# விவிலியக் களஞ்சியம்

## III

### கெ, கை, கொ, கோ, ச, சா, சி, சீ, சு, சூ, செ, சே, சை, சொ, சோ, ஞா, த, தா, தி, தீ, து, தூ

பதிப்பாசிரியர்
"தியாகு"

விவிலிய அறிமுகம்
தியான ஆசிரமம்
சென்னை-28.

முதல் பதிப்பு: அக்டோபர், 1993.

**Nihil Obstat**
P.C. Thomas.

**Imprimatur**
+ M. Arockiasamy,
Archbishop of Madurai.

விலை: ரூ. 150/-

நூல் கிடைக்கும் இடங்கள்
தியான ஆசிரமம்
சென்னை-28.

மற்றும் மறைமாவட்ட மேய்ப்புப் பணி நிலையங்கள்.

Type setting : Savithri Laser Printing, Madras.

Printing : Hi-Tech Offset Private Limited, Madras.

# அர்ப்பணம்

இறைவனின் வார்த்தையைத் தன் இதயத்தில் ஏற்று, வார்த்தையாம் இறைவனைத் தன் உதரத்தில் வளர்த்து, மனுவுருவான வார்த்தையை உலகிற்கு அளித்து இறைவனின் அன்னையாம் மரியாளுக்கு, அன்பு கலந்த அர்ப்பணம்.

# முன்னுரை

விவிலியக் களஞ்சியத் தொகுப்பின் மூன்றாம் பாகத்தைத் தமிழ்கூர் நல்லுலகிற்கு அளிப்பதில் பெரும் மகிழ்ச்சி கொள்கிறேன். தமிழ்க் கிறிஸ்தவர்கள் முதல் இரண்டு பாகங்களுக்கு அளித்த ஆர்வமிக்க வரவேற்பு, இம்முயற்சியைத் தொடர்ந்து செய்து இந்த மூன்றாம் பாகத்தை வெளிக் கொணரப் பெரிதும் உற்சாக மூட்டியது. இவ் வரவேற்பு அளித்த அனைவருக்கும் எனது மனமுவந்த நன்றி.

ஆள், இடம் ஆகியவற்றின் பெயர்களின் மூல எபிரேய, கிரேக்க உச்சரிப்புகள் தமிழ் இலக்கண மரபுக்கேற்ப மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. அவற்றோடு இப்பெயர்கள் புதிய பொதுமொழிபெயர்ப்பில் வரும் வடிவில் அடைப்புக் குறிகளுக்குள் கொடுக்கப்பட்டுள் ளன. சங்கீதங்களின் எண்கள் எபிரேய முறையில் தரப்பட்டுள்ளன. இறையில் கட்டுரைக ளில் பெரும்பகுதி Xavier Leon-Dufour- இன் Dictionary of Biblical Theology என்ற நூலைத் தழுவி எழுதப்பட்டுள்ளன.

இனி நன்றி நவிலுதல் என்ற இனிய கடமைக்கு வருகிறேன். தமிழ்க் கத்தோலிக்கப் பாரம்பரியத்தில் முதல் முயற்சியான இத்தொகுப்பு பலர் சேர்ந்த கூட்டு முயற்சியாகும். இவர்கள் பல கட்டுரைகளின் பொருட்களையும் செய்திகளையும் தொகுத்துத் தருவதில் பெரிதும் உதவியுள்ளனர். இவர்கள் அனைவரின் பெயர்ப் பட்டியல் பின்பு தரப்படுகிறது. இவர்கள் அனைவருக்கும் என் நன்றி உரித்தாகுக.

இத்தொகுப்பைத் திட்டம் செய்த காலத்தில், அறிவுரை கூறியும் உற்சாகப்படுத்தியும் பொருள் உதவி நல்கியும் ஊக்கமளித்த மேதகு கர்தினால் சைமன் D. லூர்துசாமி ஆண்டகை அவர்களுக்கு எனது உளம்கனிந்த நன்றி உரியதாகும். தயாரிப்புக் காலத்தில் பொருள் உதவிசெய்த Adam Sehall Von Bell E.V., Koln, பதிப்பித்தலுக்குப் பொருள் உதவி செய்த MISSIO, Munchen ஆகிய இரு நிறுவனத்தார்க்கும் எனது மனமார்ந்த நன்றி. இவர்களின் உதவியின்றி இந்நூலை இவ்வளவு மலிவாகக் கொணர்ந்திருக்க முடியாது.

முதல் இரண்டு பாகங்களுக்கு அணிந்துரை வழங்கிய, தமிழ்நாடு விவிலிய ஆணைக் குழுத்தலைவர், மதுரைப் பேராயர் மேதகு M. ஆரோக்கியசாமி ஆண்டகையே இப்பகுதிக் கும் அணிந்துரை வழங்கியுள்ளார். அவருக்கும், Nihil Obstat அளித்துள்ள அருட்தந்தை P.C. தாமஸ் அடிகளார்க்கும், இப்பாகத்தின் தயாரிப்பில் நெடுகலும் பிரதிகளைத் திருத்தியும் பலவாறு உதவி செய்தும் வந்துள்ள தமிழாசிரியர் ப. மீனாட்சி சுந்தரம் அவர்களுக்கும் சிறப்பான முறையில் நன்றி கூறுகிறேன். இம் முயற்சியில் எனக்கு ஊக்கமளித்த இயேசு சபை மதுரை மாநில முன்னாள் தலைவர் அருட்தந்தை மைக்கில் செயராசு அடிகளார்க்கும், தயாரிப்புக் காலத்தில் எங்கள் குழு தங்குவதற்கு இடமளித்து, விருந்தோம்பி நல்லுதவிகள் செய்த திருச்சிராப்பள்ளி, புனித சின்னப்பர் குருத்துவக் கல்லூரியினருக்கும், அன்போடு பராமரித்து உதவிசெய்த எனது இல்லங்களாகிய லோயோலாக் கல்லூரி, தியான ஆசிரமம் ஆகியவற்றின் இயேசுசபைச் சகோதரர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. வரைபடங்கள் கொடுத்துதவிய திண்டிவனம், தமிழ்நாடு முப்பணி நிலையத்தாருக்கும் எனது மனமுவந்த நன்றி. அச்சு அமைத்த Savithri Laser Printer, Hi-Tech Offset Private Ltd, சென்னை, ஆகியோருக்கும் எனது உளங்கனிந்த நன்றி.

நான் இறைவனின் குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்ட இந்த இருபத்தைந்தாவது ஆண்டில், பயிற்சிக் காலத்தில் எனக்குப் பலவிதங்களில் உற்சாகமளித்த என் இறையியல் ஆசிரியர்கள்P. De. Letter, Volkart, எனது சகோதரர்M. அருளானந்தம் ஆகிய அருட்தந்தையர் களை நினைவு கூர்கிறேன்; எனது நன்றியைச் சமர்ப்பிக்கிறேன்.

இறைவார்த்தையை நன்குணர்ந்து, அன்பு செய்து, அதன்படி வாழ்வதற்கு இந்த விவிலியக் களஞ்சியம் பெரிதும் துணை செய்யும் என்று நம்புகிறேன். இக்களஞ்சியத்தைத் தயாரிப்பதில் நெடுகலும் ஊக்கமும் உரமும் அளித்து வழிநடத்தி வரும் இறைவன் திருவருள் துணைக்குச் சிரம்தாழ்த்தி நன்றியுடன் வணக்கம் செலுத்துகிறேன். இப்பாகமும் இதற்குப் பின்வரும் நூல்களும் விவிலிய அன்பர்களுக்குப் பெரிதும் பயன்படும் நம்பிக்கை யில் இப்பகுதியை வெளியிடுகிறேன்.

"தியாகு"

## விவிலியக் களஞ்சியம்
## அணிந்துரை

''சொல்லுதல் யார்க்கும் எளிய, அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்''

சொல்லிய வண்ணம் செய்யும் செயல்வீரர் ''தியாகு'' (என்ற அருட்தந்தை ம. சந்தியாகு சே.ச), தம் அயரா உழைப்பினால் விவிலியக் களஞ்சியத்தின் மூன்றாம் தொகுதியை வெளியிடுகிறார். இது மகிழ்ச்சிக்குரியது, பாராட்டுக்குரியது.

இம் மூன்றாம் தொகுதியில் கெ—கோ, ச—சோ, ஞான த—தூ என்ற எழுத்துக்களில் தொடங்கும் சொற்கள் இடம் பெறுகின்றன; விவிலியத்தில் வரும் பலநூல்கள் அறிமுகமாகின்றன; இறையில் தொடர்பான தலைப்புகள் பல கட்டுரைக்கப்படுகின்றன; மிகப்பல சிறப்புப் பெயர்கள், பொதுப் பெயர்கள் பற்றிய அரிய தகவல்கள் தரப்படுகின்றன.

இக்களஞ்சியம் காலத்தை வெல்லும் கருவூலம். இதில் உள்ள புதியனவும் பழையனவும் நம் வாழ்வுக்குப் பயன்படுவனவாக என வாழ்த்துகிறேன்.

+ ம. ஆரோக்கியசாமி,
மதுரைப் பேராயர்,
தமிழ்நாடு விவிலிய ஆணைக்குழுத் தலைவர்.

## இந்நூலைத் தயாரிப்பதில் உடன் உழைத்தவர்கள்

அந்தோனிசாமி A.

அந்தோனிராஜ்

அமலதாசு M.

அமல்ராஜ் P.T.

அம்புரோஸ் G.

அருள்சாமி

ஆரோக்கியசாமி C.

ஆரோக்கிய நாதன் P.

ஆன்ரு டிரோஸ்

இஞ்ஞாசி G.

இருதயராஜ் A.

இதயன் A.

உபால்டு M.

எர்னெஸ்ட் அ.

கருணைதாஸ்

சந்தனசாமி

சந்தியாகு M.

சவரிமுத்து X.

சார்லஸ் குமார் N.A.

சுந்தரம் B.

சுந்தரம் U.

சூசை ஆரோக்கியசாமி

சேவியர் இளங்கோ

ஜான்சன் ராஜ் S.

ஜெரால்டு S.

ஜேம்ஸ் ரொசாரியோ B.

ஜோ I.F.

ஜோ லாரன்ஸ்

ஜோசப் லயனல் S.

ஜோனாஸ் N.

ஞானப்பிரகாசம் F.

தீஸ்மஸ் P.

பால்ராஜ் B.

பால்ராஜ் L.

பீட்டர் சகாயராஜ்

பிரான்சீஸ் M.

போனவென்சர்

மரிய அருள்

மரியதாஸ் I.

ராஜா ஏ.எல்

லூர்து Y.A.

லூர்து சாமி A.

லூர்துராஜ் G.G.

லூர்துராஜ் S.J.

விக்டர் M.J.

வின்சென்ட் G.

## விவிலியத் திருநூல் பட்டியலும் சுருக்கக் குறிப்பும்

I. பழைய ஏற்பாடு

| நூல் | சுருக்கம் |
|---|---|
| 1. ஆதி ஆகமம் (தொடக்கநூல்) | ஆதி. |
| 2. யாத்திராகமம் (விடுதலைப் பயணநூல்) | யாத் |
| 3. லேவியராகமம் (திருப்பணியாளர் நூல்) | லேவி |
| 4. எண்ணாகமம் (எண்ணிக்கை நூல்) | எண் |
| 5. உப ஆகமம் (துணைச்சட்டநூல்) | உப |
| 6. யோசுவா ஆகமம் | யோசு |
| 7. நீதிபதிகள் ஆகமம் (விடுதலைத் தலைவர்கள் நூல்) | நீதி |
| 8. ரூத்து ஆகமம் | ரூத் |
| 9. 1 சாமுவேல் ஆகமம் | 1 சாமு |
| 10. 2 சாமுவேல் ஆகமம் | 2 சாமு |
| 11. 1 அரசர்கள் ஆகமம் | 1 அர |
| 12. 2 அரசர்கள் ஆகமம் | 2 அர |
| 13. 1 நாள் ஆகமம் (ஆட்சிக் குறிப்பேடு) | 1 நாள் |
| 14. 2 நாள் ஆகமம் (2 ஆட்சிக் குறிப்பேடு) | 2 நாள் |
| 15. எஸ்ரா ஆகமம் | எஸ் |
| 16. நெகேமியா ஆகமம் | நெகே |
| 17. தோபியா ஆகமம் | தோபி |
| 18. யூதித்து ஆகமம் | யூதி |
| 19. எஸ்தர் ஆகமம் | எஸ்த |
| 20. யோபு ஆகமம் | யோபு |
| 21. சங்கீதங்கள் (திருப்பாடல்கள்) | சங் |
| 22. பழமொழி ஆகமம் (நீதி மொழிகள்) | பழ |
| 23. திருவுரையாளர் ஆகமம் | திருவுரை |
| 24. உன்னத சங்கீதம் (பேரின்பப் பாடல்) | உ.ச. |
| 25. ஞான ஆகமம் | ஞான |
| 26. சீராக்கு ஆகமம் | சீரா |
| 27. எசாயா ஆகமம் | எசா |
| 28. எரேமியா ஆகமம் | எரே |
| 29. புலம்பல் ஆகமம் | புல |
| 30. பாரூக்கு ஆகமம் | பாரூ |
| 31. எசேக்கியேல் ஆகமம் | எசே |
| 32. தானியேல் ஆகமம் | தானி |
| 33. ஓசேயா ஆகமம் | ஓசே |
| 34. யோவேல் ஆகமம் | யோவே |
| 35. ஆமோஸ் ஆகமம் | ஆமோ |
| 36. ஒபதியா ஆகமம் | ஒப |
| 37. யோனா ஆகமம் | யோனா |
| 38. மீக்கா ஆகமம் | மீக் |
| 39. நாகூம் ஆகமம் | நாகூ |
| 40. அபக்கூக் ஆகமம் | அப |
| 41. செப்பானியா ஆகமம் | செப் |
| 42. ஆகாய் ஆகமம் | ஆகா |
| 43. செக்கரியா ஆகமம் | செக் |
| 44. மலாக்கி ஆகமம் | மலா |
| 45. 1 மக்கபேயர் ஆகமம் | 1 மக் |
| 46. 2 மக்கபேயர் ஆகமம் | 2 மக் |

II. புதிய ஏற்பாடு

| நூல் | சுருக்கம் |
|---|---|
| 47. மத்தேயு நற்செய்தி | மத் |
| 48. மாற்கு நற்செய்தி | மாற் |
| 49. லூக்கா நற்செய்தி | லூக் |
| 50. யோவான் நற்செய்தி | யோவா |
| 51. அப்போஸ்தலர் பணிநூல் (திருத்தூதுவர் நூல்) | அ.ப. |
| 52. உரோமையர் | உரோ |
| 53. 1 கொரிந்தியர் | 1 கொரி |
| 54. 2 கொரிந்தியர் | 2 கொரி |
| 55. கலாத்தியர் | கலா |
| 56. எபேசியர் | எபே |
| 57. பிலிப்பியர் | பிலி |
| 58. கொலேசியர் | கொலோ |
| 59. 1 தெசலோனிக்கேயர் | 1 தெச |
| 60. 2 தெசலோனிக்கேயர் | 2 தெச |
| 61. 1 திமொத்தேயு | 1 திமொ |
| 62. 2 திமொத்தேயு | 2 திமொ |
| 63. தீத்து | தீத் |
| 64. பிலமோன் | பில |
| 65. எபிரேயர் | எபி |
| 66. யாக்கோபு | யாக் |
| 67. 1 பேதுரு | 1 பேதுரு |
| 68. 2 பேதுரு | 2 பேதுரு |
| 69. 1 யோவான் | 1 யோவா |
| 70. 2 யோவான் | 2 யோவா |
| 71. 3 யோவான் | 3 யோவா |
| 72. யூதா | யூதா |
| 73. திருவெளிப்பாடு | திருவெளி |

## துணை நின்ற நூல்கள்


Anderson G.N. : A Critifcal Introduction to the O.T.
A History and Religion of Israel.
The living Word of the O.T.

A New Catholic Commentary on Holy Scripture.

Bright J : A History of Israel.

Claus Schedl : History of the O.T.

Danielou J : The Lord of History

Daniel-Rops : Sacred History

Edman Jacob : God, the Lord of History

Elis P.F. : The Men and Message of the O.T.

Grelot P : Introduction to the Bible

Harry Thomas Frank : Discovering the Biblical World

Helmer Ringgren : Israelite Religion

James Hastings : Dictionary of the Bible

Leon-Dufour X : Dictionary of the Bibical Theology

Louis Hartman : Encyclopedic Dictionary of the Bible

Mc Kenzie J.L : Dictionary of the Bible

Moriarty F.L : Introducing the O.T.

Osmund Lewry O.P. : Introducing the O.T.

Robert A & Feuillet A : Introduction to the Bible

Robert A & Tricot A : Guide to the Bible

The Eerdmans Bible Dictionary

The Harper's Dictionary of the Bible

The Interpreter's Dictionary of the Bile 5 Vols

The Jerome Biblical commentary

The Jerusalem Bible

Weather head : A Guide to the Bible

Willaim P. Baber : Everyone in the Bible

''தியாகு'' : விவிலிய அறிமுகம் (10 பாகங்கள்)

# கெ

**கெகமோனியர்** *(HEGMONIDES - தலைவர், வழிகாட்டி)*

*பிலிப்பு அந்தியோக்குவைத் தாக்கிய போது தாலமாய் முதல் கெரார் வரையிலுள்ள மாவட்டத்திற்கு ஆளுநராக அந்தியோக்குவால் நியமிக்கப்பட்ட சீரிய அதிகாரி (1 மக் 13:24).*

**கெகேலாத்தா** *(KEHELATHAH - கூட்டம், மக்களவை)*

*இஸ்ராயேல் மக்கள் கானான் நாட்டை நோக்கி வரும்பொழுது கெசரோத்துக்குப் பின் (அட்சரேத்து) அவர்கள் தங்கிய இடங்களுள் இதுவும் ஒன்று (எண் 33:22-23). இரிசாவுக்கும் செபேருக்கும் இடையில் இருந்தது. இப்பெயரானது மக்கலோத்து என்ற சொல்லின் இரட்டிப்பாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது (எண் 33:25-26). எழுபது நூல் இரண்டு இடங்களிலும் ஒரே பெயரைப் பயன்படுத்துகிறது (எண் 33:22. 25-26).*

**கெக்கல்யா, அக்கல்யா** *(HACALIAH - யாவே காத்திருக்கிறார்)*

*நெகேமியாவின் தந்தையாவார் (நெகே 1:1;10:1)*

**கெக்கிலா, அக்கிலா** *(HACHILAH - இருண்ட குன்று)*

*சீப்பு என்ற பாலையின் எல்லையிலுள்ள மலை. சவுலுக்குப் பயந்து தாவீது பாலைவனத்திற்கு அருகிலுள்ள இந்தக் கெக்கிலா குன்றில்தான் ஒளிந்திருந்தார் (1 சாமு 23:19;26:3). கெபிரோனுக்கு (எபிரோன்) அருகிலுள்ள எசிமோன் பாலைவனமாக இருக்கலாம். ஆனால் இன்னும் உறுதியாக அடையாளம் காட்டப்படவில்லை.*

**கெங்கிரேயா** *(CENCHREAE)*

*கொரிந்து நகரிலிருந்து கிழக்கே 10 கி.மீ. தொலைவில் உள்ள துறைமுகம். இது சரோனிக் அல்லது எகினா வளைகுடாவில் அமைந்துள்ளது. இந்நகர் துசிதைதிஸ், பவுசானியா, ஸ்திராபோ ஆகியோரின் நூல்களில் குறிக்கப்பட்டுள்ளது. பவுல் கொரிந்தில் தமது பணியை முடித்தபின், கெங்கிரேயாவில்தான் தான் செய்திருந்த பொருத்தனையின்படி முடி வெட்டிக்கொண்டார் (அ.ப.18:18). உரோ 16:1-2-இன்படி இங்கு ஒரு திருச்சபை இருந்திருக்கிறது. இங்கு, பவுலின் திருமுகத்தை உரோமைக்கு எடுத்துச் சென்ற பெபா, பெண் தியாக்கோனாக இருந்தாள்.*

**கெசதியா, அசதியா** *(HASADIAH) - யாவே அன்பானவர், பிரமாணிக்கமுள்ளவர்)*

*1. செருபாபேலின் மகன்களில் ஒருவர் (1 நாள் 3:20).*

*2. கிலிக்கியாவின் (இலிகியா) மகனும், பாரூக்கின் முன்னோரும் ஆவார் (பாரூ 1:1).*

**கெசபியா, அசபியா** *(HASHABIAH - யாவே கணக்கில் எடுத்துக்கொண்டார்)*

*1. திருப்பேழை ஆண்டவரின் ஆலயத்தில் நிறுவப்பட்டபோது ஆலயப் பாடல்களுக்குப் பொறுப்பாளராய் இருந்த லேவியர்களுள் ஒருவர் (1 நாள் 6:45). மெராரியின் குடும்பத்தைச் சேர்ந்தவர். ஏத்தானின் முன்னோர்.*

*2. ஒரு லேவியர். செமயாவின் முன்னோர். அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்தவர் (1 நாள் 9:74; நெகே 11:15). மெராரியின் குடும்பத்தைச் சேர்ந்தவர். அசிரிக்காமின் தந்தை.*

*3. ஒரு லேவியர், எதுத்தூனின் மகன். ஆண்டவருடைய ஆலயபீடத்தில் பாடல்கள் பாடுவதற்கும், இறைவாக்கு உரைப்பதற்கும் என்று தாவீதால் ஒதுக்கி வைக்கப்பட்ட குழுவைச் சேர்ந்தவர். பன்னிரண்டாவது பாடகர்கள் பிரிவின் தலைவர் (1 நாள் 25:3. 19).*

*4. கெபிரோன் (எபிரேன்) குடும்பத்தைச் சேர்ந்தவர். யோர்தானுக்கு மேற்கே வாழ்ந்து வந்த இஸ்ராயேலரின்மேல் ஆண்டவரின்*

எல்லாத் திருப்பணிக்கும் அரசனின் ஊழி யத்திற்கும் அடுத்த காரியங்களில் அதிகாரிக ளாய் இருந்தவர்களுள் ஒருவர் *(1 நாள் 26:30)*.

*5.* அரசர் தாவீதின் கீழ்ப் பணி செய்த ஒரு லேவியத்தலைவர். கெமுவேலின் மகன் *(1 நாள் 27:17)*.

*6.* அரசர் யோசியாவின் கீழ் ஒரு லேவியத் தலைவர் *(2 நாள் 35:9)*.

*7.* எஸ்ராவுடன் அகவா நதிக்கரையில் சேர்ந்து கொண்ட ஒரு மெராரிய லேவியர் *(எஸ் 8:19)*. ஆலயக் கருவூலத்துக்குப் பொறுப்பா னவர் *(8:24)*. எஸ்ராவின் உடன்படிக்கையில் கையொப்பமிட்டவராக இருக்கலாம் *(நெகே 10:11)*. மேலும் ஆலயப் பாடகர்க ளின் தலைவர் *(12:24)*.

*8.* புறவின மனைவியை ஒதுக்கிவிடுமாறு எஸ்ராவால் வற்புறுத்தப்பட்ட பொதுநிலை யினர் *(எஸ் 10:25)*.

*9.* நெகேமியா மதிலைக் கட்ட உதவியவர் *(நெகே 3:17)*. கெயிலா மாவட்டத்தின் பாதிக்கு ஆட்சியாளர்.

*10.* ஆசாபின் வழிவந்த ஒரு லேவியர் *(நெகே 11:22)*.

*11.* பெரிய குரு யோயாக்கிமின் காலத்தில், கிலிக்கியா (இலிகியா) குடும்பத்தைச் சேர்ந்த ஒரு குரு *(நெகே 12:21)*.

**கெசபினா, அசபினா** (HASHABNAH )கருத்தில் கொண்டார்)

நெகேமியாவின் கீழ்ப் புதுப்பிக்கப்பட்ட எஸ்ராவின் உடன்படிக்கையில் கையொப்ப மிட்டவருள் ஒருவர் *(நெகே 10:25)*.

**கெசபினியா, அசபினியா** (HASHABNEIAH) -யாவே என்னைக் கருத்தில் கொண்டார்)

*1.* கத்தூசின் (அற்றூசு) (2) தந்தை. நெகேமியாவின் காலத்தில் எருசலேம் மதி லைச் சீர்திருத்தம் செய்வதற்கு உதவி செய் தார் *(நெகே 3:10)*.

*2.* எஸ்ராவின் காலத்தில் ஆண்டவருக்கு லேவியர் செலுத்திய புகழுரையில் கலந்து கொண்ட ஒரு லேவியர் *(நெகே 9:5)*.

சீரியா வாசகம், இவர் *எஸ் 8:19.24;* நெகே *10:11* - இல் குறிக்கப்படும் கெசபியா *(7,8 அல்லது 10)* என்ற லேவியராக இருக்கலாம் என்று சுட்டுகிறது.

**கெசரோத்து, அட்சரோத்து** (HAZEROTH -குடியிருப்புகள் )

பாலைவனப் பயணத்தில் இஸ்ராயேலர், கிபிரோத்து (கிப்ரோத்து) - அத்தாவா என்ற இடத்திற்கு அடுத்துத் தங்கிய இடம் *(எண் 33:17-18; 11:35;12:16; உப 1:1)*. இங்குதான், மோசே கூசியப்பெண்ணை மணந்ததைப் பற்றியும், இறைவனுக்கும் மக்களுக்கு மிடையே ஒரே நடுவர் என்ற அவரது தனிச் சிறப்பான நிலையைப் பற்றியும் *(எண் 12:2)* அவரோடு ஆரோனும் மிரியாமும் வாதாடி னர். இதற்காக மிரியாம் தொழுநோயால் தண்டிக்கப்பட்டார். இது, இக்கால அயின் காதரா இருக்குமிடமாக இருந்திருக்கலாம். இது சீனாய்த் தீபகற்பத்தில் நீரூற்றுக்கள் உள்ள இடமாகும். இது பாரம்பரியமாகக் கருதப்படும் சீனாய் மலைக்கு வடகிழக்கில் *48* கி.மீ. தொலைவில் உள்ளது.

**கெசலோன்** (CHESALON - பின்புறம், நம் பிக்கை)

யூதாவுக்கு அளிக்கப்பட்ட பகுதியின் வடக்கு எல்லையிலுள்ள ஒருநகரம். இது தாண் நகரத்தின் அருகில் உள்ளது *(யோசு 5:10)*. எருசலேமிலிருந்து மேற்கே ஏறத்தாழ *14* கி.மீ. தொலைவிலுள்ள இக்காலக் கெஸ்லா என்ற இடமாகக் கருதப்படுகிறது. முற்காலத்தில் இப்பகுதி ஓக் மரக்காடுகள் நிறைந்த ஒன்றாகும்.

**கெசிசு** (KEZIZ - முடிவு, எல்லை )

இது பென்யமின் கோத்திரத்துக்குக் கொடுக்கப்பட்ட இடங்களுள் ஒன்று *(யோசு 18:21)*. ஒரு பள்ளத்தாக்கு. இதன் பெயர் எமெக்கெசீசு (எமக்கசீசு) ஆகும்.

**கெசியேல், அசியேல்** (HAZIEL - இறைவனின் காட்சி)

கேர்சோனின் வழித்தோன்றலும் சிமயின் மகனுமான ஒரு லேவியர் (1 நாள் 23:9).

**கெசியோன், எசியோன்** (HEZION - காட்சி)

சீரியாவின் அரசன். தபிரிம்மோனின் தந்தையும் முதலாம் பென் - அதாதின் பாட்டனுமாவார் (1 அர 15:18). அறிஞர் பலர் இவரை இரசோனோடு ஒன்றாக்குகின்றனர் (11:25).

**கெசிரோ, எட்சரோ** (HELRO - அகழ் தோண்டி அரண்செய்)

'முப்பதின்மர்' என்று அழைக்கப்படும் தாவீதின் ஆற்றல்மிக்க மனிதர்களுள் ஒருவர். இவர் கர்மேலிலிருந்து வந்தவர் (2 சாமு 23:35;1 நாள் 11:37).

**கெசிரோன், எட்சரோன்** (HEZRON - அகழ் தோண்டி அரண் செய்யப்பட்ட) - ஆள்.

1. ரூபன் கோத்திரத்திலுள்ள ஓர் இனத்தின் குலப்பெயர்த் தலைவர். ரூபனின் மூன்றாவது புதல்வர் (ஆதி 46:9; யாத் 6:14; எண் 26:6;1 நாள் 5:3).

2. யூதா கோத்திரத்தாரின் ஒரு குலத்தலைவன் (ஆதி 46:12; எண் 26:21; ரூத் 4:18-19; 1 நாள் 2:5.9.18.21.24-25; 4:1; மத் 1:3; லூக் 3:33). பெரேட்சின் மகனும், யூதாவின் பேரனுமாவார் (ஆதி 46:22; 1 நாள் 2:5;4:1). இவரது வழித்தேன்றல்கள் யூதா கோத்திரத்தின் கெசிரோனிய குடும்பத்தைச் சேர்ந்தவர்களாவர் (எண் 26:21; 1 நாள் 2:9தொ). இவர் தாவீதின் நேரடி மூதாதையர் பட்டியலிலும் யூதாவின் அரசமரபிலும் குறிக்கப்படுகிறார் (ரூத் 4:18-19). இயேசுவின் இரு மரபுமுறைக் கொடியிலும் குறிக்கப்படுகிறார் (மத் 1:3; லூக் 3:33).

**கெசிரோன், எட்சரோன்** (HEZRON) - இடம்

காதேசு பர்னேயாவுக்கும் அத்தாருக்கும் இடையே கானான் நாட்டின் தெற்கு எல்லையில் உள்ள ஒருநகரம் (யோசு 15:3). இதன் இணைப்பகுதியான எண் 34:4 - இல் கசர் - அத்தார் (அட்சராதர்) என்று பின் உள்ளதோடு இணைக்கப்படுகிறது. யூதாவின் தெற்கில் உள்ள இன்னொரு நகரமான கெரியோத்து எட்சரோனும் இதுவும் ஒன்றல்ல.

**கெசிபு** (HEZIB - பொய் சொல்லுதல்)

சூவாவின் புதல்வி சேலாகுவைப் பெற்றெடுத்த இடம் (ஆதி 38:5). காண்க. அக்சீபு.

**கெசில்** (CHESIL - முட்டாள்)

யூதாவின் செபேலாவிலுள்ள ஒரு நகரம். எல்தோலாதுக்கும் கோமாவுக்கும் (ஓர்மா) இடையில் உள்ளது (யோசு 15:30). இது எங்கிருந்தது என்று அடையாளம் காட்ட முடியாது. நகரங்களின் சில பட்டியல்களில் கேசில் நகரம் பெத்தூல் (யோசு 19:4), பேத்துவேல் (1 நாள் 4:30), அல்லது பெத்தேல் (1 சாமு 30:27) என்று அழைக்கப்படுகிறது.

**கெசுபா, அசுபா** (HASHUBAH - கவனிப்புடைய) செருபாபேலின் மகன் (1 நாள் 3:20).

**கெசுபோன், எசுபோன்** (HESHBON)

மோவாபின் வடக்கேயுள்ள ஒரு முக்கிய நகர். இன்று கெசிபான் என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. இது எருசலேமுக்குக் கிழக்கே 80 கி.மீ. தள்ளி வாடிகெசிபானுக்குத் தெற்கில் குறிக்கப்படுகிறது. எமோரிய அரசன் சீகோனின் நகர் என்று பெரும்பாலும் இது அழைக்கப்படுகிறது. இவர் ஆர்னோன் (அர்னோன்) ஆறு வரைக்கும் உள்ள பகுதி முழுவதையும் மோவாபியர்களிடமிருந்து வலிந்து பறித்துக் கொண்டார். கெசுபோனை அவர் தமது தலைநகரமாக மாற்றினார். மேலும் அதன் பெயர் அவரால் அது கட்டப்பட்டது என்பதைச் சுட்டிக்காட்டுவதாக அமைகிறது. சீகோன் இஸ்ராயேலர்களினால் தோற்கடிக்கப்பட்டபிறகு கெசுபோன் ரூபன் கோத்திரத்தாராலும் பிறகு காது கோத்திரத்தாராலும் புதுப்பிக்கப்பட்டு, குடி அமர்த்தப்பட்டது (எண் 21:32: யோசு 13:17.26;21:39; 1 நாள் 6:81). இப்பகுதிக்காக மோவாபியருக்கும் இஸ்ராயேலருக்கும் இடையே கடும் போர் நடந்தது. ஒருவேளை

மோவாபு அரசன் ஏகிலோன் (எக்லோன்) இந்நகரைக் கைப்பற்றி இருக்கலாம் (நீதி *3:12*). பிறகு நீதிபதிகளின் முயற்சியால் திரும்ப வெற்றி கொள்ளப்பட்டது (*1 சாமு 12:9.11*). ஆகாபின் இறப்புவரை (கி.மு.853) இந்நகர் இஸ்ராயேலரின் கைவசமே இருந்தது. பின்பு மோவாபின் மேசா திரும்ப இந்நகர்மேல் வெற்றி கொண்டார். அதிலிருந்து மோவாபியர்கள் கைவசமே இருந்தது. மோவாபுக்கு, எதிரான இறைவாக்குகளில் பலதடவை குறிக்கப்படுகிறது (*எசா 15:4;17:8-9; எரே 48:2.33-34*). கி.மு. 600 ஐ ஒட்டிக் கெசுபோனை அம்மோனியர்கள் கைப்பற்றினார்கள் (*எரே 49:3*). இந்தப் பகுதிக்கு அவர்கள் உரிமை கொண்டாடினார்கள் (*நீதி 11:26*). கிரேக்கர் காலத்தில் இந்நகர் நபத்தேய அரசில் இருந்தது. அலக்சாந்தர் யன்னேயுவால் (கி.மு. 103-7) வெற்றி கொள்ளப்பட்டது. ஆனால் நாணயங்களைத் தாங்களே அச்சடித்துக்கொள்ளும் அளவுக்கு முழு சுதந்தரம் அளிக்கப்பட்டது. யூதர்களின் அரசு வீழ்ந்தபோது, கெசுபோன் உரோமைய அரசின் மாகாணமான சீரியாவோடு இணைக்கப்பட்டது.

**கெசுமோன், எசுமோன்** (HESHMON - *பலன் நிறைந்த*)

யூதாவின் தென்மேற்குப்பகுதியில், பெயேர்-செபா சுற்று வட்டாரத்தில் கசர் - கதாவுக்கும் பேத்து-பலேத்துக்கும் இடையில் இருந்த ஒரு நகர். இது இருந்த இடம் தெரியவில்லை. தால்மூது மக்கபேயர்களுக்கு அடைமொழியான கசமோனியார் என்ற சொல் இதிலிருந்து தோன்றியிருக்கலாம்.

**கெசுல்லோத்து** (CHESULLOTH - *அழிவு, சிதைவு*)

இசக்காரிலுள்ள ஒரு எல்லை நகரம் (*யேசு 19:18*). கிசிலோத் - தாபோரும் இதுவும் ஒன்றே. நசரேத்திலிருந்து தென் கிழக்கில் ஏறத்தாழ 5 கி.மீ. தொலைவில் உள்ள இக்கால இக்சால் என்ற இடமென அடையாளம் காட்டப்படுகிறது.

**கெசேது** (CHESED - *ஆதாயம்*)

நாகோருக்கும், மில்காவுக்கும் பிறந்த நான்காவது புதல்வன். கல்தேயர் தோன்றிய அரமேய இனத்தின் மூதாதையர் (*ஆதி 22:22*).

**கெசேம்** (GESHEM - *மழை*)

அராபியரான கெசேம், கொரோனியரான (ஒரோனியர்) சன்பலாற்றுடனும், அம்மோனியரான தோபியாவுடனும் சேர்ந்து கொண்டு நெகேமியா எருசலேம் மதிலைக் கட்டும்போது அவரை எதிர்த்தனர். அவர்கள் ஒன்று சேர்ந்து நெகேமியாவை எள்ளி நகையாடினர் (*நெகே 2:19-20*); அவருக்குத் தீங்கிழைக்கச் சதி செய்தனர் (*6:1-3*); அவர் மீது பொய்க்குற்றம் சாட்டி அரசருக்குக் கடிதம் எழுதுவதாகப் பயமுறுத்தினர் (*6:5-9*). ஆனால் எல்லாவற்றிலும் தோல்வியுற்றனர்.

'அராபியன்' என்ற பெயர் அவன் யூதாவின் தெற்குப் பகுதிக்கு ஓர் உயர் அதிகாரி என்பதைக் காட்டுகிறது. சில வாசகங்கள் 6:6-இல் இவரைக் கசிமு என்று அழைக்கின்றன.

**கெசேரிம், அட்சேரிம்** (HAZERIM - *கிராமங்கள்*)

பாலஸ்தீனத்தின் தென்மேற்குப்பகுதியில் அவ்வாயர்கள் வாழ்ந்த (*உப 2:23*), சுவர்ப்பாது காப்பற்ற குடியிருப்புக்கள் (*லேவி 25:31*). சில மொழிபெயர்ப்புக்கள் இந்த எபிரேயச் சொல்லை இடப்பெயராக மொழிபெயர்க்கின்றன.

**கெசேர்** (GEZER - *பங்கு*)

கெசேர் என்பது பாலஸ்தீனச் சமவெளியில் யோப்பாவிற்கும் எருசலேமிற்கும் இடையிலுள்ள ஒரு நகரமாகும்.

யோசுவாவிற்கு எதிராக ஐந்து அரசர்கள் இணைந்து நடத்தியபோரில் கெசேர் நாட்டு அரசரும் ஒருவராவார். ஆனால் இந்நாடானது இஸ்ராயேலர்களால் கைப்பற்றப்படவில்லை (*யோசு 10:33;12:12; நீதி 1:29*). இந்நகர் யோசேப்பின் எல்லைப்பகுதியில்

இருந்தது (யோசு 16:3). எனவே எப்பிராயி மின் நகரம் என்று கூறப்பட்டது (1 நாள் 7:28). இது ஒரு லேவிய நகரமாகும் (1 நாள் 6:52). தாவீதுக்கும் பெலிஸ்தியருக்கு மிடையே போர் நடந்த இடமாகும் (2 சாமு 5:25; 1 நாள் 14:16; 20:4).

பார்வோனால் இந்நகர் கானானியர்களிட மிருந்து கைப்பற்றப்பட்டு, சாலமோன் பார் வோனின் மகளை மணந்தபொழுது அவருக் குக் கொடுக்கப்பட்டது (1 அர 9:15தொ). சாலமோன் இந்நகரைச் சுற்றி அரண் எழுப்பி னார். இவ்வாறு முதன்முதலாக இந்நகரானது இஸ்ராயேல் மக்களுக்குச் சொந்தமான நக ராக மாறுகின்றது, மேலும் இந்நகர் யூதா வால் செலூக்கியர்களிடமிருந்து கைப்பற்றப் பட்டு ( 2 மக் 10:32தொ) யோனத்தான் என்பவரால் இந்நகரைச் சுற்றி அரண் எழுப் பப்பட்டது (1 மக் 9:52). பின் யூதர்களின் முக்கியமான நகராகக் காக்கப்பட்டு வந்தது (1 மக் 13:53; 14:7. 34). ஏழாம் அந்தியோக்கு அரசன் கெசேர், யோப்பா, எருசலேம் போன்ற நகர்களைத் தனக்கு உரித்தானது என்று உரிமை கொண்டாடினர். ஆனால் இந்நகர்களை அவரது அதிகாரத்திற்குக் கொண்டுவர இயலவில்லை (1 மக் 15:28;16:1.19.21).

எகிப்து நாட்டு மன்னன் மூன்றாம் துத் மோசால் வெற்றிக் கொள்ளப்பட்ட (கி.மு. 1502-1448) கனானிய நகரங்களில் கெசேரும் உள்ளடங்கும். அமர்னா கடிதங்களில் இந் நகர் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. மெர் னப்தா (1234-1220) என்பவர் இந்நகரை எகிப்து அரசாட்சியின் கீழ் மீண்டும் கொண்டு வந்ததாகக் கூறுகின்றார்.

எருசலேமிற்கு வடமேற்கே 29-கி.மீ. தொலைவில் தற்போதுள்ள தேல்யெசர்தான் கெசேர் நகர் இருந்த இடமாகும். இந்நகர் 22 ஏக்கர் நிலப்பகுதியை உள்ளடக்கியிருந்த தால், பண்டைக்கால பாலஸ்தீனா நகரங்க ளில் மிகவும் பரந்து விரிந்த நகராகும்.

கற்காலத்தில் (கி.மு. 4500-3200) மக்கள் இவ்விடத்தில் குடியேறினர். புதைபொருள் ஆராய்ச்சியின் மூலம் பெரிய மதில்சுவர்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கி.மு. மூவாயிரத்திற்குமுன் முதல் சுவரும், கி.மு. மூவாயிரத்தில் இரண்டாவது சுவரும், கி.மு. 1500-இல் மூன்றாவது சுவரும் கட்டப்பட் டன. இந்தச்சுவர்கள் பிற்காலத்தில் மாற்றிய மைக்கப்பட்டு, கிரேக்கப் பண்பாட்டுக் காலம் வரை பயன்படுத்தப்பட்டன. கி.மு. மூவாயிரத்தில் கிணற்றையும் நகரையும் இணைக்குமாறு கட்டப்பட்டிருந்த சுரங்கக் கால்வாய் போர் சமயத்தில் மக்களுக்குத் தண்ணீர் வழங்குவதற்குப் பெரிதும் உதவி யாக இருந்தது. நிறுத்தப்பட்ட கற்களைக் கொண்ட ஓர் இடமானது புதைபொருள் ஆராய்ச்சியாளர்களால் கண்டுபிடிக்கப்பட் டது. இவை பழைய ஏற்பாட்டுக்காலத் தூண் கள் என்று உறுதி செய்யப்பட்டன. அறிஞர் கள் சிலர் இவ்விடத்தை இறப்புச் சடங்குகள் நிகழ்த்தப்படும் இடம் என்றும், மற்றும் சிலர் வழிபாடுகள் நடத்தப்படும் இடம் என்றும் கூறுகின்றார். மெசபொத்தாமியா வின் பாதிப்பைக் காட்டுகின்ற கி.மு. 15-14ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஆப்பு வடிவ எழுத்துக்களை உடைய பலகைகள் அங்குக்காணப்பட்டன. மேலும் கி.மு.10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நாள் காட்டி யைப் பற்றிய கல்வெட்டு ஒன்றும் அங்குக் காணப்பட்டது. மாதங்களின் பெயர்கள் தரப் படவில்லை. ஆனால் குறிப்பிட்ட தானியங் கள் பயிர் செய்யப்படும் அந்தக் குறிப்பிட்ட காலத்தை வைத்து மாதங்களை அறிந்து கொண்டனர்.

புதைபொருள் ஆராய்ச்சியிலிருந்து கண்டு பிடிக்கப்பட்ட குறிப்புகள் விவிலியம் தரும் குறிப்புகளோடு முழுவதும் ஒத்துப்போக வில்லை. கி.மு. 9-ஆம் நூற்றாண்டில் இந் நகர் அழிந்தது என்பதற்கான ஆதாரங்கள் காணப்படவில்லை. ஆனால் மன்னன் பார் வோனால் இந்நகர் தீக்கிரையாக்கப்பட்டது என்ற வாக்கியத்தை அப்படியே எடுத்துக் கொள்ளத் தேவையில்லை.

**கெசூரியர்(GESHURITES)**

1. பாலஸ்தீனத்தின் வடமேற்கில் அமைந்த கெசூர் அரசின் மக்கள் (உப 3:14; யோசு 12:5;13:11.13).

2. பெலிஸ்தியர் பகுதியருகில் நெகேபுவில் வாழ்ந்த மக்கள் (யோசு 12.2). தாவீது சிக்லா

கில் தங்கியிருந்தபோது கெசூரியர்களுக்கு எதிராகப் போரிட்டுக் கொள்ளையிட்டார் *(1 சாமு 27:8)*. அரசர்கள் காலத்தில் சீமோன், யூதா இனத்தவர்கள் தெற்கு நோக்கி முன்னேறியபோது இந்த மக்கள் அழிக்கப்பட்டனர் *(1 நாள் 4:39-43)*.

**கெசூர்** (GESHUR - *பாலம்)*

பாசானுக்கு வடக்கேயும் சீரியாவுக்குத் தெற்கேயும் உள்ள ஒரு சிறிய அரசு. இஸ்ரா யேலுக்கும் ஆரானுக்கும் இடையில் சிறிய நடுநிலை நாடாக இது இருந்தது *(யோசு 13:11; 2 சாமு 15:8; 1 நாள் 2:23)*. தாவீது யூதாவின் அரசனாக இருந்தபோது கெசூர் அரசனோடு நட்புறவாக வாழ்ந்தார். கெசூர் அரசனான தல்மாயின் மகளாகிய மாக் காவை மணமுடித்து உடன்படிக்கை செய்து கொண்டார். மாக்கா அப்சலோமைப் பெற் றெடுத்தாள் *(2 சாமு 3:3)*. தன்னுடைய சகோதரன் அம்மோனைக் கொன்றுவிட்டு அப்சலோம் தன் தாத்தாவிடம் (கெசூருக்கு) ஓடிப்போனான். அங்கே மூன்று ஆண்டுகள் இருந்தான் *(2 சாமு 13:37-14:24)*. அதன் பிறகு கெசூர் இஸ்ராயேலுக்கு அடிமைநாடாக இருந்து வந்தது. ஆனால் இஸ்ராயேல் அரசு பிளவுபட்டபின், கெசூர் அரசன் ஆராமோடு சேர்ந்து பாசானின்மீது படையெடுத்துக் கொள்ளையிட்டான் *(1 நாள் 2:23)*. காலப் போக்கில், கெசூர் தமஸ்கு அரசோடு இணைந்தது.

**கெசோ, அசோ**(HAZO - *காட்சி)*

நாகோர், மில்கா ஆகியோரின் ஐந்தாவது மகன் *(ஆதி 22:22)*. இப்பெயர் அசீரிய அரசன் ஏசர்கத்தோனின் ஏடுகளில் குறிக்கப் படும் கவுரானைச் (அவுரான்) சுற்றிய பகுதி யான காசுவுடன் தொடர்புடைய இனத் தையோ, உப இனத்தையோ குறிக்கலாம்.

**கெஸ்தாஸ்** (GESTAS)

லூக் *23:39-43*-இல் குறிக்கப்படும், இயேசு வோடு சிலுவையில் அறையப்பட்ட, மனம் வருந்தாத கள்வனின் பெயராகப் போலி நூல்களில் கொடுக்கப்படுகிறது. இப்பெய ரின் மற்ற வடிவங்கள் கிஸ்தாஸ், கெஸ் மாஸ், ஸ்தெக்மாஸ், துமாக்குஸ் ஆகியவை யாகும். இவர் திஸ்மசுடன் ஒப்பிட்டு வேறு படுத்தப்படுகிறார்.

**கெட்சியா** (KEZIAH - *பரிமளம்)*

யோபு தாம் இழந்த செல்வங்களைத் திரும்பப் பெற்றபின் அவருக்குப் பிறந்த இரண்டாவது மகளின் பெயர் *(யோபு 42:14)*.

**கெதமோத்து** (KEDEMOTH - *கீழ்த்திசை சேர்ந்த)*

ரூபனின் கோத்திரத்தாருக்குக் கொடுக்கப் பட்ட குருக்களின் நகரம். இது வட அர்னோ னில் உள்ளது *(யோசு 13:18;21:37)*. இதற்கு அருகிலுள்ள பாலைவனத்திலிருந்துதான் மோசே எமோரிய அரசன் சீகோனிடம் ஆள் அனுப்பி அவர்தம் நாட்டைக் கடக்க உத்த ரவு கேட்டார் *(உப 2:26)*. மேலும் இது மெராரியின் புதல்வருக்குக் கொடுக்கப்பட்ட லேவியர் நகரமாகும் *(யோசு 21:37; 1 நாள் 6:79)*. இந்தச் சுற்று வட்டாரத்தில் காணப் படும் கசர் எஸ்-ஸாபெரான், கிர்பெத் ஏல்- ரெமேயில் ஆகிய இரு நபத்தேய இடங் களில் ஒன்று கெதமோத்தாக இருந்திருக்க லாம். இவ்விடத்திற்கு எஸ்-சலியேயையும் அடையாளம் காட்டுவர்.

**கெதரோத்தாயிம்** (GEDEROTHAIM - *இரு ஆட்டுப்பட்டி, இரு சுவர்கள் - )*

சோரா - அசேக்காவில் செபேலா மாவட் டத்திலுள்ள யூதாவைச் சேர்ந்த ஒரு கிராமம் *(யோசு 15:36)*. இவ்வூர் இருந்த இடம் இன்னும், தெரியவில்லை.

கெதரோத்தாயிம் என்பது எழுபது நூலில் இருப்பது போல 'அவளுடைய ஆட்டுக் கிடைகள்' என்ற பொருளில் வாசிக்கப்பட வேண்டும் என்று விவிலிய வல்லுநர்கள் பலர் கருதுகின்றனர்.

**கெதரோன்** (KEDRON)

இது மோதினுக்கு அருகிலுள்ள ஓர் ஊர் *(1 மக் 15:39-41;16:9)*. இது இக்காலக் காத்ரா என்ற ஊராக இருக்கலாம் என்று கருதப்படு கிறது *(யோசு 15:36)*. இந்நகரின் மதிற்சுவர் சீரியா மன்னன் ஏழாம் அந்தியோகினால் யூதேயா நாட்டைத் தாக்கும் பொருட்டுக் கட்டப்பட்டது.

**கெதர்** (GEDER - சுவர், வேலி)

கானான், நாட்டிலுள்ள இந்நகரை யோசுவா வென்றார். விவிலியத்தில் இந்நகரம் தெபீர் நகரை அடுத்துக் குறிப்பிடப்பட்டிருப்பதால் அநேகமாக இது யூதா நாட்டின் செபோலாவில் அமைந்திருக்கக்கூடும். தாவீதின் திராட்சைத் தோட்டங்களை மேற்பார்க்க நியமிக்கப்பட்ட பாகால்-அனானின் ஊர் *(யோசு 12:13; 1 நாள் 27:28)* ஆகும். ஆனால் அந்த இனத்தாரின் நகரப் பட்டியலில் இந்நகர் காணப்படுவதில்லை. ஒரு வேளை பிற்காலத்தில் இந்நகர் அவர்களால் கைவிடப்பட்டிருக்கலாம். ஒரு வேளை பெத்காதேர் *(1 நாள் 2:51)* என்பதும் கெதர் என்பதும் ஒரே இடத்தைக் குறிக்கலாம்.

**கெதர்லகோமர்** *(CHEDORLAOMER)*

ஏலாமின் அரசரான இவர் தெற்குப் பாலஸ்தீனத்தைச் சேர்ந்த ஐந்து அரசர்களை எதிர்த்துப் போர்புரிந்து அவர்களைச் சித்தீம் என்ற பள்ளத்தாக்கில் வென்றார் *(ஆதி 14:1-12)*. இவரது கூட்டணி, பின்னர் எபிரேயனான அபிராம் என்பவராலும் அவரது கூட்டாளிகளாலும் முறியடிக்கப்பட்டது. இவர்களிடமிருந்து அபிராம் தன் உறவினன் லோத்தை மீட்டார் *(14:13-17)*.

கெதர்லகோமர் (இலகமாரின் ஊழியன்) ஏலாமியத் தோற்றம் கொண்டதாயினும், இப்பெயர்கொண்ட எந்தக் குறிப்பிட்ட ஏலாமிய அரசனைப் பற்றியும் விவிலியத்துக்குப் புறம்பான சான்றுகள் ஏதுமில்லை.

**கெதல்யா** (GEDALIAH - யாவே பெரியவர்)

1. அகிக்காமின் மகன். சாபானின் பேரன். சிறைப்பிடிக்கப்படாமல் யூதர் நாட்டில் விடப்பட்ட மக்களுக்குப் பாபிலோனிய அரசன் நெபுகத்னேசரால் ஆளுநராக நியமிக்கப்பட்டவர் *(2 அர 25:22-26; எரே 40:6-41:18)*. இலாக்கிசு என்ற இடத்தில் கெதல்யா பயன்படுத்திய முத்திரை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. மக்கள் கையால் கொல்லப்படாமல், எரேமியா இறைவாக்கினரைக் கெதல்யாவின் தந்தை காப்பாற்றினார் *(எரே 26:2)*. கெதல்யா எரேமியா இறைவாக்கினரின் அரசியல் மிதவாதக் கொள்கையைப் பின்பற்றினார். ஆகவே பாபிலோனிய அரசன் நெபுகத்னேசரின் நம்பிக்கையைப் பெற்றார். இறுதியில் நாடு கடத்தப்பட்ட அரச குலத்தலைவனான இசுமயேலின் தலைமையில் யூதப் படைத்தலைவர்கள் கெதல்யாவை மிஸ்பாவிலிருந்த அவரது அரண்மனையில் விருந்தாளிகளாக இருந்தபோது வெட்டிக் கொன்றார்கள். நெபுகத்னேசர் பதிலடி கொடுப்பார் என்று அஞ்சிய மக்கள், எரேமியாவின் அறிவுரையை மதிக்காமல் காரயாகுவின் மகன் யோகனானின் தலைமையில் எகிப்துக்கு ஓடிப்போயினர்.

2. லேவியர் எதுத்தூனின் மகன். அநேகமாகத் தாவீதின் காலத்தில் வாழ்ந்த ஓர் இசைக் கலைஞர். பாடகர்களின் இரண்டாம் பிரிவின் தலைவர். நாடு கடத்தலிலிருந்து திரும்பியபின் இவரிலிருந்து ஒரு லேவியர் குடும்பம் உருவானது *(1 நாள் 25:3. 9)*.

3. தலைமைக்குரு எசுவா குடும்பத்தைச் சேர்ந்த் ஒரு குரு. புறவினத்தைச் சேர்ந்த தங்களது மனைவிகளை விலக்கி வைத்த குருக்களில் இவரும் ஒருவர் *(எஸ் 10:18)*.

4. பஸ்கூரின் மகன். எரேமியா இறைவாக்கினரைக் கொல்ல வேண்டுமென்று செதேக்கியா அரசனிடம் ஆலோசனை கூறிய எருசலேம் நகரத்துத் தலைவர்களில் இவரும் ஒருவர் *(எரே 3 :1-6)*.

5. இவர் எசேக்கியாவின் பேரனும், செப்பனியா இறைவாக்கினரின் தாத்தாவுமாவார் *(செப் 1:1)*.

**கெதெரோத்து** *(GEDEROTH - ஆட்டுப்பட்டி)*

செபேலாவில் இலாக்கிசுப் பகுதியில் யூதா குலத்தினர் வாழ்ந்த நகரமாகும் *(யோசு 15:41)*. அநேகமாக ஏல்-மான்சுரா பகுதியில் இந்நகர் இருந்திருக்கலாம். ஆகாசு மன்னனின் ஆட்சிக்காலத்தில் *(கி.மு. 735-715)*, கெதெரோத்து நகரை ஆகாசிடமிருந்து பெலிஸ்தியர்கள் கைப்பற்றிக் கொண்டனர் *(2 நாள் 28:18)*.

கெதெரோத்து நகரம், கெந்தபேயுவால் கட்டப்பட்டதும், சீமோன் மக்கபேயின் மகனான யோவான் கெந்தபேயுவைத் தோற்கடித்த இடமுமான கெதரோன் (இக்காலக்

கத்ரா) நகரும் ஒன்றாக இருக்கலாம் (1 மக் 15:39;16:9). இந்தக் கத்ரா, யபினியேலுக்குத் தென்கிழக்கில் 7 கி.மீ.தொலைவில் உள்ளது. வேறுசிலர் இந்தக் கத்ரா பழங்கால எக்ரோன் இருந்த இடமாக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.

**கெதேசு** (KEDESH - புனித இடம்)

கெதேசு, காதேசு என்ற பெயர்கள், இஸ்ராயேலர் வருகைக்கு முந்திய பாலஸ்தீனத்தில் இருந்த இடங்களைக் குறித்தன. மாசரேட்டிக் வாசகம் வடபகுதியிலுள்ள புனித இடங்களைக் கெதேசு என்றும், தென்பகுதியில் உள்ள புனித இடங்களைக் காதேசு என்றும் அழைக்கும் மரபைக் கொண்டுள்ளது.

1. யோசுவா வெற்றிகொண்ட இடங்களில் ஒன்று (யோசு 12:22). இசக்காரின் பகுதியில் கேர்சோமியருக்கு அளிக்கப்பட்ட நகரமாக இருக்கலாம் (1 நாள் 6:72). இது மற்ற இடங்களில் கிசியோன் என்றழைக்கப்படுகிறது (யோசு 19:20;21:28). இது மெகிதோவுக்குத் தென்கிழக்கில் 4 கி.மீ. தொலைவிலுள்ள தேல் அபுகுதேயிஸ் என்று அடையாளம் காட்டப்படுகிறது.

2. யூதாவின் தென்கோடியிலுள்ள ஓர் எல்லை நகரம் (யோசு 15:23). அநேகமாக இதுவும் காதேசும் ஒன்று.

3. நப்தலியின் பகுதியிலுள்ள ஒரு நகரம் (யோசு 19:37). இது ஓர் அடைக்கல நகரமாக்கப்பட்டு (20:7) கேர்சோமிய லேவியர்களுக்கு அளிக்கப்பட்டது (21:32; 1 நாள் 6:76). கி.மு. 733-இல் தெகிலத்து பிலேசர் இதைக் கைப்பற்றி இவ்வூர் மக்களை அசீரியாவுக்கு நாடு கடத்தினார் (2 அர 15:29). கெதேசைச்சுற்றிய பகுதி மூன்றாம் துத்துமோசின் பட்டியலில் குறிக்கப்படுகிறது. இந்த இடம், காசோருக்கு (ஆட்சோர்) வடமேற்கில் 11 கி.மீ. தொலைவிலும் தீருக்குக் கிழக்கில் 36 கி.மீ. தொலைவிலும் உள்ள இக்காலத் தேல் காதேசாக அடையாளம் காட்டப்படுகிறது. இங்கு இரு குன்றுகள் உண்டு. இங்கு மூன்றாம் ஆயிரமாண்டுக் காலத்திலிருந்து இஸ்ராயேலர் காலம் முடியும் வரை மக்கள் வாழ்ந்து வந்திருக்கின்றனர்.

4. நப்தலியில் கெதேசு நீதிபதி பாராக்கின் சொந்த ஊர். இங்குதான் சிசராவுக்கு எதிராகப் பாராக்கு மக்களை ஒன்று திரட்டினார் (நீதி 4:6,9-11). இங்குதான் யோனத்தான் மக்கபேயு தெமெத்திரியுவின் படைகளைத் தோற்கடித்தார் (1 மக் 11:63.73). யோசிப்பசின் காலத்தில் இது பெனிசியர்களின் கையில் இருந்தது.

**கெதேரா** (GEDERAH - சுவர், வேலி)

1. யூதா புதல்வரின் கோத்திரத்துக்குச் செபேலாவில் கிடைத்த நகர்களில் இதுவும் ஒன்று (யோசு 15:36). யூதாவின் கோத்திரத்தைச் சேர்ந்த சிலர் அரசனின் வேலையைக் கவனிக்கும் பொருட்டுக் கெதேராவிலும் நெற்றாயிமிலும் குடியிருந்தனர் (1 நாள் 4:23). அநேகமாக இப்போது லோது நகருக்குத் தென்கிழக்காக 16 கி.மி. தொலைவிலும், கெசேருக்குத் தென்கிழக்கில் 6 கி.மீ. தொலைவிலும் உள்ள யெதிரேயாக இருக்கலாம்.

2. பென்யமின் குலத்தினர் வாழ்ந்த நகரமாகும். சிக்லாகு என்னுமிடத்தில் தாவீதுடன் சேர்ந்து கொண்ட ஆற்றல் மிகக் கொண்டவரும் திறமை மிக்கவருமான படைவீரர்களில் ஒருவரான யோசபாது கெதேரா நகரத்தைச் சேர்ந்தவராவார் (1 நாள் 12:4). கிபயோனுக்கு அருகிலுள்ள யெதிரே நகரும் இந்தக் கெதேரா நகரும் ஒன்றே எனக் கருதலாம்.

**கெதோர்** (GEDOR - கோட்டை, மதில்) - ஆள்.

கீசுவின் சகோதரரும் அரசன் சவுலின் உறவினரும் ஆவார். பென்யமின் குலத்தில் ஒரு நபர் அல்லது ஒரு குடும்பத்தைத் தோற்றுவித்த முதியவர் (1 நாள் 8:31;9:37).

**கெதோர்** (GEDOR - கோட்டை, மதில்) -இடம்

1. யூதா குலத்தினர் வாழ்ந்த நகர். பெத்-சூரை அடுத்துக் குறிப்பிடப்பட்டுள்ளது. பெத்லகேமுக்கும் கெபிரோனுக்கும் (எபிரோன்) இடையில் அமைந்துள்ளது (யோசு 15:58). பெனுவேல் என்பவர் கெதோரின் தந்தை என்று குறிப்பிடப்பட்டுள்ளார் (1 நாள் 4:4). இதற்கு அவர் இந்நகரை நிறுவிய

வர் என்று பொருள் கொள்ள வேண்டும். இது இருந்த இடம் கெபிரோனுக்கு வடக்கில் 12 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து-யெதூராக இருக்கலாம். *1 நாள் 2:57*-இல்வரும் பெத்காதேரும் இதுவும் ஒரே இடமாக இருக்கலாம்.

*2.* யூதாவில் காலேபின் புதல்வர்கள் வாழ்ந்த நகரம். சோக்கோ, சானோவாகு முதலிய நகர்களோடு குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நகரைக் கட்டியவர் எரேது என்பவராவார் *(1 நாள் 4:18)*. தாவீதைப் பின் தொடர்ந்து சென்றவர்களில் யோவேலாவும் செபதியாவும் கெதோர் நகரைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்பட்டுள்ளது *(12:7)*. ஆனால் இது எந்த ஊர் என்பது தெளிவாகத் தெரியவில்லை.

*3.* நெகேபில் உள்ள நகரம். சிமியோனுடைய புதல்வர்கள் கைப்பற்றிய இடங்களின் கிழக்கு எல்லையாக இந்நகர் அமைந்திருந்தது *(1 நாள் 4:39)*. ஆனால் எழுபதுநூலில் உள்ளது போல் இது கெரார் என்று திருத்தப்படவேண்டும் என்று பலர் கருதுகின்றனர்.

*4.* பென்யமின் பகுதியைச் சேர்ந்த ஓர் ஊர். தாவீதின் பல வீரர்களில் யோவேலாவும், செபதியாவும் இவ்வூரைச் சேர்ந்தவர்கள் *(1 நாள் 12:7)*. இது இருந்த இடம் கிபயோனுக்கு மேற்கில் 10 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத் ஏல்-குடையராவாக இருக்கலாம். அறிஞர்கள் சிலர் இதுவும் 2-இல் குறிக்கப்படும் ஊரும் ஒன்றே என்று கருதுகின்றனர்.

**கெத்சமனி** *(GETHSEMENE - எண்ணெய் ஆலை)*

ஒலிவ மலையில் உள்ள இவ்விடத்தில் தான் இயேசு யூதாசால் காட்டிக் கொடுக்கப்படுவதற்கு முன் வேதனையோடு செபித்தார். நான்கு நற்செய்திகளும் இந்நிகழ்ச்சியை விவரித்தாலும் மத்தேயுவும் மாற்குவும் மட்டுமே இந்நிகழ்ச்சி கெத்சமனியில் நடந்ததாகக் கூறுகிறார்கள். அவர்கள் அதை ஒரு 'தோட்டம்' என்று கூறுகிறார்கள். 'கெத்சமனி' அதாவது ''எண்ணெய்ச் செக்காலை'' என்ற பெயர்தான், அது ஓர் ஒலிவ மரங்கள் அடர்ந்த தோட்டம் என்று காட்டுகிறது *(மத் 26:36;மாற் 14:32)*. லூக்கா நற்செய்திப்படி, இந்நிகழ்ச்சி ஒலிவ மலையில் இயேசு வழக்கமாகச் செல்கின்ற ஓர் ''இடத்தில்'' நடைபெற்றது *(லூக் 22:39-40)*. இத்தோட்டம் கிதரோன் அருவியைக் கடந்து இருந்ததாக யோவான் கூறுகிறார் *(யோவா 18:11)*.

இயேசு இவ்விடத்தில்தான் செபித்தார் என்று யாராலும் அறுதியிட்டுக் கூற முடியாது. ஏனென்றால் நற்செய்தியில் அதைப் பற்றி விரிவான விளக்கங்கள் தரப்படவில்லை. மேலும், முற்காலத்திய ஒலிவ மரங்களெல்லாம் தீத்து கி.பி.70-ஆம் நூற்றாண்டில் எருசலேமை முற்றுகையிட்டபோது அழிக்கப்பட்டுவிட்டன. இவ்விடம் நிச்சயமாக நகர் வாயில் அருகில், கித்ரோனுக்குக் கிழக்கே ஒலிவ மலையில் அமைந்திருக்க வேண்டும். ஒரு முற்காலத்து மரபின்படி, இது கிழக்கு வாயிலுக்கு வெளியே, பள்ளத்தாக்குக்குக் கிழக்கே அமைந்திருந்தது. 5 ஆம் நூற்றாண்டில் இங்கு ஓர் ஆலயம் கட்டப்பட்டது. 7-ஆம் நூற்றாண்டின் திருப்பயணியான ஆர்குல்பு என்பவர் இங்குள்ள பாறை ஒன்றில் இயேசுவின் முழங்கால் சுவடுகள் பதிந்திருந்ததைக் கூறுகிறார். இவ்விடம் பிரான்சிஸ்கன் சபையினர் பாதுகாப்பில் உள்ளது. இவ்விடத்தில் 1919-1924க்கிடையில் ''எல்லா நாடுகளின் ஆலயம்'' கட்டப்பட்டது. அதற்குள் பாரம்பரியமாகக் கருதப்பட்ட இரத்தவேர்வைப்பாறை உள்ளது. நான்காம் நூற்றாண்டின் மரபு ஒன்று கெத்சமனி ஒலிவ மலையில் உயர்ந்த பகுதியில் இருந்ததாகக் கூறுகிறது.

புனித யோவான் இந்நிகழ்ச்சியை விவரிக்கும்போது இயேசு 'நுழைந்தார்', ''வெளியே சென்றார்'' என்று கூறுவதால் கெத்சமனியைச் சுற்றிலும் சுவர் இருந்ததாகவும், தனி நபர் ஒருவருக்கு அது சொந்தமாக இருந்ததாகவும், இயேசுவை அங்குச் செல்ல அவர் அனுமதித்திருந்ததாகவும் சிலர் கருதுகின்றனர்.

இயேசு எருசலேமிலிருந்து பெத்தானியா வுக்குச் செல்லும் பொழுதெல்லாம் இத் தோட்டத்தைக் கடக்க வேண்டியிருந்தது. இதையே அவர் ''இயேசு வழக்கம்போல் ஒலிவ மலைக்குச் சென்றார்'' என்று கூறி யிருக்கலாம். ஆனால் ''அவரைக் காட்டிக் கொடுத்த யூதாசுக்கும் இந்த இடம் தெரியும். ஏனெனில் இயேசுவும் அவருடைய சீடரும் அடிக்கடி அங்குக் கூடுவதுண்டு'' என்று யோவான் கூறுவதால், இங்கு வருவது இயேசுவின் வழக்கம் என்பது தெளிவாகி றது. ஒத்தமை நற்செய்தியாளர்களின் விளக் கப்படி இந்த இடம் ஒரு விரிந்த பரப்பு என்று தெரிகிறது. ஏனெனில் இயேசு அவரு டைய சீடர்களிடமிருந்து ''கல்லெறி தொலைவு'' விலகி இருக்கிறார்.

**கெத்தெர்** *(GETHER - அச்சம்)*

ஆராமின் புதல்வர்களில் ஒருவரும், சேமின் பேரனும் ஆவார் *(ஆதி 10:23;1 நாள் 1:17)*. ஓர் அரமேய நகரும் அரசுமாகும்.

**கெத்லோன், எத்லோன்** *(HETHLON மறைந்து கொள்ளும் இடம்)*

எசேக்கியேலின்படி இஸ்ராயேலின் வடக்கு எல்லையில் ஓர் இடம் *(எசே 47:15; 48:1)*. லெபனோனில் திரிப்பொலிக் குக் கிழக்கே கெயித்தெலாவோடு ஒன்றாகக் கருதப்படுகிறது.

**கெந்தபேயு** *(CENDEBEUS)*

யூதாவோடு போர் புரிவதற்கென்று அந்தி யோக்கு மன்னனால் நியமிக்கப்பட்ட படைத்தலைவன். லீக்கியாவில் உள்ள காண் டுபா என்ற இடத்தை வைத்து இந்தப் பெய ரும் தோன்றியிருக்கலாம். கெந்தபேயு யாம் னியாவுக்கு வந்து அங்கிருந்து யூதேயாவின் மீது பலமுறை படையெடுத்தான். மேலும் அவன் கெதிரோன் என்ற நகரைக் கட்டி *(யோசு 15:41-இல் கெதரோத்து)* அங்கிருந்து யூதேயாவைச் சூறையாடினான். யோவான் கிரிக்கானு தன் தந்தை சீமோனுக்குச் செய்தி அனுப்ப, அவர் அவரையும் அவருடைய சகோதரன் யூதாவையும் கெந்தபேயுவுக்கு எதிராகப் போர் செய்ய அனுப்பினார் *(1 மக் 15:38)*.

யோவான் மோதின் என்ற இடத்தில் இரவு தங்கிவிட்டுச் சமவெளியைக் கடந்த போது, அங்கே கெந்தபேயுவின் படைக ளைக் கண்டார். சண்டையிட்டுக் கெந்தபேயு வைத் தோற்கடித்தார். பின்னர் கெதரோன் வரை துரத்திச் சென்று, அசுதோது கோபுரங்க ளைத் தீக்கிரையாக்கினார். ஏனெனில் வீரர் சிலர் அங்கு ஓடி ஒளிந்திருந்தனர். இவ்வெற் றிக்குப் பின் யோவான் கிரிக்கானு அமைதி யாய் யூதேயா நாட்டுக்குத் திரும்பினார் *(1 மக் 16:1)*.

**கெபரம்மோனி** *(CHEPPHAR-AMMONI அம் மோனியர் கிராமம்)*

பென்யமினின் நகரங்களில் ஒன்று *(யோசு 18:24)*. இந்நகரில் அம்மோனியர் குடியேறி இருந்ததால் இது அம்மோனியக் கிராமம் என்றழைக்கப்பட்டது. தற்போது இவ்விடம் எது என்று தெரியாது. சிலருடைய கருத்துப் படி இது பெத்லகேமுக்கு வடக்கில் 5 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து கெபிர்அனா என்ற இடமாக இருக்கலாம்.

**கெபா** *(GEBA - குன்று, உச்சி)*

பென்யமின் கோத்திரத்திற்கு ஒதுக்கப் பட்ட நகர்களிலிருந்து *(யோசு 18:24; 1 நாள் 8:6)* லேவியருக்குக் கொடுக்கப்பட்ட நகரங் களில் இதுவும் ஒன்று *(யோசு 21:17; 1 நாள் 6:60)*. இந்தப் பகுதி பரம்பரையாக உள்ள யூதா அரசின் வட எல்லையைக் குறிக்கிறது. *(2 அர 23:8; செக் 14:10; நெகே 11:31)*. மிக்மாகக் கணவாயின் தெற்கில் பாதுகாப்பா கவும் உள்ளது. இராமாவின் கிழக்கிலும், எருசலேமின் வடக்கு, வடகிழக்கில் 10 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.

யுத்த தந்திரத்திற்கு ஏற்ற இடமாக இருந்த தால், சவுல், யோனத்தான், தாவீது ஆகியவர் கள் பெலிஸ்தியர்களோடு இட்ட போரில் இந்த இடம் முக்கிய பங்கை வகித்தது *(2 சாமு 13:16;14:5; 2 சாமு 5:25; 1 நாள் 14:16)*. இந்த வாசகங்களில், இப்பகுதியில் காணப் படும் கிபயா, கிபயோன் ஆகிய இடங்களைக் கவனமாக வேறுபடுத்த வேண்டும். இவற்றைக் கெபாவுடன், எபிரேய வாசகத் தில் குழப்ப வாய்ப்பு இருக்கிறது *(எ. கா.*

2 சாமு 5:25; 1 நாள் 14:16). அரசன் ஆசா யூத மக்கள் அனைவரையும் ஒன்று திரட்டி இராமாவைக் கட்டும்படி பாசா தயாரித் திருந்த கற்களையும் மரங்களையும் எடுத்து வந்து கெபாவையும் மிஸ்பாவையும் கட்டிப் பலப்படுத்தினார் (1 அர 15:22; 2 நாள் 16:6). எருசலேமை நோக்கிப் படையெடுத்த பகை வரது படைகள் முன்னேறிய பாதையில் அமைந்த முக்கிய இடங்களில் ஒன்றாகக் கெபாவை எசாயா குறிக்கிறார் (எசா 10:29). நாடு கடத்தப்பட்ட பின்பு மீண்டும் பாபி லோனியாவிலிருந்து மக்கள் திரும்பி வந்து இங்குக் குடியேறினர். அவர்களில் பெரும் பாலானோர் பென்யமின் கோத்திரத்தினர் (எஸ் 2:26;நெகே 7:30;11:31;12:29). அறிஞர் கள் பலர் கெபாவை இக்கால எபாவாக அடையாளம் காட்டுகின்றனர்.

**கெபார் (CHEBAR)**

ஒரு நதியின் பெயர். இந்நதியின் பக்கம் அமைந்துள்ள தெல்-அபீபு என்ற ஊரில்தான் இறைவாக்கினர் எசேக்கியேல் நாடு கடத் தப்பட்ட தன் மக்களோடு வாழ்ந்தார் என்று எண்ணப்படுகிறது. இவ்விடத்தில்தான் அவ ருக்கு இறைவாக்குக் காட்சிகள் அருளப்பட் டன (எசே 1:3;3:15.23;10:15.20.22;43:3). இது பாபிலோனுக்கு அருகிலுள்ள படகுகள் செல்லக்கூடிய யூப்பிரத்தீசுவின் கால்வாயாக இருக்கலாம். இது தென்கிழக்கிலிருந்து நிப் பூருக்குக் கிழக்காக ஓடி உருக்குக்கு (விவி லிய எரேக்கு) அருகில் மீண்டும் யூப்பிரத்தீ சோடு சேருகிறது. சிலர், இது இக்காலச் சாத்து ஏன்-நில்லாக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.

**கெபால் (GEBAL - மலை, எல்லை)**

திரிபோலிக்கும் பெய்ரூட்டிற்கும் இடை யில் உள்ள பெனிசிய நகரம் (இப்பொழுது கெபெயில் என்றிருக்கிறது). மத்திய தரைக் கடல்கரையில் பெய்ரூட்டுக்கு வடக்கில் 32 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்விடம் புள்தாள் வியாபாரத்தின் மையமாக விளங்கி யதால் கிரேக்கர்கள் இதைப் பிப்லோசு என் றழைத்தனர். இது கப்பல் கட்டும் வியாபாரத் தில் ஒரு முக்கியமான இடம் ஆகும். இதைச் சுற்றிக் கப்பல் கட்டுவதற்குத் தேவையான லெபனோன் கேதுரு மரங்கள் அதிகம் கிடைத்தன. கப்பல்கள் தேவைப்பட்ட எல்லா அரசர்களுக்கும் இது முக்கிய நகர மாக விளங்கியது. எகிப்து, எமோரியா, அசீரியா ஆகிய இடங்களிலிருந்து போதிய அளவு தூரத்தில் அமைந்திருந்ததால் பேரரசு களின் ஆதிக்கத்தைத் தவிர்க்க முடிந்தது. ஆனால் அதே சமயம் வியாபாரத்திற்கும் பண்பாட்டிற்கும் இது வசதியான சந்திப்பு இடமாக விளங்கியது.

கெபால் மேற்காசியாவின் மிகப்பழைய நகரங்களில் ஒன்று; நீண்ட வரலாற்றைக் கொண்டது. இவ்விடத்தில் புதிய கற்காலத் திலேயே குள்ளமான மக்கள் வாழ்ந்திருந்திருக் கின்றனர் என்பதற்கு மனித எலும்புச் சான்று கள் கிடைத்துள்ளன. இவர்கள் வட்டமான குடிசைகளிலோ வீடுகளிலோ வாழ்ந்து வந் தார்கள். இறந்தவர்களைத் தாழிகளில் புதைத்து வந்தார்கள். என்ன மொழி பேசி னார்கள் என்பது தெரியவில்லை. கி.மு. 4-ஆம் ஆயிரமாண்டு இறுதியில் இந்தப் பண்பாடு திடீரென அழிந்துவிட்டது.

அதே நேரத்தில் புதிய மக்களினம் பிப் லோசிலும், பெனிசியாவிலும், கானானிலும் தோன்றியது. அவர்கள் பண்பட்ட நகர வாழ்க்கை நடத்தினார்கள். பிப்லோசில் புதிய கட்டடக்கலை பயன்படுத்தப்பட்டது. வீடுகளும் ஆலயங்களும் கட்டப்பட்டன. புதிய நகரம் மதில் சுவர்களால் பாதுகாக்கப் பட்டது. தொழில் நுட்பங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டன. வண்டிச்சக்கரம், கப் பல்கள், மட்பாண்டச் சக்கரம், அனைத்திற் கும் மேலாகப் புதிய வெண்கலம் என்ற உலோகப் பொருள் முக்கியமானதாகக் கண்டு பிடித்தார்கள். வடக்கிலிருந்து பெனிசியா வுக்கு வந்தவர்களால் இது அறிமுகப்படுத் தப்பட்டது. அவர்கள் மட்டும் படையெடுக்க வில்லை; செமித்தியர்களும் அவர்களோடு ஒன்றாகக் கலந்தனர். இந்தக் கலப்பு இனம் தான் பெனிசியர்கள் என்று கிரேக்கர்களால் அழைக்கப்பட்டது. 4-ஆம் ஆயிரமாண்டு முடிவில் பெனிசியர்களின் முக்கிய நகரங்க ளில் ஒன்றாகக் கெபால் விளங்கியது.

இந்த நகரமானது எகிப்தியர்களால் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதற்குக் கெபால் ஆலயங்களின் சிதைவுகளிலிருந்து அகழ்ந்தெடுக்கப்பட்ட பொருட்கள் சான்று கூறுகின்றன. தீனிய காலத்து (கி.மு. 3,000) உருளைகளும், பார்வோன்கள் பலரின் பெயர்களைக் கொண்ட சாடிகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

கெபால் பற்றிய எகிப்திய அக்கறைக்கு மதக்காரியங்கள் மட்டும் காரணமன்று. கெபாலிலிருந்து எண்ணெய், சுவையூட்டும் மணப்பொருட்கள், இரசம், தோல் போன்ற சில பொருட்களும் ஏற்றுமதி செய்யப்பட்டன. எகிப்தியர்களுக்குக் கப்பல்களும் கப்பல் கட்டுவதற்கான கேதுரு மரங்களும் தேவைப்பட்டன.

கி.மு. 3-ஆம் ஆயிரமாண்டின் முடிவில் கெபால் அழிக்கப்பட்டு எரிக்கப்பட்டது. புதிய நகரம் 19, 20-ஆம் நூற்றாண்டுகளில் கட்டப்பட்டது. செமித்தியர்களும் எமோரியர்களும் அரசாட்சி செய்து வந்தனர். எமோரியர்கள் ஆட்சி புரிந்து வந்தாலும் மக்களினம் கலப்பினமாகவே இருந்தது. இத்தியர்களும் கூரியர்களும் குடியேறினர். இவர்கள் வெண்கல ஆயுதங்களையும், மட்பாண்டத் தொழிலையும் கொண்டு வந்தனர். எகியன் தீவுகள் கலாச்சார ஆதிக்கம் செலுத்தின. கி.மு. 2-ஆம் ஆயிரமாண்டு மத்தியில் கெபாலைக் கூரியர்கள், இத்தியர்கள், சிறிது காலத்திற்கு மித்தானியர்கள் ஆகியோர் ஆட்சி செய்தனர். ஆனால் அரசர்களின் பெயர்கள் செமித்தியர்களுடையதாகும். அரமேயம் ஆதிக்கம் செலுத்தியது. கி.மு. 14-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த இலிப்-ஆதி என்ற அரசன் எகிப்திய மன்னருக்கு விசுவாசமுள்ளவனாக இருந்தான் என்று தெல் ஏல் அமர்னா ஏடுகள் கூறுகின்றன. அதற்குப் பின் வந்த நூற்றாண்டுகளில் அந்தச் சூழ்நிலை மாறியது.

நேர்கோடு நெடுங்கணக்கில் எழுதப்பட்ட எழுத்துச் சான்றுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் மிகவும் முக்கியமானது பிப்லோசில் கி.மு. 1,000-ஐ ஒட்டிய அகிராம் கல்வெட்டுகள் ஆகும்.

இந்த நூற்றாண்டுகளில் வியாபாரத்திலும் கப்பல் கட்டுவதிலும் கெபால் பெரும் பங்கெடுத்தது. கெபாலில் உள்ளவர்கள் கடல் மனிதர்களாகவும், நல்ல கொத்தர்களாகவும் விளங்கினார்கள் என்று விவிலியம் சொல்லுகிறது (1 அர 5:18;எசே 27:9; யோசு 13:5). கெபால் இஸ்ராயேலரால் கைப்பற்றப்படவில்லை.

மற்றப் பெனிசிய நகரங்களைப்போல் கெபாலும் அசீரியர்கள், பாபிலோனியர்கள், பாரசீகர்கள், கிரேக்கர்கள், உரோமையர்கள் ஆகியோரால் கைப்பற்றப்பட்டது. இன்று இங்குக் காணப்படும் முக்கிய சிதைவுகள் கிரேக்க, உரோமையர் காலத்தைச் சேர்ந்தவையாகும். இவற்றோடு கி.பி.11-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட சிலுவைப்போர் வீரர்களின் பெரிய கோட்டையும் காணப்படுகிறது.

2. சாக்கடலுக்குத் தென்கிழக்கில் உள்ள மலைப்பகுதி. பெத்ராவிற்கு அருகில் உள்ளது. இன்று கிபால் என்று அழைக்கப்படுகிறது. இது மோவாபு, அம்மோன், அமலேக்கு மற்றும் பிற நாடுகளோடு சேர்ந்து இஸ்ராயேலுக்கு எதிராகக் கூட்டணி அமைத்ததாக சங் 83:7-இல் கூறப்பட்டுள்ளது.

**கெபிரா** (CHEPHIRAH - குக்கிராமம்)

கிபயோன் நகரத்தை அடுத்து இஸ்ராயேலரோடு சமாதான உடன்படிக்கை செய்த ஒரு கீவியர் நகரம் (யேசு 9:17). இங்குப் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட நிகழ்ச்சிக்குப்பின் இஸ்ராயேலர் மீண்டும் குடியேறினர் (எஸ் 2:25; நெகே 7:29). ஏல்-கிப் (கிபயோன்) நகரத்திற்குத் தென்மேற்கில் 8 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து கிபிரே என்பது இந்த இடமாக இருக்கலாம்.

**கெபிரோன், எபிரோன்** (HEBRON - குழு கூட்டமைப்பு) - ஆள்

1. ஒரு லேவியர். கோகாத்தின் மூன்றாம் மகன் (யாத் 6:18; எண் 3:19; 1 நாள்

*6:2.18;23:12)*. நான்கு புதல்வர்களின் தந்தை *(1 நாள் 23:19;24:23)*. அவருடைய வழித் தோன்றல்கள் கெபிரோனியர் *(எண் 3:17;26:58; 1 நாள் 26:30-31)* அல்லது கெபி ரோனின் புதல்வர்கள் *(15:9)* என்றழைக்கப் பட்டனர்.

2. ஒரு காலேபியர். மாரேசாவின் புதல் வர். கோராகு, தப்புவாகு, இரக்கேம், செமா ஆகிய நான்கு புதல்வர்களுக்குத் தந்தை *(1 நாள் 2:42-43)*. இதுவும் மரபுமுறைப்பட்டிய லில் வரும் மற்றப் பெயர்களும் இடப் பெயர்களாக இருக்கலாம்.

**கெபிரோன், எபிரோன்** (HEBRON) - இடம்

கெபிரோன் என்பது எருசலேமிற்குத் தெற்கே 30 கி.மீ. தொலைவிலும் பெத்லகே மிற்குத் தென்மேற்கே 22 கி.மீ.தொலைவி லும் உள்ள நகரமாகும். இந்நகரானது கெபி ரோன் பள்ளத்தாக்கின் கிழக்குப் பகுதியில் இருக்கின்றது. அவ்விடத்தில் கிணறுகளுக் கும், நீரூற்றுகளுக்கும் குறைவில்லை. இந் நகரமானது ஏர்-ருமெயிதே என்ற குன்றின் மேல் கட்டப்பட்டிருந்தது. இது தற்போ தைய அதே பெயருடைய நகரத்திற்கும் மேற்குப் புறத்தில் இருந்தது. தற்போதைய நகரானது குலத்தந்தையர்களின் கல்லறை களைச் சுற்றிக் கட்டப்பட்டிருக்கிறது. இந்நக ரின் இன்றையப் பெயரானது ஏல்-கலீல் எனப் படுகின்றது. இச்சொல்லுக்கு (இரக்கமுள்ள வரின், அதாவது இறைவனின்) நண்பன் என்பது பொருள். இது ஆபிரகாமுக்கு அளிக் கப்பட்ட சிறப்புப்பெயரைப் பிரதிபலிக்கிறது *(2 நாள் 20:7; எசா 41:8)*. குகைக்கு மேல் உள்ள பள்ளிவாசலானது ''காராம் ஏல்-கலில்'' என்று அழைக்கப்படுகிறது. இதற்கு (இரக்கமுள்ளவரின்) நண்பர் உறையும் புனி தமான இடம் என்பது பொருள்.

கெபிரோன் என்பது யூதா நாட்டிலுள்ள கானானிய நகரமாகும். இந்நகரானது எகிப் திலுள்ள சோவான் (தனிசு) என்ற நகருக்கு ஏழு ஆண்டுகளுக்கு முன்பே கட்டப்பட் டிருந்தது *(எண் 13:22)*. ஆபிரகாம் வாழ்ந்த காலத்தில் இப்பகுதியானது இத்தியர்களும், எமோரியர்களும் வாழ்ந்துவந்த பகுதியாக இருந்தது; எனவே ஆபிரகாம் தனது குடும் பத்தில் இறந்தவர்களை அடக்கம் செய்வ தற்கு இத்தியர்களின் தலைவனாகிய எபிரோ னிடமிருந்து ஒரு குகையை விலைக்கு வாங்க வேண்டியிருந்தது *(ஆதி 23:8;14:13)*. இங்கு ஆபிரகாம் *(25:9-10)*, சாரா *(23:17-19)*; ஈசாக்கு, ரபேக்கா, லேயா, யாக்கோபு ஆகி யோர் *(49:29-32; 50:12-13)* அடக்கம் செய்யப் பட்டனர்.

முதன்முதலில் இந்நகரானது கிரியத்தா ரிபா என்று அழைக்கப்பட்டது. பின்னர் கெபிரோன் என்று அழைக்கப்பட்டது *(ஆதி 23:2; 35:27;யோசு 15:24;20:7;21:11;நெகே 11:25)*. இந்த இரண்டு பெயர்களுக்கும் இடையே உள்ள வரலாற்றுத் தொடர்பு தெளிவாக இல்லை. கிரியத்தாரிபா என்ற பெயரானது அனாக்கியருள் பெரியவனாகக் கருதப்பட்ட 'அர்பா' என்பவனின் பெயரை வைத்து எழுந்த பெயராகும் என்று விவிலிய மரபு கூறுகின்றது *(எண் 13:22;யோசு 14:15;15:13)*.

கி.மு. 14ஆம் நூற்றாண்டில் கெபிரோனின் எல்லைப் பகுதியானது அந்நாட்டைச் சேர்ந்த இளவரசர் சுவர்தாத்தா என்பவ ரால் ஆட்சி செய்யப்பட்டுவந்தது. இவரைப் பற்றிய குறிப்புகள் அமர்னாக் கடிதங்களில் காணப்படுகின்றன. கி.மு.13-ஆம் நூற்றாண் டில் அனாக்கிமின் புதல்வர்களாகிய அகி மான், கேசாய், தல்மாய் போன்றவர்கள் கெபிரோனில் வாழ்ந்து வந்தனர் *(எண் 13:22)*. ஒரு தலைமுறைக்குப்பின் கெபிரோ னின் கிழக்குப்பகுதியிலிருந்து கானான் வெற்றிகரமாகத் தாக்கப்பட்டது

யோசுவாவின் கையிலிருந்த கிபயோ னைக் கைப்பற்றுவதற்காகத் தெற்குக் கனா னிய அரசர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து எருசலேம் அரசனான அதோனிசெதேக்கின் தலைமையில் யோசுவாவிற்கு எதிராகப் போரிட்டனர். இந்தப் போரில் யோசுவாவா லும் அவரது படைவீரர்களாலும் கெபிரோ னின் அரசன் ஒகாம் கொலை செய்யப்பட்

டார் (யோசு 10:1-24). பின் யோசுவா கெபி ரோனைக் கைப்பற்றி அங்குள்ள மக்கள் அனைவரையும், தெபீர், அனாபு மற்றும் பிற மலைப்பகுதிகளில் குடியேறியிருந்த வர்களையும் தம் வாளுக்கு இரையாக்கினார் (யோசு 10:36-37;11:21-22). புதைபொருள் ஆராய்ச்சியின்படி உடனே இஸ்ராயேல் மக் கள் தெபீரில் வந்து குடியேறியதுபோல் தோன்றுகிறது (நீதி 1:11-12). ஆனால் கெபி ரோனில் அனாக்கிமின் புதல்வர்கள் மீண் டும் வந்து குடியேறியதாகவும் யோசுவா இறந்தபின் காலேபின் படைகள் கெபி ரோனை மீண்டும் கைப்பற்றும் வரை இஸ் ராயேலர்களின் ஆதிக்கம் அங்கு வளர வில்லை என்றும் குறிப்புக் காணப்படுகிறது (யோசு 14:13தொ; 15:13-14;நீதி 1:10.19-29; யோசு 10:36-39; 11:21-22). கெபி ரோனைக் கைப்பற்றிய கருத்துப்பற்றி விவி லியத்தின் உரையானது அவ்வளவு தெளி வாக இல்லை. கெபிரோன் நகரானது லேவி யர்களின் நகராகவும், அகதிகளின் நகராக வும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது (யோசு 20:7;21:10-13;1 நாள் 6:57).

தாவீதினுடைய தொடக்ககால வாழ்க்கை யைப் பற்றிய நிகழ்ச்சிகளில் கெபிரோன் முக்கிய இடம் வகிக்கின்றது. தாவீதுக்கும் அவரது மக்களுக்கும் செய்த பணிகளுக்காக நன்கொடை பெற்ற நகரங்களில் கெபிரோ னும் உள்ளடங்கும். இங்கு இவர் யூதாவின் அரசராக அபிடேகம் செய்யப்பட்டார். இவ ரது ஆட்சிக்காலத்தின் முதல் ஏழரை ஆண்டு களில் கெபிரோன் நகரானது தென்னாட்டு அரசின் தலைநகராக விளங்கியது. அப்ச லோம் உட்பட தாவீதின் புதல்வர்களில் பலர் கெபிரோனில்தான் பிறந்தனர். இசு போசேத்து (இசிபாகால்) என்பவரின் தளபதி யாகிய அப்னேர் என்பவர் வடநாட்டைத் தாவீதின் அரசாட்சிக்குள் கொண்டுவர எடுத்த முயற்சியில் யோவாபாலும், அவரது சகோதரராலும் கொல்லப்படுகின்றார். அப் னேர் இறந்தபின் கெபிரோனில் அடக்கம் செய்யப்பட்டார். அப்னேரின் இறப்பிற்குப் பின் இசுபோசேத்தின் படைத் தலைவர்கள் இருவர் அவரைக் கொன்று, பரிசுபெறும் நோக்குடன் அவரது தலையினைக் கெபிரோ னில் உள்ள தாவீதிடம் கொண்டுவந்தனர். தாவீது அவர்களின் கொடுமையான செய லைக்கண்டு கோபமுற்று அவர்கள் இருவ ரையும் கொலை செய்கின்றார். இசுபோசேத் தின் தலையினை அப்னேரின் கல்லறையில் அடக்கம் செய்கின்றார். இசுபோசேத்து இறந்தபின் வடநாட்டு அரசும் தென்னாட்டு அரசும் இணைகின்றது. தலைநகரம் எருச லேமிற்கு மாற்றப்படுகின்றது (2 சாமு 2:1-55;1 அர 2:11; 1 நாள் 3:1-4; 29:17).

அப்சலோம் தன் தந்தை தாவீதுக்கு எதிரா கச் சதித்திட்டம் தீட்டி, கிளர்ச்சி உருவாக்கும் இடமாகக் கெபிரோன் மாறிவிட்டது (2 சாமு 15:7-10). எருசலேமில் வாழ்ந்த ரெகப யாம் கெபிரோனை அரணுள்ள நகராகக் கட்டியெழுப்பினான் (2 நாள் 11:5.10). கி.மு. 918 -இல் சிசாக்கு என்பவரால் கைப்பற்றப்பட்ட பாலஸ்தீனப் பகுதிகளைப்பற்றிய பட்டிய லில் குறிப்பிடப்பட்டுள்ள 'அபிராம் நிலம்' என்பது கெபிரோனைக் குறிக்கலாம். கி.மு. 701 - இல் கெபிரோனானது சனகெரிபுவால் கைப்பற்றப்பட்டு கி.மு. 597-இல் நெபுகத் னேசரால் அழிக்கப்பட்டது.

இஸ்ராயேலர்கள் அடிமைத்தளையி லிருந்து திரும்பி வந்தபொழுது கெபிரோன் பகுதியானது இதுமேயர்களால் உடைமை யாக்கிக் கொள்ளப்பட்டிருந்தது. கி.மு. 164 வரை இப்பகுதியானது இதுமேயர்களின் கையில் இருந்தது. அதன்பின் யூதா மக்க பேயு இந்நகரைக் கைப்பற்றி அதைத் தீக்கிரை யாக்கினார் (1 மக் 5:65). பெரிய ஏரோதின் ஆட்சிக்காலத்தில் இந்நகர் மீண்டும் கட்டி யெழுப்பப்பட்டது. கி.பி. 68-இல் யூதப்புரட்சி யாளர்களில் ஒருவராகிய சீமோன் என்பவர் கெபிரோனின் மீது திடீர்த் தாக்குதல் செய்து சூறையாடினார். இதற்குப்பின் செராலியு என்ற உரோமைத் தளபதி இந்நகரைக் கைப் பற்றித் தீக்கிரையாக்கினார். புதிய ஏற்பாட் டில் இதைப்பற்றிய குறிப்புக்கள் காணப்பட வில்லை. சிலுவைப்போர்கள் நடந்த சமயத் தில் இந்நகருக்கு அருகில், உள்ள 'புனித ஆபிரகாமின் கல்லறை' பற்றிய குறிப்புகளே

காணப்படுகின்றன. 1168-இல் ஆயர் தங்கும் இடமாக இந்நகர் மாறியது. 1187-இல் இந் நகர் முஸ்லீம்களின் ஆட்சியின் கீழ் வந்தது.

**கெபெர்** (GEBER - வலிமையுள்ளவன்)

ஊரியாவின் மகன். சாலமோனின் 12 அதி காரிகளில் இவரும் ஒருவர். இவர் எமோரிய அரசன் சிகோனுக்கும், பாசானின் அரசன் ஓகுக்கும் உரிய நாடாகிய கிலயாது என்ற மாவட்டத்தின் அதிகாரி (*1 அர 4:19*). அறி ஞர் சிலர் இவர் பென்-கெபரின் தந்தையா வார் என்று கருதுகின்றனர்.

**கெபேர், எபேர்** (HEBER)

1. பெரீயாவின் மகனும் ஆசேரின் வழித் தோன்றலுமாவார் (*ஆதி 46:17; 1 நாள் 7:31-32*). ஆசேர் கோத்திரத்தின் ஒரு முக்கிய மான குலப்பெயர் முன்னோர் (*எண் 26:45*). அறிஞர் சிலர் கருத்துப்படி, இப்பெயர் கபிரூ (அபிரூ) அல்லது எபிரேயர் என்ற பெயர்களுடன் தொடர்புபடுத்தப்படுகிறது.

2. கோபாபு (ஒபாபு) வழிவந்த ஒரு கேனி யர். கேனியச் சமூகத்திலிருந்து பிரிந்து, கெதேசில் குடியேறினார் (*நீதி 4:11*). சிசரா வைக் கொன்ற யாவேலின் கணவன் (*4:12-24*).

3. யூதாவைச் சேர்ந்த எஸ்ரா, அவருடைய யூத மனைவி ஆகியோரின் வழித்தோன்றல். சோக்கோவை நிறுவியவர் (*1 நாள் 4:18*).

4. பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர். எல்பாகாலின் மகன் (*1 நாள் 8:17*). ஒரு வேளை 1 நாள் 8:12-இல் வரும் ஏபேரும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**கெப்சிபா, எப்சிபா** (HEPHZIBAH - அவளில் உள்ளது என் மகிழ்ச்சி)

1. எசேக்கியா அரசனின் மனைவியும் மனாசேயின் தாயும் ஆவாள் (*2 அர 21:1*).

2. 'கடவுள் உன்னிலே மகிழ்ச்சி அடை வார்' என்று பொருள் கொடுக்கும் இப் பெயர் எருசலேம் மீண்டும் அமைக்கப்பட்டதன் அடையாளப் பெயராகும் (*எசா 62:4*).

**கெமரியா** (GEMARIAH - யாவே நிறைவேற்றி விட்டார்)

1. பாபிலோனுக்குக் கொண்டு போகப் பட்ட இஸ்ராயேல் மக்களுக்கு எரேமியா இறைவாக்கினர் எழுதிய கடிதத்தைக் கொண்டு சென்ற இவர், யூதாவின் அரச னான செதேக்கியாவிடம் இருந்து பாபிலோ னிய அரசன் நெபுகத்னேசாரிடம் அனுப்பப் பட்ட தூதுவர் ஆவார் (*எரே 29:3*). இவரு டைய தந்தையாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் இலிகியா என்பவர் யோசியாவின் ஆட்சிக் காலத்தில் பெரிய குருவாக இருந்த இலிகியா வும் அல்லர் (*2 அர 22:4*); எரேமியா இறை வாக்கினரின் தந்தையுமல்லர் (*எரே 1:1*).

2. செயலாளரான சாபானின் மகன். இவர் இருந்த மேல் முற்றத்துக் கருவூல அறையில் தான் பாரூக்கு எரேமியா இறைவாக்கினரின் வார்த்தைகளை ஓலைச்சுருளிலிருந்து வாசித் தார் (*எரே 36:10-12.25*). கெமரியாவின் மகன் மீக்காயா ஓலைச்சுருளிலிருந்து வாசிக்கப்பட் டவைகளையெல்லாம் கேட்டு அரசனது அரண்மனையில் இருந்த தலைவர்களிடம் அறிவித்தான். ஓலைச்சுருளிலிருந்து வாசிக் கப்பட்டதைக் கேட்ட யோயாக்கிம் அரசன் அவ்வோலைச் சுருளை எரிக்க முயன்ற போது அதை எரிக்காமல் அரசனைத் தடுக்க முயன்றவர்களில் கெமாரியாவும் ஒருவர்.

**கெமல்லி** (GEMALLI - ஒட்டகம் உடையவன்)

தாண் கோத்திரத்திலிருந்து கானான் நாட் டைச் சுற்றி வேவு பார்க்கும்படி அனுப்பப் பட்ட அம்மியேல் என்பவரின் தந்தையா வார் (*எண் 13:12*). கெமல்லி என்ற சொல் 'நிறைவு' அல்லது 'ஒருவருக்கு நன்மை செய்ய' என்பதைக் குறிக்கப்பயன்படும் எபி ரேய சொல்லிலிருந்து உருவாகியிருக்கலாம்.

**கெமுவேல்** (KEMUVEL - இறைவன் உறுதி யாக உள்ளார்)

1. இவர் ஆராமின் தந்தையும், ஆபிரகா மின் சகோதரனாகிய நாக்கோரின் மைந்தனு மாவார். அரமேயர்களின் குலப்பெயர் முன் னோர் (*ஆதி 22:21*).

2. சிப்தானின் மகன்; எப்பிராயிம் கோத்திரத்தின் ஒரு தலைவனும், கானான் நாட்டை இஸ்ராயேல் மக்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்க நியமிக்கப்பட்டவருள் ஒருவரும் ஆவார் (எண் 34:24).

3. லேவியரான இவர் லேவியருக்குத் தலைவரான கெசபியாவின் (அசபியா) தந்தை. மேலும் இவர் தாவீது மன்னன் காலத்தில் வாழ்ந்தவர் (1 நாள் 27:17).

**கெமோசு** (CHEMOSH)

மோவாபு இனமக்களின் தெய்வத்தின் பெயராகும். மோவாபு மக்கள் கெமோசின் மக்கள் என்றும் அழைக்கப்பட்டனர் (எண் 21:29; எரே 48:46). மோவாபு நாட்டு அரசர்களுக்குக் கெமோசு என்று பெயருண்டு. சனகெரிபு வரலாற்று ஏட்டின்படி எசேக்கியா காலத்தில் வாழ்ந்த மேசா, கம்முசுனாத்பி இவர்களின் தந்தைபெயர் கெமோசு என்பதாகும். சாலமோன் மன்னனால் கெமோசு தெய்வத்திற்கு ஒரு பீடம் எருசலேமுக்குக் கிழக்கில் உள்ள மலையில் கட்டப்பட்டது (1 அர 11:7). ஆனால் யோசியா அரசன் காலத்தில் இடிக்கப்பட்டது. மேசாவின் குறிப்புப்படி கெமோசு அதார் என்ற வீனஸ் விண்மீனோடு தொடர்புபடுத்தப்படுகிறது. எனவே கெமோசு என்பது மோவாபு மக்களுக்கு ஒரு விண்ணகத் தெய்வமாக இருக்கலாம் என எண்ணப்படுகிறது. நீதி 11:24-இன்படி கெமோசு, அம்மோன் நாட்டு மில்க்கோம் என்ற தெய்வம் எனச் சுட்டுகிறது.

**கெம்தான், எம்தான்** (HEMDAN - விருப்பம், இன்பம் காணுதல்)

ஏதோமைச் சேர்ந்த ஒரு கோரியர் (ஓரியர்); தீசோனின் முதல் மகனும் சேரியின் வழித்தோன்றலும் ஆவார் (ஆதி 36:26). 1 நாள் 1:41-இல் இவர் கம்ரான் (அம்ரான்) என்று அழைக்கப்படுகிறார்.

**கெம்பு** (JACINTH)

விலையுயர்ந்த பல்வேறு இரத்தினக் கற்களில் ஒன்று. சிவப்பு-ஆரஞ்சு நிறக்கல். தீர்ப்புக் கூறும் மார்புப் பட்டையில் பதிக்கப்பட்டிருக்கும் கற்களில் மூன்றாவது வரிசையில் முதலாவதாக அமைந்துள்ளதாகும் (யாத் 28:19; 39:12).

புதிய ஏற்பாட்டு, புதிய எருசலேமின் அடிக்கற்களில் பதினொன்றாவதாக வருவது கெம்புக் கல்லாகும் (திருவெளி 21:20). இச்சொல்லின் அடைமொழிவடிவம் திருவெளி 9:17-இல் வரும் காட்சியில் தோன்றும் குதிரையின் மேல் ஏறிவந்தவர்களின் மார்புக் கவசத்தை விவரிக்கப் பயன்பட்டுள்ளது. அக்கவசம் நெருப்பு, நீல, கந்தக நிறத்திலிருந்தது.

**கெயிலா** (KEILAH - கோட்டை) - ஆள்

கர்மியரான கெயிலா யூதாவின் வழித்தோன்றல்கள் பட்டியலில் ஒதியாவின் பேரனாகக் குறிக்கப்படுகிறார் (1 நாள் 4:19).

**கெயிலா** (KEILAH - கோட்டை) - இடம்

இது யூதேயாவிலுள்ள மதில் சூழ்ந்த ஓர் ஊர் (யோசு 15:44). தாவீது மன்னன் இந்நகரைப் பெலிஸ்தியர்களிடமிருந்து காத்தார். ஆனால் அம்மக்கள் தம்மைச் சவுலிடம் கையளிக்கக்கூடும் என அஞ்சிக் கெயிலாவை விட்டுப்பாலைவனத்திற்குப் பின்வாங்கினார் (1 சாமு 23:1-13). பாபிலோனியாவிலிருந்து திரும்பிய யூதர்கள் இந்நகரை ஆக்கிரமித்து மீண்டும் கட்டியெழுப்பினர் (நெகே 3:17-18). கில்தி (கெயிலா) நகரானது அமர்னாக் கடிதங்களில் பல இடங்களில் குறிப்பிடப்படுகிறது. தற்போதைய கிர்பெத் கிலா பழைய கெயிலாவாக இருக்கலாம். இந்த இடம் எருசலேமுக்குத் தென்மேற்கில் 25 கி.மீ. தொலைவிலும் கெபிரோனுக்கு வடமேற்கில் 14 கி.மீ. தொலைவிலும் உள்ளது. இந்த இடம் தற்சமயம் பழங்கால அழிவுச் சின்னங்களையும், மதிற்சுவரையும், மலைக்குகைகளையும் கொண்டுள்ளது. இறைவாக்கினர் அபக்கூக்கு அடக்கம் செய்யப்பட்டிருப்பதாகக் கருதப்படும் பல இடங்களில் கெயிலாவும் ஒன்று.

**கெயுவேல்** (GEUEL - இறைவனின் மகிமை)

காது இனத்தைச் சேர்ந்தவர். மாக்கியின் மகன். கானானை வேவுபார்க்க அனுப்பப்பட்ட குழுவில் ஒருவர் (எண் 13:15).

**கெரசேனர் பகுதி, கெராசா (GERASENES, GERASA)**

கெரசேனர் என்பது அலக்சாந்தரால் அடித்தளமிடப்பட்ட கிரேக்கப் பண்பாடுகளைக் கொண்ட நகரம். பெரும்பாலும் இந்நகரானது அலக்சாந்தரின் தளபதியாகிய பெர்திக்காஸ்அல்லது அந்தியோக்கு எப்பிபானால் நிறுவப்பட்டிருக்க வேண்டும். இது தெக்காப் பொலியின் முக்கிய நகரம். அம்மானுக்கு வடக்கே 36 கி.மீ. தொலைவில் இன்று உள்ள யெராசு என்ற இடத்தில் இந்நகர் இருந்திருக்க வேண்டும். இயேசு புயலை அடக்கியபின் அவர் தமது சீடர்களுடன் கெரசேனரில்தான் வந்து இறங்கினார் என்று நம்பத்தகுந்த வாசகங்கள் கூறுகின்றன (மாற் 5:1; லூக் 8:26). இயேசு கெரசேனில் பேய்களை ஓட்டியதைக் கண்டு அச்சம் கொண்ட மக்கள், அந்நகரை விட்டு அகலும்படி அவரைக் கேட்டுக் கொண்டனர் (லூக் 8:26-39; மாற். 5:1-20).

இந்நகரின் அழிவுச் சின்னங்களில் அரங்கம், நீதிமன்றம், ஆலயங்கள் போன்றவை அடங்கும். இவையனைத்தும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் பேரரசர் அதிரியான் பார்வையிட்டுச் சென்ற பின்னும், மூன்றாம் நூற்றாண்டில் கெரசேன் மிக முக்கியமான விற்பனைத்தளமாக மாறிய பொழுதும் கட்டியெழுப்பப்பட்டவைகள்.

இரும்புக் காலத் தொடக்கத்தில் அம்மோனியர் இங்குக் குடியேறினர். நான்காம் அலக்சாந்தர் எப்பிபானினால் மீண்டும் அமைக்கப்பட்டது. கி.மு. ௮-இல் அலக்சாந்தர் யன்னாயு இதைக் கைப்பற்றினார். கி.மு. 63-இல் பாம்பே இதைக் கைப்பற்றி, தெக்காப்பொலியின் ஒரு பகுதியாக்கினார். செழிப்பான வியாபார ஏ மயமாகிய கெராசா முதல் யூத எழுச்சியின்போது யூதர்களால் தாக்கப்பட்டது. கி.பி.நான்காம் நூற்றாண்டில் இது ஒருமுக்கிய கிறிஸ்தவ மையமாகியது. கி.பி. 635-இல் மகமதியர்கள் இதைக் கைப்பற்றினர். 746-இல் நிகழ்ந்த நிலநடுக்கம் இந்நகரை அழித்தது.

**கெராசா (GERASA)**

காண்க. கெரசேனர் பகுதி.

**கெரார் (GERAR - இடைத்தங்குமிடம்)**

மத்திய தரைக் கடலுக்கு அருகிலும் கானான் நாட்டின் தெற்கு எல்லையிலும் அமைந்த ஒரு முக்கியமான நகரம். இதை ஆண்ட மன்னனோடு ஆபிரகாமும் ஈசாக்கும் நட்பு உடன்படிக்கை செய்து கொண்டார்கள் (ஆதி 20:26). ஆபிரகாமும் ஈசாக்கும் உடன்படிக்கை செய்து கொண்ட அரசனின் பெயர் அபிமெலக்கு. இது ஒரே அரசனின் பெயராக இருக்கலாம் அல்லது அரச குலப் பெயராக இருக்கலாம். கெரார் நகரத்து மக்கள் 'பெலிஸ்தியர்கள்' என்றுகுறிப்பிடப்பட்டுள்ளனர். ஆனால் இது கால வரிசைக்கு முரணானது. ஏனெனில் சில நூற்றாண்டுகள் கழித்துத்தான் பெலிஸ்தியர்கள் கெராரைக் கைப்பற்றினார்கள். எகிப்தியப்பதிவுக் குறிப்புக்களில் கெரார் நகரம் காணப்படவில்லை. எனவே இந்நகரம் எகிப்தியர்கள் படையெடுக்கும்போது சென்ற கடலோரப் பாதையில் அமைந்திருக்கவில்லை. 2 நாள் 14:13-14-இல் ஆசா எத்தியோப்பியர்களைக் கெரார் நகர் வரை விரட்டிச் சென்றதாகக் கூறப்பட்டுள்ளது.

இஸ்ராயேலர்களின் காலத்தில் பெலிஸ்தியர்கள் கெரார் நகரைக் கைப்பற்றினர். பிறகு யூதா குலத்தினர் அதை ஆண்டனர். இஸ்ராயேல் மக்கள் நாடு கடத்தப்பட்ட பின், கிரேக்கர்கள் இங்கு வந்து குடியேறினர்.

பெயேர்செபாவிலிருந்து வடகிழக்காக 24 கி.மீ. தொலைவிலும்,வாடி எசரியாவின் வடக்கேயும் இருக்கும் தேல் அபு குரைராதான் கெரார் நகரம் என்று வல்லுநர்கள் கருதுகிறார்கள்.

அகழ்வாய்வுகள் வெண்கல, இரும்புக் காலத்துப் பொருள்களைக் கண்டுபிடித்துள்ளன. இவற்றில் சில, மத்தியவெண்கலக் காலத்தில் இப்பகுதி மிகவும் செழிப்புற்றிருந்ததாகக் காட்டுகின்றன.

**கெரான்** (CHERAN - யாழ்)

குலத்தலைவனான தீசோனின் நான்காவது மகன். ஏதோம் நாட்டைச் சேர்ந்த கோரியர் (ஓரியர்) உபகுலத்திற்கு மூதாதையர் (ஆதி 36:26; 1 நாள் 1:41). இவர் சேயிர் நாட்டில் வாழ்ந்தார்.

**கெரிக்குலிசு** (HERCULES)

தீர் நகரில் ஐந்து வருடங்களுக்கு ஒரு முறை கொண்டாடப்பட்ட ஒலிம்பிக் விளையாட்டுக்களின் கடவுள். பழைய பெனிசியக் கடவுளான மெல்க்கார்த்துக்குப் பதிலாக நகரின் அரசனாகக் கருதப்பட்டது. தீர் நாட்டில் கெரிக்குலிசுக்குப் புகழ்ச்சிப் பலிகள் செலுத்தப்பட்டன. யாசோன் கெரிக்குலிசுக்குப் பலிசெலுத்த முந்நூறு வெள்ளித் திராக்மா என்ற நாணயங்களைக் கொடுக்க தூதுவர்களை எருசலேமிலிருந்து அனுப்பினார். ஆனால் அவைகளைக் கொண்டு போனவர்களே புறவினப் பலிகளுக்காக அவைகளைச் செலவிடுவது சரியல்ல என்றுகருதி வேறு செயல்களுக்குப் பயன்படுத்தவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள். பிறகு அவை கப்பல்களின் வேலைக்குச் செலவிடப்பட்டன (2 மக் 4:1 9).

**கெரிசிம்** (GERIZIM) - மலை

ஏபால் மலைக்குத் தெற்கேயுள்ள ஒரு மலை. இன்று யெபேல் எத்தோர் என்று அழைக்கப்படும் மலைதான் கெரிசிம் மலையாகும். இரண்டு மலைகளுக்குமிடையில் கிழக்கு மேற்காக ஒரு முக்கியமான கணவாய் அமைந்துள்ளது. அதன் கிழக்கு முனையில் செக்கேமும், இரு மலைகளுக்கிடையே உள்ள பள்ளத்தாக்கில் நாப்லுஸ் என்ற இடமும் உள்ளன. இம்மலை மத்தியதரைக்கடல் மட்டத்திலிருந்து ஏறக்குறைய 881 மீட்டர் உயரத்திலும் ஏபால் மலைக்கும் இம்மலைக்கும் இடையேயுள்ள பள்ளத்தாக்கிலிருந்து 210 மீட்டர் உயரத்திலும் அமைந்துள்ளது. இம்மலை எயேசின் என்னும் சுண்ணாம்புக் கற்களினால் ஆனது. எனவே இதன் உயர்ந்த பகுதி சாம்பல் நிறத்துடன் அச்சம் எழுப்பும் தோற்றம் உடையது. வியாபாரத்திலும், பாதுகாப்புப் பணியிலும் இம்மலை மிகவும் முக்கியம் வாய்ந்ததாகும். மேற்கு கிழக்காக எப்பிராயிம் மலை வழியாகச் செல்லும் முக்கிய சாலை இம்மலையின் பள்ளத்தாக்கில் அமைந்துள்ளது. தென்வடக்காக எருசலேமிலிருந்து கலிலேயாவுக்குச் செல்லும் சாலை மேற்கூறிய சாலையோடு செக்கேம் அருகில் இணைகிறது. மேலும் இங்குநீர்வளம் அதிகமாக இருந்ததால் முற்காலத்திலிருந்தே ஏராளமான மக்கள் இப்பகுதிக்கு வந்தனர்.

கரிசிம் மலை வரலாற்றில் மிகவும் புகழ் வாய்ந்ததாக இருந்த போதிலும், சமாரியர்கள் இதன் உச்சியில் பாஸ்கா விழாவைக் கொண்டாடி வந்த போதிலும், எபிரேய பழைய ஏற்பாடு இம்மலையைப் பற்றி நான்கு இடங்களில்தான் கூறுகிறது (உப 11:29;27:12; யோசு 8:33;நீதி 9:7). புதிய ஏற்பாட்டில் ''இந்த மலை'' என்றுதான் குறிப்பிடப்பட்டிருக்கிறது (யோவா 4:20-21.). இம்மலைக்கு ஆபிரகாமும் (ஆதி 12:6), யாக்கோபுவும் (ஆதி 33:18-20), யோசுவாவும் (யோசு 8:33) வந்து சென்றனர். அப்போது மதச்சடங்குகளும் நிறைவேற்றப்பட்டன. இருந்தபோதிலும் இம்மலையின் பெயர் விவிலியத்தில் அடிக்கடி இடம் பெறாதது வியப்புக்குரியது. தாவீது எருசலேமைத் தலைநகராக்கியது கெரிசிமின் புகழ் குறைந்ததற்குக் காரணமாக இருக்கலாம். யூத ஆசிரியர்களும், பதிப்பாசிரியர்களும் வேண்டுமென்றே கெரிசிம் பெயரை மூதாதையர்களின் வரலாற்றோடு இணைக்கவில்லை என்று சிலர் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

மோசே இஸ்ராயேல் மக்களுக்கு ஆசிர் வழங்குவதற்காக அவர்களைக் கெரிசிம் மலைமேல் ஏறி நிற்கச் சொன்னார் (உப 27:12). உப 11:29 இந்த ஆசிருக்கான தயாரிப்பையும், யோசு 8:30-35 அது நிறைவு பெற்றதையும் பற்றிக் கூறுகின்றன. அப்போது இஸ்ராயேல் மக்களில் பாதிப்பேர் கெரிசிம் மலையிலும் மற்றவர்கள் எபால் மலையிலும் நின்று கொண்டிருந்தனர். அவர்களுக்கு நடுவில் உடன்படிக்கைப் பேழை இருந்தது. யோசு 8:30-இன்படி கெரிசிம் மலையில்

அல்லாது ஏபால் மலையில் யோசுவா ஒரு பீடத்தை நிறுவிக் கற்களில் இறைவனின் சட்டங்களைப் பொறித்து வைத்தார். சமாரியர்களின் ஐந்நூல் ஏபாலுக்குப் பதிலாகக் கெரிசிமைக் கொண்டுள்ளது. கெரிசிம் மலையில் நின்று கொண்டு யோத்தாம் செக்கேம் மக்களுக்கு உவமை ஒன்று கூறினார் (நீதி 9:7). அதற்குப்பின் இவ்விடத்தைப்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை.

யோசிப்பசின் கூற்றுப்படி, சமாரியர்களும் யூதர்களும் பிரிந்தபோது கெரிசிம் மலையில் சன்பல்லாற்று ஒரு கோவிலைக் கட்டினார். சமாரியர்களின் கோவில் யோவான் கிரிக்கானு என்பவரால் அழிக்கப்பட்டது என்றும் யோசிபஸ் கூறுகிறார். சமாரியர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்குமிடையில் கடும் போட்டி நிகழ்ந்த காலத்தில் 6-ஆம் நூற்றாண்டில் கெரிசிம் மலையில் சேனோவாலும், யுஸ்தீயனாலும் இரு கிறிஸ்தவ ஆலயங்கள் கட்டப்பட்டன.

சமாரியர்களின் எண்ணப்படி, ஆபிரகாம் தன் மகனைப் பலியிடக் கட்டளையிடப்பட்டது இந்த மலையில்தான். இங்குதான் யோசுவா பீடம் கட்டினார். யோசு 24:26-இல் வரும் ''ஆண்டவரின் புனித இடம்'' இந்த மலைமேல் உள்ள ஆலயம்தான். நாடு கடத்தலுக்குப்பின் சமாரியர்கள் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் இம்மலைமேல் ஓர் ஆலயம் கட்டினர். இதை நான்காம் அந்தியோக்கு எப்பிபான் பங்கப்படுத்தினான் (2 மக் 6:2). இதை, கி.மு. 238-இல் யோவான் கிரிக்கானு அழித்தார். இருப்பினும் இவ்விடம் சமாரியர்களின் வழிபாட்டு மையமாகத் திகழ்ந்தது. சமாரியப் பெண் ''எங்கள் மூதாதையர் இந்த மலையில் வழிபட்டனர்'' என்று இயேசுவிடம் கூறுகிறாள் (யோவா 4:20). நப்லுசிலுள்ள ஒரு சிறிய சமாரிய சமூகத்தினர் இந்த மலையில் பாஸ்கு, ஐம்பதாம்நாள், கூடார விழா ஆகிய விழாக்களை இன்றும் கொண்டாடுகின்றனர்.

அகழ்வாய்வுகள் கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் அதிரியான் கட்டிய சேயுஸ் ஆலயத்தையும் ஒருவேளை யோவான் கிரிக்கானு அழித்த ஆலயத்தையும் வெளிக்கொணர்ந்துள்ளன. வட சரிவிலுள்ள மத்திய வெண்கலக்காலத்தைச் சேர்ந்த கட்டடம் யோத்தாம் அறிக்கையிட்ட இடமாக இருக்கலாம்.

**கெரியோத்து** (KERIOTH - நகரங்கள்)

இது மோவாபு நாட்டின் மதில் சூழ்ந்த நகரம் (எரே 48:24.41; ஆமோ 2:2). மோவாபு மன்னன் மேசா அத்தரோட்டின் தலைவனைக் கெரியோத்திலுள்ள கெமோசுக்குமுன் பிடித்து வந்தான். இந்தக் கெரியோத்தும், ஆர் நகரமும் ஒன்று எனக் கருதப்படுகிறது. ஏனெனில் ஆமோ 2:2 கெரியோத்தை மோவாபு நாட்டின் தலைநகரெனக் கூறுகிறது.

**கெரியோத்து - எட்சசுரோன்** (KERIOTH-HEZRON - பாதுகாக்கப்பட்ட நகரம்)

தென்கோடியில் இருக்கும் ஏதோமின் எல்லை ஓரமாக யூதா கோத்திரத்துக்குக் கிடைத்த ஓர் ஊர். காசோர் (ஆட்சோர்) என்றும் அழைக்கப்படுகிறது (யோசு 15:25). இந்த ஊர் பெயேர்செபாவின் மாவட்டத்தில் உள்ளது. இவ்வூரும் மாவோனிற்குத் தெற்கில் 7 கி.மீ. தொலைவில் உள்ள கீர்பெத் ஏல்-கரிய தெய்னும் ஒன்று எனக் கூறப்படுகிறது.

இஸ்காரியோத்தைக் ''கெரியோத்தின் மனிதன்'' என்றும் விளக்கும் அடிப்படையில் இவ்விடம் யூதாசு இஸ்காரியோத்தின் பிறப்பிடமாகக் கருதப்படுகிறது (யோவா 12:4;13:2.26;14:22).

**கெரீத்து, ஓடை** (CHERITH, BROOK)

உடனடியாக வரவிருக்கும் பஞ்சத்தை ஆகாபுக்கு அறிவித்தபின், இறைவனின் கட்டளைப்படி இந்த நீரோடையில்தான் எலியா இறைவாக்கினர் மறைந்து வாழ்ந்தார். ஓடை வறண்டு போகும்வரை இந்த நீரோடையருகிலே தங்கினார். இங்குக் காகங்கள் அவருக்கு உணவு கொண்டுவந்தன. இந்த நீரோடை குடிநீர் அளித்தது (1 அர 17:2-7). இப்பகுதி யோர்தானுக்குக் கிழக்கே காணப்பட்டதாலும் (17:3) எலியா

கிலயாது நாட்டைச் சேர்ந்தவர் ஆனதாலும், கெரித்து, மலைக்குகைகள் நிறைந்த கில யாது நாட்டிலுள்ள ஒரு சிற்றோடையாக இருக்க வேண்டும். இதை இப்போது அடை யாளம் காட்டுவது எளிதன்று.

**கெருபு, கெருபிம்** (CHERUB, CHERUBIM -வானதூதர்)

இறக்கை கொண்ட ஓர் எருது அல்லது அது போன்ற புராணக்கதைகளில் வருகின்ற ஒரு விலங்கு. இஸ்ராயேல் மக்கள் மெச பொத்தாமியா, கானான் புராணங்களி லிருந்து இதனை எடுத்துக் கொண்டனர்.

1. விவிலியக் குறிப்புகள்:- ஆதி *3:24*- இன்படி ஆண்டவர் மனிதனை ஏதோன் தோட்டத்திற்கு வெளியே துரத்தி விட்டார். அத்தோட்டத்திற்குக் கிழக்கே வாழ்வின் மரத்திற்குச் செல்லும் வழியைக் காப்பதற் குக் கெருபுகளையும், சுற்றிச் சுழலும் சுட ரொளி வாளையும் வைத்தார். இங்கு ஆசிரி யர், கெருபு என்ற சொல்லை, வாசகர் களுக்கு ஏற்கெனவே தெரிந்ததுபோல் பயன் படுத்துகிறார். *2* சாமு *22:11*; சங் *18:10*-இல் இறைவன் உலகிற்கு வரும்போது கெருபுக ளில் அமர்ந்துவருவதுபோல் சித்தரிக்கப்படு கிறார். இரண்டு வாசகங்களிலும் கெருபுகள் ''காற்றின் இறக்கைகளுக்கு'' இணையாக விவரிக்கப்படுகின்றன. எசே *9:3;10:15-22*- இலிருந்து இறைவாக்கினர் எசேக்கியேல் பார்த்த நான்கு இறக்கைகளும் நான்கு முகங்களும் கொண்ட ''உயிருள்ள விலங்குகள்'' *(1:5.13.15.19)* கெருபுகள் என் பது தெளிவு. இவற்றைப் பாதிமனிதனாக வும் பாதி விலங்காகவும் விவரிக்கும்போது, இறைவாக்கினர் அசீரிய, பாபிலோனியப் புராணங்களில் வரும் இரு உருவங்களை மனதில் கொண்டிருக்கலாம். நான்கு கெருபு கள் சேர்ந்து இறைவன் அரியணை அமர்ந் திருக்கும் பீடத்தைச் சுமந்து சென்றன.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பே, மரத் தால் செய்யப்பட்டு, பொன்னால் வேயப் பட்ட கெருபுகளைச் செய்து, இரக்க இருக்கை யின் இரண்டு பக்கங்களிலும் அவற்றை அடிப்பு வேலையாக அமைக்கும்படி, மோசேக்கு இறைவன் கட்டளையிட்டிருந் தார். இந்த இருகெருபுகளுக்கிடையிலிருந்து தான் யாவே மோசேயிடம் பேசி இஸ்ராயே லர்களுக்கு அவரது திட்டத்தை வெளிப்படுத் தினார் *(யாத் 25:18-22;எபி9:5)*. கெருபுகளின் சித்திரம் திருவுறைவிடத்துத் திரைகளிலும் திருத்தூயகத்திரையிலும் கலைத்திறனுடன் நெய்யப்பட்டிருந்தது *(யாத் 26:1.31;36:8.35* ஆகிய பகுதிகள் சுட்டுகின்றன). பிற்காலத்தில் சாலமோன் ஆலயச்சுவர்களில் இத்தகைய உருவங்கள் பொறிக்கப்பட்டன *(1 அர 6:29)*. உடன்படிக்கைப் பெட்டகத்தின்மேல் *(8:6-7)* ஒலிவ மரத்தால் செய்யப்பட்ட இரு கெருபுகள் திருத்தூயகத்தை அழகு செய்தன *(6:23-28)*. இத்தகைய உருவங்கள் ஆலயத்திரை யில் நெய்யப்பட்டிருந்தன *(1 நாள் 3:14)*. வார்ப்புக்கடலின் சட்டங்களிலும், பத்து வெண்கலத் தள்ளு வண்டிகளின் கைப்பிடி கள், குறுக்குக் கம்பிகள் ஆகியவற்றின் மேலும் கெருபுகள் பொறிக்கப்பட்டிருந்தன *(1 அர 7:29.36)*.

யாவே கெருபுகள் மேல் அரியணை வீற்றி ருப்பதாகப் பழைய ஏற்பாடு பலதடவை கூறுகிறது *(1சாமு 4:4;2 சாமு 6:2; 2 அர 19:15; எசா 37:16; சங் 80:1)*. உடன்படிக்கைப் பேழையின் மேலுள்ள இரக்கத்தின் இருக் கைகள் மேலுள்ள யாவேயின் அரியணை யைக் கெருபுகள் பாதுகாக்கின்றன. இவை அவருடைய காவலாளிகள்; அவருடைய பரிசுத்தத்தை அடையாளப்படுத்தும் சிறப் பான ஊழியர்கள். இதைத் திருவெளி *4:6*-இல் வரும் இறைவனது அரியணையைச் சூழ்ந்து நிற்கும் நான்கு உயிர்கள் பற்றிய விவரிப்பு தெளிவாக்குகிறது. எசேக்கியே லின் காட்சியில் வரும் ஆலய அணிகளில் கெருபுகளும் பங்கு வகிக்கின்றன (எசே *4:18.20.25*). எசே *28:14-16*-இல் வரும் கெருபு வால் காவல் செய்யப்படும் தீரின் அரச னைப்பற்றிய விவரிப்பு, அரசன் இந்த விண் ணக ஊழியரின் தயவில் உள்ளான் என்றும் அவனுடைய தவறுகளுக்காக அவர் அவ னைத் துரத்திவிடுவதையும் சுட்டுகிறது.

*2. பொருட்சான்றுகள்:-* அலெப்போ, கர்க்கமிசு, பிப்லோசு(கெபால்), தானாக்கு போன்ற மேற்காசிய இடங்களில் கண்டு பிடிக்கப்பட்ட சிலைகளிலும் புடைப்பகழ்வுச் சித்திரங்களிலும் கலைப்பண்புடைய கெருபுகள் காணப்படுகின்றன. நிம்ரூத்து, சமாரியா ஆகிய இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட தந்தப் பொருட்களில் இறக்கையுடைய உயிர்களும் மனித முகத்தோடு இரு இறக்கைகள், நான்கு கால்கள் கொண்ட விலங்கு உடலும் கொண்ட உயிர்களும் நுணுக்கமாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இவை இத்தியப் புராணங்களில் காணப்படுகின்றன. நினிவேயிலும் மற்ற மெசபொத்தாமியா இடங்களிலும் அரண்மனை மற்றும் பொதுக் கட்டடங்களின் வாயிலின் முன் இறக்கைகள் கொண்ட எருதுகளின் பெரிய சிலைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

**கெருபு** *(CHERUB - இடம்)*

ஒரு பாபிலோனிய நகரம். ஆனால் இது எவ்விடமென்று இதுவரை கண்டுபிடிக்கப் படவில்லை. தங்களது வம்சவழியை எண்பிக்க முடியாத நாடுகடத்தப்பட்ட யூதர் சிலர் இவ்விடத்திலிருந்துதான் பாலஸ்தீனத்திற்குத் திரும்பினர் *(எஸ் 2:59; நெகே 7:61)*. விளக்கவுரையாளர் சிலர் கருத்துப்படி ''கெருபு, அதான், இம்மேர்'' ஆகியவை ஒரே இடத்தைக் குறிக்கலாம் அல்லது மூன்று இடங்களைக் குறிக்கலாம்.

**கெரேசின் (எரேசு) ஏற்றம்** *(HERES, ASCENT OF - சூரியன் எழுந்தோற்றம், உதித்தல்)*

கிதியோன், மிதியானியர்களைத் தொடர்வதை நிறுத்திவிட்டுத் திரும்பிவர முனைந்த இடம் *(நீதி 8:13)*. இந்த வாசகம் ஐயத்திற்குரியது. சில மொழிபெயர்ப்புக்கள் இந்த வார்த்தைகளைச் ''சூரியன் உதிக்குமுன்'' என்று மொழிபெயர்க்கின்றன. அடையாளம் தெரியாத இந்த இடம் கர்கரேசிலிருந்து *(அர்கரேசு)* வேறுபட்டதாகும்.

**கெரேசு (எரேசு) மலை** *(HERES, MOUNT)*

கர்கரேசின் *(அர்கரேசு)* மற்றொரு பெயர்.

**கெரேசு (எரேசு) நகர்** *(HERES, city of)*

காண்க: சூரிய நகர்.

**கெரேத்தியர் - பெலேத்தியர்** *(CHERETHITES PELETHITES)*

பெலிஸ்தியாவின் தென்கிழக்கில் வாழ்ந்த பெலிஸ்திய இனங்கள்.

தாவீது மன்னனின் அந்தரங்கப் படையைச் சேர்ந்த குழுவினர். தாவீது பெலிஸ்தியர்களை வென்று எருசலேமில் ஆட்சி அமைத்தவுடன் இவர்கள் தாவீதோடு சேர்ந்து கொண்டார்கள். யோயாதாவின் மகன் பெனாயா இக்குழுக்களின் தலைவர் *(2 சாமு 8:18)*. இவர் தாவீதின் படைப்பிரிவில் முக்கியமான பதவி வகித்தார் *(2 சாமு 20:23)*. இவர்கள் தாவீதுமன்னனுக்கு முழுவதும் பிரமாணிக்கமாய் இருந்தனர். தாவீது அப்சலோமின் காரணமாக எருசலேமிலிருந்து ஓடிப்போனபோது இவர்களும் அவரோடு சென்று தங்கினர் *(15:18)*. பிக்கிரியின் மகன் சேபாவைப் பின்தொடரும் நிகழ்ச்சியில் இவர்களும் பங்குகொண்டு எருசலேமிலிருந்து வெளியேறினர் *(20:7)*. சாலமோன் மன்னனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதை இவர்கள் ஆதரித்தனர் *(1 அர 1:38. 44)*. இவ்வாறு தாவீது மன்னனுக்குப் பிரமாணிக்கமாய் இருந்தனர்.

இக்கால அறிஞர் பலரின் கருத்துப்படி கெரேத்தியர் கிரேத்தாவில் தோன்றியவர்களாவர். இது மற்ற விளக்கங்களைவிடப் பொருத்தமானதாகத் தெரிகிறது. ஏனெனில் இவர்கள் பெனிசியா அரசன் கெரேத்திடமிருந்து தங்கள் பெயரைப் பெற்றனர் என்றும் இவரது அரசு யூதாவின் நெகேபிலோ, கெரேத்தியரின் நெகேபிலோ *(1 சாமு 30:14)* இருந்தது என்றும் விளக்கப்படுகிறது.

தாவீது சிக்லாகில் சிறிது நாள் தங்கியிருந்த போது பெலிஸ்தியர்களோடு பழக்கம் கொண்டார். அவர்களில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்தான் பெலேத்தியர்கள் ஆவர். பெலிஸ்தியர் என்பது மருவிப் பெலேத்தியர் என்றானது. காரணம் கெரேத்தியர் என்ப

தோடு ஒத்துப்போவதற்காகப் பெலேத்தியர் ஆனது எனலாம். இவ்விரு குழுக்களின் பெயர்களும் விவிலியத்தில் சேர்ந்தே தோன்று கின்றன. எசே *25:16*; செப் *2:5* ஆகிய இடங்களில் பெலிஸ்தியர்களோடு கெரேத்தி யர்களும் கண்டிக்கப்படுவதால் இந்த இரு வார்த்தைகளும் ஒரே மக்களைத்தான் குறிக் கின்றனவா அல்லது வெவ்வேறு பிரிவின ரையா என்பது கேள்விக்குறியாக உள்ளது.

காரியர் என்ற மக்கள் யோவாசு, அரசனுக் குப் பிரமாணிக்கமாய் இருந்தனர். இவர்கள் (*2 அர 11:4.19*) கெரேத்தியர்கள்தாம் என விவிலிய விளக்கப்பேராசிரியர்கள் சிலர் எண்ணுகின்றனர். இம்மக்கள் முற்காலத்தில் கூலிப்படையில் வேலை செய்த ஆசியஇன மான காரியான் என்ற மக்களாக இருக்கலாம் எனச் சிலர் எண்ணுகின்றனர். ஆனால் 2 சாமு *20:23*-இன் வேறுபட்ட வாசகத்தில் வரும் காரியர் என்ற வாசகம் முதல் கருத்துக்கு ஆதரவு அளிக்கிறது.

**கெரேத்து, எரேத்து** (HERETH - *அவமதிக்கிற*)

தாவீது சவுலுக்குத்தப்பி மோவாபில் சிறிது தங்கிய பிறகு அதுல்லாமுக்கும் கீலோவுக்குமிடையே ஒளிந்து கொண்ட காட்டின் பெயர் கெரேத்து ஆகும் (*1 சாமு 22:5*). பெய்த் கிப்ரினுக்குக் கிழக்கே 11 கி.மீ. தொலைவில் கிர்பெத்துகிலா (விவிலிய கெயிலா)வுக்கு அருகே உள்ள இக்காலச் சிறிய கிராமமான காராசைச் சுற்றியுள்ள பகுதியில் இக்காடு இருந்திருக்கலாம். இப் பகுதி, அக்காலத்தில் பெலிஸ்தியர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்திருக்கலாம்.

**கெரேன் - அப்பூக்கு** (KERAN - HAPPUCH - *அஞ்சனச் சிமிழ், கண்மை*)

யோபு தாம் இழந்த செல்வங்களை மீண் டும் பெற்றபின் அவருக்குக் கடைசியாகப் பிறந்த மகளின் பெயர் (*யோபு 42:14*).

**கெரோன்** (GERON)

''அந்தியோக்கிய நகரத்தாரான முதியவர்'' (*2 மக் 6:1*). இது ஒரு தனிப்பட்ட நபரின் பெயராகவும் இருக்கலாம். கிரேக்க நாட்டுக் கல்வெட்டுப் பொறிப்புகளில் இது ஒரு தனிநபரின் பெயாாகவே காணப்படுகிறது.

**கெர்மோன் (எர்மோன்)மலை** (HERMON, MOUNT - *அர்ப்பணிக்கப்பட்ட மலை*)

எதிர் லெபனோன் மலைத்தொடரின் தெற்கு முனையாகும். இது மிக உயர்ந்தது. உப *3:9*-இன் படி சீரியா, பாலஸ்தீனப் பேச்சுவழக்கில் இப்பெயர் பலவாறு மாறு பட்டிருக்கிறது. இதைச் சிதோனியர் சிரி யோன் என்றும், எமோரியர் செனீர் என்றும் அழைக்கிறார்கள். உப *4:48*-இல் சியோன் மலை என்றுபெயரிடப்பட்டிருக்கிறது. *1* நாள் *5:23*-இல் பாகால் கெர்மோன், செனீர், கெர்மோன் என்பவை வேற்றுமைப்படு கின்றன. உன்னத சங்கீதத்தில் செனீர், கெர் மோன், ஆகியவற்றிடையே வேறுபாடு காட் டப்படுகிறது. ஒருவேளை செனீர் என்பது எதிர்லெபனோனின் வடக்குப் பகுதியின் பெயராக இருக்கலாம்.

கெர்மோன் மலை கடல்மட்டத்திலிருந்து *2800* மீட்டர் உயரம் இருக்கிறது. நீண்ட தூரப்பார்வைக்கு ஓர் அருமையான தோற்றத் தைக் கொடுக்கிறது. பாலஸ்தீனத்தின் பல பகுதிகளிலிருந்து இதனுடைய உச்சியைப் பார்க்கலாம். வருடத்தின் பெரும் பகுதிக்கா லம் பனியால் இம்மலை மூடப்பட்டிருக் கும். அரேபியர்கள் இதை யெபெல் ஏல் செயிக்கு அதாவது சாம்பல் நிறமுடியுடைய மலை என்றும், யெபெல் ஏல் தால்ஜ் அதா வது 'பனிமலை' என்றும் அழைக்கிறார்கள். கெர்மோன் மலையிலிருந்து ஓடிவரும் தண் ணீர் வடக்குக் கவுரான் ஆறுகளில் கலக்கிறது. மேலும் யோர்தான் ஆற்றின் மூலநீர்ச் சுனை களும் இதனுடைய சரிவுகளில் தோன்று கின்றன.

கெர்மோன் மலை ஓர் எழில் தோற்றத்தை நமக்கு அளிக்கிறது. மக்களை எக்காலமும் கவர்ந்திருக்கிறது. மேலும் ஒரு புனிதமான மலையாகவும் கருதப்பட்டு வந்திருக்கிறது. நீதி *3:3*-இல் வரும் பாகால்-கெர்மோன் 'பாகால்' கடவுள் வழிபட்டதைக் குறிப் பிடுகிறது (*1 நாள் 5:23*).

சங் 133:3-இல் கெர்மோன் மலை பசுமை அளிக்கும் தெய்வங்களின் அடையாளமான பனித்துளியோடு தொடர்புபடுத்தப்படு கிறது. கெர்மோன் மலை வழிபடும் தளமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. கண்டெடுக் கப்பட்ட கிரேக்க ஏட்டுச்சுருள்கள் 'தேவதை யின் மலை'' என்று வர்ணிக்கிறது.

கெர்மோன் மலை, யோசுவா வென்ற பகுதிகளின் வட எல்லையாகும் (யோசு 11:17;12:1). உ.ச. 4:8 இந்த மலைத்தொடரின் காடுகளில் வாழும், சிங்கம், சிவிங்கி முதலி யவற்றைக் குறிக்கிறது.

### கெலகு, அலகு (HALAH)

அசீரியப் பேரரசில் உள்ள ஒரு நகரம் அல்லது ஒரு மாவட்டம். ஓசேயாவின் ஆட்சி யின் ஒன்பதாம் ஆண்டில் அசீரிய அரசன் சல்மனேசர் இஸ்ராயேலர்களை நாடு கடத்தி நகரில் குடியேறக் கட்டளையிட்டார் (2 அர 17:6;18:11).

மூன்றாம் தெகிலத்துபிலேசர், யோர்தா னுக்கு அப்பாலிருந்த இஸ்ராயேலரை நாடு கடத்திய பகுதிகளில் இதுவும் ஒன்றாகும் (1 நாள் 5:26). காரானுக்கு அருகில் அல்லது காபோர் (ஆபோர்) ஆற்றங்கரையில் அமைந்த ஒரு பகுதியாகும்

### கெலால் (CHELAL)

பகாத்மோவாபின் புதல்வர்களில் ஒரு வர். தாங்கள் வைத்திருந்த அந்நிய நாட்டுப் பெண்களை விலக்கிவிட வேண்டுமென்று எஸ்ரா கட்டளையிட்டிருந்தவர்களுள் இவ ரும் ஒருவராவார் (எஸ் 10:30).

### கெலியதோர், எலியதோர் (HELIODORUS)

எருசலேமில் கோயில் பணத்தைப் பறி முதல் செய்து அரசரின் பணத்தோடு சேர்த்து விட அனுப்பப்பட்ட, செலூக்கிய அரசனான நான்காம் செலூக்கிய பிலோபாத்தர் என்பவ ருடைய அரசவை உயர் அதிகாரியாவார் (கி.மு. 187-185). 2 மக்கபே மூன்றாம் அதிகா ரம் கூறுவதுபடி, அவர் இறைவனால் பழி வாங்கப்பட்டார். கோயில் அதிகாரியான சீமோன், கூலோ-சீரியா, பெனிசியா ஆகிய நாடுகளில் அக்காலத்தில் படைத்தலைவ னாய் இருந்த அப்பொல்லோனியுவிடத்தில் கோயில் கருவூலத்தில் ஏராளமான பணம் உண்டு என்று தவறாகத் தெரிவித்துவிட்டார்; அப்பொல்லோனியு அரசனிடம் தெரிவித்து விட்டார் (2 மக் 3:7-14). கெலியதோர் கருவூ லத்தில் நுழைய முயன்றபோது குதிரைமேல் தோன்றிய பயங்கரத்துக்குரிய ஒருவரால் தாக்கப்பட்டார். இவர் பொன்னாயுதங்க ளோடும் இரு இளைஞர்களோடும் தோன்றி னார் (3:22-26). தலைமைக்குரு மூன்றாம் ஒனியா வேண்டினதால், காயப்பட்டவர் காப்பாற்றப்பட்டார் (3:31-39). எவ்வாறு கட வுளின் ஆற்றல் அவர் வாழும் இடத்தைக் காப்பாற்றியது என்று சாட்சியம் சொன்னார் கெலியதோர்.

ஆப்பியன் நூலில் கெலியதோர் நான் காம் செலூக்கியுவுக்கு உற்ற நண்பன் என்று குறிக்கப்படுகிறார். தேலோசில் உள்ள அப்பொல்லோ கோயிலில் கண்டெ டுக்கப்பட்ட எழுத்துப்பிரதி ஒன்று அமைச்ச ரவையில் கெலியதோர் முக்கிய அதிகாரி என்று கூறவிளைகின்றது. இவர் கி.மு. 175-இல் அரசனைக் கொன்று ஆட்சியைக் கைப்பற்ற முயன்றார். யூமென் மற்றும் அத் தாலுசு என்பவர்கள் இவரை விரட்டியடித்து விட்டு, செலூக்கியுவின் சகோதரன் அந்தி யோக்குவை ஆட்சிபீடத்தில் அமர்த்தினார் கள்.

### கெலியாப்போலி, எலியாப்போலி (HELIOPOLIS)

1. பழங்கால எகிப்து நாட்டில் இருந்த முக்கியமான நகரங்களில் கெலியாப்போலி யும் ஒன்றாகும். இந்நகர் கைரோவிற்கு வட கிழக்கே 8 கி.மீ. தொலைவில் தற்போதுள்ள மக்காரியா என்ற இடத்தில்தான் இருந்தது. எகிப்தியர்கள் இந்நகரை ''இவ்னு'' என்று அழைத்தார்கள். இவ்வார்த்தையானது ''ஓன்'' என்று எபிரேய மொழியில் மாற்றம் பெற்றது. ஆதி 41:45.50;46:20 போன்ற பகுதி களில் போற்றிபெரா என்பவர் கெலியாப் போலியில் ஓனின் குருவென்று குறிப்பிடப்

பட்டுள்ளார். எரே 43:13-ஐத் தவிர மற்ற இடங்களில் கெலியாப்போலியைப் பற்றிய நேரடியான குறிப்புகள் இல்லை.

கெலியாப்போலி நகரானது கெலியாப் போலி இறையியலுக்குப் பெயர் போனது. மூன்றாம் அரசகுலத்தின் ஆட்சிக் காலத்திலே கெலியாப்போலி இறையியல் தளிர்விட ஆரம்பித்துவிட்டது. இந்த இறையியலின்படி ஆத்தும்தான் தலைமைத் தெய்வமாகக் கருதப்பட்டது. இத்தெய்வம் சூரியக் கடவுளாகிய ஆத்தும்-ரேயோடு ஒருமைப் படுத்தப்பட்டது. எகிப்திய வரலாற்றில் அரசியல் துறையைப் பொறுத்த வரையில் கெலியாப்போலி முக்கியத்துவம் பெறவில்லையென்றாலும், முக்கியமான வழிபாட்டுத் தலமாக விளங்கியது.

சூரியவழிபாட்டிற்கு இந்நகர் பெயர் போன நகராகும். சூரியக்கடவுள்தான் இவ்வுலகினைப் படைத்தவராகக் கருதப்பட்டார். சமயத்துறை சார்ந்த கருத்துக்களுக்கும் வழிபாடுகளுக்கும் அதிக முக்கியத்துவம் இங்கு அளிக்கப்பட்டது.

கெலியாப்போலி என்ற ஓன் நகரம், தென் எகிப்தின் 13-ஆவது பகுதிக்குத் தலைநகராகவும், சூரியக்கடவுள்களான ஆத்தும் மற்றும் ரேயின் வழிபாட்டு மையமாகவும் விளங்கியது (எரே 43:13).

2 பகால்பேக்கு என்பதன் கிரேக்கப்பெயர்.

**கெலிலோத்து** (GELILOTH - வட்டம்))

பென்யமினையும் யூதாவையும் பிரிக்கும் எல்லையில் அதும்மிம் ஏற்றத்திற்கு எதிராக உள்ள ஓர் இடம் (யோசு 18:17). எரிகோவிலிருந்து எருசலேமுக்குச் செல்லும் சாலையில் எருசலேமிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ளது. நல்ல சமாரியன் சத்திரமாக நெடுங்காலம் அடையாளம் கட்டப்பட்ட காண் ஏல்-அக்மாராக இருக்கலாம். அல்லது 1.5 கி.மீ. மேற்கிலுள்ள அராகு ஏத்-தெபீராக இருக்கலாம். யோசு 15:7-இல் குறிக்கப்படும் கில்காலும் இதுவும் ஒரே இடத்தைக் குறிக்கலாம். காண்க. கில்கால்.

**கெலிற்றா** (KELITA - குள்ளமான, முடமான)

லேவியரான இவர், திருச்சட்ட நூலை எஸ்ரா வாசிக்க, அதை மக்களுக்கு விளக்குவதில் உதவினார் (நெகே 8:7). புதுப்பிக்கப்பட்ட உடன்படிக்கையில் கையொப்பமிட்டவருள் இவரும் ஒருவர் (10:10). எஸ்ராவால் வெளிநாட்டு மனைவிகளை விட்டுவிடும்படி இவர் கட்டாயப்படுத்தப்பட்டார் (10:23). கேலாயா, கெலிற்றா என்ற பெயர்கள் ஒரே மனிதரைக் குறிக்கின்றன.

**கெலுகி** (CHELUHI)

தாங்கள் வைத்திருந்த அந்நிய நாட்டுப் பெண்களை விலக்கிவிட வேண்டும் என்று எஸ்ரா என்பவரால் கட்டளையிடப்பட்டவர்களில் இவரும் ஒருவர் (எஸ் 10:35). பானியின் மகன்.

**கெலுபாய்** (HELUBAI)

யூதாவைச் சேர்ந்த கெசிரோனின் வழித்தோன்றல் (1 நாள் 2:9). 1 நாள் 2:18. 42-இல் இவர் காலேபு என்றழைக்கப்படுகிறார்.

காண்க. காலேபு.

**கெலூசு** ((CHELOUS)

யூதி 1:9-இல் குறிக்கப்படும் பாலஸ்தீனத்தில் உள்ள மூன்று நகரங்களுள் ஒன்று. தற்போதைய கலாசா என்ற இடமாக இருக்கலாம். முற்காலத்தில் இதுமேயாவில் அமைந்திருந்த அலூசா என்ற இடமாகவும் இருக்கலாம். இது ஆதி 16:4;யாத் 15:22 பற்றிய பாலஸ்தீனத் தார்குமில் குறிக்கப்படுகிறது. எருசலேமிலிருந்து தெற்கு நோக்கி எகிப்துக்குச் செல்லும் பாதையில் இருக்கின்றது. காசாவுக்கும் ஏதோமுக்கும் இடையே உள்ள வியாபார வழியில் உள்ளது. அரேபிய எழுத்தாளர்கள் ஏல்-காலுசு, ஏல்-கலாசா ஆகிய இரு இடங்களை வேறுபடுத்துகின்றனர்.

**கெலூபு** (CHELUB - கூடை, கூடு)

இப்பெயர் காலேபு என்ற பெயரின் திரிபாக இருக்கலாம்.

*1.* யூதாவின் குலத்தைச் சேர்ந்தவர். சூகாவின் சகோதரனும் மெகீரின் தந்தையுமாவார் *(1 நாள் 4:11).* இங்கு கெலூபு என்பதும் 1 நாள் *4:1*-இல் கர்மி என்பதும் காலேபு என்று வாசிக்கப்படலாம்.

*2.* எஸ்ரியின் தந்தையும் மன்னன் தாவீதின் அலுவலர்களில் ஒருவரும் ஆவார் *(1 நாள் 27:26).*

**கெல்காத்து, எல்காத்து** *(HELKATH)*

ஆசேர் பகுதியிலுள்ள ஒரு லேவிய எல்லைப்புறநகர். கேர்சோமியருக்குரியது *(யோசு 19:25;21:31).* மூன்றாம் துத்மோஸ் நகர்கள் பட்டியலில் கெல்காத்தைப்பற்றிய குறிப்பேடு வரலாற்றில் முதன்முறையாக இடம்பெற்றிருக்கிறது. *1 நாள். 6:75*-இல் இது குக்கோக்கு (உக்கோக்கு) என்றழைக்கப்படுகிறது.

ஆக்கோ (அக்கோ) சமவெளியின் தெற்குக் கடைசியில் கர்மேல் மலைப்பகுதியில் கீசோன் ஆறு அருகில் இருந்ததாகக் கருதப்படுகிறது. இவ்விடம் ஒருவேளை இக்காலத்திய தேல் ஏல்-கர்பாசாக அல்லது தேல் ஏல் காசிசாக இருக்கலாம்.

**கெல்காத்து அட்சூரிம், எல்காத்துஅட்சூரிம்** *(HELKATH- HAZZURIM - கூர்மையான பாறைகளை உடைய நிலம், எதிரிகளின் நிலம்)*

கிபயோன் குளத்துக்கு அருகில் உள்ள இடம் இப்பகுதியாக இருக்கலாம். 'வலியோர் இடம்' என்று அழைக்கப்படுகிற இவ்விடத்தில்தான் யோவாப்பின் பன்னிருவரும் அப்னேரின் பன்னிருவரும் ஒருவருக்கொருவர் தலையைப்பிடித்து விலாவில் வாளால் குத்த அனைவரும் ஒருங்கே இறந்தனர் *(2 சாமு 2:16).*

**கெல்காய், எல்காய்** *(HELKAI - யாவே என் பங்கு ஆவார்)*

தலைமைக்குரு யோயாக்கிம் காலத்தில் மெரயோத்து வம்சத்தின் தலைவரும் குருவுமாவார் *(நெகே 12:15).*

**கெல்தாய், எல்தாய்** *(HELDAI - அகழ்எலி)*

*1.* ஒரு நெற்றோபாயர். ஒத்தினியேல் வழித்தோன்றல். தாவீதின் படையில் பன்னிரண்டாம் பிரிவுக்குத்தலைவர் *(1 நாள் 27:15).* தாவீதின் ஆற்றல்மிக்க வீரர்கள் பற்றிய இணைவாசகத்தில் இவர் கேலேது (ஏலேது) என்றழைக்கப்படுகிறார் *(11:30).* ஒருவேளை இவரும், *2 சாமு. 23:29*-இல் வரும் கேலேபும் (ஏலேபு) ஒரே ஆளாக இருக்கலாம்.

*2.* இறைவாக்கினர் செக்கரியா காலத்தில் பாபிலோனில் வாழ்ந்து வந்த ஒரு யூதர். இவர் தலைமைக்குரு யோசுவாவின் தலையில் சூட்ட 'முடி' செய்யப் பொன், வெள்ளி கொணர்ந்தவர்களில் ஒருவர் *(செக் 6:10.14).* செக் *6:14*-இல் வரும் ஏலேம் தவறாக இருக்க வேண்டும்.

**கெல்பா, எல்பா** *(HELBAH)*

அசேர் குலத்திற்குரிய ஒரு நகர். இங்கிருந்து இஸ்ராயேலர் கானானியர்களை விரட்ட முடியவில்லை *(நீதி 1:31).* இது அதே வரியில் வரும் அகிலாபின் இரட்டிப்புப் பெயராக இருக்கலாம். ஆகையால் சில பதிப்புகள் இதை விட்டு விடுகின்றன. ஆனால் இரண்டுமே மகலாபு என்ற பெயரின் (இக்காலக் கிர்பெத் ஏல்-மகலிபு, *யோசு 19:29)* பழுதுபட்ட வாசக வேறுபாடாக இருக்கலாம்.

**கெல்பான்பிசின்** *(GALBANUM)*

கெல்பான்பிசின் என்பது ஒரு தாவரத்திலிருந்து எடுக்கப்படுகின்ற ஒருவித பரிமளத் தைல வகை. இது பிசின் போன்றது. நறுமணமுள்ளது. அநேகமாக இந்தியாவிலிருந்தோ, பாரசீகத்திலிருந்தோ இறக்குமதி செய்யப்பட்டதாக இருக்கலாம். இது எங்கிருந்து கிடைத்தது என்பது பற்றி உறுதியாக எதுவும் கூறமுடியாது. யாத் *30:34*-இன்படி திருஉறைவிடத்தில் எரிக்கப்பட்ட நறுமணத் தூபப்பொருள் தயாரிக்கப் பயன்பட்ட பொருட்களில் இதுவும் ஒன்று.சீரா *24:15*-இல் ஞானத்தைப் போற்றும்போது உருவகமாக இப்பொருள் பயன்பட்டுள்ளது.

**கெல்போன், எல்போன்** (HELBON - செழிப்பான)

தீர் நகரத்திற்கான புலம்பலில் குறிக்கப்பட்ட ஒருநகரம். அதனுடைய திராட்சைரசத்திற்கு முக்கியத்துவம் வாய்ந்தது (எசே 27:18). இன்றும் திராட்சை பயிரிடுதலை முக்கியத்துவமாகக் கொண்டு விளங்கும், தமஸ்குவின் வடமேற்கில் 29 கி.மீ. தொலைவில் லெபனோன் எதிர்ப்பகுதியில் உள்ள இக்காலக் கெலிவுனும் இந்தக் கெல்போனும் ஒன்றாகக் கருதப்படுகிறது.

**கெல்லயாயியர்** (CHELLEANS)

இசுமயேலர் வாழ்ந்த பகுதியின் வடக்கே குடியிருந்த மக்கள் இவர்கள் (யூதி 2:13). பல்மைராவுக்கும் யூப்பிரத்தீசு நதிக்கும் இடையேவுள்ள பழங்காலக் கொல்லே என்ற பகுதியில் வாழ்ந்தவர்கள் என்று தெரிகிறது. தற்போது இது ஏல்கொல்லே என்றழைக்கப்படுகிறது. இம்மக்கள் அரேபியப் பாலைவனத்தின் பக்கம் உள்ள கிழக்குப் பாலஸ்தீனத்தில் வாழ்ந்தனர் என்று விவிலிய அறிஞர் சிலர் கருதுகின்றனர்.

**கெல்லேனிசம்** (HELLENISM)

இது கிரேக்கப்பற்று, கிரேக்கப்பண்பாடு அல்லது கிரேக்க நாகரீகம், முக்கியமாகப் பழங்காலக் கெல்லேனியர்களின் உயர்ந்த பண்பாடு அல்லது மனிதப்பண்பு ஆகியவற்றை உணர்த்தும். நவீன எழுத்தாளர்கள் மத்தியில் இப்பண்பாட்டின்பால் காட்டப்படும் ஆர்வத்தையும் பற்றையும் உணர்த்தும். ஆனால் வரலாற்று ஆசிரியர்கள் கி.மு. 334-325-இல் அலக்சாந்தர் பெற்ற வெற்றியின் விளைவாக மத்திய தரைக்கடல் உலகத்திலே பரவிய நாகரீகம் என்று பொருள் கொடுக்கிறார்கள்.

துரதிர்ஷ்டவசமாகக் கி.மு. இரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் எருசலேமில் வாழ்ந்த கிரேக்க ஆதரவாளர்களின் தீவிரச் செயல்கள் நான்காம் அந்தியோக்கு ஆண்ட போது ஆபத்தான ஒரு நிலைக்கும், நீண்ட மக்கபேயர்களின் சுதந்தரப்போருக்கும் இட்டுச் சென்றது. யூதமதத்திற்குள்ளே உட்பூசலையும் உருவாக்கியது. இதன்விளைவாக அவர்களிடையே தனித்து ஒதுங்கிவாழும் தன்மையையும் தாங்கள் மேலானவர்கள் என்ற மனப்போக்கையும் வளர்த்தது. இந்நிலை பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து வந்தது. ஆதிக்கிறிஸ்தவர்கள் காலத்தில்தான் இந்த எண்ணங்கள் மாற்றப்பட்டு ஒரு முடிவுக்குக் கொண்டுவரப்பட்டன (அ.ப. 15; கலாதியார்).

**கெவிலா, அவிலா** (HAVILAH - மணற்பூமி) - ஆள்

1. கூசின் மகனும் காமின் பேரனும் ஆவார் (ஆதி 10:7;1 நாள் 1:9).

2. சேமின் வழித்தோன்றலும் யோக்தானின் மகனும் ஆவார் (ஆதி 10:29; 2 நாள் 1:29).

**கெவிலா, அவிலா** (HAVILAH - மணற்பூமி) - இடம்

ஏதேன் தோட்டக்கதையில் குறிக்கப்படும் இடமாகும். இப்பகுதியில் பிசோன் ஆறு ஓடுகிறது. இப்பகுதியில் பசும்பொன், நறுமணப் பொருட்கள், வண்ணமணிக்கற்கள் நிறைய உண்டு (ஆதி 2:11). இந்த ஆறு எங்கு ஓடியது என்பது பற்றிப் பல யூகங்கள் உண்டு. இதற்கு வாடி ஏல்-தவாசீரை அடையாளம் காட்டினால், அரேபியாவின் மேற்குக் கடற்கரையில் ஏமனுக்கு வடக்கில் கெவிலாவுக்கு இடம் சுட்டலாம். நாடுகளின் பட்டியலில், மரபுமுறைப்பட்டியல் புவியியல் இடங்களைச் சுட்டினால், கெவிலா அராபிய இடப்பெயர்களாக இருக்கலாம் (ஆதி 7:29; 1 நாள் 9:29; காண்க கெவிலா - ஆள் -1 மற்றும் 2). இது இசுமயேல் பகுதியின் கிழக்கு எல்லையாகத் தெரிகிறது (ஆதி 25:18).

**கெற்றூரா** (KETURAH - நறுமணப்பொருள், சாம்பிராணி)

இவள் ஆபிரகாமின் இரண்டாவது மனைவி. இவள் ஆபிரகாமுக்கு ஆறு மைந்தர்களைப் பெற்றுத் தந்தாள் (ஆதி 25:1-6; 1 நாள் 1:32-33). சாராளின் மரணத்திற்குப்

பின் ஆபிரகாம் இவளை மணம் முடித்திருக் கக்கூடும். கெற்றூரா ஆதி 25:6-இல் இவள் ஆபிரகாமின் வைப்பாட்டியென அழைக்கப் படுகிறாள். ஆபிரகாம் இவர்களுக்கு வெகு மதி அளித்துக் கீழை நாட்டிற்குஅனுப்பி வைத்தார். எபிரேய மக்கள் இவர்கள் மூல மாக அரேபியர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டனர். கெற்றூராவின் மைந்தர்கள் பாலஸ்தீனத்திற்குக் கிழக்கில் வாழ்ந்த அரேபியர்களின் குலப்பெயர் முன்னோர் ஆனார்கள் (ஆதி. 25:4-6). இவர்கள் வழியாக ஆபிரகாம் எண்ணற்ற நாடுகளுக் குத் தந்தையானார் (17:4).

**கெனசரேத்து** (GENNESARET - இளவரசனின் தோட்டம்)

1. கலிலேயாக் கடலின் முந்தைய பெயர்.

2. கலிலேயாக் கடலுக்கு வடமேற்கில் உள்ள நீரும் வளமும் நிறைந்த பள்ளத்தாக்கு.

யோசிபசின் கூற்றுப்படி இது 6 கி.மீ. நீளமும் 4 கி.மீ. அகலமும் உடையது. இதன் தட்பவெப்பநிலை மலைகளாலும் ஏரிகளா லும் மட்டுப்படுத்தப்பட்டது. இங்கு பனை, அத்தி, ஒலிவா, திராட்சை போன்றவை பயிர் செய்யப்பட்டன. கலிலேயாக்கடலில் மீன் பிடித்தலும், விவசாயத்தைப் போல், இப்பகு தியைச் செல்வச் செழிப்புள்ளதாக்கியது. யோசிபசின் கூற்றுப்படி சமவெளியின் தென்பகுதியிலுள்ள மகதலா என்ற ஊரில் நான்குபேர் கொண்ட 230 படகுகள் இருந் தன. இப்பகுதியில் மகதலாதான் மிகப் பெரிய நகரம். இங்கு 40,000 பேர் வாழ்ந்தனர். புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் இப்பகுதி யில் மக்கள் மிகுதியாக வாழ்ந்தனர். மற்றொரு முக்கிய நகரம் கப்பர்நாகும் ஆகும். இயேசு வும் அவரது சீடர்களும் தங்கள் பணிக் காலத்தின் ஒரு பகுதியில் கப்பர்நாகுமில் வாழ்ந்தனர் (மத் 9:1). இங்கிருந்து, அவர்கள் மலைப்பகுதிகளுக்கும் நகரங்களுக்கும் சென்று தங்களதுபோதிக்கும், குணமளிக்கும் பணிகளைச் செய்தனர். கெனசரேத்தின் விவ சாயமும், மீன்பிடித்தலும், இயேசுவுக்கு உவ மைகளில் பயன்படுத்தப் பல உருவங்களை அளித்திருக்க வேண்டும்.

**கெனனியா** (CHENANIAH - யாவே பலப்படுத் துகிறார்)

1. தாவீது மன்னன் உடன்படிக்கைப் பெட் டகத்தை எருசலேமுக்கு ஆடம்பரமாகக் கொண்டுவந்தபோது இந்த லேவியர் தலைவர் பாடல்களைத் தொடங்கும் பாடகர் தலைவர் (1 நாள் 15:22.27).

2. ஆலயத்துக்குப்புறம்பே இஸ்ராயேல ருக்குக் கல்வி புகட்டுவதும், நீதி வழங்குவ துமாகிய வெளிவேலையைக் கவனிக்க நிய மிக்கப்பட்ட ஒருவர். இசுரகியா குலத்தைச் சேர்ந்தவர் (1 நாள் 26:29. நெகே 11:16).

**கெனாசு** (KENAZ - வேட்டையாடுகிற)

1. எலீப்பாசின் மகனும் ஏசாவின் பேரனு மாவார் (ஆதி 36:11; 1 நாள் 1:36). இவர் ஏதோமிய குலத்தின் தலைவராய் இருந்த வர் (ஆதி 36:15.42; 1 நாள் 1:53). கெனிசிய ரின் குலப்பெயர் முன்னோர் (ஆதி 15:19).

2. எபுன்னேயின் மகனான காலேபின் பேரன் (எண் 32:12;யோசு 14:6.14). ஏலாவின் மகன். யூதாகுலத்தைச் சேர்ந்தவர் (1 நாள் 4:15).

3. யூதாவைச் சேர்ந்தவர்; செராயா, நீதிபதி ஒத்தினியேல் ஆகியோரின் தந்தை (1 நாள் 4:13). எபுன்னேயின் மகனான காலேபின் சகோதரன் என்றழைக்கப்படுகிறார் (யோசு 15:17;நீதி1:13;3:9.11).

**கெனாத்து** (KENATH - உடைமை, சொத்து)

இது கிழக்குக் கிலயாத்தில் உள்ள ஓர் ஊர். நோபாகு என்ற மன்னன் இதைக் கைப்பற்றி இதற்கு நோபாகு என்ற தன் பெயரை இட் டான் (எண் 32:42). இருப்பினும் இந்நகரின் பழைய பெயர் வழக்கத்தில் இருந்தது. ஏனெ னில் 1 நாள் 2: 23 கெசூர், ஆராம் என்போர் கெனாத்தைக் கைப்பற்றியதாகக் கூறுகிறது. இவ்வூர் தற்போதைய ஏல் கவுரானில் உள்ள கனாவாத்தாக இருக்கும் எனக் கருதப்படுகி றது. இது கலிலேயாக் கடலுக்கு வட கிழக் கில் 97 கி.மீ. தொலைவில் அவ்ரானித்திசின் சுற்றுப்புறத்தில் உள்ளது.

**கெனானா** (CHENAANAH - வணிகன்)

1. ஆகாபு காலத்தில் இறைவாக்கினரான செதேக்கியாவின் தந்தை *(1 அர 21:11.24;2 நாள் 18:19.23).*

2. பென்யமின் இனப்பட்டியலில் குறிக் கப்படுகிறார். பில்கானின் மகன் *(1 நாள் 7:10).* ஆனால் இது தவறாக இருக்கலாம். ஏனெனில் 1 நாள் 7:6-12- இல் வரும் பெயர்கள் செபுலோன் இனத்தைச் சேர்ந்த வையாக இருக்கலாம்.

**கெனானி** (CHENANI - வாங்குதல்)

யூதர்கள் நாடு கடத்தப்பட்ட நிகழ்ச்சிக்குப் பின் வாழ்ந்த ஒருலேவியர். எஸ்ரா மக்கள் முன் சட்டத்தை வாசித்தபோது இவரும் அங்கிருந்தார். மக்களின் குற்றங்களை அறிக் கையிட்டு ஆண்டவரிடம் அபயமிட்டவர் களில் ஒருவர் *(நெகே 9:4).*

**கெனிசியர்** (KENIZZITE)

கெனிசியர்களைப் பற்றிய குறிப்புக்கள், சிறப்பாகக் கெனாசு என்ற பெயர் ஒரு தனி ஆளைமட்டுமன்று ஒரு சமூகக் குழுவையும் குறித்ததால், ஒரு சிக்கல்மிக்க சமூக, அரசி யல் வரலாற்றைச் சுட்டுகிறது. இவர்கள் இஸ்ராயேலருக்குமுன்பே கானானில் குடி யேறியவர்களாவர் *(ஆதி 15:19).* இவர்கள் தென்கிழக்கிலிருந்து - அனத்தோலியாவி லிருந்து நெகேபுக்குள் குடியேறியிருக்கலாம். இவர்களில், கெபிரோனில் குடியேறிய காலேபியர்கள் *(யோசு 14:6.14;15:52-54)* தெபீரில் குடியேறிய ஒத்தினியேலர்கள் *(யோசு 15:15-14; நீதி 1:11-15),* நெகேபின் தென்கோடி மலைப்பகுதியில் குடியேறிய எரகுமவேலியர் *(1 சாமு 27:10;30:29)* ஆகி யோர் அடங்குவர். தென்யூதாவிலோ வட நெகேபிலோ நிலைபெற்ற இவர்கள் முத லில் ஏதோமியரோடு, அநேகமாகச் சேனியர்க ளோடு, இணைந்தவர்களாகத் தோன்றுகின் றனர். பின்னவர்களிடமிருந்து இவர்கள் செம்பொன் மற்றும் இரும்புத் தொழில் களைக் கற்று இருக்கவேண்டும் *(1 நாள் 4:13-14).* பிற்காலத்தில் இவர்கள் யூதாவின் வழித்தோன்றல்களின் பட்டியலில் சேர்க்கப் படுகின்றனர். கானானை வெற்றி பெறுவ தில் இஸ்ராயேலர்களோடு சேர்ந்து கொண்ட கலப்புக் கூட்டத்தில் இவர்கள் சேர்ந்து கொண்டனர் என்று காட்டுகிறது *(யாத் 12:38; எண் 11:4).*

**கெனீசா** (GENIZAH - உறை, மறைப்பு, கிடங்கு களஞ்சியம்))

செபக் கூடத்தில் பயன்படுத்தப்படாத ஓர் அறை அல்லது இடம். பயன்படுத்த முடி யாத திருநூல்களையும், தவறான கருத்துக் களைக் கொண்ட நூல்களையும் யூதர்கள் இவ் வறையில் போட்டு வைத்தனர். இவ்வாறு, கையால் எழுதப் பெற்ற அல்லது அச்சிடப் பட்ட, இறைவனின் பெயரைத் தாங்கிய நூல்கள் எல்லாம் அவமதிக்கப்படாமல் பாதுகாக்கப்பட்டன. இத்தகைய கெனீசாக்க ளில் எல்லாம் மிகவும் புகழ் வாய்ந்தது கெய்ரோ நகரில் உள்ளதாகும். இதன் காலம் கி.பி. 886-ஆகக் கணக்கிடப்படுகிறது. இத னுள் ஏறக்குறைய 3 இலட்சம் துண்டுப் பகுதிகள், எபிரேயம், அரமேயிக்கு, அராபி யம், சமாரித்தன், கிரேக்கம் ஆகிய மொழி களில் காணப்பட்டன.

**கெனுபத்து** (GENUBATH - திருட்டு)

அரசகுல ஏதோமியனாக இருந்து பிறகு எகிப்துக்கு ஓடிச் சென்ற அதாது என்பவருக் கும் எகிப்திய அரசி தபினேசுவின் தங்கைக் கும் பிறந்த மகனாவார். *(1 அர 11:20).* தபினேசு கெனுபத்தை அரச மகன்களில் ஒருவனாகத் தத்தெடுத்துக் கொண்டிருப்பதா கத் தெரிகிறது.

**கென்னாயு** (GENNAEUS)

ஐந்தாம் அந்தியோக்கு மன்னரின் ஆட்சிக் காலத்தில் பாலஸ்தீன நாட்டில் ஒரு பகுதி யில் ஆளுநராக இருந்த அப்பொல்லோனியு என்பவரின் தந்தை *(2 மக் 12:2).*

# கே

**கே/ஏ** (HE)

எபிரேய நெடுங்கணக்கில் ஐந்தாவது எழுத்து. அகரவரிசைச் சங்கீதமான 119-இல், ஐந்தாவது பகுதிக்குத் தலைப்பாக அமைந் துள்ளது. இப்பகுதியின் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்துடன் தொடங்குகிறது.

**கேகசி** (GEHAZI - காட்சியின் பள்ளத்தாக்கு)

இறைவாக்கினர் எலிசாவின் ஊழியர். *(2 அர 4:12;5:20;8:4)*. குழந்தைப்பேறு இல்லாத சூனேமியளுக்கும் அவளது கணவருக்கும் குழந்தைப்பேறு அளித்து அவர்கள் அளித்த நீண்டகால விரும்தோம்பலுக்குக் கைம் மாறு செய்யவேண்டும் என்று எலிசாவுக்கு ஆலோசனை கூறியவர் கேகசிதான் *(2 அர 4:8-37)*. அதன்படியே குழந்தைபிறந்து சில ஆண்டுகள் கழித்து இறந்தபோது, கேகசி எலிசாவின் உயிர் அளிக்கும் ஊன்று கோலை எடுத்துக் கொண்டு போய்ச் சிறுவனின் முகத் தின்மேல் வைத்தார். ஆனால் அந்தச் சிறு வன் உயிர் பெறவில்லை. சூனேமியன் தன் வீட்டையும் நிலத்தையும் தனக்குத் திரும்பக் கொடுக்கும்படி அரசனிடம் முறையிட வந்த போது, கேகசி எலிசா செய்த புதுமைகளை யெல்லாம் அரசனிடம் எடுத்துக் கூறினார் *(2 அர 8:1-6)*.

மேலும் சீரியனான நாமானின் தொழு நோயை எலிசா இலவசமாகக் குணமாக்கிய வுடன்,கேகசி பேராசை கொண்டு நாமானிட மிருந்து இரு தாலந்து வெள்ளியும் இரு உடைகளும் பெற்றுக்கொண்டார். இதை அறிந்த எலிசா அவர் மேல் கோபம் கொண்டு சபித்து அவருக்குத் தொழுநோய் வரச் செய்தார் *(2 அர 5:19-27)*.

**கேகன்னா** (GEHENNA - நெருப்பு நிறைந்த நகரம்)

இது எருசலேமிற்குத் தெற்கேயுள்ள ஒரு கணவாயின் பெயர். இஸ்ராயேல் மக்களை அரசர்கள் ஆண்டபோது இந்த இடத்தில் தான் அரசர்கள் பிற சிலைகளுக்குத் தூபம் காட்டவும், புறவினத்தாரின் வழக்கத்தைப் பின்பற்றிக் குழந்தைகளைத் தீயில் எரித்துப் பலியிடவும் செய்தனர் *(2 அர 23:10; 2 நாள் 28:3; 33:16; எரே 7:3; 32:35)*. இதன் காரண மாக எரேமியா இந்த இடத்தைச் சபித்து, அது ஒரு படுகொலையின் பள்ளத்தாக்காக இருக் கும் என இறைவாக்குரைத்தார் *(எரே 7:32; 19:6)*. இன்று வாடி என்னாரை, சீயோன் மலையோடு இணைக்கும் வாடி எர் ராபாபி தான் இன்னோம் பள்ளத்தாக்காகும்.

கி.மு. முதலாம் நூற்றாண்டில், மரணத்துக் குப்பிறகு அல்லது இறுதித் தீர்ப்புக்குப் பிறகு தீயவர்களைத் துன்புறுத்துவதற்காக ஒதுக்கப்பட்ட இடத்தைக் குறிப்பதற்கு இந் தப் பள்ளத்தாக்கின் பெயரை உருவகமாகப் பயன்படுத்தி வந்தனர். பழைய ஏற்பாட்டில் தண்டனைத் தீ பற்றிய கருத்து உப *32:22*; எசா *33:14* ஆகியவற்றில் காணப்படுகிறது. ஆனால் கிரேக்க - உரோமையர்களின் ஆட் சிக்காலத்தில்தான் தீ நிறைந்த பாதாளம், எரிகின்ற நரகம், தீயவர்கள் துன்புறும் இடம் முதலியவை பற்றித் தெளிவான கருத்துக்கள் உருவாயின *(தானி 7:10; யூதி 16:17)*. இது இரானியர்களின் கருத்தாகிய தீயவர்கள் இறு தியில் உருகிய உலோக ஓடையில் தீர்ப்பிடப் படுவார்கள் என்பதை அடிப்படையாகக் கொண்டது.

ஆனால் திருமுறைப்பட்டியலில் சேராத நூல்களில் இத்தண்டிக்கும் இடம் கேகன்னா என்று அழைக்கப்படவில்லை. இப்பள்ளத் தாக்கைப் பற்றிய எரேமியாவின் இறைவாக் கினால்தான் நரக தண்டனைக்கு இவ்விடம் ஒப்பிடப்படுகிறது *(எரே 19:2-10)*.

புதிய ஏற்பாட்டில் 7 முறை கேகன்னா என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது *(மத் 5:22.29-30; 10:28; 18:9; 23:15,33; மாற் 9:43.45.47; லூக் 12:5; யாக் 3:6)*. அது ஒரு நெருப்பு நிறைந்த இடம் *(மத் 5:22; யாக் 3:6; மாற் 9:43)*. தீயவர்கள் இங்கு உடலோ டும் ஆன்மாவோடும் அழிக்கப்படுவார்கள்

(மத் 10:28; 18:9; மாற் 9:45.47; லூக் 12:5). பரிசேயர்கள் கேகன்னாவின் மக்கள் (மத் 23:15). அவர்கள் கேகன்னாவின் தண்டனைக்கு ஆளாவார்கள் (மத் 23:33).

மேலும் புதிய ஏற்பாட்டில் கேகன்னா என்பதும், பாதாளம், இறந்தவர்கள் இருக்குமிடம், இறுதியில் எறியப்படும் இடமான 'நெருப்புக் கடல்' என்பவையும் ஒன்றே என்பது தெளிவாகிறது (திருவெளி 20:14). கேகன்னா என்ற பெயர் பயன்படுத்தப்படாமல் பல இடங்களில் நெருப்புத்தண்டனை பற்றிய குறிப்புகளைப் புதிய ஏற்பாட்டில் காணலாம் (மத் 3:10.12; 7:19; லூக் 3:9.17; மத் 18:8; 25:41; திருவெளி 14:10; 17:16; 18:18; 19:20; 20:9-15; 21:8; 2 பேதுரு 2:4). பொதுவாக இப்புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள் அவர்கள் காலத்திய யூத மதத்தினரின் உருவகங்களையே பயன்படுத்தி வந்தனர். ஆனால் இக்கருத்து தெளிவாக விளக்கப்படவில்லை. ஏனெனில், கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த யூதக் குருக்களின் கூற்றுப்படி, பெரிய தீமை புரிந்தவர்கள், விபச்சாரம் செய்தவர்கள் ஆகியவர்களைத் தவிர மற்ற எல்லா யூதர்களும் கேகன்னாவிலிருந்து விடுவிக்கப்படுவார்கள். கேகன்னாவின் தண்டனை 12 மாத காலமே நீடிக்கும் என யூத ராபி அக்கிபா கூறுகிறார். ஆனால் பீலோவின் கருத்துப்படி, அத்தண்டனை நித்தியத்துக்கும் உரியதாகும்.

கிரேக்கர்கள் ஆண்ட காலத்தின் இறுதி நாட்களைப் பற்றிய காட்சிகள் எல்லாவற்றையும் பழைய ஏற்பாட்டில் குறிப்பிட்டுள்ள ஆட்களின் பெயர்களுக்கும் இடங்களுக்கும் ஏற்றிச் சொல்கின்ற வழக்கம் இருந்தது. அவ்வாறுதான் கேகன்னாவும் பயன்படுத்தப்பட்டது. அதுபோன்றே திருவெளி 16:16-இல் அருமகதோன் என்ற இடம் சாத்தானுக்கு எதிராக இறுதிப்போர் நடக்கும் போர்க்களம் (செக் 12:11) என்றும், சாக்கடல் சுருள்களில் 'தமாஸ்கு பாலைவனம்'தான் மீட்பர் வருவதற்கு முன்னால் விசுவாசிகள் நாடு கடத்தப்படும் இடம் (ஆமோ 5:27) என்றும் ஏற்றிக் கூறப்பட்டுள்ளது. மேலும், இறுதி நாட்களைப் பற்றிக் கூறும் போது 'புதிய எருசலேம்' ''தோபேத்து'' என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. விண்ணகத்தைக் குறிப்பதற்கு 'இன்பவனம்' என்ற சொல்லும் அதன் எதிர்மறைச் சொல்லாகக் கேகன்னாவும் பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு ஏற்றிக்கூறும் வழக்கம் பிறநாட்டுக் கருத்துக்களை யூத மறைக்குக் கொண்டு வரப்பெரிதும் உதவியது.

அதே போல மிஸ்னாவில் பல இடங்களில் கேகன்னா உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. குரானிலும் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது (சூரா 19:69).

ஆனால் புதிய ஏற்பாட்டில் சில நூல்களில் இத்தகைய உருவகம் பயன்படுத்தப்படவில்லை. புறவினத்தாராயிருந்த கிறிஸ்தவர்களுக்கு யூத மறையின் திருவெளிப்பாடுகளும் இறுதி நாட்கள் பற்றிய காட்சிகளும் பொருளற்றவை என்பதால் இவை விடப்பட்டிருக்கலாம். எனவே கடவுளின் கோபத்தையும், பாவ தண்டனையையும் விளக்க அவர்கள் வேறு உருவகங்களைப் பயன்படுத்தினர். புனித யோவானின் கருத்துப்படி தீர்ப்பினாலும் (3:8; 5:24 தொ; 12:31.48; 16:11) இறப்பினாலும், அதாவது மகன் அளிக்கும் முடிவற்ற வாழ்விலிருந்து புறம்பாக்கப்படுவதாலும் (5:29; 8:24; 10:28; 11:25 தொ; 12:25), இருளினாலும் (8:12; 12:44-46) பாவத்திற்குத் தண்டனை அளிக்கப்படுகிறது. பவுலின் கூற்றுப்படி, பாவத்தின் சம்பளம் மரணமாகும் (உரோ 6:23); பாவிகளுக்கு இறைவனின் அரசில் பங்கில்லை (1 கொரி 6:10; கலா 5:19-21). பாவிகள் முடிவற்ற அழிவுக்குள்ளாவார்கள் (2 தெச 1:9; எபி 10:26-31).

**கேசான்** (GESHAN - இறுதியான)

காலேபின் வழித்தோன்றல். எகிதாயின் மூன்றாம் மகன் (1 நாள் 2:47).

**கேசீர், ஏசீர்** (HEZIR - பன்றி, காட்டுப்பன்றி)

1. ஆரோனின் வழித்தோன்றல். தாவீது ஆட்சியின்போது குருகுலத்தின் பதி

னேழாம் பிரிவின் குலப்பெயர்த்தலைவர் *(1 நாள் 24:15).*

2. எஸ்ராவின் உடன்படிக்கையின்போது கையொப்பமிட்டவர்களில் ஒரு குலத் தலைவர் *(நெகே 10:20).*

**கேடயம்** *(SHIELD, BUCKLER)*

போரில் பயன்பட்ட அடிப்படைப் பாது காப்புக்கருவியாகும். வெடிமருந்துகள் கண்டு பிடிக்கப்படுமுன் போரில் கேடயம் பயன் பட்டது. இஸ்ராயேல் தோன்று முன்பே கேடயம் போரில் பயன்பட்டுள்ளது. வடிவத்திலும் பருமனிலும் கேடயங்கள் வேறுபடும். ஒருவருடைய உடலை முழுவதும் மறைக்கக்கூடிய பெரிய கேடயம் உண்டு. இது சில சமயம் கேடயம் தாங்குவோனால் சுமந்து செல்லப்படும் *(1 சாமு 17:7.41).* அல்லது முகத்தையும் மேல் உடலையும் மட்டும் மறைக்கும் சிறிய கேடயமும் உண்டு. இது உடலில் போர்க்கவசம் அணியப்பட்டிருக்கும்போது பயன்படுத்தப்பட்டது. கேடயங்கள் பொதுவாக மரத்தால் செய்யப்பட்டு, தோலால் மூடப்பட்டிருந்தன. தோல் வெடித்துப் போவதைத் தடுக்க தோலை எண்ணெய் பூசிப் பளபளப்பாக வைத்திருக்க வேண்டும். அரிதாக உலோகத்தால் கேடயங்கள் செய்யப்பட்டன. மரத்தையும் தோலையும் வலுவாக்கக் குறிப்பாக முகத்தை மறைக்கும் பாகத்தை வலுவாக்க உலோகம் பயன்பட்டது.

பழைய ஏற்பாட்டில் கேடயத்தைக் குறிக்க மூன்று சொற்கள் பயன்படுகின்றன. ''மாசேன்'' என்ற சொல் சிறிய வட்டவடிவமான கேடயத்தைக் குறித்தது. இதை வில் வீரர்களும் வாள்வீரர்களும் பயன்படுத்தினர் *(1 நாள் 5:18; 2 நாள் 14:8; 17:17).* ''சின்னா'' என்ற சொல் பெரிய செவ்வக வடிவமான கேடயத்தைக் குறித்தது. இதை வேலைத் தாக்கும் ஆயுதமாகக் கொண்டவர்கள் பயன்படுத்தினர் *(14:18).* இந்த இரு சொற்களும் ஒன்று மற்றதைக் குறிக்கப் பயன்படலாம். ''செலெத்'' என்ற சொல் கேடயத்தைப் பொதுவாகக் குறித்தது.

அரச மாளிகையையும் *(1 அர 10:16-17)* எருசலேம் ஆலயத்தையும் *(2 நாள் 23:9)* அழகு செய்ய உலோகத்தால் செய்யப்பட்ட சிறிய, பெரிய கேடயங்கள் பயன்பட்டன.

உருவகமாக இறைவன் கேடயம் என்று குறிக்கப்படுகிறார் *(ஆதி 15:1; சங் 3:35; 18:2.30; 33:20; 84:11; ...).* கேடயம் இறைவனுடைய பாதுகாப்பின் *(சங் 18:3; 8:9)* அடையாளமாகும். புதிய ஏற்பாட்டில் கேடயம் ஒரே ஒருதரம் பயன்பட்டுள்ளது. விசுவாசம் கேடயம் என்றழைக்கப்படுகிறது *(எபே 6:16).* அது கிறிஸ்தவனின் உயிர்நாடியான பாதுகாப்பாகும்.

**கேடயம் தாங்குவோன், பரிசையன்** *(SHIELD - BEARER)*

படைத்தலைவனின் கேடயத்தை ஏந்திச் செல்லும் ஏவலன் *(1 சாமு 17:7. 41).*

**கேதமா** *(KEDEMAH - கீழ்த்திசை)*

இது இசுமயேலின் ஒரு மகன் பெயர். இப்பெயர் ஓர் அரேபிய இனத்தையும் குறிக்கிறது *(ஆதி 25:15; 1 நாள் 1:31).* இப்பெயரும் நோதாபும் ஒரே ஆளைக் குறிப்பதாகத் தெரிகிறது.

**கேதார்** *(KEDAR - கருப்பான், வலிமைமிக்க)*

இசுமயேலின் இரண்டாவது மகனின் பெயர் *(ஆதி 25:13; 1 நாள் 1:29).* மேலும் இப்பெயர் ஒரு முக்கியமான அராபிய இனத்தின் குலப்பெயருமாகும். சில தலைமுறை வரலாற்று மேதைகள் முகம்மது இந்தக் கேதார் சந்ததியில் வந்தவர் எனக் கருதுகின்றனர்.

*1.* **விவிலிய விளக்கம்:-** கேதார் மக்கள் பாலைவனத்தில் *(எசா 42:11)* கருப்புக் கூடாரங்களில் *(உ.ச. 1:5; சங் 120:5; எரே 49:29)* தனித்து *(எரே 49:31)* வசிப்பவர்கள். இவர்களில் சிலர் அரணில்லா ஊர்களில் வாழ்ந்தனர் *(எசா 42:11).* இவர்கள் ஆடு மேய்க்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர் *(எசா 60:7; எரே 49:29.32).* தங்கள் கால்நடைகளை விற்கத் தீர் நகரம் வரை வந்தனர் *(எரே 49:29.32; எசே 27:21).* இவர்கள் முன் தலையை மழித்

துக் கொள்வர். இம்மக்களின் தலைவர்கள் வியாபாரத்தை முன்னின்று நடத்தினர் (எசே 27:22). கேதார் மக்கள் வலிமை வாய்ந்த வில் வீரர்கள் (எசா 21:17). பழங்கால மேற்காசியாவில் மேன்மைமிக்கவர்களாகத் திகழ்ந்தனர் (21:16).

*2. தொடர்பு:-* ஆதி ஆகமத்திலே கேதாரானது இசுமயேலின் மற்றப் பதினொன்று கோத்திரங்களுடன் தொடர்புபடுத்தப்பட்டுள்ளது. இவர்களில் பலர் வட அரேபியாவில் வாழ்ந்தவர்கள். இவர்கள் கீழ்த்திசை மக்களாகக் கருதப்பட்டனர் (எரே 49:28).

இவர்கள் மற்ற இடங்களில் சீரியா பாலஸ்தீனத்துக்குக் கிழக்கே வாழ்ந்ததாகக் கட்டப்படுகின்றனர் (ஆதி 29:1; நீதி 6:3; எசே 25:4:10). கேதார், தெதானியர், தேமானியர் மக்களோடும் (எசே 21:13-14) செலா (42:11) மிதியான், ஏப்பாகு, சேபா, நெபயோத்து (60:6-7), காசோர் (ஆட்சோர்) (எரே 40:28.33) ஆகிய நகரங்களோடும் தொடர்புபடுத்தப்படுகின்றனர்.

*3. இருப்பிடம்:-* கேதாரும் அவர்தம் சகோதரரும் கெவிலாவுக்கும், (அவிலா) (அரேபியாவில் உள்ள ஓர் இடம்) அசீரியாவுக்குப் போகிற வழியில் எகிப்து நாட்டிற்கு எதிராகக் காணப்படும் சூருக்கும் (எகிப்திற்குக் கிழக்கிலும் பாலஸ்தீனத்திற்குத் தெற்கிலும் உள்ளது) இடையிலுள்ள பகுதியில் வாழ்ந்தனர் (ஆதி 25:18). இப்பகுதியில் கேதார் மக்கள் மேய்ச்சல் நிலங்களை நாடிச் சுற்றித் திரிந்தனர்.

*4. வரலாறு:-* கி.மு. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அசீரிய வெற்றிக் குறிப்பேடுகள் இம்மக்களும் அரேபியர்களும் ஒன்றே எனக் கூறுகிறது. நெபுகத்னேசார் மன்னன் இந்நாட்டைக் கைப்பற்றினான் (எரே 49:28). கேதார் மக்களின் அரசனாகிய கெசேம் எருசலேம் மதில் கட்டுமானப் பணியைத் தடைப்படுத்தினான் (நெகே 2:19; 6:1-2.6).

*5. மதம்:-* இம்மக்கள் உருவ வழிபாட்டைக் கொண்டவர்கள். அவர்களுக்கெனப் புண்ணியத்தலங்கள் இருந்தன. அவர்கள் தங்கள் கடவுளை நட்சத்திர வடிவமாக்கி வழிபட்டனர். அவர்கள் தண்ணீரையும் வழிபட்டதாகப் பாபிலோனியத் தால்மூது கூறுகிறது.

## கேதுரு மரம் (CEDAR)

விவிலியக் காலங்களில் லெபனோன் மலைகள் கேதுரு மரங்களைக் கொடுக்கும் ஒரு சிறந்த இடமாக இருந்தது. ஆகவே தாவீதும் சாலமோனும் அங்கிருந்து அதிக மான அளவு மரங்களை இறக்குமதி செய்தனர் (2 சாமு 5:11; 7:2.7; 1 அர 5-7; 1 நாள் 14:1; 17:1.6; 22:4; 2 நாள் 2). இந்த மரக்கட்டைகள் பெரிய, பெரிய கட்டுகளாக லெபனோனிலிருந்து யோப்பாவிற்கு மிதந்து செல்லுமாறு விடப்பட்டன. சாலமோனுடைய கட்டடங்களில் ஒன்றில் மூன்று வரிசைகளில் 15 கேதுரு மரத் தூண்கள் இருந்ததால் அது ''லெபனோனின் வனம்'' என்று அழைக்கப்பட்டது (1 அர 7:2-5). கேதுரு மரங்கள் தூண்களாகப் பயன்படுத்தப்பட்டதுமன்றிக், கூரையாகவும் (7:7), விட்டங்களாகவும் (6:9; 7:2), பலகையாகவும் (6:15), செதுக்கு வேலைகளுக்கும் (6:18) பயன்படுத்தப்பட்டன. சாலமோன் காலத்தில் ''கேதுரு மரங்கள் செபேலாவில் உள்ள காட்டத்தி மரங்கள் போல மிகுதியாய் இருந்தன'' (1 அர 10:27). கப்பல் பாய்மரத்தைக் கேதுரு மரம் கொண்டு செய்வித்தனர் (எசே 27:5).

கேதுரு மரம் அடிக்கடி வலிமையின் அடையாளமாகவும் (சங் 29:5; 37:35; எசா 2:13; 19:10; செக் 11:2....), மேன்மையின் அடையாளமாகவும் (உ.ச. 1:17); (எரே 22:14...), மகிமையின் அடையாளமாகவும் (சங் 80:10; எரே 27:7; செக் 11:1;...) லெபனோனோடு சேர்த்துப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. எசே 31-இல் உள்ள கேதுரு மர உருவகம் அநேகமாகப் புராணப் பொருளைக் கொண்டதாகும்.

பிலயாம் இறைவாக்குரையில் வரும் கேதுருமரக் குறிப்பை விளக்குவது மிகவும்

கடினம்; ஏனெனில் நீரின் அருகில் இம்மரம் வளர்வதில்லை (எண் 24:6). கேதுரு மரக் கட்டை, ஈசோப்புடனும் கருஞ்சிவப்பு நூலு டனும் சேர்ந்து தொழுநோய்ச் சுத்திகரச் சடங்கில் பயன்படுத்தப்பட்டது (லேவி 14:4-6. 49-52). செங்கிடாரிச் சடங்கிலும் இது பயன்படுத்தப்பட்டது (எண் 19:6). இவை வேறுவகையான கேதுரு மரக்கட்டைகளைக் குறிக்கக்கூடும் என்று பிற தாவரவியல் வல்லுநர்கள் கருதுகின்றார்கள். இது சாலமோன் காலத்திற்குப் பிந்திய சடங்கு முறைகளைக் காலமயக்கமாக முன்னே குறிப்பிடுவதாகக் கருதப்படுகிறது. இந்த முறையில் லெபனோன் கேதுரு நீண்ட ஆயுளின் அடையாளமாகப் பயன்பட்டது.

**கேத்து** (CHETT)

எபிரேய நெருங்கணக்கில் எட்டாவது எழுத்து. அகரவரிசைச் சங்கீதம் 119-இல் எட்டாவது பிரிவுக்குத் தலைப்பாக உள்ளது.

**கேத்து, ஏத்து** (HETH)

நாடுகள் பட்டியலில் இத்தியர்களில் குல முதியவரின் பெயர். கானானின் இரண்டாவது புதல்வர் (ஆதி 10:5;23:10;1 நாள் 1:13). ஆபிரகாம் இத்தியர்களிடமிருந்து மக்பேலாவில் தன் கல்லறைக் குகையை வாங்கினார் (ஆதி 23;25:10;49:32). யாக்கோபு இத்தியப் பெண்களை மணப்பதை ரபேக்காவும் ஈசாக்கும் தடுத்தனர். (27:46). இப்பெண்களை அவர்கள் ''கனானியப்பெண்கள்'' என்றும் குறிப்பிட்டனர் (28:1.8).

**கேபர், ஏபர்** (HEPHER - கிணறு, உதவி) -ஆள்

1. மனாசே அல்லது கிலயாது கோத்திரத்தில் ஓர் இனத்தின் குலப்பெயர்த் தலைவர் (எண் 26:32-33;27:1; யோசு 17:2-3).

2. யூதா கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு குடும்பம் அல்லது ஒரு மனிதன். அஸ்கூர், நாராஆகியோரின் மகன் (1 நாள் 4:6).

3. தாவீதின் ஆற்றல்மிக்க மனிதர்களுள் ஒரு மெக்கராத்தியர் (1 நாள் 11:36). 2 சாமு 23:34-இல் இருந்து இப்பகுதி வேறுபட்டிருக்கிறது. இரண்டுமே பழுதுபட்ட வாசகங்களாக இருக்கலாம்.

**கேபர், ஏபர்** (HEPHER) - இடம்

கானானிய நகரம்; யோசுவாவால் தோற்கடிக்கப்பட்டது (யோசு 12:17). இது பிறகு சாமோனின் மாவட்டங்களுள் ஒன்றாகக் காணப்படுகிறது. கேபர் நாடு முழுவதும் சாலமோனின் அதிகாரிகளுள் ஒருவரான பென் - கெதுது என்பவரின் கண்காணிப்பில் இருந்தது. அருபோத்து, சொக்கோவோடு இது ஆட்சிமுறைசார்ந்த மூன்றாவது மாவட்டமாகும் (1 அர 4:10). எட்டாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் கேபர் அருபோத்தோடு வரிசைப்படுத்தப்பட்டிருக்கிறது.

கேபர் இருந்த இடம் துல்லியமாகத் தெரியவில்லை: இது அருபோத்துக்குக் கிழக்கே 3 கி.மீ. தொலைவில் கப்பிரே என்ற இடமும், தேல் இப்சாரும் ஆக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**கேபா** (CEPHAS)

காண்க. பேதுரு.

**கேபீம்** (GEBIM - அகழி, பதுங்குகுழி)

பென்யமின் குலத்தோர் வாழும் இந்நகரம், எருசலேமை நோக்கி அசீரியர்கள் படையெடுத்துச் சென்ற பாதையில் அமைந்திருந்தது (எசா 10:31). இந்நகர் எங்கிருந்தது என்று சரியாகச் சொல்ல முடியவில்லை என்றாலும், எசாயாநூலில் ஆய் நகருக்கும், மிக்மாசு நகருக்கும் இடையே காணப்படுவதால் இவ்விரு ஊர்களுக்கும் அருகிலே இருந்திருக்கக்கூடும்.

**கேரா** (GERA - விருந்தாளி)

1. பென்யமின் புதல்வர்களில் ஒருவர். உண்மையில் இது பென்யமின் குலத்தின் இனப்பெயர் முதல்வரின் பெயராகும் (ஆதி 46:21). இணையான விவரிப்பு (1 நாள் 8:3) இவரைப் பேலாவின் மகனாகக் குறிப்பிடுகிறது. ஆகவே இவர் பென்யமினின் பேரனாவார்.

2. பென்யமினைச் சேர்ந்த நீதிபதி ஏகூதின் தந்தை *(நீதி 3:15)*.

3. அப்சலோமின் கலகத்தால் தாவீது எருசலேமைவிட்டு ஓடும்போது அவரை வசை மொழி கூறிய சிமயி என்பவனின் தந்தை *(2 சாமு 16:5;19:16.18;1 அர 2:8)*.

4. பென்யமினின் பேரன் *(1 நாள் 8:3.5)*. 1 நாள் 8:5 இலிருந்து கூறப்பட்டவைகளே திரும்பவும் கூறப்பட்டிருப்பதால் கெரா ஏகூதின் புதல்வராகக் குறிப்பிடப்பட்டுள்ளார்.

**கேரா** (GERAH - *கொட்டை)*

எடையின் ஓர் அளவு. செக்கேலின் இருபதில் ஒரு பாகம் *(யாத் 30:13; லேவி 27:25;எண் 3:47;18:16;எசே 45:12)*. *0.57* கிராமுக்குச் சமமான எடை

**கேராசிம்** (GE-HARASHIM - *தொழிலாளிகளின் பள்ளத்தாக்கு)*

சாரோன் சமவெளியின் தெற்கு எல்லையில் லோது, ஓனோ என்ற ஊர்களுக்கு அருகில் உள்ள பள்ளத்தாக்கிலிருந்து ஒரு தொழிலாளிக்குழுவினர் பெயர் பெறுகின்றனர். இப்போது யோப்பா நகரையும் எருசலேம் நகரையும் இணைக்கும் சாலையில், லோதுக்கும் ஓனோவுக்கும் இடையில் உள்ள வாடி எஸ்செலால் என்ற அகன்ற பள்ளத்தாக்கே தொழிலாளர்களின் பள்ளத்தாக்காக இருக்கலாம். வேறுசிலர், தென்மேற்கே உள்ள பள்ளத்தாக்கிலிருக்கும் சாராபாண்ட் ஏல்-காராப்பு என்ற இடமே தொழிலாளர்களின் பள்ளத்தாக்கு என்று கருதுகின்றனர்.

யூதாவின் குலத்தைச் சேர்ந்தவரும், கெனாசுவின் வழித் தோன்றலுமாகிய யோவாபு என்பவரே இந்தத் தொழிலாளிகள் குழுவின் தந்தை அல்லது அதை நிறுவியவர் *(1 நாள் 4:14)*. அடிமைத்தனம் முடிந்து நாடு திரும்பி வந்தபோது பென்யமின் புதல்வர்கள் இப்பள்ளத்தாக்கில் குடியேறினர் *(நேகே 11:35)*.

இப்பள்ளத்தாக்குக்கு ஏன் இப்பெயர் சூட்டப்பட்டது என்பது இன்றும் தெளிவாக வில்லை. ஆனால் இஸ்ராயேல் நாடு முழுவதும் ஒரு கொல்லன் கூடக் காணப்படாதவாறு இஸ்ராயேல் மக்கள் தங்கள் போர்க் கருவிகளைக் கூர்மைப்படுத்தப் பெலிஸ்தியரிடம் சென்றதை இது நினைவூட்டுகிறது *(1 சாமு 13:19-20)*.

**கேருத் - கிம்காம்** (GERUTH CHIMHAM - *கிம்காமின் பேட்டை)*

கேருத்-கிம்காம் பெத்லகேம் அருகில் உள்ள ஓர் இடம். இவ்விடம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. யோகனானும் இசுமயேலும் அவர்களோடு சேர்ந்த கொலையாளிகளும் எகிப்துக்குத் தப்பியோடியபோது தங்கிச் சென்ற இடம் *(எரே 41:17)*. பர்சில்லாயின் மகனான கிம்காமுக்கும் *(2 சாமு 19:37-38)* இந்த இடத்திற்கும் இடையேயுள்ள தொடர்பு தெளிவாக இல்லை.

**கேரேசு, ஏரேசு** *(*HERESH*)*

அடிமைத்தளையிலிருந்து மீண்டு திரும்பி வந்தவர்களில் ஒருவராகக் குறிப்பிடப்படும் ஒரு லேவியர் *(1 நாள் 9:15)*.

இப்பெயர் அதன் இணைப் பகுதியான நெகே 11:15-16-இல் காணப்படவில்லை.

**கேரோசு** *(*KEROS - *வளைந்த)*

பாபிலோனிய அடிமைத்தனத்திற்குப்பின் எருசலேம் தேவாலயத்தில் வேலை செய்த ஒரு குடும்பத்தலைவனின் பெயர் *(எஸ் 2:44)*.

**கேர்சோம்** *(*GERSHOM - *அந்நியர், குடியேறியவர்)*

1. மதியான் நாட்டில் மோசேக்கும், சிப்போராவுக்கும் பிறந்த மூத்தமகன் *(யாத் 2:22;18:3)*. இவரைத்தான் சிப்போரா விருத்தசேதனம் செய்திருக்க வேண்டும் *(4:24-26)*. இவர் தாண் வம்சத்தினருக்கு மூத்த குருவாக இருந்த யோனத்தானின் தந்தையாவார் *(நீதி 18:30)*. ஆரோனுடைய புதல்வர்களோடு மோசேயின் புதல்வர்களும் திருவிடத்தில் திருப்பணி புரியச் சேர்த்துக் கொள்ளப்பட்டனர் *(1 நாள் 23:13-16)*. கேர்சோம் குருகுலத்தின் வேலை கருவூலத் தலைமைக் கண்கா

ணிப்பாளனாய் இருப்பதாகும் (1 நாள் 23:16; 26:24).

2. கேர்சோன் என்ற பெயரின் மற்றொரு வடிவம். லேவியின் புதல்வரில் ஒருவர் (1 நாள் 6:1. 16-17. 20. 43;23:6-7). இவருடைய வழித்தோன்றல்கள் ''கேர்சோமின் புதல்வர்கள்'' என்று அழைக்கப்படுகிறார்கள் (1 நாள் 6:62.71;15:7).

3. பினகாசின் (குரு, ஆரோனின் பேரன்) வழித்தோன்றல். பாபிலோனிலிருந்து வந்த குலத்தலைவர்களில் இவரும் ஒருவர் (எஸ் 8:2).

**கேர்சோன்** (GERSHON)

லேவியின் மூன்று புதல்வர்களில் ஒருவர் (யாத் 6:16;எண் 3:17; 1 நாள் 6:1.16.43;23:6). யாக்கோபும் அவர் குடும்பத்தினரும் எகிப்து நாட்டுக்குக் குடிபெயர்வதற்கு முன்னால் இவர் பிறந்தார் (ஆதி 46:11). கேர்சோனுக்கு லிப்னி (1 நாள் 23:7;26:24-இல் இலாதான் என்றிருக்கிறது), சிமயி என்று இரு புதல்வர்கள் உண்டு (யாத் 6:17;எண் 3:18;1 நாள் 6:17.20). பிற்காலத்தில் இவர்கள் லிப்னியர், சிமயியர் என்று பிரிவுபட்டனர். கேர்சோனின் வழித்தோன்றல்களைப் பற்றியும் அவர்களுக்குக் கிடைத்த நகர்கள் வேலைகளைப் பற்றியும் நாளாகமம் கூறுகிறது.

அ) 10-ஆம் நூற்றாண்டில் லேவியரின் நகரங்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டபோது, கோகாத்தியர்களும், கேர்சோனியர்களும், மெராரியர்களும்தான் பெரிய லேவியக் குழுக்களாக இருந்தனர். அவர்கள் கோவிலைச் சுற்றிக் குடியிருக்கவில்லை. திருவிடத்தை விட்டு அகன்றே இருந்தனர். கேர்சோனின் புதல்வர்களுக்கு 13 நகர்கள் கொடுக்கப்பட்டன (யோசு 21:6.27-33; 1 நாள் 6:22.71-76).

ஆ) சிறிது காலத்திற்குக் கேர்சோனியர்கள்தான் லேவியக் குழுக்களில் மிகவும் சக்தி வாய்ந்தவர்களாக இருந்தார்கள் (ஆதி 46:11;யாத் 6:16; எண் 3:17;26: 57; 1 நாள் 6:1.16;23:6). மக்கள் கணக்கெடுப்புப் பதிவில் கேர்சோனியர்கள் முதலிடம் பெற்றனர் (எண் 26:57). பாபிலோனிலிருந்து திரும்பி வந்தபின் பாடகர்கள் பட்டியலிலும் கோவிலில் வேலைகளைச் செய்வதிலும் முதலிடம் வகித்தனர் (1 நாள் 6:16-30;23:7-11). கேர்சோனியரின் வழித்தோன்றல்களிலிருந்து ஆசாபின் இசைக்குழு (1 நாள் 6:39.43), கோவில் கருவூல நிர்வாகிகளான இலாதான் (1 நாள் 23:7-9;26:21), எகியேல் (29:8) போன்ற முக்கியமான நபர்கள் தோன்றினர்.

இ) நாளாகமத்தில் சில இடங்களில் கேர்சோனியரைவிடக் கோகாத்தியர்களே சக்தி வாய்ந்த லேவியர்களாக இருந்தனர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது (யோசு 21; எண் 3:21; 4:24-26; 10:17;4:34-39; 1 நாள் 15:4-7; 2 நாள் 29:12; 34:12; 20:19).

**கேலக்கு, ஏலக்கு** (HELEK - பகுதி)

கேலக்கிய வம்சத்தின் குலப்பெயர்த் தலைவனும் மனாசே கோத்திரத்தாரின் உறுப்பினனுமாவார் (எண் 26:30). யோசேப்பின் புதல்வனான மனாசேயின் வழித்தோன்றல்களில் ஒருவராக வரிசைப்படுத்தப்பட்டிருக்கிறார் (யோசு 17:2; எண் 26:29). இங்கே கேலக்கின் தலைமுறை அட்டவணை கிலயத்து, மாக்கிர், மனாசே வழியாக யோசேப்புக்குப் பின்னோக்கிக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**கேலப்பு, ஏலப்பு** (HELEPH - மாற்றம்)

நப்தலியில் ஒரு எல்லையோர நகர். தாபோர் மலைக்கு வடகிழக்கில் உள்ள கிர்பெத்து அர்பாத்தாவும் இதுவும் ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆனால் இதுதான் என்று அடித்துச் சொல்லமுடியாது. இது கலிலேயாவின் மலைப்பகுதியில் தேல் கதேசுக்கு மேற்கில் 18 கி.மீ. தொலைவில் இருந்திருக்கலாம்.

**கேலா, எலயா** (HELAH - கழுத்தணி)

அஸ்கூரின் இரண்டு மனைவிகளில் ஒருத்தி; யூதாவின் வழி வந்தவள். தெக்கோவாவின் முன்னோர் (1 நாள் 4:5.7).

**கேலாம், ஏலாம்** (HELAM - கோட்டை)

கிலயாதின் எல்லைக்கு அருகில் உள்ள ஒரு நகரம். இங்கு தாவீது சீரியர்களைத் தோற்கடித்தார் (2 சாமு 10:16-17). எசே 47:16-இன் எழுபதுநூல் வாசகத்தில் இப் பெயர் வருகிறது. இது தமஸ்குவுக்கும் கமாத் துக்கும் (ஆமாத்து) இடையில் அமைந்திருந் தது. இது இருந்த இடம் பற்றித் தர்க்கம் இருந்தாலும், இது 1 மக் 5:26.35-இல் வரும் அலமாவாக இருக்கலாம்.

**கேலாயா** (KELAIAH - யாவே அவமதித்தார், குள்ளமான)

லேவியருள் ஒருவரான இவர் எஸ்ராவால் புறவின மனைவியை விட்டுவிடும்படி கட் டாயப்படுத்தப்பட்டவர் (எஸ் 10:23). கேலாயாவும் கெலிற்றா என்ற பெயரும் ஒரே ஆளைக் குறிக்கலாம்.

**கேலேக்கு, ஏலேக்கு** (HELECH)

தீருக்குக் கூலிப்படை கொடுத்து வந்த இடம் (எசே 27:11). இது சிறிய ஆசியாவின் தென்கிழக்குப் பகுதியிலுள்ள சிலிசியா வைக் குறிக்கலாம்.

**கேலேசு, ஏலேசு** (HELEZ - வலிமை, ஆற்றல்)

1. தாவீதின் ஆற்றல்மிக்க வீரர்களுள் ஒருவர் (2 சாமு 23:26; 1 நாள் 1:27; 27:10). 2 சாமுவேல் நூல் இவரைப் ''பல்த்தியர்'' என்று அழைக்கிறது, 1 நாளாகமம் ''பெலோ னியர்'' என்று அழைக்கிறது. 'எழுபது நூல்' 2 சாமுவேலில் 'பெலோனிபர்' என்று அமைப்பதாலும், 1 நாள் 27:10 கேலேசை எப்பிராயிமைச் சேர்ந்தவர் என்று கூறுவ தாலும் 'பெலோனியர்' என்று அழைப்பது தான் சரியாக இருக்கலாம்.

2. யூதா கோத்திரத்தாரின் ஒரு குடும்பம். எரகுமவேலின் வழித்தோன்றல்; அசரியா வின் மகன்; எலயாசாவின் தந்தை (1 நாள் 2:39).

**கேலேது, ஏலேது** (HELED)

தாவீதின் வலிய வீரர்களில் ஒருவர். நெற் றோபாவின் பாகனாவின் மகன் (1 நாள் 11:30). கெல்தாய் (எல்தாய்)-1-இன் மற் றொரு பெயர்.

**கேலேபு, ஏலேபு** (HELEB)

தாவீதின் ''முப்பது'' ஆற்றல்மிக்க வீரருள் ஒருவர். நெற்றோபாவின் பாகனாவின் மகன் (2 சாமு 23:29). காண்க. கெல்தாய் (எல்தாய்)-1

**கேலோன், ஏலோன்** (HELON - வீரமிக்க, ஆற்றல்மிக்க)

செபுலோன் கோத்திரத்தில் எலியாபுவின் தந்தை (எண் 1:9; 2:7; 7:24.29; 10:16).

**கேவே** (KUE)

கேவே சிறிய ஆசியாக் கடற்கரையில் உள்ள, அநேகமாகக் கிழக்குச் சிலிசியாவின் பழங்காலப் பெயராக இருக்கலாம். இப் பெயர் 1 அர 10:28-இலும் 2 நாள் 1:16-இலும் காணப்படுகிறது. சாலமோன் அரசர் கேவே யிலிருந்து குதிரைகளை இறக்குமதி செய்த தாகக் கூறப்படுகிறது. கேவே இங்கு மிஸ்ரா யிம் என்னும் பெயருடன் சேர்த்துக் கூறப் படுகிறது. ஆனால் இங்கு மிஸ்ராயிம் எகிப் தைக் குறிக்காமல் சிறிய ஆசியாவில் உள்ள, கேவே போன்று, முசிரி என்னும் வேறு ஒரு நாட்டைக் குறிக்கிறது. சிலிசியா வளமை யான கடற்கரைச் சமவெளியில் சிறிய ஆசியா வின் தெற்கில் உள்ளது. இதன் வடக்கிலும் மேற்கிலும் தவுரஸ் மலைகளும் கிழக்கில் அமானுஸ் மலைகளும் உள்ளன. அசீரிய மன்னனான மூன்றாம் சல்மனேசரின் (கி.மு. 858-824) சாசனங்களில் கேவே குறிப்பிடப் படுகிறது. கேவேயின் மன்னன் சல்மனேசரின் எதிரிகளில் ஒருவர். கேவேயின் மன்னன் ஊரிக்கும், ஊரிக்கியும் மூன்றாம் திகிலத் பிலேசருக்குக் (கி.மு. 744-727) கப்பம் கட்டிவந் தனர் என்பது அவரது கட்டடங்களிலுள்ள சாசனங்களிலிருந்து தெளிவாகிறது.

**கேனதாது, ஏனதாது** (HENADAD)

செருபாபேல் தலைமையில் ஆலய வேலை செய்துவந்தவர்களை ஊக்குவிப்ப தற்காக நியமிக்கப்பட்ட லேவிய குலத்தலை வர் (எஸ் 3:9). நெகேமியா காலத்தில் எருசலேம் மதில்சுவர் பழுதுபார்த்தவர்க

ளுள் ஒருவராகவும் (நெகே 3:18.24), எஸ்ராவின் உடன்படிக்கையில் கையொப்பமிட்டவர்களில் ஒருவராகவும் (10:9) குறிப்பிடப்படுகின்றார்.

**கேனான்** (KENAN - சேர்க்கப்பட்ட, வாங்கப்பட்ட)

ஏனோசின் மகனும் மகலவேலின் தந்தையுமாவர் (ஆதி 5:9-14; 1 நாள் 1:2).

**கேனியர்** (KENITES - கொல்லன், கண்ணான்)

கி.மு. 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கொல்லர் இனத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் பாறைகளையும், கனிப்பொருட்களையும் கொண்ட தேல் ஆராதுக்குத் தெற்கே வாழ்ந்தனர் (எண் 24:21; நீதி 1:16). இவர்கள் வளமுடனும் மற்றவர் மதிக்கும் வகையிலும் வாழ்ந்தனர்.

1. **ஆரம்பக் குறிப்பு:-** ஆபிரகாமுக்கு இறைவன் வாக்களித்த நாடுகளிலே இந்தக் கேனியர் நாடும் ஒன்றாகும் (ஆதி 15:19). பிலயாமின் குறிசொல்லுதலில் இந்தக் கேனியரைப் பற்றிய குறிப்பு உள்ளது (எண் 24:21-22).

2. **மோசேயின் வாழ்வில் கேனியர் தொடர்பு:-** இஸ்ராயேலர் வரலாற்றில் இந்தக் கேனியர் மிகுந்த தொடர்புடையவராக இருக்கின்றனர். இவர்கள் இஸ்ராயேலருக்குச் சுரங்க வேலைகளையும், உலோக வேலைகளையும் கற்றுக் கொடுத்தனர். இந்தக் கேனியர் மோசேயின் உறவினன் கோபாபின் (ஓபாபு) வழி வந்தவர்களெனக் கூறப்படுகிறது (நீதி 4:11). இம்மக்கள் மோசேக்குப் பல வழிகளில் உதவினர். மோசே இவர்களிடமிருந்து வெண்கலத்தில் பாம்பைச் செய்யக் கற்றுக் கொண்டார் (எண் 21:8-9)

3. **கேனியரும், அமலேக்கியரும்:-** நாடோடி மக்களான கேனியர்கள் தெற்குப் பாலஸ்தீனத்தில் அமலேக்கியர் மத்தியில் வாழ்ந்தனர். சவுல் மன்னன் காலத்தில் கேனியரும் அமலேக்கியரும் நெருங்கி வாழ்வதைக் கண்ட சவுல் கேனியர்களை அமலேக்கியரை விட்டு விலகிச் செல்லுமாறு கண்டிக்கிறார் (1 சாமு 15:6). நீதிபதிகள் காலத்திலே இந்தக் கேனியரின் ஒரு பிரிவினர் கெபேரின் தலைமையிலே, கலிலேயாவில் வாழ்ந்து வந்தனர் (நீதி 4:11; 5:24). விவிலியப் பாரம்பரியம் இம்மக்களின் நாடோடி வாழ்க்கையையும், அவர்களின் தனித்தன்மைகளையும் அழகாக விளக்குகிறது. தென்யூதாவின் யகபேசில் வாழ்ந்த எழுத்தர்களின் சில குடும்பங்கள் கேனியர் என்று அழைக்கப்படுகின்றனர் (1 நாள் 2:55).

4. **கேனியரும், தாவீதும்:-** தாவீது இஸ்ராயேலின் அரசனாக ஆகும்முன்னர் இந்தக் கேனியர் நாட்டைக் கொள்ளையிட்டார் (1 சாமு 27:10). அவர் இக்கொள்ளைப் பொருள்கள் சிலவற்றைத் தம் உறவினர்களாகிய யூதாவின் மூப்பர்களுக்கு அனுப்பினார் (1 சாமு 30:29).

5. **கேனியர் மறைவு:-** கி.மு. முதலாம் ஆயிரம் ஆண்டில் இவ்வினம் மறைந்தது. இஸ்ராயேலின் பிற்கால வரலாற்றில் இவர்களைப்பற்றிய செய்திகள் இல்லை.

**கேன்** (HEN - சலுகை, ஆதரவு)

மாசரேட்டிக் வாசகப்படி, செப்பனியாவின் மகன் (செக் 6:14). சில மொழிபெயர்ப்புக்கள், சீரியக் வாசகத்தைப் பின்பற்றி, ''யோசியா'' என்று கொண்டுள்ளன.

# கை

## கை (HAND)

விவிலியத்தில் ஏராளமான பகுதியில் கை பயன்படுத்தப்பட்டுள்ளது. இவற்றில் பல உடலின் ஒரு அங்கத்தைக் குறிக்கின்றன. வேறுபல இச்சொல்லை உருவகமாக ஏறக் குறைய 1300 தடவை பயன்படுத்துகின்றன. கை சக்தியை ஆற்றலை அடையாளமாகச் சித்திரப்படுத்துகிறது (*சங் 78:42; எபி 10:31*). ''கையளித்தல் அல்லது கையிலிருந்து விடு வித்தல்'' என்பது மிகப்பரவலாகப் பயன் படும் சொற்றொடராகும் (*யாத் 3:8; நீதி 4:2*). சில சமயம் செயல்புரிவதையும் (*யாத் 14:31*) இயலும் அல்லது இயலாத் தன்மையையும் (*லேவி 5:7*) உடைமையையும் (*ஆதி 35:4*) கை சுட்டவல்லது.

கை என்ற சொல் மனித உடம்பின் மற்றப் பாகங்களைக் குறிக்கும் சொற்களைப்போல், முழு மனிதனைக் குறிக்கப் பயன்படுகிறது (*லேவி 8:36;எசா 1:12; 35:3*).

இறைவனின் கையைக் (ஆற்றலைக்) குறிக்கும் பல குறிப்புகள் உள்ளன (*எசா 41:20;லூக்1:66*). அவற்றில் மிகச் சிறப்பா னவை: ஓங்கிய கை (*எரே 21:5*); கைவன்மை (*யாத் 6:1;13:3*). ''ஆண்டவரின் கைவன்மை இருந்தது'' என்பதன் பொருள் எசேக்கியேல் இறைவாக்குப் பரவசநிலையால் பீடிக்கப் பட்டார் என்பதாகும் (*எசே 1:3; 3:14.22*). இது இறைவாக்கு ஏவுதலையும் குறிக்க வல்லது.

சில சைகைகள் பொருள் பொதிந்தவையா கும். கைகளை உயர்த்துதல் போற்றுத லையோ வேண்டுதலையோ குறிக்கும் (*1 அர 8:22; சங் 44:20; யாத் 8:5-6. 17; 2 அர5:11*). கைதட்டுதல் அரசனைக் குறித்தோ (*2 அர 11:12*) இறைவனைக் குறித்தோ (*சங் 47:1; 48:8; எசா 55:12; புல 2:15*) ஆர்ப்பரித்தலா கும். ஒருவர் மேல் கைவைத்தல் ஆசீர்வழங் குவதையோ (*ஆதி 48:14-15; மாற் 10:16*) அதிகார மாற்றத்தையோ குற்ற மாற்றத் தையோ உணர்த்தவல்லது. கைகளை ஒன்று சேர்த்தல் அல்லது குலுக்குதல் வாக்குறுதிக ளையும் உடன்படிக்கைகளையும் முத்திரை யிட்டது (*2 அர 10:15; பழ 6:1; 17:18; யாத் 23:1; 1 சாமு 22:11*). தனக்கு ஒரு காரியத்தில் எவ்விதப் பங்குமில்லை என்பதைச் சுட்டிக் காட்டக் கை கழுவுவர் (*உப 21:6; சங் 26:6; மத் 27:24*). விவிலியக் காலத்தில் கைகளை முடக்கி வைத்திருத்தல் சோம்பேறித்தனத் தைக் குறித்தது (*பழ 6:10; 24:33*). பிற்காலத் தில் இது செபம் செய்யும் நிலையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. காண்க: கரம் மற்றும் புயம்.

## கைக்காப்பு (ARMLET)

இது கையின் மேற்புறத்தில் அணியும் வளையம். இது கையின் கீழ்ப்புறத்தில் அணியும் பட்டை எனப்படுகிறது. மிதியா னியரிடமிருந்து இஸ்ராயேலர்கள் கொள் ளையடித்த பொருள்களில் கைக்காப்பு அல் லது கைப்பட்டையும் ஒன்றாகும் (*எண் 31:50*). சீயோன் மகளிருள் உல்லாசத்தில் மிதந்த வர்கள் அணிந்த ஆடம்பர அணிகலன்களில் இதுவும் ஒன்று (*எசா 3:20*). சவுல் இறந்தபின் அவர் அணிந்திருந்த காப்புவளை அவர் இறந்ததன் அடையாளமாகத் தாவீதிடம் காண்பிக்கப்பட்டது (*2 சாமு 1:10*). யாத் 35:22 இஸ்ராயேல் மக்கள் சந்திப்புக் கூடார வேலைக்காகக் கைக்காப்பு மற்றும் பிற அணிகளையும் காணிக்கையாகக் கொடுக்கத் தயாராக இருந்தனர் என்று கூறும்போது, எசா 3:20-23 இத்தகைய உலகியல் பொருள்க ளில் மக்கள் காட்டிய ஆர்வத்தைக் கண்டு இறைவன் சினம் கொள்வதைச் சித்தரிக்கி றது.

## கைக்குட்டை (HANDKERCHIEF, NAPKIN)

அ.ப.19:12 ''அவரது (பவுல்) உடலில் பட்ட கைக்குட்டை...'' இலத்தீனில் இச் சொல்லின் அடிப்படைப்பொருள் ''வியர் வை''யாகும். வியர்வையைத் துடைக்க நாம் பயன்படுத்துவது போன்ற ஒரு சிறுதுணி யையோ, அரேபியர்கள் தலைக்குமேல்

போடுகின்ற துண்டையோ குறிப்பிடலாம். அதே கிரேக்கச் சொல் லூக் *19:20*-இல் கைக் குட்டை, என்றும் யோவா *11:44; 20:7*-இல் முகத்தை மூடியதுணி, தலையை மூடியிருந்த துணி என்றும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. அப்போஸ்தலர் பணியில் பவுலிடமிருந்து கைக்குட்டை நோயை குணப்படுத்தும் சக்தியைக் கொண்டுவரப் பயன்படுகிறது. லூக் 19:20-இல் பணத்தை முடித்து வைத்திருக்கக் கைக்குட்டை பயன்படுகிறது. யோவானில் இத்துண்டு இறந்தவர்களுடைய முகத்தை மூடப் பயன்படுகிறது.

**கைக்சோஸ்** (HYKSOS)

எகிப்தை ஆட்சி செய்த 15, 16-ஆம் அரச மரபுகளைச் சேர்ந்த அரசர்கள் அனைவரும் 'கைக்சோஸ்' என்று அழைக்கப்பட்டனர் என்பது வரலாற்று ஆசிரியர் மனேத் தோவின் கருத்து. மேலும் கி.மு. *1800* முதல் *1550* வரை எகிப்திலும், சீரிய-பாலஸ்தீனப்பகுதிகளிலும் அதிகமான எண் ணிக்கையிலிருந்து ஆதிக்கம் செலுத்திய ஒரு குழுவினரும் 'கைக்சோஸ்' என்று அழைக் கப்பட்டனர் என்பது இன்றைய அறிஞர்க ளின் கருத்து.

வரலாற்று ஆசிரியர் மனேத்தோ இச் சொல்லை 'ஆயர் மன்னர்கள்' என்று மொழி பெயர்த்துள்ளது ஓரளவே சரியாகும். இன் றைய எகிப்திய ஆய்வாளர்கள் இச்சொல்லா னது எகிப்தை ஆண்ட அந்நிய நாடுகளைச் சேர்ந்த அரசர்களைக் குறிக்கின்றது என்கின் றனர். எகிப்து நாட்டில் கைக்சோஸ் என்ப வர்களின் ஆதிக்கம் வளர ஆரம்பித்த காலம் அவ்வளவு தெளிவாக இல்லை. ஆனால் எகிப்தில் 12ஆவது அரச மரபுக்குப்பின் அர சாட்சியானது சீர்குலைந்த நிலையில் இருந்த பொழுது கைக்சோஸ் என்பவர்கள் வட கிழக்குப் பகுதியிலிருந்து நைல் பள்ளத்தாக் கின் மீது படையெடுத்ததுபோல் தோன்று கிறது (கி.மு. *1991-1792*). முதன் முதலில் கி.மு. *1730*-இல் அவாரிசைத் தலைநகராகக் கொண்டு கழிமுகப் பகுதியில் கைக்சோசின் அரசாட்சி தொடங்கியது. இக்காலத்தில்தான் கைக்சோசின் 14-ஆவது அரசகுலம் கழிமுகப் பகுதியிலிருந்த கோயிசிலும் 13-ஆவது அரச குலம் தெபேசிலும் ஆட்சி செய்தனர். ஆனால் உண்மையிலே தெபேசு ஆட்சிப்பகு தியில் கைக்சோசின் ஆதிக்கம் நிலவியது என்பதற்குத் தெளிவான ஆதாரங்கள் காணப் படவில்லை.

எகிப்து நாட்டின் வடபகுதி முழுவதும் அந்நிய நாட்டவரின் ஆதிக்கம் பெருகுவ தைக்கண்டு அதிருப்தியடைந்த 17-ஆவது அரகுலத்தைச் சேர்ந்த எகிப்திய ஆட்சியாளர் காமோஸ் கைக்சோஸ் என்பவர்களை எகிப்து நாட்டின் மத்திய பகுதியிலிருந்து துரத்திச் சென்று கழிமுகப்பகுதியில் மட்டும் அவர் களது ஆதிக்கம் இருக்கும்படி செய்தார். ஆனால் 18-ஆவது அரசகுலத்தின் முதல் அரசராகிய (கி.மு. *1570-1545*) அக்மோசு என்பவரால்தான் கைக்சோஸ் என்பவர் களை எகிப்திலிருந்து வெளியேற்ற முடிந் தது.

கைக்சோஸ் என்பவர்கள் ஒரு தனிப்பட்ட மனித சமூகத்தினைச் சேர்ந்தவர்கள் அல்லர் என்பது தொல்பொருள் ஆராய்ச்சிகளி லிருந்து கிடைத்த ஆதாரங்களின் மூலம் உறுதி செய்யப்பட்டது. ஏனென்றால் எகிப்து நாட் டில் இருந்த கைக்சோசியர் அந்நாட்டு மொழியினையே தங்கள் மொழியாகக் கொண்டு பேசி வந்தனர். இவர்களது பெயர் களில் ஒருசில செமித்திய இனத்தவர்களின் பெயர்களைப்போலத் தோன்றியதால் இவர் கள் செமித்திய இனத்தைச் சேர்ந்தவர்க ளாகக் கருதப்பட்டனர்.

இவர்கள் எகிப்தியப் பண்பாட்டிற்கும் ஆசியப் பண்பாட்டிற்குமிடையே ஒரு தொடர்பை ஏற்படுத்தினார்கள். போர்களில் குதிரைகளையும், குதிரை பூட்டிய தேர்களை யும் முதன்முதலில் பயன்படுத்தினார்கள். நகர்களைச் சுற்றி அரண் எழுப்புகின்ற சிறந்த செயலை இவர்கள்தாம் ஆரம்பித்து வைத்த னர். ஆபரணங்கள் செய்வதில் திறமை படைத்தவர்கள். ஆயுதங்கள் செய்வதற்குச் செம்பு போன்ற உலோகப் பொருளைப்

பயன்படுத்தினர். கைக்சோசின் ஆட்சிக் காலத்தில்தான் இஸ்ராயேல் மக்கள் எகிப்தில் வந்து குடியேறியிருக்க வேண்டும் என்பது அறிஞர்கள் பலரால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது.

**கைத்தடி** (HANDPIKE)

கையில் வைத்திருக்கின்ற ஊன்றுகோல். இது நீண்ட கழியாகும். சிலசமயம், இது உலோகத்தினால் ஆன முனையைக் கொண்டிருக்கும். இதைக் காலாட்படையினர் ஓர் ஆயுதமாகப் பயன்படுத்துவர். அப்போது வேல்போல் பயன்படும் (எரே 39:9).

**கைத்தொழில்கள், வேலைகள்** (CRAFTS)

தனிப்பட்ட திறமை தேவைப்படுகின்ற வேலைகள், கைக்கலைகள். இந்த வேலைகளில் ஈடுபட்டுள்ளவர்கள், கலைஞர்கள், திறமையான வேலையாட்கள், கைவினைஞர்கள் என்று அழைக்கப்பட்டனர். விவிலிய மொழிபெயர்ப்பில் 'கைவினைஞர்கள்' என்ற பட்டம் மரவேலை செய்தவர்களுக்குத் தரப்பட்டது.

பல வேலைகள் ஆண்களாலும், பெண்களாலும் வீடுகளிலேயே செய்யப்பட்டன. அநேகமாகத் தாவீதின் காலம்வரை இஸ்ராயேலில் கொல்லர்கள் இருந்ததாகத் தெரியவில்லை (1 சாமு 13:14 தொ). வளர்ந்த கானானியப் பண்பாட்டுடனும், நாடு கடத்தப்பட்டபொழுது பாபிலோனியருடன் கொண்ட தொடர்பினாலும், இஸ்ராயேலில் பல கைவினைஞர்கள் உருவானார்கள். நாடு திரும்பியவர்களில் கைதேர்ந்த வேலையாட்கள், படிப்பறிவற்றவர்கள் என்று கருதப்பட்டனர். நாடு திரும்பிய பிறகும் புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் தங்களுடைய கைவேலைத் திறனால் இராபிகள் சுதந்தரமாக இருந்தனர். உழைப்பதைப் பெருமையாகக் கருதினர்.

கைவினைஞன் சாதாரணமாக ஒரு சுதந்தரக் கலைஞன். அடிமைகள் சிலர் மட்டும் இந்தத் தொழிலில் பயிற்றுவிக்கப்பட்டனர். நாடு திரும்பியபிறகு பாலஸ்தீனத்தில் கைவினைஞர்களின் சங்கங்கள் இருந்தன (நெகே 3:8). பொற்கொல்லர்கள் எருசலேம் சுவரைக் கட்டுவதில் உதவினர்.

கைவினைஞர்களால் கடைகள் நடத்தப்பட்டன (எரே 18:2); ஆனால் வியாபாரமும், வேலையும் வீட்டிற்கு வெளியே நடத்தப்பட்டன (1 அர 20:34). ஓரேவகை வேலை செய்த இஸ்ராயேலர்கள் சாதாரணமாக ஒரே இடத்தில் வாழ்ந்தார்கள் (நெகே 11:35; எசா 7:3; எரே 37:21). கைவினைஞர்களின் பட்டியல் மிகவும் நீளமானது. தச்சர்கள், ஆசனங்களைச் செய்பவர்கள், படகுகளைக் கட்டுநர்கள், மரத்தைச் செதுக்குபவர்கள், யானைத் தந்தத்திலும் செதுக்குபவர்கள், பொன், வெள்ளி, வெண்கலக் கொல்லர்கள், நெசவாளர்கள், தோல் பதனிடுவோர், தோல் வேலைகள் செய்வோர், கூடாரம் செய்வோர், தரைவிரிப்புகளைச் செய்பவர்கள், கயிறு பின்னுபவர், சிற்பக் கலைஞர்கள், நகை செய்வோர், கண்ணாடி வேலையைச் செய்வோர், பானைகளைச் செய்வோர், விளக்குகளைச் செய்வோர் முதலானோர்.

இறைவனே ஒரு தலைசிறந்த ''சிற்பியும் ஆக்குநருமாக'' விவரிக்கப்படுகிறார் (எபி 11:10).

**கைப்பிடிச்சுவர்** (PARAPET)

மக்கள் மாடியிலிருந்து கீழே விழாவண்ணம் தடுக்கும்சுவர். வீடுகள் தட்டையான கூரையைக் கொண்டிருந்ததால் மக்கள் எளிதில் மேலே செல்ல முடிந்தது. ஒரு புது வீட்டைக் கட்டும்போது ''ஒருவன் மாடியிலிருந்து விழுந்தால், அவனின் இரத்தப்பழி உன்மீது'' வராவண்ணம் மாடியைச் சுற்றிலும் கைப்பிடிச் சுவரைக் கட்ட வேண்டும் என்று கூறப்படுகிறது (உப 22:8).

**கைப்பிரதி** (MANUSCRIPT)

இது கையால் எழுதப்பட்ட ஆவணம் அல்லது பத்திரம் ஆகும். குறிப்பாக இச்சொல் மெல்லியதோல், புல்தாள், தோல் ஆகியவற்றின் மேல் எழுதப்பட்ட விவிலியத்தின் பகுதிகளைக் குறிக்கும். இவை கிறிஸ்துவ மதம் தோன்றும்முன் சில நூற்றாண்டுகள்

முதல், கி.பி. 16-ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலத்துக்குரியவை.

**கைம்பெண், விதவை (WIDOW)**

விவிலியத்தில் கைம்பெண்களைப் பற்றிக் கூறும் பல குறிப்புகள் அவர்களின் இரங்கத் தக்க நிலைமையைப் படம் பிடித்துக் காட்டு கின்றன. இவர்கள் பெரும்பாலும் கடுமை யாக நடத்தப்பட்டனர். இவர்கள் பொது வாக, அனாதைகள் மற்றும் திக்கற்றோருக்கு ஒப்பான ஒரு வாழ்க்கையை வாழ்ந்துவந்த னர். கைம்பெண்கள் தண்டனைத்தீர்ப்பின் பலியாடுகளாகக் கருதப்பட்டனர். ஆதிக் கிறிஸ்துவ மறையில் கைம்பெண்களின் தனித்த குழு ஒன்று காணப்படுகிறது. நகரங் களும் கைம்பெண்களுக்கு ஒப்புமையாகக் கூறப்படுகின்றன.

1. கைம்பெண்கள் பற்றிய சட்டம் :- எபிரேயச் சட்டம் கைம்பெண்களுக்கு அவர் களின் மரபு உரிமைகளை மறுக்கிறது என லாம். இது வேறெந்த ஒரு சட்டத்திலும் நாம் காணமுடியாத ஒரு கடுமையான, கொடுமை யான பழக்கமாகும். இதன் காரணம் என்ன வென்றால், வயதாகும் முன்பே ஒருவனுக் குச் சாவு என்பது பாவத்தின் தண்டனையா கும்; அதை இறந்தவனின் மனைவியும் ஏற்க வேண்டும் என்ற கருத்தாகும். எனவே கைம் பெண்ணாய் இருப்பது மிகவும் கேவலமான தாகக் கருதப்பட்டது (ரூத் 1:20-21;எசா 54:4). கைம்பெண்களுக்கு எனச் சில சலுகைகள் வழங்கப்படுகின்றன. இறந்த கணவனின் சகோதரர் யாராவது விதவையான தனது சகோதரனின் மனைவிக்கு வாழ்வு கொடுப் பது ஏற்றுக் கொள்ளப்பட்டது. சில இடங்க ளில் வலியுறுத்தப்படுகிறது (லேவி 22:13; ரூத 1:8). விதவைகளுக்குச் சில சலுகைகள் கொடுக்கப்பட்டன. அவர்கள் எடுத்துக் கொண்ட பொருத்தனைகள் நிலைக்கும் (எண் 30:10). விதவை மீண்டும் திருமணம் செய்துகொள்ளலாம் (லேவி 21:14;ரூத் 1:9;1 சாமு 25; எசே 44:22).

2. கைம்பெண்கள் கடுமையாக நடத்தப் பட்டனர்:- விதவைகள் கடுமையாக நடத்தப் படுதலை எதிர்த்து இறைவாக்கினர்கள் குரல் கொடுக்கின்றனர் (எசா 1:23; யோபு 22:9; 24:3; 31:16; சங் 94:6). கடவுள், இறுதி நாளில் விதவைகளை நசுக்குபவர்களைக் கடுமை யாகத் தண்டிப்பார் (மலா 3:5). இக் கண்டனங்களின் கடுமை, விதவைகள் கடுமை யாக நடத்தப்பட்டதைச் சுட்டுகின்றன. இவர்கள் தங்கள் கைம்மையை எடுத்துக் காட்ட அடையாள உடைகள் அணியவேண் டும் (ஆதி 38:14.19).

3. விதவைகள் இரக்கத்திற்குரியவர்கள்:- விதவை என்றால் ஊமை என்று பொருள். மேலும் விதவைகளின் உடைகள் அவளது துன்பத்தை விளக்கும். எனவே விதவை களின்மேல் இரக்கம் காட்ட வேண்டுமென விவிலியம் கூறுகிறது. அவளுக்கு நீதியும், அன்பும் காட்டப்பட வேண்டும் (உப 14:29;24:17). விதவைகள் கடவுளின் சிறந்த பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கின்றனர் என்று கூறுகிறது விவிலியம். இறைவனே விதவைகளின் தேவைகளை நிறைவு செய்கி றார் (உப10:18). மேலும் விவிலியத்தின் பல இடங்களில் இறைவனே விதவைகளைக் காப்பவர் மற்றும் அவர்களை நசுக்குபவர் களைத் தண்டிப்பவர் என்ற கருத்து காணப் படுகிறது (எரே 49:11; சங்68:5; 146:9 லூக் 20:47). விதவைகளுக்கு இறைவன் காட்டும் இரக்கம், அவர்களது நலனில், விசு வாசிகள் அக்கறையில் பிரதிபலிக்கப்பட வேண்டும் (யாக் 1:27)

4. ஆதிக் கிறிஸ்தவர்களிடையே விதவை களின் சிறப்புக்குழு:- இவர்களைப் பற்றிய குறிப்புகள் 1 திமோ 5:3-16; அ.ப. 6:1;9:39-இல் காணப்படுகின்றன. இவர்கள் போற்றப்பட்டனர்; ஆதரிக்கப்பட்டனர்; கவ னிக்கப்பட்டனர். இவர்கள் தங்கள் முழு நம்பிக்கையையும் கடவுள் மேல்வைத்து, அல்லும் பகலும் செபத்திலும் மன்றாட்டி லும் நிலைத்திருக்க வேண்டும். இவர்கள் அறுபது வயது குறையாதவர்களாகவும் ஒரு முறை மட்டுமே திருமணம் ஆனவர்களாக வும் இருக்க வேண்டும். பிள்ளைகளை நன் றாய் வளர்த்தல், விருந்தோம்புதல், இறை

மக்களின் பாதம் கழுவுதல், துன்புற்றோருக்கு உதவி அளித்தல் ஆகியவை விதவைகளின் கடமைகளில் சிலவாகும். இளம் விதவைகளை இக்குழுவில் சேர்க்கக்கூடாது. விதவைகள் தவிர்க்க வேண்டியவைகளும் சுட்டிக் காட்டப்படுகின்றன. இத்தகைய விதவையர் குழு இருந்ததற்கு ஆதிச் திருச்சபையின் தந்தையர்களுடைய நூல்கள் சான்று கூறுகின்றன.

5. கைம்பெண் என்ற சொல்லின் உருவகம்:-பாபிலோனின் நகரைக் கைம்பெண்ணாக உருவகப்படுத்துகிறார் விவிலிய ஆசிரியர் (எசா 47:9). இஸ்ராயேல் நாடும் விதவையாக விவரிக்கப்படுகிறது (54:4). புலம்பல்நூல் ஆசிரியர் எருசலேம் நகரை ஒரு விதவையாகச் சித்தரிக்கிறார் (புல 1:1; 5:3-4). திருவெளி 18:7 பாபிலோனை ஒரு விதவையாக உருவகப் படுத்துகிறது.

## கையணி, கைவளையல், கைக்காப்பு (BRACELET)

கைகளில் அணிந்து கொள்ளும் பொருட்டு அமைந்த ஒரு வளைந்த அணிகலன் (எண் 31:50; 2 சாமு 1:10). இவ்வகைக் கையணிகள் பாலஸ்தீனத்தில் எங்குமே பயன்படுத்தப் பட்டன என்று அகழ்வாராய்ச்சி கூறுகிறது. ஆண்கள் பெண்கள் என்னும் இரு பாலரும் இதனை அணிந்திருந்தனர். ஒரு கையிலோ, இரு கைகளிலுமோ அணிந்து கொள்ளப் படும். பொதுவாக, இவைகள் வெண்கலத்தினால் செய்யப்பட்டன. மற்றும் இரும்பு, வெள்ளி, கண்ணாடி ஆகியவற்றால் செய்த கையணிகளும் உண்டு. தங்கத்தில் செய்யப் பட்டவை மிக அரிதே. விவிலியத்தில் சொல்லப்பட்டிருக்கும் கையணிகள், முக்கியமாக ரபேக்காவுக்குக் கொடுக்கப்பட்டவை அனைத்தும், தங்கத்தால் செய்யப்பட்டதையே குறிக்கும். இத்தகைய அணிகள் ஆடம்பர வாழ்க்கையின் பிரதிபலிப்பாக இருக்கலாம் (எசா 3:19).

## கையூட்டு, கைக்கூலி (BRIBE)

சட்டமுறையான கடமையை நிறைவேற்றுவதைப் பாதிக்கும் முறையில் மதிப்புள்ள பொருளைக் கொடுப்பது அல்லது வாங்குவதாகும். அதன்விளைவு நீதியைப் பிறழச் செய்யும்; நெறிகோணச்செய்யும் (1 சாமு 8:3;பழ 17:23). கையூட்டு வாங்குவது சட்டத்தால் தடைசெய்யப்பட்டுள்ளது (யாத் 23:8; உப 16:19). ஆனால் இக்குற்றத்திற்கு எந்தக் குறிப்பிட்ட தண்டனையும் விதிக்கப் படவில்லை. குற்றவாளியை விட்டுவிடுவதற்கு மட்டுமன்று, குற்றமற்றவர்களைக் குற்றஞ்செய்தவர்களாகத் தீர்ப்பிடுவதற்கும் (சங் 15:5;எசா 5:23) அவர்களைக் கொல்வதற்கும் கூட (உப 27:25; எசே 22:12), கையூட்டுக் கொடுக்கப்பட்டது. உரிய நீதியைப் பெறுவதற்கும்கூட இது கொடுக்கப்பட்டது (யோபு 6:22). நடுவர்களுக்கு அன்பளிப்புக் கொடுப்பது இறைவாக்கினர்களால் கண்டனம் செய்யப்படுகிறது (எசா 1:23; மீக் 3:11;7:3). இதனால் ஏழைகள், தீர்ப்பினால் பாதிக்கப்படாவிட்டாலும், தங்கள் வழக்குகளை நடுவர்களிடம் சொல்வதற்குக்கூட வாய்ப்பில்லாது போகக்கூடும் (எசா 1:23). இதற்கு எதிராக, உப 1:17 ''விருப்பு வெறுப்பின்றித் தீர்ப்பிடுங்கள்; உயர்ந்தோனுக்கும் தாழ்ந்தோனுக்கும் ஒன்றுபோல் செவிகொடுங்கள்'' என்று அறிவுரை கூறுகிறது.

கொடை அல்லது அன்பளிப்புக் கொடுப்பது முன்னேறுவதற்கு நேர்மையான சாதனம் என்று கருதப்படுவதாலும் (பழ 18:16), சினத்தைத் தணிப்பதற்கு நன்கொடை அளிப்பது பரிந்துரைக்கப்படுவதாலும் (21;14), அன்பளிப்புக்கும் கையூட்டுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை விவரிப்பது வெகு கடினமாகும்.

## கையொப்பம் (SIGNATURE)

இந்த வார்த்தை எபிரேய நெடுக்கணக்கின் இறுதி எழுத்தின் தன்மை ஒருமை விகுதியுடன் கூடிய வடிவமாகும். விவிலியத்தில் இந்த எழுத்து "X" போன்ற வடிவம் கொண்டிருந்தது (1 சாமு 21:13; எசே 9:4). யோபு 31:35 என்ற பகுதி வாதியால் தான் குற்றமற்றவன் என்று சட்டப்பிரதியில் எழுதப்பட்டுள்ள பகுதியில் தன்னுடைய கையொப்பமிட்டு வைத்திருப்பதாகவும், அதே நேரத்

தில் குற்றம் சாட்டியவனின் எதிர் அறிவிப்புக்காகக் காத்திருப்பதாகவும் பிரதிபலிக்கின்றது.

**கைரேயா** (CHAEREAS)

மக்கபேயர் காலத்தில் வாழ்ந்த ஓர் அம்மோனியப் படைத்தளபதி. இவர் கசரா என்ற நகரைத் தம் கைக்குள் வைத்திருந்தார். கசரா மக்கபேயர்களால் முற்றுகையிடப்பட்டபோது இவரும் யூதா மக்கபேயரால் கொல்லப்பட்டார்.

**கைவினைத் தோரணங்கள்** (BEVELED WORK)

சாலமோன் கட்டிய ஆலயத்தில் பயன்பட்ட தள்ளுவண்டிகளின் சட்டங்களில் அமைக்கப்பட்டிருந்த அலங்காரத் தோரணங்களாகும் *(1 அர 7:29)*.

# கொ

## கொக்கி, தூண்டில் முள் (Clasp, Hook)

இது பல எபிரேய, கிரேக்கச் சொற்களை மொழிபெயர்க்கப் பயன்பட்டுள்ளது. திருவுறைவிடத்தின் தூண்களோடு இணைக்கப்பட்ட பொன்னால் *(யாத் 26:32)* அல்லது வெள்ளியால் *(27:10)* செய்யப்பட்ட கொக்கிகள் உண்டு. அங்குத் தொங்கிக் கொண்டிருக்கும் வெள்ளாட்டுத் தோல்களையும் துணித் திரைகளையும் இறுக்கமாகப் பிடித்துக் கொள்கிற பொன் *(26:6; 36:13)* அல்லது வெண்கலக் *(26:11; 36:18)* கொக்கிகளும் உண்டு. மேலும் தூயகத்தையும் உடன்படிக்கைப் பேழை வைக்கப்படும் திருத்தூயகத்தையும் பிரிக்கும் பொருட்டுத் தொங்கவிடப்படும் திரைச் சீலையும் கொக்கிகள் அல்லது வளையங்களால்தான் தொங்கவிடப்பட்டிருந்தது *(26:33)*.

விலங்குகள் *(எசே 19:4-9)* அல்லது கைதிகளின் *(2 நாள் 33:11)* மூக்கில் *(2 அர 19:28)* அல்லது தாடையில் *(எசே 29:4)* செருகப்பட்ட கொக்கி, இதனோடு இணைக்கப்பட்ட கயிற்றினால் கைதிகள் இழுத்துச் செல்லப்பட்டனர். *யாத் 35:22*-இல் இச்சொல் ஒருவகைக் காப்பைக் குறிக்கிறது.

மீன்பிடிக்க உதவும் தூண்டில் முள்கள் *(எசா 19:8; அப 1:15; யோபு 40:24; ஆமோ 4:2)*. மீன்பிடிக்க உதவும் தூண்டிலைக் *(மத் 17:27)* குறிக்கும் கிரேக்க மொழிச் சொல் 'கொக்கி' என்பதைக் குறிக்கும் பொதுச் சொல்லாகும்.

## கொக்கு, நாரை (STORK)

இச்சொல் நீண்ட கால்களையுடைய நீரில் நடக்கக் கூடிய பறவை வகையைக் குறிக்கும். இவை மீன்களையும், சிறிய பாலூட்டிகளையும் பறவைகளையும், ஊர்வனவற்றையும் உணவாகக் கொள்ளும். இவை தங்களுடைய குஞ்சுகளைப் பாதுகாக்கும் விதம் பழமொழிகளில் போற்றப்படுகின்றது. திரிஸ்தராம் என்பவர் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பாலஸ்தீனத்தில் வெள்ளைக் கொக்குகளையும், கருப்புக் கொக்குகளையும் பார்த்திருக்கிறார். இவைகளில் பல வடக்கு நோக்கி ஐரோப்பாவுக்கு இடமாற்றம் செய்தாலும் சில பாலஸ்தீனத்திலேயே கூடுகட்டி வாழ்ந்தன.

விவிலியத்தில் கொக்கு அசுத்தப் பறவைகளில் ஒன்றாகக் கருதப்பட்டது *(லேவி 11:19; உப 14:18)*. தகுதியான கட்டடங்கள் கிடைக்காவிடில் கொக்குகள் மர உச்சிகளில் தங்கள் கூடுகளைக் கட்டிக்கொள்ளும். இது *சங் 104:17*-இல் குறிக்கப்படுகிறது. *எரே 8:7*, இப்பறவைகளின் இடமாற்றச் செயலைச் சுட்டுகிறது.

## கொக்கோக்கு உக்கோக்கு (HUKOK)

கேர்சோமிய லேவியர்களுக்கு அளிக்கப்பட்ட, ஆசேர் பகுதியிலுள்ள ஒரு நகரம் *(1 நாள் 6:75)*. மற்ற இடங்களில் இது கெல்காத்து (எல்காத்து) என்றழைக்கப்படுகிறது.

## கொசு, பூச்சி (Gnat)

இது கொசுவைக் குறிக்கின்றதா அல்லது மற்றப் பூச்சியினத்தைக் குறிக்கின்றதா என்பது தெரியவில்லை.

இது அறுவடைக்காலத்தில் வேலை செய்யும் ஆட்களின் கண், காது, மூக்குகளில் நுழையும் அறுவடைப் பூச்சியாக இருக்கலாம். அல்லது மலேரியா நோயைப் பரப்புகின்ற கொசுவினமாக இருக்கலாம். "டெங்கு" என்னும் கொள்ளைக் காய்ச்சலைப் பரப்பும் மணல் பூச்சியாக இருக்கலாம். எகிப்து நாட்டின் படுக்கையறைகளில் நுழைந்து துன்பம் கொடுக்கக்கூடியது. எகிப்தில் நிகழ்ந்த மூன்றாவது வாதையை விவரிக்க மேலே குறிப்பிட்டுள்ள மூன்றில் ஏதாவது போதுமானது *(யாத் 8:12-15; சங் 105:31)*. இது *எசா 51:6*-இல் விட்டில் எனத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

அசுத்த விலங்குகளில் மிகச் சிறிதான கொசுவை வடிகட்டி அகற்றுவது தாங்களே

ஏற்படுத்திக்கொண்ட அற்பத்தனமான சிறிய சடங்குகளை அதிக நுணுக்கமாக அனுசரிப்ப தற்கு ஒப்பிடப்படுகிறது (மத் 23:24). இப் படிச் செய்த மறைநூல் அறிஞரும் பரிசேயரும் முக்கிய கடமைகளைப் புறக்கணித்தனர். முக்கிய கடமைகளைப் புறக்கணிப்பது ஒட் டகத்தை விழுங்குவதற்கு ஒப்பிடப்படுகிறது (23:24).

## கொடி (Banner, Standard)

இனத்தைக் குறிக்கும் அடையாளமாகக் கொடி பயன்பட்டது (எண் 1:52; 2:2. 10; சங் 74:4). அதுவே வெற்றிச் சின்னமாகவும் பயன்படலாம். போரில் வீரர்கள் ஒன்று கூடும் அடையாளமாகவும் பயன்படலாம். கொடி அடையாளமாகப் பயன்படலாம் (எசா 5:26; 13:2; 18:3; 30:17; 49:22); எச்சரிக்கை யாகவும் பயன்படலாம் (எண் 26:10).

பாலையில் பயணம் செய்தபோது இஸ்ரா யேலின் ஒவ்வொரு இனமும் தனக்கே உரிய கொடியைக் கொண்டிருந்தது (எண் 2:2; 1:52). இவர்கள் திருவுறைவிடத்தைச் சுற்றிப் பாளையம் இறங்கினர். தங்கள் கொடியின் கீழ்ப் புறப்பட்டுச் செல்வர் (10:14.18.22.25).

இஸ்ராயேலரின் கொடிகளின் தன்மை பற்றி ஒன்றும் அறிவதற்கில்லை. மற்றப் பழங்கால மக்களைப் போல், ஒரு கோலின் மேல் நுனியில் அல்லது ஈட்டியில் பொருத் தப்பட்ட அடையாளமாக இருக்கலாம். இந்த அடையாளம் விலங்குகள் வடிவிலும் இருக்கலாம் அல்லது, பெயர்களோ மற்ற வாசகங்களோ பொறிக்கப்பட்டிருக்கலாம். ''இறைவனின் கோலைக் கையில் பிடித்த வாறு குன்றின் உச்சியில் நின்ற'' மோசே உயிருள்ள கொடியானார் (யாத் 17:9). இரபி திமில் உள்ள பீடத்தை மோசே ''யாவே என் கொடி'' என்ற பொருள்படும் ''யாவே நிசி'' என்றழைத்தார் (17:15). ''கொடி யுடைய போரணி'' காதலனுடைய மூழ்கடிக் கும் காதலை அடையாளமாக உணர்த் திற்று (உ.ச. 6.4.10).

## கொடிமரம், பாய்மரம் (Flagstaff)

தப்பியோடும் இஸ்ராயேலர் ''மலை உச் சிக் கொடிமரம் போல், குன்றின் மேல் சின்னம்போல் எஞ்சி நிற்பார்'' என்று எசாயா விவரிக்கிறார் (எசா 30:11). பிற இடங்களில் மூல எபிரேயச் சொல் கப்பலின் பாய்மரத்தைக் குறிக்கிறது (எசா 33:23; எசே 27:5).

## கொடிய குத்தகைக்காரர் (Wicked Tenants)

இந்த உவமை இயேசு இறைவனோடும், இறையரசோடும் கொண்டிருக்கும் உறவை வெளிப்படையாக எடுத்துக் கூறுகிறது. ஒத் தமை நற்செய்தியாளர்கள் மூவருமே (மத் 21:33-44; மாற் 12:1-12; லூக் 20:9-18) இந்த உவமை யூத சமயத் தலைவர்களுக்கு எதிரா கக் கூறப்பட்டது என எழுதுகின்றனர். இந்த உவமையில் வரும் வீட்டுத் தலைவன் வான கத் தந்தை. திராட்சைத் தோட்டமே இவ்வுல கம். பல விவிலிய விளக்கவுரையாளர்கள் இந்தக் குத்தகைக்காரர்கள் யூத மதத் தலை வர்களாவர் எனக் கூறுகின்றனர். ஏனெனில் இறைவன் இவர்களோடு உடன்படிக்கை செய்துகொண்டு அருள் வாழ்வை அவர்க ளுக்குத் தருவதாக வாக்களித்தார். ஊழியர்க ளைக் குத்தகைக்காரர்கள் துன்புறுத்தியது போல் யூதர்களும் இறைவாக்கினர்களைத் துன்புறுத்தினர். தலைவனின் மகனே மெசி யாவாகிய இயேசு. இந்த இறைமகன் மனித னின் பாவங்களுக்காக இவ்வுலகில் இறந் தார். யூதத் தலைவர்களும் உரோமையரும் சேர்ந்து இயேசுவைக் கொன்றனர். ஆனால் இயேசுவின் சாவிற்கு உண்மைக் காரணம் தனி மனிதனுடைய பாவம். புனித பவுல் உடன்படிக்கையைப் பெற்றுள்ள யூதருக்கு முதலில் இறைவனின் நற்செய்தி அருளப் படுகிறது, பின்னர் புறவினத்தாருக்கு அது அளிக்கப்படுகிறது என்கிறார். எனவே பழைய உடன்படிக்கை புறக்கணிக்கப்பட வில்லை. புதிய உடன்படிக்கையானது முத லில் யூதருக்கும் பின்னர் புறவினத்தாருக்கும் கொடுக்கப்படுகிறது. கடவுள் இறுதியிலே, தீய குத்தகைக்காரர்களை அழித்துவிட்டு நல் லவர்களைப் பணிக்கமர்த்தும் தலைவனைப் போல நல்லவர்களோடு நட்புறவு கொள்

வார். இவர்கள் ஆபிரகாமின் விசுவாசத்தைக் கொண்டவர்களாக இருக்க வேண்டும்.

**கொடை, அன்பளிப்பு** (Gift)

ஒவ்வொரு கொடையின் தொடக்கத்திலும் இறை முன்முயற்சியை அறிந்து உணருமாறு விவிலியம் நமக்குக் கற்பிக்கிறது. ''ஒவ்வொரு நற்கொடையும்... ஒளியின் தந்தையிடமிருந்தே வருகிறது'' (*யாக் 1:17; தோபி 4:19*). படைப்பிற்கான முதல் முயற்சியை எடுப்பவரும், எல்லா மனிதருக்கும் ஊட்டத்தையும் வாழ்வையும் அளிப்பவரும் இறைவனே (*சங் 104*). மேலும், மீட்பிற்கான முதல் முயற்சியை எடுப்பவரும் இறைவனே (*உப 9:6; 1 யோவா 4:10*). இதன் விளைவாகத் தாராள மனதானது அருளுக்கு முன்செல்வதாகப் பாசாங்கு செய்யும்போது அது பாதை மாறிச்செல்கிறது (*யோவா. 13:37-38*). மனிதனிடம் கோரப்படும் முதன்மையான மனப்பான்மையானது, இறைவனின் கொடைக்குத் தன்னையே திறப்பதாகும் (*மாற் 10:15*). அதனைப் பெறும்போது, அவன் உண்மையான தயாள குணத்திற்குத் தகுதியானவனாக உருவாகி, தானும் கொடுத்துப் பழகுமாறு அழைக்கப்படுகிறான் (*1 யோவா 3:16*).

I. **பழைய ஏற்பாடு.**

1. **இறைவனின் கொடைகள்:-** பழைய ஏற்பாடானது கொடைகளின் காலமல்ல; மாறாக, உறுதிமொழிகளின் காலம் ஆகும். இக்கொடைகள் முன்னடையாளங்காட்டி, உறுதியான கொடைக்குத் தயாரிப்பதற்கு மட்டுமே செயல்படுகின்றன.

ஆண்டவர் ஆபிரகாமிடம் ''நாம் இந்த நாட்டை உனது சந்ததியாருக்குத் தருவோம்'' என்று கூறினார் (*ஆதி 15:18*). இவ்வார்த்தையின் எதிரொலியானது ஐந்நூல் முழுவதும் ஒலிக்கின்றது. உப ஆகமமானது இத்தகைய கொடையினைப் பாராட்ட முன்வருகிறது (*உப 8:7; 11:10*); ஆனால் பிரமாணிக்கமின்மை தீமையைக் கொண்டுவரும் என்றும் அது அறிவிக்கின்றது. திரும்புதலுக்கும் வாழ்விற்கும் நிபந்தனையான இதயத்தின் விருத்தசேதனம் என்ற மற்றொரு கொடை அவசியமாகிறது (*உப 29:21-30:6*).

மோசேயின் வழியாக, மற்றெல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட கொடையாக (*சங் 147:8-9*), இறைவன் தன் மக்களுக்குச் சட்டத்தை அளித்தார் (*உப 5:22*). ஏனெனில், இது அவருடைய ஞானத்திலேயே பங்கு பெறுதலாகும் (*சீரா 24:23; உப 4:5-8*). ஆனால் அதனைப் பெறுகின்ற இதயம் தீயதாக இருக்கும்போது சட்டமானது ஆற்றலற்றதாக உள்ளது (*நெகே 9:13,26*). இஸ்ராயேலுக்குப் புதிய இதயம் தேவையாக உள்ளது. இறைவாக்கினர்கள் தங்களது நம்பிக்கைகளைத் திருப்பியிருந்த வரவிருக்கும் கொடை இத்தகையதே (*எரே 24:7; எசே 36:26 தொ*).

பழைய ஏற்பாட்டின் எல்லாக் கொடைகளைப் பற்றியும் இப்படியே கூறலாம்: சில குறைவுபட்டவையாகக் காணப்படுகின்றன (தாவீதின் மரபு, ஆலயத்தில் மகிமையின் பிரசன்னம்); மற்றும் தொடர்ச்சியான ஏமாற்றங்கள் மேலும் முன்னேறுமாறு அவர்களின் நம்பிக்கைகளைத் தூண்டுகின்றன. வானிலிருந்தான அப்பம் (*ஞான 16:20-21*), பாறையிலிருந்தான தண்ணீர் (*சங் 105;41*) போன்ற மற்றவையனைத்தும் அவர்களின் ஆசைகளைக் கிளறுகின்ற நினைவுகளே ஆகும். இஸ்ராயேலானது பெருமளவு பெற்றிருந்தாலும் இன்னும் அதிகமாக எதிர்பார்க்கின்றது.

2. **இறைவனுக்குக் கொடைகள்:-** அவருடைய மேலாண்மையான ஆட்சி மற்றும் அவரது நன்மைகள் ஆகியவற்றை ஏற்றுக் கொள்வதற்காக, இஸ்ராயேலானது முதற்கனிகள், பத்திலொரு பங்கு (*உப 26*) மற்றும் பலிகள் (*லேவி 1..*) ஆகியவற்றை ஆண்டவருக்கு அளிக்கிறது. அவ்வாறே, உடன்படிக்கைக்குக் காட்டிய பிரமாணிக்கமின்மைக்குப் பரிகாரம் புரியவும் (*லேவி 4:5*), மீண்டும் ஒருமுறை ஆண்டவரின் தயவைப் பெறவும் (*2 சாமு 24:21-25*) அது கொடைகளை அளிக்கிறது. எனவே, இறைவனுக்குக் காணிக்கை

கள் அளிப்பது பரஸ்பர வடிவமைப்பிற்குள் இடம் பெறுகின்றது (சீரா 35:9-10).

*3. பரஸ்பரக் கொடைகள்:-* அதே முன்னோக்கில் தனி நபர்கள், குடும்பங்கள், அல்லது நாடுகள் ஆகியவற்றிடையே கொடையானது பெரும்பாலும் கண்டுணரப்படுகிறது. கொடை அளிக்கும்போது, தோழர்கள் அல்லது நண்பர்கள் இடையிலான சட்டமாகிய பரஸ்பர நல்லெண்ணம் மற்றும் நற்செயல் ஆகியவற்றை ஒருவன் காட்டுகிறான். கொடையை ஏற்பவன் உடன்படிக்கையை ஏற்பவனாகி, எந்தவித விரோத மனப்பான்மையினின்றும் தடுக்கப்படுகிறான் (ஆதி 32:14; யோசு 9:12 தொ; 2 சாமு 17:27; .., 19:33.). ஆனால் இலஞ்சமாகக் கருதப்படுகின்ற கொடைகள் கடுமையாகக் கண்டனம் பெறுகின்றன (யாத் 23:8; எசா 5:23). காணிக்கையின் பரஸ்பர நிலையானது சாதாரணமாக நல்லுணர்வினுடைய பரஸ்பரத்திற்குச் சாட்சியம் கூறுவதால் இந்த மனப்பான்மையானது பெருந்தன்மை இல்லாமல் இல்லை.

மிகச்சிறப்பான சொற்களால் பரிந்துரைக்கப்படும் ஏழைகளுக்கு அளிக்கப்படும் கொடையானது (பிச்சையிடுதல்) பரஸ்பரமாக அளித்தலுக்கு ஒத்ததாக உருவாக முயல்கிறது. ஏனெனில் ஒருநாள் அந்த ஏழை மனிதன் அக்கொடையைத் திருப்பியளிக்க முடியும் (சீரா 22:23) அல்லது ஆண்டவர் அதனைச் சரிப்படுத்திக்கொள்வார் (பழ 19:17) என்பதே இதன் நம்பிக்கையாகும். தீயோருக்கு அளிப்பதென்பது தெளிவாகத் தடைசெய்யப்படுகின்றது (தோபி 4:17); இத்தகைய கொடையானது வீணானதாகும் (சீரா 12:1-7); பழைய ஏற்பாடானது உண்மையான தயாள மனதுடன் அறிவு சார்ந்த விவேகத்தைச் சேர்ப்பதில் கவனமாக இருந்தது.

**II. புதிய ஏற்பாடு.**

''இறைவனின் கொடையை நீ அறிந்திருந்தால்...'' (யோவா 4:10). இறைவனின் முட்டாள்தனமாகத் தோன்றும் தயாள குணத்தை முழு ஒளியில் அமைப்பதன் மூலம் (உரோ 5:7-8), புதிய ஏற்பாடானது மனித மதிப்புகளைத் தலைகீழாக மாற்றி அமைக்கிறது. இதுவே உண்மையில் கொடையின் காலமாகும்.

**1. இயேசு கிறிஸ்துவில் இறைவனின் கொடை:-** தமது மகனையே நமக்காக அளிப்பதன் மூலம் தந்தை நம்மீதான தம் அன்பை வெளிப்படுத்துகிறார் (யோவா 3:16). இயேசு, தந்தையினுடைய எல்லாச் செல்வங்களினாலும் நிரப்பப்பட்டிருப்பதால், தமது மகனில் தந்தை தம்மையே அளிக்கிறார் (1:14): சொற்கள் மற்றும் செயல்கள், தீர்ப்பிடவும் வாழ்வளிக்கவும் உரிய ஆற்றல், பெயர், மகிமை, அன்பு முதலிய தந்தைக்குரிய அனைத்தும் இயேசுவிற்கு அளிக்கப்படுகிறது (யோவா 17).

தம்மைத் தந்தையுடன் இணைக்கின்ற அன்பின் மீதான தமது பிரமாணிக்கத்தில் (15:10), இயேசு தம்மையே முழுக் கொடையாய் ஆக்குகிறார்: ''அவர் தம் உயிரையே அளிக்கிறார்'' (மத் 20:28). ''தந்தையால் அளிக்கப்பட்ட உண்மையான விண்ணக அப்பமாகிய தமது உடலை, உலகின் வாழ்விற்காக'' அவர் அளிக்கிறார் (6:32.51; லூக் 22:19; ''இது உங்களுக்காக அளிக்கப்படும் என் உடல்''). அவரது பலியின் மூலமாக எல்லாவற்றையும்விடச் சிறப்புமிக்க இறைவனின் கொடையாகிய (அ.ப. 8:20; 11:17) வாக்களிக்கப்பட்ட ஆவியை நமக்கு அளிக்குமாறு செய்கிறார் (2:33). இவ்வாறு இவ்வுலகிலேயே நமது உரிமைச் சொத்தினுடைய பிணையைக் கொண்டிருக்கிறோம். எல்லா ஆன்மீகக் கொடைகளாலும் (1 கொரி 1:5தொ) பல்வேறுபட்ட வரங்களினாலும் (12), உயிர்த்த கிறிஸ்துவின் கொடைகளினாலும் (எபே 4:7-12) நாம் செல்வராக்கப்பட்டுள்ளோம். அருளினுடைய கொடையின் அபரிமிதம் என்றுமே போதுமான அளவில் போற்றப்படமுடியாது (உரோ 5:15-21). மறைவான ஆனால் உண்மையான முறையில் (கொலோ 3:3-4), இறைவனது இலவசக் கொடையாகிய முடிவில்லா வாழ்வி

னால் நாம் ஏற்கெனவே வாழ்கிறோம் (உரோ 6:23).

**2. இயேசு கிறிஸ்துவில் இறைவனுக்குக் கொடை:-** கிறிஸ்துவின் பலி, ஒரே நேரத்தில் மனித குலத்திற்கு இறைவனின் கொடையாகவும் (யோவா 3:16), இறைவனுக்கான மனித குலத்தின் கொடையாகவும் (எபி 2:16-17) உள்ளதால், மனிதன் இனி வேறு கொடைகளை அளிக்க வேண்டியதில்லை. அது முழுமையான பலிப்பொருளானது; எக்காலத்திற்கும் போதுமானதாகும் (எபி 7:27). ஆனால் அவர்கள் இப்பலிப் பொருளுடன் தங்களைச் சேர்த்து, தங்களையே இறைவனுக்குக் காணிக்கையாக்குவதன் மூலம் (உரோ 12:1), மற்றவர்களின் பணிக்கென அவரது செயற்பாட்டில் தங்களை ஈடுபடுத்த வேண்டும் (கலா 5:13-16; எபி 13:16). ஏனெனில் அருளானது, ஒரு மனிதன் தன்னையே அடைத்துக்கொள்கின்ற ஒரு அன்பளிப்பாகப் பெறப்படுவதில்லை; பலனைக் கொண்டு வருவதற்கென அது பெறப்படுகிறது (யோவா 16; மத் 13:12).

**3. பிரதிபலன் அற்ற கொடை:-** பிறருக்கு அளிக்கின்ற இயக்கமானது இதுவரை அறிந்திராத முழுமையினையும் தீவிரத்தையும் ஏற்றுக்கொள்கிறது. அதனை எதிர்க்கின்ற "இச்சையானது" இடைவிடாமல் போராடப்பட வேண்டும். இதுமுதல், வாக்குறுதிகளின் பிரதிபலனை நாடாமல், ஒருவன் அதனின்று விலகியோட வேண்டும் (லூக் 14:12). ஒரு மனிதன் இறைவனிடமிருந்து இவ்வளவு பெற்றிருக்கும்போது, எந்தக் கணக்கீடும், இதயத்தின் குறுகிய மனப்பான்மையும், அவதூறாகவும் ஆகிறது (மத் 18:32-33). "கேட்கிறவனுக்குக் கொடு" (5:42). "இலவசமாய்ப் பெற்றுக்கொண்டீர்கள், இலவசமாய்க் கொடுங்கள்" (10:8). உலகப்பொருட்களாயினும் ஆன்மீகப் பொருட்களாயினும், மற்றவர்களின் பணிக்கெனத் தன்னிடம் ஒப்படைக்கப்பட்டு, தான் அவற்றிற்கெல்லாம் ஒரு கண்காணிப்பாளராக மட்டுமே இருக்கிறோம் என்பதை மனதில் கொண்டு அனைத்துச் செல்வங்களையும் நோக்குமாறு கிறிஸ்தவன் அழைக்கப்பட்டுள்ளான் (1 பேதுரு 4:10-11). நிறைவடைய விரும்புகின்ற மனிதனை, அவனுடைய செல்வங்கள் அனைத்தையும் அளித்துவிடுமாறு அசாதாரண அழைப்பின் மூலம் இயேசு கேட்கின்றார் (லூக் 18:22). இயேசு கிறிஸ்துவிலான இறைவனின் கொடையானது நம்மை மேலும் கூட்டிச்செல்கிறது. இயேசு "தனது வாழ்வையே நமக்கென அளித்தார்"; அவரது அருளானது "நமது வாழ்வையும் நமது சகோதரர்களுக்கென அளிக்குமாறு" நம்மைத் தூண்டுகிறது (யோவா 3:16); "உயர்ந்த அன்பு வேறில்லை" (யோவா. 15:13).

இக்கொடையானது அன்பினில் ஒன்றிப்பைக் கொண்டுவந்து, அனைவரிலும் நன்றியறிதலைத் தூண்டியெழுப்புகிறது (2 கொரி 9:12-15). பயன்பெறுபவனைவிட அளிப்பவன் இறைவனுக்கு அதிக அளவில் நன்றி செலுத்துகிறான்; ஏனெனில், அவனுடைய தாராள மனப்பான்மையே ஓர் அருளாகவும் (2 கொரி 8;1), இறைவனிடமிருந்து வருகின்ற அன்பின் கனியாகவும் (1 யோவா 3:14-18) உள்ளதென அவன் அறிந்துள்ளான். இதனாலேயே, இறுதியாக, "பெறுவதிலும் தருவதே இன்பம்" (அ.ப. 20:35).

## கொட்டைகள் (Nuts)

உணவாகக் கொள்ளுதற்குரிய பல பழமரங்களின் 'கொட்டைகள். உ.ச. 6:11இல் குறிப்பிடப்படும் கொட்டை வகை, வாதுமையினக் கொட்டை வகையாக இருக்கலாம். வாதுமை மரம் கலிலேயாக் கடல் ஓரத்தில் அதிகம் காணப்படுகின்றது. இது பாரசீகத்தில்தான் முதல் முதலில் காணப்பட்டது. பின் அரேபியாவில் குறிப்பாகப் பாலஸ்தீனத்தில் காணப்பட்டது.

யாக்கோபு தன் புதல்வர்களிடம் வாதுமைப் பருப்பையும் தேவதாருக் கொட்டைகளையும் எகிப்து மன்னனுக்குக் காணிக்கையாக்கும்படி கூறுகின்றார் (ஆதி 40:11). தேவதாருக் கொட்டை மிகவும் ருசி உள்ளது;

உண்பதற்கு மிகவும் நன்றாக இருக்கும். தாவரவியல் வல்லுநர் சிலர் இவைகளைத் தவிர இதே வகையைச் சேர்ந்த மற்றவகைக் கொட்டைகள் உண்பதற்கு ஏற்றவையல்ல என்று கூறுகின்றனர். யோர்தான் சந்தையில் சீரியாவிலிருந்து தருவிக்கப்பட்டு வறுக்கப் பட்ட கொட்டைகள் கிடைக்கின்றன. யோர் தான் நதிக்குக் கிழக்கில் (பெற்றோனிம் *யோசு 13:26*) என்ற நகரம் அங்குக் காணப் பட்ட பழமரங்களிலிருந்து தன் பெயரைப் பெற்றிருக்கலாம்.

**கொதொனியேல்** *(GOTHONIEL)*

கபிரி என்பவரின் தந்தை. யூதித்து வாழ்ந்த நகரமான பெத்தூலியா நகரின் முதியவர்க ளில் ஒருவர் (*யூதி 6:15*).

**கொத்த மல்லி விதை** *(Coriander Seed)*

இந்த விதை இன்றையக் கசகசா, ஒரு வகைச் சீரகம், எள்ளு விதைகள் போல அன்று பயன்படுத்தப்பட்டது. சிறிய, உருண் டையான, பழுப்பு நிறமுள்ள வாசனை யுள்ள இந்த விதையானது விவிலியத்தில் இரண்டு முறைதான் சொல்லப்பட்டுள்ளது (*யாத் 16:31; எண் 11:7*). இது மன்னாவை வருணிக்கும் பொழுது சொல்லப்பட்டுள் ளது.

**கொத்தர்கள்** *(Masons)*

மதில்கள் கட்டுவதிலும் கற்களால் கட்ட டங்கள் அமைப்பதிலும் ஆற்றல் உள்ளவர் கள். குறிப்பாக, இவர்கள் பெரிய, பகட் டான கட்டடங்கள் கட்டுவதிலும், நினைவுச் சின்னங்கள் அமைப்பதிலும் நகரைச் சுற்றிப் பாதுகாப்புச் சுவர்கள் அமைப்பதிலும் கைதேர்ந்தவர்கள். தீரைச் சேர்ந்த கீராம் (ஈராம்) பெனிசியாவிலிருந்து ஆற்றலுள்ள கொத்தர்களை எருசலேமில் தாவீதின் அரண் மனையைக் கட்ட அனுப்பினார் (*2 சாமு 5:11; நாள் 14:1*). நெடுங்காலத்திற்குப் பெனி சியாவைச் சேர்ந்த கொத்தர்களே இஸ்ராயே லில் வேலை செய்திருக்கலாம். சாலமோன் சொந்தமாகக் கற்சுரங்கங்களைக் கொண் டிருந்தார் (*1 அர 5:15; 2 நாள் 2:18*). இஸ்ராயே லுக்கும் யூதாவுக்கும் எருசலேம் ஆலயமே மிக முக்கிய கட்டடமாகையால், அதைக்கட் டுதல் (*1 நாள் 22:2.15*), அதைப் பழுதுபார்த் தல் (*2அர 12:12; 22:6; 2 நாள் 24:12*), மீண்டும் கட்டுதல் (*எஸ் 3:7*) ஆகிய சூழ்நிலையில் கொத்தர்கள் அடிக்கடி குறிக்கப்படுகின்ற னர். தொல்பொருள் ஆய்வு பல அரசாங்கக் கட்டடங்களையும், நினைவுச் சின்னங்களை யும், நகரைச் சுற்றிய பாதுகாப்புச் சுவர்களை யும் வெளிக்கொணர்ந்துள்ளன. இவற்றைக் கட்டுவதற்கும் கொத்தர்கள் பெருமளவில் பயன்படுத்தப்பட்டிருக்கவேண்டும்.

**கொப்புழ்க்கொடி** *(Navel String)*

எசே *16:1-14*-இல் இஸ்ராயேலின் அனா தைத் தன்மையையும், இறைவன் இஸ்ராயே லின்மேல் கொண்ட அன்பையும், இதனால் இஸ்ராயேலுக்குச் செய்த நல்லவைகளையும் எடுத்துக்கூறுகின்றார். ''நீ பிறந்த வரலாறு இதுவே: நீ பிறந்த அன்று இன்னும் உன் கொப்புழ்க்கொடி அறுக்கப்படவில்லை; நீ நீராட்டப்பட்டுத் தூய்மையாக்கப்பட வில்லை; உப்புநீரால் கழுவப்படவில்லை; பிறந்த நாளிலேயே நீ வெறுத்து ஒதுக்கப்பட் டாய்'' (*எசே 16:4-5*) என்று கூறுகின்றார். பழங்காலத்தில் அரேபியா தேசத்தில் பச் சிளம் பெண் குழந்தைகள் உயிரோடு புதைக் கப்பட்டார்கள். ஆனால் கடவுள் இஸ்ராயே லாகிய அனாதைக் குழந்தையை அன்போடு பராமரித்துக் காக்கின்றார்.

*16:4*-இல் ஒரு மருத்துவச்சியின் கடமை எடுத்துக் கூறப்பட்டிருக்கின்றது. இக்காலத் தைப் போல் அக்காலத்திலும் இவளின் பணி குழந்தையினைத் தாயின் கொப்புழிலிருந்து வெட்டி எடுத்தல், நீரால் கழுவுதல், உப்பால் தேய்த்தெடுத்தல், எண்ணெய் பூசுதல், துணி யால் பிறந்த குழந்தையை மூடுதல் போன்ற வைகளை ஏழு நாட்கள் செய்ய வேண்டும்.

**கொப்புளம், கட்டி** *(Boil)*

உடல்தோலில் ஏற்படும் வீக்கமாகும். யோபு *2:7*-இல் உள்ள எரியும் புண் அம்மை நோயைக் குறிப்பதாக இருக்கலாம். யாத் *9:9*-இல் எகிப்தில் நடந்த பல கொள்ளை நோய்களில் கொப்புளமும் ஒன்றாகும்.

எசேக்கியாவின் உடலில் ஏற்பட்ட கட்டி அல்லது பிளவை (*2 அர 20:7; எசா 38:21*) தோல் செதில்களுக்கு எரிச்சல் மூட்டி சீழ் வடிய வைக்கும் ஒருவிதத் தோல்நோய் வகையைச் சார்ந்தது. எசாயா அத்திப்பழ அடையை இதற்கு மருந்தாகக் குறிப்பிடுகிறார்.

**கொப்ரா (ஒப்ரா)** (HOPHRA - *ராவின் இதயம் நிலைத்திருக்கிறது*)

*26*-ஆவது அரச மரபைச் சேர்ந்த ஒரு பார்வோன் (கி.மு. *588-569*). செதேக்கியா நெபுகத்னேசர் கரங்களில் துன்பப்பட்டதுபோல, இவனும் பகைவர்களிடத்திலும், அவன் உயிரைப் பறிக்கத் தேடுகிறவர்களிடமும் கையளிக்கப்படுவான் என்று எரேமியா இவனைப் பற்றி இறைவாக்கு உரைத்தார் (எரே *44:30*)

கொப்ரா அவன் தந்தை ஸாமெத்திக்குவைத் தொடர்ந்து ஆட்சி பீடத்திற்கு வந்து நைல் நதிக்கழிமுகப்பகுதியில் சாயிசைத் தலைநகராகக்கொண்டு ஆண்டான். அவனது ஆட்சியின் ஆரம்பகாலத்தில் பாலஸ்தீனம் மற்றும் பெனிசியாமீது படையெடுத்தான். செதேக்கியாவைப் பாபிலோனியருக்கு எதிராகப் புரட்சி செய்யத் தூண்டிவிட்டான் (எரே *37:5*). இப்புரட்சி தோல்வியடைந்தது. நெபுகத்னேசர் எருசலேமைக் கைப்பற்றினார். கொப்ரா எரேமியாவையும் ஒரு சில யூத அகதிகளையும் கழிமுக நகரமான தகபனகேசில் (*43:7*) ஏற்றுக்கொண்டான். கொப்ரா ஆட்சி செய்தபோது எகிப்து செழிப்புற்றது; ஆனால் கிரேக்கக் கூலிப் படைகளை விவேகமற்ற படையெடுப்புக்களில் பயன்படுத்தினான். கடைசியாக அமாசிசு என்ற அரசனின் உறவினன் கி.மு. *569*-இல் கொப்ராவுக்கு எதிராக அரசனாக அறிவிக்கப்பட்டான். *566*-இல் படையைத் திரட்டி அமாசிசைத் தோற்கடிக்கக் கொப்ரா முயன்றான். ஆனால் எரேமியாவின் இறைவாக்கு நிறைவேறும் பொருட்டுக் கொல்லப் பட்டான்.

**கொப்னி, ஒப்னி** (HOPHNI - *அறட்டவளை*)

கொப்னியும் பினகாசும் ஏலியின் இரண்டு புதல்வர்களாவர். சீலோவில் ஏலியோடு யாவேயின் குருக்களாகப் பணிசெய்தார்கள் (*1 சாமு 1:3*). நிகழ்ச்சியுரை அவர்களைப் 'பேலியாலின் புதல்வர்கள்' என்று அழைக்கிறது (அதாவது மதிப்பற்ற, முழுவதும் இழிவானவர்கள்). மேலும் அவர்கள் எவ்வாறு ஆண்டவரைப் பொருட்படுத்தவில்லை என்பதையும் கூறுகிறது (*2:12*). அவர்கள் ஆண்டவரின் பலியினின்று மக்களின் மனத்தைத் திருப்பினர் (*2:17*). ஆண்டவருக்குப் பலி கொடுக்கும்முன்பே தங்களுக்குத் தேவையானதை எடுத்துக்கொண்டார்கள். எந்த மனிதனாவது தடுத்தால், தேவையானால் வலுக்கட்டாயமாகப் பயமுறுத்தித் தங்கள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டார்கள் (*2:13-16*). புனித இடத்தில் பணியாற்றிய பெண்களுடன் தகாத உறவு வைத்துக்கொண்டார்கள் (*2:22*). ஏலியின் கண்டனத்தை அவர்கள் கண்டுகொள்ளவில்லை (*2:22-25; 3:13*). அவர்களுடைய பாவத்தின் விளைவாக ஏலி வீட்டாரின் அழிவு அடையாளம் தெரியாத கடவுளின் மனிதர் ஒருவராலும் (*2:27-36*) சாமுவேலாலும் (*3:11-18*) அறிவிக்கப்பட்டது. இருவரும் அபேக்கு என்ற போர்க்களத்திற்குக் கொண்டுவரப்பட்ட கடவுளின் உடன்படிக்கைப் பெட்டியோடு இருந்தனர் (*4:4*), பெலிஸ்தியர்களால் இருவரும் கொல்லப் பட்டார்கள் (*4:11.17*). இச்செய்தி சீலோவுக்கு எட்டியபோது, ஏலி இறந்தார் (*4:18*). பினகாசின் மனைவி இக்கபோதைக் குறை மாதத்திலே பெற்றெடுத்தாள் (*4:19-22*).

சவுல் காலத்தில் பெட்டகத்தோடு அகீயாவின் பாட்டனாகப் பினகாசை ஆக்கும் *14:3*-இல் வரும் மரபுமுறைப்பட்டியல் அசாதாரணமானதாகும். இது ஓர் இடைச் செருகலாக இருக்கலாம்.

**கொமோரா** (GOMORRAH - *அமிழ்ந்து போதல்*)

சமவெளி நகரங்களுள் ஒன்று. இம்மக்களுடைய பாவம் ஆண்டவருக்குக் கோபத்தைத் தந்து அதனால் அழிபட்ட நகரம் (ஆதி *10:10; 19:24-28*; உப *29:23*; எசா *13:19*; எரே *49:18; 50:40*; ஆமோ *4:11*). கானானியர்களின் எல்

லைகளைக் குறிப்பிடும்போது கொமோரா முதன்முதலாகக் குறிப்பிடப்படுகின்றது (ஆதி 10:19). கொமோராவின் அரசனான பிர்சா ஏனைய நான்கு அரசர்களுடன் கெதர்லகோமரால் சிதீம் என்ற பள்ளத்தாக்கில் தாக்கப்பட்டார் (ஆதி 14:2.8). கொமோராவின் அழிவு ஒரு முன்னெச்சரிக்கை அல்லது முன் அடையாளமாகும் (உப 29:23; 32:32; எசா 1:9-10; 13:19; எரே 23:14; 49:18; 50:40; ஆமோ 4:11; செப் 2:9; மத் 10:15; உரோ 9:29; 2 பேதுரு 2:6; யூதா 7).

பொதுவாகக் கொமோரா சோதோம் நகருடன் இணைத்துச் சொல்லப்படும் (7 முறை). ஆனால் இருமுறை ஏனைய சமவெளி நாடுகளுடன் சொல்லப்பட்டுள்ளது (ஆதி 14:2.8). ஒரு முறை மூன்று நகரங்களுடன் (சோவர் நீக்கப்பட்டு) (உப 29:23) சொல்லப்பட்டிருக்கிறது. கொமோரா 5 நகரங்களில் ஒன்றாகச் சொல்லப்படாவிட்டாலும் - இதுவும் சேர்ந்ததே ஆகும் (ஞான 10:16). பள்ளத்தாக்கு நகரங்களின் அழிவுகளில் இந்நகரும் குறிப்பிடப்பட்டுள்ளது (ஆதி 19:25.29). இந்நகரம் சாக்கடலின் தென்பகுதியில் நீருக்குள் குறிக்கப்படலாம். இங்குச் செழிப்பான சிதீம் பள்ளத்தாக்கு இருந்திருக்கலாம். இது ஐந்து நகரங்களில் வடகோடியில் இருந்து இருக்கலாம்; செயில் ஏசால் ஓடைக்கருகில் இருந்திருக்கலாம்.

**கொம்பு, ஊதுகுழல்** (Horn)

ஓர் இசைக்கருவி. அபிடேகம் செய்வது போன்ற குறிப்பிட்ட செயலுக்காக எண்ணெய் போன்ற பொருள்களை வைத்திருக்கப் பயன்பட்ட கலமும் ஆகும். இது உலோகத்தால் செய்யப்பட்டதா என்று உறுதியாகக் கூறமுடியாது. அநேகமாக விலங்குகளின் கொம்புகளிலிருந்து செய்யப்பட்டதாக இருக்கலாம்.

கொம்பு பல அடையாளப் பொருளில் பயன்பட்டுள்ளது. இது அதிகாரத்தையும், உதவியையும், வெற்றியையும், மகிமையையும் அடையாளமாக உணர்த்தவல்லது (உப 33:17). ''ஆற்றல் உயர்கின்றது'' என்பதைக் குறிக்க (1 சாமு 2:1.10) மூலத்தில் கொம்பை உயர்த்துதல் கூறப்படுகிறது. இதற்குமாறாகக் ''கொம்பு முறிதல்'' (எரே 48:25) தோல்வியைக் குறிக்கிறது. இறைவனுக்கெதிரான ஒரு சக்தியைக் குறிக்கும் கொம்பு வருங்காலத்தில் எழுச்சியுறுவதை இறைவாக்கினர் முன்னறிவித்தனர் (செக் 2:1-2; தானி 7:8; திருவெளி 13:1). திருவெளி 5:6-இல் செம்மறி அல்லது இயேசு கிறிஸ்து, தமது ஆற்றலின் அடையாளமாக ஏழு கொம்புகளைக் கொண்டுள்ளார்.

**கொம்புமான்** (Antelope)

ஒருவகை மான். இது கொம்புகளையுடைய விலங்குகளான எருது, ஆடு, செம்மறி இவற்றில் எந்த வகையிலும் சேராத தனி வகை. இது மற்ற மான்கள் போல் தங்கள் கொம்புகளை ஆண்டுக்கொருமுறை உதிர்ப்பதில்லை; கொம்புகள் அதன் உடலின் ஒரு பகுதியாகவே உள்ளன. இவை உருவத்தில் வேறுபட்ட அமைப்புகளில் உள்ளன. ஆனால் எருதுகளைவிட மிக அழகிய அமைப்புடன், தங்கள் தலைகளை உடலுக்கு மேல் உயர்த்தி நடக்கும். இது சாதாரணமாய் ஆப்பிரிக்காவில் காணப்படும். பாலஸ்தீனத்திலும், பெரும் எண்ணிக்கையில் காணப்பட்டுள்ளது.

விவிலியம் பலவகையான கலைமான்களைப் பற்றிக் கூறுகிறது. இது உண்ணக் கூடிய சுத்த விலங்குகளில் ஒன்றாகும் (உப 14:5). இதை வலைபோட்டுப் பிடிப்பர். எசா 51:20-இல் இறைவனது சினத்தால் தண்டிக்கப்பட்ட எருசலேம் மக்கள் வலையில் சிக்கிய கலைமானைப் போன்றிருப்பர் என்று கூறப்படுகிறது.

**கொராசின்** (CHORAZIN - இரகசியம்)

இங்கு இயேசு பல அருஞ்செயல்களைச் செய்திருந்தாலும், அவரில் விசுவாசம் கொள்ளாததால் அவரால் கண்டிக்கப்பட்ட கலிலேயாவில் உள்ள ஒரு நகரம் (மத் 11:21; லூக் 10:13).

புதிய ஏற்பாட்டில் கூறப்படுகின்ற கொராசின் என்பதை இப்பொழுது நாம் அழைக்கின்ற கிர்பெத்து கெராசே என்ற இடத்தின் அழிவுடன் வைத்துப் பார்க்க வேண்டும் என்பது பெரும்பான்மையோரின் கருத்து. கப்பர்நாகுமின் வடக்கே 4 கி.மீ. தூரத்தில் உள்ள இந்த இடம் இக்காலத் தேல் கூம் என்ற இடத்துக்கு அருகில் உள்ளது. இக்கருத்து புனித எரோனிமு (சுமார் கி.பி. 400) என்பவரின் கருத்துடன் ஒத்திருக்கின்றது.

கொராசின் என்பது கப்பர்நாகுமிற்கு மேலே உள்ள எரிமலைப் பாறையில் கட்டப்பட்டுள்ளது. இதன் பரந்த சிதைவுகள் இது ஒரு முக்கியத்துவம் வாய்ந்த நகரமாக இருந்திருக்கலாம் 'என்று காட்டுகின்றன. இங்குள்ள கட்டடக்கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவது கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட ஒரு கறுப்பு நிறமான எரிமலைப்பாறையில் கட்டப்பட்ட செபக்கூடமாகும். இங்குக் காணப்படும் சிதைவுகளில் வாசகத்தோடு கூடிய இருக்கை ஒன்றாகும். இது 'மோசேயின் இருக்கைக்கு' ஒரு மாதிரியாகும் (மத் 23:2). தால்மூதில் எபிரேய வடிவில் கொராசிம் என்று இந்த நகரம் குறிப்பிடப்படுகின்றது. இந்த இடம் கோதுமைக்குப் பெயர் பெற்றது.

கொராசின், பெத்சாய்தா ஆகிய இந்த இரண்டு இடங்களும் அவைகளின் விசுவாசமின்மையின் காரணமாக இயேசுவால் கடிந்து கொள்ளப்பட்ட இடங்களாகும். இந்த இரண்டு இடங்களும் கப்பர்நாகுமிற்கு அருகில் உள்ளன.

**கொரிந்து (CORINTH)**

இது உரோமைய மாநிலமான 'அகாயாவின்' தலைநகரமும், கொரிந்து நில இடுக்கில் அமைந்த மிக முக்கியமான வியாபார மையமும் ஆகும்.

கொரிந்து நகர் பற்றிய மிகத்தெளிவான விளக்கங்கள் ஸ்டாரோபோ மற்றும் பவுசானியா என்பவர்களால் தரப்பட்டுள்ளன. கி.பி. 1896-இலிருந்து இந்நகர் பற்றிய அகழ்வாய்வுகள் தொடர்ந்து நடைபெற்றுவருகின்றன.

கொரிந்து வளைகுடாவின் உட்பகுதியில், 566 மீட்டர் உயரமான பகுதியில் அக்ரோகொரிந்து என்ற மலையடிவாரத்தின் உயரமான பகுதியில் அமைந்துள்ளது இந்நகர். கற்களால் ஆன கருவிகளும், மற்றும் இப்பகுதியில் அகழ்ந்தெடுக்கப்பட்ட மட்பாண்டங்களும் இவை புதிய கற்காலத்தைச் சேர்ந்தவை எனக்காட்டுகின்றன. தொடக்க வெண்கலக்காலத்தில் இது அழிக்கப்பட்டது. முதலாம் ஆயிரமாண்டுத் தொடக்கத்தில் தோரியன் கிரேக்கர்களால் குடியேற்றப்பட்டது. கி.மு. எட்டாம் நூற்றாண்டில் கொரிந்து கோர்பு, சிரக்கூசா ஆகிய இடங்களில் தனது குடியேற்றங்களை நிறுவியது. 7-ஆம் நூற்றாண்டில் சிப்சேலு, பெரியாண்டர் ஆகியோர் காலத்தில் கொரிந்து பெரும் ஆதிக்கமும் செழிப்பும் பெற்று விளங்கியது. இது பெலோப்போனிசியர், கொரிந்தியப் போர்களில் அழிவிலிருந்து தப்பியது. பழைய கிரேக்க நகரமாகிய கொரிந்து கி.மு. 146-இல் உரோமையர்களால் அழிக்கப்பட்டது. ஒரு நூற்றாண்டுக் காலம் பாழடைந்த இடமாகக் கிடந்தது.

கி.மு. 44-இல் யூலியு சீசரால் இந்நகரம் மீண்டும் நிறுவப்பட்டது. இது 'அகாயா'வின் தலைநகரமானது. முதலில் விடுதலையடைந்த இத்தாலியர்கள் பலர் இங்கு வந்து குடியேறினர். பின்னர் பல நாட்டவரும் வந்து தங்குமளவுக்கு இது பலரைக் கவர்ந்திழுக்கும் நகரமாகியது.

கிரேக்கர் காலத்தைவிட உரோமையரின் காலத்தில் வியாபாரத்தில் இது அதிக முக்கியத்துவம் பெற்றது. புதிய ஏற்பாட்டுக் கொரிந்து நகரில் கிரேக்க-உரோம, கிழக்கு-மேற்கு வாணிபத் தொடர்புகள் அதிகரித்தன. கொரிந்து நகர் இரு துறைமுகங்களுக்கு நடுவே அமைந்திருந்தது. கொரிந்து வளைகுடாவில் உள்ள லெகேயோனுக்கும், சரோனிக் வளைகுடாவில் உள்ள கெங்கிரேயவுக்கும் இடையில்தான் இது அமைந்திருந்தது. பொருட்கள் இரண்டு துறைமுகங்களுக்கும் எடுத்துச் செல்லப்படும் வகையில் இந்நகரில் கால்வாய் அமைத்திருந்தனர். இவ்வாறு

பொருட்களை இரண்டு துறைமுகங்களுக்கும் சுமந்து செல்லுதல், மாற்றுதல் ஆகிய இவ்வேலைகளைச் சார்ந்துதான் இந்நகரம் வாழ்ந்தது. எந்தக் குறிப்பிட்ட பொருளும் இங்கு உற்பத்தி செய்யப்படவில்லை. ஆயினும் இந்நகரின் பெருமைபற்றி, விண்ணைத் தொடும் கட்டடங்கள் பற்றிப் பழம்பெரும் வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். கி.மு.146-இல் இருந்த கிரேக்க நகரம் அன்று முழுமையாக அழிக்கப்பட்டுவிடவில்லை. அதில் வியக்கத்தக்க ஓர் அமைப்பு அப்பொல்லோ கோவிலின் ஏழு தூண் வரிசையாகும். அவை பிற்காலக் கிரேக்க கட்டடக் கலைக்குச் சான்று பகர்ந்தன.

1896-இல் தொடங்கிய அகழ்வாராய்ச்சிகள் தொடர்ந்து நடந்தாலும் பொது உபயோகத்திற்கான கட்டடங்கள், தனியார் வீடுகள் போன்றவற்றை இன்னும் முழுவதுமாக எடுக்கவில்லை. இலக்கியங்களும், தொல் பொருட்களும் கொரிந்து நகரில் எண்ணிக்கையற்ற கோவில்கள் இருந்ததற்குச் சான்று பகர்கின்றன.

மேலே கூறப்பட்ட அப்பொல்லோவின் ஆலயத்தைத் தவிர மேலும் பல ஆலயங்கள் அப்பொல்லோவுக்காகக் கட்டப்பட்டிருந்தன. அத்தீனா பொசிதேயோன், அஸ்கெலெபியோஸ் போன்ற பல தெய்வங்களின் ஆலயங்களும் இருந்தன. இவை எல்லாவற்றிலும் மிகப் பெரிய வழிபாட்டு மையம் அக்ரோ கொரிந்தில் உள்ள அப்ரோதைத்துவின் ஆலயம்தான். இங்கு 1000 அடிமைப் பெண்கள் தேவதாசிகளாகப் பணிபுரிந்தனர்.

கி.பி. 50-ஐ ஒட்டி ஒரு யூதக் குடியேற்ற நகரமும், செபக்கூடமும் இருந்திருக்கிறது. இங்குள்ள நகர மையம் கடைகளும், வியாபாரக் கட்டடங்களும் சூழப்பட்ட ஒரு பெரிய சந்தைக் கூடமாக அமைந்திருந்தது. இது 'அகோரா' எனப்பட்டது. அகோராவின் தென்பகுதியில் ஆலோசனைக் கூடமும், பேசுபவர்கட்குரிய மேடையும் இருந்தன. அ.ப.18:16-இல் பவுலினின் வழக்கைக் கல்லியோ இங்குதான் கேட்டிருக்கவேண்டும் (அ.ப. 18:16 தொ). இதே பகுதியில் மிகப் பெரிய பேராலயம் ஒன்று உள்ளது (பொதுக் கட்டடமாக இருந்திருக்கவேண்டும்). என்ன காரணத்திற்காகப் பயன்படுத்தப்பட்டது என்பது தெரியவில்லை. அகோரா முழுவதும் பல கோவில்களால் சூழப்பட்டுள்ளது. நகரம் பல பொதுக்குளியல் மையங்களையும், அரங்குகளையும் கொண்டிருந்தது. ஒரு பொது அரங்கு 18,000 பேர் ஒரே நேரத்தில் உட்கார்ந்து நிகழ்ச்சிகளைக் கண்டுகளிக்கும் வசதியைக் கொண்டிருந்தது. பவுல் 1 கொரி 9:24-2-இல் குறிப்பிடும் இஸ்திமியன் விளையாட்டுகள் நடைபெறுவது இவ்விடத்தில்தான். லெகேயோனைச் சென்றடையும் சாலை பாதுகாக்கப்பட்டிருந்தாலும், அத் துறைமுகம் இருந்ததற்கான அடையாளங்கள் எதுவும் இல்லை.

கொரிந்து நகர் கிரேக்கர் காலத்திலும் சரி, உரோமையர் காலத்திலும் சரி, அதன் தீய இன்பக் களியாட்டங்களுக்குப் பெயர் பெற்றது. ''எல்லோரும் கொரிந்துக்குச் செல்வது நல்லதல்ல'' என்ற கிரேக்கப் பழமொழியே இதனை விளக்கும். 'விலைமாது' 'விலைமாதின் வீட்டிற்குச் செல்பவன்', எனும் பொருள்தரும் சொற்களாக அகராதியில் சேர்க்கப்படுமளவுக்கு இந்நகர் பெயர் பெற்றிருந்தது. பவுல் நற்செய்தி அறிவித்து அதிகம் பலன் தராத சபையென்றால் அது கொரிந்துதான். அவர்களைக் குறிப்பிடப் பயன்படுத்தும் அடைமொழிகளை வேறு எந்தச் சபைக்கும் அவர் பயன்படுத்தவில்லை (1 கொரி 5:19 தொ; 6:9; 6:15-20).

பவுல் ஒருமுறை கொரிந்து சென்றது பற்றி மட்டுமே அப்போஸ்தலர் பணிநூல் குறிப்பிடுகிறது (18:1-18). ஏதன்சிலிருந்து, தனது இரண்டாவது பயணத்தில் கொரிந்தை கி.பி.50-இல் அடைந்ததாகக் கூறப்படுகிறது. இங்கே அக்கிலாவோடும், பிரிஸ்கில்லாவோடும் கூடாரம் செய்யும் தனது தொழிலை மேற்கொண்டு அவர் வாழ்ந்ததாகவும், ஓய்வு நாள்களில் செபக் கூடத்திற்குச் சென்று போதித்ததின் மூலம் அதன் தலைவனான கிறிஸ்பு என்பவரை மனந்திருப்பியதா

கவும் கூறப்படுகிறது. அந்நகரத்து யூதர்கள் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை. எனவே தீத்து யுஸ்து என்பவர் வீட்டிலிருந்து போதித் தார். 18 மாதங்களுக்குப் பின் சட்ட விரோத மான ஒரு மதத்தைப் போதிப்பதாகப் பவுல் மேல் குற்றம் சாட்டிக் கல்லியோன் முன்னி லையில் கொணர்ந்தனர். ஆனால் இவ்வழக் கைக் கேட்பதற்குக் கூட மறுத்துவிட்டான் அவன். இதன்பின் பவுல் கொரிந்து நகரை விட்டு எபேசு சென்றடைந்தார் (அ.ப. 18:18).

**கொரிந்தியருக்குத் திருமுகம் - I** (1 CORINTHIANS, Letter to the)

I. கொரிந்தியத் திருச்சபைக்குப் பவுல் எழுதிய ஒரு மடல் இப்போது புதிய ஏற் பாட்டுத் திருமுறைப்பட்டியலில் ஏழாவதாக இடம் பெறுகிறது. இது பல காரியங்களைப் பற்றிப் பேசுகிறது. ஆகவே கிறிஸ்தவ இலக்கி யத்தில் மிகவும் விளக்கம் அளிக்கும் நூல் களில் ஒன்றாகத் திகழ்கிறது. பவுலின் சிந்தனையின் பல கூறுகளைக் கூறுவதோடு தொடக்க காலத்திருச்சபை, குறிப்பாகப் புற வினத்தாரின் திருச்சபை, எதிர்கொண்ட பல பிரச்சினைகளுக்கு விளக்கம் அளிக்கிறது. ஆண்டவரின் இறுதி இரவுக் கொண்டாட் டம் ஆதித்திருச்சபையில் கடைப்பிடிக்கப் பட்டது என்பது பற்றிய விவரிப்பையும், இறுதி இரவுணவில் இயேசு பயன்படுத்திய சொற்களையும் 1 கொரி 11:23-26 என்ற பகுதி பாதுகாத்து வைத்துள்ளது. உயிர்ப்பில் விசு வாசம் எப்படித் தோன்றியது என்பதை 15:3-11 என்ற பகுதி எடுத்துக் கூறுகிறது. அதி 13-இல் வரும் அன்பு பற்றிய பாடல் யாவ ரும் அறிந்த, மற்றும் யாவராலும் விரும்பப் படும் ஒன்றாகும். நூல் முழுவதிலும் ஆன் மீக ஆழமும் கவிநயமும் மிளிர்கிறது.

II. **கொரிந்து நகர்:-** காண்க: கொரிந்து

III. **கொரிந்தியத் திருச்சபை:-** கி.பி. 49-இன் பிற்பகுதியில் தமது இரண்டாம் நற்செய்திப் பயணத்தைத் தொடங்கிய பவுல், ஆசியாவில் இருந்த சபைகளைப் பார்வையிட்ட பின்னர் துரோவா, பிலிப்பு, தெசலோனிக்கே, பெரயா, ஏதன்சு வழியா கக் கி.பி. 50-இல் கொரிந்து வந்தடைந்து, அங்கு ''ஓராண்டு ஆறுமாதம் தங்கியிருந்த போது'' (அ.ப.18:11) கொரிந்தில் திருச் சபையை நிறுவினார். அங்கு, கி.பி. 50-52-க்கு இடையில் 18 மாதங்கள் தங்கி யிருந்து போதித்தார் (18:1-18). அங்கிருந்து சீரியா நாட்டுக்குப் புறப்பட்டுச் சென்ற போது கொரிந்தில் செழிப்பான திருச்சபை ஒன்று உருவாகியிருந்தது. எல்லாச் சமூகமட் டங்களிலிருந்தும் அங்கத்தினர்கள் இருந்தா லும் பெரும்பாலானவர்கள் தாழ்ந்த நிலை யைச் சேர்ந்தவர்களே. இதில் யூத, புறவினக் கிறிஸ்தவர்களும் அடங்குவர்.

கொரிந்துக்குப் பவுல் சென்றடைவதற்குச் சற்று முன்னர்தான், பேரரசன் கிளாதியுவின் கட்டளைக்கிணங்க அக்கிலா பிரிஸ்கில்லாத் தம்பதியினர் உரோமையிலிருந்து வெளி யேறிக் கொரிந்தில் குடியேறியிருந்தனர் (18:1-2). பவுல் ''ஓய்வு நாள்தோறும் செபக் கூட்டத்தில் விவாதித்து யூதர்களுக்கும் கிரேக்கர்களுக்கும் விசுவாசமூட்ட முயன் றார்'' (18:4). மற்ற நேரத்தில் பவுல் கூடாரம் செய்யும் தொழில்செய்து, தனது வாழ்க் கைக்கு வேண்டிய ஊதியம் தேடிக்கொண் டார். யாருக்கும் சுமையாக இருக்கவிரும்ப வில்லை. இதே தொழிலைக் கொண்டிருந்த அக்கிலா தம்பதியரின் வீட்டில் தங்கி வேலை செய்துவந்தார் (18:2-4).

பவுல், தனது வழக்கப்படி முதலில் யூதர் களை நாடிச்சென்றார் (உரோ 1:16). ஆனால் பிற இடங்களில் நிகழ்ந்ததுபோன்று இங்கும் யூதர்கள் அவரை ஏளனம் செய்தனர்; நற்செய் தியை ஏற்க மறுத்தனர். எதிர்ப்பு வளர்ந்தது. இதன் விளைவாகப், புறவினத்தாரை நாடிச் சென்றார். அவர்கள் நற்செய்தியை ஆவ லோடு ஏற்றுக்கொண்டனர் (18:8). இப்பணி யில் மாசிதோனியாவிலிருந்து திரும்பி யிருந்த சீலாவும் திமொத்தேயுவும் பவுலுக்குப் பெரிதும் உதவியாய் இருந்தனர். பிலிப்பி நகர் மக்களின் நன்கொடையும் அவரது உழைப்பும் பயன்பட்டன (பிலி 4:15; 2 கொரி 11:9). பெயிபா அக்கிலா குடும்பத்தி

னர் முதலியோர் இப்பணியில் பெரிதும் ஆர்வம் காட்டினர். செபக் கூடத்தலைவர் கிறிஸ்பு தன் குடும்பத்துடன் திருமறையை ஏற்றார் (2 கொரி 1:14). அவர் தங்கவும் சபையினர் கூடுவதற்கும் தன்வீட்டில் இட மளித்திருந்த காயுவும் அவரது வீட்டாரும் திருமுழுக்குப் பெற்றனர் (உரோ 16:23; 1 கொரி 1:14). ஸ்தேவான் வீட்டாருக்கும் பவுல் திருமுழுக்குக் கொடுத்திருக்கிறார். இவர்களுக்கு மட்டுமே பவுல் தன் கைப் படத் திருமுழுக்கு அருளியதாகக் கூறுகிறார் (1:14-16). பிறருக்கு அவருடைய சீடர்கள் திருமுழுக்கு அளித்துவந்தனர் (1:17).

கொரிந்து திருச்சபை ஆவியானவரின் அருங்கொடைகளை நிரம்பப் பெற்று இறை அருளில் நிலைத்து நின்று (1:4-6) வளரத் தொடங்கியது. அதன் உட்கரு யூத சமூகமாகும். ஆனால் அனேக புறவினத்தார் இருந்தனர். கிரேக்க, உரோமை உலகின் பல சமூக மட்டங்களிலிருந்து மக்கள் நற்செய்தியை ஏற்றனர். அவர்களுடைய சமூக நிலை சில வற்றில் உயர்ந்தும், சிலவற்றில் தாழ்ந்தும் இருந்தது. பெயிபா போன்ற செல்வமிக்க பெண்களும், எரஸ்து போன்ற நகர அதிகாரி களும், முன்னாள் அடிமையும் கிரேக்கருமான வர்களும் (உரோ 16:23), அக்கிலா போன்ற யூதனும், தொழிலில் வல்லவரும், உயர்ந்த சமூக நிலையையுடைய அவரது மனைவி போன்றவர்களும், பொர்த்துனாத்து போன்ற உரோமையர்களும் (16:17), கிறிஸ்பு போன்ற யூதர்களும் (1:14) ஆகிய பலதரப் பட்ட மக்கள் நற்செய்தியை ஏற்றிருந்தனர். மேல் குடிமக்களும் இருந்தனர். ஆனால் பெரும்பாலோர் சாதாரண எளிய மக்களே (1:26-28). அடிமைகளும் இடம்பெற்றிருந்த னர் (7:21). யூதரும் புறவினத்தாரும் கிறிஸ்து வத்தை ஏற்றுக்கொள்வதைக் கண்ட யூதர்கள் பொறாமை கொண்டனர். அதுவும் பவுல் தங்கியிருந்து பணிசெய்து வந்த இல்லம் செபக்கூடத்தை அடுத்து இருந்ததால் (அ.ப. 18:7) யூதர்களின் எதிர்ப்பு வலுத்தது. தங்கள் சட்டத்துக்கு முரணான முறையில் இறை வனை வழிபடுமாறு மக்களைத் தூண்டிவிடு வதாக ஆளுநன்முன் அவர்மீது குற்றம் சுமத் தினார்கள் (18:12-17). ஆனால் கொரிந்தை மையமாக வைத்துத் திருச்சபை வளர்ந்து கொண்டே இருந்தது. வெகுவிரைவில் அக் காயா மாநிலம் முழுவதிலும் இறை வார்த்தை வேரூன்றியது (2 கொரி 1:1). இந்நிலையில் பவுல் சீரிய நாட்டிற்குக் கப் பல் ஏறி, எபேசு நகரை அடைந்தார். அக் கிலா தம்பதியினரும் அவருடன் சென்றனர்.

பவுல் நட்ட நற்செய்திப் பயிருக்கு அலக் சாந்திரியாவைச் சேர்ந்த அப்பொல்லோ என்ற யூதர் நீர்பாய்ச்சினார். இவர் சொல் வண்மை மிக்க மறைநூல் அறிஞர். இவர் திரு முழுக்கு யோவானின் திருமுழுக்கை மட்டுமே அறிந்திருந்தார். இவருக்கு அக்கிலா தம்பதி யினர் ''கடவுளின் அருள் நெறியைப் பற்றித் திட்டவட்டமாக விளக்கினர்''. பின்னர் இவர் அக்காய மாநிலத்திற்குச் சென்று, கொரிந்தில் தங்கிக் கிறிஸ்தவர்களின் விசுவா சத்தை உறுதிப்படுத்தினார் (அ.ப. 18:24-28).

பலதரப்பட்ட கொரிந்தியக் கிறிஸ்தவர் கள், கிறிஸ்துவத்தை ஏற்றவுடன், கேள்விகள் எழுப்புவதையும் மேலும் ஆய்வு செய்வதை யும் கைவிட்டுவிடவில்லை. அதற்கு யூதர்க ளின் எதிர்ப்பிரச்சாரமும், அவநம்பிக்கையும் தூண்டிவிட மற்றத் திருச்சபைகளைவிடக் கொரிந்து திருச்சபை பவுலுக்குப் பல பிரச் சனைகளை எழுப்பியது. கொரிந்து கிறிஸ்த வர்கள் பவுல் போதித்ததற்கு வேறான பிரச் சாரங்களையும் வரவேற்றனர். சமூக ஏற்றத் தாழ்வு திருவழிபாட்டிலும் பிரதிபலித்தது. இவை பல கட்சிகள் தோன்ற வாய்ப்பாயின. ஞானத்தைப்பற்றிய தவறான எண்ணமும், அதை அடைவதில் அவர்கள் காட்டிய தகாத பற்றும், ஆன்மீகப் பெருமைக்காக அவர்க ளிடையே நிலவிய போட்டிகளும், கட்சிப் பிரிவினைப் போக்கை மேலும் வளர்த்தன. சண்டை சச்சரவுகள் உண்டாயின. கிறிஸ்தவர் கள் வேற்று மறையினர்முன் வழக்காட ஆரம்பித்தனர் (6:1-11). கொரிந்தில் மேலோங்கி நிலவிய ஒழுக்கக்கேடு கிறிஸ் தவர்களையும் பாதித்தது (5:1-13; 6:12-30). திருவழிபாட்டிலும் தீயவொழுக்கம் புகுந் தது (11:2-16). ஒற்றுமையின் சின்னமாகிய

ஆண்டவரின் திருவிருந்துகூட வேற்றுமை களை வெளிப்படுத்த வாய்ப்பாயிற்று *(11:17-34)*. அன்றாட வாழ்வைச் சேர்ந்த பல காரியங்களில் கருத்து வேறுபாடுகளும் தவ றான கருத்துகளும் *(7:1-40; 8:1-11:1)*, ஆவி யின் வரங்கள் பற்றிய முரண்பட்ட கருத்துக ளும் *(12:1-14:40)*, உயிர்த்தொழுதல் பற்றிய பிரச்சினைகள் *(15:1-58)* முதலியவையும் தோன்றிக் கொரிந்து திருச்சபையின் வளர்ச்சி யைக் குன்றச்செய்தன. இந்நிலை புறவினத் தாருக்கே துர்மாதிரியாய் அமைந்தது *(5:1)*.

இந்நிலையில் பவுல், கேட்டறிந்த தகவல் களாலும், கொரிந்தியரின் மடலாலும் கொரிந்தியக் கிறிஸ்தவர்களின் இரங்கத்தக்க நிலையை அறியவந்தார். அந்நிலையைச் சீர் செய்ய எழுதப்பட்டதே இந்த முதலாம் திரு முகமாகும்.

IV. **நூல் தோன்றிய சந்தர்ப்பமும், நோக்க மும்:-**

இதற்குப் பல காரணங்கள் உண்டு. பவுல் கொரிந்தியருக்கு ஏற்கெனவே ஒரு மடல் எழுதியிருந்ததாகத்தெரிகிறது *(காண்க 5:9)*. சில விளக்கவுரையாளர்கள் இதன் சில பகுதி களை இரண்டாம் திருமுகத்தில் அடையா ளம் காண்கின்றனர். இவர்கள் கருத்துப்படி 2-ஆம் திருமுகம் பவுலின் பல மடல்களின் சில பகுதிகளைக் கொண்ட தொகுப்பாகும்.

*1.* ''இப்பொழுது நீங்கள் எழுதிக் கேட்ட வற்றைக் குறித்துப் பேசுகிறேன்'' என்று பவுல் கூறுகிறார் *(7:1)*. இதிலிருந்து கொரிந் தியக் கிறிஸ்தவர்கள் பல காரியங்களைப் பற்றிக் கேள்வி எழுப்பிப் பவுலுக்கு எழுதி அவரது ஆலோசனையைக் கேட்டதாகத் தெரிகிறது. இந்த மடல் ஸ்தேவான், பொர்த் துனாத்து அக்காய்க்கு ஆகியோர் வழியாகப் பவுலை அடைந்திருக்கலாம். அவர்கள் எழுப்பிய பிரச்சினைகள் திருமணம் மற்றும் கன்னிமை வாழ்வு பற்றிய மதிப்பீடு *(7:2 தொ)*, சிலைகளுக்குப் பலியாக அளிக்கப் பட்ட உணவுப் பொருட்களைப் பயன்படுத் துதல் *(8-9)*, அருங்கொடைகளின் மரபுப்படி *(12:4)* ஆகியவையாகும். மேலும் மடலைக் கொண்டு வந்தவர்கள் வழியாகச் சபைக்குள் ளும், நற்கருணை வழிபாட்டிலும் கூடப் புகுந்துள்ள சில தவறுகள் பற்றியும் *(10-11)*, பொதுஉயிர்ப்புப் பற்றிய கோட்பாடு எழுப் பிய சில கடினமான கருத்துக்கள் பற்றியும் *(15)*, பவுல் கேள்விப்பட்டிருக்க வேண்டும். இவற்றிற்கு *7:1-15:58* என்ற பகுதியில் பவுல் பதில் அளிக்கிறார்.

*2.* இவ்வாறு எழுத்து மூலம் அறியவந்த செய்திகளைக் கேட்டறிந்த தகவல்களும் நிறைவு செய்திருக்கவேண்டும். ''உங்கள் நடுவில் சண்டை சச்சரவுகள் இருப்பதாகக் குலோயி வீட்டினர் எனக்கு அறிவித்தனர்'' *(1:11)* என்று பவுல் கூறுகிறார். குலோயி எபேசு நகரில் வியாபாரம் செய்துவந்த ஒரு பெண்மணி. இவள் வியாபாரத்தின் நிமித் தம் கொரிந்துக்குச் சென்று வந்திருக்கவேண் டும். அப்போது அங்குத் தான் கண்ட திருச் சபையின் நிலைபற்றி எபேசில் தங்கியிருந்த பவுலுக்கு அறிவித்திருக்க வேண்டும். இந் நிலையின் சில கூறுகள், கொரிந்து திருச்சபை யில் நிலவிய கட்சி மனப்போக்கு *(1:12)*, சகோதரர்களிடையே நிலவிய சண்டை சச்சர வுகள் *(6:1)*, சிலரது துர்மாதிரியான நடத்தை *(5:1; 6:12-20)* ஆகியவை பற்றிய செய்திகளாகும். இவற்றிற்குப் பதிலாகவும் அறவுரையாகவும் பவுல் இத்திருமுகத்தின் *1:10-6:20* என்ற பகுதியை வரைகிறார்.

கொரிந்து திருச்சபையில் நிலவிய மேற் கூறப்பட்ட சீர்குலைவுகளைத் தீர்த்துவைக்கப் பவுல் கொரிந்துக்குச் செல்ல விரும்பினார். ஆனால் அப்பொழுது எபேசில் இருக்க வேண்டிய அவசியம் பவுலுக்கு ஏற்பட்டது *(அ.ப. 19:22)*. இருந்த போதிலும் அவர் விரைவிலே அங்குச் செல்லமுடியும் என்ற நம்பிக்கையோடு இருந்ததாகத் தெரிகிறது *(4:19)*.

இதற்கிடையில், திமொத்தேயுவைக் கொரிந்துக்கு அனுப்பிவைத்தார். திமொத் தேயு எரஸ்துவோடு மாசிதோனியா வழியா கக் கொரிந்துக்குப் புறப்பட்டுச் சென்றார் *(4:17:16:10)*. கொரிந்து திருச்சபையின் நிலை

மேலும் மோசமாகி விடும் என்ற அச்சத்தில் இந்தத் திருமுகத்தைப் பவுல் எழுதினார். இவ்வாறு, இந்தத் திருமுகம் குலோயி வீட்டாரிடமிருந்து கேட்டறிந்த தகவல்களுக்கும் கொரிந்தியர் கேட்டிருந்த வினாக்களுக்கு விடையாகவும், விளக்கமாகவும் அமைந்தது. இச்செய்திகள் கிறிஸ்தவச் சமூகம் பற்றிக் கொரிந்தியர்களிடையே நிலவிய அடிப்படைத் தவறுகளை எடுத்துக்காட்டின. ஆகவே, கிறிஸ்துவில் உண்மையான வாழ்வு பற்றிய உண்மையான அறிவையும் மதிப்பீட்டையும் கொரிந்தியர்க்கு உணர்த்த அவர்களை நேர் வழிப்படுத்தும் நோக்கோடு பவுல் இத்திருமுகத்தை வரைந்தார் எனலாம்.

V. **எத்தனை திருமுகங்கள்?** இப்பிரச்சினை பற்றிக் கொரியந்தியருக்கு எழுதப்பட்ட இரண்டாம் திருமுகத்திற்கு எழுதப்படும் கட்டுரையில் அலசப்படும்.

VI. **நூலாசிரியரும் நூலில் ஒற்றுமையும்:** இம்மடலை பவுல்தான் எழுதினார் என்பதை யாரும் ஐயுறுவதில்லை. புறச்சான்றுகள்: முதலாம் நூற்றாண்டின் முடிவில் உரோமைக் கிளமந்து (கி.பி. 95) இந்நூலைக் குறிப்பிடுகிறார். இந்நூலிலிருந்து பல மேற்கோள்களை எடுத்தாளுகிறார். புனித போலிக்கார்ப்பு இந்நூலைப் பயன்படுத்தியுள்ளார். புனித அந்தியோக்கியா இஞ்ஞாசியார் (கி.பி. 112) இந்நூலிலிருந்து எடுத்துக்காட்டுகள் கொடுக்கிறார். முராத்தோரியின் துணுக்குகளில் இம்மடல் பவுலின் மடல்கள் தொகுப்பில் முதலாவதாகக் குறிக்கப்படுகிறது. இது தொடக்க நூற்றாண்டுகளில் இந்நூலுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தைச் சுட்டுகிறது. தொடக்ககாலத் திருச்சபைத் தந்தையர்கள் உரோமையர், எபேசியர் ஆகிய மடல்களுடன் சேர்த்து இந்நூலிலிருந்துதான் அடிக்கடி எடுத்துக்காட்டுகள் அளிக்கின்றனர். சிலரைத்தவிர மற்ற யாவரும் இந்நூலின் உண்மைத் தன்மையை ஏற்றுக்கொள்வர்.

**அகச்சான்றுகள்:** இந்நூலில் காணப்படும் சொற்றொடர்கள், மொழிநடை, கருத்துகளை விளக்கும் முறை, பவுலைப் பற்றிய சில குறிப்புகள் முதலியவை இந்நூல் பவுலால்தான் எழுதப்பட்டிருக்கவேண்டும் எனச் சுட்டுகின்றன *(1:1.13-16; 4:12; 16:21)*.

இது ஒரு தொகுப்பு நூல் என்ற கருதுகோளுக்கு ஆதரவாகக் கூறப்படும் வாதக் கருத்துக்களும் நூலுக்கு அளிக்கும் பிரிவுகளும் பலதரப்பட்டவையாகவும் முரண்பட்டவையாகவும் இருப்பதே இந்த வாதத்தின் பலவீனத்தை எடுத்துக்காட்டுகின்றன.

VII. **இடம்:** இந்நூல் எபேசு நகரில் எழுதப்பட்டது என்பது அறிஞர்களின் முடிவு. ''பெந்தக்கோஸ்து திருநாள்வரை எபேசில் தங்கியிருப்பேன்'' *(16:8)* என்றும், ''ஆசிய நாட்டுச் சபைகள் உங்களுக்கு வாழ்த்துக் கூறுகின்றன'' *(16:19)* என்றும் பவுல் கூறுகிறார். ''அக்கிலாவும், பிரிஸ்கில்லாவும், இவர்களது வீட்டில் கூடுகின்ற சபையினரும் ஆண்டவருக்குள் உங்களுக்கு வாழ்த்துக்கூறுகின்றனர்'' *(16:19)* என்றும் கூறுகிறார். இந்த இருவரும் பவுலுடன் எபேசுக்குச் சென்றதாக அ.ப. *18:18* கூறுகிறது. ஆகவே, பவுல் எபேசு நகரிலிருந்துதான் இம்மடலை எழுதினார் என்பது உறுதி.

VIII. **காலம்:** இந்நூல் எழுதப்பட்ட காலத்தைப் பற்றித் துல்லியமாக ஒன்றும் கூறமுடியாது. கி.பி. 52-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் கொரிந்து நகரைவிட்டுப் புறப்பட்ட பவுல் *(அ.ப.18:18)* எபேசு, செசரியா, எருசலேம் வழியாக அந்தியோக்கியாவை அடைந்து தனது இரண்டாம் நற்செய்தி பரப்புப் பயணத்தை முடிக்கிறார் *(அ.ப. 18:20-22)*. அந்தியோக்கியாவில் ஓராண்டு தங்கியபின் கி.பி. 53-இல் தனது மூன்றாம் நற்செய்தி பரப்பும் பயணத்தைத் தொடங்கிக் கலாத்தியா, பிரிகியா ஆகிய நாடுகள் வழியாக 54-இன் பிற்பகுதியில் எபேசு நகரை அடைந்தார் *(அ.ப. 19:1)*. அங்கு ஈராண்டுகளும் *(19:10)* மூன்று மாதங்களும் *(19:8)* தங்கியிருந்தார். அங்கிருந்து திமொத்தேயுவையும் எரஸ்து

வையும் மாசிதோனியாவுக்கு அனுப்பி வைத்ததாகத் தெரிகிறது (19:22). அவரும் மாசிதோனியா, அக்காயா வழியாக எருசலேம் செல்லத் திட்டமிட்டிருந்ததாகத் தெரிகிறது (19:21). இப்பயணங்களையே 1 கொரி 16:5-10-இல் குறிப்பிடுகிறார் எனலாம். இந்நூல் பவுல் எபேசில் தங்கியிருந்த காலத்தில் (கி.பி. 54-57) பாஸ்கு விழாவிற்குப்பின் எழுதப்பட்டதாகத் தெரிகிறது (5:6). விளக்கவுரையாளர்கள் சிலர் கி.பி. 57-இன் வசந்த காலத்திலும், இந்நூல் எழுதப்பட்டது என்பர். உறுதியாக ஒன்றும் கூறமுடியாது.

IX. மொழிநடை: இதன் நடை உரோமையர் திருமுகத்தைப் போன்று ஆடம்பரமான தன்று. ஆனால் நேரடியானது; உறவாடும் நடைகொண்டது. இலக்கியநயமிக்கது (8:4-6; 12:4-11; 13:1-13; 15:54-57). இரங்கற் சுவைக்குக் குறைவில்லை. வஞ்சப்புகழ்ச்சி அணி ஆங்காங்கே பளிச்சிடும் (1:25; 4:9-13). முரணணிகள் பல இடங்களில் காணப்படு கின்றன (1:21; 3:1-4; 8:7-13; 10:1-13; 13:11-12). பலவகை உவமைகளை ஆசிரியர் பயன்படுத்துகிறார் (3:2.9.16; 5:6; 15-16; 4:24-27; 12:12-30; 13:12). கிரேக்க மெய்யியலார் போன்று எழுதுகிறார். எதையும் நுணுகி ஆய்ந்து மேய்ப்பனுக்குரிய பரிவோடு எழுதுகிறார்.

கொரிந்தியர் இரண்டாம் மடலைப் போன்று அவ்வளவு கடுமை மிக்கதன்று. யாரிடையே அவர் போதித்து உழைத்தாரோ அவர்களுக்கும், அவர் ஏதன்சில் தோல்வியடைந்தபின் (அ.ப.17) அவருக்கு ஆறுதல் அளித்தவர்களுக்கும், அவர் காட்டும் அக்கறையையும் அன்பையும் நூல் பிரதிபலிக்கிறது. கொரிந்தியர் இரண்டாம் மடலில் காணப்படுவதுபோல் அவர் யாரிடமும் கோபப்படவில்லை. ஆனால் கோபமிக்க கூற்றுக்கள் இல்லாமலுமில்லை (1 கொரி 1:13; 5:5; 11:17-22). முதல் மடல் பவுலின் இரண்டாவது நீண்ட மடலாகும்; கிரேக்க மொழியில் 6800 சொற்களையுடையது.

X. திட்டம்: இத்திருமுகத்தை எழுதத்தூண்டிய இரு சந்தர்ப்பங்களுக்கேற்ப இந்நூலை இரு பெரும்பகுதிகளாகத் தெளிவாகப் பிரிக்கலாம். முதல் பகுதி (அதி 1-6) குளோயி வீட்டாரிடமிருந்து அனுப்பப்பட்ட செய்திக்குப் பவுலின் பதிலாகும். கொரிந்து சபையில் நிலவிய முறைகேடுகளை ஆற்றலோடு பவுல் கண்டனம் செய்கிறார். இரண்டாம் பகுதி (அதி 7-15) கொரிந்து திருச்சபை அனுப்பிய மடலில் காணப்பட்ட பிரச்சினைகளுக்குப் பதிலாக அமைந்துள்ளது. கிறிஸ்தவச் சமூகத்தில் நிலவிய ஒற்றுமையின்மைக்கு எதிராகப் போராடுவதில் பவுல் பயன்படுத்தும் கிறிஸ்தவ ஞானம் என்ற கருத்து நூல் முழுவதும் ஓடுகிறது, ஒன்றிணைக்கிறது.

1. முன்னுரை : வாழ்த்தும் நன்றியுரையும் (1:1-9)

2. முதல் பாகம் : கொரிந்து சபையில் நிலவிய முறைகேடுகளுக்குக் கண்டனம் (1:10-6:20).

அ. கொரிந்து சபையில் கட்சிப் பிளவுகளும் கிறிஸ்தவ ஞானமும் (1:10-4:2).

| | |
|---|---|
| 1:10-16 | : கட்சிப்பிளவின் தன்மை. |
| 1;16.25 | : சிலுவையின் செய்தி. |
| 1:26-31 | : கொரிந்து சபையின் அங்கத்தினர்கள். |
| 2:1-5 | : பவுல் போக்குமுறை. |
| 2:6-16 | : உண்மையான போலியான ஞானம். |
| 3:1-4 | : கொரிந்தியரின் ஆன்மீக சிறுபிள்ளைத்தனம். |
| 3:5-4:13 | : நற்செய்திப் பணியாளர்கள் பால் உண்மையான கிறிஸ்தவ மதிப்பீடு. |
| 4:;14-21 | : திமொத்தேயுவை அனுப்புதல். |

ஆ. உடலின் முக்கியத்துவம் (5:1-6:20).

5:1-8 : தகாத ஒழுக்கமுடைய மனிதன்.

5:9-13 : ஒழுக்கமற்ற கிறிஸ்தவர்கள் புறம்பாக்கப்படவேண்டும்.

6:1-11 : வேற்றுமறையினர் முன் வழக்காடுதல்.

6:12-20 : பாலினப்பாவங்களின் தீமை.

3. இரண்டாம் பாகம் : கொரிந்தியரின் வினாக்களுக்குப் பதில் (7:1-15:58).

அ. திருமணமும் கன்னிமையும் (7:1-40).

7:1-9 : திருமணத்தில் பாலின உறவு.

7:10-16 : திருமணமும் விவாகரத்தும்.

7:17-24 : சமூக நிலையில் மாற்றங்கள்.

7:25-40 : பாலின நிலையில் மாற்றங்கள் : கன்னிமை.

ஆ. பிற மதச்சூழ்நிலையில் எழும் பிரச்சினைகள்: சிலைகளுக்குப் படைக்கப்பட்டதை உண்ணுதல் (8:1-11:1).

8:1-13 : அறிவும் அன்பும்.

9:1.27 : சுயநலம் தேடாத அன்பிற்குப் பவுல் ஓர் எடுத்துக்காட்டு.

10:1-13 : மறைநூலிலிருந்து ஓர் எடுத்துக்காட்டு. மிதமிஞ்சிய நம்பிக்கையால் வரும் ஆபத்துக்கள்.

10:14:22 : சிலைகளோடு தொடர்பு கூடாது.

10:23-11:1 : சில நடைமுறை விதிகள்.

இ. திருவழிபாட்டுச் சபைகளில் எழும் பிரச்சினைகள் (11:2-14:40).

11:2-16 : பெண்களும் முக்காடும்.

11:17:34 : ஆண்டவரின் இறுதி உணவுக் கொண்டாட்டம்.

12:1-11 : ஆவியின் கொடைகள்.

12:13-31 : உடலுக்குப் பல உறுப்புகள் தேவை.

13:1-13 : அன்பே மிகப்பெரிய கொடை.

14:1-25 : பரவசப் பேச்சைவிட இறைவாக்குரைத்தலே முக்கியமானது.

14:26-40 : ஆன்மீகக் கொடைகளை முறைப்படுத்துதல்.

ஈ. இறந்தோர் உயிர்த்தெழுதல் (15:1-58).

15:1-11 : திருச்சபையின் விசுவாசம்: கிறிஸ்துவின் உயிர்ப்பு.

15:12-34 : கிறிஸ்தவனின் உயிர்ப்பு.

15:35-49 : உயிர்த்த உடலின் நிலை.

15:50-58 : உருமாற்றத்தின் அவசியம்: சாவின் வெற்றி.

4. முடிவுரை (16:1-24).

16:1-4 : பாலஸ்தீன ஏழைகளுக்கு நன்கொடை திரட்டுதல்.

16:5-9 : பவுலின் பயணத்திட்டம்.

16:10-18 : சில பரிந்துரைகள்.

16:19-24 : இறுதி வாழ்த்தும் ஆசீரும்.

**XI. மதிப்பீடும் இறையியலும்:** வரலாற்று நோக்கிலும், இறையியல் நோக்கிலும் இத் திருமுகம் மிக முக்கியமானதாகும். இது ஒரு தொடக்க காலத் திருச்சபையின் சமூக, சமய நிலையை விவரிக்கிறது. குறிப்பாகச் சமீப காலத்தில் புதிதாக மதம் மாறியவர்கள்,

சிறப்பாகப் புறவின மதத்திலிருந்து மனந் திரும்பியவர்கள், எதிர்கொண்ட பிரச்சினை களை விவரிக்கிறது. இப்பிரச்சினைகள் ஒழுக்க, சமூகப் பண்புகளையுடையவையா கும். பவுலின் கோரிக்கைகள் இயேசுவின் மரணத்துக்குப்பின் 25 ஆண்டுகளுக்குள் நிறு வப்பட்டு 10 ஆண்டுகள்கூட ஆகியிராத திருச் சபையில் ஏற்கெனவே போதிக்கப்பட்ட உண் மைகளைப் பிரதிபலிக்கின்றன. கோட் பாட்டு உண்மைகள் பற்றிய குறிப்புகள் பொருள்மிக்கவையாகும். திருச்சபை ஏற் கெனவே விசுவாச வாய்பாடுகளைக் கொண் டிருக்கிறது *(8:5-6; 12:8; 15:1-5)*. வழிபாட்டு முறைகளும், குறிப்பாகத் திருமுழுக்கு மற்றும் நற்கருணை பற்றிய முறைகள், திருஆட்சி அமைப்பு, திருச்சபை மரபு ஆகியவை ஏற் கெனவே மரபு வடிவம் எடுத்திருந்தன. தொடக்க காலத் திருச்சபையில், உண்மை யில், சில கூறுகள் எப்படி வளர்ச்சியுற்றன என்பதற்கும், சில சமயங்களில் போதகத்தி லும் வழிபாட்டிலும் எப்படி ஒரு கூறு மற்றவற்றைவிட வலியுறுத்தப்பட்டது என் பதற்கும் இம்மடல் சாட்சியாக அமைகிறது *(10:16-17-ஐ 11:23-27-ஒடு ஒப்பிடுக)*. இம் மடல் மிக முந்திய நகர சமூகங்களில் ஒன்றின் செழிப்புமிக்க வாழ்க்கைபற்றிய காட்சியை அளிக்கிறது. இக்கடிதம் இல்லாமல் தொடக்க காலத்திருச்சபையில் நிலவிய ஆன் மீக இயக்கங்கள், மற்றும் அப்போஸ்தலர் எதிர்கொண்ட பிரச்சினைகள் பற்றிய அறிவு தெளிவில்லாதுபோகும். தொடக்க நிலை யில் இருந்த அருங்கொடை இயக்கம், துறவு நிலை போன்ற ஆன்மீக இயக்கங்கள் பற்றிய விவரிப்புகளை இம்மடல் கொண்டுள்ளது.

சமூகத்தில் நில்விய கட்சிப்பூசலோ, தகாத உடலுறவோ, கற்பு ஒழுக்கமின்மையோ, திரு மணமோ, சிலைகளுக்குப் படைக்கப்பட்ட உணவை உட்கொள்ளுதலோ, கொரிந்து திருச்சபையிலும் பொதுத் திருச்சபையிலும் நிலவவேண்டிய ஒற்றுமைபற்றியோ, எதைப் பற்றிப் பேசினாலும் அப்போஸ்தலர் பவுலின்போக்கு கிறிஸ்துவை மையமாகக் கொண்டுள்ளது. பொது உயிர்ப்பைத் தவிர மற்றவற்றைப்பற்றி விசுவாசக் கோட்பாட்டு அறிக்கையாக இம்மடலில் அதிகம் கூறப் படவில்லை. ஆயினும் கோட்பாட்டுச் சிந்த னையை அதிகம் வளப்படுத்தும் பல குறிப் புகளைக் கொண்டுள்ளது. உரோமையர், எபிரேயர் திருமுகங்களைப் போன்று இந் நூல் கோட்பாட்டளவில் அவ்வளவு செழிப்பு மிக்கது அன்று என்று பொதுவாகக் கூறப் படும். ஆனால் இது சரியான மதிப்பீடு என்று கூறமுடியாது. ஏற்புடைமை என்ற தலைப்பை உரோமையர் திருமுகம் மிக நிறைவாக விரித்துரைக்கின்றது. ஆனால் இதுபற்றிய கருத்துக்கள் முதலாம் கொரிந்தி யரில் ஏற்கெனவே உள்ளன *(15:22.45)*. நற் கருணை பற்றிய குறிப்புக்கள், எபிரேயர் திரு முகத்தில் காணப்படும் கிறிஸ்து, குருத்து வம் மற்றும் பலிப்பொருள் பற்றிய போத கத்தை இந்நூல் வித்தாகக் கொண்டுள்ளது. மடலின் மேய்ப்புப்பணி மற்றும் அறவுரைத் தொனியால், இதன் போதனைகளில் பெரும் பாலானவை நிறைவுசெய்யப்பட வேண்டி யுள்ளன. இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு திருமணம் பற்றிய போதகமாகும். இந் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளவையெல்லாம் நிலையான மதிப்பீடு உடையவையல்ல. இதற்குச் சான்று, சிலைகளுக்குப் படைக்கப் பட்ட உணவுபற்றிய போதகம். ஆயினும் அப்போஸ்தலர் சிந்தனையின் அடிப்படைக் கருத்துக்களும், அவர் அளிக்கும் உந்து கார ணங்களும் எக்காலக் கிறிஸ்தவர்களுக்கும் முக்கியமானவையாகும். ஏனெனில் எல்லா வற்றையும்விட உண்மையான கிறிஸ்தவ ஞானம் எதில் அடங்கியுள்ளது என்று பவுல் காட்டுகிறார். மேய்ப்புப்பணித் திருமுகங்க ளில் காணப்படுவதுபோல் திருச்சபையின் அமைப்பு தெளிவாகக் கூறப்படவில்லை யென்றாலும், அது அப்போஸ்தலர்களைத் தவிர்த்து, மற்ற அதிகாரிகளையும் கொண்ட நன்கு அமைக்கப்பட்ட சமூகமாக ஏற் கெனவே திகழ்கிறது *(12:28)*. விசுவாசமற்றவர்க ளோடு திருமணம் செய்வது பற்றிய போத கத்தில் மீட்பர் போதித்த பொதுப் போதகத் தைச் செயல்படுத்துவதில் அப்போஸ்தலரின் அதிகாரம் பற்றிய உட்கருத்து காணப்படு கிறது *(7:12-16)*. திருச்சபை அமைக்கப்பட் டிருந்தாலும் திருச்சபையின் மற்ற நன்மை

களுக்காகப் பல்வேறு அங்கத்தினர்களும் ஆவியின் ஆற்றலுக்குத் திறந்த மனத்தவராய் இருத்தல்வேண்டும். இந்த உண்மை எக் காலத்திற்கும் பொருந்தும். ஆதித் திருச்சபை யில் இருந்த பல்வேறு பிரச்சினைகள் இன் றையத் திருச்சபையில் காணப்படும் பிரச் சினைகளுக்கு ஒத்துள்ளன. ஆகவே பவுல் அன்று கூறிய அறவுரை இன்றையத் திருச் சபைக்கு வழிகாட்டும் ஒளிவிளக்காக அமையக்கூடும்.

மேலும் பவுலினுடைய வாழ்வுபற்றிய, குறிப்பாக அவரது எபேசுப் பணிபற்றிய, பல செய்திகளை இந்நூல் அளிக்கிறது.

**கொரிந்தியருக்குத் திருமுகம் - II** (*2 CORINTHIANS, Letter to the*)

I. கொரிந்து திருச்சபைக்குப் பவுல் எழுதிய ஒரு திருமடல். இப்போது இது புதிய ஏற் பாட்டுத் திருமுறைப்பட்டியலில் எட்டாவது இடத்தைப் பெறுகிறது. இதில் அப்போஸ்த லர் பவுல் தனது உணர்ச்சிகளைக் கொட்டி யிருக்கிறார். உள்ளத்தைத் திறந்து காட்டு கிறார். அப்போஸ்தலர்பணி நூல் ஒன்றும் கூறாது செல்லும் பவுலின் வாழ்க்கைக் கட் டத்தில் அவரது நடவடிக்கைகள், அனுபவங் கள் மற்றும் மனநிலை ஆகியவை பற்றி இந்நூல் பல செய்திகளைக் கூறுகிறது. அ.ப. 18, கிளமந்தின் முதல் திருமுகம் ஆகியவற் றோடு சேர்ந்து இதுவும் முதல் நூற்றாண்டில் திருச்சபையின் நிலையையும், மற்றும் கிறிஸ்தவர் வாழ்வையும் பற்றிய சித்தி ரத்தை நமக்குத் தருகின்றது. ஆனாலும் இது ஒரு சிக்கல்மிக்க நூலாகும். அண்மையில் இந்நூல் ஒரே திருமடலா, பலவற்றிலிருந்து தொகுக்கப்பட்ட நூலா என்பதுபற்றிய பிரச் சினை அறிஞர்களின் கவனத்தை ஈர்த்துள் ளது. இதுபற்றிய எந்தக்கருத்துகளும் மன நிறைவு அளிக்கவல்லதன்று.

**II. ஆசிரியரும் நூலின் உண்மைத்தன்மையும்:** *புறச்சான்றுகள்:* கி.பி. 55-155-க்கு இடைப் பட்ட காலத்தில் வாழ்ந்த சிமிர்னாவின் ஆயர் போலிக்கார்ப்பு பவுல் கொரிந்திய ருக்கு எழுதிய இரண்டாம் திருமுகத்தை அறிந்திருந்தார். கி.பி. 150-ஐ ஒட்டிய மார்சி யன் என்ற பிரிவினையாளரின் புதிய ஏற் பாட்டு நூலில் இந்நூல் இடம்பெறுகிறது. கி.பி. 200-ஐ ஒட்டிய முராத்தோரியின் துணுக் குகளின் தொகுப்பு பவுல் கொரிந்தியருக்கு இரண்டு திருமுகங்கள் எழுதினார் என்று குறிப்பிடுகிறது. இரேனேயு (*130-202*) இதி லிருந்து எடுத்துக்கூறுகிறார். அந்தியோக்கியா வின் தியோபிலு, அலக்சாந்திரியாவின் கிள மந்து (*-215*), தேர்துல்லியன் (*220*) ஆகியோர் இந்நூலின் பெயரைச் சொல்லிப்பயன்படுத்து கின்றனர்.

நூலின் அகச்சான்றுகளும் இதையே சுட்டு கின்றன. இந்நூல் கி.பி. 50-60 ஆண்டுகளில் கிரேக்க நாட்டில் இடம் பெற்ற நிகழ்ச்சிகள், பண்பாடு, பழக்க வழக்கங்கள் ஆகியவற் றைப் பிரதிபலிக்கிறது. நமக்குத் தெளிவில் லாத பல குறிப்புகள் நூலில் காணப்படுகின் றன. இவை நூலை எழுதியவர்க்கும், யாருக் காக எழுதப்பட்டதோ அவர்களுக்கும் தெரிந்திருக்க வேண்டும். இவையும் விவரங் களின் இயல்தன்மையும், சுயவாழ்க்கைக் குறிப்புகளின் நம்பகத்தன்மையும், பின்னணி யாக அமைந்துள்ளதாகக் கருதப்படும் குழப்ப மான நிலைகளும் இந்நூலின் உண்மைத் தன்மைக்குச் சான்றுகளாக உள்ளன. எல்லா வற்றையும்விட, இக்காலத்தில் எழுதப்பட்ட தாகக் கருதப்படும் பவுலின் திருமுகங்க ளோடு சிந்தனைப் போக்கிலும் சொற்றொகுதி யிலும் இந்நூல் கொண்டிருக்கும் ஒப்புமை யும், பவுல் தன் உள்ளத்தைத் திறந்து காட் டும் விதமும், இந்நூல் போலியான மடல் என்று காட்டவில்லை. இது பவுலின் மிகச் சிறந்த நூல்களில் ஒன்றாகும். ஆனால் பவுல் எழுதிய ஏனைய திருமுகங்களைப் போல் அவ்வளவு விரைவாகக் கிறிஸ்து சமூகத்தில் இந்நூல் பரவவில்லை என்று கருத இட மிருக்கிறது. முதல் நூற்றாண்டின் முடிவில் உரோமை நகரின் ஆயராகப் பணியாற்றிய கிளமந்து கொரிந்து சபைக்கு எழுதிய மட லில் பவுல் எழுதிய மடலை நினைவூட்டு கிறாரே தவிர மடல்கள் என்று பன்மையில் குறிக்கவில்லை.

III. ஒரே மடலா அல்லது தொகுப்பா? இந்நூலைப் பவுல்தான் எழுதினார் என்பதில் ஆய்வாளர்களிடையே கருத்துவேறுபாடு இல்லை எனலாம். ஆனால் இது பவுல் தொடர்ச்சியாக எழுதிய ஒரே மடலா அல் லது அவர் எழுதிய பல்வேறு மடல்களி லிருந்து எடுக்கப்பட்ட பகுதிகளைக்கொண்ட தொகுப்பு நூலா என்பது பற்றிப் பலத்த கருத்து வேறுபாடுகள் உண்டு. இப்பிரச்சி னைக்குப் பதிலும், இந்நூலுக்கு விளக்கம் அளிப்பதும், இந்நூலை எழுதத்தூண்டிய வர லாற்றுச் சூழ்நிலையை நாம் புரிந்து கொள் ளும் விதத்தைப் பொருத்ததாகும். இச்சூழ் நிலையைப் புரிந்துகொள்ள முழுவதும் இந் நூலையே நம்ப வேண்டியிருக்கிறது. இச்சூழ் நிலையைத் திரும்ப அமைக்க நூலில் காணப் படும் பல குறிப்புகளின் தெளிவின்மை உதவி யாக அமையவில்லை. ஆகவே தோராய மாகவே உண்மையில் நடந்தது என்ன என்று கூறமுடியும். அப்படிக் கூறும்போது, 1. இடைப்பட்ட மடல் 2. இடைக்காலத்தில் பவுல் கொரிந்துக்குச் செல்லல் 3. பெரும் வருத்தம் தந்த நிகழ்ச்சி 4. தீத்து கொரிந்துக்குத் தூது செல்லல் ஆகிய நான்கு காரியங்களைக் கவனத்தில் கொண்டு தீர்மானம் செய்ய வேண்டும்.

1. *இடைப்பட்ட மடல்:* கொரிந்தியருக்கு ஒரு மடல் எழுதியதாகப் பவுல் *2:3.4.9; 7:8.12*-இல் குறிப்பிடுகிறார். 19-ஆம் நூற் றாண்டுவரை, இம்மடல் கொரிந்தியருக்குப் பவுல் எழுதிய முதல் திருமுகம்தான் என்ற கருத்து எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட் டது. அதற்குப்பின் பவுலின் முதலாவது இரண்டாவது திருமுகங்களுக்கு இடையில் பவுல் மற்றொரு மடல் எழுதியிருக்கவேண் டும் என்று அறிஞர்கள் பெரும்பாலானோர் கருதத்தொடங்கினர். இக்கருத்திற்கு அவர்க ளது காரணங்கள் பவுலின் கூற்றுக்களே. ''மிகுந்த வேதனையோடும், உடைந்த உள் ளத்தோடும், கலங்கிய கண்களோடும் இதை எழுதினேன்'' *(2:4)* என்றும், ''நீங்கள் எல் லாவற்றிலும் எனக்குக் கீழ்ப்படிபவர்களா என்று சோதித்து அறியவே எழுதினேன்'' *(2:4)* என்றும், ''நான் எழுதிய கடிதத்தால் உங்களுக்குத் துயர் தந்திருந்தாலும் ...'' *(7:8* தொ) என்றும் இக்கடிதத்தைப் பவுல் விவரிக் கிறார். இத்தகைய கடிதம் கொரிந்தியருக்கு எழுதிய முதலாம் திருமுகத்திலிருந்து மிக வும் வேறுபட்டதாகும். ஏனெனில் கொரிந்தி யர் முதலாவது திருமுகம், எழுச்சியும் சீற்ற மும், சில சமயம் உணர்ச்சிவசப்பட்டதாயி னும், வியத்தகுமுறையில் மேன்மையும் ஆறுதலும் மிக்கதாகும். அதில் பவுல் தன்னை இழந்துவிடவில்லை. சூழ் நிலையை நன்குக் கட்டுப்படுத்திய உள்ளத் துடன் எழுதுகிறார்.

மேலும் கப்பல் பயணத்திட்டம் மாற்றப் பட்டபின் கொரிந்தியர் இரண்டாம் திரு முகத்தை எழுதுகிறார் *(1:23; 2:1-3)*. இதுபற்றிக் கொரிந்தியர் முதலாம் திருமுகத்தில் எவ் விதக் குறிப்புமில்லை. 2-ஆம் கொரிந்தியர் கொரிந்திய சபையில் செய்யப்பட்ட ஒரு ''குற்றத்தைப்'' பற்றி எழுதப்பட்டது. இக் குற்றம் முதல் கொரிந்தியரில் குறிக்கப்படும் தகாத பாலின உறவாக இருக்கமுடியாது. இதுவே முதலாம் கொரிந்தியர் எழுதப்படு வதற்குப் போதிய காரணமாக இல்லை. ஆகவே முதலாவது இரண்டாவது திருமுகங் களுக்கு இடையில் கடுமையானதொரு கடி தம் எழுதப்பட்டதாக ஏற்றுக்கொள்ளலாம். ஆகவே பவுல் நான்கு கடிதங்கள் எழுதிய தாக ஏற்றுக்கொள்ளலாம். அவை திரு முறைப்பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள இரண்டு திருமுகங்களும், *1 கொரி 5:4*-இல் குறிக்கப்படும் கடிதம், இந்தக் கடுமையான கடிதம் ஆகியவையுமாகும். இக்கடினமான கடிதம் தொலைந்துவிட்டதா அல்லது இதன் பகுதியே *2 கொரி 10-13*-இல் அடங்கியுள் ளதா என்ற பிரச்சினை நூலில் ஒற்றுமை என்ற தலைப்பின் கீழ் அலசப்படும்.

2. இடைப்பட்ட காலத்தில் பவுல் கொரிந் துக்குச் செல்லல்: *12:14; 13:1*-இல் வரும் குறிப்புகள் பவுல் ஏற்கனவே கொரிந்துக்கு இருமுறை சென்றிருந்தார் என்று சுட்டுகின் றன. அதாவது கொரிந்தில் திருச்சபையை நிறுவியபோது அங்குச் சென்றதையும், கொரிந்தியர் இரண்டாம் திருமுகத்திற்குப்

பின் அங்குச் சென்றதையும் தவிர்த்து இடைப்பட்ட காலத்தில் கொரிந்துக்குச் சென்றுள்ளார். முற்காலத்தில் இது ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இப்போது அறிஞர் கள் பெரும்பாலானோர் இதை ஏற்றுக்கொள் கின்றனர். இந்த வருகையின் போது கொரிந்து கிறிஸ்தவர்கள் பவுலைத் துக்க முறச் செய்தனர்; இழிவுபடுத்தினர் (காண்க *12:21; 2:1; 1:23*). இது முதல் வருகையாக இருக்க முடியாது. ஏனெனில் அது பலவீனத் தில் தொடங்கினாலும் *(1 கொரி 2:3)* மறை பரப்பு வெற்றியாகும். பவுல் கொரிந்தியர் இரண்டாம் திருமுகத்தை எழுதுவதற்குமுன் இரண்டாம் முறை கொரிந்துக்குச் சென் றிருக்க வேண்டும். இதை மூன்றாவது மறை பரப்புப் பயணத்தில்தான் செய்திருக்கமுடியும். அதுவும் அநேகமாய் எபேசிலிருந்து செய் திருக்க வேண்டும். ஆகையால் முதலாம் கொரிந்தியருக்குப்பின் இது நடந்திருக்க வேண்டும். ஏனெனில் அவரே எந்தத் தவ றையும் நேரடியாகக் கண்டதாக எக்குறிப்பும் இல்லை எனலாம். ஏன் அங்குச் சென்றார்? எங்கு அல்லது என்ன நடந்தது என்பதுபற்றி யூகமாகத்தான் கூறமுடியும். இதற்கு *10:10*-இல் வரும் குறிப்பும், இரண்டாம் கொரிந்தியரில் தமது எதிரிகள் பற்றி அவர் அளிக்கும் விவரங்களும், ''பெரிய அநீதியும்'' உதவுவனவாகும்.

*3. பெரிய அநீதி:* கிறிஸ்தவ சமூகத்தில் ஒருவர் மற்றொருவருக்கு எதிராக அநீதி செய்துள்ளார் *(7:12)*. இவர் ஒரு தனிநபராவர் என்பது தெளிவு *(2:5-7.9)*. ஆனால் சமூகத் தின் ஒரு பகுதியினர் இதில் குற்றமற்றவர் கள் அல்லர் *(2:9)*. குற்றம் கடுமையானது *(2:1-4)*. அது பவுலுக்கு எதிரானதாகும் *(2:5.10)*. அதுவும் அவருக்குக் கீழ்ப்படியாமை யாகவும் கருதப்பட்டது. பாரம்பரிய மாக இக்குற்றம் *1 கொரி 5:1*-இல் குறிக்கப் படும் தகாத பாலின உறவாகக் கருதப்பட்டது. இதைத் தேர்துல்லியன் ஏற்றுக்கொள்ள வில்லை. இப்போது இக்குற்றமாக இருக்க முடியாது என்று பொதுவாக ஏற்றுக்கொள் ளப்படும். முதலில் இரண்டாம் கொரிந்திய ரில் குறிக்கப்படும் குற்றம் பவுலுக்கு எதிரான தாகும் *(2:5-10)*. இதற்கு மாறாகத் தகாத பாலின உறவு இறைவனுக்கும், திருச்சபை யின் நற்பெயருக்கும் எதிரானதாகும். புற வினத்தார்கூட இதைக் கண்டனம் செய்தனர் *(1 கொரி 5:1 தொ)*. இரண்டாவது பவுல் செயல் முறை வேறுபடுகிறது. தகாத பாலின உற வைப் பொருத்தமட்டும், தனது அப்போஸ் தல அதிகாரத்தைக் கொண்டு பவுலே புறம் பாக்கும் தீர்ப்பை வெளியிடுகிறார். சமூகம் அதை அறிவிப்பதைவிட வேறு சுதந்தரம் கொண்டிருக்கவில்லை. ஆனால் இந்தப் ''பெரிய அநீதியைப்'' பற்றிச் சமூகம் தீர்ப்பிட் டது. பெரும்பான்மையினர் தீர்மானித்துத் தண்டனையிட்டனர் *(2:6)*. அது போதுமானது எனப் பவுல் கருதுகிறார். சமூகம் மற்றொரு அதிகாரபூர்வமான தீர்மானத்தில் மன்னித்து விடும்படி *(2:8:10)* பவுல் ஆலோசனை கூறு கிறார். தகாத பாலின உறவுகொண்ட மனித னுக்கு எதிரான புறம்பாக்கும் தீர்ப்பைப் பவுல் மன்னிப்பது விநோதமானதாகும். *2:6* சுட்டுவதுபோல், சமூகத்தில் ஒரு பகுதியினர் இம்மனிதனுக்கு ஆதரவு அளித்தனர் என்ப தும் விநோதமானதாகும். ஆகவே இரண் டாம் கொரிந்தியரில் குறிக்கப்படும் குற்றம் வேறொன்றாக இருக்க வேண்டும் என்பது உறுதி.

இக்குற்றம் எப்போது நடந்தது என்பதுபற் றிக் கருத்து வேறுபாடுகள் உண்டு. இது பவுல் இடைப்பட்ட காலத்தில் கொரிந்துக் குச் சென்றிருந்தபோது, நேருக்கு நேர் அவமானப்படுத்தப்பட்டிருக்கலாம் என்று பலர் கருதுகின்றனர். இதைச் சமூகம் எப்படி அனுமதித்தது என்பதைப் புரிந்து கொள்ளு வது கடினமாக உள்ளது. மேலும் தனது அப்போஸ்தலிக்க அதிகாரத்திற்கு எதிரான இழிவிலிருந்து தப்பி ஓடுவது பவுலின் தன் மைக்கு மாறானதாகும். இடைப்பட்ட காலத்தில் அவர் கொரிந்துக்குச் சென்று திரும்பியபின் அவர் இல்லாதபோது இக்குற் றம் நடந்திருக்கவேண்டும். இதை அவரது பிரதிநிதிகள் அவருக்குத் தெரிவித்திருக்க வேண்டும். அதைச் சமூகம் அடக்கவில்லை என்றும் பவுல் அறிந்திருக்கவேண்டும். இது அவரை மறைமுகமாகப் பாதித்திருக்க

வேண்டும். இதைக் கேட்டறிந்தபோது, பவுல் ''கடுமையான மடலை'' எழுதியிருக்க வேண்டும்.

***4. தீத்துவின் தூதுப் பயணங்கள்:*** எத்தனை தடவை தீத்து தூது சென்றார் என்பது நூலின் ஒற்றுமை பற்றிய கருதுகோள்களை அடிப்படையாகக் கொண்டதாகும். அவை குறிக்கப்படும் வரிசையில் கவனிப்போம்.

***அ. முதல் தூது:*** *(2:13; 7:6 தொ; 7:13-15):* மென்மையான பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதில் தீத்து ஆற்றல் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. இந்தக் 'கடுமையான மடலுடனோ' (7:6 தொ) அது அனுப்பப் பட்ட காலத்திலோ தீத்துவைப் பவுல் கொரிந்துக்கு அனுப்பியிருக்கவேண்டும். கொரிந்தை அடைந்தவுடன், தீத்து பவுலுக் குச் சார்பாகச் செயல்படத் தொடங்கினார். சூழ்நிலையைக் கவனமாக ஆராய்ந்தார் *(7:13; 8:6.23).* அவரது போக்கு சமூகத்தில் சாதகமான எண்ணத்தை உண்டாக்கியது. துன்பந்தரும் பிரச்சினையைத் தீத்து வெற்றி கரமாக முடித்து வைத்தார். 7:6 தொ; 2:5-11 ஆகிய பகுதிகள், பவுலின் கடிதமும் தீத்து வின் செயல்களும் உண்டாக்கிய விளைவு களைக் கூறுகின்றன. தீத்து மாசிதோனியா வில் தங்கியிருந்த பவுலிடம் திரும்பிவந்து மகிழ்ச்சிமிக்க விளைவுகளை எடுத்துக் கூறினார் *(2:13; 7:6 தொ).*

***ஆ. இரண்டாவது தூது:*** காணிக்கை எடுத் தல்:- மற்றும் இரு சகோதரர்களோடு தீத்து மீண்டும் ஒருமுறை கொரிந்துக்கு அனுப்பப் படுகிறார் *(8:17.18-23).* இந்த முறை எருச லேம் திருச்சபைக்காகக் காணிக்கை எடுத் தலை ஒருங்கமைத்து அதைச் செய்து முடிக்க அனுப்பப்படுகிறார். பவுலின் சிந்தனையி லும் செயல் முறைத்திட்டத்திலும் இந்தக் காணிக்கை மிக முக்கியமானதாகும். அதைப் பற்றி நான்குமுறை குறிப்பிடுகிறார் (கலா 2:10; 1 கொரி 16:1-4; 2 கொரி 8:9; உரோ 15:25-27; காண் அ.ப. 24:17). எருசலேம் திருச்சபை மிகக்கொடிய பொருளாதார இடுக்கண் நிலையில் இருந்தது. அதன் உத விக்கு வருவதின் தேவையைப் பவுலைப் போன்ற நாட்டுப்பற்று உடையவர்கள் ஆழ்ந்து உணர்ந்தனர். மேலும் இந்த உதவி திருச்சபையின் ''தூண்களானவர்களால்'' *(கலா 2:9-10)* பவுலிடம் கோரப்பட்டது. இந்த உதவியை வலியுறுத்த அவருக்கு இன் னுமொரு காரணம் இருந்தது. பல யூதக் கிறிஸ்தவர்கள், யாவரையும் உள்ளடக்கும் திருச்சபையின் உலகளாவிய தன்மைக்கும், புறவினக் கிறிஸ்தவர்கள் மோசேயின் சட்டத் திற்கு உட்பட்டவர்கள் அல்லர் என்று பவுல் போதித்து வந்ததற்கும் எதிரானவர்கள். புற வினக் கிறிஸ்தவர்கள் யூதக்கிறிஸ்தவர்க ளோடு கொண்டிருந்த ஒன்றிப்புக்கும், அவர் கள் யூத சமூகத்தின்பால் கொண்டிருந்த மரி யாதைக்கும் பகிரங்கச் சாட்சி அளிக்க வேண்டி யிருந்தது. அது வறுமையில் வாடிய எருச லேம் திருச்சபைக்குப் புதிய கிறிஸ்தவர்கள் தாராளமாய் அளிக்கும் காணிக்கையில் காட் டப்படவேண்டும். எல்லாச் சச்சரவுகளையும் இந்தப் பொதுத் திருச்சபைச் செயல் முடித்து வைக்க ஏதுவாகும் *(9:12-14).*

இரண்டாவது கொரிந்தியரை எழுதிய போது இத்திட்டத்தைச் செயல்படுத்துவது அவசியமாயிற்று. இது மூன்றாம் மறை பரப்புப் பயணத்தின் தொடக்கத்தில் ஏற்கெ னவே கலாத்தியாவில் தொடங்கப்பட்டது. இதில் பங்குபெறக் கொரிந்து மக்கள் தூண் டப்பட்டனர். (1 கொரி 16:1 தொ; காண் கலா 2:10). மாசிதோனியாவில் வெற்றிகர மாக நடந்துகொண்டிருந்தது. ஆனால் கொரிந்து திருச்சபையில் தேவைக்கு அதிக மாகக் காலம் தாழ்த்தப்பட்டது *(8:10-11; 9:2-5).* மத்திய தரைக்கடலின் மேற்குப் பகு திகளுக்குப் பவுல் செல்லவேண்டிய நேரம் நெருங்கிக்கொண்டிருந்தது (உரோ 15:17; 19:23; காண் 2 கொரி 10:15-16). ஆனால் அதற்கு முன்னால் செல்வச் செழிப்புமிக்க தும், மத்திய தரைக்கடலின் கிழக்குப் பகுதி யில் முக்கிய நகரங்களில் ஒன்றானதுமான கொரிந்து திருச்சபை கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப்படவேண்டும். எருசலே மோடு ஒற்றுமைப்படுத்தப்படவேண்டும். அங்கு இக்காணிக்கை எடுத்தலை வெற்றிகர

மாக நடத்தி, எல்லாத் திருச்சபைகளின் மிகு தியான காணிக்கையைக் கொரிந்திலிருந்து கொண்டுவந்தால், அந்நகர் யூதக் கிறிஸ்தவர் களுக்குக்கூட அன்பு மற்றும் ஒற்றுமையின் மையமாகத் திகழும். அங்கு இக்காணிக்கை எடுத்தல் தோல்வியுற்றால் பவுலின் செயல் திட்டத்தைச் செயல்படுத்துவதைத் தாமதப் படுத்துவதோடு அதன் தாக்கத்தையும் குறைக்கும்.

ஆகவே இக்காணிக்கை எடுத்தலைச் செய்து முடிக்க ''மற்றும் இரு சகோதரர்க ளுடன் தீத்துவைப் பவுல் கொரிந்துக்கு அனுப்பி வைத்தார் *(8:16-24)*. இரண்டாம் கொரிந்தி யரைப் பவுல் எழுதிக்கொண்டிருந்தபோது, தீத்து ஏற்கெனவே கொரிந்துக்குச் சென்று விட்டாரா? பவுலுடனே தீத்து இருந்தார் என்பது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும் கருத்தாகும். இது உண்மையென்றால் *12:17-18*ஐ, முன்னிட்டு அதி *10-13* என்ற பகுதி இக்கடிதத்தைச் சேர்ந்ததாக இருக்க முடியாது. இக்கடிதம் எழுதப்படும்போது, தீத்து ஏற்கெனவே கொரிந்துக்குச் சென்று விட்டார் என்று கொள்வது மேலானதாகும். ஏனெனில் வாழ்த்துக்கூறுதலில் தீத்து குறிக் கப்படவில்லை. மேலும் இங்கு வரும் வினைச்சொல் உண்மையிலேயே கடந்த காலத்தைக் குறிக்கிறது என்பதுமாகும்.

**இ. தீத்துவும் சகோதரரும் (8:22):** இவர்கள் மீண்டும் *12:17-18*-இல் குறிக்கப்படுகின்ற னர். இது தீத்து கொரிந்துக்குச் சென்ற முந் தைய முதல் தூதாகும் என்று சிலர் கருது கின்றனர். இதன்படி நாம் முன்குறித்த முத லாம், இரண்டாம் தூதுகள் முறையே இரண்டாம் மூன்றாம் தூதுகளாகும். இக் கருத்து அதி *10-13* என்ற பகுதிதான் ''கடுமை யான கடிதம்'' என்ற கருத்துகளோடு ஒத்துப் போகிறது. இப்பகுதி அதி 1-9 என்ற பகுதிக் குப்பின் எழுதியதாகும். ஆனால் *8:16-24*-இல் நினைவுபடுத்தப்படும் சகோதர ரைப் பற்றிய குறிப்பை எப்படி விளக்கு வது? மேலும் ஒழுங்குமுறையை நிறுவும் தூதுக்குப்பின் தீத்துவுக்குக் கொரிந்தியர்கள் அறிமுகமாகவில்லை என்ற எண்ணத்தை *7:13-15* கொடுக்கிறது. இந்த வசனங்கள், காணிக்கைத் தூதிலிருந்து பவுலிடம் தீத்து திரும்பியபின் எழுதப்பட்டிருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். இக்கருத்து அதி *10-13* என்ற பகுதி பவுல் கொரிந்தியருக்கு எழுதிய ஐந்தாவது கடிதம் என்ற அவர்களது கருது கோளுக்கு ஆதரவாக உள்ளது. தீத்து இன் னும் கொரிந்திலேயே இருக்கிறார் என்பது மேலானதாகும் *(12:17)*. காணிக்கை எடுப் பது எதிர்ப்பைக் கிளப்பியது என்று தீத்து விடமிருந்து கேள்விப்பட்டு அதை அடுத்த வரிகளில் விலக்குகிறார்.

கி.பி. *57-58*-இன் குளிர்காலத்தில் கொரிந் திலிருந்து உரோமையர் திருமுகத்தை எழுதிய போது, காணிக்கை எடுப்பது வெற்றிகர மாக நடந்துவிட்டது என்று அறிகிறோம். *15:25-28.30-32*; அ.ப. *24:17* தொ என்ற பகுதி கள் அதற்குப்பின் வந்தவற்றைக் கூறுகின் றன.

**IV. நூலில் ஒற்றுமை:** மூலத்தில் இரண் டாம் கொரிந்தியர் ஒரே கடிதம் அன்று என்று அறிஞர்கள் பலர் கூறுவர். பலவிதங்களில் இந்நூலின் ஒற்றுமை பற்றிக் கேள்விகள் எழுப்பப்படுகின்றன. இத்தகைய கருதுகோ ளுக்கு வாசகப் பாரம்பரியத்திலோ, திருச் சபைத் தந்தையரின் நூல்களிலோ எவ்வித ஆதரவும் இல்லை என்பதை முதலில் நாம் கூறவேண்டும். புறச்சான்றுகள் நூலின் ஒற்று மைக்கும் முழுமைக்கும் முழுவதும் ஆதரவு அளிக்கின்றன. இரண்டாம் கொரிந்தியர் ஒரு தொகுப்பு என்பது முழுவதும் நூலின் அகச் சான்றுகளையே அடிப்படையாகக் கொண்ட தாகும். இச்சான்றுகள் மூன்று பகுதிகளைப் பற்றியவையாகும்.

*அ. 6:14-7:1* - இப்பகுதி *6:12-13*-க்கும் *7:2*-க்கும் இடையில் சிந்தனைப் போக்கைத் தடைசெய்கிறது. இப்பகுதி இல்லையென் றால் சிந்தனை சீராகச் செல்லும். இப்பகுதி புறமதத்தினரைப்பற்றியதாகும். இப்பிரச்சி னையைப்பற்றி முன்போ பின்போ நூலில் கேள்வி எழவில்லை. மேலும் பவுலின் பாணியை அவ்வளவு கொண்டிருக்க

வில்லை. இப்பகுதி புறவினத்தாரோடு கொரிந்தியர் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது என்று அறிவுரை கூறுகிறது. இது இப்பண்பு அவர் *1 கொரி 5:4* தொ; *10:27* தொ ஆகிய பகுதிகளில் கூறிய அறிவுரையை மறுக்கிறது. இப்பகுதி கும்ரான் கலைச்சொற்களைக் குறிப்பிடத்தக்க அளவு ஒத்திருப்பதாகத் தெரிகிறது. ஆகவே இப்பகுதி எஸ்ஸேனியர்களைப் பற்றிய கருத்தின் தழுவலாகும் என்று சிலர் கருதுவர். வேறுசிலர் இது *1 கொரி 5:9*தொ-இல் குறிக்கப்படும் திருமுறை சேர்ந்த கடிதங்களுக்கு முந்தியதாகும் என்று கருதுவர். இப்பகுதி தவறான கருத்தைக் கொடுக்கக்கூடியதே என்றும் நாம் எதிர்பார்க்கலாம். வேறு சிலர், இப்பகுதி இடம் மாறியிருக்கிறது; இது *5:21*-க்குப் பிறகோ *6:2*-க்குப் பிறகோ சேர்க்கப்படவேண்டும் என்பர்.

இந்த யூகங்களுக்கு எதிராக வாசகப் பாரம்பரியம் ஒருமுகமானதாகச் சான்று கூறுகிறது. எல்லா வாசகங்களிலும் இப்பகுதி இதே இடத்தில்தான் காணப்படுகிறது. இதைவிட, திருமுறைக்கடிதங்களுக்கு முந்திய கடிதத்தையோ எஸ்ஸேனியர் பற்றிய பகுதியையோ அது ஒத்துப்போகாத இடத்தில் பதிப்பாசிரியர் புகுத்தியுள்ளார் என்பது விநோதமாக உள்ளது. மேலும் சிந்தனைப் போக்கு தடைப்படுவது அவ்வளவு வலுக்கட்டாயமானதாகத் தெரியவில்லை. ஏனெனில் *1.5:14-21*-இல் வரும் போதகத்தின் ஒழுக்க விளைவுகளை இப்பகுதி வெளிக்கொணர்வதாகக் கருதலாம். கொரிந்தியர்கள் தன்னோடு திறந்த மனதினராக இருக்க வேண்டும் என்று பவுல் விரும்புகிறார் *(6:12-13; 7:2)*. இருவருக்குமிடையேயுள்ள தடை அவர்கள் புற மதத்தினரோடு ஒத்துப் போதலேயாம் *(6:14-7:1)*. இப்பகுதியின் நடை மொத்தத்தில் பவுலினுடையதே. அசாதாரணத் தலைப்பும் உணர்ச்சிப்போக்கும் அசாதாரணச் சொற்களுக்கு இடம் தருகின்றன எனலாம். இப்பகுதிக்கும் *1 கொரி 5:9* தொ-க்கும் முரண்பாடு இல்லை எனலாம். பவுல் புறமதத்தினரோடு கொண்டுள்ள சமூக உறவுகளைப் பற்றியன்று, சமயக்காரியங்களில் அவர்களோடு ஒத்துப்போதலைப் பற்றியே பேசுகிறார். இறுதியாகக் கும்ரான் சிந்தனைக்கு இணையான பகுதிகள் இருப்பதை, பவுலின்மேல் எஸ்ஸேனியர்களின் தாக்கம் இருப்பதை நிரூபிக்க எடுத்துக்கூறுவர் அறிஞர்கள் சிலர். சிந்தனைப் போக்கில் தடையிருப்பதாகத் தோன்றினால், எல்லாம் கூறிய பின் இப்பகுதி உரிய இடத்திலேயே இருப்பதாகத் தோன்றுகிறது.

**ஆ. அதி 8-9-காணிக்கை எடுத்தல்:** அதி 9, அதி 8-இன் இரட்டிப்பு வாசகமாகும் என்றும், அது அக்காயா திருச்சபைக்கு எழுதப்பட்டது என்றும், அது பவுலின் தொகுப்பு அமைக்கப்பட்டபோது இயற்கையாகவே இங்கு இடம் பெற்றது என்றும் சிலர் கருதுவர். இதற்கு இவர்கள் காட்டும் காரணங்கள்: *1. 8:7-15; 9:6-14* ஆகிய பகுதிகள் ஒரே கருத்தை மீளவும் மீளவும் கூறுகின்றன. இவற்றில் தாராள மனப்பான்மை கொள்ளத் தூண்டுதல் இருமுறை கூறப்படுகிறது. ஆனால் வெவ்வேறு விதமாய் விவரிக்கப்படுகிறது. *2.* காணிக்கை எடுப்பதுபற்றி ஏற்கெனவே கூறப்படவில்லை என்பதாக *9:1*-இல் பவுல் பேசுகிறார். *3.* கொரிந்தியரைத் தாராளத் தன்மைக்குத் தூண்ட, *8:1-5*-இல் மாசிதோனியரின் மாதிரியை எடுத்துக்கூறுகிறார். ஆனால் *9:1-6*-இல் மாசிதோனியர் அக்காயா மக்களின் மாதிரியால் தூண்டப்பட்டனர் என்று கூறுகின்றார். அதே கடிதத்தில் அதே திருச்சபைக்கு அதே தலைப்பைப் பற்றி இத்தகைமையான முரண்பட்ட பகுதியைப் பவுல் எப்படி எழுதமுடியும் என்பதை விளக்க வெறும் குறுக்கீடு மட்டும் போதாது என்று கூறுவர்.

ஆயினும் இந்த முரண்பாடு வெறும் தோற்றமேயொழிய உண்மையானதன்று. ஏனெனில் *1. 9:6*-இலும் *8:7* தொ; *9:6* தொ ஆகிய பகுதிகள் அதே தூண்டு காரணங்களைக் கொடுக்கவில்லை. உண்மையில் பின்னது முன்னதை நிறைவு செய்கிறது எனலாம். *2.* இந்த அதிகாரங்கள் மோசமாகப் பிரிக்கப்பட்டுள்ளன. *9:1-5* புதிய தலைப்புக்கு முன்னுரையன்று, *8:16-24*-இல் கூறப்

பட்டவையின் விளக்கமாகும். *3.9:2*-இல் அக்காயர்கள் தாராளமாக இருந்தனர் என்று கூறப்படவில்லை. அவர்கள் அக்காணிக்கை எடுக்க ஏற்பாடு செய்தனர் என்று மட்டுமே கூறப்பட்டுள்ளது. இந்த ஏற்பாடு மாசிதோனியர்களைச் செயலாற்றத் தூண்டியது. இதற்கு மாறாக, *8:1* தொ-இல் மாசிதோனியர்களின் தாராளத்தன்மை, அக்காயர்கள் (கொரிந்தியரும்) வெறுமனே ஆயத்தம் மட்டும் செய்யாமல், செயல்பட வேண்டும் என்று தூண்டுவதற்கும் பயன்பட்டுள்ளது. உண்மையில் தலைப்புகள் ஒன்றையொன்று நிறைவு செய்கின்றன. எது எப்படியிருப்பினும் அக்காயாவில் சிதறிக்கிடந்த சிறிய திருச்சபைகளைக் கொரிந்தியத் தாய்த் திருச்சபையிலிருந்து பவுல் பிரிக்கவில்லை. இறுதியாக இப்பகுதியில் குறிப்பிடத்தக்க அளவில் காணப்படும் ஒற்றுமை இதைப் பாகுபடுத்துவது நேர்மையற்றது என்று காட்டவல்லது.

இ. *அதி 10 –13:* திருமுகத்தின் மற்றப் பகுதிகளோடு இப்பகுதி கொண்டிருக்கும் தொடர்பு பற்றிய பிரச்சினை மிகக்கடுமையானதாகும். பொது நம்பிக்கை மற்றும் பாசத்திலிருந்து கடுமைக்குத் தொனி மாற்றம் அசாதாரணமானதாகும். உளவியல் நோக்கிலும் இது அசாதாரணமானதாகும். ஏனெனில், குறைகூறுவதும் அச்சுறுத்தல்களும் முதலில் கூறப்பட்டுப் பின்பு சமாதானச் சொற்கள் வருவதை நாம் சாதாரணமாய் எதிர்பார்க்கலாம். ஆனால் வாசகம் உள்ள நிலையில், முதல் பகுதியின் நல்ல விளைவுகளை, இப்பகுதியின் தொனி அழித்துவிடும் என்று பலர் கூறுவர். பண உதவி கேட்டபின் உடனடியாக இப்பகுதி வருவது மிகவும் விநோதமானதாகும். அறிவு சார்ந்த பல முரண்பாடுகள் எடுத்துக்கூறப்படுவதோடு அவற்றிற்கு எதிரானமுறை அறிவு சார்ந்ததாக இருக்கும் என்றும் சுட்டிக்காட்டப்படுகிறது. எடுத்துக்காட்டாக அதி 10-13-இல் வரும் பல குறிப்புகள் *(10:6; 12:16-17; 13:2-10)* அதி 1-9-இல் *(2:9; 4:2; 7:2; 1:23; 2:3)* நட்பு முறையில் கூறப்பட்டுள்ளன. பொதுவாகப் பவுலின் பெரும் மகிழ்ச்சியும் போற்றுரையும் *(7:4.14-16; 8:7)* இழிவு நிலை *(12:20-21)*, கொரிந்தியர்களின் சுதந்தரத்தையும் பணத்தையும் எடுத்துக் கொள்ளும் இடைப்புகுந்தவர்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு *(11:3-4.20-21)* ஆகியவை பற்றிய குற்றச்சாட்டிற்கு இடம்தருகின்றன. இவற்றின் விளைவாக அறிஞர்கள் பலர் அதி 10-13 என்ற பகுதியை அதி 1-9-என்ற பகுதியிலிருந்து பிரித்தெடுக்கின்றனர்.

இப்பகுதி பற்றிப் (அதி 10-13) பல கருதுகோள்கள் உண்டு. அவற்றில் சிலவற்றை மட்டும் பார்ப்போம். **முதலாவது கருதுகோள்:** இதன்படி இப்பகுதிதான் ''கடுமையான இடைக்காலக் கடிதம்''. இக்கருத்தைப் பலர் பின்பற்றுவர். இப்பகுதி அதி 1-9-என்ற பகுதிக்கு முன் எழுதப்பட்டது. இது இடுக்கண் உற்ற உச்சநிலையில் பவுலின் உள்ளக் கொதிப்பின் வெளிப்பாடாகும். அதி 1-4 என்ற பகுதி சமாதான ஒப்புரவு முயற்சியின் இறுதிச் சொற்களாகும். இக்கருதுகோளுக்கு ஆதரவாகப் பல காரியங்களைக் கூறலாம். ஆனால் இதை ஏற்பதாக இல்லை. ஏனெனில் 1. ''கடுமையான கடிதத்தின் முக்கிய தலைப்பாகக் கருதப்படும் ''கொடிய குற்றம்'' பற்றிய எக்குறிப்பும் இப்பகுதியில் இல்லை. பிற்காலப் பதிப்பாசிரியர் இக்குற்றம் பற்றிய குறிப்பை விட்டுவிட்டார் என்பது ''தெளிவில்லாததைக் கொண்டு தெளிவில்லாததை'' விளக்குவதாகும். 2. இப்பகுதியில் சீற்றமும் கோபமும்தான் முதன்மையானவை; மனவேதனையும் துக்கமும் அல்ல. 3. இக்கருதுகோள் அறிவு சார்ந்த முரண்பாடுகளை உண்மையில் பொருந்திப் போகச் செய்யவில்லை. எடுத்துக்காட்டாக *18:2-10* விரைவில் பவுல் செய்யப்போகும் பயணத்தைப் பற்றிப் பேசுகிறது. இதற்கு மாறாக *1:23; 2:3* ஆகியவை இப்பயணத்தைத் தவிர்ப்பதற்காக எழுதப்பட்ட கடிதத்தைப் பற்றிப் பேசுகின்றன. மற்றக் காரணங்கள் பின்பு கொடுக்கப்படும்.

**இரண்டாவது கருதுகோள்:** அதி 1-9 அடங்கிய ஒரு கடிதத்தை எழுதி அனுப்பியபின் எழுதப்பட்ட மற்றொரு கடிதமாகும் அதி 10-13 என்ற பகுதி. அதாவது இது பவுலின்

ஐந்தாவது கடிதமாகும். இதன்படி அதி. 1-9 என்ற பகுதியில் கூறப்படும் சமூகத்தில் நிலவிய இசைவிணக்கம் சிறிது காலத்திற்கே நீடித்தது. தீத்து எதிர்கொண்ட கடினங்கள், எதிர்ப்பாளர்கள் தங்கள் தாக்குதலை மீண்டும் தொடங்குதல் ஆகிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்திருந்தன. கொரிந்தியர்களை இறுதியாகப் பணியவைக்க இந்தப் புயல்தன்மையுடைய கடிதத்தைப் பவுல் எழுதினார். இக்கருதுகோளுக்கு ஆதரவாகப் பல கூறுகள் உள்ளன. குறிப்பாகக், கடிதத்தில் கூறப்படும் நிகழ்ச்சிகளின் வளர்ச்சி, *12:17-18*-இல் வரும் தீத்து மற்றும் சகோதரர்கள் பற்றிய குறிப்புகள் ஆகியவையாகும். கொரிந்தியர்கள் திருமுகத்தின் முதல் பகுதிக்கும் இரண்டாம் பகுதிக்கும் இடைப்பட்ட காலத்தில் தங்கள் ஆர்வத்திலிருந்து இன்னும் அதிகமாய் வீழ்ச்சியுற்றனர் என்ற கருத்தைப் புகுத்தி, இக்கருதுகோள் அதன் நோக்கில் பார்க்கிறது. அப்படியிருந்தால் இந்நிலை அசாதாரண வேகத்தில் வளர்ச்சியடைந்திருக்க வேண்டும். இவ்வாறு கருதப்படும் கடிதத்தில் குறிக்கப்படும் கடற்பயணமும் *(12:19-13:10)*, வாழ்த்தும் ஆசீரும் கூறும் இறுதிப் பகுதியும் முதற்பகுதியோடோ (அதி 1-4) இரண்டாம் பகுதியோடோ (அதி 10-13) ஒத்துப் போகலாம். இது நூல் இருபகுதியும் அடங்கிய ஒரே திருமுகமாகும் என்று சுட்டுகிறது. அப்படியில்லையென்றால் நான்காம் கடிதத்தின் முடிவுரையும் ஐந்தாம் கடிதத்தின் முன்னுரையும் என்னவாயின என்ற கேள்வி எழும்.

***மூன்றாம் கருதுகோள்:*** ஒரு சிலர் இத்திருமுகம் ஐந்து கடிதத்துணுக்குகளைக் கொண்ட தொகுப்பாகும். அவை *1) 2:14-7:4 (6:14-7:1* நீக்கப்பட்டது*) 2)* அதி *10-13:* துக்ககரமான கடிதம் *3) 1:1-2:13; 7:5-16;* ஒப்புரவுக் கடிதம்; *4) 8:1-24:* எருசலேம் திருச்சபைக்காகக் காணிக்கை எடுத்தல் பற்றியது. *5) 9:1-15:* அதே காணிக்கையைப்பற்றி அக்காயத் திருச்சபைக்கு எழுதப்பட்டது. இக்கருதுகோள், இரண்டாம் கொரிந்தியரின் இன்றைய வாசக நிலையில் கருத்துப் பிளவுகள் உள்ளன என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டது. முதல் பகுதியில் காணப்படும் கருத்துப் பிளவுகள் நூலைப் பிரிக்கும் அளவு அவ்வளவு ஆழ்ந்தவையாகத் தெரியவில்லை. அதி *1-9*-என்ற முதல் பகுதிக்கும், அதி *10-13* என்ற இரண்டாம் பகுதிக்கும் காணப்படுவதாகக் கருதப்படும் கருத்துப் பிளவு அவ்வளவு முழுமையானதன்று. பின்பு பார்க்க.

***நான்காம் கருதுகோள்:*** இந்நூல் முழுமையான ஒரே திருமுகமாகும். முன்கூறப்பட்ட கருதுகோள்களுக்கு மாறாக, வாசகப் பாரம்பரியத்தின் ஒரே சீரான வரலாறு சான்றாக அமைந்துள்ளது என்பது கவனிக்கத்தக்கது. முதல் பகுதிக்கும் இரண்டாம் பகுதிக்கும் இடையே இருப்பதாகக் கருதப்படும் கருத்துப்பிளவு அவ்வளவு முழுமையானதன்று என்று முன்பு கூறினோம். ஏனெனில் இத்திருமுகத்தை எழுதத்தூண்டிய பவுலின் நோக்கங்கள் நூல் முழுவதும் ஒரே சீராகக் காணக்கிடக்கின்றன.

1. ''சிலருடைய எதிர்ப்பை அழிப்பது''. இந்த எதிர்ப்பின் பண்புகள் நூல் முழுவதும் சுட்டிக் காட்டப்படுகின்றன. சில முதல் பகுதியில் சிறப்பாகக் குறிக்கப்படுகின்றன *(3:1; 3:6.10; 4:1-5;...)*.

2. சமூகத்தின் பணிவைக்கோரத் தனக்குள்ள உரிமையைப் பவுல் வலியுறுத்துதல். அவரது அப்போஸ்தல நிலைபற்றிய காப்புரை அதி *10-13*-இல் உச்ச நிலை அடைகிறது என்பது உண்மை; ஆனால் அது நூலின் தொடக்கத்திலிருந்தே காணப்படுகிறது *(1:12* தொ; *2:14; 4:1-6; 6:4-10; 5:12.14; 7:2-4;...)*. அவரது நோக்கங்கள் ஏதோ ஒரு பகுதியில் மட்டும்தான் காணப்படுகின்றன என்று கூற முடியாது. அவை நூல் முழுவதும் காணப்படுகின்றன. மேலும் திருமுகத்தை இருபகுதியாகப் பிரித்தோம் என்றால், இந்த வாக்குவர்த் சுட்டுதல்கள் ஒன்றுமில்லாது போகின்றன. ஓர் இடுக்கண் நிலை உருவாக்கப்படுதலை நாம் காணலாம். வாழ்க்கைக்குச் சாற்றிக் கூறுவதற்குத் துல்லியமாகத் தயாரிக்கும் இறையியல் அடிப்படை (அதி 3-7) அமைக்கப்படுவதைக் காணலாம். ஒரு கடினமான முயற்சியை மேற்கொள்ளப் பவுல் தன்

னையே ஊக்கப்படுத்துவதை நாம் உணர லாம். அதன் விளைவாக அதி 7-இன் முடி வில் பவுல் முழுநம்பிக்கை கொண்டுள்ளார் (7:16). இப்போது இன்னும் கடினமான மற்றும் சொந்தக் காரியங்களை அவர் தாக்க முடியும். ஆகவே நூல் ஒரு முழுமையான திருமுகம் என்று ஏற்பதுவே சாலச்சிறந்தது. அதே சமயத்தில் இத்திருமுகம் எழுதச் சிறிது காலம் பிடித்தது என்பதையும் ஏற்கவேண் டும். இவ்வளவு நீண்ட கடிதத்தைச் சொல் லச் சொல்ல எழுதுவதற்கே காலம் பிடிக் கும். அதி 7-க்குப் பின்னும் அதி 9-க்குப் பின்னும் இடைநிறுத்தத்தை அனுமதிக்க வேண்டும். இந்த நீண்ட, சொல்லச் சொல்ல எழுதும் பணி அடிக்கடி தடைசெய்யப்பட் டிருக்கலாம். இதற்கிடையில் பவுல் மேலும் சில மோசமான செய்திகளைக் கேள்விப்பட் டிருக்கவேண்டும் (எ.கா.12:17-18). இவை அவர் குற்றம் சாட்டுதலை இன்னும் கடு மைப்படுத்தியிருக்கலாம். ஆனால் அடிப் படையில் எதிர்கொள்ள வேண்டிய பிரச்சினை ஒன்றே. இது ஒரே கடிதம் அல்லது திருமுகம் என்பதாகும்.

V. ***நிகழ்ச்சிகளின் வரிசை:-*** மேற்கூறப்பட் டவை நம்பத்தகுந்தவை என்று ஏற்றுக் கொண்டால் இரண்டாம் கொரிந்தியர் திரு முகம் எழுதப்படுவதற்கு இட்டுச் சென்ற நிகழ்ச்சிகளைப் பின்வருமாறு வரிசைப்படுத்த லாம்.

பவுல், கொரிந்தை மையமாகக்கொண்டு அக்காயா முழுவதிலும் இறைவார்த்தை வேரூன்றச் செய்தபின் (2 கொரி 1:1) கொரிந் தில் தனது பணியை முடித்துக்கொண்டு எபேசு நகரில் தங்கியிருந்தார். அங்கிருந்து கொரிந்தியருக்கு ஒருமடல் எழுதினார் (1 கொரி 5:9). அதில் ''காமுகரோடு உறவுவைத் துக்கொள்ள வேண்டாம்'' என்று எச்சரித் திருந்தார். இம்மடலின் சுவடிகள் சுவடுகூடத் தெரியாமல் மறைந்துவிட்டன என்று அறி ஞர் பலர் கருதுவர். இக்கடிதத்தின் ஒரு பகுதியே 2 கொரி 6:14-7:1 என்ற பகுதி என்பர் சிலர். இப்பகுதியைப் பற்றி முன்பு பார்க்க.

இதற்கிடையில் பல காரணங்களால், கொரிந்து திருச்சபையில் ஒழுக்கக்கேடும் (1 கொரி 6:5; 1-13; 6:12-20), கட்சிமனப்பான் மையும், சண்டை சச்சரவுகளும் (6:1-11), கருத்துவேறுபாடுகளும் (7:1-15:58) தோன்றி அத்திருச்சபையைச் சீர்கெடச்செய்தன. திருச் சபை நலிவுற்றது. புறவினத்தாருக்குக்கூட துர்மாதிரியாய் அமைந்தது (5:1). இவை பற்றிய செய்திகளைக் குலோயியாரின் வீட் டார் பவுலுக்கு அறிவித்தனர். கொரிந்தியக் கிறிஸ்தவர்களே தங்களிடையே நிலவி வந்த கருத்து வேறுபாடுகளையும் ஐயப்பாடுகளை யும் நீக்கி, கருத்துவிளக்கம் தருமாறு பவுலி டம் கேட்டிருந்தனர் (7:1). பவுல் கொரிந்துக் குத் தானே நேரில் சென்று அங்குக் காணப் பட்ட சீர்குலைவுகளைத் தீர்த்துவைக்க விரும்பினார். ஆனால் அப்போது அவர் எபேசில் இருக்க வேண்டிய கட்டாயம் ஏற் பட்டது (அ.ப. 19:22). ஆகையால் கொரிந் துக்குச் செல்ல வாய்ப்புக் கிடைக்கும்வரை காத்திருக்கக்கூடிய பொறுமையில்லாது உட னடியாகத் திமொத்தேயுவைக் கொரிந்துக்கு அனுப்பிவைத்தார். திமொத்தேயு கொரிந் துக்குச் சென்றார் என்பதற்குச் சான்றுகள் இல்லை. அவர் கொரிந்துக்குச் செல்லக் காலம் தாழ்த்தியதாலோ, காலம் இல்லை என்ற காரணத்திற்காக எபேசுக்குத் திரும்பி விட்டதாலோ, கொரிந்தின் நிலை மோசமாகி விடுமோ என்று எண்ணிய பவுல் அத்திருச் சபையைச் சீர்திருத்த, திருமுகம் ஒன்று தீட்டு கிறார். இதுவே நமக்குக் கிடைத்திருக்கும் கொரிந்தியருக்கு முதலாம் திருமுகம். இது கோட்பாட்டளவிலாவது பயன்விளைவித் தது எனலாம். ஆனால் திருச்சபையின் நிலை மேம்படவில்லை.

இதற்கிடையில் நாடோடிப் போதகர்கள் கொரிந்துக்கு வந்தனர். விரைவில், பவுலுக் கும் அவரது அதிகாரத்துக்கும் எதிராக ஒரு கிளர்ச்சி தொடங்கி வளர ஆரம்பித்தது. கொரிந்தைப்பற்றி மோசமாகச் செய்திகள் கிடைத்ததால் பவுலே கொரிந்துக்கு நேரி டையாகச் சென்றார். அங்கே அவர் சூழ்ச்சிக ளும் சந்தேகமும் நிறைந்த சூழ்நிலையைக் கண்டார். கிறிஸ்தவ சமூகம் ஆர்வத்தோடு

அவரை ஏற்கவில்லை. ஆகவே அங்கு நீண்ட காலம் தங்கமுடியவில்லை. தன்முயற்சியில் தோல்வியடைந்து விரைவில் எபேசுக்குத் திரும்பினார். ஆனால் அடுத்த தடவை வரும் போது (2 கொரி 1:13-16) பாவம் செய்தவர்க ளைத் தக்கமுறையில், நடத்தப் போவதாக எச்சரித்தார் (18:2). ஆனால் அவர் கடிதத்தால் மட்டும் அச்சமூட்டும் திறமையுடையவர் என்று எண்ண அவரது எதிரிகளைத் தூண்டி யது (10:10). அவர் அங்கிருந்து திரும்பிய பின் ஏதோ ஒரு கடுமையான பொது அவ மதிப்பு நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டும். அதைக் கேட்டறிந்தபோது, பவுல் தான் திட்டமிட்டிருந்த கொரிந்தியப் பயணத்தை இரத்து செய்துவிட்டார் (1:15-17.23). அதற் குப் பதிலாகக் கொரிந்தியருக்கு வருத்தம் விளைவிக்கக் கூடிய கடுமையான கடிதம் ஒன்று எழுதினார் (2:1 தொ). தீத்துவால் முடிந்ததைச் செய்யுமாறு அவரை இக்கடிதத் தோடு கொரிந்துக்கு அனுப்பினார். 2 கொரி 10-13 என்ற பகுதிதான் இம்மடல் என்று அறிஞர் பலர் கருதுவர். இப்பிரச்சினை பற்றி முன்பு பார்க்க. தீத்து பிரச்சினையை ஓரளவு வெற்றிகரமாகத் தீர்த்துவைத்தார். சமூகம் தன் கடமையில் தவறியதற்கு வருத் தம் கொண்டது. குற்றவாளியைத் தண்டித் தது (7:7தொ). (இப்போது காணிக்கை எடுத் தலை ஒழுங்குபடுத்தினாரா என்று கூறுவதற் கில்லை). ஆனால் அவரால் அங்கு நிலவிய சூழ்ச்சிகளில் கவனம் செலுத்த முடிய வில்லை. மேலும் சிறுபான்மையினரது எதிர்ப்பை நன்குணர்ந்தார். பவுல் கொரிந் துக்கு வராமையும் அவரது கடுமையான கடிதமும் இந்த எதிர்ப்பை மேலும் வளர்த் தன. இந்நிலையை அறிவிக்கப் பவுலிடம் தீத்து திரும்பிவந்தார். ஆனால் கொரிந்தியரி டையே தன்னைப்பற்றி ஒரு நல்ல எண் ணத்தை ஏற்படுத்தியிருந்தார் (7:14 தொ; 8:6 தொ).

இதற்கிடையில் பவுல் எபேசை விட்டுப் புறப்பட்டுத் (அ.ப. 19:21-20:1) துரோவாவுக் குச் சென்றார் (2 கொரி 2:2). (இப்போது ஆசியாவில் பவுல் கொடிய நோயால் தாக் கப்பட்டிருக்கலாம் 1:8-11). துரோவாவில் தீத்துவைச் சந்திக்காததால் தீத்துவின் தூதின் வெற்றியைப் பற்றி அறிய ஆவல் கொண்ட வராய்ப் பவுல் மாசிதோனியாவுக்குச் சென் றார் (1:16). அங்குப் பிலிப்பியிலிலோ, தெச லோனிக்கேயிலோ தீத்துவைச் சந்தித்து அவரது தூதின் வெற்றிபற்றி அறிந்து பவுல் பெரும் மகிழ்ச்சி கொண்டார்.

காணிக்கை எடுத்தலை முடித்துவைக்க (8:6 தொ. 16 தொ) இருசகோதரர்களுடன் தீத்துவை மீண்டும் கொரிந்துக்கு அனுப்பி வைத்தார் பவுல். அதன்பின் கொரிந்து சமூ கத்தில் தான் கொண்டிருந்த நம்பிக்கையை எடுத்துக்கூறவும், தவறு செய்தவர்களையும் இடைபுகுந்து குழப்பம் விளைவித்தவர்க ளையும் சரியான முறையில் நடத்தத் தூண்ட வும் பவுல் இந்தத் திருமுகத்தை எழுதத் தொடங்கினார். ஆனால் இடை புகுந்தவர்க ளின் அதிகரித்த செயல்களால் கொரிந்தில் குழப்பம் கூடுவது பற்றியும், காணிக்கை எடுப்பதைப் பற்றியும் கூட அவதூறு எழுப் பப்படுவது பற்றியும் செய்திகள் கொரிந்தி லிருந்து வந்தன (12:17-18). இவை ஒருவேளை பவுல் தனது முழுத் தாக்குதலையும் முழுக் காப்புரையையும் இந்தக் கடைசி நான்கு அதிகாரங்களில் எழுதத் தூண்டியிருக்கலாம்.

**VI. பவுலின் எதிரிகளும் கொரிந்தின் குழப்ப நிலையும்:** அடிப்படையில் இரண்டாம் கொரிந்தியரில் பவுல்தான் குற்றவாளிக்கூண் டில் நிறுத்தப்பட்டவராய்க் காட்சி அளிக்கின் றார். அவரது அப்போஸ்தலத்துவம் கேள் விக் குரியதாக்கப்படுகிறது. மேலும் அவரது ஆதாயம் தேடாமை, நேர்மை, மனஉறுதி, தாழ்ச்சி போன்ற பண்புகள் தாக்கப்படுகின் றன. ஆகவே அவரது அதிகாரம் கேள்விக் குரியதாகிறது. ஆகவே அவர் தனது நற்பெய ரைப் பாதுகாக்கப் போராடவும் சமூகத்தின் மேல் அவருக்குரிய அப்போஸ்தல அதிகா ரத்தை மீண்டும் நிறுவவும் வேண்டியிருக்கி றது. இதை மூன்று மட்டத்தில் செய்கிறார்.

1. தன் பிள்ளைகளிடமிருந்து மேலான வற்றை எதிர்பார்க்கும் அன்புள்ள தந்தைக் குரிய உரிமைகளைக் கொரிந்தியர்களிடம்

பவுல் கோருகிறார். அவருக்கும் கொரிந்தியர்களுக்குமிடையே குடும்ப மனவேறுபாடுகள் ஏற்பட்டுவிட்டன. ஆனால் சமூகமே கிறிஸ்துவின் மணமகளாகும் *(11:2)*. சமூகம் பலவற்றில் கவனக் குறைவாய் இருந்துவிட்டது. கொரிந்தியர்கள் தங்களுக்குகிடையே கட்சிப் பூசல்களுக்கு இடம் கொடுத்துவிட்டனர் *(12:20)*. தங்களிடையேயுள்ள பாவிகளைச் சரியான முறையில் நடத்தத் தவறிவிட்டனர் *(12:21)*. இவற்றிற்கும் மேலாக, இடைப் புகுந்தவர்களின் சூழ்ச்சிகளுக்கு இடம் கொடுத்து வளரவிட்டுவிட்டனர் *(11:19-20)*. இவற்றின் விளைவாக விசுவாசம் ஆபத்திலிருந்தது *(11:4)*. இவையெல்லாம் அவர்களின் தந்தையான பவுலுக்கு அவமரியாதையாக அமைந்தன *(12:11)*. ஆனால் அடுத்தமுறை அவர்களிடம் வரும்போது அதிக ஆர்வத்தையும் ஆற்றலையும் பவுல் எதிர்பார்க்கிறார் *(10:6.15; அதி 13)*.

**2. சமூகத்திலிருந்த கெட்ட கிறிஸ்தவர்களைப் பற்றியது:-** தான் அடுத்த தடவை வரும்போது 'இவர்களை எப்படி நடத்தப் போகிறார்' என்று எந்த மறைப்புமின்றிக் கடுமையாக அச்சுறுத்துகிறார் பவுல் *(12:20-13:2; 6:14-7:1)*. இவர்கள் பிற மதப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றிய ஒழுக்கக் கேடுகளையும், தவறான நெறிகளையும் கடைப்பிடிப்பவர்களாவர். இவர்கள் தங்களுக்கு எல்லாம் அனுமதிக்கப்படவில்லை என்று ஏற்றுக்கொள்ள மறுப்பவர்கள் *(12:21; காண்க 1 கொரி 6:12; 10:23)*. பிள்ளைக்களுக்குரிய கிறிஸ்தவச் சுதந்தரத்தைத் தவறாகப் பயன்படுத்தி, எல்லா ஒழுக்கக் கட்டுப்பாட்டிலிருந்தும் சுதந்தரம் கோரிய இவர்களைப் பற்றி முதலாம் கொரிந்தியரில் பல குறிப்புகள் உள்ளன *(1 கொரி 6:9 தொ; அதி 8-10)*. இவர்கள் தங்களுடைய தவறான கோட்பாடுகளை வெளிப்படையாகக் கூறாவிடினும் *(2 கொரி 1:24)* தங்கள் ஒழுக்கவாழ்வைச் சிறிது கூடச் சீர்திருத்தவில்லை *(12:21)*.

**3. இடைப்புகுந்த குழப்பக்காரர்கள்:** மற்றவற்றையெல்லாம்விட, இவர்கள் மிக ஆபத்தானவர்கள். இவர்கள் கொரிந்து திருச்சபையில் புகுந்து பவுலின் அதிகாரத்தை அழிக்க முயற்சி செய்தனர். இவர்கள் யார் என்று துல்லியமாக விவரிக்கமுடியாது. இவர்கள் யூதக் கிறிஸ்தவர்கள் என்றும் அவர்கள் பவுலின் அப்போஸ்தல அதிகாரத்தைத் தாக்கினர் என்றும் பொதுவாகக் கூறலாம். மற்றப்படி இவர்கள் செயல்பட்ட விதம்பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உண்டு. சிலரது கருத்துப்படி 1 கொரி-இல் குறிக்கப்படும் யூதமயமாக்க விரும்பியவர்கள் அல்லர் 2 கொரி-இல் குறிக்கப்படும் பவுலின் எதிரிகள். இவர்கள் யூத இனத்தைச் சேர்ந்த உருவகப்படுத்தும் ஆவியினர். வேறு சிலர் இவர்களை ஞானவாதிகள் என்பர். மற்றும் சிலர், இவர்கள் பாலஸ்தீனத்திலிருந்து வந்த மறைபரப்புப் பணியாளர்கள் என்பர். மேலும் சிலர், இவர்களைக் கிரேக்க மொழி பேசிய கிரேக்கப் பிரியர்கள் என்பர். இவ்வாறு பவுலின் எதிரிகள் பற்றிய கருத்துக்கள் வேறுபடும். பவுல் சுட்டிக்காட்டும் சில கூறுகளை வைத்துத்தான் இவர்களை விவரிக்கமுடியும்.

பவுல் தன் எதிரிகளைப் ''பேர் போன அப்போஸ்தலர்கள்'' என்று அழைக்கிறார் *(11:5; 12:12)*. இவர்கள் ''அப்போஸ்தலர்கள்'' என்ற பட்டத்தைப் பவுலுக்குத் தர மறுத்தாலும் *(11:12)*, அது தங்களுக்கு உரியதென உரிமை கொண்டாடினர் *(11:15)*. இவர்கள், தங்களை உண்மையான எபிரேய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் *(11:22)*, ''நீதியின் பணியாளர்கள்'' என்றும் *(11:15)*, ''கிறிஸ்துவின் பணியாளர்கள்'' என்றும் *(11:23)* காட்டிக் கொண்டனர். இவர்கள் பரிந்துரைக் கடிதங்களோடு வந்த நாடோடிப் போதகர்களாக வந்தனர். இந்தப் பரிந்துரைகள் ''பன்னிருவரிடமிருந்து'' பெற்றவையல்ல; ஒரு வேளை பிற திருச்சபைகளிடமிருந்து பெற்றதாக இருக்கலாம். இவர்கள் யூதக் கிறிஸ்தவர்களாகத் தோன்றுகின்றனர். இவர்கள் கிரேக்க மொழிபேசும் கிரேக்கப் பிரியர்களாகவும் நாடோடிப் போதகர்களாகவும் இருக்கலாம். இவர்கள் ஆவியைக் கொண்டிருந்தனர் என்பதற்குத் தங்களது பேச்சுவன்மையையும், பரவச அனுபவத்தையும், புதுமை

கள் செய்யும் ஆற்றலையும் சான்றாகக் காட்டியதாகத் தெரிகிறது *(10:10; 11:6)*. விருத்த சேதனம் பற்றி எக்குறிப்பும் இல்லை. ஆனால் மோசே உயர்த்திக் கூறப்படுகிறார். இவர்களிடமிருந்து உண்மையான நற்செய்தி மறைக்கப்பட்டுள்ளது *(அதி 3-4)*.

ஒருவேளை தொடக்கத்திலிருந்தே இவர்கள் பவுலுக்கு எதிராகத் தப்பெண்ணம் கொண்டிருந்திருக்க வேண்டும். கொரிந்துக்கு வந்தபின் அங்குப் புறவினக் கிறிஸ்தவர்கள் புறமதத் தீய செயல்களை இன்றும் கடைப்பிடிப்பது கண்டு *(12:11)*, பவுலைத் தாக்குவதை அதிகப்படுத்தியிருக்கவேண்டும். இவர்கள் கருத்துப்படி, பவுல் அப்போஸ்தலர் அல்லர்; போதகரும் அல்லர்; இருவிதமாகப் பேசும் பண்புடையவர் *(1:17-18)*; தூரத்திலிருக்கும்போது கடிதத்தால் மட்டும் அச்சமூட்டும் கொடியவர் *(10:8.10)*. ஆனால் ஒரு கோழை; நேரடியாக வரமுடியாதவர் *(1:23; 18:2)*; அவர் கொரிந்திலிருந்து ஒடிப்போனார் *(2:1; 13:2)*. அவர் மக்களிடமிருந்து எந்த ஆதரவும் பெறாததும் *(11:7-9; 12:14)*, தனது ஆட்கள் வழியாக வஞ்சகமாக இந்த ஆதரவைப் பெற்றுக் கொண்டார் என்பதும் *(7:2; 12:17-18)*, அவர் அப்போஸ்தலர் அல்லர் என்று காட்டுகின்றன. அவர் காணிக்கைப் பொருளைக் கொள்ளையடித்திருக்கலாம் என்றுகூட இவர்கள் குற்றம் சாட்டியிருக்கலாம் *(8:20-21)*. ஆனால் அவர் எப்போதும் தன்னைப் பற்றியும் தனது வெற்றிகளைப் பற்றியும் பெருமையாகப் பேசிக் கொள்கிறார் *(3:1; 12:1-17)*. தனது அதிகாரத்தை வலியுறுத்துகிறார் *(4:5)*; ஒருவேளை அவர் மதிமயங்கிப் போயிருக்கலாம் *(5:12-13)*.

இவையும், குறிப்பாகக் கொரிந்து சமூகத் தலைவர்கள் இந்த அவதூறுகளை எதிர்த்துப் போராடாமையும், பவுலின் அதிகாரத்தைப் பெரிதும் பாதித்தன என்பதில் வியப்பில்லை. ஆகவே இவர்களைச் சாத்தானின் ஏவு ஆட்கள் என்று இரக்கமற்ற முறையில் பவுல் தாக்குகிறார் *(11:14-15)*. இவர்கள் கடவுளின் சொல்லை விலை கூறித்திரிபவர்கள் *(2:17; 4:2)*; தங்களது நிலையைத் தக்க வைத்துக்கொள்ளக் கொடுங்கோலர்களைப் போல் தங்களின் செல்வாக்கைப் பயன்படுத்துகின்றனர் *(11:12.20)*. இவர்கள் ''வேறொரு இயேசுவையும்'', ''வேறொரு ஆவியானவரையும்'', ''வேறொரு நற்செய்தியையும்'' போதிக்கின்றனர். இந்த ''வேறொரு நற்செய்தி'' எது என்பது பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உண்டு. இவர்கள் தங்களை மீமனிதர்களாகவும், விண்ணக மனிதர்களாகவும், ஆபிரகாமின் சந்ததியினராகவும், உண்மையான எபிரேயர்களாகவும் காட்டிக் கொள்கின்றனர். இவர்கள் தங்களைப் போல் பிறரையும் மீமனிதர்களாக ஆக்கத் தங்களுக்கு ஆற்றல் இருப்பதாகக் கருதினர் *(2 கொரி 11:15 தொ)*. இவர்கள் பழைய ஏற்பாட்டை உருவகப்படுத்தி, ஆவியானவரின் கொடையில் மேலான ஞானத்தைக் கொண்டிருப்பதாக எண்ணியிருக்கலாம் *(3:15-16)*. இவர்கள் கிறிஸ்துவை விண்ணக மனிதனின் மேலான எடுத்துக்காட்டாகக் கருதினர். அவரது மனிதத்தன்மையை இழிவாகக் கருதினர். அவர் இறப்பின் முன்னும் இறப்பின் பின்னும் எப்போதும் விண்ணவராக இருந்ததால் அவரது இறப்பு எந்த மாற்றத்தையும் செய்யவில்லை என்று கருதியதாகத் தெரிகிறது. தங்களது சொந்த வெற்றிகளையும் செல்வத்தையும் தங்கள் வேதபோதக ஆற்றலின் சான்றுகளாகக் கருதி, துன்பங்கள் அல்லது பலிகள் ஆகியவை தேவையில்லாதவர்களாகத் தோன்றுகின்றனர்.

பவுல் இந்த அகந்தைமிக்கவர்களைத் தீவிரமாகத் தாக்குகிறார். இவர்களுக்கு எதிராக ஆண்டவரின் முக்கியத்துவத்தை அழுத்திக் கூறுகிறார். இயேசுவின் மரணத்தையும் உண்மையான கிறிஸ்துவ வேதபோதகரின் துன்பங்களையும் வலியுறுத்துகிறார்.

4. இறுதியாக 1 கொரிந்தியரோடு ஒப்பிடும்போது இந்தக் குழப்பங்களுக்கெல்லாம் அடிப்படையாகப் பவுலுக்கும் கொரிந்திய சமூகத்திற்குமிடையேயுள்ள சுமூகமான உறவு பாழ்பட்ட நிலை அமைந்திருந்தது

எனலாம். 1 கொரி எழுத்தப்பட்ட காலத்தில் கொரிந்தில் பல ஒழுக்க மற்றும் கோட்பாட்டு முறைகேடுகள் இருந்தாலும், பவுல் தனது தந்தைக்குரிய கட்டுப்பாடு மற்றும் அவர்களின் பிள்ளைக்குரிய பணிவு ஆகியவை பற்றி உறுதிகொண்டிருந்தார். ஆனால் இப்போது அவ்வுறவு பாழ்பட்டுவிட்டது. ஆகவே ஒருமைப்பாட்டை மீண்டும் நிறுவவும் அதைப் பாழ்படுத்தியவர்களைத் தாக்கி ஒடுக்கவும் தனது காப்புரையை இந்த இரண்டாம் கொரிந்தியரில் பவுல் எழுதுகிறார்.

**VII. எங்கே, எப்போது எழுதப்பட்டது?** இப்பிரச்சினைக்குப் பதில், பவுலின் வாழ்க்கைக் காலக்கணிப்பைப் பொருத்ததாகும். இந்நூல் மாசிதோனியாவிலுள்ள *(2:13; 7:5; 8:1; 9:2-4)* தெசலோனிக்கேயிலோ, பிலிப்பியிலோ, பவுல் தனது மூன்றாவது மறைபரப்புப் பயணத்தின் இறுதியில் எழுதினார் என்பதில் கருத்தொற்றுமை உண்டு. இந்த மூன்றாவது மறைபரப்புப் பயணம் கி.பி.53-இலிருந்து 57-வரை நீடித்தது என்று இதுவரை கணிக்கப்பட்டது. ஆனால் இக்கணிப்பை இரண்டு ஆண்டுகள் முன் கூட்டியே கணிப்பவர்கள் உண்டு. ஆகவே இந்நூல் கி.பி. 55-இன் அல்லது 57-இன் பின்பகுதியில் குளிர்காலத்தில் அவர் தங்கியிருந்த மாசிதோனியாவிலிருந்து பவுல் எழுதியிருக்கலாம்.

மேற்கூறப்பட்ட பல பிரச்சினைகளும் நூலின் பின்னிலைகளைப் புரிந்துகொள்ள உதவலாம். ஆனால் அவ்வளவு முக்கியமுள்ளவை என்று கூறமுடியாது. திருமுகங்கள் என்ன போதிக்கின்றன என்பதே முக்கியம் இவற்றில் நாம் கவனம் செலுத்த வேண்டும்.

**VIII. திட்டம்:** இந்நூல் பவுலின் சொந்த, ஆழ்ந்த உணர்ச்சிகள் மிக்க கடிதமாகும். ஆகவே அதன் பொருளடக்கம் பற்றித் தெளிவான திட்டம் அமைப்பது அவ்வளவு எளிதன்று. ஆயினும் நூல் முழுவதும் ஒருதலைப்பும் ஒரு நோக்கமும் காணப்படுகின்றன. அவை, கொரிந்து திருச்சபையில் பவுல் தனது அப்போஸ்தல அதிகாரத்தை மீண்டும் நிறுவுவதாகும். கொரிந்தில் ஏற்பட்ட குழப்பங்களால் இவ்வதிகாரம் மிகவும் பாதிக்கப்பட்டது. இதை அவர்களின் நம்பிக்கையை மீண்டும் அடைந்தும், அப்போஸ்தலர் என்ற அளவில் அவரது பதவியை எடுத்துக்காட்டியும் அடைய, பவுல் முயலுகிறார். தொடக்க அதிகாரங்களில் அவரது காப்புரை மிகவும் பொதுவாக உள்ளது. வெளிப்பாட்டின் உண்மைகளின் ஒளியில் அப்போஸ்தல உயர்வை நிரூபிக்கிறார். பிந்தைய அதிகாரங்களில் குறிப்பிட்ட மற்றும் சொந்தப் பதவிபற்றிய காப்புரையையும் தருகிறார். நோக்கத்தின் அடிப்படையில் நூலை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. முன்னுரை: வாழ்த்தும் ஆசிரும் *(1:1-11)*.

2. பொதுக் காப்புரை : *(1:12-7:16)*.

அ. கொரிந்துக்கு வருவதைத் தள்ளிப்போட்டதில் பவுலின் நேர்மை *(1:12-2:13)*.

ஆ. உண்மையான அப்போஸ்தலத்துவப் பணி *(2:14-6:10)*.

*2:14-3:6* : அப்போஸ்தலப் பணி: கொள்கையும் செயல்பாடும்.

*3:7-4:6* : பழைய, புதிய பணி.

இ. பணியின் துன்பமும் நம்பிக்கையும் *(4:7-5:10)*.

*4:7-15* : இயேசுவின் வெளிப்பாடு.

*4:16-5:10* : சாவுபற்றிய அச்சத்தை எதிர்கொள்ளல்.

ஈ. புதிய படைப்பில் ஒப்புரவு *(5:11-6:10)*.

*5:11-17* : புதிய படைப்பு.

*5:18-6:10* : ஒப்பரவுப் பணி.

உ. கொரிந்தியரோடு உறவு *(6:11-7:16)*.

*6:11-7:4* : திறந்த உள்ளம் கொண்டிருங்கள்.

*7:5-16* : தீத்துவின் தூதின் விளைவு கள்.

3. எருசலேம் திருச்சபைக்காக நன்கொடை திரட்டும் திட்டம் *(8:1-9:15)*.

அ. தாராளத் தன்மைக்கு ஒரு சவால் *(8:1-15)*.

ஆ. தாம் அனுப்பியவர்களைக் குறித்துப் பரிந்துரை *(8:16-9:5)*.

இ. தாராளத்தன்மைக்குச் சன்மானம் *(9:6-15)*.

4. பவுல் தன்னைப்பற்றிய காப்புரை வரைதல் *(10:1-13:10)*.

அ. முழுக் கீழ்ப்படிதலைக் கோரும் வேண்டு கோள் *(10:1-18)*.

*10:1-6* : கீழ்ப்படியாமையின் விளை வுகள்.

*10:7-18* : சமூகத்தை நிறுவியவர் என்ற அளவில் பவுலின் அதிகாரம்.

ஆ. பவுல் தன்னையே புகழ்ந்து கொள்கிறார் *(11:1-12:13)*.

*11:1-21* : அறிவிலியைப்போல் பேசு தல்.

*11:21-33* : பவுலின் துன்பங்கள்.

*12:1-10* : அவரது காட்சிகளும் வெளிப்பாடுகளும்.

*12:11-13* : தனது அறிவிலித்தன்மைக்கு மேலும் காரணங்கள்.

இ. தான் வரப்போவதைப் பற்றிய எச்ச ரிக்கை *(12:14-13:10)*.

*12:14-18* : உங்கள் உடையன்று; நீங் கள்தான் எனக்குவேண்டும்.

*12:19-13:10* : கொரிந்தியர்கள் தங்களைத் திருத்திக்கொள்ள வேண்டும்.

5. **முடிவுரை:** இறுதி அறிவுரையும் வாழ்த் தும் ஆசீரும் *(13:11-13)*.

**IX. நூலின் மதிப்பீடும் முக்கியத்துவமும்:**

1. பவுலின் வரலாறு பற்றிய பல விவரங்களை இந்நூல் கொடுக்கிறது. துரோவாவில் பவு லின் நற்செய்தி பரப்புப் பணி *(2:12-13)*, அவரது கடுமையான உழைப்பு, அகம் மற் றும் புறத்துன்பங்கள், கிறிஸ்தவச் சமூகங்க ளோடு, குறிப்பாகக் கொரிந்து திருச்சபை யின் இடுக்கண் நிலையில் அவர் நடந்து கொண்ட முறைகள் ஆகியவை பற்றிய செய்திகளை இந்நூல் கொடுக்கிறது.

2. தொடக்க காலத்திருச்சபையின் வாழ்க் கைமுறை, மற்றும் அதன் வளர்ச்சி, ஏற்படும் துன்பங்கள், குறிப்பாக யூத, புற இனக் கிறிஸ்தவர்களுக்கிடையே நிலவிய நெருக் கடி நிலை, திருச்சபையின் பொதுக்கூறுகள் *(2:6-8; 8:19* தொ*)*, அதன் பொதுவழிபாடு *(1:20)* ஆகியவை பற்றிய காட்சிகளை இந் நூல் தருகிறது.

3. பவுலின் இறையியல் போதகத்தின் முக்கியமான வளர்ச்சிகளை இந்நூல் கொண் டுள்ளது. இயேசுவே முழுவதும் மையம் கொண்டுள்ளார். அவரது இவ்வுலக வாழ் வின் துன்பங்களும் பண்புகளும் *(4:11-12; 1:5-7; 8:9; 10:1)* அப்போஸ்தலத்துவத் துன் பங்களின் மாதிரியாகும். இவற்றின் வழி யாக உயிர்த்த இயேசுவின் ஆற்றல் செயல் படுகிறது. பரிசுத்த ஆவியின் அலுவல்பற்றி யும் *(3:3.18; 18:14;..)* பரிசுத்த திரித்துவம் பற்றியும் (சிறப்பாக *18:14*) பல குறிப்புகள் உள்ளன. இறுதிக்காலக் கோட்பாடு பற்றியும் *(5:1-10)*, பழைய மற்றும் புதிய உடன்படிக் கைகளுக்குள் உள்ள உறவும் (அதி *3-4*), கிறிஸ்துவன் புதுப்பிக்கப்படுதலும் *(3:18; 4:16* தொ; *6:1-10)*, புனிதர்களின் உறவும் ஆகியவைபற்றிய சிறப்புச் செய்திகள் இந் நூலில் உண்டு. புனிதர்களின் உறவு நூலுக்கு ஒருவகைச் சூழ்நிலையாக அமைகிறது. இந்

நூலில் காணப்படும் இறையியல் சொற்களான ஆவி, ஆற்றல், அதிகாரம், மகிமை, அருள், உருவம் முதலிய சொற்களின் முழுப்பொருளையும் நாம் இன்னும் முழுமையாக உணரவில்லை எனலாம்.

4. இத்திருமுகத்தின் மிகப்பெரிய கொடை, அது பவுலைப்பற்றி அளிக்கும் உட்கருத்தாகும். இதில் இந்நூல் தனிச்சிறப்புடையதாகும். முரண்பட்ட உணர்ச்சிகளின் போராட்டத்தில் பவுல் தன் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறார். அறிவுசார்ந்த, உணர்ச்சிப் பெருக்குடைய, காட்சித் தன்மையுடைய, செயல்முறையான, பெண்ணின் மென்மைத் தன்மையும் பாசமும் மிக்க, உறுதியில் விட்டுக்கொடாமையுடைய பெரும் வளப்பம் மிகுந்த பவுலின் ஆட்தன்மையை இந்நூல் வெளிக்கொணர்கிறது.

**கொரிந்தியர்களுக்கு எழுதப்பட்ட மூன்றாவது திருமுகம்**

இது போலி நூலான பவுலின் பணிகள் என்ற நூலின் ஒரு பகுதியாகும். சிரியா மற்றும் அர்மேனிய திருச்சபைகளிலே வெகு காலம் இது உண்மைத்தன்மையுடைய நூலாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது.

**கொரோனயிமர், ஒரோனயிமர்** (HORONITE *- கொரோனயிமிக் குடிகள்)*

எருசலேமை மீண்டும் அமைப்பதில் நெகேமியாவுக்கு எதிராக இருந்த சன்பலாற்றுக்கு அளிக்கப்பட்ட இடுபெயர் (நெகே *2:10.19; 13:28*). இப்பெயர், சன்பலாற்று கொரோனயிமிலிருந்து வந்தவர் என்றும் பொருள் கொடுக்கலாம். அப்படியாயின், இவர் ஒரு மோவாபியராக இருக்கலாம். யோசிபசு இவரை ஒரு சமாரியன் என்று அழைக்கிறார். அப்படியாயின் இவர் பெத்-கோரோனிலிருந்து வந்தவராக இருக்கலாம்.

**கொரோனயிம், ஒரோனயிம்** (HORONAIM *-இரு குகைகள், இரு பொந்துகள்)*

மோவாபுக்கு எதிரான இறைவாக்குகளில் மோவாபிய நகர்களில் ஒன்றாகக் குறிப்பிடப்படுகிறது (எசா *15:5*; எரே *48:3.34*). ஓர் இறங்கிப் போகும் வழியில் இது குறிப்பிடப்படுகிறது (எரே *48:5*). ஆனால் இதனுடைய சரியான இருப்பிடம் உறுதியாகத் தெரியவில்லை. மேசா கவுரோனென்னுக்கு எதிராகப் போர் புரிந்து அதைக் கைப்பற்றினார். அலக்சாந்தர் யன்னாயு (கி.மு. *103-76*) மற்ற அரேபிய நகர்களோடு கொரோனயிமைக் கைப்பற்றினார். ஆனால் கிரிக்கான் அரேத்தாவிடம் மீண்டும் அளித்தார்.

*2* சாமு *13:34*-இல் சில மொழிபெயர்ப்புகள் 'அவனுக்குப் பின்னாலுள்ள பாதையிலிருந்து' என்ற எபிரேய வாசகத்துக்குப் பதிலாகக் ''கொரோனயிம் வழியிலிருந்து'' என்று மொழிபெயர்க்கின்றன. ஒருவேளை இப்பெயர் மேல், கீழ் பெத்-கோரோனைக் குறிக்கும் இரட்டை வடிவமாக இருக்கலாம்.

**கொர்னேலியு** (CORNELIUS)

செசரியாவில் இருந்த இத்தாலியப் படையின் நூற்றுவர் தலைவர்களுள் ஒருவர். அப்போஸ்தலர் பணி ''இவரும் இவர் வீட்டார் அனைவரும் பக்தியுள்ளவர்கள், கடவுளுக்கு அஞ்சி வாழ்ந்தவர்கள்'' என்று கூறுகிறது (அ.ப. *10:1-2*); கடவுளுக்குப் பயந்தவன் எனக்குறிப்பிடுகிறது. கப்பர்நாகுமில் உள்ள நூற்றுவர் தலைவன் போல ''யூதர்களை அன்பு செய்து'' அவர்கட்குச் செபக்கூடம் கட்டிக்கொடுத்தவர்'' (லூக் *7:5*). மிகத் தாராளமாக ஏழைகளுக்குத் தர்மம் கொடுத்தார். அத்துடன் கடவுளிடம் இடைவிடாது செபித்தார்.

கொர்னேலியு, யூத சமயத்தையும், கிறிஸ்தவத்தையும் இணைக்கும் ஓர் இலட்சிய புறவினத்தாராகக் காட்டப்படுகிறார். யூத மதம் நற்செய்திக்குத் தயாரிப்பாகும். ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபின் கடவுளை நம்பும் யூத மதம், இயேசு கிறிஸ்துவின் தந்தையே கடவுள் என்னும் விசுவாசத்திற்கு இட்டுச் செல்கிறது. அதே நேரத்தில் புறவினத்தாருக்கும் வாழ்வு உண்டு (அ.ப. *11:18*). ஆனால் அது சட்டத்தின் செயல்களால் வருவதன்று. இயேசு கிறிஸ்துவின்மேல் கொள்ளும் விசுவாசத்தால் மட்டுமே ஒருவன் வாழ்வு பெற

முடியும். அதாவது புறவினத்தார் யூதர்களாக மாறவேண்டுமென்பது கட்டாயமில்லை. எனவே விருத்தசேதனமும் அவசியமில்லை.

கடவுளுக்குப் பயந்த மனிதன், ஏழைகட்குத் தர்மம் கொடுப்பவர்; கடவுளிடம் மன்றாடுபவர். இத்தகைய புறவினத்தாரைக் கடவுள் அழைக்கிறார். அவர் வெளிப்பாட்டை ஏற்கத் தகுதியுள்ளவர் என்பதைப் பேதுருவாலும் மற்றும் எருசலேமில் உள்ள திருச்சபையாலும் ஏற்றுக்கொள்ள முடிகிறது. மேலும் விருத்த சேதனம் பெறாத கொர்னேலியு அவரது உறவினர்கள் அனைவர் மேலும் பரிசுத்த ஆவி இறங்கி வருவதைக் கண்டு (அ.ப. 10:45) அவர்கள் திருமுழுக்குப் பெறுவதைத் தடுக்க முடியவில்லை. தனது அழைப்பை ஆவியைப் பொழிந்ததன்மூலம் கடவுள் உறுதிப்படுத்தியதால், இதனை எதிர்ப்பது கடவுளையே எதிர்ப்பது போலாகும் எனப் பேதுரு உணர்ந்தார் (அ.ப. 11:17).

கொர்னேலியு மனந்திரும்பியபின் என்ன செய்தார் என்பது பற்றி நமக்கு அப்போஸ்தலர் பணியில் அதிகம் கூறப்படவில்லை. ஆனால் இந்த நிகழ்ச்சிக்கு லூக்கா அதிக முக்கியத்துவம் கொடுத்து, இரண்டு காட்சிகள், இரண்டு புதுமைகளை விவரிப்பதோடு பல விவரங்களுடன் விவரித்துக்கூறி, இதனை இன்னும் அதிக முக்கியத்துவம் உடையதாக்குகிறார். இது போன்று பவுலின் மனந்திரும்புதலுக்குத்தான் மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறார் லூக்கா. எனவே அப்போஸ்தலர் பணியில் கொர்னேலியுவின் மனமாற்றம் பெரும் முக்கியம் பெறுவதற்குக் காரணங்கள்:- 1) அன்றைய கிறிஸ்தவத்தின் நற்செய்தியை மிகச் சுருக்கமாகப் பேதுரு கூறுவதைக் காட்டவும், 2) பவுலும், பர்னபாவும் புறவினத்தாரிடையே மேற்கொண்ட நற்செய்திப் பணிக்கு ஆதரவாக எருசலேமில் சங்கத்தின்முன் பேசவும் 3) இவை எல்லாவற்றுக்கும் மேலாகப் பவுலுக்கு முன்பே பேதுரு புறவினத்தாரிடையே தமது பணியைத் தொடங்கிவிட்டார் என்பதைக் காண்பிக்கவும், இம்மனமாற்ற நிகழ்ச்சி பெரும் வாய்ப்பாக இருக்கிறது. மேலும் பேதுருதான் விருத்தசேதனம் பெற்றவர்கள்முன் (11:2) விருத்தசேதனம் பெறாதவர்களுக்கும் ஆவி அருளப்பட்டது என்பதை அறுதியிட்டுக்கூறி அவர்களது எதிர்ப்புக்குரலை அடக்கினார் (11:18). இவ்வாறு அகில உலகத் திருச்சபையைப் பவுல் தமது புறவினத்தாரின் நற்செய்திப் பணியைத் தொடங்கு முன்னரே பேதுரு நிறுவிவிட்டார்.

லூக்கா அ.ப. 10-11 அதிகாரங்களில் என்ன நோக்கோடு கொர்னேலியுவின் மனமாற்றத்தைக் கொண்டு வந்திருக்கிறார் என்பது தெரிந்தபிறகு, அத்தகையதொரு மனிதர் இருந்தாரா இல்லையா என விவாதிப்பது பொருளற்றது. இது யூதர்களுக்கு மட்டுமே என்ற திருச்சபையின் நிலைமாறி, அனைவருக்கும் மீட்பு, விருத்த சேதனமின்றியும் ஒருவன் இயேசுவின்மேல் கொள்ளும் விசுவாசத்தினால் மீட்பின் பாதையைப் பின்பற்றலாம் என்ற ஒரு முடிவான கருத்தைத் தெரிவிக்க வந்த நிகழ்ச்சியே.

வரலாற்று நிகழ்ச்சி என்ற அளவில் இது ஏரோது அகிரிப்பாவின் இறப்பிற்குப் பிறகு நடந்ததாகக் காட்டப்படுவது ஏற்றுக்கொள்ளத்தக்கதாக உள்ளது. ஏனெனில் அகிரிப்பா இறந்த பின் செசரியாவின் நூற்றுவர் தலைவன் ஒருவன் இருக்க வாய்ப்புண்டு.

அதே நேரத்தில் அனைவரும் இணைந்த அகில உலகத் திருச்சபை உருவானதில் 10-11 அதிகாரங்கள் எவ்வளவு தூரம் முக்கியத்துவம் பெறுகிறது என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது. விசுவாசத்தினால் எவரும் மீட்பைப் பெறலாம் என்ற கருத்தை ஒரு வரலாற்று நிகழ்ச்சியாக, வரலாற்று வடிவத்தில் லூக்கா தருகிறாரேயொழிய வரலாற்றைத் தரவில்லை.

## கொலை செய்தல் (Kill)

இதைக்குறிக்க விவிலியத்தில் பல எபிரேய, கிரேக்கச் சொற்கள் பயன்பட்டுள்ளன. ஆனால் இச்சொல்லின் முதன்மையான பொருள் சட்டத்துக்கு மாறாகக் கொல்லுதலாகும்.

ஆறாவது கற்பனையில் வரும் எபிரேயச் சொல் (யாத் 20:13; உப 5:17; காண்க. எரே 7:9), முன்பே திட்டமிட்டுச் செய்யப்பட்ட கொலையைக் குறிப்பாகச் சுட்டவில்லை. ஆனால் அப்படிப்பட்ட கொலையைக் குறிக் கவும் பயன்பட்டுள்ளது (1 அர 21:19; யோபு 24:14; சங் 94:6; ஓசே 4:2; 6:9). "கொல்பவன்" (என் 35), "கொன்றுவிட்டவன்" (உப 4:42; 19:3 தொ; யோசு 20:3.5; 21:13) என்பன கொலை செய்யவேண்டும் என்ற எண்ணம் கொண்டவனையும் கொள்ளாதவனையும் குறிக்கின்றன. சட்டத்தின் காரணமாகவோ போரிலோ கொல்லுதலை இச்சொற்கள் குறிப்ப தில்லை. ஏனெனில் விவிலியக்காலத்தில் இவை ஏற்கப்பட்ட முறையாக இருந்தன. இவற்றைக் குறிக்க வேறு சொற்கள் பயன் பட்டன. ஆறாவது கற்பனை சட்டத்திற்கு மாறான கொலையையே தடைசெய்கிறது. சட்டப்படி கொல்வதையோ போரில் கொல் வதையோ தடைசெய்யவில்லை. இதே பொருளிலேயே புதிய ஏற்பாடும் இச்சொல் லைப் பயன்படுத்துகிறது (மத் 5:21; மாற் 10:19; உரோ 13:9).

### கொலைஞர், தண்டனை வழங்குவோர், தூக்கிலிடுபவர் (Executioner)

தூக்குத் தண்டனைத் தீர்ப்பை நிறைவேற் றும் கொலைஞன். எசே 9:1-இல் இச்சொல் ஒரு நகர அதிகாரியைக் குறிக்கிறது. போத்தி பார் பார்வோனின் அதிகாரிகளில் ஒருவரும் மெய்க்காப்பாளர் தலைவனுமாய் இருந்தார் (ஆதி 37:36; 40:3; எசே 39:9; தானி 2:14). இந்தப் மெய்க்காப்பாளர் தலைவன் கொலைஞனா கச் செயல்படலாம் (1 அர 2:25.35). தூக்குத் தண்டனையை நிறைவேற்றுபவர்களைக் குறிப்பதற்கென்று பழைய ஏற்பாட்டில் தனிச்சொல் இல்லை.

புதிய ஏற்பாட்டுப் பாலஸ்தீன நாட்டில், ஒருவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கும் உரிமை உரோமை அரச அதிகாரிகளையே சாரும். கொலைஞர் என்ற சொல் அநேக மாக அரசனின் மெய்க்காப்பாளர்களையே குறிக்கும். ஏனெனில் இதைக்குறிக்கும் கிரேக்கச் சொல்லுக்கு 'ஒற்றன்' அல்லது 'உளவாளி' என்று பொருள். இயேசுவைக் கொலை செய்தவர்கள் படைவீரர்களே (லூக் 23:47; யோவா 19:23).

### கொலோசை (COLOSSAE - தண்டனை)

இது தென்கிழக்கு சிறிய ஆசியாவில் உள்ள ஒரு நகரமாகும். கொலோசை என்பது கிரேக்க மொழியில் உள்ள பெயராகத் தோன் றினாலும் உண்மையில் அது பிரிகியப் பெய ராகும். மெயாண்டர் நதியின் உபநதியாகிய இலிக்கு நதியின் பள்ளத்தாக்கில் பண் டைக்காலப் பிரிகியாவின் தென்மேற்கே அமைந்துள்ளது இலிக்கு - பள்ளத்தாக்கு. அன்றைய நாளில் மேற்கிலிருந்து கிழக்காக ஒரு பொது வழியாக இருந்தது. இன்று சாராய்கோவ் என்ற இடத்திலிருந்து கிழக்கு வரை இரயில் பாதைகளும், சாலைகளும் இதேவழியில் போடப்பட்டுள்ளன. கொலோசை இருந்த இடம் துருக்கியில் இக்கால நகரமான தென்சிலிக்குக் கிழக்கில் 16 கி.மீ.தொலைவில் இருக்கிறது.

இலிக்கு மாவட்டத்தில் உள்ள மூன்று மாபெரும் கிறிஸ்தவ நகரங்களில், கொலோ சைதான் நகருக்குரிய ஓர் இடத்தைப்பெற்ற முதல் இடமாகும். எரோதோதசு இதைப் பிரிகியாவில் உள்ள பெரியநகரம் எனக் குறிப்பிடுகின்றார். அந்நாட்களில் அங்குப் பிரிகியர் என்ற மக்கள், அவர்களது சொந்த மொழியில் பேசி, பெரிய தேவதையை வழிபட்டுவந்ததாகத் தெரிகிறது. கி.மு. 401-இல் கொலோசை செழுமையான ஒரு பெரிய நகரமாக இளைய சைரசின் காலத் தில் இருந்ததாகச் செனபோன் குறிப்பிடுகின் றார். இதனின்று கிரேக்கர்களின் ஆட்சிக்கு முன் கொலோசை ஒரு பெரிய நகரமாக இலிக்கு பள்ளத்தாக்கில் இருந்ததாகத் தெரிகிறது.

உரோமையர் காலத்தில் கொலோசை ஆடை நெய்யும் தொழிலுக்குப் பெயர் பெற்ற தாக இருந்தது. பேரரசர்களின் காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்களும் கல்வெட் டுகளும் இந்த இடத்தின் முக்கியத்துவத் தைக் காட்டுகின்றன. கி.பி. 1835-இல்

பயணம் செய்த வில்லியம் கமில்டன் என்பவரால் இது அடையாளம் காட்டப்பட்டது. இவர் நதியின் இடப்புறம் அழிந்துபோன நகரத்தைக்காட்டி அங்குச் சலவைக்கல்லால் கட்டப்பட்ட கட்டடங்களும், ஒரு நாடக அரங்கும் இருந்ததற்கான அறிகுறிகள் இருப்பதாகக் கூறினார். நதியின் வடக்குப் பகுதியில் ஓர் இடுகாடும், பாறையில் வெட்டிக் கட்டப்பட்ட கல்லறைகளும் இருந்தன.

கொலோசையின் கிழக்குப் பகுதியில், ஆற்றின் வடகரையில் புனித மிக்கேலுக்கு ஓர் ஆலயம் கட்டப்பட்டுள்ளது. *12*-ஆம் நூற்றாண்டில் இவ்வாலயம் துருக்கியர்களால் அழிக்கப்பட்டது. *8*-ஆம் நூற்றாண்டில் கொலோசை நகரம் கைவிடப்பட்டு 5 கி.மீ. தெற்கே உள்ள சோனாய் என்ற இடத்தில் உள்ள மக்களுக்குக் கல்சுரங்கமாகப் பயன் பட்டது.

அகழ்வாய்வுகள் இங்கு நடத்தப்படவில்லை. இங்குக் கிடைத்த வாசகச்சான்றுகள் ஆராய்ச்சியாளர்களின் கவனத்தை ஈர்த்துள்ளன. நமக்குக் கிடைத்த வரலாற்று, தொல்பொருள் ஆதாரங்கள் புனித பவுல் கொலோசையருக்கு எழுதிய திருமுகத்தில் குறிப்பிடுகின்ற இதன் முக்கியத்தை எடுத்துக்காட்டப் போதியவையாக இல்லை.

இலிக்கு - பள்ளத்தாக்கின் மூன்று முக்கிய கிறிஸ்தவ நகரங்களில் (திருவெளி *3:14*) ஏராப்பொலியிலிருந்து 21 கி.மீ. தொலைவிலும் இலவோதிக்கேயாவிலிருந்து 19 கி.மீ. தொலைவிலும் உள்ள கொலோசை புதிய ஏற்பாட்டுக் காலத்தில் நன்கு நிறுவப்பட்டிருந்தது. இங்குள்ள திருச்சபை எப்பப்பிராவால் நிறுவப்பட்டதாகப் பொதுவாகக் கருதப்பட்டது (கொலோ 1:7, *4:12*). இத்திருச்சபைக்குப் பவுல் ஒரு திருமுகத்தை எழுதினார் *(1:2)*. இத்தலத்திருச்சபையைச் சேர்ந்த சிறப்புப்பெற்றவர்கள் அர்க்கிப்பு *(4:17;* பில *2)*, ஒனேசிமு மற்றும் அவரது தலைவர் பிலமோன் (கொலோ *4:8-9;* பில 10 தொ.) ஆகியோராவர்.

**கொலோசையருக்குத் திருமுகம்** *(Letter to the COLOSSIANS)*

I. **முன்னுரை:-** ''சிறைக்கூட மடல்கள்'' என்றழைக்கப்படும் திருமுகங்களில் இதுவும் ஒன்று. இதைப் பவுல்தான் எழுதினாரா என்பதுபற்றி இக்காலத்தில் பலத்த கருத்து வேறுபாடுகள் உண்டு. ஆயினும் புதிய ஏற்பாட்டின் திருமுறைப் பட்டியலில் பன்னிரண்டாவது இடத்தைப் பெற்றுள்ளது. இத்திருமுகம் வளர்ச்சியடைந்த நிலையில் கிறிஸ்து இயல் போதகம் *1:15-20*-இல் வரும் பாடலில் நமது கவனத்தை ஈர்க்கிறது. கலப்பு மதக்கோட்பாட்டுக்கு ஆசிரியர் மறுப்புரை தருகிறார். எபேசியர் திருமுகத்திற்கு இது முதன்மையான மூலமாக அமைகிறது.

II. **கொலோசை நகர் வரலாறு:-** காண்க கொலோசை.

III. **கொலோசைத் திருச்சபை:-** இந்நகரின் பெரும்பான்மையான மக்கள் புற இனத்தவராவர். இங்கு ஒரு யூதக் குடியிருப்பு இருந்திருக்கலாம். இங்குத் தோன்றிய திருச்சபையைப் பவுல் உருவாக்கவில்லை (கொலோ *2:1*). இங்கு நற்செய்தியைப் பரப்பியவர் இந்நகரைச் சேர்ந்த *(4:12)* எப்பப்பிரா ஆவார் *(1:7)*. இவர் பவுல் எபேசில் தங்கியிருந்தபோது அவரால் மனந்திருப்பப்பட்டவர் (அ.ப. 19). இவர் பவுலால் தூதராக அனுப்பப்பட்டோ, சொந்த ஆர்வத்தால் இயக்கப்பட்டோ, தனது நகர் மக்களுக்கு நற்செய்தியை அறிவித்துத் திருச்சபையை நிறுவினார் என்று கூறலாம் *(4:12;1:2)*.

கொலோசைத் திருச்சபையில் புறவினத்தாரே அதிகம் இருந்தனர் *(1:27;2:13)*. மடலின் பிற்பகுதியில் *(3:5:7)* புறவினத்தாருக்கே உரிய பாவச் செயல்களைப்பற்றி மடல் பேசுகிறது. தவறான யூதக்கொள்கைகளுக்கு எதிராக ஆசிரியர் அறிவுரை அளிப்பது *(2:16)*, யூதர்களும் இங்கு இருந்தனர் என்பதைச் சுட்டுகிறது.

இவர்கள் கிறிஸ்துவை அறிந்து, அவரின் நற்செய்தியை ஏற்று *(1:6)* அவரில் தங்களது

விசுவாசத்தை வளர்த்துக் கொண்டனர் (1:5). இறையன்பிலும் பிறரன்பிலும் சிறந்து விளங்கினர் (1:8). இவர்களது பழைய வாழ்வு மறைந்து புதிய ஒழுங்குமுறையும் உறுதியான விசுவாசமும் இவர்களிடையே வேரூன்றியிருந்தது (2:5). கிறிஸ்தவ வாழ்வு வளர்ச்சியுற்ற இச்சமூகத்திலும் சில தவறு கள் தலையெடுக்கத் தொடங்கியிருந்தன (2:8). நடைமுறையில் இத்தவறுகள் பல தவறான பழக்க வழக்கங்களுக்கு இட்டுச் சென்றன (2:16). சபையின் கிறிஸ்தவ ஒழுக் கத்தைச் சீர்குலைப்பனவாகவும் அமைந் திருந்தன (3:5). இத்தவறுகளையும் அவற்றின் பின் விளைவுகளையும் எப்பப்பிராவின் வழியாகக் கேட்டறிந்த பவுல், கிறிஸ்தவ விசுவாசத்தில் சீரிய முறையில் வளர்ந்த கொலோசையக் கிறிஸ்தவர்கள் தவறான கொள்கைகளில் மயங்கித் தங்களது விசுவாசத் தைப் பாழ்படுத்திவிடக்கூடாது என்று விரும்பி இம்மடலை எழுதினார் எனலாம்.

IV. **கொலோசைத் திருச்சபையில் நிலவிய தவறுகள்:-** இவைபற்றி இம்மடலில் காணப்படும் குறிப்புகளிலிருந்தே நாம் அறி கிறோம். ஆகவே இவற்றைத் துல்லியமாக விவரிக்கமுடியாது.

கொலோசைத் திருச்சபையில் யூதர்களும் புறவினத்தாரும் இணைந்தே வாழ்ந்து வந்த னர். இவர்கள் கிறிஸ்தவ விசுவாசத்தை ஏற் றுக் கொண்டாலும், தங்கள் பழைய வாழ்க்கை முறையிலிருந்து உடனடியாக விடுபடமுடியவில்லை. காலப்போக்கில் பழைய யூத, புறவின ஆசார முறைகள் கிறிஸ்தவ வாழ்விலும் வழிபாட்டிலும் புகத் தொடங்கின. அதன் விளைவாகப் பல தவ றான கோட்பாடுகள் இத்திருச்சபையில் இடம்பெறத்தொடங்கின.

நடைமுறை வாழ்க்கையில் விருத்த சேத னம் (2:11), உணவு முறைகள் (2:16), முழு நிலவு பார்த்தல் போன்ற காலக்கணிப்புகள் (2:10) போன்ற பல யூதச் சடங்குகள் கிறிஸ் தவ யூதர்களின் வாழ்க்கையிலும் இடம் பெற்றன (2:16;21). கொள்கையளவில் யூதர் கள் வானதூதர்பால் கொண்டிருந்த கருத்துக் களும் கொலோசைத் திருச்சபையைப் பாதித் தன. இத்தூதர்கள் தங்கள் ஆற்றலால் மனி தனை அடிமைப்படுத்தி வந்ததாக யூதர்கள் கருதினர். ஆகவே இவர்கள்பால் யூதர்கள் ஒருவித அச்சம் கொண்டிருந்தனர். ஆகவே துன்பம் தவிர்க்க இந்த வானதூதர்களின் துணையை மனிதன் நாடவேண்டியிருந்தது. இக்கொள்கையின் விளைவாகக் கொலோ சைத் திருச்சபையில் மீட்பில் கிறிஸ்துக்கு அளிக்கப்பட்ட தனிச்சிறப்பான இடையா ளர் கோட்பாட்டைப் பாதிக்கும் அளவுக்கு இத்தூதர்களுக்கு மிக முக்கியத்துவம் அளிக் கப்பட்டதாகத் தெரிகிறது (1:16; 2:10). மேலும் எஸ்ஸேனிய யூத சமூகத்தினர் கடுந் தவம் புரிந்து, மணவாழ்வையே வெறுக்கு மளவுக்கு ஆன்மீகவாழ்வில் அக்கறைகாட்டி னர். இவர்களுடைய கோட்பாடுகளும் கொலோசைத் திருச்சபையினரைக் கவர்ந்த தாகத் தெரிகிறது (2:23).

யூதர்களிடையே நிலவிய சில கோட்பாடு கள் கொலோசைத் திருச்சபையைப் பாதித்தது போல், புறவினத்தாரின் சில கோட்பாடு களும் இத்திருச்சபையைப் பாதித்ததாகத் தெரி கிறது. இவற்றில் ஒன்று, ''உலகின் பூதங்கள்'' அல்லது வானதூதர்கள்மேல் கொண் டிருந்த விசுவாசமாகும். உலகம் இப்பூதங்க ளின் பிடியில் இருந்தது (2:8:20). இவை கடவுளுக்கும் உலகிற்கும் இடைப்பட்டவை யாகும். ஒவ்வொன்றும் கடவுளின் முழுமை யில் ஒரு பகுதியைக் கொண்டிருந்தது (1:19:2:9). இவையே படைப்பிற்குக் கார ணம் (1:15-17). இவை உலகின் பல்வேறு பகுதிகளையும், மனிதரின் ஊழலையும் தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டிருந்தன. இந் நிலையில் மனிதனின் முக்கியமான அலுவல் தனது ஊழலைக் கண்டுணர்ந்து, அதற்கேற்ற வாறு தன் வாழ்க்கையை அமைத்துக் கொள் வதாகும்.

இந்த யூத, புறவினக் கோட்பாடுகளின் கலப்பு கொலோசைக் கிறிஸ்தவர்க ளிடையே பல விளைவுகளை உண்டுபண்ணி யது. இவற்றால் பாதிக்கப்பட்டவர்கள்,

இந்த மறைந்த, சக்திவாய்ந்த உயிர்கள் பற்றியும், இவைகள் கட்டுப்படுத்திய உலகில் இவைகளின் ஆற்றல்பற்றியும் வெளிப்படுத்தப்பட்ட ஞானம் அல்லது அறிவு தேவை என்றுணர்ந்தனர். இவைகளின் பெயர்கள், அலுவலர்கள், எப்படி இவைகளுக்குப் பரிகாரம் செய்ய வேண்டும் என்பவை பற்றி அறிவது மிகவும் முக்கியமாகும். மனித ஊழ் இவைகளின் கட்டுப்பாட்டில் இருந்ததால், ஒருவகை ஒழுக்கக்கட்டுப்பாட்டைக் கடைப்பிடிப்பது அவசியமாகும். உ-ம். சில காரியங்களுக்குச் சாதகமான அல்லது பாதகமான நாட்களை அறிந்து கடைப்பிடித்தல். இதுபோன்று, இந்தப் பாதகமான பூதங்களின் கட்டுப்பாட்டின்விளைவாக எந்தக் காரியங்களும் பொருட்களும் தடைசெய்யப்பட்டிருந்தன. சாதகமான பூதங்களின் ஆற்றல், எந்தக் காரியங்கள் நல்லவை என்பவை பற்றி அறிந்திருப்பது மிக முக்கியமாகும். அதுவே மீட்படைய வழி *(2:23)*.

இந்த இரகசிய அறிவைப்பெற சமய வழிபாடுகளில் பங்குகொண்டனர் *(1:10)*. இந்தக் கலப்புத் தவறுகள் மக்களிடையே பல தவறான கருத்துகளுக்கும் நடைமுறைக்கும் வழிகோலின. விரைவில் உலகின் பூதங்களும் வானதூதர்களும் இணைக்கப்பெற்றனர். இவர்கள் நாடுகளின் ஏற்றத்தாழ்வுகளை நிர்ணயிப்பதாகவும் இயற்கை விதிகளைக் கட்டுப்படுத்துவதாகவும் கருதப்பட்டனர். கடவுள் தன்மையும் இவர்களுக்கு வழங்கப்பட்டது. இவர்கள் வழிபாடும் வணக்கமும் பெற்றனர். கிறிஸ்துவினால் வரும் மீட்பு நிறைவற்றதுபோல், இப்பூதங்களின் உதவியை மக்கள் நாடினர். இவைகளைப் போன்றவரே கிறிஸ்துவும் என்ற எண்ணம் மக்களிடையே பரவியது. இது அவர்களின் ஒழுக்க வாழ்வையும் பாதித்தது *(2:23; 3:5)*.

இத்தகைய கலப்புத்தவறுகளை எதிர்த்துக் கொலோசையர் திருமுகம் எழுதப்பட்டது. அதன் நேரடிப்போதகத்தைப்பின்பு பார்ப்போம்.

V. **எழுதியவர் யார்?** இந்த மடலைப் பவுல்தான் எழுதினாரா? ஆதித்திருச்சபையில் இக்கேள்வி எழவில்லை. புனித இரேனேயு (2ஆம் நூற்றாண்டு) இந்நூல் திருமுறைப்பட்டியலைச் சேர்ந்ததாக ஏற்றுக்கொண்டார். முராத்தோரியன் பட்டியலும் மார்சியனின் பட்டியலும் இந்நூல் பவுலால் எழுதப்பட்டது என்று ஏற்றுக்கொண்டன.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் திருமறை நூல் ஆய்வுகள் அறிவியல் முறையில் தொடங்கிய காலத்தில், ஆய்வாளர்கள் சிலர் இந்நூலைப் பவுல் எழுதவில்லை என்று கூறி அதற்கு ஆதாரங்கள் காட்ட முயன்றனர். இவர்கள் காட்டிய காரணங்கள் மடலின் மொழிநடையையும், கருத்து வளர்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டவையாகும்.

மொழிநடையைப் பொருத்தமட்டும், இந்நூல் கரடுமுரடான, வளவளவென்ற நடையைக்கொண்டுள்ளது. பவுல்தான் எழுதினார் என்று உறுதியாகக் கூறவல்ல நூல்களிலிருந்து சொற்றொகுதியில் இந்நூல் வேறுபடுகிறது. 34 சொற்கள் புதிய ஏற்பாட்டிலேயே இந்நூலில்தான் காணப்படுகின்றன. பிற பவுலின் நூல்களில் காணப்படாத 28 சொற்கள் இந்நூலில் காணப்படுகின்றன. இந்நூல் 10 சொற்களை எபேசியரோடுமட்டும் பொதுவாகக் கொண்டுள்ளது. கொலோசையரிலும் எபேசியரிலும் காணப்படும் 15 சொற்கள் புதிய ஏற்பாட்டில் வேறெங்கும் காணப்படவில்லை. பவுலின் பிற நூல்களில் பயன்படும் ஏற்புடைமை, விசுவசித்தல், சட்டம், மீட்டல் போன்ற அவருக்கே உரிய கலைச் சொற்கள் கொலோசையரில் காணப்படவில்லை. அவரால் எழுதப்பட்டது என உறுதியாகக் கருதப்படும் மடல்களில் காணப்படும், ''சகோதரர்களே, என் சகோதரர்களே'' என்ற அழைப்புச் சொற்கள் *(உரோ 1:13;1 கொரி 1:10;2 கொரி 1:8;கலா 1:1 1)* இந்நூலிலோ எபேசியரிலோ காணப்படுவதில்லை. ஆவியைப் பற்றிய குறிப்புகள் இந்நூலில் அதிகம் இல்லை எனலாம். மடலின் போக்கும் வேறுபடுகிறது (உரோமையர் கலாத்தியரில் காணப்படும் வாதப்போக்குக்கு மாறாக வழிபாட்டுப் பாடல் போக்கு காணப்படுகிறது). வழிபாட்டைச் சார்ந்த

பகுதிகள் இடையிடையே செருகப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. சில பகுதிகள் மிகக் கடினமானவையாகும்; மற்றும் சிலபகுதிகள் கருத்துச் செறிவுகொண்டு ஆழமிக்கவையாக உள்ளன. ஆகவே இவ்வாறு நடையிலும் போக்கிலும் பவுலின் பிற நூல்களிலிருந்து வேறுபடும் இந்நூலுக்குப் பவுல் ஆசிரியராக இருக்கமுடியாது.

வேறுசிலர் கருத்துவளர்ச்சி அடிப்படையில் இந்நூலைப் பவுல் எழுதியிருக்க முடியாது என்பர். இம்மடலில் காணப்படும் இறையியல் அதிகம் வளர்ச்சி பெற்றதாகத் தெரிகிறது. குறிப்பாக இந்நூலில் காணப்படும் கிறிஸ்துஇயல், திருச்சபை பற்றிய போதகம், இறுதிக்கால இயல் ஆகியவை, பவுலின்பிற மடல்களிலிருந்து வளர்ச்சியுடைய வேறுபாடுகளைக் கொண்டுள்ளன.

இந்நூலைப் பவுல் எழுதியிருக்கமுடியாது என்பதற்கு மற்றொரு காரணம் காட்டப்படும். இந்நூலில் ஆசிரியர் எதிர்த்துப் போராடும் தவறுகள் ஞானவாதக் கொள்கையின் பண்புகளைக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இக்கொள்கை கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வளர்ச்சியுற்ற ஒரு கொள்கையாகும். பவுல் இறந்ததோ கி.பி. 68ஆம் ஆண்டு. ஆகவே பவுல் இந்நூலை எழுதியிருக்க முடியாது.

மேற்கூறப்பட்ட காரணங்களைக் கூறுபவர்கள் புகழ்பெற்ற பெரும் ஆய்வாளர்கள். ஆயினும் இந்நூலைப் பவுல்தான் எழுதினார் என்பதற்குப் பின்வரும் காரணங்களைக் கூறலாம். திருச்சபையின் தொடக்க காலப் பாரம்பரியம் இதற்குச் சான்று கூறுகிறது. மேலும் இந்நூலுக்குச் சிறப்பான முறையில் உரிய சொற்கள் பாரம்பரியப்பாடலிலும் *(1:15-20)*, வாதப்பகுதியிலும் *(2:6-23)* காணப்படுகின்றன. தவறுகளை எதிர்த்துப் போராடும்போது, பவுலுக்குத் தவறுகளைப் போதித்தவர்களின் சொற்றொகுதிகளைப் பயன்படுத்த வேண்டியிருந்தது எனலாம். ஆகவே பவுல் புதிய சொற்றொகுதிகளைப் பயன்படுத்துகிறார்.

கருத்து வளர்ச்சியைப் பொருத்தமட்டும், பவுல் தனது முக்கிய பாடல்களை எழுதிய காலத்திற்கும் இம்மடல் எழுதப்பட்டிருக்கக் கூடிய காலத்திற்கும் இடையே குறைந்தது நான்கு ஆண்டுகளாவது கடந்துவிட்டிருந்தன. இக்காலத்தில் பவுலின் இறையியல் கருத்துக்கள் வளர்ச்சியுற்றிருக்கலாம். இவ்ற்றை இந்நூலின் போதகத்தைப் பற்றிக் கூறும்போது பார்ப்போம். மேலும் இவ்வளர்ச்சி பவுலின் சிந்தனைக்குக் கிரியாவூக்கியாக அமைந்த புதிய தவறுகளுக்குப் பதிலாக அமைந்திருக்கலாம்.

ஞான வாதத் தவறுகள் அவற்றின் வளர்ச்சியுள்ள நிலையில் கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாயினும், அவை முதல் நூற்றாண்டிலேயே தோன்றத் தொடங்கின. இந்தத் தொடக்கநிலை ஞானவாதத் தவறுகளுக்கு எதிராகக் கொலோசையர் அமைந்திருக்கிறது எனலாம்.

இந்நூலைப் பவுல்தான் எழுதினார் என்பதற்கு உண்மையிலேயே பவுல்தான் எழுதினார் என்று ஏற்றுக்கொள்ளப்படும் பிலமோனுக்கு எழுதப்பட்ட திருமடலோடு இந்நூல் கொண்டிருக்கும் ஒப்புமை ஒரு வலுவான சான்றாக அமைகிறது. இரண்டு மடல்களிலும், எப்பப்பிரா, அரிஸ்தர்க்கு, மாற்கு, லூக்கா, மற்றும் தேமா ஆகியோர் வாழ்த்துச் செய்தி அனுப்புகின்றனர் *(கொலோ 4:10 தொ;பில 23 தொ)*. இரண்டிலும் ஒனேசிமுவை அனுப்புவதைப் பற்றிய குறிப்பு உள்ளது. *(கொலோ 4: 4; பில 12)*; இரண்டும் அர்க்கிப்புவுக்குச் செய்தி அளிக்கின்றன *(கொலோ 4:17; பில 2)*.

ஆகவே பவுல்தான் இம்மடலை எழுதினார் என்று ஏற்றுக்கொள்வது சாலச்சிறந்தது. ஆனால் இக்கால ஆய்வாளர்களில் பெரும்பாலோர் முன்பு கூறப்பட்ட காரணங்களுக்காக, இம்மடலைப் பவுல் எழுதவில்லை என்பர். பவுல்தான் இம்மடலை எழுதினார் என்பவர்களில் சிலர், இந்நூல் பல இடைச்செருகல்களைக் கொண்டுள்ளது என்பர். ஒருசிலர் இந்நூல்லைப், பவுலும்

திமொத்தேயுவும் சேர்ந்தோ, அவரது சீடர்களோ எழுதினார் என்று கருதுவர்.

VI. **நூல் தோன்றிய இடமும் காலமும்:-** பவுல் சிறையில் இந்நூலை எழுதினார் (*கொலோ 4:3.18;1:24*). சிறை வாழ்வு பவுலுக்கு அடிக்கடி நேர்ந்த ஒன்றாகும். ஆகையால் இக்குறிப்பு இந்நூல் தோன்றிய இடத்தையும் காலத்தையும் கணிக்கப் போதுமானதன்று. நூலில் காணப்படும் கிறிஸ்து இயல் வளர்ச்சி, இந்நூல், 1-2 கொரி, உரோ, கலா ஆகிய திருமுகங்களுக்குப்பின் எழுதப்பட்டிருக்கவேண்டும் என்று சுட்டுகிறது.

பவுல் சிறையிலிருந்து இம்மடலை எழுதியதால், செசரியாவிலிருந்தோ, எபேசிலிருந்தோ, உரோமையிலிருந்தோ, இம்மடல் எழுதப்பட்டிருக்கலாம் என்பர் அறிஞர்கள்.

செசரியா நகரில் பெலிக்சு என்னும் உரோமை ஆளுநரின் கீழ்ப் பவுல் ஏறக்குறைய இரு ஆண்டுகள் சிறைப்பட்டிருந்தார் (*அ.ப.24:27*). அப்பொழுது அவர் இம்மடலை எழுதியிருந்தால் மாற்கு, ஒனேசிமு ஆகியோரைப்பற்றி எழுதியிருக்க வாய்ப்பில்லை (*கொலோ 4:9-10*). ஆசியாவில் நற்செய்திப்பணி செய்து கொண்டிருந்த மாற்கு திடீரென்று செசரியாவில் தோன்றியிருக்கமுடியாது (*அ.ப.15:39*). தன் உற்ற உடன்உழைப்பாளரான பிலிப்புவைக் (*21:8*) குறிக்காமல் இருந்திருக்கமாட்டார். ஒனேசிமு தன்தலைவனிடமிருந்து வரவிரும்புவதாகப் பவுல் எழுதியிருக்கமுடியாது (*பில 22*); ஏனெனில் தன் தீர்ப்புக்காகச் செசரியாவிலிருந்து உரோமைக்குச் செல்ல வேண்டியிருந்தது (*அ.ப.23:11*). நற்செய்தியைப் போதிக்கப் பவுல் ஓரளவு சுதந்தரம் கொண்டிருந்ததாகத் தெரிகிறது (*கொலோ 4:3-4*). இந்நிலை செசரியாவில் இருந்திருக்கமுடியாது. ஏனெனில் அவரைக் கொல்ல அவரது எதிரிகள் சூழ்ச்சி செய்தனர் (*அ.ப. 23:12*) என்று அறிகிறோம். இக்காரணங்களுக்காக இம்மடல் செசரியாவில் எழுதப்பட்டிருக்க முடியாது என்று அறிஞர்கள் பெரும்பாலானோர் கருதுவர்.

இம்மடலை எபேசுப் பணியின் இறுதியில் பவுல் எழுதியிருக்கலாம் என்று அறிஞர் பலர் கருதுகின்றனர். தனது மூன்றாம் மறைபரப்புப் பயணத்தின்போது எபேசு நகரிலிருந்து தனது சுற்றுப் பயணங்களை மேற்கொண்டார். அப்போது திமொத்தேயு அவருடன் இருந்தார் (*அ.ப. 19:22; கொலோ 1:2*). கொலோசை அருகில் இருந்ததால், எப்பப்பிராவும் ஒனேசிமுவும் பவுலிடம் சென்று வருவது எளிதாகும் (*கொலோ 4:9*). பவுல் எபேசில் பலவாறு துன்பப்பட்டார் என்று அறிகிறோம் (*2 கொரி 1:8-10*). ஆனால் சிறையிலிருந்தார் என்று எந்தக் குறிப்புமில்லை. பவுல் எபேசின் சிறையிலிருந்து இம்மடலை எழுதினார் என்று கொண்டால், நற்செய்தியாளரான லூக்கா பவுலோடு இருந்திருக்க முடியாது. ஏனெனில் பவுல் ஆசியாவில் தங்கி நற்செய்திப் பணி செய்ததைப் பற்றி எழுதிய லூக்கா (*அ.ப. 16:17-20: 5*) இப்பகுதியில் மட்டும் தன்னையும் சேர்த்து ''நாம்'' என்று குறிப்பிடுவதில்லை. ஆனால் பவுல் கொலோசையருக்கு மடல் எழுதிய போது லூக்கா அவரோடு இருந்தார் (*கொலோ 4:14*). ஆகவே இம்மடல் எபேசிலிருந்து எழுதப்பட்டிருக்க முடியாது. மேலும் இங்கு இம்மடல் எழுதப்பட்டிருந்தால், அதில் காணப்படும் போதக வளர்ச்சியை விளக்குவது கடினம்.

இம்மடலை உரோமைச் சிறையிலிருந்து பவுல் எழுதினார் என்பது பலருடைய கருத்து. இதுவே பாரம்பரியக் கருத்தும் ஆகும். பவுலின் உரோமைச் சிறைவாழ்வைப்பற்றித் (*அ.ப. 28:16-31*) தெளிவாக எடுத்துக்கூறுகிறார். எபேசியர், கொலோசையர், பிலமோன் ஆகியோருக்கு எழுதப்பட்ட மடல்கள் பவுலின் மற்ற மடல்களிலிருந்து நடையிலும் மொழியிலும் வேறுபட்டவை; கருத்து வளர்ச்சியுடையவை. ஆகவே, பவுலின் பெரிய மடல்கள் என்றழைக்கப்படும் உரோமையர், கொரிந்தியர், கலாத்தியர் ஆகியோருக்கு எழுதப்பட்ட மடல்களுக்குப் பல்லாண்டுகளுக்குப் பின்னே இம்மடல் எழுதப்பட்டிருக்கலாம். பிலமோனுக்கு எழுதும் போது, பவுல் தன்னையே ''வயது சென்ற

வன்'', ''கைதி'' என்று குறிப்பிடுகிறார் (பில 9). வயது முதிர்ந்த கைதியாகப் பவுல் உரோமைச் சிறையில்தான் இருந்திருக்க வேண்டும். தன் தலைவனிடமிருந்து ஓனேசிமு வாய்ப்புகள் மிகுந்த உரோமையில்தான் தஞ்சம் புகுந்திருக்கக்கூடும். உரோமையில்தான் சிறையிலிருந்து நற்செய்தியைப் போதிக்கப் பவுலுக்கும் போதிய வாய்ப்பிருந்தது (அ.ப.23:12; கொலோ 4:3-4). ஆகவே கொலோசையருக்குப் பவுல் எழுதிய மடலையும், எபேசியர், பிலமோன் ஆகியோருக்கு எழுதிய மடல்களையும் உரோமையிலிருந்தே பவுல் எழுதியிருக்கவேண்டும் என்பர் அறிஞர் பலர். இம்முடிவை நாமும் ஏற்கலாம்.

பவுலின் முதல் உரோமைச் சிறைவாசம் கி.பி. 61-63-இல் நடந்தது என்று கணிக்கப்படுகிறது (அ.ப. 28:30). அப்போது பவுல் கொலோசையர், எபேசியர், பிலமோன் ஆகியோருக்குத் தன் மடல்களை வரைந்திருக்க வேண்டும்.

VII. **மடலின் திட்டம்:**

1. முன்னுரை: (1:1-14).
   - *1:1-2* : வாழ்த்து.
   - *1:3-8* : நன்றிகூறல்.
   - *1:9:14* : மன்றாட்டு.
2. போதனைப் பகுதி: படைப்பு முழுவதிலும் திருச்சபையிலும் கிறிஸ்துவின் முழுமுதன்மையும் மேன்மையும் (1:15-2:3).
   - *1:15-20* : கிறிஸ்துவின் மேன்மை. பாடல்.
   - *1:21-23* : மீட்பில் கொலோசையர் பங்கு.
   - *1:24-2:3* : இம்மறையுண்மையை அறிவிப்பதில் பவுலின் பங்கு.
3. வாதப்பகுதி: தவறான கொள்கைகள் பற்றி எச்சரிக்கை (2:4-34 3:4).
   - *2:4-7* : உண்மை விசுவாசத்தில் நிலைத்து நிற்றல்.
   - *2:8-15* : நற்செய்தியும் போலி ஞானமும்.
   - *2:16-23* : கிறிஸ்தவ சுதந்தரம்; போலித்தவம்.
   - *3:1-4* : உயிர்த்த கிறிஸ்து புதுவாழ்வுக்கு ஊற்று.
4. அறவுரைப் பகுதி: கிறிஸ்துவில் புது வாழ்வு (3:5-4:1).
   - *3:5-17* : கிறிஸ்துவில் வாழ்வுக்குப் பொதுவிதிகள்.
   - *3:18-4:1* : குடும்ப வாழ்க்கை.
5. முடிவுரை (4:2-18).
   - *4:2-6* : இறுதி அறவுரை.
   - *4:7-9* : தன்னைப் பற்றிய செய்திகள்.
   - *4:10-18* : இறுதி வாழ்த்து.

VIII. **போதகம்:** இம்மடல், கிறிஸ்து இயல், இறுதிக்கால இயல், திருச்சபை இயல் ஆகிய தலைப்புகளில் கருத்து வளர்ச்சியைக் காட்டுகிறது. இவற்றை எடுத்துக் கூறும்போது, அதற்கு முந்திய மடல்களோடு ஒப்புமையும் சுட்டிக்காட்டப்படும்.

**1. கிறிஸ்து இயல்:-** இது கொலோ 1:15-20-இல் வரும் பாரம்பரியப் பாடலை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது. இதன்படி, கிறிஸ்து ''கட்புலனாகாக் கடவுளின் சாயல் (1:15; காண்க. 2 கொரி 4:4); படைப்புக்கெல்லாம் தலைப்பேறானவர் (1:15; உரோ 8:29); அனைத்துக்கும் முன்பே உள்ளவர் (1:17). அவரே ஆதியானவர் (1:18). இறந்தோரினின்று பிறந்த தலைப்பேறானவர் (1:18); அவரிலேயேதான், அவராலேயே, அவருக்காகவே அனைத்தும் உண்டானது (1:16). முழுநிறைவும் அவரில் குடிகொண்டுள்ளது (1:19; எபே 3:19); அவர் வழியாகவே எல்லாம் ஒப்புரவாக்கப்படுகின்றன (1:20. உரோ 5:10: 2 கொரி 5:18-19). திருச்சபையாகிய உடலுக்குத் தலையும் அவரே'' (1:18; எபே 1:22;4:15; 5:23). இத்தலைப்புக்கள் மடல் முழுவதும் விவரிக்கப்படுகின்றன. பவுல்தான் எழுதினார் என்று உறுதியாகக் கருதப்படும் மடல்களோடு ஒப்புமையில்லாத கிறிஸ்துஇயல் கூற்றுக்கள் இம்மடலில் காணப்படுகின்றன. கிறிஸ்துவே இறை

வனின் மறையுண்மை (1:27;2:2-3); கிறிஸ்து வோடு விசுவாசிகளும் உயிர்த்தெழுந்துள்ளனர் (2:12); கிறிஸ்து பாவங்களை மன்னிக்கிறார் (1:13-14; 3:13; எபே 1:7). தமது சிலுவை மரணத்தால், உலகைக் கட்டுப்படுத்துவதாகக் கருதப்பட்ட தலைமை ஏற்போர், அதிகாரம் தாங்குவோர் முதலிய தூதர்களின் படைகளைக் கிறிஸ்து வெற்றிகொள்கிறார் (2:15). ஆயினும் பவுலுக்கே உரியதெனக்கருதப்படும் சில கிறிஸ்துஇயல் கருத்துகளும் இம் மடலில் காணப்படுகின்றன. கிறிஸ்துவே இறைமகன்; அவரில் விசுவாசிகள் மீட்புப் பெறுகின்றனர் (1:13-14; உரோ 3:24; 1 கொரி 1:30). திருமுழுக்கில் கிறிஸ்துவோடு விசுவாசிகள் புதைக்கப்படுகின்றனர் (2:12; உரோ 6:4). கடவுளின் வலப்புறத்தில் கிறிஸ்து அமர்ந்திருக்கிறார் (3:1; உரோ 8:34).

இந்த வளர்ச்சியடைந்த கிறிஸ்து இயலுக்குப் பழைய ஏற்பாட்டு ஞானநூல்கள் மூலமாக அமைந்திருப்பதாகத் தெரிகிறது. இவ் வளர்ச்சிக்கு ஒருங்கமைவும் ஒற்றுமையும் அளிப்பது கிறிஸ்துவையும் இறைஞானத்தையும் ஒன்றாக்குவதாகும். முழு அண்டமும், தொடக்கத்திலிருந்து, இறைவனது ஞானத்தால் படைக்கப்பட்டு நடத்தப்படுகிறது. இப்போது அந்த ஞானம் கிறிஸ்துவில் முழுமையாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது (கொலோ 1:15-20). கிறிஸ்துவே அந்த இறைஞானம் என்ற அளவில் அவரே, நிறைவான பொருளில், எல்லாப் பொருட்களின் ''ஆதியாவார்''; தொடக்கமாவார் (1:18). ஞானமாக எல்லாம் அவரில் உள்ளன. இதன் விளைவாகப் படைப்பிலும், மறுபடைப்பிலும் அவரது பாகம் அண்டப்பண்புடையது.

**2. இறுதிக்கால இயல்:-** பிறமடல்களில் கிறிஸ்துவின் இரண்டாம் வருகையையும், உலக இறுதிக் காலத்தையும் உடனடி எதிர்காலத்தில் பவுல் எதிர்பார்த்தாகத்தெரிகிறது. (1 தெச 4:15; 5:23; 1 கொரி 7:26). இந்த எதிர்பாார்ப்பிலோ ஒருவிதத் தளர்ச்சி கொலோசையரில் காணப்படுகிறது. இம்மடலில் வரும் இறுதிக்கால இயலை ஏற்கெனவே நேர்ந்துவிட்ட இறுதிக்கால இயல் என்று அறிஞர்கள் விவரிப்பர். வருங்காலத்தில் கிறிஸ்து மீண்டும் வருவார் என்ற கருத்து கொலோ 3:4-இல் காணப்படுகிறது. ஆனால் விசுவாசிகள் ''மேலுலகில் உள்ளவற்றை'' நிகழ்கால உண்மைகளாக ஆக்க ஊக்குவிக்கப்படுகின்றனர் (3:1-2). பவுலால்தான் எழுதப்பட்டவை என்று உறுதியாகக் கருதப்படும் மடல்களில் உயிர்ப்பு ஒரு வருங்கால எதிர்பார்ப்பாய் விவரிக்கப்படும்போது (1 கொரி 6:14; 2 கொரி 4:14) இம்மடலின்படி விசுவாசிகள் ஏற்கெனவே இறந்தோரிடமிருந்து கிறிஸ்துவோடு உயிர்த்தெழுந்துவிட்டார்கள் (2:12;3:1). பவுலின் பிறமடல்களில் நம்பிக்கை விசுவாசியினுள் உள்ளது; எதிர்காலத்தை நோக்கியுள்ளது (உரோ 5:2;8:24; 2 கொரி 1:10; கலா 5:5). கொலோசையரில் நற்செய்தியில் அடங்கியுள்ள நம்பிக்கையும் (1:23), மறை உண்மையும் (1:27) ஏற்கெனவே வானகத்தில் விசுவாசிகளுக்கென வைக்கப்பட்டுள்ளன (1:5). இறுதிக்கால இயல்பற்றிக் கொலோசையருக்கும் பவுலின் மற்ற மடல்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடு திருமுழுக்குப்பற்றிய இறையியல் வேறுபாட்டின் விளைவாகும். உரோ 6:1-4-இல் திருமுழுக்கு வருங்காலத்தை முன்னோக்குகிறது. இதற்கு மாறாகக் கொலோசையரில் திருமுழுக்கு முடிக்கப்பெற்ற மீட்பைப் பின்னோக்குகிறது. திருமுழுக்கில் விசுவாசிகள் கிறிஸ்துவோடு மரிப்பதோடு, உயிர்த்தெழுந்தும் விட்டனர்.

விசுவாசிகள் கிறிஸ்துவில் ''மகிமையின் நம்பிக்கையைக்'' கொண்டுள்ளனர் (1:2). இந்த ஒன்றிப்பின் பேரொளியின் வெளிப்பாடு வருங்காலத்தைச் சேர்ந்ததாகும் (3:4). ஆனால் முடிவைப்பற்றிக் கலக்கமிக்க எதிர்பார்ப்பைக் கொண்டிருப்பதற்குப் பதிலாக, கிறிஸ்துவின் அலுவலின் முக்கிய விளைவுகள் நிகழ்காலத்தில் காணப்படவேண்டும் என்ற அமைதியான உறுதிப்பாட்டைக் கொலோசையர் திருமுகத்தில் காணலாம். இந்த அனுபவித்துக் கொண்டிருக்கும் இறுதிக்கால இயல் திருமுழுக்குப் பற்றிய பவுலின் இறையியலில் மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. நாம் ஏற்கெனவே இறந்தோரிலிருந்து உயிர்த்துவிட்டோம்.

*3. திருச்சபை இயல்:* பவுலால்தான் எழுதப்பட்டவை என்று உறுதியாகக் கருதப்படும் திருமுகங்களில் திருச்சபை, சிறப்பானதும் செயல்முறையானதுமான விதத்தில் தலத்திருச்சபையைக் குறிக்கிறது. ஆனால் கொலோசையரில், திருச்சபை என்ற கருத்து கிறிஸ்துவைத் தலையாகக் கொண்ட உடலாகிய உலகளாவிய பொதுத்திருச்சபையைக் குறிக்கிறது (கொலோ *1:18.24;2:19;3:15;* ஆனால் *4:15.16* தலத்திருச்சபையையே குறிக்கிறது). இந்தக் கருத்து வளர்ச்சியில், திருச்சபையியல் கிறிஸ்து இயலோடு தொடர்பு கொண்டுள்ளது. உடலின் தலையாகக் கிறிஸ்துவுக்குச் சாற்றிக்கூறப்படுபவையெல்லாம் அந்த உடலின் அங்கத்தினர்களுக்கும் பொருளுள்ளதாகக் கொள்ளலாம். திருச்சபையில் விசுவாசிகளின் அலுவல் தலையாயிருப்பவரோடு இறுக்கிப்பிணைத்துக் கொள்வதும் *(2:14)*, ஒருவருக்கொருவர் போதிப்பதும், அறிவு புகட்டுவதும் *(3:16)* ஆகும். திருச்சபையினுள் தனிப்பட்ட பதவிகளோ அமைப்புகளோ விவரிக்கப்படவில்லை. பவுல் தன்னையே அப்போஸ்தலர் என்றும் *(1:2)* எப்பப்பிரா மற்றும் திக்கிக்கு ஆகியோரை உடன் ஊழியர்கள் என்றும் *(1:7.23;4:7)* குறிப்பிடுகிறார்.

கிறிஸ்து இயலின் முக்கியமான விளைவு, மீட்பின் குழுக்கூறு புதிய முறையில் வலியுறுத்தப்படுவதாகும். முந்தைய திருமுகங்களில், விசுவாசிகள் கிறிஸ்துவின் ''அங்கங்களாக''க் காட்டப்படுகின்றனர். இதற்கு மாறாக, இத்திருமுகத்தில் அவர்கள் ''உடல்'' என்று வெறுமனே குறிக்கப்படுகின்றனர். திருமுழுக்கால் செயல்படுத்தப்படும் புதிய படைப்பு செயலளவில் ''புதிய மனிதன்-பழைய மனிதன்'' *(3:9)* என்ற தலைப்பின் கீழ் விவரிக்கப்படுகிறது. இம்மனிதர்களுக்கிடையேயுள்ள ஒன்றியத்தொடர்பு, 'மண்ணைச் சார்ந்த மனிதன்' (ஆதாம்), ''விண்ணைச் சார்ந்த மனிதன்'' (கிறிஸ்து) என்ற தலைப்புகளில் மீட்பின் இரு யுகங்களுக்கிடையேயுள்ள வேறுபாடுகளிலிருந்து *(1 கொரி 15:45-49)* தெளிவாக்கப்படுகிறது. இந்த முன்னோக்கில் புறஇனத்தாருக்குச் சிறப்பான கவனம் செலுத்தப்படுகிறது. ஏனெனில் பவுலால் அனுபவிக்கப்பட்ட மீட்புப் பற்றிய மறைபொருள் ''கிறிஸ்து உங்களுக்குள் இருத்தலாகும்'' (கொலோ *1:27*). அவரில் கிரேக்கர்கள் யூதர்களுக்கிடையே மிலேச்சர்கள் சித்தியர்களுக்கிடையே இனி எவ்வேறுபாடும் இல்லை *(3:11)*. மனுக்குலம் அதன் பாவத்தால் விளைந்த பிளவுகளுடன் கிறிஸ்துவுக்கும் எடுத்துக்கொள்ளப்பட்டுவிட்டது. ''கிறிஸ்துவே அனைவரிலும் அனைத்துமாவார்'' *(3:11)*.

**IX. பிற சிறைக்கூட மடல்களோடு தொடர்பு:** கொலோசையைச் சேர்ந்த ஒனேசிமு கூடவர, திக்கிக்கு இம்மடலைக் கொலோசைக்கு எடுத்துச் சென்றார் *(4:7-8)*. *4:16*-இன் அடிப்படையில், இது ஒரு சுற்று மடலாக இருக்கலாம். கொலோசையில் வாசிக்கப்பட்டபின், அதற்கு அடுத்து அமைந்திருந்த இலவோதிக்கேயாத் திருச்சபையில் *(2:1)* ஒருவேளை எராப்போலியிலும் வாசிக்கப்படவேண்டியதாக இருந்திருக்கலாம் *(4:13)*.

பொருளடக்கத்தில் இம்மடல் எபேசியர் திருமுகத்தோடு பெருமளவில் ஒத்திருக்கிறது. இரண்டும் திருச்சபையைக் கிறிஸ்துவின் உடல் என்று விவரிக்கின்றன *(1:18;* எபே *4:12.15)*. குடும்ப வாழ்வுபற்றி இரண்டும் ஏறக்குறைய ஒரே போதகத்தைத் தருகின்றன *(3:18-4:1;*எபே *5:21-6:4)*. ஆனால் நோக்கும் விதத்தில் சிறிது வேறுபாடு உண்டு. எபேசியர் திருமுகம் திருச்சபையையும், எல்லாவற்றின் முடிவையும் வலியுறுத்தும். கொலோசையர் திருமுகம் படைப்பில் அதிகக் கவனம் செலுத்துகிறது.

**கொல்கொதா** (GOLGOTHA - மண்டைஓடு)

'கொல்கொதா' என்ற இடத்தில்தான் இயேசு சிலுவையில் அறையப்பட்டார் (மத் *27:33;* மாற் *15:22;* யோவா *19:17*). கொல்கொதா என்ற அரேபியச் சொல்லை அப்படியே தந்துள்ள மூன்று நற்செய்திகளும் 'மண்டை ஓடு' என்ற பொருள்தரும் அச்சொல்லின் கிரேக்க மொழிபெயர்ப்பையும் தந்திருக்கின்

றன. நற்செய்தியாளர் லூக்கா 'மண்டை ஓடு' என்ற பொருளைத்தரும் கிரேனியோன் என்ற கிரேக்கச் சொல்லை இயேசு அறையப் பட்ட இடத்தின் பெயராகத் தருகின்றார். ஆனால் அச்சொல்லிற்கு இணையான அரமேய வார்த்தையைத் தரவில்லை (லூக் 23:33).

'கொல்கொதா' என்பது நகரத்திற்கு வெளியே உள்ள இடம் என்று தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது (மத் 27:32; மாற் 15:21). நற்செய்தியாளர் யோவான் நகரத்திற்கு அருகிலிருந்ததாகக் கூறுகின்றார் (19:20). லூக்கா தருகின்ற உரையில் நகரத்திற்கு வெளியே உள்ள இடம் என்ற கருத்து மறைந்திருக்கின்றது. கொல்கொதா என்ற இடம் இயேசுவின் கல்லறைக்கு அருகில் இருந்ததாக யோவான் 19:41-இல் தெளிவாகவும், வெளிப்படையாகவும் மற்ற நற்செய்திகளில் மறைமுகமாகவும் கூறப்பட்டிருக்கின்றது. இந்த இடத்தில்தான் புனிதக் கல்லறை என்ற ஆலயம் இன்று இருக்கின்றது.

கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக மக்கள் அவ்விடத்தைச் சுற்றி வாழ்ந்து கொண்டிருப்பதால் அவ்விடமானது அடையாளம் காண முடியாதவிதத்தில் பலவிதமான மாற்றங்களைக் கண்டிருக்கிறது. எனவே இயேசு ஒரு மலையில்தான் சிலுவையில் அறையப் பட்டார் என்ற மக்களின் நம்பிக்கையை வலியுறுத்துவதற்கான இலக்கிய அல்லது தொல்பொருள் ஆதாரங்கள் அங்கு இல்லை. கி.பி. 132-135-இல் நடந்த யூதக் கிளர்ச்சிக்குப்பின் எருசலேமின் அழிவின்மேல் அதிரியான் என்பவரால் ஏலியா கப்பித்தோலினா என்ற உரோமானிய நகரத்தில் கட்டப்பட்ட அப்ரோதைட்டு கோவில் இருந்த இடம்தான் கொல்கொதா என்ற இடமும் இயேசுவின் கல்லறை இருந்த இடமுமாகும் என்பது கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த யூசேபியுவின் கணிப்பாகும். இருப்பினும் இயேசு சிலுவையில் அறையப்பட்டு, அடக்கம் பண்ணப்பட்ட இடத்தில் ஓர் ஆலயம் கட்ட வேண்டும் என்று அதிரியான் விரும்பினார் என்பதையோ, கட்டடம் கட்டும் உரோமையர்களுக்கு அந்த இடம் தெரிந்திருந்தது என்பதையோ உறுதியாகக் கூற வழி இல்லாததால் அப்ரோதைட்டு ஆலயம் இருந்த இடம் தான் கொல்கொதா இருந்த இடம் என்று உறுதி சொல்வதற்கும் வழியில்லை. இந்த ஆலயம் ஏலியா காப்பித்தோலினாவின் சுவர்களுக்குள் இருந்தது. இந்தச்சுவர் பழைய சுவர்களின் போக்கைப் பின்பற்றவில்லை. கி.பி. 70-இலும் 135-இலும் நடந்த போர்களில் அழிந்து, மீண்டும் நகரம் அமைக்கப்பட்டபின், காலத்தால் முந்திய இந்த அடையாளம் காட்டுதல் மிகவும் கடினமாகும்.

அப்ரோதைட்டு ஆலயம் இருந்த இடம் தான் கொல்கொதா என்ற இடமும், இயேசுவின் கல்லறை இருந்த இடமும் என்று மன்னன் காண்ஸ்டண்டைனுக்குச் சுட்டிக்காட்டப் பட்டபோது அவர் அவ்வாலயத்தைத் தரை மட்டமாக்கிவிட்டு அவ்விடத்தில் ஒரு பெரிய ஆலயத்தை எழுப்பினார். இந்தப் பேராலயமானது கி.பி 614-இல் பாரசீகர்களால் அழிக்கப்பட்டது. கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் முன் அழிந்து புதுப்பிக்கப்பட்ட ஆலயம் முகமதியர்களால் அழிக்கப்பட்டது. 1099-இல் சிலுவைப்போர் வீரர்களால் அவ்விடமானது கைப்பற்றப்பட்டு அங்கு ஓர் ஆலயம் கட்டப்பட்டு 1149-ஆம் ஆண்டு திருநிலைப்படுத்தப்பட்டது.

தொல்பொருள் ஆய்வின் அடிப்படையில் இந்த இடத்தை அடையாளம் காட்டுவது முடியாத காரியமாகும். இந்த இடத்தைப்பற்றிய கடந்த 100 ஆண்டுகளாக நீடிக்கும் பிரச்சினை, இரண்டாவது சுவர் பரிசுத்தக் கல்லறை ஆலயத்தை உள்ளடக்கியதா இல்லையா என்பதைப் பொருத்ததாகும். இரண்டாவது சுவர் இப்போதுள்ள ஆலயத்தை உள்ளடக்கியதென்றால் பாரம்பரியமாக அடையாளம் காட்டப்பட்டு வரும் இடம் கொல்கொதாவாக இருக்கமுடியாது. இரண்டு கருத்துக்களும் உறுதியாகக் கூறப் படக்கூடியவை அல்ல. ஆகவே சுவர் ஆலயத்திற்குக் கிழக்கிலும் தெற்கிலும் அமைந்திருக்க வேண்டுமென்று அறிஞர்கள் தோராய

மாகக் கருதுவர். இது பாரம்பரிய அடையா ளத்திற்கு ஒத்ததாக இருக்கும்.

*1842*-இல் ஒத்தேனியு என்பவர் தமஸ்கு கதவிற்கு வடகிழக்கே *250* முழம் தூரத்தில் உள்ள மலைப்பாங்கான பகுதிதான் கொல் கொதா என்று கூறினார். ஏனென்றால் அவ ரது விவாதத்தின்படி அவ்விடம் நகரத்திற்கு வெளியே இருக்கிறது. மண்டைஓடு போன்ற வடிவத்தைக் கொண்டிருக்கிறது. யூதக்குற்றவாளிகளைக் கல்லால் அடித்துக் கொல்லுகின்ற இடமாகவும் விளங்கிவந் தது. எனவே அவ்விடம்தான் 'கொல்கொதா வாக' இருக்கவேண்டும் என்பது அவரது கருத்து. இக்கருத்தினை *1885*-இல் தளபதி சார்லஸ் கோர்டன் என்பவரும் ஏற்றுக்கொள் கின்றார். இவ்விடம் 'கொல்கொதா'தான் என்பதை உறுதிசெய்யும் பொருட்டு அவ் விடத்திற்கு அருகில் 'கல்லறைத் தோட்டம்' ஒன்று இருக்கின்றது. இக்கல்லறை பைசாந் தியர்களின் கல்லறைக் குகைகளுக்கு அரு கில் இருக்கிறது. இக்கருத்திற்கு ஆதரவாகத் தொல்பொருள் ஆய்வுகளும் தொடக்ககாலத் திருச்சபைப் பாரம்பரியங்களும் அமைய வில்லை.

**கொல்-கோசே** (COL-HOZEH - எல்லாம் பார்க்கிறவர்)

1. சல்லூமின் தந்தை. நெகேமிய ஆட்சிக் காலத்தில் மிஸ்பா மாவட்டத்தின் ஆளுநர் *(நெகே 3:15)*

2. யூதாவைச் சேர்ந்த மாசேயாவின் மூதா தையர். நாடு கடத்தலுக்குப்பின் எருசலே மில் குடியேறியவர் *(நெகே 11:5)*. இவரும் 1-இல் குறிக்கப்பட்டவரும் ஒருவராக இருக் கலாம்.

**கொழுத்த கன்று** (Fatling)

இஸ்ராயேலுடைய பலிகொடுக்கும் பழக்க முறையில் முக்கியமாகப் பயன்படுத்தப் படும் வீட்டோடு வளர்க்கப்பட்ட ஆடு அல்லது மாடுவகை விலங்கு.

இஸ்ராயேலிய விவசாயச் சூழ்நிலையில் உருவான கொழுத்த கன்று பலி கொடுக்கப் பயன்படுத்தத் தகுதியான மிருகங்களிலே முதல் தரமாக முன்னுரிமை பெறுகிறது. இப்பெயர் அதன் இனத்திற்காகக் கொடுக் கப்படுவதல்ல; அம்மிருகத்தின் தரத்தைப் பார்த்தே கொடுக்கப்படுகிறது. மிக விரும் பப்படுவதும், தேர்ந்தெடுக்கப்பட்டதுமே ஆண்டவருக்கு ஒப்புக் கொடுக்கப்படலாம். நன்றாகக் கவனிக்கப்பட்டு, நன்றாக உணவு ஊட்டப்பட்டதே தகுதியனாதாகும். இதைக் குறிக்க மூலத்தில் பலதரப்பட்ட சொற்கள் காணப்படுகின்றன. மொழிபெயர்ப்புகளில் 'கொழுத்தகன்று' என்பதுதான் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது. பலியாக ஒப்புக் கொடுப்பவைகளைக் குறிக்கும்போது அது இஸ்ராயேலின் விளைச்சலில் சிறந்ததாக இருக்கவேண்டும் *(எசா 1:11)* - இச்சொல் பல இடங்களில் பலியோடு தொடர்புடைய தாகவே பயன்படுத்தப்பட்டிருக்கிறது. வெட்டிக் கொலை செய்து பலிகொடுக்கும் முறையில் ஒப்புக்கொடுக்கப்படுகிறது *(2 சாமு 6:13; 1 அர 1:9.19.25; எசே 39:18)*. தகனப்பலி முறையிலும் ஒப்புக்கொடுக்கப் படுகிறது *(எசா 1:11)*. மேலும் சமாதானப் பலியோடு தொடர்புடையதாகவும் இது வருகிறது *(ஆமோ 5:22)*. ஒரே ஒரு விலங்கு மட்டுமே ஒப்புக்கொடுக்கப்படுவதன்று. மாறாக மற்றும் பல விலங்குகளோடு அட்டவ ணைப்படுத்தப்படுகிறது. எருமை *(2 சாமு 6:12; 2 அர 1:19.25)*, செம்மறிக் கிடாய்கள் *(எசா 1:11)*, ஆட்டுக்கிடாய்கள் *(1 அர 1:9. 19.25)*, கன்றுகள் *(1 அர 1:9)* முதலியன. எசே *39:18*-இல் 'கொழுத்த' என்பது பலிகொடுக் கப்படும் எல்லா மிருகங்களையும் பிரித்து எடுப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது. இச் சொல் எல்லா ஆடுமாடு முதலிய விலங்குக ளுக்கும் பொருந்துவதாக இருக்கும்போது, பலிகளுக்குத் தகுதியான மிருகங்களைக் குறிக்கத் தனிச் சிறப்பான முறையில் இது பயன்படுகிறது. ஒரே ஒரு இடத்தில்தான் இச்சொல் பலியோடு தொடர்பற்ற பகுதி யில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது *(எசா 11:6)*.

மேலும் செம்மறிக்கிடாய்கள், காளைகள், வெள்ளாடுகள் *(சங் 66:15)* முதலியவைகள்

தகனப் பலியோடும் தொடர்புபடுத்திப் பேசப்படுகின்றன. இவற்றில், பலிவிலங்கி னம் முக்கியம் பெறவில்லை. அதன் தரம் வலியுறுத்தப்படுகிறது.

சவுலால் அழிக்காமல் விடப்பட்ட விலங்குகளில் ஆட்டுக்கிடாய்கள் (1 சாமு 15:9) இடம் பெறுகின்றன. இச்சொல் அழிக்காமல் விடப்பட்டதெல்லாம் நல்லவைகள் என்ற உண்மையைக் குறிப்பிடுகின்றது. முதற்கனியை விட மேலான இரண்டாவது கனி தான் 'கொழுத்த' ஒன்றாக இருக்கும். எனவே இதைத்தான் கொழுத்தவை என்ற சொல் குறிப்பிடுகிறது.

மத் 24:4-இல் காளைகளும் கொழுத்த விலங்குகளும் விருந்துக்கு ஏற்பாடாகியிருக்கிறது. இவ்விருந்துக்கும் வழிபாட்டுச் செயலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இவ்வாறு இறைச்சிக்காக வளர்க்கப்படுகின்ற ஆடுமாடு முதலிய விலங்குகள் வழிபாட்டுக்கும், வழிபாட்டுக்குப் புறம்பான செயல்களுக்கும் பயன்படுத்தப்பட்டன. கொழுத்த பலிக்கு ஏற்ற விலங்கு, இஸ்ராயேல் தன் இறைவன் முன், அவ்விலங்கின் மிகச் சிறந்ததை, சிறந்த இஸ்ராயேலைப் பிரதிபலித்து அளிக்கிறது என்பதை உணர்த்துகிறது.

### கொளுந்துகள் (Tenons)

மர வேலைப்பாடுகளில் அடுத்துள்ள பலகையில் உள்ள துவாரத்திற்கோ, இடைவெளிக்கோ சரியாகப் பொருந்துமாறு முதல் பலகையில் செய்யப்பட்ட நீட்டிப்பு அமைப்பாகும். திருஉறைவிடத்தின் மரச்சட்டங்கள் சட்டம் ஒன்றுக்கு இரு கொளுந்து வீதம் சட்டத்தோடு சட்டம் இணைக்கப்பட்டது (யாத் 26:17.19;36:22.24).

### கொள்ளிக்கட்டை (Firebrand)

1. எசாயாவால் உருவகமாகப் பயன்படுத்தப்படுகிற சொல். இரு சினமிக்க அரசர்கள் ''புகையும் இரு கொள்ளிக்கட்டைகள்'' என ஏளனமாக விவரிக்கப்படுகின்றனர் (எசா 7:4). இஸ்ராயேல் நெருப்பிலிருந்து இழுக்கப்பட்ட ''கொள்ளிக் கட்டைபோல்'' இருக்கிறது (ஆமோ 4:11). பெரிய குரு யோசுவா ''அடுப்பிலிருந்து எடுத்த கொள்ளியாவார்'' (செக் 3:2).

2. பைத்தியக்கார மனிதனால் தூக்கியெறியப்பட்ட ஒரு பொருள் (பழ 26:18).

### கொள்ளிவாய்ப் பாம்புகள் (Fiery Serpents)

இஸ்ராயேலர்கள் பாலைவனத்தில் அலைந்து திரிந்து கொண்டிருந்தபோது பாம்புகள் அவர்களிடையே அனுப்பப்பட்டது. அதனால் பலர் இறந்தார்கள் (எண் 21:6.8; உப 8:15); பாம்புகள் கடித்ததால் ஏற்பட்ட பயங்கர நெருப்புப்போன்ற வீக்கத்தைக் குறிப்பிடலாம். எசா 14:29; 30:6-இல் வரும் பறக்கும் நாகம் புராணக்கதைத் தன்மையுடையதாகும். இச்சூழ்நிலையில், இராகாபு என்ற இதிகாச நாகவேதாளம் குறிக்கப்படுகிறது.

### கொள்ளைக்கூட்டத்தார் (கொலை செய்பவர்) (Assassin)

பாலஸ்தீனத்தில் திட்டமிட்டு அரசியல் கொலைகள் புரியும் யூதர்களுக்கு உரோமையர்களால் வழங்கப்பட்ட பெயர் இது. இக்கொலைகள் திடீரென்று எதிர்பார்க்காத போது நடத்தப்பட்டன. உரோமை அதிகாரிகளின் கருத்துப்படி அத்தகைய கொலைகள் குற்றமாகும்.

யோசிப்பசு என்பவர் கி.பி. 66-70 ஆண்டில் நடந்த போரில் புரட்சி செய்த குழுவிற்கு இப்பெயரை அளிக்கிறார். ஆனால் அது அரசியல் கொலையில் ஈடுபட்ட ஒரே ஒரு குழுவைக் குறிக்கின்றதா அல்லது பல குழுக்களைக் குறிக்கின்றதா என்பது ஐயத்திற்குரியது. யோசிப்பசு இவர்களைக் 'கொள்ளையர்கள்' என்று கூறுகின்றார். இவர்கள்தான் முதலில் இவ்வாறு சட்டத்தை மீறிக் கொள்ளையடித்தனர் என்பது இவர் கருத்து. இவர்களின் பூர்வீகத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது கிரேனியு காலத்தில் நடந்த மக்கள்தொகைக் கணக்கெடுப்பிற்குத் தேசிய அளவில் நடந்த எதிர்ப்புச் சக்தியை

இவர்கள் சார்ந்தவர்கள் என்பது இவர் கருத்து. ''அந்நாளில் உரோமிற்கு ஒப்புதல் தெரிவித்த மக்களை எதிர்த்து, அவர்களைப் பகைவர்களாகவும், புற இனத்தவராகவும் கருதிச் சொத்துக்களைச் சூறையாடி, கால் நடைகளை வளைத்து, உடைமைகளைத் தீ வைத்தவர்கள் இவர்கள்''.

யோசிப்பசு இக்கொலையாளிகள் இறுதி வரை உரோமையரை எதிர்த்தனர் என்று கூறுகிறார். உரோமையர்களாலும் யூதேயா பாலைவனத்தில் மசாதா என்ற இடத்தில் இருந்த அவர்களின் அரணை கி.பி. 73-வரை அழிக்க முடியவில்லை. உரோமையர்கள் அவர்களது அரணை அழித்து நுழைந்த போது இக்கொலையாளிகள் கூட்டமாகச் சேர்ந்து தங்களைத்தாமே அழித்துக் கொண் டது தெரிந்தது. யோசிப்பசுகூட இச் செயலை நாட்டுப்பற்று, மற்றும் இறைவன் மீதும், அவரது சட்டத்தின் மீதும் உள்ள பற்றின் விளைவு என்கிறார். உரோமையர் பாலஸ்தீனைப் பிடித்த காலத்தில் இக் கொலையாளிகள் நாட்டுப்பற்று மிக்கவர்கள் என்ற எண்ணம் இருந்தது. இப்படிப் பார்க்கும் பொழுது அவர்களது நடவடிக்கை 'கொலை யாளி', 'கொள்ளைக்காரன்', மற்றும் வேத சாட்சிகள் போன்று இருந்ததாகத் தெரிகிறது.

அ.ப. 21:38-இல் 4000 கொள்ளைக் கூட்டத் தாரைப் பாலைவனத்திற்குக் கூட்டிச் சென்றது பவுலாக இருக்கலாம் எனப் படைத்தலைவன் நம்பினதாகத் தெரிகிறது.

**கொள்ளைநோய்** *(Plaguo)*

கொள்ளைநோய் என்பது அழிவை, சாவை அல்லது பெரிய தொந்தரவைத் தரக் கூடிய ஒரு கொடும் நோயைக் குறிக்கும் *(எண் 14:37;16:47; லேவி 26:21; எண் 11:33;உப 28:59; எண் 16:46; யோசு 22:17; யாத் 11:1; 1 1 சாமு 6:4)*. இங்கே குறிப்பிட் டுள்ள வேதாகமக் குறிப்புகளின் எபிரேய மூல வார்த்தைகளை ஆராய்ந்தால், இவ் வார்த்தையின் பொருள் தெளிவுபடும். இத் தகைய கொள்ளைநோய் பல்வேறு சூழ்நிலை களில் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் இந்த நோய் பாவிகளுக்கும் இறைவனுக்குக் கீழ்ப் படியாத மக்களுக்கும் இறைவன் தன் நீதியின்படி தரும் தண்டனை என்றே கருதப் பட்டது *(1 சாமு 5-6)*.

*1 சாமு 5-6*-இல் பெலிஸ்தியர்கள், இஸ்ரா யேல் மக்களைத் தோற்கடித்து உடன்படிக் கையின் பேழையைத் தங்கள் நாட்டிற்கு எடுத்துச் சென்றவுடன் அவர்களில் பலர் இறக்கின்றனர் *(1 சாமு 5:12)*. அம்மக்க ளிடையே கொடிய மூலக்கட்டிகள் எலியின் மூலம் பரவுகின்றது. கொடும் காய்ச்சல், சுரப்பிகள் வீக்கம் போன்றவைகள் அந்தக் கொள்ளைநோயின் சில அம்சங்கள். பெலிஸ்தியர்களின் குருக்களும் மந்திரவாதி களும் பெலிஸ்தியர்களின் பாவங்களுக்குப் பரிகாரமாகப் பலிகள் செலுத்தி அப் பேழையை அனுப்பி விடுங்கள் என்று கூறுவது குறிப்பிடத்தக்கது *(1 சாமு 6:3)*. மோவாபிய ரின் கடவுளர்களை இஸ்ராயேல் மக்கள் வழிபட்டபோதும் இத்தகைய கொள்ளை நோய்கள் ஏற்பட்டதை நாம் காண்கிறோம் *(எண் 25:9)*

எலிகள் அசீரியர்களின் வில் நாண்களைக் கடித்துவிட்டதால் சனகெரிபின் படைக்குப் பெரும் அழிவு ஏற்பட்டது என எரோதாத் துஸ் குறிப்பிடுகிறார் *( 2 அர 19:35)*. எலிகள் அங்கு இருந்ததற்கு இது ஒரு சான்று. எலிக ளின் மூலம் ''பூபோனிக்'' கொள்ளைநோய் பரவி அவர் படை அழிந்திருக்கலாம். பொது வாகக் குளிரான தட்பவெப்ப நிலையில் ஏற்படும் நுரையீரல் சம்பந்தமான கொள் ளைநோய் அல்லது காலரா போன்ற நோய் ஏற்பட்டிருக்கலாம். கொள்ளைநோய் பழங் காலப் பாலஸ்தீனத்துக்கு உரித்தான ஒன்றாகும். காண்க. யாத்திரையில் கொள்ளைநோய்.

**கொள்ளைப்பங்கு** *(Booty - கொள்ளையடிக் கப்பட்ட பொருட்கள்)*

ஒரு நாட்டை வெற்றி கொண்டதும் அங் குள்ள விலை மதிப்புள்ள பொருட்களை எடுத்துக்கொள்வது பொதுவான பழக்கம். இவைகளில் ஒரு குறிப்பிட்ட பங்கு தெய்வத் திற்கென்று அர்ப்பணிக்கப்படும் *(எண் 31:26 தொ)*. முகம்மது கட்டளைப்படி கொள்ளை

யடிக்கப்பட்ட பொருட்களில் 5-இல் ஒரு பகுதி அல்லாவுக்குச் செலுத்தப்பட வேண்டும்.

**கொள்ளைப்பொருள்** (Spoil)

சூறைப்பொருள்; போரில் வெற்றிக்குப் பின் எதிரியின் நாட்டில் கொள்ளையடித்த பொருள்; போரில் கைப்பற்றிய பொருட்கள்.

பழங்கால மேற்காசிய நாடுகளின் போர் விதிமுறைகளின்படி போரில் வெற்றிவாகை சூடியோர் எதிரிகளின் நாட்டைச் சூறையாடுதலைத் தங்களின் உரிமையாகக் கொண்டிருந்தனர். தோல்விகண்ட எதிரிகளுக்குச் சொந்தமான ஆடுமாடுகள் *(உப 2:5; 3:7; 1 சாமு 14:32; 2 நாள் 15:11; எரே 49:32)*, ஆடை ஆபரணங்கள் *(யோசு 7:21; நீதி 5:30;2 நாள் 20:25; 28:15)*, விலையுயர்ந்த உலோகங்கள், கற்கள் *(யோசு 7:21;நீதி 8:24-25)* மற்றும் எவையெல்லாம் எடுத்துச் செல்லக் கூடியனவாக இருந்தனவோ *(2 நாள் 20:25)* அவை அனைத்தையும் கொள்ளைப் பொருளாக எடுத்துச் செல்வது வழக்கமாக இருந்தது. எதிரிநாட்டுக் குழந்தைகள், பெண்டிரையும் *(உப 20:14)* தங்கள் நாட்டிற்குக் கொண்டு செல்வதும் வழக்கமாக இருந்தது. ஆனால் ஆண்கள் அனைவரும் கொல்லப்பட்டனர் என்று எண் *31:7.17* கூறுகின்றது. கொள்ளையடிப்பது, போர்வீரனது மிகப்பெரிய இன்பமாக இருந்தது *(சங் 119:162; எசா 9:3)*

கொள்ளைப் பொருளைப் பங்கிடுவதற்கான ஒருசில வரைமுறைகளும் எபிரேயர்களிடையே இருந்தன. பொதுவாகப் படைத் தலைவனுக்குத் தனிப்பங்கும், ஆலய வழிபாடுகளுக்கெனத் தனிப்பங்கும் அளிக்கப்படும் *(நீதி 8:24-25)*. குருக்கள் பாரம்பரியப்படி *(எண் 31)* இஸ்ரயேலர் மிதியான் நாட்டின் மீது வெற்றிகொண்டு அந்நாட்டில் தாங்கள் கொள்ளையிட்ட பொருட்கள் அனைத்தையும், பிடித்திருந்த மனிதவுயிர், மிருகவுயிர் அனைத்தையும், பங்கீடு செய்வதற்காக மோசேயிடமும் தலைமைக் குருவாகிய எலயாசரிடமும் கொண்டுவந்தனர். பெண் குழந்தைகள், கன்னிப் பெண்கள் தவிர மற்ற மனிதவுயிர்களையும் கொல்ல மோசே கட்டளையிட்டதையும் இந்த விவரிப்பு குறிப்பிடுகின்றது. பின்பு அக்கொள்ளைப் பொருள் இரண்டு சம பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒரு பகுதி இஸ்ராயேல் மக்களுக்கிடையேயும் மறுபகுதிபடைவீரர்களுக்கிடையேயும் பங்கிடப்பட்டது. கொள்ளைப் பொருட்களின் ஒரு சிறந்த பங்கு ஆலயத்திற்கும் *(1 சாமு 21:9;31:9-10; 1 நாள் 26:27)* அதன் தேவைகளுக்கும் அளிக்கப்பட்டது. மேலும் வீரர்களும் மக்களும் தங்கள் பங்கில் முறையே நூறில் ஒருபங்கும், ஐம்பதில் ஒரு பங்கும் ஆலயத்திற்குக் காணிக்கை செலுத்துவதும் வழக்கமாக இருந்தது.

ஒரு சில வேளைகளில் ஒரு நகரமோ அல்லது அந்நகர்வாழ் மக்களினமோ இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்டிருப்பின் அந்நகரை வெற்றி கொண்டவர்கள் கொள்ளைப் பொருளை எடுத்துச் செல்வது தவறாகக் கருதப்பட்டது. ஆனால் இத்தகு வேளைகளில் ஆலயத்திற்குத் தேவைப்படும் விலையுயர்ந்த உலோகங்கள், கற்கள், பொருட்கள் தவிர மற்றெல்லாப் பொருட்களும் தீக்கிரையாக்கப்பட்டு அழிக்கப்படுவது வழக்கமாக இருந்தது. இம்முறையில் எரிகோ பட்டணம் தீக்கிரையாக்கப்பட்டு அழிந்தது *(யோசு 6:17-10)*.

**கொனனியா** (CONANIAH - யாவே நிறுவினார்)

1. ஒரு லேவியர். எசேக்கியா ஆட்சிக்காலத்தில் முதல் பலன்களையும், பத்திலொரு பாகத்தையும் நேர்ச்சைப் பொருள்களையும் சேகரித்துப் பாதுகாப்பதைக் கண்காணிக்க நியமிக்கப்பட்டவர் *(2 நாள் 31; 12-13)*.

2. யோசியா ஆட்சிக்காலத்தில் பாஸ்காப் பலிக்கெனக் காணிக்கை அளித்த லேவியத் தலைவர்களுள் ஒருவர் *(2 நாள் 35:9)*.

# கோ

**கோகா** (KOA)

கோகா இனத்தினர் பின்வரும் வரிசையில் குறிப்பிடப்படுகின்றனர்; பாபிலோனியர், கல்தேயர், பெக்கோத்து, சோவா, கோகா (எசே 23:23). பெக்கோத்து, தென்பாபி லோனில் வாழும் பக்காதை இனத்தாரைக் குறிப்பதால் 'சோவா' சுத்து மக்களையும் 'கோகா' குத்தி மக்களையும் குறிப்பதாகக் கருதப்படும். ஆனால் 'சோவா, கோகா' என்பவை அழகிய பேச்சு நடைக்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**கோகாத்து** (KOHATH - கூட்டம், மக்களவை)

கோகாத்து லேவியின் இரண்டாவது மகன் (ஆதி 46:11; யாத் 6:16; எண் 3:17; 1 நாள் 6:16.38; 23:16). அம்ராம், இசார் (இட்சார்), கெபிரோன் (எபிரோன்), உசியேல் ஆகியோ ரின் தந்தை ஆவர் (யாத் 6:18; எண் 3:19; 1 நாள் 6:2;6:18;23:12). இவர்களுடைய தலை மையில்தான் கோகாத்து குடும்பத்தினர் நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டனர். கோகாத்து தம் 133-ஆம் வயதில் இறந்தார் (யாத் 6:18). இவர் ஆரோன், மோசே, மிரி யாம் ஆகியவர்களின் தாத்தா ஆவார் (யாத் 6:20; எண் 26:59). கோகாத்து புதல்வர்களின் குடம்பங்களே லேவியர் குடும்பங்களில் முக்கியமானதாக இருந்தன. இவர்களைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் குருக்கள் பாரம்பரிய ஆசிரியர் யாத்திரை, நாட்டை வெல்லுதல், அரசாட்சி, மீண்டும் அமைத் தல் என்னும் நான்கு பகுதிகளாகத் தருகின் றார்.

**1. யாத்திரையின்போது:-** உடன்படிக்கைக் கூடாரம் பாலைவனத்தில் அமைக்கப்பட்ட போது கேர்சோனியர், கோகாத்தியர், மெராரி குடும்பத்தினர் ஆகியோர், அதைச் சுற்றி வாழ்ந்தனர். கோகாத்து குடும்பத்தினர் கூடாரத்தின் தெற்குப்புறத்தில் வாழ்ந்தனர். இவர்களில் ஒரு மாதமும் அதற்கு மேற்பட்ட வயதுமுள்ள ஆண்கள் 8600 (எண் 3:28); 30 முதல் 50 வரை வயதுள்ள ஆண்கள் 2750 இருந்தனர் (எண் 4:1-3.34-37). இவர்கள் பெட்டகம், கிளைவிளக்கு, பீடம், மேசை, புனிதப் பாத்திரங்கள், திரை (எண் 3: 29-31) முதலியவற்றைப் பாதுகாக்க வேண்டும். மிகவும் பரிசுத்தப் பொருட்களை இவர்கள் தொடக்கூடாது. தொட்டால் இறந்துவிடு வார்கள். பாளையம் பெயர்தலின்போது ஆரோனும் அவரது புதல்வர்களும் புனிதப் பொருட்களை மூடி அவற்றுக்குக் கழிகளைப் பொருத்துவார்கள். இதைக் கொண்டுதான் கோகாத்தியர்கள் சுமந்து செல்ல வேண்டும் (எண் 4:4-15.17-20; 7:9).

**2. நாட்டை வென்றபோது:-** பாலஸ்தீனத்தை வென்றபோது ஆரோனின் வழிவந்த கோகாத்தின் புதல்வர்களுக்குப் பதின்மூன்று நகரங்களுக்குச் சீட்டு விழுந் தது. அதன்படி அவர்கள் யூதா, சிமியோன், பென்யமின் கோத்திரங்களிடமிருந்து 13 நகரங்களையும் பெற்றார்கள் (யோசு 21:4.9-19; 1 நாள் 6:54-80). கோகாத்தின் ஏனைய புதல்வர்கள் எப்பிராயிம், தாண், கோத்திரங்க ளிடமிருந்தும், மனாசேயின் பாதிக் கோத்திரத் திடமிருந்தும் 10 நகரங்களைப் பெற்றார்கள் (யோசு 21:5.20-26; 1 நாள் 6:61.67-70). இவ் வாறு கோகாத்தின் புதல்வர்கள் தெற்கு மற் றும் மத்திய பாலைவனத்தில் நிலங்களைப் பெற்றிருந்தனர்.

**3. அரசாட்சிக் காலத்தில்:-** தாவீது, கடவு ளின் திருப்பேழைக்காக ஒரு தனி இடத்தைத் தயார் செய்து கூடாரத்தை அமைத்தபின், எருசலேமுக்குப் பேழையைத் தூக்கிவர, 120 கோகாத்தியர்கள் உரியேலின் தலைமையில் நியமித்தார் (1 நாள் 15:5). ''ஆண்டவரின் வீட்டில் பாடிப்புணிபுரிய'' இவர்களின் பிரதி நிதியாக ஏமான் நியமிக்கப்பட்டார் (6:33). யோசபாத்து, மோவாபியர் மற்றும் அம்மோ னியர்களிடமிருந்து இஸ்ராயேல் மக்களை விடுவிக்கும்படி வேண்டும்போது கோகாத் தின் புதல்வர்கள் திருப்பணியாளர்களாக இருந்தனர் (2 நாள் 20:19). எசேக்கியா அரசன் (கி.மு. 725) வழிபாட்டு முறைகளத்

தூய்மையாக்கும்படி ஆணையிட்டபோது கோகாத்தின் புதல்வர்கள் மாகாத்தும் யோவேலும் இதில் பணிபுரிந்தனர் *(2 நாள் 29:12)*. யோசியா கி.மு. 621-இல் ஆண்டவரின் ஆலயத்தைச் செப்பனிட்டபோது கோகாத்தின் புதல்வர்கள் செக்கரியாவும், மெசுல்லாமும் மேற்பார்வையாளர்களாகப் பணிபுரிந்தனர் *(34:12)*.

**4. நாடு மீண்டும் அமைக்கப்பட்டபோது:-** பாபிலோனிய அடிமைத்தனத்திற்குப் பிறகு திருப்பணியாளர்கள் நியமிக்கப்பட்டபோது கோகாத்தின் புதல்வர்கள் சிலர் பிரசன்ன அப்பங்களைக் கண்காணிக்கவும், ஓய்வு நாளில் புது அப்பங்களைத் தயாரிக்கவும் நியமிக்கப்பட்டனர் *(1 நாள் 9:32)*.

**கோகு** (GOG - தங்கத்தாலான விலையுயர்ந்த பொருள்)

ரூபன் கோத்திரத்தின், ஒரு குலப்பெயர் முதியவர். செமாயாவின் மகனும் சிமயின் தந்தையுமாவார் *(1 நாள் 5:4)*.

**கோகும் மாகோகும்** (GOG AND MAGOG)

கோகு என்பவர் மேசேக்கு, தூபால் நாடுகளின் முதல் தலைவர். மாகோகு நாட்டிலிருந்து வந்தவர், அரசனுமாவர். அவர் எசே *38-39* அதிகாரங்களில் யாவேக்கு எதிராகப் போரிடுமாறு தீய சக்திகளை வழிநடத்துகின்றார். திருவெளி *20:8*-இல் மாகோகு ஒருநாட்டைக் குறிக்கவில்லை. கோகுடன் சேர்ந்து அருமகதோன் போரில் பங்குபெற்ற உடன் குற்றவாளி ஆவார்.

கோகு என்பவரை வரலாற்றில் வாழ்ந்த ஏதாவது ஒரு தலைவனோடு அல்லது இராணுவ வீரரோடு தொடர்பு படுத்த அறிஞர் பலர் முயன்றுள்ளனர். ஆனால் முயற்சிகள் அனைத்தும் தெளிவான முடிவுக்கு வர வாய்ப்பளிக்கவில்லை. லீதியாவின் அரசராகிய கைகஸ் என்பவர் அசூர்பானிப்பாலின் பதிவேடுகளில் கூகூ என்று அழைக்கப்படுகின்றார். இவரைக் கோகுக்கு இணையாக ஒப்பிட்டுக்கூற எண்ணினர். ஆனால் இரண்டு பெயர்களின் உச்சரிப்பைப் பொறுத்த வரையில்தான் ஒற்றுமையிருக்கின்றதே ஒழிய மற்ற எந்தக் காரியங்களிலும் இவையிரண்டுக்குமிடையே ஒற்றுமையில்லை. மேலும் கோகு என்பவர் ஒளியாகிய இறைவனுக்கு எதிராக இருக்கும் இருளாகிய தீமையைப் பிரதிபலிக்கின்றார் என்று ஒரு சிலர் புராணக்கதைக் குறிப்புக்களை வைத்துக் கூறினர்.

இப்பெயரின் தோற்றம் எதுவாக இருந்தாலும் யாவேக்கு எதிராக எழுந்த உலகத்தின் முடிவை இது படம் பிடித்துக் காட்டுகின்றது என்பது தெளிவாகின்றது. பாரசீகம், கூசு, பூற்று, கோமேர், தோகர்மா, சேபா, தெதான், தர்சீசு போன்ற உலகத்திலுள்ள அரசாட்சிப் பகுதிகளை இது உள்ளடக்குகிறது. இவையனைத்தும் இறைவனின் அரசை எதிர்த்து எழுந்து இறுதியில் தோல்வியடையும். இப்படிப்பட்ட தாக்குதல் வடக்கிலிருந்துதான் தோன்றும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஏனென்றால் கடந்தகாலத்தில் அங்கிருந்துதான் ஏராளமான தாக்குதல்கள் உருவாகின. ஆனால் கடந்தகால அல்லது எதிர்கால வரலாற்றை நமக்கு அப்படியே படம் பிடித்துக் காட்டுகின்றது என்று எண்ணுதல் கூடாது. மாறாக நன்மைக்கும், தீமைக்கும் இடையே நடக்கும் போராட்டம் இறுதியாகத் தீர்க்கப்படவேண்டும் என்பதை மனதில் கொள்ளவேண்டும்.

**கோகுலா, ஒகுலா** (HOGLAH - கவுதாரி)

மனாசே கோத்திரத்தில் செலோபுகாத்தின் ஐந்து புதல்விகளுள் ஒருத்தி *(எண் 26:33; 27:1; 36:11; யோசு 17:3)*. இந்த ஐந்து புதல்விகளின் பெயர்களும் கானானிய நகர்களின் பெயர்களிலிருந்து வந்ததாக இருக்கலாம். எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சமாரியா பாண்ட ஓடுகளில் கோகுலா என்ற பெயர் காணப்படுகிறது.

**கோகெலேத்து** (KOHELETH, QOHELETH)

திருவுரையாளர் நூலின் ஆசிரியரது எபிரேயப் புனைபெயர். இச்சொல் ''சபையைக் கூட்டுதல்'' என்ற பொருளுடைய ''கால்'' என்ற எபிரேயச் சொல்லின் பெண்பால் பெயரெச்சமாகும். இச்சொல் ஒருபதவி

யையோ, பதவியைக் கொண்டிருப்பவரையோ குறிக்கப் பயன்பட்டது. திருவுரையாளர் நூலில் இச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கும் சூழ்நிலை (திருவுரை 1:1-2.12; 7:27; 12:8-10), இச்சொல் ஒரு தனிநபரின் பெயரன்று, ஒரு பட்டத்தையே குறிக்கிறது என்று சுட்டுகிறது.

காண்க: திருவுரையாளர் நூல்

**கோசா** (KOSAH - அடைக்கலம்) - ஆள்.

மெராரி குடும்பத்தாரின் ஒரு லேவியன்; எருசலேமுக்குத் தாவீது கொணர்ந்த ஆண்டவரின் திருப்பேழையின் கூடார வாயிற்காப்போரில் ஒருவன் (1 நாள் 16:38). வாயிற்காப்போர் பிரிவு விரிவுபடுத்தப்பட்டபோது, கோசாவும், அவருடைய 13 புதல்வர்களும், சகோதரர்களும் வாயிற்காப்பவர்கள் பிரிவில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். சல்லகேத்து வாயிலின் மேற்புறம் காவல் காக்க இவர்களில் ஆறுபேர் நியமிக்கப்பட்டார்கள் (1 நாள் 26:10-19).

**கோசா** (HOSAH - அடைக்கலம்) - இடம்.

ஆசேருக்குக் கொடுக்கப்பட்ட பகுதியில் உள்ள ஓர் எல்லையோர நகர் (யோசு 19:29). விவிலியச் சூழ்நிலையில் 'தீர்' நகரத்துக்கு அருகில் இது இருந்திருக்கிறது. ஆனால் உறுதியான அடையாளம் காட்ட முடியாது. அநேகமாக, எகிப்திய, அசீரிய ஏடுகளின் ஊசுவாக, கோசா, தீருக்குத் தெற்கில் 4 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலத்தேல் ரசிதியேவாக அடையாளம் காட்டப்படலாம்.

**கோசாம்** (COSAM - முன்கூட்டி அறிவிப்பவன்)

இயேசுவின் மூதாதையர் ஒருவரின் பெயர் (லூக் 3:28).

**கோசாய்** (HOZAI - காட்சியாளர்)

2 நாள் 33:19-இன் எபிரேய மூலப்படிவத்தின்படி - அரசன் மனாசேயின் வாழ்க்கைக் குறிப்பை நூலில் எழுதி வைத்ததில், சில வசனங்களுக்கு மூல ஆசிரியர். ஓர் எபிரேய வாசகமும், எழுபது நூலும் ''காட்சியாளர்'' என்று கொண்டுள்ளன. இந்தக் கருத்துதான் பொதுவாக முதன்மைபெறுகிறது. இருப்பினும் சில விளக்கவுரையாளர்கள் மாசரேட்டிக் வாசகத்தின் பெயர் அறியப்படாத இறைவாக்கினர் என்று எடுத்துக் கொள்கின்றனர். மூன்றாவது கருத்து எபிரேயப் பகுதியின் மெய்யெழுத்துக்களைத் திருத்தி வரிசைப்படுத்தி ''அவருடைய (அதாவது மனாசேயின்) காட்சியாளர்'' என்று பொருள் கொள்கிறது.

**கோசான்** (GOZAN)

வடமேற்கு மெசபொத்தாமியாவில் யூப்பிரத்தீசுக்கு அருகில் காபோர் (ஆபோர்) ஆற்றங்கரையில் அமைந்த ஒரு நகரமும் மாவட்டமும் ஆகும். பழைய ஏற்பாட்டில் இந்த ஆறு கோசானின் ஆறு அல்லது கோசான் ஆறு என்றழைக்கப்படுகிறது (1. நாள் 5:26). கோசானும், தாலாமாயால் குறிப்பிடப்படும் கவுசானித்தும் ஒன்றாக இருக்கலாம்.

மூன்றாம் திகிலத்து பிலேசர் என்ற அசீரிய மன்னன் ரூபன், காது, யோர்தானுக்கு அப்பாலுள்ள மனசே ஆகிய இனத்தவரைக் கோசான் பகுதிக்கு நாடு கடத்தியிருந்தான் (2 நாள் 5:26). சமாரியாவின் வீழ்ச்சியோடு 5-ஆம் சல்மனேசர் அல்லது சார்கோன் மற்ற வட பகுதியினரையும் நாடு கடத்தினான் (2 அர 17:6;18:11). பிற்காலத்தில் சனகெரிபு என்ற அசீரிய மன்னன் யூதாவின் எசேக்கியா மன்னனிடம், கோசானில் அசீரியர்கள் பெற்ற வெற்றிகளைக் கூறிப் பெருமைப் பட்டுக் கொண்டான் (19:12;எசா 37:12).

காரனுக்குக் கிழக்கிலுள்ள, இக்காலத் தேல் கலாபு இந்நகரமாக இருக்கலாம்.

**கோசு** (COS)

எகியன் கடலின் காரியாக் கடற்கரைப்பக்கம் உள்ள ஒரு சிறு தீவு. இது கப்பல்கள் செல்லும் பாதையில் அமைந்திருந்ததால் செல்வச் செழிப்புடையதாய் இருந்தது. இது திராட்சைரசம், பட்டு ஆகியவற்றிற்குப் பெயர் பெற்றது. இது ஆசீர்வதிக்கப்பட்டவர்களின் தீவுகளில் ஒன்று என்று கருதப்பட்

டது. இங்கிருந்த மருத்துவப்பள்ளி புகழ் பெற்றது. அதில் கிப்போகிராத்து ஒரு அங்கத்தினராவார். இங்கு மருந்துகளின் கடவுளாகிய அஸ்கிலேபியுசுக்கு ஒரு புனித இடமிருந்தது. இது எகியன் பகுதியில் யூதர்களின் முக்கியமான இடமாக மாறியது. லூக்கியு என்ற உரோமை மந்திரி கி.மு. 130-ஆம் ஆண்டில் செய்த உடன்படிக்கையின்படி இந்நாட்டில் உள்ள யூதர்களோடு சமாதானம் செய்து கொண்டான் (கி.மு. 138; 1 மக் 15:23). பெரிய ஏரோது இந்தத் தீவை ஆதரித்தான். அவன் தன் மகனுக்கு இங்கு ஒரு சிலை எழுப்பினான். பவுல் தனது மூன்றாம் மறை பரப்பும் பயணத்தின் முடிவில் மிலேத்திலிருந்து பயணம் செய்தபோது இங்குத் தங்கினார் (அ.ப. 21:1)

### கோசு (KOZ - முள்)

இவர் யூதா குலத்தைச் சேர்ந்தவர். ஆனுபு, சொபேபா ஆகியோரின் தந்தை (1 நாள் 4:8). இவர் ஒருவேளை அக்கோசு குருகுலத்தின் மூதாதையராக இருக்கலாம்.

### கோசுபி (COZBI - இன்பநாட்டமுள்ள, செழிப்பான)

மிதியான் நாட்டுத் தலைவர்களில் ஒருவரான சூர் என்பவரின் மகள். சிம்ரி இவளைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். எனவே பினகாசு அவர்கள் இருவரையும் கொன்று வரவிருந்த கொள்ளை நோயைத் தடுத்தார் (எண் 25:6-15). வேசியான இந்தக் கோசுபி மோசேயைக்கூடத் தன் வசமாக்கினாள் என்று தால்மூது கருதுவதாகத் தெரிகிறது.

### கோசேன் (GOSHEN)

1. எகிப்தில் நைல் நதிக் கழிமுகத்தில் ஒரு பகுதி. இங்குதான் யோசேப்பு யாக்கோபின் குடும்பங்களைத் தங்கச் செய்தார் (ஆதி 45:10; 46:28-47:6). இது வாடி துமிலாத்துக்கு மேற்கிலும் நைல்நதிக்குக் கிழக்கிலும் அமைந்திருந்தது. ஆனாலும் இதன் எல்லையைத் துல்லியமாகக் கொடுக்க முடியாது. இப்பகுதி யாக்கோபின் சந்ததியினருக்கு மேய்ச்சல் நிலமாகவும் (46:28-34;47:1) குடியேறும் பகுதியாகவும் கொடுக்கப்பட்டது. எகிப்தின் பிற பகுதிகளைத் தாக்கிய கேடுகள் இப்பகுதியைத் தாக்கவில்லை (யாத் 8:22; 9:4.26;10:23).

2. யோவாவால் கைப்பற்றப்பட்ட கானானின் ஒரு பகுதி (யோசு 10:41; 11:16). இது பாலஸ்தீனத்தின் தென்மேற்குப் பகுதியில் தாழ்ந்த மலைப்பகுதியில் அமைந்திருக்க வேண்டும். இது கெபிரோனுக்கும் (எபிரோனுக்கும்) நெகேபுக்கும் இடையில் அமைந்திருக்கலாம்.

3. யூதாவின் மலைப் பகுதியிலுள்ள ஒரு நகர் (யோசு 15:1). இது கெபிரோனுக்குத் (எபிரோன்) தென்மேற்கில் 19 கி.மீ. தொலைவில் உள்ள இக்காலச் சகரியே ஆக இருக்கலாம்.

### கோஸ்பா (COZEBA - பொய்)

யூதேயாவைச் சேர்ந்த மலைநாடுகளில் ஓர் ஊர் (1 நாள் 4:22). தெக்கோவாவின் மேற்கே ஏல் அரூப் பக்கமுள்ள கிர்பெத்து எத்-தில்பி என்ற இடமாக இருக்கலாம் என்று எண்ணப்படுகிறது. கோஸ்பா என்பது அக்சீபு (யோசு 15:44) அல்லது கெசீபு (ஆதி 38:5) என்ற இடங்களாக இருக்கலாம் என்று விவிலிய விளக்கவுரையாளர்கள் கருதுகின்றனர்.

### கோடரி (AXE)

கைப்பிடி தாங்கிய ஒரு வெட்டுக்கருவி.

1. இது மரத்திலும், கல்லிலும் வேலை செய்யப் பயன்பட்டது.

2. வெட்டுகின்ற விளிம்பைக் கொண்ட போர்க் கருவியுமாகும். இதில் பலவகையுண்டு. கோடரி மனிதனால் கண்டு பிடிக்கப்பட்ட காலத்தால் மிக முந்திய கருவியாகும். இதன் தலைப்பகுதி உலோகம் கண்டுபிடிக்கப்படுமுன் எலும்பு, மரம், கல் போன்றவற்றால் செய்யப்பட்டிருந்தது.

இதன் அமைப்பு மற்றும் பணி பற்றி விவிலியத்தில் காணும் எபிரேய, கிரேக்கச் சொற்களினால் எதையும் தெளிவாகக் கூற

முடியாது. பொதுவாக இது மரம் வெட்டப் பயன்பட்டது.

*2 சாமு 12:31;1 நாள் 10:3*-இல் குறிக்கப் படும் கோடரி எவ்வாறு பயன்படுத்தப் பட்டது என்பது தெளிவாக இல்லை.

*1 அர 6:7*-இல் இக்கருவி கல்லில் வேலை செய்யப் பயன்பட்டது. ஆலயத்திற்காகக் கற்கள் தயாரிக்கப்படும்போது சம்மட்டி போன்ற இரும்புக் கருவிகளால் வரும் சப் தம் கேட்காமலிருக்க இக்கருவி பயன்படுத் தப்பட்டது. இதே சொல் கிகோன் ஓடையி லிருந்து சீலோவாம் குளத்திற்கு நீர் கொண்டு வரப் பாறையைக் குடைந்து கால்வாய் வெட்டப்பட்டது பற்றிய கல்வெட்டில் மூன்று முறை பயன்பட்டுள்ளது. இச் சூழ்நிலையில் இச்சொல் மண்வெட்டி, குந்தாலி போன்றவற்றைக் குறிக்கலாம்.

எரே *10:3*-இல் இது தச்சன் கோடரி என்று கூறப்பட்டுள்ளது. மரத்தில் வேலை செய்ய இது பயன்பட்டது. கெசேர் என்ற இடத்தில் பல மாதிரிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

நீதி *9:4*-இல் அபிமெலக்கு இக்கோடரி யைக் கொண்டு மரக்கிளையை வெட்டி செக்கேமின் கோட்டையைச் சுற்றி வைத்து அவனும் அவனைச் சார்ந்தவர்களும் தீயிட்ட னர். இது கோடரி ஒரு கருவியாகவும், ஆயுதமாகவும் பயன்பட்டது என்பதைச் சுட் டுகிறது. அழிவுக்கும் இதைப் பயன்படுத்து வதால் போரிலும் இதை ஆயுதமாகப் பயன் படுத்தினர் (*சங் 74:5; எரே 46:22; 51:20; எசே 9:1-2*).

இதைப் பயன்படுத்தும்போது இதன் பிடி கழன்றால் என்ன நிகழும் என்பதை மனிதக் கொலை செயல் பற்றிய சட்டத்தில் குறிப் பிடப்பட்டுள்ளது (*உப 19:5*). பிடி கழன்று நீரில் விழுந்த கோடரியை எலிசா மீட்டார் (*2 அர 6:5*).

**கோட்டான்** (IBIS)

இது ஒரு நீர்ப்பறவையாகும். ஆறுகளி லும் ஏரிகளிலும் கரை ஓரங்களில் காணப்பட் டுள்ளது. இவை விவிலியக் காலத்தில் இருந் திருந்தாலும் கி.பி. 19-ஆம் நூற்றாண்டிலி ருந்து பாலஸ்தீனத்தில் காணப்படவில்லை. இது அசுத்தப் பறவைகளில் ஒன்றாகும் (*லேவி 11:17*).

பழங்கால எகிப்தில் இப்பறவை நன்கு அறியப்பட்டிருந்தது. அங்கு இது தோத்து என்ற தேவதைக்குப் புனிதமானதாகும். இவை நத்தை, நண்டு போன்றவற்றை உண்டு வாழ்ந்ததால், இஸ்ராயேல் மக்கள் இதை உணவாக ஏற்க மறுத்தனர்.

**கோட்டை, கொத்தளங்கள்** (BATTLEMENTS, CASTLE, CITADEL)

கோட்டை கொத்தளங்கள் ''காவல்கோபு ரம் முதல் அரண்சூழ்ந்த கோட்டைவரை'' (*2 அர 17:9; 18:8*) உள்ளடக்கிய பலவகைப் பட்டவையாகும். இவற்றைக் குறிக்கப் பல எபிரேயச் சொற்கள் பயன்பட்டுள்ளன. மொழிபெயர்ப்புகளும் பல சொற்களைப் பயன்படுத்துகின்றன.

பாதுகாப்பிற்கென நகரத்தினைச் சுற்றி (*சங் 48:3.13*) அல்லது அரண்மனையைச் சுற்றிக் (*1 அர 16:18; 2 அர 15:25*) கட்டப்பட் டது கோட்டையாகும். தாவீது எருசலே மைக் கைப்பற்றியபோது, முதன்முதலில் கோட்டையைப் பிடித்தார். பின் நகரினைக் கைப்பற்றினார் (*2 சாமு 5:7.9; 1 நாள் 11:5.7*).

அரண் என்று பொருள்தரும் எபிரேயச் சொல் கோட்டையால் சூழப்பட்ட கோபுரம் அல்லது கட்டடத்தைக் குறிக்கும் (*சங் 122:7; எசா 34:13; ஆமோ 1:22; 2:2; எரே 6:5; புல 2:7; பழ· 18:19*). மக்கபேயர்கள் காலத்தில் எருசலேம் நகரக் கோட்டை சீமோனால் கைப் பற்றப்படும்வரை செலூக்கியர்களின் கோட் டையாக இருந்தது (கி.மு.142; 1 மக் 13:49-52). கி.பி. 70-இல் தீத்துவின் தலைமையில் சென்ற உரோமையர் படை ஏரோதுவின் ஆலயத் தோடு சேர்ந்த அந்தோனியாக் கோட் டையை வீழ்த்தியது.

நெகே *7:2*-இல் வரும் ''அரண்மனைத் தலைவன்'' என்பது அநேகமாக நீதி *9:30;*

1 அர 22:26; 2 அர 23:8-இல் வரும் ''நகர்த் தலைவன் (அல்லது ஆளுநன்)'' என்பதற்கு இணையானதாக இருக்கலாம். பாதுகாக்கப் பட்ட நகர்களின் கோட்டை, கொத்தளங்கள் செப் 1:16; 3:6-இல் குறிக்கப்படுகின்றன. இவற்றைக் குறிக்கும் எபிரேயச் சொல் உ.ச. 8:9-இல் ''வெள்ளி அரண்கள்'' என்று உருவக மாகப் பயன்படுகிறது.

கிபயாவில் தோண்டி எடுக்கப்பட்ட சவுல் அரசனின் சிறிய கோட்டை ஓர் எடுத்துக்காட் டாகும். அதன் காலத்தையும் இடத்தையும் நோக்கும்போது, அது கரடுமுரடானதாயி னும் வலிமை மிக்கதாகும். ஏரோதின் ''அந் தோனியாக்கோட்டை'' (அ.ப. 21:34) மற்றொரு எடுத்துக்காட்டு.

### கோதாம், ஓதாம் (HOTHAM - முத்திரை மோதிரம்)

1. ஆசேர் வம்சத்தைச் சேர்ந்த ஓர் உறுப்பி னர். கெபேரின் (எபேர்) மகனும் பெரீயா வின் பேரனும் ஆவார் (1 நாள் 7:32). 7:35-இல் வரும் ஏலேம் இதே நபராகத்தான் தோன்றுகிறது.

2. அரோயேரியர். தாவீதின் ஆற்றல்மிக்க மனிதர்களுள் சாமா, எயியேல் ஆகியோரின் தந்தை (1 நாள் 11:44).

### கோதிக் மொழிபெயர்ப்பு (விவிலியத்தின்) (GOTHIC VERSION)

இம்மொழி கிரேக்க மொழியிலிருந்து உரு வான ஒரு கிளை மொழி. இம்மொழி அக்காலத்தில், ஜெர்மனி, ருமேனியா, ஆஸ்ட்ரியா, ஹங்கேரி முதலிய நாடுகளில் பேசப்பட்டது. கோதிக் மொழியில், மொழி பெயர்க்கப்பட்ட விவிலியம் பலவிதச் சிறப்பு களுக்கு உரியதாகிறது. இதனை மொழி பெயர்ப்புச் செய்தவரின் பெயர் முதற் கொண்டு, இதனைப் பற்றிய பல விபரங்கள் விளக்கமாக நமக்குக் கிடைக்கின்றன. உல் பிலசு என்ற ஆயர், இம்மொழி பெயர்ப்பின் வாய்ப்பில், கோதிக் மொழிக்காகத் தனி எழுத்துக்களை உருவாக்கியிருக்கிறார். இவர் கி.பி. நான்காம் நூற்றாண்டின் மத்திய ஆண்டுகளில் (341) விவிலியத்தைக் கோதிக் மொழியில் மொழி பெயர்த்தார். இவர் செய்த மொழி ஆக்கத்தின் படிவங்கள், ஆறு பழஞ்சுவடிகளில் மட்டும் நமக்குக் கிடைக் கின்றன. இவையனைத்தும், உடைந்து குறைந்துபோன ஏடுகள். இவற்றில் மிகப் பழையது தொடக்ககால பைசாந்திய வாசக மாகும். இது சொல்லுக்குச் சொல் மொழி பெயர்த்திருக்கிறது. ஆனால் பழைய இலத் தீன் வாசகத்தோடு கொண்டுள்ள ஒப்புமை, இது உல்பிலசுக்குப் பின்னும் கோதிக் கிறிஸ் தவர்கள் 348-இல் மேசியாவுக்கு விரட்டப் பட்ட பின்னும்தான் நிறைவு செய்யப்பட் டது என்று காட்டுகிறது. ஆனால் 5-ஆவது அல்லது 6-ஆவது நூற்றாண்டைச் சார்ந்த ஒரு நல்ல பழம் ஏட்டுத் தொகுப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது. இது வெள்ளிமணியேடு என்று அழைக்கப்படுகிறது. ஏனென்றால் கத்தரிப்பூ நிறம் கொண்ட தோல் ஏட்டில், வெள்ளி நீலம் கொண்ட மையால் இது எழுதப்பட்டுள்ளது. இதில் நான்கு நற்செய் தியிலிருந்தும் சில பகுதிகள் இடம் பெற் றுள்ளன.

பழைய ஏற்பாட்டைப் பொறுத்தவரை ஒரு சில துண்டுப் பழம் ஏடுகளே, இக் கோதிக் மொழிபெயர்ப்பில் கிடைத்துள்ளன. கீழ்க்காணும் வசனங்களைக் கொண்ட ஏடு கள் அவை. ஆதி 5:3-32; சங் 52:2-3; நெகே மியா நூலின் ஒருபகுதி. இந்தப் பழைய ஏற் பாட்டு மொழிபெயர்ப்பு லூசியன் என்ப வர் திருத்திய எழுபது நூலைப் பின்பற்றிச் செய்யப்பட்டதாகும்.

புதிய ஏற்பாட்டைப் பொறுத்தவரை ஏறக் குறைய எல்லாப் புத்தகங்களுக்கும் சான்றா கக் கோதிக் மொழிபெயர்ப்பின் பழம் ஏடு கள் நிறையக் கிடைத்துள்ளன. ஆனால் அப் போஸ்தலர் பணி, பேதுரு, யோவான், யூதா எழுதிய கடிதங்கள் (பொதுத் திருமுகங்கள்), திருவெளிப்பாடு ஆகிய புத்தகங்களின் வாச கங்கள், இம்மொழி பெயர்ப்பின் பழம் ஏடுகளில் இடம் பெறவில்லை. இம் மொழி பெயர்ப்பு தாள்களில் எழுதப்பட்டவிதம், பழைய இலத்தீன் மொழிபெயர்ப்பு எழுதப் பட்ட முறையை ஒத்திருக்கிறது.

**கோதுமை** (WHEAT)

பல எபிரேய மூலச்சொற்கள் கோதுமை என்றும், தானியம் என்றும், தினை என்றும் வெவ்வேறு இடங்களில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. எப்பெயர் கொண்டு அழைக் கப்படினும் கோதுமை என்னும் தானியமா னது உணவு தானியங்களுள் ஒரு முக்கியத் தானியமாகவும், புதிய கற்காலம் முதல் பயிரிடப்பட்டு வந்த ஒரு தானிய வகை என்றும் அறிய வருகிறோம்.

தாவரவியல் வல்லுநர்கள் இனக்கீற்று களின் எண்ணிக்கையின் அடிப்படையில் மூவ கைக் கோதுமைகள் இருப்பதைக் கண்டு பிடித்துள்ளனர். 14 இனக்கீற்றுகளை உடைய எயின்கோன் வகை முதல்தரமான கோதுமை என்றும், 28 இனக்கீற்றுகள் உடைய எம்மர் வகையும், 42 இனக்கீற்றுகளை உடைய ஸபெல்ட் வகையும் முறையே இரண்டாம், மூன்றாம் தரக்கோதுமைவகைகள் என்றும் பிரித்துள்ளனர். சோகரி என்பாரின் கருத்துப் படி விவிலியம் குறிப்பிடும் கோதுமை இரண்டாம் தரத்தினது; 'எம்மர்' கோதுமை வகையைச் சேர்ந்ததாகும். சிறிய ஆசியாவி லும் அதன் வடக்குப் பகுதிகளிலும் ஸ்பெல்ட் வகை காணப்பட்டாலும் எகிப்திலும் அதன் தெற்குப் பகுதிகளிலும் எம்மர் வகைக் கோதுமையை அதிகமாகக் காணலாம்.

கோதுமை அறுவடைக் காலத்தைப்பற்றி யும் (ஆதி 30:14; யாத் 34:22; நீதி 15:1) கோதுமையறுப்பின் முதற்பலனை ஆண்ட வருக்குச் செலுத்தும் வாரங்களின் திருவிழா வைப் (யாத் 34:22; எண் 23:26-31) பற்றியும் பல குறிப்புகள் விவிலியத்தில் காணக்கிடக் கின்றன. வாரங்களின் திருவிழாவானது யூதர் களின் மூன்று முக்கியத் திருவிழாக்களுள் ஒன்றாகும். விவிலியத்தில் கோதுமை அறு வடையைப் பற்றியும் (ரூத் 2:23; 1 சாமு 6:13), கோதுமையைப் பிரித்தெடுப்பதைப் பற்றி யும் (நீதி 6:11; 1 நாள் 21:20), கோதுமையைச் சுத்திகரிப்புச் செய்வது பற்றியும் (2 சாமு 4:6), கோதுமைப் பதர்களை நீக்குவதுபற்றி யும் (மத் 3:12) குறிப்புகள் உள்ளன.

தீர் தீவுடன் செய்த வாணிபத்தில் கோதுமை முக்கிய இடம் வகித்ததை 1 அர 5:11; 2 நாள் 2:10:15; எசேக் 27:14; அ.ப. 12:20; திருவெளி 18:13 ஆகியவை குறிப்பிடுகின் றன. கோதுமை இறைவனுடைய அன்புக் கும், ஆதரவுக்கும் ஒரு அடையாளமாகவும் விவிலியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம் (சங் 80:16;146:14). சாபத்திற்கும் (யோபு 31:40; எரே 12:13), மணமகளின் அழகிற்கும் அடையாளமாயிற்று (உ.ச. 7:2). புதிய ஏற்பாட்டில் கோதுமை உவமைகளி லும் உருவகப் பொருளிலும் பயன்படுத்தப் பட்டுள்ளது (மத் 3:12; லூக் 3:17; மத் 13:25-30; லூக் 16:7). பவுலும் (1 கொரி 15:37) யோவானும் (யோவா 12:24) மனந்திரும்பிய அருள் வாழ்வை மண்ணில் விழுந்துமடிந்து புதிதாக முளைத்தெழும் கோதுமைமணி யுடன் ஒப்பிட்டுப் பேசுகின்றார்கள்.

புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கருகிப் போன தானியவகைகள் சிலவற்றைக் கண் டெடுத்துள்ளனர். இக்கண்டுபிடிப்பு யோர் தானுக்கு அப்பால் உள்ள பகுதி கோதுமை உற்பத்தியில் எவ்வளவு சிறந்திருந்தது என்ப தனை விளக்குகிறது.

**கோதேசு, ஓதேசு** (HODESH - அமாவாசை)

பென்யமின் குலத்தவரான சகரயிமின் மனைவி (1 நாள் 8:9; ஆனால் இப்பகுதி பழுதுபட்டதாகும்).

**கோணி, சாக்கு** (SACK)

பல மேற்கோள்கள் இதைத் 'தானியம் அல்லது உணவை உள்ளடக்கி வைக்கப் பயன்படும் பைபோன்ற பொருள்' என்று குறிக்கின்றன. பெரும்பாலும், இது வெள் ளாட்டு உரோமத்தால் செய்யப்பட்ட சொர சொரப்பான துணியாக இருக்கும் (1 சாமு 9:7;2 அர 4:42). காண்க: சாக்கு உடை.

**கோபம்** (ANGER)

காண்க: கடுஞ்சினம், சினம்.

**கோபா** (CHOBA)

பாலஸ்தீனத்தின் வடபகுதியில் உள்ள பலகிராமங்களில் இதுவும் ஒன்று. ஒலபெரி

னேயின் கீழ் உள்ள அசீரியர்களின் படையெடுப்புக்கு அஞ்சி மக்கள் இதன் கோட்டைக்குள் ஒன்று கூடினர் (யூதி 4:4). எதிரியான அசீரியர்களின் தலைவன் யூதித்தால் கொல்லப்பட்டதும்,பாலஸ்தினத்திலுள்ள, இஸ்ராயேலர் அனைவரும் அவர்களைத் துரத்திச் சென்று கோபாவிலும், தமஸ்வுக்கு அப்பாலும் அவர்களைக் கொன்று அழித்தொழித்தனர் *(15:4-5)*.

இக்கிராமம் எங்கு இருந்தது என்பதைத் தெளிவாகக் கூறமுடியாது. ஆயினும் பலர் பேசானிலிருந்து சமாரியர்களின் மலைநாடுகளின் வழியாகச் செல்லுகின்ற முக்கியமான சாலையில் உள்ள ஏல்மெக்குபி என்ற இடம் இது என்று அடையாளம் காட்டுவர். இந்த இடம் பேசானுக்கும், தூபாசுக்கும் இடையே உள்ளது. ஆதி 14:15-இல் காணப்படுகின்ற தமஸ்குவின் வடக்கே உள்ள கோபா (ஓபா) என்ற இடத்தின் பெயரிலிருந்து இது வந்திருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர்.

**கோபா, ஓபா** (HOBAH - மறைத்து வைக்கப் பட்ட)

தமஸ்குவைத் தலைநகரமாகக் கொண்டு விளங்கிய ஒரு நாடு. ஆதி 14:15-இன்படி ''தமஸ்குவின் இடப்பக்கத்தில்'' அதாவது ''தமஸ்குவுக்கு வடதிசையில்'' கோபா இருந்தது. இதுவரை, ஆபிரகாம் கெதர்லகோமரையும் அவரது கூட்டணியையும் துரத்திச் சென்றார். கோபாவுக்கு (ஓபா) இடம் குறிப்பிடப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. உதாரணமாகத் தமஸ்குவுக்கு வடமேற்கே 96 கி.மீ. தொலைவில் உள்ள காபூன் அல்லது கோபாவைச் சிலர் குறிப்பிடுகிறார்கள். அமர்னா ஏடுகளின்படி 'உபே' தான் இந்தநாடு. அதன் தலைநகர் தமஸ்கு என்று சொல்லப்படுகிறது. கி. மு. 16-ஆம் நூற்றாண்டுக்குமுன் தமஸ்கு என்ற பெயரை யாரும் அறிந்திருக்கவில்லை. தம்சியீர்களின் குடியிருப்பு மையமாக வேறொரு நகர் விளங்கியிருக்கலாம். தமஸ்குவுக்குக் கிழக்கே 16 கி.மீ. தொலைவில் இருக்கும் தேல் ஏல்-சலிகியே குன்றுதான் இப்பகுதியில் பெரிய குன்றாகும். முற்காலத்தில் தலைநகர் இதன்மேல் இருந்திருக்க வாய்ப்பு இருப்பதற்கு ஆதாரம் தருவதாக அமைந்திருக்கிறது. கோபா இவ்விடத்தின் பெயராக இருந்திருக்கலாம். தமஸ்கு தலைநகரானவுடன் இதனுடைய முக்கியத்துவத்தை இது இழந்துவிட்டிருக்கலாம். வரலாற்றுக்கு முற்காலத்துக்கு முன்பிருந்து இங்கு ஒரு குடியிருப்பு இருந்தது என்பதைத் தேல் ஏல்-சலிகியே காட்டுகிறது. பழைய பாபிலோனிய காலத்தில் கிழக்கிலிருந்து வரும் பகைவர்களுக்கு எதிராகக் கோட்டையும், பாதுகாப்பும் நிறைந்த ஒரு முக்கியமான நகரம் இங்கு இருந்தது.

**கோபாபு, ஓபாபு** (HOBAB அன்புக்குரியவர்)

கோபாபு மோசேயின் மாமன் ஆவார் (எண் 10:29; நீதி 4:11). மோசேயின் மாமனார் பெயர் பற்றி மாறுபடுகின்ற பாரம்பரியங்கள் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. கோபாபுவோடு மிதியான் நாட்டுக் குருவாகிய இத்திரோவும் (யாத் 3:1;18:1) இராவேலும் (யாத் 2:18) மோசேயின் மாமன்களாகக் குறிப்பிடப்படுகிறார்கள். எண் 10:29-இல் கோபாபு ஒரு மிதியான் நாட்டவராகவும் நீதி 4:11இல் கேனியராகவும் குறிக்கப்படுவதால் கோபாபுவின் அடையாளம் பற்றி ஒன்றும் உறுதியாகக் கூறமுடியாது. யாத் 2:18-இல் கோபாபுவின் பெயர்தான் குறிக்கப்பட்டிருக்கலாம். அப்படியிருப்பின் அந்த வசனத்தில் இரகுவேல் என்பது ஓர் இனக்குறிப்பாக இருக்கலாம். ஏழுபதுநூல் கையெழுத்துப்பிரதிகளின் சில ஆதாரங்கள் நீதி 1:16, ஒருகாலத்தில் ''கேனியரான கோபாபு'' என்று இருந்திருக்கவேண்டும் என்று சுட்டுகின்றன.

பாலைவனத்தில் வழிகாட்டியாக இருந்து இஸ்ராயேலை வழிநடத்தும்படிகோபாபுவை மோசே தூண்டினார். எண் 10:29-31. இப்படிச் செய்தாரா என்று கூறாவிட்டாலும், நீதி 1:16 அவர் வழிகாட்டியதை நினைவூட்டவிளைகிறது.

**கோபு** (GOB - தொட்டி)

இவ்விடத்தின் இருப்பிடம் தெரியவில்லை. இங்குத் தாவீது பெலிஸ்தியர்களு

டன் இருமுறை போரிட்டார் (2 சாமு 21:18-19). 1 நாள் 20:4-இல் சொல்லப்படும் இணைக்கதையில் கோபுவுக்குப் பதிலாகக் கெசேர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே 2 சாமு 21:18-19 என்ற வாசகம், இதைப் பொருத்தமட்டிலும் தவறானதாக இருக்கலாம்.

### கோபுரம் (TOWER)

விவிலியத் திருநாட்டில் கோபுரங்கள் பரவலாகக் காணப்பட்டன. நகர்களிலும், தோட்டங்களிலும், மற்றும் மேய்ச்சல் நிலங்களிலும் இவை கட்டப்பட்டன. இவை கற்கள் மற்றும் செங்கற்களால் பல உயரங்களில் கட்டப்பட்டன. இவை பாதுகாப்புக்காகவும், அடைக்கலத்திற்காகவும் பயன்படுத்தப்பட்டன. ஆதியிலே மனிதன் வானை முட்டுமளவுக்குக் கோபுரம் ஒன்றைக்கட்ட விரும்புகிறான் (ஆதி 11:4) 'கோபுரம்' என்னும் சொல் ''மிக்தால்'' என அழைக்கப்படுகிறது (2 அர 9: 17; எசா 2:15). பாதுகாக்கும் கோபுரமாக இறைவனை ஒப்புமைப்படுத்துகிறது விவிலியம் (2 சாமு 22:61). முற்றுகைக் கோபுரம் எனவும் (ஏசா 23;13) காவற் கோபுரம் எனவும் (32:14) பலவகைக் கோபுரங்கள் உண்டு. சில கோபுரங்களின் பெயர்களும் விவிலியத்தில் இடம் பெறுகின்றன. அவை தாவீதின் கோபுரம் (உ.ச. 4:4), ஏதேர் கோபுரம் (ஆதி 35:21), மந்தைக் கோபுரம் (மீக் 4:8), சூளைகளின் கோபுரம் (நெகே 3:11), லெபனோன் கோபுரம், நூற்றுவர் கோபுரம், பானுவேஷின் கோபுரம், செக்கேமின் கோபுரம், இசிரியேலின் கோபுரம், தீர் கோபுரம், எருசலேம் கோபுரம் மற்றும் சிலோவாம் கோபுரம் என்பனவாம். ஊசியா மன்னன் (2 நாள் 26:9), யோத்தாம் அரசன் (2 நாள் 27:4), எசேக்கியா மன்னன் (2 நாள் 32:5) ஆகியோர் கோபுரங்களைக்கட்டினர். கோபுரங்கள், கடவுளின் பாதுகாக்கும் வல்லமைக்கு ஒப்பிடப்பட்டுக் கூறப்படுகின்றன (சங் 61:3). மேலும் மனிதனின் சக்தியையும் அவை எடுத்துக் காட்டுகின்றன (உ.ச. 4:4). பெண்ணின் அழகை வருணிக்கக் கோபுரம் உதாரணமாகக் கொள்ளப்படுகிறது (7:4; 8:10). தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள், பற்பல புதிய கற்காலக் கோபுரங்களைத் தோண்டி எடுத்துள்ளனர். குறிப்பாக இவை எரிகோ, பெத்சான், மெகிதோ, இலாக்கிசு, மிஸ்பா சமாரியா போன்ற இடங்களில் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன.

### கோபுரங்கட்டுதல், அரசன் போர்தொடுத்தல் (PARABLE OF BUILDING A TOWER & MAKING WAR) (லூக் 14:25-35)

இந்த இரு உவமைகள் - ஒருவன் இயேசுவின் சீடனாயிருக்க அர்ப்பணிப்பு அவசியம் என உணர்த்துகின்றன; தயார்படுத்திக் கொள்ள வேண்டும். இவற்றை நினைத்துப் பார்க்காமல் செயலில் இறங்கினால் பின்னர் வருந்த வேண்டி வரும். கோபுரங்கட்டுதலிலே செலவைக் கணிக்க வேண்டும். இதே போன்று இறையரசிலே நுழையவும் விண்ணக இன்பத்தைச் சுவைக்கவும் ஒருவன் செய்ய வேண்டிய தியாகங்களை எண்ணிச் செயல்பட வேண்டும். உணர்ச்சிகளுக்கு அடிமையாகாதவனாய் உண்மை ஈடுபாட்டுடன் சீடன் வாழ வேண்டும். போருக்கு ஆயத்தமாகும் அரசன் போலச் சீடனும் தன்னையே தயார்படுத்திக் கொள்ள வேண்டும். துன்பதுயரங்களைக் கண்டு அஞ்சாமல் கடைசிவரை இயேசுவைப் பின்பற்றி வாழ்பவன் இறையரசைப் பெறுவான்.

### கோப்திக்கு மொழி பெயர்ப்பு (விவிலியத்தின் - COPTIC VERSION)

கோப்திக்கு மொழி என்பது எகிப்திய மொழியின் பிற்கால வடிவம் ஆகும். கிறித்துவம் பரவிய காலத்திற்கு முன்னதாக, இம்மொழி, முற்கால எகிப்திய எழுத்து முறையில் எழுதப்பட்டது. இதில் எழுத்துக்கள், சித்திர எழுத்துமுறையில் எழுதப்பட்டன. அதாவது குறிக்கும் பொருளின் உருவத்தையே எழுத்துக்கள் பெற்றிருக்கும். ஆனால் கிறித்துவம் பரவிய காலங்களில், இம்மொழிக்குக் கிரேக்க மொழியின் எழுத்துக்களை எழுதப் பயன்படுத்தினர். இந்தக் கிரேக்க மொழி எழுத்துக்களோடு 7 பழைய எகிப்திய எழுத்துக்களையும் சேர்த்துக் கொண்டனர். காலப்போக்கில் இம் மொழியிலிருந்து பல துணை மொழிகள் பிரிந்து வளர்ந்தன.

இப்பல திரிபு மொழிகளின், 6 மொழிகளில் விவிலியத்தின் பழம் ஏடுகள் நமக்குச் சான்றாகக் கிடைத்துள்ளன. அம்மொழிகளின் பெயர்கள் பின் வருமாறு. (1) சகிதிக்கு. முதலில் இது தேபாயிக் என்று அழைக்கப்பட்டது. இது எகிப்தின் தென்பகுதியில் நைல் பள்ளத்தாக்கில் பேசப்பட்டுவந்த மொழி. (2) பொகையிரிக்கு. இது முதலில் மெம்பிடிக் என்று அழைக்கப்பட்டது. இது எகிப்தின் வட பகுதியிலும், நைலின் கழிமுகப்பகுதியில் அலக்சாந்திரியா நகர்ப் பகுதிகளிலும் பேசப்பட்டது. (3) அக்மிமிக்கு. இதுவும் எகிப்தின் தென்பகுதியில் அக்மிம் என்ற இடத்தைச் சுற்றிப் பேசப்பட்டுவந்தது (4) துணை அக்மிமிக்கு. இது மேற்கூறப்பட்ட அக்மிமிக்கு மொழியிலிருந்து சிறிதளவுமட்டும் வேறுபட்டது. இப்பிரிவு அஸ்யுத் என்ற இடத்திற்குத் தென் பகுதியில் பேசப்பட்டு வந்தது. (5) இடை எகிப்தியம். (6) ஃபாய்யுமிக்கு. இது முதலில் பஷ்முரிக் என்று அழைக்கப்பட்டது. இம்மொழி நைல் நதியின் மேற்குப் பகுதியில் பயன்படுத்தப்பட்டது.

இந்த ஆறு மொழிப்பிரிவுகளிலும் சகிதிக்கு, பொகையிரிக்கு என்ற இரண்டு பிரிவுகள், விவிலியம் மொழிபெயர்க்கப்பட்ட அளவில் முக்கியமானவை.

கி.பி. 3ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே, சகிதிக்கு மொழிப்பிரிவில் புதிய ஏற்பாடு மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. பிறகு அடுத்த 100 ஆண்டுகளுக்குள்ளாக விவிலியத்தின் எல்லாப் புத்தகங்களும், இம்மொழிப்பிரிவில் (கி.பி. 270 -இலேயே) மொழி பெயர்க்கப்பட்டுவிட்டன. இவை ஓரிசனின் எழுபதுநூல் வாசகத்தை அடிப்படையாகக் கொண்டவை. தற்போது நமக்கு ஏராளமான, சகிதிக்கு விவிலியப் பழஞ் சுவடிகள் கிடைத்திருக்கின்றன. ஆனால் அவைகள் ஒன்றுக்கொன்று மொழியாக்கத்தில் வேறுபடுகின்றன. இது சகிதிக்கு மொழியில், பலமுறை, பலரால் தனிப்பட்ட முறையில் விவிலியம் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது என்பதை எடுத்துக்காட்டுகிறது.

பொகையிரிக்கு மொழிபெயர்ப்பு காலத்தால் பிந்தியது. கோப்திக் மொழியில் வழங்கி வந்த பல மொழி பெயர்ப்பிற்கெல்லாம் திருத்தம் அளித்து, மாற்று மொழி பெயர்ப்பாக இது அமைக்கப்பட்டது. இந்த மொழி பெயர்ப்பிலும் ஏராளமான பழஞ் சுவடிகள் நமக்குக் கிடைத்துள்ளன. ஆனால் அவையனைத்தும் பிற்காலத்தியவை. அதாவது கி.பி. 12 முதல் 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. ஆனால் இது 4ஆம் நூற்றாண்டிலேயே மொழி பெயர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

கோப்திக்கு மொழி பெயர்ப்பிற்குப் பழைய ஆகமத்தின் எழுபதுநூல் என்ற கிரேக்க விவிலியத்தைப் பயன்படுத்தியுள்ளனர்.

புதிய ஏற்பாட்டில், சகிதிக், பொகையிரிக் என்ற இரண்டு மொழி ஆக்கங்களும், அலக்சாந்திரிய நகரில் விளங்கிய பாரம்பரிய வாசகங்களுக்கு ஒத்திருக்கின்றன. சகிதிக், பொகையிரிக் மொழிபெயர்ப்புக்களைத் தவிர்த்து, துணை அக்மிமிக்கு மொழி பெயர்ப்பில் மட்டும்தான் ஒரே ஒரு முக்கியமான பழம் ஏடு நமக்குக் கிடைத்துள்ளது. இது யோவான் நற்செய்தியின் ஒரு பகுதியாகும். கி.பி. 4ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது இது. ஆனால் மற்றக் கோப்திக்கு மொழி பெயர்ப்புக்களில் பழஞ்சுவடிகள் நமக்குக் கிடைக்கவில்லை. கோப்திக்கு மொழி பெயர்ப்பில் இன்னும் ஆழ்ந்து ஆராய்ச்சியாளர்கள் ஆய்ந்து வருகின்றனர்.

இவையாவும், வாசக ஆய்வுக்குக் குறிப்பாக எழுபதுநூல் தொகுப்பு ஆய்வுக்குப் பெரிதும் உதவியுள்ளன.

**கோப்பு** (KOPH)

கோப்பு என்பது எபிரேய நெடுங்கணக்கில் 19-ஆவது எழுத்தாகும். சங் 119-இல் 19-ஆவது பிரிவின் தலைப்பாக இவ்வெழுத்து உள்ளது. இப்பிரிவில் ஒவ்வொரு வரியும் இவ்வெழுத்தோடு தொடங்குகிறது.

**கோபெர் மரம்** (GOPHER WOOD)

இம்மரத்தினால் பெட்டகம் செய்ய வேண்டும் என்று நோவா கட்டளையிடப்பட்டார். இக்குறிப்பு ஆதி 6:14-இல் ''நன்கு இசையும் மரம்'' என்று மற்றொரு மொழி பெயர்ப்பு

கூறுகிறது. பிசின் பசையுள்ள மரத்தால் இப் படகு செய்யப்பட்டது என்று சிலர் கருது வர். வேறு சிலர் குச்சிகளாலும் பனை ஓலைகளாலும் செய்யப்பட்டு நிலக்கீல் பூசப்பட்ட மெசபொத்தாமியப் படகு என் பது இச்சொல்லின் சொல்லிலக்கணம் என் பர். எதுவானாலும், இது தேவதாருமரம் போன்ற ஒன்றாகும். கப்பல் கட்டுதலில் இது பொதுவாகப் பயன்படுத்தப்பட்டது.

**கோமாம், ஓமாம்** *(HOMAM - அழிவு)*

ஏதோமில் உள்ள ஒரு கோரியர். லோத்தா னின் மகனும் செயிரின் பேரனுமாவார் *(1 நாள் 1:39)*. ஆதி *36:2*-இல் இவரது பெயர் ஏமான் என்றுள்ளது. காண். ஏமான்-3.

**கோமேதகம்** *(ONYX, SARDONYX)*

நீலச் சாயலை உடைய வெண்ணிற மணிக்கல்.

பொன், வாசனைப் பொருட்களோடு இது வும் கவிலா (அவிலா) நாட்டைச் சேர்ந்ததா கும் (ஆதி *2:12*). இது ஏபோதுக்கும் மார்புப் பட்டைக்கும் வேண்டிய காணிக்கையாக ஏற் றுக்கொள்ளப்பட்டது (யாத் *25:7; 35:9.27*). ஆரோனின் ஏபோதின் தோள்பட்டைகளில் பதிக்கப்பட்டிருந்த கற்களில் இதுவும் ஒன்று *(28:9; 39:6)*. தீர்ப்புக்கூறும் மார்புப் பட்டை யில் பதிப்பிக்கப்பட்ட கற்களில் இதுவும் ஒன்று *(28:20;39:13)*. ஆண்டவரின் ஆலயத் தைக்கட்ட தாவீது சேர்த்து வைத்த பொருள் களில் இதுவும் ஒன்றாக இருந்தது (1 நாள் *29:2*). ஞானத்தை மதீப்பீடு செய்ய இது பயன்படுத்தப்பட்டது (யோபு *28:16*). கோமேதகத்திற்குப் பதிலாக எசே *28:13*-இல் படிகப்பச்சை என்றும், யாத் *28:20*-இல் பளிங்குக்கல் என்றும் சில வாசகங்களில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. தீர் நாட்டு அரசனின் மேலாடையில் பதிப்பிக்கப்பட்ட கற்களில் இதுவும் ஒன்று.

புதிய எருசலேம் நகரின் 5-ஆவது அடித் தளக் கல்லாகக் கோமேதகம் இருந்தது (திரு வெளி *21:20*).

**கோமேர்** *(GOMER - முடித்தல்)*

1. யாபேத்தின் (எபேத்தின்) மூத்த மகன். ஒரு மக்களினத்தின் குலப்பெயர் முதியவ ராக நாடுகளின் பட்டியலில் குறிக்கப்படு கிறார் (ஆதி *10:2-3;* 1 நாள் *1:5-6*). இவர்களின் பெயர் அக்காதிய கிமிர்ரா என்பதற்குச் சமமாகும். இவர்கள் சிமிரியர்கள் என்று அழைக்கப்பெறுகின்றனர். இவர்கள் ஒரு நாடோடி மக்கள்; கருங்கடலுக்கு வடக்கில் வாழ்ந்து வந்தனர். கி.மு.8-ஆம் நூற்றாண் டில் இவர்கள் தெற்கு நோக்கிப் புறப்பட்டுக் கப்பதோக்கியாவில் குடியேறினர். இவர்கள் லீதியா அரசை முடிவுக்குக் கொண்டுவந்த னர். எசே *38:6*-இல் இவர்கள் யாபேத்தின் மற்ற மக்களாகிய மாகோகு, மேசேக்கு, தூபல் ஆகியோருடனும் காமின் மக்களாகிய கூசு, பூற்று ஆகியோருடனும் தொடர்புபடுத்தப்படு கின்றனர். இவர்கள் யாவரும் கோகுவின் படையைச் சேர்ந்தவர்கள்.

2. திப்லாயிமின் மகள். இறைவாக்கினர் ஓசேயாவின் மனைவி (ஓசே *1:3*). இனப் பெருக்க வழிபாட்டோடு தொடர்புடைய ஒரு விலைமாதாக இருக்கலாம். இவளை மணக்க ஓசேயாவுக்கு யாவே கட்டளையிடுகி றார். திருமணத்தில் இவளுடைய பிரமா ணிக்கமின்மை, இஸ்ராயேல் இறைவனுக் குப் பிரமாணிக்கமின்மையை எடுத்துக்காட் டும் ஓர் உவமையாக நாடகப்பாணியில் இறைவாக்கினரால் பயன்படுத்தப்படுகிறது.

**கோயிம்** *(GOIIM - நாடுகள்)*

1. மூன்று கிழக்கத்திய அரசர்களோடு சேர்ந்து திதால் அரசனால் நடத்தப்பட்டு, பள்ளத்தாக்கின் நகர்களைத்தாக்கிய மக்கள் (ஆதி *14:1.9*). இவர்கள் வடபகுதியில் வாழ்ந்த செமித்தியர் அல்லாதவர்களாக இருக்கலாம். இத்திய அரச பெயராகிய துதா லியாஸ் என்பதற்கும் திதால் என்ற பெயருக்கு மிடையேயுள்ள ஒற்றுமையைக் கொண்டு இம்மக்கள் இத்தியர்கள் என்று கருதப்படு வர்.

2. யோசு *12:23*-இல் குறிப்பிடப்படுகின்ற மக் கள். இங்கு கோயிமின் (கலிலேயாவில் உள்ள) அரசன் யோசுவாவால் தோற்கடிக்கப் பட்டவருள் ஒருவர். இம்மக்கள் இடம் விட்டு இடம் பெயரும் குழுவாக இருக்க லாம். பெலிஸ்தியர்களுடன் தொடர்பு கொண்டவர்களாயும் இருக்கலாம். எழுபது

நூல் கலிலேயா என்பதையும் மாசரேட்டிக் வாசகம் கில்கால் என்பதையும் கொண்டுள் ளன. இங்கு அபேக்குக்கு வடக்கில் உள்ள கில்கால் குறிக்கப்படலாம். சிலர் இதை நீதி. *4:2*இல் வரும். கரோசத்துககோயிமாக, (அரோசத்ககோயிம்) அடையாளம் காட்டு கின்றனர்.

**கோரகித்காது, ஓரகித்காது** (HOR-HAGGI-DGAD - கித்காதின் குகை அல்லது பொந்து).

இஸ்ராயேல் பாலைவனத்தில் பாளையம் இறங்கித் தங்கிச் சென்ற ஓர் இடம். எண் *33:31*-இல் மோசரோத்து, பென்யாக்கான், கோரகித்காது, யோற்று பாத்தா என்று பாளையம் இறங்கிய இடங்களை வரிசைப் படுத்துகிறது. ஆனால் உப *10:6-7* யாக்கான் புதல்வரைச் சேர்ந்த பேயரோத்து பென்-யாக்கான், மோசேரா, குத்கோதா, யோற்று பாத்தா என்று வரிசைப்படுத்துகிறது.

வாடி காதகெத்தோடு இவ்விடம் ஒன்று படுத்தப்படுகிறது. வாடி காதகெக் என்பது ஒரு நீரோடை. இது வாகிடி ஜெராபெ வழியா கப் பாய்கிறது, அரபா பகுதியில் உள்ள வாடி ஏல் யெயிபில் பாய்கிறது. ஆனால் இக்கருத்து, மொழியாராய்ச்சி அடிப்படை யில் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை.

**கோராகு** (KORAH - வழுக்கையான)

1. இவர் எசாயுவின் மூன்றாம் மகன் (ஆதி *36:5.14*; *1* நாள் *1:35*). இவர் ஏதோமியரின் தலைவராக இருந்தார் (ஆதி *36:18*).

2. இவர் எசாயுவின் பேரனும், எலீப்பா சின் மகனும் ஆவார். ஏதோமியரின் தலை வர்களில் ஒருவர் (ஆதி *36:16*).

3. இவர் பாலைவனத்தில் நடந்த கல கத்தை முன்னின்று நடத்தியவர். எண் *16*-இல் *3* கலகங்கள் இணைத்துப் பேசப்படு கின்றன. அவை: *1.* யாவே, எலோயிம் பாரம்பரியங்களின்படி தாத்தன், அபிராம் இவர்களால் மோசேக்கு எதிராக எழுந்த கலகம் (எண் *16:1-2.12-15.25.26.27-32.33-34*); *2.* குருக்கள் பாரம்பரியத்தின்படி கோராகு என்பவனால் நடத்தப்பட்ட கலகம். (எண் *16:1-7. 18-24.35.41-50*). *3.* குருக்கள் பாரம்பரி யத்தில் திரும்பவும் கூறப்படும் கோராகு வின் கலகம் (*16:7.7-11. 16-17.35.36-40*). முதல் இரண்டு கலகங்களும் தனித்தனியாக எழுதப்பட்டவை என்றாலும், பின் இணைக் கப்பட்டன. மூன்றாவது பிற்காலத்தில் எழு தப்பட்டது.

குருக்கள் பாரம்பரியத்தில் கோராகு *250* மக்கள் தலைவர்களை லேவியர்களுக்கு எதி ராகக் கிளப்பிவிட்டார். மோசே கோராகு வையும், அவர் தோழர்களையும், சோத னைக்காக ஆண்டவர் சந்நிதிக்கு வரும்படி அழைத்தார். அவர்கள் தூபக்கலசங்களோடு அங்கு வந்தபோது வானின்று நெருப்புத் தோன்றிக் கலகக்காரர்களை அழித்துவிட் டது (எண் *16:35*). மறுநாள், மோசேக்கு எதிராகவும் கோராகுவுக்குச் சார்பாகவும் பேசியவர்களை ஆண்டவர் அழிக்க இருந்த போது, மோசேயும் ஆரோனும் அவர்களுக் காக மன்றாடி அவர்களைக் காப்பாற்றினர் (எண் *16:41-50*). இங்குக் கூறப்படும் கலகத் தில் கோராகுவும் அவர் தோழர்களும் லேவி யர்-அல்லாதவர்கள். சமயக்காரியங்களில் லேவியரின் உரிமைதான் இங்குப் பிரச்சி னையாகும். இந்நிகழ்ச்சியுரை, லேவியரின் முன்னுரிமையை உறுதிசெய்கிறது. ஆனால் குருக்கள் பாரம்பரியத்தில் இதே நிகழ்ச்சி திரும்பவும் கூறப்படும்போது குழப்பம் லேவியர்களுக்குள்ளேயே தோன்றியதாகக் கூறப்படுகிறது. இது ஆரோனுடைய குருத் துவ முன்னுரிமைக்கு எதிரானதாகும். இந்த இரண்டு கருத்துக்கள் உள் எதிர்ப்பால்தான் வழிபாட்டு முறையின் தலைமைப் பதவி யில் முன்னேற்றம் ஏற்பட்டது என்பதைச் சுட்டுகின்றன. மேலும், கோராகுவும் அவர் வழித்தோன்றல்களும் ஒரு காலத்தில் முக் கிய நிலையில் இருந்திருக்க வேண்டும் என் பதையும் சுட்டுகின்றன.

4. இவர் ஒரு லேவியர்; இட்சாரின் வம்சத் தவரும் கோகாத்தின் குடும்பத்தவரும் ஆவார் (யாத் *6:21*; *1* நாள் *6:22.37*). கோராகு வின் மக்கள், தெபோராவுக்கும் தாவீதுக்கும் இடைப்பட்ட காலத்தில் கெபிரோனில் (எபி ரோன்) வாழ்ந்த *3* அல்லது *4* லேவிய குருகுலக் குடும்பங்களில் ஒன்றாகும். ஒரு சமயத்தில் கோராகுவின் புதல்வர்களும்

ஆசாபும் ஆலய பாடற்குழுவில் இருந்தனர். எண் 26;11-இல் கோராகு நெருப்பினால் இறந்துபோக அவன் புதல்வர்கள் இறக்க வில்லை எனக் கூறப்படுகிறது. 2 நாள் 20:19-இல் கோராகுவின் புதல்வர்கள் கோகாத்தின் புதல்வர்களோடு சேர்த்துப் பேசப்படுகின்றனர். பிற்காலத்தில் கோராகின் புதல்வர்கள் வாயில் காப்போராகவும் காணிக்கை அப்பம் தயாரிப்போராகவும் விளங்கினர் (1 நாள் 9:19.31;26:1.19). பல சங்கீதங்கள் கோராகுவின் புதல்வர்கள் எழு தியதாகத் தலைப்பைக் கொண்டுள்ளன (சங் 42; 44-49; 84-85; 87-88).

5. இவர் கெபிரோனின் (எபிரோன்) புதல் வரில் ஒருவர் (1 நாள் 2:43). கோராகு ஒரு புவியியல் பெயராகவும் இருக்கலாம். இதுவே கெபிரோனின் அருகிலிருந்த யூதா வின் ஊர்களில் ஒன்றாகவும் இருக்கலாம். சிக்லாகு என்னும் இடத்தில் தாவீதோடு சேர்ந்து கொண்டவர்கள் இவ்வூரைச் சேர்ந்த வர்களாக இருக்கலாம் (12:6). இவர்கள் பென்யமின் குலத்தவராயின் அவர்கள் வேறு நகரத்திலிருந்துதான் வந்திருக்கவேண் டும்.

**கோரே** (KORE - கௌதாரி)

1. கோராகின் வழி வந்த ஒரு லேவியர். ஆலயத்தில் வாயிற்காப்போர்களான சல் லூம் (1 நாள் 9:19), மெசேலமியர் (26:1) ஆகியோரின் மூதாதையர்.

2. இவர் இம்னாவின் மகனும் ஒரு லேவி யரும் ஆவார் (2 நாள் 31:34). எசேக்கியா ஆட்சிக்காலத்தில் ஆலயத்தின் கிழக்கு வாயி லைக் காப்பவராகவும் ஆண்டவருக்கு ஒப் புக்கொடுக்கப்பட்ட காணிக்கைகளை மேற் பார்க்கவும் நியமிக்கப்பட்டார். இவரும் 1-இல் குறிக்கப்படுபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**கோரேபு, ஓரேபு மலை** (HOREB MOUNT -பாலைவனம், பாழான பகுதி)

இறைவனின் மலை. சீனாய் என்றும் அழைக்கப்பட்டது. ஆய்வாளர்கள், கோரேபு என்ற பெயர் வரும் பகுதிகள், ஐந்நூலின் எலோகீம், உபாகமப் பாரம்பரி யங்களைச் சேர்ந்தவை என்பர்.

இங்குதான் மோசே எரியும் புதரில் இறைத் தோற்றத்தை அனுபவித்தார் (யாத் 3:1). இங்குதான் இறைவன் இஸ்ராயேலருடன் செய்து கொண்ட உடன்படிக்கையின் நிபந்த னைகளை வெளிப்படுத்தினார் (உப 4:10.15;5:2; யாத் 19-20). இங்கிருந்துதான் இஸ்ராயேல் காதேசு பர்னேயாவை நோக்கிப் புறப்பட்டனர் (உப 1:2.6.19). பிற்காலத்தில் கோரேபு மலையில் தான் இறைவாக்கினர் எலியா இறைக்காட்சி கண்டார். சீரியாவிற்குக் கசாவேலை (அசாவேல்) அரசனாகவும், இஸ்ராயேலுக்கு ஏகூவை அரசனாகவும் அபி டேகம் செய்யவும், எலிசாவைத் தன் வழித் தோன்றலான இறைவாக்கினராக நியமிக்க வும் கட்டளை பெற்றார் (1 அர 19:8.11).

அறிஞர் சிலர் கோரேபு மலையைச் சீனாய் மலையிலிருந்து வேறுபட்டதாகக் கருதுகின் றனர். வேறுசிலர், இதைச் சீனாய்த் தீபகற்பத் திலுள்ள மலைத் தொடரின் பொதுப் பெய ராகக் கருதுகின்றனர்.

**கோரேம், ஓரேம்** (HOREM - அர்ப்பணிக்கப் பட்ட)

நப்தலி நாட்டில் ஓர் அரணுள்ள நகர் (யோசு 19:38). இப்பகுதி கலிலேயாவுக்கு வடக்கில் மலை நாட்டில் இருக்கிறதாக வாசகச் சூழ்நிலை சுட்டிக்காட்டுகிறது. ஆனால் அதனுடைய சரியான இருப்பிடம் அறியப்படவில்லை.

**கோரி, ஓரி** (HORI - குகைவாசி)

1. லோத்தானுக்குப் பிறந்த முதல் புதல்வ னும், எசாவின் வழித்தோன்றலும் ஆவார். ஏதோமில் கோரிய துணை இன முன்னோர் (ஆதி 36:22;1 நாள் 1:39).

2. சிமியோன் கோத்திரத்தின் சாபாற்றின் தந்தை (எண் 13:5).

**கோரிக்கியா** (GORGIAS)

மக்கபேயரை எதிர்த்துப் போரிட்ட நான் காம் அந்தியோக் எப்பிரானின் ஒரு படைத் தளபதி (1 மக் 3:38;2 மக் 8:9). இவருடைய

படைகள் எம்மாவுக்கு அருகில் மக்கபேய ரால் தோற்கடிக்கப்பட்டன (1 மக் 4:1-22). அசமோனியத் தளபதிகளில் இருவர் யோசேப் பும் அசரியாவும் யூதாவின் கட்டளைக்குப் பணியாது போர் தொடுத்தனர். கோரிக்கியா வால் தோற்கடிக்கப்பட்டனர் (1 மக் 5:58-61). கோரிக்கியா - இதுமேயாவின் ஆளுநராக இருந்தபோது அந்நியரைத் தன்னு டன் சேர்த்துக் கொண்டு பலமுறை யூதரோடு போர் செய்தார் (2 மக் 10:14). யூதா என்பவரால் தோற்கடிக்கப்பட்டார் (2 மக் 12:32-37).

**கோரியர்** (HORITES - குகைவாசிகள்)

1. மாசரேட்டிக்கு வாசகம் ஆரம்ப காலத்து மக்களைக் குறிக்கப்பயன்படுத்திய ஒரு பெயர். இந்நாடு பிறகு ஏதோமியர்க ளால் குடியேறப்பட்டது (ஆதி 14:6; உப 2:12.22). ஓர் இடத்தில் (ஆதி 36:2), மாச ரேட்டிக்கு வாசகம் 'கீவியர்' (இவ்வியர்) என்று கொண்டிருப்பது 'கோரியர்' என்ற சொல்லுக்குப் பதிலாக எழுதப்பட்ட தவறு ஆகும் (36:20).

2. ஆதி 34:2; யோசு 9:7-இல் எழுபது நூல் கீவியர்களுக்குப்பதிலாகக் கோரியர்கள் என்று கொண்டுள்ளது. மாசரேட்டிக்கு வாசகத்தின் இவ்விரண்டு பகுதிகளும் கோரியர்களி லிருந்து வேறுபட்ட, மத்திய பாலஸ்தீனத்தில் வாழ்ந்த மக்களைப் பற்றிப் பேசுகின்றன. நேர்மாறாக 'எழுபது நூல்' எசா 17:9-இல் 'கீவியர்கள்' என்று வாசிக்கிறது. அங்கே மாச ரேட்டிக்கு வாசகம் திரித்து, 'கோரியர்கள்' என்று தவறாகக் கொண்டிருக்கிறது. இங்குப் பேசப்படுகின்ற இடம் பாலஸ்தீனம். எனவே, முந்தைய ஏதோமிய கோரியர்களோடு இந்தக் கோரியர்-கீவியரைக் குழப்பக்கூடாது. எழு பது நூலில் இதுதோன்றுகிறது. இது முன் னாள் எபிரேய பாரம்பரியத்துக்குத் தெரியாத ஒன்றல்ல. இத்தகைய மேற்குக் கோரியர்கள் விவிலியத்துக்குப் புறம்பே உள்ள கூரியர்க ளோடு தொடர்புபடுத்தப்படவேண்டும். அங்கு உள்நாட்டு வழக்கிலே கீவியர்கள் என் றுதான் பொதுவாகக் குறிப்பிடப்படுகிறது.

மேலே சொன்ன கோரியர்கள் கூரியர்களி லிருந்து வேறுபட்டவர்கள் என்று பிரிப்பதற்கு இரண்டு தகுந்த காரணங்கள் இருக்கின்றன. அ) அவர்களுடைய சொந்தப் பெயர்கள் (ஆதி 36:20-30) கூரியர்களுடைய விதத்தில் அமை யவில்லை. ஆனால் செமித்திய அமைப் பைச் சேர்ந்தவைகளாக இருக்கின்றன. ஆ) ஏதோமில் அல்லது யோர்தானுக்கு அப்பால் உள்ள பகுதியில் பொதுவாகக் கூரியர்கள் குடியேறி வாழ்ந்ததாகப் புதைபொருள் ஆராய்ச்சியில் எந்த ஓர் ஆதாரமும் இல்லை. எனவே 'கோரியர்' என்ற சொல்லின் இரு விதப் பயன்படுத்தல், தற்செயலாக இரண்டு வார்த்தைகளின் உச்சரிப்பு ஒலி ஒன்றாக இருப்பதிலிருந்து வந்திருக்க வேண்டும். மாசரேட்டிக்கு கோரியர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது எபிரேயச் சொல் தோற றத்தில் செமித்திய அமைப்பைக் கொண்டி ருக்கிறது. ஒருவேளை பாரம்பரியம் நெடுங் காலமாக விளக்கி வந்து கொண்டிருப்ப தைப்போலக் 'குகை-வாழ் மனிதர்களிலிருந்து' இச்சொல் தோன்றியிருக்கலாம். அதன் மாற்றுப் பயன்படுத்துதலில், இச்சொல் கூரி யர்கள் காலம் வரை போகிறது. இரண்டு வகைப் பயன்படுத்தலிலிருந்து வேறுபாட் டைப் பாதுகாக்க வேண்டிய தேவைதான் கூரியர்களைச் சிறிது சிறிதாகக் 'கோரியர்கள்' என்று மாற்றிக் குறிப்பிடுவதற்கு இட்டுச் சென்றிருக்கும். பிறகு அதையும் நீக்கிவிட்டுக் 'கீவியர்' என்று அழைத்தது.

**கோரைப்புல், நாணல்செடி** (BULRUSH)

நீரோடையின் பக்கத்திலும், சேறுநிறைந்த பகுதிகளிலும் மிகவும் உயரமாக, நெருக்க மாக வளரக்கூடிய ஒருவகை நாணல் செடி. யாத் 2:3;எசா 18:2 ஆகிய பகுதிகளில் வரு கின்றவை இந்தப் பாபிரஸ் செடியிலிருந்து உண்டாக்கப்படுகின்ற கூடை அல்லது படகு என்பதைக் குறிக்கும்.

**கோர்த்தினா** (GORTYNA)

கிரேத்தாவின் மத்தியப் பகுதியில் இலத் தேயு ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஒரு நகரம். கடற்பகுதிக்குப் பல மைல்களுக்கு அப்பால் உள்ளது. மெட்டலும், லெபனா வும் இதன் துறைமுகங்கள். 1 மக் 15:23 கோர்த்தினா ஒன்று மட்டும் கிரேத்தாவின் நகரங்களில் ஒன்றாகக் குறிக்கப்படுகிறது.

கி.மு. 139-ஐ ஒட்டி யூதர்களுக்குச் சார்பாக உரோமையர் கடிதம் பெற்ற நகரங்களில் இதுவும் ஒன்று. இது அப்போது அங்கு யூதர்கள் வாழ்ந்தனர் என்று காட்டுகிறது.

**கோர்பான்** *(CORBAN - காணிக்கை, நேர்ச் சைக்கடன்)*

யூதர்கள் நாடு கடத்தப்பட்ட பிறகு சமய காரியங்களுக்காக இறைவனுக்குச் செலுத்திய கொடையை இது குறிக்கின்றது. இந்த எபி ரேயச்சொல், எசேக்கியேல் நூலிலும், பரிசுத் தத்தின் சட்டத்திலும் குருக்கள் சட்டத்திலும் எவ்வகைக் காணிக்கையையும் குறிக்கப் பயன்பட்டுள்ளது (லேவி 1:2; 22:27; 23:12; எண் 7:25; எசே 20:28; 40:43). முற்கால இலக்கியத்தில் இப்பெயர் காணப்படாத தால், இப்பெயர் பிற்காலத்தில்தான் பரவலா கப் பயன்படுத்தப்பட்டது தெளிவாகிறது. ஒருவேளை எருசலேமே வழிபாட்டுக்கு ஊக்குவித்த குழுக்களிலிருந்துதான் இது தோன்றியிருக்க வேண்டும். பிந்தைய யூத சமயக்கோட்பாட்டில், இப்பெயரால் ஏதா வது ஒரு பொருள் ஒதுக்கி வைக்கப்பட்டிருந் தால், அது முன்பின் பாராது செய்யப்பட்டா லும், எந்தப்பிற காரணத்திற்கும் பயன்படுத் தப்படமாட்டாது என்பதனை மிஷ்னா கூறு கிறது. இந்தச் சொல் இவ்வாறு கடினமாகப் பயன்படுத்தப்பட்ட அடிப்படையில்தான் மாற்கு நற்செய்தியில் இயேசு இதைக் கண்ட னம் செய்கிறார் (மாற் 7:11 மத் 15:5).

**கோர்மா, ஓர்மா** *(HORMAH - பக்தி)*

தெற்கு யூதா நாட்டில் சிமியோன் வம்சத் தாருக்குக் கிடைத்த நகர்களில் ஒன்று. இது சிக்லாகு வட்டாரத்தில் இருந்தது (யோசு 15:30; 19:4; 1 நாள் 4:30). இப்பெயருக்கு இரட்டைப்பொருள் உண்டு. ஒன்று 'பெரிய புனிதம்'. மற்றொன்று 'முழுமையான அழி வு' (தேவதைக்குப்பலி கொடுத்ததால்). ஒரு கதை கூறுவது படி, இஸ்ராயேலர்களுடைய ஒற்றர்கள் திரும்பி வந்து, இவர்களுடைய சந்ததி மேல் அழிவு அறிவிக்கப்பட்ட பிறகு, மனமொடிந்த நிலையில், பலனற்ற முறை யில் மலைநாட்டைக் கைப்பற்ற முயன்றார் கள். ஆனால் கோர்மா வரையிலும் துரத்தி அடிக்கப்பட்டார்கள் (எண் 14:45; உப1:44). இந்தப் பகுதிகளில் சரியான இடத்தையோ, அக்காலக்கட்டத்தில் இதே பெயரில் கானா னிய நகரையோ சுட்டிக்காட்டக் கோர்மா காலமயக்கமாகப் பயன்பட்டிருக்கலாம். ஆனால் இன்னொரு குறிப்பு, இஸ்ராயேலர் கள் அராதுவின் அரசனின் சூறையாடலால் வெகுண்டு, அவர்களையும் அவர்களுடைய நகரங்களையும் அழித்து அவ்விடத்திற்குக் கோர்மா அதாவதுசபிக்கப்பட்ட ஊர் என்ற பெயரிட்டனர் என்று கூறுகிறது (எண் 21:3). கடைசியாக யூதா வம்சத்தார் சிமியோன் வம்சத்தாரோடு சேர்ந்து செபத்துநகரை அழித்து அவ்வூரின் பெயரைக் கோர்மா அல்லது சாபம் என்று மாற்றி வைத்தனர் என்று ஒரு கூற்று இருக்கிறது (நீதி 1:17). யோசுவா வென்ற அரசர்களில் இந்நகரைச் சேர்ந்த அரசனும் ஒருவன் ஆவான் (யோசு 12:14). ஆனால் இஸ்ராயேலர் மேற்குக் கானா னில் வெற்றி பெற்ற நாடுகளின் மொத்த எண்ணிக்கையே இந்த அட்டவணையாகும். அமலேக்கியர்களைத் தோற்கடித்து அவர்க ளிடமிருந்து கொள்ளையடித்த பொருள்க ளைத் தாவீது பரிசுப் பொருட்களாக அனுப்பி வைத்த நகர்களில் இவும் ஒன்று. அதாவது அவர் நாடோடியாகத் திரிந்த போது இவர்கள் அடைக்கலம் தந்ததற்காக இப்பரிசுப் பொருட்களை அவர் அனுப்பி வைத்தார் (1 சாமு 30:30).

எண் 21-இல் கூறப்பட்டிருக்கும் இஸ்ரே லியத் தாக்குதலின் திசைக்கேற்பக் கோர்மா இருந்த இடம்பற்றிப் பல கருத்துக்கள் உண்டு. தாக்குதல் தெற்கிலிருந்து வந்திருந் தால் இவ்விடம் பெயேர் செபாவுக்குக் கிழக்கே 12 கி.மீ. தொலைவில் உள்ள 'தேல் ஏல் மில்' ஆக இருக்கவேண்டும். தென்மேற் காகச் சென்றிருந்தால் நகருக்கு வடமேற்கே 19 கி.மீ. தொலைவில் உள்ள 'தேல் எஸ் செரியா' வாக இருக்கவேண்டும்.

**கோலயா** *(KOLAIAH - யாவேயின் குரல்)*

1. பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட பின், எருசலேமில் வாழ்ந்த பென்யமின் குலத்தவர். சல்லூவின் மூதாதையர் (நெகே 11:7).

2. எரேமியாவின் எதிரியும் பொய்த்தீர்க்க தரிசியுமான ஆகாபுவின் தந்தை இவர் (எரே 29:21).

**கோலா** (KOLA)

கோலா யூதி *15:4*-இல் குறிப்பிடப்படும் ஓர் இடமாகும். இதுவும், யோசு *15:51*-இல் கூறப்படும் கோலோன் (ஓலோன்) என்பதும் ஒன்றாக இருக்கக்கூடும்.

**கோலான்** (GOLAN - சுற்றுப்பயணம் )

மனாசே வம்சத்தாரைச் சேர்ந்த பாசானில் உள்ள நகரம் கோலான் ஆகும். இந்நகரம் மோசேயால் தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று அடைக்கல நகர்களில் ஒன்றாகும் *(உப 4:43; யோசு 20:8)*. கேர்சோமியர்களுக்கு அளிக்கப்பட்ட லேவியர்களுடைய நகரங்களில் ஒன்றாகும் *(யோசு 21:27; 1 நாள் 6:71)*.

கலிலேயாக் கடலுக்குக் கிழக்கில் *28* கி.மீ. தொலைவிலுள்ள இக்காலச் சகேம் ஏல்-யோலான் என்பதை இதற்கு அடையாளம் காட்டுகின்றனர் அறிஞர் சிலர். ஆனால் இது இந்நகரைக் கோலான் மாவட்டத்திற்குப் புறம்பாக்கும். பழைய ஏற்பாட்டில் இப்பகுதி கெசூரியர்களுடையதாகவும் மாக்காத்தியர்களுடையதாகவும், குறிக்கப்பட்ட பகுதிகளைக் கொண்டிருந்தது. பிற்காலத்தில் காலானிய என்றழைக்கப்பட்டது.

**கோலியத்து** (GOLIAH - நாடு கடத்தப்பட்டவன்)

இவன் பெலிஸ்திய நாட்டு வீரன். தாவீது இவனை ஏலா பள்ளத்தாக்கிலே நடந்த போரில் கொன்றார் *(1 சாமு 17)*. பெலிஸ்தியர்களுக்குச் சேவை செய்து வந்த அந்நிய நாட்டு வீரர்களின் வழிவந்தவர்களில் ஒருவன். இவன் காத்தில் தங்கியிருந்தான் *(2 சாமு 21:22; 1 நாள் 20:8)*. தாவீதுக்கும் கோலியத்துக்கும் நடந்த போராட்டம் பற்றி *1 சாமு 17*-இல் வாசித்தறிக.

தாவீது பெலிஸ்தியனுடைய ஆயுதங்களை ஆண்டவருக்கு அர்ப்பணம் செய்தார் *(1 சாமு 21:9)*. குரு அகிமெலக்கு, சவுலிடமிருந்து தப்பி ஓடிய தாவீதுக்குக் கோலியத்தினுடைய வாளைக் கொடுத்தார். பல சான்றுகள் தாவீதுதான் கோலியத்தைக் கொன்றார் என்று சொன்னாலும் *(1 சாமு 17; 21:9; 22:10)*. பிற இடங்களில் இத்தீரச்செயல் எல்கானான் என்பவருக்கு உரியதாகவும் சொல்லப்படுகின்றது *(2 சாமு 21:19)*. *1* நாள் *20:5* எல்கானான் கோலியத்தின் சகோதரன் இலகுமியைக் கொன்றதாகக் கூறும்போது, இது வேறுபட்ட பாரம்பரியங்களை ஒருமைப்படுத்த எடுக்கப்பட்ட முயற்சியாகத் தோன்றுகிறது. அறிஞர் சிலர் எல்கானான்தான், அரசராவதற்கு முந்திய தாவீதின் மூலப்பெயர் என்று கருதுகின்றனர். காண்க. எல்கானான்-*1*.

**கோலோன்** (HOLON - மணற்பாங்கான)

*1*. மலை மாவட்டமான தெபீரில் உள்ள, யூதா கோத்திரத்துக்குக் கிடைத்த ஊர் *(யோசு 15:51)* கோகாத்து வம்சத்தின் லேவியருக்கு ஒதுக்கப்பட்ட ஒரு நகர் *(யோசு 21:15; காண் 1 நாள் 6:58)*. கெபிரோனுக்கு (எபிரோன்) வடமேற்கில் யாலாவுக்கு அருகில் 'கிர்பெத் அலின்' தான் கோலோன் என்று பொதுவாக அடையாளம் காட்டப்படுகிறது. அப்படியாயின் தெபீர் பகுதியில் இருந்திருப்பதைவிடப் பெத்சூர் *(யோசு 15:58-59)* பகுதியில் இருந்திருக்கவேண்டும்.

*2*. மோவாபு பீடபூமியில் உள்ள ஓர் ஊர். இது யகுசா, மேபத்து ஆகிய ஊர்களோடு குறிக்கப்படுகிறது *(எரே 48:21)*. இது இருந்த இடம் தெரியவில்லை.

**கோல், கைத்தடி** (STAFF)

இச்சொல் கழி, கோல், நெடுங்கழி, கைப்பிரம்பு, ஊன்று கோல், போன்ற பல பொருட்களைக் குறிக்கும். ஆட்டிடையர்கள், வழிப்போக்கர்கள், வீரர்கள், காவலர்கள் மற்றும் பலர் தங்களுக்குத் துணையாக ஒரு கைத்தடியைப் பயன்படுத்துவது இன்று போல் அன்றும் பழக்கத்திலிருந்த வழக்கம். விவிலியத்தில் ''கைத்தடி'', ''கோல்'' என்னும் சொற்கள் சாதாரணப் பொருளில் மட்டுமல்லாது உருவகப் பொருளிலும் பலமுறை பயன்படுத்தப்பட்டுள்ளன *(எசே 4:16; 5:16; 14:13)*.

யாத் *7:9*தொ; எண் *17:20*தொ-இல் காண்பது போல் மோசே, ஆரோனின் கோல்கள் எகிப்திய மந்திரவாதிகளின் கோல்களைப் போல மந்திரசக்தி நிறைந்தனவாக இருந்தன. மோசேயின் கோல் பாலைவனத்தில்

செங்கோலாகவும், போரின்போது இறைப்பிரசன்னத்தின் அடையாளமாகவும் இருந்ததை விவிலியம் தெரிவிக்கின்றது. ஒவ்வொரு கோத்திரமும் தங்கள் கோத்திரத்தின் பெயரைப் பதித்திருக்கும் ஒரு கோலைக் கொண்டிருந்தனர் என்பதற்கு எண் *17:17* சான்று பகர்ந்து நிற்கின்றது. *2 அர 4:29.31*-இன் கூற்றுப்படி எலியாவின் கோல் நோய்தீர்க்கும் சக்தியுடையதாயிருந்தது.

ஆட்டிடையனுடைய கோலும் கைத்தடியும் ஆடுகளுக்குப் பாதுகாப்புத் தருகின்றன.

ஆண்டவருடைய ஊன்றுகோல் என்பது ஆண்டவரின் பிரசன்னத்திற்கும் சக்திக்கும் அடையாளமாக நிற்கின்றது *(2 சாமு 22:19; சங் 18:18; எசா 3:1)*. ஆண்டவருடைய கோலும், கைத்தடியும் நீதித்தீர்ப்பின் கருவிகளாகவும் எசா *10:15;30:32*-இல் பேசப்படுகின்றன. அசீரியாவை, இஸ்ராயேலுக்கு எதிராக ஆண்டவரின் தீர்ப்புக்கெனப் பயன்படும் கோலாகவும் தடியாகவும் எசா *10:15.24; (காண்க யோபு 9:34; சங் 2:9; எசா 9:4; எசே 20:37)* உருவகமாகக் குறிப்பிடுகின்றது. வயது முதிர்ந்தவர்கள் தத்தம் கையில் கோல் வைத்திருப்பது பாதுகாப்பின் அடையாளமாகும் *(செக் 8:4)*.

புதிய ஏற்பாட்டில் மத்தேயுவும் *(10:10)* லூக்காவும் *(9:3)* கிறிஸ்து தன் சீடர்களைப் பணிக்கென அனுப்புங்கால் கோலும் கைத்தடியும் கொண்டு செல்ல வேண்டாம் என்று கூறியதாக எழுதியுள்ளனர். மாற்கோ *(6:8)* கோலும் கைத்தடியும் கொண்டு செல்லும்படி அவர் கூறியதாகக் கூறுகின்றார். எபி *11:2*-இல், யாக்கோபு யோசேப்பின் புதல்வர்களை ஆசீர்வதித்தபோது, தனது ஊன்றுகோலின் மீது சாய்ந்து கொண்டு இறைவனைத் தொழுதார் என்று கூறப்படுகிறது.

**கோவா** *(GOAH - பசுவின் கதறல்)*

எருசலேம் நகரின் சுற்றுப்புறத்தில் உள்ள காரேபு குன்றின் அருகில் உள்ள ஒரு பகுதியாகும். எரேமியாவின் எருசலேம் திரும்பவும் அழகுறக் கட்டப்படும் என்ற இறைவாக்குகளில் இப்பெயர் சொல்லப்பட்டிருக்கின்றது *(எரே 31:39)*.

**கோவேறு கழுதை** *(MULE)*

கோவேறு கழுதை என்பது ஆண் கழுதையும் பெண் குதிரையும் இணைவதால் கிடைக்கும் கலப்பினம்.

கோவேறு கழுதையானது முதன் முதலில் தாவீதின் காலத்தில்தான் காணப்படுகின்றது *(2 சாமு 13:29)*. இதற்குக் காரணம் கி.மு.*1000* ஆண்டுக்குமுன் எபிரேயர் மற்றும் அவர்களைச்சுற்றி அயலாரிடையே குதிரை அரிதாகவே காணப்பட்டது. ''உன் கால்நடைகளை வேறுவகை விலங்குகளோடு பொலிய விடாதே" என்று *(லேவி 19:19)* சட்டம் தடுத்ததால், கோவேறு கழுதைகளைப் பிற இன மக்களிடமிருந்தே எபிரேயர் பெறக்கூடும்.

தீர் நாடு கோவேறு கழுதைகளைப் பெத்தொகர்மாவிலிருந்து (அதாவது அர்மேனியா அல்லது வடசீரியா) இறக்குமதி செய்தது. ஆகவே இஸ்ரேயலுக்குக் கோவேறு கழுதைகளை இறக்குமதி செய்த நாடுகளில் பெனிசியாவும் ஒன்றாகக் கருதப்படுகிறது *(எசே 27:14)*.

கோவேறு கழுதைகள் கடிவாளத்தால் அடக்கப்பட்டன. இவை முதலில் பயணம் செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டன *(சங் 32:9)*. ஆனால் விவிலியத்தில் பெரும்பான்மையான குறிப்புகள் கோவேறு கழுதைகள் அரசர்கள், பிரபுக்களால் பயன்படுத்தப்பட்டதாகவே காணப்படுகின்றன *(2 சாமு 13:29; 18:9; 1அர 10:25; 18:5)*. பொதிசுமப்பதற்காகக் கோவேறு கழுதைகள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன *(2 அர 5:17; 1 நாள் 12:40)*. நாடுகடத்தலுக்குப்பின் யூதசமூகத்தில் *245* கோவேறு கழுதைகள் இருந்ததாக எஸ் *2:66-67* கூறுகின்றது.

**கோனா** *(KONA)*

இது யூதி *4:1*-இல் குறிப்பிடப்படும் ஓர் இடமாகும். இவ்வூர் இருந்த இடம் தெளிவாகத் தெரியவில்லை.

**கோனியா** *(CONIAH)*

யோயாக்கினின் மற்றொரு பெயர். காண்க: யோயாக்கின்.



**சகட்சிம** *(SHAHAZUMAH - உச்சிநோக்கி)*

இது இசக்காரில் உள்ள ஓர் எல்லை நகரம் *(யோசு 19:22)*. இந்த நகரத்தின் இடத்தைப் பற்றி எவ்வித நேரிடையான குறிப்பும் இல்லை. தேல் ஏல்-முகார்கசு என்ற குன்றை இதற்கு அடையாளம் காட்டுவர். இது தாபோர் மலைக்குக் கிழக்கு, தென்கிழக்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது. இடைப்பட்ட மற்றும், இறுதி வெண்கலக் காலம், இரும்புக் காலம், பைசாந்தியர் காலம் ஆகியவற்றில் மக்கள் இங்கு வாழ்ந்துள்ளனர். இது மேல்மட்ட ஆராய்ச்சியின்போது கண்டு பிடிக்கப்பட்டது. இந்தப் பெயர் சகட்சு மற்றும் யம்மா என்ற இரு பெயர்களின் இணைப்பாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**சகவான்** *(ZAAVAN - அமைதி குலைந்த, நடுங்குகின்ற)*

இனத் தலைவனான ஏசேரின் (ஏட்சேர்) இரண்டாம் புதல்வர். ஏதோமிலிருந்த கோரியத் துணை இனம் ஒன்றின் மூதாதையர் *(ஆதி 36:27; 1 நாள் 1:42)*.

**சகரயிம்** *(SHAHARAIM - இரட்டை விடியல்)*

இவர் பென்யமின் குலத்தில் பிறந்தவர். இவருக்கு மூன்று மனைவிகள் உண்டு. ஆனால் இரண்டு மனைவிகளை அனுப்பி விட்டார். பிள்ளைகள் பலர் உண்டு *(1 நாள் 8:8)*.

**சகோதரன்** *(BROTHER)*

I. சகோதரர்கள் என்ற சொல்லானது மிகக் குறுகிய பொருளில், ஒரே உதரத்தில் உருவானவர்களைக் குறிப்பிடுகிறது *(ஆதி 4:2)*. ஆனால், பெரும்பான்மையான மொழிகளில் உள்ளது போன்று எபிரேய மொழியில் இச்சொல்லானது விரிவுபடுத்தப்பட்டு ஒரே குடும்பம் *(ஆதி 13:8; லேவி 10:4; மாற் 6:3)* அல்லது அதே இனம் *(2 சாமு 19:13)* அதே மக்கள் *(உப 25:3; நீதி1:3)* ஆகியோரின் உறுப்பினர்களுக்கும் கூறப்படுகிறது. இது இவர்களை அன்னியர்களிடமிருந்து வேறுபடுத்துகிறது *(உப 1:16; 15:2-3)*. இறுதியாக, ஏதோம் மற்றும் இஸ்ராயேல் போன்று ஒரே முன்னோரிடமிருந்து வழித் தோன்றிய மக்களைக் குறிப்பிடுகிறது *(உப 2:4; ஆமோ 1:11)*. ஊனுடலை அடிப்படையாகக் கொண்ட இந்தச் சகோதரத்துவத்துடன் விவிலியமானது ஆன்மீக அடிப்படைத் தொடர்புடைய மற்றொரு சகோதரத்துவத்தையும் பற்றிப் பேசுகிறது. இச்சகோதரத்துவமானது விசுவாசம் *(அ.ப. 2:29)*, இரக்கம் *(2 சாமு 1:26)*, ஒத்த பணி *(2 நாள் 31:15; 2 அர 9:2)*, ஏற்றுகொள்ளப்பட்ட உடன்படிக்கை *(ஆமோ 1:9; 1 அர 20:32; 1 மக் 12:10)* ஆகியவற்றுடன் அறிமுகமாகிறது.

இச்சொல் இத்தகைய உருவக முறையில் பயன்படுத்தப்படுவது மனித சகோதரத்துவம் அதனுடைய இயல்பான அடித்தளத்தை உருவாக்கினாலும், சாதாரண இரத்த உறவிற்கு மட்டுமே வரையறுக்கப்பட்டதன்று என்பதைக் காட்டுகிறது. வெளிப்பாடானது அனைத்து மனிதரையும் சகோதரராக்குகின்ற ''இயற்கையினுடைய சமுதாயத்தின்'' மீதான மெய்யியல் சிந்தனையினின்று தொடங்குவதில்லை. உலகளாவிய சகோதரத்துவத்தை நிராகரிப்பதாக இதற்குப் பொருளல்ல. ஆனால், கிறிஸ்துவில் இதனை நாடாத வரையில் இதுநிறைவேற முடியாதது என்பதையும், அதனுடைய முயற்சி ஏமாற்றத்தில் முடியக்கூடியது என்பதையும் அறிந்திருப்பதுவே இதற்குக் காரணம். மேலும் தொடக்க சகோதர சமுதாயங்களாகிய குடும்பம், மக்கள், சமயம் போன்றவற்றில் பழைய ஏற்பாடு எதிர்நோக்குகின்ற அமைப்பு இதுவே. திருச்சபையின் சமுதாயத்தில் புதிய ஏற்பாடு நிறைவேற்றத் தொடங்குவது இதுவே.

II. **பழைய ஏற்பாடு:-**

**உலகளாவிய சகோதரத்துவத்தை நோக்கி:-**

*1. தொடக்கங்கள்:-* ''ஒரே மூலத்திலிருந்து'' மனித இனத்தைப் படைப்பதில் (அ.ப. 17:26; ஆதி 1-2), ஆதாமிலான சகோதரத்து வத்தின் கனவை மனிதரின் இதயத்தில் இறைவன் அமைத்தார். ஆனால், இக்கனவா னது நீண்ட வழிப்பயணம்வரை உண்மையாக வில்லை. தொடக்கக் கட்டமாக ஆதாமின் பிள்ளைகளுடைய வரலாறானது உடைந்து போன சகோதரத்துவம் ஆகும். ஆபேலின் மீது கொண்ட பொறாமையால், காயின் அவரைக் கொல்கிறார். தனது சகோதரன் எங்குள்ளான் என்பதை அறியவும் அவர் விரும்பவில்லை (ஆதி 4:9). ஆதாமின் நாள் முதல் மனுகுலமானது பாவம் நிறைந்ததாய் உள்ளது. மூல மனித நன்மைத்தனத்திற்குப் பின்னால் வீணாகத் திரையிட்டு மறைக்க நாடுகின்ற மனிதருடைய வெறுப்பின் முகத் தோற்றத்தின் முகமூடியானது காயினுடன் கிழிக்கப்படுகிறது. பாவமானது தனது இத யத்தின் கதவைத் தட்டுகிறது என்பதை மனி தன் உணர வேண்டும் (ஆதி 4:7). அதனு டைய ஆதிக்கத்திற்கு உட்பட விரும்பா விடில், அவன் அதன் மீதுவெற்றி கொள்ள வேண்டும்.

*2. உடன்படிக்கையில் சகோதரத்துவம்:-* சகோதரத்துவத்தின் வெற்றியைக் கிறிஸ்து உறுதிப்படுத்துவதற்கு முன்னர், தேர்ந் தெடுக்கப்பட்ட மக்கள் சகோதரத்துவத்தில் நீண்ட பயிற்சிக்காலத்தைக் கொண்டிருப்பர். எல்லா மனிதரிடையிலும் ஒரே நேரத்தில் சகோதரத்துவம் இருப்பதில்லை. ஆனால், அதே இறைவன் மீதான விசுவாசத்தினா லும், அதே உடன்படிக்கையின் மூலமாக வும், ஆபிரகாமின் பிள்ளைகளிடையே சகோதரத்துவம் இருந்தது. புனிதத்தின் சட் டம் அளித்த மாதிரி வடிவம் இதுவே: ''உன் சகோதரனைப் பகைக்காதே.. உன் அயலா னுக்கும் அன்பு செய்'' (லேவி 19:17-18). விவாதமோ, வன்மமோ, பழியோ எதுவும் இருக்கக்கூடாது. இனவிருத்தியின் அத்யாவ சியப் பணிக்கென, லேவியர் சட்டம் அளிக் கும் நேரடி உதவியாகும் இது. ஒருவன் குழந்தையின்றி இறந்தால் அவனது நெருங் கிய உறவினரொருவர் ''தனது சகோதரனுக் கென வாரிசை உருவாக்க வேண்டும்'' (உப 25:5-10; ஆதி 38:8.26). மூதாதையரின் மரபு கள் இந்தச் சகோதரத்துவத்தின் அழகிய உதாரணங்களை அளிக்கின்றன: ஆபிரகா மும் லோத்தும் வாக்குவாதத்தை விட்டுவிடு கின்றனர் (ஆதி 13:8). யாக்கோபு ஏசாவுடன் சமாதானம் செய்து கொள்கிறார் (33:4). யோசேப்பு தனது சகோதரர்களை மன்னிக்கி றார் (45:1-8).

ஆனால், இம்மாதிரி செயல்படுத்தப்படும் போது, மனித இதயங்களின் கடினத்தன் மையை இடைவிடாமல் சந்திக்க வேண்டி யுள்ளது. இறைவாக்கினர்கள் காண்பது போல இஸ்ராயேல் சமூகமானது சகோதரத் துவத்தினின்று தொலைவில் விலகி இருந் தது. அங்குச் சகோதர அன்பே இல்லை (ஓசே 4:2); ''ஒருவனும் தனது சகோதரனை விட்டுவைக்கவில்லை'' (எசா 9:18). அநீதி உலகளாவியதாக உள்ளது. நம்பிக்கை இய லாததாக உள்ளது (மீக் 7:2-6); எவருமே சகோதரனை நம்ப முடியாது; ஏனெனில் ஒவ்வொருவரும் ஒரு தீமையிலிருந்து மற் றொரு தீமைக்கு முன்னேறுகிறார்கள் (எரே 9:3). எரேமியா தனது சகோதரர்களாலேயே துன்புறுத்தப்படுகிறார் (எரே 11-18; 12:6; சங் 69:9; யோபு 6:15). கடினமனதுடைய இவ் வுலகிற்கு இறைவாக்கினர்கள் நீதி, இரக்கம், கனிவு ஆகியவற்றின் கோரிக்கைகளை நினைவுபடுத்துகின்றனர் (செக் 7:9-10). ஆபிர காமின் வழித்தோன்றல்களாக இருப்பதை விடப் படைத்தவரைப் பொதுவான தந்தை யாகக் கொண்டிருக்கும் நிலை (மலா 2:10), உடன்படிக்கையின் உறுப்பினர்கள் அனைவ ரின்மீது உண்மையான சகோதரத்துவத்தைப் பொழிவதில்லையா (எசா 63:16)? அவ் வாறே ஞானிகளும் உண்மையான சகோதரத் துவத்தை உயர்வாகப் புகழ்கின்றனர். தனது சகோதரர்களால் கைவிடப்படுவதைவிடத்

துன்பமானது வேறெதுவுமில்லை (*பழ 19:7; யோபு 19:13*). ஆனால் உண்மையான சகோதரன் துன்பங்களிலும் அன்பு செய்வான் (*பழ 17:17*). ''சகோதரனால் உதவி பெறுகிற சகோதரன் வலுப்பெற்ற நகரம் போல'' இருப்பதன் காரணமாகப் (பழ 18:19), பொன்னுக்காக அவனைப் பண்டம் மாற்ற முடியாது (*சீரா 7:18*). இறைவன் சச்சரவுகளை வெறுத்து அமைதியை நேசிக்கிறார் (*சீரா 25:1*). ''சகோதரர் ஒருமித்துவாழ்வது எத்துணை இனியது'' (*சங் 133:1*).

**3. முறிவுற்ற சகோரர்களை ஒப்புரவாக்குதல்:-** ஆயினும் இறை சட்டத்தின் கொடையானது சகோதரத்துவ உலகை மீண்டும் அமைக்கப் போதுமானதாக இல்லை. மனித சகோதரத்துவமானது எல்லா நிலைகளிலும் தோல்வியடைந்துள்ளது. தனிப்பட்ட சச்சரவுகளுக்கு அப்பாற்பட்டு இனங்களின் இணைப்பு அழிவுறுவதை இஸ்ராயேல் காண்கிறது (*1 அர 12:24*). அதன்விளைவு பிரிவும் சகோதரர்களுக்கிடையே போர்களுமே (எசா 7:1-9). புற அளவில் அருகிலிருந்து தனது சகோதர நாடுகளுடன் அது போர்தொடுத்தது. உதாரணமாக அன்பு செய்யக் கடமைப்பட்டிருந்த ஏதோமோடு போர் தொடுத்தது (*உப 23:8*); ஏதோமும் தன்னைப் பொறுத்த அளவில் இஸ்ராயேல் மீதும் இரக்கங்காட்டவில்லை (*ஆமோ 1:11; எண் 20:14-21*). தீவிர விரோதத்தினால் ஒன்றுக்கொன்று விரோதம் பாராட்டிய, தூரத்திலுள்ள நாடுகளைப்பற்றி இனி என்னதான் கூறமுடியும்? இக்குழு பாவத்தை எதிர் கொள்ளும்போது இறைவாக்கினர்கள் இறைவனை நோக்கித் திரும்புகின்றனர். இறுதிக்கால மீட்பினைக் கொண்டுவ்ரும் வேளையில் அவரால் மட்டுமே மனித சகோதரத்துவத்தை மீண்டும் உருவாக்க முடியும். அப்போது யூதாவையும் இஸ்ராயேலையும் ஒரே மக்களாக இறைவன் ஒன்றிணைப்பார் (*ஒசே 2:2-3.25*). ஏனெனில் அப்போது யூதாவும் எப்பிராயிமும் ஒருவர் மீது ஒருவர் பொறாமை அற்றவர்களாய் இருப்பர் (*எசா 11:13-14*). யாக்கோபின் இனத்தார் அனைவரையும் அவர் ஒன்றாகச் சேகரிப்பார் (*மீக் 2:12*); எல்லாக் கோத்திரங்களுக்கும் அவரே இறைவனாக இருப்பார் (*எரே 31:1*); நீதியின் அரசரின் முயற்சியால் (*எரே 23:5-6*), ''இரு மக்களும்'' உடன்பாட்டின்படி நடப்பர் (*3:18*); அங்கு ஓர் அரசு மட்டுமே இருக்கும் (*எசே 37:22*). இறுதியில் இச்சகோரத்துவமானது எல்லா நாடுகளுக்கும் பரவும்; தங்களிடையே ஒப்புரவான நிலையில் அவர்கள் சமாதானத்தையும் ஒற்றுமையையும் கண்டடைவர் (*எசா 2:1-4; 66:18*).

### III. புதிய ஏற்பாடு

**இயேசுகிறிஸ்துவில் அனைவரும் சகோதரரே:-** உலகளாவிய சகோதரத்துவம் பற்றிய இறைவாக்கினர்களின் கனவு, புதிய ஆதாமாகிய கிறிஸ்துவில் உண்மையாகிறது. திருச்சபையிலான முழுமையடையாத அதனுடைய மண்ணுலக நிறைவேற்றமானது, அதனுடைய இறுதிச் செயற்படுத்தலின் தெளிவான அடையாளமாகும்.

**1. எண்ணற்ற சகோதரர்களுடைய முதல் பிறப்பு:-** தனது சிலுவை மரணத்தின் மூலமாகப் பல சகோதரர்களில் மூத்தவராக இயேசு உருவாகிறார் (*உரோ 8:29*). அவர் மனுகுலத்தின் இரு பிரிவுகளாகிய யூதர்களையும் பிற மக்களையும் இறைவனுடனும் அவர்களுக்கிடையிலும் ஒப்புரவாக்கினார் (*எபே 2:11-18*). ஒன்றுபட்ட நிலையில் அவர்கள் அரசிற்கு நுழைவுரிமை பெற்றுள்ளனர். மூத்த சகோதரனாகிய யூத மக்கள் இறுதியாகத் தந்தையின் வீட்டிற்கு வருகின்ற ஊதாரிகள்மீது இனியும் பொறாமைப்படக்கூடாது. (*லூக் 15:25-32*). தமது உயிர்ப்பிற்குப்பின்னர், கிறிஸ்து தனது சீடர்களைச் சகோதரர்கள் என்று அழைக்கலாம் (*யோவா 20:17; மத் 28:10*). இப்போதைய உண்மை இதுவே. அவரை ஏற்றுக்கொள்கிற அனைவரும் இறைவனின் பிள்ளைகளாகின்றனர் (*யோவா 1:12*). ஊனுடலின்படி ஆபிரகாமின் வழி வந்ததால் இல்லாமல், கிறிஸ்து

வின் மீதான விசுவாசத்தினாலும், தந்தையின் சித்தம் நிறைவேறுவதனாலும் அவர்கள் சகோதரர்களாகின்றனர் (மத் 12:46-50; 21:28-32). இவ்வழியாக, உருவகப் பொருளில் அன்று, மாறாகப் புதுப்பிறப்பினால் மனிதர்கள் கிறிஸ்துவின் சகோதரர்களாகின்றனர் (யோவா 3:3). அவர்களைத் தூய்மைப்படுத்தி ''வெளிப்படையாகச் சகோதரர்கள் என்று அழைக்கின்ற'' கிறிஸ்துவின் அதே தொடக்கத்துடன் (எபி 2:11) அவர்கள் இறைவனுக்காக மீண்டும் பிறக்கின்றனர் (யோவா 1:13). உண்மையில் நம்மை அவருடன் பிள்ளைகளாக்குவதற்காகக் கிறிஸ்து எல்லாவற்றிலும் நம்மைப் போலானார் (எபி 2:10-17). இறைவனின் பிள்ளைகள் என்பதன் முழுப் பொருளில் அவரை ''அப்பா'' என்று அழைக்கத் தகுதியுடையவர்களாய் நாம் கிறிஸ்துவோடு உடன் உரிமையாளர்களாகிறோம். ஏனெனில் நாம் அவரது சகோதரர்களாய் இருப்பதோடு (உரோ 8:14-17) ஊனியல்பின்படி சகோதரர்களுடன் இருப்பதை விட மிக நெருங்கிய அளவில் அவருடன் உறவு கொண்டிருக்கிறோம்.

**2. கிறிஸ்துவிலான சகோதரர்களின் சமுதாயம்:-** தாம் வாழ்ந்த காலத்திலேயே இயேசு, சகோதரர்களின் புதிய சமுதாயத்திற்கு அடிக்கல்நாட்டி அதற்குரிய சட்டத்தையும் அறிவித்தார். சகோதரத் திருத்தத்தின் பணிக்கு முக்கிய இடமளித்து (மத் 18:15 தொ), சகோதரர்களுக்கிடையிலான உறவுகள் பற்றிய கட்டளைகளை எடுத்து அவற்றை நிறைவுபடுத்தினார் (மத் 5:21-26). அதிலே சகோதரத் திருத்தப்பணிக்குக் குறிப்பிட்ட இடமளித்தார் (மத் 18:15 தொ). விசுவாசியான சகோதரன் விலக்கப்படக்கூடிய கட்டுப்பட்ட சமுதாயத்தின் சாட்சியை இந்தக் கடைசி வாசகம் நமக்கு அளிக்குமாயின், அது அனைவருக்குமாகத் திறந்த மனதுடையதாக இருப்பதை நாம் காணலாம் (மத் 5:47). தனது நற்பேறற்ற சிறிய சகோதரரில் கிறிஸ்துவை எப்போதுமே சந்திப்பதால், ஒவ்வொருவரும் அவர்களுக்குத் தனது அன்பைக் காட்ட வேண்டும் (மத் 25:40). உயிர்ப்பிற்குப் பின்னர், பேதுரு ''தனது சகோதரர்களை உறுதிப்படுத்திய பின்னர் (லூக் 25:31-32), சீடர்கள் தங்களிடையிலேயே சகோதரத்துவத்தை உருவாக்குகின்றனர் (1 பேதுரு 5:9). உண்மையில் தொடக்கத்தில், தங்களது இனத்தின் தோழர்களாகிய யூதர்களுக்கும் ''சகோதரர்கள்'' என்ற பெயரைத் தொடர்ந்து அளித்தனர் என்று உறுதியாகக் கூறலாம் (அ.ப. 2:29; 3:17;..). ஆனால் ஊனுடலிலான தனது சகோதரரில் இருப்பதை விட அதிகமாகப் பவுல் அவர்களில் எதையும் இன்னும் காணவில்லை (உரோ 9:3). யூதர்களுடனும் மற்ற நாடுகளுடனும் தொடங்கி (அ.ப.14:1-2), கிறிஸ்துவில் அவர்கள் கொண்டுள்ள விசுவாசத்தினால் ஒப்புரவாகிய புதிய இனமானது பிறந்துவிட்டது. உறுப்பினர்கள் என்ற அளவில் எதுவும் அவர்களைப் பிரிக்க முடியாது; தலைவர்கள் மற்றும் அடிமைகளுக்கிடையிலான சமூக நிலையின் வேறுபாடுகூட அவர்களைப் பிரிக்க முடியாது (பில 16). அவர்கள் அனைவரும் கிறிஸ்துவில் ஒன்றுபட்டவர்களாக, சகோதரர்களாக, இறைவனுடைய அன்பிற்குரிய விசுவாசிகளாக உள்ளனர் (கொலோ 1:2). கிறிஸ்துவின் உடலை உருவாக்குகின்ற (1 கொரி 12:12-27), ஆபிரகாமின் உண்மையான மக்கள் இத்தகையோரே (கலா 3:7-29). புதிய ஆதாமில் அவர்கள் தங்களது சகோதரத்துவத்தின் அடித்தளத்தையும் ஊற்றையும் கண்டடைந்துவிட்டனர்.

**3. சகோதர அன்பு:-** விசுவசிக்கும் சமுதாயத்தில் சகோதர அன்பானது முதலில் செயல்படுத்தப்படுகிறது. இந்த ''நேர்மையான மெய்யியலானது'' சாதாரண இயற்கையான மனிதவின நேயமல்ல. புதுப்பிறப்பிலிருந்து மட்டுமே இது வரமுடியும் (1 பேதுரு 1:22-23). பிளேட்டோவினுடைய தத்துவத்தையும் இது கொண்டிருக்கவில்லை. ஏனெனில் எல்லா மனிதரையும் அடைய இது நாட்டமுடையதாயின் சிறிய சமுதாயத்தினுள் செயல்படுகிறது. இது சச்சரவுகளைத் தவிர்த்தல் (கலா 5:15), ஒருவருக்கொருவர்

ஆதரவு காட்டுதல் (உரோ 15:1), பிச்சையிடுதல் (2 கொரி 8-9; 1 யோவா 3:17) மற்றும் மென்மை (1 கொரி 8:12) போன்றவற்றில் அடங்கும். உரோமையை அடைந்தபோது பவுலுக்கு ஆறுதலளித்தது இதுவே (அ.ப. 28:15). மற்றப் பகுதிகளில் சகோதரன் என்ற சொல்லானது அயலார் என்ற சொல்லுக்கு மட்டுமே ஒதுக்கப்பட்டுள்ள நிலையில், யோவான் தனது திருமுகங்களில் அதற்கு உலகளாவிய பொருளை அளிப்பதாகத் தெரிகிறது. ஆனால், அவரது போதனை அதே போன்று உள்ளது. சகோதர அன்பினைக் காயினுடைய மனப்பான்மைக்கு எதிர்மாறானதாக அமைத்த நிலையில் (1 யோவா 3:12-16), இறைவனுக்கான அன்பினுடைய ஒதுக்க முடியாத அடையாளமாக அமைகிறது (1 யோவா 2:9-12).

4. முழுமையான சகோதரத்துவத்தை நோக்கி:- ஆயினும் இவ்வுலகில் விசுவாசிகளின் சமுதாயமானது முழுமையான அளவில் என்றுமே அடையப்பட முடியாததாகும். ஏனெனில் தகுதியற்ற உறுப்பினர்கள் அதில் காணப்படலாம் ( 1 கொரி 5:11); போலிச் சகோதரரும் அறிமுகப்படுத்தப்படலாம் (கலா 2:4-5; 2 கொரி 11:26). ஆனால் இறைவனின் முன்னிலையில் அனைத்துச் சகோதரரையும் குற்றம் சாட்டுகின்ற தீயோன், ஒருநாள் கீழே தள்ளப்படுவான் என்பதை இச்சமூகம் அறிந்துள்ளது (திருவெளி 12:10). சுய நிறைவேற்றத்தின் முழுமையாகிய இந்த இறுதி வெற்றிக்கெனக் காத்திருக்கும் வேளையில், தொடக்கத்திலிருந்தே கனவில் கண்டுவந்த புதிய மனிதனை நோக்கி மனித சகோதரத்துவம் நடைபோடுகிறதென இச்சமூகம் ஏற்கனவே சான்று பகர்கின்றது.

**சகோதரத்துவ அன்பு** (BROTHERLY LOVE)

இந்தச் சொல் புதிய ஏற்பாட்டில் மட்டுமே காணப்படுகிறது. ஆனால் பழைய ஏற்பாட்டில் இதன் கருத்து விளக்கப்பட்டுள்ளது. பழைய ஏற்பாட்டில் அயலான் என்பது ஒரு சக இஸ்ராயேலனையே குறிக்கிறது (லேவி 19:17-18). ஆனால் இந்த அன்பு பக்கத்தில் குடியிருக்கும் வேற்றினத்தாருக்கும் நீட்டிக்கப்படுகிறது (லேவி 19:34; உப 10:19). குடும்பங்களின் ஒற்றுமை போற்றப்படுகிறது (சங் 133:1; ஆதி 13:8;14:14-16). உண்மையான அன்பு என்பது நிலையானது, மற்றும் நெருங்கிய அன்பு, இரத்த உறவை காட்டிலும் பிணைப்பான அன்பு. தாவீதும் யோனத்தானும் வாழ்ந்த கதை இதற்குச் சான்று (1 சாமு18 — 2 சாமு1; பழ 17:9.17). மிகவும் மனத்தை உருக்குவது யோசேப்பு தன் சகோதரர்களுக்கு எகிப்து நாட்டில் காட்டும் அன்பு (ஆதி 43:30;44:14). ஒருவர் மற்றவருக்காகப் பரிந்து பேசுதலும் அன்பின் அடையாளம் ஆகும் (ஆதி 18:23;தொ 19:29; 44:33; யாத் 32:1 தொ).

புதிய ஏற்பாட்டில் இது உரோ 12:10; 1 தெச 4:9; எபி 13:1; 1 பேதுரு 1:22; 2:17; 3:8; 5:9; 2 பேதுரு 1:7-இல் காணப்படுகிறது.

கிறிஸ்தவர்கள் எல்லாம் ஒரே குடும்பம். இறைவன் ஊழியத்தில் நாம் எல்லாம் சகோதரர்கள் (மத் 23:8). எனவே நாமும் இயேசுவைப் பின்பற்றி ஒருவர் ஒருவரை அன்பு செய்ய அழைக்கப்பட்டிருக்கிறோம் (யோவா 13:34; 15:12-13; உரோ 12:3; 13:8.10; 16:5; கலா 5:13; 6:10; எபே 4:2; கொலோ 1:4; 2:2-3; 1 தெச 3:12; தீத்து 1:8; பில 5.16; 1 யோவான்). ஒரே நம்பிக்கை, விசுவாசம், உடன்படிக்கை காரணமாக நம்முடைய இந்த அன்பு நிலையானது. இந்த அன்பு கிறிஸ்து இயேசுவாலேயே தூண்டப்பட்டதால் இவ்வன்பு சாந்த மிக்கது, பரிவுடையது, நீதியானது, உண்மையுள்ளது, மன்னிக்கக்கூடியது, பொறுமையானது, தன்னலம் நாடாதது, தியாகமிக்கது.

**சகோதரி** (SISTER)

அதே பெற்றோருக்குப் பிறந்த (எண் 26:59; 2 சாமு 13:4) அல்லது ஒரே பொதுப்பெற்றோருக்குப் பிறந்த பெண் (ஆதி 20:12; லேவி 18:9.11; 2 சாமு 13:2). இச்சொல் எந்த இரத்த உறவுள்ள பெண் உறவினரையும் குறிக்கலாம் (ஆதி 24:59). ஒரே குலத்தைச்சேர்ந்த ஒரு பெண்ணை (எண் 25:18) அல்லது காதலியைக் (உ.ச. 4:9-10) குறிக்கலாம்.

புதிய ஏற்பாட்டில், விசுவாசச் சமூகத்தில் பெண் அங்கத்தினரைச் சகோதரி என்ற சொல் குறிக்கிறது (உரோ 16:1; 1 கொரி 7:15; யாக் 2:15). இயேசு தம்முடைய சீடர்களைத் தம் ''சகோதரர், சகோதரி, தாய்'' என்று குறிப்பிடுகிறார் (மத் 12:50) 2 யோவா 13-இல் வரும் ''தேர்ந்தெடுக்கப்பட்ட உன் சகோதரி'' என்ற சொற்றொடர் எழுதுகிற வரை உள்ளடக்கிய தலத்திருச்சபையைக் குறிக்கிறது. இந்த வழக்கு, கடிதம் எந்தத் திருச்சபைக்கு எழுதப் பட்டதோ அந்தத் திருச் சபையைத் ''தேர்ந்தெடுக்கப்பட்ட பெருமாட்டி'' (2 யோவா) என்றழைக்கும் மற்றொரு உருவகத்திற்கு இட்டுச் செல்கிறது.

**சக்கரம், உருளை** (WHEEL)

வண்டியின் உருளை (எசா 28:28; யாக் 3:6). மைய அச்சினைக் கொண்டு சுழலும் வட்ட வடிவமான உருளை. பழைய ஏற்பாட்டு ஆசிரியர்கள் இதை ஏற்கனவே இருந்ததாக ஏற்றுக் கொள்வதாகத் தெரிகிறது. ஆனால் இது முதன்முதலில் கி.மு. 3,000-இல் மெச பொத்தாமியாவில் கண்டுபிடிக்கப்பட்டு உப யோகிக்கப்பட்டது.

1. **அமைப்பு:-** முற்காலத்திய சக்கரங்கள் கனமான மூன்று மரப்பலகைகளால் ஆன வட்டவடிவ உருளையும் விளிம்பில் உலோ கத்தினால் இறுக்கிவிடப்பட்ட வட்டைக ளும் கொண்டு விளங்கின. ஒரே மரத்தி னின்று முழு உருளையைச் செய்வது மிகக் கடினமாதலின் மூன்று மரப்பலகைகளால் உருளை செய்யப்பட்டிருக்க வேண்டும். ஆனால் கி.மு. 2000-ஆம் ஆண்டிற்குள் ஆரக் கால்களுடைய சக்கரங்கள் கண்டுபிடிக்கப் பட்டு புழக்கத்திற்கும் வந்திருந்தன. 1 அர 7:33-இல் சக்கரங்களின் அச்சுக்கள், வட்டை கள், ஆரக்கால்கள், குடங்கள் ஆகியவை வார்ப்பால் ஆனவை என்று தெரிகிறது.

2. **வாகனங்கள்:-** சக்கரங்கள் பெருவண்டி களுக்கும் (எசா 27:28), தேர்களுக்கும் (யாத் 14.25; எசா 5:28; எரே 47:3) உருளைகளாகப் பயன்படுத்தப்பட்டன. சக்கரம் ஆகுபெய ராக வாகனத்தையே உணர்த்தலாம் (எசே 23:24; 26:1; நாகூ 3:2).

3. **ஆலயத் தள்ளுவண்டிகள்:-** சாலமோனின் ஆலய கட்டட விவரிப்பில் 10 வெண்கலத்தள்ளுவண்டிகள் விவரிக்கப் படுகின்றன. ஒவ்வோர் வண்டியும் 4 வெண் கலச்சக்கரங்களும் வெண்கல அச்சுக்களும் கொண்டவையாகும் (1 அர 7:30-33).

4. **யாவேயின் அரியணை:-** இறை பிரசன் னம் பற்றிய எசேக்கியலின் காட்சியில் (எசே 1:4-28;10), இறைவனின் அரியணையைத் தாங்கி நிற்கும் நான்கு கெருபீம்களும் அவற் றின் அருகில் நான்கு சக்கரங்களும் காணப் படுகின்றன. இச்சக்கரங்கள் இறைவனின் அரி யணையின் சக்கரங்கள் என விவரிக்கப்படு கின்றன.

5. சக்கரம் உருவகப் பொருளிலும் பயன் படுத்தப்பட்டு வந்திருக்கின்றது. கிணற்றண் டையில் ஒடிந்த சக்கரம் கிடப்பின்... உயிர ளிக்கும் நீரை இறைக்க முடியாமல் இறக் கும் நிகழ்வினைக் குறிப்பதைத் திருவுரை 2:6 கூறுகின்றது. அரசத்தேரின் சக்கரம் கொடிய வன் மீது ஏறிச்செல்லுதல் அவன் அடையப் போகும் தண்டனையைக் குறிக்கும் (பழ 20:26). சீராக் ஒரு மடையனின் இதயத்தை வண்டியின் சக்கரத்திற்கு ஒப்பிடுகின்றார் (சீரா 38:5). யாக் 3.6-இல் வரும் வாழ்க்கைச் சக்கரத்தின் உண்மைப் பொருள் இன்னும் சரியாகப் புரியாத புதிராகவே உள்ளது.

**சக்காய்** (ZACCAI - தூய்மையான)

அடிமைத் தளையிலிருந்து நாடு திரும்பிய குடும்பங்களில் ஒன்றின் குலப்பெயர் மூதா தையர் (எஸ் 2:9; நெகே 7:14).

**சக்கூத்து - கிய்யோன்** (SAKKUTH and KAI-WAN)

இப்பெயர்கள் இஸ்ராயேலரின் சமயக் கொள்கை மீறுதலோடு தொடர்புடையவை. இச்சொற்களுக்கு இரண்டு விளக்கங்கள் உண்டு. 1. சக்கூத்து என்பது சுக்காத்து (கூடாரம்) என்பதின் மொழிச் சிதைவாக இருக்கும். கிய்யோன் என்பதற்கு 'மேடை' என்று பொருள் கொள்ளலாம். 2. இந்தப் பெயர்கள் இரண்டு தெய்வங்களையும்

குறிக்கலாம். ஆமோ *5:26*-இல் விண்மீன் தெய்வம் கிய்யோன் என்று எழுதப்பட்டுள்ளது. இதனால் விண்மீன் தெய்வங்கள் இங்குச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன என்பது தெளிவு.இவைகள் மெசபொத்தாமிய நூல்களில் காணப்படுகின்றன. இரண்டுமே பாபிலோனிய சனித் தெய்வத்தின் பெயர்களாக உள்ளன.

**சக்கூர்** (ZACCUR - *கவனமுள்ள*)

1. ரூபன் கோத்திரத்து ஓர் ஆள் அல்லது குடும்பம். பாலஸ்தீனத்தை வேவு பார்க்கச் சென்ற சம்மூவாவின் தந்தை (*எண் 13:4*).

2. சிமியோனின் குடும்பம் அல்லது கோத்திரத்தைச் சேர்ந்தவர். கம்மூவேலின் மகன் (*1 நாள் 4:26*). இவர் மிசுமாவின் வழித் தோன்றல். இது ஆதி *25:14; 1 நாள் 1:30*-இல் ஓர் இஸ்ராயேலியப் பெயராகும். இந்தக் குடும்பமானது அனேகமாகச் சிமியோனியர்களுடையவும், வடக்கு அரேபியா நாடோடிகளுடையவும் கலப்பாக இருக்கலாம்.

3. இவர் மெராரியின் வழிவந்த ஒரு லேவியர்; யகசியாவின் மகன் (*1 நாள் 24:27*).

4. அடிமைத்தளையிலிருந்து நாடு திரும்பியவருள் ஆசாபின் பாடற் குழுவைச் சேர்ந்த ஒரு குடும்பம் (*1 நாள் 25:2.10; நெகே 12:35*).

5. பாபிலோனியாவிலிருந்து எஸ்ராவுடன் நாடு திரும்பியதாக ஊத்தாயோடு சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கும் பிகவாயின் வழித் தோன்றல் (*எஸ் 8:14*).

6. இம்ரியின் மகன்; எருசலேம் மதில் சுவர்களைக் கட்ட உதவியவர்களில் ஒருவர் (*நெகே 3:2*).

7. நெகேமியாவின் தலைமையில் புதிய உடன்படிக்கையில் கையெழுத்திட்ட ஒரு லேவியர் (*நெகே 10:12*).

8. கனானின் (அனான்) தந்தை; ஒரு லேவியர்; நெகேமியாவால் உதவிப் பொருளாளராக நியமிக்கப்பட்டவர் (*நெகே 13:13*).

**சக்கேயு** (ZACCHAEUS - *தூய்மையான*)

1. யூதா மக்கபேயுவின் படையில் ஒரு தலைவர் (*2 மக் 10:19*).

2. எரிகோவில் வாழ்ந்த ஒரு வரிவசூலிப்பவர்; இயேசுவைச் சந்தித்தபின்னர் இவர் வாழ்க்கை மாறியது (*லூக் 19:1-10*). மேலே கொடுக்கப்பட்டுள்ள பொருளின்படி இப் பெயர் சக்கேயுவிற்குத் (வெறுக்கப்பட்ட உரோமையரின் கூட்டாளி) தகுந்ததன்று என்று யூதர்கள் நினைத்திருக்கலாம்.

ஒரு மாவட்டத்திலிருந்த வரிவசூலிப்பவர்களுக்கெல்லாம் தலைவராகச் சக்கேயு தோன்றுகின்றார் (*லூக் 19:2*). யூதேயாவின் கிழக்கத்திய வணிகத்திற்கு எரிகோ நுழைவாயிலாயிருந்தது; மேலும் இது செழுமையான நிலத்தைக் கொண்டிருந்தது; இந்தச் சூழ்நிலையில் வரி வசூலிப்பவர்கள் தங்களைப் பெரும் செல்வந்தர்களாக ஆக்கிக்கொள்ள நிறைய வாய்ப்புகள் இருந்தன. ஆயினும் இவர் இயேசு அந்த ஊரைக் கடந்து செல்கின்றார் என்று கேட்டபோது, அவரைக் காண முயற்சி எடுத்தார். இவர் குள்ளமாய் இருந்ததால், ஒரு மரத்தில் ஏறவும் தயங்கவில்லை. இதைக் கண்ட இயேசு சக்கேயுவை அழைத்து இவரது வீட்டில் தங்கவும் சென்றார். இதைக் கண்ட மக்கள் முணுமுணுத்தனர். ஆனால் சக்கேயு தனது சொத்தில் பாதியை ஏழைகளுக்குக் கொடுப்பதாகவும், எவரையாவது ஏமாற்றி எதையாவது கவர்ந்திருந்தால் நான்கு மடங்காகத் திருப்பிக் கொடுப்பதாகவும் கூறினார் (*யாத் 22:1; லேவி 6:1-5; 2 சாமு 12:6*). இயேசு இதைச் சக்கேயுவின் மீட்பின் அடையாளமாகக் கருதினார்.

நம்பத்தகாத ஒரு பாரம்பரியத்தின்படி இவர் பிறகு செசரியாவின் ஆயரானார். இந்நிகழ்ச்சி ''இழந்துபோனதைத் தேடி மீட்க வந்த'' இயேசுவின் பணிக்கு ஓர் எடுத்துக் காட்டாகும் (*19:10*). இந்நிகழ்ச்சி சக்கேயுவின் சமயோசிதப்புத்தியையும், சமய ஆர்வத்தையும், மன உறுதியையும் நிறைவான மனமாற்றத்தையும் எடுத்துக்காட்டுகிறது.

சக்கேயு வாழ்ந்த எரிகோ பழைய எரிகோ விற்குத் தெற்கே ஏறக்குறைய 3.கி.மீ. தொலைவில் இருந்தது. பெரிய ஏரோது இதை விரிவுபடுத்தி, அழகுபடுத்தித் தன்னுடைய குளிர்காலத் தலைநகரமாக மாற்றினார். இது 1950-51-இல் அமெரிக்கர்களால் தோண்டி ஆராயப்பட்டது.

**சங்கிலிகள்** (CHAINS)

'சங்கிலிகள்' என்ற சொல்லுக்கு விவிலியத்தில் பல வகைகளில் பொருள் கொள்ளப் படுகின்றது.

அ) இச்சொல் எரேமியா நூலில் (40:1.4) கை விலங்குகளைக் குறிக்கிறது.

ஆ) எசாயா நூலில் 45:14-இல் கால்விலங்குகளைக் குறிக்கிறது.

இ) கார்த்திகை விண்மீன்களாகிய ஆறு விண்மீன்களைச் சேர்த்து இணைக்கின்ற சங்கிலியாகக் கருதப்படுகின்றது (யோபு 38:31).

ஈ) அழகு செய்யப் பயன்படுத்தும் சங்கிலிகளைக் குறிக்கிறது. இந்தச் சங்கிலிகள் எருசலேம் கோவிலை அழகுசெய்யப் பயன்படுத்தப்பட்டன (1 அர 7:17; 2 நாள் 3:5.16). குருக்களின் பணிக்கான ஆடைகளில் பசும் பொன்னால் செய்யப்பட்ட சிறிய சங்கிலிகள் பயன்படுத்தப்பட்டன (யாத் 28:14). எசா 40:19-இல் சிலைகளுக்கு வெள்ளிச் சங்கிலிகள் போடப்பட்டதாகக் குறிப்பிடப்படுகின்றது.

உ) அரமேயத்தில் இச்சொல் கழுத்தணியைக் குறிக்கின்றது. ஆதி 41:42-இலும் 5:29-இலும் அரசனின் அன்புச்செயல், அல்லது நல்லெண்ணத்தினை உணர்த்தும் பொருட்டுப் பொன்கழுத்தணியானது அணிவிக்கப்படுகின்றது. எசே 16:11-இல் ஆண்டவர் எருசலேமை அளவற்ற விதத்தில் பராமரித்துவருகின்றார் என்பதைக் குறிப்பால் உணர்த்த உருவகமாக இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஊ) புதிய ஏற்பாட்டில் சங்கிலியால் கட்டப்படல் பற்றிக் கூறப்படுகின்றது (மாற் 5:3-4; அ.ப. 28:20; திருவெளி 20:1). உரோமையர் முறைப்படி கைவிலங்கின் ஒரு முனை சிறைக்கைதியின் கையில் மாட்டப்பட்டிருக்கும். மறுமுனை சிறைக்காவலனின் கையிலிருக்கும் (அ.ப. 12:6-7).

எ) இச்சொல் கட்டுவதற்குப் பயன்படுகின்ற எந்தப் பொருளையும் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட பொதுவான சொல் ஆகும் (அ.ப. 26:29: எபி 11:36; யூதா 6).

**சங்கீதங்கள் - திருநூல்** (PSALMS, BOOK OF)

காண்க: திருப்பாடல்கள் நூல்

**சங்கூத்து** (SHAMHUTH - அழிவு, பாழ்படுத்து)

இவர் ஓர் இசுராகியர் அல்லது செரகியர் ஆவார் (1 நாள் 2:6). தாவீதின் படையில் ஐந்தாம் மாதத்திற்கான ஐந்தாம் பிரிவின் தலைவராவார் (1 நாள் 27:8). சில சமயம் இவர் சம்மாகு என்றும் கரோதின் (அரோது) சம்மோத்து என்றும் அடையாளம் காட்டப் படுவார் (2 சாமு 23:25; 1 நாள் 11:27).

**சசாய்** (SHASHAI - மேன்மையான)

நாடு கடத்தப்பட்டு, திரும்பியவர்களில் இவரும் ஒருவர். எஸ்ராவின் காலத்தில் வாழ்ந்தவர். இவர் புறவின மனைவியை நீக்கிவிட வேண்டியிருந்தது (எஸ் 10:40).

**சடங்குச்சட்டம்** (CEROMONIAL LAWS)

இஸ்ராயேலரின் சமய அனுசரிப்புக்கள், வழிபாட்டுப் பழக்கவழக்கங்கள் மற்றும் விழாக்கள் ஆகியவற்றைப்பற்றிய சட்டங்கள், ஒழுங்குகள்.

**சடலப் பாதுகாப்பு** (EMBALMING)

இறந்த உடலை அழிவிலிருந்து பாதுகாக்கும் முறையாகும். எகிப்தியரைப்போல் எபிரேயர் இப்பழக்கத்தை ஐயத்தோடு நோக்கினர். இப்பழக்கம் எகிப்தில் தோன்றியது எனலாம். எபிரேயர்கள் இதைக் கடைப்பிடிக்கவில்லை என்பதற்கு இதுபற்றிய குறிப்புகள் சிலவே உள்ளன என்பதும், கானானின் கல்லறைகளில் கண்டெடுக்கப்பட்ட சடலங்களின் நிலையும் சான்று கூறுகின்றன.

பழைய ஏற்பாடு சடலப்பாதுகாப்பைப்பற்றி இரு நிகழ்ச்சிகளை மட்டுமே கொடுக்கிறது. ஒன்று யோசேப்பின் தந்தை யாக்கோபின் சடலப்பாதுகாப்பாகும். யோசேப்பின் கட்டளைக்கிணங்க, எகிப்திய மருத்துவர்கள் யாக்கோபின் உடலுக்கு முறையான பாதுகாப்புச் செய்ய நாற்பது நாட்கள் எடுத்துக்கொண்டனர் (ஆதி 50:2-3). அதே பாதுகாப்பு யோசேப்புக்கும் அளிக்கப்படுகிறது (50:26). இருவரும் எகிப்தில் முக்கியமானவர்கள். அவர்களின் அடக்கம் பற்றிய ஏற்பாடுகள் அவர்களின் சமூக, அரசியல் நிலையின் மேன்மைக்குச்சான்று கூறுகின்றன. பழம் மேற்காசியாவில் மற்ற இடங்களில் சடலப் பாதுகாப்பு செய்யப்பட்டதுபற்றித் தெளிவான குறிப்புகள் இல்லை. அரசன் ஆசாவின் உடலுக்கும் (2 நாள் 16;14) இயேசுவின் உடலுக்கும் (யோவா 19:39-40) பயன்படுத்தப்பட்ட வாசனைப் பொருட்கள் சடலப் பாதுகாப்பிற்கன்று, சடங்கு முறையில் தூய்மைப் படுத்துவதற்காக இருக்கலாம். யூத அடக்கமுறையில் இறந்தவரைச் சுற்றி மூட, துணிகள் மட்டுமே பயன்பட்டது. உடலைப் பாதுகாக்கவோ, வேறு எந்த நோக்கத்திற்கோ உடலைக் கீறுவது தடை செய்யப் பட்டிருந்தது (லேவி 19:28; 21:5).

சடலத்தை அழிவிலிருந்து பாதுகாக்க விரும்பினர் எகிப்தியர். மேலும் இவ்விதம் செய்வது கீழ் உலகில் இறந்தவரின் ஆள் அடையாளத்தைத் தொடர்ந்து பாதுகாக்கும் என்று நம்பினர். இதற்குமாறாக, எபிரேயர் உடல் பாதுகாப்பின் தேவையை ஏற்றுக் கொள்ளவில்லை. இறைவன் தமது பிரசன்னத்தையும் கவனத்தையும் கல்லறைவரை தங்களுக்கு அளித்து, ஒருநாள் உடலை உயிர்ப்பிப்பார் என்று நம்பினர். மேலும் இவர்கள் எகிப்தியரின் பழக்கத்தை வெறுத்தனர். பாலஸ்தீனியர்களோ ஏழைகள். சடலப்பாதுகாப்பில் அதிகச் செலவும் இம் முறையை, அவர்கள் பின்பற்றத் தடையாய் இருந்தது.

### சடைபின்னுதல் (BRAIDING)

கூந்தலில் அலங்காரப் பின்னல் இடுதல் அல்லது பூவைத்து அலங்கரித்தல் (1 பேதுரு 3:3; 1 திமோ 2:9). இது பெண்களுக்கு உண்மையான அணிகலன் இல்லை என்று கூறப்படுகிறது.

### சட்ட அறிவிப்பு (DECREE)

எழுத்து வடிவில் உள்ள பொது அறிவிப்பு அல்லது பறைசாற்றலாகும். எசாயா அநீதியான சட்டங்களை ஆக்குவோர்க்கும், அநியாயங்களை எழுதி வருவோர்க்கும் 'ஐயோ கேடு' என எழுதுகிறார் (எசா 10:1). இது யூதேயாவின் அரச ஆணையால் கல்லில் பொறிக்கப்பட்ட சட்டத்தைக் கண்டிக்கவே கூறப்பட்டிருக்கும் எனக் கருதப்படுகிறது. மேலும் பிற்கால பழைய ஏற்பாட்டு நூல்களிலே (தானியேல், எஸ்தர், எஸ்ரா) சட்டங்கள் அடிக்கடி குறிப்பிடப்பட்டுள்ளன. இது பாரசீகப் பேரரசின் சட்டத்தைப் பயன்படுத்துதலின் விளைவாக இருக்கலாம்.

### சட்டம் (LAW)

''தோரா'' என்ற எபிரேயச்சொல் விரிவான பொருள் கொண்டது. கிரேக்கச் சொல் நீதி வழக்கில் வெளிப்படுவது. வழக்கமாய் மோசேயோடு தொடர்புபடுத்தும் பழைய ஏற்பாட்டு மரபில் சட்டம் என்பது இறைவன் அளித்த அறிவுரைகள் கொண்டது; யூத முறையில் அமைக்கப்பெற்றுள்ளதைப் புதிய ஏற்பாடு தழுவிச் சட்டம் என்கிறது (உரோ 5:20). இயேசு கிறிஸ்துவால் நிறுவப்பட்ட அருளாட்சிக்கு இது எதிரானது (உரோ 6:15;யோவா 1:17). இருந்தாலும் புதிய ஏற்பாடும் ''கிறிஸ்துவின் சட்டம்'' என்று பேசுவதைக் காண்கிறோம் (கலா 6:2). மேலும் கிறிஸ்துவ இறையியல் பழையது புதியது என்று சட்டத்தைப் பாகுபடுத்துகிறது. மீட்பின் வரலாற்றை முழுவதுமாக எடுத்துக் கொண்டால் புதிய ஏற்பாடு ''இயல்பான சட்டம்'' ஒன்றையும் ஏற்கிறது (காண். உரோ 2:14தொ). ஏனென்றால் மேலுள்ள இரண்டு சட்டங்களுக்கும் உட்படாதவரும் உள்ளனர். சட்டம் என்று சொல்லுகையில் கடவுளின் திட்டத்தில் அத்தியாவசியமாக மூன்று கட்டங்களைக் காண்கிறோம். இயல்பான சட்டம், பழைய சட்டம், புதிய சட்டம் என்னும் தலைப்புகளில் மேலும் தொடர்வோம்.

*அ) மோசேக்கு முன்னால்: இயல்பான சட்டம்:-* இயல்பான சட்டம் என்று விளக்கமாய் நாம் மறை நூலில் காண்பதில்லை. ஆனால் அதனுடைய உட்பொருள் தெளிவாகப் பல்வேறு உருவத்தில் பரவிக்கிடக்கிறது.

*1.பழைய ஏற்பாடு:-* ஆதி 1-11 (மற்றும் அபூர்வமான ஒத்த பகுதிகள்) ஆகிய இப்பகுதி காட்டுவதெல்லாம் வாக்குறுதிக்காலம் (ஆபிரகாமும் குலத்தந்தையரும்) மற்றும் (மோசேயின்) திருச்சட்டம் வரையில் மனிதனின் சமய ஆட்சி பற்றியதாகும். கடவுளின் திருவுளத்தின் வெளிப்படையான கட்டளையையே மனிதன் ஆதிமுதல் நேர்கொள்கிறான் (ஆதி 2:16தொ). இன்பவனத்தில் இது தான் சோதனையாகவும், இதை மீறுவதால் உலகில் சாவு நுழையவும் ஏதுவாகிறது (3:17தொ; காண். ஞான 2:24;உரோ 5:12). இந்த விளைவுகளிலிருந்து, இறைவன் மனிதனைச் சட்டமின்றி விட்டுவிடவில்லை என்பது தெளிவாகிறது. ஒழுக்க நெறி மனிதனை நடத்துகிறது. காயினுக்குக் கடவுள் இதை நினைவுறுத்துகிறார் (ஆதி 4:7). பெருவெள்ளக் காலத்துத் தலைமுறையும் இதையே மீறியது (6:5). நோவா கடவுளோடு செய்த உடன்படிக்கையில் சமயக் கட்டளைகளும் அடங்கியுள்ளன (9:3-6). மேலும் அக்காலத்திய மனிதனின் வழிபாட்டு முறைகளும் உள்ளன (4:3தொ;8:20). இந்தக் கருநிலைச் சட்டத்திற்கு மனிதன் காட்டும் போக்கின் படி அவர்கள் நீதிமான்கள் (4:3; 5:24; 6:9) அல்லது தீயவர்கள் (4:4; 6:5.11தொ; 11:1-9; காண்.ஞான 10:3தொ) ஆகிறார்கள்.

*2. புதிய ஏற்பாடு:-* ஆதாமிலிருந்து மோசே வரையில் உள்ள வரலாற்றையும் பவுலின் மீட்புத்திட்டம் உள்ளடக்குகிறது (உரோ 5:13தொ). இஸ்ராயேல் அழைப்பில் பங்கேற்காத ஏனைய இனங்கள் மோசே காலத்திற்கு முந்திய சமயத்திற்கே உட்பட்டவர்கள். அவர்களின் வழியிலே சென்றார்கள் (அ.ப. 14:16; காண் உரோ 1:24-31); கடவுளைத் தேடினார்கள் (அ.ப.17:27). எல்லாமே அறியாமையில்தான் (17:30). இவையெல்லாம் நடந்ததோ கடவுளின் திருவுளப்படியே. அவருடைய திருவுளம் அவர்களின் மனச்சாட்சி மூலம் வெளிப்பட்டது (உரோ 2:14தொ). இச்சூழ்நிலையில் சட்டம் என்று பவுல் கூறுவது, ஒழுக்க நெறி என்ற பொருளில்தான். மற்றச்சமயத்தவரைக் கடவுள் தீர்ப்பிடுவது இந்தக் கட்டளைகளின் அடிப்படையில்தான் (1:18;2:12). மனிதர் குற்றங்களுக்கு அவர் வழங்கும் தண்டனையும் ஒழுக்க நெறியை மீறுகின்றவர்களுக்கேதான் (1:32; காண் ஆமோ 1:2-2:3). கடவுளைத் தெரிந்தும் அவரது மகிமையை மறுக்கும் (உரோ 1:2) வேளையில் சமயச் சார்புள்ள பாவம் என்றும், அதற்கேற்றாற்போல் தண்டனை கிட்டும் என்றும் அடிப்படை உண்மையைப் பவுல் உரைக்கிறார்.

*ஆ) மோசேயும் பழைய சட்டமும்:-* மற்ற இனத்தவரிடமிருந்து பழைய ஏற்பாட்டு மக்களைக் கடவுள் பிரித்தார். மோசேயின் சட்டம் என்பதின் மூலம் அவரே வெளிப்படுத்திப் புதிய ஆளுகைக்கு அவர்களை ஏற்படுத்தினார்.

*(1) பல்வகையான சட்டம்:-*

1. ஐந்நூலில் மோசேயின் சட்டம் உறைந்துள்ளது. தொடக்கமுதல் மோசேயின் சாவு வரையில் கடவுளின் மீட்புத்திட்ட வரலாறு சட்டமியற்றும் வாசகங்களோடு இழைந்தோடுகிறது. படைப்பு (ஆதி 2:2தொ) நோவாவின் உடன்படிக்கை (9:1-7), ஆபிரகாமின் உடன்படிக்கை, பாலைவனத் தங்கல் (யாத் 20:1-17; 20:22-23:32; 25-31; 34:10-28; 35-40; லேவியராகமம் முழுவதும்; எண் 1:1-10:28;15;17-19;26-30;35; ஏறக்குறைய உபாகமம் முழுவதும்) ஆகியவை பற்றிய விவரிப்பில் இவ்வாசகங்கள் காணப்படுகின்றன.

2. எல்லா நிலைகளிலும் இறைமக்களை நடத்திச் செல்ல யாவற்றையும் உள்ளடக்கும் இச்சட்டம் துணையாகிறது. மற்றச் சமயமெய்யிலானவர்கள் காணமுடியாத உண்மையான உறுதியான முறையில், மனச்சாட்சியை அடிப்படையாக வைத்துப் பத்துக்கட்

டளைகள் (*யாத் 20:2-17;உப 5:6-21*) சுருக்க மாய் உரைக்கின்றன. நீதிமன்ற ஒழுங்கு முறையில் பற்பல நிறுவனங்களையும் (குடும்பம், சமூகம், பொருளாதாரம், நீதி முறை) கட்டுப்படுத்துகின்றன. இறுதியாக, இஸ்ராயேலின் வழிபட்டுச் சடங்குமுறைக ளுக்கு ஒழுங்குகள், நடத்துபவர்கள், தேவை யானவைகள் (தூய்மை பற்றிய ஒழுங்குகள்) என்றும் உள்ளன. எதுவும் ஏனோதானோ என்று நடக்க முடியாது. சமூக அமைப்புக ளால் ஏற்பட்டுள்ள இறைமக்களின் உலகி யல் நிறுவனங்கள், வெளிப்படையான, சம யச் சட்டத்தால் பாதிக்கப்பட்டதும் உண்மை.

3. சட்டத்தின் இலக்கிய அமைப்பிலும் பல்வேறு குணங்கள் உள்ளன. சில ஐயவாத முறை (*யாத் 21:18*) பழைய மேற்காசியச் சட்டத் தொகுப்பிலிருந்து கையாளப்படுவ தாகும். தனிப்பட்ட தீர்ப்புகளிலிருந்து வரு பவை. மற்றவைகள் (*யாத் 21:17*) தீய உரைக ளுக்கு வழக்கமாய் உடன்படிக்கையைப் புதுப்பித்தலோடு தொடர்புடைய சாபங் களை நினைவுபடுத்துகின்றன (*உப 27:15...*). வெளிப்படையான, திட்டவட்டமான கட்ட ளைகள் மூலம் (எ. கா. பத்துக்கட்டளைகள்) இறைவன் நேரிடையாகத் தமது திரு வுளத்தை மக்களுக்குக் காட்டுகிறார். ஞானாகமப் போதனைகளை ஒத்த மற் றத் தூண்டுதல் பெற்ற கட்டளைகளும் உள் ளன (*எ.கா.யாத் 22:25தொ*). சட்டத் தொகு திக்குக் கட்டளைகள்தான் உயிர் கொடுத்தன. இந்த விதத்தில் இஸ்ராயேல் சட்டம் நீதித் தீர்ப்புத் தொகுப்பிலிருந்து வேறுபட்டதா கும். கடவுளின் பெயரால் கட்டாயமாக்கப் பட்டதுதான் சட்டம் என்றாகியது.

4. சட்டம் பலவகையானதால் பழைய ஏற்பாடு அதற்கு அறிவுரை, சாட்சி, கட் டளை, ஒழுங்கு, தீர்மானம் (அல்லது தீர்ப்பு), சொல், கடவுளின் வழி (காண் *சங் 19:8-11;119*) எனப் பல பெயர்களைக் கொடுக்கிறது. சட்டத்தின் வரம்பினை இத் திருச்சட்டம் கடந்து மேலோங்கி நிற்பது தெளி வாகும்.

***(2) பழைய ஏற்பாட்டில் சட்டத்தின் பங்கு:-***

***1. சட்டம் உடன்படிக்கையோடு இணைந் தது:-*** கடவுள் தமது உடன்படிக்கை மூலம் இஸ்ராயேலர் குலத்தைச் சிறப்பானதாக்குகி றார். இத்தேர்வோடு சில வாக்குறுதிகளை யும் சேர்க்கிறார். இவற்றின் நிறைவேறுதல் வரவிருக்கும் வரலாற்றில் ஆதிக்கம் செலுத் தும் (*யாத் 23:22-33; லேவி 26:3-13; உப 28:1-14*). ஆனால் தமது வாக்குறுதிகளுக்குச் சில நிபந்தனைகளையும் கடவுள் விதிக்கி றார். இஸ்ராயேல் அவருக்குச் செவிமடுக்க வேண்டும், கட்டளைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையேல் அவர்களுக்குச் சாபக்கேடுதான் (*யாத் 23:21; லேவி 26:14-45; உப 28:15-68*). இறுதியில் உடன்படிக்கை நடைமுறைச் சட்டத்தைக் காக்கவேண்டும் என்றுதான் ஆகிறது (*யாத் 19:9தொ;24:7;* காண் *யோசு24:21-24;2 அர23:3*). வரப்போ கும் மீட்புப் பெற சட்டம்தான் இஸ்ராயே லுக்கு அடிப்படையான சமய வழிமுறையா கும். சட்டத்தைப் பூர்த்தி செய்வது கடினமே. ஆயினும் உண்மையில் அது இறை ஆதரவா கும். ஏனென்றால் அதனுடைய நோக்கம் இஸ்ராயேலை ஞானிகளாக்குவதும் (*உப 4:5-8*) அதன்மூலம் அவர்களை இறைவனின் திருவுளத்தோடு தொடர்புபடுத்துவதுமா கும். சட்டத்தின் பயிற்சி கடினமானாலும் அதன் வழியாகத்தான் வணங்காக் கழுத்தின ராகிய இஸ்ராயேலர், இறைவன் அவர்களிட மிருந்து எதிர்பார்க்கும் புனிதத்தைக் கற்றுக் கொண்டனர். இது தோராவின் மையமான பத்துக் க்ட்டளைகளுக்குச் சிறப்பாகப் பொருந்தும். மேலும் இது, சமூகக் காரியங்க ளையும் வழிபாட்டையும் பற்றிய ஒழுங்குக ளுக்கும் பொருந்தும். இவை கருத்தியலான வற்றை இஸ்ராயேலின் நிறுவனங்களின் செயல்முறைப் பணித்திட்டமாக மாற்றின.

2. சட்டத்திற்கும் உடன்படிக்கைக்கும் உள்ள தொடர்பு, பழைய மோசேயின் சட் டம் தவிர வேறொன்றும் இஸ்ராயேலுக்கு இல்லை என்று காட்டுகிறது. பழைய முறை யில் அமைந்த உடன்படிக்கையின் கோரிக் கைகளை இறைவன் வெளிப்படுத்துகிறார் (*சங் 103:7*). இதனுடைய முக்கியத்துவம்;

இருவகையில் தெளிவாகிறது. முதலாவது, எந்த மனிதச் சட்டம் இயற்றுபவரும், தாவீது, சாலமோன் ஆகியோரின் காலத்தில் கூட, நாட்டைப் படைத்தவரின் சட்டத்திற்குப் பதிலாகத் தனது அதிகாரத்தோடு புதுச் சட்டங்களைச் சேர்க்கவில்லை (மோசேயின் போக்கில் தோன்றிய எசே *40-48* கூட தோராவில் சேர்க்கப்படவில்லை). இரண்டாவது எல்லாச் சட்டக் குறிப்புகளும் மோசேயின் பெயரால் இயங்குகின்றன. இவையும் சீனாய் மலையில் தங்கிய சூழ்நிலையில் எடுத்துக் கூறப்படுகின்றன.

*3.* இதனால், காலப்போக்கில் சட்டம் முன்னேற்றம் அடையவில்லை என்று சொல்லிவிட முடியாது. உள்ளார்ந்த திறனாய்வு பற்பல நோக்கங்களையும், குணங்களையும் கொண்ட பகுதிகளைப் பகுத்துக்காட்டுகிறது. ஐந்நூலின் மூலங்களுக்கேற்ப மோசேயின் மரபுரிமை பல வகையான பாரம்பரியங்களில் எடுத்துக் கூறப்படுகிறது. பலமுறை அவை திருத்தம் பெற்றுப் புதுப் பொலிவு பெற்றன. பத்துக்கட்டளைகளும் *(யாத் 10:1-17)* உடன்படிக்கைச் சட்டமும் *(யாத் 20:22-23:33)* உபாகமத்தினாரால் எடுத்தாளப்பட்டு விரிவாக்கப்படுகின்றன *(உப 5:2-21;12-28)*. இவர், கடவுளை அன்பு செய்வது ஒன்றுதான் முதன்மையானது. மற்றவை அதனை ஒட்டியே உள்ளன என்று காட்டுகிறார். *(6:49)*. புனிதக் கடவுளைப் பின்பற்றுவதைக் காட்டுவதே *(லேவி 19:1)* புனிதச் சட்டத்தின் நோக்கமாகும். *(லேவி 17-26)*.மோசேயின் சட்டத்தைவைத்தே அரசர்கள் காலத்திலும் சீர்திருத்தங்கள் நடைபெறுகின்றன *(1 அர 15:12தொ;2 அர 18:3-6;22:1-23:25)*. அனேகமாக, ஐந்நூலை இறுதி நிலைப்படுத்துவது தொடர்பாக எஸ்ரா செய்த பணி, பாரம்பரியச் சட்டத்தின் அதிகாரத்தையும் சட்டப்படி செல்லக்கூடிய தன்மையையும் திருநிலைப்படுத்துவதைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை *(எண் 7:1-26; நெகே 8)*. இப்பாரம்பரியச் சட்டத்தின் அடிப்படையும் தன்மையும் மோசேயால் நிறுவப்பட்டவையாகும்.

***(3) சட்டத்திற்குமுன் இஸ்ராயேல்:-***

பழைய ஏற்பாடு முழுவதுமே சட்டம் எதிரொலிக்கிறது. அதன் கோரிக்கைகள் மக்களை நேரிடையாக எதிர்கொள்கிறது. அது மறைநூல் ஆசிரியர்களின் எண்ணங்களில் எப்போதும் உள்ளடங்கியுள்ளது.

*1.* தங்கள் பதவியின் சிறப்பிடத்தால் **குருக்கள்** சட்டத்தின் நிபுணர்களும், காவலர்களும் ஆவர் *(ஓசே 5:1; எரே 18:18;எசே 7:26)*. யாவேயின் தீர்மானங்களையும் அறிவுரைகளையும் மக்களுக்குப் போதிப்பது அவர்களின் கடமையாகும் *(உப 33:10)*. புனித இடத்தில் அளிக்கப்பட்ட *(உப 31:10தொ)* இந்த அறிவுரையானது வழிபாட்டு முறையைத் தழுவியதாகும் *(லேவி 10:10 தொ; எசே 22:26;ஆகாய் 2:11தொ; செப் 7:3)*. வாழ்க்கையின் மற்றவைகளும் அப்போதனையில் அடங்கியிருந்தன. புனிதபோதகத்தை விளக்கிச் சொல்லும் குருக்கள் யாவேயின் வழிகள் பற்றிய அறிவுரை ஊட்டுவதைப் பொறுப்பாகக் கொண்டிருந்தனர் *(ஓசே 4:6;எரே 5:4தொ)*. அவர்கள்தாம் சட்டவாசகங்களைத் தொகுத்தவர்கள். அவர்களின் ஆதிக்கத்தில்தான் சட்டம் வளர்ச்சியுற்றது.

*2.* இறைவனின் ஆவியால் தூண்டப்பெற்ற, வார்த்தையின் மனிதர்களான **இறைவாக்கினர்,** சட்டத்தின் அதிகாரத்தை வலியுறுத்துகின்றனர். அதைப் புறக்கணிக்கும் குருக்களையும் சாடுகின்றனர் *(காண்.ஓசே 4:6; எசே 22:26)*. தோராவின் சட்டங்களையும் ஓசேயா அறிந்திருக்கிறார் *(ஓசே 9:12)*; அவர் கண்டிக்கும் பாவங்கள் பத்துக்கட்டளைகளை மீறுவதால் வந்தவையே *(4:1தொ)*. உபாகமச் சீர்திருத்தத்திற்கு ஆதரவாக *(2 அர 22)* எரேமியா, உடன்படிக்கையின் வாக்குறுதிகளுக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்று போதிக்கிறார் *(எரே 11:1-12)*. புனிதச் சட்டத்திலிருந்துதான் *(எசே 22:1-16.26)* எசேக்கியேல் பாவங்களின் அட்டவணையைத் தொகுக்கிறார். அவர்கள் மேலானதாகப்போற்றும் ஒழுக்க நெறி மோசேயின், தோராவின் கோரிக்கைகள் பற்றிய இன்னும் ஆழ்ந்த உட்பொருளேயாகும்.

*3.* இஸ்ராயேலின் வரலாற்று ஆசிரியர்களிடமும் இதே மனநிலையைக் காண்பதில் வியப்பில்லை. சீனாய் உடன்படிக்கைதான் இஸ்ராயேல் இனத்தின் தொடக்கம் என்று இத்தொகுப்பாசிரியர்கள் உரைக்கின்றார்கள். உபாகமப் பாரம்பரியம் வரைந்த தகுதிகளைக் கொண்டே கடந்தநிகழ்ச்சிகளுக்குப் பொருள் காண உபாகம வரலாற்றாசிரியர்கள் (உப, நீதி, சாமு, அர) முனைகின்றனர். ஐந்நூல் குருத்துவ வரலாற்றாசிரியர் அவரது சூழ்நிலையின் சட்டப் பாரம்பரியத்தால் இயங்குகிறார். இஸ்ராயேலின் இறையாட்சி வரலாற்றை மறுமதிப்பீடு செய்யும் நாளாகம ஆசிரியர் இறுதியாக நிலைப்படுத்தப்பட்ட வாசகத்தைக் கொண்ட ஐந்நூலின் கருத்தியல் நோக்கால் வழிநடத்தப்படுகிறார். சட்டத்திற்கு அளித்த மதிப்பிற்கேற்ப முற்கால மக்கள் போற்றப்படுகிறார்கள் அல்லது தூற்றப்படுகிறார்கள். இறை மக்கள் இறைவனைப் பற்றியிருக்க வேண்டும் என்பதை எடுத்துக்கூற இத்தகைய வரலாறுகள் உயிருள்ள போதகமாகின்றன.

*4.* இதே சட்டத்தைப் போதிப்பதில் புதுப் புது மாற்றங்களை ஞானம் பற்றி உரைப்போரிடமும் காண்கிறோம். பழமொழி, சீராக், தோபியா ஆகமங்களில் மேற்கோள்கள் உள்ளன. சீராக் சட்டத்தைத்தவிர வேறொரு ஞானம் இல்லை *(சீரா 24:23...)* என வெளிப்படையாக உரைக்கிறார். மோசே சட்டம் அளித்தபோது இந்த ஞானம் இஸ்ராயேலில் குடிகொண்டது *(24:28...)*. நாடு கடத்தப் பெற்ற பின்பு யூதகுலம் இறைப்பற்று மிகுந்து விளங்கியபோது, இறைசட்டத்தின் மேன்மையைப்பற்றிச் சங்கீத ஆசிரியர் பாடக்கூடும் (சங் 19:8...); கடவுள் வேறெந்த நாட்டிற்கும் இதைப்போல மேலான கொடை அளித்ததே இல்லை *(சங் 147:19தொ)*. சட்டத்துக்கு அன்பு செய்வது *(சங் 119)* கடவுளுக்கே அன்பு செய்வதை வெளிப்படுத்துகிறது *(சங் 119)*. இவ்வாறு யூதகுலப்பக்தி வழிவழியாய்ப் பாய அடித்தளம் ஏற்பட்டது.

*5.* எஸ்ராவின் காலத்திற்குப்பிறகு தனது வாழ்க்கையின் மையமாகச் சட்டத்தை இஸ்ராயேல் சமூகம் அமைத்துக்கொண்டது, சட்டத்தின் மேலுள்ள அவர்களின் ஆர்வம் கட்டுக்கு அடங்காதது. அதற்காக உயிரையும் தியாகம் செய்யத் தயங்கவில்லை. அந்தியோக்கு எப்பிபான் புதிய காலங்களையும், சட்டத்தையும் மாற்ற *(தானி 7:25;1 மக் 1:41-51)* முயன்றபோது பலர் உயிர்கொடுக்கவும் *(1 மக் 1:57-63;2:29-38;2 மக் 6:18-28;7:2...)* தயாராகினர். கிரேக்க சார்புடைய துரோகிகளும் இருக்கத்தான் செய்தனர். மக்கபேயர்கள் சட்டத்தின்பால் கொண்ட வேட்கையால் தூண்டப்பட்டு *(1 மக் 2:27)* மீண்டும் பாரம்பரிய மரபையே வலுப்படுத்தினர். இனிமேல் சட்டம் பற்றிய சர்ச்சையே எழாது. இனிமேல் சட்டம் பற்றிய விளக்கவுரையில்தான் பிரிவினை ஏற்படும். ஏனென்றால் சட்டம் தெய்வீகமானதாகவும், வாழ்க்கை அமைப்பிற்கு முக்கியமானதாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது. தங்களின் குருக்கள்தான் சட்டத்தின் உண்மையான விளக்கவுரையாளர்கள் என்று கருதிய சதுசேயர்கள் சட்டத்தின் எழுத்தை அப்படியே கைக்கொள்வார்கள். பரிசேயர்களோ வாய்வழிச் சட்டத்தையும், அதாவது முந்தையர்களின் மரபுகளையும் ஏற்பார்கள். கும்ரான் பிரிவினர் (ஒருவேளை எஸ்ஸேனியர்) சட்டம் கொடுத்தவரின் (அதாவது மோசேயின்) வழிபாட்டு முறை கொண்டு, அவர்களுக்கே உரிய வழிகளில் விளக்கம் கொடுப்பார்கள்.

யூத சமயம் சட்டத்தின்பால் கொண்ட பக்தியினால் மாண்படைகிறது. ஆயினும், சட்டத்தை இவ்வாறு பற்றிக் கொள்வதில் சில ஆபத்துக்களும் உண்டு. ஒன்று சமயம் மற்றும் ஒழுக்கம், உலகியல் மற்றும் வழிபாடு ஆகியவைபற்றிய கட்டளைகளைச் சமமாகப் பாவித்து உரியவிதத்தில் வரிசைப்படுத்தாமல் போவதாகும் *(உப 6:4)*. இந்தச் சட்ட வழிபாடு, குறுக்கிடும் புற ஆசாரத்தன்மைக்கு மாற்றப்பட்டு, ஐயவாதிகளின் யூகங்களின் போக்கால் மனிதனுக்குத் தாங்க முடியாத சுமையாக மாறுகிறது (மத்

*23:4;அ.ப.15:10)*. இரண்டாவது, முதலாவ தைவிட ஆழமானது, அடிப்படையானது. இறைவன் முன் மனிதனின் ஏற்புடைமைக்கு இறைவனின் அருளை அடிப்படையாகக் கொள்ளாமல், மனிதனின் சட்ட அனுசரிப்பையும் மனிதர் நற்செயல்களையும் அடிப்படையாகக் கொள்வதாகும். இதில் மனிதன் தன்னையே இறைவனுக்கு ஏற்புடையன் ஆக்கிக் கொள்கிறான். புதிய ஏற்பாடு இந்த இரு தவறுகளையும் நேரடியாகத் தாக்கும்.

**(4) புதிய சட்டம் நோக்கி.**

பழைய ஏற்பாடு இறுதிக்காலத்திற்குச் சாட்சி அளித்தாலும், புதிய உடன்படிக்கையில் சட்டம் ஆழ்ந்த மாற்றம் பெற்றுக் கொண்டிருந்தது. புனித மலையில் இறைவன் அளித்த சட்டமும் *(எசா 2:3)* யாவேயின் ஊழியர் உலகில் நிறுவவிருக்கும் அமைப்பும் *(42:1.4)* மோசேயின் சட்டத்தைவிட சமய மதிப்பீட்டில் மேம்படவில்லையா? புதிய உடன்படிக்கையின் உட்கருத்தை இறைவாக்குரைகள் தெளிவாகக் காட்டவில்லை. எசேக்கியேல் மட்டும் மரபு முறையில் அதனைச் சுட்டிக்காட்ட முயலுகிறார் *(எசே 40-48)*. மனிதனுக்கும் சட்டத்திற்கும் உள்ள தொடர்பு மாற்றி அமைக்கப்படும் என்று உறுதியாகக் கூறப்படுகிறது. இனி மேல் கற்பலகைகளில் எழுதப்பட்ட புறச்சட்டங்கள் மட்டுமல்ல. ஒவ்வொருவரின் நெஞ்சத்திலும் பதிக்கப் பெற்றுள்ள உள்சட்டங்களும் யாவே பற்றி அறியச் செய்யும் *(எரே 31:33)*. பழைய உடன்படிக்கையில் இது இடம் பெறவே இல்லை *(ஓசே 4:2)*. மனித இதயமும் மாறும், உள்ளார்ந்த ஆவியின் தூண்டுதலால் இறைவனின் சட்டங்களையும் கட்டளைகளையும் மனிதன் கடைப்பிடிப்பான் *(எசே 36:26தொ)*. உலகிற்குக் கிறிஸ்து அளிக்கப்போவது இத்தகைய சட்டமே.

**இ) இயேசுவும் புதிய சட்டமும்**

**(1) இயேசுவின் தனிப்பட்ட மனப்பாங்கு:-**

1. பழைய சட்டம் பற்றிய இயேசுவின் மனநிலை தெளிவானது. ஆனால் அதில் வேறுபாடுகளுக்கு இடமுண்டு. மறைநூல் அறிஞர்களும் பரிசேயர்களும் போதித்த பழைய மரபு முறைகளைக் கடுமையாக எதிர்க்கிறார். ஆனால் சட்டத்தின்பால் அதே முறையில் செயல்படவில்லை. மாறாக, பாரம்பரியம் சட்டத்தை மீறுவதற்கு மனிதர்களை இட்டுச் செல்வதாலும் இறைவனுடைய வார்த்தையைத் தள்ளுபடி செய்வதாலும *(மாற் 12:28-34 இணை)*, அப்பாரம்பரியத்தை ஒதுக்கிவிடுகிறார். இறையரசில் சட்டம் அழிவுறுவதில்லை. மாறாக மிகச் சிறிய எழுத்துவரை நிறைவு காண்கிறது *(மத் 5:17 தொ)*. இயேசுவும் அதற்குப் பணிகிறார் *(காண் 8:4)*. எவ்வளவு தூரத்திற்கு மறைநூல் அறிஞர்கள் மோசேக்குப் பிரமாணிக்கமாக இருக்கிறார்களோ, அவ்வளவிற்கு அவர்களின் அதிகாரம் மதிக்கப்படல் வேண்டும். அவர்களின் நடத்தையைப் பின்பற்றத் தேவையில்லை *(23:2தொ)*.

ஆயினும் இறையரசுப் போதனையில், அடிப்படையிலே புதிதான சமய முறையைப் போதிக்கிறார். அதைத் தொடங்கி வைக்கிறார். திருமுழுக்கு யோவானோடு இறைவாக்கினர் காலம் நிறைவுறுகிறது *(லூக் 16:16 இணை)*; சீனாய்ப் போதனையின் பழைய சித்தையில் புதிய நற்செய்தியின் இரசம் ஊற்றப்பட முடியாது *(மாற் 2:21தொ இணை)*. இயேசு புதிய அமைப்பைத் தோற்றுவிக்கிறார். மறைநூல் அறிஞர்களால் புறக்கணிக்கப்பட்ட அடிப்படையான கடமைகள் (நீதி, இரக்கம், நேர்மை) இப்போது புதிய அமைப்பில் பொலிவு காண்கின்றன *(மத் 23:16-26)*. பழைய சட்டத்தில் கடின இதயத்திற்காக *(19:8)* விட்டுக் கொடுக்கப்பட்ட குறைபாடானவைகள் புதிய அரசில் இடம் பெறா; கடவுளின் நிறைவைப் பின்பற்றும் பாணியில் அமைந்துள்ளதுதான் புதிய ஒழுக்க நெறியாகும் *(5:21-48)*. இது தற்போதைய நிலையில் மனிதன் அடைய இயலாத ஒன்றாகும் *(காண் 19;10)*. ஆயினும் இப் புதிய கட்டளையைக் கடைப்பிடிக்க வேண்டிய ஆற்றல்மிக்க மாதிரியும், ஆவியின் உள்ளார்ந்த வலியையயும் இயேசு நமக்கு நல்குகிறார் *(அ.ப.1:8; யோவா 16,13)*.

இறுதியில், இறையரசின் சட்டம், கடவுளை அன்பு செய்வதும், தன்னைப்போல் பிறரை அன்பு செய்வதுமாகிய பழைய ஏற்பாட்டின் இருவடிவக் கட்டளையை (மாற் 12:28-34 இணை). இணைக்கிறது. மற்றெதுவும் இதிலிருந்து ஊற்றெடுப்பது, இதற்குப் பணிந்திருப்பது ஆகும். ஒருவருடன் ஒருவரை இணைந்து வாழவைக்கும் இப்பொன்னான ஒழுங்கு, சட்டத்தையும் இறைவாக்கினரையும் வெளிப்படையாக (மத் 7:12) உள்ளடக்குகிறது.

2. சட்டம்பற்றிய பல்வேறு கூற்றுகளில் இயேசு சட்டம் இயற்றுகின்றவராகத் தோன்றுகிறார். ஓய்வு நாளைவிட மனிதன் முக்கிய மானவன் (மாற் 2:23-27 இணை; காண் யோவா 5:18;7:21தொ) என்று கூறும்போது மோசேக்கு முரணாகச் சொல்லவில்லை. மாறாக, மோசேயின் போதனைக்கு விளக்கம் அளிக்கிறார்; அப்போதனையை நிறைவு செய்கிறார். சட்டத்தின் எழுத்துக்களைக் கடந்து புதிய ஒழுங்குகளால் அதையும் எதிர்க்கிறார். இதற்குத் தூய்மை முறைகளை (மாற் 7:15-23இணை) எடுத்துக்காட்டலாம். இப்போதனை கேட்போருக்கு வியப்பானது, மறைநூல் அறிஞர்களை அவமானப் படுத்துவது, புதிய ஒரே அதிகாரம் பற்றிய உணர்வை வெளிப்படுத்துகிறது (1:22இணை). மோசே தள்ளிவைக்கப்படுகிறார். ஏனெனில் இறையரசில் ஒரே போதகர்தான் உண்டு (மத் 23:10). அவரின் சொல்லுக்கு மனிதன் செவிமடுக்க வேண்டும். அதன்படி நடக்கவேண்டும் (7:24தொ). ஏனெனில் இதுதான் தந்தையின் திருவுளத்தை நிறைவேற்றும் ஒரே வழியாகும் (7:21தொ). இராபிகளின் போதனையைப் பின்பற்றி, பிரமாணிக்கமுள்ள யூதர்கள் சட்டத்தின் நுகத்தை மேற்கொண்டது போல், இப்போது ஒருவன் கிறிஸ்துவின் நுகத்தை ஏற்று அவரிடமிருந்து கற்கவேண்டும் (11:29). இதற்குமுன், சட்டத்தின்பால் கொண்ட மனநிலையால் மனிதனின் முடிவிலா ஊழ் நிர்ணயிக்கப்பட்டது. இப்போதிலிருந்து அவன் இயேசுவின்பால் கொண்டிருக்கும் மனநிலையால் அது நிர்ணயிக்கப்படும் (10:32தொ). மோசேயைவிடப் பெரியவர் இங்கே உள்ளார். இதில் ஐயமே இல்லை, இறைவாக்கினர் முன் உரைத்த புதிய சட்டம் இப்போது அறிவிக்கப்பட்டுச் செயல்படத் தொடங்கிவிட்டது.

**(2) தொடக்க கிறிஸ்தவத்தில் பிரச்சினை:-**

1. யூத சட்ட அனுசரிப்பை அப்படியே இயேசு கண்டனம் செய்யவில்லை. கோயில் வரி (மத் 17:24-27) அல்லது பாஸ்கா சட்டம் (மாற் 14:12தொ) ஆகியவற்றைக் குறிப்பானவைகளில் அவரே பின்பற்றினார். இதைப் போலவே தொடக்கத்தில் அப்போஸ்தலிக்க சமூகமும் கோயில் வழிபாடுகளில் பங்கெடுத்தது (அ.ப. 2:46); இதற்காக யூத மக்கள் அவர்களைப்பற்றிப் பெருமையாகப் பேசினார்கள் (5:13). இயேசுவின் மாதிரியைப் பின்பற்றிச் (9:43) சிலவற்றில் ஓரளவு சுதந்தர உரிமை கொண்டாலும் சட்ட ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடித்தார்கள்; அதிகமான பக்திப் பழக்கவழக்கங்களையும் ஏற்படுத்தினார்கள் (18:77;21:23தொ). சட்டம் பற்றிய பக்திமான்களும் அவர்களிடையே இருக்கத்தான் செய்தனர்.

2. யூதப் பின்னணி இல்லாது, விருத்தசேதனம் பெறாத புறவினத்தார் விசுவாசத்தை நேரடியாகத் தழுவியபோது புதியதொரு பிரச்சினை முளைத்தது. விசுவாசத்தாலும் ஆவியின் கொடையாலும் இறைவன் தூய்மைப்படுத்திய எல்லாம் தூய்மையானதே என்று ஏற்றுக்கொள்ளக் கட்டளை பெற்ற காட்சிக்குப்பின் பேதுரு தெளிவு பெற்று அவரே கொர்னேலியுவுக்குத் திருமுழுக்கு அளிக்கிறார் (அ.ப.10). தெய்வீகக் குறுக்கீட்டின் சாட்சிக்குமுன் சட்டத்தின்பால் ஆர்வமுடையவர்களின் எதிர்ப்பு மறைந்துபோகிறது (11:2தொ; 11:4-18). ஆனால் பர்னபாவும் பவுலும் துணைகொடுக்க (11:22-26), அதனால் பெரிய கிரேக்கர் கூட்டம் அந்தியோக்கில் மனந்திரும்புகிறது (11:20). இதனால் பிரச்சினை மீண்டும் கிளம்புகிறது. ஆனால் எருசலேமின் சில பார்வையாளர்களும், குறிப்பாக யாக்கோபின் கூட்டத்திலிருந்தவர்கள் (கலா 2:12) மனந்திரும்பியவர்கள் சட்டத்திற்குள்ளாக வேண்டும் (அ.ப.

15:1தொ.5) என்று கட்டாயப்படுத்தினார்கள். அந்தியோக்கியாத் திருச்சபையிடம் வருகையின்போது பேதுரு இதுபற்றிப் பின்னிடுகிறார் (கலா 2:11தொ). அன்னிய மதத்திலிருந்து மனந்திரும்புகின்றவர்களுக்குச் சட்டக் கடைப்பிடிப்பிலிருந்து சுதந்தரம் வேண்டும் என்று பவுல் மட்டுமே ஊன்றி நின்று போராடுகிறார் (கலா 2:14-21). எருசலேம் சங்கத்தில் பேதுருவும் யாக்கோபும் இதற்கு உடன்பாடு தெரிவிக்கின்றனர் (அ.ப. 15:7-19). பவுலின் தோழர் தீத்து, விருத்தசேதனம் பெறவேண்டும் என்று வற்புறுத்தப்படக்கூட இல்லை. தாய்த்திருச்சபைக்கு ஈதல் வேண்டும் என்ற ஒரே நிபந்தனைதான் இருந்தது. (கலா 2:1-10). சீரியாத் திருச்சபையில் சேர்ந்து அமர்வதற்கான செயல்முறைகள் ஏற்பாடாகின (அ.ப. 15:20தொ;21:25). பிற மதத்திலிருந்து மனந்திரும்பியவர்களுக்குக் கொடுக்கப்பட்ட இச்சலுகையினால் சட்டத்தின்பால் ஆர்வம்கொண்ட சிலர் பவுலின் மேல் சினம் கொண்டவர்களாகவேதான் இருந்தனர் (காண்.21:21).

(3) பவுலின் சிந்தனை:-

தூதுரைப் பயணங்களின்போது, யூதக் கிறிஸ்தவர்கள், முக்கியமாகக் கலாத்தியாவில், பவுலுக்கு எதிராகச் செயல்பட்டனர். எதிர்ப்புக் கூட்டத்தினர் தனியே எதிர்த் தூது அமைத்தனர் (கலா 1:6தொ; 4:1தொ). இத்தகைய சூழ்நிலை சட்டம்பற்றிப் பவுலைச் சிந்திக்க வைத்தது.

1. பவுல் போதிப்பது ஒரே நற்செய்திதான். இதன்படி கிறிஸ்துவில் மனிதன் கொள்ளும் விசுவாசத்தால் மட்டுமே அவன் ஏற்புடையவனாகிறான். சட்டத்தின் செயல்களால் ஆவதில்லை (கலா 2:16;உரோ3:28). இதில் இரண்டு முக்கியக் கருத்துக்கள் உள்ளன. முதலாவதாக, விருத்தசேதனம் (கலா 6:12), காலக் கடைப்பிடிப்புகள் (4:10) போன்ற யூதச் சடங்கு அனுசரிப்புகள், இப்பொருளில், எல்லாம் வீண். இப்பொருளில் புரிந்து கொள்ளப்படும் சட்டம் பழைய உடன்படிக்கை சார்ந்ததாகும். அடுத்து, மனிதன் சட்டத்தை அனுசரிக்கும் தனது செயல்களினால் தன்னையே ஏற்புடையவனாக்குகிறான் என்பதைத் தாக்குகிறார். இது தவறான மீட்பியல் கொள்கை. இதற்கு மாறாக இயேசுவின் பலிமூலம் இலவசமாய் மனிதன் ஏற்புடையவன் ஆகிறான். இதுதான் உண்மை (உரோ -3:21-26; 4;4தொ). இங்கும் ஒழுக்கம் சார்பான கட்டளைகள் தர்க்கத்திற்குரியவை.

2. இப்போதனையின் விளைவாக மீட்புத் திட்டத்தில் சட்டத்தின் பங்கு என்ன என்று ஒரு கேள்வி முளைக்கிறது. சட்டம் என்பது கடவுளிடமிருந்து வருவது. இதுபற்றி ஐயமில்லை. வானதூதர்கள் வாயிலாக அது கொடுக்கப்பட்டதால் அதனுடைய நிலை குறைவானது (கலா 3:19); இருந்தாலும் புனிதமிக்கது; ஆன்மீகமானது (உரோ 7:12.14); இஸ்ராயேலின் தனிப்பட்ட சலுகைகளில் ஒன்று (9:4). ஆனால் தானாகவே அது ஊனியல்பான மனிதனை மீட்க இயலாது (7:14). அவன் பாவத்தின் அடிமையாவான். ஒழுக்க நெறியிலும்கூட அது நல்லது கெட்டது பற்றி அறிவிக்கிறதேயன்றி அதைச் செய்ய ஆற்றல் தருவதில்லை (7:16தொ); பாவம் என்ன என்கிறது (3:20;7:7;1 திமோ 1:8), அதனுடைய ஆற்றலிலிருந்து தப்புவது எங்ஙனம் என்கிறதில்லை. சட்டம் பெற்று அதனால் வரும் ஏற்புடைமையைத் தேடும் யூதர்கள் (உரோ 9:31) புறவினத்தாரைப் போலப் பாவிகளே (2:17-24;3:1-20). தீமையிலிருந்து விடுவிக்காமல் சட்டம் அதற்குள்ளேயே தள்ளுகிறது; கிறிஸ்து ஒருவர் மட்டுமே எடுத்துக் கொண்டு மீட்பளிக்கக்கூடிய சாபத்தில் மனிதனை ஆழ்த்துகிறது (கலா 3:10-14). சிறுபருவத்தில், தொடக்க காலத்தில் சட்டம் இறைமக்களுக்கு ஒரு வழிமுறையாகவும், துணையாசானாகவும் இருந்தது (3:23தொ;4:1தொ). நீதியின் ஏக்கத்தை அவர்களுக்கு அளித்தது. அவர்களால் அதை அடைய முடியாதுதான். ஆயினும் ஒரு மீட்பர் தேவை என்பதை உணர்த்தியது.

3. மீட்பர் வந்துவிட்டதால் அதே வழிமுறை தேவையில்லை. இனி இறைமக்கள் அதற்குப் பணிய வேண்டியதில்லை (கலா

*3:25*). பாவத்திலிருந்து மனிதனை விடுவிக்கும் கிறிஸ்து (*உரோ 6:1-19*) சட்டத்தின் கண்காணிப்பிலிருந்து அவனை விடுதலை செய்கிறார் (*7:1-6*). மனச்சாட்சியைத் தீமையின் சிறைக்கைதியாக்கும் உள்ளார்ந்த முரண்பாட்டையும் அவர் அகற்றுகிறார் (*7:14-25*). இவ்வாறு சட்டத்தின் தற்காலிக ஆட்சி அவரில் முடிவு காண்கிறது; அவர்தான் சட்டத்தின் முடிவு (*10:4*); ஏனெனில் அவர்தான் விசுவாசிகளை விசுவாசத்தின் ஏற்புடைமைக்கு இணங்கச் செய்கிறார் (*10:5-13*).

அப்படியென்றால் கிறிஸ்துவில் விசுவாசங் கொள்வோர் இனிமேல் செயல்முறை ஒழுங்குகள் இல்லாதவர்களா? இல்லவே இல்லை. இஸ்ராயேலின் நிறுவனங்களைச் சார்ந்த நீதி சார்ந்த, வழிபாடு சார்ந்த ஒழுங்குகள் மறைந்தாலும் கட்டளைகளின் ஒழுக்க நெறி சார்ந்தவை இன்னும் நீடிக்கின்றன. அதே கருத்து அன்பெனும் கட்டளையில் கலந்து முழுமையான நிறைவு காண்கிறது (*13:8*தொ). பழைய கருத்து பிரிக்கப்பட்டு கிறிஸ்துவின் பிரசன்னத்தினால் மாற்றியமைக்கப்பட்டு, அவரின் மாதிரியில் புதுப் பொலிவு காண்கிறது. கிறிஸ்துவின் சட்டமாக (*கலா 6:2;காண் 1 கொரி 9:21*) இக் கருத்து மனிதனுக்குப் புறம்பாக அல்லாமல், கடவுளின் ஆவி மனித நெஞ்சங்களில் பதிக்கும் அன்பாகிறது (*உரோ 5:5 காண் 8:14*தொ). நடைமுறையில் இக்கட்டளைகளின் கருத்தை நிறைவேற்றுவது ஆவிசார்ந்த செயலேயாகும் (*கலா 5:16-23*). கிறிஸ்தவன் மேல் உள்ள இவ்வொழுக்கவியல் சார்ந்த கருத்தை இவ்வாறுதான் பவுல் கைக்கொள்கிறார். பல்வேறு ஒழுக்கச்சட்டங்கள் கிறிஸ்தவத் தூய்மையைக் குறிக்கோளாகக் கொண்டிருப்பதால் பவுல் அவற்றை மேலும் கடினமான தாக்க இயலுகிறது (*1 தெச 4:3*). தனிப்பட்ட பிரச்சினைகளைத் தர்க்கிக்க, பவுலால் முடிகிறது. இயேசுவின் சொற்களில், தனிப்பட்டவர்க்கும் முடிவுகள் அவரால் சொல்ல முடிந்தது (*1 கொரி 7:10*). பழைய சட்டம் செய்ய முடியாததைப் புதிய சட்டம் உள்ளத்தில் பதிக்கப்பெற்றுள்ள உடன்படிக்கை வாக்குறுதிகளை நிறைவேற்றம் செய்கிறது (*2 கொரி 3:3*).

**4. மற்ற அப்போஸ்தல நூல்கள்:-**

1. வழிபாட்டு நோக்கில், சட்டத்தைக் (பழைய மீட்புமுறை) காண்கிறது.

**எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம்:-** சட்டம் கொடுத்து சடங்கு ஒழுங்குமுறைகளை நன்கறிந்து உள்ளார் இதன் ஆசிரியர் (*எபி 7:5*தொ; *8:4;9:19.22*). மனிதனின் தூய்மைக்கென்று ஏற்பட்ட இச்சட்டம் அதனைச் செய்ய இயலவில்லை என்றும் அவருக்குத் தெரியும். எதையும் நிறைவு செய்ய அச்சட்டத்தால் முடியவில்லை (*7:19*). இயேசுவின் பலியின் குறையுள்ள மாதிரி என்ற அளவில், வரவிருக்கும் நன்மைகளின் உண்மை உருவை அதுகாட்டவில்லை; அதன் நிழலாகவே உள்ளது (*10:1*). இதற்கு மாறாகப், புதிய மீட்புச் செயலானது அந்த உண்மை உருவையே நமக்கு அளிக்கிறது. நாம் காணக்கூடிய உருவில் அதை அளிக்கிறது (*10:1*). இதனால்தான் தற்காலிக குருத்துவத்திற்குப் பதிலாக வந்த இயேசுவின் குருத்துவம் சட்டத்தில் மாற்றத்தை ஏற்படுத்துகிறது (*7:12*). இவ்வாறு நம் உள்ளங்களில் பதிப்பிக்கப்பட்ட இறைவாக்கு வாக்குறுதி நிறைவேற்றம் காண்கிறது (*8:10; 10:16*).

2. இயேசு போதித்துள்ள, ஒழுக்கச் சார்பான நோக்கில்தான் **யாக்கோபின் திருமுகம்** சட்டம் பற்றிப் பேசுகிறது. சட்டம் இயேசுவின் போதனையால் ஆதரவு பெற்றதாகும். இவ்வாறு புரிந்து கொண்டால் சட்டம் பழைய ஏற்பாட்டின் கூறு என்றும் ஆகவே ஒழிக்கப்பட்ட ஒன்றாகவும் ஆகிறதில்லை. விடுதலை நல்கும் நிறைவான சட்டமாகும் அது. அதற்கு நாம் எக்காலத்தும் கட்டுப்பட்டிருக்கிறோம் (*1:25*). அதன் நிறைவின் உச்சி அன்பு பற்றிய மேலான கட்டளையாகும் (*2:8*). அதனுடைய மற்றைய ஒழுங்குகளையும் ஒதுக்கிவிடக் கூடாது. ஒதுக்கினால் ஒருவன் அதை மீறுகிறான். அதற்குத் தகுந்தாற்போல் தண்டனையும் பெறுவான் (*2:10-13; காண்.4:11*). பழை

யதைவிடப் புதிய சட்டம் மனிதனிடமிருந்து அதிகம் எதிர்பார்க்கிறது.

3. யோவானின் கூற்றுப்படி, சட்டம் என்பது மோசேயின் சட்டம் (யோவா 1:17.45; 7:19.23), யூதர்களின் சட்டம் (7:49.51; 12:34; 18:31; 19:7), இயேசு கூறுவதுபோல் ''உங்கள் சட்டம்'' (8:17; 1:34) ஆகியவற்றையே குறிக்கிறது. சட்டம் என்பதற்குப் பதிலாகக் கட்டளை என்ற சொல் இடம்பெறுகிறது. தனது தந்தையிடம் இருந்து பெற்றுள்ள கட்டளைகளை இயேசு கடைப்பிடிக்கிறார். ஏனெனில் அவைகள்தாம் முடிவில்லா வாழ்வாகும் (12:49தொ). தமது வாழ்வையே அளிக்க ஒரு கட்டளை பெற்றுள்ளார். இது தான் மகத்தான அன்புச்செயலாகும் (15:13). இந்தக் கட்டளையே அவருக்குத் தந்தை காட்டும் அன்பின் அடையாளமாகும் (10:17தொ). கிறிஸ்துவை விசுவசிப்பதிலும் (1 யோவா 3:13), உண்மையில் வாழ்வதிலும் (2 யோவா 4) அடங்கியுள்ள கடவுளின் கட்டளைகளைக் கிறிஸ்தவர்கள் அனுசரிக்க (1 யோவா 3:22) வேண்டும். இக்கட்டளைகள் யாவும் கிறிஸ்துவினுடையனவே. அவரின் போதனைகள் தந்தையிடமிருந்தே வருகின்றன (யோவா 7:16 தொ). கடவுளின் கட்டளைகளைக் கடைப்பிடிப்பதும் இயேசுவுக்குச் சான்று பகர்வதும் ஒன்றேதான் (திருவெளி 12:17; 14:12).

இயேசுவின் தனிப்பட்ட கட்டளைகளையும் நினைவுகூர்வதில் யோவான் அக்கறை கொள்கிறார். இயேசு தந்தையின் கட்டளைகளைக் கடைப்பிடித்து அவர் அன்பில் உறைவதுபோல (யோவா 15:10), இயேசுவை மெய்யாக அறிய, அவர் அன்பை நம்மில் கொண்டிருக்க (1 யோவா 2:50), அவர் அன்பில் உறைய (யோவான் 14:15; 2 யோவா 5), அவரது கட்டளைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். கட்டளைகளை ஏற்றுக் கடைப்பிடிப்பதே உண்மையான அன்பின் அடையாளம் (யோவா 14:21; 1 யோவா 5:2 தொ; 2 யோவா 6). கடவுளை அன்பு செய்யும் பெருக்கிலிருந்து (1 யோவா 4:21) வழிந்தோடும் மிகப் பெரிய ஒன்று-பழைய புதிய ஏற்பாடுகள் இரண்டிலும் மேலானது - பிறர் அன்புபற்றிய கட்டளைதான் (யோவா 13:34; 15:12; 1 யோவா 2:7தொ). இவ்வாறு யோவானின் சாட்சி, பவுல் மற்ற நற்செய்தியாளர்கள் ஆகியோருடைய போதனையோடு இணைகிறது. பழைய சட்டப்படி இயேசு தண்டனை பெற்றபிறகு (யோவா 18:31; 19:7), அது ஒழிக்கப்படுகிறது. புதிய சட்டம் பிறக்கிறது. இயேசுவின் சொல்லிலிருந்து பிறக்கும் இது புது வகையானது. இந்தச் சட்டம்தான் கிறிஸ்தவர்களை வழி நடத்தும் ஒழுங்காக எக்காலத்திற்கும் நிலைத்திருக்கிறது.

**சட்டைக்கை** (SLEEVES)

கையினை மறைக்கும் சட்டைப்பகுதி, மணிக்கட்டுவரை கையினை மறைக்கக் கூடிய சட்டைப்பகுதி. இதை அழகு வேலைப்பாடு நிறைந்த என்றும் பல்வண்ண என்றும் தமிழில் மொழி பெயர்த்துள்ளனர். ஆதி 37:3-இல் யாக்கோபின் புதல்வன் யோசேப்பு பல வண்ண அல்லது அழகுவேலைப்பாடு நிறைந்த அங்கியையும் அணிந்திருந்ததை அறிகிறோம். தாவீதின் மகள் தாமார் நீண்ட ஆடை அணிந்திருந்தாள் (2 சாமு 13:18-19) சட்டைக்கை இல்லாத சாதாரண உடையை உடுத்துவோரினின்று சட்டைக்கை உடை உடுத்துவோரைச் செல்வந்தர்களென்றும் மதிப்பிற்குரியவர்களென்றும் பிரித்துக் காட்ட இத்தகு உடை பழங்காலத்தில் பயன் பட்டது என்பதையும் அறிகிறோம்.

**சணல் பயிறு** (FLAX)

இது ஒரு செடிவகை. யாத் 9:31 (எகிப்திய பயிர்கள் அழிந்து போகின்றன) யோசு 2:6 (இராக்காபு ஒற்றர்களைச் சணல் தட்டைகளுக்குள் மறைத்து வைத்தாள்) போன்ற வாசகங்களில் மட்டுமே இச்செடி குறிப்பிடப் படுகிறது. நீதி 15:14-இலும் இச்செடி குறிக்கப்படுகிறது என்று கருத இடமிருக்கிறது.

வேறு இடங்களில் ஆடை நெய்யத்தயார் நிலையில் உள்ள நூலை அல்லது நெய்து முடிக்கப்பட்ட ஆடையைக்

குறிப்பிடுவதுபோலத் தெரிகிறது (எரே 13:1; எசே44:17-18). சிம்சோன் அவரது உடம்பில் கட்டப்பட்டிருந்த புதுக்கயிறுகளை அறுத் தெறிந்தபோது அவை ''நெருப்பில் எரிந்த சணலைப்போல்'' என்று குறிப்பிடப்படு கின்றன (நீதி 15:14). நல்ல மனைவி ''கம் பளி, சணல் ஆகிய பொருட்களைத் தானே தேடிக் கொள்வாள்; தன் வேலையனைத்தை யும் மகிழ்ச்சியுடன் தானே செய்வாள்'' (பழ 31:13). ''மெல்லிய சணலாடை செய் வோர்... வெட்கி நாணுவர்'' என்று எசாயா இறைவாக்கு உரைக்கிறார் (எசா 19:9). 'சணல் பட்டுக்கயிறும், ஓர் அளவுகோலும் வைத்துக் கொண்டிருந்த' மனிதனை எசேக்கி யேல் கண்டார் (எசே 40:3). வேசித்தாய் (இஸ்ராயேல்) மயிராடையையும், சணலா டையையும் தன் காதலர்களிடமிருந்து பெற் றாள், கடவுள் அவைகளை எடுத்துவிடுவார் (ஓசே 2:7).

சணலிலிருந்து செய்யப்பட்ட புகையும் திரி எசா 42:3-இல் குறிக்கப்படுவதாகத் தெரி கிறது (மத் 12:20). தேர்ப்படைகளையும், வீரர்களையும் ஆண்டவர் ''திரியை அணைப்பதுபோல் அழித்தார்'' என்று (எசா 43:17) குறிப்பிடப்படுகிறது.

விதைகள் முற்றியவுடன் இச்செடிகள் பிடுங்கப்படுகின்றன. உலர்த்தப்பட்டு விதை கள் அகற்றப்படுகின்றன. பிறகு அதனுடைய நார்கள் தளர்வதுவரை உலர வைக்கப்படு கின்றன. திரும்பவும் உலர்த்தப்படுகின்றன. அதன் 'சணலைச் சுத்தப்படுத்தும் சீப்பை உபயோகித்துச்' சணல் உள்தண்டிலிருந்து பிரித்தெடுக்கப்படும், பிறகு சணலைச் சுத் தப்படுத்தி ஆடை நெய்வதற்கு ஏற்ற நூலாக மாற்றுவார்கள். சுத்தப்படுத்தும்போது சிறிய நூல்கள் பழுதான நூல்களாகக் கருதப்படும். இது நீதி 16:9; எசா 1:31-இல் குறிப்பிடப்படு கிறது.

கி.மு. பத்தாம் நூற்றாண்டில் கெசேர் நாட் காட்டியில், சணல் செடியின் அறுவடை மாதம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## சதுசேயர்கள் (SADDUCEES)

சதுசேயர்கள் எப்போது எவ்விதம் ஒரு பிரிவினராகத் தோன்றினர் என்பது பற்றி நாம் ஒன்றையும் உறுதியாகக் கூறமுடியாது. ஒருவேளை அந்தியோக்கு எப்பிபான் காலம் வரையில் குருக்களாக இருந்தவர்களின் மூதாதையரான சாதோக்கு என்பவரின் பெய ரிலிருந்து சதுசேயர் என்ற பெயர் தோன்றி யிருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்ற னர். இவர்கள் யூத மதத்திலிருந்து பிரிந்து வாழ்ந்தவர்கள் அல்லர்; யூத மதத்தின் ஒரு போக்கைச் சார்ந்தவர்கள். புதிய ஏற்பாட்டி லிருந்தும் யோசிப்பசின் நூலிலிருந்தும் இவர்களைப் பற்றிச் சிறிது அறிகிறோம். மற்றச் சான்றுகள் நமக்குக் கிடைத்தில. இவர் கள் பல சமயங்களில் அரசியலில் ஈடுபட்டா லும், இவர்களை அரசியல் பிரிவினர் என்ப தைவிட மதப்பிரிவினர் என்று கூறுவதே நன்று.

குருக்கள் குலத்தினர் பலரும், எருசலே மில் வாழ்ந்த செல்வர்களும், உயர் குடிமக்க ளும் இந்தப்பிரிவைச் சேர்ந்தவர்கள். யோவான் கிரிக்கான் காலத்தில் சதுசேயர் ஒருபிரிவினராக அல்ல, ஒரு கட்சியினராகத் திகழ்ந்தனர். இவர்கள் குருக்கள் குடும்பங்க ளையும் செல்வந்தர் குடும்பங்களையும் சார்ந்தவர்களாதலால், இயல்பாகவே சமூக வாழ்வில் பங்கெடுத்தனர்; அரசியலில் ஈடு பட்டனர். பரிசேயர் செல்வாக்கு வலுத்த காலங்களில், அவர்களை எதிர்க்கச் சதுசேயர் தயங்கியதில்லை. பெரிய ஏரோது பரிசேய ரையும் சதுசேயரையும் கடுமையாக நடத்தி னார். சதுசேயர் கிரேக்க மரபுகளையும் பண் பாட்டையும் பெரிதும் விரும்பினர். அப் பண்பாட்டின் அடிப்படையில் சுகபோகங் களை அனுபவிக்கத் தவறியதில்லை. யூதேயா உரோமைப் பேரரசுடன் நேரடியாக இணைக்கப்பட்டபின், ஆளும் கட்சியின ரோடு ஓரளவு ஒத்துப் போகும் கொள்கை யைக் கடைப்பிடித்தனர். வெளிப்படையாக உரோமை ஆளுநர்களுடன் ஒத்துழைக்கா விட்டாலும், அவர்களோடு கடுமையாக மோதுதலையும், பிற சச்சரவுகளையும் தவிர்த்தனர். கி.பி. 6-இலிருந்து 70-வரை

சதுசேயரைச் சேர்ந்தவர்களே பெரிய குரு பதவியை வகித்தனர். எருசலேமின் அழிவுடன் இப்பிரிவினரும் அழிந்தனர். அதற்குப் பின் இவர்களைப் பற்றி நாம் கேள்விப்படுவதில்லை.

இவர்களது மதக்கொள்கையைக் கவனிக்குங்கால், சதுசேயர், ஆலயப் பணியில் ஈடுபட்டவர்களாதலால், ஆலயப்பணிப் பாரம்பரியத்தைப் பின்பற்றினர். புனித எரோனிமு ஓரிசன் ஆகியோரது கருத்துப்படி இவர்கள் ''தோரா'' எனப்படும் விவிலியத்தின் முதல் ஐந்து நூல்களை மட்டுமே வேத நூலாக ஏற்றுக்கொண்டனர். அதன்படி தங்கள் விசுவாசத்தையும் அறவாழ்க்கையையும் அமைக்க முயன்றனர். மதகாரியங்களில் இவர்கள் மிதவாதிகள்; பழைமைப் பற்றுடையவர்கள்; மதக்கொள்கை வளர்ச்சியையும் மரபு வழக்குகளையும் ஏற்க மறுத்தனர். ஆகையால்தான் இயேசு இவர்களோடு வாதாடுகையில் ''தோரா''விலிருந்து மட்டும் சான்றுகாட்டுகிறார் (*மத் 22:23தொ*). இறந்தபின் உயிர்ப்பு, தீர்ப்பு, ஆன்மாவின் அழியாமை, வானதூதர்கள் உண்மை முதலியவற்றை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். மன்றங்களில் நீதி வழங்குகையில் ''தோரா''வில் கூறப்பட்டவைகளைச் சொற்பொருளில் பிரமாணிக்கமாய்க் கடைப்பிடித்தனர். பரிசேயர்களைச் சார்ந்த போதகர்களைவிட, இவர்கள் தண்டனைச் சட்டங்களைக் கடுமையாய்ச் செயல்படுத்தினர். சாதாரண மக்களுடன் இவர்கள் அகந்தையோடும் கடுமையாகவும் நடந்து கொண்டனர். ஆனால் தங்களது பிரிவினருக்குச் சலுகை காட்டினர். உலகில் தங்களுக்குக் கிடைத்துள்ள உயர்நிலையைப் பற்றி மனநிறைவு கொண்டிருந்தனர். ஆகையால் இறையரசு வருகைபற்றி இவர்கள் அவ்வளவு கவலைப்படவில்லை. அதனை எதிர்பார்க்கவுமில்லை. மெசியாவைப் பற்றிய நம்பிக்கையை இவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. தங்களுக்குக் கிடைத்திருந்த சலுகை நிறைந்த நிலையைப் பாதுகாத்துக் கொள்வதில் கண்ணும் கருத்துமாய் இருந்தனர். ஆகையால் யார் ஆண்டாலும் அவர்களோடு ஒத்துப்போகத் தயாராக இருந்தனர். இதன் காரணமாக இவர்கள் மக்களது மத வாழ்விலோ, ஒழுக்க வாழ்விலோ ஒரு செல்வாக்கும் பெற்றிருக்கவில்லை.

இவர்களில் நேர்மைமிக்கவர்கள் பலர் இருந்தனர். எருசலேம் அழிந்தபோது, தங்களது ஆலயப்பணியைப் பெரிதாக மதித்து, அதற்காகத் தங்களது உயிரையும் அளித்த பல குருக்களைப் பற்றி அறிகிறோம். ஆலயத்திற்கும் சட்டத்திற்கும் பிரமாணிக்கமாய் இருந்து, தங்களது குருதியைச் சிந்தி, இக் குருக்கள் தங்களது ''தேவ அழைத்தலுக்கு''த் தகுதியுடையவர்கள் ஆனார்கள்.

நற்செய்தியில் பரிசேயர்களையும், சதுசேயர்களையும் திருமுழுக்கு யோவான் கண்டிக்கிறார் (*மத் 3:7*). இவ்விதமே இயேசுவும் இவர்களைக் கண்டிக்கிறார் (*மத் 16:1-12*). இயேசு இவர்களை ஒருதடவை மட்டுமே நேருக்குநேர் சந்திப்பதாக நற்செய்தியில் வாசிக்கிறோம் (*மத் 22:23தொ; மாற் 12:18-27; லூக் 20:27. 40*). இந்நிகழ்ச்சியில் பழைய ஏற்பாட்டுத் திருமண முறையைப் பற்றிக் கேள்வி கேட்கின்றனர். அக்கேள்வி இயேசுவுக்கு வைக்கப்பட்ட பொறியாகும். அதனோடு தாங்கள் விசுவசியாத உயிர்ப்பை நகைப்புக்குரிய ஒரு செய்தியாக ஆக்கவேண்டும் என்பதும் அவர்களது நோக்கம். இயேசு இவர்களுக்கு அளித்த பதிலைக் கேட்டு மறைநூல் அறிஞர்களும் பரிசேயர்களும் வியந்ததாக வாசிக்கிறோம். அப்போஸ்தலர் பணியில் சதுசேயர் அப்போஸ்தலர்களை மிகுந்த பகையுடன் நடத்தினர் (*அ.ப. 4:1.5.17*) என்று வாசிக்கிறோம். அப்போஸ்தலர்கள் இயேசுவின் நற்செய்தியைப் போதிக்காதிருக்க அவர்களைச் சதுசேயர் சிறைப்படுத்தினர். பரிசேயருக்கும் சதுசேயருக்கும் இடையேயுள்ள மதக்கொள்கை வேற்றுமையைப் பயன்படுத்தி, புனித பவுல் தம்மேல் கொண்டுவந்த தாக்குதலைத் தவிர்த்ததாக அறிகிறோம் (*அ.ப. 23:6-8*).

இயேசுவின் மரணத்திற்கு மற்ற யாவரையும்விடச் சதுசேயர் பொறுப்பாளி ஆவர். தங்கள் உலகியல் அதிகாரம் பறிபோய்

விடுமே என்ற அச்சத்தில் தங்களது மெசியா வைக் கொல்லவும் இவர்கள் தயங்கவில்லை.

**சதுப்பு நிலம்** (SWAMP, MARSH)

ஆலயத்திலிருந்து புறப்படும் ஓடை நீரால் வளமை பெறாமல் உப்பளங்களாக விடப் படும் சதுப்பு நிலங்கள் எசே 47:11-இல் குறிக் கப்படுகின்றன. சாக்கடலை ஒட்டிய பகுதி யில் தவிர, பாலஸ்தீனத்தில் சதுப்பு நிலங் கள் இல்லை எனலாம். யோபு 8:11;40:21-இல் குறிக்கப்படும் நிலம் எகிப் திய சதுப்பு நிலங்களைக் குறிக்கலாம். அப் பகுதியில் நாணலும் கோரையும் வளர்ந்தன; பெகிமோத்து விலங்கு (யோபு 40:15-24) அங்கே காணப்படலாம்.

**சத்தாய்** (SHADDAI - மலையானவர்)

காண்க. ஏல் சத்தாய்.

**சத்து** (ZATTU - கிளை)

அடிமைத் தளையிலிருந்து செருபாபே லோடு நாடு திரும்பிய சாதாரணக் குடும்பங் களில் ஒன்றின் தலைவன் அல்லது குலப்பெ யர் மூதாதையர் (எஸ் 2:8; 8:5; நெகே 7:13). எஸ்ராவின் அந்நிய திருமண ஒழிப்புச் சட் டத்தின்படி இவர்களில் சிலர் அந்நிய மனை வியரையும், பிள்ளைகளையும் விலக்கிவிட் டனர் (எஸ் 10:27). இந்தக் குடும்பத்திற்கு அப்பொழுது தலைவனாக இருந்தவர் இந்தச் சீர்த்திருத்த உத்தரவில் கையொப்பமிட்டார் (நெகே 10:14).

**சந்திப்பு** (VISITATION)

I. மீட்பின் வரலாறானது தனது மக்கள் அல்லது சில சலுகைக்குரிய நபர்களுடனான ஆண்டவருடைய சந்திப்புகளின் தொடராக விவிலியத்தில் அடிக்கடி காட்டப்படுகிறது. உடன்படிக்கையில் முன்முயற்சி எடுத்தவ ரும், தமது திட்டத்தின் வளர்ச்சியில் மறை வான வடிவில் இருப்பவருமான இறைவன், ஆசிர்வதிக்கவோ தண்டிக்கவோ, ஆனால் எப்போதுமே காப்பதற்காகத் தனது மக்களின் வாழ்வில் அசாதாரண முறையில் அடிக்கடி தலையிடுகிறார். இந்தத் தலைமைக்குரிய கவனமும், இத்தகைய காணக்கூடிய தனிப் பட்ட தலையீடுகளும், இறைவனின் பிரசன் னம் மற்றும் செயல்கள், அவரது மீட்புத்திட் டத்தின் தொடர்ச்சி, அவரது மக்களுடைய நிலையற்ற வரலாறு முழுவதிலுமான அவ ரது கோரிக்கைகள் ஆகியவற்றின் அடையா ளங்களாக உள்ளன. இறைத்தலையீடுகள் என் பவை இயேசுவிலும், மீட்பினுடைய இறுதி யான செயலில் இறுதித் தீர்ப்பின்போது மகிமை மிக்க மறுவருகையிலும், இறை வனே வருதலாக மிக மேலானவிதத்தில் ஆண்டவரின் நாளுக்குத் தயாரிப்பதாகவும், அதை அறிவிப்பதாகவும் உள்ளன.

II. பழைய ஏற்பாடு

1. ''கடவுள் உங்களைச் சந்தித்து, உங் களை இந்நாட்டிலிருந்து தாம் ஆபிரகாம் ஈசாக், யாக்கோபு ஆகியோருக்கு வாக்களித் திருக்கும் நாட்டிற்குப் போகச்செய்வார்'' (ஆதி 50:24). பெரிய மக்கள் திரளுக்குத் தந்தையாக்குவதற்கென ஆபிரகாமை அழைத்தவரும், இந்நோக்கத்திற்காகச் சாரா வைச் சந்தித்து அவளைத் தாய்மையடையச் செய்தவருமான இறைவன் (21:1.2), தனது மக்களை எகிப்திலிருந்து விடுவிப்பதன் மூலம் தனிச்சிறப்பான, முறையில் தலையிடு கிறார். தனது மக்களை அன்பு செய்து காக் கின்ற இறைவனின் சந்திப்புகள், இஸ்ராயே லின் வரலாறு முழுவதும் மீண்டும் உருவாக் கப்படும். அவை தனது வாக்குறுதிகளுக் கான யாவேயின் பிரமாணிக்கத்தின் நூலாக வும் இழையாகவும் உள்ளன. உடன் படிக்கையின் மீது பிரமாணிக்கமற்ற இஸ்ரா யேலர்பால் எரிச்சல் கொள்ளும் இறைவ னின் தலையீடானது தண்டனையின் வடிவை ஏற்கின்றது: ஆயினும் தலையீடா னது மக்களுடைய மீட்பை நோக்கியே திரும்பியுள்ளது. எல்லா இறைவாக்கினர் களும், குறிப்பாக எரேமியா, ஆண்டவரு டைய தலையீடுகளைப் பல்வேறு ஒழுங்கு முறைகளிலும், நிகழ்வுகளிலும் உபயோகிக் கின்றார். வெற்றிகள் என்பவை தனது விசுவாசிகளை ஆசீர்வதிக்கும் இறைவனு டைய சந்திப்புகளாக உள்ளன (செப் 2:7).

அதே போன்று இடையூறுகள் எனப்படுபவை, தன்னிடம் மீண்டும் நடத்திக் கொண்டு வருவதற்கென இஸ்ராயேலரையும் அவர்களது தலைவர்களையும் திருத்துகின்ற இறைவனுடைய சந்திப்புகளாகும். ''உலகத்திலுள்ள எல்லா மக்களினங்களுக்குள்ளும் உங்களைத்தான் நாம் சிறப்பாக அறிந்து கொண்டோம்; ஆதலால் உங்கள் தீச்செயல்கள் அனைத்திற்காகவும் நாம் உங்களைத் தண்டிப்போம் (ஆமோ 3:2; ஓசே 4:9;எசா 10:3;எரே 6:15;23:2.34). தன் மந்தையைப் பார்வையால் கண்காணிக்கும் மேய்ப்பனின் மேற்பார்வை என எசேக்கியேல் இச்சந்திப்பை விவரிக்கிறார் (எசே 34). எனவே, சந்திப்பானது எப்போதும் இறைவனின் அன்பிலிருந்து புறப்பட்டு, மக்களின் மீட்பை நோக்கிச் செலுத்தப்படுகிறது. மீட்பின் இறைத்திட்டத்தையே எதிர்க்கின்ற அயல்நாடுகளாகிய மோவாபு, எகிப்து மற்றும் குறிப்பாகப் பாபிலோன், முதலியனவும், இறைவனால் சந்திக்கப்படும். நீதிபதியான இறைவன் அவர்களைத் தண்டிப்பார் (எசே 46:21;48:44;50:18;27:31). ஆனால் இறுதியாக அவர்களைக் காத்தருள்வார் (எரே 12:14-17;16:19தொ). எகிப்திலிருந்தான மீட்புப் போன்று நாடு கடத்தலிலிருந்து மீண்டும் நாடு வருவதும் ஆண்டவரது செயலாகும். ''பாபிலோனில் எழுபது ஆண்டுகள் முடிந்த பின், நாம் உங்களை வந்து சந்திப்போம்; உங்களை இந்த இடத்திற்குக் கொண்டு வந்து சேர்ப்போம் என்று உங்களுக்கு நாம் கொடுத்த வாக்கைநிறைவேற்றுவோம்'' (எரே் 29:10;32:5;சங் 80:15; செக் 10:3).

2. பின்னர் ஒவ்வொரு யூதனும், இறைவனுடைய தனிப்பட்ட கவனத்திற்குரியவன் தான் என்பதை அதிகமாக உணர்ந்திருப்பான். ''ஆண்டவரே, நீர் உம் மக்கள் மீது இரக்கம் காட்டும்போது என்னை நினைவு கூரும்: உமது உதவியை எனக்குத்தாரும். அப்போது உம்மால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்குள்ள பெரும் பேற்றைக்கொண்டு நான் இன்புறுவேன்'' (சங் 106:4-5). தனிப்பட்ட சந்திப்புகள் வழிபாட்டின் அதிகார எல்லைக்குள் கட்டுப்படுத்தப்படுவதில்லை. ஏனெனில் ஞானிகளின் நடத்தையைப் பரிசோதிப்பதன்மூலமும் (யோபு 7:8; சங் 17:3) அல்லது கனவுகளை அனுப்புவதன் மூலமும் அவர் ஒளிர்விப்பார் (சீரா 34:6; ஆதி 20:3).

மிகக்குறிப்பாக நாடு கடத்தப்பட்டதற்குப் பின்னர், வெளிப்பாட்டின் முன்னோக்கிய தர்க்கமானது உறுதியான சந்திப்பின் அறிவிப்பிற்கு மனதைத் திறக்கிறது. மக்களையும் நாடுகளையும் தீர்ப்பிட இறைவன் வருவார். நாடு கடத்தப்படுவதற்கு முன்பே இறை வாக்கினர்களால் அறிவிக்கப்பட்ட யாவேயின் அந்நாளானது, இறைவனுடைய வருகை, சந்திப்பு மற்றும் ஆட்சியால் காக்கப்பட்ட தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுடைய வெற்றியின் நாளாக இருக்கும். உரிமையால் இது அனைத்து மக்களுக்கும் பரவும். ''கடவுளின் வருகைக் காலத்தில் அவர்கள் சுடரொளி வீசுவார்கள்... ஆண்டவர் அவர்கள் மேல் என்றென்றும் ஆட்சி செலுத்துவார்' (ஞான 3:7; சீரா 2:14). இந்நம்பிக்கையில் முதல் நூற்றாண்டின் யூதர்கள் வாழ்வர் (உம். கும்ரான்). இயேசு வந்து அரசினைப் போதிக்கும்போது, இறை சந்திப்பிற்கான வாக்குறுதியும் நம்பிக்கையும் உண்மையாக உருவாகப்போகிறது.

III. புதிய ஏற்பாடு

1. ''இஸ்ராயேலில் கடவுளான ஆண்டவரைப் போற்றுவோம்; ஏனெனில் தம் மக்களைத் தேடிவந்து விடுவித்தருளினார்'' (லூக் 1:68). இறைவன் அன்பினாலும் (1:78) தனது வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டும் என்ற ஆசையினாலும் தூண்டப்படுகிறார். மனிதரைக் காப்பாற்ற இயேசுவின் வடிவில் அவர் வருகிறார். இவ்வாறு இறைவன் மனிதனுடைய நம்பிக்கைகளை நிறைவேற்றி அவனது வேண்டுதல்களுக்குப் பதிலளிக்கிறார். இதுவே முழு நற்செய்தியிலும் பரவியுள்ள மையக்கருத்தாகும். இயேசுவிலான இறைவனது வருகைக்காகவும், வெளிப்பாட்டிற்காகவும் இதயங்களைத் தயாரிக்க வந்தவராக, இறைவாக்குகளின் ஒளியில் முன்னோடியானவர் தோன்றுகிறார். யோவான் இறுதிக்காலத் தீர்ப்பைப்

போதித்து அரசின் வருகையைப் பற்றி அறி விக்கிறார். இயேசுவும் தமது வருகையின் மீட்புப்பண்பையும், தன்மையையும் முதன் மையாக வலியுறுத்துவார். அனைத்து ஊனுட லுக்கும் அளிக்கப்பட்ட வருகையாக இருந் தாலும் (லூக் 3:6;1 பேதுரு 2:12), அதனை அறிந்து கொள்ளக்கூடிய தூய இதயங்களால் மட்டுமே பெறக் குறிக்கப்பட்டதாக உள் ளது. ''நம்மிடையே பெரிய இறைவாக்கி னர் ஒருவர் தோன்றியுள்ளார். கடவுள் தம் மக்களைத் தேடி வந்திருக்கிறார்'' (லூக் 7:16). ஆனால், இந்த வருகை உலகளாவிய விளக்கமாக இருக்காது; ஏனெனில் புதுமை கள் நிகழ்ந்தாலும் இயேசுவிலான இறைவ னின் வருகையானது, முழுமையாக, உள்ள டக்கும் மின்னல் கீற்றாக இருப்பதில்லை. இச்சந்திப்பினை ஏற்காமல் மறுக்கவும் முடி யும்.

இறைவனுடைய சந்திப்பின் இந்த நாட கப்பாணித் தன்மையானது நற்செய்தியாளர்க ளால் குறிப்பாக யோவானால் வலியுறுத்தப் படுகிறது; ''தமக்குரிய இடத்திற்கு வந்தார்; அவருக்குரியவர்கள் அவரை ஏற்றுக்கொள்ள வில்லை'' (யோவா 1:11). இயேசுவை ஏற்க மறுக்கும் இக்குற்றம் அருளைத் தண்டனை யின் அச்சுறுத்தலாக மாற்றும். ''சந்திப்பின் காலத்தை'' அறிய முடியாதவர்களுக்கு ஐயோ கேடு; ''எருசலேமிற்கு ஐயோ கேடு'' (லூக் 19:43-44). ஏரிக்கரை நகரங்களுக்கு ஐயோ கேடு. புறவினத்தாருடைய மனப்பான் மைக்கு முரண்பட்ட இந்த யூதரின் நிராகரிப் பானது (மத் 8:10தொ). பழைய ஏற்பாடு முழுவதும் யாவேயின் சந்திப்புகளை ஏற்க மறுப்பது, மற்றும் புறக்கணிப்பது ஆகிய நீண்ட வரிசையில் இறுதியான துன்ப நிகழ்ச் சியாக எடுத்துக்காட்டப்படுகிறது. திராட் சைக்கொடியின் ''கனிகளைச் சேகரிக்க''த் தந்தையால் அனுப்பப்பட்ட அரசனின் மகனை வரவேற்காதவர்களுக்கான தண்ட னையானது பயங்கரமானதாக இருக்கும் (மத் 21:33-46). யூத உலகின் முடிவாகவும், இறைவனுடைய தண்டனையின் குறிப்பிடத் தக்க சுட்டிக்காட்டுதலாகவும், அறியக்கூடிய முன்குறிப்பாகவும் உள்ள எருசலேமின் அழி வானது, மகிமையிலான தமது இறுதி வரு கையைப்பற்றிப் பேசுகின்ற மனுமகனு டைய பயங்கரச் சந்திப்பாக உள்ளது (மத் 25:31-46).

2. ஒலிவக்கிளைகள் மீதான இயேசுவின் ''மகிழ்ச்சிகரமான நுழைவினால்'' முன் னுரைக்கப்பட்ட இறுதியான சந்திப்பிற்கு முன் னர், இயேசுவின் செயலானது அப்போஸ்த லர்களுடைய பணியினாலும், ஆவியை அனுப்புவதனாலும் திருச்சபையில் தொடர்ந்து நடைபெறுகிறது. ஆசிய சமூகத் தினர் தங்களுடைய வழிகளை மாற்றா விடில் அவர்களைத் தண்டிக்கத் தயாராயிருப்ப வராவார் அவர். திருவெளிப்பாட்டில் காட் டப்படுவது போலத் (திருவெளி 2-3) திருச் சபையின் வாழ்வில் ஆண்டவரே நிலையான நடுவராக உள்ளார். வரவிருக்கும் கிறிஸ்து விற்கு முன்னால் நாம் ஒரு குழுவாகச் செல்ல வேண்டியிருந்தாலும் (1 தெச 4:17; மத் 25:6), கிறிஸ்துவைப் பின்செல்லும் ஒவ் வொருவரும் இயேசுவின் சந்திப்பை வர வேற்கத் தனிப்பட்ட முறையில் அழைக்கப் படுகின்றனர்; ''ஆகவே தனக்கெனக் காத்தி ருப்பவர்களுக்கு மீட்பை அளிப்பதற்காக இரண்டாம்முறை இயேசு தோன்றவிருக்கின் ற'' (எபி 9:28), எவருமேயறியாத, அந்நாள் வரை கிறிஸ்துவைப் பின்செல்பவர் விழித்தி ருந்து (மத் 24:42தொ; 25:1-13) செபிக்கவேண் டும்.

### சந்திப்புக்கூடாரம் (TENT OF MEETING)

ஐந்நூலில் திருஉறைவிடத்தைக் குறிக்க எலோயீம் பாரம்பரியமும் (பல தடவை) குருக்கள் பாரம்பரியமும் (130 தடவை) வழங்கிய பெயராகும் (யாத் 33:7; எண்11:16; 12:4; உப 31:14).

### சந்தைவெளி, பொதுவிடம் (MARKET PLACE)

பழங்கால நகர்களில் சந்தையிடம் என்பது பொருள்களை வாங்குவதற்கும் விற்பதற் கும் மட்டும் இடமன்று. அங்கு, பொதுக் கூட்டங்களும் தர்க்கங்களும் நடக்கும். கிரேக்க நகரங்களில் மைய வளாகம் சந்தை

யாகவும் பயன்பட்டது. பழங்காலப் பாலஸ்தீன நகர்களில் இதற்கு நகரவாயில் பயன்பட்டது (சங் 50:11;பழ 1:20;7:12).

நற்செய்தியில் கூறப்படும் சந்தைவெளிக்கும் அப்போஸ்தலர் பணியில் குறிப்பிடப்படும் பொது இடத்திற்கும் வேறுபாடு உண்டு.

நற்செய்தியில் கூறப்படும் ''சந்தைவெளி'' கடைகள் நிறைந்த வீதியாகும். இங்கு, சிறுவர்கள் அமர்ந்து தம் தோழரைக் கூவி அழைப்பார்கள் (மத் 11:16; லூக் 7:32). மக்கள் நோயுற்றோரைக் கிடத்தினார்கள். இயேசு அவர்களைக் குணப்படுத்தினார் (மாற் 6:56). மக்கள் இங்கே வீணே நின்றுகொண்டிருந்தனர் (மத் 20:3). மறைநூல் அறிஞர்கள் வணக்கம் செலுத்தப்பட்டனர் (மாற் 12:38). பரிசேயர்கள் இந்த இடங்களில் வணக்கத்தை விரும்பினர் (லூக் 11:43). சந்தைவெளிகளிலிருந்து வந்தபின், தங்களைத் தூய்மை செய்யாமல் உணவு உண்ணமாட்டார்கள் (மாற் 7:4).

அப்போஸ்தலர் பணியில் குறிப்பிடப்படும் இரண்டு பொது இடங்கள் பிலிப்பி (அ.ப.16:19) ஏதன்சு (அ.ப.17:17) ஆகிய கிரேக்க நகரங்களில் இருந்தன. இவை பொது வாழ்வின் மையங்களாகும். இவை சிலைகள் நிறைந்த திறந்த வெளியாகும். இவற்றைச் சுற்றிலும் பல கோயில்களும், பெரிய கட்டடங்களும் இருந்தன. நகரத் தலைவர்கள் முன் நிறுத்த பவுலையும், சீலாவையும் பொது இடத்திற்குத்தான் அழைத்துச் சென்றனர். பவுல் ஏதன்சு நகரப் பொது இடத்தில் விவாதித்து வந்தார்.

**சபக்தானி** (SABACHTHANI - ஏன் என்னைக் கைவிட்டீர்)

காண்க. ஏலி, ஏலி, சபக்தானி

**சபத்தாய்** (SHABBETHAI - ஓய்வுநாளில் பிறந்த)

1. இவர் புறவினப் பெண்களை மனைவியாக வைத்திருப்பதற்கு எதிராகவுள்ள சாசனத்தை எதிர்த்தவர்களுள் ஒரு லேவியர் (எஸ் 10:15).

2. எஸ்ரா சட்டத்தை வாசித்தபோது, மக்களுக்கு அதை விளக்கிக் காட்டியவர்களுள் ஒரு லேவியர் (நெகே 8:7).

3. ஆலயத்தின் புறவேலைகளை மேற்பார்த்தவர்களில் ஒருவர். லேவியரின் தலைவர் (நெகே 11:16).

**சபனத்து பனேகா** (ZAPHENATH - PANEAH)

பார்வோன் அரசன் யோசேப்பை உயர்பதவிக்கு உயர்த்தியபொழுது இவருக்கு அவர் இட்டபெயர் (ஆதி 41:45). விவிலியக் கதைகள் பெயரை மாற்றுவது என்பது ஒரு சாதாரண வழக்கு. இருப்பினும் இப்படிப்பட்ட பெயர் மாற்றம் எகிப்திய உயர் பதவியில் அவசியமில்லை. எகிப்திய அரசியல் ஏடுகளில் பல நல்ல செமித்தியப் பெயர்கள் உள்ளன (உ.ம்.பாகால்-மாகார், யான்கமு, யாக்கோபு-கார்). கைச்சோசியர்களிடையே எகிப்தியப் பெயர்களை எடுத்துக்கொள்ளும் வழக்கம், குறிப்பாக அரச பதவி ஏற்கும் போது, இருந்திருக்கிறது.

இப்பெயரின் பொருளைப்பற்றி நிறைய வேறுபாடுகள் உள்ளன. ''கடவுள் பேசுகிறார்; (அப்பெயரைக் கொண்டிருப்பவர்) வாழ்கிறார்,'' என்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும் ஒரு பொருளாகும். ஆனால் இப்பொருள் விளக்கம் யோசேப்புக்கும் பிற் காலத்தைச் சேர்ந்ததாகும்.

**சபாய்** (ZABBAI)

1. அன்னிய மனைவியை மணந்து கொண்டிருந்த ஒரு இஸ்ராயேலர் (எஸ் 10:28).

2. எருசலேமின் சுவரின் ஒரு பகுதியைப் பழுதுபார்க்க உதவிசெய்த பாரூக்கின் தந்தை (நெகே 3:20). இவர் 1-இல் குறிக்கப்பட்டவராக இருக்கலாம்.

**சபிக்கப்படுதல்** (ACCURSED, ANATHEMA)

I. சபிக்கப்படுதலின் செமித்திய மூலச் சொல்லாகிய 'கேரேம்' ஒதுக்கிவைத்தல், புனித உபயோகத்திற்காக விலக்குதல் என்று பொருள்படும். விவிலியத்தில் இதனுடைய உபயோகமானது இறைவனுக்காகத் திருநிலைப்படுத்தப்படுதலைக் குறிக்கும்.

**II. பழைய ஏற்பாடு:-**

பழைய நூல்களில், இஸ்ராயேலானது தனது அயலாராகிய மோவாபியர் போன்றவர்களுடன் பொதுவாகக் கொண்டுள்ள சபித்தலின் வழக்கமானது, வெல்லப்பட்ட பகைவனைக் கொல்வதாக மட்டுமில்லாமல், புனிதப்போரின் சமய விதிகளில் ஒன்றாகவும் இருந்தது. வெற்றியை அடைவதற்கென, ஆண்டவரின் போர்களில் ஈடுபட்டுள்ள இஸ்ராயேலானது, கொள்ளைப் பொருளைச் சாபத்திற்குரியதென உறுதிமொழி ஏற்கிறது. அதாவது, அதனின்று எவ்வித இலாபத்தையும் அடைவதை விட்டுவிட்டு, ஆண்டவருக்கு அதனை ஒப்புக்கொடுக்க உறுதிமொழி எடுக்கிறது (*எண் 21:2-3; யோசு 6*). இந்த ஒப்புக்கொடுத்தலானது வாழும் உயிர்கள் மற்றும் பருப்பொருள் முதலிய கொள்ளைப்பொருளின் முழு அழிவையும் கொண்டுள்ளது. இது நிறைவேற்றப்படாவிடில், தண்டனை எதிர்பார்க்கப்படுகிறது (*1 சாமு 15*). இறை பழிப்புச் செயல் மூலம் மீறப்பட்டாலும், இது தோல்விக்கு இட்டுச் செல்லும் (*யோசு 7*).

உண்மையில் இதனுடைய செயல்பாடானது அரிதானதாகத் தோன்றுகிறது. கெசேர் (*யோசு 16:10; 1 அர 9:16*) அல்லது எருசலேம் (*நீதி 1:21; 2 சாமு 5:6-7*) போன்ற பெரும்பான்மையான கானானிய நகரங்கள் இஸ்ராயேலரால் கைப்பற்றப்பட்டன (*யோசு 24:13; நீதி 1:27-35*). கிபயோன் (*யோசு 9*) மற்றும் செக்கேம் (*ஆதி 34*) போன்ற சில நகர்கள் இஸ்ராயேலோடு உடன்பாடுகளையும் ஏற்படுத்திக் கொண்டன.

சபித்தலானது பாலஸ்தீனம் கைப்பற்றப்பட்ட போது ஈடுபடுத்தப்படவில்லை என்பதை உப ஆகம வரலாற்றாசிரியர்கள் அறிந்திருந்தனர் (*நீதி 3:1-6; 1 அர 9:21*). ஆயினும் தேர்ந்து கொள்ளப்பட்ட மக்களின் புனிதத்தை மீண்டும் அறிவுறுத்தவும், இஸ்ராயேலின் மீதான கானானிய சமயத்தின் சீர்குலைக்கும் தாக்கத்தை எதிர்த்துப் போராடவும், சபித்தலை ஒரு சட்டமாக்கினர்.

நாட்டைக் கைப்பற்றிய வரலாற்றை (*உப 7:1-6*) வெற்றி வரலாறாகப் படிப்படியான திட்டமிட்ட முறையில் எடுத்துக் கூறுவதற்கு இதுவே காரணமாகும். புனிதநாடு மற்றும் அதில் குடியிருப்போரின் மீதான ஆண்டவரின் தனிப்பட்ட மேலாண்மையானது ஆபத்தில் இருந்த நிலையில், பண்டைய சமயச் சட்டத்தைச் சுட்டிக்காட்டுகின்றனர். ''கேரேம்'' என்ற சொல்லின் வளர்ச்சி அதனுடைய இரு கூறுகளின் பிரிவினைக்கு இட்டுச் செல்லுவதாகத் தோன்றுகின்றது: ஒரு புறம், குறிப்பாக ஆண்டவர்பால் காட்டிய பிரமாணிக்கமின்மையைத் தொடரும் அழிவு மற்றும் தண்டனை (*உப 13:13-18; எரே 25:9*); மற்றொருபுறம் குருக்கள் பாரம்பரியத்தில் காணப்படுவதுபோல் மீண்டும் வாங்குவதற்கு எவ்வித வாய்ப்பும் இல்லாத அளவில், மனித உயிரையோ ஒரு புறப்பொருளையோ இறைவனுக்கு ஒப்புக்கொடுத்தல் (*லேவி 27:28-29; எண் 18:14*). இவை ஆண்டவருக்குரியன. ஆகவே அழிவிற்குரியன. (*உப 7:26; 21:23; யோசு 6:17-18; 7:1.11-13.15; 22:20; சங் 119:21; எசா 65:20; மீக் 6:10; 1 நாள் 2:7*).

**III. புதிய ஏற்பாடு:-**

புதிய ஏற்பாட்டில் புனிதப்போர் பற்றிய கேள்வியோ, பகைவரைச் சாபத்திற்கு உட்படுத்த உறுதிகொள்வதோ இனிமேலும் எழுவதில்லை. ஆனால், சாபம் என்ற பொருளின் இச்சொல்லானது தொடர்ந்து பயன்படுத்தப்படுகிறது (லூக் 21:5-இல் எருசலேம் ஆலயத்தில் நேர்ச்சைக் காணிக்கைகளைக் குறிப்பிடுகின்றன).

உறுதிமொழிகளில் யூதரால் உபயோகிக்கப்படும்போது (*மாற் 14:71 இணை; அ.ப. 23:12*), பொய்ச்சத்தியம் செய்யும் சமயத்தில் ஒருவர் தனக்கெதிராகவே உரைக்கப்படும் சாபத்தைக் குறிப்பிடுகிறது.

பவுலின் நூல்களில், விசுவாசமற்றவர்களுக்கு எதிரான இறைவனின் தண்டனையை வெளிப்படுத்துகின்ற சாபத்தின் வடிவமாக இது உள்ளது (*கலா 1:8-9; 1 கொரி 16:22*).

இயேசுவிற்கு எதிராக இதனை உரைப்ப தென்பது கிறிஸ்தவனுக்கு இயலாத ஒன்று *(1 கொரி 12:3)*. தனது சக யூதர் மீட்பை அடைவதற்குப் பயன்படுமாயின், தான் சாப மாக இருக்கத் தயார் என்று அப்போஸ்தலர் கூறும்போது, கிறிஸ்துவிடமிருந்து பிரிதலே இதன் பொருள் என்பதை அவர் தெளிவு படுத்துகிறார் *(உரோ 9:3)*. இந்த முரண்பட்ட கூற்று இறுதியான சாபத்தைக் குறிப்பிடு கிறது.

சபிக்கப்படுதல் என்ற கருத்து, புதிய ஏற் பாட்டில், *மத் 24:31; மாற்11:21; லூக் 6:28; யோவா 7:49; உரோ 9:3; 12:14; கலா 3:10.13; யாக் 3:9; 2 பேதுரு 2:14* என்ற பகுதிகளில் காணப்படுகிறது.

**சபு** (SAPH - *வாயிற்படி)*

இவர் அரக்கர்கள் குலத்தில் பிறந்தவர். பெலிஸ்தியரோடு கோபு என்ற இடத்தில் போர் நடந்தது. அதில் சபுவைக் கூசாயியரான (ஊசாயியர்) சிபகாய் என்பவர் கொன்றார். சிபகாய் வலிய 'முப்பது பேரில்' ஒருவரா வார் *(2 சாமு 21:18)*. காத்து என்ற இடத்தை இருப்பிடமாகக் கொண்டிருந்த அரக்கர்களின் வழித்தோன்றலில் சபு சேர்த்துக் கொள்ளப் பட்டார். இந்த அரக்கர்கள் பெலிஸ்தியரின் கூலிப்படையைச் சேர்ந்தவர்களாக இருக்க லாம். *1 நாள் 20:4*-இல் சபு, சிபாய் என்றழைக்கப்படுகிறார்.

**சப்தக்கா** (SABTECA - *முனைப்பான, கவர்ச்சி யான)*

இவர் கூசு என்பவரின் புதல்வர். எனவே அரேபிய இடப் பெயரைச் சுட்டலாம் *(ஆதி 10:7; 1 நாள் 1:9)*. இது இதுவரை அடையா ளம் காட்டப்படவில்லை.

**சப்தா** (SABTA(H) - *முனைப்பான, மனம் கவர்கின்ற)*

சப்தா *(1 நாள் 1:9)* கூசு என்பவருடைய மகன். இப்பெயர் அரேபியாவில் ஒரு இடப் பெயராகவும் உள்ளது *(ஆதி 10:7)*. சாதாரண மாக இது கதிரமாத்தில் உள்ள சபோட்டா என்ற ஊரோடு அடையாளம் காட்டப்படுவ துண்டு. அங்கு உப்பும், தூபப் பொருட்க ளும் நிறைந்த வாணிப மையம் ஒன்று உண்டு. ஆனால் செபாயர் ஏடுகளில் இப் பெயர் எழுதப்பட்டிருக்கும் முறை இக்கருத் துக்கு ஆதரவு தரவில்லை. மேலும் சப்தா, பாரசீக வளைகுடாவுக்கு அருகில் ஒரு நிலப் பகுதிக்கும் பெயராக அமைந்துள்ளது. இது தோலமி என்பவரால் குறிப்பிடப்பட்டுள் ளது.

**சப்தி** (ZABDI - *கடவுளின் கொடை, என் கொடை)*

1. செராகுவின் குடும்பத்தைச் சேர்ந்த யூதாவின் வழிவந்தவர்; கர்மியின் தந்தை. இவர் ஒரு குடும்பமரபைத் தோற்றுவித்தார். இதில் ஆக்கான் ஓர் அங்கத்தினர் *(யோசு 7:1. 17-18)*. *1 நாள் 2:6*-இல் இவர் சிம்ரி என்று அழைக்கப்படுகின்றார்.

2. பென்யமின் குலத்தைச் சேர்ந்த சிமயி யின் மகன் *(1 நாள் 8:9)*.

3. இவன் ஒரு சிபிமியர் தாவீதின் அரச உடைமைகளின் மேல் பொறுப்பாயிருந்த அரசாங்க ஊழியர்களில் ஒருவர். ''திராட் சைரசக் கிடங்குகளுக்குப் பொறுப்பாய் இருந்தார்'' *(1 நாள் 27:27)*.

4. ஆசாபின் மகனும் லேலியருமாவார் *(நெகே 11:17)* அல்லது ஆசாபின் வழிவந்த ஒரு லேவியக் குடும்பமாக இருக்கலாம். அனேகமாக *1 நாள் 9:15*-இல் சொல்லப்பட் டுள்ள சிக்ரியும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**சப்தியேல் –** (ZABDIEL - *இறைவன் கொடை, இறைவன் என்கொடை ஆவார்)*

1. யூதா குலத்தைச் சேர்ந்தவர், யாசொப யாமின் தந்தை. தாவீதின் படையில் முதல் பிரிவின் படைத்தலைவர். பெரேட்சின் வழித்தோன்றல் *(1 நாள் 27:2)*.

2. நாடு கடத்தலுக்குப்பின் குருக்களின் ஒரு குழுவிற்கு மேற்பார்வையாளர். அக் தோலிமின் மகன் என அழைக்கப்படுகின் றார் *(நெகே 11:14)*.

*3.* அலக்சாந்தர் பாலாசு புகலிடம் தேடி அரேபியாவிற்கு ஓடியபொழுது அவரைச் சிரச்சேதம் செய்து தலையைத் தோலமி பிலோமேத்தருக்கு அனுப்பி வைத்த ஓர் அரேபியன் *(1 மக் 11:17).* யோசிப்பசு இவரை ஓர் இளவரசன் என்று குறிப்பிடு கிறார்.

**சப்பீரா (SAPPHIRA - அழகான)**

இவள் பழங்காலக் கிறிஸ்துவ எருசலேம் சமூகத்தில் ஓர் உறுப்பினராக இருந்தாள். இவள் அனனியாவுக்கு மனைவி. அனனியா தனது உடைமையில் ஒரு பகுதியை விற்று விட்டு அதைக் கொண்டு போய் அப்போஸ்த லர்களின் பாதத்தில் முழுவதும் தருவது போல் நடித்தார். இதற்குச் சப்பீரா உடந்தை யாயிருந்தாள். இதற்காகப் பேதுரு இவர்க ளைக் கண்டித்தபோது இருவரும் இறந்து போயினர் *(அ.ப. 5:1-10).* ஏனெனில் இதுபரி சுத்த ஆவிக்கு எதிரான பொய்யாகும்.

**சமஉரிமைச் சமூகம் (COMMON WEALTH)**

பிலி *3:20*-இல் பவுல் வானகமே நமது தாய்நாடு அதாவது, நமது சமஉரிமைச் சமூ கம் என்கிறார். கீழ்க் காணும் விளக்கங்களை இதற்கு நாம் காணலாம்.

*அ)* கிறிஸ்தவர்களாகிய நமது சமஉரி மைச் சமூகம் மற்றவர்களிடமிருந்து வேறு பட்டது. ஏனெனில் மற்ற உலக அரசுகள் போலன்றி நாம் ஏற்கெனவே விண்ணகத் தின் குடிமக்கள்.

*ஆ)* சம உரிமைச் சமூகம் என்பது சமூக உறவைக் குறிக்கிறது. ஒருவரோடு ஒருவர் பகிர்ந்து கொண்டு வாழ்வதுதான் கிறிஸ்தவ வாழ்க்கை.

*இ)* கிறிஸ்தவர்களின் நடத்தையும் அவர்க ளின் தாய் நாடான விண்ணகத்திற்கு உகந்த தாக அமையவேண்டும்.

*ஈ)* விண்ணின்று அருங்குறி போல் வந்த மீட்பரில் தான் இந்தச் சமுதாய வாழ்வு முழுமையடையும்.

இந்தச் சமஉரிமைச் சமூகம் குடி உரிமை என *அ.ப. 22:28*-இல் மொழி பெயர்க்கப்பட் டுள்ளது.

**சமய அறவுரை (HOMILY)**

மறைநூல் பகுதிக்கு அளிக்கப்படும் பொழிப்புரை அடங்கிய எளிய கருத்துரை. பிரசங்கம் என்பதைவிட விவிலிய வாசகத் தன்மையுடையது. அன்றாடச் செயல்முறை யான காரியங்களில் கவனம் செலுத்தியது; தொடக்க காலத் திருச்சபையில் ஒரு போதக முறையாகப் பயன்பட்டது. எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் ஒன்று அல்லது பல சமய அறவுரைகள் அடங்கியதாகக் கருதப் படலாம் *(எ.கா. அதி 11).* பொதுவாகப் பவுலின் திருமுகங்கள் குறிப்பிட்ட காரியங் களைப் பற்றிய உண்மையான கடிதங்களா கும். ஆனால் அவர் எபேசியருக்கு எழுதிய திருமுகம், பிலிப்பியருக்கு எழுதப்பட்ட திருமுகத்தைச் சமய அறவுரை முறையில் திரும்ப எழுதியதாகக் கருதலாம்.

**சமய நிலை பிறழ்தல் (APOSTASY)**

தொடக்கத்தில் இச்சொல் அரசியல் பொருளுடையதாக இருந்தது. புரட்சி செய் பவர்களைக் குறித்தது. இப்பொருளில் எழு பதுநூலில் சில இடங்களில் இச்சொல் பயன் பட்டுள்ளது. மதத்தொடர்புடைய பொரு ளில், அதாவது கடவுளின் சட்டத்திலிருந்து பிரிந்து செல்லுதல், ஒரு குறிக்கோளைக் கைவிடுதல், வழிபாடு, கோயில் முதலியவற் றைக் கைவிடுதல், பொதுவாகக் கடவுளுக் குக் கீழ்ப்படிதலை மறுத்தல் என்னும் பொருளில் (எழுபது நூல்; *யோசு 22:22; 2 நாள் 29:19; 33:19; எரே 2:19;* குறிப்பாக *2 மக் 5:8)* பயன்படுத்தப்பட்டுள்ளது.

புதிய ஏற்பாட்டில் இரண்டு இடங்களில் மதத் தொடர்புடைய பொருளில் பயன்படுத் தப்பட்டுள்ளது. *அ.ப. 21:21*-இல் பவுல் மத நெறியைக் கைவிட்டுத் தவறியதாகக் குற்றம் சாட்டப்படுகிறார். அவர் மோசேயின் சட் டங்களை விட்டுவிடும்படி போதித்ததாகக் கூறுகின்றனர். *2 தெச 2:3*-இல் இறுதிக்காலச் சூழ்நிலைக்காட்சி ஒன்று விவரிக்கப்படுகி

றது. இது கிறிஸ்தவ மத வரலாற்றில் பல காலங்களில் மீண்டும் மீண்டும் நிகழ்வதாகும். இது ஒரு யூத காட்சி இலக்கியத்தைப் பின்பற்றி எழுதப்பட்டது. இதன்படி கிறிஸ்து திரும்பி வரும் முன் ஓர் எதிர்க்கும் கிளர்ச்சி நிகழவேண்டும். இந்தக் கருதுகோள் இறுதிக்காலம் தள்ளிவைக்கப்படுதல் என்ற கருத்தைப் பிரதிபலிக்கிறது. இக்கருத்து 2 தெசலோனியரிலும் 2 பேதுருவிலும் காணப்படுகிறது.

எபி 6:6-இல் இச்சொல் நெறிபிறழ்வதைக் குறிக்கிறது. இது வேத கலாபனையின் போது கிறிஸ்துவில் உள்ள விசுவாசத்தை மறுதலிப்பதை எடுத்துரைக்கின்றது.

**சமயப்பிளவு** (SCHISM)

I. சமயப்பிளவிற்கும் சமயப் பதிதக் கருத்திற்கும் இடையில் சிறிதளவு வேறுபாடே உள்ளது. இஸ்ராயேலில் இருந்தவற்றால் முன் நிழலிடப்பட்டு 'யாவேயின் சபை' (1 கொரி 20:8) என்ற அதன் தன்மை மறுத்துக் கூறப்பட்டு, இந்தப் பிளவுகள் எதிரெதிரான குழுக்களாக திருச்சபையைப் பிரித்து, கிறிஸ்துவின் உடல் என்ற அதன் தன்மையை மறுத்துக்கூறின.

II. பழைய ஏற்பாடு

***1. பாவமானது இயல்பான பிரிவுகளைச் சமயப்பிளவுகளாக மாற்றுகிறது:-*** மனிதர் பல்வேறு மக்களாகவும், மொழிகளாகவும், நாடுகளாகவும் பிரிந்துபோவது (பங்கிடுவது) ஓர் இயல்பான நடைமுறையே (ஆதி 1:28; 9:1; 10). மேலும் இது மீட்பின் வரலாற்றுக்கான தயாரிப்பாகும் (உப 32:8-9). ஆனால், பாவமானது இதனை எண்ணற்ற சச்சரவுகளுக்கு ஊற்றாக மாற்றுகிறது. இதன் காரணமாகப் பிரிவுகளை எடுத்துக்கூறும் சொற்கள், ஒற்றுமையை முறித்தல் என்று இழிபொருளில் விவரிக்கின்றன (சங் 55:10; ஆதி 49:7; புல 4:16), அல்லது சிதறிப் போதலை மனித அகந்தைக்கான ஒரு தண்டனையாகவும் (ஆதி 11:1-9) எடுத்துக் கூறுகின்றன.

தனது சந்ததியில் அனைத்து நாடுகளும் ஆசிர்வதிக்கப்படக்கூடிய பேறுபெற்ற ஆபிரகாமுடன் (12:7;13:15;22:17-18; கலா 3:16) விசுவாசிகளை ஒன்று சேர்ப்பதும் (கலா 3:7தொ) மனித ஒற்றுமையை மீட்டளிப்பதும் தொடங்குகிறது. ஆனால் செம்மறியைச் சூழ்ந்த இறுதி ஒன்றிப்பிற்கு முற்பட்டபிரச்சினைகள் என்னென்ன உள்ளன (திருவெளி 7:9)!

**2. சமயப்பிளவானது தேர்ந்து கொள்ளப்பட்ட மக்களின் விசுவாச வாழ்வை அச்சுறுத்தி, அவர்களது சாட்சித் தன்மையைப் பாழ்படுத்துகிறது:-** சமூக அளவில் நிலையுறுதியற்றதாய் அமைந்த தேர்ந்து கொள்ளப்பட்ட மக்களின் ஒற்றுமையானது (2 சாமு 5:5; 15:6.13; 19:41; 20:2) விசுவாசத்தின் தோழமையை அடிப்படையாகக்கொண்டதாகும். அதே சட்டத்தையும் அதே வழிபாட்டையும் ஏற்றுக்கொள்வதில் கூட்டாக இணைக்கப்பட்ட இனங்களை ஒன்றுபடுத்தியது, முதன்மையாக ஆண்டவருடனான உடன்படிக்கையே (யாத் 24:4-8; யோசு 24). மத்திய புனித இடத்தை நோக்கிய (செக்கேம், சீலோவாம்,...பிற்காலத்தில் எருசலேம் ஆலயம்) திருப்பயணங்களும், கால வரையான தவணைமுறையாக அங்குக்கூடிய கூட்டங்களும் இன ஒன்றிப்பைக் காத்து, அதனுடைய சமய அடிப்படையில் செயல்படுத்தி வந்தன. ஆனால், மற்றொரு புறத்தே, புனிதப்போரில் பங்கேற்க மறுப்பது (எண் 32:23; நீதி 5:23) அல்லது மத்திய புனிதத்தலத்திற்கு விரோதமாக வழிபாட்டுத் தலத்தைக் கட்டுவது (யோசு 22:29) ஓர் இனத்திற்குப் பாவமாகும். இரண்டு அரசுகளாகப் பிளவுபட்டதானது ஓர் அரசியல் நிகழ்ச்சியாக எங்குமே கண்டிக்கப்படவில்லை; ஆனால், இறைவனது முன்முயற்சியாக விவரிக்கப்படுகிறது (1 அர 11:31-39; 12:24; 2 அர 17:21). இறைவன் இம்முறையில் சாலமோனின் பாவங்களைத் தண்டிக்கிறார் (1 அர 11:33). சமயப்பிளவு என்ற நிலையில்தான் இம்முறிவானது கண்டிக்கப்படுகிறது. எதிரான புனித இடங்களைக் கட்டுவதன் மூலமும் (12:27-28), காளையின் வடிவில் அமைக்கப்பட்ட நிலைமேடையில் இறைப் பிரசன்னத்தை நிலைபெறச்செய்து, சிலை

வழிபாட்டுக் குழப்பத்தை ஊக்குவித்ததன் மூலமும் (*12:28.32; 14:9; 16:26; 2 அர 10:29; 17:16; ஒசே 8:5-6*), லேவியின் சந்ததியைச் சாராத குருக்களைப் பேத்தேலில் அமர்த்துவ தன் மூலமும் (*1 அரு 12:31; 13:33; 2 நாள் 13:4-12*) எருசலேமிலுள்ள மத்திய திருத்தலத் தினின்று இஸ்ராயேலரைத் திருப்பிவிடுவதே எரொபவாமின் பாவமாகும்.

நாடு கடத்தப்பட்ட காலத்தைச் சேர்ந்த சிலவாசகங்கள் இஸ்ராயேல் மற்றும் யூதாவி னுடைய மறு ஒன்றிப்பை முன்னுரைத்து, இச்சமயப் பிளவானது புனித மக்களுடைய விசுவாச வாழ்விற்கு மட்டுமின்றி நாடுக ளுக்கு முன்னிலையில் அவர்களது சாட்சியத் தின் வலிமைக்கும் தடையாக உள்ளதென எடுத்துக் கூறுகின்றன (*எசா 43:1தொ; 44:8*). சீயோனில் நாடுகள் அனைத்தும் ஒன்று சேர்வதற்காக (*எரே 4:17*), யூதாவானது இஸ் ராயேலுடன் இணைந்து செல்வது அவசிய மாகும் (*3:18; எசா 11:12தொ; எசே 37:11-12.28*). புனித மக்களின் ஒற்றுமையா னது, அவர்களது இறைவன் மட்டுமே உண் மையான இறைவன் என்ற உண்மையின் பிரதிபலிப்பாகவும் மெய்ப்பிப்பாகவும் நோக்கப்படுகிறது.

III. புதிய ஏற்பாடு

''எதிர்க்கப்படும் அறிகுறியாக இருக்கும் நிலையில்'' (*லூக் 2:34*), தமக்குச் சார்பாக வும் தமக்கு விரோதமாகவும் உள்ள அளவில் (*யோவா 7:43; 9:16; 10:19*), குடும்பங்களுக் குள்ளும் (*லூக் 12:2-53*) இயேசு பிளவைக் கொண்டு வருகிறார் (*12:51*). ஆனால் இதன் மூலம், மாயையாக அல்லது மிகமிக இயற் கையானதாக உள்ள அமைதியை அவர் குலைக்கிறார். ஏனெனில், ''சிதறிப்போன இறைவனின் பிள்ளைகளை ஒன்று சேர்க்க வும்'' (*யோவா 11:52; 10:16*), ''பகைமையை ஒழிக்கவும்'', தடைகளை முறிக்கவும், அவர் களை அதே தந்தையின் பிள்ளைகளாகவும், அதே ஆவிக்கு உட்பட்ட அதே உடலின் உறுப்பினர்களாகவும் அமைக்கவும் (*எபே 2:14-18*) அவர் வந்துள்ளார். இவ்வுடலில் எவ்விதமான பிரிவும் அட்டூழியமாகக் கரு தப்படுகிறது (*1 கொரி 12;25*). இது, பாவத் தின் ஊற்றான, ஊனுடலின் கனியாகும் (*கலா 5:20; 1 கொரி 3:3-4*).

**1. அருங்கொடைகளினின்று விளையும் பிளவுகள்:-** விசுவாசிகளிடையிலான பிளவு களின் தீமையை, முக்கியமாகக் கொரிந்தில் தான் பவுல் எதிர்கொள்கிறார் (*1 கொரி 1:10; 11:18-19; 12:25*). ஆனால், ''கிறிஸ்து பிளவு பட்டிருக்கிறாரா'' என அவர் கேட்கிறார். அவரது பெயரால் மட்டுமே அவர்கள் திரு முழுக்குப் பெறவில்லையா? தனது மரணத் தால் அவர்களைக் காத்தவர் அவர் மட்டுமே அல்லவா? (*1:13*). பிளவுகளை வளர்ப்பவர் கள் உண்மையில் ஞானிகளோ (*2:6*) ஆன்மீக வாதிகளோ (*3:1*) அல்லர். கவர்ச்சிகரமான அருங்கொடைகளை உரிமையாக்கிக்கொள் ளும் கட்டுப்பாடற்ற ஆர்வத்தினால் தூண் டப்படும் கருத்து வேறுபாடுகளைப் பவுல் கண்டிக்கிறார். பல்வேறு கொடைகளின் ஒரே இறை ஊற்றையும், தான் விரும்பிய வாறு பகிர்ந்தளிக்கும் ஆவியால் ஆசிக்கப் படும் கட்டியெழுப்புதலையும் அவர்கள் மறந்து விடுகின்றனர் (*12:11*). அன்புண வில் சிலர் தங்களது பேராசையினாலும் சுயநலத்தினாலும் பிளவின் இடறலை மோச மாக்குகின்றனர் (*11:22.27-32*). ஆனால் இறு தியாக, ஆன்மீகக் கொடைகளில் உயர்வான தும் (*12:31*), தவிர்க்கப்பட முடியாத ஒரே நிலையும் (*13:1தொ*) பிளவை விலக்கி ஒன் றிப்பைக் கட்டி எழுப்புதலைத் தனது நேரடி விளைவாகவும் கொண்ட (*8:1*) சகோ தர அன்பை அனைவரும் மறந்துவிடுகின்ற னர்.

**2. திருச்சபையின் சாட்சியத்தைச் சமயப் பிளவுகள் சீர்குலைக்கின்றன:-** இவ்வாறாக, விசுவாசத்தின் ஒன்றிப்பை அவைகள் விட்டு விட்டாலும், முரண்பட்ட பதிதப் போத னைக்கு முன்செல்லும்போதும், அல்லது அதனைப் பின்பற்றும்போதும் பிளவுகள் விசுவாசத்தை அச்சுறுத்துகின்றன. அப்படி அவை விசுவாச ஒன்றிப்பைப் பாதிக்காவிட் டாலும், உட்பிளவுகள் திருச்சபையின் இயல்பை மறுத்துக்கூறுகின்றன; அன்பை

யும் பாழ்படுத்துகின்றன. இந்த இரண்டாம் தீமையின் ஒரு முக்கிய விளைவை யோவான் எடுத்துக்கூறுகிறார். கிறிஸ்தவர்களுடைய ஒருவருக்கொருவரளிக்கும் அன்பானது கிறிஸ்துவின் சீடர்களாக அவர்களை அடையாளம் காட்டுவதால், கிறிஸ்துவிற்கு திருச்சபை அளிக்கவேண்டிய சாட்சியமானது தடுக்கப்படுகிறது *(யோவா 13:35)*. கிழிக்கப்படாத தையலில்லாத அங்கியானது *(19:23-24)*, நமது பலியின் தலைமைக் குரு இயேசுவே, மற்றும் அவரது திருச்சபையானது பிளவுபடாதது என்பதற்கான அடையாளமாக இருக்கலாம். தம்மைப் பின்பற்றுபவர்கள் ஒன்றாக இருப்பதற்காகவும், அதன் மூலமாகத் தந்தையால் அனுப்பப்பட்ட ஒருவராலேயே அன்பினுடைய தோழமையானது தொடங்கப்பட்டது என்பதை உலகிற்குக் காட்டவும் *(17:21.23)*, அவர் தம்மையே பலியாக்கினார் *(17:19)*.

**சமயம் தழுவச்செய்தல்** *(PROSELYTIZE)*

சமய மனமாற்றமாகும். விவிலியவழக்கில், முதன்மையான பொருளில், இது ஒரு புறவினத்தவர் விருத்தசேதனம், மூழ்குதல் அல்லது திருமுழுக்கு, சிறப்பான பலிகளை ஒப்புக்கொடுத்தல், மோசேயின் சட்டத்தை ஏற்றுக்கொள்ளல் ஆகியவற்றுக்கு உட்பட்டு யூத சமயத்தை ஏற்றுக்கொள்வதை உணர்த்தியது. சமயம் தழுவியவர்கள் முழுவதும் மனந்திரும்பியவர்களாவர். இவர்கள் இஸ்ராயேலரின் இறைவனை வழிபட்டு, விருத்தசேதனத்திற்கு உட்படாத புறஇனத்தாராகிய ''இறைவனுக்கு அஞ்சுபவர்களிடமிருந்து'' வேறுபட்டவர்கள்.

எழுபது நூலில் பல காரணங்களுக்காக இஸ்ராயேலரிடையே நிலையாக இல்லாவிட்டாலும், தங்கள் குடியிருத்தலை நீடித்துக்கொண்ட அந்நியர்களைக் குறிக்கிறது இச்சொல். கைம்பெண்கள் மற்றும் அநாதைகள் ஆகியவரோடு சேர்த்து இவர்களுக்கும் மோசேயின் சட்டம் பாதுகாப்பு அளிக்கிறது *(லேவி 19:10; 23:22; உப 24:14.19-22; 27:19)*. இவர்கள் பலி ஒப்புக் கொடுக்க அனுமதிக்கப்பட்டனர். விருத்த சேதனம் பெற்றிருந்தால் இஸ்ராயேலரின் விழாக்களிலும் பங்கு பெறலாம் *(உப 16:11-14; யாத் 12:45-48)*. உடன்படிக்கை புதுப்பித்தலில் இஸ்ராயேலர் சபையோடு சேர்ந்து கொள்ளலாம் *(யோசு 8:33-35)*. இச்சொல் இஸ்ராயேல் அரசு பிளவுபட்ட காலத்திலிருந்து *(2 அர 5:15-19)* மதம்மாறியவர் என்ற பொருளைப் பெறத்தொடங்கியது எனலாம். அந்நிய நாடுகளைக் கைப்பற்றுதல், இஸ்ராயேலும் மற்ற மக்களும் தாங்கள் தங்கியிருந்த பகுதிகளை மாற்றிக் கொள்ளல் ஆகிய சமூகக் கலவையாலும் *(எஸ் 9-10;நெகே 13:23-27; எஸ்த 8:17)*, புரட்சிகளாலும் இம்மாற்றம் விளைந்தது. நாடு கடத்தப்படல், மீண்டும் குடியேறுதல் ஆகிய மாறிய சூழ்நிலைகள் எபிரேயச் சிந்தனையில் புதிய யாவும் அடக்கும் பொதுமைப்பண்பை ஊக்குவித்தது.

இஸ்ராயேலரின் விசுவாச அறிவைப் புறவினத்தாருக்கு அளிக்கச் செய்த ஒன்றித்த முயற்சிக்கு யூதர்கள் சிதறிப்போதல் ஓர் அடிப்படையாயிற்று *(மத் 23:15)*. இரண்டு ஏற்பாடுகளுக்கும் இடையிட்ட காலத்தில் சமயம் தழுவச்செய்தல் வெகுவாக வளர்ந்தது *(2 மக் 9:17)*. யூத மதத்தைத் தழுவியவர்கள் யூதர்கள் தங்கிய பதிகளில் எல்லா இடங்களிலும், எல்லாச் சமூக வகுப்பினரிடையேயும் காணப்பட்டனர். பரிசுத்த ஆவி திருச்சபையின்மேல் இறங்கிவந்த ஐம்பதாம் நாள் விழாவிற்கு வந்திருந்த திருயாத்திரீகர்களுள் யூதர்களும் யூத சமயத்தைத் தழுவியவர்களும் அடங்குவர் *(அ.ப.2:10)*. அப்போஸ்தலர்களுக்கு உதவி செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்ட எழுவரில் ஒருவர் சமயம் தழுவியவராவார் *(6:5)*. பிசிதியாவைச் சேர்ந்த அந்தியோக்கியாவிலும் மற்ற இடங்களிலும் பல யூத சமயம் தழுவியவர்கள் பவுலின் போதனையால் ஈர்க்கப்பெற்றனர் *(13:43)*. பவுல் கிறிஸ்தவராகுமுன், புறஇனத்தாருக்கு யூத சமயத்தைப் போதித்திருக்கலாம் *(கலா 5:11)*. கி.பி. முதல் நூற்றாண்டுக்குப்பின் யூத சமயத்தைத் தழுவிய புறஇனத்தவரின் எண்ணிக்கை குறைந்ததற்குக் கிறிஸ்துவ விசுவாசம் அவர்களுக்கு அளித்த ஈர்ப்பே முக்கிய காரணமாகும்.

**சமவெளி** (PLAIN, TABLELAND)

இதைக்குறிக்க நான்கு எபிரேயச் சொற்கள் பயன்பட்டுள்ளன. முதலில் சமவெளி என்பது பாபிலோனியாவில் யூப்பிரத்தீசு, திகிரிசு எனப்படும் இரு பெரும் ஆறுகளுக்கிடையே உள்ள சமவெளியைக் குறிக்கும் (*ஆதி 11:2;எசே 3:22-23; 8:4; தானி 3:1*). அதோடு ஓனோ சமவெளியையும் சாரோன் சமவெளியையும் குறிக்கலாம் (நெகே 6:2). சமவெளி என்பது கரடுமுரடான ஓர் நிலத்திற்கு (எசா *40:4*) எதிர்மாறான பசுமையான ஒரு சமதள நிலப்பகுதி (ஆமோ 1:5; 2 நாள் *34:22;* செக் *11:11;* லூக் *6:17*). எரிகோ (உப *34:3*), யோர்தான் ஆறு (*1 அர 7:46;* 2 நாள் *4:17*), எருசலேம் (*2 சாமு 18:23;* நெகே *3:22*) ஆகியவற்றை அடுத்த சமநிலப்பகுதியைக் குறிக்கவும் சமவெளி என்ற சொல் பயன்பட்டுள்ளது. இச்சொல்லின் மூல எபிரேயச் சொல் பள்ளத்தாக்கையும் குறிக்கலாம் (ஆதி *13:10; 19:17;....*).

யோர்தானுக்கு அப்பாலுள்ள அர்னோனுக்கும் எஸ்போனுக்கும் இடைப்பட்டு, சாக்கடலுக்குக் கிழக்கில் பெட்சேர், மேதபா ஆகிய நகர்களைச் சுற்றியுள்ள செழுமையான சமதளப்பகுதி சமவெளி என்று குறிக்கப்படுகிறது (உப் *3:10; 4:43;* யோசு *13:9.16-17.21*). இப்பகுதி ரூபன் கோத்திரத்துக்குக் கொடுக்கப்பட்டிருந்தாலும் அரசாட்சிக் காலத்தில், இது மோவாபியர்களுக்குச் சொந்தமாக இருந்தது (உப *4:43;* யோசு *20:8;* எரே *48:21-25*). இதன் புகழ்வாய்ந்த நகரங்களுள் (யோசு *13:15-21*), தீபோன், மேதபா ஆகியவை மோவாபியரின் சிறப்பு வாய்ந்த அரண்களாகும்.

**சமவெளிநகர்கள்** (CITIES OF THE VALLEY)

யோர்தான் பள்ளத்தாக்கிலும், சாக்கடல் பள்ளத்தாக்கிலும் அமைந்துள்ள சோதோம் கொமோரா, அதாமா, செபாயீம், சோவார் ஆகிய ஐந்து நகரங்களை இது குறிக்கும். சோவார் நீங்கலாக மற்ற நான்கு இடங்களும் தங்களது தீமைத்தனத்தின் பொருட்டு இறைவனால் அழிக்கப்பட்டன (ஆதி *19:24-29*). ஞான *10:6*-இல் இந்த நகரங்கள் ஐந்து நகரங்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளன. ஆதி *14:3.8.10* ஆகிய பகுதிகளில் இந்த ஐந்து நகரங்களும் சித்தீம் பள்ளத்தாக்கில் இருந்ததாகவும், அப்பகுதி இன்று சாக்கடலின் தெற்கே உள்ள கடலால் மூழ்கடிக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

**சமாதானப்பலி** (PEACE OFFERING)

இப்பலியின் சிறப்பு அங்கம் பலியின்பின் கடைப்பிடிக்கப்பட்ட பலியுணவாகும். பலிப்பொருள் ஆண் அல்லது பெண் விலங்காக இருக்கலாம். ஆனால் பழுதற்றதாக இருக்கவேண்டும் (லேவி *3:1.6*). இரத்தம் பலிபீடத்தின்மேலும் சுற்றிலும் தெளிக்கப்படவேண்டும் (*3:2.8.13*). கொழுப்புப்பகுதிகள் பீடத்தின்மேல் எரிக்கப்பட்டன (*3:3-5.9-11. 14-16*). வலது பின்தொடையும் நெஞ்சுக்கறியும் குருக்களுக்கு அளிக்கப்பட்டன (யாத் *29:27-28;* லேவி *7:31-36*). மீதி ஊன், பலியுணவில் பயன்படுத்தப்பட்டது. இவ்விருந்தில் பலிகொடுத்தவரின் குடும்பம் முழுவதும் அடிமைகளும் பங்கெடுத்தனர். ஏழ்மை மிக்க லேவியரும் இதில் பங்குபெற அழைக்கப் பெறுவர் (லேவி *3*).

இதைச் சமாதானப்பலி என்பதைவிட ஒன்றிப்புப்பலி என்றழைத்தல் சாலச்சிறந்தது. பலிகொடுப்பவர் தான் இறைவனின் அன்பன் என்று காட்ட விழைகிறார். இறைவனுக்கும் தனக்கும் உள்ள சமாதான உறவையும், ஒன்றிப்பையும் அன்பையும் வெளிக்காட்டவும் உறுதிப்படுத்தவும் இப்பலியை ஒப்புக்கொடுக்கிறார். இக்கருத்து பலியுணவில் முதன்மை பெறுகிறது. இதில் இறைவனே விருந்தளிப்பவர். பலிசெலுத்தியவர் விருந்தாளி ஆவார். விருந்து இருவருக்குமிடையேயுள்ள அன்பின் அடையாளமும் உறுதியுமாகிறது. இப்பலியுணவு மெசியா அரசில் மனுகுலத்திற்கு யாவே தயாரிப்பதாக அடிக்கடி வேதநூலில் கூறப்படும் உணவுக்கு எடுத்துக்காட்டாகும். இப்பலிச்சடங்கு மகிழ்ச்சி மிக்கதாகும். சமாதானப் பலியோடு தானியக்காணிக்கையும் எண்ணெய்க் காணிக்கையும் அளிக்கப்பட்டன (லேவி *7:12-14;*எண் *14:8-10*). நன்றிப்பலியும், நேர்ச்

சிப்பலியும், பொருத்தனைப்பலியும், சமாதானப்பலியின் சிறப்பு வடிவங்களாகும் (*லேவி 7:11-18*). இப்பலி குருக்கள் திருநிலைப்படுத்தப்பட்ட போதும் (*9:4.18.22*), விழா நாட்களிலும் (*23:19*), நாசீர் நேர்ச்சியைச் செய்யும்போதும் (*எண் 6:14.17*), சிறப்பான முறையில் நன்றி கூறவேண்டிய போதும் (*7:88; யோசு 8:31; நீதி 20:26; 21:4; 1 சாமு 11:15; 1 அர 8:63-64; எசே 43:27*) செலுத்தப்பட்டது.

**சமாதானம்** (PEACE)

காண்க. அமைதி.

**சமாதானம் செய்வோர், அமைதி ஏற்படுத்துவோர்** (PEACE MAKERS)

*மத் 5:9*-இல் குறிக்கப்படும் இவர்கள் முதன்மையாக மகிழ்ச்சியையும் நல்லெண்ணத்தையும் ஏற்படுத்துபவர்கள் அல்லர். எங்கே வெறுப்பும் பகைமையும் உள்ளதோ அங்கு, சமாதானத்தை ஏற்படுத்துபவர்கள். எங்கே பிளவும் பிரிவும் உள்ளதோ அங்கு ஒப்புரவை ஏற்படுத்துபவர்கள். இவர்கள் ''கடவுளின் மக்களாவர்''. இறைவன் தங்களுக்கு அளித்துள்ள சமாதானத்தைப் பகைப்பவர்களுக்குள் ஒன்றிப்பை ஏற்படுத்தப் பயன்படுத்துபவர்கள். இந்தச் சமாதானம் இறுதிக்காலஇயல் சமாதானமாகும். முன்னோக்காக இவர்களுக்குக் கிடைக்கிறது. இவர்கள் அளிக்கும் சமாதானம் கிறிஸ்து வழியாக அளிக்கும் ஒப்புரவே ஆகும். இதன் விலையோ அதிகமானது. இதன் நிபந்தனைகளை ஏற்க மறுப்பவர்களுக்குக் கிறிஸ்து சமாதானத்தை அன்று வாளையே கொண்டு வருகிறார்.

**சமாரிய நிலப்பரப்பு** (SAMARIA, TERRITORY OF)

பாலஸ்தீன நாட்டு மலைப்பகுதியில் ஒன்று சமாரியா. இது வட அரசாகிய இஸ்ராயேலின் தலைநகரை வைத்துப் பெயரிடப்பட்டது. இந்த நாட்டின் பரப்பு ஒவ்வொரு நூற்றாண்டும் மாறிக்கொண்டே இருந்ததால் எல்லையைச் சரியாகச் சொல்லமுடியாது. இருந்தாலும் பொதுவாகத் தெற்கே எரிகோவிலிருந்து அய்யலோன் பள்ளதாக்கு வரையும் மேற்கே கடற்கரைச் சமவெளியும், வடக்கே இசிரியேல் பள்ளத்தாக்கில் தென் முனையும், கிழக்கே யோர்தான் நதியும் கொண்டு உள்ளடங்கிய பகுதியைச் சமாரியா கொண்டுள்ளது. இந்தப் பகுதி வடக்கிலிருந்து தெற்கே 64 கி.மீட்டரும், கிழக்கிலிருந்து மேற்கே 56 கி.மீட்டரும் கொண்டது.

இதில் தெற்குப்பகுதி சிறிது உயர்ந்த பகுதியாக இருக்கிறது. கிழக்கிலும் மேற்கிலும் சிறிது தாழ்வாக உள்ளது. இங்குப் பள்ளத்தாக்குகள் இருப்பதால் வெளிநாடுகளிலிருந்து சிறிதுபிரிந்து தனியே இருப்பதுபோல் உள்ளது. நல்ல செம்மண் வகை மண்ணும் போதுமான மழையும் சேர்ந்து நிலத்தை வளப்படுத்துகிறது.

இப்பகுதியின் வடக்கில், ஒரு குழிவான பள்ளம் ஒன்று உண்டு. அது பல குன்றுகளைத் தன்னகத்தே கொண்டது. அதில் ஏபால் மலையும் (930 மீ.), கெரிசிம் மலையும் (873மீ) குறிப்பிடத்தக்கன. இப்பகுதி வேளாண்மைக்கு வளமுள்ள பகுதி. மரங்களும், திராட்சைக் கொடிகளும் மலைச்சரிவுப் பகுதியில் நடப்படும் (*எரே 31:5*). அந்தப் பகுதியில் அகலமான வழிகள் இருப்பதால், மற்றச் சமவெளிகளுக்குச் செல்வது அவ்வளவு கடினமாயிராது. வியாபாரம் இப்பகுதிக்கு வளர்ச்சியைக் கொடுத்தது. இது வடக்குப் பெனிசிய, அரமேயப் பண்பாடுகள் வர வாய்ப்பளித்தது. இவர்களுடைய சமய மற்றும் ஒழுக்கக் கூறுகளுக்கு எதிராகத் தான், இறைவாக்கினர்கள் எலியா, எலிசா, ஆமோஸ் மற்றும் ஓசே போன்றவர்கள் இறைவாக்கு உரைத்தார்கள் (*ஓசே 7:1; 8:5; ஆமோ 4:1*). இப்பகுதியின் வளமையும், திறந்த தன்மையும் பகைவரைப் படையெடுக்கத் தூண்டியது.

இப்பகுதியானது, 'சமாரியா நிலப்பகுதி' என்று அரசாட்சி இரண்டாகப் பிரிவதற்கு முன் சொல்லப்படவில்லை. இதன்படி முதலாம் எரொபவாம் காலத்தைச் சேர்ந்த *1 அர 13:32*-இல் வரும் 'சமாரியாவின் நகர்' என்

பது இடைச்செருகல் என்பது தெளிவாகிறது. இஸ்ராயேலின் வீழ்ச்சிக்குப்பின் *(கி.மு. 722-721)* அசீரியர்கள், பாபிலோன், கூத்தா, அவ்வா, ஆமாத்து, செபர்வாயிம் போன்ற இடங்களிலிருந்த கைதிகளைச் சமாரிய நகர்களில் குடியேற்றினர் *(2 அர 17:24-26)*. அசீரியர்கள் 7-ஆவது நூற்றாண்டு இறுதிவரை ஆண்டனர். அதன் பிறகுதான், யூதாவின் யோசியா *(640-609)* என்பவர் சமாரிய நகர்களின் முக்கிய பகுதிகளை அழிக்க முடிந்தது. இந்தப் பகுதி 612-இல் அசீரியரின் ஆட்சி முடிவுறும்போது, பாபிலோனியப் பகுதியாகியது.

587-இல் எருசலேமின் வீழ்ச்சிக்குப்பின், எருசலேம் உள்ளாக, யூதாவின் வடக்கு மலைப்பகுதிகள், சமாரிய மாகாணத்தில் சேர்க்கப்பட்டன. 539-இல் பாரசீகர்கள் பாபிலோனைக் கைப்பற்றியபோது, அவர்களது ஆட்சிப் பகுதியில் ஒன்றாக மாறியது. நாடு கடத்தப்பட்டுத் திரும்பியவர்களில், எருசலேம் கோவிலைத் திருப்பிக் கட்ட முயற்சித்தவர்களை இந்தப்பகுதி ஆளுநர்கள் தடுத்தார்கள் *(எஸ் 4:8-24; நெகே 2:9-20; 4:1-9; 6:14)*. ஆனால் நெகேமியாவின் வருகையினால், வடயூதாவின் மலைப்பகுதி ஒரு தனி மாகாணமானது. அதற்கு வடக்கில் சமாரியா அமைந்தது. எஸ்ரா-நெகேமிய காலத்தில் நிகழ்ந்த யூத-சமாரியர் பிளவுக்குப்பின் இப்பகுதி சமாரியரின் மையமாக விளங்கியது. பாரசீகரைக் கிரேக்க அலக்சாந்தர் தோற்கடித்தபின், இப்பகுதி ஒருவர்பின் ஒருவராக மாசிதோனியர், தோலமியர், செலூக்கியர் ஆகியோரால் ஆளப்பட்டது. கி.மு.111-107க்கு இடைப்பட்ட காலத்தில் மக்கபேய யோவான் கிரிக்கானுவால் சமாரியாவும் செக்கேமும் கைப்பற்றப்பட்டன. கெரிசிமிலுள்ள சமாரியர் ஆலயம் அழிக்கப்பட்டது. அதன்பின் இப்பகுதி புதிய யூதநாட்டில் இணைக்கப்பட்டது. கி.மு. 63-இல் உரோமையர்களின் கையில் சென்றது. கி.பி. 41-44 வரை முதலாம் ஏரோது அகிரிப்பா இப்பகுதியை ஆண்டார். இவர் இறந்தபிறகு, மீண்டும் பேரரசின் ஆளுநர்கள் ஆட்சி செய்தனர். இது சீரியா மாகாண மேற்பார்வையில் இருந்தது. கி.மு.30-இல் அகுஸ்துவால் பெரிய ஏரோதுக்குக் கொடுக்கப்பட்டது. இவர் தன் மகன் அர்க்கெலாவுக்குக் கொடுத்தார். இவர் கி.பி. 6-வரை ஆண்டார். இவர் பதவி இழந்தபின், இப்பகுதி கி.பி. 41வரை உரோமை ஆளுநர்களால் ஆட்சி செய்யப்பட்டது. இந்த ஆளுநர்களில் ஒருவர் போந்தியு பிலாத்து ஆவார். இந்தக்காலக் கட்டத்தில் தான் இயேசுவின் பணியும், சீடர்களின் பணியும் நடந்தது. இயேசுவும் அவருடைய சீடர்களும் யூத வழக்கப்படி, யூதேயாவுக்குப் பயணமாகும்போது சமாரியா எல்லையைச் சுற்றிச் சென்றிருக்கின்றனர் *(மத் 19:1, லூக் 17:11)*. ஆனால் ஒரு முறைதான் சமாரியா நாட்டு வழியாக என்று குறிப்பிடப்பட்டுள்ளது *(யோவா 4:4-9)*. உயிர்ப்புக்குப்பின், இயேசுவின் கட்டளைக்குப் பணிந்து, சீடர்கள் சமாரியாவிலும் மற்ற இடங்களிலும் சான்று பகர்ந்தனர் *(அ.ப. 1:8)*. பிலிப்பு, பேதுரு, யோவான் ஆகியோரின் போதனைகள் இந்தச் சமாரியப் பகுதியில் உள்ள திருச்சபையை உருவாக்கி உறுதிப்படுத்தின *(அ.ப. 8:1-25; 9:31; 15:3)*.

**சமாரியர்களின் ஐந்நூல்** (SAMARITAN PENTATEUCH)

சமாரியர்கள் தங்களுக்கென்று ஒரு தனி விவிலியத்தைப் பாதுகாத்துப் பயன்படுத்தி வருகின்றனர். இவ்விவிலியத்தில், நாம் பயன்படுத்தும் விவிலியத்தின் முதல் ஐந்து நூல்கள் மட்டும்தான் இடம் பெறுகின்றன. இது எபிரேய மொழியில் எழுதப்பட்டுள்ளது. ஆனால் நமது எபிரேய விவிலியத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நிறைய வேறுபாடுகள் இரண்டிற்குமிடையே காணப்படுகின்றன. இவ்வேறுபாடுகள், சமாரியர்களின் சற்று வேறுபட்ட கொள்கையால்தான் ஏற்பட்டிருக்க வேண்டும். அதாவது கடவுள் வாழுமிடம் கரிசிம் மலைதான், அதுதான் வழிபாட்டு மையம் *(உப 11:29-30; 12:5-14)* எருசலேம் அல்ல என்ற கொள்கைப் பிடிப்புடன் நின்றார்கள் சமாரியர்கள்.

ஆனால் இந்தச் சமாரியர்களின் ஐந்நூல், எழுபதுநூல் என்ற கிரேக்க மொழி பெயர்ப்பு, கும்ரான் குகைகளில் கண்டுபிடிக் கப்பட்ட விவிலிய ஏடுகள் ஆகியவற்றுடன் ஒத்துப் போகின்றன. ஒருபுறத்தில் எழுபது நூலுடன் ஒத்துப் போகின்ற இந்தச் சமாரியர் ஐந்நூல், எபிரேய விவிலியத்துடன் அதிக மாக வேறுபடுகிறது. இது எதைக் காட்டுகி றது என்றால், சமாரியர் ஐந்நூல் பின்பற்றிய சுவடிப் பாரம்பரியம் வேறு, மாசரேட் டிக்கு என்று அழைக்கப்படும் மரபுரையின ரின் எபிரேய வேதாகமம் பின்பற்றிய சுவ டிப் பாரம்பரியம் வேறாக விளங்கியிருக்கி றது. எனவே ஒரு காலத்தில் நிறைய எபிரேய விவிலியச் சுவடிகள் பழங்காலத்தில் உலாவி வந்தன என்பது தெளிவாகிறது. இவ்வாறு பல இடங்களில் பல கருத்துக் கோணங்களு டன் படிவம் செய்யப்பட்ட பல எபிரேய விவிலியங்கள் பழக்கத்தில் இருந்து வந்துள் ளன. இவைகளிடையில் மரபு முறையின ரின் விவிலியம் உயர்ந்து நின்று, பின் அத னையே பெரும்பாலானோர் பின்பற்றிய சூழ்நிலை உண்டாகியிருக்கிறது. ஆனால் சமாரியர் ஐந்நூல் வேறுபட்ட சுவடிப் பாரம் பரியத்தைப் பின்பற்றிப் படிவம் செய்யப் பட்டுள்ளது.

இந்தச் சமாரியர் ஐந்நூல் எப்போது தயாரிக் கப்பட்டது என்பதை, ஒரு முக்கியமான நிகழ்ச்சியின் காலத்தைக் கணித்துக் கூறமுடி யும். அதாவது எப்போது சமாரியா, தனி நாடாக யூதேயாவிலிருந்து பிரிந்தது அல்லது ஒதுக்கப்பட்டது என்பதுதான். இந்த யூதேயா, சமாரியா பிரிவினை கி.மு. 4ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று அறிஞர்கள் கருதினர். ஆனால் தற் போது இப்பிரிவினை கி.மு. 129-128-இல் யோவான் கிரிக்கான் கரிசிம் நகரைத் தாக்கி யதிலிருந்து உண்டாயிருக்க வேண்டும் என் பதைப் பலரும் ஏற்றுக் கொள்கின்றனர். நமக்குத் தற்போது கிடைக்கும் சமாரியர் ஐந்நூல் பழஞ் சுவடிகள் பெரும்பாலும் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டவை. அல் லது அதற்குப் பிந்திய காலங்களில் எழுதப் பட்டவை.

முதன்முதலாக இத்தகைய சமாரிய ஐந்நூ லின் பழஞ்சுவடிகளில் ஒன்று 1616-இல் கண்டு பிடிக்கப்பட்டது. இதனைப்பார்த்ததும், இது தான் ஐந்நூலுக்கே ஆதாரமாக விளங்கியிருக்க வேண்டுமெனப் பலரும் புகழ ஆரம்பித்த னர். ஆனால் 1815-இல் ஜெசெனியு என்பவர் மேற்கண்ட முடிவு சரியானதன்று என்று நிரூபித்துக் காண்பித்தார். 1915-இல் கால் என்பவர், பழைய ஏற்பாட்டுப் புத்தகங்கள் ஒன்றாகத் தொகுக்கப்படும் முன்பே, பல பழம் ஏடுகள் மக்களின் பழக்கத்தில் இருந்து வந்தன. எனவே இந்தச் சமாரியர் ஐந்நூல் மட்டும் ஆதாரமல்ல என்று கருத்துத் தெரி வித்தார்.

கும்ரானில் கண்டுபிடிக்கப்பட்ட ஓர் ஏடு இந்தச் சமாரியர் ஐந்நூலுடன் மிக ஒத்திருக்கி றது. இதில் யாத்திரை ஆகமத்தின் ஒருபகுதி எழுதப்பட்டுள்ளது. இக்கும்ரான் ஏடுகள் கி.மு. முதலாம் நூற்றாண்டில் எழுதப்பட்டி ருக்க வேண்டும் என்பது அறிஞர்களின் கணிப்பு. ஆகவே இந்தச் சமாரியர் ஐந்நூல் பழமையானது என்பதும், இது மிகவும் காலங்காலமாகக் கவனமுடன் படியெடுக் கப்பட்டிருக்கிறது என்பதும் தெளிவாகிறது.

அபிசா சுருள் என்ற பழம் ஏட்டின் புகைப் படத்தை ஆராய்ச்சி செய்தார்கள். இந்த அபிசா சுருளில் சமாரியர் ஐந்நூல் இடம் பெற்றிருக்கி றது. மேற்சொன்ன ஆராய்ச்சியின்படி, இவ் வேடு காலத்தால் முற்பட்டது என்பது தெரிய வருகிறது. ஆனால் இவ்வேடு உண் மையிலே தொன்மையானதுதானா என்று ஜெசெனியு போன்றவர்கள் கேள்விக்குறி எழுப்பினர். கால் என்ற அறிஞர் இச்சுருளில் பழையதும், கி.பி. 14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததும் கலந்திருக்கின்றன என்று கூறுகி றார்.

**சமாரியர்கள்** *(SAMARITANS)*

இப்பெயர் சமாரிய நாட்டில் வாழும் மக்களுக்குக் கொடுக்கப்பட்ட பெயராக இருந்தபோதிலும், இது சமய சம்பந்தப்பட் டது என்பது குறிப்பிடத்தக்கது. யூதர்கள் சமாரியர்களை யூத சமயத்திற்கு முரணான

கோட்பாட்டை உடையவர் எனவும், இஸ்ராயேலின் இறைவனுக்குப் போலியான வழிபாடு செலுத்தும் பிரிவினைக்காரர்கள் எனவும் கருதி ஒதுக்கினர். பிறமதத்தினரைவிட இவர்களை அதிகமாக வெறுத்தனர். இப்பிரிவு இஸ்ராயேலரின் தொடக்ககால வரலாறிலிருந்தே தொடங்கியது எனலாம். இது யூதாவும் இஸ்ராயேலும் ஒன்றிணைந்து ஒரு போதும் இருந்ததில்லை என்ற உண்மையைப் பிரதிபலிக்கிறது. யூதாவுக்கும் மற்றக் கோத்திரங்களுக்கும் இடையேயுள்ள அரசியல் மற்றும் சமயப்பிளவுகள் தாவீது, சாலமோன் ஆகியோரின் காலத்திற்கு முன்னரே தொடங்கிய ஒன்றாகும். முதலாம் எரொபவாம் ஆட்சிக்குப்பின்னரும் அப்பிரிவு தொடர்ந்தது. சைரசு மன்னனின் சாசனத்திற்குப்பின் தாயகம் திரும்பிய யூதர்கள் சமாரியாவிலே வாழ்ந்தவர்களை உண்மை இஸ்ராயேலர்களாக ஏற்றுக் கொள்ளவில்லை. இம்மக்கள் கி.மு. 8-ஆம் நூற்றாண்டுக்குமுன் குடியேறிய புறவின மக்களும், யூதர்களும் சேர்ந்த கலப்பினத்தைச் சார்ந்தவர்கள். வெளிநாட்டிலிருந்து வந்த மக்கள் தங்கள் தெய்வவழிபாட்டை இங்கே புகுத்தினர் (2 அர 17). ஆனால் இந்தச் சமயக் கொள்கைகள் சமாரியாவில் நிலைபெறவில்லை. அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்த இஸ்ராயேலர் செருபாபேல், ஏசுவா ஆகியோரின் தலைமையில் ஆலயம் கட்டத் தொடங்கியபோது சமாரியர்கள் தாங்களும் அதில் சேர விருப்பம் தெரிவித்தனர். ஆனால் மற்றவர் அதை நிராகரிக்கவே ஆலய வேலைக்குச் சமாரியர்கள் பலவிதங்களில் இடையூறாக இருந்தனர் (எஸ் 4:1-6). நகரச் சுவர்கள் கட்டப்படத் தொடங்கியபோது சமாரியர்கள் பாரசீக அரசனிடம் சுவர் எழுப்புவது, அவ்வரசுக்கு எதிரான கிளர்ச்சியாகும் என்று முறையிட்டனர். ஆகவே நெகேமியா ஆளுநராக வரும் வரை கட்டுமானப்பணிகள் நிறுத்தப்பட்டன (எஸ் 4:7:24). மேலும் அவர்கள் நெகேமியாவைப் பயமுறுத்தவும், கேலிசெய்யவும், அவரைக் கொல்லவும் துணிந்தனர் (நெகே 4:6-13). ஆனால் அவர்தம் முயற்சி பலிக்கவில்லை. யூதர், சமாரியர் பிரிவு சிறுகச் சிறுகப் பெருகித் திருத்த முடியாததாயிற்று. நெகேமியாவுக்கும் மக்கபேயர் காலத்திற்கும் இடையில், சமாரியர்கள் கெரிசிம் மலையில் கோயில் கட்டியவுடன் இரு பிரிவினருக்குமிடையேயுள்ள பிளவு முழுமையாயிற்று. மக்கபேயர் போர்களிலே சமாரியர்கள் செலூக்கியப் படைகளுடன் கூட்டுச் சேர்ந்தனர் (1 மக் 3:10). செலூக்கிய மன்னர்கள் யூதர்களைத் தோற்கடிக்கத் தவறி சமாரியாவின் ஒருபகுதியை யூதர்களுக்கு அளித்தனர் (1 மக் 10:30.38;11:28.34). கி.மு. 108-இல் யோவான் கிரிக்கான் சமாரியக் கோயிலை அழித்து அந்தப் பகுதியையும் கொள்ளை அடித்தார். யோசிப்பசின் கூற்றுப்படி ஒரு சமாரியர் குழு, கொப்போனியசின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 6-9), இறந்தவர்களின் எலும்புகளைப் புனிதத் தலத்தில் பரப்பி, எருசலேம் ஆலயத்தைப் பங்கப்படுத்தினர். கி.பி. 35-இல் ஒரு மெசியா இறைவாக்கினர் தலைமையில் நடந்த ஒரு சமாரிய சமய ஊர்வலத்தைப் பிலாத்து தாக்கினார். சமாரியர்களின் முறையீடு பிலாத்து பதவி இழக்கக் காரணமாயிற்று. கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் சமாரியர் செழித்து விளங்கியதாகத் தெரிகிறது. நாளடைவில் கிரேக்கப் பண்பாடு இவர்களிடையே புகுந்து வேரூன்றத் தொடங்கியது. இன்னும் இப்பிரிவினரைச் சேர்ந்த 350-க்கும் மேற்பட்டவர்கள் நபுலுஸ் என்ற இடத்தில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் கொண்டாடும் பாஸ்கா விழா ஒரு தனிச் சிறப்புடையது. இவர்கள் தங்களது வழிபாட்டுச் சுதந்தரத்தைக் காத்து வந்துள்ளனர். இந்நாள்வரை தங்களது பழக்க வழக்கங்களைக் காத்து வந்திருக்கின்றனர்.

சமாரியர்களது சமயக் கோட்பாடுகளைப் பற்றித் திட்டவட்டமாகக் கூறுவதற்கு ஒன்றும் தெளிவாக இல்லை. யூதர்களைப் போலவே இவர்களும் ஒரே இறைவனை விசுவாசித்தனர். மோசே இறைவனின் இறைவாக்கினர் ஆவார். அவர் அளித்த வேதநூலின் முதல் ஐந்து நூல்களையும் அதிகாரப்பூர்வமானதாக ஏற்றுக் கொண்டனர். சட்டத்தை விளக்குவதற்குப் பரிசேயரைப் போல் பாரம்பரியப் போதகத்தைக் கையாண்டனர். பெரியகுரு ஏலியின் காலத்தி

விருந்து இறைவனின் மக்கள் இறைவனது சினத்திற்குட்பட்டனர்; அவர்களது பாவத்தி னிமித்தம் இறைவன் தமது முகத்தை அவர்க ளிடமிருந்து திருப்பிக் கொண்டார் என்று நம்பினர். ஆனால் ஒருகாலத்தில் ''வரவிருப் பவர்'' அல்லது ''சீர்படுத்துபவர்'' என்று பொருள்படும் ''தாகேபு'' என்ற மோசே யைப் போன்ற மெசியா அல்லது தூதர் வந்து, இந்நிலையை மாற்றி யாவற்றையும் சரிப்படுத்துவார் என்று விசுவசித்தனர். மெசியாவைப் பற்றிய இந்தத் தெளிவில் லாத கருத்தைச் சமாரியர்கள் கொண்டிருந்த னர் என நற்செய்தியிலிருந்து அறிகிறோம் (யோவா 4:25).

நற்செய்திக்காலத்திலும் யூதர்களுக்கும், சமாரியர்களுக்கும் இடையே பகைமை தொடர்ந்து இருந்தது என அறிகிறோம். ஒரு சமயம் ஒரு சமாரியச் சிற்றூர் இயேசுவை வரவேற்க மறுத்துவிட்டது (லூக் 9:5 2 தொ). பிறர் அன்புக்கு மாதிரியாக ஒரு சமாரிய னைக் காட்டுகிறார் இயேசு (10:33 தொ). குணமடைந்த பத்துத் தொழுநோயாளிகளில் ஒருவர் நன்றிகூற வந்தார். வந்த ஒருவரும் சமாரியர் ஆவார் (17:16). யோவான் எழுதிய நற்செய்தியின் 4-ஆம் அதிகாரத்தில் இயேசு ஒரு சமாரியப் பெண்ணை மனந்திருப்பிய நிகழ்ச்சியுரையை வாசிக்கிறோம். இயே சுவை அப்பெண் வாழ்ந்த கிராமத்து மக்கள் வரவேற்றாலும், அந்நிகழ்ச்சியுரை யூதர்க ளுக்கும் சமாரியர்களுக்குமிடையே நிலவிய பகையுணர்ச்சியைத் தெளிவாகப் பிரதிபலிக் கிறது (யோவா 4). சமாரியர்கள் எருசலே முக்கு யாத்திரையாகச் செல்லும் யூதர்களைத் தாக்கி வழிப்பறி செய்ததாக வரலாற்று ஆசி ரியர் யோசிப்பசு குறிப்பிடுகின்றார்.

### சமாரியா (SAMARIA)

இது வட அரசாகிய இஸ்ராயேலில் அமைந்திருந்த அரச நகரமாகும். நபுலுசுக்கு வடமேற்கில் 11 கிலோமீட்டர் தொலைவி லுள்ள இக்காலச் செபாஸ்தியே இருக்கும் இடத்தில் இந்நகர் இருந்திருக்கலாம். இந்த இடமானது ஓம்ரி மன்னனால் செமேர் என்ப வரிடமிருந்து 2 தாலந்து வெள்ளிக்கு வாங் கப்பட்டது. ஓம்ரி மலையின்மேல் ஒரு நக ரைக் கட்டி மலையின் உரிமையாளன் செமே ரின் பெயரின்படியே அதற்குச் சமாரியா எனப் பெயரிட்டார் (1 அர 16:24). இந்நகர் சுற்றிலும் செங்குத்தான மலைமீது அமைந்தி ருந்தது. வடக்கு, கிழக்குப் பகுதிகளில் மலைகள் சூழ்ந்த இந்நகரின் தெற்கில் எருச லேம் தென்படும். இறைவாக்கினர் எசாயா இந்நகரைக் குடிவெறியரின் மாண்புமிகு மணி முடி என்றும், அதன் மேன்மைமிகு எழிலின் வாடிப்போகும் மலர் என்றும், செழிப்பான பள்ளத்தாக்கில் அது அமைந்துள்ளது என் றும் கூறுகின்றார் (எசா 28:1-4). இந்நகர் ஓர் இஸ்ராயேலின் அரச இருப்பிடமென அரசர் ஆகமங்கள் கூறுகின்றன (1 அர 17—2 அர 17). ஆகாபு அரசர் காலத்திலே இந்நகரானது சீரியாவின் அரசன் பென்-அதாது என்பவ ரால் முற்றுகையிடப்பட்டது. எதிரிகள் எதிர்த்தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் புறமுதுகு காட்டி ஓடினர் (1 அர 20:1-21). எலிசா இறைவாக்கினர் பற்றிய ஒரு கதை எவ்வாறு அவர் நகரைத்தாக்கிய அரமேயர்க ளைத் தற்காலிகமாகக் குருடாக்கி அவர் களை நகருக்குள் நடத்திச் சென்றார் என்று கூறுகிறது (2 அர 6:19-23). பென்-அதாதின் மற்றொரு முற்றுகையிடல் பெயர் குறிப்பி டப்படாத இஸ்ராயேல் அரசன் காலத்தில் நடந்ததாகக் கூறப்படுகிறது (6:19-23). ஏகூ இந்நகரிலே அரச வம்சத்தினரையும் பாகால் வழிபாட்டினரையும் கொன்று குவித்தார் (2 அர 10). ஓசேயா அரசன் அசீரிய அரசுக்கு எதிராக எழுந்தபோது, அசீரியா சமாரி யாவை முற்றுகையிட்டது; பின்னர் ஆக்கிர மித்தது (கி.மு. 724-721). 5-ஆம் சல்மனேச ரால் தொடங்கப்பட்ட முற்றுகை சார்கோ னால் முற்றுப்பெற்றது. சார்கோன் இஸ்ரா யேலரை நாடு கடத்தி, மற்ற இடங்களிலி ருந்து மக்கள் சமாரியாவில் குடியேறச் செய் தார் (2 அர 17). இம்மக்கள் யாவே வழிபாட் டைத் தங்கள் சொந்தக் கடவுள் வழிபாட்டு டன் இணைத்துக் கொண்டனர். எசேக்கியா சமய மறுமலர்ச்சியைச் சமாரியாவில் ஏற்ப டுத்த முயற்சி செய்தார் (2 நாள் 30:1-11). மேலும் யோசியா அரசனின் சமய மறு மலர்ச்சி இந்நகருக்கும் எட்டியிருக்க வேண்

டும். மேலும் அவர் இப்பகுதியைத் தனதரசு டன் இணைத்துக் கொள்ளவும் முயற்சி செய் தார் (2 அர 23:19).

எட்டாம் நூற்றாண்டு இறைவாக்கினர்கள் இந்நகரைப் பகையுணர்ச்சியுடன் அடிக்கடி குறிப்பிடுகின்றனர். எசாயா இறைவாக்கினர் இந்நகரை எப்பிராயிமுக்குத் தலைநகரம் என்றும் (எசா 7:9), அதற்கு அழிவு ஏற்படப் போகிறது என்றும் அச்சுறுத்துகின்றார் (8:4;28:1-4). ஆமோஸ் இந்நகரில் குழப்பத் தையும் கொடுமையையும் காண்கிறார் (ஆமோ 3:9); அழிவு வரும் என அச்சுறுத்து கிறார் (3:12;6:1). ஓசேயா சமாரியாவின் தீச் செயல்களைக் குறிப்பிடுகின்றார் (ஓசே 7:1;8:5 தொ;10:5.7;14:1).

மீக்கா சமாரியாவை இஸ்ராயேலின் பாவம் என்றழைக்கிறார்; அது முழுவதும் அழிக்கப்படும் என்று அச்சுறுத்துகிறார் (மீக் 1:5-7). பிற்காலத்தில், அசீரிய அரசர்கள் ஏசர்கத்தோன், ஒசினப்பார் ஆகியோர் புற வினத்தாரைச் சமாரியாப் பகுதியில் குடியேற்றி னர் (எஸ் 4:2-10). மேலும் இந்நகர் பல ஆண்டுகளுக்குப் பாரசீக அரசில் மாவட்ட ஆட்சியகமாகத் திகழ்ந்தது. எலெபன்டைன் யூதர்கள், கி.மு. 408-இல் தங்கள் ஆலயம் அழிக்கப்பட்டபின் உதவிகேட்டு, சமாரியா வுக்கும் எருசலேமுக்கும் எழுதினர். அலக் சாந்தரின் படையெடுப்பிற்குப்பின், இந்நகர் கிரேக்க மயமாக்கப்பட்டது. விவிலியத்தின் மீதிக் காலம் முழுவதும் அப்படியே திகழ்ந் தது. இந்நகர் கி.மு. 108-இல் யோவான் கிரிக்கானால் அழிக்கப்பட்டது. பாம்பே, கபினியு ஆகியோரால் மீண்டும் கட்டப்பட் டது. இந்த இடத்தில் ஏரோது பகட்டான, அழகுவாய்ந்த ஒரு நகரை எழுப்பி, அங்கு 6000 உரோமை ஓய்வுபெற்ற வீரர்களைக் குடியேற்றி, அதற்குச் செபாஸ்தே என்று பெயரிட்டார். இப்பகுதி சீரியா மாகாணத்தி லிருந்து பிரிக்கப்பட்டு, ஏரோது மற்றும் அர்க்கெலாவின் ஆட்சிக்குள் சேர்க்கப்பட் டது. அர்க்கெலா பதவி நீக்கம் செய்யப்பட்ட பின், முதலாம் அகிரிப்பாவின் குறுகிய காலத்தைத்தவிர (கி.பி. 41-44), யூதேயாவின் ஆளுநரால் ஆட்சி செய்யப்பட்டது.

நற்செய்தியில் சமாரியா லூக் 17:11-இல் குறிக்கப்படுகிறது. இயேசு கலிலேயாவி லிருந்து எருசலேமுக்குச் செல்லுகையில் சமா ரியா வழியாகச் செல்கிறார் (யோவா 4:4-7). யூதேயாவுக்குப் புறம்பே, அப்போஸ்தலர் கள் இயேசுவுக்குச் சான்று பகரும் முதல் இடமாகச் சமாரியா அ.ப.1:8-இல் குறிக்கப் படுகிறது. ஸ்தேவான் கொலைக்குப்பிறகு இயேசுவின் நற்செய்தி சமாரியாப் பகுதியில் பரவியது (அ.ப.8:1-25;9:31;15:3).

**சமையற்கட்டு (KITCHEN)**

எசேக்கியேல் கண்ட காட்சியில் காட்டப் படும் கோவிலில் வெளிமுற்ற மூலையில் அமைந்தது சமையற்கட்டு. பொதுமக்கள் இடும் பலமிருகங்களின் இறைச்சி சமையல் செய்யப்படும் இடம் இதுவே (எசே 46:21-24). குற்ற நீக்கப்பலி, பாவநீக்கப்பலி, சாதாரண உணவுக்காணிக்கைகள் ஆகியவை குருக்களுக்குரிய அறைகளுக்கு மேற்கு ஓரத் தில் இருந்த சமையற்கட்டில் சமைக்கப்பட் டன (46:19-20). இவ்வாறு இவற்றை அவர் கள் வெளிமுற்றத்திற்குக் கொண்டுபோவ தன் மூலம், இவற்றின் தூய்மை தூய்மையற் றவர்களில் தொடர்பால் கெடுவது காப்பாற் றப்பட்டது.

**சமொத்திராக்கு (SAMOTHRACE)**

இது ஏகியன் கடலுக்கு வடகிழக்கிலுள்ள ஒரு தீவு. இதன் வழியாக அப்போஸ்தலரான பவுல் தம் பணிப் பயணங்கள் செய்திருக்கி றார்.

இந்தத் தீவிலே சாமியார்கள் கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் குடியேறி இருக்கலாம் எனத் தெரிகிறது. அவர்கள் அங்கே திராக்கு மக்க ளைக் கண்டதால் ''திராக்குசமொ'' என்று பெயரிட்டிருக்கலாம். 'இந்தத் தீவு புதிய கற்காலத்தைச் சார்ந்தது' என்று புதை பொருள் ஆதாரங்கள் வழியாகத் தெரிகிறது. கிரேக்கர்களின் காலத்தில் கடற்படைக்குத் தகுந்த இடமாக இருந்தது. மேலும் சமய

வளர்ச்சிக்கு முக்கியமான இடமாகவும் இருந்திருக்கிறது. இங்கே, பெரும் தெய்வங்களின் வழிபாட்டிடம் இருப்பது புதைபொருள் ஆராய்ச்சியின் விளைவாகத் தெரியவந்துள்ளது. அங்கே சிறப்பு வழிபாட்டுக்காகப் பல திருப்பயணிகள் சிறிய ஆசியாவிலிருந்தும், கிரீசிலிருந்தும் வருவார்கள்.

அப்போஸ்தலரான பவுல் நெயாப்பொலிக்குப் போகும் வழியில், தென் கடற்கரையிலுள்ள ஒரு சிறிய துறைமுகத்துக்கு அருகிலே அமைந்துள்ள ஒரு பழைய நகருக்குச் சென்றார் (அ.ப. 16:11). துரோவாவுக்குத் திரும்பும்போதும் அவர் அங்குச் சென்றிருக்கலாம் (20:6).

1938-இல் இந்தத் துறைமுகத்து முனையில் ஒரு தொடக்ககாலக் கிறிஸ்துவ ஆலயம் சீர்குலைந்த நிலையில் கண்டுபிடிக்கப்பட்டது. இது பவுல் இங்குக் கரையிறங்கிய நிகழ்ச்சியை நினைவு கூறலாம்.

**சம்கார்** (SHAMGAR - சிமிக்கே கடவுள் கொடுத்தார்)

இவர் அனாத்தின் மகன். இவர் காலத்தில் பாதைகள் ஆள் நடமாட்டமின்றிக் கிடந்தன. ஏனென்றால் கொள்ளையடிப்பது மிகுதியாய் இருந்தது (நீதி 5:6). மேலும் சம்கார், பெலிஸ்தியரில் அறுநூறு பேர்களைக் கலப்பைக் கொழுவால் கொன்று இஸ்ராயேலுக்கு விடுதலை அளித்தார் (நீதி 3:31).

சம்கார் பெலிஸ்தியர்களை வென்றது சிம்சோன் கழுதைத் தாடையை வைத்துக் கொண்டு ஆயிரம் பிலிஸ்தியர்களைக் கொன்றதற்கும் (நீதி 15:14-16) ஆகேயின் மகன் சம்மா வயலைக் காப்பாற்றிப் பெலிஸ்தியர்களைத் தோற்கடித்ததற்கும் (2 சாமு: 23:11-12) ஒப்ப இருக்கிறது.

சம்கார் ஒரு நீதிபதியாக அழைக்கப்படவில்லை. ஆனால் இவர் இஸ்ராயேலர்களைக் காப்பாற்றும் பொருட்டுப் பெலிஸ்தியர்களோடு போரிடுவதில் உதவி செய்யும் ஒரு கானானிய இளவரசர் போல் தோன்றுகிறார். நீதி 5:6-இன் படி பார்த்தால் இவர் இஸ்ராயேலுக்கு எதிராக இருக்க வாய்ப்பு இருக்கிறது.

**சம்கார் நெபோ** (SAMGAR - NEBO)

இது பிற்காலப் பாபிலோனிய இளவரசனின் பெயராக அல்லது பட்டமாக இருக்கலாம். இவர் கி.மு. 588-586-இல் எருசலேம் முற்றுகையில் பங்கெடுத்தார் (எரே 39:3). இந்த வாசகம் மூன்று இளவரசர்களைக் குறிப்பிடுகிறது; நான்கு பேர்களை அல்ல. முதலாமவர் சம்கார் என்ற நேர்கால்-சரேத்சர், இரண்டாமவர் இரபிசாரி என்ற நெபோ-செர்செக்கிம். இந்த இரண்டும் பாபிலோனியப் பெயர்களின் எபிரேய மொழிச் சிதைவுகள்தான்.

**சம்சராய்** (SHAMSHERAI - சூரியன் போன்ற)

இவர் பென்யமின் குலத்தினர். எரொகாமுக்கு முதல் மகனாகப் பிறந்தவர் (1 நாள் 8:26).

**சம்சும்மிம், சம்சும்மியர்** (ZAMZUMMIM - பிதற்றல்)

அம்மோனியர்கள் யோர்தானுக்கு அப்பால் உள்ள பகுதியில் குடியேறுவதற்கு முன்பு அங்கு வாழ்ந்த மக்களை அவமதிப்புக்குரிய இப்பெயர் கொண்டு அழைத்தனர். இதற்குக் கொடுக்கப்பட்டுள்ள பெயர் விளக்கங்கள் ஒன்றுகூடத் திருப்திகரமானதாக இல்லை. ஆதி 14:5-இல் உள்ள ஓசிம் என்பதும் இதுவும் ஒன்று என்று சொல்வதை நிரூபிக்கமுடியாது.

சம்சும்மியர் என்பவர்கள் இரபாயிம் என்ற குலத்தைச் சேர்ந்தவர்களென்றும், கி.மு. 2000-ஐ ஒட்டி, கிழ்த்திசை அரசர்களிடம் (ஆதி 14:5) தோற்றார்கள் என்றும் உபாகம வரலாற்று ஆசிரியர் கூறுகின்றார் (உப 2:20-21). இவர்கள் யோர்தானுக்கு அப்பால் தொடர்ந்து வாழ ஆரம்பித்தார்கள்; அம்மோனியர்கள் இங்குக் குடியேறியபொழுது இவர்களை வெளியேற்றவேண்டியதாயிற்று. அம்மோனியர்கள் தங்கள் முன்னோடிகளைப் பற்றி நல்ல எண்ணம் கொண்டிருந்தனர். ஏனென்றால் உப 3:11-இல் ''அரக்க

வம்சத்தாருக்குள்ளேயே பாசான் அரசனாகிய ஓகு என்பவனின்'' படுக்கைத் தலைநகரமான இரபாவில் இருந்தது. இவர்கள் ஓகுவை ஒரு கதைத்தலைவனாகக் கொண்டாடியதாகத் தெரிகிறது.

**சம்பிசாம்** (SAMPSAMES)

உரோமை வெளியுறவு மேலாளர் லூக்கியு என்பவர் யூதர்களுக்கு ஆதரவாகப் பல இடங்களுக்குக் கடிதம் எழுதினார். அதில் ஓரிடம் சம்பிசாம் என்பதாகும். இது கருங்கடலில் உள்ள துறைமுகமாக இருக்கலாம். இப்போது ''சம்சூன்'' என்றழைக்கப்படுகிறது.

**சம்மா** (SHAMMA - பாழ்பட்ட)

ஆசேர் கோத்திரத்தில், சோபாகுவின் எட்டாவது மகனாகச் சம்மா பிறந்தார் (1 நாள் 7:37).

**சம்மாகு** (SHAMMAH - பாழ்படுதல், வீணாகுதல்)

1. ஏதோமியத் தலைவர். இவரது தந்தையான இரகுவேல், ஏசாவுக்கும் இசுமயேலின் மகளான பாசமத்துக்கும் பிறந்தவர் (ஆதி 36:13.17; 1 நாள் 1:37).

2. சம்மாகு பெத்லகேமைச் சேர்ந்த ஈசாயின் மூன்றாவது மகன். இவர் அம்மோனுக்கும் பெலிஸ்திய அரக்கனைக்கொன்ற யோனத்தானுக்கும் ( 2 சாமு 21:21; 1 நாள் 20:7) ஐயுறவான நண்பனாக இருந்த சூழ்ச்சிமிக்க யோனதாபுக்குத் தந்தை (2 சாமு 13:3.32). சாமுவேல் ஈசாயின் புதல்வர்களில் ஒருவனை இஸ்ராயேலுக்கு அரசனாக அபிடேகம் செய்தபோது, சம்மாகு அங்கிருந்தார். ''இவரை ஆண்டவர் தேர்ந்து கொள்ளவில்லை'' என்று இறைவாக்கினர் சொல்லிவிட்டார் (1 சாமு 16:9). மேலும் பெலிஸ்தியப் படையெடுப்பின்போது சவுலின் படையில் சம்மாகு, மற்ற இரு மூத்த சகோதரர்களோடு இருந்தார். இவர் தனது இளைய சகோதரரின் கைகளினால் ஏற்பட்ட அரக்கரின் தோல்வியைப் பார்த்தார் (1 சாமு 17:13 தொ).

3. இவர் ஓர் ஆராரியர்; ஆகேயின் மகன்; தாவீதின் மூன்று உயர் அதிகாரிகளில் ஒருவராக உயர்த்தப்பெறத் தகுதி பெற்றவர். இவரது வீரத்தை விளக்க ஓர் எடுத்துக்காட்டுத் தரலாம். இவர் ஒருவரே தனித்துநின்று பயறு வயலைக் காப்பாற்றிப் பெலிஸ்தியர்களைத் தோற்கடித்தார் (2 சாமு 23:11-12; 1 நாள் 11:12-14). இவரது மகன் யோனத்தான், தாவீதின் முப்பது வீரர்களில் ஒருவராக இருந்தார் (2 சாமு 23:32; 1 நாள் 11:34).

4. கரோதியரான (அரோத்தியர்) சம்மாகு தாவீதின் முப்பது ஆற்றல்மிக்க வீரர்களில் ஒருவர் (2 சாமு 23:25). இவர் தாவீதின் 24000 போர் வீரர்களுக்குத் தலைவனாக இருந்தார். இது ஐந்தாம் மாதத்தில் பணிபுரிந்தது ஆகும் (1 நாள் 27:8). இவரது பெயர் கரோதியரான சம்மோத்து என்றும் (1 நாள் 11:27), இசுராகியரான சங்கூத்து என்றும் (11:8) குறிப்பிடப்பட்டுள்ளது.

**சம்மாய்** (SHAMMAI - யாவே கேட்டருளினார்)

1. இவர் யூதா குலத்து எரகுமவேல் வழிவந்தவர் (1 நாள் 2:28.32). ஓனாம் என்பவரின் மகன் நதாபு, அபிசூர் என்பவர்களின் தந்தை யாதாவின் சகோதரர்.

2. யூதா குலத்தைச் சேர்ந்த காலேபின் வழியில் பிறந்தவர் (1 நாள் 24:44-45). இரக்கேமின் மகன். மாவோனுக்குத் தந்தை.

3. யூதா குலத்தில் பிறந்தவர் இவர் எகிப்திய மனைவி பித்தியாவின் மூலம் மெரேதுக்குப் பிறந்தவர் (1 நாள் 4:17).

**சம்மூவா** (SHAMMUVA - பெயர்பெற்ற)

1. தாவீதின் புதல்வர்களில் ஒருவர். இவர் தாவீதுக்கு, எருசலேமிலிருந்த வைப்பாட்டியின் மூலம் (அல்லது மனைவியின் மூலம்) பிறந்தார். தாவீது தனது தலைநகரை எருசலேமுக்குக் கொண்டு சென்றபோது தனது அதிகாரத்தின் அறிகுறியாக அந்தப்புரத்தைப் பெரிதாக்கினார். சம்மூவாவும், 1 நாள் 3:5-இல் குறிக்கப்பட்டிருக்கும் சிமயாவும் ஒருவர்தாம்.

2. இவர் ரூபன் கோத்திரத்துச் சக்கூரின் புதல்வராவார் (எண் 13:4). இவர் மோசே கட்டளைப்படி, பாரான் பாலைவனத்தி

லிருந்து கானானை உளவு அறிய அனுப்பப் பட்ட பன்னிருவரில் ஒருவர். இது கானான் தேசத்தை இஸ்ராயேலர்கள் பிடிக்குமுன் நடந்தது.

*3.* சம்மூவா ஒருலேவியர்; அபீதாவுக்குத் தந்தை;. கலாலின் மகன். இவர் *1* நாள் *9:16*-இல் செமாயா என்று அழைக்கப்படு வார்.

*4.* இவர் ஒரு குரு; பில்காவின் மகன்; ஒரு குருகுலத்திற்குத் தலைவராக இருந்தார் (நெகே *12:18*). இவரும் *3*-இல் குறிப்பிடப் பட்டவரும் ஒரே ஆளாக இருக்க வாய்ப்பு உண்டு.

**சம்மோத்து** (SHAMMOTH - அழிவு, பாழாகு தல்)

இவர் ஒரு கரோதியர் (அரோதியர்); தாவீ தின் முப்பது ஆற்றல்மிக்க வீரர்களில் ஒருவர் (*1* நாள் *11:27*). இதற்கு இணையான பெயர்ப் பட்டியலில், கரோதியரான (அரோது) சம்மா என்றிருக்கிறது (*2* சாமு *23:25*). இது சரியாக இருக்கும் எனக் கருதப்படுகிறது. *1* நாள் *11:27*-இல் வரும் 'அரோரியன்' தவறா கத் தோன்றுகிறது.

**சம்லா** (SHAMLAH - ஆடை)

இவர் இஸ்ராயேலர்களை எந்த அரசனும் ஆள்வதற்குமுன் ஏதோமின் ஐந்தாவது மன் னனாக இருந்தார். இவருக்குச் சொந்த ஊர் மசுரேக்கவாகும். (ஆதி *36:36-37*; *1* நாள் *1:47-48*).

**சம்லாய்** (SHAMLAI)

சல்மாய் என்ற பெயரின் மற்றொரு வடி வம் (எஸ் *2:46*). காண்க *சல்மாய்*.

**சரடு** (BUCKLE)

வெளி ஆடையை இறுக்கிக் கட்டுவதற் குப் பயன்படுத்தப்பட்ட ஒரு கொக்கி. இது உள் ளாடைமேல் அமைந்திருக்கும்; தோள்பட் டையோடு இணைக்கப்பட்டிருக்கும். பொதுவாக, மத்தியதரைக் கடல் நாடுகளில் கிரேக்க-உரோமைக் காலங்களில் திற மைக்கு, தகுதிக்கு அடையாளமாக ஆடை ஊக்கு பரிசாக வழங்கப்பட்டது. உரோமை யின் கிழக்கத்திய பகுதியில் தங்கத்தால் செய் யப்பட்ட பொன்சரடுகள் பரிசாக வழங்கப் பட்டன. இது அரசாட்சி செய்வோருக்கு, முக்கியமான பெரிய மனிதர்களுக்கு அல் லது அரசனின் ''உறவினர் நண்பர்களுக்கு வழங்கப்படும்'' (*1* மக் *10:89*; *11:58*; *14:44*).

**சரேத்சர்** (SHAREZER - கடவுள் அரசனைக் காப்பாற்றுவாராக)

*1.* சனகெரிபுவின் மகன். இவரும் அதிமெ லக்கும் சேர்ந்து கி.மு. *681*-இல் நிசுரோக்கு கோவிலில் வழிபாடு செய்து கொண்டிருந்த தங்கள் தந்தையை வெட்டிக் கொன்றனர் (*2* அர *19:37*; எசா *37:38*).

*2.* இரகேம்-மெலக்குடன் குறிக்கப்படுப வர். கி.மு. *518*-இல், பெத்தேலின் மக்கள் எருசலேமுக்கு அனுப்பிய தூதுக் குழுவின் தலைவர்களில் ஒருவர். இத்தூதுக்குழு ஆண் டவரின் அருளைப்பெற மன்றாட வேண் டும். மேலும், ஆண்டவரது கோயிலில் இருக்கும் குருக்களையும் இறைவாக்கினர் களையும் கண்டு, ஐந்தாம் மாதத்தில் வரும் வழக்கமான நோன்பிருந்துபுலம்புதல் இன் னும் கடைப்பிடிக்கப்பட வேண்டுமா என்று கேட்டு வர வேண்டும் (செக் *7:2-3*). இத் தூதுக்குழு பெத்தேலிலிருந்து அல்லாமல் மெச பொத்தாமியாவிலுள்ள ஒரு யூதக் குடியிருப்பி லிருந்து வந்திருக்கலாம்.

**சர்செக்கிம்** (SARSECHIM)

இது கி.மு. *587*-இல் எருசலேம் படை யெடுப்பில் கலந்துகொண்ட பாபிலோனிய இளவரசர்களில் ஒருவரின் பெயராகவோ ஒரு தலைவனுக்கு அளிக்கப்பட்ட ஒரு பட் டமாகவோ இருக்கலாம் (எரே *39:2*). இது அடிமைகளின் தலைவனைக் குறிக்கும் சொல்லாகவும் பயன்பட்டு வந்தது.

**சர்தை** (SARDIS)

இது இக்காலத்தில் சாரத் என்றழைக்கப் படுகிறது. இது சிறிய ஆசியாவில் சிமிர்னா வுக்குக் கிழக்கே *80* கிலோமீட்டர் தொலை விலுள்ள ஒரு நகரம். இது லீதியா ஆட்சிப்

பகுதிக்குத் தலைநகராக இருந்தது. கி.மு. 546-இல் சைரசால் கைப்பற்றப்பட்டுச் சிறிய ஆசியாவுக்கு நிர்வாகத் தலைநகராக ஆனது. இது சூசாவிலிருந்து வரும் சாலையின் மேற்குக் கோடியில் இருக்கிறது. இதுபாரசீக ஆதிக்கத்திலிருந்து, செலூக்கிய ஆட்சிக்குப் பின் பெர்கமு ஆட்சிக்கும், பின் உரோமை ஆட்சிக்கும் மாறியது. இந்நகர் கைவினைத் திறனுக்குப் புகழ்பெற்றது. கி.பி. 17-இல் ஒரு நிலநடுக்கத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டது. 1910 - முதல் 1914 வரையிலும் 1958-இலும் நடத்தப்பட்ட புதை பொருள் ஆராய்ச்சியில் இந்நகரின் சிதைவுகளில் விளையாட்டரங்கம், நாடகஅரங்கம், மூப்பர் பேரவை போன்றவைகள் கண்டுபிடிக்கப்பட்டன. இங்கேயுள்ள அர்த்தமி கோவில் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தது. அப்போஸ்தலர்கள் காலத்திலேயே இங்குத் திருச்சபை நிறுவப்பட்டது. திருவெளிப்பாட்டில் வரும் ஏழு திருச்சபைகளில் ஒன்று சர்தையாகும் (திருவெளி *1:11;3:1-4*).

**சலவைக்கல் (MARBLE)**

சலவைக்கல் சுண்ணாம்புக்கல்லிலிருந்து வேறுபட்டது. இவற்றின் நிறம் வெள்ளை முதல் கருப்பு வரை வேறுபடுகின்றது. தாவீது ஆலயம் கட்டுவதற்குச் சேர்த்த பொருட்களில் இதுவும் ஒன்று (*1 நாள் 29:2*). பரோசு நயமான சலவைக்கல் கிடைக்கும் இடமாகும். தாவீது இங்கிருந்துதான் சலவைக் கற்களைக் கொண்டுவந்தாரா என்பது சந்தேகத்திற்குரியதாய் இருக்கின்றது. இவர் ஆலய வளாகத்தின் வடக்கிலிருந்த பெசெத்தா குன்றிலிருந்த சுண்ணாம்புக் கற்களையே பயன்படுத்தி இருக்கவேண்டும் என்று கருதப்படுகிறது. ''சூசாவில் இருந்த அரண்மனையில் சலவைக் கற்களாலான தூண்கள் இருந்ததாக எஸ்த *1:6* குறிப்பிடுகின்றது. பாரசீகர்கள் பெர்சப்போலி என்ற இடத்திலிருந்து சலவைக் கற்களைப் பெற்றனர். அசூர்பானிபல் ஏலாமிலிருந்து சலவைக் கற்களாலான சிலைகளை எடுத்துவந்ததாகத் தற்பெருமை பேசினார். சனகெரிபு அம்னானா மலைகளிலிருந்து சலவைக் கற்களைப் பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

**சலவைக்காரர், வண்ணார் (FULLER)**

கம்பளி, துணி ஆடைகளைச் சுருங்கச் செய்து தடிமனாக்கிப் பதப்படுத்தும் தொழிலாளி. இது ஆடைப்பொருட்களை, அடித்து, மிதித்து, சவர்க்காரத்தையும் மற்றப் பொருட்களையும் கொண்டு தேய்த்து, தண்ணீரில் சுத்தப்படுத்துவதாகும் (மலா *3:2*). இறுதியில் ஆடை சூரிய வெப்பத்தில் விரித்து உலர்த்தப்பட்டது

சலவைக்காரரின் பணியிடம் பொதுவாக, நீர் கிடைக்கக்கூடிய இடத்தில் அமைக்கப்பட்டது. உலர்த்துவதற்குப் போதிய இடம் இருக்கவேண்டும். இதிலிருந்து விரும்பத்தகாத வீச்சம் உண்டாகும் என்பதால் சலவைக்கூடங்கள் பொதுவாக ஊருக்கு வெளியே அமைக்கப்பட்டன. ஆகாசை எசாயா சந்தித்த ''வண்ணான் வயலும்'' (எசா *7:3*), எசேக்கியா மற்றும் சனகெரிபு ஆகியோரின் தளபதிகள் சந்தித்த, ''வண்ணார் துறையும்'' (எசா *36:2;2* அர *18:17*) மேல் புறத்துக் கால்வாய் அருகில், ஒரு வேளை ஏன்ரோகேல் அல்லது கீகோன் ஊற்றுக்கருகில் இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

பழைய ஏற்பாட்டில், தீமையிலிருந்து தூய்மை பெறுபவரைப்பற்றிச் சலவைக்காரர் சுத்தப்படுத்துதல் என்ற கருத்து உருவகமாகப் பயன்பட்டுள்ளது (சங் *51:7*;எரே *2:22;4:14*). சமய விழாக்களின் போது வெண்ணிற ஆடைகள் பயன்பட்டன. இவற்றைச் சிறப்பான முறையில் சுத்தப்படுத்தவேண்டும் (செக் *3:3*; திருவெளி *4:4*). ஆண்டவரின் நாளுக்காகத் தூதர் குருத்துவத்தைத் தூய்மைப்படுத்துவது சலவைக்காரர் சுத்தப்படுத்துவதற்கு ஒப்பிடப்படுகிறது (மலா *3:2*;எரே *2:22*). புதிய ஏற்பாட்டில், இயேசு ஒளி உருமாற்றம் கொண்டபோது, அவரது ஆடைகள் ''இவ்வுலகில் எந்தச் சலவைக்காரரும் வெளுக்க முடியாத அளவுக்குப் பளபளப்பாக வெண்மையாயின'' (மாற் *9:3*; மத் *17:2*).

**சலாமியேல்** (SALAMIEL - இறைவன் நட்புடையவர்)

சலாமியேல் யூதித்தின் மூதாதையர். சராசதாய் என்பவரின் மகன். இந்தப் பெயரானது செலுமியேல் என்பதன் எழுபதுநூல் வடிவத்தோடு ஒத்து இருக்கின்றது. அனேகமாக ஒரே ஆளைக் குறிக்கலாம்.

**சலிக்கா** (SALECAH - நகருகின்ற)

பாசானின் கிழக்குப் பகுதியில் காதைச் சேர்ந்த ஒரு நகரம். இது ஒரு மாவட்டத்தின் பெயராகவும் இருக்கலாம். இது ஒகு அரசின் ஒரு பகுதியாகவும் அதன் வடகிழக்கு எல்லையாகவும் இருந்தது. பாசானை இஸ்ராயேல் கைப்பற்றியபோது சலிக்காவும் வீழ்ச்சியுற்றது (யோசு 12:5;13:11; 1 நாள் 5:11). இது விவிலியத்தில் அவ்வளவு முக்கிய இடம் வகிக்கவில்லை.

இந்த இடமும், பெயரும் சால்க்காது என்ற நகரில் அழியாது பாதுகாக்கப்படுகின்றன. இந்நகரம் ஒரு வட்ட வடிவ எரிமலைப் பாறையின்மேல் கட்டப்பட்டது. இந்தப் பாறை தரைமட்டத்திலிருந்து 90 மீட்டர் உயரத்தில் அமைந்திருக்கிறது; தமஸ்குவிற்குத் தென்-தென்கிழக்கில் 115 கி.மீ. தொலைவிலும் இக்காலச் சீரியாவின் தென் முனையிலும் அமைந்துள்ளது. இது கி.பி. 17-இல் மாலிக்கு என்ற நபத்தேய அரசனால் கைப்பற்றப்பட்டது என்ற செய்தி நபத்தேயக் கல்வெட்டுப் பொறிப்புகளின் மூலம் தெரிகிறது. பல உரோமையர் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன.

**சலீம்** (SALIM - அமைதி)

சலீம் ஐனோனுக்கு அருகில் உள்ள ஓரிடம். இந்த இடத்தைச் சரியாகக் குறித்துச் சொல்லமுடியாது. அங்கே தண்ணீர் அதிகம் இருந்ததால் யோவான் திருமுழுக்குக் கொடுத்து வந்தார் (யோவா 3:23).

இரண்டு குறிப்புகள் சொல்லப்படுகிறது. ஒன்று: அந்த இடம் யோர்தானுக்கு அருகில் பெத்சானுக்குத் தெற்கில் 12 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இதை யுசேபியுவும் எரோனிமுவும் (கி.பி.400) குறித்து வைத்திருக்கின்றனர். இரண்டு: பலத்தாவுக்கு (செக்கேம்) 5 கிலோமீட்டர் கிழக்கே உள்ள மலைப்பாங்கான நாட்டிலே இருக்கலாம் என்று சொல்லப்படுகிறது.

**சலோமி** (SALOME - அமைதி, நல்வாழ்வு)

1. சலோமி என்பவள் இயேசுவைப் பின்பற்றிய கலிலேயப் பெண்களில் ஒருத்தி அனேகமாகச் செபதேயுவின் மனைவியாகவும், யாக்கோபு, யோவான் ஆகியோரின் தாயாகவும் இருக்கலாம்.

மாற் 15:40-இன்படி பல கலிலேயப் பெண்கள், சிலுவையின் அடியில் நின்றனர் என்று சொல்லப்பட்டுள்ளது. அதில் சலோமியும் இருந்தாள். பிறகு இயேசுவின் உடலில் பூசுவதற்காகப் பரிமளப் பொருட்கள் கொண்டு வந்தவர்களோடு சேர்ந்திருந்தாள் (16:1). மத் 27:56-இன் மூலம் சலோமி, செபதேயுவின் புதல்வர்களுக்குத் தாய் என்பது தெளிவாகத் தெரிகிறது. யோவா 19:25-இல் ‘அவர் தாயின் சகோதரியும் குளோப்பாவின் மனைவியுமான மரியாள்’ என்றுள்ளது. இதை இரண்டாகப் பிரித்துப் பார்த்தால், முதலில் குறிக்கப்படுபவர் சலோமியாக இருக்க வாய்ப்பிருக்கிறது. இதன்படி பார்த்தால் சலோமியும், செபதேயுவும் இயேசுவுக்குச் சின்னம்மா, சித்தப்பாவாக ஆகிறார்கள். யாக்கோபும், யோவானும் இயேசுவுக்குச் சகோதரர்கள் ஆகிறார்கள்.

அறிஞர் சிலரின் கருத்து: சிலுவையில் அறையுண்டிருந்த இயேசு தன் தாயைத் தான் அன்பு செய்த சீடரிடம் (யோவான்) ஒப்படைத்தார் (யோவா 19:26-27). இதைக் கருத்தில் கொண்டால் செபதேயுவின் மக்கள் இயேசுவின் அழைப்பை உடனடியாக ஏற்றுக்கொண்டது சாத்தியமாகிறது (மாற் 1:19-20). யாக்கோபு, யோவான் ஆகியோர் இறையரசில் வலப்பக்கம் ஒருவரும் இடப்பக்கம் ஒருவருமாக இருக்க அவர்களின் தாய் வேண்டியதாகக் கூறப்படும் நிகழ்ச்சி (மாற் 10:35; மத் 20:20) இந்த அப்போஸ்தலர்

களின் பொது மதிப்பைப் பாதுகாக்க மத்தேயு வால் செய்யப்பட்ட முயற்சி என்று விளக்கப்படுகிறது.

2. சலோமி ஏரோது பிலிப்புக்கும், ஏரோதியாளுக்கும் மகளாகப் பிறந்தவள். அவளது பெயர் நற்செய்திகளில் குறிப்பிடப்படவில்லை. ஆனால் அவள் 'விருந்தினர்களுக்காகவும், ஏரோது அந்திப்பாவுக்காகவும் நடனம் ஆடியது மட்டும் சொல்லப்பட்டுள்ளது. இந்த நடனம், அந்திப்பா ஆணையிட இதனால் திருமுழுக்கு யோவான் தலை போகக் காரணமாகியது *(மத் 14:1தொ;மாற் 6:17தொ)*. இவளைப் பற்றி யோசிப்பசின் நூலிலிருந்து அறிகிறோம்.

**சல்மனேசர்** (SHALMANESER - சுல்மானு தலைவராவார்)

1. முதலாம் சல்மனேசர் *(கி.மு. 1274-1245)* முதலாம் அதாது நிராரியின் மகன். தனது அரசின் தெளிவான விவரிப்பை விட்டுச் சென்ற முதல் அசீரிய மன்னன். முதலாம் சல்மனேசர் சக்ரோசில் உள்ள மலைவாழ் மக்களோடும், கனிகல்பட்டின் சத்தூராரோடும் யூப்பிரத்தீசை ஒட்டிய அரமேயர்களோடும் போர் புரிந்தார். இவரது வெற்றிகள், இருண்ட காலத்திலிருந்து அசீரியா அதிகாரத்திற்கு வரக் காரணமாயின.

2. இரண்டாம் சல்மனேசர் *(கி.மு. 1031-1020)*: இவரைப் பற்றி ஒன்றும் அறியப்படவில்லை. முதலாம் திகிலத்து பிலேசருக்குப் பிறகு ஆண்ட திறமையற்ற ஆட்சியாளர்களில் இவரும் ஒருவர்.

3. மூன்றாம் சல்மனேசர் *(கி.மு. 858-824)*: இரண்டாம் அசூர்நசிர் பாலின் மகன். புதிய அசீரியப் பேரரசை நிறுவியவர்களில் ஒருவர். இவர் இஸ்ராயேல் அரசர்களோடு தொடர்பு வைத்துக் கொண்ட, முதல் அசீரிய அரசராவார். வடக்கில் உராத்துவோடு போரிட நேரிட்டது. இது தற்பாதுகாப்புக்காகச் செய்ய வேண்டியதாயிற்று. மேற்கே போரிட்டது நாடு பிடிப்பதற்காகத்தான். மூன்றாம் சல்மனேசர் மூன்று வருடமாக *(858-856)* அரமேய அகுனியை யூப்பிரத்தீசின் இடக்கரையிலிருந்து வெளியேற்றுவதில் சிரமப்பட்டார். இதை அந்த ஆறுவரை தனது அரசு இருக்க வேண்டும் என்பதற்காகச் செய்தார். இந்த நிகழ்ச்சிகளின் விளைவாகச் சீரியாவில் ஆண்ட ஆட்சியாளர்கள் அவர்களுக்குள் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். இப்படி ஒன்று கூடினதால் போரிடப் பலம் பொருந்தியவர்களாகி அசீரிய ஆதிக்கத்தை முறியடிக்கலாம் என்று எண்ணியிருந்தனர். இது அந்தப் பகுதி வரலாற்றில் அரிய செயலாகும். ஆனால் எண்ணம் சரிவர நிறைவேறவில்லை. இவரது அசீரிய ஆதிக்கம் சிலிசியா உள்பகுதி வரைக்கும் கூட போய்விட்டது. இவரது ஆட்சிப் பகுதி மிகுதியானதால், ஆட்சி பாழ்பட்டது. நாடு எங்கும் கிளர்ச்சிகள்தான் இவரது ஆட்சியின் இறுதிக் காலத்தைக் களங்கப்படுத்தின.

4. நான்காம் சல்மனேசர் *(கி.மு. 782-772)*: மூன்றாம் அதாது நிராரியின் மகன். இவரது ஆட்சிக் காலம் முழுதும் உராத்து அரசோடு போர் தொடுத்துத் தன் ஆட்சியைக் காப்பாற்ற வேண்டியதாயிற்று.

5. ஐந்தாம் சல்மனேசர் *(கி.மு. 727-722)*: மூன்றாம் திகிலத்துபிலேசரின் மகன். இவரது ஆட்சிக்காலம் மிகவும் குறுகியது. இவர் வரலாற்றுப் பொறிப்பு ஒன்றை விட்டுச் சென்றிருக்கிறார். இவர் உளுலை என்ற பெயரில், பாபிலோனில் ஆண்டு வந்தார். எகிப்தின் தூண்டுதலால் ஓசேயா அசீரியாவுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தபோது சமாரியாவை முற்றுகையிட்டார். இம்முற்றுகை மூன்று வருடங்களாக நீடித்தது என்று தெரிகிறது. இம்முற்றுகையின்போது இவர் இறந்தார் அல்லது கொல்லப்பட்டார். ஆகவே அசீரியப்படை பின்வாங்கித் திரும்பிப்போனது. இவருடைய சகோதரர் இரண்டாம் சார்கோன் ஆட்சிக்கு வந்தார் *(2 அர 17:3-6; 18:9-12)*.

**சல்மா** (SALMA)

சல்மோன் என்ற பெயரின் மற்றொரு வடிவம். காண்க: சல்மோன்.

***சல்மாய்*** *(SHALMAI - யாவே அமைதியாவார், நலம் ஆவர்)*

இவர் நெத்தினிமின் ஒரு குடும்பத்தின் குலப்பெயர் முதல்வராக உள்ளார். நாடு கடத்தப்பட்டு, பாபிலோனிலிருந்து திரும்பியவர்களில் இவருடைய மக்கள் ஆலய ஊழியர்களாக இருந்தனர் (நெகே 7:48; எஸ் 2:46). சல்மாய் என்பது சம்லாய் என்பதன் மற்றொரு வடிவமாக இருக்கலாம்.

***சல்மான்*** *(SHALMAN)*

இவர் அடையாளம் காட்டமுடியாத புறவினத்து அரசன் (ஓசே 10:14). இப்பெயர் மூன்றாம் சல்மனேசர் என்ற அசீரிய அரசனின் சுருக்கப் பெயராகக் கருதப்படுகிறது. இவர் கி.மு. [illegible]-இல் நடத்தியபோரில் பெத்தர் பேல் அழிக்கப்பட்டது.

***சல்முன்னா*** *(ZALMUNNA பாதுகாப்பில்லாத)*

தன்னுடைய சகோதரர்களைக் கொன்றதற்காகக் கிதியோன் கைப்பற்றிக் கொன்ற இரு மிதியானிய அரசர்களில் ஒருவர் (நீதி 8:4-21; சங் 83:11).

***சல்மோனா*** *(ZALMONAH - இருண்ட)*

கோர் (ஓர்) மலையைவிட்டுக் கிளம்பி பூனோனை அடைவதற்கு முன் இஸ்ராயேலர்கள் முதலில் பாளையம் இறங்கிய இடம் (எண் 33:41-42). இந்த இடம் கண்டுபிடிக்கப் பட முடியாது. நீதி 9:48; சங் 68:14-இல் சொல்லப்பட்டுள்ளது. சல்மோன் மலையைப் போன்று இதுவும் காடுகள் நிறைந்த மலையின் பெயராக இருக்கலாம்.

***சல்மோனி*** *(SALMONE - ஆடை அணியப்பட்ட)*

இது கிரேத்துத் தீவின் கிழக்கு முனையில் உள்ளது. அனேகமாக இக்காலச் சிதெரோ முனையாக இருக்கலாம். ஒரு எகிப்தியக் கப்பலில், பவுலும் அவருடைய தோழர்களும் உரோமைக்குக் கொண்டு செல்லப்பட்டனர். பல நாள் கடினப் பயணம் செய்து கினிது நகர் எதிரே வந்தனர். சாதாரண நிலையை விட அதிகம் காற்று வீசியதால், பாதுகாப்பாக இருக்க சல்மோனி முனையைக் கடந்து, கிரேத்துத் தீவின் ஒதுக்கிலே வந்து சேர்ந்தார்கள் (அ.ப. 27:7).

***சல்மோன்*** *(SALMON - ஆடை அணியப்பட்ட)*

1. சல்மோன் நகசோனின் மகன்; கெலுபாய் குடும்பத்தைச் சேர்ந்த போவாசு என்பவருக்குத் தந்தை (1 நாள் 2:11; ரூத் 4:20-21; மத் 1:4-5; லூக் 3:32). இவர் தாவீதின் மூதாதையருள் ஒருவராக உள்ளதால், இயேசு கிறிஸ்துவின் தலைமுறை அட்டவணையில் இடம் பெற்றிருக்கிறார். மத்தேயு நற்செய்தியில் ''சல்மோனுக்கு இராகாபிடம் போவாசு பிறந்தார்'' (மத் 1:5) என்று குறிக்கப்பட்டுள்ளது.

2. காலேபுக்கும் எப்ராத்தியப்பெண்ணுக்கும் கூர் என்பவர் பிறந்தார் (1 நாள் 2:19.50.51); கூருக்குச் சல்மோன் பிறந்தார். சல்மோன் என்பவர் ''பெத்லகேமின் தந்தை'' அதாவது பெத்லகேமில் குடியிருந்தவர்களின் தந்தை என்று வருணிக்கப்படுகிறார். மேலும் அற்றரோத்து எபத்-யோவாபு நகர மக்களும், நெற்றோபாவியர் மற்றும் மானகத்தியரில், சோரியரைச் சேராத பாதி இனமும், யகபேசில் குடியிருந்த குடிகளும் இன்னும் பலரும் சல்மோனுடைய குலத்தைச் சேர்ந்தவர்களாவார் (1 நாள் 2:50-51).

***சல்மோன்*** *(ZALMON - இருளான) - ஆள்*

ஓர் அகோகியர்; தாவீதின் ''முப்பது'' ஆற்றல் மிக்க வீரர்களில் ஒருவர் (2 சாமு 23:28). 1 நாள் 11:29-இல் இவர் ஈலாய் என்றழைக்கப்படுகிறார். ஒருவேளை இது ''சிலாய்'' என்று அழைக்கப்படவேண்டும்.

***சல்மோன்*** *(ZALMON - இருளான) - இடம்*

1. செக்கேமுக்கு அருகிலுள்ள ஒரு மலை. அபிமெலக்கு இங்கிருந்த மரங்களை வெட்டி, செக்கேமின் கோபுரத்தை எரித்தார் (நீதி 9:48). கெரிசிம் மலை செக்கேமுக்கு அருகில் இருந்ததால் சல்மோன் இந்த மலையின் சிகரம் என்று கருதப்பட்டது. இம்மலை

செக்கேமுக்கு அருகில் இருந்த வேறொரு மலையாகும். ஆனால் தங்களை நெருங்கி வரும் அழிவை அவர்கள் அறியமுடியாத அளவுக்குத் தூரத்தில் இருந்திருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர்.

2. பாசானிலிருந்த ஓர் இடம் அல்லது ஒரு மலையாகும் (சங் 68:14). இங்கு இருந்த பெயர் 'இருட்டு' அல்லது 'இருட்டான இடம்'' என்பதைக் குறிக்கிறது; ஓர் இடத்தையல்ல என்று சிலர் கருதுகிறார்கள். இருப்பினும் தொடர்ந்து வருகின்ற வசனத்தில் வரும் 'பாசானின் மலை' சல்மோனைத்தான் குறிக்கின்றது என்று கருதப்படுகிறது. கெர்மோன் (எர்மோன்) மலையில் அடிக்கடி பனிபெய்வதால், இங்குக் குறிக்கப்படும் பனி உண்மையான பனியையோ, உருவகமாகத் தோற்றவர்களின் வெள்ளையான எலும்புகளால் மூடப்பட்ட பாசானின் ஒரு மலையையோ, பிரகாசிக்கும் கொள்ளைப் பொருள்களையோ குறிக்கலாம்.

*சல்லகேத்து* (SHALLECHETH - வாயில்)

இது எருசலேம் கோவிலின் மேற்கேயுள்ள வாயிலாகும் (1 நாள் 26:16). நகரத்திலிருந்து இங்குச்செல்ல ஒரு பாதையிருந்தது. இந்த வாயில் பாப் - ஏல் முட்டவாடாவுக்குத் தெற்கே 20 அடியிலுள்ள ஒரு பழைய வாயிலாக அடையாளம் காட்டப்படுகிறது.

*சல்லடை* (SIEVE)

இச்சொல் உருவகமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. நீதித் தீர்ப்பின் நாளைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது, ஆண்டவர் அழிவின் சல்லடையைக் கொண்டு நாடுகளைச் சலித்து எடுப்பார் என்று எசா 30:28 கூறுகிறது. அதே போல் ஆமோ 9:9-இல் இஸ்ராயேல் வீட்டாரை ஆண்டவர் சல்லடையில் தானியத்தைச் சலிப்பதுபோல் சலிக்கப்போகிறார் என்று கூறப்பட்டுள்ளது.

*சல்லாய்* (SALLAI - (இறைவன்) சேர்ப்படுத்தியுள்ளார்)

1. பென்யமின் குலத்தில் பிறந்தவர். நெகே 11:18-இன் படி இவர் நாடு கடத்தப் பட்ட காலத்திற்குப்பின் எருசலேமில் தங்கியிருந்தார் என்பது தெளிவாகிறது. இதற்கு இணையான 1 நாள் 9:9-இல் இந்தப் பெயர் காணப்படவில்லை.

2. நாடு கடத்தப்பட்ட காலத்திற்குப்பின் இவர் ஒரு லேவியராக இருந்தார் என்று நெகே 12:20-இன் மூலம் தெரிகிறது. இப்பெயரும் சல்லூ (2) என்ற பெயரும் ஒரே ஆளைக் குறிக்கலாம்.

*சல்லூ* (SALLU - அளவு செய்யப்பட்ட)

1. நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பென்யமின் குலத்தில் பிறந்தவர். மெசுல்லாம் என்பவர் இவருடைய தந்தை ஆவார் (1 நாள் 9:7; நெகே 11:7).

2. நாடு கடத்தப்பட்டுத் திரும்பியவர்களில் ஒரு லேவியர் (நெகே 12:7). இப்பெயரும் சல்லாய் (2) என்ற பெயரும் (நெக 12:20) ஒரே ஆளைக் குறிக்கலாம்.

*சல்லூம்* (SHALLUM - உழைப்பீடு)

1. இவர் யகபேசின் மகன். எசுதிரலோன் சமவெளியில் இபிலயாமிலிருந்து வந்தவராக இருக்கலாம். இவர் கி.மு. 747-இல் இஸ்ராயேலின் வடக்கு ஆட்சிப் பகுதியை அரசராக ஒரு மாதத்திற்கு ஆட்சி செய்தார் (2 அர 15:10-13-15).

இவர் தனக்கு முன் இருந்த செக்கரியாவைக் கொன்று, ஆட்சியைக் கைப்பற்றினார். ஆனால் இவரை மெனகேம் என்பவர் கொன்றுவிட்டு ஆட்சியைப் பிடித்தார். இவ்வாறு அரச கொலைகள் வடக்கு ஆட்சிப் பகுதியில் இரண்டாம் எரொபவாம் காலத்திலிருந்து நடந்தது. இதனால் அசீரிய அரசன் இரண்டாம் சார்கோனிடம் கி.மு. 721-இல் பலியாக நேரிட்டது. ஆமோசும், ஒசேயாவும் இம்மாதிரி வீழ்ச்சி இஸ்ராயேல் பாவத்திற்கு விளைவாக அமையும் என்று இறைவாக்குரைத்திருந்தனர்.

2. இவர் திக்வாவின் மகன். (இவரை 2 நாள் ஆகமம் தோக்காத்து என்றழைக்கிறது). இறைவாக்கினள் குலிதாவுக்குக் (உல்தா)

கணவனாவார் (2 அர 22:14; 2 நாள் 34:22). இவர் ஆடையக மேற்பார்வையாளர் என்று குறிக்கப்படுகிறார். ஆனால் இவர் பணி செய்தமை ஆலயத்திலா, அன்றி அரண் மனையிலா என்பது தெளிவாக இல்லை.

3. சிசமாயிக்கு மகன். எக்கமியாவுக்குத் தந்தை. மேலும் இவர் யூதாவைச் சேர்ந்த எரகுமவேலின் வழித்தோன்றல் (1 நாள் 2:40-41).

4. யூதாவின் அரசன் யோசியாவின் நான் காவது மகனாகப் பிறந்தவர். இவர் தன் தந்தைக்குப்பின் கி.மு. 609 முதல் அரசாண் டார் (எரே 22:11; 1 நாள் 3:15). இவர் யோவகாசு (2) என்று அழைக்கப்படுவார் (2 அர 23:30-31; 2 நாள் 36:1-2). இவர் மூன்று மாதங்களுக்கே ஆட்சிசெய்தார். எகிப்தியர் இவரை நீக்கிவிட்டு இவரது மூத்த சகோத ரன் யோயாக்கீமை (1) அரசராக்கினர்.

5. சிமியோனின் வழித்தோன்றல். சவு லுக்கு மகன். மிப்பிசாமுக்குத் தந்தை (1 நாள் 4:24-25).

6. ஒரு தலைமைக் குரு. சாதோக்கின் மகன். கிலிகியாவின் தந்தை (1 நாள் 6:12-13; எஸ் 7:2). எஸ்ரா இவருடைய வழித்தோன் றல் என்று உரிமை கொள்கிறார். இவர் ஒருவேளை மெசுல்லாமாக இருக்கலாம் (1 நாள் 9:11; நெகே 11:11; 12:13).

7. நப்தலியின் நான்காவது புதல்வன். இவர் பில்காவின் வயிற்றில் பிறந்தவர் (1 நாள் 7:13). ஆதி 46:24; எண் 26:49-இல் சில்லேம் என்றழைக்கப்படுகிறார்.

8. ஒரு லேவிய வாயிற்காவலர். இவர் பாபிலோனிய அடிமைத் தளையிலிருந்து யூதாவிற்கு முதலில் திரும்பியவர்களில் வாயிற் காவலராக இருந்தார் (1 நாள் 9:17; எஸ் 2:42; நெகே 7:45). இவர் கோராகியரான சல்லூமாகவும் (9) (1 நாள் 19:31) மெசுலேமி யாகவும் (19:21), செலேமியாகவும் (26:14) செல்லூம் (11) ஆகவும் (எஸ் 10:24) இருக்க லாம்.

9. ஒரு லேவிய வாயிற்காவலர். கோராகி யர் வழிவந்த கோரேயின் மகன் (1 நாள் 9:19.31). இவர் 8-இல் குறிக்கப்பட்டவராக வும் இருக்கலாம்.

10. எப்பிராயிம் குலத்தில் பிறந்தவர். பெக்காவின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த எகிச கியாவின் தந்தை (2 நாள் 28:12).

11. நாடு கடத்தப்பட்டுத் திரும்பி வந்த பின் புற இன மனைவியரை நீக்கிவிட்ட ஒரு லேவியக் காவலர் (எஸ் 10:24).

12. நாடு கடத்தப்பட்டபோது புறவினப் பெண்ணை மணந்து கொண்ட லேவியர் குலத்தைச் சேராத ஓர் இஸ்ராயேலர் (எஸ் 10:42).

13. அல்லோகேசு என்பவருடைய மகன். நெகேமியாவின் காலத்தில் எருசலேம் மதிற் சுவரைத் திரும்பக் கட்ட உதவி செய்தவர்க ளில் ஒருவர் (நெகே 13:12). ஐந்து அரச மாவட்டங்களில், ஒரு மாவட்டத்தின் பாதிப் பகுதிக்குப் பொறுப்பாயிருந்தார். எனவே இதிலிருந்து, இவர் கி.மு. 586-இல் தெற்கு அரசாட்சியின் வீழ்ச்சிக்குப் பிறகு யூதாவில் வசித்து வந்த குடும்பத்தைச் சார்ந்தவர் என்ற முடிவுக்கு வரலாம்.

14. கொல்கோசேயின் மகன் (நெகே 3:15). மிஸ்பா மாவட்டத்தின் ஆளுநர். இவர் எருச லேமில் ஊருணி வாயிலைச் சீர் செய்தார். அரச தோட்டத்திலுள்ள சேலா குளத்தின் சுவர்களைப் பழுதுபார்த்தார்.

15. இறைவாக்கினர் எரேமியாவின் உறவி னர் ஆவார் (எரே 32:7). கனமேலின் (அன மேல்) தந்தை. இறைவாக்கினர் எரேமியா அரசு வழக்கு மன்றத்தில் சிறையிடப்பட் டிருந்தார். சல்லூம் தனதுமகனை அனத்தோத் தில் தனக்கு இருக்கும் நிலத்தை மீட்கும் உரிமையைக் கொடுப்பதற்காக எரேமியா விடம் அனுப்பினார். இந்த வாய்ப்பைப் பயன் படுத்தி நாடு பாபிலோனியர்களால் படை யெடுக்கப்பட்டிருந்தாலும் ''அங்குள்ள நிலங்கள், திராட்சைத் தோட்டங்கள், வீடு

கள் யூதாவால் திரும்பவும் வாங்கப்படும்'' என்று உருவகமாக எடுத்துரைத்தார்.

16. மாசேயாவின் தந்தை. இவர் எரேமியா காலத்தில் கோவிலின் வாயில் காவலராய் இருந்தார் (எரே 35:4). இவர் மாசேயாவின் தூரத்து உறவினர் என்பது உண்மையாயின், இவரும் 8-இல் குறிக்கப்படுபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**சவரக்கத்தி, கத்தி** (RAZOR)

தலையை மழிக்கவோ, முடியை வெட்டவோ, தாடியை மழிக்கவோ பயன்படும் கத்தி இது (எசா 7:20). நசரேயன் தலையில் இத்தகைய கத்தி படக்கூடாது என்ற சட்டமுண்டு (எண் 6:5; நீதி 13:5; 16:17; 1 சாமு 1:11). இது சாதாரணக் கத்தி; சற்று நீளமாகச் சிறிதுவளைந்து முடிவில் ஒரு குமிழுடன் அமைந்திருக்கலாம்; சில சமயங்களில் இவை அழகுபடுத்தப்பட்டவையாகக்கூட இருக்கலாம். எசேக்கியேல் அடையாள முறையில் தனது வாளை முடி திருத்துவோனின் கத்தியாகப் பயன்படுத்துகிறார் (எசே 5:1). சடங்குச் சுத்திகரிப்புக்காக லேவியர்கள் உடல் முழுவதையும் சிரைக்க வேண்டும் (எண் 8:7). வஞ்சகப் பேச்சை விவரிக்கவும் (சங் 52:2), முழு அழிவைக் குறிக்கவும் (எசா 7:20) சவரக்கத்தி உருவகமாகப் பயன்பட்டுள்ளது.

**சவர்க்காரம்** (SOAP)

இஃது ஒருவகையான சோப்பு. இச்சொல் விவிலியத்தில் இருமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது. எரே 2:22 இது உடலைத் தேய்த்துக் கழுவுவதற்கும், மலா 3:2 உடைகளைத் துவைப்பதற்கும் பயன்படுத்தப்பட்டதாகக் குறிப்பு தருகின்றன. உடைகளைத் துவைக்கப்பயன்படும் ''வண்ணாரின் காரம்'' என்றும் எபிரேய மூலச் சொல்லுக்குப் பொருள் கொடுக்கலாம்.

**சவுசா** (SHAVSHA)

இவர் தாவீதின் அரசவையில் எழுத்தராகப் பணிபுரிந்த ஓர் உயர் அதிகாரி (1 நாள் 18:16). இவரது புதல்வர்கள் எலிகோரெபும், அகியாவும் சாலமோன் ஆட்சியில் இதே நிலையில் இருந்தனர் (1 அர 4:3).

இவர் 2 சாமு 8:17-இல் செராயா என்றும், 20:25-இல் செவா என்றும் 1 அர 4:3-இல் சிசா என்றும் அழைக்கப்படுகிறார். இவற்றில் சவுசா அல்லது சிசா மூலப்பெயராக இருந்திருக்கலாம்.

**சவுல்** (SAUL - யாவேயிடமிருந்து கேட்கப் பட்டது)

1. இஸ்ராயேலின் முதல் அரசனின் பெயர் பென்யமின் இனத்தைச் சேர்ந்த கீசின் மகன். அழகுவாய்ந்தவர். மற்ற அனைவரையும் விட உயரமானவர். மற்ற அனைவரும் அவர் தோள் உயரமே இருந்தனர் (1 சாமு 9:2). பழைய ஏற்பாட்டில் ஏறக்குறைய 400 தடவையும் புதிய ஏற்பாட்டில் ஒரே ஒரு தடவையும் குறிக்கப்பெறுகிறார்.

சவுலின் வீடு பென்யமின் பகுதியிலுள்ள கிபயா என்ற இடத்திலிருந்தது. குடும்பம் செலாவோடும் தொடர்பு கொண்டிருந்திருக்கலாம். ஏனெனில் அங்குதான் கீசும், சவுலும் யோனத்தானும் அடக்கம் செய்யப்பட்டனர் (2 சாமு 21:14). இக்குடும்பம் கழுதைகளையும், வேலைக்காரர்களையும் (1 சாமு 9:3) நிலங்களையும் மாடுகளையும் கொண்டிருந்தது என்பதிலிருந்து இதுபோதிய அளவு செல்வமுடையதாக இருந்திருக்க வேண்டும் என்று கருதலாம்.

சவுலின் காலம்:- சவுல் அவரது காலச் சூழ்நிலைகளின் படைப்பாவார். நெருக்கமில்லாத இனங்களின் கூட்டாட்சிக்கும், ஆற்றலோடு ஒன்றிக்கப்பட்ட தாவீதுகால ஆட்சிக்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவராவார் சவுல். ஆகவே அவரது வாழ்வில் காலமும் சூழ்நிலையும் பெரிதும் இடம் பெற்றுப் பாதித்தன.

சமய நோக்கில் சீலோவை மையமாகக் கொண்டு இனங்கள் ஒன்றுபட்டன. இது பிற்கால அரசியல் ஒற்றுமைக்கு வித்திட்டது. ஆனால் பெலிஸ்தியர்களின் படையெடுப்பால் சீலோ அழிக்கப்பட்டது. குருக்க

ளின் தலைமை சூழ்நிலையைச் சமாளிப்பதற்குப் போதியதாகக் காணப்படவில்லை. நாட்டின் பழம்பெரும் சின்னமான உடன்படிக்கைப் பேழை செயலளவில் மறைந்து விட்டது எனலாம் ( *1 சாமு 6-7*). கில்கால் வழிபாட்டுமையமாகியது *(10:8; 11:14-15; 13:4.8-15; 15:12.21.33)*.

அரசியல் நோக்கில் இஸ்ராயேலர் கிழக்கிலிருந்து பாலஸ்தீனத்திற்குள் குடியேறிய போது பெலிஸ்தியர் மேற்கிலிருந்து இந் நாட்டில் குடியேற முயன்றனர். ஆகவே வாக்களிக்கப்பட்ட நாடு பெலிஸ்தியர் நாடா அல்லது இஸ்ராயேலர் நாடா என்பது பற்றி இரு இனத்தவருக்கும் பலபோர்கள் அடிக்கடி நடந்தன. கடல் மக்களாகிய பெலிஸ்தியர் பாலஸ்தீனக் கரையோரப்பகுதிகளைத் தாக்கித் தங்களுடையதாக்கிக் கொண்டு, அங்கு ஏற்கெனவே வாழ்ந்த கானானியர்களின் நகர ஆட்சி அமைப்பை ஏற்றுத் தங்களது ஆட்சியை நிலைப்படுத்த முயன்றனர். அதேசமயம் தங்களுக்குள்ளே சுயமாக ஒரு பொதுக்குழு அமைத்துப் பாதுகாப்பு, போர் போன்ற பொதுக் காரியங்களைச் செய்தனர். அப்போது ஏதாவது ஒரு நகர ஆட்சித்தலைவர் இக்குழுவுக்குத் தலைமைதாங்குவார். இதன் விளைவாகப் பெலிஸ்தியர் ஒரு பலமிக்க அமைப்பாகத் திகழ்ந்தனர். போர் செய்வது அவர்களது தொழிலாக இருந்தது. இரதங்களையும், இரும்புப் போர்க் கருவிகளையும் பயன்படுத்தினர். அவற்றைப் பிறர் கொண்டிருப்பதைத் தடுத்தனர் *(13:19-22)*. ஆகையால் பெலிஸ்தியரை வெல்வது அவ்வளவு எளிதன்று. இவர்கள் கிழக்கிலுள்ள மலைப்பகுதிகளையும் வெல்லத் தொடங்கினர். அங்கே குடியேறிய இஸ்ராயேலரை வென்று தங்களுக்குக் கப்பம் கட்டச் செய்வதே இவர்களின் நோக்கம். அதே சமயம் கிழக்கிலிருந்து பாலஸ்தீனத்தில் குடியேறிய இஸ்ராயேலர் நிலை வேறுவிதமாக இருந்தது. இவர்களிடையே நகரங்கள் இல்லை. கோட்டை கொத்தளங்கள் இல்லை. மைய அரசு இல்லை. இனத்தலைவர்களின் நெருக்கமற்ற கூட்டாட்சி இருந்தது. போரைத் தொழிலாகக் கொண்ட படைகள் இல்லை. போர்க்கருவிகள் இல்லை. பிறர் கொடுமைப்படுத்தும் போதும் இறை ஆவி பெற்ற தலைவர்கள் தோன்றித் தலைமை தாங்கிப் போரை நடத்தினர். அது முடிந்ததும் ஒவ்வொருவனும் தனது பகுதிக்குத் திரும்பிவிடுவான். இவர்கள் யாவேயிடம் கொண்டிருந்த விசுவாசம் இவர்களது சமூக ஒற்றுமைக்கு அடிப்படையாகும். இந்த விசுவாசத்தில்தான் இவர்களின் நாட்டு ஒற்றுமை வேர் ஊன்றியிருந்தது. ஒவ்வொரு இனத்தவரும் சுயாட்சி நடத்தினர். தங்களுக்குள்ளே ஒரு மைய அரசியல் அமைப்பைப் பெற இவர்கள் இன்னும் பக்குவம் அடையவில்லை எனலாம். இந்நிலையில் இவர்களுக்குப் பெலிஸ்தியர் பெரும்பகைவர்களாக விளங்கினர். இவ்விருவருக்கும் நடந்த போர்களும் பெலிஸ்தியர் இஸ்ராயேலர்களுக்கு இழைத்த கொடுமைகளும் இஸ்ராயேல் அரசை உருவாக்கின.

2. சாமுவேலும் சவுலும்:- இந்நிலையில் அருங்கொடைபெற்ற சாமுவேல் இஸ்ராயேலர்களுக்குத் தலைமைதாங்கி வெற்றிக்கு இட்டுச் செல்கிறார். சாமுவேலுக்கு வயது முதிர்ந்தபோது அவருடைய புதல்வர்கள் நேர்மையோடு மக்களை ஆட்சி செய்யவில்லை. பெலிஸ்தியர்களிடமிருந்து வந்த அரசியல், சமய ஆபத்துக்கள் பெருகின. இச்சூழ்நிலையில் இஸ்ராயேலரின் தலைவர்கள் ஒரு புதிய வேண்டுகோளுடன் சாமுவேலைச் சந்தித்தனர். நிலையான மைய அரசையும், போரைத் தொழிலாகக் கொண்ட படையையும், அதை இயக்க ஆற்றல்மிக்க தலைவனையும் கொண்ட அரச அமைப்பைத் தங்களுக்குத் தரவேண்டும் என்று சாமுவேலிடம் கேட்டனர். விருப்பமில்லாதிருந்தும் இறைவனது ஆணைக்குப் பணிந்து சாமுவேல் மக்களது விருப்பத்திற்கு இணங்குகிறார். இப்படித் தோன்றிய அரசின் தலைவர்தான் சவுல்.

சவுல் அரசரானது பற்றி இரு பாரம்பரியங்கள் உண்டு. *1 சாமு 9:1-10:16;11* ஆகிய பகுதிகள் அரசாட்சிக்குச் சார்பாக உள்ளன.

இதன்படி, சவுல் தன்வீட்டிலிருந்து காணா மற்போன கழுதைகளைத் தேடிச்செல்கிறார். அப்போது இராமாவில் சாமுவேலால் அபி டேகம் செய்யப்படுகிறார். ஆவி அவர்மேல் இறங்கி வருகிறது *(10:6.10.13)*. நீதிபதிக ளைப் போன்ற அருங்கொடைபெற்ற தலை வராகக் காட்டப்படுகிறார். அரசாட்சிக்கு எதிரான பாரம்பரியம் *(8;10:17-27; 12)*, சாமு வேல் விருப்பமில்லாது மக்களின் வற்புறுத் தலுக்காகவே சவுலை முதல் அரசனாக ஆக்கு வதாக விவரிக்கிறது. இதில் சாமுவேல் கடைசி நீதிபதியாகவும் அவரைத் தொடர்ந்து சவுலும் அந்த நீதிபதிகள் பாணி யிலேயே பணிசெய்வதாகவும் காட்டப்படு கிறார். ஆகவேதான் சாமுவேல் சவுலை அரசனாக (மெலக்கு) அல்லாது, ஆயனாக (நகீது) அபிடேகம் செய்கிறார்.

சாமுவேல் தனது பணியை மிஸ்பாவிலி ருந்து தொடங்கினார். அங்குதான் மக்களைக் கூட்டி அவர்களுக்கு ஒரு நிலையான தலை வனை அளிக்கிறார். இஸ்ராயேலின் வரலாற் றில் முதல் தடவையாக ''அரசே வாழி'' என்ற கூவல் கேட்கிறது. அரசதேர்வு திரு வுளச்சீட்டு வழியாக நடக்கிறது. இதை *1* சாமு *10:17-24*-இல் வாசித்தறியலாம்.

சவுல் தனது பணியின் தொடக்கத்திலேயே பல வெற்றிகளைக் காண்கிறார். அவை அவருக்குப் பெரும் ஆர்வத்தை அளித்தன. யாபேசு - கிலயாதை அம்மோனியர்கள் முற்றுகையிட்டபோது, சவுல் யாவேயின் ஆவியால் ஆட்கொள்ளப்பட்டு யாபேசின் மக்களை மீட்டதையும் பின் சாமுவேல் சவுலைக் கில்காலில் அரசனாக்கியதையும் *11:1-15*-இல் வாசித்தறியலாம். இதற்குப்பின் சாமுவேல் அரசியல் பொதுவாழ்விலிருந்து விடைபெறுகிறார். அதன் பின் இஸ்ராயேல ரின் பயங்கர எதிரியாக விளங்கிய பெலிஸ்தி யரை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. இப்போர்கள் *13:3-14:48*-இல் விவரிக்கப்பட் டுள்ளன. பெலிஸ்தியரை வெற்றி கொண்ட ஒரு போரில் சவுலின் மகன் யோனத்தான் முக்கிய பங்கு பெறுகிறார்.

முதல் அரசனான சவுல் சில தவறுகள் செய்தார். தன்னை அபிடேகம் செய்த சாமு வேலுடன் மோதினார். இம்மோதல்களில் ஒன்று கில்காலில் பெலிஸ்தியர்களுக்கு எதி ராக நடந்தது. போர் தொடங்குமுன் இறைவாக் கினர் சாமுவேலின் வரவுக்காகக் காத்திராமல் பொறுமையிழந்து சவுல் தானே பலியை நிறைவேற்றிப் போரைத் தொடங்கினார். இச்செயலை ''நீர் அறிவீனமாய்ச் செயல்பட் டீர். உமது அரசு நிலைக்காது; ஏனெனில் ஆண்டவர் கட்டளையின்படி நீர் நடக்கவில் லை'' என்று கூறிச் சாமுவேல் கண்டனம் செய்கிறார் *(13:13-14)*. மற்றொரு சமயம், சவுல் அமலேக்கியரைத் தோற்கடித்தபோது தங்களின் சட்டப்படி, கொள்ளைப் பொருட் களை முழுவதுமாக அழிக்காமல் சிலவற் றைத் தன்னுடன் வைத்துக் கொள்கிறார் சவுல். அவர் கூறிய விளக்கங்களைச் சாமு வேல் ஏற்கவில்லை. இந்நிகழ்ச்சி சவுலுக்கு இறுதித் தீர்ப்பாக முடிகிறது. ''நீர் ஆண்டவ ரின் வார்த்தையைப் புறக்கணித்தீர். அவரும் உம்மை அரச பதவியினின்று நீக்கிவிட்டார்'' *(15:23)* என்று சாமுவேல் கடுமையாகக் கூறு கிறார். இச்சுடுசொற்களைக் கேட்டு அவ நம்பிக்கையுற்ற சவுல், பிரிந்து செல்லும் சாமுவேலின் போர்வையின் மேற்புறத்தைப் பிடித்தார். அது உடனே கிழிந்து போயிற்று. சவுலிடமிருந்து அரசை யாவே எடுத்துவிட் டார் என்பதற்கு இது மேலும் ஓர் அடையாள மாயிற்று. இவ்வாறு சவுல் இறைவனால் கைவிடப்பட்டதாக நினைத்து வெதும்பி மனம் உடைந்துபோய் மனநோய்க்கு ஆளா கின்றார். இச்சூழ்நிலையில்தான் தாவீது சவுல்முன் தோன்றுவதாகச் சில பகுதிகளில் காண்கிறோம்.

*3.* **சவுலும் தாவீதும்:-** சவுலின் பற்றுறுதி யின்மையின் விளைவாக அவரை, யாவே நிராகரித்து விட்டதை நினைத்து இரவும் பகலும் சாமுவேல் வருந்தினார். எல்லாம் போய் விட்டது என்ற நிலையில் யாவே தாவீதைத் தேர்ந்தெடுத்தலிலே மீட்பு வர லாற்றில் புதியதோர் கட்டத்தைத் தொடங்கு கிறார். சவுல் ஆட்சி செய்தாலும் யாவேயின் கட்டளைக்குப் பணிந்து சாமுவேல் தாவீதை

அரசனாக அபிடேகம் செய்கிறார் (*16:1-13*). தாவீது சவுலின்முன் முதன்முதலாகக் கொண்டு வரப்படும் நிகழ்ச்சி பற்றி இரு பாரம்பரியங்கள் காணப்படுகின்றன. *1 சாமு 16:14-23; 17:1-11.32-53-* என்ற பகுதியில் சவுல் தீய ஆவியால் அலைக்கழிக்கப்படும் போது அவருக்கு முன் யாழ் வாசிக்கத் தாவீது அழைத்து வரப்படுகிறார். ஆனால் *1 சாமு 17:12-30; 17:55-18:2*-என்ற பகுதியில் தாவீது தன் மூத்த சகோதரர்களைப் போர்க் களத்தில் சந்திக்கிறார். அங்குக் கோலியத்தின் அட்டகாசங்களைப் பார்த்து, அவனைக் கொன்று வெற்றிபெற அரசனிடம் அனுமதி கோரி சவுல்முன் தாவீது முதன்முதலாகத் தோன்றுவதாகக் கூறப்பட்டுள்ளது. ஆய்வா ளர்கள் கருத்துப்படி முதல் பாரம்பரியமே உண்மையானதும் இயல்பானதுமாக இருக்க லாம். இரண்டு பாரம்பரியங்களும் அரசவை யில் தாவீது எப்படி ஆதரவு பெற்று உயர்ந் தார் என்பதைக் கூறுகின்றன. அரசனின் படைக்கலன் தாங்குவோனாகத் தாவீது பதவி பெறுகிறார் (*16:21*). அதன்பின் தாவீது கோலியத்தைக் கொன்ற வரலாறு வருகிறது. மேலும் சவுல் அனுப்பிய இடமெல்லாம் தாவீது சென்று வெற்றியைக் கொணர்ந்தார். அதனால் சவுல் தாவீதைப் படைத்தலைவ னாக்கினார். மக்கள் எல்லாரும் மற்றும் சவுலின் அலுவலர்களும் இதைப் பெரிதும் விரும்பினர் (*18:5*). தாவீது தனது போரிடும் திறமையால் படிப்படியாக முன்னுக்கு வரு கிறார். சவுலின் மகன் யோனத்தானுக்கும் தாவீதுக்கும் நெருங்கிய நட்பு ஏற்படுகிறது. தாவீதின் உயர்சக்தியையும், மக்கள் அவ ரைத்தன்னைவிட அதிகமாகப் புகழ்ந்துபாடு வதையும் கண்ட சவுல் தாவீது மீது பொறாமை கொண்டார். தன் அரியணைக் குப் போட்டியாகத் தாவீதை எண்ணினார். ஆகையால் தாவீதைக் கொல்லப் பலதரம் முயன்றார் (*18:8-11.20-27*). சவுல் தாவீதைச் சுத்தமாய்த் தொலைத்து விடுவதற்குப் பேயாய்ச் செயல்பட்டார். இதையறிந்த தாவீது ஒரு நாடோடியாகிறார். சவுல் அவரை வேட்டையாடுகிறார். இந்த முயற்சி யில் சவுல் ஒரு கொடிய செயலைச் செய்கி றார். நோபில் இருந்த குருகுலம் முழுவதை யும் கொன்றுதீர்க்கிறார் (*22:11*தொ). ஆனால் தாவீது சவுலைக் கொல்வதற்கு இருமுறை வாய்ப்புகள் கிடைத்தும் அவற்றைச் சாதக மாக்கிக் கொள்ள மறுத்துவிடுகிறார்; அரச னைப் பாதுக்காக்கிறார் (*24:3-12;26: 6-25*).

சவுலின் பிடியிலிருந்து தப்பியோடிய தாவீது நானூறுபேர் கொண்டபடையை ஏற் படுத்திக் கொள்கிறார். இவர்களில் பெரும் பான்மையோர் சவுலின் ஆட்சியில் திருப்தி யிழந்தவர்கள்; துன்புறுத்தப்பட்டவர்களா வர் (*22:2*). இவர்களை ஒரு படைப்பிரி வைப்போல் தாவீது பயன்படுத்தினார் (*23:5; 25:13*). இப்பிரிவு பிற்காலத்தில் தாவீது அரச னான பின் அரசபடையின் மைய ஆற்றல் மிகு படைவீரர்களாகத் திகழ்ந்தனர் (*2 நாள் 12*). இப்படிப்பட்ட அமைப்பு தோன்றக் கூடிய நிலை நிலவியதே சவுலின் ஆட்சியின் வீழ்ச்சியையும், அது மக்களிடையே ஏற் படுத்திய அதிருப்தியையும் எடுத்துக்காட்டுகி றது. பாலைவனத்தில் பதுங்கி வாழ்ந்த காலத்தில், தாவீது தந்திரமாகத் தங்களின் பகைவரான பெலிஸ்தியர்களுடன் இரகசிய உறவை ஏற்படுத்திக் கொள்கிறார். காத்து நகரப் பெலிஸ்திய அரசனுடன் நல்லுறவு கொண்டு சவுல் அரசன் இறக்குமுன்பே தாவீது சிக்லாகு நகரின் சிற்றரசன் ஆனார் (*27:1-7*). பெலிஸ்தியர்களின் கூட்டாளி போல் நடந்தாலும் தாவீது இஸ்ராயேலரின் மற்ற எதிரிகளோடு போரிட்டார் (*27:8-12*).

சவுல் தாவீதை வேட்டையாடித் திரிந்த போது, பெலிஸ்தியர்கள் என்ன செய்து கொண்டிருந்தனர் என்று நாம் வியக்கலாம். இஸ்ராயேலை முழு ஆற்றலுடன் தாக்கப் பெலிஸ்தியர் ஆயத்தம் செய்து கொண்டிருந் தனர். இத்தகைய பெரிய தாக்குதலை இது வரை எதிர் கொள்ளாத சவுல் பேரச்சம் கொண்டார். ஆண்டவரின் ஆலோசனை கேட்டார். அது கிடைக்கவில்லை (*28:1-6*). சவுல் குறிகாரியின் உதவியைநாடி இறந்து போன சாமுவேலின் ஆவியைச் சந்தித்து ஆலோசனை கேட்டார். சாமுவேல் அவ ரைக் கண்டனம் செய்து விரைவில் வரவிருக் கும் அவரது முடிவை முன்னறிவித்தார் (*28:4-20*).

கில்போவா மலையில் இஸ்ராயேலருக்கும் பெலிஸ்தியருக்கும் போர் மூண்டது. இஸ்ராயேலர் தோற்றனர். சவுலின் மூன்று புதல்வர்கள் தங்கள் தந்தையைக் காப்பாற்றும் முயற்சியில் உயிர்துறந்தனர். தனது முடிவு நெருங்கிவருவதை உணர்ந்த சவுல், பெலிஸ்தியர்களால் கொல்லப்படுவதைத் தவிர்க்கத் தனது வாளைத் தரையில் குத்தி வைத்துத் தாமாகவே அதன்மேல் விழுந்து உயிர்நீத்தார். இவ்வாறு இறைவனால் ஏற்படுத்தப்பட்ட முதல் இஸ்ராயேல் அரசன் அவல முடிவெய்தினார் *(31:2-4)*. யாபேசு - கிலயாது மக்கள் சவுலின் உடலையும், அவர்தம் புதல்வர்களின் உடல்களையும் பெத்சானிலிருந்து கொண்டுவந்து யாபேசில் அடக்கம் செய்து, ஏழுநாள் நோன்பு இருந்தனர் *(31:13)*.

*4. மதிப்பீடு:-* சவுலின் வாழ்வையும் அரசையும் பலரும் பலவாறு மதிப்பீடு செய்வர். அவரது வாழ்வு துன்பியல் வாழ்வுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இது மிகவும் இரங்கத்தக்கதாகும். தேர்ந்தெடுக்கப்படுதல், நிராகரிக்கப்படுதல் என்று இருசொற்கள் அவரதுவாழ்வைச் சுருக்கித் தருகின்றன.

இளைஞனான சவுல் அரசத்தன்மையும் கம்பீரத்தோற்றமும் உடையவராய் விளங்கினார் *(9:2)*. ஆற்றல்மிக்கவராகவும் வீரமிக்கவராகவும், பிறர் தன்பால் பற்றுறுதி கொள்ளத்தூண்ட வல்லவராகவும் திகழ்கின்றார். இஸ்ராயேலர் அவரிடம் பெரும் நம்பிக்கை வைத்தனர். பல பெரும் காரியங்களை எதிர்பார்த்தனர். அவருடைய எழுச்சி மிக விரைவாக நிகழ்கிறது. அவரை யாவே தேர்ந்தெடுக்கிறார். அவரை இறைவாக்கினர் சாமுவேல் போர்த்தலைவனாக, ஆயனாக (நகீது) அபிடேகம் செய்கிறார். மக்கள் அவரை அரசராகத் தேர்ந்தெடுக்கின்றனர். வெற்றிப் படையெடுப்புகள் அவரது அரசை உறுதிப்படுத்துகின்றன. நீதிபதிகள் காலத்திய ஆவி பெற்றவர்கள் பாணியில் சவுலின் அரசு முழுமை பெறுகிறது. அது யாவேயின் கொடையிலிருந்தும் மக்களின் தேர்விலிருந்தும் தன் உருவத்தையும் பொருளையும் பெறுகிறது. சவுலின் வரலாற்றில் இஸ்ராயேலின் அரசு, பிற மக்களின் அரசுகளிலிருந்து வேறுபடுகிறது என்பதைத் தெளிவாகக் காண்கிறோம். இஸ்ராயேலின் அரசு சமய உலகம் மற்றும் இவ்வுலக அரசியல் உலகம் ஆகிய இரு உலகங்களைச் சார்ந்ததாகும். ஆனால் இரண்டையும் பிரிக்க முடியாது. சமய உலகில் இஸ்ராயேலின் அரசு யாவேயின் கொடையாகும். அவரது சலுகை பெற்றது. உலக அரசு நிறுவப்பட்டபின்னும் யாவேதான் இஸ்ராயேலின் உண்மையான அரசர். இஸ்ராயேல் சேனைகளின் ஒரே ஆண்டவர். இந்த இரு உலகத்தன்மையைப் பிரிக்க முயலும்போது, இஸ்ராயேல் அரசு வீழ்ச்சியடைகிறது. உலக அரசர் ''யாவேயின் சொற்களுக்கு'' மாறாகச் செயல்படும்போது, அது அவரை வீழ்ச்சிக்கு இட்டுச் செல்கிறது. அவருக்குள்ளே ஏற்கெனவே நிகழ்ந்துவிட்ட கீழ்ப்படியாமை என்னும் துன்பியல் நிகழ்ச்சியின் புறத்தோற்றமே அவருடைய புற உலக அரசியல் வீழ்ச்சியாகும். சவுல் கெட்டிக்காரரான அரசியல்வாதியாக இருக்கலாம். ஆனால் சமய உள்நோக்கு அற்றவர். சமய உலகில் வீழ்ச்சி அடைகிறார். அதன் விளைவாக அரசியலிலும் வீழ்ச்சியடைகிறார். மனித ஆற்றலைப் பெரிதும் நம்பினார். பேராசைப்பட்டார். இறைவனது ஆற்றல் செயல்படுவதற்கு அவர் இடம் தரவில்லை. சுருக்கமாக யாவேயிடம் அவருக்குப் போதிய விசுவாசமில்லை. அப்படிப்பட்ட அரசன் யாவேயின் ஆதரவு பெற்றவராக நிலைத்து நிற்கமுடியாது. மனிதன் அரசனாக இஸ்ராயேலில் செயல்பட்டாலும், யாவேதான் உண்மையான அரசர், மேலான ஆண்டவர்.

யாவே தன்னை நிராகரித்துவிட்டார் என்ற எண்ணமும், இறைவாக்கினர் சாமுவேலின் ஆதரவு தனக்கு இல்லை என்ற ஏக்கமும், சவுலின் நிலையற்ற மனப்போக்கும், மட்டுமின்மையும் அவரை ஒரு மனநோயாளியாய் ஆக்குகிறது. தன்னை யாவரும் துன்புறுத்துவதாக மயக்கம் கொள்கிறார். தாவீதின்மீது பொறாமை கொள்கிறார். தாவீதைக் கொல்லத் திட்டம் செய்கிறார்; வேட்டையாடுகி

றார். சவுலின் உள்ளத்தில் அன்பும், வெறுப்பும் போராடுகின்றன. சமய உலகில் எவ்வளவு வீழ்ச்சியடைந்தார் என்றால், குறிசொல்பவர் உதவியையும் நாடத் தயங்கவில்லை. தற்கொலை செய்து கொள்கிறார். யாவேயால் உன்னத நிலைக்கு உயர்த்தப்பெற்றார். தனது தவறால் பெரும் வீழ்ச்சிஅடைந்தார். என்னே பரிதாபமான வீழ்ச்சி!

உலக அரசைப் பொருத்தமட்டும், சவுல் இஸ்ராயேலரிடையே நிலையான போர்ப் படையை நிறுவினார். பெலிஸ்தியரின் முன்னேற்றத்தைத் தடைசெய்தார். அமலேக்கியரை வென்று அவர்களைக் கட்டுப்படுத்தினார். இரும்பால் ஆன ஆயுதங்களுக்குப் பெலிஸ்தியர் கொண்டிருந்த தனி உரிமையைத் தகர்த்தெறிந்தார் என்று கூறலாம். இஸ்ராயேலரிடையே ஓரளவு ஒற்றுமை உணர்வை ஏற்படுத்தினார். ஆயினும் இன்னும் இஸ்ராயேலரிடையே பல இனங்களில் கூட்டாட்சிமுறையே நிலவியது எனலாம். இஸ்ராயேலரின் அண்டை நாட்டவரான ஏதோமியர், மோவாபியர், அம்மோனியர் ஆகியோரின் அரச அமைப்பைப்பின்பற்றி இஸ்ராயேலிலும் அரசை அமைத்தார். கானானியரின் நகர ஆட்சி அமைப்பைப் பின்பற்றவில்லை. அவரது தலைநகரான கிபயாவில் நடந்த அகழ்வாய்வுகள் சாதாரணமான போர்க் கோட்டையையே வெளிக்கொணர்ந்துள்ளன. அது அதிகச் சிறப்புடையதன்று.

சவுல் ஆட்சிசெய்த காலத்தை உறுதியாகக் கணக்கிட முடியாது. ஏனெனில் *1 சாமு 18:1*-இல்வரும் வாசகம் பழுதுபட்டுள்ளது. தொடக்க அரசாட்சிபற்றிய முதல் காலக்குறிப்பாகிய ரெகபயாம் ஆட்சிக் கணிப்பிலிருந்துதான் சவுலின் ஆட்சிக்காலத்தைத் தோராயமாகக் கூறலாம். இது ஏறக்குறைய கி.மு. *1220-1000* இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

எசாயா காலத்தில் கிபயாவில் சவுலின் பெயர் நினைவு கூறப்படுகிறது (எசா *10:29*). அவர் தாவீதை வேட்டையாடித் திரிந்தது சில சங்கீதங்களின் தலைப்பில் காணப்படுகிறது (*52:2; 54:2; 57:1; 59:1*).நாளாகம ஆசிரியர் சவுலுக்குப் பாதகமான தனது மதிப்பீட்டை *1* நாள் *10:13-14*-இல் சுருக்கமாகத் தருகிறார். சவுலின் மரபுமுறை *1* நாள் *8:33;9:39*-இல் காணப்படுகிறது.

*2.* **சவுல்:-** பவுலின் யூதப்பெயராகும். அப்போஸ்தலர் பணியில் அவர் முதல்முதல் தோன்றியதிலிருந்து (அ.ப. *7:58*), இருபெயர்களும் சேர்த்துக் கூறப்படும் வரை (*13:9*) அப்போஸ்தலர் சவுல் என்றழைக்கப்படுகிறார்.

**சனகெரிபு** (SENNACHERIB - சந்திரக் கடவுளான சின் சகோதரர்களைப் பெருக்குவாராக)

கி.மு. *705* முதல் *681* வரையில் அசீரியாவை ஆண்ட அரசன். இவரது தந்தை சார்கோன். இவர் பதவியேற்றவுடன் பேரரசின் பெரும்பகுதியில் பெரும் புரட்சியைச் சந்திக்க வேண்டிவந்தது. பாபிலோனில் மெரொதாக்கு-பலாதான் தலைமையிலும், சீரியா, பாலஸ்தீன நாடுகளில் எசேக்கியா என்ற யூதா நாட்டு அரசன் தலைமையிலும் புரட்சி ஆரம்பித்தது. இதில் யூதா நாட்டு மன்னனுக்கு எகிப்திய அரசனின் உதவியும் இருந்தது. பாபிலோனுக்கு எதிராக விரைவாகப் படையெடுத்து மெசபொத்தாமியாவில் கிளர்ச்சியை அடக்கினார். பின்பு கி.மு. *701*-இல் சீரியா, பாலஸ்தீனத்துக்கு எதிராகத் திரும்பினார். யூதாவும் பெலிஸ்திய நகரங்களும் தவிர, வேறு யாரும் ஆக்கபூர்வமான எதிர்ப்பு அளிக்கவில்லை. எருசலேமைத் தவிர யூதாவின் மற்ற நகரங்களைச் சனகெரிபு கைப்பற்றினார். இத்தாக்குதலை எதிர்க்குமாறு எசாயா எச்சரித்திருந்தாலும் (*2* அர *18:17-19:34*; எசா *36:1-37:15*) கிளர்ச்சிக் கூட்டணியின் தலைவரான யூதாவின் அரசன் எசேக்கியா, இறுதியாக அசீரியர்களின் தாக்குதலுக்கு அடிபணிந்தார் (*2* அர *18:14-16*). எருசலேம் நகரைச் சுற்றிய முற்றுகை நீக்கப்பட்டது. ஆனால் *2* அர *19:36*-இன்படி எருசலேமைத் தாக்குமுன்பே, ஆயிரக்கணக்கான அசீரிய வீரர்கள் அவர்கள் பாளையத்தி

லேயே மடிந்தனர். இந்த விவிலிய விவரிப்பு, எருசலேமுக்கு எதிரான இரு படையெடுப்புகளை விவரிப்பதாக அறிஞர் சிலர் கருதுகின்றனர். இதன்படி ஒன்று 701-இலும் மற்றது 688-இலும் நடந்ததாகக் கருதப்படும்.

மெசபொத்தாமியாவில் எழுந்த கிளர்ச்சி முழுவதும் அழிக்கப்படவில்லை. ஆகையால் சனகெரிபுவின் ஆட்சியின் பிற்பகுதி பாபிலோனைத் தாக்குவதில் செலவிடப்பட்டது. 689-இல் இவர் பாபிலோன் நகரைத் தரைமட்டமாக அழித்து, அங்கிருந்த மார்தூக்கு கோவிலை நினிவேக்கு மாற்றினார். இது ஒரு காட்டுமிராண்டிச் செயலாகக் கருதப்பட்டது. ஏனெனில் பாபிலோன் மிகப் பழைய, மதிப்புக்குரிய நகரமாகவும், மெசப்பொத்தாமியாவின் சமய, கலாச்சார மையமாகவும் கருதப்பட்டது. 689-க்குப்பின் சனகெரிபுவின் ஆட்சிபற்றிய குறிப்புகள் இல்லை. ஏசர்கத்தோன் என்ற இளைய மகனைத் தனது வாரிசாக நியமித்ததால், அதிரமெலக்கு, சரேத்சர் என்ற மற்ற இரு புதல்வர்களால் கொலை செய்யப்பட்டார் (*2 அர 19:36-37; 2 நாள் 21:31*). கொலை நடந்த இடம் காலாவிலோ நினிவேயிலோ உள்ள நிசிரோக்கின் கோவிலாகும்.

**சனேத்ரின் (SANHEDRIN - பொதுச்சங்கம்)**

சனேத்ரின் யூதர்களின் தலைமையான சபையும் நீதிமன்றமும் ஆகும். பெரிய அந்தியோக்கு காலத்திலிருந்து (*கி.மு. 223-183*) இச்சங்கம் இருந்ததாக யூத வரலாற்று ஆசிரியர் யோசிப்பசு கூறுகின்றார். மக்கபேயர் ஆகமங்களிலும் இச்சங்கம் பற்றிய சில குறிப்புகள் காணப்படுகின்றன (*1 மக் 11:23; 12:6; 14:28; 2 மக் 1:10; 4:44; 11:27*). பெரிய ஏரோதன் அரசுக்கட்டிலில் ஏறிய பின் இச்சங்கத்தின் அங்கத்தினர் யாவரையும் கொன்று போட்டான் என்று யோசிப்பசு கூறுகின்றார். அப்படியாயின் புதிய ஏற்பாட்டுக் காலத்துச் சனேத்ரின் எவ்வாறு எப்போது அமைந்தது என்று அறிய நாம் விரும்பலாம். இதுபற்றி நமக்கு ஒரு செய்தியும் கிடைத்திலது.

புதிய ஏற்பாட்டுக் காலத்துச் சங்கத்தில் மூன்றுவகை உறுப்பினர்கள் இருந்தனர். முதல் வகையினர் பெரிய குருக்களாவர்; அதாவது முன்னாள் பெரிய குருக்களும், குருக்களுடைய குடும்பத் தலைவர்களுமாவர். இரண்டாம் வகையினர் மூப்பர்கள் அல்லது பெரியோர்கள். இவர்கள் யூத கோத்திரங்களின் தலைவர்களும், குருக்கள் அல்லாத பிரபுக்களின் குடும்பத் தலைவர்களும், மறைநூல் அறிஞர்களுமாவர். இவ்விரு பிரிவினரும் பெரும்பாலும் சதுசேயர் பிரிவைச் சேர்ந்தவர்கள், மூன்றாம் வகையினர் பரிசேயரைச் சேர்ந்தவர்கள். மக்களோடு நெருங்கிய தொடர்புடையவர்கள். இவர்கள் அரசி அலக்சாந்திரா காலத்தில் (கி.மு. 76-67) சனேத்ரினில் இடம் பெற்றனர். இச்சங்கத்தில் தலைவர் உட்பட எழுபத்தொரு அங்கத்தினர் இருந்தனர். எவ்விதம் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்பதுபற்றி அறிவதற்கில்லை. அனேகமாக, ஏற்கெனவேயுள்ள அங்கத்தினர்கள் தேவைப்பட்ட மற்ற அங்கத்தினர்களைப் பொறுக்கி எடுத்திருக்க வேண்டும்.

பதவியிலிருக்கும் பெரிய குருவே, சட்டமுறைப்படியும் செயலளவிலும் இச்சங்கத்தின் தலைவர். பொதுவாக யூத மக்களுக்கு இச்சங்கம்தான் தலைமையான நீதிமன்றமாகும். இதன் அதிகாரமும் செல்வாக்கும் ஏரோதர்கள் காலத்தில் கட்டுப்படுத்தப்பட்டாலும், ஆளுநர்கள் காலத்தில் பெருகி இருந்தது. உரோமையர், தங்களது கொள்கைப்படி இச்சங்கத்தின் செயல்களில் தலையிடவில்லை. உரோமையர், தாங்கள் கைப்பற்றிய நாடுகளில் அந்நாட்டின் முறைப்படி நீதிவழங்கவும் தீர்ப்பைச் செயல்படுத்தவும் சுதந்தரம் அளித்திருந்தனர். அதற்கேற்பச் சனேத்ரின் யூத சமய, சமூக, அரசியல் பாரம்பரியப்படியும் யூத சட்டமுறைப்படியும் நீதி வழங்கியது. சட்டத்தையும் பாரம்பரியத்தையும் காப்பவர்கள் என்ற முறையில் யூதர்கள் நாடு, சமயம் பற்றிய யாவற்றையும் சனேத்ரின் அங்கத்தினர்கள் நன்கு அறிந்திருந்தனர். இச்சங்கம் தனக்கென ஒரு காவலர் படையையும் கொண்டிருந்தது. இதற்குப் பிறரைக்

கைது செய்ய அதிகாரம் இருந்தது (மத் 26:27; மாற் 14:132; அ.ப. 4:3; 5:17 தொ). தண்டம் விதித்தல், கசையடி கொடுத்தல் யூத சமூகத் திலிருந்துபிரித்து வைத்தல் போன்ற தண்ட னைகளை வழங்க இச்சங்கத்திற்கு அதிகாரம் உண்டு. மரண தண்டனைத் தீர்ப்பு அளிக்க வும் அதிகாரம் உண்டு. ஆயினும் அதை நிறைவேற்ற ஆளுநரின் இசைவு பெற வேண்டும் (யோவா 18:31).

இச்சங்கம் ஆலயத்தைச் சார்ந்த தென் மேற்குப் பகுதியில் இருந்த ஒரு தனி மன்றத் தில் கூடியது. இயேசுவின் பாடுகளின் போது, பெரிய குருவின் வீட்டில் சங்கம் கூடியதாக (மத் 26:57 தொ; மாற் 14:53 தொ) அறிகிறோம். ஆலயத்தின் வெளிக்கதவுகள் மூடப்பட்டிருந்ததால் இவ்வாறு நிகழ்ந்திருக் கலாம். ''தால்மூது'' பாரம்பரியப்படி இச் சங்கம் அரைவட்ட வடிவமாகக் கூடியது. இரு பக்கங்களிலும் விடுதலை கூறும் வாக்கு களைப் பதிவு செய்ய ஒருவரும் தண்டனை கூறும் வாக்குகளைப் பதிவு செய்ய மற்றொரு வருமாக இரு பதிவாளர்கள் இருந்தனர். ஓய்வு நாட்களிலும் திருநாட்களிலும் சங்கம் கூடாது. அந்நாட்களில் தீர்ப்புக் கூறமுடி யாது. மரண தண்டனை வழங்க நேரும் போது பல தனிப்பட்ட முன்னெச்சரிக்கை எடுக்கப்பட்டன. குற்றவாளிக்குச் சார்பாகப் பேசியவர் அவனுக்கு எதிராகச் சான்று கூற முடியாது. இரு சாட்சிகளின் சான்று இன்றித் தண்டனைத் தீர்ப்புக்கூற முடியாது. விடுத லைத் தீர்ப்பு விசாரித்த அன்றே கூறப்பட லாம். மரணத்தீர்ப்பு அடுத்தநாளில்தான் கூறப்படவேண்டும். எழுந்து நின்று இளை ஞர் முதலாக முதியோர் வரை வாக்குக் கொடுத்தனர். விடுதலை செய்ய ஒருவாக்கு அதிகமாய் இருந்தால் போதும்; மரணத் தீர்ப்புக்கூற, குறைந்தது இரண்டு வாக்குக ளாவது அதிகமாயிருக்க வேண்டும்.

இயேசுவின் காலத்தில் யூதேயா நாட்டுக் குள்தான் இச்சங்கம் அதிகாரம் செலுத்த லாம். யூதேயாவுக்கு வெளியில் இச்சங்கத் தின் அதிகாரம் எவ்வாறு ஏற்றுக்கொள்ளப் பட்டது என்று அறுதியிட்டுக் கூற முடியாது. கிறிஸ்தவர்களைப் பிடித்து வருமாறு அதிகா ரத்துடன் தூதுவர்களை இச்சங்கம் அனுப்பிய தாக வாசிக்கிறோம் (அ.ப. 9:2; 22:5; 26:12). யூதேய நாட்டுக்கு வெளியில் உள்ள யூத சமூகங்களிலும் சிதறிக் கிடந்த யூத சமூகங்க ளிலும் எருசலேம் சனேத்ரின் போன்ற சிறிய சனேத்ரின்கள் இருந்தனவாகத் தெரிய வருகி றது. இவை எருசலேமில் அமைக்கப்பட்ட சட்டமுறையைக் கையாண்டன. எருசலேம் சங்கம் செய்த தீர்மானங்கள் மற்ற எல்லா யூதச் சங்கங்களுக்கும் பொதுவானவையாக அறிவிக்கப்பட்டன. அவை மரியாதையுடன் செயல்படுத்தப்பட்டன.

இயேசு மலைப் பொழிவிலே, பிறரைத் தூற்றுபவன் சனேத்ரின் சங்கத்திற்குமுன் கொண்டு வரப்படவேண்டும் என்று கூறுகி றார் (மத் 5:22). தம்முடைய அப்போஸ்தலர் கள் நற்செய்தியைப் போதித்ததற்காக இச்சங் கத்தின்முன் குற்றம் சாட்டப்படுவர் என்று முன்னறிவித்தார் இயேசு (மத் 10:17; மாற் 13:19). கிறிஸ்துவைப் பற்றிய வழக்கை இச்சங்கம் இருமுறை கேட்டது. பெரிய குருவின் வீட்டில் இரவில் ஒரு முறையும், வழக்கமாகச் சங்கம் கூடும் மன்றத்தில் காலையில் மற்றொரு முறையும் இயேசு விசாரிக்கப்பட்டார். இரவு விசாரிப்பை மத் 26:59 தொ; மாற் 14:55தொ என்ற பகுதியில் வாசிக்கிறோம். அன்னாசு வீட்டில் நடந்த விசாரிப்பைப்பற்றி யோவான் கூறுகின்றார் (யோவா 18:12 தொ). பெரிய குருவாகிய காயபாவின் வீட்டிற்கு இயேசு இட்டுச் செல் லப்பட்டார் என்று லூக்கா கூறினாலும் (லூக் 22:54) காலையில் நடந்த வழக்கு விசார ணையை மட்டும் குறிப்பிடுகின்றார் (லூக் 22:66). மத்தேயுவும் (27:1) மாற்கும் (15:1) சனேத்ரின் சங்கம் என்று குறிப்பிடாவிடி னும், காலையில் நடந்த விசாரணை சட்ட முறைப்படி நடந்ததாகும்.

இச்சங்கம் பேதுருவையும் யோவானை யும் விசாரித்து இனிமேல் கிறிஸ்துவாகிய இயேசுவின் பெயரால் போதிக்கக்கூடாது என்று தடைவிதித்தது (அ.ப. 4:5தொ). அவர் கள் சங்கத்திற்குப் பணிய மறுத்தனர். ஆயி

னும் அவர்களை விடுதலை செய்தது (அ.ப. 4:18தொ). அவர்களது போதகத்தின் வெற்றி கண்டு மீண்டும் அவர்களைக் கைது செய்தது. ஆண்டவரின் தூதர் அவர்களை விடுதலை செய்தார் (அ.ப.5:17தொ). மீண்டும் அவர்களைக் கைதுசெய்து இச்சங்கம் விசாரித்தது (அ.ப..5:26தொ). அவர்கள் பணியாததைக் கண்டு சங்கத்தினர் சினமுற்று அவர்களைக் கொன்று போடக்கருதினர் (5:33). ஆனால் ஞானி கமாலியேல் இவ்வியக்கம் கடவுளுடைய வேலையானால் அதை அழிக்க முடியாதுஎன்று கூறிச் சங்கத்தினரைச் சமாதானப்படுத்தினார் (5:35 தொ). பவுலும் இச்சங்கத்தின்முன் விசாரிக்கக் கொண்டு வரப்பட்டார் என அறிகிறோம் (அ.ப. 22:30தொ).

உரோமையரால் எருசலேம் அழிக்கப்பட்டு, யூதர்கள் சிதறுண்டு போனதோடு இச்சங்கமும் அழிந்தது எனலாம்.

**சன்சன்னா** (SANSANNA - கிளை, பனைக் கிளை)

இது சிக்லாகுக்கு அருகிலுள்ள யூதாவின் தெற்குப் பகுதியில் உள்ள ஒரு நகர் (யோசு 15:31). சிமியோனின் நகரங்களைப் பற்றிய இணைப்பட்டியல்கள் கசர்சூசா (அட்சர் சூசா), கசர்-சூசிம் (அட்சர் சூசிம்) என்று சொல்கின்றன. இவை இரண்டும் சன்சன்னாவைத்தான் குறிக்கின்றன. இது முன்னுள்ள பெயரான மத்மன்னாவினைப்பின்பற்றி, கையெழுத்துப் பிரதி எடுத்தவர்களின் தவறாகும். இந்த இடம், இக்காலப் பெயர்செபாவுக்கு வடமேற்கில் 15 கிலோமீட்டர் தொலைவிலுள்ள இக்காலக் கிர்பெத்து எஸ்-சம்சனியாத்துவாக அடையாளம் காட்டப்படுகிறது.

**சன்பல்லாற்று** (SANBALLAT - சந்திரக் கடவுளாக சின் உயிரளித்தார்)

நெகேமியாவின் காலத்தில் பாரசீகர்களுக் கடியில், சமாரியா பகுதிக்கு ஆளுநராக இருந்தார். இவர் அக்காதியப் பெயரைக் கொண்டிருந்தாலும் யாவே கடவுளை வணங்குபவராகத் தெரிகிறது. கி.மு. 408-இல் எகிப்திலுள்ள எலபைன்டைன் என்னும் இடத்தில் வாழ்ந்த யூதர்கள் சன்பல்லாற்றின் புதல்வர்களாகிய செலேமியாவுக்கும் தெலாயாவுக்கும் அவர்களுடைய கோவிலின் அழிவு பற்றிய செய்தியைக் கடிதம் மூலம் எழுதியனுப்பினர். இப்பெயர்கள் யாவே என்ற பெயரோடு இணைக்கப்பட்டுள்ளன. மேலும் அக்கடிதத்தில் சன்பல்லாற்று யூதவிசுவாசத்தைக் கடைப்பிடித்தார் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. எருசலேம் சமூகத்திற்கும், குறிப்பாக அதன் சுவர்கள் எழுப்பப்படுவதற்கும் சன்பல்லாற்று எதிரியாக இருந்தார் என்று நெகேமியா விவரிக்கிறார். சன்பல்லாற்று எருசலேமைத் தாக்கப் போவதாகவும் அச்சுறுத்தினார் (நெகே 2:10.19; 4:1.7; 6:1-2.5.12.14). இந்த அச்சுறுத்துதல் பயன் அளிக்காதது கண்டு, சன்பல்லாற்று எருசலேமுக்கு வெளியில் நெகேமியாவைச் சந்திக்க முயன்றார். ஆனால் நெகேமியா தான் போனால் கைது செய்து விடுவார்கள் என எண்ணிச் சந்திப்புக்கு மறுத்தார் (நெகே 6:1-14). எருசலேமில் சன்பல்லாற்றின் மருமகன் ஒரு குருவாக இருந்தார். அவரை நெகேமியா எருசலேமிலிருந்து வெளியேற்றினார் (நெகே 13:28). உண்மையில் எருசலேம் யூதர்கள் கோவிலைத் திரும்பக் கட்டும் பணியில் சமாரியர்கள் பங்கெடுக்க விரும்பியபோது அதற்கு மறுத்துவிட்டனர். இது இரு குழுவினருக்கும் இடையே பகைமையை வளர்த்தது. நெகேமியா எருசலேமுக்கு ஆளுநராக வந்தபோது இந்தப் பகைமை நிலையாக வடிவெடுத்திருந்தது.

**சன்னல், பலகணி** (WINDOW)

விவிலியக்காலத்திலும் சரி, இன்றும் சரி சன்னல்கள் உபயோகிக்கப்படுகின்றன. இது வீடுகளின் சுவர்களில் காணப்படும் செவ்வக வடிவமான திறப்பாகும். இத்திறப்பினைச் சட்டங்களால் அழகுபடுத்தினர். திறப்பினை, மூடித்திறக்க அசையும் ஓர் அமைப்புப் பொருத்தப்படுகிறது. ஆலயத்தில் ''வெளிப்புறம் குறுகி உட்புறம் விரிந்த பலகணிகள் (1 அர 6:4; எசே 41:16) அமைக்கப்பட்டிருந்தன''. இவை ''குறுகிய பலகணிகள்'' என்று விவரிக்கப்படுகின்றன (எசே 40:16).

# சா

**சாகாம் (ZAHAM - வெறுப்பு)**

யூதாவின் அரசன் ரெகபயாமின் மகன் (2 நாள் 11:19).

**சாகே (SHAGEE - தவறுகின்ற, அலைந்து திரிகிற)**

இவர் ஓர் அராரியர். இவர் தாவீதின் முப்பது ஆற்றல் மிக்க வீரர்களில் ஒருவரான யோனத்தானுக்குத் தந்தை (1 நாள் 11:34). 2 சாமு 23:33-இன்படி யோனத்தானின் தந்தை அராரியரான சம்மாவாகத் தோன்று கிறார்.

**சாக்கடல் (DEAD SEA)**

இது யோர்தான் ஆற்றின் கழிமுகத்தில் உள்ள உப்பு ஏரியாகும். இதன் மிக அதிக மான உப்புத்தன்மையால் எச்செடி கொடி யும் வளர்வதில்லை. ஆகையால் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

1. பெயர்:- இந்த ஏரிக்கு விவிலியத்தில் பலமுறை பயன்படுத்தப்பட்ட பூர்வீகப் பெயர் 'உப்புக்கடல்' என்பதாகும் (ஆதி 14:3; எண் 34:3.12; உப 3:17; யோசு 3:16; 12:3; 15:2. 5; 18:19). இதற்கு 'அராபாவின் கடல்' என்ற பெயரும் வழங்கியது (உப 3:17; 4:49; யோசு 3:16; 12:3). சில பிற்கால இறைவாக்கு நூல்களில் ''கிழ்கடல்'' என்ற மற்றொரு பெயரும் இருந்தது (எசே 47:18; யோவே 2:10; செக் 14:8). மேற்சொன்ன எந்தப் பெயராலும், புதிய ஏற்பாட்டில் இக் கடல் குறிப்பிடப்படவில்லை. விவிலியத்துக் குப் புறம்பே, இது ''சோதோம் கடல் அல் லது ஏரி'' என்றழைக்கப்படுகிறது. ''சாக் கடல்'' என்ற பெயர் கிரேக்க, இலத்தீன் வழக்கில் கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் தோன் றியதாகத் தெரிகிறது. சிலர் இதை ''லோத் தின் கடல்'' என்றும் அழைப்பர்.

2. பௌதீகப் பண்புகள்:- யோர்தான் நிலப்பிளவு 565 கி.மீ. நீளமானது. இது கிழக்கு ஆப்பிரிக்கா வரை நீண்டிருக்கிறது. இந்தப் பிளவின் மிக ஆழமான தாழ்வாகும் சாக்கடல். இது யோர்தான் ஆற்றின் கழி முகத்திலிருந்து தொடங்கித் தெற்கு நோக்கி அமைந்திருக்கிறது. இதன் நீளம் ஏறக் குறைய 80 கி.மீ. இதன் அதிக அளவு அகலம் ஏங்கேதிக்கு வடக்கே 18 கி.மீ. இதன் மேல் மட்டம் கடல் மட்டத்திலிருந்து 394 மீட்டர் தாழ்ந்தது. இதிலிருந்து இதன் அதிக அளவு ஆழம் வடகிழக்கில் 396 மீட்டராகும். ஆகவே இது உலகின் மிகத் தாழ்ந்த பகுதியாகும். இதன் அடிமட்டம் கடல்மட்டத்திலிருந்து 790 மீட்டர் ஆழமானது. இது மலைகளாலும் பீடபூமிகளாலும் சூழப்பட்டுள்ளது. இத னால், இக்கடலின் சுற்றுப்புறத்திலிருந்து 1585 மீட்டர் ஆழமானதாகும். இதன் மேற் பரப்பு 1036 ச.கி.மீ. ஆகும். ஏல்-லிசான் என்ற சிறிய தீபகற்பபகுதி கிழக்கரையிலிருந்து இக்கடலை ஏறக்குறைய இருசம பகுதியா கப் பிரிக்கிறது. இப்பகுதியில் இதன் ஆழம் 9 மீட்டர்தான். வடக்கில் யோர்தான் கழி முகப்பகுதியிலும், தெற்கில் எஸ்-செப்காவிலுள்ள சகதியான உப்புச்சதுப்பு நிலப்பகுதியிலும் தவிர, இக்கடல் பயனற்ற வறட்சியான நிலத்தாலும் செங்குத்தான மலைப்பகுதிகளாலும் சூழப்பட்டுள்ளது. ஆகவே இப்பகுதிகளை அணுகுவது கடினம்.

இதன் நீரில் பலவகையான உப்புகள் மிக அதிக அளவில் காணப்படுகின்றன. ஒரு லிட்டர் நீரில் 300 கிராம் உப்பு உள்ளது. ஆகவே பெருங்கடல் நீரில் உள்ள உப்பை விட எட்டு மடங்கு அதிக உப்புத்தன்மை கொண்டது. ஆகவே உலகிலேயே அதிக உப்புத்தன்மையுடைய நீர்த்தேக்கமாகும் இக் கடல். இதன் நீர் கசப்பானது, கண்கள், புண்களில் பட்டால் எரியும். மனித உடலை விட அதிகப் புளுவீதம் கொண்டிருப்பதால், நாம் மிதக்கலாம். இதன் நீர் தொடுவதற்கு எண்ணெய்த் தன்மையுடையது. அதில் குளித்தவுடன் உடலில் ஒட்டியுள்ள உப்பை நீக்கச் சுத்தமான நீரில் குளிக்க வேண்டும்.

மேலும் இதைச் சுற்றியுள்ள பகுதியில் அதிக அளவில் நிலக்கீல் உண்டு (ஆதி 14:10). இதன் தென்மேற்குப்பகுதியில் செதோம் மலை (எபேல் உஸ்தம்) எழுகிறது. இது களிக்கல், உப்பு, சுண்ணாம்புக்கல், ஆகியவற்றால் ஆனது. இந்தத் தாதுப் பொருட்களைக் காயச்செய்து உடையக்கூடியதாக்கும் கோடைகால வெப்பமும், குளிர்கால மழையால் ஏற்படும் அரிப்பும் சேர்ந்து இந்தப் பகுதியில் விநோதமான உப்புத் தூண்களைத் தோன்றச் செய்துள்ளன. இவை லோத்தின் மனைவியெனச் சுற்றுலாவில் வருபவர்களுக்குச் சுட்டிக்காட்டப்படுகின்றன (ஆதி 19:26).

பழங்காலப் பாரம்பரியம், சோதோம், கொமோராவின் அழிவிற்குமுன் சாக்கடல் இருக்கவில்லை என்று கூறுகிறது (ஆதி 13:19; 14:10). இதை இடஅமைவு ஆய்வியல் ஏற்றுக்கொள்வதில்லை. ஆனால் இப்பகுதியில் நடைபெற்றுள்ள தொல்பொருள் அகழ்வுகள் தொடக்க வெண்கலக்கால நகரங்களின் அழிவுகளைக் காட்டுகின்றன. இந்நகர்கள் சமவெளி நகர்களாக (19:29) இருக்கலாம். இந்த அழிவு, நில அதிர்ச்சியால் ஏற்பட்டிருக்கலாம். இது போன்ற அதிர்ச்சி 1927 - ஆம் ஆண்டு சூலை பதினொன்றாம் நாள் நிகழ்ந்திருக்கிறது. இத்தகைய நில அதிர்ச்சி, ஆபிரகாம் கண்டதாகக் கூறப்படும் காட்சியை (ஆதி 19:28), நிகழ்ச்சியை நினைவுபடுத்தலாம்.

### சாக்கடல் ஏடுகள், சுருள்கள் (DEAD SEA SCROLLS)

1. 1947-ஆம் ஆண்டிலிருந்து, சாக்கடலின் வடமேற்குத் திசையிலுள்ள வாடி கும்ரான் (கும்ரான் ஓடை) என்றவிடத்தில் பழஞ்சுவடிகள் பல கண்டுபிடிக்கப்பட்டன. வாடிகும்ரான் எரிகோவிலிருந்து தெற்கில் 14-கி.மீ. தூரத்தில் உள்ளது. வாடி என்றால் காட்டோடை என்று பொருள். இங்குக் கண்டுபிடிக்கப்பட்ட பழஞ் சுவடிகளில் விவிலியத்தின் படிவங்களும், பழைய ஏற்பாடு புதிய ஏற்பாடு காலங்களுக்கிடையில் உண்டான நூல்களின்பிரதிகளும் கண்டுபிடிக்கப்பட்டன. தொடர்ந்து இப்பகுதியின் தென்பாகத்திலும் பழஞ் சுவடிகள் குகைகளில் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வாறு இங்குக் கண்டுபிடிக்கப்பட்ட சுவடிகளுக்கெல்லாம் தொகுப்பான பெயராகத்தான் கும்ரான் ஏடுகள் அல்லது சாக்கடல் ஏடுகள் என்று கூறப்பட்டுள்ளது.

2. ஏடுகள் கண்டுபிடிக்கப்பட்ட வரலாறு:- 1947 - ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் கும்ரான் என்றவிடத்திற்கு வடக்கே பெடூயின் என்ற நாடோடி வகுப்பைச் சேர்ந்த சிறுவன் ஒருவன் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தான். அவனது உண்மையான பெயர் முகமது அமீது ஏல் கமீது என்பதாகும். ஆனால் அவனை எத்-திப் என்று அழைப்பார்கள். எத்-திப் என்றால் ஓநாய் என்று பொருள். அவன் பெடூயின் என்ற நாடோடி வகுப்பில் தாஅமீரே என்ற குலத்தைச் சார்ந்தவன். அவன் மேய்த்த ஆடுகளில் ஒன்று காணாமற் போக அதனைத் தேடிச் சென்றான். அவ்விடம் குகைகள் நிறைந்த பகுதியானதால், குகைகளில் ஆடு ஒளிந்திருக்கும் என்று குகைகளில் கற்களை விட்டெறிந்து தேடிச் சென்றான். ஒரு குகையில் தான் விட்டெறிந்த கல்லுக்கு ஒரு விநோதமான ஒலிவர, பிறகு அதில் இறங்கிப்பார்க்க, அங்கு மண் சாடிகள் இருக்கக் கண்டுபிடித்தான். அச்சாடிகள் 25/₂ அங்குல முதல் 29/₂ அங்குலம் வரை உயரமாகவும் 10 அங்குல அகலத்திலும் இருந்தன. தன் நண்பர்களையும் துணைக்கு அழைத்துவந்து அந்தச் சாடிகளைத் திறந்து பார்த்தால் அவைகளில் தோல் சுருள்கள் துணியால் சுற்றப்பட்டுக் கிடந்தன. அது தோலாயிருந்ததால் பாதணிகள் செய்பவரிடம் பெத்லகேமில்' அதை விற்கச் சென்றார்கள். இதற்கு 20 பவுன் விலை கேட்டார்கள். வியாபாரி இவ்வளவு தொகைக்கு மதிப்பில்லை என மறுத்துவிட்டார். சில காலத்திற்குப்பின் பழம் ஏடாகயிருந்ததால் எருசலேமிலிருந்த புனிதமாற்கு சிரியன் ஆர்தோடாக்சு மடத்திற்கு இவைகள் கொண்டுவரப்பட்டன. அந்த மடத்தின் பேராயராக விளங்கிய மார் அத்தனேசியு சாமுவேல் 5 சுருள்களை வாங்கினார். மூன்று சுருள்களை எருச

லேம் எபிரேயப் பல்கலைக்கழகத்தில் பணி யாற்றிய சுகேனிக் என்பவர் வாங்கினார். 1954 - ஆம் ஆண்டு மேற்கண்ட சுகேனிக் என்பவரின் மகன் யாதின் பேராயர் அத்தனே சியு வைத்திருந்த 5 சுருளையும் வாங்கினார். அதற்காக இரண்டு இலட்சத்தி ஐம்பதாயிரம் டாலர்களை விலையாகக் கொடுத்து வாங்கி னார். ஆனால் இஸ்ராயேல் அரசு இந்த எல்லாச் சுவடிகளையும் வாங்கி இப்போது எருசலேமில் உள்ள பழஞ்சுவடிகளின் காட் சியகத்தில் சேர்த்து வைத்துள்ளது. இவ்வாறு இப்பழம் ஏடுகளின் பெரும் மதிப்பைப் புரிந்து கொண்ட பெடுயின் நாடோடி மக்கள் அப்பகுயிலிருந்த எல்லாக் குகைகளுக்குள் ளும் நுழைந்து பல ஏட்டுத் துணுக்குகளைக் கொண்டு வர ஆரம்பித்தனர். இச்சமயத்தில் தான் யூதர்களுக்கும் அரபு மக்களுக்கும் இஸ் ராயேல் நாட்டில் கடும்போர் நடந்து கொண் டிருந்தது. 1948-இல்தான் இஸ்ராயேல் நாட் டைப் பிரகடனம் செய்தனர். எனவே இந்நாட்களில் முறையான தொல்பொருள் ஆராய்ச்சியை அங்கு நடத்த முடியவில்லை.

ஆனால் சண்டை ஓய்ந்ததும் 1949 - ஆம் ஆண்டு பிப்ரவரி 15 முதல் மார்ச் 5 வரை யோர்தானில் செயல்பட்டுவந்த தொல் பொருள் ஆராய்ச்சிக் கழகத்திலிருந்து லங்ஸ்டர் கார்டிங் என்பவர் இப்பகுதியில் பழஞ் சுவடிகளைக் கண்டுபிடிக்கும் பணியில் ஈடுபட்டார்.

அவருடன் எருசலேம் நகரில் சாமிநாத சபைக் குருக்களால் நடத்தப்பட்ட விவிலியப் பள்ளியிலிருந்த தே வோ என்பவரும் இத் தேடும் பணியில் சேர்ந்து கொண்டார். பல நூற்றுக்கணக்கான, பல பழம் ஏட்டுத் துணுக் குகள் இப்போது கண்டுபிடிக்கப்பட்டன. இதில் விவிலிய நூல்களும் திருச்சபையால் அங்கீகரிக்கப்படாத போலியான விவிலிய நூல்களும் இன்னும் பலவிதப் புத்தகங்களி லிருந்து வசனங்களும் அச்சுவடிகளில் காணப்பட்டன.

1947 - இல் கண்டுபிடிக்கப்பட்ட இந்தச் சுவடிகளைப்பற்றி, முன்பே அறிஞர்களுக் கும் மக்களுக்கும் தெரிந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. கி.பி. 184-250 ஆண்டுக ளில் வாழ்ந்த ஓரிஜன் என்ற அறிஞர், எரிகோ நகர் அருகில், சாடி ஒன்றில் கண்டுபிடிக்கப் பட்ட சங்கீதங்களின், கிரேக்க மொழி பெயர்ப்பொன்றைப் பயன்படுத்தியிருக்கி றார். இச்செய்தியைத் தருபவர் யுசேபியு என்ற திருச்சபை வரலாற்று ஆசிரியர். கி.பி 800 - ஆம் ஆண்டு முதலாம் திமோத்தேயு என்ற நெஸ்தோரிய பிரிவினை ஆயர், தன் கடிதமொன்றில் இவ்வாறு குறிப்பிடுகிறார். ஓர் ஆடு மேய்ப்பவர், எரிகோ அருகே நூல்கள் இருந்த ஒரு வீட்டினைக் கண்டு பிடித்தார் என்று கூறுகிறார். கி.பி. 973 - இல் காரயத்தர் வகுப்பைச் சார்ந்த கிர்க்கிசானி என்பவர் யூதரின் பிரிவினைபற்றிப் புத்தகம் எழுதினார். அதில் மகரை என்ற வகுப்பின ரைப் பற்றிக் குறிப்பிட்டு, அவர்களின் புத்தகங்கள் ஒரு குகையில் கண்டுபிடிக்கப் பட்டதாகவும் கூறுகிறார்.

இவ்வாறு சுமார் 200 ஏட்டுச் சுருள்கள் கொண்ட ஒரு நூலகத்தையே மறைத்து வைப்பதற்காகக் கும்ரான் குகைகள் பயன் படுத்தப்பட்டிருக்கின்றன என்று தெரிகிறது. தன்னிடம் வந்து சேர்ந்த 5 சுருள்களைப் பேராயர் அத்தனேசியு, இஸ்ராயேல் அரசி டம் ஒப்படைக்குமுன், அமெரிக்க அறிஞர்க ளுக்கு ஆராய்ச்சிக்காக அனுப்பி வைத்தார். இவ்வேடுகளைப் பர்ரோஸ் என்ற அறிஞர் திரவேர், பிரவுன்ஸி என்ற மற்ற அறிஞர்க ளின் துணையுடன் 1950 ஆம் ஆண்டு பதிப்பு செய்து வெளியிட்டார். இப்பதிப்பில் இரண்டு ஓலைச் சுருள்களின் படமும் அதில் எழுதப்பட்டவைகளின் தொகுப்பும் அடங்கி யிருந்தன. இச்சுருள்களில், ஒரு சுருள் எசாயா ஆகமத்தின் முழுப் பகுதியையும் கொண்டிருந்தது. அடுத்த சுருளில் அபகூக்கு ஆகமத்தின் முதல் சில அதிகாரங்களுக்குக் கொடுக்கப்பட்ட விளக்கவுரைகள் காணப் பட்டன.

மேற்கண்ட அமெரிக்க அறிஞர் பர்ரோஸ் மீண்டும் 1951 - இல் இரண்டாவது தொகுப்பை வெளியிட்டார். இத்தொகுப்

பில் மற்றயிரண்டு சிறிய ஓலைச்சுருள்களின் படங்களும், அவைகளில் எழுதப்பட்டவை களும் வெளியிடப்பட்டன. இதில் 'ஒழுக் கங்களின் கையேடு' என்ற புத்தகத்தின் பிரதி இடம் பெற்றிருந்தது. ஆயர் அத்தனேசியுவிட மிருந்து பெற்ற 5 சுருள்களில் நான்கை இவ்வாறு வெளியிட்டார். ஐந்தாவது சுரு ளைச் சரியாகத் திறக்க முடியவில்லை. எனவே வெளியிடப்படமுடியவில்லை. ஆனால் அதில் இலாமேக்கின் திருவெளிப் பாடு என்ற நூல் இடம் பெற்றிருக்க வேண் டும் என்று யூகித்தார்கள்.

*1948* - ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் சுகேனிக் தன்னிடம் கிடைத்த பழம் ஏடுகளில், தெளிவாகத் தெரிந்தவைகளை மட்டும் முதல் பகுதியாக வெளியிட்டார். மீண்டும் அதே போல *1950* - ஆம் ஆண்டு தன்னிட மிருந்த பழம் ஏடுகளில் மற்றொரு பகுதியை வெளியிட்டார்.

சுகேனிக் இறந்தபிறகு அவரது மகன் யாதின் அவர் பணியை அதாவது கும்ரான் ஏடுகளை வெளியிடும் பணியைத் தொடர்ந்து செய்தார். *1954* - ஆம் ஆண்டு, தன்னிடமிருந்த எல்லாக் கும்ரான் ஏடுகளை யும் தொகுத்து 'மறைந்திருந்த ஓலைகளின் கருவூலம்' என்ற தலைப்பில் ஒரு தொகுப்பை வெளியிட்டார். இதன் தலைப்பு எபிரேயத்தில் ஒசார் கமகிலோத் கேனுசோத் என்பதாகும். இதில் மூன்று புத்தகத்தின் பகுதிகள் இடம் பெற்றிருந்தன. 1. எசாயா ஆகமம், 2. 'ஒளியின் பிள்ளைக ளுக்கும், இருட்டின் பிள்ளைகளுக்கும் நடக் கும் போர்' என்பதைப் பற்றிய புத்தகம், 3. நன்றி சங்கீதங்களின் நான்கு பாகங்கள்.

இதற்கிடையில் உடைக்கமுடியாதபடி இருந்த ஓர் ஓலைச்சுருளை, வல்லுநர்கள் உதவிகொண்டு எபிரேயப் பல்கலைக்கழ கம் திறக்க உதவியது. அதில் இலாமேக்கின் திருவெளிப்பாடு இருக்கும் என்று எண்ணி னார்கள். ஆனால் அதில், ஆதி ஆகமத்தை விளக்கிக் கூறும் மிட்ராஸ் என்ற கதை விளக்கங்கள் காணப்பட்டன. எனவே அதற்கு ஆதியாகமத்தின் போலிநூல் என்று பெயர் கொடுத்தார்கள். இதனையும் யாதின், அவிகாத் என்பவருடன் இணைந்து வெளி யிட்டார்.

*1951* - ஆம் ஆண்டு மற்றொரு இடத்தில் பழஞ் சுவடிகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்விடத்தையும் கண்டுபிடித்தவர்கள் தாஅமீரே வகுப்பைச் சார்ந்த பழங்குடியினர் தான். இவ்விடம் கும்ரானிலிருந்து 18 கி.மீ. தெற்கே உள்ளது. இதுவும் ஓர் ஓடைமேல் தான் உள்ளது. அவ்வோடையின் பெயர் வாடி முராபாத் என்பதாகும். இவ்வோடை யின் மேலிருந்த இரண்டு குகைகளில் பல பழம் ஏட்டுத் துணுக்குகளைக் கண்டுபிடித்த னர். இதன்பிறகு *1952* - ஆம் ஆண்டு இப்பகு தியில் (முராபாத்) தொல்பொருள் ஆராய்ச்சி நடத்தப்பட்டது. இப்பகுதிகளையும் ஏடு களை மறைத்து வைக்கப் பல காலங்களைப் பயன்படுத்தியிருந்தனர் என்பது தெரிய வரு கிறது. இங்கு விவிலியப் புத்தகங்களும், மற்றப் புத்தகங்களும் கண்டுபிடிக்கப்பட் டன. விவிலியப் புத்தகங்கள் மாசரேட்டிக்கு முறை (மரபுரையினர்) அறிமுகப்படுத்திய புள்ளிகள் வைத்தெழுதும் முறையில் எழு தப்பட்டுள்ளன. இங்கு ஒருதோல் சுருளில் சிறிய இறைவாக்கினர் என்ற புத்தகங்களி லிருந்து வாசகங்கள் காணப்படுகின்றன. மற் றொரு புல்தாள் சுருள், அழித்துவிட்டு அதன் மேல் எழுதப்பட்ட சுவடியாகும். இந்த அழித்து எழுதப்பட்ட சுவடி கி.மு. *8* - ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாயிருக்க வேண்டும் என்று அறிஞர் கருதுகின்றனர்.

இந்த முராபாத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஏடுகள், இவ்வேடுகள் எழுதப்பட்ட காலத் தின் சூழ்நிலையை நாம் தெரிந்து கொள்ளப் பெரிதும் உதவுகின்றன. கி.பி. 132 - 35 - ஆம் ஆண்டுக் காலத்தில் எழுதப்பட்ட இவ் வேடுகள், இவ்வாண்டுகளில் உரோமைய ருக்கு எதிராக எழுந்த இரண்டாவது புரட்சி நிலையைத் தெரிவிக்கிறது. ஓர் ஏட்டில், புரட்சியின் தலைவராக விளங்கிய கோசேபா மகன் சீமோன் கையெழுத்திட்டி ருக்கிறார். மற்ற ஏடுகள் கோசேபா மகனை

இஸ்ராயேலின் இளவரசன் என்று அழைத்து, இவன் இஸ்ராயேல் மக்களுக்கு விடுதலை வாங்கித் தந்தான் என்றும் கூறுகின்றன.

மற்றொரு இடத்திலும் பழம் ஏடுகள் 1950 - ஆம் ஆண்டை அடுத்து வந்த காலங்களில் கிடைத்தன. அவ்விடத்தின் பெயர் கிர்பெத் மிர்து என்பதாகும். இது மார்சாபா என்ற மடத்திலிருந்து வடகிழக்குத் திசையில் 4 கி.மீ. தூரத்தில் அமைந்திருக்கிறது. இங்குக் கிடைத்திருக்கும் பழம் ஏடுகள் காலத்தால் பிற்பட்டவை. இங்கு விவிலியத்தைச் சார்ந்தவை, கிரேக்க மொழியிலும் பாலஸ்தீனிய அரமேய மொழியிலும் எழுதப்பட்டுள்ளன. இவை கி.பி. 5 - ஆம் நூற்றாண்டு முதல் 8 - ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்திற்கு உட்பட்டவை. 1952 - ஆம் ஆண்டு சூலை மாதத்தில் கிர்பெத் மிர்துவில் நபத்தேயர், யூத புல்தாள் சுவடிகள், கிரேக்க மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட சிறிய இறைவாக்கினர் புத்தகங்களின் ஏட்டுத் துணுக்குகள் ஆகியவை இங்குக் கண்டுபிடிக்கப்பட்டன. முராபாத்திலும், கிர்பெத் மிர்துவிலும் கண்டுபிடிக்கப்பட்ட பழஞ் சுவடிகள் கும்ரான் ஏடுகளுடன் தொடர்பில்லாதவையாகக் காட்சியளிக்கின்றன. ஆனால் கும்ரானில் பல புதிய பழம் ஏடுகள் பல குகைகளில் கண்டுபிடிக்கப்பட்டன.

1952 - ஆம் ஆண்டு, ஒரு தனித்த தேடும் பணி கும்ரான் ஓடைப் பகுதிகளில் நடத்தப்பட்டது. அப்போது 37 குகைகளில் பல பானைகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவைகளில் சிலவற்றில் பழம் ஏடுகளும் கிடைத்தன. இவற்றில்,

**குகை - 2 (2Q):** இக்குகை முதல் குகையிலிருந்து, தென்புறத்தில், அதன் அருகில் உள்ளது. இங்கு விவிலிய ஏட்டுத் துணுக்குகளும், போலி விவிலியப் புத்தகங்களின் ஏட்டுத் துணுக்குகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இவைகளில் சுபிலி ஆகமத்தின் ஒரு பகுதி காணப்படுகிறது. சுபிலி ஆகமம் போலி விவிலியப் புத்தகங்களில் ஒன்று. அத்துடன் அரமேய மொழியில் எழுதப்பட்ட மற்றொரு புத்தகமும் இங்குக் கிடைத்தது. இதில் வரவிருக்கும் புதிய எருசலேமைப் பற்றிக் கூறப்படுகிறது.

**குகை - 3. (3Q)** இது முதல் குகையிலிருந்து வடக்கே சுமார் 2 கி. மீ. தூரத்தில் உள்ளது. இங்கு 274 ஏட்டுத் துணுக்குகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வேடுகள் எபிரேய மொழியிலும் அரமேய மொழியிலும் எழுதப்பட்டுள்ளன. இத்துடன் செப்புத்தகடுகளில் எழுதப்பட்ட இரண்டு சுருள்களும் கிடைத்துள்ளன.

**குகை. 4. (4Q):** இக்குகை கிர்பெத் கும்ரான் என்ற இடத்திலிருந்து நேராக மேற்குத் திசையில் அமைந்துள்ளது. இது பெடூயின் பழங்குடியினரால் 1952 - ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. இங்கு மற்றக் குகைகளைவிட அதிகமாக ஏடுகள் காணக்கிடந்தன. இவ்வேடுகள் பலதரப்பட்டவை. விவிலியத்தைச் சேர்ந்தவைகள், போலி விவிலியத்தைச் சேர்ந்தவை, விவிலிய விளக்கவுரைகள், வழிபாட்டைச் சார்ந்தவை இன்னும் அப்பகுதியில் வாழ்ந்த குறிப்பிட்ட தனிப்பிரிவினரான எஸ்ஸேனியர்களின் வாழ்க்கையைச் சார்ந்தவையெனப் பலதரப்பட்ட ஏடுகள் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டன.

**குகைகள் - 5,6 (5Q, 6Q):** இக்குகைகள் கும்ரான் அருகிலேயே அமைந்திருக்கின்றன. இங்கு ஒரு சில ஏடுகளே கிடைத்தன.

**குகைகள் ஏழு முதல் பத்து வரை:** இக்குகைகள் 1955 - இல் கண்டுபிடிக்கப்பட்டன. இக்குகைகள் கிர்பெத் கும்ரான் மேடுகளில் அமைந்திருக்கின்றன. இங்குக் கிடைத்த ஏட்டுத் துணுக்குகள் எல்லாம் தூய்மை செய்யப்பட்டு, வரிசைப்படுத்தப்பட்டு, தொகுக்கப்பட்டுத் தற்போது எருசலேமிலிருக்கும் பாலஸ்தீனப் பொருட்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

**குகை - 11:** இக்குகை, மூன்றாவது குகையின் அருகிலேயே உள்ளது. இங்குக் கண்டுபிடிக்

கப்பட்ட ஏடுகள், அதிகம் சிதையாமல் கிடைத்திருக்கின்றன. இங்குக் கிடைத்த ஒரு நூதனமான பொருள் இரண்டு செப்புத் தகட்டுச் சுருள்கள். மூன்று தகடுகளை ஒன்றாக நீளமான அளவில் அடித்துப் பிறகு அது இரண்டு சுருள்களாக மாற்றப்பட்டுள்ளன. இந்த இரண்டு சுருள்களில் உள்ள செப்புத் தகட்டின் நீளம் 2.5 மீட்டர். இந்தச் செப்புத் தகட்டுச் சுருள் வெகுகாலம் ஆகிவிட்டதால், துரு ஏறிப் பிரித்தெடுக்கவே முடியவில்லை. பிறகு அல்லகெரோ என்ற அறிஞரின் துணை கொண்டு, மான்செஸ்டரிலுள்ள தொழில் நுணுக்கக் கல்லூரியில் இச்செப்புத் தகட்டுச்சுருள் கவனமாகப் பிரித்தெடுக்கப் பட்டது. இந்த இரண்டு சுருள்களிலும் 12 பத்திகளில் எழுதப்பட்டுள்ளன. எழுத்துக்கள் பதிக்கப்பட்டதால், தகட்டின் பின்புறத்தில் இருந்த எழுத்துப் புடைப்பினைப் பார்த்து அறிஞர் கே.ஜி.கூன் என்பவர் வாசித்து விளக்கமளித்தார். இச்செப்புத் தகட்டு வாசகங்கள் பலவிதப் புதையல்களையும், அவை எங்குப் புதைக்கப்பட்டிருக்கின்றன என்பது பற்றியும் தெரிவிக்கின்றன. அதில் கூறப்பட்டிருக்கின்ற எண்ணிக்கையில்லாத திரவியங்களைப் பார்க்கிறபோது, அவை எருசலேம் ஆலயத்தின் பொருட்களாயிருக்க வேண்டும் என்று அறிஞர் கூன் கருதுகிறார்.

3. கும்ரான் ஏடுகள் எழுதப்பட்ட மொழியும் எழுதப்பட்ட ஆண்டும்:-

இங்குக் காணப்படும் ஏடுகளில் எழுதப் பயன்படுத்தப்பட்டிருக்கும் மொழி பழைய ஏற்பாட்டு எபிரேய மொழியாகும். மிஷ்னா - எபிரேயம் என்ற வகை ஒரு சில சொற்றொடர்களில் மட்டும் காணப்படுகின்றது. ஆனால் நான்காவது குகைகளில் காணப் பட்ட ஏடுகளில் மிஷ்னா எபிரேய இலக்கண நடை அதிகம் காணப்படுகின்றது.

சுவடிகளில் காணப்படும் எழுத்துக்கள் மிக அருமையாகத் திறமையுடன் எழுதப்பட்டுள்ளன. எனவே கைதேர்ந்த, நன்கு கற்றறிந்தவர்தான் இவைகளைப் படிவம் எடுத்திருக்க வேண்டும் என்பது தெளிவு. தோல் சுவடிகள் தான் இங்குப் பெரும்பாலும் பயன்படுத்தப் பட்டுள்ளன. தோலில் முடியிருந்த பாகத்தை நன்கு தேய்த்துவிட்டு, பிறகு அந்தப் பக்கத்தில்தான் எழுதியுள்ளனர். எழுதுவதற்கு முன்வரிசைகளைத் தளமட்டமாக வரைந்திருக்கின்றனர். பக்க ஓரங்களைக் காட்ட நேர் கோடுகளை வரைந்திருக்கின்றனர். இங்கு எழுதப்பட்டிருக்கிற கையெழுத்தின் வடிவம், கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டு நமக்குக் கிடைத்திருக்கும், நாஷ் புல்தாள் சுவடியின் கையெழுத்தை ஒத்திருக்கிறது. அதே சமயத்தில் எருசலேம் நகரில் பழங்காலக் கல்லறைகளில் எழுதப்பட்ட கையெழுத்தையும் இது ஒத்திருக்கிறது.

ஆல்பரைட், திரவேர், பர்ன்பாம், சுகேனிக் என்ற அறிஞர்கள், பழம்பொருள் ஆராய்ச்சி முறைகளைப் பயன்படுத்தி, கும்ரானில் கண்டுபிடிக்கப்பட்ட ஏடுகள் கி.மு. இரண்டாவது அல்லது முதல் நூற்றாண்டைச் சார்ந்தவையெனத் தெரிவிக்கிறார்கள். இவ்வேடுகளை வைத்திருந்த சாடியின் ஓடுகள் கிரேக்கர்களின் கடைசிக்காலத்தைச் சேர்ந்தவையென, ஆராய்ச்சிகள் நிரூபிக்கின்றன. ஆக, சுவடிகளின் காலமும், அதைத் தாங்கியிருந்த சாடிகளின் காலமும் ஒன்று என்பது தெளிவாகிறது. சுவடிகளைச் சுற்றியிருந்த துணிகளையும் ஆராய்ச்சிக்கு அனுப்பினார்கள். ஆராய்ச்சியின்படி இவை கி.பி 33 -ஆம் ஆண்டைச் சார்ந்தது என்ற முடிவைத் தந்தது. கிடைத்திருக்கின்ற ஆதாரங்களையெல்லாம் திரட்டிப் பார்க்கிறபோது இச்சுவடிகள் அனைத்தும் கி.மு. 168 - இலிருந்து கி.பி. 233 - க்குள் என்ற கால எல்லைக்குள் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவாகத் திகழ்கிறது.

4. கும்ரானில் தொல்பொருள் ஆராய்ச்சி:-

கிர்பெத் கும்ரான் என்றவிடத்தில் தொல்பொருள் ஆராய்ச்சிநடத்தினார்கள். இவ்வாராய்ச்சிகள்தான் மேற்கூறப்பட்ட சுவடிகளைப் பற்றிய பல விளக்கங்களை நமக்குக் கொடுத்தன. கிர்பெத் என்றால் இடிந்து வீழ்ந்தஇடம் என்பது பொருள். கும்ரானில்

கிர்பெத் என்ற இடம், கும்ரானின் முதல் குகையிலிருந்து தெற்கே 1கி.மீ. தூரத்தில் உள்ளது. அயின் பெசுக்கா என்றவிடத்திலி ருந்து வடக்கே 3 கி.மீ. தூரத்தில் மலையடி வாரத்தில் உள்ளது.

இந்தக் கிர்பெத் என்ற பாழடைந்தவிடம், முதலில், ஆபிரகாம் காலத்தில் அழிந்து போன கொமோரா நகரம் என்று நினைத்தார் கள் அல்லது உரோமையர்களின் ஒரு சிறு இராணுவ முகாமாயிருந்த இடம் என்றும் ஊகித்தனர். இந்தக் கணிப்புகளெல்லாம் தவ றானவையெனத் தொல்பொருள் ஆராய்ச்சி நிரூபித்தது. தே வோ என்ற குருவும் கார்டிங் என்ற அறிஞரும் இத்தொல்பொருள் ஆராய்ச்சியை முன்னின்று நடத்தினர். ஐந்து முறை இங்கு இத்தகைய ஆராய்ச்சி நடத்தப் பட்டது.

முதல்முறை ஆராய்ச்சி நடந்த காலம் 1951 - ஆம் ஆண்டு நவம்பர் 24 முதல் டிசம்பர் 12 வரை. இரண்டாவது முறையாக ஆராய்ச்சி செய்யப்பட்ட நாட்கள் 1953 - ஆம் ஆண்டு பிப்ரவரி 3 முதல் ஏப்ரல் 24 வரை. மூன்றாவது முறை ஆராய்ச்சிநடந்த காலம் 1954 - ஆம் ஆண்டு பிப்ரவரி 13 முதல் ஏப்ரல் 14 வரை. நான்காவது கட்டமாக ஆராய்ச்சி நடந்த காலம் 1955 - ஆம் ஆண்டு பிப்ரவரி 2 முதல் ஏப்ரல் 6 வரை. ஐந்தாவது முறை யாக ஆராய்ச்சி நடந்த நாட்கள் 1956 - ஆம் ஆண்டு பிப்ரவரி 18 முதல் மார்ச் 28 வரையி லும். இவ்வாராய்ச்சியில், அறிஞர்கள் முக்கிய மாகக் கண்டுபிடித்தது என்னவென்றால், கும்ரான் கிர்பெத் என்னுமிடத்தில் ஒரு பெரிய மடம் செயல்பட்டு வந்திருக்கிறது என்பதுதான். இம்மடத்தில் ஒரு குறிப்பிட்ட கொள்கை கொண்ட குழுவினர் வாழ்ந்துள்ள னர் என்பதும் தெளிவாகத் தெரிகிறது. இவ் விடத்தில் இம்முனிவர்கள் தங்குவதற்கு முன்பாகக் கி.மு. ஏழாவது நூற்றாண்டி லேயே, இவ்விடம் ஒரு நகரமாக விளங்கி யிருக்க வேண்டும் என்றும் தெரிகிறது. நோத் என்ற அறிஞர் யோசு 15:6 - இல் குறிப்பிடப் படும் உப்பு நகரம் இதுவாகத்தானிருக்கும் என்று கருத்துத் தெரிவிக்கிறார். 7 - ஆம் நூற்றாண்டில் பயன்படுத்தப்பட்ட இவ்வி டம் கி.மு. 6 - ஆம் நூற்றாண்டின் முடிவில் கைவிடப்பட்டது. பிறகு நான்கு நூற்றாண்டு கள் இவ்விடம் பாழடைந்த நிலையில் இருந் திருக்கிறது. மீண்டும் இவ்விடம் கி.மு. 134 - 104 ஆண்டுகளில் அசமோனிய பெரிய குரு யோவான் கிரிக்கான் என்பவரால் பயன் படுத்தப்பட்டுள்ளது.

இதன்பிறகுதான் கி.மு. முதலாம் நூற் றாண்டின் ஒரு தனிப்பட்ட சபையினர் இங்கு வந்து தங்கியுள்ளனர். அவர்களுக் கெனத் தனிமடத்தையும் கட்டிக்கொண்டனர்.

5. கும்ரான் மடத்தின் வாழ்க்கைமுறை:-

இவ்விடத்தில் பல வியக்கத்தக்க அமைப் புகளைத் தொல்பொருள் ஆராய்ச்சியின் போது கண்டுபிடித்தனர். உதாரணமாக இங் குத் தண்ணீர் சேர்த்து வைக்கும்முறை. மழைக்காலத்தில் மழைபெய்யும்போது, இவ்விடத்தின் அருகேயிருந்த நீர் வீழ்ச்சியி லிருந்து, வாய்க்கால் மூலமாகத் தண்ணீர் கொண்டு வந்து, மடத்தில் பெரிய நீர்த் தொட்டிகளில் நிரப்பிக் கொண்டனர். இவ் வாய்க்கால்களைக் கற்களாலேயே கட்டி யிருக்கின்றனர். இந்நீர்த்தொட்டிகளில் படிக் கட்டுகளும் காணப்படுகின்றன. இப்படிகள், முனிவர்கள் தங்கள் சபை முறைப்படி தூய் மைச் சடங்குகள் செய்து கொள்ள, அத் தொட்டிகளில் இறங்க வசதியாகச் செய்யப் பட்டவையாகும்.

அம்மடத்தின் தென்கோடியில், பெரிய விசாலமான அறை ஒன்று காணப்படுகிறது. அதன் அளவு 22.5 மீட்டர் நீளம் 4.5 மீட்டர் அகலம். இவ்வறை பொதுவாகச் சபை உறுப்பினர்கள் ஒன்று கூடுவதற்கும், ஒன்று கூடிச் செபிப்பதற்கும் பயன்படுத்தப்பட் டிருக்கிறது. இவ்வறை உணவுக் கூடமாகவும் பயன்பட்டிருக்கிறது. ஏனென்றால் இவ் வறையுடன் மற்றொரு சிறிய அறை இணைக் கப்பட்டுள்ளது. அச்சிறிய அறையில் நூற்றுக் கணக்கான சாப்பாட்டுத் தட்டுகள், கிண்ணங் கள், சாடிகள் முதலியவைகளை வைத்திருந் திருக்கின்றனர். இம்மடத்தில் பலவிதமான

கைவினை வேலைகளும் செய்யப்பட்டிருக்கின்றன. உதாரணமாகப் பானை செய்யும் சூளைகள், கொல்லுப்பட்டரை, தானியம் அரைக்கும் ஆலைகள், ரொட்டி சுடும் அடுப்புகள், துணி துவைக்கும் சலவைமனை ஆகிய இவைகள் எல்லாம் இம்மடத்தில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

இம்மடத்தைச் சுற்றிலும் சுற்றுச்சுவர்கள் மதிலைப்போல் கட்டப்பட்டுள்ளன. காவலர்கள் எதிரிகளைக் கண்காணிக்கத் தனிக் கோபுரமும் கட்டப்பட்டுள்ளது. இக்காவலர்களின் கோபுரம் வடமேற்குத் திசையில் அமைந்திருக்கிறது. இக்காவல் கோட்டைக்குப் பின்னால், தென்புறமாக எழுதுவதற்கென்று தனி அறை ஒதுக்கப்பட்டிருக்கிறது. இங்கு நீளமாக மேசையும், அதன் அருகே இருக்கைப் பலகைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. அத்துடன் இரண்டு எழுத்து மைக்கலயங்களும் இருந்திருக்கின்றன.

இவ்வாறு இங்குக் காணப்படும் பொருள்கள் அனைத்தும், இங்கு வாழ்ந்த குழுவினரின் வாழ்க்கை நிலையையும் முறையையும் நமக்கு நன்கு படம் பிடித்துக் காண்பிக்கின்றன. இங்கு இருந்தவர்கள் புனித வாழ்க்கையின் வழி சென்றிருக்கின்றனர். அதே நேரத்தில் இவர்கள் எல்லாத் தொழிலிலும் ஈடுபாடு காட்டி, தங்கள் காலிலேயே நின்று வாழ்ந்திருக்கின்றனர். இவர்கள் போர்வீரர்களைப் போலப் போரில் குதிக்கவும் தயார் நிலையில் இருந்திருக்கின்றனர். இவர்கள் எழுத்துப் பணியையும், முக்கியமானதொன்றாகக் கருதியிருக்கிறார்கள் என்பதும் நன்றாக விளங்குகிறது.

இம்மடத்தின் தென்புறத்தில் கல்லறைத் தோட்டமொன்றும் காணப்படுகிறது. இங்குச் சுமார் 1000 பேராவது புதைக்கப்பட்டிருக்க வேண்டும் எனச் சான்றுகள் கூறுகின்றன. இறந்தவர்கள், எவ்வித அலங்காரப் பொருட்களும் அணிவிக்கப்படாமல் புதைக்கப்பட்டிருக்கின்றனர். இக்கல்லறைகளில் பெண்களும் புதைக்கப்பட்டிருக்கின்றனர் என்பதற்கும் சான்றுகள் கிடைத்துள்ளன. கி.மு. 31-இல் இப்பகுதியில் பூமி அதிர்வு ஒன்று ஏற்பட்டிருக்கிறது. இதனை யோசிப்பசு என்ற யூத வரலாற்று அறிஞர் கூறுகிறார். இதனால் இவ்விடத்தில் கட்டப்பட்டது அனைத்தும் அழிவுக்கு உள்ளாகியிருக்கிறது. இவ்வழிவிற்குப் பிறகு பல ஆண்டுகள் அப்படியே பாழடைந்தவிடமாக விடப்பட்டிருக்கிறது. அனேகமாக கி.மு. நான்காம் ஆண்டுவரை (பெரிய ஏரோதின் இறப்பு) இப்படியே விடப்பட்டிருக்கிறது.

இதற்கடுத்து மீண்டும் அக்குழுவினர் இவ்விடத்தில் தங்கள் மடத்தைக் கட்டியிருக்கின்றனர். தொடர்ந்து தங்களின் பழக்கமான குழு வாழ்க்கையை நடத்தி வந்துள்ளனர். சுமார் 60 - ஆண்டுகளுக்குப் பிறகு, கி.பி 68 - இல் உரோமையர்கள் இவ்விடத்தைத் தங்கள் இராணுவத்தைக் கொண்டு தாக்கினர். இம்மடத்தின் முனிவர்களும் வீரர்களும் அவர்களை எதிர்த்துப் போரிட்டிருக்கின்றனர். இதனால் உரோமைய வீரர்கள் இம்மடத்தைத் தீ வைத்துக் கொளுத்தித் தரைமட்டமாக்கிவிட்டனர். இம்முடிவு, உரோமை இராணுவத்தின் பத்தாவது பிரிவு எரிகோவின் மீது படையெடுத்தபோது நடந்திருக்கிறது. இதனையும் வரலாற்று ஆசிரியர் யோசிப்பசு தெரிவிக்கிறார்.

இவ்வாறு இவ்விடத்தை அழித்தபிறகு உரோமைய இராணுவம் இவ்விடத்தைத் தங்கள் முகாமிற்காகப் பயன்படுத்தியிருக்கிறது. இதன் பிறகு, யூதப் புரட்சியாளர்கள் தங்களின் பதுங்கும் இரகசிய இடமாக இவ்விடத்தைப் பயன்படுத்தியுள்ளனர்.

இங்குச் சில நாணயங்களும் கிடைத்தன. அவைகளின் காலமும் நாம் மேற்கூறிய நிகழ்ச்சியின் காலங்களும் நன்கு ஒத்துப் போகின்றன. பெரியகுரு முதலாம் கிரிக்கான் காலம் தொடங்கி (கி.மு. 135 - 140) யூதர்களின் இரண்டாம் புரட்சிக்காலம் (கி.பி. 132 - 135) வரையிலான காலத்தின் நாணயங்கள் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இம்மடத்தில் காணப்படும் பானைகளின் வடிவமும் அமைப்பும், கும்ரான் குகைகளில் கண்டு

பிடிக்கப்பட்ட பானைகளின் அமைப் பிற்கு அப்படியே ஒத்திருக்கின்றன. குகைக ளில் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு சில ஏடுகளில் விவரிக்கப்படும் வாழ்க்கை முறையும், இம் மடத்தில் கிடைக்கும் தடயங்களினால் நாம் காணும் வாழ்க்கைமுறையும் அப்ப டியே ஒற்றுமையாய் அமைந்திருக்கின்றன.

இக்கும்ரான் மடத்திற்குத் தெற்கே அயின் பெசுக்கா என்றவிடத்தில் மற்றொரு சிறிய மடம் காணப்படுகிறது. இது கும்ரான் கிர் பெத் மடத்தின் கிளை மடமாகத்தான் அமைந்திருக்கவேண்டும். இம்மடத்தைச் சுற்றிலும், கும்ரான் மடத்தைப்போலவே, நன்கு காவற்சுவர்கள் எழுப்பப்பட்டுள்ளன. இங்கு விவசாயப் பண்ணையை நடத்தி யிருக்கிறார்கள். தானியம், காய்கள், பழமரங் கள் இவைகளைப் பயிர் செய்திருக்கின்ற னர். கால்நடைப் பண்ணையும் அங்கு இருந் திருக்கிறது. இவ்வாறு தங்களுக்கு வேண்டி யதையெல்லாம் அவர்களே உழைத்துப் பெற்று, பாதுகாத்து, பயன்படுத்தி வந்துள்ள னர். இங்குக் காணப்படும் வாழ்க்கை தற்கா லத்திய துறவியர் மட வாழ்க்கை ஒழுங்கு போலவே காணப்படுகிறது.

*6. கும்ரானில் காணப்படும், விவிலிய நூல் களும், போலி விவிலியப் புத்தகங்களும்:-*

*எசாயா நூல்:-* இங்குக் கண்டுபிடிக்கப் பட்ட பழம் ஏடுகளில் மிகவும் நீளமான பெரிய ஏடு, எசாயா ஆகமம் எழுதப்பட்ட ஏடாகும். எசாய ஆகமத்தின் இரண்டு சுருள் கள் கிடைத்துள்ளன. இவ்விரண்டு சுருள்க ளும் முதல் குகையிலேயே கிடைத்தன. முதல் சுருளில் எசாயா ஆகமத்தின் முழுப் புத்தகமும் அப்படியே சிதையாமல் காணப் படுகிறது. இச்சுவடியின் மொத்தநீளம் 7.2 மீட்டர். சுவடியின் அகல அளவு 25 செ.மீ. இதில் 17 தாள்கள் சேர்த்து ஒட்டப்பட்டிருக் கின்றன. இதில் காணப்படும் மொத்தப் பத்திகள் 54. இச்சுவடி கி.மு. 2-ஆம் நூற் றாண்டில் எழுதப்பட்டிருக்கவேண்டும் என அறிஞர் கருதுகின்றனர். எசாயா ஆகமத்தின் இரண்டாம் சுருளில் எல்லா அதிகாரங்களை யும் காணமுடியவில்லை. எசாயா ஆகமத் தின் மூன்றில் ஒரு பகுதிதான் இங்குக் காணக்கிடக்கிறது.

இதற்கடுத்து, காலத்தால் முற்பட்ட ஏடுக ளில் முக்கியமானதாக வருவது, லேவியர் ஆகமம் எழுதப்பட்ட பழஞ்சுவடி. இதுவும் எபிரேய மொழியில்தான் மற்றக் கும்ரான் சுவடிகளில் காணப்படும் அதே எபிரேய எழுத்து வடிவில் காணப்படுகிறது. இச்சுவ டிகளில், கடவுளின் பெயரைத் தயக்கமில்லா மல் எழுதிப் பயன்படுத்தியுள்ளனர். சாமு வேல் ஆகமத்திலிருக்கும் ஏட்டுத் துணுக்கு கள் இங்குக் கிடைத்துள்ளன. இவையும் கி.மு. 3 - ஆம் நூற்றாண்டை ஒட்டி எழுதப் பட்டிருக்கவேண்டும் என்று கணிக்கப்படு கிறது.

இக்குகைகளில் கிடைத்த மொத்த ஏட்டுத் தொகுப்புகளை வைத்துப் பார்க்கும்போது, இங்கு உப ஆகமம், சங்கீதங்கள், எசாயா ஆகமம், ஆதி ஆகமம் ஆகிய புத்தகங்களை விரும்பி அதிகமாகப் பயன்படுத்தியுள்ளார் கள் என்று தெரிகிறது.

சீராக் ஆகமத்தைப் பிரிவினைச் சகோதரர் கள் ஏற்றுக் கொள்வதில்லை. இதனை ஒதுக் கப்பட்ட விவிலியப் புத்தகம் என்று அழைப் பர். இப்புத்தகம் கிரேக்க மொழியில்தான் முதன்முதலில் எழுதப்பட்டது என்பது பாரம்பரியக்கருத்து. ஆனால் எபிரேயத்தி லேயே எழுதப்பட்ட சீராக் ஆகமத்தின் ஏட் டுத் துணுக்குகள் 6 - ஆவது குகையில் கிடைத்திருக்கின்றன. இச்சுவடி, கெய்ரோ நகரில், செபக்கூட பழுதுபட்ட பழைய ஏடுகள் கொட்டப்படும் அறையில் கண்டு பிடிக்கப்பட்ட, மற்றொரு சீராக் ஆகமம் ஏட் டுத்துணுக்குடன் அப்படியே ஒத்திருக்கிறது.

தோபியா ஆகமத்தையும் பிரிவினைச் சகோ தரர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. ஆனால் எபிரேயத்திலும், அரமேயத்திலும் எழுதப் பட்ட தோபியா ஆகமத்தின் ஏட்டுத் துணுக் குகள் இங்குக் கிடைத்துள்ளன.

இன்னும் எந்தத் திருச்சபையும், விவிலி யப்புத்தகம் என்று ஏற்றுக் கொள்ளாத, பல

நூல்கள் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால் அவை அப்போது விவிலியத்தைச் சார்ந்த நூல்கள் என்று கருதப்பட்டன. சுபிலி ஆகமம் என்ற நூல், பல பிரதிகளில் இங்குக் காணப்படுகிறது. இதே போன்று ஏனோக்கு ஆகமமும், அதன் ஒன்று, மூன்று, நான்கு, ஐந்து என்ற பகுதிகளிலிருந்து வாசகங்களும் காணப்படுகின்றன. அதே போன்று லேவி யின் ஏற்பாடு, தமஸ்கு நாட்டில் புதிய உடன்படிக்கையின் ஒழுங்குகள், இன்னும் நாம் அறியாத பல போலி விவிலியப் புத்தகங்களிலிருந்து வசனங்கள் ஆகியன ஏடு களில் காணப்படுகின்றன.

7. கும்ரானில் காணப்படும் விவிலியத்தின் விளக்கவுரைகள்:-

விவிலிய நூல்களின் படிவங்களுடன், விவிலிய நூல்களுக்கு விளக்கவுரைகளை யும் கும்ரான் ஏடுகளில் நாம் காண முடிகி றது. இதில் மிட்ராசிம் என்ற கதை விளக்கங் களும் காணப்படுகின்றன. உதாரணமாகச் சுபிலி ஆகமத்திற்கு அதன் வசனங்கள் சுருக் கத் திரட்டாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

இங்கு ஒரு புதுவிதமான விளக்கவுரை முறை கையாளப்பட்டிருக்கிறது. இதற்கு எபிரேயத்தில் பெசாரிம் என்று கூறுகிறார் கள். பெசாரோ என்றால் 'பொருள், கருத்து என்று பொருளாகும். இம்முறைப்படி, ஒவ் வொரு சொற்றொடருக்கும், விளக்கம் கூறப் படுகிறது. இவ்விளக்கம், இவ்விடத்தில் வாழ்ந்த சபையினரின் வரலாற்றுடன் தொடர்பு படுத்திக் கூறப்படுகிறது. முக்கிய மாக இறைவாக்கினர் நூல்களுக்கு இவ்வி தம், சொற்றொடர், சொற்றொடராகப் பொருள் தரப்பட்டிருக்கிறது. எசாயா, மீக்கா, நாகூம், அபக்கூக்கு, செப்பானிய என்ற நூல்கள் இம்முறையில் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளன. மிட்ராஸ் கதை விளக்கத்தால் இங்குச் சிறப்பாக விளக்கம் கூறப்பட்டிருக்கிற நூல் ஆதி ஆகமம் ஆகும். பெசாரிம் முறைப்படி, அபக்கூக்கு ஆகமம் சிறந்த முறையில் விளக்கம் கூறப்பட்டுள் ளது.

மற்றொரு புதுவிதமான இலக்கிய நடை யில் எழுதப்பட்ட புத்தகங்களையும் இங்கு நாம் காண முடிகிறது. அதாவது விவிலிய வசனங்களின் தொகுப்பு என்றும், சான்று வசனங்கள் என்றும் ஒரு தனிப்பட்ட திரட் டுக்களை நாம் காணமுடிகிறது. சான்று வச னங்களில், ஒரு குறிப்பிட்ட கருத்தைச் சார்ந்து வருகின்ற வசனங்கள் தொகுக்கப்பட் டுள்ளன. 4 - ஆவது குகையில் ஒரு விவிலிய வசனங்களின் தொகுப்பும், ஒரு சான்று வச னத் தொகுப்பும் காணப்படுகின்றன. விவி லிய வசனங்களின் தொகுப்பில், யாத்திரை ஆகமம், இரண்டாம் சாமுவேல், எசாயா, ஆமோஸ், சங்கீதங்கள், தானியேல் ஆகமம் இவைகளிலிருந்து வசனங்கள் சேர்த்துத் தொடுக்கப்பட்டுள்ளன. சான்று வசனங்க ளில் மெசியா என்ற தலைப்பில் பின்வரும் வசனங்கள் எழுதப்பட்டுள்ளன. உப 5:28-29; 18:18-19; எண் 24:15-17; உப 33:8-11.

யூதர்கள் நெற்றியிலே கட்டிக்கொள்ளும் தாயத்துகளும் இங்குக் கண்டுபிடிக்கப்பட் டுள்ளன. இவைகளும் 4 - ஆவது குகையில் தான் கிடைத்தன. தாயத்தினுள்ளே விவிலிய வசனங்கள் எழுதப்பட்ட தாள்கள் பெரிதாக வைக்கப்பட்டிருந்தன. இவை வழக்கமாக இருப்பதைவிடப் பெரியவை.

9. கும்ரான் குழுவினரின் சம்பந்தப்பட்ட ஏடுகள்:-

இங்கு ஒரு குறிப்பிட்ட சபையினர் வாழ்ந்து வந்துள்ளனர் என்று ஏற்கனவே பார்த்திருக்கிறோம். இவர்களின் கொள்கை களைப் பற்றியும், ஒழுங்குகளைப் பற்றியும் தனிப்பட்ட புத்தகங்களை இச்சபையினர் எழுதியுள்ளனர். அப்புத்தகங்களின் பிரதிகளும் இக்குகைகளில் கண்டுபிடிக்கப்பட்டன.

இச்சபையினரின் ஏடுகளைப் பொறுத்த வரை நான்குவிதமாகப் பிரிக்கலாம்.

அ) முதல் வகையில், இவர்களின் வாழ்க்கை யில் அனுசரிக்கப்படவேண்டிய ஒழுங்குக ளின் தொகுப்பை அமைக்கலாம் (உ.ம்) ஒழுக்கக் கையேடு, போர் ஏடுகள்.

ஆ) இரண்டாம் வகையில், பாடல்களின் தொகுப்பு இடம் பெறுகிறது. இப்பாடல்களில் கெதயோத் என்ற நன்றிப் பாடல் முக்கியவிடத்தைப் பெறுகிறது.

இ) மூன்றாவதாக, நாம் வகைப்படுத்தக்கூடியது வழிபாட்டு வசனங்கள், (உம்) ஆசீர் கூறும் முறை போன்றவைகள்.

ஈ) நான்காவதாக விளங்குவது அனுபவ வாக்கியங்கள், ஞான வாக்கியங்கள் முதலியன, அல்லது சில தத்துவப் படிப்பினைகள் உள்ள பகுதிகள்.

சில இடங்களில் மேலே வகைப்படுத்தியவையெல்லாம், தனித்தனியாக அமையாமல் ஒன்றாகக் கலந்து காணப்படுகின்றன. உதாரணமாக ஒழுக்கக் கையேடு என்ற புத்தகம் இறையியல் தொகுப்பைச் சார்ந்தது என்று சொல்லலாம். ஆனால் அதன் முடிவில் ஒரு நீண்ட பாடலுடன் அப்புத்தகம் முடிவடைகிறது.

இப்போது கும்ரான் குழுவினரின் புத்தகங்களை ஒவ்வொன்றாக எடுத்து விளக்கம் காணலாம்.

அ) பெசாரிம் (விவிலியத்தின் பொருள்):- இது ஒரு தனிப்பட்ட வகையான பொருள் தரும் முறை என்று ஏற்கனவே பார்த்துள்ளோம். ஒவ்வொரு சொற்றொடருக்கும் பொருள் தருவதாகும் இம்முறை. அபக்கூக்கு ஆகமத்திற்கு எழுதப்பட்டிருக்கும் இந்தப் பெசார் விளக்கவுரை 13 பத்திகளில் எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு பத்தியிலும் 18 வரிகள் காணப்படுகின்றன. மொத்தம் இந்த விளக்கவுரை எழுதப்பட்டுள்ள ஏட்டின் நீளம் 1.35 மீட்டர். இச்சுவடியின் அகலம் 12.5 செ.மீட்டர்.

இந்தப் பெசார் விளக்கவுரை, கும்ரான் குழுவினரின் வரலாற்றைத் தெரிந்து கொள்ள மிகவும் உதவுகிறது. ஏனென்றால் விளக்கவுரை, இவர்களின் வரலாற்றோடு தொடர்புபடுத்தி எழுதப்பட்டுள்ளது.

இந்தப் பெசார் விளக்கவுரைகளில் மூன்று முக்கிய கருத்தோட்டங்களை நாம் காண முடிகிறது. 1) நீதியான ஆசிரியருக்கும், தீமையான குருவுக்கும் இடையில் உண்டாகும் மோதலைப்பற்றி, இவ்விளக்கங்களில் அடிக்கடி குறிப்பிடப்படுகிறது. 2) மக்கள் மீது இறைவனின் தண்டனை. 3) நாடுகள் மீது இறைவனின் தண்டனை. இந்த மூன்று கருத்துக்களும் பரவலாக இந்தப் பெசார் விளக்கவுரையில் காணக்கிடக்கின்றன. இதில் முக்கியமாகக் காணப்படும் நீதியான ஆசிரியர் யார்? தீமையான குரு யார் என்பதில் அறிஞர்கள் பலரும், பலரைக் குறிப்பிட்டு அடையாளம் கூறுவர். இதில் கித்திம் என்பவரைப் பற்றியும் குறிப்பிடப்படுகிறது. கித்திம் என்பவரிடத்தில் எருசலேமில் வாழும் குருக்கள் தங்கள் அநீதச் செல்வங்களை இழப்பார்கள் என்றும், அவரால் நாடு முழுவதும் அழிக்கப்படும் என்றும் இந்த விளக்கவுரையில் கூறப்படுகிறது. இந்தக் கித்திம் என்பவர் யார் என்பது பற்றியும் பலதரப்பட்ட கருத்துக்கள் கூறப்படுகின்றன.

ஆ) ஒழுக்கக்கையேடு:-
இச்சுவடி 1.8 மீட்டர் நீளத்தில் உள்ளது. இதன் உயரம் 23.5 செ.மீ. இதில் காணப்படும் மொத்த பத்திகள் பதினொன்று. ஒவ்வொரு பத்தியிலும் 26 வரிகள் காணப்படுகின்றன. இவ்வேட்டின் தொடக்க வரிகள் சிதைந்து போய்விட்டன. எனவே இப்புத்தகத்தின் தலைப்பு எது எனச் சரியாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. அனேகமாக இப்புத்தகத்தின் தலைப்பு 'சபையின் ஒழுங்குகள்' என அமைந்திருக்க வேண்டும் என அறிஞர்கள் கருதுகின்றனர். எபிரேயத்தில் ''சேரக் கய்யகாத்'' என்பதாகும். பர்ரோஸ் என்ற ,அறிஞர்தான், இதற்கு ஒழுக்கக் கையேடு என்று பெயர் கொடுத்தார்.

இப்புத்தகம் மிக முக்கியமானதாகக் கும்ரான் குழுவினரால் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இப்புத்தகத்தைச் சார்ந்த 11 பழஞ்176 சுவடிகள் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இங்குக் கண்டுபிடிக்கப்பட்ட பழஞ்

சுவடிகளிலேயே, இப்புத்தக வசனங்களைத் தாங்கிய பழம் ஏடு ஒன்றும் மிகப் பழமை யானது.

இப்புத்தகத்தில் காணப்படும் ஒழுங்குகள் கீழ்வரும் முறையில் அமைந்துள்ளன.

1) உடன்படிக்கையைச் சார்ந்த ஒழுங்கு களும், அதனைச் சார்ந்த வழிபாடும்.

2) அவர்கள் சபையின் கொள்கைகள்.

3) இச்சபையில் எப்படிச் சேர்வது, அனு மதிக்கப்படுவது என்பது பற்றியது.

4) தவறுகளுக்குக் கொடுக்கப்படும் தண்டனை களின் விவரம்.

5) தீமையான உலகில் புனிதவாழ்வு வாழ் வது எப்படி?

6) இறைவனைப் போற்றுதல்.

இவர்கள் சபை இறைவனின் உடன்படிக் கையின் சின்னமாக விளங்குகிறது எனக் கருதினார்கள். இச்சபையில் சேருகின்றவர் கள், உடன்படிக்கையில் சேருகின்றார்கள். இவைகளைப் பற்றி விளக்கமாகக் கூறுகிறது இப்புத்தகம்.

*இ) புனிதப் போர்ச் சுவடி:-*

இச்சுவடி, தற்போது கிடைத்திருக்கும் நிலையில் 2.7 மீட்டர் நீளம் உள்ளது. 15.5 செ.மீ. உயரம் உள்ளது. இதில் மொத்தம் 18½ பத்திகளில் எழுதப்பட்டுள்ளன. ஒவ் வொரு பத்தியிலும் 16 முதல் 18 வரிகள் காணப்படுகின்றன. 4 - ஆவது குகையில், இப்புத்தகப் பகுதிகளைத் தாங்கிய 4 ஏட்டுத் துணுக்குகள் கிடைத்துள்ளன.

இப்புத்தகத்தில், ஒளியின் பிள்ளைகளுக் கும் இருளின் பிள்ளைகளுக்கும் நடக்கும் போராட்டத்தைப் பற்றி எழுதப்பட்டிருக் கிறது. ஒளியும் இருளும், நன்மை தீமை ஆகியவைகளின் சின்னங்களாக அமைத்துக் கூறப்பட்டுள்ளன. இப்போராட்டம் இறை வனின் நடுத்தீர்ப்பில் முடிவடைகிறது. இப் போராட்டம் இரண்டு கோணங்களில் நடை பெற்றிருக்கிறது. ஒன்று ஒழுக்கவியல் வாழ் வில் போராட்டம், மற்றொன்று நாட்டு நல னிற்கான போராட்டம்.

இப்புனிதப்போரின் அமைப்புகள், பழைய ஏற்பாட்டில் காணப்படும் மற்றப் புனிதப்போர்களை ஒத்திருக்கின்றன. குறிப்பாக மக்கபேயர், கிரேக்கர்களுக்கு எதிராக நடத் திய போராட்டத்தின் சாயலும் இதில் காணப்படுகின்றது. எசேக்கியேல் ஆகமம் 38-39 அதிகாரங்களில் காணப்படும் கோகு, மகோகு இவர்களுக்கு எதிராகக் கூறப்படும் போராட்டமும், இந்நூலில் எதிரொலிக்கிறது.

*ஈ) இறைபுகழ்ச்சி:-*

இச்சுவடி இரண்டு பாகமாகக் கிடைத்தது. முதல் பாகத்தில் மூன்று தாள்கள் இருந்தன. ஒவ்வொரு தாளிலும் 4 பத்திகள் காணப்படு கின்றன. இரண்டாவது பகுதி சுமார் 20 ஏட்டுத் துணுக்குகள் சேர்ந்ததாகும்.

இச்சுவடிகள் பெரிதும் சிதைவுகளுக்கு உள்ளாகியிருக்கின்றன. இச்சுவடிகள் உயரத் தால் வழக்கத்தைவிடப் பெரியவையாக உள் ளன. இவ்வளவு உயரமாக இருப்பதால், ஒருபத்தியில் 35 முதல் 40 வரிகள் எழுதப்பட் டுள்ளன. இச்சுவடிகளை இரண்டு எழுத்தா ளர்கள் எழுதியுள்ளனர். 4 - ஆவது குகையில் கண்டுபிடிக்கப்பட்ட 5 ஏட்டுத் துணுக்குகள், இவ்வேடுகளில் காணப்படுகின்ற விடுபாடு களை நிரப்புதல் செய்ய உதவுகின்றன. அத் தோடு 4 - ஆவது குகையில் கண்டுபிடிக்கப் பட்ட சுவடிகள் இந்த இறை புகழ்ச்சிப் பாடல்களின் வரிசை அமைப்பு சரியே என்று நமக்கு உறுதிப்படுத்துகின்றன.

இதில் காணப்படும் சங்கீதங்கள் எல்லாம் ஏறக்குறைய, ''என் ஆண்டவரே உம்மை நான் புகழ்வேன்'' என்றே ஆரம்பிக்கின்றன.

*உ) போலியான விவிலிய நூல்கள்:-*

ஆதி ஆகமம் புதியமுறையில் எழுதப்பட் டுள்ளது. பல விளக்கங்களைக் கற்பனை செய்து எழுதியிருக்கிறார்கள். இது அரமேய மொழியில் எழுதப்பட்டுள்ளது. இது சாடிக

ளில் வைத்துப் பாதுகாக்கப்படாததால் மிக வும் சிதைந்து காணப்படுகிறது. இச்சுருளில் 4 தாட்கள் உள்ளன. இச்சுருளின் மொத்த நீளம் 2.78 மீட்டராகும். இதன் உயரம் 30 செ.மீ. மொத்தம் 22 பத்திகளில் எழுதியுள் ளார்கள். ஒவ்வொரு பத்தியிலும் 34 முதல் 37 வரிகள் உள்ளன.

ஆதி ஆகமத்தின் இப்புத்தகம் எழுதப்பட் டுள்ள முறை, சுபிலி ஆகமத்தின் மொழி நடையையும் தானியேல் ஆகமத்தின் மொழி நடையையும் ஒத்திருக்கிறது. இச்சுருளில் பல திருவெளிப்பாடுகள் அடங்கியுள்ளன. இவ் வெளிப்பாடுகள் லாமெக், நோவா, ஆபிர காம் இவர்களை மையமாக வைத்து எழுதப் பட்டுள்ளன.

*10. கும்ரான் கண்டுபிடிப்பால் நாம் காணும் உண்மைகள்:-*

முதன் முதலாக, இங்கு நமக்கு இதுவரை கிடைத்திராத மிகப் பழங்காலச் சுவடிகள் கிடைத்துள்ளன. இக்கண்டுபிடிப்பிற்கு முன் னதாக நமக்குக் கிடைத்திருந்த பழம் ஏடு கள், இவ்வேடுகளுக்கு 1000 வருடத்திற்குப் பிந்தியவையாகும். இதனால் எவ்வாறு விவி லியம் காலப்போக்கில் கவனமாகப் படிவம் செய்யப்பட்டு மக்களிடையே பயன்படுத்தப் பட்டு வந்திருக்கிறது என்பது நமக்குத் தெளி வாகிறது. விவிலியத்தில் இதற்குமுன் புரியா திருந்தவைகளையும், தெளிவாயில்லாதிருந் தவைகளையும் நன்கு புரிந்து கொள்ள வாய்ப்பு உண்டாகியுள்ளது.

இக்கும்ரான் காலத்தில், விவிலியத்தில் அங்கீகரிக்கப்பட்ட அல்லது ஏற்றுக் கொள் ளப்பட்ட புத்தகப்பட்டியல் என்பது கிடை யாது. எனவே தற்காலத்தில் நாம் பின்பற் றும் அங்கீகரிக்கப்பட்ட பட்டியலுக்கு விளக் கம்கூற இக்கண்டுபிடிப்பு உதவி செய்வ தில்லை.

பழைய ஏற்பாட்டுப் புத்தகங்கள் எழுதப் பட்ட காலத்திற்கும், புதிய ஏற்பாட்டுப் புத்தகங் கள் எழுதப்பட்ட காலத்திற்கும் இடையே இருந்த மறை இலக்கியங்களை நாம் காண இந்தக் கும்ரான் ஏடுகள் உதவி செய்கின்றன. யோசிப்பசு, பிலோ, பிளினி என்ற எழுத்தா ளர்கள், இவ்விடைக்காலத்தில் வாழ்ந்தவர் கள். அவர்கள் கொடுக்கும் தகவல்களை நிறைவு செய்வதாய் இக்கும்ரான் கண்டு பிடிப்புகள் அமைந்துள்ளன. இக்கும்ரானில் எஸ்ஸேனியர் என்ற தனிப்பட்ட குழு வாழ்ந் திருக்க வேண்டும் என்று அறிஞர்கள் ஒத்துக் கொள்கின்றனர். அவர்கள் எழுதிய இலக்கி யங்கள் இக்கண்டுபிடிப்பால், நம் கவனத் திற்கு வந்து சேர்ந்துள்ளன.

இங்குக் காணப்படும் விவிலிய விளக்க வுரைகள் நமக்கு மிகவும் பயனளிப்பன. முக்கியமாக, இவர்கள் பின்பற்றிய பெசாரிம் முறை, விவிலியத்தை எவ்வாறு புரிந்து கொள்ள வேண்டும், நம் வாழ்க்கையில் அதை எவ்வாறு கடைப்பிடித்திட வேண்டும் என்று நாம் அறிந்துகொள்ள, இவர்கள் கொடுத்துள்ள முன்மாதிரி நமக்குப் பெரும் உதவியாகும். அத்துடன் யூதர்கள் மத்தியில் விளங்கிய, மெசியாவைப் பற்றிய கருத்துக் களையும் மறு உலக வாழ்வைப் பற்றிய கருத்துக்களையும் நாம் தெரிந்துகொள்ள கும்ரான் சுவடிகள் பெரிதும் துணை செய் கின்றன.

இக்கும்ரான் சுவடிகள் மூலமாக இராபி கள் போதித்து வந்த யூதக் கொள்கைகளை யும், யூதர்களின் அறிவுசார்ந்த கொள்கை களையும் நாம் அறிந்துகொள்ள முடிகிறது. அத்துடன் கிறிஸ்துவத்தின் ஆரம்ப நிலை யில் இருந்திருக்கும் சூழ்நிலையையும் நாம் தெரிந்து கொள்ள இக்கண்டுபிடிப்புக்கள் உதவுகின்றன. திருமுழுக்கு யோவான், இயேசு, பவுல் இவர்களின் போதனை முறைகளிலும், கொள்கைகளிலும், இந்தக் கும்ரான் குழுவினரின் கொள்கைகள், கருத் துக்கள் பிரதிபலிப்பதை நாம் காணலாம். ஒருசிலர் திருமுழுக்கு யோவானும், இயேசு வின் சீடர்சிலரும் இந்தக் கும்ரான் சபை யைச் சார்ந்தவர்கள் என்றுகூட வாதிடுவர். ஆனால் இக்கூற்றை முழுமையாக நிரூபிக் கத் தக்க ஆதாரங்களில்லை. இயேசுவும் அவர்களுடன் தொடர்பு வைத்திருந்தார் என்று ஒரு சிலர் வாதிடுவர். அவர்களின்

ஏடுகளில் நீதியான ஆசிரியராக வர்ணிக்கப் படுகிறவர் இயேசுவே என்று கூறுவர். இதெல்லாம் நாம் ஏற்க முடியாத கருத்துக்கள். ஏனென்றால் அதற்கேற்ற ஆதாரங்கள் இல்லை.

**சாக்கார் (SACHAR - வாடகைக்கு எடுத்தல்)**

1. ஓர் ஆராரியர். இவர் அகியாமின் தந்தை. தாவீதின் வல்லமைமிக்க முப்பது வீரர்களில் அகியாமும் ஒருவராவார் ( *1 நாள் 11:35*). இதற்கு இணையான பட்டியலில் இப்பெயர் *''ஆராரியரான சாரர்''* என்று குறிக்கப்பட்டுள்ளது (*2 சாமு 23:33*). ஆளின் மூலப்பெயரை நிர்ணயிக்க முடியவில்லையாயினும் ''ஆராரியர்'' என இனப் பெயர் உண்மையான வாசகமாகும்.

2. இவர் ஒரு கோராகியர். வாயில் காப்போரின் குடும்பங்களில் ஒன்றின் குலப்பெயர் மூதாதையரான ஒபேது - ஏதோமின் புதல்வர்களில் ஒருவர் (*1 நாள் 26:4.15*).

**சாக்கு உடை, கோணி (SACKCLOTH)**

இது வெள்ளாட்டு உரோமத்தால் அல்லது ஒட்டகத்தின் உரோமத்தால் செய்யப்பட்ட ஆடையாகும். இது துயரத்திற்குச் சின்னமாக அணியப்படும். இதைச் சில இறைவாக்கினர்களும், சிறைப்பட்டவர்களும் அணிந்திருக்கிறார்கள்.

இது தலைக்கும், கைகளுக்கும் இடம் விட்டுச் செங்கோண அமைப்பாகத் தைக்கப் பட்டதாகும் என்று சிலர் சொல்கின்றனர். இது தானியப்பை போல இருக்கும் என்பர் சிலர். இதற்கு யோசேப்பின் சகோதரர்கள் எகிப்துக்குக் கொண்டு சென்ற தானியப்பையும் (*ஆதி 42:25.27.35*) கிபயோனின் குடிகள் யோசுவாவை ஏமாற்றப் பயன்படுத்திய பழைய கோணிப்பையும் (*யோசு 9:4; லேவி 11:32*) ஆதாரமாகக் காட்டுவர். மற்றொரு கருத்தும் உண்டு. அதாவது ஒரு சிறு அரைத் துணிபோல உள்ள துணியாகும். மேற்காசியாவின் சிறைபட்ட கைதிகள், இப்படிப் பட்ட துணியை அணிந்தவர்களாகச் சித்தரிக் கப்படுகின்றனர். இதற்கு ஆதாரமாக, இடுப்பைச் சுற்றிச் சாக்கு உடை அணியும் எபிரேய வழக்கம் உள்ளது ( *2 சாமு 3:31; எசா 15:3; 22: 12; எரே 4:8*). இடுப்பைச் சுற்றிச் சாக்கைக் கட்டுவதும் (*ஆதி 37:34; 1 அர 20:31; எரே 48:37*) இருந்தது. ஒருவன், சாக்குஉடை அணிவது (*2 அர 19:1-2; 1 நாள் 21:16; எஸ் 4:2; சங் 69:11; எசா 37:1-2*) என்பது இது அரைத் துணியைவிட அகலமானது என்று காட்டுகிறது.

சாக்குஉடை கருமை நிறமானதாகும் என்பது *எசா 5:3; திருவெளி. 6:12* ஆகிய பகுதிகளிலிருந்து தெரிகிறது.

இந்தச் சாக்குஉடை எப்போது தோன்றியது என்பது தெரியவில்லை. வரலாற்றுக்கு முன் உள்ள காலத்தில் இது ஒன்றுதான் ஆடையாகப் பயன்பட்டிருக்கலாம். இந்த ஆடையின் சொரசொரப்பான தன்மை உடலுக்கு அசௌகரியத்தை உண்டாக்கியது என்பதற்கோ தன்னைத்தானே வருத்திக்கொள்ளப் பயன்பட்டது என்பதற்கோ எந்த ஆதாரமும் இல்லை. ஆனால் சொந்த இழப்பு (*2 சாமு 3:31*) நாட்டுப் பேராபத்து (*2 சாமு 3:31; 2 அர 6:30; நெகே 9:1*) ஆகிய காலங்களில் உள்ள அங்கலாய்ப்பின் அடையாளமாக அணியப்பட்டது. சாக்குத்துணி பல நூற்றாண்டுகளாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது. யாக்கோபு பல நாட்களாய்த் தன் மகன் யோசேப்புக்காகச் சாக்கை உடுத்தி வருந்தினார் (*ஆதி 37:34*). ஆகாபு தன் உடல்மேல் சாக்குத்துணி உடுத்தி நோன்பிருந்தார் (*1 அர 21:27*). சீயோனின் மூப்பர்கள் எருசலேமுக்காகக் கோணி உடுத்தி வருந்தினர் (*புல 2:10*). நாடு இடுக்கண் நிலையில் இருக்கும்போது, எல்லாக் குடும்பங்களும் தங்களது மந்தை, வேலையாட்கள், அடிமைகள் போன்ற எல்லோரோடும் சேர்ந்து கோணி உடுத்தியிருந்ததைக் குறித்துக் காட்டுகிறது. மத்தத்தியாவும் அவரது புதல்வர்களும், கலக்கத்தில் இருக்கும்போது, கோணி உடுத்தியிருந்தனர் ( *1 மக் 2:14; 3:47*). புதிய ஏற்பாட்டில் இது மனம் வருந்துவதற்கு அடையாளமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (*மத் 11:21; லூக் 10:13*).

சாக்குத்துணி, சட்டத்தில் குறிப்பிடப்பட வில்லை. ஆனால் பொதுவாகப் பயன்படுத் தப்பட்டதால், எக்கேள்வியுமின்றி ஏற்றுக் கொள்ளப்பட்டது. குருக்கள், துக்கம் கொண் டாடும்போது சாக்குத் துணியை அணிந்திருந் தனர் (யோவே 1:13). இது கன்னி, மணமக னுக்காகப் புலம்புவது போலாகும் (யோவே 1:8). ஒரு தடவை எசாயா இதை அணிந்திருந் தாலும் (எசா 20:2), இதுதான் இறைவாக்கின ருக்கு ஆடை என்று சொல்லிவிட முடியாது. எலியா மயிர் அடர்ந்த தோற்கச்சை அணிந்தி ருந்தார் (2 அர 1:8; செக் 13:4). திருமுழுக்கு யோவான் ஒட்டக மயிராடையையும், வார்க் கச்சையையும் அணிந்திருந்தார் (மத் 3:4; மாற் 1:6).

**சாக்யா** (SACHIA - யாவேயால் பாதுகாக்கப் பட்ட)

இவர் பென்யமின் இனத்தைச் சேர்ந்தவர். சகராயிம் மற்றும் கோதேசு (ஓதேசு) ஆகி யோரின் மகன் (1 நாள் 8:10).

**சாசா** (ZAZA - நிறைவுடைய)

அடிமைத் தளையிலிருந்து நாடு திரும்பிய எரகுமவேலின் கோத்திரத்தைச் சேர்ந்தவர். யூதாவைச் சேர்ந்தவர், யோனத்தானின் (6) மகன் (1 நாள் 2:33).

**சாசாக்கு** (SHASHAK - ஆர்வமுள்ள)

பென்யமின் குலத்து எல்பாகாலின் மகன். இவருக்குப் பதினொரு புதல்வர்கள் உண்டு (1 நாள் 8:14. 22-25).

**சாட்சகசு** (SHAASHGAZ - அழகை இரசிப்பவர்)

இவர் அரசன் அகசவேருவின் வைப்பாட் டிகளைக் கவனித்து வந்த அண்ணகர் (எஸ்த 2:14).

**சாட்சிப்பலிபீடம்** (WITNESS, ALTAR OF)

யோர்தான் ஆற்றிற்கு அப்பால் இருந்த கோத்திரங்கள், ஆற்றின் மேற்குப் பக்கத்தில் இருந்த யூதா கோத்திரங்களைப் போன்றே தங்களுக்கும் கடவுளிடம் பங்கு உண்டு என்பதற்குச் சாட்சியாக ஒரு பலிபீடம் எழுப் பினர் (யோசு 22:27-34). இந்தப் பீடத்திற்குச் ''சாட்சி'' என்ற பெயர் கொடுக்கப்பட்டது. ஆனால் ஓர் எழுத்தர் அதை யோசு 22.34 - இலிருந்து நீக்கிவிட்டார்.பின்பு அது சேர்க்கப்பட்டது. இந்தப் பகுதி எசா 19;19-20-ஐப் பாதித்திருக்கலாம்.

**சாட்சியம், சான்று** (TESTIMONY)

நீதி வழங்கும்போது வாய்மொழி அல் லது எழுத்து வாக்கு மூலங்கள் முதன்மை யான சான்றாக இருந்தன. ஒருவனைக் குற்ற வாளி என்று தீர்ப்பிட இரண்டு சாட்சிகள் அவசியமாகும் (எண் 35:30; உப 19:15; மத் 18:19-16). ஒருவர் பார்த்த அல்லது கேள்விப் பட்ட குற்றம்பற்றிச் சாட்சி கூற மறுப்பது அனுமதிக்கப்படவில்லை (லேவி 5:1; காண் பழ 29:24). ஒன்பதாவது கட்டளை பொய்ச் சாட்சி கூறுவதை முழுவதும் தடை செய்கி றது (யாத் 20:16). நடுவர்கள் சாட்சிகளின் சான்றை ஆய்வு செய்யவேண்டும். ஒரு குற் றத்தைத் தான் கண்டதாக உரிமைகொண்டா டும் பொய்ச்சாட்சியம் கூறுபவர் அக்குற்றத் திற்குரிய தண்டனையைப் பெறுவார் (உப 19:16-19). சிலசமயம், குற்றவாளிக்கு அளிக் கப்படும் தண்டனை சாட்சிகளாலேயே தொடங்கிவைக்கப்பட்டது (17:7).

சான்றுகள் என்று பன்மையில் பயன்படும் போது, அது தோராவின் சட்டத்தை இறைவ னின் சான்றுகளாகக் குறித்தது (உப 4:45; 6:20). பத்துக்கட்டளைகள், சிறப்பாகத் திரு உறைவிடம் (யாத் 38:21; எண் 1:50; 18:2), உடன்படிக்கைப்பேழை (யாத் 25:22; எண் 4:5) மற்றும் சட்டப்பலகை (யாத் 31:18; 32:15) ஆகியவற்றோடு சாட்சியம் என்ற சொல் தொடர்புபடுத்தப்படுகிறது. பேழையும் (16:34; 27:21) சட்டப்பலகையும் (25:16.21) வெறுமனே சாட்சியம் என்றழைக் கப்படுகின்றன. எசா 8:16.20-இல் யாவேயின் இறைவாக்கு சான்றுரை என்று கூறப்படு கிறது.

**சாட்டை** (WHIP)

சாட்டை, சவுக்கு, கசை போன்ற சொற்கள் (1 அர 12:11. 14; 2 நாள் 10: 11.14; பழ

26:3; நாகூ 3:2;..) பல இடங்களில் காணக் கிடக்கின்றன. யோவா 2:15 இலும் "சாட்டை" காணப்படுகின்றது. இஃது தண்டனைக் குரியவர்களைத் தண்டிப்பதற்கோ துன்புறுத்தி உண்மையை வெளிக்கொணர்வதற்கோ பயன்படுத்தப்படும் கருவியாகும். இச் சாட்டை . மனிதர்களை மட்டுமல்லாது விலங்குகளையும் தண்டிக்க உபயோகப் படுத்தப்படும். யோவா 2:15 - இன்படி இயேசு சாட்டைகொண்டு நாணயம் மாற்றுவோரை யும், வியாபாரிகளையும் ஆடு மாடுகளை யும் ஆலய வளாகத்திலிருந்து விரட்டினார் என அறிகிறோம்.

**சாணம், மலம் (DUNG)**

எரிபொருளாகவோ, எருவாகவோ பயன் படுத்தப்பட்ட மிருகங்களுடைய, பறவைக ளுடைய மற்றும் மனிதனுடைய மலம். 2 அர 18:17; எசே 4:12 - இல் மூலச்சொல் குப்பைக்கும் மனித மலத்திற்கும் பயன் படுத்தப்படுகிறது. 2 அர 9:37; எரே 8:2 - இல் உள்ள சொல் தரையில் கழிவுபோல் கிடக் கும் இறந்த உடல்களைக் குறிக்கும்.

கட்டையும், அடுப்புக் கரியும் கிடைக்காத காலங்களில் இன்று செய்வதுபோலப் பாலஸ் தீனத்தில் சாணியைச் சேர்த்துக் காய வைத்து எரிபொருளாகப் பயன்படுத்தினர் (எசே 4:12.15). இந்தச் சாணம் வைக்கோலோடு கலக்கப்பட்டு உரமாகப் பயன்படுத்தப்பட் டது (எசா 25:10). பலி ஒப்புக் கொடுக்கப் பட்ட மிருகங்களின் குடல்களில் இருந்த சாணத்தைப் பாளையத்திற்கு வெளியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் எரிக்க வேண்டும் என்று குருக்களுக்குரிய சட்டம் குறிப்பிட் டுக் கூறுகின்றது (யாத் 29:4; லேவி 4:11; எண் 19:5).

ஒரு மனிதன் அல்லது நாடு அடையவிருக் கும் மோசமான முடிவைக் குறிக்க 'சாணம்' ஓர் அடையாளமாகப் பயன்படுத்தப்பட்டது (2 அர 9:37; சங் 83:10; எரே 8:2; 9:2 செப் 11:17). ஒருவனை மோசமாக இழிவுபடுத்து வதன் அடையாளமாக அவன் முகத்தில் சாணியைப் போடலாம் (மலா 2:3).

நெகேமியா நூலில் குப்பைமேடு என்று குறிப்பிடப்பட்டுள்ளது (நெகே 2:13; 3:13 — 14; 12:31). இது அனேகமாகக் குப்பைகள் கொட்டப்பட்டதைக் குறிக்கலாம். இந்த இடம் நகரின் மேற்கு மூலையில் இருந்திருக் கலாம்.

பென் - அதாது சமாரியாவை முற்றுகை யிட்ட பொழுது, புறாவின் மலம் அதிக விலைக்குப் போனது பற்றி 2 அர 6:25 கூறுகின்றது: ஆனால் புறாவின் மலம் எதற் குப் பயன்பட்டது என்று தெரியவில்லை

**சாதாரண எழுத்துக்கள் (COMMON CHARACTERS)**

படித்தவர்கள் புரிந்துகொள்ளும் விதத்தில் குறிப்பிட்ட அடையாளமாக அல்லது எழுத் தாக, எழுதும்போது பயன்படுத்தும் குறியீடு கள் அல்லது எழுத்துக்கள் சாதாரண எழுத் துக்கள் எனப்படும். இதுவே அக்கால மொழிநடையாகவும் இருந்தது. நெடுங் கணக்கின் எழுத்துக்கள் சாதாரண முறையில் எழுதப்படுவது (எசா 8:1).

**சாதோக்கியத் துணுக்குகள் (ZADOKITE FRAGMENTS)**

ஒரு பழங்கால எபிரேய பிரிவினைக் கையேடு. இது 1897 - இல் கைரோவிலுள்ள கெனிசாவில் கண்டெடுக்கப்பட்ட மத்திய காலத்தைச் சேர்ந்த இரு பிரதிகளிலிருந்து அறியப்படுகிறது. இந்த ஏடு 1910 - இல் பதிப்பிக்கப்பட்டது. இது தோசித்தேயர்க ளோடு தொடர்புபடுத்தப்படுகிறது. இக் குழுவினர், சாலமோன் காலத்தில் பெரிய குருவாக இருந்த சாதோக்கின் வழித்தோன் றல்கள் என்று உரிமை கொண்டாடியதால், சதுசேயர்களுடன் தொடர்புடையவர்கள் ஆவர். ஆயினும் இந்த ஏட்டின் துணுக்குகள் சாக்கடல் சுருள்களுடன் கண்டெடுக்கப்பட் டுள்ளதால், இந்த ஏடு, கும்ரானோடு நெருங் கிய தொடர்புடைய ஒரு குழுவிடமிருந்து தோன்றியிருக்கலாம் என்று கருதப்படு கிறது. இந்த ஏடு "தமஸ்கு நாட்டில் புதிய உடன்படிக்கையைக்" குறிப்பிடுவதால், இது தமஸ்கு ஏடு அல்லது தமஸ்கு சட்டம்

என்று பொதுவாகக் குறிக்கப்படுகிறது. ஏடு இருபெரும்பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் பகுதி அறிவுரையையும் இரண்டாம் பகுதி சட்டங்களையும் கொண்டுள்ளது. இந்த ஏட்டின் கும்ரான் துணுக்குகளின் இரு பகுதிகளிலும் தொடக்கமும் முடிவும் காணப்படவில்லை.

**சாதோக்கு** (ZADOK - நேர்மையுள்ள)

1. சவுலின் அரசைத் தாவீதிடம் ஒப்படைக்கக் கெபிரோனுக்கு (எபிரோன்) வந்த ஒரு படைப்பிரிவின் தலைவர் (*1 நாள் 12:28*). யோசிப்பசின் கருத்துப்படி இவர் 2 - இல் வரும் குருவாகிய சாதோக்காக இருக்கலாம். ஆனால் இதுதான் நாளாகம ஆசிரியரின் நோக்கம் என்று உறுதியாகக் கூறுவதற்கில்லை.

2. தாவீதின் ஆட்சிக்காலத்தில் எருசலேமில் வாழ்ந்த இரு தலைமையான குருக்களில் ஒருவர். கி.மு. 171 - வரை பெரிய குருக்களின் மூதாதையாவார். சாதோக்கு ஆரோனின் மகன் எலயாசரின் வழித்தோன்றலாகிய அகித்தூபின் மகனும் அகிமாசின் தந்தையுமாவார் (*2 சாமு 8:17; 18:19; 1 நாள் 6:8; 24:3*).

தாவீது ஆட்சியின் தொடக்க காலத்தில் கிபயோனில் இருந்த திருக்கூடாரத்தின் குருவாகச் சாதோக்கு பணிபுரிந்தார் (*1 நாள் 16:39 — 40*). தாவீது அரசனான பின்பு, சாதோக்கும் அபியாத்தாரும் தலைமைக்குருக்களாக விளங்கினர் (*2 சாமு 20:25*). படைக் கணக்கெடுப்பில் சாதோக்கு ஆரோனியர்களுக்குத் தலைவராக இருந்தார் (*1 நாள் 27:17*). தாவீது தனதுமகன் அப்சலோமிடமிருந்து ஓடிய போது, சாதோக்கும் அபியாத்தாரும் உடன்படிக்கைப் பெட்டகத்தை எருசலேமுக்குள் எடுத்துச் சென்றனர். நகரத்தில் நடப்பவைகளைத் தாவீதுக்குத் தெரிவிப்பவர்களாகச் செயல்பட்டனர் (*2 சாமு 15:24 - 29; 17:15-16*). அப்சலோமின் மரணத்துக்குப்பின் தாவீதை மீண்டும் அரியணை ஏற்றும் முயற்சியில் இந்த இரு குருக்களும் முக்கிய பங்கெடுத்தனர் (*19:11-12*).

சாலமோனிடமிருந்து அரியணையை எடுத்துக்கொள்ளும் அதோனியாவின் முயற்சியில் அபியாத்தார் அதோனியாவுடன் சேர்ந்து கொண்டார் (*1 அர 1:7*). ஆனால் இந்தச் சூழ்ச்சித் திட்டத்தில் சாதோக்கு சேரவில்லை (*1:8.26*). சாதோக்கும் இறைவாக்கினர் நாத்தானும் சாலமோனை அரசராக அபிடேகம் செய்தனர் (*1:32-40*). சாலமோன் அபியாத்தாரை ஊரைவிட்டு அகற்றி, அவரது குருத்துவத்தைச் சாதோக்குக்கு அளித்தார் (*2:26-27:35; 4:2.4*). இவ்வாறு சாதோக்கின் வழித்தோன்றல்கள் *1 சாமு 2:35*-இல் முன்னறிவிக்கப்பட்டுள்ளபடி ஏலியின் சந்ததியான அபியாத்தாரின் வழித்தோன்றல்களின் இடத்தை எடுத்துக்கொண்டனர். அதே முன்னறிவிப்பு சாதோக்கின் மரபு எக்காலத்திற்கும் நிலைத்திருக்கும் என்றும் முன்னறிவிக்கிறது. எசேக்கியா காலத்தில் வாழ்ந்த பெரிய குரு சாதோக்கின் வழித்தோன்றலாவார் (*2 நாள் 31:10*). நாடு கடத்தப்படும் காலத்திற்கு முன்பே சாதோக்கிய பெரிய குரு அமைப்பு உறுதியாக நிறுவப்பட்டிருந்தது (*எசே 40:46; 43:19; 44:15; 48:11*). நாடு கடத்தலிலிருந்து திரும்பிய பின், ஆரோனின் பெரிய குருக்கள் குடும்பத்தில் சாதோக்கு உள்ளடங்குகிறார் என்று நாளாகமம் காட்டுகிறது. ஆனால் நாளாகம ஆசிரியர், ஆரோனின் மூத்த மகனான எலயாசரின் குடும்பத்தில் சாதோக்குக்கு இடமளித்து, சாதோக்கின் குடும்பத்திற்கு முக்கிய அல்லது ''அபிடேகம்'' செய்யப்பட்ட குருவின் பதவியை அளிக்கிறார் (*1 நாள் 6:1-8. 50-53; 24:8; எஸ் 7:2*).

3. யூதாவின் அரசனான யோத்தாமின் தாயாகிய எருசாவின் தந்தை; ஆக்வே யோத்தாமின் பாட்டன் (*2 அர 15:33; 2 நாள் 27:1*). ஒருவேளை 4 - இல் வருபவராக இருக்கலாம்.

4. 2-இல் வரும் சாதோக்கு குருவின் வழித்தோன்றல். யோசதாக்கு, எஸ்ரா ஆகியோரின் மூதாதையர் (*1 நாள் 6:12; 9:11; எஸ் 7:2; நெகே 11:11*). *எஸ் 7:1-5*-இல் வரும் தலைமுறைப் பட்டியல், சாதோக்கின் பெய

ரையொட்டிக் குறுக்கிக் கூறப்படுகிறது. அதன் விளைவாகச் சாதோக்கு என்ற பெயருக்குமுன் சாதோக்கு குருவின் மூதாதையர்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்தச் சாதோக்கின் சந்ததியாரின் பெயர்கள் சாதோக்கு என்ற பெயருக்குப்பின் உடனடியாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

5. பானாவின் மகன், நெகேமியா காலத்தில் எருசலேம் சுவர்களை மீண்டும் கட்டுவதில் பங்கெடுத்தவர்களில் ஒருவர் (நெகே *3:4; எஸ் 2:2*).

6. இம்மேரின் மகன். தன்வீட்டுக்கு முன்பிருந்த எருசலேம் சுவரைப் பழுது பார்த்தவர் (நெகே *3:29; எஸ் 2:37*).

7. நெகேமியாவின் காலத்தில் எஸ்ராவின் உடன்படிக்கையில் கையொப்பமிட்ட ''மக்கள் தலைவர்களில்'' ஒருவர் (நெகே *10:21*). ஒரு வேளை அதி *3* - இல் கட்டடம் கட்டுபவர்களின் பட்டியலிலிருந்து இங்குச் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

8. லேவியர்களின் கருவூலத்தைக் கவனித்துக்கொள்ள நெகேமியாவால் நியமிக்கப்பட்ட எழுத்தர்களில் ஒருவர் (நெகே *13:13*).

9. இயேசுவின் சட்டப்பூர்வ தந்தையான யோசேப்பின் ஒரு மூதாதையர் (மத் *1:14*).

**சாத்தான் (SATAN)**

புதிய ஏற்பாட்டிலே சாத்தான் (எபிரேய மொழியில் சாத்தான் என்பதற்குப் பகைவன், எதிரி என்பது பொருள்) பேய் அல்லது அலகை (கிரேக்க மொழியில் தியாபோலோஸ் என்பதற்குக் கேடு விளைவிப்போன் என்பது பொருள்) எனும் சொற்கள் ஏறக்குறைய ஒப்பான எண்ணிக்கையில் தோன்றுகின்றன. திருமறை நூலில் அச்சொற்கள் தனிப்பட்ட ஓர் ஆளைக்குறிக்கின்றன. கண்ணுக்குப் புலனாகாத அந்த ஆளின் செயலும் செல்வாக்கும் மற்றவர்களின் (பேய்களின் அல்லது தீய ஆவிகளின்) செயல்களிலும், சிலவேளைகளில் நமக்கு ஏற்படும் சோதனைகளிலும் வெளிப்படுகின்றன. பிற்கால யூதத்துவத்துக்கும் பண்டைய மேற்காசிய நாடுகளின் அனேகமாக எல்லா இலக்கியங்களிலும் நாம் காண்பதற்கும் மாறாக, விவிலிய நூலில் இப்பொருள் பற்றி மிகச் சுருக்கமாக எடுத்துச் சொல்லப்படுகிறது. மறைநூல் கூறுவதெல்லாம், மேற்கூறிய சாத்தான் உண்டு, அவனுடைய சூழ்ச்சிகள் யாவை? அவற்றினின்று நம்மைக் காத்துக் கொள்வது எப்படி? என்பன பற்றியேயாகும்.

I. **பழைய ஏற்பாட்டில்:-**

சங் *109:6*-இல் குற்றம் சாட்டுபவராகவும், *1* சாமு *29:4; 2* சாமு *19:23; 1* அர *5:18* ஆகிய பகுதிகளில் அரசியல் எதிரியாகவும் கூறப்பட்டுள்ளது. ஒருசில இடங்களில் உலகில் உள்ள எதிரி என்று கூறப்பட்டாலும் பெரும்பாலான இடங்களில் விண்ணில் உள்ள உயிர்கள் என்றே பொருள் கொள்ளப்பட்டது. பிற்காலத்தில் சாத்தானைப் பற்றிய ஒரு கருத்து உருவானது யோபு ஆகமத்தின் அடிப்படையில்தான் (யோபு *1:6*தொ; *2: 1* தொ). இதில் குறிப்பிடப்படும் சாத்தான் தீய ஆவி அல்ல. அவனும் கடவுள் அவையில் ஓர் உறுப்பினரே. நமது நாட்டு அரிச்சந்திர புராணத்திலே எவ்வாறு விசுவாமித்திர முனிவர் அரிச்சந்திரனைச் சோதிக்கக் கிளம்புகிறாரோ அது போலவே இந்தச் சாத்தானும் புறப்படுகிறான். அவனது பணியே மனிதனின் உண்மையான தன்மையை வெளிக்கொணர்வது தான். அதனைச் சரியாக நிறைவேற்ற அவன் பல தீமைகளையும் வருவிக்கிறான். இங்குப் பழங்காலத்தில் தீய ஆவியின் செயல்களாகக் கூறப்பட்டவை கடவுளுடைய பணியாளர்களின் செயல்கள் என்று மாற்றமடைகின்றன. இக்கண்ணோட்டம் செக் *3.1-2; 1* நாள் *21:1* ஆகிய பகுதிகளில் வெளிப்படுகிறது.

II. **யூத இலக்கியங்களில்:-**

இங்குச் சாத்தானைப்பற்றிய கருத்து முக்கியமான இடத்தைப் பெறுகிறது. யூத நூல்களின் கருத்துப்படி சாத்தான் தீய ஆவியே. அவன் மனிதனுக்குச் செய்யும் தீமைகள் எல்லாம் அவன் மனிதன் மேல்கொண்ட பொறாமையினால்தான். இதனாலேயே ஆதாம், ஏவாளைச் சோதித்து ஏமாற்றினான்.

மனிதன், இறைதூதர்களுக்கும் சாத்தானுக் கும் இடையேயுள்ள வேறுபாடுகளை அறிந் திருக்க வேண்டும். ஏவாளிடம் சாத்தான் பாம்பாக மாறிப் பேசவில்லை, பாம்பின் வழியாகப் பேசினான். ஆதாம் இதற்குக் கார ணம் கேட்டபோது, இறைவனின் சாயலான மனிதனை ஆராதிக்க மறுத்தபோது, விண் ணகத்திலிருந்து வெளித்தள்ளப்பட்டு மிக்கேல் வானதூதரால் நரகத்துக்குத் தள்ளப்பட்டதா கச் சாத்தான் விளக்குகிறான். ஏனோக்கின் நூலில், சாத்தான்கள் என்று பன்மையில் இச்சொல் பயன்பட்டுள்ளது. இவர்கள் வானதூதர்களைச் சோதனைக்கு உட்படுத்து கின்றனர். பக்திமான்களைப்பற்றி இறை வன் முன் அவதூறு கூறுகின்றனர். தீர்ப்புக் குட்பட்டவர்களைத் தண்டிக்கின்றனர். இவர்கள் ஆயிரமாண்டுக் காலத்திலும் மெசி யாக் காலத்தில் மறைந்துபோகின்றனர். எப் படி மறைகின்றனர் என்பது தெளிவாக இல்லை. சாத்தானின் பொறாமையால் சாவு உலகிற்குள் புகுந்தது என்று ஞான 2:24 கூறுகிறது. இக்கருத்துக்களில் பல புதிய ஏற்பாட்டிலும் எதிரொலிக்கின்றன.

III. *புதிய ஏற்பாடு:-*

புதிய ஏற்பாடு பயன்படுத்தும் சாத்தான், பேய் என்ற சொற்களின் பொருளில் அதிக வேறுபாடு இல்லை. சாத்தான் வலிமை யுடையவன் (மத் 12:29; மாற் 3:27; லூக் 11:21). சாத்தான் தீயவன் (மாற் 13:19 தொ); உலகின் தலைவன் (யோவா 12:31); மனிதர்களைச் சோதிப்பவன். அவன் இயேசுவைக்கூட விட்டுவைக்கவில்லை (மத் 4:1; மாற் 1:13; லூக் 4.2). பேதுரு இயேசுவிடம் பாடுகள் வேண்டாம் என்று கூறியபோது இயேசு அவ ரைச் சாத்தான் என்று அழைக்கிறார். அதா வது இறைத்தந்தையின் விருப்பத்திற்கு மாறாகச் செல்பவர்கள் சாத்தானின் பிள்ளை கள் என்று உணர்த்துகிறார் (மத் 16:23; மாற் 8:33). இறைவனின் வார்த்தையை மனித னின் உள்ளத்திலிருந்து நீக்குபவன் (மத் 13:19; மாற் 4:15; லூக் 8:12). அதே நேரத்தில் யூதாஸ் மனத்தில் காட்டிக் கொடுக்கும் தீய விதையை விதைப்பவனும் அவனே (யோவா 13:2). பின் அதைச் செயல்படுத்த யூதாசினுள் புகுகிறான் (லூக் 22:3; யோவா 13:27). சீடர்களைக் கோதுமையைப் போல் புடைக்க முயற்சிக்கிறான் (லூக் 22:31). ஏமாற்றும்படி சாத்தான் அனனியாவை ஆட் கொண்டான் (அ.ப. 5:3). திட்டம் செய்தும் (1 கொரி 7:5; 2 கொரி 2:11), வஞ்சகத் தந்திரங்களாலும் (எபே 6:11), வலையாலும் (1 திமோ 3:7; 2 திமோ :15) சோதிக்கிறான். சாத்தான் ஒளியின் தூதனாக நடிக்கிறான் (2 கொரி 11:14). சில விசுவாசிகளை நெறிதவ றச் செய்கிறான் (1 திமோ 5:15). அவனே ஆண்டவரது கோதுமை நிலத்தில் களை களை விதைப்பவன் (மத் 13:39; லூக் 8:12). அவன், கர்ச்சிக்கும் சிங்கம்போல் யாரை விழுங்கலாம் எனத் தேடித்திரியும் எதிரியா வான் (1 பேதுரு 5:8). ஆகவே சாத்தானுக்குக் கிறிஸ்தவர்கள் இடம் கொடுக்கக் கூடாது (எபே 4:7).

சாத்தானிடம் மனித உடலுக்கு வேதனை யையும், வருத்தத்தையும் கொடுக்கும் ஆற் றல் உண்டு. அவனுக்கென்று ஓர் அரசும், வீடும் உண்டு (மத் 12:26; மாற் 3:23.26; லூக் 11:18). உலக அரசுகள் எல்லாம் அவனு டைய அதிகாரத்தின் கீழ் இருப்பதாக அவனே உரிமை கொண்டாடுகிறான் (லூக் 4:6). சாத்தானின் வல்லமையை, இருளின் வல்லமை என்றும் இருள் ஆட்சிபுரியும் நேரம் என்றும் (லூக் 22:53; அ.ப. 26:18) இருளுக்கும் ஒளிக்கும் போராட்டம் என்றும் கூறுகின்றனர் புதிய ஏற்பாட்டு ஆசிரியர்கள். வாதநோயால் வாடிய பெண்ணை 18 ஆண்டு களாகச் சாத்தான் கட்டி வைத்திருந்தான் (லூக் 13:16). பவுலை உடலில் தைத்த முள் போல் வருத்தியது சாத்தானுடைய தூதனே (2 கொரி 12:7). பாவிகளும், அப்போஸ்தலர் களின் எதிரிகளும் துன்புற சாத்தானிடம் கையளிக்கப்படுகின்றனர் (1 கொரி 5:5; 1 திமோ 1:20). பவுல் தெசலோனிக்கேயர்களி டம் வருவதைச் சாத்தான் தடுக்கிறான் (1 தெச 2:18), எதிர்க் கிறிஸ்து சாத்தானின் வல்ல மையோடு வருவான் (2 தெச 2:9). ஆயிர மாண்டுக் காலம் சாத்தான் பாதாளத்தில் கட்டிவைக்கப்படுவான் (திருவெளி 20:2). உலகின் இறுதிக்காலத்தில் விடுவிக்கப்பட்டு

அழிவை ஏற்படுத்த அனுமதிக்கப்படுவான் *(20:7)*. ஆனால் அவனுக்கு அளிக்கப்படும் காலம் குறுகியதாகும் *(12:12)*. கொல்வதற்கு அவனுக்கு ஆற்றல் உண்டு (எபி *2:14*). எவ்வளவுதான் வலிமையானவனாக இருந்த போதிலும் அவன் இறைவனின் அதிகாரத் திற்கு உட்பட்டவனே. இறுதியில் அடக்கப் படுவான். இயேசு சாத்தான் விண்ணிலிருந்து விழுந்ததைக் கண்டதாகக் கூறுகிறார் (லூக் *10:18*). இதனை வெளிப்படையாக யோவான் தனது திருவெளிப்பாட்டு நூலில் *(12:9-10)* சுட்டிக்காட்டுகிறார். இங்குச் சாத் தான் பெரும் பறவை நாகமாகக் கூறப்படு கின்றான். சாத்தானுக்கும் அவனது பேய்க ளுக்கும் நித்ய நெருப்பு இருப்பதாகவும் (மத் *25:41*), அவனை எதிர்த்துநின்றால், அவன் ஓடிவிடுவான் என்றும் (யாக் *4:7*) கடவுள் அவனைத் தன் காலால் நசுக்குவார் என்றும் (உரோ *16:20*) வாசிக்கின்றோம்.

தன் சகோதரனை அன்பு செய்யாதவன் பேயின் மகனாவான் (யோவா *3:10*). பேயோ ஆதியிலிருந்தே பாவியாக உள் ளான் *(3:8)*; இயேசு யூதர்களைப் பேயின் மக்கள் என்று அழைக்கின்றார் (யோவா *8:44*). அவன் ஆதிமுதல் ஒரு கொலைகாரன். அவனிடம் உண்மையில்லை. யூதாஸ் பேய் என்றே அழைக்கப்படுகின்றான் *(6:70)*. பதிதக் கோட்பாடுகள் ''சாத்தானின் ஆழ்ந்த ஞான மாகும்'' (திருவெளி *2:24*). போலி யூதர்களாக அடையாளம் காட்டப்படும் பதிதப் பிரிவி னர் சாத்தானின் கூட்டம் என்று அழைக்கப் படுகின்றனர் *(2:9;3:9)*. பெர்கமுவில், சாத்தா னின் அரியணையும் அவன் வாழும் இட மும் இருப்பதாகக் கூறப்படுகிறது *(2:13)*. ஒருவேளை இக்குறிப்பு, அங்கு இருந்த சேயுசின் பீடத்தையோ, சீசரின் கோவி லையோ குறிக்கலாம்.

IV. **மீட்புப்பற்றிய கடவுள் திட்டத்தின் எதிரி:-**

1. ஒரே இறைவனின் மேன்மையை எடுத் துரைக்கும் பழைய ஏற்பாட்டில் சாத்தா னைப் பற்றி வெகுவாகக் கூறப்படவில்லை. இரு கடவுளர் வழிபாட்டில் ஈடுபட விழை யும் இஸ்ராயேல் மக்களை அதனின்று காப் பதுவே அதன் குறிக்கோளாகக் காண்கி றோம். சாத்தானின் தோற்றத்திலிருந்து அவனை எதிரி என நாம் சுலபமாகக் கண்டு கொள்வதற்கில்லை. யாவேயுடைய சமூகத் திலே பணிபுரியும் எண்ணற்ற வானதூதர்க ளில் ஒருவனாகவும் வான்வீட்டு நீதிமன்றத் திலே அரசுதரப்பு வக்கீல்போல் பூவுலகில் இறைவனின் நீதியையும் ஒழுங்கையும் நிலைநிறுத்த நியமனம் பெற்றவன் போல வும் அவன் தோன்றுகிறான். எனினும் இறை வனின் பணியாளனாக நடிக்கும் அவன் நடிப்பு, யோபு *1-3* சரிதம் கூறுவதுபோல், இறைவனுக்கு விரோதமாக இல்லாவிடி னும், அவருடைய நீதிக்கும் மனிதனுக்கும் எதிராக அமைவதைக் காணலாம். தன்னல மற்ற அன்பிலே (யோபு *1:9*) அவனுக்கு நம்பிக்கையில்லை. ''சோதிப்பவனாக'' இல்லாமலேயே யோபுவின் வீழ்ச்சிக்குக் காத்திருக்கிறான். மறைமுகமாக அவன் யோபுவின் வீழ்ச்சியை வரவேற்பது, அவ் வீழ்ச்சி அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சியைக் கொணரும் என்பதில் ஐயமில்லை. குற்றம் சாட்டும் சாத்தான் இஸ்ராயேலுக்கு இறை வன் வகுத்த அன்புத் திட்டங்களின் மெய் யான எதிரியாக மாறுவதை செப் *3:1-5*-இல் காண்கிறோம். இஸ்ராயேலர் காப்பாற்றப்படு வதற்காக இறைவனின் பெயரால் இறைத் தூதர் எதிரியின் வாயையடைக்கிறார். ''ஆண்டவர் தாமே உன்னைக் கண்டிக் கட்டும்'' (யூதா *9*).

2. திருமறை நூலை வாசிக்கும் நாம் மனித குலத் தோற்றத்திலிருந்தே மறைபொருளான ஒருவரின் முக்கிய பாகத்தை உணர்கிறோம். ஆதியாகமம் பாம்பினை மட்டும் குறிப்பிடு கிறது. இறைவன் படைத்தமற்ற ''எல்லாவற் றையும் போன்றே'' (ஆதி *3:1*). ஆயினும், படைப்பான இந்தப் பாம்பு மனிதனையும் மிஞ்சுமளவு அறிவும் தந்திரமும் பெற்றிருந் தது (ஆதி *3:1*). மேலும் தொடக்கத்தி லிருந்தே இந்தப் பாம்பு மனித இனத்தின் எதிரியாகக் காட்சியளிக்கிறது. மனிதனின் இன்பம் கண்டு பொறாமை கொண்ட பகை வன் (காண். ஞான *2:24*) தன் திட்டத்தை

நிறைவேற்ற எப்போதும் அவனுடையதான வஞ்சகம், சூழ்ச்சிஎனும் கருவிகளைப் பயன்படுத்துகிறான். அவன் 'பூமியில் தோன்றிய விலங்குகளுள் மிகச் சூழ்ச்சி மிக்க விலங்கு' (ஆதி 3:1), 'ஏமாற்றுக்காரன்' (ஆதி 3:13; உரோ 7:11; திருவெளி 12:9; 20:8தொ), 'ஆதிமுதல் ஒரு கொலைகாரன், பொய்யன்' (யோவா 8:44) எனப் பேசப்படுகிறான். ஞானாகமம் இப்பாம்பிற்கு ''அலகை'' என அதன் உண்மையான பெயரை வழங்குகிறது (ஞான 2:24).

V. **கிறிஸ்துவின் எதிரி:-**

ஆதிமுதல் சம்பவத்தினால் தோல்வியுற்ற மனித இனம், என்றாகிலும் ஓர்நாள் அப் பகைவனை வெற்றிகொள்ளும் என்ற உறுதி யுடன் முன்னோக்குகிறது (ஆதி 3:15). சாத்தானின் மேல் மனிதன் கொண்ட வெற்றியே, சொல்லப்போனால் கிறிஸ்துவின் மீட்புப் பணியில் முடிவு எனலாம். 'சாவைத் தம் கையில் கொண்டிருந்தவனை, அலகையை, வலிமையிழக்கச் செய்யவும்' (எபி 2:14), 'அவனுடைய செயல்களைத் தொலைக் கவுமே (1 யோவா 3:8) கிறிஸ்து தோன்றினார். சுருங்கக்கூறின், சாத்தானுடைய ஆட்சியை அகற்றி, தந்தையின் ஆட்சியை அமைக்கவே தோன்றினார் (1 கொரி 15:24-28; கொலோ 1:13தொ). எனவேதான், நற்செய்தியாளர்கள் கிறிஸ்துவின் பகிரங்க வாழ்வினைச் சாத்தானுக்கெதிராக அவர் நடத்திய போராட்டமாகவே நமக்கு வழங்குகிறார்கள். இப்போராட்டம் இயேசு பாலை நிலத்தில் அலகையினால் சோதிக்கப்பட்ட கட்டத்துடன் ஆரம்பமாகிறது. இன்ப வனச் சம்பவத்திற்குப்பின், முதன்முறையாக, 'ஆதாமின் மகனென' (லூக் 3:38), ஒருவர் மனித குலத்தின் பிரதிநிதியென நேருக்கு நேராக அலகையைச் சந்திக்கும் சம்பவமாகும் இது. 'கடவுளரசு நெருங்கிவிட்டது' (மாற் 3:22 தொ), ''சாத்தானின் ஆட்சி முடிவை எய்திவிட்டது'' (காண் லூக் 10:17-20) என்பதனை நிரூபிக்கும் வண்ணம் பேய் பிடித்தவர்கள் விடுவிக்கப்படுகிறார்கள். இது போராட்டத்தை மேலும் தீவிரப்படுத்துகிறது. நோய் வாய்ப்பட்டோர் (காண். அ.ப. 10:38) நலம்பெறலும் போராட்டத்தினை உணர்த்தும். கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளாத ''அலகையின் மக்கள்'' (யோவா 8:44; காண். மத் 13:38), 'விரியன் பாம்புக்குட்டிகள்' (மத் 3:7 தொ; 12:34;23:23) ஆகிய யூதர்களுடன் ஏற்படும் மோதலின்போது, இப்போர் சூழ்ச்சித்திறமுடைய வகையில் மேலும் தொடர்கின்றது. கிறிஸ்துவின் பாடுகளின்போது அது மும்முரமாக நடைபெறுகிறது. லூக்கா தெரிந்து விரும்பியே பாடுகளைச் சோதனையுடன் இணைக்கிறார் (லூக் 4:13; 22:53). யோவானும் சாத்தானின் இறுதித் தோல்வியை அறிவிக்கவே, பாடுகளின் போது அவனுக்குள்ள பங்கை விளக்குகின்றார் (யோவா 13:2.27; 14:30; காண். லூக் 22:3.31). சாத்தான் போராட்டத்தை நடத்துவதாகத் தோன்றினாலும் 'உண்மையிலே கிறிஸ்துவின் மீது அவனுக்கு எவ்வித அதிகாரமுமில்லை'. அனைத்துமே இறைமகனின் அன்பும் கீழ்ப்படிதலுமிகுந்த பணியாகும் (யோவா 14:30). தனதே வெற்றி என எண்ணிய அக்கணமே 'இவ்வுலகின் இளவரசன்' 'தூக்கியெறியப்படுகிறான்' (யோவா 12:31; காண் 16:11; திருவெளி 12:9-13). அன்று அவன் துணிவுடன் இயேசுவுக்கு அளிக்க வந்த இவ்வுலக அரசு (லூக் 4:6) இனி, மரித்துயிர்த்து மகிமையில் வீற்றிருக்கும் கிறிஸ்துவுக்கே சொந்தம் (மத் 28:18; காண். 2:9).

VI. **கிறிஸ்தவர்களின் எதிரி:-**

கிறிஸ்துவின் உயிர்ப்பு, சாத்தான் தோல்வியுற்றதின் அடையாளம் எனில் பவுல் கூற்றுப்படி, 'ஆண்டவருடைய நாளில்' மீட்பு வரலாற்றின் இறுதி நிகழ்ச்சிகளுடன்தான் அவனுடன் நடக்கும் போராட்டம் முடிவினை எய்தும். அந்நாளில் ''தலைமை ஏற்போர், ஆட்சிபுரிவோர், வலிமைமிக்கோர் அனைவரையும் அவர் தகர்த்துவிட்டு, கடவுளும் தந்தையுமானவரிடம் அரசை ஒப்படைப்பார்.... அதனால் கடவுளே அனைத்திலும் அனைத்துமாயிருப்பார்'' (1 கொரி 15:24.28).

கிறிஸ்துவைப்போன்றே, கிறிஸ்தவனும் எதிரியுடன் போராட வேண்டியுள்ளது.

பவுல் தெசலோனிக்கே செல்வதைத் தடுப்ப வன் அந்தச் சாத்தானே (1 தெச 2:18). அப்போஸ்தலப் பணியில் தடையாக அவரு டைய 'உடலில் தைத்த முள்', 'சாத்தான் அனுப்பிய தூதனாவான்' (2 கொரி 12:7-10). ஆண்டவனின் தோட்டத்திலே களைகளை விதைப்பவனும் (மத் 13:39), தேவ வார்த் தையை மக்கள் நம்பி மீட்படைவார்களே என அஞ்சி (மாற்கு 4:15) அவர்களுடைய உள்ளங்களில் விதைக்கப்பட்ட தேவவார்த் தையைப் பறித்துச் செல்பவனுமாகிய பகை வன் சாத்தானே என நற்செய்தி ஏற்கெனவே அடையாளம் காட்டியுள்ளது. கர்ச்சிக்கும் சிங்கம்போல் யாரை விழுங்கலாமென விசு வாசிகளிடையே தேடித் திரிகிறது எனப் பேதுரு சித்தரிக்கிறார் (1 பேதுரு 5:8). அன்று இன்பவனத்தில் நடந்துகொண்டவாறே, இன்றும் மக்களைப் பாவத்தில் விழச்செய்ய வும் (1 தெச 3:5; 1 கொரி 7:5), கடவுளை அவர்கள் எதிர்க்கச் செய்யவும் (அ.ப. 5:3) விழையும் சாத்தான் சோதிப்பவனாகவே வருகின்றான். மேலும், பாவம் என்றழைக் கும் உருவமுள்ள சக்தியின் பின், பாவத்தின் தந்தையான சாத்தானின் கைவண்ணம் பொதுவாக உண்டு என்றே பவுல் கருதுகின் றார் (உரோ 5:12ஐ ஞான 2:24-ஒடும், உரோ 7:7-ஐ ஆதி 3:13 - ஓடும் ஒப்பிடுக). இறுதி யாக எதிர்க்கிறிஸ்து இவ்வுலகில் ஏற்கனவே செயலாற்றுவது உண்மையானால், அவனு டைய தீய செயல்களில் எல்லாம் மறைந் திருப்பது சாத்தானின் ஆதிக்கம்தான் (2 தெச 2:7தொ).

எனவே, கிறிஸ்தவன் என்போன், இறை வனை அல்லது சாத்தானை, கிறிஸ்துவை அல்லது பேலியாலை (2 கொரி 6:14), தீய வனை அல்லது உண்மையானவரைத் (1 யோவா 5:18தொ) தேர்ந்துகொள்ள வேண் டும். இதுவே அவனது ஊழின் சோகக் கட்டமாகும். கடைசி நாளில் அவன் யாராகி லும் ஒருவருடன் முடிவில்லாக்காலமும் வாழ்வான்.

வஞ்சகமும், கடபமும், சூதும், தந்திரங்க ளுமே நிறைந்து விளங்கும் அஞ்சற்குரிய தீய ஆவி (2 கொரி 2:11; எபே 6:11; 1 தீமோ 3:7; 6:9..) சில வேளைகளில் ஒளியின் தூதனாகத் தோன்றுவதுண்டு (2 கொரி 11:14). எனினும் சாத்தான் ஏற்கனவே தோல்வியுற்ற ஓர் எதிரிதான். விசுவாசம் (எபே 6:10), செபம் (மத் 6:13;26:41) இவற்றால் கிறிஸ்துவுடன் ஒன்றித்து, துணைக்கு இயேசுவின் வேண்டு தலும் கிடைக்கப் பெற்றால் (லூக் 22:32; காண் உரோ 8:34; எபி 7:25) கிறிஸ்தவன் வெற்றியடைவது திண்ணம். அலகைக்கு இடம் கொடுப்பவனே தோல்வி காண்பான் (யாக் 4:7: எபே 4:27).

திருவெளிப்பாடு நூலின் இறுதிப்பக்கங் கள், குறிப்பாக 12 ஆம் அதிகாரம், மனித குலமே ஆதியிலிருந்து (திருவெளி 12:9) மீட்பு வரலாற்றின் இறுதிநாள் வரை எதிர்த்துப் போராட வேண்டியுள்ள இப்பகைவனைப் பற்றிய விவிலிய போதனைகளின் தொகுப்பி னைத் திரட்டித் தருகின்றன. ஓர் பெண்ணிட மும் அவள் ஈன்றெடுத்த மகனிடமும் (12:5தொ) தன் வலிமையிழந்த சாத்தான், எஞ்சிய அவள் பிள்ளைகளுடன் (12:17) போர் தொடுத்து வருகிறது. எதிர்க்கிறிஸ்து. வின் ஏமாற்று வித்தைகளால் தற்காலிகமாக அவனுக்குக் கிடைக்கும் உயர்வினைச் (13:17) செம்மறியும், செம்மறியின் மணமகளாம் (18:22) திருச்சபையும் அடையும் உறுதியான வெற்றி ஓர் முடிவுக்கு கொணரும். இறுதி நாளில் விலங்கு, போலித்தீர்க்கதரிசி, சாவு, பாதாளம், இன்னும் அவனுடைய சூழ்ச்சி களுக்கு இரையான மக்களுடனும் சாத்தான் 'கந்தக நெருப்புக்கடலில் எறியப்படுவான்'. அந்நெருப்புக்கடலே 'இரண்டாம் சாவு' (திருவெளி 20:10.14தொ).

**சாத்திராபு (SATRAP)**

இச்சொல்லுக்குக் கிரேக்க மொழிபெயர்ப் பில் ஆளுநன் என்ற பொருளோடு வேறு சில பொருளையும் கொடுத்துள்ளனர். பொதுவாக இச்சொல் பாரசீக ஆட்சியில் ஒருபகுதிக்கு ஆளுநராக உள்ளவனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. புனித எரோனிமு தனது இலத்தீன் மொழி பெயர்ப்பில் ஆளுநன் என்ற பொருளிலேயே

பயன்படுத்துகின்றார் (*நீதி.3:3; 1 சாமு 29:6; 2 நாள் 9:14*).

**சாத்ராக்கு, மேசாக்கு, ஆபேதுநெகோ** *(SHADRACH, MESHACH, ABEDNEGO - அகூவின் கட்டளை, அகூவைப்போல் இருப்பவர் யார்? நெபோவின் ஊழியன்)*

இவர்கள் மூவரும் தானியேலின் தோழர்கள், இவர்கள் இதே வரிசையில் சேர்ந்தே சொல்லப்பட்டிருக்கிறார்கள் (*தானி 1:7; 2:49; 3:12-30*).

இந்த இளைஞர்களுக்கு, இந்தப் பாபிலோனியப் பெயர்களை நெபுகத்னேசரின் தலைமை அண்ணகன் கொடுத்தார் (*தானி 1:7*). அவர்களது எபிரேயப் பெயர்கள் அனனியா (யாவே கருணைமிக்கவர்), மிசாவேல் (இறைவன் இருப்பதுபோல் இருப்பவர் யார்?) அசரியா (யாவே உதவி செய்தார்) என்பவையாகும் (*தானி 1:6-7:11.19;2:17; 1 மக் 2:59*).

பாபிலோனியப் பெயர்களின் சொல்லிலக்கண விளக்கம் தெளிவற்றதாய் உள்ளது. இப்பெயர்களுக்குத் தானியேல் நூல் அல்லது அதன் பாரம்பரியம் ஓர் ஏளனக் குறிக்கோளை வெளிப்படுத்துகிறது என்பர். இப்பெயர்கள் பாபிலோனியத் தெய்வங்களின் முக்கிய அடிப்படைக் கூறுகளைக் குறிக்கும் பெயர்களிலிருந்து எடுக்கப்பட்டவையாய் உள்ளன. சாத்ராக்கு என்ற பெயர் அக்காடியர்களின் சுதூர்-அகூ (சுமேரியர்களின் சந்திரக் கடவுள்) - விலிருந்து வந்ததாக உள்ளது. இது மார்துக் என்ற பெயரின் பழுதுபட்ட வடிவமாகவும் இருக்கலாம். மேசாக்கு என்ற பெயர் அக்காடியர்களின் மிசாக்கு (அகூ இருப்பதுபோல் இருப்பவர் யார்)வின் பெயராகும். ஆபேதுநெகோ என்ற பெயர் ஆபேது நெபோ "பாபிலோனிய அறிவுக் கடவுள்", "நபுவின் ஊழியன்" என்ற சொல்லிலிருந்து மொழிச்சிதைவு பெற்று வந்ததாகும். செலூக்கியர்களால் முற்றுகையிடப்பட்ட பாலஸ்தீன யூதர்களின் விசுவாசத்தை ஊக்குவிக்க எழுதப்பட்ட கதையாகும். இந்த மூன்று இளைஞர்களும் "மாசு இல்லாதவர்களாயும், அழகுள்ளவர்களாயும், எல்லா வகை ஞானத்திலும் தேறியவர்களாயும், அறிவில் சிறந்தவர்களாயும், கல்வியில் வல்லவர்களாயும், அரண்மனையில் பணிசெய்யும் திறமையுள்ளவர்களாயும்" இருந்தனர் (*தானி 1:4*). இவர்கள் மற்றவர்களைவிடத் திறமையில் புகழ்பெற்றவர்களாக இருந்தனர். இவர்களுக்கு இணையாக யாரும் காணப்படவில்லை (*தானி 1:19-20; 2:17.47; 3:28-30*). எந்தத் துன்பத்திலும், நெபுகத்னேசரால் உருவாக்கப்பட்ட பொற்சிலையை வணங்க மறுக்கும் அளவுக்குப் பக்தியும், விசுவாசமும் கொண்டிருந்தனர் (*தானி 3*). இம்மூவரும் நெபுகத்னேசரை நோக்கி "அரசே நாங்கள் வழிபடுகின்ற எங்கள் கடவுள், எரிகிற தீச்சூளையினின்றும், உம்கைகளினின்றும் எங்களைக் காப்பாற்றி மீட்க வல்லவர். அப்படியே அவருக்கு மனமில்லாமற் போயினும் உம்முடைய தெய்வங்களுக்குப் பணிபுரியோம், நீர் நாட்டிய பொற்சிலையைப் பணியமாட்டோம் இதெல்லாம் உமக்குத் தெரிந்திருக்கட்டும்" என்றனர். இவ்வாறு சொல்லுமளவுக்கு விசுவாசம் கொண்டிருந்தனர் (*3:17-18*).

இந்த மூவருடைய பெயர்கள் தனித்தனியாகப் பழைய ஏற்பாட்டில் வேறு இடங்களில் குறிப்பிடப்பட்டாலும் அவர்களை இந்த மூவரோடும் அடையாளம் காட்ட முடியாது. இவர்கள் யூதாவின் வழிவந்தவர்கள் (*தானி 1:6*) என்ற குறிப்பைத்தவிர சுட்டிக்காட்டும் குறிப்புகள் வேறில்லை. ஒரு புதிய பணிக்குச் செல்லும்போது பெயர் மாற்றம் செய்வது விவிலியத்தில் சில இடங்களில் காணப்படுகிறது. உதாரணமாகப் பார்வோன் யோசேப்பின் பெயரை மாற்றினார் (*ஆதி 41:45; 2 அர 23:34; 24:17*). இதைப் போலவே இங்கேயும் பெயர் மாற்றியுள்ளனர்.

**சாந்தம்** *(MEEKNESS)*

"என்னிடம் கற்றுக்கொள்ளுங்கள், ஏனெனில் நான் சாந்தமும் மனத்தாழ்ச்சியும் உள்ளவன்" (மத்.11,29). இறைவனுடைய சாந்தத்தின் மிகச்சிறந்த வெளிப்பாடாகிய இயேசு

வின் சொற்கள்தாம் இவை (மத் 12:18தொ). ''சாந்தமுள்ளோர் பேறு பெற்றோர்'' (மத் 5:4) என மொழிந்திடும் அவரே நம் சாந்தத்தின் ஊற்றாவார்.

**1. இறைவனின் சாந்தம்:-** இறைவனின் எல்லையற்ற இரக்கமிகும் நன்மைத்தனம் (சங் 31:20;86:5) அவர் அகில உலகையும் அதில் காணும் அனைத்தையும் ஆள்வதில் விளங்குகிறது (ஞான 8:1; 15:1). இதனைப் பழைய ஏற்பாடு பாடுவதுடன் அதனைச் சுவைக்க நம்மையும் அழைக்கின்றது (சங் 34:9). தேனினும் இனியன இறைவனின் வார்த்தை, அவருடைய சட்டம் (சங் 119: 103;19:11; எசே 3:3), அவருடைய ஞானத்தைப்பற்றிய அறிவு (பழ 24:13; சீரா 24:20), அவருடைய கட்டளைக்குப் பிரமாணிக்கமாயிருத்தல் (சீரா 23:27) முதலியன. எல்லாருடைய சுவைக்கும், உகந்த உணவால் கடவுள் தம் மக்களை வயிறார உண்பிக்கிறார். தம் மக்களின் அன்பார்ந்த மணவாளனாகிய இறைவன் (உ.ச 2:3) இவ்விதம் தம் சாந்தத்தை வெளிப்படுத்துகிறார் (ஞான 16:20). அதனைச் சுவைக்க அவர்களை அழைக்கிறார். இச்சாந்தத்தினைத்தான் ஆண்டவர் இயேசு நமக்கு வெளிப்படுத்தி (தீத் 3:4) நாம் அதைச் சுவைக்குமாறு செய்தார் (1 பேதுரு 2:3).

**2. சாந்தமும் தாழ்ச்சியும்:-** உண்மைச் சாந்தத்திற்கு மோசே ஓர் எடுத்துக்காட்டு. சாந்தம் பலவீனமன்று. இறையன்பில் ஒருவர் கொண்ட நம்பிக்கையின் அடிப்படையிலமைந்த தாழ்மையான கீழ்ப்படிதலாகும் (எண் 12:3; சீரா 45:4;1:27; காண் கலா 5:22 தொ). கடவுள் காப்பாற்றவிருக்கும் ''சிறு கூட்டமும்'' நாடுகளுக்கெல்லாம் அமைதியைக் கொணரும் மன்னரும், இத்தாழ்மையான சாந்தமுள்ளவர்களாயிருப்பர் (செப் 3:12; செக் 9:9தொ=மத் 21:5).

தம் வார்த்தைக்குப் பணிந்துநடக்கும் சாந்தமுள்ளோரை (யாக் 1:20 தொ) இறைவன் வழிநடத்துகிறார் (சங் 25:9); நிலைநிறுத்துகிறார் (சங் 147:6); மீட்கின்றார் (சங் 76:10); அவர்களுக்கு வல்லமைமிக்கவரின் அரியாசனத்தை வழங்குகிறார் (சீரா 10:14); மேலும் இப்பூவுலகை அமைதியில் மகிழச் செய்கிறார் (சங் 37:11=மத் 5:4).

**3. சாந்தமும் அன்பும்:-** இறைவனுக்கு உகந்தவன் மனிதர் மாட்டு, குறிப்பாக ஏழைகள் மாட்டு சாந்தமுள்ளவனாக நடந்து கொள்வான் (சீரா 4:8). சாந்த குணம் ஆவியின் கனியாகும் (கலா 5:23). அது வானுலக ஞானத்தின் அடையாளம் (யாக் 3:13.17). அமைதியான மென்மை, அரச பெருமிதக் கட்டுப்பாடு என்ற இருபொருள் கொண்ட சாந்த குணம் கிறிஸ்துவிலும் (2 கொரி 10:1), அவருடைய சீடர்களிடமும் (கலா 6:1; கொலோ 3:12; எபே 4:2), அவர்களுடைய மேய்ப்பர்களிடமும் (1 தீமோ 6:11; 2 திமோ 2:25) சிறப்புற அமைந்துள்ளது. சாந்த குணம் கிறிஸ்தவப் பெண்களின் அணிகலன் (1 பேதுரு 3:4). அது அவர்தம் உள்ளங்களுக்கு மகிழ்வினைக் கொணர்கின்றது (சீரா 36:23). மெய்யான கிறிஸ்தவன் பொதுவாக எல்லாரிடத்தும் (தீத் 3:2; பிலி 4:5), குறிப்பாகத் துன்புறும் நிலையிலும் (1 பேதுரு 3:16) சாந்தமுள்ளவனாக இருப்பான். இவ்விதம் ''ஆண்டவருடைய நுகம் இனிது'' என அவன் சான்று பகர்வான் (மத் 11:30). ஏனெனில் அது அன்பாலான நுகம்.

## சாந்திக்கு (XANTHICUS)

செலூக்கிய மாசிதோனிய நாட்காட்டியில் உள்ள ஒரு மாதம்; இது யூதர்களின் நீசான் மாதத்திற்கு (மார்ச் - ஏப்ரல், பங்குனி) இணையானது. 5-ஆம் அந்தியோக்கு மற்றும் உரோமையர் ஆகியோர் யூதர்களுக்கு எழுதிய இரு கடிதங்களில் இப்பெயர் குறிக்கப்படுகிறது (2 மக் 11:30. 33.38).

## சாந்து, சுண்ணாம்புக்காரை (PLASTER)

கற்காலம் முதல் சுவரிலும் தரையிலும் களிமண்ணோ, சாந்தோ பூசுவது வழக்கத்தில் இருந்தது. இஸ்ராயேலர்கள் வந்தபின், அதாவது இரும்பு பயன்படுத்தப்பட்ட காலத்தில், கெட்டியான நீரில் கரையாத சாந்துகள் நீர்த்தேக்கத்திற்கும், நீர்த்தொட்டிகளுக்கும் பயன்படுத்தப்பட்டன. இதன் எபி

ரேய மூலச்சொல் சுண்ணாம்பு அல்லது சாந்து எனப்பொருள்படும். இதன் வினைச் சொல் ''கொதிக்கவைத்துச் செய்'' எனப் பொருள்படும். இது இந்தச் சாந்து தயாரிக்கும் முறையைக் குறிக்கிறது. தானி 5:5-இல் இந்த அரமேயச்சொல் சுவரின்மேல் பூசப்பட்ட சாந்துப்பூச்சையே குறிக்கிறது. இஸ்ராயேல் மக்கள் நாட்டில் நுழைந்ததும் கற்களை நிறுத்தி, சாந்து பூசி, நினைவுத் தூணை ஏற்படுத்தும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார்கள் *(உப 27:2)*.

**சாபதேயர்** *(ZABADEANS)*

சாபாது என்ற ஊரில் இருந்த அரேபியா குடிமக்கள் இவ்வாறு அழைக்கப்பட்டனர்.

யோனத்தான் மக்கபேயு தன்னுடைய செலூக்கிய எதிரிகளைத் தொடர்ந்து விரட்ட அவர்கள் எலூத்தரு ஆற்றுக்கு அப்பால் நழுவியபோது அவர் அங்கு அரேபிய சாபதேயர்களைத் தோற்கடித்து அவர்களுடைய சொத்துக்களை எடுத்துச் சென்றார் *(1 மக் 12:31)*. எலூத்தரு ஆறு, மத்திய லெபனோனில் உள்ள இக்கால நாகர் ஏல் - செபிராக இருக்கலாம்.

யோனத்தான் விரைவில் தமஸ்குப் பகுதிக்குத் திரும்பியதால் *(12:32)* இந்தக் கிராமம் தமஸ்குவுக்கு *28* கி.மீ. தொலைவிலுள்ள இக்காலச் செபதானியாவாக இருக்கலாம்.

**சாபம்** *(CURSE)*

I. எபிரேய மொழியில் சாபத்தைக் குறிக்கும் சொற்கள் பல உள்ளன. கோபம் கொண்டவர்களின் முரட்டுத்தனமான உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் சொல்லாக இது விளங்குகிறது. கோபத்தில் சபிக்கின்றனர்; ஒருவரை இழிவுபடுத்தும் வெறுப்புணர்ச்சியை வெளிப்படுத்தவும் ஒதுக்கிவைக்கவும் பிரமாணிக்கம் செய்வதிலும் இச்சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

கிரேக்க வேதாகமம் 'ஆரா' என்ற சிறப்பான அடிச்சொல்லைக் கொண்டுள்ளது. இச்சொல் செபம், வார்த்தைப்பாடு, தூற்றுதல் முதலியவற்றை விளக்குவதும், சபிக்கப்பட்டதைவிடப் பலமுள்ளதான மற்றொரு சக்தியை மன்றாடுதலைக் குறிப்பதுமான சொல்லாகும்.

மனித பலத்திற்கு அப்பாற்பட்ட பெருஞ் சக்திகளை வெளிக்கொண்டு வருகிறது. தன்னுள் தானே கொண்டுள்ள பெரும் அழிவு சக்தியின் வழியாகக் கூறப்பட்ட வார்த்தைகள் பாவத்தினுடையவும் தீமையினுடையவும் கொடும் சக்திகளின் வழியாகச் சபிக்கப்பட்டவனைத் தீமையிலிருந்து பெருங்கேட்டிற்கு இட்டுச் செல்கின்றன. துன்பத்தின் காரணம் அல்லது நிபந்தனை அதனால் விளைய இருக்கும் பலன் ஆகிய இரண்டினையும் சாபம் தன்னுள் அடக்கியுள்ளது. ''இங்ஙனம் செய்ததால் அல்லது இவ்வாறு செய்தால்... இத்தகைய துன்ப துயரம் உன் மீது வரும்'' என்பதாகும்.

யோசனையின்றி மற்றவர்மீது சாபத்தை விளைவிக்க முயன்றால் தானே அதன் தீய பலன்களை அனுபவிக்க நேரிடும் *(காண்.சங் 109:17)*. மற்றவரைச் சபிப்பதற்கு அவர்மீது சட்டப்படியோ, சொந்தபந்தத்தினாலோ முழு உரிமையிருக்கவேண்டும்; அல்லது அவரால் அநியாயமாய்த் துன்பப்படுத்தப்பட்டிருப்பதால் பழிக்குப்பழி வாங்கும் உரிமையிருக்க வேண்டும் அல்லது அவரின் இறைவனாக இருக்கவேண்டும் *(சங் 137:8; யோபு 31:20.38; யாக் 5:4)*.

**II. வரலாற்றிற்கு முந்தியகாலம்: உலகின் மீது சாபம்:-**

தொடக்க முதலே சாபத்தினைக் காண்கிறோம் *(ஆதி 3:14.17)*. ஆனால் இதற்கு எதிராய் இறைவனின் ஆசியுரையையும், வாழ்த்திப் போற்றும் செய்கையினையும் காண்கிறோம் *(ஆதி 1:22.28)*. மேலான ஆசிமொழியான, இறைவனின் படைப்பு 'வார்த்தைக்கு' மாறுபட்ட எதிரொலியாகச் சாபம் விளங்குகிறது.

ஒளியும், உண்மையும், வாழ்வுமான வார்த்தையானவர்முன், பொய், மரணத்தின் தந்தையும், இருளின் அரசனுமான சாத்தான் எதிர்ப்படும் பொழுது, அச்சாத்தானின் அழி

வினைக் கொணரும் மறுப்பு வெளிப்படு கிறது. இவ்வாறு மறுப்பதால் சாபம் விளை கிறது. பாவம் ஒரு தீமை, ஆனால் அவர் படைக்கவில்லை: வார்த்தையான அவர் அத் தீமையை வெளிப்படுத்தி அதை அழிப்ப வர்: சாபம் ஏற்கனவே ஒரு நீதித் தீர்ப்பாகும்.

இறைவன் வாழும் தேவனாய் இருப்ப தால், உயிரின் ஊற்றாய் இருப்பதால் ஆசி அளிக்கின்றார் (எரே *2:13*). ஆனால் இறைவ னுக்கு எதிராகச் சோதிப்பவன் (ஆதி *3:4*தொ) மனிதனைப் பாவத்திற்குள் ஈடு படுத்தித் தன்னுடைய சாபத்தினுள் அவனை யும் ஈடுபடுத்துகிறான். இறையவனின் திருச் சந்நிதிக்குப் பதிலாக அவரிடமிருந்து அவ னுடைய மகிமையினின்று தொலைவிற்குச் சென்றுவிடுகிறான் (ஆதி *3:23*; திருவெளி *3:23*). வாழ்விற்குப் பதில் சாவு (ஆதி *3:19*) கிடைக்கிறது. ஆனால் எப்பொழுதும் முதற் குற்றவாளியாகிய சாத்தானே (ஞான *2:24*) எந்நாளும் சபிக்கப்பட்டவனாவான் (ஆதி *3:14*). மற்றப்படி பெண்கள் தொடர்ந்து பிள்ளைப் பேறு பெறுவர்; விளைநிலம் கனிகொடுக்கும். பலன்கொடு என்ற முதல் ஆசிமொழி திரும்ப எடுத்துக் கொள்ளப் படவில்லை (ஆதி *3:16-20*). ஆனால் சாபம் அதன்மீது துன்பத்தின் சாயலை, தொல்லைதரும் வேலையை, துயரத்தின் சாயலைப் படரவைக்கிறது. ஆனால் வாழ்வு சக்தி வாய்ந்ததாக விளங்கிச் சாபத்தின் இறுதியான தோல்வியின் அடையாளமாய் நிற்கிறது (*3:15*).

மரணத்தை விளைவிக்கும் இச்சாபம் ஆதாமிலிருந்து ஆபிரகாமுக்கு வந்தடை கிறது. சாபத்தின் மூலகர்த்தாவாக மனிதனே விளங்குகிறான் (*4:11* இரத்தம்மீது சாபத்தின் கட்டுப்படுத்தும் தன்மை ஆதி *4:23* தொ; *9:4*தொ; மத் *27:25* காண்க). இச்சாபத்தினால் அழிவு விளைகிறது. இவ்வாறாய் வாழ்வின் மூலப்பொருளாய், நிலைக்களமாய் விளங் கிய நீர், புதைகளமாய் மாறியது (ஆதி *6:5-12*). ஆனால் இச்சாபத்தின் மத்தியில் இறைவன் தன் ஆறுதலை நோவாவின் வழி யாக, புது மனுக்குலத்தின் முதற்கனிகள் அளிப்பதன் மூலம் எந்நாளும் தன் ஆசியை நிலைப்படுத்துகிறார் (*8:17-23;9:1-17*; 1 பேதுரு *3:20*).

**III. பிதாபிதாக்கள்: இஸ்ராயேலரின் எதிரிக ளின் மீது சாபம்:-**

பாபேலை அழித்து இறைவனுக்கு எதிரா கக் கூடிய மக்களை ஒரு சாபம் சிதறடித்தா லும் (ஆதி *11:7*), இறைவன் ஆபிரகாமைத் தேர்ந்தெடுத்துஅவர் வழியே அவரையடுத்து உள்ளவர்களையும், அவர்வழி வருகிறவர் களையும், பெரும் பேற்றிற்கோ சாபத்துக்கோ ஏற்படுத்தினார் (ஆதி *12:1*தொ). இறைவ னின் இந்த ஆசி மொழியானது தேர்ந்தெடுக் கப்பட்ட மக்களை மலட்டு உதரம் (ஆதி *15:5*தொ: *30;1*தொ), எதிரான நிலம் ஆகிய இருவகைச் சாபத்தினின்று விடுவித்தாலும் (*27:27; 49:11*தொ.*22-26*) தெரிந்து கொள்ளப் பட்ட மக்களின் எதிரிகளால் ஏவப்பட்ட சாபம் ''நிலத்தின் செழுமையிலிருந்தும், வானின் பனித்துளியிலிருந்தும்'' வெகு தொலைவிற்குத் துரத்திவிட்டது (*27:39*). அவர்களது சாபமே தண்டனையாகும். அந்த ஒரு மேலான ஆசியினின்று அவர்களை விலக்கி வைக்கிறது. ''உங்களைச் சபிக்கிற வன் சபிக்கப்படுவான்''. பார்வோன் மன் னன் (யாத் *12:29-32*), பின் பாலாக்கு (எண் *24:9*) ஆகியோர் இக்கூற்றின் உண்மையைத் தங்கள் வாழ்வில் உணர்ந்தார்கள். மிகவும் விநோதமான காரியம் என்னவெனில், பார் வோன் தானே இஸ்ராயேல் மக்களையணு கித் தனக்காக, தன்மீது அவர்களது இறைவ னின் ஆசி வழங்கப்பட வேண்டுமெனத் தங்கள் இறைவனை இறைஞ்சுமாறு கெஞ்சி னான் (யாத் *12:32*).

**IV. *சட்டம்: பாவம் புரிந்த இஸ்ராயேல் மீது சாபம்:-***

ஆசியுரை அதிகரிக்க, அதிகரிக்க சாபம் அதிகமாக வெளிப்பட்டது.

***1. சட்டம்:***

சட்டம் படிப்படியாகப் பாவத்தை வெளிப் படுத்தியது (உரோ *7:7-13*). என்ன செய்ய

வேண்டும், எதைச் செய்யக்கூடாது என்று கூறுவதோடுகூட, மீறி நடப்பதால் விளையும் தீமைகளைப்பற்றியும் கூறியது. இறை உடன்படிக்கை முதல் உபாகம இறைவழிபாட்டுச் சட்டம் வரை, சாபத்தைப் பற்றிய குறிப்பீடுகள் மிகமிகத் துல்லியமாகவும், விரிவாகவும் விளக்கப்பட்டுள்ளன (யாத் 23:21; யோசு 24:20; உபா 28; லேவி 26:14-39). இறைவனின் அழைப்பின் மறைபொருளாய் ஆசிமொழி விளங்கினால், அந்த அழைப்பை மறுத்ததின் மறைபொருளாய்ச் சாபம் விளங்குகிறது. தேர்ந்து கொள்ளப்பட்ட மக்களில் தகுதியற்றவர் இறைவனின் அழைப்பிலிருந்து விலக்கப்படுகின்றனர் (1 சாமு 15:23; 2 அர 17:17-23; 21:10-15). ஆயினும் அந்தத் தேர்ச்சி அவர்களது வாழ்வை எந்நாளும் பாதிக்கிறது (ஆமோ 3:2).

**2. இறைவாக்கினர்கள்:**

இஸ்ராயேல் மக்களின் கடினமான உள்ளத்திற்கும் (ஆமோ 6:1; உப 2:6-20) தங்கள் மேல் விழ இருக்கும் துன்பத்தைக் காணாத குருட்டுத் தன்மைக்கும் (ஆமோ 9:10; எசா 28:15; மீக் 3:11; மத் 3:8தொ) சாட்சி கூறுகின்றனர் இறைவாக்கினர்கள். இவ்வாறாய் இஸ்ராயேல் மக்கள் ஆட்கொள்ளப்பட்டு, கொள்ளையடிக்கப்படுவது பற்றியும் (எரே 20:8) இன்னும் பல்வேறான சாபச்சொற்களையும் கூற வேண்டியிருந்தது (ஆமோ 2:1-16; ஓசே 4:6; எசா 9:7-10; எரே 23:13; எசே 11:1-12. 13-21). மேலும் எவ்வாறாய் இச்சாபக்கேடு ஒருவரையும் விடாமல் அனைவர்மீதும், குருக்கள்மீதும் (எசா 28:7-13), பொய்த்தீர்க்கதரிசிகள் மீதும் (எசே 13), கொடிய ஆயர்கள் மீதும் (எசே 34:1-10), நாட்டின் மீதும் (மீக் 1:8-16), நகரத்தின் மீதும் (எசா 29:1-10), கோவில் மீதும் (எரே 7:1-15), குவலயம் ஆளும் கோமகன் மீதும் (எரே 25:18), அவன் தன் அரண்மனைமீதும் (எரே 22:5) விழும் என்று சாபக்கேட்டை வெளிப்படுத்த வேண்டியவர்களாயினர்.

ஆனால் இச்சாபம் முழு அழிவையும் ஏற்படுத்தி விடுவதில்லை. சில சமயங்களில் எவ்விதக் காரணமுமின்றி, படிப்படியாக இல்லாமல் திடீரென்று இறைவனின் இரக்கம் வெளிப்படுத்தப்பட்டு, எச்சரிக்கையின் பின்பு மீட்பைப் பற்றிய உறுதிமொழியும் அளிக்கப்படுகிறது (ஓசே 28:11.16; எசா 6:13). ஆனால் பெரும்பாலும் சாபத்தின் மத்தியில் ஆசியின் உருவம் மிளிருகிறது (எசா 1:25தொ; 28:16தொ; எசே 34:1-16; 36:2-12. 13-38).

**V. நீதிமான்கள் சாபம் இடுதல்:-**

ஆபிரகாமுக்கு அளித்த ஆசி தலைமுறை தலைமுறையாய் ஒரு சில நீதிமான்கள் வழியாக வந்தது. ஆனால் இவர்கள் வாயினின்று சாபக்கேடு விளைவிக்கும் சொற்களும் வெளிவந்தன. எடுத்துக்காட்டாக, எரேமியா (எரே 11:20; 12:3; 20:12) சங்கீத ஆசிரியர்கள் (சங் 5:11; 35:4தொ; 83:10-19; 109:6-20; 137:7தொ). ஆனால் எவ்விதச் சந்தேகமுமின்றி, இவர்களது இவ்வாறான பழிவாங்க வேண்டுமென்ற விருப்பங்கள் நம்மை அதிர்ச்சிக்குள்ளாக்குகின்றன. ஏனெனில் நாம் மன்னிக்கத் தெரிந்தவர்கள் என நினைத்துக் கொள்கிறோம். இந்த வேண்டுகோள்கள் நாட்டின் அல்லது தனிப்பட்ட மனிதனின் வெறுப்பினை வெளிப்படுத்துகிறது. ஆனால் இவைகள் தூய்மைப்படுத்தப்பட்டுள்ளதைப் புதிய ஏற்பாட்டில் கண்டு கொள்ளலாம். ஏனெனில் இவைகள் பாவத்தின் சாபத்திற்கு ஆளான மனுக்குலத்தின் வேதனையின் வெளியீடாக மட்டுமின்றி, பாவத்தை அழித்தொழித்து இறையவனின் நீதி நிலைநிறுத்தப்பட வேண்டும் என்ற விழைவின் வெளிப்பாடாகவும் விளங்குகிறது.

தன் பாவத்தை உணர்ந்து ஏற்றுக் கதறுபவனின் முறையீட்டிற்குச் செவிகொடுக்காமல் இறைவனால் இருக்கமுடியாது (பாரூக் 3:8; தானி 9:11-15). இறைபணியாளன் தான் அநியாயமாய்த் துன்புறுத்தப்படுவதால் தனக்குள்ள பழிவாங்கும் உரிமையையும் இழந்துவிடத் தயாராக உள்ளார். ''தன் வாயைத் திறவாமல்'' (எசா 53:7) அவர் தன்னையே நம்முடைய பாவத்தின் விளைவான சாபத்

திற்கு ஆளாக்குகிறார் *(53:3தொ)*. ''இனிமேலாகச் சாபம் என்றுமேயிராது'' *(செப் 14:11)* என்று பாவத்தின் அழிவிற்காகக் காத்திருக்கும் வேளையில், அவருடைய மன்றாட்டு பாவிகள் மீட்பின் உத்தரவாதமாக விளங்குகிறது.

**VI. சாபத்தை வென்றவர், இயேசுகிறிஸ்து:-**

''இயேசுகிறிஸ்துவோடு இணைக்கப்பட்டவர்கள் எவருக்குமே இனிமேலாகத் தண்டனைத் தீர்ப்பு ஏதுமில்லை'' *(திருவெளி 8:1)*; அவ்வாறே சாபம் எதுவுமில்லை. அவர் நமக்காகப் ''பாவமாகி'' *(2 கொரி 5:21)* நம் பொருட்டுச் சாபமாகித் தம்மையே பாவத்துடனும், அதன் விளைவான சாபத்துடனும் ஒன்றுபடுத்தி, ''சட்டத்தின் சாபத்தினின்று மீட்டுக் கொணர்ந்து'' *(கலா 3:13)*, இறைவனின் ஆசியையும், அவர்தம் தூய ஆவியையும் பெறும்படி செய்துள்ளார். வார்த்தையானவர் புதிய காலங்களைத் தொடங்குவார். அக்காலத்தில் இயேசுவால் கூறப்பட்ட சாபச் சொற்களுக்கு அதன் உண்மையான பொருளில் இடமில்லை. அப்பொழுது, பேறுபெற்ற நிலையோடு *(லூக் 6:20-26)* கூடிய துயரமான நிலைமட்டும் இருக்கும். வெறுத்து ஒதுக்காமல், கவர்ந்து இழுக்கவும் *(யோவா 12:32)* சிதறடிக்காமல் ஒன்று சேர்க்கவும் செய்வார் *(எபே 2:16)*.

வார்த்தையானவர் மனிதனை அவனது சபிக்கப்பட்ட விலங்குகளான சாத்தான், பாவம், கோபம், மரணம் முதலியவற்றினின்று விடுவித்து அன்பு செய்ய ஆளாக்கி விடுகிறார். தன் மகன் வழியாக நம் ஒவ்வொருவரையும் மன்னித்துள்ள பரம தந்தையானவர் தம் பிள்ளைகளாகிய நாம் எவ்வாறு சாபத்தை மன்னிப்பின் மூலமாய் (திருவெளி *12:14; 1 கொரி 13:5)*, அன்பின் மூலமாய் *(மத் 5:44; கொலோ 3:13)* வெற்றி கொள்ள வேண்டுமென்று கற்பிக்கிறார். கிறிஸ்தவன் இனிமேல் ஒருநாளும் சபிக்கலாகாது *(1 பேதுரு 3:9)*, பழைய ஏற்பாட்டில் காணும் ''உன்னைச் சபிக்கிறவன் சபிக்கப்படுவான்'' என்ற கூற்றிற்கு மாறாக, ஆண்டவரைப் பின்பற்றி, ''சபிக்கிறவனுக்கு ஆசி கூற வேண்டும்'' *(லூக் 6:28)*.

சாபமானது கிறிஸ்துவால் வெற்றி கொள்ளப்பட்டாலும், இன்றும் உண்மையில் அது நிலவுகிறது. ஆனால் இப்பொழுது அது தவிர்க்கமுடியாத அழிவின் நிர்ணயமாக இல்லை; ஆனால் அதே சமயம் எவரும் அதற்கு ஆளாகலாம். நாம் பெறக்கூடிய பெரும்பேற்றின் உச்சநிலையிலும், தொடக்கத்திலிருந்தே சாபத்தின் நிழலும் தொடர்ந்து வருகிறது. சாபம், தன் கடைசிநாட்கள் கணக்கிடப்பட்டுள்ளன என்பதைப் பயன்படுத்திக்கொண்டு (திருவெளி *12:12)* மீட்பு நிறைவேற்றப்படும் நாட்களில் *(8:13)* தன் முழு நஞ்சினையும் வெளிப்படுத்துகிறது. ஆதலால் புதிய ஏற்பாடு பல சாபச் சொற்களைக் கொண்டுள்ளது. திருவெளிப்பாட்டில் ''இனிமேலாகச் சாபம் இருக்காது'' *(22:3)* என்ற மொழியினையும் அதே சமயத்தில் காண்கிறோம். அதே சமயம் ''தீமையை விரும்புவோர்களே, அழிந்தொழியுங்கள்'' *(22:15)*; ''கொடிய மிருகமே செத்தொழி'' *(22:12)*; ''மிருகமும், பொய்த் தீர்க்கதரிசியும் மறைந்தொழியுங்கள்'' *(22:13)*; கோகு, மாகோகு போன்ற நாடுகளும் *(20:7)* விபசாரிகளும் *(17)*, பாபேலும் *(18)*, மரணமும், பாதாளமும் *(20:14)* இருளும் *(22:5)*, உலகமும் (யோவா *16:33)* இவ்வுலகின் சக்திகள் *(1 கொரி 2:6)* அனைத்தும் அழிந்தொழியட்டும் என்ற சொற்றொடர்களையும் காண்கிறோம். ''அழிந்தொழி'' என்ற சொல் மீட்பற்ற முழு அழிவினைக்குறிக்கும் சொல்லாக உள்ளது. இயேசு கிறிஸ்துவிடமிருந்து வந்தாலும் இதுபழிவாங்கும் குணத்தினால் அல்ல, தீமைக்குப் பதிலடியாகவுமல்ல, அது மிகவும் தூய்மையானது; மிகவும் பயங்கரமானது; அன்பு செய்ய மறுப்பவர்கள் தாங்களாகவே தேர்ந்து கொண்ட கேட்டின் விளைவாகும்.

இயேசு சபித்துத் தண்டிக்க வரவில்லை *(யோவா 3:17;12:47)*; ஆனால் ஆசியினையும் பேற்றினையும் கொணர்ந்தார். தம் வாழ்நாளில் யாரையும் சாபத்தின் உண்மையான பொருளில் சபிக்கவில்லை. ஆனால் அதே சமயத்தில் தன்னில் தானே திருப்திப்பட்டுக் கொள்ளும் மக்களுக்கு எதிராகவும் (லூக்

6:24), கலிலேயாவில் விசுவசிக்க மறுக்கும் நகரங்களுக்கு எதிராயும் (மத் 11:21), சதுசேயர், பரிசேயர்களுக்கு எதிராகவும் (மத் 23:13-31), இஸ்ராயலேரின் சகல பாவங்களின் இருப்பிடமான சந்ததியாருக்கு விரோதமாயும் (23:33-36), ''மனுமகன் யாரால் கையளிக்கப்பட இருக்கிறாரோ'' அவனுக்கெதிராயும் (26:24) கடுஞ்சொற்கள் கூறி எச்சரிக்காமல் இருக்கவில்லை.

தன் கடைசி வருகையின்பொழுது, ''சபிக்கப்பட்டவர்களே என்னை விட்டகலுங்கள்'' (மத் 25:41) என்ற சாபச் சொல்லைத் தவிர உண்மையான சாபச் சொல் மனுமகனின் வாயில் வருவதில்லை. அந்நேரத்திலும் கூடத் தாம் சபிப்பதில்லை என்ற மனநிலையில் எவ்விதமாற்றமும் இராது என்று கூறுகிறார். ''என் வார்த்தையை எவனொருவன் கேட்டு, அதன்படி நடவாதிருக்கிறானோ, அவனைத் தீர்ப்பிடுவது நானல்ல; அந்தக் கடைசி நாளில் நான் கூறிய வார்த்தைகளே அவனைத் தீர்ப்பிடும்'' என்கிறார் (யோவா-12:47தொ).

**சாபாஓத்து** (SABAOTH - படைகள்)

யாவே சாபாஓத்து என்ற எபிரேயச்சொல்லின் கிரேக்க வடிவம் ''சாபாஓத்தின் ஆண்டவர்'' - படைத்திரளின் ஆண்டவர் என்பதாகும். காண்க: படைத்திரளின் ஆண்டவர்.

**சாபாது** (ZABAD - கொடை)

1. யூதாவின் குலத்தைச் சேர்ந்த எரகுமவேலின் வழித்தோன்றல். நாத்தானின் மகனும், எப்லாலின் தந்தையுமாவார். எலிசாமாவின் வழித்தோன்றல்கள் பட்டியலில் இப்பெயர் வருகிறது (1 நாள் 2:36-37).

2. அடிமைத்தளையிலிருந்து நாடு திரும்பிய பின்பு எப்பிராயிம் வம்ச வரலாற்றில் யோசுவாவின் மரபுப்பட்டியலில் வருகிறது இப்பெயர். இவர் தாகத்தின் மகனும் எப்பிராயிமின் வழித்தோன்றலும் ஆவார் (1 நாள் 7:21).

3. அகிலாயின் மகன்; தாவீதின் ஆற்றல் மிக்க வீரர்களில் ஒருவர் (1 நாள் 11:41).

4. யோயதாவின் மகனான செக்கரியாவைக் கல்லால் எறிந்து கொல்லக் கட்டளையிட்டதற்காக அரசன் யோவாசு கொன்ற அவரது இரு ஊழியர்களில் ஒருவர். அம்மோனியரான சிமயாத்தின் மகன் (2 நாள் 24:26). 2 அரச 12:21-இல் இவர் யோசக்கார் என்று அழைக்கப்படுகிறார்.

5. எஸ்ராவின் சீர்திருத்தப்படி அன்னிய மனைவியரை நீக்கிவிட்ட ஒரு பொது நிலையினர். சத்தூவின் புதல்வர்களில் ஒருவர் (எஸ் 10:27).

6. 5-இல் உள்ளது போன்ற மற்றொரு பொதுநிலையினர். கத்துமின் (அற்றுமின்) புதல்வர்களில் ஒருவர் (எஸ் 10:23).

7. 5-6-இல் உள்ளது போன்ற வேறொரு பொது நிலையினர். நெபோவின் புதல்வர்களில் ஒருவர் (எஸ் 10:43).

**சாபாத்து** (SABATH)

காண்க, ஒய்வுநாள்

**சாபாம்** (SHAPHAM - வெறுமையான)

இவர் பாசான் நாட்டில் வாழ்ந்து வந்த காதின் குலத்தினர். இந்தக் குலத்திற்குத் துணைத்தலைவராக இருந்தார் (1 நாள் 5:11-12).

**சாபாற்று** (SHAPHAT - அவர் தீர்ப்பிட்டார்)

1. இவர் சிமியோன் கோத்திரத்தில் பிறந்த கோரியின் (ஓரி) புதல்வர் (எண் 13:5). மோசேயால் பாரான் பாலைவனத்திலிருந்து, கானானுக்கு இஸ்ராயேலர்கள் போகு முன்பே, உளவு அறிய அனுப்பப்பட்ட பன்னிரண்டு பேர்களில் இவரும் ஒருவர்.

2. இறைவாக்கினர் எலிசாவின் தந்தை. இவர் அபல் - மெகோலாவிலிருந்து வந்தவர் எனக் கருதப்படுகிறது. இந்த நகர் தற்போது யோர்தான் நதிக்கு அருகிலுள்ள மனாசே பகுதிக்குக் கிழக்கு எல்லையில் இருக்கிறது (யோர்தான் நதிக்கருகில்) என்று எண்ணப்படுகிறது. இருந்தாலும் நகரம் இருந்த இடம் உறுதியாய்த் தெரியவில்லை.

எலியா இறைவாக்கினருக்குப் பதிலாக, நிய மனம் செய்யப்பட்ட கால கட்டத்தில், சாபாற்று வாழ்ந்து வந்தார் *(1 அர 19:16;19.20; 2 அர 3:11; 6;31)*.

3. இவர் செமாயாவிற்குப் பிறந்த ஆறு புதல்வர்களில் இறுதியானவர். செருபாபே லுக்குப் பேரன். இவர் தாவீது குலத்தின் வழியில் பிறந்தவர் *(1 நாள் 3:22)*.

4. பாசான் நாட்டில் வாழ்ந்த காதின் வழி வந்தவர் *(1 நாள் 5:12)*.

5. அதிலாயின் மகன். இவர் பள்ளத்தாக்கு களிலுள்ள மாடுகளைக் கண்காணித்து வந் தார். இம்மாடுகள் தாவீது அரசனுக்குச் சொந் தமானவை *(1 நாள் 27:29)*.

**சாபான்** (SHAPHAN - *குழிமுயல்)*

1. ஒரு குடும்பத்தின் தலைவர். யோசியா வின் ஆட்சிக்காலத்திலும், யூதாவின் அர சாட்சி இறுதி நாட்களிலும், எரேமியா வாழ்ந்த காலத்திலும், நடந்த நிகழ்ச்சிகளில் புகழ்பெற்று விளங்கியது இக்குடும்பம். இவர் யோசியாவின் காலத்தில் யோசியா வுக்குச் செயலராகவும் ஆலயத்தின் நிதி அதிகாரியாகவும் இருந்தார். இவர் புதிதாகக் கண்டெடுக்கப்பட்ட ''சட்டப் புத்தகத்தைக்'' கிலிகியா (இலிகியா) ஏன்ற குருவிடமிருந்து கொண்டு வந்து, யோசியாசிடம் கொடுத் தார் *(2 அர 22:3-13; 2 நாள் 34:8-20)*. மேலும் இவர் இப்புதிய புத்தகம் பற்றிக் குலிதா (உல்தா) இறைவாக்கினரிடம் ஆலோசித்து வர, அனுப்பப்பட்டவர்களில் ஒருவர் *(2 அர 22:14)*. சாபானும், அவரது புதல்வர்க ளும், யோசியாவின் சீர்திருத்தத்திற்கு நண் பர்களாயும், எரேமியாவின் சிறந்த ஆதரவா ளர்களாயும் இருந்தார்கள். இவருடைய புதல்வர்களில் ஒருவரான அகிக்காம் ஓர் அரசவை அலுவலர்; சட்டப்புத்தகக் கண் டெடுப்பில் பங்கு கொண்டவர் *(22:11.14)*. யோயாக்கிம் அரசரின் காலத்தில், ஒரு கூட் டத்தின் கைகளில் இறக்கும் தறுவாயில் இருந்த எரேமியாவைக் காப்பாற்றினார் *(எரே 26:24)*. இறைவாக்கினர் சாபானின் மற்றொரு புதல்வரான எலாசா மூலம் நாடு கடத்தப்பட்டவர்களுக்குத் தனது புகழ் பெற்ற கடிதத்தைக் கொடுத்தனுப்பினார் *(எரே 29)*. யோயாக்கிம் காலத்தில் சாபா னின் மற்றொரு மகனான கெமரியாவின் வீட்டிலிருந்து பாரூக்கு மக்களுக்கு எரேமி யாவின் வார்த்தைகளை ஓலைச்சுருளி லிருந்து வாசித்தார் *(எரே 36:10-12)*. எரேமியா சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டு, சாபானின் மகனாகிய அகிக்காமின் மகன் கெதலயாவின் பொறுப்பில், அனுப்பிவைக் கப்பட்டார் *(எரே 39:14; 40:5)*. இவர்கள் எல்லாம் சாபானின் புதல்வர்கள்தான் என்று அறிஞர் சிலர் ஐயம் எழுப்புவர். ஆனால் கால ஒருமைப்பாடும் நாட்டின் வரலாற்றில் இவர்கள் கொண்டிருந்த முக்கி யத்துவமும் இவர்கள் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்று சுட்டுகின்றன.

2. இவர் யாசானியாவின் தந்தை. மக்க ளைச் சிலை வழிபாட்டுக்குத் தூண்டுபவ ராக இவரை எசேக்கியேலின் காட்சிகளில் ஒன்று வெளிப்படுத்தியது *(எசே 8:11)*.

**சாபீர்** (SHAPHIR - *அழகான)*

இது மீக்காவின் இறைவாக்கிலே, சொல் லாடல் பகுதியில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஓரிடம்.

இந்த இடம், கெபிரோனுக்கு (எபிரோன்) மேற்கில் 13 கிலோமீட்டர் தொலைவிலுள்ள கிர்பெத்து ஏல் - கோமாக இருக்கலாம் என்று பெரும்பாலும் நம்பப்படுகிறது. வாடி எஸ் -சப்பார் என்ற பெயர் சாபீரின் அரேபியத் தழுவலாக இருக்கலாம்.

**சாபு** (SHAAPH - *பிளவுபட்ட)*

எரகுமவேலின் சகோதரரான காலேபின் வழித்தோன்றல்கள் இருவரின் பெயர்.

1. காலேபின் வழித்தோன்றலோ, மனை வியோ வைப்பாட்டியோ ஆன யகுதாயின் (எகிதாயின்) கடைசி மகன் *(1 நாள் 2:47)*.

2. காலேபுக்கும் அவரது வைப்பாட்டி மாக்காவுக்கும் பிறந்த மகன் மத்மன்னாவின் தந்தையாவார் *(1 நாள் 2:49)*.

**சாபூது** (ZABUD - கொடுக்கப்பட்ட, கொடை)

நாத்தானின் புதல்வர். இவர் ஒரு குருவாகவும், சாலமோனின் அரச நண்பனாகவும் சேவை செய்தார் (1 அர 4:5).

**சாபோன்** (ZAPHON - வடக்கு)

சுக்கோத்துப் பள்ளத்தாக்கிற்கு வடக்கேயுள்ள காதுவுக்குச் சொந்தமான ஒரு நகரம். முன்பு சீகோன் ஆட்சிக்குட்பட்டது (யோசு 13:27). கானானியர்களின் முக்கியமான தெய்வமான பாகால் - செபோனின் திருத்தலமாக இருந்திருக்கலாமென்று இதன் பெயர் குறிப்பிடுகின்றது. 19-ஆம் அரசமரபைச் சேர்ந்த எகிப்திய ஏடுகளில் இப்பெயர் சபுனா என்று காணப்படுகிறது; அமர்னா ஏடுகளிலும் இது சபுனா என்றுள்ளது; 'சிங்கங்களின் தலைவி', எனப்படும் அரசிளங்குமரியின் இருப்பிடமாக இது கொடுக்கப்பட்டுள்ளது. இவள் எகிப்தின் உதவியை நாடினாள். இபிதாகு (இப்தாகு) அம்மோனியரைத் தோற்கடித்துத் திரும்பியபோது, எப்பிராமியர் தங்களையும் ஏன் இப்போரில் சேர்த்துக் கொள்ளவில்லை என்று இபிதாகுவிடம் கேட்டனர் (நீதி 12:1). அதன்பின், சாபோனில் நடந்தபோரில், எப்பிராயிமியர் தோற்கடிக்கப்பட்டனர் (நீதி 12:1-6). காதின் ஒரு குலமாகிய செபோனியர் (எண் 26:15) அல்லது சிபோனியர் (ஆதி 46:16) தங்களது பெயரை இந்நகரத்திலிருந்து எடுத்துக் கொண்டதாகத் தெரிகிறது.

சாபோன் இருந்த இடமாகக் கருதப்பட்ட, வாடி இரசேப்புக்கு வடக்குப் பக்கத்தில் அமைந்திருக்கும் இக்காலத் தேல் ஏல்-கோசு, இப்போது அவ்வளவு ஆதரவு பெறுவதில்லை. ஏனெனில் அங்குப் பின்வெண்கலக்காலச் சிதைவுகள் காணப்படுகின்றன. சாபோன் இருந்த இடமாகப் பொதுவாகத் தேல் எஸ்-ஸா இதியேயும், தேல் ஏல் - மாசாரும் அடையாளம் காட்டப்படும்.

2. கானானிய இதிகாசங்களில், இது கடவுள் பாகால் வசிக்கும் மலையாகும். ஒரு காலத்தில் இப்பெயர், மத்திய தரைக் கடற்கரையில் இராஸ் சம்ராவுக்கு (பழைய உகாரித்து) வடக்கில் 48 கி.மீ. தொலைவிலுள்ள ஒரு மலையைக் குறித்தது. பழங்கால இதிகாசங்களைப் பொறுத்த அளவில், இந்த இடம் மக்களுக்கு ஏற்றவாறு இடமாறியது. இந்த இதிகாசம் பற்றிய எபிரேய விளக்கம் சங் 48:2; எசா 14:13 போன்ற வாசகங்களுக்குப் பின்னணியாக இருக்கலாம்.

**சாமா** (SHAMA - கடமையுணர்வுடைய)

ஆரோயேரியரான கோதாமின் (ஓதாம்) இரு புதல்வர்களில் இவரும் ஒருவர். இவர் தாவீதின் முப்பது ஆற்றலில் மிக்க வீரர்களில் ஒருவர் (1 நாள் 11:44).

**சாமீர்** (SHAMIR - கூரிய முனை, முள்) - ஆள்

மீக்காவின் மகன். ஒரு கோகாத்திய லேவியர் (1 நாள் 24:24;23:12-20).

**சாமீர்** (SHAMIR - கூரியமுனை, முள்) - இடம்

1. இது தெபீர் மாவட்ட மலைப் பகுதியில் பெயேர் - செபாவுக்கு வடக்கில் இருக்கும் ஒரு யூதாவின் ஊர் (யோசு 15:48). கெபிரோனுக்கு (எபிரோன்) மேற்கு தென் மேற்கில் 20 கிலோமீட்டர் தொலைவிலுள்ள கிர்பெத்து சொமெரா இதே பெயரைக் கொண்டிருந்தாலும், இன்னும் இரு கிலோமீட்டர் வடக்கிலுள்ள ஏல் - பிரே என்ற இடமே சாமீராக இருக்கலாம்.

2. எப்பிராயிம் மலைப்பகுதியில் இருக்கும் ஓர் ஊர். இப்பகுதியை இசக்கார் கோத்திரத்தாரான தோலா என்ற நீதிபதி ஆண்டு வந்தார் (நீதி 10:1-2). இது சமாரியாப் பகுதியில் இருந்திருக்கலாம்.

**சாமு** (SAMOS - மிக உயர்ந்த இடத்தின் உச்சி)

இது ஏகியன் கடலில் தென் கிழக்கிலுள்ள அயோனியத் தீவுகளில் ஒன்று. இது எபேசுக்குத் தென் கிழக்கிலும், மிலேத்துக்கு வட கிழக்கிலும் உள்ளது. இது கிழக்கு மேற்காக 44 கிலோமீட்டர் நீளமும், 24 கிலோமீட்டர் அகலமும் கொண்ட பரப்பளவைக் கொண்டது. இதன் தலைநகர் சாமு பவுலின் காலத்தில் ''சுதந்தர நகர்'' என்று அழைக்கப்பட்டது. இது பித்தகோரசு பிறந்த இடமாகும். முந்தைய காலத்தில் இந்தத் தீவு கடற்படை

ஆற்றலுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது. இது கி.மு. 6-ஆம் நூற்றாண்டில் போலிகிரேந்து காலத்தில் சிறப்புப் பெற்றது. கி.மு. 479 - இல் சாமுவுக்கும் துரோகில்லியுமுக்கும் இடையில் கிரேக்கர்களால் பாரசீகர்கள் தோற்கடிக்கப்பட்டனர். அங்கே யூதர்கள் கி.மு. 2 -ஆம் நூற்றாண்டில் குடியேறியிருக்கின்றனர் என்று 1 மக் 15:23 - இலிருந்து தெளிவாகத் தெரிகிறது. இது கி.மு. 84 - இல் உரோமையரின் ஆசியா மாகாணத்தின் ஒரு பகுதியாயிற்று. ஆனால் கி.பி. 17-இல் உரோமையர் ஆட்சியில் சுதந்தரமாகச் செயல்பட்டது. பவுல் எருசலேமுக்குச் சென்ற இறுதிப் பயணத்தில், அவரது கப்பல் சாமுத் தீவை ஒட்டியோ, சாமுத் தீவுக்குப் பக்கத்திலோ, தீவில் தங்கியோ சென்றிருக்கின்றது. இது அ.ப. 20:15-இலிருந்து தெரியவருகிறது.

சாமுவேல் (SAMUEL - ஏலின் பெயர்)

கி.மு. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓர் இறைவாக்கினர். இஸ்ராயேலை ஆட்சி செய்த இறுதிநீதிபதியாகக் (விடுதலை வீரராகக்) கருதப்படுபவர் (அ.ப. 13:20). ஒரு லேவியர் (1 நாள் 6:28.33). எல்கானா, அன்னா ஆகியோரின் தவப் புதல்வன் (1 சாமு 1:20).

''ஆண்டவரிடம் மன்றாடி''ப் (1:10) பிறந்தவர். சாமுவேல் பையனைச் சவரக் கத்தியே படாது ஒப்புக் கொடுப்பதாக அன்னா வாக்களித்திருந்தார். அந்த வாக்குறுதியை நிறைவேற்றும் பொருட்டு (பையன் பால்குடி மறந்ததும்) அவனைச், சிலோவில் குருவாக இருந்த ஏலியிடம் ஒப்படைத்தார் (1:11.24-28). சாமுவேல் ஏலியின் மேற்பார்வையில் சிலோவிலுள்ள புனித இடத்தில் இறைவனுக்குப் பணிபுரிந்தார். ''ஆண்டவர் திருமுன்'' வளர்ந்தார் (2:21). ''ஆண்டவரின் வாக்கு அரிதாக இருந்த'' (3:1) இருண்ட காலத்தில், யாவே பையனிடம் அடிக்கடி பேசினார். பையனின் பெருமை இஸ்ராயேல் முழுவதும் பரவியது (3:20-21). குறிப்பாக ஏலியின் புதல்வர்களின் தீய நடத்தைக்காக அவரது வீட்டுக்கு எதிரான தீர்ப்பை இறைவாக்கு உரைக்கச் சாமுவேலை இறைவன் பணித்தார்.

அபேக்கு என்னுமிடத்தில் இஸ்ராயேலர் படுதோல்வி அடைந்து பெலிஸ்தியர்களிடம் உடன்படிக்கைப் பேழையை இழந்த இருபது ஆண்டுகளுக்குப்பின், சாமுவேல் நீதிபதி அல்லது விடுதலை வீரரானார். இஸ்ராயேல் இனத்தவரை ஒன்றுகூட்டி, உடன்படிக்கையைப் புதுப்பித்து மிஸ்பா என்னுமிடத்தில் பெலிஸ்தியர்களிடமிருந்து இஸ்ராயேலர்களுக்கு விடுதலை அளித்தார். சாமுவேல் ''தம்வாழ்நாள் முழுவதும் இஸ்ராயேலுக்குத் தலைவராக இருந்தார். ஆண்டுதோறும் சுற்றுப்பயணம் செய்து பெத்தேல், கில்கால், மிஸ்பா ஆகிய இடங்களில் எல்லாம் இஸ்ராயேலுக்கு நீதி வழங்கினார் (17:15-16).

சாமுவேலின் மிகப்பெரிய பங்கு, இஸ்ராயேலில் அரசாட்சிமுறை நிறுவப்பட்டதில் அவர் செயலாற்றிய விதமாகும். அவருக்கு வயது முதிர்ந்தபோது, தனது புதல்வர்களாகிய யோவேல், அபியா ஆகியோரை நீதிபதிகளாக நியமித்தார். ஆனால் அவர்கள், ஏலியின் மக்களைப் போல் ஊழல்மிக்கவர்களாக இருந்தனர்: பொருளாசைப்பட்டுக் கையூட்டு வாங்கினர்; நீதி வழங்கவில்லை (8:1-3). இந்தத் தோல்வியும், தங்களைப் போருக்கு இட்டுச் செல்ல ஓர் அரசன் வேண்டும் என்ற விருப்பமும், ''அனைத்து வேற்றினங்களிடையே இருப்பது போன்று'' தங்களுக்கும் ஓர் அரசனை நியமிக்க வேண்டும் என்று இறைவாக்கினரிடம் விண்ணப்பிக்க இஸ்ராயேலின் பெரியோர்களைத் தூண்டின (8:4-5.20). சாமுவேல் இதற்கு ஒத்துக் கொள்ளவில்லையாயினும், யாவேயின் கட்டளைக்குப் பணிந்து, அவர்களின் விண்ணப்பத்திற்கு இணங்கிச் சவுலை அரசனாக அபிடேகம் செய்தார் (9:1-10:16. 17-27; 11:15). அதே சமயம் அரசாட்சியால் வரும் கேடுகளைப் பற்றியும் மக்களை எச்சரித்தார் (8:11-8). அரசனுடைய உரிமைகளையும் கடமைகளையும் மக்களுக்கு எடுத்துரைத்து, அவற்றை ஓர் ஏட்டில் எழுதி, ஆண்டவர் திருமுன் வைத்தார் (10:25). புதிய அரசன் சாமுவேலின் இறைவாக்கு அலுவலை அபகரித்துக் கொண்டு (13:8-14) ஆண்டவரது

வார்த்தைகளுக்குக் கீழ்ப்படியாதபோது (15:22-23), சவுலின் அரசுத்தன்மையை நிராகரித்து (15:26-29), அவருக்குப் பதிலாகத் தாவீதை அபிடேகம் செய்யும்படி (அதி 16) யாவே சாமுவேலுக்குப் பணித்தார்.

சவுலை மக்களுக்கு அரசனாக அளித்த பின், சாமுவேல் தனது நீதிபதி அலுவலைத் துறந்தார். மக்களுக்கு அளித்த பிரியாவிடையில் தனது நிலையான எடுத்துக்காட்டான வாழ்க்கையை மக்களுக்கு நினைவுபடுத்தினார். யாவேக்கு மரியாதையோடும் பிரமாணிக்கத்தோடும், பணி செய்யும்படி கட்டளையிட்டார். அவர்கள் தீயவழியில் சென்றால் வரவிருக்கும் பேரழிவுகளைப் பற்றியும் எச்சரித்தார் (அதி:12). பின்பு இராமாவிலுள்ள தன் இல்லத்திற்குத் திரும்பி அங்கு வாழ்ந்தார். தாவீதைச் சவுல் கொடுமைப் படுத்தியபோது சாமுவேல் இறந்தார். இஸ்ராயேலர் அனைவரும் ஒன்றுகூடி அவருக்காகத் துக்கம் கொண்டாடினர். பின்பு இராமாவில் அடக்கம் செய்தனர் (25:1). பிற்காலத் தலைமுறைகள், இறைவனால் அன்பு செய்யப்பட்டவராகவும், மோசேக்கு மட்டுமே அடுத்தபடியிலுள்ள பரிந்துரையாளராகவும் சாமுவேலைக் கொண்டாடிப் பெருமைப் படுத்தின (சங் 99:6; எரே 15:1; சீரா 46:13-20; 45:1).

சாமுவேலின் ஆளுமை அவர்காலத்து மக்களிடையே ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தியது. அவரது பதவி, ஆளுமை மற்றும் அரசாட்சி ஏற்படுத்துவதில் அவரது பங்கு ஆகியவை புராணப் பண்புகளாலும், அவை பற்றிய பாரம்பரியங்களில் காணப்படும் முரண்பாடுகளாலும் போர்த்தி மறைக்கப் பட்டுள்ளன. எனவே வரலாற்று உண்மைகளைப் பிரித்தெடுக்கும் எந்த முயற்சியும், இந்நிகழ்ச்சியுரைகளின் புராணப் பண்புகளைக் கவனத்தில் கொள்ள வேண்டும். வரலாற்று உண்மைகளை நிராகரிக்கவோ, ஐயப்பாடுடையவற்றை ஏற்கவோ எச்சரிக்கையாக இருக்க வேண்டும்

சாமுவேலின் பதவி:- சாமுவேல் இராமா நகரைச் சேர்ந்த ஒரு முக்கியமான செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தவர் (1 சாமு 1:1). நாளாகமம் அவரை 'லேவியின் ஒரு மகனாக'க் குறிப்பிட்டாலும் (1 நாள் 5:28), அவர் எப்பிராயிம் இனத்தைச் சேர்ந்தவர்.

''இறைமனிதராகவும்'', ''திருக்காட்சியாளராகவும்'', ''இறைவாக்கினராகவும்'', ''இஸ்ராயேலின் இறுதி நீதிபதியாகவும்'' மக்கள் அவரைப் போற்றினர். இஸ்ராயேல் முழுவதிற்கும் அவர் நீதிபதியாக விளங்கினார் (8:4-5) என்று உறுதியாகக் கூறமுடியாது. அவர் சமய காரியங்களிலும் அதிகாரம் கொண்டிருந்தார் என்பது போதியமட்டும் தெளிவாகிறது. இராமாவிலுள்ள தொழுகை மேட்டில், சாமுவேல் ஆசீர் வழங்குவதற்குமுன் மக்கள் தங்கள் பலியுணவைத் தொடங்க மாட்டார்கள் (9:13). பலிக் கூட்டங்களில், அவர் விருந்தினரை அழைக்கலாம்; கட்டளையிடலாம்; வழிபடுவோரின் வரிசையைத் திட்டமிடலாம் (9:22-24). அவர் அபிடேக எண்ணெயை வைத்திருந்தார்; அல்லது அதைத் திருநிலைப்படுத்தலாம் (10:1). கொள்ளைப் பொருட்களையும், போர்க்கைதிகளையும் அழிவிற்கு அர்ப்பணம் செய்யலாம் (15:3). அரசனின் காணிக்கை அளிக்கும் உரிமையை மறுக்கலாம் (10:8; 13:13). இந்த வழிபாட்டுச் சலுகைகளும், அரசனைத் தேர்ந்தெடுக்கும் சடங்கைத் தயாரிப்பதில் சாமுவேலின் பாகமும், அவரது காலத்தில் அவர் இஸ்ராயேலின் முதன்மை சமயத்தலைவராகத் திகழ்ந்தார் என்று சுட்டுகின்றன.

இஸ்ராயேலில் இறைவாக்கினர் குழுவோடு அவர் ஓரளவு தொடர்பு கொண்டிருந்ததாகத் தெரிகிறது (10:5-6; 10:18-24). அவர் இறைவாக்கு இயக்கத்தின் ஒரு நபராகவோ தலைவராகவோ இருந்தார் என்று உறுதியாகக் கூறமுடியாது. கி.மு. 8-ஆம் நூற்றாண்டின் பெரும் இறைவாக்கினர்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர்களில் சாமுவேலும் ஒருவர் என்று உறுதியாகக் கூறலாம்.

அரசாட்சி நிறுவப்படுவதில் சாமுவேலின் பாகம்:-

சவுல் அரசனாக அபிடேகம் செய்யப்பட்டதில் சாமுவேலின் பாகம் என்ன என்று துல்லியமாக விவரிக்கமுடியாது. ஆனால் இஸ்ராயேலில் அரசாட்சி அறிமுகப்படுத்தப் படுதலில் அவரது பாகம், தீர்மானமானது என்று மூன்று பாரம்பரியங்கள் சான்று கூறுகின்றன (எலோகிம் பாரம்பரியம்: 10:17-21; யாவே பாரம்பரியம்:10:1-16; குருக்கள் பாரம்பரியம்: 10:21-27). எலோகிம் பாரம்பரியத்தில் ஆண்டவரும் சாமுவேலும் அரசாட்சிக்கு எதிர்ப்பாய் உள்ளனர். ஆனால் யாவே பாரம்பரியம் பரிவான மனப்போக்கைக் காட்டுகிறது. இந்த வரலாற்றைத் திருத்தியமைக்கும் முயற்சியில் தொடக்கத்தில் சாமுவேல் அரசாட்சிக்கு எதிராக இருந்திருக்கலாம்; ஆனால் பிற்பாடு பெலிஸ்தியர்களின் ஆதிக்கத்தை எதிர்கொண்டபோது தனது மனதை மாற்றி அரசாட்சி அறிமுகப் படுத்தப்படுவதில் ஆக்க பூர்வமான பங்கெடுத்திருக்கலாம் என்று கருதலாம். இறைவனது ஆட்சியின் உலகியல் பிரதிநிதியாக அரசனைச் சாமுவேல் கருதியிருக்கலாம். ஆகவே இறைவனது வார்த்தைக்கு முழுவதும் அரசன் கீழ்ப்படியவேண்டும் என்று கோரினார். இது இரண்டு நிராகரிப்பு நிகழ்ச்சிகளிலிருந்தும் தெளிவாகிறது (1 சாமு 13; 15). சவுலுக்குத் தனது ஆதரவை எடுத்துக் கொண்டபின், சாமுவேல் மற்றொரு இறையாட்சிப் பிரதிநிதியைத் தேடிப் போர்வீரரான தாவீதை அப்பபடிப்பட்ட பிரதிநிதியாகக் கண்டிருக்கலாம். இக்கருத்து வரலாற்றோடு ஒத்துப்போகக் கூடியது.

## சாமுவேல் திருநூல்கள் (1, 2 SAMUEL, BOOKS OF)

### 1. பெயர்:

மாசரேட்டிக்கு வாசகத்தில் கி.பி. 15-ஆம் நூற்றாண்டுவரை, இரு சாமுவேல் ஆகமங்களும் ஒரே தொடர்ச்சியான நூலாக இருந்தது என்பர். இக்கூற்றுக்கு எரோனிமு, யுசேபியு போன்றவர்கள் சாட்சி கூறுகின்றனர். ஆனால் வெகு காலத்திற்கு முன்பே எழுபது நூல், இந்நூலை இரு நூல்களாகப் பிரித்து அவற்றை 1, 2 அரசராகமங்கள் என்றழைத்தது. இதைப்பின்பற்றி ''வுல்கத்தா'' வாசகம், இவற்றை 1. 2 அரசராகமங்கள் என்று அழைத்தது. இதைப் பின்பற்றிக் கத்தோலிக்க மொழிபெயர்ப்புகள் அப்படியே அழைத்தன. தமிழிலும் அதையே பின்பற்றினோம். ஆனால் கி.பி. 15-ஆம் நூற்றாண்டிலிருந்து எபிரேய வாசகங்கள் இவற்றை 1, 2 சாமுவேல் ஆகமங்கள் என்றழைத்தன. இதைப் பின்பற்றி இப்போதுள்ள நமது கத்தோலிக்க விவிலியப் பதிப்பு இந்நூல்களை 1, 2 சாமுவேல் ஆகமங்கள் என்றழைக்கிறது.

எபிரேய வாசகத்தில் எப்படி இப்பெயர் வந்தது? பழைய ஏற்பாடு நூல்களில் பெரும்பாலானவற்றை இறைவாக்கினர் எழுதினார்கள் என்பது ஒரு யூத பாரம்பரியமாகும். மேலும் நூலின் தொடக்கத்தில், 1, சாமு 1-15இல், சாமுவேலின் வாழ்க்கையும் செயல்களும் வருகின்றன. அவரதுவாழ்வு சிறப்புப் பெறுகின்றது. இதன் விளைவாக இரு பகுதிகளையும் கொண்ட எபிரேய மூல நூலுக்கு அவரது பெயரே தலைப்பாயிற்று.

### 2. ஆசிரியர்:

யூத இலக்கியம் ''தால்மூது'' இந்நூலுக்குச் சாமுவேல்தான் ஆசிரியர் என்று நம்பிக்கையோடு கூறுகிறது. இந்நம்பிக்கை 1 நாள் 29:29-இல் வரும் கூற்றின் விளைவாக இருக்கலாம். ஆனால் இப்படி இந்நூல்கள் சாமுவேலுக்குச் சாற்றிக் கூறுவதை நிபந்தனையின்றி நாம் ஏற்றுக்கொள்ள முடியாது. காரணம், சாமுவேலின் இறப்பு 1 சாமு 25-இல் கூறப்படுகிறது. முதல் சாமுவேல் ஆகமத்தில் வரும் நிகழ்ச்சிகளில் சாமுவேல் கொண்டிருக்கும் ஆதிக்கத்தினால் இந்நூல்களைச் சாமுவேல் எழுதியதாகக் கூறப்பட்டது என்று கருதுவது மேலானது. காலப்போக்கில் திருக்காட்சியாளரான சாமுவேலின் பெரும் பெயரும், அவரது செயல்களில் காணப்பட்ட இறையாற்றலும், இந்நூலுக்குச் சாமுவேல்தான் ஆசிரியர் என்ற கருத்து வளர்ந்து வழக்கில்வர ஏதுவாயிற்று. மற்றப்படி இந்நூல் எழுதப்படுவதில் சாமுவேல்

எப்பங்கும் கொண்டிருந்தார் என்று நம்புவ தற்கு எக்காரணமும் இல்லை.

இந்நூல்களைக் கவனத்தோடு வாசித்தா லும், இவை ஒரே ஓர் ஆசிரியரது வேலைப் பாடன்று என்பது தெளிவாகும். பல பேர் வெவ்வேறு காலத்தில் இந்நூல் தொகுப்பு வேலையில் பங்கு கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

**3. எப்படித் தோன்றின? மூலங்கள்:**

இந்நூல்கள் எப்படித் தோன்றின என்பது பற்றிப் பல ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. விவிலிய அறிஞர்கள், சிலரின் கருத்துப்படி ஏற்கனவேயிருந்த முந்தைய ஏட்டு மூலங் களிலிருந்து இந்நூல்கள் தோன்றின. இவ் வேடுகள் யாவே, எலோகிம் பாரம்பரியங்க ளால் பெரிதும் பாதிக்கப்பட்டன. இதற்கு மாறாக, அறிஞர்கள் வேறுசிலர் ஏட்டு மூலக் கருதுகோளுக்குப் போதிய சான்றுகள் இல்லை என்று கருதினர். வெவ்வேறு இலக் கியச் சூழ்நிலைகளில் தோன்றிய வேறுபட்ட பாரம்பரியங்களின் தொகுப்பிலிருந்து இவ் விரு ஆகமங்களும் தோன்றின. தனிப்பட்ட பாரம்பரியங்கள் மக்களிடையிலும் அரசமன் றத்திலும் தோன்றின. இவை ஏற்கெனவே யிருந்த பல நிகழ்ச்சி விவரிப்புகளைக் கொண் டிருந்தன. இவ்விவரிப்புகளின் தொகுப்பும் கலப்பும் ஒன்று சேர்ந்து ஒரே பாரம்பரியமா கியது. இது திருத்தியமைக்கப்பட்டு, இறை வாக்கு அமைப்புகளோடு சேர்ந்து, இறை யியல் விளக்கம் பெற்ற ஒரு முழு வரலாறாக உருவெடுத்தது. இது உபாகமப் பாரம்பரியத் தால் பாதிக்கப்பட்டு, அப்பாரம்பரிய ஆசிரி யர்களால் திருத்தப்பெற்றது. இதில் பிற்கா லத்தில் சில காவியப் பகுதிகள் புகுத்தப் பட்டு நாம் கொண்டிருக்கும் வடிவில் நூல் உருவெடுத்தது என்பர். இப்படித் தோன்றிய தொகுப்புநூல் வாரிசு விவரிப்பைக் கருப் பொருளாகக் கொண்டு, சாமுவேல் நூல்கள் தோன்றின என்று அறிஞர் சிலர் கருதுகின் றனர். இப்படித் தாவீது அரசு எக்காலத்துக்கும் நிலைத்து நிற்கக் கூடியது என்று காட்டிடும் பொருட்டு இந்நூல்கள் தோன்றின. இக் கருத்தை மையமாகக் கொண்டு பிற நிகழ்ச்சி யுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன. அரசு நிறு வப்படுதல், தாவீதை அபிடேகம் செய்தல் இவை போன்ற யாவும் வாரிசு நிகழ்ச்சியை ஒட்டித் தொகுக்கப்படுகின்றன.

இந்நூல்களின் தோற்றத்தில் பல மூலங்கள் பயன்படுத்தப்பட்டன என்பதற்குப் பல எடுத்துக்காட்டுகளைக் கொடுக்கலாம். *(1)* வாசகங்களில் வரும் எதிர்மறைத் தோற்றம் *(1 சாமு 7:13-யை 9:16 ஓடும், 13: 14-ஐ 19:22. 24-ஓடும் ஒப்பிடுக). (2)* திடீர் மாற்றங்கள் *(1 சாமு 1-3-ஐ 4-6 ஓடும் ஒப்பிடுக. (3)* மீண்டும் மீண்டும் வரும் இரட்டிப்பு நிகழ்ச்சி யுரைகள் (சவுலின் அபிடேகம், சவுலைத் தாவீது முதன்முறை சந்தித்தல், சவுல் தாவீதை ஈட்டியால் குத்த முயற்சித்தல், தாவீது சவுலைக் காத்தல்) *(4)* தொனியிலும் நடையிலும் இறையியல் போக்கிலும் காணப்படும் வேறுபாடுகள்.

இந்நூல் தோன்ற உதவிய மூலங்களை வேறுபடுத்துவது அவ்வளவு எளிதான தில்லை. என்றாலும், பின்வருவன தெளி வாக வேறுபடுத்தப்பட்ட மூலங்களாகத் தோன்றலாம்.

*(1)* நீதிபதிகளோடு தொடர்புடைய மூலம் *(1 சாமு 1-3; 15:1-16:13).*

*(2)* பெட்டகத்தோடு தொடர்புடைய மூலம் *(1 சாமு 4-7:1;2 சாமு 6).*

*(3)* மன்னராட்சியின் தோற்றம் பற்றிய இரு வகை மூலம் (மன்னராட்சிக்கு மாறாக *1 சாமு 7:2-8:22; 10:17-24; 12; 13:8-14; 15;* மன்னராட்சிக்குச் சார்பாக:*1 சாமு 9:1-10:16; 11:1-11.15; 13:1-7.15-23).*

*(4)* ஆட்டு இடையன் பையனிலிருந்து அரச னாக உயர்ந்தது பற்றி இரு இணையான பாரம்பரியம் *(1 சாமு 16-2 சாமு 5).*

*(5)* தாவீது பற்றிய அரச மரபு வரலாறு *(2 சாமு 9-20).*

*(6)* தாவீது பற்றிய சிறு துணுக்குகள் அடங் கிய தொகுப்பு.

நாம் சாமுவேல் ஆகமங்களை வாசிக்கும் போது திட்டக் குறைவையும், ஓர் அளவு இணைப்பற்ற நிலையையும் விரைவில் உணரலாம். இதனால் மயக்கம் அடைய வேண்டியதில்லை. இந்நூல்களில் நாம் கால நடை ஒழுங்குகளைக் காண விழையக் கூடாது. இந்நூல் ஆசிரியர்கள் தாங்கள் தொகுத்தவற்றிடையே உறுதியான காரண காரியத் தொடர்பை அமைக்க முயற்சிக்க வில்லை. இக்கால ஆசிரியர்கள் செய்யக் கூடிய அளவில் வேறுபாடுகளைச் சல்லடை போட்டு நீக்கி விட முயற்சி செய்யவில்லை. தங்களது வாசகர்கள் எதிர்பார்த்த அளவிற் குத் தங்கள் தொழிலைச் செய்தனர். ஒரு குறிப்பிட்ட செயலைப் பற்றிய விவரிப்புகள் தங்களுக்குள்ளே ஒத்துப் போகவில்லை என் றாலும், தங்களுக்குக் கிடைத்த விவரிப்பு களை உள்ளடக்கிய ஒரு நிகழ்ச்சி உரை நூலைத் தொகுத்தனர்.

இத்தொகுப்பில் உபாகமப் பாரம்பரியம் பரவி நிற்கிறது. ஆசிரியர் தனது மூலங்க ளைப் பயன்படுத்தும் முறையும், அவற்றை ஒழுங்குபடுத்தும் முறையும் அவற்றிற்கு அளிக்கும் விளக்கங்களும் இதைத் தெளிவு படுத்தும். இப்பாரம்பரியமே, ஆசிரியரின் நோக்கையும் எடுத்துக் காட்டுகிறது. இது பற்றிப் பின்பு பார்ப்போம். மூலங்களை ஒழுங்குபடுத்தும் முறை வாசகர்களைத் தாவீதுக்கும் அவரது அரசமரபுக்கும் உறுதி யாகவும் வேகமாகவும், இட்டுச் செல்கிறது. தாவீது அரசு எக்காலத்தும் நிலைத்திருக்கும் என்பதை மூலங்களைப் பயன்படுத்தும் முறையால் சுட்டிக் காட்டுகிறார்.

ஆசிரியர் சாமுவேலோடு தொடங்குகி றார். ஏனெனில் மன்னராட்சியை நிறுவுவ தற்கு இறைவன் பயன்படுத்தும் கருவி சாமு வேல்தான். ஆகையால் சாமுவேல் பற்றிய மூலத்திலிருந்து சாமுவேல் ஓர் இறைவாக்கி னர் *(1 சாமு 1-3)*, அவர் ஒரு நீதிபதி *(7:3-17)* என்று நிலைநாட்டுவதற்கு வேண்டியதை மட்டும் ஆசிரியர் எடுத்துக் கொள்ளுகிறார். *4:1-7:*-இல் பெட்டகம் பற்றிய மூலத்தைப் புகுத்துகிறார். ஏனெனில் அது, சாமுவேல் *3:18*-இல் இறைவாக்காக முன்னறிவித்தது நிறைவேறுகிறது என்று காட்டுகிறது. இப்படி யாக சாமுவேல் ஓர் உண்மையான இறை வாக்கினர் என்று உறுதிப்படுகிறது. இது மன்னராட்சியை நிறுவுவதில் சாமுவேலுக் குரிய அதிகாரத்தையும் உறுதிப்படுத்துகிறது.

பின் ஆசிரியர் மன்னராட்சி பற்றிய மூலங் களிலிருந்து மன்னராட்சிக்குச் சார்பாக உள் ளவற்றையும், மாறாக உள்ளவற்றையும் எடுத்துக் காட்டுகிறார். ஆனால் இவற்றை இணைத்துக் கூறும் விதம், வாசகர்கள் மன்ன ராட்சி பற்றிச் சரியான இறையியல் அறிவு பெறும் நோக்கோடு அமைந்துள்ளது. மன்ன ராட்சிக்குச் சார்பான மூலங்கள் அவ்வாட்சி உரிமை நேர்மையுடையது என்று காட்டு கிறது *(1 சாமு 9:1-10:6; 11;. 13:1-7. 15-23)*. இறைவனால் அனுமதிக்கப்பட்ட மன்ன ராட்சியின் உண்மைத் தன்மை எது என்று விவரிக்கிறது. மன்னராட்சிக்கு எதிராக உள்ள மூலங்களில் *(1 சாமு 8:1-22; 10:17-24; 12:13:8-14; 15)* சுற்றியுள்ள புற இனத்தவ ருடைய மன்னராட்சிக்கு ஒத்த ஆட்சிக்கு எதி ராக இறைவனது வெறுப்பை எடுத்துக் கூறு வதால் மன்னராட்சி பற்றிய சரியான இறை யியல் அறிவு எடுத்துக் காட்டப்படுகிறது *(8:4-22)*. அஃதோடு மன்னராட்சியில் மனித அரசன் அவனுடைய மக்களோடு சேர்ந்து, இஸ்ராயேலின் உண்மையான தெய்வீக அரச னான இறைவனுக்குப் பணிந்து இருக்க வேண்டும் என்று கூறுவதிலும் மன்னராட்சி பற்றிய இறையியல் கருத்து தெளிவாகிறது *(1 சாமு 12:13-15.20-25)*. இறைவனுக்கு ஏற் புடைய மன்னராட்சி பற்றிய சரியான இறை யியல் அறிவை வாசகர்களின் மனதில் பதிய வைக்க இஸ்ராயேலின் முதல் அரசரான சவுல் நிராகரிக்கப்படுவது பற்றி இரு வேறு பட்ட வாசகங்களைக் கொடுக்கிறார் ஆசிரி யர் *(13:8-14; 15:1-35)*. இரண்டு விவரிப்புகளி லும் ஒரே உண்மையான அரசரான இறைவ னுக்குப் பணியாததால்தான் சவுல் நிராகரிக் கப்படுகிறான் என்பது மேலும் மேலும் வலி யுறுத்தப்படுகிறது. *1 சாமு 15:28*இல் சவு லிடம் சாமுவேல் கூறும் வார்த்தைகள் இக் கதை எத்திசையில் போகும் என்று காட்டு

கிறது. ''இன்றே ஆண்டவர் உமது கையி லிருந்து இஸ்ராயேல் அரசைக் கிழித்து உம்மைவிட மேலான அயலானுக்குக் கொடுப்பார்''.

பின்பு தாவீது பற்றிய மூலங்களைப் பயன் படுத்த ஆசிரியர் தொடங்குகிறார் *(1 சாமு 16-2 சாமு 24)*. தாவீதின் தொடக்க வரலாறு, சவுலின் வரலாற்றோடு பிரிக்க முடியாத வாறு பின்னியிருப்பதால், உபாகமப் பாரம் பரிய ஆசிரியர் இரு வரலாற்றையும் திறமை யோடு இணைத்து இறைவனால் கைவிடப் பட்டு நிராகரிக்கப்பட்ட சவுலின் வீழ்ச்சி யையும், இறைவன் ''தன் மனதுக்கேற்ற''வ ராகத் தேர்ந்தெடுத்த மனிதனான தாவீதின் எழுச்சியையும், எடுத்துக் கூறுகிறார். இரு வரையும் ஒற்றுமைப்படுத்தி வேறுபடுத்து கிறார் *(1 சாமு 13:4)*. இஸ்ராயேலின் அரிய ணைக்குத் தாவீது உயர்ந்ததை வெளிப்படை யாகவோ, மறைமுகமாகவோ ஏற்றுக் கொள் ளும் வாசகங்களின் எண்ணிக்கை ஆசிரியரது இறையியல் நோக்கை எடுத்துக் காட்டுகின் றன *(1 சாமு 13:14; 15:28; 16:13; 18:8.28; 20:30; 23:17; 24:20; 25:30; 26:25; 28:17)*. இவ்வாசகங்கள் உபாகமப் பாரம்பரிய ஆசி ரியர்களின் சொந்தக் கருத்தாய் இருக்கலாம் அல்லது அவர் இவற்றைத் தனது மூலங்க ளில் கண்டிருக்கலாம். எது எப்படியிருந்தா லும் தாவீது முதலில் யூதாவின் அரசராகிறார் *(2 சாமு 2-4)*. பின்பு எல்லா இஸ்ராயேலின் அரசராகிறார் *(2 சாமு 5:3)* என்று வாசிக்கும் போது வாசகர்கள் வியப்புக் கொள்ளார்.

இந்நூலின் உபாகமப் பாரம்பரிய ஆசிரி யர், தனது மூலங்களைப் பயன்படுத்திய தைப் பற்றி மேலே கூறும்போதே, மன்ன ராட்சி பற்றிய ஆசிரியரின் இறையியல் கருத் தின் வளர்ச்சியைப் பற்றிக் கூறியுள்ளோம். இதை மனதில் கொள்ள வேண்டும்.

ஆசிரியர் மற்றொரு கருத்தையும் எடுத்துக் கூறத் தனது மூலங்களைப் பயன்படுத்து கிறார். சாமுவேல் ஆகமங்களில் தாவீது வர லாற்று நிகழ்ச்சிகளின் உன்னதமான கருத்து, தாவீதின் அரச மரபு எக்காலத்திற்கும் என்ற இறைவாக்கு உறுதியாகும் *(2 சாமு 7)*. இதை வெளிப்படுத்த தாவீதின் பக்தியையும், இறைவன் காட்டிய வழியில் தாவீது பணிந்து நடந்ததையும் எடுத்துக்காட்டி வாச கர்களை ஆயத்தம் செய்கிறார் *(1 சாமு 13:14; 15:28; 16:7; 17:37; 22:3-5; 23:2.4. 10-12; 24:6-23; 25:29; 26:9-11; 30:6-8; 2 சாமு 2:1; 5:25; 6:21-22)*. இதற்காகப் பொருத்தமான இடங்களில் 'இறைவன் தாவீதுடன் இருக்கி றார்'' என்று அடிக்கடி கூறப்படுகிறது *(1 சாமு 16:13.18; 18:12-28; 23:14; 2 சாமு 5:10; 7:3)*.

முன் சென்ற நிகழ்ச்சியுரைகளாலும் 2 சாமு 7-இல் வரும் வாக்குறுதி பற்றிய விரிவான நயமிக்க விவரிப்பாலும் தாவீதை ஒரு பெரும் வரலாற்றுப் பாத்திரமாக உபாகம ஆசிரியர் அமைக்கிறார். இப்படியாகத் தாவீது அரசமரபு எப்போதும் நீடித்திருக்கும் என்பது வருங்காலத்தில் இஸ்ராயேலின் நம் பிக்கையின் ஊற்றாகும் என்ற தனது முக்கிய மான இறையியல் நிலையை, உபாகம ஆசி ரியர் நிலைநிறுத்துகிறார். இஃதோடு தாவீது கதைக்கு நிறைவான முடிவுரையைக் கண்டி ருக்க வேண்டும் ஆசிரியர்.

அதற்கு மாறாகத் தாவீதின் முதிர்ந்த வய துக் காலத்தை விவரிக்கத் தொடங்குகிறார். அவரது விபச்சாரக் குற்றம், கொலைக்குற் றம், குழந்தையின் சாவு மற்றும், அவரு டைய புதல்வர்களிடையேயான சகோதரத் துரோகங்களும், சகோதரர் கொலைகளும், இறுதியாகத் தாவீது புதல்வர்களின் புரட்சிக் கலகங்கள் ஆகியவையும் கூறப்படுகின்றன. இப்பிரச்சினையை மேலும் சிக்கலாக்கும் விதத்தில், உபாகம ஆசிரியர், அரசவை வர லாற்று முடிவைப் பிரித்து, சாலமோனின் ஆட்சிக்கு முன்னுரையாகப் பயன்படுத்து கிறார் *(1 அரச 1-2)*.

நாத்தானின் இறைவாக்கில் இரு கூறுகள் உள்ளன *(2 சாமு 7:14-16)*. ஒன்று நிபந்தனை யுள்ள கூறு. மற்றது நிபந்தனையற்ற கூறு. இவற்றை வாசகர்களுக்கு எடுத்துக் காட்ட அரசவை வரலாற்றை உபாகம ஆசிரியர்

பயன்படுத்துகிறார். இவ்விதம் தாவீது தவறிப்போகிறார்; ''மனிதர் பயன்படுத்தும் கோலால்'' தண்டிக்கப்படுகிறார். ஆயினும் துன்ப நிகழ்ச்சிகளும் புரட்சிக் கலகங்களும் நடந்தாலும், அவருக்குமுன் அரசரான சவுலிடமிருந்து அகற்றப்பட்டது போல் (2 சாமு 7:15) இறைவனது அன்பு தாவீதிடமிருந்து அகலவில்லை. 1, 2 சாமுவேல் ஆகமங்களில் உபாகம ஆசிரியர் தாவீது மரபு அரசர்களின் பற்றுறுதி இன்மையை விவரிப்பார். தாவீது மரபு அரசர்கள் செய்த குற்றமோ, ஏன் தாவீதின் குற்றமோகூட, தாவீது மரபு அரசுக்கு அளிக்கப்பட்ட நிபந்தனையற்ற வாக்குறுதியை ஒன்றுமின்மையாக்க முடியாது என்பதை நாடு கடத்தப்பட்டவர்கள் உய்த்துணர்வது மிக மிக முக்கியமானதாகும். இந்த வாக்குறுதியில் அவர்களுடைய நம்பிக்கை அடங்கியிருக்கிறது. இதற்காகவே தமது மூலங்களைப் பயன்படுத்துகிறார்.

**4. எப்போது தோன்றின?**

சாமுவேல் ஆகமங்கள் எப்போது தோன்றின? என்று துல்லியமாகக் கூற முடியாது. சில பகுதிகளில் இந்நூல்கள் மிகப் பழைய பொருட்களை, இஸ்ராயேலின் மன்னராட்சித் தொடக்க காலத்தைச் சேர்ந்த நிகழ்ச்சிகளைக் கொண்டிருக்கின்றன என்பதில் ஐயமில்லை. அரசு வாரிசு நிகழ்ச்சியுரை (2 சாமு 9-20) இப்படிப்பட்ட ஏட்டிற்குச் சான்றாகும். இவை நிகழ்ந்ததாகக் கூறப்படும் நிகழ்ச்சிகள் நடந்த சிறிது காலத்திற்குள்ளாகவே இவை எழுத்து வடிவம் எடுத்திருக்க வேண்டும். பிற்காலச் சேர்க்கை, திருத்தியமைத்தல் ஆகியவற்றிற்குத் தள்ளுபடி செய்தாலும், முழு நூலும் இஸ்ராயேலர் நாடு கடத்தப்படுமுன் அல்லது நாடு கடத்தப்பட்ட காலத்தில் நிலையான வடிவம் எடுத்திருக்க வேண்டும். உபாகமப் பாரம்பரியத்தால் பாதிக்கப்பட்டு இறுதி வடிவம் எடுத்திருக்க வேண்டும். இவ்வுண்மை 1 சாமு 2:27-36; 2 சாமு 7-இல் எதிரொலிக்கிறது. இறுதி வடிவம் கி.மு. 560-539 இடையிட்ட காலத்தில் தோன்றியிருக்கலாம்.

**5. வாசகங்கள்:**

சாமுவேல் ஆகமங்களின் எபிரேய வாசகங்கள் திருப்தி அளிக்கும் முறையில் பாதுகாக்கப் பட்டிருக்கவில்லை. அதைத் திருத்தியமைப்பதற்கும், புரிந்து கொள்வதற்கும் எடுத்துக் கொள்ளும் முயற்சிகள், இதுவரை முற்றிலும் வெற்றியடையவில்லை. எழுபது நூல் சாமுவேல் வாசகம், மாசரேட்டிக்கு எபிரேய வாசகத்திலிருந்து வேறுபட்ட எபிரேய மூலவாசகத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

கும்ரான் 4-ஆம் குகையில் கண்டுபிடிக்கப்பட்ட சாக்கடல் சுருள்களில் காணப்படும் சாமுவேல் ஆகமத்துணுக்குகள் மாசரேட்டிக்கு சாமுவேல் ஆகம வாசகத்தைப் பற்றித் தாழ்ந்த மதிப்பை ஏற்படுத்துகின்றன. இவற்றில் பல, எழுபதுநூல் சாமுவேல் ஆகம வாசகத்தோடு ஒத்துப்போகின்றன. சில சமயம் இவை எழுபது நூலையும், மாசரேட்டிக்கு வாசகத்தையும்விடச் சிறந்த வாசகத்தைக் கொண்டுள்ளன. இது எழுபது நூலுக்கும் மாசரேட்டிக்கு எபிரேய வாசகத்திற்கும் மூலமாக மற்றொரு மூலவாசகம் இருந்திருக்க வேண்டும் என்று சுட்டுகிறது. மாசரேட்டிக் எபிரேய வாசகத்தைத் திருத்த எழுபது நூலும் நாளாகம வாசகங்களும் உதவியுள்ளன. ஆனால் ஆய்வாளரின் இந்தத் திருத்தும் முயற்சி அவ்வளவு வெற்றி பெற்றதாகவும், உறுதியுடையதாகவும் தெரியவில்லை.

**6. யாருக்காக எழுதப்பட்டது? ஆசிரியரது நோக்கம்:**

நாம் கொண்டிருக்கும் வடிவில் சாமுவேல் ஆகமங்கள் நாடு கடத்தப்பட்ட யூதர்களுக்காக எழுதப்பட்டன. இதை உபாகமப் பாரம்பரியத்தைச் சார்ந்த ஒருவர் எழுதினார். நாடு கடத்தப்பட்ட உற்சாகமில்லாத, நம்பிக்கையற்ற யூதர்களுக்கு உற்சாகமும் நம்பிக்கையும் போதகமும் தேவைப்பட்டது. அந்நிலையில் மன்னராட்சி இறைவனால் நிறுவப்பட்டது என்பதைத் துன்புறும் மக்களுக்கு நினைவுபடுத்துதல் அவர்களை ஊக்குவிப்பதோடு வருங்காலத்திற்கு ஒரு நம்பிக்கையின்

ஊற்றாகவும் இருக்கும். எக்காலமும் நிலைத் திருக்கும் என்று தாவீதுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதியில் மெசியா பற்றிய, நாட்டு மக்களின் நம்பிக்கை அடங்கியிருக்கிறது. நாம் கொண்டிருக்கும்வடிவில், இஸ்ராயே லின் இந்நம்பிக்கைக்கு வரலாற்று இறை யியல் அடிப்படை கொடுக்கும்படி *1, 2* சாமுவேல் ஆகமங்கள் உபாகம ஆசிரியரால் ஒன்றாகச் சேர்க்கப்பட்டன.

**7. திட்டம்:**

இஸ்ராயேல் வரலாற்றில் கி.மு. *1050-965* இடையிலுள்ள காலத்தில் நிகழ்ந்த வரலாற் றைச் சாமுவேல் ஆகமங்கள் விவரிக்கின் றன. முன் கூறிய கருத்துக்களை மனதில் கொண்டு இவ்விரு ஆகமங்களையும் பின் வருமாறு பிரித்துத் திட்டம் செய்யலாம்.

I. சாமுவேலின் வரலாறு *(1 சாமு 1:1-7:17):*

அ. சிலோவில் சாமுவேல் *(1 சாமு 1-3).*

ஆ. பெட்டகமும் பெலிஸ்தியரும் *(4-7:17).*

II. சாமுவேலும் சவுலும் *(1 சாமு 8:1-15:35):*

அ. சாமுவேல் மன்னராட்சியை நிறுவுதல் *(8-12).*

ஆ. சவுல் அரசன் நிராகரிக்கப்படுதல் *(13-15).*

III. சவுலும் தாவீதும் *(1 சாமு 16-2 சாமு 1):*

அ. சவுலின் அரசவையில் தாவீது *(16-20).*

ஆ. சவுலிடமிருந்து தாவீது ஓடிப்போதல் *(21-27).*

இ. சவுலின் இறுதிநாட்கள் *(1 சாமு 28 - 2 சாமு 1).*

IV. தாவீது அரசனாதல் *(2 சாமு 2-20):*

அ. யூதாவின் அரசனான தாவீது *(2-4).*

ஆ. தாவீது இஸ்ராயேல் முழுமைக்கும் அர சன் *(5-20).*

V. பிற்சேர்க்கைகள்: தாவீது பற்றிய சிறு துணுக்குகளின் தொகுப்பு *(2 சாமு 21-24).*

**8. சிறப்புக் கருத்துக்கள்:**

இந்நூல் ஆசிரியர் கலைப்பண்போடு இஸ் ராயேலில் மன்னராட்சி தேன்றியதை விவ ரிக்கிறார். நிகழ்ச்சிகளை ஒற்றுமைப்படுத்தி வேறுபடுத்துவதில் கவனம் செலுத்துகிறார். இதை இந்நூலின் தொடக்கத்திலேயே காண லாம்.

**8.1. ஓர் எடுத்துக் காட்டான குடும்பம்:**

எல்கானா என்ற சொல்லுக்கு ''இறைவன் ஈட்டிக் கொண்டார்'' அல்லது ''இறைவன் நிறைவு செய்தார்'' என்று பொருள் கொள்ள லாம். இவர் லேவியர் தோகூவுடைய மகனா வார். தங்களுடைய உரிமைச் சொத்தாகிய எப்பிராயிம் மலையிலுள்ள சோபிம் என்ற ழைக்கப்பட்ட இராமாத்தயிம் என்ற ஊரில் வாழ்ந்து வந்தார். இவருக்கு இரு மனைவி யர். ஒருத்தி அருள், அருளுடையவள், அழகி என்று பொருள்படும் அன்னா. மற்றவள் ''பவழமுத்து' என்று பொருள்படும் பெனின்னா. ஒருவனுக்கு ஒரு மனைவி என்ற கொள்கை ஆதியாகமத்தில் நிறுவப் பட்டிருந்தாலும் *(ஆதி 2:24)* பல மனைவிய ரைக் கொள்ளுதல் இக்காலத்தில் பழக்கத் தில் இருந்தது. சிறப்பாக முதல் மனைவி மலடியாக இருந்து விட்டால் இரண்டாவது மனைவியைக் கொள்ளுதல் நடைமுறைப் பழக்கம். பல மனைவியரைக் கொள்ளுதல் ஒருவனுடைய செல்வப் பெருக்கத்திற்கு அடையாளமாகவும் கருதப்பட்டது. சட்டநூல் இப்பழக்கத்தை ஏற்று அதை ஒழுங்குபடுத்தி யது *(உப 21:15-17).* இக் குடும்பங்களில் கணவன் யாரை அதிகம் நேசித்தானோ அவ ளுடைய அதிகாரம் உயர்ந்திருக்கும். ஆகை யால் மனைவியருக்குள் பொறாமையும், போராட்டமும், போட்டியும், ஏச்சும், துன்பு றுத்தலும் மிகுந்திருக்கும். இதை இவர்கள் சிலோவுக்குத் திருயாத்திரை செய்யும் இக் கதையில் நன்குணரலாம்.

இர்ரமாத்தயிமிலிருந்து சிலோவுக்கு 50 கிலோ மீட்டர் பயணம் செய்ய வேண்டும். எப்பிராயிமில் பெத்தேலுக்கு வடக்கே சிலோ, மலைகளைப் பாதுகாப்பாகக் கொண்ட செழிப்பான சமவெளியில் அமைந்திருந்தது. யோசுவா, உடன்படிக் கைப் பெட்டகத்தை இங்கே நிறுவினார். ஏனெனில் எல்லா யூத இனத்தவருக்கும் இவ்விடம் மையமாக இருந்தது *(யோசு 18:1).* இவ்விடம் இஸ்ராயேலுக்கு ஆன்மீக விசுவாச மையமாக விளங்கியது.

ஒரு பற்றுறுதியுள்ள இஸ்ராயேலனாக எல்கானாவைக் காண்கிறோம். இவர் குடும்பத்தோடு சிலோவுக்குத் திருயாத்திரை செய்தது, அங்கு அன்னா செய்த மன்றாட்டு, நேர்ச்சி, பெரிய குரு ஏலி அளித்த ஆசீர், ஒரு வருடம் சென்று தான் பெற்ற குழந்தை சாமுவேலை இறைவனுக்கு அர்ப்பணித்தது ஆகியவை பற்றிய வரலாற்றை நூலில் வாசித்தறிக. அப்போது அன்னா பாடிய பாடல், நற்செய்தியில் மரியாள் பாடிய பாடலுக்கு ஒத்ததாயுள்ளது; முன்னோடியாகவுள்ளது. அதிலே யாவே ஞானம் நிறைந்தவர்; எல்லாம் வல்லவர்; உலகிற்கெல்லாம் நீதி வழங்குபவர் என்று இறைவனைப் போற்றுகிறாள். குழந்தை சாமுவேல் ஆண்டவர் முன் வளருகிறான். ஆண்டவருக்கும், பெரிய குருவுக்கும் ஊழியம் செய்கிறான். இக்கதை ஒரு பக்தியுள்ள இறைவனுக்கு அஞ்சும் நல்லதோர் இஸ்ராயேலர் குடும்பத்தைச் சித்தரிக்கிறது. இது ஒரு நாட்டுப்புற வாழ்க்கைச் சித்திரமாகும்.

*8.2. பெரிய குருவின் மக்கள்:*

மேற்கூறியதற்கு மாறாகச் சிலோவில் இழிவான நிகழ்ச்சிகள் நடக்கின்றன. சாமுவேலின் சிறு பருவமும் அவருடைய பெற்றோர் வாழ்வும் யாவேயின் சட்டத்தால் நிர்ணயிக்கப்படும் வாழ்வுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இதற்கு மாறாகப் பெரிய குரு ஏலியின் மக்கள் இழிவாக வாழ்கின்றனர். ஏலி என்ற சொல்லுக்கு 'எல்லாம் வல்லவர் நீடுழி வாழ்க' என்று பொருள். ஏலி இஸ்ராயேலில் பெரிய குருவும் நீதிபதியுமாவார். ஆகையால் இஸ்ராயேலின் அரசியலிலும் சமய காரியங்களிலும் அவரே உயர் அதிகாரி. அவர் யாவேயின் கூடார வாயிலில் அமர்ந்து சமய வழிபாட்டை மேற்பார்க்க வேண்டும். தம்மிடம் கொண்டு வரப்படும் வழக்குகளைத் தீர்த்து வைக்க வேண்டும். உண்மையில் அவர் தமது அதிகாரத்தைச் செயல்படுத்தவில்லை. அவர் ஒரு நிழல் தான். அவரோடு இருந்த அவரது இரு புதல்வர்கள் ஒப்னி (கொப்னி), பினகாசு ஆகியோர் அதிகாரம் செய்தனர். அவர்களைப் 'பேலியாலின் புதல்வர்கள்' என்று வேதாகமம் அழைக்கிறது. இது ஒன்றே அவர்களைப் பற்றிய போதிய தீர்ப்பாகும். 'பேலியல்' என்ற சொல்லுக்கு ''ஒன்றுக்கும் உதவாக்கரை'' என்றும் ''நரகத்தின் புதல்வர்கள்'' என்றும் பொருள் கொடுக்கலாம். இவர்கள் யாவேயையும் அவரது சட்டத்தையும் புறக்கணித்தனர். முதிய தங்கள் தந்தையின் எச்சரிக்கையோ (சாமு 2:22-26) கடவுள் மனிதர் அளித்த் அச்சுறுத்துதலோ (2:27-36) சிறுவன் சாமுவேல் வழியாகக் கூறப்பட்ட இறைவனது கூற்றோ (3:1-18) இவர்களுக்குப் பயன்படவில்லை. இவர்கள் பலியின் போது செய்த தீச்செயல்களையும் (2:12-17) ஒழுங்கீனமான வாழ்வையும் (2:22) நூலில் வாசித்தறிக.

ஏலி தனது ஒழுக்கங்கெட்ட புதல்வர்களைத் திருத்தியிருக்க வேண்டும். மாறாக இறைவனையும் அவருடைய காரியங்களையும் விடத் தனது புதல்வர்களையே பெரிதும் எண்ணியதாகத் தெரிகிறது (2:29). ஏலியின் எச்சரிக்கையும் அவர்கள் செய்த குற்றத்தை மறைக்கச் செய்த முயற்சியாகத் தெரிகிறது. நமது இல்லங்களில் நமது ஆன்மீக ஒழுக்கப் பொறுப்புகளைப் பற்றி நாம் மிகவும் கவனக் குறைவாய் இருப்பது எளிது. இக்கால குடும்பத் தலைவர்களுக்கும் துறவற சபைத் தலைவர்களுக்கும் ஏலி சரியான பாடமாக அமைந்துள்ளார்.

யாவேக்கு எதிராகக் குற்றம் செய்பவன் யாவேயின் மாற்ற முடியாத தீர்ப்புக்குள்ளாகிறான். அவரிடம் மன்னிப்புக் கேட்டுப் பரிகாரம் செய்யலாம். ஆனால் ஏலியின் மக்கள் அதைச் செய்ய மறுத்து விட்டனர். அதன் விளைவு யாவேயின் பயங்கரத்தீர்ப்பாய் விளைகிறது. ஏலியின் மக்களையும் தனது குருக்களாக யாவே அழைத்தார். ஆனால் அவர்கள் யாவேயையும் அவரது சட்டத்தையும் ஏற்க மறுத்தனர். விளைவு ''இதோ! நாட்கள் நெருங்குகின்றன. உனது வாரிசையும் உன் மூதாதை வீட்டார் வாரிசையும் நான் அழிப்பேன். உன் வீட்டில் ஒரு முதியவன் கூட இருக்கமாட்டான்'' (2.31). ஏலியின் குடும்பத்திலிருந்து குருத்துவம் நீக்

கப்படுகிறது. அவரது புதல்வர் அவலமாய் மடிவர். அவருடைய வழித்தோன்றல்கள் பிச்சை எடுப்பர். அவர்களுக்குப் பதிலாக ''என் திட்டத்திற்கும் விருப்பத்திற்கும் ஏற்பச் செயல்படும் நம்பிக்கைக்குரிய ஒரு குருவைநான் எழுப்புவேன்'' *(2:35).*

இப்பகுதியில் வரும் ''கடவுள் மனிதர்'' பற்றி ஒரு சிறிது கூற வேண்டும். இச்சொல் இறைவனுக்கும் மனிதருக்கும் நடுவராய் இருப்பவர்களைக் குறிக்கிறது. இவர்கள் இறைவனுடைய பிரதிநிதிகள்; அவருடைய மறையுண்மைகளை அறிவிப்பவர்கள்; மனிதன் என்ன செய்ய வேண்டும் என்று அறிவிக்கும் இறைவாக்கினர். இவர்கள் இறைவனின் காரியங்களில் அக்கறை காட்டுபவர்கள். அவருடைய செய்தியை அது எவ்வளவு கடினமானதாக இருந்தாலும், கேட்போர் அனைவரும் அதிர்ச்சி அடைந்தாலும் *(3:11)*, அதை எடுத்துக் கூறுவர். அவர்களே நாட்டின் மனச்சாட்சி. வரவிருக்கும் அழிவையும் எடுத்துக்கூறுவர். நற்செய்தியையும் இறைமீட்பின் புதிய தொடக்கத்தையும் எடுத்துக் கூறும் விண்ணகத் தூதரும் ஆவர். சாமுவேல் ஆகமத்தில் ''கடவுளின் மனிதர்'' என்ற சொல் இப்படிப்பட்ட மனிதர்களின் தன்மையையும் தூதையும் நன்கு உணர்த்தவல்லது. கடவுள் மனிதர் ''திருக்காட்சியாளர்'' என்றும் அழைக்கப்பட்டார். காலப்போக்கில் இச்சொல் இழிவு அடைந்து இறைவாக்குரைஞர் என்ற சொல்லே வழக்கில் நீடித்தது. முற்காலத்தில் திருக்காட்சியாளரிடம் ஆலோசனை கேட்கும் பழக்கம் இஸ்ராயேலில் இருந்தது. அப்படிச் செல்லும்போது வெறுங்கையுடன் செல்லாது, காணிக்கை கொண்டு செல்ல வேண்டும்.

**8.3. சாமுவேல் அழைக்கப்படுதல்:**

மேற்கூறப்பட்ட சூழ்நிலையில் ஏலியின் பாதுகாப்பில், சாமுவேல் சிலோவில் ஆண்டவர் திருமுன் வளர்ந்து வந்தார். அவருடைய தாய் ஆண்டுதோறும் அவருக்கு வேண்டிய ஆடைகளோடு பார்க்க வந்தாள். ஏலியின் குடும்ப ஒழுக்கக்கேடு சாமுவேலை ஓரளவு பாதித்தது.

இந்நிலையில் இறைவனுடைய வார்த்தை சாமுவேலுக்கு வருகிறது. இவ்வரலாற்றை நூலில் வாசித்தறிக *(3:1-15)*. ஏலி கட்டாயப்படுத்த, யாவே தமக்குக் கூறியதைச் சாமுவேல் கூறுகிறார். அதை அறிந்த ஏலி ''அவர் ஆண்டவர்தான்! அவரது பார்வையில் எது நல்லதோ அதை அவர் செய்யட்டும்'' என்று கூறி இறைவார்த்தைக்குப் பணிகிறார். ஏலி தன் அசட்டைத்தனத்தாலும், பலவீனத்தாலும் தனது கடமையில் தவறியிருக்கலாம். ஆனால் இக்கூற்றில் ஏலியின் தாழ்ச்சியும் ஆன்மீக உணர்வும் தென்படுகிறது. ''சாமுவேல் வளர்ந்தார். ஆண்டவரும் அவருடன் இருந்தார். அவர் சொன்ன சொல்லில் ஒன்றும் வீண்போகவில்லை'' ( *.3 :19*). பாவம் பலமிக்கதாக இருக்கலாம். ஆனால் இறை அருள் அதைவிடப் பலமிக்கது.

**8.4. பெலிஸ்தியர்:**

விவிலியப்படி, பெலிஸ்தியர் கப்தோரிலிருந்து தோன்றியவர்கள். கப்தோர் என்பது கிரேத்து நாட்டிற்கு மற்றொரு பழமைப் பெயராகும். இவர்கள் துருக்கியரோடு கலாச்சாரத் தொடர்புடையவர்கள். இஸ்ராயேலர் கிழக்கிலிருந்து பாலஸ்தீனத்திற்குள் குடியேறிய போது, பெலிஸ்தியர் மேற்கிலிருந்து இந்நாட்டில் குடியேற முயன்றனர். ஆகவே வாக்களிக்கப்பட்ட நாடு பெலிஸ்தியர் நாடா அல்லது இஸ்ராயேலர் நாடா என்பது பற்றி இரு இனத்தவருக்கும் பல போர்கள் அடிக்கடி நடந்தன.

பெலிஸ்தியர், கடலிலிருந்து தாக்கிப் பாலஸ்தீனத்தில் கடற்கரையோரப் பகுதிகளைக் கைப்பற்றிக் காசா அஸ்கலோன், அசுதோது, எக்ரோன், காத்து ஆகிய நகரங்களில் தங்களை நிலைப்படுத்தினர். ஏற்கெனவே இப்பகுதியில் வாழ்ந்த கானானியர்கள் இப்பகுதியைச் சிறிது சிறிதாகப் பிரித்துச் சுயாட்சி கொண்ட நகர ஆட்சியைக் கொண்டிருந்தனர். எகிப்தியர் இவர்களை வெற்றி கண்ட போது இவ்வமைப்பை அழிக்காது இவர்களே தொடர்ந்து ஆட்சி செய்ய விட்டுவிட்டனர். ஆனால் கப்பம் கட்டச் செய்தனர். இப்பகுதியில் புகுந்த

பெலிஸ்தியரும் இந்த நகர ஆட்சி அமைப்பை ஏற்றுத் தங்களுடையதாக்கிக் கொண்டனர். அதே சமயம் தங்களுக்குள்ளே சுயமாக ஒரு பொதுக்குழு அமைத்துப் பாது காப்பு, போர் போன்ற பொதுக்காரியங்க ளைச் செய்தனர். அப்போது ஏதாவது ஒரு நகராட்சியின் தலைவர் இக்குழுவுக்குத் தலைமை தாங்குவார். இதன் விளைவாகப் பெலிஸ்தியர் ஒரு பலமிக்க அமைப்பாகத் திகழ்ந்தனர். போர் செய்வது அவர்கள் தொழிலாக இருந்தது. இரதங்களையும், இருப்புப் போர்க் கருவிகளையும் பயன் படுத்தினர். அவற்றைப் பிறர் கொண்டிருப்ப தைத் தடுத்தனர் *(1 சாமு 13:19-22)*. ஆகை யால் பெலிஸ்தியரை வெல்வது அவ்வளவு எளிதன்று. இவர்கள் கிழக்கிலுள்ள மலைப் பகுதிகளையும் வெல்லத் தொடங்கினர். அங்கே குடியேறிய இஸ்ராயேலரை வென்று தங்களுக்குக் கப்பம் கட்டச் செய்வதே இவர் களின் நோக்கம்.

அதே சமயம் கிழக்கிலிருந்து பாலஸ்தீனத் தில் குடியேறிய இஸ்ராயேலர் நிலை வேறு விதமாக இருந்தது. இவர்களிடையே நகரங் கள் இல்லை. கோட்டை கொத்தளங்கள் இல்லை. மைய அரசு இல்லை. குழுத்தலை வர்களின் நெருக்கமற்ற கூட்டாட்சி இருந் தது. போரைத் தொழிலாகக் கொண்ட படை கள் இல்லை. போர்க்கருவிகள் இல்லை. பிறர் கொடுமைப்படுத்தும்போதும் இறை ஆவி பெற்ற தலைவர்கள் தோன்றித் தலைமை தாங்கிப் போரை நடத்தினர். அது முடிந்ததும் ஒவ்வொருவனும் தனது பகுதிக் குச் சென்று விடுவான். இவர்கள் யாவேயி டம் கொண்டிருந்த விசுவாசம் இவர்களது சமூக ஒற்றுமைக்கு அடிப்படையாகும். இந்த விசுவாசத்தில்தான் இவர்களின் நாட்டு ஒற்றுமையின் வேர் ஊன்றியிருந்தது. ஒவ் வொரு இனத்தவரும் சுயாட்சி நடத்தினர். தங்களுக்குள்ளே ஒரு மைய அரசியல் அமைப்பைப்பெற இவர்கள் இன்னும் பக்கு வம் அடையவில்லை எனலாம். இந்நிலை யில் அவர்களுக்குப் பெலிஸ்தியர் பெரும் பகைவர்களாக விளங்கினர். இவ்விருவருக் குமிடையே நடக்கும் போர்களும் பெலிஸ் தியர் இஸ்ராயேலர்களுக்கு இழைத்த கொடு மைகளும் இஸ்ராயேலர் அரசை உருவாக் கின.

**8.5. பெலிஸ்தியர் இஸ்ராயேலரிடையே போர்: உடன்படிக்கைப் பேழை**

அபேக்கு என்ற இடத்தில் இரு தரத்தாருக் கும் போர் நடக்கிறது. இஸ்ராயேலர் தோற்று, சேதமுற்று, புறங்காட்டி ஓடிப்போயி னர். தோல்வி ஒரு சமயப் பிரச்சினையாக எழுகிறது. ''ஆண்டவர் இன்று நம்மைத் தோல்வியுறச் செய்தது ஏன்?'' *(4:3)*. இவர்க ளிடையே போர்த்தலைவர்கள் இல்லை. குல முதியவர்களே தீர்மானிக்கின்றனர். உடன்படிக்கைப் பேழை சிலோவிலிருந்து கொண்டு வரப்படுகிறது. இப்பேழை சட் டப்பலகையை மட்டும் கொண்டிருக்க வில்லை. அது யாவேயின் அரியணையா கும். ஆகவே பெட்டகத்தோடு இவர்களின் போர்செய்யும் சேனைகளின் ஆண்டவர் இவர்களிடையே வருகிறார். இஸ்ராயேலர் நிலம் அதிர ஆர்ப்பரித்தனர் *(4:5)*. இதைக் கேட்டு, பெலிஸ்தியர் அஞ்சிப் பெருமூச்சு விட்டனர் *(4:6)*; ஆனால் திடத்தோடு போரிட்டனர். இஸ்ராயேலர் தோல்வி, அடைந்தனர். அஃதோடு ஆண்டவரின் பேழையும் பெலிஸ்தியர் வசமாயிற்று *(40:10-11)*. இச்செய்தி கேட்டு ஏலி மரித்தார். பெலிஸ்தியர் பேழையை அசுதோதுக்கு எடுத்துச் சென்றனர். அங்குத் தாகோன் கோவிலில் தாகோன் அருகில் வைத்தனர். காலையில், ஆண்டவர் பேழைக்கு முன் தாகோன் முகங்குப்புற விழுந்து கிடக்கக் கண்டனர். இப்படி இருமுறை பெலிஸ்தியரின் தேவர்களுக்கு அவமானம் ஏற்படுகிறது *(5:1-5)*. ஆண்டவரின் கை அசுதோதியர் மேல் வன்மையாக விழுந்தது. அவர்களைப் பல வாறு தண்டித்தார். பல பெலிஸ்தியர் நகரங் கள் துன்புற்றன. காத்து, எக்ரோன், பெத்செ மேசு நகரங்களுக்குப் பேழை எடுத்துச் செல் லப்பட்டது. எங்கும் ஆண்டவர் பெலிஸ்திய ரைத் தண்டித்தார். இவ்வாறு பேழை பெலிஸ்தியர் நாட்டில் ஏழுமாதம் இருந்தது. ஆண்டவருக்கு அஞ்சிய பெலிஸ்தியர், பெரும் காணிக்கைகளுடன் பேழையை

இஸ்ராயேலுக்குத் திருப்பி அனுப்பிவிடுகின் றனர் (5:6-6:21). இஸ்ராயேலர் அதை ஏற்றுக் கிரியத்து எயாரிமில் நிறுவினர் (5:6-7:2).

யாவேயைப் பற்றிய அச்சம் பெலிஸ்தியர் களை ஆட்கொண்டது. இஸ்ராயேலரையும் பற்றிக் கொண்டது ''இந்தத் தூய கடவுளா கிய ஆண்டவர் திருமுன் நிற்கத் தகுந்தவன் யார்?'' என்ற கேள்வி எழுந்தது. யாவே மற்றக் கடவுள்களைப் போன்றவர் அல்லர். அவர் வெல்லப்பட்டவராகத் தோன்றலாம். அந்நிலையிலும் அவரே வெற்றி பெறுவார். இதைப் பெலிஸ்தியரும் இஸ்ராயேலரும் கண்டுணர்ந்தனர். அவரது மக்கள் உண்மை யில் மனந்திரும்பி அவரிடம் வந்தால் அவர் கள் ஆற்றல் மிக்க நாடாக மாறுவர். யாவே யிடம் அவர்கள் கொண்டிருக்கும் விசுவாசம் ஒன்றே அவர்களது பலம்.

**8.6. எண்ணிக்கை:**

இப்போது ஆயிரம் என்ற எண்ணிக்கை பற்றிய ஒரு சிறிய குறிப்பு தேவைப்படு கிறது. இந்நூலின் பல இடங்களில் மடிந்தோர் அல்லது போர்வீரர்கள் பல்லாயிரக்கணக் கில் குறிக்கப்படுகின்றனர். சில இடங்களில் இவ்வளவு பேர் இறந்தனரா என்ற ஐயம் நம்மில் எழலாம்.

ஆயிரத்தைக்குறிக்க ''ஏலப்பு'' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இச்சொல் முதலில் குடும்பங்களைக் குறிக்கிறது. நமது கிராமங்களில் பயன்படும் ''தலைக்கட்டு'' என்ற சொல்லுக்கு ஒத்தது. போர் நிகழும் போது ஒவ்வொரு குடும்பமும் இத்தனை பேரைப் போருக்கு அனுப்ப வேண்டும் என்ற ஒழுங்கு உண்டு. இந்த எண்ணிக்கை இடத்துக்கு இடம் மாறலாம். இப்படி ''ஏலப்பு'' என்ற சொல் ஓர் இனம் அல்லது குடி கொடுக்க வேண்டிய எண்ணிக்கையைக் குறிக்கிறது. இவ்வெண்ணிக்கை 3,25 அல்லது 60 ஆக இருக்கலாம். பொதுவாக 25 அல்லது 40 பேரைக் கொண்டதாக எடுத்துக் கொள்ள லாம். இப்படி ஒவ்வொரு குடும்பமும் போருக்கு அனுப்ப வேண்டிய குழுவை இச்சொல் குறிப்பதாக எடுத்துக் கொண்டால் இந்நூலில் குறிக்கப்படும் எண்ணிக்கை களைச் சரியாகப் புரிந்து கொள்ளலாம். அப் போது இவ்வெண்ணிக்கைகள் உண்மைக்கு நெருங்கியதாக இருக்கும்.

''ஏலப்பு'' என்ற சொல் வீட்டைக் குறிக்க லாம்; போரில் ஈடுபட்டுள்ள ஒரு பகுதி யைக் குறிக்கலாம். அரசர் காலத்தில் போர் வீரர்கள் இனவாரியாகச் சேர்க்கப்படாமல் அரசனே நேரடியாக வீரர்களைச் சேர்த்த போது, ''ஏலப்பு'' என்ற சொல் ''ஆயிரம்'' என்று பொருள் பெற்றிருக்கலாம். இது சால மோன் காலத்தில் நிகழ்ந்திருக்கலாம்.

**8.7. நீதிபதியான சாமுவேல்:**

சிலோ அழிக்கப்பட்ட போதும் அதன்பின் னும் சாமுவேல் என்ன செய்தார் என்று ஒன்றும் தெரியவில்லை. தோல்வியுற்ற இஸ் ராயேலர் தங்கள் அரசியல் சுதந்தரத்தை இழந்தனர். அவர்களுடைய புனித இடமும் அழிக்கப்பட்டது. இந்நிலையில் அவர்கள் கானானியரின் தேவர்களையும் வழிபாட்டு முறைகளையும் பின்பற்றத் தொடங்கினர். இக்கொடிய நோய் அவர்கள் இனத்தை அடி யோடு அழிக்கும் நிலை தோன்றியது. இச் சூழ்நிலையில் சாமுவேல் போதிக்கத் தொடங்குகிறார். இஸ்ராயேலர் மேல் வந்த பேரழிவிற்கு அவர்களே காரணம். அவர்கள் கானானியக் கடவுள்களை வணங்கத் தொடங்கியதே காரணம். அவர்கள் அடி மைத் தளையிலிருந்து விடுதலை அடைய விரும்பினால் அவர்கள் தங்களிடமுள்ள சிலைகளை அழிக்க வேண்டும். அவற்றை வழிபடுவதை விட்டு, யாவேயிடம் திரும்ப வேண்டும். அப்போது அவரே அவர்களுக் காகப் போரிட்டு விடுதலை அளிப்பார். இவ்வாறு பலவாறாகச் சாமுவேல் போதித்த தின் விளைவாக ''இஸ்ராயேல் மக்கள் பாகால்களையும், அஸ்தரோத்தையும் விலக்கி விட்டு ஆண்டவருக்கு மட்டும் ஊழியம் செய்தார்கள்'' (7:4). இப்போதகத்தின் உச்ச நிலையில் சாமுவேலை மிஸ்பா என்ற இடத் தில் காண்கிறோம். இவ்வாறு மீளவும் போர் செய்ய இஸ்ராயேலர் ஆன்மீகத் தயாரிப்புப் பெறுகின்றனர்.

மிஸ்பாவில் நிகழ்ந்த சுதந்தரச் சடங்கும், பலியும், (7:7-12) ஒரு போர் அறைகூவலாக அமைகிறது. இது கண்ட பெலிஸ்தியர் படையெடுத்தனர். யோசுவாவுக்கும் பாராக்குக்கும் உதவியது போல் யாவே ''அன்று பெலிஸ்தியர்மீது பேரிடி முழங்கச் செய்தார்'' (7:10). அதன் விளைவாகப் பெலிஸ்தியர் தோல்வியுற்றனர். இஸ்ராயேலர் வெற்றி கொண்டு கடற்கரைப் பகுதிவரை பெலிஸ்தியரைத் துரத்தினர். இந்நிகழ்ச்சிகளை நினைவு கூறும் விதத்தில் தனது முன்னோர்களைப் பின்பற்றி (ஆதி 35:14; யோசு 24:26) ஒரு கல்லை நாட்டி ''இதுவரை ஆண்டவர் நமக்கு உதவியாய் இருந்தார்'' என்று கூறி அதற்கு ''எபனேசர்'' என்று சாமுவேல் பெயரிட்டார்.

இவ்வெற்றியோடு விடுதலை அளிக்கும் நீதிபதி என்ற அளவில் சாமுவேலின் வேலை முடிந்தது. ஆனால் மக்கள் மேல் அவர் ஆன்மீகத் தலைமை கொண்டிருந்தார். தன்வாழ்நாள் முழுவதும், நாட்டின் பல பகுதிக்கும் சென்று இஸ்ராயேலர் மக்களுக்கு அவர்களின் அன்றாடச் செயல்களில் நீதி வழங்கினர். சாமுவேல் வயது முதிரவே, பெலிஸ்தியரிடமிருந்து வந்த அரசியல், சமய ஆபத்துக்கள் அதிகமாயின. இதைக் கண்ட இஸ்ராயேல் இனத் தலைவர்கள் ஒரு வேண்டுகோளுடன் சாமுவேலை அணுகினார்.

**8.8. எங்களுக்கும் ஓர் அரசனை ஏற்படுத்தும்:**

இஸ்ராயேலரின் எதிரிகள் வல்லவர்களாய் இருந்ததற்குக் காரணம் அவர்கள் நிலையான மைய அரசையும், போரைத் தொழிலாகக் கொண்ட படையையும், அதை இயக்கத் தகுதி வாய்ந்த தலைவர்களையும் கொண்டிருந்தனர், என்பதை இஸ்ராயேலர் உணர்ந்தனர். அப்படிப்பட்ட அரச அமைப்பைத் தங்களுக்கும் தரவேண்டும் என்று சாமுவேலை இஸ்ராயேலர் தலைவர்கள் கேட்டனர். இப்படிமுன்பு ஒருமுறை கிதியோனுக்கு அழைப்பு விடுத்தனர். அதற்குக் கிதியோன் ''நான் உங்களை ஆளமாட்டேன். என் மகனும் உங்களை ஆள மாட்டான். ஆனால் ஆண்டவரே உங்களை ஆள்வார்'' என்றார் (யோசு 8:23). இஸ்ராயேலரின் இப்போதையை வேண்டுகோளைக் கேட்டு வருந்திய சாமுவேல் ஆண்டவரிடம் வேண்ட, அவர் ''உன்னைப் புறக்கணித்து விடவில்லை; நாம் அவர்களை ஆள விடாதபடி நம்மைத்தான் புறக்கணித்து விட்டனர்'' (1 சாமு 8:7) என்று கசப்புடன் கூறி, அவர்களுக்குச் செவிமடுக்கும்படி கூறுகிறார். அரசன் இருந்தால் என்ன நிகழும் என்று சாமுவேல் எடுத்துக் கூறியும் (8:10-22) அவர்கள் அரசனைக் கோர, யாவேயின் கூற்றுப்படி அதற்கு இணங்குகிறார்.

இப்படியாகச் சமய எதிர்ப்புக்கிடையில் அரசாட்சி இஸ்ராயேலில் உருவெடுக்கிறது. காலத்தின் இடுக்கண் மிக்க நிலையும், பெலிஸ்தியர், அம்மோனியர் போன்றவர்களிடமிருந்து வந்த போர் ஆபத்துகளும் இஸ்ராயேலின் எல்லா இனத்தவரையும் ஒன்றாக இணைத்து, ஒரே தலைமையின் கீழ் இயங்கும் அரச அமைப்பைத் தோற்றுவிக்கிறது. தொடக்கத்திலிருந்து இஸ்ராயேலில் அரசு அமைப்பு போரை அடிப்படையாகக் கொண்ட அமைப்பாகும். மரபு முறையாக வருவது அன்று. மக்களின் விருப்பத்தால் வருவது. மக்களே தேர்ந்து கொண்ட அமைப்பாகும்.

இத்தோற்றம் பற்றி இரு பாரம்பரியங்கள் உண்டு. ஒன்று அரச அமைப்புக்கு எதிரானது. இறைவாக்கினர் வட்டாரத்தில் எழுந்திருக்க வேண்டும். மற்றது அரச அமைப்புக்குச் சார்பானதாகும். அரச மன்றத்தில் தோன்றியிருக்க வேண்டும். இதுபற்றி முன்னமே சிறிது கூறியுள்ளோம்.

**8.9. முதல் அரசனின் தேர்வு:**

சவுல் சாமுவேலைச் சந்தித்தது, அவர் அவனை அபிடேகம் செய்தது போன்றவற்றை நூலில் வாசித்தறிக (9:1-10:13).

சாமுவேல் சவுலை அரசனாக அபிடேகம் செய்யவில்லை. மாறாக ஆயனாக அபிடேகம் செய்கிறார். இஸ்ராயேலருக்கு ஒரு தலைவன் இருக்க வேண்டியதன் தேவையைச்

சாமுவேல் உணர்ந்தார். ஆனால் இத்தலைவ னைப் பற்றி அவர் கொண்ட கருத்திற்கும், மற்ற இஸ்ராயேலர் கொண்ட கருத்திற்கும் பலத்த வேறுபாடு உண்டு. இவர்கள் புற இனத்தவரைப் போன்று தங்களுக்கு ஓர் அரசனை எதிர் பார்த்தனர். ஆனால் சாமு வேலோ புற இனத்தவர் இஸ்ராயேலைத் தீட்டுப்படுத்தியபோதெல்லாம் எதிர்த்துப் போதித்துப் போராடி, சுத்திகரித்த சீர்திருத்த வாதி. இஸ்ராயேலுக்கு ஓர் அரசனை நியமிக் கும்போது புற இனத்தவரிடமிருந்து கடன் வாங்க வேண்டியதில்லை. இஸ்ராயேலர் பாரம்பரியப்படியே அவர்களுக்கு ஒரு தலை வனைக் கொடுக்க விரும்பினார். ஆயன் என்ற அடையாளம் (ஆதி 49:19) அதற்கு ஏற்றதாக இருந்தது. ஆகவே சவுலை இஸ்ரா யேலரின் ஆயனாக அபிடேகம் செய்தார். இவ்வாயன் யாவேயால் தனிப்பட்ட முறை யில் தேர்ந்தெடுக்கப்பட்டவர். யாவேயின் செயல் மக்களின் செயலிலிருந்து தெளிவாக வேறுபடுகிறது. மக்களின் தேர்வு ஒருவனை அரசனாக்குகிறது. யாவேயின் தேர்வு அவனை ஓர் ஆயனாக ஆக்குகிறது.

**8.10. அரசனைத் தேர்ந்தெடுத்தலும் உறு திப்படுத்துதலும்:**

மிஸ்பாவிலிருந்து சாமுவேல் தனது சீர் திருத்தத்தைத் தொடங்கினார். அங்கிருந்து தான் பெலிஸ்தியரை எதிர்க்கத் தொடங்கி னார். அங்குதான் மக்களைக் கூட்டி அவர் களுக்கு ஒரு நிலையான தலைவனை அளிக்கி றார். இஸ்ராயேலின் வரலாற்றில் முதல் தடவையாக ''அரசே வாழி'' என்ற கூவல் கேட்கிறது. சாமுவேல் எச்சரித்தும், மக்கள் தங்களுக்கு ஓர் அரசன் வேண்டும் என்கின்ற னர். தேர்தல் திருவுளச் சீட்டு வழியாக நடக்கிறது. இறைவனே ஓர் அரசனைத் தேர்ந்தெடுக்கிறார். வாக்குரிமைச் சீட்டால் அன்று, யாவேயின் வார்த்தையால் தேர்வு நடைபெறுகிறது. சவுலை மக்கள் ஏற்றுக் கொண்ட விதத்தைப் பற்றி நூலில் காண லாம் (10:17-24). அம்மோனிய அரசன் நாகசு (பாம்பு) காலத்தில் யாபோசிலிருந்து இஸ் ராயேலர்களுக்கு இட்ட இழிவான நிபந்த னைகளையும் சவுல் யாவேயின் ஆவியால் ஆட்கொள்ளப்பட்டு அவர்களை மீட்டதை யும் பின்சாமுவேல் சவுலைக் கில்காலில் அரசனாக்கியதும் நூலில் வாசித்தறிக (11:1-15).

யாபோசில் கிட்டிய வெற்றி போர் வெற்றி மட்டுமன்று; உளவியல் வெற்றியுமா கும். இது தாங்களும் ஒரு நாட்டவர் என்ற உணர்வை அவர்களுக்கு அளித்தது. தங்க ளது எதிரிகளைக் கண்டு ஏதும் செய்ய இயலா நிலையில் இருக்க வேண்டிய தில்லை. தங்கள் அரசன் கீழ் ஒன்றித்துப் பகைவரை வெல்லலாம் என்பதை உணர்ந்த னர். இதுவரை அவசர காலத்தில் படைக்கு இனவாரியாக ஆட்கள் சேர்க்கப்பட்டனர். இனி நாடு ஒற்றுமையாய் அமைதியாக இருக்க வேண்டுமென்றால் இது இனிப் போதாது. நிலையான போரைத் தொழிலா கக் கொண்டபடைகள் வேண்டும். இத்த கைய அமைப்பைச் சவுல் தொடங்கி வைத் தார். இது பெலிஸ்தியரைத் தூரத்தில் நிறுத்தி வைத்தது.

கில்காலில் சவுலை அரசனாக்கிய பின், சாமுவேல் மக்கள் முன் தன் குற்றமிலா வாழ்வை எடுத்துரைக்கின்றார். அதற்கு மக் கள் சாட்சி கூறுகின்றனர். யாவேயும் சாட்சி கூறுகின்றார். மக்கள் யாவேக்குப் பற்றுறுதி யாக இருக்க வேண்டும் என்று எச்சரித்தபின் (12:15) அவர்கள் அரசனுக்குப் பணிந்து இருக்க வேண்டும் என்று கூறி மக்களிட மிருந்து பிரியா விடை பெறுகிறார்.

**8.11. சவுல் நிராகரிக்கப்படுதல்:**

பெலிஸ்தியருக்கும் சவுலுக்குமிடையே நடந்த போர்களைப் பற்றி வாசித்தறிக (13:3-14:48). கில்காலில் நடந்தபோரில் முன் முயற்சியாகச் சவுல் தாக்க விரும்பினார். ஆனால் இறைவாக்குக்காகக் காத்திருக்க வேண்டியிருந்தது. அதற்கு வரவேண்டிய சாமுவேல், காலம் தாழ்த்தினார். பலியோடு போரைத் தொடங்குவது மரபு. வீரர் பலி யால் தூய்மையாக்கப்பட்டனர் என்பது இஸ் ராயேலரது கருத்து. போரைத் ''தூய்மைப் படுத்துங்கள்'' என்ற அறைகூவலும்,

''போரைத் தொடங்குங்கள்'' என்ற பறைசாற்ற லும் ஒன்றே. பொறுமையிழந்த சவுல் தானே தகனப்பலியை ஒப்புக் கொடுத்துப் போரைத் தொடங்கினார். அப்போது சாமு வேல் அங்குத் தோன்றிச் சவுலின் செய் கையை ''நீர் அறிவீனமாய்ச் செயல்பட்டீர்'' என்று க்ண்டிக்கிறார் *(13:13)*. இக்குற்றத்திற் காகச் சவுல் தனது அரசையே இழக்க வேண்டி யிருக்கும் *(13:14)*. இந்நிகழ்ச்சியில் சவுலை விடச் சாமுவேலையே குறைகூறத் தோன்ற லாம். ஆனால் சவுலின் குற்றம் என்ன? கடவுளின் கட்டளைப்படி அவர் காத்திருக்க வில்லை. மாறாக வேகமும் முன்முயற்சியும் கோரும் தன்திட்டப்படியே செயல்பட்டார். அதனால் யாவேயின் கட்டளையை நிராகரித் தார். அதன் விளைவு யாவே சவுலை நிராக ரித்தார்; அவரிடமிருந்து அரசை நீக்கினார்.

மீளவும் ஒரு முறை குருவின் எபோதின் உதவியால் இறைவார்த்தையை அறிய முயன்று கொண்டிருக்கும்போதே அதற்கா கக் காத்திராமல் போரைத் தொடங்கினார் *(14:17-20)*. விவேகமே அவருக்கு முக்கியமா கப்பட்டது. அது மட்டுமின்றி ஆவேசத் தோடு நடந்து கொண்டார். சவுலின் இச் செய்கை பற்றியும் தனது அரசை நிலைப் படுத்த அவர் எடுத்த முயற்சிகள் பற்றியும் நூலில் வாசித்தறிக *(14:31-48)*.

சாமுவேல் வழியாக இறையாணை பெற்று அமலேக்கியரோடு செய்த போரில் யாவற்றையும் அழிக்க வேண்டும் என்ற அர்ப்பணப்போரை நிறைவேற்ற சவுல் தவறுகிறார். மதிப்புள்ள பொருட்களை அழிக்க, சவுலுக்கு மனம் வரவில்லை. அம லேக்கிய அரசன் அகாகுவை உயிரோடு சிறைப்படுத்துகிறார். இறைவனது ஆணைக் குப் பணியவில்லை. இது சவுலுக்கு இறுதித் தீர்ப்பாக முடிகிறது. ''நாம் சவுலை அரச னாக்கியதற்காக வருந்துகிறோம். ஏனெனில் அவன் என்னைப் பின்பற்றாமல் விலகிவிட் டான். என் வார்த்தைகளின்படி நடக்க வில்லை.'' என்று சாமுவேலிடம் யாவே கூறுகிறார். சாமுவேல் கில்காலில் சவுலைச் சந்திக்கிறார். நாடகப் பாணியில் அமைந் துள்ள இச்சந்தித்தலை, நூலில் வாசித்தறிக. சவுல் கூறிய விளக்கங்களைச் சாமுவேல் ஏற்கமறுத்து ''ஆண்டவருக்கு மகிழ்ச்சி தரு வது தகனப்பலிகளையோ பிறபலி களையோ செலுத்துவதா? பணிதல் பலிகளை விடச் சிறந்ததே! கீழ்ப்படிதல் ஆட்டுக் கிடாய்களின் கொழுப்பைவிட மேலானது! ... நீர் ஆண்டவரின் வார்த்தையைப் புறக்கணித் தீர்! அவரும் உம்மை அரச பதவியினின்று நீக்கிவிட்டார்'' என்று கூறினார் *(15:22-23)*. இச்சுடு சொற்களைக் கேட்டு அவநம்பிக்கை யுற்ற சவுல், பிரிந்து செல்லும் சாமுவேலின் ஆடையின் விளிம்பைப் பிடித்தார். அது உடனே கிழிந்து போயிற்று. சவுலிடமிருந்து அரசை யாவே எடுத்துவிட்டார் என்பதற்கு இது மேலும் ஓர் அடையாளமாயிற்று. பின் அகாகுவைச் சாமுவேல் கொன்றதையும், சவுலுக்காகச் சாமுவேல் வருந்தியது பற்றி யும் நூலில் வாசித்தறிக. இனிச் சாமுவேலும் சவுலும் சந்திக்கவேயில்லை.

**8.12. சாமுவேல்**

இவ்விடத்தில் சாமுவேலைப் பற்றிச் சுருக்கமாகச் சில கூறவேண்டும். சாமுவேல் எல்கானா — அன்னா ஆகியோரின் தவப் புதல்வன்; எப்பிராயிம் இனத்தவர்; பல்திறம் கொண்டவர்; வருங்காலம் உரைப்பவர்; திருக்காட்சியாளர்; இறைவாக்கினர்; நீதி பதி; குரு. அவர் இஸ்ராயேலில் இருந்த இரு அரசியல் அமைப்புகளை இணைக்கும் பால மாக விளங்கியவர்; மனிதனுக்கு அஞ்சாத வர்; இறைவனுக்குப் பற்றுறுதியுடையவர்.

பிறப்பால் லேவியர் இனத்தைச் சேராத வர். ஆனாலும் இவர் சிலோவில் உள்ள பெட்டகத்தோடு தொடர்புபடுத்தப்படுகி றார். முதலில் ஒரு நசரேயராகவும் *(1 சாமு 1:24-28)*, பின்பு ஒரு குருவாகவும் *(7:9-10., 10:8)* அவரைக் காண்கிறோம். இதன் விளை வாக நாளாகம ஆசிரியர் சாமுவேலுக்கு ஒரு லேவியர் குடும்ப வரலாற்றையும் கொடுக்கி றார் *(1 நாள் 6:19-28; 9:22; 26:28; 2 நாள் 35:18; சங் 99:6)*. இவர் சிலோவிலிருந்து தூய்மை கெட்ட குருத்துவத்திற்கு எதிராகப் புரட்சி செய்தார் என்பது தர்க்கத்திற்குரிய

கூற்றாகும். ஆனால் இவர் ஒரு சமய சீர் திருத்தவாதி. அயராது போதித்து, யாவே பால் மக்கள் கொண்ட பழம்பெரும் விசுவா சத்தைப் புதுப்பித்தார். ''இஸ்ராயேல் மக்கள் பாகால்களையும், அஸ்தரோத்தையும் விலக்கி விட்டு ஆண்டவருக்கு மட்டுமே ஊழியம் செய்தார்கள்'' *(1 சாமு 7:4)*. இது சாமுவேலின் வாழ்வில் ஒரு பெரும் ஆழ்ந்த உன்னத அனுபவமாகும்.

இப்படி ஆன்மீகத் தலைவராக இருந்தவர் இஸ்ராயேலின் அரசியல் தலைவராகவும் போர்த்தலைவராகவும் விளங்கினார். இவர் இஸ்ராயேலின் சிறந்த நீதிபதியாவார். ஏனெனில் எதிரிகளின்மேல் யாவேயின் தீர்ப்பைச் செயல்படுத்தினார். இறை ஆவிபெற்ற தலைவராக *(7:3-14)* மக்களை எதிரிகளிட மிருந்து விடுவித்தார். இன வழக்குகளில் அவர் நடுவர். அவரிடம் யாரும் நீதி கோரலாம் *(7:15-17; 8:1-3; 12:3.5)*. இவர் வருங்காலத்தை முன் உரைப்பவர் *(9:6-9)*; ஓர் இறை வாக்கினர் *(3:20-21; சீரா 46:13-15)*; இறைவனோடு கழிபேருவகை பெற்ற திருக்காட்சியாளர் *(2 சாமு 19:20)*. சாமுவேல் வாழ்ந்த காலம் இஸ்ராயேலில் கொந்தளிப்பு மிக்கதாகும். அதில் அவர் மேற்கூறிய பல அலுவல்களையும் பொறுப்போடு நிறைவேற்றினார். அவ்வலுவல்களில் எல்லாம் முக்கியமானது இஸ்ராயேலின் கூட்டாட்சியின் இறுதிக் காலத்தையும் அரச ஆட்சியின் தொடக்க காலத்தையும் இணைக்கும் பாலமாக விளங்கினார். இது அவ்வளவு எளிதான ஒன்றன்று. சாமுவேல் அரச ஆட்சியை வெறுத்தார். இருப்பினும் மக்களின் வேண்டுகோளுக்கும் யாவேயின் சித்தத்துக்கும் பணிந்து அவர்களுக்கு ஓர் அரசனைக் கொடுக்கிறார். அவனையும் அரசனாக அன்று, போர்த்தலைவனாகவே அபிடேகம் செய்கிறார். இப்படித் தோன்றிய முதல் தலைவனிடமிருந்து அதிகம் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் கசப்பான அதிருப்தியாக முடிந்தது. சாமுவேல் இதில் தோல்வி கண்டார். தாவீதை இஸ்ராயேலின் அரசனாக அபிடேகம் செய்தபோது முடிவில்லா அரசாட்சியைச் சாமுவேல் நிறுவுகிறார்.

சவுல் இறைவனது வார்த்தையின்படி நடவாததால் யாவே அவரை நிராகரித்துவிட்டார். இதை அறிவிக்க சவுலை இறுதியாகச் சந்தித்தபோது சாமுவேல் கண்டிப்பும் மேன்மையும் மிக்கவராகவும், அச்சமற்றவராகவும் காட்சியளிக்கிறார். வயது சென்றவராய், பல வீனராய், ஆயுதமில்லாதவராய்ச் சாமுவேல், போரில் வெற்றிப் பெருமிதம் கொண்டு திரும்பும் அரசனைத் துணிவுடன் எதிர் கொள்ளுகிறார். யாவேயின் மனமிரங்காத மாற்ற முடியாத தூதுவராக நிற்கிறார். சவுலிடம் பொறாமையோ, அழுக்காறோ சாமுவேல் கொள்ளவில்லை. அவனுக்காக இரவு தோறும் ஆண்டுக்கணக்காக இறைவனை மன்றாடினார். சவுலின் அவல நிலையைப் பின்னிலையாகக் கொண்டு பார்க்கும்போது சாமுவேல் மிக உயர்ந்து திகழ்கிறார். ஆண்டவரும் அவருடன் இருந்தார். அவர் சொன்ன சொல்லில் ஒன்றுமே வீண் போகவில்லை *(3:19)*; குரு ஏலியிடமோ அரசரான சவுலிடமோ யாவேயின் வார்த்தையை அச்சமின்றி உறுதியாகச் சொல்லத் தயங்கியதில்லை. அவர் குணச் சிறப்பு மிக்கவர்; ஆனால் இரும்பு போன்று உறுதிமிக்க மனமுள்ளவர். அவர் யாவேயின் வார்த்தையின் தீர்ப்புக்கு, அரசர்களையும் தலைவர்களையும் அச்சம், நடுக்கமின்றிப் பணியக் கட்டாயப்படுத்தும் உரமிக்கவர்; வருங்கால இறைவாக்கினர்களுக்கு ஒரு முன்னோடியாகத் திகழ்கிறார். நாடு இடுக்கண் நிலையில் இருக்கலாம். சமயப் பிரச்சினைகள் எழலாம். புனித இடம் அழிக்கப்படலாம், பெட்டகம் எதிரிகளிடம் விழலாம். மக்கள் நம்பிக்கையிழந்து போகலாம். அரசன் பற்றுறுதியற்றுப் போகலாம். எந்நிலையிலும் சாமுவேல் இறைவனது வாக்குரைப்பவராக, இஸ்ராயேலின் நீதிபதியாகத் திகழ்கிறார். இறைவனுக்குக் கீழ்ப்படிதல் அவரது வாழ்வின் மையமாகும். அதுவே அவரதுசேவையை வளமிக்க தாக்கியது.

**8.13. தாவீதும் சவுலும்:**

சவுலின் பற்றுறுதியின்மையின் விளைவாக அவரை யாவே நிராகரித்ததை நினைத்து இரவும் பகலும் சாமுவேல் வருந்

தினார். எல்லாம் போய்விட்டது என்ற நிலையில் யாவே மீட்பு வரலாற்றில் புதிய தோர் கட்டத்தை ஆரம்பிக்கிறார். யாவே தாவீதைத் தேர்ந்தெடுத்தலிலே மீட்பு வர லாறு தொடருகிறது.

தாவீதின் எழுச்சியை ஐந்து அதிகாரங்க ளைக் கொண்ட மூன்று பகுதியாகப் பிரிக்க லாம். ஒவ்வொன்றும் ஒரு வீர காவியமா கும். முதல்படி சவுலின் அரசமன்றத்தில் தாவீது (16-20). இரண்டாம்படி அன்புக்கும், வெறுப்புக்கும் போராட்டம் (21:1-27:2). மூன்றாம்படி சவுலின் அவல மரணமும் தாவீதின் இரங்கற்பாவும் (1 சாமு 28-2 சாமு 1).

சாமுவேல் தாவீதை அபிடேகம் செய்த வரலாற்றை நூலில் (16:13) காணலாம். கொம்பினால் செய்த கிண்ணமும் அதில் உள்ள எண்ணெயும், பழம்மேற்காசியாவில் அரச அபிடேகத்தைக் குறித்தது. தாவீதின் அபிடேக விவரிப்பு, எப்படி யாவே இஸ் ராயேலில் ''குடும்பத்தில் வல்லமை உடைய மீட்பர் ஒருவரை நமக்காகத் தோன்றச் செய்தார்'' (லூக் 1:70) என்பதையும் சுட்டு கிறது.

பெத்லகேம் யூதாவின் சிறப்பு மிக்க நகரங் களில் ஒன்றாக இருந்திருக்க வேண்டும். பெத்-வீடு. லகேமு என்பது ''ஏனுமஎலிவு'' என்ற காவியத்தில் வரும் குழப்பத்தின் கட வுளுக்குப் பெயர். இது கானானியரின் போர்க்கடவுளாகும். ஆகையால் பெத்ல கேம் என்பதற்கு ''லகேமுவின் வீடு'' என்று பொருள் கூறலாம். எபிரேயர்கள் இச்சொல் லுக்கு ''அப்பத்தின் வீடு'' என்று பொருள் கொடுத்தனர். தாவீதின் வழியாகவும் அவ ரது மாபெரும் புதல்வரான இயேசுவின் வழியாகவும் இந்தக் கானானியப் பெயர், மீட்பின் மெசியா காலத்தின், எல்லா மக்க ளுக்குமுரிய அமைதி மகிழ்ச்சியின் நற்செய் திக்கு அடையாளமாகிறது.

ஈசாய் என்ற சொல்லுக்கு ''யாவேயின் மனிதர்,'' ''பலமிக்கவர்'', ''வீரமிக்கவர்'', ''யாவே இருக்கிறார்'' என்று பலவாறு பொருள் கொடுப்பர். இறை ஆவியால் தூண் டப்பெற்று தாவீதைச் சாமுவேல் அபிடேகம் செய்ததை வாசித்தறிக. ''அன்று முதல் ஆண் டவருடைய ஆவி தாவீதுமேல் நிறைவாக இருந்தது'' (16:13). இனிமேலிருந்து அவ னது வாழ்வு ஆவியின் ஆதிக்கத்தில் இருக் கும். அபிடேகம் செய்யப்படுதலும், ஆவியைப் பெறுதலும் சேர்ந்து நிகழ்கிறது. அது யாவே ஒரு மனிதனைத் தேர்ந்து கொண்டார் என்பதற்கு அடையாளமாகும். யாவேயால் தேர்ந்தெடுக்கப்பட்ட மனிதன், அவர் அளிக்கும் தூதுக்கும் தன்னையே ஆயத்தம் செய்ய வேண்டும். இனி அவன் தனக்குச் சொந்தமானவன் அல்லன். அவனை இறை ஆவி எடுத்துக் கொண்டது, ஆட்கொண்டு விட்டது. அவனை அதே ஆவி வழி நடத்தும். தாவீதின் தந்தையும் சகோதர ரும் அதை ஓர் அரச அபிடேகமாய் எடுத்துக் கொண்டதாய்த் தெரியவில்லை. ஏதோ ஒரு அலுவலுக்குத் தாவீதை யாவே அழைத்துள் ளார் என்று உணர்ந்தனர். ஆனால் அந்த அலுவல் என்ன என்பதை ஒருவரும் அறி யார். சிறுவனான தாவீது தனது வேலைக்குச் சென்றான். எல்லாம் சாதாரணமாக நடந் தன. ஆவி அவனை வேறுவிதமாக நடத்த ஆரம்பித்தது.

தாவீது என்பதற்குப் பல பொருள் கொடுப்பர்: அவற்றில் சில ''தலைவன்'' ''ஆணையிடுபவன்'' ''அன்புக்குரியவன்'' ''கலுகை பெற்றவன்'' என்பன. சிறுவனான தாவீது ஆடுமேய்ப்பவன், பாடகன், தீரமிக்க போர்வீரன். தாவீது மக்களின் மனதையெல் லாம் தன்பால் ஈர்த்தான். வரலாற்றிலே தம் மக்களின் அன்புக்குரியவனாகத் திகழ்கிறான்.

**8.14. சவுலின் அரச மன்றத்தில் தாவீது:**

இறை ஆவியின் தூண்டுதலுக்குப் பணி யும் மனிதன் தனது குறிக்கோளை நோக்கி வெற்றியோடு முன் செல்லுகிறான். யாவே தன்னுடன் இருப்பதால் எகிப்தில் யோசேப் பைப்போல், இப்போது தாவீது, சாமுவே லால் அபிடேகம் பெற்றபின் இறைவனால் நடத்தப்படுகிறான். இதற்கு மாறாக இறை

ஆவிக்கு எதிராக எழுந்த சவுல் தீய ஆவியின் ஆதிக்கத்தில் துன்புறுகிறார். ''தீய ஆவி அவரைக் கலக்கமுறச் செய்தது'' *(16:14)*. இந்தத் தீய ஆவியையும் ஆண்டவரே அனுப்பியதாகக் கூறப்படுகிறது. சவுலை அலைக்கழித்த நோய் என்ன? அவரைப் பேய் பிடித்ததா? இருக்கலாம். ஆனால் சவுலின் பணியாளர்கள், இத்தீய ஆவியை விரட்ட அக்காலத்தில் வழக்கமாய்ச் செய்வதுபோல் செபம் செய்யவோ தூய்மைச் சடங்கை நிறைவேற்றவோ பலி செலுத்தவோ முயற்சி செய்யவில்லை. அதற்கு மாறாக அவருக்கு அமைதியளிக்க இசையைப் பயன்படுத்த முயலுகின்றனர். இதனால் அவர்கள் இந்நோயை ஓர் உள்நோயாகக் கருதியதாகத் தெரிகிறது. சவுல் உடல் அளவில் பருத்தும் உயர்ந்தும் இருந்தாலும் கூச்சமுள்ளவர்; அச்சமுள்ளவர்; அடங்காத கோபம் கொள்ளக்கூடியவர்; நிலையான மனப்போக்குடையவர் அல்லர். நல்ல காலத்திலேயே இத்தன்மையுடைய சவுல், இப்போது யாவே தன்னை நிராகரித்தார் என்ற எண்ணத்தால், உள்ளம் தளர்ந்து மன இரக்கத்தால் வாடுகிறார். இது அவரைப் பைத்தியம் பிடித்தவர்போல் செயல்படச் செய்கிறது. இத்தகைய மன நோயால் சவுல் வருந்தினார் என நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஆயினும் இந்நோயை யாவே அனுப்பினார். ஆதலால் இதற்குச் சமய வேர் உண்டு. இந்நிலையில் தாவீது சவுலின் பணிக்குக் கொண்டு வரப்படுகிறார். சவுல் தீய ஆவியால் துன்புற்ற போதெல்லாம் தாவீது யாழ் மீட்டுகிறார். அதனால் சவுல் நலம் பெறுவார், தீய ஆவி அவரைவிட்டு நீங்கும் *(16:23)*.

**8.15. தாவீதும் கோலியத்தும்:**

இக்கதையை *17:4-51*-இல் வாசித்தறிக. நாம் இரு குறிப்புகளை மட்டும் கொடுக்கிறோம். முதலாவதுகோலியத்து விட்ட சவாலை ஓர் இஸ்ராயேலனும் ஏற்கவில்லை என்பது பற்றித் தாவீது மிகவும் வெட்கினான். கோலியத்தை வென்றால் கிடைக்கக் கூடிய சன்மானத்தைப் பெரிதாகக் கருதவில்லை. அதைவிட மேலானது ஆபத்தில் இருந்தது. இஸ்ராயேலர் தங்கள் நாட்டுக்காக மட்டும் போரிடவில்லை. தங்கள் ''உயிருள்ள இறைவனுக்காகப் போரிடுகின்றனர்''. கோலியத்து உயிருள்ள கடவுளின் சேனைகளைத் தாக்கினான். ஆகையால் அவன் வீழ்ச்சியடைய வேண்டும். ஏனெனில் ஈட்டியையும் போர்க்கவசத்தையும் விட உயிருள்ள இறைவன் பலமிக்கவர். இது தாவீதின் நம்பிக்கை. கோலியத்து போர்க்கருவிகளுடன் வரலாம். தாவீதோ ''சேனைகளின் ஆண்டவர் பெயராலே'' செல்வான். என்ன வேற்றுமை! ஒருபுறம் கோபமிக்க கொடுமை! மறுபுறம் அமைதிமிக்க வெற்றி கொள்ளும் நம்பிக்கை! இஸ்ராயேலின் போர்க்கடவுளான சேனைகளின் ஆண்டவர் தாவீதுக்காகப் போரிடுகிறார். ''ஆண்டவர் மீட்பு வாளாலும் அன்று; ஈட்டியாலும் அன்று என்று இந்த மக்கள் கூட்டம் எல்லாம் தெரிந்து கொள்ளும்; ஏனெனில் போர் அவருடையது'' *(17:47)*. தாவீதும் யாவேயின் பெயரால் வெற்றி பெறுகிறார். ஆகவே யாவேயின் கூடாரத்தில் இவ்வெற்றியின் சின்னங்கள் சாட்சியாக வைக்கப்பட்டன.

இரண்டாவது, 16-ஆவது அதிகாரத்தின்படி யாழிசைஞனும் பாடகனும் போர்வீரனுமாய்ச் சவுலுக்குத் தாவீது பணிசெய்கிறான். 17-ஆம் அதிகாரத்தில் சவுல் தாவீதை அறியாதிருப்பதாகக் காட்டப்படுகிறது. இந்த முரண்பாடுகளுக்குப் பலவாறு விளக்கம் அளிக்க முயன்றுள்ளனர். பின்வருவது திருப்தியளிப்பதாயுள்ளது. சாமுவேல் ஆகம வரலாற்று ஆசிரியருக்குப் பல மூலங்கள் இருந்தன. ஒரு புறம் சாமுவேலைச் சுற்றி எழுந்த இறைவாக்குப் பாரம்பரியங்கள். இவை இஸ்ராயேலில் வரும் யாவேயின் சிறப்பு நிகழ்ச்சிகளை அப்படியே சிறப்பித்துக் காட்டுவதில் கவனம் செலுத்தின. மறுபுறம் அரசமன்ற விவரிப்புகள் இளைஞனான தாவீதின் வரலாற்றை வேறு விதமாய் எடுத்துரைக்கின்றன. சாமுவேல் ஆகம ஆசிரியர், இப்படிப்பட்ட வேறுபட்ட விவரிப்புகளை ஒற்றுமைப்படுத்தாமல் அப்படியே அடுத்தடுத்துத் தருகிறார். இப்படி வேறுபட்ட மூலங்களை அப்படியே தருவதில் இவ்வாசிரியரின் நம்பகத் தகுதியுடைமை வெளிப்படுகிறது. இதே

பண்பு ஒத்தமை நற்செய்தியாளர்களிடை யேயும் காணப்படும்.

**8.16. அன்பும் வெறுப்பும்:**

கோலியத்தைக் கொன்றபின் தாவீது பல சண்டைகளில் வெற்றி பெற்றார். எனவே ''எல்லா மக்களும் சிறப்பாகச் சவுலுடைய ஊழியர்களும் தாவீதைப் பெரிதும் விரும்பினர்'' *(18:5)*; அபிமானம் கொண்டனர். சவுலின் மகன் யோனத்தானுக்கும் தாவீதுக்கும் இடையே நட்பு வளரலாயிற்று. ''யோனத்தானின் உள்ளமும் தாவீதின் உள்ளமும் ஒன்றுபட்டன. யோனத்தான் அவனைத் தன் உயிர்போல் அன்பு செய்தான்'' *(18:1)*. இந் நட்பு ஒரு தனிப்பெரும் அன்புக் காப்பியமாகும். இதை நூலில் வாசித்தறிக *(18:1-5; 20:1-43; 23:16-18)*. பிற்காலத்தில் யோனத்தான் போரில் இறந்துபட்டபோது தாவீது புலம்பிக் கூறுவார்: ''சகோதரன் யோனத்தான்! உனக்காக என் உளம் உடைந்துபோனது! எனக்கு உவகை அளித்தவன் நீ! என் மீது நீ பொழிந்த பேரன்பை என்னென்பேன்! அது மகளிரின் காதலையும் மிஞ்சியதன்றோ!'' *(2 சாமு 1:26)*. இவ்விருவருக்கிடையே இருந்த அன்பைப் போன்று பழம் இலக்கியங்களில் வேறொன்றைக் காண்பது அரிது.

போரில் வெற்றி பெற்றுத் திரும்பிய போது, தன்னைவிடத் தாவீதைப் பெண்கள் புகழ்ந்து பாடக்கேட்ட சவுல், தாவீது மீது பொறாமை கொண்டார். தனது அரியணைக்குப் போட்டியாகத் தாவீதை எண்ணினார். ஆகையால் அவனைக் கொல்லப் பலதரம் முயன்றார். ஆனால் தாவீதோ தப்பிக் கொண்டே முன்னேறினார். இவை பற்றி நூலில் வாசித்தறிக *(18:6-19:21; 24:1-23; 26:1-25)*.

அரச மன்றத்தில் இனித் தங்க முடியாது; நாட்டிலும் இனி வாழ முடியாது; அரசன் தன்னைக் கொல்லத் தேடுகிறான் என்பது உறுதியானவுடன் தாவீது ஒரு நாடோடியாகி றார். சவுல் அவரை வேட்டையாடுகிறார்; துன்புறுத்துகிறார். தாவீதின் வாழ்வில் புதியதோர் அதிகாரம் தொடங்குகிறது.

**8.17. நாடோடியான தாவீது:**

தாவீது கோலியத்தை வென்றவர்; அரசனின் மருமகன் என்ற அளவில் பிறரது பொறாமைக்குரியவர். போரில் வெற்றி மேல் வெற்றி பெற்றவர். ஆனால் திடீரெனப் பல இன்னல்கள் அவரைச் சூழ்கின்றன. உதவியற்ற நாடோடியாகப் பாலையில் அலைந்து திரிகிறார். துன்புறுத்தப்படுகிறார். அவரது உயிருக்கே ஆபத்து வருகிறது. வேட்டையாடப்படத் தகுதி இல்லாத ''செத்த நாயைப் போலாகிறார்'' *(24:75)*. இவற்றில் எல்லாம் அவரது ஒரே நங்கூரம் உறுதியான அடிப்படையுடைய அவரது விசுவாசமாகும். தன் இறைவன் யாவேயிடம் தளராத நம்பிக்கை வைத்திருந்தார். உறுதியான முடிவு எடுக்குமுன் யாவேயின் திருவுளத்தைத் தேடுகிறார். அதை அறிந்தபின் அவநம்பிக்கையின் மத்தியிலும், தளராது, பிறழாது அதைப் பின்பற்றுகிறார். துன்பம் எனும் புடைக்கலத்தில் தாவீது முதிர்ச்சியடைகிறார். இப்படியாக இறைவன் அளிக்கவிருக்கும் பெரும் அலுவல்களுக்கும் தாவீது தயாராகிறார்.

இக்காலத்தில் சவுல் தாவீது ஆகியோரிடையே நடக்கும் நாடகம் உச்சகட்டத்தை அடைகிறது. நூல் ஆசிரியரும் இப்பகுதியை நாடகப்பாணியில் வீர காவியமாக வரைகிறார். இறைவனது திட்டப் பின்னணியில் தான் நாம் இவற்றை வாசிக்க வேண்டும். அப்போதுதான் இந்நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்ள முடியும்; சரியாக மதிப்பிட முடியும்.

சவுலின் பிடியிலிருந்து தப்பி ஓடிய தாவீது நோபுக்குச் செல்லுகிறார். தாவீதுக்கு உணவும் போர்க்கருவிகளும் உடனடியாகத் தேவைப்பட்டன. கூடாரத்தில் இருந்த பெரிய குருவிடம் ''பிரசன்ன அப்பங்களைத்'' தவிர வேறு உணவு இல்லை. தேவையின் பொருட்டு, இதையும் தாவீதுக்குக் கொடுக்க பெரிய குரு தயங்கவில்லை. இதைப்பற்றிப் புதிய ஏற்பாட்டுக் குறிப்பு ஒன்று உளது. இயேசுவின் சீடர் ஓய்வுநாளில் தானியக்கதிரைக் கொய்து, தேய்த்துச் சாப்பிட்டபோது

பரிசேயர் குறை கூறினர். இயேசு மேற்கூறிய நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி அத்தியாவசியத்திற்குக் கட்டுப்பாடே இல்லை என்று கூறுகிறார்.

கூடாரத்தில் வெற்றிச்சின்னமாக வைக்கப்பட்ட கோலியத்தின் வாள் இருந்தது. அதைத் தாவீது எடுத்துக்கொள்கிறார். இதை, யாவேயின் உதவி தனக்கு எப்போதும் இருக்கும் என்பதற்கு ஒரு தெளிவான அடையாளமாக எடுத்துக் கொள்கிறார். தாவீதுக்கு இவ்வுதவிகளைச் செய்ததால் பெரிய குருவையும் மற்றக் குருக்களையும் சவுல் மிருகத்தனமாகக் கொல்லுகிறார். இந் நிகழ்ச்சியில் மனித வரலாற்றை இறைவன் திட்டமிட்டு நடத்திச் செல்லுகிறார் என்ற மற்ற உண்மை மீளவும் தெளிவாகிறது. இந்நிகழ்ச்சியில் ஏலியின் வீட்டிற்கு எதிராக அறிவிக்கப்பட்ட தீர்ப்பு நிறைவேறுகிறது (1 சாமு 2:30-36). குற்றமற்ற இந்தக் குருக்களின் இரத்தப்பலி, அவர்களுடைய முன்னோரின் குற்றங்களுக்குப் பரிகாரமாகிறது. மனிதன் மட்டும் வரலாற்றை அமைப்பதில்லை. நமக்குத் தோன்றாவிடினும் எல்லா நிகழ்ச்சிகளின் மத்தியிலும் யாவே இருக்கிறார்; தீர்ப்பிடுகிறார்; நிராகரிக்கிறார்; தேர்ந்தெடுக்கிறார்; வழிநடத்துகிறார். இவ்வாறு தொடர்ந்து செயலாற்றுகிறார். மனிதவரலாறு ஒரு தொடரான இறைத் தீர்ப்பாகும்.

தாவீது பைத்தியக்கார வேடம் போடுகிறார் (21:10-15); பாலையில் ஒரு சிறுபடைத் தலைவனாகிறார். சவுல் தாவீதை அழிக்கப் பல முயற்சி செய்தும் வெற்றியடையவில்லை. இரு முறை சவுலைக் கொல்ல வாய்ப்புகள் கிடைத்தும், தாவீது அப்படிச் செய்யவில்லை. ஏனெனில் சவுல் ''ஆண்டவரால் அபிடேகம் செய்யப்பட்டவர்''. இரு முறையும் சவுல் மனந்திருந்தி, தாவீதைத் துரத்தும் முயற்சியைக் கைவிட்டுத் திரும்புகிறார்.

தாவீது நாடோடியாகத் திரிந்த காலத்தில் சாமுவேல் மரிக்கிறார். அதற்காக இஸ்ராயேலர் அனைவரும் துக்கம் கொண்டாடினர் (25:1). இஸ்ராயேலரில் மிகப் பெரியவர்களுள் ஒருவருடைய இறப்பு இப்படி வெறுமனே கூறப்படுகிறது.

தாவீது - அபிகாயில் கதை வாசிக்க வேண்டியதொன்றாகும். பெலிஸ்தியரிடம் தஞ்சம் புகுந்து சிக்லாகு நகரைப் பெற்று, அங்கிருந்து கெசூரியர், கிர்சியர், அமலேக்கியர் ஆகியோர் மேல் பெலிஸ்தியருக்குச் சார்பாகப் படையெடுத்துச் சென்று அவர்களைக் கொள்ளையடித்தார். அதே போது யூதாவுக்குப் பாதுகாப்பு அளித்தார். இதன் விளைவாகத் தம் இனத்தவரின் அபிமானத்தைப் பெற்றார். இது அவரது வருங்கால அரசுக்கு உறுதியான அடித்தளம் இட்டது.

**8.18. சவுலின் அவல முடிவு:**

மிக்மாசில் தோல்வியடைந்த பெலிஸ்தியர், பின்வாங்கித் தங்கள் படைகளை ஒன்று திரட்டி, இஸ்ராயேலை மீளவும் தாக்கப் பொருத்தமான வேளைக்குக் காத்திருந்தனர். ''சவுல் பெலிஸ்தியரின் பாசறையைப் பார்த்து அஞ்சினார். அவர் உள்ளம் மிகவும் திகிலடைந்தது'' (28:5). போருக்குச் செல்லுமுன் யாவேயின் திருவுள்ளத்தை உறுதிப்படுத்த சவுல் விரும்பினார். ஆனால் நோபுவில் நடந்த இரத்தக்களறிக்குப்பின் எஞ்சியிருந்த ஒரே குருவான அபியாத்தாரும் தாவீதோடு சேர்ந்து கொண்டார். இதனால் குருக்கள் வழியாக யாவேயின் விருப்பத்தை அறிய முடியவில்லை. சவுல் குறிகாரியின் உதவியை நாடி இறந்துபோன சாமுவேலின் ஆவியைச் சந்தித்ததையும், சாமுவேல் சவுலைக் கண்டனம் செய்ததையும் நூலில் காணலாம் (28;4-20). இந்நிகழ்ச்சி இறந்தபின் வாழ்வு பற்றிய இஸ்ராயேலின் விசுவாசம் பற்றிய மிகப் பழம்பெரும் ஏடாகும். இறந்தவர்கள் முழுவதும் இறந்தவர்கள் அல்லர். அவர்களுயை உயிர் முழுவதும் அழிந்துவிடுவதில்லை. இறைவன் அனுமதித்தால், அவர்கள் இறந்தோர் உலகிலிருந்து எழுந்து வந்து, உலகில் உயிர் வாழ்வோரை எச்சரிக்க முடியும் (சீரா 46:23).

கில்போவா மலையில் இஸ்ராயேலருக்கும் பெலிஸ்தியருக்கும் போர் மூண்டது.

இஸ்ராயேலர் தோற்றனர். சவுலின் மக்களாகிய யோனத்தானும், அபினதாபும், மல்கிசுவாவும் தங்கள் தந்தையைக் காப்பாற்றும் முயற்சியில் தங்களுடைய உயிரையே அளித்தனர். தங்கள் தந்தை நம்பிக்கையற்ற முறையில் வீழ்ச்சியடைந்தபோது அவருக்குப் பற்றுறுதியாக இருந்து வீரமரணம் எய்தினர். தனது முடிவு நெருங்கி வருவதை உணர்ந்த சவுல், தன்னை வாளால் வெட்டும்படி படைக்கலம் தாங்குவோனைக் கேட்க, அவன் மறுத்து விட்டான். ஆகையால் சவுல் தமது வாளைத் தரையில் குத்திவைத்துத் தாமாகவே அதன்மேல் விழுந்து உயிர் நீத்தார். இவ்வாறு, இறைவனால் ஏற்படுத்தப்பட்ட முதல் இஸ்ராயேல் அரசன் அவல முடிவெய்தினார். இவர் இஸ்ராயேலுக்குப் பெலிஸ்தியரிடமிருந்து விடுதலை அளித்திருக்கவேண்டும். சவுலின் வாழ்வு சொற்களால் விவரிக்க முடியாத ஒரு துன்பியல் காவியமாக மாறுகிறது. இறைவனது ஆண்மையுடைய திட்டத்தின் பின்னிலையில் புரிந்து கொள்ளக்கூடிய மறை பொருளாகும் இது. சவுல் இறைவனுக்குப் பணியவில்லை. ஆகவே அவருக்கு இவ்வவல முடிவைத் தவிர வேறு முடிவு இருக்க முடியாது.

சவுலும் அவருடைய புதல்வர்களும் இறந்து பட்ட செய்தியை அறிந்த தாவீது பெரிதும் துக்கம் கொண்டாடினார். அவர் அப்போது பாடிய இரங்கற்பா சிறப்பு மிக்கதாகும். தாவீது சவுலிடம் பெரிதும் துன்பப்பட்டிருந்தாலும் சவுலைத் தாவீது நிந்தனை செய்யாது, அவரைப் போற்றிப்பாடுகிறார் (2 சாமு 1). அது தாவீதின் பெருந்தன்மையைக் காட்டுகிறது.

***8.19. சவுல்:***

சவுலின் வாழ்வு துன்பியல் வாழ்வுக்கு ஒரு சிறந்த சான்றாகும். இது மிகவும் இரங்கத்தக்கதாகும். தேர்ந்தெடுத்தல், நிராகரித்தல் என்ற இரு சொற்கள் சவுலின் வாழ்வைச் சுருக்கித் தருகின்றன.

இளைஞனான சவுல் அரசதன்மையும் கம்பீரத்தோற்றமும் உடையவராய் விளங்கினார் (9:2); மேலும் ஆற்றல் மிக்கவராகவும், வீரமிக்கவராகவும், பிறர் தன்பால் பற்றுறுதி கொள்ளத் தூண்டவல்லவராகவும் திகழ்ந்தார். இஸ்ராயேலர் அவரிடம் பெரும் நம்பிக்கை வைத்தனர். பல பெருஞ்செயல்களை எதிர்பார்த்தனர். அவருடைய தந்தையின் காணாமற்போன கழுதைகள் சவுலை அரியணைக்கு இட்டுச் செல்கின்றன. அவருடைய எழுச்சி மிக விரைவாக நிகழ்கிறது. அவரை யாவே தேர்ந்தெடுக்கிறார். அவரை இறைவாக்கினர் சாமுவேல் போர்த்தலைவனாக அபிடேகம் செய்கிறார். மக்களால் அரசராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். வெற்றி மிக்க படையெடுப்புகள் அவரது அரசை உறுதிப்படுத்துகின்றன. நீதிபதிகள் காலத்திய ஆவி பெற்றவர்கள் பாணியில் சவுலின் அரசு முழுமை அடைகிறது. அதுயாவேயின் கொடையிலிருந்தும் மக்கள் தேர்விலிருந்தும் தன் உருவத்தையும் பொருளையும் பெறுகிறது. சவுலின் வரலாற்றில் இஸ்ராயேலின் அரசு, பிற மக்களின் அரசிலிருந்து வேறுபடுகிறது என்பதைத் தெளிவாகக் காண்கிறோம். இஸ்ராயேலின் அரசு இருஉலகத்தைச் சார்ந்ததாகும். ஒன்று சமய உலகம். மற்றது இவ்வுலக அரசியல் உலகம். ஆனால் இரண்டையும் பிரிக்க முடியாது. சமய உலகில், இஸ்ராயேல் அரசு யாவேயின் கொடையாகும். அவரது சலுகை பெற்றதாகும். உலக அரசு நிறுவப்பட்ட பின்னும் யாவேதான் இஸ்ராயேலின் உண்மையான அரசர். இஸ்ராயேலர் சேனைகளின் ஒரே ஆண்டவர். உலக அரசன் ''யாவேயின் சொற்களுக்கு'' மாறாகச் செயல்படும்போது, அது அவனை உறுதியாக வீழ்ச்சிக்கு இட்டுச் செல்கிறது. அவனுள்ளே ஏற்கனவே நிகழ்ந்துவிட்ட கீழ்ப்படியாமை என்னும் துன்பியல் நிகழ்ச்சியின் புறத்தோற்றமே. அவனுடைய புற உலக அரசியல் வீழ்ச்சியாகும். சவுல் சமய உலகில் வீழ்ச்சி அடைகிறார். அதன் விளைவாக அரசியலிலும் வீழ்ச்சி அடைகிறார்.

சவுல் இஸ்ராயேலரிடையே நிலையான போர்ப்படையை நிறுவுகிறார். இஸ்ராயேலரை ஒற்றுமைப்படுத்துகிறார். நாட்டுக்கு உறுதியான அடிப்படையை நிறுவுகிறார்.

ஆனால் யாவேயின் விருப்பத்தை அறிய சாமுவேல் வரும்வரை காத்திராமல் போர் தொடங்குகிறார். குருக்களின் சிறப்பான அலுவலான பலியிடுதலையும் தாமே செய்து போர் தொடுக்கிறார். அவற்றிற்காக சாமுவேலின் வழியாக யாவேயின் கண்டனத்தைப் பெறுகிறார். யாவேயின் விருப்பத்தை அறிவதையும் அவர் வழிகாட்டுதலையும் சவுல் நிராகரித்தார். அரசு அவரிடமிருந்து எடுக்கப்படும்.

சவுலின் மற்றக் குறைகளையும் ஏற்கெனவே கூறியுள்ளோம். சவுல் கெட்டிக்காரரான அரசியல்வாதியாக இருக்கலாம். ஆனால் அவர் சமய உள்நோக்கு அற்றவர். சமய உலகில் வீழ்ச்சிஅடைகிறார். அதன் விளைவு அரசியலிலும் வீழ்ச்சிஅடைகிறார். அவர் மனித ஆற்றலைப் பெரிதும் நம்பினார்; பேராசைப்பட்டார். இறைவனது ஆற்றல் செயல்படுவதற்கு அவர் இடம் தரவில்லை. சுருக்கமாக யாவேயிடம் அவருக்கு விசுவாசமில்லை. அப்படிப்பட்ட அரசன் யாவேயின் ஆதரவு பெற்றவராக நிலைத்து நிற்க முடியாது. மனிதன் அரசனாக இஸ்ராயேலில் செயல்பட்டாலும் யாவேதான் உண்மையான அரசர்; மேலான ஆண்டவர்.

யாவே தன்னை நிராகரித்துவிட்டார் என்ற எண்ணமும், சவுலின் நிலையற்ற மனப்போக்கும், மட்டுமின்மையும் அவரை ஒரு மனநோயாளியாய் ஆக்குகிறது. தன்னை யாவரும் துன்புறுத்துவதாக மயக்கம் கொள்கிறார். தாவீதின் மீது பொறாமை கொள்கிறார். தாவீதைக் கொல்லத்திட்டம் செய்கிறார். வேட்டையாடுகிறார். சவுலின் உள்ளத்தில் அன்பும் வெறுப்பும் போராடுகின்றன. சமய உலகில் மிக்க வீழ்ச்சியடைந்தார் என்பதாலேயே குறி சொல்பவர் உதவியையும் நாடத் தயங்கவில்லை. தற்கொலை செய்து கொள்கிறார். யாவேயால் உன்னத நிலைக்கு உயர்த்தப்பட்டார். தனது தவறால் பெரும் வீழ்ச்சியடைந்தார். என்னே பரிதாபமிக்க வீழ்ச்சி!

**8.20. தாவீதின் எழுச்சி:**

சவுல் போரில் வீழ்ந்தார். இஸ்ராயேல் படை சிதறிப் போயிற்று. நாட்டின் வடபகுதியில் பெரும்பகுதி பெலிஸ்தியரின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. ஆனால் தென்பகுதியில் தாவீது பொறுமையோடும், தந்திரத்தாலும், திட்டமிட்ட போர்த்திறத்தாலும் தெற்கிலிருந்து கொள்ளை அடிக்கும் கூட்டத்திலிருந்து யூதாவைக் காப்பாற்றி வந்தார். அவருடைய சொந்த ஊரான பெத்லகேம் மக்களோடு இரத்த உறவு கொண்டிருந்தார். எபிரோன் மக்களோடு திருமணத்தால் உறவு கொண்டார். கொள்ளை அடித்த பொருட்களைப் பகிர்ந்து அளித்ததால் யூதாவின் 15 நகரங்களில் ஆதரவைப் பெற்றிருந்தார். சவுல் மடிந்தவுடன் யூதாவின் தலைவர்கள் தாவீதைத் தங்கள் அரசனாக விரும்பி ஏற்றுக் கொண்டனர். யூதாவுக்குப் போகலாமா? எந்நகருக்குப் போகலாம் என்பவை பற்றி யாவேயின் விருப்பத்தை அறிந்தபின் தாவீது எபிரோனுக்குச் சென்றார். அங்கு யூதாவின் அரசனாக அபிடேகம் செய்யப்பட்டார். மதியூகத்தோடு சவுலை அடக்கம் செய்த யாபேசின் மக்களைப் பாராட்டிச் செய்தி அனுப்பினார்.

**8.21. அப்னேர் - யோவாபு:**

சவுலின் படைத்தலைவரான அப்னேர் சவுலின் மகனான இசுபோசேத்தை இஸ்ராயேலின் அரசனாக ஏற்படுத்தினார். அப்னேர் ஒரு சிறந்த அரசியல் வல்லுநர். சிதறிப்போன வட பகுதியை ஒற்றுமைப்படுத்தி அரசைத் திருத்தி அமைத்தார். யூதாவை வெற்றி கொண்டு தன் ஆட்சியின் கீழ் கொண்டு வர முயன்றார். அதனால் உள்நாட்டுப் போர் தொடங்கியது. தாவீதுக்குச் சார்பாக, யோவாபு படைகளை நடத்தினார். யூதாவில் தாவீதுக்கு அடுத்தபடி யோவாபு தான் முக்கியமானவர். போர்த்திறமும் பேராவலும் மிக்கவர். கடின இதயமுடையவர். இரக்கமற்றவர். அவரது உறுதியிலிருந்து அவரை மாற்ற முடியாது. விட்டுக் கொடுக்க மாட்டார். இரத்தம் சிந்த அஞ்சமாட்டார். இவரைக் குறிக்கும்போது விவிலியம் சிறிது கசப்பு உணர்வோடு செரூயாவின் மகன்

என்றே குறிக்கிறது. கிபயோனின் குளத்தருகில் இருபடையும் சந்தித்துப் போரிட்டனர். அப்னேரின் படை தோற்றது. தன்னைத் துரத்திவந்த யோவாபின் தம்பியான அசாவேலை அப்னேர் கொன்றார். தன் தம்பியின் கொலைக்குப் பழி தீர்க்க யோவாபு சமயம் பார்த்துக் கொண்டிருந்தார். உள்நாட்டுப் போர் தொடர்ந்து நடந்தது.

அரசனின் வைப்பாட்டியை மற்றொருவன் எடுத்துக்கொண்டால், அது அவ்வரசுக்கு உரிமை கொண்டாடுவதற்குச் சமமாகும். இப்படி ஒரு பிரச்சினை எழுந்து, இசுபோசேத்துக்கும், அப்னேருக்கும் பகைமை ஏற்படுகிறது. வடபகுதியைத் தாவீதுக்கு அளிக்கப் போவதாக அப்னேர் சபதம் கூறுகிறார். அதன் விளைவாக அப்னேருக்கும் தாவீதுக்கும் உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்பின் தாவீதைச் சந்தித்துத் திரும்பிப்போகும் அப்னேரை யோவாபு தனியாக அழைத்துத் தந்திரமாகக் கொன்று, தன் தம்பி அசாவேலுடைய இரத்தத்திற்குப் பழி தீர்த்துக் கொண்டார். இப்படிச் செய்வது அக்காலத்தில் முறையான வழக்காகக் கருதப்பட்டது. இதன் விளைவாக இஸ்ராயேலின் இரு பகுதிகளையும் தாவீதின் ஆட்சியின் கீழ்க் கொண்டு வர நினைத்த அப்னேரின் முயற்சி நின்று போயிற்று.

இப்பழிவாங்கலில், தனது கரத்தைக் கறைபடுத்திக் கொள்ள தாவீது விரும்பவில்லை. ஆகவே தாவீதும் அவரது அவையும் அப்னேருக்காகத் துக்கம் கொண்டாடினர். இதனால் அரசன் நேர்மையுள்ளவன் என்று இஸ்ராயேலர் அனைவரும் அறிந்து கொண்டனர். வடபகுதி மக்கள் இசுபோசேத்தின் பொம்மை அரசால் மன நிறைவு அடையவில்லை. இந்நிலையில் பென்யமின் இனத்தைச் சேர்ந்த பானா, இரேக்கபு என்ற இருவர் இசுபோசேத்தைக் கொன்று, அவனது தலையை வெட்டித் தாவீதிடம் கொண்டு வந்தனர். இச்செயலுக்காகத் தாவீதிடமிருந்து இவர்கள் சன்மானம் எதிர்பார்த்தனர். ஆனால் அவர்கள் செய்த குற்றத்திற்காகத் தாவீது அவர்களைக் கொன்று கைகால்களையும் வெட்டி எபிரோனில் குளத்தருகில் அவர்களைத் தொங்கவிட்டார். இசுபோசேத்தின் தலையை எடுத்து மரியாதையுடன் அடக்கம் செய்தார். இவ்வாறு தாவீது செயல்படாமலேயே அவரது இருபெரும் போட்டியாளர்கள் ஒழிந்தனர். தாவீது மக்களின் நன்மதிப்பையும் பெற்றார். மேலும் தாவீது தனது எதிரிகளைக் கொன்ற இரத்தக் கறைபடியாத தூய கரத்தோடு அரியணை ஏற முடிந்தது.

**8.22. இஸ்ராயேலின் அரசன் தாவீது:**

யாவும் தாவீதுக்குச் சாதகமாகவே நடந்தன. இஸ்ராயேலின் கோத்திரத்தார் யாவரும் எபிரோனில் இருந்த, தாவீதிடம் வந்தனர். சவுலின் காலத்திலேயே தாவீது இஸ்ராயேலை நடத்திச் சென்றதையும், தாவீது இஸ்ராயேலுக்குத் தலைவனாக இருக்க வேண்டியது என்ற இறைவாக்கையும் நினைவுபடுத்தித் தங்களுக்கும் அவர் அரசனாக இருக்கும்படி கேட்டுக் கொள்கின்றனர். இரு திறத்தாருக்கும் உடன்படிக்கை ஏற்படுகிறது. தாவீது எல்லா இஸ்ராயேலின் அரசனாக அபிடேகம் செய்யப்படுகிறார். இது மூன்றாம் அபிடேகமாகும். முதலாவது சாமுவேல் தாவீதை அபிடேகம் செய்தார். இது அடிப்படையான அடையாளச் சடங்காகும். வரவிருக்கும் நிகழ்ச்சிகளை முன்னோக்கிச் செய்யப்பட்டது. இரண்டாம் முறையாக யூதா இனத்தவர் தங்கள் அரசனாகத் தாவீதை அபிடேகம் செய்தனர். மூன்றாம் முறையாக, எல்லா இஸ்ராயேல் இனத்தவரும் தங்கள் அரசனாகத் தாவீதை அபிடேகம் செய்தனர். ஒவ்வொரு அபிடேகமும் சமய அரசியலில் உச்சநிலையாகும்.

இதுவரை ஆதரவு அளித்து வந்த பெலிஸ்தியர் இனிமேல் தாவீதைத் தாக்கத் தொடங்கினர். யாவேயின் விருப்பத்தை அறிந்து, அதன்படி பெலிஸ்தியரைப் பல முறை தோற்கடித்து, கெபா தொடங்கிக் கெசேர் எல்லைவரை, தாவீது பெலிஸ்தியரை விரட்டினார். பாலஸ்தீனம் இஸ்ராயேலுக்குச் சொந்தமான நாடாயிற்று.

**8.23. எருசலேமில் தாவீது அரசன்:**

உலகின் மிகப்பழம் பெரும் நகரங்களில் எருசலேம் ஒன்றாகும். இதில் கி.மு. *3000*

ஆண்டுகளுக்கு முன்பே மக்கள் வாழ்ந்து வந்திருக்க வேண்டும். கி.மு. 2000-த்தை ஒட்டிய எகிப்திய பழித்துரை ஏடுகளில் இப்பெயர் காணக்கிடக்கிறது ''ரூசலிமும்'' என்ற சொல்லுக்குச் ''சலிமால் நிறுவப்பட்டது'' என்ற பொருளுண்டு. சலிம் ஒரு கடவுளைக் குறிக்கலாம். ''சலீம்'' என்ற சொல்லுக்கு ''முழுமையானது'', ''நலமுள்ளது'' என்று பல பொருள் உண்டு. இச்சொல்லின் திரிபு ஆன ''சுல்மான்'' என்ற சொல்லுக்கு ''நலம் அளிப்பவர்'' என்ற பொருள் உண்டு. சுல்மானின் ஆலயம் எருசலேமில் இருந்திருக்க வேண்டும். தாவீது இந்நகரைக் கைப் பற்றியபோது, அதன் பெயரை மாற்றினார். ஆயினும் வரலாற்றிலே எருசலேம் என்ற பெயரே நிலைத்துவிட்டது. யூத மறைமெய்மையியலில் எருசலேம் ''விண்நகரமாகிறது''. புதிய ஏற்பாட்டில் இரு பரிசுத்த நகரமாகிறது. அரேபியா நாடுகளில் எருசலேம் ''புனித இடம்'', ''பரிசுத்த நகரம்'' என்று வெறுமனே குறிக்கப்படும். உலகிலே, மனிதவரலாற்றிலே இது முக்கிய நகரங்களில் ஒன்றாகும்.

எருசலேம் மலையுச்சியில் 760 மீட்டர் உயரத்தில் அமைந்திருந்தது. ஏறக்குறைய 4.5 ஹெக்டேர் பரப்புடையது. ஒரு பக்கத்தில் கிதரோன் பள்ளத்தாக்கும், மற்றொரு பக்கம் திரோப்பியன் பள்ளத்தாக்கும் இயற்கை அரணாக அமைந்திருந்தன. இப்பக்கங்களிலிருந்து இந்நகரைத் தாக்குவது முடியாத காரியம். வடக்கில் இந்நகரம் சிறிது பலவீனமாயிருந்தது. அங்கும் 70 மீட்டர் விட்டமுடைய கிணற்றால் பாதுகாக்கப்பட்டது. அதைச் சுற்றியிருந்த உயர்ந்த மலைகள் பாதுகாப்பான சுவர்கள் போல் அமைந்திருந்தன.

தாவீது அரசியல் ஞானத்தோடும் விவேகத்தோடும் எருசலேமைத் தனது தலைநகரமாக்குகிறார். அது நாட்டின் மையத்திலிருந்தது. இங்கிருந்து பல பகுதிகளுக்கும் பாதைகள் இருந்தன. மேலும் இது எந்தத் தனி யூத இனத்துக்கும் உரியதன்று. தாவீது எப்படி எருசலேமை வென்றார்; அதில் யாவேயின் பாகம் என்பது என்ன என்பவை பற்றி நூலில் வாசித்தறிக (*2 சாமு 5:6-16; 1 நாள் 11:4-9*).

*2 சாமு 5:7*-இல் முதல் தடவையாக எருசலேம் ''சீயோன்'' என்றழைக்கப்படுகிறது. இச்சொல் ''பாறை'' அல்லது ''உட்கோட்டை'' என்று பொருள்படும். ஒரு வேளை எபூசியர் நகரின் உட்கோட்டையாக இது இருந்திருக்கலாம். காலப்போக்கில் சீயோன் என்ற சொல் நகரம் முழுமையையும் குறித்தது. இஸ்ராயேல் மக்களின் சமய மையமாகத் திகழ்ந்தது. சங்கீதங்களிலும் இறைவாக்குகளிலும் பெரிதும் போற்றப்படுகிறது.

தாவீது தான் கைப்பற்றிய எருசலேமுக்குத் ''தாவீதின் நகரம்'' என்று பெயரிட்டார். ஆனால் வரலாற்றில் பழைய பெயரே நிலைத்தது. அக்காலத்தேவைக்கு ஏற்ப தாவீது எருசலேமின் பாதுகாப்பைப் பலப்படுத்தினார். தீர் அரசனாகிய ஈராமின் உதவியோடு தனக்கு ஒரு மாளிகை கட்டிக் கொண்டார். தாவீதின் குடும்பம் பெருகுகிறது.

அரசியல் ஒற்றுமைக்குப்பின், தாவீது சமய ஒற்றுமையில் தனது கவனத்தைச் செலுத்தினார். உடன்படிக்கைப் பேழை இன்னும், கிரியத்து எயாரிமில்தான் இருந்தது; அங்கே சரியான வழிபாடு கொடுக்கப்படவில்லை. திருப்பயணிகள் அங்குச் செல்லவில்லை. இந்நிலை இஸ்ராயேலுக்கு ஓர் அவமானமாகும். ஆகவே தாவீது உடன்படிக்கைப் பேழையை எருசலேமுக்குக் கொண்டு வர முயன்றார். முதல் முயற்சியில் தோல்வியடைந்தாலும், பின்பு எப்படி வெற்றி பெற்றார் என்று நூலில் வாசித்தறிக (*6:12-19*). இது ஒரு மகிழ்ச்சி மிக்க நிகழ்ச்சியாகும். ஆயினும் இது தாவீதின் குடும்பத்தில் ஒரு பூசலை உண்டாக்கியது (*2 சாமு 16:20-23*).

**8.24. தாவீதுக்கு இறைவன் அளித்த வாக்குறுதியும் உடன்படிக்கையும்:**

தாவீதின் அரசு இஸ்ராயேலரிடையே உறுதிப்பட்டுவிட்டது. ஆனால் இவ்வரசும் சவுலுடையதைப் போன்று குறுகிய காலத்தியதா? அப்படியன்று என்று இறைவாக்கினர்

கூறுகிறார். இவ்வரசு எக்காலத்துக்கும் நீடித் திருக்கும்; அதற்கு முடிவு இராது. இறைவ னுக்கு ஆலயம் கட்ட விரும்பிய தாவீதுக்கு இறைவாக்கினர் நாத்தான் வழியாக அளிக் கப்பட்ட இறைவாக்கு இச்செய்தியை அறி விக்கிறது (2 சாமு 7; 1 நாள் 17). இரத்தக் கறை படிந்த தாவீது இறைவனுக்கு ஆலயம் கட்டமாட்டார்; மாறாக அவர் மகன் சால மோன் கட்டுவான். இறைவனுக்கு ஆலயம் கட்டவிரும்பிய தாவீதுக்கு இறைவனே ''ஒரு வீட்டைக் கட்டுவார்''. ''உன் வாழ் நாள் முடிந்து நீ உன் முன்னோருடன் துயில் கொள்ளும் பொழுது உனக்குப்பிறக்கும் உன் வழித்தோன்றலை உனக்குப்பின் நாம் உயர்த்தி அவனது அரசை நிலைநாட்டு வோம்...... உன் அரியணை என்றுமே நிலை பெற்றிருக்கும்'' (2 சாமு 7:12-16). இவ்வாக் குறுதி மூன்று இடங்களில் வருகிறது (2 சாமு 7:12-16; 1 நாள் 17; சங் 89). இவற்றில் காலத்தால் முந்தியதும் மூலமாய்த் திகழ் வதும் 2 சாமு 7 ஆகும். இவ்வாக்குறுதி பற்றிய பல தர்க்கங்கள் உண்டு.

இக்கூற்றில் சிலசொற்களை நாம் கவ னிக்க வேண்டும். வீடு: இச்சொல் வரும் சில சிறப்பான இடங்கள்: ஆதி 7:1; 12:7; 35:2; யாத் 2:1; யோசு 7:14; 1 அரச 12:16; 13:2; 11:38; இவையெல்லாம் ஒருவனுடைய வீட் டினர் அனைவரையும் குறிப்பதாகும்; சிறப் பாக இனி வரும் தலைமுறைகளையும் குறிக்கும். வரவிருக்கும் அரச மரபையும் குறிக்கும் (1 அரச 13:38; 12:16; 13:2). இவற்றைக் கருத்தில் கொண்டால் ''வீடு'' என்பது அரச மரபைக் குறிக்கும்; இங்கு இச்சொல் தாவீதின் அரச மரபை உணர்த்தும்.

மகன் - வித்து: இச்சொல் தனிப்பட்ட குழந்தையைக் குறிக்கிறது (ஆதி 4:25; 1 சாமு 1:11). குழுப் பொருளில் பரம்பரையைக் குறிக்கும் (ஆதி 3:15; 12:7; 13:15). குடும்ப பரம்பரையைக் குறிக்கும், சிறப்பாக அரச பரம்பரையைக் குறிக்கிறது (2 அரச 11:1). இதன்படி ''உனக்குப் பிறக்கும் உன் வழித் தோன்றலை'' என்ற சொற்றொடர் தாவீதின் உடனடி நேரடி மகனான சாலமோனைத் தான் குறிக்கும். ஆனால் ''வீடு'', ''மகன்'' இவ்விரு சொற்களையும் சேர்த்துப் பார்க் கும்போது ''மகன்'' அல்லது ''வித்து'' என்பது உடனடியான வழித்தோன்றலை மட்டுமன்று, முழுப் பாரம்பரியத்தையும் குறிக்கிறது எனலாம்.

இறைமகன்: இறைவனுக்கு நேரடியான மகன் இருக்கக்கூடும் என்ற கருத்து இஸ்ரா யேலின் இறையியலுக்குப் புறம்பானதா கும். ஆனால் தாவீது இறைவனைத் தந்தை யாக வழிபட்டார். இது அவர் தன் மகனுக்கு ''(இறைவனாகிய) என் தந்தை சமாதானமா வார்'' என்று பொருள்படும் ''அப்சலோம்'' என்று பெயரிட்டதிலிருந்து தெரிகிறது. இஸ் ராயேலுக்கு யாவே தம்மைத் தந்தையாகக் காட்டுகிறார், வழி நடத்துகிறார் (உபா 32:6; எசா 43:6; 63:16; 64:9). ஆகவே இஸ்ராயேலர் அவரது படைப்பின் பிள்ளைகள். ஆகவே ''நாம் அவனுக்குத் தந்தையாக இருப்போம் அவனும் நமக்கு மகனாய் இருப்பான்'' என்ற கூற்று, யாவே தாவீது பரம்பரைக்குச் சிறப் பான தந்தைக்குரிய அன்பைக் காட்டுவார்; அதன்மேல் சிறப்பான அக்கறை காட்டுவார் என்பதை உணர்த்துகிறது.

என்றென்றும் (ஒலாம்): இச்சொல் தொடக்கமுதல் தூர வருங்காலம்வரை, முடி வற்ற, கால முழுமையும் குறிக்கும். யாவே என்றென்றும் ஆளுகிறார். இக்கருத்து சிறிது சிறிதாக வளர்ந்த ஒன்றாகும். தாவீது இதை எவ்வாறு புரிந்து கொண்டார் என்பதை ''நீண்ட நாட்களுக்குப்பின் நடக்கவிருக்கும் உம் அடியான் வீட்டைப் பற்றிய செய்தி'' என்ற அவரது கூற்று விளக்குகிறது. இந்த இறைவாக்கின் பொருள் எளியதே. இது, யாவேயின் ஆலயத்தைக் கட்டுபவரும், தாவீதின் உடனடியான வழித்தோன்றலும் ஆன சாலமோனை மட்டும் குறிக்கவில்லை. வரவிருக்கும் மெசியாவையும் உள்ளடக்கிய முழுப் பரம்பரையையும் குறிக்கும். இது நன்மையையும் தீமையையும் உள்ளடக்கும். தீய அரசன் தண்டிக்கப்படுவான். ஆனால் தாவீது பரம்பரையை விட்டு அரசு ஒருபோதும் அகலாது என்பது உறுதி.

இப்பெரும் வாக்குறுதியால் திகைத்து வியப்பில் ஆழ்ந்துபோன தாவீது பெட்டக அரியணையில் கொலுவீற்றிருக்கும் யாவே யின் முன் சென்று தனது நன்றியைத் திக்கித் திணறிக் கூறுகிறார். ''தம் வார்த்தையின் பொருட்டும், தம் அன்பின் பொருட்டும்'' *(7:21)* தாவீதின் பாதையை மட்டுமின்றி அவரது மக்களின் பாதையையும் யாவே காத்திடுவார். இறைவனது இதயம் மனித வரலாற்றில் துடிக்கிறது என்பது வெறும் கவிநயமிக்க சொற்றொடர் மட்டுமன்று. அது விவிலிய இறையியலின் அடிப்படை யான முக்கிய கருத்துக்களில் ஒன்றாகும். இக்கருத்து - வரலாற்று மனிதனை மட்டும் சார்ந்திருக்கவில்லை. ஏன் மனிதச் செயலே இறைத்திட்டத்தின் மேல் நிற்கிறது. அவர் தனது ''முழு இதயத்தோடும்'' அதாவது இறை ஆர்வத்தோடும், அன்போடும், வர லாற்றுப் போக்கில் உயிருள்ள விதத்தில் அக்கறை கொள்ளுகிறார். அதன் முடிவை நோக்கி அதை வழி நடத்துகிறார். மனித வரலாற்றில் செயலாற்றும் இக்கடவுளின் மேலுள்ள உறுதியான விசுவாசமே, தாவீது மரபு என்று நிலைத்திருக்கும் என்ற அவ் வரசு பற்றிய இறைவாக்கை நடக்கக் கூடிய தாக மாற்றுகிறது. தாவீதின் அரசு இறைவ னின் திறமிக்க மேலான திட்டத்தில் உறுதி யாய் வேரூன்றியுள்ளது. அதை எந்த மனித சக்தியும் ஏமாற்றிச் செல்ல முடியாது. இறை வாக்கினர் நாத்தானின் வாயிலாகத் தாவீ துக்கு யாவே கூறிய சொற்கள் வருங்காலத் திற்குரிய வெறும் வாக்குறுதி மட்டுமன்று. யாவே தனது விருப்பத்தை அறிவிக்கும் அதே சமயம் தாவீது மரபின் ஊழையும் நிர்ணயிக் கிறார். தாவீது மரபு மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஓர் இறை நிறுவனமாகும்; ஆகவே என்றும் நிலைத்திருக்கும்:

தொடக்கமுதல், மனுக்குலம், வேதாளத் தைக் கொன்று, தான் இழந்து போன இன்ப வனத்தைத் திருப்பித்தரும் ஒருவரை எதிர் நோக்கியிருந்தது. நோவாவோடு செய்த உடன் படிக்கையால் இறைவனது ஆசீர் சேமின் கூடாரத்துக்குள் புகுகிறது. ஆபிரகா மோடு செய்த உடன்படிக்கையில் இஸ்ரா யேல் மக்களைச் சுற்றி இவ்வட்டம் சுருங்கு கிறது. இறக்கும் தருவாயில், யாக்கோபு யூதா இனத்திலிருந்து செங்கோல் அகலாது என்று இறைவாக்கு உரைத்தார். சீனாய் உடன்படிக்கையில் யாவே சிறப்பான முறை யில் பன்னிரண்டு இனத்தவரின் இறைவனா கிறார். தாவீதோடு செய்து கொண்ட உடன் படிக்கையில் *(2 சாமு 7)* இறைவனின் மீட்புச் செயல் இதுவரை கேட்டிராத உச்சநிலையை அடைகிறது. தாவீது மரபை இறைவன் தன் னுரிமையாகத் தேர்ந்தெடுத்தலில் வரலாறு பற்றிய இறைவனது மாபெரும் திட்டம் புதிய கட்டத்தை அடைகிறது. தாவீதின் அரசு என்றும் நிலைத்திருக்கும் என்ற இறை வாக்கு, மெசியா பற்றிய இறைவாக்கு, எதிர் பார்ப்பைத்தூண்டி வரும் தீப்பொறியாக அமைகிறது.

இவ்விசுவாசம் பிற்கால வரலாற்றில் உயி ருள்ள விதத்தில் விளங்குகிறது என்பதற்குச் சங் 89 சாட்சியாக நிற்கிறது. இவ்விசுவாசம் தகர்க்கப்பட்டு அழியும் நிலைக்கு வருகிறது. எருசலேமின் அழிவோடு தாவீதின் அரச மரபும் முடிகிறது. ஆகையால் சங்கீத ஆசிரி யர் துயர்மிக்க கேள்விகள் எழுப்புகிறார் (சங் *89:38-46*). தாவீதுக்கு அளிக்கப்பட்ட வாக்கு றுதி துன்பம், சோதனை என்ற கலத்தில் புடம் போடப்பட்டுத் தூய்மைப்படுத்தப் பட வேண்டும். இறைவன் சிந்தனை மனித னின் படைப்பன்று. அவர் தனது சொல் லைக் காப்பாற்றுகிறார். தம் திட்டத்தைத் தொடர்ந்து செயல்படுத்துகிறார். ஆனால் மனிதன் எதிர்பார்க்கும் முறையில் அன்று, பாலஸ்தீனத்தைப் பாபிலோனியர், பாரசீகர் மாசிதோனியர், செலூக்கியர் ஆகியோர் ஆண்டனர். எருசலேமில் புதியதோர் அரசு தோன்றியது. மக்கபேயர்களும் இதுமேய னான ஏரோதும் ஆண்டனர். ஆனால் தாவீ தின் மரபோ அழிந்து மறைந்து போயிற்று.

ஆனால் திடீரென்று புதிய ஆற்றலோடும் புத்தொளியோடும், தாவீது மரபு என்றும் நிலைத்திருப்பது பற்றிய இறைவாக்கு புத்து யிர் பெருகிறது. இப்போது கன்னிமரியா ளுக்குத் தூதுரைக்கும் காபிரியேல் தூதன்

வழியாகப் புத்துயிர் பெறுகிறது (லூக் 1:32). மக்கள் இயேசுவைத் தாவீதின் மகனே என்று அன்போடும், ஆர்வத்தோடும் அழைத்தனர். ஆனால் தாவீது அரசு பற்றி மக்கள் கொண்டிருந்த கருத்துக்கும் இயேசு போதித்த கருத்திற்கும் அதிக வேறுபாடு இருந்தது. தான் அரசன் என்பதை மறுக்கவில்லை. அதை வெளிப்படையாகவே பிலாத்துமுன் ஏற்றுக் கொள்கிறார் (யோவா 18:33). தாவீதின் மகன் என்பதை மறுக்கவில்லை. மாறாக அதை நகைப்புக்குரிய பிரச்சினையாக மாற்றுகிறார் (மத் 22:45; சங்.110:1).

தாவீது அரசன், தன் நாட்டிற்கும் தன் அரச மரபுக்கும் ஒத்த விதத்தில் சிந்தித்தார். அது அவரது காலத்திற்கு ஏற்றதாயிருந்தது. ஆனால் இறைவனோ தெய்வீக நிலையில் சிந்திக்கிறார். நசரேத்தூர் இயேசு உண்மையான இறை மகனும் தாவீது மரபைச் சார்ந்த உண்மையான மகனும் ஆவார். அவரிலே, இறைவனின் நித்தியத்திற்கும், பாவம் நிறைந்த தகர்க்கப்பட்ட மனித அரச மரபின் கடந்துபோகும் அமைப்புக்கும் உறவு ஏற்படுகிறது. அவரது அரசு, ஒரு நாட்டை மட்டும் கொண்டுள்ள வரையறைகளை உடைத்தெறிந்து எல்லா மொழிகளையும் இனங்களையும் உள்ளடக்கும் உலகமனைத்தையும் கொண்ட அரசாகும். அது மனித காலயிட வரையறைகளைக் கடந்து செல்லுகிறது. தந்தையின் வலப்பக்கத்திற்கு உயர்த்தப்பட்டு தாவீதின் உண்மையான மகனும் இறைமகனுமான இயேசு என்றென்றும் வாழுகிறார். அவரது அரசுக்கு முடிவு இராது.

**8.25. புற எதிரிகளை வெற்றி கொள்ளுதல்:**

தாவீது பெலிஸ்தியரைத் தாக்கி அவர்களை வென்றார் (2 சாமு 8:1). பெலிஸ்தியர் நாட்டின் மீது தாவீதும் சாலமோனும் ஆதிக்கம் செலுத்தியதற்குப் போதிய புதைபொருட் சான்றுகள் உள. பின்மோவாபியரையும் (8:2) அம்மோனியரையும் (10:1-14) சீரியரையும் (10:15-19) வென்று, அவர்களுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டார் (8:20). பின் இதுமேய நாட்டைத் தன் ஆட்சிக்குள் கொண்டு வந்தார் (8:13-14). இவற்றை நூலில் வாசித்தறிக.

**8.26. அரசமைப்பு:**

இதுபற்றி 1 சாமு 8:15-18; 20:23-26-இல் வாசித்தறிக. தாவீது ஒவ்வொரு அலுவலுக்கும் சரியான ஆளை நியமித்தார். படைத் தலைவன், ஆவணங்களைப் பாதுகாப்பவன், குருக்கள், எழுத்தர்கள், அடிமை வேலையைக் கவனிப்பவர்கள், ஆலோசகர்கள் என்று பலவகைப்பட்ட அலுவலர்களை நியமித்தார். இவர்களில் ஆவணங்களைப் பாதுகாப்பவர் அரசனுக்கும் மக்களுக்குமிடையே நடுவராக, இணைப்பாளராக இருந்தார். இவர் அரண்மனை மேற்பார்வையாளராகவும், நீதித் தலைவராகவும் விளங்கினார். இப்படி, தாவீது புதியதோர் அரசமைப்பை நாட்டிற்குக் கொடுத்தார். இது குல முதியவர்களின் தலைமை அமைப்பைப் போன்று தோன்றலாம். ஆனால் இதில் வலுவான மைய அரசு சிறப்பிடம் பெறுகிறது. இஸ்ராயேல் இனத்தை ஆளுவதில் முறையை மாற்றவில்லை. அந்தந்த இனத்தவர்களின் ''முதியவர்களே'' ஆட்சி செய்தனர். தாவீது அரசு பதவியிலும் போரிலும் உயர்ந்து கொண்டே போனார்.

**8.27. குடும்பதுயர நிகழ்ச்சிகளும் அரசின் நெருக்கடிகளும்:**

துன்பங்கள், தொல்லைகள் மிக்க காலங்கள், ஒருவனுடைய ஒழுக்க நிலையை உயர்த்துகின்றன. அவரது ஒழுக்கத்தூய்மையையும் உயர்பண்புகளையும் உச்ச நிலையில் வெளிக்கொணர்கின்றன. மாறாக, பாதுகாப்பான, உறுதியான நிலைகள், படிப்படியான ஊழலையும் ஒழுங்கீனத்தையும் கொண்டு வருகின்றன. பிறர் தாக்குதலின் போது பாதுகாப்பாயுள்ளவன் பாதுகாப்பாயிருக்கும்போது அச்சுறுத்தப்படுகிறான். இது ஒரு மேல்வரிச்சட்டமான மனித ஊழ் ஆகும். தாவீது இதற்கு விதி விலக்கல்லர். பாவமும் தீமையும் தாவீதை ஆட்கொள்ளுகின்றன. அவர்மேல் தீமை தனது ஆற்றலைச் செலுத்துகிறது. விவிலிய ஆசிரியர், எப்படி உண்மையோடும், நேர்மையோடும் தாவீதின் எழுச்சியை விவரித்தாரோ, அதே போன்று அவரது வீழ்ச்சியையும் விவரிக்கிறார். தனது ஆசாபாச உணர்ச்சிகளோடு

போராடி வெற்றி தோல்வி ஆகிய வட்டத்தில் தாவீதின் ஆட்தன்மை இறுதியான முதிர்ச்சி அடைகிறது. இம்முதிர்ச்சி சாதாரண மனிதனுடையதைவிடப் பலவாறு மேன்மையுடையதாகும். குடும்பத்தில் நடக்கும் துன்பமிக்க நிகழ்ச்சிகளும் நாட்டில் நடக்கும் நெருக்கடிகளும் அவரை வீறுடைய துன்பமிக்க சாவுக்கு இட்டுச் செல்கின்றன.

*2 சாமு 10-12* அதிகாரங்கள் அடங்கிய பகுதி ஒற்றுமையுடைய தொகுப்பாகும். நிகழ்ச்சியுரை உயிர்ச்சித்திரமுடையது. ஆகவே நேரடிச் சாட்சியே இதை எழுதியிருக்க வேண்டும் என்பர் ஆய்வாளர்கள். தாவீதின் அரசவையில் வாழ்ந்தவரே இவற்றை எழுதியிருக்க வேண்டும் என்பர். இப்பகுதி எபிரேய இலக்கியத்தின் பொற்காலமாகிய கி.மு. 10-ஆம் நூற்றாண்டிலே எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று அனேக அறிஞர் ஏற்றுக்கொள்ளுவர். இதற்கு ஒத்த பகுதியை விவிலிய இலக்கியத்தில் பார்ப்பது அரிது என்பர். இப்பகுதியின் வரலாற்றுத் தன்மையை ஒருவரும் ஐயப்படமாட்டார். இப்பகுதியின் ஆசிரியர் வெறுமனே செய்திகளை மட்டும் கொடுக்கவில்லை. அவர் ஓர் உளநூல் வல்லுநர், ஒரு கலைஞர், ஓவியர், தனது பாத்திரங்களின் உள்ள ஆழத்தை அறியக் கூடியவர். அவர்களின் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் ஆற்றல் மிக்க விதத்தில் புதிதாகப் படைக்கக் கூடியவர். இதிலே ஒரு புதுமைத் தன்மையும் காணப்படும். ஆனால் இது வெறும் கற்பனையன்று. இது வரலாற்று நிகழ்ச்சியுரையாகும்; உளநூல் ஆழத்தை எய்துகிறது. கலைப்பண்போடும், நயத்தோடும் எடுத்துக் கூறப்படுகிறது. இதில் அருஞ்செயல்கள் இடம் பெறவில்லை. ஆனால் இப்பகுதியின் சிறப்புக் கருத்து தெளிவாகத் தெரிகிறது. அது இறை பரிபாலிப்பின் மேலுள்ள அசையாத நம்பிக்கையாகும். உளவியல் கருத்துக்கள் மனித உருவில் தோன்றுகின்றன. ஆனால், ஆசிரியர் உளவியல் வல்லுநரையும் கடந்தவர். அவரது கவனத்தின் இறுதியான குறிக்கோள் வெறும் மனித ஆண்மை மட்டுமன்று. இறைவனுடைய செயல்களாகும். அவருடைய செயல்கள் எல்லாவற்றையும் ஊடுருவுகின்றன. அவர்முன் மனிதன் தன் குற்றத்தை ஏற்றுக் கொள்ளுகிறான். மன்னிப்புக் கோருகிறான். இறைவனும் தன்னுரிமையாக ஏற்றுக் கொள்ளுகிறார். இந்த விவரிப்பில் இறையியலே இல்லை என்று தோன்றலாம். ஆனால் இது தான் இஸ்ராயேல் வரலாற்று இலக்கியங்களுக்கு இன்றிமையாத பண்பை நிறைவோடு வெளிப்படுத்துகிறது. அது ஓர் வரலாற்று இறையியலாகும். இதைக் கருத்தில் கொண்டு இவ்வதிகாரங்களை வாசிக்க வேண்டும்.

**8.28. தாவீதின் பாவம்:**

பாவம் பயங்கரமானது; திகில் உண்டாக்கக்கூடியது; கோரமானது; சூழ்ச்சித் திறமுடையது; தன்னையே பெருக்கவல்லது. சட்டத்தை மீறுவது, வெகு அரிதாகத்தான் ஒரு தனிப்பட்ட செயலாகும். ஒரு தடவை பாவம் செய்தால், அதில் ஓர் அழிக்கும் கொடிய தீய சக்தியை விடுவிக்கிறோம். அதைக் கட்டுப்படுத்த நமக்குச் சக்தியில்லை. ஒரு பாவம் மற்றொரு பாவத்தைத் தோற்றுவிக்கிறது. இட்டுச் செல்லுகிறது. இந்தப் பயங்கர படிமுறையை நிறுத்த நாம் ஒன்றும் செய்ய முடியாது. இந்தத் தவிர்க்க முடியாத சங்கிலித் தொடரை ஒரே ஒரு வழியால் உடைக்க முடியும். இது, இறைவன் தன் ஆற்றலாலும் மன்னிப்பாலும் நம்மிடம் பாவம் மரிக்கும் அளவுக்குப் போதிய அருளாலும் நம் வாழ்வை அவர் ஆட்கொண்டு விசுவசிக்க அனுமதிப்பதாகும். பாவத்துக்கு மரிப்பது இதுதான். இப்படிப்பினை பழைய ஏற்பாடு முழுவதும் காணக் கிடக்கிறது. ஆனால் இந்நூல்களைப் படிக்கும்போது இவ்வுண்மையைக் காணத் தவறி விடுகிறோம். இதை நாம் தவிர்க்க வேண்டும்.

தாவீது மன்னன் பத்சேபாவுடன் செய்த விபச்சாரத்தைப் பற்றி வாசித்தறிக. சுருக்கமாகவும் மேலான அடக்கத்தோடும் விவரிக்கப்படுகிறது. தாவீது பாவத்தில் வீழ்கிறார்.

மூடி மறைக்கச் செய்த முயற்சிகள் தோல்வி அடைகின்றன. ஒரு நம்பிக்கைத் துரோகம் மற்றொரு துரோகத்துக்கு இட்டுச்செல்லு கிறது. உரியா தாவீதுக்காகப் போரிட்டு மடி கிறான். ஒரு பெரும் வீரனுடைய விதவைக்கு அதிகாரப்பூர்வமான பெருமை அளிக்கும் முகத்தான், தாவீது பத்சேபாவைத் தன் மனைவியருள் ஒருத்தியாக ஆக்கிக் கொண் டார். இவ்வாறு விபச்சாரமும் கொலையும் புறத்தோற்றத்திற்கு அரச பரிவன்பின் போர் வையின் கீழ் மறைக்கப்பட்டன. மேலான செயலாகப் பிறருக்குத் தோன்றியிருக்கலாம். திருட்டுத்தனமாக மறைவாகச் செய்யப் படும் தீமை வெற்றி பெறுவதாகத் தோன்ற லாம். வாழ்வு சாதாரண நிலைக்குத் திரும்பி யிருக்கும். ஆனால் இறைவன் ஒருவர் இருந் தார். ''தாவீதின் இச்செயல் ஆண்டவர் திரு முன் தீயதாக இருந்தது'' *(11:26)*. தீமையை இரக்கமற்ற முறையில் எதிர்த்துப் போராட இறைவனுடைய இறைவாக்கினர் இருந் தார். அவர் இத்தீமையைத் தீமையென்று அறிவித்தார். மனித இதயத்தில் மறைந்திருக் கும் இரகசிய எண்ணங்களை வெளிப் படுத்துகிறார்.

இறைவாக்கினர் நாத்தான், தாவீதின் வாயாலே தாவீதைத் தீர்ப்பிடச் செய்கிறார். இதை நூலில் வாசித்தறிக. அவர் பயன்படுத் தும் உவமை இலக்கிய நயமிக்கது. ஒழுக்கச் சிறப்புமிக்கது. அநீதி கண்டு பொங்கி எழுந்த அரசனைப் பார்த்து ''நீரே இந்த மனிதன் என்று'' அரசனைக் குற்றம் சாட்டும் போது இறைவாக்கினரது துணிச்சலைக் காண்கிறோம். இச்செயலில், வல்லவர்களுக் கும் உண்மையை எடுத்துச் சொல்லத் தயங் காத இறைவாக்கினர்களுக்குமெல்லாம் முன்னோடியாகத் திகழ்கிறார் நாத்தான்.

தாவீது என்ன செய்யக்கூடும்? இறைவன் பெயரால் பழிகூறுபவரை அழித்துவிடு வாரோ? இது எளிதுதானே. இங்கு தான் தாவீதின் ஆன்மீக உயர்ச்சி சிறந்து விளங்கு கிறது. பாவம் செய்ய அவருக்குத் துணிவு இருந்தது. அப்பாவத்தை ஏற்று மனம் வருந் தவும் அதைவிடத் துணிவு இருந்தது. ''நான் ஆண்டவருக்கு எதிராகப் பாவம் செய்து விட்டேன்'' *(12:13)*. பாவம் பற்றிய இறை யியலுக்கு, இப்பகுதியில் கூறப்படும் கருத்து மிக முக்கியமானதாகும். விபச்சாரம் வெறும் மனித காரியமன்று. அதில் ஈடுபடுபவன் யாவேயைத் தாக்குகிறான் *(12:9)*. மனச்சாட் சியைப் புறக்கணிப்பது யாவேயின் வார்த் தையையே புறக்கணிப்பதாகும். தாவீது பெறவேண்டிய மரண தண்டனை அவருக் குக் கிடைக்காது. ஆனால் அப்பாவத்தின் சின்னமான குழந்தை மடிந்து போகும். தாவீது இறைவனின் சீரிய நீதிக்குத் தலை பணிகிறார். இந்நிகழ்ச்சி பற்றிய மற்ற வற்றை நூலில் வாசித்தறிக.

### 8.29. தாமார் கற்பழிக்கப்படுதல்:

இந்நிகழ்ச்சியுரை, தாவீதின் குடும்பத்துள் நிகழ்ந்த பலத்தபோராட்டங்களை எடுத்துக் காட்டுகிறது. அன்பு, காமம், வெறுப்பு, பழிவாங்குதல், கொலை யாவும் அழிவுக்கு இட்டுச் செல்லுகின்றன. தாவீது தனது முதிய வயதில் தம் கொடிய புதல்வர்கள் முன் பலவீனராகத் தோன்றுகிறார். அதே போது இப்பகுதி தாவீதின் மகன் அப்சலோ மின் பண்புகளையும் ஒழுக்கத்தையும் எடுத் துக் காட்டுகிறது. இதில் ஆசிரியர் வெறும் நிகழ்ச்சிகளை மட்டும் தரவில்லை. பங்கெடுப் போரின் மனநிலையையும் உளவியல் நாடகத்தையும் எடுத்துக் காட்டுகிறார்.

### 8.30. அரசியல் நெருக்கடி:

தாவீதுக்கு வயதாகிக் கொண்டிருந்தது. அவருக்குப் பின் அரசனாவது யார் என்பது ஒரு பெரும் பிரச்சினையாக மாறியது. அவ ரது அரசு நிலைத்திருக்கும் என்று இறைவாக் குறுதி அளிக்கப்பட்டது. ஆனால் யார் அப் பதவி வகிப்பார் என்பது பற்றி ஒரு முடிவும் எடுக்கப்படவில்லை. இந்நிலையில் அப்ச லோம் கிளர்ச்சி செய்து அரசைக் கைப்பற்ற முயற்சி செய்கிறான். இதைப் பற்றி நூலில் வாசித்தறிக. இங்குச் சில குறிப்புகளை மட்டுமே அளிக்கிறோம்.

இந்நிகழ்ச்சியுரையில் குறுகிய காலத்தில் நிகழ்ந்தவை நீண்டதாக விவரிக்கப்படு

கிறது. அதுவும் கலைப்பண்போடு விவரிக்கப் படுகிறது. வரலாற்று விவரிப்புக்களிலே மிக அழகான ஒன்றை இதில் காண்கிறோம் என் பர் அறிஞர்.

தாவீதின் மகன் அப்சலோம் திட்டமிட்டுக் கிளர்ச்சி செய்கிறான். இதுவரை மந்தமாய் இருந்த தாவீது, மிக ஆபத்தான நிலையில் சிலிர்த்து எழுகிறார்; செயல்படுகிறார். பற் றுறுதியுடைய மெய்க்காவலர் படையோடு ஓட்டம் பிடிக்கிறார். பெரிய குருக்கள் பற் றுறுதியுடன் உடன்படிக்கைப் பேழையோடு புறப்படுகின்றனர். தாவீது அவர்களைத் தடுத்து நிறுத்துகிறார். அப்போது அவர் யாவேயிடம் கொண்ட விசுவாச உறுதி வெளிப்படுகிறது. யாவே அவரை நிராகரித்து விட்டால் பேழையால் ஒரு பயனு மில்லை. மாறாக, யாவே அவரை உண்மை யாகத் தேர்ந்தெடுத்திருந்தால், யாவேயே தாவீதைப் பரிசுத்த நகருக்கு மீளவும் இட்டுச் செல்வார். தாவீது தனது துன்பப் பாதை யைத் தொடங்குகிறார். பதவியிழந்த அரச னாகத் தோன்றாமல், தபசு செய்யும் மனித னாக வெறுங்காலோடும், மூடிய தலையோ டும் ஓடுகிறார். அகித்தோபல் துரோகியாகி றார். நண்பனான கூசாய் (ஊசாய்), வயதான வராதலால், நாடோடி வாழ்க்கை நடத்த முடியாது. ஆகவே அவர் தன்னைப் பின் தொடர்வதைத் தாவீது தடுக்கிறார். அதற்கு மாறாகக் கூசாய், எதிரிகளோடு சேர்ந்து அவர்களது திட்டத்தைத் தாவீதுக்கு அவ்வப் போது தெரிவித்தால் அது பயனுள்ளதா யிருக்கும். இதைக் கூசாய் சிறப்பாகச் செய் கிறார். சவுலின் மகனான மெபிபோசேத்தின் ஊழியன் சீபா தாவீதை ஏமாற்றுகிறான். சவுலின் குடும்பத்தைச் சேர்ந்த சிமயி தாவீதை வசைமாறி பொழிகிறான். அவனைத் தண்டிக்க விரும்பிய தன் உடன் ஊழியர் களைத் தடுத்துத் தாவீது கூறுவது, அவர் சாதாரண மனிதர் அல்லர், வீரமிக்க மேலான வர் என்று காட்டுகிறது (16:10-12). தான் எழுச்சியுற்ற காலத்தில் ஒவ்வொரு நிகழ்ச்சி யிலும் தாவீது இறைவனது செயல்படும் கரத்தைக் கண்டார். அதே போன்று துன் புற்று இழிநிலை அடைந்தபோதும் அதே யாவேயின் கரத்தைக் காண்கிறார். யாவே ஒரு நாள் அவருக்கு இரக்கம் காட்டுவார் என்று தாவீது உறுதியாக நம்புகிறார். இதில் யோபுவைப் பிரதிபலிக்கிறார். தாவீதின் ஓட் டம் தபசு செய்யும் திருப்பயணமாகிறது. இவ்விழிநிலையில் தாவீது தளர்ந்து போக வில்லை.

அகித்தோபலின் ஆலோசனைப்படி அப்ச லோம் தீச்செயல் புரிகிறான். பின்பு தாவீ தைத் துரத்திச் செல்கிறான். கூசாய் தனது ஆலோசனையால் இப்படை எடுப்பைக் காலந்தாழ்த்தச் செய்கிறார். தனது ஆலோ சனை நிராகரிக்கப்பட்டதால் விளையும் முடிவை முன்னுணர்ந்த அகித்தோபல் வீடு சென்று நான்று கொண்டு இறக்கிறார். காட் டிக் கொடுக்கும் யூதாசுக்கு ஒரு முன் எடுத் துக்காட்டாக இருக்கிறார்.

அப்சலோமிற்கு ஏற்பட்ட அவலமுடிவை அறிந்த தாவீது புலம்புகிறார். அதனால் அன்று கிட்டிய வெற்றி கசப்பாகிறது. யோவாபு கடிந்து கொண்டபின் தாவீது சுய உணர்வு பெற்று, அரசை நடத்தத் தொடங்கு கிறார். கலகப்படைத்தலைவனாகிய அமா சாவைத் தானைத் தலைவராக்குகிறார். இது யோவாபுக்கு விருப்பமாயில்லை. சீபாவை யும் சிமயியையும் மன்னிக்கிறார். தமக்கு உதவி செய்த பர்சில்லாயிடமிருந்து தாவீது விடைபெறும் காட்சி உள்ளத்தை உருக்க வல்லது.

பென்யமின் இனத்தைச் சேர்ந்த சேபா கலகம் செய்தான். போட்டி அரசு ஏற்படுத்தி னான். யோவாபு இதை அடக்குகிறார். யோவாபு இரத்தத்தைக் கண்டு அஞ்சிய தில்லை; தயங்கியதில்லை. தனது அரி யணையை அடைந்த தாவீது யோவாபுக்கு மீளவும்' நன்றிக் கடன்படுகிறார்.

**8.31. பிற் சேர்க்கைகள்:**

மூலத்தில் மேற்கூறப்பட்டவையோடு இந்நூல் முடிந்திருக்க வேண்டும். *21-24* ஆகிய அதிகாரங்கள் பிற்சேர்க்கையாக அமைந்திருக்கின்றன. ஆனால் கலைப்பண் போடு எழுதப்பட்டுள்ளன. இதில் இரு

நிகழ்ச்சியுரைகள், இருபட்டியல்கள் இரு பாடல்கள் அடங்கியுள்ளன.

1. சவுலின் வழித்தோன்றல்களின் முடிவு *(21:1-14)*.
2. பெலிஸ்தியருக்கு எதிராக நான்கு வீரச் செயல்கள் *(21:15-22)*.
3. நன்றிப்பாடல் *(22)*.
4. தாவீதின் இறுதிவாக்கு *(23:1-7)*.
5. தாவீதினுடைய வீரர் பட்டியல் *(23:8-39)*.
6. கணக்கெடுப்பும் கொள்ளை நோயும் *(24:1-25)*.

நன்றிப்பாடலும், தாவீதின் இறுதிக்கூற்றும் *(3-4)* இப்பகுதிக்கு மையமாய் அமைந்திருக்கின்றன. அதைச்சுற்றிவீரச் செயல்கள் வரையப்படுகின்றன *(2-5)*. இதைச் சுற்றி தாவீது அரசின் இரு துன்ப நிகழ்ச்சிகள் அமைகின்றன *(1-6)*.

சாதாரணமாக இலையுதிர் காலத்திலும், இளவேனிற்காலத்திலும், மழை பெய்யாவிட்டால் பஞ்சம் நிகழ்ந்தது. ஆனால் மக்கள் பேரழிவுகளுக்கு இயற்கையான காரணங்களைக் காட்டி மனநிறைவு அடையவில்லை. இப்பேரழிவுகள் இறைவனுடைய போதகமாகவும், தீர்ப்பாகவும் கருதப்பட்டன. மக்களிடையே பரிகாரம் செய்யப்படாத ஏதோ ஒரு குற்றம், பாவம் இருந்திருக்க வேண்டும். இப்பாவம் என்ன? எப்படிப் பரிகாரம் செய்யப்பட்டது என்பதை நூலில் வாசித்தறிக.

கணக்கெடுப்பிற்குத் தாவீதே காரணம். கணக்கெடுப்பது எப்படி யாவேக்கு விரோதமாகக் குற்றமாகும் என்று நாம் வியக்கலாம். மேலும் இஸ்ராயேலிலும் யூதாவிலும் கணக்கெடுக்கும்படி தாவீதை யாவேயே தூண்டியதாக வாசிக்கிறோம் *(24:1)*. பின் கோபப்பட்டுக் கொள்ளை நோயை அனுப்புகிறார். இதில் முரண்பாட்டைக் காண்கிறோம். ஆனால் நன்மையோ தீமையோ யாவற்றிற்கும் யாவேதான் முடிவான காரணமாவார். ஆகவே அவருக்கே சாற்றிக் கூறப்பட வேண்டும். இத்தகைய சமயக் கருத்து, சிறிது சிறிதாக வளர்ந்து, பிற்காலத்தில் நன்மை யாவேக்கும் தீமை சாத்தானுக்கும் சாற்றிக் கூறப்பட்டன *(1 நாள் 20:1பின்)*. வளர்ச்சியுற்ற இந்த நிலையிலும், மக்கள் தொகைக் கணக்கெடுப்பது பாவமாகக் கருதப்பட்டது.

பழைய செமித்திய கருத்துப்படி ஒருவரை அறிதல் அவர்மேல் ஆதிக்கம் செலுத்துவதற்குச் சமமாகும். மக்கள் தொகையை அறியக் கணக்கெடுப்பது அவர்கள் மேல் வரையற்ற முழுமையான ஆதிக்கம் செலுத்துவதற்குச் சமமாகும். ஆனால் இத்தகைய ஆதிக்கம் ஆண்டவராகிய யாவேக்கு மட்டுமே உரியது. ஆகவே மக்களைக் கணக்கெடுத்தல் இறைவனுக்கு மட்டுமே உரிய ஆதிக்கத்திற்கு உரிமை கொண்டாடுவதாகும். ஆகவே அது ஒரு இறை நிந்தையாகும். ஆகவே தீர்ப்பிடவேண்டிய ஒன்றாகும். கணக்கெடுத்ததற்குப் பிறகு தாவீது மனம் வருந்தித் தன்னையே குற்றம் சாட்டிக் கொள்ளுகிறார். ''நான் (இப்படிச் செய்ததினால்) மாபெரும் பாவம் செய்தேன்'' *(24:10)*.

கொள்ளை நோயால் பலர் இறந்தது, கடவுள் அனுப்பிய தண்டனையாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இயற்கைக் காரணத்தைப்பற்றிக் கவலைப்படவில்லை. இதைக் கண்டு நாம் வியக்கலாம். ஆனால் அவர்கள் சமயக் கருத்துப்படி இறைவனது முழுமையுடைய ஆதிக்கத்தை எவ்விதத்திலும் எதிர்க்க முடியாது. அப்படிச் செய்தால் அது தீர்ப்பிடப்படும்; தண்டிக்கப்படும். எல்லா நிகழ்ச்சிகளையும் யாவும் வல்ல யாவேயின் ஒரே அரசுத் தன்மையின் ஒளியில் காண நாம் முயல வேண்டும்.

மற்ற விவரங்களை நூலில் வாசித்தறிக. தாவீது இறைவனில் கொண்ட நம்பிக்கை இந்நிகழ்ச்சியில் சிறப்புப் பெறுகிறது. ''மனிதர் கையில் விழுவதைவிட ஆண்டவரின் கையில் விழுவது நலம் (ஏனெனில் அவர் பேரிரக்கம் உள்ளவர்)'' *(24:14)*. இந்நிகழ்ச்சியுரை பெரும் வெள்ள நிகழ்ச்சியுரை வடிவில் அமைந்துள்ளது. இறைவனின் கோபம் *(24:1)*; தண்டனை பற்றி எச்சரிக்கை *(24:15)*; இறைவன் இரக்கம் கொள்ளுதல் *(24:16)*; பீடம் கட்டுதல் *(24:18)*.

**8.32. தாவீதின் இறுதிச் சொற்கள்:**

மூலத்தில் இப்பகுதி ஆற்றல் மிக்க இலக்கியப் படைப்பாகும். இச்சொற்கள் ஈசாக்கு (ஆதி 27:1தொ), யாக்கோபு (ஆதி 48:10தொ; 49:1தொ), மோசே (உப 33:1தொ) ஆகியோருடைய இறுதிச் சொற்களுக்கு ஒத்தவை. அதன் செய்தி வருங்காலத்தைச் சார்ந்ததாகும். இப்பகுதி பிற்காலப் படைப்பாகும். தாவீதின் வாய்வழியாக முன் கூறப்படுகிறது என்பர் சிலர். இதற்கு மாறாக, இலக்கிய அமைப்பாலும், கருத்தமைப்பாலும் இது தாவீதின் காலத்தியதே என்பர் பலர்.

இக்குறுகிய பாடலில் மெசியா பற்றிய மிகப்பழைய இறைவாக்கு அடங்கியிருக்கிறது என்று அறிஞர் கருதுவர். இதுவும் நாத்தானின் இறைவாக்கும் (2 சாமு 7) சேர்ந்து சாமுவேல் ஆகமத்தின் மீட்பு வரலாற்று உச்ச நிலைக்குச் சான்றாக அமைகின்றன. நாத்தானின் இறைவாக்கு காலப் போக்கில் வளர்ந்து தாவீதின் கூற்றில் முதிர்ச்சியடைகிறது. தனது அரச மரபின் பெரும் வருங்காலம் பற்றிய அசைக்க முடியாத விசுவாசம் பொங்கி வழிகிறது. இப்பாடலே ஓர் இறைவாக்காக மாறுகிறது. யாவேயின் ஆவியே தாவீதில் பேசுகிறது. முதல் அடி இறையூக்கம் பற்றிய விசுவாசத்திற்கு விவிலிய அடிப்படைகளில் ஒன்றாகும் (23:1-3). இரண்டாவது (36:4) மூன்றாவது அடிகள், நாத்தானின் இறைவாக்கை மேலும் வற்புறுத்திக் கூறுகின்றன. உடன்படிக்கை மனித ஊழினை நிர்ணயிக்கும் இறைவனுடைய செயலாகும். தாவீது அரச மரபின் வருங்காலம் எந்த மனித ஆற்றலுக்கும் அப்பாற்பட்டதாகும். யாவே தாவீதின் பாறையாவர். அப்பாறையின் மேல் தாவீதின் மரபு உறுதியாகக் கட்டப்பட்டுள்ளது. ஆகையால் அதை எதிர்த்துத் தீய ஆற்றல்கள் வெல்லா என்று நான்காம் அடி (6-7) கூறுகிறது.

இப்பாடல் மெசியா பற்றிய நேரடி இறைவாக்கு என்பர் அறிஞர் பலர். வருங்காலத்தில் வரவிருக்கும் பெரும் அரசரையும், அவரது வருகை கதிரவன் உதயம்போல் ஒளிமிக்கதாக இருக்கும் என்றும் முன்னோக்குகிறார் ஆசிரியர். ஆயினும் சில கருத்துக்களை நாம் நினைவில் வைத்துக் கொள்வது தேவை. மெசியா பற்றிய கருத்துக்குத் தாவீதின் காலம் இன்னும் முதிர்ச்சியடையவில்லை. மேலும் இறைவனது வாக்குறுதி, தாவீதின் அரச மரபு என்றும் நிலைத்து நிற்கும் என்று நேரடியாகக் குறிப்பிடுகிறது. இம்மரபு நல்லவர்களையும் தீயவர்களையும் கொண்டிருந்தது. மெசியா பற்றிய கருத்து சிறிது சிறிதாக வளர்ந்து, தாவீது மரபில் வரவிருக்கும் ஒரு குறிப்பிட்ட ஆளைக்குறிக்கும் விதத்தில் முதிர்ச்சியடைந்தது. தாவீது தனது அரசமரபைப் பற்றி எண்ணுகிறார். இறைவாக்கினர்கள் மெசியா காலம் பற்றி எண்ணுகின்றனர். அவர்களுடைய கூற்றுகள், தாவீதின் கூற்றுக்கு ஆழ்ந்த பொருளை அளிக்கின்றன. ''பூமியின்கண் புல் முளைப்பதையும்,'' ''காலையில் சூரியன் உதிப்பதையும்'' பற்றி மட்டும் தாவீது பேசுகிறார். இறைவாக்கினர் படிப்பினைப்படி, ''இஸ்ராயேலின் தளிர்'' வரவிருக்கும் மெசியாவின் மேன்மைமிக்க பட்டமாகிறது (எசா 4:2; செக் 3:8; 6:12; எரே 23:5; 33:15). முதிய குருவாகிய செக்கரியா, இயேசு மனிதனாகப் பிறந்ததிலே இந்த ''வானின்று இள ஞாயிறு எழுதல்'' (லூக் 1:79) நிறைவேறியதாக உணருகிறார். தாவீது நாட்டு அரச மரபு முழுவதும் மனிதத்தன்மையான அடிப்படையில் இவ்விறைவாக்கைப் புரிந்து கொண்டாலும், தாவீது மரபிலிருந்து மெசியா அரசர் தோன்றுவார் என்ற விசுவாசம் வளர்ந்தது. பழைய ஏற்பாட்டு இறைமக்களின் மைய விசுவாசம் உருவாயிற்று. மேலும் வளர்ந்து முடிவில் இயேசு கிறிஸ்துவில் திருத்தம் பெற்று, கருத்தாழம் பெறுகிறது.

பழைய ஏற்பாட்டு வரலாறு திருவெளிப்பாடு, விசுவாசம் ஆகியவற்றின் வளர்ச்சியின் வரலாறு ஆகும். பிற்காலத்தில் வளர்ந்து முதிர்ச்சியடைந்த கருத்தை முற்காலத்திற்குச் சாற்றிக் கூறுவது தவறாகும். தாவீது அவரது காலத்தியவர்; அதற்கேற்றபடியே சிந்திக்கிறார்; புரிந்து கொள்ளுகிறார். அவரிலே புதியதோர் நம்பிக்கை பிறக்கிறது. யாவே ஒருவரே. தாவீதின் அரசமரபு என்றென்றும்

நிலைத்திருக்கும். கி.மு. முதல் ஆயிரம் ஆண்டுத் தொடக்கத்திலே தாவீதோடு இறைவன் செய்துகொண்ட உடன்படிக்கையின் இறைவன் ஒருவரே என்ற கோட்பாடும் தனிச் சிறப்புடைய உண்மைகளாகும்.

**8.33. தாவீது:** சாமுவேல் ஆகமங்களில் ஆதிக்கம் செலுத்துபவர் தாவீதுதான். இந்நூல் ஆசிரியர், ஒரு சிறந்த ஓவியரைப் போல் தாவீதின் படத்தை வரைகிறார். இது முகப் புகழ்ச்சியானதன்று. இப்படத்தின் ஒழிவு மறைவுப் பகுதிகள் உண்மையை வெளிக் கொணருகின்றன.

தாவீது நல்லவர்; அறிவுக்கூர்மையுடையவர். ஆனால் புலனுணர்ச்சி இன்பங்களில் நாட்டமுடையவர். ஆனால் மனம் வருந்தி, சீர்திருந்த வல்லவர். கொலை செய்யத் தயங்காதவர். மென்மையான அன்பு நிறைந்த, ஆனால் பலவீனமான தந்தை. மன்னிக்கக் கூடியவர். அவரிலே ஓர் உண்மையான மனிதனைப் பார்க்கிறோம். அவரிடம் பல குறைகள் உண்டு. இருப்பினும் தாவீது இறைவனுக்குப் பிடித்த மனிதனாவார் (1 சாமு 13:14). சமயப்பற்றும், இறைப்பற்றும் மிகுந்தவர். இவை அவர் இன்னல்படும்போது சிறந்து ஒளிர்கின்றன. தாவீது இறைவனைத் தம்வாழ்வின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் காணுகிறார். தாவீது துன்பமிக்க பல அனுபவங்களைப் பெற்றார். ஆனால் இத்துன்பங்கள் அவரது விசுவாசத்தை உறுதிப்படுத்தின; ஆழப்படுத்தின; அவரது மனிதத் தன்மையை மிளிரச் செய்தன. சாமுவேல் ஆகமங்களும் சிறப்புப்பெற்ற சில சங்கீதங்களும் இதற்குச் சான்றுகள் கூறுகின்றன. இந்நூலில் வரும் நிகழ்ச்சிகளைச் சங்கீதங்களில் வரும் வரலாற்றுக் குறிப்புகளோடு ஒத்துப் படிப்பதுநன்மை பயக்கும் (*1 சாமு 19:11-12=சங் 59; 21:10=சங் 56; 21:10-15=சங்34; 24:1-7=சங் 142; 2 சாமு 12:1-15=சங் 51; 15:13-17= சங் 3*). துன்பங்கள் பெருகினாலும் இடுக்கண்கள் மிகுந்தாலும், எல்லாவற்றிலும் தாவீது தன்னை இறைவனிடம் ஒப்படைத்தார். அது அவருக்கு இறைவனுடைய பெரும் உதவிகளைப் பெற்றுத் தந்தது. வெற்றிகளைப் பெற்றவர் தோல்விகளையும் ஏற்றுக்கொள்ளத் தெரிந்திருந்தார்.

பரம்பரையான பழக்கங்களையும் கடந்து செல்லும் விசுவாசம் கொண்டவர் தாவீது. தனது குழந்தைக்கு வருந்த மறுப்பதில் இதைக் காணலாம் (*2 சாமு 12:29*). இறைவன் தன் ஆதரவை மறுத்துவிட்டால் பெட்டகத்தால் என்ன பயன் என்று கூறும்போது, தன்னுடைய காலத்துக் கருத்துக்களையும் கடந்து தாவீது முன்னோக்குகிறார். தாவீதை வண்ணமிக்க, கவர்ச்சிமிக்கவராக ஆசிரியர் படைக்கிறார். இக்கவர்ச்சி தாவீதை அணுகியவரையெல்லாம் அவர்பால் ஈர்த்து, இறைவனையும் ஈர்த்தது.

**9. வரலாற்று மதிப்பீடு:** இதை நிர்ணயிக்க இந்நூலின் இலக்கிய அமைப்பையும், இந்நூலில் காணப்படும் பாரம்பரிய விவரிப்புகளின் காலத்தையும் கவனத்தில் கொள்ள வேண்டும். விவரிப்புகள் தொன்மையானவை. அவை விவரிக்கும் நிகழ்ச்சிகளுக்கு அண்மையானவை. இவை இந்நூலின் வரலாற்று மதிப்பீட்டை மேலும் உயர்த்திக் காட்டவல்லன. இந்நூலில் பயன்படுத்தப்பட்ட மூலங்கள் நிகழ்ச்சிகளைப்பற்றிய விவரங்களை மட்டும் கொடுக்கவில்லை. அந்நிகழ்ச்சிகள் மக்கள் மனதில் விட்டுச் சென்ற பதிவுகளையும் அவை எழுப்பிய சமய சிந்தனைகளையும் விட்டுச் சென்றுள்ளன.

இந்நூலில் காணப்படும் விவரங்களைப் புற இன மக்கள் வரலாற்றோடு இணைத்துக் காட்ட முடியாது. ஏனெனில் இக்காலத்தில் எகிப்தும் அசீரியாவும் மந்தநிலையில் இருந்தன. இவ்விரு அரசுகளும் இஸ்ராயேலரோடு சிறப்பான முறையில் தொடர்பு கொண்டிருந்ததற்குத் தடயங்கள் அதிகமில்லை. இந்தத் தேக்கநிலை, தாவீது சிறப்பான முறையில் வெற்றி பெறுவதற்குப் பெரிதும் துணை செய்தது எனலாம். ஆனால் அதே சமயம் பிரவரலாறுகளோடு கால வரையறையினுடைய இணைந்த ஆராய்ச்சிக்கு இடமில்லாது போகிறது. ஆகையால் தோராய

மான காலக்கணிப்பையே ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதன்படி கி.மு. *1030*-ஐ ஒட்டி, சவுல் அரசுக்கட்டில் ஏறினார். *1010-970* இடையிட்ட காலம் தாவீதின் ஆட்சியாகும்.

தொல்பொருள் ஆராய்ச்சி, பெலிஸ்தியர் களைப் பற்றி இந்நூல் கூறுவனவற்றிற்கு ஆத ரவு அளிக்கிறது. மேலும் அவர்கள் கிரேத்து, சைப்பிரசு ஆகிய நாடுகளோடு கொண்ட தொடர்புக்கும் கி.மு. 12-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காசாவிலிருந்து எக்ரோன் வரையிலுள்ள பகுதியில் பெலிஸ்தியர் குடி யேறி வாழ்ந்ததற்கும் சான்று கொடுக்கிறது. எருசலேமுக்கு அருகில் உள்ள தேல் ஏல் -பூல் என்ற இடத்தில் செய்யப்பட்ட புதை பொருள் ஆராய்ச்சி இஸ்ராயேலின் மிகத் தொன்மையான கோட்டையைத் தோண்டி எடுக்க உதவியது. ஒரு வேளை இது சவுலி னால் கட்டப்பட்டதாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. சில புதைபொருள் ஆராய்ச் சிகள், தாவீது பெலிஸ்தியரோடு கொண் டிருந்த போராட்டங்களுக்குச் சான்று காட்டு கின்றன. இவற்றையெல்லாம்விட நூலே இஸ்ராயேலின் வரலாற்றில் ஒரு சிறப்பான கட்டமான மன்னராட்சியின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றிற்குச் சிறந்த சான்றாக இருக்கிறது. இதைச் சிறப்புக் கருத்துகளில் ஆங்காங்கே சுட்டிக் காட்டியுள்ளோம்.

*10.* ***சமய மதிப்பீடு:*** இந்நூலில் காணப் படும் விவரங்கள், மன்னராட்சியின், தொடக்க காலத்தில் இஸ்ராயேலரிடையே நிலவிய சமய, ஒழுக்க நிலைகள் பற்றிய உயிர்ச்சித்திரமான காட்சிகளைக் கொடுக் கின்றன. அவற்றில் சில முதிர்ச்சியடையாத தொல்சமயங்களைச் சேர்ந்த சாபப்போர் போன்ற பழக்கம்; எபோத்தைக் கொண்டு ஆலோசனை கேட்டல்; நாபிகளின் கழிபேரு வகை.

பாவம் பற்றிய தரம் குறைந்த கருத்துக்கள் காணப்படும். இதன்படி, தடைகளை அறி யாது மீறுவதும் குற்றமாகும். பாவம் பற்றிய ஒட்டு மொத்தமான கருத்து, பாவம் தன்னி யக்கமாகத் தாக்கும் தன்மையையும் கொண் டுள்ளது. பரிகாரம் செய்யப்படாவிட்டால் பாவம் ஒரு குழுவினரையே தாக்கக்கூடும். இக்கருத்தை இறைவெளிப்பாட்டில் காலப் போக்கில் எய்தப் போகும் முன்னேற்றத் திற்கு ஒரு தொடக்கமாகக் கொள்ள வேண்டும். பாவம் பற்றிய மற்றொரு கருத்தை (தாவீதின் பாவத்தைப் பற்றிக் கூறியபோது) வாசித்தறிக.

சாமுவேல் இறைவாக்கினர் தத்துவத்தின் விளக்கமாக நிற்கிறார். இறைவனுடைய நம் பிக்கைக்குரியவர். அவரது விருப்பத்தை அச்சமின்றி நிறைவேற்றுபவர். இதுபற்றி ஏற்கெனவே பல கூறியுள்ளோம்.

விசுவாசமில்லாத, இறைவனுக்குப் பணி யாத அரசனுக்குச் சவுல் ஓர் எடுத்துக்காட்டு. அரசியல் ஆற்றலுக்கும் சமய ஒழுங்குத் திட்டத்திற்குமிடையே நடக்கும் போராட் டத்திற்கு ஒரு முன் எடுத்துக்காட்டு. இவ ரிடம் ஆபிரகாமின் விசுவாசமில்லை. ''பலி களைக் காட்டிலும் கீழ்ப்படிதலே மேலானது. ஆட்டுக்கடாக்களின் கொழுப்பை அவருக்கு ஒப்புக் கொடுக்கிறதைவிட அவருக்குச் செவி கொடுத்தலே சிறந்தது'' *(1 சாமு 15:22)*. இதற்கொத்த சொற்களை ஆபிரகாம் தரிசன பூமியான மோரியா மலையில் கேட்டார் *(ஆதி 22:12கொ)*. அவர் விசுவாசத்தால் தந் தையின் அன்பிற்கும் சமயக் கீழ்ப்படிதலுக்கு மிடையே நிகழும் போராட்டம் முரண்பா டான இணக்கத்தோடு முடிகிறது. ஒரு பக் கம் யாவேயாலும் மற்றொரு பக்கம் தன்னை அரசனாக்கிய மக்களின் தயவாலும் இழுக் கப்பட்டு, சவுல் மக்களையே இழந்துவிடு கிறார். மற்ற எல்லாக் கடமைகளிலும் விசுவா சம் முதன்மை வகிக்கிறது. இது மீட்பு வரலாற்றில் அடிப்படை உண்மையாகும்.

சவுலுக்கு மாறாக, ஆசிரியரின் கருத்துப் படி, தாவீது இறைவன் திட்டம் செய்த மன்னராட்சியின் உயர்ந்த எடுத்துக்காட்டா கத் திகழ்கிறார். இறைவனுக்குத் தன்னை முழுவதும் அர்ப்பணித்த அரசன், இறைவாக் கினர் கடிந்துரைக்கும் போதுகூட அவர்

களுக்குப் பணிபவர். அவர் அடையும் வெற்றி இறைவன் அவரோடு இருக்கிறார் என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைகிறது. இறைவனுக்குகந்த அரசராகத் திகழ்கிறார்.

தாவீதின் உடன்படிக்கை புதிய வடிவில் செயல்புடுவதைப் பார்க்கிறோம். அது உலகில் இறையரசாக வடிவம் எடுக்கிறது. நூலின் மத்தியில் வரும் நாத்தானின் இறைவாக்கு புதிய அரசின் வருங்காலம் பற்றிய புதிய முன்னோக்கைத் திறந்து காட்டுகிறது. யாவே தம்மைத் தாவீதின் அரச மரபோடு மீட்க முடியாத விதத்தில் இணைத்துக் கொள்ளுகிறார். தம் மக்களைத் தாவீதின் மக்கள் வழியாக அரசு செலுத்தவிழைகிறார். அதற்காகத் தாவீதின் மக்களைத் தம் புதல்வர்களாகச் சுவிகாரம் செய்கிறார். இக்கருத்து பற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம்.

இப்பொருளில் தாவீதின் வரலாறு இறையியல் மதிப்பீட்டால் தோய்ந்திருக்கிறது. சில மதிப்பீடுகளைப் புனித வரலாற்றில் புகுத்துவது தாவீதின் அலுவலாகும். அம் மதிப்பீடுகள் செயல்படுவதை நோக்கிய விசுவாசத்தையும் எதிர்பார்ப்பையும் எடுத்துக் காட்டுபவராகத் தாவீது திகழ்கிறார். இந்த நம்பிக்கையின் வளர்ச்சி அரசின் வருணனையிலே எழுதப்படும். அது தொடர்ந்து சரி பார்க்கப்படும்; தியானிக்கப்படும். நாடு கடத்தப்படும்வரை தாவீதை மாதிரியாகக் கொண்டே மற்ற அரசர்கள் தீர்வையிடப்படுவர். இவ்வரசர்கள் தவறிப் போகலாம்; தண்டிக்கப்படலாம். ஆனால் இவ்வரசு மீண்டும் அமைக்கப்படும் என்பதில் ஐயம் இருந்ததே இல்லை (ஆமோ *9:11*; ஒசே *3:5*). இடுக்கண் வேளையில் அரசர்களின் பற்றுறுதியின்மையால் ஏற்பட்ட இடர்களையும் கடந்து தாவீதின் வழித்தோன்றலான ஒரு எடுத்துக்காட்டானவரை (எசா *9:1-6*; *11:1-9*; *16:5*; எரே *23:5-6*), புதிய தாவீதை (எரே *30:9*; எஸ் *34:23-24*; *37:24-26*), ஆண்டவரின் அபிடேகம் பெற்றவரை, மெசியாவை இறைவன் தோற்றுவிப்பார். நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின் ஆலயம் மீண்டும் கட்டப்படும் காலத்தில் தாவீதின் வீடும் திரும்ப அழைக்கப்படும் என்பது எதிர்பார்க்கப்படுகிறது. செருபாபேலைச் சுற்றி மெசியாபற்றிய நம்பிக்கை மீண்டும் எழுப்பப்படுகிறது (செக் *6:12-13*). தாவீதுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதி பற்றிய தியானத்திற்குத் தோல்வி முடிவு கட்ட முடியாது (சங் *89:32-37*; எசா *55:3-4*; எரே *33:14-26*; செக் *9:9-10*; *11:7*; *12:6*). நாளாகமங்கள் தனது தொலை நோக்கின் மையத்தில் தாவீதைக் கொண்டிருக்கின்றன. குருக்கள் பாரம்பரியப்படி இறையாட்சியின் எடுத்துக்காட்டான அரசனாகத் தாவீது இருப்பார். அவரே இறையூக்கம் பெற்ற பாடகர். வழிபாட்டைத் திருத்தி அமைப்பவர்.

மன்னராட்சியின் தோல்வி, மெசியாவை எதிர்பார்த்திருத்தலைச் சோதனைக்குட்படுத்தியது. ஆனால் அத்தோல்வியே மெசியாக் கருத்தை ஆழப்படுத்தியது எனலாம். தாவீதுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதியின் ஆழ்ந்த மதிப்பீட்டை அதன் முழுமையோடு வெளிப்படுத்த இயேசு இறுதியில் வரவேண்டியது அவசியமாயிற்று. இயேசு அவ்வரசை அறிவிக்கிறார். மறைபொருள் மிக்க உலகியல் பண்புகளையுடைய உருவங்களைப் பயன்படுத்தி ஆன்மீக உண்மைகளை விட்டுக் கொடுத்து விடுவோமே என்று அச்சப்படுபவர்போலத் தாம் தாவீது வழியாகத் தோன்றியது பற்றி எச்சரிக்கையாக இருக்கிறார் இயேசு (மாற் *2:25-26*). தாம் ''தாவீது மகன்'' ஆனாலும் தாவீதுக்கும் ஆண்டவர் என்றும் காட்டுகிறார் (*12:35-37*). சில இடங்களில் தாவீதின் மகன் என்றழைக்கப்பட அனுமதிக்கிறார் (மாற் *10:47-48*; மத் *15:22*; *21:9-15*). எருசலேமுக்குள் நுழைந்தபோது, தமது தலைநகர் மீதும் ஆலயத்தின் மீதும் தம் அதிகாரத்தைச் செலுத்துகிறார். ஆனால் அதன் அழிவையும், தாம் அதில் மரிக்கப் போவதை முன்னறிவிக்கவுமே அப்படிச் செய்கிறார். தன் உயிர்ப்பாலும் இறைவன் முன் அரியணை ஏறுவதாலும் அரச மெசியாத் தன்மையை உலகியல்பிலிருந்து பிரிக்கிறார். இனிமேல் அவரை மெசியா என்று ஏற்றுக் கொள்ளும் அவரது சீடர்கள், அவர் தாவீதின் குலத்தில் தோன்றியவர் என்பதையும் (மத் *1:1*; லூக் *2:4*; யோவா *7:42*; உரோ

*1:3;* 2 திமோ *2:8;* திருவெளி *5:5; 22:16)* தாவீதுக்கு அளிக்கப்பட்ட சொல்லுறுதி அவரில் நிறைவேறுகிறது என்பதையும் (அ.ப. *2:30;* எபி *1:5)* வலியுறுத்திக் கூறத் தயங்கமாட்டார்கள்.

இறுதியாக, மீட்பு வரலாற்றில் மன்னராட்சி சிறப்புப் பொருள் கொண்டிருப்பதால், மன்னராட்சியின் தோற்றம் பற்றிய விவரிப்பு விவிலியத்தில் விட்டு வைக்கப்பட்டிருக்கிறது எனலாம். இஸ்ராயேலரிடையே பல அரசர்கள் ஒன்றுமில்லாமல் மறைந்து போயினர். அப்படிப்பட்ட அழிவிலிருந்து தாவீது காப்பாற்றப்பட்டிருக்கிறார். ஏனெனில் இயேசு கிறிஸ்துவில் இறையரசு நிறைவுறுதலை நோக்கித் தாவீதின் வரலாறு செயல்படுகிறது. தாவீதையும் கடந்து தம்மை வெளிப்படுத்த மெசியாவுக்குத் தாவீது தேவைப்பட்டார். கிறிஸ்துவர்களிடையே சாமுவேல் ஆகமங்கள் நினைவாக நிலைத்து நிற்பதற்கு இது ஒன்றே போதுமான காரணமாகும். கிறிஸ்து என்னும் மறைபொருளில் நாம் கொண்டிருக்கும் விசுவாசத்தில் தாவீது ஒரு சிறப்பான இடம் வகிக்கிறார்.

**சாமேக்கு (SAMECH)**

எபிரேய நெடுங்கணக்கில் பதினைந்தாவது எழுத்து. இது அகர வரிசைச் சங்கீதமான *119*-ஆவது சங்கீதத்தின் பதினைந்தாவது அடியின் தலைப்பில் வருகிறது. அந்த அடியில் இருக்கும் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்தை முதலெழுத்தாகக் கொண்ட சொற்களுடன் தொடங்குகிறது.

**சாமேது (SHEMED - அழிவு)**

பென்யமின் குலத்தில் ஒரு குடும்பத் தலைவர். சகரயிம் மற்றும் கூசிம் (ஊசிம்) என்பவர்களின் வழித்தோன்றல். எல்பாகாலின் மகன். நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின், இவரும் இவர் சகோதரர்களும் ஓனோ, லோது போன்ற நகரங்களை மீண்டும் கட்டியெழுப்பினர் அல்லது மீண்டும் குடியேறினர் *(1* நாள் *8:12)*.

**சாமை, மாக்கோதுமை (SPELT)**

இதைக்குறிக்கும் எபிரேய மூலச்சொல் யாத் *9:32;* எசா *28:25;* எசே *4:9* ஆகிய பகுதிகளில் காணப்படுகிறது. இது ஒருவகை மட்டரகமான கோதுமையாக இருக்கலாம். பாலஸ்தீனத்தில் இன்றும் காணக்கூடிய 12க்கும் மேற்பட்ட கோதுமை வகைகளில், மட்டரகமான கோதுமைவகையான இக்கோதுமை எசா *28:25* குறிப்பின்படி உயர் ரகக் கோதுமைப்பயிருக்கு வேலியாக வயல் ஓரங்களில் விதைக்கப்பட்டது என அறிகிறோம். இங்கு இது தானியங்கள் என்று தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

**சாம்பல் - (ASHES)**

பழங்கால மதங்களில் சாம்பல் அதிகமாக உபயோகத்தில் இருந்தாலும், எக்கருத்துடன் முதன்முதல் சாம்பலை வழிபாட்டில் பயன்படுத்த ஆரம்பித்தனர் என்பது மிகவும் விவாதத்திற்குரிய கேள்வியாகும். அடிக்கடி சாம்பல் புழுதியோடு இணைத்துப் பேசப்படுகின்றது. (எழுபதுநூல் மொழி பெயர்ப்பில் பல இடங்களில் 'சாம்பல்' என்ற சொல்லுக்குப் பதிலாகப் 'புழுதி' என்ற வார்த்தை பயன்படுத்தப்படுகின்றது). மேலும் மனிதனின் பாவத்தையும் பலவீனத்தையும் குறிக்கும் சின்னமாகச் சாம்பல் விளங்குகின்றது.

1. முதலிடத்தில் பாவியின் இதயம் புழுதியோடு ஒப்பிட்டுப் பேசப்படுகின்றது. எசாயா சிலை வழிபாட்டில் ஈடுபாடு உடையவனை 'வெறும் சாம்பலில் பற்றுவைப்பவன்' (எசா *44:20)* என்று அழைக்கின்றார்; ஞான ஆகம ஆசிரியரோ ''அவன் உள்ளமோ வெறும் சாம்பல்தான்; அவனது நம்பிக்கை புழுதியிலும் தாழ்வானது'' (ஞான *15:10)* என்று இயம்புகின்றார். இக்காரணத்தினால் பாவத்தின் கூலியும் வெறும் சாம்பலாகத்தான் அமையும். எவ்வாறெனில் செருக்குற்றோர் தாங்கள் ''சாம்பலாகச் சுட்டெரிக்கப்படுவதைக்'' (எசே *28:18)* காண்பர்; தீயோர்களோ நீதிமான்களின் காலடியில் சாம்பல்போல் மிதிபடுவர் (மலா *3:21)*. மேலும் தன் அகந்தையை அகற்றி (சீரா *10:9)*, தன் பாவத்தை உணரும் பாவி, தன்

னைப் ''புழுதிக்கும் சாம்பலுக்கும்'' ஒப்பிட்டே (ஆதி 18:27; சீரா 17:32) அறிக்கையிடுகிறான். தான் உணர்ந்ததைத் தனக்கும் மற்றவர்களுக்கும் எடுத்துக்காட்ட பாவியானவன் புழுதியில் அமர்ந்து (யோபு 42.6; யோவா 3:6; மத் 11:21) தலையில் சாம்பலைத் தூவிக் கொள்கிறான் (யூதி 4:11-16; 9:1; எசே 27:30).

2. பாவியின் மன வருத்தத்தின் சின்னமாக விளங்கும் சாம்பல், இடர்ப்பாடுகளுக்கிடையே நலியும் மனிதனின் வருத்தத்தைக் குறிக்கும் அடையாளமாகவும் பயன்படுத்தப்படுகின்றது. இடர்ப்பாடுகளுக்கும் பாவத்துக்கும் இடையே ஒருவிதமான பிணைப்பு இருப்பதாக மக்கள் கருதியது இவ்வித உபயோகத்திற்குக் காரணம் என்பது தெளிவாகின்றது. தாமார், ஒதுக்கித்தள்ளப்பட்ட நிலையில் தன் தலையில் சாம்பலை வாரிப்போட்டுக் கொள்கிறாள் (2 சாமு 13:19). யூதர்களும், தங்கள் உயிருக்கு ஆபத்து நேர்ந்தநிலையில் இவ்வாறே சாம்பலைப்போட்டுக் கொள்கின்றனர் (எஸ்த 4:1-4; காண் 1 மக் 3:47; 4:39). இவ்வாறுதான் நலிந்த நிலையை மனிதன் எடுத்துக்காட்ட விரும்புகிறான் (யோபு 30:19). சாம்பலை உணவாகக்கூடக் கொள்கிறான் (சங் 102:10; புல 3:16). சிறப்பாகத் தன் உற்றார் உறவினரைப் பறிகொடுத்த நிலையில்தான், மனிதன் தன் வெறுமையை உணர்கிறான்; அதை வெளிக்காட்டத் தன்மேல் சாம்பலையும் புழுதியையும் போட்டுக் கொள்கிறான்; ''என் மக்களே, மயிராடையை அணிந்து கொள்ளுங்கள்; சாம்பலில் புரண்டு வருந்துங்கள்; புலம்பி அழுங்கள்...'' (எரே 6:26).

இவ்வாறு தன்மேல் சாம்பலைத் தூவிக் கொள்ளும்போது மனிதன் மௌனமாக ஊறியத் தன் பாவத்தை ஏற்றுக்கொள்கிறான் (காண். விபூதிப்புதன் திருவழிபாடு). புழுதியோடு ஒன்றாகப்போகும் இச்சடப்பொருளின் மூலம் மனிதன் தன் பாவத்தையும் பலவீனத்தையும் ஏற்றுக் கொள்கிறான்; இவ்வாறு கடவுளின் தீர்ப்பையும் தடுத்து நிறுத்தி, அவருடைய இரக்கத்தைக் கவருகிறான். இவ்விதம் தனது வெறுமையை ஏற்றுக்கொள்ளும் யாவருக்கும் பாவத்தின் மீதும் சாவின் மீதும் வெற்றிவாகை சூடவும், ''அழுகிறவர்களை மகிழ்விக்கவும், சாம்பலுக்குப் பதிலாய் மணிமுடியை அளிக்கவும்'' (எசா 61:3) மெசியா வருகின்றார் என்று வாக்களிக்கப்படுகின்றது.

### சாம்பல் தட்டு (கள்), சாம்பல் கலசங்கள் (SNUFFDISHES)

திருஉறை கூடாரத்தில் வைக்கப்பட்ட பசும்பொன்னாலான அகல்கள், குத்து விளக்குகளுடன் வைக்கப்பட்டிருக்கும் தட்டு. கரிந்த திரியை வெட்டக் கத்திரிகளையும், வெட்டப்பட்ட கரிந்த திரி, சாம்பலை வைப்பதற்கும் பயன்படுத்தப்பட்ட தட்டுகள் அல்லது கலசங்கள் (யாத் 25:38; 37:23; எண் 4:9).

### சாம்பிராணி, தூபம் (FRANKINCENSE)

இது மரங்களிலுள்ள ஒரு வகையான பிசின் போன்றதிலிருந்து தயாரிக்கப்படுகிறது. அரேபியாவிலிருந்து பாலஸ்தீனத்திற்கு இறக்குமதி செய்யப்பட்டது. அது வெள்ளை நிறமாக இருக்கும்.

குருத்துவ ஒழுங்கின்படி பரிமள வகைகளாகிய எல்லா நறுமணப் பொருட்களையும் கலந்து பொடிப்பொடியாக இடித்து ஆண்டவருடைய கூடாரத்து முன் வைக்க வேண்டும் (யாத் 30:34-38). மற்றத் தேவைகளுக்கு இந்தப் பொருள்களைப் பயன்படுத்தக் கூடாது. வேறுவிதமாய்ச் சேர்க்கப்பட்ட நறுமண தூபங்களையேனும், காணிக்கையையேனும் பீடத்தின் மேல் ஒப்புக்கொடுத்தல் ஆகாது (யாத் 30:9).

பிரசன்ன அப்பங்கள் ஆண்டவருக்குச் செய்யப்பட்ட நினைவுச் சின்னமாய் இருப்பதால், அவற்றின்மீது மிகவும் சுத்தமான சாம்பிராணி தூவப்படவேண்டும் (லேவி 24:7). தூப வகைகள் நிறைக்கப்பட்ட இரண்டு பொன்னாலான பாத்திரங்கள், புனித அப்பங்களின் மீது வைக்கப்படவேண்டும் என்று யோசிப்பசு கூறியுள்ளார்.

சாம்பிராணி தூவி, எண்ணெயும் வார்த்து பீடத்தின் மீது நினைவுச் சின்னமாகவும்,

நறுமணமாகவும் உணவுப்படையல் ஆண்டவருக்கு வைக்க வேண்டும் (லேவி 2:1-2; 14:16; 6:14-18). இச்சாம்பிராணி, பின்பு ஆண்டவருடைய பீடத்திற்கு முன்பாகச் சுட்டெரிக்கப்பட வேண்டும் (எசா 43:23; 66:3; எரே 17:26; 41:5). குற்றவாளி தான் செய்த குற்றத்தினிமித்தம் தான் படைக்கும் காணிக்கையின்மீது எண்ணெயோ சாம்பிராணியோ இடலாகாது (லேவி 5:11; எண் 5:15). சாம்பிராணிப்பொருட்கள் உள்ள கிடங்குகள் எருசலேம் ஆலயத்தில் இருந்தன (1 நாள் 9:29; நெகே 13:5.9). குழந்தை இயேசுவைக் காண வந்த மூன்று ஞானிகளுள் ஒருவர் தூபத்தைப் பரிசாகக் கொடுத்தார் (மத் 2:11). புதிய ஏற்பாட்டில் மத் 2:11-இலும் திருவெளி 18:13-இலும் மட்டுமே இந்தச் சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

**சாயமிடுதல் (DYEING)**

இது ஒரு பூர்வீகக் கலை. விவிலியக் காலத்தில் இது பாலஸ்தீனியர் வாழ்க்கையில் அவசியமான முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. விவிலியத்தில் சாயமிடும் முறை சொல்லப்படாவிட்டாலும், சாயமிடப்பட்ட பொருள்கள் நிறைய இருந்தன (யாத் 35:6.23.25.35; நீதி 5:30; மாற் 15:17; அ.ப. 16:14). இஸ்ராயேலர்கள் தங்களுக்குத் தெற்கும், வடக்கும் வாழ்ந்த மக்களிடமிருந்து இதைக் கற்றுக்கொண்டது பற்றிக் குறிப்பிட்டுக் கூறும்படி ஒன்றும் தெரியவில்லை; ஆனால் ''ஊதா, கருஞ்சிவப்பு, நீல நூல் வேலைப்பாட்டிலும்... தேர்ந்தவனாக இருக்கும்'' ஒரு மனிதனை அனுப்பிவைக்கும்படி சாலமோன் அரசன் தீர் அரசனான ஈராமிடம் கேட்டுக் கொண்டதாகச் சொல்லப்பட்டுள்ளது (2 நாள் 2:7; காண்க: 3:14). ஊதா நிறத்தைத் தயாரிப்பது எப்படி என்பதைப் பெனிசியர்கள் இரகசியமாக வைத்திருந்தனர்; ஏனெனில் மற்றவர்கள் அதைத் தங்களிடமிருந்து வாங்கவேண்டியிருக்கும்.

சாயமிடுவோரின் சங்கங்கள் இருந்த இடங்கள் இந்த வேலையில் மையங்களாக விளங்கின (1 நாள் 2:55; 4:21). செம்மறி ஆடுகள், வெள்ளாடுகள் மேய்வதற்கான மேய்ச்சல் நிலங்களும், தண்ணீர் நிறைந்த இடங்களும் இந்தச் சங்கங்கள் இருந்த இடங்களாகும். தேல் பெயித் மிர்சிம் என்ற இடத்திலிருந்த முக்கியமான தொழில் சாயமிடுவதும், நெய்வதும்தான் என்று புதைபொருள் ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. கெசேர் பெத்செமேஸ்,தேல் - என் - நாஸ்பே, பெத் - சூர் ஆகிய இடங்களிலும் சாயமிடுதல் நிலையங்கள் சிறிய அளவு இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. மகதலா ஒரு சாயமிடும் மையமாகவும், செக்கேம் அருகிலுள்ள உலுஸ் நீலப் பொருட்களைத் தயாரிக்கவும் இடமாகவும் இருந்தது.

பூர்வீகத்திலிருந்து சாயமிடுவது எப்படிச் செய்யப்பட்டது என்று தெரியாவிட்டாலும், இதனுடைய சாமான்கள், அமைப்பைப் பற்றி முக்கியமான சில குறிப்புகள் வெவ்வேறு இடங்களிலிருந்து சேகரிக்கப்பட்டுள்ளன. தேல் பெயித் மிர்சிமில் இந்தத் தொழிலை வீட்டுத் தொழிலாகச் செய்து வந்த 30 வீடுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்தத் தொழில் ஒரு அடிப்படை அமைப்பைக் கொண்டிருந்தது. ஒவ்வொரு அறையும், மேலே குறுகிய திறப்புகளுள்ள இரண்டு உருளையான கற்களால் அமைக்கப்பட்டிருந்தன. இரண்டு தொட்டிகளும், மேசைகளும், இந்த இரண்டு கற்களுக்கு முன்போ இடையிலோ அமைக்கப்பட்டிருந்தன. சில சமயங்களில் மேசையில் ஒரு சிறிய சாடி செதுக்கப்பட்டிருந்தது. சாயங்களை ஒட்டவைப்பதற்காகச் சில சாடிகள் சுண்ணாம்பும், பொட்டாசியமும் வைக்கப்பட்டு அருகில் இருந்தன. இந்தக் கற்களின் மேல் திறப்பு சிறியதாக இருப்பதால் இதில் நூலுக்குச் சாயம் போடப்பட்டது; ஆடைகளுக்கு அல்ல. இந்த நூலிலிருந்து பலநிறத் துணிகள் நெய்யப்பட்டன. சாதாரணமாக ஒவ்வொரு கட்டு நூலையும் இரண்டு முறை சாயத்தில் மூழ்கச்செய்து, பின் சாயத்தைப் பிழிந்து சேர்த்தார்கள். சாயம் போடப்பட்ட நூலானது காய வைக்கப்பட்டது. பாலஸ்தீனத்தில் குளிர்ந்த சாயம் போடப்பட்டது; ஆனால் எகிப்தியர்கள் சூடான சாயத்தைப் போட்டிருக்கலாம்.

இரும்புக் காலத்தில் அமைக்கப்பட்ட இந்த அமைப்புகள் பெத் - செமேசிலும், தேல் என் - நாஸ்பேயிலும் கண்டுபிடிக்கப்பட்டுள் ளன; இரண்டாவதாகச் சொன்ன இடத்தில் மேலே திறப்புடைய ஒரே கல்லும், மேசை கள் இல்லாமலும் இருந்தன. கிரேக்க சாயம் போடும் இடமானது கெசேர் என்ற இடத் தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது; பல நூற் றாண்டுகள் கடந்தாலும், இதனுடைய அடிப் படை அமைப்புகளில் சிறிதும் மாற்றம் இல்லை; இங்கு ஒரே கட்டடத்தில் மூன்று சாயம் போடும் அறைகள் இருந்தன. கற்சாடி களுக்குப் பதிலாகக் குளிக்கும் தொட்டிகள் அமைப்பில் பெரிய தொட்டிகள் இருந்தன; ஒவ்வொரு அறையிலும் இருந்த இரண்டு தொட்டிகளுக்கு அருகில் மேசைகளும், சிறிய கற்சாடிகளும் இருந்தன; இந்த அமைப்பிற்கு அடியில் ஓர் அடுப்பு இருந் தது; இது சூடான சாயங்களைப் போட்ட தைக் குறிக்கின்றது. இதேபோன்ற ஒரு சாயம்போடும் இடம் பெத் - சூரில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

**சாயிர்** *(ZAIR - சிறிய)*

இங்குதான் யூதாவின் அரசர் யோராம் *(கி.மு. 849-842)* இரவுத் தாக்குதலில் ஏதோமி யர்களைச் சந்தித்தார். அவருடைய தேர்ப் படை முதலில் வெற்றிகரமாகத் தாக்குத லைத் தொடங்கினாலும் அவரது படை தாக்குதலைத் தொடர்ந்து நடத்தவில்லை; அவரைக் கைவிட்டோடியது. அதன் விளை வாக ஏதோமியக் கிளர்ச்சி வெற்றிபெற்றது *(2 அர 8:20 தொ)*. இதற்கு இணையான பகுதியில் *(1 நாள் 21:8-10)* இடப்பெயர் கொடுக்கப்படவில்லை. சாயிர் ஒருவேளை ஏதோமுக்கு அருகில் சாக்கடலுக்குத் தெற் கில் இருந்திருக்க வேண்டும். சில எழுபது நூல் கையெழுத்துப்பிரதிகள் சீயோர் என்ற பெயரைக் கொடுக்கின்றன. இந்நகரம் யூதா வின் மலைப்பகுதியில் உள்ளது *(யோசு 15:54)*.

**சாயீன்** *(ZAIN)*

எபிரேய நெடுங்கணக்கில் ஏழாவது எழுத்து. அகரவரிசைச் சங்கீதமான 119 - இன் ஏழாவது பிரிவுக்கு இந்த எழுத்து தலைப் பாக உள்ளது. இப்பிரிவின் ஒவ்வொரு வரி யும் இந்த எழுத்தோடு தொடங்குகிறது.

**சாரத்தான்** *(ZARETHAN - குளிர்ந்த)*

யோர்தான் பள்ளத்தாக்கிற்குக் கிழக்கே உள்ள ஒரு நகரம். இந்தப் பெயர் முதன்முத லில் யோசு 3-இல் வருகின்றது. இங்கு யோர்தான் நதிநீர் தடுக்கப்பட்டதாகவும், அதன் உதவியால் யோசுவாவின் தலைமை யில் இஸ்ராயேலர்கள் அந்த ஆற்றைக் கடந்து எரிகோவைத் தாக்கச் சென்றதாகவும் விவரிக்கப்பட்டுள்ளது.

இது மறுபடியும் சாலமோன் காலத்தில் குறிக்கப்படுகிறது. இது சாலமோனின் நான் காவது மாவட்டத்தின் பகுதியாக இருந்தது என்று சொல்லப்பட்டுள்ளது. இதுயோர்தா னின் இரு பக்கங்களையும் கொண்டிருந்தது. இது பெத் - சானிலிருந்து வெகு தொலை வில் இல்லையென்று இந்த வர்ணிப்பு காட்டு கின்றது *(1 அர 4:12)*. சுக்கோத்திற்கும் சாரத்தானுக்கும் இடையில்தான் சாலமோ னின் வார்ப்படக் கலைஞரான ஈராம் ஆலயத் துக்கான வெண்கலப் பாத்திரங்களை வார்ப் பித்தார் *(7:46)*. இது 2 நாள் 4:17-இல் செரேதா என்றும் நீதி 7:22-இல் செரேரா என்றும் அழைக்கப்படுகிறது.

இது யோர்தானிலிருந்து வெகுதொலை வில் இருந்திருக்காது; ஆதாமிற்கும் சுக்கோத் திற்கும் இடையில் அமைந்திருக்கவேண் டும். இது ஆதாமிலிருந்து 20 கி.மீ. தொலை வில் இருந்ததாகத் தால்மூது கூறுகிறது. மேற் சொன்ன அனைத்தையும் பார்க்கும்பொழுது இது அனேகமாகத் தேல் எஸ் - சயிதியேவாக இருக்கலாம்.

**சாரபாத்து** *(ZAREPHATH - சாயமிடுதல்)*

சீதோனுக்கும் தீருக்கும் இடையிலுள்ள ஒரு பெனீசிய நகரம். சீதோனுக்குத் தெற்கே ஏறக்குறைய 9 கி.மீ. தொலைவில் மத்திய தரைக் கடற்கரையில் இந்த இடம் உள்ளது. கி.மு. 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு நாணல் ஏட்டில் இந்தப் பெயர் சொல்லப்பட்

டுள்ளது. இந்நகரம் கண்ணாடிச் சாமான் களுக்குப் பெயர்போனது; இந்தக் கண்ணாடி யானது சீதோனுக்கு அருகில் உள்ள மணலால் செய்யப்பட்டது. சீதோன், தீரைப் போல் இதுவும் சாயங்களை உற்பத்தி செய்தது என்று இதன் அக்காதியப் பெயர் சுட்டுகிறது.

கடவுள் எலியாவைச் சீதோனைச் சேர்ந்த சாரபாத்துக்குச் சென்று அங்குச் சிறிது காலம் தங்கியிருக்கும்படி கட்டளையிட்டதை 1 அர 17:9-24-இல் வாசிக்கின்றோம். அங்கு அவர் ஒரு விதவையைச் சந்தித்து அவருடைய எண்ணெய்த் தாழியும், மாவும் மழைபெய்யும் வரை குறையாமலிருக்கும்படி ஆசீர்வாதித் தார். அவளது இறந்துபோன மகனை உயிர்த் தெழச்செய்தார். இந்தக் கதை லூக் 4:26-இல் சொல்லப்பட்டுள்ளது. ஒபதியா 20-இல் சாரபாத்து பெனீசியாவின் ஒரு பகுதியெனச் சொல்லப்பட்டுள்ளது. இப்பொழுது இது சாரபாந்து என அழைக்கப்படுகிறது.

**சாரயிம்** (SHAARAIM - இரண்டு கதவு)

1. அசேக்காவின் செபேலா மாவட்டத் திலுள்ள யூதாவின் நகர் (யோசு 15:36). தாவீது பெலிஸ்தியர்களின் தலைவன் கோலியத் தைக் கொன்றபின் இஸ்ராயேலர் பெலிஸ்தி யர்களைச் சாரயிம், காத்து எக்ரோன் வரைக் கும் துரத்திச் சென்றனர் (1 சாமு 7:52 தொ). எனவே சாரயிம் வாடி எஸ் - சாந்துக்கருகில், அசேக்காவுக்கு அருகில் இருக்க வேண்டும்.

2. இது சிமியோனின் நகர் (1 நாள் 4:31). இது இணை நகர்ப் பட்டியலில் சாருகென் என்று வருகிறது (யோசு 19:6). அறிஞர்கள் சிலர் மத்தியதரைக் கடலிலிருந்து 25 கி.மீ. தொலைவிலுள்ள நாகர்-பெசோரில் உள்ள தேல் ஏல் - பாராவோடு, இவ்விடத்தை அடையாளம் காட்டுகின்றனர்.

**சாரர்** (SHARAR - உறுதியான, நாபி)

இவர் ஓர் ஆராரியர். அகியாமின் தந்தை. அகியாம் தாவீதின் முப்பது ஆற்றல் மிக்க வீரர்களில் ஒருவர் (2 சாமு 23:23). 1 நாள் 11:35 - இல் இவர் சாக்கார் (1) என்று அழைக்கப்படுகிறார்.

**சாரா** (SARAH - இளவரசி, தலைவி)

1. சாரா ஆபிரகாமின் மனைவி, ஈசாக்கு வின் தாய். சாராய் என்ற பெயர் ''சாரா'' என்றும் (ஆதி 17:15) 'அபிராம்' என்ற பெயர் ஆபிரகாம் என்றும் (17:5) மாற்றப்பட்டது. இது இலக்கியஞ்சார்ந்த திறனாய்வுக்குப் பொருள் பொதிந்த குறிப்பாக அமைகிறது. இது பிற்காலத் தொகுப்பாளர்களின் வேலை யாக இருக்கலாம். இது ஆதி 17-ஆம் அதிகா ரத்தின் ஆசிரியராகவோ இறுதியில் இலக் கிய உருக் கொடுத்தவராகவோ இருக்கலாம். ஏனெனில் முன்வரும் பெயர்களும், பின் வரும் பெயர்களும் இந்த மாற்றத்துக்கேற்ற வாறு அமைந்துள்ளன. ஆதி 17:15-இல் சாராய், சாரா என்ற பெயர்களுக்குக் காரண விளக்கங்கள் கொடுக்காமல் இருப்பது குறிப்பிடத்தக்கது. இரண்டு பெயர்களும் 'இளவரசி' அல்லது தலைவி என்ற பொருள் கொண்டவை. ''சாராய்'' என்ற பெயர் முத லில் ஆதி 11:29-30-இல் குறிப்பிடப்பட்டுள் ளது. அங்கே அபிராமின் மனைவி என்றும், குழந்தை இல்லாதவள் என்றும் சொல்லப் பட்டுள்ளது. 20:12-இன்படி இவள் அபிரா. மின் ஒன்றுவிட்ட சகோதரியாக இருக்கி றாள். இவள் அபிராமோடு காரானுக்கும் (11;31) பிற்கு கானானுக்கும் (12:5) சேர்ந்து சென்றாள். 12:4; 17:17-இன்படி அந்தச் சமயத் தில் சாராய்க்கு 65 வயதாகும். அவ்வளவு வயதாகியும் அழகாக இருந்தாள். எனவே தான் எகிப்துக்குச் செல்லும்போது பாதுகாப் புக்காக அபிராமும், அவளும் சகோதர சகோ தரி என்று பாதி உண்மையைக் கூறி வந்தனர் (12:10-13). இதனால் பார்வோன் அவளை அவனது இல்லத்திற்குக் கொண்டு சென் றான். ஆனால் தொந்தரவுகள் வந்ததால் சாராய் அபிராமின் மனைவி எனப் புரிந்து கொண்டான். பிறகு அவர்களைத் தன் நாட்டி னின்றே விரட்டினான் (12:14-13:1).

ஆதி 16-ஆம் அதிகாரம் சாரா தனது வேலைக்காரி ஆகாரோடு கொண்ட பகை மைப் போராட்டத்தைச் சொல்கிறது. சாரா அபிராமுக்கு இறைவன் வாக்களித்த வாரிசு கிடைக்கமாட்டான் என்ற அவநம்பிக்கை யில் அபிராமுக்கு ஆகாரைக் கொடுத்தாள்.

அதன் விளைவாகத் தங்களுக்குப் பிள்ளை உண்டாகலாம் என்று நம்பினாள். ஆகார் கருவுற்றாள். அதனால் ஆகார், சாராவை அலட்சியப்படுத்தினாள் (16:1-5). இதனால் வந்த கோபத்தினால், சாரா தங்கள் கூடாரத்திலிருந்து ஆகாரை வெளியேற்றினாள். ஆனால் பாலையில் ஆண்டவருடைய தூதரின் காட்சிக்குப் பிறகு, ஆகார் திரும்பி வந்து, இசுமயேலைப் பெற்றுக் கொடுத்தாள் (16:6-15).

இந்த நேரத்தில் அவளது பெயர் 'சாரா' என்று மாற்றப்பட்டது. ஓர் ஆண்டுக்குள் அவளுக்குப் பிறக்கும் மகன் வழியாக அவளுக்கு ஒரு பெரிய தலைமுறை உண்டாகும் என்று இறைவன் வாக்களித்திருந்தார் (17:15-21). இந்த வாக்கு மம்ரேயில் மனித உருவில் இரு வான் தூதர்களோடு யாவேயால் உறுதிப்படுத்தப்பட்டது (18:1-10). இதைக் கேட்டதும் தொண்ணூறு வயதுநிரம்பிய சாரா நம்பிக்கையின்மையினால் சிரித்தாள். அதற்கு யாவே அவளைக் கண்டிக்கிறார் (18:11-15).

இந்தக் காலத்தில் ஆபிரகாமும், சாராளும் சகோதர சகோதரியாக நடந்த கதையொன்று வருகிறது (ஆதி 20). இந்நிகழ்ச்சி கெராரில் நடைபெறுகிறது. அவர்களைச் சகோதர சகோதரி என்று எண்ணி அபிமெலக்கு அரசன் அவளைத் தனது இல்லத்திற்குள் எடுத்துக் கொண்டான். ஆனால் கடவுளால் கனவில் அவளைத் தொடக்கூடாது என எச்சரிக்கப்பட்டான் (20:1-4). இப்படி ஏமாற்றியதற்காக, அரசன் ஆபிரகாமைக் கண்டித்து, சாராவுக்கு ஓர் அன்பளிப்பு அளித்துத் தனதுநாட்டில் தங்கிவாழ அனுமதி கொடுத்து அனுப்பினான். இதன் விளைவாக, அவனது வீட்டிற்கும் மந்தைக்கும் இறைவன் கொடுத்திருந்த மலட்டுத்தன்மைச் சாபம் நீக்கப்பட்டது (20:8-18).

கடவுள் வாக்குறுதிப்படி சாரா தனது முதிர்ந்த வயதில் ஈசாக்கு மகனைப் பெற்றாள் (21:1-3). ஈசாக்கின் பால்குடி மறப்புவிழாவில் சாரா பொறாமையினால் ஆகாரையும் இசுமயேலையும் வெளியேறும்படி செய்தாள் (20:8-21. சாரா நூற்று இருபத்துஏழு வயதில் கானான் நாட்டிலுள்ள கிரியத்து அர்பா என்ற இடத்தில் இறந்தாள் (ஆதி 23:1-2). மக்பேலா என்ற குடும்பக் குகையில் புதைக்கப்பட்டாள். இவள் பழைய ஏற்பாட்டிலே எசா 51:2-இல் எபிரேயர்களுக்கு மூதாதையர் என்ற முறையில் குறிப்பிடப்பட்டிருக்கிறாள்.

புதிய ஏற்பாடு பல முறைகள் சாராவை நினைவு கூர்ந்திருக்கிறது. உரோ 4:19-இல் அவளது நீண்ட மலட்டுத் தன்மை ஆபிரகாமின் விசுவாசத்தின் சான்றாக, எடுத்துக்காட்டாகக் கூறப்படுகிறது. 9:19-இல் இசுமயேலுக்குப் பதிலாக, வாக்குறுதியின் வாரிசாகச் சாரா கருவுற்றது தேர்ந்தெடுத்தலின் இறை மேலாண்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கூறப்படுகிறது. எபி 11:11-இல் அவளது சொந்த விசுவாசத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அவள் கணவனுக்குப் பணிந்திருக்கும் தன்மை ஓர் உண்மையான இறை ஆபரணத்திற்கு மாதிரியாகும் என்று 1 பேதுரு 3:6 கூறுகிறது. கலா 4:21-31-இல் வேலைக்காரி ஆகாரோடு இவள் ஒப்பிடப்பட்டிருக்கிறாள். ஆனால் பெயர் குறிக்கப்படவில்லை.

விவிலியத்திற்குப் பிறகு உள்ள யூத மதம் தங்கள் முதல் தாயைப் பக்திக்கு உதாரணமாகவும், மிகச் சிறந்த அழகுடையவளாகவும் பார்க்கிறது. கி.பி. முதல்நூற்றாண்டைச் சார்ந்த அரமேய ஏடுகளின் ஒரு பகுதி இவளை ''எல்லாப் பெண்களையும் விட அன்புடையவள், அதையும் விட அழகுடையவள்'' என்று வருணித்துள்ளது.

2. தோபித்து நூலின் தலைவியாவாள் சாரா. இவள் இரகுவேலுக்கு மகள். பல துன்பங்களுக்குப்பின் தோபியாவுக்கு மணப்பெண்ணானாள் (தோபி 3:7 தொ).

**சாராபு** (SARAPH - மேலான, எரிகின்ற)

இவர் யூதா கோத்திரத்தில் பிறந்தவர். இவர் மோவாபு பகுதியை ஆண்டு இலாகேமுக்குத் திரும்பினார். இவர் சேலா என்பவ

ரின் சந்ததியினர் (1 நாள் 4:22). இலாகேம் என்ற இடம் ஒன்றும் அறியப்படாத இடம்.

**சாராய்** (SHARAI - விடுதலை அளி)

நாடு கடத்தப்பட்டுத் திரும்பியவர்களில் இவரும் ஒருவர். பின்னுயின் புதல்வர்களில் ஒருவர். இவர் எஸ்ராவின் காலத்தில் வாழ்ந்தவர். புறவின மனைவியரை நீக்கியவர் (எஸ் 10:40).

**சாரிது** (SARID - பிழைத்து வாழ்பவர்)

செபுலோன் பகுதியின் தென்எல்லையில் ஓரத்தில் அமைந்த ஒரு நகரம் (யோசு 9:10.12). இது இஸ்ரியேல் பள்ளத்தாக்கின் வடமுனையிலுள்ள சிறிய குன்றான தேல் சாதுத்துவாக அடையாளம் காட்டப்படுகிறது. இது மெகிதோவுக்கு வட-வடகிழக்கில் 9 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்கு நடந்துள்ள அகழ்வாய்வுகள், இங்கு வெண்கலக் காலத்தின் பின்பகுதியிலும், முதலாம் இரும்புக்காலத்திலும், கிரேக்க - உரோமையர் காலத்திலும், தொடக்க இசுலாமியக் காலத்திலும் மக்கள் வாழ்ந்துள்ளனர் என்று காட்டுகின்றன.

**சாருகென்** (SHARUHEN - அருளுடைய வீடு)

இது யூதாவின் தென்மேற்குப் பகுதியிலுள்ள சிமியோனின் ஒரு நகரம் (யோசு 19:6). இணையான பெயர்ப் பட்டியல்களில் இது சில்கிம் என்றும் (யோசு 15:32) சாரயிம் என்றும் (1 நாள் 4:31) அழைக்கப்படுகிறது. இந்த இடம், தற்போதுள்ள காசாவுக்கு 24 கி.மீ. தென்கிழக்கிலுள்ள தேல் ஏல் - பாராவாக இருக்கலாம் என்று சொல்லப்படுகிறது. சாருகென் என்ற பெயர் பதினெட்டாவது அரச குலத்தை நிறுவியவரான முதலாம் அக்மோஸ் என்பவருடைய எகிப்திய ஏடுகளின் மூலம் உறுதியாகிறது. இவர் கைக்சோசியர்களை எகிப்திலிருந்து வெளியேற்றினார் (1570 - 1545). இந்த ஏடுகளின்படி சாருகென் ஒரு கைக்சோசியக் கோட்டை என்றும் மூன்று வருட முற்றுகைக்குப்பிறகு, எகிப்தியர்களால் எடுத்துக் கொள்ளப்பட்டது என்றும் அறிகிறோம். மேலும் 18, 19-ஆவது எகிப்திய அரச மரபில் பாலஸ்தீனத்திலுள்ள எகிப்திய முக்கிய அடித்தளமாகச் சாருகென் இருந்தது. தேல் ஏல் - பாராவில் நடந்த ஒரு சிறிய அகழ்வாராய்ச்சியின் பயனாகச் சில பொருட்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இந்நகரம் கி.மு. 10-ஆம் நூற்றாண்டில் அழிக்கப்பட்டது. அதன்பிறகு 4-ஆம் நூற்றாண்டுகள் வரை யாரும் அதில் குடியேறவில்லை. இதன் மூலம் சிமியோனின் பட்டியல் கி.மு. 900-க்கு முற்பட்டது என்று தெளிவாகிறது. இங்கு 10-ஆவது நூற்றாண்டைச் சேர்ந்த 23 அடி பருமன் உடைய ஒரு பெரிய கல் சுவர் கண்டுபிடிக்கப்பட்டது. இது பார்வோன் சிசாக்கு பாலஸ்தீனத்தின் மேல் படையெடுத்தபோது அவர் கட்டியதாக இருக்கலாம்.

**சாரோனியர்** (SHARONITE)

இச்சொல் சிற்றாய்க்கு அடைமொழியாகச் சொல்லப்பட்டுள்ளது. இவர் சாரோன் சமவெளியிலுள்ள தாவீதின் ஆட்டு மந்தைகளுக்குக் கண்காணிப்பாளர் (1 நாள் 27:29).

**சாரோன்** (SHARON - சமவெளி, சமதள நாடு)

சாரோன் சமவெளி பாலஸ்தீனக் கடற்கரைச் சமவெளியின் நடுப்பகுதியாகும். வடக்கில் கர்மேல் மலையிலிருந்து தெற்கில் யோப்பா வரைக்கும் சுமார் 72 கி.மீ. தொலைவு இப்பகுதி உள்ளது. அகலம் சுமார் 20 கி.மீ. வரை உள்ளது. இந்தப் பகுதி விவிலியத்தில் அரிதாகத்தான் குறிக்கப்பட்டுள்ளது. இது எசா 33:9;35:2-இல் நல்ல வளமைப் பகுதியாகவும், 1 நாள் 27:29-இல் தாவீதின் மேய்ச்சல் நிலமாகவும், எசா 65:10-இல் மேய்ச்சல் நிலமாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. சாரோனில் இருப்பதாகப் பழைய ஏற்பாட்டில் குறிக்கப்படும் ஒரே ஒரு நகரம் அபேக்கு ஆகும் (யோசு 12:18). சாரோனில் பூத்த காட்டுமலர் உன்னத சங்கீதம் 2:1-இல் குறிப்பிடப்பட்டுள்ளது. புதிய ஏற்பாட்டில் அ.ப. 9:35-இல் மட்டும் லித்தாவோடு குறிப்பிடப்பட்டுள்ளது.

இவைகளிலிருந்து, சாரோன் சமவெளி நிலம் வளமையானதாக இருந்தாலும்,

மேலும் பல ஓடைகளால் நீர் வளம் பெற்றிருந்தாலும் பழைய ஏற்பாட்டுக் காலத்தில் குடியேற்றம் இல்லாது இருந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. குடியேற்றம் இல்லாததற்கு இது சதுப்பு நிலப் பகுதியாக இருந்தது தான் காரணமாகும். பழங்காலத்தில் இந்தப் பகுதி, மிகுந்த மரங்கள் நிறைந்த காடுகளாய் இருந்தது. இதனால் விவசாயம் செய்யத் தகுதியற்றதாய் இருந்தது. எகிப்துக்கும், சீரியாவுக்கும் இடையே அமைந்த ஒரு முக்கியமான பாதை, சாரோன் சமவெளியினூடே சென்றது. இந்தச் சமவெளி, இஸ்ராயேலரின் பகுதியாகவும் இல்லை. அவர்கள் வாழ்ந்த பகுதியாகவும் இல்லை.

**சார்கோன்** (SARGON) )

*1. அக்காதின் சார்கோன்: காண்க. அக்காது.*

*2.* முதலாம் சார்கோன் : அசீரிய அரசர்களில் ஒருவர். இவரைப்பற்றி அதிகம் அறிவதற்கில்லை. இவரது முத்திரை, கப்பதோக்கியாவில் கண்டெடுக்கப்பட்ட பழைய அக்காதிய ஏடுகளில் காணப்படுகிறது.

*3.* இரண்டாம் சார்கோன் : பாபிலோனிய அரசர். 3-ஆம் திகிலத்துபிலேசரின் மகன். கி.மு. 722-முதல் 705-வரை அசீரியாவுக்கு அரசனாக இருந்தார். இவரது காலம், அசீரியர்களின் ஆட்சியில் பரந்து விரிந்த வெற்றிகரமான காலமாக இருந்தது. இவர் மூன்று முக்கியமான பகுதிகளில் (அர்மேனியா, பாபிலோன், சீரிய -பாலஸ்தீனம்) வெற்றி அடைந்தார். சார்கோன் தன் சகோதரன் 5-ஆம் சல்மனேசரை அடுத்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். அப்போது சமாரியா அசீரியர்களால் முற்றுகையிடப்பட்டிருக்கிறது. சார்கோன் சமாரியாவை வென்றார். இவர் 27,290 இஸ்ராயேலர்களை வெளியேற்றிவிட்டு மெசபொத்தாமிய மக்களைக் குடியேற்றினார். யூதாவைத் தவிர்த்து சீரிய -பாலஸ்தீனாவில் ஓர் அசீரிய மாவட்டத்தை உருவாக்கினார். கி.மு. 711 - இல் அசுதோதின் கிளர்ச்சியை முறியடித்தார். இதை எசா 20:1 குறிப்பிடுகிறது. இந்தக் கிளர்ச்சியில் எசேக்கியா பங்கெடுப்பதைத் தடுக்க, எசாயா விநோதமான இறைவாக்குச் செயல்புரிந்தார். சார்கோன் தூர் - சருக்கின் என்ற இடத்தில் (தற்போது கொர்சபாது என்றிருக்கிறது) ஓர் அரண்மனை கட்டினார். இது அசீரியர்களின் கட்டடக்கலையை எடுத்துரைக்கும் ஒரு பெரிய நினைவுச் சின்னமாக இருக்கிறது. இவர் போர் நடத்திக் கொண்டு இருக்கும்போது கொல்லப்பட்டார். எந்த இடம் எப்போது என்று குறித்து வைக்கப்படவில்லை.

**சாலபிம் / சாலபின்** (SHAALABIM / SHAALABIN -நரிகளின் இடம்)

இது தாண் இனத்துக்குக் குறிக்கப்பட்ட எமோரியர்களின் நகரம் (யோசு 19:42). ஆனால் தாணின் மக்களால் குடியிருக்க முடியவில்லை. காலப்போக்கில் இந்தச் சாலபிமில் உள்ளவர்கள் யோசேப்பின் இல்லத்திற்குக் கட்டாய வேலையாளர்களாக இருந்தனர் (நீதி 1:35). இந்நகரம் இறுதியாக இஸ்ராயேலர்களால் ஆட்கொள்ளப்பட்டது. சாலமோனுடைய இரண்டாவது நிர்வாக மாவட்டத்தின் ஒரு பகுதியாக மாறியது (1 அர 4:9). சால்போன், சாலீம் என்று சொல்லப்படும் இடங்களும் இதே இடமாக இருக்கலாம்.

அறிஞர் பலர் அய்யலோனுக்கு வடமேற்கில் 5 கி.மீ. தொலைவிலும், பெத்செமேசுக்கு வடக்கில் 13 கி.மீ. தொலைவிலும் உள்ள செல்பித்து என்ற இடந்தான் முன்பு சாலபிமாக இருந்திருக்கும் என்று கருதுகின்றனர்.

**சாலமி** (SALAMIS - அமைதி)

'சாலமி' என்ற சொல்லுக்குப் பொருள் 'அமைதி' என்பதாகும். இது சைப்பிரசில் முக்கியமானநகரம். சீரியாவுக்கு எதிரில் ஆழமில்லாத கிழக்குக் கடல் பகுதியில் அமைந்துள்ளது. புதிய ஏற்பாட்டுக் காலத்தில், பெரிய நகராகவும், சைப்பிரசின் துறைமுகமாகவும் இருந்தது. இந்தச் சாலமி துறைமுகத்துக்குத்தான் பவுலும் பர்னபாவும் தங்களது முதல் மறைபரப்புப் பயணத்தில் முதலில் போய்ச் சேர்ந்தனர். அங்கே யூதர்களின் செபக் கூடங்களில் கடவுள் வார்த்தையை

அறிவித்தனர் (அ.ப. 15:5). பழைய கிறிஸ்துவ பாரம்பரியத்தின்படி, பர்னபா இங்கேதான் யூதக் கூட்டத்தினரால் வேத சாட்சியாக உயிர் நீத்தார். கி.பி 116-17-இல் யூதஇன மக்கள் வன்முறையாகக் கிளர்ச்சி செய்தனர். இதனால் திரேசன் என்பவரால் நகரம் அழிவுக்குள்ளாகியது.

**சாலபு** (ZALAPH - ஒருவகை முட்செடி)

கானூனின் (ஆனூன்) தந்தை; இவர் நெகேமியாவின் காலத்தில் எருசலேம் சுவர்களைப் பழுதுபார்க்க உதவியவர்களுள் ஒருவர் (நெகே 3:30).

**சாலமோனின் ஏற்பாடு** (SOLOMON, TESTAMENT OF)

சாலமோனைப்பற்றிய வரலாற்று விவரிப்புகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட ஒரு சிக்கலான புனை பெயர் நூலாகும். இது மந்திர சாதனங்களாலும் நோய்களை உண்டாக்கும் பேய்களைக் கட்டுப்படுத்துவதாலும் குணமளிப்பதில் அக்கறை செலுத்துகிறது. இந்நூல் தோன்றியதாக எகிப்து, பாலஸ்தீனம், சிறிய ஆசியா, பாபிலோன் போன்ற நாடுகள் கூறப்படும். முந்தையப் பொருள்கள் உள்ளடங்கியிருந்தாலும், இந்நூல் கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் தோன்றியிருக்கலாம். இது ஒரு யூத நூலாகத் தோன்றியிருக்கலாம். இப்பொழுது காணப்படும் நிலையில் இந்நூலில் சில கிறிஸ்தவக் கூறுகளும் உண்டு. சாலமோனை மந்திரவாதிகள் மற்றும் பேயோட்டுபவர்களின் தலைவராகக் கருதும் பாரம்பரியக் கருத்தைப் பிரதிபலிக்கிறது. 1 அர 5:9-14-க்கு விளக்கமாக கி.பி. முதல் நூற்றாண்டில் இத்தகைய பாரம்பரியம் நிலவியதாகத் தெரிகிறது.

**சாலமோனின் சங்கீதங்கள்** (SOLOMON, PSALMS OF)

இவை விவிலியத்தில் காணப்படாத 18 சங்கிதங்கள் அடங்கிய ஒரு புனைபெயர்த் தொகுப்பு. இது கிரேக்க மற்றும் சீரிய மொழியில் உள்ளது. விவிலியத்தில் உள்ள சங்கீதங்களிலிருந்து பிரித்துக் காட்டுவதற்காக இத்தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. சாலமோனுக்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. 19-ஆம் நூற்றாண்டிலிருந்துதான் இந்நூல் ஆய்வாளர்களின் கவனத்தை ஈர்க்கத் தொடங்கியது.

முதலில் இது கிரேக்க மொழியில் எகிப்தில் எழுதப்பட்டது என எண்ணினர். ஆனால் இப்போது இது யூதேயாவில் கி.பி. 70-இல் எபிரேய மொழியில் எழுதப்பட்டது; பின் கிரேக்கத்தில் மொழிபெயர்க்கப்பட்டது என்று கருதுகின்றனர். ஆனால் தற்போது இதன் எபிரேய மூலம் காணப்படவில்லை. இந்நூல் ஒரு பரிசேயர் குழுவால் எழுதப்பட்டது என்று சிலரும், எஸ்ஸேனியர் குழுவால் எழுதப்பட்டதுஎன்று வேறு சிலரும் கருதுவர். இந்தச் சங்கீதங்கள் ஏறக்குறைய ஒரே நடையில் பல கருத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. யூதர்களின் சமய அரசியல் நிகழ்ச்சிகள் இதில் பெரிதும் காணப்படுகின்றன. இது விவிலியத்தில் உள்ள சங்கீதம் போன்ற அமைப்பைப் பெரிதும் தழுவி உள்ளது. இதிலும் விசுவாசம், சோகம், மகிழ்ச்சி, நம்பிக்கை போன்ற உணர்வுகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. வரலாற்று மற்றும் இறுதிக்காலக்கருத்துகளுடன், இந்நூலில் வரும் செபங்களும் போற்றுரைகளும் இறைமக்களது பாவம், இறைவனது இரக்கம் ஆகியவற்றில் கவனம் செலுத்துகின்றன. இசைக் குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன.

இஸ்ராயேல் நாடு உள்நாட்டு, வெளிநாட்டுக் கேடுகளால் தாக்கப்பட்டபோது இது இயற்றப்பட்டதால் இது அவர்களின் பக்தியின்மையையும், வெளிவேடத்தையும் வெகுவாகக் கண்டிக்கிறது. இறைவனுக்குப் பயப்படுவோர் நல்லவர், நீதிமான், பக்தன் என அழைக்கப்படுகின்றனர்.

ஆலயத்தை மாசுபடுத்திய புறவினத்தாரை இது சபிக்கிறது. இவ்வாறு இஸ்ராயேல் அடிமையாக்கப்பட்டது அவர்களின் பாவத்திற்கு இறைவன் வழங்கும் தண்டனையாகும். இதைப் போன்றதொரு கருத்து சாக்கடல் சுருள்களிலும் காணப்படுகிறது. பழைய ஏற்பாட்டில் இறைவாக்கினர்கள், பாபிலோ

னியர்கள் அசீரியர்கள் ஆகியோர் புறவினத் தவராய் இருப்பினும் கடவுள் அவர்களை இஸ்ராயேலைத் திருத்துவதற்குக் கருவிக ளாய்ப் பயன்படுத்தினார் என்று கூறினர். இக்கருத்திலிருந்து இந்நூலின் ஆசிரியர் அதி கம் வேறுபடவில்லை. ஆயினும் புறவினத் தார் பலயூதர்களைச் சிலை வழிபாட்டுக்கு இழிவுபடுத்தியதால், இவர்கள் செயல் தன் னிலேயே தீயதாகும். இதன் ஆசிரியர் தாவீது குலத்தில் தோன்றும் அரசரும் மெசி யாவுமான ஒருவர் மூலமே மீட்பை எதிர் பார்க்கிறார். தீர்வுகாண்முடியாத பிரச்சனை யான மனிதனின் சுதந்தரம் - இறைவனின் திட்டம், இரண்டிற்குமுள்ள தொடர்பைப் பற்றிய ஒரு சிக்கல் இதன் ஆசிரியர் மனதி லும் இருப்பதை நாம் சில இடங்களில் காண்கிறோம். கடவுள் பூமிக்கு வரும்போது பாவிகள் அழிக்கப்படுவர்; மாறாக நீதிமான் களோ ஆசிர்வதிக்கப்படுவர் என்பதை அவர் கருத்து எனலாம்.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் வாழ்ந்த யூதர்களின் நம்பிக்கை பற்றி அறிய இந்நூல் பெரிதும் உதவுகிறது. நற்செய்தியில் கூறப் பட்டுள்ள நிகழ்ச்சிகளுக்கு இது ஒரு பின்னணி யாக உள்ளது. ''தன் ஒரே பேரான மகன்'', ''தாவீதின் வழியில் மெசியா தோன்று வார்'' ஆகிய சில கருத்துக்கள் புதிய ஏற்பாட் டுடன் பெரிதும் ஒத்து அமைகின்றன.

**சாலமோனின் ஞானம்** *(WESDOM OF SOLOMON, BOOK OF - திருநூல்)*

*1.* **முன்னுரை:** இந்நூல் முதலிலேயே கிரேக்க மொழியில் எழுதப்பட்டது. எழுபது நூலைச் சேர்ந்ததன்று. வுல்காத்தா வாசகத் தில் தொடக்கத்திலிருந்து ஏற்றுக்கொள்ளப் பட்டது. கத்தோலிக்கத் திருமுறைப்பட்டிய லில், துணை அல்லது இணைத்திருமுறைப் பட்டியலைச் சேர்ந்தது. விவிலியத்திலேயே புலமைக்கும், உயர்ந்த சிந்தனைக்கும், கலை நயமிக்க நடைக்கும் உரிய எபிரேய, கிரேக்கப் பண்பாடுகளின் கூறுகளை இணைக்கும் நூல்களில் ஒன்றாகும்.

*2.* **பெயர்:** கிரேக்க, சீரிய வாசகங்கள், இந் நூலைச் ''சாலமோனின் ஞான நூல்'' என்று அழைக்கின்றன. வுல்காத்தா வாசகம் இந் நூலை வெறுமனே ''ஞான நூல்'' என் றழைக்கிறது. இந்நூலைக் குறிக்க இரு பெயர் களையும் பயன்படுத்தலாம். இந்நூலைப் பற்றிய காலத்தால் முந்திய குறிப்பு கி.பி. 3-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ''முராத்தோரி யின் பட்டியலில்'' காணப்படுகிறது. இப் பட்டியல் இந்நூலைப் புதிய ஏற்பாட்டுத் திருமுறைப் பட்டியலின் ஒரு பகுதியாகக் கொடுக்கிறது. மேலும் ''சாலமோனின் மகி மைக்காக அவரது நண்பர்களால் எழுதப்பட் டது ஞானநூல்'' என்றும் கூறுகிறது.

*3.* **சமய, வரலாற்றுப் பின்னிலையும் நோக் கமும்:** கி.மு. 2-1-ஆம் நூற்றாண்டுகளில் யூதத்துவம் மிகக்கடுமையான இக்கட்டு களை எதிர்கொண்டது. குறிப்பாக எகிப் தில், சிறப்பாக அலக்சாந்திரியாவில், இந் நிலை நிலவியது. மத்தியதரைக் கடற் பகுதி களில், அலக்சாந்திரியா ஒரு பெரிய அறி வியல் மையமாக விளங்கியது. அது, சிதறிக் கிடந்த யூதர்களின் மிகப் பெரிய மையங்க ளில் ஒன்றாகும். அங்குப் பிற இன மக்க ளிடையே வாழ்ந்த யூதசமூகம், அக்காலத்தில் நிலவிய கிரேக்கப் பண்பாட்டு உலகுடன் பல வழிகளில் தொடர்பு கொண்டது. விஞ்ஞான அறிவுவளர்ச்சி உலகின் அழகையும் இரகசி யங்களையும் எடுத்துக்காட்டிற்று *(7:17-20)*. பல சமயங்களும் தத்துவ இயக்கங்களும் ஞானம், மீட்பு, வாழ்வின் உண்மைப் பொருள் ஆகியவை பற்றிப் பலவகையாக எடுத்துக்கூறின. அதன் விளைவாக ஒரு வகைக் கலப்புத் தன்மையுடைய தனிநபர்ப் பண்புடைய மனப்போக்கும், சமய அக்கறை யற்ற போக்கும், பரம்பரைக் கருத்துக்கள் பற்றிய அதிருப்தியும் நிலவின. அதற்கு யூத சமூகமும் விதிவிலக்காக அமையவில்லை. அந்நிலை யூதத்துவத்தைப் பலவாறு பாதித் தது. சில யூதர்கள் தங்கள் விசுவாசத்தைக் கைவிட்டுப் *(2:12)* பிற இன சமயப் பழக்க வழக்கங்களையும், சமய அக்கறையற்ற தத்து வங்களையும் பின்பற்றத் தொடங்கினர் *(2:1-20)*. மற்ற யூதர்களும் இந்த இறைபயம் அற்றவர்களைப் பின்பற்றும் ஆபத்திலிருந்த னர். இந்த அறிவியல் சூழ்நிலையால் ஏற்

பட்ட ஆபத்தோடு, செமித்திய இனத்துக்கு எதிராக எழுந்த இயக்கமும், சமயத்தின் பெயரால் ஏற்பட்ட கொடுமைகளும், தங்கள் விசுவாசத்திற்குப் பற்றுறுதியாக இருந்த யூதர்களை எதிர்கொண்டன. எகிப்தில் ஏழாம், ஆறாம் தோலமியர்கள் காலத்தில் (*கி.மு. 145-116; 116-80*) யூதர்கள் கொடுமைப் படுத்தப்பட்டனர் (*ஞான 2:10-20; 5:1; 10:15; 15:14; 16:4; 17:2*). இவையாவும் சேர்ந்து, காலம்காலமாக யூதர்களிடையே நிலவிய வினைப்பயன் கோட்பாட்டுப் பிரச்சினையை மீண்டும் தலைதூக்கச் செய்தன. தீயவர்களும் இறைப்பற்று அற்றவர்களும் செழிப்படைகின்றனர். நீதிமான்களோ துன்பம் அடைகின்றனர். இது எப்படி நிகழ்கிறது? எப்படி, எங்கே இறைவன் தமது நீதியைச் செயல்படுத்துகிறார்? இப்பிரச்சினைகளோடு பக்தியுள்ள யூதர்கள் போராட வேண்டியிருந்தது.

இந்நிலையில் சாதாரண யூதர்களுக்கு விசுவாசப்பாதுகாப்பு வேண்டியிருந்தது. அவர்கள் உற்சாகப்படுத்தப்பட வேண்டும். அவர்களது விசுவாசம் எந்த விதத்திலும் குறையுடையதன்று. சிலை வழிபாட்டால் சீர்கெட்ட எகிப்திய, கிரேக்கப் பண்பாடுகளிலோ, உலோகாயுத நல்வாழ்விலோ, வெற்றியளிக்கும் உண்மையான ஞானம் அடங்கியிருக்கவில்லை (*3-9*). அது இறைவனிடமிருந்து வருவதாகும். அத்தகைய ஞானம் இஸ்ராயேலின் ஞானம், மற்றப் பிற இனப்பண்பாடுகளையும் சமயங்களையும் விட மேலானது என்று காட்டக்கூடிய ஒரு காப்புரை வேண்டியிருந்தது. அப்படிப்பட்ட நூலாகும் இந்த ஞானநூல்.

மேலும் நல்ல புலமை பெற்ற யூதர்களில் சிலர் பிறமதத்தினருக்குத் தங்களது சமயத்தை, நயமான முறையில் எடுத்துக்கூற முயன்றனர். அதற்காகக் கிரேக்கப் பண்பாட்டிற்கும் இஸ்ராயேல் பாரம்பரியத்திற்குமிடையேயுள்ள தொடர்புகளைத் தேடினர். இரண்டுக்கும் இணக்கமான கருத்துக்களையும் இலக்கிய மரபுகளையும் பயன்படுத்தித் தங்கள் சமயத்தைப் பிற மதத்தினரையும் கவரும் வண்ணம் எடுத்துக் கூற முயன்றனர். அந்த முயற்சியின் விளைவே ஆகும் இந்நூல்.

**4. ஆசிரியரும் அவரது நோக்கமும்:** இவ்வாறு சமயக் காப்புரையாகவும் விளக்கமாகவும் தோன்றியதாகும் ஞானநூல். இந்நூலின் ஆசிரியர், அவரது வரலாறு ஆகியவை பற்றி ஒன்றும் தெரிவதற்கில்லை. சாலமோன் இந்நூலுக்கு ஆசிரியர் என்று கூறுவது, பிற ஞான நூல்களாகிய பழமொழி, உன்னத சங்கீதம், திருவுரையாளர் போன்றவற்றில் வருவது போன்று, நூலுக்கு அதிகாரம் அளிக்கும் ஓர் இலக்கிய யுக்தியாகும்; ஒரு புனை பெயராகும். சாலமோனின் பெயரால் பேசுவதும், ஆள்பவர்களையும் (*1:1*), அரசர்களையும் (*6:2*) பார்த்துப் பேசுவதும் இந்த யுக்தியின் ஒரு கூறே. இந்நூலின் ஆசிரியர் பீலோ, செருபாபேல், அப்பொல்லோ அரிஸ்டாபூலஸ் ஆகியவர்களில் ஒருவராக இருக்கக்கூடும் என்று அடையாளம் காட்டப்பல வீண் முயற்சிகள் நடந்துள்ளன.

நூலிலிருந்து ஆசிரியரையும் அவரது பண்புகளைப் பற்றியும் சிறிது அறியலாம். இந்தப் பெயர் தெரியாத ஆசிரியர் ஒரு பக்தியுள்ள, புலமைமிக்க, சமய ஆர்வமுடைய கிரேக்க மொழி பேசும் யூதர். யூத சமயத்தை எதிர்கொண்ட பிரச்சனைகளுக்குத் தமது சமய நூல்களிலே விடை தேடுகிறார். முந்தைய புனித நூல்களைப் பயனுள்ள விதத்தில் தியானித்துத் தமது முடிவுகளை எடுத்துக் கூறுகிறார். அந்நூல்களின் இறைவழி காட்டுதல் வழியாகத் தாம் அறிந்த ஞானத்தை அறிவிக்கிறார்.

ஒருபுறம், இந்நூலின் வழியாகச் சிதறிக் கிடந்த கிரேக்க மொழி பேசிய யூதர்களுக்கு நம்பிக்கையும் ஆறுதலும் உற்சாகமும் அளிக்கிறார். யூத விசுவாசத்தைப் பாதித்த எகிப்திய, கிரேக்கப் பண்பாட்டுத் தத்துவங்களையும் கருத்துக்களையும் பயன்படுத்தி இக்காப்புரையை எழுதுகிறார். யூதத்துவத்திற்கு எதிராகத் தொடுக்கப்பட்ட தாக்குதல்களிலிருந்து அதைப் பாதுகாக்கவும், வாழ்வுக்கு

உண்மையான பொருள் அளிக்கவும் யூதர் களது விசுவாசத்தைப் பலப்படுத்தவும், அதற்குப் பிரமாணிக்கமாக இருக்க அவர்களைத் தூண்டவும் உற்சாகப்படுத்தவும் இந்நூலை எழுதுகிறார்

மறுபுறம் அதி. 13-15-இல் சிலை வழி பாட்டு மடமை பற்றிய விவரிப்பையும் அதி. 16-19-இல் வரும் எகிப்தியர், இஸ்ரா யேலர்களுக்கிடையே காணப்படும் வேறு பாடுகள் பற்றிய விவரிப்பையும் பயன் படுத்தி, பிற இனத்தார்க்கு யூதசமயத்தின் மேன்மையை எடுத்துக் காட்டவும், முடிந் தால் - அவர்களைக் கவரவும் முயற்சி செய்கிறார் ஆசிரியர்.

**5. நூல் தோன்றிய இடம்:** சமய, வரலாற்றுப் பின்னணிகள், எகிப்தை, குறிப்பாக அலக்சாந்திரியாவை, இந்நூல் தோன்றிய இடமாகச் சுட்டுகின்றன. ஆசிரியர் கிரேக்கப் பண்பாட்டையும் தத்துவ இயல்களையும் அறிந்திருந்தார் என்பது அவர் கிரேக்கச் சொற்களைப் பயன்படுத்தும் முறையி லிருந்து தெரிகிறது. கிரேக்கத் தத்துவங்கள் செழிப்புற்றிருந்த அலக்சாந்திரியா ஆசிரிய ருக்கு இதற்கான வாய்ப்பளித்திருக்கலாம். மேலும் பழைய ஏற்பாட்டில், அலக்சாந் திரியாவில் செய்யப்பட்ட எழுபது நூலின் கிரேக்க மொழியும், இந்நூலின் மொழியும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. இந் நூலின் சிந்தனைப்போக்கு அதே காலத்தில் அலக்சாந்திரியாவில் நிலவிய யூத சிந் தனைப்போக்கொடு ஒத்துள்ளது. மேலும் எகிப்திய சிலை வழிபாடு, விடுதலைப் ப்ய ணத்துக்கு இஸ்ராயேலர் அங்கு அனுபவித்த அடிமைத்தனம் ஆகியவைபற்றி அதிகம் அக் கறை கொள்கிறார் ஆசிரியர். அலக்சாந்திரி யாவில் நிலவிய இலக்கியத் தரத்தில் அவர் ஆற்றல் பெற்றிருந்தார் என்று கிரேக்க மூல நூல் காட்டுகிறது. இவையெல்லாம் இந் நூல், எகிப்தில், குறிப்பாக அலக்சாந்திரியா வில், தோன்றியிருக்கக்கூடும் என்று சுட்டு கின்றன.

**6. எப்போது தோன்றியது:** சிந்தனை வளர்ச்சியின் அடிப்படையில் இந்நூல் தோன்றிய காலத்தை ஓரளவு நிர்ணயிக்க லாம். இந்நூல் பழைய ஏற்பாட்டின் காலத் தால் முந்திய கிரேக்க மொழி பெயர்ப்பான எழுபதுநூலைப் பயன்படுத்தியுள்ளது என் பது உறுதி. எழுபதுநூல் ஏறக்குறைய கி.மு. 250-ஐ ஒட்டித் தோன்றியதாகும். ஆகவே கி.மு 250-க்கு முன் இந்நூல் தோன்றியிருக்க முடியாது. நூலின் கோட்பாடு இந்நூல் மிக வும் பிந்திய காலத்தைச் சேர்ந்தது எனச் சுட்டுகிறது. மேலும் கி.மு. முதலாம், இரண் டாம் நூற்றாண்டுகளில், இந்நூலில் காணப் படுபவை போன்ற இலக்கியமும், சமய அறி வும் யூதர்களிடையே பரவியிருந்தன. நூலில் காணப்படும் கிரேக்கப் பாதிப்பும் இக்காலத் தையே சுட்டுகிறது. மேலும், பீலோ என்ற யூத தத்துவவியல் வல்லுநரின் (கி.மு. 20-கி.பி.54) நூல்களையோ, புதிய ஏற்பாட் டையோ அறிந்திருப்பதாகத் தெரிய வில்லை. ஆகவே ஞானநூல் பீலோவுக்கு முந்தியது எனலாம். பீலோவின் நூல்கள் புதிய ஏற்பாட்டுக்கு முந்தியவையாகும். ஞானநூலைப் புதிய ஏற்பாடு பயன்படுத்துவ தாகத் தெரிகிறது (உரோ 1:8-22; எபே 6:11-17; யோவான்; எபி 1:2-3;...). இவற்றை யெல்லாம் கருத்தில் கொண்டு ஞானநூல் கி.மு. முதலாம் நூற்றாண்டின் முற்பகுதி யில், குறிப்பாக கி.மு. 50-ஐ ஒட்டி, தோன்றி யிருக்கலாம் என்று கூறலாம். ஒரு வேளை இந்நூலே பழைய ஏற்பாட்டின் இறுதியான நூலாகலாம்.

ஒருசிலர், இந்நூலின் கலைச் சொற்றொகு தியை ஆய்வு செய்து, எகிப்தில் உரோமைப் பேரரசு வேரூன்றிய கி.மு. 28-க்குப் பின் இந்நூல் தோன்றியிருக்க வேண்டும் என்று கருதுவர்.

**7. அயல் பாதிப்பு:** கிரேக்க மொழியில் எழுதப்பட்ட இந்நூல், அம்மொழிப் பண்பா லும், கிரேக்கப் பண்பாட்டாலும் ஓரளவு பாதிக்கப்பட்டிருப்பதில் வியப்பில்லை. கோமர், செனேபோன், பிளேட்டோ, ஸ்தோ யிக்குகள், பித்தகோரசு ஆகியோருடைய நூல்களை ஆசிரியர் வாசித்திருப்பதாகத் தெரிகிறது. ஆன்மாவின் அழியாமைபற்றிய

கருத்துக்கள், ஆசிரியரது விவரிப்புக்களைப் பாதித்துள்ளது. இது எபிரேயக் கருத்தன்று. கிரேக்க தத்துவ இயலாகும். ஆன்மா ஆவியாகக் கருதப்படுகிறது. இது ஸ்தோயிக்கு தத்துவக்கருத்தோடு ஒத்துள்ளது. உடல் ஒரு குடிசையாகும் என்ற கருத்து *(9:15)* பிளேட்டோ, பித்தகோரசு ஆகியோரின் நூல்களில் காணப்படுகிறது. மற்றக் கிரேக்க தத்துவக் கருத்துக்கள் *2:22-23; 6:18* தொ; *8:4.7.20; 9:15* ஆகிய பகுதிகளில் காணப்படுகின்றன.

கிரேக்க மொழிநடையும் ஞானநூலில் பெரிதும் இடம் பெறுகிறது. நூலில் காணப்படும் மேற்கோள், கூற்றுக்கள் வெறும் தொகுப்பாக அமையவில்லை; கிரேக்க தத்துவ இயல் முறையில் தொடர் வாதமாக அமைந்துள்ளன. ஞான நூல் கிரேக்கப் பண்பாட்டாலும் தத்துவங்களாலும் பாதிக்கப்பட்டுள்ளது என்பதை நாம் மிகைப்படுத்தக் கூடாது. பல தத்துவங்கள் பற்றிய அறிவை ஆசிரியர் காட்டுகிறார். ஆனால் இந்த அறிவு மேல் எழுந்தவாரியானதாகும். இது அலக்சாந்திரியாவைச் சேர்ந்த எந்தச் சராசரிக் கல்வி பெற்ற குடிமகனும் கொண்டிருக்கக் கூடிய அறிவையே காட்டுகிறது. இதை அன்றாட உரையாடலிலிருந்து அவர் பெற்றிருக்கலாம்.

இஸ்ராயேல், கிரேக்கக் கோட்பாடுகளைச் சேர்த்து, ஆசிரியர் கலப்படம் செய்யவில்லை. அவரது போதகம் இஸ்ராயேல் பாரம்பரியத்தைச் சேர்ந்ததே. அதற்கு எப்போதும் பிரமாணிக்கமாய் இருக்கிறார். ஆனால் அதற்குக் கிரேக்கப் புறவடிவைக் கொடுக்கிறார். தாம் வாழ்ந்த சூழ்நிலைக்கு ஏற்றவாறு தமது செய்தியை எடுத்துக்கூறி, கிரேக்கக் கருத்துக்களையும் இலக்கிய முறைகளையும் பயன்படுத்தத் தயங்கவில்லை. இவ்வாறு உடல், ஆன்மா பற்றிய கிரேக்கக் கருத்துக்கள் ஆசிரியருக்கு உதவியதாகத் தெரிகிறது. ஆனால் அவரது சிந்திக்கும் முறை யூதத்தன்மையுடையது. ஆசிரியர், மனித ஆத்மா அழியாதது என்ற முடிவுக்கு அதன் பருப்பொருளற்ற தன்மையிலிருந்து வரவில்லை. மாறாக இறைவனோடு மனிதன் கொள்ளும் உறவிலிருந்து வருகிறார். நீதிமானின் சன்மானத்தைக் ''கடவுளின் புதல்வர்களுள்ள இடம்'', ''பரிசுத்தர்களோடு பங்கு'' *(5:5)* என்று விவரிக்கிறார். ஆன்மாவின் அழியாமை என்ற கருத்து தத்துவ இயலாக அமையாமல் பழைய ஏற்பாட்டுப் பக்தியின் வளர்ச்சியாக அமைந்துள்ளது. இத்தகைய போக்கைக் கும்ரான் ஏடுகளிலும் காணலாம். நூலுக்கு அடிப்படையான நீதிமான்களின் அழியாமையும், தீயோரின் அழிவும் பற்றிய கருத்துக்கள் கிரேக்க வடிவத்தைக் கொண்டிருந்தாலும், கிரேக்க மரபுக்கு மாறாகத் தீமையின் தோற்றத்துக்கு அலகையே காரணம் என்று கூறப்படுகிறது *(2:24)*.

ஞானத்தின் 21 பண்புகள் *(3 x 7*, நிறைவைக் குறிக்கும் எண்கள்), தலையாய நற்பண்புகள் *(8:7)* ஆகியவை பற்றிய கூற்றுக்கள் ஆசிரியர் கிரேக்க தத்துவச் சொற்களை அறிந்திருப்பதை மட்டும் காட்டவில்லை; தமது ஒரே இறைவனின் மிகச் சிறந்த பண்பாகிய ஞானத்தில் காணப்படாத எதுவும், தத்துவ ஞானிகள் ''உலக ஆன்மாவை''ப் பற்றிக் கூறுவதில் இல்லை என்று தமதுவாசகர்களின் மனதில் பதியச் செய்ய விரும்புவதைக் காட்டுகிறது. ஞானத்தை விவரிக்கும்போது, கிரேக்கச் சொற்களைப் பயன்படுத்தினாலும், தமது இறையொருமைக் கோட்பாட்டுக்குப் பங்கம் விளைவிக்காத முறையில் பயன்படுத்துகிறார். பிறமதத்தினரைப் பற்றிய ஆசிரியரது பல கூற்றுக்களோடு இதையும் மனதில் கொண்டால், ஆசிரியர் யூதர்களையும் பிற மதத்தினரையும் தனது வாசகர்களாக மனதில் கொண்டு எழுதுகிறார் எனத் தெரியும். இவ்வாறு கிரேக்க மொழியையும் தத்துவக் கருத்துக்களையும் பயன்படுத்தி எபிரேய இறையியல் சிந்தனையில் காட்டுமிராண்டித்தனமானதும், வெறுக்கத்தக்கதும் எதுவுமில்லை என்றும் அவற்றைவிட இது மேலானது என்றும் காட்ட விழைகிறார் ஆசிரியர்.

**8. இலக்கியப் பண்புகள்:**

**8.அ) மொழி:-** இந்நூலின் முதற்பகுதியாவது *(அதி 1-10)* முதலில் எபிரேயத்தில்

எழுதப்பட்டு, பின்பு கிரேக்கத்தில் மொழி பெயர்க்கப்பட்டது எனச் சிலர் கூறியுள்ள னர். இதற்கு அவர்கள் காட்டியுள்ள காரணங் கள்: கருத்துக்களை மொழி பெயர்ப்பதற்குப் பதிலாகச் சொற்களை மொழி பெயர்ப்ப தால், கிரேக்க வாசகத்தில் காணப்படும் மொழித்தடுமாற்றம்; இப்பகுதியில் காணப் படும் எபிரேயப் பண்புகள் (1:1; 5:14-16; 2:5-6; 4:13-14; 5:16; 6:7; 8:4; 9:1.3.9-11; 10:1.8.9); பின்பகுதியில் காணப்படுவது போல் இப்பகுதியில் கிரேக்க இலக்கணக் கூறுகள் அதிகம் காணப்படாமை; எபிரேய யாப்புப் பண்பாகிய இணையமைப்புகள் அதிகம் காணப்படுதல்; இப்பகுதியின் வாச கர்கள், பின்பகுதியின் வாசகர்களிடமிருந்து வேறுபடுவதாகத் தெரிகிறது. ஆகவே இப் பகுதியில் மொழி நடை கடினமாக உள்ளது. இவற்றையெல்லாம் கருதி இவ்விருபகுதிகளும் வெவ்வேறு காலத்தில் எழுதப்பட்டு ஒன் றாக்கப்பட்டன என்று பலர் விளக்குவர். இப்போது இந்நூல் முதலிலேயே கிரேக்க மொழியில்தான் எழுதப்பட்டது என்று ஆய் வாளர்களால் பொதுவாக ஏற்றுக் கொள்ளப் படும். ஏனெனில், மொழிபெயர்ப்பில் காணப்படும் தடைகள் இந்நூலில் இல்லை. கிரேக்க மொழிநடை சுதந்தரமாக, சரளமாக ஓடுகிறது. நூலில் காணப்படும் மோனை அமைப்பு, சந்தம் சிலேடை போன்ற இலக் கிய யுக்திகளை ஒருமொழி பெயர்ப்பாளர் அமைத்திருக்க முடியாது. ஆசிரியர் பழைய ஏற்பாட்டை எழுபது நூலின் கிரேக்க மொழி யில்தான் அறிந்து பயன்படுத்துகிறார். ஆகவே நூல் முழவதும் கிரேக்க மொழியில் நேரடியாக எழுதப்பெற்றது என ஏற்றுக் கொள்வது சாலச்சிறந்தது.

**8.ஆ) இலக்கியக் கூறுகள்:**
நூல் பாடல்களையும், அறவுரைகளையும் கொண்டுள்ளது. இந்நூல் நாம் கொண்டிருக் கும் வடிவில் வாய்மொழியாய்த் தோன்றிய தன்று. ஏனெனில், அது முன்னிலைப்படுத்திப் பேசும் பேச்சு முறையைப் பயன்படுத்துவது செயற்கைத் தன்மையுடையதாகும். பாடல் வடிவு முன்பகுதியில் சிறந்து காணப்படு கிறது (அதி 1-5;9); மற்றப் பகுதிகளில் இங்கு மங்குமாகக் காணப்படுகிறது; அதி 13-19-ஐ விட அதி 6-8;10-12-இல் அதிகம் காணப்படு கிறது. கிரேக்க, எபிரேய இலக்கிய அமைப் புகள் கலந்து காணப்படுகின்றன. சில இடங் களில் நடைமிகக் கவர்ச்சியாக உள்ளது. ஆசிரியர் பல இடங்களில் வண்மைமிக்க, உற்சாகமிக்க, தூண்டுகிற இலக்கிய நடை யைக் காட்டுகிறார். அவர் நன்கு தேர்ந் தெடுக்கப்பட்ட, மனதில் பதியக்கூடிய சொற்களைப் பயன்படுத்துவதில் ஆர்வம் காட்டுகிறார்.

பொருளடக்கத்தைப் பொறுத்தமட்டும் இந்நூல் ஞான இலக்கியங்களைச் சார்ந்ததா கும். ஆனால் இவ்விலக்கியத்தின் முக்கிய அமைப்பான இணையமைப்பு முதலில் கடைப்பிடிக்கப்பட்டு, சிறிதுசிறிதாகத் தளர்த்தப்பட்டு, பின்பு முழுவதுமே கைவிடப் படுகிறது. பழமொழி, யோபு, திருவுரை யாளர், சீராக் ஆகியவற்றின் பாரம்பரியத்தி லிருந்து, இந்நூல் வெகுதூரம் கடந்துவிட் டது. இது அயல்பாதிப்பைக் குறிப்பாகக் கிரேக்கப் பாதிப்பையே காட்டுகிறது. நூல் தியானமுறையில் அமைந்த அறவுரையா கும். இந்தத் தியான முறை அறிஞரது ஆழ்ந்த தியானமாக இல்லாமல், பொது மக்களுக்கு ஏற்றவாறு அமைந்துள்ளது. ஆசி ரியர் தாம் எடுத்துக் கொண்ட பொருளைப் பல கோணங்களிலிருந்து தமக்கே உரிய முறையில் அணுகுகிறார்.

**8.இ) இலக்கிய யுக்திகள்:** அதி 1-9-இல் ''தொகுப்பு முறை''யைப் பயன்படுத்தி, ஞானம் பற்றிய தமது போதகத்தை அளிக் கிறார் ஆசிரியர். ''தொகுப்பு முறை'' என்பது முந்தைய விவிலிய நூல்களிலிருந்து கருத்துக் களையும், சொற்றொடர்களையும் எடுத்து, அவற்றை ஞான இலக்கியச் சூழ்நிலைக் கேற்ப ஒன்று திரட்டித் தருவதாகும். இப்பகுதி யில் கிரேக்கப் பண்பாடு அளிக்கக்கூடிய சாதனங்களையெல்லாம் பயன்படுத்தினா லும், சிந்தனைப்போக்கு முழுவதும் யூத முறையிலேயே அமைந்துள்ளது. இதன் விளைவு திட்டமிட்ட இறையியல் அன்று; ஆசிரியர் எடுத்துக் கொண்ட பொருள்பற்றி

முந்தைய வேதாகம நூல்களில் காணப்படு பவற்றை ஒன்று சேர்த்துத் தரும் இறையிய லாகும்.

ஆசிரியர் பயன்படுத்தும் மற்றொரு யுக்தி சொல்லாட்சித் திறம் வாய்ந்த தொடர்வாத மாகும். இம்முறை ஒரு எதிரியைக் கற்பனை செய்து அவனோடு வாதாடுவதாகும். இதில் வஞ்சகப்புகழ்ச்சி அணி தாராளமாகப் பயன் படும். பல பொருள்கள் பற்றியும், சுதந்தர நடையில் வாதம் நடக்கும் இம்முறையை ஸ்தோயிக்கு வல்லுநர்கள் பெரிதும் பயன் படுத்தினர். ஆசிரியர் இம் முறையைப் பயன் படுத்தி வேதாகமத் தலைப்புகள் பற்றி, குறிப்பாக முடிவுகாலத் தீர்ப்புப்பற்றித் தம் அறவுரைகளை அமைக்கிறார்.

அதி *10-12; 16-19*-இல் ஆசிரியர் ''மிட்ராஷ்'' என்ற இலக்கிய வடிவத்தைப் பயன்படுத்து கிறார். இந்த இலக்கிய வடிவம் பற்றி, மிட்ராஷ் இலக்கியம் என்ற தலைப்பின்கீழ் விரிவான கட்டுரை ஒன்று தரப்படும். இங்கு இவ்வடிவம் பற்றிச் சுருக்கமாகச் சிலவற் றைத் தருகிறோம். இது வேதாகம வாக்கு களைப் பற்றிய மறையுரையாகும். யூத செபக் கூடங்களில் தோன்றி வளர்ச்சியுற்றது. இம் முறை வேதாகம வாசகத்தை அடிப்படையா கக் கொண்டதானாலும், அதை அப்படியே கூறுவதன்று. இது வரிக்குவரி அளிக்கப் படும் விளக்கமாக இருக்கலாம்; மறையுரை வடிவில் அளிக்கப்படும் பாரம்பரியப் போதக மாக இருக்கலாம். கதைகளையும் விவிலி யத்துக்குப் புறம்பான விவரங்களையும் பயன்படுத்தி மீண்டும் கூறப்பட்ட விவிலிய நிகழ்ச்சியுரையாக இருக்கலாம். இது, வேதா கம நிகழ்ச்சி உரைகளில் காணப்படும் விவ ரங்களைக் கூட்டியும் குறைத்தும் மிகைப் படுத்தியும் எடுத்துக் கூறலாகும். இம்முறை யின் நோக்கம் வேதாகம வாசகத்தைப் புதிய சூழ்நிலைக்கு, நிகழ்காலத்திற்குப் பொருத் திக் காட்டுவதாகும். இன்று, இங்கு இந்த வாசகம் நமக்கு என்ன கூறுகிறது என்று அறிவிக்கும் போதனையாகும்.

இந்த முறை, தேர்ந்தெடுக்கப்பட்ட மக் கள் எகிப்திய அடிமைத்தளையிலிருந்து விடு தலை பெற்ற வரலாற்றில் ஞானத்தின் செயலை எடுத்துக் காட்ட ஆசிரியருக்குப் பெரிதும் உதவியது. இம்முறையைப் பயன் படுத்தி, ஆசிரியர் சில இடங்களில் யூதக் கதைகளிலிருந்தும், தாமே கட்டிய கதைகளி லிருந்து எடுத்த கூறுகளைக் கொண்டும், பாரம்பரிய வேதாகம நிகழ்ச்சியுரைகளை அணி செய்கிறார். இவற்றில் சில வெறும் விவரிப்புகளே. நடை மெருகுபடுத்தப்படு கிறது *(17:17-20; 18:1*தொ. *15*தொ; *19:9)*. மற்றவை குறிப்பிட்ட நிகழ்ச்சிகளை உள்ளத் தில் பதியவைப்பதாகவும் பொருள் மிக்கவை யாகவும் நாடகப் பாணிமிக்கதாகவும் அமை கின்றன *(17:3-6.9; 18:2; 11:11-13; 17:8.18.20: 18:17-19; 16:27-29)*. இம்முறையில், இறைவ னது நன்மைத் தனத்திற்கோ தேர்ந்தெடுக்கப் பட்ட மக்களின் நற்பெயருக்கோ பங்கம் விளைவிக்கக் கூடியவற்றை ஆசிரியர் நீக்கி விடுகிறார் அல்லது மாற்றி அமைக்கிறார். இதற்கு, இறைவன் பார்வோனைக் கடினப் படுத்துதல், பாலையில் மக்கள் முணுமுணுத் தல் போன்றவை சில சான்றுகளாகும்.

மற்ற இடங்களில், வேதாகம நிகழ்ச்சி களை அப்படியே எடுத்துக்கூறி, அவற்றிற் குப் புதிய விளக்கம் அளித்துத் தமது திட்டத் திற்கு ஏற்றதாகச் செய்கிறார் ஆசிரியர். சான் றாக, யாத் *23:28-30*-இல் நிலம் பாலைவன மாகிவிடாமல் பாதுகாக்கும் பொருட்டு, இறைவன் கானானியர்களை நாட்டிலிருந்து சிறிது சிறிதாகத்தான் துரத்தியடிப்பார். இச் செயல் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் நன் மைக்காகச் செய்யப்பட்டது. ஆனால் இந் நூல், இதைப்பிற மதத்தினருக்குக் காட்டப் பட்ட இரக்கமிக்க செயலாகக் காட்டுகிறது. அவர்கள் குற்றமிக்கவர்கள். ஆனாலும் அவர்கள் மனந்திரும்ப ஒரு வாய்ப்பளிக்க இறைவன் விரும்பினார் *(12:3-6.10*தொ*)*. இது ஒரு நயமிக்க சிந்தனையாகும். பழைய வாசகத்திற்கு ஆழ்ந்தபொருள் அளிக்கிறது. ஆனால் யாத்திரை நூலின் நோக்கத்திற்குப் புறம்பானது என்பது உறுதி. இப்படி விளக் கம் அளிப்பதில் ஆசிரியர்காட்டும் சுதந்தரப் போக்கு எகிப்தியர், இஸ்ராயேலர் ஆகியோ ருடைய முடிவுகள் பற்றிய இணையமைப்பு

விவரிப்பில் *(11:5-14; 16:1-19:9)* தெளிவாகக் காணப்படுகிறது. நிகழ்ச்சிகளை நாடகப் பாணியில் விவரித்து அவற்றின் வேறு பாட்டை மிகைப்படுத்திக் காட்டுகிறார். இப்படிச் செய்யும்போது தமது கருத்திலும் நோக்கத்திலும் தெளிவாக உள்ளார். இறை வன் தன்மையால் இரக்கமிக்கவர். கட்டா யப்படுத்தப்பட்டால் மட்டுந்தான் தண்டிக் கிறார். இறைவன் தமது மக்கள் பால் தனிப் பட்ட அக்கறை கொள்கிறார் என்று நூல் முழுவதும் எடுத்துக் காட்டப்படுகிறது. இதற்குப் பின்னணியாக விவரிக்கப்படும் விவிலிய நிகழ்ச்சிகள் சமய, ஒழுக்க மதிப்பீடுகளைக் கொண்டுள்ளன என்ற விசுவாசம் அமைந்தி ருக்கிறது. இவற்றையெல்லாம் வெளிக் கொணர்வதே மிட்ராஷ் இலக்கிய வடிவின் நோக்கமாகும்.

மிட்ராஷ் இலக்கிய முறையில் பல வகை உண்டு. அவற்றில் தோராவில் சட்டமல்லாத பகுதிகளுக்கு விளக்கமளிக்கும் முறையா கிய ''அக்காதா'' என்ற வடிவத்தை ஆசிரியர் பயன்படுத்துகிறார்.

அதி 13-15 ஒரு தனிப்பட்ட இலக்கியப் பகுதியாக அமைந்திருக்கிறது. இப்பகுதி இடைச் செருகலாக இருக்கலாம். இவை சிலை வழிபாட்டுக்கு எதிரான வசையுரை களாக அமைந்துள்ளன. கிரேக்க, எகிப்தியச் சமயங்களைப் பலவீனப்படுத்தும் நோக் கோடு, எள்ளிநகையாடுதல், வஞ்சப்புகழ்ச்சி ஆகியவற்றைப் பயனுள்ள முறையில் பயன் படுத்துகிறது.

ஆசிரியர் அடிக்கடி பயன்படுத்தும் அணி களில் ஒன்று ''குறைமதிப்பீட்டுரை''யாகும். அதாவது, ஒரு கருத்தை வலியுறுத்த, அதைக் குறைத்துக் கூறுவதாகும். சான்றாக, நூலின் தொடக்கத்திலேயே இத்தகைய கூற்று வரு கிறது. ''அவரைச் சோதிக்காமல் இருக்கிறவர் கள் அவரைக் கண்டடைவார்கள்; அவர் மேல் அவநம்பிக்கை கொள்ளாதவர்களுக்கு அவர் தம்மையே வெளிப்படுத்துகிறார்'' *(1:2)*. இங்கே ஆசிரியர் கூற விரும்புவது, விசுவாசிகள், இறைவனில் தளராத நம் பிக்கை வைப்பதாலும், நீதியைக் கடைப் பிடிப்பதாலும், இறைவனை நெஞ்சறிந்த முறையில் தேட வேண்டும் என்பதே. இதே அணியை நூலின் முடிவில் காணலாம். இறைவன் தாம் தேர்ந்து கொண்ட மக்கள் பால் காட்டும் ஆற்றல்மிக்க பாதுகாப்பைப் போற்ற விரும்பிய ஆசிரியர், ''எக்காலத் திலும் எவ்விடத்திலும் நீர் அவர்களைப் புறக்கணிக்காமல் துணை நின்றீர்'' *(19:22)* என்று கூறுகிறார்.

மற்றொரு இலக்கியயுக்தி ''உள்ளடக்குத லாம்''. இது பற்றித் திட்டம் என்ற தலைப் பில் பார்ப்போம். ''முன் காட்சியின் இடைப்பதிவு'' என்ற ஒரு யுக்தியையும் ஆசிரியர் பயன்படுத்துகிறார். படைப்பின் மேல் இறைவன் கொண்டிருக்கும் மேலாண்மை பற்றிய முந்தைய சிந்தனை யோடு வரலாற்று நிகழ்ச்சிகளை இணைத் துப் பின்பகுதியில் சுட்டிக் காட்டுவதாகும். இவ்வாறு இந்நூலில் காணப்படும் இலக்கி யச் சிறப்புக்களைக் கூறிக்கொண்டே போக லாம்.

**9. நூலில் ஒற்றுமை:** இந்நூலை ஒரே ஆசி ரியர் எழுதினாரா? இதுபற்றி கி.பி. *18-19*-ஆம் நூற்றாண்டுகளில் பல ஐயங்கள் எழுந்துள்ளன. இந்நூல் பல ஆசிரியர்களால் எழுதப்பட்டுத் தொகுக்கப்பட்டதாகும் என்று சிலர் கூறுவர், இதற்கு இவர்கள் கூறும் காரணம்: முற்பகுதி பிற்பகுதியி லிருந்து நடையிலும், தொனியிலும் வேறுபடு கிறது. மொழியிலும் சொற்றொகுதிகளிலும் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் உள்ளன. முற்பகுதியில் சிறப்புப்பெறும் ஞானம், ஆன்மாவின் அழியாமை போன்ற கருத்துக் கள், *14:2-5*-இல் தவிர பிற்பகுதியில் காணப் படவில்லை. சிலர், முற்பகுதிக்காவது (அதி *1-5*, அல்லது அதி *1-9*, அல்லது அதி.*1-10*) எபிரேய மூலம் இருந்திருக்க வேண்டும்; அதைப் பிற்பகுதியின் ஆசிரியரோ வேறு ஒருவரோ, கிரேக்கத்தில் மொழிபெயர்த்துப் பிற்பகுதியோடு சேர்த்திருக்க வேண்டும் என்பர். இக்காரணங்கள் அவ்வளவு பொருத் தமாய் இல்லை என்று இக்கால ஆய்வுகள்

நிறுவியுள்ளன. சமீப காலத்தில் பெரும்பா லான ஆய்வாளர்கள், கிரேக்க வாசகத்தைப் பொறுத்தமட்டுமாவது, ஒரே ஆசிரியர்தான் இந்நூலுக்குப் பொறுப்பாவார் என்று கருது கின்றனர். இது ஏற்கத்தக்க நிலையே. ஏனெ னில் நூல் முழுவதும் சொற்றொகுதியும், நோக்கமும் ஒரே சீராக அமைந்துள்ளன. நூலின் பல்வேறு பகுதிகளும் ஒன்றோ டொன்று இணைந்துள்ளன. சில சொற் களைத் தவறான பொருளில் பயன்படுத்துவதி லும் இணைத்தன்மையுள்ளது *(4:12;16:25)*. இறையியல், ஒழுக்கப் போதகங்களில் எப் பகுதியிலும் வேறுபாடு இல்லை; மாறாகக் குறிப்பிடத்தக்க ஒற்றுமையுள்ளது. நூல் முழுதும் பக்தி மனப்போக்கு நிரவ அமைந் துள்ளது. இக்காரணங்கள் பல ஆசிரியர் என்ற கருதுகோளுக்குச் சார்பான காரணங் களை விஞ்சுகின்றன. வெவ்வேறு பகுதி களுக்கிடையே காணப்படும் வேறுபாடுகள், இவை நீண்ட கால இடைவெளிகளில் எழு தப்பட்டதன் விளைவாகும் என்றும், அதி *11-19*-இல் காணப்படும் கலைப் பண்பு, இறையியல் ஆகியவற்றில் காணப்படும் மாற்றுக்குறைவு, இவற்றை ஆசிரியர் தம் முதிய பருவத்தில் எழுதியதன் விளைவா கும் என்றும் விளக்கப்படுகின்றன. முதற் பகுதியை எழுதிய ஆசிரியரே அதி 11-19-ஐ ஒரு பாஸ்கு விழா ''அக்கதா மிட்ராஷ்'' ஆகத் தனியாகப்படைத்து ஞானம் பற்றிய தமது சிந்தனைத் தொகுப்போடு பிற்காலத் தில் சேர்த்திருக்கலாம் என்பர் சிலர். இருபகுதி களுக்குமிடையில் அதி 10 ஒரு நிலைமாறு பாடு செய்கின்ற இடைச் செருகலாக அமைந்துள்ளது. மேலும், ஆசிரியர் ஒரு தலைப்பிலிருந்து மற்றொன்றுக்கு அறிவு சார்ந்த முறையில் இலகுவாகச் செல்லு கிறார். ''முன் நிகழ்ச்சியின் இடைப்பதிவு'' என்ற யுக்தியைப் பயன்படுத்தி எல்லாப் பகுதிகளையும் இணைக்கிறார். இவற்றை யெல்லாம் மனதிற்கொண்டு நூல் முழுவதை யும் ஒரே ஆசிரியர் எழுதினார் என்று நாம் ஏற்றுக் கொள்வோம்.

**10. நூலின் திட்டம்:** இந்நூலை இரண்டு *(ஆதி 1-10; 11-19; அல்லது அதி 1-5; 6-19)*. மூன்று அல்லது நான்கு பகுதிகளாகப் பிரித்து, அதற்கேற்பப் பலவகைத் திட்டங் கள் கொடுக்கப் பலரும் முயன்றுள்ளனர். ஆனால் ஆசிரியரே தமது நூலுக்குத் திட்டம் அளிக்கப் பல யுக்திகளைப் பயன்படுத்தியுள் ளதாகத் தெரிகிறது. இவை இப்போது ஆய் வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

அவற்றில் சிறப்பான ஒன்று ''உள்ளடக்கு தல்'' ஆகும். அதாவது ஒரு பத்தியின் தொடக்கச் சொற்களையே அதன் முடிவில் பயன்படுத்தி அப்பத்தி முடிந்துவிட்டது என்று காட்டுவதாகும். இப்பத்திகள் தொகுக்கப்பட வேண்டிய முறையையும் பலவாறு ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார். அதி *1-6; 7-8; 13-15* ஆகியவை பொது மைய வட்ட வடிவில் அமைந்துள்ளன. அதி 9 இணையமைப்புச் செவ்வொழுங்குடன் அமைந்துள்ளது. அதி *10;11-12; 16-19* ஆகி யவை நேர்கோட்டு முறையில் அமைக்கப் பட்டு எடுத்துக்கொண்ட கருத்தை மீண்டும் மீண்டும் கூறுவதால் விரிவாகின்றன.

மேலும் ஆசிரியர் தம் நூலில் வரும் பாடல் வரிகளின் எண்ணிக்கையிலும் கவ னம் செலுத்தியுள்ளதாகத் தெரிகிறது. *11:17-12:22; 13:1-15:17* ஆகிய பிரிவு செய் திப்பகுதிகளைத் தவிர, பிற்பகுதிகளில் கணி தம், சிற்பம் கட்டடக்கலை, அழகுக் கலை ஆகியவற்றில் பயன்படுத்தும் நடுநிலைச் செவ்வி அல்லது தெய்வீக வீதம் முறை யைப் பயன்படுத்தியுள்ளதாகத் தெரிகிறது. இந்த முறையை வெர்ஜீல் போன்ற கவிஞர் கள் தங்கள் இலக்கியப் படைப்புகளில் கையாண்டுள்ளனர்.

''உள்ளடக்குதல்'' ஆசிரியர் தாம் கூறவந் ததை நிறைவுடன் செய்ய ஆர்வம் கொண்டி ருந்தார் என்று காட்டுகிறது. பாடல் வரி களின் எண்ணிக்கையில் காட்டும் அக்கறை அவரது வீர உணர்வைக் காட்டுகிறது. இரண் டிலும் அவரது கலைப்பண்பு தெரிகிறது. அதி *10;11:17-12:22; 13:1-15:17* ஆகிய பகுதிக ளைச் சேர்த்தபின் நூலைச் சம எண்ணிக்கை (பாடல் வரிகள் *251*) கொண்ட இருபெரும்

பகுதியாகப் பிரிக்கலாம் (அதி 1-10; 11-19). இவற்றைக் கருத்தில் கொண்டு பின் வரு முறையில் நூலின் பொருளடக்கத்தைப் பிரிக்கலாம்.

**11. பொருளடக்கம்:**

**I ஞானத்தைப் போற்றுதல் (1:1-10:21).**

(அ) ஞானம் அளிக்கும் கொடை அழியாமையாகும் (1:2-6:23).

(ஆ) ஞானத்தின் பிறப்பிடம், இயல்பு, விளைவுகள், சாலமோன் அதைத் தேடுதல் (6:24-10:21).

II. யாத்திரையில் இறைவன் தம் மக்களுக்குக் காட்டிய பிரமாணிக்கம் (11:1-19:22).

(அ) முன்னுரை (11:1-5).

(ஆ) இடைச் செருகல்கள் (11:16-15:19).

(இ) யாத்திரை நிகழ்ச்சிகளில் எகிப்தியர், இஸ்ராயேலரின் வேறுபட்ட நிலைகள் (16:1-19:22).

**12. சிறப்பு இறையியல் கருத்துக்கள்:**

ஆசிரியர் இறையியலையோ மெய்யியலையோ தொழிலாகக் கொண்ட வல்லுநர் அல்லர். திருவுரையாளர், சீராக் போன்ற போதகர். ஆகவே இந்நூலில் திட்டம் செய்யப்பட்ட இறையியல் கட்டுரையைக் காண முடியாது. அவரது கருத்துக்கள் நூல் முழுவதும், சிதறி, பரவிக் கிடக்கும். அவற்றில் சில தலைப்புகளை மட்டும் இங்குத் தொகுத்துத் தருகிறோம்.

**12.அ) இறைவன்:**

விசுவாசமுள்ள யூதனுக்கு இறைவன் இருக்கிறார் என்பதற்கு நிரூபணம் வேண்டியதில்லை. ஆனால் கிரேக்கப் பண்பாட்டால் பாதிக்கப்பட்டவர்களுக்கு அத்தகைய நிரூபணம் தேவைப்பட்டது. படைப்பின் அழகு, ஆற்றலிலிருந்து படைத்தவரைக் கண்டுணரலாம். எந்தச் சாதாரண சிந்தனையாளனும் இதைக் கண்டுணரலாம். அப்படிச் செய்யத் தவறினால் அது மடமையாகும். ஏனெனில் புலப்படுபவைகளிலிருந்து புலப்படாத இறைவனை, படைப்புகளிலிருந்து படைத்தவரை அறிதல் கட்டாயத் தன்மையுடைய நிரூபணமாகும். இதில் தவறுபவர்களுக்கு எந்தச் சாக்குப் போக்கும் இல்லை.

உலகைப் படைத்துக் காப்பாற்றும் இறைவன் இவ்வுலகத்திற்கு முழுவதும் அப்பாற்பட்டவர் (11:22). அவர் உருவமற்ற பொருளைக் கொண்டு உலகைப் படைத்தார் (11:18). அவர் எதுவாலும் கட்டுப்படுத்தப்பட்டவர் அல்லர் (11:21; 16:24). அவர் எங்கும் இருக்கிறார், எல்லாவற்றையும் அறிகிறார் (1:6-10). அனைத்தையும் அளவோடும், கணக்கோடும் நிறைவோடும் ஏற்பாடு செய்கிறார் (11:21). அவர் யாவற்றின் மேலும் மேலாண்மையுடையவர். அவரது தீர்ப்பை எதிர்ப்பவன் எவனுமில்லை (12:12-18). அவரது செயல்கள் நீதியானவை. அவற்றில் குற்றம் காண முடியாது. வாழ்வு, சாவு (16:13), ஆற்றல்கள் அனைத்தும் அவரைச் சார்ந்துள்ளன (6:1-11). பெரியவை, சிறியவை, வலுவற்றவை ஆற்றலுள்ளவை யாவும் அவரது பராமரிப்பின் கீழ்ச் செயலாற்றுகின்றன. அவரது பராமரிப்பு படைப்பு முழுவதையும் திட்டமிட்டுச் செயல்படுத்துகிறது (6:7-8; 11:26-27; 12:12-13; 14:13).

இப்பண்புகளைவிட, சில பண்புகளை ஆசிரியர் வலியுறுத்துகிறார். அவை இறைவனது அன்பும் இரக்கமும் ஆகும். இறைவன் அளவில்லா ஞானமுடையவர் (1:20); எல்லாவற்றையும் நீதியோடு நடத்துகிறார்; கட்டாயப்படுத்தும்போதுதான் தண்டிக்கிறார். அப்போதும் குற்றத்திற்கு ஏற்றவாறு தண்டனை அளிக்கிறார் (12:12-18). பாவிகள் மனந்திரும்புதலுக்காகப் பொறுமையோடு காத்திருக்கிறார் (9:1; 11:21; 12:2.22). அவர் தண்டனை அளிப்பது, கற்பிப்பதையும் பயிற்சி அளிப்பதையும் நோக்கமாகக் கொண்டது. அது இறைவனைப்பற்றிய அறிவுக்கு இட்டுச் செல்கிறது. ஒருவன் விரும்பி இறைவனுக்கு எதிரான நிலையை எடுக்கும் போதுதான், அவனை அவனது போக்கில் விட்டுவிடுகிறார், அவன் நித்திய அழிவைப் பெறுகிறான். இறைவன் மேலான விதத்தில் நல்லவர். மனிதர்களின் அன்பர். அவர்களது நன்மையை விரும்புகிறார். யூதர்களை மட்டுமல்ல தாம் படைத்த யாவற்றையும் அன்பு செய்கிறார்; இரக்கம் காட்டுகிறார் (11:23-25; 12:16).

*12.ஆ) ஞானம்:-*

ஆசிரியர் இறைவனது ஞானத்தை மிகவும் வலியுறுத்துகிறார். ஞானம் பற்றிய விவரிப்பு, பழமொழி, யோபு, பாரூக், சீராக் ஆகிய நூல்களில் காணப்படுபவையே; ஆனால் இந்நூலில் அவ்விவரிப்பு தெளிவாய் உள்ளது. கருத்து வளர்ச்சி கொண்டுள்ளது.

ஞானம் இறைவனுக்கும் மனிதனுக்கும் சொந்தமானது. இறைவன் தமது ஞானத்தின் வழியாக, உலகைத் திட்டமிட்டுப்படைத்துப் பாதுகாக்கிறார். படைப்பில் இறைவனுடைய பண்பாகும் ஞானம். அது இறைவனது அரியணையருகில் வீற்றிருக்கிறது (9:4). அது ''எல்லாம் வல்லவரது மகிமையொளியின் தூய சுடர்'', ''முடிவில்லா ஒளியின் எதிரொளி'', இறை ''வேலைத்திறனின் கறைபடியாக் கண்ணாடி'', இறைவனுடைய ''நன்மைத்தனத்தின் சாயல்'' (7:25-26). ஆகவே ஞானம் இறைப்பண்புகளைக் கொண்டிருக்கிறது; இறைவனிடமிருந்து தோன்றுகிறது (7:25); இறைவனைப் போல் அறிவுடையது; எல்லாம் வல்லது; மாறாமல் நிலைத்திருப்பது; ஆட்தன்மை கொண்டது (7:22-27); இறைவன் செய்யக் கூடியதையெல்லாம் செய்ய ஆற்றல் பெற்றது. படைப்பாற்றல் கொண்டது. அது இறைவனோடு இருப்பதால், அது அனைத்தையும் அறிந்து கொள்ள, கண்டுபிடிக்க (9:11) ஊடுருவிச் செல்ல (7:6) இனிதாய் ஒழுங்குப்படுத்த (8:1) செயல்படுத்த (7:27) வல்லது. இறைவன் உலகைப் படைத்தபோது அவர் அருகில் இருந்தது (9:9-12). அது உலகைப் பாதுகாக்கிறது. அதில் உள்ளவற்றையெல்லாம் வழி நடத்துகிறது (1:7; 7:27; 8:1). நீதிமான்களின் ஆன்மாவைப் புனிதப்படுத்துவது அதன் கடமையாகும் (7:27).

ஞானத்தின் செயல் மனிதனில் நிறைவு பெறுகிறது. ஞானம் மனிதர்களுக்குக் கற்பிக்கிறது (8:7; 9:10); அவர்களை வழி நடத்துகிறது (9:11:10:10); பாதுகாக்கிறது (9:11); உதவுகிறது (9:10). அவர்களோடு வாழ்க்கைத் துணைபோல் வாழ்கிறது (7:28;8:2.9). தனது இறைத்தன்மைக்கேற்ப, இறைவனுக்கும் மனிதனுக்குமிடையே பாலம் அமைக்கிறது. ஞானம் பெற எல்லா மனிதரும் தகுதியுடையவர் அல்லர். மனிதன் பல தகுதிகளைக் கொண்டிருக்க வேண்டும். அவன் பாவமில்லாது இருக்க வேண்டும் (1:4-5; 6:15-16; 7:27). அதை அடைய அவனுக்கு உரிமையில்லை. அதற்காக மன்றாடலாம் (7:1-14; 9:1-18). ஞானம் மனிதர்களின் அன்பனாகும். தன்னை விரும்புவோரிடையே தன்னைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறது (6:12-16). மனிதன் ஞானத்தை விரும்பினால், இது அவனை ''முடிவில்லா அரசுக்குக் கூட்டிச் செல்லுகிறது' (6:20). ஞானத்தோடு எல்லா நன்மைகளும் வந்து சேருகின்றன (7:15-22; 8:8). இறைவனுடைய ஆழ்ந்த இரகசியங்களை அறிமுகப்படுத்துகிறது. மனிதனை இறைவனின் அன்பனாகவும் (7:14), மகனாகவும் (2:18; 5:5; 18;13) ஆக்குகிறது.

ஞானத்தின் செயல் முதன்மையாக இஸ்ராயேலை நோக்கியதாகும் (15:1-6). உலக நாடுகளிடையே இஸ்ராயேல் ஒரு குறிப்பிட்ட தூதைக் கொண்டிருந்தது. இஸ்ராயேலின் வழியாகத்தான் இறைவனின் ''அழியா ஒளி'' இருளில் ஒளிர வேண்டும் (18:4). எல்லாக் காலங்களிலும் இடுக்கண்களிலும் ஞானம்தான் இஸ்ராயேலுக்கு வழிகாட்டியது. ஐந்நூலில் யாவேயின் மீட்புச் செயல்கள் பற்றிக் கூறப்பட்டதெல்லாம் இந்நூலில் ஞானத்திற்குச் சாற்றிக் கூறப்படுகிறது (அதி 10-19). மீட்பு வரலாற்றின் தொடக்கத்திலேயே ஞானம் செயலாற்றிக் கொண்டிருந்தது. ஞானத்தின் வழியாகத்தான் யாவே இஸ்ராயேலுக்கு விடுதலை அளித்தார், இஸ்ராயேலை மீட்டார்.

நீதிபதிகள் நூலின் அசாதாரண நிகழ்ச்சிகள் ''யாவேயின் ஆவிக்குச்'' சாற்றிக் கூறப்படுகின்றன. ஞானநூலும் அதே சொல்லைப் பயன்படுத்துகிறது. ''பரிசுத்த ஆவி'' மனிதனில் வாழ்கிறது, செயலாற்றுகிறது (1:4-5; 12:1). ஆவி உன்னதத்திலிருந்து கொடுக்கப்படுகிறது (9:17); எல்லாவற்றையும் ஊடுருவுகிறது; அனைத்தையும் சேர்த்திணைக்கிறது

*(1:7)*. இதே கூற்றுக்கள் ஞானத்தைப் பற்றியும் கூறப்படுகின்றன *(9:18)*. ஆசிரியர் ஆவி, ஞானம் போன்ற இரு கருத்துக்களையும் வேறுபாடின்றிப் பயன்படுத்துவதாகத் தெரிகிறது. ஞானமும் ஆவியும் தீமையை வெறுக்கின்றன *(1:4-5)*. இரண்டும் எல்லாவற்றையும் ஊடுருவி, சேர்த்திணைக்கின்றன *(1:7; 7:2-24; 8:1)*. ஒரு காலத்தில் ஆவி இறைவாக்கினர்களைத் தூண்டியதுபோல், இப்போது ஞானம் செய்கிறது *(7:27)*. இத்தகைய இணைப்பு ஏற்கனவே எசாயா நூலில் காணப்படுகிறது.

ஞானத்தைப்பற்றிய மேற்கூறப்பட்ட பண்புகள் எல்லாம் கடவுளுக்கே உரியன; படைப்புகளோடு பகிர்ந்து கொள்ளக் கூடாதவை. ஞானம் என்பது என்ன? அது இறைவனுடைய ஒரு பண்பு ஆட்தன்மையாக்கப்படுவதா? வெளிப்பாட்டின் இக்கட்டத்தில், இது ஒன்றுதான் பதில். பழமொழி, சீராக் நூல்களைவிட இந்நூல் மிகத் துணிவோடு ஞானத்திற்கு ஆட்தன்மை அளித்து உருவகப்படுத்துகிறது. ஞானம் தனி ஆள் அல்ல. 6:24-இல் வருவதுபோல், ஆசிரியர் ஞானத்தை மகிமைப்படுத்தவும், அதன் இறைத் தோற்றத்தை விசுவாசிகளுக்கு எடுத்துக் கூறவுமே எழுதுகிறார். அவர் இறைவனின் உள்ளார்ந்த வாழ்வைப் பற்றிப் பேசவில்லை. மற்ற ஞான நூல்கள் போல் இந்நூலும் ஞானத்தை உருவகமாகவே ஆட்தன்மைப்படுத்துகிறது. இது ஓர் இலக்கிய யுக்தியே தவிர, ஞானம் தன்மையால் இறைவனோடு ஒன்றானதன்று.

ஞானத்திற்கு ஆட்தன்மை அளிப்பது *(7:22-8:1)* அதை அதிக ஆன்மீக வடிவில் எடுத்துக்காட்டுவதற்கே. ஞானம் இறைவனைச் சார்ந்த ஒன்றானாலும், அவரிடமிருந்து புறப்பட்டு, ஆன்மாக்களுள் புகுந்து செயலாற்றுகிறது. அது எல்லாப் புண்ணியங்களுக்கும் அடிப்படையாகவும், பாதுகாப்பாகவும் அமைகிறது. மனிதர்களை இறைவனது அன்பர்களாக்குகிறது. யாவற்றிற்கும் மேலாக, சாகாமைக்கும், அழியாமைக்கும் இட்டுச் செல்லுகிறது. மனிதன் அதைத் தேடி அடைய முடியாது; அது இறைவனிடமிருந்து மன்றாடிப் பெற வேண்டிய கொடையாகும்.

இந்த விளக்கங்களில் எல்லாம், ஆசிரியர் தாம் அறிந்த கிரேக்கப் பண்பாடு பற்றிய அறிவையும், தத்துவக் கருத்துக்களையும் பயன்படுத்துகிறார். இதன் நோக்கம் கிரேக்கக் கவர்ச்சியால் யூதர்களிடையே நிலவிய பிரச்சினையைச் சுட்டிக்காட்டி, பிறர் கூறுவது போல் யூதர்கள் பண்பாடற்ற காட்டுமிராண்டிகள் அல்லர்; அவர்கள் உண்மையான ஞானத்தைக் கொண்டிருக்கின்றனர்; ஆகவே, பிறமதத்தினரது ஞானத்தைக் கண்டு பொறாமைப்பட வேண்டியதில்லை, என்று ஆசிரியரது காலத்து யூதர்களுக்குக் காட்டுவதேயாகும். அவர் கிரேக்கப் பண்பாட்டை நிராகரிக்கவில்லை. மாறாக ஓரளவு ஒன்றிணைப்புச் செய்கிறார். மனிதனை மையமாகக் கொண்ட மனிதப்பற்றுக் கோட்பாட்டுக்கும், இறைவனை மையமாகக் கொண்ட மனிதப்பற்றுக் கோட்பாட்டுக்கும் இடையில் ஒன்றிணைப்புச் செய்ய முயலுகிறார். இதைக் கிரேக்க சமயச் சார்பற்ற அறிவை உள்ளடக்கும் விதத்தில், ஞானத்தின் தூய, ஒழுக்கப் பண்புகளை விவரிப்பதால் செய்கிறார். கிரேக்கர்களின் ''உலக ஆன்மா''வின் குணங்களையெல்லாம் ஞானம் கொண்டிருக்கிறது என்று ஆசிரியர் காட்டுகிறார் *(7:22-8-9)*. ஞானம்தான் பிளேட்டோவின் நான்கு தலையாய புண்ணியங்களைப் படிப்பிக்கிறது. கிரேக்கச் சிந்தனை - மூல முதற் பூதங்களை உலகின் அடிப்படைப் பொருள்களாகக் கருதுவதற்கு மாறாக, இந்தப் பூதங்கள் இறைஞானத்தின் கருவிகளாகவும் ஊழியர்களாகவும் இருந்து, இறைமீட்பு, தீர்ப்பு ஆகிய குறிக்கோள்களுக்கு ஏற்றவாறு செயலாற்றுகின்றன என்று ஆசிரியர் காட்டுகிறார் *(அதி 16-19)*. எபிரேய சமய அறிவையும், கிரேக்க மெய்யியல் அறிவையும் ஒன்றிணைக்கும் முயற்சியை எபிரேய சமயத்திற்கு ஏற்றவாறு செய்கிறார்.

*12.இ) நன்மை தீமை - வினைப்பயன் கோட்பாடு - அழியாமை:*

தரையிலிருந்து எடுக்கப்பட்ட மண்ணும், உன்னதத்திலிருந்து வந்த ஆவியும் ஒன்று சேர்ந்து உருவாக்கப்பட்ட மனிதனின் இறுதிக் கதி என்ன? அவனுக்குச் சாவுக்கு அப்பால் வாழ்வு உண்டா? நீதிமானின் துன்பத்திற்குப் பொருள் என்ன? பலரும் பலவாறு விடைகொடுத்தனர். இவ்வுலகத்தையே மையமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் மறுவுலக வாழ்வை மறுத்தனர். இறப்போடுஎல்லாம் முடிந்து விட்டது. உடல் தூசியும் சாம்பலுமாக மாறுகிறது; உயிரோ அற்பக் காற்றுப் போல்சிதறிப் போகிறது *(2:3).* ஆகவே இவ்வுலகில் எல்லாவற்றையும்நன்றாய் அனுபவி *(2:9).*

யூத பாரம்பரியக் கருத்துப்படி, கல்லறைக்கு அப்பால் நல்லோர் தீயோர் அனைவருடைய நிலையும் ஒன்றே. அவர்கள் இறைவனிடமிருந்து பிரிக்கப்பட்டு, சேயோலில் ஒருவகை நிழல் வாழ்க்கை வாழுகின்றனர். ஆகவே மனிதனது செயல்களுக்கேற்ற சன்மானமோ தண்டனையோ இவ்வுலகிலேயே நடைபெற வேண்டும். நீதிமான்களுக்குச் சன்மானமாக நீண்ட வாழ்வும், பெரிய குடும்பமும், பெருஞ் செல்வமும், புகழும் கிடைக்கும். தீயோர் பல வழிகளிலும் துன்புறுவர். ஆனால் அன்றாட வாழ்வில் இக்கருத்துக்கள் பொருந்தியதாகக் காணப்படவில்லை. இக்கோட்பாட்டின் வெறுமையை இஸ்ராயேலின் பல சிந்தனையாளர்கள் அனுபவத்தால் உணர்ந்தனர். தீயோர் செழிப்புறும்போது நல்லோர் ஏன் துன்புறவேண்டும் என்ற பிரச்சினைக்கு நாட்டளவில் உபஇசையாவும், தனிநபர் அளவில் யோபுவும் திருவுரையாளரும் விடை காண முயன்றனர். அவர்கள் வெற்றி அடையவில்லை.

மேற்கூறப்பட்ட கேள்விகளுக்கு விடை காணமுடியாது ஏங்கி, ஞானநூல் ஆசிரியர் அவதிப்படவில்லை. தமது செய்தியின் அழகாலும், மகிமையாலும் உந்தப்பட்டு மகிழ்ச்சியோடும் நம்பிக்கையோடும் அதை எடுத்துக் கூறுகிறார். அவர் சொல்லும் முறையில் நற்செய்திப் பண்பு மிளிர்கிறது. மனிதன் சாவுக்காக அன்று, வாழவே உண்டாக்கப்பட்டான். மனிதனை அழியாமைக்கென்றே இறைவன் படைத்தார் *(1:13; 2:23).* அலகையின் பொறாமையால் சாவு உலகில் நுழைந்தது *(2:24).* ஆனால் மன்னிப்பும், அதன் விளைவாக வாழ்வும், அளிக்க இறைவன் எப்போதும் தயாராக இருக்கிறார் *(12:2).* புதிய வாழ்வு இவ்வுலகிலேயே தொடங்குகிறது. ஞானத்தைப் பின்பற்றுகிற ஒவ்வொருவனும் இறைவனுடைய அன்பனாகிறான். இறைவனது பிள்ளையாகிறான் *(2:16-18; 5:5;9:4;7:1-14.27).* ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்வு சாவுக்கு அப்பாலும் சென்று சாகாமைக்கும் அழியாமைக்கும் இட்டுச் செல்லுகிறது *(3:4; 4:1; 8:17; 15:3; 2:23; 6:18-19).* இந்த அறிவை, மனிதனது ஆன்மீகத் தன்மைபற்றிய தத்துவச் சிந்தனையால் மனிதன் அடைய முடியாது. சாகாமையும், அழியாமையும் இறை அருளின் சுதந்தரக் கொடைகளாகும். நல்லோர் கல்லறைக்கு அப்பாலும் இறைவனோடு வாழ்கின்றனர் என்ற கருத்தைச் சில சங்கீதங்கள் ஏற்கெனவே கூறியுள்ளன *(சங் 16:9-11; 49:16; 73:23-24).* இக்கருத்துக்களையெல்லாம் ஒன்றிணைத்து, ஞானநூல், மறுஉலகில் இறைவனோடு வாழும் வாழ்வே நல்லோரின் உண்மையான சன்மானம் என்று உறுதியாகப் போதிக்கிறது.

இப்போதக ஒளியில், இவ்வுலக நலன்களையும் துன்பங்களையும் ஆசிரியர் மதிப்பீடு செய்கிறார். இவ்வுலகில் நடப்பவை மறு உலக வாழ்வுக்குத் தயாரிப்பாக அமைகின்றன. நீதிமான்களின் துன்பங்கள், அவர்களைத் தூய்மைப்படுத்துகின்றன. பெரும் சன்மானத்தைப் பெற்றுத் தருகின்றன. அவர்கள் இளம் வயதில் இறந்தாலோ, கொடிய முடிவை அடைந்தாலோ, மரணம் அவர்களுக்கு இரண்டாம்தர முக்கியத்துவம் உடையதே. உண்மையானதற்குச் செல்லும் - ஒரு கடந்துபோகும் செயலாகும். இறை ஞானம் அவர்களைப் பேறுடைய அழியாமைக்கு இட்டுச் செல்கிறது *(6:17-20; 8:17).* இறந்த பின்னும், அவர்களின் ஆன்மாக்கள் இறைவன்

முன் என்றென்றும் மகிழ்ச்சியாக வாழ்கின்றன (3:1-9; 5:16). ஆசிரியரது இந்தப் புதிய போதகம் புதிய நம்பிக்கை அளிப்பதாகும். இப்போதகம் தானியேல் நூலில் திடீரென்று தோன்றுகிறது (தானி 12:2); சீராக் நூலில் பிற்காலத்தில் சேர்க்கப்பட்ட பகுதிகளில் ஓரளவு காணப்படுகிறது. ஆனால் இந்நூலில் தெளிவாகவும், உறுதியாகவும் போதிக்கப் படுகிறது. உடல் உயிர்ப்பு அதி 3:5:16:13; 19:6-21 ஆகிய பகுதியில் உள்ளடங்கியுள்ளது, என்று ஆய்வாளர்கள் சிலர் கருதுவர். ஆனால் உடல் உயிர்ப்புபற்றிய போதகம் இந்நூலில் இல்லையென்றே கூறவேண்டும். இப்போதகத்திற்குப் பழைய ஏற்பாடு இறையியல் இன்னும் வளர்ச்சியடையவில்லை

நல்லோரின் அழியாமைக்கு மாறாகத் தீயோரின் வாழ்வு, மனிதர்முன் எவ்வளவு மகிமை மிக்கதாயினும், உண்மையில் சாவே (1:16); பாதாளத்தின் இருளில் முடிகிறது. ஆசிரியர் மனிதனின் ''முதல் வீழ்ச்சியை'' அறிந்திருப்பதாகத் தெரிகிறது (2:2; 10:1-2). சாவு பாவிகளுக்குரியதாகும் (1:16). அது பொய்யின் (1:11), சிலை வழிபாட்டின் (14:12), பொதுவாக, நெறிதவறிய வாழ்க்கையின் விளைவாகும் (1:12). பாவிகள், இறைவனிடமிருந்து விரும்பித் தங்களையே பிரித்துக் கொண்டு, சாவோடு உடன்படிக்கை செய்து கொண்டனர். அவர்களது சாவுக்குப் பின் வரும் வாழ்வு பயனற்றதாகும். அவர்களது தண்டனை மறுஉலக வாழ்வு வரை காத்திருப்பதில்லை. இவ்வுலகிலேயே தொடங்குகிறது.

மனிதர்கள் - பக்தியுள்ளோர், இறைப்பற்றற்றோர் என இரு குழுவாகப் பிரிக்கப்படுகின்றனர். இறைவனின் வருகைக் காலம் (3:7) பரிசோதிக்கும் நாளாகும் (4:6); தீர்வையின்நாளாகும் (3:18). தீர்வை நாள் என்ற இறைவாக்குக் கருத்தைப் பற்றிப் பேசுகிறார் ஆசிரியர். தீர்வை நாளில் தனிப்பட்டோரும் மனுகுலம் முழுவதும் தீர்ப்பிடப்படும். சாவுக்குப்பின் தனிப்பட்டோர் தீர்ப்புப்பெறுவர் (3:1-4:6. 18.19). காலமுடிவில் பொதுத் தீர்ப்பு நிகழும் (4:20-5:23). இரண்டையும் தெளிவாக வேறுபடுத்த முடியாது. ஆனால் அவை உள்ளன.

இந்நூலில் மெசியா கருத்து இல்லை. ஆனால் இறையரசு என்ற கருத்து உள்ளது (10:10). இறைவன் ஓர் அரசராவார் என்று வெளிப்படையாகக் கூறப்படவில்லை; ''விண்ணகத்திலுள்ள அரியணையிலிருந்து'' (18:15; 9:10) ஆட்சி செய்கிறார். அங்கிருந்து தான் மனிதர்களையும், நாடுகளையும் நிர்ணயிக்கிறார்; சட்டத்தை நிறைவேற்றுவதில் இறையரசு செயல்படுகிறது. இந்தச் சட்டம் இறை ஞானத்தின் ஒளியாகும்; கண்ணாடியாகும். தமது திட்டத்திற்கேற்ப நீதிமான்களின் வாழ்க்கையை நடப்பிக்கிறார் (2:22). சாவுக்குப்பின், அவர்கள் இறைவனது ஆட்சியில் பங்கு பெறுகின்றனர். ''ஆண்டவர் அவர்கள் மேல் என்றென்றும் ஆட்சி செலுத்துவார்'' (8:8). ''மகிமையான மணிமுடியையும், அழகான மகுடத்தையும்.... பெற்றுக் கொள்வர்'' (5:17); இறைவனோடு என்றென்றும் அரசாள்வார்கள் (6:22). இந்த அரசுக்கு, இட, இன, வரையறைகள் இல்லை. எங்கெல்லாம் மனிதன் இறைவனுக்குப் பணிகிறானோ, அங்கெல்லாம் இந்த அரசு நிலவுகிறது. இறைவனுக்குப்பணி செய்வது அரசாள்வதாகும்.

**12.ஈ) யாவருக்கும் இறைவனது அன்பிரக்கம்:**

இக்கருத்தைப் பல இடங்களில் ஆசிரியர் எடுத்துக் கூறுகிறார். இதன் நோக்கம், பிற மத வாசகர்களுக்கு மதிப்பளிப்பதும், அவர்களை யூத சமயம்பால் ஈர்ப்பதும் ஆகுமெனத் தெரிகிறது. இறைவன் அனைவருக்கும் அன்பு காட்டுகிறார். படைத்த எதனையும் அவர் அருவருத்துத் தள்ளுவதில்லை. மனிதர்கள் மனந்திரும்பிவர வாய்ப்பளிக்க, அவர்கள் பாவங்களைப்பார்த்தும் பாராததுமாய் இருக்கிறார். தண்டிக்கும்போதும், இரக்க மிக்கவராக இருக்கிறார். அவர்களை மெதுவாகத் தண்டிக்கிறார். அவர்கள் தீமையினின்று விடுபடவும் தம்மில் அவர்கள் நம்பிக்கை வைக்கவுமே இவ்வாறு செய்கிறார் (11:24-12:2; 12:13-22). இறைவனது இரக்கத்தையும், பொறுமையையும் ஆசிரியர் மீண்டும் மீண்டும் எடுத்துக் கூறுகிறார்.

இயற்கை வழிபாடு, சிலைவழிபாடு ஆகிய மடமை பற்றிய உரையில் *(13:1-15-17)* அவற்றைக் கண்டனம் செய்வதில் ஆசிரியர் சிறிதும் விட்டுக் கொடுக்கவில்லை. ஆயினும் ''அம்மனிதர்கள் மேல் அவ்வளவு குற்றமில்லையெனலாம். ஏனெனில் இறைவனைத் தேடிக் கண்டுபிடிக்க முயலும் போது ஒருவேளை அவர்கள் தவறியிருக்கலாம்'' *(13:6)* என்று அவர்களது குற்றத்தைச் சிறிது குறைத்துக் கூறுவதில் கவனமாய் இருக்கிறார் ஆசிரியர்.

மேலும், உலகின் சிற்பியாக இறைவனைத் தேடிக் கண்டுபிடிக்கப் பிற மதத்தினருக்கு அழைப்பு விடுக்கிறார் ஆசிரியர். இறைவன் நன்மை மிக்கவர், இரக்கமுள்ளவர் என்னும் உறுதியையும் அளிக்கிறார் *(13:1-9)*. உடல் உயிர்ப்பு பற்றி ஆசிரியர் மௌனம் காட்டுவது கிரேக்கர்களின் உணர்வுக்குக் காட்டும் மரியாதையாகும் *(அ.ப. 17:32)* என்று ஆய்வாளர்கள் சிலர் கருதுவர்.

இவையெல்லாம் ஆசிரியர் எல்லாப் பிற மதத்தினரையும் மனதில் கொள்ளாவிட்டாலும், உண்மையான சமயத்தின்பால் ஒத்துணர்வு கொண்டவர்களையாவது, குறிப்பாக யூதமதத்தின்பால் பற்றுடைய பிற மதத்தினரையாவது, மனதில் கொண்டிருந்தார் என்பதற்கு அடையாளங்களாகும்.

***12.உ) பிற கருத்துக்கள்:***

மேற்கூறப்பட்டவற்றைத் தவிர, யூதப் பாரம்பரியத்தில் ஏற்கனவே வழக்கில் இருந்த பல கருத்துக்களையும் எடுத்துக் கூறுகிறது இந்நூல். இவற்றின் விளக்கத்தில், இறைவனதுபராமரிப்பு *(6:7; 14:3; 17:2)*, மனச்சான்று *(17:10)*, தலையாய புண்ணியங்கள் *(8:7)* போன்ற கிரேக்கச் சொற்களையும், கருத்துக்களையும் விவிலியச் சொற்றொகுதியில் ஆசிரியர் புகுத்துகிறார். ஆட்தன்மையுடைய மெசியாவைப்பற்றிய நம்பிக்கை இந்நூலில் காணப்படவில்லை. இது, இறைவன் தமது ஆட்சியை நிறுவ உலக முடிவில் நேரடியாகத் தலையிடுவார் என்று எதிர்பார்த்த யூதப்பிரிவை ஆசிரியர் சேர்ந்தவராக இருக்கக்கூடும் என்று காட்டுகிறது. ஆனால் ''இறையரசு'' என்ற முக்கிய புதிய ஏற்பாட்டுச் சொல் பழைய ஏற்பாட்டிலேயே இந்நூலில்தான் ஒரே ஒரு தரம் வருகிறது *(10:10)*. மேலும் கிரேக்க மெய்யியல் சொற்களில் அருஞ்செயல்களுக்கு அளிக்கும் விளக்கம் *(19:18-21)*, யாத்திரையை ஒரு புதிய படைப்பாக நோக்குதல் *(19:6.13)* படைப்பு வழியாக இறைவனை அறிதல் பற்றிய தர்க்கம் ஆகியவற்றில் ஆசிரியர் ஆர்வத்தோடு ஈடுபட்டுள்ளார். இவையெல்லாம் வாசகர்களைக் கவரக் கூடியன.

***13. ஞான நூலும் விவிலியமும்:***

பழைய ஏற்பாட்டின் மற்ற ஞான இலக்கியங்களிலிருந்து, பழைய ஏற்பாட்டு இறுதி நூலான இந்நூலுக்கு வரும்போது, வாசகர் பாலஸ்தீனத்திலிருந்து எகிப்துக்கும், யூதச் சூழ்நிலையிலிருந்து கிரேக்கச் சூழ்நிலைக்கும் தெளிவாக மாறினாலும், இன்னும் யூதச் செபக்கூடத்திலேயேதான் இருப்பதை உணர்வார். சிந்தனைகள் மிகவும் கருத்தியலாகவும், ஆய்வுப் பண்புடையவையாகவும் மெய்யியல் தன்மையுடையவையாகவும் உள்ளன. மொழி கலைச்சொல் மிக்கதாகவும் நயம் மிக்கதாகவும் உள்ளது. ஆனால் கோட்பாடு முழுவதும் யூதத்தன்மையுடையதும் விவிலியப் பாரம்பரியத்தைச் சேர்ந்ததுமாக உள்ளது.

ஞானநூல் பழைய ஏற்பாட்டுக்கும் புதிய ஏற்பாட்டுக்குமிடையே ஓர் இயற்கையான பாலமாக அமைந்துள்ளது. அப்போஸ்தலர்கள் காலமுதல் திருச்சபை இந்நூலைப் பயன்படுத்தியுள்ளது. புனித யோவானும், புனித பவுலும் இந்நூலை ஒரு மேற்கோள் நூலாகவும், இறைவனது புதிய வெளிப்பாட்டை எடுத்துக் கூற ஒரு மூல நூலாகவும் பயன்படுத்தத் தயங்கவில்லை. ஆதிக் கிறிஸ்தவர்களிடையே இந்நூல் பரவலாகப் பயன்பட்டதும், அதன் புகழும் யூதர்கள் தங்கள் திருமுறைப் பட்டியலில் இந்நூலை ஏற்றுக் கொள்ள மறுத்ததற்கு ஒரு காரணமாயிற்று.

புனித யோவான் தமது நற்செய்தியை எழுதும்போது, ஞானநூல் ஏற்கெனவே

தொடங்கி வைத்த தலைப்புக்களையே விரி வாக்குகிறார். அவற்றில் சில: வாழ்வின் வழியும், சாவின் வழியும்; ஒளிக்கும் இரு ளுக்கும் இடையே தொடர்ந்து நடக்கும் போராட்டம்; இருள் ஒரு காலத்திற்கு வெற்றி பெறுவது போல் தோன்றினாலும் இறுதி யில் ஒளியே வெற்றி பெறுவது உறுதி போன்றவையாகும். ஞான நூலிலிருந்து பல எடுத்துக்காட்டுக்களையும் கலைச் சொற் களையும் யோவான் பயன்படுத்துகிறார். இவற்றிற்கு ஆதாரமாக, யோவா *1:1.18*-ஐ ஞானம் *8:3; 9:4*-ஓடும்; யோவா *1:3.10*-ஐ ஞானம் *7:21; 8:6; 9:1-9* ஓடும்; யோவா *5:20*-ஐ ஞானம் *8:4;9:10. 11.17* ஓடும்; யோவா *14:23; 16:27*-ஐ ஞானம் *7.28* ஓடும்; யோவா *3:16-17*-ஐ ஞானம் *1:6;7:23; 11:24.26* ஓடும்; யோவா *17:3*-ஐ ஞானம் *15:3*-ஓடும் ஒப்பிட் டுப் பார்க்கலாம்.

புனித பவுலும் யோவானைப் போன்றே இந்நூலைப் பயன்படுத்தியுள்ளார். எபி *1:3*-ஐ ஞானம் *7:26*-ஓடும்; கொலோ *1:15*-ஐ ஞானம் *7:26*-ஓடும்; உரோ *1:18-20*-ஐ ஞானம் *13:3-5* ஓடும்; உரோ *1:21-32*-ஐ ஞானம் *14:22-31*-ஓடும்; உரோ *2:4*-ஐ ஞானம் *11:23.26; 12:2.10.19* ஓடும்; உரோ *9:20*-ஐ ஞானம் *12:12*-ஓடும்; உரோ *9:21*-ஐ ஞானம் *15:7* ஓடும்; எபே *6:14-17*-ஐ ஞானம் *5:17-20* ஓடும் ஒப்பிட்டுப் பார்க்க.

''உம்மை அறிதலே நிறைவான நீதி; உம் வல்லமையை அறிதலோ சாகாமைக்கு ஆணிவேர்'' *(15:3)* என்று இந்நூல் உரைக் கும்போது, வாசகர் இரண்டு ஏற்பாடுகளுக்கு மிடையேயுள்ள பாலத்தில் அடியெடுத்து வைத்துவிட்டதை உணர்வார். ''முடிவில்லா வாழ்வு என்பது - உண்மையான ஒரே இறை வனாகிய உம்மையும் நீர் அனுப்பிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே'' *(யோவா 17:3)* என்று வாசிக்கும்போதே, அப்பாலத்தைக் கடந்து ஏற்கனவே அடுத்த பக்கத்திற்குச் சென்று விட்டதாக உணர்வார்.

***14. இக்காலத்திற்கு:***

ஞான நூல் ஆசிரியர், தமது கால யூதர் களுக்கிடையே நிலவிய சமய அவலநிலைக்கு ஒரு மறுப்பாகவும், பாரம்பரிய சமய போதகத்திற்கு ஒருகாப்புரையாகவும், யூதர் களுக்கும் பிறமத்தினருக்கும் யூத சமயத்தின் மேன்மையையும் உயர்வையும் எடுத்துக் காட்டவும், இந்நூலை எழுதினார். பாரம் பரிய இறையியல் போதகத்தைத் தம் காலத் திற்குத் தகுந்தவாறு புதுநிலைப்படுத்தவும், அலக்சாந்திரியாவில் நிலவிய புதிய நிலைக் கும் அப்போதகம் பொருத்தமுடையது என்று காட்டவும் விரும்பினார். அதற்கு அவர் காப்புரை அணுகு முறையைப் பயன் படுத்தினார். அம்முயற்சியில் விவிலிய விசு வாசத்தைச் சிறிதும் விட்டுக் கொடுக்க வில்லை. அதில் நம்பிக்கை இழக்கவும் இல்லை. அக்காலத்தில் நிலவிய பல சமய இணைப்புக் குளறுபடியையும், அவை, மாறிக் கொண்டிருக்கும் நிலையற்ற உல கிற்கு எந்த நம்பிக்கையையும் தரப்போவ தில்லை என்பதையும் நன்கு அறிந்திருந்தார். ஆனால் அவர் வாழ்க்கைச் சூழ்நிலைக்குப் புறம்பாக வாழவில்லை. ஆகவே கிரேக்கப் பண்பாட்டின் சாதனைகளை ஒதுக்க வில்லை. அவற்றில் கண்ட நன்மைகளை யெல்லாம், குறிப்பாகக் கிரேக்க மொழிச் செழிப்பையும் மெய்யியல் கலைச்சொற் களையும் வாதமுறைகளையும் பயன்படுத்தி, வெளிப்பாட்டின் உண்மைகளை மேன்மைப் படுத்தி, உயர்த்திக் காட்டினார். இதே முறை யைத் திருச்சபைத் தந்தையர்களின் நூல்களி லும் காண்கிறோம். ஏனெனில் இறுதி ஆய் வில், நிலைத்திருக்கும் எல்லா அறிவும் இறைவனுடைய கொடையாகும் *(7:15-22)*; அறிவின் முடிவான நோக்கம் மனிதரை இறைவனது முடிவில்லா அரசுக்குக் கூட்டி வருவதாகும் *(6:21)*.

இப்போது, திருச்சபையில், குறிப்பாக நம் நாட்டில், காணப்படும் ஓர் அவலநிலை யைக் குறிப்பிட வேண்டும். பிற சமய நூல்களோடு விவிலியத்தை ஒப்பிட்டு, விவி லியத்தைக் குறைத்தும் பிறசமய நூல்களை மேன்மையானதாகவும் மதிப்பீடு செய்யும் போக்கைக் காண்கிறோம். இது எந்த அள வுக்குப் போகிறதென்றால், திருப்பலியில் விவிலிய வாசகங்களை நீக்கிவிட்டு, அவற்

றிற்குப் பதிலாகப் பிறசமய நூல்களை வாசிக்கும் வழக்கத்தைப் பல இடங்களில், குறிப்பாகச் சில குருத்துவப்பயிற்சி நிலையங்களில் காண்கிறோம். பல மீட்பர்களில் கிறிஸ்துவும் ஒருவராகக் கருதப்படுகிறார். கிறிஸ்துவின் வழியாக வரும் மீட்பின் தனித்தன்மையும், தன்னேரில்லாத் தன்மையும், எழுத்திலும் செயலிலும் மறுக்கப்படுவதைக் காண்கிறோம். நடைமுறையில் ''எல்லா மதமும் சம்மதம்'' என்ற கருத்து கிறிஸ்தவர்களிடையே பரவிக்கொண்டிருக்கிறது. இதையொத்த அவலநிலையைத்தான் ஞானநூல் ஆசிரியரும் தமது காலத்து யூதர்களிடையே கண்டார். அதற்கு எதிராக இந்தக் காப்புரை நூலை எழுதினார். அதேபோன்று, இந்தியப் பண்பாட்டு இலக்கியக் கருவூலங்களிலிருந்து பழையதும் புதியதுமான நன்மையானவற்றையெல்லாம் எடுத்துப் பயன்படுத்தி, நமது மறை உண்மைகளைச் சிறிதும் விட்டுக் கொடாமல், எடுத்துக்கூறி, அவற்றின் தனித்தன்மையையும், மேன்மையையும் உயர்வையும் தாழ்ச்சியுடன் எடுத்துக்காட்டி, அவற்றை நம்மவர்களுக்கும் பிறருக்கும் வாழ்க்கைக்குப் பொருத்திக்கூறி, இறையியல் வல்லுநர்கள் தங்கள் பொறுப்பை உண்மையான முறையில் செய்தால் எவ்வளவோ நலமாயிருக்கும்! அப்போது இவர்கள் தங்கள் அழைப்பிற்கு உண்மையானவர்களாகவும், பொறுப்புடையவர்களாகவும், பற்றுறுதி உடையவர்களாகவும் இருப்பர். இவ்வாறு செய்ய அனைவரும் முன்வருவார்களா?

### சாலமோனின் பணியாளர்கள், அதிகாரிகள்

ஒவ்வொரு அரசனுக்கும் பணியாளர் இருந்தனர். சாலமோனின் தலைவர்களும் அதிகாரிகளும்தான் பணியாளர்கள் என்று அழைக்கப்படுகின்றனர் என்பது *1 அர 4:1-19*-இல் கொடுக்கப்படும் பட்டியலிலிருந்து தெளிவாகிறது. *3:15*-இல் குறிப்பிடப்படும் அலுவலர் அவரது அதிகாரிகளே என்று எடுத்துக் கொள்ளலாம். கீராமும் *(ஈராம்)* சாலமோனும் ஊழியர்களைக் கொண்டிருந்தனர். *4:6* அடிமைகள் இருந்ததைக் குறிப்பிடுகிறது. சாலமோன் காலத்தில் கட்டாய வேலைத்திட்டம் இருந்தது. அந்த அமைப்பின் நோக்கம் *9:15-19*-இல் கொடுக்கப்படுகிறது. கட்டாய வேலைக்கு ஆட்கள் இஸ்ராயேலரல்லாத பாலஸ்தீனத்தில் தங்கியிருந்த பிறமக்களிடமிருந்து பெறப்பட்டனர். ஆனால் *9:22-5:27*-ஐ மறுத்துக் கூறுவதாக உள்ளது. *5:27*-இல் வரும் இஸ்ராயேலர் இஸ்ராயேலரையும் மற்றவர்களையும் உள்ளடக்கலாம். *9:21.27; 2 நாள் 8:18; 9:10*-ஆகிய பகுதிகள் கட்டாய வேலையாட்களுள் இஸ்ராயேலரும் அடிமைகளும் இருந்தனர் என்று சுட்டுகின்றன.

நாடு கடத்தலுக்குப்பின், சாலமோனின் ஊழியரின் மக்கள் என்றழைக்கப்பட்ட ஒரு குழுவினர் யூதாவுக்குத் திரும்பினர் *(எஸ் 2:55-58; நெக 7:56-60)*. இவர்கள், ஒருவேளை, இஸ்ராயேல் அல்லாத சாலமோனின் அடிமைகளின் சந்ததியினராக இருக்கலாம். அதனால் இஸ்ராயேலிலும் யூதாவிலும் ஒரு தனி இனமாக இருந்திருக்கலாம் *(1 அர 9:20-21)*. நாடு கடத்தப்பட்ட பின்பு, இவர்கள் நெத்தினிமியர்களைப் போல ஆலய ஊழியர்களாக இருந்திருக்கலாம் *(எஸ் 7:24)*.

### சாலமோனின் பாடல்கள் *(SOLOMON, ODES OF)*

இந்நூல் புனைபெயருடையது. நாற்பத்திரண்டு பாடல்களைக் கொண்டது. இவற்றைத் துள்ளற்கலிப்பாடல்கள் எனலாம். தலைப்பில் மட்டும்தான் சாலமோன் பெயர் வருகிறது.

இப்பாடல்கள், ஒருவேளை சீரியக் மொழியில், பாலஸ்தீனத்தில் அல்லது சீரியாவிலிருந்த கிறிஸ்தவக் குழுவால் கி.பி *100*-ஐ ஒட்டி எழுதப்பட்டதாகக் கருதப்படுகிறது. இது யூதர்களால் எழுதப்பட்டு, கிறிஸ்தவர்கள் அல்லது ஞானவாதிகளின் படைப்புகளும் சேர்க்கப்பட்டது என்று சிலர் கூறுவர். இந்த நூலின் சீரியக், கிரேக்கம், கோப்திக் கையெழுத்துப் பிரதிகள் *20*-ஆம் நூற்றாண்டில் கண்டெடுக்கப்பட்டன.

இப்பாடல்கள் யோவானின் நற்செய்தி, இஞ்ஞாசியாரின் மடல்கள், சாக்கடல் சுருள்கள் ஆகியவற்றிற்கிடையே இலக்கிய, இறையியல் உறவைக் காண்கிறது. ஆனால் அது தெளிவாக இல்லை. சங்கீதங்கள் நூல் இப்பாடல்களின் வடிவைப்பாதித்துள்ளது. இப்பாடல்கள் தொடக்ககாலக் கிறிஸ்தவ வழிபாட்டைப்பற்றி முக்கியமான செய்தியை அளிக்கின்றன. ஒரு முக்கியமான பண்பாக மீட்பின் நிகழ்கால மகிழ்ச்சியில் கருத்தைச் செலுத்துகின்றன.

**சாலமோனின் மண்டபம்** (SOLOMON'S PORTICO)

ஏரோது கட்டிய எருசலேம் கோவிலின் வெளிமுற்றத்தைச் சுற்றிலும் நடப்பதற்கெனத் தூண்கள் கொண்ட அமைப்பு இருந்தது. அதன் கிழக்குப் பகுதி சாலமோனின் மண்டபம் என்றழைக்கப்பட்டது. இப்பகுதியில் உயர்ந்த சுவரோடுகூடிய உயர்ந்த மேடையில் தூண்கள் நின்றன. இவ்விவரங்களைக் கொடுக்கும் யோசிப்பசின் கூற்றுப்படி, இத்தகைய அமைப்பை முதலில் சாலமோன் பயன்படுத்தியதாக ஒரு பொதுப்பாணிப் பாரம்பரியம் உண்டு. ஆகவே இவ்வமைப்பு அவரது பெயரையே கொண்டிருந்தது. எருசலேம் அழிந்தபிறகு செருபாபேல் சீர்திருத்திய போது இப்பகுதியையும் சேர்த்தே அமைத்தார். ஆனால் புதிய ஏற்பாட்டுக் காலத்தில் இருந்த சாலமோன் மண்டபம் முழுக்க முழுக்க ஏரோதின் கைவண்ணமே ஆகும். ஆனால் இதற்கும் சாலமோனுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. யூதராபிகள், தங்கள் சீடர்களுக்குக் கற்பிக்கவும், பொதுவுரைகள் வழங்குவதற்கும் இவ்விடத்தை அடிக்கடி பயன்படுத்தினர். ஆகவே நற்செய்திகளில் குறிக்கப்படும் பல நிகழ்ச்சிகள் இங்கு நடந்திருக்க வாய்ப்பு உண்டு (*லூக் 2:46; 20:1; யோவா 7:14*). ஒரு சமயம் இயேசு இங்குப் போதித்ததாகத் தெளிவாகக் கூறப்படுகிறது (*யோவா 10:23*).

''அழகிய வாயிலில்'' பேதுரு ஒரு முடவனைக் குணமாக்கினார் (*அ.ப. 3:2-10*). இவ்வாயில், புறவினத்தர் முற்றத்தைக் கடந்து சாலமோன் மண்டபத்தை நோக்கியிருந்த ஆலயத்தின் பகுதியிலுள்ள முன்முற்றத்துள் (பெண்கள் முற்றம்) இட்டுச் சென்றிருக்கலாம். குணமாக்கியபின், அதனால் கவரப்பட்ட கூட்டத்திற்குப் பேச, பேதுரு இந்த மண்டபத்திற்குச் சென்றார் (*3:11-12*). இந்த மண்டபம் திருச்சபை நாள்தோறும் கூடும் இடமாயிற்று (*5:12*).

**சாலமோன்** (SOLOMON - அமைதியான, செழிப்புமிக்க)

***1. சாலமோனும் குடும்பமும்:-***

தாவீதுக்கும் பத்சேபாவுக்கும் எருசலேமில் பிறந்த இரண்டாம் மகன் (*2 சாமு 5:14; 12:24; 1நாள் 3:5; 14:4*). தாவீதுக்கு அடுத்த அரசன்; இஸ்ராயேலின் மூன்றாவது அரசன் (கி.மு. *970-30*). சாலமோன் என்ற பெயர் அரியணைப் பெயராக இருக்கலாம். அவர் பிறந்தபோது நாத்தானின் இறைவாக்கில் இவர் எதிதியா (ஆண்டவருக்குப் பிரியமானவர்) என்றழைக்கப்படுகிறார் (*12:25*). இவரது குடும்பத்தைப்பற்றி அதிகக் குறிப்புகள் இல்லை. இவர் பல பெண்களை விரும்பியதாகவும், பல மனைவிகளை அதுவும் அன்னிய மனைவிகளைக் கொண்டிருந்ததாகவும் தெரிகிறது (*1 அர 11:1; உ.ச. 6:8*). இம்மனைவியரில் முக்கியமானவள் பார்வோனின் மகளாவாள் (*1 அர 3:1*). இவளுக்கெனச் சாலமோன் தனிவீடு கட்டிக் கொடுத்திருந்தார் (*1:8*). பெயர் குறிக்கப்படும் மற்றொரு மனைவி அம்மோனியப்பெண்ணான நாமா ஆவாள். இவள், சாலமோனுக்குப்பின் அரசு பதவிபெற்ற ரெகபயாமின் தாய் ஆவாள். (*14:21.31*). சாலமோனுக்குத் தாபத்து (*4:1*) பாசமத்து (*4:15*) ஆகிய இரு புதல்வியர்கள் இருந்தனர். இருவரும் சாலமோனின் மாவட்ட மேற்பார்வையாளர்களை மணந்தனர்.

***2. மூலங்கள்:-***

சாலமோனைப்பற்றிய செய்திகள் உபாகமப் பாரம்பரியத்தைச் சேர்ந்த 2 சாமுவேல், 1 அரசர்கள் ஆகிய நூல்களிலும், நாளாகமப் பாரம்பரியத்தைச் சேர்ந்த 1,2, நாளாகம நூல்களிலும் காணப்படுகின்றன. இவ்வர

லாற்றைத் தொகுத்தவர் ''சாலமோன் வர லாற்று நூலிலிருந்து'' (1 அர 11:41), எடுத்துப் பயன்படுத்தியிருக்க வேண்டும். சாலமோனைப் பற்றிய தொடர்ச்சியான வரலாறு இல்லையெனலாம். தொகுப்பாளர் சாலமோன் பற்றிய பல கதைகளையும் முக்கிய நிகழ்ச்சிகளையும் கொடுக்கிறார். இவையே சாலமோனையும் அவர் காலத்தைப்பற்றிய உன்னதமான சித்திரத்தையும் அளிக்கப் போதுமானவையாயுள்ளன.

**3. அரசனாக அபிடேகம் பெறுதல்:-**

சாலமோன் தாவீதின் புதல்வர்கள் பலருக்கும் இளையவர். ஆனால் தாவீதின் மிகப்பிரியமான மனைவியின் மகன். சாதாரணமாக இவர் அரசு பதவிக்கு வருவது நிகழக்கூடியதன்று. ஆனால் அக்காலத்தில் அரசுவாரிசு முறைபற்றி எத்தகைய மரபும் நிறுவப்பட்டிருக்கவில்லை. தாவீது வயது முதிர்ந்தபோது, அரசு வாரிசுரிமைக்காக இரு கட்சியினர் போராடினர். படைத்தலைவர் யோவாபு, குரு அபியாத்தார் ஆகியோரின் உதவியோடு தாவீதின் தலைமகன் அதோனியா அரச பதவிக்கு உரிமை கொண்டாடினார் (1 அர 1:5-10). இதை எதிர்த்தும், சாலமோனை ஆதரித்தும் பத்சேபா, இறைவாக்கினரான நாத்தான், தாவீதின் மெய்க்காவலர் படைத்தலைவர் பெனாயா, குரு சாதோக்கு ஆகியோர் போராடினர். தனிப்பட்டவர்களின் விருப்பு வெறுப்புகளைத் தவிர வேறு எதுவும் இருகட்சியினரையும் பிரித்ததா என்று சொல்வது கடினம். பத்சேபா சுட்டிக்காட்டும் வாக்குறுதி (1:13.17) எப்போதாவது அளிக்கப்பட்டதா என்று கூறுவதும் கடினம். தாவீது சாலமோனை இணை அரசனாக்கி அதோனியா உரிமை கொண்டாடுவதை முடித்துவைத்தார் (1:11-49). இப்போராட்டத்தில் சாலமோன் எதுவும் செய்ததாகத் தெரியவில்லை. அவர் அரசனானதில் அபிடேகமோ மக்கள் ஆரவாரமோ முக்கிய பங்கு வகிக்கவில்லை. வயதாகிக் கொண்டிருக்கும் முந்தைய அரசனின் கட்டளையால் அரசனானார். அரசனானவுடன் சாலமோன் செயல்படத் தொடங்கினார். சந்தர்ப்ப சூழ்நிலையைப் பயன்படுத்தி யோவாபையும் அதோனியாவையும், சாலமோன் கொன்றார். குரு அபியாத்தாரை எருசலேமை விட்டு வெளியேற்றினார். இந்த அரச உரிமைப் போராட்டத்தில் பங்குபெறாத பென்யமின் குலத்தைச் சேர்ந்த சிமயியையும் கொன்றார். யோவாபையும் சிமயியையும் கொல்லச் சொல்லும் தாவீதின் உயிலைப் பற்றி (1அர 2:2-9) வரலாற்று ஆசிரியர் சிலர் ஐயுறுவர். அதைச் சாலமோனின் செயல்களை எண்பிக்கப் புகுத்தப்பட்ட பிரச்சார ஏடு என்று கருதுவர். ஆனால் அப்பகுதி எபிரேயச் சிந்தனைப் போக்கு, தாவீதின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், தாவீதின் தன்மை ஆகியவற்றோடு ஒத்துப் போகிறது எனலாம்.

**4. ஆட்சிமுறை:-**

சாலமோனின் நீண்ட ஆட்சிக்காலம் சில சிறுசிறு பூசல்கள் தவிர அமைதியானதாகும். அரசனானவுடன் சாலமோன் தனது தந்தையின் பேரரசை உறுதிப்படுத்தினார். யூதாவின் பகுதியைத்தவிர, நாட்டின் மீதப்பகுதியைப் பன்னிரண்டு மாவட்டங்களாகப் பிரித்தார். இதில் அவர் பழைய குலஎல்லைகளைக் கடைப்பிடிக்கவில்லை; மாறாகப் புறக்கணித்தார். இதன் விளைவாகப் பழைய குலப்பற்றைப் பலவீனப்படுத்துவதும் மக்களை அரசன்பால் பற்றுக்கொள்ளச் செய்வதும், சாலமோனின் நோக்கமாக இருந்திருக்கலாம். குலப்பாகுபாட்டை அழிப்பதில் அவர் வெற்றி பெற்றிருக்கலாம். ஆனால் மக்கள் அரசன்பால் பற்றுக் கொள்ளவில்லை. இந்த மாவட்டப்பட்டியலில் யூதா இடம் பெறாததற்கு, அது அரசனுடைய சொந்தக் குலமாயிருந்ததால், அது வரிகளிலிருந்து விடுபட்டிருந்தது என்று சிலர் காரணம் கூறுவர். இதைவிடத் தாவீதின் காலத்திலேயே யூதா பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பது மேல். இதனால்தான் அப்சலோம் கிளர்ச்சி செய்தபோது, யூதாவின் மக்கள் உற்சாகமாய் அதில் பங்கு பெற்றனர் எனலாம்.

நாடு மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டது எருசலேமிலுள்ள அரசாங்கத்தில் கட்டுப்பாடு

களை மையப்படுத்த சாலமோனுக்கு உத வியது. இந்த அமைப்பு வரிகளைச் சேர்க்க வும், கட்டாய உழைப்பைப் புகுத்தவும் பெரி தும் உதவியது. ஒவ்வொரு மாவட்டமும் ஆண்டின் ஒரு மாதத்திற்கு அரண்மனைக்கும் ஆலயத்திற்கும் வேண்டிய பொருட்களை அளிக்கும் பொறுப்பைக் கொண்டிருந்தது *(4:7-28)*.

**5. கட்டடங்கள்:-**

தனது ஆட்சியின் பதினொன்றாவது ஆண் டில், சாலமோன் எருசலேம் ஆலயத்தைக் கட்டிமுடித்தார். இதற்கு இவரது தந்தை தாவீது தயாரித்தார். சாலமோன் ஏழு ஆண்டு களாக வேலை செய்து முடித்தார் *(6:38)*. பின்பு தனது பகட்டான அரண்மனையைக் கட்டினார் *(7:1-8)*. இவர் எருசலேமையும் மெகிதோ, காசோர் (ஆட்சேர்), கெசேர் போன்ற நகரங்களையும் *(9;15)* வலுப்படுத் தினார். இவ்விடங்களில் இஸ்ராயேலைப் பற்றிய செய்திகளை அளிக்கும் தொல்பொருள் ஆய்வுகள் பல நடைபெற்றுள்ளன. பல தேர் நகரங்களையும் பண்டகசாலை நகரங்க ளையும் கட்டினார் *(1 அர 9:19; 2 நாள் 8:6)*.

**6. கட்டாய வேலை:-**

இக்கட்டட வேலைகளுக்குப் பெரும் நிதி வேண்டியிருந்தது. இது சுமையான வரி களை மக்கள் மேல் விதிக்கச் செய்தது. அக்காலத்தில் பொதுவான வரி கட்டாய உழைப்பைத் தருவதாகும். அக்காலவழக்கப் படி சாலமோன் அன்னியர்களைப் பயன் படுத்தினார். இவர்களில் பெரும்பாலோர் அடிமைகள். காலப்போக்கில் இது உள் நாட்டு மக்கள் மேலும் சுமத்தப்பட்டது. அயல்நாடுகளோடு செய்த வியாபாரம் நிறைய நிதியைக் கொண்டுவந்தது என்பது உண்மையே. ஆனால் இது, பெரும் கட்டட வேலைகளுக்கும் அரண்மனையின் ஆடம் பர வாழ்க்கை முறைக்கும் போதியதாக இருக்கவில்லை *(1 அர 4:22தொ)*. ஆகவே கட்டாய உழைப்பு நாட்டுமக்கள் மேலும் சுமத்தப்பட்டது *(5:27)*. இந்த வழக்கு எகிப்தி லும் மெசபொத்தாமியாவிலும் நிலவியது. ஆனால் இஸ்ராயேலின் மரபுகளுக்குப் புறம் பானது. மக்களால் பெரிதும் வெறுக்கப்பட் டது. இந்த வழக்கு தாவீதால் ஏற்கெனவே புகுத்தப்பட்டிருந்தது *(2 சாமு 20:24)*. சால மோன் எல்லா இஸ்ராயேலரின் மேலும் சுமத்தினார் *(1 அர 5:27)*. *9:20-22* இந்தக் கட்டாய உழைப்பு கானானியர்கள் மேல் மட்டுமே சுமத்தப்பட்டது என்று கூறுகிறது. ரெகபயாம் ஆட்சிக்கு வந்தவுடன், மக்கள் அளித்த வேண்டுகோள், இப்பழக்கம் இஸ் ராயேலர் மேலும் சுமத்தப்பட்டிருந்ததை உண்மையெனக் காட்டுகிறது *(12:4)*.

**7. வியாபாரம்:-**

சாலமோன் ஆட்சியில் பொருளாதாரம் அன்னிய வணிகத்தை மிகவும் சார்ந்திருந் தது. எட்சியோன்-கெபேர் என்ற இடத்தில் ஒரு கப்பல் துறைமுகத்தையும் சுரங்க மையத்தையும் அமைத்தார். அக்காலத்தில் தெரிந்திருந்த நாடுகளுக்கெல்லாம் அவரது கப்பல்கள் சென்றுவந்தன. ஒரு முழுப்பய ணத்துக்கு மூன்று ஆண்டுகள் எடுக்கலாம் *(9:26-28; 10:22)*. அவருடைய வணிகப்பொருள் களில் தேர்களும், குதிரைகளும் அடங்கி யிருந்தன. சாலமோன் தேர்களைச் செய்யவு மில்லை; குதிரைகளை வளர்க்கவும் இல்லை. கேவே (சிலிசியா)யிலிருந்து குதி ரைகளையும் எகிப்திலிருந்து தேர்களையும் பெற்று *(1 அர 10:28 தொ)* பண்டமாற்றும் தரகராகச் செயல்பட்டார்.

**8. அரசியல்யுக்தி:-**

அண்டை நாடுகளுடன் வியாபார, போர் உடன்படிக்கைகள் செய்து கொண்டார் சால மோன். இதற்கு எடுத்துக்காட்டாக அவர் எகிப்தோடும் தீரின் அரசன் ஈராமோடும் செய்துகொண்ட உடன்படிக்கைகளைக் கூற லாம் *(5:1-12)*. இவை சில சமயங்களில் திருமணத்தால் உறுதிப்படுத்தப்பட்டன. சாலமோன் எகிப்திய இளவரசியை மணந் தார் என்பது அவரது ஆட்சியின் முக்கியத் துவத்தையும் அவரது மேன்மையையும் காட்டு கிறது *(3:1)*. எகிப்தின் இளவரசி மற்ற மனைவியரைவிடச் சிறப்பான முறையில் நடத்தப்பட்டாள். பார்வோன், கைப்பற்றி யிருந்த கெசேர் நகரை அவளுக்குச் சீதனமாகக்

கொடுத்தார் (*3:1; 7:8; 9:16.24*). தீரின் அரச னான ஈராம், வணிகத்திலும் கட்டடங்கள் கட்டுவதிலும் சாலமோனின் முக்கிய கூட் டாளியாக இருந்தார்.

*9. செல்வம்:-*

சாலமோனின் செல்வங்கள் பழமொழி யாக எடுத்துக்கூறும் அளவுக்குப் பெருகி யிருந்தன (*மத் 6:29; லூக் 12:27*). அவரது ஆட்சிக் காலத்தில் நாடு செழிப்புற்று இருந் தது எனப் பாரம்பரியங்கள் கூறுகின்றன (*1 அர 4:20. தொ 25; 9:10-14; 10:14-29*). இவை மிகைப்படுத்தப்பட்டிருக்கலாம் என்று வர லாற்று ஆசிரியர்கள் கருதுவர். சாலமோனும் அவரது அரசவையும் கொண்டிருந்த செல் வச் செழிப்பு பொது மக்களைப் போய்ச்சேர வில்லை. பெரும் செல்வமுடைய சிறிய குழுக்களும், கொடும்வறுமையால் வாடிய பெரும்பகுதியினரும் சாலமோன் காலத்தில் தான் தோன்றினர் எனலாம். இந்நிலை இறைவாக்கினர்களால் சுட்டிக்காட்டப்பட் டுக் கண்டிக்கப்படும். தீரைச் சேர்ந்த ஈராமுக் குக் கலிலேயாவிலுள்ள 20 ஊர்களைக் கையளித்தது சாலமோன் தன் வரவுக்குமேல் செலவு செய்தார் என்பதைச் சுட்டுகிறது.

*10. ஞானம்:-*

செல்வச் செழிப்பைவிட ஞானத்திற்குச் சாலமோன் புகழ்பெற்றவராவார்; இஸ்ராயே லின் ஞானத்திற்கும் ஞான இலக்கியங்களுக் கும் தந்தையெனப் போற்றப்படுகிறார் (*1 அர 3:1-28; 4:29-34; 10:23 தொ; பழ 1:10; 10:1; 25:1*). *1 அர 3:5-15*-இன்படி இறைவன் அரசனுக்குக் கனவில் தோன்றி ஒரு வரம் அளிப்பதாகக் கூற, சாலமோன் தனக்கு ஞானத்தைத்தர வேண்டும் என்று கேட்டார். இறைவனும் அளித்தார். சாலமோனின் ஞானம் எவ்வளவு போற்றப்பட்டதென் றால், பிற்கால இஸ்ராயேல் மற்றும் தொடக்க கால யூத இலக்கியங்களின் ஞானப் பாரம்பரியத்துடன் மிகவும் நெருங் கியவிதத்தில் சாலமோன் தொடர்புபடுத்தப் படுகிறார். இதன் விளைவாகப் பழமொழி நூலின் பெரும்பகுதிகளுக்கும் (*பழ 10:1-22:16; 25:1-29:27*), உன்னத சங்கீதம், திருவுரை, சங் *127*, சாலமோனின் ஞானம், சாலமோனின் சங்கீதங்கள், சாலமோனின் பாடல்கள் முதலியவற்றிற்கும் சாலமோனே ஆசிரியர் ஆவார் என்ற பாரம்பரியம் நிலவி யது. இந்தக் குறிப்புகளுக்குப்பின், ஒரு பெரிய இலக்கிய இயக்கம், தாவீதின் காலத் தில் தொடங்கப்பட்டு சாலமோனின் ஆட்சி யில் ஊக்கம்பெற்று நிலவியது எனக் கூற லாம். இந்த இயக்கத்தில் தொடக்க இஸ்ரா யேல் பற்றிய யாவே பாரம்பரிய வரலாறும் குடியேற்றம் மற்றும் நீதிபதிகள் காலத்திய வரலாறும் இடம் பெறுகின்றன. இவை யெல்லாம், முதலில் வாய்மொழிப் பாரம்பரிய மாகப் பாதுகாக்கப்பட்டு, பின்பு அரசராட் சிக் காலத்தில் எழுத்து வடிவம் எடுத்தன. வரலாற்றின் மற்றக் காலங்களைப்போல, அக்காலத்திலும் இந்த இலக்கியங்கள், மக்க ளின் நாட்டுணர்வையும், மக்கள் வரலாற் றைச் சார்ந்தவைகள் என்ற உண்மையையும் எடுத்துக்கூறும் கருவியாயின. வரலாறு களையும் நாளேடுகளையும் தொகுப்பது இந்த இயக்கத்தின் ஒரு பகுதியாகும். அர சாட்சியின்கீழ்ப் பல்குலத்தவரையும் ஒன்றி ணைப்பது, பல்குலத்தவர்களின் பாரம்பரி யங்களையும் ஒன்றுசேர்த்து இணைத்துத் தொகுப்பதை அவசியமான தாக்கிற்று. இந்த இலக்கிய இயக்கத்தில் இஸ்ராயேலரின் ஞானப் பாரம்பரியங்களின் தொகுப்பும் இடம் பெற்றது.

*11. பாவங்கள்:-*

உபாகமப் பாரம்பரியத் தொகுப்பாளர் சாலமோனின் பாவங்களையும் தாழ்வுகளை யும் தொகுத்துத் தந்துள்ளார் (*1 அர 11*). சாலமோன் அன்னிய மகளிரை மணந்ததும், அவர்களது வழிபாடுகளுக்கு ஆதரவு அளித் ததும், அவரது ஆட்சி நெடுகிலும் நிகழ்ந் திருக்க வேண்டும். இது அவரை யாவேயின் உண்மையான வழிபாட்டிலிருந்து விலகிச் செல்லச் செய்திருக்க வேண்டும் (*11;1-8*). அவரது மரணத்துக்குப்பின் நாடு பிளவுபட் டதற்குச் சாலமோனின் பாவமே காரணம் எனக் கூறப்படுகிறது (*11:9-13*). யோசியா வின் காலத்தில்கூட சாலமோன் கட்டியதா கக் கருதப்பட்ட மேட்டு நிலங்கள் இருந்

திருக்கின்றன (2 அர 28:13). அவருக்கு 700 மனைவியரும் 300 வைப்பாட்டிகளும் இருந் தனர் (1 அர 11:4) என்பது பொதுப்பாணிப் பாரம்பரியத்தால் மிகைப்படுத்தப்பட்டதா கும். காதல் மன்னன் என்ற அவரது புகழ் உன்னத சங்கீதத்தில் சுட்டிக் காட்டப்படு கிறது.

12. தாழ்வுகள்:-

இவையும் ஓரளவு அவரது ஆட்சியின் தொடக்க காலத்தைச் சேர்ந்ததாகும். ஏதோ மின் அரசனான அதாது, பார்வோனின் தூண் டுதலால், சாலமோனுக்குத் தொல்லை கொடுத்துவந்தார். இது சாலமோன் எகிப்திய இளவரசியை மணந்தபின் எகிப்தில் அரச மரபு மாறியிருக்கலாம் என்று சுட்ட வல்லது. இதைவிட ஆபத்தானது தமஸ்கு வில் இரசோனால் நிறுவப்பட்ட சுதந்தர மான அரசாகும் (1 அர 11:23-25). இந்த அரசு பிற்காலத்தில் இஸ்ராயேலின் அரசுக்கு அச் சுறுத்தலாகவே இருந்தது. மற்றும் சில, இறை வாக்கினர்களின் ஆதரவுடன் எரொபவாம் நடத்திய வெற்றிபெறாத கிளர்ச்சியாகும் (11:26-40). சாலமோனின் வரலாற்றைப்பற்றிய உபாகமப் பாரம்பரிய விவரிப்பை நாளாக மப் பாரம்பரிய விவரிப்போடு ஒத்துப்பார்க் கலாம். நாளாகமப் பாரம்பரிய ஆசிரியர் (1 நாள் 28-2நாள் 9) வாரிசு உரிமைப் போராட் டம் பற்றிய கதையைவிட்டு விடுகிறார்; அதற் குப் பதிலாகத் தாவீது முறையாகக் கட்டளை யிடும் கதை கூறப்படுகிறது. மாவட்ட அமைப்பு, சாலமோனின் பாவங்கள், தாழ்வு கள் பற்றிய விவரிப்புகள் விடப்பட்டுள்ளன.

13. முடிவுரை:-

நவீன கால வரலாற்று ஆய்வாளர்கள் பொதுவாகச் சாலமோனுக்குப் பாதகமா கவே தங்கள் தீர்ப்பைக் கூறுகின்றனர். அவர் தன் தந்தையிடமிருந்து ஒரு வலுவான அர சைப் பெற்றார். ஆனால் அதை எப்படிப் பேணிக்காத்தார்? அவரது மரணத்துக்குப் பின் அரசு பிளவுபட்டது, அவர் அரசை நடத்திய விதம் பற்றிக் கேள்விக்குறி எழுப்பு கிறது. செல்வம் மிகுந்தது; ஆனால் அதே சமயம் அரசவையின் ஆடம்பரச் செலவு களும் மிகுந்தன. அதனால் தாவீதின் வெற்றி கள் மற்றும் சாலமோனின் வியாபாரம் ஆகிய வற்றின் பலன்கள் மக்களைச் சென்றடைய வில்லை. யூதாவையும் இஸ்ராயேலையும் ஒன்றிணைக்க அவர் செய்த முயற்சி தோல்வி யுற்றது. சாலமோனின் அருமை பெருமை சிறுமைகள் சீரா 47:12-22-இல் போற்றப்பட் டுள்ளன.

**சாலமோன் வரலாற்று நூல்** (SOLOMON, BOOK OF THE ACTS OF)

1 அர 11:41-இல் குறிக்கப்படும் ஒரு நூல். 1 அர 3:1-11:40 வரையுள்ள பகுதிக்கு முக்கியமான மூலமாகக் கருதப்படுவது. இந்த நூல் கொண்டிருந்தது என்ன, மற்றும் பிற மூலங்களிலிருந்து எவை எடுத்தாளப் பட்டன என்பனவற்றைப்பற்றி ஒன்றும் உறுதி யாகக் கூறமுடியாது. ஆனால் சாலமோ னின் செயல்கள், ஞானம்பற்றிய குறிப்பு (11:41) இந்நூல் பலதரப்பட்ட பொருள் களைக் கொண்டிருந்திருக்க வேண்டும் என்று சுட்டுகிறது.

**சாலா** (SALA)

1. லூக்கா அளிக்கும் இயேசுவின் மூதாதை யர் பட்டியலில் சாலா போவாசின் தந்தை யும் நகசோனின் மகனும் ஆவார் (லூக் 3:32).

2. அதே பட்டியலில் சாலா ஏபேரின் தந்தையும் கயினானின் மகனும் ஆவார் (லூக் 3:36).

**சாலிசா** (SHALISHAH - முக்கோணவடிவ மான, மூன்றுபகுதி)

இப்பகுதி வழியாக, சவுல் காணாமல் போன கழுதைகளைத் தேடிச் சென்றார் (1 சாமு 9:4). அறிஞர்கள் சிலர் கிபயாவி லிருந்து வடக்குப் பகுதியாகச் சென்று எப்பிரா யிம் பகுதிக்குப்பின் சாலிசா வழியாகப் போனார் என்று கருதுகின்றனர். இதனால் சாலிசா, எப்பிராயிம் பகுதிக்கு வடக்கிலோ அப்பகுதியிலோ இருந்திருக்கலாம். ஆனால் இப்பகுதியின் இறுதி மேற்கோளானது சவுல் பயணத்தின் திசையைக் குழப்புகிறது.

பாகால் - சாலிசா *(2 அர 4:42)* நகரம். சாலிசா பகுதியில் இருந்திருக்கலாம். இது இக்காலத் தேல் அவிவுக்கும் நபுலூசுக்கும் இடையிலுள்ள கெபிர் திலித்துவாக அடையாளம் காட்டப்படுகிறது.

**சாலிம்** (SHAALIM - நரிகளின் நாடு)

இது, காணாமல் போன கழுதைகளைத் தேடிச் சென்ற சவுல் கடந்து சென்ற பகுதியாகும் *(1 சாமு 9:4)*. அறிஞர்கள் பலர் 'இது பென்யமினின் நிலப்பரப்பில் இருந்திருக்கலாம்' என்று கருதுகின்றனர். மேலும் இப்பெயர் ''சாலபிம்'' என்ற பெயரின் மொழிச் சிதைவாக இருக்கலாம் என்றும் கருதுகின்றனர். மேலும் பெத்தேலுக்கு வடக்கிலுள்ள சூவால் என்ற இடத்தோடும் இதைத் தொடர்பு படுத்தலாம்.

**சாலூ** (SALU - திரும்ப அமைக்கப்பட்ட)

இவர் சிமியோனின் பரம்பரையில் பிறந்தவர். இவர் சிம்ரி என்பவருக்குத் தந்தை; சிம்ரி மிதியானியப் பெண் கோசுபியை மணந்தபோது கொல்லப்பட்டார். சிமியோனியக் குடும்பத்திற்குத் தலைவராக இருந்த சிம்ரியின் திருமணம், இஸ்ராயேலர்கள் தாங்கள் முன்செய்த பாவத்திற்கு வருந்தும் போது நடந்தது. ஆகவே இஸ்ராயேல் தலைவர்களின் சினத்தைத் தூண்டியது *(எண் 25:14)*.

**சாலேம்** (SALEM - அமைதியான, பாதுகாப்பான, முழுமையான)

இது மெல்கிசதேக்கு அரசனுடைய நகரத்தின் பெயர் *(ஆதி 14:18)*. பிற்காலத்தில் இந்நகரம் எருசலேம் நகரத்தோடு ஒன்றாகக் கருதப்பட்டுள்ளது. இது சங் 76:2-இல் மிகத் தெளிவாகிறது. இச்சங்கீதத்தில் உலகில் இறைவனின் உறைவிடமாகச் சீயோனோடு, இணையாகச் சாலேம் குறிக்கப்படுகிறது. சாவேயின் பள்ளத்தாக்கு அல்லது அரசரின் பள்ளத்தாக்கு என்ற இடத்தில், எபிரேயர் கெதர்லகோமரையும் அவரது கூட்டணியையும் தோற்கடித்தபின், மெல்கிசதேக்கு ஆபிரகாமைச் சந்தித்தார் *(ஆதி 14:17-18)*. இவ்விடம் எருசலேமுக்கு அருகில் இருந்திருக்கலாம். ஒரு வேளை கிதரோன் பள்ளத்தாக்காக இருக்கலாம் *(2 சாமு 18;18)*. சங் 110:4 எருசலேமில் யூதாவின் அரசனை மெல்கிசதேக்கின் வாரிசாக விவரிக்கின்றது. பிலோவின் நூலும், எபிரேயர்களுக்கு எழுதப்பட்ட திருமுகமும் இப்பெயருக்கு அமைதி என்ற பொருளைக் கொடுக்கின்றன *(எபி 7:2)*. சாலேம் எருசலேமுக்கு மற்றொரு பெயர் அல்ல; ஆனால் சமய, கவிதைசார்ந்த இடுபெயராக உள்ளது. சாலேம் சில சமயங்களில் சாலிம் என்ற கிராமத்தோடு ஒன்றாக்கப்படலாம். இந்தக் கிராமம் பலாத்தாசெக்கேம் என்ற நகருக்குக் கிழக்கே 8 கி.மீ. தொலைவில் உள்ளது.

**சாலேம்** (SHALEM - அமைதி)

இவ்வார்த்தை ஆதி 33:8-இல் மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது. விளக்குரைஞர்கள் இதைப் பலவாறு எடுத்து, செக்கேமிற்கு அருகிலுள்ள ஒரு நகரத்தின் பெயர் என்றும், செக்கேமுக்கு இன்னொரு பெயர் என்றும், செக்கேமுக்கு யாக்கோபு வந்து சேர்ந்ததை விவரிக்கும் சொல் என்றும் கருதுகின்றனர். ஆதி 14:18-இல் வரும் சாலேமோடு இதைச் சேர்த்துக் குழப்ப வேண்டிய அவசியமில்லை.

**சாலேம்** (SHALEM - நிறைவு செய்பவர் - கடவுள்)

இராஸம்ரா ஏடுகளின் ஆதாரங்களிலிருந்து இது ஒரு தெய்வம் எனத்தெரிகிறது. இது சாலேம், சாகர் போன்ற இரட்டையர்களின் பிறப்பு பற்றி விளக்கும்போது தெளிவாகிறது. 'சாகர்' விடிவெள்ளியாகும், 'சாலேம்' மாலை வெள்ளியாகும். இரண்டும் சேர்ந்து வீனஸ் நட்சத்திரமாகும். உரோமையர்களும் இவர்கள் இருவரையும் இரட்டையர்களாகப் பார்க்கின்றனர். சாலேம் மாலை அமைதியைக் குறிப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் முதன்மைப் பொருள் ''முழுமைப்படுத்தல், நிறைவுபடுத்தல்'' ஆக இருக்க வேண்டும். பகலை முடிவுக்குக் கொண்டு வரும் வீனஸ் நட்சத்திரம் இதைக் குறிப்பதாக உள்ளது. அதிகாலையில் வரும் வீனஸ் நட்சத்திரம் சாகராக உள்ளது.

பழைய ஏற்பாட்டிலே சாலேம் கடவுளாகப் பாவிக்கப்படாவிட்டாலும், இவருடைய பெயர் எருசலேம் இடப்பெயரோடு கலந்து நிற்கிறது. இந்த இடப்பெயர் ஆதி 14:18-இல் சாலேமாகக் குறிக்கப்பட்டுள்ளது. இது சங் 76:2-இல் சீயோனோடு ஒப்பிட்டுச் சொல்லப்பட்டுள்ளது. சாலேம் இஸ்ராயேலர் எருசலேமுக்குக் குடியேறுமுன் அந்த இடத்துக் கடவுளாக இருந்திருக்க வேண்டும், அந்தத் தெய்வத்திற்கு மதிப்புக் கொடுக்கும் பொருட்டு தாவீதின் மகனுக்குச் சாலமோன் பெயர் கொடுக்கப்பட்டதாய் இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இந்தப் பெயரின் வேறு வடிவம் சாலமானு ஆகும். இது வீனஸ் நட்சத்திரம், மாலையில் வெளிப்படுவதைக் கூறுகிறது. இது அரேபிய புராணக் கதையில் வரும் அத்தாரோடு ஒப்பிடப்படும். இந்த அத்தார் நீதி 11:24-இல் வரும் அம்மோன் கடவுளோடு ஒப்பிடப்பட்டுள்ளது. இது சரியென்றால் எருசலேமில் மோலக்கு வழிபாடு சாலேம் கடவுளின் வழிபாட்டு நினைவாக இருக்கலாம்.

**சால்போன் (SHAALBON)**

தாவீதின் பலம் வாய்ந்த மனிதர்களில் ஒருவரான எலியாபா (எல்யாகுபா) என்பவரின் சொந்த ஊர் (2 சாமு 23:32; 1 நாள் 11:33). இவ்வூர் சாலபிம் என்ற நகராயும் இருக்கலாம்.

**சாவடி, சத்திரம், விடுதி (INN.)**

இவற்றின் மூல எபிரேயச்சொல் பல வித்தியாசமான உறைவிடங்களுக்குப் பயன்படுத்தப்பட்டது.

*1. பழைய ஏற்பாடு:*

சொல்லிணக்கத்தின்படி எபிரேயச் சொல் ''இன்றிரவு தங்குமிடம்'' (யோசு 4:3) என்று குறிப்பிடுகிறது. இது ''பயணியர்'' (எரே 9), ஒரு குடும்பம் (யாத் 4:24) வழிப்போக்கர் குழு (ஆதி 42:27; 43:21), ஒரு படை (2 அர 19:23; எசா 10:29), அல்லது ஒரு நாடுகூட (யோசு 4:3.8) தங்குமிடத்தைக் குறிக்கப் பயன்பட்டிருக்கிறது. அனேகமாக ஒரு சிறிய, எளிய இடமாகப் பாலைவன வழிப்போக்கர்களுக்குப் பயன்பட்டிருக்கிறது (எரே 9:1). ஆனால் மற்றக் குறிப்புகளில் எவ்வகைக் கட்டமைப்பும் கருத்தில் கொள்ளவில்லை. வழிபோக்கர்களுக்குத் தனி வீடுகளில் தங்க இடம் கிடைக்காதபோது திறந்தவெளியில் இரவைக் கழித்தார்கள் (ஆதி 19:2; 28:11; நீதி 19:15). ''கேரூத - கிம்காம்'' என்பதைக் (எரே 41:17) கிம்காமின் தங்குமிடம் அல்லது சாவடி என்று மொழிபெயர்க்கலாம். இவ்விடம் பெத்லகேமுக்கு அருகில் இருந்தது.

யோசு 2:1-இல் இராகாபு விலைமாதுத் தொழிலையும் சத்திரக்காப்புத் தொழிலையும் சேர்த்துச் செய்திருக்கலாம் என்று பிற்கால யூத விளக்கங்கள் சுட்டுகின்றன.

*2. புதிய ஏற்பாடு:*

பெத்லகேமில் யோசேப்பு, மரியாளுக்கு ''விடுதியில் இடம் கிடைக்கவில்லை'' (லூக் 2:7) என்று கூறப்பட்டுள்ளது. கிரேக்கச் சொல்லின் அடிப்படையான பொருள் ஒருவரின் சுமையைக் குறைக்கும் இடமாகும். இங்கு இச்சொல் ஓர் உணவுவிடுதியைக் குறிக்காது. ஆனால் அனேகமாக, அரபிய மொழிபோல, நகரத்தார் விருந்தினர் வீட்டைக் குறிக்கலாம். இச்சொல் விருந்தினர் அறையாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. அங்கே இயேசுவும் அவருடைய சீடர்களும் அவர்களுடைய கடைசி இரா உணவை உண்டனர் (மாற் 14:4; லூக் 22:11).

நல்லசமாரித்தன் காயப்பட்ட வழிபோக்கனைச் சாவடிக்குக் கொண்டு சென்றார் (லூக் 10:34). இச்சாவடி ஒரு உணவு விடுதியாக இருந்ததால் காயம்பட்ட மனிதனுக்குச் சிகிச்சையும், உணவும் அளிக்கப்பட்டது.

நல்ல சாமாரித்தனுடைய சாவடி பரம்பரையாகக் கான் - ஏல் - ஆக்மார் அல்லது அதிகம் தெரிந்த கான் காத்ரூர் என்ற இடமாக அடையாளம் காட்டப்படுகிறது. இது எருசலேமுக்கும், எரிக்கோவுக்கும் இடையில் காணப்படுகின்ற பாதையின் மத்தியில் உள்ளது. இது ஒரு பெரிய முற்றத்தையும், வில்வடிவமான கதவுகளை உடைய கட்டடத்தையும், நடுவில் ஒரு கிணற்றையும்

கொண்டிருக்கிறது. இயேசுவின் காலத்தில் சாவடிகள் இதே அமைப்பைக் கொண்டிருந் திருக்கலாம்.

**சாவூல்** *(SHAUL - இறைவனிடம் கேட்டது, இறைவனுக்குக் கொடுக்கப்பட்டது)*

*1.* எந்த அரசனும் இஸ்ராயேலர்களை ஆள்வதற்குமுன் ஏதோமில் ஆறாவது அரச னாக இருந்தவர் *(ஆதி 36:37-38; 1 நாள் 1:48-49)*. இவரது ஆட்சிப் பகுதி தெளிவாகத் தெரியவில்லை. இவர் யூப்பிரத்தீசு நதிக்கரு கிலுள்ள இரகாபோத்தைச் சேர்ந்தவர்.

*2.* ஓர் இஸ்ராயேலன், சிமியோனுக்கும் பெயர் தெரியாத ஒரு கானானியப் பெண் ணுக்கும் பிறந்தவர் *(ஆதி 46:10; யாத் 6:15; 1 நாள் 4:24)*. 'சாவூல் வமிசத்திற்குத்' தலைவ ராக இருந்தார் *(எண் 26:13)*.

*3.* ஒரு லேவியர். கோகாத்தின் புதல்வர்க ளில் ஒருவர். ஊசியாவின் மகன் *(1 நாள் 6:24)*. இவரும் *1 நாள் 6:36*-இல் வரும் யோவே லும் *(5)* ஒரே ஆளாக இருக்கலாம்.

**சாவே - கிரியாத்தாயிம்** *(SHAVEH - KIRIA-THAIM - சமவெளி)*

இது யோர்தானுக்கு அப்பால் மோவாபில் இருக்கிறது. இங்குதான் கெதர்லகோமரும் அவரது கூட்டணியும் ஏமியர்களைத் தோற்க டித்தனர் *(ஆதி 14:5)*. அனேகமாகக் கிரியாத்தா யிமைச் சுற்றியுள்ள சமவெளியாக இருக்க லாம். கிரியாத்தாயிம் இக்கால ஏல் - கெரே யாத்தாக அடையாளம் காட்டப்படுகிறது. இது திபோனுக்கு வடகிழக்கே 9 கி.மீ. தொலைவில் உள்ளது. கி.மு. முதல் நூற் றாண்டுக்கு முன் உள்ள எந்த ஆதாரங்களும் அங்குக் கண்டுபிடிக்கப்படவில்லை.

**சாவே பள்ளத்தாக்கு** *(SHAVEH, VALLEY OF)*

இந்தப் பள்ளத்தாக்கில்தான் ஆபிரகாம் கெதர்லகோமரையும், அவரது கூட்டாளி களையும் வெற்றி கண்டார். மேலும் இங்கு தான் சோதோமின் அரசரும், சாலேமின் அரசரான மெல்கிசதேக்கும் ஆபிரகாமைச் சந் தித்தனர். *ஆதி 14:17-18*-சாவே, பள்ளத் தாக்கை ''அரசர் பள்ளத்தாக்கு'' என்று வரு ணிக்கிறது. *2 சாமு 18:18* ''அரசர் பள்ளத் தாக்கு'' எருசலேமுக்கு அருகிலுள்ளதா கக் கூறுகிறது; அரசர் தோட்டத்தோடு தொடர்புபடுத்துகிறது. அனேகமாக இரண் டும் ஒன்றாகவே இருக்கலாம். ஆகவே சாவே பள்ளத்தாக்கு அல்லது அரசர் பள்ளத் தாக்கு கிதரோன் ஓடையைச் சுட்டலாம்.

**சானானிம், சானானியர்** *(ZAANANNIM - மாறு கின்ற)*

நப்தலியின் ஓர் எல்லை நகரம். தாபோர் மலைக்கும் யோர்தான் ஆற்றுக்கும் இடை யில் கெதேசுக்கு அருகில் இருந்தது *(யோசு 19:33)*. கேனியரான கெபேர் (எபேர்) இங்கு தான் கூடாரங்களை அமைத்தார். இங்குதான் சிசரா கொல்லப்பட்டார் *(நீதி 4:11)*.

நீதி 4-ஆம் அதிகாரம் தெளிவாக இல்லா மையால், இது இருந்த இடம் இன்னும் கண்டு பிடிக்கப்படவில்லை. *யோசு 19:33*-இல் குறிக்கப்படும் இடம் இன்றைய கான் எத்-துசார் என்ற இடமாக அடையா ளம் காட்டப்படுகிறது. பெத்சானிலிருந்து தமஸ்குவுக்குப் போகும் வழியில் உள்ள ஒரு வணிகக்குழு தங்கிச்செல்லும் இடமாகும். அதாமிலிருந்து 6.5 கி.மீ. தொலைவிலுள் ளது. *நீதி 4:11*-இல் குறிக்கப்படும் இடம் மெகிதோவுக்கும் தேல் அபு கெதேயிசுக்கும் இடையிலுள்ள லெகூனாக இருக்கலாம். நப்தலியிலுள்ள இடமே இரண்டு பகுதியி லும் குறிக்கப்பட்டிருக்கலாம்.

**சானான்** *(ZAANAN - கூட்டம் கூடும் இடம்)*

யூதாவின் செபேலாவிலுள்ள இன்னும் அடையாளம் காட்டப்படாத ஒரு நகரம் *(மீக் 1:11)*. பலமுறை இதுவும் செனானும் *(யோசு 15:37)* ஒன்றே என்று கருதப்படுகிறது. இந்த இரண்டு இடங்களும் இலாக்கிசோடு சேர்த்துச் சொல்லப்பட்டுள்ளன.

**சானோவாகு** *(ZANOAH - சதுப்பு நிலம், நிராகரிக்கப்பட்ட) - ஆள்*

எக்குத்தியேலின் மகன்; மெரேதின், அவ ருடைய யூத மனைவியின் வழியாக வந்த, வழித்தோன்றல் *(1 நாள் 4:18)*.

**சானோவாகு** (ZANOAH - சதுப்பு நிலம், நிராகரிக்கப்பட்ட) - இடம்

1. யூதாவில் சோரா அசேக்கா என்ற செபேலா மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு கிராமம் (யோசு 15:34). அடிமைத் தளையிலிருந்து நாடு திரும்பிய யூதர்கள் குடியேறிய ஊர்களுள் இதுவும் ஒன்று என்று நெகே 11:30 கூறுகின்றது. எருசலேம் மதில் சுவரைக் கட்டும் வேலையில் கானூனும் (ஆனூன்) சானோவாகின் குடிகளும் பள்ளத்தாக்கு வாயிலைக் கட்டினார்கள் (நெகே 3:13).

பெத் - செமேசுக்கு தெற்கு- தென் கிழக்குத் திசையில் ஏறக்குறைய 5 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத் - சானுதான் இவ்விடம் என்று அடையாளம் காட்டப்படுகிறது. இது மலைமேல் அமைந்திருப்பதால் இதைக் கிழக்கு, மேற்கு, வடக்கு வழியாக அடைவது கடினம். அரசாட்சிக்காலம், பைசாந்தியர் காலம், அரேபியர்கள் காலம் சார்ந்த சுவரின் சிதைவுகளும், பாண்டங்களும் இங்குக் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

2. மாவோன் என்ற மலைமாவட்டத்திலிருந்த ஒரு யூதா நகர் (யோசு 15:56; 1 நாள் 4:18). இக்கால யாத்தாவிற்கு (விவிலிய யூற்றா யோசு 15:55) வடமேற்குத் திசையில் வாடிஅபுசெனாவில் ஏறக்குறைய 2.5 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத் பெயித்துஅமிரிதான் இவ்விடம் என்று கருதப்படுகின்றது.

**சான்று பகர்** (WITNESS)

**அ. பழைய ஏற்பாடு:**

**I. மனிதர்களின் சாட்சியம்:**

நிகழ்ந்த ஒன்றை நடந்ததென உறுதிப்படுத்துவது, சான்று பகர்தல் எனப்படும். சாட்சியின் பணி வழக்குத் தீர்க்கும் நீதித்துறையில் மிகவும் இன்றியமையாதது. மக்களின் பழக்கத்திற்கேற்ப, பலவும் சான்றாகப் பயன்படலாம். யாக்கோபு தனக்கும் லாபானுக்கும் அமைத்த சாட்சி மேடையான கலயேது (ஆதி 31:45-52), தாமார் வேசியாய் நடந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டபொழுது அவளுக்கு அளிக்கப்பட்ட அடைமானங்கள் (38:25) ஆகியவை இதற்குத் தக்க சான்றுகள். இத்தகைய பொருட்களைவிட, மனிதன் கூறும் சாட்சியத்தையே மறைநூல் தலைசிறந்ததாகக் கருதுகின்றது. சாட்சி கூறுவதற்கு வகுக்கப்பட்ட முறையான சட்டங்கள் உண்டு. சாட்சிகள் மூலம் தெளிவு பெறாமல், தண்டித்தல் கூடாது (எண் 5:13). சாட்சிகள் இருவராயிருப்பது சிறந்தது, அதனால் தவறு அல்லது கெட்ட எண்ணத்துடன் கூடிய தீர்ப்பு தவிர்க்கப்படும் (எண் 35:30; உப 17:6; 19:15; காண் மத் 18:16). கொலைத் தீர்ப்பு உள்ள வழக்கிலே, சாட்சிகள் இதை முதலாவதாகச் செயல்படுத்த வேண்டும் (உப 17:7; காண் அ.ப. 7:58). பொய்ச்சான்று கூறப்பல வாய்ப்புகள் உண்டு. பொய்ச்சான்று பகர்வோர் தமக்கெதிராக எழும்புவதாக முறையிடுகின்றார் சங்கீத் ஆசிரியர் (சங் 27:12;35:11). பொய்ச்சாட்சிகளால் நடந்த துயரமிகு வழக்குகளும் இஸ்ராயேல் வரலாற்றில் உள்ளன (1 அர 21:10-13; தானி 13:34-41). பத்துக்கட்டளைகளை மக்கள் கடைப்பிடித்த நாளிலிருந்து பொய்ச்சாட்சி கூறுவது மிகவும் கடுமையாகத் தண்டிக்கப்பட்டது (உப 9:16 தொ; 5:20). பொய்ச்சான்று பகன்றோர், அதே தண்டனை அனுபவித்ததை உப ஆகமத்தில் காண்கின்றோம் (உப 19:18 தொ). ஞானிகளும் இதை மிகவும் கடிந்துரைத்தார்கள் (பழ 14:5.25; 19:5.9; 21:28; 24:28; 25:18). ஏனென்றால் கடவுளின் திருமுகத்தின் முன்பு இச்செயல் மிகவும் அருவருப்பூட்டும் செயலாய் உள்ளது (பழ 6:19).

**II. கடவுள் கூறும் சான்று**

**1. கடவுளே சாட்சி:-**

மனிதனின் சான்றுக்கு மேலாகக் கடவுள் பகரும் சான்று ஒன்று உண்டு. அதை எவனாலும் மறுக்க முடியாது. திருமணச்சடங்கிலே, கணவனுக்கும் மனைவிக்கும் ஆண்டவர்தாம் சாட்சி (மலா 2:14). அதுபோல் அவர் திருமுகம் முன் மனிதன் செய்கின்ற எல்லா ஒப்பந்தங்களுக்கும் அவரே உத்தரவாதம் ஆவார் (ஆதி 31:53தொ; எரே 42:5). மனிதர்களின் பொய்ச்சான்றை மறுத்துக்கூற (யோபு 16:7 தொ 19) கடவுளையே சாட்சியாக அழைக்கலாம் (1 சாமு 12:5; 20:12).

**2. திருச்சட்ட வழியாகவும், இறைவாக்கினர் வழியாகவும் இறைவன் கூறும் சான்று:-**

ஆண்டவர் பகரும் சான்றை, அவரது திருவாக்குடன்சேர்த்து, வேறுவிதமாகவும் புரிந்து கொள்ளலாம். முதலாவதாகக் கடவுள் தமது திருப்பெயரின் பொருளை மோசேக்கு அறிவிக்கும் பொழுதும் (யாத் 3:14), தாம் ஒருவரே (20:2தொ) ஏகமான கடவுள் என்று எடுத்துரைக்கும்பொழுதும் தம்மைப்பற்றியே அவர் சாட்சியம் கூறுகின்றார். இந்தச் சாட்சியம் அவரால் ஆணையிட்டு மொழியப்பட்ட பொய்யாமொழி (எசா 45:21-24). இஸ்ராயேலின் இறையொருமைக் கோட்பாட்டிற்கு அடிப்படையும் இதுவே. கடவுள், திருச்சட்டங்களில் உள்ள கட்டளைகளின் வாயிலாகவும் தம்மைப் பற்றிச் சாட்சியம் கூறுகின்றார் (2 அர 17:13; சங் 19:8; 78:5.56; 119). இக்காரணத்தால்தான் திருச்சட்டப் பலகைகள் சாட்சி என்றழைக்கப்படுகின்றன (யாத் 25:16; ..31:18). வாக்குறுதிப் பெட்டகத்தில் இவை வைக்கப்பட்டதால் இது சாட்சியப் பெட்டகமாகின்றது (25:22; 40:3.5.21தொ). திருஉறைவிடமும் சாட்சியக் கூடாரமாகின்றது (38:21; எண் 1: 50-53). அனைத்தையும்விட இறைவாக்கினர்களே பகரும் தெய்வீக சாட்சியம் உண்டு. இது இறைவன் ஆணையிட்டுக் கூறும் மொழி (எசே 42:18); தனது பிரமாணிக்கமற்ற மக்களுக்கு எதிராகச் சான்று பகரும்பொழுது வருவதாகும் (சங் 50:7). அனைத்தையும் அறியும்தன்மை கடவுள் கொள்வதால் எதுவும் அவரிடமிருந்து தப்ப முடியாது. தமது சாட்சியத்தால், கடவுள் அவர்களுடைய குற்றங்களை வன்மையாகக் கண்டிக்கின்றார் (எரே 29:23). இறைவனாகிய ஆண்டவர் அவர்களைப்பாவ வழியிலிருந்து திருப்ப அவர்களுக்கு எதிராய்ச் சாட்சியம் கூறுகின்றார் (மீக் 1:2; ஆமோ 3:13; மலா 3:5).

**III. கடவுளுக்குச் சாட்சியங்கள்:**

மனிதர்களுக்கிடையே செய்யப்படும் ஒப்பந்தங்களில் நடைபெறுவதுபோல், கடவுளாகிய ஆண்டவரிடம் கொள்ளும் வாக்குறுதிகளுக்கும், இஸ்ராயேல் சான்று பகரும் முறையிலே சில பொருட்களைச் சான்றாகக் கொள்கின்றது. தாங்கள் அளித்த வாக்குறுதிகளுக்கு எதிராக நடக்கும்பொழுது இவை அவர்களுக்கு எதிர்ச்சாட்சிகளாய் விளங்கும். உப ஆகமத்தில் குறிப்பிட்டுள்ளபடி பெட்டகத்தில் உள்ள சட்டநூல் (உப 31:26), மோசேயின் சங்கீதம் (உப 31:19தொ) ஆகியவை இதற்கு நல்ல எடுத்துக்காட்டுகள். விண்ணும் மண்ணும்கூட ஆண்டவருக்குச் சாட்சியாக விளங்கும் (உப 4:26; 31:28). மனிதர்கள் மட்டுமே செய்யவல்ல சாட்சிகளாய்த் திகழும் பணி ஒன்றுண்டு. ஆயினும் கடவுள் தான் இப்பணிக்கு இவர்களை அழைக்க வேண்டும். இதுவே இறைவாக்கினரின் பணியாகும். கடவுளால் விசுவாசங்கொண்ட சாட்சியாய் அழைக்கப்பட்ட தாவீது அரசரின் பணி இவ்வகையைச் சார்ந்ததே (சங் 89:37தொ; காண் 1 சாமு 12:5). தாவீதரசர் பிறநாடுகளுக்கு முன்பு இறைவனின் சாட்சியாய் விளங்குகின்றார் (எசா 55:4). இதைப் போன்றே, இஸ்ராயேல் மக்களும் ஒரே கடவுளாம் ஆண்டவருக்குச் சாட்சிகளாய் விளங்குவதைத் தமது பணியாகக் கொள்கின்றார்கள் (எசா 43:10தொ; 44:8). இவ்வாறு கூறும் அவர்களது சான்று, சிலை வழிபாட்டை முற்றிலும் எதிர்க்கின்றது. சிலைகள் தங்களுக்கென்று எவரையும் சான்று கூற அழைக்க இயலாது (43:9). பிற மக்களுக்குச் சாட்சியம் கூறும் இப்பணியில் இஸ்ராயேல் மக்கள் பிரமாணிக்கமின்றி இருப்பினும், கடவுளால் அவர்கள் இப்பணிக்குத் தெரிந்து கொள்ளப்பட்டதால் அதிலே அவர்கள் நம்பிக்கை கொள்ளலாம் (44:8).

**ஆ. புதிய ஏற்பாடு:**

**I. மனிதனின் சாட்சியமும் கடவுளின் சாட்சியமும்:-**

பழைய ஏற்பாட்டில் நாம் காண்பது போலப் புதிய ஏற்பாடு பொய்ச்சான்று கூறுவோரை வன்மையாகக் கண்டிக்கிறது. இயேசுவின் நீதித் தீர்ப்பிலும் (மத் 26:59-65), ஸ்தேவானின் நீதித்தீர்ப்பிலும் (அ.ப. 6:11 தொ) பொய்சாட்சிகளின் குற்றச்சாட்டுகளை நாம் காண்கின்றோம். உப ஆகம ஆசிரியர் எடுத்துரைத்த மரபுப்படி இரண்டு அல்லது மூன்று

சாட்சிகளை ஆதிக் கிறிஸ்தவ சமுதாயமும் தமது மரபாக ஏற்றுக்கொள்கிறது (மத் 18:16; 2 கொரி 13:1; 1 தீமோ 5:19). ஆனால் சாட்சியம் என்ற சொல்லின் உட்பொருள் நாளடைவில் மிகவும் விரிவடைகின்றது. நல்லான் ஒருவனைத் தெரிந்தவர்கள் அவனைப்பற்றி நற்சான்று பகர்கின்றனர். இம் முறையில்தான் யூதர்கள் இயேசுவுக்கும் (லூக் 4:22), கொர்னேலியுவுக்கும் (அ.ப. 10:22) அன்னியாவுக்கும் (22:12) சான்று பகர்கின்றனர். ஆதிக் கிறிஸ்தவர்களும் இதே வகையில் முதல் துணைத் தொண்டர்கட்கும் (6:3), திமோத்தேயுவுக்கும் (16:2), தெமேத்திரியுவுக்கும் (3 யோவா 12; காண் 3:6), பவுலுக்கும் (1 தெச 2:10) நற்சான்று பகர்கின்றார்கள். பவுலும் கொரிந்துவில் உள்ள சபைகளுக்கும் (2 கொரி 8:3) கலாத்தியா நாட்டில் உள்ள சபைகளுக்கும் (கலா 4:15) நற்சான்று பகர்கின்றார். இங்குச் சாட்சியம் என்பது தெளிவாகத் திருமறையைச் சார்ந்த மதிப்பீட்டைப் பெறுகிறது. நமது கிறிஸ்தவ வாழ்வு நம்மைப் பிறரிடமிருந்து ஒதுங்கி வாழும் தனி நபர்களாக்கிவிடுவதில்லை. மாறாகச் சாட்சிகளாய் விளங்கும் பலர் நடுவிலே நம்மைச் சேர்க்கின்றது. இவர்கள் நல்வாழ்வு வாழ நமக்கு வழிகாட்டிகளாகத் துலங்குகின்றார்கள். வாழ்வோர் மட்டுமன்று (1 திமோ 6:12) நம்மை விட்டு விசுவாசத்தில் முன் சென்றோரும் நமக்குத்தூண்டுதல்களாக உள்ளார்கள் (எபி 12:1தொ). இந்தச் சாட்சிகளில் முதன்மையானவர் இறைவனே. பழைய ஏற்பாட்டில் காணும் நீதிமான்களுக்கும் (அ.ப. 13:22; எபி 11:2.4தொ.39) அண்மையில் புறமதத்திலிருந்து மனந்திரும்பியவர்களுக்கும் (15:8) இறைவன் சாதகமான நற்சாட்சியாக விளங்குகின்றார்.

### II. இயேசுவின் சாட்சியம்

திருச்சட்டத்தில் நாம் காணும் சாட்சியின் தன்மையும், இறைவாக்கினர் போதனையில் கண்ட சாட்சியின் பணியும், இப்பொழுது இணையற்ற சாட்சியான இயேசுவில் ஒருங்கே இணைந்துள்ளன (திருவெளி 1:5; 3:14). உண்மைக்குச் சாட்சியம் சொல்ல அவர் உலகிற்கு வந்துள்ளார் (யோவா 18:37). தந்தையிடம் கண்டதற்கும் கேட்டதற்கும் அவர் சாட்சியம் கூறுகின்றார் (7:7). தம்மைப் பற்றித் தாமே சாட்சியம் மொழிகின்றார் (8:13தொ). பிலாத்து முன்பு, இயேசு மொழிந்த அறிக்கை எல்லாச் சான்றுகளிலும் தலை சிறந்தது (1 திமோ 6:13). இது நமது மீட்பின் திட்டத்தை மிகவும் தெளிவாக்குகின்றது (2:6). இந்தச் சாட்சியம், விசுவாசங் கொள்ளாத (யோவா 3:11; 8:13) உலகத்தால் மறுக்கப்பட்டாலும், நீதி வழக்கு மரபுகளின் படி எவராலும் மறுக்கமுடியாததென்றாகும். ஏனென்றால் பிற சாட்சிகளும் இதற்கு ஆதரவு தருகின்றன. எடுத்துக்காட்டாக, இயேசுவின் முழுத் திருப்பணியை எடுத்துரைக்கும் திருமுழுக்கு யோவானின் சாட்சி (1:6தொ. 15.19; 3:26 தொ; 5:33-36), தந்தையின் திருவுளப்படி இயேசு ஆற்றிய திருச்செயல்கள் (5:36; 10:25), திருமறை நூல் அளிக்கும் சாட்சிகள் (5:39; காண் எபி 7:8.17; அ.ப. 10:43; 1 பேதுரு 1:11) தந்தையின் சாட்சி (5:31 தொ. 37 தொ; 8:16தொ) இவையனைத்தும் இதற்குத் தக்க சான்றுகள். இறைவனைப் பொய்யராக்க விரும்பாத எவரும் இவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும். இவற்றுடன் கிறிஸ்தவனுக்குப் பரிசுத்த ஆவியே சான்று பகரும் முறையில் (1 பேதுரு 5:6தொ) அடையாளமாய் அளிக்கும் திருமுழுக்கு நீர், நற்கருணையின் திரு இரத்தம் ஆகியவற்றின் சாட்சியும் உண்டு. நமக்கு அளிக்கப்பட்ட ஆவியானவர் இயேசுவுக்குச் சாட்சியம் கூறுகின்றார் (யோவா 15:26). நாம் அனைவரும் இறைவனின் மக்கள் என்பதற்கும் அவர் சான்று பகருகின்றார் (உரோ 8:6). இவை போன்ற தொகுப்புள்ள பல சாட்சியங்கள் இயேசுவின் சாட்சியத்தை உறுதிப்படுத்துகின்றன. இவற்றை ஏற்றுக்கொள்வதன் மூலம் ஒருவன் இயேசுவின் சாட்சியத்திற்கும் பணிந்து நடந்து விசுவாச வாழ்க்கையில் நுழைகின்றான்.

### III. இயேசுவுக்குச் சாட்சியம்

#### 1. அப்போஸ்தலர் சாட்சியம்:-

மனிதர்களைச் சென்றடைய சாட்சியமானது ஒரு குறிப்பிட்ட செயல்முறையின் அமைப்பைக் கொள்ள வேண்டும். அதுவே

நற்செய்தியைப் போதிப்பதாகும் (மத் 24:14). நற்செய்தியை எங்கும் பரப்பவே, அப்போஸ்தலர்கள் சாட்சிகளாய் நியமனம் பெறுகின்றனர் (அ.ப. 1:8). அவர்கள் யோவானின் திருமுழுக்கு முதல் கிறிஸ்துவை ஆண்டவராகத் திருநிலைப்படுத்திய அவரது உயிர்ப்பு, விண்ணேற்புவரை நிகழ்ந்தவையெல்லாம் அனைவருக்கும் எடுத்துரைக்க வேண்டும் (1:22; 2:32). பவுலின் திருமறைப்பணியும் இதே பாணியில்தான் அமைந்துள்ளது. தமஸ்கு நகருக்குச் செல்லும் வழியில் அவர் அனைவருக்கும் சாட்சிகளாய் விளங்குமாறு நியமனம் பெறுகின்றார் (22:15; 26:16). புறவினத்தாரிடையே, இயேசுவின் உயிர்ப்பை எடுத்துரைத்து, அதன் வழியாகப் பலரிடையே விசுவாசத்தை வளர்க்கின்றார் (2 தெச 1:10; 1 கொரி 1:6). யோவானின் நூல்களிலும், நற்செய்தி போதிப்பதும் சான்று பகர்வதும் ஒன்றெனக் கருதப்படுகின்றன. நற்செய்தியாளரின் போதனை, அவர் தான் ஒரு நேரடிச் சாட்சி என்ற வகையில் தான் கண்டதையும் கேட்டதையும் உறுதியுடன் கூறுவதே (யோவா 19:35; 21:24). ஆனாலும் ஆவியானவரால் தூண்டப்பட்டு (யோவா 16:13) நிகழ்ச்சிகள் மறைக்கும் மறைபொருளோடும் சாட்சி சேர்ந்து கொள்கிறது. இந்த மறைபொருள் வாழ்வின் வார்த்தை ஊனுடல் எடுத்தலாகும் (1 யோவா 1:2; 4:14). இவ்வாறு அப்போஸ்தலர்களின் சாட்சியத்தை ஏற்றுக் கொள்வோர், தம்மிலே இயேசுவின் சாட்சியத்தையே ஏற்கெனவே கொண்டுள்ளார்கள். அப்போஸ்தலர்கள் அளிக்கும் சாட்சியம் இக்காலத்தைச் சார்ந்த இறைவாக்காகவும் விளங்குகின்றது (திருவெளி 12:17; 19:21). இதனாற்றான், பிறருக்குச் சாட்சியம் கூறுவோர், பழைய ஏற்பாட்டுக்கால இறைவாக்கினர் கொண்ட பண்புகளையும் மரபுகளையும் தாமும் கொண்டு விளங்குகின்றனர் (11:3-7).

**2. சாட்சியமும் சான்றுக்காக உயிரையே அளிப்பதும்:-**

இயேசுவின் சாட்சிகளாய் விளங்குவோரின் பணி, அவர் தம் அப்போஸ்தலர்களுக்கு விடுத்துச் சென்ற முறையில் (மாற் 13:9; மத் 10:18; லூக் 21:13 தொ) அதிகாரிகள் முன்னும் நீதிமன்றத்திலும் நின்று சான்று பகர்வதாகும். இவ்வாறு பலர்முன் உறுதியுடன் பகரும்பொழுது இச்சான்று பல வேளைகளில் பெருந்துயருக்கு முன்னோடியாய் விளங்கும். இயேசுவுக்காகச் சான்று பகர்வதால் விசுவாசிகள் துன்புறுத்தப்படுகின்றனர் (திருவெளி 1:9). முதன் முதலாக, ஸ்தேவான் தன் குருதி சிந்தித் தனது சாட்சியத்தைநிறைவேற்றினார் (அ.ப. 22:20). நற்செய்தியின் மற்றச் சாட்சிகளுக்கும் இவ்வுலகில் இதே நிலைதான் காத்திருக்கின்றது. (திருவெளி 11:7). ''இயேசுவுக்கும் இறைவார்த்தைக்கும்'' அளித்த தங்கள் சாட்சியத்திற்காக உயிரை ஈந்தோர் எவ்வளவுபேர்? (6:9; 17:6). விண்ணகத் திருத்தலத்திற்கு எதிராக எழுந்த தீய சக்தியான பாபிலோன் இச்சாட்சிகளின் இரத்தத்தைக் குடித்து வெறி கொள்ளும் (17:6). ஆனால் அவளது வெற்றி நிலையானதல்ல. உண்மையில் விண்ணரசின் மக்கள், கிறிஸ்துவுடன் இணைந்து, ''செம்மறியின் இரத்தத்தாலும் தாங்கள் சான்று பகர்ந்த வார்த்தையாலும் அலகையை வென்று வாகை சூடுவர்'' (12:11). மறைசாட்சியம் என்பது தமது விசுவாசத்திற்காகக் குருதி சிந்திச் சான்று பகர்வதே.



**சிகயோன், சிகியோனத்து** (SHIGGAION, SHIGIONATH)

சங் 7-இல் தலைப்பிலும், அப 3:1-இலும் (பன்மை) காணப்படும் சொல்லாகும். இது, இவை புலம்பலாகவோ இரங்கற்பாடலாகவோ பாடப்பட வேண்டும் என்று பொருள் படலாம். அல்லது அமைப்பும், பாடப்படும் முறையும் அடிக்குஅடி மாறுபடும் என்று குறிப்பிடலாம்.

**சிகா** (ZIHA - காய்ந்து போன)

1. இது அடிமைத்தனத்திலிருந்து செருபாபேலோடு திரும்பி வந்த ஒரு குடும்பத்தின் பெயர் (எஸ் 2:43; நெகே 7:46).

2. நெகேமியா ஆகமம், சிகா என்பவர் நாடுகடத்தலுக்குப்பின் ஆலய ஊழியர்களுக்குத் தலைவராய் இருந்தாரெனக் கூறுகிறது (நெகே 11:21).

**சிகியோன்** (SICYON - வெள்ளரிநகர்)

இது கொரிந்துவுக்கு வடமேற்கில் 29 கி.மீ. தொலைவில் உள்ள பழங்கால கிரேக்க நகரமாகும். இது கொரிந்திய வளைகுடாவின் தென்கரையில் அமைந்துள்ளது. தொழில் துறையிலும், கலைத்துறையிலும் சிறப்பிடத்தைப் பெற்றிருந்த இந்நகரம் உரோமையரசின் மையங்களுள் ஒன்றாக இருந்தது (கி.மு. 139). யூதர்களைக் கொடுமைப்படுத்த வேண்டாமென்று உரோமை ஆளுநன் பலநகரங்களுக்கும் கடிதம் அனுப்பியபோது (கி.மு. 139) இந்நகரத் தலைவனுக்கும் கடிதம் அனுப்பினார் (1 மக் 15:23). யூதர்கள் இவ்விடங்களில் பெருமளவில் வசித்து இருந்திருக்கவேண்டும். கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் இதன் புகழ் மங்கிப் போயிற்று.

**சிக்கரோன்** (SHIKKERON - போதையடைந்த)

மத்தியதரைக் கடலுக்கருகில் யூதாவின் வட எல்லையில் அமைந்த ஒரு கிராமம் (யோசு 15:11). சோரேக்கு பள்ளத்தாக்கில் சற்று வடக்கே கிர்பெத்து ஏல்-முக்கானவுக்கு 5 கி.மீ. தொலைவிலுள்ள தேல் ஏல் - பூல் (எக்ரோன்) ஆக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**சிக்கார்** (SYCHAR)

சமாரியாவில் யாக்கோபின் கிணறு அமைந்திருந்த ஒரு நகர். இதன் அருகே ''யாக்கோபு தன்மகன் யேசேப்புக்கு அளித்த நிலம் உண்டு. அங்கே யாக்கோபின் கிணறு இருந்தது'' என்று யோவா 4:5-6 கூறுகிறது. இந்தக் கிணற்றுக்கருகில்தான் இயேசு ஒரு சமாரியப் பெண்ணிடம் ''உயிருள்ள தண்ணீரை''ப் பற்றிப்பேசினார் (4:7-26).

இங்கே குறிக்கப்படும் ''நிலம்'' ஆதி 48:22-இல் குறிக்கப்படுவதாக இருக்கலாம். இந்நிலம், செக்கேமின் தந்தை காமோரிடமிருந்து யாக்கோபு வாங்கிய நிலமாக இருக்கலாம் (33:18-19; யோசு 24:32). ஆகவே சிக்கார் செக்கேமுக்கும் யாக்கோபின் கிணற்றுக்கும் அருகில் இருந்திருக்கலாம். அல்லது செக்கேமாகக் கூட இருக்கலாம். கிரேக்கச் சொல் சிக்கார் செக்கேம் என்ற சொல்லின் பழுதுபட்ட வடிவமாக இருக்கலாம். ஆகவே சிக்காரும் செம்கேமும் ஒரே இடத்தையே குறிக்கின்றன என்று கருத இடமிருக்கிறது. செக்கேமுக்கு வடக்கிலும் நபுலுசுக்கு வடக்கில் 2 கி.மீ. தொலைவிலும் உள்ள அஸ்கார் என்ற கிராமம் சிக்கார் இருந்த இடமாகப் பாரம்பரியமாக அடையாளம் காட்டப்படுகிறது.

**சிக்ரி** (ZICHRI - என் நினைவு, என் ஞாபகம்)

1. கோகாத்திய வழியில் வந்த இசார் (இட்சகார்) லேவியர் குடும்பத்தின் ஒரு பிரிவின் பெயராக அல்லது இக்குடும்பத்தைச் சார்ந்த ஒருவனின் பெயராக இருக்கலாம் (யாத் 6:21).

2. பென்யமின் குலத்தைச் சார்ந்த இந்தக் குடும்பம் சிமயியிடமிருந்து தோன்றியது (1 நாள் 8:19).

*3.* பென்யமின் குலத்தைச் சார்ந்த இந்தக் குடும்பம் சாசாக்கிடமிருந்து தோன்றிய்து *(1 நாள் 8:23).*

*4.* பென்யமின் குலத்தைச் சார்ந்த இந்தக் குடும்பம் எரொகாமிடமிருந்து தோன்றியது *(1 நாள் 8:27).*

*5.* இப்பெயர் ஆசாப்பின் வழிவந்த லேவியரை அல்லது லேவியக் குடும்பத்தைக் குறிக்கிறது *(1 நாள் 9:15).* இவர் *1* நாள் *25:2.10;* நெகே *12:35* இல் வரும் சக்கூராகவோ நெகே *12:11:17*-இல் வரும் சபதியாகவோ *(4)* இருக்கலாம்.

*6.* லேவியரான இவர் மோசேயின் மகன் எலியேசர் வழிவந்தவர்; செலமோத்தின் தந்தையாவார் *(1 நாள் 26:25).*

*7.* ரூபானியரான இவர் எலியேசரின் தந்தையாவார். தாவீது காலத்தைச் சேர்ந்தவர் *(1 நாள் 27:16).*

*8.* யூதாவைச் சேர்ந்த இவர் யோசபாத்தின் படையில் தளபதியான அமாசியாசின் மகனாவார் *(2 நாள் 17:16).*

*9.* இவர் எலிசபாத்தின் (எலிசப்பாற்று) தந்தை; அரசி அத்தலியாவுக்கு எதிரான கிளர்ச்சியில் யோயாதாவின் படைத் தளபதிகளில் ஒருவர் *(2 நாள் 23:1).*

*10.* எப்பிராயிம் குலத்தினரான இவர் பெக்காவின் படையில் இருந்த வலிமை மிக்க போர் வீரர். இவர் ஆகாசின் சிலைவழிபாட்டின் பொருட்டு அவரது அரசவையில் இருந்த பலரைக் கொன்றார் *(2 நாள் 28:7).*

*11.* பென்யமின் குலத்தினரான இவர் யோவேலின் *(13)* தந்தையாவார் (நெகே *11:9).*

*12.* அடிமைத்தனத்திற்குப்பின் வாழ்ந்த ஒரு குருவின் பெயர் (நெகே *12:17).*

**சிக்லாகு** (ZIKLAG - வளைந்து ஓடும்)

இந்த நகரம் முதலில் சிமியோன் கோத்திரத்திற்கும் (யோசு *19:5; 1* நாள் *4:30)* பின்னர் யூதா கோத்திரத்திற்கும் கிடைத்தது (யோசு *15:31).* கி.மு. பன்னிரண்டாம் நூற்றாண்டில் பெலிஸ்தியர்கள் இந்நகரைப் பிடித்தனர். இதன் பின்னர்த் தாவீதின் காலம் வரை இந்நகர் பெலிஸ்தியர் கையிலேயே இருந்தது.

சவுலின் ஆட்சிக்காலத்தில் காத்தின் மன்னன் ஆக்கிசு இந்நகரை நிலமான்யமாகத் தாவீதிற்குக் கொடுத்தார். ஆனால் தாவீது, அமலேக்கியர்களையும் மற்றவர்களையும் கொள்ளையடிக்க இதைப் பயன்படுத்தினார் *(1* சாமு *27:6* தொ). மேலும் தாவீது கெபிரோனுக்கு வரும் வரை இந்நகரிலேயே தங்கியிருந்தார் *(2* சாமு *1:1; 4:10; 1* நாள் *12:1. 20).* தாவீதும், அவர் வீரர்களும் இல்லாதபோது அமலேக்கியர் இந்நகரைப் பிடித்துத் தீக்கிரையாக்கினர் *(1* சாமு *30:1-26).* அடிமைத்தனத்திற்குப்பின் இந்நகரிலே யூதர்கள் மறுபடியும் குடியேறினர் (நெகே *11:20).* இந்த நகரம் நெகேபில், பெயேர்செபாவுக்கு வடக்கு, வடமேற்கில் *18* கி.மீ. தொலைவில் உள்ள தேல் ஏல் - குவெலிபேவாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. இதைவிட மேற்கில் *15* கி.மீ. தொலைவிலுள்ள தேல் எஸ் செரியாதான் இவ்விடம் என்று குறிப்பிடுவது மேல். இங்கு நடந்த அகழ்வாய்வுகள் தொடக்க வெண்கலக் காலத்திலிருந்து பாரசீகக் காலம் வரை குடியிருப்புகள் இருந்திருப்பதைக் காட்டுகின்றன.

**சிங்கக்குகை** (DEN OF LIONS)

தானியேல் 6-ஆம் அதிகாரத்தில் அடிக்கடி தோன்றுகிறது. விவிலியத்தில் இச்சொல் பிற இடங்களிலும் வருகிறது. ''ஓர் இளம் சிங்கம் தன் குகையிலிருந்து'' (ஆமோ *3:4),* ''சிங்கங்களின் குகை'' (நெகே *2:11)* என்றும் மற்றும் யோபு *37:8; 38:40;* சங் *104:22;* உ.ச. *4:8;* நெகே *2:12* ஆகிய இடங்களிலும் வருகின்றது.

பழைய ஏற்பாட்டில் சிங்கக் குகை பற்றிய முக்கியமான நிகழ்ச்சி தானியேல் 6-ஆம் அதிகாரத்தில் வருகிறது. தானியேல் மீது பொய்க் குற்றம் சாட்டியவர்கள், அவர்களது

குடும்பும் முழுவதும் சிங்கக்குகையில் தள்ளப்பட்டனர் என்று தானி 6:24 கூறுகிறது. இச்சிங்கக் குகையில்தான் தானியேல் தள்ளப்பட்டார். ஆனால் எவ்வித அழிவுமின்றி, மகிழ்ச்சியோடு வெளியே வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

சிங்கக்குகை என்பது உவமையாகப் பல இடங்களில் கூறப்படுகிறது. கடவுள் படைப்பின் சக்தியையும் மாட்சிமையையும் விளக்கும் பொருட்டு, சிங்கக்குகை என்று உவமையாகக் கூறப்படுகிறது (யோபு 38:39-41). நினிவே நகரின் வலிமையைக் கூற சிங்கக்குகை என்று உவமையாகக் கூறப்படுகிறது (நாகூ 2:11-12). மேலும், இவ்வகை விலங்குகளையும் இறைவன் உணவளித்துக் காப்பாற்றுகிறார் என்று விளக்கவும் இச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது (சங் 104:21-22).

## சிங்கக்குட்டி (WHELP)

ஆதி 49:9-இல் யாக்கோபு யூதாவை ஒரு சிங்கக்குட்டி எனப் புகழ்கின்றார். ஏனெனில் சிங்கத்தைப்போன்று யூதாவும் வலிமையிலும், தலைமைப்பண்புகளிலும் சிறந்து விளங்கும். ஆண்டவர் பாபிலோனைத் தண்டிக்கும்போது பாபிலோனியர் சிங்கங்களைப்போல் ஒருமிக்க கர்ச்சிப்பார்கள். சிங்கக்குட்டிகளைப்போல் பிடரியை உலுக்குவார்கள்; சீறுவார்கள் (எரே 51:38).

எசே 19-இல் யூதா ஒரு பெண்சிங்கமாகவும் யோவகாசும், யோயாக்கினும் அதன் குட்டிகளாகவும் பேசப்படுகின்றன. நினிவே நகர் சிங்கக்குட்டிகள் வளரும் குகையாகப் பேசப்படுகின்றது (நாகூ 2:11-13). யோபு ஆகமத்தில் எலீப்பாசு, தீயோரையும் கொடியோரையும் சிங்கம், பெண்சிங்கம், சிங்கக்குட்டிக்கு ஒப்பிட்டுக் கூறுகின்றார் (யோபு 4:10-11).

## சிங்கம் (LION)

நான்கு கால் மிருக இனத்தில் ஒன்றாகிய இந்த விலங்கு, அமைப்பில் பெரியதாகவும், இறைச்சியை உண்ணும் இயல்பு கொண்டதாகவும், மரவண்ணம், கலந்த மஞ்சள் நிறத்தைக் கொண்டதாகவும் காணப்படுகின்றது. இதன் வால் பகுதியானது முடி நிறைந்த குஞ்சம் போன்ற அமைப்பைக் கொண்டது. ஆண் சிங்கத்தின் கழுத்துப்பகுதியில் அழகிய நீண்ட பிடரி மயிர் வளர்ந்திருக்கும்.

பாலஸ்தீனச் சிங்கம் ஆசிய அல்லது பாரசீக வகையைச் சேர்ந்ததாகும். சிங்கத்தின் பிடரி முடியானது அதனுடைய கழுத்து தோல் பகுதியில் மட்டுமே வளர்ந்தாலும் அதன் நீண்ட முடியானது சிங்கத்தின் பாதி வயிற்றுப் பகுதியையும் சூழ்ந்துகொண்டிருக்கும். விவிலிய காலத்தில் பாலஸ்தீனத்தில் சிங்கங்கள் அதிக எண்ணிக்கையில் வாழ்ந்தன. ஆனால் கி.பி. 1300-க்குப்பின்னர் அதன் எண்ணிக்கை குறைந்து மறைந்து போயிற்று. மெசபொத்தாமியாவில் 19-ஆம் நூற்றாண்டு வரை சிங்கம் இருந்திருக்கிறது.

அசீரிய மன்னர்களுக்குச் சிங்க வேட்டை ஒரு போட்டி விளையாட்டாக அமைந்திருந்தது. இதற்கான அசீரிய ஆதாரக் குறிப்புகள் உள்ளன. நீதிபதிகளின் காலம் தொடங்கி (நீதி 14:5-9), யோபு (யோபு 4:10-11) மற்றும் மிஸ்னா காலம்வரை இஸ்ராயேல் இலக்கியங்களில், இந்த வகை விலங்குகளைப்பற்றிய குறிப்புகள் உள்ளன. சிம்சோன் (நீதி14:6), தாவீது (1 சாமு 17:34-36), மற்றும் பெனாயா (2 சாமு 23:20) ஆகியோர் சிங்கத்தைக் கொன்று பெரும் புகழைப் பெற்றுள்ளனர். மற்றும் சிலர் சிங்கத்தால் கொல்லப்படுகின்றனர் (1 அர 13:24; 20:36; 2 அர 17:25). எசே 19:4-8 சிங்கத்தைப் பிடிக்கும் முறையையும் விவரிக்கிறது. தானி 6 குகையில் அடைக்கப்பட்ட சிங்கங்களைக் குறிக்கிறது.

விவிலிய நூலில், சிங்கம் மிக வீரமிக்கதாகவும், அழிவினை ஏற்படுத்தும் சக்தி கொண்டதாகவும், மந்தைகளுக்குப் பேராபத்தாகவும் (ஆமோ 3:12), பயத்தை உருவாக்கும் அளவிற்குக் கர்ச்சனை செய்யும் தன்மை கொண்டதாகவும் வர்ணிக்கப்படுகின்றது. விலங்கினங்களில் அதிமிக வலிமைகொண்டதாக (பழ 30:30) இது குறிப்பிடப்பட்டுள்

ளது. மற்ற விலங்குகளைப் போலவே சிங் கங்களும் இறைவனின் அருளால் அரவ ணைக்கப்பட்டு வந்தாலும்கூட (யோபு 38:39; சங் 104;21), ஆசிர்மிக்க எதிர் காலத் தில் இவை முற்றிலும் அழிந்து போகும் (எசா 35:9) அல்லது சாதுவான மிருகங்க ளைப் போலாகிவிடும் (எசா 11:6-7; 65:25) என்று விவிலியம் கூறுகின்றது.

விவிலியத்தில் சிங்கம் உருவகமாகப் பின் வரும் விவிலிய வாக்கியங்களில் காணப்படு கின்றது. ''யூதா சிங்கக் குட்டியாம்'' (ஆதி 49:9); ''சிங்கத்தின் முழக்கம் எப்படியோ அப்படியே அரசனின் கோபம்'' (பழ 19:12); ''அவர் தம் செயல்களில் சிங்கத்திற்கு ஒப்பா னார்'' (1 மக் 3:4). ஆண்டவரையும் சிங்கத் திற்கு ஒப்பிட்டுள்ளனர் (யோபு 10:16; ஓசே 13:7). பேய்க்கும் இதை ஒப்பிட்டுள்ளனர் (1 பேதுரு 5:8). திருவெளிப்பாட்டு நூலில் (5:5) ஆண்டவர் யூதாவின் சிங்கமாகப் புகழப் படுகின்றார். இது யூதாவைச் சிங்கக்குட்டி என்றும் (ஆதி 49:9), மெசியா தாவீது மரபில் வந்தவர் என்றும் வருகின்ற கூற்றுக்களை அடிப்படையாகக் கொண்டிருக்கலாம்.

பண்டைய மேற்காசிய நாடுகளில் சிங்கம் மத் அடையாளமாக அதிகம் பயன்படுத்தப் படவில்லை. எகிப்தில் இது பெரும்பாலும் கோரூஸ், ரே ஆகியவற்றுடன் தொடர்புடைய தாக இருந்தது. தேவதைகள் பெண் சிங்கத் தின் வடிவில் தங்களை வெளிப்படுத்தின. அறிஞர் சிலர் கருத்துப்படி, பண்டைய மெச பொத்தாமியாவில் சிங்கம், குறிப்பிட்ட ஒரு கடவுளுக்கு அடையாளமாக அல்லாமல் கட வுளின் வலிமையைக் குறிப்பிடும் பொது அடையாளமாகப் பயன்படுத்தப்பட்டது என்று அறிகிறோம். பிற்காலத்தில் சிங்கத் தின் ஆற்றல் தீய ஆவிகளின் ஆற்றலுக்கு ஒத்ததாயில்லை என்று கருதப்பட்டபோது, அதற்கு இறக்கைகள் அளிக்கப்பட்டுத் தெய் வத்தன்மை பெற்றன.

பிற்கால அசீரியாவில் சிங்கத்தை அரச விலங்காகக் கருதி அரசனுக்குரிய நிலை யைச் சிங்கத்திற்கு அளித்தனர். பாலஸ்தீனக் கலையில் சிங்கத்தின் உருவம் இடம் பெற்றி ருப்பது குறிப்பிடத்தக்க ஒன்று. எபிரேயர் களின் வருகைக்கு முன்னர் இது நடந்தது. இதற்கான சான்று, 1955-இல் காசோரில் நடத்தப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சியின் போது பதிமூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு கானானியப் பீடத்திலிருந்து கிடைத் தது. சாலமோன் ஆலய, அரண்மனைச் சிங் கங்களை (1 அர 7:29; 10:19-20) பெனிசியக் கலைஞர் தயார் செய்தனர். எசேக்கியேலின் ஆலயத்தில் கெருபீம்கள் சிங்கமுகத்தினைக் கொண்டிருந்தன (எசே 41:15-19).

எரொபவாமின் ஊழியனான செமாவிற்குச் சொந்தமான சிங்க உருவம் கொண்ட முத்திரை யொன்று, மெகிதோ என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஆனால் இந்தக் காலக்கட்டத்தில் சிங்கம் எபிரேயர்களின் அரச அடையாளமாகப் பயன்படுத்தப்பட் டதா என்பது அவ்வளவு உறுதியாக இல்லை. சமாரியாவிலும் இது சம்பந்தமான அடையாளங்கள் கிடைத்துள்ளன. மேற் கண்ட உதாரணங்களிலிருந்து, விவிலிய ஆசிரியர்கள், குறிப்பாக வெளிப்பாட்டு இலக்கிய ஆசிரியர்கள் சிங்கத்தைச் சக்தியும் வீராவேசமும் கொண்ட விலங்காக விவிலி யத்தில் எழுதியுள்ளனர் என்று தெரியவரு கின்றது. எசே 1:10;10:14; 7:1-4, திருவெளி 4:7; 13:2 போன்ற விவிலிய வாக்குகளிலும் இதற்கான சான்றுகள் உள்ளன.

**சிசமாய்** (SISMAI - புகழ்பெற்ற)

இஸ்ராயேல் நாடு கடத்தப்பட்ட பிறகு யூதா இனத்தைச் சேர்ந்த எலயாசாவின் மகன்; சல்லூமின் தந்தை; எலிசாமாவின் வழித்தோன்றல் (1 நாள் 2:40).

**சிசரா** (SISERA - போருக்கு ஆயத்தமாக)

1. நீதிபதிகள் காலத்தில் கானான் நாட்டில் காசோரின் அரசனான 'யாபின்' என்பவனின் படைத்தலைவன் ஆவார் (நீதி 4). ஆனால் நீதி 5-இல் 'யாபின்' அரசனைப்பற்றி எந்தக் குறிப்பும் இல்லை. மாறாக, சிசராவே அரச னாகத் தோற்றமளிக்கிறார். இஸ்ராயேலரால் தோற்கடிக்கப்பட்ட சிசரா, யாவேல் என்ற

பெண்மணியின் இல்லத்தில் அடைக்கலமாகத் தங்கியிருந்தபோது அவளால் வஞ்சகமாகக் கொல்லப்பட்டார். இவரது காலத்தில் இஸ்ராயேலை வழிநடத்தி இவரைத் தோற்கடித்த நீதிபதிகள் தெபோராவும், பாராக்கும் ஆவார்கள்.

2. பாபிலோனிய அடிமைத் தனத்திலிருந்து செருபாபேலோடு திரும்பிய ஓர் ஆலய ஊழியர் குடும்பத்தின் மூதாதையர் (*எஸ் 2:53; நெகே 7:55*).

### சிசா (SHISHA)

சாலமோனின் செயலர்களாகிய எலிகோரேபு, அகியா ஆகியோரின் தந்தை (*1 அர 4:3*). இவர் தாவீதின் செயலராக இருந்திருக்க வேண்டும். இவர் *1 நாள் 18:16*-இல் சவுசா என்றும் *2 சாமு 8:17*-இல் செராயா என்றும் *20:25*-இல் செவா என்றும் அழைக்கப்படுகிறார்.

### சிசாக்கு (SHISHAK)

ஓர் எகிப்திய பார்வோன் (*945 - 915 கி.மு.*); இருபத்து இரண்டாம் அரச மரபைத் (*945-730*) தோற்றுவித்தவர்; பாலஸ்தீனத்தின் மீது போர் தொடுத்து எருசலேமைக் கொள்ளையிட்டுச் சென்றவர் (*1 அர 14:25-26*). சாலமோன் ஆட்சிக் காலத்தில் எகிப்தில் ஓர் லிபிய படைத் தலைவனாக இருந்தார். அப்பொழுது அங்கு ஆட்சி செய்த வலிமையிழந்த 21-ஆம் அரச குலத்தைக் கவிழ்த்து விட்டு ஆட்சியைக் கைப்பற்றினார். இவரது மகனை அமோனின் தலைமைக் குருவாக்கினார். இவரைப் பற்றிய செய்திகள் பல கர்னாக்கு என்னுமிடத்திலுள்ள அமோன் ஆலயத்திலுள்ள கட்டடங்களிலிருந்து தெரிகின்றன.

இவர் எகிப்தின் வலிமையை மீண்டும் நிலை நாட்டும் நோக்கத்துடன் பாலஸ்தீனத்தைக் கைப்பற்ற எண்ணிச் சாலமோனிடம் இருந்து தப்பியோடிய எரொபவாமிற்கு அடைக்கலம் அளித்தார் (*1 அர 11:40*). ரெகபயாம் ஆட்சி செய்த ஐந்தாம் ஆண்டில் சிசாக்கு எருசலேமின் மீது படை எடுத்தார். எருசலேம் ஆலயம், அரண்மனை மற்றும் அங்கிருந்த அனைத்துச் செல்வங்களையும் கொள்ளையடித்துச் சென்றார் (*1 அர 14:25-26*). கொள்ளையடித்துச் சென்றவற்றைத் தெபேசிலுள்ள அமோன் கடவுளுக்கு அர்ப்பணித்தார்.

கர்னாக்குக் கல்வெட்டுக்களில் அவர் கைப்பற்றிய நகரங்கள் பற்றிக் கொடுக்கப்பட்டுள்ளது. அவருக்குப்பின் வந்தவர்கள் அவனைப் போல் திறமையாக ஆட்சிசெய்ய முடியவில்லை. இரண்டு நூற்றாண்டுகள் சென்ற பிறகுதான் எகிப்து பாலஸ்தீனத்தின் மீது தனது அதிகாரத்தை மீண்டும் காட்ட முடிந்தது.

சிலசமயம், சாலமோன் சிசாக்கோடு திருமண உறவுகொண்டதாகவும், அதன் விளைவாகக் கெசேர் நகரைச் சீதனமாகப் பெற்றதாகவும் கூறப்படும் (*1 அர 3:1; 9:16*). இந்த உறவு முந்தைய பார்வோனுடன் கொண்டதாக இருக்கலாம்.

### சிட்டுக்குருவி (SWALLOW)

இச்சொல் பொதுவாக, சிறிய நீளமான இறக்கைகள் கொண்ட குடும்பத்தைச் சார்ந்த எந்தப் பறவையையும் குறிக்கும். இவை பறக்கும் விதம் அழகாக இருக்கும். ஆனால் எழுபது நூலில் இச்சொல் சங் *84:3*-இல் மாடப்புறாவைக் குறிப்பதாகவும், பழ *26:2*-இல் சிட்டுக் குருவியைக் குறிப்பதாகவும் கூறுகின்றது. எசா *38:14*-இல் சிட்டுக்குருவியின் கூக்குரலும், எரே *8:7*-இல் அதன் இடம் பெயரும் பழக்கமும் குறிக்கப்படுகின்றன. இவை இப்பறவை ஒருவகைப் புறாவைச் சுட்டலாம்.

### சிதறிப்போதல் (DISPERSION)

ஆதியாகமத்தின் முதல் அதிகாரங்களிலிருந்தே மனிதர்கள் மண்ணுலகில் சிதறிப்போவதானது பொருள்மயக்கமுள்ள நிகழ்ச்சியாகத் தோன்றுகிறது. மனிதன் பல்கிப் பெருகி உலகை நிரப்ப வேண்டிய இறை ஆசியின் விளைவானது (*ஆதி 9:1; 1:28*) ஒன்றிப்பில் நிறைவு செய்யப்படுகிறது. பாவத்திற்கான

தண்டனை என்ற அளவில் மனிதரிடையி லான பிளவின் அடையாளமாக இது உருவா கிறது (ஆதி 11:7-8). இந்த இருவித முன் னோக்கு மீட்பின் வரலாற்றில் மீண்டும் காணப்படுகிறது.

*1. மக்கள் மற்றும் நாட்டினுடைய சிதறல்:-* இறைவன் தமக்கென ஒரு மக்களினத்தைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு ஒரு நாட்டை யும் அளித்தார். ஆனால், இறைவனுக்கு விசுவாசமற்ற நிலையில், இஸ்ராயேலானது சிதறிப்போயிற்று (2 அர 17:7-23); முன்பு எகிப்தில் இருந்ததைப்போல அடிமைத்தனத் திற்குத் திரும்புகிறது (உப 28:64-68). நாடு கடத்தப்படுதலோடு தொடர்ந்து வந்த இன் னல்கள் எழுபது நூல் மொழிபெயர்ப்பில் ''சிதறிப்போதல்'' என்ற சொல்லால் விவரிக்கப் படுகின்றன (உப 28:25; 30:4; எசா 49:6...). சிதறிப்போதல் என்ற சொல், பாபிலோ னிய அடிமைத்தனத்திற்குப் பின்னர்ப் புற வினத்தாரின் உலகில் பரவியுள்ள அனைத்து யூதரையும் குறிக்கப் பயன்பட்டது. இச்சித றிப் போதலின் நோக்கம் தூய்மைப்படுதலா கும் (எசே 22:15). இத்தூய்மைப்படுதல் நிகழ்ந்தவுடனே, திரும்பி வருதல் நிறைவே றும் (எசே 36:24). இடைப்பட்ட காலத்தில் சிதறிப்போதலானது தூய ஆன்மாக்களை வதைக்கும் வருத்தமிக்க செயலாக இருக்கும் (சங் 44). இறைவன் தமது மக்களின் உறுப்பி னர்கள் அனைவரையும் ஒன்று சேர்க்கும் காலம் வரும் (சீரா 36:10).

ஆயினும் இத்தீமையினின்று இறைவன் உயரிய நன்மையை விளையச் செய்கிறார். சிதறிய இஸ்ராயேலானது வெளியினத்தா ருக்கும் உண்மையான விசுவாசத்தை அறி விக்கிறது (தோபி 13:3-6). அடிமைத்தனத்தி னின்று புதியவர்களை ஏற்பது தொடங்கு கிறது (எசா 56:3). கிரேக்கர் ஆட்சிக்காலத்தில், புறவினத்தாராலும் செவிமடுக்கப்பட வேண்டுமென ஞானநூல் ஆசிரியர் விரும்பு கிறார்; ஏனெனில் அவரைப் பொறுத்தமட் டில், இஸ்ராயேலின் அழைப்பானது இத் தகையதே (ஞான 18:4). இத்தகைய புதிய முன்னோக்கில் இஸ்ராயேலானது நாடு என் னும் தனது நிலையினின்று விலகி, திருச் சபை என்னும் வடிவை ஏற்க முயல்கிறது. இனிமேல், எருசலேமிற்குச் செல்லும் யாத்தி ரிகர்களை அடையாளமாகக் கொண்ட உயி ருள்ள ஒற்றுமையை அதற்கு உறுதியளிப்பது விசுவாசமேயன்றி இனமல்ல (அ.ப. 2:5-11).

*2. மக்கள் மற்றும் திருச்சபையின் சிதறல்:-* கிறிஸ்துவுடன் இறைவனின் மக்கள் யூத தேசிய வரைச்சட்டத்தைக் கடந்து, திருச் சபையாக உரிய விதத்தில் உருவாகின்றனர். ஐம்பதாம் நாளில் பரவசப் பேச்சாலும், அன் பினாலும் ஆவியானவர் நாடுகளின் ஒன் றிப்பை உறுதிப்படுத்துகிறார். அதுமுதல் அங்கோ இங்கோ இல்லாமல் மனித இனத்தை ஒன்று சேர்க்கின்ற இறைவனை மனிதர் ''ஆவியிலும் உண்மையிலும்'' (யோவா 4:24) வழிபடுவர். எருசலேமி னின்று நெடுந்தொலைவிற்குச் சிதறடிக் கின்ற கொடுமைகளுக்கு விசுவாசிகள் இனி யும் அஞ்சுவதில்லை (அ.ப.8:1; 11:19). ஒரே திருமுழுக்கினால் ஒரே விசுவாசத்தில் எல்லா இனங்களையும் ஒன்று சேர்ப்பதற் கென, உயிர்த்தெழுந்தவரின் கட்டளைப்படி அவர்கள் தங்களுடைய விசுவாசத்தைப் பர வச் செய்யப்போகின்றனர் (மத் 28:19-20).

எனவே, யூத சிதறிய நிலைக்குப்பதிலாக, உலக மனமாற்றத்திற்காக இறைவனால் தீர் மானிக்கப்பட்ட மாறுபட்ட சிதறிய நிலையா னது உருவாகிறது. இந்த மக்களுக்கே யாக் கோபு தனது திருமுகத்தை எழுதுகிறார் (யாக் 1:1). சிதறிய மனித இனத்தை மீண்டும் ஒற்றுமைக்குக் கொண்டு சேர்ப்பதற்கென (அ.ப. 2:1-11) விசுவாசமிக்க யூதர்களுடன் புதிய இறைமக்களை உருவாக்கிய புறவின மனமாறியவர்களிடையே பேதுரு காண்ப தும் இம்மக்களே (1 பேதுரு 1:1). கிறிஸ்தவ ரைப் பொறுத்த மட்டில் விசுவாசத்தின் ஒன் றிப்பானது சிதறிப்போதலால், இடைவிடா மல் வெற்றியடைகிறது. கிறிஸ்துவின் பலி யால் இறைவனின் பிள்ளைகள் அனைவரும் ஒன்று சேர்க்கப்படுகின்றனர் (யோவா 11:52). இனிமேல், அவர்கள் தாங்கள் எவ்வி டத்தில் வாழ்ந்தாலும், ''உலகினின்று உயர்த்

தப்பெற்ற'' கிறிஸ்து, அவர்களைத் தனது உடலில் ஒன்றுபடுத்துகின்ற அன்பின் ஆவியை அவர்கள் மேல் பொழிந்து (1 கொரி 12), அனைவரையும் தம்பால் ஈர்த்துக் கொள்வார் (யோவா 12;32).

**சிதீம்** (SIDDIM - பள்ளத்தாக்கு)

சாக்கடலின் தென்பகுதியில் அமைந்துள்ள சமவெளி. இங்கு சோதோம், கொமோரா, அதாமா, செபோயிம், சோவர், ஆகிய ஐந்துநாட்டு மன்னர்களும் தங்கள் அடிமைத்தளையிலிருந்து விடுபட ஏலாமிய அரசன் கெதர்லகோமரின் தலைமையிலான நான்கு மெசபொத்தாமிய அரசர்களை எதிர்த்துப் போரிட்டனர்; தோல்வியுற்றனர் (ஆதி 14:3-4.8-11). இங்குக் கீல்குழிகள் பல இருந்தன. இவ்வரசர்கள் தோல்விக்கு இவையும் உதவின. இதுவே உப்புப்பள்ளத்தாக்காக இருக்கலாம் (2 சாமு 8:13; 2 அர 14:7). சோதோம், கொமோரா இருந்த பள்ளத்தாக்காகவும் இருக்கலாம் (ஆதி 19:24-25).

**சிதீம்** (ZIDDIM - பக்கம்)

இது நெப்தலி புதல்வருக்குக் கொடுக்கப்பட்ட நாட்டில் இருந்த அரண் எழுப்பப்பட்ட நகரம் (யோசு 19:35). இந்தச் சிதீம் காபர்-கித்தாயியாவாக (தற்கால காத்தின் ஏல் - காதிம்) இருக்குமெனத் தால்மூது கூறுகிறது. இந்தக் காத்தின் ஏல் - காதிம் மாதோனுக்கு அருகில் திபேரியாவுக்கு மேற்கு - வடமேற்கில் 13 கி.மீ. தொலைவில் உள்ளது.

**சித்திம்** (SHITTIM - வேல மரங்கள்)

1. சாக்கடலுக்கு வடகிழக்கே மோவாபியருடைய சமவெளியில் இஸ்ராயேல் மக்கள் செங்கடலைக் கடப்பதற்கு முன் தங்கிய இடம். ''யோர்தானுக்கு அண்மையில் மோவாபியருடைய சமவெளியிலே பெத்த சிமோத்திலிருந்து ஆபல் - சித்திம் வரையிலும்'' பாளையம் இறங்கினர் (எண் 33:49). ஆபல் - சித்திம் என்பதே இவ்விடத்தின் முழுப் பெயராகும். பொதுவாகச் சித்திம் என்று சுருக்கமாக அழைக்கப்படும்.

இஸ்ராயேலர் இங்குத் தங்கியபோது முக்கிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மோவாபின் அரசனான பாலாக்கு பிலயாமைக் கொண்டு இஸ்ராயேலரைச் சபிக்கச் செய்ய முயன்றார் (எண் 22-24). இங்கு இஸ்ராயேலர்கள் மிதியானிய, மோவாபியப் பெண்களுடன்பாவம் செய்ததால் தண்டிக்கப்பட்டார்கள் (எண் 25). ஒரு கணக்கெடுப்பு நடத்தப்பட்டது (எண் 26). யோசுவா மோசேக்குப் பின் இஸ்ராயேல் மக்களை வழிநடத்துவார் என்று எல்லோருக்கும் அறிவிக்கப்பட்டது (27:12-23). மிதியானியர்கள் பழி வாங்கப்பட்டனர் (எண் 31). ரூபன், காது, மனாசேயின்பாதி இனம் ஆகியவர்கள் யோர்தானுக்குக் கிழக்கே குடியேறினர் (எண் 32). மோசே இறுதி உரை ஆற்றிய பின்பு, நெபோ மலைமேல் இருந்து வாக்களிக்கப்பட்ட நாட்டைப் பார்த்தபின் இறந்தார். யோசுவா இரண்டு ஒற்றர்களைச் சித்திமிலிருந்து எரிகோவிற்கு அனுப்பினார் (யோசு 2). மக்கள் பாளையத்தைக் கலைத்துவிட்டு, யோர்தானைக் கடந்துசெல்ல, சித்திமிலிருந்து புறப்பட்டனர் (3:1). மீக் 6:5-இல் ''சித்திமுக்கும் கில்காலுக்கும் இடையே நடந்தவற்றையும் எண்ணிப்பாருங்கள்'' என்பது யோர்தானை வியத்தகுமுறையில் கடந்து சென்றதைச் சுட்டலாம்.

சித்திம் இருந்ததாகக் கிர்பெத்து ஏல் - கெபிரெயின்,தேல் ஏல் - கம்மாம் ஆகிய இடங்கள் அடையாளம் காட்டப்படுகின்றன. இரண்டும் எரிகோவிற்கு எதிராக யோர்தான் ஆற்றுக்கு அருகில் உள்ளன.

2. யோவேல் 4:18-இல் குறிக்கப்படும் இடமாகும். ''ஆண்டவரின் இல்லத்திலிருந்து நீரூற்று ஒன்று கிளம்பும். அது சித்திமிலிருந்த ஓடைகளில் பாய்ந்தோடும்''. இதை உறுதியாக அடையாளம் காட்டமுடியாது. ஆனால் எருசலேம் ஆலயத்தோடு கொண்டிருக்கும் தொடர்பும், பள்ளத்தாக்கின் சாதாரணமான வறட்சியும், இது கிதரோன் பள்ளத்தாக்கு சாக்கடலை நோக்கிச் செல்லும் கீழ்ப் பகுதியிலுள்ள வாடி ஏன் - நார் ஆக இருக்கலாம்.

**சித்தியர்** (SCYTHIANS)

தெற்கு உருசியாவில் தோன்றி, கசிப்பியன் கடலுக்குக் கிழக்கே கவுகசு மலைப்பகுதிக்கு வடக்கே குடியேறிய நாடோடி மக்கள். இங்கும் இவர்கள் நிலையாக இருக்கவில்லை. பழைய ஏற்பாட்டில் இவர்கள் அஸ்கனாசு என்று குறிக்கப்படுகின்றனர் (ஆதி 10:3; 1 நாள் 1:6; எரே 51:27).

அசீரிய வரலாற்றில் கி.மு.670-முதல் 612-வரையிலான கால கட்டத்தில் அசீரிய அரசுக்குப் பெரும் இடையூறாக இருந்தனர். அசீரியர்கள் அவர்களை வெல்ல முடியாமல் போகவே ஒரு உடன்பாட்டுக்கு வர வேண்டியதாயிற்று. இவர்களைப் போன்ற பிற நாடோடிக் கூட்டங்களால் துரத்தப்பட்ட இவர்கள் மத்திய ஆசியாவிலும் ஐரோப்பாவில் கருங்கடல் மற்றும் தானுபுக்கு வட பகுதியிலும் குடியேறினர். இவர்களின் வட எல்லையான தானுபு நதிக்கரை கி.மு. 512-இல் பாரசீக மன்னன் முதலாம் தாரியுவால் தாக்கப்பட்டது.

எரோதோத்து என்ற வரலாற்று ஆசிரியர் சித்தியர்களின் தாக்குதலைப்பற்றிக் கூறும் பொழுது இவர்கள் சீரியா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகளில் புகுந்து எகிப்திய எல்லை வரையிலும் சென்றதாகக் கூறுகிறார். இதனையே எரே 1:13-15; 4:5-6:26 ஆகிய பகுதிகள் குறிக்கின்றன என்று பலர் கருதுகின்றனர். சித்தியர்களின் தாக்குதலால் எழுந்த பயம்தான் செப்பனியா நூலுக்கும் எரேமியாவின் சில வாக்குகளுக்கும் சந்தர்ப்பமாயிற்று என்று சிலர் கூறுவர். சமீபகால வல்லுநர்கள் பலர் இதை ஏற்க மறுப்பர். பழைய ஏற்பாட்டில் இவர்களைப் பற்றிய குறிப்பே இல்லை என்பர். கிரேக்கர்களின் காலகட்டத்தில் பெத்-சான் என்ற நகரம் இவர்களின் பெயரைத் தாங்கி ஸ்கூத்தோபொலி என்றழைக்கப்பட்டது. மக்கபேயர் நூல் இவர்களின் காட்டுமிராண்டித் தனத்தைச் சுட்டிக் காட்டுகிறது (2 மக் 4:47). இதன்விளைவாகக் கிரேக்கர்கள் நடுவே ''சித்தியனாக நடந்து கொள்ளுதல்'' என்னும் சொற்றொடர் முரட்டுத்தனமாய் நடப்பவர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது.

பவுல் கொலோ 3:11-இல் எவ்வினத்தாராயினும் கிறிஸ்துவில் ஒருவரே என்று கூறும் போது சித்தியர் இனத்தையும் குறிப்பிடுகின்றார்.

**சித்திர எழுத்துமுறை** (HIEROGLYPHS)

இப்பெயர் தொன்மையான எகிப்திய எழுத்துமுறையைக் குறிக்கிறது. இம்முறையில் எழுத்துக்கள் அவை குறிக்கும் பொருட்களையே ஓவிய வடிவம் போல அமைத்தன. பொதுவாக இவை கற்களின் மேல் பொறிக்கப்பட்டன. சில சமயங்களில் புல்தாள்களில் எழுத்தாணியால் வரையப்பட்டன.

இவ்வெழுத்துக்கள் எழுத, அதிக இடம் தேவைப்பட்டதால், இதன் அளவுகளைக் குறைத்து, சிறிய பொருள் வடிவ எழுத்து முறையை உருவாக்கினார்கள். பிறகு இவை பாரசீகர் காலத்தில், .மக்களுக்கு வசதியான முறையில் எளிமையாக்கப்பட்டது. இத்தியர்கள் தங்கள் மொழியை எழுத, ஒரு தனிப்பட்ட பொருள் வடிவ எழுத்து முறையை அமைத்துக்கொண்டனர்.

**சித்தீம் மரம்** (ACACIA)

ஒருவகை மரத்தையும் அதன் கட்டையையும் குறிக்கும் சொல். உடன்படிக்கைப் பேழை, பீடம் மற்றும் திருஉறைவிடத்தைச் சேர்ந்த பொருட்களைச் செய்வதில் பயன்பட்ட மரம். அச்சூழ்நிலையிலேயே அடிக்கடி கூறப்படுகிறது (யாத் 25-27; 30:35-38).மேசை, பெட்டகம் போன்ற கடினப் பொருட்களைத் தயார் செய்ய மிகவும் பயன்படுகிறது. ஏனெனில் அதன் கட்டை கடினமானது, பூச்சிகளால் அதிகம் பாதிக்கப்படாதது. நெகேபு, சீனாய் பாலைவனப் பகுதிகளில் நிறையக் கிடைக்கின்றது. நீடித்து உழைக்கக்கூடியது. சித்திம், ஆபல் - சித்திம், பெத் - சித்திம் போன்ற பெயர்கள் இம்மரங்கள் அதிகமாக வளர்ந்து காணப்பட்ட இடங்களின் பெயர்களே. சிலர், யாத் 3:2-3-இல் காணப்படும் எரியும் முட்புதர் இம்மரத்தின் சிறியவகை என்பர். அரேபியாவில் இம்மரங்கள் பிசின் உற்பத்திக்குப் பெரிதும் உதவுகின்றன. எசா 41:19-இல் வறண்ட

பாலைநிலத்தில் வளரும் மரங்களில் ஒன்றாகக் குறிக்கப்படுகிறது.

**சித்ரி** (SITHRI - *மறைக்கப்பட்ட*)

லேவியின் வம்சத்தில் வந்த உசியேலின் மூன்றாவது மகன் (*யாத் 6:22*). மோசேக்கு உறவினர்.

**சித்னா** (SITHNA - *பகைமை, வெறுப்பு, அவதூறு*)

ஈசாக்கு வாழ்ந்த இடத்தில் பஞ்சம் உண்டானபடியால் பெலிஸ்திய அரசனான அபிமெலக்கைக் காணச் சென்றார். அவ்வாறு சென்றபொழுது கெரார் என்ற பள்ளத்தாக்கில் தண்ணீருக்காகக் கிணறு தோண்டிய பொழுது அபிமெலக்கின் மேய்ப்பர்கள் அதற்கு உரிமை கொண்டாடியதால் அதற்கு 'அவதூறு' என்ற பொருளில் சித்னா எனப் பெயரிட்டார் (*ஆதி 26:18-19*). இது கெராருக்குத் தெற்கிலும் பெயேர் - செபாவுக்கு மேற்கிலுள்ள பகுதியிலுள்ள இரகாபோத்து (2)-க்கு வடக்கிலும் இருந்திருக்க வேண்டும்.

**சிந்திக்க** (SYNTYCHE - *நற்பேறு, பொருத்தம், வெற்றி*)

பிலிப்பியிலுள்ள திருச்சபையைச் சேர்ந்த ஒரு பெண்; பவுல் இந்தப் பெண்ணை எயோதியாளுடன் ஒற்றுமையாக இருக்கும்படி அறிவுறுத்துகின்றார் (*பிலி 4:2-3*).

**சிபகாய்** (SIBBECAI - *நெசவாளர்*)

கூசா (ஹுசா) நகரத்தைச் சேர்ந்த செரகியர். தாவீதின் குறிப்பிடத்தக்க 30 படை வீரர்களில் ஒருவர். இவர் பெலிஸ்தியரோடு நிகழ்ந்த போரில் பெலிஸ்திய அரக்கன் சாபுவை (*2 சாமு 21:18*) அல்லது சிபாயைக் (*1 நாள் 20:4*) கொன்றார். தாவீது அரசரின் எட்டாவது பிரிவு படைக்குத் தலைவராவார் (*1 நாள் 27:11*). *2 சாமு 23:27*-இல் இவரது பெயர் மெபுன்னாய் என்றுள்ளது. இது தவறான வாசகமாய் இருக்கலாம்.

**சிபமோத்து** (SIPHMOTH - *செழிப்பான*)

தெற்கு யூதாவில் உள்ள ஒரு கிராமம். தாவீது அரசர் அமலேக்கியரை வெற்றி கொண்ட பிறகு கொள்ளையிட்ட பொருளின் ஒரு பகுதியை இக்கிராமத்திற்குத் தனது நன்றியை வெளிப்படுத்த அனுப்பிவைத்தார் (*1 சாமு 30:28; 1 நாள் 27:27*). இன்று இதன் அமைவிடத்தைப் பற்றிக் குறிப்பு இல்லை. தாவீதின் திராட்சைத் தோட்ட மேற்பார்வையாளரான ''சிபமியரான்'' சபதி (*1 நாள் 27:27*) சிபமோத்திலிருந்து வந்தவராக இருக்கலாம்.

**சிபயோன்** (ZIBEON - *கழுதைப்புலி, கொள்ளைக்காரன்*)

இவர் ஏதோம் நாட்டில் இருந்த கோரியரான சேயிரின் மூன்றாம் மகன் ஆவார் (*ஆதி 36:20.24.29; 1 நாள் 1:38.40*). அனாவின் தந்தையும், ஏசாவின் மனைவியான ஒகோலிபாமாவின் பாட்டனும் ஆவார் (*ஆதி 36:14*).

**சிபா** (SHIBAH - *ஆணையிடுதல்*)

ஈசாக்கினால் வெட்டப்பட்டதாகக் கருதப்படும், ஒரு கிணற்றின் பெயர்; பெயேர் - செபா என்ற பெயரின் மூலம் ஆகும் (*ஆதி 26:33*). இங்குக் கொடுக்கப்பட்டுள்ள விவரம் *ஆதி 21:25*-இல் கொடுக்கப்பட்டுள்ளதற்கு மாறுபட்டுள்ளது. ஆனால் இரண்டு பகுதிகளிலும் ஒரு குல மூதாதையர் கெராரின் அரசனோடு ஒப்பந்தம் செய்ததாகக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆபிரகாம் நிகழ்ச்சியில் அவர் உடன்படிக்கையின் அடையாளமாய் ஏழு ஆடுகளைக் கொடுத்ததாலும், இரண்டாவது நிகழ்ச்சியில் ஈசாக்கும் அபிமெலக்கும் ஆணையிட்டதாலும் 'சிபா' எனப் பெயர் ஏற்பட்டது.

அனேகமாகச் சிபா, பெயேர் - செபா என்ற இரண்டு நகரங்கள் ஒன்றாகி இருக்கலாம். பெயேர் - செபா காலப்போக்கில் புகழ்வாய்ந்ததாக இருந்ததால் இரு நிகழ்ச்சிகளையும் அந்தப் பெயருடன் தொடர்புபடுத்தினர். ஆனால் ஈசாக்கின் நிகழ்ச்சியோடு இது மிகவும் பொருந்துகின்றது. சிபா இக்காலத் தேல் எஸ் - சபாவாக இருந்திருக்கலாம் என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**சிபாய்** (SIPPAI)

சாபு என்ற பெயரின் மற்றொரு வடிவம்.

**சிபி** (SHIPHI - ஏராளம், அனேகம்)

சிமியோன் குலத்தைச் சேர்ந்த செமயா வின் வழித்தோன்றல், அல்லோனின் மகன். சீசாவின் தந்தை (1 நாள் 4:37).

**சிபிமா** (SIBMAH - நறுமணமுள்ள)

யோர்தானுக்கு அப்பாலுள்ள புல்வெளிச் சமவெளியில் உள்ள ஓர் ஊர் (எண் 32:3). எமோரிய அரசன் சீகோன் தோற்கடிக்கப்பட்ட பின் இந்த ஊர் ரூபன் குலத்திற்குக் கொடுக்கப்பட்டது (எண் 32:38; யோசு 13:19). மோவாபியருக்கு எதிரான திருவாக்குகள் கூறப்பட்ட காலத்தில் (எச 16:8-9; எரே 48:32) இது மோவாபியருக்குச் சொந்தமாய் இருந்தது. அக்காலத்தில் இங்குத் திராட்சைத் தோட்டங்கள் சிறப்புற்று இருந்தன. இவை ''அழிப்போனால்'' அழிக்கப்பட்டன.

எரோனிமுவின் கூற்றுப்படி இந்த ஊர் கெஸ்போனுக்கு (எஸ்போன்) மிக அருகில் இருந்தது. இது இருந்த இடம் சரியாகத் தெரியவில்லை. கெஸ்போனுக்குத் தென் மேற்கில் 5 கி.மீ. தொலைவிலுள்ள குருன் ஏல் - கிபெசாக இருக்கலாம்.

**சிபிமியர்** (SHIPHMITE)

செபாம் (எண் 34:10-11) அல்லது சிப மோத்து (1 சாமு 30:28)-ஊரைச் சேர்ந்தவர். தாவீதின் அரச திராட்சைத் தோட்டங்களைக் கண்காணித்துவந்த சபதியின் இனப்பெயராகும் (1 நாள் 27:27).

**சிபியா** (ZIBIA - கலைமான்)

பென்யமின் குலத்திலே பிறந்த இவர் குடும்பத்தலைவராய் இருந்தார். இவர் ஏதோம் நாட்டிலே சகரயிம், கோதேசு (ஓதேசு) ஆகியோருக்குப் பிறந்த ஏழு புதல்வர்களுள் ஒருவர் (1 நாள் 8:9).

**சிபியா** (ZIBIAH - கலைமான்)

இவள் யூதாவின் அரசனாகிய யோவாசின் தாய் (2 அர 12:1; 2 நாள் 24:1).

**சிபியோன்** (ZIPHION)

இவர் காதின் மூத்தமகன் (ஆதி 46:16). எண் 26:15-இல் இவர் செபோன் என்றழைக்கப்படுகிறார்.

**சிபிராயிம்** (SIBRAIM - நம்பிக்கையுள்ள)

கானான் நாட்டு வட எல்லையில் தமஸ்குவுக்கும் கமாத்துக்கும் (ஆமாத்து) இடையில் அமைந்திருந்த ஓர் இடம் (எச 47:16). ஒரு வேளை ''கம்ஸ்'' என்னுமிடத்துக்கு அருகில் இருந்திருக்கலாம். இதுவும் செபர்வயிமும் ஒரே இடத்தைக் குறிக்கலாம்.

**சிபிரோன்** (ZIPHRON - வாசனைப்பொருள்)

கசர் -ஏனான் (அட்சரேனான்) (எண் 34:9) அருகில் கானானின் வடக்கு எல்லையில் உள்ள நகரம். எங்கு இருந்தது என்று கூறுவதற்கில்லை.

**சிபோலத்து** (SHIBBOLETH - தானியக்கதிர், பெருவெள்ளம்)

யோர்தானைக் கடக்க முயற்சி செய்த எப்பிராமியர்களைக் கண்டுபிடிக்கக் கில யாத்தியர் பயன்படுத்திய சொல் (நீதி 12:5-6). எப்பிராமியர்கள் எபிரேய மொழியின் ஒரு தனிப்பிரிவைப் பேசியதால் இச்சொல்லைப் பாலஸ்தீனத்தில் உச்சரிக்கப்படுவதிலிருந்து சிறிது வேறாக உச்சரிப்பர்.

**சிப்தான்** (SHIPHTAN - தீர்ப்பு)

யோர்தானுக்கு மேற்கிலுள்ள கானான் நாட்டை இஸ்ராயேல் மக்களுக்குப் பங்கிட்டுக்கொடுக்க நியமிக்கப்பட்டவர்களுள் ஒருவரான எப்பிராயிம் கோத்திரத்தின் தலைவன் கெமுவேலின் தந்தை (எண் 34:24).

**சிப்பா** (ZIPHAH - ஆற்றொழுக்கான)

எகலலேலின் இரண்டாவது மகன். யூதா கோத்திரத்தில் ஒரு குடும்பத்தின் அல்லது குலத்தின் பெயர் (1 நாள் 4:16).

**சிப்போரா** (ZIPPORAH - சிட்டுக்குருவி, பறவை)

சிப்போரா மிதியானிய குரு இரகுவேலின் ஏழு புதல்வியருள் ஒருத்தியும் மோசேயின்

முதல் மனைவியும், கேர்சோம் (2 யாத் 2:22), எலியேசர் (18:3-4) ஆகியவர்களின் தாயும் ஆவாள் (யாத் 2:16.21-22). யாவே பாரம்பரியம் பின்வரும் நிகழ்ச்சியைக் கூறுகின்றது. மோசேயும் அவரது குடும்பத்தாரும் மிதியானிலிருந்து எகிப்துக்குச் சென்று கொண்டிருக்கையில் யாவே மோசேயைக் கொல்லத் தேடினார். உடனே சிப்போரா தன் மகனுக்கு விருத்தசேதனம் செய்தாள். இதனால் ஆண்டவர் மோசேயை விட்டுவிட்டார் (யாத் 4:24-26). பின் அவளையும், அவள் பிள்ளைகளையும் இத்திரோ (இரகுவேலின் மறு பெயர்) அழைத்துக் கொண்டு போய்விட்டார். பின்பு சீனாய் மலைக்குக் கொண்டு சென்றார் (18:1-7).

**சிப்போர்** (ZIPPOR - பறவை, குருவி)

இவர் பிலயாமை இஸ்ராயேல் மக்களைச் சபிக்கும்படி அழைத்து வந்த மோவாபிய மன்னன் பாலாக்கின் தந்தை ஆவார் (எண் 22:2.4.10.16; 23:18; யோசு 24:9; நீதி 11:25).

**சிப்ரா** (SHIPHRAH - அழகு)

எல்லா இஸ்ராயேல் ஆண் பிள்ளைகளையும் கொல்லுவதற்காக எகிப்து அரசனால் ஆணையிடப்பட்ட இரண்டு எபிரேய மருத்துவச்சிகளில் ஒருத்தி (யாத் 1:15-16). இப்பெயர் எகிப்திய அடிமைகளின் பட்டியலில் இடம் பெறுகிறது; இதன் பொருள் 'அழகுடைய' என்பதாகும். பிற்கால யூதக்கதைகள் சிப்ராவை யோக்கபேதுவுடன் ஒன்றுபடுத்துகின்றன.

**சிமயா** (SHIMEA - இறைவன் கேட்டருளினார்)

1. ஈசாயின் மூன்றாவது மகன் (1 சாமு 16:9; 17:13). தாவீது அரசனின் சகோதரர் (1 நாள் 2:13). பெலிஸ்திய அரக்கனைக் கொன்ற (20:7) யோனதாபு (1) (2 சாமு 13:3.32) யோனத்தான் (4) (2 சாமு 21:21; 1 நாள் 20:7) ஆகியவர்களின் தந்தை. சிமயா, சம்மா (2) என்றும் (1 சாமு 16:9; 17:13), சிமெயா (1) என்றும் (2 சாமு 13:3.32) சிமயி (3) என்றும் (21:21) அழைக்கப்படுகிறார்.

2. எருசலேமில் பிறந்த தாவீதின் புதல்வர்களுள் ஒருவர் ( 1 நாள் 3:5). இவர் சம்மூவா (2) என்றும் (2 சாமு 5:14; 1 நாள் 14:4) அழைக்கப்படுகிறார்.

3. மெராரி குடும்பத்தில் ஒரு லேவியர் (1 நாள் 6:30).

4. கேர்சோமின் குடும்பத்தில் ஒரு லேவியர். பெரக்கியாவின் தந்தை (1 நாள் 6:39).

5. பென்யமின் குலத்தவர். எயியேலின் வழித்தோன்றல் (1 நாள் 8:32; 9:38).

**சிமயாத்தியர்** (SHIMEATHITES)

யகபேசில் குடியிருந்த மூன்று எழுத்தர்களின் குடும்பங்களில் ஒன்று. இவர்கள் காலேபின் சந்ததியர் அட்டவணையில் சேர்க்கப்பட்டுள்ளனர். இவர்கள் கேனியர்களாகவோ இரேக்காபியர்களாகவோ இருக்கலாம் (1 நாள் 2:55).

**சிமயாத்து** (SHIMEATH)

யூதாவின் அரசனான யோவாசைச் சதி செய்துகொன்ற அவரின் பணியாளர்களில் ஒருவனின் தாய் (தந்தை). 2 அர 12:21-இன்படி இக்கொலைகாரரின் பெயர் யோசக்கார், 2 நாள் 24:26-இன்படி சாபாது அல்லது யோசபாது ஆகும்.

**சிமயாம்** (SHIMEAM)

பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர். மிக்லோத்தின் மகன் (2 நாள் 9:38). 8:3-இல் சிமெயா (2) என்றும் அழைக்கப்படுகிறார்.

**சிமயி** (SHIMEI - யாவே கேட்டருளினார்)

1. இது ஒரு பெயர்ச்சொல். லேவியின் பேரன். கேர்சோனின் (கேர்கோமின்) இரண்டாவது மகன். எனவே இவர் லேவியின் குடும்பத்திலிருந்து தோன்றிய உட்பிரிவை நிறுவியவர் (யாத் 6:17; எண் 3:18; 1 நாள் 6:17; 23:7.10). இவர்கள் சிமயியர் என்றழைக்கப்படுகின்றனர் (எண் 3:21; செக் 12:13). 1 நாள் 23:9-10-இல் சிமயியின் புதல்வர்களைப்பற்றி இரு பட்டியல்கள் கொடுக்கப்

படுவதால் கேர்சோமுக்குச் சிமயி என்ற பெயருடைய மற்றொரு மகனும் இருந் திருக்கலாம் என்று சிலர் கருதுவர்.

2. இவர் சவுல் மன்னனின் குடும்பத்தைச் சார்ந்தவர். தாவீது அப்சலோமுக்குத் தப்பி பகூரிமைக் கடந்து சென்றபோது இவர் அவரை வசை மொழிந்து கல்லால் எறிந்தார். மேலும் தாவீது சவுல் மன்னரின் குலத்தை முடிவுக்குக் கொண்டுவந்ததோடு பல கொலைக் குற்றங்களைச் செய்ததாகவும் இவர் குற்றம் சாட்டினார். ஆனால் தாவீது இவருடைய வார்த்தை இறைவனின் வார்த் தையெனக் கருதி இவரைக் கொல்லவில்லை *(2 சாமு 16:5-13)*. தாவீது அப்சலோமின் புரட்சியை அடக்கிய நேரத்திலே சிமயி தாவீதிடம் மன்னிப்பை மன்றாடவே அவ ரும் அவனை மன்னித்தார். அவரைத் தண் டிப்பதில்லை எனச்சத்தியமும் செய்து கொடுத்தார் *(29:16-23)*. ஆனால் சாலமோன் மன்னர் சிமயி வசைமொழியை நீக்க அவ ரைக் கொல்ல வழி தேடினார் *(1 அர 2:8-9)*. சாலமோன் சிமயியிடம் எருசலேமிலேயே தங்கியிருக்கும்படி கூற அவர் அந்தக் கட்டளையை மீறியதால் அவரைக் கொன்றார் *(2:36-46)*.

3. ஈசாயின் மூன்றாவது மகன். தாவீது அரசனின் சகோதரர் *(2 சாமு 21:21)*. இவர் *1 நாள் 2:13*-இல் சிமயா *(1)* என் றழைக்கப்படுகிறார்.

4. அதோனியா அரசாட்சியை ஆக்கிர மிக்க நினைத்தபோது சிமயி அதோனி யாவை ஆதரிக்கவில்லை; சாலமோனை ஆத ரித்தார் *(1 அர 1:8)*.

5. எலாவின் மகன்; பென்யமின் பகுதி யில் சாலமோனின் ஆளுநராக இருந்தவர் *(1 அர 4:18)*. இவரும் 4-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

6. இவர் செருபாபேலின் சகோதரர் *(1 நாள் 3:19)*.

7. சிமியோன் கோத்திரத்தின் ஒரு பிரிவு அல்லது குடும்பம். சக்கூரின் மகன். இவருக் குப் பதினாறு புதல்வர்களும் ஆறு புதல்வி களும் *(1 நாள் 4:26-27)* இருந்தனர்.

8. ரூபன் இனத்தைச் சேர்ந்த கோகுவின் மகன் *(1 நாள் 5:4)*.

9. மெராரி குடும்பத்தில் தோன்றிய லேவியர் *(1 நாள் 6:29)*.

10. கேர்சோமியக் குடும்பத்தில் தோன்றிய லேவியர் யாகத்தின் மகன் *(1 நாள் 6:42)*.

11. பென்யமின் குலத்தைச் சார்ந்த ஒரு குடும்பத் தலைவன். ஒருவேளை இவர் செமா *(3)* ஆக இருக்கலாம் *(1 நாள் 8:13.21)*.

12. எதுத்தூனின் புதல்வர்களில் ஒருவர். தாவீது காலத்தில் ஆலய இசைக்கலைஞர் களின் பத்தாவது பிரிவின் தலைவர் *(1 நாள் 25:3.17)*.

13. இராமாவைச் சேர்ந்தவர். தாவீதின் உடைமைகளைக் கண்காணித்தவருள் ஒரு வர். இவர் திராட்சைத் தோட்டங்களைக் கண்காணித்தார் *(1 நாள் 27:27)*.

14. ஏமான் குடும்பத்தில் பிறந்த லேவியர். இவர் எசேக்கியா காலத்தில் ஆலயத்தைத் தூய்மைப்படுத்தினார் *(2 நாள் 29:14)*.

15. அரசன் எசேக்கியாவுக்குச் சமகாலத் திய லேவியரான இவர் ஆலயக் குருக்களுக் காகப் பெறப்படும் வரியையும் மற்றக் கொடைகளையும் கண்காணித்தார் *(2 நாள் 31:12-13)*.

16. எஸ்ராவின் சீர்திருத்தக் காலத்திலே பிறஇன மனைவிகளை விலக்கிய ஒருலேவி யர் *(எஸ் 10:23)*.

17. எஸ்ராவின் சீர்திருத்தக் காலத்திலே பிறஇனமனைவிகளைவிலக்கிய காசூமின், (ஆசம்) புதல்வர்களில் ஒருவர் *(எஸ் 10:33)*.

18. எஸ்ராவின் காலத்திலே பிறஇன மனைவிகளை விலக்கிய பின்னுயின் புதல்வர்களில் ஒருவர் *(எஸ் 10:38)*.

19. பென்யமின் குலத்துக் கீசின் வழித் தோன்றல். மொர்தெக்காயின் மூதாதையர் (*எஸ்த 2:5*).

**சிமால்கு** (SIMALCUE)

இமால்கு என்ற பெயரின் மற்றொரு வடிவம். காண்க. இமால்கு.

**சிமியோனின் பாடல்**(NUNC DIMITTIS)

சிமியோனின் பாடல் (*லூக் 2:29-32*) லூக்கா நற்செய்தியில் இயேசுவின் குழந்தைப் பருவத்தைப்பற்றி உள்ள பகுதியில் உள்ள மூன்று பாடல்களில் ஒன்று. இது மீட்பரின் வருகைக்காக நன்றி கூறும் பாடல். இம்மீட்பர் இஸ்ராயேலுக்கு ''மாட்சிமையும்'' புறவினத்தாருக்கு ''ஒளியும்'' ஆவார் (*காண்க எசா 29:6;52:10*). இவ்வாறு இப்பாடல் லூக்கா நற்செய்தி, அப்போஸ்தலர் பணி முதலியவற்றின் மையக்கருத்தை வலியுறுத்துகிறது. இப்பாடல் கிழக்குத் திருச்சபையில் மாலைச் செபத்திலும், மேற்கத்திய திருச்சபையில் இரவுச் செபத்திலும் பயன்படுத்தப் படுகிறது.

**சிமியோன்** (SHIMEON - இறைவன் கேட்டருளினார்)

அன்னிய மனைவியை நீக்கிவிட்டவர் பட்டியலில் ஒருவர். எஸ்ராவின் காலத்தில் வாழ்ந்தவர் (*எஸ் 10:31*).

**சிமியோன்** (SIMEON - இறைவன் கேட்டருளினார்)

1. யாக்கோபுக்கு லேயா வழியாகப் பிறந்த இரண்டாவது மகன். இஸ்ராயேலின் பன்னிரண்டு கோத்திரங்களில் ஒரு கோத்திரத்தின் குலப்பெயர் மூதாதையர்.

சிமியோன் தன் சகோதரன் லேவியோடு சேர்ந்து தங்கள் சகோதரி தீனாவைக் கற்பழித்ததற்காகச் செக்கேமிலுள்ள எல்லா ஆண்களையும் கொன்று பழிதீர்த்தார் (*ஆதி 34:25-26*). பிற்காலத்தில் யாக்கோபின் புதல்வர்கள் உணவு தேடி எகிப்து சென்றபோது, யோசேப்பு சிமியோனைப் பிணைக்கைதியாக வைத்துக் கொண்டு மற்றவர்களை அவர்களது இளைய சகோதரனைக் கொண்டு வர அனுப்பினார் (*42:24.36; 48:33*). யாக்கோபு எகிப்து வந்து சேர்ந்தபோது, சிமியோனுக்கு ஆறு புதல்வர்கள் இருந்தனர் (*46:10; யாத் 6:15*). சில பட்டியல்களில் சிமியோனின் ஐந்து புதல்வர்களின் பெயர்களே கொடுக்கப் பட்டுள்ளன (*எண் 26:12-14; 1 நாள் 4:24*). யாக்கோபு தனது புதல்வர்களை ஆசீர்வதித்த போது லேவி, சிமியோன் ஆகியோரின் வழித்தோன்றல்கள், பிற கோத்திரங்களிடையே சிதறிப் பரவிப்போய்விடுவர் என்று முன்னறிவிக்கிறார் (*ஆதி 49:5-7*).

பாலைவனத்தில் எடுக்கப்பட்ட முதல் கணக்கெடுப்பிலிருந்து மற்றதற்குச் சிமியோனில் போர் செய்யத் தகுதியுடையவர்களின் எண்ணிக்கை 59300-இலிருந்து 22000-ஆகக் குறைகிறது. கோத்திரங்களுக்கு மோசே அளித்த ஆசிரில் (உப 33) சிமியோன் பெயர் இடம் பெறவில்லை. ஆனால் இந்தக் கோத்திரம் உப 27:12-13-இல் குறிக்கப்படுகிறது. தாங்கள் வழிபாட்டில் கொண்டிருந்த பாகத்தால் லேவியர் தங்கள் தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொண்டனர். ஆனால் சிமியோனியர், ஒரு கோத்திரம் என்ற அளவில் தங்களது தனித்தன்மையைக் காலப்போக்கில் இழந்துவிட்டனர். கானானில் சில நகரங்கள் சிமியோனுக்கு அளிக்கப்பட்டன. ஆனால் சிமியோனுக்குரிய பகுதி, யூதாவுக்கு அளிக்கப்பட்டதன் தென்பகுதியில் உள்ளடங்கிப்போயிற்று (*யோசு 19:1-9; 15:26-32; நீதி 1:3*). கெபிரோனில் சிமியோனியரில் பல வீரர்கள் தாவீதோடு சேர்ந்து கொண்டது சிமியோனியர் யூதாவுக்குக் காட்டிய பிரமாணிக்கத்தைப் பிரதிபலிக்கிறது (*1 நாள் 12:25*). தாவீதின் ஆட்சிக் காலத்தில் சிமியோனுக்கு உரிய பகுதி என்ற கருத்துக்கே இடமில்லை. இது, புதிய அரசியல் நிர்வாக மாற்றங்களின் விளைவாக இருக்கலாம் (*4:31*).

அரசாட்சிக் காலத்தின் முடிவுக்காலத்தில் சிமியோனியர் ஒரு குழுவாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றனர் (*2 நாள் 15:9; 34:6*). எசேக்கியாவின் ஆட்சிக்காலத்தில் சிமியோனியர்,

தங்களுக்குரிய பகுதியின் மேற்கிலும் தெற்கிலும் இருந்த மேய்ச்சல் நிலங்களை இஸ்ராயேலர் அல்லாதவர்களிடமிருந்து கைப்பற்றிக் கொண்டனர் (1 நாள் 4:32-43).

எசேக்கியேலின் இறுதிக்காலச் சீர் அமைப்பில் சிமியோன் கோத்திரமும் இடம் பெறுகிறது (எசே 24-25.33; திருவெளி 7:7).

2. மத்தத்தியாவின் (1) தாத்தா (1 மக் 2:1).

3. சீமோன் மக்கபேயர். சீமோன் என்பது சிமியோன் என்ற எபிரேயப் பெயரின் கிரேக்க வடிவமாகும். இவர் மத்தத்தியாவின் (1) இரண்டாவது மகனும் யூதா மக்கபேயரின் மூத்த சகோதரனுமாவார் (1 மக் 2:65). காண்க: சீமோன் மக்கபேயர்.

4. இயேசு பிறந்தபோது எருசலேமில் வாழ்ந்துவந்த ஒரு ''நீதிமானும் கடவுள் பக்தரும்'' ஆவார் (லூக் 2:25-35). இஸ்ராயேலுக்கு மீட்புகொண்டு வரும் மெசியா பற்றிய நம்பிக்கை நிறைவேறுதலாகிய ''இஸ்ராயேலரின் ஆறுதலுக்காகக்'' காத்திருந்தவர் (எசா 40:1; 49:7-10; 51:3; 61:2; 66:13; மாற் 15:43). இவர் ''ஆண்டவரின் கிறிஸ்துவைக்'' காணும்முன் தாம் சாவதில்லை என்று வாக்குப் பெற்றிருந்தார். இயேசு ஆலயத்தில் காணிக்கையாக ஒப்புக் கொடுக்கப்பட்ட போது, சிமியோன் குழந்தையை மீட்பர் என்று வாழ்த்தினார்; மரியாளையும் யோசேப்பையும் வாழ்த்தினார். இயேசுவும் மரியாளும் பற்றிய நிகழ்ச்சிகளை முன்னறிவித்தார்.

இவர் பாடியதாகக் கூறப்படும் ''ஆண்டவரே, இப்போது உம் அடியானை அமைதியாகப் போகவிடும்'' என்ற குறுகிய பாடல், குருக்களின் கட்டளைச் செபத்தில் இரவுச் செபத்தில் தினமும் பயன்படுத்தப்படுகிறது. இப்பாடல் தனக்கும் (2:29-30), இஸ்ராயேலுக்கும் உலகனைத்துக்கும் (2:31-32) இறைவன் அளித்துள்ள கொடைக்குச் சிமியோனின் நன்றியை எடுத்துக் கூறுகிறது. இச்சிறு பாடலில் காணப்படும் சுட்டிக்காட்டல்கள் சிமியோனின் விசுவாசத்தில் மெசியாவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த மைய இடத்தைக் காட்டுகிறது (எசா 40: 3-5 மற்றும் 52:10 (லூக் 3:4-6); எசா 42:6 மற்றும் 49:6 (ஊழியனைப்பற்றிய பாடல்கள்); எசா 46:13 (லூக் 2:32) எசா 25:7; 60:2-3).

லூக் 2:33-35 கூற்று மெசியாவின் தோற்றத்தோடு உடன்வரும் துன்பத்தைத் தெளிவாகச் சுட்டுகிறது. அவரது வருகை அடையாளமாகவும் (எசா 11.14; லூக் 11:30-32) பலருக்குத் தீர்ப்பாகவும் (எசா 8:14-15; மத் 21:42-43; யோவா 9:39; 16:8-11; 1 கொரி 1:23; 1 பேதுரு 2:8), அவரது தாய்க்குத் துன்பமாகவும் அமையும் (லூக் 2:35).

5. தாவீதின் காலத்திற்கும் நாடுகடத்தலுக்கும் இடையில் வாழ்ந்த இயேசுவின் மூதாதையர் (லூக் 3:30).

6. சீமோன் பேதுருவின் எபிரேயப் பெயர் (அ.ப.15:14; 2 பேதுரு 1:1). காண்க. பேதுரு.

**சிமிரியர் (CIMMERIANS)**

விவிலியத்தில் காணப்படுகின்ற கோமேர் என்ற மக்களின் கிரேக்கப் பெயராகும்.

**சிமிர்னா (SMYRNA)**

சிறிய ஆசியாவில் உள்ள ஒரு நகரம். யோவான் தனது காட்சியாகமத்தில் எழுதும் ஏழு திருச்சபை அரியணைகளில் இதுவும் ஒன்று (திருவெளி 1:11; 2:8). இந்த இடத்தில் சிறிய ஆசியாவிலேயே மிகப்பெரிய நகரமாகிய இக்கால இசிமிர் இன்று அமைந்துள்ளது. கெர்முஸ் ஆற்றுநீர் வடியும் வளைகுடாவை ஒட்டி அமைந்துள்ளது. ''பழைய சிமிர்னா'' இவ்வளைகுடாவின் வடகிழக்கில் அமைந்திருந்தது. இது எப்போது நிறுவப்பட்டது என்று கூறமுடியாது. லீதியாவின் அரசனான ஆலியாத்தெசு இதனைக் கி.மு. 627-இல் கைப்பற்றினார். அவரது ஆட்சியில் அடுத்த 300 ஆண்டுகளுக்கு இவ்விடத்தில் சிறு கிராமம் மட்டுமே இருந்தது. மகா அலக்சாந்தர் சர்தையை வென்றபின் இன்றுள்ள இடத்தில் இந்நகரம் நிறுவப்பட்டது. ஒரு முக்கிய கிழக்கு - மேற்கான வியாபாரச் சாலையின் முடிவில் இருந்ததா

லும், ஒரு சிறந்த துறைமுகத்தைக் கொண்டிருந்ததாலும் உரோமையர் காலத்தில் செல்வத்திலும் கட்டடங்களிலும் சிறப்புப் பெற்றிருந்தது. மருத்துவ அறிவியல் மையமாக விளங்கியது. பொருளாதாரத்திலும், அரசியலிலும் எபேசு நகரை அடுத்திருந்தது. இங்குக் கிறிஸ்துவ சமூகம் தோன்றிய காலத்தைப்பற்றியோ தோற்றுவித்தவரைப் பற்றியோ எந்தவிதக் குறிப்பும் இல்லை. ஆனால் எபேசில் பவுல் ஆற்றிய பணியிலிருந்து இங்குக் கிறிஸ்தவ சமூகம் தோன்றியிருக்கலாம் (அ.ப. *19:9-10*). சிமிர்னாத் திருச்சபைக்கு எழுதப்பட்டமடல் (திருவெளி *2:8-11*) இங்கு வாழ்ந்த கிறிஸ்தவர்கள் வறியவர்கள் என்றும், நகரில் வாழ்ந்த யூத சமூகத்தோடு சச்சரவுகள் ஏற்பட்டன என்றும் *(2:9)* கிறிஸ்தவ சமூகம் துன்புறுத்தப்பட்டது என்றும் *(2:10)* சுட்டுகிறது. யூத, கிறிஸ்தவ சமூகங்களுக்கிடையே தொடர்ந்து நிலவிய பகைமை கி.பி. 156-இல் சிமிர்னா ஆயரான போலிக்கார்ப்பின் மறைசாட்சி மரணத்தை விளக்குகிறது.

**சிமெயா** *(*SHIMEAH - *இறைவன் கேட்டருளினார்)*

1. ஈசாயின் மூன்றாவது மகன். தாவீதின் சகோதரன் (2 சாமு *13:3.22*). இவர் 1 நாள் *2:13*-இல் சிமயா என்றும் 1 சாமு *16:9; 17:13*-இல் சம்மூவா என்றும், *21:21*-இல் சிமயி என்றும் அழைக்கப்படுகிறார்.

2. பென்யமின் குலத்தைச் சேர்ந்த மிக்லோத்தின் மகன் (1 நாள் *8:32*). *9:38*-இல் இவர் சிமயாம் என்றழைக்கப்படுகிறார்.

**சிமெயோன்** *(*SYMEON*)*

1. அந்தியோக்கியாவிலே இருந்த திருச்சபையிலே பர்னபா மற்றும் சிலருடன் இருந்த யூதக் கிறிஸ்தவ போதகரும் இறைவாக்கினரும் ஆவார். இவரின் சிறப்புப் பெயர் நீகர் ஆகும் (அ.ப. *13:1*). ஆகவே கருப்பராய் இருந்திருக்கலாம்.

2. சீமோன் பேதுருவின் மற்றொரு பெயர். இதை யாக்கோபு பயன்படுத்துகிறார் (அ.ப. *15:14*; 2 பேதுரு *1:1*).

**சிம்சாய்** *(*SHIMSHAI - *ஒளிமயமான சூரியன்)*

''ஆற்றிற்கு அப்பால்'' பாலஸ்தீனம் உட்பட உள்ள மாநிலத்தின் பாரசீக உயர் அதிகாரி. இவரின் பெரிய அதிகாரியாகிய இரகூமும் இவரும் சேர்ந்து அரசன் அர்த்தக்சஸ்தாவுக்கு இஸ்ராயேல் மக்கள் நாடுகடத்தப்பட்டபின் எருசலேமை மீண்டும் கட்டுவதை எதிர்த்து மடல் எழுதினார் (எஸ் *4:8-16*). அங்கிருந்து ஒப்புதல் கடிதம் பெற்றுக்கொண்டு தங்களின் கூட்டாளிகளுடன் சேர்ந்து அந்த வேலையைத் தடுத்து நிறுத்தினான் (எஸ் *4:17-24*).

**சிம்சோன்** *(*SAMSON - *சூரியன் போன்ற சிறிய சூரியன்)*

இந்தச் சொல்லின் சொல்லிலக்கணம் சம்பந்தப்பட்ட விளக்கம் சில முந்தைய அறிஞர்களை, சிம்சோன் ஒரு புராணப் படைப்பு என்று எண்ணத்தூண்டியது. இந்தக் கருத்து இப்போது பொதுவாகக் கைவிடப்பட்டுவிட்டது. சிம்சோன் மனோவாகு என்பவரின் மகன். இவர் தாண் இனத்தைச் சேர்ந்தவர். இவரது குடும்பம் பெலிஸ்தியர்களின் தாக்குதலினால் வடக்கிலுள்ள தாணுக்குக் குடியேறுமுன், இந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் வாழ்ந்த பகுதியிலுள்ள செப்போலாவிலுள்ள சோராவில் வாழ்ந்தது. மூலத்தில் தனித்தனியானதாக இருந்த சிம்சோனைப் பற்றிய கதைகள், அதிக நெருக்கமில்லாது ஒன்று சேர்க்கப்பட்டுள்ளன.

நீதி 13-ஆம் அதிகாரம் சிம்சோனின் பிறப்பும், 14-ஆம் அதிகாரம் அவரது திருமணமும் சிங்கத்தைக் கொல்லுதலும், *15:1-3*-இல் மனைவியின் இழப்பும் நரிகளின் கதையும் *15:9-17*-இல் யூதாவைச் சேர்ந்தவர்கள் சிம்சோனுக்குச் செய்த துரோகமும் இலேகியில் ஆயிரம் பெலிஸ்தியர்களைக் கொன்றதும், *15:18*-இல் ஏன்கக்கோரே ஊற்றுபற்றியும், *16:1-3*-இல் காத்தின் கதவுகளும், *16:4-22*-இல் சிம்சோனும் தெலீலாவும் சிம்சோன் பிடிபடுவதற்கு முன்வரும் ஒரே வடிவமைப்புடைய மூன்று கதைகளும், *16:23-31*-இல் அவருடைய இறப்பில் ஒரு பெரிய செயல் நிறைவேற்றப்பட்டதும் விவரிக்கப்படுகின்றன.

இந்தக் கதைகளின் தலைவன் தாண் குலத்து நாட்டுப்புற மனிதர் வியக்கத்தக்க வகையில் இயற்கையான பலத்தைவிட அதிக உடல்பலம் கொண்டவர். தனியாகப் பெலிஸ்தியர்களோடு பழிவாங்கும் போர் புரிந்தவர். 'இஸ்ராயேலரின் நீதிபதி'' என்ற முறையில் வியப்பூட்டும் தன்மை வாய்ந்தவர். இவர் கோபமும் இச்சையும் சேர்ந்த ஒழுக்கம் சாராத அரக்க மனிதராக இருந்தார். பெலிஸ்தியரின் ஆதிக்கம் நிலவிய காலத்திலும் இடத்திலும் இவர் இஸ்ராயேல் குலத்து ஒரே ஒரு பெருமைமிக்க வீரராக இருந்தார். நாடோடிப்பாடல்களின் கதாநாயகன் ஆனார். இவரது செயல்கள் புகழ் பெற்றவை. ஒவ்வொரு செயல்பற்றிய கதையும் அணிசெய்து புனைந்துரைக்கப்பட்டுள்ளது. அளவுக்குமீறி மிகைப்படுத்தப்பட்டுள்ளது. கதைகளை அப்படியே எடுத்துப் பார்த்தால் அவற்றில் எவ்வித சமயக் கண்ணோட்டமும் இருந்ததாகத் தெரியவில்லை. கதைகளைச் சேகரித்தவர்தான் சமயக் கண்ணோட்டத்தை அளித்திருக்கக்கூடும். இவர்தான் சிம்சோனின் பிறப்புக் கதையையும் எழுதியிருக்க வேண்டும். பெலிஸ்தியர்களுக்கு எதிராக யாவே தாண் இனத்தவருக்கு ஆயுதமாக அளித்த இப்படிப்பட்ட மனிதர் வரலாற்றில் முக்கிய இடம் வகிக்க வேண்டும். இதைப் பிறப்புக்கு முந்திய தேர்வும் முன்னறிவிப்பும் எடுத்துக்காட்டுகிறது. இவரது வியப்புமிக்க உடல் பலம், யாவேயின் கொடைதான் என்று கதைகளே எடுத்துக் காட்டுகின்றன. சிலகதைகள், இதை யாவேயின் ஆவி சிம்சோனுள் புகுவதன் விளைவாகும் என்று காட்டுகின்றன *(13:25;14:6.19; 15:14)*. இன்னும் சில அவரது நசரேயர் என்ற அர்ச்சிப்புக்கும், வெட்டப்படாத தலைமுடிக்கும் *(16:17.22)* ஏற்றிச் சொல்கின்றன. கதைகளைச் சேகரித்தவரின் நோக்கம் என்னவென்றால் யாவே இவரைப் பயன்படுத்தி அவரது மக்களைக் காப்பாற்றினார் என்பதாகும். இப்படி மறுஉருவம் அளிக்கப்பட்ட சிம்சோன்தான் எபி *11:32*-இல் விசுவாசத்தின் வீரனாகச் சித்தரிக்கப்படுகிறார்.

இந்தக் கதைகள் மற்றப் பழைய ஏற்பாட்டு நிகழ்ச்சியுரைகளைவிட இஸ்ராயேலருக்கும், பெலிஸ்தியர்களுக்குமிடையே உள்ள தொடர்பை நன்கு விளக்குகின்றன. இவர்கள் எல்லையை ஒட்டிய கிராமங்களில் வாழ்ந்துள்ளனர். சில சமயங்களில் நண்பர்களாயும், சில சமயங்களில் பகைவர்களாயும் இருந்திருக்கின்றனர். இரு இனத்தாரும் ஒருவர் மற்றவருடைய நிலப்பகுதியில் சுதந்தரமாகச் சென்று வந்திருக்கின்றனர். இவர்களுக்கிடையே திருமணம் நடந்துள்ளது. பெலிஸ்தியர்களின் உயர் ஆதிக்கத்தினால் யூதாவைச் சேர்ந்தவர்கள் சிம்சோனைப் பெலிஸ்தியர்கள் கையில் அளிக்கக் கட்டாயப்படுத்தப்பட்டார்கள். பொதுப்பாணிப் பாரம்பரியம் இக்கதைகளை மிகைப்படுத்தியிருந்தாலும், இக்கதைகளின் பின்னணியின் உண்மைத் தன்மை இவை சிம்சோனின் வீரச்செயல்கள் நடந்த காலத்திலிருந்தும் இடத்திலிருந்தும் இக்கதைகள் தோன்றியிருக்க வேண்டும் என்று காட்டுகிறது. பெலிஸ்தியர்களின் அச்சுறுத்தல்களிலிருந்து இறுதியாகத் தமதுமக்களை விடுவித்த யாவேயின் மீட்பாற்றலுக்கும் சித்தத்திற்கும் சிம்சோன் சாட்சியாகத் திகழ்கின்றார்.

**சிம்மா** *(ZIMMAH)*

*1.* சிம்மா கேர்சோமின் வம்சத்தில் பிறந்த ஒரு லேவியர் ஆவார். ஆலயத்தில் வழிபாட்டு இசைக்குப் பொறுப்பானவர் *(1 நாள் 6;20)*.

*2.* கேர்சோமிய லேவியரான யோவாகுவின் தந்தை *(2 நாள் 9:12)*. இவரும் 1-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**சிம்மாக்கு** *(SYMMACHUS)*

இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த பழைய ஏற்பாட்டின் கிரேக்க மொழி பெயர்ப்பாளர் யூசேபியு மற்றும் எரோனிமு ஆகியோரின் கருத்துப்படி இவர் ஓர் எபயோனியர் ஆவார். இவரதுமொழி பெயர்ப்பை ஓரிசன் தனது ஆறுவடிவ மொழி பெயர்ப்பில் நான்காவதாகப் பயன்படுத்துகிறார்.

**சிம்ராத்து (SHIMRATH - காவல்காத்தல்)**

பென்யமினின் குலப்பட்டியலில் கொடுக் கப்பட்டுள்ள சிமயியின் (11) புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 8:21).

**சிம்ரான் (ZIMRAN - பாடப்படுதல்)**

ஆபிரகாமுக்கும், கெற்றூராளுக்கும் பிறந் தவர் (ஆதி 25:2; 1 நாள் 1:32). இது அரேபிய இடப்பெயராகும். இப்பெயரும், எரே 25:25-இல் கூறப்படும் சிம்ரியும் ஒன்றாக இருக் கலாம் என்று கருதப்படுகிறது. இது இருந்த இடம் தெரியவில்லை. தோலமி கூறும் மெக்காவுக்கு மேற்கில் சபிரான் என்ற இடமாக இருக்கலாம். இது செங்கடலின் கரையில் இருக்கிறது.

**சிம்ரி (SHIMRI - விழிப்பாயுள்ள)**

1. சிமெயோனுடைய வம்சத்தார்; செமாயா (3)வின் மகன்; சீசாவின் முன் னோர் (1 நாள் 4:37).

2. தாவீதின் வலிமைமிக்க வீரர்களுள் இருவராகிய எதிவேல், யோகாவின் தந்தை (1 நாள் 11:45).

3. தாவீதால் ஏற்படுத்தப்பட்டதாகக் கூறப் படும் வாயிற் காவலர் பிரிவில் மெராரியின் வழியில் வந்த கோசாவின் (ஓசா) தலை மகன் (1 நாள் 26:10).

4. எலிசாபானின் (எலிட்சாபான்) குடும் பத்தின் ஒரு லேவியர். எசேக்கியாவின் காலத்தில் ஆலயம் புதுப்பிக்கப்பட்ட பொழுது முன்னின்று செய்தவர்களுள் ஒருவர் (2 நாள் 29:13).

**சிம்ரி (ZIMRI - யாவேயின் மதிப்பச்சம்) - ஆள்**

1. இவர் சாலுவின் மகனும், சிமியோன் கோத்திரத்தில் ஒரு தலைவரும் ஆவார் (எண் 25:6-18; 1 மக் 2:26). இஸ்ராயேல் மக்க ளிடையே கொள்ளைநோய் பரவி இருந்ததால் மக்கள் ஆசாரக்கூடார வாயிலின் அருகே அழுது கொண்டிருந்தார்கள். அப்போது இஸ்ராயேலன் ஒருவன் அந்நியப் பெண்ணை மணம் செய்வதைத் தடுக்கும் சட்டத்தை எதிர்த்து மிதியானியப் பெண் ணைத் தன் கூடாரத்திற்கு அழைத்து வந்தார். அப்போது, ஆரோனின் மகனான எலயாசா ரின் மகன் பினகாசு அவர்களைக் கொன்றார். அதனால் கொள்ளை நோய் தடைப்பட்டது. அந்த இஸ்ராயேலன் சிமியோன் கோத்திரத் தின் ஒரு தலைவரான இந்தச் சிம்ரி ஆவார். அப்பெண் மிதியானிய நாட்டு இளவரசி யான கோசுபி ஆவாள்.

2. சுமார் கி.மு. 876-இல் இஸ்ராயேலரின் அரசனாக இருந்தவர். இவர் ஏலா என்பவ ரைக் கொன்றுவிட்டு அரசனானவர். சிம்ரி திரட்சாவில் 7 நாட்கள் ஆண்டார் (1 அர 16:15). பாசாவால் நிறுவப்பட்ட அரசு, சிம்ரி ஏலாவைக் கொன்று அவர் குடும்பத்தை அழித்தபோது, இறைவாக்கினர் ஏகூ முன் னறிவித்ததுபோல் மறைந்தது (15:11-13). பாசா, நாதாபுக்கு எதிராகச் சதி செய்து அவரைக் கிபத்தோனில் கொன்றான். கிபத் தோன் என்பது நாதாபும், இஸ்ராயேலர் அனைவரும் முற்றுகை இட்டிருந்த இடம் (1 அர 15;27). ஏலா திரட்சாவின் ஆளுந னான அர்சாவின் வீட்டில் குடிபோதையில் இருந்தபோது சிம்ரி உட்புகுந்து அவரைக் கொன்றார். இச்செய்தி படைகளுக்கு எட்டி யதும், ஒமிரி, (ஒம்ரி) அரசனாக்கப்பட்டார். இவர் படைகளால் அரசனாக்கப்பட்டாரே ஒழிய எல்லா இஸ்ராயேல் மக்களாலும் அல்ல (1 அர 16:16-17). ஒம்ரி திரட்சாவுக்கு வந்து முற்றுகையிட்டார். நகர் பிடிபடப் போகிறது என்று சிம்ரி அறிந்து அரண்மனைக் குள் புகுந்து அதைத் தீக்கிரையாக்கி அத் தீயிலே அவரும் மாண்டார். 2 அர 9:31-இல் இப்பெயர் குறிப்பிடப்படுகிறது. ஏகூ இசிரி யேலுவின் நகரவாயிலுக்கு வந்தபோது ஈச பேல் ''என் தலைவரைக் கொன்ற சிம்ரிக்கு அமைதிகிட்டுமா?'' என்றாள். அதன்பின் தன் தலைவரைக் கொன்றவனுக்குச் சிம்ரி யின் பெயர் இடுபெயராயிற்று.

3. சிம்ரி செராகுவின் (6) ஐந்து மக்களில் மூத்தவர். யூதா, தாமார் ஆகியவர்களின் பேரனும் ஆவார் (1 நாள் 2:6). யோசு 7:1.17-18-இல் இவர் சபதி என்று அழைக்கப் படுகிறார்.

*4.* சிம்ரி பென்யமின் கோத்திரத்தைச் சார்ந்தவர். இவர் சவுலின் மகனான யோனத்தானின் வழிவந்தவர். யோயதா என்பது இவருடைய தந்தையின் பெயராகும் (1 நாள் 8:36; 9:42).

**சிம்ரி** (ZIMRI) - இடம்

சினத்தின் கிண்ணம்பற்றிய எரேமியாவின் இறைவாக்கில் குறிக்கப்படும் நாடுகளில் ஒன்று (எரே 25:25). இப்பெயர் எழுபது நூலில் காணப்படவில்லை.

**சிம்ரித்து** (SHIMRITH - இறைவன் பாதுகாத்துள்ளார்)

யூதாவின் அரசன் யோவாசைச் சதி செய்து கொன்ற அவரின் பணியாளராகிய யோசபாது வின் தாய். இவள் ஒரு மோவாபியள் (2 நாள் 24:26). 2 அர 12;21-இல் இவள் சோமேர் (1) என்றழைக்கப்படுகிறாள்.

**சிம்ரோன்** (SHIMRON - காவல்நிலையம்) - ஆள்

இசக்காரின் நான்காவது மைந்தன் (ஆதி 46:13; 1 நாள் 7:1). சிம்ரோனியர்களின் மூதாதையர் (எண் 26:24).

**சிம்ரோன்** (SHIMRON - காவல் நிலையம்) - இடம்

கானானிய அரச நகர் (யோசு 11:1); பிற்காலத்தில் செபுலோனுக்குப் பங்கிடப் பட்டது (19:5). இதன் அரசன் யாபீனுடன் கூட்டுச் சேர்ந்து யோசுவாவினால் தோற்கடிக்கப்பட்டார்.

**சிம்ரோன் – மெரோன்** (SHIMRON - MERON)

கானானிய அரச நகர்; இதன் அரசன் யோசுவாவினால் தோற்கடிக்கப்பட்டார் (யோசு 12:20). இந்தக் கூட்டுப் பெயர் யோசு 12:20-இல் மட்டும்தான் வருகிறது. உண்மையில் இது சிமிரோன் மற்றும் மெரோன் என்ற இரு வேறுபட்ட நகரங்களைக் குறிக்கலாம். எழுபது நூல் இவ்வாறு கொண்டுள்ளது.

**சியா** (ZIA - நடுங்குகின்ற)

பாசானில் வாழ்ந்த காது கோத்திரத்தில் தோன்றிய இவர் அபீகயிலினுடைய புதல்வராவார் (1 நாள் 5:13).

**சிரக்கூசா** (SYRACUSE)

சிசிலியின் கிழக்குக் கடற்கரையில் உள்ள முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மாநகரம். பவுல் மால்தாவிற்கும், இரேகியுவிற்கும் இடையே இங்கு மூன்று நாட்கள் தங்கினார் (அ.ப. 28:12).

இந்நகரம் கொரிந்தியர்களால் கி.மு. 734-இல் ஒரு குடியிருப்பாக மாற்றப்பட்டது. இது 5-ஆம் 4-ஆம் நூற்றாண்டுகளில் செழிப்புற்று விளங்கிற்று. சிசிலி முழுவதையும் கொண்டுவர ஏதன்சு இந்நகரை முற்றுகை யிட்டது (415-413). ஆனால் இந்நகர் வெற்றி பெற்றது. 213-211-இல் நீண்ட முற்றுகைக் குப்பின் இந்நகர் உரோமையர் ஆதிக்கத்திற்கு உட்பட்டது. சிரக்கூசா ஒரு பெரிய செழிப்புமிக்க நகரமாகும். அதன் அழகுக்குப் பெயர் பெற்றது. கி.மு.21-இல் இதை அகுஸ்து ஒரு குடியிருப்பு நிலைக்கு உயர்த்தினார்.

**சிரிப்பு** (LAUGHTER)

ஈசாக்கினுடைய பெயராகிய ''சிரிப்பு'', சிரிப்பைவிடச் சிக்கலானது என்ன? என்ற தலைப்புப் பற்றிய வேறுபாடுகளைக் கூற வாய்ப்பாக உள்ளது. ஆதி 17:17; 18:12-15; 21:6... முதலிய வாசகங்களில் சிரிப்பின் இரு தன்மைகளின்மீது இறைவாக்கு கருத்துச் செலுத்துகிறது. ஒன்று விசுவாசமின்மையின் சிரிப்பாகும் இதுவியப்பு மிக்க இறை செயல்களைக்கண்டு மகிழ்ச்சியான வியப்பின் சிரிப்பாக மாற்றியமைக்கப்படலாம். எவ்வாறு சிரிக்க வேண்டுமென்பதை விவிலிய மனிதன் உறுதியாக அறிந்துள்ளான். பொதுவாகக் கற்பனை செய்யப்பட்டவைகளை விட இறை ஏவுதல் பெற்ற நிகழ்ச்சியுரை களில், வலிமைமிக்க நகைச்சுவை உணர்வானது மறைந்துள்ளது. ஆனால் இந்த நகைச்சுவையானது அக்கால இஸ்ராயேலரின் முரட்டுத்தனத்தின் முத்திரையைக் கொண்டுள்ளது. சவால், ஏளனம் மற்றும் திருப்தியான தற்பெருமை ஆகியவற்றினின்று அரிதாகவே விலகிச்செல்கிறது. மற்றொன்று அறிவிலியின் சிரிப்பு: விவிலியப் பகுதிகள் பெரும்பாலும் நீதிமானின் சிரிப்பை எடுத்துக்கூறாமல் உண்மையின் தேவைகளுக்கேற்ப நடவாத அறிவிலியின் சிரிப்பை எடுத்துக் கூறுகின்றன.

**1. அறிவிலியின் சிரிப்பு:**

ஞானியின் சிரிப்பானது விவேகமானதாக இருக்கின்ற வேளையில், இது மூடத்தன மான (*சீரா 27:13*) அல்லது மிகைப்படுத்தப் பட்ட சிரிப்பாக உள்ளது (*21:20*). குறிப்பாக அறிவிலியின் சிரிப்பானது ஏளனம் செய்பவ ரின் சிரிப்பாக உள்ளது. இச்சொல்லானது துல்லியமான பொருளைக் கொண்டுள்ளது. திருத்துதல் (*சங் 1:1; பழ 13:1; 15:12...*), கற்பித்தல், அல்லது விசுவாசத்தை ஏற்றல் ஆகியவற்றிற்கு எதிராகக் கிளர்ச்சி செய்யும் மனிதனை இது குறிப்பிடுகிறது. ஏளனம் புரிவோன் ஞானிக்கு நேர்மாறானவன் (*பழ 9:12; 29:8*). அவன் இறைவனுடைய வார்த் தைக்குக் கேலியாகப் பதிலளிப்பான் (*எரே 20:7-8*). உ.ம். எசேக்கியாவின் சீர்திருத் தத்திற்கான பதில் (*2 நாள் 30:10*). பிற்காலத் தில் இறந்தோரின் உயிர்ப்பு போதிக்கப்படும் போது அவன் ஏளனமாகச் சிரிக்கிறான் (*அ.ப. 17:32*). இறுதி நாட்களில் ''ஏளனம் செய்பவர்கள்'' (*2 பேதுரு 3:3*) வாக்குறுதி களையே சந்தேகிப்பர். ஆகவே ஏளனமானது கிட்டதட்ட விசுவசிக்க மறுப்பதற்குச் சமமா கும். நீதிமான் துன்புறும்போது ஏளனத் திற்கு உட்பட்டவனாக இருப்பான் (*சங் 22:8; 35:26; புல 3:14*). பிறநாடுகள் இஸ்ரா யேலை ஏளனம் செய்யும். கல்வாரியிலும் ஏளனம் புரிவோர் உள்ளனர் (*மாற் 15:29-30;லூக் 23: 35-36*).

**2. விசுவாசியின் சிரிப்பு:**

சிரிப்பானது மதிகெட்ட செயலெனத் திரு வுரை ஆசிரியர் அறிவிக்கிறார் (*திருவுரை 2:2*). அவர் கண்ணீரினின்று அதிகமாக எதிர் பார்க்கிறார் (*7:3*). ஆயினும் ''சிரிக்க ஒரு நேரம் இருப்பதை'' அவர் ஏற்றுக்கொள் கிறார் (*3:4*). உண்மையில் சிரிப்பானது நபர் களுக்கும் காலங்களுக்கும் ஏற்ப மாறுபட்ட பொருளைக் கொண்டுள்ளது. ஏளனம் புரிப வரை இறைவன் எள்ளி நகைப்பதுபோல் (*சங் 2:4; பழ 3:34*), குறிப்பிட்ட காலத்தில் நீதிமான், இறைப்பற்றற்ற மனிதனைப்பார்த் துச் சிரிப்பான் (*சங் 52:6*). ஏளனமானது போலித் தெய்வங்களுக்கு எதிரான ஓர் ஆயுத மாக உள்ளது. கர்மேல் மலையில், எலியா வாலும் (*1 அர 18:27*), பாரூக்கின் நூலினா லும் (*பாரூ 6*) இது பயன்படுத்தப்படுகிறது. மக்கபேயர் காலத்து வேதசாட்சிகள் தங்க ளைக் கொடுமைப்படுத்துபவருக்கு எதிராக ஏளனப்பழிப்புச் சொற்களைப் பயன்படுத்து கின்றனர் (*2 மக் 7:39*). அதே நேரத்தில் நீதிமானின் சிரிப்பானது தர்க்கவாதத்தன்மை யற்றதாய் இருக்கலாம். இறைவனால் ஆசிர் வதிக்கப்பட்ட ஆன்மாவின் ஆறுதலை வெளிப்படுத்தலாம் (*சங் 35:27; 126:2; யோபு 8:21*). ''நாளையை நோக்கிச் சிரிக்கின்ற'' பெண்ணைப்போலச் சிரிப்பானது நம்பிக்கை மிக்கதாக இருக்கலாம் (*பழ 31:25*).

இக்காலத்துடன் * திருப்தியடைகிறவர் களின் சிரிப்பைப்போன்ற சிரிப்பானது (*லூக் 6:25; யாக் 4:9*) நீடிக்காதென இயேசு கூறு கிறார். ஆனால் இப்போது அழுகிறவர் களுக்கு, நீடித்தமகிழ்ச்சியுடன் இணைந்த சிரிப்பை அவர் வாக்களிக்கிறார் (*லூக் 6:21*). இறைவனின் முன்னிலையிலும், மனிதனின் முன்னிலையிலும் தொடக்கத்திலிருந்தே செயற்பட்டு வந்துள்ள (செயல்பாடு என்பது இங்கு, 'சிரிப்பு' என்பதற்கான மற்றொரு சொல் பழ 8:30-31), ஞானத்தினுடைய நிறை வான தூய சிரிப்பை, சிரிப்பின் இறுதிநிலை யானது எதிரொலிக்கும்.

**சிரியோன் (SIRION)**

உப *3:9*-இன்படி கெர்மோன் (எர்மோன்) மலையைச் சிதோனியர்கள் சிரியோன் என்று அழைத்தனர். சங். *29:6*-இல் சிரியோன் லெப னோனுடன் சேர்த்துக் கூறப்படுவதால், சிரி யோன் எதிர்-லெபனோன் மலைத் தொட ரைக் குறிக்கலாம் என்று கருதப்படுகிறது. உப. *4:48*; எரே *18:14*-வரும் பெயர்கள் சில பதிப்புகளில் சிரியோன் என்று திருத்தப்படு கின்றன.

**சிரேனியர்(CYRENIANS)**

சிரேனின் குடிமக்கள் (*அ.ப. 6:9*)

**சிரேன் (CYRENE)**

ஆப்பிரிக்காவின் வடக்குக் கரையிலுள்ள (இக்கால லீபியா) ஒரு கிரேக்க நகரம். சிரேனாயிக்காவின் தலைநகரம்.

தேரா, கிரேத்து ஆகிய தீவுகளிலிருந்து வந்த தோரியன் கிரேக்கர்களால் இது நிறுவப்பட்டது. சிரேன், பாத்தியாது என்ற வம்ச அரசர்களால் கி.மு. 5-ஆம் நூற்றாண்டுவரை ஆளப்பட்டது. இதனுடைய பொருளாதாரம் முழுவதும் வேளாண்மையைப் பொறுத்திருந்தது. வருடத்திற்கு மூன்றுமுறை பயிர் செய்யப்பட்டது என்று எரோதோத்து கூறுகின்றார்.

கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் சிரேன் குடியாட்சியாக மாறியது; தத்துவஞானிகளுடைய கல்வி மையமாக மாறியது. கி.மு. 331-இல் அலக்சாந்தரால் வெல்லப்பட்டு பிறகு தோலமியரின் ஆட்சியின் ஒரு பகுதியானது. கி.மு. 96-இல் இது உரோமைக்குக் கொடுக்கப்பட்டது; உரோம் இதைச் சுதந்தர நாடாக அறிவித்தது. ஆனால் சில உள்நாட்டுப் பூசல்களினால் இது உரோமைய மாகாணமாக்கப்பட்டுக் கிரேத்துடன் இணைக்கப்பட்டது.

கிரேக்க, உரோமையர் காலத்தில் தோலமியினால், அனுப்பப்பட்ட கிரேக்க மொழி பேசும் யூதர்கள் இங்கு வந்து குடியேறினர்; சம உரிமைகளை அனுபவித்தனர். சீமோன் (மத் 27:32; மாற் 15:21; லூக் 23:26) இந்த யூதக் குழுவின் ஒரு அங்கத்தினராவார். அந்தியோக்கியாவின் இறைவாக்கினரான லூக்கியுவும் (அ.ப.13:1) சிரேனியர்களுக்கும் அலக்சாந்தியர்களுக்கும் சொந்தமான செபக்கூடத்தில் ஸ்தேவானைத் தாக்கியவர்களும் (அ.ப. 6:9) இந்தக் குழுவைச் சேர்ந்தவர்கள். எருசலேமிலிருந்த யூதர்கள் மத்தியிலும், வெளிநாடுகளிலும் சிரேனியர்கள் முக்கியத்துவம் பெற்றிருந்தனர் (அ.ப. 2:10).

வெஸ்பாசியன் காலத்தில் நடந்த யூதக் கலகமானது சிரேனிலும் அதன் விளைவுகளைக் கொண்டிருந்தது. ஒரு பெரும் கலகம் கி.பி. 115-116-இல் நடந்தது. இதில் யூதர்கள் புறமத நினைவுச் சின்னங்களை உடைத்தும், கொளுத்தியும், 2,00,000 குடிமக்களைக் கொன்றும் அழித்தனர். அதிரியான் இதன் கட்டடங்களை மீண்டும் கட்டினார். இதன் செழிப்பு விரைவாகக் குறைந்து நீரோவின் காலத்தில் முழுவதுமாக அழிந்துவிட்டது.

19-ஆம் நூற்றாண்டிலும், இரண்டாம் உலகப் போருக்கு முன்பும் இதன் நினைவுச் சின்னங்கள் ஆராயப்பட்டன. பலமுறை கட்டப்பட்ட அப்பொல்லோ கோவில்தான் அழிவிலிருந்து தப்பிய பெரிய கட்டடமாகும். இது கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் கிறிஸ்தவ ஆலயமாக மாற்றப்பட்டது. உரோமைப் பேரரசர் வழிபாட்டிற்காகக் கட்டப்பட்ட பல கோவில்களும், கட்டடங்களும், அரங்கங்களும், குளியல் அறைகளும் இங்குக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

**சிலந்தி** (SPIDER)

பாலஸ்தீனத்தில் உள்ள நூற்றுக்கும் மேற்பட்ட சிலந்தி வகைகள் உருவில் வித்தியாசப்பட்டாலும், அனைத்துச் சிலந்திகளுமே பட்டுப்போன்ற நூலிழையினாலான வலைகளைப் பின்னக் கூடியனவே. சிலந்திவலைகளினுடைய வலுவற்ற, நிலையற்ற தன்மையினை மேற்கோளாகக் காட்டும் வகையில் தான் சிலந்தி விவிலியத்தில் இடம் பிடித்துள்ளது (யோபு 8:14; 27:18; எசா 59:5).

**சிலிசா** (SHILSHAH - மூன்றாவது)

ஆசேர் குலத்தில் சோபகு கோத்திரத்தில் ஒரு பிரிவு. சோபகுவின் மகன் (1 நாள் 7:37).

**சிலிசியா** (CILICIA)

சிறிய ஆசியாவின் தென்கிழக்குக் கடற்கரை ஓரப் பகுதியில் ஒரு முக்கியமான மாவட்டமாகும். வரலாற்றின் முற்காலத்தில் இது வேறு பல பெயர்களைக் கொண்டிருந்தது.

**1. இதன் புவியியல் அமைப்பு:**

சிலிசியாவின் மேற்குப் பகுதி பம்பிலியாவிலிருந்து இலாமுசு ஆறுவரை விரிந்து கிடக்கிறது. இது சிலிசியாதிராக்கேயியா என அழைக்கப்படுகிறது. கோராசெசியுமுக்கும், சோலிபம்பேயோபோலிக்கும் இடையேயுள்ள பகுதி செங்குத்தாகவும், பாறை நிறைந்த பகுதியாகவும் உள்ளது. இதன்நில

முனைகள் சிறுசிறு துறைமுகங்களாகப் பயன்பட்டன. இதன் பின்பகுதி விவசாயம் செய்வதற்கு ஏற்ற பகுதியாக இல்லாத தோடு, குகைகளும், பள்ளங்களும் நிறைந் துள்ளது. தவுரஸ் மலையிலிருந்து உருவா கும் முக்கியநதி கலிகாடுனுஸ் ஆகும். தொடர்பற்ற சிலிசியாவின் உள்பகுதிகளில் செய்தித் தொடர்பு என்பது சற்றுக் கடினமான தாகும்; போக்குவரத்து கரையோரங்களில் மட்டும் இருந்து வந்தது. இப்பகுதிகளில் முக்கிய இயற்கைச் செல்வம் என்னவெனில் மலைச் சரிவுகளில் அடர்ந்து வளர்ந்த மரங்க ளாகும்.

இலாமுசு நதிக்குக் கிழக்கேயுள்ள பகுதி மேற்குப் பகுதியினின்றும் பெரிதும் வேறு பட்டது. இசுஸ் வளைகுடா வரைக்கும் விரிந்து கிடக்கும் கிழக்குக் கடற்கரைப் பகுதி சிறிய ஆசியாவிலே மிகவும் வளமான பகுதியாகும். இப்பகுதி சிலிசியா பேதி யாஸ் எனப்படுகிறது. இங்கு சித்னுஸ், சாருஸ், பிரமுஸ் எனப் பல நதிகள் பாய்வ தால் மிகவும் செழிப்பாக நீர்நிறைந்த பகுதி யாக உள்ளது. புல வகையில் விவசாயத்திற் குப் பயன்படும் நிலமாக இப்பகுதி வளம் நிறைந்துள்ளது. பல்வகைத் தானியங்களும் பழவகைகளும் பயிர் செய்யப்பட்டன. சிலி சியா பேதியாசுக்குள் போக்குவரத்துத் தொடர்பு எளிது. ஆனால் வட பகுதியுடன் தொடர்பு படுத்த கட்டுப்படுத்தப்பட்ட கண வாய்கள் வழியாகப் பழங்காலப் பாதைகள் இருந்தன. இக்கணவாய்களில் பெயர் பெற் றவை சிலிசிய வாயில்கள் என்றழைக்கப்பட் டன. தொடர்பு தேவையில்லையென்றால் இவ்வாயில்களை அடைத்துவிடலாம். பின் தொடர்பு அறுந்துபோகும். கிழக்குப் பகுதியிலும் இதேபோல் தொடர்பு கொள்ள ''சீரோ - சிலிசியன்'' வாயில்கள் அமைந் துள்ளன. இவற்றின் மூலம் கிழக்குப் பகுதிக் கும், பிறநாடுகட்குமுள்ள தொடர்பைக் கட் டுப்படுத்தலாம்.

**2. 'வரலாற்றுக்கு முந்திய காலம்:**

சிலிசியாவில் தொன்மையாக வாழ்ந்தவர் கள் கிராமங்களிலும் நகரங்களிலும் வாழ்ந்த னர். வரலாற்றுக்கு முந்திய காலம் புதிய கற்காலத்திலிருந்து தொடங்குகிறது. இதன் கலாச்சாரம் வட சீரியா, மெசபொத்தாமியா கலாச்சாரத்தை ஒத்திருக்கிறது. தொடக்கத் தில் தொடர்பு அதிகம் இல்லையெனினும் அந்தோலியாவின் உள்பகுதிகளுடன் பின் னர்த் தொடர்பு ஏற்பட்டது. கடற்கரைப்பகுதி களில் கப்பல் போக்குவரத்தும், விரைவில் வளர்ச்சியடைந்தது. கி.பி. 2000-த்தில் சீரியா விலிருந்து புதிய தொடர்புகள் ஏற்படுகின் றன.

**3. வரலாறு: அ. இத்தியர் காலம்:-**

கி.மு. 2000 ஆண்டுகளில் கிசுவத்தனா என்ற பெயரில் புதிய சுதந்தர நாடாகச் சிலிசியா வடிவெடுத்தது. இது இத்தியர்க ளுடன் ஒப்பந்தங்கள் செய்து ஆட்சி செய்தது. பின்னர் இத்திய அரசின் ஒரு பகுதியாக மாறியது. கி.மு. 1200-இல் இத்தியர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு தனிநாடானது. அப் பொழுது அதன் மக்கள் படித்தவர்களாக, பெரும்பகுதியினர் தர்சா (தார்சுஸ்), அத்தா னிய - அதனா போன்ற முக்கிய நகரங்களில் வசித்தனர்.

**ஆ. இருண்ட காலத்திலிருந்து பாரசீகர் காலம் வரை:-**

கடல் மக்களின், படையெடுப்பின்போது சிலிசியா அழிக்கப்பட்டது. கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் அசீரியாவின் சார்கோன் அர சன் இதனைக் கைப்பற்றினார். அதிலிருந்து அசீரியர்கள் சிலிசியாவை ஓரளவு கட்டுப் படுத்தினாலும் கிரேக்கப் பண்பாட்டைப் புகுத்துவதும், காலனி ஆதிக்கத்துக்கு உட் படுத்தும் முயற்சியுமே அதிகமாக இருந்தது.

ஏழாம் நூற்றாண்டில் சிலிசியா ஒரு தனி நாடாக உரிமை பெற்றுத் திகழ்ந்தது. இத னால் லீதியா, பாபிலோன், மேதியா ஆகிய வற்றை ஒத்த ஒரு நாடாகியது. பாரசீகர் களின் காலம் கி.மு. 6-ஆம் நூற்றாண்டி லிருந்து தொடங்குகிறது. இக்காலத்தில் மக்கள் அதிகம் பேசியது கிரேக்க மொழிதான். கி.மு. 4-ஆம் நூற்றாண்டுவரை இது தனி நாடாகச் சுதந்தரத்துடன் இருந்தது. அதன் பின்

னரே பாரசீகர்களின் ஆட்சியின் கீழ் இது வந்தது. நாகிதுஸ், செலன்தேரிஸ், சோலி, தார்சுஸ், மல்லுஸ் ஆகியவை இக்காலங்களில் சிறந்து விளங்கிய நகரங்களாகும்.

**இ. கிரேக்கர் காலத்திலிருந்து கி.மு. 67 வரை:**

கிரேக்கர்கள் காலத்தில் செலூக்கியரின் ஆட்சியின் கீழ் சிலிசியா வந்தபின்னர் இது மிகுந்த முக்கியத்துவம் பெற்றது. செலூக்கு நிக்காத்தோர் என்பவர் கடற்கரையோரங்களில் பல புதிய நகரங்களை நிறுவினார். அந்தியோக்கியா, செலுக்கியா என்று பலநகரங்கள் மறுபெயரிடப்பட்டன. சிலிசியா திராக்கேயியா, தோலமிகளால் பிடிக்கப்பட்டாலும் மூன்றாம் அந்தியோக்கு என்பவரால் மீட்கப்பட்டது. அந்தியோக்கு எப்பிபான் எனும் அரசன் காலத்தில் மீண்டும் சிறப்புப் பெற்றது. கி.மு. 69-இல் உரோமையர்கள் ஆர்மேனிய அரசனான திகிரானெசைச் சிலிசியாவை விட்டுவிடுமாறு வற்புறுத்தினர். முடிவில் கி.மு. 67-இல் பாம்பே இதனைப் பிடித்து, சிலிசியாவின் கிழக்கு மேற்குப் பகுதிகளை உரோமை அரசின் ஒரு பகுதியாக மாற்றினார்.

**ஈ. உரோமையர் காலம்:-**

உரோமை ஆட்சியின் கீழ் வந்தபிறகும் சிலிசியாவில் உள்ள குறுநில மன்னர்கள் அவர்கள் பகுதியை ஆள அனுமதிக்கப்பட்டனர். கி.மு. 38-இல் சிலிசியா பேதியாஸ் சீரியா மாநிலத்துடன் இணைக்கப்பட்டது. கி.பி. 72-வரை சீரிய ஆளுநனின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. சிலிசியா திராக்கேயியா அந்தோனியால் கிளியோபத்திராவுக்கும், ஆக்டேவியனால் கலாத்திய அரசன் அமின்சாசுக்கும், பின் கப்பதோகிய அரசன் அர்க்கெலாவுக்கும் அளிக்கப்பட்டது.

கடைசி கிரேக்க அரசனான நான்காம் அந்தியோக்கு இரு பகுதிகளையும் ஒன்றிணைத்து ஒரு கிரேக்க அரசை உருவாக்க முனைந்தும், இவை இணைக்கப்பட்டு வெஸ்பாசியனின் ஆட்சியில் உரோமையின் சிலிசியா மாகாணமாகியது.

**4. விவிலியத்தோடு தொடர்புடைய பகுதிகள்:**

அ.ப. 15:23.41; கலா 1:21-இல் குறிக்கப்படும் சீரியாவும் சிலிசியா பேதியாசு என்பது சீரியாவின் ஆட்சிக்குட்பட்டிருந்தது என்பதைத் தெரிவிக்கிறது. சிலிசியா என்று பரந்த பொருளில் கூறும்பொழுது பொதுவாகக் கிழக்குப் பம்பிலியாவின் கடற்கரைப் பகுதி முழுவதையுமே அது உள்ளடக்கும் (அ.ப. 27:5).

பவுல் தனது சொந்தநாட்டில் எங்கெல்லாம் சென்றார் என்பது தெளிவாகக் குறிப்பிடப்படவில்லையெனினும் அவர் அந்தியோக்கியாவிலிருந்து தார்சு நகர் செல்லும் சாலையில் சென்றுள்ளார் என்பதும் தனது இரண்டாவது மறைபரப்பும் பயணத்தில் சிலிசியா வாயில்களிலிருந்து தெர்பைக்குச் செல்லும் வழியில் சென்றுள்ளார் என்பதும் இவ்வழி அன்றையப் பல சிலிசியா நகரங்களுக்கு அவரை இட்டுச் சென்றிருக்குமென்பதும் மிகத் தெளிவாகத் தெரிகிறது.

5. தொல்பொருள் ஆராய்ச்சிகளினின்று (தார்சு, மெர்சியன் எனுமிடங்களின் சான்றுகள்) கி.மு.700-ஆம் ஆண்டு சிற்பங்களையும், இத்திய இருமொழி ஏடுகளையும் அறிய வருகிறோம். சிலிசியா திராக்கேயியாவின் கி.பி. முதல் நூற்றாண்டின் உரோமைய நகரத்தின் சிதைவுப் பகுதிகள் பற்றிய ஒரு கருத்தைத் தந்துள்ளன ஆராய்ச்சிகள். சிலிசியா பேதியாசின் பல பகுதிகள் இன்றைய நகரங்களால் சூழப்பட்டுவிட்டதால் பழையவற்றைக் காணமுடியவில்லை. ஆனால் இப்பகுதிகள் அன்றுபோல் இன்றும் வளமைபெற்றுத் திகழ்கின்றன.

## சிலுவை (CROSS)

1. இயேசு சிலுவையிலறையப்பட்டு மரித்தார். இவ்வாறு, சிலுவையானது மீட்பின் கருவியாயிற்று. மேலும் மரணம், துன்பம் மற்றும் இரத்தத்துடன் சேர்ந்து நமது மனதிற்கு மீட்பை நினைவுபடுத்துகின்ற அவசியமான சொற்களில் ஒன்றாக உருவாயிற்று. சிலுவையானது இனியும் இகழ்ச்சியின்

அடையாளமன்று; மாறாக, முதலில் கிறிஸ்துவிற்கும், பின்னர்க் கிறிஸ்தவர்களுக்கும் ஒரு சவாலும், மகிமைக்குரிய வழியுமாகும்.

II. இயேசு கிறிஸ்துவின் சிலுவை

*1. சிலுவையின் இடறல்*

''நாங்களே சிலுவையில் அறையுண்ட ஒரு மெசியாவை அறிவிக்கிறோம். இது யூதர்களுக்கு இடறலாயுள்ளது. புறவினத்தாருக்கு மடமையாயுள்ளது'' *(1 கொரி 1:23).* இச்சொற்களில், மீட்பளிக்கும் சிலுவைக்கு அறிமுகப்படுத்தப்பட்ட ஒவ்வொரு மனிதனின் தன்னியலாய் அறிவிக்கும் பதிலைப் பவுல் வெளிப்படுத்துகிறார். அடிமைகளுக்கு ஒதுக்கிவைக்கப்பட்ட தண்டனையாக (பலி 2:8), கொடூரமான தண்டனையாக மட்டுமின்றி, பழிகேடாகவும் உள்ள (எபி 12:2; 13:13) சிலுவை மரணத்தினால் கிரேக்க - உரோமை உலகிற்கு மீட்பு வரக்கூடுமா? கூடிய விரைவில் அகற்றவேண்டிய தீட்டு நிலையைத் தொடர்பு கொள்வதனாலேயே அளிக்கக்கூடிய இறந்த உடலின் மூலமாக யூதருக்கு மீட்பு வரக்கூடுமா? (யோசு 10:26-27; 2 சாமு 21:9; யோவா 19:31). இறை சாபத்தினுடைய குறியை ஏற்று, கழு மரத்தில் தொங்குகின்ற தண்டிக்கப்பட்ட மனிதனிடமிருந்து மீட்பு வரக்கூடுமா? (உப 21:22-23; கலா 3:13). கல்வாரியிலிருந்த சாட்சிகள், சிலுவையிலிருந்து அவரை இறங்கி வருமாறு அழைத்ததன் மூலம், சிலுவையில் அறையுண்டவரை எள்ளி நகையாடியிருக்கலாம் (மத் 27:39-44). கிறிஸ்துவின் சீடர்களைப் பொறுத்தவரையில், தங்களது பயங்கர எதிர்விளைவை முன்னுரைப்பதென்பது ஓர் எளிதான காரியமாகும். இயேசுவை மெசியா என்று அங்கீகரித்த பேதுருவால் அவரது பாடுகளையும் மரணத்தையும் பற்றிக் குறிப்பிடுவதைப் பொறுக்க முடியவில்லை (மத் 16:21; 17:220-23). அப்படியானால், சிலுவையில் அறையப்படுவதன் அருவருப்பு எவ்வளவு பெரியதாக இருந்திருக்கும்! மேலும் தனது பாடுகளுக்கு முந்தின இரவில், இதனால் அனைவரும் இடர்ப்படுவர்; அவரை விட்டு ஓடிப்போவார்கள் என்று இயேசு அறிவிக்கிறார் (மத் 26:31).

*2. சிலுவையின் மறை பொருள்:*

சிலுவையில் பிரசன்னமாயிருந்த ஒரு மறைவான மறைபொருளானது அதற்கு ஒரு புதிய பொருளை அளித்ததன் காரணமாக, இயேசுவும் அவருக்குப்பின் அவரது சீடர்களும், சிலுவையின் இடறலைக் குறைக்க முயலவில்லை. கிறிஸ்துவின் உயிர்ப்புக்கு முன்னர், தந்தையின் சித்தத்திற்கான தனது கீழ்ப்படிதலின் ஒரு பகுதியாக, சிலுவையானது அவசியமானதென இயேசு மட்டுமே வலியுறுத்தினார் (மத் 16:21). பெந்தகோஸ்தேவிற்குப் பின்னர், உயிர்த்த ஆண்டவரின் மகிமையால் ஒளியூட்டப் பெற்றவர்களாய்ச் சீடர்களே சிலுவையின் அவசியத்தைப்பற்றிப் போதித்து சிலுவையின் இடறலை இறைவனின் திட்டத்தினுடைய ஒரு பகுதியாகச் சரியாக நிலைப்படுத்தினர். மெசியாவானவர் சிலுவையில் அறையப்பட்டு (அ.ப. 2:23;4:10) அதிர்ச்சியூட்டும் வகையில் (உப. 21:23) மரத்தில் தொங்கினாரெனில் (அ.ப. 5:30; 10:39), அதற்குக் காரணம் அவருடைய சகோதரரின் பகைமையே. இறைவாக்கினுடைய தெளிவாக்கும் ஒளியில் இவ்வுண்மையானது கிறிஸ்துவைப் பற்றி எழுதப்பட்டதன் நிறைவேற்றம் என்னும் புதிய பரிணாமத்தை அடைகின்றது (13:29). இதன் காரணமாக, இயேசுவின் மரணம் பற்றிய நற்செய்தி விவரிப்புகள் சங்கீதக் குறிப்புகளால் நிறைந்துள்ளன (மத் 27:33-60; யோவா 19:24.28.36-37). எம்மாவுக்குச் செல்லும் சீடர்களுக்கு உயிர்த்த ஆண்டவர் விரிவாக விவரிப்பதுபோல இறைவாக்குகளின்படி ''மெசியா பாடுபட வேண்டும்'' (லூக் 24:25-26).

*3. சிலுவையின் இறையியல்:*

''மறைநூலில் உள்ளபடி கிறிஸ்து நம் பாவங்களுக்காக இறந்தார்'' என்னும் பண்டைய பாரம்பரியத்திற்குப் பவுல் வாரிசாக இருந்தார் (1 கொரி 15:3). சிலுவையே உண்மையான ஞானம் என்ற அவர் கண்டறிந்த அவரது இறையியல் சிந்தனைக்கான அடிப்படையை, இந்த மரபுண்மை அளித்தது; இதன் விளைவாக, சிலுவையிலறையப்பட்ட கிறிஸ்துவை மட்டுமே அறிய அவர்

விரும்பினார் *(2:2)*. பழைய ஏற்பாட்டில் ஏற்கெனவே கூறப்பட்ட இறைவனுடைய திட்டத்தின் ஞானமானது *(1:19-20)* சிலுவையில் ஒளிர்கிறது; மனிதனுடைய வலிமையற்ற நிலையின் மூலமாக இறைவனுடைய வலிமையும் இதிலேயே தோன்றுகிறது *(1:25)*. இந்த அடிப்படையான உள்ளுணர்வை வளர்ச்சியடையச் செய்வதன் மூலம், சிலுவையிலறைதல் பற்றிய விவரங்களிலும் பவுல் பொருள் காண்கிறார். நாம் சட்டத்தின் சாபத்தினின்று தப்பிப்பதற்கென, இயேசு சபிக்கப்பட்டவராக ''மரத்தில் தொங்கினார்'' *(கலா 3:13)*. பாவ ஊனுடலின் சாயலில் சிலுவையில் வெளிப்படுத்தப்பட்ட அவரது உடலானது ''ஊனியல்பில் பாவத்தைத் தண்டிக்க'' இறைவனை அனுமதித்தது *(உரோ 8:3)*. சட்டத்தின் தீர்ப்பானது நிறைவேற்றப்பட்ட அதே நேரத்தில் இறைவன் ''சிலுவையில் அதனை அறைந்து, தலைமை ஏற்போர், அதிகாரம் தாங்குவோருடைய படைக்கலன்களைப் பறித்துக்கொண்டு அதனை ஒழித்துவிட்டார்'' *(கொலோ 2:14-15)*. ''சிலுவையின் இரத்தத்தினால்'' இறைவன் அனைத்தையும் தம்மோடு ஒப்புரவாக்கினார் *(கொலோ 1:20)*. இவ்வாறு பாவத்தினால் விளைந்த பழைய பிளவுகளை அவர் வென்றுவிட்டார். ஒரே உடலை உருவாக்குவதற்கென யூதருக்கும், புறவினத்தாருக்குமிடையே அவர் சமாதானத்தையும் ஒற்றுமையையும் ஏற்படுத்தினார் *(எபே 2:14-18)*. இவ்வாறு சிலுவையானது, பழைய ஏற்பாடு மற்றும் புதிய ஏற்பாட்டினுடைய இரு திட்டங்களுக்கிடையில் நிற்கிறது.

**4. மகிமைக்கு உயர்த்தப்பெறும் சிலுவை:**

யோவானின் சிந்தனையில் சிலுவையானது துன்பம் மற்றும் இகழ்ச்சியைவிட உயரியதாக அதனுடைய மீட்பு நலந்தரும் விளைவுகளின் காரணமாக, இறைவனின் திட்டத்தில் பொருளுடையதாக உள்ளது. சிலுவையானது ஏற்கெனவே இறைவனின் மகிமையினுடைய முன்சுவையாகும். யோவானுக்கு முற்பட்ட பாரம்பரியம் எப்போதும் இயேசுவினுடைய பின்விளைவான மகிமையுடன் தொடர்புபடுத்திச் சிலுவையைப் பற்றிப் பேசியது. ஆனால், யோவானின் நோக்கில் சிலுவையிலேயே இயேசு வெற்றிவீரராக உள்ளார். இவ்வெற்றியைச் சுட்டிக்காட்டுவதற்கென, இதுவரை விண்ணகம் நோக்கி இயேசுவின் மாட்சிமையைக் குறிப்பிட்ட சொற்களை *(அ.ப. 2:35; 5:31)* யோவான் பயன்படுத்துகிறார். எனவே மனுமகன் ''புதிய பித்தளைப் பாம்பைப்போன்று'', மீட்பின் அடையாளமாக *(3:14; எண் 21:4-9)* ''உயர்த்தப்பட்டார்'' *(யோவா 8:29; 12:32-33)*. யோவானின் பாடுகளின் விவரிப்பில் இயேசு மாட்சியுடன் சிலுவையை நோக்கிச் செல்கிறார். ''ஆவியை அளிப்பதன் மூலமும்'' *(19:30)* தனது பக்கத்திலிருந்து இரத்தமும் நீரும் வழிந்தோட அனுமதித்த தன் மூலமும் *(19:34)* சிலுவையில் அவர் திருச்சபையை உருவாக்குவதால், வெற்றிகரமாக அவர் சிலுவையில் ஏறுகிறார். விசுவாசமானது சிலுவையில் அறையுண்டவரை நோக்கித் திருப்பப்படுவதாலும், சிலுவையானது மீட்பின் உயிருள்ள அடையாளமாக விளங்குவதாலும், இனி முதல் ''ஊடுருவக் குத்தியவரையே நோக்க வேண்டும்'' *(19:37)*. இதே முறையில் திருவெளிப்பாடானது இந்த மீட்பளிக்கும் மரத்தில் வாழ்வின் மரத்தையும், சிலுவை மரத்தில் வாழ்வின் மரத்தையும் காண்பதாய்த் தோன்றுகின்றது *(திருவெளி 22:2.14.19)*.

III. கிறிஸ்தவனின் அடையாளமாகச் சிலுவை

**1. கிறிஸ்துவின் சிலுவை:**

''ஆண்டவர் சிலுவையில்அறையப்பட்ட இடத்தில்'' இரண்டு சாட்சிகள் கொலை செய்யப்பட்டதன் வெளிப்பாட்டுடன் *(திரு 11:8)* திருவெளிப்பாடானது சீடர்களுடைய பங்கை அவர்களுடைய தலைவருடையதுடன் அடையாளப்படுத்துகிறது. ''எனக்குப் பின்வர விரும்பும் எவரும் தம்மையே மறுத்துத் தம் சிலுவையைத் தூக்கிக்கொண்டு என்னைப் பின்பற்றட்டும்'' என்பதற்காகவே இயேசு அழைத்தார் *(மத் 16:24)*. தான் சுமக்கின்ற சிலுவையானது உலகிற்கான மரணத்தின் அடையாளமாக இருப்பதால், சீடன் தனக்காக மட்டுமே இறக்கக்கூடாது. எல்லா

வித இயற்கைத் தொடர்புகளையும் முறித்து விட்டு (மத் 10:33-39), தான் தனது வாழ்வையே இழக்கவிருக்கின்ற துன்புறுத்தலின் முடிவை ஏற்றுக்கொண்டான் (மத் 23:34) என்பதன் அடையாளமாக இது உள்ளது. ஆயினும் அதே நேரத்தில் சிலுவையானது எதிர்பார்க்கப்பட்ட மகிமையின் அடையாளமாகவும் உள்ளது (யோவா 12:26).

*2. சிலுவையிலறையப்பட்ட வாழ்வு:* பவுலின் கருத்துப்படி கிறிஸ்துவின் சிலுவையானது சட்டம் மற்றும் விசுவாசத்தினுடைய இரு திட்டங்களைக் குறிப்பிடுகிறது. மேலும், கிறிஸ்தவனின் இதயத்தில் சிலுவையானது ஊனுடல் மற்றும் ஆவி என்னும் இரு உலகங்களின் எல்லைகளைக் குறிப்பிடுகிறது. சிலுவையில் மட்டுமே ஏற்புடைமையும், ஞானமும் உள்ளன. கிறிஸ்தவன் மனம் மாறுகிறான் என்றால் அதற்குக் காரணம் சிலுவையில் இயேசுகிறிஸ்து அவனது கண்களுக்குத் தோன்றுவதாகும் (கலா 3:1). அவன் சட்டத்தின் செயல்களால் இல்லாமல் சிலுவையில் அறையுண்டவரின் மீதான விசுவாசத்தினால் ஏற்புடையவனாகிறான். ஏனெனில் அவன் திருமுழுக்கில் கிறிஸ்துவுடன் சிலுவையில் அறையப்படுவதால், இறைவனில் வாழ்வதற்காகவும் (கலா 2:19) உலகுடன் எவ்வித உறவும் இல்லாமலிருப்பதற்காகவும் (கலா 6:14), சட்டத்திற்கு இறந்தவனாகிறான். இவ்வாறு, அவன் தனது நம்பிக்கையைக் கிறிஸ்துவின் வல்லமையின்மீது மட்டுமே வைக்கிறான்; இல்லாவிடில், அவன் சிலுவையின் விரோதியாக இருப்பான் (பிலி 3:18).

*3. கிறிஸ்தவரின் மகிமையாகிய சிலுவை:* அனுதின கிறிஸ்தவ வாழ்வில், முழுவதும் பாவத்தினின்று சுதந்தரமாக இருப்பதற்காகப் ''பழைய மனிதன் சிலுவையில் அறையப்படுகிறான்'' (உரோ 6:6). அவரது தீர்ப்பு சிலுவையின் ஞானத்தால் மாற்றியமைக்கப்படுகிறது (1 கொரி 2). இந்த ஞானத்தின்படி, தாழ்ச்சியிலும் மரணம் வரையிலான - சிலுவை மரணம் வரையிலான - கீழ்ப்படிதலிலும் (பிலி 2:1-8) அவர் இயேசுவின்மாதிரியைப் பின்பற்றுகிறார். வாழ்வின் பொதுவான மாதிரிக்காக, ''நாம் நமது தவறுகளுக்கு மரித்து, நேர்மைக்காக வாழ்வதற்கென, நமது பாவங்களின் சுமையைத் தமது உடலில் ஏற்ற இயேசுவைச் சிலுவை மரத்தில் முன்மாதிரியாகக் காண வேண்டும்'' (1 பேதுரு 2:21-24). இறுதியாக, ஒருவன் தன்னியல்பாக இறைமகனை மீண்டும் சிலுவையில் அறைகின்ற பதிதத்தைக் கிறிஸ்தவன் வெறுக்க வேண்டும் (எபி 6:6). ''நானோ நம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் சிலுவையிலன்றி வேறெதிலும் ஒருக்காலும் பெருமை பாராட்ட மாட்டேன்; அந்தச் சிலுவையின் வழியாகவே உலகம் எனக்கு அறையுண்டதாய் இருக்கிறது, நானும் உலகத்திற்கு அறையுண்டவனாய் இருக்கிறேன்'' என்னும் பவுலின் குரலொலியைப்போல அவனது நம்பிக்கைக்குரிய குரலொலியும் இருக்க வேண்டும் (கலா 6:14).

## சிலுவையில் அறைதல் (CRUCIFIXION)

1. குற்றவாளியாகக் கருதப்படுபவரைச் சிலுவையில் ஆணிகளால் அறைந்தோ கயிறுகளால் கட்டியோ மரிக்கச் செய்யும் தண்டனையாகும் இது. தண்டனையாகச் சிலுவையில் அறைதல் பற்றிய முதற் சான்றுகள் பாரசீகர்களிடையே காணப்படுகின்றன. இது அசீரியர்களின் கழுவேற்றுமுறையிலிருந்து தோன்றியிருக்கலாம். இது பிற்காலத்தில் கிரேக்கர்களால் குறிப்பாகப் பெரிய அலக்சாந்தராலும் கார்தசீனியர்களாலும் பயன்படுத்தப்பட்டது. இவர்களிடமிருந்து உரோமையர் இத்தண்டனை முறையைப் பெற்றுக்கொண்டு அடிமைகளுக்கும், அந்நியர்களுக்கும் மட்டுமே அளித்தனர். இவ்வாறு இயேசு சிலுவையில் அறையப்படலாம். ஆனால் உரோமைக் குடிமகன் பவுல் சிலுவையில் அறையப்படமுடியாது. எப்பொழுதாவதுதான் சதிசெய்யும் குடிமகனுக்கு வழங்கப்பட்டது. பழைய ஏற்பாட்டில் இறைநிந்தைக்காகவோ சிலைவழிபாட்டுக்காகவோ தொங்கவிடப்பட்டாலும் (உப 21;23) சிலுவையில் அறைதல் கிரேக்கர் காலம் வரை பாலஸ்தீனத்தில் வழக்கில் இல்லை. தனது கிரேக்கமயமாக்கும் கோட்

பாட்டை எதிர்த்த யூதர்களைச் செலூக்கிய மன்னர் நான்காம் அந்தியோக்கு எப்பிப்பான் சிலுவையில் அறைந்து தண்டித்தார் (1 மக் 1:44-50). அசமோனிய மரபைச் சேர்ந்த அலக்சாந்தர் யன்னாயு பெத்தோமைச்சேர்ந்த எண்ணூறு பரிசேயக் கிளர்ச்சியாளர்களைச் சிலுவையில் அறைந்து கொன்றார். 3600 யூதர்களை உரோமையர் சிலுவையில் அறைந்து கொன்றதுதான் (கி.பி. 66) யூதர்களின் கிளர்ச்சியைத் தூண்டியது. இத்தண்டனை முறையில் பல யூதர்களும் கிறிஸ்தவர்களும் தங்கள் சமயப்பற்றுக்குச் சான்று கூறினர். கி.பி. 337-இல் கிறிஸ்துவின் மரணம் பற்றிய கிறிஸ்தவர்களின் விசுவாசத்திற்கு மதிப்பளித்து கான்ஸ்டன்டைன் இப்பழக்கத்தை நீக்கி ஒழித்தார்.

**2. சிலுவையின் அமைப்பு:**

தொடக்கத்தில் இது ஒரு செங்குத்தான மரத்தூணாய் இருந்திருக்கவேண்டும். உரோமையர் காலத்திற்குள் கழுமரத்தோடு ஒரு குறுக்கு விட்டம் சேர்க்கப்பட்டது. இது மரத்தின் உச்சியில் அல்லது சிறிது கீழாக இணைக்கப்பட்டது. பிற்காலத்திய கிரேக்கச் சிலுவை சம அளவுடைய இரு சட்டங்கள் இணைக்கப்பட்டதாக இருந்தது. பிற்காலத்தில் உரோமையர் X - வடிவமுடைய புனித அந்திரேயர் சிலுவையையும் பயன்படுத்தினர். கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த, எருசலேமுக்கு அருகிலுள்ள ஒரு கல்லறையின் சிதைவுகளிலிருந்து பல செய்திகள் அறியக்கிடக்கின்றன. சிலுவையில் அறையப்பட்டவரின் இரு கால்களும் ஒரே ஆணியால் ஊடுருவப்பட்டு, ஒரு சிறிய ஒலிவப் பலகையில் அறையப்பட்டன. இது கால்களை இணைத்து வைப்பதற்கு உதவியது. இந்த ஆணி செங்குத்தான மரத்தில் அறையப்படவில்லை. கைகள் சமதளமான குறுக்குச் சட்டத்தில் ஆணிகளால் அறையப்பட்டன. இருப்பிட உயரத்திற்குச் சமதளப்பலகை செங்குத்தான மரத்தில் இணைக்கப்பட்டது. இது உடல் கீழே விழுந்துவிடாமல் தாங்கிக் கொள்ள உதவியது. ஆனால் வேதனையை நீடிக்கச்செய்தது.

3. மரண தண்டனையாகச் சிலுவையில் அறைதல் இருவகைக்கொடுமையைக் கொண்டிருந்தது. முதலாவது பகிரங்க அவமானம்; இரண்டாவது உடல்சார்ந்த நீடித்த வேதனை.

**அ. பகிரங்க அவமானம்:**

பிறருக்கு எச்சரிக்கையாக இருக்கும்படி, தீர்ப்பிடப்பட்டவர் முழுச்சிலுவையை அல்லது குறுக்குச் சட்டத்தைப் பொதுச்சாலைகள் வழியாகக் கொலைக்களத்திற்குச் சுமந்து செல்ல வேண்டும். அங்கே அவரது ஆடைகள் அனைத்தும் களையப்படும். சிலுவையில் அறையப்பட்டபின் தன் உடல் தேவைகளைப்பற்றிக் கவலைப்படமுடியாது. அவ்வழியாகச் சென்றவர்கள் அவரைப்பார்த்து எள்ளி நகையாடி ஏளனம் செய்வதும் உண்டு.

**ஆ. உடல் சார்ந்தவேதனை:**

சிலுவையில் அறைதல் உடலின் முக்கிய பாகங்களைப் பாதிக்கவில்லை. குற்றவாளியின் கைகளும் கால்களும் ஆணிகளால் அறையப்பட்டன. தோள்களையோ, உடலையோ மரத்தோடு கயிறுகளால் கட்டுவர். இதனால் அவர் அசையமுடியாது. வெப்பம் அல்லது குளிர், அல்லது பூச்சிகளின் கொடுமையிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள முடியாது. சாவு மெதுவாகத்தான் வரும். ஒருவர் சாகுமுன் பல நாட்களுக்குச் சிலுவையில் வேதனைப்படலாம். பெரும்பாலும் மூச்சுத்திணறலால் சிலுவையில் அறையப்பட்டவர் இறந்தார். தாகமும், பசியும் கொடுமையாக இருக்கும். உடலின் கனமும் பிடிப்பும் சொல்லொண்ணா வேதனையைக் கொடுக்கும். கடுங்காய்ச்சலும் உடல் நடுக்கமும் உடல் முழுவதையும் சித்திரவதை செய்யும். சிலசமயம் கொலைஞர்கள் சிலுவையில் அறையப்பட்டவருடைய கால்களை முறித்துச் சாவை விரைவுபடுத்தினர். குற்றவாளியை இன்னும் இழிவுபடுத்தவும் பிறரை எச்சரிக்கவும், குற்றவாளி முதலில் கசையால் அடிக்கப்படுவார். அப்போதே மரித்துப் போனவர்களும் உண்டு. பிறகு, சிலுவையில் அறையப்படும் இடத்திற்கு

அவரே குறுக்குச் சட்டத்தைச் சுமந்து செல்வார். அங்குக் குறுக்குச்சட்டம் செங்குத்தான மரத்தின்மேல் ஏற்றப்பட்டு இணைக்கப்படும். சிலசமயம் சிலுவையில் தொங்குபவரின் வேதனையைக் குறைக்க மருந்திட்ட பானம் அவருக்குக் கொடுக்கப்படலாம் (மத் 27:34; மாற் 15:23).

**4. இயேசுவின் சிலுவை மரணம்:**

நான்கு நற்செய்திகளும், இயேசு தமது மரணத்தை முன்னறிவித்தார் என்று காட்டுகின்றன. ஆனால் அம்மரணம் சிலுவையில் அறையப்படுவதால் வரும் என்றும் (மத் 20:19; 26:2) தம்மைப் பின்பற்றுபவர்களில் சிலருக்கும் அதே நிலைவரும் என்றும் இயேசு அறிந்திருந்தார் என்று மத்தேயு மட்டும்தான் கூறுகிறார்.

இயேசுவின் சிலுவை மரணம் மத் 27; மாற் 15; லூக் 23; யோவா 19 ஆகிய பகுதிகளில் விவரிக்கப்படுகிறது; புதிய ஏற்பாட்டில் மற்றும் பல இடங்களில் குறிக்கப்படுகிறது (அ.ப.2:36; 4:10; 1 கொரி 2:8; 2 கொரி 13:4; கலா 3:1; திருவெளி 11:8). இவற்றில் எதுவும் நாம் அறிய விரும்பும் அதன் விவரங்களைக் கொடுக்கவில்லை எனலாம். இயேசு கழுமரத்தில் மரித்தார் என்ற கூற்றைக்கூட (அ.ப. 5:30; 10:39) உருவகமாகத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். சிலுவையின் அமைப்பு கழுமரத்தை முன்னுணர்த்தியிருக்கலாம். இயேசு மரித்த கொல்கொதா எங்கு இருந்தது என்பது பற்றி ஐயப்பாடுகள் உண்டு. அது எருசலேமுக்கு இட்டுச்செல்லும் முக்கிய சாலைகளில் ஒன்றுக்கு அருகில் இருந்தது என்று கூறலாம். வேதனையைக் குறைக்கக்கூடிய பானத்தைக் குடிக்க இயேசு மறுத்துவிட்டார் (மத் 27:34; மாற் 15:23). அவரோடு வேறு இருவருக்கு அதே தண்டனை அளிக்கப்பட்டது. அவர்களில் ஒருவன், இயேசுவை ஏளனஞ்செய்தவர்களோடு சேர்ந்து கொண்டான் (மத் 27:44; மாற் 15:32; லூக் 23:39). இதனால் கடைசி நேரத்தில் ஆட்சியாளருடன் சேர்ந்து அவர்களின் தயவைப் பெறும் முயற்சியாக இருக்கலாம். இயேசு எக்குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டார் என்ற குற்றப்பட்டயம் அவரது சிலுவையின் மேல் வைக்கப்பட்டது. மற்ற இருவருக்கும் அப்படி வைக்கப்பட்டதாக ஒன்றும் கூறப்படவில்லை.

அடுத்த நாள் யூதர்களுக்குப் புனிதநாள் என்பதால், குற்றவாளிகள் தப்பியோடிவிடாமல் இருப்பதற்கு அவர்கள் கால்களை முதலில் முறித்தபின், மாலையில் அவர்கள் சிலுவையிலிருந்து அகற்றப்பட உரோமை அதிகாரிகள் அனுமதித்தனர் என்று நான்காம் நற்செய்தி கூறுகிறது. வீரர்கள் இயேசுவிடம் வந்தபோது, அவர் ஏற்கனவே இறந்துவிட்டிருந்தார் எனக்கண்டனர். இது ஒரு கேள்வியை எழுப்புகிறது? எப்படி அவர் இவ்வளவு விரைவில் மரித்தார்? அவரது விலா ஈட்டியால் திறக்கப்பட்டது என்று யோவான் மட்டும் கூறுகிறார். ஆனால் இது அவர் இறந்தபின் நடந்தது. அவர் இதயம் உடைந்து மரித்தார் என்பது யோவா 19:34-இல் வரும் ''இரத்தமும் நீரும் வெளிவந்தன'' என்பதால் தெரிகிறது. இது மருத்துவ முறையில் ஐயப்பாடுடைய விளக்கத்திற்குரியது. இது உடல்சார்ந்த கூற்றல்ல; இறையியல் நோக்கோடு கூறப்பட்டது என்று சிலர் கூறுவர். ஒருவேளை உரோமையரின் கசையடிகொடுக்கும் முறை இயேசுவின் மரணத்தை விரைவுபடுத்தியிருக்கலாம். இம்முறை மிகக் கொடுமையானது. சில வேளைகளில் அடிபடும்போதே இறந்துபோய்விடுவர். அரசுக்கு எதிராகச் சதிசெய்தவர் என்ற குற்றம் சாட்டப்பட்ட இயேசுவுக்கு இந்தக் கசையடி மிகவும் இரக்கமற்ற முறையில் நடந்திருக்க வேண்டும்.

இயேசு இறந்தபோது மீபௌதிக இருள் நாடெங்கும் சூழ்ந்ததாகவும் ஆலயத்தின் திரை மேலிருந்து கீழ்வரை இரண்டாகக் கிழிந்தது என்றும் ஒத்தமை நற்செய்திகள் கூறுகின்றன. ''நிலம் நடுங்கியது, பாறைகள் வெடித்தன, கல்லறைகள் திறக்கவே, துஞ்சிய பரிசுத்தர்களின் உடல்கள் பல எழுந்தன'' என்று மத்தேயு மட்டும் கூறுகிறார். யோவான் இவைபற்றி ஒன்றும் கூறவில்லை.

***5. அடையாளப் பொருளில் சிலுவை மரணம்:***

சிலுவை மரணம் இயேசுவுக்கும் பகிரங்க அவமானத்தைக் கொண்டுவந்தது. ''மரத்தில் தொங்குபவன் எவனும் சபிக்கப்பட்டவனே'' என்ற சாபத்திற்கு அவரை உள்ளாக்கியது (கலா 8:13; உப 21:33). இது யூதர்களைப் புதிய விசுவாசத்திற்கு மனந்திருப்பும் முயற்சிக்குப் பெரும் தடையாக இருந்தது. பழைய ஏற்பாட்டிலோ யூதப்பாரம்பரியத்திலோ இவ்வாறு சிலுவை மரணம் எய்துவார் என்பது பற்றிய சுட்டிக்காட்டல்கள் ஒன்றுமில்லை. பல யூதர்களுக்குக் கிறிஸ்தவர்களின் உரிமை அதிர்ச்சி அளிக்கும் இறைநிந்தனையாகும்.

தண்டனை என்ற முறையிலும் (கலா 3:13) அதோடு தொடர்புபடுத்தப்பட்ட குற்றம் என்ற அளவிலும் சிலுவையில் அறைதலால் வரும் அவமானம் முழுவதும் மடமையாகும் (1 கொரி 1:17-18). இது கிறிஸ்துவின் மரணம் மனுக்குலம் அனைத்திற்கும் பரிகாரமாகும் என்ற பொருளோடு ஒப்பிட்டு வேறுபடுத்தப்படுகிறது (எபே 2:16; கொலோ 2:14). கிறிஸ்தவனுக்குச் சிலுவை மரணம் கிறிஸ்துவின் அன்புக்கும் ஆற்றலுக்கும் மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகும்; அவனுடைய ஆண்டவரோடு கொள்ளும் ஒன்றிப்புக்கு அடையாளமும் ஆகும். அவரது சீடராவதென்றால் ஒருவருடைய பழைய இயல்பையும் பாவ இயல்பையும் சிலுவையில் அறையவேண்டும் (உரோ 6:6; கலா 2:20; 5:24). அவரது சீடர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய தன்னையே மறுப்பதை, அதாவது தனது சொந்தத் தேவைகளையும் ஆசைகளையும் துறக்க ஆயத்தமாய் இருப்பதை (மத் 10:38; மாற் 8:34; லூக் 9:23) அடையாளமாகக் குறிக்கச் சிலுவைத்துன்பம் எடுத்துக் கூறப்படுகிறது. உருவகத்தை மாற்றிச் சிலுவை மரணத்தால் கடவுள்பற்றின்மை சாகடிக்கப்பட்டு விட்டது (கலா 6:14). ஆகவே கிறிஸ்துவில் மட்டுமே வாழ கிறிஸ்துவன் சுதந்தரம் உள்ளவனாக இருக்கிறான்.

## சிலுவையின் மேல் குற்ற அறிக்கை (INSCRIPTION ON THE CROSS)

இயேசுவின் சிலுவையின்மேல் இருந்த அவர்மேல் சாட்டப்பட்ட குற்றம் எழுதப்பட்ட பலகை (மத் 27:37; மாற் 15:26; லூக் 23:38; யோவா 19:19). இதை மத்தேயுவும் மாற்கும் ''கொலை செய்வதற்கான காரணம்'' என்று குறிப்பிடுகின்றனர் (மத் 27:37; மாற் 15:26). ஆனால் யோவான் குற்ற அறிக்கை என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறார். லூக்கா ''இவர் யூதரின் அரசன்'' என்று எழுதப்பட்டிருந்தது என்று வெறுமனே கூறுகிறார்.

நான்கு நற்செய்தியிலும் சிலுவைமேல் பொறிக்கப்பட்ட சொற்கள் வேறுபடுகின்றன. ஆனால் எல்லாவற்றிலும் 'யூதர்களின் அரசன்' என்ற வாக்கியம் காணப்படுகிறது. இதிலிருந்து இயேசு உரோமையர்களின் ஆட்சியை எதிர்த்துப் புரட்சி செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டார் என்று தெரிகிறது. மேலும் உரோமை அதிகாரிகளுக்கு யூதர்களின் மேல் இருந்த அவமதிப்பையும் வெறுப்பையும் இதுகாட்டுகிறது. இயேசுவைச் சிலுவையில் அறைந்த இடம் நகருக்கு அருகில் இருந்ததால், யூதர் பலர் அவ்வறிக்கையைப் படித்து ஏளனம் செய்தனர் (யோவா 19:20-32). அவ்வறிக்கை எபிரேயம், இலத்தீன், கிரேக்கம் ஆகிய மொழிகளில் எழுதப்பட்டிருந்ததால் (யோவா 19:19-20) எல்லோரும் அதனைப் படித்தனர். யூதரின் தலைமைக் குருக்கள் பிலாத்துவிடம் சென்று, ''யூதரின் அரசன் என்று எழுத வேண்டாம் 'யூதரின் அரசன் நான்' என்று அவன் கூறியதாக எழுதும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். ஆனால் பிலாத்து அதற்கு மறுத்துவிட்டான்.

இக்காலச் சிலுவைகளின் மேல் இக்குற்றம் I.N.R.I. என்று அழகாகப் பொறிக்கப்பட்டிருக்கும். இது I[esus] N[azareneus] R[ex] I[udaeorum] (நாசரேத்து இயேசு யூதர்களின் அரசன்) என்பதன் சுருக்க வடிவாகும்.

## சிலைகள் (IDOLS)

***1. சிலைகளிடமிருந்து விலகுதல்:***

விவிலியமானது, ஒரு நிலையில், சிலைகளிடமிருந்து அடிக்கடி விலகிவருகின்ற இறைவனின் மக்களைப்பற்றிய கதையாகும். ஒரு நாள், ''மற்றத் தெய்வங்களுக்கு

ஊழியம் செய்து வந்த'' ஆபிரகாமை ஆண்டவர் தெரிந்தெடுத்தார் (*யோசு 24:2-3; யூதி 5:6*தொ). ஆனால் இம்முறிவானது எவ்வளவு தீவிரமானதாக இருந்தாலும், ஒட்டு மொத்தமாக ஒரே தடவையில் நிறைவேற்றப்பட்டுவிடவில்லை. ஆபிரகாமின் சந்ததியினர் எப்போதும் அதனை மீண்டும் நிகழ்த்த வேண்டும் (*ஆதி 35:2*தொ; *யோசு 24:14-23*). அவர்கள் தங்களது தேர்வை மீண்டும் மீண்டும் புதுப்பித்து, ''வீணானவற்றைத் தொடர்வதற்குப் பதிலாக'' அவர்கள் ஒரே இறைவனைப் பின்பற்ற வேண்டும் (*எரே 2:2-5*).

சிலை வழிபாடானது யாவே வழிபாட்டின் உள்ளார்ந்த செயல்பாட்டிலும் புகுந்துவிடலாம். மனிதன் மட்டுமே இறைவனுடைய உண்மையான சாயலாக இருப்பதன் காரணமாக (*ஆதி 1:26-27*) உருவங்களை உருவாக்கக் கூடாதெனப் பத்துக் கட்டளைகள் மூலம் இஸ்ராயேல் கற்றிருந்தது (*யாத் 20:3*தொ; *உப 5:7*தொ). உதாரணமாக, இறைவல்லமையை அடையாளப்படுத்த மனிதன் உண்டாக்குகின்ற காளையானது (*யாத் 32; 1 அர 12:28; நீதி 17:18*) இறைவனின் சினத்தையும் இறைவாக்கினர்களுடைய புண்படுத்துகின்ற வஞ்சப்புகழ்ச்சியையும் இஸ்ராயேல் தன் மீது வரவழைத்துக்கொள்ளும் (*ஓசே 8:5; 13:2*). போலித் தெய்வங்களின் சிலையானாலும் தமது சாயலைக்காட்டும் சிலையானாலும் எதுவானாலும் இறைவன் பிரமாணிக்கமின்மையைத் தண்டிக்கிறார் (*உப 13*). தம்மைக் கைவிடுபவர்கள் அல்லது கேலிப்பரிகாசம் புரிபவர்கள்மீது தேசிய துன்பங்களை அனுப்புவதன் மூலம் அவர் அவர்களைக் கைவிடுகிறார் (*நீதி 2:11-15; 2 அர 17:7-12; எரே 32:28-35; எசே 16:20-23*).

நாடுகடத்தப்படுதல் இந்த இறைவாக்கு வரலாற்றுக் காட்சியைக் கொடுமையான விதத்தில் உறுதிப்படுத்தும்போது, மக்கள் திருந்துகின்றனர். ஆனால், சிலை வழிபாட்டினரோ (*சங் 31:7*) அல்லது இறைவனை மறுதலிப்பவரோ மறைவதில்லை (*சங் 10:4.11*தொ). இறுதியாக மக்கபேயரின் காலத்தில் சிலைகளுக்குப் பணிவிடை புரிவதென்பது (*1 மக் 1:43*), புறவின மனிதப்பற்றுக் கோட்பாட்டுக்கு அடிபணிவதாகும். இது ஆண்டவர் தமது மக்களிடம் எதிர்பார்க்கின்ற விசுவாசத்திற்கு ஒவ்வாததாகும். சிலைகளையோ வேதசாட்சி மரணத்தையோ ஒன்றையே அவர்கள் தேர்ந்தெடுக்க வேண்டும் (*2 மக் 6:18-7:42; தானி 3*).

புதிய ஏற்பாடு அதே சூழ்நிலையை விவரிக்கிறது. சிலைகளினின்று விலகி உண்மையான இறைவனை நேரக்கித் திரும்பிய பின்னர் (*1 தெச 1:9*), அன்றாட வாழ்வை ஊடுருவுகின்ற புறமதவழிபாட்டில் மீண்டும் ஈடுபடுமாறு விசுவாசிகள் அடிக்கடி சோதிக்கப்படுகின்றனர் (*1 கொரி 10:25-30*). அரசில் நுழைவதற்கென அவர்கள் சிலை வழிபாட்டினின்று விலகி ஓட வேண்டும் (*1 கொரி 10:14; 2 கொரி 6:16; கலா 5:20; 1 யோவா 5:21; திருவெளி 21:8; 22:15*). இயேசுவிற்கும் உலகிற்கும் இடையிலான கொடிய போராட்டத்தைத் தொடர்கின்ற திருச்பையானது, ''விலங்கின் சாயலை'' வழிபடுதல் (*திருவெளி 13:14; 16:2*), ''பாழாக்கும் அருவருப்பை'' ஆலயத்தில் அமைப்பதை ஏற்றுக்கொள்ளல் (*மத் 24:15; தானி 9:27*) போன்ற சோதனைகள் நிறைந்த வரலாற்றைக் கொண்டுள்ளது.

**II. சிலை வழிபாட்டின் பொருள்**

இஸ்ராயேலானது இறைவனின் அழைப்பிற்குப் பிரமாணிக்கமாய்ப் பதிலளிக்க முயல்வதோடு நிறைவடையாமல், அதனைச் சோதித்த ''*ஊமைச்சிலைகளின்*'' இயல்பையும் சிந்தித்தது (*1 கொரி 12:2*). படிப்படியாக இஸ்ராயேலானது சிலைகளின் ஒன்றுமின்மையைத் துல்லியமான சொற்களில் வெளிப்படுத்தும்.

***1. ''பிற கடவுள்கள்'':***

எரேமியாவின் காலம்வரை நிலவிய இந்தச் சொற்றொடர் மூலம் இஸ்ராயேலானது யாவேயைத்தவிர பிற கடவுள்கள் இருத்தலையும் ஏற்றுக்கொண்டதாகத் தெரிகிறது.

பொதுப்பாணி யாவே வழிபாட்டில், கலந்து விட்ட, பெண்களுக்கெனச் சந்தேகத்திற்கிட மின்றி ஒதுக்கப்பட்ட ''குடும்பச் சிலைகள்'' (ஆதி 31:19-35; 1 சாமு 19:13-16) அல்லது வெண்கலப் பாம்பு (2 அர 18:4) போன்ற மற்றச் சமயங்களின் ஐயப்பாடுடைய எஞ்சிய வைகளைப் பற்றிய கேள்வியல்ல இது. மாறாக, வாக்களிக்கப்பட்ட நாட்டில் இஸ்ரா யேலர் நிலைப்படுத்தப்பட்டபோது அவர் கள் எதிர்கொண்ட கானானிய பாகால் தெய் வங்களைப்பற்றிய பிரச்சனையே இது. இந் தப் பாகால்களுக்கு எதிரான மரணப் போராட்டமாகும் இது. தனது தந்தை, பாகா லுக்கு ஒப்புக்கொடுத்த பீடத்திற்குப் பதிலாக யாவேயின் பீடத்தை மாற்றியமைத்த நீடித்த பெருமை கிதியோனுக்கு உரியதாகும் (நீதி 6:25-32). எனவே, இஸ்ராயேலானது பிற கடவுள்களைப்பற்றிப் பேசினாலும், யாவே மட்டுமே உண்மையான இறைவன் என் பதை அது சந்தேகிக்கவில்லை (யாத் 20:3-6; உப4:35). இவ்வாறுதான் இது மற்ற நம்பிக் கைகளை மாற்றி அமைக்கிறது (2 அர 5:17).

**2. சிலைகளின் ஒன்றுமின்மை:**

சிலைகளுக்கெதிரான மரணப் போராட்ட மானது தொடர்கிறது. ஆனால், சிலைகள் ஒன்றுமற்றவை என்பதை அறிந்து கொள்வ தற்கென, ஆண்டவரில் விசுவாசமுள்ள வரின் ஆவியில் இப்போது இது நிகழ்கிறது (சங் 81:10; 1 நாள் 16:26).

தனது வாழ்வு அபாயத்தில் இருந்தாலும், தகனப்பலிகளை உண்ண முடியாத கடவுள் களை எலியா கேலிப்பரிகாரம் செய்கிறார் (1 அர 18:18-40). சிலைகள் எதிர்காலத்தைப் பற்றிக்கூற இயலாமையால் அவை எதையும் அறிந்திருக்கவில்லை என்பதை நாடு கடத்தப் பட்டோர் தெளிவாகப் புரிந்து கொண்டனர் (எசா 48:5). அவைகளால் காப்பாற்றவும் முடியாது (45:20-21). ''நமக்குமுன் எந்தத் தெய்வமும் உருவாக்கப்படவில்லை, நமக் குப் பின் எதுவும் இருப்பதில்லை'' (43:10). இதுவே உண்மையான நிலையெனில், இதற் குக் காரணம் அவை உண்மையாக இல்லா மல் மனிதனுடைய கண்டுபிடிப்புகளாக மட் டுமே இருப்பதாகும். இறைவாக்கினர்கள், மரம், கல், அல்லது பொன்னாலான சிலை களுக்கு எதிராகத் தங்களது தாக்குதல்களைச் செய்தபோது (ஆமோ 5:26; ஓசே 8:4-8; எரே 10:3தொ; எசா 41:6-7; 44:9-20), உருவக விவரிப்பை மட்டுமே அவர்கள் பழிக்காமல் உண்மையான நெறிபிறழ்வைப் பழிக்கின்ற னர். படைத்தவரை வழிபடாமல், படைப் பானது தன்னுடைய படைப்பையே வழி படுகிறது.

இச்சிலை வழிபாட்டின் விளைவுகளை ஞான ஆகமம் வெளிக்கொணர்கிறது (ஞான 13-14). வாழ்வானவரை விட்டுவிடுவதைச் சுட்டிக்காட்டுவதனால், இது மரணத்தின் பலனாக உள்ளது. ஆனால் அதே நேரத்தில் இந்த நெறிபிறழ்வு நிலைக்கு ஒரு விளக்கத் தினை அது விசுவாசிக்கு அளிக்கிறது. இது இறந்தோர் அல்லது புகழ்பெற்ற மக்களை இறைமைப்படுத்துதல் (14:12-21), அல்லது மனிதனைத் தங்களுடைய படைப்பாள ரிடம் நடத்திச்செல்ல, குறிக்கப்பட்ட இயற் கைச் சக்திகளை வழிபடுதலாகும் (13:1-10).

சிலை வழிபாட்டினைப் பேய் வழிபாட் டுடன் இணைப்பதன் மூலம் பவுல் இந்தக் குற்றங்காணுதலைத் தொடர்கிறார். சிலை களுக்குப் பலியிடுவதென்பது பேய்களுக்குப் பலியிடுவதாகும் (1 கொரி 10:20-21). இறுதி யாக ஒரு பயங்கர குற்றச்சாட்டில் படைத்த வரை அவரது படைப்பில் அறிந்து கொள்வ தற்குப் பதிலாக, அவரது படைப்புகளின் பிரதிக்காக அழிவில்லா இறைவனின் மகி மையை மாற்றிய மனிதரின் உலகளாவிய பாவத்தை அவர் கண்டிக்கிறார். இதிலிருந்து எல்லா நிலைகளிலும் அவர்களின் வீழ்ச்சி தொடர்கிறது (உரோ 1:18-32).

**3. சிலை வழிபாடு ஒரு நிலையான சோதனை:**

சிலை வழிபாடானது ஒரே நேரத்தில் வென்றுவிடக்கூடிய மனப்பான்மையன்று. இது மாறுபட்ட வடிவங்களில் மீண்டும் வருகின்றது. ஆண்டவருக்குப் பணிபுரிவதை ஒருவன் விட்டுவிடும் போதெல்லாம் அவன்,

*தன்னால் படைக்கப்பட்டவைகளுக்கு அடிமையாகிறான். அப்படிப்பட்ட பொருள்கள்: பணம் (மத் 6:24), மது (தீத் 2:3), அயலாரின் மீது ஆதிக்கம் செலுத்தும் ஆசை (கொலோ 3:5; எபே 5:5), அரசியல் வல்லமை (திருவெளி 13:8), இன்பம், பொறாமை, வெறுப்பு (உரோ 6:19; தீத் 3:3), பாவம் (உரோ 6:6), சட்டத்தைப் பொருளளவில் கடைப்பிடித்தல் (கலா 4:8-9) ஆகியவையாகும். இவையனைத்தும் மரணத்திற்கு நடத்திச் செல்லுகின்றன (பிலி 3:19); ஆனால் ஆவியின் கொடையோ வாழ்வாக உள்ளது (உரோ 6:21-22). சிலை வழிபாட்டை உருவாக்குகின்ற இந்தக் குற்றங்களுக்குப் பின்னால், நமது நம்பிக்கைக்குரிய ஒரே இறைவனைப் பற்றிய அறியாமை மறைந்துள்ளது.*

**சிலைக்கல்** *(SACRED STONE)*

*பெரும்பாலும் எரி நட்சத்திரக் கல்லாக இருக்கலாம். வானத்திலிருந்து விழுந்ததால், இயற்கைக்கு அப்பால் தோன்றியதாக நம்பப்படுகிறது. இது ஆர்தமிஸ் கடவுளுக்கு அடையாளமாகக் கருதப்படுகிறது (அ.ப. 19:35).*

**சிலைத்தூண் கருவாலி மரம்** *(OAK OF THE PILLAR)*

*இது செக்கேமிலுள்ள புனித கருவாலி மரம். இந்த மரத்தடியில் செக்கேமில் இருந்த எல்லா மனிதரும் பெத்மில்லோ நகரின் எல்லாக் குடும்பங்களும் ஒன்றுகூடி அபிமெலக்கைத் தம் அரசனாக்கினர் (நீதி 9:6). ஒருவேளை இந்த மரத்தடியிலே யாக்கோபு தன் மனைவிகளின் வேற்றுத் தெய்வங்களின் சிலைகளையும், அவர்களின் காதணிகளையும் புதைத்தார் எனலாம் (ஆதி 35:4). மேலும் யோசுவா, இஸ்ராயேல் மக்கள் சட்டத்திற்குத் தாங்கள் பணிந்து நடப்பதாகக் கொடுத்த வாக்கிற்குச் சாட்சியாக இந்த இடத்திலே ஒரு பெரிய கல்லை நாட்டினார் (யோசு 24:26).*

**சில்கி** *(SHILHI - வேல் எறிபவன், போர்வீரன்)*

*யூதாவின் அரசன் யோசபாதின் தாயாகிய அசுபாவின் தந்தை (1 அர 22:42; 2 நாள் 20:31).*

**சில்கிம்** *(SHILHIM - ஆயுதம் தாங்கிய)*

*யூதாவின் தெற்கே சிக்லாகு அருகில் உள்ள ஒரு நகரம் (யோசு 15:32). இதற்கு ஒத்தபகுதியாகிய யோசு 19:6-இல் இது சாருகென் என்றழைக்கப்பட்டு, சிமியோனுக்குக் கொடுக்கப்பட்டதாக உள்ளது.*

*இது 1 நாள் 4:31-இல் சாரயிம் என்றழைக்கப்படுகிறது. இதைப் பெயேர்-செபாவுக்கு மேற்கில் 30 கி.மீ. தொலைவில் நகர் - பேசோரின் கரையிலுள்ள தேல் ஏல் - பாராக அடையாளம் காட்டலாம்.*

**சில்தாய்** *(ZILLETHAI - யாவே என் பாதுகாப்பு ஆவார்)*

*1. சிமயியின் மகன். பென்யமின் கோத்திரத்தில் ஒரு குடும்பமும் ஆகும் (1 நாள் 8:20).*

*2. இவர் சிக்லாகில் தாவீதோடுசேர்ந்து கொண்ட மனாசே கோத்திரத்தைச் சார்ந்தவர். தாவீதின் படையில் தலைவராகவும் இருந்தார் (1 நாள் 12:20).*

**சில்பா** *(ZILPHA - குட்டை மூக்குடைய)*

*சில்பா காது, ஆசேர் ஆகியவர்களின் தாய். இவள் லாபானால் தன் மகள் லேயாவுக்கு வேலைக்காரியாகக் கொடுக்கப்பட்டவள் (ஆதி 29:24; 26:18). மலடாகிவிட்ட லேயா இவளைத் தன் கணவனுக்கு, அதாவது யாக்கோபுக்கு, ''மனைவியாக''க் கொடுத்தாள் (ஆதி 30:9; 37:2). இவள் யாக்கோபுக்கு காது ஆசேர் என்னும் பிள்ளைகளைப் பெற்றாள் (ஆதி 30:19.12; 35:26).*

**சில்லா** *(SILLA - கிளை, ஓடக்கரை)*

*எருசலேம் நகருக்கு வெளியே அமைந்திருந்த சிறு பகுதி. இது மில்லோ வீட்டோடு தொடர்புபடுத்திக் கூறப்படுகிறது. இங்குதான் யூதாவின் அரசன் யோவாசு கொல்லப்பட்டார் (2 அர 12:20). எபிரேய வாசகம் தெளிவாயில்லை.*

**சில்லா** *(ZILLAH - மறைப்பு, பாதுகாப்பு)*

*இவள் இலாமேக்கின் இரண்டாவது மனைவியும், துபால் - காயீன், அவர் சகோ*

தரி நாமா ஆகியவர்களின் தாயும் ஆவாள் *(ஆதி 4:19-23)*.

**சில்லு** (DISCUS)

கிரேக்கமயமாக்கும் பொதுவான முயற்சியில் மக்கபேயர் காலத்தில், யாசோன் என்ற தலைமைக்குரு யூதர்களுக்கு அறிமுகமாக்கிய ஒரு கிரேக்க விளையாட்டு. கிரேக்க உடற்பயிற்சிக் கூடங்களை நிறுவுவதற்கும் அதில் உடற்பயிற்சி செய்வதற்காக இளைஞர் குழுக்களை நிறுவுவதற்கும் கடவுள் பயமற்ற யாசோன் சீரிய நாட்டு அரசன் அந்தியோக்கு எப்பிபானிடம் உத்தரவு பெற்றார் என்று *2 மக் 4:7-17* கூறுகின்றது. தலைமைக்குருவும் அவன் நண்பர்களும் கோவில் காரியங்களில் கவனத்தைச் செலுத்துவதைவிட இந்த விளையாட்டுகளில், சில்லு விளையாடுவதிலும், சேர்ந்து அதிகம் ஆர்வம் காட்டியதாகச் சொல்லப்படுகிறது.

இந்தச் சில்லு மரத்தாலோ, கல்லினாலோ, உலோகத்தினாலோ செய்யப்பட்ட வட்டமான மிகவும் பளுவான தகடாகும். இந்தச் சில்லை மிகவும் தூரமாக எறிவதில்தான் இந்த விளையாட்டு அடங்கியுள்ளது. இது சாதாரணமாக *100* அடி அதற்கும் மேலான தூரத்திற்கு வீசப்பட்டது. இதை எறியும் முறை, கிரேக்க சிற்பி மைரன் செதுக்கிய 'சில்லு எறிபவர்' சிலையில் காட்டப்படுகின்றது.

**சில்லேம்** (SHILLEM - ஈடு செய்யப்பட்ட)

நெப்தலியின் நான்காவது மகன் *(ஆதி 46:24)*, சில்லேமியர் குலத்தின் மூதாதையர் *(எண் 26:49)*. இவர் *1 நாள் 7:13*-இல் சல்லூம் *(7)* என்று அழைக்கப்படுகிறார்.

**சில்வானின் போதனைகள்** (SILVANUS, TEACHINGS OF)

வட எகிப்தில் கி.பி. *1946*-இல் செனோபோஸ் கியோன் என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட, பேதுரு, பவுல் ஆகியோரின் தோழனான சில்வான் எழுதியதாகக் கருதப்பட்ட ஞானவாதப் போலி நூலாகும்.

**சில்வான்** (SILVANUS)

காண்க. சீலா.

**சிவந்தமேனி** (RUDDY)

ஆணின் அழகைச் சித்தரிக்கும் ஒருசொல். இச்சொல் முந்தைய வாசகங்களில் ஒரு வேளை சிவப்பு மயிரை விவரிக்கலாம் *(1 சாமு 16:12; 17:42; காண் ஆதி 25:25)*. பிற்கால வாசகங்களில் வலிமையுள்ள உடல் நலத்தைக் குறிக்கின்றது *(உ.ச. 5:10; புல 4:7)*.

**சிவு** (ZIV - ஒளிமயமான)

சிவு என்பது இரண்டாவது எபிரேய மாதத்தின் முந்தைய பெயராகும். இது பிற்காலத்தில் இய்யார் என்று அழைக்கப்பட்டது. இது ஏப்ரல் - மே மாதங்களுக்கும் சித்திரை மாதத்துக்கும் இணையானது. சிவு மாதத்தில்தான் சாலமோன் ஆலயக்கட்டடப் பணியைத் தொடங்கி அடிக்கல் நாட்டினார் *(1 அர 6:1.37)*.

**சிறப்புப்பெயர்** (SURNAME)

ஆண்டவரின் ஆசி வரும் நாளில் புறவினத்தார், அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களோடு ஒன்றானவர்கள் என்பதைக் காட்டச் சிறப்புப் பெயர்களைச் சூடிக் கொள்வர் என்று எசா *44:5*-இல் கூறப்படுகிறது. எசா *45:4*-இல் கடவுள் சைரஸ் அரசனோடு பேசும்போது ''உனக்குச் சிறப்புப் பெயர் தருவோம்'' அதாவது, ''பெயரும் புகழும் வழங்கினோம்'' என்கிறார்.

புதிய ஏற்பாட்டில் நான்கு பேர் சிறப்புப் பெயர் பெற்றனர். சீமோன் பேதுரு என்று இயேசுவால் பெயரிடப்பட்டார்; அதாவது இயேசு அப்பெயரை அவருக்கு அளித்தார் *(மாற் 3:16; மத் 16:18)*. செபதேயுவின் மக்களான யாக்கோபுக்கும் யோவானுக்கும் இடியின் மக்கள் என்று பொருள்படும் ''பொவனேர்கேசு'' என்று இயேசு பெயரிட்டார் *(மாற் 3:17)*.

அ.ப. *1:23*-இல் பர்சபா என்றழைக்கப்பட்ட யோசேப்பு, யுஸ்து என்று சிறப்புப் பெயர் சூட்டப்பட்டார். அ.ப. *4:36*-இல் யோசேப்பு

என்பவர்க்குப் பர்னபா என்று அப்போஸ்தலர் களால் சிறப்புப் பெயர் சூட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்தப் பெயராலேயே இவர் அப்போஸ்தலர் பணியின் மற்றப் பகுதிகளி லும், பவுலின் கடிதங்களிலும் அழைக்கப் படுகின்றார் (1 கொரி 9:6; கலா 2:1;9.13; கொலோ 4:10). இப்பெயருக்குப் பொருள் ''ஆறுதலின் புதல்வன்'' என்று அப்போஸ்த லர் பணி கூறுகிறது.

### சிறிய ஆசியா (ASIA MINOR)

கருங்கடலுக்கும், மத்திய தரைக்கடலுக் கும் இடையிலுள்ள ஒரு தீப கற்பமாகும். துருக்கிய மொழியில் அனதோலு என் றழைக்கப்படும். அர்மேனிய மேட்டு நிலத்தைக் கிழக்கில் கொண்டது.

இதன் கடற்கரைப்பகுதிகளுக்கும், உள் பகுதிகளுக்கும் இடையே அதிக வேறுபாடு உண்டு. 1000 மீட்டர் உயரத்திலுள்ள பீடபூமி யைச் சுற்றி இரண்டு மலைத் தொடர்களைக் கொண்டது. கருங்கடல் ஓரத்தில் போந்து மலைகளும் மத்தியதரைக் கடலோரத்தில் தவுரசு, அமனோசு ஆகிய மலைகளும் உள் ளன. இந்த மேடுபள்ளமான பகுதியில் பாதை பெரிய மத்திய மேட்டுச் சமவெளி, சிலிசியாவின் தெற்குக் கடற்கரைச் சமவெளி ஆகிய இருச்மவெளிகள் வழியாகச் செல்லு கிறது. சிலிசியாச் சமவெளி சிறிய ஆசியா வையும் சீரியாவையும் இணைக்கிறது. இப் பகுதியில் சிலிசியன் வாயில் வழியாகப், பழங்கால வாணிகச் சாலை ஓடுகிறது. இது தான் செருசு, பெரிய அலக்சாந்தர் ஆகியோ ரின் பெரிய நெடுஞ்சாலையாகும். இதன் வழியாகப் பவுலும் சீலாவும் பயணம் செய்தனர் (அ.ப. 15:40-41). சிறிய ஆசியாவின் மேற்குக் கரையில் பல இயற்கையான துறைமுகங்கள் உள்ளன. இங்குதான் பழங்காலக் கிரேக்கக் குடியிருப்புக்களும் புதிய ஏற்பாட்டுத் திருச் சபைகளும் இடம் பெற்றன (திருவெளி 2-3).

பழைய ஏற்பாட்டில் சிறிய ஆசியா இத்தி யர் பேரரசின் மையமாகத் திகழ்ந்தது. அதன் தலைநகர், இக்காலப் பொகஸ்கோயின் அரு கில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளது. பவுலின், வேத போதகப் பயண காலத்தில், இத்தீபகற் பம், உரோமையரால் பல மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை: ஆசியா, பித்தி னியா, போந்து, கலாத்தியா, கப்பதோக் கியா, லீக்கியா, சிலிசியா, ஆசியா என்ற சொல் (1 பேதுரு 1:1) முழுத்தீபகற்பத்தை விட ஆசியா மாகாணத்தையே குறிக்கிறது.

### சிறிய கொம்பு (LITTLE HORN)

கொம்பு பொதுவாக ஆற்றலின், உதவி யின், வெற்றியின் மகிமையின் அடையாள மாகக் கருதப்பட்டது. தானி 7:8 தொ. 20. தொ; 8:8தொ-இல் வரும் இக்குறிப்பு செலூக்கிய மன்னன் அந்தியோக்கு எப்பிப் பானைக் குறிக்கிறது. இவர் யூதர்களைக் கொடுமைப்படுத்தியதும் ஆலயத்தைப் பங் கப்படுத்தியதும் நேர்மையான பலிகளை ஆலயத்தில் நிறைவேற்றுவதைத் தடை செய் ததும் மக்கபேயரின் கிளர்ச்சிக்கு இட்டுச் சென்றன.

### சிறுத்தைப்புலி, வேங்கை (LEOPARD)

மிகக் கொடூரத்தன்மையும், எதிர்த்து நிற்க முடியாததுமான இந்த மிருகம் இந்த இருப தாம் நூற்றாண்டில் பாலஸ்தீனத்தில் வாழ்ந்து இருந்திருக்கிறது. இந்த வகையைச் சார்ந்த ''சீத்தா'' என்ற ஒருவகை சிறுத்தைப் புலியைக் கட்டுப்படுத்தி, பயிற்றுவித்து, வேட்டைக்குத் தயார் செய்யலாம். இது மிக வேகமாகச் செல்லக்கூடியது. விவிலிய உல கில் இவ்வகை மிருகம் நன்கு தெரிந்த ஒன்று (அ.ப. 1:8).

பழைய ஏற்பாட்டில் சிறுத்தைப் புலியின் புள்ளிகளைப் பற்றிய (எரே 13:23) குறிப்பு உள்ளது. எசாயா இறைவாக்கினர் அமைதி மிக்க எதிர்காலத்தில் புலி சிறு குழந்தையின் அருகில் உறங்கும் (எசா 11:6) என்று முன் னறிவிக்கிறார். லெபனோன், கெர்மோன் (எர் மோன்) ஆகியவை சிறுத்தைப் புலிகளின் உறைவிடமாகக் குறிப்பிடப்படுகின்றன (உ.ச. 4:8). இக்குறிப்புகளைத்தவிர, மற்ற இடங்களில், சிறுத்தை உருவகமாகவோ உலக இறுதிக்காலத்தைச் சேர்ந்த விலங்கா கவோ விவரிக்கப்படுகிறது.

ஓசே இறைவாக்கினர், இஸ்ராயேலைத் தண்டிக்க இருந்த கடவுளைச் சிறுத்தைப் புலிக்கு ஒப்பிட்டுள்ளார் (ஓசே 13:7). இஸ்ரா யேலுக்கு எதிராகக் காத்திருக்கும் எதிரியைப் பற்றிப் பேசுவதற்காகவும் இதே உருவகம் பயன்படுத்தப்பட்டுள்ளது (எரே 15:6). அப 1:8-இல் கல்தேயக் குதிரைகள் சிறுத்தைப் புலிகளைவிட வேகமானதாக வர்ணிக்கப் படுகின்றன. மேலும் தானி 7:6, திருவெளி 13:2 ஆகிய விவிலிய வாக்குகளிலும் இத்தகைய விலங்கு பற்றிய விவரிப்புகள் உள்ளன.

### சிறுநீரகங்கள் (KIDNEYS)

உடலின் மற்ற உறுப்புக்களைக் குறிக்கும் சொற்களைப் போலவே, சிறுநீரகங்களும் சாதாரணமாகச் சிறுநீரகத்தைக் குறிப்பதாக வும், உருவகமாக வேறு பொருளைத் தருவ தாகவும் அமைகின்றன. மனித சிறுநீரகங் களைக் குறிப்பதற்காகப் பயன்படுத்தப்படும் எபிரேய கிரேக்கச் சொற்கள் வழக்கமாக உருவக உள்ளர்த்தங்களைக் கொண்டதாக (எரே 12:2; திருவெளி 2:23) மனம், இதயம், உள்ளம், ஆன்மா, ஆகியவற்றைக் குறிப்ப தாக வருகின்றன. யோபு 16:13-இல் மட்டுமே அவ்வாறு வரவில்லை.

எசா 34:6-ஐத் தவிர மற்ற எல்லாப் பகுதிகளிலும் பலி ஒப்புக்கொடுக்கும் ஒழுங்கு முறைகளைப்பற்றிப் பேசும்போது விலங்கு களின் சிறுநீரகம் பற்றிக் குறிப்பிடப்படு கிறது. யாவேக்கு நன்றியின் அடையாளமாகக் குடல்களை மூடிய கொழுப்பு யாவையும், கல்லீரல் பையையும், இரு சிறுநீரகங்களை யும், அவற்றின் மேலேயுள்ள கொழுப்பை யும் பீடத்தின் மீது எரிக்க வேண்டும் எனக் கூறப்பட்டது (யாத் 29:13; லேவி 3:4.10.15). அக்காலத்தின் மக்களின் எண்ணத்தில் சிறுநீர கங்களின் நிறம், அடர்த்தியினால் அவை உயிரின் இருப்பிடமாகக் கருதப்பட்டது. அதன் விளைவாக, அவை இரத்தத்தோடு சேர்ந்து தெய்வத்திற்கு உரியதெனக் கருதி னர். பின்னர் இக்கருத்து ஓரளவு மாறி, விலங்குகளின் மிகச் சிறந்த பகுதியாகக் கருதப்பட்டது சிறுநீரகமாகும் என்றனர்.

சிறுநீரகங்களுக்குக் கொடுக்கப்பட்ட இந்த அளவுக்கதிகமான முக்கியத்துவம், சிறு நீரகமே மனித உளவியல் மற்றும் ஒழுக்க வாழ்விற்கு மையம் எனும் கருத் துக்கு இட்டுச் சென்றது. இவைகளோடு இதயத்தைத் தொடர்புபடுத்தி, அவையே மனித ஆளுமையின் உட்பகுதியென்றும், அத்தகைய இதயத்தின் சிந்தனைகளையும் மனத்தின் மறைபொருட்களையும் இறை வன் சோதிக்கிறவர் எனக் கூறுகிறது விவிலி யம் (சங் 7:9; 26:2; எரே 11:20; 17:10; 20:12; திருவெளி 2:23). துன்பம், கசப்புத்தன்மை, மகிழ்ச்சி முதலிய மனித உணர்வுகளுக்கும் இவையே காரணமென்றும் கூறப்பட்டன. சிறுநீரகங்களை ஒருவனின் ஒழுக்க நெறி யோடு தொடர்புபடுத்திப் பேசுபவையே மிக முக்கியமானவையாகக் கருதப்படுகின் றன. ஆனால் சிறுநீரகமே ஒருவனின் ஒழுக்க வாழ்விற்கு அடிப்படையென எபிரேயர் நம் பினர் என்று முடிவு செய்யுமளவுக்கு அதிக மான விவிலியப் பகுதிகள் இல்லையாத லால் நம்மால் இக்கருத்தை ஏற்க முடிய வில்லை.

### சிறு பயறு (LENTILS)

இது சதைப்பிடிப்புடைய ஒரு பயறு வகை. இந்தப் பயறிலிருந்து யாக்கோபின் பயற்றங்கூழ் தயாரிக்கப்பட்டது (ஆதி 25:34). இது, இன்று அரேபியாவில் தயாரிக் கப்படும் ''முய்யெத்தெரா'' என்ற உண வினை ஒத்ததாகக் கருதப்படுகின்றது. இந்த உணவில் வெங்காயம், அரிசி, ஒலிவ எண் ணெய் மற்றும் இப்பயறு முதலிய பொருட் கள் சேர்க்கப்படுகின்றன. இவ்வுணவின் சிவப்புநிறம், சிவப்பு நிறமுடைய ஏதோ மோடு தொடர்பு படுத்தப்பட்டதாகத் தெரி கிறது (ஆதி 25:30).

தாவீது மகனயீம் என்ற இடத்திற்கு ஓடிச் செல்ல வேண்டியிருந்தபோது (2 சாமு 17:28), இந்தச் சிறுப்பயறையும் மற்ற உணவுப் பொருட்களுடன் சேர்த்து உண்டார். தாவீ தின் வலிமைமிக்க வீரர்களில் ஒருவரான சம்மாகு என்பவர் இலேகி என்ற இடத்துக் கருகில் சிறுபயறு நிறைந்த வயலில் பெலிஸ்

தியரைத் தனியாளாக வெற்றி கொண்டார் (2 சாமு 23: 11). எசேக்கியேல் இறைவாக்கினர், தனது கோதுமைக் கலவையில் இந்தச் சிறு பயறின் விதைகளையும் சேர்த்து ரொட்டி தயாரித்தார். இந்த அப்பம் பஞ்சத்தின் அடையாளமாகும் (எசே 4:9). இன்றும்கூட மேற்காசியாவில் குறிப்பாகத் தெற்கு எகிப்தில் வாழும் ஏழை மக்கள் இதைத் தங்களின் முக்கியமான உணவாக உண்டுவருகின்றனர்.

### சிறைக்கூட மடல்கள் (PRISON LETTERS)

பவுல் சிறையில் இருந்தபோது எபேசியர், பிலிப்பியர், கொலோசியர், பிலமோன் ஆகியோருக்கு இந்த மடல்களை எழுதியதால் (எபே 3:1; பிலி 1:13-14; கொலோ 4:3; பில 1); இவை ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுள்ளன. பாரம்பரியமாக இருந்த நான்கு மடல்களும் பவுல் உரோமையில் சிறை இருந்தபோது எழுதப்பட்டதாகக் கருதப்படுகின்றன (அ.ப. 28; கி.பி. 61-63). ஆனால் இதற்கு முன்பே இரு ஆண்டுகளுக்கு அவர் செசரியாவில் சிறை இருந்திருக்கிறார் (23:33-26:32). சில குறிப்புகள் (20:18-19; 1 கொரி 15:32; 2 கொரி 1:8-10) இதற்கும் முன்பே பவுல் எபேசில் சிறையிருந்திருக்கலாம் என்று சுட்டுகின்றன. கொலோசியர் திருமுகம் ஒருபுறம் எபேசியர் திருமுகத்தோடும் மறுபுறம் பிலமோனுக்கு எழுதப்பட்ட திருமுகத்தோடும் கொண்டிருக்கும் தொடர்புகள் (இவையாவும் பவுலால்தான் எழுதப்பட்டவை என்று ஏற்றுக் கொண்டால்), இம்மூன்றிற்கும் ஒரே காலத்தைக் குறிக்கலாம் என்று சுட்டுகின்றன. சூழ்நிலை, மற்றும் மொழிநடையைப் பொறுத்த மட்டும், பிலிப்பியர் திருமுகம் முந்தைய திருமுகங்களோடு தொடர்புடையதாகத் தெரிகிறது (உரோமையர், 1-2 கொரிந்தியர், கலாத்தியர்). இக்காலப்பிரச்சினைக்கு ஒரு விடை, உரோமைச் சிறைவாசத்தில் அல்லாமல், எபேசில் இருந்திருக்கக்கூடிய சிறைவாசத்தின்போது பிலிப்பியர் திருமுகம் எழுதப்பட்டிருக்கலாம் என்று ஏற்றுக் கொள்வதாகும். திமொத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரண்டாம் திருமுகமும் சிறையில் எழுதப்பட்டதுதான் (2 திமொ 1:8). ஆனால் இது திமொத்தேயுவுக்கு எழுதப்பட்ட முதல் திருமுகத்தோடும் தீத்துவுக்கு எழுதப்பட்ட திருமுகத்தோடும் நெருங்கிய தொடர்புடையதாகும்.

### சிறைக்கூடம் (PRISON)

சட்டப்பூர்வமான சிறைத்தண்டனை பழங் காலச் சட்டங்களில் காணப்படவில்லை. முதன் முதலில் வேதாகமத்தில் பாரசீக ஆட்சிக்காலத்தில் (எஸ் 7:26) சிறைத்தண்டனை அல்லது குற்றவாளி கொடுமையாகக் கண்காணிக்கப்படும் ஓர் இடம் என்று குறிப்பு காணப்படுகிறது. லேவி 24:12; எண் 15:34 என்பவை தற்காலிகமாகக் காவலில் வைப்பதைக் குறிக்கின்றன.

அரசாட்சிக் காலத்தில் ஒருவன் ஆட்சிக்கோ, மக்களுக்கோ, நாட்டிற்கோ, அபாயத்தையோ, பயத்தையோ விளைவித்தால் அவன் சிறையில் அடைக்கப்படுவான் (1 அர 22:27; எரே 37:15; 2 நாள் 16:10; எரே 37:16; எசா 24:22; 1 அர 22:27). கொடிய சிறைத்தண்டனை என்பது ஓர் இருட்டான நிலவறையில் அடைக்கப்படுவதாகும். இலகுவான சிறைதண்டனை என்பது காவலர்கள் தங்கியிருக்கும் முற்றத்தில் அடைக்கப்படுவதாகும். இதில் குற்றவாளிகள் வெளியுலகத் தொடர்பில் இருந்து விலக்கப்படுவதில்லை (எரே 32:2; 33:1; 38:6; சங் 142:7; எசா 24:22).

இஸ்ராயேல் அல்லாதவர்களின் சிறை, எகிப்தின் அரச கைதிகள் என்ற குறிப்புகளும் காணப்படுகின்றன (ஆதி 39:20;40:3; 2 அர 17:4..) ஓசேயா, சனகெரிபு என்னும் அசீரிய அரசனால் சிறையில் அடைபட்டார். யோயாகின் சிறை உடை அணிந்து பாபிலோனுக்குக் கொண்டு செல்லப்பட்டார் (2 அர 25:27.29). செதேக்கியா பாபிலோனியச் சிறையிலும் (எரே 52:11) சிம்சோன் பெலிஸ்தியச் சிறையிலும் அடைக்கப்பட்டனர் (நீதி 16:21).

ஒருவன் தெரியாமல் கொலை செய்துவிட்டால் நகரத் தலைவர்கள் அவனை அடைக்கலம் நகரத்திற்கு அனுப்புவர். இதனால் அவன் குற்றம் மன்னிக்கப்படுகிறது.

இக்கருத்தைச் சிறைத் தண்டனைக்கு ஒப்பிடலாம் (எண் 35:25)

தீர்ப்புக்காகக் காத்திருக்கும் கைதிகள் அடைக்கப்படும் இடங்களைப் புதிய ஏற்பாடு கூறுகிறது (அ.ப. 5:21.23; 4:3; 5:18; மத் 5:25). சிறையில் அடைபடுவது ஒருவகைத் தண்டனையாகும் (அ.ப. 22:19; மத் 18:30). சிறு தவறுகளுக்குச் சிறையிலடைக்க உரோமை அதிகாரிகள் அதிகாரம் பெற்றிருந்தனர் (மத் 11:2; அ.ப. 16:26; மத் 14:10). சிறைக்கூடம் பல அறைகளைக் கொண்டிருக்கும். இவற்றில் வெளிச்சம் இல்லாதவை மிக மோசமாக இருக்கும் (அ.ப. 12:7; 16:24). சிறைச்சாலையில் அடைப்பதோடு கைதி சங்கிலியால் கட்டப்படுவதும் உண்டு (16:26).

**சிறையிலிருந்த ஆன்மாக்கள்** (SPIRITS IN PRISON)

இறைமகன் இயேசு உயிர்விட்ட பின், உயிர்ப்புக்கு முன் இந்த. இடத்திற்குச் சென்றார் எனப் பேதுரு திருமுகம் கூறுகிறது (1 பேதுரு 3:19). இந்த ஆன்மாக்கள் கிறிஸ்துவுக்கும் முன் மரித்தவர்களாக இருக்கலாம் அல்லது ஆதி 6:1-7-இல் குறிக்கப்படும் வீழ்ச்சியுற்ற வானதூதர்களாக அல்லது இரு குழுவினரையும் சேர்ந்தவர்களாக இருக்கலாம். இந்த நிகழ்ச்சி இறைமகன் இயேசு உலகில் மரித்த அனைவரையும் மீட்டார் என்ற உண்மையைத் தெளிவாக்குகிறது.

**சிற்றரசர்கள்** (VASSALS)

அரசனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் சிற்றரசர்கள். பல சமயங்களில், சிற்றரசர்கள் அரசனால் தோற்கடிக்கப்பட்டவர்களாவர். அரசனது அதிகாரத்துக்கு உட்பட்டு, தனது மக்களையே ஆளுவதற்கு ஆளுநராக வென்ற அரசனால் நியமிக்கப்பட்ட அரசர்கள் ஆவார்கள். இவர்கள் இளவரசர்கள் என்றும், ஊழியர்கள் என்றும், அடிமைகள் என்றும் குறிக்கப்படுகின்றனர். இவ்வாறு பதவியையும் ஆட்சியையும் இழப்பதைப்பற்றி புல 1:1 விவரிக்கிறது. சிற்றரசர்கள் அரசனுக்குக் கப்பம் கட்ட வேண்டி இருந்தாலும், அவர்களுக்கென்று மரியாதையும் மதிப்பும் இருந்தன. செல்வமும் கொண்டிருந்தனர்.

**சிற்றாய்** (SHITRAI - எழுதுபவன்)

சாரோனில் இருந்த தாவீதின் ஆட்டு மந்தைகளைக் கவனித்து வந்த அரச காப்பாளராகிய ஒரு சாரோனியர் (1 நாள் 27:29).

**சிற்றுளி** (HATCHET)

ஆலயத்திலுள்ள சிற்பவேலைமிக்க மரங்களைத் துண்டுபடுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்ட ஒருவகையான கருவியாகும் (சங் 74:6). ஒருவேளை மரம் வெட்டும் சிறு கோடரி என்றும் சொல்லலாம்.

**சினத்தின் உணவுப் படையல்** (JEALOUSY, ORDEAL OF)

விபச்சாரத்தில் ஒரு பெண் ஈடுபட்டாள் எனச் சந்தேகம் கொண்ட பின் அது உண்மையா பொய்யா என நிரூபிக்கச் செய்யப்படும் சோதனை இது. அந்தப் பெண் கூடாரத்தின் புழுதியும் புனித நீரும் கலந்து குடிக்க வேண்டும். அதற்குமுன் தன் கையில் சினத்தின் உணவுப்படையலை ஏந்திக் கொண்டு சாபத்துக்குரிய ஆணையிட வேண்டும். இவற்றைச் செய்தபின் அவள் குற்றமுள்ளவளாய் இருந்தால் வயிறு வீங்கித் தொடைகள் அழுகி விடும். இல்லாவிடில் கருத்தரிக்கத் தக்கவளாக இருப்பாள் (எண் 5:12-38).

**சினம், கோபம்** (ANGER)

விவிலியத்தில் மனிதரின் சினத்திற்கும் கடவுளின் சினத்திற்கும் தன்மையிலும் இறையியல் பொருளிலும் பெரும் வித்தியாசம் உள்ளது. ஆனால் இரண்டிற்கும் ஒரே சொல்லே பயன்படுத்தப்படுகிறது. பொதுவாக ஒருவரின் மனம் ஒரு தவறினால் புண்படுத்தப்பட்டால் அந்தப் புண்பட்டவரின் மன உணர்ச்சியே கோபம் எனப்படுகிறது. ஆனால் இது பொறாமை, வெறுப்பு ஆகியவற்றிலிருந்து வேறுபடுத்தப்பட வேண்டும். ஆனாலும் இவை சினத்தோடு தொடர்புடையன.

ஆதி 27:45-இல் கோபம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. பழங்கால எபி

ரேய உளவியல் முறைப்படி மூக்குதான் சினத்தின் இருப்பிடம் (பழ 14:29; எண் 11:20). சினம் என்ற சொல் பழைய ஏற்பாட்டில் கடவுளின் சினத்தைக் குறித்தது. 'எரித்தது', எரிக்கும் சினம் ஆகியவை மனிதனைக் குறித்தது (எண் 22:27; யோனா 4:1; எசா 7:4; யாத் 32:12; 2 அர 5:12; சங் 19:6). இது சூரியவெப்பத்தைக் குறிக்கவும், இரசம் பருகியதன் விளைவைக் குறிக்கவும் (ஓசே 7:5), பாம்பின் நஞ்சைக் குறிக்கவும் (உப 32:24) பயன்படுத்தப்பட்டது (எஸ்த 1:12; ஆமோ 1:11; எரே 15:17; 2 நாள் 26:19; 1 சாமு 1:6; யோபு 5:2). தேவசினத்தை மனித சினத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காகத் தேவ சினத்தைக் குறிக்கும் சில சொற்களோடு மற்றும் சில சொற்களும் சேர்க்கப்பட்டன.

சினம் என்பது மனிதனுக்குச் சாதாரணமாக எழக்கூடிய ஓர் உணர்ச்சி. காயீன் - ஆபேல் கதைத் தொடக்கத்திலேயே மனிதனுக்குச் சினம் என்ற உணர்ச்சி இருந்ததைப் படம் பிடித்துக் காட்டுகிறது (ஆதி 4:5.23-24). பிற்காலத்தில் ஒரு கட்டுப்பாடுள்ள சமூகத்தில் சினம் என்பதுவேண்டாத ஒன்று எனக்கருதப்பட்டது (சங் 36:8; பழ 14:29; 29:22; யோபு 18:4; 36:18). ஆனாலும் சினம் ஓர் மனித உணர்ச்சி என்பது மறக்கப்படவில்லை (மத் 22:1-10). எனினும் இது கண்டும் காணாமலும் விட்டுவிடக்கூடிய ஒரு பண்பல்ல (ஆதி 49:5-7; 1 சாமு 18:8-9; 19:9-10; 20:30-31; மத் 27:20-23; லூக் 4:28-29; அ.ப. 7:54-58). கோபம் வெறும் அழிவை மட்டுமல்ல ஆக்கத்தையும் உயர்வையும் தரக்கூடியது (மாற் 3:5; யோவா 2:13-21; லூக் 6:11; 19:45-46; மாற் 3:6;).

ஒருவனின் பக்தி மற்றும் விசுவாச உணர்வில் ஒருவன் கோபப்படுவது பழைய ஏற்பாட்டில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. நாத்தான் இறைவாக்கினர் அரசரிடம் வந்த போது தாவீதுகோபத்தில் தன்னையே தீர்ப்பிடுகிறார் (2 சாமு 12:5.7.13). மோசே இஸ்ராயேலரின் பிரமாணிக்கமின்மை கண்டு கடுங் கோபம் கொள்கிறார் (யாத் 16:20). இறைவாக்கினரின் கோபம் இறைவனின் கோபம் எனக் கருதப்பட்டது (எசா 7:13; எரே 6:11; 15:17; ஆமோ 4:1-3; 1 சாமு 15:33).

புதிய ஏற்பாட்டிலும் இத்தகைய ஓர் கண்ணோட்டத்தைக் காண்கிறோம். பிறரின் நன்மைக்காகக் கோபம் கொள்வது நல்லது (உரோ 13:3-4; 2 கொரி 7:11; மத் 12:34; 15:7; 23:13-36; மாற் 3:5; 9:42; 10:14;யோவா 2:15;8:44). புதிய ஏற்பாட்டில் சினம் ஓர் மனித உணர்ச்சியே என்று ஏற்றுக் கொண்டாலும் ''சினம் கொள்வதால் கடவுளுக்கு ஏற்புடைய செயல்கள் விளைவதில்லை'' என்று யாக் 1:19-21-இல் கூறப்பட்டுள்ளது. ''சினம் கொண்டாலும் பாவத்திற்குள்ளாகாதீர்கள்'' என்று எபே 4:26-இலும் (சங் 4:4) கூறப்பட்டுள்ளது (3:8; 1 திமொ 2:8; தீத்து 1:7). சினம் கொள்வது மனித இயல்பேயானாலும் அது பாவத்திற்கு இட்டுச் செல்லக்கூடும் என எச்சரிக்கை விடுக்கிறார்.

''பழிவாங்குவது என் உரிமை நானே பதிலுக்குப் பதில் செய்வேன் என்கிறார் ஆண்டவர்'' என உரோ 12:19-இல் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது (எபி 10:30; லேவி 19:18; உப 32:35). இறைவனது கோபத்தின் கருவியாக அமையும் மனிதனே அக்கோபத்திற்குப் பலியாகக் கூடும் (2 அர 9:7; 10:11; ஓசே 1:4-5; எசா 10:5-6; 10:15). கடவுளின் கோபத்திற்குள்ளாகாமல் இருப்பவனுக்கு எதிராக இறுதி நாளில் தீர்ப்பிடப்பட மாட்டாது (உரோ 13:4; திருவெளி 18:1-19:3).

**காண்க:** கடுஞ்சினம்

**சினா** (ZINA)

சீசா என்ற பெயரின் மற்றொரு வடிவம்.

**சினாபு** (SHINAB - சந்திரக் கடவுளான) சீன் என் தந்தையாவார்

அதிமாவின் அரசன். ஆபிரகாம் காலத்தில் கெதர்ல - கோமருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த தென் பாலஸ்தீன அரசர்களில் ஒருவர் (ஆதி 14:2).

**சினார் (SHINAR)**

பாபிலோனியாவிற்கு ஒரு பெயர் (எசா 11:11). விவிலிய மரபுப்படி சினார் நாட்டிலுள்ள பாபேல், எரேக்கு, அக்காது என்னும் நகரங்களை நிம்ரோது ஆட்சி செய்தார் (ஆதி 10:10).

பழங்கால உருக்குதான் எரேக்கு என்றும், தற்பொழுது வார்கா என்றும் கருதப்படுகிறது. பாபேல் பாபிலோன் என்று கருதப்படுகிறது. அக்காது பழங்கால அக்காதே என்றும் கருதப்படுகிறது. ஆனால் அக்காது இருந்த இடத்தை அடையாளம் காட்டமுடியவில்லை. பாபிலோனுக்கும், பாக்தாதிற்கும் இடையே உள்ள பகுதியாக இருக்கலாம். சினார் நாடு பழங்காலச் சுமேர், அக்காது ஆகிய பகுதிகளை உள்ளடக்கியதாக இருந்திருக்கலாம். அதாவது இப்பொழுது இருக்கும் பாக்தாதிற்கும் சற்று வடக்கிலிருந்து நசிரியேவிற்குச் சற்று தெற்கு வரை உள்ள பகுதியாக இருந்திருக்கலாம்.

விவிலிய மரபுப்படி பாபேல் கோபுரம் சினாரில் கட்டப்பட்டது (ஆதி 11:2). சினார் அரசனாகக் கருதப்படும் அம்ராபல் ஆபிரகாமை எதிர்த்ததாக ஆதி 14:1.9.-இல் கூறப்படுகிறது. ''சினாரிலிருந்து தம்மக்களுள் அடிமைத்தனத்தில் எஞ்சி இருப்போரை ஆண்டவர் மீட்டுக் கொள்வார்'' என்ற இறைவாக்கு எசா 11:11-இல் உள்ளது. பாபிலோனின் இரண்டாம் நெபுகத்னேசர் எருசலேம் ஆலயத்தில் இருந்து கொள்ளையடித்த பொருட்களைச் சினாருக்குக் கொண்டு சென்றதாகத் தானி 1:2-இல் கொடுக்கப்பட்டுள்ளது. 'மரக்கால்' சினார் நாட்டிற்குக் கொண்டு போகப்பட்டதாகச் செக்கரியா காட்சி கண்டார் (செக் 5:11). பின்னது இரண்டிலும் சினார் பாபிலோனைக் குறிக்கிறது.

**சின் பாலைவனம் (ZIN, WILDERNESS OF)**

சின் பாலைவனம் இஸ்ராயேல் மக்கள் கானான் நாட்டை நோக்கிப் பயணம் செய்த போது கடந்து சென்ற பாலைவனம் (எண் 13:21; 20:1; 27:14; 33:36; 34:3-4; உப 32:51; யோசு 15:1.3). இது காதேசு - பர்னேயாவில் உள்ளடங்கியது. ஏதோமுக்குக் கிழக்கு எல்லையில் உள்ளது. காதேசிலிருந்து மோசேயால் கானான் நாட்டை உளவு பார்த்து வரும்படி அனுப்பப்பட்டவர்கள், சின் பாலைவனத்திலிருந்து இரகோபுவரையிலும் உளவு பார்த்து வந்தனர் என்று எண் 13:27 கூறுகின்றது (உப 1:19-20). ''இஸ்ராயேல் மக்களாகிய சபையெல்லாம் முதல் மாதத்திலே சின் என்னும் பாலைவனத்தை அடைந்தபோது, அவர்கள் காதேசில் தங்கி இருக்கையிலே மிரியாம் இறந்து அவ்விடத்தில் புதைக்கப்பட்டாள்'' என்று எண் 20:1 குறிப்பிடுகின்றது. எண் 20:2-15 வாக்குவாதத் தண்ணீர் எனப்படும் மெரிபாவின் நீர் நிலைகள் பற்றிய நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றது. இவற்றிலிருந்து சின் பாலைவனம் பாரானுக்கு வடக்கிலிருந்தது என்றும், காதேசு அங்குதான் இருந்தது என்றும் புலனாகிறது. எண் 27:12-14; உப 32:49-52 மோசே ஆண்டவருக்கு எதிராகப் பாவம் செய்து இஸ்ராயேல் மக்களுக்குக் கொடுக்கப்பட்ட நாட்டில் நுழையாமை என்னும் தண்டனை பெற்றது இவ்விடத்தில்தான் என்று கூறுகின்றன. இஸ்ராயேலர்கள் எசியோன் (எட்சியோன்) கெபேரிலிருந்து புறப்பட்டு, சின் பாலைவனத்தில்தான் முதன்முதலில் பாளையம் இறங்கினார்கள் என்று எண் 33:36 குறிப்பிடுகின்றது. இச்செய்திகளிலிருந்து 'சின்' பாலைவனமும், 'சீன்' பாலைவனமும் ஒன்று அல்ல என்பது தெளிவாகிறது. 'சீன்' பாலைவனம் சீனாய் மேட்டுப்பகுதியின் மேற்குப் பாகத்தில் இருந்திருக்க வேண்டும். ஆனால் 'சின்' பாலைவனம் பாரான் பாலைவனத்துக்கு வடக்கிலும், பக்கத்திலும் இருந்தது. காதேசு ஏதாவது ஒன்றில் இருந்திருக்கலாம். இது சாக்கடலை நோக்கியுள்ள யூதாவின் தென்கிழக்குப் பகுதிகளுள் ஒன்று.

தொல்பொருள் ஆய்வுகளின்படி, சின் பாலைவனமும் காதேசு பர்னேயாவும், இக்கால அயின் ஏல்-குடையிராத்து, கோசைமா, முவெல்லே மற்றும் அயின் கதேயிசு ஆகிய பகுதிகள் அடங்கிய நிலப்பரப்பாக இருந்திருக்கலாம்.



**சீகோர்** (SHIHOR)

இது எகிப்துக்கும் பாலஸ்தீனத்துக்கும் இடையிலுள்ள ஓர் ஓடை. எல்லையைக் குறிக்கும் ஓர் ஆறு அல்லது பல ஆறுகள் ஆகும். இது இஸ்ராயேலின் எல்லையாகும். எரேமியா ஆகமம் இதை நைல் நதியெனக் குறிப்பிடுகிறது *(எரே 2:18)*. எசாயா *23:3* இப்பெயரால் எகிப்திலுள்ள ஓர் ஓடையை யும், இவ்வசனத்தின் இரண்டாம் பகுதி நைல் நதியையும் குறிக்கிறது. அனேகமாக இப்பெயர் நைல் நதியின் புபாஸ்தித்து அல் லது பெலுசியாக்கு கிளைகளைக் குறிக்க லாம் *(யோசு 13:3; 1 நாள் 13:5; எசா 23:3)*.

**சீகோர் - லிப்னாத்து** (SHIHOR - LIBNATH)

ஆசேரின் தென் எல்லையில் உள்ள ஓர் இடம் *(யோசு 19:26)*. சில சமயம் தோருக் குத் தெற்கில் 10 கி.மீ. தொலைவில் மத்திய தரைக்கடலுடன் சேருகின்ற முதலை ஆறு எனப்படும் நாகர் எஸ் - செராக்காக அடை யாளம் காட்டப்படுகிறது.

**சீகோன்** (SIHON - வேரோடு எடுத்தல்)

இவர் இஸ்ராயேல் மக்களின் விடுதலைப் பயணத்தின் இடையில் கடக்க வேண்டி யிருந்த எமோரிய நாட்டு மன்னன் ஆவார். இவரது தலைநகர் கெஸ்போன் (எஸ்போன்) ஆகும் *(எண் 21:21-30)*. இவரது அரசு சாக்கட லுக்குக் கிழக்கிலும் அர்னோன் ஆற்றுக்கு வடக்கிலும் பரவியிருந்தது. இஸ்ராயேலர் இவரது நாட்டைக் கடந்து செல்ல அனுமதி கேட்டபோது, இவர் மறுத்ததுமல்லாமல் படையெடுத்துப் போரிடவும் துணிந்தார். ஆனால் போரில் தோல்வியுற்று, தனது அரசை இஸ்ராயேலரிடம் பறிகொடுத்தார். அவரது அரசில் மோவாபியரின் எல்லைப் பகுதிகளும் இணைந்திருந்தன. அவையும் சீகோனை வெற்றி கொண்டதன் மூலமாக இஸ்ராயேலருக்குக் கிடைத்தன *(எண் 21:21-23; உப 2:26-32; நீதி 11:19-21)*. சீகோ னின் அரசு ரூபனுக்கும், காதுவுக்கும் கொடுக்கப்பட்டதாக யோசுவா *(13:21.27)* ஆகமமும், இவர்களுடன் மனாசேக்கும் சேர்த்துக் கொடுக்கப்பட்டதாக எண்ணாகம மும் *(32:33)* கூறுகின்றன. இறைவனின் பராமரிக்கும் செயலின் ஒருபகுதியே இஸ்ரா யேலரின் இந்தவெற்றி என்று விவிலியத்தில் பல இடங்களிலும் எடுத்துரைக்கப்படுகின் றது *(உப 1:4; யோசு 2:10; நெகே 9:22; சங் 135:11; 136:19; எரே 48:45; எண் 21:27-30)*. கெஸ்போன், ''சீகோனின் வீடு'' என்று மோவாபியருக்கு எதிரான இறைவாக்கில் குறிப்பிடப்படுகிறது *(எரே 48:45)*.

**சீசருடைய மன்றத்திற்கு முறையீடு** (APPEAL TO CAESAR)

பவுல் எருசலேமில் கைது செய்யப்பட்ட பின், யூதர்கள் அவரைக் கொல்ல சதித் திட்டமிட்டதால், அவர் படைவீரர்களால் செசரியாவுக்குக் கொண்டு செல்லப்பட்டார். பெலிக்சால் சிறையிலடைக்கப்பட்டு விசா ரணைக்காகக் காத்திருந்தார். பெலிக்சுக்குப் பின் பெஸ்து ஆளுநராகப் பதவி ஏற்றார். அவர் பவுலை விசாரிக்க அழைத்தார். எருச லேமிலிருந்த யூதர்கள் அவருக்கெதிராய்க் குற்றம் சாட்டினர். பெஸ்து அவரிடம் நீ எருசலேம் சென்று இக்குற்றங்கள் பற்றி விசாரிக்க இசைவாயா என்று கேட்க *(அ.ப. 25:9)* பவுல் யூதர்கள் தன்னைக் கொன்றுவிடு வர் என்று அறிந்து, அங்குச் செல்லவிரும்ப வில்லை. ''சீசரின் மன்றத்திற்கே என் வழக்கு செல்ல வேண்டும்'' *(25:11)* என்றார். சாவுத்தண்டனைக்குரியது எதுவும் அவர் செய்யாததால் *(25:25)*, பெஸ்து சீசரிடம் அனுப்புவதற்குக் குற்றம் எதுவும் காண வில்லை. எனவே அகிரிப்பாமுன் பவுல் அழைத்துவரப்பட்டார். ''இவ்வழக்கு சீசரி டம் செல்ல வேண்டுமென்று இவன் கூறா திருந்திருந்தால் இவனை விடுதலை செய்திருக் கலாம்'' *(26:32)* என்று அகிரிப்பா கூறினார். அப்போஸ்தலர்பணி நூல் பவுல் உரோ மைக்கு எடுத்துச் செல்லப்பட்டுச் சிறைவாசம் இருந்ததோடு முடிவடைகின்றது. ஆனால் விசாரணையின் விளைவு பற்றி எதுவும் கூறவில்லை.

பவுலின் உரோமைக் குடிமகன் (22:25 தொ) என்ற உரிமை அவர் தன்வழக்கைச் சீசர் மன்றத்திற்கு மேல் முறையீடு செய்ய உதவியது எனலாம். அப்போஸ்தலர் பணியில் குறிப்பிடப்படாவிடினும் பெரிய குற்றம் செய்தவர்களுக்கு இந்த உரிமையை அளிப்பது பழக்கம். பிளினி திரேசனுக்கு எழுதிய மடலில் பெரிய குற்றம் சாட்டப்பட்ட கிறிஸ்தவர்கள் உரோமைக் குடிமக்களாய் இருந்தால் அவர்களை உரோமைக்கு அனுப்புவதாகக் குறிப்பிடுகிறார். அவர்கள் முறையிட்டபின்தான் இப்படிச் செய்திருக்க வேண்டும்.

பவுல் சீசரிடம் முறையிட விரும்பினார். ஏனெனில் அவர் யூதச் சட்டத்தின்கீழ் விசாரிக்கப்பட விரும்பவில்லை. மேலும் உள்ளூர் உரோமை ஆளுநர்கள் அவருக்கெதிராய் எண்ணம் கொண்டிருந்தனர் என்று பவுல் கருதியிருக்கலாம். லூக்கா, யூதர்கள் கூறிய குற்றச்சாட்டுகளை ஆளுநர்கள் நம்பியதாக ஒருபோதும் குறிப்பிடவில்லை.

பவுல் மேல்முறையிட்டதன் முடிவு என்ன என்று அறியோம். ஒருவேளை குற்றம் சாட்டிய யூதர்கள் உரோமைக்கு வராததால் இரண்டு ஆண்டு சிறைத் தண்டனைக்குப்பின் பவுல் விடுதலை செய்யப்பட்டிருக்கலாம்.

### சீசருடைய வீட்டைச் சேர்ந்தவர்கள் (CAESAR'S HOUSEHOLD)

சாதாரணமாக உரோமையிலும் மற்ற இடத்திலுமுள்ள அரச ஊழியர்களைச் (அடிமைகள், உரிமைக் குடிமக்கள்) சிறப்பாகக் குறிக்கும் ஒரு கூட்டுப்பெயர். பிலி 4:22-இல் பவுல் "சீசருடைய வீட்டைச் சேர்ந்தவர்கள்" என்று கூறுகின்றார்; அதாவது அவரோடு சேர்ந்து வாழ்த்துக்கள் அனுப்பிய கிறிஸ்தவர்களில் சிலர் சீசருடைய வீட்டைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். பவுல் உரோமைக்கு வந்த பொழுது ''சீசருடைய வீட்டார்'' சிலரால் வாழ்த்தப்பட்டார். பிலி 4:22-இல் வரும் குறிப்பு, இத்திருமுகம் உரோமையிலிருந்து எழுதப்பட்டது என்று கருத ஆய்வாளர் சிலரைத் தூண்டியுள்ளது. ஆனால் அறுதியாக நிரூபிக்கவில்லை.

### சீசர் (CAESAR)

யூலியு சீசரின் குடும்பப் பெயர்; இவருடைய தத்துப்பிள்ளையும், முதல் உரோமைப் பேரரசனுமான அகுஸ்துவினால் (கி.மு. 27-கி.பி. 14) எடுத்துக் கொள்ளப்பட்டது. இவருடைய வழிவந்த ஒவ்வொருவராலும் இப்பெயர் எடுத்துக் கொள்ளப்பட்டதால் இது ஒரு பட்டம் ஆனது. சீசர் அகுஸ்து என்ற பெயர் லூக் 2:1-இல் வருகிறது. மேலும் புதிய ஏற்பாட்டில் 27 மற்ற இடங்களிலும் தோன்றுகின்றது. இயேசு தன்னுடைய பொது வாழ்க்கையைத் தொடங்கிய பொழுது திபேரியு சீசர் (கி.பி. 14-37) ஆண்டு கொண்டிருந்தார் என லூக் 3:1 சொல்கின்றது. இந்தச் சீசர் பெயர்தான் மற்ற நற்செய்திப் பகுதிகளிலும் கூறப்படுகிறது (மாற் 12:14-17 இணை; லூக் 23:2; யோவா 19:12-15). அப்போஸ்தலர் பணியில் கிளாதியு (41-54) பட்டமில்லாமல் 11:20; 18:2-இல் சொல்லப்பட்டிருக்கிறார்; இவரே 17:70-இல் சொல்லப்பட்டிருக்கின்ற சீசர். ஆனால் இதற்குப் பின் வருகின்ற குறிப்புகள் (25:8 தொ; 26:32; 27:24; 28:19) அனேகமாக நீரோவைக் (54-68) குறிக்கலாம். பிலி 4:22-இல் உள்ள சீசர் கிளாதியுவா அல்லது நீரோவா என்று சொல்வது அந்த மடல் எழுதப்பட்ட தேதியைப் பொறுத்தது.

புதிய ஏற்பாட்டில் கொடுக்கப்படாத மற்ற சீசர்கள், முதல் நூற்றாண்டைச் சேர்ந்த கலிகுலா (33-41), கால்பா (68-69), ஓதோ (69) விட்டேலியு (69), வெஸ்பாசியன் (69-79), தீத்து (79-81) தொமிசியன் (81-96); நெர்வா (96-98), திரேசன் (98-117) ஆகியோராவர்.

### சீசா (SHIZA - வணங்குதல்)

அதினாவின் தந்தை. ரூபன் இனத் தலைவர். தாவீதின் வலிமை மிக்க 'முப்பது' மனிதர்களில் இவரும் ஒருவர் (1 நாள் 11:42).

### சீசா (ZIZA - ஏராளமான)

1. சீசா சிமியோன் இனத் தலைவராய் இருந்தார். இவரது மரபுக்கொடி ஐந்து தலைமுறைகளுக்குத் தரப்பட்டுள்ளது (1 நாள்

4:37). கெதோர் பகுதியை நோக்கிச் சிமியோனியர் தங்கள் ஆதிக்கத்தை விரிவாக்கிய போது இவரது குடும்பமும் பங்கு கொண்டது.

2. யூதாவின் அரசன் ரெகபயாமுக்கும் அவரது இரண்டாம் மனைவி மாக்காவுக்கும் பிறந்தவர் (2 நாள் 11:20).

**சிசா** (ZIZAH - ஏராளம்)

ஒரு கேர்சோமிய லேவியர். சிமயியின் இரண்டாவது மகன் (1 நாள் 23:11). 23:10-இல் இவர் சினா என்றழைக்கப்படுகிறார்.

**சிசு ஏற்றம்**(ZIZ, ASCENT OF)

சீசு என்பது யூதாவின் தென்புறத்திலுள்ள மலைக் கணவாயாகும். இது ஏன்—கேதிக்கு அதிகத் தூரத்தில் இல்லை (2 நாள் 20:16). யோசபாத்தின் காலத்தில் இதன் வழியாகத் தான் மோவாபியரும், அம்மோனியரும் மெயோனியரும் படையெடுத்து வந்தனர். இந்த வழியானது எருவேல் பாலைவனத்துக்கு அருகிலுள்ள ஒருபள்ளத்தாக்கிற்குச் செல்கிறது. இக்கருத்தை நோக்கும்போது, இது தெக்கோவாவுக்கு அருகில் இருந்தது என்பது புலனாகிறது. இதுவும், தெக்கோவாவின் தெற்கிலும் ஏன் கேதிக்கு வடக்கிலும் உள்ள வாடி காசாசா என்பதும் ஒன்றாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. அப்படியாயின் இதன் மூலப்பெயர் கசீசுவாக இருந்திருக்கலாம்.

**சீடன்** (DISCIPLE)

I. எவனொருவன் ஓர் ஆசிரியரின் பள்ளியில் சுதந்தரமாகச் சேர்ந்து அவரது கருத்துக்களில் பங்கு கொள்கிறானோ அவனே சீடன் எனப்படுவான். பழைய ஏற்பாட்டில் முற்றிலுமாய்க் காணப்படாத இச்சொல்லானது, விவிலிய மரபின் வளர்ச்சியாகப் பிற்கால யூதமத ஏடுகளில் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது. அவ்வாறே இச்சொல்லானது இயேசு அளித்த மூலப்பொருளுடன் புதிய ஏற்பாட்டில் காணப்படுகிறது.

II. பழைய ஏற்பாடு:

**1. இறைவாக்கினர் மற்றும் ஞானிகளின் சீடர்கள்:** காலங்காலமாக, எலியாவுடன் எலிசா தன்னைச் சேர்த்துக் கொள்வதையும் (1 அர 19:19 தொ), அல்லது எசாயாவை ஆர்வமிக்க சீடர்களின் குழு சூழ்ந்து கொண்டு அவரது சாட்சியத்தையும் வெளிப்பாட்டையும் பொறுப்பாகப் பெறுவதையும் (எசா 8:16) ஆசிரியர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். பெரும்பாலும் ஞானிகள் சீடர்கள் பலரைக் கொண்டிருந்தனர். அவர்களைத் தங்கள் ''புதல்வர்கள்'' என்றழைத்தனர் (பழ 1:8.10; 2:1; 3:1); பாரம்பரிய போதனையை அவர்களது மனதில் ஆழப் பதிய வைத்தனர். ஆனால், இறைவாக்கினரோ, ஞானிகளோ தங்களது படிப்பினையின் மூலம் இறைவனுடைய வார்த்தையின் இடத்தை அடையத் துணியவில்லை. குரு, சீடர் உறவு மரபை அடிப்படையாகக் கொண்டிராது, இறைவார்த்தையை மட்டுமே உடன்படிக்கையான அடிப்படையாகக் கொண்டிருந்தது.

**2. இறைவனின் சீடர்கள்:** அனைத்து ஞானத்திற்கும் ஊற்றாக இறைவார்த்தை இருப்பதால், மனித குருவுடன் இணைத்துக் கொள்ளாமல், இறைவனுக்குச் சீடனாக இருப்பதுவே உன்னதக் குறிக்கோளாகும். ஆட்தன்மைப்படுத்தப்பட்ட இறை ஞானமானது, தனக்குச் செவிமடுத்துத் தனது படிப்பினைகளைப் பின்பற்றுமாறு மனிதரை அழைக்கிறது (பழ 1:20 தொ; 8:4 தொ. 32தொ). இறுதி நாட்களில் இறைவன் தம்மையே இதயங்களின் தலைவராக அமைத்துக் கொள்வாரென இறுதிக்காலம் பற்றிய கூற்றுகள் அறிவிக்கின்றன: அவர்களுக்கு இனியும் உலகத் தலைவர்கள் தேவையில்லை (எரே 31:31-34), ஆனால் அவர்கள் யாவேயின் சீடர்களாக இருப்பர் (எசா 54:13). இறைக் கட்டளைகளைக் கற்பிக்குமாறு பணிக்கப்பட்டிருந்தாலும், யாவேயின் ஊழியர் (42:1.4) அனுதினமும் காலையில் திறந்த செவியுடன் காத்திருந்து, ''கற்றோனின் நாவை''ப் பெறுகிறார் (50:4). இந்த இறைவாக்கிற்கு விசுவாசமிக்கவராய்ச் சங்கீத ஆசி

ரியர் தளர்ந்து போகாமல், ''ஆண்டவரே, எனக்குக் கற்பியும்'' என்று செபிக்கிறார் (சங் 119:12.26-27. 33-34; 25:4-9...).

*3. **யூத மதத்தில் ஆசிரியர்களும் சீடர்களும்:*** நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின், சட்டமானது போதனையின் முதன்மையான பொருளாக விளங்கியது. இந்த அடிப்படை அமைப்பிற்குப் பொறுப்பான தலைவர்கள் ''சட்ட வல்லுநர்கள்'' என்று அழைக்கப்பட்டனர். ஆனால் இப்போது தாங்கள் விளக்கவுரை அளித்த இறைவனுடைய வார்த்தையின் அதிகாரத்தோடு சிறிது சிறிதாக அவர்களுடைய சொந்த அதிகாரமும் சேர்க்கப்பட்டது (மத் 23:2. 16-22), குறிப்பாகத் தங்கள் தலைவர்களிடமிருந்து தாங்கள் பெற்ற பாரம்பரியத்தை அளிக்கும்போது, இவ்வாறு நிகழ்கிறது. விவிலியக் காலத்திற்குப் பிற்பட்ட யூத மதமானது இப்போதனையின் (தால்மூது) அடிப்படையில் தன்னை ஒன்றுபடுத்தும். புதிய ஏற்பாட்டின் காலத்தில், தான் கமாலியேலின் சீடனாக இருந்ததைப் பவுல் நினைவு கூர்கிறார் (அ.ப. 22:3).

**III. புதிய ஏற்பாடு**

*1. **இயேசுவின் சீடர்கள்:*** மோசே (யோவா 9:28), திருமுழுக்கு யோவான் (மாற் 2:18; யோவா 1:35; அ.ப. 19:1 தொ), அல்லது பரிசேயர்கள் (மத் 22:11) ஆகியோரது சீடர்களைப்பற்றிச் சில நேரங்களில் குறிப்பிட்டதற்கு அப்பாற்பட்டு, புதிய ஏற்பாடானது சீடன் என்ற பெயரை, இயேசுவைத் தங்களது தலைவராக அங்கீகரித்தவர்களுக்கு மட்டுமே குறிப்பிடுகிறது. நற்செய்தி நூல்களில் பன்னிருவரும், இவ்வாறு முதலில் குறிப்பிடப்பட்டவர்களினின்று வந்தவர்களே (மத் 10:1; 12:1...). இந்த நெருங்கிய வட்டத்திற்கு அப்பாற்பட்டு, இயேசுவைப் பின்பற்றுகிறவர் (8:21), முதன்மையாகத் திருப்பணிக்கென இயேசு அனுப்பிய எழுபத்து இரண்டு பேரும் (லூக் 10:1) இப்பெயரைப் பெறுகின்றனர். இச்சீடர்கள் சந்தேகத்திற்கிடமின்றி எண்ணற்றவர்களாயிருந்தாலும் (லூக் 6:17; 19:37; யோவா 6:60), பலர் இயேசுவைவிட்டு அகன்று போயினர் (யோவா 6:66). தலைவராக உருவாவது போன்று ஒருவரும் நடிக்க முடியாது. ஒருவர் சீடர்களை உருவாக்குகிறாரெனில் (மத் 28:19; அ.ப. 14:21-22) அது தனக்காக இல்லாமல் கிறிஸ்துவிற்காகவே இருக்க வேண்டும். இவ்வாறு, அப்போஸ்தலர் பணியின் ஆறாம் அதிகாரம்முதல் ''சீடன்'' என்னும் எளிய பட்டப்பெயர், ஒருவன் தனது தொடக்க வாழ்வில் இயேசுவை அறிந்திருந்தாலும் இல்லாவிட்டாலும், சிறிது சிறிதாக ஒவ்வொரு விசுவாசியையும் குறிக்கப் பயன்படுகிறது (அ.ப. 6:1-2; 9:10-26...). இந்நோக்கில் விசுவாசிகள் பன்னிருவரைப் போன்றே இருக்கின்றனர் (யோவா 2:11; 8:31; 20:29).

*2. **பண்புகள்:-*** தமது காலத்து யூத வல்லுநர்களுடனான வெளிப்படையான ஒப்பீடுகள் எவ்வாறிருந்தாலும், தமது சீடர்களுக்கென இயேசு தனிப்பட்ட தேவைகளைக் குறிப்பிடுகின்றார்.

***அ. அழைத்தல்:-*** இயேசுவின் சீடர்களாவதற்கு அறிவுத்திறனோ, ஒழுக்கத் தகுதிகளோ முக்கியமானவையல்ல. ஆனால் முக்கியமாக இருக்க வேண்டியது இயேசுவிடமிருந்தும் (மாற் 1:17-20; யோவா 1:38-50), அவருக்குப் பின்னணியில், இயேசுவிற்கு அவரது சீடர்களையும் அளிக்கின்ற தந்தையிடமிருந்தும் (யோவா 6:39; 10:29; 17:6. 12) வருகின்ற தொடக்க முயற்சியாகிய அழைப்பாகும்.

***ஆ) கிறிஸ்துவுடனான தனிப்பட்ட*** நெருக்***கம்:*** இயேசுவின் சீடனாவதற்கு உயர்ந்த திறமைமிக்க மனிதனாக இருப்பது அவசியமானதல்ல. உண்மையில் சீடனையும் தலைவனையும் இணைக்கின்ற உறவானது தனிப்பட்ட விதத்திலோ, முதன்மையான விதத்திலோ அறிவுத்திறன் அமைப்பைச் சார்ந்ததல்ல. ''என்னைப் பின்பற்றிவாரும்'' என்று அவர் சீடர்களிடம் கூறுகிறார். நற்செய்தி நூல்களில் ''பின்பற்றி வருதல்'' என்ற சொல்லானது எப்போதுமே இயேசுவினுடனான நெருக்கத்தையே குறிப்பிடுகின்றது (மத் 8:19..). இயேசுவைப் பின்பற்றுதல் என்பது பழமையுடனான உறவைத் துண்டிப்பதாகும்.

சலுகைக்குரிய சீடர்களெனில் பிறஉறவை முழுமையாக முறித்துக் கொள்வதாகும். இயேசுவைப் பின்பற்றுதல் என்பது அவரைப்போல நடப்பது, அவரது படிப்பினைகளுக்குச் செவிமடுப்பது, மற்றும் மீட்பரின் வாழ்வைப் போலத் தனது வாழ்வையும் அமைத்துக் கொள்வதாகும் (மாற் *8:34-35; 10:21. 42-45*; யோவா *12:26*). யூத வல்லுநர்களுடைய சீடர்கள் சட்ட ஒழுங்கில் கற்பிக்கப்பட்டு, தங்களது தலைவர்களிடமிருந்து விலகித் தாங்களாகவே போதிக்கக்கூடியவர்களாக இருந்தனர். இவர்களிடமிருந்து இயேசுவின் சீடர்கள் மாறுபட்டவர்களாக இருந்தனர். இயேசுவின் சீடர் கோட்பாட்டிற்காக இல்லாமல், ஒரு மனிதருக்குக் கட்டுப்பட்டவர். இனிமேல், தந்தை மற்றும் தாயைவிட உயரியவராக உள்ள அவரைவிட்டு அவன் பிரிந்து செல்ல முடியாது (மத் *10:37*; லூக் *14:25-26*).

**இ. விதியும் தகுதியும்:** எனவே, இயேசுவின் சீடன் தனது தலைவருடைய விதியிலேயே பங்கு பெறுமாறு அழைக்கப்படுகிறான். அவரது சிலுவையைச் சுமந்து (மாற் *8:34*), அவரது கிண்ணத்தில் பருகி (மாற் *10:38-39*), இறுதியாக அவரிடமிருந்து அரசைப்பெறவேண்டும் (மத் *19:28-29*; லூக் *22:28*தொ; யோவா *14:3*). எனவே இக்காலம் முதல், ''என் சீடன் என்பதற்காக இவனுக்கு ஒரு கிண்ணம் தண்ணீர் கொடுப்பவனும் கைம்மாறு பெறாமல் போகான்'' (மத் *10:42*). மற்றொரு புறத்தே, ''இச்சிறியோரில் ஒருவனுக்கு இடராக இருப்பது'' பெரும் பாவமாகும் (மாற் *9:42*).

**3. இயேசுவின் சீடர்களும் இறைவனின் சீடர்களும்:-**

இறைவனே தனது மகனின் மூலமாக மனிதரிடம் பேசுவதன் காரணமாகவே, இயேசுவின் சீடர்கள் யூத வல்லுநர்களுடைய சீடர்களினின்று வேறுபடுத்தப்படுகின்றனர். வல்லுநர்கள் சாதாரண மனிதப் பாரம்பரியங்களையே, சில நேரங்களில் இறைவனுடைய வார்த்தையையே வெறுமையாக்குகின்ற பாரம்பரியங்களையே அளித்துச் செல்கின்றனர் (மாற் *7:1* தொ). இயேசு தனது சீடர்களின் ஆன்மாக்களுக்கு அமைதியை வாக்களிக்கின்ற இறைஞானத்தின் மனித அவதாரமாக உள்ளார் (மத் *11:29*). இயேசு பேசும்போது, பழைய ஏற்பாட்டின் இறைவாக்கு நிறைவேற்றப்படுகிறது. அவர்கள் செவிமடுத்துக் கேட்பது இறைவனையே. இவ்வாறு அனைவரும் ''இறைவனின் சீடர்களாக'' உருவாக முடியும் (யோவா *6:45*).

## சீட்டுப்போடுதல் (LOTS)

**I. பழைய ஏற்பாடு:**

பண்டைய உலகில் சீட்டுப்போடும் தேர்வு முறையானது, தரையில் சீட்டுகளைக் குலுக்கிப் போட்டு எடுத்தல் அல்லது கொள்கலத்தில் இடப்பட்ட சீட்டுகளிலிருந்து எடுத்தல் என்ற இரு வகைகளில் நடைபெற்றது (எஸ்த *3:7*; யோவே *3:3*; யோனா *7:7*; நாகூ *3:10*). பழைய ஏற்பாட்டில் இந்தக் குலுக்குத் தேர்வுமுறை கடைப்பிடிக்கப்பட்டதற்கான சான்றுகள் பல உள்ளன. புதிதாகக் கைப்பற்றப்பட்ட நிலங்களைக் குலமரபுக் குழுக்களுக்குப் பாகம் பிரித்து அளிக்கவும் (எண் *26:55*; யோசு *14:42*) பாவப்பரிகாரப் பலியில், தகுதியான வெள்ளாடு எது என்று கண்டுபிடிக்கவும் (லேவி *10:7-10*) இத்தகைய முறை கடைப்பிடிக்கப்பட்டது.

இம்முறை கொண்டு சில சமயங்களில் அரசியல், தொழிலாளர் பிரச்சனைகளுக்குத் தீர்வு கண்டனர். இஸ்ராயேலின் முதல் அரசனும் இத்தகைய முறையிலேயே தேர்ந்தெடுக்கப்பட்டார் (1 சாமு *10;20-21*). ஆலயத்தில் பணிபுரிந்த குருக்கள், பாடகர்கள், வாயிற்காப்போர் போன்றவர்களும் இதே முறையில்தான் வேலையிலமர்த்தப்பட்டனர் (1 நாள் *24:5; 25:8; 26:13*). கோயிலுக்கு மரம் அளித்தல், எருசலேமில் மறுமுறை குடியேற்றம் அமைத்தல் முதலான அவசர காலத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும் (நெகே *10:34*), வலிமைமிக்க போட்டியாளர்களிடையேயான பிளவுகளைத் தீர்த்துவைக்கவும் இதேமுறை பயன்படுத்தப்பட்டது (பழ *18:18*).

இந்தச் சீட்டுப்போடும் தேர்வு முறை, மாயவித்தையாகக் கருதப்படவில்லை *(யோசு 18:6)*. ஏனென்றால், கடவுளின் பிர சன்னத்தை உணர்ந்து அவர் முன்னேதான் சீட்டுகள் குலுக்கிப் போடப்பட்டன. உப ஆகமத்தில், பலவிதமான பில்லிசூனிய பழக்கங்கள் கண்டிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் இந்தச் சீட்டுப் போடும் முறை இடம் பெறவில்லை *(உப 18:10-12)*. பழ மொழி ஆகமத்தில் ''மடியிலுள்ள திருவுளச் சீட்டை ஒருவன் குலுக்கிப் போடலாம். ஆனால் திருவுளத் தீர்ப்பை வெளிப்படுத்து பவர் ஆண்டவரே'' *(பழ 16:33)* என்று கூறப்பட்டுள்ளது.

'சீட்டுக் குலுக்கல்' என்ற இந்தச் சொல், யோசுவா ஆகமத்தில்தான் முதன் முதலில் பயன்படுத்தப்பட்டுள்ளது *(யோசு 17:14)*. இதில் நிலத்தினைப் பங்கீடு செய்வதற்காக இச்சொல் பயன்படுத்தப்பட்டது. ஆனால் பின்னர், பரம்பரை நிலச்சொத்துக்களைக் குறிப்பிடவும், முடிவுகளை வெளிப்படுத் தும் முறையிலும் இந்தச் சொல் பயன்படுத் தப்பட்டுள்ளது *(சங் 16:5-6; எசா 17:14; எரே 13:25; தானி 12:13)*. பண்டைய இஸ்ராயே லில் இருந்த குலுக்கல் முறையின் அமைப் பையும் தன்மையையும் நாம் அறிய முடிய வில்லை.

**II. ஊரிம் தும்மிம்**

பழைய ஏற்பாட்டில் பின்பற்றப்பட்ட முறைகளில் இது மிக முக்கியமானது. குறிப் பிட்ட ஒரு பிரச்சனைக்குத் தீர்வு காண்பதற் காக 'ஆம்', 'இல்லை' என்று எழுதப்பட்ட அல்லது இவற்றின் பொருளை விளக்கும் அடையாளங்களைக் கொண்ட இரு சிறு பொருட்களைப் பயன்படுத்தினர். இவை, உலோகம் அல்லது கல்லாலான சிறிய பொருட்கள். இவற்றில் அடையாளங்கள் அமைக்கப்பட்டிருந்தன *(யாத் 28:16; 29:5; லேவி 8:8)*.

இந்த முறையில் நடைபெற்ற முதல் விவி லிய நிகழ்ச்சியாகத் தாவீதின் நிகழ்ச்சி குறிப் பிடப்பட்டுள்ளது *(1 சாமு 23:9-12; 30:7-8)*. பொதுவாக, எதிர்மறையான பதில் கிடைக்க வில்லை என்றாலும் இரண்டு நிகழ்ச்சிகள் எதிர்மறையான, பதிலைப் பெற்றவனவா கக் குறிப்பிடப்பட்டுள்ளன *(1 சாமு 14:36-37; 28:6)*. இத்தகைய முறைக்குப் பல விவிலியக் குறிப்புகள் உள்ளன: *1 சாமு 14:18.41; 10:22-23; 23:2-3; 2 சாமு 2:1; 5:19. 23-24; நீதி 20:27; 1:1-2; 20:23; யாத் 28.30;* லேவி *8:8;* உப *33:8*. இன்னும் பல உள்ளன.

**III. புதிய ஏற்பாட்டில்:**

பண்டைய யூத, புறச் சமயங்களிலும் இறை வனின் திருவுளத்தை அறிவதற்காகச் சீட்டுக் குலுக்கும் முறை பின்பற்றப்பட்டது. கிறிஸ் தவத்திலும் இந்த முறை ஓரளவிற்கு இருந் தது. கடவுளால் நமக்கெனக் குறிக்கப்பட்ட வற்றையே குலுக்கல் முடிவு அறிவிக்கும் என்ற நம்பிக்கையில்தான், நமது இலக்கியத் தில் இந்தப் பழக்கம் குறிப்பிடப்பட்டுள் ளது. எனவே கடவுளின் திருவுளத்தை அறி தல் என்பது, கடவுள் நமக்காகக் குறிப்பிட் டுள்ளது எது என்பதை அறிவதேயாகும். இந்தத் திருவுளம், நிலம் போன்ற தொட்டு உணரக்கூடிய பொருட்களாகவோ, செயலா கவோ, பணியாகவோ, அலுவலாகவோ அல்லது மீட்பின் முழுமையில் பங்கு கொள் ளுதலாகவோ அமையலாம். இதில் முக்கிய கருத்து என்னவென்றால் குலுக்கு முறையில் எடுக்கப்படும் முடிவு, கடவுளிடமிருந்தே வருகின்றது என்ற நம்பிக்கைதான். கடவு ளின் செயலினைப் புகழ்வதற்காக, புதிய ஏற்பாட்டில் மனிதனுடைய பங்கு சற்றுக் குறைவாகவே விளக்கப்பட்டுள்ளது.

**IV. குலுக்கல்முறை:**

பலவகை நிறங்களை அல்லது அடை யாளங்களைக் கொண்ட கற்களை ஒரு கலத்தில் வைத்தார்கள். பின்னர், அவற்றில் ஒன்று தானாகக் குதித்து வெளியே விழும் வரை நன்கு குலுக்கினார்கள். கடவுளே இந்த முடிவை அளித்தார் என்பதைத் தெளி வாக்கவே இப்படிச் செய்தனர். மத்தியா தேர்ந் தெடுக்கப்பட்டதும் இவ்வாறுதான் *(அ.ப. 1:26)*. இயேசு, 12 அப்போஸ்தலர்களைத் தேர்ந்து கொண்டது போலவே மத்தியாவை

யும் தேர்ந்து கொண்டார். யூதாசு தனது உரிமை வாழ்வை இழந்த பின்னர் அந்த இடத்தில் மத்தியா நியமிக்கப்பட்டார். இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் இவ்வகைப் பழக்கம் இருந்ததாக அப்போஸ்தலர் பணியில் குறிப்பு இல்லை. ஏனென்றால் பரிசுத்த ஆவி வருகை நிகழ்ச்சிக்குப் பின்னர், இறைவனின் திருவுளம், தூய ஆவியின் வழியாகவே அருளப்பட்டது என்று புனித லூக்கா கூறியுள்ளார்.

இயேசு இறந்தபின்னர், படைவீரர்கள் இயேசுவின் ஆடையை எடுத்துக் கொள்வதற்காகச் சீட்டுப் போட்டனர். இது இயேசுவை மனிதர்முன் ஏளனப்படுத்துவதாக அமைந்தது (மாற் 15:24=மத் 27:35=லூக் 23:34=யோவா 19:24). இங்குச் சீட்டுப்போடு தலை நிர்ணயிப்பவரையே சீட்டுப்போட்டு ஒழித்துக்கட்டுதலின் வழியாக இறைவனின் உரிமையை அபகரித்துக்கொள்ள மனிதன் துணிகிறான்.

**சீதபேதி** (DYSENTRY)

பெருங்குடல் புண்ணான வலிமிகுந்த நோய்; வயிற்றுக்கடுப்புடன் இரத்தமும் மலமும் வெளியேறும் (அ.ப. 28:8). கிருமிகளால் சீதபேதிகள் சாதாரணமாக வருபவை; இது கடுமையான வலியுள்ளதாகவோ, தீராத வியாதியாகவோ தொற்று நோயாகவோ அவ்வப்போது வருவதாகவோ இருக்கும்.

**சீதே** (SIDE)

இது பம்பிலியாக் கரையோரம் கடலில் பாய்ந்துள்ள நிலமுனைக் கோடியின் மீது அமைந்துள்ள துறைமுகம். இது சிசிலிய கடற்கொள்ளையர்களுக்கு முக்கியமான இடம். எஸ்கிஅடாலிய்யாவில் அழிவுற்ற பகுதிகளாக இது தென்படுகின்றது. இதில் இரண்டு துறைமுகங்கள் இருந்தன. மேலும் கொள்ளையடிக்கப்பட்ட பொருட்களைச் சேர்த்துவைப்பதற்கு அடைக்கலம் தரக்கூடிய இடமாகவும் இருந்தது. சீரியாவின் மூன்றாம் மகா அந்தியோக்குக்கும் ரோடிசியர்களுக்கும் கடற்போர் நிகழ்வதற்குத் தகுந்த இடமாக இருந்தது. அங்கு, சீதேயில் இருந்து வந்த கப்பல்களும், அராடுஸ்சில் இருந்த வந்த கப்பல்களும் அந்தியோக்குவின் இடப் பக்கப் படையைச் சார்ந்திருந்தன. இது சைமியன் என்பவர்களுக்குக் காலனியாக இருந்தது. மேலும் உரோமைப் பேரரசின் ஆளுநர் கி.மு. 139-இல் யூதர்களை நன்கு உபசரிக்குமாறும், நாடுகடத்தப்பட்ட யூதர்களைச் சீமோன் மக்கபேயுவிடம் திருப்பி அனுப்புமாறும், எழுதிய கடிதத்தில் இதுவும் ஓர் இடமாகும் (1 மக் 14:23). ஏழாம் அந்தியோக்கு இங்குதான் வளர்க்கப்பட்டார். இங்குப் பல நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

**சீதோன்** (SIDON - மீன் பிடிக்கிற)

இது பெய்ரூட்டுக்குத் தெற்கில் 45 கி.மீ. தொலைவிலும், தீர் நகருக்கு வடக்கில் 40 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ள இக்காலச் சயிதா இருக்கும் இடத்தில் அமைந்திருந்த பெனிசிய நகர-நாடாகும். இந்த இடம் இன்னும் அகழ்வாய்வுக்கு உட்படுத்தப்படவில்லை. மத்திய தரைக்கடலுக்குள் புகும் ஒரு சிறிய குன்றின்மேல் அமைந்திருந்தது. இரண்டு கப்பல் துறைமுகங்களைக் கொண்டது. இதைச்சுற்றிப் பல சிறு தீவுகள் உள்ளன. நகருக்கு அப்பால் உள்நாட்டிலுள்ள சமவெளி விவசாயத்திற்கேற்ற செழிப்புமிக்கதாகும். ஆயினும் நகர மக்கள் தங்கள் வாழ்க்கைக்குக் கடல் வியாபாரத்தையே நம்பியிருந்தனர்.

சீதோன் அமர்னா ஏடுகளில் குறிக்கப்பட்டுள்ளது. இதுகடலுக்குள் கப்பல் செலுத்திய முதல் பெனிசிய நகரமாகும். கைக்சோசுகளை வெளியேற்றியபின் எகிப்திய 18-ஆவது 19-ஆவது அரச மரபுகள் தங்கள் ஆதிக்கத்தை வலியுறுத்தியபோது, சீதோன் எகிப்தியரின் ஆளுகைக்குட்பட்டது. கி.மு. 1200-ஐ ஒட்டி கடல் மக்களால் பெனிசிய வாழ்வு சிதறடிக்கப்படும் வரை, சீதோன் முதன்மையான பெனிசிய நகரமாய்த் திகழ்ந்தது. அதற்குப் பின் தீர் நகரம் முதன்மைபெற்றது. சீதோன் மீண்டும் கட்டப்பட்டு முக்கிய நகரங்களில் ஒன்றாகத் திகழ்ந்தது. சீரிய, பாலஸ்தீனத்தி

லுள்ள பிற சிறிய நாடுகளைப்போல் சீதோனின் வரலாறு பேரரசுகளின் படையெடுப்பாலும் அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய கப்பத்தாலும் பெரிதும் பாதிக்கப்பட்டது. இது அசீரியாவின் முதலாம் திகிலத்து -பிலேசருக்கும் (கி.மு. 1112-1074), இரண்டாம் அசூர் பானிப்பாலுக்கும் (883-859) மூன்றாம் சல்மனேசருக்கும் (858-824), மூன்றாம் அதாது - நிராரிக்கும் (810-783) கப்பம் கட்டியது. இந்நகர் சனகெரிபுக்கு (705-671) எதிராகக் கிளர்ச்சி செய்தது. அதற்குப் பதிலடியாக அவர் இந்நகரைக் கைப்பற்றி இதன் அரசனை விரட்டியடித்தார். இந்நகர் கி.மு. 677-இல் ஏசர்கத்தோனால் (680-669) அழிக்கப்பட்டது. ஆனால் எகிப்தியர் ஆளுகையில் 7-ஆவது நூற்றாண்டு முடிவில் இந்நகர் எழுச்சியுற்றது. விரைவில் பாபிலோனியப் பேரரசன் நெபுகத்னேசரால் கைப்பற்றப்பட்டது. பாரசீகர் காலத்தில் ஓரளவு தன்னாட்சி கொண்டிருந்தது. மூன்றாம் அர்த்தக்சஸ்தாவுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ததன் விளைவாகக் கி.மு. 351-இல் நகர் எரியூட்டப்பெற்றது. பல சீதோனியர் உயிரிழந்தனர். கி.மு. 332-இல் பெரிய அலக்சாந்தரிடம் இந்நகர் சரண் அடைந்தது. செலூக்கிய, உரோமையர் காலத்தில் நகர் ஒரு வணிக மையமாகத் திகழ்ந்தது. சீதோன் சாயம் செய்யும் தொழிலுக்குப் புகழ் பெற்றிருந்தது. உலோகத் தொழிலும், நெய்தலும், கிரேக்கர் காலத்தில் கண்ணாடி செய்தலும் இங்குச் சிறப்புப் பெற்றிருந்தன.

நாடுகளின் பட்டியலில் சீதோன் கானானின்தலை மகனாகும் (ஆதி 10:15; 1 நாள் 1:13). இது கி.மு. இரண்டாயிரமாண்டுகளில் சீதோனின் தலைமைக்குச் சான்று பகர்கிறது. இது எல்லைக் குறிப்பாக அடிக்கடி கூறப்படுகிறது. கானான் நாட்டு எல்லையில் (ஆதி 10:15) செபுலோனின் விலாப்புறம் (49:13). ''பெரிய சீதோனில்'' ஆசேரின் எல்லை (யோசு 19:28). தாவீதின் அரசின் எல்லை (2 சாமு 24:6). வடகானானிய அரசர்களைச் சீதோன்வரை யோசுவா விரட்டியடித்தார் (யோசு 11:8). இலாயிசு, சாரபாத்து ஆகியவை சீதோனின் துணை நகரங்களாக இருந்தன (நீதி 18:28; 1 அர 17:9). இஸ்ராயேலர் குடியேறியபின்பும் சீதோன் கானானிய நகரமாகவே இருந்தது. (நீதி 1:31). பழைய ஏற்பாட்டில் சீதோன் அடிக்கடி தீரோடு சேர்த்துக் கூறப்படுகிறது. இது இரண்டிற்குமிடையேயுள்ள நெருங்கிய உறவைச் சுட்டுகிறது. அச்சுறுத்தும் இறைவாக்குகளில் சீதோன் தனியாகவோ பெரும்பாலும் தீரோடு சேர்த்தோ குறிப்பிடப்படுகிறது (எசா 23:2.4.12; எரே 47:4; எசே 28:20-23; செக் 9:2; யோவே 4:4). யாவேயின் கோபத்தின் கிண்ணத்தைப் பருகவேண்டிய நகரங்கள், அரசுகளில் ஒன்று சீதோன் ஆகும் (எரே 25:22). நெபுகத்னேசருக்கு எதிராகக் கிளர்ச்சியில் சேர்ந்து கொள்ளுமாறு செதேக்கியாவுக்குத் தூதுவர்களை அனுப்பிய நாடுகளில் சீதோனும் அடங்கும் (27:3). தீர் என்னும் உருவகக் கப்பல் சீதோனிய மாலுமிகளைக் கொண்டதாகும் (எசே 27:8). மக்கபேயர் காலத்திய போர்களில் சீதோனும் மற்ற நகரங்களும் கலிலேயா யூதர்களுக்கு எதிராகத் தாக்குதல் நடத்தின (1 மக் 5:15). பழைய ஏற்பாட்டில் பொதுவாகப் பெனிசியர்கள் சீதோனியர் என்றழைக்கப்படுகின்றனர் (உப 8:9; நீதி 10:21; 1 அர 5:6).

இயேசு தீர், சீதோன் பகுதிகளுக்குச் சென்றார் (மத் 15:21; மாற் 7:24.31). இது யூதப் பகுதிக்குப் புறம்பே இயேசு சென்றார் என்று சுட்டவில்லை. யூத, பெனிசியப் பகுதிகளின் எல்லையில் உலவினார் என்பதாகும். இயேசுவுக்குச் செவிமடுக்கவந்த தீர், சீதோன் மக்கள், அங்கு வாழ்ந்த யூதர்களே (மாற் 3:8; லூக் 6:17). கலிலேயா நகர்களில் செய்யப்பட்ட இயேசுவின் பணி தீர், சீதோனில் செய்யப்பட்டிருந்தால், அவர்கள் மனந்திரும்பியிருப்பர். ஆகவே அவர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு அளிக்கப்படும் (மத் 11:21 தொ; லூக் 10:13 தொ). அ.ப. 12;20 சீதோனிய மக்களுக்கும் ஏரோது அகிரிப்பாவுக்கும் இடையில் நடந்த சண்டையைச் சுட்டுகிறது. பெனிசிய நகரங்கள் அவரது ஆட்சிக்குட்பட்டிருந்தன. பவுல் உரோமைக்குப் பயணம் செய்தபோது அவரது கப்பல் தங்கிய முதல் இடம் சீதோன் ஆகும் (அ.ப. 27:3).

**சீபா** (ZIBA - செடி, இல்லை)

சவுல் மன்னனின் வீட்டு வேலைக்காரருள் இவரும் ஒருவர். சவுல் இறந்தபின் தாவீது மன்னர் சவுலின் வீட்டாரில் எஞ்சியவருக்கு இரக்கம் காட்டநினைத்துச் சீபாவை விசாரிக்க, சீபாவும் யோனத்தானின் மகன் மெபிபொசேத்து என்னும் முடவர் இருப்பதாகக் கூறினார். தாவீது மெபிபொசேத்தை அழைத்துச் சவுலின் சொத்தை அவருக்கு அளித்து, அந்தச் சொத்தையும் அவரையும் கண்காணிக்க சீபாவை நியமித்தார் (2 சாமு 9:2-12).

அப்சலோம் கலகம் செய்தபோது தாவீது எருசலேமை விட்டுச் சென்றார். அப்போது இந்தச் சீபா உணவுப்பொருட்களோடு தாவீதைச் சந்தித்து, மெபிபொசேத்து தாவீதிற்குத் துரோகம் செய்து விட்டாரெனக் கூறினார். எனவே தாவீது மெபிபொசேத்தின் உடைமைகளைச் சீபாவுக்குத் தருவதாக வாக்களித்தார் (2 சாமு 16:1-4). தாவீது வெற்றி பெற்றுத் திரும்புகையில் சீபா அவரைச் சந்தித்தார் (2 சாமு 19:18). மெபிபொசேத்து, சீபா கூறிய பழி உண்மையல்ல என்றும் தனக்குத் தாவீதைப் பின்பற்றி வர கழுதைகள் தரப்படவில்லையென்றும் கூறினார். ஆகவே தாவீது சொத்தைச் சீபாவும், மெபிபொசேத்தும் பாதிப்பாதி எடுத்துக் கொள்ளும்படி கட்டளையிட்டார் (19:24-29).

**சீபு** (ZIPH - ஆற்றொழுக்கான) - ஆள்

1. யூதா குலத்தைச் சேர்ந்த ஒரு காலேபியர் (1 நாள் 2:42).

2. எகலலேலின் மூத்தமகன். யூதா கோத்திரத்தில் ஒரு குடும்பம் அல்லது குலத்தின் பெயராகும் (1 நாள் 4:16).

**சீபு** (ZIPH - ஆற்றொழுக்கான) - இடம்

1. நெகேபு பகுதியிலுள்ள யூதாவின் நகரங்களில் ஒன்று (யோசு 15:24; காண்க 1 நாள் 2:47; 4:16). இது சாக்கடலின் தென்முனைக்கு மேற்கில் 40-50 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலக் கிர்பெத்து எஸ் - செயிபே ஆக இருக்கலாம்.

2. மாவோன் மலைநாட்டுப் பகுதியிலுள்ள யூதாவின் நகரங்களில் ஒன்று (யோசு 15:55). கெபிரோனின் தென்கிழக்கில் சுமார் 6.5 கி.மீ. தொலைவிலுள்ள சீபு என்ற ஊரைப்பற்றி யுசேபியு கூறுகின்றார். சீபு பாலைவனத்தில் தாவீது, சவுலுக்குப் பயந்து தங்கி இருந்தார் (1 சாமு 23:14-15. 19;24:26; காண்க: சங் 54:2). இதே இடத்தில்தான் தாவீது சவுலின் உயிரை எடுக்காமல், தண்ணீர்ச் சாடியையும், ஈட்டியையும் எடுத்துக் கொண்டார் (1 சாமு 26:1 தொ). நாடு பிளவுபட்டபின் இந்நகரை ரெகபயாம் பலப்படுத்தினார் (2 நாள் 11:8).

**சீமோன்** (SHIMON - வீணான, கழிவுப் பொருள்)

யூதாவின் குலத்தில் ஒரு குடும்பம் (1 நாள் 4:20).

**சீமோன்** (SIMON - இறைவன் கேட்டருளினார்)

1. இரண்டாம் சீமோன் என்ற பெரிய குரு. இரண்டாம் ஒனியா என்பவரின் மகன்; மூன்றாம் ஒனியா மற்றும் யாசோன் என்பவர்களின் தந்தை. யூதேயா செலூக்கியர்களின் கீழ் இருந்தபோது யூதர்களின் தலைமைக் குரு. சீரா 50:1-21 பகுதியில் ஆலயத்தின் சீர்திருத்தத்திலும், ஆலய வழிபாட்டிலும் இவரது செயல்கள் போற்றப்பட்டுள்ளன. சுமார் கி.மு. 198-இல் இவர் இறந்திருக்க வேண்டும்.

2. சீமோன் மக்கபேயர் (1 மக் 2:3). காண்க: சீமோன் மக்கபேயர்.

3. ஓர் ஆலய மேற்பார்வையாளர். மூன்றாம் ஒனியா என்ற பெரிய குருவோடு கருத்துவேறுபாடு கொண்டு, எருசலேம் ஆலயக் கருவூலத்தில் வைத்திருந்த தனிநிதி பற்றி செலூக்கிய அரச அதிகாரிகளிடம் தெரிவித்தார் (2 மக் 3:4-6). இந்நிதியை அபகரித்துவர ஒரு செலூக்கியத் தூதுவன் அனுப்பப்பட்டார். இறைவன், ''தமது மாட்சியின் அடையாளத்தை வெளிக்காட்ட'', இத்தீச்செயல் தடுத்து நிறுத்தப்பட்டது

*(3:7-40)*. பிறகு சீமோன் தான் செய்த செயல்களுக்கே ஓனியாவைக் குற்றம் சாட்ட முயற்சித்தார் *(4:1-6)*.

4. இயேசுவின் சகோதரர்களில் ஒருவராகக் கருதப்படுபவர் (மாற் *6:3*; மத் *13:55*). இயேசுவின் உறவினர் என்பதுமேல். இவரை ஒரு சிலர் கிளோப்பாவின் மகன் சிமியோன் என்று கருதுகின்றனர். இவர் யாக்கோபுக்குப் பின் எருசலேம் திருச்சபையின் தலைமைப் பொறுப்பை ஏற்றார் என்று கெசிப்பசு கூறுகின்றார்.

5. அப்போஸ்தலரான பேதுருவின் எபிரேயப் பெயரின் ஒரு வடிவம் (மத் *16:7* காண்க: பேதுரு.

6. பெத்தானியாவில் வாழ்ந்த இவர் இயேசுவை விருந்திற்கழைத்ததாக மாற்கு *14:3-9*-இல் வருகிறது. இவரது வீட்டில் இயேசு மரியாவால் தைலம் பூசப்பட்டார். மரியாள், மார்த்தாள் இலாசர் இவர்களின் தந்தையாகவோ, மார்த்தாளின் கணவனாகவோ இருந்திருக்கலாம். இவரைப் பற்றித் தொழுநோயாளி சீமோன் என்று வருவதால் ஒருவேளை முன்னர்த் தொழுநோயாளியாயிருந்து இயேசுவால் குணம் பெற்றவராயிருக்கலாம். இந்நிகழ்ச்சியும் யோவா *12:1-8*-இல் வருவதும் ஒரே நிகழ்ச்சியாக இருக்கலாம்.

7. இயேசுவின் சிலுவையைக் கொல்கொதாவுக்குச் சுமந்து செல்லக் கட்டாயப்படுத்தப்பட்டவர். இவர் வட ஆப்பிரிக்காவிலுள்ள சீரேனைக்கா மாவட்ட தலைநகரான சீரேனேயைச் சேர்ந்தவர் (மாற் *15:21*; மத் *27:32*; லூக் *23:26*). இவர் வடஆப்பிரிக்காவில் வசித்தாலும் நீக்ரோவாக இருக்கமுடியாது. ஏனெனில் இயேசுவின் காலத்தில் யூதர்கள் பலரும் அப்பகுதிகளில் குடியேறி இருந்தனர். ஒருவேளை பாஸ்காவைக் கொண்டாட எருசலேமுக்கு வந்த யூதர்களில் ஒருவராயிருக்கலாம். இவருக்கு அலக்சாந்தர், ரூபு என்ற புதல்வர்கள் இருந்தனர் (மாற் *15:21*). இவர்கள் ஆதித்திருச்சபையால் நன்கு அறியப்பட்டவர்களாக இருக்கலாம்.

8. இயேசுவின் அப்போஸ்தலர்களில் ஒருவர். இவர் தீவிரவாதி என்றழைக்கப்படுகிறார் (லூக் *6:15*). மாற் *3:18*; மத் *10:4*-பகுதிகளில் கானானேயனான சீமோன் என்று அழைக்கப்படுகிறார். கானானேயன் என்றால் கானாவிலிருந்து வந்தவர் என்றோ, கானானியர் என்ற பொருளோ அல்ல. இந்த அரமேயச் சொல் தீவிரத்தன்மையையும் ஆர்வத்தையும் குறிக்கும். ஒரு வேளை, தீவிரவாதிகள் என்றழைக்கப்பட்ட உரோமை எதிர்ப்பாளர்கள் குழுவில் முன்பு இவர் ஒருவராக இருந்திருக்க வேண்டும். புதிய ஏற்பாட்டில் இவரைப்பற்றிய வேறு குறிப்பு இல்லை. இவரைச் சிலர் கிளோப்பாவின் மகன் சிமியோனாகக் கருதுகின்றனர். இவர் யாக்கோபுக்குப்பின் எருசலேம் திருச்சபைக்குத் தலைமை தாங்கியதாகக் கெசிப்பசு கூறுகிறார்.

9. இயேசுவை விருந்துக்கழைத்த பரிசேயர் (லூக் *7:36-50*). இவர் வாழ்ந்த இடம் கலிலேயாவில் அதுவும் கப்பர்நகூமில் இருப்பதுபோல் தோன்றினாலும் அது சுட்டிக்காட்டப்படவில்லை. இயேசு இறைவாக்கினர் என்று கருதி *(7:39)* அவரோடு நீண்ட நேரம் உரையாடும் நோக்கோடு அவரை விருந்துக்கு இவர் அழைத்தார். இவனது ஆசை மேற்போக்கானது என்பதை விருந்தினர்களை உபசரிக்கும் முறைகளிலிருந்து தவறியவர் என்று கூறுவதன்மூலம் ஆசிரியர் உணர்த்துகின்றார் *(7:44-46)*. இவரது இல்லத்தில்தான் ஒரு பாவியான பெண், இயேசுவுக்குத் தைலம்பூசி மன்னிப்பைப் பெற்றாள். பாவிகளிடம் இயேசு காட்டிய போக்கு சீமோனுக்கு வியப்பையும் அதிர்ச்சியையும் அளிக்கின்றது. ஏனெனில் பாவிகள் தீண்டத்தகாதவர்கள் என்பது யூதர்களின் கருத்து. இரு கடனாளிகள் உவமை மூலமாக இயேசு சீமோனைக் கண்டித்து, பெண்ணின் அன்புச் செயலைப் போற்றுகிறார்.

10. இயேசுவைக் காட்டிக்கொடுத்த யூதா இஸ்காரியோத்தின் தந்தை. இவர் சீமோன் இஸ்காரியோத்து என்று அழைக்கப்படுகிறார் (யோவா *6:71*; *13:2.26*).

*11.* அப்போஸ்தலர் பணியிலும் *(8:9-24)* பிற்காலக்கதைகளிலும் குறிக்கப்படும் சமாரிய மந்திரவாதி. காண்க: சீமோன்மாகு.

*12.* பேதுரு யோப்பாவில் தங்கியிருந்த போது தோல்பதனிடும் தொழிலைச் செய்து வந்த சீமோன் வீட்டில் தங்கியிருந்தார் *(அ.ப. 9:43; 10:6.17.32)*. இவர் கிறிஸ்தவராக இருக்க வேண்டும். ஏனெனில் தோல்பதனிடும் தொழில் இறந்த உடல்களோடு தொடர்பானது என்பதால் யூதர்கள் இதனையும் இதனைச் செய்பவர்களையும் வெறுத்தனர் *(லேவி 11:39-40)*. தோல்பதனிடுவோரைப் பரிசேயர் ஒதுக்கினாலும், கிறிஸ்தவத் தோழமை பரந்தமனதுடன் ஏற்றுக்கொண்டது.

**சீமோன் மக்கபேயர்** (SIMON MACCABEUS)

இவர் அசமோனியத் தலைவரும் யூதேயாவின் பெரிய குருவும் ஆவார் *(கி.மு. 200-136)*. இவர் மத்தத்தியாவின் ஐந்து புதல்வர்களில் இரண்டாவது புதல்வராவார். ''தாசி'' அதாவது வலுவற்றவன் என்ற பட்டப் பெயர் இவருக்கு உண்டு *(1 மக் 2:3)*. இவரது தந்தை யூதா மற்றும் யோனத்தான் ஆகிய இரு சகோதரர்களோடு சேர்ந்து, கி.மு. 168-க்குப்பின், நான்காம் அந்தியோக்கு எப்பிபானால் ஆட்சி செய்யப்பட்ட செலூக்கிய சீரியாவுக்கு எதிராக வெற்றிகரமாகச் சுதந்தரப் போர் நடத்தினார். மத்தத்தியா, தன் புதல்வர்களைப் பற்றிய சாட்சியில் *(2:49தொ)* ''இதோ உங்கள் சகோதரன் சீமோன் மிகவும் முன்மதியுள்ளவன். அவன் சொல்வதை எப்போதும் கேளுங்கள். அவன் உங்களுக்குத் தந்தைபோல் இருப்பானாக'' *(2:65)* என்று கூறுகிறார்.

கலிலேயாவிலுள்ள யூதர்களுக்கு உதவி செய்ய சீமோன் யூதாவால் அனுப்பப்பட்டார். செலூக்கியப் படைகளைப் பல சிறு சண்டைகளில் தோற்கடித்து இறுதியாகச் சீமோன் யூதர்களை அங்கிருந்து வெளியேற்றிக் கொணர்ந்தார். யூதாவுக்கு வாரிசாக யோனத்தான் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் அவருக்கு நெருங்கிய கூட்டாளியாகவும் அரசியல், போர்க்காரியங்களில் ஆலோசகராகவும் சீமோன் விளங்கினார். இருவரும் சேர்ந்து தங்கள் சகோதரன் யோவான் கொல்லப்பட்டதற்குப் பழிவாங்கினர் *(1:34-42)* பாக்கிதின் சீரியப் படைகளுக்கு நழுவித் தப்பினார். பாக்கிது பெத்-பாசியைச் சுற்றி இட்டிருந்த முற்றுகையைச் சீமோன் நீக்கினார் *(9:62-68)*. பல ஆண்டுகளுக்குப்பின் இரு சகோதரர்களும் பாக்கிதைத் தோற்கடித்து, அவரோடு உடன்படிக்கை செய்து கொண்டனர். இது செலூக்கியச் சார்புடைய யூதர்களுக்குப் பேரச்சம் அளித்தது *(9:67-73)*.

நான்காம் அந்தியோக்குவால் யோனத்தான் பெரிய குருவாக உறுதிப்படுத்தப்பட்டு, ஆளுநராக நியமிக்கப்பட்டபின், கி.மு. 147-146-இல் 2-ஆம் தெமேத்திரியு நிக்காதோருக்கு எதிராக யூதேயா போராட வேண்டியிருந்தது. இதில் சீமோன் பெத்-சூரைக் கைப்பற்றிப் பலப்படுத்தினார். திடீரென்று தாக்கி யோப்பாவைக் கைப்பற்றி மத்திய தரைக்கடலுக்கு ஒருவழியை ஏற்படுத்தினார். பிறகு எருசலேமுக்கு வடமேற்கில் அதிதாவைக் கட்டினார். எருசலேமின் பாதுகாப்பைப் பலப்படுத்தினார் *(1 மக் 12)*.

திரிபோவால் யோனத்தான் கைதியாக்கப்பட்டபின், சீமோன் யூதேயாவில் அரசியல் போர்க்காரியங்களில் தலைமை தாங்கினார் *(1 மக் 13-16)*. பிணைக் கைதியாக இருந்த யோனத்தான் மற்றும் அவரது புதல்வர்களை மீட்க, பணம் அனுப்ப வேண்டியிருந்தது. அப்படி அனுப்பியும் அவர்கள் கொல்லப்பட்டனர். யோனத்தானின் உடலைப்பெற்று மோதினில் அவருக்கு ஒரு பெரிய கல்லறையைக்கட்டினார் சீமோன். இது இன்றும் எருசலேமுக்கு அருகில் காணப்படுகிறது.

அரியணைப் போராட்டத்தில் சீமோன் 2-ஆம் தெமேத்திரியுவை ஆதரித்தார். அதற்குப் பலனாக, வரிநீக்கத்தையும் செயல் அளவில் சுதந்தரத்தையும் யூதேயாவுக்குப் பெற்றார். இஃது ஓர் அரசியல் வெற்றியாகும் *(1 மக் 13:36தொ)*. செலூக்கியக் காலக்கணிப்பில் 170-ஆம் ஆண்டாகிய இந்த ஆண்டிலிருந்து *(கி.மு. 142-141)* யூதர்கள் புதிய சகாப்

தத்தைத் தொடங்கினர். சீமோன் காசரைக் கைப்பற்றினார். எருசலேம் அரணிலிருந்து அந்நியப் படைகளை அகற்றினார். அவரது ஆட்சியில் பல தலைமுறைகளுக்குப்பின் முதல் தடவையாக நாட்டில் அமைதி நிலவியது. உரோமையரோடு அரசியல் உறவுகளைப் புதுப்பித்தார். அவர்களுடைய ஆதரவை அளிக்கும் மடல்கள் பல நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. சீமோனின் செயல்கள் வெண்கலத் தகட்டில் பொறிக்கப்பட்டன *(14:27-48)*.

2-ஆம் தெமேத்திரியு பார்த்தியர்களால் கைதியாக்கப்பட்டபின் அரியணைக்கு உரிமை கொண்டாடிய 7-ஆம் அந்தியோக்கு, யூதர்களுக்கு அளிக்கப்பட்ட சுதந்தரத்தை விரும்பவில்லை. சீமோன் அவரது உரிமைக் கோரிக்கைக்கு ஆதரவு அளித்தாலும் அந்தியோக்கு யோப்பா காசரா போன்ற நகரங்களைச் சரண் அளித்து யூதர்கள் கப்பம்கட்ட வேண்டும் என்று கோரினார். சீமோன் மறுக்கவே ஒருபடை அனுப்பப்பட்டது. அதைச் சீமோன் தோற்கடித்தார். ஆனால் அவரது மருமகனால் நயவஞ்சகமாக அவரும் அவரது புதல்வர்களும் கொல்லப்பட்டனர். தலைமைப் பதவி அவரது மகன் யோவானுக்கு மாறியது.

சீமோன் அரச பட்டத்திற்கு உரிமை கோரவில்லை. ஏனெனில் அவர் தாவீது குலத்தைச் சேராதவர். ஆதலால், மக்கள் அதற்கு ஆதரவு அளிக்க மாட்டார்கள் என்று எண்ணியிருக்கக்கூடும். அவர் ''*ஏலின் மக்களின் தலைவர்*'' என்ற பட்டத்தைப் பெற்றிருந்தார் *(14:28)*. அது போலவே பெரிய குருவின் பதவிக்கும் உரிமையுள்ளவர் அல்லர். இப்பிரச்சனை அசமோனிய ஆட்சிக் காலமுழுவதும் நீடித்தது எனலாம். ஆயினும் இப்பிரச்சனையைத் தீர்க்க ''ஓர் உண்மையான இறைவாக்கினர் தோன்றும் வரை'' *(14:41)* சீமோன் பெரிய குருவின் பதவியையும் வகித்தார்.

**சீமோன் மாகு** *(SIMON MAGUS)*

சமாரியாவில் வாழ்ந்த ஒரு மந்திரவாதி *(அ.ப.8:9-24)*. மக்கள் ''மாபெரும் சக்தி எனும் கடவுளின் வல்லமை இவனே'' என்று கருதினர். இந்தப் பட்டம் இவர் ஒரு ஞானவாதக் குழுவுக்குத் தலைவராக இருந்திருக்கலாம் என்று சுட்டுகிறது. பிலிப்பு சமாரியாவில் நற்செய்தியைப் போதித்து அருஞ்செயல்கள் செய்ததைக் கண்டு இவர் மனந்திரும்பி திருமுழுக்குப் பெற்றார். அப்போது பேதுருவையும் யோவானையும் எருசலேம் திருச்சபை சமாரியாவுக்கு அனுப்பி வைத்தது. அப்போஸ்தலர்கள் சமாரியக் கிறிஸ்தவர்கள்மேல் கைகளை விரிக்கவே அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டனர். அப்போஸ்தலர்கள் செய்தது போலவே, சீமோன் தானும் பிறருக்குப் பரிசுத்த ஆவியை அளிக்கும் வரத்தைத் தருமாறு கோரி அப்போஸ்தலர்களுக்குப் பணம் கொடுக்க முன்வந்தார். பேதுரு சீமோனைக் கடுமையாகக் கடிந்து சபித்தார். இவருடைய பெயரிலிருந்துதான், புனித காரியங்களை வியாபாரப் பொருளாக்கும் போக்கு ''சிமோனியம்'' என்ற பெயர் பெறுகிறது.

பிற்கால நூல்களில், குறிப்பாக மறைசாட்சியான யுஸ்தின் மற்றும் இரனேயு ஆகியோரின் நூல்களில் சீமோன் ஞான வாதப் பிரிவினைச் சபையின் தந்தையெனக் குறிக்கப்படுகிறார். போலிக்கிளமந்து நூல்களிலும், பேதுருவின் பணி என்ற நூலிலும் பேதுருவுக்கும் சீமோனுக்கும் இடையே நடந்த போராட்டம் பற்றிய கதைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

**சீயா, சீயாகா** *(SIA, SIAHA - கூட்டம்)*

ஓர் ஆலய ஊழியர். இவரது சந்ததியினர் பாபிலோனிய அடிமைத் தனத்திலிருந்து செருபாபேலோடு திரும்பினர் *(எஸ் 2:44; நெகே 7:47)*.

**சீயோர்** *(ZIOR - சிறிய)*

சீயோர் கெபிரோன் மலைநாட்டிலுள்ள யூதாவின் நகரங்களில் ஒன்று (யோசு. 15:54). கெபிரோனுக்கு வடக்கு வடகிழக்கில் சுமார் 8 கி.மீ. தொலைவிலுள்ள பள்ளத்தாக்கிலுள்ள ''சியிர்'' என்ற நகரம் சீயோராக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இங்

குள்ள கல்லில் குடையப்பட்ட கல்லறைகளி லிருந்து இங்கு மக்கள் வாழ்ந்ததாகத் தெரி கிறது. இங்குள்ள கல்லறைகளில் ஒன்று ஏசா வின் கல்லறையாகும் என்று பாரம்பரியம் கூறுகின்றது.

**சீயோன்** (SHION)

இசக்காரின் இனப்பகுதியிலுள்ள ஒரு நக ரம் (*யோசு 19:19*). இது இருந்ததாகப் பல இடங்கள் அடையாளம் காட்டப்படும். அவற்றில் ஒன்று தாபோர் மலைக்குத் தென் கிழக்கில் 22.5 கி.மீ. தொலைவிலுள்ள சீரிம் ஆகும்; மற்றது நாசரேத்துக்குக் கிழக்கில் 5 கி.மீ. தொலைவிலுள்ள அயுன் எஸ் - சாயின் ஆகும்.

**சீயோன்** (ZION - நடு அரண், உட்கோட்டை)

சீயோன் என்பது இஸ்ராயேல் மக்கள் எருசலேமுக்கு வருமுன் இருந்த குன்றைக் குறிக்கின்றது. இப்பெயர் 'வறண்ட நிலம்' எனப் பொருள்படும் எபிரேயச் சொல்லி லிருந்து வந்தது என்று கருதப்படுகிறது (*எசா 25:5; 32:2*). இன்றையக் கருத்தின்படி, சீயோன் என்பது 'ஆறு' அல்லது 'ஓடை' என்று பொருள்படும் சூரியர் சொல்லிலிருந்து வந்த தாகக் கருதப்படுகிறது. 'சீயோன் கோட்டை' என்பது 'கிகோன்' நீரூற்றுக்கு நேர் மேலே இருந்த எபூசியர் கோட்டையாகும்.

சீயோன் என்னும் பெயர் முதன் முதலில் தாவீது ''சீயோனின் கோட்டையைக்'' கைப் பற்றினார் என வாக்கியத்தில் கூறப்படுகிறது (*2 சாமு 5:6-10; 1 நாள் 1:49*). இச்சொற் றொடர் தனிப்பட்டதொரு கோட்டையைக் குறிக்காமல் பாதுகாக்கப்பட்ட மலை உச்சிக ளைக் குறிக்கும். ஆனால் எருசலேமின் பழைய பெயரான உர்சலிம் அரணுக்கு வெளியே இருந்த குடியிருப்புகளையும் குறிக்கும். இதே பகுதிகள் எவ்வாறு, ''தாவீ தின் நகரம்'' என்ற சொற்றொடர் ''சீயோ னுக்கு''ப் பதிலாகப் பயன்படுத்தப்பட்டது என்பதையும், அரணுக்குள் உள்ள நகரத்தைக் குறித்தது என்பதையும் விளக்குகின்றன (*1 அர 8:1; 2 நாள் 5:2*). இந்த இரண்டு பகுதிகளும் தாவீதின் நகரத்திலிருந்து உடன் படிக்கைப் பேழை புதிதாகச் சாலமோனால் எருசலேமில் கட்டப்பட்ட ஆலயத்திற்குக் கொண்டு வரப்பட்டதைப் பேசுகின்றன.

நகரிலிருந்து ஆலயத்திற்கு உடன்படிக் கைப்பேழை மாற்றப்பட்டதின் விளைவாகச் சீயோன் என்ற பெயர் ஆலயப்பகுதிக்கும் விரிவாக்கப்பட்டது. இதற்குச் சங்கீதங்கள் சான்று பகர்கின்றன. யாவே சீனாய் மலை மீது வாழ்வதாக மக்கள் கருதினர். சில பகுதிகள் அரசனைக் கடவுளோடு தொடர்பு படுத்துகின்றன (*சங் 2:6; 132:13*). ஆனால் பல சமயங்களில் யாவே மட்டுமே குறிப்பிடப் படுகின்றார் (*சங் 48:2; 74:2; 84:7; எசா 18:7*). திருப்பயணிகள் சீயோன் மலையில் ஏறி, கடவுள்முன் தங்களைப் பிரசன்னப் படுத்தினர் (*சங் 84:5*).

இறைவாக்கினர் நூல்களில், சீயோன் கட வுள் அருளின் அல்லது தண்டனையின் அடையாளமாக, அல்லது சமயத்தலைநகர மாகக் கருதப்பட்ட எருசலேமுக்குச் சமமா கப் பயன்படுத்தப்படுகின்றது (*எசா 28:10; காண்க: உரோ 9:33; 1 பேதுரு 2:6*). பல சமயங்களில் இவற்றில் காவிய இணைவுத் தன்மையைவிட வேறு எதுவும் இல்லை (*சங் 51:18; எசா 10:12; 24:23; 31:4; 40:9; யோவே 3:16; மீக் 3:10.12*). எருசலேமில் வாழ்ந்தவர்கள் அவர்களின் சுயநிறைவு இரு மாப்புக்காகச் சமாரியாவில் உள்ளவர்க ளோடு ஒப்பிடப்படுகின்றனர் (*ஆமோ 6:4*). சீயோனில் வாழ்ந்த மக்களைக் கடவுள் உற் சாகப்படுத்துகின்றார் (*எசா 10:24*). அடிமைத் தனத்தில் சென்றவர்கள் சீயோனுக்குத் திரும்பி வருவர் (*எரே 3:14*). 'சீயோன்', எருசலேமில் வாழ்ந்தவர்களுக்குப் பதிலாக ஒரு பொருட் பன்மொழியாகப் பயன்படுத் தப்பட்டது (*சங் 97:8; எசா 1:27; 33:5*). ''சீயோனின் புதல்வர்கள்'' (*சங் 149:2; புல 4:2; யோவே 2:23*) அல்லது ''சீயோன் மகளிர்'' (*எசா 3:16; 4:4; எரே 4:31; 6:2; செக் 9:9; காண்க மத் 2:5; யோவா 12:15*) ஆகிய சொற்கள் எருசலேமில் வாழ்ந்த இறைவ னின் அருள் பெற்ற அல்லது தண்டனை பெற்ற ஆண்களையும் பெண்களையும்

குறிக்கின்றது. சில சமயங்களில் ''சீயோன் மகளிர்'' என்பது ''பெண்களை'' மட்டும் குறிக்கின்றது (உ.ச.3:11; எசா 10:32; 16:1).

இறுதிக் காலத்தைப்பற்றிக் கூறும் நூல்களும் வெளிப்பாட்டு நூல்களும் மேற்கூறிய சமயப் பொருளிலேயே சீயோன் என்ற பெயரைப் பயன்படுத்துகின்றன. மெசியா சமூகத்தின் மாட்சிமை சீயோன் மலைமீது நிகழும். மெசியா, காலமுடிவில் அங்குத் தோன்றுவார். இங்கு, 'சீயோன்' ''வானக எருசலேமோடு'' ஒன்றிப்போகிறது (எசா 60:14; எபி 12:22; திருவெளி 14:1).

கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் 'சீயோன்' என்பது எருசலேம் இருந்த தென்மேற்கிலுள்ள குன்றிற்குக் கிறிஸ்தவர்களால் இடப்பட்ட பெயராகும். இதற்குக் காரணம், பெந்தகோஸ்தேயின்போது அப்போஸ்தலர்கள் கூடியிருந்த வீடு இப்பகுதியில்தான் இருந்தது என்று கருதப்பட்டது. எப்பிபானியு இங்கு ஓர் ஆலயம் இருந்ததாகக் குறிப்பிடுகின்றார். கி.பி 4-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இங்குத் ''திருச்சபைகளுக்கெல்லாம் தாயாகிய பரிசுத்த சீயோன்'' என்ற பேராலயம் எழுப்பப்பட்டது.

1) 6-ஆம் நூற்றாண்டுக்கு முன் ஆண்டவரின் இறுதி இரவுணவு நிகழ்ந்த ''மேலறையும்'', பெந்தகோஸ்தே நிகழ்ந்த ''மேலறையும்'' ஒன்றாகக் கருதப்பட்டன. அதனால் பேராலயத்தில் நற்கருணை நிறுவனம் சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டது. இதற்கு அருகில் மரியாள் மரித்த இடம் இருந்ததாக 7-ஆம் நூற்றாண்டுப் பாரம்பரியம் சுட்டிக் காட்டுகிறது. செஞ்சிலுவைப் போர்வீரர்கள் எருசலேமை வென்றபோது இவ்வாலயம் சிதைந்த நிலையில் இருந்தது.

2) இதற்குப் பதிலாக எழுப்பப்பட்ட மத்தியகாலக் கோயிலின் ஒருபகுதி இக்கால ''மரியாள் துயில் கொள்கிறாள்'' என்ற துறவற மடத்திற்குத் தென்கிழக்கில் இன்றும் இருக்கிறது. ''மேல் அறையின் கோவில்'' கி.பி 1524-இல் மசூதியாக மாற்றப்பட்டது. இங்கு முஸ்லீம்கள் தாவீதின் கல்லறை இருப்பதாக நம்புகின்றனர்.

தற்போது, தாவீதின் கல்லறை எனப்பாரம்பரியமாகக் கருதப்படும் இடத்தையும் இறுதி இரவுணவு மேல் அறையையும் கொண்டிருக்கும் பழைய எருசலேம் நகரின் தென்மேற்கு மலைப்பகுதி ''சீயோன் மலை'' என்றழைக்கப்படுகிறது. இப்பகுதியில் தாவீதின் மூல நகர் இருந்ததாக அடையாளம் காட்டும் யோசிப்பசுக்கு முன்பே, இந்தத் தென்மேற்கு மலைப்பகுதிக்குச் சீயோன் என்ற பெயர் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது.

## சீயோன் மகள் (ZION, DAUGHTER OF)

'சீயோன் மகள்' என்பது எருசலேமையும் அதிலுள்ளவர்களையும் குறிக்க அடிக்கடி பழைய ஏற்பாட்டில் பயன்படுத்தப்பட்ட சொற்றொடர். எபிரேயர்கள் ஒருவனுடைய குணங்களைக் 'குடும்ப உறவின்' மூலம் வெளிப்படுத்துவது வழக்கம். ''அந்நியனுடைய புதல்வர்கள்'' என்பது 'அந்நியர்களைக்' குறிக்கும் (எசா 60:10). இதன் உட்கருத்து பிள்ளைகள் 'பெற்றோர்களைப் போலவே இருப்பார்கள் அல்லது அப்பிள்ளைகள் இந்தப் பெற்றோருக்குப் பிறந்தவர்கள்' என்பதாகும். 'புதல்வியர்' என்பது 'பெண்களை' மட்டும் குறித்தாலும் 'சீயோனின் புதல்வியர்' என்பது 'ஒரு சமூகத்தையே குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

நகரங்கள், ஊர்கள், கிராமங்கள் ஆகியவை ''நாட்டின் புதல்வியர்'' என்று அழைக்கப்பட்டன. உதாரணம்; ''யூதாவின் புதல்வியர் (நகரங்கள்) (சங் 97:8), பெலிஸ்தியரின் புதல்வியர் (நகரங்கள், எசே 16:27). எனவே ''சீயோன் மகள்'' என்பது சீயோன் மலைமீது கட்டப்பட்ட எருசலேம் நகரம் ஆட்தன்மைப்படுத்தப்படுவதாகும். இதே கருத்தில்தான் இதுபழைய ஏற்பாட்டில் பயன்படுத்தப்படுகிறது (2 அர 19:21; சங் 9:14; எசா 1:8; 10:32; 16:1; 37:22; 52:2; 62:11; எரே 4:31; 6:2. 23; புல 1:6; 2:1.4.8.10.13.18; 4:22; மீக் 1:13; 4:8.10.13; செக் 2:10; 9:9).

புதிய ஏற்பாட்டில் மத் *21:5;* யோவா *12:15*-இல் இயேசு எருசலேமில் நுழைந்த போது செக்கரியா இறைவாக்கினரின் வார்த்தைகள் மேற்கோள் காட்டப்படுகின்றன (செக் *9:9*).

**சிரகச்செடி** *(CUMININ)*

விவிலிய நாடுகளில் இச்செடி அதிகமாகக் காணப்படவில்லை. ஆயினும் உணவுக்குச் சுவையூட்டப் பயன்பட்டது. எசாயா இறைவாக்கினர் உழவன் எவ்வாறு சிரகத்தைத் தெளித்துப் பின்னர் அறுவடை செய்கிறான் என விளக்குகிறார். கடவுளுடைய செயலும் இதைப் போன்றதே என்றும் கூறுகிறார் (எசா *28:23-29*).

இறைமகன் இயேசு மறைநூல் அறிஞரையும், பரிசேயரையும், அவர்களது வெளிவேடத்திற்காகக் கடிந்து கொள்ளும்போது, அவர்கள் புதினா, சோம்பு, சீரகம் ஆகியவற்றில் பத்தில் ஒரு பகுதி செலுத்துகிறார்கள் எனவும், ஆனால் திருச்சட்டத்தில் முக்கிய படிப்பினைகளான நீதி, இரக்கம், விசுவாசம் ஆகியவற்றை விட்டுவிட்டனரெனவும் கூறுகிறார் (மத் *23:23*).

உப ஆகமம் *14:22-23* (லேவி *27:30*) விளையும் தானியத்திலும், கொடி முந்திரிப்பழச் சாற்றிலும் எண்ணெயிலும் பத்திலொரு பாகத்தை இஸ்ராயேல் மக்கள் இறைவனுக்குக் காணிக்கையாய்த் தர வேண்டுமெனக் கூறுகிறது. இந்தத் தானிய வகையில் சீரகமும் அடங்கும் என மிஸ்னா விளக்குகிறது.

**சிரழிந்த, சிர்கெட்ட** *(PERVERSE)*

''கோணல்'', ''முறுக்கிய'', ''புரட்டான'', ''திரித்து'', ''வளைந்த'' போன்ற பல சொற்களின் பொருளை உணர்த்த இச்சொல் பயன்படுகிறது. இது, பெரும்பாலும் ஞான இலக்கியங்களில், நேர்மையான வழிக்கு எதிரான நேர்மையற்ற வழியைக் குறிக்கிறது. இதன் சிறப்புப்பண்புகள் மடமை, சிற்றின்பம், இறைவனது கட்டளைக்குக் கீழ்ப்படியாமை ஆகியவையாகும். உபாகமப்பாரம்பரியத்தில் வரும் ஆசீர், சாபம் என்ற பின்னணியில், இச்சொல் கீழ்ப்படியாமையால், இறைவனது கட்டளைகளை நேர் மாறான அல்லது வேறுபட்ட தொன்றாகப் புரட்டாகக் கூறுதலை, திரித்துக்கூறுதலைக் குறிக்கிறது. சீரழிந்த மனிதன் இறைவனது சட்டத்திற்கும் செயல்முறையான ஞானத்திற்கும் அதிலிருந்துவரும் ஒழுக்கமுறைக்கும் எதிராக வாழ்பவன் ஆவான்.

புதிய ஏற்பாட்டில் இச்சொல் பழைய ஏற்பாட்டு வழக்கையே உயர்த்துகிறது (மத் *17:17;* லூக் *9:41;* பிலி *2:15;* காண் உப *32:5*).

**சீரா** *(SIRAH - முட்புதர்)*

இந்த இடம் சீராவின் ஊற்று என்றழைக்கப்பட்டது. இந்த இடத்தில்தான் தாவீதரசரின் தளபதி யோவாபு, சவுலின் மகனிடம் தளபதியாயிருந்த அப்னேர் என்பவரை வஞ்சகமாக அழைத்துவந்து கெபிரோனில் கொலை செய்தார் (2 சாமு *3:26*). யோசிப்பசின் கூற்றுப்படி இந்த இடம் கெபிரோனிலிருந்து சுமார் 4. கி.மீ. தொலைவில் உள்ளது. இது இருந்ததாகக் கெபிரோனுக்கு அருகில் பல இடங்கள் சுட்டிக்காட்டப்படுகின்றன. இவற்றில் கெபிரோனுக்கு வடக்கிலுள்ள சீரெட் ஏல்-பெல்லாவும், கெபிரோனுக்கு வடமேற்கிலுள்ள அயின் சாராவும் அடங்கும்.

**சீராக்கு** *(SIRACH)*

இவர் பென்சீராக்கு (சீராக்கின் மகன்) என்றும் குறிக்கப்படுகிறார். விவிலியத்தில் உள்ள நூல்களில் திருச்சபை தனதுவழிபாட்டுக்கு அதிகமாகக் கையாள்வது சீராக்கு ஆகமப் பகுதிகளையே. எனவேதான் இதனைத் திருச்சபை நூல் என்றே அழைக்கின்றனர். இந்நூலில் *50:29*-இல் பகுதியில் சீராக்கு மகனான இயேசு இந்நூலை எழுதியதாகக் குறிப்பு வருகிறது. வேறு எந்தப் பழைய ஏற்பாட்டு நூலுக்கும் இவ்வளவு தெளிவாக ஆசிரியர் குறிப்பிடப்படுவதில்லை. இந்நூல் எபிரேய விவிலியத்திலும் பிரிவினைச் சபைகளின் திருமுறைப்பட்டியலிலும் சேர்க்கப்படுவதில்லை. ஆனால் தொடக்ககாலத் திருச்சபை இந்நூலைப்பயன்படுத்தியுள்ளது; திரிதெந்தீன் பொதுச்சங்கத் திருமுறைப்பட்டியலில் இந்நூல் சேர்ந்ததாகும்.

**சீராக்கு நூல்** *(SIRACH, BOOK OF)*

***1. முன்னுரை:-*** பழைய ஏற்பாட்டு ஞான நூல்களில் நீண்டதாகிய இந்நூல் பழமொழி நூலின் நடையில் எழுதப்பட்டுள்ளது. ஆசிரியர் பழமொழி ஆசிரியரின் பிரமாணிக்க முள்ள சீடராக விளங்குகிறார். கி.மு. 2-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒரு பக்தியுள்ள யூதன் எவற்றை விசுவாசித்தான், எப்படி வாழ்ந்தான் என்பதை இந்நூல் பிரதி பலிக்கிறது. ஆசிரியர் சட்டம் மற்றும் ஞானத்தின்பால் காட்டும் ஆர்வம் நம்மைக் கவரக்கூடியது.

***2. நூலின் பெயர்:-*** இந்நூலுக்கு இரு பெயர்கள் உண்டு. ஒன்று ''எக்லேசியாஸ்டிக்கஸ்'' என்ற கிரேக்கப் பெயராகும். இச்சொல்லுக்குத் ''திருச்சபையில் வாசிக்கப்படுவது அல்லது பயன்படுவது'' என்பது பொருளாகும். அதாவது இந்நூல் ''திருச்சபையின் நூலாகும்.'' எப்படி இந்நூல் இந்தப் பெயரைப் பெற்றது என்பதை விளக்க முடியாது. ஒரு வேளை, யூத செபக்கூட வழிபாட்டிலும் திருச்சபையின் வழிபாட்டிலும் பெரிதும் பயன்பட்டதால், திருச்சபையின் போதக வாழ்வில் மிகச் சிறந்த நூலாகக் கருதப்பட்டிருக்கலாம். அல்லது கி.பி. முதலாம் நூற்றாண்டு முடிவில், யூதர்கள் தங்கள் திருமுறைப் பட்டியலிலிருந்து இந்நூலை நீக்கிய பின், அதைத் திருச்சபை தனது திருமுறைப் பட்டியலில் சேர்த்துக் கொண்டதால், ''திருச்சபையின் நூலாக''க் கருதப்பட்டிருக்கலாம். தொடக்க காலத்தில் ''எக்லேசியாஸ்டிக்கஸ்'' என்ற பெயர் இரண்டாம் திருமுறைப்பட்டியலில் உள்ள எல்லா நூல்களையும் குறித்தது. ஆனால் காலப்போக்கில் இந்நூலை மட்டும் குறிக்கப்பயன்பட்டது. பழைய இலத்தீன் வாசகமும், வுல்காத்தா வாசகமும் இப்பெயரையே பயன்படுத்தின.

இந்நூலின் மற்றொரு பெயர், எபிரேயத்தில் ''பென்சீரா'' என்பதும் கிரேக்கத்தில் ''சீராக்கு'' என்பதுமாகும். இந்நூலைக் கிரேக்க மொழியில் மொழி பெயர்த்தவர் தமது முன்னுரையில், இந்நூலின் ஆசிரியரை ''என் தாத்தா இயேசு'' என்று குறிப்பிடுகிறார். சீரா 50;29-இல் ''எருசலேம் வாழ் எலயாசரின் மகனான சீராக்கின் மைந்தர் இயேசு'' என்றும், 51:1-இல் ''சீராக்கின், மகன் இயேசுவின் மன்றாட்டு'' என்றும் ஆசிரியர் குறிக்கப்படுகிறார். காலப்போக்கில் இந் நூலைப் ''பென் சீராக்கு'' (சீராக்கின் மகனின் நூல்) அல்லது வெறுமனே ''சீராக்கு நூல்'' என்று அழைப்பது மரபாகும். ஆசிரியரது குடும்பத்து மூதாதையராக, சீராக்கு யூதர்களிடையே புகழும் மதிப்பும் பெற்றுத் திகழ்ந்திருக்க வேண்டும். ஆகவே அவரது பெயரால் இந்நூல் அழைக்கப்படுகிறது எனலாம்.

நாமும் இந்நூலைச் ''சீராக்கு நூல்'' என்றே அழைப்போம்.

***3. ஆசிரியர்:-*** ஆசிரியரது பெயர் தெளிவாகக் கூறப்படுகிறது. நூலின் ஆசிரியர் ''சீராக்கின் மகன் இயேசு'' என்று கூறப்படுவது பற்றி (50:29; 51:1) முன்பே கூறியுள்ளோம். நூலின் கிரேக்க வாசகம் ''சீராக்கின் மகன் இயேசுவின் ஞானம்'' என்ற தலைப்பைக் கொண்டுள்ளது. 50:27-இன் மற்றொரு கிரேக்க வாசகம் ''எருசலேம் வாசியான எலயாசர் மகன் சீராக்கின் மகன் இயேசு'' என்றும் அதே வாக்கின் எபிரேய வாசகம் ''எலியேசெர், சீராக் மகன் எலயாசர் மகன் இயேசுவின் மகனான சிமெயோன்'' என்றும் ஆசிரியரைக் குறிக்கின்றது. இவ்வாறு எபிரேய, கிரேக்க வாசகப் பிரதிகள் ஆசிரியர் பெயர் பற்றிய பிரச்சனையைச் சிறிது குழப்பி விட்டன. எலயாசர் மகன் சீராக் மகன் இயேசுதான் இந்நூலின் ஆசிரியர் என்று இப்போது ஆய்வாளர்கள் கருத்தொற்றுமை கொண்டுள்ளனர். கத்தோலிக்கத் தமிழ் மொழிபெயர்ப்பு கிரேக்க வாசகத்தைப் பின்பற்றினாலும், இந்நூலின் ஆசிரியரை வெறுமனே ''சீராக் மகன் இயேசு'' என்றும் நூலைச் ''சீராக்கின் நூல்'' என்றும் அழைக்கிறது.

ஆசிரியரைப் பற்றிய பல குறிப்புக்கள் நூலில் காணப்படுகின்றன. இவற்றின்படி ஆசிரியர் எருசலேமில் வாழ்ந்தவர் (50:27).

இளமை முதல் வேதாகமத்தைக் கவனமாகப் படித்து முதிர்ச்சி பெற்ற பக்தியுள்ள மாண வர் ஆவார். குறிப்பாகப் பழமொழி, சங்கீ தங்கள், ஐந்நூல்கள் ஆகியவற்றில் சிறப்பான புலமை பெற்றிருந்தார். தமது மூதாதையரின் சமயத்துக்குப் பிரமாணிக்கமுள்ளவராய் இருந்தாலும், மற்றவற்றில் பரந்த மனப் போக்குடையவர். மதிப்போடு ஏற்றுக் கொள்ளப்பட்ட சட்ட வல்லுநராகவும், போதகராகவும் விளங்கினார். தான் விரும் பிய வேதாகமப் படிப்பில் ஈடுபடுவதற்குத் தேவையான செல்வமும், ஓய்வும் கொண் டிருந்தார்.

ஆசிரியர் அயல்நாடுகளில் பயணம் செய் துள்ளார் *(34:11)*. அந்நாடுகளில் பல காரியங் களைக் கற்றறிந்து அனுபவம் பெற்றவர். இப்பயணங்களில், சில சமயங்களில் ''உயி ரிழக்க முதலாய்'' இருந்துள்ளார் *(34:12)*; மற் றும் பல ஆபத்துக்களையும் எதிர்கொண்டுள் ளார். அவற்றிலிருந்து தம்மைக் காப்பாற்றிய இறைவனுக்கு நன்றி கூறுகிறார் *(51:1-12)*. பண்பாடும், செல்வமும் மிக்கவர். சமூகத் தின் உயர் மட்டத்தில் உலவியவர். அரசவை யில் பணிபுரிந்துள்ளார். மற்ற ஞானிகளைப் போல் இவரும் அயல் நாடுகளுக்குத் தூது சென்றிருக்கக்கூடும் *(39:4)*.

நகர வாழ்வில் அதிகப் பழக்கமுள்ளவர். பல தொழில்களையும் வேலைகளையும் அறிந்திருக்கிறார் *(19:38)*. இவர் நல்ல மனைவி மக்களைப் பெற்று மகிழ்ச்சியாக வாழ்ந்ததாகத் தெரிகிறது *(39:29 தொ)*. அவ ரது பிள்ளைகளை மிகுந்த கட்டுப்பார்ட்டு டன் வளர்த்திருக்க வேண்டும் *(7:24; 42:9)*. எருசலேமுக்கு வெளியே இருந்த அவரது சொத்துக்களைப் புத்திக் கூர்மையோடும், விவேகத்தோடும் பயன்படுத்தியதால், நக ரில் சுதந்தரமாக வாழ முடிந்தது. அவரது நிலை கண்டு பொறாமை கொண்டவர்களும் உண்டு. ஆனால் அவர் தமது வீட்டைச் சீரும் சிறப்புமாக நடத்தத் தெரிந்தவர் *(6:7தொ; 9:29தொ; 30:29-33)*. அங்கு ஒட் டுண்ணி போன்று சுரண்டி வாழ்வோருக்கு இடம் அளிக்கவில்லை. ஆனால் ஏழைகளுக் கும் துன்பப்படுவோருக்கும் அவரது வீடு திறந்தே இருந்தது. அவர்களுக்கு முடிந்த போதெல்லாம் உதவினார் *(12:1)*.

வேதாகமத்தை ஆர்வத்தோடு படிப்பதில் தம்வாழ்வைச் செலவிட்டாலும், அவர் தனித்துத் துறவியாக வாழவில்லை. சமூக வாழ்வில் பெரிதும் ஈடுபட்டார். நண்பர்கள் தோழமையைப் பெரிதும் போற்றினார். விழாக்காலங்களைப் பாராட்டினார். இசையை விரும்பினார் *(32:5கொ)*. அரசிய லிலும், பொறியியலிலும், மருத்துவத்திலும் அக்கறை காட்டியதாகத் தெரிகிறது. அழகி யவை, நல்லவை யாவற்றிலும் ஆர்வம் கொண்டிருந்தார். ஆனால் எதிலும் ஒரு மட் டுடையவர்; நடுநிலை கொண்டவர். இதைத் தமது போதகத்தில் முக்கிய கருத்தாகக் கொண்டவர். இவ்வுலக இன்பங்களை அனு பவித்தாலும், அவற்றில் மூழ்கித் தம்மையே இழக்கவில்லை. இதில் சட்டம் அவருக்கு வழிகாட்டியது. சட்டத்தின் தொடக்கம் இறையச்சமாகும். கிரேக்கப் பண்பாட்டின் பால் திறந்த மனதுடையவரானாலும் சட்டத் தைச் சிறிதும் கைவிடாதவர். அவர் சமயத் தால் ஒரு யூதர்; பண்பாட்டால் ஒரு கிரேக்கர் என்றாலும் மிகையாகாது.

சீராக்கு அளிக்கும் ஆலோசனைகள் மனிதச் செயல்களில் பலவற்றை உள்ளடக்குகின் றன. சமய, சமூகக் கடமைகளைப் பற்றிப் பேசுகிறார். இவற்றில் மேலானது ஞானத் தைத் தேடுவதாகும் *(14:20-15:8)*. இவற்றில் எல்லாம் ஒருவகை ஆதாயம் தேடும் போக் கைக் காட்டுகிறார் *(51:28.30)*.

சீராக்கு ஆசிரியர் இறுதித் தீர்ப்பு, சன்மா னம், உடல் உயிர்ப்பு ஆகியவற்றில் நம் பிக்கை கொண்டதாகத் தெரியவில்லை. வழி பாட்டில் ஆர்வம் காட்டுகிறார். இவற்றில், அவர் பிற்காலச் சதுசேயர்களின் முன்னோடி எனலாம்.

முதிர்ந்த வயதில், ஆசிரியர், எருசலேமில் தங்கி ஒரு பள்ளியை நடத்தி, தமது நாட்டு இளைஞர்களுக்கு வேதாகமத்திலும் ஒழுக் கப் போதனையிலும் பயிற்சி அளித்து வந்

தார். அறிவு வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட யாவரும் இங்கு வரவேற்கப்பட்டனர். தமது வீட்டில் வந்து வாழ்க்கையை அனுபவிக்கு மாறு சீடர்களை அழைக்கிறார் *(51:23)*. இவர்கள் ஞானமிக்கவர்களாகத் திகழ்ந்த தோடு, வாழ்வில் மேலான பதவிகளையும் வகித்தனர். இப்பள்ளியில் அறிவையும் ஞானத்தையும் தேடி மாணவர்கள் வந்து போகலாம். பணம் பெறாமலே அவர் களுக்கு அறிவு புகட்டினார் *(51:33)*. ஆசிரி யரே ஒரு பாடமாகத் திகழ்ந்தார். இளமை முதல் ஞானத்தைத் தேடிய ஆசிரியர், தாம் செய்தவற்றையே மாணவர்களும் செய்ய ஆலோசனை கூறுகிறார். ''ஞானிகள் யார் எனக் கண்டு அவர்களைப் பற்றிக் கொள். கடவுளைப்பற்றிய எல்லா உரைகளுக்கும் செவிசாய்ப்பதில் ஆர்வம் காட்டு; அறிவுக் கூர்மை கொண்ட பழமொழிகளைக் கேட்கா மல் விட்டுவிடாதே. அறிவுக்கூர்மை படைத் தோரை நீ கண்டுவிட்டால் விரைவாக அவர் களிடம் செல்; உன் காலடிபட்டு அவர்களின் வீட்டு வாயிற்படிகள் தேயட்டும்'' *(6:34-36)*. அவரது ஞானத்தின் முதன்மையான ஊற்று வேதாகமமாகும். ஆனால் அது மட்டும் போதாது. உலகம் பற்றிய அறிவாலும் இளைஞன் தனது மனதை விரிவுபடுத்த வேண்டும். இவ்வாறு, தமது சீடர்களுக்கு ஆசிரியர் தமது ஆழ்ந்த வேதாகம அறிவை யும், அனுபவத்தால் கண்டுணர்ந்த செயல் முறை ஞானத்தையும் கற்றுக் கொடுத்தார் *(முன்னுரை; 34:9-12; 38:24; 39:1-11; 51:23-25)*. நன்னெறியைத் தேடும் எல்லோ ருக்காகவும் உழைத்தார் *(33:18; 50:29)*. அதன் விளைவாக, அறிந்து திட்டம் செய்யாமலே, இந்நூலைத் தொகுத்தார் *(24:23-24)*. அப் போது அவர் நரை திரை மிகுந்த முதியவ ராய் இருந்திருக்க வேண்டும் *(50:13)*.

ஆசிரியரது பேரனே இந்நூலைக் கிரேக்க மொழியில் மொழி பெயர்த்துள்ளார். ஆனால் அவர் பெயர் கொடுக்கப்பட வில்லை. மொழி பெயர்ப்பாளர் அளிக்கும் முன்னுரை கத்தோலிக்கத் தமிழ் மொழி பெயர்ப்பில் காணப்படவில்லை. *(இப்பகுதி திருமுறைப்பட்டியலைச் சேர்ந்ததாகக் கரு தப்படுவதில்லை)*.

**4. நூல் தோன்றிய காலம்:-** பழைய ஏற் பாட்டு நூல்களிலேயே, துல்லியமாகக் காலம் குறிக்கக்கூடிய சில நூல்களில் இது வும் ஒன்றாகும். இந்நூலைக் கிரேக்க மொழி யில் மொழிபெயர்த்த ஆசிரியரது பேரன், தமது மொழிபெயர்ப்புக்கு அளிக்கும் முன் னுரையில் வரும் குறிப்புக்களைக் கொண்டு ஓரளவு துல்லியமாக இந்நூல் தோன்றிய காலத்தைக் கணிக்கலாம். இவர் எகிப்தை ''யூர்கெத்து' ஆண்ட *(கி.மு. 170-116)* காலத் தில் *38*-ஆவது ஆண்டு அலக்சாந்திரியாவுக் குத் தாம் வந்ததாகக் குறிப்பிடுகிறார். இதி லிருந்து இவ்வரசன் ஏழாம் தாலமி ஃபிசிக் கோன் என்றும், மொழி பெயர்ப்பாளர் எகிப்துக்கு வந்தது கி.மு. *132*-ஆம் ஆண்டு என்றும் கணிக்கப்படுகிறது. மொழி பெயர்ப்பாளர் எகிப்தில் இருந்த யூதர்க ளிடையே ஏற்கெனவே பல எபிரேய நூல்கள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளதைக் கண்டார். ஆகவே தமது தாத்தாவின் நூலையும், எபி ரேய மொழி பேசாத யூதர்களின் நன்மைக்கா கக் கிரேக்க மொழியில் மொழி பெயர்க்க முடிவு செய்து செயல்பட்டார். இவர் கி.மு. *132*-க்குப் பின் தமது மொழி பெயர்ப்பு வேலையைத் தொடங்கியிருக்க வேண்டும். முன்னுரை கி.மு. *116*-இலோ அதற்குப் பின்போ எழுதப்பட்டது என ஆய்வாளர்கள் சிலர் கருதுவர்.

*50*-ஆம் அதிகாரம் கி.மு. *220-195* க்கு இடைப்பட்ட காலத்தில் பெரிய குருவாக விளங்கிய இரண்டாம் சீமோனைப் பற்றிப் பேசுகிறது. இவர் அண்மையில்தான் இறந் திருக்க வேண்டும் என்ற உணர்வை நூல் உண்டாக்குகிறது. மேலும் யூத வரலாற்றில் போராட்ட மேகங்கள் தோன்றியிருந்தாலும் நான்காம் அந்தியோக்கு எப்பிபானின் கொடுமைகளும் *(கி.மு. 168)* மக்கபேயர்க ளின் புரட்சியும் ஏற்கனவே தொடங்கிவிட் டன என்பதற்கு இந்நூலில் எந்த அறிகுறியு மில்லை. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு, கி.மு. *132* இலிருந்து இரண்டு தலைமுறை பின் சென்றால் அதாவது *50* அல்லது *60* ஆண்டுகள் பின் சென்றால், இந்நூல் தோன்றிய காலத்தை அடையலாம்.

இவ்வாறு, இந்நூல் கி.மு. 190 - 180க்கு இடைப்பட்ட காலத்தில் தோன்றியிருக்க வேண்டும். காலப்போக்கில் சில பகுதிகள் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். இதுபற்றிப் பின்பு பார்ப்போம்.

5. வாசக வரலாறு:- இது சிக்கல் மிக்கதாகும். இந்நூல் எபிரேய மொழியில் எழுதப் பட்டது என்பது உறுதி. இந்த எபிரேய வாசகத்தைப் புனித எரோனிமு அறிந்திருக்கிறார். ஆனால் கி.பி. முதல் நூற்றாண்டு முடிவில் யூதர்களின் திருமுறைப்பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்படாததால், காலப் போக்கில் மறைந்து போயிற்று. ஆனால் சில இராபிகளின் நூல்களில், இந்நூலிலிருந்து பக்தியோடு எடுத்துக்காட்டுகள் தரப்படுகின்றன. திருச்சபையில் கிரேக்க மொழி வாசகம் பாரம்பரியமாயிற்று. இதிலிருந்து பழைய இலத்தீன் மொழி வாசகம் செய்யப்பட்டது. இந்நூலின் புனிதத் தன்மையை ஐயுற்றதால், எரோனிமு இந்நூலைப் புதிதாக மொழி பெயர்க்கவில்லை. ஆகவே பழைய இலத்தின் மொழி வாசகமே ''வுல்காத்தா'' வாசகத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்தக் கிரேக்க மொழி வழி இலத்தீன் மொழி பெயர்ப்பே சென்ற நூற்றாண்டு முடிவுவரையில் திருச்சபையின் வழக்கில் இருந்தது.

ஆனால் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் முடிவில் இந்நூலின் எபிரேய வாசகம் புத்துயிர் பெற்றது. கி.பி. 1896 - 1900-க்கு இடைப்பட்ட காலத்தில் கெய்ரோவிலுள்ள பழைய யூத செபக்கூடத்தை ஒட்டிய ''கெனிசியா'' வில் கண்டெடுக்கப்பட்ட ஏடுகளில், இந்நூலின் நான்கு பகுதிகள் அடங்கியிருந்தன. (''கெனிசிய'' என்பது பழைய, பழுதுபட்ட, பயன்படாத புனித ஏடுகளைச் சேர்த்து வைக்கும் இடமாகும்). இவை A, B, C, D என்று குறிக்கப்பட்டன. இவை எபிரேய வாசகத்தின் மூன்றில் இரண்டு பாகமாகும் என்று பிற்காலத்தில் கணிக்கப்பட்டன. இந்த ஏடுகள் கி.பி. 10 - 12-ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்ததாகும் என்று கருதப்படுகின்றன. 1936-இல் இன்னும் ஒரு பகுதி கண்டெடுக்கப்பட்டது. 1956 - 60க்கிடையில் இன்னும் சில பகுதிகள் கிடைத்தன. 1963-இல் கும்ரான் குகைகளிலிருந்து இன்னும் ஒரு பகுதி கண்டெடுக்கப்பட்டது. இது கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இத்துடன் இந்நூலின் எபிரேய வாசக வரலாறு முடிகிறது எனலாம். இந்த ஏடுகள் நன்கு பாதுகாக்கப் படவில்லை.

இந்நூல் கிரேக்கம், சீரியாக்கு இலத்தீன் மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இவை ஒன்றையொன்று பாதித்துள்ளதாகத் தெரிகிறது. கிரேக்க மொழி பெயர்ப்பில் இரு வடிவங்கள் இருப்பது தெரியவருகிறது. ஒன்று மற்றதைவிட நீண்டது. குறுகிய வாசகத்தை முதல் வாசகம் என்றும், நீண்ட வாசகத்தை இரண்டாம் படி வாசகம் என்றும் அழைப்பது ஆய்வாளர்களிடையே மரபு. பின்னது முன்னதைவிட ஏறக்குறைய 150 வாக்குகளை அதிகமாகக் கொண்டுள்ளது. இந்தக் கூடுதலான பகுதிகள் சீராக்கு ஆசிரியருடையனவா என்பது பற்றி ஐயம் எழுந்துள்ளது. இவை பிற்காலத்தைச் சேர்ந்தவை என்று பலர் கருதுவர். இவை இறை ஏவுதல் பெற்றவை என்று கத்தோலிக்க அறிஞர் சிலர் ஏற்றுக்கொள்வதில்லை. இவை குறுகிய வாசகத்தில் காணப்படும் முடிவு காலம் பற்றிய வளர்ச்சியடையாத கருத்துக்களை நிறைவு செய்வனவாக அமைந்துள்ளன என்பர். இக்கருத்துக்கள் இறப்பின் போது வரும் தீர்ப்பு, வரும் உலக வாழ்வு, மனித ஆன்மாவின் அழியாமை, இறப்புக்குப் பின்வரும் இறுதித்தண்டனை, சன்மானம் போன்ற கருத்துக்களாகும் (6:23; 15:18; 16:22; 17:25; 18:22; 20:4; 24:26). 51-ஆம் அதிகாரமும் ஐயத்திற்குள்ளாகியுள்ளது.

கண்டெடுக்கப்பட்ட எபிரேயப் பகுதிகள், கிரேக்க வாசகத்திலிருந்து வேறுபடுகின்றன. இவற்றிலிருந்து நூலின் மூல எபிரேய வாசகத்தை மீண்டும் அமைக்கப் பல முயற்சிகள் நடந்துள்ளன. வெற்றிகிட்டியதாகத் தெரியவில்லை. கத்தோலிக்கத் தமிழ் வாசகம் நீண்ட கிரேக்க வாசகத்தைப் பின்பற்றுகிறது.

***6. திருமுறைப்பட்டியலில் சீராக்கு நூல்:-*** இந்நூல் எபிரேய மொழியில் எழுதப்பட்டது. பாலஸ்தீனத்தில் தோன்றியது. பழைய யூத செபக் கூடங்களில் பக்தியோடு பயன்படுத்தப்பட்டது. பிற்கால யூத இலக்கியங்களில் எடுத்துக்காட்டாகப் பயன்பட்டுள்ளது. இவையெல்லாம் இந்நூல் மக்களால் பொதுவில் நல்ல முறையில் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பதைச் சுட்டுகின்றன. ஆசிரியரே, தமது நூல் இறை ஏவுதல் பெற்றது என்று ஒரு வகையில் உரிமை கொண்டாடுகிறார் *(24:30-34; 39:6-11)*. ஆசிரியரது பேரனான கிரேக்க மொழி பெயர்ப்பாளரும் இதே உரிமை கோருகிறார். இந்நூலின் எபிரேய வாசகம் வழக்கிலிருந்து மறையும்வரை, அதைப் பிரதி எடுக்கும் முறை யூதர்களிடையே புனித நூல்களுக்குரியதாகும். இதைக் கும்ரான் குகைளில் கண்டெடுக்கப்பட்ட இந்நூலின் பகுதியில் பார்க்கிறோம். ஏடுகளில் காணப்படும் முறையும் சாதாரணமாய்த் திருமுறைப்பட்டியல் நூல்களுக்குரியதாகும். இவற்றிலிருந்து, யூதர்களில் சிலராவது இந்நூலை நெடுங்காலத்திற்குப் புனிதமானதாகக் கருதினர் என்று தெரிகிறது.

ஆயினும் கி.பி 90-ஐ ஒட்டி, யாம்னியாவில் நடந்த யூதப் பொதுக்கூட்டம் சீராக்கு நூலைத் தனது திருமுறைப்பட்டியலில் ஏற்றுக்கொள்ளவில்லை. இதற்கு இந்நூல் சமீபத்தில் தோன்றியது ஒரு காரணமாக இருக்கலாம். அதைவிட அக்கூட்டத்தில் பரிசேயர்கள் காட்டிய பிரிவினைப் போக்கே முக்கிய காரணமாகும். அக்காலத்தில் பரிசேயரது ஆதிக்கமே யூதர்களிடையே மேலோங்கி இருந்தது. இவர்களே யூதத்திருமுறைப்பட்டியலுக்குப் பொறுப்பானவர்கள். இவர்கள் சீராக்கு நூலில் சதுசேயர் கருத்துக்களையும் போக்கையும் கண்டனர். இந்நூல் பரிசேயருடைய இறையியலோடு ஒத்துப் போகவில்லை என்று கருதினர். சீராக்கு ஆசிரியர் சதுசேயர் அல்லர். அவரது காலத்தில் இப்படிப்பட்ட பிரிவினர் இருக்கவும் இல்லை. வழிபாட்டுச் சடங்கில் ஆர்வம், இறப்புக்குப் பின் வரும் வாழ்வுபற்றி அக்கறையின்மை, மெசியாக் கோட்பாட்டில் ஆர்வமின்மை போன்றவை பிற்காலத்தில் தோன்றிய சதுசேயருடைய கோட்பாடுகளாகும். இத்தகைய கருத்துக்கள் இந்நூலில் காணப்படுகின்றதாகத் தோன்றுகிறது. ஆகவே பரிசேயர்கள் தாங்கள் தொகுத்த திருமுறைப்பட்டியலிலிருந்து சீராக்கு நூலை நீக்கினர். இதற்குப் பின்வரும் யூத இராபிகளிடம் இந்நூலைப் பொறுத்த மட்டும் மாறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. சிலர் இந்நூல் புனிதமற்றது என்று ஒதுக்குவர். வேறுசிலர், இந்நூல் புனிதமானது என்று கருதி, இதிலிருந்து எடுத்துக்காட்டுக் கூறுவர்.

யூதப் பாரம்பரியத்தைப் பின்பற்றி கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலும் அதற்குப்பின்னும் தோன்றிய பிரிவினைக் கிறிஸ்துவச் சபைகள் இந்நூலைத் தங்கள் திருமுறைப்பட்டியலில் ஏற்றுக்கொள்வதில்லை.

இந்நூல் இறைஏவுதல் பெற்றது அன்று எனச் சில திருச்சபைத் தந்தையர் கருதியதாகத் தெரிகிறது. இருப்பினும், கிரேக்க மொழி விவிலியத்தைச் சேர்ந்தது என்ற அளவில் திருச்சபை தொடக்கத்திலிருந்து இந்நூலைத் தனதாக ஏற்றுக் கொண்டுள்ளது. இதற்குக் காரணம், இந்நூல் புதிய ஏற்பாட்டு நூல்களில் கொண்டிருக்கும் ஆதிக்கம் மட்டுமன்று, திருச்சபைத் தந்தையர் பலரும் இந்நூலிலிருந்து அடிக்கடி சான்று காட்டுவதும் ஆகும். இந்நூல் திருச்சபையில் வாசிக்கப்பட்டதாகக் கருதப்பட்டது என்பதற்கு அதன் ''எக்லேசியாஸ்டிக்கஸ்'' என்ற பெயர் சான்று கூறுகிறது. திருமுழுக்குப் பெறத் தங்களைத் தயாரிப்பவர்களுக்குப் போதனை அளிக்க இந்நூல் ஒரு கையேடாகப் பயன்பட்டது. பிரிவினைச் சகோதரர்களின் போக்கிற்கு எதிராகத் திரிதெந்தீன் பொதுச் சங்கம், இந்நூலைத் திருச்சபையின் திருமுறைப் பட்டியலில் ஏற்றுக்கொண்டு, இந்நூல் பற்றிய பிரச்சனையை முடிவு செய்தது.

***7. வரலாற்றுப்பின்னிலையும் ஆசிரியரது நோக்கமும்:-*** கி.மு. மூன்றாம் நூற்றாண்டில், மேற்காசிய நாடுகளான பாலஸ்தீனம், சீரியா, பாபிலோன், பாரசீகம் முதலிய நாடு

களும் எகிப்தும்கூட கிரேக்கப்பண்பாட்டு மோகத்தால்பெரிதும் பாதிக்கப்பட்டன. மாமன்னன் அலக்சாந்தரது வெற்றிக்குப் பின், இப்பண்பாடு நகரங்களை மட்டு மன்று, நாட்டுப்புறங்களையும் பாதித்தது. இப்பண்பாடு தத்துவம், இலக்கியம், உடற் பயிற்சி விளையாட்டுக்கள் போன்றவற்றை மட்டுமன்று, பல தேவர்களைக் கொண்ட சமயத்தை உள்ளடக்கியது. இது யூதேயா வில் ஒரு பெரும்போராட்டத்தைத் தொடங் கியது. எபிரேய இறையொருமைக் கோட் பாட்டின் போதனையில் நிலைத்திருந்து மோசே சட்டத்தைக் கடைப்பிடிப்பதற்கும், அதே சமயம் கிரேக்கப் பண்பாட்டில் மோகம் கொண்டு புதிய பழக்கவழக்கங்க ளைக் கடைப்பிடிப்பதற்கும் இடையே ஒரு இடுக்கண் நிலை ஏற்பட்டது. அலக்சாந்திரி யாவிலிருந்து ஆட்சி செய்த எகிப்தியத் தோல மிய அரசர்களின் கீழ் பாலஸ்தீனம் இருந்த மட்டும், இப்பிரச்சனை அவ்வளவு கடின மாய் இருக்கவில்லை. அது உச்சநிலை அடையவில்லை. எருசலேமைச் சுற்றிய பகு திகள் வரிகட்டினால் போதும். ஆனால், அந்தியோக்கியாவிலிருந்து ஆட்சிசெய்த சீரிய செலூக்கிய அரசர்களின் பொறுப்பிற் குப் பாலஸ்தீனம் மாறியபோது, கிரேக்கப் பண்பாட்டில் மயங்கியவர்களுக்கும் பாரம் பரிய . யூத அபிமானிகளுக்குமிடையே போராட்டம் படிப்படியாக - ஆனால் - உறுதியாக வளர்ந்து, உச்சநிலை அடைந்து கி.மு. 166-இல் மக்கபேயரின் எழுச்சியில் வெடித்தது. அது, யூதத்துவத்தின் அகப் புறச் சக்திகளுக்கு இடையே நடந்தபோராட்டம் மட்டுமன்று, யூதர்களிடையேயும் செல்வாக் குடையவர்கள் கிரேக்கச் சிலை வழிபாட் டுக்கு மனம் மாறினர். இது யூதர்களுக் கிடையே ஓர் உட்போராட்டத்தை உண்டாக்கி யது. சீராக்குநூல் இப்போராட்டத்தின் தொடக்க காலத்தைப் பிரதிபலிக்கிறது. ஆசி ரியர் யூத சமயக் கோட்பாடுகளைக் கைவிட் டவர்களைக் கண்டனம் செய்வதோடு *(2:12-15)*, தம்மைப் போலவே வாசகர்களை யும் தங்கள் மூதாதையரின் பாரம்பரியங் களுக்குப் பிரமாணிக்கமுள்ளவர்களாகக் கரு தித் தம் நூலை எழுதுகிறார்.

கிரேக்கப் பண்பாட்டால் யூதர்கள் பாதிக் கப்பட்ட நிலையில், ஆண்டவருடைய வார்த் தைக்கு நிலையான முறையில் பணியும்படி ஆசிரியர் விடுக்கும் அழைப்பைப் புரிந்து கொள்ள வேண்டும் *(2:15-18)*. பாவிகள்தான் ஒரே வேளையில் இரு சமயங்களைப் பின் பற்ற முயலுவர். இவர்களை ஆசிரியர் கண் டனம் செய்கிறார் *(2:12)*. தவறான வழியில் செல்பவர்கள்தான், மனிதன் மிகச் சிறிய வன், ஆகவே அவன் இறைவனது அக்கறைக் குரியவனாக இருக்க முடியாது என்று *(16:17)*, தங்களை ஏமாற்றிக் கொள்வர். சூரி யனைவிடப் பல்லாயிரம் தடவை பிரகாச முடைய இறைவனின் கண்கள் எல்லாவற்றை யும் கவனிக்கின்றன. பொறுமை இழக்கக் கூடாது *(2:16)*. ''உன்னத ஆண்டவருடைய கட்டளையைக் கைவிடுபவர்களுக்கும்'' *(41:11)*, தங்கள் தெய்வீக உரிமைச் சொத் தான உடன்படிக்கையைக் கண்டு வெட்கப் படுபவர்களுக்கும் *(42:2)* ஐயோ, கேடாம்! இறைவனுக்கு அஞ்சுபவன், எவ்வளவு தாழ்ந்தநிலையில் இருந்தாலும், உயர்குடி யோரையும் செல்வந்தர்களையும், அரசர் களையும் விட மேலானவன் *(10:23-27)*. ஆனால் சீராக்கு ஆசிரியர் கிரேக்கப் பண்பாடு பற்றி எத்தகைய திறனாய்வும் செய்ய வில்லை. இறைஞானம் வேதாகமத்தில் தனிச் சிறப்பான முறையில் குடி கொண் டிருக்கிறது என்று ஏற்றுக்கொண்டனர். இந்த அடிப்படையில் எல்லாவற்றையும் மதிப் பீடு செய்கிறார்.

இந்த அடிப்படையில் கிரேக்கப் பண்பாட் டின் படையெடுப்பை ஆசிரியர் எதிர்த்தார். இப்படையெடுப்பால் ஏற்பட்ட சவாலுக்கு மறுப்பாக இந்நூலை யூதசமயத்துக்கு ஒரு காப்புரையாக எழுதினார். பாலஸ்தீனத் திலும், அயல்நாடுகளிலும் வாழ்ந்த யூதர்களுக் கும் நல்ல மனதுடைய புறவினத்தாருக்கும், உண்மையான ஞனம் இஸ்ராயேலில் உறை விடம் கொண்டுள்ளது என்று காட்ட விழை கிறார். பாரம்பரிய எபிரேய ஞானத்தின் கருவூலத்தை வாசகர்களுக்கு எடுத்துக்காட்ட வும், கிரேக்க அறிவியலில் புதினங்களைத் தேடாமல் தங்கள் பாரம்பரிய ஞானத்தி

லேயே நிறைவு கொள்ளலாம் என்று காட்ட வும், யூத சமயத்தையும் செயல்முறை ஞானத்தையும் ஒருங்கிணைத்து இந்நூலை ஒரு காப்புரையாக அமைக்கிறார்: இந்நூல், கிரேக்க மயமாக்கும் இயக்கத்தை எதிர்க்க - யூதர்களைப் பயிற்றுவிக்க - உதவியிருந் திருக்க வேண்டும். மக்கபேயர்களுக்கு முந்திய காலத்து யூதக்கோட்பாடுகளுக்கும் ஒழுக்க அமைப்புக்கும் ஒரு முக்கிய சாட்சியாகத் திகழ்கிறது.

**8. இலக்கியப் பண்புகள்:-** சீராக்கு ஆசிரி யர் காலத்தில் அரமேயிக் மொழி எபிரேய மொழியைப் பாதித்தது. ஆகையால் அரமே யிக்கின் பண்புகள் காணப்படுவதில் வியப் பில்லை. அவரது நடை, ஓரளவுக்குப் பிற ரைப் பின்பற்றுவதாகவும் மீண்டும் மீண்டும் கூறுவதாகவும் அமைந்துள்ளது. ஆனால் மொழிநடையின் தரம் சிறிதும் குறைந்து விடவில்லை. இந்நூல், தானியேல், எஸ்தர் போன்ற நூல்களின் மொழிநடையில் எழுதப் பட்டுள்ளது என்று மொழி ஆய்வு காட்டு கிறது. ஆசிரியர் தமது காலத்து எபிரேய மொழியில் எழுதினாலும், பிற்காலச் சங்கீதங் களுக்கும், பழமொழிநூலின் பிற்காலச் சேர்க் கைகளுக்கும் ஒத்தநடையில் எழுத வல்ல வர். அவர் யோபு நூலின் உன்னதக் கலைப் பண்பை அடையாவிட்டாலும், போத கத்தை உள்ளக்கிளர்ச்சிப் பாடல்களோடு இணைத்து, ஒழுக்கஇயல் கருத்துக்களை எடுத்துக் கூறுவதில் வரக்கூடிய அயர்ச்சி யைக் குறைக்கக் கூடியவர். அவருடைய முதுமொழிகள், பழமொழிநூலின் சிறந்த வாக்குகளோடு ஒப்பிடத்தக்கவை. இயற்கை யில் இறைவனது செயல்களைப் போற்றும் நேர்த்தியான பாடலை *(42:15-43:33)*, சங் 147-ஓடும் யோபு நூலில் வரும் பகுதிகளோ டும் ஒப்பிடலாம். பொதுவாகச் சங்கீதங்கள், பழமொழிநூல் ஆகிய நூல்களிலிருந்து ஆசிரி யர் தமது உந்துதலைப் பெறுவதாகத் தெரி கிறது. அதன் விளைவாக இந்நூலில் போதகப் பாடல், பக்திப்பாடல் ஆகிய வரிவடிவங் களைக் காணலாம்.

**8.அ) போதகப்பாடல்கள்:-** பழமொழி நூலில் முதுமொழிகள் தனித்தனியாக ஒன் றோடொன்று தொடர்பில்லாமல் அமைந் துள்ளன *(பழ 10:1-22:16)*. இத்தகைய தனிக் கூற்றுகளை இந்நூலில் அரிதாகத்தான் காண முடியும். ஆசிரியர் தொடர்ச்சியான பாடல் வடிவைப் பயன்படுத்துகிறார். வழக்கமாகத் தமது கூற்றுக்களைத் தனித்தனியாகக் கூறாது, ஒரு முக்கிய கருத்தைச் சுற்றி ஒன் றோடொன்று இணைக்கிறார்; ஒரு கட்டுரை யைப்போல் அமைக்கிறார். பழமொழி நூலில் காணப்படும் யாப்பு அமைப்புக் களையே பயன்படுத்துகிறார். ஞானத்தை மோசே சட்டத்தோடு ஒன்றாக்கினாலும் சட்ட ஒழுங்குகளைச் சட்ட நடையில் ஒரு போதும் எடுத்துக் கூறுவதில்லை.

**8.ஆ) பக்திப்பாடல்கள்:-** பழமொழி நூலில் காணப்படுவதுபோல், ஆட்தன்மை ஆக்கப் பெற்ற ஞானத்தின் மகிமை சங்கீத வடிவில் விவரிக்கப்படுகிறது *(1:1-21; 24:1-22;* மேலும் பழ. *8:1-3;* யோபு *28:12-28*-ஓடு ஒப்பிடுக). இது நாம் ஆசிரியரிடமிருந்து எதிர்பார்க்கக்கூடியதே. எடுத்துக்காட்டான அறிவர் என்ற அளவில், ஆசிரியர், இறைவ னால் உந்தப்பட்டு, ஞானமிக்க ஒழுக்க போதனை அளிப்பதோடு, இறைவனுக்கு செபவடிவில் நன்றியும் கூறுகிறார் *(39:6-7)*. அவ்வப்போது, தங்களுக்கு நல்லவற்றை அளிக்கும் இறைவனுக்குப் போற்றுதல் அளிக் கும்படி வாசகர்களைத் தூண்டுகிறார். *51:1-12*-இல் தமது சொந்த நன்றியுரைப் பாடலைத் தருகிறார். இதைச் சங்கீதம் *18*-ஓடு ஒப்பிடலாம்.

ஆசிரியர், பாடகரும் மக்களும் மாறிமா றிப் பாடும் பாடல்களோடு கூடிய ஆலய வழிபாட்டைப் பெரிதும் போற்றுகிறார் *(50:18-21)*. பாடகர் குழுவை அமைத்தும், வாசகங்கள் இயற்றியும் இறைவழிபாட்டை அழகு செய்ததற்காகத் தாவீது மன்னனைப் புகழ்கிறார் *(47:11-12)*. கடந்த கால மூதாதை யர்க்கு அளிக்கும் புகழஞ்சலி *(44-49)* சங் *105*-ஐப் பிரதிபலிக்கிறது. இதில் இறைவன் தாம் தேர்ந்து கொண்ட மக்களுக்காகப் பழங் காலத்தில் வியத்தகு செயல்களைப் புரிந்ததற் காக அவரைப் போற்றுகிறார். பெரியகுரு சீமோனைப் பற்றிய போற்றுரை *(50:1-26)* சங்கீதம் போன்ற மன்றாட்டோடு முடிகிறது

*(50:24-26)*. போதகப் பாடல்களிலும் உள்ளக் கிளர்ச்சித் தொனி திடீரென்று வெளிப்படுகிறது *(சான்று: 23:19-20)*. சிலவற்றில் வருத்தம் தெரிவிக்கும் புலம்பல் தொனி மன்றாட்டாக வருகிறது *(14:18-21; 17:21-25; 18:7-8; 22:33)*. பக்திப் பாடல் எழுதுவதில் ஆசிரியருக்குள்ள ஆற்றலுக்கு மிகச் சிறந்த சான்றுகள், அவர் இறைவனது மகிமையைப் பாடும்போது காணப்படுகின்றன *(39:16-41; 42:15-43:37)*.

ஆசிரியர் தமது நோக்கத்தையும், அதை எடுத்துக் கூறும் முறையையும் பற்றி *24:30-34; 33:16-18; 39:12-16. 32-35; 50:27-29*-இல் சுட்டிக் காட்டுகிறார். சட்டம், மற்ற வேதாகம நூல்களைப் படித்தல், சொந்த அனுபவம், வாழ்க்கை பற்றிய ஆழ்ந்த சிந்தனை ஆகியவை வழியாக ஆண்டவரால் நிறை ஞானம் அளிக்கப்பட்ட ஆசிரியர், ''திராட்சைப்பழம் பறிப்போர் விட்டுப் போனதைப் பொறுக்கியவனைப்போல்'' *(33:16)* தமக்கு முந்திய அறிவர்களைப் பின்பற்றி, தாம் பெற்ற ஞானத்துக்கு நூல் வடிவம் கொடுக்க விழைகிறார். சிந்தனை ஆற்றல் பெற்றயாவரையும், தமது போதகத்தைச் சிந்தித்துக் கடைப்பிடிக்க அழைக்கிறார். கிரேக்கத்தில் மொழிபெயர்த்த அவரது பேரனும் நூலின் செயல்முறைப் போக்கையும், சட்டம் மனித வாழ்வுக்கு இறைவழி காட்டியாகும் என்பதையும் வலியுறுத்துகிறார்.

**9. நூலின் திட்ட அமைப்பு:-** இந்நூல் ஞானத்தைப் போற்றும் பாடல்களையும் ஒழுக்க இயல் பற்றிய ஒரு வகைக் கையேட்டையும் கொண்ட தொகுப்பாகும். இது கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பக்தியுள்ள ஒரு யூதன் விசுவாசித்தவற்றையும், செயல்பட்ட முறையையும் எடுத்துக் கூறுகிறது. ஆனால் நூலில் அறிவு சார்ந்த முறையில் எந்தக் குறிப்பிட்ட திட்டமும் இருப்பதாகத் தெரியவில்லை. தலைப்புகள், எத்தகைய ஒழுங்கும் இல்லாமல் ஒன்றன்பின் ஒன்றாக வருகின்றன. சில தலைப்பு எத்தகைய வளர்ச்சியுமில்லாமல் இரண்டு அல்லது மூன்று தடவை விவரிக்கப்படுகின்றன. ஆகவே, இந்நூலை ஆசிரியர் ஒரே தடவையில் இயற்றியிருப்பாரா என்பது ஐயத்திற்குரியதாகும். சீராக்கு ஆசிரியர் ஒரு செமித்தியர், போதகர் என்பதை மனதில் கொள்ள வேண்டும். ஆசிரியர் தம் போதகத் தொழிலைச் செய்து கொண்டே, இந்நூலைச் சிறிது சிறிதாக இயற்றியிருக்க வேண்டும். இறுதியில் எல்லாவற்றையும் சேர்த்துப் பதிப்பித்திருக்க வேண்டும். இந்நிலையில், சிலவற்றை மீண்டும் மீண்டும் கூறுதலையும், கூறவந்ததிலிருந்து விலகிப் பிறிதொன்றைக் கூறுதலையும் கண்டு நாம் வியப்படைய வேண்டியதில்லை.

இந்நூலுக்குத் தெளிவானதிட்டம் அளிக்கும் முயற்சிகள் வெற்றி அடையவில்லை என்று கூறலாம். நூலில் திட்டம் இல்லை என்று கூறவில்லை. ஆனால் அது ஆய்வாளர்களின் முயற்சிகளிலிருந்து நழுவிக் கொண்டே போகிறது. தலைப்புக்களை அடிப்படையாகக் கொண்டு நூலைத் திட்டம் செய்ய சிலர் முயன்றுள்ளனர். வேறு சிலர், பழமொழித் தொகுப்புகள் *(2:1-42:14)* இறைவனையும் மூதாதையர்களையும் போற்றுதல் *(42:15-50;29)* என இருபாகமாகப் பிரிப்பர். ஸ்பிக் என்பவர் இந்நூல் மோசேயின் ஐந்து சட்டநூலைப் பின்பற்றி அமைக்கப்பட்டிருக்கிறது என்று கருதுகிறார். இந்த அடிப்படையில் நூலை ஐந்து பாகமாகப் பிரிக்கலாம். ஒவ்வொருபாகமும் ஒத்த அமைப்பைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு பாகத்திலும் ஒரு முன்னுரை அல்லது அறிமுகம் உள்ளது *(1:3-30; 16:24-18:14; 24:1-34; 32:14-33:19; 42:15-43:33)*. இவை ஞானத்தையோ, படைப்பின் இறைவனையோ போற்றுகின்றன. முன்னுரையை அடுத்துச் செயல்முறைப் போதகத்தை எடுத்துக்கூறும் பழமொழித் தொகுப்புகள் அமைந்துள்ளன. இவற்றில் எத்தகைய திட்ட அமைப்பும் இருப்பதாகத் தெரியவில்லை. ஐந்து முன்னுரைகளையும் ஒப்பிடும்போது, அவற்றில் ஓர் இணையமைப்புத் தெரிகிறது. இவை ஞானத்தைப் பற்றியோ இறைவனைப் பற்றியோ தொடங்கி மனிதனுக்கு

அளிக்கப்பட்ட ஞானத்தை விவரிக்கின்றன. பின் ஆசிரியர் செயல்முறை ஆலோசனை களை எடுத்துக் கூறுகிறார். இவை ஆசிரியர் தமக்கே கூறிக்கொள்ளும் அறிவுரையா கவோ, பிரமாணிக்கத்திற்கோ நன்றியறித லுக்கோ விடும் அழைப்பாகவோ அமைகின் றன. மேலும் முன்னுரைகள் குறிப்பிடத்தக்க கருத்து இயக்கத்தைக் காட்டுகின்றன. ஆதி யாகம நூலைப்போல் சீராக்கு நூல் யாவை யும் அடக்கும் பண்பிலிருந்து, இஸ்ராயேல் தேர்ந்தெடுக்கப்படுதலாகிய தனிப்பண்புக் குப் போகிறது. முதல் முன்னுரையில் ஞானம் பரந்த அளவில் எல்லா உயிரினங் களுக்கும் (1:10.24), குறிப்பாக மக்கள் அனை வருக்கும் உரியதாகக் காட்டப்படுகிறது. இரண்டாவது. முன்னுரை படைப்பவராகிய இறைவனைப் பற்றிய கொள்கையைத் திரட் டித் தருகிறது (16:24-18:14). மூன்றாவது முன்னுரையில் ஞானம் இஸ்ராயேலுக்கு, குறிப்பாகச் சீயோனுக்கு அளிக்கப்படுகிறது (அதி 24). நான்காவது முன்னுரை மோசே யின் சட்டத்தையும் வழிபாட்டையும் வலி யுறுத்துகிறது (38:18தொ). ஐந்தாவது முன் னுரை இறைவனது ஞானத்தையும் ஆற்ற லையும் எடுத்துக் கூறுகிறது (42:15தொ). இஸ்ராயேலின் தலைவர்களுக்குப் புகழஞ்சலி யைத் தொடங்கிவைக்கிறது. அதாவது நூலின் தொடக்கத்தில் யாவற்றையும் உள் ளடக்கும் நோக்குக் காணப்படுகிறது. போகப் போகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள்மேல் கவனம் ஒருங்கு குவிக்கப்படுகிறது. இந்த மக்கள் இறை ஞானத்தின் உறைவிடமாகக் காட்டப் பெறுகின்றனர். இந்த அமைப்பு ஐந்நூல்கள் பற்றிய ஆசிரியரின் ஆழ்ந்த அறிவை வெளிப்படுத்துகின்றது. இந்தக் கருத்து வளர்ச்சி ஆதியாகமத்திற்கு ஒத்ததாக உள்ளது. ஆதியாகமம் உலகப் படைப் போடு தொடங்கி, படிப்படியாக மற்ற இனங்களை ஒதுக்கிவிட்டு யூதர்களின் பன் னிரண்டு குலத்தலைவர்களோடு, இவ்வாறு பன்னிரண்டு இனத்தவரோடு முடிகிறது (ஆதி 49:28). சீராக்கு நூல் முழுவதும் இந்தக் கருத்து வளர்ச்சியை ஒரே சீராக எடுத்துக் காட்டவில்லையென்றாலும் பற்பல காலங் களில் எழுதியவற்றை ஒன்று சேர்த்துப் பதிப் பித்தபோது, ஆசிரியர் முன்னுரைப் பகுதி களை எழுதி, சிதறிக் கிடந்த தமது போதகங் களுக்கு ஒருவகை ஒழுங்கு செய்திருக்கலாம். இந்த அடிப்படையில் இந்நூலை ஐந்து பாக மாகப் பிரித்துத் திட்டம் செய்யலாம். ஆனால் இதுதான் ஆசிரியரது கருத்தை உறுதியாகப் பிரதிபலிக்கிறது என்று நாம் கூறவில்லை

*10. பொருளடக்கம்:*

1. கிரேக்க மொழி பெயர்ப்பாளரது முன் னுரை.

2. முதல் பகுதி: ஞானத்தின் தன்மையும் செயலும் (1:1-16:23).

(அ) ஞானத்தைப் புகழ்தல் (1:1-4:10).
(ஆ) ஞானத்தின் சன்மானமும் ஒழுக்க முறையும் (4:1-6:17).
(இ) ஞானத்தின் பயிற்சி (6:18-14:19).
(ஈ) ஞானத்தைத் தேடுதல் (14:20).

3. இரண்டாம் பகுதி: இறைவனும் படைப்பும் மனிதனும் அவனது ஒழுக்கச் செயலும் (16:24-23:27).

(அ) படைப்பும் இறைவனும் (16:24-18:14).
(ஆ) பற்பல ஆலோசனைகள் (18:15-23:27).

4. மூன்றாம் பகுதி: குடும்ப, சமூக வாழ் வில் ஞானத்தின் செயல்கள் (24:1-32:13).

(அ) ஞானத்தைப் போற்றுதல் (24:1-34).
(ஆ) அறவுரைகள் (25:1-32:13).

5. நான்காம் பகுதி: ஒருவனுடைய வாழ் வின் சரியான நடத்தை (32:14-42:14).

(அ) மோயீசன் சட்டம் (32:14-33:19).
(ஆ) பல அறவுரைகள் (33:20-39:11).
(இ) உலகை இறைவன் ஆட்சி செய்தல் (39:12-42:14).

6. ஐந்தாம் பகுதி: இயற்கையிலும் இஸ்ரா யேல் வரலாற்றிலும் ஞானம் வெளிப்படுதல் (42:15-50:21).

(அ) படைப்பவராகிய இறைவனைப் போற்றுதல் (42:15-43:33).

(ஆ) மூதாதையரைப் போற்றுதல் (44:1-50:21).

7. முடிவுரை (50:22-29).

8. பிற்சேர்க்கை (51:1-30).

**11. நூலின் போதகம்:** இந்நூலில் ஆதிக்கம் செலுத்தும் ஒரே கருத்து இறை ஞானம் பற்றியதாகும். பழமொழி, யோபு, திருவுரையாளர் போன்ற நூல்களைப் போல் இந்நூலும் ஞானத்தைப் போற்றும் பல பாடல்களைக் கொண்டுள்ளது: 1:1-20; 4:11-19; 14:29-15:10; 51:13-29. இறைஞானம் பற்றிய விரிவான போதகத்தைத் தருகிறது. இறை ஞானம் என்னும் இறையுண்மையின் உள்ளார்ந்த தன்மை, அதன் புறத்தோற்றம், அது இயற்கையிலும் மனுக்குலத்திலும், இஸ்ராயேலின் வரலாற்றிலும், அதன் சமய, சமூக வாழ்விலும் பல்வேறு விதமாகச் செயல்படும் விதம் ஆகியவை இந்நூலுக்கு அடிப்படையாகின்றன. ''முன்னோர் எல்லாருடைய ஞானத்தைப்பற்றி''ப் (39:1) போதிக்கவும், அதை உய்த்துணரக் கற்றுக் கொடுக்கவும் அதன் அறிவை அளிக்கவும், எல்லாவற்றிற்கும் மேலாக அதைத் தெரியப்படுத்தவும், ஆசிரியர் தமது நூலை எழுதுகிறார் (காண்க 24:43-47; 33:16-18; 39:1-11; 50:29-31). ஆகவே இத்தலைப்பின் கீழ் ஆசிரியரது போதகத்தைச் சுருக்கமாக இங்குத் தருகிறோம்.

**11.அ) இறைவனும் ஞானமும்:** இறைவன் ஒருவரே - தன்மையாலே ஞானமுடையவர் (1:8). அவரோடு ஞானம் இருக்கிறது. அவரிடமிருந்து வேறுபடுத்தப்படும் போது ''எல்லா ஞானமும் ஆண்டவராகிய கடவுளிடமிருந்து உண்டாகி, அவருடன் என்றைக்கும் நித்தியமாக இருக்கிறது (1:1). இங்கே குறிக்கப்படும் நித்தியம் என்பதைத் தழுவிய பொருளில் எடுத்துக் கொள்ள வேண்டும். அதாவது, மற்றப் படைக்கப்பட்டவற்றோடு ஒப்பிடும்போது, அவற்றிற்கெல்லாம் முந்தியே இருப்பது. ஏனெனில் உண்மையில் ஞானம் படைக்கப்பட்டதாகும் (1:4-9; 24:12). ஒரு தடவை படைக்கப்பட்டபின், அது என்றைக்கும் நிலைத்திருக்கிறது. ''தொடக்கத்திலும் உலகத்திற்கு முன்னும் நான் படைக்கப்பட்டேன்; எக்காலமும் இருப்பேன்'' (25:14). இறைவனிடமிருந்து வேறுபட்ட ஒன்றாக ஞானம் படைக்கப்படுதல், அவருடைய வார்த்தையால் நிகழ்கிறது. எல்லாவற்றையும் படைப்பிக்கும் வார்த்தை ''உன்னத கடவுளின் வாயினின்று புறப்படுகிறது'' (24:5). இதுவே, இதுவரை இறைவனோடு ஒன்றாயிருந்த ஞானத்தைப் புறநிலைப்படுத்துதலாகும். இனி ஞானம் இறைவனிடமிருந்து வேறுபட்டதாக இருக்கிறது. அது இறைவன் உலகோடு கொள்ளும் தொடர்பின் சாதனமாகிறது (42:15; 43:28). ஞானம் புறநிலையாக்கப்படும்போது, அது இயற்கையிலும், மனுக்குலத்தில் இஸ்ராயேலிலும் தன்னையே வெளிப்படுத்துகிறது. அது படைக்கும், வெளிப்படுத்தும் வார்த்தையாகத் தோன்றி, உலகிலும், மனுக்குலத்திலும் தனது செயலை ஆற்றுகிறது (39:14-26:37; 42:15; 43:5.11.14. 28).

**11.ஆ) உலக முழுமையில் ஞானம்:** ஆண்டவர் ஒருவரே இறைவன். ''அவர் அனைத்திலும் இருக்கிறார்'' (43:29). ''அவர்தம் படைப்புகளுக்கெல்லாம் மேலாக எல்லா வல்லமையும் உள்ளவராக இருக்கிறார்'' (43:30). ''அவர் இடைவிடாமல் அனைத்தையும் கண்டறிகிறார்'' (15:19). உலக முழுமையும் அவர் படைத்துள்ளார். அவற்றின் ஒவ்வொரு பகுதியும் ஒன்றோடு ஒன்று ஒருங்கிணைந்து செயல்பட அவற்றை இசைவிணக்கத்துடன் நிலையாக ஒழுங்குபடுத்தியுள்ளார் (42:24). மனிதனுக்குப் புறம்பாக இவ்வுலகிற்கு மதிப்புண்டு (17:31). வானங்கள் இறைவனது மகிமையாலும் ஆற்றலாலும் நிறைந்துள்ளன. அவர் பாதாளத்தையும், மனித இதயத்தையும் சோதித்தறிகிறார். அவரது அழகின் பிரதிபலிப்பும், அவரது கலையாற்றலின் முத்திரையும், பூமியிலும், வானத்திலும், கடலிலும் நிறைந்துள்ள எண்ண முடியாத பொருட்களில் காணப்படுகின்றன. எதிர்க்க முடியாத அவரது ஆற்றல்

இவற்றையெல்லாம் சேர்த்துப் பிணைத்து இவற்றின் குறிக்கோளை நோக்கி இயங்கச் செய்கிறது. இவையெல்லாம் ஆண்டவரின் வெளிப்பாடாகும். இவற்றைச் சிறுமைமிக்க மனிதன் புரிந்து கொள்ள முடியாது. எடுத்துக்கூறவும் முடியாது. ஆகவே இறைவன் தொடக்கத்திலிருந்து, ஞானத்தை ''உண்டாக்கி, அறிவித்து வெளிப்படுத்தினார். ஏனென்றால் தமது எல்லாப் படைப்புகளிலும், உயிரினங்களிலும்... அதைப் பகிர்ந்திட்டார்'' *(1:9-10)*. ஆகவே உலக முழுவதிலும் இறைவனது-படைக்கும், காத்து அளிக்கும் ஆற்றல் செயலின் சாதனமாக, ஞானம் தன்னைப் பற்றியே கூறிக்கொள்ளக்கூடும். இறைவன் விண்ணையும் மண்ணையும் படைக்கத் தொடங்கிய போது இறை ஆவி செய்தது போல் *(ஆதி 1:1)* ஞானம் ''மண்ணுலகம் முழுவதையும் மேகத்தைப் போல் மூடுகிறது... வான மண்டலங்களைத் தனியே சுற்றி வந்தது. பாதாளத்தின் ஆழத்தை ஊடுருவியது. கடலின் அலைகள் மேல் உலவியது, மண்ணுலகம் முழுவதிலும் நின்றது'' *(24:6-9)*. ஒழுங்கமைப்போடு கூடிய வேறுபாடுகளும், குறிக்கோளுடனும் தளராததுமான ஆற்றலும், இறைவனது செயல்களின் மேல் ஞானம் பதிப்பிக்கும் முத்திரையின் பண்புகளாகும் *(16:26-31)*. இயற்கையில் இறைவன் தம்மையே வெளிப்படுத்தியதை இஸ்ராயேல் அறிவர்கள் புரிந்து கொண்ட விதத்தை அறிய, படைப்பவர் பற்றிய பாடலைக் *(42:15-43:37)* கவனமாய் வாசித்துத் தியானிக்க வேண்டும். அதிலே ஆன்மீக உணர்வும் உயிர்பெற்று நிற்கின்றது. அச்சம், ஆராதனை மற்றும் எடுத்துக் கூறவிழையும் அன்பு, ஆகியவற்றின் துடிப்பையும் காணலாம். இன்னும் அளிக்கப்படாத ''வார்த்தையானவரை''த் தேடுதலையும் கண்டுணரலாம். ''ஆண்டவரை வாழ்த்தி, உங்களால் கூடுமான மட்டும் அவரைப் புகழுங்கள். அவர் எல்லாப் புகழ்ச்சிக்கும் மேலானவர்... அவரைப் பார்ப்பவன் யார்? அவரது இயல்பை எடுத்துரைப்பவன் யார்?'' *(43;33-35)*.

*11.இ)* **ஞானமும் மனுக்குலமும்:** இறைவன்திட்டம் செய்த அளவின்படி ஞானம் எல்லா மனுக்குலத்தின்மூலம் மீதும் பொழியப்பட்டுள்ளது *(1:10; 24:9-10)*. இறைவன் தம் சாயலாக மனிதனைப் படைத்தார். அவனை அறிவும் விழைவும் கொண்ட ஆன்மீகமானவனாகப் படைத்தார். படைக்கப்பட்ட பொருட்களின் மீது அவனுக்கு அதிகாரம் அளித்தார். அவனது நடத்தைக்கு வழிகாட்ட, அவனது மனச்சாட்சியில் ஒழுக்கச் சட்டத்தையும் அளித்தார் *(17:1-12)*. அவன் மேல் சுமத்தப்பட்ட இந்த ஒழுக்கப் பொறுப்பு அவனுக்கு இயற்பண்பாக அருளப்பட்ட சுதந்தர உள்ளத்திற்கு இணையானதாகும். இறைவன் ஆதியில் மனிதனைப் படைத்து அவன் விருப்பத்தின்படியே நடக்க உரிமை கொடுத்தார். ஆனால் தம் கட்டளைகளையும் சட்டங்களையும் கொடுத்தார். கட்டளைகளைக் கடைப்பிடிக்கவும் அவருக்கு நித்தியத்திற்கும் விருப்பமாய் நடக்கவும் உனக்கு மனமுண்டானால், அவைகள் உன்னைக் காப்பாற்றும். அவர் நீரும் நெருப்பும் உன்முன்பாக வைத்தார். ''எது வேண்டுமோ, உன் கையை நீட்டு. மனிதனுக்கு முன்பாக வாழ்வும் சாவும், நன்மையும் தீமையும் உண்டு. அவன் எதைத் தேர்ந்து கொள்வானோ அதை அடைவான்'' *(15:14-18)*. அவனுக்கு ஞானமே வழிகாட்டி.

*11.ஈ)* **ஞானமும் இஸ்ராயேலும்:** ஞானம் இறைவனிடமிருந்து உண்டாகி அவரோடு என்றைக்கும் நித்தியமாய் இருக்கிறது என்பது உண்மையானாலும், அது புறநிலைப் படுத்தப்படும்போது அது படைக்கும், வெளிப்படுத்தும் வார்த்தையாகி - உலகில் தனது அலுவலைச் செய்கிறது. இஸ்ராயேலுக்கு அந்த ஞானமும் வார்த்தையும் சட்டமாக உருவெடுக்கிறது. இறைவனின் ஞானம், - கடலைவிடப் பரந்ததும், மூலப் பாதாளத்தைவிட ஆழமானதுமான அளவிட முடியாத பெருங்கடலாகும் *(24:29)*. ஏதேன் தோட்டத்தில் பாயும் நான்கு ஆறுகளுக்கொப்ப, ஞானத்தின் நீர் பொங்கி மோசேயின் சட்டத்துக்குள் வழிகிறது. அதன் விளைவாகச் சட்டம் தன்னுள்ளே உயிரளிக்கும் ஆற்றலைக் கொண்டுள்ளது. அதன் ஒவ்வொரு ஒழுக்கச் சட்டமும் ஒவ்வொரு சடங்

குக் கட்டளையும் அந்த வல்லமைமிக்க ஆற்றிலிருந்து புறப்படும் கால்வாயாகும். ஒவ்வொரு பிரமாணிக்கமுள்ள சட்ட வல்லு நனும், மனுக்குல நன்மைக்காக அந்த உயி ரளிக்கும் நீரிலிருந்து அள்ளி அளிக்கும் உழவ ராவார் (*24:32-47;* மேலும் காண்க *1:33; 6:37; 15:1*).

இஸ்ராயேலுக்கு ஞானம் வேதாகமத்தி லிருந்து, குறிப்பாகச் சட்ட நூல்கள் ஞான நூல்கள் இறைவாக்கினர் நூல்கள் - ஆகியவற் றிலிருந்து வருகிறது (*39:1-3*). இறைவனது வார்த்தைகளைக் கொண்ட ஏடு என்ற அள வில்மட்டும், வேதாகமம் தூண்டி எழுப்ப வும் போதிக்கவும் இல்லை. மூதாதையர் களோடு இறைவன் கொண்ட உறவுகளையும் உள்ளடக்கும் ஏடு என்ற அளவிலும், அவ ரது நோக்கத்திற்கேற்ப உருவெடுப்பதற்காக அவர்கள் தங்களையே சரண் அளித்ததையும் எடுத்துக் கூறுகின்றன என்ற அளவிலும் தூண்டுகிறது. இதை அதி. *44-50*-இல் காண லாம். ஆகவே, வேதாகமத்தை ஆழ்ந்து படிக்க வேண்டும். இப்படிப்பு மற்றச் செயல்களைக் கைவிடக் கோருகிறது (*38:25*). புலமைபெறவும், சிந்தனை நிறைவு பெறவும், வேதாகமம் படிப்பதைத் தொழி லாகக் கொள்வதைவிட உயர்ந்தபடியுண்டு. அது இறைவனது மனதோடு மனித மனம் கொள்ளும் கூட்டுறவால் வரும் ஞானமா கும். சிந்தனையாளன் ஆழ்ந்து ஆராயும் ஆன்மீகச் சிந்தனையாளனாக வேண்டும். மனித ஆவி இறைவனது ஆவியில் மூழ்கி, அவரோடு ஆளாக உறவாடி, ஒன்றுபட்டுத் துய்க்க வேண்டும். அதற்காகத் ''தன்னைப் படைத்த கடவுள்பால் விழித்திருப்பதற்கா கத் தன் இதயத்தைக் கையளிப்பான். உன்னத ஆண்டவருடைய முன்னிலையில் மன்றாடு வான்... (அப்போது) மகத்தான ஆண்டவர் மனம் வைப்பாராயின் அறிவுடைமையால் அவனை நிரப்புவார். தமது ஞானத்தின் போகங்களை மழைபோல் வரவிடுவார். அவனும் தன் செபத்தில் ஆண்டவரைப் போற்றுவான். அவர் அவனுடைய எண்ணத் தையும் நெறியையும் நடத்துவார். அவன் மறைபொருட்களைச் சிந்தித்துப் பார்ப் பான். அவர் தமது போதகத்தின் நெறியை வெளிப்படுத்துவார். அவன் ஆண்டவர் உடன்படிக்கையின் கட்டளையில் மகிமை கொள்வான்'' (*39:6-11*) ''என்னை உண்பவர் கள் இன்னும் ஆவல் கொள்வார்கள். என்னை அருந்துகிறவர்கள் இன்னமும் தாக மாய் இருப்பார்கள்'' என்று ஞானம் கூறு கிறது (*24:29*).

***11உ) ஞானமும் ஆலய வழிபாடும்:*** ''ஞானத் தின் தொடக்கம் தெய்வ பயம்'' என்ற கூற்றில் சமய பயமே குறிக்கப்படுகிறது. இப்பயம் பழைய ஏற்பாட்டிற்கு அடிப் படையானதாகும். இது இறைவன் முன் கொள்ள வேண்டிய மதிப்பச்சமாகும். இது இறைவன் மேலாண்மையுள்ளவர், வழிபடத் தக்கவர் என்ற உண்மையை மனிதனுக் குப் புகட்டுகிறது. இந்த மனஉறுதியை இறைவன்கோரும் வழிபாட்டைச் செய்வதா லும், ஒழுக்க வாழ்வில் அவரது திரு வுளத்தை நிறைவேற்றுவதாலும், இப்பயம் வெளிப்படுத்துகிறது. இந்த வழிபாடு இஸ் ராயேலுக்குச் சட்டத்தால் நிர்ணயிக்கப்பட் டுள்ளது. இந்தப் பயம் இரு பொருளில் ''ஞானத்தின் தொடக்கமாகும்''. முதலில் இந்தச் சமய மனநிலை, ஞானம் வேரூன்றி ஆன்மாவில் வளர்ச்சி கொள்ளும் நிலையா கும். ''ஞானத்தின் அடிவேர் தெய்வ பயமா கும்'' (*1:25*). இரண்டாவது, ஞானம் தனது முடிவாகவும் (*1:22*) நிறைவாகவும் (*1:20*) உண்டாக்கும் மிகச் சிறந்த கனி, பலிகளும் பொதுச்செபங்களும் அடங்கிய, நிர்ணயிக் கப்பட்ட சடங்கு வழிபாட்டை முழு இதயத் தோடும் சரியான ஒழுக்க மனநிலையோடும் இறைவனுக்களித்தல் என்ற பொருளில், இறைவனுக்கு அஞ்சுதலாம். ஆலய வழி பாட்டுக்கு வணக்கமும் உற்சாகமும் காட்டு வதில், ஞான இலக்கிய ஆசிரியர்க ளிடையே, தனிச் சிறப்புடையவர் சீராக்கு ஆசிரி யர். இதற்குச் சான்றாக, ஆரோனையும் அவ ருக்கு இறைவனால் அளிக்கப்பட்ட குருத் துவத்தையும் ஆசிரியர் புகழ்கிறார் (*45:7-27;* மேலும் காண்க: *33:12*); பெரியகுரு சீமோன் ''இஸ்ராயேலின் சபைக்குமுன்'' (*50:15*) ''அவ ரைச் சுற்றி அவர் சகோதரர் நிற்க'' (*50:13*)

பகிரங்கமாகப் பலி ஒப்புக் கொடுத்தலை உணர்ச்சி மிகுதியோடு விவரிக்கிறார் *(50:11-21)*. இந்த ஒப்பற்ற பணியைக் கொண்டிருப்பது இஸ்ராயேலை ஒரு குலமாக்குகிறது. குருத்துவ அபிடேக எண்ணெய், தூய கத்துச் சாம்பிராணிபோல், மனுக்குலத்துக்குள்ளே வழிபாட்டுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது. இந்தப் பின்னணியில்தான் ஒவ்வொரு இஸ்ராயேலனும் ''ஆண்டவருக்கு அஞ்ச வேண்டும்'' என்றும், குருக்களுக்குரிய பாகத்தைக் கொடுத்து அவர்களுக்கு வணக்கம் செய்ய வேண்டும் என்றும் அறவுரை கூறப்படுகிறது *(7:31 -34)*.

***11.ஊ) ஞானமும் உள்ளார்ந்த வாழ்வும்:-*** புற வாழ்வில் ஞானமிக்க நடத்தை - எல்லா விவேகிகளுக்கும், அவன் இஸ்ராயேலனோ அல்லனோ, கிட்டக்கூடியது. ஆனால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாகிய இஸ்ராயேலரோ ஞானம் உறையும் வீடாகும். ஆகையால் அவர்களுக்கே உரிய பொறுக்கியெடுக்கப்பட்ட பலன் உண்டு *(24:12-16)*. அது, இறைவனை அன்பு செய்பவனுக்கு அளிக்கப்படும், இறைவனுடைய தனிச்சிறப்பான சலுகையாகும். இறைவனோடு அவன் கொள்ளும் நெருக்கமான உறவு; அவன் விரும்பும் தனிச்சிறப்பான கூருணர்ச்சி மென்மை, எவ்வளவு கடினமானாலும் அதை நிறைவேற்றும் மன உறுதி ஆகியவை இந்தச் சலுகையாகும். அதிலே சிறந்து விளங்க முயலுவான் *(1:9-10; 2:18. 19;34:19-20)*. இந்த உள்ளார்ந்த வாழ்வுக்கு வேண்டிய ஞானம் வேதாகமத்திலிருந்து கிடைக்கிறது *(39:1-3)*. ஏனெனில் வேதாகமம் தூண்டுகிறது, போதிக்கிறது. இறைவனது திருவுளத்துக்கேற்ப ஒருவனை உருவெடுக்கச் செய்கிறது.

இத்தகைய இனிய நெருக்கம் சோதனைகளால் சுத்திசெய்யப்படும்வரை அளிக்கப்படுவதில்லை. ''அது (ஞானம்) துன்பநேரத்தில் அவனோடு உலவுகிறது; அவனை ஆதியில் தேர்ந்து கொள்கிறது. பயத்தையும், அச்சத்தையும், சோதனையையும் அவன் மீது ஏவுகிறது; அவன் எண்ணங்களால் அவனைச் சோதித்து, அவன் தன் ஆன்மாவில் நம்பிக்கை கொள்ளும் வரையிலும் தன் போதனையினால் உண்டாகும் துன்பத்தில் அவனை வருத்துகின்றது; அவனை உறுதிப்படுத்தி அவனிடம் நேர் வழிசென்று அவனை மகிழ்விக்கும்'' *(4:18-20)*.

***11.எ) ஞானமும் ஒழுக்க நடத்தையும்:-*** வழிபாடு அடிப்படையானது என்றாலும், ஒழுக்க வாழ்வு அதைவிட அடிப்படையானதாகும். சட்டம் இயல்பாகவே ஒழுக்கச் சட்டமாகும். புண்ணிய வாழ்வும் அதற்கேற்ற உள்ளார்ந்த மனநிலையும் அற்ற சடங்கு முறைகள் கடுமையாகக் கண்டனம் செய்யப்படுகின்றன *(7:8-10; 34:21-35:15)*. இந்த அடிப்படைக் கோட்பாட்டிலிருந்து, நூலில் பரவிக்கிடக்கும் பழமொழிகள் தோன்றுகின்றன. இதில் ''முன்னோர்கள்'', குறிப்பாகப் பழமொழிநூல் ஆசிரியர் பெரிதும் உழைத்துள்ளனர். அவர்களைப் பின்பற்றிச் சீராக்கு ஆசிரியர் ஒழுக்க வாழ்வின் ஒவ்வொரு பகுதியையும் வளமுள்ளதாக்குகிறார் *(24:40-47; 33:16-19; 39:1-3)*.

மனிதனைத் தமது சாயலாகப் படைத்த இறைவன், அவனுக்கு வழிகாட்ட அவன் மனச்சாட்சியில் ஒழுக்கச் சட்டத்தைக் கொடுத்துள்ளார். அவனது நடத்தைக்கு அவனே பொறுப்பு *(15:14-18)*. பாவத்திற்கு இறைவன் பொறுப்பல்லர். தனது சுதந்தரத்தைப் பயன்படுத்தி, மனிதனே தன் பாவத்திற்குப் பொறுப்பாகிறான். அப்படியானால் இறைவனதுகொடையாகிய சுதந்தரத்தை மனிதன் தவறாகப் பயன்படுத்துவதற்குக் காரணமும் பொறுப்பும் எது? இது ''மனிதனது முதல் வீழ்ச்சிதான்'' என்று சீராக்கு கூறவில்லை. ஆதி 2-ஆம் அதிகாரம் பற்றிய அவரது பொழிப்புரை *(17:1-12)* இந்த ''முதல் வீழ்ச்சியைக்'' கூறவில்லை. *25:33*-இல் ''பெண்ணால் பாவம் பிறந்தது. அவளால் நாம் எல்லோரும் சாகிறோம்'' என்கிறார். இது பாவத் தோற்றத்தின் காலவரிசையைக் காட்டுகிறது. வாசகத்தில் குறிக்கப்படும் பாவம் ஏவாளுடையதாகும். அது அவளது பின் சந்ததியின் பாவங்களுக்குக் காரணமா

யிற்று என்று கூறவில்லை. ''முதல் வீழ்ச்சி யின்'' விளைவுகள் பற்றி ஆதி *2:16-19*-க்கு மேல், அதாவது, அதன் விளைவாக ஆதா மின் மக்கள் மேல் சுமத்தப்படும் துன்பச் சுமை, இறுதி விளைவான மரணம் ஆகிய வற்றுக்குமேல் இந்நூல் அதிகம் கூறவில்லை *(40:1-7)*.

*11.ஏ) பாவம்:* பாவத்திற்கு இருவடிவ வேர்கள் இருப்பதாக ஆசிரியர் கருதுகிறார். முதலாவது, படைக்கப்பட்டவன் என்ற அள வில் மனிதனில் இயற்கையாகவே அமைந் துள்ள குறைபாடு. ''அனைத்தும் மனிதரில் இருப்பது கூடாத காரியம். ஏனெனில் மனித னாய்ப் பிறந்தவன் அழியாதவன் அல்லன்... மனிதர் அனைவரும் தூசியும் சாம்பலுமாய் இருக்கிறார்கள்'' *(17:29-31)*. இரண்டாவது, முன்னதைவிடத் தீய கூறு மனிதனிடம் உண்டு. அதாவது, தீமையின்பால் இயல்பா கக் கொண்டிருக்கும் நாட்டம் மனிதனிடம் உண்டு. இது ''கெடுதியானது'' *(17:30; 18:10)*. ''வெறுக்கத்தக்க எண்ணம்'' *(37:3)*, என்று பலவாறு குறிக்கப்படும். இதைக் குறிக்கும் எபிரேய அடிப்படைச் சொல் ''விருப்பம்'' என்று பொருள்படும் ''யேசெர்'' என்பதாகும் *(15:4)*. கருத்தளவில் இச்சொல் சுதந்தர உள்ளத்தைக் குறிக்கும். அது இயற்கையாகவே நல்லது, ஒழுக்க அளவில் எச்சார்பும் அற்றது. ஆனால் நடை முறையில் மனிதன் தன் சுதந்தர உள்ளத்தை, வழக்கமாகத் தவறான முறையில் பயன் படுத்துகிறான். ஆகவே செயல்முறையில் அது பழுதுபட்டதாகத் தோன்றுகிறது. அதைத் தவறாகப் பயன்படுத்துவது எவ்வளவு அதிக மாயுள்ளதென்றால், இராபிகளின் போதகம் ''யேசெர்'' என்ற சொல்லைத் தீயபொருளி லேயே, தீமையை நோக்கிய வலுவான நாட்டத்தை விவரிக்கவே, எப்போதும் பயன்படுத்தியுள்ளது. அதைக் கிறிஸ்தவர் கள், மனித இயல்பின் மேல் சென்மப் பாவத்தால் இழைக்கப்பட்ட காயங்கள் என் பர். சீராக்கு ஆசிரியர் அந்தத் தீய நாட்டத் தின் மூலத் தோற்றத்தை ஆராயவில்லை; விளக்கவில்லை. அது இருப்பதை மட்டுமே கவனத்தில் எடுத்துக் கொள்கிறார். பாவத் திற்குக் காரணம் இறைவன் அல்லர், இறை வன் அளித்த நல்லதொன்றை மனிதன் தவ றாகப் பயன்படுத்தியதன் விளைவே பாவ மாகும். சுதந்தரத்தைத் தவறாகப் பயன்படுத் துதல் மனிதனில் காணப்படும் குறைபாட்டி லிருந்தும், அதைவிட, மனிதவியல் அமைப் பிலேயே காணப்படும் ஒழுக்கச் சீர்கேட்டி லிருந்தும் தோன்றுகிறது. இப்படி விளக்குவ தோடு ஆசிரியர் நிறைவு அடைகிறார். ஏன் இது ஒவ்வொரு மனிதனிடமும் காணப்படு கிறது என்பதை அவர் விளக்கவில்லை. வருந்தத்தக்க உண்மை என்னவென்றால் ''நாம் எல்லோரும் தண்டனைக்கு உரியவர் கள்'' *(8:6;* காண்க. *21:3; 27:11)*. ஒவ்வொரு வனும் தனக்கே சாத்தான் (பேய்); அதாவது எதிராளி ஆவான். பாவி தன் ''எதிராளி யைச் சபிக்கும்போது தன் ஆன்மாவையே சபித்துக் கொள்கிறான்'' *(21:30)*. மனிதரின் பாவங்களுக்கு இறைவனைக் குற்றம் சாட் டக்கூடாது. ஏனெனில் ''அக்கிரமங்கள் அவ ருக்குத் தேவையில்லை. அநியாயம் அனைத் தையும் அவர் பகைக்கிறார்'' *(15:12-13)*.

பாவம் தீமையானது. ஆனால் இறைவன் தீமையிலிருந்து பல வழிகளில் நன்மையைக் கொணர்கிறார். 1) பாவியின் பலவீனத்தன் மையே இறைவனில் இரக்கத்தை உண்டாக்க வல்லது *(18:9-14)*. 2) பாவத்தைத் தவிர்க்க, சட்டத்தின் வழியாக இறைவன் வழிகாட்டு கிறார், உற்சாகப்படுத்துகிறார். சட்டத்தைக் கடைப்பிடிப்பது பாவத்தின் உந்துதல் களைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கத் திடம் அளிக்கிறது *(21:12; 32:18-20; 32:27-33:3)*. 3) பாவநாட்டம் பற்றிய அறிவு செபிப்பதற்கு ஒரு வாய்ப்பாகும். செபம் பாவத்தை வெல் லவும், அதைத்தவிர்க்கவும் இறைவனது உத வியைப் பெற்றுத் தருகிறது *(22:33-23:6)*. 4) சோதனையை வெல்வது தகுதிபெற ஒரு வாய்ப்பாகும் *(31:8-11)*. இறுதியாக, 5) பாவம் செய்த பின் அதற்கு மனம் வருந்து தல் மனிதனை இறைவனிடம் நெருங்கி வரச் செய்கிறது. பரிகாரம் பாவத்தின் விளைவு களை அகற்றுகிறது. ''அக்கிரமத்தினின்று அகன்றுபோவது ஆண்டவருக்கு விருப்ப மானது. அநீதத்திலிருந்து விலகுவது பாவ நிவாரணம்'' *(35:5;* காண்க. *17:28; 34:30-31)*.

*11.ஐ)* **வினைப்பயன் கோட்பாடு:** தீமைக் காகத் துக்கப்படவில்லையென்றால், இறை வன் அதைக் கவனித்துத் தண்டிப்பார். மனித னது எல்லா எண்ணங்களையும் செயல்களை யும், நன்மையானதையும் தீமையானதை யும், மிக இரகசியமானதையும் கூட இறை வன் பார்க்கிறார். ஒவ்வொருவருடைய செய லுக்கேற்பத் தீர்ப்பிடுகிறார். நல்லவர்களுக் குச் சன்மானமும் தீயவர்களுக்குத் தண்டனை யும் அளிக்கிறார் *(16:11-15; காண்க 17:13; 23:25-27; 42:18-20).* இந்த வினைப்பயன் கோட்பாடு பற்றி ஆசிரியர் பாரம்பரியப் போதகத்தை அசைக்க முடியாத முறையில் பின்பற்றுகிறார். இதைப் பொறுத்த மட்டும் இவர் ஒரு பழமை விரும்பி. யோபு, திரு வுரையாளர் ஆகியவர்களைப் போல் ஐயுற்ற தில்லை. வரும் உலக வாழ்வு பற்றிய புதுக் கருத்துகள் இருக்கக்கூடும் என்பதைக் கூட இவர் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. மனிதனுடைய தீமைக்கு அவனுடைய, இவ் வுலக வாழ்விலோ, தவறினால் அவனு டைய பிள்ளைகளின் வாழ்விலோ, உறுதியா கத் தண்டனை உண்டு. ஏனெனில் பாதாள மாகிய ''சேயோலில்'' தண்டனையோ சன் மானமோ இல்லை *(9:16; 23:34-38; 41:8-14; 1:13; 30:4.6; 37:27-29; 41:11-13; 44:14-18).*

*11.ஒ)* **சேயோல்:** அவருக்கு முந்திய பழைய ஏற்பாட்டு அறிவர்கள் சேயோலை விவரித்தவாறே, சீராக்கு ஆசிரியரும் அதைத் தெளிவற்ற நிழல் உலகமாக விவரிக்கிறார். அங்கே நீதிமான்கள், அக்கிரமிகளின் ஆவி கள் ஒரே நிலையில் உள்ளன. இந்நிலை சில இடங்களில் ''இளைப்பாற்றி'' என்று குறிப் பிடப்படுகிறது *(22:11; 38:24).* வேறு சில இடங்களில் ''நித்திய இளைப்பாற்றி'' என் றும் குறிப்பிடப்படுகிறது *(30:17).* ஆனால் இப்போது நாம் எடுத்துக் கொள்ளும் பொரு ளில் இது கூறப்படவில்லை. சாவோடு ஒரு வனுடைய சொந்த வாழ்வில் எல்லாம் முடி வுக்கு வருகிறது. அவனுக்கு எஞ்சியதெல் லாம் ''கோபம், பொறாமை, கலகம், கலக் கம்'' *(40:4)* ஆகியவையே. வரும் உலக வாழ்வு பற்றிய மூல எபிரேயவாசகத்தில் காணப்படும் இந்த முதிர்ச்சி பெறாத கருத் தோடு ஒப்பிடும்போது விரிவாக்கப்பட்ட வாசகத்தில் குறிப்பிடத்தக்க முறையில் கொள்கை முன்னேற்றம் உள்ளது. இது பிற் காலச் சேர்க்கைகளின் விளைவாக இருக்க லாம்.

*11.ஓ)* **ஆட்தன்மைப்படுத்தப்பட்ட ஞானம்:** ஞானம் வெறும் ''வார்த்தையாகவும்'' இறைவனது புறச் . செயல்களின் சாதன மாகவும் இருப்பதற்குமேல், அஃது ஓர் ஆள் என்று கூறலாமா? இதுபற்றி வாசகம் ஒரு வளர்ச்சியைக் காட்டுகிறது. *14:20-27*-இலும் முன்னேற்றம் இல்லை. இது *15:1-8*-ஓடு இணையும்போது ஞானத்தின் ஆட்தன்மை பொருளியலான பண்புகளைப் பெற்றாலும், உருவகத் தன்மையே ஆதிக்கம் செலுத்து கிறது. இதிலிருந்து, ஞானம் தன்னைப் பற் றியே பேசுவதாக விவரிப்பது ஒரு வளர்ச்சி யாகும். *4:15-19*-இலும் (எபிரேய வாசகத் திலும்) ஞானத்தின் பக்தனிடம் என்ன நிகழ் கிறது என்பதைப் பற்றி விவரிக்கப்படுகிறது. ஞானத்தின் ஆட்தன்மை அன்று. முக்கிய மான பகுதி *24:1-22* ஆகும். இதில் ஞானம், தன்பெயரிலேயே, தனது தன்மை மற்றும் செயல்கள் பற்றி விவரித்துப் பேசுகிறது. இங்கு உருவகம் மட்டுமில்லை. கருத்து ஒருமையும் இருக்கிறது. இது இறைவன் தாம் படைத்த உலகிலும், உலகுக்கும் தம் மையே அளிப்பதாகும். இறைவனது கைவேலையாகிய இயற்கையிலும் அவரது சாயலாகிய மனிதனிலும் அவர் தம்மையே வெளிப்படுத்துதலான ஞானம் பிரசன்னமாக இருக்கிறது. வேதாகமங்களில் அவர் தம் மையே வெளிப்படுத்துதலான ஞானம் பிர சன்னமாக இருக்கிறது. வேதாகமங்களில் இறைவன் அளிக்கும் போதனையிலும், ஒவ் வொரு இதயத்திலும் அவர் பதித்திருக்கும் ஒழுக்கச் சட்டத்திலும் இறைவன் தம்மையே வெளிப்படுத்துதலான ஞானம் பிரசன்னமாக இருக்கிறது. அவர் அன்பு செய்பவர்களுக்கு இறைவன் தம்மையே உள்ளார்ந்த முறை யில் அளிப்பதும் ஞானமே *(4:10-14; 45:1; 46;13).* அவர்கள் இறைவனுடைய அன்பர் கள் என்று அவர்கள் அறியச் செய்ய ஒளிவடி விலும், அவரது அன்புக்கு அவர்களைச்

செபவடிவில் பதில் கூறச் செய்யவும், அவருக்குச் சேவை செய்து பதில் அன்பு காட்டச் செய்ய உந்துதல் வடிவிலும் அவர் அளிப்பது ஞானமே (*1:10:2:19-20; 34:19-20*). இவ்வாறு ஞானம் என்பது வெறும் கருத்தன்று, அல்லது இறைவனுடைய ஏதோ ஒரு பண்புமட்டுமன்று. அது பலவழிகளிலும் இறைவன் தம்மையே அளிப்பதாகும். இதை எடுத்துக் கூற ஞானம் ஆட்தன்மைப்படுத்தப்படுகிறது. ஆனால் ஓர் ஆளாக்கப்படவில்லை. இறைமையின் உள்ளார்ந்த தன்மையில் இறைவனோடு ஒன்றானதாக மனிதரை இறைப்பண்புடையவர்களாக மாற்ற வருவதாக ஞானம் விவரிக்கப்படவில்லை. அதற்கு இன்னும் காலம் முதிரவில்லை. ஆனால் வெளிப்பாட்டின் வளர்ச்சிமிக்க ஒளியில், இறைவன் மனிதர்களுக்கு என்ன செய்துள்ளார், அவர்களை எதற்கு அழைக்கிறார் என்பவை பற்றிய இந்த இறையூக்கம் பெற்ற சிந்தனைகள், விரைவில் சொல்லமுடியாத விதத்தில் நிறைவேறுதலை நிழல் படர்விப்பதாகவும், முன்னறிவிப்பதாகவும் அமைந்திருப்பதாகத் தோன்றுகின்றன. பழைய ஏற்பாட்டு ஞானிகள் இன்னும் ஒருபடி எடுத்து வைத்தால் புதிய ஏற்பாட்டில் நிற்பர். சீராக்கு மகன் ''இடியின் மகனான'' யோவானுக்குத் தனது எழுதுகோலை அளிப்பார்.

*12. இக்காலத்திற்கு:* ஞானி தன் மாணவர்களை, வாழ்வின் எல்லாச் சூழ்நிலைகளையும் நம்பிக்கையோடு எதிர்கொள்ளத் தயாரிக்க வேண்டும். அவர்களுக்கு உண்மையான, உறுதியான மதிப்பீடுகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும். இதையே இந்நூல் செய்கிறது. இந்நூலில் மனித சமூகத்தின் எல்லாக் கூறுகளையும் காணலாம். இவற்றையெல்லாம் பயன்படுத்தி, கடந்துபோகும் இவ்வுலகின் பொருட்களைக் கையாளுவதில் மிகுந்த மட்டுடமையையும், விவேகத்தையும் கடைப்பிடிக்கத் தனது மாணவர்களைப் பயிற்றுவிக்கிறார் சீராக்கு ஆசிரியர். இதில் அவர் உண்மையான மனித இன நல விரும்பியாவார். பரிபக்குவமுடைய, வினைத்திட்பமுடைய, நகைச்சுவைமிக்க இந்த ஆசிரியர் உறுதியான புண்ணியவாழ்வில் தமது மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கிறார். ஆகவேதான், யூதர்கள் ஓரளவு தங்கள் செபக்கூட வழிபாட்டிலும், திருச்சபை தனது வழிபாட்டிலும் இந்நூலைப் பயன்படுத்தியுள்ளன. திருச்சபையின் தந்தையரும் இந்நூலிலிருந்து பல எடுத்துக்காட்டுகள் கொடுக்கின்றனர். இக்காலக் கிறிஸ்தவர்களும் இந்த ஞானியின் பள்ளியில் பயின்று, ஒழுக்க வாழ்விலும் இறை அச்சத்திலும் ஞானத்திலும் வளர்ச்சியுற்று எப்போதும் பயன் பெறலாம்.

மேலும் இந்த ஞானி தனது போதகத்தில், நலம்பயக்கும் மனித இன நலம் தேடும் இயலோடு வெளிப்படுத்தப்பட்ட சமயத்தின் ஆழ்ந்த உண்மைகளையும் வியத்தகு முறையில் ஒன்றிணைக்கிறார். இதில் அவர் தமது காலஇறையியல் வல்லுநர்களுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக அமையவேண்டும். மனுக்குலத்திற்குச் சேவை செய்யும் ஆர்வத்தில் கிறிஸ்துவ சமய அடிப்படை உண்மைகளை ஐயுற்றோ, மறுத்தோ வெறும் சக்கைகளைத் தேடித் திரியும் போக்கு இப்போதுள்ள சில தான்தோன்றிஇறை இயல் வல்லுநர்களிடையே காணப்படுகிறது. இவர்கள் சீராக்கு ஆசிரியரைப் பின்பற்றினால் உண்மையிலேயே மேன்மை அடைவர். மனுக்குலத்திற்குச் சிறப்பான முறையில் சேவை செய்வர் என்பது உறுதி. அது உண்மையான இறை சேவையாகவும் அமைந்திருக்கும்.

### சீரியக்கு (SYRIAC)

கிழக்கத்திய அரமேயிக்கு மொழியின் பிற்கால வடிவமாகும். இது கி.பி. முதல் நூற்றாண்டின் மத்தியில் வடமெசபொத்தாமியாவில் தோன்றியது. இது எதெஸ்லா நகருடன் (இக்கால உர்பா) தொடர்புபடுத்தப்படுகிறது. பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும் சீரியக்கு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டதன் விளைவாக இம்மொழி ஓர் இலக்கிய மொழியாக மிகுந்த முக்கியத்துவம் பெற்றது.

அரமேயிக்கு மொழியிலிருந்து இம்மொழி தனது எழுத்துக்களைப் பெற்றது.

வலமிருந்து இடமாக எழுதப்பட்டது. இதன் நெடுங்கணக்கில் இருபத்திரண்டு மெய் யெழுத்துக்கள் உண்டு. இவை எபிரேய மொழியைப் போன்று வரிசைப்படுத்தப் பட்டன. உயிர் எழுத்து வடிவங்கள் 8-ஆம் நூற்றாண்டில் புகுத்தப்பட்டன. காண்க: அர மேயிக்கு

***சீரியக்கு மொழிபெயர்ப்பு** (விவிலியத்தின்)*
*(SYRIAC VERSION)*

I. அரமேயிக்குமொழி, எபிரேய மொழி யோடு நெருங்கிய உறவு கொண்ட ஒரு செமித்திய மொழியாகும். இந்த அரமேயிக் கின் ஒரு திரிபுமொழி சீரியக்கு மொழியா கும். குறிப்பாகக் கிழக்கத்திய அரமேயிக் கின் திரிபு மொழி சீரியக்கு மொழியாகும்.

இந்தச் சீரியக்கு மொழியைப் பழைய அர மேயம் பேசப்பட்ட இடங்களில், மக்கள் பயன்படுத்த ஆரம்பித்தனர். தற்கால இஸ்ரா யேல், யோர்தான், சீரியா, லெபனோன், துருக்கி, முதலிய நாடுகளில், கி.பி. முதல் நூற்றாண்டில் அரபிய மொழிதான் பேசப்பட் டிருக்கிறது. சீரியக்கு மறைந்துவிட்டது. தற் போது இந்தச் சீரியக்கு மொழி, சிலயிடங்க ளில் வழிபாட்டு மொழியாக மட்டும் பயன் படுத்தப்படுகிறது. கத்தோலிக்கத்தில் இலத் தீனைப் பயன்படுத்துவதைப் போலச் சில நாடுகளில் கிறித்துவ வழிபாட்டிற்கு இந்தச் சீரியக்கு மொழியை இன்றும் பயன்படுத்தி வருகின்றனர். இவ்வாறு இம்மொழியைப் பயன்படுத்தும் நாடுகள் மேற்காசிய நாடுக ளாகும். அங்கிருந்து தென் அமெரிக்காவி லும் வட அமெரிக்காவிலும், கிழக்கத்திய நாடுகளிலிருந்து குடியேறிய மக்கள் தங்கள் வழிபாடுகளில் சீரியக்கு மொழியைப் பயன் படுத்துகின்றனர். நமது இந்திய நாட்டில் கேரளாவில் சீரியன் கத்தோலிக்கர்கள், இரண்டாம் வத்திக்கான் சங்கத்திற்கு முன் பாக, இந்தச் சீரியக்கு மொழியைத்தான் வழிபாட்டில் பயன்படுத்தினர். ஆனால் தற் போது தங்கள் தாய்மொழியாகிய மலையா ளத்தையே வழிபாட்டு மொழியாகப் பயன்படுத்துகின்றனர்.

விவிலியத்தின் மொழி பெயர்ப்புகளில் கிரேக்க மொழிபெயர்ப்பை அடுத்து, காலத் தால் முந்தி நிற்பது இந்தச் சீரியக்கு மொழி பெயர்ப்புதான். இங்குப் பழைய ஏற்பாட்டின் சீரியக்கு மொழி பெயர்ப்பு, புதிய ஏற்பாட்டின் சீரியக்கு மொழி பெயர்ப்பு என்று பிரித்துப் பார்ப்பது நல்லது.

***II. பழைய ஏற்பாட்டுச் சீரியக்கு மொழி பெயர்ப்பு***

***1. பெசிட்டா மொழிபெயர்ப்பு:-*** பழைய ஏற்பாட்டுச் சீரியக்கு மொழி பெயர்ப்பில் முதலில் நிற்பது பெசிட்டா மொழி பெயர்ப் பாகும். பெசிட்டா என்றால் சீரியக்கு மொழியில் எளிமை அல்லது பொதுவானது என்பது பொருள். சாதாரண மக்களுக்காக எளிமையான மொழியில் இந்தப் பெசிட்டா பழைய ஏற்பாடு ஆக்கம் செய்யப்பட்டுள் ளது. இதில் பக்க ஓரக் குறிப்புகளோ, கீழ்க் குறிப்புகளோ கொடுக்கப்படவில்லை. இது அரமேயிக்கு மொழிபெயர்ப்பான தார்குமி லிருந்து மொழி பெயர்க்கப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. சிலர் எபிரேய மூலத்திலிருந்தே இந்தச் சீரியக்கு மொழி பெயர்ப்பு செய்யப்பட்டது என்று கூறுகிறார் கள். உதாரணமாக மெக்கன்சி என்ற அறிஞர். இப்பழைய ஏற்பாட்டுச் சீரியக்கு மொழி பெயர்ப்பு கி.பி. முதல் நூற்றாண்டில் அல்லது கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் ஆக்கம் செய்யப்பட்டிருக்க வேண்டும். இம்மொழி பெயர்ப்பில் பலர் பணியாற்றியிருக்கின்ற னர். இம்மொழிபெயர்ப்பை யூத கிறிஸ்தவ அறிஞர்கள் செய்திருக்க வேண்டும் என்று சிலர் கருதுகின்றனர். இம்மொழி பெயர்ப்பில் பிரிவினைச் சகோதரர்கள் ஏற்றுக் கொள்ளாத துணைத்திருமுறை விவிலிய புத்தகங்களும் இடம் பெற்றுள்ளன. இம் மொழி பெயர்ப்பு பெரும்பாலும் எழுபது நூல் என்ற கிரேக்க மொழி பெயர்ப்புடன் ஒத்துப்போகிறது. ஆனால் மாசரேட்டிக்கு எபிரேய மூலத்துடன் அதிகமாக இணைந்து செல்வதில்லை. இந்நிலை, அனேகமாக இந் தப் பெசிட்டா பிற்காலத்தில் திருத்தப்பட் டிருப்பதால் உண்டாகியிருக்கலாம். இந்தச் சீரி

யக்கு பெசிட்டா மொழி பெயர்ப்பிலிருந்து தான் கி.பி. 442-ஆம் ஆண்டைச் சேர்ந்த ஓர் அருமையான பழஞ்சுவடி நமக்குக் கிடைத் திருக்கிறது. இதன் சிறப்பு என்னவென்றால், இச்சுவடியினுடைய காலம் தெளிவாக இதில் அறிந்து கொள்ளப்படுகிறது. இதைப் போன்று மற்றப் பழஞ்சுவடிகள், காலத்தை அறியத் தெளிவாகயில்லை.

*2. பிலோக்சேனு பதிப்பு:* ஒரே இயல்புக் கொள்கையினர் (மோனபிசைட் என்ற பதி தம்) பெசிட்டா மொழி பெயர்ப்பை மக்கள் விரும்பிப் பயன்படுத்தியதைப்பார்த்துப் பொறாமைப்பட்டனர். அந்தப் பெசிட்டா மொழி பெயர்ப்பிற்கு மாற்றாக வேறொரு மொழிபெயர்ப்பைத் தயாரிக்க ஏற்பாடு செய்தனர். மாப்புக் என்றவிடத்தின் ஆயரான பிலோக்சேனு என்பவர் போலிகார்ப்பு என் பவரை எழுபதுநூல் என்ற கிரேக்க விவிலி யத்திலிருந்து சீரியக்கு மொழியில் ஆக்கம் செய்யப் பணித்தார். போலிகார்ப்பும் அப் போது ஒரு துணை ஆயர்; அவரும் அப் பணியை ஏற்று விவிலியத்தைச் சீரிய மொழி யில் மொழிபெயர்த்தார். இது கி.பி. 508-இல் செய்து முடிக்கப்பட்டது. தற்போது இதில் நமக்குச் சில பழம் ஏட்டுத் துணுக்குகளே கிடைக்கின்றன. அவைகளை ஆராய்ந்து பார்க்கும்போது, இந்தப் பிலோக்சேனு சீரி யக்கு மொழிபெயர்ப்பு, லூசியன் என்பவர் திருத்தம் செய்த எழுபதுநூல் கிரேக்க மொழி பெயர்ப்பை அடிப்படையாக வைத்துச் செய் யப்பட்டிருக்கிறது என்பது தெரிகிறது.

*3. சீரிய பாலஸ்தீனிய பழைய ஏற்பாடு:* பாலஸ்தீனத்தில் வாழ்ந்த மெல்கைட் கிறிஸ்த வர்கள் தங்கள் வழிபாட்டில், கிரேக்க விவிலி யத்தை வாசித்து வந்தனர். ஆனால் கிரேக் கம் மக்களுக்குத் தெரியாத மொழி. எனவே அரமேயிக்கு மொழி பெயர்ப்பு செய்யப்பட் டதுபோலவே கிரேக்க வாசகம் வாசிக்கப் பட, அதற்கு வாய்மொழி அளவில், மக்க ளின் தாய்மொழியில் , மொழிபெயர்ப்பு உடனே கொடுக்கப்பட்டு வந்தது. இந்த மெல்கைட் கிறிஸ்தவர்கள் பேசிய மொழி பாலஸ்தீனிய அரமேயிக்கு மொழி. இது சீரியக்கு மொழியைவிடச் சற்றுவேறுபட்டது. ஆனால் எழுதும் முறையில், ஒன்றானது.

இவ்வாறு வாய்மொழியாகக் கொடுக்கப் பட்டுவந்த மொழிபெயர்ப்பை நாளடை வில் புத்தகமாக எழுதிப் பதிப்பித்தனர். அப்பணியைக் கி.பி. 4-ஆம் நூற்றாண்டின் இறுதியில் செய்தனர். தற்போது நமக்குக் கிடைக்கும் பழம் ஏடுகளில், 42 முழு சங்கீ தங்களும், மற்றும் மற்றச் சங்கீதங்களி லிருந்து ஒரு சில வசனங்களும் அடங்கிய ஒரு பழம் ஏட்டுத் தொகுப்பு மிக முக்கியமானது. இம்மொழிபெயர்ப்பு எழுபதுநூல் என்ற கிரேக்க விவிலியத்தை ஆதாரமாக வைத்துச் செய்யப்பட்டிருக்க வேண்டுமென்பது தெளி வாகிறது. ஆனால் அறிஞர்கள் ஒருசிலர் இது, ஒரு பாலஸ்தீனிய அரமேயிக்கு மொழி பெயர்ப்பை ஆதாரமாக வைத்துச் செய்யப் பட்டிருக்க வேண்டும் என்று கருதுகின்றனர்.

*4. சீரியக்கு ஆறுபடிவ பழைய ஏற்பாடு:* சீரியக்கு விவிலிய மொழி பெயர்ப்பினைத் திருத்தி அமைக்க மூதாளர் முதலாம் அத்த னாசியு விரும்பினார். எனவே அலக்சாந் திரியா அருகிலுள்ள தெல்லா தெ மௌசலத் என்ற இடத்தின் ஆயராக விளங்கிய பவுல் என்பவரை, இப்பணியைச் செய்து தரும்படி பணித்தார். அவரும், ஓரிசன் தயாரித்த ஆறு படிவம் என்ற தொகுப்பு ஏட்டில், ஐந்தாவது பத்தியில் எழுதப்பட்டிருந்த, எழுபதுநூல் கிரேக்க மொழி பெயர்ப்பை எடுத்துக் கொண்டு, அதைச் சீரியக்கு மொழியில் மொழி பெயர்த்தார். இவ்வாறு மொழி பெயர்த்தபோது, ஓரிசன் கிரேக்க மொழி பெயர்ப்பில் கொடுத்திருந்த அத்தனை குறிப்பு களையும், குறியீடுகளையும் விட்டு விடாமல் சேர்த்துஅப்படியே மொழி பெயர்த்தார். ஓரிசன் ஏட்டின் பக்க ஓரங்க ளில் கொடுத்திருந்த, அக்குவிலாஸ், சிம் மாக்குஸ், தியோடிசியன் இவர்களின் மாற் றுப்பாடங்களையும் மொழிபெயர்த்துத் தந் திருக்கிறார். இப்பணியை கி.பி. 616-617-இல் செய்து முடித்தார்.

இந்த முக்கியமான மொழிபெயர்ப்பு நமக்கு அழியாமல் கிடைத்திருக்கிறது. ஏறக்

குறைய எல்லாப் பழைய ஏற்பாட்டுப் புத்த கங்களுக்கும், இச்சீரியக்கு மொழி பெயர்ப் பின் பழம் ஏடுகள் நமக்குக் கிடைக்கின்றன. இவை தற்போது மிலானிலுள்ள, அம்புரோசி யார் நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வரு கின்றன. இந்தப் பழம் ஏடு, முதன்முதலில் எழுதப்பட்ட சீரியக்கு மொழிபெயர்ப்பு ஏட் டிற்கு ஒரு நூற்றாண்டு மட்டும்தான் காலத் தால் பிந்தியதாகும். இதில் இறைவாக்கினர் புத்தகங்களும், கவிதைநடையில் உள்ள விவிலியப் புத்தகங்களும் இடம் பெறுகின் றன. இப்பழம் ஏடு புகைப்படம் எடுக்கப் பட்டு அண்மையில் வெளியிடப்பட்டது.

இந்தச் சீரியக்கு ஆறுபடிவ மொழி பெயர்ப்பு மிக முக்கியமானதாகும். ஏனென் றால் இதைக்கொண்டு கி.பி. 4-ஆம் நூற் றாண்டில், எழுபதுநூல் கிரேக்க மொழி பெயர்ப்பில் ஓரிசனால் செய்யப்பட்ட உண் மையான திருத்தங்களை நாம் கண்டுபிடிக்க லாம். இம்மொழி பெயர்ப்பில் தானியேல் ஆகமமும் அடங்கியிருக்கிறது. இதற்குமுன் எழுபதுநூல் கிரேக்க மொழிபெயர்ப்பில், தானியேல் ஆகமம் இடம் பெறவில்லை என்றே கருதப்பட்டது. ஆனால் இம்மொழி பெயர்ப்பு அக்கருத்து தவறு என்று எண்பிக் கிறது.

II. **புதிய ஏற்பாட்டின் சீரியக்கு மொழி பெயர்ப்புகள்:** மேலே பழைய ஏற்பாட்டிற்கு நாம் பார்த்த மொழி பெயர்ப்புகளிலேயே, சில மொழி பெயர்ப்புகளில் புதிய ஏற்பா டும் அடங்கும்.

**1. பழைய சீரியக்கு மொழி பெயர்ப்பு:** சீரி யக்கு விவிலிய மொழிபெயர்ப்பில் மிகப் பழமையானது, புதிய ஏற்பாட்டின் மொழி பெயர்ப்பு என்று சொல்லலாம். சீரியக்கு மொழியில் விவிலிய மொழி பெயர்ப்பு புதிய ஏற்பாட்டிலிருந்துதான் ஆரம்பமாகி யது போல் தெரிகிறது. இம்மொழி பெயர்ப்பு கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் நடந்திருக்கிறது. புதிய ஏற்பாட்டில் ஒரு சில பகுதிகள்தான் இப்போது மொழிஆக்கம் செய்யப்பட்டன. இப்போது செய்யப்பட்ட மொழிபெயர்ப்பின் படிவங்கள் இரண்டு பழம் ஏடுகளில் மட்டும்தான் நமக்குக் கிடைக்கின்றன. ஆனால் இப்பழம் ஏடுகள் இரண்டாம் நூற்றாண்டில் மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டதைத் தன்னில் கொண்டிருந்தா லும், இவை கி.பி. 4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவைதான். இவ்வேடுகளில் நான்கு நற்செய்திகளிலிருந்தும் வசனங்கள் சில காணப்படுகின்றன. இந்த ஏடுகளின் பெயர் கள் சீனாய் சீரியக்குச் சுவடி, குர்தோனிய சீரியக்குச் சுவடி என்பனவாகும். சீனாய் சீரியக்குச் சுவடி 1892-ஆம் ஆண்டு லுவிஸ் கிப்சன் என்ற ஆங்கிலேயப் பெண்மணி யால் சீனாய் மலையிலிருக்கும் கத்தரின் மடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. குர்தோனிய சீரியக்குச் சுவடியை 1858-இல் குர்தோன் என்பவர் வெளியிட்டார். இதில் 80 பக்க முள்ள நற்செய்தி வாசகப் பக்கங்கள் உள்ளன.

**2. பெசிட்டா மொழிபெயர்ப்பில் புதிய ஏற்பாடு:** பெசிட்டா பழைய ஏற்பாடு மொழிபெயர்ப்புடன், புதிய ஏற்பாடும் சேர்த்து மொழி பெயர்க்கப்பட்டது. இது செய் யப்பட்ட காலம் கி.பி.4-ஆம் நூற்றாண்டு. இதை ஒரு புதிய மொழிபெயர்ப்பு என்று சொல்ல முடியாது. இதற்குமுன் நிலவிய பழைய சீரியக்கு மொழிபெயர்ப்பைக் கிரேக்க மூலத்துடன் ஒப்பிட்டுப் பார்த்துத் திருத்தப்பட்டதாகும். இது எரோனிமு இலத் தீன் மொழியில் செய்த வுல்காத்தா என்ற மொழிபெயர்ப்பைப் போல, எல்லோருக் கும் உகந்த வகையில் செய்யப்பட்ட ஒரு நல்ல திருந்திய பதிப்பாகும். எதே சாவின் ஆயர் ரப்பூலா இந்தத் திருத்தத்தை கி.பி 411-435 ஆண்டுகளில் செய்ததாகக் கூறு வர். இதனை யாக்கோபைட் சபையினரும், நெஸ்டோரியன் சபையினரும் ஏற்றுக் கொண்டு பயன்படுத்தி வந்தனர். இம்மொழி பெயர்ப்பு கவனமுடன், பிழைகள் சேரா வண்ணம் ஏடுகளில் படி செய்யப்பட்டிருக் கிறது.

சீரியக்கு திருச்சபை, பேதுரு எழுதிய இரண்டாம் திருமுகம், யோவான் எழுதிய இரண்டாம் மூன்றாம் திருமுகங்கள், யூதா

எழுதிய திருமுகம், திருவெளிப்பாடு இவை களை அங்கீகரிக்காது. புதிய ஏற்பாட்டின் புத்தகங்களுக்குள் ஏற்றுக்கொள்ளவில்லை. எனவே இந்த 5 புத்தகங்களும், சீரியக்கு பெசிட்டா மொழிபெயர்ப்பிலும் இடம் பெறவில்லை.

**3. நான்கு வழியில்:** ''தியாடெஸ்ஸாசா ரன்'' என்ற 4 நற்செய்திகளின் ஒருங்கமை வைத் தேசியன் என்பவர் தயாரித்தார். ''தியாடெஸ்ஸாசாரன்'' என்றால் கிரேக்க மொழியில் நான்கு வழியில் என்றுபொருள். எனவேதான் நான்கு வழியில் என்று இதற் குப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. கி.பி. 170-ஆம் ஆண்டு வாக்கில் கிழக்கத்திய நாடு களில் இப்புத்தகம் பரவலாகப் பயன்படுத்தப் பட்டது. ஆனால் நாளடைவில், இப்புத்த கத்தை எழுதிய தேசியன் தவறான கொள் கைகளைக் கொண்டவராகத் திருச்சபையால் கண்டுபிடிக்கப்பட்டார். எனவே இவர் தயா ரித்த இம்முக்கிய தொகுப்பையும் திருச்சபை மக்களிடமிருந்து வாங்கி அவைகளை அழித்து விட்டது. இதனால் அவர் தயாரித்த இப் புத்தகத்தின் பிரதிகள், பழஞ்சுவடிகள் வழி யாக நமக்குக் கிடைக்க வாய்ப்பில்லை. ஒரே ஒரு சிறிய துண்டுச் சுவடிமட்டும் கி.பி. 220-ஆம் ஆண்டைச் சார்ந்தது, நமக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால் இந்தச் தேசிய னின் நூலைப் பற்றிய குறிப்புகள், மற்ற இரண்டு முக்கிய இடங்களில் கிடைக்கின் றன. எப்பிரேம் என்பவர் தேசியன் எழு திய நான்கு வழியில் என்பதற்கு விளக்க வுரை எழுதியுள்ளார். அது நமக்குக் கிடைக் கிறது. இதில் தேசியனின் நான்குவழியில் என்ற நூலை நேராகப் பார்ப்பதைப் போலவே விளக்கங்கள் உள்ளன. அரபிய மொழியிலும் இந்தநான்கு நற்செய்திகளின் ஒருங்கமைவு ஒன்று காணப்படுகிறது. இது தேசியனின் ஒருங்கமைவின் மொழிபெயர்ப் பைப் போலக் காட்சியளிக்கிறது. ஏனென் றால் அரபிய மொழிபெயர்ப்பு சீரியக்கு பெசிட்டா மொழிபெயர்ப்பை ஒத்திருக் கிறது.

**4. பிலோக்சேனு புதிய ஏற்பாடு:** பழைய ஏற்பாட்டுப் புத்தகங்கள் எவ்வாறு பிலோக் சேனு என்ற ஆயரின் உத்தரவால், போலி கார்ப்பு என்பவரால் எழுபதுநூல் கிரேக்க விவிலியத்திலிருந்து சீரியக்கு மொழியில் புதிதாக மொழி பெயர்க்கப்பட்டது என் பதை மேலே பார்த்தோம். இது பெசிட்டா என்ற சீரியக்கு மொழிபெயர்ப்பிற்கும் போட்டியாக மொழி பெயர்க்கப்பட்டது என்பதையும் பார்த்தோம். இப்போது அதே போலப் போலி கார்ப்பே, புதிய ஏற்பாட்டை யும், பெசிட்டா சீரியக்குமொழி பெயர்ப் பின் உதவியைக் கொண்டு திருத்தம் செய் தார். இங்கு, பெசிட்டா நீக்கியிருந்த 5 புத்தகங்களையும் (2 பேதுரு 2, 3, யோவான், யூதா, திருவெளி) சேர்த்து அமைத்திருக்கிறார்.

**5. பாலஸ்தீனிய சீரியக்குப் புதிய ஏற் பாடு:** மெல்கைட் கிறித்தவர்கள் எவ்வாறு கீழைய அரமேயத்தில் முதலில் வாய் மொழி யாகவும், பிறகு எழுத்தளவிலும் பழைய ஏற்பாட்டை ஆக்கம் செய்தார்கள் என்று பார்த்தோம். அவர்கள், புதிய ஏற்பாட்டை யும் தங்கள் மொழியில் ஆக்கம் செய்தார்கள். இம்மொழிபெயர்ப்பில், வழிபாட்டில் பயன்படுத்தப்பட்ட வாசகப் புத்தகங்களின் சில தாள்கள் மட்டுமே பழம் ஏடுகளாக நமக்குக் கிடைக்கின்றன. இம்மொழி பெயர்ப்பு பெசிட்டா புதிய ஏற்பாட்டின் பின்னணியில் செய்யப்பட்டிருக்க வேண் டும் என்பது தெளிவாகிறது. அதே சமயத் தில், பாலஸ்தீன நாட்டில் கி.பி. 4-ஆம் நூற்றாண்டுகளில் பயன்படுத்தப்பட்டு வந்த கிரேக்க ஏடுகளின் பின்னணியும் இதில் காணப்படுகிறது.

**6. கெராக்கிலியாசீரியக்குப் புதிய ஏற் பாடு:** மேலே நாம் கண்ட பிலோக்சேனு புதிய ஏற்பாடு, ஒரு நூற்றாண்டு கழித்துத் திருத்தப்பட வேண்டும் என்ற அவசியத்தைச் சிலர் உணர்ந்தனர். கெராக்கிலியாவைச் சேர்ந்த தாமஸ் என்பவர் புதிய ஏற்பாட்டின் திருத்தம் ஒன்றைச் சீரியக்கு மொழியில் வெளியிட்டார். இவர் வெளியிட்ட காலம் கி.பி. 7-ஆம் நூற்றாண்டு. இத்திருத்தத்தில் பக்கங்களின் ஓரங்களில், மற்றக் கிரேக்கப்

பழம் ஏடுகளில் காணப்படும் மாறுபட்ட வசனங்களைக் கொடுக்கிறார்.

விவிலிய அறிஞர்களிடையே, இவர் புதிதாகத் திருத்தி மொழி பெயர்த்தாரா? அல்லது பழைய பிலோக்சேனு மொழி பெயர்ப்பில், பக்க ஓரக் குறிப்புகளை மட்டும் சேர்த்து வெளியிட்டாரா என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.

**சீரிய - பெனிசிய இனம்**

மாற் 7:26-இன்படி சிரிய - பெனிசிய இனப்பெண் (அல்லது புறச்சமயப் பெண்); இயேசு தீர், சீதோன் பகுதிகளில் பணி செய்த போது அவரைப் பற்றிக் கேள்வியுற்று அவரிடம் வந்தவள். இவளின் மகளிடமிருந்து இயேசு பேயை ஓட்டினார். இதற்கு ஒத்த பகுதியாகிய மத் 15:22-இல் இவள் ஒரு கானானியப் பெண் என்று கொடுக்கப்பட்டுள்ளது. சீரிய பெனிசியர்கள் தங்களைக் கானானியர் என்று அழைத்துக் கொள்வர். சீரிய பெனிசியா என்ற பெயர் இயேசுவின் காலத்தில் பெனிசியா (தீர், சீதோன் உட்பட) சீரியாவின் உரோமை மாநிலத்தில் இருந்தது என்பதைக் குறிக்கின்றது.

**சீரியா, சீரியர் (SYRIA, SYRIANS)**

இது ஒரு புவியியல் பெயர். பழங்காலத்தில் சீரியா என்பது வடக்கில் தவுரசு மலைகளாலும், வடகிழக்கில் யூப்பிரத்திசு நதியாலும், தெற்கில் பாலஸ்தீனத்தாலும், மேற்கில் மத்தியதரைக்கடலாலும் சூழப்பட்ட நிலப்பரப்பாகும். பழைய ஏற்பாட்டில் சீரியா அல்லது ஆராம் என்பது தென் கிழக்குச் சீரியாவில் தமஸ்குவை மையமாகக் கொண்ட அரமேய அரசைக் குறித்தது.

சீரியா பாரசீகப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தது. இதைக் கி.மு. 332-இல் பெரிய அலக்சாந்தர் கைப்பற்றினார். அவரது மரணம், அவருக்குப்பின் வந்தவாரிசு உரிமைப் போர்கள் ஆகியவற்றுக்குப்பின், சீரியா செலூக்கியப் பேரரசின் மையமாயிற்று. இப்பேரரசு வடசீரியாவில் ஒரோன்தசு ஆற்றின் கரையிலுள்ள அந்தியோக்கியாவைத் தலைநகராகக் கொண்டிருந்தது. கி.மு. 64-63-இல் பாம்பே இதைக் கைப்பற்றி ஓர் உரோமை மாகாணமாக்கினார். சீரியா மாகாணம் பார்த்தியரின் எல்லையில் அமைந்திருந்ததாலும், அதன் தலைநகரான அந்தியோக்கியா பேரரசின் மூன்றாவது மிகமுக்கிய நகரமாகக் கருதப்பட்டதாலும் சீரியா மாகாணம் உரோமைப் பேரரசின் முக்கிய மாகாணங்களில் ஒன்றாகக் கருதப்பட்டது.

சீரியாவின் பெரும்பகுதி கிராமப்புறத்தன்மையையே கொண்டிருந்தது. கிரேக்கக் கலாச்சாரத்தால் அதிகம் பாதிக்கப்படவில்லை. பொதுவாக மக்களில் பெரும்பகுதியினர் அரமேயிக்கு மொழியையே பேசினர். உரோமையர் காலத்தில் இம்மாகாணத்தோடு வேறுசிலபகுதிகளும் சேர்க்கப்பட்டன. கி.பி. 6-இலிருந்து 41 வரை இது யூதேயாவில் ஓர் உரோமையர் மாகாணமாக விளங்கிற்று. ஆனால் கி.பி. 44-க்குப்பின் யூதேயா ஆளுநன், சீரியா ஆளுநனுக்கடியில் செயல்படவேண்டியதாயிற்று. ஆகவே யூதேயா சீரியாவின் ஒரு பகுதியாகக் கருதப்பட்டது.

புதிய ஏற்பாட்டில் சீரியா என்ற கிரேக்கச் சொல், உரோமை மாகாணத்தையும் (லூக் 2:2) சீரியா, பெனிசியா, பாலஸ்தீனியக் கடற்கரையையும் (அ.ப. 18:18.22; 20:3; 21:2-3) பாலஸ்தீனத்தையும், பாலஸ்தீனம், பெனிசியா மற்றும் சீரியா ஆகியவற்றுக்கிடையே உள்ள எல்லையடங்கிய பகுதியையும் (மத் 4:24) குறித்தது. சீரியா மாகாணம் ''சீரியா மற்றும் சிலிசியா'' என்றும் அழைக்கப்படலாம் (அ.ப. 15:23; கலா 1:21). எலிசாவின் சமகாலத்தவராகிய நாமான் என்ற தளபதி 2 அர 5:20-இன் எழுபதுநூல் வாசகத்தைப் பின்பற்றிச் சீரியன் என்றழைக்கப்படுகிறார் (லூக் 4:27).

**சீர்த்தி (SYRTIS)**

ஆப்பிரிக்காவின் வடகரையில் உள்ள இரண்டு ஆழமில்லாத வளைகுடாக்களின் கிரேக்கப் பெயர் (அ.ப. 27;17). பெரிய சீர்த்தி என்பது சிரேனைகாவுக்கு மேற்கில்

இப்பொழுது சிதிரா வளைகுடா என்று அழைக்கப்படுகிறது. அனேகமாக இதுதான் சீர்த்தி என்று இந்தப் பகுதியில் குறிப்பிடப் படுகிறது.

சிறிய சீர்த்தி இப்பொழுது காபெசு வளை குடா என்று அழைக்கப்படுகிறது. இங்கு மணல் திட்டுகளும், மறைந்த பாறைகளும் இருப்பதால் மாலுமிகள் இதற்குப் பயந்தனர்.

பவுல் லீக்கியாவிலுள்ள மீராவிலிருந்து பயணம் செய்த கப்பலின் மாலுமிகள், கிரேத்தாவைச் சுற்றி அவர்கள் எதிர்கொண்ட வடகிழக்குக் காற்று சீர்த்தி வளைகுடாவுக் குள் தள்ளிவிடுமோ என்று அஞ்சினர் (அ.ப.27:17).

**சீர்வரிசை, திருமணப்பரிசு** (DOWRY)

சாதாரணமாக, திருமணத்தின்பொழுது பெண் தன் கணவனிடம் கொண்டு வந்த சொத்து. பெண்ணின். திருமணத்திற்கு முன்பு, இது தந்தை மகளுக்குக் கொடுக்கும் பரிசாக இருந்திருக்கலாம். ஆனால் யாக்கோ பின் மகள் தீனாவைத் தன்மகன் செக்கேமிற் குத் தருமாறு திருமணம் பேச கமோர் (ஆமோர்) வந்தபோது செக்கேம் ''திருமணப்பரிசாகக்'' கேட்பதையெல்லாம் தருவதாகச் சொன்னார் (ஆதி 34:12).

பழைய காலத்தில் தந்தை தன் மகளுக்கு ஒரு பெண் வேலைக்காரியை வரதட்சணை யாகக் கொடுத்திருக்கலாம் (ஆதி 16:1; 24:61; 29:24.29). நீரூற்றுகளும் (யோசு 15:19) நகர் களும் (1 அர 9:16) சீர் வரிசையாகக் கொடுக்கப்படலாம்.

**சீலா** (SILAS - இறைவனிடம் கேள்)

இவர் எருசலேம் திருச்சபையின் செல் வாக்குள்ள உறுப்பினரும் இறைவாக்குரைப் பவருமாவார்; பவுல் மற்றும் பேதுருவின் அப்போஸ்தலத் தூதுகளில் பங்குபெற்றவர். அந்தியோக்கியாவில் பிரச்சனை எழுந்த போது அப்போஸ்தலர்களின் பிரதிநிதிகளுள் ஒருவராக அங்குச் சென்றார். அதன்பிறகு இவர் பவுலின் நற்செய்தியறிவிப்புப் பணி யில் இணைந்து உழைப்பதைக் காணலாம் (அ.ப. 15:22-35). பவுலின் இரண்டாவது பயணத்தில் மாற்குவுக்குப் பதிலாகச் சீலா அவருடன் சென்றார் (அ.ப. 15:36-41). இப் பயணத்தில் இக்கோனியா, கலாத்தியா, பிரி கியா, சீரியா, சிலிசியா நகரங்களுக்குச் சென் றார். பவுலுடன் அவரது சிறைவேதனையை யும் பகிர்ந்து கொண்டார். சீலாவை அவர் கள் பிலிப்பியில் விடுவித்தார்கள். தெலோ னிக்கே பெரோயா நகரங்களில் குழப்பம் ஏற்பட்டபோது உடனிருந்து பவுலைக் காத் தார் (அ.ப. 16:1-17:15). பவுல் பெரோ யாவை விட்டுப் புறப்பட்டபோதுசீலா, திமொத்தேயுடன் தங்கிவிட்டுப் பின்னால் கொரிந்துவில் பவுலோடு சேர்ந்து கொண் டார் (அ.ப. 18:5).

1 தெச 1:1; 2 தெச 1:1; 2 கொரி 1:19 ஆகிய பகுதிகளில் உதவியாளராகக் கூறப் படும் சில்வான் என்பது சீலாவின் மறு பெயரே என்பதில் ஐயமில்லை. இவர் 1 பேதுரு 5:12-இலும் குறிப்பிடப்படுவதால் மறைவல் லுநர் சிலர் சீலா (சில்வான்) கடிதம் எழுத உதவுவதும், கொண்டு செல்வதும் மட்டு மல்ல, இவரே இக்கடிதத்தை எழுதியிருக்க வும் கூடும் ஏன்று நம்புகின்றனர்.

**சீலோ** (SHILOH - ஏராளம், அமைதி)

இது அரசாட்சிக் காலத்திற்கு முந்திய இஸ்ராயேலரின் வழிபாட்டு மையமாகும். ''பெத்தேலுக்கு வடக்கே, லெபனோனுக் குத் தெற்கே, பெத்தேலிலிருந்து செக்கேமுக் குச் செல்லும் நெடுஞ்சாலையின் கிழக்கே இருக்கும்'' (நீதி 21:9) இந்தச் சீலோவின் சிதைவுகள் எருசலேமுக்கு வடக்கில் 30 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்துசெயி லூன் என்னுமிடத்தில் காணப்படுகின்றன.

கானான் நாடு இஸ்ராயேலர் இனங்க ளிடையே இறுதியாகப் பகிர்ந்தளிக்கப்பட்டு முன் பெட்டகம் இந்த இடத்தில் வைக்கப் பட்டதுடன் சீலோ இஸ்ராயேலரின் வழி பாட்டு மையமாயிற்று (யோசு 18:8.10; 19:51). யோர்தானுக்கு அப்பால் குடியேறிய இனத்தவர்கள் நாடு பகிர்ந்தளிக்கப்பட்ட

வுடன் மற்றொரு இடத்தில் பீடம் கட்டிய போது அவர்களுக்கு எதிராகப் போர்த்திட்டங்கள் தீட்டப்பட்டன (22:10-12). இது ஒன்றே சீலோவிலுள்ள புனிதத்தன்மை எவ்வளவு கண்டிப்பாக எடுத்துக் கொள்ளப்பட்டது என்று காட்ட வல்லது. எபனேசரில் உடன்படிக்கைப்பேழை பெலிஸ்தியரால் கைப்பற்றப்படும்வரை அது சீலோவிலேயே தங்கியிருந்தது (1 சாமு 4:3-4). சீலோ ஒரு முக்கியமான திருயாத்திரை மையமாயிற்று. அங்கு ஆண்டுதோறும் ஆண்டவருக்கு விழா நடைபெற்றது (நீதி 21:19; 1 சாமு 1:3; 2:14). பெலிஸ்தியரால் பெட்டகம் கைப்பற்றப்பட்ட பிறகு, மற்றும் சீலோவில் குருக்களாக இருந்த ஏலியும் அவருடைய புதல்வர்களும் இறந்தபிறகு, பெட்டகம் சீலோவுக்குத் திரும்பி வரவில்லை. அதோடு சீலோவின் முக்கியத்துவம் முடிவுக்கு வந்தது (4:12-22; சங் 78:60-61). தொல்பொருள் ஆய்வாளர்கள் சிலர் சீலோவைப் பெலிஸ்தியர் அழித்ததற்குச் சான்று காட்டுவர். இது ஒரு வேளை கி.பி. 1050-ஐ ஒட்டி ஏலியின் மரணத்துக்குப் பின் நடந்திருக்கலாம்.

பிற்காலத்தில் இறைவாக்கினர் அகியா சீலோவில் இறைவாக்குரைத்தார். ஆனால் இந்நகரம் .முந்தைய முக்கியத்துவத்தைக் கொண்டிருந்ததற்குச் சான்றுகள் இல்லை (1 அர 11:29-39; 14:12-16). ஆயினும் சில காலத்திற்குச் சமயத்திருயாத்திரையில் ஒரு தங்கும் இடமாகச் சீலோ தொடர்ந்து இருந்திருக்கலாம் (எரே 41:5). இந்த முந்தைய சமய வழிபாட்டு மையத்தின் அழிவை எருசலேம் மக்களுக்கு எரேமியா நினைவூட்டியது, அவர்களுக்கு வரவிருக்கும் அழிவின் முன் எச்சரிக்கையாகும் (எரே 7:12.14; 26:6.9).

சீலோ குருகுலம் நோபிலுள்ள திருத்தலத்தையும் பின்னர் எருசலேம் திருத்தலத்தையும் கண்காணித்து வந்தது. சாலமோன் மன்னன் அபியாத்தாரை நீக்கியவுடன் இக்குருகுலத்தின் பணி முடிவுக்கு வந்தது (1 அர 2:27).

**சீலோவாகு** *(SHILOAH - சிற்றாறு)*

எருசலேமில் உள்ள ஒரு குளமும் கட்டுக் கால்வாயும் ஆகும். சீலோவாம் நீர்த்திட்டத்தின் ஒரு பகுதியாகும் (எசா 8:6).

**சீலோவாம்** *(SHILOAM - அனுப்பப்பட்டவர்)*

சீலோவாமைப் பற்றிப் பழைய ஏற்பாட்டில் எசா 8:6-இல் மட்டும் ஒரு குறிப்பு வருகிறது. அதன்படி இப்பெயர் ஒரு கால்வாயைக் குறித்து நிற்கிறது. இது கீகோன் ஊற்றோடு இணைக்கப்பட்டிருந்தது. எசேக்கியா கால்வாயைவிடப் பழமையானது. இதில் வரும் வெள்ளம் அசீரிய அரசனின் படையெடுப்புக்கு மாதிரியாகக் காட்டப்படுகிறது.

புதிய ஏற்பாட்டில் எருசலேமில் உள்ள ஒரு குளத்தின் பெயராக வருகிறது. இது பிற்காலத்தில் செயற்கையாக அமைக்கப்பட்டிருக்க வேண்டும். இதன் கரையில் இயேசு பிறவிக் குருடன் ஒருவனைக் குணமாக்குகிறார் (யோவா 9:7). இங்கு நற்செய்தியாளரின் நோக்கம் குளத்தின் மீதன்று, குளத்திற்கு அனுப்புபவரான இயேசுவின் வல்லமையை வலியுறுத்த வேண்டுமென்பதுதான். இதற்கு அருகில் அல்லது இதனை அடுத்திருந்த பகுதியில் லூக் 13;4-இல் வரும் கோபுரம் இருந்திருக்கலாம்.

**சீலோவியர்** *(SHILONITE)*

1. இறைவாக்கினர் அகியாவைப் பற்றிக் குறிப்பிடும்போது ''சீலோவியர்'' அதாவது ''சிலோவைச் சார்ந்த அகியா'' என்று குறிக்கப்பட்டுள்ளது (1 அர 11:29).

2. அடிமைத்தனத்திநின்று திரும்பிய யூதக் குடும்பங்களில் ஒன்று (1 நாள் 9:5; நெகே 11:5). 1 நாள் 9:5-இல் கொடுக்கப்பட்டுள்ள குடும்ப அட்டவணைக்கும் நெகே 11:5-இல் உள்ளதற்கும் மிகுந்த வேறுபாடு உள்ளது. சீலோவியர் சீலோவிலிருந்து வந்தவர்கள் என்றால் அவர்களின் முன்னோர்கள் வட அரசிலிருந்து வந்திருக்க வேண்டும். ஆனால் ஒரு வேளை இருவாசகங்களிலும் இச்சொல் சேலாவியர் என்று உச்சரிக்கப்பட

லாம். இது சேலாவின் (2) சந்ததியினரைச் சுட்டும் (ஆதி 38:5; எண் 26:20).

**சீவான்** (SIVAN)

எபிரேய நாட்காட்டியில் மூன்றாவது மாதம் (மே - சூன், வைகாசி) (எஸ்த 8:9). வாரங்களின் விழா அல்லது ஐம்பதாம் நாள் விழா சீவான் மாதம் ஆறாம் நாள் கொண்டாடப்படும்.

**சீனாய்** (SINAI - புதருள்ள)

இஸ்ராயேலின் சமய வரலாற்றில் சகாப்தம் ஏற்படுத்தும் முக்கியத்துவமுடைய மலையாகும். இது கோரேபு (ஓரேபு) என்றும் அழைக்கப்படுகிறது. சீனாய் மலையில் மோசே இறைவனிடமிருந்து தனது அழைப்பைப் பெறுகிறார் (யாத் 3:1). இங்குதான் மோசே தனக்களிக்கப்பட்ட வெளிப்பாடுகளைப் பெற்றார். இஸ்ராயேல் மக்கள் உடன்படிக்கையையும் சட்டத்தையும் பெற்றனர். யாத் 19:1-இலிருந்து எண் 10:11வரை நடந்ததாகக் கூறப்படும் நிகழ்ச்சிகள் இடம்பெறும் மலையும் பாலையுமாகும். இந்த மலையில்தான் எலியாவுக்கு அளிக்கப்பட்ட இறையாற்றல் தோற்றம் நிகழ்ந்தது (1 அர 19:8). இது இஸ்ராயேல் விசுவாசத்திற்கு ஓர் இறையியல் நங்கூரமாயிற்று (நீதி 5:5; நெகே 9:13; சங் 68:8.17). அப்போஸ்தலர் பணிநூலில் ஸ்தேவான் சீனாயில் மோசேயும் இஸ்ராயேலரும் பெற்றதைக் குறிப்பிடுகிறார் (அ.ப. 7:30.38); கலா 4:24-31-இல் பவுல், தான் எதிர்த்துப் போராடிய சட்டத்தால் வரும் ஏற்புடைமைக்குச் சீனாய் ஓர் அடையாளமாக இருப்பதைக் காண்கிறார் (எபி 12:18-29).

சீனாய் என்ற பெயர் யாவே பாரம்பரியத்தில் அபூர்வமாகத்தான் காணப்படுகிறது (யாத் 19:20.23; 34:2.4); பெரும்பாலும் குருக்கள் பாரம்பரியத்தில்தான் வருகிறது. எலோகிம், உபாகமப் பாரம்பரியங்களில் இம் மலை கோரேபு (ஓரேபு) என்றழைக்கப்படுகிறது. காலத்தால் முந்திய ஒருபாடல் யாவேயைச் சீனாயோடு தொடர்புபடுத்திக்கூறுகிறது (நீதி 5:5). ஆனால் சீனாய் எங்கிருந்தது என்பதுபற்றி எச்செய்தியும் கூறவில்லை. நீதி 5:4-இல் யாவே சேயிர், ஏதோமிலிருந்து வருவதாகக் கூறப்படுகிறது. இது சீனாய் ஏதோமிலிருந்திருக்கலாம் என்று சுட்டுகிறது. அரசாட்சிக் காலத்தைச் சேர்ந்த மற்றொரு பாடல் சீனாய் மலையைச் சேயிர், பாரான் மற்றும் மெரிபத்து-காதேசுடன் தொடர்புபடுத்துகிறது (உப 33:2). ஐந்நூல் பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்ட மற்றச் சுட்டல்களும் (நெகே 9:13; சங் 68:8; சீரா 48:7; அ.ப. 7:30) தெளிவில்லாத புவியியல் சொல்லான அரேபியாவில் சீனாய் இருப்பதாய்க் கூறுவதும் (கலா 4:24 தொ) சீனாய் எங்கிருந்தது என்பது பாலஸ்தீனத்தில் குடியேறிய காலத்தில்கூட இஸ்ராயேலருக்குத் தெரிந்திருக்கவில்லை என்ற எண்ணத்தைத் தூண்டவல்லன. சீனாய் தெற்கே அமைந்துள்ளது. அதற்குமேல் ஒன்றும் கூறுவதற்கில்லை.

இஸ்ராயேலர் பாலையில், அலைந்து திரிந்ததை உறுதிப்படுத்தும் தொல்பொருளாய்வுச் சான்றுகள் இல்லாததால், இம் மலை எங்கிருந்தது என்று உறுதியாகக் கூற முடியாது. சீனாய் தீபகற்பத்தில் வட கடற்கரையையொட்டிய சில எகிப்தியச் சிதைவுகளைத் தவிர, வெண்கலக் காலத்தைச் சேர்ந்த தொல்பொருள் சான்றுகள் இல்லை. பழைய ஏற்பாடு சீனாய்க்கு அருகில் பல இடங்களின் பெயர்களைக் கொடுக்கிறது (எண் 33:14-17). இவ்விடங்கள் எங்கிருந்ததென்று உறுதியாக ஒன்றும் கூற முடியாது. இவையெல்லாம், சீனாய் எங்கிருந்தது என்பதுபற்றிப் பல கருதுகோள்களுக்கு இடந்தந்துள்ளன. இவை பொதுவாக அக்காபா வளைகுடாவுக்குக் கிழக்கில், சீனாய் தீபகற்பத்தின் வடபகுதியிலோ, தென்பகுதியிலோ இருந்திருக்கலாம் என்று சுட்டுகின்றன.

யாத் 19:16-19 என்னும் பகுதி எரிமலைச் சூழ்நிலையைச் சுட்டுவதாக அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர். இத்தகைய எரிமலைகள் அக்காபாவுக்குத் தென்கிழக்கில் காணப்படுவதால் அங்குச் சீனாய் மலை இருந்திருக்கலாம் என்று கருதுகின்றனர். இப்படியிருக்க

வேண்டியதில்லை. ஏனெனில் இறைவனின் அச்சம் தரும் பிரசன்னத்தை விவரிக்கக் குறிப்பாக இறையாற்றல் தோற்றத்தை விவரிக்கப் பழைய ஏற்பாடு அடிக்கடி இயற்கை சார்ந்த உருவகங்களைப் பயன்படுத்துகிறது. சீனாயில் மிதியானியர் இருந்ததாகக் கூறப்படுவது *(3:1)* அதிகமாகக் கூறவில்லை. ஏனெனில் இந்த நாடோடி மக்கள் இப்பகுதியில் எங்கும் காணப்பட்டனர்.

காதேசு - பர்னேயாவுக்கு அருகில் இஸ்ராயேலர் அமலேக்கியரைச் சந்தித்தனர் (எண் *14:43*). இதைக் கருத்தில் கொண்டு அறிஞர்கள் சிலர், மோசே இஸ்ராயேலரை வடபகுதியில் சூர் பாலை வழியாக *(யாத் 15:22)* நடத்திச் சென்றிருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இதற்கு ஆதரவாகக் கடலிலிருந்து வந்த காடைகள் பற்றிய நிகழ்ச்சியையும் *(எண் 11:31)* மத்தியதரைக் கடலோரத்திலுள்ள பாலைவனச் சோலைகளையும் எடுத்துக் கூறுவர். ஆனால் காதேசிலிருந்து வெகு தூரத்தில் சீனாய் இருந்தது என்பது தெளிவு *(33:16-36; உப 1:19)*. எகிப்திலிருந்து மலையை அடைய இஸ்ராயேலர் மூன்று மாதங்கள் எடுத்தனர் *(யாத் 19:1-2)*.

கி.பி. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து சீனாய் மலை, அத்தீபகற்பத்தின் தென்பகுதியில் இருப்பதாகப் பாரம்பரியமாகக் கருதப்பட்டு வருகிறது. இதன்படி இத்தீபகற்பம் முக்கோண வடிவமுடையது. தெற்கு வடக்காக *420* கி.மீ. நீளமும், வடக்குப் பகுதியில் *240* கி.மீ. அகலமும் உடையது. இது சூயெஸ் வளைகுடாவுக்கும் அக்காபா வளைகுடாவுக்கும் இடையில் அமைந்துள்ளது. வடக்கில் *24* கி.மீ. அகலத்திற்கு மணற்பரப்பு அமைந்துள்ளது. வடபகுதியிலிருந்து தெற்கு நோக்கி 240கி.மீ. தொலைவிற்கு ஒரு பாறை மேட்டுநிலம் உயர்கிறது. இதன் தெற்கில் கடுமையான பாறைகளைக் கொண்ட மலைத் தொடர்கள் உள்ளன. இந்தத் தீபகற்பம் முழுவதும் மிகவும் வறட்சியானது. சில பாலைவனச் சோலைகளைத் தவிர, செடி கொடிகளேயில்லை. இங்குப் பயணம் செய்வது கடினம். மலைத்தொடர்கள் *2700* மீட்டர் வரை உயர்ந்துள்ளன. சீனாய் மலை எபெல் மூசா (மோசேயின் மலை) என அடையாளம் காட்டப்படுகிறது. இதன் உயரம் 2285 மீட்டராகும். இதைச் சுற்றியுள்ள பகுதி யாத்திரை நிகழ்ச்சிகளுக்கு உகந்ததாய்ப் பரந்த சமவெளியைக் கொண்டுள்ளது *(யாத் 19:1-2; எண் 33;15)*. சீனாய்ப் பாலைவனம் எர் - ராகா என்று அடையாளம் காட்டப்படுகிறது. இது எபெல் மூசாவுக்கு அருகிலுள்ளது. பரந்த பாலைவனத்தில் இம்மலைச்சரிவின் சிவப்புநிறப் பாறை முகடுகள் மிகுந்த அச்சத்தை எழுப்பக்கூடியன. இவையெல்லாம் இதுதான் சீனாய் மலை என்று கூற ஒருவரைத் தூண்டலாம். ஆனால் உறுதியாக ஒன்றும் கூறமுடியாது. எபிரேய அரசாட்சிக் காலத்திலேயே இம்மலை எங்கிருந்தது என்று உறுதியாகக் கூறமுடியவில்லை. இதன் அருகில் எகிப்திய செம்புச் சுரங்கங்கள் இருந்தன. இது இத்திரோ கேனியர் (கொல்லர்) என்று அழைக்கப்படுவதை *(நீதி 1:16)* விளக்கலாம். அவர் இந்தத் தாதுப்பொருளை வியாபாரத்தில் பயன்படுத்தியிருக்கலாம்.

தீபகற்பத்தின் தென்பகுதியில் சீனாய் மலை இருக்கிறது என்ற பாரம்பரிய அடிப்படையில் பைசாந்தியர் காலத்தில் இங்குப் பல துறவறமடாலய மையங்கள் தோன்றின. கி.பி. 527-இல் யூஸ்தினியன் இங்கு உயர்ந்த மதில்களையுடைய இப்போதுள்ள துறவற இல்லத்தைக் கட்டினார். இது 11-ஆம் நூற்றாண்டிலிருந்து புனித கத்தரீனாள் துறவற இல்லம் என்று அழைக்கப்படுகிறது. இந்த மடத்தில் அசாதாரண பல்வண்ண ஓவியங்களையும் வழிபாட்டு உருவங்களையும், கையெழுத்துப் பிரதி நூல் நிலையத்தையும் காணலாம்.

**சீனாய்ச் சுவடி** *(CODEX SINAITICUS)*

இது கி.பி. 4-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கிரேக்க விவிலியச் சுவடியாகும். இதனை எபிரேய முதல் எழுத்து ஆலப்பு என்ற குறி எழுத்தால் குறிப்பிடுவர். இச்சுவடி 1859-ஆம் ஆண்டு, சீனாய் மலையடிவாரத்தில் அமைந்துள்ள கத்தரீனாள் மடத்தில், கான்ஸ்டன்

டைன் போன் திசன்டோர்ப் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது.

இதில் புதிய ஏற்பாடு முழுவதும் காணப் படுகிறது. ஆனால் பழைய ஏற்பாட்டுப் புத்தகங்களில் ஒரு சில பகுதிகளே நமக்குக் கிடைக்கின்றன எஸ் 9:9-க்கு முன்புள்ள பகுதிகள் அனைத்தும் சிதைந்துபோய் விட் டன. இத்தொகுப்பில் விவிலியப் புத்தகங்க ளுடன், பர்னபா எழுதிய திருமுகமும், எர் மஸ் ஆயர் என்பவர் எழுதியதில் ஒரு பகுதி யும் சேர்ந்து காணப்படுகின்றன. இப்பழம் ஏடு எழுபதுநூல் என்ற கிரேக்க மொழி பெயர்ப்பிற்கும் புதிய ஏற்பாட்டுக் கிரேக்கப் படிவத்திற்கும் சிறந்த சான்று தரும் ஏட்டுத் தொகுப்பாக விளங்குகிறது.

இச்சுவடித் தொகுப்பில் 346½ தாள்கள் அடங்கியுள்ளன. இத்தாள்கள் தோலால் செய்யப்பட்டவை. அதிலும் விலையுயர்ந்த, அனேகமாக மான் தோலைக் கொண்டு செய் யப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. ஒவ்வொரு தாளும் 15 அங்குல நீளம், 13½ அங்குல அகலம் என்ற அளவில் வெட்டப் பட்டுள்ளன. கவிதை நடையில் எழுதப்பட் டுள்ள விவிலியப் புத்தகங்கள், பக்கத்திற்கு 2 பத்திகள் வீதமும், மற்றப் புத்தகங்கள் பக்கத்திற்கு 4 பத்திகள் வீதமும் எழுதப்பட் டுள்ளன. இங்குப் பன்னிருபாக எழுத்துக் கள் என்ற எழுத்துமுறையைப் பயன்படுத்தி எழுதியுள்ளனர். ஒருவரிக்கு எண்ணிக்கையில் 12 முதல் 14 வரை எழுத்துக்கள் எழுதப்பட் டுள்ளன.

புதிய ஏற்பாட்டின் நற்செய்திப்பகுதிகளுக் குப் பக்க ஓரங்களில் அதிகார, பத்திக் குறிப் புகள் கொடுக்கப்பட்டுள்ளன. இது யுசேபியு கி.பி. 260-இல் அல்லது 340-இல் நற்செய்தி களுக்குச் செய்து தந்த பிரிவுகளைப் பின்பற்றி யது தானா? என்பதுதெளிவாகத் தெரிய வில்லை.

இத்தொகுப்பு மூன்று எழுத்தாளர்களால் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பதுதெளி வாகிறது. இம்மூன்று எழுத்தாளர்களும் வேறுபட்டதிறமை கொண்டவர்கள் என்ப தும், எழுதப்பட்டிருப்பதிலிருந்து புரிகிறது. இச்சுவடியைச் சீனாய் மடத்திலிருந்து பெற்ற திசன்டோர்ப் என்பவரே, இச்சுவடி கி.பி. நான்காம் நூற்றாண்டின் மத்திய காலத் தைச் சேர்ந்தது என்று குறிப்பிடுகிறார். இவ ரின் கருத்தினை அறிவியல் பூர்வமாகச் செய் யப்பட்ட ஆராய்ச்சிகளும் உறுதி செய்கின் றன. இப்பழம் ஏடு எழுதப்பட்டவுடன், அதிலே திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின் றன. இதன் பிறகும் கி.பி. 7-ஆம் நூற்றாண்டு வரையிலும் அதில் பல பகுதிகள் திருத்தப் பட்டு அத்துடன் இணைப்புகள் சேர்க்கப்பட் டிருக்கின்றன என்பதும் இவ்வேட்டின் அமைப்பிலிருந்து தெரிகிறது.

திசன்டோர்ப் இச்சுவடியினைக் கண்டு பிடித்த நிகழ்ச்சியும் எழுதப்பட வேண்டிய ஒன்றாகும். 1844-ஆம் ஆண்டு திசன்டோர்ப் முதன்முதல் சீனாய் கத்தரீனாள் மடத்திற்குச் சென்றார். அங்கிருந்த நூலகத்தின் நடுவில், பழைய தாள்களைப் போடும் குப்பைத் தொட்டி ஒன்றிருந்தது. அதில் பழம் தோலே டுகள் கொட்டப்பட்டிருந்தன. அந்நூலகத் தைப் பராமரித்தவரிடம் திசன்டோர்ப் விசா ரித்தபோது, இதைப்போன்று உதவாத, கெட் டுப்போன பழந்தோல் சுவடிகள், பல கூடை கள் இதற்குமுன் எரிக்கப்பட்டுவிட்டன என்று தெரிவித்தார். அப்பழஞ் சுவடிகளை ஆராய்ந்தபோது, பழங்காலத்திய கிரேக்க விவிலியத்தின் தாள்கள் அங்குக் கிடக்கக் கண்டார் திசன்டோர்ப். அவரது கண்களை அவராலேயே நம்ப முடியவில்லை. விவிலி யத்தின் பழம் ஏடுகளைத் திரட்டும் அரிய பணியைச் செய்து வந்தவர் அவர். எனவே அப்பழந் தாள்களையெல்லாம் எடுத்துச் செல்ல அனுமதிகேட்டார். இவரின் ஆர்வத் தைப் பார்த்த அந்த முனிவர், இப்பழம் ஏடுகளின் மதிப்பை உடனே புரிந்து கொண்டு 43 தாட்களை மட்டும் திசன்டோர்ப் பிற்கு வழங்கினார். இந்தக் கிரேக்க விவிலி யம் அடங்கிய 43 தாட்களும் தற்போது லெய்ப்சிக் நகரிலுள்ள அரசு நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

விவிலியத்தின் பழம் ஏடுகள் சீனாய் கத்தரீ னாள் மடத்தில் நிறைந்திருப்பதைத் தெரிந்து

கொண்ட திசன்டோர்ப் 1853-ஆம் ஆண்டு மீண்டும் அங்குச் சென்றார். அங்குள்ள மற்றப் பழஞ் சுவடிகளைப்படிவம் எடுப்பதற்கா வது அனுமதி வேண்டும் என்று கேட்டார். அவர் முயற்சி ஒன்றும் பயனளிக்கவில்லை. கடைசியில் இம்முறையில், துடைத்துப் போடுவதற்குப் பயன்படுத்தப்பட்ட ஒரு சிறிய பழந்தோல் தாள் மட்டும் தான் கிடைத்தது. அதில் ஆதிஆகமத்திலிருந்து 11 வரிகள் மட்டுமே எழுதப்பட்டிருந்தன.

மீண்டும் மூன்றாம் முறையாக 1859-ஆம் ஆண்டு திசன்டோர்ப் சீனாய் கத்தரீனாள் மடத்திற்குச் சென்றார். இம்முறையும் பயன ளிக்காது என்ற முறையில்தான் நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருந்தன. பிப்ரவரி 7-ஆம் தேதி கெய்ரோவிற்குப் புறப்படலாம் என்று முடிவு செய்து விட்டார். பிப்ரவரி 4-ஆம் தேதி மாலை, சாப்பாட்டுப் பணியை மடத் தில் கவனிக்கும் முனிவருடன், மாலையில் பேசிக் கொண்டிருந்தார். அவர்கள் உரையா டலின் முடிவில் தேனீர் அருந்த அழைத்தார் அந்த முனிவர். உணவரையில் நுழைந்ததும், ''நானும் எழுபதுநூலை வாசித்திருக்கிறேன்'' என்று அறையின் மூலையிலிருந்து, சுவடி மூட்டை ஒன்றைத் தூக்கி வந்தார். அது சிவப்பு நிறத் துணியால் சுற்றப்பட்டு கட்டப் பட்டிருந்து. அதை அவிழ்த்துப் பார்த்தார், திசன்டோர்ப். அதில் இவர் 1844-இல் எடுத் துச் சென்ற 43 தாள்களின் மற்றப்பகுதிகள் காணப்பட்டன. திசன்டோர்ப்பின் மகிழ்ச் சிக்கு எல்லையேயில்லை. இச்சுவடியைத் தன் அறையில் தனியாக வைத்து ஆரஅமரப் பார்க்க இதைக்கொடுத்துதவ வேண்டும் என்று கேட்டார் திசன்டோர்ப். அதைத் தன் அறைக்கு எடுத்துச் சென்று விரித்தபோது, ''என் கைகளில் விவிலியத் திரவியம் ஒன்று மின்னிச் சொலிப்பதை நான் உணர்ந்தேன்'' என்று அவரே இந்நிகழ்ச்சியைப் பற்றி எழுதி யிருக்கிறார். ஆனால் இச்சுவடிகளைத் தன் னுடன் அவர் எடுத்துச்செல்ல அனுமதிக்கப் படவில்லை.

பிறகு உருசிய மன்னன் அலக்சாந்தர்சார் வழியாக இப்பழஞ்சுவடிகளைப் பெற முயற்சி செய்தார். இவர் இச்சுவடிகளி லிருந்து படிவம் எடுப்பதற்காக, இச்சுவடிகள் உருசியாவுக்கு அனுப்பப்பட்டன. பிறகு இம்முனிவர்கள் 7000 ரூபிகள் வாங்கிக் கொண்டு உருசிய மன்னனுக்கே கொடுத்து விட்டனர். பிறகு இச்சுவடிகள் 1933 வரை தற்போதைய லெனின்கிராடு, முன்னாளின் பீட்டர்ஸ் பெர்கில் காப்பாற்றப்பட்டு வந் தன. பிறகு இதனை உருசிய அரசு பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலைக்காக அப்போதே ஒரு இலட்சம் பவுன்களுக்கு விற்றுவிட்டது. தற்போதுபிரிட்டிஷ் பொருட்காட்சி சாலை யில் இலண்டனில் இது பாதுகாக்கப்பட்டு வருகிறது. இதுதான் நமக்குக் கிடைத்திருக் கும் சீனாய்ப் பழஞ் சுவடியாகும்.

**சீனிம்** (SYENE - *சந்தை)*

எசே 29:10; 30:6-இல் குறிப்பிடப்பட் டுள்ள எகிப்தின் தெற்கு எல்லைப் பகுதியில் உள்ள ஓர் இடம். தற்பொழுது அசுவான் என்று அழைக்கப்படும் இக்கிராமம் நைல் நதியின் கிழக்குக் கரையில் முதலாம் நீர்வீழ்ச் சிக்குச் சற்று வடக்கே எகிப்தின் மேல் பகுதியில் அமைந்துள்ளது. இங்குக் கிடைக் கும் வெளிர் சிவப்புக் கற்கள் பண்டைய எகிப்தில் கட்டடங்கள் கட்டப் பயன்படுத் தப்பட்டன. இக்கற்களுக்காகச் சீனிம் வணிக நிலையமாக முக்கியத்துவம் பெற்றிருந்தது.

இது மிகவும் தொலைதூரத்தில் உள்ள ஊர் என்பதை எசா 49:12 குறிப்பிடுகின்றது. ''இதோ, இவர்கள் தொலைவிலிருந்து வருவார்கள். சிலர் வடக்கிலிருந்தும் சிலர் மேற்கிலிருந்தும் சிலர் சீனிம் நாட்டி லிருந்தும் வருவார்கள்.''

இது கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் யூதர் களின் இராணுவக் குடியிருப்பாக இருந்த 'எலிபென்டைன்' தீவிற்கு எதிரே உள்ளது.

**சீனியர்** (SINITES - *களிமண்)*

கானானியர் என்ற இனத்தவருள் சீனியர் என்பவரும் அடங்குவர் (ஆதி 10:7; 1 நாள் 1:15). ஒரு சிலர் லெபனோன் சரிவுகளில் இருந்த சின்னு என்ற நகரினர் இவ்வாறு

அழைக்கப்பட்டார்கள் என்றும், வேறு சிலர் வட பெனிசியாவில் உள்ள சியானு நகர மக்களே இவர்கள் என்றும் கூறுவர். இன்னும் இவர்களது பூர்வீகத்தைப் பற்றி நிலையான கருத்து உருவாக்கப்படவில்லை.

**சீன்**

இது எபிரேய நெடுங்கணக்கில் இருபத்தி ஒன்றாவதுஎழுத்தாகும். அகரவரிசைப் பாடல் சங் 199-இன் இருபத்தியொன்றாம் அடிக்குத் தலைப்பாக உள்ளது. இதன் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்தோடு தொடங்குகிறது.

**சீன் பாலைவனம்** *(SIN, WILDERNESS OF -களிமண்)*

ஏலிமுக்கும் சீனாய்க்கும் இடையில் உள்ள பகுதி 'சீன்' பாலைவனம் என்று விவிலியத்தில் *(யாத் 16:1; 17:1; எண் 33:11-12)* கூறப்பட்டாலும், யாத் 17:1-இல் சீன்பாலைவனத்திற்கும் சீனாய்க்கும் இடையில் இரபிதிம் என்ற இடம் இருப்பதாகவும், எண் 33:11-12-இல் 'சீன்'னுக்கும் இரபிதிமுக்கும் இடையில் இரு இடங்களில் இஸ்ராயேலர் தங்கியதாகவும் கூறப்பட்டுள்ளது.

இப்பாலைவனம் எங்கிருந்தது என்று உறுதியாகக் கூறமுடியாது. ஒருவேளை சீனாய்க்கு அருகில் இருந்திருக்கலாம். சீனாய் என்ற பெயர் ''சீன்'' என்பதிலிருந்து வந்திருக்கலாம். சீன் பாலைவனத்தில்தான் மன்னா முதலில் பொழியப்பட்டது.

''சின்'' என்பதற்கும் ''சீன்'' என்பதற்கும் உள்ள ஒற்றுமையினால் இடம் குழம்ப வாய்ப்புண்டு. மேலும் யூதாவுக்குத் தெற்கிலும் சீனாய்க்கு வடகிழக்கிலும் சின் என்று ஒரு பாலைவனம் உண்டு *(எண் 33:36)*. இவ்விரு பெயர்களுக்கும் ஏற்பட்ட குழப்பம் சின்பாலைவனத்தைக் குறிப்பிட்ட இடத்தில் இருப்பதாகக் கூறவிடாமல் தடுக்கிறது. எனவேதான் சின் பாலைவனத்தின் அமைவிடத்தைப்பற்றி இன்னும் நிலையான கருத்து உருவாகவில்லை.



**சுக்காத்தியர், சுக்காவியர்** (SUCATHITE)

யூதாவின் யகபேசில் குடியிருந்த எழுத்தர்களின் குடும்பங்களில் ஒன்று. இவர்கள் காலேபின் வழித்தோன்றல்களாகப் பட்டியலில் குறிக்கப்படுகின்றனர். இவர்கள் கேனியர்களாக அல்லது இரேக்காபியர்களாகக் கருதப்படுகின்றனர் (*1 நாள் 2:55*).

**சுக்கான்** (RUDDER)

கப்பல்கள், படகுகள் ஆகியவற்றின் போக்கைக் கட்டுப்படுத்தும் கருவி (*அ.ப. 27:40; யாக் 3:4*).

**சுக்கிம், சுக்கியர்** (SUKKIM)

எருசலேமைத் தாக்குவதற்காக எகிப்திய மன்னன் சிசாக்கு கொண்டு வந்த படையின் ஒரு பகுதி (*2 நாள் 12:3*). இவர்கள் லிபியா மரபில் தோன்றிய படைவீரர்களில் ஒரு வகுப்பினர் என்று கருதப்படுகின்றனர்.

**சுக்கோத்து** (SUCCOTH - கூடாரம்)

1. கிழக்குப் பாலஸ்தீனத்தில் யோர்தான் பள்ளத்தாக்கு அருகில் அமைந்துள்ள காதின் நகர்.

யாக்கோபு இந்த இடத்தில் வீடு கட்டி, தன் மந்தைகளுக்குக் கூடாரம் அமைத்ததால் இந்த இடத்திற்குச் சுக்கோத்து (கூடாரம்) என்று பெயர் இடப்பட்டதாகக் கூறப்படுகிறது (*ஆதி 33:17*). ஆனால் இது ஒரு பழைய கானானிய நகரம் என்றும், அறுவடைத்திருநாள் இங்கு நடைபெற்றதால் இப்பெயர் பெற்றது என்றும் கருதப்படுகிறது.

சீகோனுடைய அரசின் ஒரு பகுதியாக விளங்கியது; காதின் புதல்வர்களுக்கு அவர்களின் வம்சங்களின்படி சொந்தமாயிற்று (*யோசு 13;27*). கிதியோனும் அவனது படைவீரர்களும் மிதியானியரைத் துரத்திச் சென்றபோது சுக்கோத்து ஊராரிடம் களைப்பைப் போக்க உணவு கேட்டபோது அவ்வூரார் மறுத்தனர். கிதியோன் வெற்றி பெற்றுத் திரும்பும்போது சுக்கோத்து ஊர் மக்கட் தலைவர்களையும் மூப்பர்களையும் சித்திரவதை செய்து கொன்றார் (*நீதி 8:5-9. 14-16*).

சாலமோனின் ஆலயத்திற்கு வெண்கலப் பாத்திரங்கள் இங்குதான் வார்க்கப்பட்டன (*1 அர 7:46; 2 நாள் 4:17*). சங்கீதங்களில் சுக்கோத்துப் பள்ளத்தாக்கு பற்றி இரண்டு இடங்களில் வந்துள்ளன (*சங் 60:6; 108:7*). யாபோக்குக்கு வடக்கே 5 கி.மீ. தொலைவில் யோர்தானுக்குக் கிழக்கில் உள்ள தேல் தெயிர் - அல்லா என்பதுதான் சுக்கோத்து என்று பொதுவாக அடையாளம் காட்டப்படுகிறது. இது மிகச் செழிப்பான பகுதியாகும். இங்கு மத்திய வெண்கலக் காலத்திலிருந்தே மக்கள் குடியேறியுள்ளனர். வேறுசிலர் இவ்விடத்தைத் தேல் ஏல் - அக்சாவாக அடையாளம் காட்டுவர். இதுவும் செழிப்பான பகுதியாகும்.

2. ஓர் எகிப்திய நகர். *யாத் 12:37; 13:20;* எண் *35:5-6*-இல் குறிப்பிடப்பட்டுள்ளது. இஸ்ராயேல் மக்கள் எகிப்திலிருந்து விடுதலைப் பயணம் மேற்கொண்ட போது வழியில் தங்கிய முதல் இடம். இங்கு இஸ்ராயேலின் தலைப்பேற்றாண்கள் அர்ப்பணிக்கப்பட்டனர் (*யாத் 13:2.11-15*). இது பொதுவாகத் தேல் ஏல் - முஸ்குத்தாவாக அடையாளம் காட்டப்படும். இவ்விடம் இஸ்ராயேலர் தங்களது விடுதலைப் பயணத்தைத் தொடங்கிய இடமாகிய இராமசேசுவிலிருந்து 52 கி.மீ. தொலைவிலுள்ளது.

**சுக்கோத்து** (SUKKOTH - கூடாரம்)

யூதத்துவத்தின் முப்பெரும் யாத்திரை விழாக்களில் ஒன்று காண்க: கூடாரவிழா, சேகரிப்பு விழா.

**சுக்கோத்து - பெனோத்து** (SUCCOTH -BENOTH - பெண்பிள்ளைகளின் கூடாரம்)

அசீரியர்களால் கி.மு. 722-க்குப் பிறகு பாபிலோனில் இருந்து சமாரியாவில் குடியேறிய வர்கள் வழிபட்ட ஒரு தெய்வம் அல்லது

தெய்வங்கள் (2 அர 17:30). இந்தப் பாபிலோனியக்கடவுள் மார்துக்கின் துணைவியாகிய தெய்வம் சர்பனித்து என்று கருதப்படுகிறது. பொதுவாக இந்தப் பெண் தெய்வம் சீர்-பானித்து (விதை உண்டாக்குகிற) என்று அழைக்கப்படுகிறது. சுக்கோத்து என்ற பெயரை உள்ளடக்கியுள்ளதால் சனி தெய்வமாகிய பாபிலோனியச் சக்கூத்துவாக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது (ஆமோ 5:26). பெயர் ''பெண் பிள்ளைகளின் கூடாரம்'' என்று பொருள்கொள்வதால், இது தெய்வத்தைக் குறிக்கவில்லை; வழிபாட்டு விபச்சாரிகளுக்குப் பாபிலோனியர் கட்டிய வீட்டைக் குறிக்கிறது என்றும் கூறலாம்.

**சுங்கத்துறை** (TAX OFFICE)

இயேசு மத்தேயுவை - லேவியை அழைத்த போது இது குறிப்பிடப்படுகிறது (மத் 9:9; மாற் 2:14; லூக் 5:27). இது வணிகப் பொருட்கள் மேல் விதிக்கப்பட்ட வரிகளைச் செலுத்தும் அலுவலகமாக இருக்கலாம்.

**சுட்டிகள்** (HEADBANDS)

அனேகமாகத் தங்கம் அல்லது வெள்ளியிலான தலை அணிகலன்களாக இருக்கலாம் (எசா 3:18-20).

**சுண்டெலி** (MOUSE)

கொறிக்கும் உயிரின வகையைச் சேர்ந்த எலிவகையில் ஒன்று. இவை தீட்டானவை. இவற்றை உண்ணக்கூடாது (லேவி 11:29). எசா 66:17 - இல் புற இன மக்களின் வழிபாடு குறிக்கப்படுகிறது. இதில் எலிகள், சுண்டெலிகள் உண்ணப்பட்டன. இறைவனால் அனுப்பப்பட்ட சுண்டெலிகளின் படையெடுப்பிற்குக் குற்ற நீக்குப் பலியின் ஒரு பகுதியாகப் பெலிஸ்தியர்கள் ஐந்து பொன் சுண்டெலிகளையும் உடன்படிக்கைப் பேழையோடு இஸ்ராயேலரிடம் அனுப்பினர் (1 சாமு 6:4-18).

**சுண்ணாம்பு** (LIME)

சுவரில் வெள்ளையடிப்பதற்காகப் பயன்படுத்தப்படும், சுண்ணாம்பு காரம் நிறைந்த மாவு. சுண்ணாம்புக் கற்களையும், சிப்பிகளையும் எரித்து இந்த மாவினைத் தயாரிப்பார்கள். பாலஸ்தீனச் சுண்ணாம்புக் கல், சுண்ணாம்புக் கரியாகவும், காரை செய்யும் கூட்டுப்பொருட்களில் முக முக்கியமானதாகவும் இருந்தது. இது, சூடாக்கப்பட்ட உடனேயே சுண்ணாம்பாகும் தன்மை கொண்டது. எசா 33:12-இல் சுண்ணாம்பு அவமான அழிவின் அடையாளமாக எரிக்கப்படுவதோடு தொடர்புடையதாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த விவிலிய வாக்கு, ''சுண்ணாம்பாக எரிக்கப்பட்டது'' அல்லது ''சுண்ணாம்பால் எரிக்கப்பட்டது' என்று இரு பொருள்களில் பயன்படுத்தப்படலாம். முதல் பொருளின் அடிப்படையில்தான் ஆமோ 2:1 விளக்கப்பட்டுள்ளது. ஏனென்றால், மோவாபு, ஏதோம் அரசனின் எலும்புகளைச் சுட்டுச் சாம்பலாக்கினான் என்று எழுதப்பட்டிருக்கின்றது.

இரண்டு விவிலிய வாக்குகளிலும், எலும்புகள் எரிக்கப்பட்டதைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருப்பதால் இது சுண்ணாம்பு பாஸ்பேட்டாக இருக்கலாம். இந்தச்சொல் ஒரு சுண்ணாம்புச் சாந்தையும் குறிப்பிடுகின்றது (உப 27:2). சுண்ணாம்பு, சுவர், தரை, தொட்டி போன்றவற்றின்மேல் பூசப்படும் சாந்திலும் பயன்பட்டது. மற்றப் பல தேவைகளுக்காகவும் பயன்படும் வகையில், சூளையில், உடைத்த சுண்ணாம்புக் கற்கள் எரித்துத் தயாரிக்கப்படுகின்றன. வேகம் குறைந்த சுண்ணாம்பு, கம்பளித் துணிகளுக்கான சாயம் தயாரிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

**சுண்ணாம்புக் கற்கள்** (CHALKSTONES)

இவைகள் பாலஸ்தீனிய பாறைகளிலிருந்து எடுக்கப்பட்ட கற்களாகும். இக்கற்கள் யூதேயாவிற்குக் கிழக்கே உள்ள மலைக்குன்றுகளில் அதிக அளவிலும் இந்நாட்டிற்கு மேற்கிலும், வடக்கிலும் உள்ள குன்றுகளில் குறைந்த அளவிலும் காணப்படுகின்றன. இவைகள் மிருதுவானவைகளாகவும், அழிந்து போகக் கூடியவைகளாகவும், வறண்டுபோனவைகளாகவும் இருக்கின்றன. இவற்றில் எதுவும் வளர்வதில்லை. எசா 27:9-இல் ''சுண்ணாம்புக் கற்களை

உடைத்துத் தூள் தூளாக்குவதுபோல், அவர் அவர்களின் (இஸ்ராயேல் சிலைகளின்) பலி பீடக்கற்களுக்குச் செய்வார்'' என்று கூறப் பட்டுள்ள கூற்று இக்கற்களின் தன்மையைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

**சுத்த, அசுத்த உணவு** *(FOODS, CLEAN AND UNCLEAN)*

சுத்தமான உணவு என்பது உண்ணலாம் என யூதச் சட்டம் அனுமதிக்கும் உணவு வகைகளாகும். அசுத்தமான உணவு என்பது உண்ணலாகாது என அச்சட்டம் தடுப்பவை யாகும். இவற்றின் முக்கிய பட்டியல் லேவி *11;* உப *14*-இல் கொடுக்கப்பட்டுள்ளது.

காண்க: தூய்மையானது, தூய்மையற்றது.

**சுத்தியல், சம்மட்டி, கொட்டாப்புளி** *(HAMMER, MALLET)*

விவிலிய காலத்தின் தொடக்கத்திலிருந்து கற்களால் செய்த சுத்தியல் வைத்துக் கையால் வேலையை மேற்கொண்டிருக்கின் றனர். வெண்கல காலத் தொடக்கத்தில் கையால் நன்கு பிடிப்பதற்கு ஏதுவாகக் கற்க ளில் துளையிடப்பட்டிருக்கிறது. மரம் அல் லது எலும்பினால் ஆன சுத்தியல் எல்லாக் காலங்களிலும் பயன்படுத்தப்பட்டிருக் கிறது. ஆனால் பாலஸ்தீனத்தில் உலோகத் தலையுடன் கூடிய சுத்தியல் அரிதாகக் காணப் படுகிறது; இதற்கு உலோகத் தட்டுப்பாடு காரணமாக இருக்கலாம். ஆகவே கற்கள் திருப்திகரமான பகரப்பொருளாகப் பயன் பட்டன. அதே நேரத்தில் வெட்டும் முனை யுடன் கூடிய கருவிகள், ஆயுதங்கள் ஆகிய வற்றிற்கு உலோகம் தேவைப்பட்டது.

இரும்பால் செய்யப்பட்ட சுத்தியல் *1* அர *6:7*-இல் குறிக்கப்படுகிறது. இது கற்களைச் செதுக்குபவர்களாலும் இரும்புக் கொல்லர் களாலும் பயன்படுத்தப்பட்டது.

இக்கருவி நீதி *4:21; 5:26;* எசா *44:12;* எரே *23:29; 51:20;* எசே *9:2;* சீரா *38:28* ஆகிய பகுதிகளில் குறிக்கப்படுகிறது. இச்சொல் மரக் கொட்டாப்புளியையும் குறிக்கும். இத் தகைய கருவியைக் கொண்டுதான் யாவேல் சீசராவைக் கொன்றாள் (நீதி *5:26*). இது கூடாரத்தின் முளைகளை அடிப்பதற்குப் பயன்பட்ட ஒரு கருவியாக இருக்கலாம் (*4:21*).

**சுத்தேலகு** *(SHUTHELAH - முரண்பாடு, வேறுபாடு)*

*1.* இவர் எப்பிராயிமின் முதல் மகனும் ஏரான் என்பவரின் தந்தையுமாவர். இவரது வழித்தோன்றல்கள் சுத்தேலகியர் என்று அழைக்கப்பட்டனர் (எண் *26:35-36; 1* நாள் *7:20*).

*2.* எப்பிராயிமின் குலத்தைச் சேர்ந்த சாபாது வின் மகன் (*1* நாள் *7:21*). இவர் *1*-இல் வருபவராகவோ அவருடைய வழித்தோன்ற லாகவோ இருக்கலாம்.

**சுபவேல்** *(SHUBAEL)*

செபுவேல் என்ற பெயரின் மற்றொரு வடிவம்.

**சுப்பீம்** *(SHUPPIM - பாம்பு)*

*1.* பென்யமின் குலத்தைச் சேர்ந்த ஈரின் இரு புதல்வர்களில் ஒருவர் (*1* நாள் *7:12*). சுப்பீம் மற்றும் குப்பிம் (உப்பிம்), ஆகி யவை பென்யமினின் ஒரு தலைமுறைப் பட்டியலில் வரும் செப்புபாம் மற்றும் கூப் பாம் (உபாம்) (எண் *26:39;* ஆதி *46:21; 1* நாள் *8:5*) என்பனவற்றின் மறுபெயர்களா கும். இவை குழப்பமிக்க மனாசேயின் பட்டி யலில் வருவது (*1* நாள் *7:15*) வாசகம் பழுதுபட்டதன் விளைவாகும்.

*2.* எருசலேமின் லேவிய வாயில் காவ லர்களில் ஒருவர். தாவீது காலத்தில் இவ்வே லைக்கு ஆட்களைப் பிரித்தெடுக்க சீட்டுப் போட்டதில் இவருக்குக் கோவிலின் மேற் குப் புற வாயிலும், மேட்டுப் பாதையை நோக்கிய சல்லகேத்து வாயிலும் விழுந்தன (*1* நாள் *26:16*).

**சுமேர், சுமேரியா** *(SUMER, SUMERIA))*

இது பிற்காலத்திலே பாபிலோனியா என அழைக்கப்பட்ட நாடு. யூப்பிரத்தீசு, திகிரிசு நதிக்கரையில் இக்காலப் பாக்தாதுக்கும் பார

சீக வளைகுடாவுக்கும் இடையில் அமைந் திருந்தது. இங்கு வளர்க்கப்பட்ட சுமேரிய நாகரீகம் மனித வரலாற்றிலே முதன் முதலாகத் தோன்றிய நாகரீகமாகும். சுமேரிய நாகரிகம் விவிலியத்தில் குறிப்பிடப்படவில்லை. ஆனால் இவர்தம் நாகரீகம் இஸ்ராயேலரைப் பெரிதும் பாதித்துள்ளது. சுமேரியர்கள் கி.மு. 3000-ஐ ஒட்டிப் பாரசீக வளைகுடா வழியாக மெசபொத்தாமியா வந்து சேர்ந்தனர்.

சுமேரியர்கள் சிற்பக் கலையையும், கட்டடக் கலையையும் வளர்த்தனர். அரண்களையும் எழுப்பி நகரங்களைக் காத்தனர். சுமேரிய கண்டுபிடிப்புகளில் முக்கியமானவை ஆப்பு வடிவ எழுத்துக்களாகும். சுமேரிய இலக்கியங்கள் பிற்காலத்தில் வளர்ந்தவை. சுமேரிய மொழி அவர்தம் எழுத்தர்களால் பாதுகாக்கப்பட்டது. இந்த இலக்கியங்கள் சரித்திர, ஞான, சமய சம்பந்த கருத்துக்களைக் கொண்டவை. சுமேரிய சமயமும் புராணங்களும் மெசபொத்தாமியாவில் வாழ்ந்த செமித்திய இனத்தவரின் சமய, புராணங்களைப் பெரிதும் பாதித்தன.

சுமேரிய மக்கள் மறுவாழ்வை நம்பினரா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் அவர்தம் கல்லறைகள் வியக்கத்தக்கவை.

**சுமை, பளு (BURDEN)**

இச்சொல் இயற்பொருளில் பாரமான பொருளைக் குறிக்கிறது. இச்சொல் உவமையாகவும் பயன்பட்டுள்ளது. இஸ்ராயேல் மக்கள் ஒரு பளுவெனவும் (எண் 11:11.17; உப 1:12), ஒரு தனிமனிதன் சுமையாவதும் (யோபு 7:20) உருவகமாகக் கூறப்பட்டுள்ளன.

**சுரங்க வேலை / சுரங்கத்துறை - (MINING)**

விவிலிய எபிரேய மொழியில், "சுரங்கம்" அல்லது ''சுரங்க வேலை'' என்பனவற்றைக் குறிப்பிடக்கூடிய வார்த்தை இல்லாததால், எபிரேயர்களின் வாழ்க்கையுடன் தொடர்பு இல்லாததாக இது கருதப்படுகிறது. யோபு நூல் 28:1-இல் வரும் சொல் வெள்ளி கிடைக்கக்கூடிய ஓர் இடத்தைக் குறிப்பிடுவதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் இச்சொல் ''விளை நிலம்'' என்ற பொருளையே கொண்டுள்ளது.

சுரங்கம் தோண்டும் செயலுக்கு யோபு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்திருக்க வேண்டும். அதனால்தான் அவர் ''மக்கள் குடியிருப்புக்குத் தொலைவில் சுரங்கத்தைத் தோண்டுவர்'' (யோபு 28:4); ''எட்டினமட்டும் தோண்டி இருட்டிலும் மரண இருளிலும் கனிமப் பொருளைத் தேடுகிறான்'' (28:3) என்கிறார்.

*1. செம்புச் சுரங்கம்:* செம்பு உலோகப் பொருள் வாடி அராபிய ஓடையின் இரு பக்கங்களிலும் காணப்படுகின்றது. மண்ணியலின் அடிப்படையில், இங்குக் காணப்படும் உலோகம் சீனாய்த் தீபகற்பத்தில் உள்ள உலோகத்துடன் தொடர்புடையதாகக் காணப்படுகின்றது. ஆரம்ப காலத்தில் சீனாய்ச் சுரங்கங்களிலிருந்துதான் எகிப்து தனக்கு வேண்டிய செம்பைப் பெற்றுக் கொண்டது. பிற்பட்ட காலத்தில்தான் அராபியச் சுரங்கங்களிலிருந்து எடுக்கப்பட்டன (கி.மு. 2200-1800).

சீனாய்ச் சுரங்கங்கள் மீது எகிப்தியர் காட்டிய உற்சாகமே சேயிர் மலையில் குடியேறியவர்களையும் இந்தச் செயலில் ஈடுபட வைத்தது. பூனோன் குடிமக்கள் வேலை செய்த சுரங்கம் இப்போது உம்மெல் அமாத் என்று அழைக்கப்படுகிறது. இது சுமார் 9 கி.மீ. தென்கிழக்கே அமைந்துள்ளது. இந்தச் சுரங்கம், ''தூண்களின் தாய்'' என்ற பொருள் கொண்ட பெயரைத் தாங்கியுள்ளது. ஏனென்றால் இது, கூரைப் பகுதியைத் தாங்குவதற்காகப் பண்டைய சுரங்க வேலையாட்களால் விடப்பட்ட பாறைத் தூண்களைக் குறிப்பிடுகின்றது.

முதலாம் இரண்டாம் இரும்புக் காலத்தில் (கி.மு. 1200-600) அராபிய செம்பு அதிக அளவில் தோண்டி எடுக்கப்பட்டது. இந்தச் செம்பைத் தோண்டி எடுக்கும் செயலை முதலில் கேனிய மக்கள் செய்தனர். சுரங்கங்

களுக்கு அருகில் உள்ள செலா என்ற இடத்தி லேயே அவர்கள் தங்கியிருந்தனர். இவர்களிட மிருந்தே எபிரேயர்கள் சுரங்கவேலையை யும் உருக்கு வேலையையும் கற்றுக்கொண்ட னர் என்பதில் சந்தேகமில்லை. எபிரேய மன்னராட்சி ஏற்படுத்தப்பட்ட பின்னர், அராபியாவின் உலோகப் பொருட்களைக் கட் டுப்படுத்துவது, அக்காபா வளைகுடாவுக் குச் செல்ல வழி அமைத்தல் போன்ற கார ணங்களின் அடிப்படையில் ஏதோம் மன்னர் களுடன் எதிர்ப்பு உருவாகியது. யூதாவிற் கும் ஏதோமிற்குமிடையே போர்கள் நடந் தது (தாவீது காலம் தொடங்கி யோசபாத்து காலம் வரை மற்றும் அமாசியா காலம் முதல் ஆகாசு காலம் வரை).

வட அராபியாவில் மிக முக்கியமான சுரங்கமாகக் கருதப்பட்டது, கிர்பெட் -நகாஸ் என்ற இடத்தில் இருந்தது. இது சாக்கடலுக்குத் தெற்கே ஏறக்குறைய 26 கி.மீ. தொலைவில் இருந்தது. இது ஈர் - நகாசு என்ற இடமாக *(1 நாள் 4:12)* அடையா ளம் காட்டப்படுகிறது. இதுவே செம்பு நகர் என்று அழைக்கப்படுகிறது. தென் அராபியா வின் பெரிய சுரங்கத்துறை, ''மெனே இயே'' என்ற இடத்தில் இருந்தது. இது அராபியா வின் மேற்குப்பகுதியில், வளைகுடாவிற்கு ஏறக்குறைய 35 கி.மீ. தொலைவில் அமைந் திருந்தது.

அராபியாவில் கடுமையான வெப்பமும், தண்ணீர் வறட்சியும் நிலவியதால், மழைக் காலங்களில்தான் சுரங்கத் தொழில் நடை பெற்றது. அடிமைத் தொழிலாளர்கள் இவ் வேலைக்குப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது. இதற்குச் சுவர் சூழ்ந்த குடியிருப்புகள் ஆதாரங்களாக உள் ளன. இந்த ஆதாரங்கள் எபிரேய மன்னராட்சி யின் காலத்தைச் சேர்ந்தவை. எனவே கேனிய மக்களிடம், அடிமைகளைப் பயன் படுத்துமளவிற்கு அரசியல் சக்தி இருந்ததா என்பது சந்தேகத்துக்குரிய ஒன்றாக உள்ளது.

**2. இரும்புச் சுரங்கங்கள்:** அராபிய சுரங் கங்களிலும், உருக்குப் பட்டறைகளிலும் காணப்படுகின்ற இரும்புக் கசடு போன்ற பல இரும்புத் துண்டுகள், இரும்புக் காலத்தில் அங்கு இரும்பும், செம்பும் தோண்டியெடுக் கப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கு ஆதார மாக உள்ளன. ஆனால் இரும்புச் சுரங்கம் என்று குறிப்பிடும்படி எந்த இடமும் குறிப் பிடப்படவில்லை. பெத்திராவிற்குத் தென் கிழக்கில் ஏறக்குறைய 7. கி.மீ. தொலைவில் உள்ள வாடி யெஸ்சபிராவில் ஓரளவிற்கு இரும்புப் பொருட்கள் காணப்படுகின்றன. ஆனால் இது நபத்தேயர் காலம் வரை நடைபெற்றதாகத் தெரியவில்லை.

வடக்கு யோர்தான் பகுதியிலுள்ள அய்லூன் (கிலயாது) என்னும் இடத்தில் கண்டுபிடிக்கப் பட்ட உலைக்களங்கள் இடைக்காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது. ஆனால் மகா ரத் வார்தாவில் காணப்படும் இரும்புச் சுரங் கம் பண்டைக் காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப் படுகிறது. பாசான் நாட்டு மன்னரான ஓகு, இரும்புப் படுக்கையைப் பயன்படுத்தியதாகப் பாரம்பரியம் உள்ளது *(உப 3:11)*. இதன் மூலம், வடக்கு யோர்தானில், மோசேயின் காலத்திலோ அதற்கும் முன்னரோ இந்த இரும்புச் சுரங்கவேலை நடைபெற்றிருக்க லாம் என்று எண்ணப்படுகிறது.

உப ஆகமம் *(3:11)* எழுதப்பட்டபோது ஒரு மன்னனின் சிம்மாசனம், இராபாவில் இருந்த பெரும் கற்கால நினைவுச்சின்னத் துடன் ஒப்பிடப்பட்டுள்ளது.

தாவீது அரசர் காலத்தில் ''இரும்பு மனி தன்'' என்ற பொருளுடைய பர்சில்லாய் என்ற பெயர் பயன்படுத்தப்பட்டுள்ளதால் இது இரும்புத்தொழிலுககு ஆதாரமாக அமைகின்றது. உப ஆகமத்தில் வாக்களிக் கப்பட்ட நாட்டைப்பற்றிக் குறிப்பிடுகையில், ''அந்த நாட்டின் பாறைகள் அனைத்தும் இரும்பு, அதன் மலைகளிலிருந்து செம்பு வெட்டி எடுக்கலாம்'' *(உப 8:9)* என்று எழுதப்பட்டுள்ளது. எனவே இத்தகைய தொழில்கள் மோசேயின் காலத்திலும் நடந் துள்ளன என்று கருதப்படுகிறது.

**சுருள், ஏட்டுச்சுருள்** (ROLL, SCROLL)

தோல் அல்லது நாணல் தாளால் ஆன சுருள். எழுதுவதற்குப் பயன்பட்டது (எஸ் 6:1; எபி 10:7; எசா 8:1; 34:4).

**சுரிசதாய்** (ZURISHADDAI - சதாய் (வல்லமை மிக்கவர்) என்பாறையாவார்)

பாலைவனத்தில் சிமியோனின் கோத்திரத்துக்குத் தலைவராய் இருந்த செலுமியேலின் தந்தை ஆவார் (எண் 1:6; 2:12; 7:36. 41; 10:19). பாறையோடு தொடர்புபடுத்தி இறைவனைக்குறிக்கும் இச்சொல்லும் பிற சொற்களும் பாதுகாப்புக்கு இருப்பிடமான கடவுளை உருவகப்படுத்துதலாகும் (சங் 89:26).

**சுவர், மதில்** (WALLS)

பழைய ஏற்பாட்டில் சுவர்கள் பல இடங்களில் குறிப்பிடப்படுகின்றன. திராட்சைத் தோட்டங்களுக்கும், வயலுக்கும் சுற்றுச் சுவர்கள் இருந்தன (எசா 5:5). இவை செதுக்காத கற்களால் கட்டப்பட்டவை. வீட்டின் மதில்கள் செதுக்காத கற்களாலும், மண் அல்லது செங்கற்களாலும் கட்டப்பட்டன. கரடு முரடான கற்களால் கட்டப்பட்ட நகரக் கோட்டைச் சுவர்கள் உயரமானவையாகவும் அதிக அகலமுடையவையாகவும் இருந்தன (யோசு 2:15; 6:5).

சுவர் அல்லது மதில்கள் பற்றிய புதிய ஏற்பாட்டுக் குறிப்புகள் சிலவே (அ.ப. 9:25; 2 கொரி 11:33; எபி 11:30; திருவெளி 21:12;...).

**சுவர்க்கோழி** (CRICKET)

இது சப்தமிடும் ஒருவகைப் பூச்சி (வெட்டுக்கிளி போன்றது). நான்கு காலால் நடமாடி, தரையிலே தத்திப்பாயும்படி மிக நெடிய பின்னங்காலை உடைய இந்தப்பூச்சிகளை மக்கள் உண்ணலாமென லேவியர் ஆகமம் கூறுகிறது (லேவி 11:22).

**சுவர்ணரத்தினம்** (CHRYSOLITE)

எருசலேம் மதில்களின் அடிக்கற்களில் இது ஏழாவது கல்லாகும் (திருவெளி 21:20). இது மஞ்சள் நிறத்தில் இருக்கலாம். மற்ற இடங்களில் இது மரகதக்கல் என்று மொழி பெயர்க்கப்படுகிறது (எசே 1:16;10:9). உருவகமாகவும் பயன்பட்டுள்ளது (உ.ச. 5:14; தானி 10:6).

**சுவிகாரம்** (ADOPTION)

1. கிறிஸ்து, தன்மையால், உள்ளார்ந்த பண்பில் இறைவனின் மகனாவார். இரண்டாந்தர, தழுவிய பொருளில் கிறிஸ்துவன் இறைவனின் மகனாவார். இக்கருத்தை உயிர்ச்சித்திரமான முறையில் எடுத்துக்கூறப் பயன்படுத்துவதில் சுவிகாரம் என்ற கருத்தின் இறையியல் முக்கியத்துவம் அடங்கியிருக்கிறது. இறைவன் இஸ்ராயேலைத் தேர்ந்தெடுத்ததால் அது இறைவனின் மகனாகிறது (ஓசே 11:1;...). திருமுழுக்காலும் பரிசுத்த ஆவியின் பிரசன்னத்தாலும் கிறிஸ்துவன் இறைவனின் மகனாகிறான் (உரோ 8:15; கலா 4:6). அதனால் இறைவனை ''அப்பா! தந்தாய்!'' என்றழைக்கும் உரிமை பெறுகிறான். இந்த அழைப்பு, இயேசுவின் தனிச் சிறப்பான நிலையினால் (உரோ 1:4; பிலி 2:6தொ; கொலோ 1:15 தொ) அவரது வாயிலிருந்து முதலில் தோன்றுகிறது (மாற் 14:36).

**2. பழைய ஏற்பாடு:** பழங்கால மேற்காசியாவில், மரபுரிமையையும் சொத்துரிமையையும் உறுதிப்படுத்த சுவிகாரம் ஒரு முக்கிய சாதனமாக விளங்கியது. ஆதியாகமத்திலேயே இப்பழக்கம் சுட்டிக்காட்டப்படுகிறது. ஆபிரகாம் தனது அடிமையான தமஸ்கு நகர் எலியேசரைத் தன் இல்லத்திற்கு உரிமை மகனாகக் கருதுகிறார் (ஆதி 15:2தொ). பார்வோனின் மகள் மோசேயைத் தத்து எடுக்கிறாள் (யாத் 2:10). எஸ்தர் மொர்தக்காயால் மகளாக ஏற்றுக்கொள்ளப்படுகிறாள் (எஸ்த 2:7. 15). செம்கேமில் உடன்படிக்கை நிறுவப்பட்டபின் நாடு யாவேயின் உடைமையாய்க் கருதப்பட்டது. அவர் பன்னிரண்டு குலத்தவர்க்கும் அந்நாட்டைப் பகிர்ந்தளிக்கிறார். அப்பகுதிகளின் உரிமை விற்கப்படவோ மாற்றப்படவோ முடியாததால், கற்பனையான சுவிகாரமுறை இஸ்ரா

யேலில் தோன்றியிருக்க வேண்டும். ஆனால் இவ்வழக்கு செமித்தியப் பண்பாட்டில் இருந்தது பற்றிக் கம்முராபியின் சட்டமும் நூசி ஏடுகளும் சான்று பகர்கின்றன.

*3. புதிய ஏற்பாடு:* புதிய ஏற்பாட்டில் இக் கருத்து உரோ *8:15*-இலும் (பிள்ளைகளாக் கும்), *8:23*-இலும் (இறைமக்களாக்கப் படும்), *9:4*-இலும் (கடவுளின் மக்களாக ஏற் றுக் கொள்ளப்பட்டவர்கள்), கலா *4:5*-இலும் (இறைமக்களாய் இருப்பதால்), எபே *1:5*-இலும் (நம்மைத் தம் பிள்ளைக ளாக்கிக் கொள்ள) காணப்படுகிறது.

பவுல் இக்கருத்தைச் சட்ட உருவகமாகப் பயன்படுத்தி முக்கியமான இறையியல் போதனையை அளிக்கிறார். சுவிகாரம் பற் றிய உரோமையரின் சட்ட வழக்குகளை நன்கு அறிந்தவராய்ப் பவுல் இக்கருத்தை விரிவுபடுத்தி, விசுவாசத்தை ஏற்றுக்கொள் வது விசுவாசியைச் சுவிகாரப்பிள்ளையாக இறைவனின் குடும்பத்துக்குள் கொண்டு வருகிறது என்று காட்டுகிறார். இதனால் வரும் மகன் தன்மை, இரண்டாந்தர, தழுவிய பொருளில் புரிந்து கொள்ளப்படுகிறது. இந்த மகன்தன்மை, கிறிஸ்துவின் நேரடி மகன் தன்மையோடு ஒப்பிட்டு வேறுபடுத் தப்படுகிறது. இது ஆன்மீக சுவிகாரமாகும். இது வீழ்ச்சியால் இழந்துபோன இறைவ னோடு கொண்டிருந்த இயற்கையான குடும்ப உறவின் இடத்தை நிரப்புகிறது.

உரோ *8:15*-இல் பயன்படும் உருவகம், கிறிஸ்துவப் பாணியில் வாழவேண்டிய பொறுப்பை விசுவாசிக்கு நினைவுபடுத்து கிறது. இந்த வாழ்வு கிறிஸ்துவோடு துன்புறு வதையும் உள்ளடக்கும் *(8:17)*. உரோ *8:23* ''நம் உடல் விடுதலையாக்கப்படும் நாளை எதிர்நோக்கிய'' நிலையில் இறைமக்களாக்கப் படும் நாளை எதிர்நோக்குகிறது. இந்தச் சுவிகாரம் இன்னும் உண்மையாகவில்லை; அதை ஒரு வாக்குறுதியாகவே பவுல் கருதுவ தாகத் தெரிகிறது. இந்த மகன் தன்மை, இரத்த உறவின் அடிப்படையில் வராமல், ஒவ்வொருவருக்கும் தனிப்பட்டமுறையில் அருளப்படுகிறது என்பது உரோ *9:4.6*-இல் தெளிவாகிறது. இப்பகுதி எல்லா இஸ்ராயே லரும் இறைவனின் சுவிகாரப்பிள்ளைகள் அல்லர் என்பதைச் சுட்டிக்காட்டுகிறது.

மற்ற இரு பகுதிகளில் சுவிகாரம் என்ற உருவகத்திற்குப் பவுல் பரந்த இறையியல் பணித்திட்டம் அளிக்கிறார். கிறிஸ்து, தமது மீட்புச்செயலால், விசுவாசி, இறைவனின் குடும்பத்துக்குள் சுவிகாரம் பெறுவதை உறு திப்படுத்த வந்தார் என்பது பவுலின் கருத்து (கலா *4:5*). அதன் விளைவாகப் பாவத்திற்கு அடிமையாயிருக்கும் நிலையை முடிவுக்குக் கொண்டுவருகிறார். விசுவாசியை இறையர சின் உரிமையாளனாக்குகிறார் *(4:7)*.

விசுவாசி, இயேசு கிறிஸ்துவுக்குள் மகனா வதைச் செயல்படுத்துபவர் இறுதியில் இறைவனே என்ற கருத்தைப் பவுல் எதி ரொலிக்கிறார் (எபே *1:5*).

மற்றப் புதிய ஏற்பாட்டுக் கருத்துகளோடு தொடர்பு:- உரிமைச்சொத்து, பரிசுத்த ஆவி ஆகியவை பற்றிய பவுலின் கருத்துக்கள் சுவிகாரத்தோடு தொடர்புடையன (கொலோ *3:24*; உரோ *8:16.23*). யோவான் நற்செய்தியிலும், பேதுருவின் முதல் திரு முகத்திலும் வரும் புதுப்பிறப்பு என்ற கருத்தும் சுவிகாரத்தோடு தொடர்புடையது. காண்க: இறைவனின் பிள்ளைகள்.

### சுவை, அனுபவம் (TASTE)

சுவைத்தல் என்பது சில நேரங்களில் உண வின் சத்தை உட்கொள்ளுதலால் (யோனா *3:7*; கொலோ *2:21*), ஆனால் எல்லாவற்றிற் கும் மேலாக எல்லா நிலைகளிலும் நமது அனுபவத்தின் தனிச்சுவையைப் பாராட்டுத லாகும் (2 சாமு *19:36*). ஒழுக்க மதிப்பீடு களைப் பகுத்தறிவதற்கும், இவ்வுலகிலும் மறு உலகிலும் நமது வாழ்வின் இன்பங்க ளாகிய மற்றும் கிறிஸ்துவையும் பற்றிய அறிவைச் சுவைப்பதற்கும், விவிலியம் இச் சொல்லைப் பயன்படுத்துகிறது.

*1. பகுத்தறிதல்:* சுவைத்தலானது செய லறிவு. (1 சாமு *25:33*), சாமர்த்தியம் (பழ

*11:22)*, விவேகமான பதில் *(பழ 26:16)* முதலான ஞானத்தின் பல்வேறு வடிவங்களை உள்ளடக்கியுள்ளது. மீண்டும் எடுத்துக்கொள்ளவேண்டிய *(யோபு 12;20)* இறைவனின் இக்கொடை *(சங் 119:66)*, வயது மற்றும் அனுபவத்தின் பலனாகவும் அதே நேரத்தில் உள்ளது *(யோபு 12:11-12)*. மிகவும் செயற்பாடுடைய வாழ்வில் இது மனிதனுடைய நடத்தைக்குத் திசையளிக்கிறது *(பழ 31:18)*. ஆயினும் நன்மை தீமையைப் பகுத்தறிதலாகிய இதன் உயர்ந்த வடிவமானது வெறுமனே ஒரு ஒழுக்க மதிப்பீடு அன்று; விசுவாசத்தின் அடிப்படையில் சமய மதிப்பீடாகவும் உள்ளது *(சங் 119:66)*. இனியதாகக் கண்டறியப்படும் இறைவனின் வார்த்தை *(எசே 3:3)*, மற்றும் அவரது கட்டளைகள் *(சங் 119:16; உரோ 7:22)* ஆகியவற்றின்பால் இது கொள்ளும் ஈர்ப்பினால் இது முழுமை பெறுகிறது.

***2. சமய அனுபவம்:*** ஞானத்தின் பகுத்தறிதலுக்கு அப்பாற்பட்ட நிலையில், இறைவன் நம்மீது கொண்டுள்ள அன்பின் உயிருள்ள அனுபவத்தை நாம் கண்டடைகிறோம். இம்மைக்குரிய ஆசிகள் என்பவை, இறைவனின் சட்டத்திற்குக் கீழ்ப்படிகின்ற பழைய ஏற்பாட்டு நீதிமானின் மகிழ்ச்சிகளாகும் *(நெகே 9:25; எசா 55:2)*. அவரது மன்னாவினுடைய முடிவற்ற பல்வேறு சுவைகளை அவன் அனுபவிக்கிறான் *(ஞான 16:20-21)*. ஆண்டவர் எவ்வாறு நல்லவர் என்பதை அவன் அனுபவிக்கிறான் *(சங் 34:9)*. தனது ஒரே செல்வத்தைப்போல அவன் அவருடன் ஒட்டிக்கொள்கிறான் *(யோபு 22:26)*.

புதிய ஏற்பாட்டில், ஞானஸ்நானம் பெற்றவரின் முழு வாழ்வானது உயிர்த்த கிறிஸ்துவுடனான ஒன்றிப்பாகும். ஆனால், ஞானஸ்நானத்தைப் பெறுவதானது, தூய ஆவியில் பங்கு பெறுதல், விசுவாசத்தால் கிரகிக்கப்பட்ட நற்செய்தியின் வார்த்தை, புது உலகை ஏற்கனவே படைக்கின்ற இறைவனுடைய வல்லமையின் வெளிப்பாடுகள் *(எபி 6:4-5)* முதலிய மீட்பின் விண்ணக ஆசிகளை நோக்கி உறுதியாக நெருங்கி ஈர்க்கப்பட்டதன் சுவைமிக்க அனுபவத்தை உள்ளடக்குகிறது. இவை அனைத்தும் இறைவனுடைய நன்மைத்தனத்தினுடைய மிகமேலான அச்சாரமாகும் *(1 பேதுரு 2:3)*. முடிவில்லா மரணத்தின் சுவையினின்று நம்மை விடுவிக்க *(யோவா 8:52)* இயேசு சுவைத்த மரணத்தின் கசப்பினின்று *(எபி 2:9)* இந்த இனிப்புச் சுவையானது நமக்கு வருகின்றது. இது நற்பேற்றினுடைய முன்சுவையாகும் *(திருவெளி 2:17)*.

**சுற்றுமதில் புற அரண் - (RAMPART)**

நகரைச் சூழ்ந்துள்ள புற அரண். சாதாரணமாய் இது மண்ணால் ஆன உயர்ந்த மேடையாகும். இதனைக் குறிக்கும் எபிரேயச் சொல் புற அரணைக் குறிக்கிறதா அல்லது மதிலுக்கும் அரணுக்கும் இடையே அமைந்த அகழியைக் குறிக்கிறதா என்பது தெளிவாக இல்லை. பாலஸ்தீனத்தின் நகரங்களில் இத்தகைய பாதுகாப்பு முறை இருந்ததாகக் கூறப்படுகிறது *(2 சாமு 20:15; 1 அர 21:23; சங் 48:13)*. எருசலேமின் வடபகுதி மட்டுமே இத்தகைய முறையில் பாதுகாக்கப்பட்டது. சுற்றுமதில் என்ற இச்சொல்லைப் பொதுவாக 'அரண்' அதாவதுபாதுகாப்புச் சுவர் என்ற முறையிலும் பொதுவாகப் பயன்படுத்தினர். தெபேசுக்கு *(நாகூ 3:8)* அல்லது தீருக்குக் *(செக் 9:3)* கடலே அரணாக அமைந்தது.



**சூகா** (SHUHAH - *குழி, பள்ளம்*)

யூதாவின் குலத்தைப் பற்றி விட்டுவிட்டுக் கொடுக்கப்பட்டுள்ள தலைமுறை அட்டவணையில் கெலூபின் சகோதரர் (1 நாள் 4:11).

**சூகாம்** (SHUHAM - *கிணறு தோண்டுபவர்*)

தாணின் புதல்வர். சூகாமிய வம்சத்தின் மூதாதையர். தாணுடைய குடும்பங்களின் பட்டியலில் இது ஒன்றுதான் கொடுக்கப்பட்டுள்ளது. ஆதி 46:23-இல் இப்பெயர் கூசிம் (ஊசிம்) என்று உள்ளது.

**சூகாயர்** (SHUHITE)

யோபுவின் நண்பர்களில் ஒருவரான பில்தாதின் இனப்பெயர். இது, ஒருவேளை அவரைச் சூவாகின் சந்ததியினராகச் (1) சுட்டலாம் (யோபு 2:11; 8:1; 18:1; 25:1; 42:9).

**சூசன்னா** (SUSANNA - *லீலி*)

தானி 13-இல் வரும் கதையின் தலைவி பெயர். கதை பாபிலோனில் அமைகிறது. சூசன்னா, ஒரு நாடு கடத்தப்பட்ட யூதராகிய யோயாக்கிமின் அழகிய ஆனால் பிரமாணிக்கமுள்ள மனைவியாவாள். பாபிலோனில் உள்ள யூதர்களிடையே இரு முதியவர்கள் அவள்பால் காம இச்சை கொண்டனர். ஒரு நாள் அவள் குளித்துக் கொண்டிருந்த பொழுது அவளை அணுகித் தங்களுக்கு இணங்கும்படி கட்டாயப்படுத்தினர். இல்லையென்றால் அவள் மீது பொய்க்குற்றம் சாட்டப்போவதாக அச்சுறுத்தினர். அவள் இணங்க மறுக்கவே, அவர்கள் அவள் ஓர் இளைஞனோடு விபச்சாரம் செய்ததாகக் குற்றம் சாட்டினர். அவள் தான் குற்றம் அற்றவள் என்று எடுத்துக்கூறியும் மக்கள் கூட்டம் அவளைக் குற்றவாளி என்று தீர்ப்பிட்டு அவளுக்கு மரண தண்டனை விதித்தது. அவளைக் கூட்டிச் சென்றபோது, இறைவன் அவள் சார்பாகத் தானியேலைத் தூண்டிச் செயல்படச் செய்தார். மீண்டும் வழக்கு தானியேலால் விசாரிக்கப்பட்டது, தானியேல் இரு முதியவர்களையும் ஒருவர் மற்றவரது கூற்றை மறுத்துக் கூறச்செய்து, அவர்கள் பொய்க்குற்றம் சாட்டியுள்ளனர் என்று நிரூபித்தார். சூசன்னா விடுவிக்கப்பட்டு பொய்க் குற்றம் சாட்டிய இரு முதியவர்களும் மோசேயின் சட்டப்படி (உப 19:16-19) தீர்ப்பிடப்பட்டனர்.

இக்கதை உலகின் முதல் துப்பறியும் கதை என்றழைக்கப்பட்டுள்ளது. சில கதாபாத்திரங்களோடு, ஓர் உணர்ச்சிவசமான நிகழ்ச்சியைப்பற்றிக் கதை நன்கு எழுதப்பட்டுள்ளது. விவிலியத்திலேயே, கதை என்ற அளவிலே மிகக் கவர்ச்சிகரமானதொன்றாகும். நன்மை தீமையை வெல்லும் என்பதை எடுத்துக்காட்டும் சிறந்தகதையும், இறைவாக்கினர் தானியேல் தனது ஞானத்தை எடுத்துக்காட்டும் கதையும் ஆகும். தானியேல் நூலில் வரும் கதைகளைப் போல், இக்கதையும் இறைவனில் விசுவாசம் வைத்து அவருடைய சித்தப்படி வாழ்வோருக்கு நம்பிக்கை அளிக்கிறது. இக்கருத்தையொட்டி, இதில்வரும் முக்கிய மானவர்களின் பெயர்களின் பொருள் குறிப்பிடத்தக்கது. சூசன்னா என்றால் லீலி என்று பொருள். இது குற்றமின்மையை உணர்த்துகிறது. தானியேல் என்றால் ''இறைவன் தீர்ப்பிட்டார்'' அல்லது ''இறைவன் எனது நடுவர்'' என்பது பொருள். இது இஸ்ராயேலின் தொடக்ககால இறைஆவி பெற்ற நீதிபதிகளைச் சுட்டிக்காட்டுகிறது. அறிஞர் சிலரின் கருத்துப்படி, இக்கதை துல்லியமான நோக்குடையது. சட்டமுறையில் நிகழக் கூடிய தவறுகளைச் சுட்டிக்காட்டும் ''மிட்ராசிக்'' கதையாகும் என்பர்.

இரு சாட்சிகளைத் தானியேல் விசாரிப்பது கி.மு.76-இல் அலக்சாந்தர் யன்னேயு மரித்தபின் வந்தகாலத்தில் யூத சனேத்ரினில் பரிசேயர்களின் வழக்கைப் பிரதிபலிப்பதாகக் கருதப்படுகிறது. அப்படியாயின் தானியேல் நூலுக்குப் பிற்சேர்க்கையாகக் கருதப்படும் இக்கதை கி.மு. முதல்நூற்றாண்டைச் சேர்ந்ததாகும் என்று கருத இடமிருக்கிறது.

இந்த அதிகாரம் (தானி 13) யூத எபிரேயர் விவிலியத்திலும், பிரிவினைச் சகோதரர்களின் விவிலியத்திலும் இடம் பெறுவதில்லை. எழுபது நூலிலும், வுல்காத்தாவிலும் நவீன உரோமைக் கத்தோலிக்க விவிலியத்திலும் தானியேல் நூலின் 13-ஆம் அதிகாரமாகச் சேர்க்கப்படுகிறது. தியோடோசியனின் கிரேக்க வாசகத்தில் முதல் அதிகாரத்தில் முன்சேர்க்கப்படுகிறது. புதிய பொதுத் தமிழ் மொழிபெயர்ப்பில் இக்கதை இணைத்துணை மறைநூல் பகுதியில் சேர்க்கப்படுகிறது.

மூலக்கதையில் தானியேல் இடம் பெற்றிருக்காமல் இருந்திருக்கலாம். இக்கதை தானியேல் நூலோடு சேர்க்கப்பட்டபின்புதான் தானியேல் கதையில் இடம் பெறுகிறார் என்று சிலர் கருதுவர். இக்கதைக்கு எபிரேய மூலம் இருந்திருக்கலாம் என்று அறிஞர் சிலர் கருதுவர். ஆனால் கதையின் முக்கிய கட்டத்தில் வரும் சொல்லாடல் இக்கருத்துக்கு மாறாக உள்ளது. ஏனெனில் இப்பண்பை மொழி பெயர்ப்பில் கொண்டுவருவது கடினமாகும். இது கிரேக்க மொழியிலேயே எழுதப்பட்டது எனலாம்.

2. தங்கள் உடைமைகளைக் கொண்டு இயேசுவுக்கும் அவரது சீடர்களுக்கும் பணிவிடை செய்த பெண்களில் ஒருத்தி (லூக் 8:3).

**சூசன்னாவின் நூல்** (SUSANNA, BOOK OF)

தானி 13-இல் காணப்படும் கதை அடங்கிய பகுதி. யூத எபிரேய விவிலியத்திலும், பிரிவினைச் சகோதரர்களின் விவிலியத்திலும் இக்கதை இடம் பெறுவதில்லை. ஆனால் எழுபது நூலிலும், வுல்காத்தாவிலும், உரோமைக் கத்தோலிக்க விவிலியத்திலும் இடம் பெறுகிறது. புதிய பொதுத் தமிழ் மொழி பெயர்ப்பில் இணைத்துணை மறைநூல் பட்டியலில் இடம் பெறுகிறது. உலக இலக்கியத்தில் மிகச் சிறந்த சிறுகதைகளில் ஒன்றாகவும் உலகின் முதல் துப்பறியும் கதையாகவும் கருதப்படுகிறது.

காண்க: சூசன்னா - 1.

**சூசான்** (SUSA)

தென்மேற்கு ஈரானில் ஊலாய் ஆற்றுச் சமவெளியில் இக்கால ஆசாவுக்கு அருகிலுள்ள ஏலாமின் தலைநகராகும். பிற்காலத்தில் பாரசீகப் பேரரசின் குளிர்கால அரச இருப்பிடமாயிற்று.

பெரிய தாரியு சூசானில் தான் கட்டிய அரண்மனை பற்றி விரிவான விவரிப்புத்தருகிறார். முதலாம் அர்த்தக்சஸ்தா காலத்தில் (கி.மு. 465-425) அரண்மனைக் கட்டடங்கள் தீயால் அழிக்கப்பட்டன. ஆனால் 2-ஆம் அர்த்தக்சஸ்தா காலத்தில் (404-359) மீண்டும் கட்டப்பட்டன. சர்தைக்கும், இலூரிஸ்தான் மலைகள் வழியாக எக்பத்தானாவுக்கும், பெர்சப்பொலிக்கும் செல்லும் வியாபாரச் சாலைகளில் அமைந்திருந்த சூசான் வியாபார மையமாகச் சிறப்புப் பெற்று விளங்கியது. எஸ்தர் நூலில் கூறப்படும் நிகழ்ச்சிகள் நடந்த இடம் இந்தச் சூசான்தான் (எஸ்த 1:2). எருசலேம் மீண்டும் கட்டப்படுவதை எதிர்த்த சமாரிய மக்களில் சூசானிலிருந்து வந்த நாடுகடத்தப்பட்டவர்களும் இருந்தனர் (எஸ் 4:9-10). நெகேமியா, சூசானில் பாரசீக அரசன் அர்த்தக் சஸ்தாவுக்குப் பானம் பரிமாறுபவராக இருந்தார் (நெகே 1:1).

அக்கமேனியர் ஆட்சியில் சூசான் தன் பொற்காலத்தைக் கண்டது எனலாம். பெரிய அலக்சாந்தர் காலத்தில், அவரது அதிகாரிகள் 80 பேர் மற்றும் பத்தாயிரம் வீரர்களுக்கும் ஈரானியப் பெண்களுக்குமிடையில் ஒரு பெரிய கூட்டுத் திருமணம் இங்கு நடந்ததாகக் கூறப்படும். செலூக்கியர், பார்த்தியர் காலங்களில் சூசான், சிறப்புப்பெற்று விளங்கவில்லை. சசானிய அரசன் 2-ஆம் சாப்பூருக்கு எதிராகச் செய்த கிளர்ச்சியின் விளைவாகச் சூசான் அழிக்கப்பட்டது. ஆனால் மீண்டும் ஏரான்சாகர் - சாப்பூர் என்ற பெயரில் கட்டப்பட்டது. கி.பி. 638-ஐ ஒட்டி அரபியப்படையால் கைப்பற்றப்பட்டது. இன்று இது சில சிதைவுகளின் தொகுப்பாக விளங்குகிறது.

பரந்த அளவில் அகழ்வாய்வுகள் செய்யப்பட்டுள்ளன. இவை பாரசீக அரண்மனை,

அரண்கள், கலைவினைஞர்களின் பகுதி போன்ற பலவற்றைக் காட்டுகின்றன. மேலும் ஏலாமிய வரலாற்று இலக்கிய ஏடுகளையும் பழைய அக்காதியன், 3-ஆம் ஊர், பழைய பாபிலோனியன் ஏடுகளையும் கண்டெடுத்துள்ளனர். இவற்றில் கம்முராபியின் சட்டமும் அடங்கும். இந்த அகழ்வாய்வுகள் ஐயாயிரம் ஆண்டு வரலாற்றைச் சொல்லுகின்றன. இங்குக் கி.மு. 4-ஆம் ஆயிரமாண்டுகளுக்கு முன்பே மக்கள் வாழ்ந்து வந்தனர் என்பதையும் காட்டுகின்றன.

மேதியா சூசானைக் கொண்டிருந்த காலத்தில், தானியேலின் ஒரு காட்சி அவரைச் சூசானுக்குக் கொண்டு சென்றது (*தானி 8:2*). மகமதியப் பாரம்பரியம் இங்குத் தானியேலின் கல்லறை இருப்பதாக நம்புகிறது. இதைச் சியயிட்டு மகமதியர்கள் பக்தியோடு காத்து வருகின்றனர்.

**சூசி** - (SUSI - குதிரை, குதிரைக்காரன்)

மனோசேயின் குலத்தில் இருந்து கானான் நாட்டிற்கு உளவு பார்க்க அனுப்பப்பட்ட காத்தின் தந்தை (*எண் 13:11*).

**சூசிம்** (ZUZIM)

யோர்தானுக்குக் கிழக்கில் காம் என்ற இடத்தில் வாழ்ந்த ஓர் இனத்தவரைக் குறிக்கும். இவர்கள், கெதர்லகோமர் யோர்தானின் அக்கரைப்பகுதி வழியாகச் சித்திம் பள்ளத்தாக்கிலிருந்தவர்களோடு போர்புரியச் சென்றபோது தோற்கடிக்கப்பட்டனர் (*ஆதி 14:5*).

அறிஞர் சிலர் இவர்களை உப *2:20*-இல் வரும் சம்சும்மியரோடு ஒன்றாக்குகின்றனர்.

**சூது** (SUD)

பாரூ *1:4*-இன் படி இஃது ஓர் ஆறு. பாரூக்கு தனது நூலை எழுதியவுடன் அரசனான எக்கோனியா, பெரியோர், தலைவர்கள், மூப்பர்கள் முன்பாக, அவர்கள் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டு, சூது நதிப் பகுதியில் இருந்தபோது, அந்த நூலை வாசித்துக் காண்பித்தார். இந்த ஆறு வேறு எங்கும் குறிப்பிடப்படவில்லை. இது யூப்பிரத்தீசு நதியின் ஒரு கிளை அல்லது ஓடையாக இருக்கலாம். எவ்வாறெனினும், இது பாபிலோனில் அல்லது பாபிலோனுக்கு அருகில் இருப்பதாகக் குறிப்பிடப்படுகிறது.

**சூபா** (SUPHAH)

மோவாபில் அனேகமாக அர்னோன் ஆற்றின் பள்ளத்தாக்கில் உள்ள ஒருபகுதி (*எண் 21:14*). இது வாகேபு பகுதியையும் உள்ளடக்கியது. இது மதேபாவுக்குத் தென் கிழக்கில் 6 கி.மீ. தொலைவிலும், அர்னோனுக்கு வடக்கில் 23 கி.மீ. தொலைவிலும் உள்ள கிர்பெத்து சூபாவோடும், உப *1:1*-இல் வரும் சூபுவோடும் தொடர்புபடுத்தப்படலாம். ஆனால் உறுதியாகக் கூறமுடியாது.

**சூபு** (SUPH - நாணல்)

மோசே இஸ்ராயேல் மக்களுக்கு உரை ஆற்றிய இட அமைப்பைக் குறிக்கும் ஒரு சொல் (*உப 1:1*). இந்தஇடம் ''*யோர்தானுக்கு அப்பால் சூபுவுக்குக் கிழக்கே அமைந்த அராபா பர்லைநிலத்தில்..*'' என்று விவரிக்கப்படுகிறது. ஆனால் இந்த இடத்தைச் சரியாகக் குறிப்பிடமுடியவில்லை. எழுபதுநூலும் வுல்காத்தாவும் இதைசெங்கடல் என்று மொழி பெயர்க்கின்றன. இஃது ஓர் இடப்பெயர் என்றால் சூபாவாக (*எண் 21:14*) இருக்கலாம். இதை மதேபாவுக்குத் தென்கிழக்கில் 6 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து சூபாவாக அடையாளம் காட்டுவர். ஆனால் உறுதியாக ஒன்றும் கூறமுடியாது.

**சூப்பு** (ZUPH - தேன்கூடு) - ஆள்

சூப்பு, எல்கானா சாமுவேல் ஆகியவர்களின் முன்னோர் ஆவார் (*1 சாமு 1:1; 1 நாள் 6:26.35*). சாமுவேல் ஆகமம் முதல் புத்தகத்தில், இவர் எப்பிராயிம் கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்றும் (*1 சாமு 1:1*), நாளாகமம் முதல் புத்தகத்தில் லேவியர் (*1 நாள் 6:35*) என்றும் குறிப்பிடப்படுகிறார். இவர் லேவியராகவும், எப்பிராயிம் கோத்திரத்தைச் சேர்ந்தவராகவும் கருதப்படுகின்றார். 1 நாள் *6:26*-இல் இவர் சோபாய் என்றழைக்கப்படுகிறார்.

**சூப்பு** - (ZUPH - தேன்கூடு) - இடம்

சவுலும், அவருடைய ஊழியர்களும் கழுதைகளைத் தேடிக்கொண்டு சூப்பு என்ற நாட்டிற்கு வந்ததாக *1 சாமு 9:5* குறிப்பிடுகின்றது. சாமுவேலின் தந்தையான எல்கானா, எப்பிராயிம் மலைநாட்டிலுள்ள இராமாத்தயிம் - சோப்பிம் என்ற ஊரிலிருந்து வந்தவரும் சூப்புவின் வம்சத்தவரும் ஆவார். இக்குடும்பம் இப்பகுதியில் தங்கியதால் அந்நாடு சூப்பு என்று அழைக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. இது இருந்தஇடம் தெளிவாகத் தெரியாவிட்டாலும் செக்கேமிலிருந்து 64 கி.மீ. தொலைவில் தென்மேற்கில் இருந்ததாகக் கருதப்படுகிறது.

**சூமாவியர்** (SHUMATHITE)

கிரியத்து - எயாரிமில் வாழ்ந்த காலேபியக் குடும்பங்களில் ஒன்று. கூரின் புதல்வனான சோபாலின் வழித்தோன்றல் *(1 நாள் 2:53)*.

**சூம்பிய கை** (WITHERED HAND)

சூம்பிய கையன் ஒருவனை இயேசு குணப்படுத்துகிறார் *(மத் 12:9-14; மாற் 3:1-6; லூக் 6:6-11)*. இந்நோயினைப் பற்றிய முழுவிவரம் நாம் அறிய முடியாததாகும். ஏனென்றால் இந்நோயினைப்பற்றிய வேறெந்தக் குறிப்பும் விவிலியத்தில் காணப்படுவதில்லை. லூக்கா, இயேசு குணமாக்கிய சூம்பின கை, வலக்கை எனக் குறிப்பிடுகிறார். இதைப்பற்றி எபிரேயருக்கு எழுதப்பட்ட போலி நற்செய்தி, சூம்பிய கையன் ஒரு கொத்தன் ஆவார்; எனவே அவருடைய தொழிலே அவருடைய கையால் பாதிக்கப்பட்டது எனக் கூறுகிறது.

**சூரியேல்** (ZURIEL - இறைவன் என் பாறை ஆவார்)

சூரியேல் மெராரி குடும்பத்தைச் சார்ந்த லேவியரும், அபிகயிலின் மகனும் ஆவார். பாலையில், இவர், தச்சுத் தொழிலைச் செய்தவர்களும், கூடாரத்தின் வடக்குப் பகுதியில் தங்கியிருந்தவர்களுமான மெராரியர்களுக்குத் தலைவராய் இருந்தார் *(எண் 3:35)*.

**சூரைச்செடி** (BROOM - TREE)

பாலைவனத்தில் வளரக்கூடிய ஒரு குத்துச் செடி. இலைகள் அதிகம் இல்லாவிட்டாலும் அடர்த்தியாக வளரும் இது சிறிது நிழல் தரக்கூடியது. எலியா கோரேபு (ஒரேபு) மலைக்குச் செல்லும் வழியில் இதன் நிழலில் தங்கினார் *(1 அர 19:4-5)*. இதன் வேர்களும், இலைகளும் எரிப்பதற்குப் பயன்பட்டன *(யோபு 30:4; சங் 120:4)*. இச்செடியின் பெயரின் பொருள்கொண்ட இரித்மா என்று ஓர் இடம் உள்ளது *(எண் 33:18-19)*. எசா *14:23*-இல் வருகின்ற துடைப்பம் உவமையாகப் பயன்படுகிறது. ஒரு வேளை இச்செடியிலிருந்து துடைப்பம் செய்யப்பட்டிருக்கலாம்.

இது தெற்குப் பாலஸ்தீனத்தின் வறண்ட பாலைவனப் பகுதிகளிலும் சீனாய்ப் பகுதிகளிலும் ஏராளமாக உள்ளன. யோபு *30:4*-இல் ''அவர்களின் உணவு'' என்று சில வாசகங்களில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. ஆனால் இச்செடியின் வேர்கள் நாற்றமும் நச்சுத்தன்மையும் வாய்ந்தவை. எனவே தாவரவியல் வல்லுநர்கள் யோபு *30:4*-இல் கூறப்பட்ட செடி வேறு ஒன்றாக இருக்கலாம் என எண்ணுகின்றனர்.

**சூர்** (SHUR) - சுவர்

பாலஸ்தீனத்திற்குத் தென் மேற்கேயும் எகிப்து நாட்டிற்குக் கிழக்கேயும் சீனாய்த் தீபகற்பத்திற்கு வடக்கேயும் அமைந்துள்ள ஒரு பாலை நிலப்பகுதியாகும். எபிரேயத்தில் இச்சொல்லுக்குச் சுவர் என்று பொருள் உண்டு. சில புவியியல் வல்லுநர்கள் இச்சொல் எகிப்தியர்கள் தங்கள் கிழக்கு எல்லையைப் பாதுகாப்பதற்காகக் கோட்டைகள் கட்டிய வரிசையைக் குறிக்கலாம் என்பர். எகிப்திலிருந்து புறப்பட்ட இஸ்ராயேலர் நாணல் கடலைக் கடந்தபின் இப்பகுதிக்குள் பயணம் செய்தனர் *(யாத் 15:22; ஆதி 25:18; 1 சாமு 15:7)*. இது எண் *33:8*-இல் ஏத்தாம் பாலைவனம் என்றழைக்கப்படுகிறது.

சாராளின் பணிப்பெண்ணான ஆகார் கோபம் கொண்டு சென்றபோது இறைவ

னின் தூதர் சூருக்குச் செல்லும் வழியிலுள்ள நீரூற்றுக்கருகில் கண்டார் (ஆதி 16:7). ஆபிரகாம்கூட தன் வாழ்நாளில் காதேசுக்கும் சூருக்கும் இடையில் சிறிது காலம் வாழ்ந்திருந்ததாக அறிகிறோம் (ஆதி 20:1). இசுமயேலர் கெவிலாவிலிருந்து (அவிலா) சூர்வரைக்கும் வாழ்ந்து வந்தனர் (25:18). சவுல் அமலேக்கியரைக் கெவிலாவிலிருந்து சூர்வரை தோற்கடித்தார் (1 சாமு 16:7). தாவீதும் அவருடைய வீரர்களும் சூர்வரையுள்ள பல இனத்தவரைக் கொள்ளையடித்தனர் (27:8).

எகிப்தை நோக்கிய திசையைப் பொதுவாகச் சுட்டிக்காட்ட சூர் குறிக்கப்படுகிறது (ஆதி 20:1; 1 சாமு 27:8). ''சூருக்குச் செல்லும் வழி'' (ஆதி 16:7) கெபிரோன், (எபிரோன்) பெயேர் செபாவிலிருந்து தென்மேற்காகச் சென்று எகிப்திய ஓடைக்கு அப்பால் சூரைக் கடந்து செல்லும் வியாபார வழியாகும்.

**சூர்** (SUR)

மத்தியதரைக் கடற்கரையில் அமைந்த சீரியாவின் ஒரு நகரமாகும். இது ஒலபெரினேயுவிடம் சமாதானத் தூதுவர்களை அனுப்பியதாகக் கூறப்படுகிறது (யூதி 2:28). கர்மேல் மலைக்குத் தெற்கில் 24 கி.மீ. தொலைவிலுள்ள தோர் என்னும் துறைமுக நகரமாக அடையாளம் காட்டப்படுகிறது.

**சூர்** (ZUR - பாறை)

1. சூர் மிதியானியத் தலைவனும், இஸ்ராயேலனோடு கொல்லப்பட்ட கோசுபி என்பவளின் தந்தையும் ஆவார் (எண் 25:15; 31:8; யோசு 13:21). இது சமயத்துக்கு எதிரான கிளர்ச்சி என்று இஸ்ராயேலர் மிதியானியரோடு போர்தொடுத்தனர். ஐந்து மிதியானிய அரசர்களுள் ஒருவரான சூர் கொல்லப்பட்டார். எமோரியர்களின் அரசனான சீகோனை மோசே வென்ற போரில் சூர் கொல்லப்பட்டான் என்று யோசு 13:21 கூறுகிறது.

2. பென்யமின் கோத்திரத்தைச் சார்ந்தவர். இவர் எயியேலுக்கும் மாக்காவுக்கும் பிறந்தவர். சவுலின் தந்தையான கீசின் சகோதரனும் ஆவார் (1 நாள் 8:30; 9:36).

3. பழங்காலத்தில் 'கடவுள்' என்ற சொல்லைக் குறிக்க ஒரு பொருட் பன்மொழியாகும். இது பழைய ஏற்பாட்டில் 'பாறை' என்று மொழி பெயர்க்கப்பட்டது (உப 32:4; 2 சாமு 22:2-3; சங் 18:31.46; எசா 17:10). வடமேற்கு மெசபொத்தாமியாவில் மூதாதையர் மலைகளை ஒப்புமை கூறுவதற்கு அறிந்திருந்ததால் இச்சொல் கடவுளின் வல்லமை, நிலையான தன்மை, நம்பிக்கைக்குரிய தன்மை, என்றுமே குறையாத இரக்கம் ஆகியவற்றைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. இதே கருத்தில்தான் யாவே 'இஸ்ராயேலின் பாறை' என்று அழைக்கப்பட்டார்.

**சூர்வாயில்** (SURGATE)

1. எருசலேமின் வாயில்களில் ஒன்று (2 அரச 11:6). இது அத்தலியா கொலை செய்யப்பட்ட வரலாற்றில் குறிக்கப்படுகிறது. மற்றப்படி இதைப்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. ஒருவேளை இது அரச அரண்மனையிலிருந்து ஆலயத்திற்கு இட்டுச் சென்றிருக்கலாம். இதற்கு இணையான விவரிப்பில் (2 நாள் 23:5) இது அடித்தளவாயில் என்றழைக்கப்படுகிறது. இந்தச் சூர், சூஸ் (குதிரை) என்ற சொல்லின் பழுதுபட்ட வாசகமாக இருக்கலாம் (23:16).

**சூலாமியர்** (SHULAMMITE)

உன்னத சங்கீதம் அல்லது பேரின்பப் பாடலில் வரும் ஓர் இளம்பெண்ணின் இனப்பெயர் (உ.ச. 6:13). இச்சொல்லுக்குப் பல விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன. அ) இச்சொல், மற்றப்படி அறியப்படாத சூலாம் என்ற ஊரிலிருந்து வந்தவள் என்று சுட்டலாம். ஆ) மூலவடிவம் சூனாமியர் ஆகும் என்ற வாசகச்சான்று, இப்பெண்ணின் ஊர் சூனேம் ஆகும் என்று சுட்டலாம். அப்படியாயின் சூனாமியளான அபிசாகுவை இச்சொல் குறிக்கலாம் (1 அர 1:3). இ) மற்றொரு விளக்கப்படி, இச்சொல் சாலமோன் என்ற சொல்லின் பெண்வடிவாகும். சாலமோனின் மனைவி ஒருத்திக்குக் கொடுக்கப்

பட்டதாகும் அல்லது ஈ) சாலேம் என்ற தெய்வத்தின் பெண் துணைக்குக் கொடுக்கப் பட்ட பெயராகும். உ) இசிதார் என்ற அசீரியத் தேவதையின் பெயராகும். ஊ) உண்மையி லேயே ஒரு குறிப்பிட்ட பெண்ணின் ஆட் பெயராகும்.

**சூவா** (SHUA - செல்வம்)

1. ஒரு கானானியர். யூதாவின் கானானிய மனைவியின் தந்தை (ஆதி 38:2.12; 1 நாள் 2:4).

2. கெபரின் (எபர்) மகள். ஆசேர் குலத் தைச் சேர்ந்தவர் (1 நாள் 7:32).

**சூவாகு** (SHUAH - குழி)

ஆபிரகாமுக்குக் கெத்தூராளிடம் பிறந்தவர் (ஆதி 25:2; 1 நாள் 1:32). இப்பெயர் அராபிய அல்லது அரமேய குலத்துடனும், பின்னால் ஊசு நாட்டின் அருகில் குடிபெயர்ந்த சூகா யர்களுடனும் தொடர்பு படுத்தப்படுகிறது. சூகாயரான பில்தாது (யோபு 2:11; 8:1; 18:1; 25:1; 42:9) இந்தக் குலத்தின் உறுப்பினர் ஆவார்.

சூகாயரின் நாடு, சில சமயம் அசீரியச் சூகூவோடு ஒன்றாகக் கருதப்படுகிறது. இந்தச் சூகூ யூப்பிரத்தீசு நதியின் வலக்கரை யில் கர்க்கமிசுக்குத் தெற்கில் பலிக்கா, காபூர் ஆகிய ஆறுகளின் வாயில்களுக்கிடையில் அமைந்துள்ளது.

**சூவாகு** (SUAH - மிகப்பரந்த)

ஆசேரின் குலத்தில் சோபகுவின் மகன் (1 நாள் 7:36).

**சூவார்** (ZUAR - சிறிய, இளைய)

பாலைவனத்தில் இசக்காரின் தலைவ னாய் இருந்த நெத்தனியேலின் தந்தை ஆவார் (எண் 1:8; 2:5; 7:18.23; 10:15).

**சூவால்** (SHUAL - நரி) - ஆள்

ஆசேரின் குலத்தில் சோபகுவின் மகன் (1 நாள் 7:36).

**சூவால்** (SHUAL - நரி) - இடம்

மிக்மாசில் உள்ள பெலிஸ்தியப் பாளையத்தி லிருந்து புறப்பட்ட மூன்று பிரிவில் முதல் பிரிவு இந்த நாட்டிலுள்ள ஒபிராவை நோக் கிச் சென்றது (1 சாமு 13:17). சவுல் கழுதை யைத் தேடிச்சென்ற சாலீம் நாடும் இதுவும் ஒன்று என்று சிலர் கருதுகின்றனர் (9:4).

**சூளை, உலைக்களம்** (FURNACE)

பொருட்களைச் சுடுவதற்குச் செங்கல் லாலோ, கற்களாலோ செய்யப்பட்ட ஓர் அமைப்பாகும். இது அமைப்பிலும், பருவ னிலும் பலவாறு வேறுபட்டது. இதைக் குறிக்கப் பல எபிரேயச் சொற்கள் பயன்பட் டுள்ளன. இது உலோகங்களை உருக்குவதற் கும் (எசே 22:20) தங்கம், வெள்ளி போன்ற வற்றைப் புடமிடுவதற்கும் (பழ 17:3), செங் கற்களைச் சுடுவதற்கும் (ஆதி 19:20) பயன் படும். தானியேல் எறியப்பட்ட சூளை செங் கற் சூளையாக இருக்கலாம் (தானி 3:19-23). இப்படிப்பட்ட சூளைகள் மெகிதோவில் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன.

மனிதன் தூய்மை பெறுவதைக் குறிக்கச் சூளை உருவகமாகப் பயன்படுத்தப்படு கிறது. எகிப்திய ''இரும்புச் சூளை'' (உப 4:20; 1 அர 8:51) எகிப்தில் எபிரேயர் அனுபவித்த தொடர்ந்த அடிமைத்தனத்தின் தொகுப்பு அனுபவத்தைக் குறிக்கிறது. இந்த அனுப வம் எபிரேயர்களை யாவேக்குப் பணிபுரி யும் மக்களாக மாற்றியது. பிற்காலத்தில் வாக்களிக்கப்பட்ட நாட்டில் அவரது மக்கள் அவரைக் கைவிட்டுப் புறக்கணித்தபோது இறைவன் அவர்களை மீண்டும் எருசலே முக்கு வர அனுமதிக்குமுன், ''துன்பம் எனும் உலையில்'' அதாவது நாடு கடத்த லால் (எசா 48:10) அவர்களைப் புடமிட்டுத் தூய்மைப்படுத்தினார். புதிய ஏற்பாட்டில் ''தீச்சூளை'' (மத் 13:42.50) இறைவனது இறுதிக்காலத் தீர்ப்பைக் குறிக்கிறது.

**சூளை, காளவாய்** (KILN)

இது பலவகைப்பொருட்களை உருவாக் கப் பயன்படுத்தப்பட்டது. எபிரேய மொழி யில் இச்சொல் வீட்டில் ரொட்டி சுடப்பயன்

படும் சிறு அடுப்பிலிருந்து, மட்பாண்டங்கள் (செய்வதற்கான) சுடுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட மிகப் பெரிய சூளைகள்வரை எல்லாவகை அடுப்புகளைக் குறிக்கப் பயன்பட்டது. எருசலேமின் மதில்சுவரின் ஒரு பகுதிக்குச் 'சூளைகளின் கோபுரம்' எனும் பெயர் இருந்தது (நெகே *3:11*). மட்பாண்டம் செய்யும் தொழிலில் சூளைக்கு நெருப்பிடுவது மிகப் பெரிய தொழில். இது இரகசியமாக இருந்ததால், உருவகப் பேச்சுக்களில், மட்பாண்டத்தொழிலின் மற்றப் பகுதிகள் போல் பேசப்படவில்லை.

நாகூ *3:14*; 2 சாமு *12:31*-இல் ''செங்கல் சூளை வேலைகள்'' என்று கூறப்பட்டுள்ளது. இதைவிடச் ''செங்கல் அறுக்கும் வேலைகள்'' என்பது மேலான மொழி பெயர்ப்பாகும். பாலஸ்தீனத்தில் பயன்படுத்தப்பட்ட கற்கள் அனைத்துமே சூரிய ஒளியில் காயவைக்கப்பட்டவையே தவிர, சூளையில் சுடப்பட்டவை அல்ல.

ஆதி *19:28*; யாத் *19:18* குறிப்பிடும், "சூளையினின்று புகை புறப்படுவது போல" என்பது கரியினால் ஏற்படுத்தப்பட்ட சூளையைக் குறிக்கலாம். இஸ்ராயேலரின் வரலாற்றில் இது சுண்ணாம்புக் காளவாயைக் குறிப்பதாகவும் இருக்கலாம்.

**சூளைக்காவல் மாடம் அல்லது கோபுரம்** (OVEN, TOWER OF THE)

எருசலேமிலுள்ள ஒரு கோபுரம். இது முதலில் ஊசியாவால் கட்டப்பட்டிருக்கலாம் (2 நாள் *26:9*). நெகேமியாவின் காலத்தில் இந்தக் கோபுரம் புதுப்பிக்கப்பட்டது (நெகே *3:11*; *12:38*). இது எருசலேம் நகர் மதிலின் வடமேற்குப் பகுதியைக் காக்கப் பயன்பட்டது. மூலைவாயிலுக்கு அருகில் அமைந்திருந்தது. ஒருவேளை இதற்கு அருகில் அப்பம் சுடும் அடுப்புகள் அமைக்கப்பட்டிருந்ததால் இப்பெயர் இதற்கு வழங்கப்பட்டிருக்கலாம் (எரே *37:21*).

**சூறாவளி** (WHIRLWIND)

மிகுந்த அழிவை ஏற்படுத்தும் வலிமைமிக்க புயல்காற்று. இது காற்றின் சுழல் தன்மையை எப்போதும் சுட்ட வேண்டும் என்பதில்லை. பொதுவாகப் புயல் அல்லது கடும்புயல் என்று மொழி பெயர்க்கப்படலாம். சுழல்புயல் பாலஸ்தீனத்தில் அரிதாகவே நிகழும். ஆனால் வலிமைமிக்க புயல் காற்று மழைக்காலத்தில் நிகழ்வதுண்டு. இக்காற்றின் சுழல்தன்மை சங் *77:18*; எசா *5:28*-இல் குறிக்கப்படுகிறது.

இத்தகைய புயல்கள் நெகேபு பகுதியோடு தொடர்புபடுத்தப்படுகிறது (எசா *21:11*; செக் *9:14*; யோபு *37:91*). இது மனிதர்களையும் பதரையும் அடித்துச் செல்லவல்லது (யோபு *27:20*; 2 அர *2:1-11*). அதன் இரக்கமற்ற, மாற்றமுடியாததன்மையும் கடுமையின் நிறைவும் படையெடுத்து வரும் படைக்கும் (ஆமோ *1:14*; அப *3:14*) குறிப்பாகச் தேர்ச்சக்கரத்திற்கும் (எசா *5:28*; எரே *34:13*; எசா *66:15*), பொதுவாக எந்தப் பேரழிவுக்கும் (பழ *1:27*, ஓசே *8:7*) சிறந்த அடையாளமாயிற்று. அதே காரணத்திற்காக, உருவக முறையிலும் (எசா *29:6*; எரே *23:19*; *30:23*; ஆமோ *1:14*; செக் *7:14*; எரே *25:32*) இயல்பான பொருளிலும் (சங் *83:15*; நாகூ *1:3*; செக் *9:14*) தீர்ப்புக்காகச் சூறாவளியைப் பயன்படுத்துவதாக இறைவன் சித்தரிக்கப்படுகிறார். சிலசமயம் இறைமாட்சிக் காட்சிக்குச் சூறாவளி பின்னணியாகிறது. இறைவன் யோபுக்கும் எசேக்கியேலுக்கும் சூறாவளியில் தோன்றினார் (யோபு *38:1*; *40:6*; எசே *1:4*). எலியாவைப் பூமியிலிருந்து எடுத்துக் கொள்ள இறைவன் சூறாவளியைப் பயன்படுத்துகிறார் (2 அர *2:1-11*).

உ.ச. *3:6*-இல்வரும் புகைத்தூண், யோவேல் *3:3*-இல் வரும் புகைப்படலம் ஆகியவற்றில் சீற்றம் குறைந்த சூறாவளிக் கருத்துள்ளது. சங் *83:13*-இல் சூறாவளிப் புழுதி அல்லது பதர் பொருளற்ற தன்மைக்கு அடையாளமாகும். இப்பகுதியில் சங்கீத ஆசிரியர் தன் எதிரிகளைப் பதராக்கும்படி இறைவனை வேண்டுகிறார். எசா *17:13*-இல் இறைவனால் நாடுகள் ''புயல்காற்றுமுன் சிக்குண்ட புழுதிபோன்று துரத்தப்படுவார்கள்'' என்று கூறப்பட்டுள்ளது.

**சூனி** (SHUNI - ஓய்வில் உள்ள)

யாக்கோபின் பேரனும், காதின் மூன்றாம் மகனுமாவார். இவரது வழித்தோன்றல்கள் சூனியர் என்றழைக்கப்பட்டனர் (*ஆதி 46:16; எண் 26:15*).

**சூனேம், சூனாமியர்** (SHUNEM, SHUNAMMITE)

இந்த ஊர் இஸ்ரியேல் பள்ளத்தாக்கை மேல்நோக்கும் நெபிதாகியின் தென்மேற்குச் சரிவில் எனினுக்கு வடக்கில் 15 கி.மீ. தொலைவிலும் மெகிதோவிற்குக் கிழக்கிலும், நசரேத்திலிருந்து 11 கி.மீ. தொலைவிலும் உள்ள இன்றைய சோலேம் ஆக் அடையாளம் காட்டப்படுகிறது. இந்நகரில் மத்திய வெண்கலக்காலத்திலிருந்து மத்திய காலம் வரை மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். மூன்றாம் துத்துமோசு (கி.மு. *1490-1435*) வென்ற நகர்களில் இதுவும் ஒன்றாகும். அமர்னா ஏடுகளின்படி கி.மு. *14*-ஆம் நூற்றாண்டில் செக்கேமைச் சேர்ந்த இலபாயுவால் அழிக்கப்பட்டு, மெகிதோவின் பிரிதியாவால் மீண்டும் கட்டப்பட்டது. இஸ்ராயேலர் பாலஸ்தீனத்தைக் கைப்பற்றியபோது இந்த ஊர் முக்கியத்துவம் பெற்றதாக இருக்கவில்லை.

இஸ்ராயேலரில் ஒவ்வொரு குடும்பத்திற்கும் திருவுளச்சீட்டு போட்டு நாடுகளைப் பிரித்ததில் இசக்கார் குடும்பத்திற்கு நான்காம் சீட்டு விழுந்தது. அவர்களுக்குக் கிடைத்த நகரங்களில் ஒன்று சூனேம் ஆகும் (*யோசு 19:18*). இந்த இடத்தில்தான் பெலிஸ்தியர்கள் சவுலுடனான ஒரு போருக்கு முதன்முதலில் பாளையம் இறங்கினர். ஆனால் பிறகு அபேக்கு என்ற இடத்திற்கு மாற்றினர் (*1 சாமு 28:4*). இவ்வூரோடு இரு பெண்கள் தொடர்புபடுத்தப்படுகின்றனர். மூன்றாவது பெண்ணும் இவ்வூரிலிருந்து தோன்றியிருக்கலாம்.

தாவீதின் முதிர்ந்த வயதில் அவருக்குப் பணி செய்த பெண்ணாகிய அபிசாகு இவ்வூரைச் சேர்ந்தவள். அதோனியா இவளை மணந்து கொள்ள விரும்பி அதில் வெற்றி கொள்ளவில்லை (*1 அர 1:13.15; 2:17-22*). இந்நகரில் வாழ்ந்த ஒரு பெண்தான் எலிசா காலத்தில் பஞ்சம் ஏற்பட்டபோது அவருக்கு உணவும், உறைவிடமும் அளித்தவள். அவளின் மகனும் உயிர்ப்பிக்கப்பட்டான் (*2 அர 4:8-37*). பின்பு வரவிருக்கும் பஞ்சத்தைப் பற்றி எலிசா இவளை எச்சரித்தார். ஆகையால் இவள் தனது உடமைகளை விட்டுவிட்டுப் பெலிஸ்தியாவில் குடியேறினாள். அவள் திரும்பிவந்தபோது அவளது கணவனும் எலிசாவும் இறந்து போயிருந்தனர். ஆனால் எலிசாவின் ஊழியனது உதவியோடு தனது உடைமைகளைத் திரும்பப் பெற்றதால் (*8:1-6*). இவ்வூரைச் சேர்ந்த மூன்றாவது பெண் உ.ச. *6:13*-இல் குறிக்கப்படும் சூலாமியப் பெண்ணாக இருக்கலாம்.

# செ

**செகரியா** *(SHEHARIAH - யாவே விடியல் ஆகிறார்)*

இவர் பென்யமின் குலத்து எரொகாமின் மகன். இவர் எருசலேமில் வாழ்ந்தார்; தனது குலத்துக்குத் தலைவராய் விளங்கினார் (1 நாள் 8:26).

**செகாக்கா** *(SECACAH - புதர்க்காடு)*

யூதாவின் பாலைவனத்தில் இருந்த ஆறு நகரங்களுள் ஒன்று (யோசு 15:61). இங்குக் கிடைத்த மட்பாண்டங்களும் காப்பு அரண் களைப்பற்றிய குறிப்பும், சுவர்களும் இந்நகர் 'யோசபாது' என்னும் யூதா நாட்டு அரச னால் எழுப்பப்பட்டிருக்கலாம் என்று காட்டு கின்றன (2 நாள் 17:12). இந்நகரில் பிற் காலத்தில் வந்த 'ஊசியா' மன்னனும் சிலை வேலைப்பாடுகளைச் செய்திருக்கலாம் என் றும் தெரிகிறது (2 நாள் 26:10). சாக்கடலின் வடமேற்குக் கரைக்கருகில், ஆக்கோர் பள் ளத்தாக்கில் கிர்பெத்து-கும்ரானுக்குத் தென் மேற்கிலுள்ள கிர்பெத்து எஸ்-சம்ராவாக இது அடையாளம் காட்டப்படுகிறது.

**செகுபு** *(SEGUB - உயர்த்தப்பட்ட, மகிமைப் படுத்தப்பட்ட)*

1. கீயேல் (ஈயேல்) என்பவனின் இளைய மகன். அரசன் ஆகாபு காலத்தில் எரிகோவைச் செகுபின் தந்தையான கீயேல் மீண்டும் கட்டி யெழுப்பினார். அவ்வாறு மீண்டும் கட்டப் பட்டபோது அடித்தளம் இடும் சடங்கில் கீயேலின் இருபுதல்வர்களும் (அபிராம், செகுபு) பலியாக ஒப்புக்கொடுக்கப்பட்ட னர் (1 அர 16:34). இதனை அரசர் ஆகமத்தின் தொகுப்பாசிரியர் யோசுவாவின் வாக்கு நிறைவேறுவதற்காக இவ்வாறு நிகழ்ந்ததா கக் கூறுகிறார் (யோசு 6:26).

2. யூதாவின் வழிவந்த கெசிரோனின் (எட் சரோன்) மகன். இவருக்கு யாயீர் என்ற மகன் உண்டு (1 நாள் 2:21-22).

**செக்கரியா** *(ZECHARIAH - யாவே நினைவு கூர்ந்தார்)*

1. இவர் இஸ்ராயேலின் அரசர். இவர் ஏகூ வம்சத்தில் அரசனான எரொபவாம் மன்னனின் மகன். யூதாவின் அரசன் ஊசியா வின் (அசரியா) ஆட்சியின் 38-ஆம் ஆண்டில் எரொபவாமின் மகன் செக்கரியா சமாரியா வில் இஸ்ராயேலை ஆறுமாதம் ஆண்டபின் (கி.மு. 746) சல்லூம் என்பவரால் கொலை செய்யப்பட்டார் (2 அர 14:29; 15:8.11). ''உன் புதல்வர் நான்கு தலைமுறைகளுக்கு இஸ்ரா யேலின் அரியணையில் வீற்றிருப்பர்'' என்று ஆண்டவர் ஏகூவுக்குக் கூறியது இவ் வாறு நிறைவேறியது (2 அர 15:12; 10:30).

2. இவர் எசேக்கியா அரசனின் தாயான அபியாவின் (அபி) தந்தை (2 அர 18:2; 2 நாள் 29:1).

3. ரூபன் குலத்திலிருந்த ஒரு குடும்பத் தலைவரின் பெயர் (1 நாள் 5:7).

4. மெசலேமியாவின் புதல்வனாகிய இவர், ஒரு லேவிய வாயிற்காவலராவார். இவர்கள் கோராகின் வழி வந்தவர்கள். இவர் ஆலயத்தின் வடக்கு வாயிலுக்குக் காவலனாக நியமிக்கப்பட்டார். விவேக முள்ள ஆலோசகராகவும் விளங்கினார் ( 1 நாள் 26:2.14). மேலும் இவர் உடன்படிக் கைக் கூடார வாயிலையும் காவல்காத்தார் (1 நாள் 9:21).

5. பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர் அல் லது ஒரு குடும்பத்தின் பெயர் (1 நாள் 9:37). இவர் ஒருவேளை சவுலின் தந்தை கீசின் சகோதரராக இருக்கலாம். இதற்கு இணை யாக உள்ள பட்டியல் இவரைச் செக்கேர் என (1 நாள் 8:31) அழைக்கிறது.

6. ஆண்டவரின் உடன்படிக்கைப் பேழையை ஓபேது - ஏதோமின் வீட்டி லிருந்து சீயோனிற்குக் கொண்டுவருகையில் இசைமீட்டியவருள் இந்த லேவியர் சுரமண் டலம் வாசித்தவருள் ஒருவராவார் (1 நாள் 15:18.20). மேலும் இவர் உடன்படிக்கைப் பேழைக்கு முன் இசை வழிபாட்டுக்காக

நியமிக்கப்பட்டார். ஆலய இசைக்குழுவில் 2-ஆம் பிரிவைச் சேர்ந்தவர் (1 நாள் 16:5).

7. உடன்படிக்கைப் பேழையைச் சீயோனிற்குக் கொணர்கையில் பேழையின்முன் எக்காளம் முழங்கிய குருக்களில் இவரும் ஒருவர் (1 நாள் 15:24).

8. இந்த லேவியர் ஊசியேலின் வழி வந்தவராவார்; தாவீதுக்குச் சமகாலத்தவர் (1 நாள் 24;25).

9. தாவீது காலத்தில் மெராரியின் வழி வந்த லேவிய வாயிற்காவலர் (1 நாள் 26:11).

10. தாவீது ஆட்சிக்காலத்தில் மனாசே குலத்தலைவராகிய இவர் இத்தோவின் தந்தையாவார் (1 நாள் 27:21).

11. யோசபாது அரசன் யூதா நகர்களில் போதிக்கும் பொருட்டு அனுப்பிய மூப்பர்களின் ஐந்து பொதுநிலையினருள் இவரும் ஒருவர் (2 நாள் 17:7).

12. இவர் ஆசாபின் குலத்தில் உதித்த லேவியர். மேலும் இவர் யாகசியேலின் தந்தையாவார். இவர் யூதாவின் அரசனான யோசபாது, யோர்தானுக்கு அப்பாலுள்ள எதிரிகளோடு செய்யும் போரில் வெற்றி பெறுவார் என இறைவாக்குரைத்தார் (2 நாள் 20:14).

13. இவருடைய தந்தையாகிய யோசபாது அரசன் இவருக்கும் இவர் சகோதரருக்கும் சொத்துக்களையும், அரணுள்ள நகர்களையும் கொடுத்தார் (2 நாள் 21:2). ஆனால் தலைமகனான யோராம் அரியணை ஏறிய பின் தம் சகோதரர் அனைவரையும் கொன்றார்.

14. இவர் குரு யோயாதாவின் மகனாவார். இவர், யோவாசு அரசன் காலத்திலே ''நீங்கள் ஆண்டவரைப் புறக்கணித்ததால் ஆண்டவரும் உங்களைப் புறக்கணிப்பார்'' என இறைவாக்கு உரைத்தார். இதைக் கேட்டு மக்கள் அவருக்கு எதிராகச் சதி செய்து அரசனின் கட்டளைப்படி ஆண்டவனின் ஆலய முற்றத்தில் அவரைக் கல்லால் எறிந்தனர் (2 நாள் 24;20-21). இதனால் இந்தயோவாசு தன் உயிரைக் காப்பாற்றித் தன்னை அரசனாக்கிய செக்கரியாவின் தந்தை யோயாதாவுக்கு நன்றி கொன்றவனாவார் (2 நாள் 24:22; 22:10-24:19). இந்தக் கொலைப் பழிதீர்க்க, யோவாசின் இரு ஊழியர்கள் யோவாசைக் கொன்றனர் (24:22.25-26). கடவுளால் அனுப்பப்பட்டவர்களை ஏற்றுக்கொள்ளாத அம்மக்களுக்குத் தண்டனை அண்மையில் உள்ளது என இயேசு கூறும்போது செக்கரியாவின் கொலையையும் குறிப்பிடுகிறார் (மத் 23:35; லூக் 11;51). இது இந்தச் செக்கரியாவை 29-இல் வரும் பெரக்கியாவின் மகன் இறைவாக்கினர் செக்கரியாவோடு குழப்புவதாகத் தெரிகிறது.

15. ஊசியா மன்னன் ஆட்சி ஆரம்பத்தில் இவர் ஊசியாவுக்கு ஒழுக்கத்தையும், தெய்வ பயத்தையும் கற்றுத் தந்தார் (2 நாள் 26:5).

16. அரசன் எசேக்கியா காலத்தில் ஆசாபின் புதல்வராகிய இவர் ஆலயத்தைத் தூய்மைப்படுத்துவதில் பங்கெடுத்த லேவியருள் ஒருவர் (2 நாள் 29:13).

17. இவர் ஒரு கோகாத்திய லேவியர். யோசியா அரசன் காலத்திலே நடந்த ஆலய செப்பனிடும் பணிகளை மேற்பார்க்க நியமிக்கப்பட்டார் (2 நாள் 34:12).

18. யோசியா அரசன் காலத்தில் மூன்று ஆலய மேற்பார்வையாளர்களில் இவரும் ஒருவர். இவர் குருக்களுக்குப் பாஸ்காப் பலிக்கென மிருகங்களை வழங்கினார் (2 நாள் 35:8)

19. பரோசின் சந்ததியைச் சேர்ந்த இவர் எஸ்ராவோடு அடிமைத் தனத்திலிருந்து திரும்பி வந்த ஒரு குடும்பத் தலைவராவார் (எஸ் 8:3).

20. பேபாயின் வழித்தோன்றலான இவர் எஸ்ராவோடு அடிமைத் தனத்திலிருந்து

திரும்பி வந்த ஒரு குடும்பத் தலைவராவார் (எஸ் 8:11).

21. எஸ்ராவோடு பாபிலோனியாவி லிருந்து திரும்பியவருள் குருக்கள், பொதுமக்க ளேயன்றி லேவியர் ஒருவரும் இல்லாததால், அவர் செக்கரியாவையும் மற்றவரையும் கசிப்பியாவிலுள்ள இத்தோவுக்கு அனுப்பி அழைத்துவர ஏற்பாடு செய்தார் (எஸ் 8:16).

22. ஏலாமின் வழித்தோன்றலான இவர் எஸ்ராவின் சீர்திருத்தத்தின்போது அந்நிய மனைவி மக்களைத் தள்ளிவிட்டார் (எஸ் 10:26).

23. இவர் எஸ்ரா, ஆண்டவரின் திருச்சட் டத்தைப் படிக்கும்போது அருகிலிருந்தார் (நெகே 8:4).

24. யூதாவின் புதல்வரான இவர் பெரேட் சின் குடும்பத்தில் பிறந்தவர். நாடுகடத்தலுக் குப்பின் எருசலேமில் குடியேறியவர் (நெகே 11:4).

25. சீலோனியரின் மகன் என்றழைக்கப் படும் இவர் யூதாவைச் சேர்ந்தவர்; நாடு கடத்த லுக்குப்பின் எருசலேமில் குடியேறினார் (நெகே 11:5).

26. மல்கியாவின் மகனான பஸ்கூரின் மக னாவார். இவர் (நெகே 11:12) ஒரு குரு.

27. நாடு கடத்தலுக்குப்பின் இத்தோவின் வழிவந்த ஒரு குரு குலத்தின் தலைவர் (நெகே 12:16). இவர் 31-இல் வருபவராக இருக்கலாம்.

28. இவர் ஆசாபின் வழிவந்தவர். எருச லேம் மதிலின் அர்ப்பணிப்புச் சடங்கிலே அதன்மேல் ஊர்வலமாகச் சென்ற ஒரு பிரிவு லேவியர்களுக்குத் தலைவராயிருந்தார் (நெகே 12:35).

29. இவர் எருசலேம் மதிலின் அர்ப்பணிப் புச் சடங்கிலே எக்காளம் முழங்கியவருள் ஒரு குரு (நெக 12:41).

30. இவர் எபரேக்கியா என்பவரின் மகன். பிரமாணிக்கமுள்ள சாட்சியான இவ ரையும் இன்னொருவரையும் எசாயா இறை வாக்கினர் ''மகேர் - சாலால் - காஸ் - பாஸ்'' என்ற வரைபலகையின் எழுத்துக்களுக்குச் சாட்சியாக எடுத்துக் கொண்டார் (எசா 8:2).

31. இறைவாக்கினரான இவர் 12 சிறிய இறைவாக்கினருள் ஒருவராவார் (செக் 1:1.7; 7:1.8). இவர் இத்தோவின் மகனா கவோ அவர் வழித்தோன்றியவராகவோ இருக்கலாம். இவர் இத்தோவின் மகனென எஸ் 5:1; 6:14 கூறுகிறது. நெகே 12:16-இல் இவர் இத்தோ வழி வந்தவரெனக் கூறப்பட்டுள் ளது. செக் 1:1 இத்தோவைச் செக்கரியாவின் முக்கியமான முன்னோராகக் கூறுகிறது. செக்கரியா தாரியு அரசனின் இரண்டாம் ஆட்சியாண்டிலே இறைவாக்குரைத்தார் (கி.மு. 520 - 518). இவர் செருபாபேல் காலத்தில் வாழ்ந்தவர். இவருடைய இறை வாக்கின் தொடக்க காலத்தில் ஆகாய் தன் இறுதிக் கட்டத்தை நெருங்கினார். இவர் ஆண்டவரின் ஆலயத்தைக்கட்டி எழுப்ப மக் களைத் தூண்டினார். மக்களிடையே நம்பிக்கையை எழுப்பினார் (எஸ் 5:1; 6:14). காண்க. செக்கரியாவின் நூல்.

32. மக்கபேயர்களுக்குத் தலைவராயிருந்த யோசேப்பு என்பவரின் தந்தை (1 மக் 5:18.56).

33. இவர் திருமுழுக்கு யோவானின் தந்தை. இயேசுவின் தாயாகிய மரியாளின் உறவினளான எலிசபெத்தின் கணவன் (லூக் 1:5-67; 3:2). இவர் அபியா வகுப்பைச் சார்ந்த நீதிமானான குரு ஆவார் (1 நாள் 24:7-19). தம் பிரிவின் முறை வந்தபோது செக்கரியா கடவுள் முன்னிலையில் குருத்துவப்பணி செய்துவருகையில், இறைவழிபாட்டு முறைமைப்படி ஆலயத்தினுள் சென்று தூபங்காட்ட அவருக்குச் சீட்டு விழுந்தது. அவர் தூபங்காட்டுகிற வேளையிலே ஆண் டவருடைய தூதர் தோன்றி அவர் வேண்டுத லின்படி அவருக்கு ஒரு மகனைத் தருவதாக

வாக்களித்தார். அவருக்கு 'யோவான்' எனப் பெயரிட வேண்டும்; அவர் தூய ஆவியினால் நிரப்பப்படுவார்; அவர் மக்களைக் கடவுளின் அரசிற்குத் தயார் செய்வார் எனவும் தூதர் அறிவித்தார். வயது முதிர்ந்தவர்களாக அவரும் அவரது மனைவியும் இருந்ததால் இப்புதுமை நிகழ அவர் அறிகுறி கேட்க, தூதரும் அறிகுறியாக இப்புதுமை நடக்கும்வரை அவரை ஊமையாக்கினார். அவர் வெளியே வந்து மக்களோடு பேச முடியாமல் இருந்ததைக் கண்ட மக்கள் அவர் ஏதோ காட்சி கண்டிருக்கவேண்டும் என அறிந்து கொண்டனர் (லூக் 1:8-23). குழந்தை பிறந்து அதற்கு விருத்தசேதனம் செய்ய நாள் வந்தபோது செக்கரியா தம் மனைவி கூறிய 'யோவான்' என்ற பெயரையே எழுதிக் காண்பிக்க மக்கள் வியப்படைந்தனர். அந்நேரமே அவரது வாய் திறக்க, நா கட்டவிழ, பேசத் தொடங்கிக் கடவுளைப் போற்றினார். மெசியா பற்றிய இஸ்ராயேலின் நம்பிக்கை நிறைவேறுவது பற்றி இறைவாக்குரைத்தார் (1:57-79).

**செக்கரியாவின் திருநூல் - முதல் பாகம் (அதி 1-8).** (ZECHARIA, BOOK OF; CHAP 1-8)

**முன்னுரை:** செக்கரியாவின் திருநூலில் இரு நூல்கள் உள்ளன என்பர். அதி 1-8 அடங்கிய பகுதியை முதலாம் செக்கரியா என்றும், அதி. 9-14 அடங்கிய பகுதியை இரண்டாம் செக்கரியா என்றும் அழைப்பர். முதலாம் செக்கரியா, செக்கரியா என்ற பெயருடைய இறைவாக்கினரின் உண்மையான இறைவாக்குகளைக் கொண்டுள்ளன. ஒரு வேளை, அறிவிப்பிற்குப் பின் அவருடைய சீடரில் ஒருவர் சேகரித்துப் பதிப்பித்திருக்கலாம். இரண்டாம் செக்கரியா பிற்காலத்தைச் சேர்ந்த வேறொரு ஆசிரியர் (கள்) எழுதிய நூலாகவும் இருக்கலாம். இப்படிப் பிரிப்பதற்கும் போதிய சான்றுகள் உள்ளன. அவை இரண்டாம் செக்கரியா நூலுக்கு அளிக்கப்படும் அறிமுகத்தில் கூறப்படும்.

**2. பெயரும் வாழ்க்கையும்:** ''செக்கரியா'' என்ற சொல்லுக்கு ''யாவே நினைவு கூர்ந்தார்'', ''யாவே கவனமாய் உள்ளார்'' என்றும் பொருள் கூறலாம். இவரைப் பற்றி ஒரு சிறிதே அறியமுடிகிறது. ''இத்தோவின் பேரன், பெரக்கியாவின் மகன்''தான் செக்கரியா என்று இந்நூல் கூறுகிறது (1:1-7). ''இத்தோவின் மகன் செக்கரியா,'' என்று எஸ்ரா திருநூல் குறிக்கிறது (எஸ் 5:1; 6:14). எசா 8:2-இல் ஒரு எபரேக்கியாவின் மகன் செக்கரியா குறிப்பிடப்படுகிறார். ''இத்தே'' ஓரிடத்தின் பெயராக நெகேமியாவில் குறிக்கப்படுகிறது (நெகே 12:16). ஒரு வேளை ''பெரக்கியாவின் மகன்'' என்பது தவறாக இடையில் செருகப்பட்டிருக்கலாம். ஆகவே செக்கரியாவின் மரபுக்கொடிபற்றி உறுதியாக எதையும் கூறுவதற்கில்லை. இவர் இத்தோவின் மகனாகவோ பேரனாகவோ இருந்திருக்க வேண்டும். இத்தோ நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய ஒரு குரு குலத்தலைவர் (நெகே 12:1-4.16); ஆகவே செக்கரியா குருகுலத்தைச் சேர்ந்த இறைவாக்கினர் ஆவார். இந்த உண்மையை அவர் ஆலயம் கட்டுவதில் காட்டும் அக்கறையும், குருத்துவம், வழிபாடு ஆகியவற்றை வலியுறுத்துவதும் விளக்குகிறது (3:1-10; 4:1-14; 6:9-15; 7:1-3; 8:19-19). மக்கள் மனத்தளர்ச்சியுற்றபோது ஆலயத்தைக் கட்டுவதைத் தொடர்ந்து நடத்த ஊக்குவிக்கிறார். குரு என்ற முறையில், அவருக்கு முன் வந்த இறைவாக்கினர்களின் கூற்றுக்களை நன்கு அறிந்து உணர்ந்து, தனது காலத்திற்கேற்ப மறுவிளக்கம் அளிக்கிறார். எசேக்கியேலைப்போல் இவரும் ஒரு குரு; இறைவாக்கினர்; காட்சியாளர் ஆவார். எசேக்கியேலைத் தழுவி இவர் இறைவாக்குரைப்பதாகத் தெரிகிறது.

**3. எதற்காக:** ஆகாயும் செக்கரியாவும் சமகாலத்தவர்கள். ஆலயத்தை மீண்டும் கட்டியெழுப்ப வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுக்காக உழைத்தவர்கள். ஆகவே ஆகாய்த் திருநூலுக்குக் கூறப்பட்ட வரலாற்றுப் பின்னணி செக்கரியாத் திருநூலுக்கும் பொருந்தும்.

நாடு கடத்தப்பட்ட காலத்தில் இறைவாக்கினர்கள் அளித்த நம்பிக்கை ஒளிவீசும் வாக்

குறுதிகள் பிற்கால இஸ்ராயேலர்களுக்கு ஓர் இடறலாயிற்று. பாரசீகப் பேரரசில் ஏற்பட்ட கலகங்கள் உலகில் இறையரசு தோன்றுவதற்குரிய நம்பிக்கையை அளித்தன. ஆனால் தாரியு பாரசீகப் பேரரசைப் பல போராட்டங்களுக்குப் பிறகு நிறுவினார். எங்கும் அமைதி நிலவியது *(1:11)*. ஆனால் யூதா அதில் பங்கு கொண்டதாகத் தெரியவில்லை. இறையரசு நிறுவப்படவில்லை. மோசமான விளைச்சலால் மக்கள் அவதியுற்றனர் *(8:10)*. மக்கள் தொகை குறைந்தது. அண்டை மக்கள் எதிர்த்தனர் *(8-10)*. மக்கள் பாவக்கறையுள்ளவர்களாய் இருந்தனர் *(3:4; 7:4-6)*. மீட்பு தள்ளிப் போடப்பட்டுள்ளதுபோல் தோன்றியது. மக்கள் பொறுமையிழந்தனர். மனந் தளர்ந்தனர். ஆலயம் கட்டுவதை நிறுத்தி வைத்தனர்.

இந்நிலையில் ஆகாய் தனது இறை வாக்குப் பணியைத் தொடங்குகிறார். மக்களை ஊக்குவித்து ஆலயம் கட்டுவதைத் தொடங்கச் செய்தார். ஆலயம் மீண்டும் கட்டுவதற்குச் சன்மானமாகப் பொருளாதாரச் செழிப்பை வாக்குரைத்தார். ஒரு மாதத்திற்குப் பிறகு மக்களிடையே முதல் உற்சாகம் குறைந்தபோது, ஆகாய் மக்களை மீண்டும் ஊக்குவித்து ஆலயம் கட்டும் பணியைத் தொடர்ந்து நடக்கச் செய்தார். இந்தச் சூழ்நிலையில் செக்கரியா தனது இறைவாக்குப் பணியைத் தொடங்குகிறார். தனது காட்சிகள் - இறைவாக்குகளால் ஏற்கனவே நடந்து கொண்டிருந்த பணியை மேலும் ஊக்குவிக்கிறார். ஆலயம் கட்டுவதற்குச் சன்மானமாக மெசியா வருகையை எடுத்துக் கூறி, மக்களின் நம்பிக்கைக்குப் புத்துயிர் அளிக்கிறார். இறைவனது மெசியாத் திட்டம் உடனே நிறைவேறும் என்று உறுதி அளிக்கிறார். மக்களைத் திடப்படுத்துகிறார். மக்களுக்கு நம்பிக்கை அளிப்பது இந்நூலின் முக்கிய செய்தியாகும்.

***4. எப்போது:*** ''தாரியு அரசனது இரண்டாம் ஆட்சி ஆண்டின் எட்டாம் மாதத்தில்'' செக்கரியா தனது இறைவாக்குப் பணியைத் தொடங்கியதாக இந்நூல் கூறுகிறது *(1:1)*; அதாவது கி.மு. *520* அக்டோபர்-நவம்பர் (நமது ஐப்பசி) மாதங்களில் ஆகாய் தனது இறுதி இறைவாக்கை அறிவித்ததற்கு ஒரு மாதம் முன்பு செக்கரியா தனது பணியைத் தொடங்கினார். ஆகாயின் இறைவாக்குப் பணி நான்கு மாதங்களுக்கு நடந்தது. செக்கரியாவின் பணி இரு ஆண்டுகளுக்கு நடந்தது. ''இவரது இறுதி இறைவாக்கு கி.மு. *518* நவம்பர் - திசம்பர் மாதங்களில் கூறப்பட்டதாகக் குறிக்கப்படுகிறது *(7:1)*. ஆகவே செக்கரியாவின் பணி, ஆகாயின் பணிக்குப் பிந்தியது. இருவரும் ஒரு மாத காலத்திற்கு இணைந்து பணி புரிந்ததாகத் தெரிகிறது.

***5. இலக்கியச் சிறப்பு:*** ''காட்சி இலக்கிய வரலாற்றில்'' முதலாம் செக்கரியா ஒரு சிறப்பிடம் வகிக்கிறது. இந்த இலக்கிய மரபு எசேக்கியேலில் தொடங்குகிறது; தானியேல் நூலில் முதிர்ச்சியடைகிறது. இரண்டுக்கும் இடைப்பட்ட பல இலக்கிய வரலாற்றுக்கு இந்நூல் எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது.

முதலாம் செக்கரியா முதன்மையாக ஒரு ''காட்சியாளர்'' ஆவார். வார்த்தையைவிட காட்சியையே வெளிப்பாட்டுக்குரிய சாதனமாக இந்த இறைவாக்கினர் கருதுவதாகத் தெரிகிறது. யாவேயின் காட்சியைச் செக்கரியா பார்க்கிறார். அதைப் பிறரும் பார்க்க விரும்புகிறார். காட்சியை எடுத்துக்கூற வார்த்தைகள் அவசியம்; ஆனால் அவை இரண்டாம் பட்சமே. பொருட்களின் தோற்றத்திற்குப் பின்னுள்ள கருத்தை ஆழ்ந்து நோக்கி, அதைக் காட்சி வடிவில் இறைவாக்கினர் எடுத்துக் கூறுகிறார். இக்காட்சிகள் இறைவன் மட்டுமே அறிந்த மறைபொருள்களை வெளிப்படுத்தி வானதூதர்கள் வழியாக விளக்குகின்றன.

இக்காட்சிகள் ஒரு குறிப்பிட்ட திட்டத்தைக் கொண்டுள்ளன:- 1. சில உருவங்களை ''நான் பார்த்தேன்'' அல்லது அவர் காட்டினார். 2. வான தூதர் ஒருவர் காட்சியாளரிடம் வருகிறார். 3. இருவருக்குமிடையே நடக்கும் உரையாடல் செக்கரியாவுக்குக் காட்சியின் பொருளை விவரிக்கிறது. 4. விளக்கம்

அளிக்கப்படுகிறது. வாசகங்களுக்குப் பொருள் தெளிவாகிறது.

காட்சி இலக்கியப் பண்புகள் சிலவற்றை இந்நூலில் காண்கிறோம். காட்சி இலக்கிய ஆசிரியர்கள், ''முடிவுகாலக் காரியங்கள்'', வரலாற்றின் முடிவு இறைவனது இறுதி வெற்றி ஆகியவற்றில் ஆர்வம், அக்கறை கொள்கின்றனர். இப்பண்புக்கேற்ப மெசியா அரசு நிறுவப்படுதல் பற்றி செக்கரியா முதன்மையான அக்கறை கொள்கிறார்.

இந்நூலில் காணப்படும் மற்றொரு காட்சி இலக்கியப் பண்பு - மறை பொருள் மிக்க ''படமொழியைப்'' பயன்படுத்துவதாகும். இறைவாக்கினர் இரவில் மறைபொருள் மிக்க காட்சிகளைக் காண்கிறார். அவற்றின் இயற்கை மீறிய சக்தியால் ஆட்கொள்ளப் பட்டுச் சோர்வடைந்து துயில் கொள்கிறார்; ஆனால் புதுக்காட்சியால் எழுப்பப்படுகிறார். அவர் காணும் உருவங்கள் மாயமானவை; விசித்திரமான அடையாளப் பொருளுடையவை; இயல்பு மீறியவை; திகிலடைந்தவனின் குழப்பமிக்க கற்பனைப் படைப்பு போன்றவை. இத்தகைய காட்சிகள் ஏற்கனவே எசேக்கியேலில் காணப்பட்டாலும், இந்நூலில் சிறப்பிடம் பெறுகின்றன. காட்சிகள் பலவேறு உருவங்களை அபரிமிதமாகக் கொண்டுள்ளன. இக்காட்சிகளில், வானதூதர்கள், குதிரைப்படைகள், போர்த்தேர்கள், கொல்லர்கள், நாரையின் இறக்கைகளையுடைய பெண்கள் போன்ற உருவங்களின் கூட்டம் அதிகம். ஒவ்வொரு உருவமும் தனக்கே உரிய முக்கியத்துவத்தையும் பொருளையும் கொண்டு விளங்குகின்றன. நிறம், எண், உடை, உடலின் அங்கங்கள், விலங்குகள், பறவைகள் போன்ற எதுவும் அடையாளப் பொருளாக மாறலாம். இந்த அடையாளப் பொருட்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி உரைப்பதால், புதிரான, மாயமான சூழ்நிலை ஏற்படுகிறது; வாசகர்களுக்குத் திகைப்பு உண்டாகிறது. ஆனால் இத்தகைய உருவச் சித்தரிப்பை நவீன ஓவியர்கள் பெரிதும் விரும்புவர்.

இத்தகைய காட்சிகள் இஸ்ராயேலைச் சுற்றியிருந்தபிற மக்களிடையேயும் காணப்படுகின்றன. இவர்களில் சிலர், தங்கள் கடவுள்களின் புனித இடங்களில் உறங்கி, தெய்வ வெளிப்பாடுடைய கனவுகளைத் தேடினர். கனவுகளில் இறைவன் தோன்றும் கதைகள் யூதப் பாரம்பரியத்திலும் காணப்படுகின்றன (ஆதி 20:3; 20:10 தொ; 31:10 தொ; எண் 12:6-7). கனவுக்காட்சிப் பாரம்பரியத்தில் செக்கரியாவின் காட்சிகள் முக்கிய இடம் வகிக்கின்றன. இப்பாரம்பரியம் திருவெளிப்பாட்டு நூலில் உச்சநிலை அடைகிறது. இந்த இலக்கியம் பற்றித் தானியேல் திருநூலுக்கு அளிக்கும் அறிமுகத்தில் விரிவாக எடுத்துக் கூறப்படும்.

புதிரான மொழியும், இயற்கை மீறிய உருவங்கள் அமைப்பும் இறைவாக்குக்கு - மறைபொருள் சூழ்நிலையை அளிக்கின்றன. ஆகாயின் எளிய உரை நடைக்கு மாறாக, இந்நூல் வண்ணமிக்கது. அதன் வார்த்தைகள் ஆற்றல்மிக்க, தற்படைப்பாற்றலும் ஓவியத் தனிச்சிறப்பும் கொண்டவை. செக்கரியாவின் காட்சிகள் வெறும் கற்பனையாகச் சிதறுவதில்லை; ஆகாயின் அமைவடக்கமுள்ள சொற்களைப்போல், மக்களைச் செயலாற்றத் தூண்டவல்லன. வான்தூதர்களும் விளக்கம் அளிப்பவர்களும் தோன்றுவது -காட்சி இலக்கியப் பண்புகளில் ஒன்றாகும்.

இவ்வாறு காட்சி இலக்கிய ஆசிரியர்களுக்கும் செக்கரியாவுக்கும் ஒற்றுமைகள் இருந்தாலும், இவர்களிடையே ஓர் அடிப்படை வேறுபாடு உண்டு. பாரசீகப் பேரரசு, ஆளுநன் செருபாபேல், பெரியகுரு ஏசுவா, எருசலேமில் இறையரசு நிறுவப்படுதல், நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் இறைவன் ஆற்றும் செயல்களைக் கொண்ட வரலாறு ஆகியவற்றில் செக்கரியா கவனம் செலுத்துகிறார். மற்ற இறை வாக்கினர்களைப் போல் வரலாற்றில் மனிதர்களின் வழியாக இறைவன் செயலாற்றுவதை வலியுறுத்துகிறார்.

மனப்போக்கிலும் மொழியிலும், ஆகாயைவிடச் செக்கரியா பல்திறப் புலமையுடையவர். பெரும் நம்பிக்கையும் தெளிவான உரையும் கலந்த அரிதான இணைப்பு இந்நூலில் காணப்படும். உள்ளம் தளர்ந்த மக்களுக்கு அவர்களது மெசியாக் கனவுகளை இறைவன் உறுதியாக நிறைவேற்றுவார் என்று உறுதியளிக்க வேண்டியிருந்தது. ஆகவே எதிர்காலம்பற்றிய கனவுகளை நயமிக்க காட்சியிலக்கிய நடையில் செக்கரியா எடுத்துக் கூறுவார் *(1:7-6:8)*. வருங்காலக் கனவுகளைக் கருதி மக்கள் உடனடியாகச் செய்யவேண்டிய காரியங்களைக் கைவிடக்கூடாது *(1:1-6)*. விதவைகளும் அநாதைகளும் வீடின்றி, உணவின்றி வாடும்போது, உண்ணாநோன்பு பற்றி மக்கள் கருத்தியலாக விவாதிக்கக்கூடாது *(7:1-14)*. ஆகவே இரு வேறுபட்ட நடையில் ஆற்றலோடு பேசுகிறார். அவர் காட்சி இலக்கியத்தில் ஒரு கலைஞர். அதே சமயம் சீர்திருத்தம் செய்யும் இறைவாக்கினரும் ஆவார். ஒரே உரையில் இரண்டையும் இணைத்துக் கூறுவார். பல காட்சிகளில் வழிபடுவோரின் ஒழுக்கத் தூய்மையையும் வலியுறுத்துவார். பெரிய குரு சுத்தி செய்யப்படுதல் (அதி.3), மக்களின் பாவங்களை நீக்கும் சுருள், மரக்கால் (அதி.5) ஆகியவை அத்தகைய சான்றுகளாகும்.

மூலத்தில் செக்கரியா தனது காட்சிகள் பற்றிய நாட்குறிப்பைத் தயாரித்திருக்க வேண்டும். இவற்றோடு அவரது வாழ்க்கைக் குறிப்புகளையும் பிறவற்றையும் சேர்த்து, திருத்திஅமைத்து, பிற்காலப்பதிப்பாசிரியர்(கள்) பதிப்பித்திருக்க வேண்டும்.

இந்நூலின் எபிரேய வாசகம் மிகவும் பழுதுபட்டுள்ளது. பிற்காலத்தவர் விளக்கக் குறிப்புகளைப் புகுத்தியுள்ளனர். பல வசனங்கள் இடம் பெயர்ந்துள்ளன. பழுதுபட்ட வாசகமும், காட்சி இலக்கிய நடையும் - இந்நூல் - விவிலியத்திலேயே மிகவும் புதிரான, தெளிவற்ற நூல் என்று கூறப் புனித எரோனிமுவைத் தூண்டியுள்ளன.

**6. திட்ட அமைப்பு:**

I. முன்னுரை:- மனந்திரும்புதலுக்கு அழைப்பு *(1:1-6)*.

II. காட்சிகள் *(1:7-6:8)* எல்லாம் மெசியாவின் வருகையைப்பற்றிப் பேசுகின்றன. ஆலயம் மீண்டும் கட்டப்படுதல், நாடு கடத்தப்பட்டவர்கள் திரும்பி வருதல், சமூகம் சுத்தி செய்யப்படுதல், செழிப்படைதல் ஆகியவைபற்றிய எட்டுக் காட்சிகள்; சில, விரிவாகத் தரப்பட்டுள்ளன.

1. முதல் காட்சி *(2:1-4)*; நான்கு குதிரை வீரர்கள்.

2. இரண்டாவது காட்சி *(2:1-4)*; நான்கு கொம்புகளும் நான்கு கொல்லர்களும்.

3. மூன்றாவது காட்சி *(2:5-17)*:

அ. அளக்கும் நூலோடு வானதூதர் *(2:5-9)*.

ஆ. இரண்டாம் மூன்றாம் காட்சிகளின் விவரிப்பு, நாடு கடத்தப்பட்டவர்கள் திரும்ப அழைப்பு, புதிய எருசலேம் *(2:10-17)*.

4. நான்காவது காட்சி *(3:1-10)*: பெரியகுரு ஏசுவா.

5. ஐந்தாவது காட்சி *(4:1-14)*;

அ. விளக்குத் தண்டு *(4:1-3. 11-14)*.

ஆ. செருபாபேல் பற்றிய செய்தி *(4:4-10)*.

6. ஆறாவது காட்சி *(5:1-4)*; பறக்கும் சுருள்.

7. ஏழாவது காட்சி *(5:5-11)*; மரக்காலுக்குள் பெண்.

8. எட்டாம் காட்சி *(6:1-8)*; நான்கு தேர்கள்.

இக்காட்சிகளை *1-8, 2-3, 4-5, 6-7*, என்ற வரிசையில் ஒழுங்கு படுத்தலாம்.

III. அ. செருபாபேல் முடி சூட்டப்பெறுதல் *(6:9-15)*.

ஆ. உண்ணா நோன்பு பற்றிய கேள்வியும் பதிலும் *(7:1-14)*.

இ. மெசியாக் காலமும் ஆசீர்களும் *(8:1-23)*.

*7. முக்கிய கருத்துக்கள்:*

*அ. இறைவனின் தன்மை:* இந்த இறைவாக்கு நூல் நித்திய இறைவனை - எல்லாம் கடந்தவராகவும் நேர்மை மிக்கவராகவும் எல்லாம் வல்லவராகவும் வெளிப்படுத்துகிறது.

இஸ்ராயேலர் நாடு கடத்தப்பட்ட காலத்திலும், அதற்குப் பின்னும் இறைவனின் எல்லாம் கடந்த தன்மை பற்றிய உணர்வு மக்களிடையே வளர்ச்சியடைகிறது. எசேக்கியேலைப் பின்பற்றிச் செக்கரியா இதை வலியுறுத்துகிறார். யாவே உலகிற்கெல்லாம் மேலாக உயர்த்தப்பட்டு விண்ணக அரியணை ஏறி, ''தூரத்திலிருக்கும் இறைவனாகக்'' கருதப்பட்டார். மனுக்குலத்திற்கு எட்டாதவரானார். பாவமிக்க மனிதரிடமிருந்து எவ்வளவு விலகியிருந்தார் என்றால், இறைவாக்கினர்கள்கூட இறைவனோடு நேரடித் தொடர்பு கொள்ளவில்லை. ஆமோசோடும், எரேமியாவோடும் நேரடியாகப் பேசிய இறைவன், இப்போது காட்சிகள், விளக்கமளிக்கும் வானதூதர் வழியாக மறைமுகமாகச் செக்கரியாவோடு தொடர்பு கொள்கிறார்; செயலாற்றுகிறார். இந்த வானகத் தூதர்கள் எல்லாம் கடந்த இறைவனுக்கும் அவரது மக்களுக்குமிடையே தூதுப் பணியாற்றுகின்றனர்.

இந்நூலில் வானதூதர் இயல் வளர்ச்சியடைகிறது. பிற்கால நூலாகிய தானியேல் திருநூலில் காணப்படுவதைவிட, இந்நூலில் வானதூதர் முக்கியமான இடம் வகிக்கின்றனர். இவர்கள் இறைவாக்கினருக்கு இறைவனது தூதர்களாகச் செயாற்றுகின்றனர். காட்சிகளை விளக்குகின்றனர். உலக காரியங்களை இறைவனுக்கு எடுத்துச் சொல்லுகின்றனர். பிறஇன உலகில், இறைவனது திட்டத்தைச் செயலாற்றும் கருவிகளாவர்; இஸ்ராயேலுக்காகப் பரிந்து பேசுகின்றனர். ''அவர்கள் அனைவரும் ஊழியம்செய்யும் ஆவிகள் அல்லவா? மீட்பை உரிமைப்பேறாகப் பெறுபவர்களுக்குப் பணிபுரிய அனுப்பப்பட்டவர்கள் அல்லவா?'' (எபி 1:14). அவர்களில் ஒருவனான சாத்தான், பழைய ஏற்பாட்டிலேயே முதன் முறையாகத் தோன்றுகிறான். ஆனால் பிற்கால நூல்களில் காணப்படுவது போல் (யோபு 1:6-12) சாத்தான் தன் தன்மையாலே தீயவனாகவோ, இறைவனது எதிரியாகவோ இங்குக் காட்டப்படவில்லை. இறைவனுக்குக் கட்டுப்பட்டு மனுக்குலத்தைக் குற்றம் சாட்டுபவனாகச் செயலாற்றுகிறான். வானக அவையில் வழக்குத் தொடர்பவனாக விளங்குகிறான். இக்கருத்தைப்பழைய ஏற்பாட்டின் பிற்கால நூல்களில் விரிவாகக் காண்போம். வான தூதர்கள், பேய்கள் பற்றிய இறையியல் வளர்ச்சி, இறைவனைத் தமது மக்களிடமிருந்து மிகவும் விலகிவிட்டவராகவும், எல்லாவற்றையும் கடந்தவராகவும் காட்டுகிறது. அவர் தமது மக்கள்பால் அக்கறை காட்ட, வான தூதர்களும் பேய்களும் இடையாளர்களாகச் செயலாற்றுகின்றனர்.

எல்லாம் கடந்த இறைவன் நேர்மையுள்ளவராக இருக்கிறார். தமது மக்களிடமிருந்து நேர்மையைக் கோருகிறார். முதலிலேயே மக்களை மனத்துக்கத்திற்கு அழைக்க செக்கரியாவுக்குக் கட்டளை வருகிறது. அவர்களது மூதாதையர்கள் இறைவாக்கினர்கள் விடாது வலியுறுத்திய எச்சரிக்கைகளைப் புறக்கணித்தனர்; மனந்திரும்ப மறுத்தனர்; அழிந்து போயினர். அவர்களது வழித்தோன்றல்கள் அதே பிழையைச் செய்யக்கூடாது. ''என்னிடம் திரும்பி வாருங்கள்; அப்போது நானும் உங்களிடம் திரும்புவேன்'' (1:3). ஆலயத்தைத் திரும்பக்கட்டுதலிலும் பலி வழிபாட்டைத் திரும்ப அமைத்தலிலும் மட்டும் செக்கரியா கருத்துக் கொள்ளவில்லை. முந்தைய இறைவாக்கினர்களைப் போல் செக்கரியாவும் ஒழுக்கம், கீழ்ப்படிதல், நேர்மையான வாழ்வு ஆகியவற்றிற்குப் பதிலாகப் புறச்சடங்குகள் அடங்கிய வழிபாட்டை இறைவன் ஏற்றுக்கொள்ள மாட்டார் என்பதை நன்கு அறிந்திருந்தார். அதை உறுதியோடு போதித்தார். மக்களிடையே வாழும் இறைவன் அவர்களிடமிருந்து முழுத்தூய்மையைக் கோருகிறார். இதைப் பறக்கும் சுருள், மரக்காலுக்குள் பெண் ஆகிய காட்சிகள் எடுத்துக் காட்டுகின்றன (5:1-11). மக்களின் ஒழுக்கக்கேடுகளையும்

தவறுகளையும் செக்கரியா கண்டனம் செய்கிறார். எருசலேமை மாற்றி அமைத்தல் மக்களின் இதயத்தைத் தொடவேண்டும். பெரியகுருகூட முழுவதும் சுத்தி செய்யப்பட வேண்டும் *(3:1-10)*. ஆகாயைவிட இந்நூலில் ஒழுக்கவாழ்வு மிகவும் வலியுறுத்தப்படுகிறது. விதவைகளும் அநாதைகளும் வீடின்றி உணவின்றி வாடும்போது, மக்கள் உண்ணாநோன்புபற்றிக் கருத்தியலாக விவாதிப்பதில் பொருள் இல்லை. இறைவன் கோருவதெல்லாம், நீதி, அன்பு, இரக்கம் எளியவரைப் போற்றுதல், தீய எண்ணங்களற்ற தூய இதயம் ஆகிய உயர் பண்புகளேயாகும்.

எல்லாம் கடந்த நேர்மையுள்ள இறைவன் - எல்லாம் வல்லவரும் - ஆவார். அவர் வானகத்தில் மட்டுமின்று; பூமியின் மேலும் அதிகாரம் கொண்டுள்ளார். பூமியில் தமது திட்டத்தை உறுதியாக நிறைவேற்றுகிறார். அவர் வானகத்தில் ஏற்கெனவே தீர்மானித்தவற்றை எவ்வளவு பெரிய தடைகள் வந்தாலும், அவருடைய மனித ஊழியர்கள் பலவீனர்களாய்த் தோன்றினாலும் அவர் நிறைவேற்றுகிறார். மெசியா அரசு வெறும் மனித முயற்சியாலோ, பாரசீகப் பேரரசுக்கு எதிராகச் செய்யும் அரசியல் கிளர்ச்சிகளாலோ நிறுவப்படும் என்று செக்கரியாவோ, ஆகாயோ நம்பவில்லை. இறைவனது திட்டமிட்ட செயலாலும், மறைவான வலிமையாலும் செருபாபேலை எதிர்கொள்ளும் இடைஞ்சல்கள் நீக்கப்படும். ஆலயம் மீண்டும் கட்டும் வேலை பெரு மகிழ்ச்சி ஆரவாரத்திற்கிடையே நிறைவேறும் *(4:6-9)*. முதல் ஆலயத்தைவிட புதிய ஆலயம் சிறியதாக இருந்தாலும் அது பெருமையுடையது. இறைவன் முன் கட்டடத்தின் பருமன் முக்கியத்துவம் உடையதன்று: சிறு தொடக்கம்தான் பெரும் விளைவுகளுக்கு இட்டுச் செல்லும். மக்கள் இறைவனின் திட்டத்திலும் வழிமுறைகளிலும், செயலாற்றலிலும் நம்பிக்கை வைக்க வேண்டும்.

**ஆ. பிற போதனைகளின் சுருக்கம்:** ஆலயம் கட்டுதல், அதன் வழிபாட்டை முறைப்படுத்துதல் ஆகியவற்றில் செக்கரியா அக்கறை காட்டினார். ஆலயம் இல்லாமல் யூதக் கோட்பாடு உயிர் வாழமுடியாது. ஏனெனில் ஆலயம் இறைவனது பிரசன்னத்தை அடையாளமாக உணர்த்திற்று. மெசியாக்காலம் வரும்வரை பெரும் மீட்புச் செயல்கள் தொடர்ந்து நடக்கும் என்பதற்கு உறுதி அளித்தது. எருசலேமுக்குத் தாமே ''அதைச் சுற்றிலும் நெருப்புச் சுவராய்'' இருப்பதாகவும் ''அதில் உறையும் மாட்சிமையாய்'' விளங்குவதாயும் இறைவன் அறிவிக்கிறார் *(2:9;2:15-17; 8:3)*.

இந்நூலில் வரும் முக்கிய கருத்துக்களில் ஒன்று மெசியாக் கோட்பாடு ஆகும். சீயோனைக் கொடுமைப்படுத்தும் நாடுகள் அழிவுறுதல் *(2:1-4.10-13)*, ஆலயத்தை மீண்டும் கட்டுதல் *(1:16)*, இறைவன் தமது நகருக்குள் வருதல் *(2:14; 8:3)*, நகரில் மக்கள் மீண்டும் குடியேறுதல் *(3:4-5)*. சிதறிப் போனவர்கள் திரும்புதல் *(6:15; 7:7-8)*, நாடுகள் மனந் திரும்புதல் *(2:15; 8:22-23)*, செழிப்பும் அமைதியும் *(3:15; 8:12)*, பாவத்தின் முடிவு *(3:9.5)* ஆகிய தலைப்புகள் மெசியாக் காலம் பற்றிய ஓவியக் காட்சிகளைத் தருகின்றன. செக்கரியா, செருபாபேலை மெசியாக்காலத்தைச் சேர்ந்தவராகக் காட்டுகிறார்; இவரையும் பெரிய குருவாகிய ஏசுவாவையும் மெசியாக் காலத் தலைவர்களாக்குகிறார்.

எசேக்கியேலைப்போல் செக்கரியாவும் குருத்துவ நிறுவனத்தை வலியுறுத்துகிறார். ஆலயத்தைப் பற்றிய அவரது அக்கறை, குருத்துவத்தை உயர்த்திக் காட்டத்தூண்டியது எனலாம். அஃதோடு தாவீது அரசமரபு முழுவதும் மறைந்து போவதற்கும் சாட்சியாக உள்ளார். செருபாபேலில் அரச குடும்பம் தற்காலிகமாக அமைக்கப்பட்டது. நாடு கடத்தலுக்குமுன் அரசன் ஆலயத்தையும் குருத்துவத்தையும் கட்டுப்படுத்தினார் *(1 அர 1-2:8)*. நாடு கடத்தலுக்குப்பின் தாவீதின் வழித்தோன்றல், பெரிய குருவோடு சேர்ந்து அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்கிறார். ஆளு

நன் அருகில் பெரியகுரு நிற்கிறார். வெப்ப மும் ஒளியும் தருவதற்கு எண்ணெய் கொடுக் கும் இரு ஒலிவ மரங்களைப்போல் இருவ ரும் சேர்ந்து செயல் படுகின்றனர் *(4:1-3)*. செருபாபேலுக்கு முடிசூட்டப்படுகிறது *(4:4தொ)*. மெசியாப் பட்டங்கள் அளிக்கப்படு கின்றன *(3:8; 4:14; 6:11-13)*. ஆனால் இதற் குப்பின் வரலாற்றில் செருபாபேலை நாம் அறிய முடியவில்லை. தாவீது குடும்பத் தைப்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. ஆல யத்தின்மேல் செக்கரியா கொண்ட அக்கறை ஆட்சியை நிறைவுசெய்ய குருத்துவத்தின் வாரிசை உறுதிப்படுத்துகிறார். நிறுவனங் களுக்கு முக்கியத்துவம் கொடுத்தாலும் செக்க ரியா முதன்மையான இறைவாக்கினர் ஆவார். உண்ணா நோன்பு பற்றிய பிரச்சனை எழுந்தபோது இறைவாக்கினர் என்ற முறையிலேயே பதிலளிக்கிறார்.

ஆகாயைவிடத் தெளிவாகவும் விரிவாக வும் யாவருக்கும் மீட்பு உரியது என்றும் போதிக்கிறார். நாடு கடத்தலின் துன்பம், வேதனை பற்றிய நினைவு மக்களை வாட்டிய போது செக்கரியா, ''அந்நாளில் பிற இனத் தார் பலர் ஆண்டவரிடம் வந்து சேர்வார்கள்'' *(2:15)* என்று துணிவோடு அறிவிக்கிறார். மக்கள் ஆண்டவரை நாடவும், அவரது அருளை மன்றாடவும் எருசலேமுக்கு வரு வார்கள் *(8;12-22)*.

**8. செக்கரியாவும் விவிலியத்தின் பிறநூல் களும்:** இந்நூல் விவிலியக் காட்சி இலக்கிய வரலாற்றில் முக்கிய இடம் வகிப்பதையும், எசேக்கியேலைத் தழுவியுள்ளதையும் ஏற்க னவே பல இடங்களில் சுட்டிக்காட்டியுள் ளோம். புதிய ஏற்பாட்டில் திருவெளிப்பாட் டுத் திருநூல் இந்நூலை விரும்பிப் பயன் படுத்துவதாகத் தெரிகிறது. நான்கு குதிரை வீரர்க்ள் (1:7 தொ—திருவெளி 6:1-8); பரிசுத்த நகரம் அளக்கப்படுதல் (1:16-திருவெளி 11:1-2), இரு ஒலிவமரங்களும் விளக்குத்தன் டும் *(4:1-3. 11-14-திருவெளி 11:4-10)* ஆகி யவை இவ்வுண்மையை நிறுவும் சான்றுக ளாகும்.

**9. இக்காலத்திற்கு:** இறைவன் எல்லாவற் றின் மேலும் மேலாண்மை கொண்டுள்ளார். மனிதனிடமிருந்து கீழ்ப்படிதலையும் தூய் மையையும் உண்மையையும் எதிர்பார்க்கி றார். இவ்வுலகில் அவரது ஒளியாக நாம் விளங்க வேண்டுமென்றால் *(4:2-3; மத் 5:14-16; பிலி 2:15)*. நமது வாழ்விலிருந்து பாவம் அகற்றப்பட வேண்டும்; நாம் தூயவ ராக வேண்டும் *(3:3 தொ; 5:8-11)*. நமது வாழ்வு முழுவதும் உண்மையான வழி பாடாக வேண்டும்.

## செக்கரியாவின் திருநூல் - 2-ஆம் பாகம் (அதி 9-14) (ZECHARIAH, BOOK OF, CHAP 9-14)

**1. இந்நூல் பற்றிய குறிப்பு:** பன்னிரண்டு குறுநூல் இறைவாக்கினர்களின் நூல்கள் அடங்கிய தொகுப்பு, பெயர் தெரியாத இறைவாக்கினர்களின் வாக்குகள் அடங்கிய மூன்று தொகுதிகளோடு முடிகிறது. இவை ''ஓர் இறைவாக்கு'' என்ற தலைப்போடு தொடங்குகின்றன (செக் *9:1; 12:1;* மலா *1:1*). மூன்றாவது தொகுதி ஒரே ஆசிரியரின் முத்திரையைக் கொண்டிருப்பதாகத் தோன் றியது. ஆகவே அதைப்பற்றி அதற்குரிய அறிமுகத்தில் காண்க. குறுநூல் இறைவாக்கி னர் நூல்களைப் பரிசுத்த எண்ணாகிய பன் னிரண்டாக்கப் பெயரில்லாத முதல் இரண்டு தொகுதிகளையும், அதற்கு முன் இருந்த செக்கரியாவின் திருநூலோடு சேர்த்து ஒரே நூலாக அமைத்தனர். அதுதான் இப்போ தைய செக் 9-14 என்ற பகுதியாகும். இதை இறைவாக்கினர் செக்கரியா எழுதவில்லை. இது இப்போது எல்லா விவிலிய அறிஞர் களாலும் ஏற்றுக் கொள்ளப்படும் முடிவா கும். ஆனால் இப்பகுதியை இரண்டாம் செக்கரியாவின் திருநூல் என்றழைப்பர்.

முதலாவது செக்கரியா நூலுக்கும் 2-ஆம் செக்கரியா நூலுக்குமிடையே பலவேறுபாடு கள் உண்டு. அவற்றைப் பின்வருமாறு சுருக் கமாகக் கூறலாம்.

வரலாற்று நோக்கில், முதலாம் செக்கரியா வில் வரலாற்றுக் குறிப்புகள் தெளிவாக

உள்ளன. துல்லியமான நாட்குறிப்புகளை இப்பகுதி கொண்டுள்ளது. ஆலயம் மீண்டும் கட்டுதல், ஆளுநர் செருபாபேல், பெரிய குரு ஏசுவா ஆகியவற்றில் அக்கறை காட்டுகிறது. கி.மு. 520-இல் யூதர்களோடு தொடர்பு கொண்டிருந்த நாடுகள் நூலில் குறிக்கப்படுகின்றன. இவற்றிற்கு மாறாக, 2-ஆம் செக்கரியாவில், வரலாற்றுக் குறிப்புகள் இல்லை; இருந்தாலும் தெளிவாக இல்லை. நாட்குறிப்பே இல்லை. ஆலயம் மீண்டும் கட்டுதல் குறிக்கப்படவில்லை. செருபாபேல், ஏசுவா போன்று பெயர்கள் காணப்படவில்லை. கி.மு. 520-இல் யூதர்களுடன் தொடர்பு கொண்டிராத நாடுகள் முக்கியத்துவம் பெறுகின்றன. கி.மு. 6-ஆம் நூற்றாண்டில் யூதாவில் நிலவிய நிலைபற்றிய குறிப்புகள் இல்லை.

சமய நோக்கில், முதலாம் செக்கரியாவில், எருசலேம், தாவீது அரசு புத்துயிர் பெறுதல், மெசியாக் கோட்பாடு - முதலிய சமயக் கருத்துகள் முக்கியத்துவம் பெற்றுள்ளன. இக்கருத்துக்குச் செயல் முறையான எடுத்துக்காட்டாகச் செருபாபேல் விளங்கினர்; 2-ஆம் செக்கரியாவில், மேற்கூறப்பட்ட கருத்துகள் சிறப்புப் பெறவில்லை. இதில் நாம் காணும் மெசியாக் கோட்பாடு கி.மு. 520-இல் நிலவியது அன்று. இதில் முடிவுகால இறையாட்சி பற்றிய பல வகைக் கனவுகளைக் காணலாம்.

இலக்கிய அடிப்படையில், முதலாம் செக்கரியாவின் வாக்குகள் உரைநடையில் உள்ளன. இதில் மீண்டும் மீண்டும் கூறுதலும், சுற்றி வளைத்துக் கூறுதலும் உண்டு. யார் இவ்வாக்குகளை அருளியது என்றும் கூறப்படுகிறது. இதற்கு மாறாக 2-ஆம் செக்கரியாவில் வரும் வாக்குகள் பாடல் வடிவில் உள்ளன; எளிய முறையில், நேரடியாகவே அமைந்துள்ளன; தொகுப்பு வடிவில் உள்ளன. யார் கூறியது என்ற குறிப்பு இல்லை. செக்கரியாவின் பெயரே காணப்படவில்லை. அதி. 12-14-இல் அடங்கிய பகுதி பொருள் அடக்கத்திலும், சொற்றொகுதியிலும் காட்சி இலக்கிய வகையைச் சேர்ந்ததாகும்.

இக்காரணங்களுக்காக, 2-ஆம் செக்கரியா முதலாம் செக்கரியாவிலிருந்து வேறுபட்டது என்றும், 2-ஆம் பகுதியைச் செக்கரியா எழுதவில்லை என்றும் கூறலாம்.

**2. வரலாற்றுப் பின்னணியும் நூல் எழுதப்பட்ட காலமும்:** இரண்டாம் எசாயா, பாரசீகப் பேரரசன் சைரசை ''ஆண்டவர் நியமித்த ஆயன்'' என்றும், ''அபிடேகம் பெற்றவன்'' என்றும் அழைக்கிறார். இவர் பாரசீகப் பேரரசை நிறுவினார். இது இருநூறு ஆண்டுகளுக்கு (கி.பி. *538-333*) நீடித்தது. யூதா பாரசீக ஆட்சிக்கு உட்பட்டிருந்த காலத்தில் ஆகாய் செக்கரியா, மூன்றாம் எசாயா, ஒபதியா, மலாக்கி, யோவேல் ஆகிய இறைவாக்கினர்கள் பணி செய்தனர். இவர்களுடைய இறைவாக்கு நூல்களிலும், எஸ்ரா, நெகேமியா நூல்களிலும் இருந்து நாம் அறிவதைத் தவிர, பாரசீகர் காலத்தில் யூதர்களைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை; பாரசீகப் பேரரசிற்குட்பட்ட ஒரு சிறு நிலப்பரப்பாக யூதா இருந்தது.

பாரசீகப் பேரரசு தனது ஆட்சியை மேற்திசையில் பரப்ப முயன்றபோது கிரேக்கர்களோடு போராட வேண்டியிருந்தது. இந்தப் போராட்டத்தின் முடிவில் (கி.மு. *333-331*) மாமன்னன் அலக்சாந்தர் பாரசீகத்தைத் தோற்கடித்து, கிரேக்கப் பேரரசை நிறுவினார். அவர் தனது முப்பத்தி மூன்றாம் வயதில் இறந்தார். கிரேக்கப் பேரரசில் குழப்பங்களும் உள்நாட்டுப் போர்களும் நிகழ்ந்தன. அரசு பல பகுதிகளாகப் பிரிந்தது. இறுதியில் நான்கு தளபதிகள் மேலாண்மை பெற்று, நாட்டை நான்கு பகுதிகளாகப் பிரித்து ஆண்டனர். தோலமிலாகி என்பவர் எகிப்துக்கு ஆளுநன் ஆனார். எகிப்தின் ஆட்சிக்கு யூதா உட்பட்டது. கி.மு. *198*-வரை எகிப்தியர் யூதாவை ஆண்டனர். கப்பம் கட்டினாலும், யூதர்கள் ஓர் அளவு சுயாட்சி பெற்றிருந்தனர். யூதரில் பலர் எகிப்தின் தலைநகராகிய அலக்சாந்திரியாவில் குடியேறினர். அங்குதான் எபிரேய விவிலியத்தின் கிரேக்க மொழி பெயர்ப்பான ''எழுபது நூல்'' தோன்றியது.

ஒரு வேளை, நான்காம் நூற்றாண்டில் அதாவது, மாமன்னன் அலக்சாந்தரின் வெற்றிகள், மரணம் ஆகியவற்றுக்குப்பின் பேரரசின் ஆட்சியைக் கைப்பற்ற நடந்த போராட்டத்திற்குப்பின், குறிப்பாகத் தோலமியர் யூதாவை ஆட்சி செய்த காலத்தில் 2-ஆம் செக்கரியாநூல் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

2-ஆம் செக்கரியா நூலின் காலம் பற்றிய முதல் ஆய்வுக்கட்டுரை, செக் 9-11 என்ற பகுதிக்குக் கி.மு. 721-க்கு முந்திய காலத்தைக் குறித்தது. ஏனெனில் வட இஸ்ராயேலைக் குறிக்க எப்பிராயிம் என்ற பெயரும், அசீரியா, எகிப்து ஆகிய நாடுகளும் குறிக்கப்பட்டுள்ளன *(9:10.13; 10:6-7. 10-11)*. செக் *12-14* என்ற பகுதி யூதாவை மட்டும் குறிப்பிடுகிறது; யோசியாவின் மரணத்தையும் *(கி.மு. 609)* சுட்டிக்காட்டுகிறது *(12:11)*. ஆகையால், இப்பகுதி கி.மு. 609-586-க்கு இடையிட்ட காலத்தில் தோன்றியிருக்கலாம் என்றனர். இக்கருத்துக்கு எதிராக, முடிவு கால இயல், காட்சி இலக்கிய நடையில் காணப்படும் செயற்கை முறையான தொல் சொற்களையும் நாம் கவனிக்க வேண்டும். *எசா 19:23.25; 27:13*-இல் வருவதுபோல், எகிப்து, அசீரியா ஆகிய பெயர்களை அடையாளமாகவும், எடுத்துக்காட்டான பொருளிலும், ஆசிரியர் கையாண்டிருப்பதாகத் தெரிகிறது. அவை, தோலமியர், செலூக்கியர் அரசுகளைக் குறிக்கின்றன. தொல் சொற்கள் பழைய கருத்துக்களைக் கூறப் பயன்பட்டுள்ளன எனலாம். நாடு கடத்தல், சிதறிப் போதல் *(9:11-12)* ஆகியவை பற்றிய குறிப்புகளிலிருந்து, இப்பகுதி நாடு கடத்தலுக்குப் பின் தோன்றியிருக்க வேண்டும் என்பது தெளிவாகும்.

கிரேக்கர்கள் பற்றிய குறிப்பு நூலில் உள்ளது *(9:13)*. இது இந்நூல் இன்னும் பிற்காலத்தில் தோன்றியிருக்கலாம் என்பதைச் சுட்டுகிறது. 2-ஆம் செக்கரியாவின் முதற்பகுதியை *(செக் 9-11)* மாமன்னன் அலக்சாந்தரின் படையெடுப்புக்குப்பின் ஆசிரியர் எழுதியிருக்க வேண்டும். ஏனெனில் அதன் போக்கு அந்நியருக்கு ஆதரவு தருவதாக உள்ளது. இரண்டாம் பகுதியில் *(செக் 12-14)* யூதக் கோட்பாட்டைச் சேராத பண்பாடுகளுக்கு விரோதமான தீவிர எதிர்ப்பு காணப்படுகிறது. மேலும் இப்பகுதி யோவேலைத் தழுவி எழுதப்பட்டிருப்பதாகத் தோன்றுவதால், அதற்குப் பிந்தியதாகும். இரண்டாம் பகுதி கி.மு. 200-க்குச் சிறிது முந்தியதாக இருக்கலாம். ஏனெனில் சீராக்கு திருநூலின் ஆசிரியர், புனிதவேதாகமத்தின் இறைவாக்கினர் பகுதி நிறைவுறுவது போல், ''பன்னிரண்டு இறைவாக்கினர்களை'' வெளிப்படையாகக் குறிக்கிறார்.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டால் 2-ஆம் செக்கரியா நூல் கி.மு. 333-200-க்கு இடைப்பட்ட காலத்தில் தோன்றியிருக்கலாம்.

**3. ஆசிரியர்(கள்):** இந்நூலின் ஆசிரியர் யார் என்றுகூற முடியாது. இந்நூல் முழுவதையும் ஒரே ஆசிரியர்தான் எழுதினார் என்றும் கூறமுடியாது. ஏனெனில் இந்நூலின் இரு பகுதிகளுக்குமிடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் உள்ளன. முதல் பகுதி *(செக் 9-11)* ஓர் அளவு வரலாற்றை அடிப்படையாகக் கொண்டது. சில வரலாற்றுக் குறிப்புகள் உருவக முறையில் உள்ளன. இவை யாரைக் குறிக்கின்றன என்றோ, எந்த நிகழ்ச்சியைச் சுட்டுகின்றன என்றோ தெளிவாக்க் கூறமுடியாது. ஆயினும், இப்பகுதியில் வரும் இறைவாக்குகள் குறிப்பிட்ட ஆட்களையும் நிகழ்ச்சிகளையும் பற்றியதாகும். இரண்டாம் பகுதி *(செக் 12-14)* காட்சி இலக்கியத் தன்மையுடையது. இப்பகுதி, தொலைவிலுள்ள வருங்காலம் - இறுதிநாட்கள், உலக நாடுகளின் இறுதி முடிவு ஆகியவற்றை விவரிக்கின்றது. இந்த இரு பகுதிகளையும், ஏன் ஒவ்வொரு பகுதியையுமே, ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர்கள் எழுதியிருக்கலாம் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. சான்றாக, இரண்டாம் பகுதியில் எருசலேமின் மேல் பிற இனத்தவர் செய்யும் தாக்குதல்கள் பற்றிய இரு வருணனைகள் உள்ளன *(12:1-13:6; 14:1-21)*. இரு வருணனைகளையும் ஒரே

ஆசிரியர் எழுதியிருக்க முடியாது. முதல் பகுதியில் உள்ள ஆறு இறைவாக்குகளுக்கும், 2-ஆம் பகுதியிலுள்ள மூன்று இறைவாக்குகளுக்கும் பலர் ஆசிரியராக இருந்திருக்கலாம். இவர்கள் யாவரும் அலக்சாந்தருக்குப்பின், தோலமியர் பாலஸ்தீனத்தை ஆண்ட காலத்தில் வாழ்ந்திருக்கலாம். இந்த இறைவாக்குகளை ஒன்றிணைத்துப் பிற்காலப் பதிப்பாசிரியர்கள் இப்போதுள்ள நூலைப் படைத்திருக்க வேண்டும்.

***4. இலக்கியச் சிறப்பு:*** 2-ஆம் செக்கரியா நூலின் பெரும்பகுதி பாடல் வடிவில் உள்ளது. நடை தெளிவாக உள்ளது; மொழி நேரடித் தன்மையுடையது; சொற்றொகுதிகள் எளியவை. காட்சிகள் குழப்பமில்லாதவை; தெளிவானவை; விவரங்கள் குறைவாயுள்ளன. இப்பகுதி காட்சி இலக்கிய வகையைச் சேர்ந்தது. இவ்வகை இலக்கியத்தின் உன்னத வடிவைச் செக் 14-இல் காணலாம்.

2-ஆம் செக்கரியா சுயமாக எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. ஆசிரியர், தனக்கு முன் சென்ற பாரம்பரியங்களிலிருந்து சுதந்தரமாக எடுத்துக் கையாளுகிறார்; எரேமியா, எசேக்கியேல், 2-ஆம் எசாயா, 3-ஆம் எசாயா, மலாக்கி, யோவேல் ஆகியோரின் வாக்குகளைச் சுட்டிக் காட்டுகிறார் அல்லது அவற்றிலிருந்து வாக்குகளை எடுத்துக் கையாளுகிறார். தொடக்ககாலத் திருச்சபையை இந்நூலின் முன்னறிவிப்புகள் பெரிதும் பாதித்துள்ளன. செக் *9:9*= மத் *21:4*தொ; யோவா *12:12-15;* செக் *9:12* தொ=மத் *27:3-10;* செக் *12:10*=யோவா *19:37;* செக் *13:7*=மத் *26:31;* மாற்கு *14:27).*

இந்நூலின் எபிரேய வாசகம் பெரிதும் பழுதுபட்டுள்ளது. இது விளக்கவுரை ஆய்வாளர்களுக்கு ஒரு சவாலாக அமைந்துள்ளது.

***5. நூலின் திட்ட அமைப்பு:*** 2-ஆம் செக்கரியாவை செக் 9-11; செக். 12-14 ஆக இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். இரண்டும் ''ஓர் இறைவாக்கு'' என்ற சொற்றொடரோடு தொடங்குகின்றன.

*1.* **முதல் பகுதி** *(9:1-11:17):-*

*1. 9:1-8:* ஆண்டவரின் படையெடுப்பு.

*2. 9:9-10:* வருங்கால மெசியா அரசன்.

*3. 9:11-17:* இஸ்ராயேலை மீண்டும் நிறுவுதல்.

*4. 10:1-12:* புதிய அமைப்பு.

*5. 11:1-3:* அந்நிய கொடியவர்களுக்காகக் கேலிப்புலம்பல்.

*6. 11:4-17:* ஆயர்கள் பற்றிய உருவகம்.

*2.* **இரண்டாம் பகுதி** *(12:1-14:21):-*

*1. 12:1-9:* எருசலேமின் வருங்கால மீட்பும் வளமும்.

*2. 12:10-14:* பெரும் புலம்பல்.

*3. 13:1-6:* பொய்மையின் முடிவு.

*4. 13:7-9:* வாள் பற்றிய பாடல்.

*5. 14:1-21:* இறுதிப்போர்; புதிய எருசலேம்.

***6. செய்திகளின் சுருக்கம்:*** பாரசீகப் பேரரசு வீழ்ச்சியுற்றபோது, மக்களிடையே நம்பிக்கை வளர்ந்தது. கிரேக்க மாமன்னன் அலக்சாந்தரின் எரிநட்சத்திரம் போன்ற வெற்றிகள், மெசியாவின் நாள் வரும்போது இறைவன் என்ன செய்வார் என்பதை இறைவாக்கினருக்கு நினைவூட்டின. 2-ஆம் எசாயா சைரசுவின்பால் கொண்டிருந்தது போலவே, 2-ஆம் செக்கரியாவும் அலக்சாந்தர்பால் நம்பிக்கையுணர்வு கொண்டிருக்கலாம். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் மேலும் உலகத்தின் மேலும் ஆட்சியை நிறுவ ஆண்டவரால் அபிடேகம் பெற்றவனாக இவனைக் கருதியிருக்கக்கூடும். அவ்வரசில் வெறுத்து ஒதுக்கப்பட்ட பெலிஸ்தியா கூட ''இறைவனுக்கு எஞ்சியதாய் ஆகும். அது யூதாவின் குலங்களில் தலையாயது ஆகும்'' *(9:7).* பலிசெலுத்த எல்லோரும் எருசலேமுக்கு வருவர் *(14:21).* அதற்குமுன், அந்நியருக்கு எதிராக மிகக்கடுமையான போர் நிகழவிருப்பதை இறைவாக்கினர் எதிர்நோக்குகிறார் *(செக் 12:14).* இந்நூலில் விவரிக்கப்படும் இறுதிப் போராட்டம் யோவேலில் காணப்படுவது போன்றதே.

ஆனால் அஃதோடு ''வெட்டப்பட்டவர்'' இணைக்கப்படுகிறார். அவரதுமரணம் இறுதிப் போராட்டத்தில் மீட்புத் தன்மையுடையதாக உள்ளது. நல்லாயன் (11:4-16; 13:7-9), ''வெட்டப்பட்டவர்'' (12:10-14) ஆகியோரின் பெரும் துன்பங்களால் மக்கள் தூய்மை பெறுவர். இந்தப் பெரும் தலைவர்களோடு கொண்ட பந்தத்தால், அவர்களது வெற்றியிலும் பரிசுத்தத்திலும் மக்கள் பங்கு பெறுவர். துக்க நாளில் குருக்கள் அரச குடும்பத்தோடு சமநிலை கொண்டிருப்பர்; தாவீதின் குடும்பம் ஏழைகளோடு ஒன்றாகும். இவர்களுக்கு இறைவன் தமது அரசை வழங்குவார். இந்த அரசு சாந்தத்திலும் நீதியிலும் எளிமையிலும் அமையும் (9:9). சடங்கு வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட இறையரசு பற்றிய விவரிப்பு (அதி. 14) எசேக்கியேலை நமக்கு நினைவூட்டுகிறது. ஆனால் அதன் முன்னோக்கு பரந்ததாகும்.

ஆலயத்தைச் சுற்றி ஒரு சமூகம் அமைக்கப்படும். ஆலயம் உலகம் அனைத்திற்கும் சமய மையமாக அமையும். தாவீது மரபு புத்துயிர் பெறும் (12:7-13:1). தாழ்ச்சியும் சாந்தமும் உள்ள மெசியா (9:9-10) தொன்று தொட்டு வரும் அரச நம்பிக்கையையும் எளியோரின் எதிர்பார்ப்பையும் ஒன்றிணைத்து நிறைவேற்றுவார். பரிசுத்த வழிபாட்டிலிருந்து இறைவனது ஆசீர் நாடு முழுவதும் பரவும். மெசியாவின் ஆட்சி நித்திய கூடார விழாவாகவும், அபரிமிதமான அறுவடைக்கு மக்கள் அளிக்கும் தொடர் நன்றியறிதலாகவும் இருக்கும் (14:8-16).

**7. இக்காலத்திற்கு:** காலந்தோறும் கிறிஸ்தவர்கள் இந்த இறைவாக்கு நூலை வியப்போடும் நன்றியோடும் வாசித்துப் பயன் எய்தியுள்ளனர். இந்நூலிலே இறைமகனாம் இயேசு கிறிஸ்துவைக் கண்டு மகிழ்ந்துள்ளனர். அவரே வெற்றி வீரராய், சாந்தமும் தாழ்ச்சியும் மிக்கவராய் (9:9; மத் 21:4-5) வந்த மெசியா என்று அறிந்து விசுவசித்துள்ளனர். இந்நூல் குறிக்கும் ''வெட்டப்பட்டவரை'' அடையாளம் கண்டு அன்பு செய்துள்ளனர் (12:10; யோவா 19:37). அவரில், நாம் மீட்புப் பெற (1 பேதுரு 2:24-25) கொடுமையாக வெட்டப்பட்ட (13:7; மத் 26:31) நல்லாயனைக் கண்டு வழிபட்டு வந்துள்ளனர்.

இந்நூலில் எருசலேமைக் குறித்துக் கூறப்பட்டவையெல்லாம் இயேசுவுக்கும் பொருந்தும். அவருக்கும் இருளின் அரசனுக்கும் பயங்கரப் போராட்டம் நடந்திருக்கிறது; நடந்து கொண்டிருக்கிறது. இறுதியில் இந்தத் தீயவனை மெசியா வெல்வார். இப்போராட்டத்தில் வியப்பு மிக்க மகிழ்ச்சியாக மாறும் நம்ப முடியாத துன்பங்களை இறைவாக்கினர் விவரிக்கிறார். ''இறைவன் அன்பாய்'' இருக்கிறார் (1 யோவா 4:8) என்பது உண்மையானாலும்; அவரது அன்பு வலிமை மிக்கது; தூய்மையானது; தாம் தேர்ந்து கொண்டவர்களின் நித்திய வாழ்வைச் சிறு பாவமோ மகிழ்ச்சியின்மையோ கறைபடுத்தப் பொறுத்துக் கொள்ளார். அவரைப் போல் அவரது மக்களும் தூய்மையாய் இருப்பர்; அவர்களது வாழ்வில் மகிழ்ச்சி நிறைந்து வழிந்தோடும். அவர்களது வாழ்வு ''நித்திய கூடார விழாவாக'' அமைந்திருக்கும்.

### செக்கரியாவின் பாடல் (BENEDICTUS)

லூக் 1:68 - 79-இல் காணப்படும், திருமுழுக்கு யோவானின் தந்தையான செக்கரியாவின் பாடல். மரியாளின் பாடல் போல் இதுவும் ஒரு சங்கீதம். பாலஸ்தீன ஆதிக் கிறிஸ்தவ குழுக்களால், பழைய ஏற்பாட்டுப் பாடல், மற்றும் இறைவாக்குப் பகுதிகளை இணைத்துப் பாடப்பட்டதாகும். இது மரியாளின் பாடலைவிட அதிகமாக மீட்பரைப் பற்றிக் கூறுகின்றது. தாவீதின் இல்லத்திலிருந்து புதிய தலைவர் எழுந்து வருவதை வருணிக்கின்றது. ஆதிகாலக் கிறிஸ்தவ பாரம்பரியத்தின்படி திருமுழுக்கு யோவான் கிறிஸ்துவின் வழியை ஆயத்தப்படுத்தும் முன்னோடி. மேற்காசியத் திருச்சபைகளிலும் இலத்தீன் திருச்சபையிலும் இந்தப் பாடல் காலை வழிபாட்டில் பயன்படுத்தப்படுகின்றது.

**செக்கனியா** (SHECANIAH - *யாவே குடியேறி விட்டார், யாவேயோடு வாழ்பவர்*)

1. நாடு கடத்தப்பட்ட யோயாக்கின் அரசன் மற்றும் செருபாபேலின் வழி வந்த தாவீதின் வழித்தோன்றல் (1 நாள் 3:21-22). நாடு கடத்தலிலிருந்து திரும்பிவந்த ஒரு குடும்பத்தின் தலைவர். செமாயா (10)வின் தந்தை.

2. தாவீது காலத்தில் குருக்களின் பத்தாவது பிரிவுக்குத் தலைமைக்குரு (1 நாள் 24:11).

3. எசேக்கியாவின் காலத்திலிருந்த ஒரு குரு. இவர் கோவில் காணிக்கையைத் தன் உடன் குருக்களுடன் பகிர்ந்து கொள்வதற்கு உதவி செய்தவர் (2 நாள் 31:15).

4. யாகசியேலின் மகன் சத்தூவின் வழித்தோன்றல். இவர் நாடு கடத்தப்பட்டதிலிருந்து எஸ்ராவோடு யூதாவுக்குத் திரும்பியவர்களில் ஒருவர் (எஸ் 8:5).

5. எகியேலின் மகன் நாடு கடத்தப்பட்டு, பாபிலோனிலிருக்கும்போது புறவினப் பெண்ணை மணந்தவர்களில் இவரும் ஒருவர் (எஸ் 10:2-3). இவர்தான் ''நாடு கடத்தப்பட்டுத் திரும்பியவர்கள், புறவின மனைவிகளையும், மக்களையும் இஸ்ராயேல் மத்தியில் ஆண்டவரின் கட்டளைப்படி விட்டு விடட்டும்'' என எஸ்ராவுக்கு ஆலோசனை கூறியவர்.

6. செமாயாவின் தந்தை; வாயிற்காவலர். இவர் நெகேமியாவின் காலத்தில் எருசலேம் மதிற் சுவரை மீண்டும் கட்டியவர்களில் ஒருவர் (நெகே 3:29).

7. ஆரகுவின் தந்தை; அம்மோனியனான தோபியாவின் மாமனார் (நெகே 6:8). இவர் நெகேமியா எருசலேம் சுவரைப் பழுது பார்ப்பதைத் தடைசெய்ய முயன்றவர்.

8. இவர் நாடு கடத்தப்பட்டு, பாபிலோனிலிருந்து செருபாபேலுடன் திரும்பிய ஒரு குரு (நெகே 12:3; 1 நாள் 24:1). இவர் நெகே 10:4; 12:14-இல் சொல்லப்பட்டிருக்கும் செபன்யாவாக (3) இருக்கலாம்.

9. அற்றுசின் (கத்தூசு) (1) தந்தை. இவர் நாடு கடத்தப்பட்டதிலிருந்து எஸ்ராவோடு யூதாவுக்குத் திரும்பினார் (எஸ் 8:3). 1-இல் வருபவரும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**செக்கீனா** (SHEKINAH - *உறைதல், தங்குதல்*)

இறைவன் மனுக்குலத்திடையே பிரசன்னமாய் இருப்பதைக் குறிக்கும் யூதராபிகளின் மங்கல வழக்காகும். காண்க. இறைவனின் பிரசன்னம் / திருமுன்.

**செக்குந்து** (SECUNDUS - *இரண்டாவது*)

இவர் தெசலோனிக்கே நகரவாசி; அரிஸ்தர்க்கின் தோழன். பவுல் எருசலேமுக்கு இறுதிப்பயணம் சென்றபோது வழித்துணையாகச் சென்றவர்களில் ஒருவர் (அ.ப. 20:4). இவர்கள் துரோவா வரைக்கும்தான் சென்றிருக்கலாம். இப்பயணத்தில் மாசிதோனியாவில் எருசலேமிலுள்ள ஏழைக் கிறிஸ்தவர்களுக்காகச் சேகரித்த உதவியைப் பவுலும் அவரது தோழர்களும் கொண்டு சென்றனர். இந்த உதவியைச் சேகரிப்பதில் செக்குந்து பவுலின் ஆட்களில் ஒருவரானதால் (1 கொரி 16:3-4; 2 கொரி 8:23) அவர் எருசலேமுக்கு முழுப்பயணம் செய்தார் எனலாம்.

**செக்கேமின் கோட்டை** (SHECHEM, TOWER OF)

அபிமெலக்கு தீயினால் அழித்த ஓர் இடமாகும். அவரது தாக்குதல் ஏல் - பெரீத்துவின் கோட்டையை அழித்தது. அதில் அதைப்பாதுகாத்த ஓராயிரம் மக்கள் மடிந்தனர் (நீதி 9:46-47).

முன்பு இந்தக் கோட்டை செக்கேம் நகருக்குக் கொஞ்சம் தொலைவிலிருந்தது என்று கருதப்பட்டது. ஏனெனில் நகரத்தின் அழிவைப் பற்றிக் கேட்டபின்புதான் மக்கள் இந்தக் கோபுரத்துக்குள் தஞ்சம் புகுந்தனர் என்று கூறப்பட்டுள்ளது (9:46). அனேகமாக இந்தக் கோபுரம் (மித்தால்) நகரத்தினுள்

இருந்திருக்கலாம். இங்குக் கோட்டை அரனுடைய ஏலின் கோவில் இருந்திருக்கலாம் (9:4.6). செக்கேமைச் சேர்ந்த அகழ்வாய்வு பருமனா உள்ள சுவர்களோடு கூடிய ஒரு பெருங்கட்டடத்தை வெளிக் கொணர்ந்துள்ளது. இது கோவில் கோட்டை மற்றும் கோபுரம் என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**செக்கேம்** (SHECHEM - தோள், கழுத்து, சரிவு) - ஆள்

1. இவர் கீவியரான (இவ்வியர்) காமோரின் (ஆமோர்) மகன். யாக்கோபின் மகள் தீனாவை இவர் கற்பழித்ததால், அவளது சகோதரர்கள் கிமியோன் மற்றும் லேவி ஆகியோர் இவரையும் இவரது நகரத்து ஆண்களையும் கொன்று பழி தீர்த்தனர் (ஆதி 34; யோசு 24:32; நீதி 9:28).

2. யோசேப்பு, மற்றும் அவரது முதல் மகனான மனாசேயின் வழித்தோன்றல்களில் ஒருவர் (எண் 26:31; யோசு 17:2). செக்கேமியர்கள் தங்களது பெயரைத் தங்களது குலத் தோன்றல் மூதாதையரான இவரிடமிருந்து பெற்றனர்.

3. மனாசே குலத்தைச் சேர்ந்த செமிதாவுக்கு இரண்டாவது மகனாகப் பிறந்தார் (1 நாள் 7:19). இவரும் 2-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**செக்கேம்** (SHECHEM - மலையின் தோள், கழுத்து, சரிவு) - இடம்

எப்பிராயிம் மலைப்பகுதியில் ஏபால் மலைக்கும் கெரிசிம் மலைக்கும் இடையில் அமைந்த கானானிய, இஸ்ராயேல் நகரம். இஸ்ராயேலரின் கூட்டாட்சியை நிறுவிய உடன்படிக்கைச் சடங்கு நடந்த இடம் (யோசு 24). எகிப்திய பன்னிரண்டாம் அரச மரபைச் சேர்ந்த பழிப்புரை வாசகம், அப்சு - அதாதால் ஆட்சி செய்யப்பட்ட நகரமாகச் செக்கேமைக் குறிப்பிடுகிறது. அமர்னா ஏடுகள் லபாயு என்ற அரசனின் நகரமாக இந்நகரைக் குறிப்பிடுகின்றன. இவர் அதைத் தன் ஆட்சிக்குட்பட்ட பல நகரங்களின் மையமாக ஆக்கினார்.

ஆபிரகாம், கானான் வந்து சேர்ந்தபின் செக்கேமிலுள்ள மோரேயின் கருவாலி மரத்தடியில் ஆண்டவருக்கு ஒரு பீடம் கட்டினார் (ஆதி 12:6-7). யாக்கோபு மெசபொத்தாமியாவின் பதான் - ஆராமிலிருந்து திரும்பி வந்தபின் செம்கேம் மக்களிடமிருந்து ஒரு நிலத்தை வாங்கி அங்குத் தனது கூடாரங்களை அமைத்தார் (33:18-19). ஆபிரகாமைப் போல் யாக்கோபும் செக்கேமில் ஒரு பீடம் கட்டினார் (33:20). இங்குதான் காமோரின் மகன் செக்கேம் (1) யாக்கோபின் மகள் தீனாவைக் கற்பழித்தான். இச்செயலைக் கண்ட அவளது சகோதரர்கள் சிமியோனும் லேவியும் பழிவாங்கினர் (ஆதி 34). யாக்கோபு தன் மனைவியர்களின் வீட்டுச் சிலைகளைச் செக்கேம் அருகிலுள்ள கருவாலி மரத்தடியில் புதைத்தார் (35:4). காமோரிடமிருந்து யாக்கோபு வாங்கிய அதே நிலத்திலே யோசேப்பின் எலும்புகள் புதைக்கப்பட்டன (யோசு 24:32; அ.ப. 17:16). செக்கேமில் நடந்த உடன்படிக்கைச் சடங்கின் ஒரு பகுதியாக ''ஆண்டவரின் திருத்தலத்தில் ஒரு கருவாலி மரத்தின் கீழ்'' யோசுவா ஒரு பெரும் கல்லை நாட்டினார் (யோசு 24:26).

மனாசே எப்பிராயிம் இனங்களுக்குரிய பகுதிகளுக்கிடையில் அமைந்திருந்த செக்கேம் (யோசு 17:7) ஒரு லேவியர் நகரமாகவும் தஞ்சமளிக்கும் நகரமாகவும் ஆயிற்று (20:7; 21:21). செக்கேமில் பாகால் - பெரித்தின் (ஏல் - பெரீத்து) ஆலயம் ஒன்று இருந்தது (நீதி 9:4.46). கிதியோன் இறந்தபின், செக்கேம் மக்கள் கிதியோனின் மகன் அபிமெலக்கை அரசனாக்கி அவருக்கு இந்த ஆலயத்திலிருந்து எழுபது வெள்ளிக்காசுகளை அளித்தனர் (9:4). அபிமெலக்கின் ஆட்சிக்கு எதிராக அவர்கள் கிளர்ச்சி செய்த போது அவர் இந்நகரை அழித்தார் (9:45). செக்கேம் கோட்டையில் வாழ்ந்த மக்கள் இக்கோயிலுக்குள் அடைக்கலம் புகுந்தனர். அபிமெலக்கு இக்கோயிலுக்குத் தீ வைத்து அழித்தார் (9:46-49).

சாலமோன் மரணத்திற்குப்பிறகு ரெகபயாம், வடஇனத்தவரை யூதாவுடன் ஒன்றிணைந்து இருக்க அழைப்பதாக வடக்கில் செக்கேமில் தனது முடி சூட்டுதலை நடத்தினார் (1 அர 12; 2 நாள் 10). ஆனால் வட இனத்தவர் பிரிந்து போய் முதலாம் எரொபவாமைத் தங்கள் அரசனாகவும் செக்கேமைத் தங்கள் தலைநகரமாகவும் ஆக்கினர் (1 அர 12:20.25). வட தலைநகரம் திரட்சாவுக்கு மாற்றப்பட்ட பின்பும் செக்கேம் மாகாணத் தலைநகராக விளங்கியது. கி.மு. 722-இல் செக்கேம் அசீரியர்களால் அழிக்கப்பட்டது. பாபிலோனிய ஆளுநன் கெதல்யாவைக் கொன்றவர்களால் மிஸ்பாவில் கொல்லப் பட்டவர்களில் செக்கேமிலிருந்து வந்த திருயாத்திரீகர்களும் அடங்குவர் (எரே 41:5). நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய எஸ்ரா மற்றும் நெகேமியாவால் அமைக்கப்பட்ட சமூகங்களோடு செக்கேம் தொடர்புபடுத்திக் கூறப்படவில்லை. அலக்சாந்தர் காலத்தில் செக்கேம் சமாரியர்களின் நகரங்களில் முக்கியமாக விளங்கியதாகவும் யோவான் கிரிக்கானுவால் அழிக்கப்பட்டதாகவும் யோசிப்பசு கூறுகிறார்.

கி.பி. 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து எருசலேமுக்கு வடக்கில் 64 கி.மீ. தொலைவிலும் நபுலுசுக்குக் கிழக்கில் 1 1/2 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ள தேல் பலாத்துதான் செக்கேம் இருந்த இடமென்று அடையாளம் காட்டப்படுகிறது. கி.மு. 3600-க்கு முன்பே இங்குப் பல கிராமங்கள் தோன்றியிருந்ததாகத் தெரிகிறது. இரண்டாம் மத்திய வெண்கலக் காலத்தில் (1900 - 1540) குறிப்பாகக் கைக்சோசுகள் எகிப்தில் ஆண்ட காலத்தில் செக்கேம் ஒரு முக்கிய நகர - நாடாக விளங்கியது. 16-ஆம் நூற்றாண்டில் நகரம் பயங்கரமாக அழிக்கப்பட்டுள்ளது. 14.- ஆம் நூற்றாண்டில் மீளவும் முக்கியமான நகரநாடாகத் தலையெடுத்தது. இதற்கு அமர்னா ஏடுகள் சான்று பகர்கின்றன. இந்தக் குடியேற்றம் கி.மு. 1125-இல் அழிக்கப்பட்டதோடு, முடிவுக்கு வந்தது. ஒரு வேளை இந்த அழிவு அபிமெலக்கால் ஏற்பட்டதாக இருக்கலாம் (நீதி 9). நூறாண்டுகளுக்குப்பின் நகரம் மீளவும் கட்டியெழுப்பப்பட்டது. இந்நகரம் 722-இல் அசீரியர்களால் அழிக்கப்படும் வரை நீடித்தது. கிரேக்கர் காலத்தில் இந்நகரம் சமாரியர்களால் மீண்டும் கட்டப்பட்டது. இது கெரிசீம் மலையிலுள்ள சமாரியர் கோவிலுடன் தொடர்புடையது. கி.மு. 107-இல் யோவான் கிரிக்கானுவால் அழிக்கப்பட்டபின் கைவிடப்பட்டது.

அகழ்வாராய்ச்சிகளில் பல கோவில்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றில் முந்தியவை அரண்மனைப் புனிதத் தலங்களாகும். இவை ஆதியாகமத்தில் குறிக்கப்பட்டிருப்பது போன்று ஒரு மரத்தைச் சுற்றி எழுப்பப்பட்ட புனித இடங்களாக இருக்கலாம். பிறகு பலத்த கோட்டைகளைக் கொண்ட கோவில்கள் கட்டப்பட்டன. இவற்றில் யோசுவா நாட்டிய பெரும் கல்லைப் போன்ற தூண்களும் அடங்கும். செக்கேமிலுள்ள புனித இடங்கள் பற்றிய பாரம்பரியம் பழைய ஏற்பாட்டில் பிரதிபலிக்கிறது என்பது தெளிவு. இவை அமைந்த இடம் அரசியல் மாற்றங்களுக்கு ஏற்றவாறு மாறின.

### செக்கேர் (ZECHER)

பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர். கிபயோன் வழிவந்தவர் (1 நாள் 8:31). காண்க: செக்கரியா - 5.

### செக்கேல் (SHEKEL)

நிறுத்தலுக்கும் நாணயமாகவும் பயன்பட்ட ஓர் அளவையாகும். கி.மு. 7-ஆம் நூற்றாண்டில் நாணயம் அச்சடிக்கப்படத் தொடங்கும் வரை பண்டமாற்றாகப் பயன்பட்ட உலோகங்கள் நிறுக்கப்பட்டன. பாபிலோனியர் காலத்தில் செக்கேலின் எடை 8.3 கிராமிலிருந்து 16.7 கிராம் வரை வேறுபட்டது. செக்கேல் பற்றிய பழைய ஏற்பாட்டுப் பல குறிப்புகள் 11.4 கிராம் எடையுள்ள அளவையைக் குறிக்கின்றன. இதற்கு விதிவிலக்காக இதில் பாதி எடையுள்ள மேதிய நாணயம் நெகே 5:15; 10:32-இல் குறிக்கப்படுகிறது எனலாம். புதிய ஏற்பாட்டுக் காலத்

தில் ஒரு வெள்ளிச் செக்கேல் (வெள்ளிக் காசு மத் 26:15) 10 முதல் 15 கிராம் வரை எடை கொண்டிருந்தது. இது நான்கு திராக்குமாக் களுக்குச் சமம். யூதர்களின் முதல் கிளர்ச்சி யின்போது (கி.மு. 66-70) ஒரு வெள்ளிச் செக்கேல் ஏறக்குறைய 14.27 கிராம் எடையு டையதாக இருந்தது.

செங்கடல் (RED SEA)

தெற்கில் பாவு ஏல் - மத்தேபு சலசந்தியி லிருந்து வடக்கில் சீனாய்த் தீபகற்பம் வரை பரவியும், வடகிழக்கு ஆப்பிரிக்காவை அரா பியத் தீபகற்பத்திலிருந்து பிரிப்பதுமாக அமைந்துள்ள பரந்த நீர்ப் பரப்பை இப் பெயர் குறிக்கும். வடக்கில் இதன் கரைகள் மேற்கு சூயஸ் வளைகுடாவுக்குள்ளும் கிழக் கில் அக்காபா வளைகுடாவிற்குள்ளும் செல் லுகின்றன. பழங்காலக் கிரேக்க ஆசிரியர்கள் செங்கடல் என்ற பெயரை, அது உரிய விதத்தில் குறிக்கும் செங்கடலையும், அரா பிய வளைகுடாவையும், இந்தியப் பெருங் கடலையும் குறிக்கப் பயன்படுத்தியுள்ளனர்.

பழைய ஏற்பாட்டில் யாம் சுப்பு'' என்ற பெயர் அக்காபா வளைகுடாவையும் (யாத் 23:1; எண் 21:4; உப 1:40; 1 அர 9:26; நீதி 11:6), சூயஸ் வளைகுடாவையும் (யாத் 10:19; 13:18; எண் 33:10-11) எகிப்தைவிட்டு வெளியேறியபோது இஸ்ராயேலர் கடந்த கடலையும் (யாத் 15:4.22; உப 11:4; யோசு 4:23; 24:6; நெகே 9:9; சங் 136: 13.15) குறிக்கப் பயன்பட்டுள்ளது. இஸ்ராயேலர் கடந்த கடல் எது என்பதுபற்றி அறிஞர்களுக் கிடையே கருத்தொற்றுமையில்லை எனலாம். இது கசப்பு ஏரிகளாகவும், மென்சலே ஏரியாக வும், சொர்போனி ஏரியாகவும், சூயஸ் வளைகுடாவாகவும் இருக்கலாம் என்று பல வாறு கருதுவர்.

''யாம் சுப்பு'' என்பதற்குப் பொருள் நாணல் கடல், புல் அல்லது கோரைக்கடல் என்று இப்போது பொதுவாக ஏற்றுக்கொள் ளப்படும். இக்கருத்து சுப்பு என்ற சொல் லின் எகிப்திய வடிவம் நாணல், அல்லது கோரை என்று பொருள்படும் என்ற கருத் தினை அடிப்படையாகக் கொண்டது. இப் பொருளில் ''சுப்பு'' என்பது யாத் 2:3.5; எசா 19:6; யோனா 2.5-இல் பயன்பட்டுள்ளது. இராமேசேசு நகருக்கு அருகில் உள்ள நாணல் சதுப்பு நிலம் எகிப்திய வாசகங்க ளில் குறிக்கப்பட்டிருப்பதால், இதுதான் இஸ்ராயேலர் கடந்து சென்ற ''நாணல் சதுப்பு நிலம்'' என்ற நீர்ப்பரப்பு (எண் 33:5-8) என்று பலர் கருதுவர். ஆனால் ''நாணல் சதுப்பு நிலம்'' என்ற பெயர் தென் எகிப்தில் உள்ள பல சதுப்பு நிலங்களைக் குறிக்கும் பொதுப்பெயராகும்.

இக்கருத்தை மறுத்துக் கூறுபவர், ''யாம் சுப்பு'', என்ற பெயரில் வரும் சுப்பு என்ற சொல்லை 'முடிவு, அழிவு' என்ற பொருள் படும் ''சோப்பு'' என்ற எபிரேயச் சொல் லோடு தொடர்புபடுத்துகின்றனர். காலங் களுக்கு முந்திய மூலக்கடலையும் அதன் மேல் இறைவன் கொள்ளும் வெற்றியையும் விவரிக்கும்போது இச்சொல் பயன்பட்டிருக் கலாம் (யோனா 2:5) என்பது யாத்திரைக் கடலை ''யாம் சுப்பு'' என்று குறிக்க வழி கோலியிருக்கலாம். இத்தகைய பாதிப்பு யாத்திரையை விவரிப்பதில் மற்ற வழிகளி லும் காணப்படுகிறது (சங் 18:4-5-ஐ யாத் 15:4-5ஒடு ஒப்பிடுக). இப்பாதிப்புகள் எவ் வாறு இருந்தாலும், பழைய ஏற்பாட்டில் ''யாம் சுப்பு'' பயன்படும்போதெல்லாம் உலகின் முடிவில் உள்ள கடல் என்பதையே குறிக்கின்றது எனலாம். அதாவது தெற்கில் பாலஸ்தீனத்திற்கும் அராபியாவுக்கும் அப் பால் உள்ள பரந்த நீர்ப் பரப்பையே குறிக் கின்றது. இது பழைய ஏற்பாட்டில் ''சோப்பு'' என்பது; மற்ற இடங்களில் பயன்படுவ தோடு ஒத்துப் போகிறது. இச்சொல் கால அல்லது இறுதிக்கால நோக்கைவிட இட நோக்கையே கொண்டுள்ளது.

யாத் 23:1; எண் 14:25; 21:4; உப 1:40; 2:1; நீதி 11:16; 1 அர 9:26; 2 நாள் 8:17 - ஆகிய பகுதியில் வரும் ''யாம் சுப்பு'' செங்கடலையே குறிக்கிறது. இதையும் யாத் 23:31 - இல் வரும் இஸ்ராயேல் நாட்டின் எல்லைகளைப் பற்றிய விவரிப்பையும்

சேர்த்து நோக்கும்போது ''யாம் சுப்பு'' உண்மையான செங்கடலையல்ல, அக்காபா வளைகுடாவையே குறிக்கிறது எனலாம். ஆனால் அக்காபா வளைகுடாவைச் செங்கடல் என்று அழைப்பது அவ்வளவு பொருத்தமுடையதன்று. ''யாம் சுப்பு'' என்ற பெயர் வரும் மற்றக் குறிப்புகள் யாவும் (யாத் 10:19; 13:18; 15:4. 22; எண் 33:10 தொ; உப 11:4; யோசு 2:10; 4:23; நெகே 9:9; சங் 106:7.9.22; 136:13.15) இஸ்ராயேல் கடந்து சென்ற நீர்ப் பரப்பையே குறிக்கின்றன. ஆனால் இது சூயஸ் வளைகுடா அன்று, சூயஸ் இடுக்கின் வடகரையில் மத்திய தரைக்கடலுக்கருகில் உள்ள ஏரிகளில் ஒன்றாக இருக்கலாம்.

### செங்கல் (BRICKS)

கட்டடங்கள் கட்டுவதற்குப் பாலஸ்தீனம், எகிப்து, மெசபொத்தாமியா போன்ற பகுதிகளில் செங்கற்களே சாதாரணமாகப் பயன்படுத்தப்பட்டன. எகிப்திலும், மெசபொத்தாமியாவிலும் களிமண் ஏராளமாகக் கிடைத்தது. பாலஸ்தீனத்தில் கற்களே அதிகம் காணப்பட்டன. கல்வேலை செய்பவர்கள் அதிகம் இல்லாமல் இருந்ததாலும், அதற்கான உலோகக் கருவிகள் இல்லாமல் இருந்ததாலும், செங்கற்கள் செய்வது முக்கியத்துவம் பெற்றிருந்தது. களிமண்ணைக் காலால் பிசைந்து அஃதோடு வைக்கோலையும் சேர்த்துச் செங்கற்கள் செய்தார்கள். சுட்ட செங்கற்கள் மெசபொத்தாமியாவில் அதிகம் காணப்பட்டன (ஆதி 11:3). இஸ்ராயேலர்கள் எகிப்தில் செங்கற்கள் செய்வதை அடிமைத் தொழிலாகக் கொண்டிருந்தார்கள் (யாத் 1:14; 5:6 தொ). எகிப்திலும், பாலஸ்தீனத்திலும் கற்கள் ஆடம்பரத்தின் அடையாளமாகக் கருதப்பட்டன (எசா 9:9). எனவே அவைகள் அரண்மனைகள் கட்டுவதற்கும், ஆலயங்கள் கட்டுவதற்கும் மட்டுமே பயன்படுத்தப்பட்டன. கட்டடங்கள் தற்கால முறைகளில் கட்டப்படாததால், அடிக்கடி இடிந்து விழுந்துவிடும் அபாயம் இருந்தது (எசா 30:13; எசே 13:10 தொ). மரச் சட்டங்கள், கட்டடங்களில் குறுக்குத் தூண்களாகப் பயன்படுத்தப்பட்டன. ஆனால் இவற்றில் நெருப்புப் பற்றி கொள்ளும் அபாயம் இருந்தது. ஈரத்தினால் செங்கற்கள் பாதிக்கப்பட்டன. அனேகமாக மழைபெய்த உடன் செங்கற்கள் கரைந்து வீடுகள் இடிந்துவிடும். எபிரேய நூற்களில் பாபேல் கோபுரத்தைக் கட்டியவர்கள்தான் (ஆதி 11:3) செங்கற்களைக் கண்டுபிடித்தவர்கள் என்று கூறப்பட்டுள்ளது. அசூர் — நசீர் — பல், சார்கோன், நெபுகத்னேசர் ஆகியோரின் கட்டடங்களில், பட வடிவங்களில் எனாமல் பூசப்பட்ட செங்கற்கள் காணப்படுகின்றன. ஆனால் இஸ்ராயேலில் இது காணப்படவில்லை.

இராபாவில் பிடிபட்ட அம்மோனியக் கைதிகளைத் தாவீது செங்கல் சூளை வேலையில் ஈடுபடச் செய்ததாக 2 சாமு 13:31 கூறுகிறது. நாகூ 3:14, ஒரு வேளை எகிப்தில் செங்கல் செய்யும் முறையைச் சித்தரிக்கலாம்.

### செங்கிடாரி (RED HEIFER)

இறந்தவனைத் தொட்டதால் தீட்டுப்பட்டிருப்பவனது தீட்டை நீக்குவதற்குப் பயன்படும் "தீட்டகற்றும் நீரில்" கலப்பது இந்தச் செந்நிறமுள்ள கிடாரியின் சாம்பலாகும்.

இந்தச் செந்நிறமுள்ள கிடாரிபற்றி எண்ணாகமத்தைத் தவிர வேறு எங்கும் கூறப்படவில்லை. இச்செந்நிறக் கிடாரி வேறு எதற்கும் பயன்படாததாய் எந்தமாசு மறுவும் இன்றி பலிக்கு ஏற்றதாக இருக்க வேண்டும் (லேவி22:20-25; உப 17:1). இத்தகைய கிடாரி குருவிடம் கொண்டுவரப்பட வேண்டும். அவர் அதை எடுத்துப் பாளையத்திற்கு வெளியே கொண்டு சென்று அதனைக் கொல்ல வேண்டும் (எண் 19:2-3). பின்னர் அதன் இரத்தத்தில் தன்விரலைத் தோய்த்து உடன்படிக்கைக் கூடாரத்தின் முன்புறம் ஏழு முறை தெளிக்கக் கடவார் (19.4). இப்படி அது யாவேக்கு உரிய புனிதப் பொருளாகும். உண்மையில் இது பலியல்ல. ஏனெனில் அது எரிக்கப்படுவது பாளையத்திற்கு வெளியேதான். பலிபீடத்தில் அன்று. எல்லா இரத்தமும், மாட்டுச் சாணமும் கூட எரிக்கப்பட வேண்டும். இது பழைய ஏற்பாட்டிலே வித்தியாசமானதாக இருக்கிறது.

ஏனெனில் வழக்கமாக இரத்தம் அனைத்தும் வடித்து எடுக்கப்பட்டுப் பீடத்தில் தெளிக்கப் படுவதுதான் வழக்கம். குரு எரியும் கிடாரி யின் மேல் கேதுரு மரக்கட்டையையும், ஈசோப்பையும், சிவப்பு நூலையும் போடக் கடவார். இவை மூன்றும் தூய்மைப்படுத்தும் சடங்கில் இரண்டாந்தர முக்கிய பங்கு வகிக் கின்றன (எண் *19:10.17;* எபி *9:13*). இந்தச் சாம்பல் பாளையத்திற்கு வெளியே பத்திர மாகச் சேகரித்து வைக்கப்பட்டது (*19:4*). ஏனெனில் இறப்பினால் தீட்டுப்படுபவ னைத் தூய்மைப்படுத்த இது மீண்டும் பயன் படும் என்பதற்காக இவ்வாறு செய்யப்பட் டது.

ஒருவன் இறந்தவனுடன் ஏற்பட்ட தொடர்பால் தீட்டுப்பட்டால் இந்தச் சாம்ப லுடன் ஒரு பாத்திரத்தில் நீர் கலக்கப்பட்டு, ஈசோப்பினால் தீட்டுப்பட்டவன் மேலும் அந்த வீடு முழுவதும் தெளிக்கப்படவேண் டும். இது ''தீட்டகற்றும் அல்லது தீட்டுக் கழிக்கும் நீர்'' என அழைக்கப்படும். தீட்டுப் பட்டவன் ஏழுநாள் தூய்மையின்றி இருப்ப தால் மூன்றாம் நாளும் ஏழாம் நாளும் இது தெளிக்கப்பட வேண்டும்.

'பசு' என்பதற்குப் பயன்படும் சாதாரணச் சொல்லே எண் *19*-இல் பயன்படுத்தப்படு கிறது. பின்னர் வரும் விளக்கங்களிலிருந்தும், பாகால் புராணத்தில் 'பசு', 'கிடாரி' என்பன மாறிமாறிப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதிலிருந்தும் 'கிடாரி' என்ற சொல்லை எடுத்துக் கொள்கின்றனர். புறவின மக்களிட மிருந்து செங்கிடாரிச் சடங்கை இஸ்ராயே லர் பெற்றிருக்கலாம்.

இஸ்ராயேலின் தொடக்க காலத்தி லிருந்தே 'கிடாரி' பலிப்பொருளாகப் பயன் படுத்தப்பட்டது (ஆதி *15:9; 1* சாமு *16:2*); பெண் செம்மறிஆடுகளும், வெள்ளாடு களும் பாவப்பலிகளுக்குப் பயன்பட்டன (லேவி *4:28; 5:6, 14:10.13;* எண் *6:14*). சிவப்புநிறம், பழைய ஏற்பாட்டில் சுத்தி செய்ய மிகவும் பயன்பட்ட இரத்தத்தைச் சுட்டலாம். மண்ணின் நிறத்தையும் குறிக்க லாம். கிடாரி அழகின் அடையாளமாகவும் (எரே *46:20*), பாலியலைக் குறிக்கவும் (*50:11*); பிடிவாதத்தைக் குறிக்கும் அடையாளமாக வும் (ஓசே *4:16*) இருக்கின்றது.

அன்று புறவின மக்களின் பலினவழிபாடு, இறந்தவர்கள் வழிபாடு ஆகியவற்றில் கிடாரியைப் பலியிட்டனர். இவ்வழிபாடுகள் இஸ்ராயேலர்களுக்குத் தடை செய்யப்பட்டவை யாகும். ஆகவே இஸ்ராயேலர் செங் கிடாரிச் சடங்கை வேறுமுறையில் விளக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. தீட்டுப் பட்டிருப்பது யாவேயின் புனிதத்துவத்தை அவமதிப்பது போலாகும். எனவே தீட்டுப் பட்டிருப்பது வரை அவனுக்கும் கடவுளுக்கு மிடையேயுள்ள உறவு பாதிக்கப்படுகிறது. தீட்டுப்பட்டிருப்பது குருக்களின் எண்ணப் படி பாவத்திற்குச் சமமானது. எனவே பாவப்பலியாகக் கிடாரி எரிக்கப்பட்டது (எண் *19:9.17*). பொதுவாகப் பழைய ஏற்பாட் டில் நீர்தான் தூய்மைப்படுத்தும் கருவியாகப் பயன்படுத்தப்படும். ஆனால் இங்கு நீர் கிடாரியின் சாம்பலைச் சுமந்து செல்லும் ஒன்றாகவே பயன்படுகிறது. இதைத்தான் எபிரேயருக்கு எழுதிய திருமுகத்தில் கிடாரி யின் சாம்பல் உடலைத் தூய்மைப்படுத்தி யது. கிறிஸ்துவின் இரத்தமோ நமது மனச் சான்றைத் தூய்மைப்படுத்துகிறது என்கிறார் ஆசிரியர் (எபி *9:13-14*). இங்கே நீர் வாழ் வின் அடையாளமாகக் கருதப்படுகிறது. ஏனெனில் ஊற்றிலிருந்து எடுக்கப்பட்ட நீரில் கலக்க வேண்டும் என்று குறிப்பிடப் படுகிறது.

### செங்கோல் (SCEPTER)

இது குறிப்பாக ஆயனின்கோல் (சங் *23:4;* மீக் *7:14*) என்றும் 'கோல்' என்றும் குறிக்கப் படும். இது போர்க்கருவியாகவும் பயன்பட லாம் (யாத் *21:24,* மீக் *4:14*). இஸ்ராயேலின் ஆயனாகிய யாவேயின் கோலையும் குறிக் கும்.

செங்கோல், அரசுரிமை அல்லது மற்ற அதிகாரத்தன்மையின் அடையாளமாக இருக்கும். இவ்வாறுதான் பழைய ஏற்பாட்

டில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது அரசர்களாலும் மற்ற ஆட்சியாளர்களாலும் கொண்டு செல்லப்படும் (*ஆதி 49:10; எண் 24:17; சங் 2:9; 45:6; எசா 14:5; எசே 19:11. 14; ஆமோ 1:5.8*). அனேகமாக ஆகுபெயராய் அரசனைக் குறித்துக் காட்டலாம். செங்கோலைக் குறிக்கும் ''சேபெத்'' என்ற எபிரேயச் சொல்லானது ஒரு குழுவைக் குறிக்கிறது. குழுத்தலைவர் தன் குழுவை, மற்றக் குழுவிலிருந்து வேறுபடுத்திக் காட்டச் செங்கோலைக் கொண்டு செல்வர். பழைய மேற்காசியக் கலை செங்கோலைக் கடவுளர்களும், மனிதர்களும் கொண்டு செல்வதாகச் சித்தரிக்கிறது. செங்கோலைப் போன்ற ஒரு பொருள் இஸ்ராயேல் அரசுரிமைச் சின்னங்களின் ஒரு பகுதியாகும் (*ஆதி 49:10; சங் 45:6; 110:2; எசே 19:4*). எகிப்து, மோவாபு தமஸ்கு, அஸ்கலோன் போன்ற அரசுகளின் தொடர்பில் இந்தச் செங்கோல் குறிப்பிடப்பட்டுள்ளது (*எரே 48:17; ஆமோ 1:5.8; செக் 10:11*). மாபெரும் அரசராகிய யாவேயின் செங்கோல், யூதா குலமாகும். இக்குலத்தைத் தாவீது பேரரசன் சேர்ந்தவராவார் (*சங் 60:7; 108:8*). இக்கருத்து, தாவீது அரச மரபு இறை அதிகாரத்தின் அரச நீட்டிப்பாகும் என்பதை உருவகமாகக் கூறுகிறது. செங்கோல் அரசனின் தாக்கும் அதிகாரத்தை உருவகப்படுத்துகிறது (*எண் 24:17; சங் 125:3; எசா 14:5*).

புதிய ஏற்பாட்டில் எபி 1:8-இல் மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது சங் 45:6-இலிருந்து எடுக்கப்பட்டதாகும்.

### செசரியா (CAESAREA)

கர்மேல் மலைக்குத் தெற்கே 37 கி.மீ. தொலைவில் பாலஸ்தீனக் கரையிலுள்ள ஒரு நகரம்.

இது முதலில் பெனிசிய நகரமாகவோ, கோட்டையாகவோ இருந்ததாகத் தோன்றுகிறது. இது ஸ்திராத்தோன் அல்லது ஸ்திராதோ கோபுரம் என்று அழைக்கப்பட்டது. இது இப்பெயர் கொண்ட சீதோன் நாட்டு அரசனால் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது. மக்கபேயர் காலத்தில் கொடுங்கோலன் சோயிலசிடமிருந்து அலக்சாந்தர் யன்னாயு இதைக் கைப்பற்றினார் (கி.மு. 96). கி.மு. 63-இல் இந்த நகரம் பாம்பேயால் விடுவிக்கப்பட்ட பின்பு, அகுஸ்துவினால் பேரரசன் ஏரோதுக்குக் கொடுக்கப்பட்டது. சீசர் அகுஸ்துவின் பெருமைக்காக ஏரோது இந்நகரைச் செசரியா என்றும், துறைமுகத்தைச் செபஸ்தோஸ் (அகுஸ்து) என்றும் பெயரிட்டார். செசரியாவைத் திரும்பவும் கட்டும் இவருடைய பேராசையானது 12 ஆண்டுகள் கடந்தும் கி.மு. 10-இல்கூட கட்டுமானம் முடிக்கப்படவில்லை. கி.மு. 10-இல் பகட்டான விளையாட்டுப் போட்டிகளோடு இது திறக்கப்பட்டது. தன்னுடைய அரசிற்குப் பொருத்தமான ஒரு துறைமுகத்தை அமைக்கும் பொருட்டு ஏரோது இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கலாம். மீதி பாலஸ்தீனத்துடன் தொடர்பு கொள்ள இந்த இடம் மிகவும் சிறப்பானதாகும். ஆளுநர்களுக்கு அடியில் இவ்விடம் அவர்களுடைய ஆட்சிப் பீடமாகவும், பாலஸ்தீனத்தின் தலைநகரமாகவும் அமைந்தது. இது பிறமதத்தினர் நிறைந்த இடமாக இருந்திருந்தாலும் கணிசமான எண்ணிக்கையுள்ள யூதர்கள் இருந்தார்கள். கி.பி. 66-இல் யூதர்களுக்கும், புறவினத்தாருக்கும் இடையில் நடைபெற்ற குழப்பங்கள், உரோமைக்கு எதிராக யூதர்கள் செய்த போர்களின் தொடக்கமாக அமைந்தது. பிற்காலத்தில் இது ஆயர்களுடைய இருப்பிடமாகவும், ஒரிசன் (*185-254*), பம்பிலியு (*240-309*), யுசேபியு (*260-340*) ஆகியவர்களின் கல்வி மையங்களாகவும் இருந்தது.

இது இயற்கையான துறைமுகமாக இல்லாததால் ஏரோது 60 மீட்டர் அகலமுள்ள ஓர் அலைதாக்குக் கரை கட்டினார். கடற்கரையிலிருந்து 145 மீட்டருக்கு நீட்டி வைக்கப்பட்டுள்ள பெரிய பெரிய கற்களை இன்றும் காணலாம். இந்தத் துறைமுகத்தின் வாயிலில் பெரிய கட்டடங்களும் உரோமா, அகுஸ்து சிலைகளும் உள்ளன. இது கிரேக்க நகரத்தைப் போன்ற கட்டடங்களைக் கொண்டிருந்தது. ஒரு பகுதிமட்டும்தான் தோண்டி எடுக்கப்பட்டுள்ளது; கி.பி.4 அல்

லது 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கட்டடம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

புதிய ஏற்பாட்டில் தியாக்கோன் பிலிப்பு போதித்த இடமாக இது முதன் முறையாகக் கூறப்படுகிறது (அ.ப. *8:40*). அவர் தன் பணியின் மையமாக இவ்விடத்தைப் பயன் படுத்தினார். இங்குத் தங்கியிருந்த நூற்றுவர் தலைவனான கொர்னேலியுவைப் பேதுரு மனம் மாற்றினார் (*10:1.24; 11:11*). முதலாம் ஏரோது அகிரிப்பா இதைத் தன் உறைவிட மாக மாற்றினார். தீர், சீதோன் மக்களால் ஒரு கடவுளாக ஏற்றுக் கொள்ளப்பட்டபின் இங்குதான் அவர் இறந்தார் (*12:19-23*). பவுல் தர்சுக்குச் சென்ற பொழுது இதன் வழியாகக் கடந்துசென்றார் (*9:30*). தன்னுடைய இரண் டாவது, மூன்றாவது மறைபரப்பும் பயணங் களை முடித்துவிட்டுத் திரும்பும்பொழுது இவ்விடம் வழியாகச் சென்றார் (*18:22;21:8*). பவுல் கைது செய்யப்பட்ட பின்பு இங்குக் கொண்டுவரப்பட்டு, பெலிக்சு, பெஸ்து ஆகியோரின் முன்னணியில் கொண்டு செல் லப்பட்டார் (*23:23; 25:12*). இரண்டாம் அகி ரிப்பாவின் முன் தோன்றிய பின்பு பவுல் இங்குச் சிறைக்கைதியாக இருவருடங்கள் தங்கினார். பவுல் செசரியாவிலிருந்து உரோமைக்குக் கடற்பயணம் செய்தார் (*24:13-27:2*).

## செசரியா பிலிப்பி (CAESAREA PHILIPPI)

கெர்மோன் (எர்மோன்) மலையின் தென் மேற்குச் சரிவில் உள்ள ஒரு நகரம்; விவிலி யத்தில் மத் *16:13*; மாற் *8:27*-இல் மட்டும் தான் இது குறிப்பிடப்படுகின்றது.

**1. இடமும் விவரிப்பும்:** இது பாலஸ்தீ னத்திலேயே மிகவும் அழகான, செழிப் புள்ள, நகரங்களுள் ஒன்றாகும். ஏனெனில் இது கடல் மட்டத்திலிருந்து 345 மீட்டர் உயரத்தில் மேல்தளத்தில் யோர்தான் பள் ளத்தாக்கின் வடமுனையை நோக்கிய வண் ணம் இருக்கின்றது. வடகிழக்குத் திசையில் 2800 மீட்டர் உயரமுள்ள கெர்மோன் மலை யுள்ளது. யோர்தான் ஊற்றுகளுள் ஒன்று தோன்றும் குகையிலிருந்து இவ்விடத்திற் குத் தண்ணீர் வருகின்றது. மேற்கிலுள்ள செழிப்பான நிலங்களைப் பாதுகாப்பதால் இது தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்தக் குகைக் குள் உள்ள புனித இடத்தால் இந்த இடம் இன்னும் முக்கியத்துவம் பெறுகின்றது. இந் தப் புனிதஇடம் பூர்வீகமானது. ஏனெனில் கிரேக்கர்கள் இந்தக் குகையை ஒரு திருத் தலமாகப் பான், நிம்ப்ஸ் என்ற கடவுள் களுக்கு ஒப்புக் கொடுத்திருக்கிறார்கள். இந்த இடமானது பல செமித்தியக் கடவுள்களுக்கு அனேகமாகப் பழைய ஏற்பாட்டுப் பாகால் - காது அல்லது பாகால் - கெர்மோன் கடவுளுக்கு ஒப்புக் கொடுக்கப்பட்ட இடமாக இருக்கலாம் (யோசு *11:17* தொ; நீதி *3:13*; 1 நாள் *5:23*). புதிய ஏற்பாட்டுக் காலத்தில் குகையும் ஊற்றும் பனேயோன் என்றும் அதைச் சேர்ந்த நகரமோ மாவட் டமோ பனேயா என்றும் அழைக்கப் பட்டன.

**2. வரலாறு:** பேரரசன் அந்தியோக்கு எகிப்தைத் தோற்கடித்த முக்கியமான போரின் (கி.மு. 200) இடமாகப் பனேயா தோன்றுகிறது. கி.மு. முதலாம் நூற்றாண் டில் இது செனோதோருசின் ஆட்சியின் பகுதியாக இருந்தது. ஆனால் கி.மு. 20-இல் அரசன் இறந்த பிறகு அகுஸ்து இதை ஏரோ துக்குக் கொடுத்தார். ஏரோது இங்கு வெள் ளைச் சலவைக்கற்களால் ஒரு கோவிலைக் கட்டி அகுஸ்துவிற்கு அர்ப்பணித்தார். கி.மு. 4-இல் ஏரோது இறந்தபிறகு, இது பிலிப்பின் ஆட்சியில் சேர்ந்தது. இவர் கி.பி. 34-வரை ஆண்டார். பிலிப்பு இதைப் பெரிதாக்கி, அழகுப்படுத்தித் திபேரியு சீசருடையவும், தன்னுடையவும் பெருமைக்காக இந்த இடத் திற்குச் செசரியா பிலிப்பு என்று பெயரிட் டார். பிறகு இந்த இடம் இரண்டாம் அகிரிப் பாவின் ஆட்சியின் கீழ் வந்தது (கி.பி. 50). இதை இவர் நீரோவின் பெருமைக்காக நீரோனியா என்று பெயரிட்டார். 66 முதல் 70 வரை நடந்த யூதப் போரில் தீத்து, வெஸ்பாசியன் படைகள் தங்கும் இடமாக இது சொல்லப்பட்டுள்ளது. உரோமையர், பைசாந்தியர் காலங்களிலும் சிலுவைப் போர்க்காலங்களிலும் இது தொடர்ந்து முக்

கியமான இடமாக இருந்தது. அதேயிடத்தி லுள்ள பானியா என்ற ஊரின் பெயரில் பூர்வீகப் பெயரான பனேயா இன்னும் ஒலிக் கிறது. பூர்வீக நகரத்தின் சில பொருட்கள் தான் இன்னும் இருக்கின்றன.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் இது ஒரு முக்கியமான நகரமாகவும், கிரேக்க உரோ மைப் பண்பாட்டின் மையமாகவும் இருந் தது. அதிகமான பிறமத மக்கள் தொகை யைக் கொண்டிருந்தது. இந்தநகரம் சுற்றி யுள்ள பல இடங்களைக் கட்டுப்படுத்தி வந்தது. இது மத் *16:13*-இல் ''பிலிப்புசெச ரியா நகர்ப்புறம்'' என்றும் மாற் *8:27*-இல் ''பிலிப்பு செசரியாவைச் சார்ந்த ஊர்கள்'' என்றும் குறிப்பிடப்படுகிறது. இங்குதான் இயேசு ''மக்கள் தன்னை யாரென்று கூறு கிறார்கள்?'' என்று தன்னுடைய சீடர்களைக் கேட்க, பேதுரு ''நீரே கிறிஸ்து. கடவுளின் மகன்'' என்று பதிலளித்தார் *(மத் 16:13-16; மாற் 8:27-29)*.

**செதாது** *(ZEDAD - பக்கம்)*

இது கானானின் வடக்கு எல்லை நாட்டில் உள்ள ஓரிடம் *(எண் 34:8; எசே 47:15)*. இது பாம்மீரா, இரிப்லா சாலைக்கு வடக்கில் அமைந்துள்ள சாதாது நகரமாக அடையா ளம் காட்டப்படும். இது தமஸ்குவுக்கு வட கிழக்கில் *105* கி.மீ. தொலைவிலுள்ளது.

**செதில் (மீன்)** *(SCALES)*

இது விவிலியத்தில் பல எபிரேய, கிரேக் கச் சொற்களின் மொழிபெயர்ப்பாகும். இஸ் ராயேலருக்குச் செதிலும் சிறகும் (துடுப்பும்) உள்ள மீன்கள்தான் உணவாக உட்கொள்ள அனுமதிக்கப்பட்டிருந்தன *(லேவி 11:9-12; உப 14:9-10)*. 'கேடயம்' என்று யோபு *41:8*-இல் லேவியாத்தானின் செதில்கள் உரு வகமாகக் குறிக்கப்படுகின்றன. அ.ப. *9:18*-இல் பவுல் பார்வைபெற்றதைக் கண் களிலிருந்து செதில் போன்றவை விழுந்தன என்று உருவகமாக விவரிக்கப்பட்டுள்ளது.

**செதுக்கிய உருவம் அல்லது சிலை** *(GRAVEN IMAGE)*

கல்லிலோ, உலோகத்திலோ, கட்டை யிலோ செதுக்கப்பட்ட உருவச்சிலையாகும் *(உப 27:15; நீதி 17:3-4; 2 நாள் 34:3; நாகூ 1:14)*. இதுக்கும் வார்ப்புச் சிலைக்கும் வித்தி யாசமுண்டு. சிலை என்பதால் இரண்டும் எபிரேயர்களால் நிராகரிக்கப்பட்டன.

பண்டைய மேற்காசிய நாடுகளில் தெய் வங்களைக் குறித்துக் காட்டுவதற்குச் செதுக் கிய சிலைகள் பயன்படுத்தப்பட்டன. இது ஆதி ஆகமத்திலோ குல மூதாதையர்கள் மற்றும் அவர்கள் கானான் நாட்டில் செய்த பயணத்திலோ குறிக்கப்படவில்லை. ஆனால் உப *7:5; 12:3*-இன்படி கானானியர் கள் இதைப் பயன்படுத்தினர். சிலைகள் செய்யக்கூடாது என்று பத்துக் கட்டளைகள் எபிரேயர்களைத் தடை செய்கிறது *(யாத் 20:4; உப 5:8)*. அவர்கள் இத்தகைய உருவங் களை மிருகங்களாகவும், பறவைகளாகவும், மனிதர்களாகவும் செதுக்குதல் இங்குக் குறிக் கப்படுகிறது *(காண் உப 4:16)*. ஐந்நூலின் பிற இடங்களிலும் இது கண்டனம் செய் யப்பட்டுள்ளது *(லேவி 26:1; உப 4:23.25; 27:15)*; இறைவாக்கினர்களும் இதைக் கண்ட னம் செய்துள்ளனர் *(எசா 10:10; 21:9; 30:22; எரே 8:19; 10:14; 51:47; ஓசே 11:2; மீக் 1:7; 5:13; நாகூ 1:14; அப 2:18)*. நீதி *17:1-4*-இன்படி எப்பிராயிமின் மலைப்பகுதியில் வாழ்ந்த மீக்காவின் குடும்பத்திற்காக வெள் ளிச் சிலைகள் செதுக்கப்பட்டு ஆண்டவரின் வழிபாட்டில் அவை பயன்படுத்தப்பட்டதா கத் தெரியவருகின்றது. மரத்தாலும் செய்யப் பட்டு, பின் எரிக்கப்பட்டது என்பது உப *7:5*-இல் தெரிய வருகின்றது. மனாசே இவ்வு ருவச் சிலைகள் செய்ததற்காகக் கண்டனம் செய்யப்படுகின்றார் *(2 நாள் 33:19; காண் 2 அர 21:7)*. யோசியாவின் சீர்திருத்தத்தின் போது இவ்வுருவச் சிலைகள் அழிக்கப்பட் டன *(2 நாள் 34:4)*.

**செதுக்குதல்** *(CARVING, ENGRAVING)*

யாத் *31:5; 35:33*-இல் கற்களிலும், மரங்களி லும் உருவங்கள் செதுக்கப்பட்டன என்று கொடுக்கப்பட்டுள்ளதால் இந்தக் கலை யாத் திராகம காலத்திலேயே இஸ்ராயேலருக்குத் தெரிந்திருந்தது என்று சுட்டுகிறது. ஆனால் *2* சாமு *5:11*-இல் உள்ள கூற்று அரசர்கள்

காலத்தில்தான் இக்கலை, வளர்ந்தது என்பதைக் குறிக்கின்றது. இஸ்ராயேலின் பண்பாட்டு வளர்ச்சியுடன் செதுக்கும் கலையும் வளர்ச்சியடைந்தது எனலாம். இது பெனிசிய, எகிப்து, மெசபொத்தாமியக் கலைப் பாரம்பரியங்களால் பாதிக்கப்பட்டது.

செதுக்கப்பட்ட சிலைகளையும் அவைகளின் உற்பத்தியாளர்களையும் வசைபாடும் பகுதிகளைத்தவிர (லேவி *26:1*; எண் *33:52*; உப *4:28*; எசா *40:18-20*; *44:9-20*; எரே *2:27*; *10:10*; எசே *8:10.12*; *23:14*; ஞான *13:13*; *14:16*) மரம், கல், உலோகம் ஆகியவற்றால் செய்யப்பட்ட பொருள்கள் பற்றி, பழைய ஏற்பாட்டில் வந்துள்ள மற்றக் குறிப்புகள் அனைத்தும் சாட்சிக் கூடாரத்தையும் (யாத் *31:5;35:33*), எருசலேம் ஆலயத்தையும் சேர்ந்தவையாகும். வெண்கலத்தள்ளுவண்டிகளிலும் (*1* அர *7:31. 36*), ஒலிவ மரங்களிலும், சித்திம் கதவுகளிலும், கேதுரு மரங்களிலும் (*1* அரச *6:18.29.32.35*; எசே *41:17-20*; சங் *74:6*) உருவங்கள் செதுக்கப்பட்டன.

மணிக்கற்கள் (யாத் *28:9.11.21.35;...*), தந்தம், உலோகம், கற்கள், மரம் ஆகியன செதுக்கு வேலை செய்யப்பயன்பட்டன. அவற்றின்மீது உருவங்களும், எழுத்துக்களும் பொறிக்கப்பட்டன.

**செதூர்** (SETHUR - மறைத்து வைக்கப்பட்ட)

ஆசேர் வம்சத்தில் தோன்றிய மிக்கேலின் மகன். இவர் கானான் நாட்டின் வலிமையைக் கண்டறிய வேவுபார்க்கச் சென்றவர்களில் தன் வம்சத்தின் பிரதிநிதியாகச் சென்றவர் (எண் *13;13*).

**செதேக்கியா** (ZEDEKIAH - யாவே (என்) நீதிநேர்மையாவார்)

1. கெனானாவின் மகனான இவர் ஒரு போலி இறைவாக்கினர். ஆகாபு அரசன் காலத்திய அரமேயர்களுக்கு எதிராக இராமோத்து கிலயாதில் அரசன் வெற்றிபெறுவார் என்று இவர் நாடகப் பாணியில் போலி இறைவாக்கு உரைத்தார் (*1* அர *22:11-12*; *2* நாள் *18:10-11.23*). ஆனால் இம்லாவின் மகனான உண்மையான இறைவாக்கினரான மீக்காயா தோல்வியை முன்னறிவித்தார். அரசன் அவரைச் சிறையில் அடைத்துவிட்டு போருக்குச் சென்றார். போருக்குச் சென்ற அரசன் ஆண்டவர் வாக்கின்படி கொல்லப்பட்டார்.

2. இவர் யோசியாவின் மூன்றாவது மகனும் (*1* நாள் *3:15*) யோவகாசின் சகோதரனுமாவான். இவர் யோயாக்கினுக்குச் சிற்றப்பனும், அவருக்கு அடுத்தபடியாக யூதா நாட்டை ஆண்டவரும் யூதாவின் கடைசி மன்னருமாவார் (கி.மு. *597-587*). இவருடைய மூலப்பெயர் மத்தனியா (*1*) ஆகும். பாபிலோனிய மன்னர் நெபுகத்னேசர் மத்தனியாவை யோயாக்கினுக்குப் பதிலாக அரசனாக்கி அவருக்குச் செதேக்கியா என்ற மறுபெயரை இட்டார் (*2* அர *24:17-18*; *2* நாள் *36:10*). செதேக்கியாவும் அவரிடமிருந்த தலைவர்களும் பாவம் புரிந்ததனால் ஆண்டவர் கோபம் கொண்டார். அவர்களுக்கு வரப்போகிற தண்டனை பற்றி எரேமியா முன்னறிவித்தார் (எரே *24:8-10*). செதேக்கியா பாபிலோனியருக்கு எதிராய்க் கிளம்பாமல் அவர்களுக்கு அடிபணிந்து வாழ்வதே நல்லது என அவர் உரைத்தார் (எரே *27*). இதைக் கேட்காமல் செதேக்கியா பாபிலோனுக்கு எதிராய்க் கலகம் செய்தார். பாபிலோனியர் எருசலேமை முற்றுகையிட்டபோது அரசனைச் சரணடைய வேண்டினார் எரேமியா. மேலும் யூதர்கள் விடுதலை செய்த அடிமைகளை மீண்டும் அடிமைகளாக வைத்திருக்கக்கூடாது எனக் கண்டித்தார் (எரே *34*). இவரது சொல்லைக் கேட்காவிட்டாலும் செதேக்கியா எரேமியாவை இறைவாக்கினராக மதித்து இறைவாக்கு சொல்லும்படி கேட்டார். இவரும் எதிரிகளை எதிர்த்து நீங்கள் போர் செய்தால் தோல்வியடைவீர்கள் என மொழிந்தார் (எரே *21*). மேலும் அவர் எரேமியாவிடம் ஆள் அனுப்பி ஆண்டவரிடம் மக்களுக்காக மன்றாடக் கேட்டார் (எரே *37:3-4*).

எரேமியா பென்யமின் நாடு செல்லக் கிளம்பியபோது அதன் வாயிற்காவலன்

இவர் நாட்டை விட்டுத் தப்பி ஓடுவதாக நினைத்து, அவரைப்பிடித்துச் சிறையில் அடைத்தான். மறுபடியும் அரசன் இறை வாக்கு கேட்க, அவருக்கு அழிவே வந்து சேரும் என இவர் கூறினார் (எரே 37:11-21). எரேமியா சரணடைவது நல்லது எனத் தொடர்ந்து போதித்தார். எனவே தலைவர் கள் அரசனிடம் இவரைக் கொல்லுமாறு வேண்டினர். இரத்தப்பழிக்கு அஞ்சி அரசன் இவரைப் பாழுங்கிணற்றில் தள்ளினார். பின் னர்த் தன் அடிமையொருவனின் சொல் கேட்டு இவரை விடுதலை செய்தார். மறு படியும், சரணடையலாமா என்று யோசித்த அரசன் பிறர் ஏளனம் செய்வார்களே எனப் பயந்து எரேமியா சொல் கேட்க மறுத்தார் (எரே 38). எருசலேம் முற்றுகையிடப்பட்ட பின் சில வீரருடன் பாலைவனத்திற்குச் செல்லும் வழியே செதேக்கியா தப்பி ஓடி னான். கல்தேயரின் படையினர் அவரைப் பின் தொடர்ந்து எரிக்கோ நகரின் சமவெளி யில் அவரைப் பிடித்தனர். மேலும் அவரை இரிப்லாவில் தங்கியிருந்த பாபிலோனிய அரசனிடம் கொண்டு வந்தனர். அவர் செதேக்கியாவுக்கு எதிராய்த் தீர்ப்பிட்டார். அவரது புதல்வரை அவரது கண்முன்னே வெட்டினார். மேலும் அவரது இரு கண் களையும் பிடுங்கியபின் விலங்கிட்டு அவ ரைப் பாபிலோன் நகருக்குக் கொண்டு சென் றார். அதன்பின் அவரைப்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. ஒருவேளை அங்கே மரித் திருக்கலாம்.

அவரின் எல்லாக் குடிகளும் அவரை முறையான அரசரென ஏற்றுக்கொள்ள வில்லை. ஏனெனில் அன்னிய ஆதிக்கத்தால் அவர் அரசுக்கு வந்தவராவார். இவ்வாறே எரேமியாவும் கருதியிருக்கலாம். ஏரேமியா யோயாக்கினைத் தாவீது மரபின் கடைசி அரசனாகக் கருதுவதாகத் தெரிகிறது. செதேக்கியா எரேமியாவோடு கொண்ட தொடர்பு அவர் விசுவாசி என்று காட்டு கிறது; ஆனால் நாட்டுப்பற்றுடைய தீவிரவாதி களை முழுமையும் அவரால் கட்டுப்படுத்த முடியவில்லை.

*3.* யூதாவின் அரசன் யோயாக்கிமின் மக னும், யோயாக்கினின் சகோதரனும் ஆவார் *(1 நாள் 3:16; 2 நாள் 36:9-10).*

*4.* நெகேமியா தலைமையில் ஏற்பட்ட உடன்படிக்கையில் கையொப்பமிட்ட ஒரு குரு *(நெகே 10:1).*

*5.* இறைவாக்கினர் எரேமியா காலத்தில் வாழ்ந்த இவர் மாசேயாவின் மகனாவார். இந்தச் செதேக்கியாவும் மற்றவரும் ஒழுக் கங்கெட்டு வாழ்ந்ததாகவும், பொய் இறை வாக்குக் கூறியதாகவும் எரேமியா குற்றம் சாட்டுகிறார். மேலும் பாபிலோனிய அரசன் நெபுகத்னேசர் அவர்களைக் கொல்வாரென வும் எரேமியா முன் மொழிந்தார் *(எரே 29:21-23).*

*6.* இவர் கனனியாவின் (அனனியா) மக னாவார். யூதாவின் அரசன் யோயாக்கிமின் அரசவை அதிகாரிகளில் இவரும் ஒருவர். இவர் எரேமியாவின் இறைவாக்குகளைப் பாரூக்கு ஏட்டுச் சுருளிலிருந்து வாசிப்ப தைக் கேட்டு, அதைப்பற்றி அரசனுக்குத் தெரிவித்தவர்களில் ஒருவர் *(எரே 36:12).*

**செதேயூர்** (SHEDEUR - சத்தாய் ஒளியானவர், நெருப்பானவர்)

இவர் எலிசூரின் (எலிட்சூர்) தந்தை. பாலைவனத்தில்ரூபன் கோத்திரத்தின் தலைவரர்க இருந்தார் *(எண் 1:5; 2:10; 7:30.35; 10:18).* இப்பெயரின் எழுத்துக்கள், 'வெளிச்சம்' அல்லது 'தீ' என்பதிலிருந்து வந்திருக்கலாம் என்று சொல்லப்படுகிறது. பழைய ஏற்பாடு மேற்கோள்களைக் *(சங் 36:9; எ 2:5)* கருத்தில் கொண்டால் முதல் பொருள் (ஒளி) சாலச்சிறந்ததாகத் தெரிகிறது.

**செத்தர் - போசனாய்** (SHETHAR - BOZENAI)

''நதிக்கு அப்பால்'' பாலஸ்தீனம் உட்பட உள்ள மாநிலத்தின் பாரசீக அதிகாரி. எருச லேம் ஆலயம் மீண்டும் கட்டப்படுவதற்கு இடையூறு செய்தவர்களில் ஒருவர்.

ஆளுநர் தத்னாயிவும் இவ்வதிகாரியும் சேர்ந்து யூதர்கள் எருசலேம் ஆலயத்தை

மீண்டும் கட்டுவதற்கு அரசனின் அனுமதி பெறப்பட்டதா இல்லையா என்பது பற்றி அரசன் தாரியுவுக்குக் கடிதம் எழுதினார்கள். அரசன் அவ்வேலையை உதவி செய்து ஊக்கு விக்கும்படி இவர்களுக்கு ஆணை அனுப் பினான் (எஸ் 5:3-6:13).

**செந்துறை (FAIR HAVENS)**

கிரேத்தா தீவின் தென்கரையில் அமைந் திருந்த ஒரு துறைமுகம் (அ.ப. 27:8). ''காலோஸ் லிமியோனாஸ்' என்று இன்று அழைக்கப்படுகிற லித்தினோஸ் முனையின் கிழக்கு வளைகுடாதான் அந்தத் துறைமுகம் என்பதில் சந்தேகம் ஒன்றுமில்லை. நங்கூர மிட்டுத் தங்குமிடமான இது கிழக்கிற்கும், தென் கிழக்கிற்கும் இணைப்புப் பாதையாக உள்ளது. மேலும், மிகச்சிறிய தீவுகளால் இது ஓரளவு பாதுகாக்கப்படுகிறது. 1853 - இல் கப்பல் தலைவன் ஸ்பராத் என்பவர் துறைமுகத்தின் உயர்ந்த மலையில் பவு லுக்கு ஒப்புக் கொடுக்கப்பட்ட கோயில் ஒன்று இடிந்து கிடப்பதைக் கண்டார். குளிர் காலத்தில் கிழக்கு, தென்கிழக்குத் திசையி லிருந்து வளைகுடாவுக்குள் வீசும் காற்றால் துறைமுகம் பாதுகாப்பற்றும் இடைஞ்சல் நிறைந்ததாகவும் இருப்பதாக இந்தக் கப்பல் படை அதிகாரி கருதினார். அ.ப. 27:12-இல் வெளிப்படுத்தப்பட்டிருக்கும் கருத்தோடு இவர் கூறுவது ஒத்துபோவதைக் காணலாம்.

**செந்தூரியன் (CENTURION)**

காண்க: நூற்றுவர் தலைவன்.

**செந்நிறம், சிவப்பு (RED)**

பூச்சிகள், தாவரங்கள், உலோகத் தாதுக் கள் இவற்றிலிருந்து அன்று வெவ்வேறு சிவப்பு வண்ணங்களைத் தயாரித்தனர். ஆனால் இயற்கைப் பொருள்களின் வண் ணத்தைக் குறிப்பதற்கே 'சிவப்பு' என்ற கிரேக்க, எபிரேயச் சொல்லைப் பயன்படுத்தி யுள்ளனர்.

பலம் பொருந்திய ஏசாவு பிறந்தபோது அவன் செந்நிறமாக இருந்ததான் என்று கூறப்படுகிறது (ஆதி 25:25). ஏதோமியர்கட் கும் அவர்கள் நிறத்தை வைத்தே பெயரிடப் பட்டுள்ளது. கூழின் நிறம் (ஆதி 25:30), திராட்சை இரசம் (பழ 23:31) பலியிடப் படும் கிடாரி (எண் 19:2) குதிரைகள் (செக் 1:8; 6:2) உடல்நலமுள்ள இளைஞனின் தோல் (உ.ச.5:10; புல 4:7) இவை அனைத் தும் செந்நிறமாக இருப்பதாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. தொழுநோய் உள்ள தாகச் சந்தேகப்படக்கூடியவனின் உடம்பில் சிவப்புக்கலந்தவெண்மை மரு காணப்பட லாம் என்றும் (லேவி 13:19.24) அவனது உடை பச்சை அல்லது சிவப்பு நிறமாகக் காணப்படலாம் என்றும் (13:29) கூறப்படு கிறது. ஆட்டுக்கிடாய்த்தோல் (யாத் 25:5); போர்க்கேடயங்கள் (நாகூ 2:3) ஆகியவை செந்நிறமாக உள்ளன என்று கூறப்படுவது அவை செயற்கையாகத் தயாரிக்கப்பட் டவை என்பதைக் காட்டுகிறது. எசா 63:1-2-இல் ஏதோமையும் இறுதிக்கால வெற்றிவீரர் அணிந்திருக்கும் கருஞ்சிவப்பு ஆடையையும் வைத்து ஆசிரியர் சொல்லாடல் செய்கிறார்.

செந்நிறமும், இரத்தமும் சொல் இலக்க ணப்படி நெருங்கிய தொடர்புடையதால் நீர் செந்நிறமானால் அது இரத்தம் போல் ஆன தாக உருவகப்படுத்திக் கூறுவர் (2 அர 3:22). செந்நிறம் பாவத்தைக் குறிக்கும் அடையாள மாக எசா 1:18-இல் பயன்படுகிறது.

இயற்கையான செந்நிறத்தைக் குறிக்க வேறு பல எபிரேயச் சொற்கள் பயன்படுகின் றன. ஒருவன் அழுதபின் அவன் முகம் சிவககும் (யோபு 16:16); மது அருந்தியவ னின் கண்கள் சிவப்பாகவும், மயங்கிப் போனவையாகவும் இருக்கும் (ஆதி 49:12) என்று கூறப்படுகிறது.

புதிய ஏற்பாட்டில் வானத்தின் நிறம் (மத் 16:2-3), காட்சிகளில் வரும் குதிரை (திரு வெளி 6:4), பறவை நாகம் (12:3) ஆகிய வற்றை விவரிக்க சிவப்பு நிறம் அல்லது நெருப்பு நிறம் பயன்படுகிறது.

**செபக்கூடத்தலைவர்** (RULER OF SYNAGOGUE)

செபக்கூடத்தின் தலைவர் அல்லது பொறுப்பாளர் செபக்கூடத்தில் நடக்கும் வழிபாட்டுக்கு வேண்டியவைகளை எல்லாம் கவனிக்கும் கடமையுள்ளவர். இந்த அலுவலைச் செய்துவந்த பலரைப் புதிய ஏற்பாடு குறிப்பிடுகிறது.

அ) இயேசு உயிர்ப்பித்த பன்னிரண்டு வயதுப் பெண்ணின் தந்தையும் செபக் கூடத் தலைவருமான யாயீர் (மாற் 5:22-43). ஆனால் மத் 9:18 இவரை வெறுமனே தலைவர் என்றுமட்டும் குறிப்பிடுகிறது.

ஆ) இயேசு ஓய்வுநாளில் குணமளித்த போது கோபம் கொண்ட பெயர் குறிக்கப் படாத செபக்கூடத்தலைவர் (லூக் 13:10-17).

இ) பிசிதியாவைச் சேர்ந்த அந்தியோக்கியாவிலுள்ள செபக்கூடத்தில் பவுலும் அவரது தோழர்களும் பேச அனுமதித்தவர்கள் (அ.ப 13:14-15).

ஈ) கொரிந்தில் கிறிஸ்தவமறைக்கு மனந் திரும்பிய கிறிஸ்பு என்ற செபக்கூடத்தலைவர் (அ.ப. 18:8). கொரிந்தில் பவுலால் திருமுழுக்கு அளிக்கப்பட்ட கிறிஸ்பு இவராகத்தான் இருக்க வேண்டும் (1 கொரி 1:14).

உ) பவுலின் முதல் மறைபரப்புப் பயணத் தின்போது கொரிந்திலுள்ள ஆளுநன் கல்லி யோவின் முன்னிலையில் இவர் அடிக்கப் பட்டார். ஆனால் அப்போஸ்தலர் பணி இத் தண்டனைக்குக் காரணம் கொடுக்கவில்லை. பவுல் ''சகோதரன்'' என்றழைக்கும் (1 கொரி 1:1) சொஸ்தேன் இவராக இருக்கலாம் என்று பலர் கருதுகின்றனர். இவரைக் கொரிந்து திருச்சபை நன்கு அறிந்திருப்பதாகத் தெரிகிறது. அப்படியானால் தனது மனந் திருந்துதலுக்குப்பின் இவர் சிறிது காலத்திற்காவது எபேசுக்குச் சென்றிருந்திருக்க வேண்டும்.

**செபக்கூடம்** (SYNAGOGUE)

ஆலயத்துக்கு அடுத்தபடி யூதர்களின் சமய சமூக வாழ்வின் மையமாகத் திகழ்ந்தது செபக்கூடமாகும். செபக்கூடங்கள் எப்போது வழக்கில் வந்தன என்று அறுதியிட்டுக்கூற முடியாது. கி.மு. 587-இல் எருசலேம் ஆலயம் அழிக்கப்பட்டது. யூதர்கள் நாடு கடத்தப்பட்டுச் சிதறுண்டனர். ஆலயத்தை மையமாகக் கொண்டு வழிபாடு செய்தல் முடிந்துபோயிற்று. ஆனாலும் தங்களுடைய மத வழக்கங்களைக் கைவிடவில்லை யூதர்கள். தொடக்கத்தில் சிலர் தனிப்பட்டோரின் இல்லங்களில் கூடிச் செபித்தனர். பிறகு செபித்தலுக்கென விடுதிகள் கட்டினர். இவ்வாறு நாடு கடத்தப்பட்டுச் சிதறுண்ட யூதர்களிடையே செபக்கூடம் தோன்றியது. பின்னர் நிலையாக அவர்களிடையே வேரூன்றியது. இவ்வாறு பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டபோது எஸ்ரா காலத்தில் செபக் கூடங்கள் தோன்றின என்று கூறலாம். அக் காலத்தில் செபக்கூடங்கள் யூதர்களுக்குள்ளே ஒற்றுமையையும் மதத்தூய்மையையும் காக்கவும், ஒருவருக்கொருவர் ஆறுதல் அளிக்கவும், உற்சாகப்படுத்தவும் பெரிதும் உதவின. விசுவாச வளர்ச்சிக்கும் வழிபாட்டு மலர்ச்சிக்கும் இன ஒற்றுமைக்கும் நிலைக்களங்களாய்த் திகழ்ந்தன. விடுதலை பெற்று எருசலேமுக்குத் திரும்பியபோது யூதர்கள் கூடி வாழ்ந்த இடங்களில் எல்லாம் செபக்கூடங்கள் எழுந்தன. பத்து யூத ஆடவர் போதும் ஒரு செபக்கூடம் அமைக்க. எருசலேமில் மட்டும் 480 செபக்கூடங்கள் இருந்ததாகத் தெரிகிறது. விடுதலை பெற்றவர்கள் அல்லது கிரேக்க நாட்டு யூதர்கள் என்ற பிரிவினருக்கென ஒரு தனிச் செபக்கூடம் எருசலேமில் இருந்ததாக அறிகிறோம் (அ.ப. 6:9). கப்பர்நாகுமில் புற இனத்தார் ஒருவர் கட்டிக் கொடுத்த செபக்கூடம் ஒன்று இருந்தது (லூக் 7:5). அந்தியோக்கியா, அலக்சாந்திரியா, உரோமை போன்ற நகரங்களில் பல செபக்கூடங்கள் இருந்தன.

நமக்குக் கிடைத்த ஆதாரங்களிலிருந்தும் புதைபொருள் ஆராய்ச்சியிலிருந்தும் கீழ்க் கண்டவாறு ஒரு செபக்கூடம் அமைந்திருக்க வேண்டும் என யூகிக்கலாம். சாதாரணமாக யூதர்கள் வாழும் பகுதியின் உயர்ந்த இடத்தில், எருசலேமை நோக்கிச் செபக்கூடம்

கட்டப்பட்டது. அது ஒரு நீண்ட சதுர மண்டபத்தையும் இரு பக்கமண்டபங்களையும் கொண்டது. பெரும்பாலும் முகப்பு மண்டபமும் முற்றமும் இருப்பதுண்டு. இங்கே சுத்தி செய்வதற்கெனக் கலங்களில் நீர் வைக்கப்பட்டிருக்கும். புதிய ஏற்பாட்டுக் காலத்தில் செபக்கூடங்கள் அழகு செய்யப்படவில்லை. ஆனால் பிற்காலத்தில் பல அலங்காரங்கள் புகுத்தப்பட்டன. செபக்கூடத்தின் பிற்பகுதியில் திரைக்குப்பின் வேதநூல் சுருள்கள் கொண்ட பெட்டகம் வைக்கப்பட்டிருக்கும். அங்கேயே நோன்புகளையும் விடுமுறைகளையும் அறிவிக்கப் பயன்படும் கொம்புகளும் எக்காளங்களும் வைக்கப்பட்டிருந்தன. மண்டபத்தின் மத்தியில் ஒரு மேடை இருந்தது. அதன்மேல் ஒரு வாசிப்புத் தண்டும் ஏழு கிளை விளக்குத் தண்டும் உண்டு. இங்கிருந்து வேத நூல் பகுதிகள் வாசிக்கப்பட்டன. விரிவுரைகள் வழங்கப்பட்டன. பெட்டகத்திற்கும் மேடைக்கும் இடையிலுள்ள இடத்தில் மதிப்புக்குரியோர் அமர்வர். மேடையிலிருந்து வாயில்வரை மற்ற யூதர்கள் அமர்வர். ஆண்களும் பெண்களும் பிரிந்து அமர்வர். பிற்காலத்தில் பெண்களுக்கென மாடி கட்டப்பட்டது. செபக்கூடத்தின் இரு பக்கங்களிலும், தனிமையில் செபிக்கவும், படிக்கவும், கூட்டம் கூடவும், நீதி வழங்கவும், ஊழியர் தங்கவும் சிறுவர்களுக்கு மதபோதகம் அளிக்கவும் பல அறைகள் இருந்தன.

செபக்கூடம், எருசலேம் ஆலயத்தைப் போல், இறைவன் உறையும் இடமன்று. செபிக்கவும், சட்டத்தைப் படிக்கவும் குருக்கள் அல்லாதோர் தங்களுக்கென அமைத்துக் கொண்ட அமைப்பாகும். செபக்கூடத்தின் நிர்வாகத்தை மக்களின் மூப்பர்கள் கவனித்துக் கொண்டனர். இவர்களிலிருந்து ஒருவர் செபக்கூடத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர், மூப்பர்களின் பெயரால் செபக்கூட நிர்வாகத்தையும், வழிபாட்டுப் பணியையும் கவனித்துக் கொண்டார் (லூக் 8:41; அ.ப. 18:8-17). இவர் ஒவ்வொருவருக்கும் உரிய பணியை அளித்தார். பாடுதல், வாசித்தல், விளக்கம் அளித்தல் போன்ற அலுவல்களுக்கு இவர் ஆட்களை நியமித்தார். விருந்தாய் வந்தோர்க்கு மிகுந்த மரியாதை அளிக்கப்பட்டது. இம்மரியாதை அப்போஸ்தலர்களுக்கு அவர்களின் வேதபோதகப் பயணத்தில் பெரிதும் உதவியது. செபக்கூடங்களில் சில காரியங்களில் நீதி வழங்கப்பட்டது. தண்டனைகளும் வழங்கப்பட்டன (மத் 23:34; மாற் 13:9; லூக் 21:12; 12:11; அ.ப. 9:2; 22:19; 26:111). சபையிலிருந்து பிரித்து வைத்தல், கசையடி கொடுத்தல் போன்ற தண்டனைகள் வழங்கப்பட்டன. இவற்றைச் செபக்கூடத்தலைவர் செயல்படுத்தினார்.

செபக்கூடம் கூடிச் செபிப்பதற்காக நிறுவப்பட்டது. அங்கு ஓய்வு நாட்களிலும், திருநாட்களிலும் வழிபாடு நடந்தது. வழிபாடு, செபம், வேதநூல் வாசகம், விளக்கவுரை அல்லதுபோதகம் ஆகிய மூன்று பகுதிகளைக் கொண்டது. யூதர்களின் விசுவாச அறிக்கையாகிய ''சேமாவை''ச் (உப 6:4தொ) சொல்ல, வழிபாடு தொடங்கியது. அதன்பின் விசுவாசிகளுள் யாராவது ஒருவர் நீண்ட செபம் சொல்லுவார். செபக்கூடத் தொடக்க காலத்தில் இச்செபத்திற்குத் திட்டவட்டமான வடிவம் எதுவுமில்லை; சமயத்திற்கேற்பச் சொல்லப்பட்டது. ஆனால் காலப்போக்கில் இச்செபம் பதினெட்டு ஆசிர்களாகத் திட்டமான வடிவெடுத்தது. பின் வேதநூலின் முதல் ஐந்து நூல்களாகிய தோராவிலிருந்தும் இறைவாக்குரைஞர் நூல்களிலிருந்தும் சில பகுதிகள் வாசிக்கப்பட்டன. இவ்வாசகங்கள் யூதர்களின் வழிபாட்டு மொழியாகிய எபிரேய மொழியில் வாசிக்கப்பட்டன. பின் மக்களுக்குத் தெரிந்த மொழியில் அந்த வேதநூல் பகுதிகள் மொழி பெயர்க்கப்பட்டன. அதன்பின் செபக்கூடத் தலைவரோ, அவரது அழைப்பின் பேரில் சபையோரில் ஒருவரோ (அ.ப 3:15-42) வாசகங்களுக்கு விளக்கமாக ஒரு மறைப் பொழிவு ஆற்றுவர். சில சமயங்களில் சபையோரில் சிலர் தாங்களாகவே இப்பணியை விரும்பிக் கேட்டுச் செய்வதுமுண்டு (லூக் 4:16 தொ; அ.ப.13:5; 14:1). இவ்விதம் விளக்கவுரை கொடுப்போர் சட்டத்தையும் பாரம்பரியத்தையும் பற்றிய

நிறைந்த, ஆழ்ந்த அறிவு கொண்டிருக்க வேண்டும். ஆகவே இச்செயலை ஆற்ற மறைநூல் அறிஞர்கள் பெரிதும் பயன்பட்டனர். குருக்கள் இருந்தால் குருக்கள் அல்லது தலைவர் ஆசிர்கூற, செபக்கூட வழிபாடு முடிவடைந்தது. பிற்காலத்தில் இவ்வழிபாட்டில் சங்கீதங்களும் மற்றச் செபங்களும் சேர்க்கப்பட்டன. ''தோரா'' வாசகம் மூன்றாண்டுக்கு ஒருமுறை முழுவதும் முடியுமாறு பிரித்து அமைக்கப்பட்டிருந்தது. நமது குருக்கள் சொல்லும் கட்டளைச் செபத்தில் வரும் செபங்களும் வாசகங்களும் யூத செபக்கூட வழிபாட்டிலிருந்து தோன்றியிருக்கக்கூடும் என்று எண்ண இடம் இருக்கிறது. செபக்கூடத் தலைவரின் பதவியிலிருந்துதான் திருச்சபையில் ஆயர் பதவி ஏற்பட்டிருக்க வேண்டும் எனப் பலர் கருதுகின்றனர்.

செபக்கூடத்திற்குக் கிறிஸ்து தவறாது சென்று அங்கு நடந்த வழிபாட்டில் பங்கு பெற்றிருக்க வேண்டும். பலரறிய வாழ்ந்த போது, கிறிஸ்து செபக்கூடத்தில் பலதடவைகள் போதித்துள்ளார் (*மத் 4:23; 9:35; 12:9; மாற் 1:39; 3:1; லூக் 4:15; 6:6; 13:10; யோவா 18:20*). செபக்கூட வழிபாட்டில் வேதநூல் வாசகத்தின் பின்வரும் மறைப்பொழிவு, தமது நற்செய்தியைப் பறைசாற்ற அவருக்கு வாய்ப்பு அளித்தது (*லூக் 4:16-21*). கப்பர்நாகும் செபக்கூடத்தில் மற்றும் சில நிகழ்ச்சிகள் கிறிஸ்துவின் வாழ்வில் நடந்தன (*மாற் 1:21தொ; யோவா 6:60*).

கிறிஸ்தவ மறையின் தோற்றத்திலும், வளர்ச்சியிலும், அப்போஸ்தலர்களின் வேதபோதகப் பயணத்திலும் யூதர்களின் செபக்கூடம் சிறப்பான பங்கு பெறுகிறது. பவுல் தமாஸ்கு செபக்கூடத்தில்தான் தமதுவேத போதக அலுவலை முதல் முதலாகத் தொடங்கினார் (*அ.ப. 9:20*). பவுல் தமது வேதபோதகப் பயணங்களில் விருந்தினராகச் செபக்கூடங்களுக்குச் செல்வார். அங்கே அழைப்பின்பேரில் மறைபோதகம் செய்வார். இம்முறையைச் சைப்பிரசிலுள்ள சலாமியிலும் (*அ.ப. 13:5*), பிசிதியா நாட்டிலுள்ள அந்தியோக்கியாவிலும் (*அ.ப. 13:14*), இக்கோனியா நகரத்திலும் (*அ.ப. 14:1*), தெசலோனிக்கேயிலும் (*அ.ப. 17:1*), பெரோயாவிலும் (*அ.ப. 17:10*) கொரிந்திலும் (*அ.ப. 18:4*), எபேசிலும் (*அ.ப. 19:8*), மற்ற இடங்களிலும் பவுல் பின்பற்றினார். யூதர்களில் சிலர் அவரது போதகத்தை ஏற்றுக்கொண்டனர். அவர்களுக்கு மேலும் போதித்தார். ஆனால் பலதடவைகள், பெரும்பாலோர் அவரது போதகத்தை ஏற்க மறுத்துப் பூசல்களை உண்டாக்கினர். அவர்கள் தமது போதகத்தை ஏற்க மறுத்தபின் பவுல் புற இனத்தவரிடையே போதிக்கச் செல்வார். இம்முறையையே மற்ற அப்போஸ்தலர்களும் பின்பற்றியிருக்க வேண்டும்.

யூதர்களின் சமய சமூக வாழ்வில் செபக்கூடத்தின் சிறப்பையும் முக்கியத்துவத்தையும் நாம் நன்கு உணரவேண்டும். செபக்கூடம் சமய சமூக வாழ்வின் மையமாகத் திகழ்கிறது. இங்குதான் யூதர்கள் தாங்கள் ஒரு தனிப்பட்ட சமூகம் என்ற உணர்வைப் பெற்றனர். அவர்கள் ஒன்றித்து வாழவும், அவர்களது நாட்டுப்பற்றை வளர்க்கவும், பிறரை யூத மதத்தில் சேர்க்கவும் செபக்கூடம் பெரிதும் பயன்பட்டது. வழிபாட்டுமுறை இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு சிறிது மாறுபட்டாலும், அடிப்படை நோக்கும் போக்கும் எங்கும் ஒன்றேதான். தங்கள் சமூகத்துக்குள்ளே ஒருவர் மற்றொருவருக்கு உதவி செய்தனர்; உற்சாகப்படுத்தினர்; கண்காணித்தனர். சமூகத்தின் முக்கிய காரியங்கள் யாவும் செபக்கூடத்திலும் செபக்கூடத்தின் வழியாகவும் நடந்தன. எருசலேம் ஆலயம் அழிந்தவுடன், தங்களது நாட்டை யூதர்கள் இழந்துவிட்டாலும், அவர்கள் கூடிவாழச் செபக்கூடம் பெரிதும் உதவிற்று, ஆலயம் இல்லாவிட்டாலும், யூதர்கள் ஓர் இனமாக வாழலாம் என்பதை நிரூபித்தது. யூத மதம் ஒரு வேத விசுவாசமும், வாழ்க்கை வழியுமாகும் என்று காட்டிற்று. இன்று யூத இனம் நிலைத்துள்ளது என்றால் இச்செபக்கூடங்கள்தான் முக்கிய காரணம்.

**செபதியா** (ZEBADIAH - யாவேயின் கொடை)

*1.* பென்யமின் இனத்தைச் சேர்ந்த பெரீயாவின் வழித்தோன்றல் *(1 நாள் 8:15).*

*2.* பென்யமின் இனத்தைச் சேர்ந்த எல்பாகாலின் வழித்தோன்றல் *(1 நாள் 8:17).*

*3.* சிக்லாகில் தாவீதுடன் சேர்ந்து கொண்ட கெதோரைச் சேர்ந்த எரொகாமின் இரண்டு புதல்வர்களில் ஒருவர் *(1 நாள் 12:7).*

*4.* கோராகிய லேவியர் குடும்பத்தைச் சேர்ந்த சாலமோன் ஆலயத்தில் ஒரு வாயில் காப்போன் *(1 நாள் 26:2).* தாவீது அரசன், வருங்காலக் கோவிலுக்காகச் செய்த தயாரிப்புகளில் இப்பெயர் வாயில்காப்போரின் குழுவில் காணப்படுகின்றது *(1 நாள் 23-36).*

*5.* தாவீது அரசனின் படையின் 12 பிரிவுகளில் நான்காம் பிரிவின் தலைவர். இவன் யோவாபின் சகோதரனான அசாவேலின் மகன் *(1 நாள் 27:7).*

*6.* யூதாவின் நகரங்களில் திருச்சட்டத்தைப் போதிப்பதற்காக யோசபாத்தால் அனுப்பப்பட்ட 16 பேர் கொண்ட அமைப்பில் இருந்த 9 லேவியர்களில் ஒருவர் *(2 நாள் 17:8;* காண்க *உப 6:6-9; 27:11-26; 31:9-13).* இந்தக் கதை நாளாகமத்தில் மட்டும் தோன்றுகின்றது.

*7.* யூதா கோத்திரத்தில் மூத்தவர்; யோசபாத்து அரசனுக்கடுத்த எல்லாக் காரியங்களிலும் இவர் தலைமை வகித்தார். இசுமயேலின் மகன் *(2 நாள் 19:11).*

*8.* எஸ்ராவுடன் அடிமைத்தளையிலிருந்து நாடு திரும்பிய சாதாரணக் குடும்பங்களில் ஒன்றின் தலைவர். செபற்றியா குடும்பத்தைச் சேர்ந்த மிக்கேலின் மகன் *(எஸ் 8:8).*

*9.* அந்நிய திருமணங்களை ஒழிக்கும் எஸ்ராவின் சட்டப்படி அந்நிய மனைவியரையும், அவருடைய பிள்ளைகளையும் விட்டுவிட்டவர்களின் பட்டியலில் உள்ள ஒரு குரு. இம்மேரின் வழித்தோன்றல் *(எஸ் 10:20).*

**செபதேயு** (ZEBEDEE - யாவேயின் கொடை, யாவேயின் பாகம்)

சலோமி வழியாக இவருக்கு அப்போஸ்தலர்களான யாக்கோபும் யோவானும் புதல்வர் ஆவர் *(மாற் 1:19-20; 15:40; மத் 27:56).* கப்பர்நாகுமில் மீன்பிடிக்கும் தொழிலில் இவரும் இவருடைய புதல்வர்களும் சீமோன், அந்திரேயா ஆகியவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர் *(மாற் 1:16-20; லூக் 5:10).* இவர் ஊழியர்களை வைத்திருந்தாலும் *(மாற் 1:20),* இவருடைய மனைவி இயேசுவிற்குப் பொருளுதவி செய்ததாலும் *(மாற் 15:40-41; லூக் 8:2-3)* இவர் சொத்துடையவராக இருந்தார் எனத் தோன்றுகிறது. இவர் இயேசுவை ஆர்வத்துடன் பின்பற்றியதாக நற்செய்திகள் கூறவில்லை; ஆயினும் இவருடைய புதல்வர்களும் மனைவியும் இயேசுவைப் பின்பற்றியதைத் தடைசெய்ததாகத் தெரியவில்லை.

கி.பி. 200-இல் கட்டப்பட்ட கப்பர்நாகும் செபக்கூடத்திலுள்ள ஒரு தூண் உள்ளது. இதைக் கட்டியவர் செபிதாவின் மகன் என்ற அரமேயக் குறிப்பு ஒன்று இதில் உள்ளது.

**செபத்து** (ZEPHATH - காவல் கோபுரம்)

இது அராது ஊருக்கு அருகே யூதாவின் தென்மேற்கில் உள்ள கானானிய நகரம். இங்கே யூதா இனத்தவரும் சிமியோன் இனத்தவரும் சேர்ந்து கானானியர்மேல் பாய்ந்து அவர்களது நகரை முழுவதும் அழித்தார்கள்; கொன்றார்கள்; அவ்வூருக்குக் கோர்மா (ஒர்மா) அல்லது சாபம் என்று பெயரிட்டார்கள் *(நீதி 1:17).*

**செபம், வேண்டல்** (PRAYER)

**I. இஸ்ராயேல் வரலாற்றில் செபம்**

பழைய ஏற்பாட்டுச் செபங்களின் முக்கிய தன்மைகளில் ஒன்று கடவுளுடைய மீட்புத் திட்டத்திற்கும் அதற்குமுள்ள தொடர்பு ஆகும். ஒருவர் செபிக்கும்பொழுது தங்களுக்கு என்ன நேர்ந்ததோ என்ன நிகழ்

கிறதோ அதை மையமாக வைத்துச் செபித்த னர். இவ்வாறு தங்களுக்கு மீட்புக் கிடைக்கு மென நம்பினர். இஸ்ராயேலர் செபத்தின் உட்பொருள் வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டது. புனிதவரலாறு செபங்களினால் நிறைந்திருப்பதைப் பார்க்கிறோம். வரலாற் றின் மிக முக்கியமான கட்டங்களில், இறைத்திட்டத்தில் மக்களுக்கும் இறைவ னுக்குமிடையே இடைநிலையாளர்களாகச் செயல்பட்டவர்கள் செபத்தினால் இறைவ னது உதவியைப் பெற்றுத்தந்ததைப் பார்க் கிறோம். இவற்றில் சில எடுத்துக்காட்டுகளை மட்டும் தருகிறோம்.

*1. மோசே:* பழைய ஏற்பாட்டில் வருப வர்களில் செபத்தில் தலைசிறந்தவராக விளங்கியவர் மோசேதான். மன்றாட்டுத் தன் மையுள்ள அவரது செபம் இயேசுவின் செபத்தை முன் அறிவிக்கிறது எனலாம். அவருடைய இடைவிடாத வேண்டுதலி னால்தான் கடவுள் இஸ்ராயேலரைக் காக் கின்றார் *(யாத் 33:17)*. மோசே அவர்களிட மிருந்து விலகி நிற்கிறார் *(32:10;33:16)*. அவரது செபிக்கும் முறை ஒரு நாடகம்போல மிக விறு விறுப்பாக அமைகிறது *(32:32)*. ஒவ் வொரு வேண்டுதலுக்கு முன்னும் இறைவ னோடு பெரிய விவாதமே நடத்துகிறார். கடவுளின் அன்பைச் சுட்டிக் காட்டி ''இந்த இனம் உமது மக்கள் என்பதைக் கருத்தில் கொள்ளும்'' *(33:13; 32:11; எண் 11:12)* என்றும் அவருடைய பிரமாணிக்கத்தையும், நீதியையும் நினைவூட்டி ''நீரே எம்மைக் கை விட்டால் மற்றமக்கள் என்ன சொல்வார்கள்'' *(யாத் 32:11-4)* என்றும் கடவுளிடம் நினைவு படுத்துகிறார். அவரைச் சுற்றியிருந்தவர்க ளின் நன்மைக்காக அவரை உருமாற்றிய இந்தச் செபம் மோசேயைச் செயல்பாட் டிற்கு அழைத்துச் செல்கிறது *(யாத் 34:29-35)*. அதே நேரத்தில் மோசேயின் காலத்தில் செபம் தவறாகப் பயன்படுத்தப்படும் நிலைக்கும் சென்றது. அதாவது கடவுளைச் சோதிக்கும் அளவுக்குச் சென்றுவிட்டது. மெரீபாவில் அவர்கள் கடவுளைச் சோதித்த னர் *(யாத் 16:7; சங் 78; 106:32)*. இங்குச் செபம் அருளின் அழைப்பாக இராமல் பேராசையாக மாறுகிறது. நீர் நாங்கள் விரும் பியதைச் செய்தால் உம்மை விசுவசிப்போம் என்று கூறுவதாக அமைகிறது *(யூதி 8:11-17)*.

*2. அரசர்களும் இறைவாக்கினர்களும்:* மெசியாவைப்பற்றி நாத்தான் இறைவாக் குரைத்ததும் உடனே தாவீது அரசன் ''நீர் பேசியபடியே செய்யும்'' *(2 சாமு 7:25)* என்று செபிக்கிறார். ஆலயத்தை அர்ச்சித்து அதை வழிபாட்டுக்குரியதாகத் தொடங்கி வைத்தபோது எதிர்காலத் தலைமுறைகளை யெல்லாம் தனது செபத்தில் சேர்க்கிறார் அரசர் சாலமோன் *(1 அர 8:10-61)*. இவ்வாறு மக்களுக்காகச் செபிப்பது அரச கடமைக ளில் ஒன்றாக இருந்தது.

ஆபிரகாம் மக்களுக்காகப் பரிந்து பேசிய தால்தான் அவர் இறைவாக்கினர் என அழைக்கப்படத்தகுதி பெற்றார் *(ஆதி 18:22-32; 20:7)*. இறைவாக்கினர் ஒவ்வொரு வருமே செபிக்கும் மனிதர்களாய் இருந்தனர். எலியா *(1 அர 18:36)*, சாமுவேல், ஆமோஸ் *(ஆமோ 7:1-6)*, சிறப்பாக எரேமியா ஆகிய இவர்கள் முக்கியமாக மக்களுக்காகப் பரிந்து பேசுபவர்களாக இருந்தனர். ''மக்க ளுக்காகவும் புனித நகரத்துக்காகவும் வேண் டிக்கொள்பவராக'' எரேமியாவைப் பாரம்பரி யம் காண்கிறது *(2 மக் 15:14)*. இடையாள ராக இருந்து பரிந்து பேசுதல் அவருக்கும் அந்தச் சமூகத்துக்குமிடையே உள்ள நெருங் கிய உறவை அவசியமாக்குகிறது. இத் தகைய புரிந்து கொள்ளலால்தான் எரேமியா வின் செபம் பெரிதும் அர்த்தமுள்ளதாகவும் மோசேயின் செபத்திற்கு இணையானதாக வும் அமைந்தது. சில நேரங்களில் மக்களின் மீட்புக்காகச் செபிக்கிறார் *(எரே 10:23; 14:7தொ.14-22; 37:3;...)*; அவர்களுடைய துன் பங்களைத் தன்னுடையதாக்கிக் கொள்கிறார் *(4:19; 8:18-23; 14:17-47)*. வேறுசில நேரங்க ளில் மக்களைப்பற்றி இறைவனிடம் புகார் செய்கிறார் *(15:10; 12:1-5)*. அவர்களைப் பழிவாங்கவேண்டுமென்றுகூடக் கேட்கி றார் *(15:15; 17:18; 18:19-23)*. பிறகு தனது விதியை நினைத்துத் தானே நொந்து கொள்கி றார் *(29:7-18)*. இத்தகைய செபங்களுக்கும்,

சங்கீதங்களுக்கும் அதன் தன்மையினாலும், அர்த்தத்தினாலும் பலவிதங்களில் நெருங்கிய தொடர்பு உண்டு. எஸ்ராவும், நெகேமியாவும் தமக்காகவும், மக்களுக்காகவும் ஒரே நேரத்தில் செபிப்பதைப் பார்க்கிறோம் (எஸ் 9:6-15; நெகே 1:4-11). அதேபோல் மக்கபேயர்கள் செபிக்காமல் என்றுமே போரிடச் சென்றதில்லை (1 மக் 5:33; 11:71; 2 மக் 8:27; 15:20-28). ஒழுங்காக வடிவமைக்கப்பட்ட சொந்த செபம் நாடுகடத்தலுக்குப் பிற்பட்ட காலத்தில்தான் எழுகிறது (யோனா 2:3-10; தோபி 3:11-16; யூதி 9:2-14; எஸ்த 4:17). இத்தகைய செபங்கள் கதையோடு சேர்த்து வாசிக்குமாறு எழுதிவைக்கப்பட்டன. அவற்றிலிருந்து நாமே நமது செபத்தை உருவாக்கிக் கொள்ள திருச்சபை நம்மை உற்சாகப்படுத்துகிறது. ஆனால் சங்கிதங்களை ஒன்று சேர்த்தவர்கள் அதை முழுமையாகச் செபிக்கப் பயன்படுத்த வேண்டுமெனும் நோக்கத்துடன்தான் ஒன்று சேர்த்தனர். ஏனெனில் சங்கீதம் எல்லாக்காலங்களுக்கும் எல்லாருக்கும் பொருந்தக்கூடியதாக இருக்கிறது. இஸ்ராயேலில் அதற்கொப்பான செபம் வேறு இல்லை.

II. *சமூகத்தின் செபமாகிய சங்கீதம்:* யாவேயின் அற்புதங்கள் (சங் 104), அவரது கட்டளைகள் (15:81), இறைவாக்குகள் (50), ஞானம் (சங் 37) அனைத்தும் சங்கீதத்தில் நிறைவு பெறுவதுபோல் அனைத்தையும் உள்ளடக்கும் செபமாகச் சங்கீதம் அமைகிறது. சங்கீதத்தை நமக்குத் தந்ததன் மூலம் நமது வாய்வழியாக எத்தகைய செபத்தை இறைவன் கேட்கவிரும்புகிறாரோ அதனை நமக்குத் தந்துள்ளார்.

*1. சமூகத்தின் மற்றும் தனியாரின் செபம்:* பல நேரங்களில் நாடே மகிழ்கிறது, நினைவுகூர்கிறது, புலம்புகிறது (சங் 44; 74; 77). ஆலயம்தான் சமூகம் முழுவதின் செபமையமாக இருந்திருக்கிறது (சங் 5:8; 28:2; 48:10). தங்கள் செபத்திற்கு நீதிமான்களைச் சாட்சியாக அழைக்கின்றனர் (சங் 119:63). அவர்களது செபம் கேட்கப்பட்டவுடன் நீதிமான்களுக்கு அது தெரிவிக்கப்படும் (சங் 22:23-எபி 2:12).

பல இடங்களில் ஒரேவகையிலான செபவடிவங்கள் இருந்தாலும் இவை வெறும் சூத்திரங்கள் அல்ல. தனிப்பட்ட மனிதர்களின் ஆழமான இறையனுபவத்திலிருந்து எழுந்தவைதான் இச்சங்கீதங்கள். இது தனியாள்களின் செபமாகவும், சமூகத்தின் செபமாகவும் இருக்கிறது என்பது அரசர்கட்கு முக்கியத்துவம் கொடுப்பதிலிருந்து தெரிகிறது. ஏனெனில் அரசன் மேலானமுறையில் தனிமனிதனாக இருந்தாலும் அவன் வாழ்கின்ற சமூகத்தின் சிறப்பான அடையாளமாக இருக்கிறான். சங்கீதங்கள் தாவீதால் எழுதப்பட்டன என்று பரம்பரையாகக் கூறுவது சங்கீதத்திற்கும், தாவீதின் மகனான இயேசுவின் பரிந்து பேசும் செபத்திற்கும் உள்ள தொடர்பைச் சுட்டுகிறது.

*2. துயரத்தின் செபம்:* சங்கீதங்களின் செபம் வாழ்வின் வெவ்வேறு சூழல்களிலிருந்து எழுந்தவையாகும். தனிமையின் இனிமையை இச்செபங்களில் காணலாம் (சங் 55:7; 11:1). அதே நேரத்தில் சந்தையில் இருக்கும் சந்தடியையும் போரில் நடக்கும் கொடூரங்களையும் (சங் 55; 59; 22:13தொ), ஒரு செபநூலில் எதிர்பார்க்க முடியாத பல தன்மைகளையும் சங்கீதங்களில் காணலாம். ஒருவன் கடவுளைக் கூக்குரலிட்டு அழைக்கும்போது அனைத்தும் செயலற்று அவருடைய துணையற்று ஒன்றும் நடக்காது என்ற நிலையை அடையும்போது, ஒருவன் தன் உடல் ஆன்மா அனைத்து நிலைகளிலும் கடவுளின் துணையைத் தேடுகிறான். கூக்குரலிட்டு அழைக்கிறான் (69:4; 6:7; 22:2; 102:6). அவரே அனைத்துமாக இருக்க வேண்டுமென நினைக்கிறான் (சங் 63:2). உடல்படும் துன்பங்கள், பெறும் இன்பம் அனைத்தையும் சேர்த்து வாழ்வில் அவை வகிக்கும் பங்குபற்றி இச்செபங்கள் பேசுகின்றன (சங் 22:38). சங்கீத ஆசிரியர் நன்மைகளை மட்டும், அதுவும் கடவுளிடமிருந்துமட்டும் வர வேண்டும் என விரும்புகிறார் (சங் 4).

*3. நம்பிக்கையின் செபம்:* இத்தகைய சங்கீதங்கள் ஆண்டவர்மீது வைக்கும் அசைக்க முடியா நம்பிக்கையை எடுத்துரைக்கின்றன

*(சங் 25:2; 55:24;...)*. இந்த நம்பிக்கை சிரிப்பி லிருந்து கண்ணீருக்கும், கண்ணீரிலிருந்து சிரிப்புக்கும் மாறிமாறிச் செல்வதைப் பார்க் கிறோம் *(சங் 116:10; 23:4; 119:143)*. இது நன்றிசெலுத்துதலுக்கும் மன்றாடுதலுக்கும் இடையே ஒரு சம நிலையைத் தோற்றுவிக் கிறது. தான் கேட்டதைப் பெறுவதற்கு முன்னே ஒருவர் நன்றி கூறுகிறார் *(சங் 140:14; 22:25தொ; காண் யோவா 11:41)*. வெறும் புகழ்ச்சிகளை மட்டுமே கொண் டுள்ள சங்கீதங்கள் இத்தகைய செபத் தொகுப்பில் ஒரு சிறப்பம்சமாகும். நெருப்புச் சூளையில் போடப்பட்ட மூன்று இளைஞர் கள் பாடும் பாடல் பொதுவான தன்மை யுடையதாக உள்ளது.

***4. உண்மையான நன்மையைத்தேடும் செபங்கள்:*** கடவுளிடமிருந்து நலன்களை எதிர்பார்க்கும் மனிதன் தன்னையே கடந்து கடவுளே நன்மை, அவரை அடைந்தால் நன்மையைப் பெற்றதற்குச் சமம் என்ற உணர்வைப் பெறவேண்டும். ஆண்டவரின் அருட்பார்வையில் வாழ்வதை நினைத்தும் அவரோடு இருப்பதையும் அவரது இல்லத் தில் வாழ்வதை நினைத்தும் தான் கொள் ளும் அளவற்ற மகிழ்ச்சியை ஒருவர் அறிக் கையிடுகிறார் *(சங் 16; 23; 25:14; 65:5; 91; 119:33தொ)*. கடவுளே மனிதனைத் தனது அருகில் வரச் செய்வார் என்ற நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டுதான் இச்செபங் கள் எல்லாம் வந்தன என்று கூறமுடியாது. எனினும் அவரது கொடைகள் ஏற்கெனவே கிடைத்துவிட்டன என்ற நம்பிக்கையோடு செபித்தலைக் காண்கிறோம் *(சங் 73:24தொ; 16)*. சங்கீதச் செபங்களால் உருவாக்கப்பட்ட எவரும் அவற்றைப் பெற்றுக்கொள்ள, ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பர். இதே சங்கீ தங்களால் தன் அனுபவத்தை வெளிப்படுத்த முடியும்.

***5. இயேசு சங்கீதங்களைக் கொண்டு செபித்தார்:*** கிறிஸ்துவின் வெளிப்பாடு சங் கீத ஆசிரியரின் நம்பிக்கைகளை வளப்படுத்து கிறது. அதே நேரத்தில் கிறிஸ்துவுக்குச் சங்கீதங்கள் செபமாகின்றன *(மத் 26:30)*. அவற்றால் அவரும் அவரைச் சார்ந்தவர்க ளும் உருவாக்கப்படுகின்றனர். கிறிஸ்துவிட மிருந்து பக்தியைக் கற்றுக்கொள்ள வேண் டும் எனும் ஆர்வம் இந்த அடிப்படைச் செபநூலை மறக்கச் செய்யுமா? *(எபே 4:20)*.

**III. இயேசு கற்றுத்தரும் செபம்:** மனுவுரு வான இறைவன் என்ற முறையில் மனிதர் இடைவிடாது மன்றாடுவதின் மத்தியில் அவர் இருக்கிறார். அதற்கு அவர் பதில் கொடுத்து நம்பிக்கை ஊட்டுகிறார். அதே நேரத்தில் அவர் போற்றுகிறார், உற்சாகமூட்டு கிறார். விசுவாசத்துக்கு அழைத்துச் செல்கி றார் *(லூக் 7:9; மத் 9:22.29; 15:28)*. வாழ்வின் மையமாகச் செபம் திகழ்வதால் எப்படிச் செபிக்க வேண்டுமென்பதைக் கற்றுத்தருகி றார். ''ஆகவே நீங்கள் செபிக்கும்போது..'' *(லூக் 11:2)*.

***1. ஒத்தமை நற்செய்திகளில்:*** இறைவ னாம் தந்தையே இந்தப் போதனையின் மையமாகத் திகழ்கிறார் *(லூக் 11:2; மத் 6:9-13)*. இறைவனைத் தந்தையாக அழைப்ப தால் சங்கீதங்கள் இறைவனுக்கும் மனிதருக்கு மிடையே நெருக்கத்தை அதிகப்படுத்து கின்றன *(சங் 27:10; 103:13; எசா 63:16; 64:7)*. அதே நேரத்தில் செபிப்பவரது மனநிலை யையும் முழுவதுமாக ஆக்ரமிக்கிறது. இவ் வாறு அழைப்பதே ஒரு விசுவாசச் செயலா கும். இது ஒருவரை அன்பின் பாதையில் அழைத்துச் செல்கிறது. எனவே விவிலியச் செபத்தின் மையமாக இறைவனின் திட் டத்தை, அவரது விருப்பத்தை, அவரது நாமத்தை, அவரது அரசைக் *(மத் 9:38)*கொண்டிருக்கிறார் செபிப்பவர். அதே சமயம் தனக்கு உணவு அளிக்க வேண்டு மென்றும், இறைமகனோடு ஒப்புரவாவதன் வழியாகத் தந்தையோடு ஒப்புரவானபின் மன்னிப்பு வேண்டும் எனவும், வருங்காலச் சோதனைகளை மேற்கொள்ள அருளைக் கேட்கிறார்.

நமது செபம் கேட்கப்பட்டுவிட்டது என்ற உறுதிப்பாடுதான் செபத்தின் ஊற்றும் நிபந் தனையுமாகிறது *(மத் 18:19; 21:22; லூக் 8:50)*.

இக்கருத்தை மாற்கு நற்செய்தியாளர் வெளிப்படையாகவே கூறுகிறார். ஒருவன் உள்ளத்தில் தயக்கம் எதுவும் இன்றித் தான் நினைத்தது நடக்கும் என நம்பினால் அது அவனுக்குக் கொடுக்கப்படும் (மாற் 11:23). ஆனால், தான் தந்தையிடம் கேட்பதால்தான் இந்த உறுதிப்பாடு கொண்டுள்ளான் (லூக் 11:13; மத் 7:11). உள்ளத்தை அறியும் தந்தை அனைத்தையும் கொடுப்பார் (மத் 6:6; 6:4.18). மீண்டும் மீண்டும் வார்த்தைகளை அடுக்கிக் கொண்டே போவதாலோ மீண்டும் மீண்டும் செபிப்பதாலோ கேட்பது கிடைத்துவிடும் என எண்ணத்தேவை இல்லை (மத் 6:7). இப்படிச் செபிப்பது கடவுள் ஏதோ நம்மைவிட்டு வெகு தொலைவில் இருப்பதுபோல எண்ணத் தோன்றுகிறது (1 அர 18:26 தொ). மாறாக அவர் நமது தந்தை. அவர் அருகில் இருந்து அனைத்தையும் தருபவர். நாம் ஒருவரை ஒருவர் மன்னிக்கவும் (மாற் 11:25;மத் 6:14) சகோதரர்களாக ஒன்றிப்புக்காகச் செபிக்கவும் (மத் 18:19), நமது தவறுகளை எண்ணி மனம் வருந்திச் செபிக்க வேண்டுமெனவும் (லூக் 18:9-14) இயேசு கற்பிக்கிறார்.

மனம் தளராது, நம்பிக்கையிழக்காமல் தொடர்ந்து செபிக்க வேண்டும் (லூக் 18:1; 11:5-8) என்கிறார். நமது மனந்தளராமை, நமது இதயத்தின் விழிப்புணர்வு வெளிப்படுத்தப்படவேண்டும். செபத்தின் அத்தியாவசியத்தன்மை இறுதிக்காலச் சூழ்நிலையில் போதிக்கப்படுகிறது (லூக் 18:1-7). அவரது பாடுகளால் அண்மையில் நெருக்கமாகக் கொண்டுவரப்படுகிறது. செபமில்லையேல் ஒருவன் நடக்கவேண்டிய நிகழ்ச்சிகளால் மூழ்கடிக்கப்படுவான் (லூக் 21:36). இதேபோலத் தந்தையை நோக்கிய செபம் தீமை சோதனைகளில் விழவிடாதேயும் என்ற வேண்டுதலோடு முடிவடைகிறது.

2. யோவான், செபிக்கக் கற்றுக்கொடுப்பதை ஒரு புதிய ஒளியில் எடுத்துச் சொல்கிறார். மன்றாட்டிலிருந்து உண்மையான செபத்திற்கும், இறைவனின் கொடைகளிலிருந்து இறைவனையே சொத்தாக அடையும் விருப்பத்திற்கு ஒருவனை அழைத்துச் செல்லும் செபத்தைப்பற்றியும் யோவான் கூறி, எப்படி ஒருநிலையிலிருந்து மற்ற நிலையை எட்டிப்பிடிக்க வேண்டும் என்பதைத் தெளிவாக்குகிறார். இவ்வாறு அந்தச் சமாரியப் பெண் தனது சொந்த ஆசைகளிலிருந்து கடவுளின் கொடைகளுக்காக ஏங்கும் நிலை ஏற்படுகிறது (யோவா 4:10). எனவேதான் விசுவாசம் என்பது செபத்திற்குரிய நிபந்தனை மட்டுமல்ல அதன் விளைவும் ஆகிறது (யோவா 4:50.53; 11:25). விருப்பம் ஒரே சமயத்தில் கேட்கப்பட்டுத் தூய்மைப்படுத்தப்படுகிறது.

IV. **இயேசுவின் செபம்:**

1. ***அவரது செபமும், பணியும்:*** இயேசுவின் வாழ்வில் செபத்தின் முக்கியத்துவத்தை நற்செய்திகள் மிகத் தெளிவாக எடுத்துச் சொல்கின்றன. அவர் பல நேரங்களில் மலைமீதிருந்து செபிக்கிறார் (மத் 14:23). தனியாக, தனிமையான இடத்தில் (லூக் 9:18), உலகமே அவரைத் தேடிக்கொண்டிருந்த போதும் செபித்துக் கொண்டிருந்தார் (மாற் 1:37). இது தந்தையோடு அவர் வைத்திருக்க விரும்பிய நெருங்கிய உறவிற்காக மட்டும்தான் என நினைத்தால் அதுதவறு. ஏனெனில் இதை அவர் தனது பணிக்காகவும் அப்போஸ்தலர்கட்குக் கல்வி புகட்டவும் பயன்படுத்தினார். இந்த இரண்டு கருத்துக்களும் லூக்கா நற்செய்தியில் நான்கு குறிப்புகளில் மிகத் தெளிவாக எடுத்துச் சொல்லப்படுகின்றன. திருமுழுக்கின்போது (3:21), பன்னிருவரைத் தேர்ந்தெடுக்குமுன்பு (6:12), உருமாற்றத்தின்போது (9:29) 'பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே' செபத்தைக் கற்றுக் கொடுக்கு முன்பு (11:1). அவரது நெருங்கிய நண்பர்களையெல்லாம் அவரை நோக்கி ஈர்த்தது அவரது இந்தச் செபம்தான். அதில் அவர்கள் இன்னும் அதிகமாக நெருங்கிவரச் செய்கிறார் (9:10). அது அவர்களைப் பற்றியதாகும். ஏனெனில் அவர் தம்முடையவர்களின் விசுவாசத்திற்காகவே செபிக்கிறார். அவரது செபத்திற்கும் பணிக்குமிடையேயுள்ள நெருங்கிய தொடர்பு அவர் 40 நாட்கள் பாலைவனத்தில் செபத்திலும் நோன்பி

லும் செலவழித்ததிலிருந்தே தெளிவாகிறது. இது மோசேயின் மாதிரியைப் பின்பற்றினாலும், அதையும் கடந்து நிற்கிறார் இயேசு. மோசேயைவிட இயேசு, சாத்தானின் கடவுளைச் சோதிக்கும் வழிகளை அதிகம் வெற்றி கொள்வார் (மத் 4:7-உப 6:16). அவர் தனது பாடுகளுக்கு முன்பு நமது செபம் எத்தகைய தடைகளைக் கடந்து வரவேண்டும் என்பதை நமக்குத் தெளிவாகக் காட்டுகிறார்.

**2. பாடுகளும் செபமும்:** தனது முடிவை நெருங்கிக் கொண்டிருக்கும்போது, தன்னோடு சேர்ந்து தனக்காகச் செபிக்க வேண்டுமென ஒலிவ மலையில் இயேசு தன் சீடர்களைப் பார்த்துக் கேட்கிறார். இந்தநேரம் கிறிஸ்தவச் செபம் அனைத்தையும் சுருக்கித் தருகிறது: ''தந்தையே, உம்மால் எல்லாம் முடியும்''. அவரது தாழ்ச்சியைச் சோதிப்பவன் சோதித்துத் தோல்வி அடைகிறான். ''என் விருப்பமன்று உமது விருப்பத்தின்படி ஆகட்டும்'' (மாற் 14:6).

**3. அவரது செபமும் உயிர்ப்பும்:** எல்லா எதிர்பார்ப்புகளையும் கடந்து அவர் செபம் கேட்கப்பட்டுவிட்டது. வானதூதர்களின் செய்தி உடனடியாக ஆறுதல் தருவதாக இருக்கிறது (லூக் 22:43). ஆனால் எபிரேயருக்கு எழுதிய திருமுகம் மிகத் தெளிவாக இதனை எடுத்துக் கூறுகிறது: ''அவர் மண்ணுலகில் வாழ்ந்த காலத்தில் தன்னைச் சாவினின்று காக்க வல்லவரிடம் உரத்த குரலெழுப்பிக் கண்ணீரோடும் அழுகையோடும் தனது மன்றாட்டுக்களைச் செலுத்தினார். அவரது பக்தியினால் அவரது செபம் கேட்கப்பட்டது'' (எபி 5:7). மனித மீட்பின் மையநிகழ்ச்சியான இயேசுவின் உயிர்ப்பு, மனிதனும் கடவுளுமானவரின் செபத்திற்கு இறைவன் கொடுத்த பதில் என்பது நமக்கு புதிய தெம்பைத் தருகிறது. ஏனெனில் மீட்பின் வரலாற்றில் மனிதனின் வேண்டுகோள்களுக்கு அவரே செவிமடுக்கிறார் (சங் 2:8).

**4. இறுதி அறவுரை:** மற்ற அனைத்து முக்கியமானவைகளோடும் முதலில் எப்படிச் செபிக்க வேண்டுமென்று கூறியவர், அவரே இப்போது செபிக்கிறார். கேட்பது கிடைக்கும் என்ற நம்பிக்கையைப் பொருத்தமட்டும் அவரதுபோதகம் ஒத்தமை நற்செய்திகளின் போதனையோடு ஒத்துப்போகிறது. ஆனால் இங்கு 'என் பெயரால்' கேட்பதையெல்லாம் என்ற ஒரு புதிய நிபந்தனையைப் புகுத்துகிறார் இயேசு. இக்கூறு ஒரு புதிய முன்னோக்கை அளிக்கிறது. ''என் பெயரால் கேட்பது'' என்பது அந்த மற்றொரு புதிய மனிதரோடு நாம் கொள்ளும் நெருங்கிய உறவையும், அவர் விரும்புவதையே நாமும் விரும்புவதுமாகிய இரு சிறப்பான அம்சங்களை இதில் வெளிப்படுத்துகின்றது. இவ்வாறு செபம் நாம் விரும்புவதைக் கேட்பது மட்டுமன்று, இயேசுவின் விருப்பப்படி கேட்பதுமாக இருக்கிறது. அவரது சித்தம் அவரது தூதாகும். இயேசு தந்தையோடு கொண்டிருந்த ஒன்றிப்பு அவர் அழைத்தவர்களிடையே உள்ள ஒன்றிப்புக்கு அடிப்படையாக இருந்தது. ''நாம் (தந்தையாகிய நீர் என்னுள்ளும், நான் உம்முள்ளும்) ஒன்றாக இருப்பது போல அவர்களும் ஒன்றாய் இருப்பார்களாக'' (யோவா 17:22). அவரின் பெயரில் இருப்பதும், அவர் விரும்புவதையே விரும்புவதுமே அவர் அளித்த கட்டளைகளின்படி நடப்பதாகும். இவற்றில் முதன்மையானது பிறர் அன்பைக்கோருகிறது. ஆகவே செபத்தில் பரவிநிற்பது பிறர் அன்பே. அதுவே செபத்தின் நிபந்தனையும் அதன் இறுதி விளைவுமாகும். எல்லாச் செபமும் கேட்கப்படுகிறது என்று ஒத்தமை நற்செய்திகள் தொடர்ச்சியாக அறிவிப்பது, புதுப்பிக்கப்பட்ட இதயங்களுக்கெல்லாம். ''உருவகம் எதுவுமின்றி'' (யோவா 16:29) இங்கு உறுதிப்படுகின்றது. இங்கு ஒரு புதிய சூழ்நிலையைக் காண்கிறோம். இதில் ''ஆண்டவரின் திருப்பெயரைச் சொல்லி வேண்டுவோர் யாவரும் தப்பிப் பிழைப்பர்'' (யோவேல் 3:5=உரோ 10:13) என்பது நிறைவேறும். யாவேயின் நாள் பற்றிய வாக்குறுதிகள் நிறைவேறுகின்றன. இறுதி இராவுணவின் செபம் அனைவரும் ஆசையோடு எதிர்பார்த்த புதிய காலத்தைத் தொடங்கி வைக்கிறது. விண்ணக நலன்கள் எல்லாம் மண்ணக நலன்களோடு தொடர்புடையதாக இருக்

கிறது (ஓசே 2:23-25; எசா 30:19-23; செக் 8:12-15; ஆமோ 9:13). இவ்வாறு இயேசுவின் செபம் நமது செபத்தையெல்லாம் கடந்து நிற்கிறது. அரிதாகத்தான் ''நான் செபிக்கிறேன்'' என்கிறார். பொதுவாக, ''நான் கேட்கிறேன்'' என்றும், ஒருதடவை ''விரும்புகிறேன்'' என்றும் (யோவா 17:24) கூறுகிறார். இச்செபம் அவரது (நித்திய எபி 7:25) பரிந்துரைக்கும் மன்றாட்டை எடுத்துக் கூறுகிறது. இதுபாடுகளின் மற்றும் நற்கருணை இரவுணவின் உள்ளார்ந்த பொருளை வெளிப்படுத்துகிறது. ஏனெனில் நற்கருணை, அவரது கொள்கைகளில் இறைவனின் முழுப்பிரசன்னத்திற்கும் நிறைவான பரிமாற்றத்திற்கும் அச்சாரமாக உளது.

V. **திருச்சபையின் செபம்:**

**1. சமூகம்:** திருச்சபை வாழ்வின் தொடக்கம் இஸ்ராயேலரின் செபச் சூழ்நிலையில்தான் ஆரம்பிக்கின்றது. லூக்கா நற்செய்தி, அப்போஸ்தலர்கள் தொடர்ந்து இறைவனைப் புகழ்ந்து பாடிக்கொண்டிருப்பதாகக் கூறுவதோடு முடிவடைகிறது (லூக் 24:53). ஆறாவது மணி நேரத்தில் பேதுரு செபிப்பதாகவும் (அ.ப. 10:9); பேதுருவும் யோவானும் 9 மணி வேளையில் செபிக்கச் செல்வதாகவும் (3:1) கூறப்படுகிறது. தங்கள் கரங்களை வானத்தைநோக்கி உயர்த்திய வண்ணமும், சில நேரங்களில் நின்றுகொண்டும், முழந்தாள் படியிட்டும் செபித்தனர் (1 திமோ 2:8; அ.ப. 9:40). ''அனைவரும் ஒரே மனதாகக் கூடிச் செபித்தனர்'' (அ.ப. 1:14). பெந்தகோஸ்து நாளுக்காக அவர்கள் தங்களையே செபத்தினால் தயாரித்ததுபோலத் திருச்சபையின் ஒவ்வொரு முக்கியமான கட்டத்திலும் அவர்கள் செபித்துத் தங்களையும், இறைச்சமூகத்தையும் தயாரித்தனர். யூதாசுக்குப் பதிலாக வேறொருவரை நியமித்த போது (அ.ப. 1:24-26) ஏழு தியாக்கோன்களை நியமித்தபோது (6:6) இன்னும் பல நேரங்களில் செபத்தினால் தொடங்கிவைத்தனர். பேதுரு விடுதலை பெறுவதற்காகச் செபித்தனர் (4:24-30). பிலிப்புவால் திருமுழுக்குப் பெற்றவர்களுக்காகவும் செபித்தனர் (8:15). பேதுரு செபிப்பதையும் (9:40; 10:9) அதேபோல பவுல் செபிப்பதையும் (9:11; 13:3; 14:23; 20:36; 21:5) பார்க்கிறோம். விண்ணகத்தில் கூடியுள்ள திருச்சபையின் பாடல் எங்கும் எதிரொலிப்பதைத் தெளிவோடு கூறுகிறது (திருவெளி 5:6-14).

**2. புனித பவுல்**

**(அ) போராட்டம்:** எப்பொழுதும் செபியுங்கள் ''இடைவிடாது செபியுங்கள்'' (உரோ 1:10; எபே 6:18; 2 தெச 1:3.11; 2:13; பில 4; கொலோ 1:9) என்ற வார்த்தைகளால் செபம் என்பது என்ன என்று தெளிவாக வரையறுக்கிறார் பவுல். இரவும் பகலும் செபியுங்கள் என்றும் கூறுகிறார் (1 தெச 3:10; 1 திமொ 5:5). செபத்தை ஒரு போராட்டமாகப் பார்க்கிறார் (உரோ 15:30; கொலோ 4:12). கடவுள் நமது செபத்திற்கு எப்படி முழுமையாகச் செவிமடுக்கிறார் என்பந்தை மிக அழகாகக் குறிப்பிடுகிறார் (எபே 3:20). ''எனது உடலைவருத்திக் கொண்டிருக்கும் முள்ளை என்னிடமிருந்து அகற்றுமாறு மூன்று முறை மன்றாடினேன்'' (2 கொரி 12:8) என்கிறார்.

**(ஆ) அப்போஸ்தலச் செபம்:** மேலே குறிப்பிட்ட உதாரணம் தனித்தன்மை வாய்ந்தது. பொதுவாக அவருடைய செபம் எல்லாம் இறையரசு வளர வேண்டும் என்பதற்காகத்தான் இருக்கும். இதற்காகப் பல எதார்த்தமான நடைமுறை ஆசைகளோடு செபிக்கிறார். எருசலேம் மீண்டும் வெற்றி கொள்ளப்படவேண்டும் (உரோ 15:30 தொ), சோதனைகள் முடிய வேண்டும் (2 கொரி 1:11), அவரது உரிமை வாழ்வுக்காகவும் (பில 22) இன்னும் பலவற்றிற்காகவும் செபிக்கிறார் (பிலி1:19; 1 தெச 5:25). மற்றவர்களும் இதற்காகச் செபிக்க வேண்டுமெனக் கேட்கிறார் (கொலோ 4:12). எப்பப்பிரா அவர்களுக்காகச் செபத்தில் போராடுவதைக் குறிப்பிடுகிறார். செபத்தைப் பொறுத்தமட்டில் அது பவுலின் எழுத்துக்களில் கிறிஸ்துவின் உடலோடு ஒன்றிக்கச் செய்யும் வழி என்பதே தெளிவாகிறது.

**(இ) நன்றி கூறல்:** வேண்டுதலுக்கும், போற்றுதலுக்கும் இடையேயுள்ள பாரம்

பரிய சமன்பாட்டைப் பவுலில் காண்கிறோம். ''செபங்கள், மன்றாட்டுக்கள், நன்றியறிதல் கள்'' என வரிசைப்படுத்துகிறார் (பிலி 4:6; 1 தெச 5:17; 1 திமொ 2:1). கலாத்தியருக்கும், கொரிந்தியருக்கும் எழுதிய மடலைத்தவிர மற்ற எல்லா மடல்களையும் அவர் நற்செய்தியை ஏற்றுக்கொண்ட அவர்களுக்காக இறைவனிடம் நன்றி செலுத்திவிட்டே தொடங்குகிறார். அவர்களில் இறைவனது அருள் நிறைவு பெற வேண்டும் என்று செபிப்பதாகக் கூறுகிறார் (பிலி 1:9). நன்றி கூறிச் செபித்தல் செபத்தின் மற்ற எல்லாக் கூறுகளையும் தன்னுள் ஈர்ப்பதாகத் தோன்றுகிறது. இயேசு கிறிஸ்துவில் பெற்றுக் கொண்ட கொடையிலிருந்து தொடங்காமல் நாம் செபிக்க முடியாது. அதற்காக நன்றி கூறக் கூடியவர்களாக மாற வேண்டுகிறோம் (2 கொரி 9:11-15).

**(ஈ) மகனின் ஆவியின் வழியாகச் செபித்தல்:** நாம் செபிக்கும்பொழுது ஆவியானவர் நம்மில் செயலாற்றி நம்மை ''மூவொரு இறைவனோடு'' இணைப்பதை மிகத் தெளிவாகப் புதியதொரு ஒளியில் விளக்குகிறார் பவுல். எவ்வாறு வழிபாட்டிலே நாம் செபிக்கிறோமோ அதுபோலவே அவர் கிறிஸ்து வழியாகத் தன் செபத்தைத் தந்தையிடம் செலுத்துகிறார். அரிதாகத்தான் அவர் ''ஆண்டவரிடம்'' அதாவது இயேசுவிடம் செபத்தைச் சமர்ப்பிக்கிறார் (2 கொரி 12:8; எபே 5:19). நம்மைச் சுவிகார மக்களாக்கும் ஆவியே கிறிஸ்து வழியாகத் தந்தையிடம் நம்மைப் பேசச் செய்கிறார் (உரோ 8:15). அந்த ஆவியால்தான் இறைத்தந்தையை நாம் 'அப்பா' எனக் கூப்பிடுகிறோம். கடவுளை 'அப்பா' என அழைக்க யூதர்கள் துணியமாட்டார்கள். ஏனெனில் அது மண்ணில் நமது சாதாரணத் தந்தையர்களை நாம் அழைக்கப் பயன்படுத்தும் சொல். இந்தத் தயவு விண்ணிலிருந்துதான் வரக்கூடும். எனவே அந்த ஆவியின் துணையால்தான் நாம் ''அப்பா! தந்தாய்!'' எனத்துணிவோடு அவரை அழைக்கிறோம் (கலா 4:6; மாற் 14:36).

இவ்வாறு, மனுக்குலம் தனது செபத்தை எண்பிக்க உணரும் தேவை இறைமுன் முயற்சியால் ஊடுருவப்பட்டு, உண்மையிலேயே நிறைவடைகிறது. பிள்ளைக்குரிய மனப்பான்மையைவிட ஆழமாக மகனுரிமை நமது செபத்தின் மையமாக இருக்கிறது. செபிப்பது எப்படி என்று நாம் அறியாத நிலையில், ஆவியானவரே நம்மில் செபிக்கிறார் (உரோ 8:26). இறைவன் நமக்கு அளிக்க விரும்பும் கொடையின் ஆழத்தையும் அடைய உறுதியளிக்கிறார். இதுவே அன்பெனும் கொடையாகும். இதுவே செபத்தின் தொடக்கமும் முடிவும் ஆகும். இது ஏற்கெனவே பெற்றுக்கொண்ட (உரோ 5:5), இன்னும் வேண்டப்படும் (லூக் 11:13) அன்பின் ஆவியாவ.. அவரிலே நாம் ஒரு புதிய உலகைத் தேடுகிறோம். அந்த உலகிலே நமது செபம் கேட்கப்படுவது உறுதி. அதற்குப் புறம்பே, நமது செபம் புறவினத்தாரின் செபத்தைப் போன்றதுதான். அவரில் அனைத்துச் செபங்களும் விண்ணையும் மண்ணையும் ஒன்றிக்கச் செய்யும் முயற்சியை விரைவுபடுத்துகின்றன. ''ஆவியும் மணமகளும் 'வாரும்'.....ஆம். ஆண்டவராகிய இயேசுவே வாரும்' என்று கூறுகின்றனர்'' (திருவெளி 22:17.20).

### செபராது (SEPHARAD)

சிதறிப்போன யூதர்கள் தங்கிய இடமாக ஒப 20-இல் குறிக்கப்படும் இடமாகும். தர்கூம் செபராதை ஸ்பெயினோடு ஒன்று படுத்தியது. அதன் விளைவாக ஐபிரியன் யூதர்கள் இப்போது ''செபராதியர்'' என்றழைக்கப்படுகின்றனர்.

செபராது, சிறிய ஆசியாவில் லீதியாவின் தலைநகரான சர்தையாக அடையாளம் காட்டப்படுகிறது. மேதியப் பகுதியிலுள்ள சப்பர்தாவாக அடையாளம் காட்டப்படலாம் என்ற மற்றொரு கருத்தும் நிலவுகிறது. இவ்விடத்தில் கி.மு. 8-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே நாடு கடத்தப்பட்ட யூதர்கள் வாழ்ந்தனர்.

### செபர்வயிம் (SEPHARVAIM)

சீரியாவிலோ மெசபொத்தாமியாவிலோ அமைந்திருந்த ஒரு நகரம். இன்று இதன்

அமைவிடத்தைப் பற்றிக் குறிப்பு இல்லை. சமாரியா நகரம் அசீரியர்களிடம் வீழ்ந்த போது அசீரிய அரசன் இரண்டாம் சார்கோன் இஸ்ராயேல் மக்களை நாடுகடத்திப் பல ஊர்களிலிருந்து மக்களை இஸ்ராயேலில் குடியேற்றினார் (கி.மு.722). அப்படிப்பட்ட ஊர்களில் இவ்வூரும் ஒன்று (2 அர 17:24; 18:34; 19:13; எசா 36:19; 37:13).

இந்நகரைச் சேர்ந்த மக்கள் தங்கள் தெய் வங்களாகிய அதிராம்-மெலக்குக்கும் அனாம்-மெலக்குக்கும் தங்கள் பிள்ளை களைப் பலியிட்டு வந்தனர் என்று கூறப்படு கிறது (2 அர 17:31). இந்நகரின் பெயரைக் குறித்தும் அதன் அமைவிடத்தைக் குறித்தும் பல்வேறு கருத்துக்கள் நிலவியபோதும், எசேக்கியேல் குறிப்பிடும் சிபிராயிம் நகரா கவே இருக்கவேண்டும் (எசே 47:16). இது கமாத்துக்கும் (ஆமாத்து) தமஸ்குவுக்கும் இடையில் உள்ளது.

**செபற்றியா** (SHEPHATIAH - யாவே நடுவர் ஆவார்)

1. கெபிரோனில் (எபிரோன்) தாவீதுக் கும், அபித்தாள் என்ற மனைவிக்கும் பிறந்த புதல்வர்களில் ஒருவர் (2 சாமு 3:4; 1 நாள் 3:3).

2. பென்யமின் குடும்பத்தினர்கள் நாடு கடத்தப்பட்டதற்குப்பின் எருசலேமில் குடி யேறி வாழ்ந்தனர் (1 நாள் 9:8). இவர்களில் இவர் மெசுல்லாம் குடும்பத்தில் குலப் பெயர் மூதாதையர்.

3. இவர் ஒரு கரூபியர் (அருபியர்). சிக்லா கில் தாவீதுடன் சேர்ந்து கொண்ட பென்ய மின் குலத்து வீரர்களில் இவரும் ஒருவர் (1 நாள் 12:5).

4. தாவீது ஆட்சிக் காலத்திலிருந்த சிமி யோன் குலத்துத் தலைவன் மாக்காவின் மகன் (1 நாள் 27:16).

5. அரசன் யோசபாத்தின் மகன் (2 நாள் 21:2). இவரும் யோசபாத்தின் மற்றப் புதல் வர்களும் அவர்களுடைய சகோதரன் யோரா மால், அவன் ஆட்சிக்கு வந்தபின் கொல்லப் பட்டனர்.

6. ஒரு குடும்பத்தின் முதல்வர். இவர் வழியில் தோன்றிய 372 பேர்கள் பாபிலோ னியாவிலிருந்து செருபாபேலோடு திரும்பி னர் (எஸ் 2:4; நெகே 7:9). மேலும் 81 பேர்கள் எஸ்ராவோடு திரும்பினர் (எஸ் 8:8).

7. சாலமோன் வேலையாட்களின் குடும் பத் தலைவன். பாபிலோனியாவிலிருந்து செருபாபேலுடன் திரும்பியவர் (எஸ் 2:57; நெகே 7:59).

8. யூதா குலத்து குடும்பத்தின் குலப்பெயர் மூதாதையர். பெரேட்சின் வழித்தோன்றல். நெகேமியாவின் காலத்தில் எருசலேமில் குடியிருந்தார்கள் (நெகே 11:4).

9. மத்தானின் மகனான ஓர் இளவரசன். நெபுகத்னேசர் எருசலேமை முற்றுகையிட்ட போது, நான்கு எகிப்திய கட்சியைச் சேர்ந்த அதிகாரிகள் செதேக்கியாவிடம் எரேமியா வைக் கொல்லப் பணித்திருந்தார்கள். ஏனென் றால் எரேமியாவின் இறைவாக்குகள் எருச லேமைப் பாதுகாத்தவர்களைத் தளர்ச்சி யடையச் செய்தன. அவை நாட்டுக்குத் துரோக மானவையாயிருந்தன. இந்த நால்வரில் ஒரு வர் செபற்றியா ஆவார். அவர்களை எதிர்க்க முடியாத காரணத்தினால் செதேக்கியா, எரே மியாவை அவர்களிடம் ஒப்படைத்தார். அவர்கள் எரேமியாவைச் சாகடிப்பதற்காகப் பாழுங் கிணற்றில் இறக்கி விட்டார்கள் (எரே 38:1 தொ).

**செபன்யா** (SHEBANIAH - ஆண்டவரால் வளர்ந்த)

1. தாவீதின் ஆட்சிக்காலத்தில் திருப் பேழை எருசலேமுக்குள் கொண்டு வரப்பட்ட போது கடவுளின் திருப்பேழைக்குமுன் எக்காளம் ஊதிக்கொண்டிருக்க நியமிக்கப் பட்ட குருக்களில் இவரும் ஒருவர் (1 நாள் 15:24).

2. எஸ்ரா சட்டத்தை வாசித்ததோடு தொடர்புடைய பொதுநோன்புக் காலத்தில்

இஸ்ராயேல் மக்களை வழிபாட்டில் வழி நடத்திய லேவியர்களில் இவரும் ஒருவர் (நெகே 9:4-5). இவர் எஸ்ராவின் தலைமை யில் உடன்படிக்கைக்குக் கையொப்பமிட்ட லேவியர்களில் ஒருவராகவும் இருக்கலாம் (நெகே 10:10).

3. இவர் நாடு கடத்தப்பட்டதற்குப் பின் உள்ள காலத்திலுள்ள ஒரு குரு (நெகே 12:4). எஸ்ராவின் உடன்படிக்கைக்குக் கையெழுத் திட்டவர்களில் ஒரு பிரதிநிதி (நெகே 10:4). சில ஏடுகள் செபன்யா என்ற பெயர் செக்க னியா (8) என்ற பெயரின் தவறான வாசக மாக இருக்கக்கூடும். என்று சுட்டுகின்றன. (10:3). இவர் 12:14-இல் குறிக்கப்படும் குருக் கள் குடும்பத்தை நிறுவியவராக இருக்க லாம்.

4. நெகேமியாவின் தலைமையில் உடன் படிக்கையில் கையொப்பமிட்ட மற்றொரு லேவியராவார் (நெகே 10:12). இவரும் 2-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

5. நெகேமியாவின் தலைமையில் உடன் படிக்கையில் கையொப்பமிட்ட மற்றொரு லேவியராவார் (நெகே 10:12) இவரும் 2-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

**செபா (SEBA)**

கூசின் (அதாவது எத்தியோப்பியாவின்) மகன். ஆப்பிரிக்கா அல்லது எத்தியோப்பி யாவுக்கு அருகிலுள்ள மேற்கு அரேபியா வின் பகுதியில் வாழ்ந்த மக்களின் இனப் பெயர் மூதாதையராக இருக்கலாம் (ஆதி 10:7;1 நாள் 1:9; சங் 72:10; எசா 43:3). ஒருவேளை செபா செபாயர்களின் இடமாகவோ (எசா 45:14) அரேபிய சேபாவிலுள்ள ஒரு குடி யிருப்பாகவோ இருக்கலாம்.

**செபாகு (ZEBAH - பலி)**

தன்னுடைய சகோதரர்களைக் கொன்றதற் காகக் கிதியோன் பிடித்துக் கொன்ற இரு மிதியானிய அரசர்களில் ஒருவர் (நீதி 8:4-21; சங் 83:11).

**செபாம் (SEBAM)**

சிபிமா என்பதன் மற்றொரு பெயராகும். சீகோன் தோல்வியுற்றபின், ரூபன் உரிமை கொண்டாடிய மோவாபிய நகரம் (எண் 32:3).

**செபாம் (SHEPHAM - காட்டுத்தனமான, அம்மணமான)**

கானான் நாட்டை இஸ்ராயேலர் கொண்ட பின் கிழக்கு எல்லையின் விவரிப்பில் வரும் ஒருபெயர் (எண் 34:10-11). இது இருந்த இடமாகக் கெர்மோன் (எர்மோன்) மலைக்கு அருகிலும் யோர்தான் நதி தோன்றும் இடமுமாகக் கருதப்படும் அல் லது எதிர்-லெபனோனுக்கு வடக்கிலுள்ள ஒரோன்தோசு ஆற்றங்கரையிலுள்ள இரிப் லாவாகக் கருதப்படும். இஸ்ராயேலின் எல் லைகள் பற்றிய எசேக்கியேலின் விவரிப்பில் செபாம் விடப்பட்டுள்ளது (எசே 47:18).

**செபாயர் (SABEANS - குடிகாரர்கள்)**

செமித்திய மரபில் வந்த மக்கள். அரேபியத் தீபகற்பத்தில் தென்மேற்குப் பகுதியில் வசித்தனர். அவர்கள் நறுமணப்பொருட் களை, விலையுயர்ந்த மாணிக்கங்களை வியாபாரம் செய்து வந்தனர். அனேகமாகச் 'செபா' ஆப்பிரிக்காவிலிருந்த செபாயர் களின் குடியிருப்பின் பெயராக இருக்கலாம். செபாயர்கள் தங்கிய தென்மேற்கு அரேபியா இக்கால ஏமானாகும்.

செபாயர்கள் முதலில் தென்மேற்கு அரே பியாவில் குடியேறினர். பல்வேறு அரசியல் தொடர்பினால் அவர்களுடைய எல்லை விரிவடையலாயிற்று. இவர்கள் இருந்த பகுதி நல்ல வளமுடையதாக இருந்தது. அதிக முன்னேற்றம் கண்டது. பல அணைக் கட்டுகள், மதகுகள் கட்டினர். இது கிழக்கு எல்லைப் பகுதியில் இருந்ததால், மற்ற வட நாட்டுத் தொல்லை எதுவுமின்றிப் பாதுகாப் பாக இருந்தனர். எனவே செபாயர்கள் அமைதியோடும், பாதுகாப்போடும் மகிழ்ச்சி யாக வாழ்ந்தனர். வெளிநாட்டுத் தர்க்கங்க ளின்றித் தங்களது நிலையிலும், பண்பாட்டி லும் வளர்ந்தனர்.

அண்டைய மேற்காசிய நாடுகளின், பொருளாதார வாழ்க்கையில் செபாயர்கள் முக்கிய இடம் வகித்தனர். தூபப் பொருட்கள், வெள்ளைப் போளம் போன்றவைகளை வியாபாரம் செய்ய இவர்கள் இருந்த பகுதி வழியாகச் செல்ல வேண்டியிருந்தது. இதனால் வணிகச் சாலைகளில் இவர்கள் ஆதிக்கம் செய்தனர். இந்தத் தொடர்பில்தான் இவர்களை விவிலிய ஆசிரியர்களுக்குத் தெரியும் (யோபு 6:19; சங் 72:10.15; எசா 60:6; எரே 6:20; எசே 27:22-23; 38:13). பல சமயங்களில் செபாயர்கள் இக்கால மோக்காவிற்கு அருகிலுள்ள மூசா, பாபு ஏல் மான்டேபுக்கு அருகிலுள்ள ஒசிலிஸ் போன்ற துறைமுகங்களைத் தங்கள் கண்காணிப்பில் வைத்திருந்தனர். இந்தத் துறைமுகங்களிலிருந்துதான் இவர்கள், கிழக்கு ஆப்பிரிக்கா, சொக்கோத்ரா (இந்தியாவும் இருக்கலாம்) போன்ற நாடுகளுக்குக் கப்பல் வழியாக வியாபாரம் செய்து வந்தனர். இதன் விளைவாகத்தான் பொருளாதாரம் வளர்ச்சி கண்டு புகழ்பெற்ற எழுத்தாளர்களால் ''மகிழ்ச்சி மிக்க அரேபியா'' என்று வருணிக்கும் அளவுக்கு வளர்ந்தது.

பல தனிப்பட்ட ஆய்வாளர்கள் செபாயர்களின் நாகரீகம் பற்றி ஆய்வு நடத்தினர். அதில் குறிப்பிடத்தக்கவர்கள் சீட்சென் (1810), அர்னோ (1843), காலேவி (1869), கிளாசர் (நான்கு பயணங்கள் 1882-94), பல ஆயிரக்கணக்கான தென் அரேபியக் கல்வெட்டுக்களைப் பார்த்து எழுதிய பாக்ரி (1947) ஆகியோர் ஆவர். முதல் புதைபொருள் ஆராய்ச்சி (1928) ரத்ஜெவ்ஸ், வோன் விஸ்மான் போன்றோரால் குக்கா என்ற இடத்தில் நடத்தப்பட்டது. இது சானாவுக்கு 23 கி.மீ. வடக்கில் உள்ளது. அங்கே ஒரு சிறிய கோவிலைக் கண்டனர். மேலும் பல கண்டுபிடிக்கப்பட்டன. அதில் பழைய செபாயர்களின் தலைநகரான மாரிபுக்கு அருகிலுள்ள கராம் பில்கிஸ் என்பது குறிப்பிடத்தக்கது.

புதிய புதிய செய்திகள் கிடைக்கப்பெற்றும் செபாயர்களின் தொடக்க வரலாறு ஒரு புதிராகவே இருக்கிறது. தொடக்கச் செய்திகளடங்கிய ஆதியாகமம் சில செய்திகளைத்தான் தருகின்றது. ஆதி 10:7-இல் (1 நாள் 1:9) செபா, காமின் பரம்பரையில் கூசின் புதல்வராகக் குறிக்கப்பட்டுள்ளார். எனவே ஆசிரியர் மேற்கு வடமேற்கு மக்களோடு சேர்த்துச் செபாவைக் கருதுகிறார். அதே நேரத்தில் செபாவும், சேபாவும் ஒரே ஆள் இல்லை என்பது சங் 72:10-இன் மூலம் தெளிவாகிறது. செபா, கூசின் (நூபியா) புதல்வராக இருப்பதாலும், எசா 48:3-இன்படி, எகிப்தும் நூபியாவும் தொடர்பு கொண்டு இருப்பதாலும், செபா ஆப்பிரிக்காவில் இருக்கலாம் என எண்ணப்படுகிறது. மேலும் செபாவும் சாபாவும் ஒரே மாதிரிப் பெயர்களைக் கொண்டுள்ளதால் செபா, செபாயக் குடியிருப்பைக் குறிப்பதாக அமைகிறது. ஆனால் ஆதி 10:28 (1 நாள் 1:22)-இன்படி சேபாவும், பல தென் அரேபிய இனக்குடிகளும், சேமின் பரம்பரையாக உள்ளனர். இதனால் சேபா வடக்கு, வடகிழக்கு மக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர் என்று நம்பப்படுகிறது. ஆதி 25:3-இல் (=1 நாள் 1:32) உள்ள பெயர்ப்பட்டியல்படி, ஆபிரகாமின் மகன் யோக்சானின் வழித் தோன்றலாகச் சேபாயினர் உள்ளார். இதனால் சேபாவுக்கும் இஸ்ராயேலுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுள்ளது. இந்த எல்லா தொடக்கத் தலைமுறைக் குறிப்பீடுகளும், செபாயர்கள் மேற்காசிய மக்களோடும் ஆப்பிரிக்க மக்களோடும் தொடர்பு கொண்டுள்ளனர் என்று இஸ்ராயேலர் எண்ணினர் என்று சுட்டுகின்றன. இந்தப் பரந்த தொடர்புக்குச் செபாயர்களின் பழைய வியாபாரம் துணைநின்றது.

பல வருடங்களாக அறிஞர்கள் சாபாவின் காலம் பற்றி வாக்குவாதம் நடத்தினர். சிலர் இவர்கள் காலம் கி.மு. 8-ஆவதுநூற்றாண்டு முடிவில் என்றனர். மற்றும் சிலர் கி.மு. 5-ஆவது நூற்றாண்டுக்குப்பின் என்றனர். இறுதியில் காசர்கொலன் என்ற இடத்தில் நடத்தப்பட்ட ஆராய்ச்சியின் விளைவாக, இரண்டாவது கருத்தே சரியானதென வலியுறுத்தப்பட்டது.

மொழி, புதைபொருள் ஆராய்ச்சிச் சான்றுகளின் படி, சேம் என்பவரின் மரபில்

வந்த மக்கள், தென் அரேபியாவில் கி.மு. இரண்டாவது ஆயிரம் ஆண்டுகளின் இடைப்பட்ட நூற்றாண்டுகளில் இடம் பெயர்ந்து வந்து குடியேறினர். இந்தக் குழு வில் உள்ளவர்கள்தான் சாபாவைத் தோற்று வித்தார்கள் என்பது இன்னும் சந்தேகத்துக் குள்ளாகவே இருக்கிறது. கி.மு. 12-ஆம் நூற்றாண்டில் பாலைவனப் பயணம் இருந் தது; ஒட்டகங்கள் பயன்பட்டன. இது செபா யர்களால் ஊக்குவிக்கப்பட்டது. வணிகம் பெருகியது. இதனால் ஓர் இளவரசி 2400 கி.மீ. தொலைவிலுள்ள பாலஸ்தீனத்திற்குப் பயணம் மேற்கொள்ள முடிந்தது. அவள் சாலமோனைச் சந்தித்தது (1 அர 10:1-10.13; 2 நாள் 9:1-9. 12) வியாபார நோக்கத்திற்காக வும் இருக்கலாம். இது செபாயர்களுக்கும் இஸ்ராயேலர்களுக்கும் நல்ல பயன்களை அளித்தது.

9-ஆம் நூற்றாண்டு முதல் 5-ஆம் நூறாண்டு பாதிவரை சாபா முக்காரிப்புக்க ளால் ஆளப்பட்டது. 20 பேருக்கும் மேற்பட்ட வர்கள் நாட்டை ஆட்சி செய்துள்ளனர். இவர்கள் மூன்று குழுக்களாகப் பிரிந்து முறையே 9-ஆம் நூற்றாண்டு முதல் கி.மு. 675-வரையும், 675-முதல் 525 வரையும், 525 முதல் 450-வரையும் ஆண்டனர். முதல் குழு வில் சிலர் அசீரிய ஏடுகளில் குறிக்கப்படு கின்றனர். இரண்டாம் குழுவினர் பல கட்ட டங்களைக் குறிப்பாக, சந்திரக் கடவுளுக்கு ஆலயங்களை எழுப்பியுள்ளனர். மூன்றாம் குழுவினரைப்பற்றி அதிகம் தெரியவில்லை. இக்காலத்தில் மெசாபொத்தாமியப் பண் பாட்டால், செபாயர் சித்திர, சிற்பக்கலை கள் பாதிக்கப்பட்டன. கி.மு. 450-இல் ஆண்ட இறுதி முக்காரிப்பு கிரிபில் வாட்டர் ''சாபாவின் அரசன்'' என்ற பட்டத்தைப் பெற் றுக் கொண்டார். பல கட்டடங்களைச் சாபா வில் கட்டினார். கி.பி. முதல் நூற்றாண்டில் கிரேக்க, உரோமச் சித்திரங்கள் கலைப் பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டன. மேலும் சில இறக்குமதி செய்யப்பட்ட பானைகளும் காணப்பட்டன.

கி.பி. முதல் நூற்றாண்டின் இடைப்பட்ட ஆண்டுகளில் சாபா மற்றும் தூ-ரயிதான் அரசர்களின் காலம் ஆரம்பித்தது. இக்காலம் போராட்டங்கள் நிறைந்ததாய் இருந்தது. சாபா வெற்றிகண்டது. சில கட்டடங்கள் கட்டப்பட்டன. இறுதியில் சாபாவின் அரச ராக, அப்ரகா ஆண்டார். இவர் மாரிபு அணையைச் சீர் செய்தார். கி.பி. 575-இல் அபிசீனிய ஆதிக்கம் தொடங்கி 628-வரை நீடித்தது.

**செபாரிம்** (SHEBARIM - கல் சுரங்கம்)

இது ஆய் என்ற இடத்திற்கும் எரிகோவிற் கும் இடையில் உள்ள ஓர் இடம். ஆயைக் கைப்பற்றச் செய்த முயற்சியில் இஸ்ராயே லர் தோல்வியுற்றபின் ஆயின் மக்கள் இஸ்ரா யேலரைச் செபாரிம் வரை துரத்திச் சென்ற னர் (யோசு 7:5). செபாரிம் என்பது ஓர் இடப்பெயராய் இல்லாமல் ஓர் உண்மை யான கல் சுரங்கத்தைக் குறிக்கலாம்.

**செபார்** (SEPHAR - எண்)

யோக்தானின் மக்களின் உறைவிடம். இவர்கள் ''மேசாவிலிருந்துகிழக்கே செபார் செல்லும் திசையில் இருந்த மலைநாடுவரை" பரவியிருந்தனர் (ஆதி 10:30). முதலில் இந்நகரம் வட அரேபியாவில் இருப்பதாக வும் பிறகு இதே அரேபியாவில் தெற்குப் பகுதியில் இருப்பதாகவும் கருதப்பட்டு வந் தது. இதனைத்தவிர ஏமன் நாட்டின் உட்பகுதி யில் உள்ள ஒரு நகரையும், மகரா கரைப் பகுதியில் உள்ள ஒருநகரையும் செபார் நக ராக இருக்கலாம் என்றும் கூறுவர். ஆனால் இதனை உறுதியாக வலியுறுத்திக் கூற முடி யாது. எபிரேய மொழியில் 'செபார்' என் றால் 'எல்லையோர நகரம்' என்று பொருள் உண்டு. எனவே ஆதியாகமத்தில் வரும் சொற்றொடர் இடப்பெயரைக் குறிப்ப தில்லை என்று கொள்ளலாம். மாறாக எல் லையோரம் வரை பரவியிருந்தனர் என்று கொள்ளலாம். யோக்தானியர் தென் அரேபி யச் சேமியர் ஆவர். கத்ராமாவுத்திலுள்ள சபாராகச் செபார் அடையாளம் காட்டப்பட லாம்.

**செபாற்று** (SHEBAT)

இது எபிரேய நாட்காட்டியில் பதினோ ராம் மாதத்தின் பெயர் (செக் 1:7; 1 மக் 16:14). இது ''சாபாத்து'' என்ற அக்காதியப் பெயரின் ஒரு வடிவமாகும். இது நமது தை மாதத்திற்கு (சனவரி - பெப்ருவரி) இணை யானது.

**செபி, செபோ** (SHEPHI, SHEPHO - *வெறுமையான, மலடான*)

இவர் ஏதோமில் கோரிய (ஒரிய) துணை இனத்தின் மூதாதையர் ஆவார். இனத்தலைவர் சோபாலின் நான்காவது புதல்வர் (ஆதி *36:23; 1 நாள் 1:40*).

**செபிக்கும் இடம்** (PRAYER, PLACE OF)

செபம் என்பது எந்த இடத்திலும் செய்யலாம். சிறையில்கூடச் செய்யலாம் (*அ.ப. 16:25*); புயலில் அகப்பட்ட கப்பலிலும் செய்யலாம் (*27:23.35*). உப ஆகமப் பாரம்பரியம் எருசலேம் ஆலயத்தில் மட்டுமே செபிக்கவேண்டும் எனக்கூறியது. இதைத்தான் எசா 56:7-ஐ மேற்கோள்காட்டி இயேசு குறிப்பிடுகிறார். எல்லா மக்களுக்கும் அது செபவீடு (*மத் 21:13*). எருசலேமுக்கு வெளியே மக்கள் செபிக்கும்போது அவர்கள் அதை நோக்கியே செபிக்க வேண்டும் (*தானி 6:10; சங் 5:7*-இது யூதர்களின் செபநூலில் குறிப்பிடப்பட்டுள்ளது). பாஸ்காத் திருவிழாவின்போது அவர்கள் வீட்டிலேயே செபிக்கலாம். அப்போது அந்நியருக்கும் வீட்டில் இடம் கொடுக்கலாம் எ.கா. மேல்மாடி (*மாற் 14: 14-15; தானி 6:10; அ.ப. 1:13*). மேல்மாடி செபிக்கச் சிறந்த இடம். ஏனெனில் ஒருவன் மற்ற ஈர்ப்புகள் இன்றித் தனிமையாகச் செபிக்க முடியும் என்று அக்காலத்தில் கருதினர் (*அ.ப. 10:9; யூதி 8:5*). தனிமையான மலைகளிலும் அமைதியான இயற்கைச் சூழ்நிலையிலும் இயேசு செபித்தார் (*மத் 6:6; மாற் 1:35; லூக் 9:28; யோவா 1:48; 2 சாமு 15:32; 1 அர 18:42*).

பழைய ஏற்பாட்டில் உயர்ந்த மலைகளும் சோலைகளும் பாகால் வழிபடும் இடம் எனக் கூறப்படுகிறது (*உப 12:2; எரே 17:2; எசே 6:13*). முறையான யூத செபத்திற்கு நீர் மிக அவசியம் (*அப.16:13.6; யூதி 12:6-8*). பிரச்சனையான சமயத்தில் தனிமையாகச் சென்று செபிப்பதுமோசேக்குத் தேவையானதாகப்பட்டது (*யாத் 24:18; உப 9:25; 1 அர 19*). திருமுழுக்கு யோவான் (*லூக் 1:80*), பவுல் (*கலா 1:15-17*), இயேசு ஆகியோருக்குத் தனிமையாகச் செபிக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. அவர்கள் திரும்பவும் முடிவுகாணப் பிரச்சனைகளுக்கு நடுவே வந்தார்கள். திருமுழுக்கு யோவான் யோர்தானைக் கடந்து போதிக்க மீண்டும் மக்களிடையே வந்தார். கும்ரான் துறவற மடம் இவ்வாறு தனிமையாகச் சென்று செபித்ததற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. செபக் கூடங்களிலும் இவர்கள் செபித்தனர். செபிக்கும் இடம் யூத செபக்கூடத்தையும் குறிக்கலாம் (*அ.ப. 16:13; 1:14*).

**செபிதா** (ZEBIOAH - *கொடை*)

ரூமாவைச் சேர்ந்த பெதாயாவின் மகளும், யூதாவின் அரசன் யோவாக்கிமின் தாயும் ஆவாள் (*2 அர 23:36*).

**செபினா** (ZEBINA - *வாங்கப்பட்ட*)

அந்நியப் பெண்களை மணந்த யூதர்களுள் ஒருவர். நெபோவின் வழித்தோன்றல். இவர் எஸ்ராவின் காலத்தில் வாழ்ந்தார் (*எஸ் 10:43*).

**செபுபாம்** (SHEPHUPHAM - *பாம்பு*)

பென்யமின் குலத்தைச் சேர்ந்தவர். ஆதி *46; எண் 26; 1 நாள் 7-8*-போன்ற இடங்களில் பென்யமின் குலத்துத் தலைமுறை அட்டவணைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவைகளில் இப்பெயர் வெவ்வேறு முறைகளில் சொல்லப்பட்டுள்ளது. இப்பெயர் பென்யமினின் மகன் என்ற முறையில் எண் 26:39-இல் மட்டுமே சொல்லப்பட்டாலும், *1 நாள் 8:5*-இல் இருக்கும் செபுவான் இவராகவே இருக்க வாய்ப்புகள் பல இருக்கின்றன. ஆனால் இதில் பென்யமின் மகனாக அல்ல, வழித்தோன்றலாகச் சொல்லப்பட்டுள்ளது. மேலும் பென்யமின் குலத்துத் தலைமுறை அட்டவணைகள், இரட்டைப் பெயர்களைத் தருகின்றன. இவை செபுபாமின் சில அசைகளைக் கொண்டுள்ளன: மும்பிம், குப்பிம் (உப்பிம்) (*ஆதி 46:21*) செபுபாம், கூப்பாம் (ஊபாம்) (*எண் 26:39*) சுப்பீம், குப்பிம் (உப்பிம்) (*1 நாள் 7:12*), செபுபான், கூராம் (ஊராம்) (*1 நாள் 8:5*). இந்தச் சில ஆராய்ச்சிகள் அறிஞர் சிலரைச் சூப்பாம் என்ற பெயரே ஆதி *46; எண் 26; 1 நாள் 8*-இல்

...னப்படும் பென்யமின் தலைமுறை அட்ட ...ணையில் மூலப்பெயராக இருந்திருக்க வேண்டும் என்றும், இவர் பென்யமினின் மகனாகவோ பேரனாகவோ இருந்திருக்க வேண்டும் என்றும் முடிவு செய்யத் தூண்டி யுள்ளன.

**செபுபான்** (SHEPHUPHAN)

பென்யமினின் பேரனும் பேலாவின் மக னுமாவார் *(1 நாள் 8:5)*.

**செபுலோன்** (ZEBULUN - இளவரசன்)

யாக்கோபுவுக்கும் லேயாவுக்கும் பிறந்த ஆறாவது மகனும் யாக்கோபின் பத்தாவது மகனுமாவார் *(ஆதி 30:19-20)*. இப்பெயர் இஸ்ராயேலின் புதல்வர்களின் பட்டியலில் காணப்படுகிறது *(35:28; யாத் 1:3; 1 நாள் 2:1)*. செபுலோனின் குலம் ஆதி *26:14*-இல் குறிக்கப்படுகிறது. பாலைவனக் கணக் கெடுப்பில் செபுலோனுக்கு எண் *1:30* தொ-இல் *57,400* பேரும், எண் *26:26*-இல் *60,500* பேரும் ஒதுக்கப்படுகின்றனர்.

செபுலோன் குலமும், இசக்கார் குலமும் தொடர்புடையதாக இருந்தன. இவ்விரு கோத்திரங்களும் கர்மேல் மலைக்கு வடக் கில் தெற்குக் கலியேயாவிலும் எசுதிரலோன் சமவெளியிலும், கடற்கரைச் சமவெளி ஓரத் திலும் அருகருகே வாழ்ந்தது மட்டுமல்லா மல் *(யோசு 19:10-16.17-27)*, இரண்டையும் சேர்த்தே மோசே ஆசீர்வதிக்கிறார் *(உப 33:19)*. செபுலோனுக்குரிய பகுதி கலிலே யாப்பகுதியில் அமைந்திருந்தது. மேற்கில் ஆசேரோடும், கிழக்கில் நப்தலியோடும் தென்மேற்கில் மனாசேயோடும் தென்கிழக் கில் இசக்காரோடும் பொது எல்லைகளைக் கொண்டிருந்தது. இப்பகுதி இஸ்ரியேல் சம வெளி அல்லது அக்கோ சமவெளியின் ஒரு பகுதியைக் கொண்டிருந்திருக்கலாம். ஆனால் அதன் முக்கிய பகுதி இஸ்ரியே லுக்கு வட ஓரத்திலுள்ள மலைப்பகுதியே ஆகும். இது செழிப்பான அடர்ந்த காடுகளைக் கொண்டிருந்தது. கானானிய குடியிருப்பு மையங்களிலிருந்து விலகியிருந்தது. ஆதி *49:13; உப 33:18* ஆகிய பகுதிகள் செபுலோன் கடற்கரைப்பகுதியில் வாழ்ந்ததாகவும், அதன் கப்பல்களோடு தொடர்பு கொண்டி ருந்ததாகவும் சுட்டுகின்றன. ஆனால் அதற் குரிய பகுதியின் விவரிப்பு அது கடலோடு நேரடித் தொடர்பு கொள்ள வாய்ப்பளிக்க வில்லை. ஆனால் இக்குறிப்புகள், ஒரு காலத்திலாவது செபுலோன் மத்திய தரைக் கடல் வரை பரவியிருந்தது என்று சுட்டுகின் றன. செபுலோன் சில சமயம் இசக்காருட னும் *(ஆதி 30:17-20; உப 33:18-19; நீதி 5:14-15; எசே 48:26.33)* சிலசமயம் நப்தலியுட னும் *(நீதி 4:6; 5:18; 6:35; சங் 68:27; எசா 8:23)* தொடர்புபடுத்தப்படுகிறது.

செபுலோன் நப்தலியுடன் சேர்ந்து தெபோரா, பாராக்கு ஆகியோரின் தலைமை யில் கானானியர்களுக்கு எதிராகவும் *(நீதி 4:6.10; 5:18)* கிதியோன் தலைமையில் மிதி யானியர்களுக்கு எதிராகவும் *(6:35)* போராடி யது. நீதிபதி ஏலோன் செபுலோனைச் சேர்ந் தவராவார் *(12:11-12)*. சங் *68:27*-இல் ஊர்வ லத்தில் பங்கெடுக்கிறது. இறைவாக்கினர் யோனா, செபுலோனின் ஒரு நகரமான கத்- கேப்பேரைச் சேர்ந்தவராவார் *(2 அர 14:25; யோசு 19:13)*. செபுலோனைச் சேர்ந்த லேவி யர் நகரங்கள் *1 நாள் 6:48.62; யோசு 21:34* தொ-இல் குறிக்கப்படுகின்றன. செபுலோ னும் நப்தலியும் அசீரியாவைச் சேர்ந்த 3-ஆம் திகிலத்து பிலேசரால் வெல்லப்பட் டதை எசாயா முன்னறிவித்தாலும் *(எசா 8:23)* அவற்றிற்கு மகிமை மிக்க எதிர்காலத் தையும் முன்னறிவிக்கிறார் *(9:1)*. மத் *4:12-17*, இந்த இறைவாக்கை, கலிலேயா வின் இயேசு செய்த பணியின் தொடக்கத்திற் குப் பொருத்திக் கூறுகிறது. இதைத்தவிர புதிய ஏற்பாட்டில் திருவெளி *7:8*-இல் மட் டும்தான் செபுலோன் இசக்காருக்கு அடுத்த படியாக, வருகிறது. செபுலோன் என்ற பெயர் எகிப்தியப் பழிப்புரை வாசகங்களிலும் காணப்படுகிறது.

**செபுவேல்** (SHEBUEL - இறைவனின் கைதி)

1. இவர் கேர்சோமின் மகன். மோசேயின் வழிவந்தவர். கோவிலிலிருக்கும் ஒரு லேவி யர். இவர் கோவில் வழிபாடுகளில் குருக்

களுக்கு உதவி செய்தவர். இந்தப் பணிப்பிரிவு கள் (1 நாள் 26:26-32) கி.மு. மூன்றாவது நூற்றாண்டு வழக்கத்தைப் பிரதிபலிக்கிறது. செபுவேல் கோவில் கருவூலத் தலைமைக் கண்காணிப்பாளனாய் இருந்தார் (26:24). இவர் 1 நாள் 24:20-இல் சுபவேல் என்று அழைக்கப்படுகிறார்.

2. தாவீதின் திருக்காட்சியாளரான ஏமானின் மகன் (1 நாள் 25:4). ஒரு லேவியர். இவர் கோவில் இசைக்குழுவின் பதின்மூன்றாம் பிரிவுக்குத் தலைவர் அல்லது மூதாதையர். 1 நாள் 25:20-இல் சுபவேல் என்றழைக்கப்படுகிறார்.

**செபுனா** *(SHEBNA - இப்போது திரும்பிவாரும் ஓ யாவே!)*

இவர் அரண்மனை நிர்வாகி அல்லது ஆளுநர்; பிற்காலத்தில் எசேக்கியா அரசனின் அவையில் செயலர் (2 அர 18:18தொ; எசா 36:3தொ). அரண்மனை ஆளுநர் என்ற முறையில் தனக்கு ஒரு பகட்டான கல்லறையைக் கட்டிக் கொண்டதற்காக எசாயாவால் சபிக்கப்பட்டார் (எசா 22:15-25).

அசீரிய மன்னன் சனகெரிபு கி.மு. 701-இல் யூதாவின் நகரங்களைக் கைப்பற்றி வந்தார். அப்போது எசேக்கியா மூன்று தூதுவர்களை ஒப்பந்த நோக்குடன் கலந்துரையாட அனுப்பினார். அவர்களில் ஒருவர் செபுனா ஆவார். இவர்கள் திரும்பிவந்து சனகெரிபு கூறியவற்றைக் கூறினர் (2 அர 18:37). பிறகு எசேக்கியா கோணி உடுத்தி ஆண்டவருடைய ஆலயத்தில் நுழைந்து, இறைவாக்கினர் எசாயாவிடம் ஆலோசனை கேட்டுவரும்படி இவர்களை அனுப்பினார் (19:1தொ). எசாயா, பிறநாட்டு அரசியலில் தலையிட வேண்டாம் என்று எச்சரித்த ஆண்டவருக்குச் செவிகொடுக்க மறுத்ததற்காக நகரத்திற்குப் பேரழிவு வருகிறது என இறைவாக்குரைத்தார் (எசா 37:21-22). ஆனால் அதே சமயத்தில் அசீரியர்களின் முற்றுகையின் தோல்வியையும் முன் கூறினார் (37:33 தொ). செபுனாவும் மற்ற அதிகாரிகளும் அசீரியர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ய ஆலோசனை கொடுத்ததற்காகக் கண்டனம் செய்யப்படுகின்றனர்.

அறிஞர் சிலர், எசா 22-இல் வரும் செபுனாவும், 36-37 அதிகாரங்களில் வரும் செபுனாவும் வெவ்வேறு ஆள் என்று கருதுகிறார்கள் (2 அர 18-19).

**செபூல்** *(ZEBUL - குடியிருப்பு, உச்சி)*

இவர் செக்கேம் நகரின் தலைவராவார். செபூல் எருபாகாலின் மகனான அபிமெலக்கிற்கு ஆள் அனுப்பி, ககாலும் அவன் சகோதரரும், அபிமெலக்கிற்கு எதிராகச் செய்த சதியைக் கூறி அவர்களை முறியடிக்கச் செய்தார் (நீதி 9:30-41).

எபேது மகன் ககால் தன் சகோதரர்களோடு செக்கேமுக்கு வந்ததும் அரசியலில் குழப்பம் ஏற்பட்டது. மேலும் அவன் தன்னையே அப்பகுதிக்குத் தலைவனாக நினைத்து, அபிமெலக்கிற்கு எதிராக அவதூறு பேசினார். இதையறிந்த அந்நகரின் தலைவன் செபூல் அபிமெலக்குக்கு இதைத் தெரிவித்து, படையுடன் வந்து ககாலைத்தாக்க ஆலோசனை தந்தார். அபிமெலக்கும் படையுடன் இரவில் வந்து வயல் வெளியில் பதுங்கினார். காலையில் ககாலையும் அவனது படையையும் முறியடித்தார். இதன் பின்னர் செபூல் ககாலையும், அவனைச் சேர்ந்தவரையும் செக்கேமை விட்டு விரட்டி அடித்தார்.

**செபேர்** *(SHEBER - உடைத்தல்)*

இவர் காலேபின் வைப்பாட்டி மாக்காவுக்குப் பிறந்தவர். தாவீதின் வழித்தோன்றல்களின் தலைமுறை அட்டவணையில் சேர்க்கப்பட்டுள்ளார் (1 நாள் 2:48).

**செபேர் மலை** *(SHEPHER MOUNT - அழகான, ஒளிமயமான)*

சீனாய் மலையிலிருந்து புறப்பட்டுப் பாலைவனத்தில் இஸ்ராயேலர்கள் பயணம் செய்யும்போது தங்கிய ஓர் இடமாகும் (எண் 33:23-24). இது இருக்கும் இடம் அறியப்படவில்லை.

**செபேலா** *(SHEPHELAH - சமவெளி)*

இது மலையடிவாரப் பகுதியாகும். பெலிஸ்தியச் சமவெளிக்கும் யூதேயாவின் மேட்டுப் பகுதிக்கும் இடையில் உள்ளது. பல பள்ளத்தாக்குகளால் பிரிக்கப்பட்டுள்ளது.

இம்மாவட்டத்தைக் குறிக்கும் இப்பெயர், எபிரேய மொழியிலுள்ள, பழைய ஏற்பாட்டில் இருபது முறை வந்துள்ளது. பிறமொழிகளில் செப்பேலோ, தாழ்ந்தபகுதி, சமவெளி, மலைநாடு என்று பலவாறு மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

யோசு *11:2.16*-ஐத் தவிர, மற்ற மொழி பெயர்ப்புகள், யூதாவின் மேற்பகுதியில், 'இம்மலையடிவாரப் பகுதி உள்ளது' என்று குறிக்கின்றன. இதுபழைய ஏற்பாட்டில் 'நெகேபு' மற்றும் மலைப் பகுதியோடு சேர்த்தே சொல்லப்படுவது இது யூதாவின் பெரிய புவியியல் பிரிவுகளில் ஒன்று என்பதைக் காட்டுகிறது (உப *17*; யோசு *10:40*; *12:8*; *15:33*; நீதி *1:9*; எரே *17:26*; *32:44*; *33:13*). செபேலா சில பகுதிகளோடு ஒப்பிடப்பட்டுப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளது (*2* நாள் *26:10*; உப *1:7*; *2* நாள் *28:18*; ஒப *19*). இந்த மேற்கோள்கள் இந்த இட முக்கியத்துவத்தைச் சுட்டிக்காட்டுகின்றன.

செபேலாவில் உள்ளதாகப் பழைய ஏற்பாட்டில் குறிக்கப்படும் நகரங்கள் (யோசு *15:3-42*; *2* நாள் *28:18*) இந்த மலையடிவார மாவட்டத்தில்தான் இருக்கின்றன என்று குறிப்பிடப்பட்டுள்ளன. பழைய ஏற்பாட்டு மேற்கோள்களின் மூலம் வடக்கே அய்யலோன் பள்ளத்தாக்கும், தெற்கே வாடி ஏல்-கெசியும் இந்த மாவட்டத்திற்கு எல்லையாக இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ளலாம். வாடி குபெயிபாவிலுள்ள இலாக்கிசு தென் எல்லையிலுள்ள கோட்டையாகும். செபேலாவின் வடகோடியில் அதிதாநகரம் இருந்தது. அது அய்யலோன் பள்ளத்தாக்குக்கு வடக்கில் பாதுகாப்பாக அமைந்திருந்தது (*1* மக் *12:38*).

செபேலாவில் பல பள்ளத்தாக்குகள் இங்கு மங்குமாக நிறைந்து காணப்படுகின்றன. இவைகளில் பல இயற்கையான சாலைகள் உள்ளன. இவை வியாபாரத்திற்கும், நாடு பிடிப்பதற்கும் பயன்பட்டன. வடக்கிலிருந்து தெற்காக அய்யலோன், சோரேக்கு, ஏலா, செப்பத்தா போன்ற பள்ளத்தாக்குகள் உள்ளன (யோசு *10:12*; நீதி *16:4*; *1* சாமு *17:2*; *2* நாள் *14:10*).

செபேலா வேளாண்மையில் சிறந்து விளங்கியது. அங்குள்ள சிவப்பு மண் நல்ல விளைச்சலை உருவாக்கியது. சரிவுப் பகுதியில், ஒலிவ, அத்தி மரங்கள் பல உண்டு. இறைவன், இம்மரங்களைப் போன்று அதிகமாய் அருளினார் என்று உருவகமாக *1* அர *10:27*; *2* நாள் *1:15*; *9:27*; *1* நாள் *27:28*-இல் சொல்லப்பட்டுள்ளது. இங்கே திராட்சையும் பரியிடப்பட்டது. சில இடங்களில் பெரும் மந்தைகளுக்கு வேண்டிய புல் வளர்ந்தது. பொதுவாக இப்பகுதி சுகமான, மிதமான தட்ப வெட்பமுடைய பகுதியாகும். இங்கு மங்குமாக நகரங்கள் அமைந்திருந்தன.

**செபோ** *(ZEPHO - க்காவல் கோபுரம்)*

இவர் ஏதோமியனான எலீப்பாசின் மூன்றாம் மகனாவார். ஏசாவின் பேரன் (*1* நாள் *1:36*: ஆதி *36:11*).

**செபோயிம்** *(ZEBOIIM)*

பாவம் புரிந்த பள்ளத்தாக்கு நகரங்களில் ஒன்றான 'இது இறைவனால் மற்ற நகரங்களுடன் அழிக்கப்பட்டது (ஆதி *19:24-29*). கானானியர் நாட்டின் எல்லையாக இந்நகர் குறிப்பிடப்பட்டுள்ளது (*10:19*). ஏலாமியரின் அரசன் கெதர்லகோமர் மூன்று மேற்கத்திய அரசர்களுடன் சேர்ந்துகொண்டு இந்நகரையும், இதனுடன் நான்கு நகரங்களையும் தாக்கினார். செபோயிம் அரசனான செமேபர் தன்னுடன் நான்கு அரசர்களைக்கூட்டுச் சேர்த்து, கெதர்லகோமர் கூட்டணியுடன் போரிட்டுத் தோற்றார்.

இந்நகரின் அழிவு 'பள்ளத்தாக்கு நகரங்களின் அழிவு' என்று கூறுகையில் மறைமுகமாக உணர்த்தப்பட்டுள்ளது (ஆதி *19:24-29*). ஆண்டவர்தம் கோபத்தினால் செபோயிமும்

மற்ற நகரங்களும் அழிக்கப்பட்டன என்று மோசே கூறுகிறார் (உப 29:23). ஓசே இறைவாக்கினர் செபோயிமின் அழிவை இறைவனின் தீர்ப்புக்கு ஓர் உதாரணமாகத் தருகிறார் (ஓசே 11:8). இந்நகரும் அதிமாவும் இருமுறை இணைக்கப்பட்டிருப்பதால் செபோயிம் அதிமாவின் அருகில் அமைந்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது. இந்த இடங்கள் தெற்குச் சாக்கடலின் அடியில் அமிழ்ந்து கிடக்கின்றன.

**செபோயிம்** (ZEBOIM)

1. பென்யமின் பகுதியில் உள்ள இந்தப் பள்ளத்தாக்கு மிக்மாசு நகருக்குத் தென்கிழக்கில் அமைந்திருந்தது. மேலும் இது மிக்மாசுக்கும் பாலைவனத்துக்கும் இடையில் யோர்தானைப் பார்த்தவாறு அமைந்துள்ளது (1 சாமு 13:17-18). இது வாடி ஏல்-கெல்தில் வந்து சேரும் தற்கால வாடி அபு தாபாவாக இருக்கலாம் என எண்ணப்படுகிறது.

2. அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்த பென்யமின் புதல்வர்கள் குடியேறிய நகரங்களுள் இதுவும் ஒன்று (நெகே 11:34). இந்நகரானது கதீது (ஆதீது), நெபல்லாற்று, லோது, ஓனோ போன்ற நகரங்களுடன் குறிப்பிடப்பட்டிருப்பதால் லித்தாவுக்கு வடக்கில் கிர்பெத்து சபியேவாக இருந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**செபோன்** (ZEPHON - எதிர்பார்ப்பு)

இவர் காதின் தலைமகனாவார். செபோனியரின் மூதாதையர் (எண் 26:15). ஆதி 46:16-இல் இவரது பெயர் சிபியோனாக உள்ளது.

**செப்பனியா** (யாவே மறைத்துவைத்தார், யாவே புகலிடம் தந்தார்)

1. இவர் எருசலேமில் ஒரு குரு. மாசேயாவின் மகன் (2 அர 25:18; எரே 21:1; 29:25-26). இவரையும், பஸ்கூரையும் செதேக்கியா மன்னன் எரேமியா இறைவாக்கினரிடம் தூதனுப்பினார். இறைவாக்கினர் யூதாவுக்காக மன்றாடவேண்டும் என்று அரசன் கேட்டிருந்தார். எரேமியா யூதா அரசன் எகிப்தியரைச் சார்ந்து, கல்தேயரோடு சண்டையிடுவதைக் கண்டித்தார் (எரே 21:1; 37:3). செமாயா பாபிலோனிலிருந்து கோயிலின் தலைவராயிருந்த செப்பனியாவுக்குக் கடிதம் எழுதி நாடு கடத்தப்பட்டவர்களுக்குச் செய்தி அனுப்பியதற்காக எரேமியாவைச் சிறையிடாததற்காகக் கண்டிக்கிறார். செப்பனியா பாபிலோனை எதிர்ப்பவராயினும் எரேமியாவைச் சிறையிலிடாமல் கடிதத்தை மட்டும் அவரிடம் வாசித்துக் காண்பிக்கிறார் (எரே 29:24-32). எருசலேம் முற்றுகையிடப்பட்டு வீழ்ந்தபின் தலைமக் குரு செராயாவும், உதவிக்குரு செப்பனியாவும் இரிப்லாவிலிருந்த பாபிலோனிய மன்னனிடம் அழைத்துச் செல்லப்பட்டுக் கொல்லப்பட்டனர் (2 அர 25:18; எரே 52:24).

2. அடிமைத் தனத்திற்குப்பின் எடுக்கப்பட்ட பட்டியலில் இப்பெயர் உள்ளது. இவர் லேவியர்களான ஏமான் வழியிலும் கோகாத்தின் வழியிலும் வந்தவரெனக் கூறப்படுகிறது (1 நாள் 6:36).

3. கி.மு. 7-ஆம் நூற்றாண்டில் யூதாவில் வாழ்ந்த இறைவாக்கினர். கூசியின்மகன். இவரது மரபுக்கொடி நான்காம் தலைமுறை வரை செல்லுகிறது. இவர் யோசியா மன்னன் காலத்திலே வாழ்ந்தவர் (செப் 1:1). இவர் பன்னிரண்டு சிறிய இறைவாக்கினருள் ஒருவர். யோசியா அரசனின் தூரத்து உறவினரான இவர் எருசலேமில் வாழ்ந்து அங்கே இறைவாக்குரைத்தார் (செப் 1:4). காண்க. செப்பனியாவின் திருநூல்.

4. இவர் யோசியாவின் தந்தை. இந்த யோசியா பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்தவர்களில் ஒருவர் (செக் 6:10.14).

**செப்பனியாவின் திருநூல்** (ZEPHANIAH, BOOK OF)

**1. வாழ்க்கை வரலாறு:** ''செப்பனியா'' என்ற சொல்லுக்கு 'யாவேயின் காவற்காரன்; யாவே காப்பாற்றுகிறார்'' ''யாவேயின் இரகசியங்கள்'' என்று பல்வேறு பொருள் கொள்ளலாம். இந்நூலின் தலைப்பில், செப்

பனியாவின் மரபு, நான்கு தலைமுறைகளுக்குக் கொடுக்கப்படுகிறது. இவ்விதம் மரபுக் கொடியை அளிப்பதில் இந்நூல் மற்ற இறைவாக்கினர் நூல்களிலிருந்து வேறுபடுகிறது. மற்ற நூல்கள், இறைவாக்கினர் தந்தையின் பெயருக்கு அப்பால் போவதில்லை. செப்பனியாவின் நான்காவது தலைமுறை, ''எசேக்கியாவின் கொள்ளுப்பேரன்'' என்றழைக்கப் படுகிறார். இது இப்பெயர்கொண்ட அரசனைத்தான் குறிக்கிறதென்றும், அதனால், செப்பனியா தாவீதுமரபைச் சார்ந்தவரென்றும், சிலர் கூறுவர். இவர் அரசரான எசேக்கியாவின் கொள்ளுப் பேரன் என்றால், பல காலவரையறை பிரச்சனைகள் எழும். மேலும் எசேக்கியா ஓர் அரசன் என்று குறிப்பிடப்படவில்லை. செப்பனியாவின் தந்தையின் பெயராக விளங்கும் 'கூசி' என்ற சொல், இவர் ஓர் எத்தியோப்பியர் என்பதைக் காட்டலாம். ஆகையால், செப்பனியா ஓர் எத்தியோப்பிய அடிமை; ஆலயத்தில் பணி புரிந்தவர் என்று சிலர் கூறுவர். இந்த ஐயத்தை நீக்கி அவர் யூதாவைச் சார்ந்தவர் தான் என்று காட்டவே, நான்காம் தலைமுறைவரை அவரது மரபுக்கொடி தரப்படுகிறது என்று சிலர் எடுத்துரைப்பார்.

செப்பனியா எருசலேமைப் பற்றிப் பல விபரங்களைக் கொடுக்கிறார் (*செப் 1:4.10.11*). நகரிலும் அரசவையிலும் நடந்தவைகளை, நன்கு அறிந்திருக்கிறார். இவை அனைத்தும் இவர் எருசலேமைச் சேர்ந்த உயர் குடி மகனாக இருந்திருக்க வேண்டும் என்ற உண்மையைச் சுட்டுகின்றன. நூலின் தலைப்பு, இவர் யோசியா காலத்தில் (*கி.மு. 639-609*) இறை வாக்குரைத்ததாகக் கூறுகிறது. *1:8*-இல் தலைவர்களையும் அரச புதல்வர்களையும் தாக்குகிறார்; சிலை வழிபாட்டையும், பிற அந்நிய வழிபாடுகளையும் சாடுகிறார். ஆனால், அரசனைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. மேலும் யோசியா செய்த உபாகமச் சீர்திருத்தம் நூலில் குறிப்பிடப்படவில்லை. ஆகையால், இவரது பணி கி.மு. 621-க்கு முன் நடந்திருக்க வேண்டும்; அந்தச் சீர்திருத்தத்திற்கு முன்னோடியாக இருந்திருக்க வேண்டும். ஆகவே, இவரது பணி யோசியா இளைஞனாக இருந்தபோது, குறிப்பாக கி.மு. 640-630க்கு இடைப்பட்ட காலத்தில் நடந்திருக்க வேண்டுமென்று கருதலாம்.

இவற்றைத் தவிர, இவரைப்பற்றி வேறு ஒன்றும் கிடைத்திலது. இந்நூலிலிருந்து - இவர் கடுமையானவர், கண்டிப்பானவர் - என்று அறிகிறோம். ஆழ்ந்த சமயப்பற்று உடையவர்; அஞ்சாத துணிவுடையவர்; தீமையைக் கண்டபோதெல்லாம், எத்தகைய தயக்கமும் இன்றிக் கண்டனம் செய்யத் தவறாதவர்; ஆளும் வகுப்பினரின் பொறுப்பை எடுத்துக்கூறி, அவர்கள் அதற்கேற்பச் செயல்படத் தூண்டும் துணிவுள்ளவர்; எசாயா, மீக்காவுக்குப்பின் அடக்கி ஒடுக்கப்பட்ட இறைவாக்கு இயக்கத்தின் குரலை, மீண்டும் முதன் முறையாக முழங்கியவர். சிலர் செப்பனியாவின் பணிக்காலத்தை யோவாக்கீம் (*கி.மு. 609-591*) ஆட்சி செய்த காலத்தோடொப்பக் குறிப்பர். ஆனால், இப்போது யாரும் இதனைப் பொதுவாக ஏற்றுக் கொள்ள மாட்டார்.

சித்தியர்களது படையெடுப்பு, செப்பனியா இறைவாக்கு உரைக்க வாய்ப்பாயிற்று; சிறப்பாக 'யாவேயின் நாள்' பற்றிய அறிவிப்புக்கு ஒரு சந்தர்ப்பமாயிற்று என்று கூறுவர் சிலர். இப்படையெடுப்பு - உலகைத் தீர்ப்பிடல், யூதாவுக்கும் பிறநாடுகளுக்கும் வரவிருக்கும் பேரழிவு ஆகிய கருத்துகளைப் பற்றிய வரலாற்று விளக்கத்தினை அளிக்கலாம். ஆனால், சித்தியர் படையெடுப்பே வாதத்திற்குரிய ஒரு வரலாற்றுப் பிரச்சனையாகும். இப்படையெடுப்புப் பற்றி எத்தகைய குறிப்பும் இந்நூலில் காணப்படவில்லை. இதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். யாவேயின் நாள், உலகம், மற்ற நாடுகளின் மேல் தீர்ப்பு ஆகிய கருத்துகள், இவருக்கு முந்திய இறைவாக்கினர் நூல்களில் காணப்படுகின்றன. ஆகையால், இவற்றை விளக்க, ஒரு தனிப்பட்ட வரலாற்று நிகழ்ச்சி அவசியமன்று. சித்தியர் படையெடுப்பைவிட, அவர் காலத்தில் பொதுவாக நிலவிய அரசியல் சூழல்கள்,

சமயக்கேடுகள், சமூக இழிவுகள் ஆகியவை யாவேயின் நாள் பற்றி அவருக்கு முந்திய இறைவாக்கினர்கள் போதித்தவைகளை மீண்டும் எடுத்துக் கூறச் செய்தன. இறை வாக்கினர் சமய, சமூகத் தீமைகளைத் தாக்கு கிறார். அசீரியர்களுக்குச் சார்பானவர்களைக் கண்டனம் செய்கிறார். இவையாவும் யோசி யாவின் தொடக்க காலத்தைப் பிரதிபலிக் கின்றன. இவர் யோசியாவின் தொடக்க காலத்தில், இறைவாக்கு உரைத்து, சீர்திருத் தம் செய்ய அவரைத் தூண்டியிருக்க வேண் டும்.

*2. வரலாற்றுப் பின்னணி:* கி.மு. 8-ஆம், 7-ஆம் நூற்றாண்டுகளில் அசீரியப் பேரரசு உன்னத நிலையில் விளங்கிற்று. அதன் சேனைகள், சென்ற இடமெல்லாம் இடுகா டாயிற்று. கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் அசீ ரியா, வடஅரசாகிய இஸ்ராயேலை முழுவ தும் அழித்தது. யூதாவின் பெரும் பகுதியை யும் பாழ்படுத்தியது. அதன் அசுரப்பிடியி லிருந்து விடுதலை பெற எசேக்கியா செய்த முயற்சி தோல்வியுற்றது. நாற்பது நகரங்கள் அழிக்கப்பட்டன (2 அர 18:13தொ). யூதா கப்பம் கட்டும் அடிமை நிலையிலேயே தொடர்ந்து இருந்தது. எசேக்கியா கி.மு. 687-இல் மரித்தார். அவரது மகனான மனாசே சிறு வயதிலேயே அரசுக்கு வந்தார். இவர் அசீரியர்களை எதிர்ப்பதை முழுவதும் கைவிட்டு, தன்னையும் தன் நாட்டையும் அசீரியர் ஆட்சிக்கு அடிமைப்படுத்தினார் (22:1). மனிதக் கணிப்பில் இப்படி நடந்து கொள்வதைவிட, வேறு ஒன்றும் செய்வதற் கில்லை. இந்நிலையில் அசீரிய மன்னன் சனகெரிபு இறந்துவிட (கி.மு.681) அவரது மகன் ஏசர்கத்தோன் (கி.மு. 681) அரியணை ஏறினார். இவர் ஆற்றல் மிக்க தலைவனாக விளங்கினார். அசீரியாவுக்கு எதிராகக் கிளர்ச்சிகளைத் தூண்டிக் கொண்டிருந்த எகிப்தை வெற்றி கொண்டார்.

மனாசே யூதாவை நாற்பத்தைந்து ஆண்டளவு (கி.மு. 687-642) ஆட்சி செய்தார். இவர் யூதர்களின் அரசர்களிலெல்லாம் மிகக் கொடியவர். யூதாவின் வரலாற்றில் இவரது ஆட்சி ஓர் இருண்ட காலமாகும். சமய காரியங்களில் பதிதம் மிகுந்தது. மனாசே இறைவாக்கினர்களின் குரலை ஒடுக்கி, முழு வதுமே அடக்கி வைத்தார். அவர்கள் செயல் பட்டிருந்தாலும், அவர்கள் மறைமுகமா கவே செயல்பட்டிருக்க வேண்டும். ஆனால், அதுபற்றி எத்தகைய சான்றும் கிடைக்க வில்லை. தனது தந்தை செய்த சமய சீர் திருத்தத்தைக் கைவிட்டார். எசாயா கண்டனம் செய்த ஆகாசு காலத்து நிலைக்கு நாட்டைத் திருப்பினார். ஆலயத்தை மையமாகக் கொண்ட சமயவழிபாட்டு முறை கைவிடப் பட்டது. எசேக்கியா தரைமட்டமாக்கிய பாகாலின் பீடங்களையும், வானத்திலுள்ள பொருட்களுக்கான பீடங்களையும், மேட்டு நிலங்களையும் மனாசே மீண்டும் எழுப்பி னார் (2 அர 21:3). அசீரிய நாட்டுக் கலாச்சா ரத்தையும், சமய முறைகளையும் புகுத்தி னார் (21:4). இனப்பெருக்க வழிபாடான சடங்கு விபச்சாரத்தைப் புகுத்தினார். தன் மகனையே பிற தேவதைகளுக்குப் பலியிட் டார். சகுனம் பார்த்தல் பெருகியது. யாவே யும், பிற தெய்வங்களும் ஒன்றாயினர். நன் மையும், தீமையும் ஒன்றாகக் கருதப்பட்டன (21:6). குற்றமில்லாதவர்களின் குருதியை மிகுதியாகச் சிந்தச் செய்து எருசலேம் நகரம் முழுவதிலும் ஓடச்செய்தார் மனாசே (21:18). யாவேயின் வழிபாடு முழுவதும் அழிக்கப் படவில்லை; கலப்படம் செய்யப்பட்டது. யாவே, பல தேவர்களில் ஒருவராக, வேண்டு மானால் முதல்வராகக் கருதப்பட்டார். யாவேயும் அவரது சட்டத்தின் தனித்தன்மை யும் செயலளவில் புறக்கணிக்கப்பட்டன. அதன் விளைவாக வன்முறையும், அநீதியும் பெருகின. யாவேயையும், இறைவாக்கினர் களின் செய்தியையும் புறக்கணித்தது அரச னுக்கோ, மக்களுக்கோ எந்தத் தீய விளைவு களையும் ஏற்படுத்துவதாகத் தோன்ற வில்லை. ஆகவே, தம் மக்கள் எப்படியிருந் தாலும் யாவேக்கு அக்கறையில்லை; யாவே ஒன்றும் செய்யமாட்டார்; அவரால் ஒன்றும் செய்யவும் முடியாது என்ற மெத்தன உணர்வு மக்களிடையே பெருகியது (1:12;3:1-2).

மனச்சாட்சியற்ற மனாசேக்குப்பின் அவன் மகன் ஆமோன் ஈராண்டளவு (கி.மு. 642-40) யூதாவை ஆண்டார். இவரும் தன் தந்தையின் கொள்கையையே பின்பற்றினார். இவர் அசீரியர்களுக்கு எதிரான கட்சியினரால் கொல்லப்பட்டார் (2 அர 21:14-24). செல்வாக்குடைய நிலக்கிழார்கள் ஆமோனின் எட்டு வயது மகனான யோசியாவை அரியணையில் அமர்த்தினர். யோசியாவின் தொடக்க காலம் பற்றி நமக்கு ஒன்றும் தெரியவில்லை. ஒரு வேளை, இக்காலத்தில் ஆட்சி, ஆலோசகர்களின் கையில் இருந்திருக்க வேண்டும். இவர்கள் சுதந்தரத்தை விரும்பினாலும், செயலளவில் அசீரியர்களோடு சார்பான போக்கையே கடைப்பிடிக்க வேண்டியிருந்தது. அசீரிய அடிமைத்தனத்திலிருந்து முழுவதும் விடுபடும் நேரம் இன்னும் வரவில்லை. யோசியாவின் தொடக்க காலத்தில், பொது வாழ்விலும், தனிப்பட்ட வாழ்விலும் வேரூன்றி விட்ட தீமைகளைச் சீர்திருத்த எந்த முயற்சியும் எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இக்காலத்தில்தான் செப் 1:2-2:3 உரைக்கப்பட்டிருக்க வேண்டும். இக்காலத்தில்தான் எரோதோதசு என்ற கிரேக்க வரலாற்று ஆசிரியன் குறிப்பிடும் சித்தியர்களின் படையெடுப்பு நிகழ்ந்திருக்க வேண்டும். இவர்கள் குதிரைகளில் சவாரி செய்யும் நாடோடிகள். இவர்கள் சென்ற இடங்களில் எல்லாம் கொலையும், கொள்ளையும், அழிவும் நிகழ்ந்தன. இவர்கள் அசீரியப்பேரரசின் மேற்கு மாகாணங்களை எகிப்துவரை பாழ்படுத்தினர். இவர்கள் நிகழ்த்திய அழிவுபற்றிய அச்சம் பல நூற்றாண்டுகளுக்கு மக்களின் நினைவில் நின்றது.

**3. யாருக்கு?:** செப்பனியா காலத்தில் யூதாவில் நிலவிய தீமைகளுக்கு, இளவரசனான யோசியா பொறுப்பாளியன்று. இத்தீமைகளுக்குப் பொதுவாகப் பொறுப்பானவர்களை ஆறு வகையாகப் பிரித்துக் கண்டனம் செய்கிறார் இறைவாக்கினர். (அ) ஆளும் வகுப்பினரும், நீதிபதிகளும் - இவர்கள் மக்கள்மேல் ஆயர்களாக நியமிக்கப்பட்டனர்; ஆனால், பேராசைமிக்க ஓநாய்களாக நடந்து கொண்டனர். (ஆ) இறைவாக்குரைத்தலைத் தொழிலாகக் கொண்டவர்கள் - இவர்கள் முரட்டுத் தனமான துணிச்சலும் பற்றுறுதியின்மையும் உள்ளவர்கள். (இ) அர்ச்சகர்கள் - இவர்கள் பரிசுத்தமானவைகளைப் பாதுகாக்கவும் சட்டத்தை நிலைநிறுத்தவும் தவறி விட்டனர் (3:3-4). (ஈ) தங்களையே செல்வந்தராக்கிக் கொண்டனர் வணிகர்கள்; ஆகவே அவர்கள் முழுவதுமாக அகற்றப்படுவர் (1:10-11). (உ) இரு மனப் பற்றுடையவர்கள் - சிலர் யாவேயையும், பாகாலையும் ஒரே சமயத்தில் வழிபட்டனர். வேறு சிலர் யாவேயை மட்டும் ஏற்றுக்கொண்டனர். ஆனால், விண்பொருள்களுக்கெல்லாம் தூபம்காட்டினர். இன்னும் சிலர் இஸ்ராயேலின் யாவேக்கும் அம்மோனியர் களது கடவுளான மில்கோமுக்கும் வழிபாடு செய்தனர். (ஊ) யாவேயை முழுவதும் நிராகரித்தவர்கள் - இவர்களை, இறைவாக்கினர் வன்மையாகக் கண்டனர் செய்கிறார்.

இறைவாக்கினர் இருவகைத் தீமைகளை மிக வன்மையாகத் தாக்குகிறார். இதில் முதலாவது, இருமனப்பற்றுறுதியாகும். ஒரு சிறுபான்மையினரைத் தவிர, எல்லோரும், உண்மையான இறைவனையும், போலித் தேவர்களையும், வணங்கினர். இந்தக் கலப்புச் சமயத்திற்கு எதிராக ''நமக்கு முன் வேறே தேவர்களை நீ கொண்டிராதிருப்பாயாக'' (யாத் 20:3) என்ற முதல் கட்டளையை வலியுறுத்துகிறார். இறைவனை மட்டும் முழு இதயத்தோடு, தொழுது பணி செய்ய, மக்களை அழைக்கிறார் இறைவாக்கினர்.

செப்பனியா வன்மையாகக் கண்டிக்கும் மற்றொரு தீமை - பற்றுறுதி முழுவதுமேயில்லாதவர்களின் செயல் முறையான நாத்திகம். ஒருவேளை, எசாயா எழுப்பிய நம்பிக்கைகள் நிறைவேறக் காலம் தாழ்த்தப்பட்டமையால் அது யூதாவில் பலரைச் சமயப் பற்றற்றவர்களாகவும், ஐயம் கொண்டு குறை கூறுபவர்களாகவும் மாற்றியிருக்கலாம். அசீரியர்களது அடிமைத்தளை உடைக்கப்படவில்லை. தாவீது மரபைச் சேர்ந்த ''எடுத்துக்காட்டான அரசன்'' அவர்க

ளிடையே தோன்றி, நீதியோடும் அமைதியோடும் ஆளவில்லை. இறைவன் மக்களைத் தீமையிலிருந்து தடுக்கவோ, நன்மையில் நிலைபெற உதவி செய்யவோ இல்லை. அவர்களுக்கு எதிராகவோ, சார்பாகவோ ஒன்றும் செய்யவில்லை. ஆகவே, மனித காரியங்களில் மக்கள் அவரைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. செயல் அளவில், அவரைப் புறக்கணிக்கலாம் *(செப் 1:12-13)* என்று கருதினார்கள். எருசலேமின் மக்கள் நெடுங்காலமாகச் சொகுசாக வாழ்ந்து உழைக்க விரும்பாத சோம்பேறிகளாகவும், சுயதிருப்தியுடையவர்களாகவும், மெத்தனம் மிக்கவர்களாகவும் ஆனார்கள். இது இவர்களைச் சமய காரியங்களில் அக்கறையற்றவர்களாகவும், நாத்திகர்களாகவும் மாற்றியது. இதை, இறைவாக்கினர் வன்மையாகக் கண்டிக்கிறார்.

**4. திட்டமும் பொருளடக்கமும்:-**

I. ***1:1 தலைப்பும் மரபுக்கொடியும்.***

II. யூதாவின் மேல் யாவேயின் நாள் *(1:2-2:3)*.

*1:2-3* படைப்பு அனைத்தின் மேலும் தீர்ப்பு.
*1:4-7-* அந்நிய கடவுள்களுக்கு எதிராக.
*1:8-9-* அரசவைக்கு எதிராக.
*1:10-11* - வணிகர்களுக்கு எதிராக.
*1:12-13-* விசுவாசம் அற்றவர்களுக்கு எதிராக.
*1:14-18-*யாவேயின் நாள்.
*2:1-3-* மனந்திரும்ப அழைப்பு.

III. **பிற நாடுகளுக்கு எதிராக இறைவாக்குகள் *(2:4-15)*.**

*2:4-7-* பெலிஸ்தியர்களுக்கு எதிராக.
*2:12-* எத்தியோப்பியர்களுக்கு எதிராக.
*2:13-15-* அசீரியர்களுக்கு எதிராக.

IV. **எருசலேமுக்கு எதிராக இறைவாக்குகள் *(3:1-8)*.**

*3:1-5-* நகரும் தன் தலைவர்களும்.
*3:6-8-* பிறநாடுகள்மேல் தீர்ப்பு.

V. **வாக்குறுதிகள் *(3:9-20)*.**

*3:9-10-* புறவினத்தார் மனம் திரும்புதல்.
*3:11-13-* இஸ்ராயேலில் 'எஞ்சியோர்'.
*3:14-17-* மகிழ்ச்சிமிக்க இருபாடல்கள்.
*3:18-20-* நாடு கடத்தப்பட்டவர் வீடு திரும்புதல்.

**5. சிறப்புக் கருத்துக்கள்:**

***அ) யாவேயின் நாள்:*** செப்பனியாவை ''யாவேயின் நாளின் இறைவாக்கினர்'' என்றழைப்பர். வருங்காலத்தில், உலக வரலாற்றில் உறுதியாகத் தலையிட்டு இறைவன் தமது எதிரிகளை வெல்வார் என, இஸ்ராயேலர் நம்பினர். இறைவனது இந்தத்தலையீடும், வெற்றியும் ''யாவேயின் நாள்'' எனக் குறிப்பிடப்பட்டது.

இக்கருத்து ஆமோசிலும் *(5:18தொ)* எசாயாவிலும் *(2:7தொ)* காணப்படுகிறது. இதைச் செப்பனியா விரிவுபடுத்துகிறார். அந்நாளின் வருகை உலகம் முழுவதிற்கும் பேரழிவைக் கொண்டு வரும். அந்நாளில் ''மண்ணுலகில் எதுவும் இராதவாறு அனைத்தையும் அழித்துவிடுவேன்; மனிதனையும் விலங்கையும் அழிப்பேன்; வானத்துப் பறவைகளையும், கடல் மீன்களையும் ஒழிப்பேன்; கொடியவர்களை இடறிவிழச் செய்வேன்; மனித இனம் மண்ணுலகில் இல்லாதவாறு அற்றுப்போகச் செய்வேன்'' *(1:2-3)*. ''ஆண்டவரின் நாள் அண்மையில் உள்ளது'' *(1:7)*; அது அண்மையில் விரைந்து வந்து கொண்டிருக்கிறது *(1:14)*. ஆண்டவரது நாளின் ஆர்ப்பரிப்பு, மனக் கசப்பைத் தருகிறது. வீரனும் கலங்கி அழுகிறான். கடுஞ்சினத்தின் நாளாம் அந்நாள் மனத்துயரும் வேதனையும் மிகுந்தநாள். அந்நாள் - பேரழிவும் பெரு நாசமும் கொணரும் நாள்! இருட்டும் காரிருளும் சூழும் நாள்! கார்முகிலும் அடரிருளும் படரும் நாள் அந்நாள்! *(1:14-15)*. ஆண்டவர் தலையிடும்போது - ஒழுங்குத் திட்டத்தின் மேல் குழப்பமும், ஒளியின் மேல் இருளும் வெற்றிகொள்ளும். பாதுகாக்கப்பட்ட நகர்கள் மேல், போரின் பயங்கர விளைவுகள் நிகழும்; அவற்றிலிருந்து தப்பிக்க முயலும் பாவிகள், குருடர்களைப்போல் தடுமாறுவர். அவர்களது குருதி புழுதி போல் கொட்டப்படும் *(1:16-17)*; அவர்களைக் காப்பாற்ற யாருமிரார்.

யாவே விளக்கேந்தி எருசலேமைச் சோதிப்பார். தீயவர்களின் குடும்பம் எதுவும் அழிவிலிருந்து தப்பிக்க முடியாது (1:4-13; 3:1-8). இந்த அழிவிலிருந்து தப்பிக்க உண்மையான வழியையும் யாவே கற்றுக் கொடுக்கிறார் (2:1-3). இந்த அழிவுகள் இயற்கையைச் சார்ந்ததாக மட்டும் இரா. ''எக்காளமும், போர் முழக்கமும் கேட்கும் நாளாக'' இருக்கும் அந்த நாள் (1:17). சித்தியர் படையெடுப்பைச் செப்பனியா வெளிப் படையாகக் குறிக்கவில்லை. ஆனால், அதை ஆண்டவரின் நாளுக்கு ஒரு பயங்கர முன்னோடியாக அவர் கருதியிருக்கலாம். இந்த அழிவின் கருவிகளாக, அசீரியாவும், எகிப்தும் கருதப்படவில்லை. ஏனெனில், அவர்கள் மேலும் இந்தப் பேரழிவு வரும்.

இவ்வாறு யாவேயின் நாளை விவரிக்கும் போது, செப்பனியா எந்த ஒரு வரலாற்று நிகழ்ச்சியையும் சுட்டிக்காட்டவில்லை. கால வரையறையில்லாத நிகழ்ச்சித் தொடரை எண்ணத்தில் கொண்டிருந்திருக்க வேண்டும். இந்நிகழ்ச்சிகள் சித்தியர் படையெடுப்பாக இருக்கலாம். கி.மு. 581-இல் நிகழ்ந்த பாபிலோனியர் படையெடுப்பாய் இருக்கலாம். கி.பி. 70-இல் நடந்த உரோமையர் படையெடுப்பாக இருக்கலாம். இவையெல்லாம் யாவேயின் நாளின் தீர்ப்பாகும்; தண்டனையுமாகும். ஒவ்வொரு நூற்றாண்டிலும், நமது நூற்றாண்டிலும் கூட மக்கள் மேலும், நாடுகள் மேலும் வரும் பயங்கர அழிவுகளைக் காண்கிறோம். இவையெல்லாம் இறைவன் வரலாற்றில் தலையீடு செய்வதின் விளைவுகளாகும்; ஆண்டவரது நாளின் பல கட்டங்களாகும்; இவையெல்லாம் கால முடிவில் வரும் தீர்ப்பு நாளுக்கு இட்டுச் செல்கின்றன; இவையெல்லாம் ஆண்டவரது நாள் விரைவில் அணுகி வருகிறது என்று எச்சரிக்கின்றன; இந்நாளை உயிர்ச்சித்திரமாக விவரிக்கிறார் யோவான் (திருவெளி 20:11-12).

**ஆ) எஞ்சியோர்:** இந்நூலில் அழிவு மட்டும் அறிவிக்கப்படவில்லை; இருளில் ஒளி வீசும் நம்பிக்கைச் சுடரும் உண்டு. இந்த அழிவிலிருந்து ''எளியோர்'' தப்புவர். அதற்கு வழியுண்டு. இந்த எளியோரை, அடையாளம் காட்டுகிறார் செப்பனியா. யூதாவிலிருந்து, அகந்தை மிக்கவர் நீக்கப் படுவர்; மக்களின் பேச்சு, சுத்தி செய்யப்படும்; ஏழ்மையும் எளிமையும் உள்ளோர் விட்டு விடப்படுவர் (2:3; 3:11-13). இங்கு ஏழ்மை - ஆண்டவரில் தஞ்சம் காண்பதைக் குறிக்கிறது; உண்மையான ஆன்மீகப் போக்கை எடுத்துக் காட்டுகிறது. இவர்கள் நம்பிக்கையுள்ள எளிமையும், ஆன்மீக ஏழ்மையும் தாழ்ச்சியும் உள்ளவர்கள். இப்படிப்பட்டவர்கள் பேறு பெற்றவர்கள் என்று பிற்காலத்தில் இயேசு அறிவிப்பார் (மத் 5:3). இவர்களுக்கு இறைவன் மட்டுமே தேவை. அவரில் மட்டுமே நம்பிக்கை வைப்பர். உண்மையான அமைதியைத் தேடும் யாவர்க்கும் இந்தத் தாழ்ச்சி மிக்க நம்பிக்கையையும் நலனையும் இறைவன் அளிப்பார். இதே செய்தியைத்தான் இயேசுவும், தனது வாழ்க்கைக்கும் போதகத்திற்கும் அடிப்படையாகக் கொண்டிருந்தார் (லூக் 6:20; மத் 11:29).

இந்நூல் பொற்கால விவரிப்போடு முடிகிறது (செப் 3:14-20). இந்த வாக்குகள் ஆண்டவரது நாள் பற்றிய பயங்கர விவரிப்புக்கு ஈடுகட்டும் விதத்தில் அமைந்துள்ளன. ஏனெனில் சீற்றம் கொள்ளும் இறைவனே, இரக்கம் காட்டுகிறார். தீர்ப்பளிக்கும் ஆண்டவரே, மீட்பும் அளிக்கிறார். இஸ்ராயேல் மீண்டும் அமைக்கப்படும். நாடு கடத்தப்பட்டோர் ஒன்று கூடுவர். பிற நாட்டவரிடையே இஸ்ராயேல், புகழ்ச்சியும் பெருமையும் பெறும் (3:18-20).

**இ)** இந்நூலில் வேறு பல இறையியல் கருத்துகளும் உண்டு. பிற இனத்தவர் மனந் திரும்புவர் (2:11). இவர்கள் யாவேயிடம் வந்து அவருக்குப் பணி புரிந்து வழிபாடு செய்வர் (3:9-10). எல்லோரும் மீட்கப் பெறுவர்.

**6. செப்பனியாவும் விவிலியத்தின் பிறநூல்களும்:** இந்நூல் தனது கருத்துகளில் ஆமோசோடும் எசாயாவோடும் கொண்டுள்ள

தொடர்பை ஏற்கெனவே சுட்டிக் காட்டியுள்ளோம். ஓசேயாவின் ''திருமண அன்பு'' என்ற கருத்து இந்நூலில் உண்டு (3:14-18). அந்நாள் பற்றிய யோவேலின் விவரிப்புக்குத் தூண்டுதலாக அமைந்துள்ளது. மற்றபடி இந்நூல் விவிலியத்தின் பிறநூல்களை அவ்வளவு பாதிக்கவில்லை எனலாம். புதிய ஏற்பாட்டில், ஒரே ஒரு தரம் பயன்படுத்தப்படுகிறது (மத் 13:41-செப் 1:3).

ஆண்டவரது நாள்பற்றிய செப்பனியாவின் விவரிப்புதான் மரித்தோர். திருப்பலியில் முன்பு பயன்படுத்தப்பட்ட ''தேவ கோபத்தின் - நாள் அந்நாளே'', என்ற பாடலை இயற்ற தாமஸ் செலானோ என்பவரைத் தூண்டியது. சாமக்காவலன் விளக்கோடு தேடுவதுபோல் இறைவன் எருசலேம் வீதிகளைத் தேடுவதாக சித்தரிக்கப்படுகிறார் (செப் 1:12). இது ஆண்டவரது விளக்கை ஏந்திய மனிதனாகச் செப்பனியாவைச் சித்தரிக்க, கிறிஸ்துவ ஓவியர்களைத் தூண்டியது. இது அவரது ஆட்தன்மைக்கும் மனப்போக்குக்கும், பணிக்கும் செய்திக்கும் பொருத்தமானதே!

**7. இக்காலத்திற்கு:** இருமனப் பற்றுறுதியுடையவர்கள் பற்றிய செப்பனியாவின் விவரிப்பு ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு அப்பாற்பட்டது. எக்காலத்திற்கும் உரியது. உண்மையான ஒரே இறைவனை ஏற்றுக் கொள்பவர்கள், அவருக்கு உரிய இடத்தில், அவருக்கருகில் மற்றொருவரை அல்லது ஒரு பொருளை ஏற்றுக்கொள்ள அடிக்கடி சோதனைக்கு உட்படுகின்றனர். இக்காலத்தில் அது பாகாலோ மில்கோமோ அன்று. அது மற்றொரு ஆளாகவோ, குடும்பமாகவோ, பேராசையாகவோ, வெற்றி வெறியாகவோ இருக்கலாம். இச்சோதனையும் - சமயக் காரியங்களில் பற்றற்ற தன்மையும் அக்கறையின்மையும் - இக்காலச் சோதனைகளாகும். நேரடியான தாக்குதலைவிட இவற்றோடு போராடுவது வெகு கடினம். இக்கால அணுக்குண்டு அழிவுகள் யாவேயின் நாளை, நமக்கு நினைவுபடுத்தவில்லையா?

செப்பனியாவின் கடுமையான செய்தியும், அதற்கிணையான நம்பிக்கைச் செய்தியும் மந்த நிலையிலிருந்து நம்மை எழுப்ப வேண்டும்; பொறுமையில் நம்மை நிலை நிறுத்த வேண்டும். விசுவாசத்திற்கு இட்டுச் செல்ல வேண்டும்; நம்பிக்கைக்கு நம்மை உயர்த்த வேண்டும்.

## செப்பனியாவின் வெளிப்பாடு (ZEPHANIAH, APOCALYPSE OF)

ஒரு யூதப் புனை பெயர் வாழ்க்கை வரலாறு; செப்பனியாவால் எழுதப்பட்டது என்று கூறப்படும். ஆனால் கி.மு. 100-க்கும் கி.பி. 175-க்கும் இடையில் ஒருவேளை கி.பி. 70-க்கு முன் எகிப்தில் எழுதப்பட்டது. இது மூலத்தில் கிரேக்க மொழியில் எழுதப்பட்டது. ஆனால் இப்போது இதன் இரு கோப்திக்குக் கையெழுத்துப் பிரதிகளின் துணுக்குகளே கிடைக்கப் பெற்றுள்ளன. மேலும் அலக்சாந்திரியாவைச் சேர்ந்த கிளமெந்துவின் நூலில் ஓரிடத்தில் எடுத்துக்காட்டாகக் கூறப்படுகிறது. பெரும்பகுதி தொலைந்துவிட்டாலும், கிடைத்திருக்கும் பகுதிகள், இந்த நூல் அக்காலத்திய மற்ற யூத வெளிப்பாட்டு நூல்களைப் போன்றதே என்று காட்டப்போதுமானவை. அதாவது காட்சியாளர் அண்டங்களுக்குள் பயணம் செய்கிறார். அப்பயணத்தில் அவர் விண்ணகத்தின் மகிமையையும் நரகத்தின் பயங்கரத்தையும் பார்க்கிறார். இந்நூலின் அடிப்படைப்போக்கு இறைத்தீர்ப்பின் கூறுகளைப் பற்றியதாகும். அவை, பாவிகள் தண்டிக்கப்படுவதைப் பற்றிய விவரிப்பு, நீதிமான்களின் மன்றாட்டின் தேவை, நேரம் இருக்கும்போதே மனத்துக்கம் கொள்ள அழைப்பு, இறைப்பற்றற்றவர்களின்மேல் இறைவனது சினம் வருவதன் உறுதி ஆகியவையாகும்.

## செப்பாத்தா (ZEPHATHA - காவல் கோபுரம்)

இந்தப் பள்ளத்தாக்கு மாரேசா அருகில் உள்ளது. இங்கே ஆசா மன்னன் (913-873) எத்தியோப்பியனான செராகுவின் படையை முறியடித்தார் (2 நாள் 14:9-12). இந்தப் பள்ளத்தாக்கு பெய்த்கிப்ரினுக்கு வடகிழக்கில் 2.5 கி.மீ. தொலைவில் உள்ள சாபியேவாக இருக்கலாம்.

**செமக்கியா** (SEMACHIAH - *யாவே வலிமை அளித்துள்ளார்*)

ஓபேது - ஏதோம் வழிவந்த ஆலயத்தின் வாயில்களைக் காக்கும் லேவியக் காவலர்களில் ஒருவர் (*1 நாள் 26:7*).

**செமரியா** (SHEMARIAH - *யாவே பாதுகாத்தார்*)

*1.* சிக்லாகு என்னுமிடத்தில் தாவீதோடு சேர்ந்து கொண்ட பென்யமின் குலத்துப் படைவீரர்களில் ஒருவர் (*1 நாள் 12:5*).

*2.* யூதாவின் அரசன் ரெகபயாமுக்கும் அவர் மனைவி மக்லாத்துக்கும் பிறந்தமகன் (*2 நாள் 11:19*).

*3.* காரிமின் (ஆரிம்) மகன். இவர் எஸ்ராவின் சீர்திருத்தப்படி புறவின மனைவியையும் மக்களையும் நீக்கிவிட்டவர் (*எஸ் 10:32*).

*4.* பின்னுயின் மகன் (*எஸ் 10:41*). இவரும் புறவின் மனைவியை நீக்கிவிட்டார்.

**செமேர்** (ZEMER)

இது செமாரியர்களின் சொந்த ஊர். இந்த இடம் உருவாதுக்கும் திரிபோலிக்கும் இடையிலுள்ள சும்ராவாக இருக்கலாமெனக் கருதப்படுகிறது. இதன் திறமை வாய்ந்த மாலுமிகள், தீரின் கப்பல்களில் பணிபுரிந்தனர் (*எசே 27:8*).

**செமா** (SHEMA - *இறைவன் கேட்டருளினார்*) - *ஆள்*

*1.* காலேபிய - எரகுமவேல் குடும்பங்களின் தலைமுறையில் யூதாவின் குலத்துப் பகுதியாக இப்பெயர் குறிக்கப்பட்டுள்ளது. கெபிரோனின் (எபிரோன்) மகன். காலேபின் வழித்தோன்றல். இது ஒரு புவியியல் பெயராக இருக்கலாம். கெபிரோனுக்கு அருகிலுள்ள ஒரு நகராக இருக்கலாம். அனேகமாக எசுத்தமோவாக இருக்கலாம்.

*2.* ரூபன் குலத்தில் பிறந்தவர். யோவேலின் மகன் (*1 நாள் 5:8*). இவர் *5:4*-இல் வரும் சிமயி அல்லது செமாயாவாக இருக்கலாம்.

*3.* பென்யமின் குலத்தினன்; அய்யலோனில் ஒரு குடும்பத் தலைவனாக இருந்தார் (*1 நாள் 8:13*). *1 நாள் 8:21*-இல் இவர் 'சிமயி' என்று அழைக்கப்படுகிறார்.

*4.* இவருக்கு எவ்வித அடைமொழியும், தந்தை குறிப்பும் இல்லை. இவர் எஸ்ரா மக்கள் மத்தியில் சட்டம் வாசிக்கும்போது, அவரோடு நின்றவர் (*நெகே 8:4*).

**செமா** (SHEMA - *இறைவன் கேட்டருளினார்*) - *இடம்*

தென் யூதாவிலுள்ள ஒரு நகரம். பெயர் - செபாவோடு தொடர்புடையது (*யோசு 15:26*). இது சேபாவாக (*1*) இருக்கலாம்.

**செமாகா** (SHEMAAH)

அகியேசர், யோவாசு ஆகியோரின் தந்தை. சிக்லாகில் தாவீதோடு சேர்ந்து கொண்ட பென்யமின் வீரர்களில் இவர்களும் அடங்குவர் (*1 நாள் 12:3*).

**செமாயா** (SHEMAIAH - *யாவே கேட்டருளினார்*)

*1.* ரெகபயாம் ஆட்சிக்காலத்தில் உள்ள ஓர் இறைவாக்கினர். இவர் முதலாம் எரொபவாம் தலைமையில் வடக்கிலுள்ள பத்துக் குலங்களின் எதிர்த்தெழுதலை அடக்குவதற்காக அரசன் சண்டையிடுவதைத் தடுத்தார். யாவே கிளர்ச்சியை ஆதரித்ததால், கூடியிருந்த போர்வீரர்கள் இல்லங்களுக்குத் திரும்ப வேண்டியதாயிற்று (*1 அர 12:22; 2 நாள் 11:2*). ரெகபயாம் ஆட்சிக் காலம் முழுவதும், உள்நாட்டுக் கலகம் நடைபெற்றதால் (*1 அர 14:30*), செமாயாவும் அவரது செயல்களும் கற்பனையாகத் தோன்றலாம். *1 அர 12:24*-க்குப்பிறகு உள்ள நீண்ட இடைச்செருகலில் எழுபது நூல் இறைவாக்கினர் அகியா, எரொபவாம் ஆகியோர் பற்றிய கதை சேர்கிறது (*1 அர 11:29-39*). இக்கதை செமாயாவுக்கு இறைவாக்குச் செயலாகச் சாற்றிக் கூறப்படுகிறது. இப்பெயர் *2 நாள் 12:5-8*-இல் மீண்டும் வந்துள்ளது. இது *1 அர 14:25-28*-இல் வரும் விவரிப்பைச் சிறிது விரிவாக்குகிறது. இதில் பார்வோன் சிசாக்கு

எருசலேமைத் தாக்கியபோது, செமாயா தனது தீர்ப்பையும் விடுதலையையும் அறிவிக்கும் இறைவாக்குகளைக் கூறுகிறார். யூதா யாவேக்கு எதிராகப் பாவம் செய்தது. ஆகவே யாவே, சிசாக்கு தாக்குவதை அனுமதித்தார். அரசனும் தலைவர்களும் மனம் வருந்தியபோது அவர்களின் துன்பத்தைக் குறைத்து அவர்களுக்கு அருள் வழங்கினார். ரெகபயாம் ஆட்சி வரலாற்றைக் கொண்ட நாளாகம நூலுக்குச் செமாயாவும் இத்தோவும் ஆசிரியர்கள் ஆவார்கள் என்று கருதப் பட்டது (2 நாள் 12:15).

2. தாவீது வழித்தோன்றல் அட்டவணையில் உள்ள செக்கனியாவின் ஆறு புதல்வர்களில் ஒருவர் (1 நாள் 3:21-22).

3. சிமியோன் குலத்துத் தலைவன் (1 நாள் 4:37).

4. ரூபன் வழிவந்தவரின் குடும்பத்திற்கு முதல்வர். யோவேலின் மகன் (1 நாள் 5:4). 5:18-இல் வரும் செமாவும் (2) இவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

5. மெராரியின் வழித்தோன்றலான ஒரு லேவியர். இவர் நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் எருசலேமில் வாழ்ந்தவர்களில் ஒருவர் (1 நாள் 9:14; நெகே 11:15). நெகே 11:15-16-இன்படி நெகேமியா காலத்தில் இவர் கோவில் நிர்வாகத்தில் மேற்பார்வையாளர்களில் ஒருவராக இருந்தார். நெகே 11:15-18-ஆவது வசனங்களும் 1 நாள் 9:14-16 வசனங்களும் ஒரே மாதிரி உள்ளன. இவர் 11:15-18-இல் பூனியின் வழிதோன்றல் என்று தவறுதலாக அழைக்கப்படுகிறார்.

6. நாடு கடத்தப்பட்டதற்குப்பின், எருசலேமுக்குத் திரும்பிய ஒரு லேவியர். எதுத்தூனின் வழித்தோன்றல். ஒபதியாவின் தந்தை (1 நாள் 9:16). இவரும் நெகே 11:17-இல் குறிக்கப்பட்டிருக்கும் அபீதாவின் தந்தை சம்மூவாவும் (3) ஒரே ஆளாக இருக்கலாம்; பின்பு 11-இல் குறிக்கப்படுபவராக இருக்கலாம்.

7. லேவியர்கள் குடும்பத்திற்குத் தலைவர். எலிசாபானின் (எலிட்சாபான்) புதல்வர்களுக்கு முதல்வர். பேழையை ஒபேது - ஏதோமின் இல்லத்திலிருந்து சியோனுக்குக் கொண்டு வருவதில் (1 நாள் 15:1-16:3.43; 2 சாமு 6:12-19) இவரும் இவரது இருநூறு சகோதரர்களும், லேவியர்கள் மத்தியில் இருந்தார்கள். இந்த லேவியர்களிடம்தான் தாவீது பேழையை எடுத்துச்செல்லப் பொறுப்பாக ஒப்படைத்திருந்தார் (1 நாள் 15:8. 11-15).

8. இவர் ஒரு லேவியர். நெத்தனியேலின் மகன். ஒரு எழுத்தரும் கூட. இவர் குருக்களின் இருபத்து நான்கு பிரிவுகளையும், தாவீதின் லேவியர்கள் முறைப்படி (1 நாள் 23-26) சீட்டுப்போட்டு அவர்களின் கோவில் கடமைகளையும் (24:6) குறித்து வைத்தார்.

9. ஒரு லேவியர். ஓபேது - ஏதோமின் மூத்த மகன். வீரமிக்க புதல்வர்களுக்குத் தந்தை. இவர்கள் தாவீதின் கோவில் நியமனங்களில் வாயிற்காப்பாளர்கள் குழுவாக இருந்தனர் (1 நாள் 26:4.617).

10. ஒன்பது லேவியர்களில் ஒருவர் (உப 6:6-9). இவர்கள் பதினாறு பேர்கள் கொண்ட குழுவைச் சேர்ந்தவர்கள். அரசன் யோசபாத்தினால் யூதாவின் நகர்களுக்குச் சட்டம் கற்றுக் கொடுக்க அனுப்பப்பட்டவர்கள் (2 நாள் 17:8). இக்கதை நாளாகமத்தில் மட்டும் சொல்லப்பட்டுள்ளது.

11. எதுத்தூன் குடும்பத்து ஒரு லேவியர். இவர் எசேக்கியா ஆட்சிக்காலத்தில் கோவிலைச் சுத்தம் செய்வதில் ஆர்வமாக நின்ற பதினான்கு லேவியர்களில் ஒருவர் (2 நாள் 29:14). இவரும் 6-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம்.

12. எசேக்கியா ஆட்சிக் காலத்தில் ஒரு குழு இருந்தது. முதல்கனிகள், தசமபாகம், காணிக்கைகளை லேவியர் மற்றும் குருக்களுக்குப் பகிர்ந்து கொடுப்பது இதன் கடமையாகும். இவர் இதில் ஓர் உறுப்பினராவார். இக்குழுவில், லேவியர்கள் இருந்தார்கள். இதில் குருக்களும் இருந்திருக்கலாம். இது 2 நாள் 29-31-இல் விவரிக்கப்படுகிறது.

*13.* இவர் தலைமை லேவியர்களில் ஒருவர். இவர்கள் யோசியா காலத்தில் பாஸ்காப் பலிக்கெனக் காணிக்கை கொடுத்தவர்களில் ஒருவர் (*2 நாள் 35:9*).

*14.* அதோனிக்காமின் மகன். நாடு கடத்தப்பட்டு, பாபிலோனிலிருந்து எஸ்ராவோடு திரும்பிய ஒரு குடும்பத் தலைவராவார் (*எஸ் 8:13*).

*15.* இவர் ஒரு மக்கள் தலைவர். எஸ்ரா ஆலயத் திருப்பணிக்கென லேவியர்களை அனுப்பி வைக்குமாறு, கசிப்பியாவில் வாழ்ந்து வந்த இத்தோவைக் கேட்டு அனுப்பிய குழுவில் ஒருவர் (*எஸ் 8:16*).

*16.* இவர் காரிம் (ஆரிம்) வழித்தோன்றலாய்ப் பிறந்த ஒரு குரு. எஸ்ராவின் சீர்திருத்தப்படி, புறவின மனைவியை நீக்கிவிட்டவர்களில் ஒருவர் (*எஸ் 10:21*).

*17.* காரிம் (ஆரிம்) என்பவரின் மற்றொரு புதல்வர். இவரும் புறவின மனைவியை நீக்கிவிட்டார் (*எஸ் 10:31*).

*18.* கிழக்கு வாயிலின் காப்பாளர். எனவே ஒரு லேவியராக இருக்கலாம். செக்கனியாவின் மகன். இவர் நெகேமியாவின் காலத்தில் எருசலேம் சுவரின் ஒரு பகுதியைப் பழுதுபார்த்தார் (*நெகே 3:29*).

*19.* அனேகமாக ஓர் இறைவாக்கினர். மேலும் ஒரு குருவாகவும் இருக்கலாம். ஏனெனில் இவர் எளிதாக ஆலயத்துக்குள் செல்ல முடிந்தது. தெலாயாவின் மகன், மெகேற்றபேலின் வழித்தோன்றல். இவருக்குத் தோபியாவும், சன்பல்லாற்றும் கையூட்டு கொடுத்து, நேகேமியாவுக்கு அச்சமூட்டும் படி சொன்னார்கள். அதன்படி, இவர் நேகேமியாவிடம், ''உம்மைக் கொல்லத் தேடுகிறார்கள். ஆலயத்தில் நுழைந்து கதவுகளைப் பூட்டிக் கொண்டு இருப்போம் வாரும்'' என்று கூறி அழைத்தார் (*நெகே 6:10-13*). இதனால் நெகேமியாவின் பெயரைக்கெடுக்க முயன்றனர்.

*20.* நெகேமியாவின் காலத்தில் உடன்படிக்கையில் கையொப்பமிட்டவர்களில் ஒருவர் (*நெகே 10:8:21*). செருபாபேலுடன் திரும்பிய குருக்களில் ஒருவர் (*நெகே 12:6*).

*21.* யோயாக்கிம் காலத்தில் இருந்த குருக்களில் ஒருவர் (*நெகே 12:34*).

*22.* எருசலேம் சுவரை அர்ப்பணிக்கும் சடங்கில் பங்குபெற்ற யூதாவைச் சார்ந்த எருசலேம் மதில்மேல் ஏறியிருந்த ஒரு தலைவர் (*நெகே 12:34*).

*23.* செக்கரியாவின் (*28*) மூதாதையர். ஒரு லேவியராக இருக்கலாம். ஆசாபின் வழித்தோன்றல். எருசலேம் சுவர் அர்ப்பணச் சடங்கில் இசைக்கருவிகளை மீட்டியவர் (*நெகே 12:35*).

*24.* எருசலேம் சுவரை அர்ப்பணிக்கும் போது பங்கெடுத்த குருவின் புதல்வர்களில் ஒருவர். செக்கரியா (*28*)வின் உறவினர் (*நெகே 12:36*).

*25.* எருசலேம் சுவரை அர்ப்பணிக்கும் போது பங்கெடுத்த, நெகேமியாவோடு சேர்ந்த குழுவில் ஒரு குரு (*நெகே 12:42*).

*26.* இறைவாக்கினர் உரியாவின் தந்தை (*எரே 26:20*); அரசன் யோயாக்கிமின் காலத்தில் கொல்லப்பட்டார்.

*27.* பாபிலோனியாவின் ஒரு தலைவர். நெகலாம் குலத்தைச் சார்ந்தவர். இவர் நாடு கடத்தப்பட்டபோது ''மீண்டும் விடுதலை பெற்றுத் திரும்புவோம்'' என்று அறிவித்தவர்களில் ஒருவர். இவர் எரேமியா நாடு கடத்தப்பட்டவர்களுக்கு மடல் எழுதியதை எதிர்த்து எருசலேம் மக்களுக்கும் ஆலயத்தில் மேற்பார்வை பார்த்த செப்பனியா என்ற குருவுக்கும் கடிதம் எழுதினார். எரேமியாவைச் சிறைப்படுத்தக் கோரி ஒரு கடிதம் எழுதினார். எரேமியா இவரை ஒரு போலி இறைவாக்கினர் என்று கண்டனர் செய்து ''இவரும் இவரது வழிவருபவர்களும், விடுதலை பெற்றுத் திரும்பும்போது வாழமாட்

டார்கள்'' என்று முன்னுரைத்தார் (எரே 24:31-32).

28. தெலாயாவின் தந்தை. அரசன் யோயாக்கிமின் அவையில் ஓர் உயர் அதிகாரி (எரே 36:12).

**செமாரயிம்** (ZEMARAIM - இருமலை உச்சி, இரு ஆட்டுமயிர்)

1. இது பென்யமினின் வட எல்லைக்கு அருகில் இருந்தது (யோசு 18:22). இது பெத்தேலுக்கு வடகிழக்கில் 8 கி.மீ. தொலைவிலுள்ள தற்கால இராஸ் - எஸ் - செய்மாராவாக இருக்கலாம்.

2. எப்பிராயிம் மலைநாட்டில் உள்ள ஒரு மலை (1 நாள் 13:4). இந்த இடத்திலே யூதாவின் அரசன் அபியா, எரொபவாமுக்கும் அவரது படைகளுக்கும் எதிராகப் பேசினார். அதன்பின் அவர்களைத் தோற்கடித்தார் (13:4-18).

**செமாரியர்** (ZEMARITES)

இவர்கள் லெபனோனின் வடக்கில் சீரியாவில் வாழ்ந்த கானானியர். இவர்கள் ஆதி 10:18; 1 நாள் 1:16-இல் மட்டும்தான் குறிப்பிடப்படுகின்றனர். மேலும் இவர்கள் அர்வாதியர், கமாத்தியரின் (ஆமாத்தியர்) சகோதரருமாவர். இவர்கள் லெபனோனுக்கு வடக்கில் அர்வாது, திரிபோலிக்கு இடையில் வாழ்ந்தனர். இந்த இடத்தில் தற்போது சும்ரா என்ற சிறிய ஊர் உள்ளது. இவர்களது நகரம் அசீரியா, அமர்னா ஏடுகளில் குறிக்கப்படுகின்றது.

**செமிதா** (SHEMIDA - அறிவுக் கூர்மையுடைய)

மனாசேயின் வழித்தோன்றல் பாலைவனத்தில் மோசேயால் இரண்டாவதாக எடுக்கப்பட்ட கணக்கெடுப்பின்படி, கிலயாத்தைச் சேர்ந்தவர் (எண் 26:32; யோசு 17:2; 1 நாள் 7:19). அகியான், செக்கேம், லிக்கி மற்றும் அனியாம் ஆகியோரின் தந்தை. செமிதாயினரின் குலப்பெயர் மூதாதையராவர். யோசுவா நாட்டைப் பகிர்ந்தளித்த மனாசேயின் குடும்பங்களில் ஒன்று. சமாரியாவில் கண்டெடுக்கப்பட்ட பாண்டத்துண்டுகளில் இப்பெயர் காணப்படுகிறது.

**செமியர்** (SEMITES)

இச்சொல் இன அடிப்படையைவிட மொழி அடிப்படையில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் முதல்முதல் பயன்படுத்தப்பட்டது. நோவாவின் மக்களுள் ஒருவரான சேமின் வழித்தோன்றல்களாகக் கருதப்பட்டு (ஆதி 5:32) மேற்காசியாவில் வாழ்ந்த மக்களைக் குறிக்கப்பயன்பட்டது. சேமிய மொழிகள், கிழக்கு அல்லது வடகிழக்குச் சேமிய மொழிகள் (அக்காதிய, பாபிலோனிய மற்றும் அசீரிய மொழிகள்) வடமேற்குச் சேமிய மொழிகள் (அரமேயிக்கு, கானானிய, எபிலாயித்து, உகாரித்து, பெனிசிய, மற்றும் எபிரேய மொழிகள்), தெற்குச் சேமிய மொழிகள் (தென்கிழக்கு: பழைய தெற்கு அரபிக்கும், எத்தியோபிக்கு போன்ற நவீன வடிவங்களும்; தென்மேற்கு: அரபிக்கு) எனப் பாகுபாடு செய்யப் படுகின்றன.

**செமிரமோத்து** (SHEMIRAMOTH - உன்னதத்தின் பெயர், விண்ணகத்தின் பெயர்)

1. ஓபேது - ஏதோம் வீட்டிலிருந்து சியோனுக்கு உடன்படிக்கைப் பேழை கொண்டு செல்லப்படும்பொழுது இன்னிசை எழுப்ப, தாவீதால் நியமிக்கப்பட்டவர்களில் ஒரு லேவிய யாழிசைஞர்தான் செமிரமோத்து என்பவர் (1 நாள் 15:18.20). அதற்குப்பிறகு இவர்கள் பேழைக்குமுன் ஆண்டவரின் புகழ்பாடி வழிபட்டு வந்தனர் (16:5).

2. யூதாவின் நகரங்களுக்கு யோசபாத்தால் சட்டம் கற்றுக்கொடுக்க அனுப்பப்பட்டவர்களில் ஒரு லேவியர் (2 நாள் 17:8).

**செமிரா** (ZEMIRAH)

அடிமைத்தனத்திற்குப்பின் பென்யமின் குலத்தில் வாழ்ந்த பெக்கரின் புதல்வராவார் (1 நாள் 7:8).

**செமுவேல்** (SHEMUEL - இறைவனிட மிருந்து கேட்டது)

1. அம்மிகூதின் மகன். இவர் கானான் நாட்டைப் பிரித்தளிப்பதற்கு நியமிக்கப்பட்ட வர்களில் சிமியோன் குலத்துத் தலைவரா வார் (எண் 34:20).

2. தோலாவின் மகன். இசக்கார் குலத்துக் குடும்பத் தலைவர் (1 நாள் 7:2).

**செமேபர்** (SHEMEBER - உயர்ந்து பறத்தல்)

இவர் செபோயிமின் அரசன். சித்தீம் பள் ளத்தாக்கில் கெதர்ல - கோமர் மற்றும் அவ ரது கூட்டணிக்கு எதிராகக் கிளர்ச்சிசெய்து போரிட்டுத் தோற்றுப்போன ஐந்து அரசர் களில் ஒருவர் (ஆதி 14:2).

**செமேய்** (SEMEIN)

இயேசுவின் மூதாதையரில் ஒருவர் (லூக் 3:26).

**செமேர்** (SHEMMER - காவல் காத்தல்)

1. சமாரியாவைக் கட்ட ஓம்ரி வாங்கிய மலையின் மூல உரிமையாளர் (1 அர 16:24). இது ஒரு இனத்தின் பெயராகவும் இருக்க லாம். இவ்விடத்தில் கட்டப்பட்ட நகர் இந்த இனத்தின் பெயரால் அழைக்கப்பட்டது.

2. எருசலேம் கோவிலில் இருந்த ஒரு மெராரிய லேவியப் பாடகரின் மூதாதையர்; மக்லியின் மகன் (1 நாள் 6:46).

3. ஆசேரின் தூரத்து வழித்தோன்றல் (1 நாள் 7:32). 7:34-இல் சோமேர் என்றழைக்கப் படுகிறார்.

**செம்பு** (COPPER)

இந்தப் பொருளைக் குறிக்கும் எபிரேயச் சொல் செம்பையோ, வெண்கலத்தையோ குறித்தாலும் மொழிபெயர்ப்புகள் இதைச் சாதாரணமாக வெண்கலமென்று குறிப்பிடு கின்றன.

தங்கம், இரும்புத்தாது ஆகியவைதவிர, மனிதனால் பயன்படுத்தப்பட்ட முதல், உலோகம் செம்பு ஆகும். முதலில் இது சாதாரண அணிகலன்கள் செய்யப் பயன்பட் டது. பிறகு கருவிகள் செய்யவும் பயன்பட் டது. இது மனிதனுடைய வரலாற்றையே மாற்றிவிட்டது. ஏனெனில் இதிலிருந்து சிற் பக்கலை ஆரம்பமானது.

பாலஸ்தீனத்தில் செம்பானது கி.மு. 34 அல்லது 33-ஆம் நூற்றாண்டுகளில் பயன் படுத்தப்பட்டது. இதனுடைய அழிவுகள் மெசர் என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட் டுள்ளன. கி.மு. 30-லிருந்து 20-ஆம் நூற் றாண்டுகளைச் சேர்ந்த கோடரிகள் எரிகோ வில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால் செம்பு மிகவும் அரிதான பொருளாக இருந் தது என்று புதைபொருள் ஆராய்ச்சி கூறுகின் றது.

ஏறக்குறைய கி.மு. 20-ஆம் நூற்றாண்டில் செம்பு அதிகமாகக் காணப்பட்டது. எமோரி யர்களின் படையெடுப்பினால் செம்பு அதிக ரித்ததென்று தோன்றுகின்றது. எரிகோவில் இவர்கள் விட்டுச் சென்றுள்ள பானைச் சித றல்கள் இதற்குச் சான்று கூறுகின்றன.

வெண்கலம் வந்த பிறகு கூட, செம்பு உபயோகப்படுத்தப்பட்டது. சைப்பிரசி லிருந்த செம்புச் சுரங்கங்கள் கீழ்த்திசை நாடு களுக்குத் தேவையான செம்பைக் கொடுத் தன. எசேக்கியேலின் காலத்தில் தீர் நாடா னது தர்சிசிலிருந்தும், யாவானிலிருந்தும், துபாலிலிருந்தும், மெசேக்கிலிருந்தும் செம்பை இறக்குமதிசெய்தது (எசே 27:12-13).

**செம்புகம், கடல்நாரை** (SEA GULL).

இது தோலால் இணைக்கப்பட்ட விரல் களுடைய பாதங்களைக் கொண்ட கடல் பறவை இனத்தைச் சேர்ந்தது. இந்தப் பற வைகள் மந்தையாகவும் அதிகச் சத்தம் எழுப் பிக் கொண்டும் இருக்கும். கடற்கரைகளி லும், நிலப்பகுதியிலுள்ள நீர் நிலைகளிலும் இவைகள் காணப்படும். மீன், கடற்கரை களில் காணப்படும் புழுக்கள், பூச்சிகள், பற வைகளின் முட்டைகள், இளம் பறவைகள் போன்றவை இவற்றின் உணவாகும். இஃது ஓர் அசுத்தமான பறவையாகக் கருதப்பட் டது. ஏனெனில் அழுகிய பிணம் போன்ற

இழி பொருட்களை இரையாகக் கொண்டது (லேவி 11:16; உப 14:15).

### செம்மறி (LAMB)

பழைய ஏற்பாட்டில் 'செம்மறிஆடு' பலிப்பொருளுக்கான ஒன்றாகச் சடங்கு களைப் பற்றிக் கூறுகையில் யாத்திரை, எண், லேவியர் ஆகமங்களில் பல இடங்களில் கூறப்படுகிறது. செம்மறியாட்டின் கறி மென்மையானதெனக் கருதப்பட்டது (உப 32:14; ஆமோ 6:4). யாதுமறியா, குற்றமற்ற தன்மையின் அடையாளமாகச் செம்மறி கரு தப்படுகிறது (எசா 53:7; எரே 11:19). உதவி யற்ற நிலையில் உள்ளதன் அடையாளமாக வும் கூறப்படுகிறது (சங் 119:176; ஓசே 4:16). நாத்தானின் உவமையில் ஒரு குடும்பமே அந்த ஆட்டுக்குட்டியின்மேல் கொண்டிருந்த அன்பைக் காட்டுகிறார் (2 சாமு 12:3 தொ).

''உலகின் பாவங்களைப் போக்கும் இறை வனின் செம்மறி இவரே'' என இயேசுவைத் திருமுழுக்கு யோவான் சுட்டிக்காட்டுகிறார் (யோவா 1:29.36). இந்தச் சிறப்புப்பட்டம் அ.ப. 8:32-இல் வரும் இயேசு யாவேயின் ஊழியன் (எசா-53:7) பட்டமும் யோவா 19:36-இல் பாஸ்குச் செம்மறி என்ற பட்ட மும் இணைவதிலிருந்து தோன்றுகிறது. இத் தகைய கருத்துக்கள் திருமுழுக்கு யோவான் கூறியதிலிருந்து வந்தனவா, அல்லது ஆதிக் கிறிஸ்தவர்களின் சிந்தனையிலிருந்து எழுந் தனவா எனும் கேள்வி எழுகிறது. ''தலியா'' எனும் 'மூல அரமேயச் சொல்லுக்குச் செம்மறி, அடிமை எனும் இரண்டு பொரு ளும் உண்டு. அச்சொல்லின் தவறான மொழிபெயர்ப்பாக இருக்கலாம் இத் தலைப்பு என்பார் சிலர். தொடக்கத்தில் 'இதோ இறை ஊழியன்' (எசா 53:1தொ), என்றுதான் கூறியிருக்க வேண்டும். இயேசு பலியாகும் செம்மறியோடோ, பாஸ்காச் செம்மறியோடோ ஒப்பிடப்பட்டிருக்க வேண்டும் (1 பேதுரு 1:19).

திருவெளிப்பாட்டில் மட்டுமே இயேசு வைச் செம்மறியென 25 முறை குறிப்பிடு கின்றார். இதுபோல் புதிய ஏற்பாட்டில் வேறு எங்கும் கூறப்படவில்லை. அவர் பலியாகத் தம்மையே அளித்தார் (திருவெளி 5:6.12; 13:8). அவரது உயிரளிக்கும், காக்கும் இரத்தம் (7:14; 12:11); இவை எல்லாவற்றிற் கும் மேலாக அரியணையில் வீற்றிருப்பவரா கவும் உயர்த்தப்பட்டவராகவும் (6:16), போரில் வெற்றி பெற்றவராகவும் (17:14) வாழ்வோரின் நூலைக் கையில் கொண்ட நீதிபதியாகவும் காட்டப்படுகிறார் (13:8; 21:27). அவர் பலிப்பொருளாக்கித் தம் மையே அளிப்பதும், மகிமைப்படுத்தப்படு வதும், அவர் மீட்புக்காகத் தாமே இறந்து உயிர்ப்பதில் அடங்கியுள்ளது என்பதனைத் தெளிவாகக் காட்டுகின்றன.

இயேசுவை விசுவசிப்போர் ஆடுகள் ஆக வும் (யோவா 21:15), பேதுரு அவர்களின் மேய்ப்பன் ஆகவும் காட்டப்படுகின்றனர். பழைய ஏற்பாட்டில் மேய்ப்பனின் உருவம் பொதுவாக ஆள்பவரைக் குறிப்பதாகும்.

### செயரியா (SHEARIAH)

பென்யமின் குலத்தைச் சேர்ந்த ஆசேலின் (ஆட்சேல்) ஆறு புதல்வர்களில் ஒருவர். சவுல் அரசனின் வழித்தோன்றல் (1 நாள் 8:38; 9:44).

### செயலர் (SECRETARY)

நாடு கடத்தப்படும்முன் ஓர் அரசாங்க அதிகாரி. இவர் போர் அலுவல் (2 அர 25:19), பொருளாதாரக்காரியங்கள் (12:10-11), எழுத் தர் அலுவல் (1 நாள் 24:6; எரே 36:32) போன்ற பல அலுவல்களைச் செய்து வந் தார். பெரும்பாலும் செயலர்கள் உயர்மட்ட அதிகாரிகளைச் சேர்ந்தவர்கள் ஆவர் (2 சாமு 8:17; 20:25; 1 அர 4:3). எஸ்ராவின் காலத்தி லும் அதற்குப்பின்னும் மோசேயின் சட்டத் தைப் போதிக்கத் தகுதி வாய்ந்தவர்களைக் குறிக்க இச்சொல் பயன்பட்டது (எஸ் 7:6.11; நெகே 8:1). இதற்கு இணையான கிரேக்கச் சொல் சட்டவல்லுநர், மறைநூல் அறிஞர் ஆகும் (சீரா 38:24). இச்சொல் புதிய ஏற்பாட் டில் பயன்பட்டுள்ளது. கடிதங்களை எழுது வதற்குச் செயலர்கள் பயன்படுத்தப்பட்டனர்

என்பதற்கு உரோ *16:22; 1* பேதுரு *5:12* என்பன சான்று கூறுகின்றன.

**செயல்தியேல்** (SHEALTIEL - இறைவனிடம் கேட்டது)

இவர் எக்கோனியா அல்லது யோயாக்கின் என்ற யூதாவின் கடைசி அரசரின் மகன். செருபாபேலின் தந்தை (1 நாள் *3:17;* எஸ் *3:2; 5:2;* நெகே *12:1;* ஆகா *1:1; 2:2;* மத் *1:12*). இவர் லூக் *3:27*-இல் உள்ள நேரியின் மகன் அல்லர். எஸ் *3:2;* நெகே *12:1;* ஆகா *1:1* போன்ற எல்லா மேற்கோள்களும், செயல்தியேலின் மகன் செருபாபேல் என்று கூறுகின்றன. இவர் நாடு கடத்தப்பட்டதற்குப்பின் உள்ள யூதாவில் முதலாம் தாரியு என்ற பாரசீக அரசனின் கீழ் ஆளுநராக இருந்தார். *1* நாள் *3:17-19*-இல் மட்டும் செயல்தியேல் செருபாபேலுக்குப் பெரியப்பா என்று கூறப்படுகிறது. இப்பிரச்சனை பற்றிக் காண்க: செருபாபேல்.

**செயார் - யாசுபு** - (SHEAR - JASHUB - எஞ்சியவர் திரும்புவர்)

இது எசாயாவுக்கு முதலில் பிறந்த மகனுக்கு வைத்த அடையாளப் பெயர் (எசா *7:3*). சீரிய - இஸ்ராயேல் இணைந்த படையின் எஞ்சியோரே எருசலேமின் முற்றுகையிலிருந்து வீடுதிரும்புவார் என்ற வாக்குறுதியை அடையாளமாக உணர்த்திற்று (எசா *7:4-9; 8:18*). ஆனால் பொதுவாக இது ''நாடு கடத்தப்பட்டதிலிருந்து எஞ்சியோரே திரும்புவர்'' என்றும் ''ஆண்டவரிடம் எஞ்சியோரே திரும்புவர்'' என்றும் பொருள்படும். சூழ்நிலை முன்னதைச் சுட்டுகிறது. எசாயாவின் ''எஞ்சியோர்'' பற்றிய கருத்து, தீர்ப்பையும், வாக்குறுதியையும் அளிக்கிறது. இது அவரது தொடக்க காலப் பணியின் போது எண்ணத்தில் உருவாகியிருக்கலாம். பிற்காலத்தில் இறுதிக்கால அழிவின்முன் இஸ்ராயேலுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதியாயிற்று (எசா *10:21-23; 11:11.16*).

**செயால்** (SHEAL - கேட்டல், மன்றாட்டு)

நாடு கடத்தப்பட்டுத் திரும்பியவர்களில் இவரும் ஒருவர். எஸ்ரா காலத்தில் வாழ்ந்தவர். புறவின மனைவியை நீக்கிவிட கட்டாயப்படுத்தப்பட்டவர் (எஸ் *10:29*).

**செயிரா** (SEIRAH - காடு நிறைந்த குன்று, மயிர் நிறைந்த)

விவிலியத்தில் வரும் குறிப்புகளை வைத்துச் செயிராவைப் பற்றி எதுவும் கூற இயலவில்லை. எகூது என்ற நீதிபதி மோவாபியரின் அரசனான 'எக்லோன்' என்பவனைக் கொன்றபின் இங்குத் தப்பி வந்ததாக நீதி *3:26* கூறுகிறது. இவ்விடம் பொதுவாக எப்பிராயிம் எல்லையில் இருந்ததாகக் கூறினாலும் (*3:27*) மோவாபின் எல்லையில் இருந்திருக்கவும் வாய்ப்புண்டு.

**செயேபு** (ZEEB - ஓநாய்)

எப்பிராயிமியர்களால் ஓரேபோடு பிடிக்கப்பட்ட மிதியானியத் தலைவர். அவர்கள் இவரை இவருடைய திராட்சை ஆலையில் கொன்றனர் (நீதி *7:24; 8:3*). மிதியானியர்களின், குறிப்பாக ஓரேபு மற்றும் செயேபு ஆகியோரின் தோல்வி இஸ்ராயேலில் நெடுங்காலத்திற்கு நினைவு கூறப்பட்டது (சங் *83:11;* எசா *9:4; 10:26*).

**செயேரா** (SHEERAH - உறவினள்)

இவள் எப்பிராயிமுக்கு மகளாகவும், பெரீயாவுக்குச் சகோதரியாகவும் இருக்கலாம் (அல்லது) எப்பிராயிமின் மகன் பெரீயாவுக்கு மகளாக இருக்கலாம். மாசரேட்டிக்கு வாசகத்தின்படி இவள் (அல்லது இவளது வழித்தோன்றல்) கீழ் பெத் - கோரோனையும் மேல் பெத் - கோரோனையும் உசேன் சேராவையும் கட்டினாள் (1 நாள் *7:24*).

**செயோரிம்** (SEORIM - தாடியுடைய)

தாவீதரசரின் காலத்தில் ஆலயத்தில் பணியாற்றுவதற்கு வேண்டியவர்களைக் குலுக்குச்சீட்டுப் போட்டு, குருக்களை 24 பிரிவுகளாகப் பிரித்தனர். அதில் 4-ஆவது பிரிவைச் சேர்ந்தவர் சேயோரிம் ஆவார் (1 நாள் *24:8*). இதன் மூலம் ஏற்பட்ட பிரிவுகள் கி.பி. 70 வரை நிலைத்திருந்தது.

**செயோல்** (SHEOL)

காண்க: இறந்தோரின் உறைவிடம்.

**செரகியர்** (ZERAHITE)

இது செராகு *(4)* என்பவனிடமிருந்து தோன்றிய இரு குடும்பங்களின் பெயர். இப்பெயர் கொண்ட குடும்பங்கள் சிமி யோன் குலத்திலும் *(எண் 26:13)*, யூதா குலத்திலும் *(எண் 26:20; யோசு 7:17)* இருந் தன. ஆக்கான் யூதாவின் செரகியருள் ஒரு வர் *(யோசு 7:17-18)*. தாவீதின் வலிமை வாய்ந்தவருள் கூசாயியரான (ஊசாய்) சிபகா யும் நெற்றோபாயரான மகராயும் இந்தக் குடும்பத்திலே பிறந்தவர்கள் *(1 நாள் 27:11.13)*.

**செரகியா** (ZERAHIAH - யாவே எழுந்துள் ளார், யாவே பிரகாசித்தார்)

1. குருவான இவர் ஊசியின் மகனும் மெரயோத்தின் தந்தையும் எலயாசரின் வழித்தோன்றலும் எஸ்ராவின் முன்னோரும் ஆவார் *(1 நாள் 6:6.51; எஸ் 7:4)*.

2. இவர் எல்யகோவெனாய் தந்தையும் பகத்மோவாபு வழிவந்தவருமாவார். இந்த எல்யகோவெனாய் எஸ்ராவோடு அடிமைத் தனத்திலிருந்து யூதாவுக்குத் திரும்பியவருள் ஒருவர் *(எஸ் 8:4)*.

**செராகு** (ZERAH - தலைவி, பெருமாட்டி)

யாக்கோபின் மகனான ஆசேரின் மகள். இவளுக்கு இம்னா, இசுவா, இஸ்வி, பெரீயா என்ற சகோதரர்கள் உண்டு *(ஆதி 46:17)*. இவர்கள் அனைவரும் யாக்கோபு டன் எகிப்துக்குச் சென்றவர்கள். யூதப்பாரம் பரியத்தின்படி செராகு அசேரின் மகன்களுக் குச் சமமாகவே எண்ணப்பட்டாள். மோசே பாலைவனத்தில் எடுத்த குடிக்கணக்கில் இவளது பெயரைத் தனிக்குடியாகக் கணக் கிட்டார் *(எண் 26:46)*. இதனால் யூத இராபி கள், இவள் வாழ்வில் ஏதேனும் அசாதாரண நிகழ்ச்சி நடந்திருக்கலாம்; எனவேதான் இவ ளுக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது என்று எண்ணினர். இதனால் இவளைக் குறித்துப் பற்பல கதைகள் உண்டாயின.

**செராகு** (ZERAH - விடியல், ஒளிக்கதிர் இறைவன் பிரகாசித்தார்)

1. இவர் ஏதோமின் ஒரு தலைவர். இவர் ஏசா, இசுமயேல் ஆகியவர் வழி வந்தவர் *(ஆதி 36:13.17; 1 நாள் 1:37)*. ஏனெனில் இசுமயேலின் புதல்வி பாசமத்து வழியாக ஏசாவின் மகனான இரகுவேலின் மகன்.

2. ஏதோமின் இரண்டாவது அரசனான யோபாபின் தந்தையாவார் *(ஆதி 36:33; 1 நாள் 1:44)*.

3. யூதாவுக்குத் தன் மருமகள் தாமார் வழி யாகப் பிறந்த இரட்டைக் குழந்தைகளில் இவ ரும் ஒருவர் *(ஆதி 38:30; 46:12; யோசு 7:1. 18.24; 22:20; 1 நாள் 2:4.6; 9:6; நெகே 11:24)*. இவர் பிறப்பதற்குமுன், மருத்துவச்சி இவர் கையிலே கருஞ்சிவப்பு நூலைக்கட்டியதால் இவருக்குச் செராகு என்ற பெயர் வழங்கப் பட்டது *(ஆதி 38:27-30)*. இவர் யூதாவின் கோத்திரத்திலே செராகியர் குடும்பத்தை நிறுவியவர் *(எண் 26:20)*. இவர்கள் செரா கின் புதல்வர்கள் என்றழைக்கப்பட்டனர் *(1 நாள் 9:6; நெகே 11:24)*. இவருடைய வழித் தோன்றல்களின் பெயரும் கொடுக்கப்பட் டுள்ளது *(1 நாள் 2:6)*. இவர் ஆக்கானின் முன்னோராவார் *(யோசு 7:1.8.24; 22:20)*. இயேசு கிறிஸ்துவின் தலைமுறை அட்டவ ணையிலே இரட்டைக் குழந்தைகளான பெரேட்சு, செராகு ஆகியோரின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன *(மத் 1:3)*.

4. இவர் சிமியோனின் மகனாவார் *(1 நாள் 4:24)*. இவரது வழித்தோன்றல்கள் செர கியர் என்றழைக்கப்பட்டனர் *(எண் 26:13)*. *ஆதி 46:10; யாத் 6:15* ஆகிய இடங்களில் இவர் சோகார் என அழைக்கப்படுகிறார்.

5. லேவியரான இவர் கேர்சோமின் குடும் பத்தில் பிறந்தவர் *(1 நாள் 6:21.41)*.

6. எத்தியோப்பியனான செராகு ஆசா விற்கு எதிராகப் படையெடுத்து மாரேசா வரை வந்தார். அவர்களைத் தோற்கடித்த ஆசா கெரார் வரை துரத்திச் சென்றார் *(2 நாள் 14:9-15)*.

**செராபிம், செராபியர்** (SERAPHIM - *தீப்பிழம்பான, எரிகிறது*)

ஆலயத்தில் எசாயா ஆண்டவரைக் கண்ட காட்சியில் வரும் ஆறு இறக்கைகளையும் மனிதக் குரலையும், கை, கால்களையும் கொண்ட உயிர்கள் (*எசா 6:1-7*).

இந்த உயிர்களின் பெயரின் பொருளை உறுதியாக அறிவதற்கில்லை. பாலைவனத்தில் யாவே தமக்கு எதிராக முணுமுணுத்த மக்களைத் தண்டிப்பதற்கு அனுப்பிய பாம்புகள் ''கொள்ளிவாய்'', அதாவது நச்சுப்பாம்புகள் என்றழைக்கப்படுகின்றன (*எண் 1:6; உப 8:15*). அதன்பின் ஏற்பட்ட பெருந்துன்பங்களிலிருந்து தங்களை விடுவிக்குமாறு மக்கள் வேண்டி, மோசே செய்துவைத்த ''கொள்ளிவாய்ப்'' (வெண்கலப்) பாம்பு (*எண் 21:8*) ஒரு வழிபாட்டுப் பொருளாகி, ''ஊசியா அரசன் இறந்த ஆண்டில்'' எசாயா தனது அழைப்பைப் பெற்றபோது, (ஒருவேளை ஆலயத்தில்) வழக்கில் இருந்தது (*2 அர 18:4; எசா 6:1*). *எசா 14:29*-இல் குறிக்கப்படும் ''பறவை நாகம்'' பாலைவன உயிர்களில் ஒன்றாகும். இது பழைய ஏற்பாட்டில் காணப்படுவதுபோல் பழங்கால நாட்டுப் பாடல்களிலும் இதிகாசங்களிலும் இடம் பெறுகின்றது.

எசாயாவின் காட்சியில் வரும் செராபிம்கள் இத்தகை பாலைவன உயிர்களோடு தொடர்பு படுத்தப்பட்டிருக்கலாம். இவர்களின் அலுவல் இறைவனுக்குப் பணிபுரிவதும் அவரது பரிசுத்தத்தை வழிபடுவதுமாகும். இதனால் இவர்கள் ஒருவகை வான தூதர்களாக் கருதப்படுவர். இவர்கள் பெயர் 'கொள்ளிவாய்' அல்லது பாம்பு போன்ற தோற்றத்தைச் சுட்டும். இது, பீடத்திலிருந்து எடுக்கப்பட்ட நெருப்புப் பொறியால், செராபிம்களில் ஒன்று எசாயாவிடம் செய்யும் சுத்திகரச்சடங்கோடு தொடர்பு படுத்தப்பட்டிருக்கலாம்.

**செராயா** (SERAIAH - *யாவே வெற்றிகொண்டார், மேற்கொண்டார்*)

1. தாவீதரசர் தன் செல்வாக்கின் உச்ச நிலையில் இருந்தபோது அவரிடம் செயலராகப் பணியாற்றியவர் (*2 சாமு 8:17*). இவர் ஓரிடத்தில் செவா என்றும் (*2 சாமு 20:25*), பிறிதொரு இடத்தில் சவுசா என்றும் (*1 நாள் 18:16*), வேறொரு இடத்தில் சீசா என்றும் (*1 அர 4:3*) அழைக்கப்படுகின்றார்.

2. பாபிலோனிய அரசன் நெபுகத்னேசர், கி.மு. 587/6-இல் எருசலேமை அழித்த போது அங்கு ஆலயத்தில் தலைமைக் குருவாக இருந்தவர். யூதாவின் அடிமைத்தனம் முழுமை பெறும் பொருட்டு, தலைமைக்குரு இரிப்லாவில் நெபுகத்னேசரிடம் ஒப்படைக்கப்பட்டுக் கொல்லப்பட்டார் (*2 அர 25:18; எரே 52:24*). லேவி, சாதோக்கு வழிவந்த குருக்கள் பட்டியலில் இவரது பெயரும் உண்டு (*1 நாள் 6:14*). ஆனால் இங்கு இவர் அசரியாவின் மகன் என்றும் யோசதாக்கின் தந்தை என்றும் கூறப்பட்டுள்ளது. யோசதாக்கு கைது செய்யப்பட்டாலும், இரிப்லாவில் தனது தந்தையின் முடிவை அடையவில்லை. ஆனால் நாடு கடத்தப்பட்டார். *எஸ் 7:1*-இல் எஸ்ரா செராயாவின் வழித் தோன்றல் என்று உரிமை கொண்டாடுகிறார். அவர் யோசதாக்கின் சகோதரனாக இருந்திருக்கலாம். ஆனால் யோசதாக்கு தலைச்சன் பிள்ளை என்பது தெளிவு. செராயா ஏசுவாவின் பாட்டனும் ஆவார் (*1 நாள் 6:14; ஆகா 1:1*).

3. நெற்றோபாவியரான தங்குமெத்தின் மகன். எருசலேம் வீழ்ச்சியுற்றபோதும் நாட்டில் தங்கியிருந்த யூதா நாட்டுச் சுதந்தரப் படைகளின் தலைவர்களுள் ஒருவர் (*2 அர 25:23; எரே 40:8*). நெபுகத்னேசர் தனது பிரதிநிதியாகக் கெதலயா என்பவரை நியமித்திருப்பதைக் கேள்வியுற்ற படைத்தலைவர்கள் கெதலயா விவேகத்தோடும் நேர்மையாயும் தங்களை நடத்துவார் என்று எண்ணித் தங்களுடைய வீரர்களோடு மிஸ்பாவில் கெதலயாவிடம் சரண் அடைந்தனர் (*2 அர 25:24*). ஆனால் அடுத்த ஆறு மாதங்களில் கெதலயா கொல்லப்பட்டதால் செராயாவும் மற்றப் படைத்தலைவர்களும் தங்கள் உயிரைக் காக்க எகிப்துக்கு ஓடிப்போனார்கள்.

4. கெனாசு என்பவரின் இரண்டாவது மகன். இவருக்கு ஒத்தினியேல் என்ற சகோதரனும் யோவாபு என்ற மகனும் உண்டு. யூதாவின் வழிவந்தவர்களில் இவரும் ஒருவர்.

5. சிமியோன் இனத்தில் ஒரு தலைவர். அசியேல் என்பவரின் மகன். இவருக்கு யோசிபியா என்ற மகனும் ஏகூ என்ற பேரனும் உண்டு. தன் இனத்திற்கு இவர் ஒரு தலைவர் (1 நாள் 4:35).

6. இவர் ஆளுநரான செருபாபேலோடும், பெரியகுருவான ஏசுவாவோடும் பாபிலோனிலிருந்து திரும்பி வந்தவர்களில் ஒருவர் (எஸ் 2:2). நெகே 7:7-இல் அசரியா (19) என்று குறிக்கப்படுகின்றார். இவரே 9-இல் குறிக்கப்படுபவராக இருக்கலாம். காண்க 7.

7. நெகேமியா காலத்தில் கடவுளுடன் செய்து கொண்ட உடன்படிக்கையில் கையெழுத்திட்டவர்களில் ஒருவர் (நெகே 10:2). நெகே 10-இல் வரும் குருக்களின் பெயர்கள் குருக்களின் குடும்பப்பெயராக இருக்கலாம். அப்படியாயின் 6-இல் குறிக்கப்படுபவரும் 9-இல் குறிக்கப்படுபவரும் இவரும் ஒருவரே.

8. நாடு கடத்தலுக்குப்பின் அமைக்கப்பட்ட யூதாவில், ஆலயத்தில் மேற்பார்த்த ஒரு குரு (நெகே 11:11). 1 நாள் 9:11-இல் அசரியா (8) என்றழைக்கப்படுகிறார்.

9. ஆளுநர் செருபாபேல் என்பவரோடும் தலைமக்குரு ஏசுவாவோடும் பாபிலோனிலிருந்து திரும்பிவந்த குருக்களில் ஒருவர் (நெகே 12:1). இவரது குடும்பத்தார் ஏசுவாவின் மகனும் வாரிசுமான யோயாகிமின் கீழ்ப்பணிபுரிந்தனர் (12:2). இவரும் 6-இல் வருபவரும் ஒரே ஆளாக இருக்கலாம். காண்க 7.

10. நேரியாவின் புதல்வனும் எரேமியாவின் செயலரான பாரூக்கின் சகோதரனும் ஆவார் (எரே 32:12; 51:59). யூதாவின் அரசனான செதேக்கியா கி.மு. 594-இல் பாபிலோன் சென்றபோது அவருடன் சென்றவர். இவரது பணி அரசனுக்கு விடுதிப் பொறுப்பாளாராக இருப்பதாகும் (எரே 51:59). இறைவாக்கினரான எரேமியா, செராயாவிடம் பாபிலோனுக்கு எதிரான வாக்குகளைக் கொண்ட சுருளைக்கொடுத்து, அவ்வாக்குகளைப் பாபிலோனில் வாசித்துவிட்டு, பாபிலோனுக்கு வரவிருக்கும் அழிவை வலியுறுத்தும் பொருட்டு அச்சுருளை யூப்பிரத்தீசில் எறிந்துவிடுமாறு கட்டளையிட்டார் (51:60-64)

11. இறைவாக்கினர் எரேமியா காலத்தில் யூதாவை ஆண்ட யோயாக்கிம் அரசனிடம் பணிபுரிந்தவரில் ஒருவர். கி.மு. 604-இல் எரேமியா யூதாவுக்கு எதிராக உள்ள கடவுளின் தீர்ப்பை அரசனுக்குமுன் வாசிக்கச் செய்த பின்பு, அவரையும் அவரது உதவியாளர் பாரூக்கையும் கைது செய்து செராயாவுக்கு உத்தரவு வழங்கப்பட்டது. ஆனால் எரேமியாவும், பாரூக்கும் தப்பிவிட்டனர் (எரே 36:26). இவரது தந்தை பெயர் அசிரியேல் ஆகும்.

செரீ (ZERI - கட்டப்பட்ட, பால்சம்)

இவர் அடிமைத்தனத்திற்குப்பின் லேவிய எதுத்தூன் குடும்பத்தில் வாழ்ந்த ஓர் இசைக் கலைஞர். ஆலயத்தில் இசைப்பணி செய்வதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு குழுவில் ஒருவர் (1 நாள் 25:3). 25:11-இல் இவர் இசுரி (இட்சரி) என்றழைக்கப்படுகிறார்.

செருசு (XERXES)

1. முதலாம் செருசு: அக்கமேனிய வம்சத்தைச் சேர்ந்த ஒரு பாரசீக அரசன் (கி.மு. 486-465). இவர் முதலாம் தாரியுவுக்கும் பெரிய சைரசின் மகள் அத்தோசாவுக்கும் பிறந்த முதல் மகன். தாரியுவின் வாரிசு அமெஸ்திரிசின் கணவன். இவர் 486-இல் தன்னுடைய தந்தைக்குப் பிறகு அரசனானார்.

இவர் அரசனான முதல் ஆண்டுகளில் பல எதிர்ப்புகளையும் கிளர்ச்சிகளையும் எதிர் கொள்ள வேண்டியிருந்தது. இவர் பொய்க்

கடவுள்களை அழித்து மதச் சீர்திருத்தம் செய்தார்.

இவர் கிரேக்க நாட்டின் மீது படையெடுத்து முதலில் வெற்றி கண்டார்; ஆனால் 479-இல் திடீரென்று அயோனியாவில் தோல்வியுற்றார். இவர் சாகும்வரை *(465)* உள்நாட்டுக் குழப்பங்களைக் கவனிக்க வேண்டியிருந்தது. ஆகவே மற்றக்காரியங்களில் கவனம் செலுத்த முடியவில்லை.

எஸ்தர் ஆகமத்திலுள்ள அகசவேர் மன்னன் இந்தச் செருசு அரசன்தான் என்று கருதப்படுகிறார் *(எஸ்த 1:1-2:1.16-17; எஸ் 4:5-7)*.

2. நாற்பத்தைந்து நாட்கள் ஆண்டவர் இரண்டாம் செருசு என்ற மன்னன் *(424)* முதலாம் அர்த்தக்சஸ்தா வாரிசு. அவரது சகோதரன் சோக்தியானுசால் கொல்லப்பட்டார். அவருக்குப்பின் 2-ஆம் தாரியு ஆட்சிக்கு வந்தார்.

**செருபாபேல்** (ZERUBBABEL - பாபிலோனில் *(பிறந்த)* பிள்ளைகள்)

இவர் தாவீதின் தோன்றலும் யூதாவின் அரசன் யோயாக்கினின் பேரனும் செயல்தியேலின் மகனுமாவார் *(எஸ் 3:2; 5:2; நெகே 12:1; ஆகா 1:1; 2:2; மத் 1:12)*. இஸ்ராயேல் நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் ஆலயம் மீண்டும் கட்டப்பட்டபோது யூதாவின் ஆளுநர் *(1 நாள் 3:17; நெகே 12:47; ஆகா 1:1; 2:2)*. தாவீது வழியாக இயேசுவின் முன்னோர் *(மத் 1:12-13; லூக் 3:27)*. *1 நாள் 3:17-19*-இல் இவர் யோயாக்கினின் மற்றொரு மகனான பெதாயாவின் மகன் என்று குறிக்கப்படுகிறார். ஒருவேளை செயல்தியேல் பிள்ளையின்றி இறந்து, பெதாயா உடன்பிறந்தான் மணமுறைப்படி, செயல்தியேலின் விதவையை மணந்து, அவருக்குச் சந்ததியை ஏற்படுத்தியிருக்கலாம். செயல்தியேலும் பெதாயாவும் இருவருமே செருபாபேல் என்ற பெயருடைய புதல்வர்களைக் கொண்டிருந்திருக்கலாம் என்பது மற்றொரு கருத்தாகும்.

ஆகாய் செருபாபேலை யூதாவின் ஆளுநர் என்றழைக்கிறார் *(ஆகா 1:1; 2:2.21)*. ஆனால் அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்தவர்கள்மேல் சேசுபட்சரை ஆளுநராகச் சைரசு நியமித்ததாகக் கூறப்படுகிறது *(எஸ் 5:14; 1:8)*. செருபாபேல், சேசுபட்சர் ஆகிய இரு பெயர்களுமே பாபிலோனியப் பெயர்களாகும். இருவரும் ஆலயத்திற்கு அடிக்கல் நாட்டும் நிகழ்ச்சியோடு தொடர்புபடுத்திக் கூறப்படுகின்றனர் *(எஸ் 3:2.8.10;5:16)*. இதனால் சிலர் இரு பெயரும் ஒரே ஆளைக் குறிக்கின்றன என்பர். ஆனால் சேசுபட்சர் செருபாபேலுக்கு முந்தியவராகவும் ஒருவேளை யோயாக்கினின் மகனும் செருபாபேலின் சிற்றப்பனுமான செனாட்சராக இருக்கலாம் *(1 நாள் 3:18)*. காலவரிசை முறை தெளிவாக இல்லை. எஸ் 2-5-இல் குறிக்கப்படும் காலத்தைத் திருத்தி அமைக்கும் பல திட்டங்களும் யூதர்கள் யூதாவுக்கு இரு குழுவினராகத் திரும்பி வந்தனர் என்ற கருத்தை மேற்கொள்கின்றன. முதல் குழு சேசுபட்சர் தலைமையிலும், இரண்டாவது குழு செருபாபேல் தலைமையிலும் திரும்பி வந்தனர் *(நெகே 7:12)*.

கி.மு. 520-இல் ஆலயம் மீண்டும் கட்டப்பட்டபோது செருபாபேல் ஆளுநராக இருந்தார். ஆகாயும் செக்கரியாவும் செருபாபேலுக்கு மெசியாவின் மகிமையை அளிக்கின்றனர். அவரே ஆண்டவரின் ''தளிர் எனப்படும் தொண்டன்'' *(செக் 8:8; 6:12-13)*. உலகின் அரசுகளை இறைவன் வீழ்த்தியபின் செருபாபேல் அரசரின் ''அரச இலச்சினை'' ஆவார் *(ஆகா 2:21-23)*.

நாட்டில் வாழ்ந்திருந்த மக்கள் ஆலயம் கட்டுவதில் பங்கெடுப்பதைச் செருபாபேல் மறுத்துவிட்டார். இது சாமாரியப்பதிதத்தில் நிறைவுபெற்ற பகைமையுணர்ச்சியைத் தூண்டியது *(எஸ் 4:2 தொ)*. இவர் பெரிய குரு ஏசுவாவுக்குச் சம காலத்தவர்.

செருபாபேலின் ஆளுநர் ஆட்சி எப்படி முடிந்தது என்பது பற்றியும் அவர் என்ன ஆனார் என்பதுபற்றியும் ஒன்றும் அறிவதற்

கில்லை. செருபாபேலைச் சூழ்ந்தெழுந்த மக்களின் மெசியா பற்றிய ஆர்வத்தால் தூண்டப்பட்டு பாரசீகர்கள் செருபாபேலைக் கொன்றுபோட்டனர் என்பர் சிலர். ஆனால் இக்கூற்றுக்கு ஆதரவாகத் தெளிவான சான்றுகள் இல்லை.

**செரூக்கு** *(SERUG - கிளை)*

'சேம்' குலத்தில் தோன்றிய இரெயுவின் மகன். இவருக்கு *30*-ஆம் வயதில் நாகோர் என்ற மகன் பிறந்தார். ஆகவே ஆபிரகாம், இயேசுவின் மூதாதையர். அதன்பிறகு *200* ஆண்டுகள் வாழ்ந்து பல புதல்வர்களையும், புதல்விகளையும் பெற்றார் *(ஆதி 11:20-23; 1 நாள் 1:26, லூக் 3:35)*.

இப்பெயர் காரனுக்கு மேற்கே அமைந்துள்ள செரூக்கி என்ற நகர் மற்றும் மாவட்டத்தோடு அடையாளம் காட்டப்படுகிறது.

**செரூயா** *(ZERUIAH - ஆண்டவனால் புண்பட்ட)*

நாகசுவின் *(2 சாமு 17:25)* அல்லது ஈசாயின் மகள் *(1 நாள் 2:16)* என்றழைக்கப்படும் அபிகாயில் மற்றும் தாவீது ஆகியோரின் சகோதரி அல்லது ஒன்றுவிட்ட சகோதரி ஆவாள்.

இவள் யோவாபு, அபிசாய், அசாவேல் என்பவர்களின் தாயாவாள். தாவீதின் நம்பிக்கைக்குரிய வீரர்களான இம்மூவரும் அவர்தம் படையிலே தளபதிகளாகவும் இருந்தனர் *(2 சாமு 2:18; 3:16; 18:2)*. இவர்கள் தங்களது தகப்பனோடு தொடர்பு படுத்தப்படாமல், தங்கள் தாயான செரூயாவுடனே தொடர்பு படுத்திக் கூறப்படுகின்றனர் *(1 சாமு 26:6; 2 சாமு 2:13.18; 8:16)*. அவளது கணவன் இளமையில் மரித்ததோ, அந்நியராய் இருந்ததோ, அவள் அசாதாரணப் பெண்ணாய் விளங்கியதோ, வழித்தோன்றல்கள் தாயின் வரிசையைப் பின்பற்றிய பழக்கமோ இதற்குக் காரணமாக இருக்கலாம்.

தாவீது, செரூயாவின் புதல்வர்களைக் கட்டுப்படுத்துவதைக் கடினமாகக் கண்டார் *(2 சாமு 3:39; 16:10; 19:22)*. ஏனெனில் அவர்கள் அவருக்கு மிகவும் பிரமாணிக்கமுள்ளவர்கள் ஆனாலும் அவர்கள் கடுமையாகவும், நம்பிக்கைக்கேடு செய்பவர்களாகவும் பழிவாங்கும் போக்குடையவர்களாகவும் இருந்தனர் *(1 சாமு 26:8; 2 சாமு 3:27.30; 16:9; 18:5.14; 19:21)*.

**செரூவா** *(ZERUAH - தொழுநோயுள்ள)*

இவள் நெபாற்றின் மனைவியும் எரொபவாமின் தாயும் ஆவாள் *(1 அர 11:26)*.

**செரேசு** *(SHERESH - வேர்)*

மனாசே குலத்து ஒரு குடும்பத்தைக் குறிக்கிறது. மனாசேயின் பேரனும், மாக்கிரின் மகனுமாவார் *(1 நாள் 7:16)*.

**செரேசு** *(ZERESH - தங்கமான)*

ஆமானின் மனைவியான இவள் ஆமானுக்கு அறிவுரை கூறிவந்தாள். முதலாவதாக மொர்தக்காயைப் பழிவாங்கவும், பின்னர் ஆமான் தோல்வியுறுவது உறுதி என்றும் அவள் கூறினாள் *(எஸ்த 5:14; 6:13)*.

**செரேதா** *(ZEREDAH)*

1. இது எரொபவாமின் சொந்த ஊர் *(1 அர 11:26)*. இந்த இடத்திலிருந்துதான் எரொபவாம் சாலமோன் மன்னருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தார். இந்தச் செரேதா சமாரியாவின் மேற்கிலுள்ள அயின்செரிதா நீரூற்றில், வாடி தெயிர் பால்லுத்து ஆக இருக்கலாமெனக் கருதப்படுகிறது. மேலும் சில விளக்கவுரையாளர்கள் இந்தச் செரேதா செக்கேமுக்குத் தென்மேற்கில் *24* கி.மீ. தொலைவிலும் எருசலேமுக்கு வடமேற்கில் *34* கி.மீ. தொலைவிலும் உள்ள தெயிர் காசானேபாக இருக்குமெனக் கருதுகின்றனர்.

2. இது யோர்தான் பள்ளத்தாக்கில் உள்ள ஒரு நகரம் *(2 நாள் 4:17)*. நீதி *7:22*-இல் செரேரா என்ற பெயருக்குப் பதிலாகச் செரேதா என்ற பெயர்தான் இருக்கவேண்டும் என விளக்கவுரையாளர் பலர் கருதுகின்றனர்.

**செரேது** (SERED - *அச்சம்*)

குலமூதாதையர் செபுலோனின் மகன் (*ஆதி 46:14; எண் 26:26*). இவர் செரேது வீட்டாரின் குலமூதாதையத் தலைவர்.

**செரேது** (ZERED - *ஜாரத் நீரோடை*)

இஸ்ராயேல் மக்கள் இவ்வோடையைக் கடக்கும்போது தங்களுடைய 38 வருட வனாந்தர வாழ்க்கையை முடித்துக் கொண்டனர் (*எண் 21:12; உப 2:13-4*).

இது சாக்கடலின் தென்கிழக்கு நோக்கிப் பாயும் வாடி எல்-கேசாவாக இருக்கலாமெனக் கருதப்படுகிறது. இந்த ஓடை 56 கி.மீ. நீளமுள்ளது. இது தன் கிளை ஓடைகள் மூலமாக எபெல் எஸ் சேராவின் வடபகுதி முழுவதையும் நிரப்புகிறது. திரேசன் சாலை வெண்கலக்கால வழியைப் பின்பற்றிச் செரேதை எல் - அய்நாபில் குறுக்கே கடக்கிறது.

மேலும் இந்த ஓடை ஏதோமின் வடக்கு எல்லையாகவும், மோவாபுக்குத் தெற்கு எல்லையாகவும் உள்ளது. எசா 15:7-இல் வரும் அராவீம் ஒடையும், இவ்வோடையும் ஒன்றாக இருக்கலாமென எண்ணப்படுகிறது. அராபா ஓடையும் (*ஆமோ 6:14*) இதுவாக இருக்கலாம்.

**செரேத்து** (ZERETH - *பேரொளி*)

இவர் யூதா குலத்தில் தோன்றியவர் கேலாவின் (எலயா) தலைமகன். இந்தக் கேலா அஸ்கூரின் மனைவியாவார் (*1 நாள் 4:7*).

**செரேத்து - சாகார்** (ZERETH - SHAHAR -*விடியலின் பேரொளி*)

மோவாபு பீடபூமியிலுள்ள இந்த ஊர் மோசேயால் ரூபனின் கோத்திரத்திற்குக் கொடுக்கப்பட்டது (*யோசு 13:19*). இது நவீன சாரத் ஆக இருக்குமெனக் கருதப்படுகிறது. இந்தச் சாரத் சாக்கடலின் கிழக்குக் கரையில், கால்லிர்ரோ வெந்நீரூற்றின் அருகே அமைந்துள்ளது.

**செரேபியா** (SHEREBIAH - *யாவே பாலை வனச் சூட்டை அனுப்பியுள்ளார்*)

1. மக்லியின் மகன். புத்திக் கூர்மையுள்ளவர். எஸ்ரா, யூதாவுக்குத் திரும்பியபோது கூடாரத்தில் தங்கிய காலத்தில், கோவில் பணி செய்தவர். அவரிடம்தான் புனிதப் பொருட்கள் கொடுக்கப்பட்டிருந்தன (*எஸ் 8:8-24*).

2. எஸ்ரா சட்டத்தை வெளிப்படையாக வாசித்தபோது அதில் கலந்து கொண்ட ஒரு லேவியர் (*நெகே 8:7*). மக்களுக்குச் சட்டத்தை விளக்கிக் காட்டியவர்களில் ஒருவர் (*9:4-5*). உடன்படிக்கை புதுப்பிக்கப்படும் போது, சாட்சியாக இருந்தார் (*10:12*).

3. நர்டு கடத்தப்பட்டதிலிருந்து செருபாபேலுடன் திரும்பிய ஒரு லேவியர் (*நெகே 12:8*). இவர் லேவியர்களுக்குத் தலைவரானார் (*12;24*). 'நெகேமியா காலத்தைச் சேர வேண்டிய இப்பெயரானது, செருபாபேல் காலத்தில் தவறுதலாக இடம் பெற்றிருக்கிறது' என்று அறிஞர் சிலர் கருதுகிறார்கள்.

**செரேரா** (ZERERAH)

கிதியோன், மிதியானியரைத் தோற்கடித்த போது மிதியானியர் படை இந்தச் செரேரா வழியாக ஓடியது (*நீதி 7:22*). இது செரேதாவாக இருக்கவேண்டும் என்று விளக்கவுரையாளர் பலர் கருதுகின்றனர்.

**சேரோர்** (ZEROR - *கூரியகல், தீக்கல்*)

இவர் சவுல் மன்னனின் முன்னோர்; பெக்கோராத்தின் மகனும் அபியேலின் தந்தையுமாவார் (*1 சாமு 9:1*).

**செரோன்** (SERON)

யூதா மக்கபேயு இஸ்ராயேலின் தலைவனாக மாறியவுடன் அவரை அடக்கித் தன் பெயரை நிலைநாட்டுவதாகக் கூறிச்சென்ற சீரியப் படைத்தலைவனும் கூலே - சீரியாவின் ஆளுநரும் ஆவார். ஆனால் எருசலேமுக்கு வடமேற்கில் 20 கி.மீ. தொலைவிலுள்ள பேத்து - கோரோன் ஏற்றத்தில் யூதா மக்கபேயுவால் தோற்கடிக்கப்பட்டார் (*1 மக் 3:13.23*). இத்தோல்வி, யூதாவின் போர் ஆதிக்கம் சீரியாவுக்கு ஒரு பெரிய ஆபத்தாகும் என்று காட்டியது.

**செர்கியு பவுல்** (SERGUIUS PAULUS)

கி.பி. 45-இல் பவுலும், பர்னபாவும் சைப்ரஸ் தீவிற்குச் செல்லுகையில் செர்கியு பவுல் ஆளுநராக இருந்தார். நல்லறிவு படைத்த அவ்வாளுநர் கடவுளின் வார்த்தையைக் கேட்க விரும்பியதைப் பார்யேசு அல்லது எலிமா என்னும் மந்திரவாதி தடுக்கவே அவன் குருடானான். நடந்ததைக் கண்ட ஆளுநனும் விசுவாசித்தார் *(அ.ப. 13:7-12)*.

கி.பி. *168*-இல் மற்றொரு செர்கியு பவுல் என்பவர் ஆளுநராக இருந்தாரென்று பழங் காலக் கல்வெட்டுகள் கூறுகின்றன. ஆனால் இதற்கு முன்னதாக இப்பெயரைக் கொண்ட ஆளுநர் இருந்ததாகத் தெரியவில்லை. இருப் பினும் ஒரு கல்வெட்டு செர்கியுபவுல், கிளா தியு காலத்திலே திபேரின் மேற்பார்வையா ளராக இருந்தாரெனக் கூறுகிறது. அப்போஸ் தலர் பணியிலே குறிப்பிடப்பட்டிருப்பவர் இவராக இருக்கலாம்.

**செலமோத்து** (SHELOMOTH)

*1.* இவர் கேர்சோம் குலத்து லேவியர். சிமயியின் மகன். ஒரு குடும்பத்தலைவராக இருந்தார் *(1 நாள் 23:9)*.

*2.* ஒரு கோகாத்திய வேியர். இசாரின் (இட்சகார்) மகன் *(1 நாள் 24:22)*. இவர் *1* நாள் *23:18*-இல் 'செலோமித்து' என்று அழைக்கப்படுகிறார்.

*3.* மோசேயின் மகன் எலியேசரின் வழித் தோன்றல்; ஒரு லேவியர். தாவீதின் ஆலய அதிகாரிகள் பிரிவில் *(1 நாள் 23-26)* செலோ மோத்தும் அவரது சகோதரரும் சாமுவேல், சவுல், அப்னேர், தாவீது ஆகியோரின் போர்க்கொள்ளைப் பொருட்களிலிருந்து ஆண்டவருக்கு அர்ப்பணிக்கப்பட்ட பொருட்களுக்குப் பொறுப்பாளராக இருந்த னர் *(1 நாள் 26:25-28)*.

**செலா** (SELA - பாறையான)

*1.* ஏதோமில் உப்புப்பள்ளத்தாக்கிலோ, அதன் அருகிலோ உள்ள பாதுகாப்பான நகரங்களுள் ஒன்று. நீதிபதிகளின் காலத்தில் எமோரியரின் எல்லையில் *(நீதி 1:36)* இருந்த ஒரு நகரம். இது யூதாவில் இருக்கக்கூடும். அதன் அமைவிடம் பற்றி எந்தக் குறிப்பும் இல்லை. அறிஞர் சிலர் பெத்திராவாக இவ் விடத்தை அடையாளம் காட்டினாலும் இது சாக்கடலுக்கு அருகிலுள்ள அரபாவில் இருந் திருக்கலாம்.

*2.* இதனை அமசியா என்ற யூதா நாட்டு மன்னன் கைப்பற்றிய பிறகு, இதற்கு யோக் தவேல் என்று பெயரிட்டார் *(2 அர 14:7)*. இதனைப்பற்றி உப்புப் பள்ளத்தாக்கு என்ப தைத்தவிர விளக்கம் எதுவும் விவிலியத்தில் இல்லை. இந்நகரம் உம் ஏல் - பய்யாராவாக அடையாளம் காட்டப்படுகிறது. இந்நகரம் ஏதோம் நாட்டின் மேற்கு எல்லையிலும், தெற்கு எல்லையில் இருந்து சுமார் *32* கி.மீ. தொலைவிலும் காசாவிலிருந்து பாலை வனத்து மேட்டுச் சமவெளிக்குச் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இது எரே *49:16*; ஒப *3* பகுதிகளில் பேசப்படும் பாறை வெடிப்புகள் நிறைந்த பகுதியாக இருக்கலாம். ஏதோமில் நபத்தேயரின் நகரம் ஒன்றும் செலா என்ற பெயரில் இருக்கிறது.

*3.* மேவாபில் உள்ள ஓர் இடம். எசா *16:1*-இல் அழிவைப் பற்றிப் பேசும்பொழுது தெளிவில்லாமல் குறிக்கப்படுகிறது. இதன் அமைவிடமும் தெரியவில்லை. ஒருவேளை பெத்திராவாக இருக்கலாம்.

*4.* இறைவனின் புகழைப்பாடும் தொலை விலுள்ள இடங்களாகக் குறிக்கப்படுபவற் றில் ஒன்று *(எசா 42:11)*. ஒருவேளை பெத்தி ராவைக் குறிக்கலாம்.

**செலா** (ZELA - விலா எழும்பு)

இது பென்யமினுடைய கோத்திரத்திற்குத் தரப்பட்ட நகரம் *(யோசு 18:28)*. இந்த இடத் தில் கீசின் கல்லறை இருந்தது. இதில் சவுல் மற்றும் யோனத்தானின் எலும்புகள் இறுதி யாக அடக்கம் செய்யப்பட்டன *(2 சாமு 21:14)*. ஒரு வேளை இது சவுலின் வீடு இருந்த இடமாக இருந்திருக்கலாம். இது தற்போது எருசலேம், கிபயோனுக்கு நடு வில் இருக்கும் கிர்பெத்து சாலாவாக இருக்க

லாம் என்று அடையாளம் காட்டப் படுகிறது.

**செலூக்கியா** (SELEUCIA - செலூக்கினுடையது)

செலூக்கியப் பேரரசின் பல நகரங்களின் பெயர் இது. இவையெல்லாம் முதலாம் செலூக்கு நிக்காத்தோரால் நிறுவப்பட்டவை. விவிலியத்தைப் பொருத்த மட்டும் மிக முக்கியமான நகர் சீரியாவில் உள்ள செலூக்கியாவாகும். இது சீரியாவிலுள்ள அந்தியோக்கியாவின் கப்பல் துறைமுக நகரமாகும். இதுஅந்தியோவிலிருந்து 45 கிலோமீட்டர் தொலைவிலும், ஒரோன்தேசு ஆற்று முகவாயிலிருந்து வடக்கில் 8 கிலோமீட்டர் தொலைவிலும் உள்ளது. இது கி.மு. 3-ஆம் நூற்றாண்டின் மத்தியில் செலூக்குவால் நிறுவப்பட்டது. அரசியல் முறையில் இது பல தரம் கைமாறியிருக்கிறது. இது மூன்றாம் சீரியப்போரில் (கி.மு. 246.241) எகிப்தின் மூன்றாம் தோலமியால் கைப்பற்றப்பட்டது. 219-இல் இதை மூன்றாம் செலூக்கியா அந்தியோக்கு கைப்பற்றினார். 146-க்குப்பிறகு நான்காம் தோலமி பிலோமேத்தோர் பாலஸ்தீனத்தையும் சீரியாவையும் மீண்டும் கைப்பற்ற எடுத்த முயற்சியில் வீழ்ந்த நகரங்களில் செலூக்கியாவும் ஒன்றாகும் (1 மக் 11:8). ஆனால் மீண்டும் 138-இல் செலூக்கியர்களால் கைப்பற்றப்பட்டது. 63-இல் பாம்பே காலத்தில் ஒரு சுதந்தர நகராயிற்று. இந்தத் துறைமுகத்திலிருந்துதான், பவுலும் பர்னபாவும் யோவான் மாற்கும் தங்கள் முதல் மறைபரப்புப் பயணத்தில் புறப்பட்டுச் சென்றனர் (அ.ப. 13:4).

**செலூக்கு** (SELEUCUS)

சீரியாவின் நான்கு அரசர்களின் பெயர். செலூக்கிய அரசமரபைச் சேர்ந்தவர்கள்.

**1. முதலாம் செலூக்கு நிக்காத்தோர்:** மகா அலக்சாந்தரின் படைத்தளபதிகளில் முக்கியமானவர். அலக்சாந்தரின் மரணத்திற்குப்பின் சீரியாவுக்கு அரசரானவர். முதலில் பாபிலோனியா மட்டும்தான் இவருக்குக் கிடைத்தது (கி.மு.321). அதுவும் கி.மு. 316-இல் பிரிகியாவின் அந்திகோனு இவரைத் தோற்கடித்து நாட்டைவிட்டு விரட்டியதால் பறிக்கப்பட்டது. செலூக்கு எகிப்திய அரசனிடம் தஞ்சம் புகுந்து பிறகு அந்திகோனுவைத் தோற்கடித்துத் தனது அரசைத் திரும்பப் பெற்று செலூக்கிய அரச மரபுக்கு அடிக்கல் நாட்டினார். இந்த அரசமரபு கி.மு. 65-வரை நிலைத்திருந்தது.

கி.மு. 301-இல் இப்சுஸ் என்ற இடத்தில் நடந்த போரின் இறுதியில் சீரியாவும் சிறிய ஆசியாவும் இவரது ஆட்சியின் கீழ்வந்தன. இதன் பிறகு நடந்த நிகழ்ச்சிகள் முதலாம் மக்கபேயர் ஆகமத்தில் பேசப்படுகின்றன. கிரேக்கப் பண்பாட்டு மையங்களான அந்தியோக்கு, அபாமேயா, இலவோதிக்கேயா, ஏதேசா, பெரோயா, செலூக்கியா போன்ற நகரங்களை எழுப்பினார். அந்நகரங்களில் யூதர்கள் பலரைக் குடியுரிமை உள்ள மக்களாகக் குடியேற்றினார். இக்காலக் கட்டத்தில் அலக்சாந்தரின் அரசின் பெரும் பகுதி இவரது ஆட்சியில் இருந்தது. கி.மு. 282-இல் அலக்சாந்தரின் முழு அரசையும் தனது அதிகாரத்திற்கு மாற்றும் முயற்சியில் ஈடுபட்டிருந்தபோது கொல்லப்பட்டார். இவர் முதலாம் செலூக்கு எனப்படுகிறார்.

**2. இரண்டாம் செலூக்கு (கி.மு. 246-226):** கல்லினிக்கு என்ற 2-ஆம் செலூக்கு சீரியாவின் இரண்டாம் அந்தியோக்குவின் மகன். இவரே தானியேல் ஆகமத்தில் பேசப்படுகிறார் (தானி 11:6-9). இவரதுகொடுமை மிக்க தாய் இலவோதிக்கேயாவைச் சேர்ந்தவர். இவள் எகிப்திய இளவரசி பெர்னிக்கியைக் கொன்றதால், எகிப்தியத் தோலமி யூர்கெத்து அரசன் இவருடன் போரிட்டு இவரை வெற்றி கொண்டார். இதன் விளைவாக அந்தியோக்கு நகரும் செலூக்கிய அரசின் பெரும்பகுதியும் எகிப்துடன் இணைந்தன. 2-ஆம் செலூக்கிய ஆட்சி அவர் குதிரையிலிருந்து விழுந்து இறந்தபோது முடிவுக்கு வந்தது.

**3. மூன்றாம் செலூக்கு (கி.மு. 226-223):** சோட்டேர் அல்லது செராவுனு என்றழைக்

கப்பட்ட இவர் 2-ஆம் செலூக்கின் மகனும் மகா அந்தியோக்குவின் சகோதரனும் ஆவார். இவர் சிறிய ஆசியாவில் அத்தாலு என்பவனை அடக்கச் சென்றபோது நடந்த போரில் இறந்தார். மூன்று ஆண்டுகள் மட்டுமே இவரது ஆட்சி நிலைத்தது.

**4. நான்காம் செலூக்கு (கி.மு. 187-175):** பிலோபாத்தோர் என்ற நான்காம் செலூக்கு மகா அந்தியோக்குவின் மகன். இவர் இரண்டாம் மக்கபேயர் ஆகமத்தில் எருசலேம் ஆலயத்தைக் கொள்ளையிடக் கெலியதோர் என்ற தளபதியை அனுப்பியவர் என்று பேசப்படுகிறார் *(2 மக் 3:7)*. தானியேல் ஆகமத்திலும் இவரைப் பற்றிய குறிப்பு வருகிறது *(தானி 11:20)*. இவர் பதவியேற்ற காலத்தில் செலூக்கியாவின் செல்வாக்குக் குறைந்து உரோமையில் செல்வாக்கு வளர்ந்திருந்தது. நாட்டில் அமைதி நிலவும் பொருட்டு உரோமையுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி பெரும் நிதியை உரோமைக்குக் கட்ட வேண்டியிருந்தது. இறுதியில் இவரது தளபதியான கெலியதோர் இவரைக்கொன்று அரசைக் கைப்பற்றினாலும் இவரது சகோதரனே இவருக்கு வாரிசாக அரியணை ஏறினார். தளபதி கெலியதோர் தோல்வியடைந்தார்.

**செலுமியேல்** *(SHELUMIEL - இறைவன் அமைதியாவார், இறைவனோடு அமைதி, இறைவன் என் நண்பன் ஆவார்)*

சிமியோன் இனத்தலைவர். சுரிசதாயின் மகன். மோசேக்கு இனப் பிரதிநிதி *(எண் 1:6; 2:12; 7:36.41; 10:19)*. இவர் பன்னிரண்டு கோத்திரத்துத் தலைவர்களில் ஒருவர். இவர் இஸ்ராயேலர் கணக்கெடுப்புக்கும், பாலைவனத்தில் நடந்த வேலைகளுக்கும் மோசேக்கு உதவி செய்த பன்னிரண்டு கோத்திரத் தலைவர்களில் ஒருவர்.

யூதி *8:1*-இல் சொல்லப்பட்டிருக்கும் யூதித்தின் மூதாதையர் இவரேயாவார். அங்குச் சலாமியேல் என்றும் அவரது தந்தையின் பெயர் சரசதாய் என்றும் சொல்லப் பட்டுள்ளது.

**செலேக்கு** *(ZELEK)*

அம்மோனியனான இவர் தாவீதின் வலிமை வாய்ந்த முப்பது பேரில் ஒருவராவார் *(2 சாமு 23:37; 1 நாள் 11:39)*.

**செலேசு** *(SHELESH - பலமுள்ள, மூன்று)*

இவர் ஆசேரின் குலத்தில், தன் குடும்பத்திற்குத் தலைவராக இருந்தவர். இவர் ஏலேமின் புதல்வர் *(1 நாள் 7:35)*.

**செலேது** *(SELED - உயர்த்தப்பட்ட)*

யூதாவின் வழிவந்த நாதாபுவின் முதல் மகன் *(1 நாள் 2:30)*. ஒருவனது அழியா வாழ்வு அவனது வாரிசுகளால் அமைவதாகக் கருதப்பட்ட அக்காலத்தில் இவருக்கு மரணம் வரையிலும் குழந்தைகள் இல்லை. இது எபிரேய மக்களிடம் பெரும் சாபமாகக் கருதப்பட்டது.

**செலேபு** *(SHELEPH - வெளிக் கொணரப் பட்ட)*

யோக்தானின் மகன். சேமின் வழித்தோன்றல். எனவே அரேபிய இனத்தின் பெயராக உள்ளது *(ஆதி 10:26; 1 நாள் 1:20)*. இப்பெயர் கசர் - மாவேத்து (அட்சர் மாவேத்து) முன் குறிப்பிடப்பட்டிருப்பதால் இது தென் அரேபியாவில் இருந்திருப்பது தெளிவாகிறது. இந்த இனத்தவர் ஏமானில் வாழ்ந்திருக்கலாம்.

**செலேமியா** *(SHELEMIAH - யாவே ஈடுசெய்துள்ளார், யாவே என் நிறைவாவார்)*

1. ஒரு லேவியர் பரம்பரையில் பிறந்த கோராகியர். புனித இட வாயிற்காப்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் *(1 நாள் 26:14)*. இவர் *1 நாள் 26:1*-இல் மெசலேமியா என்று அழைக்கப்பட்டுள்ளார்.

2. பின்னுயின் மகன். இவர் எஸ்ராவின் சீர்திருத்தப்படி புறவின மனைவியையும், மக்களையும் நீக்கிவிட்டார் *(எஸ் 10:39)*.

3. பின்னுயின் இன்னொரு மகன். இவரும் எஸ்ராவின் சீர்திருத்தப்படி புறவின மனைவியையும், மக்களையும் நீக்கிவிட்டார் *(எஸ் 10:41)*.

4. கனனியாவின் (அனனியா) தந்தை அல்லது மூதாதையர்; நெகேமியா காலத்தைச் சேர்ந்தவர் (நெகே 3:30).

5. ஒரு குரு. நெகேமியா கோவில் மகமையை லேவியர்களுக்குள் பிரித்துக் கொடுக்க மூன்று பேர்களை நியமித்தார். அவர்களில் இவரும் ஒருவர் (நெகே 13:13). இந்த நியமனங்கள், வழிபாட்டு நடைமுறைகளை மீண்டும் கொண்டு வருவதில் நெகேமியாவின் செயல்களில் ஒன்று. இவ்வாறு லேவியர்கள் கோவில் வழிபாடுகளில் தங்களையே அர்ப்பணித்துக் கொள்ள வழிவகுக்கப்பட்டது.

6. கூசியின் மகன். எகுதியின் மூதாதையர். எரேமியா காலத்தவர் (எரே 36:14).

7. அப்தயேலின் மகன். யோயாக்கிம் எரேமியாவின் இறைவாக்குச் சுருளை வாசித்த பின் எரேமியாவையும் பாரூக்கையும் கைது செய்ய மூன்று பேரை அனுப்பினார். அவர்களில் இவரும் ஒருவர் (எரே 36:26).

8. எகுக்கல் (எரே 37:3) அல்லது யூக்காலின் (38:1) தந்தை.

9. கனனியாவின் (அனனியா) மகன் இரியாவின் (இரிய்யா) தந்தை. எரேமியா காலத்து மெய்க்காப்பாளர் (எரே 37:13).

**செலோபுகாது** (ZELOPHEHAD - அச்சத்திலிருந்து பாதுகாப்பு)

மனாசே வழித்தோன்றலும் கேப்பேரின் (எபர்) மகனுமான இவர் பாலைவனத்தில் புதல்வர்களின்றி இறந்தார் (எண் 26:33; 27:17; 36:2.6.6-11; யோசு 17:3; 1 நாள் 7:15). இவர் இறந்தவுடன் இவரது ஐந்து புதல்வியர்கள் மக்லா, நோவா, கொகிலா, (ஒகுலா), மில்கா, திரட்சா ஆகியோர் மோசேயிடம் சென்று பெண்களுக்கு மரபுரிமை தர வேண்டினர். மோசே மரபுரிமை வழங்கிச் செலோபுகாது விட்டுச் சென்ற சொத்துக்களுக்கும் அவர்கள் உரிமையாளராகும்படி செய்தார். இது ஒரு சட்ட முன்மாதிரியாயிற்று (எண் 27:1-11). இப்படிப்பட்ட புதல்வியர், குலமரபுச் சொத்தை வைத்துக் கொள்ள, அவர்கள் குலத்தினருக்குள்ளேயே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற நிபந்தனை விதிக்கப்பட்டது. இதனால் ஒரு குலம் அதன் சொத்தின் ஒரு பகுதியையும் இழக்கவில்லை (36:1-12). நாடு பங்கீடு செய்யப்பட்டபோது செலோபுகாதின் புதல்வியர், மனாசே பகுதியில் தங்கள் சொத்தைப் பெற்றனர் (யோசு 17:3-6).

**செலோமித்து** (SHELOMITH - அமைதியான)

இப்பெயர் சில இடங்களில் செலமோத்து என்ற பெயரோடு குழப்பப்பட்டுள்ளது. இதற்குச் சான்றாக அ) ஒரே ஆள் 1 நாள் 23:18-இல் செலோமித்து என்றும், 1 நாள் 24:22-இல் செலமோத்து என்றும் குறிக்கப்பட்டுள்ளார். ஆ) 1 நாள் 26:25-28-இல் இரண்டு பெயர்களும் ஒரே ஆளுக்குச் சொல்லப்பட்டுள்ளது. நோத் என்பவர் பெயர் ஒரு ஆளுக்குப் பெயராக வந்தால் செலமோத்து என்பது சரியானது என்றும் செலோமித்து என்பது வாசகப் பிழை என்றும் கருத்து தெரிவிக்கிறார்.

1. ஒரு தாண் குலத்தினள். திப்ரியின் மகள். இஸ்ராயேலரோடு குடியிருந்த எகிப்திய ஆடவனால் தாயானவள். இவர்களுக்குப் பிறந்த பெயர் தெரியாத ஒருவன் பாளையத்திலே ஓர் இஸ்ராயேலனோடு சண்டையிட்டு, ஆண்டவருடைய பெயரையும், ஆண்டவரையும் பழித்துப் பேசினான். அவனைக் கல்லால் எறிந்து கொன்றனர் (லேவி 24:10-23).

2. செருபாபேலின் மகள் (1 நாள் 3:19).

3. கோகத்திய குலத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். இசாரின் (இட்சகார்) முதல் மகன் (1 நாள் 23:18). 1 நாள் 24:22-இல் செலமோத்து (2) என்று அழைக்கப்படுகிறார்.

4. ரெகபயாமுக்கும் அப்சலோமின் மகள் மக்காவுக்கும் பிறந்த மகன் (அல்லது) மகள் (2 நாள் 11:20).

5. யோசிபியாவின் மகன். பானியின் வழித்தோன்றல். பாபிலோனிலிருந்து எஸ்

ராவோடு திரும்பிய ஒரு குடும்பத்துத் தலைவன் (எஸ் 8:10).

**செல்சகு** (ZELZAH - நிழல், வேகமாய்ப் பாய்ந்து ஓடுதல்)

பென்யமின் எல்லையில் ராகேலின் கல்லறை அருகே இந்த இடம் உள்ளது. ஆண்டவர் சவுலை அரசனாக அபிடேகம் செய்ததற்குரிய முதல் அடையாளம் இங்கே நிகழ்ந்தது (1 சாமு 10:1-2). எங்கு செல்சகுமும் ராகேலின் கல்லறையும் இருந்தன என்பது சர்ச்சைக்குரியதாகும்.

**செல்வம்** (WEALTH)

I. பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும், செல்வம், ஏழ்மை பற்றிய கருத்துக்கள் ஒன்றுக்கொன்று முரண்பாடானதாகத் தோன்றுகின்றன. உண்மையில், கிறிஸ்து விண்ணரசு விலைமதிப்பில்லாச் சொத்து என்றும், அதைப்பெற அனைத்தையும் தியாகம் செய்தாலும் தகும் என்றும் கூறும்போது தான் மனிதனின் சொத்து, திரவியத்தின் உண்மையான தரம் தெரிகிறது. இவ்வுலகச் சொத்தும் செல்வமும் எவ்வளவுதான் சிறந்ததாக இருந்தாலும் அது விண்ணக செல்வத்திற்குத் தாழ்வுபட்டதே (மத் 13:44). இருப்பினும், கிறிஸ்து கடவுளிடமிருந்து கொடையாகப் பெறாத, கடவுளுக்குப் புறம்பாகப் பெற்ற செல்வம் வீணானது, ஆபத்தானது என்ற பழைய ஏற்பாட்டுக் கருத்தினை வலியுறுத்தவும் செய்கிறார். கடவுள் தாம் தேர்ந்தெடுத்தவர்களைத் தம் கொடைகளால் நிரப்புகிறார் என்ற இறைவனின் பழைய வாக்குறுதியைக் கிறிஸ்து மறுக்கவில்லை, அழிக்கவில்லை. மாறாக, அதனை நிறைவேற்றுகிறார். செல்வம் ஆபத்தானது, எனவே நற்செய்தியின்படி நிறைவாழ்வு வாழ, இதனை விட்டுவிட வேண்டும் என்பது செல்வம் தீயது என்பதற்காக அல்ல. ஆனால் கடவுள் மட்டுமே நன்மையானவர் (மத் 19:17); அவர் மட்டுமே நம் இதயம் களிக்கும் சொத்து என்று காட்டவே.

**II. இறைவன் தாம் தேர்ந்து கொண்டோரைச் செல்வராக்குகிறார்.**

***1. செல்வம் நன்மை பயப்பதே:*** பழைய ஏற்பாட்டின் இறுதியாய் அமைந்த பகுதிகளில்கூட, கடவுளுக்குகந்தவர்கள் செல்வத்தால் நிரப்பப்படுவரென்று இஸ்ராயேலரின் வரலாறு போற்றிப்புகழ்கிறது. யோபு அவரது சோதனைகளுக்குப்பின், தாவீது, யோசபாத்து, எசேக்கியா போன்ற புனித அரசர்களின் வாழ்க்கைகள் இதற்குச் சான்று (2 நாள் 32:27தொ). கோமர் வாழ்ந்த கிரேக்க நாட்டில் போன்று, இஸ்ராயேலிலும் செல்வம் உயர்குலத்தின் அடையாளமாகக் கருதப்பட்டு வந்தது. கடவுள் யாரை அதிகம் அன்பு செய்கிறாரோ அவர்களைத் தம் செல்வக் கொடைகளால் நிரப்புகிறார் என்று நம்பினர். இதை ஆபிரகாம் (ஆதி 13:2), ஈசாக்கு (26:12), யாக்கோபு (30:43), இன்னும் அவர் வழிவந்தவர்கள் வாழ்விலும் தெளிவாகக் காண்கிறோம். எப்பிராயிமுக்கு உதவியாக வானம் பொழிகிறது, பூமி விளைகிறது, கொங்கைகளிலிருந்தும், கருப்பைகளிலிருந்தும் ஆசிர்பெறுகிறாா் அவர் (ஆதி 49:25). யூதா, தன்னுடைய கண்கள் மதுவைவிட ஒளியுள்ளவை, பற்கள் பாலைவிட வெண்மையாக உள்ளனவென்று ஆண்டவரில் அகமகிழலாம் (49:12). யாவே இஸ்ராயேல் மக்களுக்கு வாக்களித்த பூமியில் அவர்களுக்கு எதுவுமே குறையிருக்காது (உப 8:7-10; 28:1-12).

இவ்வுலகச் செல்வமும் நல்லதே. ஏனென்றால், செல்வமிருந்தால் யாருடைய தயவையும் நாடாது சுதந்தரமாக வாழ முடியும். யாரிடமும் இரந்து பிச்சை கேட்க வேண்டியதில்லை (பழ 18:23). கடன் தந்தவனுக்கு அடிமையாயிருக்கும் நிர்ப்பந்தமில்லை (22:7); அது பல பயனுள்ள நண்பர்களை ஈட்டித் தருகிறது (சீரா 13:21). செல்வம் சேகரிப்பதென்றால், விடாமுயற்சி (பழ 10:4; 20:13), ஞானம் (24:4), இயல்பான வாய்மை (12:11), துணிவு (11:16), தன்னடக்கம் (21:17), போன்ற நல்ல மனிதப் பண்புகளை வளர்ப்பதும் அவசியமாயுள்ளது.

***2. செல்வமே எல்லாமல்ல:*** செல்வம் நல்லது, நன்மைபயக்கிறது. ஆனால், இறைவ

னிடமிருந்து பெறக்கூடிய முதன்மையான கொடையென்று கூறமுடியாது. உதாரணமாக, ஆன்ம அமைதி (பழ 15:16), நற்பெயர் (22:1) நற்சுகம் (சீரா 30:14), நீதி (பழ 16:8) போன்ற கொடைகள் செல்வத்தைவிடப் பன்மடங்கு உயர்வானவை; விரும்பத்தக்கவை. எனவே, செல்வத்தின் சிறப்பையும், அதனோடு அதன் குறைபாடுகளையும் உடனே காணமுடிகிறது. செல்வத்தை மட்டும் வைத்து எல்லாவற்றையும் வாங்கிவிட முடியாது. சாகாத்தன்மை (பழ 49:8), அன்பு (உ.ச. 8:7), போன்ற பலவற்றைச் செல்வத்தால் வாங்கிவிட முடியாது. செல்வத்தால் பல பயனற்ற கவலைகள் உருவாகின்றன: உதாரணமாக, பிறரை ஒட்டியே வாழும் நண்பர்களை உபசரிப்பதிலேயே தங்களை அலட்டிக் கொள்வதோடு (திருவுரை 5:10), வேண்டாத பல அன்னியர்களைத் தங்கள் சொத்துக்கு உரிமையாளராக்கித் தவிப்பர் (6:2). செல்வத்தைவிட ஞானத்தையும் அதன் ஊற்றையும் தேடுவது எப்போதும் அவசியமாகும் (1 அர 3:11;யோபு 28:15-19; ஞான 7:8-11). ஞானமே உண்மையான சொத்து; விலைமதிப்பில்லாப் பவளம்; அதைப்பற்றியே எல்லா அக்கறையும் கொள்ள வேண்டும் (பழ 2:4; 3:14; 8;11).

**3. செல்வம் இறைவனின் கொடை:** செல்வம் இறைவனின் தாராளத் தன்மைக்கு அடையாளமாய்த் திகழ்வது; இறைவன் தாம் தேர்ந்து கொண்டவர்களுக்குத் தயங்காது, தடுக்காது, தவறாமல் கொடுக்கும் வாழ்வு முழுமையின் ஓர் அறிகுறி. செல்வச் செழிப்பு, கடின உழைப்பின் உரிய பலனன்றோ? செல்வம், தேர்ச்சியின், வெற்றியின், மேன்மையின் சின்னமாய்த் திகழ்கிறது (சங் 37:19). மாறாக வறுமையோ தோல்வியின், அவமானத்தின் குறியாய் அமைகிறது (எரே 12:13). நீடிய வாழ்வு, நற்சுகம், மனிதர் மத்தியில் மதிப்பு மரியாதை ஆகியவற்றோடு செல்வம் வாழ்வில் அமைதியின் மற்றும் முழுமையின் ஒரு பாகமாக அமைகிறது. இறைவன் ஒருவரைத் தனக்குகந்தவராக்கிக் கொள்ளும்போது, அவரைத் தம் கொடைகளால் முழுதும் நிரப்புகிறார். அவர் கண்காணிப்பிலிருப்பவர்களுக்குக் குறையேதுமிராது (சங் 23:1;34:10). வனாந்தரத்தில் தம் மக்களுக்கு வயிறார உணவளித்தார் (யாத் 6:8-15; சங் 78:24-29). அதைவிடப் பன்மடங்கு வாக்களிக்கப்பட்ட நாட்டில் அளித்தார் (லேவி 26:9; 25:19; உப 11:15; நெகே 9:25). மனிதனைத் தன் இருப்பிடமாகிய ஆலயத்திற்கு அழைக்கும்போது அவன் பூரணத் திருப்தியடையும்வரை தம் கொடைகளை வழங்குகிறார் (சங் 23:5; 36:9); அத்தோடு மட்டுமல்லாது, தம் திருமுக தரிசனம் தந்து ஆனந்தக் கடலில் மூழ்கவைக்கிறார் (சங் 16:11). விழாக்களிலும், கொண்டாட்டங்களிலும், இஸ்ராயேல் மக்களிடம் நாம் காண்பது, அவர்கள் கடவுளின் பெருந்தன்மையை, தாராளத்தன்மையை இறைவன் கொடைகளில் கண்டறிந்து, பறைசாற்றுவதேயாகும் (உப 16:14தொ). தானமிடக் கூறும் கட்டளை, இறைவனின் தாராளத் தன்மையைக் கண்முன் நிறுத்தி அதன்படி, அவர்களும் தாராளமனதுடன் வாழத்தூண்ட எழுந்ததே. ''அனாதைகளுக்குத் தந்தையாயிரு.. நீ உன்னதரின் மகனாய்த் திகழ்வாய்'' (சீரா 4:10; யோபு 3:18).

**4. கடவுள் நம்மைத் தமது செல்வத்தால் நிரப்புகிறார்:** கடவுள் தம் மகனில் நம்மிடம் நிரப்பும் செல்வம் "நாவன்மையும், அறிவும்" (1 கொரி 1:5), ''அருளும் நன்மை''யுமாகும் (எபே 2:7). இச்சொத்து, இவ்வுலகச் சொத்துக்களிலிருந்து வேறுபட்டது. இவை நம் ஆன்ம பசியையோ (6:35) தாகத்தையோ (4:14) தீர்த்துவைக்க இயலா. இச்செல்வம் இறைவனின் அளவு கடந்த தெய்வீகத் தயவிலிருந்து, தாராளத்தன்மையிலிருந்து வருகிறது. எனவேதான் புனித பவுல் தங்கள் உலகப் பொருட்செல்வங்களைத் தாராளமாய் வழங்கக் கிறிஸ்துவர்களை அழைக்கிறார். ஏனென்றால் இவர்கள் தெய்வீக, ஆன்மீகக் கொடைகளால் நிரப்பப்பெற்றவர்கள் (2 கொரி 8:7). அதுமட்டுமன்று, இறைவன் ''எல்லா நன்மைகளால்'' (9:8) திரும்ப அளிப்பாரென்று உறுதியிட்டுக்கூறும்போது, பொருட்செல்வத்தையும் சேர்த்துத்தான் கூறுகின்றார். இந்தப் பொருட்செல்வம் அவர்

களுக்கு எப்போதும், எச்சந்தர்ப்பத்திலும், தேவையானதையெல்லாம் அளிக்கும்; அவர்களை எல்லா வகையிலும் செல்வ ராக்கும் (9:8.11) என்று கூறுகிறார்.

அப்பம் பல்கினபின் கூடைகள் நிறைய மீதமிருந்தவைகளைச் சேகரித்தனர் என்று நற்செய்தி வலியுறுத்துவது, எதார்த்தமாக அல்ல (மத் 14:20; 15:37; 16:9). கடவுளின் அருட்கொடை வழங்கும் முறையே இப் படித்தான். திருப்திப்படுத்தல் என்பது ஓர் ஆழ்ந்த கிறிஸ்துவ உண்மை. கிறிஸ்துவிடம் வருபவனுக்கு என்றுமே பசியோ (யோவா 6:35) தாகமோ (4:14) இராது. தாம் தேர்ந் தெடுத்தவர்களுக்கு, வேண்டியதற்கு மேலே கொடுக்கிறார் இறைவன். அவர்கள் வருத் தப்படுகிற, பொறாமைப்படுகிற அளவுக்கு விடுவதில்லை. நற்செய்தி எளிமை, தன் னைப்பற்றிய தாழ்வான எண்ணம், மறை முக வெறுப்பு இவைகளை நீக்குகிறது. இவ்வேழ்மையிலும், ஒரு கிறிஸ்துவன் உல கத்தையும்விட உயர்ந்த செல்வமுடையவன். மற்றவர்கள் பவுலைத் தரித்திரராகக் கருதும் போதும், அவர், தான் அனைத்தையும் கொண்டிருப்பதாகக் கூறுகிறார் (2 கொரி 6:10). மனிதன் விரும்பவேண்டிய உண்மை யான செல்வமில்லா நிலையில், தன்னைச் செல்வந்தனாகக் கருதுகிற மந்த புத்திக்காரன் பரிதாபத்துக்குரியவன் (திருவெளி 3:16). ஏழைகளும் துன்புறுத்தப்படுவோரும் பேறு பெற்றவர்கள். அப்படிப்பட்டவர்கள் உண் மையிலே செல்வந்தர்கள் (2:9).

**III. செல்வம் விளைவிக்கும் மாயையும் ஆபத்தும்:** இறைவன் தன் அன்பர்களைச் செல்வர்களாக்குகிறார் என்றால், உடனே எல் லாச் செல்வங்களும் அவருடைய ஆசீரின் விளைவு என்று கருதுதல் சரியல்ல. பழங் காலத்து மக்கள் தவறான முறையில் சேர்க்கப் பட்ட செல்வத்தைப்பற்றி நன்கு அறிந்திருந் தனர். அஃதோடு இப்படித் தவறான முறை யில் ஈட்டிய செல்வம் நீடிய பலன் தராதென் றும் பலனற்றதென்றும் உணர்ந்திருந்தனர் (பழ 21:6; 23:4தொ; ஓசே 12:9). கயவன் தீயவழியில் திரவியம் திரட்டினாலும், இறுதியில் அது நேர்மையானவர்களுக்கே உடைமை யாகும் (பழ 28:8). பலருக்கும் பயன்படாமுறையில் சிலரை மட்டுமே சிறப் புடன் வாழவைக்கும் சொத்து தவறான வகை யில் ஈட்டியதாகும். ''வீட்டோடு வீடு சேர்ப் பவர்களே, வயலோடு வயல் இணைத்துக் கொள்பவர்களே, உங்களுக்கு ஐயோ கேடு! பிறருக்கு இடமில்லாது நீங்கள் மட்டும் தனித்து நாட்டில் வாழ்வீர்களோ?'' (எசா 5:8). அப்படிப்பட்டவர்களின்... வீடு முழுவ தும், கொள்ளையடித்த பொருட்களால் நிரப் பப்பட்டுள்ளது. இத்தீய வழிமூலம்தான் அவர்கள் பணக்காரர்களாகப் பலுகிப் பெருகு கின்றனர். அவர்கள் கொழுத்துத் தளதள வென்றிருக்கிறார்கள் (எரே 5:27 தொ).

கடவுள் தனக்குத் தேவையில்லை என்று மமதை கொண்டுள்ள செல்வந்தர்கள் கயவர்கள். அப்படிப்பட்டவர்களுக்குப் பொருட்செல்வமே அவர்களின் ஒரே பெருமை. அதையே தன் அரணாக அமைத் துக் கொள்கின்றனர் (பழ 10:15). இறைவன் மட்டுமே யாவற்றையும் வெல்லவல்ல ஒரே அரணாய், மதிலாய்த் திகழ வேண்டியவர் என்பதை மறந்துவிடுகின்றனர் (சங் 52:9). அளவிலா வெள்ளி, தங்கம்... எண்ணில்லாக் குதிரை, தேர் மலிந்து கிடக்கும் நாடு, மிக விரைவில் பொய்த் தேவதைகள் நிறைந்த நாடாகிவிடுகிறது (எசா 2:7தொ). ''தன் செல்வத்தை நம்பி வாழ்பவன் சருகென உதிர்வான்'' (பழ 11:28; காண் எரே 9:22). இறைக்கொடைகளே உடன்படிக்கையை உறுதிப்படுத்துவதற்குப் பதில் அதை மறுக் கும் சாதனமாக அல்லது சூழ்நிலையாக அமையலாம்; ''வளமான மேய்ச்சல் கிடைத்த படியால் அவர்கள் மனநிறைவுற்றார்கள்; மனநிறைவடைந்ததும் செருக்குற்று என்னை மறந்துபோனார்கள்'' (ஓசே 13:6; உப 8:12 தொ). இஸ்ராயேலர், இறைவன்தான் அவர் களின் அளவற்ற ஆசிருக்கு ஊற்று என்பதை அடிக்கடி மறந்தனர் (ஓசே 2). தன் காதலனா கிய கடவுளிடமிருந்து பெற்ற அணிகலன் களை வைத்தே இஸ்ராயேல் வேசி வாழ்க்கை நடத்துகிறாள் (எசே 16). செழிப் பான காலத்தில் பிரமாணிக்கமாயிருப்பது

கடினமாய் இருக்கிறது. ஏனென்றால் மனம் போன போக்கின்படி வாழும் சுலப வாழ்வு இதயத்தை மூடிவிடுகிறது (*உப 31:20; 32:15; யோபு 15:27; சங் 73:4-9*). மேலும் அரசன்கூட பொன்னையோ, செல்வத்தையோ நம்பாது (*உப 17:17*), ஆகூர் இறைமுன் வேண்டியது போல் செபித்தால், அவன் விவேகமுள்ளவன். ஆகூரின் மன்றாட்டு இதுவே; ''இறைவா எனக்குச் செல்வம் வேண்டாம்; வறுமையும் வேண்டாம். எனக்குத் தேவையான உணவை மட்டும் தந்தருளும். எனக்கு எல்லாம் இருந்தால், நான் 'உம்மை எனக்குத் தெரியாது' என்று மறுதலித்து ஆண்டவரைக் கண்டது யார்? என்று கேட்க நேரிடும். நான் வறுமையுற்றால் திருடனாகி என் கடவுளின் திருப்பெயருக்கு இழிவு வருவிக்க நேரிடும்'' (*பழ 30:8-9*).

புதிய ஏற்பாடும் பழைய ஏற்பாட்டின் செல்வம் பற்றிய கருத்துக் குவியலிலிருந்து தாராளமாய் வாரி எடுத்துக்கொள்கிறது. செல்வத்தின் தீமைக்கெதிராய் வெகுண்டெழுந்த இறைவாக்கினர்கள் போல், யாக்கோபும் செல்வத்திலே முழுத் திருப்தி கொள்பவர்களுக்கும் அவர்களின் மட்கிப்போன செல்வத்திற்கும் எதிராக வசைமாரி பொழிகிறார் (*யாக் 5:1-5*). ''இவ்வுலகில் செல்வம் படைத்தவர் இறுமாப்புக் கொள்ளலாகாது, நிலையில்லாச் செல்வத்தில் நம்பிக்கை வைக்காமல், நமது இன்பத்துக்காக எல்லாவற்றையும் தாராளமாக அளிக்கும் கடவுளில் மட்டுமே நம்பிக்கை வைக்கவேண்டும் (*1 திமோ 6:17*). செல்வத்தின் மமதை உலகிற்குச் சமம். பணத்தையும் பரமனையும், மனிதன் சமமாக விழைய முடியாது (*1 யோவா 2:15 தொ*).

IV. ***பணமா? பரமனா?:- 1)*** செல்வம் பற்றிய மனப்பான்மை, பழைய ஏற்பாட்டிலிருந்து நற்செய்திக்கு மாறுபடும் கருத்து சற்றுக் கொடூரமாகிறது. ''செல்வர்களே ஐயோ! உங்களுக்குக்கேடு. ஏனெனில் நீங்கள் எல்லாம் அனுபவித்துவிட்டீர்கள்'' (*லூக் 6:24*) என்ற கூற்று திரும்பிப் பெறமுடியாத கண்டனத் தொனியைக் கொண்டுள்ளது. இதன் முழுப்பொருளும், மலைப்பொழிவின் பேறுதன்மையையும், அதே நேரத்தில் அதன் சாபமும், உபாகமத்தில், சீரிய செக்கேம் காட்சியில் இஸ்ராயேலரின் பிரமாணிக்கம், பிரமாணிக்கமின்மைக்கேற்ப அமைந்த ஆசிர், சாபத்துடன் (*உப 28*) ஒப்பிடும்போது தான் தெரியவரும். இங்கேபோல் பழைய புதிய ஏற்பாட்டிற்கிடையேயுள்ள வேறுபாடு வேறெங்கும் அவ்வளவு துல்லியமாகத் தெரிவதில்லை.

விண்ணரசின் நற்செய்தி இறைவனின் முழுக் கொடையையும் இறைவனில் முழுமையான ஒன்றிப்பையும், தந்தையின் வீடு புகுதலையும் பறைசாற்றுகிறது. ஆனல் இவற்றையெல்லாம் பெற ஒருவன் தன்னிடமுள்ள எல்லாவற்றையும் கொடுக்க வேண்டும். மதிப்புமிக்க மாணிக்கத்தைப் பெற, விலைமதிப்பில்லாச் சொத்தைப்பெற, தன்னிடமுள்ள எல்லாவற்றையும் விற்க வேண்டும் (*மத் 13:45 தொ*). ஏனென்றால் ஒருவன் இரு தலைவர்களுக்குப் பணிசெய்ய முடியாது (*மத் 6:24*). பணம் இரக்கமில்லா எசமான்; நற்செய்தியின் வார்த்தையை நெருக்கிவிடும் (*மத் 13:22*). மிக முதன்மையானதை, இறைவனின் மேலாண்மையை மக்கள் மறக்கும்படி செய்கிறது (*லூக் 12.15-21*). நிறைவுடைமையை நோக்கிச் செல்லும் பயணத்தில் நல்ல மனதுடையவர்களையும் தடை செய்யும் (*மத் 19:21தொ*). எல்லாவற்றையும் தியாகம் செய்ய வேண்டிய கோரிக்கை ஒரு வரம்பில்லாச் சட்டமாகும். இதில் விதிவிலக்கோ மட்டுப்படுத்துதலோ இல்லை எனத் தோன்றுகின்றது. ''உங்களில் தன் உடைமையெல்லாம் விட்டுவிடாத எவரும் என் சீடராய் இருக்க முடியாது'' (*லூக் 14:33; காண் 12:33*). இவ்வுலகில் தன்னுடைய செல்வத்தை (*லூக் 16:25*) அதன் சுக போகங்களைக் (*லூக் 6:24*) கட்டிப்பிடித்துக் கொண்டிருப்பவன் விண்ணரசில் நுழைய முடியாது. ஊசியின் காதுவழியாக ஒட்டகம் நுழைவது கூட சுலபமாகும் (*மத் 19:23தொ*). ஏழைகளே நற்செய்தியைப்பெறத் தகுதி பெற்றவர்கள் (*எசா 61:1=லூக் 4:18; 1:53*). நமக்காகத்

தம்மையே ஏழையாக்கி, நம்மைத் தன் ''அளவில்லாச் செல்வங்களால்'' (எபே 3:8) செல்வந்தர்களாக்கினார் நம் ஆண்டவர் (2 கொரி 8:9).

*2. ஏழைகளுக்குக் கொடுங்கள்:* செல்வத்தைத் துறத்தல் என்றால் தன் உடைமையை, சொத்துரிமையை, விட்டுக் கொடுத்தல் என்பதல்ல. இயேசுவைப் பின்சென்றவர்களில் கூட, சிலர் நல்ல வசதிபடைத்தவர்களே. அரிமாத்தியா செல்வந்தர்தான். அவர் இயேசுவின் திருவுடலைத் தன் கல்லறையில் அடக்கம் செய்ய ஏற்றுக்கொண்டார் (மத் 27:57). செல்வத்தை ஓர் இடைஞ்சலாக நினைத்து உதறித் தள்ளிவிடவேண்டும் என நற்செய்தி விரும்பவில்லை. ஏழைகளோடு பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பதே அதன் கோரிக்கை (மத் 9:21; லூக் 12:23; 19:8). ஆனால் ஒரு செல்வந்தன் தன் ''நேர்மையற்ற செல்வத்தால் (உலகின் எந்தச் சொத்துதான் அநீதியுடன் தொடர்பற்றுள்ளது?), நண்பர்களைச் சேகரித்துக் கொண்டால் கடவுள் கடினமான மீட்பு வழியைத் திறப்பார் என எதிர்பார்க்கலாம் (லூக் 16:9). ஒரு பணக்காரன் இருந்தான். ஓர் ஏழை இலாசர் உடன் இருந்தான் என்பது அல்ல துர்மாதிரிகை. ஆனால் இலாசர் பணக்காரனுடைய மேசையிலிருந்து விழும் ரொட்டித் தூள்களுக்கு ஏங்கினான் (லூக் 16:21). அவனுக்கு அணு அளவும் கிடைக்கப் பெறாது மறுக்கப்பட்டான் என்பதே. பணக்காரனுக்கு ஏழையின்பால் பொறுப்புண்டு. கடவுளுக்குப் பணிந்து பணிபுரிபவன் தன் பணத்தை ஏழைகளுக்குப் பகிர்ந்தளிக்கிறான். ஆனால் பணத்திற்குப் பணிபுரிபவன் அதைத் தன்னோடு வைத்து அதிலே முழு நம்பிக்கை வைக்கிறான்.

உண்மையான செல்வம் என்பது தன்னோடு வைத்திருப்பது அன்று, பிறருக்குக் கொடுப்பதே என்று உறுதியாய்க் கூறலாம். இக்கொடுத்தல் கடவுளின் தாராளத் தன்மையை நம்பிச் செயல்படுகிறது. இது கொடுப்பவரையும், பெறுபவரையும், நன்றிப் பெருக்கில் இணைக்கிறது (2 கொரி 9:11). இவ்வாறு ஈவது ''பெறுவதைவிடக் கொடுத்தலே மேன்மையுடையது'' என்பதைச் செல்வந்தனைத் தன் அனுபவத்தில் உணரவைக்கிறது (அ.ப. 20:35).

**செவா** (SHEVA - வீண்பெருமை, தந்தை போன்ற)

1. தாவீதின் நிர்வாக அலுவலர்கள் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள செயலர். அரசாங்க ஆணைகள், அரசவைக் குறிப்புக்கள் முதலியவற்றை அதிகாரப்பூர்வ ஏட்டில் எழுதி வைக்கும் பொறுப்புடையவர் (2 சாமு 20:25). ஒவ்வொரு முறையும் இந்தச் செயலரின் பெயர் மாறுபடுகிறது: செராயா (2 சாமு 8:17), சவுசா (1 நாள் 18:16), சீசா (1 அர 4:3).

2. காலேபின் சந்ததியில் ஒரு குடும்பம் அல்லது ஒருவன். காலேபுவுக்கும் அவரது வைப்பாட்டி மாக்காவுக்கும் பிறந்தவர். மக்பேனாவையும் கிபயாவையும் நிறுவியவர் (1 நாள் 2:49).

**செவ்வண்ணம்** (VERMILION)

இது பலவாறாகப் பயன்பட்ட சிவப்பு மஞ்சள் களிமண்ணிலிருந்து பெறப்பட்ட ஒரு வகைக் கனிப்பொருளாகும். இது வீட்டிற்குச் சாயம் பூச மிகவும் சிறந்தபொருள். வீட்டின் உட்புறம் மீண்டும் புதுப்பிக்கும் வகையில் இந்தச் சாயம் பூசப்பட்டது. வீட்டின் வெளிப்புறத்திலும் நிலையாக இருக்க வேண்டிய இடங்களுக்கும் இந்தச் சாயம் களிமண்ணுடன் சேர்த்து அடிக்கப்பட்டது. யோயாக்கிம் நீதியை மறந்து, தன் வீட்டைச் செவ்வண்ணம் பூசி அழகுபடுத்தியதால் எரேமியா அவனைச் சாடுகின்றார் (எரே 22:14). கல்தேயா, பாபிலோனியர் ஆகியோருடன் வேசித்தனம் செய்த ஒகோலிபாவாக எருசலேம் சித்தரிக்கப்படுகிறது. இவள் சுவரில் சிவப்பாய்த் தீட்டப்பட்ட கல்தேய நாட்டு ஆண்களின் உருவங்களைக் கண்டாள் (எசே 23:14).

மரத்தால் செய்யப்பட்ட சிலைகள் செவ் வண்ணம் பூசப்பட்டன (ஞான 13:14). கிரேக்கர்கள் இதை மட்பாண்டத் தொழிலில் பயன்படுத்தினர். ஏதன்சு நகரத்தார் இதன் உற்பத்தியைத் தனியுடைமை ஆக்கிக் கொள்ள முயன்றனர்.

**செவ்வந்திக்கல், சுகந்தி** (AMETHYST)

கருஞ்சிவப்பு நிறத்தில் உள்ள உயர்ந்த வகைக் கற்களில் ஒன்று. இதனைச் செவ்வந் திக்கல் என்றும் குறிப்பிடுகின்றனர். இது தலைமைக் குருவின் மார்புப்பதக்கத்தில் இருக்கும் (யாத் 28:19; 39:112). புதிய எருச லேம் சுவர்களின் அடித்தளம் அமைப்பதில் இது பன்னிரண்டாவது கல்லாக வருகிறது. சுகந்தி என இதனைத் திருவெளிப்பாடு தமிழ்வாசகம் மொழி பெயர்க்கிறது (திரு வெளி 21:20). இவை எகிப்தில் காணப்படுவ தாகப் பிளினி குறிப்பிடுகிறார்.

**செனா** (SENAAH - முட்செடி நிறைந்த)

பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டு எருச லேமுக்குத் திரும்பி வந்த யூதர்களின் ஒரு குடும்பம் அல்லது இனத்தின் தலைவர் (எஸ் 2:35; நெக 7:28). இவர் நெகேமியா எருச லேம் நகர்ச்சுவரைப் பழுதுபார்த்தபோது மிகவும் உதவியாக இருந்தவர் (நெகே 3:3).

இவர்கள் எருசலேம் சுவரை மீண்டும் கட்டியதில் ஈடுபட்டவர்களான "அசுனாவா" வின் புதல்வர்களோடும் (நெகே 3:3), பென்யமின் குடும்பத்தைச் சேர்ந்த அசுனு வாவோடும் (1 நாள் 9:7; நெகே 11:9) தொடர்பு கொண்டிருந்திருக்கலாம். ஒரு வேளை இது ஓர் இடப்பெயராகவும் இருக்க லாம். செனா எரிகோவுக்கு வடகிழக்கில் 13 கி.மீ. தொலைவிலுள்ள இக்கால மக்தல் செனவாக அடையாளம் காட்டப்படுகிறது.

**செனாட்சர்** (SHENAZZAR - (சந்திரக்கடவுள்) சின் தந்தையைப் பாதுகாப்பாராக).

நாடு கடத்தப்பட்ட அரசன் யோயாக்கி னுக்கு நான்காவது புதல்வன் (1 நாள் 3:18). அனேகமாக இவர் சேசுபட்சராக இருக்க லாம் (எஸ் 1:8.11; 5:14.16).

**செனான்** (ZENAN - மந்தைவெளி)

யூதாவிலுள்ள இந்த ஊர் இலாக்கிசின் செபோலா மாவட்டத்தில் இருந்தது (யோசு 15:37). இதுவும் மீக் 1:11-இல் வரும் சானா னும் ஒன்றாக இருக்கலாம். இது தற்போ தைய ஆராக் எல்-கார்பா என்ற இடமாக இருக்கலாமெனக் கருதப்படுகிறது.

**செனீர்** (SENIR - பளபளப்பாயிருக்கும்)

இஸ்ராயேல் யோர்தானுக்கு இருபுறத்தி லும் இருந்த நாடுகளைப் பிடித்தபொழுது அப்பகுதிகளில் இருந்த கெர்மோன் (எர் மோன்) மலையை எமோரியர்கள் செனீர் என்று அழைத்தனர் (உப 3:9). ஆனால் உன்னத சங்கீதத்தின்படி (4:8) கெர்மோன், செனீர் ஆகிய இரண்டும் வெவ்வேறானவை யாகத் தெரிகிறது. இம்மலையில் கப்பல் கட்டுவதற்கான தேவதாரு மரங்கள் அதிக அளவில் கிடைத்தன (எசே 27:5).

**செனே** (SENEH - முட்புதர், கூரியபாறை)

சவுலின் ஆட்சிக்காலத்தில் பெலிஸ்தியர் கள் மிக்மாசு என்னுமிடத்தில் பாளையம் அமைத்திருந்தனர். சவுல் மகன் யோனத்தான் ஓர் இரவில் அங்குச் செல்லவிரும்பி மலை களைக் கடந்து செல்கின்றான். அவன் செல் லும் வழியில் உள்ள இரு செங்குத்தான பாறைகளில் ஒன்று செனே ஆகும் (1 சாமு 14:4). மற்றொன்று போட்சேசு ஆகும். இப் பெயர்கள் விவிலியத்தில் ஓரிடத்தில் மட் டும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவையிரண் டும் மிக்மாசுக்கும் கெபாவுக்கும் இடையில் வாடி எஸ் - சுவெய்னித்து வழியாகச் செல் லும் கணவாயின் இருபக்கத்திலும் உள்ளன. செனே, எருசலேமிலிருந்து வடக்கு - வட கிழக்கில் 10 கி.மீ. தொலைவில் ஓடையின் தென்பகுதியில் மிக்மாசுக்கு எதிரில் அமைந் திருந்தது. எஸ் 2:35; நெகே 7:38 பகுதிகளில் வரும் செனா நகரம் இப்பெயரின் அடிப் படையிலே தோன்றியிருக்க வேண்டும். பாபி லோனுக்கு நாடு கடத்தப்பட்டதிலிருந்து திரும்பிய யூதர்கள் குடியேறிய இடமாகவும், யூதாவில் அமைந்திருந்த நகரமாகவும் குறிக் கப்படுகிறது.

# சே

**சேகண்டி (மணி)** (GONG)

அதிக ஒலி எழுப்பும் வெண்கலக் கருவியாகும் (1 கொரி 13:1). ஒருவேளை ஆலய வழிபாட்டில் பயன்பட்ட இசைக்கருவிகளில் ஒன்றாக இருக்கலாம்.

**சேக்கு** (SECU - வெளியே பார்க்கும் இடம்)

கிபயா என்ற இடத்துக்கும் இராமா என்ற இடத்துக்கும் இடையில் உள்ள சாலையில் அமைந்துள்ள ஒரு கிராமம். தாவீது சவுலுக்குப் பயந்து ஓடியபோது அவரது மறைவிடத்தைப் பற்றிய செய்தியைச் சவுல் இந்த இடத்தில்தான் கேட்டறிந்தார் (1 சாமு 19:22). பொதுவாக இதனைக் கிராமம் என்று கூறினாலும் முக்கியத்துவம் வாய்ந்த பலரும் வந்து கூடுகின்ற பெரிய கிணறாகவோ, குன்றாகவோ இருக்கலாம் என்பதற்குக் குறிப்புகள் உள்ளன. இன்று இதன் அமைவிடத்தைப் பற்றிய குறிப்பு எதுவும் இல்லை.

**சேசாக்கு** (SHESHACH)

பாபிலோனைக் குறிக்கப்பயன்படும் குழூஉக் குறிப் பெயராகும் (எரே 25:26; 51:41).

**சேசாய்** (SHESHAI - இளவரசனுக்குரிய)

ஆனாக்கு என்பவரின் மூன்று புதல்வர்களில் ஒருவர். இஸ்ராயேல் ஒற்றர்கள் கானானை உளவு பார்த்தபோது, இவர்கள் கெபிரோனில் (எபிரோன்) வாழ்ந்து வந்தனர் (எண் 13:22; யோசு 15:14; நீதி 1:10). இவர் ஆனாக்கின் வழித்தோன்றலாக, அகிமான், தால்மாய் என்பவர்களோடு சேர்த்துச் சொல்லப்பட்டுள்ளார். காலேபு கெபிரோனைக் கைப்பற்றியபோது இவர்களைத் துரத்தி அடித்தார் (யோசு 15:14; நீதி 1:10.20). இப்பெயர் வேறு முழுப் பெயரின் சுருக்கமாக இருக்கலாம்.

**சேசான்** (SHESHAN - இளவரசன் போன்ற)

இவர் எரகுமவேல் என்பவரின் வழித்தோன்றலான குடும்பங்களின் தலைமுறை அட்டவணையிலுள்ள ஒரு குடும்பத் தலைவர் ஆவார். இவ்வட்டவணை யூதாவின் வழித்தோன்றல் அட்டவணைக்குள் காணப்படுகிறது (1 நாள் 2:31). சேசானுக்குப் புதல்வியர்கள் மட்டும் உண்டு. அவர்களில் ஒருத்தியை, எகிப்திய அடிமை யார்காவுக்குத் திருமணம் செய்து கொடுத்தார் (1 நாள் 2:34-35). 1 நாள் 2:34-41-இல் எலிசாமாவின் சந்ததி பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவரது முன்னோரான சேசானும், எரகுமவேலின் சேசானும் ஒரே ஆளாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இது எலிசாமாவை யூதாவின் குலத்தில் சேர்க்கிறது.

**சேசுபட்சர்** (SHESHBAZZAR - சந்திரக் கடவுள்) சின் தந்தையைக் காப்பாற்றுவாராக

ஒரு பாபிலோனிய யூதனும் யூதாவின் இளவரசனும் ஆவார். இவரைப் பாரசீகப் பேரரசன் யூதா என்னும் பாரசீக மாகாணத்திற்கு ஆளுநராக நியமித்தார். சேசுபட்சர் ஆலயத்தைச் சேர்ந்த தங்க, வெள்ளிப்பாத்திரங்களை மீண்டும் எருசலேமுக்குக் கொண்டு வந்தார். ஆலயம் மீண்டும் கட்டப்படுவதைத் தொடங்கி வைத்தார் (எஸ் 1:8-11; 5:14-16). இவரைச் செருபாபேலோடு ஒருமைப்படுத்திக் குழப்பியுள்ளனர் சிலர். அனேகமாக இவர் செருபாபேலுக்கு முந்தியவராகவும், யூதாவின் அரசன் யோயாக்கினின் (எக்கேனியா) மகன் சேனாட்சராகவும் இருக்கலாம் (1 நாள் 3:18).

**சேணம்** (SADDLE)

இது சவாரி செய்து ஓட்டுபவர் உட்காரும் ஆசனமாகும். விலங்கின் முதுகுப் பகுதியில் கட்டப்பட்டிருக்கும்.

விவிலிய உலகத்தில் பழமையான சவாரி செய்யப்பட்ட மிருகம் கழுதைகளாகும். இதன்மேல் உட்காரும் ஆசனமாக, ஒரு துணி அல்லது தோல் பயன்படுத்தப்பட்டது. துணியை இரட்டையாகப் போடுவது அல்லது மெத்தையைப்பயன்படுத்துவது தேவை என உணரப்பட்டது. இக்காலக்கருத்துப்படி சேணம் பழைய ஏற்பாட்டில் இல்லை எனலாம். இது கி.மு. நான்காவது நூற்றாண்டில், சித்தி

யாவில் உருவானது. பிறகு மத்தியதரைக் கடற்கரைப் பகுதிக்கு வந்தது. ஆனால் கிறிஸ் தவக்காலம்வரை முழுமையாக வளர்ச்சி யடையவில்லை.

இந்தச் சேணத்தைக் குறிக்கும் பெயர்ச் சொல் லேவி 15:9-இல் மட்டும் காணப்படு கிறது. இதன் வினைச்சொல் பழைய ஏற்பாட் டில், "கழுதைகளுக்குச் சேணம் கட்டுவதையே" குறிக்கிறது (ஆதி 22:3; எண் 22:21; 2 சாமு 17:23). அலங்காரமாகப் பயன்பட்ட சேணங்கள் எசே 27:20-இல் குறிக்கப்படு கின்றன. இது தெதான் நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டு தீரில் விற்கப்பட்டது.

**சேத்தாம்** (ZETHAM - ஒலிவ மரம்)

இலாதான் வழிவந்த கேர்சோமிய லேவி யர் (1 நாள் 23:8; 26:22).

**சேத்தார்** (SHETHAR - விண்மீன்)

அரசன் அகசவேருக்குப் பணிபுரிந்த ஏழு தலைமை ஆலோசகர்களில் ஒருவர்; அகச வேருக்கு அடுத்த இடத்தில் இருந்தவர் (எஸ்த 1:14).

இரண்டாவது அரமேயிக்கு தார்கூம் இவரை இந்தியாவிலிருந்து வந்தவராகக் காட்டுகிறது.

**சேத்தார்** (ZETHAR - கொல்பவன், வெற்றியா ளன்)

இவர் பாரசீக அரசனான அகசவேர் மன்ன னின் ஏவலர்களாயிருந்த ஏழு அண்ணகர் களில் ஒருவராவார் (எஸ்த 1:10).

**சேத்தான்** (ZETHAN - ஒலிவ மரங்களைக் கவனிப்பவர்)

இவர் பென்யமின் குடும்பத்தில் பிறந்தவர். பில்கானின் மகனும் எதியவேலின் வழித் தோன்றலுமாவார் (1 நாள் 7:10).

**சேத்து** (SETH - நியமிக்கப்பட்ட, கடவுளின் கொடை)

யாவே பாரம்பரியத்தின் குலமரபுப் பட்டி யலில் இவர் ஆதாம் - ஏவாளின் மூன்றாவது மகன் (ஆதி 4:25). ஆனால் பிற்காலத்தில் குருக்கள் பாரம்பரிய அட்டவணை காயின், ஆபேலைக் குறிக்காததால் சேத்து ஆதாமின் முதல் மகன் எனக் கருதப்படலாம் (5:3-8; 1 நாள் 1:17; சீரா 49:16-17; லூக் 3:38). சேத்தைப்பற்றிக் குருக்கள் பாரம்பரியம் சில குறிப்புகளையே கொடுக்கிறது.

இரண்டு பாரம்பரியங்களின் குலமரபுப் பட்டியல்களும் சேத்து, ஏனோசு, நோவா ஆகியோரைப் பொதுவாகக் கொண்டிருப்ப தாலும், பிற இணைப்பகுதிகளைக் கொண் டிருப்பதாலும், இரண்டும் முந்தைப் பாரம் பரியப் பட்டியலில் இரண்டு வாசகங்களாகும் என்று கருதலாம். ஆனால் இப்போதுள்ள யாவே பாரம்பரியத்தில் இறந்து போன ஆபேலுக்குப் பதிலாக இறைவன் ஏவா ளுக்கு அளித்த கருணை மிக்க கொடையாகத் தோன்றுகிறார் சேத்து. ''ஆபேலின் இடத் தில் இன்னொருவரைக் கடவுள் வைத்தருளி னார்'', என்று ஏவாள் கூறினாள் (ஆதி 4:25).

சேத்து ஏனோசின் தந்தையும் நோவாவின் மூதாதையரும் ஆவார் (ஆதி 4:6-7; 1 நாள் 1:1; லூக் 3:38). சீரா 49:16, சேத்தும் சேமும் மனிதர்களுள் மதிப்புக்குரியவர்கள் என்று கூறுகிறது.

**சேத்து** (SHETH - கலகத்தின் புதல்வர்கள், அகந்தையின் புதல்வர்கள்)

'சேத்தின் புதல்வர்கள்' என்பது (எண் 24:17) மேவாபியர்களைக் குறிக்கும் ஒரு சொற்றொடர். பிலயாமின் இறைவாக்கில் வரவிருக்கும் இஸ்ராயேல் அரசனால் இவர் கள் தோற்கடிக்கப்படுவார்கள் என்று முன் னறிவிக்கப்படுகிறது (எண் 24:15-19).

**சேபா** (SHEBA - ஆணையிடுதல்) - ஆள்

1. காம், கூசு ஆகியோரின் வழித்தோன் றல் (ஆதி 10:7; 1 நாள் 1:9). ஒரு வேளை சேபா என்ற இடத்தோடும் (2) தென் அராபியாவைச் சேர்ந்த செபாயர் (1) வணிகர்களோடும் தொடர்புபடுத்தப்பட வேண்டிய பெயராகும்.

2. சேமின் வழித்தோன்றல் (ஆதி 1:28; 1 நாள் 1:22). ஒருவேளை சேபா என்ற இடத்

தோடும் (2) செபாயர்களோடும் (2) தொடர்பு படுத்தப்படவேண்டிய பெயராகும்.

3. கெத்தூரா வழியாக ஆபிரகாமுக்குப் பேரன். ஒருவேளை ஒரு வட அராபிய இனத்தின் மூதாதையர் (ஆதி 25:3; 1 நாள் 1:32).

4. எப்பிராயிமின், மலைப்பகுதியில் வாழ்ந்த பென்யமின் குலத்தையும் பிக்ரியர் இனத்தையும் சேர்ந்தவர். தாவீதுக்கு எதிராக ஒரு கிளர்ச்சி செய்து தோல்வியுற்று அழிந்தார் (2 சாமு 20).

அப்சலோமின் கிளர்ச்சி அடக்கப்பட்ட பின் வந்த குழப்பமிக்க காலத்தில் அரசனுடைய இருமனப்பட்ட போக்கும் (2 சாமு 19:1 தொ) யூதாவுக்கும் இஸ்ராயேலுக்கும் இடையே நிலவிய காழ்ப்புணர்ச்சியும் (19:41-43) அப்சலோமுக்கு அபிடேகம் செய்ததால் ஏற்பட்ட ஆற்றல்மிக்க கிளர்ச்சியும் (19:8.10) மற்றுமொரு அரசியல் கொந்தளிப்புக்கு இட்டுச்சென்றன. தாவீதுக்கு எதிரான புதியதொரு கிளர்ச்சிக்குச் சேபா தீப்பொறி வைத்தார் (20:1-2). பென்யமின் குலத்தினர் என்ற முறையில் சவுலைச் சேர்ந்தவர்களின் ஆதரவைப் பெற்றார். தாவீதுக்கு எதிரி என்ற முறையில் இரண்டு அரச குடும்பங்களுக்கிடையில் நிலவிய ஆழ்ந்த வெறுப்பைக் காட்டும் கருவியானார்.

இந்த அரச குடும்பத்துக்குப் புறத்திலிருந்து தோன்றிய கிளர்ச்சியின் காரணத்தை உணர்ந்த தாவீது, புதிய படைத்தலைவரான அமாசாவை யூதாவில் மூன்று நாட்களில் படை திரட்டக் கட்டளையிட்டார். இதைச் செய்ய அமாசா தவறியபோது, அரச மெய்க்காப்பாளர் படைக்குத் தலைமை தாங்கிச் சேபாவைத் தாக்க அபிசாயிக்குக் கட்டளையிட்டார். தனது வாய்ப்புக்காகக் காத்திருந்த யோவாபு, தன் சகோதரன் அபிசாயோடு சேர்ந்து கொண்டார். வாய்ப்புக் கிடைத்தபோது, யோவாபு தனது எதிரியான அமாசாவைக் கிபயோன் என்ற இடத்தில் கொன்றுவிட்டார். இதற்கிடையில் சேபா தனது இனத்தைச் சேர்ந்த பிக்கிரியர்களின் ஆதரவோடு பேத்து - மாக்காவின் ஆபல் என்னுமிடத்தில் தன்னை நிலைப்படுத்திக் கொண்டார் (2 சாமு 20:4-14). யோவாபு தாவீதின் படைக்குத் தலைமை தாங்கி, ஆபலை முற்றுகையிட்டார். ஆபலின் மக்கள் சேபாவின் தலையைவெட்டி, சுவருக்கு வெளியே எறிந்ததால், அந்நகரை அழிவிலிருந்து காப்பாற்றினர் (20:15-22).

5. காது இனத்தில் ஒரு குடும்பத்தைத் தோற்றுவித்தவர். பாசானில் வாழ்ந்தவர். அபிகயில் வழியாகத் தோன்றியவர். நாளாகம ஆசிரியரின்படி, யூதாவின் அரசனான யோத்தாம் மற்றும் இஸ்ராயேலின் அரசனான இரண்டாம் எரொபவாம் ஆகியோரின் காலத்தில் குலமரபுப்பட்டியல் ஏட்டில் இக்குடும்பம் சேர்க்கப்பட்டது (1 நாள் 5:13).

**சேபா** (SHEBA - ஆணையிடுதல்) - இடம்

1. சிமியோன் இனத்திற்குரிய பகுதியிலுள்ள ஒருநகரம் (யோசு 19:2). இப்பெயர் வரும் பகுதியில் நகரங்களின் எண்ணிக்கை பதின்மூன்று என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் பதினான்கு பெயர்கள் உள்ளன. இதை விளக்கிக் காட்ட, இப்பெயருக்கு முந்திய பெயராகிய பெயேர் - செபாவிலிருந்து எழுத்தர்கள் தவறாக இப்பெயரைச் சேர்த்துள்ளனர் என்பர் சிலர். இப்பெயர்ப் பட்டியலுக்கு இணையான யோசு 15:26-இல் வரும் செமாவும் இதுவும் ஒரே இடத்தைக் குறிக்கின்றன என்பர் வேறுசிலர். இப்பெயர் மாற்றம் எழுத்தர்களின் தவறுதலால் எளிதில் நிகழ்ந்திருக்கலாம்.

2. தென் அராபியாவையும் அதன் அருகிலுள்ள எத்தியோப்பியக் கடற்கரைப் பகுதியையும் சேர்ந்த செபாயர் (1) வணிகர்களின் பகுதியாகும். இவர்களிடமிருந்து இசுமயேலர்களும் மற்றவர்களும் ஆப்பிரிக்கா, இந்தியா, மற்றும் கிழக்கு நாடுகளிலிருந்து பெறப்பட்ட தங்கம், வாசனைப்பொருட்கள், மணிக்கல் போன்ற பலபொருட்களைப் பெற்றனர் (சங் 72:15; ஏச 60:6 எரே 6:20; எசே 27:22; 38:13). சாலமோனைப் பார்க்க

வந்த ''சேபாவின் அரசி'' (1 அர 10;2 நாள் 9) தென் அராபியாவைச் சேர்ந்த செபாயர் களின் ஒரு பகுதியையோ, வட அராபியா வைச் சேர்ந்த அவர்களின் ஒரு குடியிருப் பையோ ஆட்சி செய்திருக்கலாம். செல்வ மிக்க அரசனோடு வியாபாரத் தொடர்பு வைத்துக் கொள்வதே அவளுடைய நோக் கம் என்பது தெளிவு. அரசனிடம் காட்டப் பல பொருட்களைக் கொண்டு வந்தாள் (1 அர 10:2). அரசனும் தனது சொத்துக்களைக் காட்டி அவளை வியக்க வைத்தார் (10:4.7).

**சேபா நாட்டு அரசி** (SHEBA, QUEEN OF))

இந்த அரசி சாலமோனின் அறிவுத் திற மையைக் கேட்டறிந்து, அவரைச் சோதிப்ப தற்காகப் பல கடினமான கேள்விகளைக் கேட்க எண்ணி வந்தாள். அதன் பிறகுதான் அவளுக்குத் தான் கேட்டறிந்ததற்குமேல் அவர் அறிவு படைத்தவர் என்று தெரிந்தது. அவர் அரசனுக்குத் தங்கம், நறுமணப் பொருள்கள், விலையுயர்ந்த கற்கள் கொடுத்தாள். அதே நேரத்தில் இவளும் பரிசுகள் பல பெற்று, தனது பணியாட்களோடு சொந்த நாட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள் (1 அர 10:1-13). இந்தப் பொருள் மாற்றங்கள் உண்மையில் நடந்திருக்கும்' என்பதற்குப் பல ஆதாரங்கள் உண்டு. சாலமோனின் பொருளாதார ஞானத்தில் வியாபாரப் போக்குவரத்து முக் கியமான ஒன்றாகும் (1 அர 9:26-28; 10:11-12.22-29). சாலமோனும் சேபா அரசி யும் சந்தித்தது வியாபார சம்பந்தமாக இருக் கலாம். அப்படிப்பட்ட சந்திப்புகளில் விடு கதை விடுப்பதும், கதைகள் கூறுவதும், ஒரு கலாச்சார அங்கமாகும்.

யோசிப்பசு சேபாநாட்டு அரசியை எத்தி யோப்பியாவோடு தொடர்புபடுத்துகிறார். அராபியக் கதைகள் சாலமோன் மணந்த அரசியைப் பற்றிப் பல விவரிப்புகளைக் கொடுக்கின்றன. செபாயர்கள் எத்தியோப்பி யாவில் குடியிருப்புகளை நிறுவினர் என்பது உண்மை. ஆனால் அபிசீனிய அரச மரபுகள் சாலமோன், சேபா நாட்டு அரசி ஆகியோ ரின் நேரடி வழித்தோன்றல்கள் என்பது நிரூபிக்கமுடியாததாகும். இது அராபியர்களிட மிருந்து அபிசீனியர்களுக்குக் கிடைத்த பாரம்பரியமாகும்.

**சேமா** (SHEMA, THE)

உப 6:4-இல் ''இஸ்ராயேலே செவி கொடு!...'' என்று வரும் வாசகமானது யூதர் களின் விசுவாச அறிக்கையாக உள்ளது. அனேகமாக இந்த வாசகம் யோசியாவின் (640-609) காலத்தில் உருவானது. இது 6 எபிரேய வாக்குகளைக் கொண்டுள்ளது. பொதுவாக, யாவே தனித்தன்மையும், அவரைத் தவிர வேறு எவருமில்லாத தன் மையும் உள்ளவராகவும் (உப 4:39) யாவே அனைத்துமானவராகவும், மற்றப் பல தெய்வங்களாகப் பிரிக்க முடியாதவராக வும் உள்ளார் (எண் 25:2-3; நீதி 8:33; 9:4; 2 அர 1:2-3; 1 அர 16:31-32) என்பதை வலியுறுத்துகிறது.

யூதராபிகளின் மரபுப்படி 'சேமா' என்பது 6:4-ஆவது வசனத்தை மட்டும் கொண்டிருந்தது என்று சொல்லப்பட்டது. ஆனால் அதன் பிறகு, 6:5-9 வசனங்களும் இரண்டாவது பகுதியாக உப 11:13-21-ம், மூன்றாவது பகுதி யாக எண் 15:37-41-ம் சேமாவோடு சேர்க்கப் பட்டன. முதல் பகுதியானது யாவேயை முழுவதும் அன்பு செய்வது, இந்த அன்பை அவரது கட்டளைகளை மனதில் பதிய வைத்து அவற்றைக் கடைப்பிடிப்பது ஆகிய இரு வேண்டுகோள்களைக் கொண்டுள்ளது. உப 11:13-21 இந்த வேண்டுகோளைக் கடைப்பிடித்தால் ஆசீர்வாதம் கிடைக்கும், தவிர்த்தால் சாபம் கிடைக்கும் என்பதைச் சொல்கிறது. எண் 15:37-41 சட்டத்தை நினை வூட்ட உதவியாகக் கட்டளைகளை ஒரே சொல்லில் அடக்கிச் சொல்கிறது (யாத் 20:2; உப 5:6). யூதராபிகளின் சட்டம் 'சேமாவை'க் காலையிலும் மாலையிலும் சொல்லும் பழைய வழக்கை நிறுவியது (உப 6:7- தூங்கும் வேளையிலும் விழித்திருக்கும் வேளையிலும்). யூதர்களின் இலக்கியம் இந் தச் சேமாவைப் பற்றிய பல தர்க்கங்களைக் கொண்டுள்ளது. இறையொருமைக்கோட் பாட்டறிக்கையும் யூதர்களின் மிக உன்னத விசுவாச அறிக்கையும் என்றளவில், இந்தச்

சேமா, காலந்தோறும், மறைசாட்சிகளின் அறைகூவலாகவும் யூதர்களின் அடையாள மாகவும் விளங்கிவந்துள்ளது.

இராபிகள் முதல் நூற்றாண்டிலே சட் டத்தை 600 கட்டளைகளாகப் பிரித்திருந்த னர். இவற்றில் எது பெரியது என்று அடிக் கடி தர்க்கித்தனர். இந்தச் சூழ்நிலையில்தான் இயேசுவிடம் ''பெரிய கட்டளை எது?'' என்று கேட்டனர் (*மத் 22:34-40; மாற் 12:28-34*). அவர் தாக்கமுடியாத சேமாவோடு லேவி *19:18*-ஐயும் (உன்னைப் போல் பிற னையும் நேசி) சேர்த்துச் சொன்னார். இது *மாற் 12:29-34*-இல் முழுமையாகச் சொல்லப் பட்டுள்ளது.

கி.பி. 2-ஆம் நூற்றாண்டிலிருந்து இன்று வரை இந்தச் சேமா யூதர்களால் காலையும் மாலையும் சொல்லப்படுகிறது. இப்படிச் சொல்வது, தோராவின் குறுகிய பாடமாகக் கருதப்பட்டது. இறைவன் ஒருமைப்பாட் டையும் அவரை அன்பு செய்யவேண்டும் என்ற கட்டளையையும் விசுவாச அறிக்கை யிடும் சேமாவின் முதல் இரு வசனங்களைத் தோராவின் அடிப்படைச் சுருக்கமாக இயேசு வும் ஆதித் திருச்சபையும் கருதியதற்குச் சான்றுகள் உள்ளன (*மாற் 12:28-34; உரோ 3:30; 1 கொரி 8:4; யாக் 2:19; 1 யோவா 4:20*).

**சேம்** (SHEM - பெயர், புகழ்)

நோவாவின் மூத்த மகன். நோவாவின் குடும்பத்தோடு பெட்டகத்துள் நுழைந்து பெரும் வெள்ளத்தில் தப்பியவர் (*ஆதி 5:32; 6:10; 7:13; 9:18; 10:1; 11:10-11; 1 நாள் 1:4.17.24; லூக் 3:36*). சேம் இஸ்ராயேலரு டையவும், செமித்திய மொழிபேசுபவர்களு டையவும் மூதாதையராகக் கருதப்படுகிறார் (*ஆதி 10:21-31; 11:10-26; லூக் 3:36*). நோவா குடிமயக்கத்தில் இருக்கும்போது எப்பேத் தோடு தன் தந்தைக்கு மதிப்புக் கொடுத்தார். இதனால் அவர் ஆசீர்வாதத்தைப் பெற்றார் (*ஆதி 9:18-24*). இந்த ஆசீர்வாதம் இஸ்ராயே லர்களின் மூதாதையருக்கு என்று இஸ்ராயே லர் மரபில் கூறப்படுகிறது (*ஆதி 10:21-31; 11:10-26*). யாவே பாரம்பரியப்படி சேம், ஏபேரின் சந்ததியாருக்கெல்லாம் தந்தையாக இருக்கிறார் (*ஆதி 10:21*). குருக்கள் பாரம்பரி யப்படி சேமும் அவரது இரண்டு சகோதரர்க ளும் தங்களது மனைவிகளோடு நோவா வோடு பெட்டகத்தில் சேர்ந்து கொண்டனர் (*ஆதி 5:32; 6:10; 7:13-15*). வெள்ளத்திற்குப் பிறகு, இவரது புதல்வர்கள் தங்கள் தந்தை யோடு தெய்வீக உடன்படிக்கையில் பங்கு கொண்டனர் (*ஆதி 9:1-17*). சேம் நூறு வயது நடக்கும்போது அர்ப்பகசாது என்பவரைப் பெற்றார். பிறகு 500 வருடங்களுக்குமேல் வாழ்ந்து ஏலாம், அசூர், லூது, ஆராம் (*ஆதி 10:22; 1 நாள் 1:17*) என்பவர்களைப் பெற்றார்.

**சேயிர்** (SEIR - மயிர்நிறைந்த, கரடுமுரடான) - ஆள்

கோரியரின் தொடக்க மூதாதையர். இந்தக் கோரியர்கள்தான் சேயிர் மலையில் முதன் முதல் குடியேறியவர்கள் (*ஆதி 36:20-21; 1 நாள் 1:38; காண் ஆதி 14:6; உப 2:12.22*).

**சேயிர்** (SEIR - மயிர்நிறைந்த, கரடுமுரடான) - இடம்

1. ஏதோமில் உள்ள முக்கியமான மலைப் பகுதி. இதன் வடபகுதி எபெல் - எஸ் -சேரா என்று இப்போது அழைக்கப்படும். கடல் மட்டத்தைவிட 1680 மீட்டர் உயரத்தில் உள்ள இம்மலைப்பகுதி மேற்கில் 'அக்காபா' வளைகுடா வரையிலும் பரவியுள்ளது. செயீர் என்ற பெயர் இப்பகுதி அடர்ந்த காடுகளைக் கொண்டிருந்தது என்பதி லிருந்து வருகிறது. இப்பகுதியில் முதலில் கோரியர்களும் பின்பு ஏதோமியர் என் றழைக்கப்பட்ட ஏசாவின் சந்ததியினர்களும் குடியேறினர் (*ஆதி 14:6; 32:3; 36:8-9.20-21; உப 2:4-5. 12.22.29; யோசு 24:4; நீதி 5:4*). பிற்காலத்தில் இஸ்ராயேலரின் ஆதிக்கத்திற் குட்பட்டது (*எண் 24:18; 2 சாமு 8:14; 1 அர 11:15-16*). சேயிர் ஏதோமியரைக் குறிக்கும் பட்டமாகவும் பயன்பட்டுள்ளது (*எசா 21:11; எசே 35*).

2. யூதாவின் வடபகுதியில் உள்ள செயீர் மலை (*யோசு 15:10*). இங்கு இஸ்ராயேலர் தெற்கிலிருந்து கானானுக்குள் நுழைய முற்

பட்டபோது நடந்த போரில் தோற்கடிக்கப் பட்டனர் (உப 1:44; எண் 14:45; 1 நாள் 4:42). பொதுவாக இக்காலச் சாரிஸ் என்பதாக அடையாளம் காட்டப்படுகிறது; ஒப்பிட்டுப் பேசப்படும். கிர்பாத்து - ஏயாரிமுக்குத் தென் மேற்கில் 4 கி.மீ. தொலைவிலும், எருசலே முக்கு மேற்கில் 14½ கி.மீ. தொலைவிலும், சாரிஸ் உள்ளது.

**சேயுசு** (ZEUS - யூப்பித்தர்)

இது கிரேக்கத் தெய்வங்களில் தலையான தெய்வம். இந்தத் தெய்வத்தின் செயல்களாக அவர்கள் கருதியவை பின்வருமாறு: சேயுசு மழைபொழிகிறார் அல்லது மழையைப் பெய்விக்கிறார். தட்பவெப்ப நிலைகள் இவர் கட்டுப்பாட்டுக்குள் இருக்கின்றன. பயங்கர இடிமின்னல்களை அனுப்புவார். மேலும் இவர் உலகத்தையெல்லாம் ஆளும் அரசர். இவர் எண்ணத்திற்கு மாறாக யாரும் செயல்பட முடியாது. மேலும் இவர் விருந் தோம்பலின் தெய்வம். இது கிரேக்கத் தெய் வங்களின் தன்னிகரில்லாத்தெய்வம்.

அந்தியோக்கு எப்பிபான் மன்னன் கெரி சிம் மலையில் சேயுசு சேனியோசுக்கு ஓர் ஆலயம் கட்டினார். மேலும் எருசலேமில் உள்ள ஆலயத்தைக் கிரேக்க மலைத் தெய்வ மான சேயுசு ஒலிப்பியசுக்கு அர்ப்பணிக்க வும் நினைத்தார் ( 2 மக் 6:2).

லிஸ்திரா நகரில் சேயுசுக்கு ஓர் ஆலயம் இருந்தது. எனவே பவுலும் பர்னபாவும் லிஸ்திராவுக்குச் சென்று போதித்தபோது மக்கட்கூட்டம் பவுலை எரிமாசு என்றும் பர்னபாவைச் சேயுசு எனவும் அழைத்தது (அ.ப. 14:8-18).

**சேர்** (ZER - தீக்கல்)

இது நெப்தலி நாட்டிலிருந்த அரண் சூழ்ந்த நகரமாகும் (யோசு 19:35). இதுவும் மாதோனும் (11:1;12:19) ஒன்றே என்று அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர்.

**சேலா** (SELAH)

சங்கீதங்களில் எழுபத்தொரு முறை வரும் ஒரு சொல்லாகும் (உ.ம். சங் 9:16.20; 55:7.19; 67:1.4; 143:6; அப 3:3.9.13). இப்பாடல்களில் எப்போதும் வரிகளின் பின் குறிப்பாகச் சேர்க்கப்படுகின்றது. பெரும்பாலும் பொருள் பொதிந்த விதத்தில் வரிகளைப் பிரிக்கப்பயன்படுகிறது. நான்குமுறை சங்கீ தத்தின் முடிவில் வருகிறது. இது ஒரு இசைக் குறிப்பாக இருக்கலாம். இதன் பொருள் தெரியவில்லை. ஆயினும் ''தொனியை உயர்த்து'', ''தொடர்ந்துபாடு'', ''முழுத்தொனியுடன்'', ''சிறிது நிறுத்து'', ''உயர்த்து'', ''இடைஇசை'' என்று பலவாறு பொருள்கொடுக்க முயலப் பட்டுள்ளது.

**சேலா** (SHELAH - மன்றாடு)

1. இவர் சேமின் சந்ததியில் பிறந்தவர்; ஏபேருக்குத் தந்தை; அர்ப்பகசாதுவின் மகன் (ஆதி 10:24; 11:12-15; 1 நாள் 1:18.24). லூக் 3:35-36-இல் 'காயினாமின் மகன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

2. கானானியப்பெண் சூவாவிடம் பிறந்த யூதாவின் மூன்றாவதுமகன் (ஆதி 38:5.11.14.26; 46:12; 1 நாள் 2:3). செலானியர் களின் மூதாதையர் (எண் 26:20; 1 நாள் 4:21).

**சேலா குளம்** (SHELAH, POOL OF)

இது எருசலேம் அரச தோட்டத்திலுள்ள ஒரு நீர்த்தேக்கம் (நெகே 3:15). அனேகமாக அரச குளமாக (நெகே 2:14) அல்லது கீழ்க் குளமாக (எசா 22:9) இருக்கலாம். இக்குளத் திற்குக் கீகோனிலிருந்து, கிதரோனின் வலக் கரையிலுள்ள வாய்க்கால் வழியாகத் தண்ணீர் வரும். அசீரியாவின் அச்சுறுத்தலின்போது, இந்த வாய்க்கால் பாதுகாப்புக்காக மூடப் பட்டபோது, எசேக்கியாவின் சுரங்க வாய்க் கால் வழியாக வந்த தண்ணீரைத் தேக்குவதற் குப் பயன்பட்டது.

**சேவல்** (COCK)

சேவல் என்பது வீட்டுக்கோழியின் ஆண் இனத்தைக் குறிக்கும். பழ 30:31-இல் வருகின்ற 'பெருமிதத்துடன் நடக்கும் சேவல்' என்ற எபிரேய வாக்கியம் எதைக் குறிக்கிறது என் பது தெளிவாக இல்லை. யூதர்களின் அரமேய

மொழியில் இது 'வலிமை வாய்ந்த மல்ல னைக் குறிக்கலாம்.

மாற் 13:35-இல் மூன்றாம் சாமத்தில் அல் லது நள்ளிரவில் கோழி கூவியது என்று கூறப்படுகிறது. இச்செயல் இரவு நேரத்தை நான்கு சாமமாகப் பிரிக்கும் உரோமானிய வழக்கத்தைக் குறிக்கிறது (மூன்று சாமமா கப் பிரித்தல் யூதர்களின் பழக்கமாகும்). சேவல் பற்றி மற்றப் புதிய ஏற்பாட் டுக் குறிப்புக்களனைத்தும், பேதுரு இயேசு வை மறுதலிக்கும்பொழுது கோழி கூவிய தாகக் காட்டப்படும் நிகழ்ச்சியோடு தொடர் புடையது (மத் 26:34...).

**சேனா** (ZENAS - சேயுசின்கொடை)

புனித பவுல் அப்பொல்லோவையும், வழக்கறிஞரான சேனாவையும் விரைவில் அனுப்பி வைக்குமாறு தீத்துவுக்கு எழுது கிறார். கிறிஸ்தவனாகிய சேனா கிரேத்துத் தீவைச் சேர்ந்தவராகத் தெரிகிறது (தீத் 3:13).

பிந்தைய பாரம்பரியத்தின்படி இவர் பாலஸ்தீனத்திலுள்ள தியோஸ்போலியின் முதல் ஆயராவார். மேலும் இவர் தீத்துவின் வாழ்க்கை வரலாற்றை எழுதியவரும் ஆவார்.

**சேன்** (SHEN - பல், கூரிய முனை)

பென்யமின் பகுதியில் மிஸ்பாவுக்கு அரு கிலுள்ள ஓர் இடம். இந்த இடத்தில் பெலிஸ் தியர்கள்மேல் கொண்ட வெற்றியினை நினைவு கூறும் விதத்தில் சாமுவேல் ஒரு கல்லை நிறுத்தி ''ஆண்டவர் இதுவரை நமக்கு உதவி செய்தார்'' என்று கூறி அதற்கு ''எபனேசர்'' என்று பெயரிட்டார். (1 சாமு 7:12). இதுவும் எசன்னாவும் ஒன்றாகக் கருதப்படுகின்றன.

# சை

### சைப்பிரசு (CYPRUS)

சிறிய ஆசியா கடற்கரையிலிருந்து 65 கிலோமீட்டர் தொலைவிலும், சீரியாவி லிருந்து 96 கிலோமீட்டர் தொலைவிலுமுள்ள ஒரு மத்திய தரைக்கடல் தீவு. வரலாற்றுக்கு முற்பட்ட காலங்களிலும், வரலாற்றுக் காலத்திலும் இது சீரியா, பாலஸ்தீன நாடுக ளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந் தது. இதன் பழங்காலப் பெயர் அலாசியா வாகும். பழைய ஏற்பாட்டில் இது எலிசா என்றழைக்கப்பட்டது.

கி.மு. 1800-க்கு முன்பே இதற்கும், எகிப்து, சீரியா, பாலஸ்தீனத்திற்கும் வாணிபத் தொடர்புகள் இருந்ததாகப் புதை பொருள் ஆராய்ச்சிகளும் ஏட்டுக் குறிப்புக ளும் கூறுகின்றன. மைசீனிய அரசோடு கூட இது நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது.

இது செம்பு கிடைக்கும் ஒரு முக்கியமான இடமாக இருந்தது. இங்குதான் முதன்முத லில் செம்பு கண்டுபிடிக்கப்பட்டது என்று பிளினி சொல்கின்றார். இது செம்பை எகிப் தியர்களுக்கும் இத்தியர்களுக்கும் ஏற்றுமதி செய்தது.

அமர்னா காலத்தில் இது லூக்கு என்பவரால் கொள்ளையிடப்பட்டது. என்கோமிஎன்ற இடத்தில் செய்யப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சிகளின்படி இது 'கடலின் மக்க ளால்' (பெலிஸ்தியர்கள்) தாக்கப்பட்டது என்று குறிப்பு ஒன்று சொல்கின்றது. ஆனால் இதற்கு வேறு ஆதாரங்கள் இல்லை.

கி.மு. 11-ஆம் நூற்றாண்டில் இது சுதந்தர மான நாடாக இருந்தது. 10-ஆம் நூற்றாண் டில் பெனிசியர்கள் இதை ஆண்டனர். 8-ஆம் நூற்றாண்டின் கடைசியிலும் 7-ஆம் நூற் றாண்டிலும் சார்கோன், சனகெரிபு, ஏசர்கத் தோன் ஆட்சியின்கீழ் அசீரியர்கள் சைப்பி ரசை ஆண்டனர். அசீரியர்களின் ஆட்சி மறையவே சைப்பிரசில் எகிப்தியர்களின் ஆதிக்கம் வளர்ந்தது. இந்நாட்டு மக்கள், பாபிலோனுக்கு எதிராகச் சைரசுக்கு உதவி செய்தனர். அதற்குச் சன்மானமாகப் பாரசீக ஆளுநர்களுக்குப் பதிலாக, அவர்களுடைய அரசர்களாலேயே ஆளப்படும் உரிமை பெற் றனர்.

பாரசீகத்திற்கு எதிராக அயோனியா செய்த கிளர்ச்சியில் சைப்பிரசு கலந்து கொண்டு தோற்றது (கி.மு. 499-498). இசுஸ் (333) போருக்குப் பிறகு சைப்பிரசு அலக்சாந் தருடன் சேர்ந்து கொண்டது; கிரேக்க உல கின் ஒரு பகுதியானது. கி.மு. 294-58-வரை இது எகிப்திய ஆட்சியின்கீழ் இருந்தது. வெள்ளியையும், கப்பல் கட்ட மரங்களை யும், தானியங்களையும் தோலமியர்களுக் குக் கொடுத்து வந்தது. யூதர்கள் நல்லமுறை யில் நடத்தப்பட வேண்டும் என்று உரோமை அரசு கடிதம் எழுதிய பல இடங்க ளில் சைப்பிரசும் ஒன்று என்று 1 மக் 15:23 கூறுகின்றது.

கி.மு. 58-இல் நிர்வாக நோக்கத்திற்காகச் சைப்பிரசு உரோமையால் சிலிசியாவுடன் இணைக்கப்பட்டது. பிலோவின் குறிப்பு களிலிருந்தும், அப்போஸ்தலர் பணியில் காணப்படும் குறிப்புகளிலிருந்தும் இங்குக் கி.பி. முதல் நூற்றாண்டில் ஒரு பெரிய யூத சமூகம் இருந்ததாகத் தெரிகிறது. பர்னபா என்று அழைக்கப்பட்ட யோசேப்பு இந்தத் தீவைச் சேர்ந்த முதல் கிறிஸ்தவராவார் (அ.ப. 4:36). ஸ்தேவானின் மறைசாட்சி மரணத்திற்குப்பிறகு சிதறிச்சென்ற கிறிஸ்த வர்கள் சிலர் சைப்பிரசுக்குச் சென்று அங்கி ருந்த யூதர்களுக்குப் போதித்தனர்; அங்கிருந்து மனம் மாறியவர்கள் அந்தியோக்கியாவி லிருந்து கிரேக்கர்களுக்குப் போதித்தனர் (11:19-20). பவுலும் பர்னபாவும் சேர்ந்து சைப் பிரசில் போதித்தபோது இத்தீவின் முக்கிய இடங்களான சாலமி, பாப்போ ஆகிய இடங்களில் போதித்தனர். பாப்போவில் தான் இவர்கள் பார்யேசு என்ற மந்திரவாதி யைச் சந்தித்தனர் (13:4-12). பர்னபா மாற்கு வுடன் சேர்ந்து மறுபடியும் சைப்பிரசுத்

தீவிற்கு மறைப்பணி வேலையாகச் சென்றார் (15:39). பவுல் இருமுறை இந்தத் தீவைக் கடந்து சென்றிருந்தாலும் அங்குப் போதித்ததாகக் கூறப்படவில்லை (21:3; 27:4).

இத்தீவிலிருந்து யூதர்கள் கி.பி. 116-117-இல் உரோமைய ஆட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். இதனால் இவர்களில் சிலர் கொல்லப்பட்டனர்; சிலர் தீவிலிருந்து துரத்தப்பட்டனர். இது சைப்பிரசுத் தீவில் கிறிஸ்துவத்தின் வளர்ச்சியைப் பாதித்தது. கான்ஸ்டன்டைன் அரசரான பிறகுதான் கிறிஸ்துவ மதம் இத்தீவினரின் முக்கிய மதமானது.

**சைரசு** *(CYRUS)*

அக்கமேனிய அரச மரபையும், பாரசீகப் பேரரசையும் தோற்றுவித்தவரான ஒரு பாரசீக மன்னன். எரோதோத்தசின்படி இரண்டாம் சைரசு, முதலாம் கம்பிசேசின் மகனாவார். அக்கமேனசு சைரசு குடும்பத்தின் மூதாதையராவார். சைரசு அரசனான பல ஆண்டுகளுக்குப் பிறகு 550-இல் அஸ்தியாகெசுக்கு எதிராக எழுந்தார். தன்னுடைய சிற்றரசர்களாலேயே கைவிடப்பட்டு அஸ்தியாகெசு தோல்வியுற்றார். சைரசு எக்பத்தானாவைக் கைப்பற்றினார். மேதிய அரசர்களின் நாடுகளுக்குமேல் (அசீரியா, மெசபொத்தாமியா, சீரியா, அர்மீனியா, கப்பதோக்கியா) உள்ள தலைமையானது 'மாமன்னர்' சைரசை வந்தடைந்தது. அதைத் தொடர்ந்து லீதியாவின் அரசன் கிரோசுவை வென்று சர்தை, லீதியா, சிறிய ஆசியாவின் கையிலிருந்த கிரேக்க நகரங்களையும் கைப்பற்றினார். இவனுடைய அரசுக்குக் கிழக்கே ஓக்சுஸ் ஆறும், மேற்கே எகியன் கடலும், எல்லையாக இருந்தன. கி.மு. 539-இல் நபோனிதையும் பாபிலோனையும் தாக்கி வெற்றிகண்டார். பிறகு சைரசு பல பட்டங்களுடன் (''உதேத்தின் அரசன் ... உதேத்தின் நான்கு முனைகளின் அரசன்'') தன்னைத் தானே அரசன் என்று பறைசாற்றிக் கொண்டார். மார்துக்குக் கடவுளை வழிபட ஆவன செய்தார். இடிந்து கிடந்த புனித நகரங்களை மீண்டும் கட்டுவித்து சிலைவழிபாட்டை ஆரம்பித்தார்.

பாபிலோனியாவின் வீழ்ச்சியினால் ''கடவுளால் அபிடேகம் செய்யப்பட்டவரான'' (எசா 45:1) சைரசின் அரசியல், இராணுவ வலிமையை எபிரேயர்கள் அறிந்து கொண்டார்கள். இதனால் கடவுளின் அரசும் இஸ்ராயேலின் மீட்பும் (எசா 4:28; காண்க அதிகாரங்கள் 35;40-55) நெருங்கிவிட்டன என்று இறைவாக்கினர்கள் நம்பினார்கள். சைரசு அரசனின் முதலாம் ஆண்டு ஆட்சியில் (கி.மு. 538), எருசலேம் ஆலயம் மீண்டும் கட்ட அரமேயிக்கில் கட்டளை (எஸ் 6:3-5) ஒன்றை வெளியிட்டார். இந்தக் கட்டளை இம்மன்னனின் ஞானத்தையும் மதசகிப்புத் தன்மைக் கோட்பாட்டையும் காட்டுகின்றது.

அவர் அரசி தோமிரிசை எதிர்த்துப் போரிடப் போவதற்கு முன்பு, தன்னுடைய மகன் கம்பிசேசை வாரிசாக்கிவிட்டுச் சென்றார். அப்போரில் அவர் இறந்தார் (529).

தானியேல் சைரசு ஆட்சியின் முதலாம் ஆண்டுவரை தன்னுடைய பதவியிலேயே இருந்தார் என்று (தானி 1:21) காட்டப்பட்டிருக்கிறது. தானியேலின் கடைசிக்காட்சி சைரசின் ஆட்சியின் மூன்றாம் ஆண்டு நடந்தது என்று காலம் குறிக்கப்படுகிறது (10:1). தானி 9:26-இல் ''கடவுளால் அபிடேகம் செய்யப்பட்டவராக''க் குறிக்கப்படுபவர் ஒருவேளை சைரசாக இருக்கலாம்.

# சொ

**சொஸ்தேன் (SOSTHENES)**

1. கிறிஸ்புக்குப்பின் கொரிந்தில் செபக் கூடத் தலைவராக இருந்தவர். ஒரு கிறிஸ்தவர் (அ.ப.18:8.17). பவுலுக்கு எதிராக யூதர்கள் உரோமை ஆளுநன் கல்லியோமுன் புகார் கூறியபோது, அவர் அதனைக் கேட்க மறுத்து விட்டார். இதனால் ஆத்திரமடைந்த யூதர் கள் செபக்கூடத்தலைவனான சொஸ்தே னைப் பிடித்து அடித்தார்கள் (அ.ப.18:17). ஆளுநன் இதைக் கவனிக்கவில்லை. ஒரு வேளை தாங்கள் பவுல் ஒரு வேதவிரோதி என்று சாட்டிய குற்றத்திற்குத் தேவையான ஆதாரங்களைச் செபக்கூடத்தலைவன் என்ற முறையில் தந்திருக்க வேண்டும் என்று யூதர் கள் எதிர்பார்த்து ஏமாந்து இருக்கலாம்.

2. பவுலின் கிறிஸ்தவச் சகோதரன். எபே சில் பவுல் கொரிந்தியருக்கு முதல் திரு முகத்தை எழுதியபோது அவரோடு இருந்த வர். இவர் ஒருவர் மட்டும்தான் 1 கொரி 1:1-இல் பவுலின் தோழனாகக் குறிக்கப்படு கிறார். மற்றவர்கள் 16:17-19-இல் குறிக்கப் படுகின்றனர். இவரைக் கொரிந்தியர்கள் அறிந் திருக்க வேண்டும். ஒருவேளை அவர்களில் ஒருவராக இருக்கலாம். அப்படியாயின் இவ ரும் 1-இல் வருபவரும் ஒரே ஆளைக் குறிக் கின்றனர். ஒருவேளை பவுலைப்போல் இவ ரும் மனமாற்றம் அடைந்திருக்கலாம்.

**சொத்து, செல்வம் (TREASURE)**

சொத்து, செல்வம், ஒருவரது மொத்த உடைமையைக் குறிக்கும். பொதுவாக அச் செல்வம் வெள்ளியாகவோ, தங்கமா கவோ, மற்றும் எந்த உடைமையாகவோ இருக்கலாம் (ஆதி 43:23; எசா 30:6). பொது வாக நல்லவர்களிடம் செல்வம் கொழிக்கு மென்ற கருத்து ஞான ஆகமத்தில் காணப் படுகிறது. ஆனால் செல்வம் நல்வழியில் சேர்க்கப்படவேண்டும். இல்லையெனில் அது அழிவுறும் எனக்கூறுகிறது பழமொழி ஆகமம் (சங் 17:14; பழ 8:21; 15:6; 21:20; லூக் 16:25; பழ 10:2; 21:6). ஆனால் புதிய ஏற்பாட்டில் இயேசுவின் கண்ணோட்டத் தின்படி இவ்வுலகச் செல்வம் நிலையற்ற தும், வீணானதும் ஆகும் (மத் 6:19; லூக் 12:23). இது ஒரு சிலைவழிபாடாக மாறி விடலாம் என்பது இயேசுவின் கருத்து (மத் 6:21; லூக் 12:20-21). எனவே இயேசு, இந்தச் செல்வத்தைக் கைவிட்டு விட்டு விண்ணகச் செல்வத்தை எதிர்நோக்கச் சொல்கிறார் (மத் 19:21; மாற் 10:21; லூக் 18:22). யோபு தனது துன்பத்தில், சாவைப் பெரும் செல்வமாகக் கருதிக் காத்திருக்கின்றார் (யோபு 3:21). ஓர் அரசனது சொத்தில் விலையுயர்ந்த கற்கள், தங்கம், வெள்ளி, நறுமணப்பொருட்கள், எண்ணெய், கால்நடைகள், படைக்கருவிகள் ஆகியவை அடங்கும் (2 அர 20:13 தொ; திருவுரை 2:8). இவற்றின் பட்டியல் 2 நாள் 32:27-29-இல் கொடுக்கப்பட்டுள்ளது. கோவில்களுக்கு அளிக்கப்பட்ட காணிக்கை கள் கோவில் சொத்தாகக் கருதப்பட்டன (நெகே 10:39).

உருவகமாக; இயற்கையின் சக்திகள் செல் வமாகக் கருதப்பட்டன (யோபு 38:22; சங் 135:7; எசா 45:3). ஞானம் ஒரு புதைந்திருக் கும் செல்வமாகும் (பழ 2:4). இஸ்ராயேல் இறைவனின் சொத்துடைமையாகும் (யாத் 19:5; சங் 135:4). மனிதன் விசுவாசத்தாலும் பிரமாணிக்கத்தாலும் மீட்பின் நற்சொத்துக் களை விண்ணில் சேர்த்துவைக்க வேண்டும் (மத் 6:20-21). நற்செய்தியைப் புனித பவுல் ஒரு செல்வமாகக் கருதுகிறார் (2 கொரி 4:7). கிறிஸ்துவில்தான் 'இறைவனின் ஞானமும் அறிவுமாகிய செல்வம் எல்லாம் மறைந்துள் ளது' (கொலோ 2:3). இந்த நித்தியச் செல்வங்களைக் கொண்டிருப்பது அரச செல்வங்களைக் கொண்டிருப்பதிலும் மேலானது (எபி 11:26). நல்லவர்கள் தங்கள் நல்ல இதயத்திலிருந்து மேலும் நல்ல வற்றை வெளிக்கொணர்வர் (லூக் 6:45).

ஒரு மன்னன் தான் போரில் கைப்பற்றிய அனைத்தையும் தனது அரச செல்வமாக எடுத்துக் கொள்கிறான் (எசா 39:6; 1 அர

*14:26).* அக்காலத்தில் கொள்ளையடித்துச் செல்வம் சேர்க்கும் பழக்கம் இருந்ததாகத் தெரிகிறது *(1 அர 15:18; 2 அர 14:14; 24:11-13; 23:18).* செல்வத்தைக் காப்பாற்றப் போதிய அக்கறை செலுத்தப்பட வேண்டும் என விவிலியம் கூறுகிறது *(பழ 15:6).* தொல் பொருள் ஆராய்ச்சியாளர்கள் ஏராளமான சொத்துக்களை அகழ்ந்தெடுத்துள்ளனர்.

**சொபரேத்து** (SOPHERETH - எழுதுபவன்)

இவர் பாபிலோனியாவிலிருந்து செருபாபேலோடு திரும்பிவந்த சாலமோன் ஊழியர்களின் மக்களில் ஒருவர் *(நெகே 7:57).* எஸ் *2:55*-இல் இவர் அசோபரேத்து என்று அழைக்கப்படுகிறார்.

**சொர்க்கம், இன்பவனம்** (PARADISE)

இதனுடைய கிரேக்க மூலச்சொல்லான ''பாராதேயிசோஸ்'' என்பது ''தோட்டம்'' என்ற பொருளுடைய ''பர்தேஸ்'' என்ற பாரசீகச் சொல்லிலிருந்து வருவதாகத் தெரிகிறது. எழுபது நூல் மொழிபெயர்ப்பானது அதனுடைய சொற்பொருளிலும் *(திருவுரை 2:5; உ.ச. 4:12)* சமயப் பொருளிலும் இதனைப் பயன்படுத்துகிறது. இரண்டாவது பொருள் மட்டுமே இங்கு எடுத்துக் கூறப்படுகிறது.

***1. இறைவனின் தோட்டம்:*** மேற்காசிய சமயங்களில், தெய்வங்களுடைய வாழ்வின் காட்சியானது, இவ்வுலகிலுள்ள வலிமை மிக்கோர் மற்றும் செல்வரின் வாழ்வினின்று தனது சாயல்களைப் பெறுகிறது. தோட்டங்களால் சூழப்பட்ட மாளிகைகளில் தெய்வங்கள் களிப்புற்றிருந்தனர்; அங்கே ''வாழ்வின் நீர்'' பாய்ந்தோடியது. மற்ற வியப்பூட்டும் மரங்களில் ''வாழ்வின் மரமானது'' செழிப்புற்றிருந்தது. தேவர்கள் ''வாழ்வின் மரத்தினுடைய'' கனியால் சத்தூட்டப்பெற்றனர். இவ்வுலகில் தெய்வங்களின் கோயில்கள் தங்களைச் சூழ்ந்துள்ள புனித தோட்டங்களுடன் இந்த மூல மாதிரியைப் பின்பற்றுகின்றன. இத்தகைய விவரிப்புகள், அவற்றில் பல தெய்வவழிபாட்டுச் சூழ்நிலையினின்று தூய்மைப்படுத்தப்பட்டவுடன், விவிலியத்தில் அறிமுகப்படுத்தப்படுகின்றன. மனிதப் பண்புகளை இறைவனுக்குச் சாற்றிக்கூறும் வழக்கப்படி ''மென்காற்று வீசிய பொழுதினிலே தோட்டத்தில் ஆண்டவராகிய கடவுள் உலாவிக்கொண்டிருப்பதாக'' இறைவனைக் காட்டுவதில் எவ்விதத் தயக்கமுமில்லை *(ஆதி 3:8).* தோட்டமும் அதனிலுள்ள மரங்களும் மூதுரையாகவும் சுட்டிக் காட்டப்படுகின்றன *(ஆதி 13:10; எசே 31:8-9.16தொ).*

***2. சொர்க்கத்தை இழந்தது முதல் மீண்டும் பெற்றது வரை.***

***அ) இழந்த சொர்க்கம்:*** இறைவன் மனிதனைப் படைத்த நிலையினையும், உலகில் அவனை அமர்த்தியதன் நோக்கத்தையும் எடுத்துக்கூறும், புனித வரலாற்றை எடுத்துக் கூறுவதில், அதே உருவகமானது அறிமுகப் படுத்தப்படுகிறது. இறைவன் அவனுக்கென ஏதேனில் ஒரு தோட்டத்தை உருவாக்கினார் *(ஆதி 2:8தொ; எசே 28:13).* இத்தோட்டத்தில் மனிதனுடைய வாழ்வானது உழைப்பைக் கொண்டிருந்தாலும் *(ஆதி 2:15),* அதே நேரத்தில் எடுத்துக்காட்டான மகிழ்ச்சியின் பண்பையும் அது கொண்டிருந்தது. ஒன்றுக்கும் மேற்பட்ட வழிகளில் இது, பொற்காலத்தின் இலக்கிய வர்ணனைகளின் பின்னோக்கிய நினைவாக உள்ளது; இறைவனுடனான நெருங்கிய அறிமுகம், தோட்டத்துக் கனிகளைத் தடையின்றிப் பயன்படுத்தல், விலங்குகளின் மீதான ஆளுகை *(2:9-20),* முதல் தம்பதியரின் ஒருங்கிணைந்த ஒன்றிப்பு *(2:18.23தொ),* வெட்கமின்மை குறிக்கும் ஒழுக்க மாசின்மை *(2:25),* மற்றும் பாவத்தின் விளைவாக உலகிற்கு வரவிருக்கின்ற மரணம் இல்லாமை *(3:19)* போன்றவைகளை இந்த விவரிப்பு கொண்டிருந்தது. ஆயினும், மனிதனுடைய சோதனையும் இந்தத் தொடக்கத் தோட்டத்தில் முக்கிய இடத்தை வகிக்கிறது. இறைவன் அறிவின் மரத்தை அங்கே அமைத்தார். ஏவாளைச் சோதிக்க பாம்பு அங்கே வரும். மேலும், ஏதேனின் மகிழ்ச்சியான நிலையானது, நமது இன்றைய நிலையினுடைய துயரம் மற்றும் துன்பத்துடன் ஒப்பிட்டு வேறுபடுத்தப்படுகிறது. மனித

பாவத்தின் விளைவாகிய இந்நிலையானது இழந்த சொர்க்கத்தினுடைய மையக்கருத் துடன் இணைக்கப்படுகிறது *(3:23)*.

***ஆ) சொர்க்கத்தினுடைய வாக்குறுதி:*** மனிதன் தன்னுள் கொண்டுள்ள நம்பிக்கையா னது பொய்யானதல்ல. அது அவனுடைய மூல அழைப்புடன் தொடர்புடையதாக உள் ளது. இரக்கமிக்க இறைபாலிப்பினால் அனைத்துப் புனித வரலாறும் மனிதனைப் பழைய நிலையில் அமர்த்துதலைத் தனது நோக்கமாகக் கொண்டிராவிட்டால், இந்த நம்பிக்கையானது என்றுமே அடைய முடி யாததாகவே இருக்கும். இவ்வாறு பழைய ஏற்பாடு முதல் புதிய ஏற்பாடுவரை மீண்டும் அடையப்படும் சொர்க்கம் என்ற தலைப்பு தனது வேறுபட்ட அனைத்து நுட்ப வேறுபாடு களுடன், புதிய புனிதநாடு மற்றும் புதிய படைப்பு ஆகியவற்றுடன் கலந்து, இறுதிக் காலத் தீர்க்க தரிசனங்களை ஊடுறுவுகிறது. இறைவனுடைய மக்களின் பாவங்கள் அவர் களது உலக உறைவிடத்தைப் பாழடைந்த இடமாக மாற்றினாலும் *(எரே 4:23)*, இறுதி நாட்களில் இறைவன் அதனை ஓர் ஏதேன் தோட்டமாக மாற்றுவார் *(எசே 36:35; எசா 51:3)*. இப்புது இன்பவனத்தில் உயிருள்ள நீரானது, இறைவன் உறையவிருக்கின்ற கோவிலிலிருந்து பொங்கி வழியும். கரை யோரங்களில் வியத்தகு மரங்கள் வளரும். இம்மரங்கள் இறைவனின் மக்களுக்கு உண வையும், மருந்தையும் அளிக்கும் *(எசே 47:12)*. வாழ்வின் மரத்திற்கான வழியானது மனிதனுக்கு மீண்டும் ஒருமுறை திறக்கப் படும் *(திருவெளி 2:7; 22:2-ஐ ஆதி 3:24-உடன் ஒப்பிடுக)*. புனித வரலாற்றில் இறுதியில், மீண்டும் அமைக்கப்பட்ட இன்பவன வாழ் வானது, மூல ஏதேனுக்கு இணையான பண் புகளைக் கொண்டிருக்கும். பல்வேறு கூறுக ளில் அவற்றைக் கடந்தும் செல்லும். இயற் கையில் அற்புதமான இனவிருத்தி இருக்கும் *(ஓசே 2:23-24; ஆமோ 9:13; எரே 31:23-26; யோவே 4:18)*; மனிதரிடையே மட்டுமின்றி *(எச 2:4)* இயற்கை மற்றும் விலங்குகளுடன் எல்லாவற்றையும் உள்ளடக்கும் அமைதி நிலவும் *(ஓசே 2:20; எசா 11:6-9; 65:25)*; கலப்பற்ற மகிழ்ச்சி இருக்கும் *(எரே 31:13; எசா 35:10; 65:18..)*, மரணம் முதற்கொண்டு அனைத்துத் துன்பங்களும் அழிக்கப்படும் *(எசா 35:5-6; 65:19...; 25:7 தொ; திருவெளி 20:14; 21:4)*. பழைய பாம்பு வெல்லப்படும் *(திருவெளி 20:2-3.10)*; முடிவில்லா வாழ்விற் குள் புகலாம் *(தானி 12:2; ஞான 5:15; திருவெளி 2:11; 3:5)*. பாவத்தினால் மனிதன் கீழ்ப்படுத்தப்பட்ட நிலைக்கு முரண்பட்ட நிலையில், இவ்வுருவங்கள் வெளிக் கொணர்கின்ற உண்மையானது, சோதனை பற் றிய எந்த எண்ணத்தையோ, வீழ்ச்சியின் வாய்ப்பையோ விலக்குகின்ற வேளையில், அவனது மூல நிலையின் பண்புகளைப் படம் பிடித்துக்காட்டுகிறது.

***இ) மீண்டும் அடையப்பட்ட சொர்க்கத் தின் முன்சுவை:*** மீண்ட சொர்க்கமானது இறுதிக்கால மெய்மையாகும். இறைவனின் மக்கள் தங்களது வரலாற்று அனுபவத்தில் அதனுடைய மறைந்துபோகும் நிழலை மட் டுமே அறிந்துள்ளனர். ''பாலும் தேனும் பெருக்கெடுத்தோடும் நாட்டை'' உரிமை யாக்குதல் என்பது இதற்கு ஓர் உதாரணம் *(யாத் 3:17; உப 6:3)*. ஆயினும் அவர்களது ஆன்மீக அனுபவமானது மற்றொரு அமைப் பின் முன்சுவையை அவர்களுக்கு அளித்துள் ளது; ஏனெனில், அனைத்து ஞானத்திற்கும் ஊற்றாகிய தமது சட்டத்தை இறைவன் அவர்களுக்கு அளித்துள்ளார் *(உப 4:5-6)*. ஆனால், ஞானமானது மகிழ்ச்சியைக் காப் பீடு செய்கின்ற ''வாழ்வின் மரமாக'' உள் ளது *(பழ 3:18; சீரா 24:12-21)*. சட்டமானது, அதனைக் கடைப்பிடிக்கிற மனிதனில், ''இன்பவனத்தின் நதியைப்போலப்'' பெருக் கெடுத்தோடும் ஞானத்தை உருவாக்குகின் றது *(சீரா 24:25தொ; ஆதி 2:10)*; அதனை மற்றவர்களுக்குக் கற்பிக்கின்ற ஞானி ''இன்ப வனத்திற்கு நடத்திச்செல்லும் நீரூற்றுப்'' போன்றவன் *(சீரா 24:30)*; அருளும் ஆண்ட வர் மீதான பயமும் ஆசிரின் இன்பவனமா கும் *(40:17.27)*. ஆகவே, ஞானத்தின் மூலம் இறைவன், இன்பவனத்தின் மகிழ்ச்சியின் முன்சுவையை மனிதனுக்கு அளிக்கிறார்.

புதிய ஏற்பாடானது இறைத்திட்டத்தி னுடைய இறுதியான இரகசியத்தை வெளிப்

படுத்துகிறது. கிறிஸ்துவே ஞானத்தின் ஊற்று; அவரே ஞானமுமாய் உள்ளார் (*1 கொரி 1:30*). மனித இனமானது தனது இறுதிக்கால நிலையினை நோக்கிச்செல்ல வழியாக உள்ள புதிய ஆதாமும் இவரே (*உரோ 5:14; 1 கொரி 15:45*). தனது சோதனையின்போது, சாத்தானும் பேயுமாகிய பழைய பாம்பின் மீது அவர் பெருவெற்றிகொள்கிறார் (*திரு வெளி 20:2*). தமது சோதனையின் காலத்தில், ஒருவித மீண்ட சொர்க்க நிலையில் அவர் ''கொடிய மிருகங்களுடன்'' வாழ்கிறார் (*மாற் 1:13; ஆதி 1:26; 2:19-20*). அது முதல் மரணமும் நோய்களும் வெல்லப்பட்டுவிட்டன என்பதை அவரது புதுமைகள் காட்டு கின்றன. அவரில் விசுவாசங்கொள்ளும் மனிதன் ''வாழ்வின் உணவு'' (*யோவா 6:35*), ''உயிருள்ள தண்ணீர்'' (*4:14*), ''முடிவில்லா வாழ்வு'' (*5:24தொ*), மற்றும் சுருக்கமாக, இப்போது திறக்கப்பட்டுள்ள இறுதிக்கால இன்பவனத்தின் கொடைகள் அனைத்தையும் கண்டடைகிறான்.

**3. சொர்க்கம் நீதிமான்களின் உறைவிடம்:** விவிலிய நூல்களில் இறுதிக்கால சொர்க்கம் பற்றிய விவரமானது கட்டுப்படுத்தப்பட்டதாகவும், படிப்படியாகத் தூய்மைப்படுத்தப் படுவதாகவும் உள்ளது. ஆயினும், திருமறைக்குள் ஏற்கப்படா நூல்கள் பெருமளவிற்கு இதனை மிகைப்படுத்தி, யூத விசுவாசத்தில் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தைக் காட்டுகிறது (உம் ஏனோக்கின் நூல்). இறுதி நாட்களில், புனித நாட்டிற்கு மீண்டும் வருவதற்கு முன், தீர்ப்பின் நாள், உயிர்ப்பு மற்றும் எதிர்கால வாழ்விற்காகக் காத்திருப்பதற்கென, நீதிமான்கள் அனைவரும் இறைவனால் ஒன்று சேர்க்கப்படவிருக்கின்ற இடைக்கால உறைவிடமாகச் சொர்க்கம் உள்ளது. நல்ல கள்ளனுக்கு இயேசுவால் வாக்களிப்பட்ட வீடு இதுவே (*லூக் 23:43*). ஆனால் வாழ்வாகிய அவரது பிரசன்னத்தினால் இது ஏற்கனவே மாற்றப்பட்டுவிட்டது. ''நீ என்னோடு இருப்பாய்...''. புனித வரலாற்றின் இறுதியில் அளிக்கப்படவேண்டிய நற்பேற்றைப் பொறுத்தவரையில், தாம் மீட்ட பாவிகளுக்குக் கிடைத்தற்குரியதாக அதனை அமைப்பதற்காகத் தமது மரணத்தின் மூலம் அதனுள் முதலில் நுழைந்தவர் இயேசுவே.

**4. சொர்க்கமும் விண்ணகமும்:** இறைவனின் உறைவிடமாக இருப்பதால், சொர்க்கமானது இவ்வுலகிற்கு வெளியே அமைக்கப்பட்டுள்ளது. ஆனால், விவிலிய மொழியானது இறை உறைவிடத்தை விண்ணகத்திலும் அமைக்கிறது. சில நேரங்களில் சொர்க்கமானது இறைவன் தங்கியுள்ள ''மேலான வானகத்துடனும்'' அடையாளம் காட்டப்படுகிறது. அவ்விடத்தில்தான் சொல்லுதற்கரிய உண்மைகளைப்பற்றிச் சிந்திக்க, பவுல் ஆவி வடிவில் கொண்டு செல்லப்பட்டார் (*2 கொரி 12:4*). கிறிஸ்தவத்தின் மொழியில் சொர்க்கம் என்ற சொல்லுக்கான சாதாரணப் பொருளும் இதுவே. ''வானதூதர்கள் உம்மைச் சொர்க்கத்திற்கு வழிநடத்துவார்களாக....'' (அடக்கச் சடங்கு). இப்போது முதல் சொர்க்கமானது ஆண்டவரில் இறக்கும் அனைவருக்கும் திறக்கப்பட்டுள்ளது.

## சொறி, சொறிசிரங்கு (*ERRUPTION, ITCH, SCURVY*)

சொறிசிரங்கு அரிப்பை ஏற்படுத்தும் ஒரு நோய். இதுதொழுநோய் என்று ஐயமுற்றால், குரு நோயுற்றவனைப் பார்வையிடுவார். பின் அவனை அடைத்து வைப்பார். ஏழு நாட்களுக்குப்பின் அவனைச் சோதனை செய்வார். நோய் குறைந்தோ பரவாமலோ இருந்தால், அது வெறும் சொறிசிரங்குதான். ஆகவே அவன் தூய்மையானவன் என்று குரு அறிவிப்பார். பரவியிருந்தால், அது தொழுநோயாகும். ஆகையால் நோயுடையவன் தீட்டுடையவன் என்று குரு அறிவிப்பார் (*உப 28:27; லேவி 13:6-8*).

தொழுநோய் பீடிக்கப்பட்டதை அறிய தலையிலோ தாடையிலோ ஏற்படும் சொறி உதவும் (*லேவி 13:30; 14:54*). இந்நோயுடையவன் என்று சந்தேகிக்கப்பட்டவன் 14 நாட்களுக்குத் தனித்து வைக்கப்பட்டு, மீண்டும் குருவால் சோதிக்கப்படுவான்.

சொறியோ, சொறிசிரங்கோ உடைய விலங்குகள் பலியாக ஒப்புக் கொடுக்கப் படக்கூடாது (*லேவி 22:22*). இம்மாசுகள் உடையவர்கள் ஆண்டவரின் படையலைச் செலுத்த அருகில் வரக்கூடாது (*லேவி 21:20*).

# சோ

**சோ** (SO)

இவர் அசீரியாவைச் சல்மனேசரும், இஸ்ராயேலை ஓசேயாவும் ஆண்டுவந்த காலத்தில் எகிப்தை ஆண்டுவந்தவர் ஆவார். அசீரிய நாட்டு மன்னனுக்கு எதிராக ஓசேயா மன்னன் சோவுடன் சேர்ந்து புரட்சித்திட்டம் தீட்டினார் (2 அர 17:4; கி.மு. 725). இறுதி வெற்றி சல்மனேசருக்குக் கிடைத்தது. ஓசேயா சிறைப்படுத்தப்பட்டார். சோ யார் என்று அடையாளம் காட்டுவது கடினம். இது, எகிப்திய ஆட்சியாளர்களை ஓசேயா சந்தித்த இடத்தின் பெயராக இருக்கலாம்.

**சோகாம்** (SHOHAM - மணிக்கல்வகை)

ஒரு லேவியர். மெராரியின் வழித்தோன்றல். யகசியாவின் மகன் (1 நாள் 24:27).

**சோகார்** (ZOHAR - பழுப்பு நிறமான)

1. இத்தியரான எப்ரோனின் தந்தை ஆவார் (ஆதி 23:8; 25:9). இவரிடமிருந்து ஆபிரகாம் மக்பேலாக் குகையை வாங்கினர்.

2. சிமியோனின் மகன் செரகுவின் (4) மற்றொரு பெயர் (ஆதி 46:10; யாத் 6:15).

**சோகேத்து** (ZOHETH - வலிமையான, கர்வமிக்க)

இசீயின் மூத்த மகன். யூதா கோத்திரத்தில் ஒரு குடும்பம் அல்லது குலம் என்று கருதப்படுகிறது (1 நாள் 4:20).

**சோக்கோ** (SOCO / SOCOH - முட்புதரான இடம்)

இப்பெயரில் மொத்தம் 3 நகரங்கள் உள்ளன.

1. யூதா புதல்வரின் கோத்திரத்திற்குச் செபேலாப்பகுதியில் கிடைத்த நகரங்களுள் ஒன்று (யோசு 15:35). இங்குதான் பெலிஸ்தியர்கள் சவுலுக்கு எதிராகப் படையெடுத்து வந்தபோது பாளையம் இறங்கினர். இப்போரில்தான் தாவீது கோலியத்தை வென்றதின் மூலம் இஸ்ராயேல் வெற்றிகொண்டது (1 சாமு 17:1). சாலமோனின் மகன் ரெகபயாம் இந்நகரைப் பல அரண்களையுடையதாக மாற்றினார் (2 நாள் 11:7). யூதாவின் அரசன் ஆகாசு காலத்தில் இந்நகர் பெலிஸ்தியர்களால் கொள்ளையடிக்கப்பட்டது (2 நாள் 28:18).

இந்த இடம் எருசலேமுக்கு மேற்கு - தென்மேற்கில் 28 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து அப்பாது என்று அடையாளம் காட்டப்படுகிறது. இப்பெயர், அருகிலுள்ள கிராமமாகிய கிர்பெத்து சுவெய்கேயினால் பாதுகாக்கப்பட்டுள்ளது.

2. யூதாவில் மலைநாட்டின் தென்பகுதியில் உள்ள ஒரு நகரம் (யோசு 15:48). இந்நகரின் தந்தை கெபர் (எபேர்) என்பவர் காலேபியர் தலைமுறைப்பட்டியலில் வருகிறார் (1 நாள் 4:18). இவர் இந்நகரை நிறுவியிருக்கலாம். இது பெயேர் செபாவுக்கு வடகிழக்கில் 25 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து சுவெய்கே என அடையாளம் காட்டப்படுகிறது. இது 1-இல் வரும் கிராமத்திலிருந்து வேறுபட்டது.

3. சாலமோன் மன்னனின் மூன்றாவது மாகாணத்தில் இருந்த ஓர் இடம். இதன் நிர்வாகி பென்-கெசது என்பவராவார் (1 அர 4:10). இந்நகரம் எகிப்திய ஏடுகளில் குறிக்கப்படுகிறது. சமாரியாவுக்கு வடமேற்கில் 16 கி.மீ. தொலைவிலும் சாரோன் சமவெளியிலுள்ள இக்காலத் துலுக்காரமிலிருந்து வடக்கில் சிறிது தூரத்திலுமுள்ள கிப்பெத்து சுவெய்கேத்து எர்-ராஸ் (தேல் எர் - ராஸ்) என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**சோசிபத்தர்** (SOSIPATER - தந்தை மீட்கப்பட்டார்)

1. யூதா மக்கபேயரின் படைத்தலைவர்களில் ஒருவர் (2 மக் 12:19-25). இவர் தன்னிடம் தோற்றுப் பிடிபட்ட திமோத்தேயு என்ற செலூக்கியப் படைத்தலைவனை அவரது வேண்டுகோளுக்கிணங்கி விடுவித்தார்.

2. பவுல் உரோமையருக்கு எழுதிய மடலில் வாழ்த்துக் கூறுபவர்களில் ஒருவர் (உரோ 16:21). பவுலின் உறவினராக அதாவது ஒரு யூதன் என்று குறிப்பிடப்படுகிறார். இப்பெயரின் மற்றொரு வடிவம் சோப்பத்தர் ஆகும் (அ.ப. 23:4). ஒருவேளை இருபெயரும் ஒரே ஆளைக் குறிக்கலாம்.

**சோஸ்திராத்து** (SOSTRATUS)

நான்காம் அந்தியோக்கு காலத்தில் எருசலேம் நகர அரணின் ஆளுநர் (2 மக் 4:28). மெனலாவு தன்னைத் தலைமைக் குருவாக நியமித்ததற்காக அரசனுக்குத் தருவதாக வாக்களித்திருந்த பணத்தைத் தரும்படி சோஸ்திராத்து வற்புறுத்திக் கேட்டும் அவரிடமிருந்து பணம் பெறமுடியவில்லை. ஆகவே, அரசன் இருவரையும் பதவியிலிருந்து நீக்கினார்.

**சோதி** (SODI - என் நம்பிக்கைக்கு உரியவர், யாவேயின் ஆலோசனையை அறிந்தவர்)

மோசே கானான் நாட்டின் வலிமையை அறிந்துவர, குலத்திற்கொருவராக அனுப்பியவர்களில் ஒருவரான காதியேலின் தந்தை. செபுலோன் குலத்தைச் சேர்ந்தவர் (எண் 13:10).

**சோதிடன்** (ASTROLOGER)

வருங்காலம் ஒரு மனிதனுக்கும் சமூகத்திற்கும் ஏப்படி இருக்கும் என்று அறிய விரும்பும் ஏக்கம் சோதிடவியலை ஊக்குவித்தது. பாபிலோனிலும் எகிப்திலும் உள்ள சோதிடர்கள் வானில் உலவும் கோள்களைத் துல்லியமாகப் பார்த்து, அவற்றின் அசைவுகள் மூலம் வருங்காலத்தில் பூமியில் என்ன நடக்கும் என்பதை முன்னறியலாம் என்று நம்பினர். பழங்கால இஸ்ராயேல் சோதிடத்தைப்பற்றி அறியவில்லை. பழைய ஏற்பாட்டில் இதைப்பற்றிக் காணப்படும் சில வாசகங்கள் இதுபாபிலோனியருக்கே உரிய பழக்கம் என்று சுட்டுகின்றன. எசாயா பாபிலோனில் உள்ள சோதிடர்களைப் பார்த்து, ''திட்டங்கள் தீட்டியே நீ சோர்வுற்றாய்; வான்வெளியைக் கணிப்போரும், விண்மீன்களை ஆய்வோரும், நிகழவிருப்பதை அமாவாசைகளில் உனக்கு முன்னுரைப்போரும், வந்து நின்று உன்னை விடுவிக்கட்டும்'' (எசா 47:13) என்கிறார். எரேமியா ''வானத்தில் தோன்றும் அடையாளங்களைக் கண்டு கலங்காதீர். வேற்றினத்தாரே அவற்றால் கலக்கமுறுவர்'' (எரே 10:2) என்று மக்களை எச்சரிக்கிறார் (காண்க தானி 2:7; 4:4; 5:7.11).

**சோதோமின் கொடி முந்திரி** (VINE OF SODOM)

நச்சுப்பழங்களைக்கொண்ட கசப்பான கொத்துக்களையுடைய திராட்சைக் கொடிக்கு மோசே இஸ்ராயேலை உப 32:32-இல் ஒப்பிடுகிறார். இது ஆரஞ்சு நிறத்தையுடையது என்று ஆசிரியர்கள் விவரிக்கின்றனர். அதன் உட்புறம் கருப்பாகவும் பொடிமயமாகவும் இருந்தமை ''பள்ளத்தாக்கின் நகரங்களின்'' அழிவைச் சுட்டுவதாகக் கருதப்பட்டது.

**சோதோமியர்** (SODOMITES)

ஆதி 18-19 பகுதிகளில் வரும் ஒரு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு ஒரே பாலினருக்குள் உடல் உறவு கொள்ளும் ஆண்களைக் குறிப்பதற்குச் சில மொழிபெயர்ப்புகளில் பயன்படும் சொல். சோதோமைச் சேர்ந்த ஆண்கள் லோத்தின் வீட்டின் முன் நின்றுகொண்டு அவ்வீட்டிற்கு வந்த இரு இளைஞர்களைத் தங்களிடம் கையளிக்குமாறு தீய எண்ணத்துடன் ''நாங்கள் அவர்களுடன் உறவுகொள்ளும்படி அவர்களை எங்களிடம் கொண்டுவா'' என்று கோருகின்றனர் (ஆதி 19:5). இவர்களது தீமை எடுத்துக்காட்டான பழமொழியாயிற்று (எசா 3:9; புல 4:6; 2 பேதுரு 2:7-10; யூதா 7). ஆனால் இச்சொல் வழிபாட்டு விலை ஆடவரைச் சுட்டுகிறதேயொழிய, சோதோமைப் பற்றிய குறிப்பைக் கொண்டிருக்கவில்லை என்பர் அறிஞர் சிலர்.

**சோதோம்** (SODOM - எரிகின்ற, அழிகின்ற)

யோர்தான் சாக்கடல் பள்ளத்தாக்கை ஒட்டிய சோதோம், கொமோரா, அதிமா, செபோவிம், சோவர் ஆகிய ஐந்து நகரங்களில் சோதோம் முதன்மையானது (ஆதி

*10:19)*; அடிக்கடி குறிப்பிடப்படுவது; தனியாகப் பதினாறுதடவையும், மொத்தத்தில் முப்பத்தியாறு தடவையும் குறிப்பிடப்படுகிறது. ஆபிரகாமிடமிருந்து பிரிந்து சென்றபோது லோத்து இப்பகுதியைத் தேர்ந்து கொண்டார். அப்போது இப்பகுதி ''ஆண்டவரது தோட்டம் போலும் எகிப்து நாட்டைப் போலும் இருந்தது'' (ஆதி *13:10*). இப்பகுதியில் சுற்றித்திரிந்தபின் இறுதியாக லோத்து சோதோமுக்கு அருகில் கூடாரம் அமைத்து வாழ்ந்து வந்தார்.

இப்பகுதி அரசர்கள், தங்களை மெசபொத்தாமிய அரசர்களான கெதர்லகோமரும் அவரது கூட்டணியும் ஆட்சி செய்ததை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர்; தோற்கடிக்கப்பட்டனர். இப்போரில் கைதியாக்கப்பட்ட தன் சகோதரன் லோத்தை மீட்க, ஆபிரகாம் சோதோமுக்கு ஆதரவாகப் போரிட்டு லோத்தை மீட்டார் (ஆதி *14*).

சோதோம் மக்கள் ஆண்டவருக்கு எதிரான மிகக்கொடிய பாவிகளாக இருந்தனர். ஆகவே சோதோமையும் அதன் அண்டை நகரங்களையும் அழிக்கப்போவதாக ஆபிரகாமுக்கு ஆண்டவர் வெளிப்படுத்தினார் *(18:16-22)*. ஆபிரகாம் சோதோம் மக்களுக்காக ஆண்டவரிடம் பரிந்து பேசி மன்றாடினார். அந்நகரில் பத்து நீதிமான்கள்கூட காணப்படாமையால் அந்நகரை அழிக்க ஆண்டவர் உறுதி கொள்கிறார் *(18:23-33)*.

சோதோமை அடைந்த ஆண்டவரின் இரு தூதர்கள் அந்நகரின் நுழைவாயிலில் லோத்து உட்கார்ந்திருப்பதைக் கண்டனர் *(19:1)*. அவர் வீட்டில் அவர்கள் தங்கியிருந்த போது, சோதோம் நகர மக்கள், விருந்தாளிகளோடு பாலின உறவுகொள்ளும்படி தங்களிடம் அவர்களை ஒப்படைக்கும்படி கோரினர். லோத்து விருந்தாளிகளைப் பாதுகாக்கும்படி, தன் புதல்விகளையே நகர மக்களிடம் கையளிப்பதாகக் கூறி மன்றாடினார். தூதுவர்கள் நகர மக்களைக் குருடராக்கி அவர்கள் செய்யவிருந்த தீச்செயலைத் தவிர்த்தனர் *(19:1-12)*. ஆண்டவர் அந்நகரை அழிக்கப் போவதை லோத்துக்கு வெளிப்படுத்தி, அவரையும் அவர் குடும்பத்தினரையும் சோதோமை விட்டு மலைப்பகுதியைநோக்கி ஓடி விடத் தூண்டினர். ஆனால் லோத்து சோவர் நகருக்குச் செல்ல அனுமதி தரும்படி வேண்டினார். அதற்கு அனுமதி அளிக்கப்பட்டது *(19:12-23)*.

லோத்து சோவரை அடைந்தவுடன், ''ஆண்டவர் வானத்திலிருந்து சோதேம், கொமோரா நகரங்களின் மேல் கந்தகமும் நெருப்பும் பொழியச்செய்தார். அந்நகரங்களையும் அவற்றைச் சுற்றியிருந்த சமவெளி முழுவதையும் அழித்தார். நகரங்களில் வாழ்ந்த அனைவரையும், நிலத்தில் தளிர்த்தவற்றையும் அழித்தார்'' *(19:24-25)*. அடுத்த நாள் காலையில் கெபிரோனுக்கு அருகிலிருந்து ஆபிரகாம் இப்பகுதியைப் பார்த்த போது ''சூளையின் புகைபோல் நிலப்பரப்பிலிருந்து புகை கிளம்பக்கண்டார்'' *(19:28)*. ஆண்டவர் ஆபிரகாமுக்காக லோத்தைக் காப்பாற்றினார் *(19:29)*.

சோதோம், கொமோரா நகரங்களின் அழிவு பற்றிய வரலாறு இஸ்ராயேல் பாரம்பரியத்தில் ஆழமாக வேரூன்றியிருந்தது. இவை இறைவன், தீர்ப்பிட்டு முழுவதும் அழிக்கப்படும் நகரங்களுக்கு எடுத்துக்காட்டாயின (உப *29:22* தொ; ஞான *10:6*; எசா *1:9*; *13:19*; எரே *20:16*; *49:18*; *50:40*; புல *4:6*; ஆமோ *4:11*; செப் *2:9*; லூக் *17:29*; 2 பேதுரு *2:6*; யூதா *7*). சோதோமின் கொடிய பாவத் தன்மை மிக இழிவானதன்மைக்கு எடுத்துக் காட்டாயிற்று (உப *32:32*; எசா *1:10*; *3:9*; எரே *23:14*; எசே *16:46-56*; மத் *10:15*; *11:23* தொ; லூக் *10:12*; திருவெளி *11:8*). ஆண்டவரின் தூதர்களிடம் சோதோம் மக்கள் தவறாக நடந்துகொள்ள முயன்றதைச் சுட்டிக்காட்டியே, இயேசு, தாமும் தம் சீடர்களும் போதித்ததைக் கேட்டுப் பயன்பெறாத நகரங்களுக்குத் தீர்வை நாளில் நேரிடுவதைப் போல் சோதோமுக்கு நேரிடுவது அவ்வளவு கடினமாய் இராது என்று கூறுகிறார் (மத் *10:15*; *11:23-24*).

சோதோமின் அடிப்படைப் பாவம் ஒரே பாலினருக்குள் புணர்ச்சி என்ற கருத்து பழைய ஏற்பாட்டு வாசகங்களில் இல்லையெனலாம்; புதிய ஏற்பாட்டில் பிற்கால நூல்களில்தான் காணப்படுகிறது (யூதா 7; 2 பேதுரு 2:6-10). உப 28:17; 1 அர 14:24; 15:12; 22:46; 2 அர 23:7; 1 திமோ 1:10-ஆகிய பகுதிகளில் சோதோமியர் என்று மொழிபெயர்க்கப்படும் எபிரேய, கிரேக்கச் சொற்கள் ஆண் ஆணோடு புணர்ச்சி கொள்வதையே (வழிபாட்டு விலைஆடவரை) குறிக்கிறது. மொழிபெயர்ப்புகள் கூறுவதைப்போல் சோதோமைச் சுட்டும் கருத்தைக் கொண்டிருக்கவில்லை.

இக்கதை சில இலக்கிய, வரலாற்றுப் பிரச்சனைகளை எழுப்புகிறது. இந்நகரங்கள் இருந்த இடங்கள், ஏல் - லிசான் தீபகற்பத்தின் தெற்கில், சாக்கடலின் தென் விரிகுடாவால் மூடப்பட்டுள்ளது என்று பொதுவாகக் கருதப்படுகிறது. ஆனால் நிகழ்ச்சியுரை, இந்நகரங்கள் கடலால் மூடப்பட்டிருந்ததாக ஒருபோதும் சுட்டவில்லை. ''ஆண்டவரின் தோட்டம் போலும்'' என்று விவரிக்கப்படும் இப்பகுதி, சாக்கடல் இப்போதிருக்கும் நிலையோடு ஒத்துப்போகவில்லை. ஆய்வுகள் யோர்தான் பள்ளத்தாக்கில் வரலாற்றுக்கு முந்திய காலத்தில், மக்கள் நெருக்கமாகக் குடியேறியிருந்தனர் என்று காட்டுகின்றன. சாக்கடல்கரை ஒருபோதும் இப்படியிருந்ததில்லை. இந்நகரங்கள் எங்கேயிருந்தன என்பதுபற்றிக் குறிப்புகள் இல்லையென்று கருத வாய்ப்பு உண்டு.

பாரம்பரியமாக இந்நகரங்கள் இருந்த இடமாகச் சாக்கடலின் தென்பகுதியிலுள்ள சிதீம் பள்ளத்தாக்கு கருதப்பட்டது. இது ஒரு காலத்தில் பசுமைமிக்கதாகத் திகழ்ந்ததாகத் தெரிகிறது. இப்பகுதி கிழக்கிலிருந்தும் தென்கிழக்கிலிருந்தும் மேற்காக ஓடும் ஐந்து ஓடைகளிலிருந்தும் நீர் பெற்றது. இப்பகுதியில் நில நடுக்கங்கள் நடந்துள்ளன. நிலக்கரியும் நில எண்ணெய்ப் பொருட்களும் இயற்கையான எரிவாயுவும் நிறையக்கிடைக்கின்றன. இந்நகரங்களின் அழிவு நில அதிர்ச்சியும் எரிமலைக் கொதிப்பும் சேர்ந்த இயற்கை நிகழ்ச்சியாக இருந்திருக்கலாம். இயற்கையான எரிவாயுவும் நில எண்ணெய்ப் பொருள்களும் சேர்ந்து எரிதல் ''சூளையின் புகைபோல் நிலப்பரப்பிலிருந்து'' கிளம்பியிருக்க வேண்டும் (ஆதி 19;28). இதையே விசுவாசமிக்க விவிலிய ஆசிரியர் இறைவனது தீர்ப்பாகக் காணுகிறார்.

இக்கதை ஆபிரகாமின் கதையோடு ஓரளவு செயற்கையாகச் சேர்க்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இந்நிகழ்ச்சி ஆபிரகாமின் காலத்தில் நடந்தது என்று உறுதியாக நிறுவ முடியாது. இக்கதையில் பல நாடோடிப் பாடல் பண்புகள் காணப்படுகின்றன. இவை ஞாபகத்துணுக்குகளால் அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது. இது ஓர் இறையியல் நிகழ்ச்சியுரை என்பது உறுதி. இந்நகரங்களின் பாவங்களுக்கான இறைவனின் தீர்ப்பு என்று இந்த அழிவு விளக்கப்படுகிறது. தீயவர்களோடு வாழும் நீதிமான்களை அழிக்காதிருப்பதற்காக யாவே தீயவர்களையும் காப்பாற்றுகிறார். ஆனால் லோத்தையும் அவரது குடும்பத்தையும் தவிர சோதோமில் ஒரு நீதிமானுமில்லை. அழிவிற்கு முன் லோத்தும் அவரது குடும்பத்தாரும் நகரிலிருந்து வெளியேறச் செய்யப்படுகின்றனர். இங்கும், பெரு வெள்ளத்திலும் இறைவனது கோபத்திற்குக் காரணம் ஒன்றே.

இந்நிகழ்ச்சி நடந்திருக்கக்கூடிய காலத்தை யூகிக்க, பாப் எத்-தாரா என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பாண்டச் சிதறல்களைச் சுட்டிக்காட்டுவர். இந்த இடம் விழாக் கொண்டாடும் இடமாகும். இங்கு கி.மு. 2300-க்கும் 1900-க்கும் இடைப்பட்ட காலத்தில் திருப்பயணிகள் வந்து போயிருக்கின்றனர். இத்தகைய பயணங்கள் நின்றுபோவது சோதோம், கொமோரா நகரங்களின் அழிவோடு ஒத்துப்போகிறது. இந்நகரங்களிலிருந்து இப்பயணிகள் வந்திருக்கவேண்டும். இந்தக் குறிப்பு ஆபிரகாம் கி.மு. 19-ஆம் நூற்றாண்டில் அல்லது 20-ஆம் நூற்றாண்டின் முடிவில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று கருத இடமளிக்கிறது.

கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு குறிப்பு கி.பி. 325-இல் நடந்த நிசேயாப் பொதுச் சங்கத்தில் பங்கெடுத்தவர்களுள், சோதோமின் ஆயரான செர்வோஸ் என்ற ஒருவர் இருந்தார் என்று கூறுகிறது. இது ஓர் ஆயருக்கு வினோதமான பட்டமாகும். சாக் கடலின் மேற்குக் கரையில் சோதோம் மீண்டும் கட்டப்பட்டதா? அதே குறிப்பு ''அராபிய சோதோமுக்கு'' அருகில் எங்கத்தி (ஏங்கேதி) இருந்ததாகக் கூறுகிறது. ஆனால் கி.பி. 381-இல் சோவாரின் ஆயர் இப்பகுதியின் பிரதிநிதியாகத் திகழ்ந்தார்.

இக்கால இஸ்ராயேல்நாடு சோதோம் என்ற புதியநகரை எபெல்-சுதுமுக்கு வடக்கில் நிறுவியது. இதன் அருகில் 1953-இல் இஸ்ராயேலின் முதல் எண்ணெய்க் கிணறு தோண்டப்பட்டது. ஆகவே சோதோமுக்கு நிலஎண்ணெயோடு உள்ள தொடர்பு நாலாயிரம் ஆண்டுக்கால பழமையுடையதாகும்.

**சோபகு** (ZOPHAH)

ஆசேர் குலத்தின் ஆற்றல்மிக்க வீரரும் ஒரு குடும்பத்த தலைவரும் ஆவார் (1 நாள் 7:35-36).

**சோபா** (ZOBAH - கூடாரம் அடித்துத் தங்குதல்)

சோபா லெபனோனுக்கும் எதிர் லெபனோனுக்கும் இடையில் இருந்த பள்ளத்தாக்கில் இருந்த எமோரியரின் நகரம். சவுல் சோபாவின் அரசனோடு போரிட்டார் என்று 1 சாமு 14:47 கூறுகிறது. தாவீது சோபாவின் மன்னனான அததேசரோடு போரிட்டார் (2 சாமு 8:3.5.9; காண்க 1 நாள் 18:3.5.9). அததேசரின் நகரங்களாகிய பெற்றகு, பேரோத்தா ஆகியவற்றிலிருந்து தாவீது மிக அதிகமான செம்பைக் கொண்டுவந்தார் என்று 2 சாமு 8:8 குறிப்பிடுகின்றது. இதன் பின் சோபா அம்மோனியரோடு ஒப்பந்தம் செய்து கொண்டது. அம்மோனியர் ஆராம் - பெத் - இரகோபு, ஆராம்-சோபா, மாக்கா ஆகியவற்றிலிருந்து வீரர்களை வாடகைக்கு அமர்த்தினர் என்று 2 சாமு 10:6 குறிப்பிடுகிறது (காண்க 1 நாள் 19:6). இவர்கள் எல்லாம் தாவீதின் படைத்தலைவரான யோவாபால் கொல்லப்பட்டனர். தாவீதின் ஆற்றல்மிக்க வீரர்களும் சோபாவைச் சேர்ந்த நாத்தானின் மகனான இகாலும் ஒருவராவார் (2 சாமு 23:26). சோபாவின் சிற்றரசர்களில் ஒருவரான இரசோன் சாலமோன் அரசரின் எதிரி ஆவார் (1 அர 11:23).

**சோபாக்கு** (SHOBACH, SHOPHACH - விரிவாக்குகிற)

தாவீதுக்கு எதிராகப் போர்தொடுத்த சோபாவின் அரசனான அததேசரின் படைத் தலைவன். இஸ்ராயேல் முதலாம் சீரிய - அம்மோனியப் போரில் தோல்வியுற்ற பிறகு அததேசர் இன்னும் பல அரமேயர்களைப் படையில் சேர்த்து அதற்குச் சோபாக்கைத் தலைவனாக்கித் தாவீதை எதிர்த்துப் போருக்கு அனுப்பினார் (1 நாள் 19:16-18). கேலாமில் (ஏலாம்) நடந்த போரில் தாவீது சீரியர்களை முழுவதுமாக அழித்து, அததேசரின் ஆட்சிக்கு உட்பட்டவைகளைத் தங்கள் வசமாக்கினர். இப்போரில் சோபாக்கு இறந்தார் (2 சாமு 10:16-18).

**சோபாபு** - (பகையான)

1. காலேபின் புதல்வர்களில் ஒருவர்; அசுபா வழிப் பிறந்தவர் (1 நாள் 2:18).

2. எருசலேமில் தாவீதுக்குப் பத்சேபா மூலம் பிறந்த நான்கு புதல்வர்களில் ஒருவர் (2 சாமு 5:14; 1 நாள் 3:5; 14:4).

**சோபாய்** (SHOBAI - கைதிகளை நடத்திச் செல்பவர்)

பாபிலோனிய அடிமைத்தனத்தினின்று செருபாபேலோடு திரும்பிய வாயிற்காவலரின் குடும்பங்களில் ஒன்று (எஸ் 2:42; நெகே 7:45).

**சோபாய்** (ZOPHAI)

எல்கானாவின் மகன். கோகாத்தியக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு லேவியர். சாமுவேலின் மூதாதையர் (1 நாள் 6:26). 6:35-இல் இவர் சூப்பு என்றழைக்கப்படுகிறார்.

**சோபால்** *(SHOBAL - கூடை, ஓட்டம்)*

*1.* சேயிரின் இரண்டாவது புதல்வன்; ஏதோமில் குடியிருந்த கோரியரின் தலைவன் *(ஆதி 36:20.23.29; 1 நாள் 1:38.40).*

*2.* யூதாவைச் சேர்ந்தவர் *(1 நாள் 4:1-2).* கூரின் மகன். கிரியத்து - எயாரிமில் வாழ்ந்த காலேபின் சந்ததியினருக்கு மூதாதையர் *(1 நாள் 2:50.52).*

**சோபி** *(SHOBI - கைதி)*

அம்மோனிய இளவரசன்; அரசன் நாகசின் மகன். அப்சலோமின் கலகத்தினால் தாவீது மகனயிம் என்ற இடத்தில் இருந்த போது லோதபார் ஊராரான அம்மியேலின் மகன் மாக்கிரோடும், ரோகலிம் ஊராரும் கிலயாதைச் சார்ந்தவருமான பர்சில்லாயோடும் சேர்ந்து சோபி தாவீதுக்கு உணவும் மற்றப் பொருட்களும் கொடுத்து உதவினார் *(2 சாமு 17:27).*

சோபியின் தந்தைக்குப் பிறகு அவனது சகோதரர் கானூன் (ஆனூன்) அம்மோனியர் நாட்டை ஆட்சி செய்தார். தாவீது அனுப்பிய தூதுவர்களைக் கானூன் அவமானப்படுத்தியதால் இருவருக்கும் போர் மூண்டது. தாவீது அம்மோனியரை அழித்து இரபாவைக் கைப்பற்றினார். கானூன் இடத்தில் சோபி தாவீதால் அரசனாக நியமிக்கப்பட்டார் *(2 சாமு 17:27-29; காண் 2 சாமு 10-12; 1 நாள் 19-20:3).*

**சோபிம்** *(ZOPHIM - காவல்காரர்கள்)*

இது சாக்கடலின் வடகிழக்கு எல்லைக்கு அருகிலுள்ள உயர்ந்த இடம். இங்குதான் பாலாக்கு இஸ்ராயேலரைச் சபிக்கும்படி, பிலயாமைக் கூட்டிக் கொண்டு போனார். ''பாலாக்கு பிஸ்காவின் கொடு முடியில் சோபிம் வயல்வெளிக்குக் கொண்டு போனார்'' *(எண் 23:14).* அனேகமாக இச்சொல் ஒரு தனிப்பட்ட இடத்தைக் குறிக்காது. எனவே இதை வெறுமனே ''காவற்காரர்களின் இடம்'' என்றழைக்கலாம். இது மோவாபின் வட சமவெளியில் உள்ளது.

**சோபேக்கு** *(SHOBEK - வெற்றிவீரர்)*

எஸ்ராவின் உடன்படிக்கையில் கையெழுத்திட்டுள்ள மக்கள் தலைவர்களுள் ஒருவர் *(நெகே 10:24).*

**சோபேபா** *(ZOBEBAH - சோம்பலான)*

யூதாவின் குலத்தைச் சேர்ந்த கோசுவின் மகன் அல்லது ஒரு துணைப்பிரிவு *(1 நாள் 4:8).*

**சோப்பத்தர்** *(SOPATER - தந்தை மீட்கப்பட்டார்)*

இவர் பவுல் எருசலேமுக்குச் சென்ற இறுதிப்பயணத்தில் அவருடன் சென்ற துணையாளருள் ஒருவர் *(அ.ப.20:4).* இவர் பெரோயாவைச் சேர்ந்தவர்; பீருவின் மகன். இவர் எருசலேம் திருச்சபைக்கு நிதிக்காணிக்கையை எடுத்துச் செல்ல, திருச்சபைகளால் நியமிக்கப்பட்டவர்களுள் ஒருவராக இருக்கலாம் *(1 கொரி 16:3-4).* இவரும் சோசிபத்தரும் ஒரே ஆளாக இருக்கலாம் *(உரோ 16:21).*

**சோப்பார்** *(ZOPHAR)*

சோப்பார், யோபுவின் மூன்று நண்பர்களுள் நாமாயர் என்று அழைக்கப்பட்டவர் *(யோபு 2:11; 11:1; 20:1; 42:9).*

யோபு *11:1; 20:1*-இல் தொடங்கும் இவரது 'ஆறுதல்' வார்த்தைகளில் ஒத்துணர்வு இல்லை. இவரது உரைகள் யோபுவின் துன்பத்தைப் புரிந்து கொண்டதாகக் காட்டவில்லை. மூன்றுநண்பர்களில் இவருக்குமட்டும் இரண்டு உரைகளே தரப்பட்டுள்ளன. ஆகவே அறிஞர்கள் சிலர் யோபுவின் உரையில் மூன்றாவது உரையைக் *(27:13-23)* காண முயல்கின்றனர்.

**சோமேர்** *(SHOMER - காவல்காரன்)*

*1.* யூதாவின் அரசனான யோவாசைக் கொன்ற அவனது பணியாளர்களில் ஒருவனான யோசபாத்தின் தாய் *(2 அர 12:21; 2 நாள் 24:26).*

*2.* ஆசேரின் குலத்தில் ஓர் இனத்தின் முன்னோர். கெபரின் (எபேர்) புதல்வர்களில்

ஒருவர் *(1 நாள் 7:32). 7:34*-இல் இவர் செமேர் *(3)* என்றும் அழைக்கப்படுகிறார்.

**சோம்பலான, சோம்பேறி** *(SLOTHFULNESS, SLUGGARD)*

''தட்டிக்கழித்தல்'', ''சோம்பேறியாக இரு'' போன்றவைகளின் எபிரேய மூலம். அடிக்கடி சோம்பேறி என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது *(பழ 15:19; 19:24; 21:25; 22:12; 24:30-34; 26:13-15)*. ''சோம்பலான'', ''சோம்பேறித்தனம்'', ''சோம்பேறி'' போன்ற சொற்கள் பழைய ஏற்பாட்டில் ஞான இலக்கியத்தில் மட்டும் காணப்படுகின்றன. சோம்பேறித்தனம் முட்டாள்தனமாக புத்தியுடைய ஒருவன் அழிவு பயமுறுத்தும் போதும் ஒன்றும் நிகழாததுபோல இருப்பதை விவரிக்கின்றது *(பழ 24:30-34)*. ஞான இலக்கியங்களில் சோம்பேறியை அறிவுள்ளவனுக்கு எதிராகக் காட்டப்பட்டுள்ளது. அறிவுள்ளவன் கவனமாய்த் தன்னுடைய வாழ்க்கையை விவேகமுள்ள ஞானத்தைக் கொண்டு ''விழிப்படைந்த சுயநலத்துடன்'' திட்டமிடுவான். இந்த எதிர்மறைகள், இரண்டு எதிரான போக்குகளை எடுத்துக்கூறுகின்றன. பழமொழி ஒரு மனிதனுக்கு வாழ்க்கையின் இரண்டு வழிகள் திறந்துள்ளன என்பதைக் காட்டுகின்றது: ஞானத்தின் வழி, மடமையின் வழி. இஸ்ராயேலின் இந்தப் படிப்பினையானது மற்ற மேற்காசிய ஞான அமைப்புக்களைவிட அதிகமாகக் கோட்பாட்டுப் பாதிப்பினால் இப்படிப்பட்ட வளர்ச்சியடைந்தது. இந்தக் கோட்பாட்டின்படி கடவுளுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்தால் அவர்களுக்குப் பொருட்செல்வமும் நீண்ட வாழ்க்கையும், கீழ்ப்படியாதவர்களுக்கு எல்லா நேரங்களிலும் துன்பமும் கிடைக்குமென்பதாகும். இப்படியாக இஸ்ராயேலில் சோம்பேறிகளின், முட்டாள்களின் வழிகள் அநீதி புரிந்தவர்களின் வழியாகும்; கடுமையான உழைப்புடைய, ஞானமுள்ளவர்களின் வழியானது, கடவுள்முன் நேர்மையுள்ளவர்களின் வழியாகும். சோம்பேறியின் சோம்பேறித்தனத்தில், அவன் வறட்டுச் சிரிப்புக்கு உள்ளாகும்போதுகூட, இறையியல் முக்கியத்துவம் உள்ளது. அவன் இறைவனது இகழ்ச்சிக்கு உரியவனாகிறான் *(சங் 2:4)*. சோம்பேறியின் பகடிப்படத்தை *பழ 10:26; 19:24; 21:25; 22:13; 26:14*-இல் காணலாம்.

புதிய ஏற்பாட்டில் தெளிவான இதனுடைய எதிரொலியை *மத் 25:26*-இல் காண்கின்றோம். இங்கு ''கெட்ட ஊழியன், சோம்பேறி''; ''விசுவாசமுள்ள நல்ல ஊழியனுக்கு'' எதிராகக் காட்டப்பட்டிருக்கின்றான். அத்தியாயம் முழுவதிலும், ஞான இலக்கியத்தின் இரண்டு பாதைகளும் மேலோட்டமாகப் புதிய ஏற்பாட்டு இறுதிக்கால இயலுக்குப் பின்னணியாகிறது. முட்டாளின், சோம்பேறியின், அநீதிபுரிபவனின் வாழ்க்கையானது ''வெளி இருளில்'' கசப்பான புலம்பலில் முடிவடையும் *(25:30)*; அதே நேரத்தில் ஞானம், அறிவாளியின் கடுமையான உழைப்பு, நேர்மை ஆகியவற்றின் வழி, மகிழ்ச்சியான இறுதிக்கால விருந்தில் பங்கு கொள்வதில் *(25:10)*, தலைவனின் மகிழ்ச்சியில் *(25:21.23)*, உலகம் தோன்றியதுமுதல் ஏற்பாடு செய்துள்ள அரசில் *(25:34)*.... பங்கு கொள்வதில் முடிகிறது.

**சோம்பல்** *(IDLENESS)*

நேர்மையான கடமைகளைப் புறக்கணித்தல். பிறரது தாராளத் தன்மையையும் உழைப்பையும் சார்ந்திருத்தல். எபிரேய ஞான இலக்கியங்களின் ஒரு போதனை, சோம்பல் வறுமைக்கும் ஏழ்மைக்கும் இட்டுச் செல்லும் என்பதாகும் *(பழ 19:15; திருவுரை 10:18; தோபி 4:13)*. மாண்புள்ள மனைவி ''தன் இல்லத்தின் அலுவல்களில் கண்ணும் கருத்துமாய் இருப்பாள்; உணவுக்காகப் பிறர் கையை எதிர்பார்த்துச் சோம்பியிருக்க மாட்டாள்'' *(பழ 31:27)*.

பவுல் தெசலோனிக்கேயில், தான் அளித்த படிப்பினைக்கு ஏற்ப நடவாமல் சோம்பித் திரிபவர்களைக் கண்டிக்கிறார் *(2 தெச 3:6-8)*. இவர்கள் பொறுப்புகளை ஒதுக்கிவிட்டு, எவ்வேலையையும் செய்யாமல், இங்கும் அங்கும் சோம்பித் திரிந்து, பிறர் வேலையில் தலையிட்டு, தங்களின் பிழைப்புக்கான தேவைகளைக் கடினமாக உழைக்கும் பிற

அன்பு மிக்க சகோதரர்களின் மேல் சுமத்துவர் (3:11). இவர்கள், உழைக்க மனமில்லாவிட்டால் உண்ணலாகாது (3:10). தெசலோனிக்கேயர்களிடையே இந்நிலை நீண்டகாலமாக இருந்திருப்பதாகத் தெரிகிறது. இது இறுதிக்காலத்தை எதிர்பார்த்ததின் விளைவு என்று வெறுமனே கூறிவிடமுடியாது.

**சோம்பு** (DILL)

இது சீரகத்துடன் சேர்ந்து வருவதால் இது உணவிற்குச் சுவையூட்டப் பயன்படுத்தப்பட்ட ஒருவகை விதை என்று தெரிகிறது (மத் 23:23). இதை உளுந்து என்றும் கூறுவர் (எசா 28:25.27). இது வாசனையாகவும் தவிட்டு நிறத்துடன், நீண்ட வட்ட வடிவத்திலுமுள்ள ஒரு விதை. இது சீரகத்தைப் போன்றதல்ல. இது உணவிற்கு வாசனை சேர்க்கப் பயன்படுத்தப்படுவதுடன் வாயுவைத் தடுக்கும் மருந்தாகவும் பயன்படுத்தப்படுகிறது. மத் 23:23-இல் சொல்லியுள்ளது போல இதிலும் பத்தில் ஒரு பகுதியைக் கடவுளுக்குச் செலுத்த வேண்டியிருந்தது (காண்க உப 14:23). லூக் 11:42-இல் சோம்புக்குப் பதிலாகக் கறியிலை என்ற சொல் தமிழ் மொழிபெயர்ப்பில் பயன்படுத்தப்பட்டுள்ளது. மூலத்தில் இரண்டு வாசகங்களிலும் சோம்பு என்ற சொல்லே பயன்பட்டிருக்கலாம்.

**சோரா** (ZORAH - குளவி)

சோரா, வாடி எஸ் - சாரார் (விவிலிய செரேக்கு பள்ளத்தாக்கு) என்பதன் வடபகுதியில் பெத் சமேசுக்கு வடக்கில் 3 கி.மீ. தொலைவிலுள்ள சாராவாகும். சோரா முதலில் தாணுக்குச் சொந்தமாய் இருந்தது (யோசு 19:4; காண்க நீதி 13:2; 18:2). பிறகு யூதாவின் செப்பேலாவைச் சேர்ந்த நகரமாயிற்று (யோசு 15:33). சிம்சோனின் தந்தை மனோவாகு சோராவிலிருந்து வந்தவர் (நீதி 13:2). சிம்சோன் சோராவுக்கும் எசுத்தாவோலுக்கும் இடையிலுள்ள பள்ளத்தாக்கில் இருக்கையில் ஆண்டவரின் ஆவி அவர் மேல் இருப்பதை உணர்ந்தார் (நீதி 13:25). சிம்சோன் இறந்த பிறகு சோராவுக்கும் எசுத்தாவோலுக்கும் இடையிலுள்ள பள்ளத்தாக்கிலிருந்த அவனுடைய தந்தையின் கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டார் (நீதி 16:31).

இஸ்ராயேல் மக்கள் வடக்கு நோக்கிச் சோராவிலிருந்தும் எசுத்தாவோலிலிருந்தும் வந்த தாண் கோத்திரத்து உளவாளிகள் இலாயிசின் ஒரு பகுதியை ஆராய்ந்தபின், அவர்களின் மக்களையும் இலாயிசுக்குக் கூட்டிக்கொண்டு போயினர். வழியில் மீக்கா தன் குருவாக நியமித்திருந்த ஒரு லேவியனைக் கடத்திக்கொண்டு போயினர். இலாயிசோடு போர் புரிந்தபின் மீக்காவிடமிருந்து எடுத்துச் சென்ற சிலைகளைத் தாணின் வழிபாட்டு இடத்தில் நிறுவினர்.

யூதா வம்சத்தவரைக் குறிப்பிடும் அட்டவணையில் சோரா குலத்தினர் கிரியத்து எயாரிமின் வம்சத்தார் என்று குறிப்பிடப்படுகின்றனர் (1 நாள் 2:53-54; 4:2; காண்க நீதி 18:2). ரெகபயாம் இதனைப் பலப்படுத்தினார் (1 நாள் 11:10). பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டவர்கள் திரும்பி வந்து இங்குக் குடியேறினர் (நெகே 11:29).

**சோராவியர்** (ZORATHITES)

சோபாலின் வம்சத்தவர். இவர்கள் சோராவில் வாழ்ந்தனர் (1 நாள் 2:53).

**சோரியர்** (ZORITES)

யூதாவின் வழிவந்த சல்மாவின் வழித்தோன்றல்கள் (2 நாள் 2:45). இவர்கள் முன் வரியில் வரும் சோராவியரிலிருந்து வேறுபட்டவர்களாகத் தெரிகிறது.

**சோரேக்கு** (SOREK - திராட்சைத் தோட்டம், பொறுக்கி எடுக்கப்பட்ட திராட்சைப் பள்ளத்தாக்கு)

நீதிபதிகளில் ஒருவரான சிம்சோனின் மனைவி தெலீலா வாழ்ந்த இடம் சோரேக்குப் பள்ளத்தாக்கு என்ற இடமாகும் (நீதி 16:4). இது பெத் செமேசு என்பதனால் பாதுகாக்கப்பட்டது. கோட்டைகளுடன் கூடிய இந்நகரம் இஸ்ராயேல் - பெலிஸ்திய எல்லையில் அமைந்திருந்தது. முதலில் இஸ்ராயேல் வசமிருந்தாலும் நீதிபதிகள் காலத்

தில் பெலிஸ்தியர் ஆட்சியில் இருந்தது. இவ்வழியாகவே பெலிஸ்தியர் தாங்கள் கவர்ந்து சென்ற பெட்டகத்தை அனுப்பி வைத்தனர் *(1 சாமு 4:12)*. பிற்காலத்தில் இவை யூதா அரசோடு இணைந்தன.

இப்பள்ளத்தாக்கு வாடி எஸ் - சரார் என்பதாக அடையாளம் காட்டப்படுகிறது. இது பெத் - செமேசின் சுற்று வட்டாரத்தி லிருந்து (எருசலேமுக்கு மேற்கு, தென்மேற் கில் 20 கி.மீ.) வடமேற்காக மத்திய தரைக் கடலைநோக்கி ஓடி அசோதுக்கும் தேல் அவீ வுக்கும் மத்தியில் கடலில் சேர்கிறது. ஓடை யின் வடகரையிலுள்ள கிர்பெத்து சுரிக்கு பழங்காலப் பெயரைத் தாங்கி நிற்கிறது. பழங்காலச் சோரேக்கு இருந்த இடமாக இருக்கலாம். யாப்பாவிலிருந்து எருசலேம் செல்லும் இக்கால இரயில்பாதை இந்த ஓடையைப் பின்பற்றுகிறது.

**சோவா** (SHOA - பலனுள்ள, செல்வமிக்க)

எசே *23:23*-இல் கொடுக்கப்பட்டுள்ள குறிப்பிடப்பட முடியாத ஒரு மக்கள் இனம். பாபிலோனியர், கல்தேயர், பெக்கோது ஆகி யோருடன் இவர்களும் யூதாவை எதிர்த் தெழுவர் என்று கொடுக்கப்பட்டுள்ளது. இவர் கள் கூலிப்படையினராக இருக்கலாம். ஒரு நாடோடி அரமேய இன்மாகிய சுத்துவைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம்.

**சோவார்** (ZOAR - சிறிய)

லோத்து வாழத் தேர்ந்துகொண்ட ''சம வெளி நகரங்களில்'' சோவாரும் ஒன்று (ஆதி *13:12; 19:29*). இது மற்ற நான்கு நகரங்க ளோடு, நான்கு கீழ்த்திசை மன்னர்களால் தாக்கப்பட்டு அடிமையாக்கப்பட்டது (ஆதி *14:1-12*). இங்கு 'பேலாவின்' அரசன் எனச் சோவாரின் அரசன் குறிப்பிடப்பட்டுள்ளார். 'பேலா' என்பது சோவாரின் அரசனின் பெய ராகவோ, சோவாரின் பழைய பெயராகவோ இருக்கலாம்.

ஆண்டவர் சோதோம், கொமோரா நகரங் களை அழிக்க எண்ணியபோது லோத்தும், அவருடைய குடும்பத்தாரும் காப்பாற்றப் பட்டனர் (ஆதி *18:20-19:17*). லோத்து மலை களுக்குப் போய்ச் சேரமுடியாது என்று அஞ்சி அருகிலிருந்த ''சிற்றூருக்குச்'' சென் றார் (ஆதி *19:18-21*). அவ்வூர் சோவார் என்று அழைக்கப்பட்டதாகப் பாரம்பரியம் கூறுகின் றது. இங்கும் தங்க அஞ்சி லோத்து மலை களுக்கு ஓடிப்போனார் (ஆதி *19:30*). இங்கு தான் லோத்தின் மூலம் அவருடைய மூத்த மகளுக்கு 'மோவபு' பிறந்தார். இவ்வூர் மற்ற நகரங்களைப்போல் நெருப்பால் அழிக்கப் படவில்லை என்று கருதப்படுகிறது. ஏனெ னில் ஆண்டவர், ''அந்நகரை நாம் அழிக்க மாட்டோம்'' என்று கூறியிருந்தார் (ஆதி *19:21*). இதை நாம் ஏற்றுக்கொண்டால், சோவார் சமவெளியில் இல்லை என்று கொள்ள வேண்டும். ஏனெனில் சமவெளியி லிருந்த ஊர்களை ஆண்டவர் அழித்துவிட் டார்.

இதைப் பற்றிப் பலகருத்துக்கள் இருந்தா லும், பிற்காலத்தில் சோவார் என்ற ஒரு நகரம் இருந்தது. ஆண்டவர் மோசேக்கு நெபோ மலைமீதிருந்து தென்னாடுகளை யும், சோவார் வரையிலும் காண்பித்தார் (உப *34:3*). எசாயா. (கி.மு. *700*) எரேமியா (கி.மு. *600*) இவர்கள் காலத்திலும் சோவார் இருந்தது. மோவாபிலிருந்து அகதிகள் சோவாருக்கு வந்தனர். மோவாபின் அழி வின் அழுகுரல் சோவார் வரை கேட்டது (எசா *15:5*; எரே *48:4.34*).

யோசிப்பசு (கி.பி. *37-93*) அரேபியாவி லுள்ள சோவாராவைப் பற்றிக் குறிப்பிடு கின்றார். பின் சார் சான் மண்டேவியே அவருடைய நாட்களில் (கி.பி. *1322-56*) சோவார் ஒரு குன்றின்மீது அமைந்திருந்ததா கக் குறிப்பிடுகின்றார். இது இருந்த இடத்தை உறுதியாகக் காட்டமுடியாது. ஆயினும் சாக்கடலுக்குத் தெற்கில் *8* கி.மீ. தொலைவிலுள்ள செயில் ஏல்-குராகியின் (செரேது ஓடை) முகத்துவாரத்துக்கருகில் உள்ள இக்கால எஸ்-சாப்பியைச் சுற்றி அடையாளம் காட்டப்படும்.

**சோவான்** (ZOAN)

இது கெபிரோன் (எபிரோன்) அமைக்கப் பட்டபின் 7 ஆண்டுகள் கழித்து அமைக்கப் பட்ட எகிப்திய நகரமாகும் (எண் *13:22-23*). சோவான் சமவெளியில் யாவே பல புதுமை கள் செய்ததாகக் கருதப்படுகிறது (சங் *78:12.43*). சோவான் நகரத்தலைவர்கள் எசா *19:11.13*-இல் எச்சரிக்கப்படுகின்றார்கள். இங்குப் பல அரசாங்க அதிகாரிகள் தங்கி இருந்தனர் (எசா *30:4*). எசேக்கியேல் அதை எரித்துவிடுவதாக அச்சுறுத்துகிறார் (எசே *30:14*). பல பெயர்களுள்ள ஓர் எகிப்திய நகரமாகும். இந்நகரம் அவாரிசு என்ற பெய ரில் கைக்சோஸ் அரசர்களின் இருப்பிடமாக வும், இஸ்ராயேலர் தங்கியிருந்த கோசேன் என்ற இடத்திற்கு அருகில் இருந்ததாகவும் கருதப்படுகிறது. 18-ஆம் அரசமரபைத் தோற்றுவித்த முதலாம் அக்மோசு அவா ரிசை அழித்தார். 19-ஆம் அரசமரபு வரையி லும் இங்கு மக்கள் வாழவில்லை. 19-ஆம் அரசமரபின் தூண் சாசனத்திலிருந்து இந்நக ரம் அது அமைக்கப்பட்ட 400-ஆவது ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடியது என் பது தெரிகின்றது. தூணின் காலம் கி.மு. *1320-1310* என்று கணிக்கப்பட்டால் அவாரிசு நகரம் 1720-1710-இல் நிறுவப்பட்டதாகும். 19-ஆவது அரசமரபில் இந்நகரம் மீண்டும் கட்டியெழுப்பப்பட்டது. இதில் பெரும்பா லான வேலைகள் இண்டாம் இராமசேசால் செய்யப்பட்டன. இந்நகரத்திற்கு இராமசே சின் நகர் என்ற பொருளில் பி-இராமசேசு என்ற பெயர் இடப்பட்டது (யாத் *1:11*). இந்நகரம் கி.மு. *1100*-க்குப்பின் தானிசு என்று அழைக்கப்பட்டது. தானிசு 21-23,25-ஆவது அரச மரபுக் காலத்தில் அரச இருக்கையாக இருந்தது. அசீரிய மன்ன னான அசூர்பானிபால் என்பவனால் அழிக் கப்பட்டது (கி.மு. *668*).

அறிஞர் பலர் வடகிழக்கு எகிப்தில் மென் சாலே ஏரிக்குத் தெற்கிலுள்ள சான் ஏல் - ஆகார் என்ற இடத்தில் தானிசு இருந்ததாகக் கருதுவர். மற்றவர்கள் அதே பகுதியில் குவான்தீர் என்ற இடத்தைச் சுட்டிக்காட்டு வர். பின்னது பாலஸ்தீன எல்லைக்கு வெகு அருகில் இருந்தது. இரு நாட்டிலும் ஆதிக் கம் செலுத்திய கைக்சோசுகளுக்கு இது வலிமை மிக்க இடமாகும். இதே சாதகமான புவியியல் அமைப்பு, தெபேசைவிட இந்த இடத்தைத் தன் அரச இருப்பிடமாகத் தேர்ந் தெடுக்க இரண்டாம் இராமசேசைத் தூண்டி யது. அகழ்வாய்வுகள் கைக்சோசின் கோட் டைகள், இராமசேசின் பெரும் கட்டடங்க ளின் சிதைவுகள், 400-வருடத் தூண் ஆகிய வற்றை வெளிக் கொணர்ந்துள்ளன. கைச் சோசுகளின் கடவுளான சேத்துக்கு 2-ஆம் இராமசேசு ஒரு பெரிய கோவில் கட்டினார். இக்கடவுளிடமிருந்து தங்கள் குடும்பம் வந்த தாக இவர் நம்பினார்.

**சோற்றாய்** (SOTAI)

நாடு கடத்தலிலிருந்து செருபாபேலோடு திரும்பிவந்த சாலமோனின் ஊழியர்களில் ஒரு குடும்பத்தின் தலைவர் (எஸ் *2:5*; நெகே *7:5*).

# ஸ்

**ஸ்கேவா** (SCEVA - *பொருத்தப்பட்ட*)

பவுலின் அருஞ்செயல்களைப் பார்த்துத் தாங்களும் இயேசுவின் பெயரைப் பயன் படுத்திப் பேயோட்டுவதில் யூதத்தலைமைக் குருக்களில் ஒருவரான ஸ்கேவாவும் அவரது ஏழு பிள்ளைகளும் ஈடுபட்டனர் (*அ.ப. 19:11-20*). பொல்லாத ஆவியால் பிடிக்கப் பட்டவன் இவர்களைத்தாக்க இவர்கள் ஆடையிழந்து ஓட வேண்டியதாயிற்று. இவர்களுக்கு நேர்ந்த கதியை எண்ணிய விசுவாசிகள் தங்கள் விசுவாசத்தை உறுதிசெய்து கொள்ள வேண்டியதாயிற்று. இயேசுவின் மேல் அவர் உயிருள்ள கடவுளின் ஒரே மகன் என்ற விசுவாசம் இல்லாமல் அவரது பெயரைப் பயன்படுத்துபவர்கள் ஸ்கேவாவின் நிலையை அடைவர்.

**ஸ்கூத்தோபோலி** (SCYTHOPOLIS - *சித்தியரின் நகரம்*)

பெத்சான் என்பதின் கிரேக்கப்பெயர். இது எருசலேமுக்கு வடகிழக்கில் 120 கி.மீ. தொலைவிலுள்ள தெக்கப்போலியின் முக்கிய நகரம் (*2 மக் 12:29-30*).

காண்க: பெத்சான்

**ஸ்தாக்கி** (STACHYS - *தானிய மணி*)

உரோமையர் திருமுகத்தில் பவுலால் வாழ்த்துச் சொல்லப்பட்ட ஒரு கிறிஸ்தவன். ''என் அன்புள்ள'' என்ற அடைமொழியுடன் இவரைப்பவுல் குறிப்பிடுகின்றார் (*உரோ 16:9*).

**ஸ்தேவானா** (STEPHANAS - *மகுடம் தாங்கியவர், முடி தாங்கியவர்*)

பவுலால், கொரிந்தில் திருமுழுக்கு கொடுக்கப்பட்ட சிலரில் ஒருவர். இவர் வீட்டார் அனைவரும் இவருடன் திருமுழுக்குப் பெற்றனர். இவர்களைப் பவுல் ''அக்காயா நாட்டின் முதற்கனி'' (*1 கொரி 16:15*) என்று குறிப்பிடுகின்றார்.

ஸ்தேவான், பொர்த்துனாத்து, அக்காயிக்கு ஆகியோர் தன்னைப் பார்க்க வந்தது குறித்துப் பவுல் மகிழ்கின்றார். இவர்களின் நேர்மைக்காகவும், பணிக்காகவும் பவுல் இவர்களைப் பாராட்டுகின்றார். இவர்களின் தலைமையைப் பின்பற்றுமாறு கொரிந்திய மக்களுக்கு அறிவுறுத்துகின்றார் (*1 கொரி 1:17-18*).

அனேகமாக இவர்கள்தான் கொரிந்திய மக்கள் பவுலுக்கு எழுதிய மடலை அவரிடம் கொடுத்துவிட்டு (*7:1*), பவுல் கொரிந்திய திருச்சபைக்கு எழுதிய முதல் மடலைப் (*1 கொரிந்தியர்*) பெற்றுச் சென்றிருக்க வேண்டும். இவர்கள் திருச்சபையில் அதிகார பூர்வமாக எந்தப் பதவியும் வகித்தனரா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் இவர்களின் செயலும், குறிக்கப்பட்டிருக்கும் விதமும் தளப்பணிக்கு முதல் படி என்று கூறலாம்.

**ஸ்தேவானின் வெளிப்பாடு** (STEPHEN, REVELATION OF)

இந்தப் போலி வெளிப்பாட்டு நூல் பவுலின் வெளிப்பாடு, தோமையாரின் வெளிப்பாடு ஆகியவற்றுடன் செலேகியன் சட்டத்தால் கண்டனம் செய்யப்பட்டது. இதை ஸ்தேவான் எழுதியதாகக் கூறப்பட்டது. இந்நூல் ஸ்தேவான், நிக்கோதேம், கமாலியேல் ஆகியவர்களின் உடல் கண்டெடுக்கப்பட்டதைப் பற்றியதாகும். எருசலேமுக்கு அருகிலுள்ள கபார்கமலா என்னும் ஊரைச் சார்ந்த லூசியன் (கி.பி. 415) என்ற குருவால் சொல்லப்பட்ட கதை என்று ஊகிக்கப்படுகிறது. இந்நூலை மணிக்கேயர்கள் போற்றிப் பயன் படுத்தியதாகச் சிக்கிடசு செனென்சிசு (கி.பி. 1593) கூறுகிறார். இந்நூல் இப்போது கிடைக்கவில்லை.

**ஸ்தேவான்** (STEPHEN - *மணிமுடி, மலர் வளையம்*)

தொடக்கத் திருச்சபையில் ''சீடர்களின் தொகை பெருகவே அவர்களிடையே கிரேக்க மொழி பேசுவோர், நாள்தோறும் நிகழும் அறப்பணியில், தங்கள் கைம்பெண்

கள் கவனிக்கப்படவில்லையென எபிரேய மொழி பேசுவோருக்கு எதிராக முறையிட்ட னர்''. இக்குறையை நீக்க, அப்போஸ்தலர்க ளின் கட்டளைக்கிணங்கிச் சீடர்கள் தங்களி டையே ''நன்மதிப்புள்ளவர்களும் தேவ ஆவியும் ஞானமும் நிரம்பப் பெற்றவர்களு மான எழுவரைத் தேர்ந்தெடுத்து'' அப் போஸ்தலர்கள் முன்நிறுத்த, அவர்கள் செபம் செய்து இவ்வெழுவர்மேல் கைகளை விரித்து அறப்பணிக்காக இவர்களை நியமித் தனர் (அ.ப. 6:1-6). இவர்களில் முதலாவது குறிக்கப்படுபவர் ஸ்தேவான் ஆவார். இவர் மட்டுமே ''விசுவாசமும் பரிசுத்த ஆவியும் நிறைந்து விளங்கியவர்'' என்று விவரிக்கப் படுகிறார் (6:5). மேலும் ஸ்தேவான் ''அரு ளும் ஆற்றலும் நிறைந்தவராய் மக்க ளிடையே மாபெரும் அற்புதங்களையும் அருங் குறிகளையும் செய்துவந்தார்'' (6:8) என்றும் விவரிக்கப்படுகிறார்.

ஸ்தேவானைப்பற்றிய செய்திகளை அப் போஸ்தலர் பணிநூலிலிருந்து மட்டுந்தான் பெறுகிறோம். மறைசாட்சி மரணத்தை முடி யாகப்பெற்ற இவர் முதல் கிறிஸ்தவ மறை சாட்சியாக எடுத்துக்காட்டப்படுகிறார். ''முடி'' என்ற பொருளுடைய ஸ்தேவான் என்ற பெயர் அவருக்கு மிகவும் பொருத்தமே.

ஸ்தேவானின் வாழ்க்கைக் குறிப்புகள் அப்போஸ்தலர் பணிநூலில் அதிகம் கொடுக் கப்படவில்லை. இவர் கிரேக்க மொழி பேசும் யூதரா? எருசலேமில் தங்கியிருந்தாரா? யாரிடமிருந்து விசுவாசத்தில் போதனை பெற்றுக்கொண்டார்? என்பன போன்றவற் றைப்பற்றி எக்குறிப்பும் இல்லை. லூக்கா இவரைத் திருத்தொண்டர் (தியாக்கோன்) என்று குறிப்பிடவில்லை. திருத்தொண்டர்க ளின் தோற்றத்தை இங்கு லூக்கா விவரிக் கிறாரா? இந்த எழுவரும் திருத்தொண்டர் கள்தானா? இவர்கள் நியமிக்கப்படுவதற்கு அறப்பணி உடனடியான காரணமாகக் காட் டப்படுகிறது. இவர்கள் ஏற்கனவே சிறப்பு மிக்க போதகர்களாக இருக்க, இவர்களுக்குக் கூடுதல் பணியாக அறப்பணி அளிக்கப்பட் டதா? என்பன போன்ற பல கேள்விகள் எழுகின்றன.

இந்த எழுவரும் அறப்பணியில் ஈடுபட்ட னரா? ஸ்தேவானைப் பற்றிய விவரிப்பு இதுபற்றி அக்கறை காட்டவில்லை. இந்த எழுவரும் போதிக்கவும் செய்தனர். அதுவும் கிரேக்க மொழிபேசிய சிதறிக் கிடந்த யூதர்க ளிடம் மட்டும் போதித்தனர். இவர்கள்தான் ஸ்தேவானோடு தர்க்கித்தனர். சங்கத்தின் முன் ஸ்தேவானைக் குற்றம்சாட்டினர் (6:9தொ). அவர் ஆலயம் அழிக்கப்படுவதை யும் சட்டம் மாற்றப்படுவதையும் முன்னறி வித்ததாகக் குற்றம் சாட்டினர் (அ.ப. 6:13 தொ). இவை பொய்க் குற்றமென்று கூற முடியாது. ஆலயம் அழிந்துபோகுமென்று இயேசுவே முன்னுரைத்திருந்தார். இரண்டா வது குற்றம், சட்டத்தின்பால் பவுல் கொண் டிருந்த மனப்போக்கை முன்பிரதிபுலிக் கிறது. சங்கத்தின்முன் ஸ்தேவானின் உரை (7:2-53) மேலோட்டமாகத் தோன்றுவதை விட மிகக் கலைத்திறமுடன் அமைக்கப்பட் டிருக்கிறது. அது யாவேயின் வெளிப்பாடு களையும், மீட்புச் செயல்களையும் ஒன்றன் பின் ஒன்றாக எடுத்துக்கூறுகிறது. இவை யாவும் பாலஸ்தீனத்திற்கு வெளியே நிகழ்ந்தவை யாகும்; பலிகளைப்பற்றிய ஆமோசின் கூற்றுகளைத் தருகிறது. பெட்டகத்தை யாவேயின் உறைவிடமாகக் குறிப்பிடு கிறது. சாலமோனின் ஆலயத்தைப்பற்றிய குறிப்போடு முடிகிறது. இது மூல மற்றும் உண்மையான சமயத்திலிருந்து தவறிப் போன நிகழ்ச்சியாக விவரிக்கப்படுகிறது. இதைப்பற்றி ஸ்தேவான் உயர்வாகக் கருத வில்லை (7:47-50). மாறாக நிலையான ஆல யத்தைவிட பாலையில் அலைந்து திரிந்த பெட்டகமே இறைவனது சித்தத்துக்கு உகந் தது என்று கருதியதாகத் தெரிகிறது (7:44-45). தனது முடிவுரையில் யூதர்கள் இறைவாக்கி னர்களையும் இறுதியாக இயேசுவையும் கொன்றதாகவும், திருச்சட்டத்தைப் பின்பற்ற வில்லை என்றும் குற்றம் சாட்டுகிறார்.

இந்த உரை, ஒருவேளை சிதறிக்கிடந்த யூதர்களிடையேயிருந்து மனந்திரும்பிய

கிறிஸ்தவர்களின் போதனைக்கு ஓர் எடுத்துக் காட்டாக இருக்கலாம். இப்போதகம் சட்டம், ஆலயம், பலிச்சடங்குகள், வாக்களிக்கப்பட்ட நாடு ஆகியவற்றிற்குத் தனிச்சிறப்பான பரிசுத்ததன்மை அளிக்க மறுத்துவிட்டது. இது இறைநிந்தனையாகத் தீர்ப்பிடப்பட்டு, ஸ்தேவான் சட்டப்படி *(7:54-60; லேவி 24:16)* கல்லால் எறிந்து கொல்லப்பட்டார். சவுலாகிய பவுல் இக்கொலைக்கு உடன்பட்டிருந்ததை லூக்கா குறிப்பிடு கிறார்.

பாலஸ்தீனிய, கிரேக்க யூதக் கிறிஸ்தவர்களுக்கிடையே ஏற்பட்ட வேறுபாடு, பொருட்களைப் பகிர்ந்தளிப்பதைவிட ஆழமானதாக இருந்திருக்கவேண்டும். யூதத்துவம் மற்றும் அதன் கடமைகள் பற்றிய திருச்சபையின் போக்குப்பற்றிப் புற இனக் கிறிஸ்தவர்களிடையே மட்டுமின்றி கிரேக்க மொழி பேசிய யூதக்கிறிஸ்தவர்களிடையேயும் ஏற்கெனவே கேள்விகள் எழுந்திருக்க வேண்டும். தீர்த்துவைக்க ஒரு தலைமுறை எடுத்ததும் பவுலின் இறையியலிலும், திருச்சபையும் மீட்பும் என்ற கருத்திலும் சுழலச் சாக விளங்கியதுமான இப்பிரச்சனை ஸ்தேவானின் உரையில் எடுத்துக்கூறப்பட்டு, பவுலைப் போலவே தீர்வு காணப்படுகிறது.

ஸ்தேவானின் விசாரணை, மரணம் மற்றும் அதன்பின் வந்த வேதகலாபனை ஆகியவை தொடக்கத் திருச்சபையில் முக்கிய மாற்றங்களைத் தூண்டின. வேதகலாபனை கிரேக்க மொழி பேசியவர்களை நோக்கியே செயல்பட்டது. ஆகவே அப்போஸ்தலர்கள் எருசலேமில் தங்கமுடிந்தது *(8:1)*. ஆனால் இந்த நிகழ்ச்சிகள் எருசலேமுக்கு அப்பாலும், யூதர்களுக்கு அப்பால் சமாரியர்களுக்கும் *(8:4-25)*, பின்பு புறவினத்தாருக்கும் *(11:19-20)* நற்செய்தியைப் பரப்ப இட்டுச் சென்றன. பவுல், ஸ்தேவானின் விசாரணையில் கிறிஸ்துவில் விசுவாசம் அறிவிக்கப்படுவதை முதலில் அறியவந்திருக்கலாம் *(7:58; 8:1)*. அவர் முதலில் கிறிஸ்துவத்தைக் கொடுமைப்படுத்துபவராகவும் *(8:3; 9:1)*, பின்பு ''புறவினத்தாரின் அப்போஸ்தலராகவும்'' *(உரோ 11:13)* மாறினார்.

ஸ்தேவானின் உரையும், மரணமும் மூன்று உண்மைகளை எடுத்துரைக்க லூக்காவுக்கு வாய்ப்பளிக்கின்றன. அவை: அ) திருச்சபை மறைசாட்சித் திருச்சபையாகும். ஆ) கிறிஸ்தவன் தனது விசுவாசத்திற்குச் சாட்சி பகரவேண்டும். மரணத்தாலும் சாட்சி பகர வேண்டும். இ) கிறிஸ்துவை நிராகரித்த இஸ்ராயேலை இறைவன் நிராகரித்துவிட்டார்.

இந்த நிகழ்ச்சியுரையில் திருச்சபை ஆலயத்தை மையமாகக் கொண்ட யூதத்துவத்தை இறுதியில் கைவிடுவதற்கு லூக்கா வழிவகுக்கிறார். யூதர்கள்தான் சட்டத்தைக் கடைப்பிடிக்கவில்லை என்று அவர்களையே குற்றம் சாட்டி, சட்டத்திற்குக் கிறிஸ்தவர்கள் அளிக்கும் விளக்கத்திற்கு இடம் வகுக்கிறார். அது உண்மையிலேயே இறைவனதுசட்டம்; ஆனால் யூதர்கள் புரிந்துகொள்ளும் விதத்தில் அன்று.

ஸ்தேவானின் மரணம் இறைவெளிப்பாடாகிறது. ''வானம் திறந்து'', ''மனுமகன் கடவுளின் வலப் பக்கம் நிற்பதை'' வெளிப்படுத்துகிறது *(7:56)*. அவர் ஸ்தேவானை ஏற்றுக்கொள்ள, அல்லது தமது அரசை நிறுவ வரத் தயாராக உள்ளார்.

கருத்தளவிலும் கடைப்பிடிப்பிலும் வளர்ந்து கொண்டிருந்த திருச்சபையோடு எந்த அளவுக்கு ஸ்தேவான் தொடர்பு கொண்டிருந்தார் என்று காட்டும் விதத்தில் லூக்கா ஸ்தேவானின் வரலாற்றுச் சூழ்நிலையில் அக்கறை கொள்ளவில்லை; ஆகவே இந்த விவரிப்பின் வரலாற்று மதிப்பீடு தர்க்கத்திற்குரியதாகும்.

**ஸ்தோயிக்கர்** *(STOICS)*

சைப்பிரசிலுள்ள சித்தியுமைச் சேர்ந்த பெனிசியரான சேனோவால் *(கி.மு. 332 - 262)* ஏதன்சில் நிறுவப்பட்ட தத்துவ இயல்

குழுவினராவர். சேனோ, ஏதன்சிலுள்ள அகோராவில் தூண்களையுடைய திறந்த வெளியில் போதித்துவந்தார். இவ்விடம் வண்ணம் தீட்டப்பட்ட முகமண்டபம் (கேபோய் கிலே ஸ்தோவா) என்றழைக்கப்பட்டது. இப்பெயரிலிருந்து இந்தத் தத்துவம் பெயர் பெறுகின்றது. இத்தத்துவம் வெகுவிரைவாகப் பரவி கிரேக்க உலகமுழுவதும் ஆதிக்கம் செலுத்தியது.

சேனோவை அடுத்து, கிளையான்தசு (கி.மு. 303-232), சோலியின் கிறிசிப்புசு, உரோதில் பனேத்தியசு (185-109), உரோமையில் சிப்பியோ எமிலியனுஸ் (144), சீரியாவில் அப்பமேயின் போசிதேனுசு (135-51) முதலியோர் இத்தத்துவத்தின் விளக்கவுரையாளர்களாகத் திகழ்ந்தனர். தொடக்க கால ஸ்தோயிக்கர்களின் நூல்கள் அழிந்து போயின. சில துணுக்குகளே கிடைத்துள்ளன. பிற்கால ஆசிரியர்களின் நூல்களிலிருந்து இத்தத்துவத்தை அறிகிறோம். நீரோவின் ஆசிரியரான செனேக்கா, பவுலின் சமகாலத்தவரான எப்பிக்தேத்தஸ், பேரரசன் மாற்கு அவுரேலியன் போன்றோரின் நூல்களிலிருந்து இத்தத்துவத்தைப் பற்றி அறிகிறோம். இத்தத்துவத்தை அரசன், அடிமை, சீரியன், உரோமையன் என்று எந்த வேறுபாடும் இன்றி யாவரும் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். ஏனெனில் இது மனிதன் என்ற அளவில் மனிதனிடம் அக்கறை காட்டியது.

இத்தத்துவத்தின் அடிப்படைக்கோட்பாடு நன்னெறி ஒன்றே நன்மையானது. தீயநெறி ஒன்றே தீமையானது என்பதாகும். இன்பம், துன்பம், செல்வம், வறுமை, வெற்றி தோல்வி யாவற்றையும் சரிசமமாக நோக்கும் பரிபக்குவமனமுடையவரே ஞானியாவர். இவர் புறச் சூழ்நிலைகளின் மாற்றங்கள் தன்னைத் தாக்காத அளவுக்கு ஓர் அளவு உணர்ச்சியற்ற தன்மையை வளர்த்துக் கொள்வார். அப்போஸ்தலர் பவுலைப்போல், இவர் உண்மையிலேயே ''எந்நிலையிலும் போதும்'' என்ற மனத்தோடு வாழக்கற்றுக் கொண்டவர். தனது ஆற்றலுக்கு அப்பாற்பட்ட எதனிலிருந்தும் சுதந்தரம் கொண்டவர். வறுமையிலும் வளமையிலும் வாழத் தெரிந்தவர். எந்தச் சூழ்நிலையிலும் வாழ்வின் சவால்களை எதிர்கொள்ளக் கற்றுக் கொண்டவர் (பிலி 4:11-12).

நன்னெறி என்பது இயற்கையோடு இயைந்து வாழ்வதாகும். ஏனெனில் இயற்கை நம்மை நன்னெறிக்கு இட்டுச் செல்லுகிறது. அண்டத்தின் ஒவ்வொரு தனி நபரின் வாழ்வும் ஊழினால் நிர்ணயிக்கப்படுகிறது. மனிதனின் முழுச் சுதந்தரம் தனக்குக் குறிக்கப்பட்டதை ஏற்றுக்கொள்வதிலும், அண்டத்தை ஆளும் சித்தம் மற்றும் குறிக்கோளோடு தனது சித்தத்தை ஒன்றாக்குவதிலும் அடங்கியிருக்கிறது. ஆனால் இந்த ஊழ் குருடான, கொடிய விதியன்று. இது ஞானத்திலும் எல்லாருடைய நன்மைக்காகவும் தீர்ப்புச் செய்யப்பட்டுள்ளது. இது இறைவனது சித்தத்தைப்போல் ''நல்லது, உகந்தது, சிறந்தது'' (உரோ 12:2). ஆனால் இந்தச் சித்தமும் குறிக்கோளும் ஆட்தன்மையுடையதாகக் கருதப்படவில்லை. செயூஸ் என்ற பெயர் ஓர் அளவு ஆட்தன்மைப் பொருளில் பயன்படுத்தப்பட்டாலும், இது ஆற்றலின் அடையாளமே. இது சடப்பொருள் தன்மையுடையது. என்றும் வாழும் தீயாக, படைக்கும் தீயாக, உண்டாக்கும் அறிவாக அண்டம் முழுவதையும் பரவி நிறைந்திருக்கிறது. மனிதனில் ஆன்மாவாக இருக்கிறது. ஆகவே மனிதனின் இயல்பான தன்மை அண்டத்தின் இயல்பான தன்மையோடு ஒன்றானது. இயற்கையோடு இயைந்து வாழ்வது என்பதற்கு ஒருவர் தம் தன்மையோடும், அண்டத்தின் தன்மையோடும் வாழ்வது என்று பொருள் கொடுக்கலாம். ஏனெனில் சிற்றண்டம் பேரண்டத்தோடு தொடர்பு கொண்டிருப்பதுபோல், மனிதன் அண்டத்தோடு தொடர்பு கொண்டுள்ளான். அதே வாழ்வின் நெருப்பான கோட்பாடு, சட்டம் மற்றும் அறிவு இரண்டையும் பரவி நிறைந்திருக்கிறது.

படைக்கும் தீ அல்லது உண்டாக்கும் அறிவு உலகின் ஆன்மாவாக உள்ளது. அதைச் செயூஸ் என்றும், மற்றும் பல பெயர்

களாலும் அழைக்கலாம். அது இயற்கையின் நல்லாற்றல் என்றும் அழைக்கப்படுகிறது. ஏனெனில் அது உலகையும் அதில் உள்ளவற்றையும் அறிவாலும் ஞானத்தாலும் ஆட்சி செய்கிறது. இதற்குச் சான்றாக இயற்கையில் நிலவும் ஒழுங்கமைவாக அமைந்திருப்பதையும், செடி, விலங்குகளின் வாழ்வில் காணப்படும் முடிவை நோக்கிச் சாதனங்களை மாற்றி அமைக்கும் தன்மையையும், காரண காரியச் சட்டத்தையும், அண்டத்தின் பல் வகைப்பட்ட அழகையும், ஸ்தோயிக்கர் எடுத்துக்காட்டுவர். தன் பாகங்களில் எல்லாம் ஒருங்கமைவுகொண்ட இந்த மாபெரும் அமைப்பு தற்செயலாகத் தோன்றியது என்றோ தன்னறிவு நோக்கமில்லாமல் தோன்றியது என்றோ எண்ணுவது முட்டாள் தனமானதாகும். எல்லாவற்றையும்விட, மனிதனின் உன்னத ஆற்றல்கள், இந்த அமைப்பு அவனது நன்மைக்காக இருக்கின்றன என்றும் செயல்படுகிறது' என்றும் காட்டுகின்றன.

இந்தச் சமஉரிமை அமைப்பு கடவுள்களையும் மனிதர்களையும் உள்ளடக்கும் நகரமாகும். இது உலக முழுவதையும் உள்ளடக்குகிறது. ஸ்தோயிக்கர் இத்தகைய அமைப்பில் சேர்ந்தவராகத் தம்மைக் கருதி, எந்த ஒரு தனிப்பட்ட நாட்டையோ அரசையோ சேர்ந்தவராகக் கருதவும் அதில் வேரூன்றுவதுமில்லை. அவரது குடியரசு, கிரேக்க நகர அரசைக் கருத்தில் கொண்டு அமைக்கப்பட்ட பிளேட்டோ அல்லது அரிஸ்தாத்திலின் குடியரசன்று. அது எல்லா மனுக்குலத்தையும் உள்ளடக்கும், ஞானம் மற்றும் நீதியின் பேரரசாகும். ஞானி என்பவர் அண்டத்தின் குடிமகனாவார். ஏனெனில் எல்லாவற்றையும் ஆளும் இயற்கையின் நல்லாற்றல் மனிதனை அத்தினியன், ஸ்பார்தன், உரோமையன் என்றோ, செல்வந்தன், வறியவன் என்றோ, அடிமை, சுதந்தர குடிமகன் என்றோ கருதுவதில்லை; மனுக்குலம் முழுவதிலுமே அதில் உள்ள ஒவ்வொரு தனிநபர் மேலும் அக்கறை கொள்கிறது. இறைத் தீயின் சில பொறிகள் ஒவ்வொரு மனிதனிலும் அறிவின் உண்டாக்கும் வித்தாய் அமைந்துள்ளது. ஆகவே எல்லோரும் செயூசின் பிள்ளைகள். ஆகவே சகோதரர்களாவர். இவ்வாறு ஸ்தோயிக்கு தத்துவம் உரோமைச் சட்டத்தின் சிறப்புமிக்க அமைப்புக்குத் தயாரிப்பாகிறது. இச்சட்டத்திற்கு மேற்கத்திய நாடுகள் அனைத்தும் கடன்பட்டுள்ளன. இன்னும் மிகப் பொருள் பொதிந்த மட்டத்தில் கிறிஸ்துவத்தின் தனிநபர்த் தன்மைக்கும் உலகளாவிய தன்மைக்கும் அதன் சகோதரத் தன்மை என்னும் கருத்துக்கும், பொதுத் திருச்சபை என்ற கருத்துக்கும் உகந்த சிந்தனைப் போக்கையும் உண்டாக்கியது.

ஏதன்சில் பவுல் பேசியபோது அவருக்குச் செவிமடுத்தவர்களில் ஸ்தோயிக்குகளும் இருந்தனர். அப்போது கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த அராத்து என்ற ஸ்தோயிக்குப் புலவரிடமிருந்து பவுல் எடுத்துக் காட்டுக் கூறுகிறார் *(அ.ப. 17:18)*. ஸ்தோயிக்குத் தத்துவத்தால் பவுல் பாதிக்கப்பட்டதாக அறிஞர் சிலர் கருதுவர். பரிபக்குவமனம் என்ற ஸ்தோயிக்குப் பண்பு பவுலின் திருமுகங்களில் பல இடங்களில் காணப்படுவதைப் பார்க்கலாம் *(1 கொரி 7:17-20.24; 9; பிலி 4:11-12; 1 திமோ 6:6-8)*. இத்தத்துவத்தின் தர்க்கம் இலத்தீன் எழுத்தாளர்களிடையே குறிப்பாக மிலானைச் சேர்ந்த அம்புரோசியாரின் நூல்களில் காணக்கிடக்கிறது.

**ஸ்பார்த்தா, ஸ்பார்த்தேயர்** (SPARTA, SPARTANS)

பண்டைக் காலத்தில் தென் கிரீசில் இருந்த ஒரு முதன்மையான நகரம்; இலக்கோனியா பகுதியின் தலைநகர். இங்கு இலக்கதேமானியர்கள் குடியிருந்தனர். உரோமை ஆட்சியில் கிரேக்க நகரங்களில் இதற்கு மட்டுமே, மக்கபேயர் மாநிலம் போல, சுயஆட்சி வழங்கப்பட்டது. கி.மு. 2-ஆம் நூற்றாண்டிலேயே இங்கு யூதர்கள் வசித்து வந்தனர் என்று 2 மக் 5:9-இன்படி கருத இடமுண்டு. யாசோன் குரு ஸ்பார்த்தாவுக்கு (இலக்கதேமானியர்கள்) ஓடியபோது, யூதர்களும் ஸ்பார்த்தேயர்களும் சேர்ந்து பொதுவாகத் தோன்றினர் என்ற பழங்கதையைமட்டும் நம்பியிருக்கவில்லை; இரு மக்களுக்கும்

இடையே ஏற்கனவே தூது உறவையும் *(1 மக் 12:7-8)* அங்கு வாழ்ந்த யூதர்களின் ஆதரவையும் நம்பிச்சென்றார். செலூக்கியர் களுக்கு எதிரான தங்கள் போராட்டத்தில், அசமோனியர்கள் ஸ்பார்த்தேயர்களுடன் நட்புறவு கொண்டிருந்தனர் *(12:2.5-23; 14:16.20-23)*.

**ஸ்பெயின்** *(SPAIN)*

தென்மேற்கு ஐரோப்பாவில் உள்ள ஒரு நாடு. உரோமையர் கைப்பற்றிய நாடுகளுள் ஒன்று. அங்கிருந்த பொன், வெள்ளிச் சுரங்கங் களை உரோமையர் தங்கள் வயப்படுத்தினர் *(1 மக் 8:3)*. கி.மு. 197-இல் இது இரண்டு உரோமை மாநிலங்களாகவும், அகுஸ்துவின் காலத்தில் மூன்றாகவும் பிரிக்கப்பட்டு ஆளப்பட்டது.

ஸ்பெயினுக்குச் செல்ல பவுல் தீர்மானம் செய்தார் என்று உரோ *15:23.28* சுட்டுகிறது. இத்திட்டம் எப்போதாவது செயல்படுத்தப் பட்டதா என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை.

**ஸ்லாவோனிக் வாசகங்கள்** *(SLAVONIC VERSIONS)*

இன்னும் பழக்கத்திலிருக்கும் பழங்கால மொழிபெயர்ப்புகளுள், 9-ஆம் நூற்றாண் டில் சகோதரர்களான சிரில், மெத்தோதியு என்பவர்களால் செய்யப்பட்ட ஸ்லாவோ னிக் மொழிபெயர்ப்பும் ஒன்றாகும்.

# ஞா

## ஞான இலக்கிய இயக்கம் (WISDOM LITERATURE MOVEMENT)

I. *பழைய ஏற்பாடு:*

***1. முன்னுரை:***எபிரேய இனத்தவர் தங்களது விவிலிய நூல்களைச் சட்டம், இறைவாக்கினர்கள், நூல்கள் என்று முப்பெரும் தொகுப்புக்களாகப் பிரிப்பர் என்பதை நாம் அறிவோம். இவற்றில் நூல்கள் என்ற தொகுப்பின் ஒரு பகுதியான ஞான இலக்கியங்களை நாம் அணுகும்போது, ஒரு புதிய உலகிற்குள் புகுகிறோம் என்ற உணர்விலிருந்து நாம் தப்ப முடியாது. மற்ற இரு தொகுப்புக்களிலும், யாத்திரை, உடன்படிக்கை போன்ற வரலாற்று, மற்றும், சமயக் கருத்துக்கள், நாம் எதிர் பார்க்காதபோதும் காணப்படும். இவற்றில் எங்கும் இஸ்ராயேல் ஓர் இனமாகத் தோன்றியதை எடுத்துக் காட்டும் இறைவனது ஆற்றல் மிக்க தலையீட்டின் எதிரொலியைக் கேட்கலாம். இஸ்ராயேல் எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற்று வாக்களிக்கப்பட்ட நாட்டை நோக்கிச் செய்த யாத்திரை ஒரு சமய நிகழ்ச்சி மட்டுமன்று, அது வரலாற்று நிகழ்ச்சியுமாகும். யாத்திரையின் விளைவாக யாவே இஸ்ராயேலின் இறைவன் ஆனார். இஸ்ராயேலர் சிறப்பான முறையில் யாவேயின் மக்களானார்கள். இஸ்ராயேலரின், சமய, வரலாற்று அனுபவ மைய நிகழ்ச்சியாகிய யாத்திரைபற்றிய ஆழ்ந்த உணர்வுக்குப் பழைய ஏற்பாட்டு நூல்கள் சான்று கூறும் முறை நமது கவனத்தைக் கவரத்தவறாது.

இத்தகைய கருத்துக்கள் விவிலியத்தின் ஒரு பகுதியில் காணப்படவில்லையெனில் அது நமக்கு வியப்பளிக்கலாம். அப்படிப் பட்டவைதான் விவிலியத்தில் வரும் ஞான இலக்கியங்கள். பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியங்களுள் புகும்போது, சமய உணர்வு குறைந்தே காணப்படுவதை உணர்கிறோம். வரலாற்று உணர்வு முழுவதுமே காணப்படவில்லை எனலாம். சிலை வழிபாட்டுக்கு எதிரான வசைமொழிகள் இல்லை. இறைவன், ஆலயம், இறைவழிபாடு, இறைமக்களின் கதி போன்ற கருத்துக்கள், பிற்கால ஞான இலக்கியங்களில் மட்டும்தான் ஓரளவு காணப்படுகின்றன. இறைவாக்கினர்கள், குருக்கள் ஆகியோரின் இறைவனை மையமாகக் கொண்ட உலக அமைப்பின் சுவடுகள் இங்குமங்குமாக அரிதாகக் காணப்படுகின்றன. இவற்றிற்கு மாறாக ஞான இலக்கியங்களில் மனிதனும் அவனது நல்வாழ்வும் முக்கியத்துவம் பெறுகின்றன. மையம் கொள்கின்றன. மனிதன், அவனது தன்மை, நடத்தை, நிறை குறைகள், அவனது வாழ்வை மேன்மைப்படுத்துபவை ஆகியவற்றை இந்நூல்கள் பேசுகின்றன. இவற்றில் ஒருவகை சமயப் பற்றற்ற போக்கு காணப்படுகிறது. இப்பண்புகள் ஞான நூல்களைப் பழைய ஏற்பாட்டின் மற்றப் பகுதிகளிலிருந்து வேறுபடுத்துகின்றன. மேலும் இந்நூல்களின் பொருளடக்கமும், நடையும் மற்றவற்றிலிருந்து இவற்றைப் பிரித்துக் காட்டுகின்றன. ஆயினும் இவையும் இஸ்ராயேலரின் ஒப்பற்ற சமய இலக்கியப் பாரம்பரியச் சொத்தைச் சேர்ந்தவையே ஆகும்.

இவ்வுண்மையை உய்த்துணர, இஸ்ராயேலரின் ஞான இலக்கிய இயக்கத்தின் பரந்த பின்னணி, அதன் வளர்ச்சி, தன்மை, நோக்கம், சிறப்புப் பண்புகள், ஞான ஆசிரியர்களின் போதக முறை, அவர்கள் போதித்த ஞானத்தின் தன்மை, பொருளடக்கம், அவர்கள் பயன்படுத்திய இலக்கிய வகைகள் ஆகியவை பற்றி நாம் அறிந்திருப்பது அவசியம். அப்போதுதான் இந்நூல்களின் மதிப்பை உணரவும் பாராட்டவும் முடியும். மேற்கூறப்பட்ட தலைப்புகள் இக்கட்டுரையில் இடம் பெறுகின்றன.

**2. இஸ்ராயேலரின் ஞான இயக்கத்தின் பின்னணி - பழங்கால மேற்காசியாவின் ஞான இலக்கிய இயக்கம்:**

***அ.*** ஞான இலக்கியங்களை உருவாக்குவதில் இஸ்ராயேலர் தனித்து நிற்கவுமில்லை;

காலத்தால் முந்தியவர்களும் அல்லர். பழங் கால மேற்காசியாவின் பொதுப் பாரம்பரி யத்தில் அவர்கள் பங்கு கொண்டிருந்தனர். ஞான இலக்கிய இயக்கம் முதலில் புற இனமக்களிடையே தோன்றி வேரூன்றியிருந் ததாகத் தெரிகிறது. இஸ்ராயேலின் ஞான இலக்கியங்கள் தோன்றும் முன்பே, எகிப்து, அரேபியா, மெசபொத்தாமியா ஆகிய நாடுக ளில் இத்தகைய இலக்கியங்கள் மிகவும் வளர்ச்சியுற்றிருந்தன என்பது ஆராய்ச்சியா ளர்களின் முடிவு. தொல்பொருள் ஆய்வுக ளும் இம்முடிவுக்கு ஆதரவு தருகின்றன.

விவிலியமும் இம்முடிவுக்குச் சான்று கூறு கிறது. யூதப் பொதுச்சங்கத்தின் முன்பு ''மோசே எகிப்து நாட்டுக் கல்வி கேள்விகள் அனைத்தையும் கற்றுச் சொல்லிலும் செயலி லும் வல்லவராய்த் திகழ்ந்தார்'' *(அ.ப. 7:22)* என்று ஸ்தேவான் கூறும்போது, இக்கூற்று எகிப்தியரின் பெரும் ஞான இலக்கியங் களையே சுட்டிக் காட்டுகிறது. ''கீழை நாட் டார், எகிப்தியர் அனைவரின் ஞானத்தையும் விட, சாலமோனின் ஞானம் சிறந்து விளங் கிற்று. எசுராகியரான ஏத்தானிலும், ஏமான், கல்கோல், தர்தா என்ற மாகோலின் புதல் வர், மற்ற மனிதர் அனைவரையும்விட அவர் ஞானத்தில் சிறந்து விளங்கினார்'' *(1 அர 5:10-11)* என்று அரசர்கள் நூல் கூறுகிறது. இக்கூற்றில் அறிவிக்கப்படுபவர்கள் புற இனத்தைச் சேர்ந்தவர்களாவர். இக்கூற்று, எகிப்திய, கானானிய அரேபிய ஞானிகளை இஸ்ராயேலர் அறிந்திருந்தனர் என்பதற்குச் சான்று கூறுகிறது. யோபு நூலின் ஆசிரியர், தமது காவியத் தலைவனாக, ஓர் இஸ்ராயே லனை அல்லாது ஏதோமையோ, அரேபியா வையோ சேர்ந்த ஒரு ஞானியை அல்லது அறிவரைத் தேர்ந்தெடுக்கிறார். யோபுவின் நண்பர்களும் புறஇனத்தைச் சேர்ந்தவர் களே. தோபியா 4-இல் குறிப்பிடும் அகிக் கார், நாதாபு ஆகியோர் மெசபொத்தாமியா வைச் சேர்ந்தவர்களாவர். புற இன அறிவர் களைப் பற்றி விவிலியத்தில் காணப்படும் பிற குறிப்புக்களில் சில எரே *49:7;* பாரூக் *3:22-23;* ஒப *8;...* இவையெல்லாம் பிற இன மக்களிடையே ஞான இலக்கிய இயக்கம் பரவியிருந்ததைச் சுட்டுகின்றன. இவ்விலக் கியங்களில் பல இஸ்ராயேலரின் ஞான இலக்கியங்களுக்கு வெகு முன்பு தோன்றிய வையாகும். இது பற்றிப்பின்பு பார்ப்போம்.

ஞான இலக்கிய இயக்கம் அகில உலகப் பண்புடையது. இவ்வியக்கங்கள், அவை தோன்றிய நாடுகளுக்கு அப்பாலும் பரவி, அங்கெல்லாம் பாதிப்பை ஏற்படுத்தின. நாட்டு எல்லையோ, காலமோ, பண்பாடோ அவற்றை வரையறை செய்யவில்லை. ஒரு ஞானி அல்லது அறிவர் தமது காலத்தையும், பண்பாட்டுச் சூழ்நிலையையும் சேர்ந்தவர் என்பது தவிர்க்க முடியாது. எனினும் அவர் எடுத்துக் கொள்ளும் பிரச்சனைகள் மனிதர் களுக்குப் பொதுவானவை. அவை பற்றி அவர் எடுத்துக் கூறிய உட்கருத்துக்கள் மனி தர்கள் எங்கு எப்போது வாழ்ந்தாலும் எப் பண்பாட்டைச் சேர்ந்தவர்களானாலும், அவர்களுக்குப் பொருத்தமுடையவையாகும். ''யாவர்க்கும் உரியது'' என்ற இந்தப் பொது மைப் பண்பு ஞான இலக்கியங்களுக்குச் சிறப்பு அளிப்பதாகும்.

பழங்கால மேற்காசிய அறிவர்கள் - ஆளும் வகுப்பினரிடையே, குறிப்பாக அமைச்சர்கள், ஆலோசகர்கள், செயலர்கள் போன்ற அரசவை அதிகாரிகளிடையே காணப்படுகின்றனர். இவர்கள் கல்விப் புலமை பெற்றுப் பண்பாட்டில் சிறந்து விளங் கினர். வாழ்க்கையில் தாம் கண்டுணர்ந்த, கேட்டறிந்த அனுபவ ஞானத்தைப் பிறருக்கு வழங்கினர். ஆட்சித் தொழிலில் வழிவகை களைக் கற்றுக் கொடுத்தனர். வாழ்க்கையின் அடிப்படைப் பிரச்சனைகளைப் பற்றி வாதிட்டனர். காலப்போக்கில் இவற்றை நூல்களாகத் தொகுத்து எழுதி வைத்தனர். இந்நூல்கள் எகிப்தில் மேற்கோளுரைகளாக வும், போதகமாகவும், மெசபொத்தாமியா வில் கதைகளாகவும் உருவகங்களாகவும், கானான் பெனிசியா நாடுகளில் மேற்கோள் கூற்றுக்களாகவும் உவமைகளாகவும் வடி வெடுத்தன. இவை அறிவர்களின் மாணவர் களுக்காகவும், ஆட்சியில் பங்கு பெறுபவர்க ளின் பயனுக்காகவும் எழுதப்பட்டன. இவற்

றில் தனி மனிதனுடைய அன்றாடப் பிரச்சனைகள் பற்றிய கூற்றுக்களையும் காணலாம்.

இனி விவிலிய ஞான இலக்கியங்களுக்கு முன்னோடியாக விளங்கியதாக அல்லது அவற்றைப் பாதிப்பதாகக் கருதப்படும் எகிப்து, மெசபொத்தாமியா, கானான், பெனிசியா ஆகிய பழங்கால மேற்காசிய நாடுகளின் இலக்கியங்களைப் பற்றிச் சிறிது காண்போம்.

***ஆ. எகிப்து:*** எகிப்திய பழங்கால வரலாற்றை வசதிக்காக, பழைய அரசு (கி.மு. 2850-2052), நடுக்கால அரசு (கி.மு.2052-1778), இடைக்காலம் (கி.மு. 1778-1610), புதிய அரசு (கி.மு. 1610-1085), பிற்காலம் (கி.மு. 1085-332), கிரேக்கர் காலம் (கி.மு. 332-30), என்று யூகமாகப் பிரிப்பது மரபு. தொடக்க காலத்திலிருந்து தோலாமியர்கள் காலம் வரையுள்ள காலத்தில் எகிப்தில் பல ஞான இலக்கியங்கள் தோன்றியுள்ளதாகத் தெரிகிறது. இவற்றில் ஏழு தொகுப்புகள் முழுமையாகவும், ஐந்து தொகுப்புகளில் சில பகுதிகளும் கிடைத்துள்ளன. மற்றொரு ஏழு தொகுப்புக்களின் தலைப்புகள் மட்டுமே கிடைத்துள்ளன. இவையாவும், ஞான இலக்கியங்கள் மக்களிடையே தன்னிச்சையாக எழுந்த படைப்புகளாகும் என்றும், பரவலாக மக்களிடையே பயன்பட்டன என்றும் காட்டுகின்றன.

எகிப்திய ஞான இலக்கியங்களில் பல வகையுண்டு. இவற்றில் சிறந்தவை போதக நூல்களாகும். இவை தந்தை மகனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் முறையில் அமைந்துள்ளன. தந்தை தன்மகனை வாழ்வின் கடமைகளுக்கும் அரசவை அலுவல்களுக்கும் தயாரிக்கும் குறிக்கோளைக் கொண்டுள்ளன இந்நூல்கள். எகிப்திய ஞானபோதகத்தின் மிகச்சிறப்பான அடிப்படைக் கொள்கை நீதி எனப் பொருள்படும் ''மாத்'' ஆகும். இது இறைவனால் நிறுவப்பட்ட அமைப்பு அல்லது உண்மையாகும். மனித வாழ்வு சிறப்புற, அது இந்த நீதியோடு ஒத்திருக்க வேண்டும். உணவு கொள்ளும்போது கடைப்பிடிக்க வேண்டிய முறை, மேலதிகாரிகளோடும், கீழ் உள்ளோரிடமும் நடந்து கொள்ளும் விதம், நட்பு, நேர்மை, நம்பத்தகுந்த தகுதி, சுறுசுறுப்பு, சுயகட்டுப்பாடு, தீய பெண்கள் முதலியவை பற்றிய பல ஆலோசனைகளும் எச்சரிக்கைகளும் இப்போதகங்களில் காணப்படுகின்றன. இவை தவிர அரசவையினர், அதிகாரிகள் ஆகியோருடைய நடத்தையை ஒழுங்குபடுத்தும் செயல்முறைநோக்கு சிறப்பிடம் பெறுகிறது. நல்ல உயர் அதிகாரிகள் எல்லா நற்பண்புகளிலும் மேன்மை பெற்றிருக்க வேண்டும். அறிவு வளர்ச்சி, நம்பிக்கைக்குரிய தன்மை, விவேகம், ஒழுக்கம், சுறுசுறுப்பு ஆகியவற்றில் சிறந்து விளங்க வேண்டும். இவற்றை எடுத்துக்கூறும் ஞான போதகத்தை இவர்கள் தங்களுடையதாக்கிக் கொள்ளவேண்டும். இயற்கையில் நிலவும் நீதியோடு ஒருங்கிணைந்து வாழ வேண்டும். இப்படி வாழ்வதே வெற்றி பெறுவதற்கு அடிப்படையும் சாதனமும் ஆகும். இதற்கு மாறானது குழப்பத்தையும், தோல்வியையும் உண்டாக்கும்.

எகிப்தில் ஞான இலக்கியங்களில் காலத்தால் முந்தியது ஓர் தெதெஃபின் (Hor-dedef) போதகமாகும். இது கி.மு. 27-ஆவது நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். பழைய அரசு காலத்தில், ப்டா-ஒடேப் (ptah-hotap) காகெம்னி (Kagemni) மெரிக்ரே (Merik-re) ஆகியோர் ஞான நூல்கள் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்திருப்பதாகத் தெரிகிறது. கி.மு. 2450-ஐ ஒட்டித் தோன்றிய ப்டா-ஓடேப்பின் போதகநூல் வாழ்க்கையில் வெற்றிகாண வழிகாட்டும் மேற்கோளுரைகளைப் பாடநூல் வடிவில் கொண்டுள்ளது. கி.மு. 2100-ஐ ஒட்டித் தோன்றிய மெரிக்ரே என்ற அரசனின் நூல் அரசன் தன் மகனுக்குக் கூறும் முறையில் வெற்றிகரமாக நல்லாட்சி செய்வது பற்றிய ஆலோசனைகளைக் கொண்டுள்ளது. நடு அரசுகாலத்தில் டௌஃபியின்(Dauf) மகனான அக்கிடாய் (Akkitoy), அமென்-எம்-ஏட் (Amen-em-het) போன்றோர் ஞானபோதக நூல்களை எழுதியுள்ளதாகத் தெரிகிறது. புதிய அரசு காலத்தில், அன்னி

(Anni), அமென்-எம்-ஒப்பே (Amen-em-ope) போன்றோர் ஞானநூல்கள் எழுதினர். அமென்-எம்-ஒப்பேயின் ஞானபோதக நூல் முழுமையாகப் பாதுகாக்கப்பட்டுள்ளது. இந்நூல் பழ *22:17-24:22*-இல் வரும் கூற்றுக்களோடு இணையாகவுள்ளது. இஸ்ராயேல் ஆசிரியரின் முப்பது கூற்றுக்கள் இந்நூலின் முப்பது அதிகாரங்களில் சிதறிக் கிடக்கின்றன. இஃது இரண்டு நூல்களுக்கும் பொதுவான ஒரு ஞான இலக்கியப்பாரம்பரியம் இருந்திருக்க வேண்டும் என்பதைச் சுட்டுகிறது. இக்காலத்தைச் சேர்ந்ததும், அமர்னா என்ற பகுதியில் கண்டெடுக்கப்பட்டதுமான தொகுப்புக்களில் காணப்படும் சில முதுமொழிகள், பழமொழிநூலில் வரும் சில பகுதிகளோடு ஒத்துள்ளன.

எகிப்திய ஞான ஏடுகளில் காணப்படும் இயற்கை உலகின் பொருட்கள், ஆள், இடம் பற்றிய திட்டமிட்ட பட்டியல்கள் சாலமோனின் பட்டியலுக்கு *(1 அர 5:13)* முன்னோடியாக அமைந்திருக்கலாம். மேலும், நீதிமானின் துன்பம் என்ற பிரச்சனை பற்றிய ''தற்கொலை பற்றிய தர்க்கம்'', ''சொல்லாற்றல் மிக்க குடியானவரின் எதிர்ப்பு'', போன்ற நடுக்கால அரசைச் சேர்ந்த நூல்களும் எகிப்தில் உண்டு. ஆனால் அவற்றில் காணப்படும் பொருளடக்கம் 'அத்தகைய தலைப்புகள் பற்றிய மெசபொத்தாமிய எபிரேய நூல்களில் காணப்படுவதற்கு ஒத்த கருத்தாழமும் கூர்மையும் உடையதன்று.

**இ. மெசபொத்தாமியா:** இப்பகுதியின் முதுமொழிகள், மேற்கோளுரைகள், கதைகள் ஆகியவை அடங்கிய ஞான போதகத் தொகுப்புகள் சுமேரியன், அக்காதிய மொழிகளில் காணப்படுகின்றன. இது அண்மைக் கால ஆய்வுகளின் விளைவாகும். அரசன் தன் மகனுக்குக் கூறும் ஆலோசனைகள் அடங்கிய ''சுருப்பாக்கின் போதனை'' என்ற நூல் அரசவையோடு தொடர்புடையதாகும். மற்றத் தொகுப்புக்கள் பொதுவாழ்வைப் பற்றியவையாகும். தோபியா நூலில் சுட்டிக் காட்டப்படும் ''அகிக்காரின் கதை'' மெசபொத்தாமியாவில் தோன்றிய ஒரு புகழ் பெற்ற ஞான பாரம்பரியக் கதையாகும். ''ஞானத்தின் ஆண்டவரைப் போற்றுவேன்' என்ற நூல் யோபு நூலோடும், ''அவல நம்பிக்கை பற்றிய உரையாடல்'' என்ற நூல் திருவுரையாளர் நூலோடும் ஒத்த கருத்தமைப்பைக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. பாபிலோனியாவைச் சேர்ந்த ''ஞானத்தின் ஆலோசனைகள்'' என்ற நூல் ஞானி தன் மகனை எச்சரிப்பதாக அமைந்துள்ளது. ''பாபிலோனிய இறைநூல்'' என்ற நூல் நீதிமானின் துன்பம் என்ற பிரச்சனையைப் பற்றிப் பேசுகிறது. ''துன்புறும் நீதிமானின் பாடல்'' உலக அமைப்பைப்பற்றிய ஒரு கண்ணோட்டமாகும். ''மனிதனும் அவனுடைய இறைவனும்'' யோபு நூலைப்போன்ற ஒரு புலம்பல் பாடலாகும்.

இந்த இலக்கியங்களில் படைக்கப்பட்ட பொருட்களிலே 'மீ' என்று அழைக்கப்படும் ஓர் இறை அமைப்பு மையக் கருத்தாக அமைகிறது. மெசபொத்தாமியா பகுதியில் நிலவிய சமூக, அரசியலின் நிலையற்ற தன்மையால், மனிதனுக்கும் இறைவனுக்குமுள்ள தொடர்பு பற்றிய ஐயமிக்க கேள்விகள் இந்த இலக்கியங்களில் எழுப்பப்படுகின்றன. இந்த மனப்போக்கை, யோபு நூல், திருவுரையாளர் நூல், ஆகூருக்கும் விசுவாசிக்குமிடையே ஓர் உரையாடல் *(பழ 30:1-9)* ஆகியவை பிரதிபலிக்கின்றன.

**ஈ. கானான், பெனிசியா:** எபிரேய ஞான இலக்கியங்களுக்குக் கானானியப் பின்னணி இருந்திருக்கக் கூடுமா என்பது பற்றிச் சிலர் ஆய்வு செய்துள்ளனர். இத்தகைய கருத்துக்கு ஆதரவான போதிய, உறுதியான சான்றுகள் இன்னும் கிடைக்கவில்லை. ஆயினும் உகாரித்து மொழியில் காணப்படும் இணையமைப்பு போன்ற இலக்கிய வடிவங்கள், சொற்றொகுதிகள், பழமொழி நூலில் பல இடங்களில் பிரதிபலிக்கின்றன. பழமொழி, யோபு ஆகிய நூல்களில் வரும் சில கவிதைகளில் கானானியப் பாதிப்பு காணப்படுகிறது. திருவுரையாளர் நூலுக்குப் பெனிசிய மூலமும் பின்னணியும் இருந்திருக்கலாம் என்று ஆய்வாளர் சிலர் கருதுவர்.

**உ. இஸ்ராயேல் பாரம்பரியம்:** பழங்கால மேற்காசிய ஞான இலக்கியங்களில் இறுதி யாக இடம் பெறுவது இஸ்ராயேலின் ஞான இலக்கியங்களாகும். இஸ்ராயேலின் ஞான இலக்கியங்களில் காலத்தால் முந்திய பகுதி கள் எகிப்திய இலக்கியங்களோடும் பிந்தி யவை மெசபொத்தாமிய இலக்கியங்களோ டும் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதா கத் தெரிகின்றது.

இஸ்ராயேல் தனக்குமுன் எகிப்து, மெச பொத்தாமியா, கானான், பெனிசியா ஆகிய நாடுகளில் தோன்றிய ஞான இலக்கியங் களை அறிந்திருக்கக்கூடும். அவற்றைத் தனது இலக்கியப் பாரம்பரியத்துள் ஏற்று, தனது விசுவாசத்திற்கும் இறையியல் கருத் துக்களுக்கும் ஏற்றவாறு பயன்படுத்தியிருக் கக்கூடும். புற இன நாடுகளிலிருந்து இஸ்ரா யேல் ஏற்றுக்கொண்ட ஞான இலக்கியங்கள் ஒரு வகை மாற்றம் பெறுகின்றன என்பதை நாம் கவனிப்பது அவசியம். இஸ்ராயேலின் ஞான இலக்கிய இயக்கம் வடிவத்திலும் பொருளடக்கத்திலும், புற இன நாடுகளில் வழக்கில் இருந்தவற்றையே பின்பற்றுகிறது. முதுமொழிகள், மேற்கோளுரைகள், அரசன் மகனுக்குக் கூறுவது போன்ற அமைப்பு, பொதுவாகத் தந்தை மகனுக்குக் கூறுவது போன்ற அமைப்புகள் ஆகிய இலக்கிய யுக்திகள் புற இன இலக்கியங்களில் காணப் படுவது போன்றே இஸ்ராயேலரின் இலக்கி யத்திலும் காணப்படுகின்றன. பொருளடக்க மும் அடிப்படையில் அதிகம் வேறுபட வில்லை. பொது வாழ்வில் எப்படி நடந்து கொள்வது, வாழ்வில் வெற்றிபெறுவது எப் படி, அதை நிறைவாக அனுபவிப்பது எப் படி என்பனவற்றைப் பற்றிய கூற்றுக்களில் அதிகம் வேறுபாடு இல்லை. ஆனால் தொனியிலும் அடிப்படை நோக்கிலும் புற இன இலக்கியத்திலிருந்து இஸ்ராயேலின் இலக்கியம் பெரிதும் வேறுபடுகிறது. புற இன ஞான இலக்கிய மரபு சமயச் சார்பற்ற ஒழுகலாற்றை உடையது. இதற்கு மாறாக, இஸ்ராயேலின் ஞான இலக்கிய மரபு சமயச் சார்புடைய ஒழுகலாற்றைக் கொண்டது. அது இறை அச்சத்தில் தொடங்கி அதிலேயே நிறைவு பெறுகிறது. இறையச்சமின்றி, அதா வது சமயச்சார்பின்றி, உண்மையான ஞானம் இல்லை என்பது இஸ்ராயேலரின் அடிப் படைக் கோட்பாடாகும்.

புற இன ஞான இலக்கியங்களை இஸ்ரா யேல் ஏற்றுக்கொண்டபோது, பழங்கால மேற்காசியாவில் நிலவிய சட்டங்களுக்கும் வழிபாட்டு முறைகளுக்கும் மோசேயும், இசைப் பாடல்களுக்குத் தாவீதும் இஸ்ராயே லின் இசைவல்லுநர்களும், என்ன செய்த னரோ, அதையே இஸ்ராயேலின் ஞானிகள் தாங்கள் ஏற்றுக்கொண்ட புற இன இலக்கி யப் பாரம்பரியத்துக்கும் செய்தனர். அதன் விளைவாக இஸ்ராயேலில் ஞான இலக்கி யங்கள் எழுச்சியுற்றன. இஸ்ராயேலரின் விசுவாசத்தால் அவை வளர்ந்தன. உயிரூட் டப்பெற்றன. இது இயற்கைமேல் அருள் வாழ்வு அமைக்கப்படும் முறைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

**3. இஸ்ராயேலில் ஞான இலக்கிய இயக் கம்:** இஸ்ராயேலில் இந்த இயக்கம் அரசவை யில் தோன்றியிருக்க வேண்டும். இப் படிக் கூறுவதால், பொதுப்பாணி ஞானம், செயல்முறை நோக்குகளின் தொகுப்புக்கள் பொது மக்களிடையே தோன்றியது என் பதை மறுக்கவில்லை. ஆனால் இந்த இயக் கத்திற்கு முன்றயான தூண்டுதல் அரசவை யில் தோன்றியது. இப்படிப்பட்ட ஞான இலக்கியத் தோற்றத்தை எகிப்திய பாரம்பரி யத்தில் காண்கிறோம். ஆட்சியமைப்பில் இஸ்ராயேலர் தங்கள் அண்டை நாடுகளைப் பின்பற்றினர் என்று 1 சாமு 8:5.20-இல் தெளிவாகக் காண்கிறோம். தாவீது, சால மோன் காலத்தில் புதிய அரசியல் அமைப்பு இஸ்ராயேலில் புகுத்தப்பட்டபோது, ஆளும் வகுப்பினரும் அதிகாரிகள் குழுவின ரும் நாட்டில் உருவெடுத்தனர். மக்கள் வாழ் வில் சிக்கல்களும் மிகுந்தன. ஆள்பவர்களுக் கும் அதிகாரிகளுக்கும் பயிற்சி அளிக்க வேண்டியது அவசியமாயிற்று. இதற்கும் எகிப்திய அமைப்பு ஒரு மாதிரியாக விளங் கிற்று. இப்பயிற்சிக்கு முதியோரின் அனு பவ ஆலோசனைகள் அவசியமாயின.

இவை தலைமுறை தலைமுறையாக வாய் மொழியாகக் கையாளப்பட்டுக் காலப்போக்கில் நூல்வடிவம் எடுத்தன. இவ்வாறு தாவீது தனது புதிய அரசியல் அமைப்புகளைக் கவனிக்க எகிப்திலிருந்து கொண்டு வந்த எழுத்தர்களோடு இஸ்ராயேலில் ஞான இயக்கம் தொடங்கியது எனலாம்.

இப்படித் தொடங்கிய இயக்கம் சாலமோனின் ஆதரவில் வளர்ச்சியுற்றது. இவர் ஓர் எகிப்தியனிடமிருந்து கல்வி கற்றிருக்க வேண்டும். இவர் ஓர் எகிப்திய இளவரசியை மணந்ததாகத் தெரிகிறது *(1 அர 3:1).* ''கடவுள் சாலமோனுக்கு மிகுந்த ஞானத்தையும் கூர்மதியையும் கடற்கரை மணலைப்போல் பரந்த மனத்தையும் கொடுத்திருந்தார்'' என்றும், சாலமோன் ''3,000 பழமொழிகளையும் 1005 பாடல்களையும் எழுதினார்'' என்றும், மற்றும் பல ஞானக் கூற்றுக்களை மொழிந்தார் என்றும் அரசர்கள் நூல் கூறுகிறது *(1 அர 5:9-13).* ஒரே குழந்தைக்கு உரிமை கொண்டாடிய இரு பெண்களுக்குச் சாலமோன் அளித்த தீர்ப்புப் பற்றிய கதை இவரது ஞானத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாகும் *(1 அரச 3:16-28).* இவரது ஞானத்தைக் கேட்க எல்லா நாடுகளிலிருந்தும் மக்கள் வந்தனர் *(5:14).* சாலமோன் ஞானத்தில் சிறந்தவராகப் புகழ் பெற்றிருந்தார். ஆகவே, சட்ட நூலுக்கு மோசேயும் சங்கீதங்களுக்குத் தாவீதும் ஆசிரியர்களாகக் கருதப்பட்டதுபோல், இஸ்ராயேலின் ஞான இலக்கியங்களுக்குச் சாலமோன் ஆசிரியராகக் கருதப்படுவது பாரம்பரியமாயிற்று. சாலமோன் ஞான இலக்கிய இயக்கத்திற்குப் புரவலனாகவும், ஞானிகளுள் சிறந்த எடுத்துக்காட்டாகவும் கருதப்பட்டார். இவ்வாறு பழமொழி, திருவுரையாளர், ஞானம், உன்னத சங்கீதம் ஆகிய நூல்களுக்குச் சாலமோன் ஆசிரியர் ஆனார். பழமொழி நூல், லெமுயேல், ஆகூர் ஆகியோரின் கூற்றுக்களைக் கொண்டிருந்தாலும், நூல் முழுவதும் சாலமோனுடையதாகக் கருதப்பட்டது *(பழ 1:1).* இது ஒரு போலிக் குறிப்பு ஆனாலும், அவர் ஞான இயக்கத்தில் காட்டிய நிலையான ஈடுபாடு, பாரம்பரியம் அவருக்கு இப்படிப் பட்ட பெயரை அளிப்பதற்கு நேர்மையான அடிப்படையாயிற்று. உன்னத சங்கீத நூலுக்கும் சாலமோன்தான் ஆசிரியர் என்ற தலைப்பை நூல் கொண்டுள்ளது. திருவுரையாளர் நூலின் ஆசிரியர் தான் ''எருசலேமின் அரசரான தாவீதின் மகன்'' *(திருவுரை 1:1)* என்று கூறிக்கொள்கிறார். ஞான நூலின் ஆசிரியர் தன்னைச் சாலமோன் என்று குறிப்பிடுகிறார் *(ஞானம் 6:23).* இந்நூல்களின் ஆசிரியர்கள் பற்றி அந்தந்த நூல்களுக்குரிய கட்டுரைகளில் காணலாம்.

புனைபெயர்களையோ காலஞ்சென்ற பெரியவர்களின் பெயரையோ, ஒருவர் தம் நூலின் ஆசிரியர் பெயராகப் பயன்படுத்துவது, ஞானிகள் காலத்து வழக்கில் இருந்துள்ளது. இஃது ஓர் ஆசிரியர் தனது செய்தியின் பால் மக்கள் கவனத்தை ஈர்க்கவும், தனது நூலின் மதிப்பை வலியுறுத்தவும் பயன்படுத்திய ஒரு யுக்தியாகும். சாலமோன் ஞானிகளின் சிறந்த மாதிரியாக விளங்கினார். ஆகவே அவர் எழுதியதாக நூல்களுக்குச் சாற்றிக்கூறுவது இயல்பாக அமைந்தது. ஆசிரியத்தன்மை பற்றிய பழங்காலக் கருத்துக்கு இது ஒத்துப்போயிற்று. இதுபற்றி ஆர்.ஏ. எஃப். மெக்கென்சி கூறுவது கவனிக்கத்தக்கதாகும்: ''இஸ்ராயேல் பாரம்பரியத்தில் ஒரு நூல் புனிதமானது, இறை ஆவியின் தூண்டுதல் பெற்றது என்பதை உணர்த்த, பழங் காலத்துப் பெரும் பெயருடைய இறைவாக்கினர்கள், ஞானிகள் ஆகியோருடன் அந்நூல் தொடர்புபடுத்தப்பட்டது. ஏனெனில் இவர்கள் ஆவியால் பயன்படுத்தப்பட்ட கருவிகளாகச் செயலாற்றிப் புகழ்பெற்றவர்கள். இம்முறை ஓர் ஆழ்ந்த உண்மையை எடுத்துக்கூற யூதர்கள் பயன்படுத்திய மரபாகும். ஒரு புனித நூலைப் பெயரில்லாதுவிட அவர்கள் விரும்பவில்லை. ஏனெனில் அப்போது இறை ஏவுதல் பெற்றவர்கள் வழியாக அந்நூல் தோன்றியது என்பது காட்டப்படவில்லை''. இவ்வாறு ஐந்நூலை மோசேயும், சங்கீதங்களைத் தாவீதும், ஞானநூல்களைச் சாலமோனும் எழுதியதாகக் கூறுவதில் எந்த முரண்பாட்டையும் யூதர்கள் காணவில்லை.

ஆகவே ஞான நூல்களோடு சாலமோனைத் தொடர்புபடுத்தி மிகைப்படுத்திக் கூறுவதற்கு உறுதியான அடிப்படை இருந்திருக்க வேண்டும். இப்போதுள்ள ஞானநூல்களின் தொகுப்பில் சாலமோனின் பங்கு வரையறைக்குட்பட்டது. ஆனாலும் இஸ்ராயேலின் ஞான இயக்க வளர்ச்சியில் அவர் ஒரு முக்கிய இடத்தை வகித்திருக்க வேண்டும் என்பதை இவையெல்லாம் சுட்டுகின்றன. பழமொழி நூலின் பழம்பகுதிகளில் காணப்படும் மேற்கோளுரையில் சிலவாவது அவருடையன என்பதை ஐயுறக் காரணம் ஏதுமில்லை. ஆனால் மற்ற ஞானநூல்கள் சாலமோன் காலத்திற்கு மிகப் பிற்பட்டவையாகும். அவர் ஞான இலக்கியங்கள் செழிப்புற வேண்டிய சூழ்நிலையை ஏற்படுத்திக் கொடுத்தார் என்பது முக்கியமாகும். அவர் அகில உலகப் பரந்த நோக்குடையவர். அந்நிய சிந்தனைப் போக்குகளை ஏற்றுக் கொண்டார். அவர் எகிப்திய, பெனிசிய நாடுகளோடு கொண்ட உறவு வெறும் வணிகத்தன்மை மட்டும் உடையதன்று, அப்படி இருக்கவும் முடியாது. அவரது சிக்கல் மிக்க ஆட்சி முறைக்கு ஏற்ப அரச அலுவலர் அமைப்பைத் திருத்தி அமைக்க வேண்டியிருந்தது. இச்சூழ்நிலையில்தான் இஸ்ராயேலின் ஞான இலக்கிய இயக்கம் செழிப்புற்றது. இதைப் பிறநாட்டு நூல்கள் பாதித்தன. இதற்கு அமென் - எம் - ஒப்பேயின் போதகத்தின் தழுவலாகக் கருதப்படும் பழ *22:17-24:14* என்ற பகுதி சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். இத்தகைய பாதிப்பு எதிர்பார்க்கப்பட வேண்டியதொன்றேயாகும். பழங்கால மேற்காசிய ஞான இயக்கத்தில் இறுதியாக வந்த இஸ்ராயேல் பிறரிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. ஆனால் விரைவில் இஸ்ராயேலின் ஞானிகள் இஸ்ராயேலுக்குரிய விதத்தில் இந்த இயக்கத்தை வளர்த்தனர். உயர்ந்த ஒழுக்க முறையில் மட்டுமன்று, இலக்கியங்களிலும் இவர்கள் தங்களது முன்னோடிகளையும் விரைவில் மிஞ்சினர்.

அரசர்கள் காலத்தில் இஸ்ராயேலின் ஞானிகள் சமயவளர்ச்சியில் முக்கிய இடம் பெற்றவர்களாக இருக்கவில்லை. இவ்வாறு எசா *29:14*-இல் வரும் குறிப்பு கடுமையாக உள்ளது. ஆண்டவர் இஸ்ராயேலை அழிக்கும்போது அவர்களது ஞானமும் அழிந்து போகும். ஒருவேளை இந்த ஞானிகள் அரசனுக்குத் தவறான ஆலோசனை கூறியவர்களாக இருக்கலாம் (*5:21; 44:25*). ஆனால் எகிப்திய ஞானிகளுக்கு எதிரான எசாயாவின் கூற்றுக்கள் அச்சுறுத்துவதாக அமைந்துள்ளன (*19:11-12*).

அரசர்கள் காலத்தில் ஞானிகள் ஒரு தனிப்பட்ட குழுவினராகச் சிறிது சிறிதாக உருவெடுக்கின்றனர். அவர்கள் பள்ளிகள் நடத்துகின்றனர் (சீரா *57:1-36*; பழ *7:1* தொ; *9:1* தொ). ஞானிகள் மக்களிடையே சிறிது சிறிதாக முக்கியத்துவம் பெறுகின்றனர். ஞானிகள் கைவினைஞர்களைவிட மேலானவர்கள் (சீரா *38:25-39;11*). ஏனெனில் ஞானத்தை அடைவது அவர்களது அலுவலாகும். அரசவை அலுவல்களுக்கு எழுத்தர்கள், செயலர்கள் வேண்டியிருந்தனர். இவர்களிடையே ஞான போதகம் முறையாக மலர ஆரம்பித்தது. இவர்கள் முன்னோர்களின் கூற்றுக்களையும் போதகங்களையும் தொகுத்தனர். இத்தொகுப்புகள் வாய்மொழிப் போதகத்திற்குப் பயன்பட்டன. இவற்றைப் பெற்றோர் தங்கள் பிள்ளைகளுக்குக் கல்விபுகட்டப் பயன்படுத்தினர் (பழ *1:8;4:1; 31:1*; சீரா *3:1-2*). ஞானிகள் தங்கள் பள்ளிகளில் மாணவர்களுக்குக் கல்வி கற்பித்தபோது ''தந்தை-மகன்'' என்ற உறவைக் கடைப்பிடித்தனர். நாடு கடத்தலுக்கு முன் ஞானிகளது செயல்களைப் பற்றி, ''யூதாவின் அரசனான எசேக்கியாவின் அவையினர் சேகரித்து வைத்த இவைகளும்கூட சாலமோனின் பழமொழிகளேயாம்'' (பழ *25:1*) என்ற தெளிவான சான்று ஒன்றுள்ளது. ஞானிகள் முதுமொழிகளைத் தொகுப்பவர்களாக மட்டும் இருக்கவில்லை; காலப்போக்கில் அவர்களே புதிய கூற்றுக்களை அமைத்தனர். சிறிதுசிறிதாக ஒரு தனிப்பட்ட குழுவினராக உருவெடுத்தனர். தாங்களே நூல்களையும் எழுதத் தொடங்கினர்.

இவ்வாறு ஞானிகளின் குழு, குருக்கள், இறைவாக்கினர் ஆகியோரின் பாரம்பரியங் களை எழுதிய குழுக்களிலிருந்து வேறுபட் டது. மக்களின் தலைவர்களைக் குருக்கள், ஞானிகள், இறைவாக்கினர்கள் என மூவகை யினராக எரேமியா கவனமாக வேறுபடுத்து கிறார் (எரே *18:18*). ஞானிகள் தங்களுக்கே உரிய ஈடுபாடுகளைக் கொண்டிருந்தனர். அவர்கள் வழிபாட்டு முறையில் குறிப்பிடத் தக்க வகையில் அக்கறை கொள்ளவில்லை. மக்களின் துன்ப நிலை அவர்களைப் பாதிக்க வில்லை. மக்களை ஒன்றிணைத்த பெரும் விசுவாச நம்பிக்கைகள் அவர்களிடம் எவ் வித உணர்ச்சிக் கிளர்ச்சியையும் தூண்ட வில்லை. அவர்கள் பொதுவாக, சமூக, அரசி யல் வாழ்வையும் நடைமுறைப் போக்கை யும் பற்றி அக்கறை கொண்டதாகத் தெரி கிறது. எரேமியாவின் கூற்றுக்கள் அவர்களை எவ்விதத்திலும் போற்றுவதாக அமைய வில்லை (எரே *8:9; 4:22; 9:23*). ஞானிகள் சமயச் சார்பற்றவர்களாக, மனிதனையே மையமாகக் கொண்டு போதித்தனர்.

பாபிலோனுக்கு இஸ்ராயேலர் நாடுகடத் தப்பட்டனர். இந்நிகழ்ச்சியால் யாவேக்குப் பிரமாணிக்கமாய் இருப்பது ஒன்றே மீட் பளிக்க வல்லது என்ற இறைவாக்கினரின் செய்தி உண்மையென நிரூபிக்கப்பட்டது. மனிதனை மையமாகக் கொண்ட ஞானத் தின் பலவீனம் தெளிவாக வெளிப்பட்டது. நாடு கடத்தலுக்குப்பின் அரசு அழிந்தது. ஆலய வழிபாடு முடிந்தது. இறைவாக்கினர் களின் குரல் குறைந்து கொண்டு போயிற்று. திருத்தி அமைக்கப்பட்ட யூதசமூகத்தில் சம யக் கருத்துக்கள் முக்கியம் பெறவில்லை. தனி நபர்ப்பற்றும், ஒழுக்கமின்மையும் அதி கமாய்ப் பரவியிருந்தது. தன்னலம் தேடுதல், - செல்வர்கள் ஏழைகளைச் சுரண்டுவதற்கு இட்டுச் சென்றது. இந்த அவலநிலை - இஸ்ராயேலின் ஞானிகளும் பெரியவர்க ளும் ஆன்ம ஆய்வு செய்வதற்கு ஓர் அரிய வாய்ப்பளித்தது. இந்த அனுபவத்தால் மிக வும் பயன் அடைந்தவர்கள் ஞானிகள் குழு வினரே. ஏனெனில் இறை அச்சமின்றி மற்ற எல்லா மனித ஞானமும் பயனற்றது என்று அனுபவப்பூர்வமாக அறிந்து தெளிந்தனர் (பழ *1:7; 9:10*). இப்பாடத்தை இவர்கள் நன்கு கற்றறிந்தது ஒரு பெரும்பேறாகும். ஏனெனில் நாடு கடத்தலுக்குப்பின் வந்த யூத சமூகத்தில் இவர்களே முக்கிய போதகர்களா கத் திகழ்ந்தனர்.

அரசை இழந்து, ஆலயம் அழிந்து, இறை வாக்கு மறைந்து கொண்டிருந்த இக்கட் டான காலத்தில், இஸ்ராயேலின் ஞான இலக் கிய இயக்கம் தன் பொற்காலத்தில் அடி யெடுத்து வைக்கிறது. அரசவை அலுவலர் களைப் பயிற்றுவிக்கத் தோன்றிய ஞான இலக்கியம், இஸ்ராயேலில் அரசாட்சி இல் லாதபோது உச்சநிலை அடைகிறது. குருக் கள், இறைவாக்கினர்கள், ஞானிகள் ஆகிய மூன்று குழுவினரும் ஒன்றாக இணைகின்ற னர். பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியங் கள் நூல்வடிவம் பெறுகின்றன. சாலமோன், லெமுயேல், ஆகூர், இன்னும் பல பெயர் தெரியாத ஞானிகள் ஆகியோரின் கூற்றுக் கள் ஒன்று சேர்க்கப்பட்டுப் பழமொழி நூலாக, கி.மு. 6-5-ஆம் நூற்றாண்டுகளில் வடிவெடுக்கின்றன. இக்காலத்தில் ஞானி கள் சமயப்பற்றுடையவர்களாகத் தோன்று கின்றனர். பழமொழி நூலின் முன்னுரை (பழ *1-9*) இறைவாக்கினர்களின் போதகத் தொனியைக் கொண்டிருக்கிறது. வினைப் பயன் தீர்ப்புப் பிரச்சனை பற்றிய இலக்கியம் யோபு நூலின் ஆசிரியரால் கி.மு. 6-5-ஆம் நூற்றாண்டுகளில் தொடங்கிவைக்கப்படு கிறது. இப்பிரச்சனையை கி.மு. 4-3-ஆம் நூற்றாண்டுகளில் திருவுரையாளர் நூலின் ஆசிரியர் தொடர்கிறார். கி.மு. 2-ஆம் நூற் றாண்டின் தொடக்கத்தில் சீராக்கின் மகனான இயேசுவின் நீண்ட, விரிவான போதகம், யூத ஞான போதகத்திற்கு அடிப்படையாக அமைகிறது. சீராக் நூல் குருத்துவத்திற்கு மதிப்பளிக்கிறது. ஆசிரியர் பக்தியோடு வழி படுபவராகத் தோன்றுகிறார் (சீரா *44-49*). ஞானத்தையும் சட்டத்தையும் ஒன்றாக்கு கிறார் (*24:23-24*). இதிலே ஞானிகளும் சட்ட வல்லுநர்களும் ஒன்றாகின்றனர். இந்நிலை நற்செய்திக்காலத்திலும் நீடிக்கிறது. கி.மு. முதலாம் நூற்றாண்டின் மத்தியில் தோன்றிய

சாலமோனின் ஞானம் என்ற நூல் மீட்புவரலாற்றை எடுத்துக்கூறுகிறது. வினைப்பயன் தீர்ப்புப்பற்றிய பிரச்சனைக்கு நல்லதோர் பதில் காண முனைகிறது. தோபியா, பாரூக், தானியேல் போன்ற நூல்களும் சங்கீதங்களில் சிலவும், ஞான இலக்கியங்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றன.

பழைய ஏற்பாட்டு ஞான நூல்களைப் புரிந்து கொள்ள இந்தத் தோற்ற வரலாறு ஓரளவு பயன்படும். ஆனால், அதன் முக்கியத்துவத்தை மிகைப்படுத்தக் கூடாது. ஞான நூல்களில் வரும் கூற்றுக்கள் அரசவை அலுவல்களுக்கு மட்டும் பொருந்தும்படி வரையறை செய்யப்பட்டவையன்று. இந்நூல்கள் இன்றைய வடிவில், நாடு கடத்தப்பட்ட பிற்காலத்தைச் சேர்ந்தவை. அப்போது அரசனோ, அரசவையோ இஸ்ரேயேலில் இருக்கவில்லை. ஞானக் கருத்து முழுவதும் சமயச் சார்புடையதாகத் தெரிகிறது (பழ 1-9). இந்த ஞானத்திற்குப் பல கோணங்கள் உண்டு. அவற்றைப் பின்பு பார்ப்போம்.

**4. விவிலியத்தில் ஞான இலக்கிய நூல்கள்:** விவிலியத்தில் ஞானத்தைப் பொதுக் கருத்தாகக் கொண்ட நூல்களை ஞான நூல்கள் என்றழைப்பது மரபு. எபிரேயப் பாரம்பரியமும், அதைப் பின்பற்றிக் கத்தோலிக்கப் பாரம்பரியமும், பழமொழி, யோபு, திருவுரையாளர், சீராக், சாலமோனின் ஞானம், உன்னத சங்கீதம், சங்கீதங்கள் - ஆகிய ஏழு நூல்களையும் ஞான இலக்கியங்கள் என்று கருதி வந்தன. ஆனால் எந்த அடிப்படையில் இந்நூல்கள் ஒன்றாகத் தொகுக்கப்பட்டன என்று கூறுவது கடினம். ஏனெனில் இவையெல்லாம் ஒரே தன்மையுடையன அல்ல. பொதுவாக, இந்நூல்கள் பெருமளவுக்குப் பழமொழி அல்லது முதுமொழி நடையில் எழுதப்பட்டுள்ளன எனலாம்.

ஞான இலக்கியத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகப் பழமொழி, சீராக் ஆகிய நூல்கள் அமைந்துள்ளன. தரத்தில் அடுத்து வருவது திருவுரையாளர் நூலாகும். இவை தனித்தனியான பொருட் செறிவுடைய கூற்றுக்களையோ, ஒரே குறிப்பிட்ட பொருள்கள் பற்றிய கூற்றுக்களின் தொகுப்புகளையோ கொண்டுள்ளன. யோபு நூல் முதுமொழி நடையில் இல்லையென்றாலும், நீதிமானின் துன்பம் என்ற பிரச்சனை பற்றிய காவியமாக இருப்பதாலும், ஞானம் பற்றிய நீண்டதோர் பாடலைக் கொண்டிருப்பதாலும் (யோபு 28) ஞான இலக்கியங்களுள் ஒன்றாக ஏற்றுக் கொள்ளப்படத் தகுதியுள்ளதாகக் கருதப்பட்டது. சாலமோனின் ஞான நூல் முதுமொழித் தன்மையைவிட, தத்துவ இயல் தன்மை கொண்டது; கிரேக்க மொழியில் எழுதப்பட்டது.

இவற்றோடு சங்கீத நூலும், உன்னத சங்கீத நூலும், விவிலிய ஞான இலக்கியங்களோடு சேர்க்கப்படுவது மரபு. ஞானம் என்ற குறுகிய பொருளில், இவை ஞான இலக்கியங்கள் அன்று. சங்கீத நூலில் பல சங்கீதங்கள் ஞானத்தைப் பற்றியனவாகும். மேலும் இறைவனுக்கும் மனிதனுக்குமிடையே யுள்ள உறவு பற்றிய உள்ளத்து எழுச்சிப் பாடல்களைக் கொண்டுள்ளது. ஆகவே இந்நூலும் ஞானநூல்களில் ஒன்றாகக் கருதப்பட்டிருக்கலாம். உன்னத சங்கீதம், ஆண்-பெண் உறவு பற்றிய அகப்பாடல் வகையைச் சேர்ந்தது. இந்நூலும் மனிதனது ''நல்வாழ்விற்கு'' ஏதோ ஒரு வகையில் உதவுகிறது என்றறிந்த யூத ஞானிகள், இதையும் ஞான இலக்கியத் தொகுப்போடு சேர்த்துப் பாதுகாத்தனர்.

*ஆதி 1-11;37-50; யாத் 34:6-7;* உபாகமம்; *2 சாமு 9-20; 1 அர 1-2* ஆகிய பகுதிகளும், ஆமோஸ், எசாயா, அபக்கூக்கு, யோனா, தானியேல், எஸ்தர், பாரூக், தோபியா ஆகிய நூல்களில் சிலபகுதிகளும், ஞான இலக்கியத் தன்மை கொண்டுள்ளனவாகத் தெரிகின்றன.

**5. ஞான நூல்களின் ஆசிரியர்கள்:** யோபுவின் பொறுமையும், திருவுரையாளரது துன்ப இயற்கைக்கோட்பாடும் சீராக்கின் மட்டுடைய மனப்போக்கும் - மக்களின் வழக்கில் பயன்படும் எடுத்துக்காட்டுகளாக மாறிவிட்டன. ஆனால் ஞான இலக்கிய

நூல்கள் தோன்றக் காரணமானவர்கள் எத் தகையவர்கள்? எரேமியாவின் காலத்திலேயே யூதத்தலைவர்களுள் ஞானிகள் குழுவினர் ஓர் அங்கம் வகிக்கின்றனர் (எரே 18:18). ஞானத்தைத் தேடுவதும், போதிப்பதும் இவர்களது அலுவலாகத் தெரிகிறது. ஆனால் இவர்களை வகைப்படுத்துவது ஆய் வாளர்களுக்கு ஒரு பிரச்சனையாகவே இருந்து வ்ந்திருக்கிறது. இவர்களுக்கு ஆய்வறி வாளர்கள், மனித நலக் கோட்பாட்டாளர் கள், தனிநபர்ப் பற்றுடையவர்கள் எனப்பல வாறு பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒருவிதத்தில் இவையாவும் இவர்களுக்குப் பொருந்தும். மற்றொரு விதத்தில், இப் பெயர்களில் எதுவும் இவர்களுக்குப் பொருந் தாது. ஏனெனில் இவர்களது தன்மை இப் பெயர்கள் குறிப்பதை விடப் பெரியது. பெயர் கொடுத்து விவரிப்பது வசதியாக இருக்கலாம். ஆனால் இவர்களது தன் மையை இப்பெயர்கள் துல்லியமாக விவரிக் காதும் போகலாம்.

யூத குருக்கள் வழிபாட்டிலும் சட்டத்தை விளக்குவதிலும் ஈடுபட்டனர். ஆலயச்சூழ் நிலையில் உலவினர். இறைவாக்கினர்கள் இறைவனுக்கும் அவரது மக்களுக்குமிடை யிலுள்ள உறவைப்பற்றி அக்கறை கொண்ட னர். மக்களுக்கு இறைவனது திருவுளத்தை எடுத்துக்கூறினர். தூய்மைப்படுத்தப்பட்ட வெளிப்பாட்டுச் சூழ்நிலையில் உலவினர். மேற்கூறப்பட்ட இருபிரிவினருக்கும் மாறாக, ஞானிகள் ஆலயத்தைப்பற்றியோ வெளிப்பாட்டைப் பற்றியோ அதிகம் பேச வில்லை. இவர்கள் இவ்வுலகில் உறுதியா கக் காலூன்றியவர்கள். மற்ற மனிதர்களைப் போலவே சாரமற்ற வாழ்க்கைச் சூழ்நிலை யில் உலவினர். இவர்கள் இஸ்ராயேலின் பள்ளி ஆசிரியர்கள், விவேகமிக்க ஆலோச கர்கள், அனுபவமிக்க முதியோர்கள், புலமை மிக்க எழுத்தாளர்கள் ஆவர். இவர்கள் வெளிப்பாட்டின் செய்திகளையும், அன் றாட அனுபவத்தின் பாடங்களையும் கூறு கூறாக்கித் தங்கள் மாணவர்களுக்கும் பிறருக் கும் சிறிது சிறிதாக எடுத்துக்கூறி அவர் களைப் பயிற்றுவித்தனர்.

போதிப்பதும், கண்டிப்பதும், திருத்துவ தும் ஞானிகளின் பணியாகும். இவர்களது போதகத்தின் பொருளடக்கம் மனித நடத்தை முழுவதையும் உள்ளடக்கியது. வெளிப்பாடு, அறிவு, அனுபவம் ஆகியவற் றின் ஒளியில் - மனிதனை மனிதன் என்ற அளவில் ஆய்வு செய்து, தாங்கள் கண்ட உண்மைகளைப் பிறருக்கு எடுத்துக் கூறினர். இந்த அடிப்படையில் இவர்களைத் தத்துவ ஞானிகள் என்று கூறலாம். இறைவனையும், மனிதனையும் பற்றிய அறிவைப் பெறுவதற் குப் பெரும் மதிப்பளித்தனர். இந்த அடிப் படையில் இவர்களை ஆய்வறிவாளர்கள் அல் லது அறிவியல்வாதிகள் எனலாம். மனித வாழ்வின் நடத்தை முழுவதும் பற்றியும், மனித வாழ்வின் மனித இறைப்பண்புகளி லும் அக்கறை கொண்டனர். இந்த அடிப் படையில் இவர்கள் மனித நலக்கோட்பாட்டா ளர்கள் ஆவர். பழைய ஏற்பாட்டில் இந்நூல் கள்தான் தனிநபர்களின் பிரச்சனைகளில் வெளிப்படையாக அக்கறை காட்டுகின்றன. பொதுவாக, இவற்றில் நாட்டுப்பற்று, மெசியா போன்ற கருத்துக்கள் காணப்படுவ தில்லை. முக்கியமல்லாத சாதாரண மனித னின் அன்றாட காரியங்களில் கவனம் செலுத்துகின்றன. வாழ்வு ஒரு முழுமையும் ஒருங்கிணைப்பும் கொண்டது என்றும் வலி யுறுத்திக் கூறுகின்றன. இதில்தான் இந்நூல்க ளின் மதிப்பும் அடங்கியிருக்கிறது. இந்நூல் களின் ஆசிரியர்கள் தாங்களாகவே சிந்தித் துப் பல காரியங்களைப்பற்றித் தங்களது சொந்தக் கருத்துக்களைக் கொடுப்பதாகவும், இறைவெளிப்பாட்டின் அதிகாரத்தையோ, புலமைமிக்க முன்னோர்களின் அதிகாரத் தையோ, அரிதாகத்தான் பயன்படுத்துவதாக வும் தோன்றுகிறது. இந்த அடிப்படையில் இவர்கள் தனி நபர்ப்பற்றுடையவர்கள் என்று கூறலாம்.

ஆனால், இவர்கள் தத்துவ ஞானிகளைப் போல் பகுத்தறிவுக்கு மட்டும் முதன்மை அளிக்கவில்லை. அறிவியல்வாதிகளைப் போல் வெறும் அறிவை மட்டும் போற்ற வில்லை. மனிதவாழ்வின் மாண்புகள் இவர் களுக்கு முக்கியம் வாய்ந்தவைதான். அதற்

காக மனிதனது ஆன்மீகப்பண்புகளை மறக்க வில்லை. மனித நடத்தையைப் பற்றித் தாங் கள் கூறுவதுதான் இறுதியானதுபோல் இவர் கள் போதித்தாலும், இறைவனது வார்த் தையே முதலும் முடிவுமாகும் என்று வலி யுறுத்துபவர்களில் முதன்மையானவர்கள். உண்மையில் இவர்களுக்கு ''இறை அச்சமே - ஞானத்தின் தொடக்கமாகும்''. எல்லாவற் றையும் இறைவனது மகிமைக்காகச் செய் யுங்கள் என்று போதித்தனர். அறிவை அறி வுக்காக மட்டும் தேடவில்லை; இறைப்பற் றுக்காகத் தேடினர். இறைகாரியங்களில் மட்டு மன்று, எல்லாவற்றிலும் மேன்மை அடை யும் கலையைத் தங்களுக்குச் செவிமடுப் போருக்குப் போதித்தனர். எல்லாம் இறைவ னிடமிருந்து வந்தன; மனிதன் வழியாக எல்லாம் இறைவனிடம் திரும்பிச் செல்ல வேண்டும் என்று உறுதியாக அறிந்திருந்த னர். சமயம் - மனிதனது வாழ்வு முழுவதி லும் ஈடுபாடு கொண்டிருந்தது. அது முழு அர்ப்பணத்தையும் கோரியது. தங்கள் மாண வர்கள் இந்த அர்ப்பணத்தைத் தங்களுடைய தாக்கி, அது அவர்களது வாழ்வின் எல்லாப் பகுதிகளையும் ஊடுருவி ஆட்கொள்ளச் செய்ய வேண்டும் என்பதே ஞானிகளின் குறிக்கோள் *(பழ 1:2-6)*.

இக்குறிக்கோளை அடைய, ஞானிகள் தங் கள் வாழ்விலேயே, இறைவனைப் பற்றிய, எப்போதும் வளர்ச்சியுறும் அறிவையும் இறைவனது திருவுளத்தையும் தேடினர். திரு மறை நூலைக் கவனமாகப் படித்தனர் (சீராக் நூலின் முன்னுரையைக் காண்க). இறைவ னது படைப்பாகிய உலகமுழுமையிலும், குறிப்பாக அவரதுமிகச் சிறந்த படைப்பா கிய மனிதனின் அமைப்பிலும் காணப்படும் அவரது ஆற்றல், மகிமை ஆகியவற்றைத் தியானித்தனர். மனிதத்தன்மை, மற்றும் அவன் செயல்படும் முறை பற்றிய அனுப வத்திலிருந்தும் உலகிற்கு ஒரு வரைபடம் உண்டென்று அறிவுசார்ந்த முறையில் முடிவு செய்தனர். பலதலைமுறைகளாக அறிவர்களின் நன்கு சோதிக்கப்பட்ட அனுப வத்திலிருந்து வடித்தெடுத்த ஞானத்தைத் தொகுத்தனர். ஞானிகளைப் பற்றிச் சீராக்நூல் ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார். ''ஞானி - முன்னோர் எல்லாருடைய ஞானத்தையும் தேடுவான் ... உவமைகளின் நுட்பங்களை ஊடுருவிக் காண்பான்... பழமொழிகளின் உட்பொருளைத் தேடுவான். உவமைகளில் பொதிந்துள்ள புதிர்களை எளிதில் புரிந்து கொள்வான். பெரியோர் நடுவே பணியில் அமர்வான். அயல்நாடுகளில் பயணம் செய் வான். மாண்புமிகு ஆண்டவர் விரும்பி னால்.. தமதுஞானத்தின் போதகங்களை மழைபோல் வரவிடுவார்... அவன் நெடுங் காலம் வாழ்ந்தால் ஆயிரம்பேரைவிடப் புகழ் பெறுவான். இறந்தாலும் அவனுக்கு மகிமை யுண்டு'' *(சீரா 39:1-15)*.

ஞான ஆசிரியர்களின் பண்புகளில் - முத லாவது, அவர்கள் பட்டறிவு சார்ந்த ஞானம் பொதிந்த ஒப்புமைக் கூற்றுக்களைப் பயன் படுத்துவதாகும். ''மசால்'' எனப்படும் இந்த ஒப்புமைக் கூற்றுக்கள் உவமையாக, உருவக மாக, விடுகதைகளாக வடிவெடுக்கலாம்; பெரும்பாலும், பழமொழி அல்லது முது மொழி வடிவம் எடுக்கின்றன. இவை பாடல்வடிவும் சந்தமும் இணையமைப்பும் கொண்ட மேற்கோளுரைகளாகும் (இவை பற்றிப் பின்பு பார்ப்போம்). இக்கூற்றுக்கள் ஒழுக்க அமைப்பைப் பற்றியவையாகும். இவை உருவகமாகவும், சில இடங்களில் புதிரான முறையிலும், எடுத்துக் கூறப்படுவ தால் இவற்றைப் புரிந்து கொள்ள வாசகர் களிடம் ஆழ்ந்த சிந்தனை அவசியமாகும்.

இரண்டாவது, ஞானிகள் - அறிவு மற்றும் வெளிப்பாடு சார்ந்த ஒரு முறையிலும் உண் மைகளை எடுத்துக்கூறுவர். இவர்களது போதகம் யாவற்றையும் உள்ளடக்கியது. அதிகம் நாட்டுப்பற்றில்லாதது. இதில் இவர் களது போதகம், குருக்கள், இறைவாக்கினர் கள் ஆகியோருடைய போதங்களிலிருந்து வேறுபடுகிறது. இவர்களதுபோதகம் யூதர் களுக்கு மட்டுமன்றி, எல்லாருக்கும் உரியது. இவர்கள் அறிவுக்கும் அனுபவத்திற்கும் அதிக மதிப்பளித்து மனித நலத்தில் அக் கறை கொண்டதால், விவிலியத்தில் மனித

நலப்பற்றுடையவர்கள் என்று அழைக்கப் பட்டுள்ளனர் (ஞானம் 7:17-21).

மூன்றாவது, சமயம் வெறும் கோட்பா டன்று; அது ஒரு வாழ்க்கை முறையாகும் என்று ஞானிகள் வலியுறுத்தியுள்ளனர். இறைவனும் அவரது நேரடிச் சட்டமும், இயற்கை சார்ந்த சட்டமும், மனித வாழ்க் கையின் ஒவ்வொரு பகுதியிலும் புகுகின் றன என்று ஞானிகள் காட்டியுள்ளனர். சம யம் ஒரு தனிப்பட்ட காலத்திற்கோ, இடத் திற்கோ வரையறை செய்யப்பட வேண்டிய தொன்றன்று. அதுமனிதனை எல்லாக் காலத் தும் அவன் செய்யும் யாவற்றையும் பாதிக்க வேண்டுவதன் அவசியத்தை வலியுறுத் தினர்.

ஞான ஆசிரியர்களின் கருத்துப்படி வெளிப்பாடு, பாரம்பரியம், இறைக் கொடை, அனுபவ அறிவு ஆகியவை ஞானத்தின் ஊற்றுக்களாக அமைகின்றன. போதகம், படிப்பு, பயிற்சி, சிந்தனை, தியா னம், ஆலோசனை ஆகியவை ஞானத்தை அடையும் சாதனங்களாகும் (பழ 1:5; 12:15; 13:4; 19:20 தொ). ஞான ஆசிரியர்கள் மனிதர் களை ஞானி, மூடன் என இருவகையாகப் பிரிக்கின்றனர். இரண்டு வகையினருக்கும் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை. இக் கருத்து உண்மைநிலைக்கு ஒத்ததன்று; இது ஒரு குறிக்கோளுடைய திட்ட அமைப்பா கும். ஞான இலக்கியங்களின்படி இருவகை யினரும் ஒத்துப்போக முடியாத முறையில் பிரிந்து கிடக்கின்றனர். இளைஞன் தன்மை யிலே அறிவிலியாவான். அவன் போதனை யாலும், ஆலோசனையாலும் ஞானம் பெற வேண்டும். வயது முதிர்ச்சியோடு அவன் ஞானத்தைக் கற்றுக்கொள்ளவில்லை என் றால், அவன் நம்பிக்கையற்ற முறையில் மூடனாகிறான். மூடத்தனம் வாழ்வில் தோல்விக்கும் துன்பத்திற்கும் இட்டுச்செல் லும். ஞானத்தையும் வாழ்வில் வெற்றி பெறுவதையும் சமன்படுத்துவது - உண்மை வாழ்க்கைச் சூழ்நிலைக்கு எப்போதும் சரி யாக இருப்பதில்லை. இது காலப்போக்கில் மாற்றிஅமைக்கப்பட வேண்டும்.

சுருக்கமாக, ஞான ஆசிரியர்கள் யார்? இவர்கள் தங்கள் செய்தியை ''மசால்''களாக அல்லது ஒப்புமைக் கூற்றுக்களாக எடுத்துக் கூறியவர்களாவர். சட்டம், இறைவாக்கினர் கள் ஆகியவற்றில் காணப்படும் இறை வெளிப்பாட்டிலிருந்தும் - படைக்கப்பட்ட உலகு, மனிதனது தன்மை, செயல், கதி ஆகியவை பற்றிய தியானம் மற்றும் அனுப வத்தாலும் கண்டு பிடித்தவற்றிலிருந்தும் - இவர்கள் கண்டறிந்த ஞானத்தைப் போற்று தல், விவரித்தல், போதித்தல், ஆகிய நோக் கத்திற்காக எழுதியவர்கள். இவர்கள் தங்கள் மாணவர்களுக்குப் போதித்த செய்தியைப் புனித பவுலின் கூற்றில் பின்வருமாறு சுருக்க மாகக் கூறலாம்; ''உண்மையானது எதுவோ, கண்ணியமானது எதுவோ, நீதி எதுவோ, இனியது எதுவோ, எதெல்லாம் நற்பண்புடையதோ, எதெல்லாம் புகழ்ச்சிக் குரியதோ, அவற்றையே மனதில் கொள்ளுங் கள். நீங்கள் என்னிடம் கற்றுக்கொண்ட போதனைகள், பெற்றுக் கொண்ட படிப்பினை கள், என்னிடம் கேட்டறிந்தவை, என் வாழ்க்கையில் நீங்கள் பார்த்தவை அனைத் தையும் கடைப்பிடியுங்கள்'' (பிலி 4:8-9). ''நீங்கள் உண்டாலும், குடித்தாலும், எதைச் செய்தாலும், எல்லாம் கடவுளின் மகிமைக் கெனச் செய்யுங்கள்'' (1 கொரி 10:31).

**6. யூத ஞான ஆசிரியர்களின் ஞானம்**

அ) : ஞானம் என்ற கருத்து மிகவும் சிக்க லானது; நழுவிப்போகும் தன்மையுடையது. அதைத் துல்லியமாக விளக்க முடியாது. ஞானத்தைக் குறிக்கும் ''ஹக்மா'' (Hakma) என்ற எபிரேயச் சொல் விவிலியத்தில் பல பொருட்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இச்சொல் கைவினைஞர்கள் (யாத் 28:3; 31:3-6; 35:10; 36:1), அழுவதைத் தொழிலா கக் கொண்டுள்ளவர்கள் (எரே 9:17), மாலுமி கள் (சங் 107:27), பொதுவாக ஒரு தொழிலில் ஈடுபடுபவர்கள் காட்டும் ஆற்றலையும் திற னையும் நுட்பத்தையும் குறிக்கிறது (1 நாள் 22:15; 2 நாள் 26:7.12 தொ). பார்வோனின் கனவுகளுக்கு விளக்கம் அளிப்பதில் யோசேப்பு காட்டிய திறமை அவருக்கு ஞானி என்ற பட்டத்தைப் பெற்றுத்தந்தது

(ஆதி 41:39). அப்சலோமை எருசலேமுக்கு மீண்டும் வரவழைக்கச் செய்ய, தெக்கோவா வூர்ப் பெண்ணின் நடிப்பு ஞானத்தின் செயல் முறைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும் (2 சாமு 14:1-23). தலைவர்கள் காட்டும் விவேகம் ஞானமாகக் கருதப்படுகிறது (உப 1:13.15; 34:9). உண்மைத் தாயைப் போலித் தாயிடமிருந்து வேறுபடுத்திக் கண்டுபிடிக் கக் குழந்தையை இரண்டாக வெட்டும்படி கட்டளையிட்டதில் மனித இதயங்களின் தன்மையைப் பற்றிய சாலமோனின் அறிவு, அப்பேரரசனது ஞானத்தை எடுத்துக்காட்டி யது (1 அர 3:16-28). இவ்வரசனது அரசியல் மதிக்கூர்மையும் (1 அர 5:12), விடுகதை களை விடுவிப்பதும் (10:1-4), இயற்கைப் பொருட்கள் பற்றிய உரையும் (4:33) இவரது ஞானத்திற்குச் சான்றாக அமைந்தன. ஞானி, அரசனுக்கு ஆலோசகராக இருக்கலாம் (எரே 50:35; பழ 31:1). கூர்மதியுடைய பெண்களும் ஞானிகளாகக் கருதப்பட்டனர் (2 சாமு 14:2; 20:16; நீதி 5:29). இந்த ஞானம் அறிவுத்திறன் சார்ந்தது; ஒழுக்கப்பண்பன்று. இது செயல் முறையானது; சமயப்பண்பன்று. அதிகம் போனால் இதுஒழுக்கச் சார்பற்றதாக இருக்க லாம் (2 சாமு 13:3; 1 அர 2:6).

ஞானம் யூகித்து ஆய்ந்து பெறும் அறி வன்று. அது முதன்மையான செயல் முறை அறிவாகும். ஞான இலக்கியங்களில் பெறும் அறிவுத்திறனைவிட ஒருவன் வாழ்வை ஒழுங்குபடுத்தும் திறனே ஞானமாகும். வாழ்க்கையில் வெற்றி பெறுபவன் ஞானி யாவான். ஒருவன் தான் தனிச்சிறப்பான முறையில் அறிந்ததைச் செயல் முறையாகப் பயன்படுத்தி வெற்றி கொள்ளும் அறிவு அவனை ஞானியாக்குகிறது.

ஆ. ஞானம் பற்றிய எபிரேயக் கருத்துக் களைப் பின்வருமாறு பிரித்துக் காட்டலாம். ஞானத்தை மனித ஞானம், இறைஞானம் என்று பிரிக்கலாம். பழமொழி நூலின் காலத் தால் முந்திய பகுதிகள் சரியாக வாழ்வது பற்றிய அறிவை வலியுறுத்துகின்றன. இந்த ஞானம் ஆய்வுணர்வு, கூரிய நோக்கு, துறை நுட்பக்கூரறிவு, விவேகம் எனப் பல பெயர் கள் பெறும். ஆனால் உண்மையான ஞானத் தைச் சமயத்திலிருந்து பிரிக்க முடியாது. ஆகவே உண்மையான ஞானி சட்டத்தில் காணப்படும் இறைவனது திருவுளத்தை ஏற் றுக்கொள்வார். ஆகவே ஞான இலக்கியங்க ளில் சமயஞானம் அடிக்கடி வலியுறுத்தப் படுவதில் வியப்பொன்றுமில்லை. இந்த இறை ஞானம்தான் பழ 1-9-இல் எடுத்துக் கூறப்படுகிறது. அதன் சுருக்கம் ''இறை அச்சமே ஞானத்தின் தொடக்கம்'' என்ற மேற்கோளுரையில் தரப்படுகிறது (பழ 1:7; 9:10; 15:38; 30:3; யோபு 28:28; சீரா 1:16). இவ்வச்சம் - பய பக்தியோடும் பிள்ளைக் குரிய பணிவோடும் ஒன்றானதாகும். இதுவே ''ஞானத்தின் நிறைவு'' (சீரா 1:16); ''ஞானத் தின் உச்சி'' (1:18); ''ஞானத்தின் வேர்'' (1:20); செயல்முறையில் இதுசமயத்தைக் கடைப்பிடிப்பதாகும்.

இ. மனித ஞானத்தை அக ஞானம், புற ஞானம் எனப்பிரிக்கலாம். சமயத்தைக் கடைப்பிடிப்பது ஞானத்திற்கு இன்றியமை யாததாகையால், வெளிப்படுத்தப்பட்ட மோசே சட்டத்தைக் கடைப்பிடிப்பது புற ஞானத்தின் முனைப்பான பண்பாகும். ஆனால் ஞான இலக்கியங்களில் பழங்காலப் பகுதிகள் சட்டத்தில், அதாவது எபிரேய ருக்கே தனிச்சிறப்பான ஒன்றில் தங்கள் அடிப்படையையோ ஒழுக்க வாய்ப்பாடு களையோ தேடவில்லை. இவை இடம், காலம் ஆகியவற்றைக் கடந்து நிற்கின்றன. மனித இதயம், வாழ்வு ஆகியவை பற்றிய உளவியல் கவனிப்பிலிருந்து இவை தங்க ளது போதகத்திற்கு முழுமையான, அறிவு சார்ந்த அடிப்படையை அமைத்துக் கொள் கின்றன. பிறவற்றிலிருந்து விலகிய தனித் தன்மையுடையதாயினும் இந்த ஞானம் வரையறைகளைக் கடந்து சென்று மனுக் குலம் முழுவதையும் அடைகிறது. ஆகவே அதன் பாடம் யாவருக்குமுரியதாகும்; மனுக்குலம் முழுவதற்கும் உரிய பொதுச் சொத்தாகும்.

ஆயினும் வெளிப்படுத்தப்பட்ட சட்டம், இறை ஞானத்தின் வெளிப்பாடாகும்.

ஆகவே சட்டமும் ஞானமும் ஒன்றாகக் கருதப்பட்டன. இதைச் சீராக் நூலிலும், பாரூக் *3:9-4:1*-இலும் காணலாம். ஞானம் உன்னத இறைவனது வாயினின்று புறப்படு கிறது. மக்களிடையே ஓர் உறைவிடம் தேடு கிறது (சீரா *24:1-12*). சீயோனில் உறைவிடம் பெற்று, சட்டநூலில் தன்னிறைவு மலர்ச்சி யைக் காண்கிறது (*24:30-33*). இப்படிச் சட் டத்தையும் ஞானத்தையும் ஒன்றாக்கும் போது, ஏற்கெனவே உபாகம நூலில் உள்ள கருத்தையே சீராக், பாரூக் நூல்கள் தெளி வாக வெளிக்கொணர்கின்றன. ''என் இறை வனாகிய ஆண்டவர் எனக்குக் கட்டளையிட்ட படியே நான் உங்களுக்குக் கட்டளைகளை யும் நீதி முறைகளையும் கற்பித்தேன்... நீங் கள் அவற்றை ஏற்றுக் கொள்வதோடல்லா மல், அவற்றின்படி நடந்து கொள்ள வேண் டும். இதுவே உங்கள் ஞானம்....(உப *4:5-8*).

**ஈ.** அக ஞானத்தைக் கோட்பாட்டளவான ஞானம், செயல்முறை ஞானம் என இரு வகையாகப் பிரிக்கலாம். இயற்கை, மனிதன், இறைவன் ஆகியவை பற்றிய ஊக ஆய்வுக ளில் எபிரேயச் சிந்தனையாளர்கள் திளைத்த தாகத் தெரியவில்லை. அவர்களது சிந்தனை வளர்ச்சியில் ஊக ஆய்வு அரிதாகவே இடம் பெறுகிறது. திருவுரையாளர் நூல் செயல் முறை ஞானத்தைப் பிரித்துரைக்கிறது; வலி யுறுத்துகிறது. இந்நூல் பொருட் களின் இறுதிக்காரணத்தைத் தேடும் ஞானத்தை, குறிப்பாக இறைவன் உலகை ஆட்சி செய்வது பற்றிய இறுதி விளக்கத்தை அறிய விரும்பும் ஞானம் வீணானது என்று பறைசாற்றுகிறது (திருவுரை *1:12-18*). யோபு நூலின் ஆசிரியர் ஓர் ஆழமிக்க இறையியல் பிரச்சனையை எழுப்புகிறார். அது உலகை ஆள்வதில் இறைபாலிப்பாகும் (யோபு *28:12-14*). அதில் நீதிமான்களின் துன்பம் என்ற பிரச்சனை முக்கிய இடம் பெறுகிறது. ஆனால் இப்பிரச்சனைக்கு இறைவன் ஒரு வர் மட்டுமே நிறைவான பதிலைக் கொடுக்க முடியும் (*28:23-24*). இந்தப் பிரச்சனையைப் பொறுத்த மட்டும் மனிதன் செய்யக்கூடியது - ''இதோ! ஆண்டவரைப் பற்றிய அச்சமே ஞானம்; தீமையைவிட்டு விலகுவதே அறிவு'' (*28:28*) என்று சுருக்கமாக ஆசிரியர் கூறு கிறார். இப்பிரச்சனைகளுக்குப் பதில் காண்ப தில் நிறைவு காண்பதைவிட, இவற்றோடு எப்படி ஒத்து வாழ்வது என்பதில் ஞான ஆசிரியர்கள் அக்கறை கொள்கின்றனர். பிற ருடன் பழகும் விதம், வெற்றிக்கு வழிவகை கள், பகைமை, எதிர்ப்பு, தோல்வி ஆகியவற் றால் ஏற்படும் பாதிப்பிலிருந்து பாதுகாத்துக் கொள்ளும் விதம் ஆகியவை பற்றிய மேற் கோளுரைகளை இந்நூல்களில் பரவலாகக் காணலாம். ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் எப்படி நடந்து கொள்வது என்பது பற்றிய அறிவில் செயல்முறை ஞானம் அடங்கி யிருக்கிறது. பெரும்பாலும் அறிவு சார்ந்த சுயநலம் இக்கூற்றுக்களில் காணப்படுகிறது.

ஆனால் பாரம்பரிய செயல்முறை ஞானம் சமயக் குறிக்கோளை நோக்கி அமைந்துள் ளது (பழ 1-9). எபிரேய ஞானிகளுக்குத் தொடக்கம் கேள்வியன்று; விசுவாசமேயா கும். எல்லாவற்றிற்கும் மேலானவரான, படைத்துக் காப்பவரான, ஆளுபவரான, எல் லாருக்கும் நடுவரான ஒருவரை - இறை வனை - விசுவாசத்தில் ஏற்றுக் கொள்கின்ற னர். முடிந்தமட்டும் இறைவனது வார்த்தை களையும் வழிவகைகளையும் அறிய முயல் வதும், அந்த அறிவைச் செயல்முறையில் பயன்படுத்துவதுமே ஞானமாகும். வாழ்க் கையிலும் நடத்தையிலும் எல்லாச் சிக்கல் மிக்க சூழ்நிலையிலும் இறைவனது திரு வுளத்தை நிறைவேற்றுவதே ஞானம்.

இதுவரை மனித ஞானத்தைப் பாகுபடுத் திப் பார்த்தோம். இனி இறைஞானத்தைப் பற்றிச் சிறிது பார்ப்போம். இதை இறைவ னுக்குப் பண்பாகச் சாற்றிக் கூறப்படும் ஞானம் - ஆட்தன்மைப்படுத்தப்படும் ஞானம் என இருவகையாகப் பகுக்கலாம்.

**உ. இறைவனுக்குப் பண்பாகச் சாற்றிக் கூறப் படும் ஞானம்:** இது, இயற்கையின் வியத்தகு அமைப்பிலும் (சங் *104:24*; பழ *3:19-20*; யோபு *28:12-18*; ஞானம் *13:1-9*), மனித நிகழ்ச்சிகளை முறைப்படுத்துவதிலும், பிரதி

பலிக்கிறது. ஞானம் மதிப்புமிக்கதொன்றாகையால், கடவுளர்கள் இதை ஏராளமாகக் கொண்டிருப்பதாகப் பழங்கால மேற்காசிய மக்கள் கருதினர். ஞானத்தைக் கொண்டே கடவுளர்கள் உலகைப்படைத்ததாகவும் ஆளுவதாகவும் நம்பினர். ஏல் என்ற கடவுள் எல்லாவற்றிற்கும் முன்பே ஞானத்தைப் படைத்ததாகவும், அந்த ஞானம் எல்லாக் காலத்திற்கும் நிலைத்திருப்பதாகவும், கி.மு. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த உகாரித்து வாசகங்களில் காண்கிறோம்.

இஸ்ராயேலிலும் இதே கருத்துக்களைக் காண்கிறோம். இறைவனைப் போல் ஞானம் மிக்கவர் வேறொருவரும் இல்லை *(யோபு 9:4-10; 12:13; 21:22)*. இறைவனில் மட்டுமே எல்லா ஞானமும் காணப்படுகிறது (யோபு 28:12-27; பாரூக் 3:15-18). ''இறைவனிடம் ஞானமும் வல்லமையும் உள்ளன. அறிவுக்கூர்மையும் அறிவும் அவருக்கே உரியன'' *(யோபு 12:13)*. ''ஆண்டவரின் ஞானம் பெரியது; அவர் ஆற்றல் மிக்கவர்; அனைத்தையும் அவர் பார்க்கிறார்... மனிதனின் செயல்களனைத்தையும் அவர் அறிவார்'' *(சீரா 15:18-19)*. ''உன்னதத்திலுள்ள வாக்கே ஞானத்தின் ஊற்று... ஞானத்தின் ஆணிவேர் யாருக்கு வெளிப்படுத்தப் பட்டது? அதன் நுணுக்கங்களை அறிந்தவர் யார்? ஞானத்தின் அறிவாற்றல் யாருக்குத் தெளிவாக்கப்பட்டது?...'' *(1:5-8)*.

மேற்கூறப்பட்டவையிலிருந்து இஸ்ராயேலும் பழங்காலப் புறஇனமக்களும் ஞானத்தைப்பற்றி ஒரேவிதக் கருத்துக்களைக் கொண்டிருந்தனர் என்றும், ஞானம் மேலான முறையில் செயல்முறை அறிவாகும், சிறப்பான முறையில் இறை உடைமையாகும் என்றும் தோன்றலாம். ஆனால் எது நன்மை எது தீமை என்பது பற்றி ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. புற இனக்கடவுளர்கள் நன்னெறிச் சார்பற்றவர்கள்; அமைதி குலைக்கும் முறையில் தன்னிச்சையானவர்கள். ஆகவே புற இன ஞானத்தை ஒழுக்க நெறி அமைப்போடு தொடர்பு இல்லாமலே சிந்தித்துப் பார்க்கலாம். இஸ்ராயேலில் அப்படிப்பட்ட ஞானத்தைச் சிந்தித்துக்கூடப் பார்க்க முடியாது. நல்லவன் அல்லாதவன் எவனும், ஞானியாக இருக்க முடியாது. பாவத்தை விலக்கி, தீமையை வெறுக்காதவன் எவனும், ஞானியாக இருக்க முடியாது. ''பொல்லாங்கான பேச்சு என் நாவுக்கு அருவருப்பு... ஆணவத்தையும் இறுமாப்பையும் தீமையையும் உருட்டையும் புரட்டையும் நான் வெறுக்கிறேன்'' (பழ 8:7.13) என்று இஸ்ராயேலின் ஞானம் அறிவிக்கிறது. ''மூடர்கள் ஞானத்தை அடைய மாட்டார்கள். பாவிகள் அதைக் காண மாட்டார்கள். ஆணவத்தினின்று அது விலகி நிற்கும். பொய்யர் ஒருபோதும் அதை நினைத்துப் பாரார்'' தீமை பற்றிய அறிவாற்றல் உண்மையான ஞானமன்று; பாவிகளின் அறிவுரையில் அறிவுத்திறனில்லை.... அறிவுத்திறன் இருந்தும் திருச்சட்டத்தை மீறுவோரைவிட, அறிவுக் கூர்மை இல்லாது போயினும் இறையச்சம் கொண்டோர் மேலானோர்'' *(19:22-24)*.

ஞானம், மேலான விதத்தில், ஆண்டவருக்கு அஞ்சுதலாகும். இறைவனை அறிந்து, அன்பு செய்து அவருக்குப் பணிசெய்யும் சமயமே - இந்த அச்சமாகும். இந்த அச்சத்தின் பெருமையைச் சீரா 1:9-18 விவரிக்கிறது. இந்த இறை அச்சத்தைத் தவறாகப் புரிந்து கொள்ளாதிருக்க அதே நூல் மேலும் விளக்குகிறது. ''ஆண்டவருக்கு அஞ்சுவோர் அவருடைய வாக்குகளைப் புறக்கணியார்; அவரிடம் அன்பு கொள்வோர் அவர்தம் வழிகளைக் கடைப்பிடிப்பர். ஆண்டவருக்கு அஞ்சுவோர் அவர்தம் விருப்பத்தையே தேடுவர்; அவரை அன்பு செய்வோர் அவர்தம் திருச்சட்டத்தில் நிறைவு அடைவார்'' *(சீரா 2:15-16; காண்க.4:14; 7:29-30: ஞானம் 6:8; 7:22-28)*.

ஆகவே விவிலிய ஞான ஆசிரியர்களின் ஞானம் தோற்றத்தில்தான் புற இனத்தவரது ஞானத்தோடு ஒத்திருக்கிறது. அது இறைவனிடமிருந்து வருவதாலும் அவருடைய ஞானத்தைப் பிரதிபலிப்பதாலும், அது இறைவனை அறிந்து சிநேகிப்பதிலும், யாவற்றையும் அறிந்து சிநேகிப்பதிலும்

அடங்கி இருக்கிறது. அது எல்லாவற்றையும் இறைவனோடு தொடர்புபடுத்துவதால் புனிதமானது. இயற்கைக்கு அப்பாற்பட்டது. ஏனெனில் அது இறைவனிடமிருந்து மட்டுமே வரக்கூடியது (*சீரா 1:1; பழ 2:16; ஞானம் 8:21*). அது செயல்முறையானது, கொள்கையளவேயானதன்று. ஏனெனில் அறிவதால் மட்டும் ஒருவர் ஞானியாகி விடுவதில்லை. அறிந்ததைச் செய்வதால் ஒழிய அவர் ஞானியாக முடியாது. ஆகவே பாவியினுடைய அறிவு எவ்வளவு அதிகமானாலும் அவன் மடையனே. ஏனெனில் வாழ்க்கையிலும் நடத்தையிலுமிருந்து விலகிய அறிவு, ஞானமே ஆகாது; மடமையின் தெளிவான சான்றேயாகும். இறுதியாக, இறைவாக்கினர்களைப்போல் ஞான ஆசிரியர்கள் இறைவெளிப்பாட்டை நேரடியாகப் பெறவில்லை என்ற அளவில், அவர்கள் விவரிக்கும் ஞானம் இறைத்தன்மையைவிட மனிதப் பண்பையே அதிகம் கொண்டது. அது நேரடி வெளிப்பாட்டைவிட செயல்முறையான இறையியல் அறிவு முறையையே அடிப்படையாகக் கொண்டது.

ஆண்டவர்மீது அச்சமின்றி, ஞானமில்லை என்று மீண்டும் மீண்டும் ஞான ஆசிரியர்கள் வலியுறுத்துகின்றனர். அன்பாலும் பணிவாலும் சேவையாலும் ஒருவன் தன் வாழ்வை இறைவனோடு முறைப்படுத்துவதே, இந்த அச்சமாகும். இதுவே உண்மைச் சமயமும் ஆகும். ஆகவே இந்த ஆசிரியர்கள் அடிப்படையில், இயற்கை கடந்த ஞானத்தைப் பற்றியே பேசுகின்றனர். நன்றாக வாழும் கலை, வாழ்க்கைப் பிரச்சனைகளுக்குச் செயல்முறையான விடை காண்பது, அரசியல் மதிநுட்பம், கலை ஆற்றல், பொதுவான விவேகம் ஆகியவை பற்றியும், உணவு கொள்ளும்போது நடந்து கொள்ளும் விதம், பிள்ளைகளுக்குப் பயிற்சி அளிப்பது, பொது இடங்களில் நடந்து கொள்வது போன்ற காரியங்களைப் பற்றியும் இந்த ஆசிரியர்கள் பேசுகின்றனர். இது மனித ஞானமாகத் தோன்றலாம். ஆனால் இவையும் இறைஞானத்தின் கொடைகளே (*காண்க. பழ 1:7; யோபு 28:28; திருவுரை 12:13-14; சீரா 1:9-18; 6:37; 15:1-10; 19:17-26; 39:1-11; சங் 119:97-104*). இத்தகைய ஞானம் இறைவனது அருளால் புத்தொளிபெற்ற அறிவில் தங்குவதோடல்லாமல், உள்ளத்தை ஆட்கொள்கிறது. அதன் விளைவாக, இதைப் பெற்றவர் எல்லாவற்றையும் அவற்றின் இறுதிக் காரணத்தோடு தொடர்புபடுத்தி அறிவிக்கிறார்; அவற்றை அன்பு செய்கிறார்; அந்த அன்புக்கேற்ற விதத்தில் நடந்து கொள்கிறார். ஞானமும் பாவமும் ஒத்துப் போகா. இயற்கை கடந்த ஞானம் புனிதப்படுத்தும். அருளை அடைவதற்கு அல்லது இழப்பதற்கு ஏற்ப வந்தடைகிறது அல்லது நீங்கிப்போகிறது (*காண்க. சீரா 1:22-29; 2:12-18; 19:17-20*).

இறைஞானம் அல்லது படைக்கப்படாத ஞானம் இறைவனது பண்பாகும். இது வெளிப்பாட்டிலும், படைப்புச் செயல்களிலும் மனிதர்களுக்கு வெளிப்படுத்தப்படுகிறது.

**ஊ. ஆட்தன்மைப்படுத்தப்படும் ஞானம்:** ஞானத்தை இறைவனது பண்பாக விவரிப்பதோடு, ஞானிகள், சிலசமயங்களில், அது இறைவனிடமிருந்து வேறுபட்டதாக, அவரிடமிருந்து வருவதாக, அது தனக்கே உரிய பண்புகளைக் கொண்டிருப்பதாக, அதை ஆட்தன்மைப்படுத்துகின்றனர். இறைஞானத்தை ஆட்தன்மைப்படுத்துவது வாசகர்களின் கவனத்தைக் கவர்ந்துள்ளது; பல ஆய்வுகளையும் விவாதங்களையும் எழுப்பியுள்ளது. ஆகவே நாம் அதைப்பற்றிச் சிறிது தனிப்பட்ட முறையில் பார்ப்பது நன்று.

ஞான இலக்கியங்களில் ஞானத்தை ஆட்தன்மைப்படுத்துவது பல மட்டங்களில் காணப்படுகிறது. சில வாசகங்களில் ஆட்தன்மைப்படுத்துதல் எளிதாய் அமைந்துள்ளது (*காண்க. பழ 1:20-23; சீரா 4:12-22; 15:1-6; ஞானம் 1:4-8; 6:13-23*); மற்ற வாசகங்களில் மிகைப்படுத்தப்பட்டு உள்ளது (*காண்க. பழ 8:22-31; 9:1-6; சீரா 24:1-29; ஞானம் 7:7-8:16*). இந்த வாசகங்களைச் சரி

யான முறையில் புரிந்து கொள்ளப் பின்வரு பவற்றை நாம் கவனத்தில் கொள்வது நலம்.

1. இறைப்பண்புகளை ஆட்தன்மைப் படுத்துவது பழைய ஏற்பாட்டு வழக்காகும். இது ஞான இலக்கியங்களுக்கு மட்டும் உரிய தன்று, சங்கீதங்களிலும் இந்த வழக்கைக் காண்கின்றோம். சங் 85:10-13-இல் இறைவ னது பண்புகள் ஆட்தன்மைப்படுத்தப்படு கின்றன. சான்றாக, ''பேரன்பும் உண்மை யும் ஒன்றையொன்று சந்திக்கும்; நீதியும் நிறைவாழ்வும் ஒன்றையொன்று முத்த மிடும்''; இதே முறையில், சங் 89:14-இல் ''நீதியும் நேர்மையும் உம் அரியணைக்கு அடித்தளம்; பேரன்பும் உண்மையும் உமக்கு முன்னே செல்லும்'' எனக் காண்கிறோம். இதே வழக்கை சங் 79:8; எசா 55:11; அப 3:5 போன்ற பகுதிகளில் காண்க.

2. இறைவனது பண்புகளிலேயே மேலான தாக ஞானம் கருதப்பட்டது. ஞான இலக் கியங்களில் ஞானத்தை ஆட்தன்மைப்படுத் துவதை மிகைப்படுத்தும் வாசகங்கள் பல உண்டு. இதற்குக்காரணம், ஞான ஆசிரியர்கள் இறைவனுடைய பண்புகளில் எல் லாம் மேலானதாக ஞானத்தைக் கருதியதே. அதைப் போதிய அளவு போற்ற முடியாது என்று அவர்கள் கருதியதாகத் தெரிகிறது. இது ஆட்தன்மைப்படுத்தாதபோதும் தெளி வாகக் காணப்படுகிறது (காண்க. பழ 21:2-24; சீரா 6:18-32). இப்படி ஞானத்திற்கு ஆட்தன்மை கொடுப்பதும் அதை உயர்வாக மதிப்பதும் இஸ்ராயேலில் மட்டுமன்று, மற் றப் பழங்கால மேற்காசிய இலக்கியங்களி லும் காணப்படுகிறது. கி.மு. 1400-ஐச் சேர்ந்த உகாரித்து இலக்கியங்களிலும் கி.மு. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அசீரிய இலக் கியங்களிலும் இப்பண்பு மிகைப்படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம்.

3. ஞானமிக்க ஆலோசகர்கள்பால், குறிப் பாக அரசனுடைய ஆலோசகர்கள்பால், பழங்கால மக்கள் காட்டியமதிப்பு: பழங் காலத்தில் ஒவ்வொரு அரசனுடைய அவையி லும் ஆலோசகர்கள் இருந்தனர். ஆலோசகர், புலமைமிக்க எழுத்தாளராகவோ, அனுப வம் பெற்ற முதல் அரசியல்வாதியாகவோ, சில சமயங்களில் அரசனின் தாயாகவோ இருக்கலாம். அவர் ஞானியாகக் கருதப்பட் டார். அவரது ஆலோசனை ஞானத்திற்குச் சமமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. பழங் கால மக்கள் நோக்கில், ஆலோசனைக்கும் ஞானத்திற்குமிடையேயுள்ள நெருங்கிய தொடர்பை எடுத்துக்காட்டச் சில சான்று களை இங்குச் சுட்டிக்காட்டலாம். ''அவர் கள் புத்திகெட்ட மக்கள்; அவர்களிடம் விவேகம் சிறிதும் இல்லை. அவர்கள் ஞான மடைந்து இதனை உணர்ந்து தங்களுக்கு நிகழப்போவதை உய்த்துணர்ந்தால் எத் துணை நலம்!'' என்று உப 32:28-29-உம், ''தேமானில் ஞானம் அற்றுப்போயிற்றா? மதிநுட்பமுடையோரிடமிருந்து அறிவுரை ஒழிந்து போயிற்றா? அவர்களின் ஞானம் மறைந்து போயிற்றா?'' என்று எரே 49:7-உம் கூறுகின்றன. இக்கூற்றுக்களில் காணப்படும் இணையமைப்பு ஞானத்திற்கும் ஆலோ சனைக்கும் உள்ள தொடர்பைச் சுட்டிக்காட்டு கிறது. ஆலோசகர்கள், அவர்களுடைய ஆலோசனை ஆகியவற்றின் முக்கியத்துவம் விவிலியத்தில் பல இடங்களில் வலியுறுத் தப்படுகிறது. யாத் 18:19; 2 சாமு 15:12.34; 16:20; 17:7.14; 1 அர 1:11-14; 12:6-11; எசா 1:26; 3:1-3; 11:2; 16:3; 47:13; எரே 18:18; எசே 7:26; மீக் 4:9-12; யோபு 12:13; தானி5:7-16; எஸ் 4:5; 7:28; 10:3-இவை ஞானமிக்க ஆலோசனை மீட்பிற்கும் பாது காப்பிற்கும் வெற்றிக்கும் உத்தரவாதமாகும் என்று சுட்டுகின்றன. அது அதிகாரம் பெற்ற வரது தீர்மானமாகும். கொடிய விளைவுக ளின்றி அதைப்புறக்கணிக்க முடியாது. அர சவையில் எப்போதும் ஓர் ஆலோசகர் இருந் தார். அரசன் தீர்மானம் செய்வதில் அவர் உதவி செய்தார்.

4. இறுதியாக, ஞானிகள், தங்களுடைய மாணவர்களுக்கு ஞானத்தின் மேலான மதிப் பையும் முக்கியத்துவத்தையும் நாடகப்

பாணியில் எடுத்துக்காட்ட ஞானத்தை ஆட்தன்மைப்படுத்தினர். இதைக் குறிப்பாக பழமொழி நூலின் முன்னுரையில் காணலாம். ஆசிரியர் ''ஞானத்தையும் ஒழுக்கத்தையும் அறியவும், பிரித்தறியும் ஆற்றலை அளிக்கவும்....'' சாலமோனின் பழமொழிகளை எடுத்துக் கூறுவதாகத் தொடங்கி, ஞானத்தைப் பலவிதத்திலும் போற்றுகிறார் (பழ *1:1-9*). இப்போற்றுரை ஞானத்தை ஆட்தன்மைப்படுத்துதலில் உச்ச நிலை அடைகிறது (*8:22-31*). பின்பு, ''பிள்ளைகளே எனக்குச் செவி கொடுங்கள்... என் வழிகளைப் பின்பற்றி... நற்பயிற்சி பெற்று ஞானத்தை அடையுங்கள். அதைப் புறக்கணியாதீர்கள்....'' (*8:32-33*) என்று முறையாக முடிக்கிறார்.

ஆட்தன்மைப்படுத்தும் வாசகங்களைக் கவனமாய் ஆய்வு செய்தோம் என்றால், அவற்றில் ஞானம் ஒரு தனிப்பட்ட முறையில் ஆட்தன்மைப்படுத்தப்படுவதைக் காண்போம். அதாவது ஞானம் இறைவனது ஆலோசகராகச் சித்தரிக்கப்படுகிறது. அரசன் தீர்மானம் செய்யுமுன்போ, செயலாற்று முன்போ, தெளிவிற்கும் ஆலோசனைக்கும் அவன் நாடும் முக்கியமான அரசவை அங்கத்தினர் ஆலோசகர் ஆவார். இறைவனே பேரரசன், அரசர்க்கெல்லாம் அரசர். ஞானமே அவரது ஆலோசகர். ஆட்தன்மைப்படுத்துதலின் வழியாக, ஞானிகள் சுட்டிக் காட்டுவதுபோல், இறைவனே தமது ஆலோசகரான ஞானத்தைக் கலந்து ஆலோசிக்காமல் செயலாற்றுவதில்லை என்றால், அதே இறை ஆலோசகரைக் கலந்து ஆலோசிக்காமல் செயல்படுவது மனிதனுக்கு மிகுந்த மதியீனமாகும்.

இந்த விளக்கத்திற்குப் பல கருத்துக்கள் வலிமை அளிக்கின்றன. முதலில் எபிரேயர் தங்கள் இறைவனை ஆலோசகர்களும் அவையினரும் புடைசூழ இவ்வுலக அரசனைப்போல் சித்தரித்தனர் என்பதற்கு விவிலியத்தில் பல சான்றுகள் உள்ளன: எசா *6:1-3; 1* அர *22:19-23;* யோபு *1:6-7;* சங் *89:7.*

இரண்டாவது, வாசகங்களைக் கவனமாய் ஆராய்ந்தால், ஞானம் ஆலோசகர் என்ற முறையில் பேசுவதும் செயலாற்றுவதும் தெளிவாகும். அது வலிமைமிக்க மூத்த ஆலோசகராகத் தோன்றுகிறது. ''நானே ஞானம். நான் விவேகத்தை அருளுவேன். அறிவையும் சிந்திக்கும் ஆற்றலையும் அடையும் வழியைக் காட்டுவேன்.... திட்டம் இடுபவனும் நானே; இட்டதைச் செய்பவனும் நானே. உணர்வும் நானே; வலிமையும் எனதே. அரசர் ஆட்சி செலுத்துவது என்னால்'' (பழ *8:12-15*) என்று ஞானம் கூறவல்லது. இறைவனது அரசவையில் ஞானம் ஒரு அங்கத்தினராகும். ''உன்னத இறைவனின் மன்றத்தில் திருவாய் மலர்ந்து பேசும்; அவரது படைத்திரள் முன்பாக மேன்மைப்படுத்தப்படும்'' (சீரா *24:2*). இறைவனுக்கு ஞானம் பணிசெய்கிறது. ''புனித கூடாரத்தில் அவர் திருமுன் பணி செய்தேன். ஆதலால் சீயோனில் உறுதிப்படுத்தப்பட்டேன்'' (*24:10*).

மூன்றாவதாக, இறை ஆலோசகரான ஞானம் இறைவனுக்குக்கூட அவசியமாய் இருப்பதால், அது உடன் இல்லாமல் அவர் இருக்கக்கூடாது என்ற கருத்து வளர்ந்ததில் வியப்பொன்றுமில்லை. உண்மையிலேயே ஞானம் இறைவனுடைய படைப்பில் தலைப்பேறானதாக இருக்க வேண்டும். ''ஆண்டவர் தம் படைப்பின் தொடக்கத்திலேயே தொல்பழங்காலத்தில் எதையும் படைக்குமுன்னரே, நான் அவரது உடைமை'' (பழ *8:22*). உலகத்தைப்படைக்கும்போது இறைவன் தமது சிற்பியும் ஆலோசகருமான ஞானத்தோடு கலந்து ஆலோசிக்கிறார். ''நான் அவர் அருகில் அவருடைய சிற்பியாயிருந்தேன்'' (*8:30*). இவ்வாறு ஞானத்தை ஆட்தன்மைப்படுத்துதலை அடுத்து, ஞானத்தைப் புறக்கணிக்காது, அதற்குச் செவிமடுத்து, ஞானிகளாகும்படி ஞானிகள் தங்களது பாடத்தை வெளிப்படையாக எடுத்துக் கூறுகின்றனர் (*8:32-33*).

இறுதியாக, பழ *8:22-31;* சீரா *24;* ஞானம் *7-8* ஆகிய பகுதிகளில் ஞானத்தை ஆட்தன்

மைப்படுத்துதல் எவ்வளவு உயிர்த்தன்மை வாய்ந்ததும், தனித்தன்மையுடையதுமாய் இருக்கிறது என்றால், ஞானம் மற்றொரு இறை ஆளாகவும், அவரிடமிருந்து புறப் பட்டு, அவரோடு சம - காலத்தவராயும் புனைந்து கூறப்படுவதாகத் தோன்றுகிறது. இதை நாம் கவனிக்கத் தவறக்கூடாது. ஆனால் இவ்விதம் ஒரு எபிரேயர் புனைந்து கூறக்கூடும் என்று நாம் சிந்தித்துப் பார்க்க முடியாது. ஆசிரியர், தனது கூற்றுக்களி லிருந்து இறைவனில் இரு ஆட்கள் உள்ளனர் என்றும், அதனால் இரு கடவுள்கள் உள்ள னர் என்றும் வாசகர்கள் எடுத்துக் கொள்வார் கள் என்று சிறிது ஐயுற்றிருந்தாலும், அவர் இத்தகைய மொழியைப் பயன்படுத்தியிருக் கவே மாட்டார். மாறாக, அரசவையினரும் ஆலோசகர்களும் புடை சூழ ஒரு மனித அரசனைப் போல் இறைவனைக் கற்பனை செய்து, அவருக்கு மனிதப்பண்புகளைச் சாற் றிக்கூறுவது பழங்கால இஸ்ராயேல் மக்க ளுக்குப் பழக்கமானதாய் இருந்தது. ஞானத்தை இறைவனிடமிருந்து வேறுபட்ட தனியாளாக ஆட்தன்மைப்படுத்துதல் ஒரு சாதாரண மரபாக இருந்தது. இம்முறை பிற இன இலக்கியங்களிலும் காணப்படுகிறது. ஆகவே பல தேவர்கள் பதிதத் தன்மை தவிர்க்கப்படுகிறது. ஞானத்தை ஆட்தன் மைப் படுத்துவது எபிரேய மரபுக்கு ஏற் புடையதே.

எல்லாச்சான்றுகளும், குறிப்பாகக் கானா னிய, பெனிசிய போதக இலக்கியங்களோடு உள்ள ஒப்புமை ஆய்வும், பழ 8-9என்ற பகுதி காலத்தால் முந்தியது என்று சுட்டுகின் றன. ஆகவே சீராக், ஞானம் ஆகிய நூல்க ளில் வரும் ஆட்தன்மைப்படுத்தும் வாசகங் கள், பழமொழி ஆசிரியர் தொடங்கி வைத்த சிந்தனைப்போக்கின் வளர்ச்சி என்று விளக் கம் அளிப்பது மேலானது.

ஞான இலக்கிய ஆசிரியர்களின் காலத் தில், இந்த ஆட்தன்மைப்படுத்தும் வாசகங் களைத் தவறாகப் புரிந்து கொள்ளும் ஆபத்து இல்லையென்றாலும், பிற்காலத்தில், குறிப் பாக மூவொரு இறைவனின் இரண்டாம் ஆள் மனிதன் ஆனபின், இத்தகைய ஆபத்து இல்லை என்று கூற முடியாது. இந்த வாசகங் களில் ஆட்தன்மைப்படுத்துதல் எவ்வளவு வலுவுள்ளதாய் இருக்கிறதென்றால் ஞான ஆசிரியர்கள், மூவொரு இறைவனின் இரண் டாம் ஆள் இருப்பது பற்றிய மனித அவதா ரத்துக்கு முந்திய வெளிப்பாட்டைக் கூறுகின் றனர் என்று நம்பப் பலரை அது தூண்டியுள் ளது. ஞான ஆசிரியர்கள் இத்தகைய வெளிப் பாட்டைப் பெறவில்லை என்பது அறிவு சார்ந்த விளக்கமாகும். ஆனால் இறைவ னுடைய ஞானம் பற்றி அவர்கள் அளித்த அசாதாரண விவரிப்பு இறைவனில் தந்தை யிடமிருந்து மகன் தோன்றுவது பற்றிப் பிற் காலத்தில் புனித யோவான், புனித பவுல், திருச் சபையின் தந்தையர் ஆகியவர்கள் அளித்த விளக்கத்திற்குச் சிறந்த பின்னணியாக அமைந்தது. அவர்களுடைய கூற்றுக்களில் காணப்படும் சிந்தனைப் போக்கையும் பொருளையும், புதிய ஏற்பாட்டு வெளிப் பாட்டைப் பழைய ஏற்பாட்டு வாசகங்களில் புகுத்திப் புரிந்து கொள்வதைவிட, பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியப் பின்னணி யிலேயே துல்லியமாகப் புரிந்து கொள்ளலாம்.

இப்போது, இந்த ஆட்தன்மைப்படுத்து தலை உருவகமாக எடுத்துக் கொள்வது அறிஞரிடையே மரபாகும். ஞான இலக்கி யங்கள் எப்போதும் செயல்மறை நோக்கு டையன. அவை தத்துவ இயல் சார்ந்த ஊக ஆய்வுகள் அல்ல. இந்நூல்கள் தோன்றிய காலத்தில் நிலவிய பொதுச்சூழ்நிலையை யும், அவற்றில் காணப்படும் செய்முறை நோக்கையும், உருவகங்களையும், உயிர்ச்சித் திரக்காவிய நடையையும் மனதிற்கொண்டு, ஞான இலக்கியங்களுக்குப் பொருள் கூற வேண்டும். அப்போது இறையூக்கம் பெற்ற இந்நூல்களில் இறைவன் கூற விரும்பும் செய்தியைத் தவறாது புரிந்து கொள்வோம்.

**7. சில இறையியல் கருத்துக்கள்**

இனி ஞான இலக்கியங்களில் பொதுவா கக் காணப்படும் சில இறையியல் கருத்துக் களைப் பார்ப்போம்.

**அ. ஞானத்தின் ஊற்று இறைவனே:** ஞான இலக்கிய இயக்கத்தின் தொடக்கத்தில், ஞானம் மனிதனைச் சேர்ந்ததாகக் கருதப்பட்டது. மனிதனுக்குச் செல்வத்தைக் கொடுப்பதுபோல், இறைவன் அவனுக்கு ஞானத்தைக் கொடுக்கிறார். அவனை ஞானியாக்குகிறார். ஞானம் என்ற சொல் பல பொருட்களில் பயன்படுத்தப்பட்டது. விரும்பத்தகா்த பல பண்புகளையும் ஞானம் என்ற கருத்து உள்ளடக்கியது. இது இறைவனுக்கு ஞானம் சாற்றிக் கூறப்படுவதைத் தடுத்திருக்க வேண்டும்.

காலப்போக்கில் ஞானம் இறைவனுக்குச் சாற்றிக் கூறப்படும் பண்பாக மாறுகிறது (யோபு *12:13*; தானி *2:20*). அது அவரது படைப்புச் செயலின் பண்பாகும் (சங் *104:24*; யோபு *38:36*; பழ *3:19*). அதை அணுக முடியாத நிலை பல தடவை சுட்டிக்காட்டப்படுகிறது. ஞானத்தைத் தேடுமாறு ஞானிகள் தூண்டுவதை மனதில் கொண்டால், இது ஒரு முரண்பாடாகவே இருக்கிறது. யோபு 28-இன்படி ஞானத்தைப் படைப்பில் எங்கும் காணமுடியாது. இறைவன் ஒருவரே அதை அடையும் வழியை அறிவார் (*28:23*). அவர் ஒருவரே அதை முழுவதும் அறிவார். மனிதர்க்கு அளிக்கப்படும் ஒரே அறிகுறி "இறை அச்சமே ஞானம்" (*28:28*) என்பதே. திருவுரைநூல் மனிதன் ஞானத்தைக் கண்டு பிடிக்க முடியாது என்பதை ஏற்றுக் கொள்கிறது (திருவுரை *8:16-17*). இதேபோல் பாரூக்-3, இறைவன் ஒருவரே ஞானத்தை அறிவார் என்ற கருத்தை வலியுறுத்துகிறது. பழைய ஏற்பாட்டு முடிவில் சீரா 1:5-7-இல் ஞானத்தின் எல்லாம் கடந்த மறைபொருளான தன்மை அறிவிக்கப்படுகிறது.

இவ்விதம் மனித மட்டத்திலிருந்து விலகிய தன்மைக்குக் காரணம், ஞானம் இறைத் தன்மையுடையது, அது ஒரு இறை உண்மையாகும் என்ற நம்பிக்கையாகும். ஞானம் நித்தியத்திலிருந்து இருக்கிறது; எக்காலத்திற்கும் நிலைத்திருக்கும் (பழ *8:22-26*; சீரா *24:9*). உன்னத இறைவனின் வாயிலிருந்து புறப்படுகிறது (சீரா *24:5*). அது இறைவனுடைய வல்லமையின் ஆவியாகும். எல்லாம் வல்லவரது மகிமையொளியின் சுடராகும்...... அவரது நன்மைத்தனத்தின் சாயல் (ஞானம் *3:25-26*). ஞானம் இறைவனிடமிருந்து புறப்படுவது மட்டுமல்லாமல், படைப்பில் அவரோடு ஒரு கைவினைஞனைப்போல் செயலாற்றுகிறது (பழ *8:27-31*; *3:19-20*; ஞானம் *9:9*). அது உலகை இனிய முறையில் ஒழுங்குபடுத்துகிறது (ஞானம் *8:1*); மனிதரோடு உறவு கொள்கிறது (பழ *8:31*; சீரா *24:16*). இஸ்ராயேலில் தன் உறைவிடத்தை அமைக்கக் கட்டளை பெறுகிறது (சீரா *24:13*). இறைபாலிப்பு வரலாற்றை வழி நடத்தும்போது ஞானம் பலதடவை மனிதருக்குத் தூது சென்றுள்ளது. தீர்ப்பைப் பற்றி எச்சரிப்பதின் வழியாகவும், தனது உடைமைகளைப் பகிர்ந்து கொள்ளவும் தன்னோடு உணவு கொள்ளவும் அழைப்பதின் வழியாகவும் (பழ *8:1-21*. *32:36*; *9:4* தொ; சீரா *24:19-22*), ஞானம் மனித காரியங்களில் கொண்டிருக்கும் அக்கறை எடுத்துக்கூறப்படுகிறது (பழ *1:10-32*). ஞானம்தான் இறைவனது கொடைகளை மனிதர்க்குப் பகிர்ந்தளிக்கிறது (பழ *8:21*; ஞானம் *7:11*). ஞானம் "நம்மைப் பயிற்றுவிக்கும் ஆவியாகும்" (ஞானம் *1:5*); பரிவு காட்டும் இறை ஆவியாகும் (*1:6*), ஞானம் மனிதரை மீட்கிறது (*9:19*). அதன் பணியில் எல்லாம் சிறந்தது மனிதரை இறைவனின் நண்பராக்குவதாகும் (*7:27* தொ). சுருக்கமாக, இறைஞானம் விவரிக்கப்படும்முறை, இறையருளைப்பற்றிய புதிய ஏற்பாட்டுப் போதகத்திற்கு முன்னுரை போல் அமைந்திருக்கிறது. புதிய ஏற்பாட்டு ஒளியில், பழைய ஏற்பாட்டுக் கருத்து எளிதில் புரிந்து கொள்ளக்கூடியதாக இருக்கிறது.

**ஆ. ஞானமும் சட்டமும்:** சீராக்நூல் ஞானத்தின் தோற்றத்தை விவரிப்பதோடு மோசேயின் சட்டத்தோடு ஞானத்தை ஒன்றாக்குகிறது (சீரா *24:22*; பாரூக் *4:1*). இதில் ஞானம் அதன் அகில உலக அரசவைத் தோற்றத்திலிருந்து வெகுதூரம் விலகிச் சென்றுவிட்டது எனலாம். ஞானத்தையும்

சட்டத்தையும் ஒன்றாக்குவது எப்படி நிகழ்ந்தது? நாடு கடத்தலுக்குப்பின் வந்த யூத சமூகத்தின் வாழ்க்கை யூதச் சட்டத்தைச் சுற்றியே சுழன்றது. அது அவர்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியையும் பாதித்தது. ஞானமும் இதே பண்பைக் கொண்டிருந்தது. ஆகவே இரண்டையும் ஒன்றாகக் கருதினர். ஆனால் இப்படி ஒன்றாக்குதல் ஒருதலைமுடிவே. ஏனெனில் ஞானிகளின் போதகம் சட்டத்தை மட்டும் கொண்டிருக்கவில்லை. இதற்குச் சீராக்கின் போதகமே சான்றாகும். அவரது பெரும்பாலான கூற்றுக்கள் சட்டத்தின் நேரடிப்போதகத்தோடு நெருக்கமில்லாத தொடர்பையே கொண்டுள்ளன. மேலும் பழ 8-இல் வரும் இறை ஞானக்கருத்தை அன்றாட வாழ்க்கைக்குரியதாகச் செய்யவேண்டிய அவசியம், இரண்டும் ஒன்றாகக் கருதப்படுவதற்கு மற்றொரு காரணமாயிற்று. சட்டத்தில் மக்கள் தங்கள் ஞானத்தைக் கண்டனர். உப 4:6-7 இந்த நம்பிக்கையைப் பிரதிப்லிக்கிறது.

**இ. ஞானம் - ஒழுக்கவாழ்வு - செய்வினைப் பயன் - அழியாமை:** ஞானத்திற்கும் புண்ணிய வாழ்வுக்குமிடையே உள்ள தொடர்பு தெளிவாக அடிக்கடி எடுத்துக் கூறப்படுகிறது. நீதிமானுக்கும் தீயோருக்குமிடையேயுள்ள வேறுபாடுகளை அறிய, பழ 10-ஆம் அதிகாரத்திலிருந்து வாசித்தாலே போதிய தெளிவு கிடைக்கும். இந்தச் சமயத் தொடர்பு, ஞான இலக்கிய இயக்கத்தின் தொடக்கத்திலேயே ஓரளவாவது ஏற்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் அரசவைப் பயிற்சி ஒழுக்க மதிப்பீடுகளிலிருந்து பிரிந்திருக்க முடியாது. எகிப்திய அமென்-எம்-ஓப்பேயின் ஞான போதகமும் சில செயல்களை இறைவனது திருவுளத்தோடு தொடர்புபடுத்துகிறது. ஆனால் நாடுகடத்தலுக்கு முந்திய இஸ்ராயேலின் ஞான இலக்கியங்களைவிட, நாடு கடத்தலுக்குப்பின் தோன்றிய ஞான இலக்கியங்கள் ஞானத்தின் நல்லொழுக்கப் பண்புகளை வலியுறுத்துகின்றன.

இதற்குச் சிறந்த சான்று பழமொழிநூலின் முன் பகுதியாகும் (1-9). இப்பகுதி நாடு கடத்தலுக்குப்பின் எழுதப்பட்டதாகும். இதில் ''இறையச்சமே ஞானம்'' என்று எண்ணவும், ''நீதியையும், நியாயத்தையும், நேர்மையையும், நன்னெறி அனைத்தையும்'' கண்டுபிடிக்கவும் (2:9), ''முழு இதயத்துடன் ஆண்டவரில் நம்பிக்கை வைக்கவும்'' (3:5), ஞானி இளைஞர்களைத் தூண்டுகிறார். ஞானமுள்ளவனின் வெற்றி, அவன் செய்வதின் நல்ல விளைவில் மட்டும் அடங்கியிருக்கவில்லை; அது ''கடவுளுக்கும் மனிதனுக்கும் முன்பாக அருளையும் நல்லறிவையும்'' (3:4) பெறுவதில் அடங்கியிருக்கிறது. எல்லாவற்றையும் விட ஞானமே வாழ்வாகும் (8:35). இதே கருத்து உபாகமப் போதகர்களிடையேயும் காணப்படுகிறது, கீழ்ப்படிதல் வாழ்வையும், கீழ்ப்படியாமை சாவையும் கொண்டுவரும் (உப 30:15-20). கற்பனைகளுக்கும் சட்டங்களுக்கும் பிரமாணிக்கமாய் இருப்பவர்களுக்கு நீண்ட வாழ்வு உறுதியளிக்கப்படுகிறது (5:33). இந்தக் கற்பனைகள் யாவே கோட்பாட்டின் வழிபாட்டு, ஒழுக்க மேல்வரிச் சட்டங்களைக் கொண்ட ''தோரா'' அல்லது ஐந்நூலாகும். இச்சட்டத்தில் வெளிப்படையாக உள்ளடங்காத ஒரு பகுதியிருப்பதை ஞானிகள் உணர்ந்தனர். அது ஒழுக்க வாழ்வு பற்றிய உணர்வை எழுப்புதலும் அதுபற்றிய பயிற்சியுமாகும். சட்டத்தைக் கடைப்பிடிப்பதில் ஒருவனுக்கு எப்படிப் பயிற்சி அளிப்பது? மனித அனுபவத்திலிருந்து கற்றுக் கொள்ளக்கூடிய தொடக்கப் பாடங்கள் இல்லையா? இந்தச் சூழ்நிலையில்தான் நோக்குந்திறன், அனுபவக்கூற்று ஆகியவற்றின் மதிப்பை ஞானிகள் கண்டுணர்ந்தனர். ஒழுக்கத் தீர்மானங்களை நேரடியாக உள்ளடக்காத இப்பகுதி பரந்தது. அன்றாட வாழ்வின் செயல்முறை விவரங்கள் ஒழுக்க வாழ்வின் ''கச்சா'ப் பொருட்களாகும். இவை பற்றி ஒருவன் காலப்போக்கில் ஒரு தீர்மானம் எடுக்க வேண்டிய தவிர்க்க முடியாத நிலை ஏற்படக்கூடும். இவ்வாற, தீயதோழர்கள் பற்றி ஒருவனது மதிப்பீடு எப்படியிருக்க வேண்டும்? பொறாமை ஒருவனுக்கு என்ன செய்கிறது? அகந்தை எந்த முடிவுக்கு இட்டுச் செல்

கிறது? விலைமாதரால் வரும் தீமைஎன்ன? (பழ 13:20; 14:30; 29:23; 23:26-28). மேலும் ஒழுக்க அமைப்பு, அனுபவத்தை எடுத்துக் காட்டும் என்று எதிர்பார்க்கலாமா? இவை போன்றவற்றிற்கு ஞானி பதில் அளிக்க முயல்கிறார். பல படிப்பினைகளை எடுத்துக் கூறுகிறார். இரக்கம் பயனளிக்கும்; அன்பின்மை ஒருவனை அழிக்கும் (பழ 11:7). சண்டை சச்சரவுகளை உடனே கட்டுப்படுத்த வேண்டும் (17:11). அந்த வருவாய் (19:2), பொய்ச் சாட்சி (25:18; காண்க. எசே 20:16), ஒருதலைத்தீர்ப்பு (பழ 24:23-24), பொய்யுரைத்தல், முகஸ்துதி (26:28) போன்ற தீய செயல்கள் கண்டனம் பெறுகின்றன. இவற்றிற்கு மாறாக, ஏழைகளுக்கு இரக்கம் (14:31), ஆண்டவருக்கு அஞ்சுதல் (19:23), ஆண்டவரில் நம்பிக்கை வைத்தல் (28:25) போன்றவை பற்றிய ஒழுக்க மேற்கோளுரைகள் கற்றுக் கொடுக்கப்படுகின்றன.

ஞானமுள்ள இளைஞனது வெற்றியும் செழிப்பும் உபாகமத்தால் வாக்களிக்கப்படும் ஆசீர்களுக்குச் சமமானதாகும் என்று ஞானிகள் கண்டுணர்ந்தனர். ஆகவே பழ 1-9-இன் ஆசிரியர் போதக அறிவுரை நடையைப் பின்பற்றுகிறார். இங்கும் வாழ்வு உறுதியளிக்கப்படுகிறது. தோராவைக் கடைப்பிடிப்பதற்கும் நல் வாழ்வு அளிக்கப்படுகிறது. சட்டத்தைக் கடைப்பிடிப்பதற்கும் ஞானத்தைத் தேடுவதற்கும் இடையே யுள்ள பொது உடன்பாட்டுக்கூறு நல்வாழ்வாகும். சட்டத்தைப்படிக்கும் ஞானி புகழ் பெறுகிறார் (சீரா 39:1-11). இவ்வாறு ஞானத்திற்கும் புண்ணிய வாழ்வுக்குமுள்ள தொடர்பு முழுமை பெறுகிறது. தோராவே ஞானமாகும் என்பது சீரா 24:22; பாரூக் 4:1-இன் வெளிப்படையான போதகமாகும்.

இஸ்ராயேல், எகிப்து ஆகிய நாடுகளின் ஞானிகளது போதகத்தில் காணப்படும் ''பயனீட்டுக்கருத்து'' கவனிக்கப்பட வேண்டிய தொன்றாகும். ஞான நூல்களை மேல் எழுந்தவாரியாகப் படிக்கும்போது தோன்றும் பயனீட்டுவாதம், அது பற்றிய இக்காலக் கருத்தைப் போன்றதாகும்.

உலகில் ஓர் இறையமைப்பு நிறுவப்பட்டிருக்கிறது என்பதை ஞானி காண்கிறார். அதற்கேற்பத் தனது கூற்றுக்களை அமைக்கிறார். சான்றாக, ''வேலை செய்யாத கை வறுமையை வருவிக்கும்; ஊக்கமுள்ளவன் கையோ செல்வத்தை உண்டாக்கும்'' (பழ 10:4). இந்த அமைப்பு எல்லாவற்றையும் உள்ளடக்கவில்லை என்பதை மற்றப் பழமொழிகள் காட்டுகின்றன. இவை இதில் உள்ளடங்கிய பிரச்சனையை ஞானி அறிந்திருப்பதைக் காட்டுகின்றன. சான்றாக ''ஏழையை ஒடுக்குகிறவன் அவனை உண்டாக்கினவரை இகழ்கிறான்; வறியவனுக்கு இரங்குகிறவன் அவரைப் போற்றுகிறான்'' (14:31). ஆகவே ஏழை எப்போதும் குறை கூறப்பட வேண்டியவன் அல்லன். இறையமைப்பு வெள்ளிடைமலை போல் தெளிவாக இருப்பதில்லை. யாவே மனிதனது கட்டுப்பாட்டிலிருந்து கடந்த நிலையில் இருப்பதுபோல், இந்த அமைப்பும் மனிதனது கட்டுப்பாட்டுக்கு அப்பால் மறைந்திருக்கிறது. ஆயினும் இந்த அமைப்பைக் கண்டுணர்ந்த அளவுக்கு ஏற்றவாறு வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுமாறு தனது வாசகர்களை ஞானி தூண்டுகிறார். தனிப்பட்டோரின் சொந்தப் பாதுகாப்பு வலியுறுத்தப்படவில்லை. எனது மகிழ்ச்சியை எப்படிப் பாதுகாப்பது? அல்லது சாவிலிருந்து என்னையே எப்படிப் பாதுகாத்துக் கொள்வது? என்பதல்ல பிரச்சனை. உலகில் காணப்படும் அமைப்பை உணர்ந்து அதற்கேற்ப ஒவ்வொருவரும் தங்கள் வாழ்வை இப்போது இருப்பதைவிடச் சிறந்த முறையில் அமைத்துக் கொள்ள வேண்டும் என்று ஞானி தன் மாணவர்களைத் தூண்டுகிறார்.

ஞானத்தைத் தேடுவோர் அடையும் சன்மானம் வாழ்வே. ''நீதி நெறியில் வாழ்வு உண்டு'' (12:28). ஞானத்தையும் புண்ணியத்தையும் அடைவது ''வாழ்வு தரும் மரத்தோடும் (11:30; 13:12; 15:4), ''வாழ்வு தரும் பாதையோடும்'' (6:23; 15:24) ''வாழ்வின் ஊற்றோடும்'' (10:11; 16:22) தொடர்புபடுத்தப்படுகிறது. இக்கருத்துகளோடு மற்ற மதிப்பீடுகளும் சேர்க்கப்படுகின்றன. அவை, நீடிய

ஆயுள் (10:27), செல்வம், பெருங்குடும்பம், வெற்றி, செல்வாக்கு, கீர்த்தி போன்ற வாழ்க்கைச் சிறப்புகளாகும். இக்கருத்துக்களில் இறப்புக்குப்பின் ஒருவனது அழியாமை பற்றிய எக்கருத்தும் காணப்படுவதாகத் தெரியவில்லை. ஆயினும் வாழ்வு பற்றிய கருத்து வளர்ச்சியடையும் போக்குடையதாக உள்ளது.

ஆன்ம அழியாமைக் கோட்பாட்டின் வளர்ச்சி ஞான இலக்கியங்களோடு தனிப்பட்டமுறையில் தொடர்புடையது. யோபு, திருவுரையாளர் ஆகிய நூல்களில் இதுபற்றி கடக்கமுடியாத தடையைப் பழைய ஏற்பாட்டு ஞானிகள் அடைந்து விட்டனர். இறைவன் நல்லவர்களுக்குச் சன்மானமும் தீயோர்க்குத் தண்டனையும் அளிக்கிறார் என்று ஞானிகள் நிலையாகப் போதித்தனர். இதைப்பழமொழி நூலின் பிற்பகுதியில் எந்த அதிகாரத்திலும் காணலாம் (பழ 19:4; 11:5). இந்த நம்பிக்கையை எக்காலத்திற்கும் எல்லார்க்கும் பொருந்தியதாக ஏற்றுக்கொள்வது அவ்வளவு எளிதல்ல என்பதையும் ஞானிகள் நன்குணர்ந்திருந்தனர். தீயோர் செழிப்புறும் உண்மையை எதிர்கொள்ளும் போது, பொறாமை கொள்ளக்கூடாது என்று இவர்கள் ஆலோசனை கூறினர் (3:31; சங் 37). தீயோர்களுக்காகக் காத்திருக்கும் வீழ்ச்சியைச் சுட்டிக் காட்டினர். இறந்தபின் நல்லோரும் தீயோரும் செயோல் அல்லது கீழுலகில் உயிராற்றல் அற்ற வாழ்க்கை வாழ்ந்து, ஒரே நிலையையே கொண்டிருந்தனர் (திருவுரை 9:10). ஆகவே ஒருவன் தன் வினைப்பயனையும் இறைவனது நீதியையும் இரக்கத்தையும் இவ்வுலகிலேயே வாழ்ந்து அனுபவிக்க வேண்டும் என்று ஞானிகள் போதித்தனர். ஆனால் இந்த நன்னம்பிக்கை, வாழ்வின் கடின உண்மைகளால் எண்பிக்கப்படவில்லை. இதை யோபு, திருவுரையாளர் நூல்கள் எடுத்துக்காட்டுகின்றன. நல்லோர் துன்பம் அடைதல், அவர்களுக்கு ''ஆண்டவர் அளிக்கும் பயிற்சியாகும்'' என்று விளக்கம் அளித்தனர். ஆகவே அதை அவமதிக்கக் கூடாது. ஏனெனில் ''ஆண்டவர் தாம் நேசிப்பவனைக் கண்டிக்கிறார்'' (பழ 3:11-12). வினைப்பயன் பிரச்சனைக்கு நிறைவான பதில் கிடைக்கவில்லை. ஆயினும் இத் தோல்வி, அழியாமைக் கோட்பாட்டின் வளர்ச்சிக்கு இட்டுச்செல்கிறது. கீழுலகம் ஆண்டவர்முன் திறந்திருப்பதை இஸ்ராயேல் உணரத்தொடங்குகிறது (சங் 16:11). இறைவன் தமக்குப் பிரமாணிக்கமாய் இருப்பவர்களைக் கைவிடமாட்டார் (சங் 49:73). அழியாமை பற்றிய விசுவாச அறிவிப்பு தோன்றும்போது, அதை இஸ்ராயேல் தனக்கே உரிய விதத்தில் எடுத்துக்கூறுகிறது. அழியாமை மனித இயல்பின் குறிக்கோள் அன்று. ஆனால் ''நீதி அழியாது'' (ஞானம் 1:15; காண்க 3:1-4; 5:1-5). இந்த வாழ்வில் மனிதன் இறைவனோடு கொள்ளும் ஒன்றிப்பு அப்படியே என்றும் நீடிக்கும் (சங் 73).

**8. இலக்கிய அமைப்புகள்:**

அ. விவிலிய நூல்களின் முதல் ஆசிரியர் பரிசுத்த ஆவியானாலும், அவர் கூறும் உன்னதச்செய்திகள் மனித வடிவங்களில் நம்மை வந்தடைகின்றன. இதில் துணை ஆசிரியரான மனித ஆசிரியரும் அவர் பயன்படுத்தும் இலக்கிய வடிவங்களும் ஒரு குறிப்பிட்ட காலத்திலும், இடத்திலும், பண்பாட்டுச் சூழ்நிலையிலும் வரையறை செய்யப்படுகின்றன.

இறைவன் கூற விரும்பும் செய்தி மாறவில்லை. ஆனால் அது நம்மை வந்தடையும் வடிவங்கள், காலத்திற்கும் இடத்திற்கும் பண்பாட்டிற்கும் ஏற்றவாறு மாறும் தன்மையுடையன. விவிலிய நூல்கள் தோன்றிய சூழ்நிலையிலிருந்து வெகு தூரம் விலகியிருப்பவர்கள் இந்த வரம்புகளை நன்கு அறிந்திருப்பது அவசியம். இந்த வரம்புகளில் ஒன்று இலக்கிய வடிவமாகும். அதில் ஒன்று யாப்பு வடிவமாகும். இதுபற்றி முறையான ஆய்வு அவசியம். இந்த ஆய்வு தன்னிலே முடிவானதன்று; விவிலியச் செய்தியைப் புரிந்துகொள்ளவும், போற்றவும் ஒரு சாதனமே ஆகும்.

பழைய ஏற்பாட்டில் பெரும் பகுதி யாப்பு அமைப்பைக் கொண்டது; பாடல் வடிவம்

கொண்டது. இதுவே இவ்வடிவத்தின் முக்கியத்துவத்தைச் சுட்டிக் காட்டவல்லது. உரைநடைப்பகுதியின் மொழி நேரடித்தொடர்பை முதன்மையாகக் கொண்டது. யாப்பு அமைப்பு யாவும் கடந்த அனுபவங்களை எடுத்துக்கூற ஏதுவானது. அது தன்னிச்சையாக வாய்மொழியாகப் படைக்கப்பட்டதாக இருக்கலாம். அல்லது தெளிவான இலக்கியப்படைப்பாக இருக்கலாம். மனித அனுபவத்தின் ஆழ்ந்த கூறுகளையும், இறையறிவின் உச்சநிலைகளையும் எடுத்துக்கூறவும், உரைநடையைவிட யாப்பமைப்பையே வாகனமாக எல்லா இன இலக்கியங்களிலும் ஆசிரியர்கள் பெரும்பாலும் பயன்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. இது உரைநடையின் வரையறைகளைக் கடந்து செல்லும் ஆற்றல் மிக்கது. சில சமயங்களில், யாப்பமைப்பைப் பயன்படுத்துவது மனித சொற்களால் கூறமுடியாத ஒன்றைக்கூறும் முயற்சியாக இருக்கலாம். இவ்வமைப்போடு இசையும் சேரும்போது, யாப்பமைப்பின் வரை கடந்து செல்லும் பண்பு உச்சநிலை அடைகிறது எனலாம்.

இவ்வாறு விவிலியத்தில் இறைவனுக்கும் மனிதனுக்குமிடையேயுள்ள உறவையும் இறைவனுக்கு மனிதன் அளிக்கும் பதிலையும் சங்கீதநூல், மனித உள்ளத்தின் ஆழத்திலிருந்து தோன்றும் எழுச்சியாக எடுத்துக்கூறுகிறது. ஞானநூல்கள் மனித அனுபவத்தின் ஆழ்ந்த கூறுகளையும், மனிதருக்கு வழிகாட்டக்கூடிய மேற்கோள்களையும் எடுத்துரைக்கின்றன. இப்பாடல்கள் இறையியல் கோட்பாடுகளையும் விசுவாச அறிக்கைகளையும் எடுத்துக்கூறலாம்; அல்லது சாதாரண வாழ்வுக்குரிய மேற்கோள்களையும் கூறலாம்.

ஆ. இனிஎபிரேயப் பாடல்களுக்கு வருவோம். இஸ்ராயேலின் பாடல்கள் என்று சொல்லக்கூடியவை விவிலியத்தில் காணப்படுபவையே. புற இன மக்களிடையே காணப்படுபவை போன்று, எபிரேயர்களிடமும் தொடக்க கால இலக்கியம் பாடல் வடிவம் கொண்டது. உரைநடை நூல்களிலும் பாடல் பகுதிகள் காணப்படுகின்றன. இவையாவும் மிகப்பழமையானவை. இவற்றில் முக்கியமானவை; இலாமேக்கின் வாள் பற்றிய பாடல் (ஆதி *4:23*-தொ); ஈசாக்கின் ஆசீர்கள் (*27:27-29.39-40*); யாக்கோபின் ஆசீர்கள் (*49:1-27*); மோசேயின் வெற்றிப்பாடல் (யாத் *15:1-18*); கிணற்றுப் பாடல் (எண் *21:17-18*); பிலயாமின் இறைவாக்கு (*23:7-10.18-24; 24:3-9.15-24*); மோசேயின் பாடல் (உப *32:1-43*); இறக்கும் முன்பு மோசேயின் ஆசீர்கள் (*33:2-29*); சூரியனுக்கும் சந்திரனுக்கும் யோசுவாவின் கட்டளை (யோசு *10:12-13*); தெபோராவின் பாடல் (நீதி *5:2-31*); சிம்சோனின் விடுகதை (*14:14-16*) என்பன.பிற்கால நூல்களிலிருந்து பாடல் சான்றுகள்: அன்னாவின் செபம் (1 சாமு *2:1-10*); தாவீதை இளம் பெண்கள் போற்றுதல் (*18:7*); சவுல், யோனத்தான் ஆகியோர் மரித்தபோது தாவீது பாடிய இரங்கற்பா (2 சாமு *1:19-27*); அப்னேர்மேல் இரங்கற்பா (*3:33-34*); தாவீதின் பாடல் (*22:2-51*); தாவீதின் இறுதி வாக்குகள் (*33:1-7*); கூடாரத்தில் பெட்டகம் வைக்கப்பட்டபோது தாவீதின் பாடல் (1 நாள் *16:8-36*) என்பனவாகும்.

இறைவாக்கு நூல்களில் பெரும்பாலானவை பாடல் வடிவில் உள்ளன. யோவேல், ஒபதியா, மீக்கா, அபக்கூக், செப்போனியா, மலாக்கி போன்ற நூல்கள் முழுவதும், எசாயா, ஓசேயா, செக்கரியா ஆகிய நூல்களில் பெரும்பகுதியும் மற்ற இறைவாக்கு நூல்களில் சில பகுதிகளும் பாடல் வடிவம் கொண்டவை. இவை சங்கீதங்களிலும் மற்றப்பாடல் நூல்களிலும் காணப்படும் யாப்பு வடிவங்களைக் கொண்டன.

ஞான இலக்கிய நூல்கள் பெரும்பாலும் யாப்பு அமைப்புக் கொண்டவை. யோபுநூல் கவிதையும் உரையாடலும் கொண்ட காவியமாகும். சங்கீதநூல் பக்திப் பாடல்களையும் செபங்களையும் கொண்டது. பழமொழி, சீராக் ஆகிய நூல் வேறுபட்ட நீளமுடைய யாப்பு அமைப்பைக் கொண்டவை. திருவுரையாளர் நூல் பாடலும் உரையாடலும் கலந்த சிந்தனைப் படைப்பாகும். உன்னத

சங்கீதம் உரைநடை கலந்த திருமண அகப் பாடலாகும். ஞானநூல் பாவடிவில் உள்ள சமய தத்துவ இயல் நூலாகும்.

கிரேக்க மொழியில் உள்ளது போன்றோ, நமது தமிழ்மொழியில் தொல்காப்பியம் உள்ளது போன்றோ, எந்த இலக்கண நூலும் எபிரேய மொழியில் இது வரை கிடைத்திலது. ஆகவே எபிரேய யாப்பின் புறவடிவங்களைத் துல்லியமாக நிர்ணயிப்பது கடினம். ஆயினும் சில யாப்புப் பண்புகளைப் பார்ப்போம்.

இ. ஞானநூல்களின் அடிப்படை இலக்கிய அமைப்பை ''மசால்'' என்ற எபிரேயச் சொல் குறிக்கிறது. இச்சொல்லின் பொருளை அறுதியிட்டுக் கூற முடியாது. ''ஒன்றைப்போல் ஆதல்'', ''ஒன்றோடு ஒத்திருத்தல்'' என்ற அடிப்பொருளுடைய வினைச் சொல்லிலிருந்து இச்சொல் வருவதாகத் தெரிகிறது. இது ''ஒப்புமை'', ''உவமை'' என்று பொருள்படும் பெயர்ச் சொல்லாகும். காலப் போக்கில் மேற்கோள் வாக்கு, பழமொழி, பொன்மொழி ஆகியவற்றைக் குறிக்கப் பயன்பட்டது. ஆனால் இது சிறு முதுமொழிகளை மட்டுமல்லாது நீண்ட கூற்றுக்களையும் குறிக்கவல்லது *(பழ 1:10-19; யோபு 27:1; 29:1; சங் 49:4; 78:2)*; வசைப்பாடலையும் குறிக்கலாம் *(எண் 21:27-30; எசா 14:4தொ; மீக் 2:4தொ; அப 2:6தொ)*; மறைபொருள் மிக்க இறைமொழிகளைக் குறிக்கலாம் *(எண் 23:7.18)*; கேலிப் பொருளிலும் வசைப் பொருளிலும் பயன்பட்டுள்ளது *(உப 28:37; சங் 44:15-16; 69:12; எசே 14:8; 17:2)*; ஒப்புமை அடிப்படைகொண்ட அறிவுரைகளையும், விடுகதைகளையும் குறிக்கலாம் *(எசே 17:2; 21:5; 24:3)*; கலைப்பண்போடு அமைக்கப்பட்ட முதுமொழிகளையும், நன்னடத்தை மேற்கோளுரைகளையும் குறிக்கலாம் *(1 சாமு 10:12; 24:14; எசே 12:22-23)*. இப்படிப் பல பொருள்களில் ''மசால்'' என்ற எபிரேயச் சொல் பயன்பட்டுள்ளது.

காலப்போக்கில் மசால் என்ற சொல்லின் பொருள் ஓரளவு வரையறை செய்யப்பட்ட, உருவகமும் யாப்பு அமைப்பும் கொண்ட, முதுமொழிப்பண்புடைய கூற்றுக்களாகவோ, அதிகாரப்பூர்வமான வாக்குகளாகவோ மசால் வடிவெடுத்தது *(எண் 23:7-18; எசா 14:4-6)*; கருத்தைக் கவரும் ஒரு வாக்கையோ பொதுக் கூற்றையோ, மேற்கோளுரையையோ குறித்தது. பிற்காலத்தில் இது உவமையாகவோ, உருவகமாகவோ, போதகமாகவோ, வாதமாகவோ விரிவான வடிவம் எடுத்தது. மசால் என்ற சொல்லுக்குச் சரியான சொல்லைப் பிற மொழிகளில் காண்பது அரிது. இச்சொல்லை அதன் தெளிவின்மையையும் சேர்த்து, இக்கட்டுரையில் ''மேற்கோளுரை,'' ''பழமொழி,'' ''பொன்மொழி'' என்ற சொற்களால் குறிப்பிடுவோம்.

ஈ. பழமொழிவகை, இணையமைப்பு, சந்தம் ஆகிய பண்புகளைக் கொண்டுள்ளது. இவற்றோடு அடி என்ற பண்பையும் சேர்த்துக் கொள்ளலாம். இணையமைப்பு என்றால் என்ன? ஒரு வரியில் கருத்தைச் சமன்படுத்துதல் அல்லது கருத்தைச் சமமாகப் பகிர்ந்து அமைத்தலாகும். சிந்தனை அடிப்படையில் வரிகள் இணையமைப்போடு ஒன்றோடு ஒன்று சேர்க்கப்படுகின்றன. அதன் விளைவாக வரிகள் கருத்து அடிப்படையில் ஒத்துப்போகின்றன. இணையமைப்பு மூன்று வகைப்படும்.

**1. நேர்நிலை இணையமைப்பு:** இதிலே ஒரு வரியின் இரண்டாம்பகுதி முதல் பகுதியின் கருத்தை எதிரொலிக்கும். சொற்களில் மாற்றமிருக்கலாம்; கருத்து அடிப்படையில் மாற்றமில்லை. சான்று:

''என் இதயம் அக்களிக்கின்றது
என் உள்ளம் மகிழ்ந்து துள்ளுகின்றது''
*(சங் 16:9)*.

''மக்களினங்களே அனைவரும் இதைக் கேளுங்கள்; மண்ணுலகில் வாழ்வோரே, யாவரும் செவி கொடுங்கள்'' *(49:1)*. பிற சான்றுகள்: *பழ 3:13-18; சங் 2:4; 37:1-2; 51:9.....*

*2. எதிர்நிலை இணையமைப்பு:* இரண்டாவது பகுதியின் கருத்து முதல் பகுதியின் கருத்துக்கு நேர் எதிரானதாயும், ஆனால் கருத்தை நிறைவு செய்வதாயும், அமைந்திருக்கும். சான்று:

''நேர்மையாளரின் நெறியை ஆண்டவர் கருத்தில் கொள்வார்;
பொல்லாரின் வழியோ அழிவைத்தரும்''
(சங் 1:6).

''ஞானமுள்ள மகன் தன் தந்தையை மகிழ்விப்பான்;
அறிவற்ற மகனோ தன் தாய்க்குத் துயரமளிப்பான்'' (பழ 10:1).

பிற சான்றுகள்: சங் 3:5-6; 20:8-9; பழ 16:28; 13:9;....

*3. தொகுப்புநிலை இணையமைப்பு:* இது தொடர் வளர்ச்சியுடையது. முதல் வரியில் வரும் கருத்து பின் வரும் வரிகளில் வளர்ச்சியுற்று நிறைவு பெறும். சான்றுகள்: சங் 1:2 தொ; 3:5-6; 19:8-19; பழ 26:3 தொ.

4. சில சமயங்களில் முதல் வரி மூன்றாவது வரியோடும், இரண்டாவது வரி நான்காவது வரியோடும் ஒத்துப்போகும் (சங் 127:1); சில இடங்களில் முதல் வரி நான்காம் வரியோடும், இரண்டாவது வரி மூன்றாவது வரியோடும் ஒத்துப்போகும் (சங் 137:5-6). இவ்வமைப்பு மூல எபிரேய அமைப்பைப் பின் பற்றிக் கூறப்படுகிறது. பின் இது தொடரில் முன்பின் முரண் நயமுடைய இணையமைப்பு என்றழைக்கப்படும்.

இவ்விதம் கருத்துக்களை இணைப்பது, ஐயப்பாடுடைய சொற்களுக்கும் தொடர்களுக்கும் விளக்கம் அளிக்க உதவுகிறது. சான்றாக,

''ஆண்டவரது வாக்கினால் வானங்க்ள் உண்டாயின;
அவரது சொல்லின் ஆற்றலால் வான் கோள்கள் எல்லாம் உருவாயின''

(சங் 33:6; காண்க. 88:11). சில இடங்களில் இப்படிப்பட்ட இணைப்பு, இரண்டு வரிகளும் சேர்ந்தே முழுப்பொருளை உணர்த்த வல்லன என்று காட்டுகிறது. இவ்வாறு, சங் 92:2. இறைவனது இரக்கத்தையும் பிரமாணிக்கத்தையும் இரவும் பகலும் போற்றும் என்று பொருள்கொடுக்கும் (காண்க 19:1-2; 42:9; ஆதி 49:27).

மேற்கூறப்பட்ட இணையமைப்புகளை விவிலியத்தில் அடிக்கடி காணலாம். இவை பாடல்களுக்கு அழகும் நயமும் கொடுக்கின்றன என்றால் மிகையாகாது. எபிரேய யாப்பு வடிவங்களில் இணையமைப்பும் சந்தமும் முக்கிய இடம் பெற்றிருந்தாலும் இணையமைப்பே மிகத்தெளிவாக அறிந்து கொள்ளப்படுகிறது. எபிரேயத்திலிருந்து பிறமொழிகளுக்கு மாற்றும்போது இணையமைப்பு எளிதில் பாதுகாக்கப்படுகிறது.

*உ. சந்தம்:* இது எபிரேயப் பாடல்களில் காணப்படும் ஒரு சிறப்புப் பண்பாகும். இது சிலமொழிகளில் காணப்படுவது போன்று அசைவுகளின் எண்ணிக்கைகளையோ, அளவைகளையோ அடிப்படையாகக் கொண்டதன்று; மாறாக ஒலி அழுத்தங்களை அடிப்படையாகக் கொண்டது. இதில் அழுத்தம் பெற்ற, அழுத்தம் பெறா ஒலி அசைகள் மாறி மாறி முறையாக வந்து ஒருவித நயத்தையும், இனிமையையும் உண்டு பண்ணும். ஒரு வரியில் வரும் சிறுபகுதிகள் ஒவ்வொன்றிலும் இரண்டு முதல் நான்கு அழுத்தம் பெற்ற ஒலி இசைகள் காணப்படலாம். இப்படிப்பட்ட இரண்டு அல்லது மூன்று சிறு பகுதிகள் சேர்ந்து ஒரு வரியாகும். இவற்றில் ஒலி அழுத்தக் கலப்பு 2+2, 3+3, 4+4, 2+3, 3+2, 4+3, 3+4,... என்று பலவாறு அமைந்திருக்கலாம். ஐந்து ஒலி அழுத்தங்கள் கொண்ட பகுதியில் மூன்றாவது அழுத்தத்திற்குப் பிறகு ஒரு நிறுத்தம் உண்டு. இது ''கினா'' (Qinah) என்றழைக்கப்படும். எரேமியாவின் புலம்பலில் இது அடிக்கடி பயன்படுவதால் இப்பெயர் பெற்றது. இந்த இடைநிறுத்தம் புலம்பல் தொனியை ஏற்படுத்தக் கூடியது.

எபிரேய ஆசிரியர்கள் எந்த ஒரு குறிப்பிட்ட ஒலி அழுத்த முறையையும் ஒரே

சீராகப் பின்பற்றியதில்லை. அவர்களது சிந்தனை எழுச்சிக்கும் வளர்ச்சிக்கும் ஏற்றவாறு, ஒரே பாடலில் ஒலி அழுத்த முறைகள் மாறுபடுவதும் உண்டு. கவிஞர் தனது இலக்கியப்படைப்பில் எந்த ஒரு துல்லியமான ஒழுங்கு முறைகளாலும் கட்டுப்படுத்தப்பட்டவன் அல்லன் என்பதை நாம் மனதில் கொள்வது நன்று.

சுருக்கமாக எபிரேய யாப்பு இலக்கணம் அசையையோ, அளவையையோ அடிப்படையாகக் கொண்டதன்று. சந்தத்தை அதாவது ஒலி அழுத்தத்தை அடிப்படையாகக் கொண்டது. ஒவ்வொரு பகுதியிலும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய ஒலி அழுத்தங்களைக் கொண்டிருக்கும். இரண்டு அல்லது மூன்று பகுதிகள் சேர்ந்து ஒரு வரியாக அமையும். இவை இணையமைப்பு முறையில் ஒன்று சேர்க்கப்படும். பல வரிகள் சேர்ந்து ஒரு அடியாகத் தொகுக்கப்படும்.

**ஊ. அடி:** எபிரேய யாப்பில் பொருள் அடிப்படையில் அடிகள் பிரிக்கப்படுகின்றன. வரிகள் இணையமைப்பைக் கொண்டிருப்பதுபோல், அடிகளும் அதே அமைப்பின் எதிரொலிப்பைக் கொண்டிருக்கும். அடிகளின் அமைப்பில் பல இலக்கிய யுக்திகள் காணப்படும். இவ்வாறு ஒவ்வொரு அடிக்குப் பின்னும் பல்லவி வரலாம் (சங் *42:5.11; 43:5*). இந்த அடிப்படையில் *42*-உம் *43*-உம் சேர்ந்து ஒரே பாடலாகும். சில பாடல்களில் ஒரே சொல் அல்லது தொடர் ஒவ்வொரு வரியின் தொடக்கத்திலும் வரலாம் *(13:1-3)*; அல்லது ஒவ்வொரு அடியின் முதலில் வரலாம் *(118:10-12)*. வரிகளின் தொடக்கத்தில் ஒரு சொல்லும் முடிவில் மற்றொரு சொல்லும் மீண்டும் மீண்டும் வருவதுமுண்டு *(118:2-4)*.

சில பாடல்களில் காணப்படும் அகர வரிசை அடிகளைப் பிரித்துக் காட்டும் (சங் *9;10; 25; 34; 37; 119; 145*; பழ *31:1-31*; சீரா *51:13-29*; புலம்பல் *3:1-40*). சில பாடல்களில் அடிகளின் முடிவில் ''சேலா'' என்ற சொல் காணப்படுகிறது. இச்சொல்லுக்குப் பொருள் தெரியவில்லை. இதுபற்றிச் சங்கீதம் அல்லது திருப்பாடல்கள் நூலுக்குரிய அறிமுகத்தில் கூறப்படும்.

**எ.** மேலும், எபிரேய ஆசிரியர்கள் தங்கள் நூல்களில், எளிய ஆனால், ஆற்றல் மிக்க சொற்றொகுதிகளையும், பலவகைச் சொல்லணிகளையும், இலக்கிய யுக்திகளையும் பயன்படுத்தியுள்ளனர். அதன் விளைவாகச் சமயசிந்தனையின் உன்னத உருவகங்களையும், ஆழ்ந்த உணர்ச்சி விவரிப்புத் தொகுப்புகளையும் விட்டுச் சென்றுள்ளனர். இந்நூல்களில் நாம் காணும் சில அணிகள்:

*1.* உவமை, ஒப்புமை அணி:- சங் *103:15; 129:6*; யோபு *7:6; 9:25.27; 14:2.11.*

*2)* உருவகம் அல்லது உள்ளடங்கிய ஒப்புமை:- சங் *18:4; 71:3*; ஆதி *49:3-27.*

*3)* தொடர் உருவகம்:- சங் *80*; எசா *5:1-7*; எசே *17:1-10*; பழ *24:30-34.*

*4)* ஆட்தன்மைப்படுத்துதல்:- சங் *19:5*; எசா *44:23; 49:13*; பழ *8:12-36*; ஞானம் *8:2*; யோபு *28:14.22.*

*5)* உயர்வு நவிற்சி:- சங் *109:6-15.* இதில் ஆசிரியர் கவிஞனின் ''நயமிக்க ஆவேசத்தோடு'' தனது எதிரி தண்டனை பெற வேண்டும் என்று மன்றாடுகிறார்.

*6)* வஞ்சப்புகழ்ச்சி:- எசா *5:22; 47:1.5.8-9.13-14; 14:9-20*; ஆமோ *4:4-5.*

*7)* சொல்லணி:- ஆமோ *5:5; 6:13*; ஒசே *6:8-10; 12:12*; எசா *5:7; 10:28-29*; மீக் *1:8-16.* ஒரு சான்று.

''அறம் விளையுமெனக் காத்திருந்தார்.
விளைந்ததோ மறம்!
முறைமை தழைக்குமெனப் பார்த்திருந்தார். எழுந்ததோ முறைப்பாடு!"
(எசா *5:7*).

ஞான இலக்கிய நூல்கள் பலவகை இலக்கிய வடிவங்களைப் பயன்படுத்துகின்றன. அவற்றில் சில போதகம், உரையாடல், பழமொழி, கற்பனைக்கதை என்பன. இவை ஒவ்வொன்றிலும் அடையாள மொழியான உருவகம் மிகுதியாகக் காணப்படுகிறது.

ஏ. இஸ்ராயேலின் ஞான நூல்களில் பெரும்பகுதி யாப்பு அமைப்பைக் கொண்டுள்ளது. யாப்பு அமைப்பில் காணப்படும் அகக்கூறுகளின் விளைவாக, பாடல்கள் வாசகர்களிடம் வெவ்வேறுபட்ட ஆழ்ந்த தாக்கத்தை உண்டுபண்ணவல்லன. பழ 25:2 இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. வாசகர்களுக்கு வெவ்வேறுபட்ட பொருளைக் கொடுக்கவல்லது. ஆகவே வாழ்வோடும் அனுபவத்தோடும் கொள்ளும் உண்மையை எதிர்கொள்ளுதலை எடுத்துக்கூறுவதே ஞானநூல்களின் அலுவலாகும். ஞான இலக்கியங்கள் பயன்படுத்தும் செயல்முறைத் தன்மை கருத்தியலாலாக்கப்பட்ட வாழ்க்கை அனுபவமாகும். இவ்வாறு, வாழ்வின் பொருளற்ற தன்மைபற்றி யோபுவின் அனுபவம் ஒரு தனிநபரின் சொந்த உணர்ச்சிமிக்க காட்சியாகத் தொடங்குகிறது. ஆனால் நாடகப்பாணி காவிய அமைப்பால் ஒவ்வொரு மனித வாழ்வின் பொருளற்ற தன்மையின் பெரு மதிப்பீடாக, பொருள்நிலை மாற்றம் பெறுகிறது. ஆகவே ஞானம் அதன் முதன்மையான உணர்வுக் காட்சியில் அனுபவத்தைச் சேர்ந்ததும் தனிநபர்த்தன்மையுடையதுமாகும். ஆனால் அது எடுத்துக் கூறப்படும்போது மிகவும் மரபு ஒழுங்காக முறைப்படுத்தப்படுகிறது. ஆகவே ஞான நூல்களை அணுகும்போது மிக எச்சரிக்கையாக அணுக வேண்டும்.

**9. ஞான போதக முறையின் குறிக்கோள்:** செயல்முறையில் அறிவர்கள் மனித அனுபவங்களைப் பற்றிச் சிந்தித்தனர். அவைபற்றிய தங்களது மதிப்பீடுகளை, சமூக வாழ்வையும் தனிநபர் வாழ்வையும் வாழக்கூடிய தாக்கும் நோக்குடன், மரபுவழிச் செல்லவிட்டனர். அவர்களுடைய இந்த ''ஞானவாத முறை'' அனுபவத்தின் வரம்புகளுக்கு அப்பால் செல்லச் செய்தது. தெரிந்தவற்றின் வரம்புகளைக் கடந்து செல்ல உதவியது. அறிவு சார்ந்த முறையில் விளக்கம் தேடுவதும், அனுபவ உலகை முறைப்படுத்துவதும் அவர்களது படைப்புக்களைப் பிறவற்றிலிருந்து பிரித்துக் காட்டின.

''ஞான வாத முறை'' என்பது அனுபவத்திற்கும் பாரம்பரியத்திற்குமிடையே எதிர்ப்பாட்டை உண்டாக்கி அதிலிருந்து வாசகர் தாமே ஒருமுடிவுக்கு வருவதாகும். இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு:

''எனக்கு வியப்பைத் தருவன மூன்று உண்டு;
நான்காவதைச் சிறிதேனும் அறியேன்
அவை வான்வெளியில் கழுகின் வழியும்
பாறையின்மேல் பாம்பின் வழியும்
நடுக்கடலில் மரக்கலத்தின் வழியும்
ஆண் மகனுக்குப் பெண்மீதுள்ள நாட்டமும் ஆகியவையே''

*(பழ 30:18-19).*

இதில் மனிதப்பலினத் தன்மையின் மறைபொருள் முனைப்பாக உள்ளது (வச. 19). மறைபொருள் மிக்க மற்றவற்றோடு ஒப்பிட்டு, ஒப்புமையை முடிக்காது விட்டுவிடுகிறார் ஆசிரியர். வாசகர்கள் தாங்களாகவே ஒப்புமை அமைத்துக் கொள்ளவும், அதன் விளைவாகத் தாங்களாகவே முடிவுகளை எடுத்துக் கொள்ளவும் தூண்டுகிறார். இயற்கையிலும் மனித வாழ்க்கையிலும் காணப்படும் அமைப்புகளையும் அவற்றின் அலுவல்களையும் சுட்டிக்காட்டி, வாசகர்கள் தங்கள் வாழ்க்கைக்கு உதவும் ஒரு கொள்கையை அமைத்துக் கொள்ளத் தூண்டுவதுவே ஞானிகளின் அலுவலாகும். ஆசிரியரின் மதிப்பீடுகளை வாசகர்கள் தங்களது சொந்தச் சிந்தனையின் தொடக்கமாக்கிக் கொள்வது அவசியம். ஞானக் கூற்றுக்கள் முழுவிளக்க விவரங்களுடன் கூறப்படுவது வெகு அபூர்வமே. இணையமைப்புக்களைப் பயன்படுத்தி வாசகர், தங்களது அறிவியல் மதிப்பீடுகளுக்கு ஏற்ப ஓர் அனுபவத்தை எதிர் கொள்ளச் செய்து, அவர்களது சிந்தனையைத் தூண்டுகிறார் ஞான ஆசிரியர். ஒரு காரியத்தைப் பற்றி இரு கோணங்களில் எடுத்துக் கூறுகிறார். பதில் கொடுப்பதை விடச் சிந்தனையைத் தூண்டுவதே ஆசிரியரது நோக்கமாகும். காண்க. பழ 11:1தொ.

ஆகவே, முன்பே அமைக்கப்பட்ட துல்லிய கருத்தையோ, தீர்ப்பையோ எடுத்துக் கூறுவது ஞான இலக்கியத்தின் நோக்கமன்று.

ஓர் அனுபவத்தின் மதிப்பீட்டை எடுத்துக் கூறுவதே அதன் நோக்கம். அதிலே வாசகர் மந்தமாய் இருப்பதில்லை. உற்சாகத்தோடு ஈடுபடுகிறார். தான் வாழவேண்டிய மட்டத்தை நிர்ணயிக்கிறார். இது மனித உறவுகளுக்கு இட்டுச் செல்கிறது. இதுவும் ஒரு ஞான மதிப்பீடாகும். எப்படி வாழவேண்டும் என்பது அவரவர் பொறுப்பாகும்; சூழ்நிலைக்கேற்ப அவரவர் எடுக்க வேண்டிய தீர்மானமாகும் என்ற உண்மை இங்குப் பின்னணியாக அமைந்துள்ளது. இதில் வாசகரின் தன்னாட்சித் தன்மை முக்கியமானதாகும் என்று ஞானநூல்கள் எடுத்துக்காட்டுகின்றன. இந்நூல்களில் முரண்தோற்றமுடைய மேற்கோள்கள் அருகருகே காணப்படுகின்றன. அவற்றிற்குத் தனது பதில் என்னவென்பதைத் தீர்மானிக்க வேண்டியது வாசகரின் கடமையாகும். திருவுரை *5:7-12* வாசகரின் தன்னாட்சித் தீர்மானக் கோட்பாட்டை ஓரளவு சுட்டிக் காட்டுகிறது.

ஞானிகள் மற்றவர்க்குக் கற்பிப்பது ஒரு போதும் ஒரு கருத்தைப் புகுத்துவதற்கன்று. மாணவர்கள், எந்தக் கருத்தையும் ஆசிரியரிடமிருந்து மந்தமாகப் பெற்றுக் கொள்ளக் கூடாது; ஆற்றலோடு அதில் ஈடுபடவேண்டும். மாணவர் தனக்கு அளிக்கப்படுபவற்றின் ஒப்பீட்டு முக்கியத்துவத்தை, தனது வாழ்க்கைச் சூழ்நிலையில் சொந்தமாக நிர்ணயித்து, அவற்றின் மதிப்பீடுகளைத் தீர்மானிக்க வேண்டும். எடுத்துக்காட்டாக ஆசிரியர் - மாணவன் உறவை - வெவ்வேறுபட்ட அனுபவங்களை அடிப்படையாகக் கொண்ட ''சமன் செய்யப்பட்ட போட்டி'' - என்று விவரிக்கலாம்.

**II. புதிய ஏற்பாடு:**

***1. முன்னுரை:*** புதிய ஏற்பாட்டில் ஞான இலக்கியநூல் என்று கூறுவதற்கு எதுவும் இல்லை. ஆனால் பழைய ஏற்பாட்டு ஞான இயக்கத்தின் ஒருவகைத் தொடர்ச்சியையும் நிறைவையும் புதிய ஏற்பாட்டில் காணலாம். யாக்கோபின் திருமுகம் ஞான இலக்கியப் பாரம்பரியத்தில் எழுதப்பட்டதாகத் தெரிகிறது. எல்லாவற்றையும் விட, புதிய ஏற்பாட்டில் இயேசு ஞான ஆசிரியராகவும் இறை ஞானமாகவும் விவரிக்கப்படுகிறார். அவர் இறை ஞானமாய் இருப்பதால், அவர் ஞானத்தைப் பிறருக்குக் கொடையாக அளிக்கிறார் என்று புதிய ஏற்பாடு ஆசிரியர்கள் புரிந்து கொண்டனர் (*1 கொரி 1:24.3*). ஆகவே ஞானம்பற்றிப் பழைய ஏற்பாடு ஞானிகள் பயன்படுத்திய அதே சொற்களையே இயேசுவுக்கு இயல்பாகச் சாற்றிக் கூறுகின்றனர்.

***2. புதிய ஏற்பாட்டில் பழைய ஏற்பாட்டுப் பாதிப்பு:*** மீட்பளிக்கும் கிறிஸ்துவின் செயலைப் பறைசாற்றும் பணித்திட்டத்தில் ஞானத்தின் அலுவல் என்ன? வரலாற்றுக் கண்ணோடு நோக்கினால் யூத ஞானம் புறத்திலிருந்து கிறிஸ்துவத்துக்குள் புகுந்து ஆதிக்கம் செலுத்தவில்லை. முதல் கிறிஸ்தவர்கள் யூதர்கள் என்ற முறையில் அதில் வளர்ந்தவர்கள்; திருச்சபைக்குள் தங்களோடு அதையும் கொண்டுவந்தனர்; அதைத் தங்கள் உரிமைச் சொத்தாகப் பாதுகாத்தனர் என்று அறியலாம். கிறிஸ்துவ விசுவாசத்தின் இறைவன் வேறு எவருமில்லை. அவர் இஸ்ராயேல் ஞானத்தின் இறைவனே; படைப்பவரான ஒரே இறைவனே. இந்த உறவுக்குச் சிறந்தோர் எடுத்துக்காட்டு 1 தெச 1:9-10-இல் வரும் மறைபரப்புப் போதக வடிவமாகும். ஒரே உண்மையான, உயிருள்ள இறைவன் உயிரற்ற சிலைகளோடு ஒப்பிட்டு வேறுபடுத்தப்படுகிறார். இந்தப் பணித் திட்டத்திற்குள் கிறிஸ்துஇயல் செய்தி அறிமுகப்படுத்தப்படுகிறது. இவ்வாறு ஞானம் பழைய ஏற்பாடு, மற்றும் யூதத்திற்கும் தொடக்க கிறிஸ்துவத்திற்கும் ஓர் இணைப்பாகவும், தொடர்பாகவும் செயல்பட்டது.

புதிய ஏற்பாட்டில், பழைய ஏற்பாட்டு யூதப் பாதிப்பு அடிப்படைத் தன்மையுடையதாகும். ஞானம் என்ற சொல்லையும் கருத்தையும் விட, பழைய ஏற்பாட்டு இலக்கிய வடிவங்களும் பொருளடக்கமும், பிற்கால யூத ஞான இலக்கியங்களும் புதிய ஏற்பாட்டை அதிகம் பாதித்துள்ளன. இவற்றில், பழமொழி வடிவில் தொகுக்கப்பட்ட மேற்

கோள்களைப் பயன்படுத்தும் ஒழுக்க போதகம் (பழமொழி, சீராக், புதிய ஏற்பாட்டில் மலைப்பொழிவு: மத் 5-7; உரோ 12; யாக்கோபு), சுருக்கமான கூற்றுக்கள் (யாக்கோபு 2-3; எபி 3:2-18; 4:12-14; 6:1-3;...), நற்பண்புகளின் பட்டியல்கள் ஆகியவை அடங்கும். இவை சில சமயம், யூத ஞானத்தின் இருபொருளுண்மைக் கோட்பாட்டு வளர்ச்சிப் பாரம்பரியத்தில் கொடுக்கப்படுகின்றன (ஞானநூல்). ஆகவே இருவகைப் பட்டியல்களைக் காணலாம் (கலா 5:19-23; கொலோ 3:5-17). ஒரே உண்மையான இறைவனும் உயிரற்ற சிலைகளும் பற்றிய சில காப்புரைகளும் (1 கொரி 8:1-6; 1 தெச 1:9-10), உருவக எடுத்துக்காட்டு இயல் முறையில் விளக்குதலும் (1 கொரி 10; கலா 4:21-31; சிறப்பாக எபிரேயர்) குறிப்பிடத்தக்கவையாகும். ஞானம் ஆட்தன்மைபெறும் யூத ஞானப் பாடல் வகையைச் (பழ 8; ஞானம் 7:22தொ; சீரா 24; பாரூக் 3:9தொ; யோபு 28) சில புதிய ஏற்பாட்டுப் பாடல்கள் பின்பற்றுகின்றன (யோவா 1:1தொ; கொலோ 1:15 தொ; 1 கொரி 13).

பழைய ஏற்பாட்டு ஞானப் பாரம்பரியத்தின் அடிப்படைக் கருத்துக்கள்: இறைவன் ஞானமிக்கவர் (சீரா 1:8). ஞானம் அவருக்கே சொந்தமானது (தானி 2:20.23). அது அவருக்கு மட்டுமே ஏற்புடையதானது (ஞானம் 9:9). எல்லா ஞானமும் அவரிடமிருந்து வருகின்றது (சீரா 1:1). இறைவன் ஞானத்தைக் கொடுப்பதால் (தானி 2:20) ஒருவன் அதற்காக அவரிடம் மன்றாடலாம் (2 நாள் 1:10). இறைவன் மட்டுமே ஞானத்தை வெளிப்படுத்துவதால், மனிதர் அதை அடைய அவரிடம் செல்ல வழிகாண வேண்டும். இதைக் கற்பிக்க ஆசிரியர்களும் போதகமும் உண்டு. ஞானத்தின் தொடக்கம் இறையச்சமாகும் (பழ 1:7).

பழைய ஏற்பாட்டிலும், யூத ஞானத்திலும் மூன்று வகையான மெய்யுருப்படுத்தி உருவகமாக்கப்படும் ஞானம் உண்டு. இவை புதிய ஏற்பாட்டில் மீண்டும் காணப்படுகின்றன. அவை: (அ). கட்புலப்படாமல் மறைந்திருக்கும் ஞானம்: இதை அடையும் வழியை இறைவன் மட்டுமே அறிவார் (யோபு 28; பாரூக் 3:9). (ஆ). இறைவனுக்கு அருகிலுள்ள ஞானம் (பழ 8:22 தொ). இது இறைவனால் படைக்கப்பட்டது. உலகப் படைப்பில் இறைவனுக்கு உதவி செய்கிறது. இதனால் உலகம் செறிந்து கிடக்கிறது. இதைத் தேடி அடைபவர்கள் இதனால் ஒளி பெறுகின்றனர். இதன் ஆதிக்கத்துள் வாழ்கின்றனர். (இ), இது மறைந்துபோன ஞானம்: இது உலகில் ஒருமுறை தோன்றியது. இதை மனிதர் நிராகரித்துவிட்டனர். ஆகவே இது விண்ணகத்திற்குப் பின்வாங்கி விட்டது. ஒரு காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு மீண்டும் தோன்றும்.

**3. புதிய ஏற்பாட்டில் "ஞானம்" என்ற சொல்:** மத் 12:42; லூக் 11:31; (அ.ப. 7:22)-இல் ஞானம் என்ற சொல் சாலமோனது ஞானத்தைப் போற்ற, சமயச் சார்பற்ற பொருளில் பயன்பட்டுள்ளது. இதே பொருளில் இயேசுவின் ஞானமும் போற்றப்படுகிறது (மாற் 6:2; லூக் 2:40.52). இறைவனது ஞானம் லூக் 11:49; எபே 3:10 ஆகிய பகுதிகளிலும், இறைப்புகழ்ச்சி வாய்பாடுகளிலும் (உரோ 11:3; 16:27; திருவெளி 7:12) குறிப்பிடப்படுகிறது. இறை ஞானம் உலகிடம் பேசுகிறது (லூக் 11:49); தூதுவர்களை அனுப்புகிறது (மத் 23:34). உயிர்த்த கிறிஸ்துவின் ஞானம் போற்றப்படுகிறது (திருவெளி 5:12). அவரில் ஞானத்தின்செல்வம் எல்லாம் மறைந்திருக்கிறது (கொலோ 2:3).

விசுவாசி ஞானத்தை இறைவனது ஆவியிடமிருந்து கொடையாகப் பெறுகிறான் (எபே 1:8; கொலோ 1:9). ஆகவே அதை நாட முயல வேண்டும் (எபே 5:15; கொலோ 4:5). திருச்சபையில் ஞானத்தில் சிறந்தவர்கள் இருக்கின்றனர் (அ.ப. 6:3.10). ஞானம் திருச்சபையில் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும் (எபே 3:10; கொலோ 1:28; யாக் 3:13). இறை ஞானமும், உலக ஞானமும் முரண்படுவது பற்றிய முக்கியமான ஆய்வுரை 1 கொரி 1-2; 8:18-19 (மேலும் 2 கொரி 1:12; கொலோ 2:23; யாக் 3:13-18; மத் 11:25) என்ற பகுதியில் காணப்படுகிறது.

ஞானம் ஆவியோடும் (அ.ப. 6:310; ஞானம் 1:5-3;7:7), ஆற்றலோடும் (திருவெளி 5:12; 7:12; யோபு 12:13) தொடர்புபடுத்தப் படுகிறது. ஞானத்தோடு ஒரு பொருள் பல சொற்களாகப் பயன்படுபவை: அறிவு (கொலோ 2:3; திருவுரை 1:17), உள்நோக்கு அல்லது அறிவுத்திறன் (கொலோ 1:9; எபே 1:8; தானி 2:21). ஆவியையும், ஆற்றலையும் இணைக்கும் ஞானம் மந்தமானதன்று; செயல்திறம் மிக்கதாகும்.

***4. ஒத்தமை நற்செய்திகள்:*** புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவோடும், ஒத்தமை நற்செய்திகளில் காணப்படும் அவரது போதகத்தோடும் ஞானத்தின் வரலாறு தொடங்குகிறது எனலாம். ஒரு வேளை ஞானப் பாரம்பரியங்களிலிருந்து பழமொழிகள் இந்நூல்களில் புகுந்திருக்கலாம். ஆனால் இயேசுவே ஞான ஆசிரியர்களுள் தலை சிறந்தவர் என்று இந்நூல்கள் காட்ட விழைகின்றன.

இயேசு தமது வயதுக்கேற்ப ஞானத்தில் வளர்ந்தார் (லூக் 2:52). இளைஞனாக இருந்தபோது அவர் காட்டிய அறிவு வளர்ச்சி வயதுக்கு மீறிய அறிவாற்றல் அன்று (லூக் 2:47). அவர் ஞானம் போதித்தலைத் தொழிலாகக் கொண்ட போதகராகத் தோன்றியபோது, அவரை முன்பு அறிந்தவர்கள், அவருக்கு எப்படி ஞானம் வந்தது என்று வியக்கின்றனர் (மத் 7:28; மாற் 6:2). இயேசு பயன்படுத்திய போதக முறைகள் இஸ்ராயேல் ஞானிகளின் முறைகளுக்கு ஒத்திருக்கின்றன. அவர் அதேவித இலக்கிய வடிவங்களையும், அதாவது மேற்கோள் கூற்றுகளையும், உவமைகளையும் பயன்படுத்துகிறார். அவர்களைப்போல் ஒழுக்க போதகத்தை அளிக்கிறார் (மத் 5-7). இத்தகைய ஞானத்தை ஞானிகளின் பள்ளிகளில் பயிலாமல் ஒருவர் பெற முடியாது. ஆகவே அவரது ஞானத்தைக் கண்டு வியக்கின்றனர்; மலைக்கின்றனர்.

ஞானிகளான சட்ட வல்லுநர்களிடமிருந்து இயேசுவைப் பற்றிய வெளிப்பாட்டை இறைவன் மறைத்துவிட்டார் (மத் 11:25; லூக் 10:21). இறைவாக்கினர்கள், ஞானிகள் பழைய ஏற்பாட்டில் இறைவனது தூதுவர்களாவர் (மத் 23:34). லூக் 11:49-இல் பேசும் இறை ஞானம் இறைவனே. இயேசு தமது சீடர்களுக்குப் ''பேச்சு வன்மையும் ஞானமும் அருளுவதாக'' (லூக் 21:15) வாக்களிக்கிறார். தனது செயல்களால் நிரூபிக்கப்படும் ஞானம் (மத் 11:19; லூக் 7:35), விளைவுகளால் சரியானது என்று காட்டப்படும் இறைவனது ஞானமே. ஒத்தமை நற்செய்திகள் இயேசுவை ஒரு ஞானியாக மட்டும் காட்டவில்லை (மாற் 6:2; மத் 12:42; லூக் 11:31). ''சாலமோனிலும் மேலானது இதோ இங்குள்ளது'' (மத் 12:42) என்ற கூற்று, சாலமோனுடைய ஞானத்தைவிட இயேசுவின் ஞானம் மேலானது, அதாவது இயேசு தலைசிறந்த ஞானி என்று காட்டுகிறது. சில இடங்களில் இயேசு ஞானத்தின் தூதுவராகவும் காட்டப்படுகிறார். இறுதியாக, மத்தேயுவால் இயேசுவும் ஞானமும் ஒன்றாக்கப்படுகின்றனர். ''இறை ஞானம் சரி என்று அதை ஏற்றுக்கொண்ட மக்கள் அனைவராலும் விளங்கிற்று'' (லூக் 7:35) என்று லூக்கா கூறும்போது ''இறை ஞானம் சரியென்று அதன் செயலால் விளங்கிற்று'' (மத் 11:19) என்று மத்தேயு கூறி, இயேசுவையும் ஞானத்தையும் ஒன்றாக்குகிறார். மத் 11:27-இல் இயேசுவே வெளிப்பாட்டின் பொருளடக்கம் என்று விவரிக்கப்படுகிறார். ஞானம் தன்னையே அறிவிக்கிறது. இதை யோவான் நற்செய்தியில் வரும் ''நான்...இருக்கிறேன்'' என்ற கூற்றுக்களில் காணலாம். இஃதோடு ''சுமை சுமந்து சோர்ந்திருப்பவர்களே எல்லோரும் என்னிடம் வாருங்கள் உங்களை நான் இளைப்பாற்றுவேன். ஏனெனில் நான் சாந்தமும் மனத்தாழ்ச்சியும் உள்ளவன்...'' (மத் 11:28-29) என்ற கூற்றையும் மத்தேயு சேர்க்கிறார். இது ஆன்மா இளைப்பாற ஞானம் விடுக்கும் அழைப்பாகும் (சீரா 51:23-30). ஞானம் எச்சரிப்பதாக லூக்கா கூறும்போது (லூக் 11:49-51), இயேசுவே அந்த எச்சரிக்கையைக் கூறுவதாக மத்தேயு கூறுகிறார் (மத் 23:34-36). இங்கும் மத்தேயு இயேசுவையும் ஞானத்தையும் ஒன்றாக்குகிறார். பேசுபவர் வரலாறு கடந்தவராவார்.

எருசலேமைப் பற்றிய புலம்பலிலும் (மத் 23:37-39; லூக் 13:34-35) இயேசு வரலாறு கடந்தவராகவே பேசுகிறார். இதில் இயேசு ஞானமாவார் என்ற அளவில் பேசுகிறார். நிராகரிக்கப்பட்ட ஞானம் மறைந்துவிடுதல், அது மீண்டும் தோன்றுதல் போன்ற கருத்துக் கள் இயேசுவின் மரணம், அவரது மகிமை மிக்க இரண்டாம் வருகை ஆகியவற்றோடு தொடர்புடையன.

5. பவுலின் திருமுகங்களில் ஞானம் என்ற கருத்து ஒரு சிறப்பிடம் வகிக்கிறது. இறை வன் ஒருவரே உண்மையான ஞானத்தைக் கொண்டுள்ளார். அது ஆழமிக்கது. அதை மனிதன் தேடி அடைய முடியாது (உரோ 11:33; 16:27). அது பல்வகைப்பட்டது (எபே 3:10). இங்கே குறிக்கப்படும் ஞானம் இறை வனது மீட்புத் திட்டமாகும்; அதன் வழியாக இறைவன் எல்லோர் மேலும் இரக்கம் காட்டு கிறார் (உரோ 11;32). ஞானம் நிறைந்த பேச்சு ஆவியின் கொடையாகும் (1 கொரி 12:8). ஞான ஆவி இறைவனால் கொடுக்கப் படுகிறது (எபே 1:17). கிறிஸ்துவ வெளிப் பாட்டை அறிவிக்கும் அப்போஸ்தலர்க ளால் ஞானம் போதிக்கப்படுகிறது (கொலோ 1:28). தனது போதகத்தில் உலக ஞானத்தை ஒரு சாதனமாகப் பயன்படுத்த பவுல் மறுத்து விடுகிறார் (2 கொரி 1:12). கிறிஸ்தவர்கள் ''முழு ஞானத்தோடு ஒருவ ருக்கொருவர் போதித்துக்'' கொள்ள வேண் டும் (கொலோ 3:16). ''திருச்சபையைச் சேரா தவர்களிடம் ஞானத்தோடு பழக'' வேண் டும் (4:5). கிறிஸ்தவர்கள் உண்மையான ஞானத்தைப் போலி ஞானத்திலிருந்து வேறு படுத்த வேண்டும் (2:23). அவர்கள் ''நன்மை செய்வதில் ஞானிகளாக'' இருக்க வேண்டும் (உரோ 16:19). இவ்வுலக ஞானத்தைக் கொண்டிருப்பவர்கள் ''தங்களை ஞானிகள் எனப் பிதற்றும் அவர்கள் வெறும் மடையர்'' ஆவர் (1:22). இங்கு ஞானம் என்ற சொல் தத்துவ இயல் அறிவைக் குறிக்கும் கலைச் சொல்லாகத் தெரிகிறது. இந்த ஞானிகள் படைப்பிலிருந்து தங்கள் அறிவைப் பயன் படுத்தி இறைவனது ஆற்றலையும் இறைத் தன்மையையும் அறிந்திருந்தனர். ஆனால் இறைவன் பற்றிய உண்மையை மூடி மறைத் தனர் (1:18-21).

கொரிந்தியர்கள் தங்கள் அறிவைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொண்டனர் (1 கொரி 8:1-6). அதன் விளைவாகத் தங்கள் உரிமை பற்றியும் பெருமைபட்டுக் கொண்டனர் (6:12; 10:23). அவர்கள் உன்னத ஆண்டவரை மதித்தாலும் மீட்பின் வரலாற்றுச் சின்ன மான சிலுவையைப் புறக்கணித்தனர். இதற்கு எதிராக, உலக ஞானத்தையும் கொரிந்தியருடைய சமயச் சார்புடைய ஞானத் தையும் பவுல் வன்மையாகக் குறை கூறு கிறார். உலக ஞானம் பற்றிய பவுலின் ஆய்வு இறையியல் தன்மையுடையதாகும். இறைவ னையும் மீட்பையும் வரையறை செய்ய விழையும் ஞானத்தையுமே குறை கூறு கிறார். இது மனிதருடைய மகிமைக்கும், இறைவன்முன் பெருமைப்பட்டுக் கொள்ள வும் பயன்படலாம். இங்கே பவுல் போராடு வது விசுவாச மற்றவர்களின், மீட்பு இழந்து போனவர்களின் சுய பெருமையாகும். இந் தப் பெருமையை அழிக்க சிலுவையைப் பறைசாற்றுகிறார். ஏனெனில், கிரேக்கர் ஞானத்தையும் யூதர்கள் அடையாளங்களை யும் கோரினர். இருவரும் தங்களது அளவு கோலுக்குட்பட்ட வெளிப்பாட்டை எதிர் பார்த்தனர். பவுல் ஞானம் என்ற தலைப்பைக் கிறிஸ்து இயலைச் சேர்ந்ததாகக் கருதுகிறார். அவரது கிறிஸ்துவ ஞானம் கிறிஸ்துவே. அதுவும் சிலுவையில் அறையுண்ட கிறிஸ் துவே (1 கொரி 1:18.22-25; 2:2). இதுதான் கிறிஸ்துவனின் ஞானம். இது உலகிற்கு மடமையாகலாம். ஆனால் இது உலக ஞானத்தைச் சீர்குலைக்கிறது. மனிதர் இந்த ஞானத்தை நிராகரித்தாலும் இது பின்வாங்க வில்லை, உலக ஞானத்தை மடமையாக்கு கிறது. ஆகவே சிலுவையில் தவிர வேறெதி லும் இறைவனை அறிந்திருப்பதாக உரிமை கொள்வது வீணாகும். கிறிஸ்துவே இறைவ னின் ஞானமாவார் (1:24); இறைஞான

வெளிப்பாடும் ஆவார். ஞான பாரம்பரியங்கள் புரிந்து கொள்வதுபோல் (ஞானம் *13-15*), இறைவனது உண்மைத் தன்மை பற்றிய போதகம் மட்டும் வெளிப்பாடன்று. உலகை மீட்கும் இறைவனது செயலும் வெளிப்பாடாகும் (*2 கொரி 5:19*).

ஞானத்தை மனிதன் தேடி அடைய முடியாது. அதை எடுத்துக்கூறச் சொல்லாற்றல் மிக்க பேச்சாளரின் ஞானம் வேண்டியதில்லை (*1 கொரி 2:4*). அது இறைவனில் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் ஞானம், இரகசிய நோக்கம் ஆகியவற்றின் வெளிப்பாடாகும்; அதாவது சிலுவையில் அறையப்பட்ட கிறிஸ்துவின் வழியாக மனுக்குலத்திற்கு அவர் அளிக்கும் மீட்புத் திட்டத்தின் வெளிப்பாடாகும் (*2:7-10*). ஆகவே இந்த ஞானத்தை அடைய இவ்வுலக ஞானிகள் மடையர்களாக வேண்டும். ஏனெனில் இவ்வுலக ஞானம் இறைவன் முன் மடமையாகும் (*3:18* தொ). இறைஞானத்தில் செல்வம் எல்லாம் கிறிஸ்துவில் உள்ளது (கொலோ *2:3*).

கொலோசியருக்கு எழுதிய திருமுகத்தில் பவுல் ஞானத்தைப் புரிந்து கொள்ளும் விதம் சிறிது வேறுபடுகிறது. ''நீங்கள் முழு ஞானத்தையும் தேவ ஆவிக்கேற்ற அறிவுத் திறனையும் அடைந்து இறைவனுடைய திருவுளத்தை உணரும் அறிவை நிறையப் பெறுமாறு மன்றாடுகிறோம்'' (கொலோ *1:9*). பவுல் கிறிஸ்துவாகிய ஞானத்தைப் போதிக்கிறார். ''கிறிஸ்துவுக்குள் ஒவ்வொருவரையும் நிறைவுள்ளவராக்கும்படி ஒவ்வொருவருக்கும் அறிவு புகட்டி ஒவ்வொருவருக்கும் முழு ஞானத்தோடு போதித்து'' (*1:28*), கிறிஸ்துவில் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கிறார். ''கிறிஸ்துவே அந்த இறைபொருள். அவருள்ளே இறைவனின் ஞானமும் அறிவுமாகிய செல்வம் எல்லாம் மறைந்துள்ளன'' (*2:3*). இயேசுவே படைப்புக்களுக்கெல்லாம் தலைப்பேறானவர் (*1:15*; பழ *8:22-31*). அவர் இறைமகிமையின் பிரதிபலிப்பாவார்.

எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் வேதாகமத்தை ஞான பாரம்பரியத்தில் விளக்குகிறது. அதில் காணப்படும் கிறிஸ்து இயலின் விளைவாக இவ்விளக்கம் உலகு சார்ந்த பருமனைக் கொண்டிருக்கவில்லை.

**6. யாக்கோபின் திருமுகம்:** இது பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியங்களுக்கு மிக நெருங்கியதென்று கருதப்படக்கூடிய புதிய ஏற்பாட்டு நூலாகும். இம்மடல் கிறிஸ்தவர்கள் எதிர் கொள்ளும் சோதனைகளை விவரிப்பதோடு தொடங்குகிறது. இது பழ *3:12*-இல் காணப்படும் ஞானியின் மனப் போக்கிற்கு ஒத்துள்ளது. பழ *2:3-6*; சீரா *51:14*; ஞானம் *9:4*-இல் காணப்படுவது போல், ஞானமில்லாதவர்கள் அதை இறைவனிடமிருந்து கேட்டு அடையுமாறு தூண்டுகிறார் ஆசிரியர். *3:13-18*-இல் உலகம் சார்ந்த, பேய்த்தன்மை வாய்ந்த ஞானத்தையும் ''விண்ணிலிருந்து வரும்'' உண்மையான ஞானத்தையும் ஒப்பிட்டு வேறுபடுத்துகிறார். உலக ஞானம் குழப்பத்தையும் கலகத்தையும் உண்டாக்கவல்லது. ஆனால் உண்மையான ஞானம் ''தூய்மையானது; அமைதியை நாடும்; பொறுமையைக் கடைப்பிடிக்கும்; இணக்கத்தை விரும்பும்; இரக்கமும் நற்செயல்களும் பெருகச் செய்யும்; நடுநிலை தவறாது; கள்ளமறியாது'' (யாக் *3:17*). ''உங்களுள் ஞானமும் அறிவும் படைத்தவன் யாராவது இருந்தால், அவன் அவற்றைத் தனது நன்னடத்தையினால் எண்பிக்கட்டும்; அவன் செயல்கள் ஞானத்தால் விளையும் சாந்தத்தோடு விளங்கட்டும்'' (*3:13*). திருமுகம் முழுவதும் போதகத் தன்மையையும் அறவுரைத் தன்மையையும் கொண்டுள்ளது. பழைய ஏற்பாட்டு ஞான இலக்கியங்களில் காணப்படுவதுபோல், யாக்கோபின் போதகத்தில் முழுக்க செயல்முறையான ஒழுக்க ஞானம் மிளிருகிறது.

**7. திருவெளிப்பாட்டு நூல்:** இதில் ஞானம் முடிவுகாலப் பண்புகளில் ஒன்றாகத் தோன்றுகிறது. ''பலியான செம்மறி- வல்லமையும், செல்வமும், ஞானமும், பலமும், மாட்சியும், மகிமையும்'' பெறுகிறார் (*5:12; 7:12*). பழைய ஏற்பாட்டில் யோசேப்பும் (ஆதி *40:8; 41:12-13*) தானியேலும்

*(தானி 2:19-30)* கொண்டிருந்ததுபோல் ஞானம் அறிவுக் கூர்மையெனும் கொடையாகும். இந்த இருவரும் இறைவனது கொடையால் கனவுகளுக்குப் பொருள் அளிக்கும் ஞானம் பெற்றிருந்தனர்.

**8. யோவான்:** ஞானம் என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை, ஆயினும், இயேசுவே இறைவனின் ஞானம் என்ற உண்மையை யோவான் உணர்த்தும்முறை குறிப்பிடத்தக்கது. அவரது சிந்தனைப் போக்கு மறைநுட்பமானதாகும். நற்செய்தியின் முன்னுரையில், இயேசு பழைய ஏற்பாட்டு ஞானத்தோடு கொண்டுள்ள பல தொடர்புகள் சுட்டிக்காட்டும் முறையில் எடுத்துக் கூறப்படுகின்றன. இயேசு வார்த்தையானவர் என்று கூறும்போது நற்செய்தியாளர் பழைய ஏற்பாட்டு ஞானத்தை மறுசிந்தனை செய்கிறார். ''மனிதரிடையே தங்கி அவர்களை இறைவனின் நண்பர்களாக்கும் ஞானம்'' மனு உருவாதல் என்ற கருத்துக்கு அடித்தளம் ஆகிறது. யோவா 1:1-18-இல் வரும் கருத்துப்போக்கு பழைய ஏற்பாட்டில் ஆட்தன்மை பெற்ற ஞானத்தின் விவரிப்பைப் பின்பற்றுவதாகத் தெரிகிறது. ஞானம் இறைவனோடு நெருங்கியிருக்கிறது; படைப்பில் ஒரு அங்கம் வகிக்கிறது; மக்களிடையே குடிகொள்ளுகிறது; அவர்களுக்குக் கொடைகளை வழங்குகிறது என்ற வரிசையில் பழ 8: சீரா 24-இல் ஞானம் தன்னையே விவரிக்கிறது. இதே வரிசை முறை யோவான் நற்செய்தியின் முன்னுரையிலும் காணப்படுகிறது. வார்த்தை இறைவனோடு இருக்கிறார் *(1:1)*; எல்லாம் வார்த்தையால் படைக்கப்படுகின்றன *(1:3)*; வார்த்தை உலகிற்கு வந்தார் *(1:9-14)*; அவர் இறைவனின் மக்களாகும் உரிமை, அருள் மற்றும் உண்மையைக் கொண்டு வந்தார் *(1:12-18)*. ஆனால இரண்டிற்கும் அடிப்படையில் வேறுபாடு உண்டு. பழைய ஏற்பாட்டு ஞானம் உருவகமாக விவரிக்கப்படும்போது, நற்செய்தி உண்மை நிலையை விவரிக்கிறது.

யோவா 6-இல் வாழ்வின் அப்பம் பற்றிய அறவுரை பழைய ஏற்பாட்டுக் கருத்துக்களை நினைவுபடுத்துகிறது. அப்பம் பலுகுதல் அருஞ்செயலுக்கு இயேசு அளிக்கும் விளக்கம், ஞானம் *16:20-26*இல் ''மன்னா'' அருஞ்செயலுக்கு விளக்கம் அளிப்பதையே நினைவுபடுத்துகிறது. இரண்டிலும் விண்ணிலிருந்து வரும் அப்பம், மேலிருந்து அனுப்பப்படும் இறைவார்த்தையே. அதை விசுவாசிகள் இறையூட்ட உணவாகப் பெறுகின்றனர். இது, விண்ணிலிருந்து வரும் அப்பத்தை வெறும் உடல் உணவாகப் புரிந்து கொள்வதிலிருந்து வேறுபடுத்துகிறது. மேலும் ஞானம் அளிக்கும் விருந்து *(பழ 9; சீரா 24:18-21; 15:3)* யோவானில் கிறிஸ்து அளிக்கும் உணவுக்கு நெருங்கிய தொடர்புடையதாகும். மேலும் கானாவூர் நிகழ்ச்சியுரையிலும் ஞானம் அளிக்கும் விருந்தின் அப்பமும் இரசமும் யோவானின் அடையாள இயலுக்குப் பின்னணியாகிறது.

இந்த நற்செய்தியில் வார்த்தையின் ஆற்றல் மரணம், உயிர்ப்பு, ஆவியை அனுப்புதல் உட்பட்ட இயேசுவின் வரலாற்றோடு ஒன்றாகிறது. இது ஞானத்தின் கிறிஸ்து இயல் மாற்றமாகும். அதாவது, இயேசுவின் செய்தியின் பொருளடக்கம் - இயேசுவும் அவர் தந்தையிடமிருந்து அனுப்பப்பட்டதும் - ஆகும்.

**9. முடிவுரை:** விவிலியத்தில் ஞானம் என்ற கருத்துபழைய ஏற்பாட்டு அறிவர்களிடையே தோன்றி, புதிய ஏற்பாட்டில் வளர்ச்சி பெற்று நிறைவு பெறுகிறது. பழைய ஏற்பாட்டில் உருவகமாக ஆட்தன்மைப்படுத்தப்படும் ஞானம், புதிய ஏற்பாட்டில் இறைமகன் இயேசு கிறிஸ்துவில் மனு உரு எடுத்து மனிதர்களிடையே தங்குகிறது. பழைய ஏற்பாட்டில் ஞானம் பற்றிக் கூறப்படுபவையெல்லாம் புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவுக்குச் சாற்றிக் கூறப்படுகின்றன. இது, பவுல் கிறிஸ்துவே 'கடவுளின் வல்லமையும் கடவுளின் ஞானமுமானவர்'' என்று கூறுவதில் உச்சநிலை அடைகிறது *(1 கொரி 1:24)*. அவரே மனிதர்க்கு ஞானத்தின் ஊற்றாவார் *(1:30)*. கிறிஸ்து ஒரே சமயத்தில் உலகில் தோன்றியுள்ள ஞானமும் மனிதரிடையே

பிரசன்னமாயிருக்கும் மனுமகனுமாவார் (மத் 11:19).

**ஞானஸ்நானம் (BAPTISM)**

காண்க: திருமுழுக்கு.

**ஞானம் (WISDOM)**

I. பழங்கால மேற்காசிய நாட்டுப் பண்பாடுகளிலெல்லாம், ஞானத்தை நாடித் தேடும் முயற்சி காணக்கிடக்கிறது. எகிப்து, மெசபொத்தாமியா, சீனா, சப்பான், இந்தியா, போன்ற நாடுகளின் பழங்கால இலக்கியத்திலே ஞானத்தைப்பற்றிய தொகுப்புகள் பல இருப்பதை நாம் அறிவோம். கிரேக்க நாட்டில் ஞானிகள் ஏழுபேர் இருந்தனர் என்பது பாரம்பரியம். இந்த ஞானம் செயல் முறையான நோக்கம் கொண்டது. தொடக்கத்தில் மனிதன் முன்மதியோடும் திறமையோடும் நடந்து, வாழ்க்கையில் எப்படி வெற்றி காணலாம் என்று விளக்குவதே இந்த ஞானத்தின் நோக்கம். இது உலகையும் மனிதனையும் நடைமுறையில் ஆராய்ந்தது; மனித நடத்தையையும் ஒழுக்கத்தையும் சீராக, பல வேளைகளில் சமயக் கண்ணோட்டத்தில், வகுத்து முறைப்படுத்தியது. இதன் விளைவாய், எகிப்து நாட்டுச் சட்டதிட்டங்களைப் போல், பாரத மண்ணிலும் குறள், மனு நியதிகள் போன்ற ஒழுக்க நெறிநூல்கள் அரும்பின. பிறகு, உலகு, மனிதன், இறைவன் என்பவற்றின் செம்பொருளை ஞானிகள் ஆராயத் தொடங்கினர். இப்படித்தான், கிரேக்க நாட்டில்போல, நம் நாட்டிலும் வேதங்கள் எனும் பக்திப் பாடல்களோடும் சமய ஒழுக்க ஆசாரங்களோடும், உபநிடதங்கள் எனும் தத்துவவியல் கருத்தோட்டங்களும் தோன்றி, இந்திய ஞானத்தின் முக்கிய கூறாக அமைந்துவிட்டன. அவ்வமயம், விஞ்ஞானம், தொழில்நுட்பம் போன்றவை சிறுமுளைபோல் மட்டுமே இருந்தன; மெய்ஞானமே அக்கால நாகரீக மேம்பாடாய் விளங்கியது. பழங்கால மனித உலக வாழ்க்கை இயல் இதுவே.

விவிலிய வெளிப்பாட்டில், இறை வார்த்தை ஞானத்தின் உரு எடுக்கிறது. இது ஒரு முக்கிய நிகழ்ச்சி. ஆனால், இதன் பொருளைச் சரியாய் நாம் புரிந்துகொள்ள வேண்டும். இந்த வெளிப்பாடு வளர்ந்து ஒரு கட்டத்தில் மனித இன நலக் கோட்பாடாக மாற்றம் கொள்வதில்லை; மாறாக, இறையூக்கம் பெற்ற இஞ்ஞானம், சிறந்தமனித ஞானம் அனைத்தையும் திரட்டித் தன்னோடு இணைத்துக் கொள்கிறது; ஆயினும் தன் தனி இயல்பை ஒருபோதும் இழப்பதில்லை. பழைய ஏற்பாட்டிலேயே இவ்வுண்மை இங்குமங்கும் மின்னுகின்றது; புதிய ஏற்பாட்டிலோ இது தெளிவாய்ப் பளிச்சிடுகின்றது.

**II. பழைய ஏற்பாடு**

**1. மனித ஞானம்: இறைவனுக்கேற்ற ஞானம்:**

**அ.** இஸ்ரயேலரிடை ஞானம் விதைக்கப் படுகிறது: யோசேப்பு (ஆதி 41:39 தொ) மோசே (யாத் 2:10; காண். அ.ப. 7:21 தொ) என்பவர்களைத் தவிர்த்து, இஸ்ரயேலர் கானான் நாட்டில் வசிக்கத் தொடங்கு முன்பு, மேற்காசிய ஞானத்தோடு அவர்களுக்கு எவ்விதத் தொடர்பும் இருந்ததாகக் காணோம். பிறகும் அரசர்கள் காலத்தில் தான் மனித உலக வாழ்க்கை இயலாக அது அரும்புகிறது. சாலமோன்தான் இதற்குப் புதுமுகம் கொடுக்கிறார்: ''கீழை நாட்டினர் அனைவரின் ஞானத்தையும் எகிப்தியரின் எல்லாவகை ஞானத்தையும்விட, சாலமோனின் ஞானம் சிறந்து விளங்கிற்று'' (1 அர 5:10-34; காண். 10:6தொ. 23 தொ). அவரது ஆளுமைப் பண்பாடும், நல்லாட்சிக் கலையும் இங்குக் குறிப்பிடப்படுகின்றன. விசுவாசிகளுக்கு இது ஒரு புதிர் அன்று. சாலமோனின் வேண்டலைக் கேட்டு இறைவன் அவருக்கு அளித்த ஒரு கொடை இது என அவர்கள் உணர்கின்றனர் (1 அர 3:6-14). இது நன்னம்பிக்கையான பாராட்டாகும். இதன் எதிரொலி மற்ற இடங்களிலும் காணப்படுகிறது. அரசவை அறிஞர்கள் பல்வேறு முயற்சியால் தம் அறிவுத்திறன்களை வளர்த்துக் கொள்கின்றனர் (பழ 10-22; 25-29: மூலக் கருத்துக்கள்). ஆனால், யோசேப்பு போன்றோர் கடவுளிடமிருந்து ஞானக்

கொடையைப் பெற்றதால் சிறந்த முறையில் ஆட்சிசெய்தனர் எனத் திருநூல் வரலாற்று ஆசிரியர் அன்னாரைப் போற்றுகின்றனர் (ஆதி 41;47). இது போலவே, சாலமோனையும் உயர்த்திப் பேசுகின்றனர்.

**ஆ. எத்தகைய ஞானம்:** பல்வகை ஞானம் உள்ளது. ஆனால், இறைவனிடமிருந்து வருவதே உண்மையான ஞானம். ''நன்மை தீமையைப் பகுத்தறியக் கூடிய ஞானம் நிறைந்த உள்ளத்தைக்'' (1 அர 3:9) கடவுள் தான் அருள்பவர். ஆனால், ஆதிப்பெற்றோரைப்போல, மனிதர் அனைவரும் தம் சொந்த சக்தியாலேயே நன்மை தீமையை அறிந்து கொள்ளும் இந்தத் தெய்வீகப் பண்பை அபகரித்துக் கொள்ளச் (ஆதி 3:5 தொ) சோதிக்கப்படுகின்றனர். அலகையின் கபடக் கவர்ச்சியால் இப்போலி ஞானத்தைப் பலர் நாடுகின்றனர் (ஆதி 3:1). மனிதக் கண்ணோட்டத்தில் அனைத்தையும் தீர்ப்பிட்டு ஆண்டவரின் திருச்சட்டத்தைப் பொய்யாக்கும் மறைநூல் அறிஞரின் ஞானம் இத்தகையதே (எரே 8;8). வெறும் மனிதப் போக்கில் ஆலோசனை கூறும் அரசரவையின் ஞானமும் இத்தகையதே (காண். எசா 29:15 தொ). இந்த ஞானத்திற்கு எதிராய் இறைவாக்கினர் எழுகின்றனர். ''தங்கள் பார்வையில் ஞானிகள் என்றும் தங்கள் கணிப்பில் கூர்மதிவாய்ந்தவர்கள் என்றும் தங்களைத் தாங்களே கருதுபவர்களுக்கு ஐயோ கேடு!'' (எசா 5:21). இத்தகைய ஞானிகளின் ஞானத்தை இறைவன் திண்ணமாய் அழித்துவிடுவார் (29:14). ஆண்டவரின் வார்த்தையை ஏளனம் செய்துபுறக்கணித்த இவர்கள் வெட்கி வெருண்டு போவர்; திகைத்துத் திண்டாடுவர் (எரே 8:9). ஏனெனில், அந்தத் தேவ வார்த்தையே மெய்யான ஞானத்தின் ஒரே ஊற்று. தவறிப்போனவர்களும் தண்டனைக்குப்பிறகு இந்த ஞானத்தைக் கண்டுபிடிப்பார்கள் (எசா 29:24). தாவீதின் மகனாய் இறுதிக்காலத்தில் ஆள இருக்கும் அரசர் இந்த ஞானத்தின் நிறைவைப் பெற்றிருப்பார்; தம்மேல் தங்கியிருக்கும் யாவேயின் ஆவியிடமிருந்து இதைக் கொண்டிருப்பார் (11:2). இங்ஙனம், இறைவாக்கினர் போதனையில், தானே போதும் எனப் பசப்பும் வெறும் மனித அறிவு அறவே ஒதுக்கப்படுகிறது; கடவுளிடமிருந்து மட்டுமே மனிதனின் மீட்பு எதிர்பார்க்கப்படுகிறது.

**இ. உண்மை ஞானம் நோக்கி:** எருசலேமின் அழிவு இறைவாக்கினரின் எச்சரிக்கைகளை உறுதிப்படுத்துகிறது. அரசவை ஆலோசகரின் போலி ஞானம் நாட்டைப் பெரும் விபத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. அவ்வமயம் தவறு எனும் மஞ்சு மறையவே, உண்மை ஞானஒளி இஸ்ராயேலரிடை பரவத் தொடங்குகிறது. இதற்கு அடிப்படையாக இறைச் சட்டம் இருக்கும்; இது இஸ்ரயேலரை மட்டும் ஞானிகளும் அறிவாளிகளுமாய் இருக்கச் செய்யும் (உப 4:6); தெய்வ பயம் ஞானத்தின் தொடக்கமும் நிறைவும் ஆகும் (பழ 9:10; சீரா 1:14-18; 19:18). இந்தச் சமய ஞான முன்னோக்கில், திருநூல் ஆசிரியர்கள் மனிதச் சிந்தனையில் விளைந்த நல்லவை அனைத்தையும் ஏற்றுத் தொகுத்துக் கொள்கின்றனர். நாடு கடத்தலுக்குப்பின் வரையப்பட்ட அல்லது வகுத்துத் தொகுக்கப்பட்ட ஞானம் பற்றிய இலக்கிய நூல்கள் இத்தகைய முயற்சியின் கனிகளாகும். ஆணவப் பாசாங்குகள் நீக்கப்படுகின்றன; மனிதப்பற்றுக் கோட்பாடு விசுவாச ஒளியில் பூத்துப் பொலிகிறது.

**2. ஞானத்தின் வண்ணக் கூறுகள்:**

**அ. நன்கு வாழும் கலை:** இயற்கைப் பொருள்களை விவிலிய ஞானி ஆர்வமுடன் ஆராய்கிறார் (1 அர 5:13); அவற்றைக் கண்டு வியப்பில் மூழ்குகிறார். அவற்றிலே எல்லாம் வல்ல இறைவனின் கரத்தைக் காண அவரது விசுவாசம் ஒளி வீசுகிறது (யோபு 36:22-37:18; 38-41; சீரா 42:15-43:33). ஆயினும், எதற்கும் மேலாக, உண்மையான மகிழ்வு பெறுவதற்கான வாழ்க்கை நெறியை அறிந்துகொள்ளத் தேடுகிறார். ஒவ்வொரு துறையிலும் சிறப்புறும் எவருமே ஞானி என அழைக்கப்பெறும் தகுதி பெறுகிறார் (எசா 40:20; எரே 9:16; 1 நாள் 22:15); நன்கு வாழும் கலையில் வல்லுநரே

மேலான முறையில் ஞானி ஆவர். தம்மைச் சூழும் உலகை மருட்சி எதுவுமின்றி இவர் ஊடுருவுகிறார்; அதன் குறைபாடுகளைத் தெளிவாய்க் காண்கிறார். ஆயினும் அவற்றை இவர் ஏற்பதில்லை (உ.ம். பழ 13:7; சீரா 13:21 தொ). உளவியல் அறிஞர் என்ற அளவில் அவர் மனித இதயத்தில் மறைந்திருப்பதை, மெய் மகிழ்ச்சியளிப்பது அல்லது துன்பம் தருவது எது என்பதை உணர்கிறார் (உ.ம்.பழ 13:12; 14:13; திருவுரை 7:2-6). ஆயினும், வெறும் பார்வையாளராய்ப் பிறரிடமிருந்து ஒதுங்கி விடுவதில்லை இவர். இயல்பாகவே ஆசிரியரான இவர், தம் சீடர்களுக்கு முன்மதி, ஆசையடக்கம், உழைப்பு, தாழ்ச்சி, சீரான பண்பு, பிரித்துணர்தல், வாக்கு நாணயம் முதலியன பற்றிய ஒழுங்குத் திட்டங்கள் வகுத்தளிக்கிறார். பத்துக் கட்டளைகள் எல்லாம் அவரது நடைமுறை ஆலோசனையில் திகழ்கின்றன.

உபாகமத்திலும் இறைவாக்குரைகளிலும் காணக்கிடக்கின்ற சமூக உணர்வு தானம் கொடுக்கவும் (சீர 7:32 தொ; தோபி 4:7-11), நீதியை மதிக்கவும் (பழ 11:1; 17:15), ஏழைகளை நேசிக்கவும் (பழ 14:31; 17:5; சீரா 4:1-10) மக்களுக்கு அறவுரை கூறவும் இவரைத் தூண்டுகிறது. கூடியமட்டும் அனுபவத்தைச் சுட்டிக் காட்டித் தம் ஆலோசனைகள் சரியானவையே என வலியுறுத்துகிறார். எனினும் அவரது அடித்தளத்தூண்டுதல் அனுபவத்தைவிட உயர்ந்த விண்ணக ஊற்றிலிருந்து சுரக்கிறது. பல தடுமாற்ற முயற்சிகளுக்குப்பின் தாம் ஞானம் பெற்றதும் அதைப் பிறரோடு பகிர்ந்துகொள்ளப் பெரிதும் விரும்புகிறார் (சீரா 51:13-20). மனந்தளராது ஞானத்தின் செயல்முறைப் பயிற்சியில் நிலைத்திருந்து வெற்றி காணச் சீடர்களை அழைக்கிறார் (சீரா 6:18-37).

**ஆ. வாழ்க்கை பற்றிய சிந்தனை:** மனிதனது இயல்பு, திறன்கள் முதலியவை பற்றிய மெய்யியல் நுண்ணாய்வை இஸ்ரயேல் ஞானியிடம் நாம் எதிர்பார்த்தலாகாது. எனினும், தம் வாழ்க்கைச் சூழ்நிலைகளை அவர் முனைப்பாக உணர்கிறார்; தம் வாழ்க்கை நியதியையும் நோக்கத்தையும் கவனமாய் அலசிப் பார்க்கிறார். பொதுவாக, இறைவாக்கினர், இறைமக்களாம் இஸ்ரயேல் இனத்தாரின் நிலைமையை விளக்குவதில் முதன்மையாய்க் கவனம் செலுத்துகின்றனர்; தனி ஆள் பொறுப்பை வலியுறுத்தும் எசேக்கியேலின் இறைவாக்கு (எசே 14:12-20; 18;33:10-20) இதற்கு ஒரு விதிவிலக்காகவே உள்ளது. ஞானிகளோ, உடன்படிக்கை மக்களின் பொது நலத்தை மறந்துவிடவில்லை (சீரா 44-50; 36:1-17; ஞான 10-12; 15-19); எனினும், தனி ஆள் வாழ்க்கைபற்றி முதன்மையாக ஆர்வம் காட்டுகின்றனர். மனிதனின் உயர்வையும் (சீரா 16:24-17:14), இழிவையும் (சீரா 40:1-11), தனிமையையும் (யோபு 6:11-30; 19:13-22), துன்புறும்போதும் (யோபு 7:16), சாகும்போதும் (திருவுரை 3; சீரா 41:1-4) அவன் படும் அவதியையும், இம்மை வாழ்க்கை தரும் வெறுமையையும் (யோபு 14:1-12; 17; திருவுரை 1:4-8; சீரா 18:8-14) மறைந்தவராய் (யோபு 23; 30:20-23) அல்லது புதிர் போன்றவராய்த் தோன்றும் (யோபு 10) இறைவன் திருமுன் அவன் கொள்ளும் மன உலைவையும் ஞானிகள் நன்கு உணர்த்துகின்றனர். இம்முன்னோக்கில் சன்மானப் பிரச்சனை கருதப்படுகிறது; இல்லையென்றால் பரம்பரைக் கருத்துப்படி, நீதியே இல்லை என்ற முடிவு பெறும் (யோபு 9:22-24; 21:7-26; திருவுரை 7:15; 8:14; 9:2தொ); ஆனால், ஏமாற்றம் அளிக்கும் இவ்வுலகச் சன்மானத்துக்கு அப்பால்,- உயிர்ப்பிலும் (தானி 12:2தொ) நித்திய வாழ்விலும் (ஞான 5:15) விசுவாச ஒளியில் இச்சிக்கலுக்குத் தீர்வுகாண நீண்டகால முயற்சி தேவைப்படும்.

**இ. ஞானமும் வெளிப்பாடும்:** தாம் தேவ தூண்டுதலால் உரைக்கிறோம் என்ற உணர்வோடு இறைவாக்கினர் கூறும் இறைவாக்கு வேறு; மனித அனுபவத்தையும் சிந்தனையையும் முக்கியமாய் வைத்துக் கற்பிக்கும் ஞானியின் போதனை வேறு. ஆயினும், திருநூல்களைத் தீரத் தியானித்துச் சிக்கல்களுக்குத் தாம் தெளிந்த தீர்வுகளையும் தம் போதனையோடு ஞானி இணைப்பதில்

வியப்பேதும் இல்லை (காண் சீரா 39:11 தொ). விரைவிலே, இறைவாக்கும் ஞானமும் வருங்கால மறைச்செய்திகளை வெளிப்படுத்த காட்சி இலக்கியப் பாணியில் இணைக்கப்பட்டன. தானியேல் இறை பேருண்மைகளை வெளிப்படுத்துவது (தானி 2:28 தொ. 47) வெறும் மனித அறிவால் அன்று (2:30), அவரில் தங்கும் இறை ஆசி அவருக்கு உயர் ஞானத்தை அருள்வதால்தான் (5:11.14). முன்னைய இஸ்ரயேலர் மரபில் ஏற்கெனவே சிறிது நாம் காண்பது போல (காண். ஆதி 41:38 தொ), பழைய ஏற்பாட்டுச் சமய ஞானம் இங்குச் சிறப்புப் பண்பு பெறுகிறது; இறை ஏவுதல் பெறும் ஞானி ஓர் இறைவாக்கினருக்குச் சமமாகத் தோன்றுகிறார்.

3. இறைவனின் ஞானம்:

**அ. ஆட்தன்மைப்பட்ட ஞானம்:** நாடு கடத்தலுக்குப்பின் வந்த ஆசிரியர்களிடையே ஞானம் சிறப்பிடம் பெறுகிறது; அதைத் தெளிவாய் முன்னணியில் வைக்கும் பொருட்டுப் பலர் அதற்கு ஆட்தன்மை கொடுத்து மகிழ்கின்றனர் (பழ 14:1). ஆவலோடு பலர் பின்தொடரும் அன்பினள் அவள் (சீரா 14:22தொ). தாங்கிக்காக்கும் தாய் அவள் (14:26). கவனித்துப் பேணும் மனைவி (15:2தொ). பரிவோடு வரவேற்று விருந்தளிக்கும் இல்லத் தலைவி அவள் (பழ 9:1-6. 13-18).

**ஆ. இறை ஞானம்:** ஞானத்தை இவ்விதம் ஒரு பெண்ணாக விவாதிப்பதை வெறும் உருவகமாக மட்டும் புரிந்து கொள்ளக் கூடாது. மனித ஞானம் இறைவனிடமிருந்து வருகிறது. அவர்தான் ஒப்புயர்வற்ற ஞானி ஆவர்; தாம் விரும்புவோர்க்கு ஞானத்தைப் பகிர்ந்தளிக்க வல்லவர். எனவே, இறைவனில் ஞானம், ஓர் ஊற்றாய் இருப்பதாகவும், அதிலிருந்து மனித ஞானமெல்லாம் சுரப்பதாகவும் திருநூல் ஆசிரியர் காண்கின்றனர். நித்தியத்திலிருந்து நித்தியத்துக்கும் இறைவனில் இஞ்ஞானம் நிலைத்திருக்கிறது (பழ 8:22-26; சீரா 24:9). உன்னதரின் திருவாயிலிருந்து இது அவரது மூச்சாக அல்லது வார்த்தையாகப் புறப்படுகிறது (சீரா 24:3). இது தேவ வல்லமையின் அனற்காற்று, எல்லாம் வல்லவரது மகிமையின் கொந்தளிப்பு, நித்திய ஒளியின் எதிரொளி, இறைச்செயலின் உருப்பளிங்கு, தேவ சிறப்பின் தனிச் சாயல் (ஞான 7:25 தொ). இது விண்ணகத்தில் வாழ்கிறது (சீரா 24:4); இறைவனோடு அரியணையில் அமர்ந்துள்ளது (ஞான 9:4); கடவுளோடு ஒன்றுபட்டு வாழ்கிறது (ஞான 8:3).

**இ. ஞானத்தின் செயல்:** ஞானம் செயலாற்றல் அற்றதொரு மூலம் அன்று. உலகில் கடவுள் செய்வது அனைத்தோடும் அது தொடர்பு கொண்டதாய் உள்ளது. படைப்பு தொடங்கும் போதிருந்தே இறைவன் திருமுன் ஞானம் விளையாடிக் கொண்டிருந்தது (பழ 8:27-31; காண் 3:19தொ; சீரா 24:5). அன்றிலிருந்து இன்று வரை இயலுலகை இனிதாய் அது ஒழுங்குபடுத்தி வருகிறது (ஞான 8:1). மீட்புவரலாறு முழுவதிலும் இறைவன் ஞானத்தையே தூதாய்ப் பன்முறை உலகுக்கு அனுப்பியுள்ளார், இஸ்ரயேலரிடையே, எருசலேமின் வாழ்வு தரும் மரம்போல அது வேரூன்றி வாழத் தொடங்குகிறது (சீரா 24:7-19); சட்ட வடிவிலே உணரக்கூடிய விதத்தில் காட்சி அளிக்கிறது (சீரா 24:23-34). அப்போதிருந்து மனுமக்களோடுகூட இருந்துமகிழ்கிறது (பழ 8:31; பாரு 3:37 தொ); உலக வரலாற்றை வழி நடத்தும் இறைபராமரிப்பும் அதுவே (ஞான 10:1-11:4); மனிதருக்கு மீட்புத் தருவதாக உறுதியளிக்கிறது (ஞான 9:18). இறைவாக்கினர் போன்று, கவனமற்றவர்களைக் கண்டித்துத் தீர்ப்பிடுகிறது (பழ 1:20-33). தன் நலன்களால் பலனடையவும் (பழ 8:1-21.32-36), தான் இடும் விருந்தை அமர்ந்து உண்ணவும் (பழ 9:4 தொ; சீரா 24:19-22) பணிவிணக்கம் உள்ளோரை அழைக்கிறது. தம் ஆவியின் வழியாகச் செய்வதுபோல், தம் ஞானத்தின் வழியாகவும் இறைவன் செயலாற்றுகிறார் (காண். ஞான 9:17). எனவே, ஞானத்தைப் பெறுவதும் இறை ஆவிக்குப் பணிவதும் ஒன்றே. புதிய ஏற்பாட்டில் இருப்பதுபோல், ஞானம் இங்கு ஒரு தேவ ஆளாக இன்னும் காட்சி அளிக்கவில்லை; எனினும், ஒரே

கடவுளின் பேருண்மை அடி ஆழத்தைத் தொடுவதாய் உள்ளது; அவரைப்பற்றிய மிகத் துல்லிய வெளிப்பாட்டுக்குத் தயாரிக்கிறது.

**ஈ. ஞானத்தின் கொடைகள்:** இந்த ஞானம் மனிதருக்கு ஓர் ஈடிணையில்லாச் செல்வமாய் இருப்பதில் வியப்பொன்றுமில்லை (*ஞான 7:7-14*). ஞானமே இறைவனின் அருட் கொடை (*8:21*). எல்லா நலன்களையும் வழங்குவதும் அதுவே (*பழ 8:21; ஞான 7:11*); வாழவும் மகிழவும் (*பழ 3:13-18; 8:32-36; சீரா 14:25-27*), காப்புறுதியும் (*பழ 3:21-26*), அருளும் மாட்சியும் (*4:8*தொ), செல்வமும் நீதியும் (*8:18*தொ), பிற நற்பண்புகளும் (*ஞான 8:7* தொ) ஞானம் தரும் கனிகளே. மனிதனோ அதைத் தன்வாழ்க்கைத் துணையாக்கிக் கொள்ள மறுத்துவிட்டது எப்படி (*8:2*)? இஞ்ஞானம்தான் மனிதர்களைக் கடவுளின் நண்பர்களாக ஆக்குபவள் (*7:27* தொ); அவளோடு நெருங்கிப் பழகுவதும் இறைவனோடு நெருங்கிப் பழகுவதும் ஒன்றே. புதிய ஏற்பாட்டிலே, இஞ்ஞானம் கிறிஸ்து திருமைந்தன், இறைவார்த்தை என்பதோடு ஒன்றாகக் கூறப்படும்போது, இந்தக் கோட்பாடு முழு வெளிப்பாட்டுக்குத் துல்லியமான தயாரிப்பாக அமைகிறது. கிறிஸ்துவோடு இணையும் மனிதன் தேவ ஞானத்தில் பங்கு பெறுகிறான்; கடவுளோடு நெருங்கிப் பழகுவதற்கு அறிமுகம் பெறுவதாய் உணர்கிறான்.

### III. புதிய ஏற்பாடு

#### 1. இயேசுவும் ஞானமும்.

**அ. இயேசு: ஞானத்தின் ஆசிரியர்:**

தம்மோடு வாழ்ந்தவர்களுக்கு இயேசு பல் திறக்கூட்டொருமைக் கோணத்தில் தம்மை வெளிப்படுத்துகிறார். அவர் மனந்திரும்ப அழைக்கும் இறைவாக்கினர், ஆனால் எல்லா இறைவாக்கினரிலும் மேலானவர் (*மத் 12:41*); மெசியா, ஆனால் மனுமகனின் மாட்சியில் நுழையுமுன் பாடுகள் பல பட்டனுபவிக்க வேண்டிய யாவேயின் ஊழியன் (*மாற் 8:29* தொ); ஆசிரியர், ஆனால்மறைநூல் அறிஞரைப் போலன்றி அதிகாரத்தோடு போதிப்பவர் (*மாற் 1:21*தொ). பழைய ஏற்பாட்டு ஞானிகளைப்போல் பெரும்பாலும் இயேசு போதிப்பது கண்கூடு. பழமொழிகள், உவமைகள் போன்றவற்றை அவர்களின் பாணியில் இயேசுவும் கையாளுகிறார். அவர்களைப்போல இயேசுவும் வாழ்க்கை நெறிகளை அறுதியிட்டு வகுத்துக் கொடுக்கிறார் (*காண். மத் 5-7*). எனினும், மக்கள் ஏமாந்துவிடவில்லை. மாறாக அவரது இணையற்ற ஞானத்தையும் அதை உறுதிப்படுத்திய அவர் ஆற்றிய அருங்குறிகளையும் கண்டு மலைக்கின்றனர் (*மாற் 6:2*); குழந்தைப் பருவத்திலிருந்தே இயேசுவுக்கு இருந்த ஞானத்தை லூக்கா குறிப்பிடுகிறார் (*லூக் 2:40.52*). இயேசுவே தம் ஞானத்தைச் சுட்டிக் காட்டுகிறார்: ''தென்னாட்டு அரசி சாலமோனுடைய ஞானத்தைக் கேட்க வந்தாள். சாலமோனிலும் மேலானது இதோ இங்குள்ளது'' (*மத் 12:42* இணை).

**ஆ. இயேசு: கடவுளின் ஞானம்:** இயேசு தம் பெயராலே தம்மவர்க்குச் செயலளவில் ஞானத்தை அருளுவதாக வாக்களிக்கிறார் (*லூக் 21:15*). விசுவாசமில்லாத மக்கள் அவரைத் தப்பாய்ப் புரிந்து கொள்கின்றனர். கடவுளுக்குப் பணிபவரோ அவரை உளமார ஏற்றுக் கொள்கின்றனர். எனவேதான் இயேசு வியப்பான முடிவு கூறுகிறார்: ''ஞானம் மெய் என்பதற்கு அதை ஏற்றுக் கொண்ட மக்களே'' (*லூக் 7:35*) அல்லது ''அதன் செயல்களே'' (*மத் 11:19*) சான்று. பழைய ஏற்பாட்டில் ஞானம் பேசுவது போல் இங்கு இயேசு பேசுவதால் அவரது மறையுண்மை இன்னும் ஆழம் பெறுகிறது: ''என்னிடம் வாருங்கள்.....'' (*மத் 11:28* தொ; *காண் சீரா 24:19*); ''என்னிடம் வருகிறவனுக்குப் பசியே இராது, என்னில் விசுவாசம் கொள்பவனுக்கு என்றும் தாகமே இராது'' (*யோவா 6:35; காண் 4:14; 7:37; எசா 55:1* தொ; *பழ 9:1.6; சீரா 24:19-22*). இயேசு வெறும் ஞானிகளில் ஒருவராயிருந்தால் இப்படியெல்லாம் கூறியிருக்க முடியாது. உண்மையில், திருமைந்தனின் ஆட்தன்மைப் பேருண்மை இவற்றில் மின்னுகிறது (காண் *மத் 11:25* தொ. இணை). இந்தப் பேருண்

மையை அப்போஸ்தலர்கள் தம் திருமுகங்களில் தெளிவாய் விளக்குவதைக் காண்கிறோம். ''கடவுளின் ஞானமானவர்'' இயேசு என்கின்றனர் (1 கொரி 1:24.30). மனிதர்களுக்கு ஞானத்தை வழங்குபவர் என்பதனால் மட்டுமன்று, அவரே ஞானமாய் இருப்பதால் தான்; இறைத் தந்தையோடு காலத்திற்கு முன்பே என்றும் அவர் இருக்கிறார் என்பதைச் சுட்டிக்காட்ட, பல்லாண்டுகட்குமுன் தேவ ஞானத்தைப் பற்றி விவிலியம் கூறும் சொற்களையே பயன்படுத்துகின்றனர்: ''அவர் படைப்புகளுக்கெல்லாம் தலைப்பேறானவர்; அவரில் அனைத்தும் உண்டாயிற்று'' (கொலோ 1:15 தொ; காண் பழ 8:22-31); கடவுளது மாட்சிமையின் சுடரொளியாகவும் அவரது உள்ளியல்பின் சாயலாகவும் விளங்குபவர் இவர் (எபி 1:3; காண். ஞான 7:25தொ). இத்திருமைந்தன் தந்தையின் வார்த்தையாய் இருப்பதுபோல (யோவா 1:1தொ) அவருடைய ஞானமாகவும் இருக்கிறார். முற்காலத்தில், ஆள்மயமான இஞ்ஞானம் கடவுளில் மறைந்திருந்தார். ஆயினும் இயலுலகை அவரே ஆண்டார்; வரலாற்றை வழி நடத்தினார்; சட்டத்தின் வழியாகவும் ஞானிகளின் போதனை வழியாகவும் மறைமுகமாகத் தம்மை வெளிப்படுத்தினார். இக்காலத்திலோ, இயேசு கிறிஸ்துவில் நேரடியாக அவர் வெளியிடப்படுகிறார். ஆகவே, பழைய ஏற்பாட்டில் ஞானத்தைப் பற்றிப் பேசும் பாடப்பகுதிகள் எல்லாம் இயேசுவில் வரைநிலையான பொருளைப் பெறுகின்றன.

**2. உலகின் ஞானமும் கிறிஸ்துவ ஞானமும்:**

**அ. உலகின் ஞானம் கண்டிக்கப்படுகிறது:** ஞானம் ஒப்புயர்வற்ற முறையில் இயேசுவிலே வெளிப்பட்ட அக்காலத்தில் இறைவாக்கினர் ஏற்கனவே மக்களுக்கு முன்னுரைத்திருந்த நிகழ்ச்சிகளின் கோவை அப்படியே நடைபெறலாயிற்று. உயிருள்ள கடவுளை ஏற்காது மக்கள் தங்கள் வீணான சிந்தனைகளில் அறிவிழந்தனர்; தங்களை ஞானிகள் எனப்பிதற்றும் அவர்கள் கடைந்தெடுத்த மடையர்கள் ஆயினர் (உரோ 1:21 தொ; 1 கொரி 1:21); இந்த மடமையின் மூர்க்கத்தில் மாட்சிமைக்க ஆண்டவரையே சிலுவையில் அறைந்தனர் (1 கொரி 2:8). எனவே, கடவுள் இந்த ஞானிகளின் ஞானத்தை அழித்தார் (1 கொரி 1:19 தொ; 3:19 தொ). இந்த ஞானம் ''மண்ணுலகையே சார்ந்தது; கீழ்நாட்டத்தைப் பின்பற்றுவது; பேய்த் தன்மை வாய்ந்தது'' (யாக் 3:15). ஆகவே, சிலுவையில் மடமையாலேயே இவ்வுலகியல் ஞானத்தைத் தகர்த்து உலகை மீட்கக் கடவுள் திட்டமிட்டார் (1 கொரி 1:17-25). இங்ஙனம், மீட்பின் நற்செய்தி அறிவிக்கப்படும்போது, வெறும் மனித ஞானம், கலாச்சாரம், கவர்ச்சிச் சொற்கள் ஆகிய வற்றிலிருந்து வரும் அனைத்தையும் உதறித் தள்ளிவிட்டு, ஆவியானவரும் அவரது வல்லமையும் தரும் சிலுவை 'மடமை'யான உயர் ஞானத்தை மக்கள் ஏற்கக் கூடுமாய் ஆனது.

**ஆ. மெய்யான ஞானம்:** இப்படிப் புதிரான முறையில் மெய்ஞ்ஞானம் வெளியிடப்படுகிறது. ஞானிகளுக்கும் விவேகிகளுக்கும் அதை மறைத்துச் சிறுவர்களுக்குத் தந்தை வெளிப்படுத்துகிறார் (மத் 11:25); ஆணவ ஞானிகளை நாணச் செய்ய, மடமை என உலகம் கருதுவதைக் கடவுள் தேர்ந்துகொண்டார் (1 கொரி 1:27); தெய்வீக ஞானமாக அதை ஆக்கிக் கொண்டார் (3:18). இந்தக் கிறிஸ்துவ ஞானம், வெறும் மனித முயற்சியால் கிட்டாது; இறைத்தந்தை வெளிப்படுத்தினால்தான் கிட்டும் (மத் 11:25 தொ). தன்னிலே இது தெய்வீகமானது, மறைபொருள் செறிந்தது; மறைத்து வைக்கப்பட்டது; வெறும் மனித ஆற்றலால் அளந்தறியப்படாதது (1 கொரி 2:7தொ; உரோ 11:32 தொ; கொலோ 2:3); பிறகு மீட்பு வரலாற்றில் வெளிப்படுத்தப்பட்டது (எபே 3:10). எனினும், தேவ ஆவிக்குப் பணிவுடையவர்களே, அந்த ஆவியினால் மட்டுமே, இந்த ஞானத்தைப் பெறக்கூடும் (1 கொரி 2:10-16; 12:8; எபே 1:17).

**3. கிறிஸ்துவ ஞானத்தின் கூறுகள்:**

**அ. ஞானமும் வெளிப்பாடும்:** மேலே நாம் விவரித்த கிறிஸ்தவ ஞானம் யூதர்களின்

வெளிப்பாட்டோடு தெளிவான தொடர்பு கொண்டுள்ளது. முதல் நிலையில் அது ஒரு வாழ்க்கை நெறியன்று. மாறாக, இறைப் பேருண்மையின் வெளிப்பாடு அது *(1 கொரி 2: 6 தொ)*. விசுவாசிகளுக்கு இறைவனிட மிருந்து பவுல் மன்றாடும் சமய அறிவின் உச்சகட்டம் அது *(கொலோ 1:9)*. ''ஆவியா னவர் கற்பிக்கும் சொற்களால்'' *(1 கொரி 2:13)* விசுவாசிகள் ஒருவர் ஒருவருக்குப் போதித்துக் கொள்ளக்கூடிய தேவ அறிவு அது *(கொலோ 3:16)*.

**ஆ. ஞானமும் ஒழுக்க நெறியும்:** ஆயினும், ஞானத்தின் ஒழுக்கக்கண்ணோட்டம் அறவே விட்டுவிடப்படவில்லை. மாறாக, பழைய ஏற்பாட்டில் தேவ ஞானம் காட்டிய வாழ்க்கை ஒழுங்குகள் எல்லாம், கடவுளின் ஞானமான கிறிஸ்து வெளிப்பாட்டு ஒளியில் முழுப்பொருள் பெறுகின்றன. அப்போஸ்தல ரது உழைப்பின் கனிகள் மட்டுமல்ல *(1 கொரி 3:10; 2 பேதுரு 3:15)*; கிறிஸ்தவனின் அன்றாட அலுவல்களும்தான் *(எபே 5:15; கொலோ 4:5)*. இக்கிறிஸ்தவ வாழ்வில், அறிவிலிகளை அல்ல, விவேகிகளான கன்னி யரை அனைவரும் கண்டு பாவிக்க வேண் டும் *(மத் 25:1-12)*. பழங்கால ஞானிகளின் போதனை போய்விட்டது; புனித பவுல் தம் இறுதிமடல்களில் எடுத்துரைக்கும் நடை முறை ஒழுக்க ஆலோசனைகள் விசுவாசிக ளிடையே இடம் பெறுகின்றன. இது யாக் கோபு திருமுகத்தில் தெள்ளத் தெளிவாய்க் காட்டப்படுகிறது. இதில் அவர் விண்ணி லிருந்து வரும் மெய்ஞ்ஞானத்தைப் போலி ஞானத்திலிருந்து பிரித்துக் காட்டி விளக்கு கிறார் *(யாக் 3:13-17)*. விண்ணிலிருந்து வரும் ஞானம் நிறைவு பெற்ற ஒழுக்க நெறியைச் சுட்டுகிறது. இந்த ஞானத்தின்படி அனைவ ரும் நடக்க முயல வேண்டும்; அதே சமயத் தில் இதைக் கொடையாக இடைவிடாது கடவுளிடம் கேட்டடைய வேண்டும் *(யாக் 1:5)*.

இந்த முன்னோக்கில்தான் மனிதன் கண்ட ஈட்டங்கள், பண்புப் பேறுகள் எல்லாம் கிறிஸ்தவக் கருத்தோடும் வாழ்வோடும் இணங்கி முழுமை பெற முடிகிறது. பாவி யான மனிதன் கிறிஸ்துவில் மறுபிறப்பு அடைய விரும்பினால் அவன் தன் ஆணவ ஞானத்தையும் தன்னையுமே சிலுவையில் அறையுண்டு மடியவைக்க வேண்டும். அப் பொழுதே, அவனது மனித முயற்சி முழுவ தும் புதுப்பொருள் பெறும்; தூய ஆவியின் சுதந்தர நுகர்வில் தன் முழு நிறைவை எய்தி இன்புறுவான்.

# த

**தகசு** (TAHASH - திமிங்கலம் போன்ற கடல் விலங்கு; வளை தோண்டிவாழும் கரடி)

நாகோர், இரயுமா ஆகியோரின் மூன்றாவது மகன் (ஆதி 22:24). தேல் ஏல்-அமர்னா கடிதங்களிலும் மூன்றாவது துத்மோசின் ஏடு களிலும் தகசி என்ற இடப்பெயராக அடை யாளம் காட்டப்படுகிறது. இது தமஸ்குவுக்கு வடக்கில் இருந்திருக்கலாம்.

**தகபனகேசு** (TAHPANHES - அரசனின் மனைவி) - ஆள்

தாவீது, சாலமோன் காலத்தில் எகிப்தை ஆட்சிசெய்த பெயர் தெரியாத பார்வோனின் மனைவி. இவளது சகோதரி ஏதோமிய அதா தின் மனைவியானாள். அதாது சாலமோ னின் எதிரியாவான் (1 அர 11:19). 11:20-இன் படி, தகப்னகேசு தங்கையின் மகன் கெனு பத்தைத் தன் வீட்டில் வளர்த்து வந்தாள்.

**தகபனகேசு** (TAHPANHES - பனகேசு கோட்டை) - இடம்

கி.மு. 587 / 586-இல் எருசலேம் வீழ்ந்தபின், யூதாவின் ஆளுநன் கெதல்யா கொலை செய் யப்பட்டபின், யூதர்கள் சிலர் யோகனான் என்ற ஒருவரின் தலைமையில் இறைவாக்கி னர் எரேமியாவையும் அவரது விருப்பத் திற்கு விரோதமாகக் கூட்டிக் கொண்டு தகப னகேசுக்கு ஓடிவிட்டனர் (எரே 43:5-7). அங்கு நெபுகத்னேசர் எகிப்தை வெற்றி கொள்வார் என்று இறைவாக்கு உரைத்தார். இது 567-இல் எகிப்தின் மேல் நெபுகத்னேசர் படையெடுத்ததைக் குறிக்கலாம். மேலும் எரேமியா அங்குக் குடியேறியிருந்த இஸ்ரா யேலரை அவர்களின் சிலை வழிபாட்டுக்கா கக் கண்டனம் செய்தார் (44:1-10). தன் பணியின் தொடக்கத்தில் எகிப்தியரிட மிருந்து 604-இல் யூதா பட்ட துன்பங்களைப் பற்றிப் பேசியபோது தகபனகேசைக் குறிப் பிடுகிறார் (2:16). எகிப்தின்மேல் வரவிருக் கும் இறைத்தண்டனையை முன்னறிவிக்கும் போது எசேக்கியேல் தகபனகேசைக் குறிப்பிடு கிறார் (எசே 30:18). தகபனகேசு கிரேக்கர்க ளால் தாப்னே என்று அழைக்கப்பட்டது.

இது, நைல்நதிக் கழிமுகப்பகுதியின் கிழக்கு எல்லையோரம் அமைந்திருந்த சயிது துறை முகத்திற்குத் தென்-தென்கிழக்கில் 43 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலத் தேல் தெப்னே யாக இருக்கலாம்.

**தகரேயா** (TAHREA)

மீக்காவின் மகன்; அரசன் சவுலின் வழி வந்தவர் (1 நாள் 9:41). 8:35-இல் இப்பெயரின் மாற்றுவடிவமாகத் தாரேயா என்ற பெயர் வருகிறது.

**தக்கமோனியர்** (TAHCHEMONITE)

தாவீதின் 'வல்லமையுள்ள மனிதர்களில் ஒருவரான யோசேபு பசபேத்தைக் குறிக்கும் இனப்பெயர் (2 சாமு 23:3). இது அக்கமோ னியர் என்ற பெயரை எழுத்தர்கள் பிழை யாக எழுதியதின் விளைவாக இருக்கலாம். அப்படியாயின் யோசேபு பசபேத்து என்ப தும் ''அக்கமோனியர் யாசொபயாம்'' என் பதும் (1 நாள் 11:11) ஒரே ஆளையே குறிக்கலாம்.

**தங்குமிடம்** (LODGE)

பொதுவாக இந்தச் சொல் (லாட்ஜ்), தற்காலிகமாகத் தங்குமிடத்தைக் குறிக்கின்றது (யோசு 4:3.8; எசா 10:29; பில 22). உரோமை நகரில் புனித பவுல் தங்கிய இடம் ஏறக் குறைய நிரந்தரமானதாகக் (அ.ப. 28:23) கருதப் படுகிறது. எரேமியா இறைவாக்கினர் கூட பாவ மக்களைவிட்டு நிரந்தரமாக ஒதுங்கி வாழ ஓர் இடத்தை விரும்பியிருக்கக்கூடும் (எரே 9:11). நிரந்தரமாகத் தங்கும் இல்லங் களை வீடு என்ற வார்த்தையால் அழைக்கின் றோம்.

''வெள்ளரித் தோட்டக் குடிசை'' (எசா 1:8) அங்கு உழைத்த வேலையாட்கள் தங்கிய சிறு குடிசைகளைக் குறிக்கலாம். இந்தச் சொல் எசா 24:29-இல் குடிசை என்று மொழி பெயர்க்கப்படுகிறது. இது பாழான நிலைக்கு அடையாளமாகும்.

**தங்குமெத்து** (TANHUMETH - ஆறுதல்)

நெற்றோபா என்ற ஊரைச் சேர்ந்தவர். இவரது மகன் செராயா, இஸ்ராயேல் நாடு கடத்தப்பட்ட பிறகு அங்குச் செல்லாமல் தப்பி, பாபிலோனிய ஆளுநன் கெதல் யாவை ஆதரித்து வந்த ஐந்து படைத்தலை வர்களில் ஒருவர். ஆனால் சிறிது காலத்தில் கெதல்யா கொல்லப்பட்டதால் தனது உயி ரைக் காத்துக்கொள்ள எகிப்துக்கு ஓடவேண் டியதாயிற்று (2 அர 25:23; எரே 40:8). இலாக்கிசில் கண்டுபிடிக்கப்பட்ட முத்திரை ஒன்றில் இப்பெயர் காணப்படுகிது.

**தசை நார்** (SINEW)

யோபு 10:11; எசே 37:6. ஆகிய குறிப்புகள் ஊனையும் அதை மூடும் தோலோடு பிணைத்து உருவம் அளிக்கும் தசை நாளங்க ளையும் மற்றப் பிணைக்கும் பகுதிகளையும் குறிக்கின்றன.

எசா 48:4-இல் ''உன் கழுத்து இரும்புத் தசைநார்'' என்பது ''வணங்காக் கழுத்தை'' நினைவுபடுத்துகிறது (யாத் 32:9). மக்களின் முரண்டுத்தனத்தை உருவகமாகக் குறிக்கிறது.

யாபோக்கு ஆற்றின் அருகில், மனித உரு வில் தோன்றிய இறைவனோடு யாக்கோபு மற்போரிட்டார். தொடைச்சந்து இடம் வில குமாறு, இறைவன் யாக்கோபின் தொடைச் சந்தைத் தொட்டு யாக்கோபை வெற்றி கொண்டார் (ஆதி 32:25). இந்த விவரிப்பு தான் இஸ்ராயேலர் விலங்குகளின் தொடைச்சந்து தசைநாரை உண்ணாமைக்குக் காரணம் (32:32). இது மிஸ்னா விளக்கத்தி லிருந்து வரும் தடையாகும். பக்தியுள்ள யூதர்கள் இன்று இதைக் கடைப்பிடிக்கின்ற னர்.

**தச்சர்** (CARPENTER)

நுகத்தடிகளையும் கலப்பைகளையும், போரடிக்கப் பலகைகளையும், மேசைகளை யும், படுக்கைகளையும், பெட்டிகளையும், சவப் பெட்டிகளையும், ஓடங்களையும், வீடுகளையும் செய்பவர். கோவிலிலும், செபக்கூடங்களிலும் வேலை செய்யும் ஒரு தொழிலாளி.

2 சாமு 5:11; 2 அர 12:11; 1 நாள் 14:1; 22:15; 2 நாள் 34:14; எசா 44:13; ஆகியவை இவரை மரவேலைப்பாடுகளோடு தொடர்பு படுத்துகின்றன.

புதிய ஏற்பாட்டுக் கிரேக்க மொழியில் இச்சொல் யோசப்புக்கும் (மத் 13:55) இயேசு விற்கும் (மாற் 6:3) மட்டும்தான் பயன்படுத் தப்பட்டுள்ளது. இயேசு ஏர்களையும், நுகத் தடிகளையும் செய்தாரென்று வேதசாட்சி யூஸ் தீன் கூறுகின்றார். அனேகமாகக் கிரேக்க மொழியில் இச்சொல் 'கட்டுபவன்' என்ற பரந்த பொருளைக் கொண்டிருக்கலாம்.

தச்சன் கல்வீடுகளின் மேல் மாடிகளைக் கட்டினார். நுழைவாயிலில் பழுது பார்ப்ப தும் செய்தார். எசா 44:13 தச்சரின் சில பொருட்களின் பட்டியலைக் கொடுக்கின் றது. நூல், கூராணி, உளி, மூலமட்டப் பலகை, கவராயம், பென்சில், இரம்பம், சுத்தி, கோடரி, துளைபோடும் கருவி ஆகி யவை சில பொருட்கள். சிலைகள் பல கல்லால் செய்யப்பட்டன; பிற்காலத்தில் இரும்பாலும் வெண்கலத்தாலும் செய்யப் பட்டன. இஸ்ராயேலர் நாடோடிகளாக இருந்ததால் இவர்கள் அனேகமாக இந்தக் கலையில் பின்தங்கியவர்களாக இருந்திருக்க லாம். ஆகவே தாவீதும், சாலமோனும் தீர் நாட்டுத் தச்சர்களை அழைத்துக் கோயிலையும், அரண்மனைகளையும் கட்டினார்கள் (2 சாமு 5:11; 1 அர 5-7). பிற்காலத்தில் உள்நாட்டுத் தச்சர்களே கோயில் சரிசெய்யும் அளவிற்குத் திறமை பெற்றார்கள் (2 எரே 12:11; 22:16). பணக்காரருடன், இவர்களும் அடிமைத் தளைக்குக் கொண்டு செல்லப்பட்டனர் (எரே 24:1). எஸ்ரா பெனிசியத்தச்சர்களை மறுபடியும் வரவழைத்தார் (எஸ் 3:7). பிற் காலப் பழைய ஏற்பாட்டுக் காலங்களில் தச்சர் களின் சங்கங்கள் இருந்தன (1 நாள் 4:14).

கிறிஸ்தவச் சித்திரக்கலை, யூதாவையும் தோமாவையும் மூலைமட்டத்தோடும், சிறிய யாக்கோபுவை இரம்பத்தோடும் சித்தரிக்கிறது.

**தச்சர் யோசேப்பின் வரலாறு** (JOSEPH, THE CARPENTER, HISTORY OF)

யோசேப்பை மகிமைப்படுத்தும் ஓர் எகிப்திய நூல். இது 4-ஆம் நூற்றாண்டுக்கு முன்பு தோன்றி இருக்க வாய்ப்பு இல்லை. மேலும், இது யாக்கோபின் மூல நற்செய்தி நூலுக்கு மிகவும் கடன்பட்டுள்ள ஒன்றாகும். இதன் நோக்கம் யோசேப்பின் வாழ்க்கை, இறப்பு இவரைப் பற்றிய இயேசுவின் புகழ்ச்சி ஆகியவற்றைக் கூறுவதாகும். இயேசு பிற்காலத்தில் ஒலிவ மலையில் தம் சீடர்களுக்கு இந்நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறுவதாக நூல் அமைந்திருக்கிறது. இதன் முழுமையான வாசகம் போகரிக்கு, அரபிக்கு மொழிகளில் பாதுகாக்கப்பட்டு உள்ளது. இவற்றிலிருந்து இலத்தீன் மொழிபெயர்ப்பு, பதினான்காம் நூற்றாண்டில் செய்யப்பட்டது. இதைத் தவிர்த்து சகிதிக்கு வாசகத்தில் சில துணுக்குகளும் உண்டு. ''இருந்தாலும், என்னுடைய கன்னித் தாயே, நீரும்கூட மற்றவர்களைப் போல் அதே முடிவை எதிர் நோக்க வேண்டும்'' என்ற கூற்று இந்நூல் ஐந்தாம் நூற்றாண்டுக்கு முந்தியது என்று சுட்டுகிறது. ஏனெனில் இந்நூற்றாண்டில் கன்னியின் விண்ணேற்றம் பற்றிய போதனை பரவத் தொடங்கியது.

**தடுப்புப் பலகை** (GEAR)

அ.ப. 27:17-இல் சொல்லப்பட்டிருப்பது. கப்பல் துறைசார்ந்த சொல். பொருள் தெளிவாக இல்லை. இச்சொல்லுக்குக் கப்பலின் பாய் என்றும், கயிறுகள், பாய்கள், கப்பி போன்ற கப்பல் சார்ந்த பொருட்கள் என்றும் நங்கூரம் என்றும் பொருள் கொள்ளலாம்.

**தடி, குண்டாந்தடி, கைத்தண்டு** (CLUB)

இஃது ஓர் ஆயுதமாகும். இது குண்டாந்தடி (யோபு 41:21) என்றும், குறுந்தடி (பழ 25:18) என்றும், சம்மட்டி (எரே 51:20) என்றும் பலவாறு குறிக்கப்படும்.

இயேசுவைப் பிடிப்பதற்காகக் கெத்சமனித் தோட்டத்திற்கு யூதாசுடன் வந்த மக்கள் கூட்டத்தினரால், வாள்களோடு கொண்டு வரப்பட்ட ஆயுதங்களில் தடியும் ஒன்றாகும் (மத் 26:47. 55; மாற் 14:43.48; லூக் 22:52).

**தடை உத்தரவு** (INTERDICT)

இது தடை செய்யும் சட்டத்தை உணர்த்தும் சட்டச்சொல் (தானி 6:7-9.12-14). இது, ''முப்பது நாள்வரையில் அரசரிடமன்றி வேறெந்தத் தெய்வத்திடமோ, மனிதரிடமோ யாதொரு விண்ணப்பமும் செய்கிறதைத்'' தடை செய்து தாரியு எழுத்து மூலம் வெளியிட்ட சட்டத்தைக் குறிக்கிறது. அரசன் மட்டுமே கடவுளாக, கடவுளின் ஒரே உண்மையான பிரதிநிதியாகக் கருதப்பட வேண்டும் என்பதே இச்சட்டத்தின் உட்பொருள். இத்தடையுத்தரவு எல்லாரையும் கட்டுப்படுத்தும். மேதியர், பாரசீகரின் சட்டங்களுக்கேற்ப மாறாதிருப்பதாகும் (தானி 6:8.12; எஸ்த 1:19; 8:8). இத்தகைய கட்டளை, செயல்படுத்த முடியாத ஒன்றாய் இருப்பதோடு, நாம் அறியும் அளவில் பாரசீக அரசர்களின் சமயக் கொள்கை முறைக்கு முழுவதுமே ஒத்துப்போகவில்லை. இது கிரேக்கர் காலத்து, சமயச் சூழ்நிலையைப் பிரதிபலிக்கலாம்.

**தடைச்சுவர்** (DIVIDING WALL)

ஏரோதின் கோவிலைப்பற்றிய விவரிப்பில் யோசிப்பஸ் மூன்று முழம் உயரமுள்ள ஒரு கற்சுவரைப்பற்றிக் குறிப்பிடுகிறார். அச்சுவரின் இடைவெளிகளில் கிரேக்க மற்றும் இலத்தீன் மொழி அறிவிப்புகள் காணப்பட்டன. அவை, புற இனத்தாரின் முற்றத்திலிருந்து உள்ளே நுழையக் கூடாதென எச்சரித்தன (3-ஆம் அந்தியோக்குவின் காலத்திற்குப் பின், கோவிலைக் காவல் புரியும் சலுகையை யூதர்கள் பெற்றனர்). 1871-ஆம் ஆண்டு 'கிளெர்மோன்ட் கான்னேயு'' என்பவர் அத்தகைய கிரேக்க அறிவிப்புடன் கூடிய கல்லினைக் கோவிலின் வடமுற்றத்தில் கண்டுபிடித்தார். 1935-ஆம் ஆண்டு ஆராமின் கிழக்குச் சரிவில் ஒரு சிறிய பகுதி கண்டுபிடிக்கப்பட்டது. யூதரல்லாத எவரும் தடைச்சுவருக்குள்ளோ, புனித தலத்தின் எல்லைக்குள்ளோ நுழையக்கூடாதென அந்த அறிவிப்பு எச்சரித்தது. மீறி நுழைந்து பிடிபட்ட

வர்கள் உடனடியாக மரணதண்டனை விதிக்கப்பட்டனர். எபே 2:14-இல் வரும் ''தடைச் சுவரென நின்ற பகைமையை இயேசு தன் ஊனுடலால் தகர்த்தெறிந்தார்'' எனும் குறிப்பு எருசலேம் ஆலயத்தில் உள்ள தடைச்சுவரைக் குறிப்பதாக விளக்கப்படுகிறது. ஆனால் இத்தகைய குறிப்பு எபேசியரால் புரிந்துகொள்ளக்கூடியது என்பது ஏற்க இயலாத ஒன்று.

**தட்டு, தகடு** (DISH, PLATE, PLATTER)

உணவுப்பொருட்களை வைத்திருப்பதற்கோ (பழ 19:24; 26:15; மத் 25:23; மாற் 14:20), சாம்பிராணி அல்லது உணவுக் காணிக்கைகளை ஒப்புக் கொடுக்கவோ (யாத் 25:29; 37:16; எண் 4:7; 7:13-14) பயன்படும் பாத்திரவகை.

உருவகமாக, மனாசேயின் பதிதத்திற்கு வினைப்பயன் தண்டனையாக ''ஒருவன் தட்டை உள்ளும் புறமும் துடைத்துத் தூய்மையாக்குவது போல (இறைவன்) எருசலேமைத் துடைத்துத் தூய்மையாக்கப் போவதாக" இறைவாக்கினர் அறிவிக்கிறார் (2 அர 21:13). ஒரு மனிதனின் உள்ளார்ந்த பண்புகளை வளர்ப்பதைப் புறக்கணித்து, ''கிண்ணத்தையும் தட்டையும் வெளிப்புறத்தில் தூய்மையாக்குகிறீர்கள்'' என்று இயேசு பரிசேயர்களைக் கடிந்து கொள்கிறார் (லூக் 11:39; மத் 23:25-26).

வேதாகம மூலச் சொற்களில் தட்டு என்பதும் கிண்ணம் என்பதும் ஒரே பொருளையே உணர்த்தின. அதன் சூழ்நிலைகளைக் கொண்டே அதன் சரியான பொருளை நாம் கொள்ளவேண்டும். அதாவது அது எந்த இடத்தில் பயன்படுத்தப்படுகிறது என்பதைக் கொண்டு பொருள் அறிய வேண்டும்.

தட்டு என்பதற்கு உலோகத்தகடு என்று பொருள் கூறலாம். தங்கத்தால் வார்க்கப்பட்ட தட்டுகள் யூத மதப் பெரிய குருவின் தலைப்பாகையில் பொருத்தப்பட்டிருந்தன (யாத் 28:36). கிளர்ச்சியாளர்களின் தூபக்கலசங்கள் தகடுகளாக்கப்பட்டுப் பீடத்தை மூடும் தகடுகளாகப் பயன்பட்டன (எண் 17:1-5). இது ஆரோன் வழித்தோன்றியிராதவர்களுக்கு ஓர் எச்சரிக்கையாக அமைந்திருந்தது.

திருமுழுக்கு யோவானின் தலையை, ஒரு தட்டில் வைத்து எரோதியாளின் மகளுக்கு அளித்தார் ஏரோது (மத் 14:8,11). இந்தத் தட்டு தங்கத்தாலோ வெள்ளியாலோ செய்யப்பட்டிருக்க வேண்டும். மத் 23:25-26; லூக் 11:39-இல் குறிக்கப்படும் தட்டு மண்ணால் செய்யப்பட்டதாக இருக்கலாம்.

**தட்டையான சட்டி** (GRIDDLE)

சிறிது பள்ளமுடைய தடித்த மண் சட்டி (லேவி 2:5). தாவீதின் காலத்திற்குப் பிறகு, இரும்பு பொதுப் பழக்கத்திற்கு வந்தபோது, இரும்பாலான தட்டையான சட்டி செய்யப்பட்டது.

**தண்ணீர் எடுப்பவர்கள்** (DRAWERS OF WATER)

அடிமட்ட ஊழியர்களில் ஒரு குழுவினர். இத்தொழில் சாவுவரைக்கும் நீடிக்கலாம். இந்த அடிமைத் தொழிலை விரும்பியே, கிபயோனியர்களைப்போல எதிரிகளால் தோற்கடிக்கப்படுவதாலே ஏற்றுக்கொள்வர் (யோசு 9:21.23.27). பெண்டுகள் தண்ணீர் எடுப்பது அவர்களின் வீட்டு வேலைகளில் ஒன்று (ஆதி 24:11). இளைஞர்கள் தங்களுடைய மற்ற வேலைகளின் தொடர்பாகத் தண்ணீர் எடுப்பதும் உண்டு (ரூத் 2:9). இத்தொழிலின் தாழ்ந்த நிலை, உடன்படிக்கை மக்களின் பட்டியலில் கடைசியாகக் குறிப்பிடுவதிலிருந்து தெரிகிறது (உப 29:10).

**தண்ணீர் வாயில்** (WATER GATE)

நெகேமியாவால் புதுப்பிக்கப்பட்ட எருசலேமின் கிழக்கேயுள்ள ஒரு வாயில் (நெகே 3:26; 12:37). இது அனேகமாகக் கீகோன் நீரூற்றுக்கு மேல் மதில் சுவருக்குள் கட்டப்பட்டது. இந்த வாயிலின் முற்றத்தில்தான் எஸ்ரா அங்கு கூடியிருந்த மக்களுக்குச் சட்டத்தை வாசித்துக் காட்டினார். இங்குதான் கூடாரத் திருவிழாவிற்குக் கூடாரங்கள்

போடப்பட்டன (நெகே 8:1.3.16). கோவிலின் தெற்கேயுள்ள வாயில்களில் இதுவும் ஒன்று என்று வல்லுநர்கள் கருதுகின்றார்கள்.

**ததிமோர்** (TADMOR - பனைமரம்)

சாலமோனால் பாலஸ்தீனத்திற்கு வடக்கே பாலைவனத்தில் கட்டப்பட்ட ஒரு நகர் (2 நள் 8:4). இதற்கு இணையான பகுதியாகிய 1 அர 9:18-இல் இது தாமார் என்று உள்ளது. ஆனால் இந்த இரண்டு வார்த்தைகளுக்கும் பொருள் ஒன்றே. இது சீரியா பாலைவனத்தில் உள்ள புகழ்பெற்ற பல்மைரா என்று கிரேக்கர்களால் அழைக்கப்பட்ட நகரத்துடன் ஒன்றாகக் கருதப்படுகிறது. இது தமஸ்குவிற்கு வடகிழக்கில் 215 கி.மீ. தொலைவிலும் யூப்பிரத்தீசுக்கு 120 கி.மீ.தொலைவிலும் உள்ள முக்கிய நகரமாகும். ஆனால் விவிலிய அறிஞர்கள் எல்லோரும் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. சிலர் இது யூதாவின் தென்கிழக்குப் பகுதியில் சாலமோனால் கட்டப்பட்ட ஒரு நகர் என்று கருதுகின்றனர். ஏனெனில் இது சாலமோனால் பிடிக்கப்பட்ட அமத்சோபாவுக்குப் பின் கொடுக்கப்பட்டுள்ளது (2 நாள் 8:2-6). சாலமோன் மரணத்துக்குப் பின்னும் நாடு பிளவுபட்டபின்னும் அது அரமேயர்களிடம் கைவிடப்பட்டிருக்கலாம்.

**ததேயு** (THADDAEUS - நெஞ்சு, மார்பு)

இயேசுவின் பன்னிரு அப்போஸ்தலர்களில் ஒருவர். இவரும், யாக்கோபின் மகனான (அல்லது சகோதரனான) யூதாவும் (8) ஒரே ஆளாகக் கருதப்படுவர் (மத் 10:3; மாற் 3:18; காண்க. லூக் 6:16; யோவா 14:22; அ.ப. 1:13).

**ததேயுவின் பணிகள்** (THADDAEUS, ACTS OF)

இந்த நூல் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. இதில் பல ஏதேசின் கட்டுக்கதைகள் காணப்படுகின்றன. இது சீரியக்கு மொழியில் எழுதப்பட்ட ''அத்தே ஏடு'' போல அமைந்துள்ளது. இதில் ததேயுவின் புதுமைகள், மற்றும் இயேசுவுக்கும் அப்காா் என்ற ஏதேசின் மன்னனுக்கும் இடைப்பட்ட கடிதப் போக்குவரத்து கூறப்பட்டுள்ளது. மேலும் இயேசுவின் திருமுகம் பதிக்கப்பட்ட கைக்குட்டைபற்றிய ஒரு செய்தியும் காணப்படுகிறது.

**தத்துக்கிளி, வெட்டுக்கிளி** (GRASSHOPPER)

தத்துக்கிளி, வெட்டுக்கிளி இவ்விரண்டு சொற்களும் ஒன்றிற்குப் பதிலாக மற்றொன்று பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் வெட்டுக்கிளி கூட்டமாக வந்து அழிக்கும். தத்துக்கிளி தனித்து வாழ்வது; இடம் விட்டு இடம் பெயராது. அதன் வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும், தத்துக்கிளி எல்லா வாழ்க்கைச் சூழ்நிலையிலும், தாவர இனங்களை அழிக்கின்றது (நீதி 6:5; 2 நாள் 7:13; திருவுரை 12:5; ஆமோஸ் 7:1-2; நாகூ 3:15). இது பல்வேறு உருவகங்களிலும் பயன்படுத்தப்படுகின்றது. ''மண்ணில் வாழ்வோர் வெட்டுக்கிளிபோல்'' சிறுமையானவர் (எசா 40:22). அதேபோலவே இஸ்ராயேல் ஒற்றர்களும் (எண் 13:34) ஆவர். தாக்கும் போர்க் குதிரைகள் வெட்டுக்கிளிகள் போன்றவையாகும் (யோபு 39:20). வெட்டுக்கிளியைப் போல் இஸ்ராயேலின் எதிரிகள் நிலத்தை வீணடிக்கின்றார்கள் (நீதி 6:5; எரே 46:23; ஆமோஸ் 7:1; நாகூ 3:15). நினிவே நகரத்தை அழித்தவர்கள் வெட்டுக்கிளிகளைப்போல் ஆவார்கள். எவ்வளவு விரைவில் வந்தனரோ அவ்வளவு விரைவில் திரும்பிச் சென்றனர். அவர்கள் மணலைப் போலும் விண்மீன்கள் போலும் எண்ணிக்கையற்றவர்கள் (நீதி 6:5; 7:12; எரே 46:23; நாகூ 3:15.17). உண்ணக்கூடிய நான்கு பூச்சிகளில் தத்துக்கிளியும் வெட்டுக்கிளியும் சேர்க்கப்படுகின்றன (லேவி 11:22).

**தத்னாய்** (TATENAI - கொடை)

தாரியு மன்னன் காலத்தில் ஆற்றுக்கு அக்கரையில் பாரசீக ஆளுநராய் இருந்தார் (எஸ் 5:3.6; 6:6.13). தத்னாய் எருசலேம் மீண்டும் கட்டப்படுவதைப் பற்றி அரசன் தாரியுவிடம் கேட்டபோது, அரசன் அவ்வேலையைத் தடை செய்யாதிருக்கும்படி கட்டளையிட்டார் (கி.மு. 520).

### தந்தம் (IVORY)

பழங்கால உலகத்தைப்போல விவிலியத்திலும், மூலப்பொருளான தந்தமும், தந்தப் பொருட்களும் சொத்துடைமையின், சுக போகத்தின் அடையாளமாக இருந்தன (ஆமோ 6:14); வியாபாரம் செய்யும் பொருளாகவும் (எசே 27:15; திருவெளி 18:12), சொத்தாகவும், கப்பம் கட்டப்படும் பொருள்களில் ஒன்றாகவும் அமைந்தன.

பல பெரிய பாலூட்டும் விலங்குகளின் பற்கள் அல்லது தந்தம் போன்ற பற்களும் பயன்படக் கூடுமானாலும் யானைத் தந்தமே மக்களால் அதிகம் விரும்பப்பட்டது. இது வட சீரியாவிலுள்ள மந்தைகளிலிருந்து அல்லது ஆப்பிரிக்கா, இந்தியா முதலிய நாடுகளிலிருந்து வியாபாரப் பொருளாகவும் பெறப் பட்டது (1 அர 10:22). நிறத்திற்கேற்றவாறு விலை பெற்றது. மரத்தைப் போன்ற அமைப்பும் கடினத்தன்மையும் கொண்டது. தந்தம் நுண்ணிய இழைவேலைகளில் பயன் பட்டது (எசே 27:6). பல அழகுப் பொருட்கள் செய்யப் பயன்பட்டது.

இஸ்ரயேலின் தந்தம் அரசரோடும் மேல் குலத்தாரோடும் சிறப்பாகத் தொடர்புப்படுத்தப்படுகிறது. சாலமோன் தந்தத்தினால் பெரியதோர் அரியணை செய்து அதைப் பசும்பொன்னால் வேய்ந்தார் (1 அர 10:19). சிங்க உருவங்கள் கொண்ட இத்தகைய அரியணைகள் சமாரியாவிலும் நிம்ரூதிலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ஆகாபு கட்டிய மாளிகையான ''தந்தவீடு'' (22:39; சங் 45:8; ஆமோ 3:15), வீட்டுப் பொருட்களிலும் கதவுகளிலும் தந்தஇழை அதிகமாகப் பயன்படுத்தப்பட்டிருப்பது ஆகியன அவரது ஆட்சியின் பகட்டைக் காட்டுகின்றன. சமாரியாவில் கண்டெடுக்கப்பட்ட கலைப்பொருட்கள், புனித மரங்கள், சன்னலில் ஒரு பெண், தண்ணீர் குடிக்கும் மான் போன்றவை எகிப்திய, சீரிய, பெனீசிய அடையாளங்களைக் கொண்டுள்ளன. இவை யாவும் சீதோனிய மருமகனுக்கு ஏற்ற அலங்காரங்களே (1 அர 16:31). ஆமோசின் கருத்துப்படி, இறைவனையும் ஏழைகளின் தேவைகளையும் புறக்கணித்து வாழும் சோம்பலான சொகுசு வாழ்க்கைக்குத் தந்தம் அடையாளமாகும் (ஆமோ 6:4; 2:6-8).

தந்தச் சிற்பங்கள் பாலஸ்தீனத்தில் மெகிதோவிலும் சமாரியாவிலும் கண்டெடுக்கப் பட்டுள்ளன. உன்னத சங்கீத ஆசிரியர் இரு உருவகங்களில் தந்தத்தைப் பயன்படுத்துகிறார். ''காதலனுடைய வயிறு (உடல்) யானைத் தந்தவேலைப்பாடு'' (உ.ச. 5:14). ''காதலியின் கழுத்து தந்தத்தாலான கொத்தளம் போன்றது'' (7:5).

### தந்தை (FATHER)

ஒரு குடும்பத்தின் தந்தைக்கு மரியாதையும் கீழ்ப்படிதலும் காட்டப்பட்டன. அவரின் அதிகாரம் ஏற்றுக்கொள்ளப்படும் (ஆதி 22:2 அர 3:27). பிள்ளைகள் தங்கள் தாய் தந்தைக்குக் கீழ்ப்படியும்படி சட்டம் சொல்கிறது (யாத் 20:12; உப 5:16; சீரா 3:1-16). தந்தையைச் சபித்தால் அல்லது அடித்தால் அவன் சாவுத் தண்டனை பெறுவான் (யாத் 21:15.17). தந்தை மகனை அடிமையாக விற்கலாம் (21:7). தன் குடும்பத்தாரை அழிக்கத் தந்தைக்கு உரிமையுண்டு (உப 13:6-19). அந்தக் குடும்பத்தின் சமய ஒழுங்குகளுக்கும் வழிபாட்டிற்கும் விருத்தசேதனம் செய்வதற்கும் தந்தையே பொறுப்பு (ஆதி 17:27). பிள்ளைகளின் உடல் நலத்திற்கும் ஆன்மீக வளர்ச்சிக்கும் தந்தைதான் பொறுப்பு (உப 1:31; யோபு 1:5; ஒசே 11:1-3). தந்தையே தன் மக்களுக்கு ஆசானும் மகிமையும் ஆவார் (பழ 1:8; 17:6). எனவே அவர் மதிக்கப்பட வேண்டும் (பழ 19:26; 30:11). தந்தை தன் மக்களை அன்பு செய்கிறார். அவர்கள் நல்லவர்கள் என்பதால் மகிழ்கிறார் (சங் 103:13; பழ 23:25; எரே 17:3). மரித்த மகனுக்காகத் தந்தை துக்கம் கொள்கிறார் (2 சாமு 18:33). ஏனெனில் தனது பெயர் நீடிக்க மகனை விட்டுச் செல்ல முடியவில்லை என்றறிவார் (சீரா 30:4).

தந்தை என்பது அந்தக் குடும்பத்தின் ஒரு மூதாதையரையோ, சொந்தத் தந்தையையோ குறிக்கும் (ஆதி 18:13; 32:9; 1 அர 15:11;

19:4; 2 அர 19:12). இஸ்ராயேல் முழுச் சமுதாயத்தின் மூதாதையரைக் கூட இந்தத் தந்தை என்ற சொல் குறிக்கும். ஆபிரகாம் ''எண்ணற்ற நாடுகளுக்கு நீ தந்தையாவாய்'' என வாக்களிக்கப்பட்டார் (ஆதி 17:4; உப 27:3; மாற் 11:10; லூக் 3:8; 16:24; யோவா 6:58; 7:22; உரோ 4:1; 1 கொரி 10:1; யாக் 2:21)

இறப்பைக் குறிப்பதற்கோ இறப்பிற்குப் பின்னும் மறுவுலகத்தில் தன் குடும்பம் தொடர்வதையோ குறிக்க, ''தன் மூதாதைய ரோடு துயில் கொண்டார்'', 'தன் மூதாதைய ரோடு சேர்க்கப்பட்டார்' என்ற தொடர் களைப் பயன்படுத்தினர் (1 அர 2:10; உப 31:16; 2 அர 22:20).

இது மரியாதையும் மதிப்பும் அளிக்கும் ஒரு பெயராகவும் கருதப்பட்டது. (நீதி 17:10; 18:19). எலிசா இறைவாக்கினரை அவரின் சீடர்கள் 'என் தந்தையே' என்று அழைத்தனர் (2 அர 2:12; 6:21; 13:14). தாவீது சவுலைத் தந்தை என்றழைத்தார் (1 சாமு 24:11; 2 அர 5:13; எசா 22:21). கிறிஸ்தவ சமூகத்தில் வயதான ஒருவரைத் தந்தை என அழைத்த னர் (1 யோவா 2:13). இந்த மதிப்புமிக்க பட்டம் இறைவனுக்கு மட்டுமே உரியது என்று மத்தேயு (23:9) நற்செய்தி கூறுகிறது.

இரேக்காபியரைத் தோற்றுவித்தவர் என்ப தற்காகவும் இரேக்காபு தந்தை என அழைக் கப்பட்டார் (எரே 35:6). ஒரு தொழிலைத் தோற்றுவித்தவர், அத்தொழிலைக் கொண்ட வர்களுக்குத் தந்தையெனக் கருதப்பட்டார் (ஆதி 4:20.21; 1 மக் 2:54). ஆபிரகாம் விசுவாசி களின் தந்தையாவார் (உரோ 4:11.16-17). தந்தை என்பது இரக்கத்தை உணர்த்தலாம் (யோபு 29:16; 31:18; சங் 103:13).

இதன் இறையியல் கண்ணோட்டத்திற்கு விவிலியத்தின் இறைவன் என்ற தலைப்பின் கீழ்ப்பார்க்கவும். பழைய ஏற் பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் தந்தை என்ற இந்தச் சொல் இறைவனின் இயல்புக ளைக் குறிப்பதாகவும் அமைந்துள்ளது. சில நேரங்களில் கடவுளின் தனிப்பட்ட பெய ரைக் குறிப்பதாகவும் இது பயன்படுத்தப்பட் டுள்ளது. அபியேல் என்பதை ''ஏல் என் தந்தை'' என மொழி பெயர்க்கலாம் (1 சாமு 9:1). ''என் தந்தையே நீதிபதி'', ''என் தந்தை அறிவார்'', ''என் தந்தை நன்மையே மிகுந்த வர்'' என்ற பொருள் கொண்ட பல பெயர் களை நாம் வேதாகமத்தில் காண்கிறோம்.

## தந்தையர்களும் தந்தையும் (FATHERS AND FATHER)

I. ''தந்தையற்ற சகோதரத்துவத்தை'' உரு வாக்க முயல்கின்ற உலகிற்கு, இறைவன் தன்மையாலே ஒரு தந்தையாவார் என்பதை விவிலியம் வெளிப்படுத்துகிறது. அன்பின் நிலையில் அதிகாரத்தைச் செயல்படுத்துவ தற்கான முறைகளைக் குடும்ப வாழ்வி னின்று பெறுகின்ற உலகத் தந்தையர்கள் மற்றும் வாழ்க்கைத் துணைவர்களின் அனுப வங்களினின்று தொடங்கி, இந்த மனித உண்மைகளைப் புறவின மதமானது நெறி விலகிய முறையில் தனது தெய்வங்களுக்குச் சாற்றிக் கூறுவதற்கு மாறாகப் பழைய ஏற்பா டானது தந்தை மற்றும் வாழ்க்கைத் துணை வர்களின் உருவங்களின் மூலம் உயிருள்ள இறைவனின் அன்பு மற்றும் அதிகாரத்தை வெளிப்படுத்துகிறது. புதிய ஏற்பாடு இவ் விரு உருவங்களையும் ஏற்றுக் கொண்டு, இயேசுவின் தனிப்பட்ட மகன் தன்மையை வெளிப்படுத்துவதன் மூலமும், அந்த மகன் தன்மையானது எல்லா மனிதரின் மீதும் கொண்டுள்ள இறைவனுடைய தந்தைத்தன் மையை ஏற்படுத்துகிறது என்னும் கேள்விப் படாக் கருத்தைச் சேர்ப்பதன் மூலமும், தந்தை பற்றிய கருத்தை நிறைவு படுத்துகிறது.

### II. ஊன் சார்ந்த இனத்தின் தந்தையர்கள்

**1. தலைவர் மற்றும் ஆண்டவர்:** கிடை நிலையில் மக்களிடையே தந்தையே குடும்பத்தி னுடைய போட்டியற்ற தலைவராவார். மனைவி அவரைத் தலைவராகவும் (ஆதி 20:3), கணவராகவும் (18:22) அங்கீகரிக்கி றாள். பிள்ளைகளின் கல்வி (சீரா 20:1-13), திருமண உடன்பாடுகள் (ஆதி 24:2 தொ; 28:1-2), சிறுமிகளின் சுதந்தரம் (யாத் 21:7),

மற்றும் பிள்ளைகளின் வாழ்வு (ஆதி 38:24; 42:37) ஆகிய அனைத்தும் அவரையே சார்ந்துள்ளன. தந்தையில் மொத்தக் குடும்பமும் ஊன் உருவெடுத்துள்ளது. அதனுடைய ஒன்றிப்பின் உறுதிப்பாடும் அவரே (32:11). இதன் விளைவாகக் குடும்பமானது ''தந்தையின் வீட்டார்'' என்றழைக்கப்பட்டது (34:19). ஒரு ஒப்புமையின் மூலமாக, வீடு என்ற சொல்லானது ஓர் இனத்தையோ (செக் 12:12 தொ), மக்களின் முக்கிய பிரிவையோ (உ-ம் யோசேப்பின் வீட்டார்), அல்லது மொத்த மக்களையோ (உ-ம் இஸ்ராயேல் வீட்டார்) குறிப்பிடத்தொடங்கியவுடன், இக்குழுக்களுடைய தலைவரின் அதிகாரமானது, குடும்பத்தினுடைய தந்தையின் சாயலில் கருதப்பட்டது (எரே 35:18). பாபிலோனில் தாயகத்தின் தந்தையாக அரசன் இருந்தது போல், அரசராட்சிக்காலத்தில் அரசன் நாட்டின் ''தந்தையாக'' இருந்தான் (எசா 9:5). கல்வியாளர்கள் என்னும் அதிகாரத்தின் காரணமாகத் தந்தை என்ற பெயரானது குருக்கள் (நீதி 17:10; 18:19), அரச ஆலோசகர்கள் (ஆதி 45:8; எஸ்த 3:13-14; 8:12), இறைவாக்கினர்கள் (2 அர 2:12) மற்றும் ஞானிகள் (பழ 1:8; எசா 19:11) ஆகியோருக்குச் சாற்றிக் கூறப்பட்டது. தங்களுடைய இந்த ஆதிக்கத்தின் மூலம் உலகத் தந்தையர், இறைவனுடைய மீட்பைப் பெறவும், இறைவனைத் தனது தந்தையாக அறிந்து கொள்ளவும் இஸ்ராயேலைத் தயாரித்தனர்.

**2. ஒரு சந்ததியின் முன்னோர்:** நேர்மேலான நிலையில் தந்தையானவர் சந்ததியினரின் தலைவராகவும், சந்ததியுடனான இணைப்பாகவும் உள்ளார். இனத்தைப் பெருக்குவதன் மூலம், அவர் தன்னை நீடித்தவராக்குகிறார் (ஆதி 21:12; 48:16). குடும்பச் சொத்துக்கள் தனது வாரிசுகளுக்குச் செல்லும் என்பதை உறுதிப்படுத்துவதால் தனது சந்ததியின் தொடர்ச்சியில் பங்கு கொள்கிறார் (15:2-3). மகனின்றி ஒருவன் இறந்தால், இறைவனால் தண்டிக்கப்பட்டதாக அவன் கருதப்பட்டான் (எண் 3:4; 27:3-4).

சந்ததியின் தலைமையில் இனத்தின் வருங்காலமானது ஏற்கனவே வடிவமைக்கப்பட்ட அமைப்பில் மிகச் சிறப்பான தந்தையாக முன்னோர் இருந்தனர். காமின் மகன் மீதான சாபமானது, சேமின் பிள்ளைகளுக்குக் கானானியரைக் கீழ்ப்படுத்துவதையும் கொண்டிருந்தது போல, இஸ்ராயேலின் உயர்வானது ஆபிரகாமின் தேர்விலும் ஆசியிலும் ஏற்கனவே அடங்கியிருந்தது (ஆதி 9:20-27; 12:2). ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோருடைய வாழ்வின் நிலைகள் கணக்கற்ற சந்ததியினர் மற்றும் வளமான நாடு என்னும் உறுதிமொழியில் குறிப்பிடப்பட்டிருந்தது. ஏனெனில் வாக்குறுதிகளினின்று விலக்கப்பட்ட லோத்து, இசுமாயேல் மற்றும் எசா ஆகியோரின் வரலாற்றினுள் அயல் மக்களின் வரலாறு எழுதப்பட்டதுபோல, இஸ்ராயேலின் வரலாறானது அவர்களுடைய வாழ்வின் சிக்கலான, புரியாத விவரங்களில் எழுதப்பட்டிருந்தது (ஆதி 19:30-38; 21:12-13; 36:1). அதே முறையில் ஒவ்வொரு இனமும் அதே பெயருடைய முன்னோருக்கு, மரபுக் கூட்டங்களிலான அதனுடைய இடத்தின் பொறுப்பை ஒப்படைத்தது (ஆதி 49:4). தலைமுறைப்பட்டியல்கள் இரத்த உறவினின்று வேறுபட்ட அல்லது சிக்கலான உறவுமுறைகளை வெளிப்படுத்தும்போது (ஆதி 10), தந்தையரின் வரிசையை முறைப்படுத்தி, வருங்காலத்தையும், அவர்களது சந்ததியினரின் உரிமைகளையும் உள்ளடக்கிய முன்னோரின் முக்கியத்துவத்தையும் வலியுறுத்தின. புனித மரபுகளின் தலைமுறைப்பட்டியல்கள் (ஆதி 5; 11) ஆதாமிற்கும் குலமூதாதையருக்குமிடையே ஒரு தொடர்ச்சியைக் காட்டுவதன் மூலம் இறைத் தேர்வு மற்றும் மீட்புடனான உறவில், குறிப்பிடத்தக்க வகையில் சந்ததிகளின் வரிசையை அமைக்கின்றன.

**III. ஆன்மீக இனத்தின் தந்தையர்:** தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் சிறப்பான தந்தையராக மூதாதையர் இருந்தாலும் இந்நிலையானது அவர்களது உடல் சார்ந்த தந்தைமுறையின் காரணமாக இல்லாமல் இனக் கருத்துகளுக்கு அப்பாற்பட்டு, அவர்களது விசுவாசத்தைப் பின்பற்றுகிற அனைவராலும் பெறப்படுகின்ற வாக்குறுதிகளால்

அடையப்படுகின்றது. ஊனுடலின்படியான அவர்களது தந்தை நிலையானது (உரோ 4:1) ஆபிரகாமின் தேர்வுமுதல் இயேசுவின் மாட்சிமைவரை இடைவிடாமல் செயல்புரி கின்ற இறைவனின் மீட்புத்திட்டத்தி னுடைய நீடித்தநிலை மற்றும் ஒழுங்கு முறை யினைச் சார்ந்துள்ள ஆன்மீக உலகளாவிய தந்தை நிலையின் தற்காலிக நிலையாக மட்டுமே உள்ளது (யாத் 3:15; அ.ப. 3:13). இத்தகைய ஆன்மீகத் தந்தை நிலையின் இறையியலாராகப் பவுல் இருந்தாலும், இந்தக் கருத்து பழைய ஏற்பாட்டிலேயே தயாரிக்கப்பட்டுவிட்டது.

**1. இனத்தைக் கடந்து செல்லும் முதன்மை:** நன்மன மற்றும் தீமையிலான கூட்டுணர்வின் எண்ணமானது ஆழப்படுத்தப்படும் அளவிற்கு, முன்னோருடைய தந்தை நிலையின் ஆன்மிகப் பண்பானது வளர்கின்ற முக்கியத்துவம் அடைகின்றது. ஒவ்வொரு தலைமுறையிலும் வளர்ச்சி யடைகின்ற தந்தையரின் முன்னோர் நிலை யானது மூதாதையரையோ, இரண்டாம் நூற்றாண்டில் புகழப்பட்ட முன்னோரையோ மட்டும் கொண்டிராமல் (சீரா 44-59; 1 மக் 2:51-61), சில கிளர்ச்சியாளர்களையும் கொண்டிருந்தது. இனப்பெயர் முன்னோராகிய யாக்கோபுவையே, சில இறைவாக்கி னர்கள், கிளர்ச்சியாளர்களின் வரிசையில் முதல் நிலைப்படுத்தினர் (ஓசே 12:3 தொ; எசா 43:27). ஆனால் இந்தக் கிளர்ச்சியாளர் கள் தங்களோடு ஒருவராகக் கருதப்பட்ட தங்களது சந்ததியினரைத் தங்களுடைய கீழ்ப் படியாமையிலும் தண்டனையிலும் ஈடுபடுத்தினர் (யாத் 20:5; எரே 32:18; பாரூ 3:4-5; புல 5:7; எசா 65:6-7; தானி 9:16). உடலியல் தந்தை நிலையின்படி தாங்கள் தந்தையராக இருப்பதன் காரணமாக, அசலான ஒழுக்க முறைத் தந்தை நிலையின் மூலம், தங்களது தவறுகளுக்கும் அல்லது அத்தவறுகள் விளைவிக்கும் தண்டனைகளுக்கும் தங்களது சந்ததியினரும் வாரிசுகளாவதாக அவர்கள் எண்ணினர். வெகுமதிபற்றிய தன்னியக்க எண்ணத்தினுடைய வெறுமை பற்றி எரேமியா அறிவிக்க (எரே 31:29-30), நெருங்கி விட்டதென எசேக்கியேல் பறை சாற்றுகிறார் (எசே 18). ஒவ்வொருவனுடைய பாவத்திற்கேற்பத் தண்டனை வழங்கப்படும்.

நாடு கடத்தப்பட்டதில் தொடங்கி, நன்மைத் தனத்தின் வரிசையில் கூட்டொருமைப்பாட்டினை நோக்கி, ஓர் ஒத்த வளர்ச்சி யானது உருவாக்கப்படுகிறது. ஆபிரகாம் மற்றும் யாக்கோபுவினுடைய உரிமைச் சொத்தானது பகைவர்களால் எடுத்துக் கொள்ளப்பட்டபோது (எசே 33:24), அவர்கள் தங்களது சந்ததியை மறந்து விட்டதாகத் தோன்றிய தருணத்தில் (எசா 63:16) செயல் பட்டது போல, தனது மக்களின் ஒரே தந்தை யாக இறைவன் எப்போதுமே தெளிவாகத் தோன்றியதில்லை. சோதனையின் இடையில் ''பண்புள்ள இஸ்ராயேலானது'' வடிவமைக்கப்பட்டது என்பதே இதற்குக் காரணம். இந்த இஸ்ராயேலுக்கு ஊனியல்பின் படியான ஆபிரகாமின் அனைத்துப் பிள்ளைகளும் உரியவராகாமல் நீதி மற்றும் நம்பிக்கை மீதான ஆபிராகாமின் தேடுதலைப் பின்பற்றுபவரை மட்டுமே கொண்டுள்ளது (எசா 51:1 தொ). மேலும் தந்தையர் மற்றும் தாயார் ஆகியோருடைய வரிசைப்படி, இஸ்ராயேல் இனமானதுதொடக்கத்திலிருந்தே தூய்மை யற்றதாக இருக்கவில்லையா (எசே 16:3)? புறவினச் சந்ததிகளுடன் தனது இனத்தின் ஒரு சிலர் கொண்டிருந்த தொடர்புகளை நாளாகம ஆசிரியரே ஏற்கவில்லையா (1 நாள் 2:18-55)? வாக்குறுதிகளின் மக்களோடு மதம் மாறியவர் இணைந்திருக்கக்கூடிய வாய்ப்பைப்பற்றி இறைவாக்கினர்களே போதிக்கவில்லையா (எசா 56:3-8; 2 நாள் 6:32-33)? தேசிய கிளர்ச்சிகளுக்கு மேற்பட்ட ஆபிரகாம் மற்றும் பெரிய முன்னோருடைய நலந்தரும் தந்தை நிலையானது இனத்தினாலன்றி விசுவாசத்தினால் மெய்யாக்கப்படும் காலம் வெகு தொலைவில் இருக்கவில்லை.

**2. நாட்டிலிருந்து உலகம் நோக்கி:** முன்னோருடைய தந்தை நிலையானது ஆன்மீக மானதாகக் கருதப்படும் அளவிற்கு, அது உலகளாவியதாகவும் உருவாயிற்று. ஆபிரகாமைப் பொறுத்தவரை இது தெளிவாகச்

சுட்டிக்காட்டப்படுகிறது. குருக்கள் பாரம்பரியப்படி அவரது பெயரானது மக்கள் திரளுக்கு அதாவது எண்ணற்ற மக்களுக்குத் தந்தை என்று பொருள்படும் (ஆதி 17:5). ''பூமியிலுள்ள இனமெல்லாம் உன் வழியாய் ஆசீர்வதிக்கப்படும்'' என்னும் ஆதி 12:3-இன் வாக்குறுதியானது கிரேக்க மொழிபெயர்ப்பில் ''உன்னில் ஆசீர்வதிக்கப்படும்'' என்று மாற்றப்படுகிறது (சீரா 44:21; அ.ப. 3:25; கலா 3:8). தேர்ந்தெடுக்கப்பட்ட இனத்தை மகிமைப்படுத்துவதற்குப் பதிலாக, அனைத்து நாடுகளும் ஒருநாள் ஆபிரகாமின் ஆசியில் பங்கு பெறுமென எழுபது நூல் மொழிபெயர்ப்பு பரிந்துரைக்கிறது.

இனத்தை முழுமையானதாக்கும் எதிர்ப்போக்கினால் அடிக்கடி மறுசமன்படுத்தப்படுகின்ற (எஸ் 9:2) இந்த உலகளாவிய போக்குகள் திருமுழுக்கு யோவானாலும் இயேசுவாலும் முடிக்கப் பெற்றன. ''இக்கற்களிலிருந்து ஆபிரகாமுக்கு மக்களை எழுப்பக் கடவுள் வல்லவர்'' என்று யோவான் கூறுகின்றார் (மத் 3:9). இயேசுவைப் பொறுத்தவரை; மீட்பிற்குத் தேவையானதாக ஆபிரகாமுடனான மகனுறவு இருக்கிறதெனின், அது அதனை உருவாக்குகின்ற உறுப்பினர் தன்மையன்று; மாறாக அது மனமாற்றம் (லூக் 9:9), மூதாதையரின் செயல்களைப் பின்பற்றுதல் அதாவது விசுவாசத்தைப் பின்பற்றுதல் (யோவா 8:33, 39-49) ஆகியவற்றில் அடங்கியுள்ளது. புறவினத்தாருக்கான அழைப்பின் மூலம் இறைவன், தந்தையருக்கு விசுவாசிகளின் ஆன்மீக சந்ததியை எழுப்புவார் என்பதைப் புரிந்து கொள்ளுமாறு கிறிஸ்துபோதிக்கிறார் (மத் 9:11).

**3. முன்னுரைத்தலினின்று உண்மையான நிறைவேற்றம் வரை:** இயேசுவின் அறிவிப்புக்கு விரைவான நிறைவேற்றத்தை அளித்ததன் மூலம், திருச்சபையின் வாழ்வானது, யூதத்தன்மைப் படுத்துபவர்களால் ஏற்பட்ட இடுக்கண் நிலையால் தூண்டப்பட்ட புறவினத்தாரின் ஆசிரியரை (1 திமொ 2:7), அதே மையக் கருத்துக்களை விரிவாக்க அனுமதிக்கிறது. பவுலைப் பொருத்தமட்டும் ''முன்னோரை முன்னிட்டு'' (உரோ 11:28) ''ஊனுடலின் படியான'' (1 கொரி 10:18) இஸ்ராயேலின் உறுப்பினர்கள், தங்களுக்களிக்கப்பட்ட வாக்குறுதிகளின் சிறப்பின் காரணமாக (அ.ப. 13:17. 32-33), மீட்பிற்கான அழைப்பில் ஒரு முதன்மை நிலையைக் (உரோ 1:16; அ.ப. 3:26) கொண்டிருந்தனர். ஆயினும் வாக்குறுதிகளுடைய உயர்ந்த மரபுரிமைமீது பலர் நம்பிக்கை வைக்க மறுத்து அதன் விளைவாக இசுமயேல் போன்ற அடிமைகளாகத் தங்களை ஆக்கிக்கொண்டனர் (கலா 4:25). ஆனால் ''இறைவனுடைய இஸ்ராயேலின்'' மையத்தில் (கலா 6:16), யூதருக்கும் புறவினத்தாருக்குமிடையே எவ்வித வேறுபாடுமில்லை (எபே 3:6). விருத்தசேதனம் செய்யப்பட்டாலும் இல்லாவிடினும், நம் அனைவருடைய தந்தையாகிய ஆபிரகாமின் விசுவாசத்திற்குரியவர்கள் என்று கோருவதன் மூலம், அனைவரும் மூதாதையரின் பிள்ளைகளாகவும், ஆபிரகாமுக்கும் அவரது தலைமுறையினருக்கும் வாக்களிக்கப்பட்ட ஆசிகளின் பயனாளர்களாகவும் ஆகிறோம் (கலா 3:7 தொ; உரோ 4:11-18). திருமுழுக்கின்போது, வாக்குறுதியின்படி ஆபிரகாமின் பிள்ளைகளுடைய புதிய ஆன்மீக இனம் உருவாகிறது (கலா 3:27). இந்த இனத்தினுடைய முதல் பிரதிநிதிகள் தங்களைத் ''தந்தையர்'' - என்று அழைத்துக்கொள்ளத் தயங்கவில்லை (2 பேதுரு 3:4).

**IV. தந்தையருடைய இறைவனின் தந்தை நிலை**

**1. தந்தையரிடமிருந்து தந்தைக்கு:** மனிதனுடைய தந்தைநிலை பற்றிய கருத்தின் முன்னேற்றமான ஆன்மீகமானது, இறைவனுடைய தந்தைத்தன்மை பற்றிய கருத்தின் வெளிப்பாட்டினை இயன்றதாக்கியது. நாடு கடத்தப்பட்ட காலத்தில் மூதாதையரின் தந்தைத்தன்மை செயல்படாததாகத் தோன்றியதெனில், ஆண்டவருடைய தந்தைத்தன்மையின் நிலையான தன்மையைப் போற்றிப் புகழ்வதற்கான ஒரு வாய்ப்பாக அது இருந்தது (எசா 63:16). இத்தகைய முரண்பாட்டிற்கும் அப்பாற்பட்டு, தந்தைத்தன்மை ஒரே நேரத்தில் இறைவனுக்கும்

குலமுன்னோருக்கும் சாற்றிக் கூறப்படலாம். இந்நிலையானது குருக்கள் பாரம்பரியத்திலிருந்தும் தோன்றியது. இறைவனின் சாயலாகப் படைக்கப்பட்டு (ஆதி 1:27), தனது சாயலாக மற்றவர்களை உருவாக்கும் (5:1தொ) ஆதாமை மரபுமுறைப்பட்டியலின் முதல்வராக்குவதன் மூலம் முன்னோரின் வரிசையானது இறைவனைநோக்கிச் செல்கிறதெனச் சுட்டிக்காட்டப்பட்டது. பிற்காலத்தில் லூக்காவும் இதனையே செய்கிறார் (லூக் 3:23-35). பவுலைப் பொறுத்தவரை, அனைத்துத் தந்தைத் தன்மையும் (ஒரு முன்னோரினின்று இறங்கி வருதல்) தனது வாழ்வு மற்றும் மதிப்பினை உயர் தந்தையாகிய இறைவனிடமிருந்தே பெறுகிறது (எபே 3:14-15). இவ்வாறு, மனிதத் தந்தையருக்கும் இறைவனுக்குமிடையே ஓர் ஒப்புமை நிலவுகிறது. இது தந்தை என்ற பெயரை இறைவனுக்குச் சாற்றிக்கூற அனுமதிக்கிறது. மேலும் இந்த இறைத் தந்தைத்தன்மை மட்டுமே மனிதத் தந்தைத்தன்மைகளுக்கு மீட்பின் திட்டத்தில் அவர்களது முழுப்பொருளையும் அளிக்கின்றது.

**2. இறைத் தந்தைத் தன்மையின் விஞ்சிய நிலை:** ஒப்புமையின் மூலம் வினவும் முறையானது, இறைவனைத் தனது தந்தையாக அழைக்க இஸ்ராயேலை நடத்திச் செல்லவில்லை. மாறாக, அது ஒரு வாழ்த்து அனுபவமாகும்; அயல் மக்களுக்கு எதிரான எதிர்ச் செயலாகவும் இருக்கலாம்.

அனைத்துப் பண்டைய நாடுகளும் இறைவனைத் தங்களது தந்தை என்று அழைத்தன. செமித்தியரிடையே இத்தகை வழக்கமானது அவர்களது வரலாற்றில் வெகுகாலத்திற்குப் பின்னோக்கிச் செல்லுகிறது. இறைவனுடைய தந்தைப் பண்பானது காப்பாளர், ஆண்டவர் மற்றும் அடிக்கடி, படைப்பாளர் முதலிய பண்புகளைக் கொண்டிருந்தது. உகாரித்து நூல்களில் (கி.மு. 16-ஆம் நூற்றாண்டு முதல் கானானிய தெய்வக்குழுவின் மேலான தெய்வங்கள் மற்றும் மனிதர் மீதான அவரது ஆதிக்கம் எடுத்துக் கூறப்பட்டது. குல மூதாதையருடைய இறைவனின் பெயராகவும் இருந்த ஏல் என்ற பெயரானது (ஆதி 46:3) மூலத்தில் "செயிக்"குக்குச் சிறப்புப்பெயராக இருந்தது. இது அவரது இனம் எனச் சில நேரங்களில் அழைக்கப்பட்டதன் மீதான அவரது அதிகாரத்தை இது சுட்டிக் காட்டுகிறது.

இந்த மூலப் பொருளின்படி, இறைத் தந்தைத்தன்மையின் கருத்து விவிலியத்திற்குள் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால், பழைய ஏற்பாட்டினால் நிராகரிக்கப்பட்ட மற்றொரு பொருளும் நிலவியது. எகிப்திய ''மின்'' னிற்கு ஒத்ததாக உள்ள, காளை மாட்டின் சாயலில் அமைந்த பெனிசிய ஏலானது தனது துணையைச் சினைப்படுத்தி, மற்றத் தெய்வங்களை ஈன்றெடுத்தது. பெண் தெய்வத்துடனான தனது ஒன்றிப்பைச் சடங்கு முறையில் பின்பற்றுவதனால் ஏலின் மகனாகிய பாகால், மனிதத் தம்பதிகள், விலங்குகள் மற்றும் மண் ஆகியவற்றை மிகுதியாக இனப்பெருக்கம் செய்தலில் சிறப்புற்று விளங்கினார். ஆனால் யாவே தனித்துவமிக்கவராய் உள்ளார். அவர் பாலினச் செயலையோ; பெண் துணையையோ, ஊனியல் பொருளில் மகனையோ கொண்டிருக்கவில்லை. சில நேரங்களில் கவிஞர்கள், வானதூதர்களையும் (உப 32:8; சங் 29:1; 89:7; யோபு 1:6), இளவரசர்கள் மற்றும் நீதிபதிகள் (சங் 82:1.6) ஆகியவர்களையும் ''இறைவனின் புதல்வர்கள்'' என்று கூறுவார்களாயின், அவர்களது சீரோ பெனிசிய ஆதாரங்கள், மற்றும் எவ்வித உடல் சார்ந்த தந்தை நிலையும் சாற்றிக் கூறப்படாத இறைவனுக்கு இந்தச் சாதாரண படைப்புகளை உட்படுத்த அவர்கள் கையாண்டவழியின் அடையாளமாக இது உள்ளது. யாவே இனப்பெருக்கத்தை உண்டு பண்ணுபவரெனில் (உப 32:6), அது தெளிவானவகையில், ஒழுக்கப் பொருளில் மட்டுமே. ஏனெனில், அவர் தெய்வங்களின் தந்தையாகவும், பெண் தெய்வத்தின் கணவராகவும் இல்லாமல், ஒரே நேரத்தில் (உருவகப் பொருளில்) தனது மக்களின் தந்தையாகவும் வாழ்க்கைத் துணையாளராகவும் உள்ளார் (ஓசே, எரேமியா). படைத்தவர் என்ற முறையில் அவர்

தந்தையாக இருந்தாலும் (எசா 64:7; மலா 2:10; ஆதி 2:7; 5:1 தொ), பாபிலோனியப் புராணங்களில் உள்ளது போன்று, இயல்பு கடந்த இறை மரபுகளின் மூலமாக அல்ல. இறுதியாகத் ''தானியம் முளைக்கச்செய்து அதை மிகுதியாய் விளையச் செய்யும்'' (எசே 36:29) இறைவன், சினைப்படுத்தும் பாகாலுடனும், இறைவாக்கினரை அச்சப் படுத்தியவனது சிற்றின்பச் சடங்குகளின் மந்திரத் துடனும் எதையும் பொதுவாகக் கொண் டிருக்கவில்லை. பாகால் தன்னைப் பின்பற்று கிறவர்களால் வேண்டப்படுகிற வழியில் தானும் வேண்டப்பட இறைவன் விரும்ப வில்லை (எரே 2:27). தங்களுடைய அயலா ரில் வலிமையாக இருந்த இறைத்தந்தைத் தன்மைக் கருத்தைப் பாலினப் பண்புகளி லிருந்து தூய்மைப்படுத்தவும், இறைவனுக் குச் சாற்றிக் கூறத்தக்க குடும்பத்தலைவர்கள் மற்றும் முன்னோரைப்பற்றிய சமூகச் சொற் றொடரின் மதிப்புமிக்க பண்புகளை மீட்டுக் கொள்ளவும் இஸ்ராயேலின் தலைவர்கள் விரும்பினரென அனைத்தும் சுட்டிக்காட்டு கின்றன.

**3. இஸ்ராயேலின் தந்தையாகிய யாவே:** தொடக்கத்தில், குறிப்பாக குழுத்தன்மை மற்றும் வரலாற்று முன்னோக்கில் இறைத் தந்தைத் தன்மை எண்ணம் உருவாக்கப்பட் டது. யாத்திரைக் காலத்தில் இஸ்ராயேலின் காப்பாளராகவும், உணவளிப்பவராகவும் அதன் தலைவராகவும் காட்டியபோது, இறைவன் இஸ்ராயேலின் தந்தையாக வெளிப்படுத்தப்பட்டார். இதன் அடிப் படையான கருத்து கீழ்ப்படிதலையும் நம்பிக்கையையும் கோருகின்ற நலஞ்செய் கிற மேலாண்மையாகும் (யாத் 4:22; எண் 11:12; உப 14:1; எசா 1:2 தொ; 30:1.9; எரே 3:14). ஓசேயாவும் எரேமியாவும் இந்த எண் ணத்தைக் கொண்டிருந்தனர். மேலும் யாவே யின் அளவற்ற பரிவை வலியுறுத்துவதன் மூலம் அதனை வளமிக்கதாக்கினர் (ஓசே 11:3-4.8-9; எரே 3:19; 31:20). நாடுகடத்தப் படுதலின் தொடக்கத்தில், இறைத் தேர்வின் மீது உருவாக்கப்பட்ட இறைவனுடைய தந் தைத் தன்மைப்பற்றிய அதே கருத்தே தொடர்ந்து பயன்படுத்தப்பட்டாலும் (எசா 45:10-11; 63:16; 64:7-8; தோபி 13:4; மலா 1:6; 3:17), மோசேயின் புகழ்ச்சிக்கீதம் சுவி கரித்தலின் கருத்தைச் சேர்த்தாலும் (உப 32:10), சில குறிப்பிட்ட சங்கீத ஆசிரியர்களும் (சங் 27:10; 103:13), சில ஞானிகளும் (பழ 3:12; சீரா 23: 1-4; ஞான 2:13-18; 5:5) ஒவ்வொரு நீதிமானையும் இறைவனின் மகனாக, அதா வது, அவரது பரிவுமிக்க பாதுகாப்பிற்கு உரியவராகக் கருதினர். மேலும், ''என் தந் தையே உதவியாவார்'' என்று பொருள்படும் அபியேசர் (யோசு 17:2) போன்ற பழைய இறைப்பொருள் பெயர்கள் தனி நபர்களுக்குச் சுட்டப்படுவது முழுவதும் புதியதொன் றல்ல.

**4. அரசரின் தந்தையாகிய யாவே:** தாவீ தின் காலம் முதல், யாவேயின் தந்தைத் தன்மை குறிப்பாக அரசர்களால் உரிமை கொண்டாடப்பட்டது (2 சாமு 7:14-15; சங் 2:7; 89:27-28;110:3). அரசனின் மூலமாக, அவர் பிரதிநிதித்துவம் வகிக்கின்ற முழு நாட்டிற்கும் இறை ஆதரவு சென்றடைந்தது. பண்டைய மேற்காசிய அரசர்கள் அனைவ ரும் அவர்களுடைய இறைவனின் சுவீ கரிக்கப்பட்ட பிள்ளைகளாகவே கருதப்பட்ட னர். ''நீரே எம் மகன்'' என்னும் சங் 2:7-இன் சொற்கள், அப்படியே பாபிலோனிய சுவி கார வாய்பாட்டில் காணப்படுகின்றன. ஆனால், இஸ்ராயேலுக்கு அப்பாற்பட்ட இடங்களில் தெய்வங்களுடைய கோரிக்கை கள், மேஷா நினைவுத்தூணில் கண்டுள்ள படி கோமேசிடம் கோரப்படுவதுபோல, வழக்கமாக மனம்போனபோக்கில் நிலையற் றவையாகவே இருந்தன (2 அர 3). எகிப்தில் இறைவன், ஊனியல்பின்படியான தந்தையா வார். ஆனால் இதற்கு முரண்பட்ட வகை யில், யாவே ஊனுடலின் அமைப்பைக் கடந்து சென்று அரசர்களுடைய ஒழுக்க முறைமையை உறுதிப்படுத்தினார் (2 சாமு 7:14).

அரசமகன் தன்மை பற்றிய இப்பகுதிகள், யூதாவின் அரசர்களுடைய வரிசையின் மூலம் தெளிவான முறையில் மெசியாவை

ஏற்கெனவே சித்தரித்துக்காட்டும் அளவிற்கு இயேசுவினுடைய தனித்தன்மைமிக்க மகன் தன்மையின் வெளிப்பாட்டிற்குத் தயாரித் தன. ஒவ்வொரு படைப்பிற்கும் முன் செல் லும் இறைவனின் மகனாக ஆட்தன்மைப் படுத்தப் பட்ட ஞானத்தின் விவரிப்பின் மூலம் (பழ 8), நாடு கடத்தப்பட்டதற்குப் பின், வெளிப்பாட்டிற்குப் புதியதொரு அணுகு முறை அளிக்கப்படுகிறது. இந்த ஞானம், இறைவாக்கினர் நாத்தானின் இறைவாக்கு முதல், தாவீதின் அரச மரபு வழியுரிமை வரை, அதைச் சேர்ந்த நம்பிக்கையைத் தன் னிலே சுருக்கமாகக் கொண்டுள்ளது.

**V. இயேசு தந்தையை வெளிப்படுத்து கிறார்:** கிறிஸ்தவ சகாப்தத்தின் வருகையுடன், இறைவன் தனது மக்களுக்கும், தன்னில் விசுவாசம் கொண்டுள்ள ஒவ்வொருவருக் கும் தந்தையாக உள்ளார் என்பதை இஸ்ரா யேல் நன்கு அறிந்திருந்தது. கிரேக்கர்கள் இச்சொல்லைப் பயன்படுத்திய முறைக்கு அஞ்சியதால், வெளிப்பாட்டு இலக்கியங்க ளில் ''தந்தை'' என்ற சொல் அரிதாகத்தான் காணப்படுகிறது. ஆனால் ராபிகளின் நூல் களில் ''வானகத்திலுள்ள எம் தந்தாய்'' (மத் 6:9) என்ற அதே வாய்பாடு காணப்படுகிறது. அவர்கள் நூல்களில் ''தந்தை'' என்ற பெயர் அடிக்கடி காணப்படுகிறது.

இறைவுனுடைய தந்தைத் தன்மை பற்றிய யூத சிந்தனையில் மிகச் சிறந்தவற்றை இயேசு நிறைவுபடுத்தினார். ''தூய இதயத் தோரின்'' சமுதாயத்தினால் உருவாகும் உண்மையான இஸ்ராயேலையும் (சங் 73:1) ''இறைவனது பிள்ளைகளின் சந்ததியையும்'' (73:15) சங்கீதத்திலுள்ள ஏழை மனிதன் காண்கிறது போன்று, ''சிறியவர்களாக'' (மத் 11:25) உருவாகிய ஒரு சமுதாயத்தையும் பற்றி இயேசுவும் கனவு கண்டார் (''எம் தந்தாய்'' என்று கூற வேண்டுமேயொழிய ''என்தந்தாய்'' என்று கூறக்கூடாது). இந்தச் சிறியவர்கள் ஒவ்வொருவரும் தனிப் பட்ட விதத்தில் இறைவனின் மகனாக இருப்பதால், தந்தை அவர்களுக்குத் தனது இரகசியங்களை வெளிப்படுத்துகிறார் (மத் 6:4.6.18). பிற்கால யூத சிந்தனையானது அடைந்த உலகளாவிய தன்மைக்கும் அப் பாற் சென்று, புதியதொன்றை அவர் எடுத் துக் கூறுகிறார். இந்த யூத சிந்தனை இறைவ னுடைய தந்தைத் தன்மையோடு படைத்தவ ரின் பண்பை இணைத்தாலும், அனைத்து மனிதருக்கும் இறைவனே தந்தை மற்றும் அனைத்து மனிதரும் சகோதரர்களே (எசா 64:7 மலா 2:10) என்னும் முடிவிற்கு அது இன்னும் வரவில்லை. மேலும், ''இறைவன் எல்லா உயிருக்கும் இரக்கம் காட்டுகிறார்'' (சீரா 18:13) என்று கருதப்பட்டாலும், இறை வனுடைய பிள்ளைகள், இஸ்ராயேலின் நீதி மான்கள் மட்டுமே அவ்விரக்கத்தின் முழு விளைவை அடைந்தனர் என்ற தகுதியும் பொதுவாகச் சேர்க்கப்பட்டது (ஞான 12:19-22; 2 மக் 6:13-16). தந்தைக்குரிய அன்பி னால் தூண்டப்பட்ட யாவேயிடமிருந்து வரும் திருத்தம் பற்றிய (பழ 3:11-12; எபி 12:5-3) உப ஆகமக் கருத்தானது (உப 8:5) செயலளவில் இவர்களுக்கு மட்டுமே பொருந்தியதாகும். ஆனால் இயேசுவைப் பொறுத்தவரை, இதற்கு மாறுபட்ட வகை யில் ''சிறியோரின்'' சமுதாயம் தந்தையின் சித்தத்தை நிறைவேற்றுகின்ற (மத் 21:31 தொ) திருந்திய யூதருக்கு மட்டுமே இன்னும் வரையறை செய்யப்பட்டிருந்தாலும், ''அர சின்பிள்ளைகளின்'' இடத்தைப்பெறும் (மத் 8:12) புறவினத்தாரையும் தன்னுள் கொண்டிருந்தது (மத் 25:32 தொ).

உரிமையால் ஏற்கெனவே அனைவருக்கும் திறக்கப்பட்ட இந்தப் புதிய இஸ்ராயேலுக் குத் தேவையான பொருட்களையும் (மத் 6:26. 32; 7:11), எல்லாவற்றிற்கும் மேலாக தூய ஆவியையும் அளித்து (லூக் 11:13), தனது மென்மையான இரக்கத்தின் எல்லை யற்ற அளவையும் தந்தை காட்டினார் (லூக் 15:11-32). இதற்கு அவசியமான ஒரே செயல் என்னவெனில், இந்தத் தனித்துவமிக்க தந் தைத் தன்மையை ஒருவன் தாழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு (மத் 23:9), அவரது உல களாவிய அன்பு (5:44-45), மன்னிக்கும் தன்மை (18:33; 6:14-15), இரக்கம் (லூக் 6:36; லேவி 19:2) மற்றும் நிறைவுடைமை (மத் 5:48)

ஆகியவற்றைப் பின்பற்றுகின்ற வேளை யில், அவரில் நம்பிக்கை கொண்டு (6:25-34), அவருக்குக் கீழ்ப்படிந்தவாறு தனது தந்தை யிடம் செபிக்கின்ற குழந்தையைப்போல் வாழ வேண்டும் (7:7-11). தந்தையைப் பின் பற்றுகின்ற கருத்தானது புதியதாக இல்லா விடினும் (லூக் 6:36 தார்கூம் நூலில் மீண்டும் காணப்படுகிறது), ஒருவர் மற்றவரை மன் னிப்பது மற்றும் பகைவருக்கும் அன்பு ஆகிய வற்றை இந்தப் பின்பற்றுதலில் வலியுறுத் துவதானது புதிதாக உள்ளது. மன்னிக்கும் போதும், அன்பு செய்யும்போதும் இறை வன் தந்தையாய் இருக்கும் அளவுக்கு, மற்ற வற்றில் இறைவன் என்றுமே தந்தையாக இருப்பதில்லை. அவ்வாறே, நமது சகோதர ரிடமும் அதே முறையில் நடந்துகொள்ளும் போது நாம் அவருடைய பிள்ளைகளா யிருக்கும் அளவுக்கு மற்றப்பொழுதில் இருப்பதில்லை.

**VI. இயேசுவின் தந்தை:**

**1. ஒரே மகனின் தந்தையாக இறைவன் இயேசுவால் வெளிப்படுத்தப்படுகிறார்:** ''என் தந்தை'' (மத் 7:21; 11:27; லூக் 2:49; 22:29) என்பதை ''உங்கள் தந்தையினின்று'' வேறுபடுத்துவதன் மூலமும் (மத் 5:45; 6:1; 7:11; லூக் 12:32), தனித்துவமிக்க அன்பு செய்யப்பட்ட (மாற் 12:6; 1:11; 9:7) மகனா கத் தன்னையே நெறிப்படுத்துவதன் மூல மும் (மாற் 13:32), தனிப்பட்ட பொருளில் இறைவனே தனது தந்தை என்பதை இயேசு வெளிப்படுத்துகிறார். குறிப்பாகத் தந்தைமட் டுமே வெளிப்படுத்தக்கூடிய தந்தையின் அனைத்து இரகசியங்களையும் முழுமை யாக அறியும் அளவிற்கு, இருவரிடையிலும் உள்ள ஒன்றிப்பின் உணர்வினை வெளிப் படுத்துவதன் மூலமும் இது நடைபெறுகிறது (மத் 11:25 தொ). தந்தை மற்றும் மகன் என்ற சொற்களின் மிக உயர்ந்த பொருளானது (இயேசுவால் சாதாரணமாகத் தவிர்க்கப் பட்ட ''இறைமகன்'' என்பதில் உள்ளதாகி லும்) தன்னிலேயே வெளிப்படையானதாக வும், அவருக்குச் செவிமடுப்போரால் உண ரப்படக்கூடியதாகவும் இருக்கவில்லை (லூக் 4:41-இல் இறைமகன் என்பது கிறிஸ்துவைக் குறிக்கிறது). ஆனால் அப்பொருள் ''மனு மகன்'' என்ற பெயரின் பொருளாலும், மனித அதிகாரத்திற்கு அப்பாற்பட்ட அதி காரத்தைக் கோரிய உரிமையின் மூலமாகவும் உறுதிப்படுத்தப்படுகிறது. அப்பா என்று கூறி இயேசு தனது தந்தையை நோக்கி உரைக் கின்ற செபமும் (மாற் 14:36) இதனை உறு திப்படுத்துகிறது. இந்த நெருக்கத்திற்கு இயேசுவிற்கு முன் வேறு உதாரணமே இல்லை; இணையற்ற உறவையும் அது வெளிப்படுத்துகிறது.

**2. தந்தைத்தன்மையின் நித்திய செயலில்:** இச்செயல் இறைவன் தமக்கே இணையான வரை அளித்துக் கொள்கிறார். ''நமது ஆண்டவ ராகிய இயேசு கிறிஸ்துவின் தந்தையைப்'' பற்றி (உரோ 15:6; 2 கொரி 1:3; 11:31; எபே 1:3; 1 பேதரு 1:3) ஒத்தமை நற்செய்தி யாளர்கள் கூறியதைத் தொடக்ககால இறை யியல் வல்லுநர்கள் வெளிப்படையாக்குகின் றனர். தந்தை என்னும் பெயராலேயே அவர் கள் அவரை அடிக்கடி குறிப்பிடுகின்றனர். கடவுளே என்று சாதாரணமாகக் கூறும் போதெல்லாம் அவரைப்பற்றியே அவர்கள் எண்ணுகின்றனர் (2 கொரி 13:13). தந்தை மற்றும் மகனுடைய உறவுகளை மீட்பில் செயலாற்றுபவர்களாகப் பவுல் எடுத்துக் கூறுகிறார். ஆயினும், சுவிகரிக்கப்பட்ட பிள்ளைகளுடன் இறைவனின் முறையான மகனை அவர் ஒப்பிட்டுப் பேசும்போதும் (உரோ 8:15.29.32), படைப்புச் செயலையே ''அன்பார்ந்த மகனுக்குச் சாற்றிக் கூறும்'' போதும் (கொலோ 1:13.15 தொ), இறைவ னில் மிக உயர்ந்த மற்றும் நித்திய தந்தைத் தன்மையின் ஓர் மறையுண்மை உள்ளது என்பதை இது ஏற்றுக்கொள்கிறது.

யோவான் இதற்கு மேலும் செல்கிறார். ஈன்றெடுக்கப்பட்ட ஒரேயொருவர் அதா வது ஒரே அன்புக்குரிய மகன் என்று அவர் இயேசுவை அழைக்கிறார் (யோவா 1:14.18; 3:16.18; 1 யோவா 4:9). இந்த மகன் தன் மைக்கு ஏற்றவாறு தந்தைத் தன்மையின் தனித்துவப்பண்பை அவர் வலியுறுத்து கிறார் (யோவா 20:17). தந்தை மகனிடம்

நிறைவேற்றுமாறு அளித்த புதுமையான செயல்களால் வெளிப்படுத்தப்பட்ட *(5:36)* விருப்பங்கள் *(5:30)* மற்றும் செயல்பாடு களின் *(5:17-20)* முழுமையான ஒன்றிப்பு, ஒருவர்க்கொருவர் கொள்ளும் உள்ளுறை வியல்பு *(10:38; 14:10-11; 17:21)* அறிவு மற்றும் அன்பினால் ஒருவர்க்கொருவர் கொண் டிருந்த நெருக்கம் *(5:20.23; 10:15; 14:31; 17:25 தொ)*, அவர்கள் ஒருவர்க்கொருவரை மகி மைப்படுத்துதல் *(12:28; 13:31-32; 17:1.4-5)* ஆகியவை தந்தை மகனுக்குள் உள்ள தனித் துவ உறவை வலியுறுத்துகின்றன. செயல் மட்டத்திலிருந்து மெய் (இருத்தல்) மட்டத் திற்குக் கடந்து சென்று, இறைவனுடனான சமநிலை பற்றிய இயேசுவின் அறிவிப்பை யூதர்கள் புரிந்து கொண்டனர் *(5:17-18; 10:33; 19:7)*. அவர்களது நிலை சரியே. இறைவன் உண்மையாகவே இயேசுவினுடைய சொந் தத் தந்தையே. ஆபிரகாமிற்கு முன்பே இயேசு *(8:57-58)* ''தந்தையின் அணைப்பில்'' வாழ்ந்தார் *(யோவா 1:18; 1 யோவா 1:1 தொ)*.

**3. தனது மனுவுரு நிலையில், மகன் தந் தைக்குக் கீழ்ப்படிந்தவராக உள்ளார்:** மகன் என்ற தகுதியானது இயேசுவைத் தந்தை யாகிய இறைவனுக்குச் சமமானவராக ஆக்கி னாலும், கிறிஸ்துவின் கருத்துப்படியும் *(மத் 26:39; 11:26-27; 24:36)* புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களின் கருத்துப்படியும், தம் முடைய தந்தைக்குரிய தனியுரிமைகளைப் பெற்றிருப்பதில் தந்தை எவ்விதத்திலும் குறைந்தவரல்லர். தொடக்க காலப் போதனை யும் *(அ.ப. 2:24)* பவுலும் *(1 தெச 1:10; 2 கொரி 4:14)* இயேசுவின் உயிர்ப்பைத் தந்தைக்கே சாற்றிக்கூறினார். மீட்பைப் பொறுத்தவரை முன்முயற்சியைத் தந்தையே கொண்டுள்ளார். கிறிஸ்தவரையோ *(2 தெச 2:13-14)* அப்போஸ்தலரையோ *(கலா 1:15-16)* தேர்ந்தெடுத்து அழைப்பவர் அவரே. நேர்மைப்படுத்துபவரும் அவரே *(உரோ 3:25.30; 8:30)*. இயேசு ஓர் அவசியமான இடையாளர் மட்டுமே. தந்தை அவரை அனுப்புகிறார் *(கலா 4:4; உரோ 8:3)*; அவ ரைக் கையளிக்கிறார் *(உரோ 8:32)*; செய்வ தற்கு ஒரு பணியையும் *(யோவா 17:4)* பேசுவதற்குச் சொற்களையும் *(12:49)*, மீட்ப தற்கு மனிதரையும் *(6:39-40)* அளிக்கிறார். அனைத்திற்கும் தொடக்கமும் முடிவும் தந் தையே *(1 கொரி 8:6)*. அவரைச் சார்ந்து செயல்படுகின்ற மகன் *(யோவா 5:19; 14:10; 15:10)* காலத்தின் இறுதியில் தமது தலைவ ராகிய இறைவனிடம் *(1 கொரி 11:3)* அடி பணிவார் *(15:28)*.

**VII. கிறிஸ்தவரின் தந்தை:** இயல்பாகவே இயேசு இறைவனின் பிள்ளையாக இருப்ப தன் காரணமாகவே, இறைவனின் பிள்ளைக ளாவதற்கு மனிதர்கள் வல்லமை கொண் டுள்ளனர் *(யோவா 1:12)*. ஒத்தமை நற்செய்தி களின் கிறிஸ்து, தன்னைத் தனக்குரியவர்க ளுடன் ஒன்று படுத்துவதன் மூலமாகவும் *(மத் 18:5; 25:40)*, தன்னை அவர்களது சகோ தரனாக அழைப்பதன் மூலமாகவும் *(28:10)*, ஒரு நேரத்தில் ''பிள்ளைகள்'' என்னும் பொதுப்பெயரின் கீழ், தன்னை அவர்க ளுடன் அடையாளப்படுத்துவதன் மூலமாக வும் *(17:26)* இந்தக் கருத்துப்பற்றி முதலில் ஒளிவீசச் செய்தார். ஆனால், பவுலின் மூல மாகவே நிறை ஒளி நமக்குக் கிடைக்கிறது. கிறிஸ்துவில் நம்மை ஓருயிராக்குகின்ற திரு முழுக்கு விசுவாசத்தின் மூலமாக *(கலா 3:26 தொ)* இறைவன் நம்மை அடிமைத்தனத்தி னின்று விடுவித்து, பிள்ளைகளாகச் சுவீகரித் தார் என்று நமக்குக் கூறுபவர் பவுலே *(கலா 4:5 தொ; உரோ 8:14-17; எபே 1:5)*. தனது சகோதரர்களுடன் தந்தையின் உரிமைச் சொத்தில் பங்கு அளிக்கின்ற மூத்த மகன் கிறிஸ்துவே *(உரோ 8:17.29; கொலோ 1:18)*. இச்சுவிகாரத்தின் உள்ளார்ந்த செயலாளராக இருக்கின்ற காரணத்தால் ஆவியே அதன் சாட்சியாகவும் உள்ளார். ஆவியானவர் நம் மைக் கிறிஸ்துவுக்கு ஒத்தவர்களாக்கிக் கிறிஸ்துவினுடைய ''அப்பா'' என்னும் அதே செபத்தை *(கலா 4:6; உரோ 8:14தொ. 29)* நம்மில் தூண்டுவதன் மூலம், அவர் சுவிகரித் தலுக்குச் சான்று பகர்கிறார். உயிர்ப்பின் காலம் முதல், ''வானகத்திலுள்ள எங்கள் தந்தையே'' என்ற செபத்தினை உச்சரிப்பதன் மூலம், இறைவன் தனது ஒரே மகனைத்

தழுவுகின்ற அதே அன்பினால் அன்பு செய்யப்படும் உணர்வைத் திருச்சபையானது எடுத்துக்கூறுகிறது (1 யோவா 3:1). கிறிஸ்துவைப் போன்று ''தந்தையே'' என்று மட்டுமே நாம் கூறுமாறு செய்வதன் மூலம் (லூக் 11:2), லூக்கா சந்தேகத்திற்கிடமின்றித் தூண்டுவதும் இதுவே.

செபத்தில் வெளிப்படுத்தப்பட்ட நமது மகனுக்குரிய வாழ்வானது, சகோதர அன்பினாலும் வெளிப்படுத்தப்படுகிறது. நமது தந்தையை நாம் அன்பு செய்தால், அவரது பிள்ளைகளாகிய நமது சகோதரர்களையும் அன்பு செய்வதினின்று நாம் தவற முடியாது. ''தந்தைக்கு அன்பு செய்பவன், தந்தை பெற்ற மகனுக்கும் அன்பு செய்கிறான்'' (1 யோவா 5:11).

**தந்தையின் குடும்பத்தார், வீட்டார்** (FATHER'S HOUSE)

பழைய ஏற்பாட்டில் யோசேப்பு தன் சகோதரர்களோடு பேசும்போது இச்சொல் பயன்படுகிறது (ஆதி 46:31; 50:22). தந்தையின் இல்லம் என்பது வெறும் வீட்டை மட்டும் குறிக்காது. மாறாகத் தன் சொந்த சமூகத்தையே, குடும்பத்தாரையே அதன் சமூக - உளவியல் பொருளில் குறிக்கும். யோசேப்பு இந்த இடத்தில் தன் சகோதரர்கள் அவர்களின் மனைவி மக்கள், வேலையாட்கள் எல்லோரையும் சேர்த்துத்தான் குறிப்பிடுகிறார். நீதி 11:2 இலும் இது பயன்படுத்தப்பட்டுள்ளது. இது பங்காளிகளையோ சொந்த குடும்பத்தையோ குறிக்கும். இது கணக்கெடுப்பிற்குப் பயன்பட்டது. இச்சொல் பெரும்பாலும் பன்மையிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது (எண் 1:2; 1 நாள் 4:38; 5:13 தொ; 7:2.7; 23:11; எஸ் 2:59; 10:16; நெகே 7:61).

புதிய ஏற்பாட்டில் தந்தையின் இல்லம் என்பது எருசலேம் தேவாலயத்தைக் குறிக்கிறது (யோவா 2:16; அ.ப. 7:47.49). இயேசுவின் பெற்றோர் அவரைத் தேடியபோது 'என் தந்தையின் இல்லத்தில் நான் இருக்க வேண்டும் என்பதை அறியீர்களோ'' என்று இயேசு சொன்னார் (லூக் 2:49). யோவான் நற்செய்தியின்படி இச்சொற்றொடர் விண்ணகத்தை அதாவது கடவுளின் உறைவிடத்தையே குறிக்கும் (யோவா 14:2).

**தபத்து** (TABBATH - புகழ்பெற்ற)

யோர்தானுக்குக் கிழக்கே கிதியோன் மிதியானியர்களைத் தபத்துவரை துரத்திச் சென்று அவர்களை இசிரியேல் சமவெளியில் அழித்தார் (நீதி 7:22). இது ஆபல் மெகோலாவுக்கு அருகில் இருந்தது. இது படைகளை ஒன்றுகூட்டி நிறுத்துவதற்கு வசதியான இடமாகக் கர்க்கோர் பகுதியில் இருந்திருக்க வேண்டும் (8:10). இங்கிருந்து தான் கிதியோன் அவர்களை இரண்டாம் முறையாகத் தோற்கடித்துவிட்டுத் திரும்பினார் (8:13). ஆகவே, இது கிழக்குக் கிலயாது மலைப்பகுதியில் இருந்திருக்க வேண்டும். அப்படி இருந்ததால் தோல்வியுற்ற வீரர்கள் பின்வாங்கி ஒன்று கூடுவதற்கு உதவியாக இருந்திருக்க வேண்டும். யோர்தான் ஆற்றுக்குக் கிழக்கிலும் வாடி குப்ரின்சேயேக்கு வடக்கிலும் கிலயாது சரிவிலுமுள்ள ர்ாசு அபு தபத்தாக இருக்கலாம்.

**தபசேத்து** (DABBESHETH - கூனல்)

செபுலோனின் ஒரு எல்லை நகரம். இது இருந்த இடம் துல்லியமாகத் தெரியவில்லை என்றாலும் வாசகச் சூழ்நிலை இது யோக்னயாம் என்ற இடத்திற்கு அருகில் இருந்திருக்கலாம் என்றும், அது தேல் எஸ்-செம்மானாய் இருக்கலாம் என்றும் சுட்டுகிறது.

**தபரிம்மோன்** (TABRIMMON - ரிம்மோன் (கடவுள்) நல்லவர்)

தமஸ்குவின் அரசனான முதலாம் பெனதாதுவின் தந்தை (2 அர 5:18). எசியோனின் மகன் (1 அர 15:18). அனேகமாகப் பெனதாதுக்குமுன் தமஸ்குவைத் தபரிம்மோன் ஆட்சி செய்திருக்க வேண்டும். இவரைப்பற்றி வேறு ஒன்றும் விவிலியத்தில் கொடுக்கப் படவில்லை.

**தபராத்து** *(DABERATH - மேய்ச்சல் நிலம், புல்தரை)*

இசக்காருக்கும் செபுலோனுக்கும் இடையில் உள்ள எல்லையில் *(யோசு 19:13)* அமைந்த இசக்காருக்குச் சொந்தமான ஒரு லேவியர் நகரம் இது. நாடுபங்கீடு செய்யப்பட்டபின் கேர்சேனியருக்கு இறைவனால் கொடுக்கப்பட்டது *(யோசு 21:28; 1 நாள் 6:72)*. யோசு *19:20*-இல்வரும் இரபீத்து என்ற இடம் இந்த ஊரையே குறிக்கலாம். தாபோர் மலைக்கு மேற்கேயுள்ள தெபுரியேதான் இவ்விடம் என்று கருதப்படுகிறது.

**தபாயோத்து** *(TABBAOTH - முத்திரை மோதிரம்)*

நாடு கடத்தலிலிருந்து திரும்பிய ஆலய ஊழியர்களின் அல்லது நெத்தினிமியர்களின் ஒரு குடும்பத்தின் தலைவர் *(எஸ் 2:43; நெகே 7:46)*.

**தப்பறை** *(HERESY)*

***1. பிளவு மற்றும் தப்பறை:*** இவ்விரு சொற்களும் கிறிஸ்தவ மக்களுக்குள் கடுமையான மற்றும் தொடர்ந்திருக்கின்ற பிரிவினையைச் சுட்டுகின்றன. இவை இரண்டும் இரு வேறுபட்ட மட்டத்தில் உள்ளன. பிளவு என்பது படிமரபுக்கூட்டமைப்பின் சூழலில் ஏற்படும் முறிவாகும். ஆனால், தப்பறையோ விசுவாசத்தின் சூழலிலேயே முறிவை ஏற்படுத்துகின்றது.

பழைய ஏற்பாட்டில் விசுவாசத்தினுடைய அறிவு பூர்வ உட்பொருளானது குறிப்பிட்ட அளவுடையதாகவும், தப்பறைக்கு இடமளிக்கச் சிறிதளவே செயல்படுத்தப்பட்டதாகவும் இருந்தது. இஸ்ராயேலின் சோதனையானது, துல்லிய கோட்பாட்டின் அமைப்பினின்று விருப்பப்படி தேர்ந்தெடுப்பதாக இல்லாமல், ''பிற தெய்வங்களைப் பின்பற்றுவதாகவே'' இருந்தது *(உப 13:3)*. இது தப்பறை என்பதை விடக் கொள்கை மாறுதல் அல்லது சிலை வழிபாடு எனப்பட்டது. மக்களைத் தவறான பாதைக்கு நடத்திச் சென்றவர்களும், அவர்களைப் பின்சென்றவர்களும், ஒரே இறைவனும் இஸ்ராயேலின் மீட்பருமான யாவேயிடமிருந்து தங்களைத் துண்டித்துக் கொண்டனர். ஆனால், புனித மக்களின் ஒன்றிப்பில் பிளவை ஏற்படுத்தவில்லை. அவர்களிடமிருந்து துண்டித்து விடுமாறு அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தனர் *(உப 13:6)*.

''தப்பறை'' என்ற சொல்லின் துல்லியமான பொருள் உணர்வானது, புதிய ஏற்பாட்டின் சில குறிப்பிட்ட பிற்கால நூல்களில் மட்டுமே தோன்றுகிறது *(2 பேதுரு 2:1; தீத் 3:10)*. பவுலைப் பொறுத்தவரை, *1 கொரி 11:18*-இனுடைய பிரிவினைகள், *11:18*-இனுடைய பிளவுகளிலிருந்து அரிதாகவே வேறுபட்டவையாக உள்ளன. சமுதாயத்திற்குள்ளிருக்கும் பிளவுகள், தமக்கேயுரிய தனிப்பட்ட கருத்துக்களுடன், உண்மையான எதிர்க்குழுக்களாக உருவாவதற்கு நாட்டம் கொள்கின்றன. யூதமதத்தில் சதுசேயர் *(அ.ப. 5:17)*, பரிசேயர் *(15:5; 26:5)* மற்றும் நசரேயர் *(24:5.14; 28:22)* என்ற அளவிலும், கிரேக்க உலகில் சொற்கோப்புக்கலைப் பள்ளிகளிலும் அவர்கள் இருந்தனர்.

கோட்பாட்டுத் தவற்றின் இக்கருத்தில் திருச்சபையானது இரு மாறுபட்ட சூழ்நிலைகளுடன் நன்கு அறிமுகமானதாக உள்ளது. முதலாவதாக, அதனுடைய ஒற்றுமையானது யூதமயமாக்கும், பிரச்சினையால் அச்சுறுத்தப்பட்டது. பிற்காலத்தில், குறிப்பிட்ட மக்கள் கிறிஸ்துவிலான விசுவாசத்தினின்று தங்களையே துண்டித்துக் கொண்டனர் *(1 யோவா 4:3)*. ''உண்மையில் இவர்கள் நம்மைச் சார்ந்தவர்கள் அல்லர்' *(2:19)*. கப்பர்நாகுமில் இயேசுவை விசுவசிக்க மறுத்து *(யோவா 6:36.64)* அவரை விட்டு விலகிச் சென்ற *(6:66)* சீடரைப் போன்றவர்களே இவர்கள்.

***2. யூத மயமாக்கும் பிரச்சினை:*** திருச்சபைக்குள் புறவினத்தாரை அனுமதித்தானது வெகுவிரைவில், யூதக் கிறிஸ்தவர்கள் தொடர்ந்து பின்பற்றி வந்த யூத நடைமுறைகளுடைய மதிப்பீடுமீது வினாக்களுக்கு இடமளித்தது. கிறிஸ்தவத்திற்கு வருகின்ற

புறவின மனமாறியவர்களின்மீது அவற்றைச் சுமத்துவதானது மீட்பிற்கு அவை அவசிய மானவையெனக் கருதப்படும். யூதமயமாக்க விரும்பியவர்கள் கோரியது உண்மையில் இந்நிலையே (அ.ப. 15:1). ஆனால், பவுலைப் பொருத்தமட்டும், இக்கோரிக்கை கிறிஸ்துவைப் பொருளவற்றவராக்கி, சிலுவையினின்று அதனுடைய மொத்த மதிப்பையும் நீக்கிவிடுகிறது. சட்டத்தில் நீதியை நாடுவதென்பது, கிறிஸ்துவோடு முறிவுற்று, அருளினின்று விழுவதாகப் பொருள்படும் (கலா 5:1-6). திருச்சபையானது பிளவினால் அச்சுறுத்தப்பட்டது. எவ்வாறாயினும் புறவினக் கிறிஸ்தவர்களின் சுதந்தரம் பற்றி (2:4; 5:1) யூதக் கிறிஸ்தவ உடன்பாட்டையும், எல்லாவற்றிற்கும் மேலாக ''யாக்கோபு, பேதுரு, யோவான் ஆகியோருடைய'' உடன்பாட்டைப் பெறவும் (2:9) பவுல் விரும்பினார். கி.பி. 48-இல் எருசலேம் சங்கத்தில் அவர் அதனைப் பெற்றார் (அ.ப. 15; கலா 2:1-10). அதைப் பெறாமலிருந்தால், ''இதுவரை அவர் உழைத்த உழைப்பும் வீணாகும்'' (கலா 2:2). அதாவது, அப்போஸ்தலிக்க வெளிப்பாடானது தன்னையே முரண்படுத்தியிருக்கும் (எபே 3:3-5). ''நீங்கள் பெற்றுக்கொண்ட நற்செய்தியினின்று வேறானதொன்றை எவனாவது உங்களுக்கு அறிவித்தால், அவன் சபிக்கப்படுக'' (கலா 1:9).

**3. தொடக்க நிலையிலுள்ள தப்பறைகள்:** பவுலின் செய்தியானது கிரேக்க ஞானத்தையும் குறை கூறுவதாயிருந்தது. இந்த ஞானத்துடனான கொரிந்தியரின் மோகமானது, கோட்பாட்டுச் சிக்கல்களையும் கொண்டிருந்தது. மற்றவர்கள் பல்வேறுபட்ட அலைந்து திரியும் மெய்யியலாரின் குழுக்களினின்று தேர்ந்தெடுப்பது போலக் கொரிந்தியர்களும் பவுல், அப்பொல்லோ மற்றும் கேபா ஆகியோரினின்று தேர்ந்து கொள்ள முடியும் என்று எண்ணியிருந்தனர். மேலும், எல்லா அப்போஸ்தலர்களும் பயன்படுத்திய ''சிலுவையின் மொழிக்கு'' அவர்கள் காதுகேளாதோராக இருந்தனர் (1 கொரி 1:17-18). இல்லாவிடில் இறந்தோரின் உயிர்ப்பைப்பற்றி விவாதிக்கலாயினர். இவ்வாறாகத் தங்களது விசுவாசத்தின் அத்யாவசிய உட்பொருளாகிய இயேசுவின் உயிர்ப்பின் மீதான போதனையையும் விசுவாசத்தையும் வெறுமையாக்கினர் (15:2. 11-16).

பிற்காலத்தில் கிறிஸ்துவில் முதன்மை பற்றிய கொலோசையரின் விசுவாசத்தை அச்சுறுத்தவும் (கொலோ 2:8-15; எபே 4:14-15), அவர்களை மீண்டும் இருளின் ஆட்சிக்குக் கொண்டு செல்லவும் (கொலோ 2:17) யூத யூகங்கள், கிரேக்கக் கருத்துக்களுடன் ஒன்று சேர்ந்தன.

அப்போஸ்தலிக்கக் காலத்தின் இறுதி ஆண்டுகளில், முரண்பட்ட யூதர் அல்லது புறவினத்தாரிடமிருந்து பெறப்பட்ட ஞானவாதத்திற்கு முற்பட்ட கருத்துக்களின் அபாயமானது (1 திமொ 1:3-7.19-20; 4:1-11; 6:3-5; 2 திமொ 2:14-26; 3:6-9; 4:3-4; தீத் 1:9-16; யூதா; 2 பேதுரு 2; 3:3-7; திருவெளி 2:2.6.14-15.20-25) மிகவும் நெருக்குவதாக இருந்தது. ''ஊனுடல் எடுத்து வந்த'' இறைமகன் இயேசுவே என்பதைச் (1 யோவா 2:22-23; 4:2-3; 2 யோவா 7) சில ''போலி இறைவாக்கினர்கள்'' (1 யோவா 4:1) மறுக்கவும் செய்தனர்.

விவாதங்களுக்கும் பிளவுகளுக்கும் இடமளிக்கின்ற இந்தப் பிறழ்தல்கள் (1 திமொ 6:3தொ; தீத் 3:9; யூதா 19), கொரிந்திலாயினும் (1 கொரி 4:18-19), கொலோசையிலாயினும் (கொலோ 2:18), அல்லது வேறெவ்விடத்திலாயினும் (1 திமொ 6:4; 2 திமொ 3:4), திருச்சபை முழுவதிலும் ஒருமித்தவாறு போதிக்கப்படுகின்ற கோட்பாட்டிற்கு அடிபணிய மறுக்கின்றவர்களுடைய கடினமான செருக்கினின்று விளைகின்றது (உரோ 6:17; 1 கொரி 15:11; 1 திமொ 6:3; 2 பேதுரு 2:21). இவர்கள் தமேக்கேயுரிய ஊகங்களால் அதனை முன்னேற்ற விரும்புவதன் மூலம் அதனை மாற்றுகின்றனர் (2 யோவா 9). எனவே, அவர்களில் மிகவும் அபாயகரமானவர்கள், புறம்பாக்கப்படுகின்றனர் (தீத் 3:10; 1 திமொ 1:20; யூதா 23; 2 யோவா 10).

சேதப்படுத்தப்படாத விசுவாசமானது எவ்வளவு மதிப்பு மிக்கது என்பதைப் போலிப்

போதகரைக் குறித்த புதிய ஏற்பாட்டின் கடு மையானது காட்டுகிறது (2 திமொ 1:19; 2 திமொ 3:8). இந்நிலையானது, அப்போஸ்தல ரிடமிருந்து பெறப்பட்ட நலமிக்க போத னையை அச்சுறுத்துகின்ற தவறுகளின்மீது வெற்றி கொண்டுள்ள திருச்சபையுடன் நம்மை உறுதியாகப் பிணைக்கிறது (2 திமொ 1:13-14.

**தப்புவாகு** (TAPPUAH - ஆப்பிள் மரம், தின் கனி தரும் மர வகை) - ஆள்

காலேபு இனத்தைச் சேர்ந்த எபிரோனில் தோன்றியவர் (1 நாள் 2:43). இவரது பெயரி லேயே தப்புவாகு நகரம் தோன்றியிருக்க வேண்டும். இப்பெயர் ஒரு வேளை பெத் தப்புவாகு என்ற ஊரைக் குறிக்கலாம் (யோசு 15:53).

**தப்புவாகு** (TAPPUAH) - இடம்

1. ஏதோமின் எல்லை ஓரமான சமவெளிப் பகுதியில் செபேலா அருகில் யூதாவின் புதல்வர்களுக்குக் கிடைத்த ஊர்களில் தப்பு வாகும் ஒன்று (யோசு 15:34). இதனைத் தெளிவாகக் குறிப்பிட விரும்பிய யூதர்கள் இதனைச் செபேலா தப்புவாகு என்று அழைத்தனர். ஏனெனில் பெத் - தப்புவாகு (யோசு 15:53) என்ற ஓர் இடமும் அன்று இருந்தது. இந்தச் செபேலா தப்புவாகு எங்கு இருந்தது என்று கூற முடியாது. ஆயினும் இது பெத்லகேமுக்கு மேற்கில் 20 கி.மீ. தொலைவிலுள்ள பெயிட் நெட்டிப் என்று அடையாளம் காட்டப்படுகிறது.

2. எப்பிராயிமின் வட எல்லையில் உள்ள ஒரு வடகானானிய நகரம் (யோசு 16:8). யோசுவாவின் தலைமையில் இஸ்ராயேலர் இதைத் தோற்கடித்தனர் (12:17). இது ஏன் - தப்புவாகுவோடு தொடர்பு படுத்தப்பட்டு, மனாசேயின் தென் எல்லையில் இருந்த எப்பிராயிமுக்கும், அதைச் சுற்றியுள்ள பகுதி மனாசேக்கும் குறிக்கப்பட்டிருந்தது (17:1-8). இது இக்காலச் செயிக் அபு சராது என்று அடையாளம் காட்டப்படுகிறது. இதுவும் திப்சாகு (2)வும் ஒன்றே என்று கருதப்படு கிறது (2 அர 15:16). இந்த இடம் இஸ்ராயேல் அரசன் மெனகேமால் கடுமையாகத் தாக்கப் பட்டது. அதே வரிசையில் திரட்சாவும் குறிக் கப்படுவதால், இது ஒரு வேளை எப்பிராயி மின் தப்புவாகுவைக் குறிக்கலாம்.

**தமஸ்கு** (DAMASCUS)

சீரியா (ஆராம்) நாட்டின் ஒரு நகரம். எதிர் லெபனோன் மலையின் கிழக்குச் சரிவு களில், தென்மேற்கில் எர்மோன் மலைகளை யும் கொண்டு இன்றைய சீரியாவின் தலை நகரமான தமஸ்கு அமைந்துள்ளது.

தமஸ்கு நிலப்பரப்பானது ஆறுகளாலும், கால்வாய்களாலும், நீர்பாய்ச்சப்படுகின்ற ஒரு பாலைவனச் சோலை. எதிர்லெபனோன் புறப்படும் அபானா ஆற்றின் கரையில் தமஸ்கு அமைந்துள்ளது. நகருக்குத் தெற்கே பர்பார் ஆறு கிழக்கு நோக்கி ஓடுகிறது. பழங்காலம் தொட்டே வணிகத்திலும், சம யங்களிலும் தமஸ்கு ஒரு முக்கியமான இடத்தை வகித்திருந்தது. ஏனெனில் இது வெகுகாலத்திற்கு முன்பிருந்தே இராணுவ, வணிகச் சாலைகள் சந்திக்கும் இடமாக இருந்தது.

தமஸ்கு பழைய ஏற்பாட்டில் பலமுறை சொல்லப்பட்டுள்ளது; அப்பொழுது இது அரமேயருடைய (சீரியா) அரசின் தலைநகர மாக இருந்தது (காண்க. ஆதி 14:15; 15:12; 1 அர 11:24; 15:18; 19:15; 20:34; 2 அர 8:7.9; 14:28; 16:10-12; எசா 7:8).

மூன்றாம் துட்மோசின் குறிப்புகளில் (கி.மு. 16-ஆம் நூற்றாண்டு) இப்பெயர் முதன்முதல் தோன்றுகிறது. தமஸ்குவிற்கு அருகில் இருந்த இடங்களில் பல முக்கிய தேல்கள் (மண்மேடுகள்) இருக்கின்றன; அவற்றில் பழைய நகரங்களின் அழிவுகள் புதைந்து இருக்கின்றன. பழைய காலத்தில் (உ-ம். 2000-1500) இங்குப் பல குடியிருப்பு மையங்கள் இருந்தன என்று தெரிகிறது. ஆனால் இன்றைய தமஸ்குதான் முக்கிய மையமா, இல்லையா என்பது தெரிய வில்லை. அபானா ஆற்றின் வளமிக்க பகுதி யில் அமைந்திருந்த தமஸ்குப்பகுதிக்குக் கிழக்கில் பெருமளவும் வறண்ட பகுதி

இருந்தது. அங்கிருந்து எதிரிகள் பல தடவை படையெடுத்திருக்கின்றனர். ஆகவே பாது காப்பு அரண்கள் அவசியமாயிற்று. தமஸ்கு விற்கு ஏறக்குறைய 15 கி.மீ. கிழக்கே அபானா ஆற்றின் கரையில் நன்கு பாதுகாக் கப்பட்ட கோட்டை நகரம் இருந்தது. இவ் வாறு பல கோட்டைகளின் சிதைவுகளைக் காணலாம். அமர்னா காலத்தில் தமஸ்குவா னது எமோர்ரிய அரசின் முக்கியமான மைய மாக இருந்தது. எகிப்திய ஆதிக்கத்தை நீக்கு வதற்காக இதனுடைய அரசர் மிகவும் பாடு பட்டதாகத் தோன்றுகின்றது. அக்காலத்தில் தமஸ்குவிற்கும் மைசேனியன் அரசிற்கும் தொடர்பு இருந்ததென்று அங்குக் கண்டு பிடிக்கப்பட்டுள்ள மைசேனியன் மட்பாண் டங்கள் சொல்கின்றன. கி.மு. ஏறக்குறைய இரண்டாம் ஆயிரமாண்டு முடிவில் தமஸ்கு முக்கியமான அரமேய அரசின் தலைநகர மாக இருந்தது. அசீரியாவோடு போட்டி யிடும் அளவிற்குத் தமஸ்கு வலிமைவாய்ந்த தாக இருந்தது. ஏறக்குறைய கி.மு. 1200-இல் அரமேயர்கள் இதைக் கைப்பற்றினர். ஒன் றித்த, மற்றும் பிளவுபட்ட எபிரேய அரசாட் சிக்காலத்தில் தமஸ்கு எருசலேமிற்கும் சமாரியாவிற்கும் எதிரியாக இருந்தது.

*2 அர 5:12*-இல் யோர்தான் ஆற்றில் நாமான் தன் உடம்பைக் கழுவச் செல்லக் கேட்டபோது, அவர் தமஸ்குவின் ஆறுகள் இஸ்ராயேலரின் ஆறுகளைவிட மேலா னவை என்று எலிசாவிற்குப் பதில் அளித்ததி லிருந்து இது தெரிகிறது. தாவீது தமஸ் குவை வென்று அதைக் கப்பம் கட்டவைத் தார் (*2 சாமு 8:5-6; 1 நாள் 18:5 தொ*). சாலமோனின் ஆட்சிக் காலத்தில் ஆராம் - சோபாவைச் சேர்ந்த இரசோன் இதை வென்று தன்னை இஸ்ராயேலிலிருந்து விடு வித்துக் கொண்டார் (*1 அர 4:23தொ*). தமஸ்கு வைச் சேர்ந்த தபரிம்மோன் யூதநாட்டு அபியா முடன் கூட்டுச் சேர்ந்து இஸ்ராயேலை எதிர்த்தான் (*1 அர 15:19*). தபரிம்மோனின் மகன் முதலாம் பெனதாது முதலில் இஸ்ரா யேல் நாட்டுப் பாசாவுடன் கூட்டுச்சேர்ந்து, பின்பு யூதாநாட்டு ஆசாவுடன் கூட்டுச் சேர்ந் தான் (*1 அர 15:18 தொ*). இரண்டாம் பெனதாதும் அவர் மகன் அததேசரும் இஸ் ராயேல் அரசனான ஆகாபுக்கு எதிராகப் போர்செய்து, இராமோத்துகிலயாத்தில் அவ ரைக் கொன்றனர் (*கி.மு. 853; 1 அர 22*); மூன்றாம் பெனதாது இரண்டு ஆண்டுகள் ஆண்டபின் அசாவேலால் கொல்லப்பட்டார் (*843-797; 2 அர 3:7-15*); பிறகு 4-ஆம் பெனதாது அரசனானார். இவர் ஏறக்குறைய இஸ்ராயேல் முழுவதையும் வென்று சமாரியா வையும் முற்றுகையிட்டார் (*2 அர 6:24 தொ*). எலிசாவின் தலையீட்டால் இந்த முற்றுகை நீக்கப்பட்டது. இஸ்ராயேல் அரச னான இரண்டாம் எரொபவாமால் இஸ்ரா யேல் மீட்கப்பட்டது (*2 அர 14:28*).

இதற்கிடையில் தமஸ்கு அசீரியாவை எதிர்த்துச் சண்டைபோட வேண்டியிருந்தது. தமஸ்கு தன்னுடைய நிலைமையைக் காத் துக்கொள்ள வேண்டுமென்றால் மேற்கில் அசீரியா வெற்றி பெறுவதைத் தடுக்க வேண்டி யிருந்தது. இதுதொடர்பான சீரிய - எப்பி ராயிமியப் போர் முக்கியமானதாகும் (*734*). இதில் தமஸ்கு அரசன் ரெசினும், இஸ்ரா யேல் அரசன் பெக்காவும் ஒன்று சேர்ந்து யூதா நாட்டு அரசன் ஆகாசை அசீரியாவுக்கு எதிரான கூட்டணியில் சேர்க்க ஆகாசுக்கு எதிராய்ப் போரிட்டனர். எசாயா ஆகாசை எச்சரித்தார்; இருந்தாலும் அவர் அசீரியா வையே நம்பினார். இந்தப் போரின் விளை வாக ஆசீரியர் தமஸ்குவை *733 / 32*-இல் கைப்பற்றி எசாயா முன்னறிவித்திருந்தது போல ரெசினைக் கொன்றனர் (*எசா 7:4 தொ; 8:1 தொ; 17:1 தொ; 2 அர 16:9*). இந்த நிகழ்ச்சிகளின் விளைவாகத் தமஸ்குவின் வளர்ச்சி குன்றியது. பிறகு அசீரியர்கள், பாபிலோனியர்கள், பாரசீகர்கள், கடைசி யாக அலக்சாந்தர் இதைக் கைப்பற்றினார். உரோமைச் சட்டப்படி தமஸ்கு சுதந்தர நபத் தேய அரசின் தலைநகரமானது (*கி.மு. 85*). இதனுடைய அரசன் 3-ஆம் அரேத்தா ஆவான். கி.மு. 65-இல் உரோமையர் சீரியாவை வென்றனர். தமஸ்கு நபத்தேய ஆளுநரின் ஆட்சியின் கீழ் வந்தது. பவுல் தமஸ்குவிற்குச் சென்ற பொழுது (*அ.ப. 9:2 தொ*) இது நான்காம் அரேத்தாவால் ஆளப்பட்டு வந்தது.

அந்தக் காலத்தில் அங்கு அதிகமான யூதர்களும் கிறிஸ்தவர்களின் குழுவும் இருந்தனர் (அ.ப. 9:2; 22:5-6.10-11; 26:12). உரோமைப் பேரரசனான திரேசன் இதை உரோமை மாகாணமான சீரியாவுடன் இணைத்துவிட்டார்.

அதற்குப் பின் வந்த நூற்றாண்டுகளில் இது கிறிஸ்தவ மயமாக்கப்பட்டது. புகழ் வாய்ந்த திருமுழுக்கு யோவான் ஆலயம் மாமன்னன் தியோடோசியனால் ஆரம்பிக்கப்பட்டு ஆர்கடியசால் முடிக்கப்பட்டது. இது, பழங்கால மேற்குச் செமித்திய புயல் தெய்வமான அதாது என்ற கடவுளின் முந்தைய கோவில் இருந்த இடத்தில் கட்டப்பட்டது.

**தமஸ்கு நகர உடன்படிக்கை அல்லது ஏடு** *(DAMASCUS, COVENANT OF)*

இது யூத சமூகத்தில் பிரிந்த சகோதரர்களுக்கு வழங்கப்படும் ஒரு சுருக்கமான பெயர். இந்தப் பிரிவினர் அவர்களின் நூல்களின் ஒரு பகுதியான ''சாதோக்கிய ஏடுகள்'' என்றழைக்கப்படும் ஏடுகளிலிருந்து அறியப்படுகின்றனர். இந்தச் சுவடிகளில் இந்தச் சமூகத்தினர் தங்களையே ''தமஸ்கு நகரத்தில் செய்த புதிய உடன்படிக்கை'' என்று அழைத்துக் கொள்கின்றனர். இயேசு வாழ்ந்த சமயத்தில் இது தழைத்து வளர்ந்தது. இது எஸ்ஸேனியர் குழுவைச் சேர்ந்த சமூகமாகும்.

கும்ரானுக்கு அருகே உள்ள நான்காம் ஆறாம் குகைகளிலே இச்சுவடிகளின் சில பகுதிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இங்கே கண்டெடுக்கப்பட்ட சாக்கடல் சுவடிகளிலும் இச்சமூகத்தினரைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

**தமஸ்கு வாயில்** *(DAMASCUS GATE)*

எருசலேமின் நவீன பழையநகரத்தின் வடசுவரிலுள்ள முக்கியமான வாயில். சுலைமான் மக்னிபிசன்ட் என்பவரால் கி.பி. 1530 - 1539-இல் இது அமைக்கப்பட்டது. இது முக்கிய தென் - வட வீதிகளுக்கு இட்டுச் செல்கிறது. இந்த வழியாகத்தான் பவுல் தமஸ்கு புறப்பட்டுச் சென்றார் என்ற ஆதிக் கிறிஸ்தவப் பாரம்பரியத்திலிருந்து (அ.ப. 9) இந்த வாயில் இதன் பெயரைப் பெறுகிறது. இதன் அரபியப்பெயர் பாப் ஏல்-அமுது (தூண் வாயில்) ஆகும். அராபியர்கள் இந் நகரைக் கி.பி. 638-இல் கைப்பற்றியபோது அதிரியானால் கட்டப்பட்ட தூண் அங்கு இருந்ததை இப்பெயர் சுட்டுகிறது. இத்தூண் இன்றும் நிற்கிறது.

**தம்மூசு** *(TAMMUZ - பற்றுறுதியான மகன்)*

சுமேரியர்களின் கடவுள்களில் ஒருவர். இவர் மீனவராகவோ மேய்ப்பவராகவோ தோன்றி, தெய்வத்தன்மை அடைந்தவர் என்று நம்பினர். இக்கடவுள் இறந்து உயிர்த்ததன் மூலம் வாழ்வின் பலநிலைகளை உணர்த்தியதாக ஏற்றுக் கொள்கின்றனர். வாழ்வுக்கும், குழந்தைச் செல்வத்திற்கும் காவலனாகக் கருதப்பட்ட இக்கடவுளின் முன் பெண்கள் அழுது வேண்டுவதாக எசே 8:14-இல் வருகிறது.

இந்த வசந்தகால விவசாயக் கடவுள் கில்காமிஸ் இதிகாசத்திலிருந்து அறியப்படுகிறார். காதல் தெய்வமாகிய இஸ்தாரின் காதலன். ஆனால் இவள் தனதுகாதலனுக்குத் துரோகம் செய்தாள். இந்தத் துரோகத்தின் நினைவு நாளில் ஆண்டின் நான்காம் மாதம் இக்கடவுளுக்காக அழுது புலம்புவார். இம் மாதம் இக்கடவுளின் பெயரால் அழைக்கப்பட்டது. இந்தப் புலம்பல் சடங்கை எருசலேம் பெண்கள் ஆறாம் மாதம் ஐந்தாம் நாளில் கொண்டாடியதாக எசேக்கியேல் கூறுகிறார் (எசே 8:14).

இந்த வழிபாடு, சீரியாவில் அதோசின் வழிபாடாகவும், கிரிசில் பெர்செப்போன் மற்றும் தியோனிசியஸ் வழிபாடாகவும், எகிப்தில் ஒசிரிஸ் வழிபாடாகவும் கொண்டாடப்பட்டது.

**தயிர், வெண்ணெய்** *(CURDS)*

மேற்காசிய நாடுகளில் தயிர் அன்றாட உணவாகும். ஆபிரகாம், தம்மைக் காண வந்த மூன்று மனிதருக்குத் தயிரை மாமிசத்

*துடன் அளித்தார் (ஆதி 18:8).* எபேரின் மனைவி யாவேல், சீசராவிற்குத் தயிர் கொணர்ந்தாள் *(நீதி 5:25).* இந்தத்தயிரும் மற்ற உணவுகளும் தாவீதுக்கு மகனயிமில் அவர் தங்கியிருந்தபோது தரப்பட்டன *(2 சாமு 17:29).* தீயவனைப் பற்றி யோபு ஆகம ஆசிரியர் கூறுகிறார் ''தேன், வெண்ணெய் ஆறுகளில் அவன் இன்பம் காணான்'' *(யோபு 20:17).* மேலும் இம்மானுவேலின் உணவு வெண்ணெயும், தேனும் என எசாயா கூறும்பொழுது, 'சாதாரண நாடோடி மக்களின் உணவை இம்மானுவேல் உண்பார்'. எனக் குறிப்பிடுகிறார் *(எசா 7:15).*

**தராலா** *(TARALAH - சுற்றிச் செல்லும்)*

பென்யமின் இனத்திற்குக் கிடைத்த நகரங்களில் ஒன்று *(யோசு 18:27).* விவிலியத்தில் வரும் குறிப்புகளைக் கொண்டு ஆராய்ந்தால் இது எருசலேமுக்கு வடமேற்கே உள்ள மலை நாட்டில் இருந்திருக்க வேண்டும் *(18:25-28).* தேல் ஏல்-புல் (கிபயா) அருகில் குறிக்கப்படும் கிர்பெத் இர்காவாக இருக்கலாம்.

**தர்க்கோன்** *(DARKON - சிதறடிப்பவர், முரடன், கடுமையானவர்)*

செருபாபேலுடன் அடிமைத்தனத்திலிருந்து நாடு திரும்பிய ''சாலமோன் ஊழியர்களின் புதல்வர்களின்'' குடும்பங்களில் ஒன்றின் தலைவர் *(எஸ் 2:56; நெகே 7:58).*

**தர்சிசு** *(TARSHISH - பாறையான, இளம் பச்சையான மணிக்கல்) - ஆள்*

1. ''யாவானின் புதல்வர்களில்'' ஒருவர் *(ஆதி 10:4; 1 நாள் 1:7).*

2. பென்யமின் இனத்தைச் சேர்ந்தவர்; பில்கானின் புதல்வர் *(1 நாள் 7:10).*

3. அகசுவேர் மன்னனுக்கு ''மிக நெருக்கமானவர்களும்'', ''பொறுப்பில் முதன்மை பெற்றோருமான'' ஏழு தலைவர்களுள் ஒருவர் *(எஸ்த 1:14).*

**தர்சிசு** *(TARSHISH - பாறையான, இளம் பச்சையான மணிக்கல்) - இடம்*

பெனிசிய மொழியிலிருந்து வந்த இந்தச் சொல்லுக்கு உலோகங்களை மெருகேற்றுதல், உருக்கிப் புதிதாகச் செய்தல் என்ற பொருள் உண்டு. இச்சொல்லிலக்கணம் தர்சிசை அடையாளம் காட்ட உதவலாம். இங்கு முக்கியத் தொழில் உலோக வேலையாக இருப்பதால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். இதனைப்பற்றி விவிலியத்தில் பல இடங்களில் குறிப்பு வருகிறது. நாடுகளைப் பற்றிய பட்டியலில் யாப்பேத்தின் வழி வந்தவரும் யாவானின் மகனும் ஆவார் தர்சிசு *(1 நாள் 1:7; ஆதி 10:4)* என்றுள்ளது. தீர் நகரத்திற்கு எதிரான இறைவாக்குகளில் ''தர்சிசின் மகளே'' என்று எசாயா விளிக்கின்றார் *(எசா 23:10);* தீர் மக்களைத் தர்சிசுக்கு ஓடி விடுமாறு கூறுகிறார் *(20:6).* எசா *66:19*-இல் பூற்று மற்றும் லூதுவோடும் தர்சிசு குறிக்கப்படுகிறது. தர்சிசு நகர வணிகர்களைப் பற்றி எசேக்கியேல் பேசுகிறார் *(எசே 38:13).* அதன் வாணிபப் பொருட்களாக வெள்ளி, வெள்ளீயம், காரீயம் ஆகிய பொருட்கள் குறிக்கப்படுகின்றன *(எசே 27:12; எசே 10:9),* சங் *72:10,* தர்சிசையும் தீவுகளையும் மெசிய அரசரை வழிபட அழைக்கிறது. செங்கடலில் தர்சிசுக்குச் செல்லும் கப்பல்கள் என்ற கருத்து *(2 நாள் 20:36தொ)* ''தர்சிசுக் கப்பல்'' என்ற சொற்றொடரைத் தவறாகப் புரிந்து கொள்வதால் வருவதாகும். யோனா தர்சிசுக்குச் செய்த பயணத்திலும் இதே தவறு மறைந்து நிற்கிறது *(யோனா 1:3; 4:2).* இப்பெயர் ''தர்சிசிலிருந்து கப்பல்கள்'' என்று மற்ற இடங்களிலும் காணப்படுகிறது *(1 அர 10:22; 22:49; 2 நாள் 9:21; சங் 48:8; எசா 2:16; 23:1-4; 60:9; எசே 27:25; யோனா 1:3).*

பொதுவாக இந்நகரை அட்லாண்டிக் கரையோரம் உள்ள தர்த்தேசாஸ் என்ற ஸ்பெயின் துறைமுகத்தோடு இணைத்துக் கூறுவர். இப்பெயர் அசீரிய ஏசர்கத்தோன் வாசகங்களிலும் சர்தீனியாவில் கண்டுபிடிக்கப்பட்ட கி.மு. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பெனிசிய ஏடுகளிலும் காணப்படுகிறது. ஸ்பெயினில் இ காலத்தில் பெனிசியக் குடியிருப்புகள் இருந்திருக்க முடியாது. ஆகவே தர்சிசை ஸ்பெயின் துறைமுகமாக அடையாளம் காட்டுவதை அறிஞர் பலர் ஏற்கார். அவர்

கள் ''சுத்திகரிப்பு நிலையம்'' என்ற பொதுப் பொருளைத் தர்சிசு என்ற பெயருக்கு அளிக் கின்றனர். உலோகப் பொருட்கள் தோண் டப்பட்டு உருக்கப்பட்ட சர்தீனியாவிலுள்ள பல பெனிசியக் குடியிருப்புகளுக்குத் தர்சிசு என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கலாம். ''தர்சிசுக் கப்பல்'' என்பதற்குப் பெரிய, வலிமையாகக் கட்டப்பட்டு ஸ்பெயினுக்கு நீண்ட பயணம் செய்ய வல்லதான கப்பல் என்று பொருள் கொள்ளப்பட்டது. விவி லிய சுட்டிக்காட்டல்களிலிருந்து இது ஒரு பெரிய கப்பலாகும். ஆனால் இது ஒரு ''சுத்திகரிப்புக் கப்பலாகும்''. உருக்கப்பட்ட உலோகங்களான கனமான பொருட்களை ஏற்றிச் செல்ல ஏதுவாகக் கட்டப்பட்டது. இப் பெயரை விவிலியம் பயன்படுத்தும் முறை, பல சுத்திகரிப்பு நிலையங்களில் ஒன்றுக்கு முதன்மை அளிக்கப்பட்டு அதற்குத் தர்சிசு என்று பெயர் கொடுக்கப்பட்டதைச் சுட்டு கிறது. ஆனால் அதன் பொருளையும், இருந்த இடத்தையும் நிர்ணயிப்பது முடியாத ஒன்றா கும்.

இந்தக் கற்பனையான இடம் பெரும் செல்வமிக்கதாகக் கருதப்படுகிறது *(எரே 10:9; எசே 27:12; 38:13)*. தனது செல்வத்திற் குக் கடல் வணிகத்தைப் பெரிதும் நம்பி யிருந்த தீர் ''தர்சிசின் மகள்'' என்றழைக்கப் படலாம் *(எசா 23:10)*.

இறுதிக் காலச் சூழ்நிலையில் *(சங் 48:7; எசா 2:16)* ''தர்சிசின் - கப்பல்கள்'' வியாபா ரக் கப்பல்கள் அல்ல; இறைமக்களின் எதிரி களின் போர்க்கப்பல்கள் ஆகும். அவை எசா *66:9*-இல் சிதறிக் கிடக்கும் இஸ்ராயேலர் களை எருசலேமுக்குக் கொண்டுவரும் கப் பல்களாகின்றன. எசா *66:19-20* தர்சிசிலிருந் தும் மற்ற, தூர நாடுகளிலிருந்தும் சிதறிக் கிடந்த இஸ்ராயேலர் திரும்பி வருவதை முன்னோக்குகிறது.

**தர்சு** (TARSUS)

சிறிய ஆசியாவில் இருந்த ஒரு நகரம். புறவின அப்போஸ்தலரான பவுல் பிறந்த ஊர் *(அ.ப. 22:3)*. அவர் எருசலேமில் தங்க முடியாத நிலை வந்தபோது இந்நகருக்கே அவரை அனுப்பி வைத்தார்கள் *(9:30)*. அதன் பிறகு பர்னபா அவரை அழைக்கும் வரை அங்கேயே தங்கியிருந்தார் *(11:25)*. ஒரு முறை பவுல் தனது ஊரைப் பற்றிப் பேசும் போது ''புகழிலே குறைவற்ற தர்சு நகரினனன்'' என்று கூறுகிறார் *(21:39)*. இந்நகரம் மிகப் பழம் பெரும் நகரமாகும். இதனைப் பற்றி மூன்றாம் சல்மனேசர் (கி.மு. *858-824)* காலத்திலிருந்தே குறிப்புகள் உள்ளன. ஆனால் விரிவான குறிப்புகள் இல்லை. அசீரியர், பாபிலோனியர், பாரசீகர் காலத் தில் இதன் வரலாறு தெளிவற்றதாக இருக் கிறது. இரண்டாம் மக்கபேயர் நூல் இந்நகர மக்கள் 4-ஆம் அந்தியோக்கு எப்பிபான் மன்னனுக்கு எதிராகப் புரட்சி செய்ததைக் கூறுகிறது *(2 மக் 4:30)*.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் தர்சு ஒரு பெரிய, செழிப்பான துறைமுகமும் வியாபார மையமுமாகும். துருக்கியின் தென்கிழக்குக் கடற்கரையில் தர்சு மலையடிவாரத்தில் இருந்து 32 கி.மீ. தொலைவில் சினிது ஆற்றின் கரையில், அதன் துறைமுகமாய் ஆற்றின் வாயில் அமைந்திருந்தது. பழங் காலத்தில் நகர் வரைக்கும் கப்பல்கள் செல்ல லாம். ஆனால் காலப்போக்கில் ஆறு மண் மேவிப்போயிற்று. தர்சுவிலிருந்து சாலை கள் சிறிய ஆசியாவுக்குச் சென்றன. மாற்கு அந்தோனி என்ற உரோமைத் தளபதியால் சுதந்தரமாக மாறியது. அதன் சலுகைகள் அகுஸ்துவால் உறுதிப்படுத்தப்பட்டு விரி வாக்கப்பட்டன. இந்நகரிலிருந்த (பள்ளி கள்) கல்விச்சாலைகள் அறிஞர் பலரை உரு வாக்கிய பெருமை கொண்டவை. அதன் ஸ்தோயிக்குத் தத்துவப் பள்ளிகள் தனிச் சிறப்புக் கொண்டிருந்தன. இந்நகரம் பல் வேறு கொள்கைகளின் மையமாக விளங்கிய தால் பவுலும் சிறந்த தெளிவான அறிவு வளர்ச்சியைப் பெற முடிந்தது.

**தர்தா** (DARDA - ஞானமுத்து)

யூதாவின் மகனான செராகுவின் புதல்வர் களுள் ஒருவர் *(1 நாள் 2:6)*. இங்குத் தாரா என்று குறிக்கப்படுகிறார். சாலமோனுக்கு

அடுத்து ஞானத்தில் சிறந்தவர் (1 அர 5:11). பழங்கால இசைவல்லுநர்களில் இவரும் ஒருவராகச் சேர்க்கப்பட்டுள்ளார்; இவர் ''மகோலின் புதல்வர்களுள்'' ஒருவர் என்று அதாவது ''இசைவல்லுநர்களின் குழுவில் ஒருவர்'' என்றழைக்கப்படுகிறார்.

**தர்த்தாக்கு** (TARTAK)

கி.மு. 722-க்குப் பிறகு சமாரியாவில் குடியேறிய அவ்வாயர்களால் வழிபடப்பட்ட ஒரு தெய்வம் (2 அர 17:31). உண்மையில் இப்பெயரில் எந்தத் தெய்வமும் அவ்வட்டாரங்களில் இல்லை. ஆனால் சீரியாவிலும் மெசபொத்தாமியாவிலும் அரமேயர்கள் ''அத்தார் காத்திஸ்'' என்ற ஒரு தெய்வத்தை வணங்கினர். அது காலப்போக்கில் தர்த்தாக்கு என்று மாறியிருக்கலாம். இக்கடவுள் சீரியாவில் குழந்தைச் செல்வத்தினை அளிக்கும் கடவுளாக வணங்கப்பட்டது.

**தர்த்தான்** (TARTAN - படைத்தலைவர்)

அசீரியப் படையில் இருந்த ஒரு படைத் தலைவனுக்கு அளிக்கப்பட்ட உயர்ந்த பட்டம். இது 'அதாத் - நிராரி' என்பவர் காலத்தில் முதன் முதல் குறிக்கப்படுகிறது (கி.மு. 911-891). பழைய ஏற்பாடு இப்பட்டங்களையுடையவர்கள் இருவரைக் குறிக்கிறது: ஒருவர் அசுதோதை அழிக்க இரண்டாம் சார்கோனால் அனுப்பப்பட்டவர் (எசா 20:1; கி.மு. 711). மற்றவர், சனகெரிபுவால் யூதாவின் அரசன் எசேக்கியாவிடம் அனுப்பப்பட்டவர் (2 அர 18:17). இவ்விருவருடைய சொந்தப் பெயர்கள் கொடுக்கப்படவில்லை. அசீரியப் படைகள் இடம், வலம் என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றிலும் ஒரு தர்த்தான் இருந்தார்.

**''தலித்தா கூம்''** (TALITHA CUMI - சிறுமியே எழுந்திரு)

யாயிரின் மகளை இயேசு உயிர்ப்பித்த போது பயன்படுத்திய அரமேய வார்த்தைகளாக மாற் 5:41-இல் வருகிறது. வியக்கத்தகு நிகழ்ச்சிகள் நடைபெறும்போது அதனைப் பார்ப்பவர்கள் வேறுமொழிச் சொற்களைக் கேட்பதில் ஆர்வம் காட்டுவார்கள். மந்திர தந்திர வித்தைகளில் பார்ப்பவருக்கும் கேட்பவருக்கும் புரியாத மொழிகளைப் பேசுவது எங்கும் உள்ள பழக்கம். அதைப்போலவே படிப்பவர்களைக் கவர்வதற்காக மாற்கு அரமேயச் சொற்களை அப்படியே கையாண்டிருக்கலாம். அல்லது இது போன்ற வியக்கத்தக்க நிகழ்ச்சிகளில் இயேசுவின் சொற்களை அப்படியே தர மாற்கு விரும்பியிருக்கலாம். இதற்குச் ''சிறுமியே நான் உனக்குச் சொல்லுகிறேன், எழுந்திரு'' என்று பொருளாகும்.

**தலை** (HEAD)

I. விவிலியத்தில் நேரடியாகவும் உருவகமாகவும் தலை பயன்படுத்தப்பட்டுள்ளது. இதன் அடிப்படைப் பொருள் உடலின் மேலுள்ள பாகம். அது மனிதனுடையதாகவோ (ஆதி 48:14), அல்லது விலங்குகளுடையதாகவோ (யாத் 12:9) இருக்கலாம். பரந்த கண்ணோட்டத்தில் இது எந்தப் பொருளின் மேல்பகுதியாகவும் இருக்கலாம். எடுத்துக்காட்டாகக் கோபுரம் (ஆதி 11:4), விளக்குத்தண்டு (செக் 4:2), மலைகள் (எசா 2:2), அல்லது மரங்கள் (2 சாமு 5:24). இந்த எல்லா எடுத்துக்காட்டுகளிலும் உச்சி என்ற சொல்லால் இது மொழி பெயர்க்கப்படுகிறது. இன்னும் ஏதாவது ஒன்றின் தொடக்கத்தைக் குறிக்கவும் இச்சொல் பயன்பட்டுள்ளது. ஆறுகள் (ஆதி 2:10), தெருக்கள் (எசே 16:25), கால அளவுகள் (யாத் 12:2; நீதி 7:19; எசே 40:1).

தலை என்ற சொல் விவிலியத்தில் அறிவோடு தொடர்புபடுத்துவதில்லை. தொடக்ககால எபிரேயர்கள் மூளையின் செயல்பாட்டை அறியாதிருந்தனர். ஆகவே அறிவின் சக்தி இருதயத்தில் இருக்கிறதாக நம்பியிருக்கிறார்கள்.

கிரேக்க உலகம் அறியாத, விவிலியத்திற்கே உரிய சொல் வழக்கில் ஒரு குடும்பத்தை அல்லது சமூகத்தை நடத்திச் செல்லும் முதல்வரைக் (யாத் 6:14; உப 35:5) குறிக்கத் தலை என்ற சொல் பயன்பட்டது. இதன் விளைவாக அதிகார வலிமை மற்றும்

அதிகாரப் பிறப்பிடத்தை இச்சொல் குறித்தது எனப்படுகிறது. எபே 5:23 இவ்வாறு திருமணத்தில் கணவன் மனைவிக்குத் தலையாய் இருக்கிறான்.

II. கிறிஸ்துவின் தன்மையைப் பற்றி எடுத்துக்கூறும் பவுலின் மடல்களில் தலை என்ற சொல் பன்முறை பயன்படுவதால், இச்சொல் நம் கவனத்தை ஈர்க்கிறது. இயேசு கிறிஸ்துவின் மாட்சியைச் சிறப்புறக் கூறுவதற்குப் புனித பவுல் இச்சொல்லின் பல்வகையான பொருள்களையும், இவ்வுருவகத்தின் பல்விதமான வேறுபாடுகளையும் அஞ்சாது கையாளுகிறார்.

***1. கிறிஸ்து தலைமையான மூலைக்கல்:*** ''ரோஸ்'' என்ற எபிரேயச் சொல்லும், 'கெஃபாலே' என்ற கிரேக்கச் சொல்லும் சாதாரணமாக ஒரு மனிதனின் தலை அல்லது விலங்கின் தலையைச் சுட்டும். அத்துடன் இது மனிதர்களின் மகிழ்ச்சி, துன்பம், கேலி போன்ற போக்குகளையும் உணர்ச்சிகளையும் காட்டும். இந்தச் சொல்லை உருவக வடிவில் பயன்படுத்தும் பொழுது, உயிரற்ற உலகிலுள்ள பொருளில் முதலில் தோன்றும் பகுதிக்கு இச்சொல் பயன்படுகிறது: சாலையின் ஆரம்பம் (*எசே 16:25*); ஆண்டின் தொடக்கம் (*யாத் 12:2; நீதி 7:19; எசே 40:1*); கட்டடத்தின் முகப்பு, அல்லது ஒரு பொருளின் மிகச் சிறந்த அல்லது உயர்ந்த பகுதிக்கு இச்சொல் பயன்படுகிறது. ஒரு மரத்தின் மேல்நுனி, மலையின் உச்சி, அல்லது பழங்கால நினைவுச் சின்னத்தின் சிகரம் (*ஆதி 11:4; 4:7*). இந்தக் கடைசிக் கருத்தில்தான் *சங் 118:22* வசனம் பயன்படுத்தும் உருவகத்தை நாம் அறிய முடிகிறது. ''கட்டுவோர் புறக்கணித்த கல்லே கட்டடத்துக்கு மூலைக் கல் ஆயிற்று''. இந்த உருவகத்தைப் புதிய ஏற்பாடு ஆசிரியர்கள் எடுத்து அதைக் கிறிஸ்துவுக்கு ஒப்பிட்டுக் காட்டுகின்றனர். புதிய ஆலயத்திற்கு மகுடமாகவும், உறுதி குலையா வலிமையாகவும் இருப்பவரன்றோ கிறிஸ்து (*மத் 21:42; அ.ப. 4:11; 1 பேதுரு 2:7; பெ 2:20*)? ஆனாலும் ஆசிரியர்கள் ஒருசிலர் மூலைக்கல்லாகிய கிறிஸ்துவை, முழுக்கட்டடத்திற்கும் அடித்தளமாகவுள்ள அடிக்கல்லாகக் கொள்வதையே விரும்புகின்றனர்.

***2. கிறிஸ்து படைப்பு முழுவதற்கும் தலைவர்:*** தலை என்ற சொல்லுக்கு மற்றொரு உருவகப்பொருளும் உண்டு. இது மற்றவர்களுக்கு முன்னால் தலைமையேற்று நடக்கும் மனிதர்களைக் குறிக்கும் (காண். தலைக்கு வால் எதிரானது. *உப 28:1.43 தொ; எசா 9:14*); இச்சொல் இன்னும் சிறப்பாகத் தலைவர்களைக் குறிக்கும் (*யாத் 6:14; 1 சாமு 15:17; யோபு 29:25; தானி 7:6; திருவெளி 12:3*). இந்தக் கருத்தைக் கொரிந்தியருக்கு எழுதிய மடலில் காணலாம் (*1 கொரி 11:3*). ''ஆணுக்குத் தலையாயிருப்பவர் கிறிஸ்து; பெண்ணுக்குத் தலையாயிருப்பவன் ஆண், கிறிஸ்துவுக்குத் தலையாயிருப்பவர் கடவுள்''. கிறிஸ்துவைத் தலையாக உருவகம் செய்யும் இடங்களிலெல்லாம், அவரது தன்னிகரில்லாத் தலைமைப் பண்பையே பவுல் குறிப்பிடுகின்றார் என்பதில் சிறிதும் ஐயமில்லை (*1 கொரி 11:3; கொலோ 2:10;* காண் *எபே 1:10-22*).

***3. கிறிஸ்து திருச்சபையின் தலை:*** கிறிஸ்து திருச்சபையின் தலை என்று பவுல் கூறும்போது (*கொலோ 1:18; 2:9; எபே 1:22 தொ; 4:15*), அவரது கருத்தில் தலை என்பது மற்ற உறுப்புக்களோடு இன்னொரு உறுப்பாவதில்லை. தலைதான், உயிரின் மூலத்தானமும் உடலின் வளர்ச்சிக்கு நிலைக்களமும் ஆகும் (*கொலோ 2:19; எபே 4:15 தொ*). இந்தக் கருத்து பவுல் திருச்சபையைப் பற்றிச் செய்த சிந்தனையின் வளர்ச்சியாகும். உண்மையில் பவுல் கொரிந்தியருக்கு எழுதிய முதல் திருமுகத்தின்படி திருமுழுக்கு, நற்கருணை இவற்றின் வழியாகத் திருச்சபை கிறிஸ்துவின் உடலாக ஆகும் அளவிற்கு நெருங்கிய உறவு பெறுகிறது. ஆனால் இந்த உறவில் கிறிஸ்துவுக்கும் அவருடன் இணைந்திருக்கும் கிறிஸ்தவர்களுக்கும் ஓர் ஆழ்ந்த வேறுபாடும் இருக்கிறது. கிறிஸ்து தம்முடைய முழு நிறைவையும் அடைந்த திருச்சபைக்கு உயிர் அளிக்கும் வேலையைத் தொடர்ந்து செய்கிறார். ஆனால் கிறிஸ்தவர்

கள் அவரிடமிருந்தே எல்லாவற்றையும் பெறுகின்றனர். ஒரு வேளை இந்த வேறு பாட்டைக் கருதியே எபேசியருக்கு எழுதிய மடலில் அவர் கிறிஸ்துவைத் திருச்சபையின் மணமகனாகவும் காண்கிறார் எனலாம் (எபே 5:23).

**4. இந்தக் கருத்துக்களின் தொடர்பு:** கிறிஸ்து புதிய ஆலயத்தின் மூலைக்கல், அண் டங்களின் தலைவர், திருச்சபை என்ற உட லின் தலை என்ற உருவகங்களை எல்லாம் பவுல் பல தடவை ஒன்றிணைத்துக் காட்டி யுள்ளார். மிகப் பழமையான முதல் உருவக மும் (அ.ப. 4:11; மத் 21:31), மூன்றாவது உருவகமும் எபேசியருக்கு எழுதிய மடலில் பொருத்திக் காட்டப்பட்டுள்ளன (ஆலயத் தைப் பற்றிய எபே 2:20 வசனத்தின் விளக்கத் திற்கும், உடலைப்பற்றிய எபே 4:16 வசனத் தின் விளக்கத்திற்கும் பயன்படுத்திய சொற் களில் ஒப்புமை உண்டு. இறுதி வசனமும் 12-ம் பயன்படுத்தும் தொடரமைப்பையும் காண்க). இறுதியாக, கிறிஸ்துவைத் திருச் சபையின் தலைவராகவும், அண்டங்களின் தலைவராகவும் பவுல் காண்பது ஒரு தற்செய லான செயலன்று. நாம் முன்பு பார்த்தபடி, இந்த இரண்டு கருத்துக்களுக்கும் வேறுபா டுண்டு. திருச்சபை படைப்பு முழுமையின் ஒரு பகுதிதான் என்றாலும் கிறிஸ்துவின் உடல் என்ற பெயராலும், அவரின் துணைவி என்ற பெயராலும் போற்றப்படும் சிறப்பு திருச்சபைக்குத்தான் உண்டு. படைப்பு முழு வதும் திருச்சபையோடு ஒன்றித்து, அத் துடன் கிறிஸ்துவின் உடலாக மாறி, தூய மணப்பெண்ணைப்போலவும், தூய ஆலயத் தைப் போலவும், மாறவும் கிறிஸ்துவி னுடைய அதிகாரத்திற்குப் பணிந்திருக்கவும் வேண்டும். ஏனென்றால் கிறிஸ்துதான் எல்லா வற்றையும் தமக்குக் கீழ் ஒன்று சேர்த்தார் (எபே 1:10). அவர் எல்லாவற்றையும் தூய் மைப்படுத்தி வாழ்வளிக்கவும், இந்தப் புனித ஆலயத்தைத் தம் வழியாக இணைத்து ஒன்றுபடுத்தவும் விரும்புகிறார்.

### தலைச்சிரா, தலைக்கவசம் (HELMET)

போரில் பாதுகாப்புக்காகத் தலையில் அணியப்பட்ட தலைஅணி. இதுபோர் வீரர் களுக்குத் தோலாலும் (2 நாள் 26:14; எரே 16:4; எசே 23:24; 27:10; 28:5), அரசர்களுக்கும் பெரும் வீரர்களுக்கும் வெண்கலத்தாலும் (1 சாமு 17:5,38) செய்யப்பட்டது. இது, கன்னத்தை யும் காதுகளையும் மறைக்கின்ற நீண்ட தொங்கல் கொண்ட தொப்பியாகும் (எபே 6:17; 1 தெச 5:8). சீரிய - இத்திய தலைச்சீரா வைப்போல் அல்லாமல், அசீரியத் தலைச்சீரா மேல் நோக்கிக் கூர்மையாக இருக்கும்.

அடையாள முறையில், யாவே ''விடுத லையைத் தலைச் சீராவாகக்'' கொண்டுள் ளார் (எசா 59:17). கிறிஸ்தவனின் படைக் கலன்களில் ஒன்று ''மீட்பாகிய தலைச் சீரா'' வாகும் (எபே 6:77). ''மீட்பின் நம்பிக்கை'' அவரது தலைச்சீராவாகும் (1 தெச 5:8). சங் 66:7; 108:8-இல் எப்பிராயிம் ''யாவேயின் தலைச் சீராவாகக்'' கூறப்படுகிறது.

### தலைப்பேறு (FIRST-BORN)

தலைப்பேறு என்பது முதன்முதலில் ஒரு தாய்க்குப்பிறக்கும் பிள்ளை. பழங்கால, செமித்தியர்கள் தங்களின் முதல் பிள்ளை கடவுளுக்குச் சொந்தமானது என்றும் அதைக் கடவுளுக்குப் பலியிட வேண்டும் என்றும் நம்பினர். இந்தத் தலைச்சன் பிள்ளை ஒரு சமூகத்தில் தனி அதிகாரம், புனிதத்துவம், மதிப்பு, பொறுப்பு ஆகியவற்றைப் பெற் றான். உருவகமாகத் தலைச்சன் பிள்ளை என்பது இஸ்ராயேல் மக்களையும், அரசனை யும், மெசியாவையும், புதிய ஏற்பாட்டில் இயேசுவையும் குறிக்கும்.

**1. தலைப்பேற்றின் உரிமை:** பழைய ஏற் பாட்டில் மூத்த மகனைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்பட்டது (ஆதி 10:15; 22:21; யாத் 6:14; எண் 3:2; ஆதி 44:12; 1 சாமு 17:28). தலைப்பேற்றுக்குத் தனி மதிப்பு அளிக்கப்பட்டது. தந்தைக்கு அடுத்து அக் குடும்பத்தின் தலைவன் அதன் மூத்த மகனே. அக்குடும்பத்தின் வளர்ச்சிக்கு அவனே பொறுப்பு (ஆதி 43:33; 37:22). தந்தையின் ஆசீர்வாதத்தைப் பெறும் உரிமை தலைச்ச னுக்கே உரியது (ஆதி 27:1-4. 35-37); குடும்ப உரிமைச் சொத்தில் இருபங்கு பெற்றான்

(உப 21:77). கமுராபி சட்டத்திலும் அசீரியச் சட்டத்திலும் இதுபோலவே கூறப்பட்டுள்ளது. எலிசா எலியாவிடமிருந்து இதே உரிமை கேட்கிறார் (2 அர 2:9). இவ்வழக்கத்தைப் புறக்கணித்து இளையவனுக்கு அளிப்பது தந்தையின் சலுகையாக இருக்கலாம். ஈசாக்கு (ஆதி 17:19-21); எப்பிராயிம் (48:13-20); அரசன் என்ற அளவில் சாலமோன் (1 அர 1:32-37; 2 சாமு 3:3; 2 நாள் 21:81); குலத்தலைவன் என்ற அளவில் சிம்ரி (1 நாள் 26:10). ஆனால் இது வழக்கமுறை கடந்தது. பிற்கால உபாகமச் சட்டம் இதைத் தடுத்தது (உப 21:15-17). உடன் பிறந்தான் திருமண முறையில் முதல் பிள்ளை இறந்து போன சகோதரனது வாரிசாகக் கருதப்பட்டது. பெண் பிள்ளைகளுள் தலைப்பேறு என்பது மூத்தவள் என்பதை மட்டுமே குறிக்கிறது (ஆதி 19:31.33.37; 1 சாமு 14:49; ஆதி 29:26).

**2. தலைப்பேற்றை அர்ப்பணித்தல்:** கானானியர்களோடு தொடர்பு கொள்ளும்முன்பே தலைச்சன் பிள்ளைகள் கடவுளுக்குச் சொந்தம் என இஸ்ராயேலர் கருதினர் (யாத் 22:30; 34:19-20). வசந்தகாலத் திருநாளின்போது வீட்டில் வளர்க்கும் விலங்குகளின் தலைச்சன் கன்றுகள் கடவுளுக்குப் பலியாக ஒப்புக் கொடுக்கப்பட்டன. அவ்வாறு பலியளிப்பதால் இறை ஆசீர்வாதம் அந்த இனத்தை விருத்தி அடையச்செய்யும் என நம்பினர். இதற்கும் பாலைவனத்தில் அவர்கள் அளித்த பலிக்கும் பிற்காலப் பாஸ்காப்பலிக்கும் தொடர்பு உண்டு எனக் கருதினர் (யாத் 3:18; 5:3; 8:27; 34:18-20. 25-26). காலப்போக்கில் முதற்பலனை ஒப்புக்கொடுத்தலுக்கு யாத்திரை விசுவாசம் பின்னணியாயிற்று (யாத் 13:14-15; உப 15:19-20). தொடக்க காலத்தில் ஆட்டு மந்தையின் முதற் கன்றுகள் அந்தந்தப் பலிபீடத்தில் பலியிடப்பட, பின் அனைவரும் அந்த உணவில் பங்கு கொண்டனர் (யாத் 22:29-30). ஆனால் ஒரு கழுதையின் முதற் கன்றை ஓர் ஆட்டுகுட்டியைக் கொடுத்து மீட்க வேண்டும். இல்லையென்றால் அதன் கழுத்தை முறித்துவிட வேண்டும் (யாத் 13:11-13). உபாகமச் சட்டப்படி இவ்வாறு பலியிடப்படும் மிருகம் மாசு மருவற்றதாக இருக்க வேண்டும் (உப 15:19-23). குருக்களின் சட்டப்படி பலிப்பொருள் குருக்களுக்குச் சொந்தமாயிற்று. தூயதல்லாத மிருகங்கள் விலை செலுத்தி மீட்டுக் கொள்ளப்படும் (எண் 18:15-18; லேவி 27:26).

**3. மனித பலி:** முதலில் தலைச்சன் பிள்ளைகள் எவ்வாறு பலியாகச் செலுத்தப்பட்டனர் என்பது பற்றிய குறிப்பு விரிவாக இல்லை. சில இடங்களில் மனிதபலிகள் இருந்ததென்றும், பின் கைவிடப்பட்டதாகவும் அறிஞர்கள் கருதுகின்றனர் (ஆதி 22:2-3; நீதி 11:34-39; 2 சாமு 21:9; எசே 20:26; யாத் 13:13). சில இடங்களில் மனிதரின் தலைச்சன் பிள்ளைகளுக்குப் பதில் ஓர் ஆட்டுக்குட்டியைப் பலியிடலாம் எனக் கூறப்பட்டுள்ளது (யாத் 13:13.15; 34:20). ஆனால் ஆகாசு, மனாசே அரசர்கள் காலத்தில் மனிதபலி இருந்திருக்கிறது (2 அர 16:3; 2 நாள் 28:3; 2 நாள் 33:6; 2 அர 17:31; எசே 16:21; மீக் 6:7). இன்னோம் பள்ளத்தாக்கில் ஒரு புனித இடத்தில் மோலேக்குச் சிசுக்கள் பலியிடப்பட்டன (2 நாள் 28:3; எரே 7:31). அஸ்திவாரங்களுக்கும் மதில்சுவர்களுக்கும் மனிதபலியிடப்பட்டது சில சான்றுகளில் இருந்து தெரிகிறது (2 அர 3:27; 1 அர 16:34). இறை இறைவாக்கினர்கள் மனிதபலிகளை வன்மையாகக் கண்டித்தனர் (எரே 7:30-34; 19:4-9; எசே 16:20.27). இப்பலியால் இறைவன்முன் எந்தவிதப் பரிகார மதிப்பும் இல்லையென்றும் (மீக் 6:7), இது நாட்டை வீழ்ச்சியுறச் செய்யும் என்றும் வலியுறுத்தினர் (எரே 44:4.22).

**4. உருவகப் பொருள்:** ஒருவருடைய குணத்தையும், வலிமையையும் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப்பட்டது (யோவு 18:13; எசா 14:30). இச்சொல் ஒரு நெருங்கிய தொடர்பையும் அதிகாரத்தையும் மேலாண்மையையும் குறிக்கும். இந்தப் பொருளில் தான் இஸ்ராயேல் மக்கள் கடவுளின் தலைச்சன் பிள்ளைகள் எனப்பட்டனர் (யாத் 4:22). தாவீதின் வாரிசு மேலான அரசனாகக் கருதப்

பட்டார் (சங் 89:27). இது மெசியாவைக் குறிப்பதாக இராபிகள் விளக்கம் அளித்தனர்.

5. தலைப்பேறான இயேசு: புதிய ஏற்பாட்டில் இது இயேசுவைக் குறிக்க வேண்டும். மரியாளின் தலைச்சன்பிள்ளை இயேசு (மத் 1:25; லூக் 2:7). இயேசுவுக்குப்பின் மரியாளுக்குப் பிள்ளைகள் பிறக்கவில்லை என்பதை விட இயேசு பிறப்பதற்கு முன் அவள் கன்னியாய் இருந்தாள் என்பதே இங்கு வலியுறுத்தப்படுகிறது. இச்சொல் இயேசுவுக்குச் சாற்றிக் கூறப்படும்போது இதன் மூலம் இயேசுவுக்கும் கடவுளுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை இது காட்டுகிறது (எபி 1:6 கடவுளின் தலைப்பேறான மகன்).

மற்றவர்களைவிட உயர்ந்தவராகவும் அவர்களோடு ஒன்றித்தவராகவும், புது வாழ்வளிப்பவராகவும் இயேசு இங்கே கூறப்படுகிறார் (கொலோ 1:18; திருவெளி 1:5; 1 கொரி 15:20; உரோ 8:29; கொலோ 1:15). மகன் என்ற வார்த்தையால் (யோவா 1:34:49) ''ஒரே மகன்' என்பதால் (யோவா 1:14.18; 3:16.18) உள்ள ஒரு தனிப்பட்ட உறவு விளக்கப்படுகிறது.

புதிய ஏற்பாட்டில் எபி 11:28-இல் மட்டும் இச்சொல் வரலாற்று நிகழ்ச்சியான யாத்திராகம நிகழ்ச்சிகளைக் குறிக்கிறது. ''தலைப்பேறானவர்களின் திருச்சபை'' (எபி 12:23) என்பது இறந்த விசுவாசிகளின் கூட்டத்தைக் குறிக்கும். இவர்கள் கடவுளோடு ஒரு தனி உறவு கொண்டு தலைப்பேற்றுப் புதல்வர்களைப்போல் விளங்குகிறார்கள். இதுவே மீட்பின் ஆசிர்வாதம். இது நம்மை இறைவனின் தலைப்பேறான இயேசுவோடு உடன் உரிமையாளர்கள் ஆக்குகிறது.

## தலைப்பாகை (TURBAN)

இது ஏறக்குறைய ஐந்து விதமாக மொழிபெயர்க்கப்படுகிறது.

1. எகிப்திய தலைப்பாகையை இது குறிக்கும். ஆண்களால் தலையைச் சுற்றி அழகுக்காகத் துணியால் அணியப்படுவதாகும். இது துக்க காலங்களில் அணியப்பட மாட்டாது (எசே 24:17.23). இது குருக்களின் தலையணி ஆகும் (எசே 44:18). பெண்களின் தலை அலங்காரமாகும் (எசா 3:20; யாத் 39:28). எசா 61:3.9-இல் உருவகமாக அழகுமாலை, மலர்மாலை ஆகியவற்றைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது.

2. இது மகுடத்தையும் குறிக்கும். இது குருக்களாலும் அரசர்களாலும் அணியப்பட்டது (செக் 3:5; சீரா 11:5; 40:4; 47:6). இது நீதியையும் (யோபு 29:14), மீட்கப்பட்டோரையும் (எசா 62:3) உருவகமாகக் குறிக்கும்.

3. இது தலைமைக்குருவால் மட்டும் அணியப்பட்ட தலையணியைக் குறித்தது (யாத் 28:4.37.39; 29:6; 39:28.31; லேவி 8:9; 16:4). இஃதோடு ''ஆண்டவருக்கு அர்ப்பணம்'' என்று பொறிக்கப்பட்ட பட்டம் தொங்கணியாக இணைக்கப்பட்டது (யாத் 28:36-39; 29:6; 39:30; லேவி 8:9; சீரா 45:12).

4. இது தொங்கணிகொண்ட குல்லாயையும் குறிக்கும் (எசே 23:15). இது கல்தேயர்களால் அணியப்பட்டது.

5. இதுவும் ஒருவிதத் தலையணியாகும்; குருக்களால் அணியப்பட்டது (யூதி 4:15; சீரா 45:12). இது வெற்றிவாகை சூடியவர்களுக்கு அளிக்கப்பட்ட தலை வட்டத்தையும் குறித்தது.

## தலைமேல் கரம் வைத்தல் (IMPOSITION OF HANDS)

பேசும் வார்த்தைகளோடு கைகளால் செய்யப்படும் அடையாளச் செயல்கள் சேரும்போது பேசப்படும் செய்தி மிகவும் வளம் பெறுகிறது. இது ஒருவனுடைய ஆற்றலை (யாத் 14:31· சங் 19:2) ஏன் கடவுளுடைய வல்லமையையும் குறிக்கச் செய்யலாம் (1 அர 18:46; எசா 8:11; எசே 1:3; 3:22). ஒருவரின் தலைமேல் கை வைப்பது என்பது ஏதோ வாழ்த்துவதற்காகக் கையை மேலே தூக்குவது மட்டுமன்று (லேவி 9:22; லூக் 24:50); அதற்கும் மேலாக உண்மையில் அது

மற்றவரைத் தொட்டு அவருக்குத் தன்னையே பகிர்ந்தளிப்பது ஆகும்.

I. *பழைய ஏற்பாடு:*

*1. ஆசீர்வதித்தலின் அடையாளம்:* வாழ்த்தி, தலைமேல் கரம் வைக்கும்போது, அது ஒரு வார்த்தையோடு நின்றுவிடாது ஒரு பெரும் செயலாகவும் ஆகி நிற்கிறது. இந்த முறையில் யாக்கோபுவும் தான் வழிமுறையாக ஆபிரகாம், ஈசாக் இவர்கள் மூலமாகப் பெற்ற அரும் பெரும் ஆசிரைத் தன் குடும்ப வழிநிற்போர் அனைவருக்கும் அளிக்கிறார். ''மண்ணுலகில் இவர்கள் பெருந்திரளாகப் பலுகுவார்களாக'' (ஆதி 48:13-16).

*2. திருநிலைப்படுத்தலின் அடையாளம்:* கடவுள் ஒருவரைத் தேர்ந்து தனிப்படுத்தியிருப்பதையும், கடவுள் ஆட்கொண்டிருப்பதையும், சில காரியங்களைச் செய்வதற்காக அவருக்கு அதிகாரத்தையும், வல்லமையையும் கொடுத்திருப்பதையும் சிரமேல் கைவைப்பது குறிக்கிறது. லேவியர் குலத்தினர் இவ்வாறாகப் புனித காணிக்கையாக ஏற்படுத்தப்பட்டனர் (எண் 8:10). மேலும் ஞானத்தின் ஆவியானவர் யோசுவாவைத் தேர்ந்து முழு அதிகாரத்தோடு மக்களை ஆட்சி செய்ய (உப 34:9; எண் 27:15-23) அவரை ஏற்படுத்தினார்.

*3. அடையாள உறுதி செய்தலின் அடையாளம்:* கைகளை விரிக்கும்போது பலியைச் செலுத்துபவருக்கும் பலிப்பொருளுக்கும் ஒரு தொடர்பு ஏற்படுகிறது. பலிப்பொருள் இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்டதில் பலியை அளிப்பவருடைய உள்ளத்தில் எழும் - நன்றியுணர்ச்சி, பாவத்தினால் ஏற்படும் துக்கம், கடவுள் வணக்கம் போன்ற - இயல்புகளைத் தாங்கி நிற்கிறது. இதையே பரிகாரப்பலி (லேவி 1:4), நல்லுறவு அல்லது ஒன்றிப்புப்பலி (3:2), பாவங்களை நீக்கும் பலி (4:4) முதலானவைகளிலும் லேவியர்களைத் திருநிலைப்படுத்தப்பட்டபோதும் (எண் 8:16) காண்கிறோம். ஆனால் 'பரிகார நாளில்' பாவத்தைத் தாங்கிய ஆடு ஒன்று விரட்டப் பெறும் சடங்கில் மட்டும் பலிப்பொருளை அர்ப்பணிப்பது கிடையாது. அன்று கைகளை அந்த ஆட்டின் மீது விரிக்கும்போது இஸ்ரேல் தன்னுடைய பாவங்களை அதன் மீது சுமத்துவதாகவும், அவ்வாறு செய்யப்படும்போது அந்த ஆடு பாவங்களைத் தரித்துத் தூய்மை அற்று இருக்கும் நிலை அடைவதாகவும் கருதப்படுவதால் கடவுளுக்குப் பலி செலுத்த ஏற்றதாக இல்லாமல் அது காட்டுக்குள் விரட்டப்படுகிறது (லேவி 16:21தொ).

II. *புதிய ஏற்பாடு:*

*1. இயேசுவின் வாழ்க்கையில்:* ஆசீர்வதிக்கும் முறையில் இயேசு தம் கைகளைச் சிறு குழந்தைகளின் மேல் வைக்கிறார் (மாற் 10:16); தாம் ஏழைகளுக்கெனக் கொடுத்துள்ள பேற்றை (மத் 5:3) அவர்களுக்கு அளித்து, அதன் விளைவாகத் தமது சொந்த செபத்தின் பரிசைத் தமது தந்தையிடமிருந்து பெற்றுத் தருகிறார் (19:13). விடுதலையின் அடையாளமாகக் கைகள் விரிக்கப்பட்டன. இச்சைகையால் இயேசு நோயுற்றோரைச் சுகப்படுத்தினார். கூன் விழுந்து நின்றவளிடம்: ''அம்மா, உம் நோயிலிருந்து நீர் விடுவிக்கப்பட்டுள்ளீர்'' என்று கூறித் தம் கைகளை அவள் மீது வைக்க, அவளும் தலைநிமிர முடிந்தது (லூக் 13:13). பெத்சாய்தாவில் பார்வையற்ற குருடனுக்குச் செய்யப்பட்டதும் (மாற் 8:23 தொ), மாலை நேரத்தில் குணப்படுத்தப்பட்டவர்களுக்குச் செய்யப்பட்டதும் இந்த முறையே (லூக் 4:40).

*2. திருச்சபையின் வாழ்வில்:* உயிர்த்தெழுந்தவரின் வாக்குப்படி, சீடர்கள் ''உடல் நலமற்றோர்மீது கைகளை வைக்க அவர்கள் குணமடைவர்'' (மாற் 16:18). இத்தகைய சைகை வழியாகவே அனனியா, மனந்திரும்பிய பவுல் (அ.ப. 9:12) திரும்பவும் பார்வை பெறச் செய்தார்; பவுலும் பின்னர் மால்டாவின் தலைவரைக் (28:8) குணப்படுத்தியதும் இவ்வாறே. இந்த முறை விடுதலையின் அடையாளமாக இருந்ததோடு இந்தச் சைகை திருநிலைப்படுத்துதலின் அடையாளமாகவும் விளங்கியது. இதன் மூலமே இறை அருள், முக்கியமாக பரிசுத்த ஆவி

யின் கொடைகள் அருளப்பட்டன: பேதுரு வும் யோவானும் அதுவரை பரிசுத்த ஆவி யைப் பெற்றிராத சமாரியர் மேல் கரங் களை விரித்து அளித்தனர் (8:17). பவுலும் எபேசில் உள்ள மக்களுக்கும் இதையே செய்தார் (19:6). மந்திரவாதியான சீமோன் அவர்கள் கைகளை விரித்துச் செய்த இந்த சைகையின் ஆற்றலைப் பார்த்து எவ்வளவு பிரமை பிடித்துவிட்டான் என்றால், இந்த ஆற்றலை விலை கொடுத்து வாங்கவும் எண்ணினான் (8:18 தொ). அக்காலத்தி லிருந்தே இந்தச் சைகை ஆற்றலுள்ள இறை உண்மையைத் தாங்கி நிற்கும் காணக்கூடிய அடையாளமாக விளங்கியது.

இதே சைகையின் மூலம் திருச்சபை எந்தக் குறிப்பிட்ட அலுவல்களுக்கும் ஏற்படுத்தப் பட்ட தெளிவான தூதுக்கு ஏற்ற ஆன்மீக அருளை வழங்கி வருகிறது. அப்போஸ்தலர் களால் நியமிக்கப்பட்டு தனிநிலைப்படுத் தப்பட்ட எழுவருக்கும் (6:6), பவுல், பர்னபா இவர்களுக்குப் போதக அலுவலை வழங் கும் பொருட்டும், செய்த சைகையும் இதுவே (13:3). பவுல் பின், திமொத்தேயு வுக்கு இதையே செய்தார் (2 திமொ 1:6தொ; 1 திமொ 4:14). திமொத்தேயுவும், தான் தேர்ந்தெடுத்த போதக அலுவலர்களுக்கும் இதே சைகையினைக் கையாள்கிறார் (1 திமொ 5:22). இதே விதமாக இன்றும் திருச் சபை கைகளை உயர்த்தித் தலைமேல் வைத்து, தனிப்பட்டவிதமான வார்த்தை களை மொழிந்து ஆவியின் கொடைகளை வழங்கி வருகிறது.

**தலைமை ஏற்போர்** (PRINCIPALITIES)

பன்மையில் பயன்பட்டுள்ளது. வானதூதர் களின் ஒழுங்கமைந்த அண்ட சக்திகளைக் குறிக்கிறது (உரோ 8:38). வானதூதர்களோடு குறிப்பாகத் தொடர்பு படுத்தப்படுவதால் ''தலைமை ஏற்போர்'' ஆவிகளின் தனிக் குழு ஒன்று என்று கருதப்படுகிறது. இவர் கள் கிறிஸ்துவின் மீட்புக்கு இடைஞ்ச லாகவோ தடைகளாகவோ செயல்படுபவர் களாக இருக்கலாம். இதற்குப் பின்னணியான கருத்து இதிகாசத் தன்மையுடையது; முழுவ தும் தெளிவாக இல்லை. இதற்கொத்த பட்டி யலில் (எபே 1:21; கொலோ 1:16) பவுலின் கருத்து தெளிவாக உள்ளது. உலகின் எந்தச் சக்தியும் இறைவனின் அன்பை அழிக்க முடியாது. அது எல்லாத் தீய சக்திகளினும் உயர்ந்தது; மேலானது.

**தலைமைக் குருவின் மார்புப்பட்டை** (BREAST PIECE OF THE HIGH PRIEST)

ஒரு பை அல்லது ஆடை போன்ற அழகிய பொருள். தலைமைக் குருவின் மார்பு உறை. மிகச் சிறந்த இழையால் தயாரிக்கப் பட்டு, பல வர்ணங்கள் கொடுக்கப்பட்டது (யாத் 28:15). அதை மடித்தால் இரட்டைச் சதுரமாக அமைந்தது. ஒவ்வொரு பக்கமும் ஒன்பது அங்குலத்தைக் கொண்டிருந்தது. அதுநான்கு தங்க வளையங்களால் அவரது ஏபோதுடன் இணைக்கப்பட்டது. வெளிச் சதுரத்தில் நான்கு வரிசைகளில் கற்கள் பதிக் கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றும் இஸ்ரேயே லின் ஒரு கோத்தித்தின் பெயரைக் கொண்டு, வரிசைக்கு மூன்று கற்கள் தொங்கவிடப்பட் டன.

இந்த மார்பு உறை இரட்டைநோக்கம் கொண்டது. இது ஊரிம் தும்மிமுக்கு ஓர் உறையாக அமைந்தது. ஆகையால் தீர்ப்புக் கூறும் மார்புப்பட்டை என்றும் அழைக்கப் பட்டது (யாத் 28:15.29-30). இவ்வாறு கடவுளின் தீர்ப்பு மனிதனுக்குத் தெளிவாக் கப்பட்டது. இதற்கு மேலாகத் தலைமைக் குருவை இஸ்ராயேலின் பிரதிநிதியாக மாற் றியது. மார்பு உறையை ஒரு நினைவுச் சின்னமாகக் காட்டி, தலைமைக் குரு இஸ்ரா யேலிய மக்களை யாவேயின் முன்னிலைக் குக் கொண்டு வந்தார்.

**தலைமுறை, மூதாதையர் பட்டியல்** (GENERATION)

1. ஒரு மனிதனின் பிறப்பிலிருந்து அவ னது மகன் வரைக்கும் உள்ள காலமாகும். குழுப்பொருளில் அக்காலத்தில் வாழ்கின்ற மக்களனைவரும் என்று பழைய ஏற்பாட் டில் பொருள்படும் (சங் 24:6; 49:20; 73:15; 84:11; 112:2; எரே 2:31). புதிய ஏற்பாடும்

பொதுவாக இதே பொருளில் பயன்படுத்து கின்றது.

2. பன்மையில், குடும்பத்தில் அடுத்தடுத் துப் பிறக்கின்ற பிறப்புகள் (ஆதி 2:4; 5:1). பொதுவாகக் குடும்பங்கள், வழித்தோன்றல் கள், தலைமுறைகள் என்று சொல்லப்படு கின்றன.

3. ஈன்றெடுத்தல் மற்றும் பெருகச்செய் தல், என்ற பொருள் தொடங்கி தலைமுறை என்ற சொல்லானது மனிதரை அவர்களி லேயே ஒன்றுபடுத்துகின்ற கூட்டொரு மைப்பாட்டை வெளிப்படுத்த முயல்கிறது. இந்த ஒருமைப்பாடானது ஒரே காலத்தில் வாழ்பவர்களைக் குழுவாய் ஒன்று சேர்க்க லாம். ஆனால் எபிரேயச் சொல்லானது இந் தச் சமூகப் பொருளுக்கு வரலாற்றுப் பூர்வ மான நுட்ப வேறுபாட்டைச் சேர்க்கிறது. ஒரே குடும்பம் அல்லது இனத்திலிருந்து வந்தவர்களின் ஒற்றுமையே இது. இச்சொல்லி னாலும், தலைமுறைப்பட்டியல்களைப் பயன்படுத்துவதினாலும் விவிலியமானது ஆதாமிலிருந்து கிறிஸ்து வரை, காலத்தின் இறுதி வரையும்கூட, ஆசீரில் அல்லது பாவத்தில் மனிதரின் ஒருமைப்பாட்டை வலியுறுத்த விரும்புகிறது.

4. **இனத்தின் சமுதாயம்:** ஒவ்வொரு மனி தனும் ஒரு தலைமுறையில் பிறக்கிறான். தலைமுறை அட்டவணைகள் குறிப்பிடுவது இதுவே (ஆதி 5:1; 11:10; 1 நாள் 1-9). தனது முன்னோருக்கு அளிக்கப்பட்ட ஆசீர்களை யும் இறை வாக்குறுதிகளையும் அவன் உரிமை யாக்கிக் கொள்கிறான். ஆபிரகாமின் மக னும், ஆதாமின் மகனுமாகிய இயேசு கிறிஸ்து வைப் பொருத்தமட்டும், வாக்குறுதிகளும் ஆசீர்களும் அவரில் நிறைவேறுகின்றன (மத் 1:1-17). இந்தத் தலைமுறைகள் வர லாற்றை உருவாக்குகின்றன. இதன் விளை வாக இவை மனிதரின் செயல்களால் நிரப் பப்பட வேண்டிய சாதாரண வெறுமையான வரைச் சட்டமாக மட்டும் இருப்பதில்லை. அவை இறைவனையும் அவரது செயல் களையும் பாடி (சங் 145:4), இயேசுவின் அன்னையைப் போற்றிப் புகழ வேண்டும் (லூக் 1:48).

5. **சுதந்தர ஒருமைப்பாடு.** மனிதன் ஆசீர் களை மட்டுமின்றி, முந்தைய தலைமுறை களின் பாவத்தையும் உரிமையாகப் பெறு கிறான் (மத் 23:35-36). தனது காலத்தவரில் (மத் 12:39; 17:17) குறிப்பாக விரியன் பாம் புக் குட்டிகள் என்று தான் குறிப்பிட்ட பரிசேயரில் (மத் 12:34; 23:33) ''கேடுகெட்ட தாறுமாறான தலைமுறை'' இருப்பதை (உப 32:5) இயேசு கண்டு கொள்கிறார். அது அலகையைத் தனது தந்தையாகக் கொண் டுள்ளது (யோவா 8:44-47). அதனுடைய இதயத்தின் கடினத்தன்மையானது இறைவ னுடைய வெறுப்பையும் சினத்தையும் தூண்டு கிறது (எபி 3:7-19; சங் 95:8-11). பாவங் களை மன்னிப்பதற்கெனக் கிறிஸ்து ஆவியை அனுப்பி விட்டதால் இச்சந்ததி யைச் சேர்ந்தவராக இருப்பது இனியும் அழி விற்குரியதல்ல. இறைமகனில் விசுவசித்து, இறைவனது பிள்ளைகளாகப் பிறக்கின்றவர் கள் அடங்கிய (யோவா 11:12-13; 1 யோவா 5:1) தேர்ந்தெடுக்கப்பட்ட சந்ததியாக இருக்க லாம் (1 பேதுரு 2:9; எசா 43:20). ஒருவன் இதனின்று காப்பாற்றப்பட்டு (அ.ப. 2:40), விசுவாசியாகிய ஆபிரகாமின் சந்ததிக்கு உரி யவராகலாம் (உரோ 4:11-12). எனவே, இரு தலைமுறைகள் அல்லது இரு உலகங்கள் உள்ளன. இவை ஒன்றோடு ஒன்று தொடர் பற்றவை அல்ல. ''நெறிகெட்ட சீரழிந்த தலைமுறையினரிடையே குற்றமின்றி மாசற் றவர்களாய்க் கடவுளின் குழந்தைகளெனத் திகழ்வதும், வாழ்வைப்பற்றிய வார்த்தை களை வழங்க, உலகில் சுடர்விடும் விண் மீன்களெனத் துலங்குவதும்'' கிறிஸ்தவரின் கடமையாக உள்ளது (பிலி 2:15; லூக் 16:8).

## தலையணை (PILLOW)

தலைக்குத் தாங்கலாக வைக்கப்படும் பல் வேறு பொருட்களைக் குறிப்பிடும் ஒரு சொல்.

யாக்கோபு தலையணையாக உபயோகித்த கல்லானது (ஆதி 28:11) நினைவுத் தூணாக

நாட்டிவைப்பதற்கு *(28:18)* மிகப் பெரியதாக இருந்திருக்கவேண்டும். இயேசு தூங்குவதற்கு உபயோகித்த தலையணையானது படகில் விரிக்கப்பட்டிருந்த மெத்தையாகவோ பாயாகவோ இருக்கலாம் *(மாற் 4:38)*.

**தலைவர்** (CHIEF)

தலைவர் என்பது குடும்பத்தலைவர், குலத்தலைவர் அல்லது கோத்திரத்துத் தலைவரைக் குறிக்கிறது *(ஆதி 36:15; யாத் 15:15; 1 நாளா 1:51; செக் 12:5)*. *1 மக் 10:65*-இல் படைத்தலைவர் என்பது படைத்தள முதல்வர் என்று வழங்கப்படுகிறது.

**தல்போன்** (DALPHON - விரைவான, தந்திரமான)

யூதர்களால் கொல்லப்பட்ட ஆமானின் பத்துப் புதல்வருள் ஒருவன் *(எஸ்த 9:7)*.

**தல்மனுத்தா** (DALMANUTHA)

கலிலேயாக் கடலின் மேற்குக் கரையில் இருந்த இடம். இது இக்கரையில் எங்கு இருந்தது என்று தெரியவில்லை *(மாற் 8:10)*.

சிறந்த சில கிரேக்கக் கையெழுத்துப் பிரதிகளில் இந்தச் சொல் காணப்படுகின்றது. நாலாயிரம் பேருக்கு உணவளித்த பின்பு, இயேசு தன்னுடைய சீடருடன் தல்மனுத்தாப் பகுதிக்குச் சென்றார் என்று சொல்லப்பட்டுள்ளது. சில கையெழுத்துப் பிரதிகள் இதேயிடத்தில் மகதான் அல்லது மக்தலா இருந்தது என்று சொல்கின்றன *(மத் 15:39)*. இப்பிரச்சினைக்குத் தீர்வு காண்பது கடினம்.

தல்மனுத்தா, மக்தலா அல்லது மகதான் என்பவை ஒரே இடத்தின் பெயர்களாகவோ, அதே பகுதியிலுள்ள ஒரு இடத்திற்குள்ள இரண்டு பெயர்களாகவோ, இரு இடங்களின் பெயர்களாகவோ இருக்கலாம். தல்மனுத்தா மிகவும் அறியப்படாத ஊராக இருந்திருக்கலாம். இக்குறிப்பில் மட்டும் எஞ்சியிருக்கலாம்.

**தல்மாத்தியா** (DALMATIA)

அதிரியாட்டிக் கடலின் வட கிழக்குக் கரையில் அமைந்திருந்த இல்லிரிக்கும் என்ற உரோமை மாகாணத்தின் தென்பகுதியாகும். கிரேத்தாவில் தன் பணியை முடித்த பின்பு தீத்து இந்தப் பகுதிக்குச் சென்றார் *(2 திமொ 4:10)*.

**தல்மாய்** (TALMAI - வீரமிக்க)

1. மோசே கானான் நாட்டை வேவு பார்த்து வர ஆட்களை அனுப்பியபோது, அவர்கள் எபிரோனில் தங்கிய நேரத்தில் ஆனாக்கையும் அவனது மூன்று புதல்வர்களில் ஒருவனான தல்மாயையும் பற்றி அறிகின்றனர். பிற்காலத்தில் நடந்த போரில் ஆனாக்கின் புதல்வர்கள் மூவரும் காலேபினால் அங்கிருந்து துரத்தப்பட்டனர் *(எண் 13:22; யோசு 15:14; நீதி 1:20)*.

2. கெசூர் பகுதியை ஆண்ட மன்னனின் பெயர். இவனது மகள் மாக்காவின் மூலமாகவே தாவீதுக்கு அழகுள்ள அப்சலோம் பிறந்தான் *(2 சாமு 3:3; 13:37; 1 நாள் 3:2)*. இந்த அப்சலோம்தான் தனது சகோதரியைக் கெடுத்ததற்காக அம்னோன் என்ற தாவீதின் முதல் மகனைக் கொன்றுவிட்டு நாட்டை விட்டுக் கெசூரிலுள்ள தன் தாத்தாவிடம் ஓடினான். கெசூர் கலிலேயாக் கடலுக்கு வடகிழக்கிலிருந்த ஒரு சிறிய அரமேய அரசாகும்.

**தல்மோன்** (TALMON - ஒளிமயம்)

பாபிலோனிருந்து நாடு திரும்பியவர்களில் இவரும் ஒருவர். செருபாபேலால் சீர்திருத்தப்பட்ட ஆலயத்தின் வாயிலைக் காக்கும் தலைமைக் காவலர் நால்வரில் ஒருவர்; லேவியர் *(1 நாள் 9:17; எஸ் 2:42; நெகே 7:45; 11:19; 12:25)*.

**தவளை** (FROG)

பழைய ஏற்பாட்டில் தவளையைக் குறிக்கின்ற பகுதிகளெல்லாம், யாத்திரையில் இரண்டாவது கொள்ளைநோயில் வரும் தவளைகளையே சுட்டுகின்றன *(யாத் 8:2-13)*. திருவெளி *16:13* ''பறவை நாகத்தின் வாயினின்றும், விலங்கின் வாயினின்றும் போலித் தீர்க்கதரிசிகளின் வாயினின்றும் தவளை வடிவில் மூன்று அசுத்த ஆவிகள்

வெளிவரக் கண்டேன்'' என்று சொல்வது, லேவி 11:10-இல் ''கடல்களும் ஆறுகளு மாகிய நீர்நிலைகளில் செறிந்திருக்கும் உயி ரினங்களில், துடுப்பும் செதில்களும் அற்றவை உங்களுக்கு அருவருப்பு'' என்று சொல்லப் பட்டிருப்பதைப் பிரதிபலிக்கிறது. மகப் பேற்றில் பெண்களுக்கு உதவிய ''எகக்டு'' என்ற எகிப்திய தேவதையுடன் தவளை (அல்லது தேரை) பாரம்பரியமாகத் தொடர்பு படுத்தப்பட்டபடியால், தவளையின் தரம் இன்னும் குறைந்தது.

### தவறு, பிழை (ERROR)

*1.* தவறு என்பது அறியாமைக்கு ஈடான தன்று. கிரேக்கர்கள் குறிப்பிடுவது போல, அறிவாளியின் தேடலிலோ தவறான கணிப்பு களிலோ இருப்பதன்று. ஏமாற்றுச் சூழ் நிலைகளால் உருவாக்கப்பட்ட தப்பெண்ணத் திற்கோ (ஆதி 20:2-7; ஞான 13:6-9), தீமை யையும் நேர்மையின்மையையும் உருவாக்கு கின்ற கவனக்குறைவிற்கோ (லேவி 4:2.13.22.27) தாழ்த்தப்படக்கூடியதன்று. இது எல்லாவற்றிற்கும் மேலாகப் பிரமாணிக்கமின் மையும் உண்மையை நிராகரிப்பதுமாகும். அலைந்து திரிதலானது அதன் விளைவாக வும் தண்டனையாகவும் இருக்கும். நாடோடி யான காயின் (ஆதி 4:12); அலைந்துதிரிந்த இஸ்ராயேல் (ஓசே 9:17); மந்தைக்குள் மீண் டும் கொண்டு சேர்க்கப்பட வேண்டிய (லூக் 15:4-7; 1 பேதுரு 2:25) ஆயனில்லா ஆடுகள் (எசா 13:15; 56:6. எசே 24:16).

*2. பழைய ஏற்பாடு:* தவறானது குருடாக் கும் கீழ்ப்படியாமையின் சமயச் சூழ்நிலை யில் குறிப்பிடப்பட வேண்டும். தவறு என் பது ''ஆண்டவரால் குறிக்கப்பட்ட பாதையி னின்று விலகி நீண்ட தொலைவு செல்வ தாகும்''(உப 13:6.11). இஸ்ராயேலின் சமயமறுப் போடு இணைக்கப்பட்டு, தவறானது சிலை வழிபாட்டிற்கு நடத்திச் சென்று (ஆமோ 2:4; எசா 44:20; ஞான 12:24), பொதுவாக யாவே யைப் புறக்கணிப்பதிலிருந்து விளை கிறது (ஞான 5:6). இதன் விளைவாக நேர்மை யாளர் மட்டுமே உறுதியுடன் நடக்கின்றனர் (சங் 26:1.3; 37:23.31). இறைவனில் விசுவாச மற்றோர் அலைந்து திரிய விடப்படுகின்ற னர் (எசா 63:17; பழ 12:26). அவர்கள் மனந்திரும்பாதபடிக்கு (பாரூ 4:28; எசே 33:12) அவர்களைத் தவறுக்குக் கைவிட்டு விடுதல் மூலம் (எசே 14:6-11; யோபு 12:24) அவர்களை அலைந்து திரியவிட்டுவிடு கிறார். இல்லாவிடின் அதனைப் பெரிதாக்கு கின்ற இதயத்தின் கடினத்தன்மையுடன் தவ றானது விரைவாகப் பலுகிப்பெருகுகிறது (ஞான 14:22-31): மக்களின் தலைவர்களா கிய (எசா 9:15) லேவியர் (எசே 44:10-13) போலி இறைவாக்கினர்கள் (ஓசே 4:5; எசா 30:10-11; எரே 23:9-40; புல 4:13 தொ; மீக் 3:5; எசே 13:8.10.18) ஆகியோர் இந்த வளர்ச் சிக்கு முக்கிய பொறுப்பாளர்கள் ஆவர். இறுதிக்காலங்களில் பேய்த்தனமான தவறை இது அறிவிக்கிறது (தானி 11:33 தொ).

*3. புதிய ஏற்பாடு:* இறைவாக்கினரால் அறிவிக்கப்பட்ட இறுதிக்காலத் தவறானது, தன்னிலையே உண்மையாக உள்ள இயேசு கிறிஸ்துவினுடைய தொடர்பில், அதனுடைய உச்ச கட்டத்தை அடைகிறது. (யோவா 14:6).

தனது காலத்தவருடைய தவறுகளை இயேசு கண்டனம் செய்கிறார் (மத் 22:29). அப்போஸ்தலர்கள் விசுவாசிகளை, அதற் கெதிரான பாதுகாப்பாக எச்சரிக்கின்றனர் (1 கொரி 6:9; 15:33). ஆனால், ஆண்டவரும் (மத் 27:63-64; யோவா 7:12.47) அவரது சீடர்களும் (2 கொரி 6:8) தங்களது முறையில் போலிகளெனப் பழிக்கப்படுவர். இவ் வாறே, குருடராகுமாறு தங்களை விட்டு விட்ட பரிசேயரும் (யோவா 9:41), இறைவ னின் ஞானத்தை அறிந்திருந்தால் மாட்சிமை மிக்க ஆண்டவரைச் சிலுவையில் அறைந் திருக்காமல் இருந்திருக்கக்கூடிய இவ்வுலகின் தலைவர்களும் (1 கொரி 2:8) இவ்வாறே ஏமாற்றப்படுகின்றனர்.

ஆனாலும், உண்மைக்கு முன்னர்ச் சோதிக் கப்பட்டாலும், தவறானது பாவிகளிடையே செயல்திறன் மிக்கதாக உள்ளது. ''அதே நேரத்தில் அது அவர்களை ஏமாற்றுபவர்க

ளாகவும் ஆக்குகிறது (2 திமொ 3:13). இவ்வாறு, (1 திமொ 1:14; 2 பேதுரு 2:1 தொ) மனிதர்களின் தந்திரத்திலும் (எபே 4:14; தீத் 1:14) போலி ஆசிரியர்களாலும் பரப்பப்பட்ட கதைகளை நம்பாதிருக்கக் கவனமாயிருக்க அவசியம் ஏற்படுகிறது (யாக் 1:16; 1 யோவா 2:26 தொ). இக்கதைகளைப் பிற்கால யூதத்துவம் தவறின், வீழ்ச்சியடைந்த தூதர்களின் தலைமையில் விட்டுவிட்டது. மேலும், உண்மையினின்று தொலைவிற்கு அலைந்து திரிகின்ற பாவியை மீட்டுக் கொண்டு வருவது ஒவ்வொருவருடைய கடமையுமாகும் (யாக் 5:20).

காலத்தின் இறுதியை முன்னோக்கிய நிலையில், போலிப் போதகரால் ஏமாற்றப்படுவதற்கு எதிராக இயேசு தனது விசுவாசிகளை முன்னெச்சரித்தார் (மத் 24:5.11.24 இணை). உண்மையில் தவறின் இந்த எழுச்சி (1 யோவா 4:6) இந்தப் ''பக்தியின்மையின் மறை பொருளானது'' (2 தெச 2:7), காலமுடிவுவரை வளர்ந்து கொண்டேயிருக்கிறது (2 பேதுரு 2:15-18; திருவெளி 20:8). அப்போது எதிர்க் கிறிஸ்துவினுடையதும் (2 யோவா 7) அவனைத்தூண்டும் (2 தெச 2:9தொ) சாத்தானுடையதும், உலகனைத்தையும் வஞ்சிக்கும் பேயினுடையதுமான (திருவெளி 12:9) தவறின் உண்மையான தோற்றத்தைத் தவறு வெளிக்காட்டும். ஆனால், இறுதியில் மிருகம், போலி இறைவாக்கினர் மற்றும் பேய் ஆகிய அனைவரும் எரிகின்ற கடலில் எறியப்படுவர் (19:20; 20:3.10).

### தளம், தரை (PAVEMENT, FLOOR)

இது பல பொருளைக் கொண்டது.

1. சூசாவிலுள்ள அரண்மனை வெண்ணீலக் கற்கள், முத்துக்கள், விலைமதிப்பற்ற கற்கள் ஆகியவை பதிக்கப்பெற்ற பல்வண்ண ஒட்டுத்தளத்தைக் கொண்டிருந்தது (எஸ்த 1:6). எசேக்கியேலின் கோவிலின் பிரகாரத்தைச் சுற்றிலும் கல்லால் அமைக்கப்பட்ட கீழ்த்தள நடைமேடை இருந்தது (எசே 40:17-18). எரேமியா சில கற்களைத் தகபனகேசில் இருக்கும் அரண்மனை வாயில் தளத்தின் காரையில் மறைத்து வைத்தார் (எரே 43:9). ஓர் இறை மகிமைக் காட்சியில், கடவுளின் காலடியில் இருந்த தளம் நீலக்கல்லினால் செய்யப்பட்டிருந்தது (யாத் 24:10; எசே 1:26).

பிலாத்து 'கல்தளம்' என்னும் இடத்திலிருந்த நீதியிருக்கை மீது அமர்ந்தார் (எபிரேய மொழியில் கபத்தா; யோவா 19:13). அது பிலாத்துவின் தலைமை நிலையத்திலுள்ள முற்றமாகும். தற்சமயம் சீயோன் சகோதரிகளின் மடத்தின் அடியில் இருக்கும் உரோமைத்தளம் இது என்று கருதப்படுகின்றது. இந்தத் தளமும், பாதாளக் கட்டடங்களும் அந்தோனியாக் கோட்டையைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

2. கட்டடத்தின் கீழ்த்தளம் அல்லது தரை. சாலமோனின் கோயில் கீழ்த்தளம் முதல் மேல் மச்சுவரை கேதுரு பலகைகளால் மூடப்பட்டிருந்ததாகவும் (1 அர 6:55), ஆலயத்தின் பிற்பகுதியிலும் முற்பகுதியிலும் தளம் பொன்னால் மூடப்பட்டதாகவும் (6:30) சித்தரிக்கப்படுகின்றன. சாட்சியக் கூடாரத்தின் தரையிலிருக்கும் புழுதி தனிப்பட்ட சிறப்புத்தன்மையைப் பெற்றிருப்பதாகக் கருதப்பட்டது (எண் 5:17). ஆமோ 9:3-இல் கடலின் அடித்தளத்தைக் குறிப்பிட இவ்வார்த்தை பயன்படுத்தப்படுகிறது.

3. சூட்டடிப்புக் களம்: திறந்தவெளிப் பாறை அல்லது காற்றுவெளியில் செம்மைப் படுத்தப்பட்ட நிலம். தானியங்களை அடித்து, தூற்றிப் பதர் நீக்க உதவும் களம்.

### தறி ஓடு கட்டை (SHUTTLE)

நெசவாளியினால் தறியில் நூலைப் பாவுகளின் இருபுறமும் செலுத்துவதற்காகப் பயன்படுத்தும் கருவியை ஓடுகட்டை என்று அழைக்கின்றார்கள் (யோபு 7:6). வாழ்வின் நிலையற்றதன்மையையும் நம்பிக்கையற்ற தன்மையையும் எடுத்துக்கூற, யோபு தறி ஓடுகட்டையை உருவகமாகப் பயன்படுத்துகிறார்.

## தற்கொலை (SUICIDE)

பழைய ஏற்பாட்டில் இச்சொல் காணப் படவில்லை. ஆனால் பல தற்கொலை நிகழ்ச் சிகள் விவரிக்கப்படுகின்றன. சவுலும் அவ ரது ஆயுதம் தாங்குவோனும் தற்கொலை செய்து கொண்டனர் (*1 சாமு 31:4-5*). அகித் தோபல் நான்று கொண்டு மடிந்தார் (*2 சாமு 17:23*). சிம்ரி தீக்குளித்துத் தன் உயிரை மாய்த்துக் கொண்டார் (*1 அர 16:18*).

புதிய ஏற்பாட்டில் யூதாசு மட்டுமே தற் கொலை செய்கிறார் (*மத் 27:5*). அ.ப. *16:27-28*-இல் பவுல் ஒரு தற்கொலையைத் தடுக்கிறார். தற்கொலை பற்றிய மற்றக் கூற் றுக்கள் உரோ *14:7-9; 1* கொரி *6:19;* எபே *5:29* ஆகியவையாகும். பிற்காலத்தில் இராபி களின் போதகம் தற்கொலையை இறைவ னுக்கு எதிரான செயலாகக் கண்டனம் செய் கிறது.

விவிலியம் தற்கொலையை நேரடியாகத் தடைசெய்யாவிட்டாலும், அது மறைமுக மாக இச்செயலைக் கண்டிக்கிறது என்பது தெளிவு. உயிரை அளிப்பவரும் எடுப்பவ ரும் இறைவனே (*யோபு 1:21*). ஆறாம் கற்பனையும் மனித இரத்தத்தைச் சிந்துவது பற்றிய ஒழுங்குகளும் (*ஆதி 9:5-6*) இதே கருத்தைக் கூறுகின்றன.

## தனிமை (SOLITUDE)

தந்தை, மகன், ஆவியாக, அன்பின் அளவு கடந்த பலனுடைமையாக உள்ள இறைவ னின் சாயலாகப் படைக்கப்பட்ட நிலையில் மனிதன், இறைவனுடனும், தன்னைச் சுற்றியுள்ளோருடனும் ஒன்றுபட்டு வாழ வேண்டும். இதன் மூலமாக அவன் பல னைக் கொண்டு வருகிறான். இப்படிப்பட்ட நிலையில் தனிமையானது தன்னிலேயே, பாவத்தினின்று வருகின்ற தீமையாக உள் ளது. ஆயினும் இயேசு கிறிஸ்துவினுடைய மீட்பின் தனிமையுடன் இணைக்கப்பட் டால், தோழமை மற்றும் பலனளிப்பின் ஊற்றாக இது உருவாகிறது.

**I. மனிதனின் தனிமை.**

**1. ''மனிதன் தனிமையாய் இருப்பது நன் றன்று'' (ஆதி 2:18):** இறைவனைப் பொறுத்த மட்டில் தனிமையானது ஒரு தீமையாகும். ஏழைகள், அன்னியர், விதவை மற்றும் அநாதை கள் ஆகியோரை அது கொடியோரின் இரக்கத்திற்கு உட்படுத்துகிறது (எசா *1:17.23*). இவர்கள் சிறப்பான பாதுகாப்பைப் பெறவேண்டுமென இறைவன் கோருகின் றார் (யாத் 22:21 தொ). அவர்களைக் காப்ப வர்களைத் தமது மகன்களாகக் கருதி, தாயை விட அதிகமாக அவர்களைக் காத்து ஆதரிக் கிறார் (*சீரா 4:10*). மனித ஆதரவாளர் இல் லாத நிலையில், இந்த ஏழை மக்களின் பழிதீர்ப்பவராக இறைவன் இருப்பார் (பழ *23:10-11;* சங் *146:9*). தனிமையானது மலட் டுத் தன்மையுடன் உள்ள பெண்களையும் பழித்துரைக்க வழி செய்கிறது. கன்னிமை யின் பொருளை வெளிப்படுத்தக் காத்திருக் கும் வேளையில் லேவியருடைய சட்டத்தி னால் இப்பழியைத் தீர்க்க பெண்ணுக்கு ஆறுதலளிக்க அவரே தலையிடுகிறார் (*1* சாமு *2:5;* சங் *113:9;* எசா *51:2*). தனிமையின் சோதனையானது, இறைவனிலான முழுமை யான நம்பிக்கைக்கான அழைப்பாகும் (எஸ்த *4:17*).

**2. பாவி தனிமையாய் இருக்க வேண்டு மென இறைவன் விரும்புகிறார்:** தனிமை யானது மனிதனுக்கு அவனது பாவநிலையை யும் வெளிப்படுத்துகிறது. பின்னர் அது மனந்திரும்புதலுக்கான அழைப்பாக உருவா கிறது. நோய், துன்பம் மற்றும் காலத்திற்கு முந்தைய மரணம் ஆகியவற்றின் அனுபவம் கற்பிப்பது இதுவே. மனித சமுதாயத்தி னின்று ஒதுக்கி வைக்கப்பட்ட நிலையில் (*யோபு 19:3-22*), மகிழ்ச்சியற்ற மனிதன் தான் பாவ நிலையில் இருப்பதை உணர்கி றான். பாவியைத் தனிமைக்கு விட்டுவிடு வதை இறைவன் மற்றொரு வழியிலும் வெளிப்படுத்துகிறார். அவர் தனது பிரமா ணிக்கமற்ற மனைவியை விட்டுவிடுகிறார் (*ஓசே 2:5;3:3*). இஸ்ராயேல் மலட்டுத் தன் மையுடையது என்பதை எரேமியா தனது மணமாகாத வாழ்வின் மூலம் குறிப்பிட்டுக்

காட்ட வேண்டும் (எரே 16:2; 15:17). இறுதியாகத் தனிமையைத் தாக்குவதன் மூலம் இறைவன் மட்டுமே அதனின்று மனிதரைக் காக்க முடியும் என்பதை நாடு கடத்தப்பட்டதானது தெளிவுபடுத்துகிறது.

II. தனிமையினின்று தோழமைக்கு.

*1. இயேசு கிறிஸ்துவால் ஏற்றுக்கொள்ளப் பட்ட தனிமை:* இம்மானுவேலின் மூலமாக (''கடவுள் நம்மோடு'', எசா 7:14) மீண்டும் ஒருமுறை அவருடன் தோழமை காண்பதற்கென இறைவன் தனது ஒரே மகனை மனிதருக்கு அளித்தார் (யோவா 3:16). ஆனால், பாவத்தின் தனிமையினின்று மனுகுலத்தை விடுவிக்க, இயேசுவே இத்தனிமையை, சிறப்பாகப் பாவம் நிறைந்த இஸ்ராயேலின் தனிமையைத் தன்மீது ஏற்றுக்கொண்டார். பகைவனை வெல்ல அவர் பாலைவனத்திற்குச் சென்றார் (மத் 4:1-11; 14:23). அவர் தனிமையில் செபித்தார் (மாற் 1:35.45; லூக் 9:18; 1 அர 19:10). இறுதியாக, அவரது செபத்தில் பங்கேற்கத் தயாராக இல்லாமையால் உறங்குகின்ற சீடர்களையும், கெத்சமனியில் அவர் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது (மாற் 14:32-41). மரணத்தின் துன்பத்தை அவராகவே ஏற்றுக்கொண்டார். இறைவனும் அவரைக் கைவிட்டு விட்டதாகத் தெரிகிறது (மத் 27:46). உண்மையில் அவர் தனியாக இருக்கவில்லை. தந்தை எப்போதுமே அவருடனிருந்தார் (யோவா 8:16.29; 16:32). நிலத்தில் விழுகின்ற கோதுமை மணியைப் போன்று, அவர் தனியாக இருக்காமல் பலனளித்தார் (யோவா 12:24). ''சிதறிக்கிடந்த கடவுளின் மக்களை அவர் ஒன்று சேர்த்து'' (11:52), ''அனைவரையும் தன்பால் ஈர்த்துக் கொள்கிறார்'' (12:32). இதுவே தோழமையின் வெற்றி.

*2. அனைவருடனும் இருப்பதற்காக இயேசு கிறிஸ்துவுடன் மட்டும்:* ''தன்னுடன் இருப்பதற்காகத்'' தனது சீடர்களை அழைத்த நேரத்தில் (மற் 3:14), மெசியா இனத்தவரை ஒன்று சேர்ப்பதானது இயேசுவால் தொடங்கப்பட்டது.

தொலைந்துபோன, தனிமையான ஆட்டைத்தேடி அவர் வந்தார் (லூக் 15:4). தனது சீடர்கள் (மாற் 4:10; 6:2) மற்றும் பாவம் புரிந்த பெண் (யோவா 4:27; 8:9) ஆகியோருடனான தனது தனிப்பட்ட உரையாடல்களால், நொருங்கிப் போன சமுதாயத்தை அவர் மீண்டும் உருவாக்கினார். அவர் கேட்கின்ற அன்பானது, ஒரே இறைவனாகிய யாவே கட்டளையிட்ட அன்பைப் போன்று (உப 6:4; நெகே 9:6) தனித்துவமிக்கது, மற்றும் மற்றவற்றைவிட உயர்வானது (லூக் 14:26).

தன்னுடைய துணைவரும் ஆண்டவரு மானவரைப் போன்று திருச்சபையானது உலகில் தன்னைத் தனிமையாகக் காண்கிறது. திருச்சபையானது இந்த உலகத்தைச் சேர்ந்ததன்று (யோவா 17:16). இதனின்று வேறுபட்ட திருச்சபையானது பாலைவனத்திற்குத் தப்பியோட வேண்டும் (திருவெளி 12:6). ஆனால், அதற்குப் பின்னர் எவ்வித உண்மையான தனிமையும் இனி இல்லை; கிறிஸ்து தனது சீடர்களைத் ''திக்கற்றவர்களாக விட்டுவிடவில்லை'' (யோவா 14:18). நெருங்கியவர்களின் மரணமானது நம்மீது சுமத்துகின்ற தனிமையை வென்று, ''நாம் அவர்களோடு ஒன்றாய்... ஆண்டவரோடு எப்போதும் இருக்கின்ற நாளில்'' (1 தெச 4:17) இவ்வாறு விடப்பட மாட்டோம்.

## தன்னடக்கம் (SELF CONTROL)

இது விவிலியத்தில் வரும் பல சொற்களின் மொழிபெயர்ப்பாகும். ''தன்னடக்கமில்லாத மனிதன் அரண் அழிந்த காவல் இல்லாத பட்டணம்'' (பழ 25:28). இப்பழமொழியானது ஒரு நகரத்தைப் பற்றியது. அதனுடைய மதில்கள், பகைவர்களிடமிருந்து பாதுகாக்கும்படியாக இல்லாமல் அழிக்கப்பட்டுவிட்டன. அதேபோல் உணர்வு சக்திகளின் பிறப்பிடமாகிய தனது ஆவியின்மேல் கட்டுப்பாடுகளைக் கொண்டிராதவனுடைய வாழ்க்கையும் ஆகும். தன்னுடைய கோபத்தையும் காம உணர்வுகளையும் மற்றும் ஆட்தன்மையை அழிக்கும் மற்றக் கட்டுப்பாடற்ற

உணர்ச்சிகளையும் பாதுகாக்காவிட்டால், அவை அவனுக்கு இடறலாக அமையும். பழ 16:32 ஒரு நேர்நிலையான நோக்கைக் கொடுக்கின்றது. ''வலிமை உடையவனை விடப் பொறுமையுடையவனே மேலாவான். ஊரை அடக்குகிறவனை விடத் தன்னை அடக்குகிறவனே சிறந்தவன்''. தன்னடக்கம் என்ற நற்குணம் கிரேக்கர்களுக்கு மிகவும் பிடித்தமானது. பழைய ஏற்பாட்டில் இதைப் பற்றி ஞான இலக்கியங்களில் மட்டும் குறிப்பிடப் பட்டுள்ளது. புதிய ஏற்பாட்டிலே ''தன்னடக்கம்'' கிரேக்க மொழியின் இரண்டு சொற்கள் குழுவிலிருந்து வருகின்ற வார்த்தைகளுக்கு மொழிபெயர்ப்பாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஒரு குழுச் சொற்கள் விவேகம் என்ற சொல்லால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன (2 திமொ 1:7). பிளேட்டோ காலத்திலிருந்து, ஞானம், திடம், நீதி ஆகிய வற்றோடு விவேகமும் எல்லாக் கிரேக்க ஒழுக்கமுறைச் சிந்தனைகளுக்கும் பொதுவான நற்பண்பாகும். மூலத்தில் கிறுக்குத் தன்மைக்கு எதிராக அறிவுத் தெளிவையும், பின்பு மட்டுடைமையையும், நல்லறிவையும் குறித்தது. இப்பண்பைக் கொண்டிருப்பவர் அறிவுத் தெளிவு கொண்டிருப்பர் (மாற் 5:15; அ.ப. 26:25; 2 கொரி 5:13). சமநிலையோடும் மட்டுமிதத்தோடும் இருப்பர் (தீத் 2:12; 1 பேதுரு 4:7). விவேகமுள்ளவர்களாக இருப்பர் (1 திமொ 2:9.15; தீத் 2:2-5). நேர்மையான தன்மதிப்புள்ளவராக இருப்பர் (உரோ 12:3).

மற்றொரு சொற்குழுவில் சிற்றின்ப இச்சைகளை அடக்குதல் (1 கொரி 7:9), பந்தயத்தில் ஓடுபவர்கள் எல்லா வகையிலும் தங்களை ஒடுக்கிக் கொள்ளுதல் (9:5), பாவத்தை எதிர்த்துநிற்றல் (அ.ப. 24:25; கலா 5:23; தீத் 1:8; 2 பேதுரு 1:6) ஆகிய சூழ்நிலையில் தன்னடக்கம் என்ற பொருளில் சொற்கள் பயன்பட்டுள்ளன.

**தன்னா** (DANNAH - அரண், தீர்ப்பிடுதல்)

தெபீர் மலை மாவட்டத்திலுள்ள யூதாவின் ஊர் (யோசு 15:49). அனேகமாக இது தெயிர்-எஸ்-செமஸ் அல்லது சிம்யாவாக இருக்கலாம்.

**தன்னை மறுத்தல்** (SELF-DENIAL)

இந்தக் கருத்தைப் பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் காணலாம். பொதுவாக, இச்சொல் தன்னை நிராகரித்தல், சுய வெறுப்பு, உயர்ந்த நோக்கத்திற்காக, - இலட்சியத்திற்காக, ஒரு சில சுய ஆசைகளை, விருப்பங்களைத் தியாகம் செய்வதைக் குறிக்கின்றது. பழைய ஏற்பாட்டைவிடப் புதிய ஏற்பாட்டில் இது முக்கியத்துவம் பெற்றுள்ளது. இங்குக் கிறிஸ்துவுக்குப் பிரமாணிக்கமாக இருப்பதற்காகத் தன்னையே மறுப்பதாகப் படம் பிடித்துக் காட்டப்படுகிறது.

*1. பழைய ஏற்பாட்டுப் பின்னணியில்:* பழைய ஏற்பாட்டில் ஓரளவு தன்னை மறுத்தல் பற்றிய வடிவங்கள் உள்ளன. ஒழுக்கக் கட்டுப்பாடுகள், உரிய கட்டுப்பாடுகள், தடைகள் போன்ற வகைகளைக் காணலாம்.

தன்னை மறுத்தல் என்பது மிகத் தெளிவாக ஒரு குறிக்கோளாகப் பழைய ஏற்பாட்டின் மையச் சிந்தனையில் குறிப்பிடப்படவில்லை. இஸ்ராயேலின் அழைப்பில் நாட்டினுடைய தேவையைவிடக் கடவுளுடைய குறிக்கோள்தான் முக்கியமானது என்பதில் இக்கருத்து உள்ளடங்கியுள்ளது (எசா 42:1-8; 52:13-53:12). அதேபோல், தன்னை மறுப்பது ஒரு சில தனி நபர்களின் வாழ்க்கையிலே கட்டாயமாக அமைந்து விடுகின்றது. அவர்கள் தங்களுடைய அழைத்தலின் காரணமாகத் தங்களுடைய ஆசைகளைத் தவிர்க்க வேண்டியிருக்கும் (உ-ம் மோசே யாத் 1-8; எரேமிய எரே 1:4-10; 15:15-18; ஆமோஸ் ஆமோ 3:8).

*2. தொடக்ககாலக் கிறிஸ்தவர்களின் பக்தியில்:* புதிய ஏற்பாட்டில் குறிப்பிட்டுள்ள ஒரு சில பக்திமுயற்சிகளான உண்ணா நோன்பு, பிறர் சிநேகச் செயல், தன்னைக் கட்டுப்படுத்துதல் போன்றவைகளை ஓரளவு தன் மறுப்புச் செயல்கள் என்று விவரிக்கலாம் (மத் 4:1-11; லூக் 4:1-13; அ.ப. 13:3; 14:23; 1 கொரி 7:5; 9:27; 1 திமொ 2:9; 1 பேதுரு 2:3-4). இந்த மாதிரியான கடைப்பிடிப்புகள் அனைத்தும் சாதாரணப் பக்தியின் அல்லது

தன்னடக்கத்தின் செயல்களாகக் கருதப்பட்டன; இவை அதிகமாக வலியுறுத்தப்படுவதில்லை. புதிய ஏற்பாட்டில் மலைப் பொழிவிலே, தன் மறுப்புச் செயல்களுக்கு மேலும் இன்னொரு பருமன் சேர்க்கப்படுகின்றது. அதாவது பிச்சையிடும் போதும், நோன்பு பின்பற்றும் போதும், இவற்றை மறைவாகவும், பகட்டில்லாமலும் செய்ய வேண்டும் *(மத் 6:1-4. 16-18)*. இன்னும் புதிய ஏற்பாட்டிலே கிறிஸ்துவினுடைய அன்பானது உதாரணமாகக் காட்டப்படும்போது கிறிஸ்துவ வாழ்வும், பக்தியும் சூழ்ந்த தன்மறுப்பு, பொருள் பெறுகின்றது *(மத் 20:25-28; மாற் 10:42-45; லூக் 22:25-27; யோவா 13:12-17; 2 கொரி 8:9; எபே 5:1-2; பிலி 2:5-11; 1 பேதுரு 2:21-23)*.

**3. புதிய ஏற்பாட்டில் வேர்நிலையான தன் மறுப்பு:** இதனுடைய வலுவான, தெளிவான அறிவிப்பு அதன் வேர் நிலையான, தனித்தன்மை மிக்க புதிய ஏற்பாட்டுப் பொருளில், இயேசுவின் கூற்றிலே காணப்படுகிறது: ''எனக்குப்பின் வரவிரும்பும் எவரும் தம்மையே மறுத்துத் தம் சிலுவையைத் தூக்கிக் கொண்டு என்னைப் பின்பற்றட்டும்'' *(மாற் 8:34; மத் 16:24; லூக் 9:23)*.

***அ) இயேசுவின் போதனையில்:*** இயேசுவின் போதனையில் வேர்நிலையான தன் மறுப்பு மிகத் தெளிவாக உள்ளது. இது இயேசுவைப் பின்பற்றுவதற்காக ஒருவன் தன்னையே முழுவதும் நிராகரித்தலாகும். மாற் *8:34-35*இல் *(மத் 16:24-25; லூக் 9:23-24; யோவா 12:25-26)* நேர்மறையான, எதிர்மறையான தன்மறுப்புப் பற்றிய புதிய ஏற்பாட்டுக் கருத்தில், நேர்நிலையான மற்றும் எதிர்நிலையான கூறுகள் தோன்றுகின்றன. எதிர்நிலைப் பொருளில் தன் மறுப்பு என்பது ஒருவன் தன்னுடைய வாழ்வு, சொத்து, சுகம், வீடு அனைத்தையும் நிராகரிப்பதைக் குறிக்கிறது *(மத் 19:16-30; மாற் 10:17-31; லூக் 18:18-30; மத் 10:37-38; லூக் 14:26-27)*. நேர்நிலைப் பொருளில் தன் மறுப்பு என்பது இயேசுவுக்குத் தன்னையே முழுமையாக அர்ப்பணிப்பதில் முதல் படியாகும். ஆகவே தன் மறுப்பு என்பது தன்னிலே முடிவான செயலன்று. மாறாக, இது கிறிஸ்துவைப் பின்பற்றும் படிமுறையிலே நிகழும் தன்னை நிராகரித்தலாகும். மூன்று நற்செய்திகளும் *(ஒத்தமை நற்செய்திகள்)* தன்மறுப்பைப் பற்றிய இயேசுவின் பொன்மொழியை, அவருடைய துன்பத்தையும் மரணத்தையும் முதல் முறையாக முன்னறிவிக்கும் சூழ்நிலையில் எடுத்துக் கூறுகின்றன என்பது பொருள் பொதிந்ததாகும். இச்சூழ்நிலையில் நோக்கினால் கிறிஸ்தவ தன்மறுப்பு கிறிஸ்துவின் சிலுவையில் பங்கு கொள்ளுதலாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

***ஆ) பவுலின் சிந்தனையில்:*** தன்மறுப்பு என்ற கருத்து பவுலின் கடிதங்களில் குறிப்பிடப்படாவிட்டாலும், கிறிஸ்தவ வாழ்வு என்பது தன்னையே அளிக்கும் பலியாகும் என்பதை உணர்ந்திருந்தார் *(உரோ 12:1)*. பவுலின் தனி வாழ்வைப் பொறுத்தவரையில், அவருடைய போதனையின் மையமாக அமைந்தது யாதெனில், அவரைப் பொறுத்தவரையில் ''கிறிஸ்துவை அறிந்து கொள்ளுதலின் பொருட்டு மற்றவை அனைத்தும் குப்பை எனக் கருதுகின்றேன்'' என்கிறார் *(பிலி 3:7-11)*. கிறிஸ்துவினுடைய செயல்களிலிருந்து கிறிஸ்துவ வாழ்வைப் பவுல் பிரித்துப் பார்ப்பதில்லை. பவுலைப் பொறுத்தவரையில் கிறிஸ்துவ வாழ்க்கையின் நோக்கமும், ஆற்றலும் கிறிஸ்துவுடன் மரித்து, அவருடன் உயிர்த்தெழுதலில்தான் அடங்கியுள்ளது *(உரோ 6)*. இந்த ஆன்மீக ஒழுக்க வளர்ச்சியான படிமுறையில் கிறிஸ்துவினுடைய மரணத்திலும் உயிர்ப்பிலும் பங்கு கொள்வதென்பது கிறிஸ்துவின் வழியாகப் புதுவாழ்வு நமக்கு உளதாகும் பொருட்டு நம்முடைய பழைய மனிதனைத் துறத்தலாகும் *(உரோ 6:6-11; கலா 2:20; எபே 4:20-24; கொலோ 3:5-11)*.

# தா

**தாகத்து** (TAHATH - கீழுள்ள, தாழ்மையான)- ஆள்

*1.* லேவியின் மூன்று புதல்வர்களில் ஒருவனான கோகாத்தின் குடும்பத்தலைமுறை அட்டவணையில் உள்ள ஒரு பெயர் (*1 நாள் 6:24.37*). இறைவாக்கினர் சாமுவேலின் மூதாதையருள் ஒருவர். ஏமானின் லேவியப் பாரம்பரியத்தைக் கூறும் பட்டியலிலும் இப் பெயர் இடம் பெற்றுள்ளது (*6:37*).

*2.* எப்பிராயிமின் குடும்பத்தின் ஒரு முன்னோர் இனப்பெயர்; பெரேதின் மகன் (*1 நாள் 7:20*).

*3.* எப்பிராயிமின் மற்றொரு குடும்பத்தின் இனப்பெயர் முன்னோர்; எலயாதாவின் மகன் (*1 நாள் 7:20*).

**தாகத்து** (TAHATH) - இடம்

யாத்திரைப் பயணத்தில் இஸ்ராயேல் மக்கள் பாலைவனத்தில் தங்கிய ஓர் இடத்தின் பெயர் (*எண் 33:26-27*). இது எங்கு இருந்தது என்று தெரியவில்லை.

**தாகான்** (TAHAN - கூடாரம்)

எப்பிராயிமின் மூன்றாவது மகன்; தாகானியக் குடும்பத்தின் தலைவன் (*எண் 26:35*). *1 நாள் 7:20-29*-இல் கொடுக்கப்பட்டுள்ள எப்பிராயிமின் தலைமுறை அட்டவணையில் எப்பிராயிமின் மூன்றாவது மகனாகத் தாகத்தும், தாகான் பின்னால் வரும் சந்ததியாகவும் கொடுக்கப்பட்டுள்ளது (*7:25*).

**தாகோன்** (DAGON - மீன், தானியம்)

பெலிஸ்தியரோடு தொடர்புள்ள கடவுள் (*1 சாமு 31:10; 1 நாள் 10:10*). இதற்குக் காசாவிலும் (*நீதி 16:23*), அசுதோதிலும் (*1 சாமு 5:2-7*) கோவில்கள் இருந்தன. சிம்சோன் பிடிபட்டபின், பெலிஸ்தியர் காசாவிலிருந்த தாகோன் கோவிலில் பலிகள் செலுத்தினர். இக் கோவிலைத்தான் சிம்சோன் அழித்திருக்க வேண்டும் (*யோசு 16:23-30*). உடன்படிக்கைப் பேழை கைப்பற்றப்பட்டபின், பெலிஸ்தியர் அதை அசுதோதிலுள்ள தாகோன் கோவிலில் அதன் சிலைக்கு அருகில் வைத்தனர். அது பேழையின் முன்பு இருமுறை முகம் குப்புற தரையில் விழுந்து கிடந்தது. இரண்டாம் முறை அதன் தலையும் இருகைகளும் துண்டிக்கப்பட்டு, வாயிற்படியில் கிடந்தன (*1 சாமு 5:2-7*). அசுதோதில் தாகோனின் கோவில் அசமோனியா காலத்திலும் இருந்தது. யூதா மக்கபேயரின் சகோதரனான யோனத்தானால் இது கி.மு. 147-இல் அழிக்கப்பட்டது (*1 மக் 10:83-84*). பெலிஸ்தியரின் படையெடுப்பிற்கு வெகு முன்னரே மேற்காசியாவில் இருந்த செமித்தியர்களால் தாகோன் வழிபடப்பட்டது. இராஸ் சமராவில் இதனுடைய வழிபாடு நன்கு வேரூன்றியிருந்தது. இங்குத் தாகோனின் கோவில் பாகாலுக்குப் போட்டியாக நின்றது. இந்த இரண்டு கோவில்களும் ஏறக்குறைய கி.மு. 2000 ஆண்டைச் சேர்ந்தவையாக இருக்கலாம்.

இராஸ் சம்ராவின் இதிகாசக் கதையில் பாகால் ''தாகோனின் மகன்'' என்று சொல்லப்பட்டுள்ளது. செமித்திய மொழியில் தானியங்களைக் குறிக்கும் பெயருக்கும், தாகோனுக்கும் உறுதியாகத் தொடர்பு இருந்திருக்கின்றது.

வானம் பூமி இவற்றின் மகனும், எல்லாவற்றிற்கும் மேலான கடவுளுமான ஏலுடன் தாகோன் இருந்தார் என்று இராஸ் சம்ரா ஏடுகளில் சொல்லப்பட்டுள்ளது. இதிலிருந்து தாகோன் பாகாலைவிட மேலான கடவுள் என்று தெரிகிறது. இவரது தாவரக் கடவுள் என்ற பணி கி.மு. 1500-ஐ ஒட்டிப் பாகாலுக்கு மாற்றப்பட்டது. ஆயினும் தாகோன் இராஸ் சம்ராவில் தனித்து வழிபடப்பட்டார். அவருக்கெனத் தனிப்பட்ட காணிக்கைகள் அளிக்கப்பட்டன. கானானிய கடவுள் தொகுப்பின் தலைவரான ஏலுக்கு அடுத்தபடியாக மேன்மை வகித்தார்.

பாலஸ்தீனத்தில் தாகோனின் மற்ற வழி பாட்டு மையங்கள்: யூதா எல்லையில் இருந்த பெத்-தாகோன் (யோசு 15:41); சனகெரிபின் ஆட்சிக் குறிப்புகளில் யாப்பாவுடன் சொல்லப்பட்டுள்ள பித் தகானா; ஆசேரிலிருந்த பெத்-தாகோன் (யோசு 19:27); நப்லூசுக்குக் கிழக்கேயும் முக்கென சமவெளியின் கிழக்கு எல்லையிலும் இருந்த பெயித் தாயான்.

**தாசி** (THASSI - ஆர்வமுள்ள)

மத்தத்தியாவின் ஐந்து புதல்வர்களில் ஒருவரான சீமோனின் சிறப்புப் பெயராகும் (1 மக் 2:3). இவரது சகோதரர் யோனத்தான் தோலமியர்களால் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டபின், இவர் யூத சுதந்தரத்துக்காக அரசனோடு பேச்சு வார்த்தை நடத்தி, உடன்படிக்கை செய்து, அசமோனிய அரச மரபை நிறுவினார்.

**தாடி** (BEARD)

நீண்ட தாடி வைத்துக் கொள்வது எபிரேய வழக்கம். தொழு நோயாளிகளைத் தவிர (லேவி 14:9) மற்றவர்கள் தாடியை நீக்குவது, எபிரேய வழக்கப்படி இழிவான செயல் ஆகும் (2 சாமு 10:4-5). பழைய மேற்காசிய நாட்டுப்படங்களில் செமித்திய மக்களுக்குத் தாடி இருப்பதைக் காணலாம். உரோமையர்களும் எகிப்தியர்களும் முழுவதும் சவரம் செய்து கொள்ளப்பட்ட முகத்துடனே இருக்க விரும்பினார்கள். ஆனாலும் பலர் எகிப்திய மன்னர்கள் போலத் தாடிகளை வைத்துக் கொண்டார்கள். எபிரேயர்களுக்குத் தாடியை மழிப்பது தண்டனைக்குரிய காரியமாகக் கருதப்பட்டது (லேவி 19:27). குருக்கள் தாடியை எடுக்கக்கூடாது என்றாலும், வரப்போகும் அழிவின் நினைவாக எசேக்கியேல் இறைவாக்கினர் மட்டும் தலை முடியையும், தாடியையும் வெட்டி விடப் பணிக்கப்பட்டார் (எசே 5:1). 1 சாமு 17:35-இல் தாவீது, ஒரு சிங்கம் அல்லது கரடியின் தாடியைப் பிடித்து, அதைத் கொல்வதாகக் கூறப்படுகிறது. யோவாபு, ஆமாசாவின் தாடியை வலக்கரத்தால் பற்றி அவரை முத்தமிடப் போனான் (2 சாமு 20:9). ஆக்கிசு மீது ஏற்பட்ட பயத்தால் தாவீதின் தாடிவழியாக உமிழ்நீர் ஓடிக்கொண்டிருந்தது (1 சாமு 21:13). தலை முடியையோ, தாடியையோ பிய்த்துக் கொள்வது கோபம் அல்லது வருத்தத்தின் அடையாளம் (எஸ் 9:3). தாடியை மழிப்பது பயங்கரமான அழிவின் அடையாளம் (எசா 7:20; 15:2; எரே 41:5; 48:37). விலையுயர்ந்த எண்ணெயால் தாடிக்குத் தைலம் பூசுவது குறித்து ஆரோனின் தாடியைப் பற்றிய ஒரு செய்தியில் கூறப்படுகிறது (சங் 133:27). ஆனால், இதே நிகழ்ச்சி யாத் 30:22-30; லேவி 8:30 ஆகியவற்றில் ஆரோனோடு தொடர்புடைய ஒரு குருத்துவ சடங்குமுறையாக்கிக் காட்டப்படுகிறது.

**தாடை, தாடை எலும்பு** (JAW, JAWBONE)

வாய் அமைப்பின் எலும்பு அமைப்பு. சிம்சோன் கழுதையின் தாடை எலும்பைப் பெலிஸ்தியருக்கு எதிராக ஓர் ஆயுதமாகப் பயன்படுத்தினார் (நீதி 15:15-17). அதனால் இது நிகழ்ந்த இடம் தாடை எலும்புக் குன்று என்று பொருள்படும் இராமத்துலெகி என்று பெயர் பெற்றது.

உருவகமாகவும் அடிக்கடியும் குறிப்பாக எதிரியைக் கட்டுப்படுத்துவதைக் குறிக்கவும் பயன்படுகிறது (எசா 30:28). ஓசே 11:4-இல் ''அவர்கள் கழுத்தின்மேல் (தாடையின் மேல்) இருந்த நுகத்தை அகற்றினேன்'' என்று இறைவன் கூறுகிறார்.

தாடையாகக் குறிக்கும் எபிரேயச் சொல்லை ''கன்னம்'' என்றும் மொழி பெயர்க்கலாம். இவை ஒன்றையொன்று மருவிப் பயன்படுவதை யோபு 4:12; எசே 29:4; 38:4-இல் காணலாம்.

**தாண்** (DAN - அவர் (இறைவன்) தீர்ப்பிடுகிறார்) - ஆள்

1. யாக்கோபின் ஐந்தாவது புதல்வர். 'தாண்' கோத்திரத்தின் குலப்பெயர் மூதாதையாவார். இவர் ராகேலின் பணிப் பெண்ணான பில்காவுக்குப் பிறந்ததால் (ஆதி 30:1-6) நப்தலியின் உடன் பிறந்தவர் ஆவார்; ஆகவே பட்டியல்களில் எப்போதும்

அவருடன் சேர்த்துக் குறிக்கப்படுகிறார் (ஆதி 35:25; 46:23; யாத் 1:4).

முதலில் 'தாண்' பென்யமினுக்குக் கிழக்குப் பகுதியில் குடியேற முயற்சி செய்தார். நீதி 1:34-35-இல் குறிக்கப்பட்டுள்ளதுபோல் சிலர் அய்யலோன், ஹர்கரேசு, சாலபிம் ஆகிய பகுதிகளை வெல்ல முடியவில்லை. ஆகவே செபேலாவில் குடியேற முயன்றனர். அங்கும் அதிகநாட்கள் நீடிக்க முடியவில்லை. எமோரியர்கள் இவர்கள் சமவெளிக்கு வருவதைத் தடை செய்தது மட்டுமல்லாமல், மலைப்பகுதிகளிலே தங்கியிருக்கக் கட்டாயப்படுத்தினர். கானானியர் தங்கியிருந்த பகுதிக்குள் தாணியர் அதிகமாகப் புகுந்துவிட்டதாகத் தெரிகிறது. தாணைச் சேர்ந்த சிம்சோனின் கதை இதோடு ஒத்துப்போகிறது (நீதி 13:2 தொ). அவருடைய தீரச்செயல்கள் மகனேதாணில் தொடங்குகிறது (13:25). இவை அவரைப் பெலிஸ்தியப் பகுதிக்குள்ளும் இட்டு செல்கின்றன. ஆகவே இவர்கள் ஒரு பாதுகாக்கப்பட்ட பாளையத்தை மட்டும் கொண்டிருந்தனர்; ஒரு குடியிருப்பை இவர்கள் கொண்டிருக்கவில்லை. இந்தப் பாளையம் சோரா, எசுத்தாவோல் என்ற இரண்டு கானானிய நகரங்களுக்கிடையில் இருந்தது. யோசு 19:40-46-இல் வரும் நகரங்களில் வரும் பட்டியல் பிற்காலத்தைச் சேர்ந்ததாகும். இது தாணின் வரலாற்றுக்குப் பெரிதும் உதவவில்லை.

நீதி 17-18-இல் 'தாண்' புதிய குடியிருப்பைத் தேடிச் சென்றார்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது நம்பத்தகுந்ததாகும். தாண் இனத்தவர் யோர்தான் மூலம் வரை சென்றனர். அங்கு இலாயிசு என்ற நகரை அமைத்தார்கள் (நீதி 18:7.28). அதன்பகுதி அவர்களது நோக்கத்திற்கு ஏற்றதாய் இருந்தது. இதைத் தங்கள் குல மூதாதையரின் பெயரான 'தாண்' என்ற பெயரால் அழைத்தார்கள் (யோசு 19:47; நீதி 18:29). இது முதலில் 600 மக்களைமட்டும் கொண்டிருந்தது (நீதி 18:11). தாண் இனம் சிறியதாகும்.

தெபோராவின் பாடலில் தாண் இனம் கண்டிக்கப்படுகிறது. ஏனெனில் அவர்கள் இஸ்ராயேலின் பொதுக்காரியத்தில் அக்கறை காட்டவில்லை; அந்நியரைப்போல் நடந்துகொண்டனர் (நீதி 5:17). யாக்கோபின் ஆசிர்வாதத்திலும் (ஆதி 48:16) தாணைக் காண்கின்றோம். உப 33:22-இல் மோசேயின் ஆசிர்வாதத்தில் தாண் வடக்கில் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அனேகமாகத் தாண் தமஸ்குவிற்குச் சென்று வந்து கொண்டிருந்த வியாபாரிகளைத் தாக்கி சூறையாடினர்.

வெவ்வேறு வம்சவழிப்பட்டியல்களில் தாணின் இடம் வேறுபடுகின்றது. குருக்கள் பாரம்பரியத்தில் கடைசியிலிருந்து மூன்றாவது இடத்தைக் கொண்டுள்ளது (எண் 1:38-39; 2:25-26; 7:66-71; 10:25; 26:42-43). தாண் எண் 1:12; 13:12 ஆகிய இடங்களில் குறிக்கப்படுகிறது. இடப்பங்கீட்டுப் பட்டியலில் பென்யமினுக்கு அடுத்தபடியாகத் தாண் நான்காம் இடத்தில் குறிக்கப்படுகிறது (34:22). லேவியர் நகர்ப்பட்டியலில் தாண், பென்யமின் மற்றும் எப்பிராயிமுக்கு அடுத்து ஐந்தாவது இடத்தைப் பெறுகிறது (யோசு 21:5.23-24; 1 நாள் 6:61.69). ஏபால் மலையில் சாபத்தைக் கூறும் குழுவின் இறுதியில் தாண் குறிக்கப்படுகிறது (உப 27:13). எசே 48:1-இல் தாணின் வடபகுதி குறிக்கப்படுகிறது. கிழக்கிலுள்ள மூன்றாவது வாயில் தாண்வாயில் என்றழைக்கப்படுகிறது. நாளாகமத்தில் ஓர் இடத்தில் நப்தலியோடு சேர்த்தும் (1 நாள் 12:36), மற்றொரு இடத்தில் அதிலிருந்து பிரித்தும் (2:2) கூறப்படுகிறது. தாண் குலம் இஸ்ராயேல் வரலாற்றில் முக்கிய பாகம் கொள்ளவில்லை. இருவர் குறிப்பிடத்தக்கவர்கள். ஒருவர் பெட்டகத்தைக் கட்டுவதில் பெட்சலேலுக்கு உதவி செய்த ஓகோலியாபு ஆவர் (யாத் 31:6; 35:34; 38:23). மற்றவர் ஊராம் அபி என்பவர். இவரும் தீரைச் சேர்ந்த ஒரு கலைஞர். ஆனால் தாணியப் பெண்ணின் மகன் (2 நாள் 2:13; 1 அர 7:13-14-இன்படி இவர் நப்தலியப் பெண்ணின் மகனாவார்). லேவி 24:11-இல் குறிக்கப்படும் இறை நிந்தனை செய்பவன், தாண் வழியில் தாணைச் சேர்ந்தவர். திருவெளி 7:4-8 தாண் இனத்தைச் சேர்க்கவில்லை. ஒருவேளை அரசன் எரொபவாம் காலத்தில் தாண் சிலை வழிபாட்டை ஊக்குவித்தது காரணமாய் இருக்கலாம் (1 அர 12:29).

**தாண் (DAN) - இடம்**

1. தாண் கோத்திரத்தார் குடிபெயர்ந்து சென்ற பாலஸ்தீனத்தின் வடகோடியில் உள்ள நகரம். இது எர்மோன் மலையடிவாரத்திற்குத் தெற்கேயும், யோர்தான் நதியின் முக்கியமான கிளை நதிகளுள் ஒன்றான நார் லெத்தான் என்ற நதியின் மூலத்திலுமுள்ள தேல் ஏல் - காதி (நீதிபதியின் மேடு) என்று அடையாளம் காட்டப்படுகிறது. ஊலே சம வெளியைப் பார்த்தவண்ணம் தீரையும் தமஸ்குவையும் இணைக்கும் வணிகச் சாலையைப் பாதுகாக்கிறது.

இந்த மண்மேடு சதுர - அமைப்பில் *450-540* மீட்டர் நீளமானது. இதன் கிழக்கு முனையானது மேற்கு முனையைவிட உயர்ந்துள்ளது. இங்குப் புதைபொருள் ஆராய்ச்சி நடைபெறவில்லை. ஆனால் இங்கு மக்கள் வெண்கலக்காலத்திலும் *(கி.மு. 3000-1200)* இரண்டாம் இரும்புக் காலத்திலும் *(900-600)* வாழ்ந்ததாக மேல் மட்ட ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. நீதி *18:7.14.27.29*-இன் படியும் துட்மோசின் பட்டியல்படியும், கானானியர்காலத்தில் இந்த நகரமானது இலாயிசு என்று அழைக்கப்பட்டது. இப்பெயரின் மாறுபட்ட வடிவம் இலசேம் யோசு *19:47*-இல் உள்ளது. அனேகமாகப் பெலிஸ்தியரின் தாக்குதலினால் தாண் கோத்திரத்தார் தங்களுடைய நாட்டை விட்டுவிட்டு, வடக்குக்குக் குடிபெயர்ந்து சென்று இலாயிசைக் கைப்பற்றி அதற்குத் தாண் என்று பெயரிட்டிருக்கலாம் (நீதி *18*). நாட்டைப் பிரித்தபிறகு எரொபவாம் பொற்கன்றுக்குட்டியோடு புனித இடம் அமைத்த இரு இடங்களில் தாணும் ஒன்றாகும் *(1 அர 12:29)*; ஏகூவின் சமயப் புரட்சியிலிருந்து இந்தப்பீடம் தப்பியது *(2 அர 10:29)*. கி.மு. *9*-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இது இஸ்ராயேலின் வடக்கு நகரங்களில் ஒன்றாக இருந்தது; யூதாவின் அரசனான ஆசாவின் தூண்டுதலால் தமஸ்குவின் அரசனான பெனதாது இதைக் கைப்பற்றிக் கொண்டான் *(1 அர 15:20; 2 நாள் 16:4)*. இஸ்ராயேலின் வடகோடி முனையைக் குறிப்பதற்காகத் ''தாணிலிருந்து பெயேர் செபாவரை'' என்ற சொற்றொடர் பழைய ஏற்பாட்டில் அடிக்கடி வருகின்றது.

2. மெக்காவுக்கும் மெதினாவுக்கும் இடையிலுள்ள ஒரு நகரமாகவோ மக்களாகவோ இருக்கலாம். இத்துடன் தீர் மக்கள் வியாபாரம் செய்தனர் *(எசே 27:19)*.

**தாதி, செவிலித்தாய் (NURSE)**

ஒரு குழந்தைக்குப் பாலூட்ட அல்லது அதைக் கவனத்துக் கொள்ள வேலைக்கு அமர்த்தப்படும் பெண். பொதுவாக இஸ்ராயேல் பெண்கள் தங்கள் குழந்தைகளைத் தாங்களே பாலூட்டிக் கவனித்துக் கொண்டனர் *(ஆதி 21:7; யாத் 2:7; 1 சாமு 1:23; 1 அர 3:21; உ.ச. 8:1; 2 மக் 7:27)*. இக்காலத்தை விட முற்காலத்தில் நீண்ட காலத்திற்கு, மூன்று ஆண்டுகள்வரைகூட, இவ்வாறு குழந்தைகளைக் கவனித்துக் கொண்டனர் *(1 சாமு 1:22-24)*. பால் குடி நிறுத்தல் ஒரு பெரிய குடும்ப விழாவாகக் கொண்டாடப்பட்டது *(ஆதி 21:8)*. எருசலேம் பாபிலோனுக்கு வீழ்ச்சியுற்றபோது, அங்குப் பால்கொடுக்க யாரும் இல்லை *(புல 4:4; யோவேல் 2:16)*.

சிலசமயங்களில் தாதிகள் நியமிக்கப்பட்டனர். இப்பெண்களுக்குக் குடும்பத்தில் நிலையான இடமும் மதிப்பும் உண்டு *(ஆதி 24:59; 2 அர 11:2)*. மோசேயின் தாய் பார்வோனின் மகளால் மோசேக்குத் தாதியாக அமர்த்தப்பட்டாள் *(யாத் 2:7-9)*. ரெபேக்காவின் பணிப்பெண்ணாகிய தெபோரா, பாலூட்டும் காலம் முடிந்தபின்னும் வீட்டில் பணிப் பெண்ணாக இருந்தாள் *(ஆதி35:8)*. யோனத்தான் குடும்பத்தில் ஐந்து வயது மெபிபோசேத்தைத் தாதி கவனித்து வந்தாள் *(2 சாமு 4:4)*. ஒருவேளை நகோமி தனது பேரனுக்குத் தாதியாக இருந்திருக்கலாம் *(ரூத் 4:16)*. பெரும்பாலும் தாதிகள் வீட்டின் பணிப் பெண்ணாக இருந்திருப்பதாகத் தெரிகிறது *(எசா 49:23-24; 2 அர 11:2; 2 நாள் 22:11)*. சிலசமயம் ஆண் காப்பாளர்கள் (பெரும்பாலும் அண்ணகர்கள்) தாதிகளாகக் கருதப்பட்டனர் *(2 அர 10:1.5)*. ஆகவே இவ்வாறு இஸ்ராயேல் மக்களுக்கு மோசே ''தாயாகக்''

கருதப்படுவது இயற்கையானதே (எண் 11:12). பவுல் தன்னைத் தெசலோனிக்கேயர்களுக்குத் தாதியாகக் கருதுகிறார் (1 தெச 2:7). இந்த இருவரின் ஒப்புமை இறைமக்களுக்கு அளித்த தொடக்கக் கவனிப்பையும் அதன் மென்மையையும் குறிக்கலாம்.

**தாத்தமா** (DATHEMA)

கிலயாதிலுள்ள ஒரு கோட்டை. யூதர்கள் இதில் தஞ்சம் புகுந்திருந்தனர். ஏனெனில் சீரியர்களால் யூதர்கள் இதில் முற்றுகையிடப் பட்டிருந்தனர். இதிலிருந்து மக்கபேயுவால் விடுவிக்கப்பட்டார்கள் (1 மக் 5:9). இது இன்றைய இ்ரெம்தெ அல்லது தாமேயாக இருக்கலாம்.

**தாத்தான்** (DATHAN - பலமிக்க, நீரூற்று சார்ந்த)

மோசேயின் அதிகாரத்திற்கு எதிராகத் தன்னுடைய சகோதரனான அபிரா (1)முடன் சேர்ந்து கிளர்ச்சி செய்தார்; ரூபன் கோத்திரத்தாரான எலியாபுவின் மகன் (எண் 16:1.12.24-25.27; 26:9; உப 11:6; சங் 106:17; சீரா 45:18).

மோசேயின் தலைமைக்கு எதிராகப் பாலை வனத்தில் இஸ்ராயேலரிடையே எழுந்த இரண்டு கிளர்ச்சிகள் எண் 16-இல் பின்னிப் பிணைந்துள்ளன. இதில் ஒன்று, மோசேயுடையவும் ஆரோனுடையவும் மத உரிமைகளுக்கு எதிராகக் கோராகுவால் செய்யப்பட்டது; மற்றொன்று, மோசே மக்கள் மேல் கொண்டிருந்த அரச அதிகாரத்திற்கு எதிராகத் தாத்தானும் அபிராமும் செய்தது (எண் 16:1-2. 12-15.25-26.27-34). மோசே யாவேயிடம் முறையிட அவர் மோசேயின் அதிகாரத்திற்குச் சான்று பகர்ந்தார். இறைச்செயலின் விளைவாகத் தாத்தானும் அபிராமும், அவர்கள் குடும்பங்களும் சொத்துக்களும் நிலத்தால் விழுங்கப்பட்டு அழிக்கப்பட்டன. இஸ்ராயேல் சமுதாயத்தில் அதிகார அமைப்புகளுக்கு எதிராக எழும் சவால்கள் யாவேக்கு எதிராகச் செய்யும் நேரடிக் கிளர்ச்சிகள் என்றும், இந்தச் சவால்களைச் சந்திக்க யாவே 'ஏதாவது புதுமையைச் செய்கின்றார்'' (எண் 16:30) என்றும் இதிலிருந்து தெரிகிறது.

எண் 26:9-இல் உள்ள வம்ச வரலாற்றில் தாத்தானும், அபிராமும் சொல்லப்பட்டுள்ளனர். இவர்களுடைய கிளர்ச்சி உப 11:6; சங் 100:17-இல் சொல்லப்பட்டுள்ளது.

**தாபத்து** (TAPHATH - சொட்டு)

சாலமோன் அரசனின் மகள். இவளது கணவன் சாலமோன் மன்னனின் நாபத்தோர் பகுதியை நிர்வகித்து வந்த பென் அபினதாபு ஆவார் (1 அர 4:11).

**தாபினே** (DAPHNE - வாகைமரம்)

அந்தியோக்கியாவிற்கு அருகிலுள்ள அழகு வாய்ந்த சிறப்பான ஓர் இடம். அப்பொல்லோவின் ஆலயத்திற்கும் புகலிடப்பாது காப்பு உரிமைக்கும் பெயர் போனது. முந்தைய பெரியகுரு ஓனியாசு மக்கபேயர் காலத்தில் இங்கு வந்து அடைக்கலம் புகுந்தார்; இங்கிருந்து அவரைக் கபடமாய் வெளிவரச் செய்து கொன்றனர் (2 மக் 4:33).

**தாபேரா** (TABERAH - நெருப்பான, எரிகின்றன)

இஸ்ராயேலர் தங்கள் யாத்திரைப் பயணத்தில் தங்கிய இடங்களில் ஒன்று. இங்கு மக்கள் தங்கள் இன்னல்களைப் பற்றி முறையிட்டு, கடவுளைக் கோபம் கொள்ளச் செய்தனர். அவர் நெருப்பை அனுப்பியதால், பாளையத்தின் ஒரு பகுதி அழிந்தது (எண் 11:1-2). ''எனவே அந்த இடத்துக்குத் தாபேரோ என்று பெயராயிற்று; ஏனெனில் ஆண்டவரின் நெருப்பு அவர்களிடையே எரிந்தது'' (11:3).

உப 9:22-இல் இஸ்ராயேல் மக்கள் ஆண்டவருக்குக் கோபம் உண்டாக்கிய் இடங்களாகக் கொடுக்கப்பட்டுள்ளதில் இதுவும் ஒன்றாகும். எண் 33-இல் இஸ்ராயேல் மக்கள் தங்கிய இடங்களின் பட்டியலில் இவ்விடம் விடப்பட்டுள்ளது. இந்த இடம் எங்கு இருக்கிறது என்று தெரியவில்லை.

**தாபேல்** (TABEEL - இறைவன் நல்லவர், ஒன்றுக்கும் உதவாத)

1. சமாரியாவில் உள்ள ஓர் அரமேயன்; யூதர்கள் எருசலேமை மீண்டும் கட்டுவதைத் தடுத்து நிறுத்தக்கோரி முதலாம் அர்த்தக்சஸ் தாவுக்கு (கி.மு. 465-424) மனு எழுதியவர்களில் ஒருவர் (எஸ் 4:7).

2. ஓர் அரமேயன். தமஸ்குவின் அரசன் ரெசினும் இஸ்ராயேலின் அரசன் பெக்காவும் கூட்டுச்சேர்ந்து தாவீதுகுல அரசனாக நியமிக்கப்பட்ட ஆகாசுக்குப் பதிலாகத் தங்களின் கைப்பாவை அரசனாக நியமிக்கப்பட விரும்பப்பட்டவனின் தந்தை (எசா 7:6). இதனால் யூதா அசீரியாவின் எதிர்க்கூட்டணியில் சேர்க்கப்பட திட்டம் செய்யப்பட்டது. தாபேலின் மகன் அனேகமாக ஒரு சீரியனாக இருந்ததால் யூதா தமஸ்குவின் பகுதியில் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

அக்காலத்தில் அசீரிய வாசகத்தில் காணப்படும் பெத் தப்-ஏல் என்ற இடம் அம்மோனுக்கும் கிலயாதுக்கும் வடகிழக்கில் இருந்தது. ''தாபேலின் மகன்'' என்ற சொல் சீரிய இளவரசிக்குப் பிறந்த யூதா இனத்தினனையும் இந்த ஊரில் பிறந்த அல்லது வாழ்ந்தவனையும் குறித்தது. ''ஒன்றுக்கும் உதவாத'' என்ற இழிபொருளில் இச்சொல்லை யூதமரபு வாசகம் ''தபேயால்'' என்று உச்சரித்தது.

**தாபோரிலுள்ள கருவாலிமரம்** (TABOR, OAK OF)

பெத்தேலுக்கு அருகில் உள்ள ஓர் இடம். பெத்தேல் திருத்தலத்திற்குச் செல்லும் மூவரைச் சவுல் சந்திக்க வேண்டிய இடம். சவுலின் பணிபற்றி இது சாமுவேல் அளித்த இரண்டாவது அறிகுறி (1 சாமு 10:3). இந்த மரத்தின் சரியான இடம் தெரியவில்லை.

**தாபோர்** (TABOR) - இடம்

செபுலோனின் நிலப்பகுதியில் உள்ள ஒரு லேவிய நகரம் (1 நாள் 6:77). இதற்கு இணையான பட்டியலாகிய யோசு 21:34-35-இல் இப்பெயர் காணப்படவில்லை. ஏதாவது ஒன்று அல்லது இரண்டு வாசகமுமே பிழையாக இருக்கலாம். நாளாகமம் சரியாக இருந்தால் தாபோர் என்ற இடம் தாபோர் மலையில் அல்லது அதற்கு அருகில் இருந்திருக்க வேண்டும். இது கிசிலோத் தாபோர் என்ற இடமாக இருக்கலாம் (யோசு 19:12).

**தாபோர் மலை** (TABOR, MOUNT)

இஸ்ரியேல் பள்ளத்தாக்கில் உள்ள ஒரு சிறிய மலை அல்லது குன்று. இஸ்ராயேலின் நீதிபதிகளுடனும், கிறிஸ்துவ மரபுடனும் முக்கிய தொடர்பு உடையது.

இது தற்பொழுது அராபிய மொழியில் யெபெல் எத்-தோர் என்று அழைக்கப்படுகிறது. இஸ்ரியேல் பள்ளத்தாக்கின் வடகிழக்கு ஓரத்திலும், நசரேத்திற்குக் கிழக்கு தென்கிழக்கே சுமார் 9 கி.மீ. தொலைவிலும் இம்மலை அமைந்துள்ளது. இஸ்ரியேல் பள்ளத்தாக்கிலிருந்து இம்மலை மிகவும் செங்குத்தாக உயர்ந்து மேலே இலேசாக வளைந்து குவிமாடமான உச்சி அமைப்புக் கொண்டுள்ளது. உச்சியில் செவ்வக வடிவ தளம் உள்ளது. இம்மலை 562 மீட்டர் உயரமுள்ளது. ஆயினும் இதன் பக்கங்கள் செங்குத்தாயிருப்பதும், இது தனித்து நிற்பதும் இதற்குப் பிரம்மாண்டமான தோற்றம் அளிக்கிறது. இதனால் கர்மேல், எர்மோன் ஆகிய மலைகளுடன் ஒப்பிடப்படுகிறது (சங் 89:12; எரே 46:18). இதன் உச்சியிலிருந்து பள்ளத்தாக்கு முழுவதின் கண்கவர் காட்சியைக் காணலாம். இஸ்ரியேலுக்கும் கலிலேயக் கடலுக்கும் செல்லும் கிழக்கு-மேற்குச் சாலையிலும், பெத்சானுக்கும் தமஸ்குவிற்கும் செல்லும் வடக்கு-தெற்குச் சாலையிலும் இம்மலை ஆதிக்கம் செலுத்துகிறது.

உப 33:19; ஓசே 5:1-இல் குறிக்கப்படும் மலை தாபோர் மலையென்றால் தொடக்கத்தில் இது பாகால் வழிபாட்டு மையமாக இருந்திருக்கலாம். பன்னிரண்டு கோத்திரங்களுக்கிடையே நாட்டைப் பங்கீடு செய்யும் சூழ்நிலையில் இம்மலை முதலில் குறிக்கப்படுகிறது.

இது இசக்கார், நப்தலி, செபுலோன் ஆகிய நிலப்பகுதிகள் சந்திக்கும் இடத்தில் உள்ளது (யோசு 19:12.22.34). ஆகவே பாராக்கு, நப்தலி, செபுலோன் மக்களுடன் சேர்ந்து சீசராவைத் தாக்க இந்த இடத்தைப் பயன்படுத்தினார் (நீதி 4:6-14). இங்குதான் மிதியானிய அரசர்கள் செபாகுவும் சல்முன்னாவும் கிதியேனின் சகோதரர்களைக் கொன்றார்கள் (8:18). மூன்றாம் அந்தியோக்கு இம்மலையில் ஒரு கோட்டையை கி.மு. 218-இல் கட்டினான். யோசிப்பஸ் அதன் உச்சியைச் சுற்றிச் சுவர் அமைத்ததாக உரிமை கொண்டாடுகிறார்.

மரபுகளின்படி இயேசுவிற்கு உருமாற்றம் நிகழ்ந்தது இங்குதான் என்பதால் இம்மலை மிகவும் மதிக்கப்படுகிறது. ஆனால், உருமாற்றம் எங்கு நிகழ்ந்தது என்பது தெளிவாகத் தெரியவில்லை; நற்செய்தியில் அந்த இடத்தின் பெயர் குறிப்பிடப்படவில்லை (மத் 17:1-8; மாற் 9:2-8; லூக் 9:28-36). பொதுப்பாரம்பரியத்தின் அடிப்படையில் பேரரசன் கான்ஸ்டான்டின் தாயாகிய கேலேனா இம்மலைமேல் ஓர் ஆலயத்தைக் கி.பி. 326-இல் கட்டினாள். பின் 7-ஆம் நூற்றாண்டளவில் இயேசு, மோசே, எலியா ஆகிய மூவருக்கும் மூன்று திருத்தலங்கள் ஏற்படுத்தப்பட்டன. அதன்பின் துறவியர் மடங்களும், ஆலயங்களும் எழுப்பப்பட்டன. இவையெல்லாம் சலாடின் என்பவரால் 1187-இல் அழிக்கப்பட்டன. இவரின் சகோதரர் இங்கு ஒரு கோட்டையை 1212-இல் எழுப்பினார். 13-ஆம் நூற்றாண்டில் இதுவும் அழிக்கப்பட்டு, 6 நூற்றாண்டுகளாக எதுவுமில்லாமல் இருந்தது. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கிரேக்கத் திருச்சபையால் ஓர் ஆலயமும், துறவியர் மடமும் கட்டப்பட்டன. பழைய சீரிய பாணியில் இலத்தீன் மரபுப் பேராலயம் ஒன்றும் மலை உச்சியில் கட்டப்பட்டது.

**தாமரி** (DAMARIS - பசுங்கன்று)

ஏதன்சு நகரில் அரயொப்பாகுவில் பவுலின் உரையைக் கேட்டு, தியோனிசியு என்பவருடன் கிறிஸ்துவமறையைத் தழுவிய ஒரு பெண் (அ.ப. 17:34). இதுவரை அறியப்படாத தாமரி என்ற இப்பெயர் பொதுவாக வழங்கப்பட்ட தாமலி என்பதன் மறுவடிவமாக இருக்கலாம். மதிப்புமிக்க பெண்களைப்பற்றி லூக்காவிற்குத் தெரிந்திருந்தும், தாமரியைப் பற்றிஅதிகம் சொல்லவில்லை (அ.ப.13:50; 17:12). இவள் தியோனிசியுனின் மனைவி என்று கிரிசோஸ்தோம் தவறாகச் சொல்கின்றார்.

**தாமரை** (LOTUS)

இந்தச்சொல், பலவிதமான தாவரங்களைக் குறிக்கும் பொதுவான பெயராகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனினும் இது பொதுவாகச் சிசிபுசு தாமரை என அடையாளம் காட்டப்படுகிறது. ஆனால் இது முட்புதர்ச்செடியாகவோ, குறைந்த உயரமுள்ள செடியாகவோ வரட்சியான இடங்களில் வளர்வது. இந்த விளக்கத்தின் அடிப்படையில் பார்க்கும்போது, யோபு 40:21-22-இல் குறிப்பிடப்பட்டிருக்கும் தண்ணீர்ப் பின்னணியுடன் இதைத் தொடர்புபடுத்த இயலாது.

யோபு நூலில் வரும் பெகிமோத்து என்ற விலங்கு என்ன என்ற கேள்விக்குப் பதில் அளிப்பதைப் பொருத்து இச்சொல்லின் பொருளும் விவிலியப் பின்னணியின் அடிப்படையில், எகிப்தில் காணப்பட்ட நிம்பேயா தாமரை எனப்படும். தண்ணீர் லீலிச் செடி பொருத்தமுடையதாகும். ஆனால் இதன் நிழலில் ஒரு பெரிய விலங்கு தன்னை மறைத்துக் கொள்ள முடியாது.

**தாமார்** (TAMAR - பேரீந்த மரம்) - ஆள்

1. யூதா தன் மகன் ஏருக்கு மணமுடித்த கானானியப் பெண். 'ஏர்' இறந்ததால், அன்றிருந்த வழக்கப்படி அவனது சகோதரன் ஓனான் அவளை மணமுடித்தான். அவன் செய்த தவறினால் இறந்தான். இதனைக் கண்ட யூதா தனது இறுதி மகன் சேலாவையும் தாமாரின் சேர்க்கை அழித்துவிடும் என்று பயந்து சேலாவின் வயதைக் காரணம் காட்டி அவளை அவளது வீட்டுக்கு அனுப்பி விடுகின்றார். சேலா பெரியவனான

பிறகும் யூதா காலம் தாழ்த்தவே, தாமார் ஒரு வேசியைப்போல் வேடமணிந்து யூதாவுடன் சேர்ந்து கருவுறுகிறாள். அவளை அறியாத யூதா அவளுக்கெதிராக வழக்கு தொடுக்கும் பொழுது அவள் தனது கருவுக்குக் காரணம் யூதாவே என்று நிரூபித்ததால் தனது தவறை யூதா ஏற்று அவளையும் ஏற்றுக் கொள்கின்றார். அவளுக்குப் பெரேட்சு, செரகு என்று இரு குழந்தைகள் பிறந்தன (*ஆதி 38:1-30; 1 நாள் 2:4*). இவளைப்பற்றி இஸ்ராயேலில் நிலவிவரும் விளக்கக் கதைகளில் யூதாவும் இவளும் இணைந்ததுகூட இறைவனின் தூண்டுதல்தான் என்று கூறப்பட்டுள்ளது. இவளது மூத்த மகன் பெரேட்சு தாவீதினுடையவும் இயேசுவினுடையவும் மூதாதையர் ஆகிறார். இவள் இயேசுவின் தலைமுறை அட்டவணையிலும் (*மத் 1:3*), 'ரூத்' ஆசிர்வதிக்கப்பட்டபொழுதும் குறிப்பிடப்படுகின்றாள் (*ரூத் 4:12*).

2. தாவீதரசருக்கும், மாக்காளுக்கும் பிறந்தவள். அப்சலோமின் சகோதரி. இவள் தாவீதின் மற்றொரு மகனான அம்னோன் என்பவனால் கற்பழிக்கப்பட்டாள். அம்னோன், அப்சலோமால் கொலை செய்யப்படுகின்றான் (*2 சாமு 13:1-29; 1 நாள் 3:9*).

3. அப்சலோமின் ஒரே மகள். தனதுமகள், தன் தங்கை தாமாரைப் போல அழகாயிருந்தாலும், அவளது நினைவாகவும் அதே பெயரைச் சூட்டுகின்றார் (*2 சாமு 14:27*). எழுபது நூலின்படியும் சிலபழைய இலத்தீன் வாசகங்களின்படியும் இவள் ரெகபயாமின் மனைவியாகி அபியாத்தாரைப் பெற்றாள். இது சரியென்றால் இவளும் *1 அர 15:2; 2 நாள் 11:20-22*-இல் வரும் மாக்காளும் (4) ஒருவரே.

**தாமார் (TAMAR) - இடம்**

1. சாலமோன் அரசனால் கட்டப்பட்ட நகரம் (*1 அர 9:18; 2 நாள் 8:4*). சிலர் இத்னை 2-இல் கூறப்படும் நகரம் என்றே கூறுவர்.

2. தென்கிழக்கு யூதாவில், சாக்கடலின் தென்கரையில் இருந்த ஒரு நகரம் (*எசே 47:19; 48:28*). எசேக்கியேலின் காட்சியில் இது இஸ்ராயேலின் தென் எல்லையில் கிழக்குக் கோடியில் அமைந்திருந்தது; சாலமோன் காலத்தில் இஸ்ராயேல் ஏதோம் எல்லையில், கோட்டை கொத்தளங்கள் நிறைந்த நகராய் விளங்கியது. ஏதோமியர் தோற்கடிக்கப்பட்ட பிறகு இந்நகர் சாலமோனுக்குக் கனிப்பொருள் கிடங்காகப் பயன்பட்டிருக்கலாம். ஏதோம் சுதந்தரமடைந்த பிறகு இந்நகரம் எல்லைகளைப் பாதுகாக்கச் சிறந்த பாதுகாப்புத் திட்டங்களுடன் சீர்திருத்தப்பட்டது. இது கச்சோன் தாமாராக (அச்சோன் தாமார்) இருக்கலாம். இது எங்கு இருந்தது என்று ஒன்றும் கூறுவதற்கில்லை. சிலர் இது எருசலேமிலிருந்து 88 கி.மீ. தொலைவில் இருந்தது என்பர். இது அராபாவுக்கு மேற்குப்பக்கத்திலுள்ள கசர் எய்யெகெனியா என்றும், சாக்கடலுக்குத் தென்மேற்கில் 10 கி.மீ. தொலைவிலுள்ள அயின் ஏல் - அருஸ் என்றும், சாக்கடலுக்குத் தெற்கிலுள்ள ஏல்-கெரியா என்றும், சாக்கடலுக்குத் தென்மேற்கில் 32 கி.மீ. தொலைவிலுள்ள அயின் கோசோபு என்றும் பலவாறு அடையாளம் காட்டுவர்.

**தாயகம், தாய்நாடு (FATHERLAND)**

I. தாயகம் என்பது ஒரு மக்களுடைய அனுபவத்தின் அத்தியாவசியமான அனுபவங்களில் ஒன்றாகும். பழைய ஏற்பாட்டு மக்களுக்குத் தாயகமானது அவர்களது விசுவாசத்திலும் நம்பிக்கையிலும் முக்கிய இடத்தைக் கொண்டிருந்தது. ஆயினும், பழைய ஏற்பாட்டின் தாயகமானது இறைவனின் வெளிப்பாட்டில் ஒரு தயாரிப்பு நிலையாகவே இருந்தது. ஏனெனில், அனைத்து மனிதருக்கும் குறிக்கப்பட்ட மற்றொரு தாயகத்தை இறைவன் இறுதியில் வெளிப்படுத்தினார்.

**II. பழைய ஏற்பாடு:**

**1. தாயகம் பற்றிய அனுபவம்:** இறைவனுடைய மக்களின் வரலாறானது இடம் பெயருதலுடன் தொடங்குகிறது. ஆபிரகாம் தனது தாயகத்தை விட்டு, தான் ஏதுமறிந்திராத வேறு நாட்டிற்குச் செல்ல வேண்டி இருந்தது (*ஆதி 12:1-2*). ஆனால், அவரது இனத்தின்

புதிய அமைப்பானது நிறைவேறுதல் தாமதப்படுத்தப்பட்டது. கானானில் தங்கியிருந்த காலத்தில், குல மூதாதையர் அந்நியராகவும் வேற்று நாட்டினராகவும் இருந்தனர் (ஆதி 23:4; எபி 11:13). நாட்டின் உரிமையானது அவர்களுக்கு வாக்களிக்கப்பட்டிருந்தது (ஆதி 12:7). ஆனால் இன்னும் அளிக்கப்படவில்லை. மேலும், அவர்கள் இடைப்பட்ட காலத்தில் தங்கியிருந்த எகிப்தும் அவர்களுக்கு விநோதமான நாடாகவே இருந்தது (15:13). யாத்திரை மற்றும் சீனாய் உடன்படிக்கைக்குப் பின்னரே இறைவனின் வாக்குறுதி நிறைவேற்றப்பட்டு, கானான் அவர்களது சொந்த நாடாக, முழுமையான அளவில் சமயப் பொருளைக் கொண்ட நாடாக ஆயிற்று. அது இறைவனின் கொடையாக மட்டும் பெறப்படவில்லை; அது அவர்களுடைய மூதாதையரின் கல்லறைகளை மட்டுமே கொண்டிருக்கவில்லை (ஆதி 47:30; 50:5; நெகே 2:3-5); ஆனால், இறைவனும் அதனைத் தமது உறைவிடமான பேழைக்கான புனித இடமாகவும், பிறகு எருசலேமின் ஆலயமாகவும் கொண்டிருந்தார் என்ற உண்மையானது, அதன் மேல் ஒரு புனித மதிப்பை அளிக்கின்றது. இத்தகைய அனைத்துத் தலைப்புகளுக்கும் கீழ், விசுவாசத்துடன் இணைக்கப்பட்டதாக இது தோன்றுகிறது.

**2. இடம் பெயர்க்கப்படும் அனுபவம்:** ஆனால் இஸ்ராயேலனாது இதற்கு எதிரிடையான அனுபவத்தினாலும் துன்புற்றது. இந்த அன்பு செய்யப்பட்ட தாயகத்தை இரட்டைத் தேசிய துன்ப நிகழ்ச்சியானது இறுதியாகப் பாழாக்கியது. அதே நேரத்தில் மக்கள் அதனின்று நீண்ட தொலைவிற்கு இடம் மாற்றப்பட்டனர்; பெயர்த்தெறியப்படும் அனுபவத்தினால் துன்புற வேண்டியிருந்தது. நாடு கடத்தப்படலானது மட்டுமே தாயகத்துடனான யூதர்களின் நெருக்கத்தை மேலும் வலிமைப்படுத்தியது (சங் 137:1-6); அதனுடைய துன்பங்களைக் கண்டு அழுது புலம்பினர் (புலம்பல் ஆகமம்). இந்தப் பெரிய அழிவின் காரணமானது, நாட்டு மக்களின் பெரிய பாவமே; அதன் மீதான இறைவனது எடுத்துக்காட்டான தண்டனையே இது என்பதை அவர்கள் புரிந்து கொண்டனர் (புல 1:8. 18-19; எசா 64:4...; நெகே 9:29தொ). சோதனை நீடித்த காலம் வரை, தாழ்த்தப்பட்ட தொலைவிலுள்ள தாயகமானது அவர்களது செபத்திலும் (நெகே 9:36-37), அவர்களது அக்கறைகளிலும் (2:3), எதிர்காலத்திற்கான அவர்களது நம்பிக்கைகளிலும் (தோபி 13:9-17; பாரூ 4:30-5:9) மைய இடத்தை வகித்தது. பழைய அமைப்புகளுடன் பற்றுக் கொண்ட நிலையில், அவற்றை உயிர்ப்பிக்க அவர்கள் இடைவிடாமல் உழைத்தனர்; ஓரளவிற்கு அதில் வெற்றியும் கண்டனர். ஆனால் அதே நேரத்தில் இறைவாக்கினருடைய வாக்குகளில் வருங்காலத் தாயகத்தின் உருமாறிய உருவத்தை அவர்கள் கண்டுணர்ந்தனர். இந்தப் புதிய புனிதநாடும் மற்றும் மீண்டும் ஒன்றிணைக்கப்பட்ட நாட்டின் மையமான புதிய எருசலேமும் மீண்டும் அமைக்கப்படும் இன்பவவனத்தின் பண்புகளைப் பெறுகின்றன. இவ்வாறு தாயகமானது யூதருக்கு, மற்ற அனைத்து மனித தாயகங்களுக்கும் ஒத்ததாக உள்ள செயல்பாடான உண்மையாகவும், தனது தூய்மை மற்றும் மாட்சிமையுடன் எல்லாவித தேசிய கருத்தாய்வுகளையும் பாதிக்கின்ற மாதிரியான கருத்தாகவும் உள்ளது. இதனில் அனைத்து மனிதக் கனவுகளும் மணி உரு எடுக்கின்றன. அதே காலத்தைய உரோமைப் பேரரசின் கருத்தைப் போன்று பல நாட்டவராக இல்லாமல், இஸ்ராயேலின் அழைப்பின் மூலம் அது உலகளாவிய நிலையை நோக்கிச் செல்கிறது. ஆபிரகாமில் உலகின் அனைத்துக் குடும்பங்களும் ஆசீர்வதிக்கப்பட வேண்டும் (ஆதி 12:3); மற்றும் சீயோனானது அனைத்துத் தாய் நாடுகளுக்கும் தாயாக வேண்டும் (சங் 87).

**III. புதிய ஏற்பாடு:**

**1. இயேசுவும் அவரது தாயகமும்:** இயேசு முழுமையான மனிதனாக இருப்பதற்காக அவரும் தாயக அனுபவத்தைப் பெற வேண்டியிருந்தது. ஏதோ ஒருநாடு அவருடையதாக இல்லாமல், அவரது தந்தை அவரது மக்களுக்கு உரிமைச் சொத்தாக அளித்த

நாடே அவருடைய நாடாகும். தனது உயிரின் ஒவ்வொரு இழையாலும் தம் தாயகத்தை அவர் அன்பு செய்தார். அதன்பால் கொண்ட தூது அவருக்கு ஒரு புதிய நாடகத்திற்கு வாய்ப்பளித்தது. அதை மேலும் தூண்டியது. கடந்த காலத்தில் இறைவாக்கினரின் குரலை இஸ்ராயேல் புறக்கணித்தது போல, யூத தாயகமானது அதனுடைய உண்மையான அழைப்பை அதற்கு வெளிப்படுத்துபவரை உண்மையாகவே பழிக்கிறது. தனது தந்தையின் ஊராகிய நாசரேத்தில் இயேசு நிராகரிக்கப்படுகிறார்; எந்த இறைவாக்கினரும் தனது சொந்த நாட்டில் மதிக்கப்படுவதில்லை (மத் 13:54-47; யோவா 4:44). நாட்டின் தலைநகராகிய எருசலேமில் தான் மரணமடையப் போவதை இயேசு அறிந்திருந்தார் (லூக் 13:33). இறைவனது வருகையின் காலத்தை அறிந்து கொள்வதற்குத் தவறிய நகருக்காகவும் அவர் அழுதார் (லூக் 19:41; 13:34-35). இறைவன் தன்னிடம் எதிர்பார்த்ததை நிறைவேற்றாததன் காரணமாக, யூதர்களுடைய இவ்வுலகத் தாயகமானது, சீர்படுத்த முடியாத அளவில் சிதைவை நோக்கிச் செல்கிறது. குறிப்பிட்ட காலம் வரை மீட்பின்திட்டப்படி அதற்கு அளிக்கப்பட்டிருந்த பணியை இறைவன் எடுத்து விட்டார் என்பதை அனைத்துக் கண்களும் பார்க்கும்படியாக ஒரு புதிய பேரழிவானது அடையாளமாக இருக்கும் (மாற் 12:14-19; லூக் 19:43-44; 21:20-23).

*2. புதிய தாயகம்:* குறிப்பிட்ட இக்காலக் கருதுகோள்கள் செய்ய முயல்வதுபோலப் புதிய மக்களாகிய திருச்சபையானது, மண்ணுலகத் தாயகத்தினுள் கூட்டிணைப்பை அடக்கப்போவதில்லை. குடும்ப அன்பினைத் தொடர்வதுடன், தாயக அன்பும் கிறிஸ்தவனின் கடமையாக என்றும் நிலைத்திருக்கும். இவ்வாறு, யூதக் கிறிஸ்தவர்கள் இயேசுவைப்போன்று இஸ்ராயேலின் தாயகத்துடன் நெருங்கிய பற்றுக் கொண்டிருந்தனர். மற்றொரு மட்டத்தில், தனது பிறப்பின் காரணமாகக் கொண்டிருந்த உரோமைக் குடியுரிமையைப் பவுல் மீண்டும் நிலைநாட்டுகிறார் (அ.ப. 22:27-28). ஆனால் இஸ்ராயேலின் தாயகமானது, இனி ஒருபோதும் அதன் புனிதப் பண்பைக் கொண்டிருக்கவில்லை; மாற்றப்பட்டுவிட்டது. இஸ்ராயேலர்கள் மண்ணுலக எருசலேமின் பிள்ளைகளாக இருந்ததுபோலத் திருச்சபையானது நம்மைப் பிள்ளைகளாகக் கொண்ட மேலுலக எருசலேமாகும் (கலா 4:26). இவ்வழியாகப் புதிய தாயகத்தின் அனுபவத்தில் அனைத்து மனிதரும் பங்கு பெறலாம். முற்காலத்தில் புறவினத்தார் இஸ்ராயேலின் நகருக்கு அந்நியராக இருந்தனர் (எபே 2:12); ஆனால் இப்போது, புனிதர்களுடன் உடன் குடியுரிமையுள்ளவர்களாக இருக்கும் சிறப்பினை யூதருடன் அவர்கள் பங்கேற்கின்றனர் (2:19). இவ்வாறு, உண்மையான தாயகமாகிய விண்ணகத்திற்கு, மண்ணுலகத் தாயகங்களினின்று தேர்ந்தெடுக்கப்பட்ட இஸ்ராயேலானது, பொருளுடைய ஆனால் தற்காலிகமான உருவமாக மட்டுமே இருந்தது. நீடித்த உறைவிடம் எதுவும் நமக்கு இங்கில்லை. மேலும் வரவிருப்பதையே நாம் நாடுகிறோம் (எபி 13:14). முற்காலங்களில் குலமூதாதையருக்கென இறைவன் தயாரித்த தாயகம் இதுவே. அவர்களும் ஏற்கெனவே கானான் நாட்டிற்கு அப்பாற்பட்டு, தங்களுடைய முழு விசுவாசத்துடன் இந்த மேலான தாயகத்திற்காகக் காத்திருந்தனர் (எபி 11:14 தொ). அவர்கள் செய்ததுபோலவே அனைத்துமனிதரும் செய்து, தங்களது குடும்பங்களுடன் அவர்கள் வேரூன்றியிருந்த உலகின் எல்லைகளுக்கு அப்பாற்பட்ட இடத்தைப் பார்த்து, அவர்களுடன் தாங்கள் என்றென்றும் வாழவிருக்கின்ற புதிய தாயகத்தைக் காண வேண்டும்.

## தாயத்து (AMULETS)

தீய ஆவிகளினின்று ஒருவன் காப்பாற்றப்படுவதற்காக அணிந்துகொள்ளும் ஒரு சமய அடையாளப் பொருளாகும். இதனைத் தாயத்து என அழைக்கின்றனர். இதனைக் குறிக்கும் எபிரேய வார்த்தை எதுவும் இல்லை. பாலஸ்தீனத்தில் எடுக்கப்பட்ட 'தாயத்துகள்' பல எகிப்தினின்று தோன்றியவையாகவும், இஸ்ராயேலர் தங்கிவாழ்ந்த காலத்திற்கு முந்தியவையாகவும் தோன்றினாலும், ஒரு சில பாலஸ்தீனத்திலே தயாரானவையாக உள்ளன.

இத்தகைய தாயத்துகள் அதிகமாகக் கல்லறைகளிலே காணப்பட்டன. எகிப்திய தாயத்துகளில் மிகவும் பிரசித்தி பெற்றவை முட்டை வடிவில் அமைந்த முத்திரை போன்றவையாகும். இதன் தட்டையான அடிப்பகுதிகளில் தெய்வ உருவங்களும், புராணக் கதைகளின் காட்சிகளும் வரையப்பட்டிருந்தன. சிறு சிறு தெய்வ உருவங்களும் குறியீடுகளும் பொறிக்கப்பட்டிருந்தன. இத்தகைய தாயத்துகளை ஒரு கயிற்றில் கோர்த்துக் கட்டினர்.

பொதுவாகப் பழைய ஏற்பாடு இது பற்றிக் குறிப்பிடவில்லை. இவற்றை மனிதர்களும், விலங்குகளும் கழுத்தில் அணிந்த குளிசங்கள் எனவும் (நீதி 8:21); நறுமணச் சிமிழ்கள் எனவும் (எசா 3:20) இது மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதனைச் சீட்டுப்பட்டம் எனவும் (யாத் 13:16; மத் 23:5), கதவு நிலைகளில் வைக்கும் அடையாளப் பொருள் எனவும் கூறுகின்றனர் (உப 6:9).

புதிய ஏற்பாட்டில் இதனை நேரடியாக மறுத்துக் கூறாவிடினும், இதனை மறைமுகமாகவேனும் ஏற்றுக் கொண்டனர் எனத் தெரிகிறது (அ.ப. 19:12). அதே நேரத்தில் இயேசுவின் பெயரும் ஆற்றலுமே அனைத்திற்கும் மேலான சக்தி வாய்ந்ததெனக் கூறியதால் (எபே:21; பிலி 2:9; 4:13) இத்தகைய அடையாளப் பொருட்கள் மாயவித்தைகளில் ஒன்றாக எண்ணப்பட்டன (அ.ப. 19:18-19). அவற்றைப் பயன்படுத்துதல், மாயவித்தை, மாயவித்தைக்காரரோடு சேர்த்து (அ.ப. 8:9-24; 13:6-12; 19:13-6) சூனியமாகவும் மறைமுகமான சிலைவழிபாடாகவும் எதிர்க்கப்பட்டது (கலா 5:20; யோவா 18:30; 1 பேதுரு 2:12; 4:15; திருவெளி 9:20-21).

**தாய், அன்னை (MOTHER)**

உயிரளிப்பவர் என்ற நிலையில் மனிதருடைய பொதுவான வாழ்விலும், மீட்பு வரலாற்றிலும் தாய் சிறப்பான இடத்தை வகிக்கிறார்.

I. **மனிதரின் தாய்:** உயிரளிப்பவர் கண்டிப்பாக அன்பு செய்யப்பட வேண்டும். ஆனால், அவளுக்குக் காட்டப்படும் அன்பு, இயேசுவின் முன்னுதாரணத்தைப் பின்பற்றிச் சில நேரங்களில் பலியாக்கும் அளவிற்கு மாற்றியமைக்கப்பட வேண்டும்.

**1. இனப்பெருக்கத்திற்கான அழைப்பு:** தனது மனைவியை ஏவாள் என்று அழைப்பதன் மூலம் ''வாழ்வோர்க்கெல்லாம் தாயாக'' இருக்கும்படியான அவளது அழைப்பை ஆதாம் குறிப்பிடுகிறார் (ஆதி 3:20). சாதகமில்லாத சூழ்நிலைகளிலும் இந்த அழைத்தல் எவ்வாறு நிறைவேறுகிறது என்பதை ஆதியாகமம் நமக்கு எடுத்துரைக்கிறது. இவ்வாறு, சாராள் ஒரு தந்திரத்தைக் கையாள வேண்டியிருந்தது (16:1-2); லோத்தின் புதல்விகள் முறையாகாப் புணர்ச்சிக்கு உட்படுகின்றனர் (19:30-38); ராகேல் மிரட்டலைக் கையாள்கிறாள்: ''நீர் எனக்குப் பிள்ளைகளைத் தாரும். இல்லையேல் செத்துப் போவேன்'' எனத் தன் கணவனிடம் அவள் முறையிடுகிறாள். ஆனால் இறைவனுடைய இடத்தில் தன்னை நிறுத்திக் கொள்ள முடியாதென்பதை யாக்கோபு கூற வேண்டியுள்ளது (30:1-2). தாயாக வேண்டும் என்ற தவிர்க்க முடியாத ஆசையினைப் பெண்ணின் இதயத்தில் ஏற்படுத்தியவர் இறைவன் மட்டுமே. தாயின் உதரத்தைத் திறந்து மூடுபவர் அவரே. மலட்டுத் தன்மையை அவர் மட்டுமே வெற்றி கொள்ள இயலும் (1 சாமு 1:2-2:5).

**2. இல்லத்தின் தாய்:** தாயான பின்னர், ஒரு பெண் பெருமகிழ்ச்சி அடைகிறார். தனது முதல் குழந்தையினுடைய பிறப்பின் போது ஏவாள் அக்களிக்கிறார்: ''ஆண்டவர் அருளால் ஆண்மகன் ஒருவனை நான் பெற்றுள்ளேன்'' (ஆதி4:1). காயினுடைய புகழானது நீடித்திருக்கச் செய்யக்கூடிய மகிழ்ச்சியாக அது இருந்தது. அவ்வாறே தனது பிறப்பின் போதான சாராளின் சிரிப்பை ஈசாக்கு என்ற பெயரும் (ஆத 21:6), மற்றொரு குழந்தையைப் பெறுவது பற்றி ராகேல் கொண்டிருந்த நம்பிக்கையை

யோசேப்பு என்ற பெயரும் *(30:24)* நினைவு கூர்கின்றன. தனது தாய்மையின் மூலமாக ஒரு பெண், வாழ்வின் வரலாற்றில் நுழைவது மட்டுமின்றித் தனது துணைவரின் நெருங்கிய உறவையும் ஏற்படுத்துகிறாள் *(ஆதி 29:34)*. இறுதியாகத் தங்களது தந்தையைப்போலத் தாயையும் பிள்ளைகள் மதிக்க வேண்டுமெனப் பத்துக் கட்டளைகள் அறிவிக்கின்றன *(யாத் 20:12)*. இதைச் செய்யத் தவறுவதானது அதே தண்டனையை அளிக்கின்றது *(யாத் 21:17; 20:9; உப 21:18-21)*. தங்களது முறையின்போது ஞானநூல்கள், ஒருவன் தனது தாயை மதிக்க வேண்டிய கடமையை வலியுறுத்தி *(பழ 19:26; 20:20; 23:22; சீரா 3:1-16)*, ஒருவன் அவளது அறிவுரைக்குச் செவிமடுத்துப் பின்பற்ற வேண்டும் என்பதையும் கூறுகிறது *(பழ 1:8)*.

**3. அரசனின் தாய்:** அரசனுடைய தாயின்மீது ஒரு சிறப்பான பங்கானது சுமத்தப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. ஆளும் அரசன் முன்னிலையில் அவனது மனைவியிலிருந்து வேறுபட்டு, தாய் மட்டுமே சிறப்பான மரியாதையை அனுபவிக்கின்றார். பத்சேபா *(1 அர 2:19)* அல்லது ஆசா அரசனின் தாய் போன்று *(1 அர 15:13; 2 நாள் 15:16)* அவளுக்கு ''அரச அன்னை'' என்ற உயர்பதவி அளிக்கப்பட்டு மதிக்கப்படுகிறார். இச்செயல்பாடானது, அரச மெசியா பணித்திட்டத்தில் தாய்மையின் தோற்றத்தைத் தெளிவுபடுத்தலாம். பக்தி உள்ளவரிடையே ''நமது அன்னை'' யாக உருவாகியுள்ள இயேசுவினுடைய தாயின் பங்கைச் சுட்டிக்காட்டுவதைக் கண்டு நாம் வியப்படைய வேண்டியதில்லை.

**4. தாய்மையின் ஆழ்ந்த பொருள்:** கிறிஸ்துவின் வருகையுடன் மகனுக்குரிய பயபக்திக் கடமையானது ஒடுக்கப்படாமல் நிறைவேற்றப்படுகிறது. அப்போஸ்தலிக்க போதனையானது இதனைத் தெளிவாகக் காத்து வருகிறது *(கொலோ 3:20-21; எபே 6:1-4)*. வீணான சடங்கு சாக்குப் போக்குகளின் கீழ் இதனை ஒதுக்குகின்ற பரிசேயருக்கு எதிராக இயேசு உரத்துக் கண்டிக்கிறார் *(மத் 15:14-9)*. ஆயினும் அதுமுதல், இறைவன்பால் கொண்டிருக்கும் பக்தியின்மூலம் இதனை நிறைவேற்றுவதில், மகனுக்குரிய பக்தியைக் கடந்து செல்வது எவ்வாறு என்பதை நாம் அறிய வேண்டும். ''மகனை அவனது தாயிடமிருந்து பிரிக்க'' அவர் வந்துள்ளார் *(மத் 10:35)*. அவரின் பொருட்டுத்தனது தந்தையையும் தாயையும் விட்டுவிடுகிறவனுக்கு அவர் நூறு மடங்கு வாக்களிக்கிறார் *(மத் 19:29)*. அவருக்கு ஏற்புடையவனாயிருக்க ஒருவன் தனது தந்தையையும் தாயையும் ''வெறுக்கக்கூடியவனாக'' இருக்க வேண்டும் *(லூக் 14:26)*. அதாவது தனது பெற்றோரைவிட இயேசுவை அதிகமாய் அன்பு செய்ய வேண்டும் *(மத் 10:37)*.

தாயோடு கொண்டுள்ள பிணைப்புகளைப் பலியாக்கும் எடுத்துக்காட்டை இயேசுவே அளிக்கிறார். பன்னிரண்டு வயதில், ஆலயத்தில் தனது தாயின் முன்னிலையில், தனது தந்தையின் பணியில் இருக்க வேண்டிய உரிமையைப்பற்றிக் கூறுகிறார் *(லூக் 2:49-50)*. கானாவில், இறுதியாகத் தனது தாய் கேட்டதை அவர் அளித்தார் என்றாலும் அவரில் அவள் இனித் தலையிடக்கூடாது என்பதை அவள் புரிந்து கொள்ள வைக்கிறார். ஏனெனில், அவரது பொதுப்பணியின் நேரம் தொடங்கிவிட்டது, அல்லது அவரது சிலுவையின் நேரம் இன்னும் வரவில்லை என்பதே அதற்கான காரணமாகும் *(யோவா 2:4)*. ஆனால் இயேசு தன்னுடைய தாயைச் சற்றுத் தொலைவிலேயே வைத்திருந்தாரெனில், மரியாளின் உண்மையான சிறப்பை அவர் புறக்கணித்துவிட்டார் என்று பொருளன்று. அதற்கு மாறாக அவள் காட்டுகின்ற விசுவாசத்தில் அவர் அதனைச் சுட்டிக்காட்டுகிறார். ''யார் என் தாய், மற்றும் யார் என் சகோதரர்?'' தனது கரத்தினால் அவர் தன் சீடரைச் சுட்டிக்காட்டுகிறார் *(மத் 12:48 தொ)*. மரியாளின் இயல்பான தாய்மையைப் போற்றும் பெண்ணுக்கு, அவளுடைய மேலான பற்றுறுதி அவள் ஆண்டவருடைய வார்த்தைக்குச் செவி மடுத்து, அதனைச் செயல்படுத்துவதில் அடங்கியிருக்கிறது என்று அவர் மறைமுகமாகக் குறிப்பிடுகி

றார் (லூக் *11:27-28*). சிலுவையின் உயரத்தி னின்று தான் அன்பு செய்தவரை நோக்கி ''இதோ உன் தாய்'' (யோவா *19:26-27*) என்று கூறும்போது ஆன்மீக அமைப்பில் இத்தாய்மையைத் தனது சீடர்கள் அனைவ ருக்கும் அவர் விரிவுபடுத்துகிறார்.

II. **மீட்பின் வரலாற்றில் தாய்:** தாயின் சிறப்பியல்புகள் உருவக வடிவில், இறைத் தன்மை அல்லது மெசியா அமைப்பின் உண்மை, அல்லது மீண்டும் திருச்சபையின் வளமை ஆகியவற்றை வெளிப்படுத்தப் பயன்படுத்தப்படுகின்றன.

*1.* **இறை கனிவும் ஞானமும்:** இறைவ னில் எத்தகைய வாழ்வின் முழுமை இருக்கிற தெனில் இஸ்ராயேல் அவருக்குத் தந்தை மற்றும் தாய் முதலிய பெயர்களை அளிக் கின்றது. இறைவனுடைய இரக்கமிக்க கனிவை வெளிப்படுத்த, தாய்மை உணர்வு களைச் சுட்டிக்காட்டி, ஒரு பெண் தனது பிள்ளைகளுக்காக உணர்கின்ற உள்ளுணர்ச் சியை இறைவனுக்குச் சாற்றிக் கூறுகிறது (சங் *25:6; 11:5*). இறைவன் ஒரு தாயைப் போல நம்மைத் தேற்றுகிறார் (எசா *66:13*). தாய் தனது வயிற்றுப் பிள்ளையை மறந்தா லும், அவர் இஸ்ராயேலலை என்றுமே மறக்க மாட்டார் (*49:15*). எருசலேமின் பிள்ளைகளை ஒன்று சேர்க்க இயேசு கொண்டிருந்த ஆர்வத்தினைப்போன்று அது இருக்கும் (லூக் *13:34*).

அவரது திட்டங்களை நிறைவேற்றுமாறு பணிக்கப்பட்ட இறைவனின் வார்த்தையா கிய ஞானமானது (ஞான *18:14-15*), அவரது வாயினின்று வெளிப்படும்போது (சீரா *24:3*) ஒரு தாயாக் அவரது பிள்ளைகளுடன் உறவு கொள்கிறத்து (பழ *8-9*). அது அவர்களுக்குத் தனது போதனைகளைப் பரிந்துரைக்கிறது: அறிதலின் அப்பத்தை அவர்களுக்கு ஊட்டு கிறது, மற்றும் அருந்துவதற்கு நீரினை அளிக் கின்றது (சீரா *15:2-3*). அவரது பங்கை நிறை வேற்றுகின்ற இயேசுவை அறிந்து கொள்வ தன் மூலம் அவரது பிள்ளைகள் அவருக்குச் சான்று அளிப்பர் (லூக் *7:35*). ''என்னிடம் வருகிறவனுக்குப் பசியே இராது; ஏனெனில் விசுவாசங்கொள்பவனுக்கு என்றுமே தாகம் இராது'' (யோவா *6:35; 8:47*).

*2.* **மெசியாவின் தாய்:** பாம்பின் தலையை நசுக்கவிருக்கின்ற வாரிசினைக் கொண்டிருக் கிற பெண் ஒருதாய் (ஆதி *3:15*) என்பதை மூல நற்செய்தி ஏற்கெனவே அறிவிக்கிறது. பின்னர் மலட்டுத்தன்மையின் மீதுவெற்றி கொள்பவராக இறைவன் காணப்படுகின்ற விவரிப்புகளில் மூதாதையருக்கு வாரிசை அளித்த பெண்கள் தொலைவினின்று கன் னித்தாயை முன்னடையாளம் காட்டுகின்ற னர். கன்னி கருத் தங்குதலானது இம்மானு வேல் பற்றியும் (எசா *7:14*), அவருக்கு பிறப்பளிக்க வேண்டியவளைப்பற்றியும் (மீக் *5:2*) இறைவாக்கினர்கள் மறைமுகமா கச் சுட்டிக்காட்டுதலாகும். எது எப்படியிருந்தா லும், நற்செய்தியாளர்கள் இறைவாக்கின் நிறைவேறுதலை இயேசு கிறிஸ்துவில் கண் டுணர்ந்தனர் (மத் *1:23*; லூக் *1:35-36*).

*3.* **மக்களின் தாய்:** மற்ற எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டு எருசலேமே தாய்-நகராக உள்ளது (2 சாமு *20:19*). அதில் குடியிருப் போர் அதனிடமிருந்தே ஊட்டத்தையும் பாதுகாப்பையும் கொண்டனர். அதனிட மிருந்து சிறப்பாக நீதியும், ஆண்டவரைப்பற் றிய அறிவும் பெறப்படுகின்றன. ''ஆயிரம் ஆயிரமாக நீ பெருகுவாய்'' என்று வாழ்த் துப் பெற்ற ரெபேக்காளைப் போன்று (ஆதி *24:69*), எருசலேம் அனைத்து மக்களுக்கும் அவர்கள் இஸ்ராயேலரோ, புறவினத் தாரோ, யாவராயினும் அனைத்து மக்களுக்கும் தாயாக உருவாகும். ''சீயோ னைக் குறித்து 'இன்னின்னான் அதிலே பிறந் தான்' என்று சொல்லப்படும்'' (சங் *87:6*); அதன் துணைவரால் நீக்கப்பட்ட தண்ட னைக்குப்பின்னர், வியப்பில் ஆழ்ந்து அவ ளைப் புதியநோக்கில் பார்ப்பவர், ''பிள்ளை பெறாத மலடியே மகிழ்ந்துபாடு. ஏனெனில் கைவிடப்பட்டவளின் பிள்ளை கள், கணவனோடு வாழ்பவளின் பிள்ளை களைவிட ஏராளமானவர்கள்'' (எசா *54:1*; கலா *4:22-30*). அவளை நோக்கி உலக மக்கள்

அனைவரும் ''தங்களுடைய புறாக்கூண்டை நோக்கிச் செல்லும் புறாக்களைப்போலச் செல்வர்'' (எசா 2:1-5; 60:1-8).

ஆனால் கிறிஸ்துவை மறுதலிப்பதில் தன்னிலேயே பின்வாங்கும் எருசலேம், இந்த ஆன்மீகத் தாய்மைக்குப் பற்றுறுதியற்றவளாக ஆனாள் (லூக் 19:41-44). அவளுடைய பிள்ளைகள் அவளைப் பழிக்க, அவளை நோக்கித் திரும்பக் கூடியவர்களாயிருப்பர் (ஒசே 2:4). இதன காரணமாகவே, உண்மையாகவே நமது தாயாக உள்ளதும், வானகத்திலிருந்தும், இறைவனிடமிருந்தும் வருவதுமான (திருவெளி 21:2) மற்றொரு எருசலேமினால் அவள் அகற்றப்படுவாள் (கலா 4:26). இப்புதிய நகர் திருச்சபையே. இறைவனுடைய பிள்ளைகளின் வாழ்விற்காக, அவள் தனது பிள்ளைகளை ஈன்றெடுக்கிறார். அது மேலும் தனிப்பட்ட ஒவ்வொரு கிறிஸ்தவ சமுதயமுமாகும் (2 யோவா 1). அது கிறிஸ்துவிற்கு அவரது உடலின் முழுமையை அளித்து, ஆன்மீக இஸ்ராயேலுக்குள் அனைத்து மக்களையும் ஒன்று சேர்ப்பதற்கெனக் குறிக்கப்பட்டுள்ளது.

இந்தத் தாய்மையில் பங்குபெற்று, இந்தப் பலருடைமையின் கருவிகளாக அப்போஸ்தலர் உள்ளனர். துன்பத்தின் மூலம் வருவது போல் அது மகிழ்ச்சியானதாகவும் உள்ளது (யோவா 16:20 தொ). குழந்தையைப் பெற்றெடுக்கும் தாய்போல் கிறிஸ்து அவர்களில் உருவாக்கப்படும்வரை மறுபடியும் தான் அவர்களுக்காக வேதனையுறுவதாகப் பவுல் கலாத்தியருக்குக் கூறுகின்றார் (கலா 4:19). தனது பிள்ளைகளுக்கு ஊட்டமளிக்கின்ற தாயைப்போன்று, அவர்களைத் தான் பேணி வளர்த்துத் தன்னை முழுவதுமே அவர்களுக்குக் கையளிக்க ஆவலாய் இருப்பதாகத் தெசலோனிக்கேயருக்கு நினைவுபடுத்துகிறார் (1 தெச 2:7-9). ஆனால், இந்தத் தாய்மை நிலையானது, இடைவிடாமல் குழந்தை பிறப்பின் துன்பத்திலும் மகிழ்ச்சியிலும் இருக்கக்கூடிய பெண்ணின் மூலமாக மட்டுமே செல்லக்கூடியதாக இருக்கும். வாழ்வோரின் தாயாகிய ஏவாள் முதல், விசுவாசிகளின் தாயாகிய திருச்சபை வரை, இயேசுவின் தாயாகிய நமது தாய் மரியாள் மூலம் (திருவெளி 12), மற்றத் தாய்மாரும் இவ்வுருவத்தின் பின்னால் நிற்கின்றனர்.

**தாரியு** (DARIUS - நன்மையை நிலைநிறுத்துபவர்)

1. பேரரசனான முதலாம் தாரியு (கி.மு. 522-486). பாரசீகத்தின் அரசியல் குழப்பத்தின்போது இரண்டாம் காம்பிசெஸ் (529-522) காலமானான். தாரியு, தன்னுடைய ஆறு சிநேகிதர்களின் உதவியால் ஆட்சி பீடத்திற்கு முயற்சி செய்து கொண்டிருந்த கவுமாதாவையும் மற்றக் கிளர்ச்சிக்காரர்களையும் தோற்கடித்து, ஆட்சியை ஒன்றுபடுத்தி அரசனானார். இவருடைய மற்றப் போர்கள் இவருடைய அரசு வடக்கில் சோக்தியானா வரையிலும், மேற்கில் லிபியா வரையிலும், வடமேற்கில் திராசியாவிலிருந்து கிழக்கில் இந்தியாவரையிலும் (சிந்து) பரவியது. தான் இறப்பதற்குப் (486) பல ஆண்டுகளுக்கு முன்பே தாரியு தன் மகன் செருசுவை வாரிசாக்கினார்.

இவருடைய சமய, ஒழுக்கக் கொள்கைகள் இரு அரச கட்டளைகளிலிருந்து தெரிய வருகிறது. முதலாவது அப்பொல்லோ கோவிலின் அலுவலர்களிடமிருந்து வரி வாங்கக்கூடாது; அவர்கள் விவசாயம் செய்யக் கட்டாயப்படுத்தப்படக்கூடாது; இரண்டாவது, எருசலேம் கோவில் கட்டப்படுவதற்கான தடைகளை நீக்கி அது மீண்டும் கட்டப்பட உத்தரவிட்டார் (எஸ் 6:6-12; கா 1:1-2).

''பாரசீக அரசன் தாரியு'' (எஸ் 4:5.24; 6:1), ''பாரசீகனான தாரியு'' (நெகே 12:22) ஆகிய சொற்றொடர்கள் முதலாம் தாரியுவைக் குறிக்கின்றன. தானி 5:31; 6:1:25; 11:1; 9:1-இல் உள்ள தாரியு இவரைக் குறிப்பிடவில்லை.

2. நோதுஸ் என்று அழைக்கப்பட்ட இரண்டாம் தாரியு முதலாம் அர்த்தக்சஸ்தாவின் மகனாவார் (கி.மு. 423-404). இவ

ருடைய அரசின் மேற்கு எல்லை ஏதன்சு வரை சென்றது.

*3. யூஸ்தினியனின் கருத்துப்படி, மூன்றாம் தாரியு (கி.மு. 336-330) கண்டோம்மானுசு என்று அழைக்கப்பட்டார். மாசிதோனியாவைச் சேர்ந்த அலக்சாந்தரால் பல முறை தோற்கடிக்கப்பட்டு, கடைசியில் பெசுஸ் என்பாரால் கொல்லப்பட்டார். அலக்சாந்தருக்கு எதிராக இவர் நடத்திய போராட்டம் 1 மக் 1:1-8-இலும் பாரசீகத்தின் நான்காம் அரசன் பற்றிய தானி 11:2-இலும் குறிக்கப்பட்டுள்ளது.*

**தாரியு மேதியன்** (DARIUS, THE MEDE)

பெல்சாட்சருக்கு அடுத்தும் சைரசுக்கு முன்பும் ஆண்ட ஒரு பாபிலோனிய அரசன் (தானி 11:1). இவர் தானியேலின் நூலில் மட்டும் குறிக்கப்பட்டுள்ளார். இவர் அரசனான பொழுது 62 வயதினர். இவர் தன்னுடைய அரசை 120 பகுதிகளாகப் (சத்திராபு) பிரித்து அவற்றிற்கு மூன்று தலைவர்களை நியமித்தார். அவர்களில் தானியேலும் ஒருவர். இவர் பற்றிய வரலாற்றுச் சிக்கல்களைத் தானியேல் நூலுக்குரிய கட்டுரையில் காண்க.

**தாரேயே** (TAREA - வளைந்த)

அரசன் சவுலின் வழி வந்தவர். சவுல் மகன் யோனத்தானுக்குப் பிறந்த மெரிபாகாலின் பேரன். இவரது தந்தை 'மீக்கா' என்பவர் (1 நாள் 8:34-35). இதன் மாற்றுப் பெயர் தகரேயா (1 நாள் 9:41) ஆகும்.

**தார்கும்** (TARGUM - விவிலியத்தின் அரமேய மொழி பெயர்ப்பு)

அரமேய மொழியில் தார்கும் என்றால் மொழிபெயர்ப்பு என்றே பொருள். கி.மு. 587-இல் பாபிலோனியர்கள் பாலஸ்தீனத்தைப் பிடித்தனர். இஸ்ராயேல் மக்களைப் பாபிலோனியாவிற்கு அடிமைகளாகக் கடத்தினர். அங்கு கி.மு. 537 வரை இஸ்ராயேல் மக்கள் அடிமைகளாக வாழ்ந்தார்கள். அப்போது அவர்கள் அந்நாட்டின் ஆட்சி மொழியான அரமேயத்தைப் பேசி வாழ வேண்டியிருந்தது. இதனால் தங்களின் சொந்த மொழியை மறக்க ஆரம்பித்தனர். பாபிலோனிய அடிமைத்தனத்திலிருந்து, தங்கள் சொந்த நாடு திரும்பியபோது அவர்களுக்குப் பிரச்சனை ஒன்று கிளம்பியது. இப்பிரச்சனை, செபக்கூடத்தில் நடத்துகின்ற வழிபாடு பற்றியது. வழிபாட்டில் வாசகங்கள் எபிரேய மொழியில் வாசிக்கப்பட்டன. ஆனால் மக்களால் எபிரேய வாசகங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எனவே மொழிபெயர்ப்பாளர் ஒருவர், எபிரேய வசனங்களை அரமேயத்தில் மொழிபெயர்க்க நியமிக்கப்பட்டார். எபிரேய வசனம் வாசிக்கப்பட, இவர் அரமேய மொழியில் வாசகத்தின் கருத்துச் சுருக்கத்தைத் தருவார். இவ்வாறு, தான் கேட்டவுடன் மொழிபெயர்க்க வேண்டியிருந்த காரணத்தால், இம்மொழி பெயர்ப்பு சரியானதாக அமைய வாய்ப்பில்லை. ஆனால் முக்கியமான விவிலியப் பகுதிகளுக்குக் கவனமாகவும், விளக்கமாகவும், பாரம்பரிய கருத்துக்களை உள்ளடக்கியும் மொழியாக்கம் செய்தனர்.

பின்னர் இந்த வாய்மொழி மொழிபெயர்ப்பு எழுத்தில் பதிவு செய்யப்பட்டது. தற்போது ஏறக்குறைய பழைய ஏற்பாட்டின் எல்லாப் புத்தகங்களுக்கும் இந்த அரமேய மொழிப்பெயர்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது. இம்மொழி பெயர்ப்பில் பொதுவாக நாம் காணும் அமைப்புமுறைகள் இவைகளாகும். (1) இறைவனுடைய பெயர் தோன்றுகின்ற இடங்களில் ''மெம்றா'' அதாவது வார்த்தை என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார்கள். (2) இறைவனுக்கு மனிதப் பண்பேற்றிக் கூறப்படும் பகுதிகளை விட்டுவிடுகிறார்கள் அல்லது அதை மாற்றியமைத்துக் கூறுகிறார்கள். (3) சில இடங்களில் விவிலியப் பகுதிகளை விளக்கிக்கூற, சில சிறிய கதைகள் ஆங்காங்கே சேர்த்துக் கூறப்பட்டுள்ளன.

இந்த அரமேய மொழி பெயர்ப்புகள் பலயிடங்களில் பெருகிவந்தன. விவிலியத்தை மூன்று பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவிலும் எவ்வாறு அவை அரமே

யத்தில் மொழிபெயர்க்கப்பட்டன என்று காணலாம்.

*(1)* **ஐந்நூல்:** பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்நூல்களுக்கு மூன்றுவித அரமேய மொழி பெயர்ப்புகளை நாம் காண முடிகிறது. இவைகளில் மிகவும் பழமையானது பாலஸ்தீன ஐந்நூல் தார்கும் என்பதாகும். 1956-ஆம் ஆண்டு உரோமையில் கண்டுபிடிக்கப்பட்ட நியோபட்டி ஏட்டுத் தொகுப்பில் பாலஸ்தீன ஐந்நூல் தார்கும் முழுவதும் அடங்கியிருக்கிறது. இதற்குமுன் ஏட்டுத்துணுக்குகள்தான் கிடைத்திருந்தன. இந்தப் பாலஸ்தீன ஐந்நூல் அரமேய மொழிபெயர்ப்பில், அரமேய மொழி, அதன் தனிநடையுடன் எழுதப்பட்டது. இப்பாபிலோனிய ஐந்நூல் கி.பி. முதல் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்க வேண்டும். ஐந்நூலின் இரண்டாவது அரமேய மொழி பெயர்ப்பு, எருசலேம் தார்கும் ஆகும். இதனைப் போலியான யோனத்தான் அரமேய மொழிபெயர்ப்பு என்றும் கூறுவார்கள். பாலஸ்தீன அரமேய மொழி பெயர்ப்பைத் போலவே மொழி நடையிலும், இறையியல் கருத்துக்களிலும் இது ஒத்திருக்கிறது. ஆனால் வானதூதர், பேய் இவர்களைப்பற்றி இன்னும் அதிகமாக விளக்கம் கொடுத்துக் கூறியிருக்கின்றனர். ஐந்நூலில் காணப்படும் மூன்றாவது அரமேய மொழிபெயர்ப்பு, ஒங்கேலோஸ் தார்குமாகும். இதுதான் அதிகார பூர்வமாகச் செபக்கூடங்களில் பயன்படுத்தப்பட்ட அரமேய ஐந்நூல் மொழி பெயர்ப்பு. இது கி.பி. இரண்டாவது அல்லது மூன்றாவது நூற்றாண்டிலே தயாரிக்கப்பட்டிருக்க வேண்டும். இம் மொழிபெயர்ப்பு, மேலே கூறப்பட்ட பாலஸ்தீன அரமேய மொழி பெயர்ப்பை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் இது பாபிலோனிய மொழிபெயர்ப்பின் துணை கொண்டு மீண்டும் திருத்தப்பட்டிருக்கிறது. இம்மொழிபெயர்ப்பு வார்த்தைக்கு வார்த்தை விட்டுவிடாமல் கவனமாக மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. யூதர்களை விடுத்த மற்றச் செய்திகளைத் தரும் போது மிகக் கவனமாக இம்மொழி பெயர்ப்பு செயல்படுகிறது. இது தனது மொழி பெயர்ப்பிற்கு ஆதாரமாக மாசரேட்டிக்கு எபிரேய விவிலியத்தைத்தான் பயன்படுத்தியிருக்கிறது. ஆதி49:10; எண் 24:17 இப்பகுதிகளை மெசியாவின் கருத்துக்களை மனதில் வைத்துமொழி பெயர்த்திருக்கிறது.

இங்குச் சமாரியர் தார்குமையும் குறிப்பிட வேண்டும். சமாரிய ஐந்நூலும் (எபிரேய மொழியில் எழுதப்பட்டது) அரமேய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டது. இது சமாரியர்களால் மட்டும் பயன்படுத்தப்பட்டது. இது யூதர்களால் செய்யப்பட்ட அரமேய மொழி பெயர்ப்பைவிடச் சற்று மாறுபட்டது. வார்த்தைக்கு வார்த்தையாக மொழி பெயர்ப்பு அமையாமல், சற்றுச் சுதந்தரமாக, மொழி நடைக்கு முக்கியத்துவம் கொடுத்து ஆக்கம் செய்திருக்கிறார்கள்.

*2.* **இறைவாக்கினர் ஏடுகள்:** இறைவாக்கினர் ஏடுகளைப் பொருத்தவரை, அதிகாரபூர்வமான அரமேய மொழி பெயர்ப்பாக விளங்கியது உசியல் மகனான யோனத்தானின் அரமேய மொழி பெயர்ப்பாகும். ஒங்கேலோஸ் அரமேய மொழி பெயர்ப்பைப் போல, இம் மொழிபெயர்ப்பு பாலஸ்தீனத்தில் ஆரம்பமானாலும், பாபிலோனியாவில் தான் இது செய்து முடிக்கப்பட்டிருக்கிறது. இது முந்தைய இறைவாக்கினர் நூல்களை (யோசுவா, நீதிபதிகள், 1,2 சாமுவேல், 1,2 அரசர்) மொழி நடைக்கு முக்கியத்துவம் கொடுத்துச் செய்திருக்கிறது. ஆனால் பிந்தைய இறைவாக்கினர் நூல்களைச் சொல்லின் நேர் பொருள் சார்ந்த முறையில் அரமேய ஆக்கம் செய்துள்ளது. மெசியாவைப் பற்றிய கருத்துக்களை மனதில் வைத்தே பல பகுதிகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. உம். எசா 53.

*3.* **ஞான ஆகம நூல்கள்:** இப்பகுதியில் எல்லா நூல்களுக்கும் ஒன்று அல்லது பல அரமேய மொழி பெயர்ப்புகள் செய்யப்பட்டுள்ளன. ஆனால் எஸ்ரா, நெகேமியா, தானியேல் ஆகிய நூல்கள் இதில் மொழிபெயர்க்கப்படவில்லை. இப்பகுதிப் புத்தகங்களின் அரமேய மொழி பெயர்ப்புகளில் எந்த முறையிலும் ஒன்றுக்கொன்று ஒற்றுமை

காணப்படவில்லை. மொழி நடையிலோ, பொருள் நடையிலோ நூலுக்குநூல் ஒற்றுமையில்லை. சில மொழி பெயர்ப் புகள், விவிலிய விளக்கங்களைப்போல் விளங்குகின்றன.

இப்பகுதி நூல்களுக்குத் தற்போது நமக்குக் கிடைக்கும் அரமேய மொழிபெயர்ப்புகள் அனைத்தும் கி.பி. 5-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்தைச் சார்ந்தவை. இப்பகுதியி லிருந்த நூல்கள், காலத்தால் பிற்பட்டு மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டதாலோ என்னவோ, இவைகள் செபக்கூடங் களிலோ, பள்ளிகளிலோ பயன்படுத்தத் தடையிருக்கிறது.

தற்போது இந்த அரமேய மொழி பெயர்ப்பு களைப் பற்றி ஆழ்ந்து தெரிந்து கொள்ள அறிஞர்கள் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். ஏனென்றால் 1930-ஆம் ஆண்டு கெய்ரோ நகரில் செபக்கூட பக்க அறையில், கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சில அரமேய ஏடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இதற்கு முன் கி.பி. 10-ஆம் அல்லது 11-ஆம் நூற் றாண்டைச் சார்ந்த அரமேய மொழி பெயர்ப்பு ஏடுகளும்தான் கிடைத்திருந்தன. இதையடுத்து 1956-ஆம் ஆண்டு வத்திக்கான் நூலகத்தில் கண்டுபிடிக்கப்பட்ட நியோ பட்டி ஏட்டுத் தொகுப்பிலும் ஐந்நூலின் அரமேய மொழிபெயர்ப்பு முழுவதுமாகக் கண்டுபிடிக்கப்பட்டது. இதற்கடுத்து கும் ரான் குகைகளிலும் அரமேய மொழி பெயர்ப்பு விவிலிய ஏடுகள் கண்டுபிடிக்கப்பட் டன. குறிப்பாக 11-ஆம் குகையில் கண்டு பிடிக்கப்பட்ட நீண்ட யோபு ஆகம வசனங்க ளைக் கொண்ட பழம் ஏடு முக்கியம் வாய்ந் ததாகக் கருதப்படுகிறது. ஏனென்றால் இவை கி.மு. முதல் நூற்றாண்டிலேயே எழு தப்பட்டவை. இது, கி.மு. முதல் நூற்றாண் டிலேயே அரமேய மொழிபெயர்ப்பு பரவ லாக இருந்திருக்கிறது என்பதை நிரூபித்துக் காண்பிக்கின்றது.

இந்த அரமேய மொழிபெயர்ப்பின் புதிய கண்டுபிடிப்புகள், இயேசுவின் காலத்தி லும், அதையடுத்து அவரின் சீடர்களின் காலத்திலும், யூதமறையின் கோட்பாடுகள் எப்படியிருந்தன என்பதைப் புரிந்து கொள்ளப் பெரிதும் துணை செய்கின்றன. அரமேய மொழிபெயர்ப்புகள் செபக்கூடங்களி லிருந்து உருவாகியதால், பொது மக் களின் நம்பிக்கைக் கோட்பாடுகளின் அள வையும் தெரிந்து கொள்ள மிகவும் இவை துணை செய்யும். சாதாரண மக்களின் பக்தி விசுவாச நிலைதான் அவர்கள் பின்பற்றிய மறையின் உண்மை நிலையை எடை போட் டுக் காட்டக் கூடியவையாகும்.

இவ்வாறு அரமேய மொழிபெயர்ப்பு கிறிஸ்துவம் தோன்றிய காலத்தை ஒட்டிச் செய்யப்பட்டிருப்பதால், புதிய ஏற்பாட்டின் முக்கிய கருத்துக்களையும், புதிய ஏற்பாட் டின் மொழி அமைப்பு மற்றும் விளக்கங் களையும் அறிந்துகொள்ள, அரமேய மொழி பெயர்ப்பு ஆதாரமாக அமைகிறது. இன்னும் அரமேய மொழியைப் பறறியும், அரமேய மொழிபெயர்ப்பில் காணப்படும் விவிலிய விளக்க முறைகள் பற்றியும், யூத வழிபாட்டு முறைபற்றியும், ஆழ்ந்து ஆராயப்படுமேயா யின், நாம் புதிய ஏற்பாட்டைப் புரிந்து கொள்ள, இவை மிகத்துணை செய்யும் என் பதில் ஐயமில்லை.

**தாலத்து** *(DALETH)*

இது எபிரேய நெடுங்கணக்கில் நான்கா வது எழுத்தாகும். அகரவரிசைச் சங்கீதம் 119-இல் நான்காவது பகுதிக்குத் தலைப்பாக உள்ளது. அப்பகுதியின் ஒவ்வொரு வரியும் இந்த எழுத்துடன் தொடங்குகிறது.

**தாலந்து** *(TALENT)*

மெசபொத்தாமியா, கானான், இஸ்ரா யேல் நாடுகளில் பயன்படுத்தப்பட்ட ஒரு தரமான பெரிய எடையைக் குறிக்கின்றது. அதன் எடை வேறுபட்டிருந்தது. விவிலியப் பகுதிகளில் அதன் எடையைச் சுமார் 34.27 கிராமாகக் கொள்ளலாம். பிறகு இச்சொல் நாணயத்தைக் குறிக்கப் பயன்பட்டது. புதிய ஏற்பாட்டுக் காலத்தில், தாலந்து நாணயம் 6000 திராக்குமாக்களுக்குச் சமமாகப் பயன் படுத்தப்பட்டது.

**தாலந்து உவமை** (TALENT, PARABLE OF)

இந்த உவமை (மத் 25:14-30) இறைவனின் வருகைக்கு நாம் எவ்வாறு தயார் செய்ய வேண்டும் என்பதை உணர்த்துகின்றது. இந்த உவமையிலே வரும் தலைவன் இறை மகன் இயேசுவைச் சித்தரிக்கிறார். ஊழியர்கள் இயேசுவின் சீடர்களையும், விசுவாசிகளையும், தொலைநாடு வான்வீட்டையும் குறிக்கின்றன. தாலந்து, பரிசுத்த ஆவியின் வருகையால் சீடர்கள் பெற்ற ஆன்மீகக் கொடைகளைக் குறிப்பிடுகிறது. இறுதி நாளில் சிலர் அதிகமும், சிலர் குறைவாகவும் தங்கள் கொடைகளைப் பெருக்கியிருக்க வேண்டும். ஒவ்வொருவரும் தங்கள் திறமைக்கேற்ப முடிந்த அளவு முயற்சி செய்து இதைச் செய்ய வேண்டும்.

**தால்மூது** (TALMUD - போதனைகளின் விளக்கங்கள்)

தால்மூது என்பது எபிரேயச்சொல். இச்சொல் லமாத் என்ற எபிரேய வினைச் சொல்லிலிருந்து வருகிறது. லமாத் என்றால் கற்றல் என்பது பொருள். லமாத் என்ற வார்த்தையிலிருந்து பிறந்த தால்மூது என்பதற்குப் பொருள் போதனைகள் என்பதாகும். இங்கு இந்தத் தால்மூது என்ற வார்த்தை ஒரு புத்தகத் தொகுப்பைக் குறிக்கிறது. இப்புத்தகத் தொகுப்பில் மக்களின் சட்டங்களையும், அதன் விளக்கங்களையும், அதைப் பற்றிய கதைகளையும், இன்னும் இஸ்ராயேல் மக்களின் அனுபவத்தில் வெளிவந்த ஞான மொழிகளையும் நாம் காணமுடிகிறது. இது பிறந்து வளர்ந்த விளக்கங்களைக் கீழே காண்போம்.

**1. வாய்மொழி வழியாக வழங்கி வந்த சட்டங்கள் புத்தகங்களாகப் பதிப்பிக்கப்பட்டன:** இறைவன் மோசேக்குத் தெய்வ சட்டங்களை வெளிப்படுத்தினார். அவைகளில் ஒருசில பகுதிகள் மட்டுந்தான் விவிலியப் புத்தகங்களில் எழுதப்பட்டன. மற்றவை மோசே முதல் வாய்மொழிப் பாரம்பரியமாக மக்களிடையே வழங்கிவந்தன. நடைமுறை வாழ்வில், அச்சட்டங்கள் வாழ்க்கை நிகழ்ச்சிகளாயின. இந்த வழிவழி வாய்மொழிச் சட்டங்களை இறைவாக்கினர்களும், போதகர்களும், மக்களுக்கு அடிக்கடி நினைவூட்டி அறிவித்தனர். ஆனால் பல நேரங்களில், பள்ளிகளிலும் செபக்கூடங்களிலும், போதகர்கள் இவைகளை விளக்கும்போது அவர்களின் விளக்கங்களில் ஒன்றுக்கொன்று மாறுபாடுகள் காணப்பட்டன. இதனிடையே மக்கள், எழுதப்படாத வாய்மொழி விளக்கங்களை மனப்பாடம் செய்து கொண்டனர். இதைத் தம் பிள்ளைகளுக்கும், பின் சந்ததியினருக்கும் சொல்லிக் கொடுத்தனர். இதனிடையில், இந்த வாய்மொழி வழியாக வழங்கிவந்த சட்டங்களும் அதன் விளக்கங்களும் எண்ணிக்கையில்லாமல் பெருகின. இவையெல்லாம் ஒவ்வொருவரும் மனனம் செய்து கொள்வது ஆகக் கூடிய செயலல்ல. எனவே பாரம்பரியத்தின் வழியாகத் தங்களுக்குக் கிடைத்த இந்த ஞானச் செல்வங்களைத் தொகுத்து, எழுத்திலே பதிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இல்லையென்றால் இவைகள் காப்பாற்றப்படாமல் தொலைந்துபோகும் என்ற ஆபத்திருந்தன. இவ்வாறு, இஸ்ராயேல் மக்கள் விவிலியத்தை அடுத்து, தங்கள் மறையில் வழங்கிய அத்தனை செய்திகளையும் ஒரு புத்தகமாகத் தொகுத்தார்கள். அத்தொகுப்புதான் தால்மூதாக மாறியது.

**2. வாய்மொழி வழியாக வந்த சட்டங்கள் செய்து வந்த பணிகள்:** இந்த வாய்மொழி வழியாக வழங்கிவந்த சட்டங்கள், இரண்டு விதத்தில் மக்களுக்கு உதவி வந்தன. முதன் முதலாக, விவிலியத்தில் எழுதப்பட்ட சட்டங்களுக்கு விளக்கங்கள் கொடுத்தன. எனவே இந்த வாய்மொழி விளக்கங்கள் மக்களுக்குக் கிடைக்கவில்லையென்றால் அவர்கள் சட்டங்களைப் பின்பற்றுவது மிகக் கடினம். உதாரணமாக இந்த வாய்மொழிப் பாரம்பரியம்தான் வேலை என்பது என்ன என்பது பற்றி விளக்கம் கொடுக்கிறது. இந்த விளக்கம் இருந்தால்தான் ஓய்வுநாளில் வேலை செய்யக்கூடாது என்பதைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

இரண்டாவதாக, இவ்வாய்மொழிச் சட்ட விளக்கங்கள், மாறுபட்ட சூழ்நிலைகளில்

எவ்வாறு சட்டங்கள் புரிந்துகொள்ளப் பட வேண்டும், அனுசரிக்கப்படவேண்டும் என் பதையும் தெரிவிக்கின்றன. இந்த விளக்கங்கள் இல்லையெனில், எழுதப்பட்டிருக்கும் சட் டங்கள் நடைமுறைக்கு ஒவ்வாததாக மாறி விடும்.

இந்த வாய்மொழி விளக்கங்கள், கால ஓட்டத்தில் அறிஞர் பலர் கொடுத்துவந்த பொருள் விளக்கங்களையும் தன்னுள் கொண்டிருந்தன. இவ்வறிஞர்கள் கருத்து விளக்கங்கள் சட்டங்களின் அரண், கோட் டைகள் என அழைக்கப்பட்டன.

*3. தால்மூதின் முன்னோடிகள்:* நாம் மேற் கண்ட வாய்மொழிப் பாரம்பரியம் இரண்டு வகைகளில் தவழ்ந்து வந்தது என்று சொல்ல லாம். ஒன்று மிட்ராஸ் என்ற வாழ்க்கை விளக்கமும், மிஸ்னா என்ற ஒப்பிக்கும் முறையுமாகும். மிட்ராஸ் என்ற எபிரேய வார்த்தை தராஸ் என்ற வார்த்தையிலிருந்து வருகிறது. தராஸ் என்றால் தேடுதல் என்று பொருள். இந்த மிட்ராஸ் என்பது விவிலிய வசனங்கள் வழியாக நடைமுறை வாழ்க் கைக்கு விளக்கமளிப்பதாகும். இம்முறை, நாம் தற்போதுபின்பற்றுகிற முறையைவிடச் சற்று வேறுபட்டதாகும். இவர்களின் முறைப்படி வாழ்க்கைக்குப் பயன்படும் கருத்துக்களை, விவிலிய வாக்கியங்களி லிருந்து எடுத்துக் கூறுவார்கள். இதற்கு அப்புத் தகம் எந்தச் சூழ்நிலையில், யாருக்காக, எத் தகைய பொருளைத் தந்து எழுதப்பட்டது என்பதைப் பற்றியெல்லாம் விளக்கம் கொடுக்காமல், குறிப்பிட்ட வார்த்தையோ வாக்கியமோ அவர்களின் அன்றைய நிலைக்கு என்ன பயனுள்ள பொருளைத் தருகிறது என்பதைப் பற்றித்தான் கவனிப் பார்கள். இதில் நிறைய தங்களின் சொந்தக் கற்பனைகளைக் கலந்து விளக்குவார்கள்.

இந்த மிட்ராஸ் என்ற வாழ்க்கை விளக் கத்தை இரண்டாகப் பிரிக்கலாம். ஒன்று அலாக்கா என்பது. இவ்வார்த்தையில் பயன் படுத்துகின்ற அலாக் என்ற எபிரேய வார்த் தையின் பொருள் நட என்பதாகும். எனவே வாழ்க்கையில் எவ்வாறு நடக்க வேண்டு மென்று, சட்டங்களை விளக்கிக் கூறுதல் இவ்வகையைச் சார்ந்தது. அடுத்தமுறை அக் கதா என்று அழைக்கப்படுகிறது. அக்கதா என்றால் நிகழ்ச்சியுரை என்று பொருள். சட்டத்தைச் சாராத விவிலியப்பகுதிகள் அல் லது பக்தி வாழ்க்கையைச் சார்ந்திருந்த விவி லியப்பகுதிகள் வரும்போது கொடுக்கப் பட்ட விளக்கங்களை அக்கதா என்றழைத் தார்கள்.

இந்த மிட்ராஸ் என்ற விவிலிய விளக்கங் களை அளிக்கும்முறை எஸ்ராவின் காலத்தி லேயே தொடங்கியிருக்கிறது. கி.மு. *444*-ஆம் ஆண்டில் எஸ்ரா மக்களைக் கூட்டிய போது, அக்கூட்டத்தில், சட்டப்புத்தகம் அரியணை ஏற்றப்பட்டு, அதன்பிறகு அதி லிருந்து வாக்கங்கள் வாசிக்கப்பட்டன. அதன் பிறகு அதன் விளக்கமும் தரப்பட்டது. எஸ் ராவிற்குப் பிறகு சோபரிம் என்ற எழுத்தாளர் களாலும் இம்முறை பின்பற்றப்பட்டது. சோபர் என்றால் எபிரேய மொழியில் புத்த கம் என்பது பொருள்.

இந்த எஸ்ராவைப் பின்பற்றிய எழுத்தாளர் கள் என்பவர்கள் கி.மு. 270-வரை வாழ்ந்து வந்தனர். இவர்களுக்குப் பிறகு ஐந்து பெயர் போன இரட்டையர்கள், மக்களின் மத்தி யில், இந்த விவிலிய விளக்கப் பணியைச் செய்து வந்தார்கள். இந்த ஐந்து இரட்டையர் களில் மிகவும் புகழ் வாய்ந்தவர்கள் கி.மு. முதல் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த சமாய் என்பவரும் இல்லல் என்பருமாவர்.

இந்தப் பெயர்போன 5 இரட்டையர்களை யும் சுகோத் என்று எபிரேயமொழியில் அழைக்கிறார்கள். சுகோத் என்றால் சோடி என்பது பொருள். இந்த இரட்டையர்களின் காலத்தில், விவிலியத்தில் விளக்கம் கூறுவ தில் ஒரு புதுமுறை தோன்றியது. இம்முறை பழைய மிட்ராஸ் முறையைவிடச் சற்று வேறுபட்டது. மிட்ராஸ் முறையில், விவிலி யம் முதலில் படிக்கப்பட்டுப் பிறகு விளக் கம் கொடுக்கப்பட்டது. ஆனால் இப்போது இப்புதிய முறையில் விவிலியம் வாசிக்கப் படாமலேயே வாய்மொழி வழியாக வந்த

பாரம்பரிய விளக்கங்கள் மட்டும் மக்களுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டன. இம்முறையினால் விளக்கம் அளிக்கிற ஆசிரியர்களுக்கு ஒரு புதிய வசதி உண்டாகிறது. இதில் தங்களுக்குத் தேவைப்படும், பயன்படும் தலைப்புகளில் மக்களுக்கு முறைப்படப் போதித்தனர். விவிலியம் வாசிக்கப்பட்டு விளக்கம் கொடுக்கப்பட வேண்டுமென்றால், விவிலியத்தில் வரும் தலைப்புகளில் தான் பேச முடியும். ஆனால் இப்போது தங்களின் எண்ணப்படி கோவையாக, தேவைப்படும் கருத்துக்களை மக்களுக்குக் கற்றுக் கொடுக்க வாய்ப்பு உண்டானது. அதே சமயத்தில் வாய்மொழிப் பாரம்பரியக் கருத்துக்களை மட்டும் கூறும்போது, அதனோடு தொடர்புடைய விவிலிய வசனங்களும் மக்களுக்குக் கூறப்பட்டன. இந்தப் புதிய முறைக்கும் எதிர்ப்பு இருந்தது. குறிப்பாகச் சதுசேயர்கள், விவிலியத்தின் எழுதப்பட்ட வசனங்களை வைத்துக்கொண்டு, வாய்மொழிப் பாரம்பரியக் கருத்துக்கள் சரியில்லாதவையென எதிர்ப்புத் தெரிவித்து வந்தார்கள்.

இப்புதிய முறையில், மக்கள் வழக்கமாக மனப்பாடம் செய்திருந்த விவிலிய வசனங்களும் பயன்படுத்தப்படவில்லை. வாய்மொழிப் பாரம்பரிய விளக்கங்களுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்து வந்தனர். இந்த வாய்மொழி விளக்கங்கள் மக்கள் மனதில் வைக்க, கற்றுக்கொள்ள ஒரு புதிய யுக்தி கையாளப்பட்டது. அதுதான் மக்களை வாய்மொழி விளக்கங்களை மீண்டும் மீண்டும் ஒப்பிக்கச் செய்தலாகும். இவ்வாறு ஒப்பித்தல்தான் எபிரேயத்தில் ''மிஸ்னா'' என்றும், அரமேயத்தில் ''தேனா'' என்றும் அழைக்கப்பட்டது. மேற்கண்ட மிஸ்னா என்பதற்கும் தேனா என்பதற்கும் திருப்பிக் கூறுதல் என்றுதான் பொருள்.

இப்புதிய முறையான மிஸ்னா, மக்களால் பின்பற்றப்பட்டாலும் மிட்ராஸ் என்ற பழைய முறையும் பயன்படுத்தப்பட்டு வந்தது. மிட்ராசில் உள்ள அலாக்கா (நடைமுறை) அக்கதா (நிகழ்ச்சியுரை) இரண்டும் பயன்படுத்தப்பட்டன. சொல்லப்போனால் மிட்ராஸ், மிஸ்னா என்ற இரண்டு வகை விவிலிய விளக்க முறைகளுமே, இந்த இரண்டாம் நிலையில் பயன்படுத்தப்பட்டு வந்தன.

*3. ஆ. மிஷ்னாவின் எழுத்துப்படிவம்:* காலப் போக்கில் இவ்வாய்மொழி ஒப்பித்தல் எழுத்துவடிவம் பெற ஆரம்பித்தது. நடைமுறை வாழ்க்கைக்கு உகந்த அலாக்கா மிஸ்னாதான் முதலில் எழுத்துருவம் பெற்றது. கி.மு. 50-ஆம் ஆண்டிலேயே, சமாய், இல்லல் ஆகியவர்கள் வாழ்ந்த காலத்தில் எழுதி உருவமைக்கப்பட்ட சில மிஸ்னா பாடல்கள் இருந்திருக்கின்றன. இதற்கடுத்து நிறைய வாய்மொழி விவிலிய விளக்கத் தொகுப்புகள் (மிஸ்னா) எழுத்துருவம் பெற்றிருக்கின்றன. இவைகளில் முக்கியமானது இராபி அகிபா செய்த தொகுப்பு ஏடுகளாகும். இராபி அகிபா கி.பி. 135-ஆம் ஆண்டில் வீரமரணம் அடைந்தார். அதிரியான் வேதகலாபனையில் கொல்லப்பட்டார். இராபி அகிபா எழுதிவைத்த விளக்கங்களைத் தொடர்ந்து, அகிபாவின் சீடர் இராபிமேயிர் என்பவர் தொடர்ந்து வாய்மொழி விவிலிய விளக்கங்களை எழுதித் தொகுக்கும் பணியைச் செய்தார். இவர் கி.பி. 110-175 ஆண்டுகளின் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர். இவ்வாறு இராபி மேயிர் எழுதிவைத்த மிஸ்னா தொகுப்புதான், அவரைத் தொடர்ந்து செய்யப்பட்ட முக்கியமான மற்றொரு மிஸ்னா தொகுப்பிற்கு அடிப்படையானது. அந்த முக்கியமான வாய்மொழி விவிலிய விளக்கத் தொகுப்பைச் செய்தவர் இராபி யூதா என்பவர். இவர் கி.பி. 135 முதல் 217 வரையுள்ள இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர். இவர்தான் இராபிகளின் தனிச் சிறப்பான தனித்த இராபி என்று அழைக்கப்பட்டார். இவர் இஸ்ராயேல் மக்கள் வழி வந்த வாய்மொழி விளக்கங்களையெல்லாம் ஒன்று திரட்டி எழுதினார். இவர் எஸ்ராவின் காலத்தையடுத்து வாழ்ந்த எழுத்தாளர்கள், அடுத்துத் தொடர்ந்த ஐந்த பெரும் இரட்டையர்கள், இன்னும் இவர்களையடுத்து வந்த காலத்திலும் இருந்த சட்ட விளக்கங்கள்

அனைத்தையும் தொகுத்து எழுதினார். இதில் இஸ்ராயேல் மக்களின் பல வாழ்க்கை நிலைகள், தொழில்கள், பணிகள் இவை களையெல்லாம் தொட்டுக் காண்பித்து எழுது கிறார். ஆக எஸ்ராவின் காலத்தையடுத்து, கி.பி. 3-ஆம் நூற்றாண்டு வரையிலும் நிலவி வந்த வாய்மொழி விளக்கங்களையெல்லாம் மிகச் சிறந்த முறையில் தொகுத்திருக்கிறார் இராபி யூதா.

இந்த முக்கிய தொகுப்பு, மக்களாலும் மற்ற அறிஞர்களாலும் வெகுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. இது வாசிப்பதற் கும், ஆராய்ச்சி செய்வதற்கும், போதிப்பதற் கும் அடிப்படை சட்டநூலாகப் பல நூற்றாண்டு களுக்குப் பயன்படுத்தப்பட்டது. இதனைப் பாலஸ்தீனத்திலும், பாபிலோனியாவிலும் பயன்படுத்தினர்.

இராபி யூதா இப்பெரிய பணியைச் செய் தாலும், இன்னும் இதில் அடங்காதவை நிறைய இருந்தன. இவர் தன் கருத்திற்கு ஒவ்வாத பல விளக்கங்களைத் தொகுக்காமல் விட்டுவிட்டிருக்கிறார். சொல்லப்போனால் இராபி யூதாவின் தொகுப்பு ஒருபாகம் என்று மட்டும்தான் கூறலாம்.

இராபி யூதாவிற்கு எதிரான கொள்கை களைக் கொண்டிருந்தவர்கள் இராபி யூதா வேண்டுமென்றே விட்டுவிட்ட பல பகுதி களைத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட் டார்கள். உதாரணமாகக் கப்பாரா, இராபி கிய்யா, இராபி கோசய்யா முதலானோர்.

இதையடுத்துப் பேச்சாளர்கள் என்று அழைக்கப்பட்டவர்கள், சில பிற்சேர்க்கை களைப் பற்றி விவாதிப்பதில் முக்கியத்துவம் காட்டினார்கள். இவர்களை அரமேய மொழியில், ''அமோராயிம்'' என்று அழைத் தனர். அமோராயிம் என்றால் பேச்சாளர்கள் என்றே பொருள். இவர்கள் புறத்தே சார்ந் தவை என்பவைகளைப் பற்றியும் துணைச் சேர்க்கை என்பவைகளைப் பற்றியும் கிடைத்த விளக்கங்களையெல்லாம் தொகுத்து எழுதினர். மேற்கூறப்பட்ட புறத்தே சார்ந்தவை என்பதனை அரமேய மொழியில் ''பரித்தா'' என்று அழைக்கிறார் கள். துணைச்சேர்க்கை என்பதனைத் ''தொசப்த்தா'' என்றும் பெயரிட்டுக் கூறுகிறார்கள். இந்தப் பேச்சாளர்களின் பள்ளிகள் பாலஸ்தீனத்திலும், பாபிலோனி யாவிலும் செயல்பட்டன.

இப்பேச்சாளர்கள், வாய்மொழிப் பாரம்பரி யங்கள் எழுத்தளவில் தொகுக்கப்பட்டதி லிருந்து கி.பி. 5-ஆம் நூற்றாண்டுவரை, இயங்கிச் செயல்பட்டிருக்கிறார்கள். இப் பேச்சாளர்கள், வாய்மொழிப் பாரம்பரிய விவிலிய விளக்கங்களை மேலும் விளக்கிக் கூறினர். புரியாதவைகளைப் பற்றித் தெளிவு படுத்தினர். அவைகளின் உட்பொருளை வெளிக் கொணர்ந்து காட்டினர். பல விளக் கங்களினிடையில், வேறுபாடுகள், முரண் பாடுகள் காணப்பட்டால் அவைகளை நேர் செய்து காட்டி அவை சரியானவையென விளக்கிக் கூறினர். அத்துடன் நடைமுறை வாழ்வில், சட்டங்கள் எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்று அவ்வப்போதுவிளக்கம் கூறினர். மாறிய சூழ்நிலையில், புதிய நடை முறை ஒழுங்குகளைப் புனித சட்டங்களின் ஒளியில் மக்களுக்குக் கொடுத்தனர்.

இவ்வாறு இந்தப் பேச்சாளர்கள் செய்து வந்த, கொடுத்து வந்த விளக்கங்களும் தொகுக்கப்ப்ட்டன. இவை அரமேய மொழி யில் ''கெமாரா'' என்று அழைக்கப்பட்டன. கெமாரா என்றால் முழுமை என்று பொருள். இராபி யூதா தொகுத்தவையும், பேச்சாளர் கள் செய்த நிறைவுத் தொகுப்பும்தான் தால்மூது என்ற வடிவைப் பெற்றது.

**4. மிஸ்னா, தால்மூது இவைகளின் உட்பிரி வுகள்:** இந்த மிஸ்னாவும், தால்மூதும் ஆறு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இதற்கு எபிரேயத்தில் 'செதாரிம்'' என்று பெயர். இந்த ஆறு பிரிவுகளும், தனித் தனியாகப் பல கட்டுரைப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இந்த ஆய்வுக் கட்டு ரைகள் எபிரேயத்தில் ''மசக்தோத்'' என்று அழைக்கப்படுகின்றன. இத்தகைய ஆய்வுக் கட்டுரைகள் 63 உள்ளன. இந்த ஆய்வுக் கட்

டுரை ஒவ்வொன்றும் பல அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இந்த அதிகாரங்களுக்கு எபிரேயத்தில் ''பெராகிம்'' என்று பெயர். தால்மூதில் காணப்படும் ஆறு பெரும் பகுதிகள் கீழ்வருபவை:

1. விவசாயத்தைச் சார்ந்த சட்டங்கள். இதற்கு எபிரேயத்தில் ''செராயிம்'' என்று பெயரிடப்பட்டுள்ளது. செராயிம் என்றால் விதைகள் என்று பொருள்.

2. ஓய்வு நாள், விழாக்கள், நோன்பு இவைகளைப் பற்றிய சட்டங்கள். இதற்கு எபிரேயத்தில் ''மேயெத்'' என்று பெயர். மேயெத் என்றால் குறிக்கப்பட்ட காலங்கள் என்பது பொருள்.

3. திருமணம், விவாகரத்து இவைகளைச் சார்ந்த சட்டங்கள். இதை எபிரேயத்தில் ''நஸிம்'' என்று பெயரிட்டுள்ளார்கள். நஸிம் என்றால் பெண்கள் என்று பொருள்.

4. குற்றவியல் பொது வாழ்க்கை சார்ந்த சட்டங்கள். இதை ''நெசிக்கின்'' என்று எபிரேயத்தில் அழைக்கிறார்கள். நெசிக்கின் என்றால் இழப்பீடு என்று பொருள்.

5. ஆலயத்தைச் சார்ந்தவைபற்றியும், பலிகள் பற்றியுமாகிய சட்டங்கள். இதனைக் ''கொதாசிம்'' என்று எபிரேயத்தில் கூறுகிறார்கள். கொதாசிம் என்றால் புனிதப் படுத்தப்பட்ட பொருள்கள் என்பது பொருள்.

6. தீட்டினைப் பற்றிக் கூறும் சட்டங்கள். இதற்கு எபிரேயத்தில் ''தோபோரோத்'' என்று பெயர். தொபோரோத் என்றால் சுத்தம் என்று பொருள்.

**5. அலாக்காவும் அக்கதாவும்:** இப்பிரிவுகள் இவ்வாறு இருப்பினும் வழக்கமாகக் காணப்படுகின்ற நடைமுறை வாழ்வில் எப்படிச் சட்டங்கள் பின்பற்றப்பட வேண்டும் என்பதும் (அலாக்கா), கதையுடன் கூறப்படும் விவிலிய விளக்கங்களும் (மிட்ராஸ்), நிகழ்ச்சியரையென்று நடைமுறை வாழ்வினை விடுத்து, பக்திவாழ்க்கை போன்றவை சார்ந்த சட்ட விளக்கங்களும் (அக்கதா) இந்தத் தால்மூது தொகுப்பில் அடுத்தடுத்துக் காணப்படுகின்றன. இந்தத் தால்மூது தொகுப்பில் மக்கள் வாழ்வின் எல்லா நிலைகளுக்கும் விளக்கம் தரப்படுகின்றது. மக்களின் வாழ்வு எவ்வாறு ஒழுக்கவியலிலும், மறை சார்ந்தும் அமைய வேண்டும் என்பதற்கு வேண்டிய எல்லா வழித்துணைக் குறிப்புகளையும் நாம் காணமுடிகிறது. அக்கதா என்பதில் கீழ்க்காண்பவைகள் நிறைந்த அளவில் இடம் பெற்றுள்ளன; நீதி நெறிமுறைகளைப் பற்றிய சிந்தனைகள், மறையுரைகள், நறுக்காக உண்மையைக் கூறும் துண்டு வசனங்கள், பழமொழிகள், இயல்கடந்த ஆராய்வுகள், இஸ்ராயேல் மக்களின் பழைய வரலாற்றைச் சார்ந்த கதைகள், வருங்காலத்தைப் பற்றிய முன் எண்ணங்கள், கணிதவியல், மருத்துவவியல், வானவியல், உயிரியல், உடலியல் போன்ற அறிவியல் துறையில் அவர்கள் கொண்டிருந்த கருத்துக்கள், இவைகள் எல்லாம் அக்கதா பகுதியில் நிறைந்து காணப்படுகின்றன.

தால்மூது இவ்வளவு விளக்கங்களையும் அளித்ததன் நோக்கம், மக்களின் எண்ணங்களை அலாக்கா கூறும் நெறிமுறை வழிகளுக்கு உயர்த்துவதுதான். மக்கள் மனஉறுதி பெற்று நீதி நெறியில் வாழத் துணை செய்வது தான் இந்தத் தால்மூது தொகுக்கப்பட்டதன் நோக்கமாக விளங்குகிறது.

**6. தால்மூதின் இரண்டு பதிப்புகள்:** இராபி யூதா செய்த தொகுப்புதான் தால்மூதாக அமைந்தது என்று மேலே பார்த்தோம். ஆனால் காலப்போக்கில் இரண்டு இடங்களை மையமாகக் கொண்டு, இரண்டுவிதத் தால்மூதுகள் பழக்கத்தில் இருந்துவந்துள்ளன. ஒன்று பாலஸ்தீனத் தால்மூது; மற்றொன்று பாபிலோனியத் தால்மூது என்பதாகும். இவ்விரண்டிற்குமிடையே பலவிதங்களில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. மொழி நடையில், கூறும் விதத்தில், அணுகு முறையில், பொருளடக்கத்திலும் நிறையவே வேறுபாடுகள் காணப்படுகின்றன.

எனவே இவையிரண்டும், அடிப்படை யிலேயே வேறுபட்ட தொகுப்புகளைப் பின் பற்றியிருக்க வேண்டும் என்ற சந்தேகம் கூட ஏற்படச் செய்கிறது. இதற்கு விளக்கமாக ஒரு சாரார் இவ்வாறு கூறுகின்றார்கள். இராபி யூதா முதலில் ஒரு தால்மூது தொகுப் பைத் தயாரித்தார். பிறகு அவரே அத் தொகுப்பினைத் திருத்தி வெளியிட்டார். எனவே இரண்டு தொகுப்புகள் அப்போதிருந்தன. பாலஸ்தீனத்தில் ஒரு தொகுப்பு பின்பற்றப் பட்டது என்று விளக்கம் கூறுவர். இருப்பி னும் எவ்வாறு இரண்டுவித வேறுபட்ட தொகுப்புகள் தோன்றின என்பதற்கு இன் னும் சரியான விடையை அறிஞர்களால் காண முடியவில்லை. ஆனால் இவ்வித வேறுபட்ட தொகுப்புகள் முதலிலேயே இருந்திருக்கிறது என்பதற்கு வேண்டிய பல சான்றுகளைப் பாபிலோனியத் தால்மூதில் நாம் காணலாம்.

**அ. பாலஸ்தீனிய தால்மூது:** இதை எருச லேம் தால்மூது என்றும் அழைப்பார்கள். இந்த வாய்மொழிச் சட்டவிளக்கங்கள், செச ரியா, திபேரியா என்பன இங்குச் செயல்பட்ட பள்ளிகளாலும், எழுத்தாளர் என்று அழைக் கப்பட்ட ஒரு பிரிவினராலும் தொகுக்கப் பட்டன. எனவே இதனைப் பாலஸ்தீனியத் தால்மூது என்பதுதான் பொருத்தமாகும்.

இந்தத் தால்மூது தொகுப்பு, அவசரத்தில் செய்யப்பட்டிருக்கிறது. இத்தொகுப்பின் மொழிநடையிலிருந்தும் அமைப்பிலிருந் தும் இது தெளிவாகத் தெரிகிறது. கி.பி. 3-ஆம், 4-ஆம் நூற்றாண்டுகளில் உரோமைய ரின் கீழ், இஸ்ராயேல் மக்கள் மிகவும் வாதனைக்குள்ளானார்கள். எனவேதான் இத் தொகுப்பு அவசரக் கோலத்தில் எழுதப்பட் டிருக்கிறது. இதனால்தான் இத்தொகுப்பு முழுமையானதாக இல்லை. தொடர்பான் அமைப்பும், கூட்டொருமையும், தெளிவும் ஆழமுடைமையும் இதில் காணப்பட வில்லை. துணைச் சேர்க்கையென்ற கெமாரா என்பதுமுதல் நான்கு பகுதிகள் மட்டும்தான் இப்பாலஸ்தீனத் தால்மூதில் காணப்படுகின்றன. கடைசி இரண்டு பெரும்பகுதிகளான ஆலயத்தையும் பலி யையும் பற்றிய பகுதிக்கும், தீட்டுகளைப் பற்றிய பகுதிக்கும், துணைச் சேர்க்கைகள் காணப்படவில்லை.

1907-இல் சாலமன் பிரிலேன்டர் என்பவர், பாலஸ்தீனத் தால்மூதின் ஐந்தாவது பகுதி யைக் (அதாவது ஆலயம் பலிகள் இவை களைச் சார்ந்தது) கண்டுபிடித்து வெளியிட் டார். ஆனால் அதற்குப் பின் நடந்த ஆராய்ச்சி கள், அவர் கண்டுபிடித்தது பாலஸ்தீனத் தால்மூது இல்லை என்பதை நிரூபித்தன. பாலஸ்தீனத் தால்மூது, சுவடிகளின் தொகுப்பு என்ற அளவில் பாபிலோனியத் தால்மூதைவிடச் சிறியதுதான். பாபிலோனியத் தால்மூதைவிடப் பாலஸ்தீனத் தால்மூது மூன்றில் ஒருபங்கு சிறியது என்று கூறலாம். அத்துடன் இது மேற்கத்திய அரமேய மொழி யில் அமைந்திருக்கிறது.

இப்பாலஸ்தீனத் தால்மூது இராபி நப் பாகா மகன் யோகனான் என்பவரால் தொகுக்கப்பட்டது என்பது மரபுவழிச் செய்தி யாகும். இவர் இறந்த வருடம் கி.பி. 279. இவர் பெயர்போன இராபி யூதாவின் சீடர். இவர், இவர் காலத்திலிருந்த மற்ற இராபி களைவிட அறிவுத் திறமையில் சிறந்து விளங் கினார். இவர் திபேரியா நகரில் ஒரு பள் ளியை அமைத்தார். அதுதான் பாலஸ்தீனத் திலேயே கல்விகற்க சிறந்த பள்ளியாய் விளங்கியது. இப்பள்ளிதான் பாலஸ்தீனத் தால்மூது தொகுத்து எழுதப்படுவதற்குப் பாசறையாகப் பயன்பட்டது.

ஆனால் பாலஸ்தீனத் தால்மூதில் இராபி யோகனானின் காலத்திற்குப் பிந்திய குறிப்பு களையும் நாம் பார்க்க முடிகிறது. இதற் குக் காரணம் என்னவென்றால், இராபியோக னான், பாலஸ்தீனத் தால்மூது தொகுப்புப் பணியை ஆரம்பித்து வைத்தார். இது தொடர்ந்து செய்யப்பட்டது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான், தற் போது நமக்குக் கிடைக்கும் தால்மூதின் அமைப்பு நிறைவு பெற்றது. இதே நேரத்தில் தான் திபேரியாவிலிருந்த பள்ளியை மூடி விடும் நிலையேற்பட்டது.

பாலஸ்தீனத் தால்மூது, பாபிலோனியத் தால்மூதின் துணைத்தொகுப்பு என்றே கரு தப்படுகிறது. ஏனென்றால், பாபிலோனியத் தால்மூதில்தான், பின்னால் உண்டான அத் தனைச் சட்டங்களும் தொகுக்கப்பட்டுக் காணப்படுகின்றன. ஆனால் பாலஸ்தீனத் தால்மூது, வாழ்க்கையில் சட்டங்கள் எம் முறையில் இடம் பெறுகின்றன என்ற அலாக்கா பகுதிக்கு, உண்மையான விளக் கங்களை நமக்குத் தருகிறது. எவ்வாறு இந்த விளக்கம் அப்போது நிலவி வந்ததோ, அப் படியே அவைகளை நமக்குப் பாலஸ்தீனத் தால்மூது தருகிறது. இதில் காணப்படும் நிகழ்ச்சி விரிவுரையெனப்படும் அக்கதாவும் நமக்குப் பயனுள்ளதாக விளங்குகிறது. இந்த அக்கதா இத்தொகுப்பின் ஆறில் ஒரு பங்கைப் பெற்றிருக்கிறது. இஸ்ராயேல் மக்கள் எவ்வாறு ஒருவருக்கொருவர் உறவு கொண்டு வாழ்ந்தனர் என்பதைப் பற்றியும் புறவினத்தார் மற்றும் வெளிநாடுகளுடன் எப்படித் தொடர்பு கொண்டு வாழ்ந்தார்கள் என்பதைப் பற்றியும் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய தகவல்களை இது நமக்குத் தரு கிறது. இந்த அக்கதா காலத்தால் பழமையான காரணத்தால், வரலாற்றுப் பூர்வமான செய்தி களையும் நாம் தெரிந்து கொள்ள வாய்ப்புக் கிடைக்கிறது.

**ஆ. பாபிலோனியத் தால்மூது:** இந்தப் பாபிலோனிய வாய்மொழிவழி சட்டவிளக் கங்கள் (தால்மூது) கிழக்கத்திய அரமேய மொழியில் எழுதப்பட்டிருக்கின்றன. இராபி யூதா தொகுத்த மிஸ்னாவைப் பற்றிப் பாபி லோனியாவில் செய்யப்பட்ட வாக்குவாதங் களையும் விளக்கங்களையும்தான், இந்தப் பாபிலோனியத் தால்மூதில் நாம் காண்கின் றோம். இதில் நிகழ்ச்சி விரிவுரை என்றழைக் கப்படும் அக்கதாப் பகுதிகள் அதிகமான இடத்தைப் பெறுகின்றன. இத்தொகுப்பின் மொத்த அளவில் மூன்றில் ஒருபகுதி இந்த அக்கதாவால் நிரம்பியிருக்கிறது. இந்த அக் கதா, இஸ்ராயேல் மக்களின் சமூக சமய வாழ்வினை நன்கு நமக்குப் படம்பிடித்துக் காண்பிக்கிறது.

இவ்வாறு பாபிலோனியத் தால்மூது, பாலஸ்தீனத் தால்மூது என்ற தனித்த தொகுப்புகள் காணப்பட்டாலும், இந்த இரண்டு தொகுப்புகளினிடையில் பரிமாற்ற மிருந்திருக்கிறது. பாலஸ்தீன எழுத்தாளர் கள் கூறிய கருத்துகளுக்குப் பாபிலோனியா வில் மிகுந்த முக்கியத்துவம் கொடுத்தனர். இவ்வாறு வந்த பாலஸ்தீனக் கருத்துக்களைத் தொகுத்து, அதனைத் துணை இணைப்பாகத் தங்களின் பாபிலோனியத் தால்மூதில் சேர்த் தனர்.

இந்தப் பாபிலோனியத் தால்மூது தொகுப் பிற்குக் காரண கர்த்தாவாகக் கருதப்படுபவர் ''அப்பா அரிக்கா'' என்பவராவர். இவர் உயரமானவர். எனவே இவர் உயர்ந்தோன் என்றே அழைக்கப்பட்டார். இவர் பாபிலோ னியாவில் பிறந்தவர். ஆனால் பாலஸ்தீனத் தில் சில ஆண்டுகள் தங்கி, பெயர் போன இராபி யூதாவிடம் கல்வி பயின்றார். கி.பி. 219-ஆம் ஆண்டு பாபிலோனியாவிற்குத் திரும்பினார். அங்கு யூப்பிரத்தீசு நதிக்கரை யில் அமைந்திருந்த சூரா என்றவிடத்தில் பள்ளியொன்று நிறுவினார். இதில் தான் இராபி யூதாவிடம் கற்ற மிஸ்னா என்ற வாய்மொழிச் சட்டவிளக்கங்களை மாணவர் களுக்குக் கற்றுத் தந்தார். ஆயிரக்கணக்கான மாணவர்கள் இவ்விடத்தில் கல்வி பயின்ற னர். இவருடைய புகழ் பரவியது. இவர் ஆசிரியர்களிலே சிறந்த ஆசிரியர் என்ற பெயரைப் பெற்றார். இவர் கி.பி. 247-ஆம் ஆண்டு இறந்தார்.

அப்பா அரிக்காவின் காலத்திலே பணி புரிந்த மற்றொரு முக்கியமானவர் மேர் சாமு வேல் என்பவர். இவரும் அப்பா அரிக்கா வைப்போலப் பாலஸ்தீனத்திற்குச் சென்று, இராபி யூதாவிடம் கல்வி கற்றவர். இவர் பாலஸ்தீனத்திலிருந்து பாபிலோனியாவிற் குத் திரும்பி வந்து நெகார்தேயா என்றவிடத் தில் ஒரு பள்ளியை ஆரம்பித்தார். இவர் குற்றவியல் அல்லாத சமுதாய வாழ்வைச் சார்ந்த சட்டங்களில் மிகவும் தேர்ச்சியடைந் தவர். இந்தத் துறையில் இவர் கூறிய முடிவு கள் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்

டன. இவரே ''நாட்டின் சட்டங்களே உண்மையான சட்டங்கள்'' என்ற அடிக்கடி எல்லோராலும் பயன்படுத்தப்பட்ட வாக்கியத்தை உருவாக்கியவர். இவ்வாறு யூதசமுதாயத்தில், சமுதாயச் சட்டங்களை உருவாக்குவதற்கு இவர் மிகவும் துணை நின்றார். இவர் இறந்த வருடம் கி.பி. 254.

இதற்கடுத்துப் பாபிலோனியாவில், தால்மூது வளர்ச்சியால் தங்கள் முத்திரையைப் பதித்தவர்கள் அப்பாயே (280-338) என்பவரும் இராபா (299-352) என்பவரும் ஆவார்கள். இவர்கள் இருவரும் எழுத்தாளர்கள் (அமோரயிம்) என்ற வரிசையைச் சார்ந்தவர்கள். இருவரும் இரண்டு பள்ளிகளின் முதல்வர்கள். அப்பாயே ''பும் தெதித்தா'' என்ற இடத்தில் பள்ளியை நிறுவினார். இராபா ''மெக்கூசா'' என்றவிடத்தில் பள்ளியை நிறுவினார். இராபா நடைமுறை வாழ்க்கைக்குப் பயன்படும் விளக்கங்களைத் தரும் அலாக்கா என்ற முறையை எதிர்த்தவர். இந்த இரு அறிஞர்களின் கருத்துக்கள் எல்லாம் தொகுக்கப்பட்டு இணைச் சேர்க்கையாகப் பாபிலோனியத் தால்மூதில் சேர்க்கப்பட்டன.

இந்த இரண்டு அறிஞர்களின் காலத்திற்குப் பிறகும், தால்மூதைப் பற்றிய கருத்துக்கள் விளக்கங்கள் எல்லாம் பெருகி வந்தன. ஒவ்வொரு தலைமுறையிலும், அவர்களுக்கு முன்பாக விளங்கிய விளக்கங்களைப் பற்றிய விவாதங்களும், தர்க்கங்களும், தொடர்ந்து நடந்து வந்தன. மேற்கண்ட பாபிலோனியத் தால்மூது வளர்ச்சியெல்லாம் வாய்மொழி அளவிலே மக்களிடையே தவழ்ந்து வந்தன. ஆனால் இவையெல்லாம் கணக்கில்லாமல் பெரும் அளவில் பெருகி வந்தன.

இந்நிலையில் பரவலாக, ஒழுங்கில்லாமல் சிதறிக் கிடந்தவைகள் அனைத்தையும் ஒழுங்கு படுத்தி ஒருமுகப் படுத்த வேண்டியிருந்தது. இந்த ஒழுங்குபடுத்தும் பணியை ''இரபு ஆசி'' என்பவர் ஆரம்பித்தார். இவர் நாம் மேலே பார்த்த அப்பா அரிக்கா ஏற்படுத்திய பள்ளியில் 23-ஆவது வயதில் முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அங்குப் பணியாற்றியவர். இவர் இந்த ஒழுங்குபடுத்தித் திருத்தும் பணியில் 52 வருடங்கள் கடினமாக உழைத்தார். இவ்வாறு இவர் அரும்பாடு பட்டு உழைத்துத் தொகுத்ததுதான் பாபிலோனியத் தால்மூதிற்கு அடிப்படை ஆதாரமாக அமைந்தது. இரபு ஆசி இறந்த ஆண்டு கி.பி. 427.

இரபு ஆசியின் காலத்திற்குப் பிறகு அவரின் சீடர்கள் அவரது பணியைத் தொடர்ந்து செய்தார்கள். இரபு ஆசியின் காலத்திற்குப் பிறகு சிறப்பான முறையில் பணியாற்றியவர்களில் குறிப்பிடத்தக்கவர் குனானின் மகனான இரபினா என்பவர். இவர் இரண்டாம் இரபினா என்றும் அழைக்கப்பட்டார். இவர் முக்கியமாக, இரபு ஆசியின் காலத்திற்குப் பிறகு வெளிவந்த வாய்மொழிச்சட்ட விளக்கங்களைத் தொகுத்து வைத்தார். இரபினாவின் காலத்துடன் எழுத்தாளர்களின் (அமோராயிம்) காலம் முடிவடைகிறது என்று சொல்லலாம். இரபினா தீவிரமாக இவ்வாறு சட்டவிளக்கங்களைத் தொகுத்த ஆண்டுகள் கி.பி. 488 முதல் 499 வரை. இவ்வாறு இரபினாவின் காலத்தில்தான் தால்மூது வளர்ச்சியின் கடைசி நிலையை அடைந்தது என்று சொல்லலாம். இவ்வாறு ஒரு முழு நிலை எய்திய தால்மூதிற்குக் கடைசியாகக் கொடுக்கப்பட வேண்டிய திருத்தங்களைச் சிந்தனையாளர்கள் என்ற ''சபோராயிம்'' என்பவர்கள் செய்தார்கள். சபோர் என்றால் அரமேய மொழியில் சிந்தனை என்று பொருள். இச்சிந்தனையாளர்கள் கி.பி. 5-ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து ஆறாம் நூற்றாண்டின் இடைக் காலம் வரை தீவிரமாக இயங்கி வந்தார்கள். இவர்கள் உண்மையிலே சிந்தித்துப் பார்த்து, தேவையில்லாதவைகளையெல்லாம் ஒதுக்கி விட்டு, தால்மூதின் கடைசி வடிவத்தைச் சீரமைத்தார்கள்.

**7. தால்மூது கொடுத்த தாக்கங்கள்:** தால்மூது, பலவிடங்களில் பரவிவந்த யூத மக்களுக்கு அவர்களின் சட்டங்களை நினை

லூட்டி, அவர்களை மறைநெறியில் வாழச் செய்த உயிரூட்டும் அடிப்படை ஊக்க சக்தி யாக விளங்கியிருக்கிறது. யூதமக்கள் பல எதிர்ப்புகளையும் கொடுமைகளையும், அழிவு களையும் சந்தித்தபோது அவர்களுக்கு ஆறுதல் தரும் குணமருந்தாக இத்தால்மூது விளங்கியது. தலைமுறை தலைமுறையாக யூத சமுதாயம் இத்தால்மூதைப் படித்துத் தங்கள் மறைநெறியில் நிலைத்து நின்றிருக் கின்றனர். பெலிக்ஸ் பெர்லஸ் என்பவர் தால்மூதின் சிறப்பைப்பற்றிக் கீழ்க்கண்ட வாறு கூறுகிறார். ''தால்மூது யூதமக்க ளுக்கு வரலாற்றில் கிடைத்த ஒரு புதுமை. இப்புதுமை உலகில் சிதறிக் கிடந்த யூத மக்களுக்கு உயிர் நீராகக் கொடுக்கப்பட்டது. அவர்கள் எதிர்ப்பையும் துரோகங்களையும் சந்தித்தபோது இது அவர்களை அழிய விடா மல் தடுத்தது. யூத மக்கள் அனைவரும் ஒரே குணம் கொண்டு வளர, ஒரே அச்சினை எல்லா யூதர்கள் மேலும் இது பதித்தது. இதுவே இந்நாள் வரையிலும், பல சூழ் நிலைகளை யூதர்கள் சந்தித்தாலும், அவர் களைத் தொடர்ந்து பாதுகாத்து வருகிறது'' என வர்ணிக்கின்றார். இத்தால்மூது யூதர் களுக்கு மட்டுமல்ல உலக நாகரீக வளர்ச் சிக்கே பெரிதும் உதவியுள்ளது. இத்தால்மூது வழங்கிய அறிவொழுக்க ஒளிச்சுடர்கள், மத்திய நூற்றாண்டுகளில் மக்களைப் பெரிதும் கவர்ந்திருக்கின்றன. இது தந்த ஒளியில்தான் பல புதுமைப் புரட்சிகள் நடந்தன. அத னுடைய தாக்கம் இன்றும் நமது நாகரீகத்தின் வளர்ச்சியில் காணப்படுகிறது.

*8. தால்மூது எரிக்கப்படல்:* வரலாற்றில் வளர்ந்துவந்த வாய்மொழிச் சட்ட விளக்கங் களுக்கு ஆரம்பத்திலிருந்தே எதிர்ப்புகள் இருந்தன. அதாவது தால்மூது எழுதப்படுவ தற்கு முன்பே இதனைப் பயன்படுத்த, கற் பிக்க, கற்றுக் கொள்ளத் தடைகள் இருந்தன. உதாரணமாகக் கி.பி. 117-138-இல் வாழ்ந்த அதிரியான் என்பவர், 139-161-இல் வாழ்ந்த அந்தோனினுஸ் பயஸ் என்பவர், இன்னும் பாரசீக அரசர்களான இரண்டாம் யாஸ்டே கர்ட் (438-57), பெரோஸ் (459-84) இவர்க ளெல்லாம் யூதச் சட்டங்களைப் படிக்கவே கூடாதென்று தடைவிதித்தனர். அதைத் தொடர்ந்த மத்திய நூற்றாண்டுகளில் பல நேரங்களில் தால்மூது புத்தகங்கள் எரிக்கப் பட்டன. அப்புத்தகங்களைப் படிப்பவர்கள் ஆங்காங்கே தண்டனைக்குள்ளாகினர்.

பல நேரங்களில், யூத மறையிலிருந்து கிறிஸ்துவ மறையைத் தழுவியவர்களும், இந்தத் தால்மூது புத்தகங்களைப்பற்றித் தவறான கருத்துக்களைக் கூறக்கேட்ட கிறித்துவ மதத் தலைவர்களும் இத்தால்மூது புத்தகங்களை அழிக்கவும் எரிக்கவும் தடைசெய்யவும் தலைப்பட்டனர். உதாரணமாக நிக்கோ லாஸ் தோனின் என்பவர், யூத மறையி லிருந்து கிறித்துவ மறைக்கு மாறினார். அவர் தால்மூதிற்கு எதிராக 23 பத்திகள் கொண்ட ஒரு குற்ற அறிக்கையைத் தயார் செய்து வெளியிட்டார். இதன் எதிரொலியாக, இரண்டாம் கிரகோரியார் என்னும் பாப்பு தால்மூது ஏடுகளையெல்லாம் கைப்பற்றக் கட்டளையிட்டார். இதனால் 1242-ஆம் ஆண்டு, பாரீஸ் நகரில் 24 வண்டிகள் நிரம் பிய தால்மூது ஏடுகள் சேர்த்து எரிக்கப்பட் டன. இதனைத் தொடர்ந்த நூற்றாண்டுகளி லும் இத்தகைய கொடுமைகளுக்குத் தால் மூது உள்ளாயிற்று. ஆனால் 1453-1522 ஆண்டு களில் வாழ்ந்த நெக்லின் என்பவர்தான் இத்தகைய கொடுமைகளை நிறுத்தும்படி குரல் கொடுத்தார். இயேசுவின் நெருங்கிய உறவினர்களால் எழுதப்பட்ட இப்புத்தகங் களை எரிப்பதும் அழிப்பதும் எவ்விதத்தில் நீதியாகும் என்று கண்டனம் செய்தார். அதிலிருந்து, தால்மூதைத் தாக்கி வந்த எதிர்ப்புகள் குறைந்தன.

பாபிலோனியத் தால்மூதும் மத்திய நூற் றாண்டுகளில், கிறித்துவத்தின் கெடுபிடி களுக்கு உள்ளாகியது. தால்மூது நூல்கள் தணிக்கை செய்யப்பட்டன. கிறித்துவ மறைக்கு எதிராகத் தால்மூதில் தோன்றுபவை களையெல்லாம் அழித்துவிட உத்திரவிடப் பட்டது. இதனால் யூதர்களே, திருச் சபைக்கு எதிராகப் பொருள்தரும் வசனங் களை, அழித்துவிட்டு வெளியிட்டார்கள். ஆனால் பிற்காலத்தில், இவ்வாறு அழிக்கப்

பட்ட வசனங்களைமட்டும் சேர்த்து ஒரு புத்தகத் தொகுப்பாக வெளியிட்டனர். அவைகளில் முக்கியமான புத்தகம் ''செப்ர் செஸ்ரோநோத் சா-சாஸ்'' என்ற பெயரைக் கொண்ட புத்தகமாகும். மேற்கூறப்பட்ட தலைப்பின்பொருள், தால்மூதில் இடையில் விடப்பட்டவைகளின் புத்தகம் என்பது.

**9. இன்றைய சூழ்நிலையில் தால்மூதிற்குக் காணப்படும் எதிர்ப்புகள்:** யூதர்களின் எதிரிகள், பல நேரங்களில் அவர்கள்மேல் பழி சுமத்த, தால்மூதைக் கருவியாகப் பயன்படுத்துவார்கள். அவர்கள் இந்தத் தால்மூதின் போதனைகள்தான், இஸ்ராயேல் மக்களைத் தீய வழிகளுக்குச் செல்ல உற்சாகப் படுத்துகின்றன என்று மேற்கோள் காட்டிக் கூறுவர். குறிப்பாக இந்தத் தால்மூது புத்தகத்தின் தூண்டுதலால்தான் இஸ்ராயேல் அல்லாதாரை, இஸ்ராயேல் மக்கள் புறக்கணிக்கிறார்கள், கொலை செய்கிறார்கள், அவர்களைக் கொள்ளையடிக்கிறார்கள், கற்பழிக்கிறார்கள் என்று அவதூறு பேசி, தால்மூதைப்பற்றிக் குறைப்படுத்துவர். ஆனால் உண்மையை அறிந்த, யூத, யூதரல்லாத அறிஞர்கள் மேற்கண்ட குற்றச்சாட்டுகள் தவறானவையென எளிதாக நிரூபித்துக் காண்பிப்பர். தால்மூதைப் பற்றி மேற்கண்ட முறையில் குற்றம் கண்டுபிடித்தவர்கள், தால்மூதைச் சரியாகப் படிக்காமல், வேண்டுமென்றே தவறான விளக்கத்தைத் தருவதால் அல்லது திரிபுபட்ட விளக்கங்களைத் தருவதால்தான் தவறான முடிவுகளில் இறங்கினார்கள் என்பது தெளிவு. இத்தால்மூது அண்மையில் பலமொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டது. இது இதனை நன்கு புரிந்து கொள்வதற்கும், இதனைப் பற்றிய தவறான எண்ணங்களை அகற்றுவதற்கும் மிக உதவி செய்தது.

**10. அச்சிலே தால்மூது:** பழம் ஏடுகள் என்ற அளவில் பாபிலோனியத் தால்மூதைச் சேர்ந்த ஒரே ஒரு பழம் ஏடுதான் நமக்குக் கிடைத்திருக்கிறது. அந்தப் பழம் ஏட்டின் பெயர் மூனிக் பழம் ஏடு என்பதாகும். இது 1343-ஆம் ஆண்டு எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் கெர்மன் எல். ஸ்டார்க் என்பவர் அதனை 1912-ஆம் ஆண்டு தொகுத்துப் பதிப்பித்தார். இந்தத்தால்மூது, அச்சு இயந்திரம் கண்டுபிடிக்கப்பட்டபின் அச்சிடப்பட்டது. வெனிஸ் நகரைச் சேர்ந்த தானியல் போம்பர்க் பாலஸ்தீனத் தால்மூதையும், பாபிலோனியத் தால்மூதையும் அச்சிட்டு வெளியிட்டார். 1522-23-இல் பாலஸ்தீனத் தால்மூது அச்சிடப்பட்டது. 1520-24-இல் பாபிலோனியத் தால்மூது அச்சிடப்பட்டது. இதன்பிறகு, பல துறைகளில் இவ்விரண்டு தால்மூதுகளும் அச்சிட்டு வெளியிடப்பட்டன. இவைகளில் மிகவும் முக்கியமானது, சிறந்த முறையில் செய்யப்பட்டது, வில்னா ரோம் என்பவரால் 1886-இல் செய்யப்பட்ட பதிப்பாகும். இவர் பாபிலோனியத் தால்மூதை மட்டும் அச்சிட்டு வெளியிட்டார். அதன்பிறகு அதே பதிப்பு பலமுறை, பல திருத்தங்களுடனும், புதிய சேர்க்கைகளுடனும் வெளியிடப்பட்டது. அண்மையில் அமெரிக்காவில் இதே பதிப்பு போட்டோ பதிவுமுறையில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

**11. தால்மூதின் விளக்கவுரைகள்:** தால்மூதைப் புரிந்துகொள்வது எளிதல்ல. ஏனென்றால் இதில் ஒரு தனிப்பட்ட மொழிநடை காணப்படுகிறது. சுருக்கமாகவும் அதே சமயத்தில் சூசகமாகவும் பலயிடங்களில் வாசகங்கள் அமைந்துள்ளன. இதில் புள்ளி, அறைப்புள்ளி போன்ற எவ்விதக் குறிப்புகளும் கொடுக்கப்படவில்லை. எனவே, இதைத் தெரிந்தவர்கள் விளக்கம் கொடுக்காமல், பிறர் புரிந்துகொள்ள முடியாது. அதே நேரத்தில், இந்தத் தால்மூதிற்கு விளக்கவுரைகள் நிறையவே நமக்குக் கிடைக்கின்றன. எழுதப்பட்ட தால்மூது விளக்கவுரைகளில் மிகவும் பழமையானது குசியல் மகன் கனானல் என்பவர் தயாரித்ததாகும். இவர் தால்மூது முழுவதற்குமே விள்க்கவுரை எழுதியிருக்கிறார். இவர் 1050-இல் இறந்தார். இவர் தயாரித்த இப்பெரிய விளக்கவுரையில் ஒரு சில பகுதிகளே தற்போது நமக்குக் கிடைக்கின்றன.

எழுதப்பட்ட தால்மூது விளக்கவுரைகளில் மிகவும் பெயர் போனது திராயஸ் ராசி

என்றவிடத்தைச் சார்ந்த இராபி சாலமோன் இட்சாக்கி என்பவர் தயாரித்ததாகும். தால்மூது வசனங்களுக்கு அருகிலேயே இவர் எழுதிய விளக்கங்களும் சேர்த்து அச்சிடப் பட்டுள்ளன. இராபி சாலமோன் இட்சாக்கி வாழ்ந்த ஆண்டுகள் 1040 முதல் 1105 வரையிலாகும்.

இதற்கிடையில் பிரான்சு நாட்டில் 12-ஆம் 13-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த இராபிகள் ஒரு நேர்த்தியான விளக்கவுரையைத் தயாரித்தனர். இவர்கள் தயாரித்த தால்மூது விளக்கவுரைக்குப்பெயர் ''தொசபோத்'' என்பதாகும். தொசபோத் என்றால் இணைச்சேர்க்கை என்பது பொருள். இவர்கள் எழுதிய விளக்கவுரை மிகவும் விரிவானது. ஆராய்ச்சி நோக்குடன் எழுதப்பட்டது. ஒப்புவமை காட்டி விளக்கமாக எழுதப்பட்டது.

இதற்கு மேலும் மிகச் சிறந்த விளக்கவுரைகளும் எழுதப்பட்டன. உதாரணமாக, சாமுவேல் எடல்ஸ் என்பவர் 1612-ஆம் ஆண்டு ''மார்சா'' என்ற மிக நுணுக்கமான விளக்கவுரையை எழுதினார். ஒவ்வொரு வசனத்தையும் நன்குபிரித்துக்காட்டி விளக்கம் எழுதியுள்ளார். இதையடுத்து 1619-ஆம் ஆண்டு லப்லினைச் சார்ந்த கெதல்ய மகன் மேயிர் என்பவர் ''மகரம்'' என்ற விளக்கவுரைத் தொகுப்பினைத் தயாரித்தார். இது தெளிவாக அமைந்திருக்கிறது. இதனால் பலரும் இவ்விளக்கவுரையை விரும்பிப் பயன்படுத்துகின்றனர்.

எருசலேம் தால்மூதிற்கு இருவர் விளக்கவுரை தயாரித்தனர். 1743-ஆம் ஆண்டு தாவீது பிரேன்க்கல் ஒரு விளக்கவுரையை எருசலேம் தால்மூதிற்கு எழுதினார். 1750-ஆம் ஆண்டு மோசஸ் மார்கோலியோத் என்பவர் ''பெனே மோசே'' என்ற விளக்கவுரையை அதே எருசலேம் தால்மூதிற்கு எழுதினார்.

அண்மைக் காலத்திலும் தற்கால அறிஞர்கள், தால்மூதிற்கு விளக்கவுரை எழுதுவதில் ஆர்வம் காட்டி வருகின்றனர். இவர்களில் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவர் லூயிஸ் கின்ஸ்பர்க் என்பவர். இவர் பாலஸ்தீனத் தால்மூதின் விளக்கவுரை என்று மூன்று பாகங்களில் எழுதியிருக்கிறார். அவர் இவ்விளக்கவுரையைச் செய்து முடித்த ஆண்டு 1941. இதுதான் தால்மூதின் அலாக்கா பகுதிக்கு மிகச் சிறந்த விளக்கவுரை என்று எல்லோரும் புகழ்ந்து ஏற்றுக் கொள்கிறார்கள்.

***12. யூதர்களின் கல்விமுறையில் தால்மூது:*** தால்மூது யூதர்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்திருந்தது. எனவே அவர்களின் கல்விமுறையிலும் இத்தால்மூது முக்கிய இடம் பிடித்திருந்தது என்பதில் வியப்பொன்றுமில்லை. தால்மூது பள்ளிகளில் முக்கியப் பாடங்களில் ஒன்றாக நிறுவப்பட்டது. ஆரம்பப்பள்ளி முதலே தால்மூது பிள்ளைகளுக்குச் சொல்லித்தரப்பட்டது. இக்கல்வி மேல்நிலைப் பள்ளிகளிலும் தொடர்ந்தது. மேல்நிலைக் கல்வியை ''யெசிவா'' என்றழைக்கிறார்கள். இதில் மாணவர்கள் தால்மூது வசனங்களைப் பிரித்துப் பார்த்து விளக்கம் காணும் முறையைக் கற்றுக் கொள்கிறார்கள். இம்முறையைப் ''பில்புல்'' என்று அழைக்கிறார்கள்.

மத்திய நூற்றாண்டுகளிலும் தால்மூது, யூதர்கல்வி முறையில் தொடர்ந்து முக்கிய இடத்தைப் பிடித்திருந்தது.

ஆனால் யூதர்கள் குறுகிய வட்டத்திற்குள் நில்லாமல் பரந்த மனப்பான்மை கொண்டு நாகரிகத்தில் வளர வேண்டும் என்ற சிந்தனைகள் மக்கள் மத்தியில் உண்டாக ஆரம்பித்தன. இதனால் தால்மூதிற்குக் கொடுக்கப்பட்ட தனியிடத்தைக் குறைத்து, அதனுடைய விடத்தில் மற்றப் பாடங்களை அறிமுகப்படுத்த ஆரம்பித்தனர். இருப்பினும் தால்மூது யூதர்களின் கல்விமுறையில் தனித்த இடத்தைப் பெற்றிருந்தது.

சிறுவர்களுக்குத் தால்மூதில் காணப்பட்ட கதைகள் கூறப்பட்டன. நிகழ்ச்சியுரை என்றழைக்கப்பட்ட அக்கதா பிள்ளைகளின் மனதில் சிறந்த ஒழுக்கமுறையைத் தோற்றுவித்தது; யூத மரபுகளில் அவர்கள் நிலைத்து நிற்க அடிப்படை மனநிலையை அவர்களிடம் உண்டாக்கியது.

இன்றைய நாளிலும் தால்மூதைப் பற்றி மறந்திருந்தவர்கள்கூட, அதில் ஆர்வம் காட்டிக் கற்க முன் வருகின்றனர். யூதப் பள்ளிகளில் தால்மூது மறைக்கல்விப் பாடமாகக் கற்பிக்கப்படுகிறது. பெரியோர்களும் தனிக்குழுக்களாகச் சேர்ந்து தால்மூதைத் தாங்களே கற்று வருகின்றனர். இப்பழக்கம் பெருகி வருகிறது. லப்லினைச் சேர்ந்த இராபி மேயிர் சப்பிரோ என்பவர் ஒரு புது முறையை 1929-இல் ஆரம்பித்தார். தினச்சுவடி என்ற ''தாப்யோமி'' தால்மூது வாசகத்தாளை அறிமுகப்படுத்தினார். இதனைப் பல யூதர்கள் தின வாசகங்களாக எடுத்துக் கொண்டு வாசித்துப் பயனடைகின்றனர். இவ்வாறு தால்மூது யூத மறையைக் கட்டிக் காக்கும் முக்கிய ஆதாரம் என யூதர்கள் கருதி அதனைக் கற்கவும் பயிலவும் முன் வருகின்றனர். அத்துடன் யூத கலாச்சாரத்திற்கே அது ஒரு வழி காட்டி என்றும் பெருமிதம் கொள்கின்றனர்.

*13. **தற்போதும் தால்மூதின் பணி:*** தால்மூது உண்டான காலத்திலிருந்து நாம் வெகுவாகத் தள்ளியிருந்தாலும், விவிலியத்தையடுத்து, தால்மூது யூதர்களுக்கு முக்கிய வழிகாட்டும் ஆதாரமாக விளங்குகிறது. அவர்களுடைய ஒழுக்கவியலுக்கும், பக்தி வாழ்க்கைக்கும் இது ஒளிதீபமாக விளங்குகிறது. தால்மூதில் காணப்படும் பலசட்ட விளக்கங்கள், இன்றைக்கு ஒவ்வாதவையாகத் தோன்றலாம். ஆனால் யூதர்களின் வாழ்க்கை முறை, தால்மூது தருகிற போதனைகளிலும் ஒழுங்குமுறைகளிலும்தான் கட்டப்பட்டிருக்கிறது. யூதர்களின் வழிபாடுகள், விழாக்கள், திருமணச்சட்டங்கள், இவைகள் எல்லாம் தால்மூது காட்டும் முறையிலேயே செய்யப்படுகின்றன. இன்னும் யூதர்களின் தனிப்பட்ட குணங்களாகக் கருதப்படும், இரக்கம், தாராளம், குடும்பப் பாசம், அகிம்சை, வல்லந்தம் மேல் வெறுப்பு ஆகியவைகளுக்கும் உள் உந்துதலாக இருந்து, யூதர்களிடம் இவைகளை வெளிப்பட செய்வது இந்தத் தால்மூதுதான்.

புதியநாடாக, பல ஆண்டுகளுக்குப் பிறகு பிறந்திருக்கும் இஸ்ராயேல் அரசும், தால்மூதின் போதனைகளுக்கு முக்கியம் அளித்து அதனைப் போற்றுகிறது. அவர்களிடையே பல காலம் அரசாட்சி இல்லாததால், அரசாட்சி தொடர்பான பல தால்மூது சட்டங்கள் பயன்படுத்தப்படாமல், பொருளற்று நின்றன. முக்கியமாக நீதிமன்றம், விவசாயம் போன்ற துறைகள். ஆனால் தாங்கள் பெற்றிருக்கின்ற புதிய அரசில், மறைந்து நின்ற தால்மூது சட்டங்களையெல்லாம் மெதுவாக அறிமுகப்படுத்தி வருகின்றனர். இன்னும் தங்கள் சமுதாயத்தைப் புதிய முறையில் கட்டி எழுப்பமுயலும் இன்றைய தலைமுறையும் தால்மூதின் விளக்கங்களையே, தங்களுக்கு வழிகாட்டும் பாதையாகக் கொண்டு, அதை அடிக்கடி உற்று நோக்குகின்றனர்.

**தாவீதின் நகர்** *(DAVID, CITY OF)*

தாவீது பன்னிரண்டு குலத்தவர்களுக்கும் அரசனானபின்பு அவர் கைப்பற்றிய எபூசியருடைய கோட்டை நகரத்துக்கு அளிக்கப்பட்ட பெயராகும் இது. ஆகவே தாவீதின் நகரமும் சீயோன் கோட்டையும் ஒரு பொருள் பல சொல்லாகப் பயன்படுகிறது *(2 சாமு 5:7.9; 1 நாள் 11:5.7; 1 அர 8:11; 2 நாள் 5:2)*. இது பிற்காலத்தில் எருசலேம் என்றழைக்கப்பட்டது.

யோசுவா எருசலேம் அரசனை வெற்றி கொண்டாலும் எருசலேம் நகரத்தைக் கைப்பற்றவில்லை *(யோசு 10:1-41)*. இஸ்ராயேலர் பிற்காலத்தில் எபூசின் ஒரு பகுதியையோ சுற்று வட்டாரத்தையோ கைப்பற்றினாலும் *(நீதி 1:8)*, எபூசியர் தாவீது காலம் வரை அங்கே தங்கியிருந்தனர் *(நீதி 1:21; யோசு 15:63; நீதி 19:10; 2 சாமு 5:6)*. எருசலேம் பன்னிரண்டு குலத்தவர் எவருக்கும் சொந்தமில்லை என்பதாலும் அது மையப் பகுதியில் அமைந்திருந்ததாலும், தாவீது தனது ஒன்றித்த அரசுக்கு எருசலேமைத் தலைநகராகத் தேர்ந்தெடுத்தது அவரது அரசியல் அறிவுக்கூர்மையை எடுத்துக் காட்டுகிறது.

அகழ்வாய்வுகள் நகரின் எல்லையை நிர்ணயிக்கின்றன. இது இக்காலப் பழைய நகருக்குத் தெற்கில் தீரோப்பியன், கிதரோன்

பள்ளத்தாக்குகளுக்கிடையில் அடங்கிய ஓபேல் மலை முகடாகும். ஏறக்குறைய கி.மு. 1300-ஐ ஒட்டி, மலைமுகட்டின் கிழக்குச் சரிவிலுள்ள நகர்ப்பகுதி சமதளப்படுத்தப்பட்டது. கிழக்குச் சுவரின் ஒரு பகுதி 10-ஆம் நூற்றாண்டில், ஒருவேளை தாவீதால் பழுது பார்க்கப்பட்டது *(2 சாமு 5:9; 1 நாள் 11:8)*. தாவீது நகரின் பெரும்பகுதி பிற்காலத்தில் குறிப்பாக அதிரியான் காலத்தில் (கி.பி. 135), கல்வெட்டி எடுத்தலால் அழிக்கப்பட்டு விட்டாலும், சில கட்டடங்களும் கல்லறைப் பகுதியும் எஞ்சியுள்ளன. இங்கு யூதாவின் அரசர்கள் புதைக்கப்பட்டிருக்கலாம் *(1 அர 2:10; 11:43; 14:31; நெகே 3:16)*.

தாவீதின் நகரை அடையாளம் காட்டுவது இப்போது அவ்வளவு கடினமன்று. இது திரோப்பியன் பள்ளத்தாக்கு, கிதரோன் பள்ளத்தாக்கு சிலோவாம் குளமும் தோட்டமும் சூழ்ந்த முக்கோண மலையாகும் *(2 நாள் 32:20)*. கீகோன் நீரூற்றிலிருந்து மக்கள் நீர் எடுக்கும் குடை கால்வாய் வழியாகச் சென்று திடீரென்று தாக்கித் தாவீது நகரைக் கைப்பற்றினார் *(2 சாமு 5:7-8)*. தாவீது தனது மாளிகையை நகரின் எல்லைக்குள்ளேயே அமைத்தார். அவர்காலத்திலும் அதற்குப் பின்னும், பல பாதுகாப்பு அரண்கள் குறிப்பாக வடக்குப் பகுதியில் கட்டப்பட்டன.

எருசலேம் அதன் மூல எல்லைகளைக் கடந்து வளர்ந்த பின்னும் தாவீதின் நகர் தனக்கே உரிய அடையாளத்தைக் கொண்டிருந்தது. நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் நகரை மீண்டும் கட்டுதல் மற்றும் சுவர்களை அர்ப்பணம் செய்தல் பற்றிய நெகேமியாவின் விவரிப்பு பல பகுதிகளைக் குறிக்கிறது. அவற்றில் சில: ஊருணிவாயில் *(நெகே 2:14; 3:15; 12:37)*; தாவீது நகரிலிருந்து கீழே செல்லும் படிகள் *(3:15; 12:37)*; தாவீதின் கல்லறை *(3:16)*; தாவீதின் அரண்மனை *(12:37)*; படைவீரரின் பாசறை *(3:16)*; தண்ணீர் வாயில் *(3:26; 13:37)*. அகழ்வாய்வுகளில் இவற்றில் பல அடையாளம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தாவீது நகரின் வட எல்லை அடையாளம் காணமுடியவில்லை. திரோப்பியன் பள்ளத்தாக்கை நோக்கிய மேற்கிலுள்ள அரண் செய்யப்பட்ட வாயில் அடையாளம் காணப்பட்டுள்ளது.

தாவீது காலத்து நகர் 12 ஏக்கர் பரப்பையும் 2000 குடிமக்களையும் கொண்டதாகும். சாலமோன் ஆலயமலையை உள்ளடக்கி வடக்கில் விரிவு படுத்தினார். அப்போது அதன் பரப்பளவு 32 ஏக்கராகும். எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எசேக்கியா வடக்கிலும் மேற்கில் திரோப்பியன் பள்ளத்தாக்கைக் கடந்தும் நகரை விரிவாக்கினார். நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய காலத்தில் சாலமோன் காலத்திய பரப்பளவுக்கு நகர் சுருங்கியது.

பல முக்கிய நிலத்தடிக் கால்வாய்கள் கீகோன் ஊற்றிலிருந்து நகருக்கும் அதன் சுற்றுப்புறங்களுக்கும் நீரைக் கொண்டு வந்தன. அவற்றில் ஒன்று பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிலோவாம் குடை கால்வாயாகும். ஒரு வேளை இது சாலமோனால் அமைக்கப்பட்டு கி.மு. 586-இல் பாபிலோனியர் நகரை அழித்தபோது அடைக்கப்பட்டதாக இருக்கலாம். மற்றது எசேக்கியாவின் குடை கால்வாயாகும். இவற்றிற்கெல்லாம் முந்தியது, வாரன் சுரங்க வழிக்கம்பம் என்றழைக்கப்படுவதாகும். இது செங்குத்தாகக் கிழக்குச் சுவருக்குள் நீரைக் கொண்டுவர உதவியது. போர்க்காலத்திலும் சமாதான காலத்திலும் இது நகருக்கு நீரை அளித்தது. இது கி.பி. முதலாம் நூற்றாண்டுவரை பயன்பட்டிருக்கிறது. இதன் வழியாக வந்துதான் தாவீது எபூசியரைத் திடீரென்று தாக்கியிருக்க வேண்டும் *(2 சாமு 5:8)*.

யோசிப்பஸ், காலப்போக்கில் நகரின் வளர்ச்சியைக் கருத்தில் கொள்ளாமல், தான் அறிந்திருந்த முழு எருசலேமையும் தாவீது நகரம் என்று பொதுவாகக் கூறுகிறார். இதன் விளைவாகத் திரோப்பியனுக்கு மேற்கிலுள்ள உயர்ந்த குன்றைத் ''தாவீதின் கோட்டையெனக்'' குழப்புகிறார். இந்தக்குன்று சமய அடையாளப் பொருளின் காரணமாகக் கிறிஸ்தவ சீயோனாகக் கருதப்படுகிறது.

**தாவீது நகரின் படிகள்** (STAIRS OF THE CITY OF DAVID)

கற்களாலான படிக்கட்டுகளைப் பற்றி, நெகேமியாவில் எருசலேம் நகர் திரும்பக் கட்டப்படுதலைப் பற்றிய விவரிப்பில், ஒரு குறிப்பு காணப்படுகின்றது (நெகே 12:37). இது நெகே 3:15-இல் ''தாவீதின் ஊரிலிருந்து கீழே செல்லும் படிகள்'' என்று குறிக்கப்படுகிறது. இது அரசர்களின் கல்லறைகளுக்கருகில் தாவீதுநகரின் தென் பக்கத்தை நோக்கி அமைந்திருந்தது.

தொல்பொருள் ஆராய்ச்சி கிதரோன், திரோப்பியன் ஆகிய பள்ளத்தாக்குகளுக்கிடையே இத்தகு படிக்கட்டு வரிசை இருப்பதைத் தெரிவிக்கின்றது. இது நகரின் கோட்டையின் கிழக்குப்புறத்தை நோக்கி, ஒரு வேளை ஊருணி வாயிலைநோக்கி அமைந்திருக்கலாம்.

**தாவீது** (DAVID - அன்பு செய்யப்பட்டவன்)

*1. முன்னுரை:* கி.மு. 1000-962 வரை இஸ்ராயேலை ஆண்ட இஸ்ராயேலின் இரண்டாம் அரசரே தாவீது. எல்கானான் என்ற பெயர் கொண்ட இவர் இஸ்ராயேலின் அரசனானபோது சூட்டிக்கொண்ட சிறப்புப் பெயராகும் தாவீது என்பது என்று சிலர் கருதுகின்றனர் (2 சாமு 21:20). பெத்லகேமைச் சேர்ந்த ஈசாயின் மகனான தாவீது சவுலையடுத்து இஸ்ராயேலின் அரசன் ஆனார். ரூத் ஆகமத்தில் உள்ள தலைமுறை அட்டவணை (ரூத் 4:1-8 தொ) ஈசாயை இராம், அம்மினதாபு, நகுசோன், சல்மோன், போவாசு ஆகியவர்களின் வழியாகப் பெரேட்சோடு தொடர்புபடுத்திப் பேசுகிறது. பெரேட்சு யூதா கோத்திரத்தைச் சேர்ந்தவர். ஆனால் இத்தலைமுறை அட்டவணை செயற்கையாக உருவாக்கப்பட்டது என்றும் தாவீதின் குடும்பம் இஸ்ராயேல் அல்லாத தோற்றம் உடையது என்ற கருத்தும் நிலவுகிறது.

*2. பெயரும் மூலமும்:* தாவீது என்ற பெயரின் மூலச்சொல் அன்பு என்னும் பொருள் படும் சொல்லிலிருந்து வருகிறது. இப்பெயருக்கு ''அன்பு செய்யப்பட்டவர்'' அதாவது ''இறைவனால் அன்பு செய்யப்பட்டவர்'' என்று பொருள் கொடுக்கலாம் (2 நாள் 20:37). ''படைத்தலைவர்'' என்ற பொருளில் ''தாவீதும்'' என்ற சொல் மாரி வாசகங்களில் பலதடவை காணப்படுகிறது. ''தாவீதும்'', தாவீது என்ற இருசொற்களும் , தொடர்புடையன என்று முன்பு கருதப்பட்டன. அவ்விதத் தொடர்பு எதுவும் இல்லையென்றே கருத வேண்டும். தாவீது என்ற சொல் பழைய ஏற்பாட்டில் எண்ணூறுக்கு மேற்பட்ட தடவையும் புதிய ஏற்பாட்டில் எழுபது தடவைக்கு மேலும் காணப்படுகிறது.

தாவீது வாழ்க்கை வரலாற்றுக்கு முக்கிய மூலங்கள் 1,2 சாமுவேலின் நூல்களும், 1 அர 1-2 என்ற பகுதியும், இவற்றிற்கு இணையானதும் பொருள் பொதிந்த சேர்க்கைகளும் விலக்கல்களும் கொண்ட 1 நாள் 11-29 என்ற பகுதியுமாகும். சாமுவேல் நூல்களிலும் அரசர்கள் நூல்களிலும் காணப்படும் செய்திகள் தாவீதின் காலத்திற்கு ஒத்தவையாகும். குறிப்பாக 2 சாமு 9-20-இல் வரும் அரசவைக் குறிப்புகள் பழைய ஏற்பாட்டிலேயே மிகவும் உண்மையான வரலாற்றுத் தன்மையுடையன.

*3. வரலாறு:* தாவீதைப் பற்றிய முதல் குறிப்பு 1 சாமு 16:1-13 ஈசாயின் எட்டு மைந்தர்களில் எல்லோரிலும் இளமையான தாவீதே யாவேயின் தேர்ந்தெடுக்கப்பட்டவராகச் சாமுவேல் இறைவாக்கினரால் அபிடேகம் செய்யப்பட்டதாகக் கூறுகிறது. மற்ற நீதிபதிகள், இறைவாக்கினர்கள் போலத் தாவீதும் இறைவனால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரே; ஆள்வதற்குரிய தனிப்பண்பினைப் பெற்றவரே என்பதை மேலே கூறிய நிகழ்ச்சி உறுதிப்படுத்துகிறது. இதற்குப் பின்வரும் நிகழ்ச்சிகளில் தாவீது ஓர் இளம் இசைக்கலைஞனாகச் சவுலுக்கு அறிமுகப்படுத்தப்படுகிறார் (1 சாமு 16:14); மேலும் கோலியத்து எனும் இராட்சசனை வெட்டி வீழ்த்தும் ஓர் இளம் மாவீரனாகக் காட்டப்படுகிறார் (1 சாமு 17:1). இவ்விரு நிகழ்ச்சிகளும் ஒன்றோடொன்று தொடர்பற்ற வெவ்வேறு நிகழ்ச்சிகளாகும். இசைக்

கலைஞன் என்ற அளவில் தாவீது சவுலுக்குப் பணியாளர் ஆகிறார். கோலியத்தைக் கொன்றவன் என்ற அளவில் புகழ்பெற்ற போர் வீரராகத் திகழ்கிறார். 1 சாமு 18:20 தாவீது சவுலின் அரசவையில் இருக்கும் போது நடந்தவை பற்றிக் குறிப்பிடுகிறது. ஏனெனில் இரண்டிலும் முதல் தடவையாகத் தாவீது சவுலிடம் அறிமுகப்படுத்தப்படுகிறார். அவர் கோலியத்தைக் கொன்று பெயர் பெற்றவுடன் சவுல் அவர் மேல் பொறாமை கொண்டு கொல்ல முயற்சிக்கிறார் (1 சாமு 18:10 தொ; 19:9 தொ). தாவீதுக்குச் சவுலின் மகள் மீக்கால் திருமணம் செய்து தரப்படுகிறாள். மேராபு என்ற மூத்த மகளைத் தருவதாகக் கூறிப் பின்னர் சவுல் மீக்காலையே தருகிறார். இதற்கு விலையாக ஒரு வீரச் செயல் செய்ய வேண்டியிருந்தது. பெலிஸ்தியர்களோடு மேற்கொள்ளும் போரில் தாவீது இறந்து விடுவார் என்று (1 சாமு 18:25 தொ) சவுல் எதிர்பார்த்தார். ஆனால் எல்லாவற்றிலும் தாவீது வெற்றிவீரராய் எழுந்து வந்தார். சவுலின் மூத்த மகனும், சவுலின் வாரிசுமான யோனத்தான் தாவீதின் நெருங்கிய நண்பனாகி விட்டதால் தன் தந்தையின் கோபத்தினின்று தாவீதைத் தப்புவிக்கிறார் (1 சாமு 19:1 தொ); மீண்டும் சவுல் தாவீதின் மீது அதிகம் கோபம் கொள்ளவே தாவீது தன் மனைவி மீக்காலின் உதவியோடு தப்பி ஓட வேண்டியதாகி விட்டது (19:11 தொ). தங்களுடைய அரச மரபுக்குப் பதிலாக வேறொரு அரச மரபை நிறுவ வேண்டிய ஊழ் உடையவனுக்குச் சவுலின் குடும்பத்தினரே உதவி செய்கின்றனர் (20:3தொ). யோனத்தான் தாவீதுக்காகச் சவுலிடம் பரிந்து பேசியது பயன் அளிக்காததால் தாவீது நாடோடியாக அலைய வேண்டியதாயிற்று. தாவீது அரச ஆதரவு பெறுதல், புகழ் அடைதல், சவுலின் வெறுப்பைப் பெறுதல், நாடோடியாகத்திரிதல் ஆகிய நிகழ்ச்சியின் வரிசை போதிய மட்டும் தெளிவாக உள்ளன. ஆனாலும் இவை ஒன்றையொன்று சாராத தனித்தனி நிகழ்ச்சிகளாகவும் சில சமயம் இரட்டிப்பு நிகழ்ச்சியுடையதாகவும் உள்ளன. எடுத்துக் காட்டாக நேரடிச் சந்திப்பு அபாயமிக்கதும் முடியாததுமாக இருந்ததால் அம்பு அடையாளம் ஒப்புக் கொள்ளப்பட்டது என்று 1 சாமு 20:35 தொ கூறுகிறது. ஆனால் இப்போதுள்ள வாசகத்தில் இந்த இரங்கத்தக்க சந்திப்பு விவரிக்கப்படுகிறது. ஆகையால் இது அம்பு அடையாள விவரிப்போடு தொடர்புடையதாகத் தெரியவில்லை.

தாவீது தப்பி ஓடியபின் ஒரு கொள்ளைக் காரனாக அலைந்து திரிந்தார் (1 சாமு 21-31) என்று பழைய விவரிப்பு வெளிப்படையாகக் கூறுகிறது. இது தாவீதின் புனிதத்தை மாசுபடுத்திவிடுமோ என்ற அச்சத்தில், இப்படி வெளிப்படையாகக் கூற இன்றைய அறிஞருள் சிலர் தயங்குவர். முதலில் தாவீது நோபு எனப்படும் வழிபாட்டு மையத்திற்கு ஓடிச் சென்று அங்கு அகிமெலக்கு என்ற குருவிடமிருந்து உணவும் ஆயுத உதவியும் பெறுகிறார். இஸ்ராயேலரின் எதிரியான பெலிஸ்தியரிடம் பணிசெய்ய முயற்சிக்கிறார். ஆனால் அவர்கள் இஸ்ராயேலரின் இந்தப் பெரும்வீரனை நம்பத்தயாராக இருக்கவில்லை. ஆகவே தாவீது யூதாவின் பாலைவனத்திற்கு ஓடவேண்டியிருந்தது. அங்கே அதுல்லாம் என்ற குகையில் சவுலை வெறுத்த அதிருப்தியாளர்கள், கிளர்ச்சியாளர்கள், கடன்பட்டோர் போன்ற 400 பேரைச் சேர்த்து ஒரு சிறு படையாக உருவாக்கினார். இவர்களே பின்னர்ப் போர் செய்தலைத் தொழிலாகக் கொண்டு தாவீதின் வாழ்க்கை முழுவதும் அவருக்குத் துணையாக நின்ற குழுவின் கருவாக அமைந்தனர். மோவாபு நாட்டிற்குத் தம் பெற்றோரை அனுப்பி, அவர்களுக்குப் பாதுகாப்பை ஏற்படுத்தினார் (1 சாமு 22:3 தொ); இதை வைத்துத்தான் இன்றைய அறிஞர் சிலர் தாவீதின் குடும்பத் தோற்றம் இஸ்ராயேலைச் சார்ந்தது அன்று என்று கருதுகின்றனர்.

அகிமெலக்கின் உதவியை நாடிய தாவீது சவுலுக்குத் தன்மேலுள்ள வெறுப்பை வெளிக்காட்டவில்லை. தோயேகு, அகிமெலக்கு செய்ததைச் சவுலிடம் கூறிய உடன் நோபிலுள்ள எல்லாக் குருக்களையும் வெட்டி வீழ்த்தக் கட்டளையிட்டார். அபியாத்தார் மட்டும் எபோதை எடுத்துக்கொண்டு யூதேயா

பாலை வனத்தில் இருந்த தாவீதிடம் தப்பி ஓடினார். யூதாவின் பாலைவனத்தில் சவுல் தாவீதைத் துரத்திச் சென்றார். கெயிலா மற்றும் சீபு ஆகிய இடத்தினர் சவுலிடம் தாவீதைக் காட்டிக் கொடுக்க முன் வந்தனர் (1 சாமு 23:10 தொ. 19 தொ). இரண்டு சமயங்களில் குகையில் தாவீதின் கையில் சவுல் சிக்கினார். ஆனால் தாவீது சவுலின் உயிரைக்காத்துத் தப்பவிடுகிறார் (1 சாமு 24:4தொ; 26:2 தொ). ஆனால் இரண்டு விவரிப்புகளும் ஒரே நிகழ்ச்சியின் இருவேறு வடிவங்களாக இருக்கலாம். இரு முறையும் சவுல் தான் செய்வது தவறு என்று ஏற்று, தாவீதுடன் சமாதானம் செய்து கொள்ள விரும்புகிறார். ஆனால் சமாதானம் செய்து கொள்ளவில்லை. இந்த நிகழ்ச்சிகளில் வரும் தாவீதின் பெருந்தன்மையைப் பின் வரும் விவரிப்புகள் அறிந்திருப்பதாகத் தெரியவில்லை. நாபால் - அபிகாயிலின் கதை தாவீதின் கொள்ளைக்கார வாழ்வுக்கு ஓர் எடுத்துக் காட்டாக அமைகிறது. இக்காலத்தில் தாவீதும் அவரது கூட்டத்தினரும் பல செல்வந்தர்களுக்குப் பாதுகாப்பு அளித்து அதற்குப்பதிலான கூலியைப் பணமாகக் கட்டாயமாக வசூலித்தனர். அப்படிப்பட்ட செல்வந்தர்களில் கர்மேலைச் சேர்ந்த நாபாலும் ஒருவர். தாவீது அளித்த பாதுகாப்பை நாபால் ஏற்க மறுத்தபோது தாவீது நாபாலையும் அவரது சொத்துக்கள் அனைத்தையும் அழித்து விடத் தயாரானார். இதை அறிந்த நாபாலின் மனைவி அபிகாயில், தன் விவேகத்தால் அழிவை நடவாதிருக்கச் செய்தார். இச்செய்தியை அறிந்த அதிர்ச்சியில் நாபால் இறந்துவிட்டதாகக் கூறப்படுகிறது. பின்பு தாவீது அபிகாயிலை மணந்து கொண்டார். அபிகாயில் தன் கணவனது சொத்துக்களைத் தாவீதிடம் கொண்டு வந்தளித்தாள். ஆனால் வரலாற்று ஆசிரியர்கள் அபிகாயிலை ஐயத்தோடே நோக்குவர்.

காத்தைச் சேர்ந்த ஆக்கிசிடம் கூலிப்படை வீரனாகச் சேர்ந்து (1 சாமு 27:1) தனது பணிக்காகச் 'சிக்லாகு' எனுமிடத்தைத் தாவீது பெற்றார். ஏன் இந்த இடம் தொடக்க காலம் தொட்டே அரசருக்குரிய சொந்த உடைமையாக இருந்தது என்பதை இந் நிகழ்ச்சி விளக்குகிறது. தாவீது பாலைவனத்தில் அலைந்து திரிந்த மக்களைக் கொள்ளையிட்டு வந்தார். இச்செயல்களை யூதாவின் மீது தாக்குதல்களாகத் தனது பெலிஸ்திய அதிகாரிகளிடம் விளக்கம் தந்தார். இந்த இஸ்ராயேல் வீரர் தன் மக்களையே கொள்ளையிட்டார் என்ற கருத்தை எபிரேயப் பாரம்பரியம் ஏற்க எப்போதும் மறுத்தது. ஆனால் நாபால் கதையில் இதையேதான் தாவீது செய்தார். பெலிஸ்தியரின் பணியில் இருந்தபோது இதை அவரால் தவிர்த்திருக்க முடியாது என்பது தெளிவு. மேலும் பெலிஸ்தியர்களின் படையைச் சவுலுக்கு எதிராகக் கொண்டு செல்ல வேண்டிய இடுக்கண் நிலையைத்தான் தாவீது எதிர்கொள்ள வேண்டியிருந்தது. ஆக்கிசு தாவீதையும் அவரது வீரர்களையும் தன் படையில் சேர்த்துக் கொள்ள விரும்பினார். ஆனால் மற்றப் பெலிஸ்தியர்கள் தாவீதை இன்னும் நம்பவில்லை. ஆகவே அவர் திரும்பிப்போக வேண்டும் என்று வலியுறுத்தினர். இதற்கிடையில் தனது ஊராகிய சிக்லாகை அமலேக்கியர்கள் தாக்கியதாகக் கேள்விப்பட்டு அதனைக் காக்க அவர்களைத் துரத்திச் சென்று கைதிகளையும் கொள்ளைப் பொருட்களையும் திரும்பக் கைப்பற்றுகிறார். போரில் பங்கெடுப்போருக்கும், படையின் மூலதனத்தைக் காப்பவருக்கும் கொள்ளைப் பொருட்கள் சமமாகப் பங்கிடப்பட வேண்டும் என்று தாவீது கட்டளையிட்டதாக இக்கதை கூறுகிறது (1 சாமு 30:24 தொ). பெலிஸ்தியருக்கும், இஸ்ராயேலுக்கும் நடந்த போரில் சவுலும் அவரது மகன்களும் கொல்லப்பட்டனர். தாவீது இப்போரில் கலந்து கொண்டிருந்தால் இடையிலே பெலிஸ்தியருக்கு எதிராகத் திரும்பியிருக்க வேண்டும். இல்லையேல் அவரை இஸ்ராயேலின் காவலராக நிச்சயம் காட்டியிருக்க முடியாது. ஆனால் அவர் போரில் கலந்து கொள்ள அவசியம் ஏற்படவில்லை.

இதற்குப்பின் ஏற்பட்ட குழப்பத்தில் தாவீது, நடக்கும் நிகழ்ச்சிகள் தன்னை வழி நடத்தும் என விட்டுவிட்டார். சவுலின்

இறப்பை ஒரு நல்ல செய்தியாக அவர் ஏற்க மறுத்துவிட்டார் (2 சாமு 1:13 தொ). யூதாவி லிருந்து வந்தவர்கள் கேட்டுக் கொண்டதின் படி எபிரோனில் இருந்துகொண்டு யூதாவின் அரசனானார் (2 சாமு 2:4 தொ). சவுலின் மகனாகிய இசுபகாலை (2 சாமு 2:8 தொ) தாவீது சிறிது சிறிதாக வெற்றி கொண்டார். இசுபகாலால் அவமதிக்கப்பட்ட அப்னேர் இஸ்ராயேலரின் ஆதரவைத் தாவீதுக்கு அளிக்க முடிவெடுத்ததோடு சவுலின் அரசு அழிந்தது எனலாம். தாவீது இத்துரோகத்தை ஏற்றார். அதேநேரத்தில் இசுபகால் இரண்டு கொள்ளைக் கூட்டத் தலைவர்களால் கொல் லப்பட்ட போது (2 சாமு 4:5 தொ) தாவீது அவர்களைத் தண்டித்தார். முடிவில் தாவீது ஒருவரே இஸ்ராயேலின் அரசை ஏற்கத் தகுதியானவர் என்ற நிலையில் எல்லாக் கோத்திரத்தாரும் அவரை அரசராக ஏற்றுக் கொண்டனர் (2 சாமு 5:1 தொ).

தாவீது மேற்கொண்ட நிகழ்ச்சிகளில் மிக முக்கியமானது பெலிஸ்தியர்களைத் தோற்க டித்ததும் எருசலேமைக் கைப்பற்றியதுமா கும். இந்த இரு நிகழ்ச்சிகள் பற்றிய எஞ்சிய ஏடுகள் நிறைவானவையன்று. இரண்டையும் காலவரையில் வரிசைப்படுத்துவது முடியாத காரியமாகும். அவை நடந்த காலமோ தெளி வாக இல்லை. எருசலேம் அரசர் தங்குமிட மாக இருந்ததில் பல நல்ல அம்சங்கள் இருந்தன. இது இயற்கையிலே பாதுகாப் பான இடம் மட்டுமன்று; பொதுவான ஓர் இடத்தில் இருந்தது. இது இஸ்ராயேலலைச் சேர்ந்ததன்று; தாவீதின் யூதா இனத்தையும் சேர்ந்ததன்று. யூதா, பென்யமின் இனத்தவர் களுக்குரிய இடங்களின் இடையில் இருந்தது. பெலிஸ்தியர்களோடு நடந்த போர் பற்றிச் சில துணுக்குகளில் மட்டும் குறிப்பிடப்படு கிறது (2 சாமு 5:17 தொ; 21:15 தொ). இதற்குப் பின் வந்த இஸ்ராயேல் வரலாற்றி லிருந்து பெலிஸ்தியர்கள் இதன்பின் இஸ்ரா யேலரை மேற்கொள்ளுமளவுக்குப் பெரும் படையாகத் திகழவில்லையெனத் தெரி கிறது. தாவீது எப்படி வெற்றி கொண்டார் என்பதைத் தெளிவாகக் கூற முடியாவிடி னும், இஸ்ராயேலர் பெலிஸ்தியரைவிட எண்ணிக்கையில் அதிகமானவர்களாக இருந் திருக்கலாம். அவர்களை வழிநடத்தத் தகுந்த தலைமை ஒன்றும் போர்க்கலங்களும் போர்த்தந்திரமும் தேவைப்பட்டன. அவற் றைத் தாவீது அளித்தார். பெலிஸ்தியர் வெற்றி கொள்ளப்பட்டனர்.

தாவீது எருசலேமை அரசன் தங்குமிட மாக மட்டுமன்று (2 சாமு 5: 11 தொ) சமய வழிபாட்டு மையமாகவும் இஸ்ராயேல ரனைவரும் வந்து கூடுமிடமாகவும் ஆக்கி னார் (2 சாமு 5:11). இதுவரை கண்டுகொள் ளப்படாமல் இருந்த இஸ்ராயேலரின் ஒற்று மையின் சின்னமான உன்படிக்கையின் பேழையைத் தலைநகருக்குக் கொண்டு வந் தார். உடன்படிக்கையின் பேழை எருசலே முக்குள் எடுத்து வரப்பட்டபோது தாவீது அதன்முன் நடனமாடியது ஒரு அரசனுக் குரிய முறையன்று என்று மீக்கால் கண்டித்ததற் காக அவளுடன் வாழ்வு முழுவதும் எந்த உறவும் தாவீது வைத்துக் கொள்ளவில்லை (2 சாமு 6:20 தொ).

தாவீது உடன்படிக்கையின் பேழை வைக் கப்படுவதற்கு ஏற்றதொரு கோவிலைக்கட்ட விரும்பினார் (2 சாமு 7:1 தொ) என்பதில் எவ்விதச் சந்தேகமுமில்லை. ஆனால் அவர் கோவில் கட்ட வேண்டுமென்பது கடவுளின் திட்டமன்று என்று நாத்தான் உரைத்தார். அதே நேரத்தில் தாவீதின் அரியணை என் றென்றும் நிலைக்கும் என முன்னறிவிக் கிறார் (2 சா 7:8-16). இந்த இறைவாக்கு சங் 89:20 தொ-இல் நீண்டதாகப் பாதுக்காக்கப் பட்டுள்ளது. இதுவே தாவீதுக்கும் அவரது மரபின் மெசியாப்பண்பிற்கும் அடிப்படை யாயிற்று. இது பிற்காலத்தில் இஸ்ராயேலை முழுமையாக இறுதியில் விடுவிக்கும் மீட்பர் தாவீதின் குலத்தினின்று எழுவார் என்ற விசுவாசமாக உருவானது. இது காலப் போக்கில் இயேசு கிறிஸ்துவின் மீட்புச் செயலில் கிறிஸ்தவர்கள் கொண்டிருந்த விசு வாசத்திற்கு அடிப்படையாயிற்று (உரோ 1:3).

தாவீதின் பிற போர்களைப் பற்றி 2 சாமு 8:1 தொ; 10:1-19; 12:26-31 ஆகியவற்றில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இச்சிறு

குறிப்புகளிலிருந்து ஒரு சிறிய இஸ்ராயேலின் பேரரசைத் தாவீது உருவாக்கினார் என்பது தெளிவாகிறது. எகிப்திலும், மெசபொத்தாமியாவிலும் பலவீனமான அரசுகள் இருந்ததால் தாவீதுக்கு இது எளிதில் முடிகின்ற காரியமாக இருந்தது. தாவீது மோவாபியர்களை வெற்றிகொண்டார் *(2 சாமு 8:2)*. முன்னர் நட்புறவு கொண்டிருந்தவர்களோடு ஏன் போர் புரிந்தார் என்றால், ஒருவேளை அரசு மாற்றமும் அதன் விளைவாகக் கருத்து மாற்றமும் ஏற்பட்டிருக்கலாம். மேலும் ஏதோம், தமஸ்கு, ஆராமிய அரசுகளைக் கைப்பற்றித் திரை செலுத்தவைத்தார். ஏதோமியரும், அம்மோனியரும் கட்டாய வேலை செய்யுமாறு வற்புறுத்தப்பட்டனர். சீரியாவிலுள்ள ஆமாத்தின் அரசனான தோயியுடன் உடன்படிக்கை செய்து கொண்டார் தாவீது.

தாவீதின் வாழ்க்கை பற்றிய முழுமையான ஒரு சான்று அல்லது வரலாறு 2 சாமு 9-20 அதிகாரங்களில் வரும் ''குடும்ப வரலாற்றில்'' காணப்படுகிறது. இப்பகுதி தாவீதின் வாழ்க்கையை நேரடியாகக் கண்ட ஒருவரால் எழுதப்பட்டிருக்க வேண்டும். தாவீது எல்லா நிலைகளிலும் சிறப்புற்றிருந்த நேரத்தில்தான் உரியாவின் மனைவியான பத்சேபாவோடு விபச்சாரக் குற்றம் செய்தார். அதனைச் சரிப்படுத்த உரியாவைக் கொலைசெய்யச் செய்தார். செய்த இப்பாவத்திற்காக நாத்தான் அவரைக் கண்டித்தார். அதைத் தொடர்ந்து தாவீதுக்கு வந்தவை எல்லாம் பெருந் தோல்விகளே. பத்சேபாவினால் தாவீதுக்குப் பிறந்த குழந்தை இறந்தது. அம்னோன் தன் சகோதரி தாமாருடன் உறவு கொண்டார் *(2 சாமு 13:1 தொ)*; தன் சகோதரியைக் கெடுத்த அம்னோனை அப்சலோம் கொன்றார் *(2 சாமு 13:21 தொ)*. அப்சலோம் தன் தந்தைக்கு எதிராகவே எழுந்தான். எனவே தாவீது எருசலேமை விட்டுத்தப்பி ஓட வேண்டியதாகிவிட்டது. எபிரோனுக்கு அருகே வாழ்ந்த இஸ்ராயேல் அல்லாத ஒரு சிலரே இந்தக் கிளர்ச்சிக்கு ஆதரவு அளித்தனரேயொழிய இஸ்ராயேல் மக்கள் அனைவரும் ஆதரவு அளிக்கவில்லை. எனவே யோர்தானுக்குக் கிழக்கே தனக்கு ஆதரவு தந்த உண்மையுள்ள போர் வீரர்களை ஒன்று சேர்த்தார் தாவீது. கிளர்ச்சியை ஒடுக்கியபோது அப்சலோமைக் கொல்ல வேண்டாமென்று கூறியும் அவன் கொல்லப்பட்டான். இந்தக் கிளர்ச்சி பற்றிய விவரிப்போடு பென்யமின் குலத்தைச் சேர்ந்த சேபா பென் பிக்ரி தலைமையில் வட இனத்தவர் சிலர் கிளர்ச்சி செய்த விவரிப்பும் கொடுக்கப்படுகிறது *(2 சாமு 20:1 தொ)*. இந்த இரண்டு கிளர்ச்சிகளும் தாவீதின் அரசாட்சியும் பேரரசும் மக்களிடையே நிலவிய உள்ளார்ந்த ஒற்றுமையை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை என்று காட்டுகின்றன. அவரது மகன் சாலமோனின் மரணத்துக்குப் பின்வந்த நிகழ்ச்சிகளும் இதையே வலியுறுத்துகின்றன.

தாவீதின் ஆட்சியில் நிகழ்ந்த வேறுசில விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் பற்றி 2 சாமு 24-இல் ஒரு எபிரேய மரபு வழிவந்தவையாகக் காண்கிறோம். தாவீது தன் ஆட்சியின் எப்பகுதியில் கணக்கெடுப்பு நடத்தினார் என்பது தெரியவில்லை. வரிகள், போர்ச் சேவை, கட்டாய வேலை ஆகியவற்றை நிர்ணயிக்க இக்கணக்கெடுப்பு பயன்பட்டதால் மக்கள் இதை விரும்பவில்லை. மேலும் கணக்கெடுப்பு என்பது கடவுள் ஒருவனுக்கு அளித்துள்ள நலன்களுக்கு எதிராகத் தன்னைப் பெருமை பாராட்டிக் கொள்வதாகக் கருதினர் இஸ்ராயேல் மக்கள். இதனால் கடவுள் அவரைத் தண்டித்தார் எனவும் அதனால் பஞ்சம், கொள்ளைநோய் முதலியன அவரது நாட்டைப் பெரிதும் பாதித்தன எனவும் கூறப்படுகிறது.

*1 அர 1:1* தொ-இல் தாவீது மிகவும் முன்னதாகவே வயோதிகத்தை அடைந்து விட்டதாகவும், ஆனால் அவரது ஒத்த வயதினர்களான நாத்தான், யோவாபு ஆகியோர் மிகுந்தபலம் பொருந்தியவர்களாக இருக்கின்றனர் எனவும் தெரிகிறது. அதோனியா தாவீதின் மகன்களிலே மூத்தவன். தன்னையே அரசன் போலக் காட்டிக்கொள்ள ஆரம்பித்தான். ஆனால் தாவீது பத்சேபாவுக்கு வாக்களித்ததின்படி சாலமோனை அர

சராக அறிவிக்கிறார். இதனால் அதோனியா வின் முடிசூட்டு விழா தடைபடுகிறது. தாவீது தன் இறுதிவிருப்பமாக யோவாபு, சிமயி ஆகியோரைப் பழிவாங்க வேண்டுமென்று சாலமோனிடம் கூறுகிறார் (1 அர 2;1 தொ).

*4. நாளாகமம்:* இந்நூல் தாவீது பற்றிக்கூற வருவது சாமுவேல், மற்றும் அரசர்கள் நூல் கள் ஆகிய மூலத்திலிருந்து எடுக்கப்பட்ட வையே. தாவீதிடமிருந்த விரும்பத்தகாத சிலவற்றை நீக்கிவிடுகிறது. தாவீதின் கொள் ளைக்கார வாழ்வு, பத்சேபாவுடன் விபச்சா ரம், உரியாவைக் கொலை செய்தல், குடும் பக் குழப்பங்கள் போன்றவற்றை நீக்கிவிடு கிறது. ஆலயம் கட்டுவதற்கும், அதன் வழி பாட்டுக்கும் தாவீது தயார் செய்தது பற்றிய சில செய்திகளைச் சேர்க்கிறது (1 நாள் 22:1-28:21). குறிப்பாக அவர் லேவியபாடற் குழுவையும் லேவியர் பணிகளையும் உரு வாக்கியது பற்றியும் கூறுகிறது. நாளாகமம் தாவீது கோவிலைக்கட்டாததற்குக் காரணம் அதிக இரத்தம் சிந்திய (போரின்மூலம்) ஒரு மனிதரால் தனது புனித ஆலயம் கட்டப்படு வதைக் கடவுள் விரும்பவில்லை எனக் கூறு கிறது (1 நாள் 22:8 தொ); ஆனால் இத்தகைய தொரு விளக்கம் 2 சாமு 7-இல் காணப்பட வில்லை. ஆலயம் கட்ட எவ்வளவு தூரம் திட்டம் வகுத்தார், மற்றும் பொருட்களைச் சேகரித்தார் தாவீது என்பதை அறுதியிட்டு நாளாகமம் குறிப்பிடவில்லை.

*5. மதிப்பீடு:* அங்குமிங்குமாகச் சிதறிக் கிடக்கும் ஒரு சில செய்திகளைக் கொண்டு தாவீது எப்படிப்பட்ட மனிதர் என்ற மிகத் தெளிவான, நேர்மையான ஓர் உருவத்தை நாம் தரமுடியாது; மதிப்பீடும் செய்ய முடி யாது. அதே நேரத்தில் அவர், சங்கீதம் காட்டுவதுபோல் (சங் 73), மிக மிகப் பக்தி யான மனிதர் என்று கூறுவதும் தவறு. ஏனெனில் ஒரு சில சங்கீதங்கள் தவிர அவர் அதிகம் எழுதியிருக்க முடியாது. பல இடங் களில் விவரிக்கப்படும் பக்தி தாவீதுக்குப் பொருந்துமானாலும், மற்றவற்றில் வரும் பக்தி இந்த இச்சைமிக்க, கொந்தளிப்புமிக்க வீரனும், கொள்ளைக் கூட்டத் தலைவனு மான தாவீதின்வரையில் பொருத்தமாக இல்லை. மேலும் பல சங்கீதங்களில் கோபம் கொண்டெழும் ஒரு போர் வீரனின் எண்ணங்களே காணப்படுகின்றன. சிறு வயதி லிருந்தே சண்டையிடுதல், பழிவாங்குதல் போன்றவற்றில் சர்வ சாதாரணமாகப் பழ கிய தாவீது ஏனைய கானானிய, மெசபொத் தாமியர்களைப்போல மனித உயிருக்கு எவ் வித மதிப்பும் கொடுப்பதாகத் தெரிய வில்லை. அவர் கோபம் அதிகம் கொண் டிருந்தவராக மட்டுமல்ல, பழிவாங்கும் உணர்ச்சி, ஒரு முறை பார்த்தவுடனே உரியா வின் மனைவியை எடுத்துக் கொள்ளத்தூண் டிய காம உணர்ச்சி, என அவர் பற்றிக் கூறும் நிகழ்ச்சிகள் அவரது பல்வேறுபட்ட உணர்ச்சி களின் வெளிப்பாடாக உள்ளன. அன்றைய மேற்காசிய பண்பாட்டின்படி எண்ணிக்கை யில்லா வைப்பாட்டிகளைத் தாவீதும் கொண்டிருந்தார். ஆனால் அவரது நண்பர் கள் என்று கூறியவர்கள் தொடக்க காலம் தொட்டு இறுதிவரை அவருக்கு மிகவும் விசுவாசமுள்ளவர்களாய் இருந்தனர் என் பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் அதே அளவு அவர்களிடம் தாவீது விசுவாசத் துடன் நடந்து கொண்டாரா என்பது கேள் விக்குரியது. பெலிஸ்தியர்களின் படையில் பணியாற்றியபோது தனது மக்களுக்கு நிச்ச யம் அவர் சார்புடையவராக இருந்திருக்க முடியாது.

ஒரு சாதாரண ஆடு மேய்ப்பவன் நிலையி லிருந்து அரசனாவது என்றால் அது உண்மை யிலே வியக்கத்தக்க நிகழ்ச்சிதான். சூழ் நிலை சந்தர்ப்பங்கள் உண்மையிலேயே அவ ருக்குத் துணையாக அமைந்தன. ஆயினும் தவிர்க்க வேண்டியவற்றைத் தவிர்த்து, தனக் குச் சாதகமான சூழ்நிலையை ஏற்படுத்திக் கொண்ட அவரது அரசியல் ஞானத்தைப் புகழாதிருக்க முடியாது. மேலும் தனது அர சியல் அறிவால் இஸ்ராயேல் முழுவதையும் ஒருங்கிணைத்த பெருமை அவருக்கு உரிய தாகும். ஆனால் அந்த ஒற்றுமை நெடுங் காலம் நீடிக்கச் செய்ய ஓர் அடிப்படையை அமைக்க அவராலோ மற்ற எவராலே கண்டு பிடிக்க முடியவில்லை.

தாவீதின் சமயம் அவரது ஒழுக்க வாழ்வோடு இணைந்ததாகும். இரண்டும் ஓர் எளிய, பேராசைமிக்க வீராவேசமிக்க எந்த மனிதனும் பின்பற்றுவது போன்றே இருந்தது. யாவே தன் பக்கம் உள்ளார்; தானும் யாவே பக்கம் இருக்கிறோம்; ஏனெனில் அவரது மக்களுக்காகப் போராடுவது யாவேக்காகப் போராடுவதாகும் என்பதை உறுதியாக நம்பினார். இதைத்தவிர இறைவன் தன்னிடமிருந்து வேறு எதையும் எதிர்பார்க்கவில்லை என்று உணர்ந்தார். இந்த இறைவனது கோரிக்கைகளுக்கு என்றும் விசுவாசமுள்ளவராய் இருந்தார்.

தாவீது பற்றிய மிகத் தெளிவான ஒரு வரலாற்று மதிப்பீடு இருக்க வேண்டும். ஏனெனில் எபிரேய மரபில் அவர் இலட்சிய அரசனாகக் காட்டப்படுகிறார். ஆனால் உண்மையிலே சமய அளவிலோ, ஒழுக்க நிலையிலோ, வெற்றியின் அளவிலோ தலை சிறந்த அரசன் என்று கூறமுடியாது. பின்னர் ஏன் அவ்வாறு கூறப்படுகிறார். இதற்கு முன்னோ, அவருக்குப் பின்னோ வந்த எந்த அரசரும் செய்யாத அளவு ஓர் அரசனிடம் எதிர்பார்க்கப்பட்டவற்றைச் செய்தார். இஸ்ராயேல் முழுவதையும் ஒருங்கிணைத்து ''யூதாவின் அரியணை என்றால் அது தாவீதின் அரியணை'' எனுமளவுக்குத் தன் புகழை நிலைநாட்டினார். மேலும் அவர் கொண்ட வெற்றிகளின் காரணமாக வெகுகாலமாக இருந்த பகைவரின் பயம் இஸ்ராயேலருக்கு அற்றுப்போயிற்று. இவ்வாறு அவர் செய்த அளவு வேறு யாரும் சாதிக்கவில்லையாதலால் அவர் இலட்சிய அரசராகக் காட்டப்படுகிறார்.

நாத்தானின் இறைவாக்கில் தாவீதின் அரியணை என்றென்றும் நிலைக்கும் என்று வாக்குறுதி அளிக்கப்படுகிறது. ஆனால் காலப்போக்கில் அது சிறிது சிறிதாக அழிந்து போனது. எனவே தாவீது போன்ற ஒருவர், ஏன் தாவீதை விட மேலான ஒருவர், யாவேயின் அரசை மிகவும் நிலையாக இவ்வுலகில் நிறுவ வருவார் என்ற நம்பிக்கை சிறிது சிறிதாக வளரவாரம்பித்தது.

6. புதிய ஏற்பாட்டில் தாவீது பற்றி வரும் இடங்களிலெல்லாம் ''தாவீதின் மகன்'', ''தாவீதின் வித்து'' என இயேசுவைக் குறிப்பிடுவதாக வருகிறது. பவுல் இயேசுவைத் தாவீதின் வழிவந்தவராகக் காண்பதில் ஒரு நியாயம் இருக்கிறது (*உரோ 1:3; 2 திமொ 2:8*); ஏனெனில் இயேசுவின் மெசியாத்தன்மையில் அவரது அரச பரம்பரை ஒரு முக்கிய பங்கு வகிப்பதாக அன்றைய திருச்சபை கருதியது. இவ்வாறு இயேசுவை அழைப்பதற்குக் காரணம் மெசியா தாவீதின் மகனாக இருப்பார் என்பது யூதர்களின் உறுதியான நம்பிக்கை (*மத 22:45; மாற் 12: 35; லூக் 20:41; யோவா 7:42*). அதாவது தாவீதின் மகன் என்று கூறும் எவரும், அதாவது அவரது வழிவந்தவர் எவரும் மெசியா என்றழைக்கத் தகுதியுள்ளவரே என்ற பொருளையே இது உள்ளடக்குகிறது. அதனால் தான் இயேசு பலரைக் குணப்படுத்திய போதும், குருத்து ஞாயிறன்றும் அவரைத் தாவீதின் மகனென்று மக்கள் அழைத்தனர் (*மத் 21:9-15*).

ஒத்தமை நற்செய்திகள் இயேசு தாவீதைக் குறிப்பது பற்றிய இரு நிகழ்ச்சிகளைத் தருகின்றன. ஒன்று, தாவீது பிரசன்ன அப்பத்தை உண்டதைச் சுட்டிக்காட்டி, தம் சீடர்கள் ஓய்வு நாளில் கதிர்களைக் கொய்து தின்றதை நேர்மைப்படுத்துகிறார் (*மத் 12:1-8 இணை*). மற்றது மக்கள் மெசியாவைத் தாவீதின் மகன் என்றழைத்தபோது (*மத் 9:27 இணை; 15:22 இணை*), தாவீது மெசியாவை ஆண்டவர் என்று ஏன் அழைக்கிறார் என்று மக்களைக் கேட்கிறார் (*மத் 22:42-45 இணை; சங் 110:1*). மத்தேயுவும், லூக்காவும் இயேசுவின் தலைமுறைப்பட்டியலைத் தாவீது வரைக்கும் பின் கொண்டு செல்கின்றனர் (*மத் 1:1.17; லூக் 3:31*). இயேசு தாவீதின் அரியணையில் அமர்வார் என்று வானதூதர் மரியாளுக்கு அறிவித்ததை லூக்கா எடுத்துக் கூறுகிறார் (*லூக் 1:32*). எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் பழைய ஏற்பாட்டு விசுவாச வீரர்களின் பட்டியலில் தாவீதைக் குறிக்கின்றது (*எபி 11:32*).

**தாழ்ச்சி** (HUMILITY)

***1. தாழ்ச்சியும் அதன் படிவங்களும்:*** திருநூலில் தாழ்ச்சி என்பது முதலிடத்தில் வீண் ஆடம்பரத்திற்கு எதிரான தன்னடக்கத்தையே குறிக்கிறது. எவ்வித முட்டாள்தனமான போலித்தனமுமின்றி, தன்னடக்கம் உள்ளவன் தன்னையே ஒரு அறிவாளியெனக் கருதுவதில்லை *(பழ 3:7; உரோ 12:3.16; சங் 131:1).* தற்பெருமைக்கெதிரான தாழ்ச்சியே இன்னும் ஒருபடி உயர்ந்தது. மும்முறையும் புனிதமான, எல்லா வல்லமையும் நிறைந்தவர் முன், படைக்கப்பட்டவனும் பாவம் நிறைந்தவனுமான ஒருவன் கொண்டுள்ள மனப்பான்மையே இத்தாழ்ச்சியாகும். தாழ்ச்சியுள்ளவன் தன்னிடமுள்ள எல்லாமே இறைவனிடமிருந்து பெற்றவை என்ற உண்மையை உணர்கிறான் *(1 கொரி 4:7).* தான் ஒரு பயனற்ற ஊழியனென்றும் *(லூக் 17:10)*, தான் பாவி என்பதைத் தவிர *(எசா 6:3 தொ; லூக் 5:8)* வேறு எந்த மதிப்பும் இல்லாதவன் *(ஆதி 6:3)* என்றும் கருதுகிறான். தம் அருளைப் பெறச் சிறந்த மனதுடைய *(யாக் 4:6-பழ 3:34)* இத்தகைய தாழ்ச்சியுள்ளவனை இறைவன் மகிமைப் படுத்துவார் *(1 சாமு 2:7 தொ; பழ 15:33).*

எவ்வித ஒப்புமைக்கும் அப்பாற்பட்ட ஆழமான தாழ்ச்சியே இயேசுவினுடையது; நம்மை மீட்கத் தம்மையே அவர் வெறுமையாக்கினார்; தம் சீடர்களை அவர்தம் சகோதரர்களுக்கு அன்புடன் பணிபுரிய அழைக்கிறார் *(லூக் 22:26 தொ).* இத்தகைய தம் சீடர் அனைவரின் செயலால் இறைவன் மகிமைப் படுத்தப்படுவார் *(1 பேதுரு 4:10 தொ).*

***2. இறை மக்களின் தாழ்ச்சி:*** தம்மைக் காத்துவந்த இறைவனின் எல்லாம் வல்ல சக்தியை அறிந்து அனுபவித்ததின்மூலம் தொடக்கத்தில் இஸ்ராயேல் மக்கள் தாழ்ச்சியைக் கற்றனர்; அனைத்துக்கும் மேலான இறைவனாக அவரை மட்டுமே ஏற்றுக் கொண்டனர். இறைவனின் செயல்களை வழிபாட்டில் நினைவுபடுத்துவதின் மூலம் இவ்வனுபவத்தை இஸ்ராயேல் மக்கள் உயிரூட்டமுள்ளதாக வைத்திருந்தனர். தாழ்ச்சியைப் பயிற்றும் பள்ளியாக இவ்வழிபாடு அமைந்திருந்தது. தான் பெற்ற அனைத்திற்கும் இறைவனுக்குக் கடமைப்பட்ட மன்னன் தாவீது, இறைவனை மகிமைப்படுத்தப் *(சங் 103)* பேழைக்குமுன் நடனமாடிச் சென்றார் *(2 சாமு 6:16.22).* இறைவனைப் போற்றியும், நன்றி செலுத்தியும், இஸ்ராயேல் மக்கள் தாவீது மன்னனின் தாழ்ச்சியைத் தம் வாழ்வில் பின்பற்றினர்.

போரில் தோல்வியுற்றும் நாடு கடத்தப் பட்டும் கிடைத்த அனுபவத்திலிருந்து கூட்டாகவும், நோயால் வருத்தப்பட்டபோதும் ஏழைகள் ஒடுக்கப்பட்டபோதும் தனித்தனியேயும் தம் வறிய நிலையை உணர்ந்தனர். இந்த அவலமான அனுபவங்கள் மனிதன் தன்னிலே பலவீனன் என்பதையும், இறைவனைப் பிரிந்து பாவி படும் அவல நிலையையும் அவர்கள் கண்டுணரும்படி செய்தன. எனவே மனத்துக்கமுள்ள இதயத்துடன் இறைவனை நோக்குகிறான் மனிதன் *(சங் 51:19).* மேலும் அவன் எல்லாவற்றிலும் இறைவனையே நாடி, நம்பிக்கையுடன் கூடிய, கீழ்ப்படிதலை அடிப்படையாகக் கொண்ட தாழ்ச்சியுடன் இறைவனை நோக்குகின்றான்; சங்கீதங்களில் காணும் வேண்டுதல்களை இறைவனிடம் எழுப்பத் *(சங் 25; 106; 103; 131)* தூண்டியதும் இத்தாழ்ச்சியே தான். இறைவனைப் புகழ்வோரும், தம்மை மீட்கும்படி அவரைக் கெஞ்சி மன்றாடுவோரும் ''வறியர்'' *(சங் 22:25.27; 34:7; 69:33 தொ)* என்று அனேக இடங்களில் அழைக்கப் பட்டனர். (''வறியவர்'' என்ற) இச்சொல் தொடக்கத்தில் அவல நிலையுடைய சமூகத்தினர் என்றே பொருள்படுகிறது. ஆனால் செப்பனியா ஆகமத்தில் மதசார்புடைய பொருள் பெறுகிறது: ''இறைவனைத் தேடுவது தாழ்ச்சியாகிய வறுமையைத் தேடுவதாகும்'' *(செப் 2:3).* யாவேயின் நாளுக்குப்பின் *(இறைவன் தண்டனையிலிருந்து)* ''எஞ்சிய'' இறை மக்கள் ''தாழ்ச்சியும் வறுமையும்'' *(செப் 3:12; மத் 11:29; எபே 4:2)* உடையோராய் விளங்குவர்.

பழைய ஏற்பாட்டில் மோசேயும், மிகமிகத் தாழ்ச்சியுடையோராய் எண்ணாகமத்தில்

குறிப்பிடப்பட்டோரும் (எண் 12:3), மரண மட்டும் தாழ்ச்சியுடனும் கீழ்ப்படிதலுடனும் இருந்து இறைவனின் திட்டத்தை நிறைவுறச் செய்த மறைபொருள்மிக்க ஊழியனும் (எசா 53:4-10), இந்தத் தாழ்ச்சியின் எடுத்துக்காட்டாக விளங்குகிறார்கள். நாடு கடத்தப்பட்டிருந்த நாட்கள் முடிந்து தம் நாடு திரும்பிய பின், இறை வாக்கினரும், இறைவழி உணர்ந்தோரும் (ஞானிகள்) தாழ்ச்சியைப் போதிப்பார்கள். தாழ்ச்சியான உள்ளத்தையும் மனத்துக்கமுள்ள இதயத்தையும் உடையவனிடம் இறைவன் வாழ்கிறார் (எசா 57:15; 66:2). தெய்வ பயமும், வளமும், புகழும், வாழ்வும் தாழ்ச்சியின் விளைவுகளாம் (பழ 22:4). ''எவ்வளவு உயர்ந்து விளங்குகிறாயோ அவ்வளவு உன்னையே தாழ்த்தினால்தான் இறைவனது ஆதரவைப் பெறுவாய்'' (சீரா 3:18; காண். தானி 3:39- ஒப்புக்கொடுத்தல் மன்றாட்டு ''தாழ்ச்சியான உளத்துடனே''). இறுதியாக வந்த இறைவாக்கினர் உரைத்ததுபோல மெசியா ஒரு தாழ்ச்சியுடைய மன்னனாக இருப்பார். கழுதைமேல் ஏற்றப்பட்டு, சீயோனுள் நுழைவார் (செக் 9:9). உண்மையாகவே ''தாழ்ச்சியுடையோரின் இறைவனே'' படைப்புக்கெல்லாம் அரசர், இஸ்ராயேல் மக்களின் இறைவன்.

3. **இறை மகனின் தாழ்ச்சி:** செக்கரியாவால் அறிவிக்கப்பட்ட இயேசு, தாழ்ச்சியுள்ள மெசியா (மத் 21:5). பேறுபெற்றோராகத் தன்னால் பறைசாற்றப்பட்ட தாழ்ச்சியுடையோரின் மெசியாவே இவர் (மத் 5:4=சங் 37:11; கிரேக்கத்தில் ''பிரவ்ஸ்' - கடவுளுக்குப் பணிந்து நடந்ததால் பொறுமையும் பரிவும் உள்ளவனாக ஆக்கப்பட்ட தாழ்ச்சியுள்ளவன்). குழந்தைகளை ஆசீர்வதித்து அவர்களையே எடுத்துக்காட்டாகவும் தருகிறார் இயேசு (மாற் 10:15 தொ). இத்தகைய சிறியவர்களுக்கே இறைவன் தம்மை வெளிப்படுத்தினார்; இத்தகையோர் மட்டுமே இறையரசில் நுழைய முடியும் (மத் 11:25; 28:3 தொ); இத்தகையோராக மாறவேண்டுமாயின் தாழ்ச்சியும் சாந்தகுணமும் நிறைந்த ஆசிரியரான இயேசுவின் பள்ளியில் சேர வேண்டும் (மத் 11:29); ஆனால் இத்தலைவர் ஒரு மனிதர் மட்டுமல்லர்; பாவிகளை மீட்க வந்த, அவர்களைப் போலவே உடலேற்றுப் பிறந்த ஆண்டவர் (உரோ 8:3). தம் புகழை அறவே தேடாமல் (யோவா 8:50), தம் சீடர்களின் பாதங்களைக் கழுவுமளவுக்குத் தம்மையே தாழ்த்துகிறார் (13:14 தொ). இறைவனுக்கு இணையானவரெனினும் நம் மீட்பிற்காகச் சிலுவையிலே மரணமடையும் அளவுக்குத் தம்மையே வெறுமையாக்கினார் (பிலி 2:6 தொ; மாற் 10:45; காண் ஏசா 53). அவரால் நமக்கு அருளப்பட்ட திரு வெளிப்பாட்டில் நமக்கெல்லாம் காரணமான தேவ வல்லமை வெளிப்படுத்தப்பட்டது மின்றி நமக்கு மீட்பு வழங்கும் இறையன்பும் வெளிப்படுத்தப்பட்டது (லூக் 19:10).

இத்தாழ்ச்சியே (''கிறிஸ்துவின் அடையாளம்'' என்று புனித அகுஸ்தீன் குறிப்பிட்டார்) இறைமகனின் தாழ்ச்சி, அன்பு வடிவான தாழ்ச்சி. புதுக் கட்டளையாம் அன்பை வாழ்வில் கடைப்பிடிக்க இப் ''புதுவகைத்'' தாழ்ச்சியை மேற்கொள்ள வேண்டும் (எபே 4:2;1பேதுரு 3:8 தொ; ''எங்கெல்லாம் தாழ்ச்சி உண்டோ அங்கெல்லாம் அன்பு உண்டு'' என்றார் புனித அகுஸ்தீன்). ''ஒருவரோடு ஒருவர் பழகுகையில் மனத்தாழ்ச்சியை ஆடையாக அணிந்து கொள்ளுபவர்'' (1 பேதுரு 5:5; கொலோ 3:12) பிறர் தேவைகளைத் தேடுகின்றனர்; இறுதி இடத்தையே தமக்கென எடுத்துக் கொள்கின்றனர் (பிலி 2:3தொ; 1 கொரி 13:4 தொ). தேவ ஆவி விளைவிக்கும் பலன்கள் தொகுப்பில் விசுவாசத்துடன் தாழ்ச்சியையும் கூடவே குறிப்பிடுகிறார் புனித பவுல் (கலா 5:22தொ). இவ்விரு மனப்போக்கும் (இவை இரண்டுமே மோசேயின் சிறப்புக்கூறுகளாக சீராக் 45:4 கூறுகிறது) உண்மையிலேயே ஒன்றோடொன்று தொடர்புடையன; ஏனென்றால் இறைவன்முன் திறந்த மனத்துடனிருக்கும் நிலையையும், இறையருளுக்கும் தேவ வார்த்தைக்கும் நம்பிக்கையுடன் கீழ்ப்படியும் நிலையையுமே இவ்விரண்டும் காட்டுகின்றன.

***4. தாழ்ச்சியுடையோரில் இறைவனின் செயல்:*** தாழ்ச்சியுடையோரை மதித்து, அவர்தம் விருப்பத்திற்கிணங்குகிறார் இறைவன் (சங் 138:6; 113:6தொ). தம் வலுவின்மையிலே மட்டும் பெருமைப்பட்டு (2 கொரி 12:9), வல்லமை மிக்க இறையருளுக்குத் தம்மையே தாராளமாக அளிக்கிறார்கள் இவர்கள். இத்தகையோரில் இறையருளும் வீண்போவதில்லை (1 கொரி 15:10). தாழ்ச்சியுடையோன் தன் பாவங்களுக்கு மன்னிப்பைப் பெறுகின்றான் (லூக் 18:14). உலகம் பொருட்படுத்தாத இத்தகையோரின் வழியாகவே எல்லாம் வல்ல இறைவனது ஞானத்தை வெளிப்படுத்துவது இறைவனது விருப்பமாகிறது (1 கொரி 1:25.28 தொ). ஆண்டவர் தமது வழியைத் தயார் செய்ய அனுப்பியவரின் தாழ்ச்சியை நாம் எண்ணிப் பார்க்கலாம்; தனக்குப்பின் வருபவருக்கு இடத்தைக் கொடுத்துவிட்டுப் பின்வாங்குவது ஒன்றே அவரது எண்ணமாயிருந்தது (யோவா 1:27; 3:28 தொ). ஆண்டவரது அடிமையாக மட்டும் இருக்க விழையும் தாழ்ச்சி நிறைந்த ஒரு கன்னியை நம் ஆண்டவரும் தம் மகனுமான இயேசுவுக்குத் தாயாக்கினார் இறைவன் (லூக் 1:38.43).

எல்லா வல்லமையும் அருளும் நிறைந்த இறைவன் அனுப்பும் துன்பங்களைச் சாந்தமுடன் ஏற்போரையும், மரித்த இயேசுவின் பாடுகளில் பங்கேற்போரையும் இறைவன், தாம் குறித்த வேளையில், இயேசுவை உயர்த்தியதுபோல் உயர்த்துவார்; இவர்களும் இறை மகனின் மகிமையில் பங்கு பெறுவர் (மத் 23:13; உரோ 8:17; பிலி 2:9 தொ; 1 பேதுரு 5:6-10). தாழ்ச்சியுடைய அனைவருடனும் சேர்ந்து, இவர்களில் அரும் செயல்கள் விளைவித்த ஆண்டவரது அன்பையும் புனிதத்தையும் இவர்கள் என்றென்றும் பாடுவர் (லூக் 1:46-53; திருவெளி 4:8-11; 5:11-14).

பழைய ஏற்பாட்டில், தேவ வார்த்தையானவர், படைத்தவரும் மீட்பருமான இறைவனுக்குத் தாழ்ச்சியுடன் பணிந்துபோகும் பாதையில் மனிதனை நடத்தினார். புதிய ஏற்பாட்டில் தாழ்ச்சியின் சிகரத்தையே அடைய, மனிதனை வழிநடத்த, கடவுளின் வார்த்தை மனிதனானார்; மனிதரில் இறைவனுக்குப் பணிசெய்யவும், இறைவனைப் புகழவும் அதே வேளை மனிதனைக் காக்கவும் தன்னையே தாழ்த்துகின்ற அன்பே தாழ்ச்சியின் சிகரமாகும்.

**தாற்றுக்கோல்** (GOAD)

ஆடு மாடுகளை விரட்டுவதற்கும், சிறப்பாக மாடுகள் உழும்போது விரட்டுவதற்கும் பயன்படுத்தப்படும் கூரியமுனையுடைய கோல். சில சமயங்களில் தாற்றுக்கோல் முனையில் ஆணி முடுக்கப்பட்டிருந்தது (1 சாமு 13:21). கலப்பையின் கொழுவிலிருந்து சேற்றைச் சுத்தப்படுத்துவதற்கும் பயன்படுத்தப்பட்டது. சம்கார் பெலிஸ்தியரில் அறுநூறு பேர்களைக் கலப்பைக் கொழுவால் கொன்றார் (நீதி 3:31). தாவீது காலம் வரைக்கும் பெலிஸ்தியர்களே இரும்பின் மேல் தனிஆதிக்கம் கொண்டிருந்தனர்.

'தாற்றுக்கோல்' உருவக அணியிலும் பயன்படுத்தப்படுகின்றது (திருவுரை 12:11). 'தாற்றுக்கோலை உதைப்பது உனக்குத்தான் துன்பம்' எனப் பவுல் கேட்ட கூற்று, மிகுந்த ஆற்றல் கொண்ட ஒன்றை எதிர்ப்பது வீண் என்னும் பொருள் கொண்ட கிரேக்கப் பழமொழியைச் சுட்டிக் காட்டுகின்றது (அ.ப. 26:14).

**தானத்து சீலோ** (TAANATH - SHILOH - சீலோவுக்கு வழி)

எப்பிராயிமின் வடகிழக்கு எல்லையில் மிக்மத்தாத்துக்கும் யானோவாகுக்கும் இடையே உள்ள ஒரு கிராமம் (யோசு 16:6). செக்கேமிற்குத் தென்கிழக்கில் ஒரு மலையில் சுமார் 11 கி.மீ. தொலைவில் நப்லூசுக்குத் தென்கிழக்கில் உள்ள, இக்காலக் கிர்பெத்து தானா ஏல்-போக்காவாக இருக்கலாம். இது பழங்காலத்தில் ஒரு கோட்டை அரணாகப் பயன்பட்டிருக்கலாம்.

**தானாக முளைத்து வளரும் விதை - உவமை** *(மாற் 4:26-29)*

வயலிலே ஒருவன் விதைக்கும் விதை தானாக முளைத்து விளைகின்றது. இதே போன்று இறையரசு வளர்ச்சியின் பலவகை நிலைகளைக் கடந்து முதிர்ச்சி அடைகின்றது. ஆனால் இதனிடையே விதைத்தவர் தன் பணியைச் செய்து வருகிறார். எனவே இவ்வுலகப் பணிகளை நாம் தொடர்ந்து ஆற்றுவதுஇறையரசின் வருகையைத் தடை செய்யாது.மேலும் இவ்வுவமையை வேறு விதமாகவும் விளக்கலாம். விதை இறைவனால் உள்ளங்களில் விதைக்கப்பட்ட அவரது வார்த்தை. விதையாகிய வார்த்தை வளர்ந்து இறையரசின் வருகைக்கு விசுவாசிகளைத் தயார் செய்கின்றது.

**தானாக்கு** (TAANACH)

இஸ்ரியேல் பள்ளத்தாக்கின் தெற்கு ஓரத்தில் மெகிதோவுக்குத் தென்கிழக்கில் 8 கி.மீ. தொலைவில் முக்கிய வணிகச் சாலையில் அமைந்திருந்த ஒரு நகர். இது முற்காலத்தில் ஒரு கானானிய நகரம். பிற்காலத்தில் இஸ்ராயேலின் ஒரு லேவியர் நகரமாயிற்று.

கி.மு. மூன்றாம் ஆயிரமாண்டுக் காலத்திலேயே மக்கள் இங்கு வாழ்ந்து வந்தனர். இது எகிப்திய பார்வோன் மூன்றாம் துத்மோசின் 15-ஆம் நூற்றாண்டு ஏடுகளில் முதல் முதல் குறிக்கப்படுகிறது. மெகிதாவோடு சேர்ந்து இதுவும் இஸ்ராயேலர் நாட்டைக் கைப்பற்றுவதை வலிமையாக எதிர்த்தது. இதன் அரசன் யோசுவாவால் தோற்கடிக்கப்பட்டார் *(யோசு 12:21)*. இந்நகரம் இசக்கார் மற்றும் ஆசேர் ஆகிய இனத்தவர்களுக்குரிய பகுதியில் இருந்தாலும் மனாசேக்குக் குறிக்கப்பட்டது *(17:11)*; ஒரு லேவியர் நகரமாகக் குறிக்கப்பட்டது *(21:25)*. ஆயினும் இது கானானிய ஆட்சியிலேயே இருந்தது *(நீதி 1:27)*. தெபோராவும் பாராக்கும் வடகானானியர்களுக்கு எதிராக நடத்திய போரில் தானாக்கு ஒரு மையமாக விளங்கியது *(5:19)*. ஒருவேளை இப்போரின் விளைவாக இஸ்ராயேலர் தானாக்கைச் சேர்ந்த கானானியர்களைக் கட்டாய வேலைக்கு உட்படுத்தியிருக்கலாம் *(1:28)*. சாலமோன் காலத்து ஐந்தாவது நிர்வாகப்பிரிவில் இது ஒரு முக்கிய நகரமாகும். இப்பிரிவில் மெகிதோவும் பெத்சானும் உள்ளடங்கும் *(1 அர 4:12)*. கி.மு. 918-ஐ ஒட்டி, சாலமோன் ஆட்சிக்குப்பின், பார்வோன் சிசாக்கால் இந்நகரம் அழிக்கப்பட்டது.

தேல்-தா-தானாக்கு என்ற மண் மேட்டில் நடத்தப்பட்ட அகழ்வாய்வுகள், கி.மு. 1468-இல் துத்மோசாலும், 1125-இல் யோசுவாவாலும், 918-இல் சிசாக்காலும் கட்டப்பட்ட பகுதிகளையும் மற்றக் கட்டடங்களையும் வெளிக்கொணர்ந்துள்ளன. கி.மு. 1450-ஐ ஒட்டிய பதிமூன்று அக்காதியன் மண்தட்டு ஏடுகள் இங்குக் கலப்பின மக்கள் வாழ்ந்ததற்குச் சான்று கூறுகின்றன. இஸ்ராயேலர் இப்பகுதியைக் கைப்பற்றிய காலத்திலிருந்து பல வழிபாட்டுப் பொருட்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

**தானியம்** (GRAINS)

பாலஸ்தீன வரலாற்றில் தொடக்கத்திலிருந்தே தானியங்கள் முதலில் சமவெளியிலும், பின்னர் மலைப்பகுதியிலும் பயிர் செய்யப்பட்டன. இவற்றில் கோதுமை, வாற்கோதுமை, தினை, சாமை முதலியன அடங்கும் *(எசா 28:25; எசே 4:9)*. குலமூதாதையர்களுக்கு முன்பே பாலஸ்தீனத்தில் தானியங்கள் பயிர் செய்யப்பட்டன. ஆனால் அவர்கள் விவசாயிகள் அல்லர். ஈசாக்கு மட்டும்தான் பயிரிட்டதாகக் கூறப்பட்டுள்ளது *(ஆதி 26:12)*. இஸ்ராயேலர் பாலஸ்தீனத்தில் குடியேறியபோது அவர்களுக்கு முந்தியிருந்தவர்களிடமிருந்து பயிர் செய்தலைக் கற்றுக் கொண்டனர் *(உப 8:8)*. ''தானியம், திராட்சைரசம்'' என்ற சொற்கள் நிலத்தில் செய்யப்படும் விவசாயம் முழுவதையும் குறிக்க உருவகமாகப் பயன்பட்டுள்ளன *(ஆதி 27:28; உப 7:13)*.

இப்பகுதியில் விளைந்த தானியங்கள் பல விதங்களில் பயன்பட்டன. பலவிதமாக அவற்றைத் தயாரிக்கலாம். கோதுமையைப் பறித்துப் பச்சையாகவே உண்ணலாம் (உப

*23:25; மத் 12:1*). அதை நெருப்பில் வாட்டி உதிர்த்து உண்ணலாம் (லேவி *2:14; 23:14; 1 சாமு 17:17*). கோதுமையில் பெரும்பகுதி மாவாக அரைத்து அப்பம் செய்து உண்ணப் பட்டது. இது உணவு வழக்கில் முக்கிய மானது மட்டுமன்று; புனித தலத்திற்குக் கொண்டு வரப்பட்ட பலிப்பொருட்களிலும் ஒன்றாகும். வாற்கோதுமை பெரும்பாலும் பச்சையாக இருக்கும்போதே அறுவடை செய்யப்பட்டு விலங்குகளுக்கு உணவாயிற்று. முற்றிய வாற்கோதுமை குதிரைகளுக்கு உணவாயிற்று (*1 அர 4:28*). அப்பம் செய்யும் மாவாகக் கோதுமை வாற்கோதுமையை விட அதிகம் பயன்பட்டது. ஆனால் அப்பம் செய்வதற்கு வாற்கோதுமை பயன்பட்டது பற்றி விவிலியத்தில் பல குறிப்புகள் உள் ளன (ரூத் *3:15; 2 சாமு 17:28*; யோவா *6:9*).

**தானியேல்** (DANIEL - இறைவன் எனது நடுவர், இறைவன் நீதிவழங்குகிறார் அல் லது ஆட்சி செய்கிறார்) - ஆள்

*1*. தாவீதின் இரண்டாம் மகன். அபிகாயில் வழியாகப் பிறந்தவர் (*1* நாள் *3:1*). ஆனால் இவர் *2* சாமு *3:3*-இல் கிலயாபு என்ழைக்கப் படுகிறார். இவரைப்பற்றி வேறொன்றும் கூறப்படாதது இவர் இளம் வயதிலேயே இறந்திருக்க வேண்டும் என்று சுட்டுகிறது.

*2*. இத்தாமர் வீட்டைச் சேர்ந்த ஒரு குரு. நாடு கடத்தலிலிருந்து எஸ்ராவோடு நாடு திரும்பியவர் (எஸ் *8:2*). நெகேமியாவின் தலைமையில் புதுப்பிக்கப்பட்ட உடன்படிக் கையில் கையொப்பம் இட்டவர்களில் ஒரு வராவார் (நெகே *10:6*). இவர் கி.மு. *5*-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்.

*3*. எசேக்கியேல் தமது நூலில் நோவா, யோபு ஆகியோரோடு சேர்த்து ஒரு தானியே லைக் குறிப்பிடுகிறார் (எசே *14:14.20; 28:3*). இப்பெயரைச் சிலவாசகங்கள் தானெல் என்று குறிப்பிடுகின்றன. இவர் அசாதாரண நேர்மையும் ஞானமும் மிக்கவர். இம்மூவ ரும் பெரு வெள்ளத்திற்கு முந்திய நீதிமான்க ளாகத் தெரிகிறது. இங்குக் குறிக்கப்படும் தானியேல் எசேக்கியேல் காலத்தவராக இருக்க முடியாது. ஒருவேளை இராஸ்-ஸம்ராவில் கண்டுபிடிக்கப்பட்ட உகாரித்து ஏடுகளில் காணப்படும் ''அக்ட்'' என்பவ ரைப்பற்றிய கதைகளில் வரும் தானெல் என்ற அரசனோடு ஏதாவது ஒருவகையில் தொடர்புடையவராக இருக்கக் கூடும். இந்த ஏடுகள் கி.மு. *14*-ஆம் நூற்றாண்டைச் சேர்ந் தவை. இந்தத் தானெல் நீதிமானும் ஞானி யும் ஆவார். இவர் விதவைகளுக்கும் அநாதைகளுக்கும் சார்பாக நீதிவழங்கியவர் என்று கூறப்படுகிறது. இதன் எதிரொலி யைச் சூசன்னா கதையில் காணலாம் (தானி *13*). தன்னை ஞானி என்று கருதிஅகந்தை கொண்ட தீர் நகரை, ''தானியேலைவிட நீ அறிவாளிதான்'' என்று இறைவன் எள்ளி நகைப்பதாக எசேக்கியேல் கூறுகிறார் (எசே *28:3*). இந்தப் பெனீசிய - கானானியப் பாரம்பரியம், யூதர்களின் யூபிலிநூல் தானி யேலை ஏனோக்கின் மாமனாராகக் குறிப் பிடுவதை ஒரு வேளை விளக்கலாம்.

*4*. ஒரு நூலுக்குப் பெயர் வழங்கிஅதன் கதைத் தலைவராக விளங்குபவர். எசேக்கி யேல் குறிக்கும் புராணத்தலைவனான தானி யேலோடு, தானியேல் நூலின் கதைத்தலை வரைக் குழப்பக்கூடாது. இவர் ஓர் இறை வாக்கினர் அல்லது காட்சியாளர். இஸ்ராயே லின் மேல்குலத்தைச் சேர்ந்தவர். இவர் யூதாவின் அரசனான யோயாக்கிமின் மூன் றாம் ஆண்டு (கி.மு. *605*), பாபிலோனிய மன்னன் நெபுகத்னேசரால் கைதியாக்கப் பட்டு, பாபிலோனுக்குக் கொண்டு செல்லப் பட்டவர் (தானி *1:2;2* அர *24:14-17; 2* நாள் *36:6* தொ). வரலாற்று ஆசிரியர் யோசிபஸ், தானியேல் யூதாவின் கடைசி அரசரான செதேக்கியாவின் அரச குடும்பத்தைச் சேர்ந் தவர் என்று கூறுகிறார். நாடு கடத்தப்பட்ட வேறு சில யூத இளைஞர்களோடு சேர்ந்து பாபிலோனிய அரசவையில் பணிபுரிவதற் காகக் கல்விபெற்றார். அப்போது அவருக் குப் பெல்தசாட்சர் என்ற பெயர் கொடுக்கப் பட்டது (தானி *1:1-7*). அப்போது தனது எபிரேய சமயத்துக்குப் பிரமாணிக்கமாக உள்ளார். இவரோடு சேர்ந்து மூன்று யூத

இளைஞர்கள் உணவு பற்றிய தங்கள் சமய ஒழுங்குகளுக்குப் பற்றுறுதியாக உள்ளனர். கனவுகளுக்கும் காட்சிகளுக்கும் விளக்கம் அளிப்பதில் தானியேலின் தனித்திறமை அவருக்குப் பாபிலோனியப் பேரரசில் உயர் பதவி அளிக்கிறது. பாபிலோனிய மாகாணத்திற்கு ஆளுநராகிறார். நெபுகத்னேசரின் ஆட்சிக் காலத்தில் ஞானிகளுக்குத் தலைவராக நியமிக்கப்படுகிறார் *(2:48)* பெல்தசாட்சர் காலத்தில் பேரரசின் மூன்றாம் நிலையில் ஆட்சியாளராகிறார் *(5:29)*. பாபிலோனியப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் வந்த சைரஸ் என்ற பாரசீக அரசன் காலத்திலும் தானியேல் உயர்வாக மதிக்கப்படுகிறார் *(1:21)*. இந்த அரசனின் மூன்றாம் ஆண்டுவரை *(கி.மு. 536-535)* தானியேல் நாடு கடத்தப்பட்ட நிலையிலேயே இருந்தார். முதலாம் தாரியுவின் காலத்தில் பேரரசின் *120* பிரிவுகளில் மூன்றில் ஒரு பகுதிக்குத் தலைவராக விளங்கினார் *(6:2-3)*. இவ்வாறு பாபிலோனியப் பேரரசின் இறுதி அரசர்கள் காலத்திலும் மேதிய - பாரசீகப் பேரரசின் முதல் அரசர்கள் காலத்திலும், அதாவது கி.மு. 6-ஆம் நூற்றாண்டின் பெரும் பகுதியில் தானியேல் பாபிலோனில் வாழ்ந்தார் என்று நூலிலிருந்து அறிகிறோம்.

நூலில் தானியேல் தனது மூதாதையரின் சமயத்துக்குப் பிரமாணிக்கமுள்ள யூத இளைஞனாகவும், இறைவனுடைய அருளால் மெசபொத்தாமியாவின் அறிவர்களையெல்லாம்விட ஞானமிக்கவாராகவும் தோன்றுகிறார். இந்தஞான, சமய, நேர்மை சேர்ந்த ஒன்றிப்பு வெளிப்பாட்டுக் காட்சிகளைப் பெற அவரைத் தகுதியுள்ளவராக்குகிறது. நூலின் கதைத்தலைவனான தானியேல் இறைவனில் அசைக்கமுடியாத விசுவாசமும், கொடுமைகளுக்கு முன் மேலான இரக்கமும் கொண்டவர். இந்தச் சிறப்பான பண்புகள் பழைய புராணத்தலைவரான தானெலிடம் காணப்பட்டதாக அறிவதற்கில்லை. இவற்றை நூலின் ஆசிரியர் தன் கதைத் தலைவனுக்கு உரியதாகக் காட்டுகிறார்.

## தானியேல் நூல் (DANIEL, BOOK OF)

*1. முன்னுரை:* கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் நான்காம் அந்தியோக்கு எப்பிபான் என்ற கிரேக்க அரசன் யூதர்களை அவர்களது சமயத்தின் பொருட்டுக் கொடுமைப்படுத்தினான். அப்போது ஒரு பெயர் தெரியாத யூதர், தானியேல் என்ற புனை பெயரில் ஒரு விநோதமான, மனதைக்கலக்கும் நூலை எழுதினார். இந்நூல் விநோதமானது. ஏனெனில், இந்நூல் மிட்ராஸ், வெளிப்பாடு ஆகிய சிக்கலான இலக்கிய வடிவங்களில் எழுதப்பட்டுள்ளது. இந்த இலக்கிய வடிவங்கள் நமது பண்பாட்டிற்கு மாறானவை. இதுவும் நூல் கற்பிக்கும் போதனையும் நமக்கு மனக் கலக்கம் அளிக்கலாம்.

*2. பெயரும் கதைத்தலைவரும்;* காண்க. தானியேல் *(4)* - ஆள்.

*3. நூலின் பிரிவுகள்:* வசதிக்காக, இவ்விடத்தில் நூலின் பிரிவுகளைப் பற்றிய குறிப்பைத் தருகிறோம். கத்தோலிக்கப் பாரம்பரியத்தில் உள்ள தானியேல் நூலை, அது இருக்கும் வடிவில் மூன்று பாகமாகப் பிரிக்கலாம்.

முதல் பாகம்: அதி *1-6*. இப்பகுதி தானியேலின் ஆறு தீரச் செயல்களைக் கொண்ட நிகழ்ச்சியுரையாகும்.

இரண்டாம் பாகம்: அதி *7-12*. இப்பகுதி வெளிப்பாட்டு இறைவாக்குக் காட்சிகள் நான்கினைக் கொண்டதாகும்.

மூன்றாம் பாகம்: அதி *13-14*. இப்பகுதி தானியேலின் தீரச் செயல்கள் பற்றிய கூடுதல் நிகழ்ச்சியுரைகளைக் கொண்டது.

இந்நூல் மூன்று மொழிகளில் காணப்படும் வாசகங்களின் தொகுப்பாகும். எபிரேய மொழியில் *1:1-2:3; 8:1-12:27;* அரமேயிக் மொழியில் *2:4-3:23; 3:91(24)-7:28;* கிரேக்க மொழியில் *3:24-45; 3:46-90; 13-14*. எபிரேய விவிலியம் எபிரேய அரமேயிக்கு மொழிகளில் உள்ள பகுதிகளை மட்டும் கொண்டுள்

ளது. எழுபது நூல், தியோடோசியன் வாசகம், வுல்காத்தா வாசகம் ஆகியவை மூன்று மொழிகளிலும் உள்ள பகுதிகளைக் கொண்டுள்ளன. இந்த மொழிப் பிரச்சினையைப் பின்பு பார்ப்போம்.

**4. வரலாற்றுப்பின்னணி:** இந்நூலின் இலக்கியத் தன்மையையும் செய்தியையும் புரிந்துகொள்ள, நூலின் வரலாற்றுப் பின்னணியை அறிந்திருப்பது அவசியமாகும். கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் அசீரியர்கள் வட இஸ்ராயேலாகிய சமாரியாவை வென்று அதைத் தங்கள் பேரரசின் ஒரு மாநிலமாக்கினர். கி.மு.7-ஆம் நூற்றாண்டின் முடிவில் மேதியா அரசனான சையக்கரஸ் என்பவனோடு சேர்ந்து பாபிலோனிய நாபோபோலசார் அசீரியப் பேரரசை முழுவதும் அழித்துப் புதிய பாபிலோனியப் பேரரசை நிறுவினான். இந்த அரச மரபில் வந்த நெபுகத்னேசர் தனது அரசை விரிவாக்கினான். கி.மு. 587-இல் யூதாவை வென்று தன் ஆட்சிக்குள் சேர்த்துக் கொண்டான். அவனுக்குப்பின் வந்த மன்னர்கள் பாபிலோனிய அதிகாரத்தைப் படிப்படியாகச் சீர்கெட விட்டு விட்டனர். இந்நிலையில் ஏற்கெனவே மேதியாவை வென்று விட்ட பாரசீக அரசனான பெரிய சைரஸ் கி.மு. 539-இல் பாபிலோனியப் பேரரசை அதன் கடைசி அரசன் நாபோனித்து மற்றும் அவன் மகன் பேல்சாட்சர் ஆகியோரிடமிருந்து கைப்பற்றினான். இதற்குப்பின் பாரசீகர்கள் பழங்கால மேற்காசியாவை நெடுங்காலத்திற்கு ஆட்சி செய்தனர். இந்த மரபில் முதலாம் தாரியு (கி.மு. 522-486) சிறந்து விளங்கினான். கி.மு. 331-இல் அலக்சாந்தர் மேற்காசியாவில் கிரேக்க அதிகாரத்தை நிறுவினார். கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் பாலஸ்தீனம் எகிப்திய அலக்சாந்திரியாவைத் தலைநகராகக் கொண்ட கிரேக்க அரச மரபைச் சேர்ந்த தோலமியர்களால் ஆட்சி செய்யப்பட்டது. கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் சீரியாவிலுள்ள அந்தியோக்கியாவைத் தலைநகராகக் கொண்ட செலூக்கிய மரபினால் பாலஸ்தீனம் ஆட்சி செய்யப்பட்டது.

நெபுகத்னேசர் யூதாவை வென்றபோது உயிர்தப்பிய யூதர்களில் பெரும்பாலோர் கி.மு. 597-582-க்கு இடையில் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டனர். கி.மு. 539-க்குப்பின் யூதர்கள் தங்கள் தாயகம் திரும்ப சைரஸ் அனுமதித்தான். பாலஸ்தீனத்தில் வாழ்ந்த யூதர்களின் எண்ணிக்கை மெதுவாக ஆனால் உறுதியாக வளர்ந்தது. பாரசீகர், தோலமியர் ஆகியோரின் ஆட்சியில் யூதர்கள் வரையறைக்குட்பட்ட அரசியல் சுயாட்சியும் முழுச்சமய சுதந்தரமும் கொண்டிருந்தனர். ஆனால் செலூக்கிய மரபைச் சேர்ந்த நான்காம் அந்தியோக்கு எப்பிபான் என்ற அரசன் அரசியல், கலாச்சாரக் காரணங்களுக்கிடையே பாலஸ்தீனத்தைக் கிரேக்க மயமாக்க முற்பட்டான். இதற்காக யூதர்கள் தங்கள் மூதாதையரின் சமயத்தைக் கைவிடவும் புறஇன வழிபாட்டு முறைகளைக் கடைப்பிடிக்கவும் அவர்களைக் கட்டாயப்படுத்தினான்; கொடுமைப்படுத்தினான்; பலரைக் கொன்று குவித்தான். இதன் விளைவு அவனது அரசுக்கு எதிராக யூதர்களிடையே ஆயுதம் தாங்கிய கிளர்ச்சி எழுந்தது. இதுபற்றி மக்கபேயர்கள் நூல்களில் வாசித்தறியலாம். இக்காலத்தில் யூத சமயத்திற்கும் புற இன மதங்களுக்கும் இடையே நடந்த போராட்டமே தானியேல் நூலின் வரலாற்று, அரசியல், சமயப் பின்னணியாகும். இப்போராட்டத்தை இறைவன் வெகுகாலமாக முன்னறிந்திருந்ததாகவும், அவரது சொல்லால் அது அனுமதிக்கப்பட்டதாகவும் தானியேல் நூல் காட்டுகிறது. பிறஇனச் சமயங்களைவிட இஸ்ராயேலின் சமயத்தின் மேன்மையையும், 'அரசர்களை' விலக்கி மாற்று அரசர்களை நிலைநிறுத்துபவருமான (தானி 2:21) இஸ்ராயேலின் இறைவனே வரலாற்றின் உண்மையான ஆண்டவர் என்றும், இறுதியில் எல்லாவற்றையும் உள்ளடக்கும் அவரது அரசைப் பூமியில் நிறுவுவார் என்றும் எடுத்துக் கூறுகிறது.

**5. திருமுறைப் பட்டியலில் தானியேல் நூல்:** எபிரேய விவிலியம் ''நூல்கள்'' என்ற தனது மூன்றாம் தொகுப்பில் எஸ்தர், எஸ்ரா ஆகிய நூல்களுக்கிடையில் தானியேல்

நூலைக் கொண்டுள்ளது. எழுபதுநூல், தியோடோசியன், வுல்காத்தா வாசகங்கள் இந்நூலை இறைவாக்கினர் தொகுப்பில் எசேக்கியேலுக்குப் பின் கொண்டுள்ளன. எபிரேயப் பாரம்பரியப்படி இறைவாக்கினர், நூல்களைத் தொகுப்பது கி.மு. 200-ஐ ஒட்டி இறுதி செய்யப்பட்டதாகத் தெரிகிறது. தானியேல் நூல் இத்தொகுப்பில் இடம் பெறாமை, இத்தொகுப்பு செய்யப்பட்ட போது இந்நூல் எழுதப்பட்டு மக்களால் இறையூக்கம் பெற்றதாக ஏற்றுக்கொள்ளப் படவில்லை என்று காட்டுகிறது. இக்கருத்துக்குத் தால்மூது பாரம்பரியமும் ஆதரவு அளிக்கிறது. கி.பி. 90-ஐ ஒட்டி யாம்னியாவில் நடந்த யூதப் பொதுக்கூட்டம், ''நூல்கள்'' என்ற மூன்றாம் தொகுப்பை உறுதி செய்வதில்தான் அக்கறை கொண்டதாகத் தெரிகிறது. கி.மு. 180-ஐ ஒட்டித் தோன்றிய சீராக் நூல் தானியேலை அறிந்திருக்கவில்லை. ஆனால் கி.மு. 2-ஆம் நூற்றாண்டின் மத்தியில் தோன்றிய மக்கபேயர் நூல் தானியேல் நூலிலிருந்து எடுத்துக் காட்டிக்கூறுகிறது *(1 மக் 2:59-60)*. இவற்றிலிருந்து தானியேல் நூல் கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் தோன்றி, யூத மக்களிடையே திருமுறை நூல்களைச் சேர்ந்ததாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். அதன் விளைவாக எபிரேயப் பாரம்பரியம் நூல்கள் என்ற தொகுப்பில் தானியேல் நூலைச் சேர்த்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. இந்நூல் உலக முடிவின் காலத்தைக் கணிக்க முயல்வதாலும், பிற்கால யூதர்கள் வெளிப்பாட்டு இலக்கியங்கள் பால் காட்டிய எதிர்ப்பு மனப்பான்மையாலும், யூதர்கள் இந்நூலைப்பற்றி அவ்வளவு ஆர்வம் காட்டியதாகத் தெரியவில்லை. இதற்கு மாறாகக் கிறிஸ்துவ பாரம்பரியம் இந்நூலின் இறை ஏவுதல் தன்மை, இறைவாக்குத்தன்மை, மதிப்பீடு ஆகியவற்றை ஏற்றுக் கொள்ளத் தயங்கியதில்லை.

எழுபது நூல்களுக்குக் காரணமான அலக்சாந்திரியா யூதர்கள் விவிலிய நூல்கள் தோன்றியதாகக் கருதப்பட்ட காலம், இலக்கிய வடிவம் ஆகிய அடிப்படையில் தங்கள் திருமுறைப்பட்டியலை வரிசைப்படுத்தினர். அதற்கேற்றபடி திருமுறைநூல்களின் வரிசையைத் திருத்தி அமைத்தனர். அதன் விளைவு தானியேல் நூல் இறைவாக்கினர் நூல்கள் தொகுப்பில் இடம் பெற்றது. இதையே கிறிஸ்துவ பாரம்பரியம் ஏற்றுக்கொண்டது. தியோடோசியன், வுல்காத்தா வாசகங்கள் இப்பாரம்பரியத்தை ஏற்று, தானியேல் நூலை இறைவாக்கினர் நூல்கள் தொகுப்பில் ஏற்றுக் கொண்டன. இனி இரண்டு பாரம்பரியங்களுக்குமான வாசக வேறுபாட்டைப் பார்ப்போம்.

6. *உப பகுதிகள்:* கிரேக்க, வுல்காத்தா வாசகங்கள், எபிரேய, அரமேயிக்கு வாசகத்தில் காணப்படாத சில பகுதிகளை அதிகமாகக் கொண்டுள்ளன. இவை அசரியாவின் செபம் *(தானி 3:24-45)*, உரைநடையை இடையுரையாக முன்கொண்ட மூன்று இளைஞர்கள் போற்றுரைப் பாடல் *(3:46-90)*, சூசன்னாவின் கதை *(அதி.13)*, பெல்தேவதையின் பூசாரிகள், நாகப்பாம்பு பற்றிய கதைகள் *(அதி.14)* ஆகிய பகுதிகளாகும். இவற்றில் எதுவும் மூலநூலைச் சேர்ந்ததாகத் தெரியவில்லை. ஆனால் செமித்தியத் தோற்றம் கொண்டவையாகத் தெரிகிறது.

தொடக்ககாலத்தில் தானியேல் நூல் இரண்டுக்கு மேற்பட்ட வடிவங்களில் மக்களிடையே பழக்கத்தில் இருந்ததாகக் கருத இடமிருக்கிறது. தானியேலைப் பற்றி எந்த விவிலியப் பாரம்பரியத்திலும் காணப்படும் கதைகளைவிட, அதிகமாகக் கதைகள் இருந்ததாகக் கும்ரான் குகைகளில் கண்டெடுக்கப்பட்ட கையெழுத்துப் பிரதிகளிலிருந்து அறிகிறோம். தானி 3:22-28-ஐப்பற்றிய கும்ரான் வாசகம் எபிரேய வாசகத்துக்குச் சரியானதாகவும், எதுவும் விட்டுவிடப்படவில்லை என்றும் காட்டுகிறது. ஆகவே இக்கூடுதல் பகுதிகள் தனிப்பகுதிகளாக, கிரேக்க மொழி பேசிய யூதர்களிடையே தானியேல் பற்றிய பாரம்பரியங்களாக வழக்கில் இருந்திருக்க வேண்டும். இவற்றைக் கிரேக்க யூதர்கள், சூழ்நிலைக்குப் பொருத்தமுடையதாக இவை காணப்படும் இடங்களில் சேர்த்திருக்க வேண்டும் என்று கருதலாம். தொடக்க

காலத்திருச்சபை விவிலியத்தை அதன் கிரேக்க வடிவில் தனது திருமுறைப்பட்டிய லில் ஏற்றுக் கொண்டதால், கத்தோலிக்கத் திருச்சபை இந்தக் கூடுதல் பகுதிகளையும் இறையூக்கம் பெற்றனவாக ஏற்றுக் கொண் டது.

7. **மொழிப் பிரச்சினை:** ஒரே நூலில் இரு மொழிகளில் வாசகங்கள் கலந்து காணப்படு கின்றன. இது யூத இலக்கியங்களுக்குப் புறம் பானதன்று. இதற்குக் கும்ரான் ஏடுகளில் சான்று காணலாம். ஆயினும் தானியேலின் மூல நூலில் காணப்படும் எபிரேய, அரமே யிக் மொழிக்கலப்பு இன்னும் விடுவிக்கப் படாத பிரச்சினையே ஆகும். நூலை அக்கதா மிட்ராஸ் (அதி.1-6), வெளிப்பாடு (அதி 7-12) என இரு பாகங்களாகப் பிரித்தால் மொழி வேறுபாடு ஓரளவே இப்பிரிவுக்கு ஒத்துள்ளது. ஏனெனில் மிட்ராஸ் பகுதி 1:1-24 எபிரேயத்திலும், 2:4-6:29 அரமேயிக்கி லும், வெளிப்பாட்டுப்பகுதி அதி.7 அரமே யிக்கிலும், அதி.8-12 எபிரேயத்திலும் உள் ளன. இப்பிரச்சினையை விடுவிக்கப்பல முயற்சிகள் நடந்துள்ளன. அ) நிகழ்ச்சி யுரைப் பகுதிகள் அரமேயிக்கிலும் காட்சிப் பகுதிகள் எபிரேயத்திலும் எழுதப்பட்டுத் தனித்தனித் தொகுப்புகளாக வழக்கில் ஏற் கெனவே இருந்திருக்க வேண்டும். பிற்காலப் பதிப்பாசிரியர், முதல் கதையை எபிரேயத்தி லும், முதற் காட்சியை அரமேயிக்கிலும் மொழி பெயர்த்து இரண்டு தொகுப்புக் களையும் சேர்த்துப் பதிப்பித்திருக்க வேண் டும். ஆ) நூல் முழுவதும் எபிரேய மொழி யில்தான் எழுதப்பட்டது. ஆனால் அதி.2-7 என்ற பகுதி தவறிப்போனதால் அதை ஈடு செய்ய அதன் அரமேயிக்கு மொழிபெயர்ப்பு இங்குச் சேர்க்கப்பட்டது. இ) ஒருவேளை 9:4-20-இல் வரும் செபத்தைத் தவிர நூலில் மற்றப் பகுதிகள் அனைத்தும் அரமேயிக்கில் எழுதப்பட்டு, யூதர் திருமுறைப்பட்டிய லில் ஏற்றுக் கொள்ளப்பட்டு, நாட்டுப்பற் றுக் காரணமாகவும் தொடக்கமும் பின்பகுதி யும் எபிரேயத்தில் மொழி பெயர்க்கப்பட் டிருக்கலாம். இக்கருதுகோள், தவறான மொழிபெயர்ப்பாகவும் கடினமாகவும் அமைந்துள்ள பகுதிகளை விளக்க உதவி யாக உள்ளதாகத் தெரிகிறது. ஈ) அதி.8-12-இல் வரும் காட்சிகளின் ஆசிரியர் ஐந்து கதைகளும் (அதி.2-6) ஒரு காட்சியும் (அதி.7) அடங்கிய முன் தொகுப்புக்கு ஒரு முன்னுரை (அதி.1) அமைத்து, பின்பு அதை எபிரேயத்தில் மொழிபெயர்த்திருக்க வேண் டும். சரளமான ஓட்டத்திற்காக இரண்டா வது கதையின் முதல் சில வரிகளையும் (2:1-4) எபிரேயத்தில் மொழி பெயர்த்திருக்க வேண்டும். இந்நூலின் முன் வரலாறு, தோற் றம், மொழிப் பிரச்சினை ஆகியவை சிக்க லானவை. விடை காண்பது எளிதன்று. பொதுவாக ஏற்றுக் கொள்ளத்தக்க விளக் கத்தை ஆய்வாளர்களால் காண இயல வில்லை.

உபதிருமுறைப் பகுதிகளான கூடுதல் பகுதி கள் கிரேக்க மொழியில் மட்டும் நமக்குக் கிடைத்துள்ளன. இவற்றிற்குச் செமித்திய அடிப்படை இருந்திருக்கலாம்.

8. **வாசகங்களும் பதிப்புக்களும்:** தானி யேலின் எபிரேய அரமேயிக்கு வாசகத்தைப் பொறுத்தமட்டும், காலத்தால் முந்திய சான்று கும்ரான் முதல் குகையில் கண் டெடுக்கப்பட்ட துணுக்குகளாகும். இவை கி.மு. 50-க்கும் கி.பி. 50-க்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவையாகும். ஒரு சில வேறுபாடுகளைத் தவிர அவை பெருமள வில் எபிரேய் விவிலியத்தோடு ஒத்துப் போகின்றன. இது கி.மு. முதலாம் நூற்றாண் டிலேயே இந்நூல் நிலையான வாசகவடிவம் எடுத்திருக்க வேண்டும் எனச் சுட்டுகிறது. ஆனால் கும்ரான் சான்றுகள் துணுக்குகளா கவே உள்ளன. மற்றப் பகுதிகளில் எபிரேய - அரமேயிக்கு வாசகம் பழுதுபட்டுள்ளது; வேறுபாடுகள் உள்ளன. இவை எபிரேய விவிலியப் பாரம்பரியத்தில் காணப்படாத வைகளிலிருந்தோ விளக்கவுரை வாசகங்களி லிருந்தோ ஏற்பட்டிருக்கலாம். எபிரேய விவிலியத்தில் காணப்படும் தெளிவின்மை புரிந்து கொள்ளக்கூடியதாகவே உள்ளது. ஏனெனில் ஏற்கெனவே இருந்த பாரம்பரியங் களைச் சேர்த்து மூல நூலை, கி.மு. 166-ஐ

ஒட்டி ஓர் ஆசிரியர் தொகுத்திருப்பதாகத் தெரிகிறது. அதற்குப்பின்னும் மறுபதிப்பு வேலை தொடர்ந்து நடந்து, நமக்குக் கிடைத்திருக்கும் வடிவில் இந்நூல் இறுதி வடிவம் எடுத்திருக்க வேண்டும்.

கிரேக்க வாசகத்தைப் பொறுத்தமட்டும், எழுபது நூல் வாசகம் கி.மு. 2-ஆம் நூற்றாண்டிலேயே தோன்றியிருக்க வேண்டும். இப்பாரம்பரியத்தின் ஒரு கையெழுத்துப் பிரதிதான் கிடைத்துள்ளது. இது சுற்றி வளைத்துக் கூறும் தன்மையுடைய்து. விரிவாக்கும் தன்மையுடையது. இதனால் இவ்வாசகத்தை ஒதுக்கி விட்டு, தியோடோசியன் வாசகத்தைத் தொடக்க காலத் திருச்சபையும் திருச்சபைத் தந்தையரும் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. இதிலிருந்து, எழுபதுநூல் வாசகத்தைத் தவிர, எபிரேய வாசகத்துக்குப் பிரமாணிக்கமான மற்றக் கிரேக்க மொழி பெயர்ப்புகளும் இருந்தன எனத் தெரிகிறது. இவற்றின் திருந்திய வடிவமே கி.பி 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தியோடோசியன் வாசகமாகும். இது புதிய மொழிபெயர்ப்பன்று. இது திருச்சபையால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

வுல்காத்தா - இலத்தீன் வாசகம், எபிரேய அரமேயிக்கு வாசகத்திலிருந்து எரோனிமுவால் மொழி பெயர்க்கப்பட்டது. இது எபிரேய விவிலியத்தோடு ஒன்றாயிராவிட்டாலும் அஃதோடு நெருங்கிய தொடர்புடையது. முதல் பகுதியில் சில இடங்களில் தியோடோசியன் வாசகத்தை எரோனிமு பின்பற்றுகிறார். உபதிருமுறைப் பகுதிகளைத் தியோடோசியன் வாசகத்திலிருந்து மொழி பெயர்க்கிறார்.

**9. ஆசிரியரும் காலமும்:** அண்மைக்காலம் வரை, யூத கிறிஸ்தவப் பாரம்பரியங்கள் தானியேல் நூலை உண்மையான இறை வாக்குகளைக் கொண்ட ஒரு வரலாற்று நூலாகவும், நூலின் கதைத்தலைவரும் கி.மு. 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவருமான தானியேல் இந்நூலை எழுதியதாகவும் கருதி வந்துள்ளன. இக்கருத்துக்கு நூலும் ஓரளவு இடம் அளித்திருப்பதாகத் தெரிகிறது. கி.மு 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்தேயச் சூழ்நிலை பற்றிய பல குறிப்புகள் நூலில் காணப்படுகின்றன. அவை, மாய வித்தைகளுக்கு அளிக்கப்படும் முக்கியத்துவம், அரண்மனையில் மேல்குடி இளைஞர்கள் பயிற்சி பெறுதல், அரசர்களின் அர்ப்பணிக்கப்பட்ட பெரும் சிலைகள், தீச்சூளையாலும் சிங்கங்களாலும் தண்டித்தல், ஆப்பு வடிவ ஏடுகளோடு சில பெயர்களும் (பெல்தசாட்சர், சதிரக்கு, மேசாக்கு, ஆபதுநெகோ *1:7*) சில விவரிப்புகளும் (இறக்கையுடைய விலங்குகள் *7:4*, தூரா சமவெளி, *3:1*) கொண்டிருக்கும் ஒற்றுமை ஆகியவையாகும். நூலில் காணப்படும் இருமொழி வாசகங்கள், எபிரேயர்கள் தாங்கள் நாடு கடத்தப்பட்ட நாட்டில் அரமேயிக் மொழிக்கு மாற்றியமைத்ததற்குச் சான்று கூறுவதாக உள்ளது. நூலில் காணப்படும் ஒற்றுமை, அதி.*1-7*-க்கும் அதி *8-12*க்கும் உள்ள இணையமைப்புத்தன்மை, காட்சிகளிலும் கோட்பாடுகளிலும் காணப்படும் வளர்ச்சியும் முன்னேற்றமும், சொற்களிலும் நடையிலும் காணப்படும் ஒத்ததன்மை ஆகிய யாவும், உபதிருமுறைப்பகுதிகள் உட்பட்ட முழு நூலுக்கும் கி.மு. 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தானியேலே ஆசிரியர் ஆவார் என்று சுட்டுவதாக உள்ளன. கிரேக்க மொழிப்பகுதிகள் மொழி பெயர்ப்பாகவும் முரண்பாடுகள் சுற்றி வளைத்தும் விளக்கப்பட்டன. இந்தப் பாரம்பரியச் சான்றுகள் யாவும் வலிமையுடையன அல்ல; கோட்பாடு அடிப்படை கொண்டவையுமல்ல. இவை யாவும் நாம் கொண்டிருக்கும் வடிவில் நூல் தோன்றிய காலத்தையோ ஆசிரியரையோ பற்றி அதிகம் கூறவில்லை. கதையில் வரும் தலைவரைப் பற்றியே கூறுகின்றன. இப்பாரம்பரியத்தை இப்போது வெகு சிலரே ஏற்றுக்கொள்வர்.

கி.பி. 4-ஆம் நூற்றாண்டிலேயே இப்பாரம்பரியத்துக்கு மாறான கருத்து கூறப்பட்டது. இதன்படி 4-ஆம் அந்தியோக்கு எப்பிபான் காலத்தில் (கி.மு. *175-165*) பெயர் தெரியாத ஒருவரால் எழுதப்பட்டதாகும் இந்நூல். இக்கருத்து விரைவில் மறைந்து போய் கி.பி.

17-ஆம் நூற்றாண்டில் உயிர் பெற்றது. கி.பி. 19-ஆம் நூற்றாண்டிலிருந்து இது தானியேல் நூல் பற்றிய பொதுக் கருத்தாக மாறியது. ஆனால் பல வடிவம் எடுத்தது.

தானியேல் நூல் பிற்காலத்தில் தோன்றியது என்பதற்குக் கூறப்படும் காரணங்கள் பலவும், ஒருமுகப்படுத்தும் தன்மையுள்ளனவாக உள்ளன. அவற்றில் சில: 1) எபிரேய விவிலியத்தில் அதன் மூன்றாம் தொகுப்பான ''நூல்களில்'' தானியேல் காணப்படுகிறது. இது, திருமுறைப்பட்டியலில் இறைவாக்கு நூல்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டு முடிவு செய்தபோது தானியேல் நூல் இன்னும் எழுதப்பட்டிருக்கவில்லை என்றும் பிற்காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம் என்றும் சுட்டுகிறது. 2) மக்கபேயர் காலத்திற்குமுன் தானியேலையும் அவரது செயல்களையும் இறைவாக்குகளையும் பற்றி எதுவும் அறியப்பட்டதாகத் தெரியவில்லை. 1 மக் 2:59-60-இல் தானியேல் நூல் எடுத்துக் கூறப்படுகிறது. முதலாம் மக்கபேயர் கி.மு. 100-ஐ ஒட்டி எழுதப்பட்டதாகும். ஏனோக்கிலிருந்து ஓனியாசின் மகன் சீமோன் என்ற பெரிய குருவரை இஸ்ராயேலின் பெரியோர்களைப் போற்றும், கி.மு. 180-ஐ ஒட்டி எழுதப்பட்ட சீராக் நூல் தானியேலைக் குறிக்கவேயில்லை. இது தானியேல் நூல் கி.மு. 180-க்குமுன் எழுதப்படவில்லை என்று காட்டுகிறது.

3) நூலில் பயன்படுத்தப்பட்டுள்ள எபிரேய மொழி நெகேமியா காலத்திற்கும் மிகப் பிந்தியதாகும்; அரமேயிக் மொழி கி.மு. 5-ஆம் நூற்றாண்டுக்குப் பிந்தியதாகும். இந்நூலில் 15 பாரசீகச் சொற்களும் 2 கிரேக்கச் சொற்களும் பயன்பட்டுள்ளன. இவை இந்நூல் பாரசீகர் காலத்திலோ கிரேக்கர் காலத்திலோ இறுதிவடிவம் எடுத்திருக்கலாம் என்று சுட்டுகின்றன. சமயக் கருத்துக்களை எடுத்துக்கூறும் சொற்கள் நாடு கடத்தலுக்கு மிகப்பிந்தியவையாகும். 9:2-20-இல் தவிர, மற்றப் பகுதியில் இறைவன் யாவே என்றழைக்கப்படவில்லை. மாறாக இடவாகு பெயராக ''வானம்'' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறார். ''நிமித்திகர்கள்'' என்ற பொருளில் ''கல்தேயர்கள்'' என்ற சொல் பயன்பட்டுள்ளது. கி.மு. 2-ஆம் நூற்றாண்டில்தான் இச்சொல் இப்பொருள் பெற்றது.

4) நூலில் பல வரலாற்றுத் தவறுகள் காணப்படுகின்றன. இவை இந்நூலின் ஆசிரியர் கி.மு. 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவராக இருக்கமுடியாது என்று காட்டுகின்றன. புதிய பாபிலோனியர் காலத்து வரலாறு பற்றிய ஆசிரியரது அறிவு குறைவானதே. அதுவும் பல தவறுகள் கொண்டதாகத் தெரிகிறது. ஆசிரியர் புதிய பாபிலோனியர்களின் காலம் பற்றிய தெளிவில்லாத வாய்மொழிப் பாரம்பரியங்களைச் சார்ந்து எழுதியிருப்பதாகத் தெரிகிறது. இவ்வாறு யோயாக்கீமின் மூன்றாம் ஆண்டு (கி.மு. 605) எருசலேமின் முற்றுகையும் நாடு கடத்தலும் நிகழ்ந்ததாக தானி 1:1-இல் குறிக்கப்படுகின்றன. இதற்கு வரலாற்றில் சான்று இல்லை. அதி.5-இல் பெல்சாட்சர், நெபுகத்னேசரின் மகன் என்றும் பாபிலோனின் கடைசி அரசன் என்றும் குறிக்கப் பெறுகின்றான். ஆனால் நாபோனித்து என்பவன்தான் பாபிலோனின் கடைசி அரசனாவான். இவனது மகனே பெல்சாட்சராவான். தகப்பனோடு கூட்டுப் பகர ஆட்சியாளனாக இருந்தான் என்று அறிகிறோம். இவனுக்கும் நெபுகத்னேசருக்கும் எந்த இரத்த உறவும் இருந்ததில்லை. மற்றப் பாபிலோனிய அரசர்களை ஆசிரியர் அறிந்திருப்பதாகக் காட்டவில்லை. பெல்சாட்சருக்குப்பின் மேதியாவைச் சேர்ந்த தாரியு ஆட்சிக்கு வந்ததாகக் குறிக்கப்படுகிறது. இவன் யார் என்பது பற்றி வரலாற்றில் வேறொன்றும் தெரியவில்லை. நாபோனித்தின் ஆட்சிக்குப் பின் சைரஸ் ஆட்சி தொடங்கியதாகப் பாபிலோனிய ஏடுகள் காட்டுகின்றன. இவ்வாறு நூலில் காணப்படும் வரலாற்றுத் தவறுகளைக் கூறிக்கொண்டே போகலாம். இவை நூலின் ஆசிரியர் கி.மு. 6-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்ற கருத்துக்கு முரணாக உள்ளன.

5) தானி 11-இல் வரும் காட்சிகள் பற்றிய ஆய்வுகள் 4-ஆம் அந்தியோக்கு எப்பிபான்

எகிப்தின் மேல் படையெடுத்த கி.மு. 167-க்கும் அவன் மரித்த 164-க்கும் இடைப் பட்ட காலம் பற்றி ஆசிரியர் அளிக்கும் செய்திகள் ஓரளவு துல்லியமாக உள்ளதைக் காட்டுகின்றன. 167-இல் அந்தியோக்கு ஆல யத்தைப் பங்கப்படுத்தியதும் அவன் செய்த கொடுமைகளும் விரிவாக உள்ளன *(9:27; 11:30-35)*. ஆனால் அத்தகைய கொடியவ னுக்கு உறுதியாக வந்திருக்க வேண்டிய கொடிய முடிவைப்பற்றி நூல் பொது வாகவே குறிக்கிறது. இது இந்நூல் எழுதப் பட்டபோது அவன் ஏற்கெனவே இறந்திருக்க வில்லை என்று காட்டுகிறது. ஆகவே அவன் மரிக்குமுன்னே, அதாவது 166 அல்லது 165-இல் எழுதப்பட்டிருக்கலாம்.

இவ்வாறு ஆசிரியரது வரலாற்று நோக்கம் பாபிலோனிய அரசர்களின் காலத்து நிகழ்ச்சி கள் பற்றித் தெளிவற்றதாகவும், ஆனால் செலூக்கிய மரபுற்றித் தெளிவுள்ளதாகவும் இருக்கிறது. இது இந்நூல் தோன்றிய காலம் கிரேக்கர் காலமாகும் என்று சுட்டுகிறது.

6) இளவரசியின் திருமணம் *(11:17)*, வெற்றிபெறாத அரசியல் உடன்பாடுகள் *(11:8)* போன்ற ஏராளமான வரலாற்று விவ ரங்களைக் கொண்டிருக்கும் தானியேலின் காட்சிகள் முந்திய இறைவாக்கினர்கள் நடையிலிருந்து முழுவதும் வேறுபடுகின் றன. இத்தகைய சிறு விவரங்கள் இறை வெளிப்பாட்டின் பொருளாக இருந்திருக் குமா என்பது ஐயத்திற்குரியது, பொருத்தமற்ற தாகவும் இருக்கலாம். ஆனால் இந்நூலின் இலக்கிய வடிவம் இறைவாக்கு இலக் கியத்தைவிட கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் நிலவிய வெளிப்பாட்டு இலக்கியத்திற்கு நெருங்கியதாகும்.

7) போதிக்கப்படும் கோட்பாடுகளான வானதூதர் இயல், தூதர்களின் பெயர்கள், அலுவல்கள் பற்றிய அக்கறை, உயிர்ப்பு, தீர்ப்பு, வருங்கால வாழ்வு ஆகியவை கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் இந்நூல் தோன்றிய தாகச் சுட்டுகின்றன.

இக்காரணங்களுக்காகத் தானியேல் நூல் மக்கபேயர் காலத்தைச் சேர்ந்தது என்றும், கி.மு. 166-ஐ ஒட்டி எழுதப்பட்டதாகவும் இப்போது பொதுவாக ஆய்வாளர்களால் ஏற்றுக்கொள்ளப்படும். இந்த அடிப்படை யில்தான், நூலின் பொருளை நன்குணர, நூலுக்கு விளக்கம் கூற வேண்டும்.

*10. நூல் தோன்றிய வரலாறு:* தானி 2-6-ஐப் பொறுத்தமட்டும் இப்பகுதி நாடு கடத்தப் பட்ட காலத்து, முக்கியமான நாபோனித் ஆட்சியின், பழம் பாரம்பரியங்களை அடிப் படையாகக் கொண்டது என்று விவிலியத் துக்குப் புறம்பான சான்றுகளிலிருந்து தெரி கிறது. இப்பாரம்பரியங்கள் பாபிலோனில் வாழ்ந்த யூதர்களிடையே தோன்றி வளர்ந் திருக்க வேண்டும். இவர்கள் நாபோனித்தின் ஆட்சியில் தங்கள் நிலையையும் தொடர்பு களையும் நன்கு மனதில் பதித்துக் கொண் டிருக்க வேண்டும். நூலின் இந்த மூலத்தோற் றம் தானி 2-6-இல் காணப்படும் வலுவான பாபிலோனியப் பண்பை விளக்கவல் லது. பிற்காலத்தில் இப்பாரம்பரியங்கள் பாலஸ்தீனத்திற்கு எடுத்துச் செல்லப்பட் டிருக்க வேண்டும். கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் பாலஸ்தீனத்துக்குத் திரும்பிய யூதர்கள் தானி 2-6-இல் வரும் பாரம்பரியங்களைக் கொண்டு வந்திருக்கலாம். பிற்கால ஆசிரியர் ஒருவர், ஒருவேளை தானி 7-12-க்குக் காரணமான ஆசிரியர், இப்பாரம்பரியங்களை ஏற்று மறு பதிப்புச் செய்து நூல் முழுவதுக்கும் ஒற் றுமை அளித்திருக்க வேண்டும். இவர்தான் விவிலியத்தில் குறிக்கப்படாத நாபோனித் தின் பெயரை அகற்றி, நன்கு அறியப்பட்ட நெபுகத்னேசரின் பெயரைப் புகுத்தியிருக்க வேண்டும்; நிகழ்ச்சியுரைப் பகுதிக்குத் தானி யேலைத் தலைவனாக ஆக்கியிருக்க வேண் டும். தானி 7-12-ஐ எழுதிய மக்கபேயர் காலத்து ஆசிரியர்தான், தானி 1-6-இலும் நூல் முழுவதும் காணப்படும் காலவரைத் திட்டத்திற்குப் பொறுப்பாவார். இதே ஆசிரி யர்தான் தானி 1-6-இல் வரும் முற்கால நிகழ்ச்சியுரைகளை மீண்டும் பதிப்புச் செய்து, அவர் காலத்தில் நிலவிய சில கருத்துக்களையும் சொற்றொடர்களையும் சேர்த்திருக்க வேண்டும்.

தானி 7-12 மக்கபேயர் காலத்தைச் சேர்ந்த தாகும். இப்பகுதியின் ஆசிரியர் தமது காட்சிக்குப் பாபிலோனில் தோன்றிய பாரம்பரியங்களை முன்னுரையாக அமைத்தார். இவற்றில் சில நாபோனித்தின் ஆட்சியின் நிகழ்ச்சிகளோடு நெருங்கிய தொடர்புடையன. ஆசிரியர் முந்திய பாரம்பரியங்களை மீண்டும் பதிப்பு வேலை செய்து, நூலுக்கு ஓரளவு ஒற்றுமை அளிக்கிறார். அப்படிச் செய்யும்போதும் அவற்றின் மூலத்தோற்றத்தின் எல்லாச் சுவடிகளையும் நீக்கிவிடவில்லை. ஆனால் நூல் முழுவதற்கும் ஒரு கற்பனையான காலவரைத் திட்டத்தை அளித்தார். இக்கருத்து தானியேல் நூலில் காணப்படும் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டதாகும்; விவிலியத்துக்குப் புறம்பான ஏட்டுச் சான்றும் கொண்டதாகும். தானி 2-6க்கு உண்மையான வரலாற்று அடிப்படை என்ன என்று இப்போதுள்ள ஆய்வுகளிலிருந்து அதிகம் கூற முடியாது. இப்பிரச்சினைக்கு வருங்காலத்திய கண்டுபிடிப்புகளும் ஆய்வுகளும் தெளிவு அளிக்கலாம்.

*11. **நூலின் ஒற்றுமை:*** இந்நூலுக்கு ஆசிரியர் எத்தனை பேர்? ஒருவரா, பலரா? சமய நோக்கிலும் ஆர்வத்திலும் படிப்பினை நோக்கிலும் நூல்முழுவதும் ஒருமுகத் தன்மை கொண்டிருப்பதாகத் தெரிகிறது. பலர் எழுதியிருந்தால் அவர்கள் யாவரும் ஒரே சிந்தனைப் போக்கைக் கொண்டிருக்க வேண்டும். ஒரே ஆசிரியர்தான் நூலை எழுதினார் என்றால், முதல் பகுதியில் வரும் கதைகளுக்குப் பழைய எழுதப்பட்ட மூலங்கள் பயன்பட்டிருப்பதை விளக்குவது கடினம்.

எபிரேய விவிலிய வாசகத்தைக் கதைகள் (அதி.1-6), காட்சிகள் (அதி.7-12) என இரு பாகங்களாகப் பிரிக்கலாம். கதைகள் உயிர்ச் சித்திரமானவை; எளிய பண்புகளுடையவை; மனிதாபிமானப் பண்புடையவை. காட்சிகள் சிக்கலானவை, தெளிவில்லாதவை; வெளிப்பாட்டுத் தன்மையுடையவை. மேலும் நூலின் சில பகுதிகள் படர்க்கையிலும் சில பகுதிகள் தன்மை ஒருமையிலும் உள்ளன. சில பகுதிகள் எபிரேயத்திலும், சில பகுதிகள் அரமேயிக்கிலும் உள்ளன. இவற்றைக் கவனத்தில் கொண்டு இந்நூல் ஒரு கலப்பு இலக்கியம் என்று ஆய்வாளர்கள் கருதினார்கள் என்றால் நாம் வியப்படைய வேண்டியதில்லை. ஆனால், இவர்கள் இந்நூலைப்பிரிக்கும் விதமும் அதற்கு அளிக்கும் காரணங்களும் நம்மை மலைக்கச் செய்யும். இவற்றிற்குப் போதிய அடிப்படையிருப்பதாகத் தெரியவில்லை.

நூலைக் கதைகள், காட்சிகள் என்று பிரிப்பதும், அரமேயிக், எபிரேயப் பகுதிகளாகப் பிரிப்பதும், படர்க்கை தன்மை நிலையில் பிரிப்பதும் ஒன்றோடொன்று ஒத்துப் பொருந்தவில்லை. இது, இந்நூல் ஒரே ஆசிரியரின் வேலைப்பாடு என்று ஏற்றுக்கொள்ளத் தூண்டுகிறது என்று அறிஞர் சிலர் கூறுவர். இந்த ஒரே ஆசிரியர் தமது முறையையும் நடையையும் மாற்றியிருக்கலாம் என்றாலும் ஒருமைப்பாடுடைய இலக்கியத்தைப் படைத்துள்ளார். கதைப்பகுதிகள் கி.மு. 2-ஆம் நூற்றாண்டில் கொடுமைப்படுத்தப்பட்ட யூதர்களுக்குப் பொருள் பொதிந்த பொருத்தமுடையனவாகும்; இதைக் கருத்தில் கொண்ட சூழ்நிலைக்குப் பொருத்தமாக அமைந்துள்ளன. இரண்டாம் கதையின் செய்தியும் முதல் காட்சியின் செய்தியும் ஒரே தன்மையுடையன என்பது எல்லா ஆய்வாளர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும். ஆகவே கதைகளும் காட்சிகளும் மிக நெருக்கமாகவும் உறுதியாகவும் பிணைக்கப்பட்டுள்ளன. மேலும் காட்சிகள் அந்தியோக்குவின் கொடுமைகளைப் பற்றியதாகும். இவை யாவும் நூலின் ஒற்றுமையைச் சுட்டுகின்றன. தானியேல் என்ற பெயரைச் சுற்றிப் பல பாரம்பரியங்கள் இருந்திருக்க வேண்டும். இவை பாபிலோனியச் சூழ்நிலையில் தோன்றியிருக்கலாம். ஆனால் நூலில் பயன்பட்டிருக்கும் கதைகளை ஒரே ஆசிரியரே தேர்ந்தெடுத்து, அவற்றை முழுவதும் திருத்தி அமைத்துத் தாம் மனதில் கொண்டிருந்த குறிப்பிட்ட நோக்கை வெளிப்படுத்துகிறார். இவரே காட்சிகளுக்கும் ஆசிரியராவார். ஆகவே நாம் கொண்டிருக்கும்

வடிவில் தானியேல் நூல் ஒரே ஆசிரியரால் ஒரு குறிக்கோளுடன் திருத்தியமைக்கப் பட்டுப் பதிப்பிக்கப்பட்ட ஒற்றுமையுடைய நூலாகும்.

**12. ஆசிரியரது நோக்கம்:** நாம் கொண் டிருக்கும் வடிவில் தானியேல் நூல் மக்கபேயர் காலத்தில் தோன்றியதாகும். அப்போது அந் தியோக்கு யூதத்துவத்தை முழுவதும் அழிக்க முயன்று கொண்டிருந்தான். உண்மையான சமயத்தின் பழக்கங்களைக் கடைப்பிடித் தால் சித்திரவதையும், சாவும் காத்திருந்தன *(1 மக் 1:60-64; 2 மக் 6-9)*. வேதநூல்கள் தேடிக் கண்டுபிடிக்கப்பட்டு எரிக்கப்பட்டன *(1 மக் 1:56 தொ)*. சமயத்தின் பொருட்டுக் கொடுமைகள் தொடங்குவதற்கு முன்பே பல யூதர்களுடைய விசுவாசம் தளர்ச்சியுற் றிருந்தது *(1 மக் 1:11)*. கிரேக்கப் புறமதத்துடன் நெருங்கிய தொடர்புடைய, கிரேக்கர்களின் உயர்வாகத் தோன்றிய உலகம் சார்ந்த, கலாச் சாரத்தால் பல யூதர்கள் ஈர்க்கப்பட்டிருந்த னர். மோசேயின் சட்டத்தைக் கைவிட்டு அந்தியோக்குவின் சமயத்தை ஏற்றுக் கொள்ள, பலர் இரத்தம் சிந்தி மரணம் வரை கொடுமைப்படுத்தப்பட்டனர். அவன் ஆட்சி யில் அனுபவித்த கொடுமைகள் இறைவ னது பராமரிப்பு இருப்பதுபற்றிப் பலரை ஐயுறச் செய்திருக்க வேண்டும். இந்நிலை யில், ஆசிரியர் தமது காலத்துச் சகயூதர்கள் தங்கள் மூதாதையரின் சமயத்திற்குப் பிரமா ணிக்கமாய் இருக்க உற்சாகப்படுத்துவதை யும், மறை சாட்சிகளுக்கு ஆறுதல் அளிப்ப தையும், அவர்களது விசுவாசத்தை உறுதிப் படுத்துவதையும் முதன்மையான நோக்க மாகக் கொண்டு இந்நூலை எழுதினார். இதற் காக முந்திய காலத்து யூதர்களின் மாதிரியை எடுத்துக் கூறுகிறார். இவர்கள் தங்கள் சமயத் துக்குப் பிரமாணிக்கமாய் இருந்ததால், தங்கள் விசுவாசத்திற்காகப் புறமதத்தினராலும் மதிக்கப்பட்டனர். முதல் பகுதி முழுவதும் *(அதி.1-6)* இறைவன் மனித காரியங்களில் கொண்டிருக்கும் ஆதிக்கத்தையும், இஸ்ரா யேல்பால் அவர் காட்டும் தனிச்சிறப்பான பராமரிப்பையும் வலியுறுத்துகின்றது. ஆல யத்தின் பரிசுத்த பாத்திரங்களைப் பங்கப் படுத்தியவர்களை இறைவன் எப்படித் தண் டித்தார் என்று ஆசிரியர் எடுத்துக் கூறுகிறார் *(5:2-23)*. இது அந்தியோக்குவுக்குக் காத்திருக் கும் அவல கதியை மக்களுக்கு நினைவு படுத்தியது *(1 மக் 1:21-23; 6:12 தொ)*. இரண் டாவது பகுதியில் *(அதி. 7-12)* இத்துன்ப மிக்க வரலாறு முழுவதும் எப்படி இறைவ னால் முன்னோக்கப்பட்டிருந்தது என்றும், இதே இறைவன் யூதர்களைக் கொடுமைப் படுத்தியவர்களை அழிப்பார் என்றும், அவ ருக்குப் பிரமாணிக்கமாய் இருப்பவர்கள் மேல் தமது முடிவில்லாத மகிமையைப் பொழிவார், இறையரசை நிறுவுவார் என் றும் காட்டுகிறார்.

இவ்வாறு பிறமதத்தினரின் வெறும் ஞானத்தைவிட இஸ்ராயேலரின் இறை ஞானத்தின் மேன்மையை எடுத்துக் காட்டவும், தமது மக்களைக் கொடுமைப்படுத்துபவர் களிடமிருந்து காப்பாற்றக்கூடிய, காப்பாற் றும் இறைவனது அளவில்லாத ஆற்றலை எடுத்துக் காட்டவும் ஆசிரியர் அக்கறை காட்டுகிறார். அவருடைய காலத்து மக்க ளுக்கு மட்டுமின்றி, எல்லாக்கால மக்களுக் கும் ஆசிரியர் அளிக்கும் நிலையான, மதிப் பீட்டுச் செய்தி, இறைவனே வரலாற்றின் ஆண்டவர், அவர் நாடுகளின் எழுச்சிகளை யும் - வீழ்ச்சிகளையும், எல்லா மனிதர்கள் மேலும் தமது யாவும் கடந்த யாவும் உள் ளாக்கும் ஆட்சியை நிறுவுவதற்குத் தயாரிப் பாகப் பயன்படுத்துகிறார் என்பதே.

***13. இலக்கிய வடிவங்கள்:*** ஆசிரியர் தமது நோக்கை எடுத்துக் கூறுவதற்கு, நமது காலத் திற்கு விநோதமான, இரு இலக்கிய வடிவங் களைப் பயன்படுத்துகிறார். அக்கதா மிட் ராஸ், வெளிப்பாடு ஆகிய இந்த இரு இலக் கிய வடிவங்களைப் பய்ன்படுத்துகிறார்.

*அதி 1-6; 13-14*-இல் அக்கதா மிட்ராஸ் இலக்கியம் பயன்பட்டுள்ளது. இது உண்மையான வரலாற்றை அடிப்படையாகக் கொண்டோ, கொள்ளாமலோ, ஓர் ஒழுக்க போதகத்தைப் படிப்பிக்கச் சுதந்தரமாகக் கதை வடிவில் எடுத்துக் கூறப்படும் நிகழ்ச்சி

யுரையாகும். தானியேலின் தீரச்செயல்கள் பற்றிய கதைகள் இத்தன்மையுடையன. இவற்றைக் கண்டிப்பான வரலாற்று நிகழ்ச்சிகளாக எடுத்துக் கொள்ள முடியாது. ஆசிரியர் வரலாறு எழுதும் நோக்கம் கொண்டிருக்கவில்லை என்பது இப்போது ஆய்வுகளிலிருந்து தெளிவாகிறது. இந்த அளவில் அவர் வாலாற்றுத் துல்லியமற்ற கூற்றுக்களைக் கூறினால், அவர் தவறு செய்து விட்டதாக அவரைக் குற்றம் கூற முடியாது. இக் கதைகளில் வரும் தானியேல் என்ற ஆள் வரலாற்றைச் சேர்ந்தவர்தானா அல்லது யூத நாட்டுப் பாடல்களின் படைப்பா என்பது பற்றி ஒன்றும் உறுதியாகக் கூற முடியாது. ஏனெனில் தானியேலைச் சுற்றிப் பொதுப் பாணிக் கதைகள் பல படிப்படியாக எழுந்திருந்தன. இவற்றை ஆசிரியர் பயன்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. இறையூக்கம் பெற்று எழுதும் ஆசிரியருக்கும் அவரது வாசகர்களுக்கும் தானியேல் வரலாற்று ஆளா இல்லையா என்பது அவ்வளவு முக்கியமுடையதன்று. ஏனெனில் தானியேல் வரலாற்று ஆளாய் இருந்தாலும், அவர் வாய்மொழிப் பாரம்பரியத்திலும் நூல் தோன்றிய வரலாற்றிலும் மறைந்து போயிருப்பார். நூலில் காணப்படும் தானியேல் கட்டுக்கதைப் பண்புடையவரே. ஏனெனில் பாபிலோன் ஆட்சிச் சூழ்நிலையைப் பயன்படுத்தி, செலூக்கிய ஆட்சிக்காலம் பற்றி ஒரு ''மாதிரி வரலாற்றை'' ஆசிரியர் படைக்கிறார். இதன் வழியாகத் தாம் விரும்பிய ஆன்மிகச் செய்தியை வலியுறுத்துகிறார். இது போன்றே நாபோனித்துக்குப் பதிலாக நெபுகத்னேசரையும் கோப்பிரியவுக்குப் பதிலாக மேதியனான தாரியுவையும் ஆசிரியர் பயன்படுத்துவது அவருக்கு முக்கியத்துவமிக்க மாற்றமாகத் தோன்றவில்லை. அவரது முக்கிய நோக்கம் அந்தியோக்கு எப்பிபானின் ஆட்சியில் கொடுமைப்படுத்தப்பட்ட யூதர்களுக்குத் தெளிவும், ஆறுதலும் அளித்து அவர்களது விசுவாசத்தை உறுதிப்படுத்துவதாகும். இந்த நோக்கை அக்கதா மிட்ராஸ் இலக்கிய வடிவில் ஆசிரியர் எய்துகிறார்.

நூலின் இரண்டாம் பகுதி (அதி. 7-12) வெளிப்பாட்டு இலக்கிய வடிவைச் சேர்ந்ததாகும். இவ்வடிவ ஆசிரியர்கள் நற்காலம் பற்றிய இறைவனது வாக்குறுதிகள் உறுதியாக நிறைவேறும் என்ற விசுவாசத்திலும், அவரது எல்லாவற்றையும் உள்ளடக்கும் பராமரிப்பில் கொண்டிருந்த நம்பிக்கையிலும் வேரூன்றியவர்கள். இதைத் தங்கள் காலத்தில் வழக்கில் இருந்த இலக்கிய வடிவில் எடுத்துக் கூறுகின்றனர். இதன் விளைவாகத் தங்கள் காலமக்களின் விசுவாசத்தை உறுதிப்படுத்தினர். அவர்கள் கொடுமைப் படுத்தப்பட்டபோது, இறைவனுக்குப் பிரமாணிக்கமாய் இருக்க ஊக்குவித்தனர். இப்பகுதி வெளிப்பாட்டு இலக்கியத்தின் வளர்ச்சியடைந்த எடுத்துக்காட்டாகும். இப்பகுதி விசித்திரமான காட்சிகள், வானதூதர் வழியாக வரும் மறைபொருள் மிக்க வெளிப்பாடுகள் ஆகியவற்றைக் கொண்டது. இது கடந்தகால வரலாறு, நிகழ்கால வரலாறு, மெசியா அரசு நிறுவப் படுதல் ஆகியவற்றை அடையாள முறையில் எடுத்துக்கூறுகிறது. இந்த இலக்கிய வடிவம் வெகுதூரத்தில் உள்ள காலத்தைச் சேர்ந்த ஒருவரை இந்த வெளிப்பாட்டைப் பெறுபவராகப் பயன்படுத்துவதால், ஆசிரியருக்கு முந்திய கடந்தகால நிகழ்ச்சிகள் வருங்கால நிகழ்ச்சிகளாகக் காட்டப்பட முடிகிறது. இந்த முறை ஒரு ''பக்தி மிக்க மோசடியாக'' நமக்குத் தோன்றலாம். இது நமது காலத்து அளவு முறைகளில் தீர்ப்பிடுவதின் விளைவாகும். ஆனால் ஆசிரியர் தமது காலத்து அளவு முறைகளுக்கு நேர்மை குன்றாது செயல்படுகிறார். அவர் தமது செய்தியைப் படைக்கவில்லை. இதை வெளிப்பாட்டு இலக்கியப் பாரம்பரியத்திலிருந்து பெற்றார். இப்பாரம்பரியத்தைத் தான் படைத்த கதாபாத்திரமாகிய தானியேல் வழியாக அளிக்கிறார். ஆசிரியர் யார், கருத்துக்கள் யாருடையவை போன்றவற்றால் தடை செய்யப்படாமல், தமது செய்தியை மிகவும் தேவைப்பட்டவர்களுக்கு அளிக்கிறார். ஆனால் இச்செய்தியை, அவர் முன்னறிவித்த உலக முடிவு காலம் வரும்வரை, எல்லாக்காலத்தையும் சேர்ந்த இறை மக்களின் விசுவாசத்திற்கு உறுதுணையாக இருக்குமென்று சிறிதாவது ஊகித்து இருப்பாரா?

பரந்த பொருளில் இந்த இலக்கிய வடிவத்தை ஒருவகை இறைவாக்கு இலக்கியமாகக் கருதலாம். ஏனெனில் இது இறைவனது பெயரால் அவரது நோக்கில் வரலாற்று விளக்கம் அளிக்கிறது.

மிட்ராஸ், வெளிப்பாட்டு இலக்கிய வடிவங்கள் அந்தியோக்கு கொடுமைப்படுத்திய காலத்தில் யூதமக்களுக்குப் பெரிதும் உதவியாக இருந்தன. ஆசிரியர் தமது போதகத்தை நேரடியாகப் போதித்திருந்தால், அது அவருக்கும் பிறருக்கும் பெரும் கொடுமைகளைக் கொண்டு வந்திருக்கும். இந்த இலக்கிய வடிவங்களில் மறைமுகமாகப் போதித்தபோது, அது அந்தியோக்குவின் அதிகாரிகளின் கவனத்திலிருந்து தப்பியது எனலாம்.

***14. காலவரைத் திட்டம்:*** நூலில் வரும் குறிப்புகளிலிருந்து பின்வருமாறு காலவரைத்திட்டம் செய்யலாம். கி.மு.

*605-562:* நெபுகத்னேசரின் ஆட்சிக்காலம். அவனது ஆட்சியின் முதலாம் ஆண்டு தானியேல் பாபிலோனுக்கு நாடு கடத்தப்படுகிறார். வெளிப்பாட்டு இலக்கியத்தின் தந்தை யென அழைக்கப்படும் எசேக்கியேல் செயலாற்றிய காலம்.

*550-540:* வெளிப்பாட்டு இலக்கியத்தின் இடைப்பட்ட வடிவமான உப எசாயாவின் (எசா 24-27) ஆசிரியர் செயலாற்றிய காலம்.

*555-539:* பாபிலோனின் கடைசிஅரசனான நாபோனித்தும் அவன் மகன் பெல்சாட்சரும் ஆட்சிசெய்த பாபிலோனியப் பேரரசின் இறுதி ஆண்டுகள்.

*539-530:* பெரிய சைரசும் பாரசீகப் பேரரசும் (539-331).

*522-485:* பாரசீகப் பேரரசின் மூன்றாம் மன்னன் முதலாம் தாரியு.

*520-350:* வெளிப்பாட்டு இலக்கியத்தின் இடைக்காலக் கட்டத்தில், செக்கரியா, யோவேல் செயலாற்றிய காலம்.

*336-323:* அலக்சாந்தர் 331-இல் பாரசீகத்தை வென்றான். 323-இல் அவனது மரணத்துக் குப்பின் அவனது தளபதிகளுக்குள் அரசு பகிர்ந்து கொள்ளப்படுகிறது. செலூக்கு, செலூக்கிய அரசமரபைத் தோற்றுவிக்கிறான் (305-163).

*175-164:* யூதர்களைக் கொடுமைப் படுத்திய 4-ஆம் அந்தியோக்கு எப்பிபான் எதிர்க் கிறிஸ்துவுக்கு மாதிரி.

*170-170:* பெரிய குரு ஓனியாஸ் கொல்லப்படுதல்.

*170-164:* மக்கபேயர் காலத்தில் அந்தியோக்கு யூதர்களைக் கொடுமைப்படுத்திய ''ஆண்டுகளின் வாரம்.'' இது 170-இல் ஓனியாஸ் கொல்லப்படுவதில் தொடங்கி 164-இல் யூதா மக்கபேயரால் ஆலயம் மீண்டும் அர்ப்பணிக்கப்படுதலோடு முடிகிறது.

*167-164:* 167-இல் ஆலயம் பங்கப்படுத்தப் படுதலோடு தொடங்கும் ''ஆண்டுகளின் அரைவாரம்.'' இக்காலத்தில் அந்தியோக்கு ஆலயத்தைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டிருந்தான். அங்குப் ''பாழாக்கும் சின்னத்தை'' அமைத்தான். ஆலயத்தில் பலிகளும் காணிக்கைகளும் நின்று விட்டிருந்தன. இக்காலத்தில்தான் தானியேல்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

***15. நூலின் திட்டம்:***

I. பாபிலோனில் தானியேல், அவரது தோழர்கள் ஆகியோரின் வீரச்செயல்கள் (1:1-6:28).

*1) 1:1-21 :* நெபுகத்னேசரின் அவையில் எபிரேய இளைஞர்கள்; உணவுச் சோதனை.

*2) 2:1-59 :* கலப்புச் சிலைபற்றி நெபுகத்னேசரின் கனவும், விளக்கமும்.

*3) 3:1-97 :* பொற்சிலையும் தீச்சூளையில் தானியேலின் தோழர்களும்.

*3:1-23 :* பொற்சிலையை வழிபட எபிரேய இளைஞர்கள் மறுத்தலும், தண்டனையும்,

*3:23-45 :* தீச்சூளையில் அசரியாவின் செபம்.

*3:46-90 :* தீச்சூளையில் மூவரின் போற்றுரைப் பாடல்

*3:91-97 :* அரசன் அருஞ்செயலை ஏற்றுக் கொள்ளுதல்.

*4) 3:98-4:39 :* மரம்பற்றிய கனவும் விளக்க மும். அரசன் பைத்தியம் பிடித்துக் குணமாகு தல்.

*5) 5:1-31 :* பெல்சாட்சரின் விருந்தும் சுவ ரில் எழுதிய கரமும்.

*6) 6:1-28 :* சிங்கக்குகையில் தானியேல்

II. தானியேல் கண்ட வெளிப்பாட்டுக் காட்சி கள் *(7:1-12:13).*

*1) 7:1-28 :* நான்கு விலங்குகள், மனுமகன் பற்றிய கனவுக் காட்சி.

*2) 8:1-27 :* செம்மறிக்கடாவும், வெள்ளாட் டுக் கடாவும் பற்றிய காட்சியும், கபிரியேல் தூதரின் விளக்கமும்.

*3) 9:1-27 :* எழுபது வாரங்கள் பற்றிய இறைவாக்கும் விளக்கமும்.

*4) 10:1-12:13 :* மாபெரும் காட்சி.

*10:1-19 :* பட்டாடை உடுத்திய மனிதனின் காட்சியும் தூதரின் செய்தியும்.

*10:20-11:1 :* இறைவாக்கு முன்னுரை.

*11:2-20 :* மன்னர்களுக்குள் போராட்டம்

*11:21-39 :* ஈனனின் எழுச்சி.

*11:40-12:13 :* முடிவு காலம்.

III. தானியேலின் மற்ற வீரச்செயல்கள் *(13:1-14:43).*

*1) 13:1-64 :* கற்புடைய சூசன்னாவும் தானி யேலின் தீர்ப்பும்.

*2) 14:1-22 :* தானியேலும் பெல்தெய்வத் தின் பூசாரிகளும்.

*3) 14:23-43 :* தானியேல் நாகப்பாம்பைக் கொன்றதும் சிங்கங்களிடையே வாழ்ந்ததும்.

**16. நூலின் பொருளடக்கச் சுருக்கமும் குறிப்புகளும்:** 1. முதல் பாகம்: இப்பகுதி மிட்ராஸ் இலக்கிய அமைப்பில் உள்ளது. அதிகாரம் 1: நெபுகத்னேசரின் அவையில் எபிரேய இளைஞர்கள்.

கி.மு. 605-இல் நாடுகடத்தப்பட்டு, பாபி லோனிய மன்னன் நெபுகத்னேசரின் அவை யில் பணிசெய்யத் தேர்ந்தெடுக்கப்பட்ட யூத மேல்குடி இளைஞனாகத் தானியேல் அறி முகம் செய்யப்படுகிறார். அவரோடு சேர்ந்து அனனியா, மிசாவேல், அசரியா ஆகிய மூன்று யூத இளைஞர்களும் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர். இந்த நான்குபேருக்கும் அரசவை யில் பெல்தசாட்சர், சதிரக்கு , மேசாக்கு, ஆபதுநெகோ என்ற பெயர்கள் கொடுக்கப்படு கின்றன. இவர்கள் அசுத்த உணவை மறுத்த னர். ஆனால் அரசனது சிறப்புணவை உண்டு வந்த இளைஞர் அனைவரையும்விட இவர் கள் முகப்பொலிவோடும் உடற்கட்டோடும் காணப்பட்டனர். இப்பகுதி தானியேல் அர சவையில் உயர்பதவிக்கு உயர்ந்ததை மட்டும் விவரிக்கவில்லை. கி.மு. 2-ஆம் நூற்றாண் டில் கிரேக்கச் சூழ்நிலையில் வாழ்ந்த யூதர் களுக்கு, முழுவதும் புறமதச் சூழ்நிலையில் உணவு பற்றிய யூதச்சட்டங்களைக் கடைப் பிடித்த இந்த நான்கு இளைஞர்களையும் ஓர் எடுத்துக்காட்டாக அளிக்கிறது. இது அந்தி யோக்குவின் சட்டத்தால் தடை செய்யப் பட்ட மக்கபேயர் காலத்து யூதர்களைத் தூய்மை பற்றிய ஒழுங்குகளைக் கடைப் பிடிக்க உற்சாகப்படுத்தியது. இப்பகுதி *1 மக் 1:41-40; 2 மக் 5:6:7*-ஓடு ஒத்துப்போகிறது.

*அதிகாரம் 2:* கலப்புச் சிலைபற்றிய கன வும் விளக்கமும். நெபுகத்னேசர் கனவில் ஒரு பெரிய சிலையைக் கண்டான். அதன் தலை பசும் பொன்னாலும், மார்பும் புயங்க ளும் வெள்ளியாலும், வயிறும் தொடைக ளும் வெண்கலத்தாலும், கால்கள் இரும்பி னாலும் களிமண்ணாலும் செய்யப்பட்டிருந் தன. அரசன் பார்த்துக்கொண்டிருக்கும்- போது, மனிதக் கை படாத மலையிலிருந்து பெருங்கல் பெயர்ந்து உருண்டு வந்து சிலையை மோதி அதைத் தூள்தூளாக நொறுக்கிப் பொடியாக்கியது. அப்பொடி யைக் காற்று அடித்துக்கொண்டு போய்விட் டது. ஆனால் அந்தக்கல் பெரிய மலையாகி உலகம் முழுவதையும் நிரப்பிற்று. பாபிலோ னிய ஞானிகளாலும் இக்கனவுக்கு விளக்கம் அளிக்க முடியவில்லை. ஆனால் சிலையின் வெவ்வேறு பாகங்கள் அடையாளமாக நான்கு பழங்காலப் பேரரசுகளைக் குறிப்ப தாகத் தானியேல் கனவுக்கு விளக்கம் அளிக் கிறார். இந்த அரசுகளில் பசும்பொன்னால் குறிக்கப்படும் முதல் அரசு நெபுகத்னேசரின்

அரசாகும். மற்ற அரசுகளைத் தானியேல் விளக்கவில்லை. அவை மேதிய, பாரசீக கிரேக்க - சீரியப் பேரரசுகளைக் குறிப்பன வாகப் பொதுவாக விளக்கம் அளிக்கப்படும். ''மனிதக் கை படாது பெயர்ந்து மலை யிலிருந்து உருண்டு வந்த கல்'' இறைவ னுடைய மெசியா அரசாகும். இது மனிதரால் ஏற்படுத்தப்பட்டதன்று; என்றுமே அழி யாது. மற்ற அரசுகளையெல்லாம் நொறுக்கி அவற்றிற்கு முடிவுகட்டும்; அவற்றின் இடத்தைநிரப்பும்.

***அதிகாரம் 3:*** பொற்சிலை வழிபாடும் தீச் சூளையில் எபிரேய இளைஞர்களும்: தானி யேல் இக்கதையில் இடம் பெறவில்லை. நெபுகத்னேசர் ஒரு பெரிய பொற்சிலையைச் செய்து தூரா என்னும் சமவெளியில் நாட்டி வைத்தான். இசைக்கருவிகள் ஒலிக்கத் தொடங்க, அவனது குடிமக்கள் அனைவ ரும் அச்சிலையை வணங்கக் கட்டளையிட் டான். தானியேலின் மற்ற மூன்று தோழர்க ளும் இக்கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்து விடுகின்றனர். ஆனால் ஆண்டவரின் தூதரது துணையால் தீச்சுவாலை அவர்களைத் தொடவில்லை. இந்த அருஞ்செயலைக் கண்ட அரசன் உறுதிப்பட்டு, இஸ்ராயேலின் இறைவனது மீட்கும் ஆற்றலை ஏற்றுக் கொள்கிறான். மூன்று இளைஞர்களையும் பெருமைப்படுத்தி உயர்பதவி அளித்தான். இவ்வாறு மறை சாட்சி ஆர்வமும் இறைவ னில் முழு நம்பிக்கையும் கொண்ட இளை ஞர்கள் இறைவனால் காப்பாற்றப் பெற்ற னர்; சன்மானம் பெற்றனர்.

தங்களது விசுவாசத்தின் பொருட்டு இத் தகைய சோதனைக்குக் கிரேக்கர்களால் உட் படுத்தப்பட்ட மக்கபேயர் காலத்து யூதர் களுக்கு இக்கதை உற்சாகமும் உறுதியும் அளிக்கும் மாதிரி ஆயிற்று. இறைவனது பாதுகாப்பு அவர்களுக்கு எப்போதும் உண்டு என்று உறுதி அளித்தது. கிரேக்கக் கடவுள்களை வணங்காதிருக்க ஊக்கமூட்டி யது *(1 மக் 1:44-63; 2:15-18; 2 மக் 6-7).*

அசரியாவின் செபமும் *(2:24-45)*, மூன்று இளைஞர்களின் போற்றுரைப்பாடலும் *(2:46-90)* கிரேக்க விவிலியத்திலும் அதைச் சார்ந்த மொழிபெயர்ப்புகளிலும் பாதுகாக் கப்பட்டுள்ளன; எபிரேயத்திலும் பிரி வினைச் சகோதரர்களின் விவிலியத்திலும் காணப்படுவதில்லை. கத்தோலிக்கத் திருச் சபை இவற்றை இறையூக்கம் பெற்றனவாக ஏற்றுக்கொள்கிறது.

***அதிகாரம் 4:*** மரம் பற்றின கனவும் அரச னது பைத்தியமும்: நெபுகத்னேசர் ஓர் உயர்ந்த பசுமையான மரத்தைக் கனவில் கண்டான். அது வெட்டப்பட்டது. அதன் வேர்கள் நிறைந்த அடிமரம் இரும்பும் வெண்கலமுமான சங்கிலியால் கட்டப்பட் டது. ஏழு ஆண்டுகளுக்குப்பின் அது மீண் டும் வளரும். தானியேல் இக்கனவுக்கு, நெபுகத்னேசர் பைத்தியம் பிடித்துத் துன்புற்றபின் குணமாவான் என்றும், இக்கனவு அவனுக்கு அளிக்கப்பட்ட எச்சரிக்கையா கும் என்றும் விளக்கம் அளித்தார். அதன்படி அரசன் பைத்தியம் பிடித்து ஏழு ஆண்டுக ளுக்கு மாட்டைப்போல் வாழ்ந்தபின் குண மானான். தானியேலின் இறைவனே உண்மை யான இறைவன் என்று ஏற்றுக் கொண் டான். நெபுகத்னேசர் இறுமாப்பு பைத்தியத் தால் கண்டிக்கப்படும் இக்கதை, வரலாறு பற்றிய இறைவாக்குப் போதகத்தின் ஒரு முக்கிய கோட்பாட்டை விளக்குகிறது. அது அரசர்களின் அதிகாரமும் வல்லமையும் இறைவனிடமிருந்தே வருகின்றன; அவை அவருக்கே சாற்றிக்கூறப்பட வேண்டும் என் பதாகும். ''மனிதர்களின் அரசை உன்னத மானவரே ஆளுகிறார் என்பதையும் தாம் விரும்பியவர்களுக்கே அதனைத் தந்தருளு வார் என்பதையும், மனிதருள் தாழ்ந்தவர் களையே அதற்குத் தலைவர்களாக்குகின்றார் என்பதையும் உயிர்கள் அனைத்தும் அறியும் படி இவ்வாறு விதிக்கப்பட்டது'' *(4:14).* ''விண்ணக இறைவனே உலகை ஆள்கிறார் என்பதை நீர் உணர்ந்தவுடன், அரசுரிமை மீண்டும் உமக்குக் கிடைக்கும்..... நல்லறத் தைப் பேணித் தீச்செயல்கள் நீங்குக. ஒடுக் கப்பட்டோர்க்கு இரக்கம் காட்டி உம் பாவக் கறைகளைப் போக்கிக்கொள்க. ஒருவேளை உமது மன நிம்மதி நீடிப்பதற்கு இது வழி யாகலாம்'' *(4:23-24).*

இக்கதை அந்தியோக்கு காலத்தோடு குறிப்பிடத்தக்க முறையில் ஒத்துப்போகி றது. அவனுக்கு அளிக்கப்பட்ட அதிகாரத் தைத் தவறாகப் பயன்படுத்தினான். இறைவ னால் தண்டிக்கப்பட்டான் (2 மக் 7:5 தொ). இக்கதை மக்கபேயர் காலத்து யூதமக்கள் இறைவனது பராமரிப்பில் கொண்டிருந்த நம்பிக்கையைத் தூண்டி உறுதிப்படுத்தியது.

நெபுகத்னேசருக்கு இப்படிப் பைத்தியம் பிடித்ததாய் வரலாற்றில் சான்றுகள் இல்லை. ஆனால் இது நடக்கக்கூடாத ஒன் றன்று என்பது அறிஞர்கள் கருத்து. கும்ரா னில் கண்டுபிடிக்கப்பட்ட கும்ரானியத் துணுக்குகளில் ஒன்று நாபோனித்தைப் பற்றி இத்தகைய கதை ஒன்றைக் கூறுகிறது. இவன் கி.மு. 558-539-இல் அராபியா பாலை வனத்தில் தேமாவில் ஏழு ஆண்டுகள் மறைந்து வாழ்ந்ததாகத் தெரிகிறது. இக்கதை யில், பெயர்களில் குழப்பம் இருக்கி றது அல்லது ஆசிரியர் யாரும் அறியாத நாபோனித்தின் பெயரை நீக்கிவிட்டு, புகழ்பெற்ற நெபுகத்னேசரைப் பாபிலோ னிய அரசர்களில் ஓர் எடுத்துக்காட்டாகப் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

**அதிகாரம் 5:** பெல்சாட்சரின் விருந்தும் சுவரில் எழுதிய கரமும்: தானியேல் நூல்படி பாபிலோனியாவின் கடைசி அரசனான பெல்சாட்சர் ஒரு பெரும் விருந்தளித்தான். அதில் அவனும் அவனது விருந்தாளிகளும் எருசலேம் ஆலயத்துப் பரிசுத்தக் கலங்க ளைப் பங்கப்படுத்தினர். திடீரென்று அரண் மனைக் கூடத்துச் சுவரில் மனிதக் கைவிரல் கள் தோன்றி எழுதத் தொடங்கின. அரசன் அஞ்சினான். நாட்டின் மாயவித்தைக்காரர் களுக்கும் கல்தேயர்களுக்கும் சோதிடர்களுக் கும் இக்காட்சியின் உட்பொருளை விளக்க முடியவில்லை. அரசன்முன் கொண்டுவரப் பட்ட தானியேல், எழுதப்பட்ட சொற்களை ''மேனே தேக்கேல் பார்சின்'' என்று வாசித்து ''மேனே - இறைவனே உமது அரசின் நாட்களை எண்ணி வரையறுத்து அதனை முடிவுக்குக் கொண்டுவந்து விட் டார்; தேக்கேல் - நீர் தராசில் நிறுக்கப்பட் டீர், எடையில் மிகவும் குறைந்துள்ளீர்; பார்சின் - உமது அரசு பிரிக்கப்பட்டு மேதிய ருக்கும் பாரசீகருக்கும் கொடுக்கப்பட்டது'' என்று விளக்கம் அளித்தார் (5:25-28). அன்று இரவே பெல்சாட்சர் கொல்லப்பட்டான். பாரசீகர்கள் ஆட்சியைக் கைப்பற்றினர்.

இக்கதையும் முன்னதைப்போல், வரலாறு பற்றிய இறைவாக்குப் போகத்தை விளக்கு கிறது. இறைவன் அளித்த அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தும் அகந்தை மிக்கவர் களிடமிருந்து அதிகாரத்தையும் மகிமையை யும் எடுத்துவிட்டு, அவர்களை இறைவன் தண்டிக்கிறார் (5:17-23). அவர் தமது மக்க ளுக்குப் பகையான சக்திகளின் வீழ்ச்சியை முன்னறிவித்து அதைச் செயல்படுத்துகிறார் என்று கதை கற்பிக்கிறது. மக்கபேயர் காலத்தில் அந்தியோக்குவின் தெய்வ நிந்தனை யான அகந்தைமிக்க வரலாற்றோடு இக் கதை ஒத்துப்போகிறது. அவனால் கொடு மைப்படுத்தப்பட்ட யூதவிசுவாசிகள், அரசு அவனிடமிருந்து எடுக்கப்பட்டு அவன் அழிந்து போவான் என்று உறுதி கொள்ள லாம்.

**அதிகாரம் 6:** சிங்கக் குகையிலே தானி யேல்: தானியேல் செல்வாக்கை அழிக்கும் பொருட்டு, பொறாமைகொண்ட பாபிலோ னிய அரசியல்வாதிகள் முப்பது நாட்களுக்கு அரசனைத்தவிர வேறு ஒருவரிடமும் மன்றா டுவது சட்ட விரோதமாகும் என்று தாரியு அரசனை ஆணையிடச் செய்தனர். எதிர் பார்த்ததுபோல் தானியேல் இக்கட்ட ளையை மீறினார். தமது வழக்கப்படி நாடோறும் மூன்று வேளை இறைவனை மன்றாடிப் புகழ்ந்தார். கண்டுபிடிக்கப்பட்டு, தண்டனையாகச் சிங்கங்களின் குகையில் போடப்பட்டார். இறைவன் சிங்கங்களிட மிருந்து தானியேலைக் காப்பாற்றினார். இதைக் கண்டுணர்ந்த அரசன், தானியே லைக் குற்றம் சாட்டிய வஞ்சகர்களை, அவர் கள் குடும்பத்தோடு சிங்கங்களின் குகையில் போட, அவையும் அவர்களைக் கொன்று தின்றன. அரசன் இஸ்ராயேலின் இறைவ னைப் போற்றினார்.

இக்கதை இறைவன் தமக்குப் பிரமாணிக்கமாக இருப்பவர்களைக் காப்பாற்றுகிறார் என்று காட்டுகிறது. மக்கபேயர் காலத்தில் யாவேக்கு வழிபாடு செய்யக்கூடாது என்று யூதர்களுக்கு அந்தியோக்கு கட்டளை இட்டிருந்தான். அப்போது அவர்கள் தங்களது சமயக் கடமைகளைத் தொடர்ந்து செய்ய விசுவாசிகளைத் தூண்டி உற்சாகப்படுத்துவது இக்கதையின் நோக்கமாகும்.

II. *இரண்டாம் பகுதி (அதி. 7-12):* இப்பகுதி வெளிப்பாட்டு நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இதன் முக்கிய கருத்து மெசியா அரசின் வருகையாகும். ஆசிரியரது கருத்துப்படி இவ்வரசு சீரியர்களின் கொடுமைக் காலத்தின் முடிவில் தோன்றும். இப்பகுதியில் காணப்படும் செய்தியே அதி. 2-இன் சாரமாகும். நெபுகத்னேசரின் கனவில் கண்ட சிலையின் நான்கு உலோகங்களும், அதி. 7-இல் வரும் நான்கு விலங்குகளும் நான்கு பேரரசுகளைக் குறிக்கின்றன. மலையிலிருந்து பெயர்க்கப்பட்ட கல் மெசியா அரசைக் குறிக்கிறது. முந்தைய அரசுகளை மெசியா அரசு அழித்து அவற்றின் இடத்தை நிரப்பும். இந்தக் கல்லுக்கு இணையான வேறுபட்ட அடையாளங்களால் இப்பகுதி புனிதர்களின் அரசை உணர்த்துகிறது.

ஒரே செய்தியைப் பல்வேறுபட்ட காட்சிகளில் மீண்டும் மீண்டும் கூறுவது வெளிப்பாட்டு இலக்கியத்தின் ஒரு பண்பாகும். இப்பகுதியில் வரும் காட்சிகள் வேறுபட்டவை. ஒன்றையொன்று சாராதவை. ஆனால் ஒவ்வொன்றும் அதே கருத்தின் வெவ்வேறு கூறுகளை அழுத்திக் கூறுகிறது. இவ்வாறு அதி.7 இவ்வுலக அரசுகளுக்கும் அவற்றை அகற்றி அவற்றிற்குப் பதிலாக நிறுவப்படும் இறைவன் அரசுக்கும் இடையேயுள்ள எதிர்பார்ப்பைப்பற்றிக் கவனம் செலுத்துகிறது. அதி. 8 கொடுங்கோலன் அந்தியோக்குவின் கொடுமைகளையும் மரணத்தையும் விவரிக்கிறது. அதி. 9 மெசியா அரசு வரும் காலத்தில் கவனம் செலுத்துகிறது. அதி. 10-12 செலூக்கிய மரபின் வரலாற்றையும் அந்தியோக்கு யூதர்களைக் கொடுமைப்படுத்தியதையும் விரிவாக விவரிக்கிறது. அதி. 12 கொடுமைப்படுத்தப்பட்ட மறைசாட்சிகளுக்கு உயிர்ப்பு உண்டு என்றும், முடிவில்லாத வாழ்வு உண்டு என்றும் உறுதி அளிக்கிறது.

இப்பகுதி நான்கு காட்சிகளைக் கொண்டது. முதல் காட்சியில் தானியேல் படர்க்கையில் அறிமுகம் செய்யப்பட்டு தன்மை ஒருமையில் தம் அனுபவத்தை எடுத்துக்கூறுகிறார். மற்ற மூன்று காட்சிகளில் தன்மை ஒருமையிலேயே எழுதுகிறார். ஆனால் மூன்றாம் காட்சியின் தொடக்கத்தில் படர்க்கையில் சுருக்கமாகக் குறிக்கப்படுகிறார். இவ்வாறு படர்க்கையிலிருந்து தன்மை ஒருமைக்கு மாறுவது முனைப்பற்ற முறையில் பெரும் திறமையோடு செய்யப்படுகிறது. இது கவனிக்கத் தக்கது. இனிக் காட்சிகளுக்கு வருவோம்.

*அதிகாரம் 7:* நான்கு விலங்குகள், மனுமகன் பற்றிய கனவுக்காட்சி: நான்கு பெரிய விலங்குகள் கடலில் இருந்து மேலெழும்பின. நான்காவது விலங்குக்குப் பத்துக் கொம்புகள் இருந்தன. இவற்றில் மூன்று பிடுங்கப்பட்டு அவற்றின் இடத்தில் ஒரு சிறிய கொம்பு எழும்பிற்று. இந்தக் கொம்பில் மனிதக் கண்களைப்போல் கண்களும் பெருமை பேசும் வாயும் இருந்தன. இந்த விவரிப்புக்குப்பின் இறையாற்றல் தோற்ற தீர்ப்புக்காட்சி வருகிறது. விலங்குகள் கொல்லப்படுகின்றன. அதை அடுத்து மனுமகனால் அடையாளமாகக் குறிக்கப்படும் ஐந்தாம் அரசு இறைவனால் நிறுவப்படுகிறது. காட்சியின் விளக்கத்தில் சிறிய கொம்பு குறிக்கும் கடைசி அரசன் பரிசுத்தர்களை ''ஒரு காலம், இரு காலம், அரைக்காலம்'' அதாவது மூன்றரை ஆண்டுகளுக்குத் துன்புறுத்துவான். அவனது அரசு அழிக்கப்பட்டு இறையரசு நிறுவப்படும். இந்த அரசு உன்னதரின், பரிசுத்தர்களின் இனத்தாருக்குக் கொடுக்கப்படும் என்று கூறப்படுகிறது.

ஆசிரியர் பயன்படுத்தும் அடையாள மொழி பற்றிப் பின்வருபவை பொதுவாக

ஏற்றுக் கொள்ளப்படும். நான்கு விலங்குகள், 2-ஆம் அதிகாரத்தில் வருவதுபோல் பாபிலோனியா, மேதியா, பாரசீகம், கிரேக்க - சீரியா அரசுகளையும், அரசர்களையும் குறிக்கின்றன. ''என்றும் வாழ்ந்தவர்'' என்ற சொற்றொடர் இறைவனைக் குறிக்கும். ''மனுமகன் போன்றவர்'' என்ற சொற்றொடரால் ஆசிரியர் உன்னதரின் புனிதர்கள் குழுவையும், குழுவின் தலைவரான மெசியாவையும் குறிக்கிறார் (யூத கிறிஸ்தவப் பாரம்பரியங்களைக் காண்க: மத் *24:30; 26:64;* மாற் *14:62;* லூக் *9:26;* திருவெளி *1:7; 14:14*). விரிவாக விவரிக்கப்படும் நான்காவது அரசைக் குறிக்கும் பத்துக் கொம்புகளைக் கொண்டிருக்கும் விலங்கு செலூக்கிய அரச மரபின் பத்து அரசர்களைக் குறிக்கின்றது. சிறிய கொம்பு அந்தியோக்கைக் குறிக்கிறது. இவன் ''இறைவன் காட்சி'' என்ற பொருளில் ''எப்பிபானெஸ்'' என்று தன்னையே அழைத்துக் கொண்டான். ஆனால் அவனது எதிரிகள் . ''பைத்தியம்'' என்ற பொருளில் ''எப்பிமானெஸ்'' என்று அவனை அழைத்து நகைத்தனர். இவன் தன்னை ஒரு கடவுளாகப் பாவித்துச் செயல்பட்டான். ''அவன் உன்னதமானவருக்கு எதிரான சொற்களைப் பேசுவான், அவரது புனிதர்களைத் துன்புறுத்துவான். வழிபாட்டுக் காலங்களையும் திருச்சட்டத்தையும் மாற்ற நினைப்பான்'' *(7:25)*. இவனைப்பற்றிய விவரிப்புகளுக்கு *1* மக் *1:24.41-51; 2* மக் *5:21; 9:4.7-11;* தானி *2:42-43; 8:9-14.23-25; 11:21-45; 12:11-12* ஆகிய பகுதிகளைக் காண்க.

ஆசிரியர் புனிதர்களின் அரசை உலக அரசுகளுக்கு எதிரானதாகக் காட்டுகிறார் என்பதை வாசகர்கள் கவனிக்க வேண்டும். புனிதர்களின் அரசு, மனுமகனைப் போன்று, மேலிருந்து வருவது, முடிவில்லாதது, யாவற்றையும் உள்ளடக்குவது. உலக அரசுகளோ விலங்குகளைப் போன்றவை, கடலிலிருந்து அதாவது கீழிருந்து வருபவை, காலவரையறைக்குட்பட்டவை.

**அதிகாரம் 8:** இந்த இரண்டாவது காட்சி செம்மறிக்கடா, வெள்ளாட்டுக்கடா பற்றியதாகும். அதி.7-இல் வரும் கருத்தை மீண்டும் கூறிச் சிறிய கொம்பு குறிக்கும் அந்தியோக்கு உன்னதமானவரின் புனிதர்களுக்குச் செய்த கொடுமைகளை விவரிக்கிறது.

தானியேல் சம அளவற்ற இரு கொம்புடைய ஒரு செம்மறிக் கடாவைக் காண்கிறார். அது நான்கு திசைகளிலும் வெற்றியோடு முன்னேறிப் பெருமிதம் கொண்டிருந்தது. கண்களுக்கிடையில் விந்தையான கொம்பைக் கொண்டிருந்த வெள்ளாட்டுக் கடா திடீரென்று செம்மறிக்கடாவைத்தாக்கி வெல்கிறது. பெருமிதம் கொண்டு திரிகிறது. அதன் ஒரே கொம்பு முறிக்கப்பட, அந்த இடத்தில் நான்கு கொம்புகள் தோன்றி மற்றவற்றைப் பாதிக்கும் விதத்தில் பெரிதாக வளர்கிறது. ''அது வான் படைகளைத் தொடுமளவிற்கு உயர்ந்து வளர்ந்தது. விண்மீன் திரள்களுள் சிலவற்றையும் தரையில் வீழ்த்தி மிதித்துப் போட்டது.மேலும் வான் படைகளின் தலைவரையே எதிர்த்துத் தன்னையே உயர்த்திக் கொண்டது. இடையறாது செலுத்தப்பட்ட தகனப்பலியையும் அவரிடமிருந்து பறித்துக் கொண்டு அவரது திருத்தலத்தையும் அழித்துப்போட்டது'' *(8:10-11)*. இதன் கொடுமைகள் ஏறக்குறைய மூன்றரை ஆண்டுகளுக்கு நீடித்தன. இறுதியில் மனிதன் எவனும் தலையிடாமலே அழிந்து போயிற்று. இக்காட்சிக்குக் கபிரியேல் தூதர் விளக்கம் அளிக்கிறார்.

இக்காட்சிக்குப் பொதுவாகக் கூறப்படும் விளக்கம். செம்மறிக்கடா மேதியா, பாரசீக அரசைக் குறிக்கிறது. வெள்ளாட்டுக்கடா கிரேக்க அரசையும் அதன் விநோதமான கொம்பு அலக்சாந்தரையும், நான்கு கொம்புகள் அவனுக்குப் பின்வந்த அரசுகளையும் குறிக்கின்றன. அவற்றில் ஒன்று செலூக்கிய அரசமரபையும் சிறிய கொம்பு அந்தியோக்கையும் குறிக்கின்றன. இவன் மக்கபேயர் காலத்தில் பிரமாணிக்கமுள்ள யூதவிசுவாசிகளைக் கொடுமைப்படுத்தினான். ஆலயத்தில் பலிகள் செலுத்தப்படுவதைத் தடைசெய்தான். திடீரென்று அழிந்து போனான். இந்தக் கொடுமைகள் நிகழும் காலம் ''இரண்

டாயிரத்து முந்நூறு மாலையும் காலையும்,'' அதாவது 1150 நாட்கள் நீடிக்கும் என்று குறிக்கப்படுகிறது. இது 7:25-இல் வரும் காலத்தை ஒத்ததாகும். இந்தக் காலவேறு பாடுகளுக்கு எந்த உட்பொருளும் இல்லை எனலாம்; மக்கபேயர் காலத்துப் போராட்டத்தோடு ஒத்துப் போகச் செய்யும் திருத்தமே ஆகும்.

*அதிகாரம் 9:* எழுபது வாரங்கள் பற்றிய இறைவாக்கும் விளக்கமும்: இது பழைய ஏற்பாட்டிலேயே புகழ்பெற்ற பகுதிகளில் ஒன்றாகும்.

பாபிலோனிய ஆதிக்கத்தின் எழுபது ஆண்டுகள் பற்றி ஏரேமியா முன்னறிவித்ததைப் பற்றி (எரே 25:12; 29:20; 31:38) தானியேல் வியந்து தெளிவிற்காக மன்றாடுகிறார் (தானி 9:1-19). 9:4-19-இல் வரும் செபத்தில் தானியேல் தம்முடையவும் தம் இனத்தவராகிய இஸ்ராயேல் மக்களுடையவும் பாவங்களை அறிக்கையிட்டு, எருசலேம் மீண்டும் அமைக்கப்படுவதற்காக மன்றாடுகிறார். இச்செபம் அது வரும் சூழ்நிலையில் முழுவதும் பொருத்தமாயில்லை. மேலும் நூலின் மற்றப் பகுதிகளை விட உயர்ந்த எபிரேய மொழியில் எழுதப்பட்டுள்ளது. இது காலத்தால் முந்தியதாகவும் மூல நூலில் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டதாகவும் இருக்கலாம்.

கபிரியேல் தூதன் தோன்றிய எழுபது ஆண்டுகளை ஆண்டுகளின் எழுபது வாரங்களாக விளக்குகிறார். யூகமாக எண்களைக் கையாண்டு, ஆசிரியர் அதி. 7-8-இல் வரும் மெசியாக் கருத்தை மீண்டும் கூறி, ஆண்டுகளின் கடைசி வாரத்தில் கவனம் செலுத்துகிறார். இது அந்தியோக்கு கொடுமைகளைச் செய்த காலமாகும். அதன் முடிவில் மெசியாக்காலம் தோன்றும். அப்போது இறைவாக்குகள் நிறைவேறும். 9:25-26-இல் வரும் காலக்கணிப்பை விளக்கும் பல்வேறு ஆய்வாளர்கள் மக்கபேயர் காலத்தோடோ, புதிய ஏற்பாட்டுக் காலத்தோடோ ஒத்துப் போகச் செய்ய முயன்று குழப்பம் செய்துள்ளனர்.

இந்தக் குழப்பமிக்க கணிப்புக்களைத் தவிர்த்துப் பின்வருமாறு பொதுவாகப் புரிந்து கொள்ளலாம். எழுபது ஆண்டுகள் ஆண்டுகளின் எழுபது வாரங்களைக் குறிக்கிறது என்றும், வாரங்களின் இறுதியில் மிகவும் இக்கட்டான கட்டத்தில் தாம் இருக்கிறார் என்றும், முடிவு அருகில் இருக்கிறது என்றும் தானியேல் கபிரியேலிடமிருந்து அறிகிறார். எரேமியாவில் வரும் எழுபது ஆண்டுகள் முழு எண்ணைக் குறித்தது. வரையறை படாத காலத்தைக் குறிக்கிறது. அது ஒரு நபரின் ஆயுளாகும். ஆகவே அப்போது வாழ்ந்த எவரும் பாபிலோனில் ஆதிக்கத்தின் முடிவைக்காண உயிரோடு இருக்கமாட்டார்கள். ஏழு ஆண்டுகள் அடங்கிய எழுபது வாரங்கள் இன்னும் நீண்ட, வரையறைப் படாத காலத்தைக் குறிக்கிறது. துல்லியமான காலத்தை அன்று, எத்தகைய கணிப்பிலும் பாபிலோனிய ஆட்சி தொடங்கியதிலிருந்து (கி.மு. 605) 490 ஆண்டுகள் என்ற தொடரை மக்கபேயர் காலத்தோடோ, புதிய ஏற்பாட்டுக் காலத்தோடோ ஒத்துப்போகச் செய்ய முடியாது. 9:25-இல் எழுபது வாரங்களின் தொடக்கம் எருசலேம் கட்டப்பட அனுமதி அளிக்கும் கட்டளையிலிருந்து (கி.மு.537) கணிக்கப்படுகிறது. இதன்படி 490-ஆவது ஆண்டு கி.மு. 47-இல் முடியும். இந்த ஆண்டுக்கு எந்தப் பொருளும் அளிக்க முடியாது. எருசலேமின் வீழ்ச்சிக்கும் ஆசிரியரது காலத்திற்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் எண்ணிக்கை பற்றி ஆசிரியருக்கு எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை.

*அதிகாரம் 10-12:* இந்த நான்காம் காட்சி நாடுகளிடையே நடந்த போராட்டம் பற்றிய மாபெரும் காட்சியாகும். இப்பகுதியை ஒரே தொகுப்பாக எடுத்துக் கொள்ள வேண்டும். 10:1-11:1 நாடுகளின் கதியின் மேல் தலைமை தாங்கும் தூதர்களுக்கிடையே நடக்கும் தர்க்கம் விவரிக்கப்படுகிறது. 11:2-45 பாரசீகப் பேரரசிலிருந்து அலக்சாந்தர் அவனது வாரிசுகள் வழியாகச் செலூக்கிய அரசின் நான்காம் அந்தியோக்கு யூதர்களைக் கொடுமைப்படுத்தியது வரையுள்ள இஸ்ரேயாலின் வரலாறு கூறப்படுகிறது.

*12:1-13* கொடுமைகளின் முடிவுவரை நிலைத்திருப்பவர்களுக்குக் காத்திருக்கும் உயிர்ப்பு, முடிவில்லாத வாழ்வு ஆகிய சன் மானத்தை விவரிக்கிறது.

**அதிகாரம் 11:** நிகழ்காலத்திலுள்ள ஒருவர் கடந்த காலத்தவராகத் தம்மைப் பாவித்து நடந்து விட்ட நிகழ்ச்சிகளையும் நிகழ்கால நிகழ்ச்சிகளையும் பற்றி இறைவாக்குரைக் கும் முறை இங்குப் பயன்பட்டுள்ளது. இது பழைய ஏற்பாட்டிலேயே வேறெங்கும் காணப்படாத முறையாகும். இஃது ஓர் இலக்கிய யுக்தியாகும். இவ்வதிகாரம் ஒரு மாபெரும் வரலாற்றுப் படத்தை விவரிக் கிறது. அக்காலம் பற்றிய பிற வரலாறுகளி லிருந்து, ஆசிரியர் பெயர் கொடுக்காத, ஆனால் வாசகத்தில் குறிக்கப்படும் ஆட்களை யும் நிகழ்ச்சிகளையும் அடையாளம் காண்பது எளிது.

சைரசுக்குப்பின் நான்கு பாரசீக அரசர்கள் வரலாற்று மேடையில் தோன்றுகின்றனர். அதன் கடைசி அரசனாகிய முதலாம் செரு சுக்குப்பின் அலக்சாந்தரும் அவன் வழித் தோன்றல்களும் தோன்றுகின்றனர். பின்பு ''தென்திசை மன்னர்களுக்கும்'' வடதிசை மன்னர்களுக்குமிடையே நடக்கும் போராட் டம் விவரிக்கப்படுகிறது. தோலமியர்கள் எகிப்தில் ஆட்சி செய்தனர். ''தென்திசை மன்னன்'' *(11:5)* முதலாம் தோலமியாவான் *(304-285)*. ''அவனுடைய படைத்தலைவர்க ளுள் ஒருவன்'' முதலாம் செலூக்கு ஆவான் *(305-281)*. இவன் செலூக்கிய அரச மரபை நிறுவினான். இந்த மரபின் அரசர்கள் ''வட திசை மன்னர்கள்'' என்று அழைக்கப்படு கின்றனர். இவர்கள் அந்தியோக்கியாவி லிருந்து ஆட்சி செய்தனர். இரண்டாம் தோலமி யின் மகள் பெர்னிக்கி. இரண்டாம் அந்தி யோக்கை *(261-246)* மணந்தபோது இரண்டு அரசுகளும் நட்பு நாடுகளாகின்றன. அவ ளுடைய வேர்களிலிருந்து தோன்றிய ஒரு தளிர் தான் *(11:7)* மூன்றாம் தோலமியாவான் *(246-221)*. மூன்றாம் அந்தியோக்கு பெரும் போர்கள் செய்தான். அவனது திமிர் அவ னையே அழிக்கும்படி, அவனது திமிரை அடக்குவான் கொர்னேலியு சிப்பியோ என்ற உரோமைப் ''படைத்தலைவன்''. இவன் மூன்றாம் அந்தியோக்கை *189*-இல் மக்கனேசியம் என்ற இடத்தில் தோற்கடித்து அவனது போர்களை முடிவுக்குக் கொண்டு வருவான் *(11:10-19)*. *11:20* நான்காம் செலூக்கை பற்றிப் பேசுகிறது *1:1-45*-இல் நான் காம் அந்தியோக்கின் ஆட்சி மூன்றாம் ஓனி யாசோடும் *(11:22; 2 மக் 4:33-38)* உரோமைய ரோடும் தொடர்புபடுத்தி விவரிக்கப்படுகி றது. போபிலியஸ் லேனஸ் என்ற உரோமை யன், *168*-இல் நான்காம் அந்தியோக்கை எகிப்திலிருந்து வெளியேறும்படி கட்டளை யிட்டான் *(11:30)*. இப்பகுதி கிரேக்க கலாச் சாரத்தின்பால் யூதர்கள் காட்டிய பதிதத்தை யும் *(11:32; 1 மக் 1:11-15.43)*, *167-164*-இல் நடந்த கொடுமைகளையும் *(11:32-35)* ''பாழாக்கும் அருவருப்பையும்'' *(11:31; 9:27; 12:11; 1 மக் 1:58)* விவரிக்கிறது. *11:40-45*-இல் குறிக்கப்படும் நிகழ்ச்சிகள் பற்றி விவிலியத் துக்குப் புறம்பான ஏட்டுச் சான்றுகள் இல்லை.

**அதிகாரம் 12:** இதில் தொலைக்காட்சி முன்னோக்கைக் கொடுக்காமல் ஆசிரியர் ஒரு காட்சியை விட்டுச் சென்றிருக்கிறார். இதில் இம்மைக்குரிய விடுதலையும் முடிவு கால உறுதிகளும் பின்னப்பட்டிருக்கின்றன.

பெருந்துன்பமிக்க காலமுடிவில், மரித்தோ ரில் சிலர் முடிவில்லாத வாழ்வுக்கும் சிலர் தண்டனைக்கும் உயிர்த்தெழுவர். இது நல் லோரும் தீயோரும் உயிர்த்தெழுதல் பற்றிய விசுவாசத்தைப் பழைய ஏற்பாட்டிலேயே ஐயந்திரிபு அற்ற முறையில் எடுத்துக்கூறும் காலத்தால் முந்திய கூற்றாகும் *(2 மக் 7:9-14. 22-36; 12:43-46)*. முடிவுக்காலம் அண்மை யில் உள்ளதுபோலத் தோன்றுகிறது. ஆனால் அது எப்போது வரும் என்று தானி யேல் கேட்க, ''குறிப்பிட்ட நாள்வரையில் இந்தச் சொற்கள் மறைக்கப்பட்டு முத்திரை யிடப்பட்டிருக்கும்'' *(11:9)* என்று பதில் கிடைக்கிறது. அது அவருக்கு வெளிப்படுத் தப்பட முடியாது. பரிசுத்த இடம் பங்கப்படுத் தப்படும் காலம் மீண்டும் ஒருமுறை *1290*

நாட்களாகும் என்றும்'', *1335* நாள்வரை காத்திருப்பவனே நற்பேறு பெற்றவன் *(11:11-12)* என்றும் கூறப்படுகிறது. இந்த எண்ணிக்கை வேறுபாட்டிற்கு இதுவரை ஒரு நல்ல விளக்கம் அளிக்கப்படவில்லை. இரண்டும் புற இனத்தாரின் கட்டுப்பாட்டில் ஆலயம் இருந்த ''ஒரு காலம், இரு காலம், அரைக்காலம்'' அதாவது மூன்றரை ஆண் டைக்குறிக்கலாம். இக்காலத்தின் முடிவில் ஆசிரியர் எதனை எதிர்பார்த்தார் என்றும் நிர்ணயிக்க முடியாது.

இதுவரை பார்த்துள்ள பகுதிகளில் முதல் நான்கு கதைகள் நெபுகத்னேசரின் ஆட்சியி லும், ஐந்தாவது கதை பெல்சாட்சரின் ஆட்சி யிலும், ஆறாவது கதை மேதியா, தாரியு வின் காலத்திலும் நடைபெறுகின்றன. முதல் காட்சி பெல்சாட்சரின் முதலாம் ஆண் டிலும், இரண்டாவது காட்சிஅவனது மூன் றாம் ஆண்டிலும், மூன்றாம்,காட்சி மேதியா, தாரியுவின் முதலாம் ஆண்டிலும் நிகழ்கின் றன. இவ்வாறு கனவுகளும் காட்சிகளும் காலவரை அமைப்புக் கொண்டுள்ளன. ஆனால் கதைகள் முடியுமுன்பே காட்சிகள் தொடங்கி விடுகின்றன.

III. மூன்றாம் பாகம் *(அதி. 13-14):* தானியேலின் கூடுதலான தீரச் செயல்கள் மிட்ராஸ் இலக்கிய அமைப்புடையது.

***அதிகாரம் 13:*** சூசன்னாவின் கதை மறை சாட்சித் தன்மையுடையது. பாவம் செய் வதை விட, சாவதைத் தேர்ந்தெடுக்கிறாள் பாபிலோனில் வாழ்ந்த சூசன்னா என்ற யூதப் பெண். இரு காமுகக் கிழ நடுவர்கள் அவள் மீது விபச்சாரக் குற்றம் சாட்டுகின்ற னர்; தீர்ப்பிடுகின்றனர். இறைவனால் தூண் டப்பட்டு தானியேல் அவர்களை எதிர் மறைச் சான்றுகளில் சிக்க வைத்துச் சூசன் னாவை விடுவித்துக் காப்பாற்றுகிறார். முதி யவர்களோடு நடக்கும் உரையாடலில் இரு மரங்களின் கிரேக்கப் பெயர்களிடையே சிலேடை அணி அடங்கியிருக்கிறது *(13:54-55.58-59)*. இக்கதை தானியேலின் ஞானத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும். அதி.1-6-இல் வரும் கதைகளைப்போல் இக் கதையும் வரலாற்றுக் கருவைக் கொண்டிருக் கிறது எனலாம். அது அந்தியோக்கு கொடு மைப்படுத்திய காலத்தில் இறைவனது சட் டத்தை மீறுவதைவிட, சாவதற்குத் தயாராக இருக்க வேண்டும் என்று விசுவாசிகளுக்குப் போதிக்க மிட்ராஸ் முறைப்படி விவரிக்கப் படுகிறது *(1 மக் 1:41-50.60-64; 2 மக் 6-7)*. முதியவர்கள் சூசன்னாவைக் கெடுக்க முயல் வதை வலியுறுத்திக்கூறுவது யாசோன் போன்றவர்களின் பொல்லாத மாதிரியை ஈடுசெய்யும் நோக்கம் கொண்டதாகும் *(2 மக். 3-4)*.

***அதிகாரம் 14:*** பெல் தேவதையின் பூசாரிக ளும் நாகப்பாம்பும்: பெல் தேவதைகளின் உருவத்தின்முன் வைக்கப்படும் உணவும், பானமும் அதன் பூசாரிகளால் இரகசியமாக உண்ணப்படுகின்றன என்று தானியேல் நிரூ பிக்கிறார் *(14:1-22)*. பாபிலோனில் வணங் கப்பட்ட ஒரு நாகப்பாம்பைத் தானியேல் கொன்றுவிடுகிறார். அதற்குத் தண்டனை யாகத் தானியேல் சிங்கக்குகையில் எறியப்படு கிறார். அங்குப் பாலஸ்தீனத்திலிருந்து தூத ரால் தூக்கி வரப்பட்ட அபக்கூக்கு என்ற இறைவாக்கினரால் உணவு அளிக்கப்பெறுகி றார். சிங்கங்களிடமிருந்து தானியேல் தப்பிய உண்மை, இஸ்ராயேலின் இறைவனே உண் மையான இறைவன் என்று அறிக்கையிட மன்னன் சைரசைக் கட்டாயப்படுத்துகிறது. இந்த மிட்ராஸ் கதைகள் அதி. *1-6*-இல் வருவது போல் புறமதத்தின் சிறுபிள்ளைத்தனமான மடமைமேல் உண்மையான சமயம் கொண் டிருக்கும் உயர்மேன்மையை எடுத்துக் காட் டுவதற்காகக் கூறப்படுகின்றன. இத்தகைய போதகம் மக்கபேயர்கள் காலத்தில் நல்ல விளைவுகளை ஏற்படுத்தியது. ஏனெனில் பல யூதர்கள் புறஇனக் கிரேக்கப் பண்பாட் டின் மாயத் தோற்றத்தால் பெரிதும் ஈர்க்கப் பட்டனர்; பாதிக்கப்பட்டனர் *(1 மக் 1:11-15; 4:10-17)*. இவர்களுக்கு இக்கதைகள் நல்வழி காட்டின.

### 17. இறையியல் போதனைகள்

***அ) வரலாற்று இயல் நூல்:*** இந்நூல் இறை வனதுபராமரிப்பு நிகழ்ச்சிகள் பற்றிய அக்

கதா மிட்ராஸ் விளக்கவுரையும் வெளிப் பாட்டு எடுத்துக்காட்டும் அடங்கியதாகும்; வரலாறு பற்றிய சமயதத்துவமும் கொண்ட தாகும். இந்த உயரிய நோக்கம் நூலில் மெசியாக் கோட்பாடு பெறும் உறுதியான அழுத்தத்தில் மனிதவுரு எடுக்கிறது. இக் கோட்பாடு இறைவன் இறுதியில் வெற்றி பெறுவார் என்பதில் கொண்டுள்ள நம்பிக்கை யினால் உறுதி கொள்கிறது. சுருக்கமாகத் தானியேலின் செய்தி கடந்தகால, எதிர்கால எதிர்ப்புகளை நிகழ்கால நிகழ்ச்சிகளில் பிரதி பலிக்கச் செய்கிறது; அவற்றைத் தொகுத் தளிக்கிறது.

ஒரு நீண்ட பாரம்பரியத்தின் முடிவில் தானியேலின் போதகம் தோன்றுகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களுக்கும் உலகப் பேரரசுகளுக்குமிடையேயுள்ள எதிர்ப்பில் இறைவனுக்கும் தீமைக்கும் நடக்கும் போராட்டத்தை உறுதிப்படுத்தி இந்த எதிர்ப் புகளின் நீண்ட தொடரில் கவனம் செலுத்து கிறது. இவற்றைத் தொடக்கத்திலிருந்து (ஆதாம், மனுகுலம், பபேல்கோபுரம் கட் டியவர்கள் ஆகியோரின் கிளர்ச்சிகள்) அசீரி யர்கள் படையெடுப்பு, ஆதிக்கம் (மூன்றாம் திகிலத்து பிலேசர், ஐந்தாம் சல்மனேசர் சனகெரிபு), பாபிலோனிய ஆதிக்கம் (நபோ போலசார், நெபுகத்னேசர்) வரை உள்ள வரலாறு அடையாளப்படுத்துகிறது அல்லது விவரிக்கிறது. தானியேலின் போதகம், இறைவன் தமது மக்களைத் தண்டிக்க புற இன மக்களைப் பயன்படுத்திய போதும் கூட (எசா *10:5-9.27-34; 14:24-27;* எரே *50-51;* எசா *13-14*) புற இனத்தவர் அழிவது உறுதி, இஸ்ராயேலார் வெற்றி பெறுவது உறுதி (எசா *10:20-27; 41:8-20;* எசே *36-37*) என்ற இஸ்ராயேலரின் விளக்கத்தை எதிரொலிக்கி றது. இறைவாக்கினர்கள் பயன்படுத்திய பல கருத்துக்கள் தானியேல் நூலில் மீண்டும் வருகின்றன. எசேக்கியேல் *(38:15-18)*, யோவேல் *(4:2.9-14)*-இல், இறைமக்கள் இறு திச் சோதனைகளை எதிர்நோக்குகின்றனர். நாடுகளை இறைவன் தீர்ப்பிடும் கருத்து பல இறைவாக்கினர்களுக்குப் பொதுவானதா கும் (ஆமோ *1-2;* எசா *14-27;* செப் *1-2;* எரே *12:14; 25:15;* எசே *25-32;* யோவே *4:1-17*). இறந்தோரின் உயிர்ப்பு எசாயாவிலும் *(26:19)*, எசேக்கியாவிலும் *(37:11-14)* குழப்ப மான முறையில் கூறப்பட்டுள்ளது. வெட் டப்பட்ட மரம், சிங்கங்கள், சிறுத்தை, செம் மறிக்கடா, வெள்ளாட்டுக்கடா போன்ற தானியேலுக்குப் பிரியமான உருவகங்கள் பழங்கால நூல்களிலும் இடம் பெறுகின்றன (ஒசே *13:17-18;* எசா *15:9;* எரே *5:6; 49:19; 50:17;* செக் *10:3*). மலையிலிருந்து பெயர்க்கப்பட்டுச் சிலையைத் தாக்கி நொறுக்கும் கல் (தானி *2:44-45*) எசாயாவி லும் *(17:10; 26:4; 32:2)*, உபாகமத்திலும் *(32:4-15)* குறிக்கப்படும் கல்லாகிய யாவே இல்லையா? தானியேல்நூல் ஆசிரியர், கடந்த காலத்திலிருந்து இவற்றையெல்லாம் தொகுத்துச் சேர்த்து, அவற்றை விரிவாக்கித் தமது நோக்கத்திற்கேற்பப் பயன்படுத்துகி றார். அதன் விளைவு அவருக்கே உரிய ஓர் ஒப்பற்ற நூலாகும். இந்த இறைவாக்கு வர லாற்றின் போதகம் கருத்துச் செழிப்பு மிக்க தாகும். இதில் நிகழ்காலச் சூழ்நிலை கடந்த காலப் பல சூழ்நிலைகளால் ஆதரவு பெறுகி றது. அதனால் வருங்காலம் எப்படியிருக்கும் என்று முன்னறிவிப்பதை நோக்கி நூல் இயங்குகிறது. இந்த வரலாற்று இயலின் முக்கிய மையக்கருத்து இறைவனே வர லாற்று நாயகனவார் என்பதாகும்.

ஆ) வரலாற்று நாயகனான இறைவன்: இறைவனே வரலாற்றின் தலைவன் என்ற மையக் கருத்தைச் சுற்றி நூல் அமைந்துள் ளது. இப்போதகத்தை ஆசிரியர் முந்தைய இறைவாக்கினர்களிடமிருந்து எடுத்தே பயன்படுத்துகிறார். எசா *17:3-6*-இல் இறை வன் உலகின்மேல் அமைதியாய் அரியணை வீற்றிருப்பதாயும், தமக்கே உரிய நேரத்தில் அதன் காரியங்களில் தலையிடத் தயாராக இருப்பதாயும் சித்தரிக்கப்படுகிறார். மனித னது எந்த முயற்சியும் அவரதுதிட்டத்தை மாற்றாது. குயவன் களிமண்ணைப் பயன் படுத்துவதுபோல் இஸ்ராயேலின் கதியையும் புறஇனத்தாரின் கதியையும் கட்டுக்குள் கொண்டிருக்கிறார் என்று எரேமியா போதித்தார் *(18:1-12)*. அவர் தமது விருப்பம்

போல் நாடுகளைக் கட்டி நிலைநாட்டுகிறார் *(18:7 தொ)*. அவர்களின் பாவங்களைப் பாகு பாடற்ற முறையில் தண்டிக்கிறார் *(25:15 தொ)*. தானியேல்நூல் ஆசிரியர் இந்தப் போத கத்தைப் பொதுப்பாணிக் கதைகள், காட்சி கள் வழியாகக் கொடுமைப்படுத்தப்பட்ட தமது கால சகசமயத்தவர்களுக்கு மீண்டும் போதிக்கிறார்.

இறைவனது அரசு வருங்காலத்தை மட் டும் சார்ந்ததன்று. அது எப்போதும் மனிதர் கள் காரியங்களில் செயலாற்றுகிறது. அவர் உயிருள்ள இறைவன் *(தானி 6:26)*. அரசர் களுக்கெல்லாம் ஆண்டவர் *(2:47)*. அரசுகளை வீழ்த்தி வேற்று அரசுகளை ஏற்படுத்துகிறவ ரும் அவரே *(2:21)*. அவரது அரசு முடிவில் லாதது. அவரது வல்லமை என்றென்றும் உளது [*3:100(33)*]. மனித ஆட்சியாளர்கள் அவரது வல்லமையை ஏற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் அதை ஏற்கமறுக்கும் போது, நிகழ்ச்சிகளை ஒழுங்குசெய்து அவர் களது அகந்தையை வீழ்த்தி அவர்களுக்குப் பாடம் கற்பிக்கிறார். நெபுகத்னேசர் அவரது வல்லமையை ஏற்றுக் கொண்டான். ஆகவே அவனதுஅரசின் மேன்மைக்கான அவனது சீரும் சிறப்பும் அவனுக்கு மீண்டும் கிடைத் தன *(4:31-31)*. ஆனால் அவனது வழித்தோன் றலான பெல்சாட்சரின் இறை நிந்தனையான நடத்தை அவனது அரசமரபின் அழிவுக்கு இட்டுச் செல்கிறது *(தானி 5)*. மனித காரியங் களில் இறைவன் ஒருவரே தலைவராவார். அவரது திருவுளத்தை அறிய வழிவகைகள் இல்லாமல் அவர் மனுகுலத்தை விட்டுவிட வில்லை. அதைப் புறமதச் சோதிடர்களால் கண்டுபிடிக்க முடியாது. அவரது தேர்ந்தெடுக் கப்பட்ட மக்களில் சிலருக்கு அளிக்கப் படும் வெளிப்பாட்டால் அதை அறிய முடி யும். நிகழ்ச்சிகளின் உட்பொருள் பற்றிய பிரச்சனை எழும்போது புறமத மந்திரவாதி கள் திறனற்றவர்களாகி விடுகின்றனர் *(2:7-10)*. ''மனிதர்களின் அரசை, உன்னதமா னவரே ஆள்கின்றார். தாம் விரும்பிய வர்க்கே அதனைத் தந்தருள்வார்'' *(4:22.29)*. கடந்த காலத்தில் இஸ்ராயேலில் பிரமாணிக் கமாய் இருந்த மறைசாட்சிகளுக்கு அவர் காட்டிய பராமரிப்பு *(தானி 1-6)* இம்மக்க ளின் இறுதி மேன்மைக்கு உத்திரவாத மாகும். ஆயினும் மனுகுலம் படிப்படியாகச் சீரழிவதாயும் இறைவனுக்குக் காட்டும் எதிர்ப்பில் மேலும் மேலும் பலமாய் வளர் வதையும் ஆசிரியர் காண்கிறார் *(தானி 2:7)*. ஒரு வேளை ஆசிரியர் மனதில் கொண் டிருந்த பேரரசுகள் பாபிலோனிய, மேதிய, பாரசீக, கிரேக்கப் பேரரசுகளாக இருக்க லாம். இவற்றை வரலாற்றில் வெறும் வரிசையாக வரும் அரசுகளாகக் கருதுவதை விட, மனித அரசுகளின் அடையாளமாகப் பயன்படுத்துவதில் ஆசிரியர் அக்கறை கொள்கிறார். மனிதக் கொடுநோக்கும் திமி ரும் கிரேக்கப் பேரரசைச் சார்ந்த 4-ஆம் அந்தியோக்குவில் உச்சநிலை அடைகின் றன. இக்கொடியவன், தானே கடவுள்போல் செயலாற்றினான். உண்மையான இறைவ னது வழிபாட்டை அகற்றித் தனது வழிபாட் டைப் புகுத்தினான். இறைவனின் புனிதர் களைக் கொடுமைப்படுத்தினான் *(7:25)*. நூலின் வெளிப்பாட்டுப் பகுதிகள், இவற்றை யெல்லாம் இறைவன் முன்னறிந்திருந் தார் எனக்காட்டுகின்றன. இறுதியாக மனித அரசர்கள் இறைவனைச் சேர்ந்ததையெல் லாம் எதிர்க்கும் அளவுக்குத் தகாத வழிச் செல்லும்போது இறைவன் வரலாற்றில் தலையிடுகிறார். ஒரு வீறார்ந்த காட்சியில் *(7:9-10; காண்க. 2:44 தொ)* உலக அரசர்கள் தீர்ப்பிடப்படுவதையும் ''மனுமகனைப் போன்ற ஒருவரால்'' இறையரசு தொடங்கி வைக்கப்படுவதையும் காண்கிறோம். மனி தர்கள்மேல் ஆட்சி என்பது இறைவனுக்கு உரிமையானதாகும் [*3:100(33)*]. அது மிக உன்னதரின் புனிதர்களில் அதாவது தேர்ந்தெடுக் கப்பட்ட மக்களில் இவ்வுலகில் உண்மை யாகிறது. இந்த அரசு எல்லாவற்றையும் உள் ளடக்கியதாகும்; முடிவில்லாதது. எல்லா மக்களும் இனத்தாரும் மொழியினரும் இறைவனுக்குப் பணிந்து ஊழியம் செய்வர் *(7:14-27)*. இவ்வாறு நூல்முழுவதுமே இறை வனுடைய யாவும் கடந்த தன்மை, வல் லமை ஆகியவை பற்றிய வீறார்ந்த அறிக்கை யாகும். இக்கருத்து நூல் முழுவதும் ஆதிக் கம் செலுத்துகிறது. கொடுமைப்படுத்தப் பட்ட யூதர்களுக்கு ஆறுதலின் ஊற்றான நம்பிக்கைச் செய்தியாக விளங்கியது.

**இ) மெசியாக் கோட்பாடு:** பூமியில் உள்ள எல்லாவற்றையும் உள்ளடக்கும் இறைவனது இந்த முடிவில்லாத ஆட்சி மெசியா அரசாகும். மனித உதவியின்றியே இவ்வரசு இறைவனால் தொடங்கி வைக்கப் படுகிறது. மெசியா என்ற ஒருதனி ஆளைப் பற்றி ஒன்றும் கூறப்படாமை நமக்கு வியப்பு அளிக்கலாம். ''மனுமகன் போன்ற ஒருவர்தான்'' *(7:13)* இங்குக் குறிக்கப்படும் மெசியா என்று சிலர் கருதியுள்ளனர். ஆனால் இச்சொற்றொடர் ''உன்னதமானவ ரின் புனிதர்கள்'' அல்லது பக்தியுள்ள இஸ் ராயேலரைக் கொண்ட இறைவனது அரசை அடையாளமாக உணர்த்துகிறது. நூலில் காணப்படும் மெசியாக் கோட்பாடு ஆட்தன் மையற்றது; குழுத்தன்மையுடையது. இறை யரசு ஏற்படுவதைப் பற்றியே ஆசிரியர் கவ னம் செலுத்துகிறார். இந்த அரசை ஆளும் தாவீதின் மகனைப்பற்றி ஒன்றும் கூற வில்லை. இதில் நாடு கடத்தப்பட்டுத் திரும் பிய காலத்தில் - பாரசீகர், கிரேக்கர்கள் காலத்தில் - இஸ்ராயேலில் நிலவிய மெசியா பற்றிய பொதுப்போதகத்தோடு ஆசிரியர் ஒத்துப்போகிறார். மெசியா என்ற தனிஆளை விட இறைவன் தமது மக்களுக்குத் தயாரித் திருக்கும் மகிமைமிக்க வருங்காலம் யூத சமய போதகத்திற்கு எப்போதும் மையக் கருத்தாகும். பாரம்பரிய மெசியா போதகத் தைப் பற்றிப் பேசும் எசாயாகூட புதிய தாவீது மரபு அரசனைக் குறிக்காமல் இவ்வரசைப் பற்றிப் பேசுகிறார் *(எசா 2:2-4; 31:1தொ- உடன் 1:25-28-ஐ ஒப்பிடுக)*. தாவீது வீட் டைச் சேர்ந்த வரலாற்று அரசர்களின் நடத் தையால் ஏற்பட்ட ஏமாற்றம், எரேமியா, எசேக்கியேல் போன்ற இறைவாக்கினர்களை யாவேயின் புதிய அரசில் கவனம் செலுத்த இட்டுச் சென்றது. இதுவே எசாயாவுக்குப் பின் நாடு கடத்தப்பட்டுப் பின்வந்த சில இறைவாக்கினர்களுக்கும் பொருந்தும். தானியேல் நூல் எழுதப்பட்ட காலத்திற்குப் பின்புதான் உலகில் இறைவனது புதிய அர சில் மெசியா என்ற தனி ஆளைப்பற்றி யூதர்கள் கவனம் செலுத்தினர். தானியேல் நூலில் காணப்படும் மெசியாக் கோட்பாடு இஸ்ராயேலின் நம்பிக்கையை, அது புதிய ஏற்பாட்டில் நிறைவாக உண்மையாகுமுன், அதன் இறுதிக் கட்டத்திற்குக் கொண்டு வரு கிறது. புதிய ஏற்பாட்டுக் காலத்திற்குள் மெசியாவின் பாகம் பற்றிய விசுவாசம் நன்கு வேரூன்றிவிட்டது. இது யூதர் நூல்களி லிருந்தும் புதிய ஏற்பாட்டிலிருந்தும் தெளிவா கிறது. இதற்காகத் தானியேலின் போதகம் முக்கியம் குறைந்தது என்று கூறவில்லை. உண்மையில் இந்த அரசின் இயற்கை கடந்த தன்மை, இதன் விண்ணகத்தோற்றம், எல் லாம் உள் அடக்கும் தன்மை, இதன் முடி வில்லாமை ஆகியவற்றை வலியுறுத்துவ தில் இந்நூலின் மெசியா போதகம் உச்ச நிலை அடைகிறது எனலாம். ''வானத்தின் மேகங்களின் மீது மனுமகனைப் போன்ற ஒருவர்'' *(7:13)* நேரடியாகத் தனிநபர் மெசி யாவைக் குறிக்கவில்லையானாலும் விரை வில் இச்சொல் அப்பொருளைப் பெற இருந் தது. இறைவாக்குகள் உண்மையானபோது, தனிநபரான மெசியாவால் அரசு தொடங்கப் படுகிறது. அவர் தாவீதின் மகனாய் இருந்த தோடு உண்மையான இறைமகனாகவும் இருந்தார்.

**ஈ. உயிர்ப்பும் வருங்கால வாழ்வும்:** ஆசிரி யரது காட்சியில் இறைவனது அரசு அந்தி யோக்குவின் அழிவிற்குப் பின் தொடங்கி வைக்கப்படுகிறது *(7:11-14.25-27; 8:25 தொ; 9:26 தொ)*. ஆனால் 11:40-இல் அந்தியோக்கு வின் மரணத்தை விவரித்த பின், இந்த அரசின் தொடக்கத்தைக் குறிக்க ஆசிரியர் தவறிவிடுவது விநோதமாகத் தோன்றலாம். இதற்குப் பதிலாக இறைவனது மக்கள் இது வரை அனுபவித்த துன்பங்களையும்விட அதிகக் கடுமையான துன்பங்கள் அனுபவிக் கும் காலத்தை விவரிக்கத் தொடங்குகிறார். இந்தப் புதிய இடுக்கண்மிக்க காலத்தில் முடிவில்லாத வாழ்வுக்காகக் குறிக்கப்பட்ட நீதிமான்கள் மீட்கப்படுவர் *(12:1)*. இவர் களும் முந்திய தலைமுறைகளைச் சேர்ந்த நீதிமான்களும் மரணத்தின் பிடியிலிருந்து உயிர்த்தெழுந்து முடிவில்லா வாழ்வு பெறு வர். வானத்து விண்மீன்களைப் போல் ஒளி வீசித் திகழ்வர். தீயவர்கள் வெட்கத்திற்கும் முடிவில்லா இழிவுக்கும் உள்ளாவர் *(12:2-3.13)*. இங்கு, இதுவரை பழைய ஏற் பாட்டிலேயே காணப்படாத அளவு உடல் உயர்ப்புப் பற்றித் தெளிவான யூத போதனை யைக் காண்கிறோம். இது விசுவாசத் தொகுப்புக்கு இந்நூல் அளிக்கும் முக்கிய பங்காகும். இந்த விசுவாசம் எபிரேய விவி லியத்திலேயே தனித்தன்மையுடையதாகும்.

ஆன்மாவின் அழியாமைக் கோட்பாட்டை விட இதுசெமித்திய மனப்போக்குக்கு மிகவும் பொருளுடையது. இது ''சேயோலில்'' வாழும் நிழல்வாழ்வு என்னும் போதகத்திலிருந்து யூதர்களுக்கு விடுதலை அளித்தது. இந்த விசுவாசம் அந்தியோக்கு கொடுமைப் படுத்திய காலத்தில் *(2 மக் 7)* இறை சாட்சிகளைக் காத்து உற்சாகப்படுத்தியது; வெற்றிமிக்க நம்பிக்கையோடு மறை சாட்சி மரணத்தை எதிர்கொள்ளத் துணிவு அளித்தது. ஆனால் தானி *12:1-3.13*-இல் காண்கின்ற படி உயிர்ப்புப்பற்றிய கோட்பாடு, பிற்காலப் போதகம் அளிக்கும் தெளிவைக் கொண்டிருக்கவில்லை. ஏனெனில் உயிர்ப்புக்குப் பின் வரும் வாழ்வு விண்ணகத்திலா பூமியிலா என்று வாசகம் தெளிவாகக் கூறவில்லை. மேலும் இஸ்ராயேலில் சிலரது உயிர்ப்பை மட்டும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். புற இனத்தாரின் உயிர்ப்பைப்பற்றி அவர் அக்கறை கொள்ளவில்லை. மேலும் நீதிமான்களின் உயிர்ப்பைமட்டும் ஆசிரியர் கருத்தில் கொண்டிருக்கலாம் *(2:1-3)*. இவ்விதம்தான் இவ்வாசகத்தைச் சாலமோனின் சங்கீதங்கள் என்ற யூதநூல் புரிந்து கொண்டதாகத் தெரிகிறது. இந்த முக்கிய கூறுகளைப் பிற்கால வெளிப்பாடுகள் நிறைவுசெய்யும். யூதர்களுக்கும் புற இனத்தார்க்கும், நல்லோர்க்கும் தீயோர்க்கும் உயிர்ப்பு பொதுவானதாகும் என்று இந்தப் பிற்கால வெளிப்பாடுகள் காட்டும்.

**உ. முடிவின் காலமும் நேரமும்:** ஆசிரியர் கூறும் காலக்கணிப்பு இறைவனது அரசு உடனடியாக வரவேண்டியதொன்றாகும் என்ற உணர்வை ஏற்படுத்தலாம் *(7:25-27; 9:24-27; 12:6 தொ. 11தொ)*. உண்மையில் ஆலயப் பலிகள் தடைசெய்யப்பட்டதிலிருந்து மூன்றரை ஆண்டு முடிவில் அரசு வருவதாக ஆசிரியர் இறைவாக்கு உரைக்கிறார். இந்த வாக்கு அக்கால யூதர்களுக்கு மகிமைமிக்க உறுதியும் நம்பிக்கையும் அளிக்கும் செய்தியைக் கொடுத்திருக்க வேண்டும். ஆனால் இக்காலம் பற்றிய ஆசிரியரது கேள்விக்குக் ''குறிக்கப்பட்ட நாள் வரையில் இந்தச் சொற்கள் மறைக்கப்பட்டு முத்திரையிடப்பட்டிருக்கும்'' *(12:9)* என்று பதில் கிடைக்கிறது. வெளிப்பாட்டுக் காட்சியாளர் இறைவாக்குகளும் அந்தியோக்குவின் வீழ்ச்சியும் ஒருசேர நிகழும் என எதிர்பார்த்திருக்கலாம். ஆனால் அது நிறைவேறுதலின் துல்லியமான காலம் அவருக்கு வெளிப்படுத்தப்படவில்லை. இப்படிப் பட்ட தொலையணிமை முன்னோக்கு இன்மை இறைவாக்குரைத்தலுக்குப் பொதுவான பண்பாகும். நிறைவேறுதல் பற்றிய துல்லியமான நேரம் ஒரு போதும் வெளிப்படுத்தப்படுவதில்லை. இறைவனது பெரும்பாலான இறைவாக்குகளில் இறைப் பயிற்சியியலின் கூறு இருப்பதே இதற்குக் காரணமாகத் தோன்றுகிறது. மனிதனது மீட்புப் பற்றிய இறைத்திட்டத்தில் இறைவாக்குகள் ஒரு பகுதியாகும். அவை நிறைவேறும்போது அவற்றிற்கு மனிதன் அளிக்கும் பதிலும் கணிப்பில் எடுத்துக் கொள்ளப்படுகிறது *(எரே 18:1-2)*. இறைவனுக்கு ஆயிரம் ஆண்டுகள் ஒரு நாளைப் போன்றதாகும் *(2 பேதுரு 3:8)*. இறைவாக்கு நிறைவேறும் நாளையோ நாழிகையையோ அவர் யாருக்கும் வெளிப்படுத்துவதில்லை *(மாற் 13:32; மத் 24:36; அ.ப. 1:7)*.

**ஊ) வானதூதர்கள்:** இறைவனது திருவுளத்தை மனிதர்களுக்கு வெளிப்படுத்தும் அவரது பணியாளர்களாக வானதூதர்களுக்குப் பொருள் பொதிந்த பாகத்தை அளிப்பதில் தானியேல் முந்திய விவிலிய நூல்களைக் கடந்து செல்லுகிறது. இந்நூலில் வானதூதர்கள் அடிக்கடி குறிக்கப்படுகின்றனர். பல்லாயிரம் பேர் இறைவனது அரியணையைச் சூழ்ந்து நின்று அவருக்குப் பணிபுரியவும் *(7:10)* அவரது சட்டத்தை நிறைவேற்றவும் *(4:13:17)* தயாராக உள்ளனர். கபிரியேல் தூதர் தானியேலுக்கு இறைவனது செய்திகளைக் கொண்டு வருகிறார் *(9:21 தொ; 10:4 தொ)*; அவருக்குக் காட்சிகளின் பொருளை விளக்குகிறார் *(8:6; 9:21)*. தீச்சூளையில் இளைஞர்களையும் *(3:28)* சிங்கக் குகையில் தானியேலையும் *(6:2)* வானதூதர்கள் காப்பாற்றுகின்றனர். தூதர் மிக்கேல் இஸ்ராயேலின் தலைமைக் காவலராகத் திகழ்கிறார் *(10:13.21; 12:1)*. புறஇன நாடுகளும் இறைவன்முன் தங்களுக்காகப் பரிந்துபேசப் பாதுகாவலரான தூதர்களைக் கொண்டுள்ளன. தானியேல் நூலில் காணப்படும் இந்த வானதூதர் இயல், யூதராபிகளின் நூல்களிலும் தொடக்க காலக் கிறிஸ்துவ இலக்கியங்களிலும் காணப்படும் மிகவும் வளர்ச்சியடைந்த வானதூதர் இயலுக்கு வழி கோலுகிறது.

*18. புதிய ஏற்பாட்டில் தானியேல் நூல்:* தானியேல் புதிய ஏற்பாட்டில் ஒரே ஒருதரம் எடுத்துக் கூறப்படுகிறது. ''பாழாக்கும் அருவருப்பு'' இயேசுவின் வெளிப்பாட்டுரையில் குறிக்கப்படுகிறது (மத் 24:15; மாற் 13:14). தானி 12:2-இலிருந்து எடுக்கப்பட்ட சொற்களில் மரித்தோர் உயிர்ப்பு மத் 25:46-இல் விவரிக்கப்படுகிறது. எல்லாவற்றிலும் முக்கியமான குறிப்பு தானி 7:13-ஐ- இயேசு தமக்கே சாற்றி யூதப்பொதுச்சங்கத்தின் முன் அறிவித்ததும் (மத் 26:64; மாற் 15:62;லூக் 23:69) இயேசு தம்மையே ''மனுமகன்'' என்று விரும்பி அழைத்துக் கொண்டதுமாகும்.

*19. இக்காலத்திற்கு:* ஒரு நூல் திருமுறை நூலாகக் கருதப்பட வேண்டுமென்றால், அது எழுதப்பட்ட காலத்திற்கு மட்டுமன்று, எக்காலத்திற்கும் பொருத்தமுடையதாக இருக்க வேண்டும். இது தானியேல் நூலுக்கு மிகவும் பொருந்தும். பிரமாணிக்கமின்மையா, சாவா என்ற இறுதிச் சவாலை மக்கள் எதிர் கொள்ளும்போதெல்லாம் துணிவைக் கோரும் இந்நூலின் கோரிக்கை தக்க பதிலைப் பெறும். ஆனால் இடுக்கண் மிக்க காலத்தில் துணிவு, தங்கள் வாழ்வில் சிறுசிறு காரியங்களுக்குப் பிரமாணிக்கமாய் இருப்பவர்களுக்குத்தான் வரும். தானியேல் நூல் இடுக்கண் மிக்க காலத்திற்கு உரிய நூல் மட்டுமன்று, சாதாரண காலத்திற்குரிய ஒரு பயிற்சி நூலும் ஆகும். இந்நூலின் நோக்கம், கடந்த கால இறைவாக்குகளில் விசுவாசம் கொள்ளவும், அவை நிறைவேறும் என்று துன்பங்கள் நடுவிலும் எதிர்பார்த்துப் பொறுமையாக நிலைத்திருக்கவும் விசுவாசிகளை உற்சாகப்படுத்துவதாகும். இறைவனது ஆட்சி யாவும் கடந்தது. அவர் எப்போதும் வெற்றி பெறுவார். தீயோர் அழிவர். இறையரசு நிறுவப்படும். அதில் நீதிமான்கள் முடிவில்லா வாழ்வு பெறுவர் என்று இந்நூல் உறுதிஅளித்தது. இவ்வாறு இறைவனுக்கு எப்போதும் பிரமாணிக்கமாய் இருக்க மக்கபேயர் காலத்து யூதர்களுக்கு இந்நூல் பயிற்சி அளித்தது. இப்பயிற்சி எக்காலத்துக்கும் பொருந்தியதாகும்.

இந்நூலில் கூறப்படும் கோட்பாடுகள் அந்தியோக்குவின் காலத்திற்கு மட்டுமன்று, இக்காலத்திற்கும் பொருத்தமுடையதாகும். இந்நூலுக்கு இணையான புதிய ஏற்பாட்டுத் திருவெளிப்பாட்டு நூலைப்போல் இந்நூலின் செய்தியும் நிலையானதாகும். காலமும் இறைவனால் படைக்கப்பட்ட பொருளே. எல்லா வரலாற்று நிகழ்ச்சிகள்மேலும் இறைவன் தலைமை தாங்குகிறார். மனித காரியங்களை ஆட்சி செய்கிறார். தீமையை வெல்கிறார். தமது மக்களை அவர்கள் இறுதிக் கதிக்கு இட்டுச் செல்கிறார். இப்போதகத்தை மனுகுலம் ஒருபோதும் மறந்துவிடமுடியாது. இவையாவும், தானியேலுக்கு இருந்தது போல, நமக்கும் மறைபொருளாக இருக்கலாம். ஆனால் இவை ''குறிப்பிட்ட நாளில்'' உறுதியாக நிறைவேறும். அதுவரை தானியேலைப்போல் நாமும் நிறைவேறுதலுக்காகக் காத்திருக்க வேண்டும். இறைவனில் விசுவாசம் என்ன என்பதுபற்றிய வீறார்ந்த விளக்கமாகும் இந்நூல்.

உடல் உயிர்ப்பு, முடிவில்லா வாழ்வு ஆகியவை பற்றிய கிறிஸ்துவ நிறைவான போதகத்தோடு ஒப்பிடும்போது தானியேலில் வரும் போதகம் குறையுள்ளதாகத் தெரியலாம். ஆனால் திருமுறைநூல்களில் வேறெந்த நூலும் தானியேல் நூலைப்போல், ''இம்மை வாழ்வுக்கு மட்டும் நாம் கிறிஸ்துவில் நம்பிக்கை வைத்தவர்களாயிருந்தால், எல்லாரையும்விட நாம் இரங்குதற்குரியர் ஆவோம்'' என்ற பவுலின் கூற்றின் (1 கொரி 15:19) உண்மையை வெளிக்கொணரவில்லை. ஏனெனில் தனது குறுகிய வாழ்வே தன் ஊழி முழுவதையும் உள்ளடக்குகிறது என்று எண்ணும் மனிதனின் வருந்தத்தக்க நிலையை இந்நூல் நினைவுபடுத்துகிறது.

தானியேல் நூல் ஆசிரியர் உலக முடிவின் காலத்தைக் கணிப்பதில் மிகவும் தவறினார் என்று கூறலாம். இந்த விவிலியக்கணிதம், முடிவு காலக் கணிப்பு ஆகிய அயர்ச்சிதரும் காரியத்தை முயன்று தோல்வி கண்டார். இது தவறான பாதையென்று கண்டார். இது திருச்சபைக்கு முக்கியம் வாய்ந்ததாகும். அவரது தோல்வியும் திருமறைப் போதகத்தின் ஓர் அங்கமாகும். இது ''அந்நாளோ நாழிகையோ ஒருவனுக்கும் தெரியாது; தந்தைக்குத் தெரியுமேயன்றி வானதூதருக்கும் மகனுக்கும்கூட தெரியாது'' என்ற இயேசுவின் எச்சரிக்கையை (மாற் 13:32) நமக்கெல்லாம் நினைவுபடுத்தி நிற்கின்றது.



**திகிலத் - பிலேசர்** [(TIGLATH - PILESSER -எசாரா (ஆலய) மகனில் என் நம்பிக்கை (உள்ளது)].

மூன்றாம் திகிலத் - பிலேசர் அசீரிய அரசனும், பூல் என்ற பெயரில் பாபிலோனிய அரசனும் ஆவார் (கி.மு. 745-727). இவர் மூன்றாம் அதாது-நிராரியின் மகனும், ஐந்தாம் சல்மனேசரின் தந்தையும் ஆவார்.

இவர் ஆட்சிசெய்த அரச குடும்பத்தைச் சேர்ந்தவரல்லர். இவர் பதவியேற்பதற்கு முன் அசீரிய ஆதிக்கம் பல திறமையற்ற அரசர்களால் வீழ்ச்சியடைந்த நிலையில் இருந்தது. இவர் பதவி ஏற்றதிலிருந்து ஆட்சி செய்வதில் தன்மை முழுவதும் ஈடு படுத்திக் கொண்டார். அசீரியர்களின் பேரரசை உண்மையில் தொடங்கிவைத்தவர் இவரேயாவார். இந்த ஆட்சி இவரது இறப் பிற்குப்பின் 100 ஆண்டுகளுக்கு நீடித்தது. இவர் பாபிலோனியாவிலுள்ள அரமேய இனத்தைக் கைப்பற்றி, பாபிலோனியாவுக் கும் தன்னை அரசனாக்கிக் கொண்டார். இவ்வாறு பாபிலோனியாவையும், அசீரி யாவையும் ஒன்றாக்கும் இவரது முயற் சியை, இவருக்குப் பின் வந்த அரசர்களும் பின்பற்றினர். இவர் பாபிலோனிய மக்க ளைத் தனது பேரரசின் மற்றப் பகுதிகளுக்குக் குடியேற்றினார். இப்படிச் செய்து எல்லோ ரையும் ஒற்றுமைப்படுத்தி ஒரே அசீரியப் பேரரசை உருவாக்க முயற்சித்தார். அர்மோ னியாவிலுள்ள ஆபத்தான உரார்து அரசைக் கைப்பற்றச் செய்த இவரது முயற்சி வெற்றி பெறவில்லை. ஆனால் அதே நேரத்தில் சீரியா, பாலஸ்தீனத்தில் வெற்றி கண்டார். கி.மு. 734-இல் கலிலேயா மற்றும் கிலயா தைக் கைப்பற்றி அவற்றை ஒரு மாநிலமாக அசீரியப் பேரரசுடன் இணைத்துக் கொண் டார். கி.மு. 732-இல் இவர் தமஸ்குவைக் கைப்பற்றித் தரைமட்டமாக்கினார். இப் பகுதி அசீரியப் பேரரசின் ஒரு மாநிலமாக்கப் பட்டது. சீரியா, பாலஸ்தீனத்தைச் சேர்ந்த மற்ற அரசர்கள் இவருக்குச் சரணடைந்து கப்பம் கட்டி வந்தனர்.

இவர் கலிலேயா, கிலயாதைக் கைப்பற்றி யது *2 அர 15:29; 1 நாள் 5:6. 26*-இல் குறிக்கப்படுகிறது. ஆகாசு இவருக்குக் கப் பம் கட்டினார்; மேலும் தமஸ்கு, இஸ்ரா யேல் ஆகியவற்றிற்கு எதிராகத் தன் நாட்டுப் பாதுகாப்புக்காக இவரோடு கூட்டுச் சேர்ந்து கொள்ளக் கேட்டார் (*2 அர 16:7-9; 2 நாள் 28:20*). இச்செயலானது இறைவாக்கினர் எசா யாவால் கண்டிக்கப்பட்டது (*7:10-14*). திகி லத் - பிலேசர் தமஸ்குவைக் கைப்பற்றிய தும் ஆகாசு தமஸ்குவுக்குச் சென்று தனது பணிவைக் காட்டினார் (*2 அர 16:10*). *2 அர 15:19; 1 நாள் 5:26*-இல் இவர் பூல் என்று அழைக்கப்படுகிறார். இஸ்ராயேலின் மென கேம் இவருக்குக் கப்பம் செலுத்தினார் (*2 அர 15:19*).

**திகிலத் - பில்னேசர்** (TIGLATH - PILNESSER)

இது திகிலத் - பிலேசரின் மற்றொரு பெயர் (*1 நாள் 5:6; 2 நாள் 28:20*).

**திகைப்பு, திகில், வியப்பு,மலைப்பு** (ASTONISHMENT, AMAZEMENT)

விவிலியத்தில் வியப்பு என்பது இறை வன் வரலாற்றில் செயல்படும்போது மனி தன் காட்டும் உணர்வாகும். பழைய ஏற்பாட் டில், இறைவன் இஸ்ராயேல் மீதோ அயல் நாடுகளின் மீதோ தீர்ப்பிடும்போது இவ் வுணர்வு எழுப்பப்படுகிறது. புதிய ஏற்பாட்டில் இயேசுவின் கூற்றாலோ செயலாலோ இவ் வுணர்வு எழுகின்றது. ஒரே ஒருதரம் இவ் வுணர்வு உயிரற்ற பொருள்களுக்குச் சாற்றிக் கூறப்படுகிறது: ''விண்ணின் தூண்கள் அதிர் கின்றன; அவர் அதட்டலில் அதிர்ச்சியடை கின்றன'' (*யோபு 26:11*).

எபிரேய, கிரேக்க மொழிகளில் இவ் வுணர்வைக் குறிக்கும் மூலச்சொல் பலவாறாக மொழி பெயர்க்கப்படுகிறது (*உப 28:37; லேவி 26:32; 1 அர 9:8; 2 நாள் 7:21; 29:8; எரே 8:21; 25:11.18; 28:37; 44:22; மத் 7:28; மாற் 5:42; 10:24; லூக் 5:9*).

பழைய ஏற்பாட்டில் இந்த வியப்புணர்வு திகைப்பு, திகில், மலைப்பு, பயம் போன்ற உணர்வுகளையும் உள்ளடக்கும். யாவே தமது ஆலயத்தின்மீதும் தம் மக்கள் மீதும் கூறும் தீர்ப்புப் போன்ற எதிர்பாராத செயல்கள் இவ்வுணர்வைத் தூண்டலாம் (1 அர 9:8=2 நாள் 7:21). இதில் இரு கூறுகள் உண்டு. இறைவனுடைய ஆற்றல் மற்றும் மேலாண்மை கண்டு வியப்புறுதல்; இத்தகைய இறைவன் தாம் உடன்படிக்கை செய்து கொண்ட மக்களைத் தண்டிப்பது கண்டு திகைத்தல் (எரே 8:21; எசே 4:16; 12:19). இவ்வுணர்வு மறுவுலகைச் சார்ந்தவையாலும் மனிதனால் புரிந்து கொள்ள முடியாத இறைவனுடைய செயலாலும், இறைவனது நோக்கம் கடந்த காலத்திற்கு மாறுபட்ட விதத்தில் வெளிப்படும்போதும் எழக்கூடும். இவ்வாறு பழைய ஏற்பாட்டில் இவ்வுணர்வு அச்சத்தையும் கொண்டுள்ளது. இவ்வாறு தெரியாதவற்றையும் புனிதமானவற்றையும் காணும்போது இவ்வுணர்வு எழக்கூடும். மேலும், தீர்ப்பினால் யாவேயால் சந்திக்கப்படுபவனும் (எரே 25:9; 42:18; 52:37; எசே 5:15), ஒளி மற்றும் வாழ்வோரின் உலகிலிருந்து புறம்பாக்கப்படுபவனும் தூய்மையற்றவனும், தன்னைச் சுற்றியுள்ளோரையெல்லாம் தீட்டுப்படுத்துபவனும் (உப 28:37; 2 நாள் 29:8; எரே 29:18; 44:12; 51:41) பேரச்சத்திற்கு உள்ளாகிறான்.

புதிய ஏற்பாட்டில் இவ்வுணர்வு இயேசுவால் எழுப்பப்படுகிறது. இதில் எதிர்பார்க்காத ஒன்றை எதிர்கொள்வதால் எழும் மலைப்பும் திகைப்பும் உள்ளடங்கும். (மத் 13:54; மாற் 10:24-27; லூக் 2:47; 4:32). ஆண்டவரது அதிகாரத்தைக் கண்டு மக்கள் வியப்புறுகின்றனர் (மத் 7:28; 22:33; மாற் 7:37). இதிலே அச்சக்கூறும் உண்டு. இவ்வாறு, மிகுதியான மீன்பாட்டைக் கண்டு திகைப்புற்ற பேதுரு, ''ஆண்டவரே, நான் பாவி, நீர் என்னை விட்டுப் போய்விடும்'' என்று அரற்றுகிறார்.

ஆயினும் புதிய ஏற்பாட்டில், இவ்வுணர்வு அச்சத்தை மட்டுமின்றி கவர்ச்சியையும் ஈர்ப்பையும் உள்ளடக்குகிறது. இயேசு மக்கள் கூட்டத்தைக் கவர்ந்தது கண்ட தலைமைக் குருக்களும் மறைநூல் அறிஞர்களும் அவரைக் கொல்லத் தேடினர் (மாற் 11:18). பவுல் அளித்த ஆண்டவரின் போதனையைக் கேட்டு மலைத்துப்போன ஆளுநன் செருகியு பவுல் இயேசு கிறிஸ்துவில் விசுவாசம் கொள்கிறான். இறைவன்முன் எழும் அச்சம் அன்பாலும் விசுவாசத்தின் பணிவாலும் மேற்கொள்ளப்படுகிறது.

**திக்கிக்கு** (TYCHICUS - நற்பேறுடைய)

இவரைப்பற்றிப் புதிய ஏற்பாட்டில் பல இடங்களில் குறிப்புகள் உள்ளன (அ.ப. 20:4; எபே 6:21; கொலோ 4:7; 2 திமொ 4:12; தீத் 3:12).

இவர் பவுலுக்கு ''அன்புள்ள சகோதரர்'' என்றும், ''ஆண்டவருக்கு நம்பிக்கைக்குரிய பணியாளர்'' என்றும் (எபே 6:21), ''அவர் நம்பிக்கைக்குரிய பணியாளர், ஆண்டவர் பணியில் என் (பவுலின்) உடனுழைப்பாளர்'' (கொலோ 4:7) என்றும் விவரிக்கப்படுகிறார். இவரும் ஒனேசிமுவும் பவுலின் மடலைக் கொலோசேயர்களுக்கு எடுத்துச் சென்றனர். இருவரும், உரோமையில் சிறைப்பட்டிருந்த பவுலைப் பற்றிய செய்திகளை எல்லாம் அவர்களுக்கு அறிவித்தார்கள் எனலாம்.

அ.ப. 20:4-இல் திக்கிக்கும் துரோபிமும் ஆசியாவைச் சேர்ந்தவர்கள் என்றும், பவுலின் மூன்றாம் மறைபரப்புப் பணியின் முடிவில் அவருக்கு வழித்துணையாய்த் துரோவாவுக்குச் சென்றனர் என்றும் கூறப்பட்டுள்ளது. இவரைப்பற்றி வேறு குறிப்பு அப்போஸ்தலர் பணிநூலில் இல்லை என்றாலும் பவுலோடு பயணம் செய்த ''நாங்கள்'' என்பதில் இவரும் ஒருவராக இருக்கலாம். 2 திமொ 4:12, பவுல் திக்கிக்குவை எபேசுக்கு அனுப்புவதாகக் கூறுகிறது. ஆனால் எப்போது எங்கிருந்து அனுப்பினர் என்று குறிப்பிடவில்லை. தீத் 3:12, திக்கிக்கு, தீத்துவுக்குப்

பதிலாகக் கிரேத்தாவில் பணி செய்யத் தகுதியுடையவர் என்று சுட்டுகிறது. ஆனால் இம்மடல் எப்போது, எங்கிருந்து எழுதப்பட்டது என்று குறிப்பிடப்படவில்லை. 2 கொரி 8:22-இல்வரும் பெயர் குறிக்கப்படாத ''வேறொரு சகோதரர்''திக்கிக்குவாக இருக்கலாம் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். இவர் பிற்காலத்தில் கொலொப்போனில் ஆயராக இருந்து மறைசாட்சியாக மரித்தார் என்று பாரம்பரியம் கூறுவதும் யூகங்களை அடிப்படையாகக் கொண்டதே.

**திக்ரீசு** (TIGRIS)

இது மேற்காசியாவிலுள்ள பெரிய நதிகளில் ஒன்று. விவிலியப் பாரம்பரியப்படி இன்பவனமாகிய ஏதேன் தோட்டத்தில் பாய்ந்து கொண்டிருந்த நான்கு ஆறுகளில் ஒன்று. ''இது அசீரியாவிற்குக் கிழக்கே ஓடுகின்றது'' (*ஆதி 2:14*). தானியேல் நூலின்படி, இறைவாக்கினர் தானியேல் இந்த நதியின் கரையில்தான் தனது முக்கிய காட்சியைக் கண்டார் (*தானி 10:4*).

இந்நதி தியார்பெக்கிரின் வடமேற்குப் பகுதியில் அர்மேனியாவில் தொடங்கி, தென்கிழக்காக ஓடி, மோசூல், தெக்ரித், சமரா, பக்தாத், குர்-ஏல்-அமாரா ஆகிய இடங்களைக்கடந்து பாஸ்ராவுக்கு வடக்கில் ஓடி, யூப்பிரத்திசுவில் கலந்து சாத்-ஏல்-அரபு நதியாக உருவெடுத்துப் பாரசீக வளைகுடாவில் விழுகிறது. இதன் முக்கிய கிளைநதிகள் மேல், கீழ்சாபு, அதெயிம் மற்றும் தியாலா ஆகும். இவை மோசூலுக்கும் பக்தாத்துக்கும் இடைப்பட்ட பகுதியில் திக்ரீசுடன் சேருகின்றன. அமாராவுக்குத் தெற்கில் கெர்கா வந்து சேர்கிறது. திக்ரீசின் கரைகளில் பல முக்கிய நகரங்கள் இருந்திருக்கின்றன. மோசூலுக்கு எதிர்க்கரையில் அசீரியப் பேரரசின் தலைநகரான நினிவேயின் சிதைவுகள் உள்ளன. இன்னும் தெற்கில் மேற்குக் கரையில் பழங்கால அசூர் இருந்த இடமாகிய கலாத் செர்காத் உள்ளது. இது அசூர் என்ற தெய்வத்தின் வழிபாட்டு மையமாகத் திகழ்ந்தது. இன்னும் தெற்கில் பக்தாத் பகுதியில் ஓபிஸ் அமைந்திருந்தது. இது புதிய பாபிலோனியாவிலும் பிற்காலத்திலும் வணிகமையமாகத் திகழ்ந்தது. கிழக்குக் கரையில் சுல்மான் பாக் என்ற இடத்தில் பார்த்தியர்களின் மற்றும் சுசானியர்களின் தலை நகரமான ஸ்தெசிபோன் இருந்தது.

**திக்லா** (DIKLAH - பனை மரத்தோட்டம்)

யோக்தானின் மகன். ஆகவே அரேபிய இடத்தைக் குறிக்கலாம் (*ஆதி 10:27; 1 நாள் 1:21*). இது ஒரு பாலைவனச் சோலையாக இருந்திருக்கலாம். இது வாடி சிர்கானின் தென்முனையிலுள்ள பிரோக்கோபியசின் பொய்னிக்கோன் என்ற இடத்தில் இருந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**திக்வா** (TIKVAH - நம்பிக்கை)

1. இறைவாக்கினி உல்தாவின் மாமனார். இவள் யோசியா அரசன் காலத்தில் இறைவாக்கு உரைத்தாள் (*2 அர 22:14; 2 நாள் 34:22*).

2. யாகிசியாவின் தந்தை. இவர் புறவின மனைவியரை நீக்கிவிடும் திட்டத்தை எதிர்த்தவர் (*எஸ் 10:15*).

**திசகாபு** (DIZAHAB - தங்கமுள்ள பகுதி)

அராபாவிற்குத் தென் கிழக்கே உள்ள ஓர் இடம். மோசே இஸ்ராயேல் மக்களுக்கு இறுதியாகப் பேசிய இடம் என்று சொல்லப்படும் பல இடங்களில் ஒன்று (*உப 1:1*). இது இருந்த இடம் தற்போது தெரியவில்லை.

**திசபே** (TISHEBE)

இது எலியாவின் சொந்த ஊரின் பெயராகும். இவரது தந்தை, குலம் பற்றி எக்குறிப்பும் இல்லை. ஆனால் எலியா திசபேயர் என்று ஆறுமுறை குறிக்கப்படுகிறார் (*1 அர 17:1; 21:17.28; 2 அர 1:3.8; 9:36*). இவர் கிலயாதில் வாழ்ந்து வந்தார் (*1 அர 17:1*). திசபேயை அடையாளம் காட்ட, பல முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன. அவைகளின் விளைவு தெளிவாக இல்லை. பாரம்பரியம் இவ்விடம் யோர்தானுக்குக் கிழக்கில் 14 கி.மீ. தொலைவிலும் வாடி யாபிசுக்குச் சிறிது தொலைவில் உள்ள லிஸ்திப்பு என்ற

இடத்திலும் இருந்ததாகக் கூறுகிறது. இது உண்மையா என்பது ஐயத்திற்குரியது. எலியா ஒரு இஸ்ராயேலரா என்பதே ஐயத்திற்குரியதாகும். காண்க: எலியா.

**திசாத்தி / இட்சாதே** (TZADDI, SADE)

எபிரேய நெடுங்கணக்கில் பதினெட்டாவது எழுத்து. அகரவரிசைச் சங்கீதமாகிய *119-இல் 18-ஆம்* பகுதிக்கு இவ்வெழுத்து தலைப்பாக உள்ளது. இப்பகுதியின் ஒவ்வொரு வரியும் இவ்வெழுத்தோடு தொடங்குகிறது.

**திசிபே** (THISBE)

வடக்குக் கலிலேயாவிலுள்ள ஓர் இடம் *(தோபி1:2)*. இந்த இடத்திலிருந்துதான் தோபியா அசீரியர்களால் சிறைப்படுத்தப்பட்டார் *(2 அர 15:29; 17:6)*. இந்த இடத்தை அடையாளம் காட்ட முடியவில்லை. தோபியா நூலின்படி, கெதேசு நப்தலிக்குத் தெற்கிலும் ஆசேருக்கு *(காசோர்)* வடக்கிலும் இருந்ததாகத் தெரிகிறது. சீனாயிக்கு வாசகம் இவ்விடம் போகோருக்கு வடக்கில் இருந்ததாகத் தெரிவிக்கிறது. எபிரேய, அரமேயிக்கு வாசகங்கள் இவ்விடத்தைக் குறிக்கவில்லை. வுல்காத்தா வாசகம் செபெத்து என்ற இடத்தைக் குறிக்கிறது *(காண்க: யோசு 19: 37-39; 20:7; 1 மக் 11:63)*.

**திசை நிர்ணயித்தல்** (ORIENTATION)

**1. திசைப்படுத்தும் அமைப்புகள்:** திசையறி கருவி கண்டுபிடிக்கப்படுமுன் உள்ள நீண்ட வரலாற்றில் திசையை நிர்ணயிக்க பலமுறைகள் பயன்பட்டன. அவை அடிப்படைத் திசைகள், தல புவியியல், சூரியன், துருவம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டன. எபிரேய மக்கள் முதல் மூன்றையும் நன்கு அறிந்திருந்தனர். இவற்றில் எது தொன்மையானது என்று கூற முடியாது. ஆனால் ஒன்றுக்கு ஒன்றாக மாற்றிப் பயன்படுத்தினர். இவற்றில் அடிப்படையான கருத்து இட அமைப்பாகும்.

**2. விவிலியத்தில் திசை நிர்ணயம்:** எபிரேயர்கள் உலகை நான்கு பகுதிகளாகப் பிரித்து அவற்றை ''உலகின் நாற்புறம்'' என்றும் *(எசா 11:12)*, ''நான்கு மூலைகள்'' என்றும் *(திருவெளி 7:1)*, ''நான்கு திசைகள்'' என்றும் *(20:8)*, ''நான்கு காற்றுகள்'' என்றும் *(எசே 37:9)* விவரித்தனர். மற்றச் செமித்திய மக்களைப்போல் எபிரேயரும் சூரியன் உதயமாகும் திசையை அடிப்படைத் திசையாகக் கொண்டு மற்றத்திசைகளுக்குப் பெயரிட்டனர். கிழக்குத்திசையை ''முற்பகுதி'' என்றும், ''உதய இடம்'' என்றும், மேற்குத் திசையைப் ''பிற்பகுதி'' என்றும் *(யோவே 2:20)*, வடக்குத் திசையை ''இடது'' என்றும் *(ஆதி 14:15)*, தெற்குத் திசையை ''வலது'' என்றும் *(1 சாமு 23:24)* அழைத்தனர். இடைப்பட்ட திசைகளின் பெயர் காணப்படவில்லை.

கிழக்குத் திசையைத் தவிர, மற்றத் திசைகள் இடங்களைக் கொண்டும் குறிக்கப்பட்டன. இவ்வாறு வடக்குத் திசை மலையை வைத்தும், தெற்குத்திசை ''வறட்சி நிலமென்றும்'' மேற்குத் திசை ''கடல்'' என்றும் அழைக்கப்பட்டன *(காண்க. எரே 4:6 தொ; யோவே 2:20, உப 33:23; யோபு 37:17; எசே 40:24)*.

**திஸ்மஸ்** (DISMAS, DYSMAS)

லூக் *23:39-43*-இல் வரும் மனம்வருந்திய நல்ல கள்ளனின் பெயராகும். இப்பெயர் போலி நற்செய்திக் கதைகளில் வருகிறது. இக்கதைகளில் இவர் குழந்தை இயேசுவுக்குச் செய்த நற்செயலால் விண்ணரசில் நுழையும் பேறு பற்றி வாக்குறுதி பெற்றார் என்று கூறப்படுகிறது. பிற்காலத்தில், கிரேக்க, இலத்தீன் தந்தையர்களின் கவனத்தை இவர் ஈர்த்தார். இவர் புனிதராக்கப்பட்டு, புனித லாத்ரோ என்ற பெயரில் இவருக்கு விழாக்கள் கொண்டாடப்பட்டன.

**திஸ்ரீ** (TISHRI)

இது ஒரு பாபிலோனியப் பெயராகும். இது எபிரேய நாட்காட்டியில் சமூக ஆண்டின் ஏழாம் மாதமும் சமய ஆண்டின் முதல் மாதமும் ஆகும். இது செப்டம்பர், அக்டோபர், புரட்டாசி மாதங்களுக்கு இணையா

னது. இது விழாக்களின் மாதம் என்றழைக் கப்பட்டது. இம்மாதத்தில் புத்தாண்டு தினமும், பரிகார நாளும், கூடார விழாவும் கொண்டாடப்பட்டன.

**திட நம்பிக்கை (CONFIDENCE)**

வாழ்க்கையில் வரும் வேலைப்பளுவை யும், ஆபத்துக்களையும், இன்னல்களையும் இடுக்கண்களையும் மேற்கொள்ள ஒரு மனி தனுக்கு, நம்பகமாய்ச் சார்வுறக் கூடிய ஒரு துணையும், அடைக்கலம் தரக்கூடிய ஒரு புகலிடமும் மிகத் தேவை. தொல்லைக ளிடையே மனந்தளராது முயலவும், குறிக் கோளை அடையலாம் எனும் உறுதியைக் கைவிடாது முன்னேறவும் நமக்குத் திடநம் பிக்கை வேண்டும். ஆனால், எங்கே இந்நம் பிக்கை ஊன்றியிருக்க வேண்டும்?

*1.* **இறைவன்பால் திடநம்பிக்கையும் விசுவா சமும்:** தொடக்கத்திலிருந்தே மனிதனுக்கு இப்பிரச்சினை இருந்து வந்துள்ளது. இதற்கு இறைவனே பதிலளித்துள்ளார். நன்மை தீமை அறியும் மரத்தின் கனியை உண் ணாதே என இறைவன் மனிதனுக்குக் கட்டளை யிட்டபோது, நன்மை தீமை எனத் தீர்ப் பிடுபவர் கடவுள் ஒருவரே என்று அவர் மேல் மனிதன் முழு நம்பிக்கை வைக்க அழைக்கப்பட்டான் (ஆதி *2:17*). கடவுளின் வார்த்தையை ஏற்பது மேலான ஞானத்தைத் தேர்ந்துகொள்வது, அதாவது தன் சொந்த விவேகத்திலே ஊன்றி நில்லாமல் மனிதன் தன் முழு இருதயத்துடனே ஆண்டவர் ஞானத்தில் நம்பிக்கை வைப்பதாகும் (பழ *3:5*); இறை வார்த்தையை விசுவசிப்பது விண்ணையும் மண்ணையும் அனைத்தை யும் படைத்த எல்லாம் வல்லவர்மேல் நம் பிக்கை வைப்பதாகும் (ஆதி *1:1*; சங் *115: 3.15*). எனவே, படைப்புகளைக் கண்டு மனிதன் அஞ்ச வேண்டியதில்லை; மாறாக, அவற்றைத் தனக்கு அடிபணிய வைப்பதே அவனுக்கு ஒப்படைக்கப்பட்ட அலுவலா கும் (ஆதி *1:28*).

ஆனால், ஆணும் பெண்ணும் ஒரு படைப் புப் பொருளிலே தம் நம்பிக்கையை வைக்க விழைந்தனர்; இத்தகைய நம்பிக்கை பொய் யானது எனத் தம் அனுபவ வாயிலாய்க் கற்றறிந்தனர் (ஆதி *3:4* தொ; யோவா *8:44*; திருவெளி *12:9*). இருவரும் வெற்று நம்பிக் கையின் விளைவைச் சுவைத்தனர்; இறை வன் முன்னிலையில் பயமும் பிறர் முன் னிலையில் வெட்கமும் கொண்டனர். பெண் ணின் பேறுகாலமும் நிலத்தின் விளைச்ச லும் நிறைவேதனையாயும், கடும் உழைப் பின் பயனாயும் ஆகின. முடிவில் அவர்கள் சாகவே சாவார்கள் (ஆதி *3:19.16-19*).

''கடவுளே பார்த்துக் கொள்வார் மகனே'' என்று கூறித் தம் ஒரே மகனைப் பலியிடக் கையோங்கிய ஆபிரகாமின் திட நம்பிக்கை ஒரு நல்ல மாதிரி (ஆதி *22:8-14*; எபி *11:17*). ஆயினும், இதிலிருந்து இஸ்ரயேலர் பாடம் கற்றுக்கொள்ளவில்லை. தங்களை அடி மைத் தனத்திலிருந்து மீட்ட எல்லாம் வல்ல இறைவன் தமது மேலோ, சொந்த மக்களாக இருக்கும்படி மனமுவந்து அழைத்த அவரது அன்பின் மேலோ (உபா *32:6.10* தொ) அவர்கள் ஊன்றி நிற்கவில்லை. மாறாக, பாலைவனத்தில் உலகிய ஆதாரம் எதுவு மின்றி அவதியுற்றபோது (யாத் *16:3*), எகிப் திய அடிமைத்தனத்துக்காக மீண்டும் ஏங்கி னர்; ஆண்டவருக்கு எதிராக முணுமுணுத்த னர். வரலாறு முழுவதிலுமே இஸ்ரயேல் தன் கடவுள்பால் சார்ந்திருக்க மறுத்துவிட் டது (எசா *30:15*); மாறாக, 'பொய்கள்' எனவும் (எரே *13:25*) 'இல்லாதவை' எனவும் (எசா *59:4*; காண் சங் *115:8*) இறைவாக்கினர் கடிந்துரைத்த சிலைகள்பால் நம்பிக்கை வைக்க முன்வந்தனர். செல்வத்திலோ (பழ *11:28*; சங் *49:6* தொ), இயற்கை வலுவிலோ (சங் *61:10*), உலகத் தலைவர்களிலோ (சங் *118:8* தொ; *146:3*) நம்பிக்கை வைப்பது மடமை என ஞானிகள் வலியுறுத்துகின்ற னர். தன் மனவலிமையில் ஊன்றி நம்பிக்கை யாய் இருக்கிறவன் மதியீனன் (பழ *28:26*); ''மனிதனில் நம்பிக்கை வைப்பவன்... சபிக் கப்படுவான்.. ஆண்டவரில் நம்பிக்கை வைப்பவன் பேறுபெற்றவன்'' (எரே *17:5.7*).

இயேசுவும் இதே ஒழுக்க விதியைப் பின்பற்றுவதின் தேவையை வலியுறுத்துகிறார். பிற அதிபர்கள், தலைவர்களை உதறிவிட்டு, தம் வல்லமை, ஞானம், தந்தைக்குரிய அன்பு என்பவற்றால் நம் நிபந்தனையற்ற நம்பிக்கைக்கு முழுதும் உரித்தானவரான இறைவனை எதற்கும் மேலாய்த் தேர்ந்து கொண்டு சார்ந்து நிற்கும்படி இயேசு நினைவுறுத்துவதிலிருந்து இது தெளிவாகிறது (*மத் 6:24-34*). நம் சொந்த நீதியில் நம்பிக்கை கொள்ளாமல் (*லூக் 8:9.14*) இறையரசின் நீதியை நாம் தேட வேண்டும் (*மத் 5:20; 6:33*); விசுவசிப்பவனுக்கு மட்டுமே இறைவன் அளிக்கும் இந்த நீதியை அவரிடமிருந்தே நாம் பெற்றுக்கொள்ள வேண்டும் (*பிலி 3:4-9*).

*2. திடநம்பிக்கையும் பணிவுள்ள செபமும்:* விசுவாசத்தில் வேரூன்றி இறைவன்பால் ஒருவர் கொள்ளும் இத்திடநம்பிக்கை அவரவர் தாழ்ச்சிக்கேற்ப உறுதி பெற்றிருக்கும். இப்படி நம்பிக்கைகொள்ள இவ்வுலகை ஆட்டி வைக்கத்தேடும் தீயோனின் சக்திகளை நாம் மறுக்கத் தேவையில்லை (*மத் 4:8தொ; 1 யோவா 5:19*); நாம் பாவிகள் என்பதை மறக்கவும் தேவையில்லை. எல்லா மனிதரும் மீட்புப் பெற வேண்டும் என விரும்பும் படைப்பவரின் பேரிரக்கத்தையும் பேராற்றலையும் (*1 திமொ 2:4*) நாம் ஏற்று, இயேசு கிறிஸ்துவில் நாமும் கடவுளின் பிள்ளைகளாய் (*எபே 1:3 தொ*) ஆக வேண்டும் என்பதுதான் முக்கியம்.

தளராத திடநம்பிக்கைக்கு மறக்கவொண்ணா எடுத்துக்காட்டாக யூதித்து நங்கை விளங்குகிறாள் (*யூதி 8:11-17; 13:19*); இழிந்தோரைத் தாங்கும் இறைவனாகவும் மடிந்தோரை மீட்கும் மீட்பராகவும் கடவுளின் கையைப் பற்றி நின்றாள்; மனமுருகி வேண்டினாள் (*9:11*). தாழ்ச்சிக்கும் திடநம்பிக்கைக்கும் உள்ள இந்த இணைபிரியா இணைப்பு, எவ்விதப் பாதுகாப்புமின்றிப் பயங்கர ஆபத்தில் திண்டாடும்போதும் இதய பூர்வமாய் இறைவனை நம்பும் சூசன்னா போன்ற எளிய மனத்தோர் செபத்தில் வெளிக் காட்டப்படுகிறது (*தானி 13:25*). சங்கீதத்தில் காணக்கிடக்கின்ற நம்பிக்கை விண்ணப்பங்கள் அளவிலா வேதனையில் (*சங் 130:1*) எழுபவையே. ''நானோ ஏழை; எளியவன்; என் தலைவர் என் மீது அக்கறை கொண்டுள்ளார்'' (*சங் 40:17*); ''உமது பேரன்பில் நம்பிக்கை வைத்திருக்கிறேன்'' (*சங் 13:5*); ''ஆண்டவரில் நம்பிக்கை கொள்வோரை அவரது பேரன்பு சூழ்ந்து நிற்கும்'' (*சங் 32:10*); ''ஆண்டவரிடம் அடைக்கலம் புகுவோர் அனைவரும் பேறுபெற்றோர்'' (*சங் 2:12*). நூற்றி முப்பதாம் சங்கீதம் முழுவதுமே தாழ்மையுள்ள இத்திட நம்பிக்கையின் தனி வெளிப்பாடே. இக்கருத்துக்கு இயேசு நிறைவளித்துப் புதுமெருகிடுகிறார்.

கடவுளின் கொடைகளைக் குழந்தையைப் போல மனந்திறந்து பெற்றுக் கொள்ளச் சீடரை இயேசு அழைக்கிறார் (*மாற் 10:15*). நீதியும் மீட்பும் உட்பட (*லூக் 7:50; 18:13 தொ*) விண்ணகத் தந்தையிடம் நாம் வேண்டுவது எதுவும் நமக்குக் கிட்டும் என்பது உறுதி (*லூக் 11:9-13 இணை*). படைப்பின் மேல் முதலில் மனிதனுக்கு இருந்த ஆற்றலை இத்தகைய செபம் அவனுக்கு மீண்டும் அளிக்கிறது (*மாற் 11:22 தொ; காண் ஞான 16:24*). ஆயினும், இறைமக்கள் கொண்டிருக்கும் குழந்தைக்குரிய இத்திட நம்பிக்கை பற்றி இறையிலிமக்கள் அவர்களை ஏளனம் செய்வர், போட்டு வாட்டுவர். இது இறைமக்கள் எதிர்பார்க்க வேண்டிய தொன்றே. இதுவே இயேசுவின் அனுபவமாயும் இருந்தது (*மத் 27:43; காண். ஞான 2:18*). தம் பலியை நிறைவேற்றிச் சாகும் போதும் திடநம்பிக்கையின் பெரு முழக்கம் தானே அவரது உள்ளத்திலும் உதட்டிலும் ஒலித்தது (*லூக் 23:46*).

*3. தளராத மகிழ்வு தரும் நம்பிக்கை:* இத்தகைய பற்றுறுதி அன்புச் செயலால் தீயோனின் சக்திகளை எல்லாம் இயேசு வென்றார்; மனிதர் அனைவரையும் தம்பால் ஈர்த்தார் (*யோவா 12:31தொ; 16:33*). இவர்களின் திடநம்பிக்கையைத் தோற்றுவித்ததோடு, இந்த நம்பிக்கைக்கு அசைக்கொணா ஆதார

மும் அளித்தார். இவ்வண்ணம், திடநம்பிக்கை கொண்ட சீடன் இறைவனின் பிரமாணிக்கத்திற்கு நல்ல சாட்சியாக விளங்குகிறான்; தன் அலுவலை இறையருள் நிறைவு படுத்தும் என நாளும் உறுதியாய் உள்ளான் (அ.ப. 20:32; 2 தெச 3:3தொ; பிலி 1:6; 1 கொரி 1:7 தொ). மிக நெருக்கடியான வேளைகளிலும் புனித பவுல் இத்திட நம்பிக்கையை வெளிப்படுத்துகிறார் (கலா 5:10). இது முழுச் சுவாதீனத்தோடு கடவுளின் நற்செய்தியைப் பறைசாற்றும் தளராத் துணிவை அவருக்கு அளித்தது (1 தெச 2:2; அ.ப. 28:31). ஆதிக் கிறிஸ்தவர்கள் இப்பற்றுறுதியின் நிறை சாட்சிகளாய் இருந்தனர். இவ்விதச் சாட்சிகளாய் அவர்களை ஆக்கியது அவர்களின் திட நம்பிக்கையும் உளமார்ந்த செபமுமே (அ.ப. 4:24-31).

நிறை அன்பு உறுதிப்பாட்டுக்கு இவ்விதத் தளராத நம்பிக்கை தேவைப்படுகிறது (எபி 3:14); தொடக்கத்தில் கிறிஸ்துவுக்குச் சாட்சி கூறுபவர்களுக்கு மகிழ்வு தரும் மகிமையையும் துணிவையும் அளிக்கிறது (3:6). இயேசுவின் இரத்தப் பலி திறந்து வைத்த பாதையின் வழியாக (10:19), இறை அருளின் அரியணையைத் தாம் அணுகிச் செல்வதாக அவர்கள் உணர்கிறார்கள் (4:16). ''கடவுளே எமக்குத் துணை, அஞ்சோம்'' என வீரத்தோடு முழங்குகின்றனர் (13:6). இறை அன்பிலிருந்து எந்தப் படைப்புப் பொருளும் தம்மைப் பிரிக்க முடியாது என்பது அவர்களின் துணிபு (உரோ 8:38 தொ). ஏனெனில், கடவுள் அவர்களை முதலில் அருள்நிலை அடையச் செய்தார்; பிறகு தம் அன்பை அவர்களின் உள்ளங்களில் பொழியவைத்து, வேதனைகளில் பெருமையும், இக்கட்டுகளில் மனத் திண்மையும் அவர்கள் கொள்ளச் செய்தார் (உரோ 5:1-5). எனவே, அவர்கள் தங்கள் நன்மைக்காகத் தங்களோடு கடவுள் அனைத்திலும் ஒத்துழைக்கிறார் என உறுதிப்பாடு கொள்கின்றனர் (உரோ 8:28).

கிறிஸ்தவ கடமைகளில் நெறிபிறழாது பற்றுறுதி கொண்டிருக்கத் தேவையான இத்திடநம்பிக்கை இத்தகைய பற்றுறுதியால் மேன்மேலும் நன்கு திடம் பெறுகிறது. இவ்விதம்விடாது கிறிஸ்துவின் கட்டளைகளைக் கடைப்பிடிப்பது திரு அன்புக்குச் சான்று (யோவா 15:10); அதே வேளையில் இத்திரு அன்பு இந்த நம்பிக்கைக்குப் புதுப் பொலிவும் முழு நிறைவும் அளிக்கிறது. இந்த அன்பில் நிலைத்திருப்பவர் மட்டுமே, நடுவராகக் கிறிஸ்து வரும் அப்பெருநாளில் முழு நம்பிக்கை கொண்டிருப்பர்; நிறை அன்பு அச்சத்தை அகற்றுமன்றோ! (1 யோவா 2:28; 4:16 தொ). இங்ஙனம், திரு அன்பில் நிலைத்திருக்கும் கிறிஸ்தவன், ''என் செபத்தைக் கடவுள் கேட்கிறார்; என் துன்பம் இன்பமாய் மாறிவிடும்; இம் மகிழ்ச்சி இறைமகன் இயேசுவின் மகிழ்ச்சியே; எனவே, எவரும் அதை என்னிடமிருந்து பறித்துவிடமாட்டான்'' (யோவா 16:20 தொ; 17: 13) எனத் திட நம்பிக்கை கொண்டு வாழ்வான்.

### திதாகே (DIDACHE)

திருச்சபையின் மிகத் தொன்மையான எழுத்து வடிவில் உள்ள சான்று இந்நூல். இது நற்செய்தி அறிவிப்பு, வழிபாடு, பணி ஆகியவை பற்றிய வழிகாட்டுதல்களைத் தருகின்றது. 'பன்னிரு சீடர்களின் போதனை' என்பதே இந்நூலின் தலைப்பு ஆகும். அதில் 'நற்செய்தி அறியாதோருக்கெனப் பன்னிரு அப்போஸ்தலர் அளித்த ஆண்டவரின் போதனை எனும் உபதலைப்பு காணப்பட்டது. அப்போதிருந்த ஒரே கையெழுத்துப் பிரதி 1056-இல் மறுபதிப்புச் செய்யப்பட்டது. இத்தலைப்புகள் எல்லாம் இந்தக் கையெழுத்துப் பிரதியில் காணப்படுபவையாகும். இப்பிரதி 1873-இல் கண்டுபிடிக்கப்பட்டு, பத்து ஆண்டுகளுக்குப்பின் பதிப்பிக்கப்பட்டது. இந்தக் கையெழுத்துப் பிரதியுடன் பர்னபாவின் கடிதம் எனப்படும் நூலும் உரோமை நகர் கிளமந்துவின் கடிதம் எனக்கூறப்படும் நூலும் காணப்பட்டன. ''பன்னிரு அப்போஸ்தலர்களின் போதனை'' என்று யுசேபியு குறிப்பிடுவது இந்தத் திதாகேதான் என்பதில் ஐயமில்லை. இது, புதிய ஏற்பாட்டுத் திருமுறை சேராத நூல்களில் ஒன்றாக இதனை ஏற்றுக் கொள்வதிலிருந்தே தெரி

கிறது. அலக்சாந்திரியா நகரத்து கிளமந்துதான் முதன்முதலில் இந்நூலிலிருந்து மேற்கோள் காட்டுகிறார். ஆனால் இந்நூல் எழுதப்பட்ட காலம் பற்றி அனைவரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய எந்த ஒரு முடிவுக்கும் இதுவரை யாரும் வரவில்லை.

மற்றத் திருச்சபை ஒழுங்குகளைப்போலத் 'திதாகே'யில் உள்ளவையும் பல மூலங்களி லிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டவை யாகவே தோன்றுகின்றன. நூலின் உட்பகுதி யில் உள்ள முக்கிய பொருள்களும், அதை எழுதியவர்களின் காலமும், நூலைத் தொகுத்தவர்களின் காலமும் வேறுவேறாக இருக்கலாம். ஆனால் நூலின் பலபகுதிகள் அப்போஸ்தலர் காலத்திலிருந்தே வருகின் றன என்று ஆய்வாளர் பலர் ஏற்றுக்கொள்வர். முதல் ஆறு அதிகாரங்களில் உள்ள ஒழுக்கம் பற்றிய ஒழுங்குகள் இதைத்தான் சுட்டுகின் றன. அதாவது 'வாழ்வுக்கும்' 'சாவுக்கும்' இட்டுச் செல்லும் வழிகள்பற்றிக் குறிப்பிடு வது.

யூத வழக்கப்படி வாய்மொழிப் போதனை யாயினும் சரி, எழுத்துவடிவப் போதனை யாயினும் சரி, வாழ்வின் வழி, சாவின் வழிபற் றிப் பேசுவது 'ஞான உபதேசம்' கற்பிக்கும் வழியாகும் (உ.ம். சங் *1:6;* பழ *4:18-19;* எரே *21:8*). புறவினத்தவர்களை மனந்திருப்ப இந்த முறையை அன்றைய கிறிஸ்தவ போதகர்கள் பின்பற்றியிருக்க வேண்டும்.

அனைத்தும் எல்லாவற்றிற்கும் பொது வான (ஒரு கிறிஸ்தவ) அல்லது யூதமூலத்தி லிருந்து பெறப்பட்டிருக்க வேண்டும். 'இரு வழிகள்' பற்றி சங் *37:11* (மத் *5:5*) கூறுவதை திதாகே *3:7*-இல் ''சாந்தமுள்ளோர் விண்ணர சைப் பெற்றுக் கொள்வர்'' என்று கூறுகிறது. இதனை ஏற்றுக்கொள்வதில் எந்த யூதனுக் கும் எவ்விதத் தடையும் இருக்காது. அதே நேரத்தில் மத் *5:39-44;* லூக் *6:30-33; 1* பேதுரு *2:11* ஆகியவற்றினின்று எடுக்கப்பட்டது போலத்தோன்றும் பகுதிகளையும் இதற் கிடையே செருகியுள்ளதால் ''ஆண்டவரின் சுமையை முழுமையாக ஏற்றுக் கொள்ப வனே நிறைவடைவான்'' என்பது போன்று வருவதால் இதனை ஏற்கத் தயங்குகின்றனர்.

இந்த இருவழிகள் பற்றிய போதனை திருமுழுக்குப் பெறுவதற்குமுன் அவர் களுக்கு அளிக்கப்படும் போதனையாக இருந் தது. எனவேதான் *7-8*-ஆம் அதிகாரங்கள் தந்தை, மகன், பரிசுத்த ஆவியின் பெயரால் ஓடும் குளிர்ந்த நீரில் திருமுழுக்கு அளிக்க வேண்டும் என்றும், திருமுழுக்குக்குமுன் ஒன்று அல்லது இரண்டு நாள்களுக்கு உண் ணாநோன்பு இருக்க வேண்டும் என்றும், ஒரு நாளில் மூன்றுமுறை ''ஆண்டவர் கற்பித்த'' செபத்தைச் சொல்ல வேண்டுமென்றும் குறிப்பிடுகிறது.

*9-10*-ஆம் அதிகாரங்கள் திருச்சபையின் பொது உணவுக்கு முன்னும், பின்னும் சொல்லப்படும் நன்றிச் செபங்களாகும். திரு முழுக்குப் பெறாதவர்கள் இந்த நன்றி வழி பாட்டில் கலந்து கொள்ளக்கூடாது என்றும் கூறப்பட்டிருக்கிறது. இது 'அன்புணவாகத் தான்' இருக்க வேண்டுமேயொழிய ஆண்ட வரின் உணவாக இருக்க முடியாது எனக் கருதுகின்றனர். ஏனெனில் இந்நன்றிச்செபங் களில் இறுதி உணவைக் குறிப்பிடும் ஒரு சொல்லோ, அப்பம், கிண்ணம் பற்றியோ எதுவும் கூறப்படவில்லை. ஆண்டவரின் உடல், இரத்தம் பற்றியும் குறிப்பு இல்லை.

*11-13*-ஆம் அதிகாரங்கள் உண்மை இறை வாக்கினர் யார், போலி இறைவாக்கினர் யார் என்பதைக் கண்டறியும் முறை பற்றிக் குறிப்பிடுகின்றன. ஏனெனில் அன்று பலர் ஆன்மீகக் கொடைகளைத் தங்கள் சொந்த நலன்களுக்காகப் பயன்படுத்தியிருக்க வேண்டும். எனவேதான் இதுபற்றிப் பேசப் பட்டிருக்கிறது.

*14-15*-ஆம் அதிகாரங்கள் ஆண்டவரின் நாளில் நற்கருணைக் கொண்டாட்டத்தைப் பற்றியும், ''ஆயர்கள், தியாக்கோன்கள்'' ஆகியோரை நியமிப்பது பற்றியும் கூறு கின்றன. நற்கருணை ஒரு பலியாகப் பார்க்கப் படுகிறது. மலா *1:11.14* நற்கருணையில் நிறை வுறுவதாகக் கூறப்படுகிறது. பாவங்களை

அறிக்கையிடுதலின் அவசியத்தையும், அதற்குப் பின்னேதான் நற்கருணையில் கலந்து கொள்ள வேண்டும் என்றும் குறிப்பிடப்படுகிறது.

இறுதியாக 16-ஆம் அதிகாரத்தில் வெளிப்பாட்டு நடையில் ஆண்டவர் வரும் நாளைக் குறித்துச் சில அறிவுரைகள் கூறப்படுகின்றன. இந்த இறுதியுரையைத் திதாகேயின் ஆசிரியர் மத் 24; 1 தெச 4:16; 2 தெச 2:9 ஆகியவற்றினின்று எடுத்திருக்க வேண்டும். இது திருச்சபையின் மரபுப்படி வந்தது அன்று. மாறாக ஓர் இடைச் செருகல் என்பதே சரி.

இவ்வாறு திருச்சபையின் மிகப் பழமையான நூலாக இருக்கும் திதாகே திருச்சபை வரலாற்றில் பல உண்மைகளை நிரூபிக்கும் சான்றாக இன்றும் திகழ்கிறது.

**திதால்** (JIDAL)

இவர் கெதர்லகோமர் மன்னனோடு கூட்டணி செய்து கொண்ட ஓர் அரசன் (ஆதி 14:1.9). இவர் கோயிம் என்ற நாட்டின் அரசனாக இருந்ததாகக் கருதப்படுகின்றது. திதால் என்ற சொல் 'துதாலியா' என்ற பெயர் மருவி வந்ததாகக் கருதப்படுகின்றது. ஏனென்றால் இத்திய மன்னர்கள் பலர் இப்பெயர்களைக் கொண்டவராக இருந்திருக்கின்றனர். காலத்தைப் பொருத்தமட்டும் முதலாம் துதாலியா பற்றிய (கி.மு. 1700-1650) வரலாற்றுக் குறிப்புகள் ஆதி 12:1-12-ஓடு ஒத்துப் போகின்றன. ஆயினும் இவ்விதம் அடையாளம் காட்டுவது உறுதியாக இல்லை.

**திதிமு** (DIDYMUS - இரட்டையர்)

அப்போஸ்தலர் தோமாவின் மறுபெயர் (யோவா 11:16; 20:24; 21:2). இப்பெயர் இவருக்குக் கிரேக்க மொழி பேசிய கிறிஸ்தவர்களுக்கிடையே பயன்பட்டிருக்கலாம். புல்தாள் ஏடுகளில் இச்சொல் பன்மையில் இரட்டையர் என்ற பொருளில் ஒரு பொதுச் சொல்லாகவும், குறிப்பிட்ட ஓர் ஆளின் பெயராகவும் தோன்றுகிறது. காண்க: தோமா.

**திதிராக்குமா** (DIDRACHMA - இருதிராக்குமாக்கள்)

இரண்டு திராக்குமாக்கள் மதிப்புள்ள ஒரு கிரேக்க நாணயம். இது புதிய ஏற்பாட்டுக் காலத்தில் வெளியிடப்படவில்லை. இது ஒவ்வொரு யூதனும் ஒவ்வொரு ஆண்டும் ஆலயத்திற்குச் செலுத்த வேண்டிய வரியைக் குறித்தது. ஆகவே இந்த வரி வெறுமனே திதிராக்குமா என்றழைக்கப்பட்டது (மத் 17:24). இதைச் சில மொழி பெயர்ப்புகள் அரைச் செக்கேல் என்று மொழி பெயர்க்கின்றன. ஏனெனில் இதன் மதிப்பு அரைச் செக்கேலுக்குச் சமமாகும்.

**தித்தியு** (TITIUS)

காண்க: யுஸ்து (2) (அ.ப. 18:7).

**திபேரியா** (TIBERIAS)

இது கலிலேயாக் கடலின் தென்மேற்குக் கடற்கரைப் பகுதியில் உள்ள நகரம். தற்போது ஏல்-தபாரியே என்று அழைக்கப்படுகிறது. ஏரிக்கு அருகில் குன்றுகள் பல உள்ளன. இந்நகரம் ஏரோது அந்திபாவால் நிறுவப்பட்டது. அதைத் தனது ஆட்சியின் தலைமை நகராக அமைத்துக் கொண்டார். திபேரியு சீசர் மன்னனது பெருமைக்காக இந்நகருக்குத் திபேரியா என்ற பெயரிடப்பட்டது. இந்த இடம் முன்னால் புதைக்கும் இடமாகப் பயன்படுத்தப்பட்டது. எனவே தூய்மையற்றதாகக் கருதப்பட்டது. புதிய ஏற்பாட்டுக் காலத்தில், இந்நகரில் முழுவதும் புறவினத்து மக்கள் வசித்து வந்ததாகத் தெரிகிறது. இந்நகரம் யோவா 6:23-இலும் (திபேரியாக் கடல்) குறிப்பிடப்பட்டுள்ளது. இயேசு இந்நகரத்தில் நுழைந்ததாகச் சொல்லப்படவில்லை. எனவே, விளக்கவுரையாளர்கள் இயேசு அங்குப் போகவில்லை என்றே பொதுவாகக் கருதுகிறார்கள். இந்த நகரம் ஏரிப் பகுதியில் பெரிய முக்கிய நகரமாகும்.

**திபேரியாக் கடல்** (TIBERIAS, SEA OF)

காண்க: கலிலேயாக் கடல்.

**திபேரியு** (TIBERIUS)

திபேரியு கிளாதியு நீரோ கி.மு. 42-இல் பிறந்தார். உரோமைப் பேரரசன் அகுஸ்து

வுக்குப்பின் பதவிக்கு வந்தவர். உரோமைப் பேரரசாக கி.பி. 14-37வரை இருந்தார். இவருடைய தாய் லீவியா, தந்தை திபேரியுவை விவாகரத்து செய்து விட்டு அகுஸ்துவைத் திருமணம் செய்து கொண்டாள். திருமுழுக்கு யோவான் திபேரியுவின் ஆட்சியில் பதினைந்தாவது ஆண்டில் தன்பணியைத் தொடங்கினார் என்று லூக்காஸ் நற்செய்தி குறிப்பிடுகிறது (லூக் 3:1). இது கி.பி. 28-ஆகஸ்டு மாதத்திற்கும், கி.பி 29 ஆகஸ்டு மாதத்திற்கும் இடைப்பட்ட காலமாகும். இதுதான் இயேசுவின் கால கட்டத்தை அறியப் பயன்படுகிறது. அந்தியோக்கியாவில் பலவகைப்பட்ட ஆண்டுக் கணிப்பு முறைகள் பயன்பட்டன. அப்படி நடந்த அந்தியோக்கியாவில், லூக்கா தன் நற்செய்தியை எழுதியிருந்தால், இந்தக் கணிப்பு முறை அவரைப் பாதித்திருக்கும். எனவே கி.பி 27-அக்டோபர் 1, கி.பி. 28 செப்டம்பர் 30, என்ற முறையில் நாட்கள் மாற்றியமைக்கப்பட வேண்டியிருக்கலாம். திபேரியு பாலஸ்தீனத்தில் நேரடியாகச் செயல் ஆற்றியதாகக் குறிக்கப்படவில்லை. இவர் ஆட்சிக்காலத்தில், எதிர்ப்புக் கிளர்ச்சிகள் பல நடந்தன. இவர் இத்தாலியாவில், தெய்வீக மதிப்பை ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாக நாட்டு அரச பற்றை அதிகரிக்கும் பொருட்டு, அகுஸ்துவை வழிபட ஊக்குவித்தார். இவர் யூதச்சட்டம் இத்தாலியாவில் கடைப்பிடிக்கப்படுவதைத் தடை செய்தார்; யூதர் பலரை நாடு கடத்தினார். இவர் காப்ரியில் கி.பி 37, மார்ச் 16-இல் இறந்து விட்டார்.

லூக்கா நற்செய்தியில் ஒரு முறை இவர் குறிப்பிடப்பட்டுள்ளார் (3:1). மேலும் நற்செய்திகளில் வரும், சீசரைப் பற்றிய குறிப்புகள் இவரை மறைமுகமாகக் குறிப்பிடுகின்றன (மத் 22:17-21; மாற் 12:14-17; லூக் 20:22-25; 23:2; யோவா 19:12-15). ஒத்தமை நற்செய்திகள் குறிப்பிடும் தெனாரியு என்ற வரிப்பணம் இவரது உருவத்தையும் பெயரையும் கொண்டிருந்திருக்கலாம்.

**திப்காத்து** (TIBHATH - கொல்லுகின்ற)

சீரியாவிலுள்ள ஓர் இடம். இங்கிருந்து, ஒரு வெற்றிக்குப்பின், தாவீது பெரும் கொள்ளைப் பொருட்களை எடுத்துச் சென்றார் (1 நாள் 18:18). இணைப்பகுதியில் இது பெற்றகு என்றழைக்கப்படுகிறது (2 சாமு 8:8). இது தெபகு என்பதோடு தொடர்பு படுத்தப்படலாம் (ஆதி 22:24). இது பெக்கப் பகுதியில் இருந்ததாகக் கருதப்பட்டாலும், இது இருந்த இடத்தை அறிவதற்கில்லை.

**திப்சாகு** (TIPSAH - குறுக்கே செல்லும்)

பழைய ஏற்பாட்டில் இந்த இடம் இரண்டு இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு வேளை இவை, இரண்டு தனிப்பட்ட இடங்களைக் குறிக்கலாம்.

1. சாலமோனுடைய ஆட்சிப் பகுதி எல்லையில் வடகிழக்குப் பகுதியிலுள்ள ஒரு நகரம் (1 அர 4:24). இது யூப்பிரத்தீசுவின் மேற்கு எல்லையில் இருந்த முக்கியமான நகரம். அங்கு, தெற்கிலிருந்து கிழக்குப்புறமாக இந்நதி ஓடுகிறது. இந்நகரம் தபஸ்குவாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இது ஒரு வணிக மையமாகும். இது செலூக்கியர் காலத்தில் அம்பிபோலி என்றும், இப்போது திபேசு என்றும் அழைக்கப்படுகிறது.

2. 2 அர 15:16-இல் குறிப்பிடப்பட்டிருக்கும் திப்சாகு சமாரியாவிலுள்ள திரட்சாவுக்கு அருகிலுள்ள ஓர் இடமாகும். இது தப்புவாகு என்ற பெயரின் மொழிச் சிதைவாக இருக்கலாம். தப்புவாகு என்ற இடம் எருசலேமுக்கு வடக்கில் 48 கி.மீ. தொலைவில் உள்ளது. சில மொழிபெயர்ப்புகள் இதைத் தப்புவாகு என்றே மொழி பெயர்க்கின்றன.

**திப்ரி** (DIBRI - சொற்பெருக்கான)

தாண் இனத்தைச் சேர்ந்த செலோமித்துவின் தந்தை. இவரது பேரன், பாலைவனத்தின் இறைவனின் பெயரைப் பழித்துக் கூறியதற்காகக் கல்லால் எறிந்து கொல்லப்பட்டான் (லேவி 24:1.14). பழித்துரைத்தவன் பெயர் குறிக்கப்படவில்லை. ஆனால் அவன் இஸ்ராயேலியத் தாய்க்கும் எகிப்தியத் தகப்பனுக்கும் பிறந்தவன் என்பது நினைவு கூறப்படுகிறது.

**திப்லயிம்** (DIBLAIM - இரு திராட்சை அடைகள்)

இவர் விலைமகளும் இறைவாக்கினர் ஓசேயின் மனைவியுமான கோமேரின் தந்தை ஆவார் (ஓசே 1:3). இப்பெயருக்கு உருவகப் பொருள் கொடுக்க முயன்றுள்ளனர். அதாவது ''திராட்சை அடைகளின் மகள் கோமேர்''. இது அவளது விபச்சாரத்தைச் சுட்டலாம். ஏனெனில் பழங்கால இனப்பெருக்க வழிபாட்டில் திராட்சை அடைகள் பயன்பட்டன.

**திப்னி** (TIBNI - அறியும்)

பாகசாவின் குறுகிய ஆட்சியின் வீழ்ச்சிக்குப்பின் அரச அரியணைக்குப் போட்டியிட்ட 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மூன்று தளபதிகளில் ஒருவர். நாட்டில் மூன்று ஆண்டுகளுக்கு உள்நாட்டுப்போர்கள் நிகழ்ந்தன. இதில் ஓம்ரி சிம்ரியைத் தோற்கடித்தார். சிம்ரியின் தற்கொலைக்குப்பின் (கி.மு. 882; 1 அர 16:21), வட அரசின் பாதி திப்னிக்கு ஆதரவு அளித்தது. ஆனால் ஓம்ரி இவரைக் கொன்றார். திப்னியின் இறப்போடு உள்நாட்டுப் போர்கள் முடிவுக்கு வந்தன (16:22). இவர் கினத்துவின் மகனாவார்.

**திமிங்கிலம்** (WHALE)

சிறு மீன்களை உணவாக உண்டு வாழும் ஒருவகை இராட்சச மீன். இது பாலூட்டி வகையைச் சேர்ந்தது. இது மத் 12:4--இல் குறிக்கப்படுகிறது. இது யோனா 2:1-இல் வரும் ''பெரிய மீனேடும்'' ஆதி 1:21; யோபு 7:12-இல் வரும் ''கடல் பெருநாகத்தோடும்,'' எசே 32:2-இல் வரும் ''நீர் வாழ் பெரு விலங்கோடும்'' இணைத்துக் கருதப்படுகிறது. இந்தப் பெரியமீன் இறைவாக்கினர் யோனாவை விழுங்கி மூன்று நாட்களுக்குப் பின் கரை சேர்த்தது.

இது முப்பது அடிக்குமேல் வளரக்கூடிய சுறாமீன் போன்ற உண்மையான மீனைக் குறிக்கலாம். இது திமிங்கிலம், டால்பின் போன்றவற்றைக் குறிக்கலாம். மத்திய தரைக்கடலிலும், அரபியக் கடலிலும் செங்கடலிலும் கூண் திமிங்கிலங்கள், துடுப்புத் திமிங்கிலங்கள் போன்றவை வாழ்ந்திருக்கலாம் என்று எண்ணப்படுகிறது.

**திமினா** (TIMNAH - குறிக்கப்பட்ட பகுதி)

1. செபேலா பகுதியில் யூதாவின் வடக்கு எல்லையில் பெத்செமேசுக்கு அருகிலுள்ள ஒரு நகரம் (யோசு 15:10). இது தாண் இனத்திற்குரியது (19:43).

சிம்சோன் காலத்தில் திமினாவில் பெலிஸ்தியர்கள் ஆதிக்கம் கொண்டிருந்தனர். இது தெலீலாவின் சொந்த ஊர் (நீதி 14:1-2). திமினாவிற்காக யூதாவும் பெலிஸ்தியர்களும் தொடர்ந்து போர் செய்தனர் (2 நாள் 28:18). ஊசியா (கி.மு. 783-742) பெலிஸ்தியரிடமிருந்து திமினாவைக் கைப்பற்றினார் (28:17). 701-இல் சனகெரிபு (705-681) இதனை, மற்ற நகரங்களோடு கைப்பற்றினார்.

2. மாவோன் மாகாணத்தில் யூதாவுக்குரிய ஒரு கிராமம் (யோசு 15:57). ஆதி 38:12-14-இல் விவரிக்கப்படும் நிகழ்ச்சிகளில் குறிக்கப்படுவது இதுவாக இருக்கலாம். இது எபிரோனுக்குத் தென்கிழக்கில் இருந்திருக்கலாம்.

3. கி.மு. 160-இல் செலூக்கியத் தளபதி பாக்கிதுவால் வலுப்படுத்தப்பட்ட, யூதாவிலுள்ள ஒரு நகரம் (1 மக் 9:50). மலைப்பகுதியில் அமைந்துள்ள இந்த இடம் பெத்தேலுக்கு வடமேற்கில் 14 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத் திப்னேயாக அடையாளம் காட்டப்படலாம்.

**திமேயு** (TIMAEUS - மதிப்பு வாய்ந்த)

எரிகோவில் இயேசு குண்ப்படுத்திய குருடனான பர்த்திமேயுவின் தந்தை (மாற் 10:46 ).

**திமொத்தேயு** (TIMOTHY - இறைவனை மதிக்கிறவர்)

1. ஓர் அம்மோனிய படைத்தலைவர். இவர் கி.மு. 164-ஐ ஒட்டி யூதா மக்கபேயுவையும் அவரைச் சார்ந்தவர்களையும் எதிர்த்தார். பிறகு யூதாவால் பலமுறை தோற்கடிக்

கப்பட்டார் (1 மக் 5:6 தொ; 2 மக் 8:3 தொ; 9:3 தொ; 10:24 தொ; 12:2 தொ).

2. திமொத்தேயு பவுலுக்கு உண்மையான சீடனாகவும் நம்பிக்கைக்குரிய தோழனாகவும் இருந்து பணி புரிந்தவர். லிக்கவோனியாவிலுள்ள லிஸ்திராவைச் சேர்ந்தவர். இவரது தந்தை ஒரு கிரேக்க இனத்தவர்; தாய் யூத கிறிஸ்தவப்பெண். 2 திமொ 1:5-இன்படி இவரது தாயின் பெயர் யூனிக்கியாகும். லோயி என்ற இவரது பாட்டிதான் முதலில் கிறிஸ்தவ மறையைத் தழுவினார். ஏறத்தாழ கி.பி. 47-இல் பவுல் தனது முதல் மறைபரப்புப் பயணத்தில் லிஸ்திராவுக்கு வந்தபோது திமொத்தேயுவை மனந்திருப்பியிருக்க வேண்டும் (1 திமொ 1:1). இவரது தாய் யூதப் பெண்ணாய் இருந்ததாலும், யூதர்களின் பொருட்டும் திமொத்தேயு விருத்தசேதனம் செய்து கொள்ளப்பவுல் அனுமதித்தார் (அ.ப. 16:1-3). பவுல் தனது இரண்டாம் மறைபரப்புப் பயணத்தில் திமொத்தேயுவையும் அழைத்துச் சென்றார். பெரோயாவில் சீலாவோடு திமொத்தேயு தங்கிவிட்டார். அப்போது பவுல் அந்நகரை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று (17:4தொ). அதன் பிறகு பவுல் கொரிந்துவில் போதித்துக் கொண்டிருந்தபோது திமொத்தேயு அவருடன் சேர்ந்து கொள்கிறார். மூன்றாம் மறைபரப்புப் பயணத்திற்கு முன்பு எரஸ்துவுடன் திமொத்தேயு மாசிதோனியாவுக்கு அனுப்பப்படுகிறார் (19:22). அதன்பிறகு மூன்றாவது பயணம் முடிந்து திரும்பும்போது பவுலோடு பயணம் செய்த குழுவில் திமொத்தேயு இருந்தார் (20:4).

பவுலின் பல திருமுகங்களின் தொடக்க வாழ்த்துரையில் திமொத்தேயு பவுலோடு தொடர்புபடுத்தப்படுகிறார் (2 கொரி 1:1; பிலி 1:1; கொலோ 1:1; 1 தெச 1:1; 2 தெச 1:1; பில 1). உரோ 16:2-இல் வரும் இறுதி வாழ்த்துரையிலும் குறிப்பிடப்படுகிறார். கொரிந்தியருக்கு முதலாம் திருமுகம் எழுதுவதற்கு முன்பாகக் கொரிந்துவில் பிரச்சனைகளை ஆய்ந்து வருவதற்காக இவரைப் பவுல் கொரிந்துவுக்கு அனுப்பினார் (1 கொரி 4:17). மேலும் திருமுகம் எழுதியதற்குப்பின்னும் இவரை அங்கு அனுப்ப ஒரு திட்டம் இருந்ததாகத் தெரிகிறது (16:10). ''திமொத்தேயு வழியாகவும் நற்செய்தி அறிவிக்கப்பட்டது'' என்று பவுல் கொரிந்தியருக்குச் சுட்டிக் காட்டுகிறார் (2 கொரி 1:19). பிலிப்பியருக்குத் திருமுகம் எழுதும் முன்பு, திமொத்தேயுவை அங்கு அனுப்ப ஒரு திட்டம் இருந்தது (பிலி 2:19). தெசலோனிக்கேயருக்கு முதலாம் திருமுகம் எழுதும் முன்பு, சில காரியங்களை அறிந்துவர, திமொத்தேயு தெசலோனிக்கேவுக்குச் சென்றார் (1 தெச 3:2.6). திமொத்தேயு சிறைப்பட்டு விடுதலை செய்யப்பட்டது எபி 13:23-இல் சுட்டிக்காட்டப்படுகிறது. இந்தக் குறிப்புகள் எல்லாம் திமொத்தேயு பவுலின் நெருங்கிய நண்பனும், நம்பிக்கைக்குரிய தோழனும் உடன் உழைப்பாளியும் ஆக இருந்தார் என்று காட்டுகின்றன.

**திமொத்தேயுவுக்குத் திருமுகங்கள்** (1,2 TIMOTHY, LETTERS TO)

1. திமொத்தேயுவுக்கும் தீத்துவுக்கும் எழுதப்பெற்ற திருமுகங்கள் பொருள், இறையியல், நடை, நோக்கம் ஆகியவற்றில் ஒரே தன்மையும் சிந்தனைப்போக்கும் உடையவை. இவற்றை அப்போஸ்தலரான பவுல் எழுதியதாகப் பாரம்பரியம் கருதி வந்துள்ளது. பவுலின் திருமுகங்களில் இம்மூன்று மட்டுமே தலத்திருச்சபைகளுக்குப் பொறுப்பாக இருந்த தனிநபர்களுக்கு எழுதப்பட்டுள்ளன. அதேபோது, பவுலின் மற்றத்திருமுகங்களிலிருந்து இவை வேறுபடுகின்றன. ஆகவே இவற்றை ஒரு தனித்தொகுப்பாகக் கருதி 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இவற்றை ''மேய்ப்புப்பணித் திருமுகங்கள்'' என்றழைப்பது மரபு. இவற்றிற்கு இப்பெயர் பொருத்தமே. ஏனெனில் இத்திருமுகங்கள் திருச்சபையின் வளர்ச்சியில் அக்கறையும் ஈடுபாடும் உள்ள ஒரு ஆயரால் (பவுல்) பிற ஆயர்களுக்கு எழுதப்பட்டுள்ளன.

2. இந்நூல்கள் பற்றிப் பல பிரச்சினைகள் உண்டு. இவற்றைப் பவுல்தான் எழுதினாரா, இவை எப்போது, எங்கே எழுதப்பட்டன,

இவற்றிற்கும் பவுலின் மற்றத் திருமுகங்களுக்கும் உள்ள வேறுபாடுகள் ஆகியவை பற்றி ''மேய்ப்புப் பணித்திருமுகங்கள்'' என்ற தலைப்பின் கீழ்க்காண்க.

*3. திமொத்தேயுவின் வாழ்க்கை வரலாறு:* காண்க: திமொத்தேயு.

*4. திட்டம்:*

I. முதல் திருமுகம்:-

1. முன்னுரையும் வாழ்த்துரையும் *(1:1-2).*
2. போலிப் போதகர்கள் *(1:3-20).*
3. திருச்சபையில் வழிபாடும் தலைமையும் *(2:1-3:13).*
4. திருமுகத்தின் நோக்கமும் இறையியல் முன்நோக்கும் *(3:14-4:10).*
5. திருச்சபையின் வெவ்வேறு குழுக்களுக்குப் போதனை *(4:11-6:2).*
6. திருமுகத்தின் தொகுப்பு *(6:3-16).*
7. செல்வத்தைப்பற்றிய சிந்தனை *(6:17-19).*
8. இறுதி அறவுரையும் வாழ்த்தும் *(6:20-21).*

II. இரண்டாம் திருமுகம்:-

1. முன்னுரை: வாழ்த்துரையும் நன்றியும் *(1:1-5).*
2. அறவுரைகள் *(1:6-2:13).*
3. உண்மையான போதகமும் பொய்யான போதகமும் *(2:14-4:8).*
4. முடிவுரை: இறுதியுரையும் வாழ்த்தும் *(4:9-22).*

*5. முக்கிய கருத்துக்கள்:* முதல் திருமுகத்தில் ஆசிரியர் போலிப் போதகர்களைப் பற்றி எச்சரிக்கிறார். இவர்கள் மோசேயின் சட்டத்தில் வல்லுநர்கள் என்று சொல்லிக் கொண்டு மக்களை ஏமாற்றுகின்றனர். உலகை அடியோடு வெறுக்க வேண்டும். திருமணங்கள், சில உணவுவகைகள் தடை செய்யப்பட்டன. இவற்றையெல்லாம் தங்கள் சொந்த ஆதாயத்திற்காகவே இவர்கள் செய்கின்றனர். ஆகவே இவர்கள் மட்டில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் *(1 திமொ 1:3-20; 4:1-11; 6:20-21).*

மேலும் திருச்சபைத்தலைவர்களுக்குரிய தகுதிகளும் பொறுப்பும் விவரிக்கப்படுகின்றன. ஒழுக்கமும் கட்டுப்பாடும் திருச்சபைத் தலைவர்களுக்குத் தேவையென அறிவுறுத்தப்படுகின்றன *(2-3; 4:12-6:3).* பொதுச் செபத்தின் அவசியமும் வலியுறுத்தப்படுகிறது. அக்கால சமூகத்திற்கு ஏற்றாற்போல், பெண்கள் எவ்வாறு அடக்கத்துடன் நடந்து கொள்ள வேண்டும் என்றும் விதவைகள் கவனிக்கப்பட வேண்டும் என்றும் போதிக்கப்படுகின்றன.

இரண்டாம் திருமுகத்தில், தனது சிறைவாசத்தைப்பற்றியும் தனக்கு வரப்போகும் முடிவைப்பற்றியும் பவுல் பேசுகிறார். இதிலேயும் போலிப் போதகங்களைப்பற்றி எச்சரிக்கையாக இருக்கும்படி வலியுறுத்துகிறார் *(2 திமொ 2:14-4:8).* திமொத்தேயுவின் கடமைகளையும் உரிமைகளையும் எடுத்துக் கூறுகிறார் *(1:6-2:13).*

**திம்னத் - கெரேசு, திம்னத் - செரா** (TIMNATH - HERES, TIMNATH - SERAH - சூரியனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பகுதி, விடப்பட்ட பகுதி)

இது யோசுவாவுக்குக் குறிக்கப்பட்ட உரிமை நிலமும் அவர் அடக்கம் செய்யப்பட்ட இடமுமாகும். *நீதி 2:9*-இன்படி, யோசுவா ''காகசு மலைக்கு வடக்கே எப்பிராயிம் மலைநாட்டில் அவரது உரிமை நிலத்தின் எல்லையிலிருந்த திம்னத்-கெரேசில்'' அடக்கம் செய்யப்பட்டார். *யோசு 19:30; 24:30*-இல் இவ்விடம் திம்னத் - செரா என்று கூறப்படுகிறது. திம்னத் - கெரேசு என்ற சொல் ''சூரியனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பகுதி'' என்ற பொருள் அடிப்படையில், காலத்தால் முந்திய பெயராகும் எனக் கொள்ளலாம். மேலும் இது சூரிய வழிபாட்டு இடமும் ஆகும். இராபிகள் பாரம்பரியம், இப்பெயரை யோசுவா கதிரவனை அசையாது நிற்கச் செய்ததோடு (யோசு *10:13*) தொடர்புபடுத்துகிறது. மேலும் யோசுவாவின் கல்லறை சூரியன் அடையாளத்தைக் கொண்டிருந்தது என்று கூறுகிறது. சூரிய வழிப்பாட்டுக் கறையை அகற்று

வதற்காக இவ்விடத்தின் பெயரைத் திம்னத் செரா என்று மாற்றினர் என்று ஒரு விளக்கம் கூறும். நாடு பங்கீடு செய்யப்பட்டபிறகு ''விடப்பட்ட பகுதியை'' யோசுவாவுக்கு உரிமைச் சொத்தாக அளித்ததைக் குறிக்கும் திம்னத் செரா என்ற பெயரும் பொருத்த முடையதே.

இவ்விடம் செக்கேமுக்குத் தென்மேற்கில் 27 கி.மீ தொலைவிலும் எருசலேமுக்கு வடக்கு வடமேற்கில் 28 கி.மீ. தொலைவிலும் உள்ள கிர்பெத் திப்னே என்று அடையாளம் காட்டப்படுகிறது. சமாரியர் பாரம்பரியம் செக்கேமுக்குத் தென்மேற்கில் 14 கி.மீ. தொலைவிலுள்ள கெபர் காரிசில் யோசுவாவின் கல்லறை இருந்ததாகக் கூறுகிறது. ஆனால் இது பிற்காலப்பாரம்பரியமாகும். இதற்குத் தொல்பொருள் சான்று இல்லை. யுசேபியுவும் எரோனிமுவும் இவ்விடத்தைத் தம்னா என்றும், அவர்கள் காலத்தில் அங்கு யோசுவாவின் கல்லறை இருந்ததாகவும் கூறுகின்றனர். இது ஒருவேளை 1 மக் 9:10-இல் வரும் திம்னாத்தா என்பதுதான் திம்னத்-கெரேசு என்பதைச் சுட்டலாம்.

**திம்னா** (DIMNAH - சாணம்)

மெராரியருக்குரிய ஒரு லேவியர் நகரம். இது செபுலோனில் அமைந்திருந்தது (யோசு 21:35). இந்நகரம் ரிம்மோனாகவோ (19:13) ரிம்மோனோவாகவே (1 நாள் 6:77) இருக்கலாம்.

**திம்னா** (TIMNA - குறிப்பிட்ட பகுதி)

1. ஏசாவின் மகன் எலீப்பாசின் வைப்பாட்டி. அமலேக்கின் தாயும் லோத்தானின் சகோதரியும் ஆவாள் (ஆதி 36:12.22; 1 நாள் 1:39).

2. ஏதோமின் ஓர் இனத்தலைவர் (ஆதி 36:40; 1 நாள் 1:51).

3. ஏசாவின் வழித்தோன்றலும் எலீப்பாசின் மகனுமாவார் (1 நாள் 1:36). 2-இல் குறிக்கப்படுபவரும் இவரும் ஒரே ஆளாக இருக்கலாம். இப்பெயர் ஏதோமிய இனத்தில் ஒரு குலப்பெயர் மூதாதையரை அல்லது ஒரு நிலப்பகுதியைக் குறிக்கலாம்.

**தியத்திரா** (THYATIRA)

லீதியாப் பகுதியில், இக்கால இஸ்மிருக்கு (சிமிர்ன) வட கிழக்கில் 80 கி.மீ. தொலைவிலும் பெர்கமாவுக்குக் (பெர்கமு) கிழக்கு வட கிழக்கில் 60 கி.மீ. தொலைவிலும் ஆகியன் கடற்கரையிலிருந்து 70 கி.மீ. தொலைவிலும் இருந்த ஒரு நகரமாகும். அதன் இக்காலப்பெயர் ஆகிசார் ஆகும்.

முந்தையக் குடியிருப்பு இருந்த இடத்தில் தியத்திரா முதலாம் செலூக்குவால் மீண்டும் நிறுவப்பட்டது. இது வணிக, தொழில்மையமாக மாறியது. இரத்தாம்பரத்துக்கும் மற்றத் தொழில்களுக்கும் பெயர் பெற்றுத் திகழ்ந்தது. உரோமையர் காலத்தில் இது பெர்கமு, இலவோதிக்கேய ஆகிய இடங்களை இணைக்கும் உரோமையர் சாலையில் முக்கிய இடமாக விளங்கியது. தொழில் குழுக்கள் ஏதாவது ஒரு தேவதைக்கு அர்ப்பணிக்கப்பட்டிருந்தன; நகரத்தின் சமூக, அரசியல் வாழ்விலும் முக்கிய பங்கு எடுத்தன. பிலிப்பியில் பவுல் மதமாற்றியவர்களுள் முதல் நபர் தியத்தீராவைச் சேர்ந்த லீதியா ஆவாள். இவள் இரத்தம்பரத்தொழில் செய்பவள் (அ.ப. 16:14). திருவெளிப்பாட்டில் குறிக்கப்படும் ஏழுசபைகளில் ஒன்று தியத்திராவாகும் (திருவெளி 1:11; 2:18-29). இச்சபைக்கு எழுதப்பட்ட கடிதத்தில், ஆண்டவர் தன்னை ''எரிதல்போலச் சுடர்விடும் கண்களும் வெண்கலம் போன்ற பாதங்களும் உடைய இறைமகன்'' என்று விவரிக்கிறார். இது அங்கு நிலவிய உலோகத் தொழிலைச் சுட்டுகிறது என்று கருதப்படுகிறது. அந்நகரத் திருச்சபையைப் போற்றுகிறார். ஆனால் ''இறைவாக்குரைப்பதாகக் கூறிக்கொண்டு, என் ஊழியர்களை ஏமாற்றி, அவர்கள் விபசாரம் செய்யவும், சிலைகளுக்குப் படைக்கப்பட்டதை உண்ணவும் போதித்து வரும்'' ஈசபேலை விட்டுவைத்திருப்பதாக இச்சபையைக் குறை கூறுகிறார். இப்பெயர் ஒரு பெண்ணுக்கு அளிக்கப்பட்ட அடையாளப் பெயராகும் (2:20-21.24; 1 அர 16:31).

**தியோக்னேத்துவுக்கு எழுதப்பட்ட கடிதம்** (DIOGNETUS, LETTER TO)

கிறிஸ்தவ மறைக்கு ஆதரவான வாதங்களைக் கொண்ட ஒரு கிறிஸ்தவக் காப்புரை இலக்கியமாகும் இது. இது சொற்கவர்ச்சி உடைய ஆனால் செயற்கையான மொழி நடையில் எழுதப்பட்டுள்ளது. கி.பி 3-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே இது எழுதப் பட்டிருக்கும் எனக் கருதுகின்றனர்.

இது வழக்கமாக அப்போஸ்தோலிக்கத் தந்தையர்களின் நூல்கள் தொகுப்பில் சேர்க்கப்படுகிறது. ஆனால் இதன் நோக்கமும், இலக்கியத் தன்மையும் இது தொடக்ககாலக் காப்புரை இலக்கியங்களைச் சேரும் எனச் சுட்டுகின்றன. யார் எழுதினார், யாருக்கு எழுதப்பட்டது என்பது ஒருவரும் அறியாத புதிர். பழங்காலத் திருச்சபையில் இந்நூல் எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தியதற்குச் சான்று இல்லை.

உடலுக்கு எப்படி ஆன்மா உள்ளதோ அதுபோல் கிறிஸ்தவர்கள் உலகிற்கு உள்ளனர் என்ற அவரின் உவமானத்தால் இவரின் நூல் எங்கும் பரவியது. இதில் மொத்தம் உள்ள 12 அதிகாரங்களில் கடைசி இரண்டு வேறு ஒருவரால் எழுதப்பட்டது என்றும், அவர் யார் என்று அறியப்படவில்லை என்றும் கூறப்படுகின்றன.

**தியோஸ்கொரிந்தியு** (DIOSCORINTHIUS)

*2 மக் 11:21*-இன்படி கி.மு. 165-164-இல் லீசியா யூதர்களுக்கு எழுதிய கடிதத்தில் குறிக்கப்படும் மாதத்தின் பெயர். யோசிப்பசின் கருத்துப்படி இது யூதர்களின் மார்கேஸ்வான் மாதத்திற்கு (நவம்பர்-திசம்பர், கார்த்திகை) இணையானதாகும்.

**தியோத்திரபு** (DIOTREPHES - சேயுசுவால் ஊட்டமூட்டப்பட்ட)

தொடக்ககாலக் கிறிஸ்தவர்களில் ஒருவர். *3 யோவா 9*-இல் வரும் கூற்று இவருக்குப் பெருமை தருவதாக இல்லை. இவர் தன்னையே தலைவனாக்கிக் கொள்ள விரும்பி, ''மூப்பரின்'' அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள வில்லை.

**தியோனிசியா** (DIONYSIA)

தியோனிசுஸ் (DIONYSUS) தெய்வத்திற்கு எடுக்கப்படும் ஒரு திருவிழா. குளிர்காலத்திற்குப்பின் தொடங்கும் வசந்தகால வாழ்வைக் குறிக்க இத்திருவிழாக் கொண்டாடப்படுகிறது. வசந்த காலத்தில் மந்திர சக்தியால் அவர்கள் வளமடைவர் என்று நம்பினர். எனவே இத்திருவிழாவிற்குமுன் குடிவெறி, காம இச்சைகள், மனிதமிருக பலிகள் முதலியன பழக்கத்தில் இருந்தன. பின்னர், கூறுபோட்ட மனித / மிருக உடல்களைப் புதைத்தனர்.

அத்திக்காவில் தியோனிசியா திருவிழா சிறிய அளவில் டிசம்பர் மாதம் கிராமங்களில் கொண்டாடப்பட்டது. பெரிய திருவிழா நகரங்களில் கொண்டாடப்பட்டது. அப்போது நாடகங்கள் பல நடைபெறும். மக்களும் பச்சைநிற, பளபளப்பான இலைகள் அணிந்தவராய்ப் பவனியாகச் செல்வர். கொலோ கூலே-சீரியாவில் இவ்விழாவைப் புகுத்தியபோது மன்னன் அந்தியோக்கு எப்பிபான் யூதர்களும் இப்பவனியில் சேர்ந்து கொள்ள வேண்டுமெனக் கட்டாயப்படுத்தினான் (*2 மக் 6:7*).

**தியோனிசியு** (DIONYSIUS)

இவர், ஏதன்சிலுள்ள அரயோப்பாகுவில் பவுல் பேசியபின் மனந்திரும்பிய சிலரில் ஒருவராவார் (*அ.ப. 17:34*). இவர் அவ்விடத்து அரசில் ஓர் அங்கத்தினர் என்று லூக்கா சுட்டிக்காட்டுகிறார். யூசேபியுவின் கருத்துப்படி, தியோனிசியு ஏதன்சின் முதல் ஆயராக இருந்திருக்கலாம். ஒரு சீரிய ஆசிரியரால் எழுதப்பட்ட (கி.பி. 500), போலி அரயோப்பாகியரான தியோனிசியு என்பவரின் மறைபொருள்-புதிய-பிளோட்டோ தத்துவ நூல் ஏதன்சின் தியோனிசியுவால் எழுதப்பட்டதாகக் கருதப்பட்டது.

**தியோனிசு** (DIONYSUS)

ஒரு கிரேக்க விவசாயத் தேவதை. இது, குறிப்பாக, திராட்சைக் கொடி லியேர்கொடி ஆகியவற்றுடன் தொடர்புபடுத்தப்படு கிறது. இதன் மற்றொரு பெயர் பாக்குஸ் ஆகும். கிரேக்க இதிகாசங்களில் இத் தேவதை ஆண்டுதோறும் மரித்து உயிர் பெறுவதாகச் சித்தரிக்கப்படுகிறது. இந்த விழா தியோனிசியா என்றழைக்கப்பட்டது.

கிரேக்க மயமாக்குதலை யூதர்களிடையே புகுத்திய அந்தியோக்கு எப்பிபான், இத் தேவதையின் விழாவில் தலையில் லியோ இலை வளையம் அணிந்து பவனியில் பங் கெடுக்குமாறு யூதர்களைக் கட்டாயப்படுத்தி னான் (2 மக் 6:7). அவனுடைய தளபதி நிக்கனோர், எருசலேம் ஆலயத்தை அழித்து, அதன்மேல் தியோனிசுக்குக் கோவில் கட் டப்போவதாக எருசலேம் குருக்களை அச் சுறுத்தி, யூதா மக்கபேயுவைத் தன்னிடம் ஒப் படைக்குமாறு கட்டாயப்படுத்தினான் (14:33).

**திரக்கோனித்தி** (TRACHONITIS - கரடுமுர டான பகுதி)

இது யோர்தானை அடுத்து வடக்கிலுள்ள ஒரு மாவட்டம். திருமுழுக்கு யோவானின் பணித்தொடக்கத்தைக் குறிக்க இப்பகுதி குறிக்கப்படுகிறது. அப்போது ஏரோது அந் திப்பாவின் ''உடன்பிறப்பான பிலிப்பு இத் துரேயா, திரக்கோனித்திப் பகுதிக்கு ... குறு நில மன்னனாக இருந்தான்'' (லூக் 3:1). இது தமஸ்குவுக்குத் தெற்கில் 40 கி.மீ. தொலை விலும், மேற்கில் கலானித்தியையும், வடகிழக் கில் எர்மோன் மலையடிவாரத்தில் உலாத்தா வையும் பனேயாவையும் கொண்டிருந்தது.

பிலிப்பு இப்பகுதியை 40 ஆண்டுகள் ஆட்சி செய்தார். அவர் இறந்தபின் (கி.பி-34), இப்பகுதி உரோமைப் பேரரசின் சீரிய மாகாணத்தோடு சேர்க்கப்பட்டது. கி.பி. 37-இல் கலிகுலாப் பேரரசனால் முத லாம் ஏரோது அகிரிப்பாவுக்குக் கொடுக்கப் பட்டது. இவர் கி.பி. 44வரை இங்கு ஆட்சி செய்தார். பின்பு 53-வரை உரோமையரின் நேரடி நிர்வாகத்தில் இருந்தது; அதன்பின் 100-வரையில் 2-ஆம் ஏரோது அகிரிப்பா இங்கு ஆட்சி செய்தார். பின், உரோமை அதிகாரிகளின் கீழ் இருந்தது. 106-இல் ஓர் உரோமை மாகாணமாயிற்று. இப்பகுதி திரே சன் ஆட்சியில் (98-117) மிகவும் சிறப்புற் றிருந்தது.

**திரட்சா** (TIRZAH - இன்பம், அழகு) - ஆள்

மனாசே இனத்தைச் சேர்ந்த செலோபுகா தின் ஐந்து புதல்வியர்களுள் ஒருத்தி. சகோ தரர்கள் இல்லாத இவர்கள் மரபுவழிச் சொத் தைக் கேட்டுப் பெற்றுக்கொண்டனர் (எண் 26:33; 27:1-11; 36:10-12; யோசு 17:3-6).

**திரட்சா** (TIRZAH - இன்பம், அழகு) - இடம்

இது ஒரு கானானிய நகரம். யோசுவா வால் கைப்பற்றப்பட்ட நகரங்களின் பட்டிய லில் இது சேர்க்கப்பட்டுள்ளது (யோசு 12:24). எரொபவாம் (1 அர 14:17), பாகசா (15:21.33; 16:6), ஏலா (16:89), சிம்ரி (16:15) ஆகியோரின் காலத்தில், இஸ்ராயேல் அரசர் களின் இருப்பிடமாக இது விளங்கியது. திரட்சா ஓம்ரியால் முற்றுகையிடப்பட்டது 16:17). இது ஓம்ரிக்கு அரசாட்சியின் இருப்பிட மாக ஆறு வருடத்திற்கு இருந்தது. பிறகு தலைநகர் சமாரியாவிற்கு மாற்றப்பட்டது (16:23). மெனகேம் திரட்சாவிலிருந்து வந்தவ ராவார் (2 அர 15:14). தப்புவாகு ஆட்சிப்பகு தியில் ஒன்றாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (15:16). உ.ச.6:4-இல் ''என் அன்பே, நீ திரட்சாவைப் போல் அழகுள்ளவள்'' என்று காதலி வர்ணிக்கப்படுகிறாள்.

திரட்சா தேல் ஏல்-பாரவோடு அடையா ளம் காட்டப்படுகிறது. இது நப்லுசிலிருந்து வடகிழக்கே 11 கி.மீ. தொலைவில் உள்ளது. புதைபொருள் ஆராய்ச்சிகள் நடைபெற்றுள் ளன. இந்த இடத்தில் கற்காலத்தில் குடியேறி யுள்ளனர். பிறகு தொடக்க வெண்கலக் காலமுதல் மத்திய வெண்கலக் காலம் முடிய யாரும் இங்குக் குடியிருக்கவில்லை. பிறகு தொடக்கால இஸ்ராயேலர் காலத்தில் மீண் டும் குடியேறினர். கி.பி 9-ஆம் நூற்றாண்டு இறுதியில் திரும்பவும் கைவிடப்பட்டது. தேல் ஏல் - பாரதான் திரட்சாவாக இருந்

தால், யோசுவாவின் பட்டியலில் இடம் பெறுவது, கால முரண்பாடாக இருக்கும். அங்கு ஓர் 'அரண்மனை' உள்ளது. இது முதலாம் எரொபவாமின் கட்டடமாக இருக் கலாம். ஓம்ரியால் புதுப்பிக்கப்பட்டது. இவ்விடம்தான் திரட்சா என்று உறுதியாகக் கூறும் அளவுக்கு எதுவும் காணப்பட வில்லை. ஆனால் அறிஞர் பலர் இப்படி யிருக்கலாம் என்று பொதுவாக ஏற்றுக் கொள்வர்.

**திரன்னு** (TYRANUS - முழு ஆட்சியுடையவர்)

பவுல், எதிர்ப்பின் காரணமாக, செபக் கூடத்தில் போதிப்பதை நிறுத்தி, திரன்னு என்பவரின் கல்விக்கூடத்தில் போதித்து வந் தார் (அ.ப. 19:9).

**திராக்கா** (TIRHAKAH)

கி.மு. 720-ஐ ஒட்டி எகிப்து பல சிறு நாடுகளாகப் பிளவுபட்டுப்போனது. எத்தி யோப்பிய அரசனான பியான்கி வடக்கி லிருந்து வந்து, எகிப்தைவென்று ஒற்றுமைப் படுத்தி எகிப்தின் 25-ஆவது அரசமரபைத் தொடங்கி வைத்தார். இவரது மூன்றாவது வாரிசு திராக்கா அல்லது தகராக்கா ஆவார் (689-664). சனகெரிபுக்கு எதிராக எசேக்கியா செய்த கிளர்ச்சியில் திராக்கா அவருக்கு ஆத ரவு அளித்ததாக விவிலியம் கூறுகிறது (2 அர 19:9; எசா 37:9). இதை, ஆசீரியா அல்லது பாபிலோனுக்கு எதிராக எகிப்தைச் சார்ந் திருப்பதின் பயனின்மைக்கு ஓர் எடுத்துக்காட் டாக விவிலியம் விவரிக்கிறது. சனகெரிபு வின் மரணத்துக்குப்பின் திராக்கா பார் வோன் என்ற அளவில், அசீரியர்களோடு போரிட்டு சனகெரிபுவின் மகன் ஏசர்கத்தோ னிடம் தோல்வியுற்றார் (671). தனது தலை நகரை இழந்தார். அதனை மீளவும் கைப் பற்றும் முயற்சியில் மீளவும் 667-இல் அசீரியர்களிடம் தோல்வியுற்றார்.

சூடானில் நடந்த தொல்பொருள் ஆய்வு கள் திராக்காவின் ஆட்சிக்காலம் பற்றிய பல செய்திகளை அளித்துள்ளன.

**திராக்கு** (THRACE)

திராக்கு என்பது தான்யூபு நதிக்குத் தெற் கில் உள்ள ஒரு பகுதி. இது போஸ்போராஸ், கருங்கடலுக்கு மேற்கில் உள்ளது. மேலும் கிழக்கு மாசிதோனியா, ஆகியன்கடல், எலெஸ் போந்து, பிரபோந்து ஆகியவற் றிற்கு வடக்கில் உள்ளது; நெஸ்து அல்லது ஸ்திரிமேன் ஆற்றுக்குக் கிழக்கில் உள்ளது. உரோமையர்கள் இந்தப் பகுதியை இரண்டு பகுதிகளாகப் பிரித்தனர். கேமுஸ் மலை களின் வடக்குப்பகுதி மேசியா என்றும், தெற் குப் பகுதி திராக்கு என்றும் அழைக்கப் பட்டன. உரோமையர்களின் கண்காணிப் பிற்குப் பிறகு திராக்கு இரண்டு நூற்றாண்டு களாக வளர்ச்சியடைந்தது. கிளாதியு சுமார் கி.பி. 46-இல் இதை ஒரு மாநிலமாக உருவாக்கினார். இங்கு வாழ்ந்த மக்கள், வீரமுள்ளவர்களாக, போர்புரியக் கூடிய மக் களாக இருந்தனர். இதனால் பல வெளி நாட்டு, ஆட்சியாளர்களுக்குக் கூலிப் போர் வீரர்களாகிப் பணி செய்தார்கள். 2. மக் 12:35-இன்படி கோர்கியா கி.மு. 163-இல் யூதா மக்கபேயரோடு சண்டையிட்டுக் கொண்டிருக்கும் போது, திராக்குவைச் சேர்ந்த ஒரு குதிரைவீரன் கோர்கியாவுக்கு உதவி செய்து ஆபத்திலிருந்து காப் பாற்றினான்.

**திராக்குமா, பொன், பொற்காசு** (DARIC OF GOLD, DRACHMA)

8.424 கிராம் எடையுள்ள ஒரு பாரசீக தங்க நாணயம். இதுதான் விவிலியத்தில் குறிப் பிடப்பட்டுள்ள முதல் நாணயம். அநேகமாக தாரிக் என்பது தாரியு அதாவது பாரசீக மாமன்னன் தாரியு என்ற பெயரிலிருந்துதான் வந்திருக்க வேண்டும். இப்பெயர் ''தாரக் மானா'' என்ற இன்னும் பழமை வாய்ந்த அசீரிய மூலத்திலிருந்தும் வந்திருக்க வாய்ப்பு உண்டு. பாரசீகர் காலத்தில் ஒவ் வொரு பொற்காசும் ''தாரிக்'' என்று அழைக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஏனெனில் சைரஸ் (எஸ் 2:69; 8:27; நெகே 7:70-72), தாவீது (1 நாள் 29:7) ஆகியோர் காலத்தில் ஏற்கெனவே இப்பெயர் பயன்பட்டுள்ளது. ஆனால் இது கால மயக்கமாக முன்பே பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

கிரேக்க நாட்டில் இது 4.3 கிராம் எடையுள்ள ஒரு வெள்ளி நாணயமாகப் பயன்பட்டது. புதிய ஏற்பாட்டுக் காலத்தில் இது உரோமை நாணயமான தெனாரியுடன் சமமாக்கப்பட்டது. இது கிரேக்கர்களால் திராக்குமா என்று அழைக்கப்பட்டது. இச்சொல் ''வெள்ளிக்காசு'' என்று மொழி பெயர்க்கப்படுகிறது (லூக் 15:8-9).

### திராசு (TIRAS - ஏங்குகின்ற)

நாடுகளின் பட்டியல்படி இவர் யாபேத்தின் ஒரு மகனாவார் (ஆதி 10:2; 1 நாள் 1:5). இவரது வழித்தோன்றல்கள் கடல் மக்களாகக் கருதப்படுகின்றனர். இவர்கள் ஆகியன், கிழக்கு மத்தியதரைக் கடல்களில் கடல் கொள்ளைக் கூட்டத்தினராகத் திரிந்தனர். கி.மு. 13-ஆம் நூற்றாண்டில் எகிப்தைக் கைப்பற்றிய கடல் மக்களுள் ஒரு கூட்டமாகக் கருதப்படுகின்றனர்.

### திராட்சைக்கொடி, முந்திரிக்கொடி, திராட்சைத் தோட்டம் (VINE, VINEYARD)

I. திராட்சைக்கொடி: பாலஸ்தீனத்தில் விளையும் ஒலிவ, அத்திமரங்களைப்போலத் திராட்சையும் ஒன்றாகும். யோத்தாம் கூறும் கதையில் இந்த மூன்றும் ஒன்றுசேரக் கூறப்பட்டுள்ளன (நீதி 9:8-13). மற்ற இடங்களில் இவை நாட்டின் விளைச்சலைக் குறிக்கும் (காண்க. யோசு 24:13; 1 சாமு 8:14; 2 அர 5:26; எரே 5:17; 40:10; எரே 2:12). விவிலியக் காலத்தில் திராட்சைத்தோட்டம் ஒன்றுதான் பலருக்கு வாழ்க்கைக்கு வேண்டியவற்றைக் கொடுக்கும் பொருளாக இருந்தது. எனவேதான் நாபோத்து ஆகாசுக்குத் தன் திராட்சைத் தோட்டத்தைத் தர மறுக்கிறார்.

**1. திராட்சை வளர்ப்பின் பழமை:** யாவே பாரம்பரியத்தின்படி நோவா திராட்சை வளர்ப்பின் தந்தை என்று அழைக்கப்படுகிறார் (ஆதி 9:20). எகிப்தில் முடியாட்சி வரும் முன்பே திராட்சை பயிரிடப்பட்டது. பழைய பேரரசில் உள்ள இராணுவ சாசனங்கள் பாலஸ்தீனத்தின் திராட்சைகளைப் பற்றிப் பேசுகின்றன. நோவாவின் கதைப்படி, திராட்சை அர்மேனியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதாகக் கருதப்பட்டாலும், ஒவ்வொரு பகுதியிலும் இருந்திருக்கும் திராட்சை பயிரிடல் மிகப்பழமையான விவசாயமாகும்.

**2. திராட்சை பயிரிடுதல்:** எசாயா திராட்சை பயிரிடுவதைப்பற்றித் தெளிவாக விளக்கிக் கூறுகின்றார் (எசா 5:6).

**அ) இடம்:** பாலஸ்தீனத்தின் தட்பவெப்ப நிலை இதற்கு ஏற்றதாக உள்ளது. போதுமான வெப்பமும், மழையும் கிடைக்கின்றன. சாதாரணமாக, திராட்சைத் தோட்டங்கள் குன்றுகளின் மேல் அமைக்கப்பட்டன (சங் 80:10; எசா 5:1; எரே 3:15; ஆமோ 9:13). சில சமயங்களில் குறிப்பாகப் பெலிஸ்தியர் சமவெளிகளில் சம நிலங்களும் பயன்படுத்தப்பட்டன. திராட்சைத் தோட்டங்கள் பெரும்பாலும் திறந்த வெளியில் இருந்தாலும், நாபோத்தின் திராட்சைத் தோட்டம் ஆகாசின் அரண்மனைக்கு அருகில் இருந்தது போல (1 அர 21), வீட்டிற்கு அருகில் இருப்பதும் உண்டு.

**ஆ. நிலத்தைப் பண்படுத்துதல்:** திராட்சை பயிரிடப்படுமுன் நிலம் நன்றாகப் பண்படுத்தப்பட வேண்டும். பெரிய கற்கள் நீக்கப்பட்டு நிலம் நன்றாக உழப்பட்டது. மேலும் திராட்சைத் தோட்டத்தைக் குள்ளநரிகளிடமிருந்து பாதுகாக்க அதைச் சுற்றிலும் கற்சுவர் அமைக்கப்பட்டது (உ.ச. 2:15); காட்டுப்பன்றிகள் கள்வர்கள் (எரே 49:9) இவர்களிடமிருந்தும் பாதுகாக்க வேலி அமைக்கப்பட்டது. ஒவ்வொரு திராட்சைத் தோட்டத்திலும் ஒரு காவல் கோபுரம் இருந்தது (எசா 5:2). பழங்காலத்தில் திராட்சையைக் கண்காணிப்பவர்கள் இந்தக் கோபுரத்தில் வாழ்ந்தனர். இந்தக் கோபுரத்தின் அடிப்பகுதி பழம் பிழியும் ஆலையாகப் பயன்பட்டது.

**இ. திராட்சை நடுதல்:** வழக்கமாகத் திராட்சைகள் 8 முதல் 10 அடிவரை இடைவெளி விட்டு வரிசையாக நடப்படும். கொடிகள் தரையில் படர்ந்திருந்தாலும், திராட்சைக்குலைகள் கவையான குச்சிகளில் தாங்கப்பட்டன. சில சமயங்களில் திராட்சை அருகிலுள்ள மரங்

கள் மேல் படரவிடப்படும். இதனால் ஒரு வன் திராட்சையின் கீழ் அமர முடியும் (1 அர 4:25). செயற்கையான குறுக்குக்கம்பிப் பின்னல் உரோமையர் காலத்தில்தான் உரு வாக்கப்பட்டது.

**ஈ. கவாத்துச் செய்தல்:** திராட்சைக் கொடிகள் மலர்ந்து, காய்த்தது. கண்காணிப்போன் தேவையில்லாத கொடிகளை வெட்டிவிடுவான் (எசா 18:5; யோவா 15:2). இதனால் மற்றக் கிளைகள் சத்து முழுவதையும் பெற்று நல்ல கனிதரும்.

**உ. திராட்சைப் பழங்களின் அறுவடை:** ஜூலை மாதத்தின் ஆரம்பத்திலேயே திராட்சைக் கொடிகள் பழுக்க ஆரம்பித்துவிட்டாலும், உண்மையான அறுவடை ஆகஸ்டு அல்லது செப்டம்பர் வரை நடைபெறாது. முதலில் பழுக்கும் பழங்கள் புளிப்பாக இருப்பதால் பற்கள் கூசும் (எரே 31:19-30; எசே 18:2). முழுவதும் பழுத்தபழங்களை மக்கள் உண்டனர்; உலரவைத்து அடைகள் தயாரித்தனர்; அவற்றை வேகவைத்துத் தேங்கூழ் தயாரித்தனர்; அல்லது திராட்சைரசம் பிழிந்தனர்.

**3. திராட்சைத் தோட்டத்தின் பயன்கள்:** பெரும்பாலான திராட்சைத் தோட்டங்கள் நிலச் சொந்தக்காரர்களாலோ கூலி ஆட்களாலோ பயிரிடப்பட்டது (மத் 20:1-6). பெரிய நிலக்கிழார்கள் தம் நிலங்களைக் குத்தகைக்கு விடுவதும் வழக்கத்திலிருந்தது (உ.ச. 8:11; மத் 21:33-43). நிலவுடைமையாளர் விளைச்சலில் தன் பங்கைப் பெறுவார் (மத் 21:34). பழைய ஏற்பாட்டில் திராட்சைத் தோட்டத்தைப்பற்றிப் பல சட்டங்கள் இருந்தன. நிலச்சொந்தக்காரர் தன் தோட்டத்தை இரண்டு முறை அறுவடை செய்யக்கூடாது. மறைந்திருக்கும் பழங்கள் வெளிநாட்டவருக்கும், விதவைகளுக்கும், அனாதைகளுக்கும் (லேவி 19:10; உப 24:21) விடப்பட வேண்டும். திராட்சைத் தோட்டங்கள் ஓய்வு ஆண்டில் தரிசாக விடப்பட வேண்டும் (யாத் 23:10-11; லேவி 25:3-5). மற்றப் பயிர்கள் அதில் இடப்படக்கூடாது (உப 22:9). இரண்டாவதாகக் கூறப்படும் சட்டம், புதிய ஏற்பாட்டுக் காலத்தில் கடைப்பிடிக்கப்படவில்லை என்பது, அத்திமரம் வைத்திருந்தவன் அந்த இடத்தில் திராட்சை பயிரிடுவதிலிருந்து புலனாகிறது (லூக் 13:6). திராட்சைத் தோட்டங்கள் பயிரிட்டவன் இராணுவச் சேவையிலிருந்து விடுதலையளிக்கப்பட்டான் (உப 20:6).

**4. திராட்சை, திராட்சைத்தோட்டம் - விவிலிய உருவகம்**

**அ. பழைய ஏற்பாடு:** திராட்சையும், திராட்சைத் தோட்டமும் இஸ்ராயேலுக்கு உருவகமாகப் பயன்படுத்தப்படுகிறது. அது எகிப்திலிருந்து கடவுளால் கொண்டுவரப்பட்டு நடப்பட்டது (சங் 80:8-13). அது தேர்ந்தெடுக்கப்பட்ட திராட்சையாய் இருந்தும் காட்டுத் திராட்சையாக மாறியது (எரே 2:21; எசா 5:1-7; ஓசே 10:1). திராட்சையின் கிளைகள் எரிக்க மட்டுமே பயன்படுவது போல, எருசலேம் வாழ் மக்கள் அழிக்கப்படுவர் (எசே 15; காண்க: 19:14). இதைப் போலவே ஒரு தனிமனிதனும் திராட்சையோடு ஒப்பிடப்படலாம். எசேக்கியேல் தன் உருவகக் கதையில் பெரிய கழுகு ஒன்று நெபுகத்னேசர் நாட்டின் விதைகளுள் ஒன்றை (செதேக்கியா எசே 17:1-8) எடுத்து விதைத்தது. அது திராட்சைக் கொடியைப் போலப் படர்ந்து பரவியது.

இயற்கையாகவே திராட்சையும், திராட்சைத் தோட்டங்களும் அதிக அளவில் இருப்பது கடவுளின் அருளாகக் கருதப்பட்டது. கைவிடப்பட்ட இஸ்ராயேலுக்குத் திராட்சைத் தோட்டங்கள் அருளப்படும் (ஓசே 2:15). இறுதிக் காலத்தில் திராட்சை புதுமையாகக் கனி கொடுக்கும். பாரூக் வெளிப்பாட்டின்படி ஒவ்வொரு திராட்சையும் 1000 கிளைகளையும், ஒவ்வொரு கிளையும் 1000 குலைகளையும், ஒவ்வொரு குலையும் 1000 பழங்களையும் கொண்டிருக்கும் (29:5). பாலைவனத்தில் திராட்சைக் குலைகளைக் கண்டாற்போல் கடவுள் இஸ்ராயேலைக் கண்டார் (ஓசே 9:10).

*ஆ. புதிய ஏற்பாடு:* இயேசு தன்னுடைய உவமைகளில் திராட்சைத் தோட்டங்களைக் குறிப்பிடுகின்றார். அவர் வானக அரசை ஒரு திராட்சைத் தோட்டத்திற்கு ஒப்பிடுகின்றார். அதன் உரிமையாளர், வேலையாட்களை அமர்த்துகின்றார். சிலர் நாள் முழுவதும் உழைத்தாலும், மற்றும் சிலர் சிலமணி நேரமே உழைத்தாலும் அனைவருக்கும் ஒரே கூலி கொடுக்கப்படுகின்றது *(மத் 20:16)*. விண்ணகத்தில் நுழைபவர்கள், முதலில் தன் தந்தையின் திராட்சைத் தோட்டத்தில் வேலை செய்ய மறுத்துப்பின் சென்ற மகனுக்கு ஒப்பிடப்படுகின்றனர் *(மத் 21:28-32)*. யூதர்கள், நிலச் சொந்தக்காரரின் (கடவுள்) மகனைக் (இயேசு) கொன்ற கொடிய குத்தகைக்காரர்களோடு ஒப்பிடப் படுகின்றனர் *(மத் 21:33-43; மாற் 12:1-11; லூக் 20:9-17)*.

மேலும் இயேசு தன்னையே உண்மையான திராட்சைக் கொடியாகவும், தன் தந்தையைக் கண்காணிப்பவனாகவும் உருவகப் படுத்துகின்றார் *(யோவா 15:1-11)*.

II. **இறையியல் சிந்தனை:** சாகுபடி செய்யப் படும் பயிர்களில் சிலவற்றிற்கு மற்றவற்றை விட அதிகமான கவனிப்புத் தேவைப்படுகிறது. பருவங்களின் மாறுதலுக்கேற்ப அவற்றைப் பேணிக்காக்க வேண்டும். திராட்சைக் கொடி நிறைந்த பாலஸ்தீன நாடு நிலத்தின் விளைச்சலைப் பெற்றுத் துய்க்கும்படி அழைக்கிறது. மேலும், வரவிருக்கும் செல்வக் கொழிப்பு நிறைந்த பலனை எதிர் நோக்கி உழைக்கவும் அதே வேளையில் தங்களது உழைப்புக்குப் பலன் அளிப்பது இறைவனின் கனிந்த இரக்கமே என்பதை மனதில் கொள்ளும்படியும் கூறுகிறது. திராட்சைக் கொடியில் ஒரு மறைபொருளும் தேங்கிக் கிடக்கிறது. அதாவது, திராட்சைக் கனியைத் தவிர, கொடிக்கு எவ்வித மதிப்புமில்லை. குலைகளைக் கொய்த பின்னர் அக்கொடி எதற்குமே உதவாததாகிறது *(எசே 15:2-5)*. கனிதராத கொடியோ நெருப்பிலே எரிக்கப்படுவதற்கே தகுதியானது *(யோவா 15:6)*. திராட்சைப் பழமானது ''தேவர்களுக்கும் மனிதர்களுக்கும்'' *(நீதி 9:13)* இன்பவிருந்தாகிறது. திராட்சைக் கொடி மனிதனுக்கு மகிழ்ச்சியைத் தருகிறது என்றால் *(சங் 104:15)* அதனுடைய மகிழ்வூட்டும் கனியானது கடவுளின் கரத்திலிருந்தே வருகிறது - இதுதான் திராட்சைக் கொடியில் அடங்கியிருக்கும் சித்தாந்தம், மறைபொருள்.

*1. திராட்சை, மனிதனுக்கோர் இன்பம்:* நீதிநெறி நின்ற நோவா, இனிமேல் சாபமிட மாட்டேன் என்று கடவுள் கூறிய பூமியில் திராட்சையைப் பயிரிடுகிறார் *(ஆதி 8:21; 9:20)*. திராட்சைத் தோட்டங்களின் செழுமை, ஆதாமின் பாவத்தினால் கடவுளின் ஆசி முற்றும் அழிந்துவிடவில்லை என்பதன் அறிகுறியாக விளங்குகிறது *(ஆதி 5:29)*. கடவுள் தம் உறுதிமொழிக்கேற்ப தம் மக்களுக்குத் திராட்சை வளமிக்க செழுமையான பூமியை வழங்குகிறார் *(எண் 13:23தொ; உப 8:8)*. ஆனால், ஏழைகளைக் கொடுமைப்படுத்துவோரும் *(ஆமோ 5:11)*, யாவேயிடத்து உண்மைப் பற்றின்றியிருப்போரும் *(செப் 1:13)*, திராட்சைக்கொடிநல்கும் திராட்சைரசத்தைக் குடிக்க மாட்டார்கள் *(உப 28:30.39)*. ஏனென்றால் திராட்சைக் கொடியானது விட்டில் பூச்சிகளால் அழிக்கப்பட்டுவிடும் *(யோவே 1:7)*; அல்லது களைகளால் அழிக்கப்பட்டுவிடும்.

தன்கீழுள்ள குடிமக்களுக்குள்ள திராட்சையைத் தனக்கெனக் கைப்பற்றிக் கொள்ளும் அரசன் கொடிய அநீதி புரிகிறான் *(1 அர 21:1-16)* என்று சாமுவேல் முன் மொழிந்திருக்கிறார் *(1 சாமு 8:14 தொ)*. ஆனால் அரசன் நல்லவனாக உள்ளபோது குடிமகன் ஒவ்வொருவனும் அமைதியோடு வாழ்கிறான்; திராட்சை நிலமும், அத்திமரங்களும் அவனுக்கு உடைமைகளாகவிருக்கும் *(1 அர 5:5; 1 மக் 14:12)*; இத்தகைய செல்வநிலைதான் மெசியாவின் காலத்தில் நிலவும் *(மீக் 4:4; செப் 3:10)*; அப்போது திராட்சை வளம் பெருகிப் பொங்கும் *(ஆமோ 9:14; செப் 8:12)*. கொடிவகையான திராட்சை ஞானத்திற்கும் *(சீரா 24:17)*, அறநெறியாளனின் மனைவிக்கும் *(சங் 128:3)* உவமையாக எடுத்

தாளப்பட்டிருக்கிறது. மேலும், உன்னத சங் கீதத்தில் தலைவனும் தலைவியும் பாடும் காதல் பாடங்களில் காதலின் அடையாள மாக அமைகிறது (உ.ச. 6:11; 7:13; 2:13.15; காண் 1:14).

2. **இஸ்ராயேல் இறைவனிடம் பற்று நீக்கிய திராட்சைக்கொடி:** இஸ்ராயேல் இனத்தின் தலைவர் இறைவன், தம் மக்களான திராட்சைக் கொடியை நட்டு, கண்காணிப்பவர் அவரே. இஸ்ராயேல் நல்ல பலன் தரும் ஒரு திராட்சைக்கொடி; ஆனால் அது தனக்கு வளமையைத் தரும் தன் வாழ்க்கைத் துணைவரான இறைவனை அசட்டை செய்து அவருடைய உடன்படிக்கையை மறந்துவிட்டு, மற்றவர்களுக்கே கீழ்ப்பணிந்து நன்றி கூறுகிறது என்று ஓசே கூறுகிறார் (ஓசே 10:1; 3:1). கடவுள் தம் திராட்சைக் கொடியை விரும்புகிறார்; அதைப் பரிவோடு பாதுகாத்து வருகிறார்; ஆனால் அக்கொடியோ கடவுள் எதிர்பார்த்திருந்த அறவொழுக்கமென்னும் கனிகளைத் தராமல், இரத்தத்தைக் கொட்டியிருக்கிறது; எனவே அவர் அக்கொடியை அழிப்போரின் கைகளில் விட்டுவிடப்போகிறார் என்று எசாயா கூறுகிறார் (எசா 5:2-7). இஸ்ராயேல் இறைவனால் தனித்த முறையில் விரும்பி நடப்பட்ட கொடி; ஆனால் அதுவோ காலப்போக்கில் அழிந்து நாசமாகி விட்டது; பலன்தாராத பதராகிவிட்டது (எரே 2:21; 8:13). எனவே அது வேரோடு பிடுங்கப்பட்டு அழிவுறும் என்று எரேமியா கூறுகிறார் (எரே 5:10; 12:10). கடவுளிடம் இஸ்ராயேல் இனம் பற்றிழந்துவிட்டது என்பதைக் குறிப்பிடுகையிலும் (எசே 19:10-14; 15:6 தொ), அரசனொருவன் தான் ஏற்றுக் கொண்ட உடன்படிக்கைக்கு நம்பிக்கைத் துரோகியாகிவிட்டான் (எசே 17:5-19) என்று குறிப்பிடுகையிலும் வளமானதாக இருந்தும் காய்ந்துபோய் எரிக்கப்பட்ட திராட்சைக் கொடியை உருவகமாக எசேக்கியேல் பயன்படுத்துகிறார்.

ஒருநாள் வரும்; அப்போது திராட்சைக் கொடியெல்லாம் கடவுளின் நுண்ணிய கண்காணிப்பில் செழிப்புற்று வளரும் (எசா 27:12தொ). கடவுளின் நிலைபெற்ற அன்பை முன்னிருத்தி, எகிப்து நாட்டிலிருந்து எடுத்து வந்து, தம் சொந்தநாட்டில் நட்ட திராட்சைக் கொடியான தம்மைக் கடவுள் அழித்து விடாமல் தொடர்ந்து பாதுகாக்க வேண்டுமென இஸ்ராயேல் மக்கள் வேண்டிக் கொள்கிறார்கள். இனிமேல் இக்கொடியானது அவருக்கு விசுவாசமாக நடந்துகொள்ளும் (சங் 80:8-17); இருப்பினும் இஸ்ராயேல் மக்கள் தங்கள் வாக்குறுதிக்கு உண்மையாக நடந்து கொள்வார்கள் என்று கூறமுடியாது. எசாயா கூறியிருக்கும் உவமையையே எடுத்தாளும் இயேசு, கடவுள் இன்னும் தம் திராட்சைக் கொடியான இஸ்ராயேலிடமிருந்து பலனை எதிர்பார்த்திருக்கிறார் என்று அம்மக்களின் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுகிறார். கடவுள் அனுப்பிய இறைவாக்கினர்களுக்குச் செவிமடுப்பதை விடுத்து, தோட்டத்துப் பொறுப்பாளர்கள் அவர்களைக் கொடுமைப் படுத்தினர் (மாற் 12:1-2); இறுதியில் தம் அன்பின் சிகரமாகக் கடவுள் தம் சொந்த மகனையே அனுப்புகிறார் (12:6). இத்தகைய ஒப்பிலா அன்பையும் அவமதித்து, மக்கள் தலைவர்கள் மகனையே கொன்று, பெரும் துரோகம் புரிகிறார்கள். எனவே, அவர்கள் தம் குற்றத்திற்காகத் தண்டிக்கப் படுவர்; அதே வேளையில் மகனின் மரணம் கடவுளின் திருத்திட்டத்தில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கி வைக்கிறது. இப்போது, திராட்சைத் தோட்டமானது பொறுப்புள்ள ஊழியர்களிடம் ஒப்படைக்கப்படுகிறது; முடிவில் அது மிகுந்த பலனளிக்கும் (12:7தொ; மத் 21:41 தொ).

இத்தகைய பொறுப்புள்ள ஊழியர் யாவர்? கொள்கையளவில் இங்கு வாதம் புரிவது வீணானது. இத்தகையோர் யாவரென அவர்களுடைய ஆக்கப்பணியிலிருந்தும் அது விளைக்கும் பலனிலிருந்தும்தான் அறிய முடியும் (மத் 21:28-32). திராட்சைத் தோட்டத்தின் பலனையெல்லாம் ஒன்று சேர்க்கும் பொருட்டு, கடவுள் தம் ஊழியர்களை எல்லாம் ஒன்று கூட்டுவார். இவர்கள் காலைப் பொழுதிலிருந்து வேலை செய்ய வந்தவர்களோ, முடியும் தறுவாயில்

கூலிக்கு வேலை செய்ய வந்தவர்களோ -எப்படியிருந்தாலும் இவர்களனைவர்க்கும் ஒரேவிதமாகவே ஊதியம் வழங்கப்படும். மனிதனெவனும் தனக்கு இவ்வளவு வேண்டுமென உரிமைபாராட்ட முடியாது; மாறாக, இவ்வாறு தரப்படும் ஊதியம் இறைவன் தாமே மனமுவந்து வழங்கும் தாராளப்பண்பின் கொடையாகும் (மத் 20:1-15).

*3. **உண்மையான திராட்சைக்கொடி - கடவுளின் மகிமை, மகிழ்ச்சி:*** இஸ்ராயேல் இனம் கடவுளுக்கு எதை அளிக்க முடியாமல் போய்விட்டதோ அதைக் கிறிஸ்து அவருக்கு அளித்தார். கிறிஸ்துதான் உண்மையான திராட்சைக் கொடி; அது விளைக்கும் கனிதான் முறையானதென அழைக்கும் தகுதி பெற்றுள்ளது. அவர்தான் உண்மையான இஸ்ராயேல்; இறைத்தந்தை அதை நட்டு, அக்கறையோடு பாதுகாத்து, பக்குவமாய் பருவத்தில் கிளைதறித்து, பேரளவு பலன் தரும்படிஅமைத்தார் (யோவா 15:1தொ; மத் 15:13). இவர் தம் உயிரையே அளித்தார். தன் குருதியை அன்பின் சின்னமாகக் கொட்டினார். இவ்வழியாக உண்மையான பலன் தந்தார் (யோவா 15:9.13; காண் 10:10தொ.17). திராட்சைக் கனியிலிருந்து செய்யப்படும் திராட்சை இரசமானது நற்கருணை மறைபொருளில் கிறிஸ்து சிந்திய இரத்தத்தின் அறிகுறியாக அமைகிறது; இக்குருதியில்தான் புதிய உடன்படிக்கை முத்திரையிடப் பட்டிருக்கிறது. கிறிஸ்துவின் அன்பில் பங்கு பெறவும், அவரில் ஒன்றித்திணையவும் திராட்சை இரசம் ஒரு சாதனமாக அமைகிறது (மத் 26:27தொ; காண் யோவா 6:56; 15:4 தொ).

கிறிஸ்துவே திராட்சைக் கொடி; நாம் அதன் கிளைகள். அவர் உடல்; நாமெல்லாம் அவருடைய உறுப்புகள். உண்மையான திராட்சைக் கொடி என்பது அவருடைய திருச்சபைக்கும் பொருந்தும். அத்தகைய ஒன்றிப்பு இல்லாமலிருந்தால் நம்மால் ஒன்றுமே செய்யவியலாது. உண்மையான திராட்சைக் கொடியான கிறிஸ்துதான் கனிதரமுடியும்; அவர் விளைக்கும் கனிதான் தோட்டத்து உரிமையாளரான விண்ணகத்தந்தைக்கு மகிமை தரக்கூடும். கிறிஸ்துவில் இணைந்திராவிடில் நாம் தறிக்கப்பட்ட கிளைகளாய் உயிர்ச்சத்தின்றி, பயனற்றதாய்த் தூர எறியப்படுவோம். கனிதராத கிளையானது நெருப்பிலிடப்படுவதற்கே தகுதியானது (யோவா 15:4தொ). எல்லா மனிதனும் இத்தகையதோர் உறவுக்கு அழைக்கப்பட்டிருக்கிறான். இது, தந்தையும் மகனும் தாமே விழைந்து விடுக்கும் அன்பின் அழைப்பு. கிறிஸ்துதான் தம் கிளைகளான சீடர்களைத் தெரிந்து கொள்ளுகிறார்; அவர்களாக அவரைத் தெரிந்து கொள்வதில்லை (15:16). இத்தகைய ஒன்றிப்பால் மனிதன் உண்மையான திராட்சைக் கொடியின் பிரியாத ஒரு கிளையாக இணைந்துவிடுகிறான். அவ்வாறு ஏற்படும் ஒன்றிப்பால் உயிர்பெற்று, தந்தை மகன் அன்பிலே உறவுபெற்று, தந்தைக்குப் புகழ்விளைக்கும் கனி கொடுக்கிறான். இவ்வாறு, கிறிஸ்துவைப்போலத் தந்தைக்குப் புகழ் விளைக்கும் பணியில் ஈடுபட்டு, கிறிஸ்துவின் உண்மை மகிழ்வில் கலக்கிறான் (15:8-11). திராட்சைக் கொடியானது கிறிஸ்துவுக்கும் திருச்சபைக்குமிடையே நிலவும் ஒன்றிப்பின் மறைபொருள் மேன்மையையும் அதனால் எழும் அழியாது நிலைபெற்ற செழிப்பு, மகிழ்ச்சி இவற்றையும் குறிக்கும் சின்னமாக விளங்குகிறது (காண் 17:23).

## திராட்சைத் தோட்டத் தொழிலாளர்கள்
(LABOURER OF THE VINEGARD)

விண்ணரசிலே முதலானோர் பலர் கடைசியாவர்; கடைசியானோர் பலர் முதலாவர் என்பதை விளக்க இந்த உவமையை இயேசு கூறுகிறார் (மத் 20:1-6). வீட்டுத்தலைவன் கடவுள், முடிவில்லா வாழ்வை அளிப்பவர். உலகமே திராட்சைத் தோட்டம். இயேசுவே அதன் கண்காணிப்பாளன். ஆண்டவனுக்காக அனைத்தையும் துறப்பவரின் சன்மானம், அவர் முதலில் துறந்தாலும் இறுதியில் துறந்தாலும், ஒன்றே. நீதிக்கு அப்பால் செல்லக்கூடியது இறைவனது அருள். இறைவன் பெருந்தன்மை மிக்கவர். அதிகம் கொடுக்க அவருக்கு அதிகாரம் உண்டு.

### திராட்சைப்பழ அடை (RAISIN - CAKES)

உலர்ந்த திராட்சையைக் கொண்டு தயாரிக்கப்படும் உணவே திராட்சை அடை. ஏனெனில் இவ்வாறுதயாரிக்கப்படும் உணவு எளிதில் கெட்டுப்போகாது; பயணத்திற்கும் ஏற்றது. எனவே படைகளுக்கும் மிகவும் பயன்படும் *(2 சாமு 6:19; 16:1; காண். 1 சாமு 25:18; 30:12; 1 நாள் 12:40)*. இது ஒரு விழாக்கால உணவாகும் *(எசா 16:7)*. இது இனப்பெருக்க வழிபாடுகளில் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் *(உ.ச. 2:5; ஓசே 3:1; எரே 7:18; 44:19)*.

### திராட்சைப் பழரசம் (WINE)

புனித நாட்டில் திராட்சைரசம், கோதுமை மற்றும் எண்ணெய் முதலியன அன்றாட உணவின் மூலப்பொருட்களாகும் *(உப 8:8; 11:14; 1 நாள் 12:41)*. ''மனிதனின் இதயத்தைக் களிப்பூட்டுகின்ற'' தனிப்பட்ட இயல்பைத் திராட்சைரசம் கொண்டுள்ளது *(சங் 104:15; நீதி 9:13)*. எனவே, மெசயா விருந்தின் பொருட்களில் இதுவும் ஒன்று. கிறிஸ்துவின் அன்பாகிய மகிழ்ச்சியின் ஊற்றுக்கு விசுவசிப்போர் செல்கின்ற நற்கருணை உணவின் முதன்மையான உறுப்பாகவும் இது உள்ளது.

#### I. மேற்காசியாவில் திராட்சைப் பழரசம்

1. பண்டைக் காலந்தொட்டே பாலஸ்தீனமும், சீரியாவும் நல்ல திராட்சைரசத்திற்குப் பிரசித்தி பெற்றவை. சின்னுகே என்பவர், ''நீரைவிட திராட்சைரசமே அங்கு மிகுந்திருந்தது'' எனக் குறிப்பிடுகிறார். இது ஒரு நல்ல பொருளாகக் கருதப்பட்டது *(சீரா 29:25-26)*. பேரிச்சை மற்றும் மாதுளை போன்ற பழரசங்கள் தயாரிக்கப்பட்டாலும் திராட்சைப் பழரசமே பாலஸ்தீனத்தில் முதன்மையானது. உரோமையர்கள் காலத்தில் திராட்சை ரசத்துடன் நீர் சேர்த்துப் பருகும் பழக்கம் இருந்தது. இப்படிப்பட்ட கலப்பு இரசம் மிகவும் இனிமையானது என மக்கபேயர் ஆகமம் கூறுகிறது *(2 மக் 15:39)*. ஆனால் இப்படிப்பட்ட கலப்பு சரியானதாகக் கருதப்படவில்லை *(எசா 1:22)*. ஆனால் திராட்சைரசம் நறுமணப் பொருட்களுடன் கலக்கப்பட்டு மிகவும் சிறப்பான இரசம் என அழைக்கப்பட்டது *(பழ 9:25; உ.ச. 8:2)*. திராட்சைரசம் மீரையுடன் கலக்கப்பட்டு மயக்க மருந்தாகப் பயன்படுத்தப்பட்டது *(மத் 27:34; மாற் 15:23)*. யூதாவின் எபிரோன் பகுதியும், யோர்தானுக்கப்பால் உள்ள சிபிமா பகுதியும் சிறப்பான இரசத்திற்குப் பேர் பெற்றவை. சீரியாவின் இரசம் உலகப்புகழ் பெற்றதாகும்.

2. **திராட்சைரசம் தயாரிக்கும் முறை:** திராட்சைக் குலைகள் ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் அறுவடை செய்யப்பட்டு, வெய்யிலில் சிறிது உலரவைக்கப்படுகின்றன *(உப 16:13)*. பெரிய தொட்டிகளில் உலர்ந்த பழங்கள் இடப்பட்டு, கால்களால் மிதிக்கப்படுகின்றன. பழங்கள் மிதிக்கப்படும் தொட்டி, அதற்கு அருகிலுள்ள மற்றொரு தொட்டியை விட உயரத்தில் அதிகமாயும், அத்தொட்டியுடன் சிறு வாய்க்காலால் இணைக்கப்பட்டதாயும் இருக்கும். பிழியப்பட்ட இரசம் உயரம் குறைந்த தொட்டியில் நிரப்பப்படும். திராட்சைரசம் பிழியும்போது பலர் பணிபுரிவர். மகிழ்ச்சியில் நிரம்பிய அவர்கள் பாட்டுக்களைப்பாடி மகிழ்வதும் உண்டு *(நெகே 13:15; யோபு 24:11; எசா 16:10)*. பின்பு சாடிகளில் இரசம் நிரப்பப்பட்டு, புளிப்பேறுவதற்காகச் சிறிது காலம் வைக்கப்படும். இவை தோல் துருத்திகளில் நிரப்பிவைக்கப்படும். புதிய இரசம் புதிய தோல் துருத்திகளிலேயே ஊற்றிவைக்கப்படும் *(மத் 9:17; மாற் 2:22; லூக் 5:37-38)*. இரசம் மக்களால் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டது. திருவிழாக்களில் மட்டுமல்லாமல் அனைத்து விருந்துகளிலும், உணவோடு இரசம் பரிமாறப்பட்டது. திராட்சைரசம் ஒவ்வொருமுறை பந்தியில் பரிமாறப்படுவதற்குமுன்னும் வடிகட்டி, தூய்மைப்படுத்தப்பட்டது *(மத் 23:24)*. பழைய இரசமே மிகவும் இனிமையானது *(சீரா 9:10; லூக் 5:39)*. இரசம் மருந்தாகப் பயன்பட்டது *(2 சாமு 16:2; 1 திமொ 5:23)*. இரசம் பலிகளில் பயன்படுத்தப்பட்டது *(உப 32:37-38; எசா 57:6; 65:11; எரே 7:18; 19:13)*. இரசம் இரத்தமாகக் கருதப்பட்டு, பலிபீடத்தினடியில் ஊற்றப்பட்டது *(சீரா 50:15)*.

II. அன்றாட வாழ்வில் திராட்சைரசம்

1. *சமய சார்பற்ற வாழ்வில்:* யாவே பாரம் பரியம், மதுக் கலாச்சாரக் கண்டுபிடிப்பை நோவாவிற்குச் சாற்றிக்கூறி, திராட்சைரசத் தின் விளைவுகளால் அவர் ஆச்சரியப்படு வதைக் காட்டுகிறது (ஆதி 9:20-21). இவ்வாறு இந்தப்பாரம்பரியம் ஒரே சமயத்தில் திராட் சைரசத்தின் பலன்களையும் ஆபத்து களையும் சுட்டிக்காட்டுகிறது. வளமை யின் அடையாளமான திராட்சைரசமானது (ஆதி 49:22-12; பழ 3:10), விவேகத் தோடு உபயோகிக்கப்படின் வாழ்வை மகிழ் வானதாக்கக்கூடிய உடைமையாக இருக்கும் (சீரா 32:6; 40:20). இந்த விவேகம் ஞான இலக்கியத்தில் அடிக்கடி புகழப்படுகின்ற நடுநிலை உணர்வின் ஒரு பகுதியாகும். தெளிவான விளக்கமானது (2 மக் 15:39) பென் சீராவின் மூதுரையாகும்: ''அளவோடு குடிக்கப்பட்ட மது மனிதருக்குத் தகுந்த வாழ்வு'' (சீரா 31:32). நிதானத்திற்கான ஆலோசனைகள் மேய்ப்புப்பணித் திருமுகங் களில் ஏராளமாக உள்ளன (1 திமொ 3:3.8; தீத் 2:3). திராட்சைரசத்தின் விவேகமான உபயோகமும் அங்குப் பரிந்துரைக்கப்படுகிறது (1 திமொ 5:23). அவப்பெயர் வரக்கூடும் என்ற அபாயநிலையிலும் இயேசு திராட்சை இரசத்தைப் பருகினார் (மத் 11:19). அளவான நிலையினின்று விலகுகின்ற மனிதன், பல் வேறு ஆபத்துகளுக்கு உட்படக் கூடியவ னாக உள்ளான். குடிப்பதில் அதிக ஆர்வ முடைய தலைவர்களுக்கு எதிராக இறைவாக் கினர்கள் வன்மையாகப் பழித்துரைக்கின்ற னர்; ஏனெனில் இவர்கள் இறைவனையும், ஏய்க்கப்பட்டுத் தீமைக்கு உட்படுத்தப்பட்ட மக்களுக்கான தங்களுடைய உண்மையான பொறுப்புகளையும் மறந்து விடுகின்றனர் (ஆமோ 2:8; ஓசே 7:5; எசா 5:11-12; 28:1; 56:12). ஞானிகள் மிதமிஞ்சிய குடியின் தனிப்பட்ட விளைவுகளின் மீதே அதிக கவனம் செலுத்துகின்றனர். இங்குக் குடிகாரன் வறுமை (பழ 21:17), வன்முறை (சீரா 31:30-31), தீயவொழுக்கம் (19:2), பேச்சுச் சிதைவு (பழ 22:30-35) ஆகியவற்றிற்கு உள்ளாகிறான். குடிமயக்கமானது ஒழுக் கக்கேடான வாழ்க்கைக்கு நடத்திச் சென்று, கிறிஸ்தவனில் ஆவியின் வாழ்வைச் சிதைப்ப தாகப் பவுல் வலியுறுத்துகிறார் (எபே 5:18).

2. வழிபாட்டு வாழ்வில்:- நிலத்தின் எல்லாப் பொருட்களையும் போன்று திராட்சைரசமும் இறைவனிடமிருந்து வருவதன் காரணமாகப் பலியிலும் ஓர் இடத்தை அது கொண்டுள்ளது. சீலோவி லுள்ள பழைய இறைத்தலத்தில், திராட்சை இரசக் காணிக்கைகளும் கொண்டு வரப்படு கின்றன (1 சாமு 1:24). பலியின் நேரத்தில் குறிக்கப்பட்ட பானங்களைப் பொழிய இவை பயன்பட்டன (ஓசே 9:4; யாத் 29:40; எண் 15:5.10). திராட்சைரசமானது குருக்க ளுக்கு அளிக்கப்பட்ட முதற்கனிகளில் ஒரு பகுதியாகவும் இருந்தது (உப 18:4; எண் 18:12; 2 நாள் 31:5). முதற்கனிகளின் முந் தைய சடங்கிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக் கக்கூடிய புதிய உடன்படிக்கைப் பலியிலும் இறுதியாக ஒரு பங்கைக் கொண்டிருக்கும்.

மற்றொரு புறம், சமய குறிக்கோளானது திராட்சைரசத்தினின்று விலகியிருக்கு மாறு சிலரைத்தூண்டுகிறது. குருக்கள் தங்க ளது பணியை நிறைவேற்றும்போது இத னின்று விலகியிருக்க வேண்டும். ஏனெனில், போதித்தல் மற்றும் தீர்ப்பிடுதல் முத லான குருத்துவப் பணிகளுக்கு முழுமை யான சுய கட்டுப்பாடு தேவையாக உள்ளது (எசே 42:21-23; லேவி 10:9-10). திராட்சை இரசத்தினின்று விலகியிருப்பதானது, திராட்சை இரசம் இல்லாமல் இஸ்ராயேலானது துறவற நிலையில் தனது இறைவனை நோக்கி நெருங்கிய பாலைவனக் காலத்தின் நினைவாகவும் உள்ளது (உப 29:5). கானான் நாட்டில் குடியேறியதற்கு நீண்ட காலத்திற்குப் பின்னர் இரேக்காபியர் திராட்சைரசத்தைக் குடிக்காமலிருப்பதன் மூலம் தங்களுடைய நாடோடி நாட்களின் பழக்கத்தைப் பாதுகாக்க விரும்பினர் (எரே 35:6-11). நாசரேயர்கள், இறைவனுக்கு அர்ப்பணிக்கப்படுவதன் அடையாளமாக எல்லாவகைக் கனிரசங் களையும் பருகுவதைத் தவிர்த்தனர் (ஆமோ 2:12). இவ்வாறாக, தனது பிறப்பிற்கு முன் னரே சிம்சோன், ஆண்டவரது கட்டளைப்

படி அர்ப்பணிக்கப்பட்டார் (நீதி 13:4-5). சாமுவேல் (1 சாமு 1:11) மற்றும் திருமுழுக்கு யோவான் (லூக் 1:15; 7:33) ஆகியோருடைய உதாரணங்கள் ஒரே தன்மையுடையவையே. குருத்துவ சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருப்பது போலத் தற்காலிக உறுதிப்பாட்டின் மூலமாகவும் ஒருவன் நாசரேயனாக இருக்கலாம் (எண் 6:3-20). இப்பழக்கமானது யூத கிறிஸ்தவ சமுதாயத்தில் இன்றும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது (அ.ப. 21:23-24). நாடு கடத்தலுக்குப் பிற்பட்ட யூத மதத்தில்தோன்றுவதுபோலப் புறவினத்தாருடனான எவ்வித உடன்பாட்டின் அபாயத்தையும் ஒதுக்குவதற்காகத் திராட்சைரசத்தை விட்டுவிடுமாறு விசுவாசிகளும் அடிக்கடி வலியுறுத்தப்பட்டனர் (தானி 1:8; யூதி 10:5). தனிமையானது, முற்றும் துறத்தலுக்கான அடையாளமாகச் சில கிறிஸ்தவர்கள் இதை முற்றும் நீக்கி விடுவதாகத் தெரிகிறது (1 திமொ 5:23). ஆனால் இது விவேகத்தோடும் அன்பினாலும் ஒழுங்குபடுத்தப்பட வேண்டும் (உரோ 14:21; 1 கொரி 10:31).

**III. திராட்சைரசத்தின் அடையாளவியல்:**

1. சமய சார்பற்ற நிலையின்படி, திராட்சைரசமானது வாழ்வில் இனிமையான அனைத்திற்கும் அடையாளமாய் உள்ளது. நட்பு (சீரா 9:10), மனித அன்பு (உ.ச. 1:4; 4:10) மற்றும் பொதுவாக மண்ணுலகில் அனுபவிக்கின்ற எல்லா மகிழ்ச்சி, அவற்றுடன் சார்ந்தவை ஆகிய அனைத்தும் இதில் அடங்கியுள்ளன (திருவுரை 10:19; செக் 10:7; யூதி 12:13; யோபு 1:18). திராட்சைரசமானது சிலை வழிபாட்டுச் சடங்குகளின் நலந்தராத குடிமயக்கத்தையும் (எரே 51:7; திருவெளி 18:3), ஞானத்தினுடைய சீடனின் மகிழ்ச்சியையும் நினைவிற்குக் கொண்டு வரலாம் (பழ 9:2).

2. சமயபார்வையில், திராட்சைரசத்தின் அடையாளவியலானது இறுதிக்காலப் பின்னணியில் தோன்றுகிறது.

அ) பழைய ஏற்பாட்டில், திராட்சைரசத்தின் இழப்பைப்பற்றிப் பேசுவதன் மூலம் கீழ்ப்படியா மக்களுக்கெதிரான பெரும் தண்டனைகளை இறைவன் அறிவிக்கிறார் (ஆமோ 5:11; மீக் 6:15; செப் 1:13; உப 28:39). அந்த நேரத்தில் பருகக்கூடிய ஒரே திராட்சை இரசமானது திகைப்பூட்டும் கிண்ணமாகிய இறைசினத்தின் திராட்சைரசமாகும் (எசா 51:17; திருவெளி 14:8; 16:19). அதே நேரத்தில் இறைவாக்கினர்களின் ஆறுதலை முன்னறிவிக்கும் வாக்குகளில் காணப்படுவது போல, தனது விசுவாசிகளுக்கு இறைவன் வாக்களிக்கின்ற மகிழ்ச்சி, பெரும் மிகுதியான திராட்சைரசத்தின் வடிவில் வெளிப்படுத்தப்படுகிறது (ஆமோ 9:14; ஓசே 2:24; எரே 31:12; எசா 25:6; யோவே 2:19; செக் 9:17).

ஆ. புதிய ஏற்பாட்டில் ''புது திராட்சை இரசமானது'' மெசியா காலங்களின் அடையாளமாக உள்ளது. தன்னில் அமைக்கப்பட்டுள்ள புதிய உடன்படிக்கையானது பழைய தோல் துருத்திகளைக் கிழிக்கின்ற புது திராட்சைரசமாகும் என இயேசு பறைசாற்றுகிறார் (மாற் 2:22). கானா புதுமை பற்றிய யோவானின் வர்ணனையிலும் அதே கருத்து தோன்றுகிறது. இதுவரை எதிர்பார்க்கப்பட்ட நல்ல இரசமாகிய திருமண இரசமானது கிறிஸ்துவினுடைய அன்பின் கொடையாக உள்ளது. மெசியாவின் வருகையால் மகிழ்ச்சியின் அடையாளமானது உண்மையாக உருவாகிறது (யோவா 2:10; 4:23; 5:25). புதிய திராட்சைரசம் என்ற சொல்லானது, தனது தந்தையின் அரசில் தனது விசுவாசிகளுக்கென இயேசு குறித்து வைத்துள்ள இறுதிக்கால விருந்தின் நினைவூட்டுதலாக மத் 26:29-இல் மீண்டும் காணப்படுகிறது. இதுவே மெசியா காலத்தின் முழுநிறைவாக இருக்கும். நற்கருணையை ஏற்படுத்துவதன் விவரிப்பின் பின்னணியில் இருப்பதன் காரணமாக, திராட்சைரசம் பற்றிக் குறிப்பிடுவதானது வெறும் அடையாளமாக மட்டுமே இருப்பதில்லை.தந்தையின் அரசில் புதிய திராட்சைரசத்தைப் பருகுவதற்கு முன், தனது வாழ்நாள் முழுவதும் கிறிஸ்தவன், ஆண்டவரால் சிந்தப்பட்ட இரத்தமாக மாறிய திராட்சைரசத்தையே குடிப்பான் (1 கொரி 10:16).

எனவே கிறிஸ்தவனைப் பொறுத்த மட்டில் திராட்சைரசத்தின் உபயோகமானது, நன்றியுரைத்தலுக்கான காரணமாக மட்டுமில்லாமல் (கொலோ 3:17; 2:20-22), மீட்பு மற்றும் முடிவற்ற மகிழ்ச்சியின் ஊற்றாக உள்ள பலியை நினைவு படுத்துவதற்கான வாய்ப்பாகவும் உள்ளது (1 கொரி 11:25-26).

## திராட்சை மதுவும் தோல் துருத்திகளும்

(மத் 9:17; மாற் 2:22; லூக் 5:37-38). புது திராட்சை மதுவை எவ்வாறு பழஞ்சித்தைகளில் ஊற்றி வைக்க இயலாதோ அதே போலப் பழைய எண்ணங்களையும் புதிய எண்ணங்களையும் இணைக்க முடியாது. இயேசுவின் நற்செய்தியும் யூதச்சட்டமும் ஒன்றாய்ச் செல்ல இயலாது. இயேசு தனது போதனையோடு யூத மதத்தையும் இணைக்க விரும்பவில்லை. மோசேக்குக் கொடுக்கப்பட்ட சட்டங்கள் எவ்வளவு புதுமை வாய்ந்ததோ அதே போலப் புதுமை நிறைந்ததே இயேசுவின் போதனைகள். யூத மதம் இயேசுவின் நற்செய்தி இப்படித்தான் இருக்க வேண்டும் என வரையறுக்கக் கூடாது. கிறிஸ்தவ மதத்தை யூதமதத்தோடு ஒட்டி வைக்க முடியாது. ஏனெனில் இது புதுமையானது.

## திராயர் (TIRATHITES)

இவர்கள் யாகபேசில் குடியிருந்த கேனியரைச்சேர்ந்த எழுத்தர்கள் (1 நாள் 2:55).

## திரித்துவம் (TRINITY)

இது தந்தை, மகன், தூய ஆவி ஒன்றாக இருப்பதைக் குறிக்கிறது. விவிலியத்தில் இந்தச்சொல் இல்லாவிட்டாலும், புதிய ஏற்பாட்டுப் போதனைகளிலிருந்து இது தொகுக்கப்படுகிறது. பவுல் ஆவி, ஆண்டவர், கடவுள் என்பவற்றை இணைத்துப் பேசுகிறார் (1 கொரி 12:4-6; எபே 4:4-6). புதிய ஏற்பாட்டின் திரித்துவ உண்மைக்குப் பழைய ஏற்பாட்டு ஞானம், ஆண்டவரின் ஆவி பற்றிய உண்மைகள் பயன்பட்டன (பழ 8:22 தொ; யோவா 1:1 தொ; கொலோ 1:1தொ; எபி 1:2-3). இவ்வுண்மையை எடுத்துக்கூறும் பிற வாசகங்கள்: மத் 28:19-இல் வரும் திருமுழுக்கு வாசகம்; தந்தையையும் மகனையும் இணைத்துக்கூறும் மத் 11:27= லூக் 10:22; ''மனுமகனுக்கும்'', ''பரிசுத்த ஆவிக்கும்'' இடையேயுள்ள இணைத்தன்மை (மத் 12:32=லூக் 12:10). காண்க: மூவொரு இறைவன்.

## திரிபேனா, திரிபோசா (TRYPHAENA, TRYPOSA - இன்பமாய் வாழ்தல்)

உரோ 16:12-இல் பவுலிடமிருந்து வாழ்த்துப்பெறும் இரு கிறிஸ்தவப் பெண்கள். பவுல், இவர்கள் ''ஆண்டவருக்குள் உழைப்பவர்கள்'' என்று கூறுகிறார். இரு பெயர்கள் ஒரே கிரேக்க அடிச்சொல்லிலிருந்து வருவதால் இருவரும் சகோதரிகளாகவோ இரட்டைச் சகோதரிகளாகவோ இருக்கலாம். இரு பெயர்களும் கிரேக்க, இலத்தீன் மூலங்களில் காணப்படுகின்றன. புல்தாள் ஏடுகள் திரிபேனா ஒரு யூதப்பெண் என்று குறிப்பிடுகின்றன. பவுல் மற்றும் தேக்கிலா ஆகியோரின் பணிநூலில் நூல் தலைவியான தேக்கிலாவின் அன்பை நாடிய அரசியின் பெயர் திரிபேனாவாகும்.

## திரிபோ (TRYPO)

அலக்சாந்தர் பாலாசு என்ற செலூக்கிய மன்னனின் தளபதி. அடுத்த மன்னன் இரண்டாம் தெமேத்திரியுவுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தார். பாலாசின் மகன் 6-ஆம் அந்தியோக்குவுக்கும், பின்பு தனக்கும் சீரிய அரியணைக்கு உரிமை கோரினார். இவரது உண்மையான பெயர் தியோதோத்து என்பதாகும். மேன்மையான அல்லது சொகுசான என்று பொருள்படும் திரிபோ ஓர் அடைமொழியாக இருக்கலாம்.

சிறுவன் அந்தியோக்குக்குக் காப்பாளனாகி, திரிபோ சிறுவனை அரசன் என்று அறிக்கையிட்டார். இதில் இரண்டாம் தெமேத்திரியுவால் நீக்கப்பட்டபோர் வீரர்களின் ஆதரவைப் பெற்றார் (1 மக் 11:38-40. 54-56). இவர் யூதேயாவிலிருந்த அசமோனியர்களின் ஆதரவையும் பெற்றார். இதற்கு ஈடாக யோனத்தானின் தலைமைக்குரு பதவியை உறுதிப்படுத்தினார். சீமோனைத் தீரின் ஏணிமுதல் எகிப்துவரையிலுள்ள கடற்

கரைச் சமவெளிக்கு ஆளுநராக நியமித்தார் (11:57-59). யோனத்தானின் பலம் ஆபத்தான தாகத் தோன்றியபோது (11:67-74) யோனத் தானையும் அரச சிறுவனையும் ஒழித்துக் கட்ட சூழ்ச்சி செய்தார் (12:39-40). பெத்-சானிலிருந்த யோனத்தானின் படைகளை முறியடிக்க முடியாததால், அவரைத் தந்திர மாய்த் தோலமேயிக்கு வரவழைத்துச் சிறை யில் அடைத்தார் (12:40-48). கைதியாக இருந்த யோனத்தானையும் கூட்டிக்கொண்டு, யூதே யாவை ஆக்கிரமிக்கத் தொடங்கினார் (13:12). தலைமைக்குரு யோனத்தானை விடுவிக்க பிணைத்தொகையையும், அவரது இரு புதல் வர்களைப் பிணைக்கைதியாகவும் கோரி னர். சீமோனும் இதற்கு இணங்கி, அப் படியே செய்தார்; ஆனால் தனது வாக்குறு தியை மீறி யோனத்தானைப் பாஸ்கமா என்ற இடத்தில் கொன்றார் (13:22-23). இதனால், 2-ஆம் தெமேத்திரியுவுக்கு ஆதரவு அளித்து, சீமோன் திரிபோவைத் தோற்கடித் தார் (13:25-26). திரிபோ அரச சிறுவனைக் கொன்று (12:31-32), தன்னையே அரசன் என்று அறிவித்து மூன்று ஆண்டுகள் ஆட்சிசெய்தார் (கி.மு. 142-138). தெமேத்திரி யுவுக்கு அளித்த ஆதரவால், யூதர்களுக்குச் செயலளவில் சுதந்தரம் கிடைத்தது (13:34-42). தெமேத்திரியு பார்தியர்களால் பிடிக்கப்பட்டபின் (14:2-3; கி.மு. 140-139), அவரது சகோதரன் 7-ஆம் அந்தியோக்கு செலூக்கிய அரியணையைக் கைப்பற்றி, திரிபோவை விரட்டியடித்தார் (14:11-14.25. 37-39). ஸ்திரபோவின் கூற்றுப்படி, திரிபோ அபமேலாவில் தன்னையே அழித்துக் கொண்டார்.

**திரிப்பொலி** (TRIPOLIS - மூன்று நகரங்கள்)

பெனிசிய கடற்கரையிலிருந்த ஒரு துறை முக நகர். இன்று தரபுலுசு ஏல்-சாம் என் றழைக்கப்படுகிறது. ஏல்-மீனா தீபகற்பத்தில் பெய்ரூட்டுக்கு வடகிழக்கில் 70 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஒருவேளை கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் நிறுவப்பட்டிருக் கலாம். சீதோன், தீர், ஆராது ஆகியவையடங் கிய பெனிசியக் கூட்டாட்சியின் தலைநக ராகத் திரிப்பொலியில் மக்கள் குடியேறினர். ஒவ்வொரு குழுவும் மூன்றில் ஒரு பகுதியில் குடியேறியது. ஆகவே இப்பெயர் பெற்றது. செலூக்கியர், உரோமையர் காலத்தில் சிறப் புப்பெற்று விளங்கியது. உரோமையில் கி.மு. 176-இலிருந்து பிணைக்கைதியாக இருந்த முதலாம் தெமேத்திரியு சோத்தேர் 161-இல் உரோமையிலிருந்து தப்பித் திரிப் பொலி வழியாகச் சீரியாவை அடைந்தார் (2 மக் 14:1; 1 மக் 7:1-இல் இந்த இடம் பெயரில்லாது ''கடல் அருகிலுள்ள நகர்'' என்று குறிப்பிடப்படுகிறது). பின் 5-ஆம் அந்தியோக்கு யூபாத்தோர், அவருடைய தோழமை ஆட்சியாளர் லீசியாவையும் வென்று தனது அரச உரிமையைப் பெற்றார். கி.மு. 111-வரை செலுக்கியர் ஆட்சியில் இருந்தது திரிப்பொலி. பின் எகிப்தில் தோலமியரால் ஒரு மாகாணமாக மேம்படுத்தப் பட்டது. இங்குக் கி.மு. 189-188-ஐ ஒட்டிய நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இங்கு ஏரோது உடற்பயிற்சிக் களம் ஒன்றை அமைத்தார். பேதுருவே இங்குத் திருச் சபையை நிறுவியதாகப் பாரம்பரியம் கூறு கிறது. கி.பி. 325-க்குப்பின் இங்கிருந்த ஆயர் களின் பெயர்ப்பட்டியல் தெரியவந்துள்ளது.

**திரிப்யூன்** (TRIBUNE)

600-க்கு மேற்பட்ட வீரர்களைக் கொண்ட படைப்பிரிவுக்குரிய உரோமை இராணுவ அதிகாரி. பவுல் எருசலேமுக்குச் சென்ற போது (அ.ப. 21-25), இத்தகைய அதிகாரி எருசலேமில் இருந்தார். இயேசுவைப் பிடித் துக்கட்டிக் கூட்டிச்சென்ற படைத்தலைவ னும் இத்தகைய அதிகாரியே.

**திருஉறைவிடம்** (TALERNACLE)

1. சீனாய் மலையில் இறைவனிடமிருந்து கட்டளை பெற்று இஸ்ராயேலர் செய்த தூக் கிச் செல்லக்கூடிய ஓர் அமைப்பு. அவர்கள் பாலைவனத்தில் பயணம் செய்தபோது, இவ்வமைப்பில் இறைவன் அவர்களிடையே குடியிருந்தார். இது ''சாட்சியத் திரு உறைவிடம்'' என்றும் அழைக்கப்பட்டது (யாத் 30:21). இது பேழையில் வைக்கப்பட்

டிருந்த பத்துக் கட்டளைகள் கொண்ட இரு கற்பலகைகளையும் சுட்டியது *(31:18; காண்க: 25:16.21-22)*. திருஉறைவிடம் அடிக் கடி ''சந்திப்புக்கூடாரம்'' என்றும் அழைக் கப்பட்டது *(27:21; காண்க:40:2-''* சந்திப்புக் கூடாரத்தின் திருஉறைவிடம்''). இங்கே இறைவன் மோசேயைச் சந்தித்து அவருடன் பேசுவார். திருஉறைவிடமும் அதன் முற்ற மும் சிறியதாக இருந்தன; ஆகவே இறைவ னும் மக்களும் சந்தித்துப் பேசுவதற்குப் போதியதன்று. அறிஞர்சிலர், யாத்திரைநூலில் வரும் திருஉறைவிட விவரிப்பு பிற் காலத்து எருசலேம் ஆலயத்தை மனதில் வைத்துப் பின்னோக்கி விவரிக்கப்பட்டது என்றும், பாலைவனத்தில் பயணப்பட்ட அமைப்பு யாத் *33:7-11*-இல் வருவது போன்று எளிய அமைப்பை உடையதாகும் என்றும் கருதுகின்றனர்.

*2.* **அமைப்பு:** திருஉறைவிடத்திற்குரிய மாதிரியை இறைவன் மோசேக்குக் காட்டி னார் *(யாத் 25:9; அ.ப. 7:44; எபி 8:5)*. அதற்கு வேண்டிய பொருட்களை இஸ்ராயேலர் சுய மாக விரும்பிக் காணிக்கையாகக் கொடுக்க *(யாத் 25:1-7; 35:4-9.20-29)*, பெட்சவேலும் ஒகோலியாபுவும் தங்கள் உதவியாளர்க ளுடன் சேர்ந்து திருஉறைவிடத்தைச் செய் தனர் *(31:1-11; 36:1)*. யாத்திரை தொடங்கி ஓராண்டு முடிவிலும் *(40:2.17)*, சீனாய் மலை சேர்ந்த ஒன்பது மாதங்களுக்குப் பின்னும் வேலை செய்து முடிக்கப்பட்டது *(காண் 19:1)*.

திருஉறைவிடம்




*1.* திருத்தூயகம், *2.* சாட்சியப்பேழை, *3.* தூயகம், *4.* தூபப்பிடம், *5.* திருமுன் அப்ப மேசை, *6.* விளக்குத்தண்டு *7.* தகனப்பலிபீடம், *8.* நீர்த்தொட்டி, *9.* முற்றம், *10.11.* நுழைவாயில்.

திரு உறைவிடம் ஒரு முற்றத்தையும் அதன் நடுவில் திருஉறைவிடம் என்று சரி யாக அழைக்கப்பட்ட சிறிய அமைப்பையும் கொண்டிருந்தது. பின்னது தூயகம், திருத் தூயகம் என்று இருபகுதியாகப் பிரிக்கப் பட்டிருந்தது. திருஉறைவிடம் என்றழைக் கப்பட்ட சிறிய அமைப்பு, ''இருபத்தெட்டு முழம் நீளமும், நான்கு முழம் அகலமும் கொண்ட பத்துத்திரைகளால்'' ஆனது *(யாத் 26)*. இவைகள் துணிவளையங்களால் இணைக்கப்பட்டு செங்குத்தாக அமைக்கப் பட்ட சித்தீம் மரச்சட்டத்திலிருந்து பொன் கொக்கிகளால் தொங்கவிடப்படும். திரு உறைவிடத்தின் மேல் வெள்ளாட்டு உரோமத் தால் செய்த திரை மூடியிருக்கும். தூயகத்திற் கும் திருத்தூயகத்திற்குமிடையில் கெரூபுகள் கலைத்திறனுடன் அமைக்கப்பட்ட திரை தொங்கும். திருத்தூயகம் 4.5மீட்டர் கனசதுர அமைப்பாகவும். தூயகம் 9 மீட்டர் நீளமும் *4.5* மீட்டர் அகலமும் *4.5* மீட்டர் உயரமும்

கொண்டதாகும். திருத்தூயகத்தில் உடன்படிக்கை அல்லது சாட்சியப் பேழையிருந்தது. அதன்மேல் இரக்க இருக்கை அமைந்திருக்கும். தூயகத்தில் தூபப்பீடமும், அதன்முன் வடக்கில் பிரசன்ன அப்பமேசையும் *(25:23-30)*, தெற்கில் விளக்குத் தண்டும் *(25:31-40)* இருந்தன. தூயகம் முற்றத்திலிருந்து திரையால் பிரிக்கப்பட்டிருந்தது. உள்திருஉறைவிடம் கிழக்கு நோக்கி அமைக்கப்பட்டிருந்தது.

முற்றம் 44.5 மீட்டர் நீளமும், 22.5 மீட்டர் அகலமும் கொண்டது. அதைச்சுற்றி 2.5 மீட்டர் உயரமுடைய 60 தூண்கள் வேலியாக அமைந்திருந்தன *(27:9-18)*. முற்றத்தில், உள் திரு உறைவிடத்தின் முன் கிழக்கில் தகனப் பலிபீடமும் *(27:1-8)*, வெண்கல நீர்த்தொட்டியும் *(30:17-21)* இருந்தன. முற்றத்தின் கிழக்குப்பக்கத்தின் நடுவில் ஒருதிரை தொங்க விடப்பட்டது. இது நுழைவாயிலாகப் பயன்பட்டது *(40:33)*. இத்தகைய திரை மற்றத் தூண்களிலும் தொங்கின.

ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்லும்போது, திருஉறைவிடமும் அதன் பொருட்களும் மாட்டு வண்டிகளில் எடுத்துச் செல்லப்பட்டன. ஆனால், அதன் பொருட்கள் சித்தீம் மரத்தண்டுகளுடன் பொருத்தப்பட்டு லேவியர்களால் தூக்கிச் செல்லப்படும் *(யாத் 25:12-15.26-28; 27:6-7; 30:4-5; எண் 4:1-15; 7:6-9)*. சாட்சியப் பேழையைத் தூக்கிச் செல்லப் பயன்படும் தண்டுகள், பேழையின் பக்கத்திலிருக்கும் வளையங்களில் எப்போதும் இருக்கும். திருஉறைவிடத்துப் பொருட்களைத் தூக்கிச்சென்ற லேவியர்கள் அவற்றைத் தொடக்கூடாது *(4:15; 2 சாமு 6:2-7)*.

*2. வரலாறு:* பாலைவனப் பயணங்களுக்குப்பின் திருஉறைவிடம் சீலோவில் வைக்கப்பட்டது. காலப்போக்கில் அங்கு ஒரு நிலையான ஆலயம் கட்டப்பட்டு அதில் திருஉறைவிடம் வைக்கப்பட்டது *(1 சாமு 1:9; 3:3)*. பெலிஸ்தியர்கள் போரில் பேழையைக் கைப்பற்றியபின் இந்த ஆலயம் அழிக்கப்பட்டதாகத் தெரிகிறது *(4:1-11; சங் 78:60-64; எரே 7:12-15)*. ஆயினும் ஒரு குரு சீலோவில் தொடர்ந்து பணிபுரிந்தார் *(1 சாமு 14:3)*. திருஉறைவிடம் நோபுக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கலாம் *(21:1-9)*. பிற்பாடு கிபயோனில் அது வைக்கப்பட்டது *(1 நாள் 16:39; 21:29; 2 நாள் 1:3-6)*. சாலமோன் தான் கட்டிய எருசலேம் ஆலயத்தில் திருஉறைவிடத்தைக் கொண்டு சென்று, வைத்தார் *(1 அர 8:4)*.

*3. பொருள்:* திருஉறைவிடம் யாவேயின் உறைவிடமாகும்; அவருடைய மக்களிடையே அவரது திருமுன் தங்கிய இடமாகும் *(யாத் 2:58)*. மக்களிடையே இறைவனின் திருமுன் உறைந்தாலும், திருஉறைவிடம் மூடியிருந்ததால், மக்கள் அவரை, முழுதும் அணுக முடியவில்லை. திருஉறைவிடத்தின்மேல் ஆண்டவரின் மாட்சிமையின் மேல் இறங்கி வர இறைவன் மக்களிடையே பிரசன்னமாவார் *(40:34-35)*. இதற்குக் குருக்களும் பலிகளும் தேவைப்படும் *(யாத் 28-29; 29:45)*.

திரு உறைவிடம், இறைவன் மனுக்குலத்துடன் உறைவது தற்காலிகமாக மட்டுமின்றி, நிலையாக அமையவிருக்கும் காலத்தை முன்னுணர்த்தியது. இக்குறிக்கோளை நோக்கிய மிகப்பெரிய குருவாகிய கிறிஸ்துவின் செயலின் மாதிரிகைகளாக குருத்துவமும் பலிகளும் கருதப்படுகின்றன *(எபி 8-9)*. கிறிஸ்துவின் இவ்வுலகப்பணியைத் திரு உறைவிடம் முன்னுருவமாக உணர்த்துகின்றது. ''அவர் மனிதன் ஆனார். நம்மிடையே குடிகொண்டார்'' *(யோவா 1:14)*. மேலும் திருஉறைவிடம் இறைவனின் உறைவிடமான விண்ணகத்தை எடுத்துக் காட்டும் உலகச் சாயலாக இருக்கிறது *(எபி 8:5; காண் 9:24; திருவெளி 11:19)*. இப்பொருளில், விண்ணும் மண்ணும் சந்தித்து முடிவில்லாக் காலத்திற்கும் இறைவன் தம் மக்களிடையே வாழும் காலத்தைச் சுட்டுகிறது *(திருவெளி 21:3)*.

## திருச்சட்ட அறிஞர் (LAWYER)

சட்டங்களை, சிறப்பாக மோசேயின் சட்டங்களைத் தெளிவாக, நுணுக்கமாகக் கற்றறிந்தவர்.

'சட்ட அறிஞர்' என்ற பொருளைத் தரு கின்ற கிரேக்கச் சொல்லானது லூக்கா நற்செய்தியில் ஆறு முறையும், தீத்துவுக்கு எழுதிய திருமுகத்தில் இரண்டு முறையும், மத்தேயு நற்செய்தியில் ஒரு முறையும். இடம் பெறுவதைத் தவிர, புதிய ஏற்பாட்டில் வேறு எந்த இடத்திலும் இடம் பெறவில்லை. பவுல் தீத்துவுக்கு எழுதிய மடலில் *(3:9)* இச்சொல்லானது சட்டத்தைப் பற்றிய வாக்கு வாதங்களில் மூழ்கியிருப்பவரைக் குறிக்கும் உரிசொல்லாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த உரிச்சொல் சேனாவைக் குறிக்கிறது *(3:13)*.

மத்தேயு நற்செய்தி *22:35*-இலும் மாற்கு நற்செய்தி *12:28*இலும் இச்சொல்லானது மறைநூல் அறிஞரைக் குறிக்கிறது. 'சட்ட அறிஞர்' என்ற வார்த்தை புறவினத்தார் அறிந்த ஒரு சொல்லாகையால் லூக்கா மறை நூல் அறிஞர் என்ற சொல்லைத் தவிர்த்து 'சட்டஅறிஞர்' என்ற சொல்லை விரும்பித் தேர்ந்தெடுத்திருக்கலாம். லூக்கா நற்செய்தி *10:25*-ஐத்தவிர, இந்நற்செய்தியில் மற்ற இடங்களில் இவ்வார்த்தையானது இழி வான பொருளைக் கொண்டிருக்கிறது. இயேசு ஓய்வுநாளில் நோயாளிகளைக் குண மாக்குவதைக் குறைகூறியவர் அல்லது எதிர்த் துப் பேசியவர்கள் கூட்டத்தில் திருச்சட்ட அறிஞர்கள் இருக்கின்றனர் *(லூக் 14:3)*. அவர்கள் யோவான் தந்த திருமுழுக்கினை வெறுத்து ஒதுக்கியதால், கடவுளுடைய திட் டத்தைத் தங்களைப் பொறுத்தமட்டில் வீணாக்கினார்கள் *(7:30)*. அவர்கள் நீதியைத் தவிர்த்து விடுகின்றனர். தாங்க முடியாத சுமையை மக்கள் மேல் சுமத்துகிறார்கள். மற்றவர்களுக்கு உதவ மறுக்கின்றனர் *(11:45-46)*. அவர்கள் உண்மையான அறி வினைப் பெற மறுக்கின்றனர். அதைப் பெற விரும்புகிறவர்களையும் தடுக்கின்றனர் *(11:52)*. இந்தக் குற்றச்சாட்டுகள் அனைத்தும் இயேசுவின் வாயிலிருந்து வந்தவை. ஆனால் லூக் *11:45*-இல் மட்டும் இயேசு அவர்களை அவமானப்படுத்துவதாக ஒரு சட்டவல்லுநர் முறையிடுகின்றார்.

## திருச்சபை *(CHURCH)*

I. திருச்சபையானது விசுவாசத்திலும் வழி பாட்டிலும் இணைக்கப்பட்ட உலகிலுள்ள சமூகமென மனிதரால் நன்கு வரையறுக்கப் பட்ட திருச்சபையின் மனிதத்தன்மைக்கு அப்பாற்பட்டு, இக்காலத்தவர்கள் பலர் செல்லவில்லை. ஆனால் திருமறைநூல் விசு வாசத்தை முன்னிருத்தி, முன்னர் இறைவ னில் மறைந்திருந்து, இப்போது வெளிப் படுத்தப்பட்டு, ஓரளவிற்கு நிறைவேற்றப்பட்டு விட்ட மறைபொருளாகத் திருச்சபையை விவரிக்கிறது *(எபே 1:9-10; உரோ 16:25-26)*. பாவிகளாயிருந்தாலும், அன்பின் வாயிலா கிய கிறிஸ்துவினுடைய உடலின் விரிவாக்க மாக இருப்பதால், மீட்பின் உறுதிமொழியைக் கொண்டுள்ள மக்களின் மறைபொரு ளாக இது உள்ளது. ''இறைவனுடைய மகி மையின் புகழ்ச்சிக்காக'' *(எபே 1:14)* ஒளி, மன்னிப்பு, அருள் ஆகியவற்றை மனிதன் கண்டடையக்கூடிய மனித — இறை அமைப் பின் மறைபொருளாகும் இது. இந்த முற்றி லும் புதிய அமைப்பிற்குக் கிரேக்க மொழி பேசும் முதல் கிறிஸ்தவர்கள் ''எக்லேசிய'' (சபை) என்னும் விவிலியப்பெயரை அளித் தனர். இச்சொல்லானது இஸ்ராயேலுக்கும் கிறிஸ்தவ மக்களுக்கும் இடையிலான தொடர்ச்சியைச் சுட்டிக்காட்டுவதாகவும், அதே நேரத்தில் ஒரு புதிய பொருளை ஏற்பதற்குத் தகுதியானதாகவும் உள்ளது.

II. சொல்லின் உட்பொருள்: திருச்சபை யென மொழி பெயர்க்கப்படும் ''எக்லே சியா'' என்ற சொல், கிரேக்க உலகில், அர சியல் சக்தியாக மக்கள் கூட்டத்தைக் குறிக்கிறது. இந்தச் சமயம் சாராத பொருள், பவுல் திருச்சபையில் ஒன்றித்துள்ள கிறிஸ்தவ சபையின் அக்கால நடைமுறையைப் பற்றிப் பேசும்போது *(அ.ப. 19:32.39 தொ)* இச் சொல்லின் சமயப் பொருளைப் பாதிப்ப தாகத் தெரிகிறது.

இதற்கு மாறாக, எழுபது நூலில், திருச் சபை என்னும் சொல், சமயச் செயலுக்காக, பெரும்பாலும் வழிபாட்டுக்காகக் கூட்டப் படும் கூட்டத்தை விவரிக்கிறது *(உப 23; 1*

*அர 8; சங் 22:26).* இது ஓரேபிலும் *(உப 4:10),* மோவாபிலும் *(31:30),* வாக்களிக்கப் பட்ட நாட்டிலும் *(நீதி 8:35; 20:2)* கூட்டத் தைக் குறிக்க உபாகமப் பாரம்பரியம் பயன் படுத்தும் ''ககால்'' என்ற எபிரேயச் சொல் லோடு ஒத்துப்போகிறது. அரசர்களின் காலத் திலும் அல்லது நாடு கடத்தப்பட்ட பின்னும் இஸ்ராயேலின் வழிபாட்டுக் கூட்டத்தை விவரிக்க நாளாகமப் பாரம்பரியமும் இச் சொல்லையே பயன்படுத்துகிறது *(1 நாள் 28:2; நெகே 8:2).* ஆனால் எப்போதும் எக்லேசியா என்ற சொல் ககால் என்ற சொல்லைக் குறித்தாலும், ககால் என்ற சொல் சில இடங்களில், பிற சொற்களாலும், குறிப்பாகச் ''சினகோகே'' (செபக்கூடம்) என்ற சொல்லாலும் குறிக்கப்படுகிறது (எண் *16:3; 20:4;* உப *5:22).* திருச்சபை மற்றும் செபக்கூடம், பெரும்பாலும் ஒரு பொருள் பல சொல்லாகும் *(யாக் 2:2).* திருச்சபை என்ற சொல் தங்களைக் குறிப்பதாகவும், செபக்கூடம் பிடிமுரண்டான யூதர்களைக் குறிப்பதாகவும் கிறிஸ்தவர்கள் கருதத் தொடங்கும்வரை இரு சொற்களும் பொரு ளில் ஒன்றுக்கொன்று எதிரானவையல்ல. ககால், எக்லேசியா என்ற சொல்லின் ஒலி யசையாலும், சொல் இலக்கணத்தாலும் பாதிக்கப்பட்டு, எழுபதுநூல் திருச்சபை என்ற சொல்லைத் தேர்ந்து கொண்டது. எக்லேசியா என்ற சொல், 'நான் அழைக் கிறேன் அல்லது நான் கூட்டுகிறேன்' என்று பொருள்படும் எக்கலேயா என்ற சொல்லி லிருந்து வருகிறது. இது இறைவனின் மக்க ளாகிய இஸ்ராயேல், இறை முன்முயற்சி யால் கூட்டப்படும் மக்கள் கூட்டமாகும் என்பதைச் சுட்டுகிறது.

பழைய இறைமக்களின் தொடர்ச்சியான இறைவனின் புதிய மக்களை நிறுவிய போது, சமயக் கூட்டத்தைக் குறிக்கும் விவி லியப் பெயரை இயேசு பயன்படுத்துவது இயல்பானதே. இப்பெயர் *மத் 16:18*-இல் எக்லேசியா என்ற சொல்லால் மொழி பெயர்க்கப்படுகிறது. ''பாலைவனத் திருக் கூட்டத்தால்'' *(அ.ப. 7:38)* முன் உணர்த்தப் பட்டு, இறைவனின் புதிய மக்களாக உணர்ந்த *(1 பேதுரு 2:10)* முதல் கிறிஸ்தவத் தலைமுறை, தன்னை ''இறைவனின் இஸ் ராயேல்'' *(கலா 6:16; திருவெளி 7:4; யாக் 1:1; பிலி 3:3)* என்று சுட்டிக்காட்டத் தகுதி வாய்ந்த விவிலியச் சொல்லைப் பயன்படுத் தியது. மேலும் இச்சொல் இறுதிக் காலத்தின் ''பரிசுத்த சபையாக'' உருவாக, முதலில் யூதர்களுக்கும், பின்னர்ப் புறவினத்தாருக்கும் எதிர்ப்பலன் கருதாது கிறிஸ்துவில் இறைவன் அளித்த அழைப்பையும் உள்ளடக்கியுள்ளது.

**III. திருச்சபைக்கான தயாரிப்பும் அதன் முழுமையும்:** சிதறிய பிள்ளைகளை மீண்டும் ஒன்று சேர்ப்பதற்காக இறைவன் நீண்டகாலம் தயாரித்தார் (யோவா 11:52). திருச்சபை யென்பது இயேசுகிறிஸ்துவிலான மீட்பின் வாரிசுகளாகிய மனிதரின் சமுதாயமாகும் *(அ.ப. 2:47).* ''மீட்புப்பெறும் நமக்கு....'' என்று பவுல் எழுதுகிறார் *(1 கொரி 1:18).* மீட்பின் இறைத்திட்டமானது, இந்தச் சமுதா யத்தில் உச்சநிலை அடைவதாயினும், ''உல கைப் படைப்பதற்கு முன்னரே உருவாக்கப் பட்டு'' (எபே 1:4), ஆபிரகாமிலிருந்து ஏன், ஆதாமினுடைய தோற்றத்தின் முதற் கொண்டே மனிதரிடையில் கோடிட்டுக் காட்டப்பட்டது.

**1. முதல் படைப்பும் புதுப்படைப்பும்:** ஆதி யிலிருந்தே, இறைவனுடன் எளிதாக வாழ்ந்த போதே *(ஆதி 3:8),* மனிதன் சமூக அமைப் புக்கும் *(1:27; 2:18)* இனப் பெருக்கத்திற்கும் *(1:28)* அழைக்கப்பட்டான். ஆனால் பாவமா னது இறைத்திட்டத்தைக் குறுக்கிட்டுத் தடை செய்கிறது. இறைவனுடன் வாழ்வதற்கு அழைக்கப்பட்ட மக்களுக்குத் தலைவனாக, இருப்பதற்குப் பதிலாக, பகைமையால் பிளவு பட்ட *(4:8;6:11),* தற்பெருமையால் சிதறிய *(11:8-9),* தன்னைப் படைத்தவரிடமிருந்தே விலகி ஓடுகின்ற *(3:8;4:14)* மனித இனத்திற் குத் தந்தையாக ஆதாம் உள்ளார். ஆகவே இறைவனுடனான நட்புறவை மீட்டளிக்கக் கூடிய (உரோ 5:12...), மனித இனம் ஒன்று படுத்தப்பட்டு (யோவா 11:52) அதனுடைய உறுப்பினர்கள் ஒப்புரவாகக்கூடிய (எபே

*2:15-18)* புதுப்படைப்பைத் தொடங்க *(2 கொரி 5:17-18; கலா 6:15)* ஒரு புதிய ஆதாம் தேவைப்படுகிறார் *(1 கொரி 15:45; கொலோ 3:10-11)*. இஸ்ராயேலால் தயாரிக்கப்படும் திருச்சபையானது இப்படிப்பட்டதாக இருக்கும். பாவமானது தனது விளைவுகளை வெளிப்படுத்துகின்ற உலகினுடைய உலகளாவிய வரலாற்றில் விவிலியமானது, ஆபிரகாம் மற்றும் அவரது வழித்தோன்றல்களின் வரலாற்றை அமைக்கின்றது. ஆபிரகாமின் உண்மை மக்களாகிய திருச்சபை *(உரோ 4:11-12)* உலகில் தன்னை இடைப்புகுத்த வேண்டும்; மேலும் பாவம், அதன் முரண்பாடுகள் மற்றும் பாவத்தினால் விளைகின்ற மரணம் ஆகியவற்றிற்கான பதிலாக அங்கு இருக்க வேண்டுமென விவிலியமானது காட்டுகிறது. பாவத்தினுடைய பரவலான விரிவாக்கத்திற்குப் பிறகு, புதிய படைப்பின் தொடக்கத்தில், ஒரு நீதிமான் இறைவனால் தேர்ந்து கொள்ளப்பட்டது பற்றிய எடுத்துக்காட்டைப் பெருவெள்ளப் பாரம்பரியங்கள் ஏற்கனவே இஸ்ராயேலுக்கு அளித்திருந்தன. நோவாவின் தலைமுறையினருக்கு நீரின் மூலமாக அளிக்கப்பட்ட உலகளாவிய மீட்பானது, மற்றொரு விதத்தில் செல்வாக்குடையதாய் உள்ள திருமுழுக்கினால் கிறிஸ்து கொண்டு வருகின்ற மீட்பின் உருவமாக உள்ளது *(1 பேதுரு 3:20-21)*.

***2. பழைய மற்றும் புதிய இஸ்ராயேல்:*** உடன்படிக்கையால் முத்திரையிடப்பட்ட *(ஆதி 15:18)* ஆபிரகாமின் தேர்வானது, இறைவனின் மக்களை அமைக்கின்ற உறுதியான செயல்முறையைத் தொடங்குகிறது. தானே தொடக்கமாக உள்ள இந்த இனத்தினின்று கிறிஸ்து வருவார். அவர் அனைத்து வாக்குறுதிகளையும் நிறைவேற்றுவார் *(கலா 3:16)*. விசுவாசியாகிய ஆபிரகாமின் உண்மையான ஆன்மீக சந்ததியினரான மக்களை அவர் தோற்றுவிப்பார் *(மத் 3:9; யோவா 8:40; கலா 4:21-31; உரோ 2:28-29; 4:16; 9:6 தொ)*. விசுவாசத்தின் வழியாக இயேசு கிறிஸ்துவின் திருச்சபையில் நுழைவதன் மூலம், ஆபிரகாமில் அனைத்து இனங்களும் ஆசீர்வதிக்கப்படும் *(கலா 3:8-9; ஆதி 12:3; சங் 47:10)*.

குலத்தந்தையருடைய ஷேன் வழிச் சந்ததியாகிய இஸ்ராயேலுக்கும் திருச்சபைக்கும் இடையில் முறிவும் தொடர்ச்சியும் உள்ளன. அவ்வாறே புதிய ஏற்பாடானது இறைவனுடைய புதிய மக்களுக்குப் பழையதன் பெயர்களைச் சாற்றிக்கூறினாலும், மாற்றப்பட்ட அல்லது வேறுபட்ட பொருளில் கூறுகிறது. இவையிரண்டும் சபைகளாகும். ஆனால் இச்சொல்லானது, பழைய ஏற்பாட்டில் அறியப்படாத, கிறிஸ்துவினுடைய உடலின் மறைபொருளை இப்போது உணர்த்துகிறது *(எபே 1:22-23)*. இதனுடைய இறை வழிபாடானது முற்றிலும் ஆன்மீகமானது *(உரோ 12:1)*. திருச்சபையானது இஸ்ராயேலாக இருந்தாலும் இயலுணர்விலில்லாமல் *(1 கொரி 10:18)* ஆன்மீக உணர்வில் இறைவனது இஸ்ராயேலாக உள்ளது *(கலா 6:16)*. இது வாங்கப்பட்ட மக்களாகும்; கிறிஸ்துவின் இரத்தத்தால் வாங்கப்பட்டது *(அ.ப. 20:28; 1 பேதுரு 2:9-10; எபே 1:14)*; மேலும் புறவினத்தாரிடையினின்று தேர்ந்து கொள்ளப்பட்டதாகும் *(அ.ப. 15:14)*. இது இனி மேலும் வேசித்தனமான துணைவியாக இல்லாமல் *(ஓசே; எரே 2-3; எசே 16)*, எவ்விதக் குறைபாடுமற்ற மணமகளாக உள்ளாள் *(எபே 5:27)*; இனியும் கட்டுத்திராட்சைக் கொடியாக இல்லாமல் *(எரே 2:21)*, கனிதரக்கூடிய திராட்சைக்கொடியாகும் *(யோவா 15:1-8)*. இதுவே ''புனித எஞ்சியோர்'' *(எசா 4:2)*. ஒரே முறையில் ஒன்றாக அழைக்கப்பட்டுப் *(எரே 23:3)* பின்னர் சிதறப்படும் மந்தையைப் போலன்றி *(செக் 13:7தொ)*, தன்னையே பலியாக்கி உயிர்த்தெழுந்த மேய்ப்பனின் கடைசி மந்தையாகும் *(யோவா 10)*. இதுவே அடிமைத்தனத்தினின்று விடுபட்ட *(கலா 4:21 தொ)* விண்ணிலிருந்து வரும் எருசலேம்; இறைவாக்கினரால் முன்னுரைக்கப்பட்ட புதிய உடன்படிக்கையின் மக்களாகும் *(எரே 31:31தொ; எசே 37:26 தொ)*. ஆயினும் புதிய உடன்படிக்கையானது, எல்லா இனங்களுக்கும் இடையீட்டாளராக உள்ள *(எசா 42:6)* கிறிஸ்துவின் இரத்தத்தால் முத்திரையிடப்பட்டுள்ளது *(மத் 26:28; எபி 9:12 தொ; 10:16)*. திருச்சபையின் உடன்படிக்கையினுடைய பட்டய

மானது, இனியும் வாழ்வளிக்க இயலாத மோசேயின் சட்டமன்று (கலா 3:21). இதயத்தில் பொறிக்கப்பட்ட (எரே 31:33-34; எசே 36:27; 1 யோவா 2:27) ஆவியின் சட்டமாக உள்ளது (உரோ 8:2). தானியேலால் அறிவிக்கப்பட்டு, நாளாகம ஆசிரியர் விவரிக்கும் தாவீது சபையால் முன் குறிக்கப்பட்ட புனிதர்களின் அரசாகும். இது இனியும் ஒரு நாட்டின் பொருளாதார நலனுக்கு மட்டுமான ஒரு அமைப்பாக இல்லை (யோவா 18:36); ஆனால், எங்கும் காணக்கூடிய வாழ்வின் ஊற்றாக, காண முடியாததன் ஆன்மீக உந்துதலாக, மரணமானது அழிக்கப்பட்ட முடிவில்லா அரசாக உள்ளது (1 கொரி 15:25-26; திருவெளி 20:14). இறுதியாக, கிறிஸ்துவின் உயிர்த்த உடல் புதிய இறைத்திட்டத்தின் ஆலயமாக உள்ளது (யோவா 2:21-22). இது மனித கரங்களால் உருவாக்கப்பட்டதோ (மாற் 14:58), அழிக்கப்படக்கூடியதோ அன்று (மத் 16:18). திருச்சபையானது கிறிஸ்துவின் உடலாக இருப்பதால், இது புதிய ஆலயமாகவும் உள்ளது (2 கொரி 6:16; எபே 2:21; 1 பேதுரு 2:5). இது பழையதைவிட மேன்மையானது; யாவராலும் அணுகக்கூடியது; இது திருமுன்னின் மற்றும் வழிபாட்டின் இடமாக உள்ளது (மாற் 11:17).

IV. **திருச்சபைக்கு இயேசு அடித்தளமிடுதல்:** பழைய ஏற்பாடானது திருச்சபைக்காகத் தயாரித்து அதனை முன் குறித்துக் காட்டுகிறது. இயேசு திருச்சபையை வெளிப்படுத்தி, அதை நிறுவுகிறார்.

**1. திருச்சபையின் பல்வேறு கட்டங்கள்:** இயேசுவின் நோக்கம் விண்ணக அரசு பற்றிய அறிவிப்பில் வெளிப்படுகிறது. இப்பணித்திட்டத்தில், பல்வேறு உறுப்புகள் எப்போதும் வேறுபடுத்தப்பட முடியாத இறைவாக்கு மொழியில், அரசின் விண்ணக வடிவத்திற்குமுன் (மத் 13:43; 25:31-46) மெதுவான, மண்ணக வளர்ச்சி ஏற்படும் (13:31-32) என அவர் வெளிப்படுத்துகிறார். அறுவடைக்காக எதிர்நோக்கியிருக்கும் காலத்தில் தீயவனால் விதைக்கப்பட்ட பாவத்தின் களையும் நற்கதிருடன் சேர்ந்து வளர வேண்டும் (13:24-30.36-43). மண்ணுலகக் காலத்தினை இரண்டு நிலைகள் குறித்துக்காட்டும். முதலாவதானது இயேசுவின் இறப்போடு முடியும் வாழ்வாகும். தனது போதனையாலும், சாத்தானின் மீதான தனது செயலினாலும், மெசியா சமுதாயத்தை உருவாக்குவதனாலும் பிரசன்னமாயிருக்கும்படி, அவர் தம் அரசை உருவாக்குகிறார் (மத் 12:28; லூக் 17:21). இரண்டாவது நிலையானது, துல்லியமான பொருளில் திருச்சபையின் காலமாகும் (மத் 16:18). திருச்சபையின் காலத்தை மூன்று முக்கிய நிகழ்ச்சிகள் தொடங்கிவைக்கின்றன. முதலாவது, இயேசுவின்பலியானது, நிறைவான வழிபாட்டில் ஆர்வமாக உள்ள (காண்க. மலா 3:1-5) புதிய உடன்படிக்கையின் இச்சமுதாயத்தை அமைத்தல் (மத் 26:28). யோசியாவின் காலத்தில் எரேமியா வழிபாட்டின் இத்தூய முறையை எதிர்பார்த்தார் (2 அர 33); ஆனால், இறுதிக் கால எதிர்காலத்திற்கு இதனை மாற்றியமைத்தார் (எரே 31). கும்ரான் மற்றும் தமஸ்குவில் இருந்த குழுக்கள், தூய வழிபாட்டைத் தாங்கள் குறித்துக் காட்டுவதாக நம்பின. இரண்டாவதாக இருப்பது அவரது உயிர்ப்பு. அதற்குப் பின்னர் மீண்டும் ஒரு முறை தனது சிதறிய மந்தையை அவர் கலிலேயாவில் ஒன்றாகக் கூட்டுவார் (மாற் 14:27-28). இறுதியாக, யூத மக்களின் இடத்தைத் திருச்சபை ஏற்றுக் கொள்வதன் அடையாளமாகவும், இறுதித் தீர்ப்பிற்கான முற்செயலாகவும் உள்ள எருசலேமின் அழிவாகும் (மத் 23:37 தொ; லூக் 21:24).

**2. சீடர்களுடைய அழைப்பும் பயிற்சியும்:** தனது மனித வாழ்வின்போது இயேசு, சீடர்களைக்கூட்டி அவர்களுக்குப் பயிற்சி அளிக்கிறார். அவர்களுக்கு அரசின் மறைபொருளை வெளிப்படுத்துகிறார் (மத் 13:10-17 இணை). அவர்களே, இறைவாக்கினர்களால் அறிவிக்கப்பட்ட, நல்ல மேய்ப்பருடைய (யோவா 10) ''சிறு மந்தை'' (லூக் 13:32); மற்றும் புனிதர்களுடைய அரசு (தானி 7:18-22). இயேசு இக்குழு தனது மரணத்திற்குப் பிறகு தொடர்ந்து இருந்து பெருகு

வதை எதிர்நோக்கியவராய், அதன் வருங் கால நிலையினுடைய பரந்த வரைபடத்தை அளிக்கிறார். தன்னைப் பின்பற்றுபவர்க ளுடைய துன்பங்களைப்பற்றிய தனது இறை வாக்குகளையும் *(மத் 10:17-25; யோவா 15:18...)*, நீதிமான்களையும் பாவிகளையும் இணைக்கும் தனது உவமைகளையும் *(மத் 22:11-12; 13:24-30.36-43.47-50)* தனது மண் ணுலக வாழ்வின் காலத்தைக் கடந்து நோக்கு மாறு அவர் அளிக்கிறார். எல்லாவற்றிற்கும் மேலாக, பன்னிருவருக்கான அவரது அறி வுரைகள் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தைக் குறிப்பிடுகின்றன.

***அ) பன்னிருவர்:-*** புதிய இஸ்ராயேலின் கருவாகவும் தலைவர்களாகவும் இருக்கக் கூடியவர்களாக, தனது சீடர்களினின்று பன் னிரு நெருக்கமானவர்களை இயேசு தேர்ந் தெடுக்கிறார் *(மாற் 3:13-19 இணை; மத் 19:28 இணை)*. அவர்களுக்குத் திருமுழுக்குச் சடங்கு *(யோவா 4:2)*, போதித்தல், அசுத்த ஆவிக ளுடனும் நோய்களுடனும் போராடுதல் *(மாற் 6:7-13)* ஆகியவை அடங்கிய பயிற்சி அளிக் கிறார். முதலிடத்தைக் கொள்வதற்குப் பதிலாகப் பணிவிடை புரியத் தயாராதல் *(மாற் (9:35)*, காணாமல் போன செம்மறிக்கு முக்கியத்து வம் தருதல் *(மத் 10:6)*, தவிர்க்கப்படமுடி யாத துன்பங்களுக்குப் பயப்படாமை *(10:17...)*, பொதுச் செபத்திற்காக அவரின் பெயரால் ஒன்று கூடுதல் *(18:19-20)*, ஒருவ ரையொருவர் மன்னித்தல் *(18:21-35)* மற்றும் எவ்வித இணங்கச்செய்யும் முயற்சியில்லா மல் சபையினின்று வெளிப்படையான பாவிகளை விலக்காமை *(18:15-18)* ஆகிய வற்றை அவர் அவர்களுக்குக் கற்பிக்கிறார். காலத்தின் இறுதி வரையில், தனது வாழ் வின் ஒழுக்க முறையைக் காண, திருச் சபையானது பன்னிருவரின் இந்த அனுப வத்தையே ஆய்வு செய்ய வேண்டும்.

***ஆ) பன்னிருவரின் உலகளாவிய பணி:*** அப் போஸ்தலர்களின் தொடக்கப் பணிக்கால மானது இஸ்ராயேலின் எல்லைப்பகுதிகளை மீறவில்லை *(மத் 10:5-6)*. இயேசுவின் உயிர்ப்பிற்குப் பின்னரே, எல்லா நாடுகளுக் கும் போதித்து, திருமுழுக்கு அளிக்குமாறு அவர்கள் கட்டளையிடப்படுவர் *(மத் 25:19)*. ஆனால், தனது மரணத்திற்கு முன்னரே, புறவினத்தாரும் அரசிற்குள் நுழைய முடியு மென இயேசு அறிவிக்கிறார். கிறிஸ்துவால் ஒன்றுசேர்க்கப்பட மறுத்ததினால் *(மத் 23:37)*, முதலுரிமை கொண்டிருந்த அரசின் மக்களாகிய *(மத் 8:12)* யூதர்கள், தங்க ளுடைய இவ்வுரிமை எடுக்கப்பட்டு விடு வதைக் காண்பர் *(மத் 21:43)*. தற்காலிகமாக நீக்கப்பட்ட யூதர்களுடைய இடத்தில் *(மத் 23:39; உரோ 11:11-32)*, இயேசுவில் விசுவ சித்து மனந்திரும்பிய பாவிகளுடைய யூத உட்கருவுடன் *(மத் 21:3 தொ)*, சம அளவில் *(மத்.20:1-16)* புறவினத்தார் நுழைவர் *(மத் 8:11-12; லூக் 14:21-24; யோவா 10:16)*.

இவ்வாறு, இவ்வுலகைச் சாராத முதல் உண்மையான அரசாகிய திருச்சபையானது *(யோவா 18:36)*, பழைய ஏற்பாட்டின் மிகத் துணிச்சலான உலகளாவிய இறைவாக்கு களை நிறைவேற்றிக் கடந்து செல்லும் *(உ-ம். யோனா; எசா 19:16-25; 49:1-6)*. இஸ்ராயேலின் மண்ணுலக வெற்றியுடன் எவ்வழியிலும் இயேசு திருச்சபையை இணைக்கவில்லை. அதில் அவருக்கு அக்கறை யில்லை. மக்கள் திரளுக்கும் *(யோவா 6:15-66)* பன்னிருவருக்கும்கூட *(அ.ப. 1:6)* இது ஒரு கடினமான படிப்பினையாகும். பெந்தகோஸ்தேவிற்குப் பின்னரே அவர்கள் இதனை நன்கு அறிந்து கொள்வர். ஆயினும் தங்களது நாட்டிற்கு எதிரான எதிர்செய லாகப் பன்னிருவரும் தங்களது உலகளாவிய பணியை அமைக்க முயல மாட்டார்கள். அரச அதிகாரிகளிடம் பற்றுறுதி காட்ட அவர்கள் போதிப்பர் *(உரோ 13:1...; 1 பேதுரு 1:13-14)*. ''சீசருடையதைச் சீசருக்கும், கடவுளுடையதைக் கடவுளுக்கும் செலுத்துங் கள்'' *(மத் 22:21)* என்னும் கிறிஸ்துவின் சொற்களில், திருச்சபை - நாடு என்ப வற்றின் உறவிற்கான விதிமுறையை அவர்கள் கண்டுணர்வர். நாட்டின் நேரிய தேவைகளுக்காகத் தேவைப்படும் வரிகளும் மற்ற அனைத்தும் பேரரசருக்கு உரியவையாகும் *(உரோ 13:6-7)*; மற்ற

அனைத்தும், அதாவது நமது முழுமையும், கடவுளுக்குரியது. ஏனெனில், திருச்சபையால் போதிக்கப்பட்ட இறைவனின் மாட்சிமை மிக்க உரிமையே சீசரின் உரிமையைப் படைத்து, அதைக்கடந்து சென்று, அதைத் தீர்ப்பிடுகிறது (உரோ 13:1).

*இ) பன்னிருவரின் அதிகாரம்:* தலைவர்களுக்கு, அதிகாரம் தேவை. இயேசு பன்னிருவருக்கும் அதனை வாக்களிக்கிறார். திருச்சபை நிலைத்திருக்கும் தன்மையை உறுதிப் படுத்துகிற பாறை பேதுருவே. விண்ணக நகரின் கதவுகளைத் திறந்து மூடுபவரும், ஒழுங்குச் செயல்முறை மற்றும் போதிக்கும் அதிகாரம் (மத் 16:18 தொ; காண்க; லூக் 22:32; யோவா 21) ஆகியவற்றைச் செயல் படுத்துபவருமாகிய பேதுரு மேற்பார்வையாளரின் பொறுப்பைக் கொண்டிருக்கிறார்.ஆண்டவரின் இரவுணவை அப்போஸ்தலர்கள் மீண்டும் நிறைவேற்ற வேண்டும் (லூக் 22:19). இதற்கு மேல், மனிதரின் மனசாட்சியின்மீது தீர்ப்பிடக்கூடிய ''கட்டுதலும் அவிழ்த்தலுமாகிய'' அதே அதிகாரத்தை அவர்கள் கொண்டுள்ளனர் (மத் 18:18; யோவா 20:22-23). இயேசு கிறிஸ்துவைப் படைத்தவராகவும் ஆண்டவராகவும் கொண்டுள்ள திருச்சபையின் இயல்பை இப்பகுதிகள் ஏற்கனவே வெளிப்படுத்துகின்றன. இவ்வுலகில் இறைவனின் அரசைத் தொடங்கி, ஒழுங்கு படுத்தப்பட்ட, காணக்கூடிய சமூகமாக அது இருக்கும். அது பாறையின்மீது கட்டப்பட்டுள்ளது. அப்போஸ்தலிக்க அதிகாரத்தைச் செயல்படுத்துவதன் மூலமும், நற்கருணையின் மூலமும் அது கிறிஸ்துவின் பிரசன்னத்தை நீடித்திருக்கச் செய்கின்றது. அது நரகத்தை வென்று, அதனுடைய பலியுயிர்களைக் கைப்பற்றும். இவ்வாறு திருச்சபையானது வாழ்விற்கும் இரக்கத்திற்கும் ஊற்றாக உள்ளது.

இயேசுவின் எண்ணத்தில் திருச்சபையின் பணியானது உலகுள்ள வரை நீடித்திருக்கும். இப்பணிக்காக அளிக்கப்பட்ட காணக்கூடிய அமைப்புக்கும் மற்றும் அதிகாரத்திற்கும் இது பொருந்தும். அப்போஸ்தலிக்க அலுவலின் பெரும்பகுதியானது பிறருக்கு அளிக்கப்பட முடியாது என்பது உண்மையே. இயேசுவின் வாழ்வுக் காலத்திலும், அவரது உயிர்ப்பிற்குப் பின்னரும், அவரது சாட்சிகள் என்ற அளவில் அப்போஸ்தலருடைய இடமானது வரலாற்றில் தனித்துவமிக்கதாகும். ஆனால், உயிர்ப்பிற்குப் பின்னர் போதித்து, திருமுழுக்கு அளித்து, வழிநடத்துமாறு பதினொருவருக்கும் கட்டளையிடும்போதும், உலக முடிவு வரை அவர்களோடிருப்பதாக வாக்களிக்கும்போதும் (மத் 28:20), அப்போஸ்தலர்களின் மரணத்திற்குப் பிற்பட்ட காலம் உட்பட அனைத்து வருங்கால சந்ததிகள் முழுவதிலும், இந்த அதிகாரத்தின் நிலையான தன்மையைக் காணுமாறு அவர் அவர்களை அனுமதிக்கிறார். இவ்வாறாக, ஆதித்திருச்சபையானது இவ்வதிகாரத்தைப் புரிந்து கொள்கிறது. கைகளை விரிப்பதன் மூலம் இப்பணிக்கென அப்போஸ்தலர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அபிடேகம் செய்யப்பட்ட தலைவர்கள் மூலமாக அப்போஸ்தலிக்க அதிகாரம் தொடர்ந்து செயல் படுத்தப்படும் (2 திமோ 1:6). இந்நாளிலும், இயேசுவின் இவ்வார்த்தைகளைத் தவிர்த்து வேறு ஆதாரத்தைத் திருச்சபையின் ஆயர் அதிகாரம் கொண்டிருக்கவில்லை.

V. திருச்சபையின் பிறப்பும் வாழ்வும்:

*1. பாஸ்காவும் பெந்தகோஸ்தேவும்:* கிறிஸ்து இவ்வுலகினின்று தந்தையிடம் கடந்து சென்ற அவரது பாஸ்காவில் திருச்சபை பிறந்தது (யோவா 13:1). கிறிஸ்து கல்லறையினின்று வெளிவந்து, வாழ்வளிக்கும் ஆவியாக உருவாவதுடன் (1 கொரி 15:45), ஒரு புதிய மனித இனம் (எபே 2:15; கலா 6:15), புதிய படைப்பு எழுகிறது. ஆதாம் உறங்கும்போது அவரது விலாவினின்று பழைய ஏவாள் வந்தது போல, கிறிஸ்துவினுடைய மரண உறக்கத்தின் போது அவரது விலாவினின்று புதிய ஏவாளாகிய திருச்சபை பிறந்ததெனத் திருச்சபைத் தந்தையர் அடிக்கடி கூறியுள்ளனர். இரத்தமும் நீரும் முதலில் கிறிஸ்துவின் பலியையும், திருச்சபையை இயங்கச்செய்கின்ற ஆவியையும் அடையாளப்படுத்தியபின்,

திருச்சபைக்கு உயிரளிக்கும் திருமுழுக்கை யும் மற்றும் நற்கருணை ஆகியவற்றின் அருட்சாதனங்களையும் குறிப்பிடுவது யோவா னுக்கு உண்மையாயின், ஈட்டியில் குத்தப் பட்டதன் விளைவுகளைப் பற்றிய (யோவா *19:34-35*) யோவானின் சான்றானது இக் கருத்தைப் பரிந்துரைக்கிறது.

ஆவியைப் பரவலாகப் பொழிந்து (அ.ப. *2:33*), உயிர்த்த கிறிஸ்துவின் (எழுப்பப் பட்ட, எபே *5:14*) உடலாக இருக்கும்போது மட்டுமே திருச்சபைச் சமூகம் வாழ்கிறது. இறைவனுடைய புது மக்களின் தலைவர்க ளாக (எசே *37:9*) அவர் இறுதியாக மீண்டும் ஒன்று கூட்டியுள்ள சீடர்கள் மீது (மாற் *14:27*), புத்துயிரூட்டும் ஆவியை இயேசு ''ஊதும்'' (யோவா *20:22*; ஆதி *1:2*) உயிர்த்த நாளில் இந்த ஆவியைப் பொழிதலானது தொடங்குகிறது (யோவா *20:22*). ஆனால், அருங்கொடைகளின் பெரும்பொழிவான பெந்தகோஸ்தேவானது (அ.ப. *2:4*), பன் னிருவருடைய சாட்சியத்தைக் குறித்தும் (*1:8*), உலகிற்குப் பரந்த அளவில் திருச்சபையின் வெளிப்பாடாகவும் நிகழ்கிறது. இந்நாளா னது அதற்கு அதிகாரபூர்வ பிறந்த நாளி னைப் போன்றது. தூய ஆவியால் கருத்தரிக் கப்பட்டு (லூக் *1:35*), மெசியா பணியின் தொடக்கத்தில் ஆவியால் அபிடேகம் செய் யப்பட்ட இயேசுவின் அனுபவத்தையும் (அ.ப. *10:38*; மத் *3:16*), கைகளை விரிப்பதன் மூலம் ஆவியின் கொடையையும், திருமுழுக் கில் அவரது பணியின் முத்திரையையும் பெறும் ஒவ்வொரு கிறிஸ்தவனின் அனுப வத்தையும் (அ.ப. *8:17*; *2:38*), பெந்தகோஸ் தேவானது ஓரளவு ஒத்துள்ளது.

2. **திருச்சபை பரவுதல்:** பெந்தகோஸ்தே விற்குப் பின்னர்த் திருச்சபையானது வேகமாக வளர்கிறது. அதில் சேர்வதானது முதலில், உயிர்த்த ஆண்டவரும் கிறிஸ்துவுமான (அ.ப. *2:36*), தலைவரும் மீட்பருமான (*5:31*) இயேசுவில் விசுவாசத்தைத் தோற்று விக்கிற (*2:44*; *4:32*) அப்போஸ்தலர்களின் வார்த்தையை ஏற்றுக் கொள்வதில் அடங்கி யுள்ளது (*2:41*). பின்னர், நீரால் திருமுழுக் குப் பெறுவதன் மூலமும் (*2:41*), ஆவியை யும் அவரது கொடைகளையும் பொழிகின்ற கைகளை விரித்தலினாலும் (*8:16-17*; *19:6*) அது நிறைவுபெறுகிறது. லூக்காவின் கூற் றுப்படி (அ.ப. *2:42*), உயிருள்ள உறுப்பினர் தகுதிக்கு நான்கு படிவ பிரமாணிக்கம் தேவையாக உள்ளது. மீட்பின் செய்தியை அறிவித்ததனால் தோற்றுவிக்கப்பட்ட முதல் விசுவாசத்தை ஆழப்படுத்துகின்ற அப் போஸ்தலர்களுடைய போதனைக்குப் பற் றுறுதி, சகோதர ஒன்றிப்பு, அப்பத்தைப் பிட்டுப் பங்குகொள்ளுதல், மற்றும் பொதுமன்றாட்டு ஆகியவற்றின் மீதான பற்றுறுதி என்பனவே இவை. குறிப்பாக அப்பத்தைப் பிட்டுப் பங்குகொள்ளுதலில், அதாவது நற்கருணை உணவின் மூலம் (1 கொரி *11:20.24*), ஒரே மனமானது (அ.ப. *2:46*) படைக்கப்படு கிறது. இதில் வெகு அண்மையில் பன்னிரு வருடன் உண்டு குடித்து உயிர்த்த கிறிஸ்து வின் பிரசன்னமானது உணரப்படுகிறது (*10:41*). இங்கு அவரது பலியானது பறை சாற்றப்பட்டு, அவரது வருகைக்கான நம்பிக்கையானது உயிருள்ளதாக அமைந் திருக்கிறது (1 கொரி *11:26*).

எருசலேமில் ஆவியின் ஒன்றிப்பானது, கும்ரானில் கடமையாக இருந்ததை நினை வுறுத்தும் விதமாக, இவ்வுலகப் பொருட் களை விரும்பிப் பொதுமைப்படுத்தும் உற விற்குத் தூண்டுமளவிற்குச் செல்கிறது (அ.ப. *4:32-35*; எபி *13:16*). ஆனால், லூக்காவே இப்படத்தில் காணப்பட்ட சில கறைகளை எடுத்துக்கூறுகிறார் (அ.ப. *5:2*; *6:1*). அப் போஸ்தலர்களுடைய அதிகாரத்தின் கீழ் விசுவாசிகள் குழுவாக்கப்பட்டுள்ளனர். கிறிஸ்துவிடமிருந்துபெற்ற முதன்மைப் பத வியை அவர்களுடன் சேர்ந்து செயல்படுத்து வதன்மூலம், பேதுரு தலைமை தாங்குகிறார் (*1:13-14*). மூப்பர்களின் சபையானது அப் போஸ்தலர்களின் அதிகாரத்தில் கீழ்ப்படி யான பங்கைக் கொண்டுள்ளது (*15:2*); அவர் கள் புறப்பட்டுச்சென்ற பின்னர், உள்நாட்டுத் திருச்சபையின் தலைவராக உருவாகின்ற யாக்கோபின் அதிகாரத்தில் அது பங்கு கொள்கிறது (*21:18*). ஸ்தேவானையும்

பிலிப்புவையும் உள்ளடக்கிய, ஆவியால் நிரப்பப்பட்ட எழுவர், கிரேக்க மொழி பேசிய கிறிஸ்தவர்களுடைய பொறுப்பாளர்களாக நியமிக்கப்படுகின்றனர் (6:1-6).

ஆவியால் நிரப்பப்பட்ட இம்மனிதர்களுடைய, குறிப்பாக ஸ்தேவானுடைய பயமற்ற தன்மையானது அவர்கள் சிதறிப்போவதற்குக் காரணமாக உள்ளது (அ.ப. 8:1.4). இச்சிதறிப்போதலானது யூதேயாவிலிருந்து (8:1; 9:31-43) அந்தியோக்கியாவுக்கும் (11:19-25), அந்தியோக்கியாவிலிருந்து ''உலகின் எல்லைகள் வரைக்கும்'' (அ.ப. 1:8; உரோ 10:18; கொலோ 1:23) அல்லது உரோமை வரைக்குமாகிலும் (அ.ப. 28:16-31) திருச்சபை பரவுவதற்குக் காரணமாகிறது. யூதரிடமிருந்து பவுல் சந்திக்கின்ற எதிர்ப்புகள், தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் தறிக்கப்பட்ட அடிமரத்துடன், புறவினக் காட்டு இனத்தை ஒட்ட வைக்க வழிவகுக்கின்றன (உரோ 11:11-18). ஆனால் பவுலோ, கொர்னேலியுவிற்குத் திருமுழுக்கு அளித்த போது யூதர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சில அதிகப்படியான சலுகைகளால் முரண்படுத்தப்படாத ஒரு தீர்மானமான செயலைச் செய்த பேதுருவோ (கலா 2:11-14), யூதக் கிறிஸ்தவர்களால் இன்னமும் கடைபிடிக்கப்படுகின்ற யூதப் பழக்கங்களுக்கு உட்படுமாறு, திருச்சபையில் நுழையும் புறவினத்தாரை அனுமதிக்கவில்லை (அ.ப. 10:14; 15:29).

3. **திருச்சபையின் உண்மை வடிவம்:** இவ்வாறாக யூத இனத்தோடு ஒப்பிடுகையில் திருச்சபையின் உண்மை வடிவம் மெய்ப்பிக்கப்பட்டு அதனுடைய கத்தோலிக்கத்தன்மை (பொதுத்தன்மை) எய்தப்படுகிறது; கிறிஸ்துவிடமிருந்து பெறப்பட்ட மறைபரப்புக் கட்டளையானது செயலாக்கப்படுகிறது. தாங்கள் ஒரே சமுதாயத்தின் அணுக்கள் என்பதை அனைத்துச் சமுதாயங்களும் அறிந்திருப்பதால், அதனுடைய ஒற்றுமையானது இடங்கள் மற்றும் மக்கள் மீது ஆதிக்கம் செலுத்துகிறது. எருசலேமிலுள்ள கிறிஸ்தவர்களுக்கான மூல நிலையிலிருந்து புறவினக் கிறிஸ்தவ கூட்டங்கள் வரையிலான இந்த விவிலிய உலகின் விரிவாக்கம், எருசலேம் கிறிஸ்தவர்களுக்காகப் பவுல் வழியாக மனமாறியவர்கள் சேகரித்த நன்கொடைகள் (2 கொரி 8:7-24), எந்த ஒழுங்குமுறைக் கூறையும் தீர்மானிக்குமாறு திருச்சபையிடம் கோரும் பழக்கம் (1 கொரி 11:16; 14:33), ஒருவருக்கொருவர் மீதான ஆர்வம் மற்றும் அக்கறை (அ.ப. 15:12; 21:20; 1 தெச 1:7தொ; 2:14; 2 தெச 1:4), மற்றும் வாழ்த்துக்கள் (1 கொரி 16:19-20; உரோ 16:6; பிலி 3:2-3) முதலிய இவையனைத்தும் திருச்சபையின் உண்மையான விழிப்புணர்வை வருணிக்கின்ற அடையாளங்களாகும்.

VI. **திருச்சபையின் மீதான கிறிஸ்தவ சிந்தனை:**

1. கிறிஸ்துவிலான மீட்பினுடைய சமுதாயக்கூறுகள் அனைத்தும் திருச்சபையின் ஆர்வத்திற்குமுரியவை. ஆயினும், பவுல் மட்டுமே தனக்காக, தனது பெயரில் இந்த மறைபொருளை ஆராயும் இறை ஏவுதலுக்குட்பட்ட ஒரே ஆசிரியராவார். தனது தமஸ்குக் காட்சியில், கிறிஸ்துவுக்கும் திருச்சபைக்கும் இடையிலான மறைபொருளை, ஒப்புமையின் வெளிப்பாட்டினை அங்கே, அப்போதே கண்டார் (அ.ப. 9:4-5). அனுபவத்தினால் கிளர்ந்தெழுந்த சிந்தனையானது இந்த முதல் உள்ளுணர்வை மேலும் வளரச்செய்கிறது. உண்மையில் திருச்சபையைக் கட்டியெழுப்புகையில், அதனுடைய எல்லாப் பரிணாமங்களையும் பவுல் கண்டுபிடிக்கிறார். முதலாவதாக, கிறிஸ்துவுடனும் ஒருவரோடொருவருடனும் உள்ள உடன்பாட்டைத் திருமுழுக்குச் சடங்கின்மூலம் மாற்றுவதும், ஆவியானவர் தனது அருங்கொடைகளால் கிட்டத்தட்ட அனுபவபூர்வமான முறையில் தெளிவானதாக மாற்றுவதுமான உயிர்நாடியான ஒன்றிப்பைப்பற்றி அவர் சிந்திக்கிறார். தங்களது கட்டியெழுப்புதல் மற்றும் ஒன்றுபடுத்தும் பங்கினின்று கொடைகளைத் திசைதிருப்பும் கொரிந்தியருக்கும், இந்த அடிப்படையான கருத்தை அவர் நினைவுபடுத்துகின்றார். ''நாம் அனைவரும் ஒரே ஆவியால் ஒரே உடலுக்குள்ளாக ஞானஸ்நானம்

பெற்றோம்'' (1 கொரி 12:13). எனவே, திருச்சபையை உருவாக்குகின்ற திருமுழுக் குப் பெற்றவர்கள், கிறிஸ்துவினுடைய இந்த ஒரே உடலின் உறுப்பினர்களாக உள்ள னர். நற்கருணை அப்பமானது உயிருள்ள தொடர்பின் பிணைப்பாக உள்ளது (1 கொரி 10:17). கிறிஸ்து பிரிக்கப்படக்கூடியவர் போல, நான் கேபாவை, அப்பல்லோவை, அல்லது பவுலைப் பின்பற்றுவேன் என்று கூறுவதை, திருமுழுக்கு மற்றும் விசுவாசத் தினுடைய ஒன்றிப்பானது எவருக்கும் இயலாததாக்குகிறது (1 கொரி 1:12-13; 3:4). இந்த ஒன்றிப்பை வெளிப்படுத்தி நிலைப் படுத்துவதற்கென, எருசலேமிலுள்ள புனிதருக்காகப் பவுல் ஒரு தண்டலுக்கு ஏற்பாடு செய்கிறார் (1 கொரி 16:1-4; 2 கொரி 8-9; உரோ 15:26-27).

சிறிதுகாலத்திற்குப் பின்னர், கொலோசை யில் அவர் எதிர்கொள்ள வேண்டிய சிறை வாசமும் அண்டம் பற்றிய ஊகங்களும், உடனடியான முக்கிய பிரச்சனைகளினின்று பவுலின் கவனத்தை ஈர்க்கின்றன. அவரது எல்லைகளை விரிவுபடுத்துவதில் இரண் டுமே பங்கு பெறுகின்றன. புறவினத்தா ருடைய அப்போஸ்தலரின் நோக்கில் அவர் காண்கின்ற மொத்த இறைத் திட்டமானது (கலா 2:8-9; உரோ 15:20), எல்லா மகிமை யோடும் மிளிர்கிறது (எபே 1). இனிமேல் ''எக்லேசியா'' என்பது முன்பு இருந்தது போன்று இங்கோ அங்கோ உள்ள தலச்சபை யன்று (ஒருவேளை 1 கொரி 12:28; 15:9; கலா 1:13 ஆகிய பகுதிகள் தவிர). அது அத னுடைய அகலத்திலும் உலகளாவிய நிலையி லும், கிறிஸ்துவின் உடலாகும்; யூதருக்கும் புறவினத்தாருக்குமிடையே ஒப்புரவை ஏற் படுத்தி நிறைவான ஒரே மனிதனை உருவாக் கும் இடமாகும் (கொலோ 1:18-24; எபே 1:23; 5:23 தொ; 4:13). இந்த அடிப்படைக் கருத்தின் மீது திருச்சபையின் தலையாகிய கிறிஸ்துவின் உருவத்தைப்பவுல் மேலும் அமைக்கிறார். கிறிஸ்து தனது திருச்சபையி னின்று வேறுபட்டவராக இருந்தாலும், அது அவர் தனது தலை என்ற அளவில் அவரு டன் ஒன்றிணைந்துள்ளது (எபே 1:22-23; கொலோ 1:18). இதில் திருச்சபையானது, தூதர்களின் ஆற்றல் நிலையில் பங்கேற்கிறது (கொலோ 2:10). எல்லாவற்றிற்கும் மேலாகத் திருச்சபையானது தனது வாழ்வு, இணைப் புத்திறம், மற்றும் வளர்ச்சி ஆகியவற்றின் ஊற்று என்ற அளவில் கிறிஸ்துவுடன் ஒன்று பட்டுள்ளது (கொலோ 2:19; எபே 4:15-16). முழுமையில்லாத உடலானது தனது தலை யாக உள்ள மகிமைமிக்க கிறிஸ்துவை நோக்கி வளர்கிறது (4:15). கிறிஸ்துவை மூலைக்கல்லாகவும், அப்போஸ்தலர்களை யும் இறைவாக்கினர்களையும் அடித்தளமாக வும் கொண்டு கட்டப்பட்ட கோயிலின் உருவம் அடிக்கடி (எபே 2:20-21), உடல் என்ற கருத்துக்குள் இடை புகுகிறது. கட்டட மானது வளர்ந்து (எபே 2:21) உடலும் கட்டப்படுகிறது (4:12.16). எபே 5:22-32-இல் உடல் மற்றும் தலை என்ற கருத்துக்கள் மணமகள் பற்றிய விவிலிய உருவத்துடன் ஒன்றுபடுகின்றன. திருச்சபையின் தலைவ ராகிய இயேசுவே திருச்சபையை அன்புக் குரியவளாகக் காதலித்த மீட்பருமாவார் (2 கொரி 11:2). திருமுழுக்கு வழியாகப் புனிதப்படுத்து தல் மற்றும் தூய்மைப்படுத்துதல் ஆகிய வற்றை அதற்கு அளிக்கவும், தனக்கு முன் னர் அதை ஒளி மிக்கதாகக் கொண்டு வர வும், அதனைத் தனது மணமகளாக ஏற்கவும் அவர் தன்னையே பலியாக்குகிறார். இறுதி யாகப் பவுலின் கூற்றுப்படி திருச்சபையை விவரிக்கும் மற்றொரு கருத்தும், முன் குறிப் பிட்ட கருத்துகளோடு இணைகிறது. அவர் இறைவனாகவும் (கொலோ 2:9), அவரது உடலுக்குள் கொணரப்பட்ட மனிதரின் மீட் பராகவும் (எபே), அண்டச்சக்திகளால் ஆளப்படும் முழு உலகின் தலைமையாக வும் (கொலோ 1:19-20) உள்ள காரணத்தி னால், கிறிஸ்துவில் தங்கியுள்ள இம்முழுமை யின் தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதியாகத் திருச்சபை உள்ளது. அதுவே முழுமை என் றும் அழைக்கப்படலாம். ஏனெனில் கிறிஸ்து அதனை நிரப்புகிறார்; மற்றும் தனது முன்னேற்ற வளர்ச்சியால் அவரது உடலை முழுமையாக்குவதன் மூலம், திருச் சபை அவரை நிரப்புகிறது (எபே 4:13). இவை அனைத்தினுடைய தொடக்கமும்

முடிவுமாக இருப்பது இறைவனுடைய முழுமையே (3:19).

2. இச்சொல்லை உபயோகிக்காமலே யோவான், திருச்சபையின் ஆழ்ந்த இறையியலை நயமாகப் புகுத்துகிறார். மணமகள் (யோவா 3:29), மந்தை (10:1-16), மற்றும் திராட்சைக்கொடி (15:1-17) போன்ற விவிலிய உருவகங்கள் நேரடியாக விவரிக்கின்ற இறைவனுடைய புதிய மக்களை, புதிய யாத்திரை பற்றிய அவரது சுட்டிக்காட்டல்கள் மனதிற்குக் கொண்டு வருகின்றன. உலகினின்று தனியே பிரித்தமைக்கப்பட்ட சீடர்களின் சிறு குழுவானது (15:19; 1:39.42-43) புதிய மக்களைக் கருவிலேயே உருவாக்குகிறது. இச்சீடர்களின் குழு திருச்சபையாக மாறுவது, இயேசுவின் மரணம் மற்றும் உயிர்ப்பினால் விளைகிறது. யூதர், சமாரியர் மற்றும் கிரேக்கர் ஆகியோரிடையே எவ்வித வேறுபாடுமின்றி ஒரே மந்தையாக்க (10:16; 12:20.32; 4:21 தொ. 30-42), ''சிதறியவர்களை ஒன்று சேர்க்க,'' கிறிஸ்து இறந்தார் (11:52).

தன்னைப் பின்செல்பவர்களுக்கு (16:7; 7:39), குறிப்பாகப் பாவங்களை மன்னிக்கும் பொறுப்புடைய தனது பிரதிநிதிகளுக்கு (20:21-22) ஆவியை அளிப்பதற்கென அவர் தனது தந்தையிடம் செல்கிறார். கிறிஸ்து விதைத்ததன் விளைச்சலைத் திருச்சபையானது அறுவடை செய்து (4:38) அதன்மூலம் கிறிஸ்துவின் பணியைப் பரவச் செய்யும் (20:21). மனுவுருவான வார்த்தையைத் தொட்டவரும் (1 யோவா 1:1), பிலிப்பினால் மனம் மாறியவர்களுக்கு ஆவியை அளித்தவருமான (அ.ப. 14-17; இதை லூக் 9:45 உடன் ஒப்பிடுக) யோவான் இதற்குச் சான்றுபகரும் நிலையில் உள்ளார். ஆனால், உள்ளார்ந்த மனநிலை மற்றும் விருப்பத்தேர்வின் மூலமாகத் திருச்சபையின் உள்வாழ்விற்கு யோவான் ஈர்க்கப்பட்டுள்ளார். பேதுருவின் கோலின் கீழ், திருச்சபையின் உறுப்பினர்கள் அனைவரும் ஒன்று சேர்க்கப்படுகின்றனர் (21). திராட்சைக் கொடியாகிய கிறிஸ்துவுடனான ஒன்றிப்பினின்று வாழ்வின் ஊற்றுக்களைப் பெறுகின்றனர். இந்த இணைப்பானது திருமுழுக்கிலும் (3:5) நற்கருணையிலும் (6) உண்மையாக்கப்படுகிறது. ஆவியின் இயக்கத்திற்குக் கீழ், கிறிஸ்துவின் வார்த்தைகளை அவர்கள் ஒன்றாகத் தியானிக்கின்றனர் (14:26); ஒருவர்க்கொருவர் காட்டும் அன்பின் மூலமாக (13:33-35), கடவுள் அவர்களிடம் எதிர்பார்க்கின்ற கனியை அவர்கள் அளிக்கின்றனர் (15:12.16-17). இவை அனைத்தின் மூலமாகத் திருச்சபையானது, அனைத்திலும் பிரசன்னமாகியுள்ள இறை ஆட்களின் ஒன்றிப்பைத் தனது ஆதாரமாகவும் மாதிரியாகவும் கொண்டுள்ள தனது ஒன்றிப்பைக் காட்டுகிறது (17). அடக்குமுறைகளுக்குப் பழக்கப்பட்ட நிலையில் (15:18-16:4), உலகம் மற்றும் அதனுடைய அரசன் மீதான வெற்றியானது ஏற்கனவே நிகழ்ந்துவிட்டதன் காரணமாக, வெற்றிகரமான நம்பிக்கையுடன் திருச்சபையானது அடக்குமுறையை எதிர்கொள்கிறது (16:33).

கடைசிக் கருத்தானது திருவெளிப்பாட்டில் மையமாக உள்ளது. அங்குத் திருச்சபையானது அடுத்தடுத்துப் புனித நகராகவும் (திருவெளி 11:1-3), நாட்கள் எண்ணப்பட்டாலும் புனிதர்களைக் கொடுமைப்படுத்தும் மிருகத்தை (புறவினப் பேரரசு) உபயோகிக்கின்ற பறவை நாகத்துடன் (சாத்தான்) போராடும் பெண் (திருவெளி 12) என்றும், பின்னர்ப் பொதுவிடத்தில் மிருகமானது இரண்டு இறைவாக்கினர் - சாட்சிகளைக் கொன்றாலும், உண்மையான விசுவாசிகளின் ஒரு பகுதியினர் பாதுகாக்கப்படுகின்ற ஆலயம் மற்றும் அதன் சுற்றுப்புறங்கள் (11:1-13) என்றும் விவரிக்கப்படுகிறது. திருச்சபையினுடைய மண்ணுலக வெற்றியின் காலமாக இராத, 20-ஆம் அதிகாரத்தில் வரும் ஆயிரம் ஆண்டானது, உள்ளார்ந்த, ஆன்மீகப் புதுப்பித்தலை (20:6 மற்றும் 5:10-ஐ ஒப்பிடுக. மற்றும் எசே 37:10=திருவெளி 11:11) அல்லது பொதுத்தீர்ப்பிற்கு முன்னரே மறைசாட்சிகளின் மகிழ்ச்சியை விவரிக்கவில்லையா? எல்லா நிகழ்ச்சிகளிலும், எல்லாவற்றிற்கும் மேலாகப் புதிய எருசலேமாகிய விண்ணகத்தின்மீது திருச்சபையானது நாட்டம் கொண்டுள்ளது (3:13; 21:1-8; 21:9-22:5).

''ஆவியானவரும் மணமகளும் 'வாரும்' என்கின்றனர்'' *(22:17)*.

விண்ணக வாழ்வில், இறைவாக்கினரால் முன்னுரைக்கப்பட்ட அனைத்தும் நிறை வேற்றப்படும்போது பாவமும் *(எசா 35:8; திருவெளி 21:27)*, துன்பம் மற்றும் மரணமும் *(திருவெளி 21:4; எசா 25:8; 65:19)* முழுமை யாக அகற்றப்படும். பின்னர், பெந்தகோஸ் தேவை எதிர்மறையாக ஏற்கனவே கொண் டுள்ள பாபேலின் சிதறிய நிலையானது இறுதிப் பதிலைப்பெறும் *(எசா 66:18; திரு வெளி 7:9-10)*. பின்னர்தான் தருக்கு மிக்க பேரரசுகள், ''சாத்தானின் செபக்கூடங்கள்'' ஆகியவை மறைந்துவிடும் *(திருவெளி 2:9; 3:9)*. ''மனிதருடனான இறைவனின் உறை விடமான'' *(21:3)* ''புதிய உலகம்'' *(21:5)* மட்டுமே இருக்கும்.

VII. **இறையியல் தொகுப்பு:** திருச்சபை யானது இறைவனால் படைக்கப்பட்டு, கிறிஸ் துவால் கட்டியெழுப்பப்பட்டு, ஆவியின் உறைவிடமாக உள்ளது *(1 கொரி 3:16; எபே 2:22)*. இத்தகைய திருச்சபையானது ''தூய ஆவியின் மூலமாக இயேசுவால் தேர்ந் தெடுக்கப்பட்ட ''அப்போஸ்தலர்களான'' *(அ.ப.1:2)* மனிதர்களிடமும், பின்னர்க் கைகளை விரிப்பதன் மூலம் ஆளுவதற்கான கொடையைப் பெறுகிறவர்களிடமும் ஒப்படைக்கப்படுகிறது *(1 திமொ 4:14; 2 திமொ 1:6)*.

''உண்மைக்குத் தூணும் அடிப்படையு மாக உள்ளதும்'' *(1 திமொ 3:15)*, அப்போஸ் தலரிடமிருந்து பெறப்பட்ட 'நற்போதனை யின் தொகுப்பை'' என்றென்றும் பாதுகாக் கத் தகுதியுடையதுமான *(2 திமொ 1:13-14)* திருச்சபையை ஆவியானவர் *(யோவா 16:13)* வழி நடத்துகிறார். விசுவாசத்தின் தொகுப் பைப் பாதுகாக்கும் இந்த அதிகாரம் அதனைத் தெளிவுபடுத்தித் தவறின்றி வெளிப்படுத்து கின்ற அதிகாரமாகும். நற்செய்தியால் கிறிஸ் துவின் உடலாக உருவாக்கப்பட்டு *(எபே 3:6)*, ஒரே திருமுழுக்கினால் பிறந்து *(4:5)*, ஒரே அப்பத்தினால் ஊட்டப்பட்டு *(1 கொரி 10:17)*, திருச்சபையானது ஒரே இறைவனும் தந்தையுமானவரின் பிள்ளைகளை *(எபே 4:6)* ஒரே மக்களாக ஒன்று சேர்க்கிறது *(கலா 3:28)*. திருச்சபையானது மனித பிளவுகளை அகற்றி யூதர் மற்றும் புறவினத்தார் *(எபே 2:14தொ)*, நாகரிகமானவர் மற்றும் காட்டு மிராண்டிகள், தலைவர்கள் மற்றும் அடிமை கள், ஆண்கள் மற்றும் பெண்கள் *(1 கொரி 12:13; கொலோ 3:11; கலா 3:28)* ஆகிய அனைவரையும் ஒரே மக்களாக ஒன்றிணைக் கிறது. 2-ஆம் நூற்றாண்டிலிருந்து கூறப்படு வதுபோல இந்த ஒன்றிப்பானது பொதுமைப் பண்புடையதாகும். திருச்சபையானது எல்லா மனித பிரிவினைகளையும் ஒப்புர வாக்கவும் *(அ.ப. 10:13)*, எல்லாக் கலாச்சாரங் களுக்கும் ஏற்ப தன்னை மாற்றிக் கொள்ளவும் *(1 கொரி 9:20 தொ)*, மொத்த உலகையும் அரவணைக்கவும் *(மத் 28:19)* அமைக்கப்பட் டுள்ளது.

தனது தலைமையிலும் அமைப்பிலும் மட்டு மின்றி, திருமுழுக்கினால் புனிதப்படுத்தப் பட்ட தனது உறுப்பினர்களிலும் திருச்சபை யானது புனிதமாக உள்ளது *(எபே 5:26 தொ)*. திருச்சபையிலும் பாவிகள் உள்ளனர் *(1 கொரி 5:12)*; ஆனால் அவர்கள் தங்க ளுடைய பாவங்களுக்கும் ''புனிதர்களின்'' கூட்டத்திற்குள் நுழைவதற்கான கோரிக்கை களுக்குமிடையே அலைக்கழிக்கப்படுகின்ற நபர்களாக உள்ளனர் *(அ.ப. 9:13)*. திருச் சபையானது அவர்களைத் திருப்பி அனுப்பா மல், கிறிஸ்துவைப் போன்று அவர்களுக்கு மன்னிப்பையும் தூய்மைப்படுத்தலையும் அளிக்கிறது *(யோவா 20:23; யாக் 5:15-16; 1 யோவா 1:9)*. தீய களையானது அறுவடை யாளரின் வருகைக்கு முன்பே எப்போதும் கோதுமையாக மாறக்கூடும் *(மத் 13:30)*. திருச்சபையானது தன்னிலேயே ஒரு முடி வாக இல்லாமல், அதற்கெனக் கிறிஸ்துவின் மறு வருகையானது மாற்றியமைக்கக்கூடிய குறிப்பிட்ட அரசிற்கு நடத்திச்செல்கிறது. தீட்டுப்பட்ட எப்பொருளும் இந்த அரசிற்குள் நுழையாது *(திருவெளி 21:27; 22:15)*. விண் ணக எருசலேமாக மாற்றப்பட வேண்டும் என்னும் திருச்சபையின் ஆர்வத்தை அடக்கு முறைகள் வேகப்படுத்துகின்றன.

திருச்சபையினுடைய விசுவாசம், நம்பிக்கை, மற்றும் அன்பினுடைய முழுமையான மாதிரியாக இருப்பவர் மரியாள். கல்வாரியிலும் (யோவா 19:25), ''மேலறையிலும்'' (அ.ப. 1:14) அவள் திருச்சபையின் பிறப்பிற்குச் சான்று பகர்கின்றாள். பவுல், திருச்சபையின்பால் ஆழ்ந்த (1 கொரி 4:15; கலா 4:19) மற்றும் செயல்முறையான, அன்பினால் நிரப்பப்பட்டுள்ளார். அனைத்துச் திருச்சபைகளைப்பற்றிய கவலையாலும் (2 கொரி 11:28), அவரது பெரும் பாடுகளால் சிலுவையின் கனிகளைப் பகிர்ந்தளிக்க உள்ள ஆர்வத்தாலும் (1 கொரி 4:9-13; 2 கொரி 1:5-9) பற்றி எரிகிறார். இவ்வாறு, ''திருச்சபையாகிய தம் உடலின் பொருட்டுக் கிறிஸ்து பட வேண்டிய வேதனைகளில் இன்னும் குறைவாய் இருப்பதைத் தன் உடலில் அவர் நிறைவாக்குகிறார்'' (கொலோ 1:24). ''திருச்சபையின் பணியாளன்'' (1:25) என்ற நிலையில் அவரது வாழ்வானது, குறிப்பாக, அப்போஸ்தலிக்கப் பணியைத் தொடர்கின்றவர்களுக்கு ஒரு மாதிரியாக உள்ளது.

தலைவர்கள் மட்டுமின்றி, கிறிஸ்தவ மக்களின் அனைத்து உறுப்பினர்களும் தங்களது அருங்கொடைகளைப் பயன்படுத்தித் திருச்சபைக்கு ஊழியம் புரிய அழைக்கப்படுகின்றனர். அன்பின் கனிகளால் நிரப்பப்பட்ட கிளைகளைப்போலத் திராட்சைக் கொடியில் வாழ அவர்கள் அழைக்கப்பட்டுள்ளனர். விசுவாசத்தின் பலியினாலும் (பிலி 2:17), ஆவிக்கேற்ற தூய வாழ்வினாலும் (உரோ 12:1; 1 கொரி 6:19; பிலி 3:3) தங்களது குருத்துவத்திற்கு உகந்தவர்களாக இருக்குமாறு கோரப்படுகின்றனர் (1 பேதுரு 2:5). சபையின் வழிபாட்டில் கிறிஸ்தவர் தீவிரமாய்ப் பங்கேற்க வேண்டும். கன்னிமை எனும் குறிப்பிட்ட கொடையைப் பெற்றிருப்பின், ஆண்டவரை மட்டுமே அவன் பற்றிக்கொள்ள வேண்டும். மணமானவராயின், கிறிஸ்துவிற்கும் அவரது திருச்சபைக்கும் இடையிலான இணைப்பின் மாதிரியில் இல்லற வாழ்வை அமைக்க வேண்டும் (எபே 5:21-33). இயேசுவால் ''வளமிக்க மணமகள்'' (1:25) என அன்பு செய்யப்பட்டதும், ஒவ்வொரு மனிதனாலும் ''அன்னை'' என்று அழைக்கப்படுவதுமான (சங் 86:5; கலா 4:26) புனித நகரானது நம்முடைய மகனுக்குரிய அன்பிற்குத் தகுதியுடையதாகும். ஆயினும், அதனைக் கட்டியெழுப்புகின்ற அளவில்தான் நாம் அதனை அன்பு செய்கின்றோம்.

## திருச்சபைத் தந்தையர்கள் (FATHERS OF THE CHURCH)

இது கிறிஸ்துவத்தின் முதல் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஆயர்களையும் திருச்சபை அதிகாரிகளையும் குறிக்கும். இவர்கள் பாரம்பரியப் போதகத்திற்குக் காட்டிய பற்றுறுதிக்கும் தங்கள் தூய எடுத்துக் காட்டான வாழ்வுக்கும் புகழ் பெற்றிருந்தனர். இவர்களுடைய நூல்கள், கிறிஸ்தவப் போதகம் பற்றிய தர்க்கங்களில் அதிகாரமுடையவையாயின. இக்குழுவில் அப்போஸ்தோலிக்கத் தந்தையர்கள் அடங்குவர். நிசேயாப் பொதுச் சங்கத்திற்கு முன் வாழ்ந்த மறைசாட்சியான யுஸ்தீன், அத்தெனகோரஸ், இரேனேயு, தெர்துல்லியன், அலக்சாந்திரியாவைச் சேர்ந்த கிளமெந்து போன்ற காப்புரையாளர்களும், உருவக முறையில் எழுதியவர்களும், மறை மெய்மையாளர்களும் ஓரிசன்போன்ற விவிலிய ஆய்வாளர்களும் அடங்குவர். நிசேயாச் சங்கத்திற்குப்பின் வந்தவர்களில் நான்காம் ஐந்தாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த மறை உண்மைக் கோட்பாட்டாளர்கள், விளக்கவுரையாளர்கள், வரலாற்று ஆசிரியர்கள், மற்றும் போதகர்கள் ஆகியவர்களும் திருச்சபைத் தந்தையர்கள் என்றழைக்கப்பட்டனர். கிரேக்க ஆசிரியர்களிடையே அத்தனேசியு, நீசாவின் கிரகோரி, நசியானுவின் கிரகோரி, யோவான் கிறிசோஸ்தோம் ஆகியோரும், இலத்தீன் ஆசிரியர்களிடையே அம்புரோசு, எரோனிமு, அகுஸ்தீன் ஆகியோரும் சிறப்புப்பெற்று விளங்குகின்றனர். அறிஞர் சிலர் 9-ஆம் நூற்றாண்டில் ''ஸ்கோலாஸ்திசம்'' எழுச்சிபெறுவதற்கு முந்திய திருச்சபை எழுத்தாளர்களையும் திருச்சபைத்தந்தையருள் உள்ளடக்கினாலும், மேற்குத் திருச்சபையில் பெரிய கிரகோரியோடும் (540-604),

கிழக்குத் திருச்சபையில் தமஸ்குவின்யோவா னோடும் (675-749) திருச்சபைத் தந்தையர் களின் காலம் முடிந்துவிட்டது என்று பொது வாகக் கருதப்படும்.

## திருச்சபையின் ஆட்சிமுறை (CHURCH GO-VERNMENT)

கிறிஸ்துவின் திருச்சபை எவ்வாறு ஆட்சி செய்யப்பட வேண்டும் என்பது பற்றிப் புதிய ஏற்பாடு அரிதாகத்தான் குறிப்பிடு கிறது. மூப்பர்கள், தியாக்கோன்கள், ஆயர்கள் என்ற பதவியாளர்களைக் குறிப்பிடும் பவுல் கூட, தன் இறுதித்திருமுகங்களில்தான் இவர் களைக் குறிப்பிடுகிறார் (1 திமொ, தீத்து). இதன் விளைவாகக் கிறிஸ்தவர்கள் இந்தச் சிறப்புப் பதவிகளின் எண்ணிக்கை, அவற் றிடையேயுள்ள உறவு ஆகியவைபற்றிப் பெரிதும் வேறுபடுகின்றனர்.

இயேசு தன்னுடைய சீடர்களில் பன்னிரு வரை அப்போஸ்தலர்களாக நியமித்தார். தனது விண்ணேற்றத்திற்குமுன் தனது நற் செய்தியைப் போதிக்கும் பொறுப்பை இவர் களிடம் ஒப்படைத்தார் (அ.ப. 1:8; மத் 28:16-20). இவ்வுலகில் இயேசு செய்த பணி யின் நேரடிச் சாட்சிகளான இவர்கள், தங்கள் செய்திக்கு ஆதரவாக இயேசுவின் அதிகா ரம் அளிக்கும் சொற்களையும் பயன்படுத்தி னர். யூதாசின் மரணத்துக்குப்பின், அவருக் குப் பதிலாகப் பதினொருவரும் மத்தியா வைத் தேர்ந்தெடுத்தனர் (அ.ப. 1:26). காலப் போக்கில் பவுலின் அதிகாரத்தையும் ஏற்றுக் கொண்டனர் (கலா 1:11 தொ). அப்போஸ்த லப் பணிநூல் பேதுரு (அ.ப. 2-12), பவுல் (13-28), ஆகியோருடைய் பணியையும், ஓரளவு யோவானின் பணியையும் (3:14.11; 8:14) எடுத்துக் கூறுகிறது.

ஏழைகள் மற்றும் விதவைகளின் கவனிப்பு உள்ளடங்கிய அவர்கள் பணி சுமையாகித் தடையாகியபோது, அவர்கள் எழுவரைத் தேர்ந்தெடுத்து, கிரேக்க விதவைகளைக் கவ னிக்கும் பொறுப்பை இவர்களிடம் ஒப்ப டைத்தனர் (அ.ப. 6:1-6). இவர்கள் தியாக் கோன்களுக்கு (திருத்தொண்டர்கள்) முன் னோடியாக இருந்திருக்கலாம். ஆனால் இவர்களில் பிலிப்பு நற்செய்தியாளராகவும் (8:5. 26 தொ.40), ஸ்தேவான் காப்புரையாள ராகவும் விளங்குகின்றனர் (அதி 7).

சில காலத்திற்குப்பின் . ஆதித்திருச்சபை ஆயர்கள் (மேற் பார்வையாளர்கள்), மூப்பர் கள், திருத்தொண்டர்கள் ஆகிய பதவிகளை நிறுவியது. ஆயர்கள் தலத்திருச்சபைகளின் பணியாளர்கள் ஆவர். இவர்கள் மூப்பர்க ளோடு சம அதிகாரம் கொண்டிருந்தனர். அ.ப. 20:17-இன்படி, பவுல் மூப்பர்களை எபேசியத்திருச்சபையின் ஆளும் குழுவாகக் கருதியதாகத் தெரிகிறது. எழுவரின் தேர்வுக் குப்பின் விரைவில் மூப்பர்கள் தோன்றுகின் றனர். அந்தியோக்கியாவிலும் (11:30), பவுலின் முதல் மறைபரப்புப் பயணத்தின் முடிவில் கலாத்தியத் திருச்சபைகளிலும் மூப்பர்கள் நியமிக்கப்படுகின்றனர் (14:23). பிலிப்பியில் தியாக்கோன்கள் நியமிக்கப்பட்டிருந்தனர் எனத் தெரிகிறது. ஏனெனில் பவுல் பிலிப்பி யர்களுக்கு வாழ்த்துக் கூறும்போது இவர் களைக் குறிப்பிடுகிறார் (பலி 1:1); ஆனால் ஆயர்கள், மூப்பர்களைப் போல் இவர்கள் அவ்வளவு அதிகாரம் கொண்டிருக்க வில்லை.

தனது முதல் சிறைவாச காலத்தை யொட்டி, பவுல் இந்த மூன்று பதவிகளை யும் ஏற்றுக் கொள்கிறார். ஆனால் இவற் றைப்பற்றி விரிவாகக் கூறவில்லை. திருச் சபை ஆட்சிமுறை பற்றிய கொரிந்தியருக்கு அளித்த அறவுரையில் பவுல், ஆன்மீகக் கொடைகளைப் பயன்படுத்த அப்போஸ்த லர், இறைவாக்கினர், போதகர், புதுமை செய்வோர், நோய்களைக் குணமாக்குவோர், பிறர் சேவை செய்வோர், ஆளுபவர்கள், பரவசப் பேச்சாளர்கள் ஆகியபதவிகளை வரிசைப்படுத்துகிறார் (1 கொரி 12:28). அன்பே ஆன்மீகக் கொடைகளில் மிகப் பெரியது என்று பவுல் கருதுகிறார் (1 கொரி 13). ஆகவே கொரிந்துத் திருச்சபையின் அருங்கொடையாளர்களின் அதிகாரத்தைக் குறைப்பதாகத் தோன்றுகிறது. எபேசிய ருக்கு எழுதிய திருமுகத்திலும் இத்தகைய

தொரு பட்டியலைப் பவுல் தருகிறார் (எபே *4:11*). திருச்சபை ஆட்சி முறை பற்றிய பவுலின் கருத்து எதுவானாலும், கிறிஸ்துவே எல்லாருக்கும் உண்மையான தலைவர் என்பதை உறுதியாக எடுத்துக் கூறுகிறார் (*1:22; 5:23-24*).

சில நூற்றாண்டுகளுக்குள்ளேயே தொடக்க காலக் கிறிஸ்தவர்கள் திருச்சபையில் வலுவான, மையமாக்கப்பட்ட, படிமர புடைய அதிகார அமைப்பைக் காண்கின்ற னர். இது மேற்குத் திருச்சபையில் காலப் போக்கில் பாப்புவின் முதன்மையில் உச்ச நிலையடைகிறது அவர் உலகில் கிறிஸ்து வின் பிரதிநிதி ஆவார். பிரிவினைச் சகோத ரர்கள், திருச்சபை ஆட்சிமுறைபற்றி வேறு பட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தாலும், பாப்புவின் அதிகாரம் பற்றிய உரோமைக் கத்தோலிக்கத் திருச்சபை கொண்டாடிய உரி மையை ஏற்க மறுப்பர்.

**திருத்தூயகம்** (HOLY OF HOLIES)

திரு உறைவிடத்தின் உள் அறையைக் குறிக்கும் சொல்லாகும் (யாத் *26:34*). திரு உறைவிடத்தின் மற்றப் பகுதிகளிலிருந்து இது ஒரு திண்ணிய திரையால் பிரிக்கப்பட்டிருந் தது. இந்த அறையில் சாட்சிப் பேழையும் அதன்மேல் இரக்க இருக்கையும் இருந்தன.

இந்த அறை 9 x 9 x 9 மீட்டர் கொண்ட தாகும். செருபாபேல், ஏரோது ஆகியோர் கட்டிய ஆலயங்களில், திருத்தூயகம் வெறுமை யாகவே இருந்தது; எப்போதும் இருள் மண்டியதாகவும் இருந்தது. ஆண்டிற்கு ஒரு முறை ''பரிகார நாளில்'' பெரிய குரு பலிப் பொருள்களின் இரத்தம் தாங்கித் தூபப்பீடத்தி லிருந்து தூபத்தோடும் இவ்விடத்திற்குள் சென்று, இரத்தத்தைத் தெளித்துவிட்டு வரு வார். பிறர் இவ்வறைக்குள் புகுந்தறியார் (லேவி *16*). இவ்வறையைப் பிற பகுதிகளி லிருந்து பிரித்த திரைதான் இயேசு மரித்த போது கிழிந்த திரையாகும் (லூக் *23:45*). எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகத்தில் திருத்தூயகம் கிறிஸ்து கொண்டு வந்த மீட் பின் அடையாளமாகும் (எபி *9:11-28; 10:19-20*).

**திருத்தொண்டர்** (DEACON - வேலைக்கா ரன், பணியாள், சேவகன்)

அப்போஸ்தலிக்க காலத்திலிருந்து, திருச் சபையில் உள்ள பணியாளர்களின் பெரிய பதவிகளில் ஒன்றின் பெயர். கிரேக்க மொழி பேசிய விதவைகளுக்கு அறப்பணி புரிவ தில் பன்னிருவருக்குத் துணைபுரிய எழுவ ரைத் தேர்ந்தெடுத்து அபிடேகம் செய்ததைப் பற்றிய விவரிப்பைக் கூறும் அ.ப. *6:1-6*-உடன் இப்பதவி நிறுவப்பட்டது தொடர்பு படுத் தப்படுகிறது. அப்போஸ்தலர் பணியின் ஆசி ரியர் இவர்களுக்குத் 'திருத்தொண்டர்' என் னும் பெயர்ச்சொல்லைக் குறிப்பிடாமல், மேசையில் பரிமாறும் அவர்களது பணி யைக் குறிப்பிடும் வினைச்சொல்லைப் பயன்படுத்துகிறார். 'திருத்தொண்டர்' என் னும் சொல் இந்நூலில் குறிக்கப்பட வில்லை; ஆனால், எழுவரில் ஒருவரான பிலிப்பு, நற்செய்திப் போதகர் என்று அழைக்கப்படுகின்றார் (அ.ப. *21:8*).

பிலிப்புவிலுள்ள மொத்த திருச்சபை யுடன் 'மேற்பார்வையாளர், திருப்பணியாளர்' (பிலி *1:1*) ஆகியோரையும் வாழ்த்தும் குறிப்பு, இப்பதவியைப் பற்றிக் குறிப்பிடு கிறது. பவுலுக்குப் பிலிப்பியரால் அனுப்பப் பட்ட பொருளுதவிக்கு நன்றியறிதலாய் இக்கடிதம் எழுதப்படுவதால், அவரது தேவைக்கெனப் பொருளைச் சேகரித்து, அனுப்பி வைக்கும் பணியை மேற்கொண்ட பணியாளர்களைத் தனது நன்றியறிதலில் நினைவு கூர்வது நியாயமே. மற்றப்படி, இச் சொல் பவுலால் தன்னுடன் போதித்தலில் பணிபுரிபவர்களாயும், உதவியாளர்களாயும் உள்ள திமொத்தேயு (1 தெச *3:2*; 1 திமொ *4:6*), திக்கிக்கு (கொலோ *4:7*; எபே *6:21*), எப்பப்பிரா (கொலோ *1:7*) ஆகியோரைப் பற்றி விவரிக்கப் பயன்படுகிறது. பவுல் இச்சொல்லைத் தனது பணியைப் பற்றி (1 கொரி *3:5*; 2 கொரி *3:6; 6:4; 11:15.23*; கொலோ *1:23.25*; எபே *3:7*), கிறிஸ்து வின் பணியைப் பற்றி (உரோ *15:8*; கலா *2:17*), அல்லது ஆளும் அதிகாரிகளின் பணியைப் பற்றி (உரோ *13:4*) வர்ணிக் கப் பயன்படுத்துகின்றார்.

அப்போஸ்தலிக்க காலத்திற்குப்பின்னர், இலக்கியத்தில் திருப்பணியாளரைப்பற்றிய குறிப்புகள் ஏராளமாக உள்ளன. திருச்சபையின் ஆளுகைக்குரிய பணியில் அவர்களது தரமும், செயல்களும் தெளிவாகவும் துல்லியமாகவும் உள்ளன: இவற்றின்படி, அபிடேகம் செய்யப்பட்ட பணியில் ஆயர்கள், மூப்பர்களை அடுத்த மூன்றாவது நிலையைத் திருத்தொண்டர்கள் பெற்றிருந்தனர். ஆயரால் அபிடேகம் செய்யப்பட்டு, அவரது திருவழிபாடு மற்றும் மேய்ப்புப் பணிகளுக்குத் துணை நின்றதால், ஆயரின் துணையாளராக இவர்கள் இருந்தனர்.

நற்கருணைச் சடங்கில் திருத்தொண்டர்கள் மக்களின் காணிக்கைகளைப் பெற்றும், நற்கருணை வழங்குவதில் துணை புரிந்தும் செயல்பட்ட்னர். பிற்காலத்தில், நற்கருணைக் கூட்டத்தில், நற்செய்தி வாசிக்கும் தனி உரிமையைத் திருத்தொண்டர்கள் பெற்றனர். அவர்கள் வெளியே சென்று, நோயாளிகள், ஏழைகள், தேவையுள்ளோர் குறிப்பாக விதவைகள், அநாதைகள் மற்றும் சிறைப்பட்டோரைச் சந்தித்தனர். ஆயரிடம் அவர்களது தேவைகளை எடுத்துச்சொல்லி திருச்சபையின் உதவியை அவர்களுக்கு எடுத்துச் சென்றனர். மறைசாட்சி யுஸ்தீனின் கூற்றுப்படி இவர்கள் தவிர்க்க இயலாத நிலையால் நற்கருணைச் சடங்கிற்கு வர இயலாதவர்களுக்கு நற்கருணையைக் கொண்டு சென்றனர். இத்தகைய செயல்களின் ஒளியில் *1 திமொ 3:8-13*-இல் குறிப்பிடப்பட்டுள்ள திருப்பணியாளருக்கான குணங்களின் வரைமுறைகள் தகுதியாக உள்ளன. ஏனெனில், மக்களுடனான இவரது பல்வேறு சந்திப்புகளும், திருச்சபையின் காணிக்கைப் பொருட்களின் பொறுப்பும் அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தாருக்கும் வதந்தி, ஆசை, பழி மற்றும் இச்சை போன்ற பல சோதனைகளுக்கும் இடம் கொடுத்தன.

திருப்பணியாளரைப்பற்றிய மூல முன் மாதிரியை யூத மற்றும் புற இனத்தாரின் அடிப்படைகளில் தேடும் முயற்சிகள் ஓரளவே வெற்றிகரமாக அமைந்தன. கிறிஸ்தவ திருப்பணியாளருக்கும், யூத செபக்கூடத் தலைவருக்கு வழிபாட்டுச் சடங்குகளில் மட்டுமே உதவிசெய்தவர்க்கும் இடையே சில ஒற்றுமைகள் உள்ளன; மேய்ப்புப் பணியிலும், மற்றச் செயல்களிலும் இருவரும் மாறுபட்டு உள்ளனர். எழுபது நூலிலும், சிறந்த கிரேக்க ஆசிரியரிடையிலும் 'திருப்பணியாளன்' என்னும் சொல் ஊழியன், தூதன், நாட்டு அதிகாரி என்னும் சமயசார்பற்ற பொருளைக் கொண்டுள்ளது. யோசிபசு மற்றும் எப்பிக்தேத்து ஆகியோர் இச்சொல்லைக் 'கடவுளின் ஊழியன்' என்ற பொருளில் சில முறை பயன்படுத்தியுள்ளனர். பல புறவினத்தாருடைய ஏடுகள், 'திருப்பணியாளர்' என்னும் சொல்லுக்குக் குறிப்பிட்ட, தனிப்பட்ட பொருள் எதையும் தராமல், தங்களது அதிகாரிகளில் ஒருவராகக் குறிப்பிடுகின்றன. பெரும்பாலான முறைகளில், இச்சொல் ''பையன்கள்'' மற்றும் ''சமையல்காரர்'' ஆகியோருடன் இணைத்துக் கூறப்படுவது, ஏவலாளிகள் மற்றும் கீழான ஊழியர்கள் ஆகியோரைக் குறிப்பிடுகிறது.

திருச்சபையின் திருத்தொண்டர் பணியானது ஐயத்திற்கிடமின்றி, திருச்சபையின் பொதுவாழ்வில் ஏற்பட்ட குறிப்பிட்ட தேவைகளுக்காகவே தோன்றியது. ''பணிவிடை பெற அன்று, பணிவிடை புரியவே வந்தேன்'' *(மாற் 10:45)* என்று கூறிய கிறிஸ்துவே இதன் தூண்டுதலாக அமைந்தார். தொண்டு மற்றும் பரிமாறுதல், குறிப்பாக மேசையில் பரிமாறுதல் என்னும் எண்ணம், கிறிஸ்து மற்றும் அவருக்குப் பின்னர் அவரது சீடர்களின் பணி ஆகியவற்றைப் பற்றிய போதனையிலேயே அமைந்துள்ளது *(மத் 25:44; லூக் 12:37; யோவா 12:26,* மற்றும் குறிப்பாக *மத் 20:26-28; 23:11; மாற் 9:35; 10:43; லூக் 22:26-27).* இத்தகைய முறையில், திருத்தொண்டர் பணியே திருச்சபையின் அனைத்துப் பணிகளுக்கும் அடிப்படையாகும்.

## திருநிலைப்படுத்துதல் (CONSECRATE)

புனித பதவிக்காக ஒருவரை *(யாத் 29:33; லேவி 16:32)* அல்லது புனித காரியங்களுக்காக ஒரு பொருளை *(2 நாள் 31:6;* எசே

*43:26)* அர்ப்பணித்தல், ஒதுக்கி வைத்தல், பிரித்துவைத்தல். பெரும்பாலும் இச்சொல் இறைவழிபாட்டோடு தொடர்புடையது. இதனால் ஆளோ பொருளோ புனிதத்தை பெறுகின்றனர். இதைக் குறிக்கப் பல எபிரேயச் சொற்கள் பயன்பட்டுள்ளன. காண்க: புனிதப்படுத்துதல்.

### திருப்பணிப்பெண் (DEACONESS)

இச்சொல் உரோ *16:1*-இல் ''தியாக்கோனோஸ்'' என்னும் சொல்லை மொழிபெயர்க்கப்பயன்படுகிறது; பவுல் பெயிபாவைக் கெங்கிரேயாவில் இருக்கும் திருச்சபைக்குத் திருப்பணி புரிபவளாகக் குறிப்பிடுகிறார். புதிய ஏற்பாட்டில் எப்பகுதியும், இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட பணியினைக் குறிப்பிடவில்லை. ஆனால் இக்குறிப்பின் மூலம், இத்தகைய பணி ஏற்படுத்தப்பட்டிருந்ததாக பொதுவாய் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இப்பகுதியில், இச்சொல்லானது ஒரு குறிப்பிட்ட பொருளையோ, பணி என்பதன் பொதுவான பொருளையோ குறிப்பிடுவதாக உறுதியாகத் தீர்மானிக்க முடியாது. இப்பிரச்சனை பிலி *1:1*-இல் குறிப்பிடப்பட்டுள்ள திருப்பணியாளர் பிரச்சனையைப் போன்றதே. திருப்பணியாளரின் குணநலன்களைப் பற்றி விவரிக்கும்போது *1* திமொ *3:11*-இல் பெண்களைப்பற்றிக் குறிப்பிடுவது பெரிய குழப்பத்தை உண்டு பண்ணுகிறது. இப்பகுதி, திருப்பணியாளரின் மனைவிகளைப்பற்றி மட்டுமே குறிப்பிட்டிருக்கலாம்; ஆனால்,. சில விளக்கவுரையாளர்கள் இதனைப் பெண் திருப்பணியாளருக்கான ஆதாரமாய் எடுத்துக் கொள்கின்றனர். *1* திமொ *5:9-10* குறிப்பிடுவதுபோலப் பெண் திருப்பணியாளருக்கும் விதவைகளுக்கும் உள்ள உறவும் குழப்பமாகவே உள்ளது.

*2*-ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் இத்தகைய பதவி இருந்ததாக 112-இல் பித்தினியாவின் ஆளுநனாக இருந்த இளைய 'பிளினி' என்பவர் பேரரசர் திரேசனுக்குக் கிறிஸ்தவர்களைப்பற்றி ஆராய்ந்து அளித்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. திருப்பணியாளர்கள் எனக் கூறப்பட்ட இரு கிறிஸ்தவ அடிமைகளைத் தான் துன்பத்திற்கு உட்படுத்தியதாக, பிளினி கூறுகின்றார். *2, 3*-ஆம் நூற்றாண்டுக் கிறிஸ்தவ இலக்கியங்களில், பெண் திருப்பணியாளர்களைப் பற்றிய குறிப்புகள் அரிதாகவே உள்ளன. *3*-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்த ''திதாஸ் காலியா'' என்னும் சீரிய நூல் அவர்களது பணியைப்பற்றிச் சுருக்கமாக விவரிக்கின்றது: அ) பெண்களின் திருமுழுக்கிலும், முக்கியமாக எண்ணெய் பூசுவதிலும் உதவி செய்தல், ஆ) விசுவசிக்கும் பெண்களுக்குள்ள பிற சமயத்தைச் சேர்ந்தவர்களின் வீடுகளுக்குச் செல்வது, நோயாளிகளைச் சந்திப்பது, தேவையான செயல்களில் அவர்களுக்குப் பணிபுரிவது, மற்றும் நோயினின்று குணமாகிறவர்களைக் குளிப்பாட்டுவது.

இதைப்பற்றிய குறிப்புகள் *4, 5*-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திருச்சபையின் கட்டளைகள் மற்றும் சங்கத்தீர்மானங்களிலிருந்து கிடைக்கின்றன. இப்பதவி, உரோமைத் திருச்சபையில் இருந்ததாகத் தெரியவில்லை.

### திருப்பயணம் (PILGRIMAGE)

I. பெரும்பாலான சமயங்களில் வழக்கிலிருந்ததாகும் திருப்பயணங்கள். இது விவிலியத் தொகுப்பு ஏற்படுமுன்பே மிகவும் பரவி இருந்ததாகும். திருப்பயணம் என்றால் என்ன? விசுவாசிகளின் செல்கையாகும். இது ஓரிடத்தை அணுகிச் செல்வதாகும். இந்த இடங்கள் இறைவெளிப்பாட்டாலோ ஒரு சமயப் பெரியவரின் செயலாலோ புனிதப்பட்டதாக இருக்கும். தங்களின் செபங்களைச் சமர்ப்பிக்கச் சாதகமான சூழ்நிலையிலும் இடங்களிலும் இதைச் செய்தனர். புனித இடத்திற்குப் போகுமுன் தூய்மை பெறுவது அவசியம். எனவே அதற்கும் தயாரிப்புகள் இருந்தன. பெரிய கூட்டத்தினில் இப்பயணம் முடிவாகிறது என்றாலும் ஒரு விசுவாசி குறிப்பிட்ட சமயக் குழுவைச் சார்ந்தவன் என்பதையும் சுட்டிக் காட்டும். எனவே வழிபாட்டுச் சூழலில் திருப்பயணம் என்பது கடவுளைத் தேடுவது, அவரைச் சந்திப்பது என்பதாகும்.

II. *பழைய ஏற்பாடு*

**1. பழங்காலப் புனித இடங்களுக்கு:** உப ஆகம மறுமலர்ச்சியாகப் புனித இடங்களை ஒன்றாகக் குறைக்க யோசுவா எடுத்த முயற்சிக்குமுன் இஸ்ராயேலில் பல இடங்கள் இருந்ததாகச் சான்றுகள் உள்ளன. இவைகள் புனித வரலாற்றோடு இணைந்தவை. இதில்தான் தங்கள் கடவுளைத் தேடி மக்கள் வந்தனர்.

குலமூதாதையர்களின் வரலாறு ஒரு உண்மையான திருப்பயணம் பற்றியே குறிக்கிறது (ஆதி 35:1-7). ஆபிரகாமுக்கு (12:6தொ செக்கேமிலும்; 18:1, மம்ரேயிலும்), ஈசாக்கிற்கு (26:24 பெயேர் செபாவிலும்) மற்றும் யாக்கோபிற்கு (28:12; 35:9 பெத்தேலிலும்; 32:31 பெனியேலிலும்) ஏற்பட்ட இறைக்காட்சிகளின் விவரிப்பில், கானானியர்களின் புனித இடங்களை இஸ்ராயேல் பின்பற்றியதைச் சட்ட முறையாக நூலாசிரியர்கள் ஆக்குகின்றனர். ஏனெனில் குல மூதாதைகளும் இவ்விடங்களைப் பயன்படுத்தியிருந்தனர். இவை தோற்ற முறையில் எப்படி இருந்தன என்றுகூட விளக்குகின்றனர். இவற்றின் பீடங்கள் (12:17 தொ; 13:4; 26:25; 33:20), தூண்கள் (28:18), புனித மரங்கள் (12:6; 18:1; 21:33)... பிற்காலத் திருப்பயணியர்களின் சடங்கு முறை நடந்த விதத்திற்கு அவர்கள் அடிப்படை அமைத்துத் தந்தனர். வெவ்வேறு தலைப்புகளில் யாவேயின் திருப்பெயரை அழைப்பது (12:8; 13:4; 21:33; 33:20), எண்ணெய் வார்த்தல் (28:18; 35:14). தூய்மைப்படுத்துதல் (35:2தொ), தசமபாக வரிகள் (14:20; 28:22).

வேறுபட்ட முக்கியத்துவமுடைய புனித இடங்களில் சமய சார்புள்ள பேரவைகளும், எனவே திருப்பயணங்களும் தொடர்ந்து நெடுங்காலம் 'நிகழ்ந்ததுபற்றி நமக்குச் சான்று உள்ளது. செக்கேம் (யோசு 24:25; நீதி 9:6; 1 அர 12:1-9), பெத்தேல் (1 சாமு 10:3 என்பது திருப்பயணிகள் இங்கே வந்தனர் என்று காட்டுகிறது; 1 அர 12:29 தொ; ஆமோ 5:5; 7:13), பெயேர்செபா (ஆமோ 5:5), ஒபிரா (நீதி 6:24),சோரா (13:19 தொ) ஆகியவை இவ்விடங்களில் சிலவாகும். இங்கே யாவேயின் தூதர்கள் தோன்றிய நினைவைக் கொண்டாடினர். பேழை வைக்கப்பட்டிருந்த ஒரு புனித இடம் சீலோவில் இருந்தது. இங்கு ஒவ்வொரு ஆண்டும் யாவேயின் பெயரால் ஒரு விழா கொண்டாடப்பட்டது (நீதி 21:19). எல்கானாவும் அவரது மனைவியரும் ''சென்றுவரும்'' திருவிழா இதுவாக ஒருவேளை இருக்கலாம் (1 சாமு 1:3). மிஸ்ப்பாவில் (1 சாமு 7:5 தொ), கில்காலில் (11:15), கிபயோனில் (1 அர 3:4), தாணில் (12:29) கூடிய பேரவை பற்றியும் தகவல் உண்டு. பேழையைத் தாவீது எருசலேமுக்குக் கொண்டு வந்ததிலிருந்தும் (2 சாமு 6) சாலமோன் ஆலயத்தை எழுப்பியதிலிருந்தும் (1 அர 5-8) எருசலேம் நோக்கிய திருப்பயணங்கள் அதிகம் முக்கியத்துவம் பெற்றன (12:27).

ஆண்டிற்கு மூன்று முறை ஆண்டவர் யாவேயின் திருமுன் ஆண்கள் யாவரும் செல்ல வேண்டும் என்று உடன்படிக்கை ஒழுங்குகள் (யாத் 34:18-23; யாத் 23:14.17) ஏற்படுத்திய கட்டளை நீண்ட காலமாய்ப் பழக்கத்தில் இருந்தது. விழாக்களின்போது வெவ்வேறு திருத்தலங்களில் இந்தக் கடமை அனுசரிக்கப்பட்டது.

**2. தனித்தன்மையுடைய புனிதஇடத்தை நோக்கி:** எசேக்கியாவால் தொடங்கிவைக்கப்பட்டு, - யோசியாவால் செயல்படுத்தப்பட்ட சீர்திருத்தம் தலத்தின் புனிதங்களை ஒழித்தது (2 அர 18:4.22; 2 நாள் 29-31). பாஸ்காக் கொண்டாட்டம் (2 அர 23; 2 நாள் 35), இரு திருவிழாக்களான வாரவிழா, கூடார விழா (உப 16:1-17) ஆகியவை எருசலேமில்தான் கொண்டாடப்படவேண்டும் என்று நிர்ணயித்தது. இவ்வாறு இறைமக்களை ஒன்றுகூட்டவும், தல சிலை வழிபாடுகளிலிருந்து காக்கவும் வழியேற்பட்டது. யோசுவா இறந்த வேளை இச்சீர்திருத்தம் ஒரு கேள்வியாக ஆன போதிலும், நாடுகடத்தப்பட்டுத் திரும்பியதிலிருந்து எருசலேமின் ஆலயம் மட்டும்தான் திருப்பயணத் தலமாக மாறியது. இங்குப் பாலஸ்தீன நாடு முழுவதி

விருந்தும் திருப்பயணிகள் வந்தனர், சித றிப்போய்ப் பரவிக் கிடந்தவர்களும் இங்கு ஒன்று கூடினர். ''ஏற்றச் சங்கீதங்கள்'' *(120-134)* பயணிகளின் செபங்களையும் மன நிலைகளையும் வருணிக்கின்றன: கடவுளின் திருத்தலத்தின் மேலுள்ள அவர்களின் பிடிப்பு, புனித நகரத்தின் மேலுள்ள அவர் கள் பற்று, அவர்களின் விசுவாசம், வழி பாடு, வழிபாட்டுப் பேரவை மூலம் ஏற் படும் ஆழ்ந்த இறைமக்களின் தோழமை, தோன்றும் மகிழ்ச்சி - போன்றவற்றைக் காண்கிறோம். இந்த அனுபவத்தின் மூலம் இஸ்ராயேல் குலத்தில் இறுதிக்கால நம் பிக்கை உண்டாவதையும் காண்கிறோம். திருப்பயணத்தின் வாயிலாய் மீட்பின் நாள் புலர்வது, புற இனத்தவரும் இறைமக்களும் ஒன்றுபடுவது *(எசா 2:2-5; 60;66:18-21; மீக் 7:12; செக் 14:16-19 தோபி 13:11)* ஆகிய வையே இறுதிக்கால நம்பிக்கையின் கூறுக ளாகும்.

III. ***புதிய ஏற்பாடு:*** புதிதாக எதுவும் சொல் வதாகத் தெரியவில்லை என்றே முதலில் தோன்றுகிறது. பன்னிரு வயதில் சட்டத்தின் படி தன் பெற்றோருடன் இயேசு எருசலே முக்குப் போகிறார் *(லூக் 2:41 தொ)*. தனது போதனைக் காலத்திலும் பற்பல விழாக்களுக் காகத் தொடர்ந்து அங்கே போகிறார் *(யோவா 2:13; 5:1; 7:14; 10:22தொ; 12:12)*. இயேசு சிலுவையில் அறையப்பட்டபின் இரு பத்தைந்து ஆண்டுகள் கழித்து ஐம்பதாம் நாள் திருப்பயணம் மேற்கொள்ள பவுல் முடிவெடுக்கிறார் *(அ.ப. 20:16; 24:11)*.

ஆலயத்தின் அழிவை இயேசு முன் னுரைக்கிறார் *(மாற் 13:2 இணை)*. இஸ்ராயேல் மறுப்பு திருச்சபைக்கும் யூத மதத்திற்கும் பிளவு ஏற்படுத்துகிறது. மேலும் இயேசு வின் உயிர்ப்பினால் அவருடைய மகிமை யான உடல் புதிய ஆலயமாக மாறுகிறது; இப்போதிருந்து அது விசுவாசிகளின் வழி பாட்டு மையமாகவும் ஆகிறது. இனிமேல் வேறெங்கிலுமில்லை *(யோவா 2:19-21; 4:21-23)*. இனிமேல் இறுதிக்கால உண்மை யான திருப்பயணம், இறைமக்களின் வாழ்க்கைதான் *(2 கொரி 5:6 தொ; எபி 13:14)*. ஆண்டவர் இயேசுவின் தலைமை யில் இத்திருப்பயணம் ஒரு புறப்பாடாகும்; விடுதலைப்பயணமாகும் *(அ.ப. 3:15; 5:31; எபி 2:10)*. சீயோன் மலை, வானக எருச லேம், வானத்தில் பெயர் பெற்றிருக்கப்பட் டுள்ள தலைப்பேறானவர்களின் திருக்கூட் டம் *(எபி 12:22தொ)*, ''கடவுளாகிய ஆண்ட வரும் செம்மறியும்'' ஆகிய ஆலயம் *(திரு வெளி 21:22-26)* ஆகிய ஆன்மீக உண்மைகள் இதனுடைய குறிக்கோளாக இருக்கும்.

திருச்சபை வரலாற்றோடு மிகவும் ஒன்றித் திருப்பதால், கிறிஸ்துவின் இவ்வுலக வாழ்க்கை யோடும், புனிதர்களின் வாழ்வில் அவ ரது வெளிப்பாட்டோடும் சேர்ந்த இடங்களுக் குத் திருப்பயணம் செய்வதை மறுப்ப தில்லை. கிறிஸ்து செயலாற்றிய இவ்விடங் களில் கூடும் இக்கூட்டங்களை, விசுவாசி களுக்கு விசுவாசத்திலும் செபத்திலும் அவர் களின் தோழமையைக் காட்ட ஒரு வாய்ப் பாகத் திருச்சபை கருதுகிறது. எல்லாவற்றிற் கும் மேலாக, கிறிஸ்துவின் தலைமையில் அவரை நோக்கிச் செய்யும் பயணத்தை விசு வாசிகளுக்கு நினைவூட்ட இந்த வாய்ப்பைத் திருச்சபை பயன்படுத்துகிறது.

**திருப்பாடல்கள், சங்கீதநூல்** *(PSALMS, BOOK OF)*

*1. முன்னுரை:* தொடக்க காலமுதல், இறைவனுடைய மக்களாகிய இஸ்ராயேல் பாடுவதில் சிறந்து விளங்கியதாகத் தெரி கிறது. மகிழ்ச்சியாக இருக்கும்போதும் *(யாத் 15:1-21)*, துன்ப வேளையிலும் *(2 சாமு 1:17-27)* பாடியிருக்கிறார்கள். பழைய ஏற் பாட்டின் பெரும் பாடல்களில் பல, மக்க ளிடையே ஆற்றல் பெற்ற சிறு குழுவினரால் பாடப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இந்த ஆன்மீகப் பாடல்களை இயற்றிய முன்னோடி யான ஆசிரியர்களுள் தாவீது மன்னன் சிறப்பிடம் வகிக்கிறார். இப்பாடல்கள் காலப்போக்கில், ஒரே நூலாகத் தொகுக்கப் பட்டு, நாம் கொண்டிருக்கும் சங்கீதநூல் அல்லது திருப்பாடல்கள் நூல் தோன்றியது. அதே சமயம் இத்தொகுப்பைச் சேராத வேறு

பல சங்கீதங்கள், விவிலியத்தின் வேறு பகுதிகளில் காணப்படுகின்றன என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும்.

*2. பெயர்:* விவிலியத்தில் மனவெழுச்சியை எடுத்துக்கூறும் 150 பாடல்களைக் கொண்ட தொகுப்பைச் சங்கீதநூல் என்றழைக்கிறோம். புதிய பொது மொழிபெயர்ப்பில் திருப்பாடல்கள் நூல் என்றழைக்கிறோம். இப்பெயரோ வேறு எந்தப் பெயருமோ இந்நூலை முழுவதும் விளக்கும் முறையில் அமையவில்லை: இத்தகைய பாடல்கள் ''நரம்பிசைக்கருவிகளுடன் பாடப்படும் பாடல்கள்'' என்று பொருள்படும் ''மிசுமோர்'' என்ற பெயரால் எபிரேய மொழியில் அழைக்கப்பட்டன. இப்பெயர் இத்தொகுப்பின் 57 பாடல்களுக்குத் தலைப்பாய் அமைந்துள்ளது. இச்சொல்லை எழுபது நூல் ''ப்சால்மோஸ்'' என்று கிரேக்கத்தில் மொழிபெயர்த்தது. இந்த 150 பாடல்கள் அடங்கிய தொகுப்பை எபிரேய விவிலியம் ''போற்றுரைப் பாடல்கள்'' அல்லது ''புகழ்ப் பாக்கள்'' என்று பொருள்படும் ''தெகில்லீம்'' என்ற பன்மைப் பெயரால் அழைத்தது. இப்பெயர் நூல் முழுவதற்கும் பொருந்தியதன்று. ஏனெனில், போற்றுரைகள், புகழுரைகளைத் தவிர, பிற இலக்கிய வகைப்பாடல்களும் இந்நூலில் உண்டு. செபம், மன்றாட்டு என்று பொருள்தரும் ''தொபில்போத்'' என்ற பெயரும் இந்நூலின் பெயராய் ஒரு காலத்தில் வழக்கில் இருந்துள்ளது. இப்பெயரும் இந்நூலை முழுவதும் விவரிக்கவில்லை. இந்நூலின் பொருளடக்கத்தை விவரிக்கும் முறையில் இந்நூலுக்கு ஒரு பெயர் அளிப்பது கடினமாகும். வசதியை முன்னிட்டு, தமிழில் இப்போது வழக்கிலுள்ள சங்கீதங்கள் என்ற பொதுப் பெயராலேயே இந்நூலை இக்கட்டுரையில் குறிப்பிடுவோம்.

***3. வாசகங்களும் எண்ணிக்கை முறையும்:*** கி.மு 12-3-ஆம் நூற்றாண்டுகளுக்கிடையில் பலகட்டங்களில், பல்வேறு சூழ்நிலைகளில் தோன்றிய பாடல்களின் கதம்பத் தொகுப்பாகும் இந்நூல். இதன் எபிரேய வாசகம் பல பாடல்களில் மிகவும் பழுதுபட்டுள்ளது, இதை நிவர்த்தி செய்ய நவீன மொழிபெயர்ப்பாளர்கள் பழங்காலத்து மொழி பெயர்ப்புகளையும் யூகத்தையும் பயன்படுத்த வேண்டியிருக்கிறது. இந்நூலில் எழுபது நூலின் கிரேக்க மொழிபெயர்ப்பும் பலவாறு பழுதுபட்டிருக்கிறது. ஆனால் பழங்கால மொழிபெயர்ப்புகளில் இது முக்கியமானதாகும். எபிரேய, கிரேக்க வாசகங்களுக்கிடையே பல இடங்களில் மலைப்புத் தரக்கூடிய வேறுபாடுகள் உண்டு. எழுபதுநூல் வாசகத்தைப் பின்பற்றி பல இலத்தீன் மொழிபெயர்ப்புகள் செய்யப்பட்டன. இவற்றில் ஒன்றைப் புனித எரோனிமு திருத்தி அமைத்துச் சங்கீதநூலுக்கு ''வுல்காத்தா'' வாசகத்தை அமைத்தார். மேற்கூறப்பட்ட இலத்தீன் மொழிபெயர்ப்புகள் இந்நூல் பற்றிய வாசகத் திறனாய்வுக்கு மட்டுமல்லாது, திருச்சபை ஆசிரியர்களிடையேயும் நமது வழிபாட்டிலும் முக்கியத்துவம் உடையன. புனித எரோனிமு, எபிரேயத்திலிருந்து நேரடியாக இலத்தீனில் இந்நூலை மொழிபெயர்த்தார். ஆனால் அது வுல்காத்தா வாசகத்தில் இடம் பெறவில்லை. ஆனால் அவர் காலத்திலிருந்து எபிரேய வாசகத்திற்கு ஒரு முக்கிய சாட்சியாக உள்ளது. காலப்போக்கில் பல இலத்தீன் மொழிபெயர்ப்புகள் எழுந்தன. இறுதியாக 1945-இல் 12-ஆம் பாப்பு பத்திநாதரின் அங்கீகாரத்தில் வத்திக்கான் புதிய மொழிபெயர்ப்பைச் செய்து பதிப்பித்தது.

இந்த வாசகம் சில ஆண்டுகளுக்குத் திருச்சபைக்கட்டளைச் செபத்தில் பயன்பட்டது. 23-ஆம் அருளப்பர் மீண்டும் வுல்காத்தா வாசகம் கட்டளைச் செபத்தில் பயன்பட வேண்டும் என்று கட்டளையிட்டார். 6-ஆம் பவுல் கட்டளையின்படி வுல்காத்தா வாசகம் திருந்திய பதிப்பாய்ப் பதிப்பிக்கப்பட்டு, கட்டளைச் செபத்தில் பயன்படுகிறது.

எபிரேய விவிலியம் சட்டம், இறைவாக்கினர்கள், நூல்கள் என்று முப்பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, மூன்றாவதான நூல்கள் என்ற

தொகுப்பில் முதலாவதாகச் சங்கீத நூல் அமைந்துள்ளது. எழுபது நூலிலும், வுல்காத்தா வாசகத்திலும் ''ஞான நூல்கள்'' அல்லது ''போதக நூல்கள்'' என்ற தொகுப்போடு இந்நூல் சேர்க்கப்பட்டு, அதில் இரண்டாவது நூலாக இடம் பெறுகிறது. இது அவ்வளவு பொருத்தமுடையது அன்று.

சங்கீதங்களை எண்ணுவதில் எபிரேய, கிரேக்கப் பாரம்பரியங்களிடையே வேறுபாடு உண்டு. இது, சில சங்கீதங்களின் ஒற்றுமை பற்றிய வேறுபட்டபழங்காலப் பாரம்பரியங்களின் விளைவாகும். எபிரேய முறையைப் பிரிவினைச் சகோதரர்களின் மொழிபெயர்ப்புகள் பின்பற்றுகின்றன. எழுபது நூல் முறையைக் கத்தோலிக்க மொழி பெயர்ப்புகள் பின்பற்றி வந்துள்ளன. நமது வழிபாட்டு வாசகங்களில் இம்முறையே பின்பற்றப்படுகிறது. சமீபகாலத்தில் கத்தோலிக்க மொழிபெயர்ப்புகள் இரண்டு முறைகளையும் குறிக்கும் வழக்கத்தைப் பின்பற்றுகின்றன.

இரண்டு முறைகளுக்குமிடையேயுள்ள வேறுபாட்டைப் பின்வரும் திட்டம் தெளிவாக்கும்.

| எபிரேய முறை | எழுபதுநூல், வுல்காத்தா முறை |
|---|---|
| *1—8* | *1—8* |
| *9+10* | *9* |
| *11—113* | *10—112* |
| *114+115* | *113* |
| *116* | *114+115* |
| *117-146* | *116—145* |
| *147* | *146+147* |
| *148—150* | *148—150* |

பொதுவாக 9-ஆம் சங்கீதத்திற்குப் பிறகு எபிரேய முறை எண், எழுபதுநூல் முறை எண்ணை விட ஒன்று அதிகமாக உள்ளது. இப்போது எபிரேய எண்ணிக்கை முறையையே பயன்படுத்துகின்றனர்.

***4. ஆசிரியர்(கள்):*** இந்தச் சங்கீத நூலுக்கு ஆசிரியர்(கள்) யார்? என்று உறுதியாகக் கூற முடியாது. எபிரேய வாசகத்தில் 116 சங்கீதங்களுக்கும் எழுபது நூல் வாசகத்தில் 125 சங்கீதங்களுக்கும் தலைப்புகள் உண்டு. பிறவற்றை ''அநாமதேயச் சங்கீதங்கள்'' என்று நகைச்சுவையாக அழைப்பதுண்டு. சங்கீதத் தலைப்புக்களில் தாவீது, கோராகு, மோசே, சாலமோன் போன்ற பெயர்கள் வருகின்றன. ஆசிரியர்களின் முழுப்பட்டியலையும் கொடுப்பது முடியாத காரியம். தனிச் சங்கீதங்களின் பொருளடக்கத்தைவைத்து அவற்றின் ஆசிரியரை அடையாளம் காட்டலாம் என்பதும் இயலுவதாகத் தெரியவில்லை. இப்போது தனிப்பட்ட சங்கீதங்களின் ஆசிரியரை அடையாளம் காட்ட முயல்வது ஆய்வாளர்களது கவனத்தைக் கவர்ந்துள்ளது.

இந்த ஆய்வில் இரு பிரச்சனைகள் உண்டு. தலைப்புகளில் வரும் பெயர்கள் தனிப்பட்ட சங்கீதங்களின் ஆசிரியரை அடையாளம் காட்டச் சிறிது உதவுகின்றன எனலாம். இப்பெயர்கள் இச்சங்கீதங்களுக்கு இவர்கள்தான் ஆசிரியர் என்று காட்டுகின்றனவா? அல்லது அவர்களோடு தொடர்புடைய மற்றொரு பொருளைச் சுட்டுகின்றனவா? இதற்குப் பதில் கூறுவதைப் பொறுத்து அடுத்த கேள்வி எழலாம். இத்தலைப்புகள் ஆசிரியரைக் குறிக்கின்றன என்றால், இப்பாரம்பரியம் நம்பத்தகுந்ததா? அல்லது இவை பிற்காலத்தில் சேர்க்கப்பட்டதால் ஐயப்பாடு உடையனவா?

இக்கேள்விகளுக்கு விடையளிக்க பெயர்களுடன் வரும் ''லாமெட்'' (lamed) என்னும் வேற்றுமை உருபால் ஏற்படும் பொருள் வேறுபாடுகளை அறிந்திருப்பது அவசியம். இதுபற்றி தலைப்புகள், - குறிப்புகள் என்ற தலைப்பின்கீழ் பிறகு பார்ப்போம். இதன்படி, ''லெதாவீத்'' என்பதற்குத் ''தாவீதால் இயற்றப்பட்டது'' என்ற பொருளைத் தவிர, தாவீதின் தொகுப்பைச் சேர்ந்தது; தாவீதுக்கு அர்ப்பணிக்கப்பட்டது; தாவீதின் வீட்டாருக்கு அதாவது தாவீது பாரம்பரிய அரசர்களுக்குரியது; தாவீதைப் பற்றியது என்பன போன்ற பல பொருள் கூறலாம். இந்த ''லெ'' வேற்றுமை உருபு அப்பெயர் கொண்டவர்தான் அந்தச் சங்கீதத்தை இயற்றினார் என்று உணர்த்த வேண்டியதில்லை. அப்படிப்

பொருள் கொடுக்கவுமில்லை. அதை மறுக்க வும் இல்லை.

இருப்பினும் தாவீது பெயரைத் தலைப் பாகக் கொண்ட சில சங்கீதங்களுக்காவது அவர் ஆசிரியராக இருக்க வேண்டும் என்று சிலர் கூறுவர். இதற்கு ஆதரவாக அராபிக் போன்ற மற்ற செமித்திய மொழிகளில் இதே மரபு வழக்கு பொதுவாகப் பயன்படுத்தப்பட்டுள் ளது என்பர். ஆனால் உகாரித்து வாசகங்க ளில் இந்த ''லெ'' உருபு பாடலைப் பற்றி யது, பாடல் தொகுப்பைச் சேர்ந்தது என்ற பொருளில் பயன்பட்டுள்ளது. ஆகையால் தாவீதுதான் இச்சில சங்கீதங்களுக்கும் ஆசிரி யர் என்று உறுதியாகக் கூறவும் முடியாது, மறுக்கவும் முடியாது.

இனி, தாவீதையும் சங்கீத நூலையும் தொடர்புபடுத்தும் பாரம்பரியங்களைப் பார்ப் போம். வரலாற்று, இறைவாக்கு நிகழ்ச்சி யுரைகளில், தாவீது சங்கீதங்களோடும் இசை யாசோடும் தொடர்புபடுத்தப்படுகிறார். முதலாம் சாமுவேல் நூலில் தாவீது, ''யாழிசை ஞன்'', அவருக்கு ''யாழ்மீட்டத்தெரியும்,'' ''தீய ஆவி சவுலைப் பிடிக்கும்போதெல் லாம் தாவீது யாழ் எடுத்து மீட்டுவான்''. *(1 சாமு 16:16-23)* என்ற குறிப்புக்கள் உள் ளன. இரண்டாம் சாமுவேல் நூலில், தாவீ தின் புலம்பல் பாடல் *(2 சாமு 1:17-27)*, இரு நன்றிப் பாடல்கள் *(2 சாமு 22; 1 நாள் 16:8-36)*, தாவீதின் இறுதி உயில் *(2 சாமு 23:3-7)* ஆகியவையும், தாவீது ''இஸ்ராயே லின் இனிமையான பாடகர்'' *(23:1)* என்ற குறிப்பும் இடம் பெறுகின்றன. அவரின் இசைக் கருவி செய்யும் ஆற்றல் ஆமோ *6:5*-இல் சுட்டிக் காட்டப்படுகிறது. அவர் பாடகர்களையும், இசையமைப்பாளர்களை யும் நியமித்து இறைவழிபாட்டில் அவர் களது அலுவலை நிர்ணயித்தார் என்றும் கூறப் படுகிறது *(1 நாள் 15:16-24; 16:7-35)*. பிற் காலத்தில் இசையும் வழிபாடும் தாவீதின் கட் டளைப்படி நடப்பதாகக் குறிப்பிடப்படு கின்றன *(எஸ் 3:10; நெகே 12:24)*. 2 சாமு 22-இல் வரும் நன்றிப்பாடல் ஏறத்தாழ முழுவதும் சங் 17-இல் அமைந்திருப்பதை நாம் கவ னிக்க வேண்டும்.

புதிய ஏற்பாட்டில், '' தாவீது சங்கீதங்களின் ஆசிரியர்'' என்று இயேசு சுட்டுகிறார் *(மத் 22:43-44; மாற் 12:35-36; லூக் 20:42-43)*. அப்போஸ்தலர் பாரம்பரியமும் இதே கருத் தைப் பிரதிபலிக்கிறது *(அ.ப. 1:16-20; 2:25-34; 4:25)*. பவுலும் தனது திருமுகங்களில் சங்கீதங்களின் ஆசிரியராகத் தாவீதைக் குறிக் கிறார் *(உரோ 4:6;11:9; எபி 4:7)*. இந்தப் புதிய ஏற்பாட்டுக் கூற்றுக்களைத் தாவீதுதான் சங்கீ தங்களுக்கு ஆசிரியர் என்று நிரூபிப்பதாக எடுத்துக் காட்ட முடியாது. ஏனெனில் அவை அக்காலப் பாரம்பரியத்தையே பிரதி பலிக்கின்றன. தொடக்கத்திலிருந்து யூத, கிறிஸ்தவப் பாரம்பரியங்கள் இந்நூலுக்குத் தாவீதுதான் ஆசிரியர் என்று கருதி வந்துள் ளன. மேலும் இந்நூலுக்குத் ''தாவீதின் சங்கீ தங்கள்'' என்ற பெயரையே வழங்கின.

ஆகவே ''லெ'' என்ற வேற்றுமை உருபு பெயர்களுடன் வரும்போது பல பொருள் கொடுக்கவல்லது. இதில் ஒன்று, அப்பெயர் கொண்டவர்தான் அச்சங்கீதத்தை இயற்றிய வர் என்று சுட்டலாம். யூத, கிறிஸ்தவப் பாரம்பரியங்கள், தாவீதுதான் சங்கீதங்க ளுக்கு ஆசிரியர் என்று கருதி வந்துள்ளன. இந்தக் கருத்தை ஆசிரியத்தன்மை பற்றிய நமது காலக் கருத்துப்படி எடுத்துக் கொள்ள முடியாது. ஐந்நூலை மோசேயும் ஞானநூல் களைச் சாலமோனும் எழுதியதாகப் பொது வாகக் கூறுவதுபோல், சங்கீதங்களைத் தாவீது எழுதினார் என்பது பொதுப் பாரம் பரியமாகும். இவற்றிலிருந்து சங்கீத நூலில் தாவீதோடு தொடர்புபடுத்தப்பட்டுள்ள சில அல்லது பல சங்கீதங்களுக்கு அவர் ஆசிரிய ராக இருந்திருக்கலாம் என்று கருதலாம்.

இதையே சங்கீத நூலில் வரும் மற்ற ஆட்களின் பெயர்களுக்கும் கூறலாம். அப் பெயர்களுடையவர்கள் பற்றிய விவிலியக் குறிப்புகளைப் பிறகு பார்ப்போம். பெரும் பாலான சங்கீதங்களின் ஆசிரியர்கள் ஆள், பெயர் அறியப்படாதவர்கள். இவர்களைப் பற்றி எதுவும் உறுதியாகக் கூறமுடியாது. பல சங்கீதங்களின் தோற்றம் இஸ்ராயேலின் வழிபாட்டுச் சூழ்நிலையில் காணப்பட

வேண்டும். அவற்றின் ஆசிரியர்களை ஆலய ஊழியர்களிடையே காண முயலவேண்டும். அவர்களது பெயர்கள் பிற்காலத்தவர்க்குக் கிடைக்கவில்லை. இவ்வாறு பல ஆசிரியர்களாலும் இசை வல்லுநர்களாலும் பல்வேறு காலங்களில் தோன்றிய பாடல்களின் தொகுப்பாகும் சங்கீதநூல். ஆசிரியர்களைப் பற்றிய துல்லியமான விவரங்கள் இல்லாமை, சங்கீதங்களைப் புரிந்து கொள்வதற்குத் தடையாக இருக்க வேண்டியதில்லை. சங்கீதங்கள் மனிதனுக்கும் இறைவனுக்குமிடையேயுள்ள உறவைப் பாடுகின்றன. இந்த உறவு காலத்துக்கு அப்பாற்பட்டது. எல்லாருக்கும் எல்லாக் காலங்களுக்கும் உரியது.

5. **காலம்:**சங்கீத நூலின் ஆசிரியர்களைப் பற்றிய ஆய்வு கடினமென்றால், அது தோன்றிய காலத்தைக் கணிப்பது அதைவிடக் கடினமானது. தாவீதின் வாழ்வோடு சங்கீதங்களைத் தொடர்புபடுத்தும் தலைப்புக்களும் குறிப்புக்களும் பல உள்ளன: *சங் 3;7; 18; 34; 51; 52; 54; 56; 57; 59; 60; 63; 142.* இவை சங்கீதங்களைத் தாவீதுக்குச் சாற்றிக் கூறிய பிற்காலத்தில் புகுத்தப்பட்டவை. ஆகவே இவற்றிற்கு வரலாற்று மதிப்பு இல்லை. இவை சங்கீதங்களின் காலத்தைக் கணிக்க எந்த உதவியும் தரக்கூடியவை அன்று. இவை சங்கீதங்களுக்கு வரலாற்று விளக்கம் அளிக்கும் முதல் முயற்சியாகும் எனக் கொள்ளலாம்.

சங்கீத நூலின் காலத்தைக் கணிப்பதில், ஆய்வாளர்களின் முன்கருத்துக்கள் அவர்களது ஆய்வுகளைப் பெரிதும் பாதித்துள்ளன. வெல்கவுசன் போன்றவர்கள் இந்நூலின் பெரும்பகுதி மக்கபேயர் காலத்தில் (கி.மு. 200-150) தோன்றியது என்பர். ஆனால் இரு ஏற்பாடுகளுக்கும் இடையிட்ட காலத்திய இலக்கியங்களின் ஆய்வும், குறிப்பாகக் கும்ரான் குகைகளில் கண்டெடுக்கப்பட்ட இலக்கிய ஏடுகளின் ஆய்வும் சங்கீதங்கள் வடிவத்திலும் நடையிலும் பொருளடக்கத்திலும் இக்காலத்தைச் சேர்ந்தவை அன்று என்று காட்டுகின்றன. ஆகவே இக்கருத்துக்கு இப்போது மதிப்பில்லை. வேறுசிலர், காலத்தை எளிதாக நிர்ணயிக்கக்கூடிய பிறநூல்களோடு, சங்கீதங்கள் கொண்டுள்ள இலக்கிய, இறையியல் தொடர்புகளை ஆராய்ந்து, சங்கீத நூலுக்குக் காலம் கணிக்க முயன்றுள்ளனர். இதிலும் பல சிக்கல்கள் உண்டு. ஏனெனில் சங்கீதங்கள் நெடுங்காலமாய் வளர்ச்சியுற்றவை; மாற்றி அமைக்கப்பட்டவை. தனிப்பட்டோர் பாடல்கள் குழுவினுடையதாகவும், தனிநபரின் மன்றாட்டுகள் பொதுவழிபாட்டுப் பாடல்களையும், புனித இடங்களுக்குரிய பாடல்கள் எருசலேம் ஆலயத்தில் பாடப்படுவதாகவும், அரச சங்கீதங்கள் மெசியாப் பாடல்களாகவும், வரலாற்றுப்பாடல்கள் இறுதிக்கால முன்னோக்குடையவையாகவும் மாற்றி அமைக்கப்பட்டுள்ளனவாகத் தெரிகின்றன. காலம் கடந்து போனவை மாற்றி அமைக்கப்பட்டு, இந்நூல் தொகுக்கப் பட்ட காலத்திற்குரியனவாகவும், வருங்கால முன்னோக்குடையவையாகவும் மாற்றப்பட்டுள்ளனவாகவும் தெரிகின்றன. இன்னும் சிலர் பழங்காலச் செமித்திய, கானானிய மொழிகளை ஆய்வு செய்து சங்கீதங்களின் மூலவடிவத்தைக் காணவும் காலத்தைக் கணிக்கவும் முயன்றுள்ளனர்.

பழைய ஏற்பாட்டின் கிரேக்க மொழிபெயர்ப்பாகிய எழுபது நூல் கி.மு. 250-ஐ ஒட்டியதாகும். இந்நூலின் எபிரேய கிரேக்க வாசகங்களிடையே பல வேறுபாடுகள் உள்ளன. இவை எபிரேய மூலத்தையும் செமித்திய மொழி மரபுகளையும் சரியான முறையில் கிரேக்க மொழி பெயர்ப்பாளர்கள் அறியாததால் ஏற்பட்டனவாகத் தெரிகின்றன. இவ்விதம் புரியாத நிலையை உண்டாக்க இரண்டு வாசகங்களுக்குமிடையே நீண்ட காலம் இடையிட்டிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

ஆய்வாளர்களின் கருத்துக்களையெல்லாம் கவனத்தில் கொண்டு இந்நூல் தோன்றிய காலக்கணிப்பைப் பின் வருமாறு சுருக்கமாகக் கூறலாம். சங்கீத நூலின் பல பாடல்கள் பாபிலோன் அடிமைத் தனத்துக்கு (கி.மு. 587) முற்பட்டவை. இவற்றில் சில தாவீது அரசன் காலத்தில் (கி.மு. 1000-960)

தோன்றியிருக்க வேண்டும். அவர்தான் அவற்றை இயற்றினார் என்று கருதப்படுமளவுக்கு அவரோடு நெருங்கிய தொடர்புடையனவாய் இருந்திருக்க வேண்டும். அல்போரிஸ் என்பவர் சங் 29 கானானியப் பாடலின் மாற்று அமைப்பாகும் என்றும், இதுதான் முழுச் சங்கீத நூலிலும் காலத்தால் முந்தியது என்றும் கருதுகிறார். நூலின் பல சங்கீதங்கள், குறிப்பாக அரச சங்கீதங்கள் அரசாட்சிக் காலத்தில் தோன்றியவையாகும். ஆனால் அவற்றின் பொருளடக்கம் தெளிவில்லாத பொதுத் தன்மையுடையது. ஆகவே இவற்றின் காலத்தைப் பரந்த அளவில்தான் சுட்டிக் காட்ட முடியும். யாவேயின் அரச மாண்புப் பாடல்கள் முந்தைய சங்கீதங்களையும் இரண்டாம் எசாயாவையும் எதிரொலிக்கின்றன. ஆகவே இவை நாடு கடத்தப்பட்ட காலத்தில் தோன்றியிருக்க வேண்டும். இது போலவே, எருசலேம் அழிவையும், நாடு கடத்தலையும் பற்றிய சங் 137-உம், நாடுகடத்தலிலிருந்து திரும்பியது பற்றிய சங் 126-உம் இக்காலத்தைச் சேர்ந்தனவாகும். அதன்பின் வந்த காலம், சங்கீத வளர்ச்சியில் செழிப்பான வசந்த காலமாகத் தோன்றுகிறது. இக்காலத்தில் திரும்ப அமைக்கப்பட்ட ஆலயத்தில் வழிபாடு புத்தெழுச்சி கொண்டு விளங்கியது. ஆலயப் பாடகர்களின் நிலை உயர்த்தப்பட்டு,அவர்கள் லேவியர்களோடு ஒன்றாக்கப்பட்டனர். இக்காலத்தில் பல சங்கீதங்கள் தோன்றியதாகத்தெரிகிறது. இவ்வாறு இஸ்ராயேலின் தொடக்க காலத்திலேயே தோன்றி, தாவீது மன்னன் காலத்தில் புத்துயிர் பெற்ற இந்தச் சங்கீதஇயக்கம் வெகுகாலத்திற்கு, ஏறக்குறைய 700 ஆண்டுகளுக்கு நீடித்தது. இது எப்போது முடிவுற்றது என்று உறுதியாகக் கூற முடியாது.

''சங்கீத நூல், நாடு கடத்தப்பட்ட போதும் அதற்குப் பின்னும் இயற்றப்பட்ட பாடல்களோடு, காலத்தால் முந்திய பழைய, மிகப் பழைய பாடல்களையும் கொண்டுள்ளது என்று பொதுப்படையாகக் கூறுவதோடு நாம் நிறைவடைய வேண்டும்'' என்று சங்கீத நூலின் காலக்கணிப்புப் பற்றி எயிஸ்ஃபெல்ட் என்பவர் கூறுவதை நாம் மனதில் கொள்ள வேண்டும். இஸ்ராயேல் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டது அதன் வரலாற்றை இரு பகுதிகளாகப் பிரிக்கும் ஒரு வரைகோட்டு நிகழ்ச்சியாகும். இதை வைத்து ஆய்வாளர்கள் சங்கீதங்களைப் பிரிப்பர். அதன்படி சங்*7; 11; 19; 20; 28; 29; 41; 42; 43; 46; 49; 51; 67; 77; 98; 100; 107; 143* ஆகியவை, நாடு கடத்தலுக்குமுன் தோன்றியவையாகும். சங். *1; 8; 18; 22; 24; 30; 31; 32; 33; 36; 45; 47; 65; 73; 74; 76; 78; 84; 85; 89; 95; 96; 97; 99; 101; 102; 105; 108; 110; 114; 115; 117; 118; 121; 122; 124; 125; 127; 131; 134; 135; 142; 144; 145; 148; 149; 150* ஆகியவை நாடு கடத்தப்பட்ட போதும் அதற்குப் பின்னும் தோன்றியவையாகும்; இதில் ஆய்வாளர்களிடையே கருத்தொற்றுமை உள்ளது.ஆனால் சங். *2; 4; 16; 50; 59; 71; 75; 79; 81; 82; 88; 92; 109* ஆகியவற்றை ஆய்வாளர்கள் தங்கள் முன் கருத்துகளுக்கேற்ப, நாடு கடத்தலுக்கு முன்னோ, பின்னோ தோன்றியது என்று கூறுவர்.

**6. தலைப்புகளும் குறிப்புகளும்:** இப்பகுதி, எபிரேய சங்கீத நூலுக்கும் சில மொழிபெயர்ப்புகளுக்கும் தேவையானதாகும். பல மொழி பெயர்ப்புகளில் இந்தத் தலைப்புகளும் குறிப்புகளும் மொழிபெயர்க்கப்படுவதில்லை.

எபிரேயத்தில் 116 சங்கீதங்களுக்கும் எழுபது நூலில் 125 சங்கீதங்களுக்கும் தலைப்புகள் உள்ளன. பல இடங்களில் இத்தலைப்புகள் சங்கீதங்களோடு ஒன்றிணைந்த பகுதியாகத் தெரியவில்லை. இவை பிற்காலப் பதிப்பாசிரியரால் சேர்க்கப்பட்டவையாக இருக்கலாம். இவை தனிப்பட்ட சங்கீதங்களின் மூலப்பொருளையும், சூழ்நிலையையும் அறிய உதவுவதைவிட, சங்கீதநூலில் அந்தத் தனிச் சங்கீதங்களின் பாகம் என்ன என்பதைப் புரிந்துகொள்ள ஓரளவு உதவுகின்றன. தற்சமயம் சங்கீதநூல் ஆய்வில், இத்தலைப்புகள் அவ்வளவு முக்கியத்துவம் பெறுவதில்லை. மோவின்கெல் போன்றவர்கள், இவை ''மிட்ராசிக்'' அதாவது

''விளக்கக்கதை'' தன்மையுடையன என்று ஒதுக்குவர். ஆயினும், இவை சங்கீதங் களைப் பற்றிய பிற்கால ஆய்வின் முதல் முயற்சிகளை எடுத்துக் காட்டுகின்றன.

சங்கீத நூலுக்குப் புறம்பேயுள்ள விவிலி யப் பாடல்களுக்கும் தலைப்புகள் உண்டு. சான்று : தாவீதின் நன்றிக்கீதம் (2 சாமு 22:1); எசேக்கியாவின் நன்றிக்கீதம் (எசா 38:9); வரலாற்றுத் தலைப்பு கொண்ட அபக்கூக் கின் கீதம் (அப 3:1.19). இசைக் குறிப் புடைய கீதங்களும் உண்டு. இவை, இக்கீதங் கள் இயற்றப்பட்டபோது இத்தலைப்புகள் சேர்க்கப்பட்டு, பின் முழுத் தொகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்று சுட்டுகின் றன. அதுபோலவே சங்கீதங்களின் தலைப்பு களும், இயற்றப்பட்ட காலங்களிலிருந்தே வழக்கில் இருந்திருக்க வேண்டும். இப்படிப் பட்ட தலைப்புகளைப் புதிய ஏற்பாட்டிலும் காணலாம் (மத் 12:35; அ.ப. 2:25.35). இத்தலைப்புகள் இறை ஏவுதல் பெற்றவை என்று இப்போது ஏற்றுக் கொள்ளப்படுவ தில்லை.

இத்தலைப்புகள் கிறிஸ்துவத்திற்கு முன்பே, யூதப்பாரம்பரியத்தால் புகுத்தப் பட்டு வழக்கில் இருந்திருக்க வேண்டும். தொடக்க மொழிபெயர்ப்புகளில் இத் தலைப்புகள் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கின் றன. ஆனால் மொழிபெயர்ப்பாளர்கள் இத் தலைப்புகளில் பலவற்றைப் புரிந்து கொண்ட தாகத் தெரியவில்லை. கி.மு. 250-ஐ ஒட் டிய கிரேக்க மொழி பெயர்ப்பாகிய எழுபது நூல் இவற்றைப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. ஆகவே இத்தலைப்புகள் இம்மொழி பெயர்ப்புக் காலத்திற்கும் முந்திய தாக இருக்க வேண்டும் என்று ஆய்வாளர் சிலர் கருதுவர். இப்படியும் இருக்கலாம்; அல்லது மொழிபெயர்ப்பாளர்கள் யூதவழி பாடு, இசை ஆகியவற்றைப் போதிய அளவு அறிந்திருக்கவில்லையென்றோ, இத்தலைப் புகளுக்குச் சமமான கிரேக்கச் சொற்கள் கிடைக்கவில்லையென்றோ காரணம் கூற லாம்.

பொதுவாக இத்தலைப்புகளும் குறிப்புக ளும் ஐந்து வகை விவரங்களைத் தருகின் றன. அ) பல சங்கீதங்கள் ஒரு தனி நப ரோடோ குழுவோடோ தொடர்பு கொண் டுள்ளன. தாவீது என்ற பெயர், எபிரேய நூலில் 73 தடவையும் கிரேக்க மொழி பெயர்ப்பில் 82 தடவையும் வருகிறது. சங்கீத நூலில் வரும் மற்றப் பெயர்கள், சாலமோன் (72; 127), மோசே (90), ஆசாபு (12 தடவை) எசுராகியரான ஏமான் (83), ஏத்தான் (89) கோராகின் புதல்வர்கள் (11 தடவை), இசை இயக்குநர் (50-க்கும் மேல்).

இப்பெயர்களுக்கு முன் ''லாமெட்'' (Lamed) என்ற வேற்றுமை உருபு சேர்க்கப்படு கிறது. சங்கீதங்களின் ஆசிரியத்தன்மையைப் புரிந்துகொள்ள இந்த வேற்றுமை உருபால் ஏற்படும் பொருள் வேறுபாடுகளை அறிந் திருப்பது அவசியம். இந்த உருபு பலபொருள் கொடுக்கக் கூடியது. சூழ்நிலையை வைத் துத்தான் உறுதியாகப் பொருள் கூற முடியும். ஆனால் சங்கீதங்களின் சூழ்நிலைகள் பொது வாகத் தெளிவில்லாதவை. ஆகவே அவற்றை மட்டும் வைத்து, ஐயப்பாடுகளை நீக்க முடியாது. ஏனெனில் இத்தலைப்புகள் பெரும்பாலும் குறிப்புகளாக அல்லது பதிப் பாசிரியரின் ஒருவகை மரபுச் சொற்களாக உள்ளன. ஆகவே சங்கீதங்களைப் பொறுத்த மட்டும் இலக்கணம், சூழ்நிலை ஆகியவற் றுள் ஐயப்பாடுகள் உள்ளன.

இந்த ''லாமெட்'' உருபு தமிழில் ஐ, ஆல், கு, இன், அது போன்ற வேற்றுமை உருபு களைக் குறிக்க வல்லது. இவ்வாறு, ''லெ தாவீது'' (Le David) என்ற சொல் தாவீதால், தாவீதுக்கு, தாவீதின், தாவீதினது, தாவீதி னுடைய, தாவீதைப் பற்றி என்று பலவாறு பொருள் கொடுக்கவல்லது. இவ்வாறு பிற பெயர்களுக்கும் கூறலாம். ஆகையால் இந்த உருபு எப்போதும் பாடலை இயற்றிய ஆசிரி யரைக் குறிக்கிறது என்று கூறுவது கடினம். இதுபற்றி ஏற்கனவே கூறியுள்ளோம்.

ஆ. சில தலைப்புகளும் குறிப்புகளும் வர லாற்றுக் குறிப்புகளைக் கொடுக்கின்றன.

இவை பெரும்பாலும் தாவீதோடு தொடர் புடையன. இவற்றின் கருத்து தாவீதுக்குப் பொருந்தியதாக உள்ளது *(3; 7; 18; 34; 51; 52; 56; 57; 59; 60; 63; 142)*.

இ. இசை, இசைக்கருவிகள் பற்றிய குறிப்பு கள்: 'Lamme nasseah' என்ற எபிரேயச் சொல் தாவீதின் பெயருக்குப் பின்னும் இசைக் குறிப்புக்கு முன்னும் அடிக்கடி தலைப்புகளில் வருகிறது *(55 தடவை)*. இச்சொல்லுக்குப் பொருள் என்ன? உறுதியாக ஒன்றும் கூற முடியாது. கிரேக்க, வுல்காத்தா பதிப்புகள் இதை ''முடிவுரை'' என்று மொழி பெயர்க் கின்றன. பிற மொழிபெயர்ப்புகளில் இது பெரும்பாலும் ''பாடகர்குழு இயக்குநர்'' என்று மொழிபெயர்க்கப்படுகிறது. ஒரு வேளை, இது மற்றொரு மூலத் தொகுப் பைக் குறிக்கலாம்.

சில குறிப்புகள் இசைக்கருவியைக் குறிக் கின்றன. இவ்வாறு, ''நெகினோத்'' (Neghinoth=String) என்ற சொல் நரம்பிசைக் கருவியைக் குறிக்கலாம் *(4; 6; 54; 55; 67; 76)*. காத்தி னுடைய யாழ் (harp) (8; 81; 84 ), ''நெகிலோத்'' (nehiloth=wind) என்பன குழ லிசைக் கருவிகளைக் குறிக்கலாம் *(5)*.

சில தலைப்புகள் மக்களிடையே பரவ லாக இருந்த மெட்டுகளைக் குறிப்பதாகத் தெரிகின்றன. இது, நாம் சில சமயம் ''காற்றி னிலே வரும் கீதம் என்ற மெட்டில்'' என்று குறிப்பது போன்றது. இவ்வாறு ''அழிக் காதே'' (Do not destroy 57; 58; 59; 75), ''காலைப் பெண்மான்'' (The hind of the dawn 22), ''தொலைவிலுள்ள தேவதாரு மரத்தில் வாழும் மௌன மாடப்புறா'' (The dove of on far-off terelinth 56), ''மகனுக்காக உயிரைக் கொடு'' (Muthu-labben 9), ''காத்து நகர்ப் பண்'' (The Gittith, 81; 84), ''லீலிமலர்கள்'' (Lilies, 45; 69), ''சான்று பகர் லீலி மலர்'' (The lilly of the Testimony=shushan eduth 60) போன்ற தலைப்புகள் சமூக வாழ்வில் பயன்பட்ட மெட்டுகளைக் குறிக்கும் பெயர்களாக இருக்கலாம்.

ஈ. 1) சில தலைப்புகள் பாடல் வகையை விவரிப்பதாகத் தோன்றுகின்றன. Sir (=Song, பாடல்). இசையோடு பாடப்பட்டது. ஒரு வேளை சடங்குப் பொருளை உணர்த்தலாம். வழிபாட்டில் பயன்பட்டிருக்கலாம் *(30)*.

Mizmor (=இசைத்துக்கொண்டு; 57 தடவை). இதை எழுபதுநூல் ப்சால்மோஸ் என்று மொழிபெயர்க்கிறது. நரம்பிசைக் கருவிகளுடன் பாடப்படுவது.

Maskil (=*அறப்பாடல்? 13 தடவை*). போத கப் பாடலைக் குறிக்கலாம். ஆனால் போத கம் இல்லாத சங்கீதங்களிலும் காணப்படு கிறது. கலைப்பண்போடு இயற்றப்பட்ட பாடலைக் குறிக்கலாம்.

Siggayon (=*புலம்பல்? 7)* புலம்பல் பாட லைக் குறிக்கலாம்.

Tephilla *(செபம், மன்றாட்டு; 5 தடவை; 17; 86; 90; 102)*. செபத்தையோ மன்றாட் டையோ குறிக்கலாம்.

Tehillah (போற்றுரை, திருப்பாடல்; *145)*. புகழ் அல்லது துதிப் பாடலைக் குறிக்க லாம். இச்சொல்லின் எபிரேயப் பன்மை, ஆண்பால் சொல் (Tehillim) சங்கீதநூல் முழுவ தையும் குறிக்க எபிரேயத்தில் பயன்படு கிறது.

Miktan *(= கழுவாய்ப்பாடல்? 6 தடவை)*. பொருள் தெரியவில்லை. பரிகாரத் தபசுப் பாடல் அல்லது இரகசிய மன்றாட்டு என்று பொருள்கூற சிலர் முயன்றுள்ளனர் *(சங் 56; 57; 58; 59; 60; 74)*.

*2) சில வழிபாட்டுக் குறிப்புக்கள் காணப் படுகின்றன. சான்று: ஆலய அர்ப்பணம் (30), ஓய்வுநாள் (92), நினைவுகூர்தல் (38; 70; 100; இவை ஆலயத்தில் நடந்த குறிப் பிட்ட வழிபாட்டுச் சடங்குகளைக் குறிக்க லாம்).* இவை பிற்காலத்தில் சேர்க்கப் பட்டவையாகத் தெரிகின்றன.

*உ)* இவைதவிர, பல புதிரான சொற்கள் வருகின்றன. அவற்றில் ஒன்று Sela என்பதா கும். இச்சொல் தலைப்பில் வரவில்லை. சங்கீதங்களின் இடையிலும் முடிவிலும் வரு

கிறது. சில சங்கீதங்களில் ஒன்று முதல் நான்கு தடவை கூட வருகிறது. இது 39 சங்கீதங்களில் 71 தடவை வருகிறது. இதன் பொருள் என்ன என்று தெரியவில்லை. ஒருவேளை, வழிபாட்டுக் குறிப்பாகவோ இசைக் குறிப்பாகவோ இருக்கலாம். இதை எழுபது நூல் ''சிறிது நிறுத்து'' என்று மொழி பெயர்க்கிறது. வுல்காத்தா போன்ற பதிப்புகள் இதைவிட்டு விடுகின்றன. எரோனிமு, இது ''என்றென்றும் ஆமென்'' என்று பொருள் படுவதாகக் கருதினார். இதற்குப் பிற்கால யூத நூல்கள் ஆதரவு தருகின்றன. சில மொழிபெயர்ப்புகள் Sela என்ற சொல்லை அப்படியே பயன்படுத்துகின்றன. சொல்லிலக்கணப்படி, இச்சொல் உயர்த்துதலைக் குறிப்பதாகத் தெரிகிறது. தொனியை உயர்த்துதல், கைகளை உயர்த்துதல், உள்ளத்தை உயர்த்துதல் என்று பலவாறு பொருள் கூறப்பட்டுள்ளது. எதுவும் உறுதியான ஆதாரம் கொண்டதன்று.

மேலும், Mahalat *(= நோயின் துயரில்? 53;88)*, Alamoth (= *இளமகளிர், 46)*, Mut Labhen (9) போன்ற பல புதிரான தலைப்புகள் சங்கிதங்களில் காணப்படுகின்றன. இவை, ஒருவேளை மெட்டுகளைக் குறிக்கலாம்.

*ஊ)* மூல எபிரேய நூலுக்கும், அதன் மொழிபெயர்ப்புகளுக்குமிடையே, இத் தலைப்புகளிலும் குறிப்புகளிலும் காணப்படும் வேறுபாடுகள், இவைபற்றிய பாரம்பரியம் உறுதியானதல்ல என்று காட்டுகின்றன. இவை இறை ஏவுதல் பெற்றவையா? இல்லை என்பதே இக்கால அறிஞரது முடிவு. இவை சங்கீதங்களை இயற்றிய ஆசிரியர்களது வேலைப்பாடன்று. பிற்காலப் பதிப்பாசிரியர்கள் இவற்றைச் சேர்த்திருக்கலாம். 1910-ஆம் ஆண்டு பாப்புவின் விவிலியக் குழுவின் அறிக்கை இவை மூலத்தொகுப்பைச் சேர்ந்தவை என்று வலியுறுத்தவில்லை. இவை பாரம்பரியத்தைச் சேர்ந்தவை என்ற அளவில் மதிப்புடையவை.

**7. சங்கீத நூலும் பிறஇனப் பாதிப்பும்:** கடந்த ஒரு நூற்றாண்டாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள எமோரிய, அக்காதிய, உகாரித்து, எகிப்து ஆகிய மேற்காசிய நாட்டுப் பழங்கால இலக்கியங்கள், சங்கீதங்களின் வாழ்க்கைச் சூழ்நிலை, இலக்கிய வடிவம், யாப்பு அளவு, சொற்றொகுதி ஆகியவற்றைப் புரிந்து கொள்ள மிகுந்த ஒளி அளிக்கின்றன. இலக்கிய வடிவங்களில் மெசபொத்தாமியாவிற்கும் இஸ்ராயேலுக்கும் இணைவுத் தன்மை உள்ளது. நான்காம் அமென் ஒட்டாப் சூரியனைப் பாடிய பாடலுக்கும், சங் 104க்குமிடையேயுள்ள ஒற்றுமை வெகுகாலமாக அறியப்பட்ட தொன்றாகும். சங்கீதநூல் எகிப்திய மன்றாட்டுக்களோடு கொண்டிருக்கும் ஒற்றுமையும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. பழங்கால உகாரித்து கதைகளுக்கும் சங்கீதங்களுக்கும் உள்ள உறவு இப்போது தெரியவந்துள்ளது. கானானியர் இலக்கியம் வழியாக, உகாரித்து இலக்கியம் சங்கீதங்களைப் பாதித்திருப்பதாகத் தெரிகிறது. இதற்கு சங் 29; 69 தெளிவான சான்றுகளாகக் கருதப்படுகின்றன. அதேபோது இரு இலக்கியங்களுக்குமிடையேயுள்ள வேறுபாடுகளையும் மறந்துவிடக்கூடாது. உகாரித்து ஏடுகளோடு சங்கீதநூல், பாடல் அமைப்பிலும் சொற்றொகுதியிலும் அதிக ஒற்றுமை கொண்டுள்ளது. ஆனால் உகாரித்தில் சங்கீதங்கள் இல்லை.

பழைய ஏற்பாட்டுச் சங்கீதம், மேற்காசியாவுக்குப் பொதுவான பரந்த சமய வழிபாட்டு இலக்கிய அமைப்பைக் கொண்டுள்ளது. மெசபொத்தாமியா, இஸ்ராயேல் புலம் பல்களுக்கிடையே பொதுவான அடிப்படை அமைப்புகளுள்ளன. அவை, அ) தெய்வத்தை அழைத்தல், ஆ) பலவகைத் தீமைகள் பற்றிய முறையீடு செய்தல், இ) விடுதலை பெற மன்றாடுதல், பாவத்திற்கும் துன்பத்திற்கும் உறவு இருக்கும் அளவுக்கு, மன்னிப்பு வேண்டுதல், ஈ) பலி ஒப்புக்கொடுப்பதாக நேர்ச்சி செய்தல் ஆகியவையாகும். சொற்றொகுதியில் ஒற்றுமை, சேயோல், விலக்குகள், திரும்பிய முகம், பெயர்கள் பட்டியல் முறையில் வருதல், மீண்டும் மீண்டும் ஒரே விதமாய்க் கூறுதல் போன்ற பண்புகளை அக்காதிய மன்றாட்டுகளில் கண்டுள்ளனர்

ஆய்வாளர்கள். இறைவனோடு நெருங்கிய உறவுகொள்ளும் தன்மை பாபிலோனிய மன்றாட்டுக்களில் இல்லை. மனிதர்கள் தேவர்களின் அடிமைகளாவர். பாபிலோனிய படைப்புக்கதை கூறுவதுபோல், தேவர்களுக்கு அடிமை வேலை செய்ய மனிதர்கள் கட்டாயப்படுத்தப்பட்டனர்.

இலக்கிய ஒப்பியலிலுள்ள எல்லாப் பிரச்சனைகளைப் போல, சங்கீதங்கள் பிற இன இலக்கியங்களால் பாதிக்கப்படும் பிரச்சனை வெறும் ஒற்றுமையால் தடம் பிறழக் கூடாது. ஒரு சொல் எப்போதும் ஒரே பொருளைக் கொண்டிருக்க வேண்டியதில்லை. ஏனெனில் அது பயன்படும் குறிப்பிட்ட பண்பாட்டாலும் சமயச் சூழ்நிலையாலும் பாதிக்கப்படுகிறது. பொதுச் சொற்றொகுதியிலும் சிந்தனைப் போக்கிலும் இணைவுத் தன்மை இருப்பதால், இஸ்ராயேல் பிற மேற்காசியச் சமயங்களுக்கிடையேயுள்ள வேறுபாடுகளை மறந்துவிடக்கூடாது. ஒற்றுமைத் தோற்றத்தால், இஸ்ராயேல், பிறஇன மொழிகளிலிருந்து இலக்கியப் பண்புகளை அப்படியே எடுத்துக் கையாண்டது என்று கூற வேண்டியதில்லை. இதைவிட, தனது அண்டை மக்களுக்குப் பொதுவான இலக்கியத்தில் இஸ்ராயேலும் பங்கு கொண்டது என்று கூறுவதே சரியாகும். அப்போதும், இஸ்ராயேல் தனது ஆற்றலுக்கும் சமயத்திற்கும் ஒத்தவற்றையே ஏற்றுக்கொண்டது. இலக்கிய ஒற்றுமை இருந்தாலும், சங்கீதங்களில் இஸ்ராயேலின் தனித்தன்மையுடைய விசுவாசம் தெளிவாக வெளிப்படுகிறது.

*8. சங்கீதங்கள் தொகுக்கப்பட்ட வரலாறு:* நமது வழிபாடுகளில் பல பாடல்களைப் பயன்படுத்துகிறோம். இப்பாடல்கள் அடங்கிய நூல்கள் உண்டு. இவை, பெரும்பாலும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்ட பாடல்களை மட்டும் கொண்டிருப்பதில்லை. இவை பலரால் இயற்றப்பட்டவை; சிலவற்றிற்கு நீண்டவரலாறும் இருக்கலாம்; பல்வேறுபட்ட பின்னணிகளையுடையனவாக இருக்கும். காலப்போக்கில் இவை மாற்றமடைந்திருக்கலாம். ஒரு காலக் கட்டத்தில், ஒருபதிப்பாசிரியர் இவற்றைத் தொகுத்து ஒரே நூலாக வெளியிட்டிருக்கலாம். சங்கீத நூலுக்கும் இத்தகைய வரலாறு உள்ளது எனலாம். இந்நூல் பலரால், வேறுபட்ட காலங்களிலும் சூழ்நிலைகளிலும் பல்வேறு நோக்கங்களோடும் இயற்றப்பட்ட பாடல்களைக் கொண்டுள்ளது. காலப்போக்கில், இப்பாடல்கள் ஒரே நூலாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலின் வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்தின் சுவட்டையும் அறிவது முடியாத காரியமாகும். ஆயினும் சங்கீதங்கள் இயற்றப்பட்டதற்கும், அவை இறுதித் தொகுப்பாக்கப்பட்டதற்கும் இடையில் நடந்த சமய, இலக்கிய வேலைப்பாடுகளின் குறிகள் காணப்படுகின்றன. இவற்றைக் கண்டறிய முயல்வது, சங்கீதங்களின் பொருளைப் புரிந்து கொள்ள, பெரும் உதவியாக இருக்கும்.

சங்கீத நூல் தோன்றிய வரலாற்றில் நான்கு கட்டங்களைக் காண முயலலாம். அ) தனிப்பட்ட சங்கீதங்கள் தோன்றுகின்றன. ஆ) சில சங்கீதங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு, சிறு சிறு தொகுப்புகள் உருவெடுக்கின்றன. இ) சிறு தொகுப்புகள் பெரியவையாக வடிவெடுக்கின்றன. ஈ) இவற்றைத் தொகுத்தும், வேறு சில தனிப்பாடல்களைச் சேர்த்தும், இறுதிப் பதிப்பாசிரியர், நாம் கொண்டிருக்கும் அமைப்பில், சங்கீத நூலுக்கு வடிவம் அளிக்கிறார்.

சங்கீத நூலின் தோற்றத்தில் பல தொகுப்புகள் இருந்தன என்பதற்கு நூலில் காணப்படும் இரட்டிப்பு வாசகங்கள் சான்றாக உள்ளன: *சங் 14=சங் 53; சங் 40:13-17=சங் 70; சங் 57:7-11+60:5-12=சங் 108; சங் 18=2* சாமு *22.* இச்சான்றுகள், தொடக்கத்தில் சில சங்கீதங்கள் தனித் தொகுப்பாய் இருந்திருக்கலாம் என்றும், சிறு தொகுப்புகள் பெரும் தொகுப்புகளாக இணைக்கப்பட்டபோது, சில இரட்டிப்பு வாசகங்கள் தவிர்க்க முடியாதாயின என்றும் காட்டுகின்றன.

சில சங்கீதங்களில் காணப்படும் தலைப்புகள், அச்சங்கீதங்கள் தோன்றிய விதம்பற்றி

எதையும் உறுதியாகக் கூறவில்லையென்றாலும், அவை தொகுக்கப்பட்ட விதத்தைச் சுட்டிக் காட்டுகின்றன. இத்தலைப்புகள், சில சங்கீதங்களை ஆட்கள் சிலரோடு தொடர்பு படுத்துகின்றன அல்லது இலக்கிய வகைகளைச் சுட்டிக் காட்டுகின்றன. இவை, சங்கீத நூல் இறுதி வடிவம் எடுப்பதற்கு முன்பே, சில தொடக்கத் தொகுப்புகள் இருந்திருக்க வேண்டும் என்று சுட்டுகின்றன.

இவ்வாறு சில சங்கீதங்களின் தலைப்புகள், தனிப்பட்ட ஆசிரியர்களின் பெயரால் சில சங்கீதங்கள் ஏற்கெனவே தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் எனச் சுட்டுகின்றன. இவ்வாறு, தாவீதின் பெயரால் மூன்று தொகுப்புகள் உள்ளன. சங் *3-41; 51-70 138-144*. இவை தாவீதின் எல்லாச் சங்கீதங்களையும் கொண்டிருக்கின்றன என்றோ அவருடைய சங்கீதங்களை மட்டுமே கொண்டிருக்கின்றன என்றோ காட்டவில்லை. ஏனெனில் சங் *33;67* இத்தொகுப்புகளைச் சேர்ந்ததாகத் தெரியவில்லை. இவற்றைச் சேராத, சங் *107-109* போன்ற சங்கீதங்கள் கொண்ட சிறு தொகுப்புகள் இருந்திருக்கலாம். மற்றவை இத்தொகுப்புகளைச் சேர்ந்தவையாயினும், இப்போது தனித்து நிற்கின்றன. இறையியல், வழிபாட்டுக் காரணங்களுக்காக, இவற்றைப் பதிப்பாசிரியர் வேறொரு இடத்திற்கு மாற்றியிருக்கலாம். இத்தொகுப்புகள் காலத்தால் முந்தியவையாய் இருந்து காலப்போக்கில் தாவீது இயற்றியதாகக் கருதப்பட்டிருக்க வேண்டும். இவை அரசாட்சியின் தொடக்க காலத்திலேயே தொகுக்கப்பட்டிருக்க வேண்டும். தாவீது இயற்றியதாக எபிரேய வாசகத்தில் *73* சங்கீதங்களும், எழுபதுநூல் வாசகத்தில் *84* சங்கீதங்களும் உள்ளன.

ஆசாபு என்பவர் லேவியர் குலத்தைச் சேர்ந்த ஓர் இசையாளர். தாவீது காலத்தில் வழிபாட்டு இசையில் தலைமை வகித்தவர் *(1 நாள் 15:17-19; 16:4-5)*. அவரது வழித்தோன்றல்கள் இந்த இசைப்பாரம்பரியத்தைத் தொடர்ந்து காத்ததாகத் தெரிகிறது *(எஸ் 3:10)*. இவர் இயற்றியதாக *12* சங்கீதங்கள் *(சங் 50; 73-83)* உள்ளன. இவற்றோடு சங் *50* பின்பு சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

கோராகின் புதல்வர்கள் ஆலயவழிபாட்டு இசையில் ஈடுபாடுள்ள லேவியர்கள் *(1 நாள் 6:22)*. இவர்கள், சங் *42-48; 84-87;* ஆகிய இரு தொகுப்புகளுக்குக் காரணமானவர்களாய்த் தோன்றுகின்றனர். இவற்றிலும் சங் *43;86* இத்தொகுப்புகளைச் சேர்ந்ததாகத் தெரியவில்லை. மேலும் ஏத்தான் என்பவர் சங் *89*-ஐயும் எதுத்தூன் என்பவர் சங் *39; 62:77* ஆகியவற்றையும், மோசே சங் *90*-ஐயும், சாலமோன் சங் *72; 127*-ஐயும் இயற்றியதாகத் தெரிகிறது. இவர்களில் சிலர் ஆலயப்பாடல் குழுவைச் சேர்ந்தவர்களாக இருந்திருக்கலாம்.

மற்றச் சங்கீதங்கள் பொருள் அடிப்படையில் தொகுக்கப்பட்டதாகத் தெரிகிறது. சான்றாக, *1.* ஏற்றப்பாடல்கள். சங் *120-134*. இவற்றைத் ''திருப்பயணிகளின் பாடல்'' என்றும் அழைப்பதுண்டு. இவை இஸ்ராயேலின் பெரும் விழாக்களின்போதோ அவற்றிற்கு முந்தியோ, குறிப்பாகக் கூடாரவிழாவின் போது பயன்பட்டிருக்கலாம். *2.* ''போற்றுரை'' என்று பொருள்படும் ''ஹல்லேல்'' சங்கீதங்கள் என்ற, சங் *113-118; 145-150* இரு தொகுப்புகள் உள்ளன. முன்னது ''எகிப்திய ஹல்லேல்'' என்றழைக்கப்படும்; இது பாஸ்கு விழாவோடு தொடர்புடையது. பின்னது பொது வழிபாட்டில் பயன்பட்டது. *3.* மேலும் சங். *104-106; 111-117; 145-150* ஆகியவை அல்லேலூயா சங்கீதங்கள் என்றழைக்கப்படும். *4.* மேலும், எபிரேய வாசகத்தில் *39* சங்கீதங்களும், எழுபது நூல் வாசகத்தில் *19* சங்கீதங்களும் . தலைப்பில்லாமல் உள்ளன. இவற்றை ராபிகள் ''அநாதைச் சங்கீதங்கள்'' என்று அழைத்தனர். சில சங்கீதங்கள் தொடக்ககாலச் சிறுதொகுப்புகளைச் சேர்ந்தவையா அல்லது இறுதிப் பதிப்பாசிரியரால் வெறுமனே ஒன்று சேர்க்கப்பட்டவையா என்று கூறுவது கடினம்.

சங்கீத நூல் வளர்ச்சியில் அடுத்த கட்டத்தை நிர்ணயிப்பது மிகவும் கடினமாகும். சில சிறு தொகுப்புகள் ஒன்று சேர்க்கப்பட்டுப் பெரிய தொகுப்பாக அமைந்திருக்கலாம். இக்கட்டத்தைச் சேர்ந்த ஒரே ஒரு உதவியான சான்று உள்ளது. அது இறைவனது பெயர்களைப் பயன்படுத்தும் விதமாகும். சங் 1-41-இல் இறைவனது சொந்தப் பெயராகிய யாவே அடிக்கடியும் (272 தடவை) அவரைக் குறிக்கும் எலோகிம் என்ற பொதுப்பெயர் சில இடங்களில் மட்டும் (15 தடவை) பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்கு மாறாக சங் 41-82-இல் யாவே என்ற பெயர் 43 தடவையும் எலோகிம் என்ற பெயர் 200 தடவையும் வருகின்றன. மீதிப்பகுதியாகிய சங் 84-150-இல் யாவே என்ற பெயர் அடிக்கடியும், எலோகிம் என்ற பெயர் சிலதடவையுமே வருகின்றன. இந்த விவரம், எலோகிம் என்ற பெயர் அதிகம் பயன்படுத்தப்படும் ''எலோகிம் சங்கீத நூல்'' (சங் 41-82) இருந்திருக்க வேண்டும் என்ற கருத்துக்கு அடிப்படையாகிறது. இது சிறுதொகுப்புகள் சேர்ந்து பெரிய தொகுப்புகள் அமைக்கப்பட்ட மூன்றாவது கட்டத்தைச் சுட்டுவதாகத் தெரிகிறது. இது கருத்தியலானது ஆனாலும், உறுதியான அடிப்படை கொண்டது. இக்கட்டம் பற்றிய சான்றுகளிலிருந்து ''எலோகிம் சங்கீத நூலை''த் தொகுத்தவர், தன் சொந்த விருப்பதற்திற்காக அன்று, யாவே என்ற இறைவனுடைய சொந்தப் பெயர் ஓரளவு தயக்கத்தோடு பயன்பட்ட காலத்தில், இத் தொகுப்பை ஆலய வழிபாட்டுக்காகத் தொகுத்திருக்க வேண்டும். (யூதத்தின் பிற்கால வழிபாட்டில் யாவே என்ற பெயர் சாதாரணமாய்ப் பயன்படுத்தப்படவில்லை. பரிகார நாள் கொண்டாட்டத்தின் முக்கிய கட்டத்தில் பெரிய குருவால் மட்டும் பயன்படுத்தப்பட்டது). இக்காலத்தில், தொகுப்பாசிரியர், யாவே என்ற பெயரை எலோகிம் என்ற பெயராக வேண்டுமென்றே மாற்றி, சங்கீதங்களை ஆலய வழிபாட்டிற்கு ஏற்றதாகத் தொகுத்திருக்க வேண்டும். இவ்வாறு முந்தையச் சிறுதொகுப்புகளாகிய கோராகுவின் புதல்வர்களின் தொகுப்பு (42-49), ஆசாபுவின் தொகுப்பு (50; 73; 83), தாவீதின் தொகுப்பு (50-65; 68-72), பிற சங்கீதங்கள் (66;67) ஆகியவை ஒன்று சேர்க்கப்பட்டு எலோகிம் சங்கீத நூல் தோன்றியிருக்க வேண்டும்.

''எலோகிம் சங்கீத நூல்'' இருந்திருக்கக் கூடும் என்று அறிவுசார்ந்த முறையில் உறுதியாகக் கூற முடிந்தாலும், இது போன்ற பிற பெரிய தொகுப்புகள் தோன்றினவா இல்லையா என்று உறுதியாகக் கூற முடியாது. போதிய சான்றுகள் இன்மையால், அடுத்த கட்டமாக, சங்கீத நூல், நாம் கொண்டிருக்கும் வடிவில், தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கூறலாம். இறுதிப் பதிப்பாசிரியர்கள், பல தொகுப்புகளையும் ஒன்று சேர்த்து, தொடக்கத்தில் எந்தத் தொகுப்பையும் சேராத சில சங்கீதங்களையும் சேர்த்து, இஸ்ராயேலின் சங்கீத நூலை அமைத்திருக்க வேண்டும். சங் 1, ஒரு வேளை சங் 2-ஆவதும் நூல் முழுவதற்கும் முன்னுரையாக வைக்கப்பட்டன எனலாம். சங் 150, ஏற்கனவே கல்லேல் சங்கீதத் தொகுப்பைச் சேர்ந்ததாயினும், முழு நூலுக்கும் உகந்த முடிவுரையாக அமைந்தது.

சங்கீதங்களை வரிசைப்படுத்துவதில் எந்த ஒரு குறிப்பிட்ட திட்டமும் இருப்பதாய்த் தெரியவில்லை. சில சமயம், ஒரு பாடலை அடுத்து இன்னொரு பாடல் ஏன் அங்கு அமைந்துள்ளது என்பதற்குக் காரணம் காட்ட முடியும். இவ்வாறு சங் 3-ஐக் காலை மன்றாட்டு என்றும், சங். 4-ஐ மாலை மன்றாட்டு என்றும் அழைப்பது மரபு. இவ்வாறு அடுத்தடுத்து வைக்கப்பட்டிருப்பதில் ஒரு பொருத்தம் இருந்திருக்க வேண்டும். மூல தாவீதுதொகுப்பை அமைத்தவர் இதைச் செய்தாரா அல்லது சங்கீத நூல் பதிப்பாசிரியர் செய்தாரா என்று உறுதி செய்வது கடினம்.

சங்கீதங்களைத் தொகுக்கும் வேலை எப்போது முடிவு பெற்றது என்று துல்லியமாகக் கூற முடியாது. சங்கீதங்கள், இஸ்ராயேலின் அரசாட்சிக் காலம் தொடங்கி, நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய காலம் வரையிலுள்ள

காலத்தைச் சேர்ந்தவையாகும். ஒருவேளை, நாம் கொண்டிருக்கும் வடிவில் பெருமளவும் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் சங்கீத நூல் வடிவெடுத்திருக்க வேண்டும். இது பற்றி, சங்கீதங்கள் தோன்றிய காலம் என்ற தலைப் பின் கீழ் ஏற்கனவே கூறியுள்ளோம்.

**9. வழிபாட்டுச் சூழ்நிலை:** சங்கீதங்கள் பற்றிய வடிவத்திறன் ஆய்வின் பயன், பல சங்கீதங்களுக்கு வழிபாடு வாழ்க்கைப் பின்னணியாக அமைந்திருக்கிறது என்ற முடிவாகும். அதாவது பெரும்பாலான சங்கீதங்கள் இலக்கியமாகத் தோன்றவில்லை. வழிபாட்டுக்காக இயற்றப்பட்டவையாகும். இச்சங்கீதங்கள் வழிபாட்டில் பயன்பட்டது மட்டுமின்றி, வழிபாட்டைப் பின்னணியாகக் கொண்ட வாழ்க்கைச் சூழ்நிலையில் தோன்றின. இக்கருத்து சங்கீதங்கள் பற்றிய இக்கால விரிவுரைகளுக்கு அடிப்படையாகப் பயன்படுகிறது.

இந்த வழிபாட்டுச் சூழ்நிலை, இஸ்ராயேல், வரலாற்றின் தொடக்க வழிபாட்டிலிருந்து நாடு கடத்தலுக்குப்பின் இரண்டாம் எருசலேம் ஆலயத்தில் வளர்ச்சியுற்றிருந்த வழிபாடுவரை உள்ளடக்கும். புகழ்ப்பாக்கள், சமூகப் புலம்பல்கள், சீயோன் பற்றிய கீதங்கள் ஆகியவை சமூக வழிபாட்டைச் சேர்ந்தவையாகும். இவற்றிற்கு ஐயமற, வழிபாடு வாழ்க்கைச் சூழ்நிலையாக அமைகிறது. இவ்வாறு 55 சங்கீதங்கள் அமைந்துள்ளன. மற்றச் சங்கீதங்களைப் பற்றி இப்படிப்பட்ட கருத்தொற்றுமை ஆய்வாளர்களிடையே இல்லை. பொதுவாக, 40 சங்கீதங்கள் தனியாரின் புலம்பல்கள் என்று கருதப்படும். இதையும் மோவின்கெல் பத்தாகக் குறைக்கிறார். இவரது கருத்துப்படி, மற்ற 30 சமூகப் புலம்பல்களாகும்; ஆகவே வழிபாட்டைச் சேர்ந்தவையாகும். போதக அல்லது ஞான சங்கீதங்கள் (37; 49; 111; 112; 127; 129; 133), வரலாறு பற்றிய சில சங்கீதங்கள் (78; 105; 106) ஆகியவை வழிபாட்டைச் சேர்ந்தவை என்று பெரும்பாலான ஆய்வாளர்கள் ஏற்றுக்கொள்வர்.

சங்கீதங்களின் வழிபாட்டுப் பின்னணியை வலியுறுத்தும் ஆய்வாளர்கள் இவ்வழிபாட்டின் மையமாகச் சில விழாக்களைச் சுட்டிக் காட்டுகின்றனர். இவ்வாறு ''அரச சங்கீதங்கள்'' இறைவனால் நியமிக்கப்பட்ட அரசன் அபிடேகம் பெற்று அரியணை ஏறும் விழாவை மையமாகக் கொண்டுள்ளன என்று குன்கெல் கருதுகிறார். இந்த இறைவனால் நியமிக்கப்பட்ட அரசமைப்பு, யாவற்றின் மேலும் அரசனாக யாவே அரியணை ஏறும் கருத்துக்கு இட்டுச் சென்றது. அவ்விழா ஒரு புது வருட விழாவாகக் கொண்டாடப்பட்டது என்று மோவின்கெல் கருதுகிறார். இவரது கருத்துப்படி, சங்கீத நூலின் மூன்றில் ஒரு பகுதி இவ்வகையைச் சேர்ந்ததாகும். இப்பகுதியோடு சங் 47; 99 போன்ற பவனிப்பாடல்களையும் சேர்த்தார். இவரைப் பின்பற்றி, ட்ரிஜ்வெர்ஸ் (Drijvers) என்பவர், சில பவனிச் சங்கீதங்களுக்கு அப்பவனிகளின் முழு விவரிப்பையும் கொடுக்க முயன்றுள்ளார்.

கிராவுஸ் (Kraus) என்பவர் 2 சாமு 6;1 அரச 8, ஆகிய வாசகங்களை அடிப்படையாகக் கொண்டு, சங்கீதங்களின் வழிபாட்டுப் பின்னணி ''அரச சீயோன் விழா''வாகும் என்றார். இவ்விழா, அரியணை ஏறுவதன்று; இறைவன் தாவீது மரபையும், தமது உறைவிடமாக எருசலேமைத் தேர்ந்தெடுத்ததையும் நினைவு கூறுவதாகும். இதில் பெட்டகம் சிறப்பிடம் பெற்றது. பெட்டகத்தைப் பவனியாக எடுத்து வருவது இவ்விழாவின் முக்கிய சடங்காகும். நாடு கடத்தலுக்குப் பின், இக்கருத்து சிறிது மாற்றி அமைக்கப் பெற்றது. யாவேயின் அரசதன்மையும் உப இசையாசில் வலியுறுத்தப்படுதலின் விளைவாக, யாவே நுழைதல் என்ற கருத்தும் இவ்விழாவில் முக்கியம் பெற்றன. யாவே, தமது மக்களை வழிநடத்தி எருசலேமுக்குள் நுழைந்து அங்கு அரியணை ஏறுகிறார். இதுதான் அரியணை ஏற்றச் சங்கீதங்களுக்கு வாழ்க்கைச் சூழ் நிலையாகும்.

வெய்செர் (Weiser) என்பவர், சங்கீதங்களின் வழிபாட்டுச் சூழ்நிலை, உடன்

படிக்கை புதுப்பிக்கப்படும் ஆண்டு நிறைவு விழாவாகும் என்றார். இஸ்ராயேல் வரலாற்றிலும், சங்கீதங்களிலும் உடன்படிக்கை கொண்டிருக்கும் முக்கியத்துவம் இக்கருத்துக்கு அடிப்படையாயிற்று. இவரது கருத்துப்படி, யாத்திரை ஆகமம், உடன்படிக்கை நிகழ்ச்சியில் இறையாற்றல் தோற்றம் முக்கியத்துவம் பெறுவது போல், வழிபாட்டுச் சடங்கின் மையமும் இறையாற்றல் தோற்றமே ஆகும்; விசுவாசிக்கு இறைவன் தம்மை வெளிப்படுத்துதல் ஆகும். உடன்படிக்கையையும் அதன் விளைவையும் வழிபாட்டு முறையில் மீண்டும் செயலாக்கம் செய்வதில் சங்கீத ஆசிரியர் யாவேயை எதிர் கொள்கிறார். இக்கருத்து மற்றப் பல சங்கீதங்களை விளக்கவில்லை. ஆகவே சங்கீத நூல் முழுவதற்கும் திறவு கோலாக அமைய முடியாது.

இக்கருத்துக்கள் எல்லாம் கருதுகோள் தன்மையுடையன. இவ்விழாக்கள் இருந்தனவா என்பதற்கு இஸ்ராயேலின் வழிபாட்டுப் பாரம்பரியத்தில் போதிய சான்றுகள் இல்லை. பெரும்பாலான சங்கீதங்கள் வழிபாட்டில் தோன்றின. அவை வாழ்க்கைச் சூழ்நிலையைக் கொண்டவை. இவற்றைச் சேராத ''ஆன்மீக'' சங்கீதங்களும் உண்டு. இவை தனிநபர்களின் தேவைகளால் எழுந்தவையாகும். ஆனால் இவையும், நாடு கடத்தலுக்குப்பின், இரண்டாம் ஆலய வழிபாட்டுச் சடங்கின் ஒரு பகுதியாயின.

*10. **நூலின் திட்டம்:*** காலப்போக்கில், யூத கிறிஸ்தவப் பாரம்பரியங்கள் இந்நூலைப் பலவாறு பகுத்துள்ளன. முதலில் இறைவனது பெயரை அடிப்படையாகக் கொண்டு நூலைப் பகுத்துள்ளதாகத் தெரிகிறது. இவ்வாறு, இறைவனை யாவே என்ற பெயரால் பெரும்பாலும் குறிக்கும் சங் *3-41* என்ற பகுதி முதற்பாகமாகும். இறைவனை எலோகீம் என்ற பெயரால் குறிக்கும் சங் *42-83* என்ற பகுதி இரண்டாம் பாகமாகும். மூன்றாம் பாகமாகிய சங் *84-150* என்ற பகுதி யாவே என்ற பெயரையே இறைவனைக் குறிக்க அதிகம் பயன்படுத்துகிறது. இது பற்றி ஏற்கனவே கூறியுள்ளோம். ஆயினும் இரண்டு பெயர்களும் சில இடங்களில் காரண காரியம் இன்றிப் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதையும் நாம் மறக்கக் கூடாது. இவ்விதம் நூலைப் பிரிப்பது காலப்போக்கில் விவிலிய ஆய்வாளர்களால் கைவிடப்பட்டு விட்டது.

அடுத்து, பதிப்பாசிரியரே நூலில் ஒரு வகைத் திட்டத்தைக் கையாண்டுள்ளதாகத் தெரிகிறது. சில பாடல்களின் முடிவில் போற்றுரை வசனங்கள் உள்ளன. இவற்றைச் சிறப்பாக *41:13; 72:18-19; 89:52; 105:48; 150:6*-இல் காணலாம். ஒருவேளை சங் *150* நூல் முழுவதற்கும் உரிய போற்றுரை முடிவாக அமைந்திருக்கலாம். இந்த உள்ளமைப்பைக் கருத்தில் கொண்டு பதிப்பாசிரியர் இந்நூலை *1-41; 42-72; 73-89; 90-106; 107-150* என ஐந்து பாகமாகப் பிரித்துள்ளதாகத் தெரிகிறது. பதிப்பாசிரியர்தான் இந்தப் போற்றுரை வசனங்களைப் புகுத்தினாரா அல்லது போற்றுரை வசனங்கள் இருந்ததால் அவர் நூலை ஐந்து பாகமாகப் பிரித்தாரா என்று உறுதியாகக் கூற முடியாது. பின்னது ஒருவேளை உண்மையாக இருக்கலாம். ஏனெனில் ஒவ்வொரு பாகமும் நிறைவுடையது எனக் கருதப்போதிய உட்சான்றுகள் இல்லை. இந்தப் போற்றுரை வசனங்கள் முதலில் அந்தந்தச் சங்கீதங்களுக்கு முடிவுரையாக அமைகின்றன. அவை இருந்ததின் அடிப்படையில் நூல் ஐந்து பாகமாகப் பிரிக்கப்பட்டிருந்தால் மோசேயின் ஐந்நூலுக்கும் சங்கீத நூலின் ஐந்து பாகங்களுக்கும் உள்ள ஒப்புமை, அவ்வாறே நிர்ணயிக்க பதிப்பாசிரியரைத் தூண்டியிருக்க வேண்டும். ஆயினும் இந்த ஒப்புமை எண்ணிக்கையோடு முடிந்து விடுகிறது. ஏனெனில் இரண்டு நூல்களுக்குமிடையே உறுதியான, உள்ளார்ந்த ஒப்புமையோ, இணையமைப்போ இருப்பதாகத் தெரியவில்லை. யூத ராபிகளும் திருச்சபைத்தந்தையரும் இந்தப் பாக முறையை விரும்பி ஏற்றதாகத் தெரிகிறது. கி.பி. 19-ஆம் நூற்றாண்டுவரை, இப்பகுப்பு முறையே விவிலிய ஆய்வு முறையில் பெரிதும் பயன்பட்டது. இம்முறையான பகுப்

பில், ஒரு பாகம் மற்றதிலிருந்து எவ்விதம் வேறுபடுகிறது என்று கூற முடியாது. எந்த உட்காரணத்திற்காக இவ்விதம் பிரிக்கப்படு கின்றன என்று காட்டுவது கடினம். இத்த கைய பிரிவுகள் செயற்கையாகப் புகுத்தப் படுவதாகத் தெரிகிறது. இம்முறையும் இப் போது ஆய்வாளர்களால் அதிகம் பயன் படுத்தப்படுவதில்லை.

மூன்றாவது முறை வடிவத் திறனாய்வு முறையிலிருந்து அண்மையில் தோன்றிய தாகும். இதைக் ஹெர்மான் குன்கெல் (Herman gunkel 1862-1932) விரிவான முறையில் விளக்கினார். இவர் சங்கீதங்களை இலக்கிய வடிவங்களுக்கேற்ப வகைப்படுத்தினார். இந்த முறையை இக்கால விவிலிய ஆய்வா ளர்கள் ஏதாவது ஒரு வடிவில் பின்பற்றுகின் றனர். இம்முறையை ஆய்வாளர்கள் சிலர் மேலும் நயப்படுத்தினர். இவர்களது கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, சங்கீதங்களை வகைப்படுத்த மூன்று ஒப்பளவு களை எடுத்துக் கூறலாம். அவை:

1. **இலக்கிய வடிவு:** ஒத்த இலக்கிய நடை யையும் அமைப்பையும் கொண்ட சங்கீதங் களை ஒரு குழுவாகத் தொகுத்தல்.

2. **பொருளடக்கம்:** கருத்து, மனநிலை ஒற்றுமை.

3. **ஒத்த வரலாற்று, வாழ்க்கைச் சூழ்நிலை** - இச்சூழ்நிலை வழிபாடாகும். இதுபற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம்.

சங்கீதங்களை வகைப்படுத்துவதில் இம் மூன்றையும் ஒருசேரக் கருத்தில் கொள்ள வேண்டும். ஏதாவது ஒன்று மட்டும் போதாது. குறிப்பாக ஒத்த பொருளடக்கத்தை யுடைய சங்கீதங்களை வகைப்படுத்துவ தில் இந்த மூன்று ஒப்பளவுகளும் சேர்ந்து அமைய வேண்டும். சான்றாக, வரலாற்றுக் கருத்தை விளக்கும் சங்கீதங்கள் எல்லாம் ஒரே வகையைச் சேர்ந்தவையாக இருக்க வேண்டியதில்லை. ஆகவே விரிவுரையாளர் கள், சங்கீதங்களை வகைப்படுத்தும்போது, பொருளடக்கத்தை மட்டுமன்று, அவை தோன்றிய சூழ்நிலையையும் இலக்கிய வடி வையும் ஆய்வு செய்ய வேண்டும். உண்மை யில் பின்னவை இரண்டும் ஒரு சங்கீதத்தின் பொருளடக்கத்தையும் பொருளையும் உறுதி செய்யப் பெரிதும் பயன்படும்.

இந்த ஒப்பளவுகளின் அடிப்படையில் ஒவ்வொரு சங்கீதமும் ஒரு தனிப்பட்ட இலக்கிய அமைப்பையும் பொருளடக்கத் தையும் கொண்டுள்ளது. அதாவது சங்கீதங் கள் திட்டமிட்ட இலக்கிய வடிவங்களைக் கொண்டுள்ளன. இவை இறைவனைப் பார்த்துக் கொட்டும் வெறும் உணர்ச்சிப் பெருக்கல்ல. இதை ஒரே தன்மையுடைய மொழியமைப்பு தெளிவாக்கும். இவை ஏற் கெனவே இருந்த அமைப்புகளைப் பின்பற்று கின்றன. ஒவ்வொரு சங்கீதமும் ஒரு குறிப் பிட்ட வாழ்க்கைச் சூழ்நிலையிலிருந்து தோன்றுகின்றன. ஆனால் இந்தச் சூழ் நிலையை நிர்ணயிப்பது அவ்வளவு எளி தன்று. சில சங்கீதங்கள் பலவகையும் சேர்ந்த கலப்பு அமைப்பைக் கொண்டுள்ளன (சங் 89:102). சிலவற்றை வகைப்படுத்துவது மிகக் கடினம்.

இம்முறையைப் பின்பற்றி, குன்கெல் என் பவர் சங்கீதங்களை 10 வகையாகவும், டூர்னே (Tournay) என்பவர் 4 வகையாகவும், வோர்டென் (Worden) என்பவர் 2 வகையாக வும் வகைப்படுத்தினார்கள். இந்த ஆய்வு முறையைப் பின்பற்றி நாம் பின்வருமாறு சங்கீதங்களை வகைப்படுத்துவோம். அதே போல் ஒவ்வொரு வகையின் சங்கீத அமைப்பையும், இறையியல் பின்னணியை யும் சிறிதுபார்ப்போம்.

*11. சங்கீதங்களின் வகைகள்*

I. **இறைபுகழ் அல்லது போற்றுரைப் பாடல் கள்:** இறைவனையும் அவரைச் சார்ந்தவற்றை யும் புகழ்ந்துபாடுதல். இந்த வகையில் *8; 19; 29; 33; 46; 48; 76; 84; 87; 93; 96; 100; 103-104; 110; 113-114; 117; 121 135; 136; 145-150* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். (குறிப்பு: இவ்வாறு சங்கீதங்களின் எண்களைத் தரும் போது, அந்த வகையைச் சேர்ந்த முழுப்பட்

டியலையும் தரவில்லை. இவை தோராய மாகவும், எடுத்துக்காட்டாகவுமே தரப்படு கின்றன. ஏனெனில் இத்தகைய கருத்துக்கள் பிற வகைகளைச் சேர்ந்த சங்கீதங்களிலும் காணப்படுகின்றன).

*அமைப்பு:*

*1.* **முன்னுரை:** ஒவ்வொரு சங்கீதமும் இறைவனைப் போற்றிப் புகழ அழைப்ப தோடு தொடங்குகிறது.

2. **நடுப்பகுதி:** புகழ்வதற்குரிய கார ணத்தை எடுத்துக் கூறுகிறது. இக்காரணங் கள், அ) பொதுவாக இயற்கையில், குறிப் பாக, படைப்புச் செயலில் காணப்படும் இறைவனது வியப்பு மிக்க செயல்கள்; ஆ) மனித வரலாற்றில், குறிப்பாக, இறைவ னது மக்களின் மீட்பு வரலாற்றில் அவரது அருஞ்செயல்கள்; இ) இறைவனது அரச மாண்புகள்; ஈ) சீயோனின் சிறப்பு இயல்பு கள். இப்பகுதி ''ஏனெனில்...'' என்ற சொல் லோடு தொடங்கும். இப்பகுதியில் பழைய ஏற்பாட்டு இறையியலின் வளமான சுரங்கத் தைக் காணலாம். இறைவன் முன்னிலை யிலோ, படர்க்கையிலோ அழைக்கப்படுகி றார்.

*3.* **முடிவுரை:** முன்னுரையில் வந்த அழைப்பு மீண்டும் கூறப்படும் அல்லது ஒரு மன்றாட்டோ ஆசியுரையோ வாக்குறு தியோ கூறப்படும்.

சில சங்கீதங்கள் முழுவதுமே அழைப் பாக அமைந்து விடுவதுண்டு. நீதிமான்கள், இஸ்ராயேலர், புற இனத்தார், பாடும் குழு வினர் ஆகியோர் அழைக்கப்படுகின்றனர். இதில் அவர்கள் செய்ய வேண்டிய சைகை யும், பயன்படும் இசைக்கருவியும் குறிப் பிடப்படுகின்றன. வழிபாடே பொதுவான வாழ்க்கைச் சூழ்நிலையாகும். இதுவும் பாட லிலேயே குறிக்கப்படும் *(100:4)*. வழிபாட் டில் பங்கு பெறுவோரின் முக்கிய செயல் கள், இலயத்தோடு கைதட்டுதல் *(47:1)*; கைகளை மேலே உயர்த்துதல் *(28:2; 77:2; 134:2; 141:2)*; தலை வணங்குதல் *(5:7; 95:6)*; மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய்தல் *(98:4)*; வாழ்த்தொலி எழுப்புதல் ஆகியவையாகும் *(1 அர 1:39 தொ; 2 நாள் 23:11-13)*. முக்கிய வாழ்த்தொலி அல்லேலூயா *(யாவேயைப் போற்றுங்கள் 146-150)*, ஆமென் *(41:13; 89:52; 106:48)* என்று கூறிஆரவாரம் செய்த லாகும்.

மோவின்கெல் என்பவர் செய்ந்நன்றிப் பாடல்களையும் இறைபுகழ்ப்பாடல் களோடு சேர்ப்பார். இவர் எபிரேய மொழி யில் நன்றி என்ற சொல்லே இல்லை என்றும் கூறுவார். இவரது கருத்துப்படி, புகழ்ப் பாடல்கள் விசுவாச அறிக்கைகள், விவரிப்புப் போற்றுரைகள் என இருவகைப்படும். இவ ரது இக்கருத்துக்கள் அறிஞரால் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. புறஇன மக்களிடையேயும் இத்தகைய புகழ்ப்பாக் கள் கர்ணப்படுகின்றன. இவற்றில் ஆமொன், ரே, அக்கெனதோன், ஆதோன், ஒசைரிஸ் ஆகிய தேவர்களுக்குப் பாடப் படும் பாடல்கள் குறிப்பிடத்தக்கவையாகும். இவை அமைப்பிலும் பொருளடக்கத்திலும் சங்கீதங்களோடு ஒத்ததன்மையுடையன. பழைய ஏற்பாட்டில் சங்கீத நூலுக்குப் புறம்பே மிரியாமின் பாடல் *(யாத் 15)*, தெபோராவின் பாடல் *(நீதி 5)* முதலியவை இத்தகைய புகழ்ப்பாடல் வகையைச் சேர்ந்த வையே.

இந்தப் புகழ்ப்பாடல்களை மூன்றுவகை யாகப் பிரிக்கலாம்.

**அ) இறை புகழ்ப்பாடல்கள்:** இப்பிரிவில் *8; 19; 33; 100; 103; 104; 110; 113. 114; 117; 135 136; 146-150* ஆகிய சங்கீதங்கள் அடங் கும். இவை, பொதுவில் இறைவனது மகி மையை நினைந்து உள்ளமுருகிப் பாடப்படு பவை. இவ்வடிவம் இஸ்ராயேலின் வரலாற் றின் தொடக்கத்திலேயே தோன்றியது என்ப தற்கு மிரியாமின் பாடல் *(யாத் 15)*, தெபோ ராவின் பாடல் *(நீதி 5)* ஆகியவை சான்றாகத் திகழ்கின்றன.

இறைவனது மாண்பு அவரது செயல் களில் குறிப்பாக, அவரது மீட்பு இடையீட் டில் வெளிப்படுகிறது. கடந்த காலம்பற்றிய

நினைவு மக்களின் நடப்பு வாழ்வோடு ஒன்றிய வழிபாடாகிறது. இறைவனது கடந்த கால மீட்புச் செயல்களை வழிபாட்டில் நினைவாக்கம் செய்து மக்கள் அனுபவம் பெறுகின்றனர். முந்தைய தலைமுறை களுக்கு இறைவன் செய்த அருஞ்செயல்களை வழிபாட்டில் கொண்டாடி, தாங்களும் அவற்றின் பயனை அனுபவிப்பதாக உணர்ந் தனர். இம்முறையில்தான் வழிபாட்டில் யாத்திரை அனுபவத்தைக் கொண்டாடினர். வழிபாட்டில் தாங்கள் உடன்படிக்கையின் மக்கள் என்று உணர்ந்தனர். தங்கள் முன் னோரை மீட்ட இறைவன், இப்போது தங்களையும் மீட்கிறார் என்று உணர்ந்தனர்.

யாவேயை மீட்பின் இறைவனாகக் கண்ட இஸ்ராயேலர், அவரைப் படைப்பின் ஆண்டவ ராகவும் கண்டு, அவரைப் படைப்பில் போற்றினர். இந்தப் புகழ்ப்பாக்கள் மீட்பி லும், படைப்பிலும், இரண்டிலும் இறைவ னைப் போற்றுகின்றன.

திருச்சபை தன்வழிபாட்டில் இச்சங்கீதங் களைப் பயன்படுத்தும்போது, இஸ்ராயேல ரது நோக்கையே கொண்டுள்ளது. ஆனால் இறைவன் கிறிஸ்துவில் செய்தவற்றைப் போற்றுகின்றது. கிறிஸ்துவே இறைவன்; அவரே படைப்பவர் (யோவா *1:3*; கொலோ *1:16*); அவரே மீட்பவர்; நமது உடன் படிக்கை. நம்மைப் பாவ அடிமைத் தனத்தி லிருந்து மீட்ட கிறிஸ்துவைப் போற்று கிறோம்; அவரிடம் மன்றாடுகிறோம்.

**ஆ) யாவேயின் அரசமாண்பைப் போற் றும் பாடல்கள்:** இப்பிரிவில் *47; 93; 96 97; 98; 99*; ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவற் றோடு சங் *95; 100*-ஐயும் சேர்க்கலாம். யாவற் றின்மேலும் யாவே ஆட்சி செய்கிறார் என்று இவை கொண்டாடுகின்றன. இவை நடை யில் இறைவாக்குகளுக்கு ஒத்தவை.

இறைவன் இஸ்ராயேலின் அரசர் என்ற கருத்து, இஸ்ராயேலின் தொடக்க காலத்தி லிருந்தே காணப்படுகிறது (யாத் *15:18*; எண் *23:21*; உப *33:5*; நீதி *8:22*; *1* சாமு *8:7*; *12:12*). இறைவன் தம் மக்களிடையே உடன்படிக் கைப் பெட்டகத்தின் மேல், குறிப்பாகக் கெருபீம்களுக்கு இடையிலோ அவற்றின் மேலோ, அரியணையில் அமர்ந்திருக்கிறார் (*18:10; 80:1; 99:1*; தானி *3:55*). பெட்டகம் அவரது கால்மணை என்றழைக்கப்படுகிறது (*99:5; 132:7*).

இஸ்ராயேலர் யாவேயின் அரசமாண் பைத் தங்கள் வழிபாட்டில் கொண்டாடினர். முக்காலத்திலும் அவர்தான் தங்கள் அரசர் என்று வழிபாட்டில் பறைசாற்றினர். அவர் களது அரசர்கள் ஆண்ட காலத்திலும், அரசு இழந்த காலத்திலும் தங்களது உண்மையான அரசன் யாவேதான் என்று நம்பினர். அதே இறைவன் தங்களை இப்போது ஆளுகிறார் (*48:2.3.8; 97:10; 98:1; 99:1*) என்றும், கடந்த கால உடன்படிக்கையை இப்போதும் தங்க ளிடையே செயல்படுத்துகிறார் என்றும் நம் பினர். ஒவ்வொரு தலைமுறையினரும் அதில் சுதந்தர உணர்வோடு பங்கெடுக்கின் றனர் என்று கருதினர். இவ்வரசு எதிர் காலத் திலும் தொடர்ந்து இருக்குமென்று எதிர் பார்த்தனர். இவ்வரசு எதிர்காலத்தில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கும்.இறைவன் தம்மை உலகிற்கெல்லாம் அரசராக வெளிப் படுத்தும் நாளில் நிறைவு பெற்றுத் திகழும் (எசா *9:1-6; 11:1-9*). இந்த வழிபாட்டுப் பின்னணியில்தான் யாவேயின் அரசமாண் புச் சங்கீதங்களின் வாழ்க்கைச் சூழ்நிலை யைப் புரிந்து கொள்ள வேண்டும்.

இந்த வாழ்க்கைச் சூழ்நிலை, யாவே அரி யணை ஏறும் புதுவருடச் சடங்காகும் என் றும், இது பாபிலோனில் மர்டாக் தேவதை யின் அரியணை ஏற்பு விழாவை மாதிரி யாகக் கொண்டது என்றும் மோவின்கெல் கருதுகிறார். ஆனால் இப்படிப்பட்ட விழா இஸ்ராயேலின் வழிபாட்டில் இருந்ததாக நிரூபிக்க முடியாது. இக்கருத்து ஒரு கருதுகோளே. வேறு சிலர், எதிர்காலத்தில் யாவற்றின்மேலும் இறைவன் ஆட்சி செய்ய விருப்பதைக் கொண்டாடுகின்றன இந்தச் சங்கீதங்கள்; ஆகவே இவை இறுதிக் காலக் கூறுடையவை என்பர்.

இவர்கள் கருத்து எதுவாயினும், இச்சங்கீதங்கள் யாவேயை அரசராகக் கொண்டாடுகின்றன. தமது படைப்பாற்றலால் இறைவன் அரசராக விளங்குகிறார். இது இதிகாசப் போர் விவரிப்பால் எடுத்துக் காட்டப்படுகிறது. அவர் மூலக் குழப்பத்தை வெற்றி கொள்கிறார் (*93:1-4;95:5; 98:7-8*). யாத்திரை நிகழ்ச்சிகளால் இஸ்ராயேலின் அரசராகிறார். அவரே அவர்களை மீட்டவர் (*95:6-7; 99:4-8; 100:3*). யாவேயின் அரசாட்சி படைப்பில் வேரூன்றியிருப்பதால், அவர் இஸ்ராயேலுக்கு மட்டுமன்று, உலக முழுமைக்கும் அரசராவார். ஆகவே ''மற்ற எல்லாத் தேவர்களுக்கு மேலும்'' யாவேயைப் போற்ற எல்லா நாடுகளும் அழைக்கப்படுகின்றன. இவை நேரடியாக முடிவு காலத்தைப் பற்றிய சங்கீதங்கள் இல்லையென்றாலும், நாடுகள் மேல் யாவேயின் ஆட்சியும் தீர்ப்பும் நிறைவேறும் காலத்தை எதிர்பார்ப்பதால், வருங் காலத்தை நோக்கியுள்ளன எனலாம்.

இச்சங்கீதங்களைப் பயன்படுத்தும் புதிய உடன்படிக்கை மக்கள், யாவேயின் அரசு கிறிஸ்துவில் நிறைவு பெறுகிறது என்றும், கிறிஸ்துவே இறைமக்களின் அரசர் என்றும், அவர் அளிக்கும் மீட்புதான் மனிதரை முடிவில்லாத காலத்திற்கும் வாழ வைக்கும் என்றும் நம்புகின்றனர்.

**இ) சீயோனைப் போற்றும் பாடல்கள்:** இப்பகுதியில் *24; 46; 48; 76; 84; 87; 122* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். சீயோன் மலை யாவே உறையும் இடம் என்பதாலும், அவருடைய மக்களது ஒரே ஒரு திருயாத்திரைத் தலம் ஆனதாலும் போற்றிப் பாடப்படுகிறது. இச்சங்கீதங்கள் முடிவு கால இயல் தொனி கொண்டுள்ளன.

தாவீது எருசலேமிலுள்ள செபுசேயர் கோட்டையைக் கைப்பற்றியபோது, முதலில் அதைத் தனது தலைநகராக்கினார். பின்பு, அங்கே பெட்டகத்தைக் கொண்டு வந்து நிறுவி, அதை ஒரு புனிதத்தலமாக்கினார். அங்கு, சாலமோன் ஆலயத்தைக் கட்டிய போது, அது அரசின் சமய மையமாக உறுதியாக நிறுவப்பட்டது. அது யாவே தேர்ந்து கொண்ட இடமாகும் (*78:68* தொ; *68:17*). பிற்காலத்தில் சீயோன் மட்டுமே சனகெரிபின் தாக்குதலுக்குத் தப்பியது. இது சீயோனை வெல்ல முடியாது என்ற நம்பிக்கையை ஒரு விசுவாச சத்திய மாக்கியது. இந்த மூட நம்பிக்கையைத் தகர்க்க எரேமியா எவ்வளவோ முயற்சி செய்தார். ஆனால் வெற்றியடையவில்லை (எரே *7:4-7*). நெபுகத்னேசர் சீயோனை அழித்து, இறைவாக்கினரது சொற்கள் வெற்றுச் சொற்கள் அல்ல என்று காட்டினான். நாடு கடத்தப்பட்டபோது, அழிந்துபோன சீயோன் மெசியா பற்றிய நம்பிக்கையின் மையமாகத் திகழ்ந்தது (எசா *60;66*;செக் *8*). இரண்டாவது ஆலயம் கட்டப்பட்டபோது, எசேக்கியேலின் கருத்துப்படி கட்டப்படவில்லையானாலும் அவருடைய போதகச் சூழ்நிலையில் கட்டப்பட்டது; வருங்காலத்தை எதிர்நோக்கியது; எல்லா மனிதருக்கும் ஆன்மீகத் தலைநகரமாக புதிய எருசலேம் விளங்கும்.

சீயோனைப் பற்றிப்பாடும் இச்சங்கீதங்கள் நாடு கடத்தலுக்கு முன்பும் பின்பும் தோன்றியிருக்க வேண்டும். இது எருசலேமை நோக்கித் திருப்பயணம் செய்தவர்களின் பாடலாக அமைந்திருக்க வேண்டும். சட்டநூல் பாங்கு ஐம்பதாம் நாள் விழா, கூடாரவிழா ஆகியவை எருசலேமுக்குத் திருயாத்திரைசெல்லும் விழாக்கள் என்று கூறியது (யாத் *34:23*; உப *16:16*). வயது வந்த ஆண்கள் இந்த யாத்திரைகளுக்குச் செல்ல வேண்டும். ஆனால் வழக்கில், எருசலேமிலிருந்து தூரத்தில் வாழ்ந்த யூதர்கள் ஏதாவது ஒரு விழாவுக்குத் திருப்பயணம் செய்தனர். சிதறிக்கிடந்த யூதர்கள், தங்கள் வாழ்வில் இத்திருப்பயணம் செல்ல ஒரு வாய்ப்புக் கிடைத்தால் அதைப் பெரும் பேறாகக் கருதினர்.

இச்சங்கீதங்களில் சிலவற்றிற்குக் குறிப்பிட்ட வரலாற்றுச் சூழ்நிலையைச் சுட்டிக் காட்டலாம். சங் *24* தாவீது ஆடம்பரமாகப் பெட்டகத்தை எருசலேமுக்குள் கொண்டு

வந்த போது பாடப்பட்டிருக்க வேண்டும். கி.மு. 701 அல்லது 688-இல் சீயோன் சனகெரிபிடமிருந்து காப்பாற்றப்பட்டபோது சங் 46; 48; 76 பாடப்பட்டதாகத் தெரிகிறது. மற்ற மூன்றிற்கும் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்ட முடியாவிட்டாலும் சங் 84 யாவேயின் உறைவிடமும் வழிபாட்டின் மையமுமான ஆலயத்தைப் போற்றுகிறது. சங் 87 கருத்தியலாக சீயோனை மனுக்குலத்தின் ஆன்மீக மையமாக எதிர் நோக்குகிறது. சங் 122 ஒரு திருப்பயணப் பாடல் என்பது தெளிவு.

இஸ்ராயேலர் சீயோன்பால் கொண்டிருந்த பாச உணர்வை *48:2; 84:2.10; 122:1* போன்ற வாசகங்களிலிருந்து அறியலாம். புதிய ஏற்பாட்டிலும் எருசலேம் முக்கியத்துவம் கொண்டுள்ளது. இதை லூக்கா நற்செய்தியிலும் அப்போஸ்தலர் பணியிலும் காணலாம். கிறிஸ்துவின் முக்கிய வாழ்க்கை நிகழ்ச்சிகள் எல்லாம் எருசலேமை மையமாக வைத்தே நிகழ்கின்றன. ஆதித்திருச்சபை சீயோனை ஒரு முன்னோடியாகக் கருதியது. விண்ணகச் சீயோனை நோக்கி இயங்கியது. இச்சங்கீதங்களைப் பாடிய போது இஸ்ராயேலர் எருசலேமின்பால் எத்தகைய விசுவாசமும் நம்பிக்கையும் மிக்க பாசம், அன்பு கொண்டிருந்தனரோ, அதே உணர்வை இன்றும் திருச்சபையின்பால் நம்மிடம் இச்சங்கீதங்கள் தூண்ட வேண்டும்.

II. **புலம்பல் அல்லது வேண்டுதல்:** இவ்வகை புகழ்ப்பாக்களிலிருந்து வேறுபட்டது. இச்சங்கீதங்கள் இறைவனுடைய மாண்புகளைக் கொண்டாடுவதில்லை; புகழ்வதில்லை; மாறாக இறைவனை நோக்கி நேரடியாக முறையிட்டு விடுதலை வேண்டுகின்றன.

இச்சங்கீதங்களின் பொது அமைப்பு: அ) முன்னுரை: இறைவனை நோக்கிக் கூவிஅழைத்தல். ஆ) நடுப்பகுதி: இறைவனது ஆதரவைஅடைய வேண்டி, பாடுவோரின் துன்பநிலை விவரிக்கப்படுதல். இது பெரும்பாலும் மரபுமுறை உருவகங்களால் விவரிக்கப்படும். ஆகவே இச்சங்கீதங்களின் வரலாற்றுச் சூழ்நிலையை எடுத்துக் கூறுவது கடினம். இ) விடுதலை வேண்டுதல். ஈ) வேண்டுவோரின் கோரிக்கை நிறைவேறி விட்டது என்ற நம்பிக்கையை எடுத்துக்கூறுதல்.

புலம்பல் சங்கீதங்களைத் தனிநபர் புலம்பல், சமூகப் புலம்பல் என்று இரு வகையாகப் பிரிக்கலாம்.

*1)* **தனிநபர்ப் புலம்பல் பாடல்கள்:** நூலிலே அதிகமாகக் காணப்படுபவை. ஏறக்குறைய நூலின் நான்கில் ஒரு பகுதி இவ்வகையைச் சேர்ந்ததாகும். இவை வழிபாட்டில் தோன்றியதாகத் தெரியவில்லை. தனிநபர்களின் துன்ப நிலையால் தூண்டப்பட்டு எழுந்தவை. ஆனால் காலப்போக்கில் வழிபாட்டுத் தன்மையும் சமூகத் தன்மையும் பெறுகின்றன. *5; 6; 7; 13; 17; 22; 25; 26; 28; 31; 35; 36; 38; 39; 42; 43; 51; 54; 55; 56; 57; 59; 61; 63; 64; 69; 70; 71; 86; 88; 102; 109; 120; 130; 141; 142; 143;* ஆகிய சங்கீதங்கள் இப்பகுதியில் அடங்கும்.

இறைவனை உதவிக்கு அழைக்கும் முன்னுரை உதவி கேட்டலையோ, மன்றாட்டையோ நம்பிக்கையையோ எடுத்துக் கூறும். இறைவனுக்கு ''என் இறைவா,'' ''என் பாறையே'' போன்ற பல இடுபெயர்கள் கொடுக்கப்படும். சில சங்கீதங்களில் இம்முன்னுரை பல வரிகளுக்கு நீடிக்கும்.

முக்கிய நடுப்பகுதியில் வேண்டுவோரின் துன்பநிலை விவரிக்கப்படும். இதை மூன்று வகையாகப் பிரிக்கலாம். ***அ)* சாவினால் வரும் உடனடி இடுக்கண்:** இஸ்ராயேலர் நீண்ட வாழ்வை ஒரு பெரும் ஆசீராகக் கருதினர். ஆகவே, அகால மரணத்தைக் கண்டு அஞ்சினர் *(102:24)*. இதற்கு எசேக்கியாவின் பாடல் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும் *(எசா 38:10-12)*. இதற்குக் காரணம் பழைய ஏற்பாட்டில், கி.மு. 2-ஆம் நூற்றாண்டுக்கு முன், மரித்த பின் வாழ்வு பற்றித் தெளிவில்லாத, நிறைவில்லாத கருத்து நிலவியதேயாகும். மரித்தோரின்

இல்லமாகிய ''சேயோல்'' பூமிக்கு அடியிலிருந்த பாதாளமாகும் *(22; 30; 69:15 தொ)*. அங்கு மௌனமும் இருளும் மறதியும் நிலவியது *(88:12)*. மரித்தோர், ஆவியாக அயர்ச்சி மிக்க வாழ்வைக் கொண்டிருந்தனர். வாழ்வு விரும்பத்தக்கது எனச் சுட்டக்கூடிய எதுவும் அங்கு இல்லை. எல்லாவற்றிற்கும் மேலாக இறைவனோடு கொள்ளும் தோழமையிலிருந்து விலக்கப்பட்டிருந்தனர் *(88:5)*. அங்கே இறைவன் போற்றப்படுவதில்லை *(88:10-13)*. அவருக்கு யாரும் நன்றி கூறுவதில்லை. மரண இடுக்கணை விவரிக்கும் ஆசிரியர், தான் பாதாளத்தில் புகவிருப்பதாகவும், அங்கே ஏற்கெனவே இருப்பதாகவும் *(69:15; 88:4)*, அதே போல் நன்றிகூறும் போது சாவிலிருந்து மீண்டு விட்டதாகவும் *(30:3)* மிகைப்படுத்திக் கூறுவார். இச்சங்கீதங்களில் ஆன்மா குறிக்கப்படும்போது, அது உடலிலிருந்து பிரிந்துவிட்ட ஆன்மாவை மட்டுமன்று முழு ஆளையும் குறிக்கிறது. ''என் ஆன்மா சேயோலுக்குச் செல்கிறது'' என்பதை ''நான் சேயோலுக்குச் செல்கிறேன்'' என்று பொருள் கொள்ள வேண்டும் *(86.13; காண்க. 16:10; 30:3)*.

**ஆ) உடல் நோய்கள்:-**

நோய்கள் பற்றி பழைய ஏற்பாட்டு மக்கள் என்ன கருதினர் என்பதைச் சங்கீதங்கள் தெளிவாகக் கூறுகின்றன. யாவே நோயைக் கொடுக்கிறார், அவரேதான் அதைக் குணமாக்குகிறார். மற்றக் காரணங்கள் இரண்டாம் தரப் பின்னணியிலே உள்ளவையே *(38:3; 69:27; 102:11; எசா 38:12; 29:2)*, பெரும்பாலும் பாவங்களுக்குத் தண்டனையாகவே யாவே நோய்களை அனுப்புகிறார் *(38:4; 42:5)*. இச்சங்கீதங்களில் சில இடங்களில் நோய்கள் உயிர்ச்சித்திரமாக விவரிக்கப்படுவதைக் காணலாம் *(39; 101; எசா 38:14)*. சில சமயம் விரோதிகள் ஒருவன் மேல் ஆதிக்கம் கொள்ள நோய்கள் வாய்ப்பளிக்கின்றன *(35:13-15; 41:6.9)*. இப்பாடல்களில் மூவகை எதிரிகளைக் காண்கிறோம். *1)* நோயை, மறைக்கப்பட்ட குற்றத்திற்குரிய தண்டனையாகக் கருதும் நண்பர்களும் உறவினரும் *(38:12; யோபு; யோவா 9:2)*. இப்படிக் கருதுவதால் நண்பர்களும் எதிரிகளாகின்றனர். *2)* நோய்வாய்ப்பட்டோரின் புண்ணிய வாழ்வை எள்ளி நகையாடும் இறை பக்தி அற்றோரும், இறை நிந்தனை செய்வோரும் ஆவர் *(69:10-12)*. இவர்கள் யாவேக்கும் அவரது பராமரிப்புக்கும் ' எதிரானவர்கள். *3)* நோய்வாய்ப்பட்டுள்ளவரின் ஒன்றும் இயலாத நிலையைப் பயன்படுத்திக் கொள்ளும் முந்தைய விரோதிகள். யாவே பாவங்களுக்குத் தண்டனையாக நோயை அனுப்பியுள்ளதால், தங்கள் குற்றச்சாட்டு உண்மையானதே என்று கொக்கரிப்பவர்கள் *(31:12-13; 35:15-16; 69:27; 108:22-25)*.

**இ) பொய்க் குற்றச்சாட்டுகள்:-**

இஸ்ராயேலரிடையே வழக்காடுதல் வெகு சாதாரணமாய் இருந்தது. அதே போல் நீதி வழங்குவதிலும் ஊழல் மிகுந்திருந்தது. இங்குச் செல்வந்தர்களுக்கும் ஏழைகளுக்குமிடையேயுள்ள வேறுபாடு தெளிவாகக் காணப்பட்டது. பெரும்பாலும் செல்வந்தர்கள் ஏழைகளைக் கொடுமைப்படுத்தினர் —*(காண்க. 2 சாமு 12; 1 அர 20; தானி 13; எசா 1:23; 5:7; 11:3 தொ. ஆமோ 5; 12; எரே 5:26; 22:3)*. கிறிஸ்துவின் காலத்திலும் இந்நிலை மாறுபட்டதாகத் தெரியவில்லை *(லூக் 18:2-5)*. ஆகவே பொய்ச் சாட்சியத்திற்கும், அநீதியான தீர்ப்புக்கும் எதிராகச் சட்டங்கள் வேண்டியிருந்தன *(உப 19:18-20; யாத் 21; 23)*. ''பழிக்குப் பழி'' என்ற நியதி கடைப்பிடிக்கப்பட்டது. பொதுவாக நகர வாயிலின் அருகில் வழக்காடுதல் நிகழ்ந்தது. ஆகவே ''வாயிலின் முன்'' என்ற சொற்றொடர் ''நீதிமன்றத்தின் முன்'' என்ற பொருளும் பெறும். நீதி வழங்குதல் சில சமயம் அரச மன்றத்திலும் நிகழும் *(122:5)*. நீதி வழங்குமுன் இரு கட்சியினரும் கேட்கப்பட வேண்டும். விடுவிப்புக்குப் பெரும்பான்மை ஒப்புமை அவசியமாகும் *(127:5)*. சாட்சியமில்லாத போது, ஒருவன் யாவேயின் பெயரால் சத்தியம் செய்யலாம் *(7:4-6)*. ஏனெனில் யாவேயே மேலான சாட்சியாவார் *(109:31)*. பொய்ச் சாட்சி கூறுபவர்களும் பொய்க்குற்றம் கூறுபவர்களும் பல உருவகங்களால் விவரிக்கப்படுகின்றனர். அவற்

றில் சில: வேடர்கள் (*7:15; 35:7; 57:6; 64:7; 140:5*); கொள்ளைக்காரர்கள் (*17:9-12; 56:6*); சிங்கங்கள் (*7:2; 17:12; 57:4*); ஓநாய்கள் (*59:14 தொ*); பாம்புகள் (*58:4 தொ*)..... ஆலயத்தி லும் நீதிவழங்கப்படலாம். ஒரு குற்றச்சாட் டைச் சட்டத்தால் நிர்ணயிக்க முடியாத போது, குற்றம் சாட்டப்பட்டவன், குருவின் முன் தனது வழக்கைச் சமர்ப்பித்துத் தீர்ப்புகள் பெறுவான்.

விடுதலை வேண்டுதலில் இறைவன் தலையிட வேண்டும் என்று கோரப்படும். இந்தத் தூண்டு காரணங்களாக, யாவேயின் பிரமாணிக்கமும், கடந்த காலத்தில் அவர் ஆற்றிய மீட்புச்செயல்களும், வேண்டு வோரின் குற்றமற்றதன்மையும் எடுத்துக் கூறப்படும். சில சமயம், துன்புறுவோர் தனது குற்றத்தை ஏற்று மன்னிப்புக் கோரியும், தனது ஒன்றும் இயலாத நிலையை எடுத்துக்கூறியும் இறைவனது உதவியை வேண்டுவார்.

**ஈ. சாபம் கூறும் சங்கீதங்கள்:** விடுதலை வேண்டுதலில் சில சமயம் விரோதிகளுக்கு எதிராகச் சாபம் கூறப்படும் (*35:1-5; 55:15; 59:13; 69:27-28; 109:7; 140:10*). இச்சாப மன்றாட்டு, பழிக்குப்பழி என்ற நியதியைப் பின்பற்றுகின்றது (*யாத் 21:24-25: லேவி 24:17-22; உப 19:16-19*). இம்முறை புதிய ஏற்பாட்டுப் போதகத்திற்கு எதிரானது (*மத் 5:39.43-48*). ஆனால் இச்சாபங்களை மீட்பு வரலாற்றின் கால அமைப்புக்கேற்ற சூழ்நிலையில் புரிந்து கொள்ள வேண்டும்.

புலம்பல் சங்கீதங்களில் அடிக்கடி குறிக் கப்படும், சபிக்கப்படும், ''விரோதி'' யார் என்பது பற்றி, பல கருத்துக்கள் கூறப்பட் டுள்ளன. இந்த விரோதிகள், சங்கீத ஆசிரி யரை அவதூறு கூறி நீதி மன்றத்திற்கு முன் கொண்டு வருபவர்கள், மாயவித்தைக்காரர் கள் போன்றவர்களே. எந்த ஒரு கருத்தும் இந்த விரோதி யார் என்பதை முழுமையாக விளக்கவில்லை எனலாம். இந்த விரோதி கள் திட்டம் செய்யப்பட்ட எடுத்துக்காட்டான வர்களாகத் தெரிகிறது. இவர்கள் சங்கீத ஆசிரியரின் சொந்த அனுபவத்தையும் ஒழுக்க மதிப்பீட்டையும் சேர்ந்தவர்கள் அல் லர். இவர்கள் இறைபயம் அற்றவர்கள். ஆகவே இறைவனுடைய விரோதிகள். இச் சாபங்கள் இவர்களுக்கு எதிராகச் சொல்லப் படும் திட்டமிட்ட எடுத்துக்காட்டான வழி பாட்டு வேண்டுகோளாகும். ஆசிரியரது சொந்த முறையில் பழிவாங்கும் கூற்றல்ல. ஆகவே இச்சாபங்கள், இறைவன்பால் ஆசிரி யர் கொண்டுள்ள பிரமாணிக்கத்தின் மறு புறமாகும் (*139:19-24*). குழந்தைகளைக் கல் லில் அடித்துக் கொல்லுதல் (*137:9*) போன்ற கூற்றுகளைப் பழைய மேற்காசியாவில் நிலவிய அர்ப்பணப் போர்ச் சூழ்நிலையில் புரிந்து கொள்ள வேண்டும். சங் *109:6.19*-இல் வரும் சாபங்கள் ஒருவேளை, சங்கீத ஆசிரியரால் கூறப்பட்டதல்ல, விரோதி யால் கூறப்பட்டதாகும். பழைய ஏற் பாட்டு ஒழுக்க இயல், புதிய ஏற்பாட்டு ஒழுக்க இயலுக்கு ஒத்ததாய் இல்லாவிடி னும், வாசகர் பழைய ஏற்பாட்டு ஆசிரியரது முன்னோக்கை ஓரளவு ஒத்துணர்வோடு நோக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

இந்தச் சாபச் சங்கீதங்களின் முதன்மைக் குறிக்கோள் எதிரி அழிய வேண்டும் என்ப தன்று, வரவிருக்கும் துன்பம் நீங்க வேண் டும் என்பதுதான். அவர்களைப் பொறுத்த மட்டும் இறைவனது நீதி எதிரிகள்பாலும் வெளிப்படவேண்டும் என்று மன்றாடுவதில் தவறில்லை. பயன்படும் சொற்கள் ஏற்றுக் கொள்ள கடினமாக இருக்கலாம். இஸ்ராயே லின் விசுவாச வளர்ச்சியின் பயிற்சி நிலை யில் இவற்றை நோக்க வேண்டும். சிலர் இச்சாப மன்றாட்டுகள் ஆன்ம எதிரி களுக்கு எதிரானது என்று கருதுவர். இப் பொருளில் இச்சங்கீதங்களைச் செபிப்பதில் தவறு ஒன்றுமில்லை.

இந்தப் புலம்பல் சங்கீதங்களில், இறை வன் மன்றாடுபவரைக் காப்பாற்றுவார் என்ற ஆழ்ந்த நம்பிக்கையும் எடுத்துக் கூறப் படும். இது மீட்பு வரலாற்று அனுபவத்தின் விளைவாகும். இந்த நம்பிக்கை வேண்டு வோரின் ஆழ்ந்த, தளராத விசுவாசத்தைக்

காட்டுகிறது. இறைவன் தலையிடவேண்டும் என்பதற்குரிய தூண்டு காரணங்களில் இந்த நம்பிக்கையும் ஒன்றாக எடுத்துக்கூறப் படும். இது பற்றி, நம்பிக்கைச் சங்கீதங்கள் என்ற தலைப்பின்கீழ் மேலும் கூறுவோம்.

சிலசமயம், நன்றிப் பலி செலுத்துவதாக நேர்ச்சியும் எடுத்துக் கூறப்படும். இச்சங்கீதங்கள் வழிபாட்டில் பயன்படுத்தப் பட்டால், நம்பிக்கைக் கூற்று, இறைக்கூற்றுக்குப் பின் கூறப்பட்டது. சில சங்கீதங்களில் *(6:8-10; 31:23; 56:10-13)* இந்தநம்பிக்கை உயிர்ச்சித்திரமாக எடுத்துக் கூறப்படும் முறை, ஒருவர் தன் துன்பத்திலிருந்து விடுதலை அடைந்த பின்னரோ, குருவோ பிறரோ இறைக்கூற்று அளித்த பின்னரோ கூறப்பட்டதாகத் தெரிகிறது.

இச்சங்கீதங்களைப் புரிந்துகொள்ள, இறைவனுக்கு மனிதப்பண்புகளைச் சாற்றிக் கூறும் விவிலிய மரபையும் மனதில் கொள்ள வேண்டும். இஸ்ராயேலர் யாவேயை ஒரு தத்துவக் கோட்பாடாகக் கருதவில்லை. அவர்கள் தங்கள் சொந்த வாழ்விலும் மீட்பு வரலாற்றிலும் கண்ட உயிருள்ள இறைவனாவார் யாவே. ஆகவே ஒரு மனிதன் மற்றொரு மனிதனை அணுகுவதுபோல், இறைவனை அண்டிப் போவார்கள். இதில் ஒருவகை வியப்பளிக்கும் நெருக்கம் உண்டு. இதை மோசே (எண் *11:11-14*), யோசுவா (யோசு *7:7-9*) எலியா (*1* அர *17:20*) எரேமியா (எரே *15:17* தொ; *20:7*) ஆகியோர் யாவேயோடு உரையாடிய முறையில் காணலாம். ஆனால் அதேபோது இறைவனது யாவும் கடந்த தன்மை மறக்கப்படுவதில்லை. இறைவனைக் குறிக்க எந்த உருவமும் பயன்படுத்தக் கூடாது என்பது இதற்குச் சான்றாக உள்ளது. இறைவனுக்கு மனிதப் பண்புகளைச் சாற்றிக் கூறுவது இஸ்ராயேலர் இறைவன் பால் கொண்டிருந்த விசுவாசத்தின் சிறப்பியல்பாகும். அவர் உயிருள்ளவர், மனிதரோடு அந்நியோன்னிய உறவு கொண்டவர். ஆகவே அவரிடம் இஸ்ராயேலர் உருக்கமாக வேண்டுவர்; வேண்டுதலை வலியுறுத்துவர்.

இந்தத் தனிநபர்ப் புலம்பல் சங்கீதங்கள் சமூகப் புலம்பல்களே என்று சிலர் கூறுவர். இவர்கள் கருத்துப்படி, இச்சங்கீதங்களில் வரும் ''நான்'', ''என்'' என்ற சொற்கள் குழுத்தன்மையுடையன. மக்கள் பெயரால் அரசன் வேண்டுகிறான். சமூகமே உருவகமாகத் தனி நபராகக் குறிக்கப்படுகிறது. தனிநபருடைய உணர்ச்சிகளையோ மன்றாட்டுகளையோ எந்தச் சங்கீதமும் எடுத்துக் கூறவில்லை; எடுத்துக்கூறும் நோக்கமும் கொண்டிருக்கவில்லை. எல்லாச் சங்கீதங்களும் சமூக வழிபாட்டுப் பாடல்களே. இவ்வாறு ஆய்வாளர்கள் ஒரு தலைப்பட்சமாகக் கூறி வந்துள்ளனர். ஆனால் இப்போது இக் கருத்துகளுக்கு மதிப்பில்லை. இக்கருத்து சரியானதன்று. ஏனெனில் இச்சங்கீதங்களில் அரசனைப் பற்றிய குறிப்பே இல்லை. மேலும் இவற்றில் தனிநபர்த் தன்மை மிகவும் அழுத்தம் பெறுகிறது. இவற்றில் சில, பிற்காலத்தில் நாட்டுப் புலம்பலாயின என்பது உண்மையே. இவை பிற்காலத்தில் சமூக வழிபாட்டில் பயன்பட்டன என்பதும், அதனால் இவை சங்கீத நூலில் இடம் பெற்றன என்பதும் உண்மையே. இருப்பினும் ''நான்'' ''என்'' போன்ற சொற்கள் தனிநபரையே குறித்தன. இச்சங்கீதங்கள் தனிநபர்களுக்காக அல்லது தனிநபர்களால், அவர்களுடைய தேவையை நிறைவு செய்யும் விதத்தில் இயற்றப்பட்டன. இவற்றில் காணப்படும் விசுவாசம் தனிநபரின் சொந்த விசுவாசம் ஆகும். அது அவரது உள்ளத்திலிருந்து பிளிறுகிறது. காலப்போக்கில் இச்சங்கீதங்கள் வழிபாட்டில் புகுந்து, சங்கீத நூலில் இடம் பெற்றபோது சமூகப்பண்பை ஏற்றன. அப்போதும் தனிநபர்ப் பண்பை இழந்துவிடவில்லை.

*2. சமூகப் புலம்பல் பாடல்கள்:* இதில் *12; 44; 58; 60; 74; 77; 79; 80; 82; 83; 85; 90; 94; 106; 108; 123; 126; 134* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவையும் தனிநபர்ப் புலம்பலைப் போன்ற அமைப்பைக் கொண்டுள்ளன. ஆனால் துன்பங்கள் பற்றிய விவரிப்பு நாடு முழுவதையும் தழுவியதாகும். இத் துன்பங்கள் போரில் தோல்வி, ஆலயம்

நீட்டுப்படுதல், அது அழிக்கப்படுதல், பஞ்சம், பிணி, கொள்ளை நோய் முதலியவை யாகும். இவற்றால் அவதியுற்ற மக்கள் தங்கள் இறைவனைநோக்கி, கதறி அழுது, விடுதலை அளிக்குமாறு மன்றாடினர்.

இறைவன் தலையிட்டு விடுதலை அளிக்க வேண்டியதற்குக் காரணங்களாக, அவருடைய உடன்படிக்கையையும் பிரமாணிக்கத்தையும் எடுத்துக் காட்டுவார்கள். அவர் தமது பெயரின் பொருட்டே தலையிட வேண்டும் என்று மன்றாடுவர். அவர் தமதுமக்கள் வரலாற்றில் கடந்தகாலத்தில் தலையிட்டுக் காத்ததுபோல், இப்போதும் தலையிட்டு, அரியன செய்து தங்களைக் காக்க வேண்டும் என்று மன்றாடுவர். இவற்றில் எல்லாம், தாங்கள் அவரது மக்கள் ஆகவே, தங்களைக் காக்க வேண்டியது அவரது பொறுப்பாகும் என்று இறைவனுக்கு நினைவுறுத்துவர்.

இச்சங்கீதங்களின் வாழ்க்கைப் பின்னணி செபநாளும், தபசு நாளும் ஆகும். நாட்டுக்கு இடுக்கண் ஏற்பட்டபோது, இத்தகைய நாட்கள் கட்டளையிடப்பட்டன. குறிப்பிட்ட நாளில், மக்கள் ஆலயத்தில் கூடுவர் *(1 அர 8:33-40; 2 நாள் 30:9; 1 மக் 4:37-40)*; விழாக் கொண்டாடுவதற்கல்ல; கோணிஆடை அணிந்து, சாம்பல்பூசி, தபசு செய்வதற்காகும் *(1 சாமு 7:6; 1 மக் 3:47)*. இத்தகைய சடங்கை யோவேல் விவரித்துள்ளார் *(யோவே 1:13-20; 2:15-16)*. மோசே *(எண் 11:11-15)*, யோசுவா *(யோசு 7:7-9)*, யோசபாது *(2 நாள் 20:6-12)*, எஸ்ரா *(எஸ் 9:6-15; நெகே 9:6-37)*, நெகேமியா *(நெகே 1:5-11)* போன்ற பொதுத்தலைவர்களின் பொதுமன்றாட்டுகள் இத்தகைய பொதுச்சடங்குச் சூழ்நிலையில் நடந்தவையே. சங் *74;137* ஆகியவை எரேமியாவால் எழுதப்பட்டவை என்று கூறுவது மரபு. இவை கி.மு. 587-இல் எருசலேம் அழிக்கப்பட்டதைப் பிரதிபலிக்கின்றன. சங் *85* நாடுகடத்தப்பட்டு நாடு திரும்பிய மக்களின் மனநிலையை எடுத்துக் கூறுகின்றன. சங் *106* நாட்டின் பொதுப் பாவநிலை பற்றிய அறிக்கையாகும்.

தனிநபர்ப் புலம்பலில் காணப்படும் நம்பிக்கை, நன்றி உணர்வுகள் சமூகப் புலம்பலிலும் காணப்படுகின்றன. இஸ்ராயேல் மக்களிடையே தனியார் நலம் குறைந்து குழு நலமே முதன்மை கொண்டிருந்தது என்பதற்கு இச்சங்கீதங்கள் சான்றாய் உள்ளன. இறைவனுக்கு மனிதப் பண்புகளைச் சாற்றிக்கூறும் மரபு இவற்றிலும் காணப்படும். இது சில சமயம், வேண்டுதலைக் கட்டளையாகவும் மாற்றக்கூடும் *(44:23)*.

III. **நம்பிக்கைச் சங்கீதங்கள்:** இவை புலம்பல் அல்லது மன்றாடுதல் வகையைச் சேர்ந்தவையே. ஆயினும் இவை இஸ்ராயேல் மக்கள் இறைவன்பால் கொண்டிருந்த நம்பிக்கையை வலியுறுத்தி, அதற்கு முக்கியத்துவம் அளிப்பதால், வசதிக்காக இச்சங்கீதங்களைத் தனியாகப் பிரித்துக் காட்டலாம்.

**அ) தனியார் நம்பிக்கைப் பாடல்கள்:** இதில் *3; 4; 11; 16; 23; 28; 62; 121; 132* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவற்றில், தனிநபர் என்ற அளவில் ஓர் இஸ்ராயேலன் இறைவன்பால் கொண்டிருந்த ஆழ்ந்த, அசைக்க முடியாத நம்பிக்கை வெளிப்படுகிறது. ஆண்டவர் அவனது தலைவர், ஆயன் *(23:1)*; தாயும் தந்தையுமாவார் *(27:1-10)*; தாயினும் மிக்க அன்புடன் காப்பவர் *(131:2)*. அவர் உறங்குவதுமில்லை; அயர்வதுமில்லை; ஓய்வதுமில்லை *(121:3-4)*. எப்போதும் இஸ்ராயேலரைக் காப்பவர் *(121:8)*. அவரே ''எனது ஒளி'', ''எனது மீட்பு'' *(27:1)*, ''அரணும் அடைக்கலமும்.'' ''அவரிடமிருந்தே எனக்கு உதவி வரும்'' *(121:2)*. இவை போன்ற நம்பிக்கை உணர்வுமிக்க சொற்கள் இச்சங்கீதங்களில் நிறைந்து காணப்படும்.

**ஆ) சமூக நம்பிக்கைப் பாடல்கள்:** இதில் *115; 125; 129* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவை துன்ப வேளையில் இறைவன் தலையிட்டுக்காக்க வேண்டும் என்று மன்றாடுகின்றன. இவற்றில், தங்களோடு உடன்படிக்கை செய்த இறைவன் தங்களைக் கைவிட மாட்டார் என்ற இஸ்ராயேல

ருடைய குழு நம்பிக்கை பரந்து காணப் படுகிறது.

IV. **நன்றிக் கீதங்கள்:** இவை புலம்பல் பாடல்களுக்கு நேர்மாறானவை. இவை, அடைந்த நன்மைக்கு நன்றிகூறுகின்றன. இவை நன்றிப் பலியோடு தொடர்புடையவை. இந்த வழிபாட்டுச் சூழ்நிலைதான் இவற்றிற்குப் பின்னணியாகும். மோவின்கெல் என்பவர், இஸ்ராயேல் இலக்கியத்தில் ''நன்றி கூறுதல்'' என்பதற்கு எபிரேயச் சொல்லே இல்லை. ஆகவே இச்சங்கீதங்கள் உண்மையில் புகழ்ப்பாக்களே என்பார். எது வாயினும், இவற்றில், இறைவனிடமிருந்து பெற்ற நன்மைக்கு நன்றி கூறுதலே முதன்மை பெறுகிறது. மக்கள் நன்றி கூறி இறைவனைப் புகழ்கின்றனர். ஆகவே இச் சங்கீதங்களைப் பிரித்துக் காட்டுவது சரியே.

*அமைப்பு 1.* **முன்னுரை:** நன்றிகூறி இறைவனைப் போற்றுதலோடு சங்கீதம் தொடங்குகிறது. இவ்வகையில் புகழ்ப்பாக்களை ஒத்திருக்கிறது.

*2.* **முக்கிய பகுதி:** அனுபவித்த இடுக்கணும், விடுதலையும் விவரிக்கப்படுகின்றன. இடுக்கண் புலம்பல் நடையில் எடுத்துக் கூறப்படுகிறது.

*3.* **அறிக்கை:** யாவேதான் விடுதலை அளித்தார் என்று அறிவிக்கப்படும். சூழநிற்போருக்குப் போதகமும் அளிக்கப்படும். நேர்ச்சிக் கடன் நிறைவேற்றப்படும்.

*4.* **முடிவுரை:** புகழ்ப்பாக்களைப் போல், முன்னுரை மீண்டும் எடுத்துக் கூறப்படும்.

இச்சங்கீதங்களையும் தனியார் செய்ந் நன்றிக் கீதங்கள், சமூக செய்ந்நன்றிக் கீதங்கள் எனப் பிரிக்கலாம்.

**அ. தனியார் செய்ந்நன்றிக் கீதங்கள்:** இதில் *9; 10; 30; 31; 34; 41; 92; 107; 115; 138* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவை தனி இஸ்ராயேலன் தான் அடைந்த நன்மைக்கு இறைவனுக்கு நன்றிகூறும் பாடல்களாகும்.

இவற்றை ஆய்வு செய்தால், நன்றி செலுத்தும் சடங்கின் விவரிப்பையும் காணலாம். துன்பத்திலிருந்து விடுபட்டவர் தன் உற்றார் உறவினருடன், நேர்ச்சிப் பலியைக் கையிலேந்தி இறைவன் உறையும் ஆலயம் நோக்கி, அவரது புகழ் பாடிச் செல்வார். ஆலய வாயிலின் முன் நின்று இறைவனைப் போற்றுவார் *(9:14)*. ஆலய வாயிற் காப்பாளரிடம் கதவைத் திறக்கும்படி கேட்பார் *(118:19)*. அவர்கள் பதில் கூறித் திறக்க *(118:20)*, ஆலயத்தினுள் செல்வார் *(138:2)*. அவரைக் குருக்கள் எதிர் கொள்வார்கள். தனது உற்றார் உறவினரையும், வழிபட வந்தோரையும் அழைத்து, தனக்கு இறைவன் செய்த நன்மையை விவரிப்பார். இதில் கோட்பாட்டு விளக்கமும் அமைந்திருக்கும். பின், நேர்ச்சிக் காணிக்கையை நன்றிப் பலியாக ஒப்புக் கொடுப்பார். பின் உறவினரோடும் பிறரோடும் சேர்ந்து நன்றியுரை கூறிவிருந்துண்பார் *(23:5)*. இத்தகைய விவரிப்பைச் சங் *118*-இல் காணலாம்.

இந்நன்றிச் சடங்கு ஆலயத்தில் நிகழ்ந்த போது, அது தனிநபரின் பக்தி முயற்சியாக மட்டும் கருதப்படவில்லை. மேலும், இச் சடங்கு ஒரு தனிநபராலோ, தனி நபருக்காக மட்டுமோ நடக்கவில்லை. அது காலப் போக்கில் சமூகச் சடங்காக மாறி, அதற்குரிய சடங்கு முறையில் நிறைவேற்றப் பட்டது. இதைச் சங் *107*-இல் காணலாம். இச்சடங்கிற்கு ஒரு பெரிய விழாவைப் பயன்படுத்தினர்; குறிப்பாக மகிழ்ச்சிமிக்க கூடாரவிழா இதற்குப் பயன்பட்டது. ஆகையால் ஒரேநாளில் பலர் இச்சடங்கை நிறைவேற்றியிருக்கலாம். இவர்களை, அவர்கள் பெற்ற நன்மையின் தன்மைக்கேற்ப குழுவாகப் பிரித்து நன்றிச் சடங்கை நிறைவேற்றுவர். சங் *107* நான்கு குழுவினரைக் குறிப்பிடுகிறது. பயணிகள் *(107:4-9)*, கைதிகள் *(107; 10-16)*, நோயால் நலிவுற்றோர் *(107:17-22)*, மாலுமிகள் *(107:23-32)*. பல நாடுகளிலிருந்து வழிபட வந்திருந்த மக்களைத் தங்களோடு சேர்ந்து இறைவனது இரக்கத்திற்கு நன்றிகூற அழைப்பதோடு சங்கீதம் தொடங்குகிறது *(107:1-3)*. பின் ஒவ்வொரு குழுவினருக்கும்

உரிய முக்கிய பகுதிகள் வருகின்றன. நான்கும் ஒரேவித அமைப்பைக் கொண்டுள்ளன. முதலில் அவர்களது துன்பம் விவரிக்கப்படுகிறது. பின் ''அவர்கள் ஆண்டவரை நோக்கிக் கூவி அழைத்தனர். அவர் அவர்களைத் துன்பத்திலிருந்து விடுவித்தார்'' என்று கூறப்படுகிறது (107:6.13:19.28). அவர்களது விடுவிப்பு அறிவிக்கப்பட்டபின், ஒவ்வொரு குழுவினரும் இறைவனுக்கு நன்றிகூறத் தூண்டப்படுகின்றனர். ''ஆண்டவருடைய இரக்கத்தை நினைத்து அவருக்கு நன்றி செலுத்துவார்களாக. மனு மக்களுக்கு அவர் செய்த வியத்தகு செயல்களை நினைத்துக் கொள்வார்களாக'' (107:8.15.21.31). இறைவன் மனிதருக்குச் செய்யும் நன்மைகள் பற்றிய பொது விவரிப்புடன் (107:33 தொ) சடங்கு முடிகிறது.

மூலத்தில் இத்தகைய சடங்குகளின் விளைவே இந்த நன்றிக்கீதங்களாகும். தொடக்கத்தில், தனிநபர்ச் சடங்காக இருந்தவை, காலப்போக்கில் சமூகச் சடங்காக மாறின. அதற்கேற்ப இச்சங்கீதங்கள் ஒரு குறிப்பிட்ட இலக்கிய வடிவம் எடுத்தன. இவை ஆலயத்தில் நடந்த குறிப்பிட்ட சடங்கையே மையமாக வைத்து இயற்றப்பட்டன. முன்பு விவரித்த முறையிலேயே எல்லா நன்றிக்கீதங்களும் தோன்றியிருக்க வேண்டிய அவசியமில்லை. சில சங்கீதங்கள் தனிநபரின் சுயமான உள்ளக்கிளர்ச்சியாகத் தோன்றியிருக்கலாம். ஆனால் சங்கீத நூலில் சேர்க்கப்பட்டபின் அவை சமூகச் செபமாக மாறின. அந்த முறையில்தான் கிறிஸ்தவ வழிபாட்டிலும் அவை பயன்படுகின்றன.

இத்தகைய நன்றிப் பாடல்களை விவிலியத்தின் பிற பகுதிகளிலும் காணலாம். பழைய ஏற்பாட்டில் அன்னாவின் பாடல் (1 சாமு 2:1-10), யோனாவின் பாடல் (யோனா 2:3-10), புதிய ஏற்பாட்டில் மரியாளின் பாடல் (லூக் 1:46-55), செக்கரியாவின் பாடல் (லூக் 1:67-79) முதலியவை நன்றிச்சங்கீதங்கள் பாரம்பரியத்தில் தோன்றியவையே.

***ஆ. சமூக செய்ந்நன்றிச் சங்கீதங்கள்:*** இதில் 65; 66; 67; 68; 117; 124 ஆகிய சங்கீதங்கள் அடங்கும். தனியாரின் நன்றிக்கீதங்கள், காலப்போக்கில் சமூக வடிவம் எடுத்தன என்று மேலே குறிப்பிட்டோம். ஆனால் சமூக வடிவமாகவே தோன்றிய நன்றிக்கீதங்களும் உண்டு. இவை நாடுதழுவிய அளவில் அடைந்தநன்மைக்காக, நாடுவெற்றி பெற்றதற்காகவோ, நாட்டை எதிர் நோக்கிய உடனடி இடுக்கணிலிருந்து கிடைத்த விடுதலைக்காகவோ இறைவனுக்கு நன்றி கூறுகின்றன (65; 124; 129). சில, மிகுதியாகக் கிடைத்த விலங்கினப் பெருக்கத்திற்காகவும் அறுவடைக்காகவும் நன்றி கூறுகின்றன (65; 67). இவற்றிற்குப் பின்னணியாக உள்ள வழிபாட்டுச் சடங்கு மேலே விவரிக்கப்பட்ட தனிநபருக்குரிய சடங்கை ஒத்ததே. இச்சடங்கு முறை 65; 66; 67; 68; 118 ஆகிய சங்கீதங்களில் விரவிக் கிடக்கிறது. இச்சடங்கு முறை ஆண்டுதோறும் கொண்டாடப்பட்ட விழாவாக இருக்கலாம் அல்லது ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சிக்குப்பின் வந்தசிறப்பு விழாவாக இருக்கலாம். இவ்விழா ''ஆண்டவர் குறித்தநாளில்'' (118:24) கொண்டாடப்பட்டது. அது ''நன்றியின் நாள்'' என்றழைக்கப்பட்டது.

இஸ்ராயேலர், தனிநபர் என்ற அளவிலும், நாடு என்ற அளவிலும் இறைவனது நன்மைத்தனத்தை ஏற்று அவர் செய்த நன்மைகளுக்காக நன்றிகூறிப் போற்றினர். இத்தகைய உணர்வுகளையுடைய இச்சங்கீதங்கள் புதிய ஏற்பாட்டிலும் புதிய இஸ்ராயேலாகிய திருச்சபையிலும் மதிப்பிற்குரிய இடம் பெற்றதில் வியப்பில்லை.

V. *அரச சங்கீதங்கள்:* சீயோன், யாவேயின் அரசமாண்பு ஆகியவை பற்றிய சங்கீதங்களில் முடிவு கால இயல் பண்பு உள்ளமையைச் சுட்டிக் காட்டினோம். இதிலே சங்கீத நூல் இறைவாக்குத் தன்மை கொண்டுள்ளது. இச்சங்கீதங்கள் முன்னறிவித்த, யாவும் புதுப்பிக்கப்படும் காலம் மெசியாவின் காலமாகும். இப்போது மெசியாவைச் சிறப்பான முறையில் முன்னோக்காகக்

கொண்ட சங்கீதங்களைப் பற்றிக் கூறப் போகிறோம். இவை அரச சங்கீதங்கள் என்று அழைக்கப்படும். இவை யாவேயின் அரச மாண்புச் சங்கீதங்களிலிருந்து வேறுபட்டவை; யாவேயின் ஊழியனும் பிரதிநிதியுமான அரசனைப் பற்றியவை. இப்பகுதியில் *2; 18; 20; 21; 44; 61; 72; 89; 101; 110; 132; 144* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவற்றிற்கு எந்தத் தனிச்சிறப்பான அமைப்புமில்லை. இவை, உண்மையில் புகழ்பாக்கள், மன்றாட்டுகள், நன்றிப்பாடல்கள். ஆனால் இவற்றில் அரசனுக்கு அளிக்கப்படும் இடம் இவற்றிற்கு ஒரு தனிச் சிறப்புத் தன்மையை அளிக்கிறது. ஆகவே இவை அரச சங்கீதங்கள் என்றழைக்கப்படுகின்றன.

இவற்றின் மையக் கருத்துகள்:1) அரசனுக்கு அளிக்கப்பட்ட இறை மொழிகள் *(2; 110)*; 2) அரசனுக்காக மன்றாடுதல் *(20; 61; 72; 84 )*; 3) அரசன் அடைந்த நன்மைக்காக நன்றி கூறுதல் *(21)*; 4) அரசனுடைய மன்றாட்டுப் பாடல் *(18; 28; 63; 101; 144)*; 5) அரச ஊர்வலம் பற்றிய பாடல் *(132)*; 6) அரச திருமணம் பற்றிய பாடல் *(45)*.

இஸ்ராயேல் சமூகத்தில் அரசர் ஒரு சிறப்பிடம் வகித்தார். இறைவனால் இயற்கைக்கு மேற்பட்ட முடிவுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் தலைவனாகத் திகழ்ந்தார் அரசர். இறைவனால் ''தேர்ந்தெடுக்கப்பட்டு'' *(1 நாள் 28:5)*, அபிடேகம் செய்யப்பட்டு, அவரிடமிருந்து அரசுரிமை பெறுகிறார் அரசர். அதேபோது அவர் மக்களின் பிரதிநிதியாகவும் உள்ளார். அவர் இறைவனது திட்டத்தில் ஒரு கருவியாவார் *(யாத் 15:18; எண் 23:21; 1 சாமு 8:7; 12:12; 1 அர 22:19)*. வாக்குறுதிகளிலும் வரலாற்றின் இயற்கைக்கு மேற்பட்ட தன்மையிலும் அவர் பங்கு கொள்கிறார். அந்த வரலாற்றை உருவாக்குவதில் முக்கிய இடம் கொள்கிறார். இறைவனது பிரதிநிதியாக ஆட்சி புரிவதால், அவரது ஆட்சிபீடம் ''ஆண்டவரின் அரியணை'' என்றழைக்கப்படும் *(1 நாள் 28:5)*. இவ்வரசு இறைவனுடையதானதால், அது என்றும் முடிவில்லாமல் நிலைத்திருக்கும் *(சங் 21:4-5)*. எல்லாவற்றையும்விட, அரசர் இறை ஆதரவும் வாக்குறுதியும் பெற்ற தாவீது மரபின் பிரதிநிதியாவார். ஆகவே இஸ்ராயேல் மக்கள் தங்கள் அரசர்களிடம் பெரு மதிப்புக் கொண்டிருந்தனர். ஆகவே அரசன் இறைவனது அருளால் முறைப்படி ஆட்சிக்கு வருதல், அரசனது மகிமை, வெற்றி, நீதிமுறை, மரபு வழி, அரியணை ஏறும் நிகழ்ச்சி, திருமணம் ஆகியவற்றைப் பாடிமகிழ்ந்தனர். அதேபோது அரசனுக்காக இறைவனிடம் மன்றாடவும் தவறவில்லை. இப்பாடல்களை ஆலயத்திலோ, அரச மாளிகைகளிலோ பாடினர்.

இச்சங்கீதங்களுக்கு, தாவீதுக்கு நாத்தான் வழியாக அளிக்கப்பட்ட வாக்குறுதியின் ஒளியில் *(2 சாமு 7:4-29)*, பொருள் கொள்ள வேண்டும். இச்சங்கீதங்கள் அனைத்தும், அன்று இஸ்ராயேலை ஆண்ட அரசர்களைப் பற்றிப் பாடப்பட்டாலும், இவை அவ்வரசர்களையும் கடந்து, தாவீதின் தனிச்சிறப்பான ஒரு மகனைச் சுட்டுகின்றன. இவர் வரவிருப்பவர், இவரில் இறைவன் மகிழ்ச்சி கொள்வார். தமது மீட்பு வேலையைச் செய்ய இவரை நியமிப்பார். இவர் ஈடு இணையற்ற முறையில் அபிடேகம் பெற்றவர்; மெசியா ஆவார். தாவீதின் மகனான மெசியா பற்றிய இறைவாக்குகளில் நாத்தானது இறைவாக்கு *(2 சாமு 7)* முதலாவதாகும். இது தாவீதின் அரசமரபு உறுதியாக நிலைத்திருக்கும் என்ற வாக்குறுதியை அளித்தது. இப்பொருளில்தான் சங் *89:29-38; 132:11-12* அமைந்துள்ளன. இப்பொருளில்தான் பிற்காலத்தில் அ.ப. *2:30* கிறிஸ்துவுக்குச் சாற்றிக் கூறப்படுகிறது. ஆகவே இச்சங்கீதங்கள் மெசியாத் தன்மையுடையன. இப்பொருளில்தான் நாடு கடத்தப்பட்டதற்குப் பின்னும், இச்சங்கீதங்கள் தொகுக்கப்பட்டு வழிபாட்டில் பயன்பட்டன.

இஸ்ராயேல் அரசர்களில் பலர் நெறி தவறியவர்கள்; யாவேக்குப் பிரமாணிக்கம் அற்றவர்கள். கி.மு. 587-இல் பாபிலோனியர் எருசலேமையும் நாட்டையும் அழித்தனர். தாவீதின் அரச மரபு அழிந்தது. இந்நிலையில் அரசனைப் பற்றிப் பாடுவதிலும் அவ

னுக்காக மன்றாடுவதிலும் பொருளே யில்லை. ஆனால், மக்கள் அப்படிச் செய்த னர் என்றால் அவர்கள் உலக அரசனைக் கடந்த மற்றொருவரை மனதில் கொண் டிருக்க வேண்டும். எருசலேமின் ஊழி, அர சாட்சி ஆகியவைபற்றி உபாகம வரலாற்று ஆசிரியர் அரசராகமங்களில் கண்டனம் செய்த பின்னும் இச்சங்கீதங்கள் பாதுகாக்கப்பட்டுப் பயன்பட்டன. மாறிய நிலைக்கேற்ப இவற்றிலே சில மாற்றங்கள் செய்யப்பட் டன. இச் சங்கீதங்கள் ''ஆன்மீகமாக்கப்பட் டன''. இச்சங்கீதங்களுக்கு மெசியாப் பொருள் அளிக்கப்பட்டது. முடிவு காலத்தை நோக்கிப் புரிந்துகொள்ளப்பட் டன. அரசனும் மெசியாவும் ஒன்றாக்கப்பட் டனர் (*2; 17; 20; 21; 45; 72; 101; 110; 132*). இப்பின்னணியில்தான் இறைவாக்கினர்கள் வரவிருக்கும் மாட்சிமைமிக்க அரசர் ஒருவ ரைப்பற்றி முன்னறிவித்தனர் (எசா *9:1-7; 11:1-9*; ஆமோ *9:11*; எசே *34:23-24*). பாபி லோனிய அடிமைக்காலத்திலும் இஸ்ராயே லர் இவ்வரச மெசியாவையே எதிர்நோக்கி நம்பிக்கையுடன் வாழ்ந்தனர். முடிவு காலத் தில் வரவிருக்கும் இந்த மெசியாவுக்கு ஆன் மீகப் பண்புகளை அளித்துக் கற்பனை செய்த னர். அதேபோது அவரால் நிறுவப்படவிருக் கும் உலகியல் அரசையும் எதிர்பார்த்தனர் (தானி *7:13-14*).

இச்சங்கீதங்கள் இந்த அரச மெசியா பற்றிய கருத்தையும் நம்பிக்கையையும் முடிவுகாலத் தன்மையுடன் விவரித்தன. ஆகவே இவை மறைந்து போகவில்லை; இரண்டாம் ஆலய வழிபாட்டில் பயன்பட்டன. இவை எப்படி வரலாற்றுப் பொருத்தத்தையும் கடந்து நின் றன என்பதைப் புரிந்து பாராட்டுவது முக்கியமாகும். இக்குறிப்பு சங்கீத நூலின் பிறபகுதிகளுக்கும் பொருந்தும்.

சங் *2:72; 110*-இல் மெசியாத்தன்மை தெளி வாக உள்ளது. இது மற்றச் சங்கீதங்களை விட சங் *110*-இல் மிகச்சிறப்பாக எடுத்துக் காட்டப்படுகிறது. அரச திருமணம் பற்றிய சங் *45*-கூட, இறைவாக்கினர்களுக்கு மிக விருப்பமான திருமண உருவக முறையே; புதிய இஸ்ராயேலுக்கும் மெசியாவுக்கு மிடையேயுள்ள உறவை விளக்கப் பயன்பட் டது. இம்முறையில்தான் எபி *1:8*-இல் சங் *45* கிறிஸ்துவுக்குச் சாற்றிக் கூறப்படுகிறது. இந்த மரபைப் பின்பற்றி அரச சங்கீதங்க ளைச் சேராத *8; 16; 22; 35; 40; 41; 68; 102; 118; 120* ஆகிய சங்கீதங்களுக்கும் மெசியாப் பின்னணியில் புதிய ஏற்பாடும், ஆதிக் கிறிஸ்தவப் பாரம்பரியமும் பொருள் கொள் கின்றன. இவ்விதமே யாவேயின் மாண்பு பற்றிய சங்கீதங்களுக்கும் கிறிஸ்துவின் அரச மாண்புகள் சாற்றிக் கூறப்படுகின்றன. இவ் விதம் பொருள் அளிப்பது உடனடியான இயற்பொருளைக் கடந்து சென்றாலும், இது முறையானதே. ஏனெனில் இறைமகன் உல கிற்கு வரும்வரை சங்கீதங்கள் தூண்டி எழுப் பிய நம்பிக்கைகள் முழுவதும் செயல்பட வில்லை; செயல்படவும் முடியாது. அவரே தான் அவற்றின் நிறைவு. இறைமகனான இயேசு கிறிஸ்துவே யாவேயின் ஊழியர், அரசர், இறைவனால் நிலைநாட்டப்பட்ட வர், அபிடேகம் செய்யப்பட்டவர், மெசியா, மெல்கிசதேக்கின் முறைப்படி குரு, அர சர்க்கெல்லாம் அரசர், ஆண்டவர்க்கெல் லாம் ஆண்டவர் (திருவெளி *17:14*). இவ் வுலகை ஆளும் உரிமை இம்மெசியாவுக்கே உரியது. அவர் என்றென்றும் ஆட்சி செலுத்து வார் (திருவெளி *11:15*).

அரச சங்கீதங்கள் காலத்தால் முந்தியவை யாக இருக்கலாம். இவை இஸ்ராயேலின் அரசாட்சிக் காலத்தில் தோன்றியிருக்க வேண்டும். இவற்றின் வாழ்க்கைச் சூழ் நிலை அரசவை மன்றமாகும். ஆகவேதான் அரசவை மொழிப்பண்பையும் சடங்கு முறைகளையும் பிரதிபலிக்கின்றன. சில அரச சங்கீதங்களில் (*2; 45; 72; 110*) அரசன் எக்காலத்திற்கும் ஆள்வார்; அவரது அரசு உலகெல்லாம் பரவியதாக இருக்கும்; அதில் நீதியும், நேர்மையும், அமைதியும் மிளிரும் ஆகியவை போன்ற கருத்துக் கள் மிகைப்படுத்தப்பட்டிருப்பதாகத் தெரி கிறது. பலவாறு வரையறை செய்யப்பட்ட ஆட்சியையுடைய இஸ்ராயேல் போன்ற சிறிய நாட்டில் இத்தகைய கூற்றுக்களை

விளக்குவது கடினம். இவை, மேற்காசிய பிறஇன அரசவை இலக்கிய நடையின் பாதிப்பால் வரும் விளைவாகும். ஆனால் அவற்றை அப்படியே கடன் வாங்கவில்லை.

ஆனால் 2 சாமு 7-இல் வரும் தாவீது அரச மரபு பற்றிய நாத்தானின் இறைவாக்கு ஒளியில், இக்கருத்துக்கள் பொருளுடையன, பொருத்தமுடையன. இந்த இறைவாக்கால் இறைவன் தாவீது அரசமரபுக்கு முடிவில்லா ஆட்சியை வாக்களித்தார். தாவீது அரச மரபுக்கு இறைவன் திட்டம் செய்திருந்த குறிக்கோளை எடுத்துக்கூற, உலக அரசுகளின் மகிமைகள் பற்றிய விவரிப்பைப் பயன்படுத்தலாம். இதன் விளைவாக, இஸ்ராயேலில் அரச மெசியாக் கோட்பாடு தோன்றி வளர்ந்தது. ஆட்சி செய்யும் அரசன்பற்றிய இக்கருத்துக்களை அரச சங்கீதங்களும் பல இறைவாக்குகளும் எடுத்துக் கூறுகின்றன. அரசன் தனக்காக ஆளவில்லை. பெரும் பேற்றினையுடைய மரபின் ஒரு நபராக, இறைத்திட்டத்தின் கருவியாக ஆளுகின்றான். ஆகவே அவனது ஆற்றலையும் மகிமையையும் அதிகமாக மிகைப்படுத்த முடியாது. ஏனெனில் அவற்றிற்கு யாவேயே உத்திரவாதம் அளிக்கிறார். யாவே தாவீது மரபோடு முடிவில்லா உடன்படிக்கை செய்துள்ளார். அரசன் இந்த மரபைச் சேர்ந்தவன். அவன் வழியாக இறையரசு செயல்படும். இவ்விதம், அரச-மெசியாப் பொருளில் இச் சங்கீதங்களைப் புரிந்துகொள்ள வேண்டும்.

VI. **போதகப் பாடல்கள்:** சில சங்கீதங்கள் ஏதாவது ஒரு விதத்தில் மக்களுக்குப் போதகம் அளிக்கும் தன்மை கொண்டுள்ளன. யாவேயின் பணியில் கடைப்பிடிக்க வேண்டிய வழி முறைகளை எடுத்துக் கூறுகின்றன. இவற்றை ஞான போதகப் பாடல்கள், வரலாற்றுப் பாடல்கள், இறைவாக்குப் பாடல்கள் என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

அ. **ஞானபோதகப் பாடல்கள்:** இதில் *1; 37; 49; 73; 91; 112; 119; 127; 128; 133; 139;* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவை பொருளடக்கத்திலும், இலக்கிய நடையிலும் ஞான இலக்கியத் தொகுப்பை ஒத்தவையாகும். இவை ஞான இலக்கிய இயக்கத்திலிருந்து தோன்றியிருக்க வேண்டும். இவற்றிற்கு இஸ்ராயேல் ஞானிகளே பொறுப்பாளர்கள் என்ற கருத்து இப்போது ஆய்வாளர்களிடையே ஏற்றுக் கொள்ளப்படும்.

ஞானபோதகச் சங்கீதங்கள் இவைதான் என்று சுட்டிக்காட்டுவது சுலபமன்று. ஏனெனில் ஞான இலக்கியத்திற்கு எந்த ஒரு வடிவமும் சிறப்பானதன்று. ஆகவே பொருளடக்கத்தையும் இலக்கியப் பண்பையும் சேர்த்து மனதில் கொண்டு இத்தொகுப்பைக் கவனிக்க வேண்டும். பொருளடக்கத்தைப் பொறுத்தமட்டும் வினைப்பயன் கோட்பாடு, இறைப்பயம், நல்லோர் தீயோர் வேறுபாடு, பொறுப்புடைமை, சுறுசுறுப்பான உழைப்பு போன்ற செயல் முறையான அறிவுரைகள் முதலிய கருத்துக்கள் காணப்படவேண்டும். இவை இச்சங்கீதங்களில் காணப்படுகின்றன. இலக்கியப் பண்புகளைப் பொறுத்தமட்டும் இணையமைப்புகள், ஒப்புமைகள், எச்சரிக்கைகள், அகர வரிசை அமைப்புகள், எண்வரிசைக் கூற்றுகள், பேறுடைமைக் கூற்றுகள், இதைவிட அது மேல்-போன்ற கூற்றுகள், தந்தை மகனுக்கு அறிவுரை புகட்டும் கூற்றுகள் ஆகியவை போன்ற அமைப்புகள் காணப்பட வேண்டும். இவை சில சங்கீதங்களில் காணப்படுகின்றன. இந்த அடிப்படையில் மேலே கொடுக்கப்பட்டவை தவிர *32; 34; 111; 129; 133* ஆகிய சங்கீதங்களையும் ஞானபோதகச் சங்கீதங்களில் சேர்க்கலாம்.

இவற்றில் சங் *1; 112; 127* ஆகியவை தெளிவான ஞான போதகப்பாடல்களாகும். *32; 37; 73* ஆகிய சங்கீதங்கள் நன்றிப்பாடல் தன்மையுடையன. சங் *119* திருச்சட்டம் பற்றிய பாடலாகும். இது எல்லா இலக்கியப் பண்புகளையும் ஒருங்கே கொண்டுள்ளது. இவை தவிர, சில புலம்பல்பாடல்களிலும் *(25;31)*, நன்றிப்பாடல்களிலும் *(40;92)* ஞான போதகப் பண்புகள் காணப்படுகின்றன. பின்னதில் யாவேயை ஏற்றுக்கொள்வது போதகமாக மாறுகிறது.

ஞான இலக்கியத்தின் முக்கியமான பிரச்சனை வினைப்பயன் கோட்பாடாகும். இதன்படி இவ்வுலகிலேயே, இவ்வாழ்விலேயே, நல்லோர், சன்மானம் பெறுவர்; தீயோர் தண்டனை பெறுவர் என்றும் பாரம்பரியப் போதகம் கூறியது. பெரும்பாலான ஞான இலக்கியங்கள் இதைவாழ்வின் நியதியாக ஏற்றுக் கொண்டன. யோபு, திருவுரையாளர் போன்றவர்கள் இப்போதகம் வாழ்க்கை நடப்புக்குத் தக்கதாக இல்லை என்று கண்டுணர்ந்தனர். சில ஞான நூல்களே இப்பிரச்சனைக்குரிய உண்மையான பதிலைக் கண்டதாகத் தெரிகிறது.

இதே முறையில் ஞானபோதகச் சங்கீதங்களையும் பகுக்கலாம். பெரும்பாலான ஞான போதகச் சங்கீதங்கள் பாரம்பரிய போதகத்தை ஏற்றுக்கொண்டன. வாழ்க்கையில் நிலவும் முரண்பாட்டை விளக்கவில்லை. நல்லோர் துன்புறுதல், தீயோர் செழிப்புறுதல் ஆகியவைகளுக்கிடையேயுள்ள முரண்பாட்டை நன்குணர்ந்து இறைவன் தீயோரைத் தண்டித்தும் நல்லோர்க்கு நன்மை செய்தும் சமன்பாட்டை நிறுவும்படி சில வேண்டுகின்றன. இன்னும் சில, இப்பிரச்சனைக்கு இறுதியான விடுப்பை நோக்கி ஒருபடி எடுத்து வைக்கின்றன. இவை தீயோரது செழிப்பையும் நிறைவையும் பற்றி ஐயம் எழுப்பி, துன்பங்களை அனுபவித்தாலும் இறைவனையும் அவரால் ஏற்புடைமையையும் கொண்டிருப்பதுவே நல்லோரின் உண்மையான நன்மையாகும் என்று வலியுறுத்துகின்றன. இறுதியாக இவற்றில் *37; 49; 73* ஆகிய மூன்று சங்கீதங்கள், இப்பிரச்சனைக்கு மிக நெருங்கிய பதிலைச் சுட்டிக் காட்டுகின்றன; வினைப்பயன் இவ்வுலகம் சார்ந்த நன்மைகளைக் கொண்டிருப்பதாலோ, கொண்டிருக்காமையினாலோ அடங்கியதன்று; அது மறுவுலக வாழ்வைச் சார்ந்தது என்று சுட்டிக்காட்டுகின்றன.

இச்சங்கீதங்கள் ஞானபோதக வடிவில் அமைக்கப்பட்ட மன்றாட்டுகள் என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

**ஆ. வரலாற்றுப் பாடல்கள்:** இதில் *78; 105* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவை வரலாற்றை அடிப்படையாகக் கொண்டவை. இவை, இஸ்ராயேல் வரலாற்றில் இறைவன் செய்த அருஞ்செயல்களையும் நன்மைகளையும் வரலாற்றுக் கண்ணோடு போதகமாக எடுத்துக்கூறி, யாவேயிடம் பிரமாணிக்கமாக இருக்க, மக்களைத் தூண்டுகின்றன. இவற்றில் புகழுரையும் நன்றியுரையும் ஞான இலக்கியப் பண்புகளும் காணப்படலாம். வசதிக்காக இவற்றை ஒரு தனிப் பிரிவாகத் தொகுத்துள்ளோம். வரலாற்றுப் பண்புகள் *135; 136; 110; 114* ஆகிய புகழ்ப்பாக்களிலும் காணப்படுகின்றன. ஆகவே சிலர் இவற்றையும் இப்பிரிவில் சேர்ப்பர்.

இவற்றின் வழிபாட்டு வாழ்க்கைச் சூழ்நிலை எது என்று உறுதியாகக் கூறமுடியாது. ஒருவேளை முப்பெரும் விழாக்களில் ஒன்றாக இருக்கலாம். இவை படிப்பிக்கும் அறவுரை: இஸ்ராயேல் மக்களுக்காகவும் அவர்கள் வரலாற்றிலும் இறைவன் பல அரும் பெருஞ்செயல்கள் புரிந்துள்ளார். அவற்றை மறந்துவிடக் கூடாது. அவரிடம் தளராத நம்பிக்கை கொண்டு, அவரது கட்டளைகளைப் பிரமாணிக்கமாகக் கடைப்பிடிக்க வேண்டும். அப்படி நடந்துகொண்டால் அவர் தம் தலையீட்டால் இப்போது அனுபவிக்கும் துன்பங்களிலிருந்தும் அவர்களை விடுவிப்பார்.

**இ. இறைவாக்குப் பாடல்கள்:** இதில் *14; 50; 52; 53; 75; 81; 95* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். இவற்றில் இறைவாக்குப் பண்புகளும் கருத்துக்களும் காணப்படுகின்றன. இவை இஸ்ராயேல் மக்களுக்கு இறைவனது திட்டத்தையும் திருவுளத்தையும் எடுத்துக் கூறுகின்றன. அவர்களது எழுச்சியையும் வீழ்ச்சியையும் முன்னறிவிக்கின்றன. இறுதிக்காலத்தில் நல்லோரும் தீயோரும் எப்படி தீர்வையிடப்படுவர் என்றும் எடுத்துரைக்கின்றன. இறைவாக்கு வடிவில் இப்போதகங்கள் அளிக்கப்படுகின்றன.

தனியார் புலம்பல்பாடல்களில், அவர்கள் துன்பத்திலிருந்து விடுதலை பெற்றபின்

கூறும் நம்பிக்கையும் நன்றியும் எவ்வளவு உறுதியாக எடுத்தியம்பப் படுகின்றன வெனில், அவை குருவோ சூழநிற்போரில் ஒரு வரோ இறைவாக்குக் கூறிய பின் கூறப் பட்டனவாக இருக்கலாம் என்று முன்பே சுட்டிக் காட்டியுள்ளோம். இந்த அடிப்படை யில் இப்பிரிவில் *2; 82; 85; 110* ஆகிய சங்கீதங்களையும் சிலர் சேர்ப்பர்.

VII. **வழிபாட்டுப் பாடல்கள்:** இதில் *15; 24; 134* ஆகிய சங்கீதங்கள் அடங்கும். சிலர் இவற்றோடு *78; 81; 95; 105; 106* ஆகிய சங்கீதங்களையும் சேர்ப்பர். இவற்றில் வழி பாட்டுச் சடங்கு விவரிப்புகள் பரவிக்கிடக் கின்றமையால் இவை இப்பெயர் பெறுகின் றன.

சங் *15; 24* ஆகிய இரண்டும் ஆலயத்துள் செல்ல ஒருவன் கொண்டிருக்க வேண்டிய மனநிலையையும் தகுதியையும் விவரிக்கின் றன *(காண்க எசா 33:14-16; மீக் 6:8)*. இவற்றைத் ''தோரா வழிபாடு'' என்று குன் கெல் அழைக்கிறார். *78; 81; 95; 105; 106* ஆகிய சங்கீதங்கள் உபாகமத்தோடு *(உப 5-11)* நெருங்கிய தொடர்புடையனவாகவும் ஒரு தனிவழிபாட்டை விவரிப்பனவாகவும் தோன்றுகின்றன. உபாகம நூலில் மூன்று கருத்துக்கள் மீண்டும் மீண்டும் வருகின்றன. அவை: 1. சட்டங்களையும் நியதிகளையும் கடைப்பிடித்தல் *(உப.5:1; 6:1-9)*. 2. யாவே யின் உண்மையான வழி பாட்டமைப்புக்குப் பிரமாணிக்கமாக இருக்க எச்சரிக்கை *(உப 6:10-16; 8:11-18)...)*. இந்த எச்சரிக்கைகளைக் கடைப்பிடித்தால் வெற்றி பெறுதல், இனப் பெருக்கம் ஆகிய வாக்குறுதிகளும் *(உப 6:18-19; 7:12-15.16-24; 8:7-10;...)*, தவறினால் அச்சுறுத்தல்களும் *(உப 4:26-29; 8:19-20;...)* கூறப்படுகின்றன. 3. யாத்திரை நிகழ்ச்சியை நினைவு கூர்தல் *(உப 6:6-9; 11:18-21;...)*.

மேலே குறிப்பிட்ட சங்கீதங்கள் இக்கருத் துக்களைக் கொண்டிருப்பதோடு, இவற் றிற்குச் செயல்முறையான வடிவம் கொடுக் கும் வழிபாட்டுச் சடங்குகளைப் பிரதிபலிக் கின்றன. இவை யாவேயைப் போற்றும் அழைப்புடன் தொடங்குகின்றன *(11:1-4; 95:1-2)*. பின் உபாகமக் கருத்துகள் வருகின் றன. 1. சட்டங்களையும் கட்டளைகளையும் மனதில் வை *(81:4-5; 78:5-8; 105:8-11)*. 2. நினைவுகூரும் அறவுரை *(81:7 தொ; 105)*. 3. எச்சரிக்கை *(81:8-12; 95:8-11; 106)*. 4. வாக் குறுதிகள் *(81:13-16)*. இச்சங்கீதங்களால் சுட் டிக்காட்டப்படும் வழிபாடு, யாத்திரை நிகழ்ச்சியையும் உடன்படிக்கையையும் மக் கள் நினைவு கூர வேண்டும் என்ற உபாகமக் கட்டளையை *(உப 27:33; யோசு 8:24)* நிறைவேற்றின. செயல்முறையில் இது பெரிய விழாக்காலங்களில் நிறைவேற்றப் பட்டிருக்க வேண்டும்.

VIII. **படிக்கீதங்கள்:** சங் *121; 123; 126; 133; 134* ஆகியவை நாடு கடத்தப்பட்டுத் திரும் பிய பிற்காலத்திய மன்றாட்டுகள் அடங் கிய சிறு தொகுப்பாகும். இவை பெரிய தொகுப்புகளோடு சேர்க்கப்படலாம் என்றா லும், இவற்றை ஒரு தனித் தொகுப்பாகக் கருதுவது நன்று. சங் *121* இறைவனுடைய தொடர்ச்சியான அன்புமிக்க பாதுகாப்பை விவரிக்கிறது. சங் *123* தாழ்ச்சியோடு இறை வனது இரக்கத்தை எதிர்பார்க்கிறது. சங் *126* மீண்டும் நாடு அமைக்கப்படுவதில் அடங்கி யுள்ள வியப்பையும் ஆழ்ந்த மகிழ்ச்சியை யும் அழகாக எடுத்துரைக்கிறது. சங் *133*, நாடுதிரும்பிய மக்களிடையே நிலவிய ஒருங்கிணைந்த உறவைப் பிரதிபலிக்கின் றது. சங் *134*, இத்தொகுப்பை நிறைவு செய்யும் விதத்தில், இறைவனை அவரது திருத்தலத்தில் இரவு முழுவதும் போற்றுமாறு குருக்களையும் லேவியர்களையும் அழைக் கிறது.

இச்சங்கீதங்களுக்குப் பல விளக்கங்கள் அளிக்கப்படுகின்றன. அவற்றில் சில: 1. பாபிலோனிலிருந்து அகதிகள் நாடுதிரும் பியபோது பாடிய பாடல்கள். 2. ஆலயத்தில் இஸ்ராயேல் முற்றத்திற்குச் செல்ல பதி னைந்துபடிகளில் ஏறும்போது லேவியர் பாடியவை. 3. படிஇணைவுத்தன்மையுடை யவை. அதாவது ஓர் அடி அடுத்த அடி யுடன் தூண்டு சொல்லால் ஏணி அல்லது படி

கள்போல் இணைக்கப்படுதல். சான்றாக, *121:3-4.7-8.* 4. பெரும் விழாக்களுக்குத் திருப்பயணிகள் எருசலேமை நோக்கிச் சென்ற போது பாடிய பாடல்கள். மற்ற வற்றை விட இத்தொகுப்புக்குப் பொருந் திய விளக்கமாகும். ஆகவே இவற்றை ஏற் றப்பாடல்கள் என்றும் அழைப்பதுண்டு.

XI. **குறிப்பு:** இப்பிரிவுகள் ஒன்றை யொன்று விலக்கும் தன்மையுடையவை அல்ல. ஒன்றோடொன்று கலந்த கலப்புச் சங் கீதங்கள் பல உண்டு. சிலவற்றில் நம்பிக்கை மன்றாட்டுக்கு அடுத்துப் புலம்பலும் *(27;31)* அல்லது புலம்பலை அடுத்து நன்றியுரையும் *(28;57)*. சங் *89* புகழ்பாடியபின் இறைவாக் குக் கூறிப் புலம்பலோடு முடிகிறது. சங் *119* முழுவதும் சட்டம் பற்றியது ஆனாலும், அதிலே தனியார் புலம்பலையும் ஞான போதகக் கருத்துக்களையும் காணலாம். சில நன்றியுரைப்பாடல்களில் ஞான இலக்கியக் கருத்துக்களையும் காணலாம். இது உள்ள எழுச்சியை எடுத்துக்கூறும் பாடலுக்கு ஒவ் வாத கருத்துக்களும் சில சங்கீதங்களில் காணக்கிடக்கின்றன என்பதைச் சுட்டுகிறது. சங்கீதங்களின் இந்தக் கலப்புத் தன்மையை மனதில் கொள்வது நல்லது.

*12.* **இறையியல்:** சங்கீத நூலில் காணப் படும் இறையியலைத் தொகுத்துக் கூறுவது கடினமானதாகும். ஏனெனில் இந்நூல் பல நூற்றாண்டுகளில் தோன்றிய உள்ள எழுச்சிப் பாடல்களைக் கொண்டுள்ளது. புகழுரை யாகவோ புலம்பலாகவோ ஒருவன் தனது உள்ளத்தைத் திறந்து கொட்டும்போது, அவன் கோட்பாடுகளை விளக்குவதில்லை. ஆனால் அவனது வாழ்க்கையை நடப்பிக் கும் கோட்பாடுகள் பின்னணியாக நிற்க லாம். இந்நூல் இறைவாக்கு நூல் தொகுப் பையோ ஞானநூல் தொகுப்பையோ போன்ற தன்று. ஆகவே அவற்றில் காணப்படுவது போல் சங்கீத நூலில்திட்டமிட்ட பழைய ஏற்பாட்டு இறையியலை எதிர்பார்க் கக்கூடாது. ஆனால் இந்நூலில் இறை வாக்கு, ஞானநூல் பண்புகள் இல்லை என்று கூறவில்லை.

சங்கீதநூல், உள்ள எழுச்சிப் பாடல் வடிவி லுள்ளது. பழைய ஏற்பாட்டு விசுவாசச் சுருக்கமாக அமைந்துள்ளது. அதேசமயம், பழைய ஏற்பாடு மட்டும்தான் இந்நூலுக்குப் போதிய விளக்கவுரையாக உள்ளது. இந் நூலில் பழைய ஏற்பாட்டுக் கருத்துத் தலைப்பு கள் மறைமுகமாகக் காணப்படுகின்றன; முன் கொள்ளப்படுகின்றன. அவற்றை இந் நூல் வழிபாட்டு முறையில் எடுத்துக்கூறு கிறது; அவற்றை இறையியல், தத்துவ இயல் கூற்றுக்களாகத் தரவில்லை; யாவேயோடு கொண்டிருந்த உறவின் அனுபவ அறிவை எடுத்துக் கூறுகிறது. இறைவன் அளித்த வெளிப்பாட்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் அளிக்கும் பதிலாக அமைந்தபாடல் களையும் மன்றாட்டுக்களையும் கொண்டுள் ளது. அவற்றையும் வழிபாட்டில் அனுப வித்த வடிவில் கொடுக்கின்றது.

தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் இறைவ னோடு கொண்டிருந்த உறவுக்கு அடிப்படை யாகவும் பணிச்சட்டமுமாக அமைவது உடன்படிக்கையாகும். இறைவனைப் பற் றிய அவர்களது அனுபவ அறிவும் உடன் படிக்கையில் வேரூன்றியதாகும். இறைவ னுக்குச் செபப் போற்றுரை வடிவிலோ, ஒரு குறிப்பிட்ட வாழ்க்கைச் சூழ்நிலையிலோ அவர்கள் பதில் அளிக்கின்றனர். இப்படிப் பதில் அளிக்க உடன்படிக்கை அவர்களுக்கு உரிமை அளிக்கிறது. இந்தப் பரந்தபொரு ளில் சங்கீதங்கள் உடன்படிக்கையின் மையக் கருத்தோடு தொடர்புடையன. தேர்ந் தெடுக்கப்பட்ட மக்களின் அன்றாட வாழ் வின் எல்லாக் கூறுகளிலும் உடன்படிக்கை ஆதிக்கம் செலுத்தியதால், சங்கீதங்களில் தோன்றாத மனிதவாழ்க்கைக் கூறு இல்லை யெனலாம்.

இவ்வாறு சங்கீதநூல் முடிசூட்டுதல் போன்ற நாட்டு நிகழ்ச்சியை எடுத்துக் கூற லாம் *(2)*; தனியாரின் சொந்த மன்றாட்டைப் பிரதிபலிக்கலாம் *(3)*; இடி புயலில் இறைவ னைப் போற்றலாம் *(29)*; அவருடைய படைப்பில் காணப்படும் வியப்புக்குரியவை களில் அவரைப் போற்றலாம் *(104)*;

அவரது மீட்புச் செயல்களை அறிக்கையிட லாம்; குறிப்பிட்ட சமய விழாக்களைக் கொண்டாடலாம் (113-118); அல்லது வாழ் வின் தனிப்பட்ட அல்லது பொதுவான கூறு களை எடுத்துக் கூறலாம். இவற்றில் எல் லாம் சங்கீதங்கள் பொதுப்பணி இறையியலை அதன் மேலான பொருளில் கொண்டுள் ளன. இந்நூல் புலமை சார்ந்தவர்களுக்கு மட்டும் புரியும் கருத்தியலான இறையிய லையோ தத்துவ இயலையோ கொண்டிருக்க வில்லை. இறைவனோடு உறவுகொண்டு வாழ்ந்த அனுபவத்திலிருந்து வரும் இறை அனுபவத்தை அல்லது இறையறிவைக் கொண்டுள்ளது.

சங்கீதங்களில் காணப்படும் இறையியல் பொதுப்பாணித் தன்மையுடையது என்று கூறியதால், அதன் பொருள் பொதிந்த தன் மையையோ முக்கியத்துவத்தையோ குறைத் துக் கூறவில்லை. பொதுப்பாணி இறை யியல் இறையியலின்மேலான வடிவமாகும். ஏனெனில் இறைவனைப் பற்றிய அறிவு எல்லா மனிதர்களுக்கும் வெளிபட்ட தொன்று என்றால், அது எல்லாராலும் புரிந்து கொள்ளக் கூடியதாக்வும் எடுத்துக் கூறக்கூடியதாகவும் இருக்க வேண்டும். சங் கீதநூல் இப்பொதுப்பாணி இறையியலை உள்ளடக்கிப் போதிப்பதோடு, அதை எல் லாரும் பயன்படுத்தவும் வாய்ப்பளிக்கிறது. சங்கீதநூலைத் தொடக்கமுதல் இன்றுவரை யூத, கிறிஸ்தவ வழிபாடு உயிருள்ள விதத் தில் பயன்படுத்தி வருவதே இதற்குச் சான்றா கும்.

சங்கீதநூல் நீண்ட கால வரலாறு உடை யது. அதை விளக்கிக் கூறும்போது அதில் காணப்படும் இறையியலை வெவ்வேறு மட்டங்களில் வேறுபடுத்திப் புரிந்து கொள்ள முயல வேண்டும். நூலை முழுமை யாக எடுத்துக் கொண்டாலும் அல்லது தனிப்பட்ட சங்கீதங்களை எடுத்துக் கொண் டாலும் அவற்றின் நீண்ட வரலாறு, அவற் றின் இறையியல் பொருளையும், பொருத்த முடைமையையும் மாற்றியமைக்கும் தன்மை யுடையது. சான்றாக இரண்டாம் சங் கீதம், தொடக்கத்தில் தாவீது அரசனின் அல் லது அவரது மரபைச் சேர்ந்த ஓர் அரசனின் முடிசூட்டும் விழாவின்போது பாடப்பட்ட அரசசங்கீதமாகும். நாம் கொண்டிருக்கும் வடிவில் சங்கீதநூலில் இச்சங்கீதம் ஏற்றுக் கொள்ளப்பட்டபோது இதன்பொருள் மாறி விட்டது எனலாம். ஏனெனில் அப்போது தாவீது அரசமரபு எருசலேமில் ஆட்சி செய்ய வில்லை. அந்நிலையில் இவ்வுலகு சார்ந்த அரசனது முடிசூட்டு விழாவைப் பாடுவதில் பொருள் இல்லை. அப்போது வழிபாட்டுச் சூழ்நிலையில் மெசியாவைப் பற்றிய பாட லாக இச்சங்கீதம் மாறுகிறது. புதிய ஏற்பாட் டுக் காலத்திலும் இச்சங்கீதம் மாறுகிறது. புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் இச்சங்கீதம் மெசியாவைப்பற்றியதாகக் கருதப்படு கிறது. இவ்வாறு இதன் பொருள், பயன்படு தல் ஆகியவற்றிலுள்ள வளர்ச்சி, இதன் மற்றொரு பருமனைச் சுட்டுகிறது. மேலும் சங்கீதங்களின் சொற்களின் வடிவம் மாற வில்லை. ஆனால் காலப்போக்கில் அவற் றின் பொருளும் அலுவலும் மாறிவிட்டன. இதன் விளைவாக இச்சங்கீதத்தின் இறை யியலில் மாற்றம் இருக்கிறது, குறைந்தது வளர்ச்சியாவது இருக்கிறது. இதன் மூலவடி வில், தாவீதுமரபு அரசர்களோடு இறைவன் கொண்ட உறவின் இறையியல் பற்றிய தாகும். அந்த இறையியல், சங்கீத விளக்கவுரை வரலாற்றில், காலப்போக்கில் மெசியா வைப்பற்றிய நிறை இறையியலாக மலர்ந் தது. பிற்கால நிலை ஒரு புதிய இறையியல் அன்று. மாறாக, தொடக்கால இறையியல் கருவின் வளர்ச்சியும் விளக்கமும் ஆகும்.

சங்கீத இறையியலில் வேறுபட்ட மட்டங் கள் உண்டு என்று ஏற்றுக் கொண்டால், ஒரு முக்கிய விளைவு எழுகிறது. ஒரு சங்கீதத்தை முழுவதும் அறிந்து கொள்ள வேண்டுமென் றால், அதன் தொடக்ககாலப் பொருளையும் இறையியலையும் நிர்ணயிக்க முயற்சிக்க வேண்டும். இது எப்போதும் எல்லாச் சங் கீதங்களுக்கும் செய்யக் கூடியதன்று. பின்பு, அதன் இறையியல் வளர்ச்சியைப் புரிந்து கொள்ள வேண்டும். இவ்வாறு சங் 2, தொடக்க காலத்தில் மெசியா பற்றியதன்று.

முதலில் இஃது ஓர் அரச சங்கீதமாகும். பிற்காலத்தில் மெசியா பற்றிய சங்கீதமாக மாற்றியமைக்கப்பட்டது. புதிய ஏற்பாட்டில் இது தெளிவாக உள்ளது. ஆகவே தொடக்க காலச் சூழ்நிலையில் சங்கீதங்களின் பொருளைக் காணக் கவனமாய் முயல வேண்டும். அப்போதுதான் அவற்றின் பிற்கால இறையியல் வளர்ச்சியைப் புரிந்து பாராட்ட முடியும். அப்படிச் செய்தால், இக்காலத்திற்கும் அவற்றின் பொருத்தமுடைமையைக் கண்டுணர்ந்து, அவற்றின் இறையியல் நோக்கை விசுவாசி தன்னுடையதாக்கிக் கொள்ள வாய்ப்பு உண்டு.

இனி இறையியல் கருத்துகளுக்கு வருவோம். இவை காலப் போக்கில் வளர்ச்சியுற்றவையாகும்.

*1)* **ஆண்டவராகிய ஒருவரே இறைவன்:** விண்ணையும் மண்ணையும் படைத்த யாவே ஒருவரே உண்மையான இறைவன். அவரைத் தவிர வேறு ஓர் இறைவனே கிடையாது. இந்த அசைக்கமுடியாத விசுவாசம் சங்கீதநூல் முழுவதும் விரவிக்கிடக்கிறது *(18:31; 83:18; 114:10-11)*. இதுவே இஸ்ராயேலர் மற்றும் கிறிஸ்தவ விசுவாசத்தின் மையம். இந்தத் தொடர்ச்சியான பாரம்பரியம் பழங்கால மக்களிடையே, இஸ்ராயேலர்களிடம் மட்டுமே காணப்படும் ஒரு தனிச்சிறப்பான பண்பாகும்.

*2)* **யாவே ஒருவரே உயிருள்ள இறைவன்:** பிற இனத்தவர் தெய்வங்களாகக் கருதுபவைகள் இறைவன் அல்ல. அவை அவர்களுடைய கைவேலைப்பாடாகும். அவை உயிரற்றவை *(114: 12-15; 135: 15-17)*. பிற இனத் தேவதைகள் உயிரற்றவைகளாக இருக்கும் போது, இஸ்ராயேலர் தங்கள் இறைவனாகிய யாவேயை ''உயிருள்ளவரும்'', ''உயிரளிப்பவருமாகக்'' கண்டனர் *(84:2; 42:2; 36:9; 85:4)*. அவை யாவேக்கு ஒப்பாக முடியாது *(86:8)*. அவர்முன் அவை நிலையற்றவை, வெறுமையானவை *(90:1-6)*. அவருக்கே அவை பணிகின்றன *(95:3; 135:5)*. ஆகவே இந்த ஒரே ஒரு இறைவனாகிய யாவேக்கு மட்டும் வழிபாடு செலுத்த வேண்டும் என்று பிற இனத்தாருக்கும் இஸ்ராயேலர் அழைப்பு விடுக்கின்றனர் *(22:27; 24:1)*.

*3)* **வரலாற்றின் ஆண்டவர்:** இஸ்ராயேலர் தங்கள் வரலாற்றிலேயே இறைவனைக் கண்டு அனுபவித்து வழிபட்டனர். தாங்கள் வாழ்வதும், தங்கள் எதிரிகள் அழிவதும் இறைவனது திருவுளத்தாலேயே என்று அனுபவத்தால் அறிந்தனர் *(44:1-4)*. ஆகவே வரலாற்றில் காணப்படும் வெற்றி தோல்விகளும் அமைப்புகளும் இறைவனாலேயே அமைக்கப்பட்டவை என்று உறுதியாக நம்பினர். சிறப்பாக, அவர்கள் எகிப்திலிருந்து விடுதலை பெற்றது யாவேயின் அருள்மிக்க இடையீட்டாலேயே என்பதை சங் 105; 106 இல் வரலாற்றுப் பாணியில் எடுத்துக் கூறிப் பறைசாற்றுகின்றனர்.

*4)* **இயற்கையின் ஆண்டவர்:** நீரின் மேல் ஆண்டவர் கொள்ளும் வெற்றியையும், படைப்புப் பற்றிய மற்ற இதிகாசக் கதைகளையும் விவரிக்கும் அரியணை ஏற்றச் சங்கீதங்களை ஆராய்ந்தால், இந்த உண்மை புரியும் *(74:13-14; 89:10-15)*. அவரது படைப்பாற்றல் ஓர் இடத்தில் அவரது வார்த்தையாகவும் *(147:15)* மற்றோர் இடத்தில் அவருடைய ஆவியாகவும் *(104:30)*, வேறோர் இடத்தில் அவருடைய வார்த்தையும் ஆவியுமாகவும் *(33:6)* விவரிக்கப்படுகிறது. யாவும் யாவேயால் படைக்கப்பட்டன; யாவும் அவருடையன *(24:1;8:3.7.8; 95:4-5)*. ஆகவே படைப்பு முழுவதும் அவருக்கு அடிபணிந்து நிற்கின்றது. அவர், படைப்பின் எப்பொருளாலும் உருவமாக்கப்பட முடியாது. ஏனெனில் அவை யாவும் அவருடைய படைப்புகள். யாவற்றிலும் அவர் உள்ளார். ஆனால் அவற்றில் எதுவும் அவராவதில்லை. அவர் யாவற்றிற்கும் உயிர் அளிக்கிறார்; பொருள் அளிக்கிறார்; அடிக்காரணமாகிறார். ஆனால் அவர் அவை யாவற்றையும் கடந்தவர். இது இறைவனுக்கு எந்த உருவமும் செய்யக்கூடாது என்ற ஆழ்ந்தவிசுவாசமாகவும் கோட்பாடாகவும் வடிவெடுக்கிறது.

*5)* **மீட்பளிக்கும் இறைவன்:** படைக்கும் இறைவனே மீட்பரும் ஆவார். இரண்டு கருத்துக்களும் சங்கீதங்களில் நெருங்கியவை, முக்கியமானவை *(104:10-18; 147:19-20)*. இறைவன் மீட்பராவர் என்ற விசுவாசத்தை இஸ்ராயேலர் தங்களது யாத்திரை, வாக்களிக்கப்பட்ட நாட்டை வென்று ஆட்கொள்ளுதல் ஆகிய வரலாற்று நிகழ்ச்சிகளில் அனுபவ வாயிலாகக் கற்றுக்கொண்டனர். இந்த அனுபவத்தைத் தங்கள் வழிபாட்டில் நாடகப்பாணியில் எடுத்துக்கூறினர். புகழ்ப்பாக்களில் இறைவன் ஆற்றல் உள்ளவராகவும் மீட்பராகவும் காட்சி அளிக்கிறார். இவற்றில் அவரது உடன்படிக்கை அன்பும், வாக்குறுதிகளுக்குக் காட்டும் பிரமாணிக்கமும், எல்லாம் அறியும் பண்பும், எல்லாம் செய்யக்கூடிய ஆற்றலும் வெளிப்படுகின்றன. புலம்பல் பாடல்கள் தனியாருடையதாகவோ, சமூகத்தினுடையதாகவோ இருக்கலாம். இவற்றிலும் இறைவன், இஸ்ராயேலின் விடுதலை வீரராகவும், இரக்கமும் மன்னிப்பும் மிக்கவராகவும், தமது வாக்குறுதி பிறழாதவராகவும் தோன்றுகிறார். இஸ்ராயேலின் மீட்பராகிய இறைவனே, பாவத்திற்கு மன்னிப்புப் பெற ஏங்கும் தனி நபருக்கும், இறக்கும் ஆபத்தில் இருப்பவருக்கும் விரோதியால் அவதூறு கூறப்பட்டு சூழ்ச்சிகளால் சூழப்படுவோர்க்கும் மீட்பராக இருக்கிறார். அவர் ஒருவரிடம் மட்டும் அவர்கள் நம்பிக்கையோடு உதவிக்குத் திரும்பக் கூடும். குழந்தைக்குரிய நம்பிக்கையோடும் நச்சரிப்போடும் அவர்கள் மீட்பளிக்கும் ஆண்டவரிடம் திரும்புகின்றனர். ஆகவே புலம்பல் பாடல்களில் இறையியல் வெளிப்படுவதைக் கண்டு நாம் வியப்படைய வேண்டியதில்லை.

*6)* **இரங்கும் இறைவன்:** தங்களை இறைவன் மீட்டார் என்று விசுவாசித்த இஸ்ராயேலர் அவரது இரங்கும் தன்மையைப் போற்றிப்பாடினர். இவர் ''இரக்கமும் தயவும் நிறைந்தவர், சினம் கொள்ளத் தாமதிப்பவர், அன்பும் பிரமணிக்கமும் நிறைந்தவர்'' *(யாத் 34:6)* என்ற கருத்து சங்கீதங்களில் நிறைவாக வெளிப்படுவதைக் காண்கிறோம் *(86:5; 103:8; 145:8-9; 136:3)*. சங் 136-இல் அடிக்கொருமுறை ''அவரதுஇரக்கம் என்றென்றும் நிலைத்துள்ளது'' என்று இறைவனைப் போற்றுதல் இஸ்ராயேலின் நம்பிக்கை விளம்பலாகும். இந்த நம்பிக்கையால் உந்தப்பட்டு, இறைவனிடம் கேள்வி தொடுக்கவும் இஸ்ராயேலர் அஞ்சவில்லை. ''ஆண்டவரே! எதுவரை? *(80:4)*, எத்தனை நாள்? *(74:9)*, எவ்வளவு காலம்? *(131:1-2)*, ஏன்? *(22:1)*, எங்கே? *(42:3)*, உமது பழைய ஆதரவு எங்கே?'' *(89:50;)* போன்ற கேள்விகளும் ''செவிசாயும்'' *(142:6)*, ''உமது பார்வையைத் திருப்பிக் கொள்ளாதேயும்'' *(143:7)*, ''எழும்புவீராக!'' *(7:6)* போன்ற வேண்டுகோள்களும் இறைவனது இரக்கத்தில் இஸ்ராயேலர் கொண்டிருந்த நம்பிக்கையை எடுத்துக் காட்டுகின்றன.

இறைவன் பற்றிய இந்த அறிவையெல்லாம் இஸ்ராயேலர் வரலாற்று அனுபவத்திலிருந்து பெற்றனர். ஆகவே அவருக்கு மனிதப் பண்புகளைச் சாற்றிக் கூறும் முறையைக் கடைப்பிடித்தனர். இம்முறை பற்றி ஏற்கனவே கூறியுள்ளோம்.

*7)* **மனிதர்பால் அக்கறை கொள்ளும் இறைவன்:** இரக்கமிக்க இந்த ஒரே இறைவன் மனுக்குலத்தின் மீது அக்கறை கொள்கிறார். மேலும் மனிதரைத் தமது நண்பர்களாக இருக்க அழைக்கிறார். இக்கருத்தும் சங்கீதங்களில் பல இடங்களில் காணப்படுகிறது. இதுவும், பழங்கால இலக்கியங்களிலேயே இஸ்ராயேலுக்கே உரியதொன்றாகும் *(5:8; 117:2)*.

*8)* **ஆகவே இறைவனுக்கு நன்றி கூறுதலும் அவரைப் போற்றுதலும்** மனிதனுக்கு மிக இயல்பான காரியமாகும் *(67:2-5; 106:1)*. ஏனெனில் அவரே உலகின் அரசர், படைப்பின் ஆண்டவர். அவரது அரசமாண்பும் நமது போற்றுரையும் நெருங்கிய தொடர்புடையன *(96-99)*. சிறப்பாக அவரது மக்களாகிய இஸ்ராயேலர் அவரைப் போற்றவும் அவருக்கு நன்றி செலுத்தவும் அழைக்கப்படுகின்றனர் *(115;118)*.

*9) இறைவனது எதிரிகள்:* இவ்விதம் உன்னத நிலைக்கு அழைக்கப்பட்டாலும், பலர் இதை ஏற்றுக் கொள்வதில்லை. சிலர் அதை விரும்பாது வெறுத்து ஒதுக்கக் கூடும். இவர்களே இறைவனின் எதிரிகள் ஆவர். ஆகவே அவர்கள் சங்கீத ஆசிரியரின் எதிரிகளாகவும் ஆகின்றனர் *(83:3; 139:20-22)*. அவர்களே ''தீயோர்'', ''அறிவிலிகள்'' *(14:1; 37:9)*.

*10) நல்லோர்:* இதற்கு மாறாகச் சங்கீத ஆசிரியர் இறைவனை ''உறுதியாகப் பற்றிக் கொள்வார்'' *(63:8; 73:28; 91:14)*; அவரை அன்பு செய்வார் *(18:1)*; அவரது சட்டத்தை அன்பு செய்வார் *(119)*; அதன் விளைவாக நீதிமான்கள், நல்லவர்கள் *(12:1)*, எளியோர் *(9:12)* ஆகியோரில் ஒருவராக எண்ணப்படுவார்.

*11) தீர்ப்பிடும் இறைவன்:* இரக்கமுள்ள இறைவனே உலகைத் தீர்ப்பிடவும் செய்கிறார். நீதிமான்களுக்குச் சன்மானமும், தீயோருக்குத் தண்டனையும் வழங்குகிறார். இறைவனுடைய இந்தத் தீர்ப்பை ஆசிரியர் தன்னுடையதாக்கிக் கொள்கிறார். ஆகவே, இறைவனுடைய எதிரிகள் ஆசிரியருடைய எதிரிகளாகின்றனர். அவர்கள் தண்டிக்கப்பட வேண்டும் என்று விரும்புகிறார். அவர்களுக்கு எதிராகச் சாபம் இடுகிறார் *(137:8-9; 109:6-20)*.

*12) பாவம்:* ஆசிரியர் இறைவனை நிராகரித்தால், அது இறைவனுக்கு எதிரான குற்றமாகும், பாவம் ஆகும். ஆசிரியர் தனது பாவங்களை ஏற்று மன்னிப்புக் கோருகிறார் *(32;38)*. இறைவன் மன்னிக்கத் தயாராக இருக்கிறார் என்ற நம்பிக்கை ஆசிரியரிடம் ஆழமாக வேரூன்றியுள்ளது *(32:1; 51:3-11)*. ஆசிரியர் இறைவனை முழுமையாக நம்புகிறார். ஏனெனில் இறைவனே அவரது ''பாறை'', ''அடைக்கலம்'', ''ஆயன்'' *(18;23)*. ஆசிரியர் கூவியழைக்க இறைவன், ''தமது திருப்பெயரின் பொருட்டு'' *(23:3)* செவிசாய்ப்பார். சங்கீதங்களில் காணப்படும் இக்கருத்துகள் ''மன்றாட்டுகளுக்கு'' அடிப்படையாகின்றன. இக்கருத்துகள் நூல் முழுவதும் காணப்படுகின்றன.

*13) நல்லோர், தீயோர், பாவம், சுய* நேர்மை ஆகிய உண்மைகளைப் பொறுத்த மட்டும் ஆசிரியர் தனது காலத்து மனிதர்களோடு கொண்ட உறவில் எழுந்த உணர்ச்சிப் போக்கையே பிரதிபலிக்கிறார். பிறர் நீதிமான்களாகவும் தாழ்ச்சியுள்ளவர்களாயும் இருக்கும்போது அவர்களை ஆசிரியர் விரும்புகிறார், அன்பு செய்கிறார். அவர்கள் ''கொடுமைப்படுத்துபவர்களாயும்'', ''பொய்யர்களாகவும்'' இருக்கும்போது அவர்களை வெறுத்து ஒதுக்குகிறார். இந்த இருகோடித்தன்மைப் போக்கைக் கண்டு நாம் அதிர்ச்சி கொள்ளலாம். இப்போக்கைக் கிறிஸ்துவின் மலைப்பொழிவோடு ஒப்பிட்டு, குறைத்து மதிப்பீடு செய்யலாம். இத்தகைய போக்கு ஒத்துணர்வு கொண்டதன்று. அவசியமானதும் அன்று. இஸ்ராயேலர் அறிந்திருந்ததெல்லாம் இவ்வுலகு மட்டும்தான். அதில் இறைவனது நீதி வெளிப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்பியதை நாம் பாராட்ட வேண்டும். ஆசிரியர் தீமை இறைவனுக்கு எதிரானது என்று கருதுகிறார். ஆகவே அது தண்டனை பெறத் தகுதி பெற்றது என்று அவர் எதிர்பார்த்ததில் தவறில்லை. தீயோர்கள், கடவுள் பற்றற்றவர்கள், இறைவனது எதிரிகள். ஆகவே ஆசிரியருடைய எதிரிகளாகவும் மாறுகின்றனர் *(139:21-22)*. ஆகவே வழிபாட்டில் அவர்களுக்கு எதிராகக் கூறப்படும் இறைநீதியைப் பெறத் தகுதியுள்ளவர்களே. ஆகவே இச்சாபங்கள் தனிப்பட்டோருடைய சொந்தப் பழிவாங்குதலை எடுத்துக் கூறுவதாக எடுத்துக் கொள்வதை விட, இறைவன்பால் ஆசிரியர் கொண்ட பிரமாணிக்கத்தை எடுத்துக் கூறுவதாகவும், அவற்றை இறைவனது எதிரிகளுக்கு மாறாகக் கூறப்பட்ட வழிபாட்டுக் கண்டனமாகவும் புரிந்து கொள்ள வேண்டும். ''பாறையில் குழந்தைகளை அறைந்து கொல்லுதல்'' *(137:9)* போன்ற கூற்றுக்களை நாம் தவறாகப் புரிந்து கொள்கிறோம். இது அக்காலப்போரில் சாதாரணமாய் நிகழ்வதாகும். எக்காலத்திலும், போர் ஒருபோதும் மனிதத்தன்மை கொண்டதன்று.

இதே இருகோடித்தன்மை, தனது குற்றமற்ற தன்மையை எடுத்துக் கூறுபவரையும்

மன்னிப்புக்கோரும் பாவியையும் நீதிமான் என்றோ பிரமாணிக்கமுள்ளவர் என்றோ ஆசிரியர் விவரிப்பதிலும் காணப்படுகிறது. சங்கீதங்களில் காணப்படும் சுயநேர்மைத் தொனி நமக்கு வியப்பளிக்கலாம். சில சங் கீதங்களில், பாடுபவர் தனது குற்றமற்ற தன் மையை எடுத்துக் கூறுவது மிகவும் வலி யுறுத்தப்படுகிறது *(117:3-5; 18;21-25)*. சில இடங்களில், யாவே தலையிட வேண்டும் என்பதற்குத் தூண்டுகாரணமாக, இந்தச் சுய நேர்மையே எடுத்துக் கூறப்படுகிறது *(59:4)*. சங் 26-இல், ஆசிரியர் தன் குற்றமற்ற தன் மையை வலியுறுத்துகிறார். அதே சமயம் பரம்பரையாகத் தவ சங்கீதங்கள் எனப் படும் *6;32; 33; 51; 102; 130; 143* ஆகிய ஏழு சங்கீதங்களில் பாவங்களை ஏற்று மன்னிப் புக் கோருதல் தெளிவாக உள்ளது. சில இடங்களில் தகுதியற்றதன்மையும் பாவ முடைமையும் தெளிவாக எடுத்துக் கூறப் படுகின்றன *(25:7; 39:9;)*... ஒரே சங்கீதத்தில் குற்றமற்ற தன்மையும் குற்ற உணர்வும் ஒரு சேரக் கூறப்படுகின்றன *(32:5.10-11; 51:3.15)*.

இந்த முரண்பாட்டை உளவியல் முறை யில் விளக்க முயலுவதற்குப் பதிலாக, நடை முறைத் தன்மையாக ஏற்றுக் கொள்வது நன்று. இந்நிலை, பிரிவினைச் சகோதரர்க ளின் ஒரே சமயத்தில் நீதிமானாயும் பாவியா யும் இருக்கும் கோட்பாட்டிலிருந்து வேறு பட்டது. நீதிமான் தனது மனச்சாட்சியில் எந்தச் சுமையும் இல்லாதவன் அல்லன். அவன் ஆலயத்தில் யாவேயை அணுக அனு மதிக்கப்பட்டவன் *(15)*. அப்போது அவன் தனது குற்றத்தை அறிக்கையிடலாம். இருப் பினும் அவனது நீதித் தன்மையே ஆண்டவ ரிடம் பேசுவதற்கு உரிமை அளிக்கிறது, அவனது குற்றமற்ற தன்மையின் அறிக்கை அவன் ஆண்டவரைச் சேர்ந்தவனாக அவரை அணுக உரிமை அளிக்கிறது. இந்த அறிக்கை அவனது சுயநேர்மையை எடுத்துக் கூறு கிறது என்பதைவிட, அவனது பிரமாணிக் கத்தை எடுத்துக் காட்டுகிறது என்பது மேல். அவனது அறிக்கை வழிபாட்டுச் சூழ்நிலை யில் அறிவிக்கப்பட்டதாகும். இறைவனுக்கு அஞ்சும் நீதிமான் தன் குற்றத்தையும் அறிக்கை யிடுவான்.

*14) மரணமும் மறு உலக வாழ்வும்:* பழைய ஏற்பாட்டு மனிதர்களுக்கு மிகக் கொடிய ஆபத்து மரணமாகும். ஏனெனில் அஃதோடு அவர்களுக்கு எல்லாம் முடிவுக்கு வந்தது. தொடக்க காலச் சங்கீதங்களில், இஸ்ராயேலர் மரித்தபின் உயிர்ப்பிலும் மறு உலக வாழ்விலும் நம்பிக்கை கொண்டிருக்க வில்லை. மரித்தபின் சேயோல் அல்லது பாதாள உலகில் அவர்கள் எதிர் பார்த்தது உருவமற்ற, உணர்ச்சியற்ற, இறைவனோடு உறவற்ற வாழ்வாகும். ஆகவே இறைவன் அளித்த ஆசீர்களோடு சேர்ந்த இவ்வுலக வாழ்வை அவர்கள் நேசிக்காமல் இருக்க முடியவில்லை. இந்த ஆசீர்கள் இறைவ னைக் கொண்டிருப்பதின் அடையாளமாக வும் விளைவாகவும் கருதப்பட்டன. மரணத் துக்குப்பின் வந்த சேயோலில் இவை யாவும் அழிந்து போகின்றன. ''மரணமடைந்தவர்க ளுள் யார் உம்மைப் போற்றுவார்?'' *(6:5)*. வாழ்வில் இறைவனது ஆசீர் இல்லாத போது, பாவிகள் வெற்றி பெற்று, நல்லோர் தோல்வியுறும்போது (உமக்கு நன்றி கூறுவது யார்?), தீயோரைப் பார்த்துப் பொறாமை கொள்வோரை ஞானி எச்சரிக்கிறார் *(38)*. சங் 73-இல் ஆசிரியர் தான் தோல்வியுற்றதை உள்ளத்தை உருக்கும் விதத்தில் எடுத்துக் கூறினாலும், ''அவரது பாகமாகிய இறை வன்'' அவரை ''மகிமையில்'' ஏற்றுக் கொள் வார் என்ற உறுதியில் அவரது விசுவாசம் இறுதியாக வெற்றி பெறுகிறது.

ஆனால் மறு உலக வாழ்வு பற்றிய கருத்து, காலப்போக்கில் வளர்ச்சியுற்று, பிற் காலச் சங்கீதங்களில் ''இறைவனோடு வாழும்'' மறு உலக வாழ்வு பற்றியதாக மாறுகிறது. வாழ்வு *(15:11; 21:4; 27:13; 56:13)*, சந்ததி *(37:37; 109:13)*, இறைவன் அளிக்கும் விருந்து *(23:5; 22:26)*, இறைவ னது மாட்சிமையைக் காணும் காட்சி *(17:15; 21:6; 27:13)* ஆகிய கருத்துக்கள் இறுதிக்கால எதிர் நோக்கு உள்ளவை; மறு உலக வாழ்வு முன்னோக்குடையவை. இவை இறைவ னோடு கொள்ளும் மறு உலக வாழ்வுபற்றிய நம்பிக்கையை எடுத்துக் காட்டுகின்றன.

*15) இஸ்ராயேல் இறைவனுடைய சொந்த உடைமை:* இஸ்ராயேலர் தங்களைப் பொறுத்தமட்டும் இரு சிறப்பான கருத்துக் களைக் கொண்டிருந்தனர். முதலாவது, இறை வன் இஸ்ராயேலைத் தமது ''சொந்த உடை மையாகச்'' (135:4) சிறப்பான முறையில் தேர்ந்து கொண்டுள்ளார் என்பதாகும். மேலும் தனிப்பட்ட முறையில் பாதுகாப்பு அளிப்பதாக வாக்குறுதி அளித்துள்ளார். அவர்களிடையே சீயோனில் வாழ்கிறார் (74:2; 132:13). ஆகவே அவர் சீயோனில் உறையும் ஆலயத்தை ஆசிரியர் அன்பு செய் கிறார். அதை நோக்கித் திருயாத்திரை செல் கிறார் (74; 84; 122; 24:6). ஆலயம் இருக்கிறது என்பதே இறுதி ஆய்வில், வழிபாடு தோன்று வதற்குக் காரணமாகும்; இச்சங்கீதங்களின் வாழ்க்கைச் சூழ்நிலையாகும். இங்கு யாவே யின் மீட்பளிக்கும் பரிவன்புமிக்க செயல் களைச் செயலாக்கம் செய்து மீண்டும் வாழ்ந்து அனுபவித்தனர் இஸ்ராயேலர். இறைவன் அளித்த வாக்குறுதிகள் எல்லாம் பாதுக்காக் கப்பட்டன. இவை ஆலயத்தோடு தொடர் புள்ள பக்தி, மக்களின் விசுவாசத்தை உயிருள்ள தாகக் காப்பாற்றின. மேலும் இறைவ னால் நிறுவப்பட்ட தாவீது மரபு ஆட்சி, இறைவனது அருளின் அடையாளமாகும். ஆகவே அதற்கு ஆசிரியர் பிரமாணிக்கமாக இருக்கிறார் (89; 132).

இவையாவும் இறுதிக் கால முன்னோக் குடையவையாகும். ஆசிரியரின் அன்றாட வாழ்வில் இறைவனது திருமுன்னை எடுத் துக்காட்டின. காலப்போக்கில் இக்கருத்து கள் வளர்ச்சியுற்று, தாவீதின் மகனும் இறை வனின் இஸ்ராயேலுமாகிய கிறிஸ்தவ னுக்குச் சீயோன் கிறிஸ்துவின் திருச்சபையை அடையாளமாக (கலா 6:16) எடுத்துக் காட்டி யது.

*16) இஸ்ராயேலின் அழைப்பு:* இஸ்ராயே லர் தங்களைப் பற்றிக் கொண்டிருந்த இரண் டாவது சிறப்புக் கருத்து, காலப்போக்கில் மனுக்குலம் முழுவதையும் ஒரே இறைவ னின் வழிபாட்டுக்குக் கொண்டு வர இஸ்ரா யேல் அழைக்கப்பட்டிருக்கிறது என்ப தாகும். இது உருவகமாகச் ''சீயோன் மலை'' என்ற கருத்தில் உள்ளடங்கியுள்ளது. முன் கூறப்பட்டசீயோன் கருத்திலிருந்து வளர்ச்சி யுறும் எல்லாருக்கும் மீட்பு உரியது என்ற கருத்து சங் 87-இல் ஆற்றலோடு எடுத்துக் கூறப்படுகிறது. இக்கருத்து தாவீது அரி யணை என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டது. அபிடேகம் செய்யப்பட்ட அரச னுக்கும் மெசியாவிற்கும் அபிடேகம் செய் யப்பட்ட தாவீது முன் மாதிரியாகிறார். மெசியா உலகம் முழுவதையும் ஆள்வார் (2;110; சிறப்பாக 72; 102:25-26). இது மெசியா வின் காலமாகும். அதன் நிறைவு கிறிஸ்து வின் வருகையோடு தொடங்குகிறது. அதன் இறுதி நிறைவை நோக்கித் தொடர்ந்து முன் செல்லுகிறது. இதுவே மனுக்குலம் அனைத் திற்கும் உரிய தனது அழைப்பின் நிறைவேறு தலை இஸ்ராயேல் முன்னோக்குதலாகும். இவ்வாறு மெசியாக் கருத்தும் இறுதிக் காலத்தன்மையுடையது. இறைவன் சீயோனை விடுவிக்கும் இறுதிக்காலத்தை முன்னோக்குகிறது (69:36-37). அங்கே அவர் என்றென்றும் அரசாளுவார் (146:10).

சுருக்கமாகக் கூறினால், சங்கீத நூலின் இறையியல், மிக உன்னதராகிய யாவேயின் மேல் கொண்ட நம்பிக்கையின், சார்புடைமை யின், இறையியலாகும். அது, இஸ்ராயே லர் தங்கள் வரலாற்றில் மட்டுமின்றி, தனிப் பட்டோர் வாழ்விலும் அனுபவித்த அவரது மீட்புச் செயல்களையும் அன்பு இரக்கத்தை யும் வழிபாட்டில் நினைவு கூர்தலில் வளர்ச் சியடைந்தது; வாழ்ந்து அனுபவிக்கப்பட் டது.

*13. சங்கீத நூலும் திருச்சபையும்:* சங்கீத நூல் பழைய ஏற்பாட்டு மக்களின் செப நூலாகும். அவற்றிலே இறைவன், தமது மக்கள் தம்மிடம் கொண்டிருக்க வேண்டிய உறவு முறைகளையும், பேசும்போது பயன் படுத்த வேண்டிய சொற்களையும் இறை ஏவுத லின் வழியாகத் தருகிறார். கிறிஸ்துவும், அவரது தாயும், அப்போஸ்தலர்களும், ஆதிக் கிறிஸ்தவ மறை சாட்சிகளும் இந்நூலைத் தங்களது செப நூலாகவும் ஏற்றுப் பயன்

படுத்தியுள்ளனர். கிறிஸ்து இந்நூலைச் செபமாகவும் மேற்கோளாகவும் கையாண்டுள்ளார் (லூக் 23:46=சங் 32:5; யோவா 12:27=சங் 6:3; மத் 21:42=சங் 119:22-23; மத் 21:16=சங் 8:2). புதிய ஏற்பாட்டு ஆசிரியர்களும் இந்நூலைப் பலமுறை (111 முறை) பயன்படுத்தியுள்ளனர்.

திருச்சபை தொடக்கத்திலிருந்து இந்நூலைத் தனது செபநூலாக ஏற்றுக் கொண்டுள்ளது. ஆதி மறைசாட்சிகளும், திருச்சபையின் தந்தையரும் இந்நூலைச் செபமாகவும், காப்புரையாகவும் நிரூபணச் சான்றுகளாகவும் பயன்படுத்தியுள்ளனர். இந்நூலுக்கு முழுக்க முழுக்க இயேசுவின் பின்னணியில் விளக்கம் கொடுத்துள்ளனர். திருச்சபை இந்நூலைப் பரந்த அளவில் தனது வழிபாட்டில் பயன்படுத்தியுள்ளது. தாய்த் திருச்சபை தனது குருக்களுக்கும் துறவியருக்கும் பணிக்கும் கட்டளைச் செபத்திலும் திருப்பலியிலும் சங்கீதங்கள் கொண்டிருக்கும் சிறப்பிடத்தையும் முக்கியத்துவத்தையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். பொருள் மிக்க இப்பாடல்களை, அருள் அளிக்கும் இவ்விலக்கியத்தைத் திருச்சபை தனதாக்கி அவற்றின் பக்தியிலும் இலக்கிய இனிமையிலும் திளைத்துள்ளது.

இப்படிப் பயன்படுத்தியபோது திருச்சபை இந்நூலின் அடிப்படை மனநிலையைச் சிறிதும் மாற்றவில்லை. ஏனெனில் சங்கீத ஆசிரியர்கள் காலத்திய நிகழ்ச்சிகளாலும் சொந்த அனுபவத்தாலும் உந்தப் பட்டு அவர்கள் உள்ளத்தில் எழுந்தபோற்றுரை, மன்றாட்டு, நன்றியுரை, அச்சம், நம்பிக்கை, விசுவாசம் ஆகிய உணர்ச்சிகள் எல்லா மனிதர்களுக்கும் எக்காலத்திற்கும் பொருந்தியதாகும். இச்சங்கீதங்கள் இறைவன்பால் கொண்டிருக்க வேண்டிய மனநிலையை எடுத்துக் கூறுகின்றன. இவற்றில் பக்தியுள்ள கிறிஸ்தவன், இறைவன், அவரது பெருமை, மகிமை, நன்மை, மனிதர்பால் அவர் கொண்டிருக்கும் அக்கறை ஆகியவை கலைப்பண்புடைய வடிவில் வெளிப்படுத்தப்பட்டிருப்பதைக் காண்கிறான். அதே போது தனது விசுவாசம், கவலைகள், பாவத் தன்மை, தனது உறுதியான ஒரே மீட்பரான இறைவன்பால் தன் உள்ளத்தில் எழும் நன்றியறிதல், போற்றுரை ஆகியவையும் வெளிப்படுத்தப்பட்டிருப்பதைக் காண்கிறான். இச்சங்கீதங்களில் ஒவ்வொருவனும் தனது உள்ளத்தையே காண்கிறான். திருச்சபை தன் துன்புறுவோரின் பெயரால் புலம்பல் பாக்களையும், மகிழ்ச்சியுறுவோரின் பெயரால் நன்றிப்பாடல்களையும் தொடர்ந்து செபிக்கிறது.

இந்நூலின் சொற்களைக்கூட திருச்சபை மாற்றவில்லை; ஆனால், அவற்றின் பொருளை வளமுள்ளதாக்குகிறது; ஆழமுள்ளதாக்குகிறது; கிறிஸ்துவை விளக்கும், அவரில் நிறைவுபெறும் நூலாக இந்நூலைத்திருச்சபை பாவிக்கிறது. புதிய ஏற்பாட்டு விசுவாசி, இறைவன் தமது தன்மையின் உள்ளார்ந்த மறை உண்மைகளை வெளிப்படுத்தியதற்காகவும், தமது மகனின் குருதியால் மனிதரை மீட்பதற்காகவும், பரிசுத்த ஆவியால் மக்களை நிரப்பியதற்காகவும், இந்நூலைப் பயன்படுத்தி அவரைப் போற்றுகிறான். ஆகவே ஒவ்வொரு சங்கீதத்தையும் ''பிதாவுக்கும் சுதனுக்கும் பரிசுத்த ஆவிக்கும் மகிமையுண்டாவதாக'' என்ற போற்றுரையோடு முடிக்கிறான். இந்நூல் கிறிஸ்துவ வாழ்வுக்கு, இறைவனது அளவு கடந்த அன்பையும் யாவற்றையும் பாதிக்கும் பாவத்தின் தன்மையையும் கனாகனத்தையும், விசுவாசிக்கு வாக்களிக்கப்படும் மறை உண்மையையும் போதித்துள்ளது. இந்தப் பின்னணியில் இச்சங்கீதங்களின் மன்றாட்டுகள் உருக்கமிக்கதாகின்றன; பொருள் பொதிந்ததாகின்றன. சங்கீத ஆசிரியர்கள் போற்றிப்பாடிய நம்பிக்கை நிறைவேறி விட்டது; மெசியா வந்துவிட்டார். எல்லா நாடுகளின் மேலும் ஆட்சிசெய்யும் அவர் யாவரும் தம்மைப் போற்றுமாறு அழைக்கிறார். திருச்சபை இப்போற்றுரையை இச்சங்கீதங்களின் வழியாகத் தொடர்ந்து செலுத்துகிறது. நாமும் தாய்த் திருச்சபையோடு சேர்ந்து இச்சங்கீதங்கள் வாயிலாக நமதுமீட்பர் இயேசுவைப் போற்றிப் பயன்பெறுவோம். திருச்சபை முழு

மைக் கிறிஸ்துவின் பெயரால் இச்சங்கீதங்க ளைப் பாடிச் செபிக்கின்றது. நாமும் திருச் சபையின் தலையாகிய கிறிஸ்துவின் பெய ரால், திருச்சபையோடு சேர்ந்து, தந்தையாம் இறைவனை இச்சங்கீதங்களில் பாடி மகிழ் வோம்.

*14. சங்கீதங்களைப் படிக்க ஒருபயனுள்ள முறை:*

*1.* முதலில் எடுத்துக் கொள்ள விரும்பும் சங்கீதம் முழுவதையும் நிறுத்திக் கவனமாய் வாசிக்க வேண்டும்.

*2.* அடுத்து அச்சங்கீதம் தோன்றிய காலத் திய பழங்கால இஸ்ராயேலின் சமய-சமூகப் பின்னணியையும், காலப்போக்கில் இஸ்ரா யேலின் வாழ்விலும் வழிபாட்டிலும் அச்சங் கீதம் அடைந்த மாற்றங்களையும் முடிந்த மட்டும் அறிய முயல வேண்டும்.

*3.* அச்சங்கீதத்தின் இலக்கிய வடிவம் மற் றும் அமைப்பையும் அறிய வேண்டும்.

*4.* சங்கீதத்தை மீண்டும் வாசித்து, விவிலி யத்திலும், அச்சங்கீதம் தோன்றிய சூழ்நிலை யிலும் இறைவனது வார்த்தையை ஆழ்ந்து அனுபவித்தல் வேண்டும்.

*5.* பின்பு, அச்சங்கீதத்தில் வரும் முக்கிய சொற்கள், தொடர்கள், அவற்றோடு தொடர் புடைய மற்ற முக்கிய அல்லது கடினமான விவரங்களைக் கவனமாய் அறிதல். மேலும் விவிலியத்தின் மற்றப் பகுதிகளோடு உள்ள தொடர்புக் குறிப்புகளையும் ஒப்பிட்டுப் பார்த்தல். இது சங்கீதமும் முக்கிய சொற் களும் பரந்த விவிலிய இறையியலால் வளம் பெற்றுள்ளதை உய்த்துணர உதவும்.

*6.* இன்று, பொது வழிபாட்டிலும் தனிப் பட்ட பக்தி முயற்சிகளிலும், சமய ஒழுக்கப் பிரச்சனைகளிலும், அச்சங்கீதம் எழுப்பக் கூடிய தாக்கத்தைச் சிந்தித்துப் பார்த்தல். இது, அச்சங்கீதம் இக்காலத்திலும் நமக்கு எப் படிப் பொருத்தமுடையது என்றும், நமது தேவைகளையும் ஆர்வங்களையும் நிறைவு செய்ய உதவுகிறது என்றும் உணர உதவி செய்யும்.

*7.* மீளவும் கவனமாய்ச் செபமுறையில் சங் கீதத்தை வாசித்து அனுபவித்தல். அப்போது சங்கீதம் உண்மையாகவே செபமாக மாறும்; பயனுள்ளதாகும்.

## திருமணம் *(MARRIAGE)*

*I. பழைய ஏற்பாடு:*

*1. படைத்து ஆள்பவரின் திட்டத்தில் திரு மணம்:* உலகப் படைப்புப்பற்றிய வருணனை கள் இரண்டுமே, திருமணம் என்ற நிறுவனத் திற்கு அடிப்படையிடும் காட்சியுடன் முடி கின்றன. ''யாவே பாரம்பரிய வருணனை'' யில் (ஆதி 2) இறைவனின் நோக்கம் பின் வரும் சொற்களில் தெளிவாக்கப்படுகிறது: ''மனிதன் தனிமையாய் இருப்பது நல்லதன்று; ஆதலால் அவனுக்குத் தகுந்த துணையை உருவாக்குவேன்'' (ஆதி 2:18). எல்லாக் கால் நடைகளுக்கும் மேம்பட்டவனாய் இருப்ப தால் (2:19 தொ), மனிதன் ''தன் எலும்புக ளின் எலும்பும் தன்தசையின் தசையுமாக'' இருக்கிறவளிடத்தில் தவிர (2:21 தொ), வேறு துணையைக் கண்டுகொள்ளக் கூட வில்லை. எனவே அத்தகைய துணையை இறைவன் மனிதனுக்கெனப் படைத்துள் ளார்; இதன் பொருட்டுத்தான், அவன் தன் தந்தையையும் தாயையும் விட்டுப் பிரிந்து, அன்பினால் தன் துணைவியோடு ஒன்று கிறான்; இருவரும் ''ஒரே உடலாய்'' ஆகின்ற னர் (2:24). ஒருவருக்கொருவர் அன்பு செய்து உறுதுணையாயிருக்கும்படி இரு மனிதப் பிறவிகளை இறைவன் அழைக்கின்றார். எனவே அவ்விருவரின் மாமிச (உடல்) இணைப்பில் பாலினப்பண்பு தன் பொரு ளைக் கண்டு கொள்கிறது. தொடக்ககாலத் துப் பகுபடா நிலையில் பாலினப்பண்பு வெட்க உணர்ச்சியை அறியாதிருந்தது (2:25); பாவத்திற்குப் பின்னரோ அது தொல் லைக்கு வாய்ப்பளிக்கும் (3:7); இனித் தம்பதி கள் இருவரின் வாழ்வு துன்பதுயரங்களா லும், உணர்ச்சி வயப்பட்ட அல்லது விஞ்சி நிற்கும் சோதனைகளாலும் அலைக்கழிக்கப் படும் (3:16). இவ்வாறெல்லாம் இருந்துங் கூட, ''உயிர் உள்ளோர் எல்லோருக்கும் தாயானவள்'' (3:20) என்பவளுக்கு மகப் பேறு இறைவனின் நிரந்தர ஆசியாக நீடிக்

கும் (4:1.25தொ). படைப்புப்பற்றிய குருக்கள் பாரம்பரிய வருணனையில் (ஆதி 1), வியப்புத்தரும் விளக்கங்கள் குறைந்துள்ளன. பூமியின்மீது ஆட்சி செலுத்தவும், பலுகிப்பெருகி அதை நிரப்பவும் வேண்டுமென்று, இறைவனின் சாயலாகப் படைக்கப்பட்ட மனிதன் எனப்படுகிறவன் உண்மையில் தம்பதிகள் இருவருமாவர் (1:26 தொ). இங்குப் பாலினப் பண்பின் நோக்கமே இனப்பெருக்கம் எனத் தோன்றுகிறது; படைத்த எல்லாவற்றையும்போல் இந்த நோக்கமும் மிகச் சிறந்த தொன்றாகும் (1:31). இவ்வாறு, பாவம் மனித குலத்தைக் கறைப்படுத்துவதற்கு முன்னரே, திருமண ஏற்பாடுபற்றிய இறைவனின் சீரிய குறிக்கோள் வலியுறுத்தப்படுகிறது.

2. **இறை மக்களிடையே திருமணம்:** இறைவன் தம் மக்களுக்குத் தமது திருச்சட்டத்தைக் கொடுத்து, அவர்களுக்கு அறிவு புகட்டும் பொறுப்பை மேற்கொள்ளும்போது திருமண ஏற்பாடு மேற்குறிப்பிட்ட பண்டைக் காலத்து உயர்ந்த குறிக்கோளுடையதாய்க் காணப்படுவதில்லை. மேலும், மக்களின் முரட்டுத்தனத்தின் பொருட்டு நேர்ந்த தேவைகளுக்கென்று திருச்சட்டம் நடைமுறையில் ஓரளவு மாற்றியமைக்கப்படுகிறது (மத் 19:8). குழந்தைப்பேறு திருமணத்தின் மூலமுதலான பயனாகக் கருதப்பட, மற்றனைத்தும் அப்பயனுக்குக் கீழ்ப்பட்டதாகின்றன. இவ்வாறு, திருமணத்தின் இந்த நோக்கம் உறுதியானது எனினும், ஆதி 1-2-இல் கண்டுள்ள திருமண மூலமாதிரிக்கு மிகவும் ஒவ்வாத மூதாதையர் வழிவந்த வழக்கங்களின் அறிகுறிகளைத் திருமண நிறுவனம் காப்பாற்றியுள்ளது.

**அ. தம்பதிகளின் அன்பும் சமுதாயக் கட்டுப்பாடும்:** விவிலியத்தின் பண்டைய வாசகங்களில் கோடிட்டு வற்புறுத்தப்படும் ஒரு போக்கின்படி, தனி மனிதரின் நலனைவிட சமுதாயத்தின் நலன் முக்கியத்துவமுள்ளது. எனவே சமுதாயம் தனி மனிதர் மீது தன் சட்டதிட்டங்களையும் தேவைகளையும் சுமத்துகிறது. பெற்றோர் தம் பிள்ளைகளைக் கலந்து கொள்ளாமலே அவர்களின் திருமணத்தை ஏற்பாடு செய்கின்றனர் (ஆதி 24:2தொ; 29:23; தோபி 6:13). ஒரு குலத்தவர் தங்களிடையே நெருங்கிய உறவினர்களுக்குள் திருமணம் நிகழ்வதற்குத் தடை செய்கின்றனர் (லேவி 18:6-19); அவ்வாறே தங்கள் இனத்திற்குப் புறம்பே திருமணம் நிகழ்வதற்கும் தடை செய்கின்றனர் (உப 7:1-3; எஸ் 9). குலவழித்தோன்றல்கள் அற்றுப் போகலாகாது என்பதற்காக, ஒரு சில ஆண் - பெண் உறவுகள் தேவையென்று கட்டளையிடப்படுகின்றது; எடுத்துக்காட்டாக, மக்களில்லாத விதவை தனக்கு மிக நெருங்கிய உறவுடையானோடு கூடலாம் (Levirate) என்ற வழக்காற்று முறை (உப 25:5-10; ஆதி 38:13-15; ரூத் 2:20). இவ்வாறெல்லாம் இருப்பினும், கட்டுப்பாட்டின் இத்தகைய வெளித்தோற்றங்களினூடே, அன்பு தன்னியல்பாய் இயங்குவதாயும் முற்றிலும் உயிர்த்துடிப்புள்ளதாயும் உள்ளது. சிலவேளைகளில் சுமத்தப்பட்ட திருமண ஒன்றிப்புக்கு உள்ளம் உடன்படுகிறது (ஆதி 24:62-67; ரூத் 3:10). சில வேளைகளில், ஒருவர் ஒருவரைத் தேர்ந்து கொண்டு, ஓர் ஆணும் பெண்ணும் கூடுகின்றனர் (ஆதி 29:15-20; 1 சாமு 18:20-26; 25:40தொ). சிலவேளைகளில், பெற்றோரின் விருப்பத்திற்கு எதிராகவும் நடக்கிறது (ஆதி 26:34தொ; நீதி 14:1-10). ஆழ்ந்த அன்பால் ஒன்று கூட்டப்பெற்ற குடும்பங்களும் காணப்படுகின்றன (1 சாமு 1:8); தம்பதிகளுள் ஒருவர் இறந்த பின்னரும்கூட மற்றவர் தாமே விரும்பி பற்று மாறா உறுதிப்பாட்டுடன் (பிரமாணிக்கத்தோடு) வாழ்கின்றார் (யூதி 16:26). பெண்ணின் குடும்பத்திற்குப் பரிசம் வழங்கப்படுகிறது (ஆதி 34:12; யாத் 22:15தொ). கணவன் மனைவியின் எசமான் என்றும் சொந்தக்காரன் என்றும் உரிமை பாராட்டுகிறான். இவ்வாறெல்லாம் இருந்துங்கூட, மனைவி விலைக்கு வாங்கி விற்கும் ஒரு பண்டம்தான் என எளிதில் கூறிவிட முடியாது. ஏனெனில் மனைவி பொறுப்புக்களை மேற்கொள்ளக் கூடியவளாகவும், திருமண வாழ்வின் வெற்றிக்கும் கணவனின் நற்பெயருக்கும் பங்களித்து உதவக்கூடியவளாகவும் காணப்படுகிறாள் (பழ 31:10-31).

இன்னும் கட்டுப்பாட்டினைத் தவிர்த்து, உணர்ச்சிவயப்பட்ட உரையாடலில் ஈடுபட்டிருக்கும் சுதந்தரமான தலைமகன் தலைமகளின் அன்பை உன்னத சங்கீதம் அறிமுகப் படுத்துகிறது. இவ்வாறு அறிமுகப்படுத்தப் பெறுவது ஓர் உருவகந்தான் என்றாலும், அந்த உருவகம் இறைவனின் அன்பையும் அவர்தம் மக்களின் அன்பையும் குறிப்பது என்றாலும், உன்னத சங்கீதம் எனும் நூல் தன் காலத்து மக்கள் மனித அன்பு பற்றிக் கொண்டிருந்த மனப்பான்மையையும், பயன்படுத்திய சொற்களையும் கொண்டு அன்பைப்பற்றிப் பேசுகிறது (உ.ச. *1:12-16; 6:3-8:4* காண்).

**ஆ. பன்மனை மணமுறையும் ஒருமனை மணமுறையும்:** இனப்பெருக்கம் பற்றிய குறிக்கோளும், பெருஞ் செல்வாக்குடைய குடும்பம் வேண்டுமென்ற அக்கறையும்கூடி மிகப்பல குழந்தைகளுக்காக அவா கொள்ளத் தூண்டுகின்றன (நீதி *8:30; 12:9*; 2 அர *10:1* காண்); இப்போக்கு இயல்பாகவே பன்மனை மணமுறைப் பழக்கத்திற்கு வழி காட்டுகிறது. ''யாவே . பாரம்பரியத்தில், மேல்வரிச்சட்டம் ஒருமனை மணமுறையே'' (ஆதி *2:18-24*); இந்த மரபுபற்றியே ஆசிரியர், பன்மனை மணமுறைத் தொடக்கத்திற்குக் காட்டுமிராண்டியான இலாமேக்கு செய்த முயற்சி ஒரு காரணம் என்று குறிப்பிடும் போது, அந்த மணமுறையைக் கண்டிக்கிறார் (*4:19*). எனினும், பழைய ஏற்பாட்டில் எங்கணும் இருமனைவியரைக் கொள்ளும் பழக்கம் (1 சாமு *1:2*; தவிர, உப *21: 15* காண்), அல்லது வைப்பாட்டிகளோடும் அடிமைப் பெண்களோடும் கூடிவாழும் பழக்கம் காணப்படுகிறது (ஆதி *16:2; 30:3*; யாத் *21:7-11*; நீதி *19:1*; உப *21:10-14*). அரசர்கள் காதலாசையின் பொருட்டும் (2 சாமு *11:2...*), அரசியல் நோக்கங்களுக்காகவும் (1 அர *3:1*) பெரும் எண்ணிக்கையில் மண ஒப்பந்தங்கள் செய்கின்றார்கள். இவ்வாறு பரந்தகன்ற அந்தப்புரங்கள் தோன்றலாயின (1 அர *11:3*; 2 நாள் *13:21*). அங்கெல்லாம் உண்மையான அன்பு இயலாததாயிற்று (எஸ் *2:12-17* காண்).

எனினும், கணவன் மனைவியரிடையே தனிப்பட்ட பற்று என்பது எந்த வகையிலும் அரிதன்று. இதற்கு ஈசாக்கு (ஆதி *25:19-28*), யோசேப்பு (ஆதி *41:50*) ஆகியோர் தொடங்கி, யூதித் (யூதி *8:2-8*), இரு தோபியாக்கள் (தோபி *11:5-15*) ஆகியோர் ஈறாகச் சான்று பகர்வர். இவ்வரிசையில் எசேக்கியேலும் (எசே *24:15-18*), யோபும் (யோபு *2:9...*) உள்ளடங்குவர். பழைய ஏற்பாட்டில் ஞான ஆகமங்கள் எனப்படுபவை ஒருமனைக் குடும்பத்தின் மகிழ்ச்சியையும் தொல்லைகளையும் நினைப்பூட்டுகின்றன (பழ *5:15-20; 18:22; 19:13*; திருவுரை *9:9*; சீரா *25:17-26:18*). உன்னத சங்கீதத்தில் கண்டுள்ள தலைமகன் தலைமகளின் அன்பு பாகுபாடு அற்றது என்பது வெள்ளிடைமலை. இவையனைத்தும் அறநெறிவாழ்வில் நிகழ்ந்த படிப்படியான உண்மை வளர்ச்சியைச் சுட்டிக்காட்டுகின்றன. இந்த வளர்ச்சியின்படி, புதிய ஏற்பாட்டுக் காலத்திற்குள் யூத திருமணங்களுக்கான நடைமுறை விதி ஒருமனை மணமுறை என்றாகிவிடும்.

**இ. திருமணத்தின் நிலைபிறழாமையும் தம்பதிகளின் அன்புறுதியும் (பிரமாணிக்கமும்):** திரும்பவும், வழித்தோன்றல் பற்றிய கவலைதான் மலட்டுத் தன்மைக்காக மனைவியை விலக்கிவிடும் பழக்கத்தைப் புகுத்தக் கூடுமாகிறது; ஆனால் பன்மனை மணமுறை, இந்தச் சிக்கலைத் தீர்க்க இடங்கொடுக்கும் (ஆதி *16*). மணமுறிவை ஒழுங்குபடுத்துவதில் திருச்சட்டம், எந்தக் 'குறைபாட்டிற்காக' ஒருவன் தன் மனைவியை விலக்கிவிடலாம் என்பதை நன்கு வரையறுப்பதில்லை (உப *24:1*தொ). எனினும் நாடுகடத்தப்பட்ட காலத்திற்குப்பின்னர், அறிஞர்கள் 'இளமைக்காலத்து மனைவிக்கு' அன்புறுதி கொண்டிருத்தல் பற்றிப் பாடுகின்றார்கள் (பழ *5:15-19*). கணவன் மனைவியரின் நிலைபிறழாமையைப் புகழ்ந்து பேசுகிறார்கள் (சீரா *36:27* தொ). இறைவாக்கினர் மலாக்கியா திருமண உடன்படிக்கையை (berith) இறைவனுக்கும் இஸ்ராயேல் மக்களுக்கும் இடையில் உள்ள உடன்படிக்கையோடு (berith) ஒப்பிட்டு இறைவன், ''மணமுறிவை

வெறுக்கிறார்'' என்று கூட வற்புறுத்திக் கூறுகிறார் (*மலா 2:14 தொ*). இவ்வாறு மணவாழ்வு மிகச் சிரமமான குறிக்கோளை நோக்கி முன்னேறினாலும், புதிய ஏற்பாட்டுக் காலத்தில்கூட, யூதமதம் மணமுறிவு நிகழக்கூடியதொன்று என ஒப்புக் கொள்ளும்; அறிஞர்களும் மணமுறிவைச் சரி என்று மெய்ப்பிக்கக்கூடிய காரணங்கள் பற்றி ஆய்வு நடத்துவார்கள் (*மத் 19:3* காண்). கணவன் மனைவியரின் விசுவாசத்தை (பிரமாணிக்கத்தை)ப் பொறுத்தளவில், விபசாரம் செய்த எந்த ஒரு மனைவியும் அவளோடு விபசாரம் செய்தவனும் கொலைத்தண்டனைக்கு ஆளாவார்கள். இந்த வழக்கம் (*ஆதி 38:24*) பின்னர், எழுதிய சட்டத்தின் ஆதரவு பெறலாயிற்று (*உப 22:22; லேவி 20:10*). ஆனால் இவ்வாறு விபசாரம் செய்யலாகாது (*யாத் 20:14*) என்ற தடையுத்தரவு கணவனின் உரிமைகளை மதிப்பதற்கு முதலில் கருத்தாயுள்ளது; ஏனெனில், கணவன் மணமாகாத பெண்களோடும் பரத்தையரோடும் உறவு கொள்வதை எதுவும் சம்பிரதாயப்படி தடை செய்வதற்கில்லை; இத்தகைய உறவுகளுக்குப் பன்மனை மணமுறைப் பழக்கம் மிக எளிதில் இடங்கொடுக்கலாயிற்று. எனினும், ஒரு மனை மணமுறையைப் பெரிதுபடுத்தும் போக்கு வலுப்படுவதுபோல, விபசாரத்தைத் தடை செய்யும் போக்கும் வலுப்படுகிறது; விபசாரம் கணவனுக்கும் தடைசெய்யப்படுகிறது (*யோபு 31:9; சீரா 9:5.8.9;41: 22தொ*). இந்த வரம்புகளுக்குள், விபசாரப் பழக்கம் இறைவாக்கினர்களால் கடுமையாகக் கண்டனம் செய்யப்படுகிறது (*எசே 18:6*); இக்காரியத்தில் குற்றவாளி தாவீது அரசராகவே இருப்பினும், அவரும் கண்டனத்திற்கு ஆளாகிறார் (*2 சாமு 12*). தவிர, அறிவாளிகள், சுற்றித்திரிகிற பெண் தரக்கூடிய மயக்கங்களைப்பற்றி விழிப்பாயிருக்கும்படி இளைஞர்களை எச்சரித்து (*பழ 5:1-6; 7:6-27; சீரா 26:12-15*), திருமணவாழ்வில் பிரமாணிக்கமாய் இருப்பதற்கு அவர்களைப் பக்குவப்படுத்தப் பார்க்கிறார்கள்.

**ஈ. திருமணத்தைப் பற்றிய சமயக் குறிக்கோள்:** திருமணம் முந்த முந்தச் சமுதாய ஒழுங்கு முறையைச் சார்ந்ததாயினும், அது பற்றிய பண்டைய உரைகள் திருமணச் சமயச்சடங்குமுறைகள் பற்றிக் குறிப்பாகக் கூடப் பேசாவிடினும், ஒவ்வொரு இஸ்ராயேலனும் நன்கு அறிந்திருந்தது என்னவென்றால், வாழ்க்கைத் துணையைத் தேர்ந்து கொள்வதில் இறைவன் அவனுக்கு வழிகாட்டுகிறார் என்பதும் (*ஆதி 24:42-52*), திருமணத்தை ஒழுங்குபடுத்தும் நீதிநெறிகளை இறைவன் உடன்படிக்கையைச் சார்ந்தனவாகக் கருதுகிறார் என்பதுமாகும் (உ-ம். *லேவி 18*). இஸ்ராயேலரின் அடிப்படைச் சட்டமான பத்துக்கட்டளை, திருமண நிறுவனம் புனிதமானது என்பதற்குச் சான்றுறுதி கூறுகிறது (*யாத் 20:14*; தவிர *பழ 2:17* காண்க). தாயகம் நீத்த வாழ்வுக்குப் பின்னர், தோபியாசு ஆகமம் இறைவனால் ஆயத்தம் செய்யப்பெற்ற குடும்பத்தைப்பற்றி உயர்ந்ததொரு ஆன்மீக விளக்கம் தருகிறது (*தோபி 3:16*); குடும்பம் கடவுள் திருமுன் விசுவாசத்திலும் செபத்திலும் நிறுவப்படுகிறது (*7:11; 8:4-9*); குடும்பம் ஆதியாகமம் வரைந்துள்ள மாதிரியைப் பின்பற்றுவதாகும் (*8:6*; தவிர *ஆதி 2:18* காண்க); குடும்பம் திருச்சட்டத்தைப் பற்றுறுதியுடன் நாள்தோறும் கடைப்பிடித்து, பாதுகாப்புப் பெறுவதாகும் (*14:1.8-13*). திருமணத்தைப்பற்றிய விவிலியக் குறிக்கோள் இந்த உயர்தளத்தை வந்தடைந்தும், மோசேயின் சட்டம் தற்காலிகமாக இடங்கொடுத்த குறைபாடுகளை மேற்கொண்டுவிட்டது.

**3. திருமணப்பழக்கம்:** விவிலியம் திருமணப் பழக்கத்தை இரு பிரிவுகளாகப்பிரிக்கின்றது. அ. மண உறுதி எடுத்தல். ஆ. திருமணம்.

**அ. மண உறுதி எடுத்தல் அல்லது நிச்சயம் செய்தல்:** விவிலியத்தில் நிச்சயம் செய்த பெண்கள் மனைவி என்றும் (*ஆதி 29:21; உப 22:23-24; மத் 1:18.20*), நிச்சயம் செய்யப்பட்ட ஆண்கள் கணவன் என்றும் (*யோவே 1:8; மத் 1:9*) அழைக்கப்பட்டிருக்கின்றனர். விவிலியம் முறிவுபட்ட நிச்சயதார்த்தத்தைக் குறிப்பிடவில்லை. ஆனால் கமுராபி சட்டத்

தில் நிச்சயதார்த்தம் செய்த பிறகு ஆண் நிச்சயதார்த்தத்தை முறிவுபடச் செய்தால் கொடுக்க வேண்டிய பொருள் (Dowry) கொடுக்கப்பட மாட்டாது. ஆனால் நிச்சய தார்த்தம் பெண்வீட்டார் பக்கம் முறிவுபடச் செய்தால் இருமடங்குப் பொருளை ஆண்வீட் டாருக்கு அளிக்க வேண்டும். விவிலியத்தில் யோசேப்பு மணமுறிவுச் சீட்டுக்கொடுத்து மரியாளை மறைமுகமாக விலக்கிவிட எண் ணினார் *(மத் 1:19)*.

கடவுள் இஸ்ராயேல் மக்கள் மீது கொண்ட அன்பும் பிரமாணிக்கமும் ஒசே *2:14.20*-இல் நிச்சயதார்த்த உறவாக உருவகப் படுத்தப்படுகிறது. நிச்சயதார்த்தம் செய்யும் முறையை இப்போது காணலாம்.

*1. மணப்பெண்ணைத் தேர்ந்தெடுத்தல்:* வழக்கமாக ஆணின் பெற்றோர்தான் மகனுக்குத் தேவையான பெண்ணைத் தேர்ந்தெடுத்துத் திருமணத்திற்குத் தயார் செய்வர். உ.ம். ஆகார் இசுமயேலுக்கும் *(ஆதி 21:21)*, யூதா ஏர்க்கும் பெண் பார்த்தனர் *(ஆதி 38:6)*. சில சமயங்களில் பிள்ளைகள் தங்களுக்குப் பிடித்த பெண்ணைப் பார்த்துப் பெற் றோரிடம் கூறினால் அவர்கள் திருமணத்திற் குத் தயார் செய்வார்கள். உதாரணமாக செக்கேம் *(ஆதி 34:4,8)*; சிம்சோன் *(நீதி 14:2)*. ஏசாவைப் போன்று *(ஆதி 26:34.35)*, பெற் றோர்களுக்கு விரோதமாகத் திருமணம் செய்து கொள்பவர்கள் வெகு சொற்பமே. பெண்களின் விருப்பத்தைத் சில சமயம் கேட் பார்கள். ரெபேக்காள் விருப்பம் கேட்கப்பட் டது *(ஆதி 24:58)*. வழக்கமாக, பெற்றோர் களே பிள்ளைக்குரிய மணமகளைத் தேர்ந் தெடுப்பர் (உ-ம்) நகோமி *(ரூத் 3:1.2)*; சவுல் *(1 சாமு 8:21)*.

***2) சீதனம் அல்லது பரிசம் பரிமாறிக் கொள்ளல்:*** மூன்று வகையான சீதனங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அ) திருமணப்பரிசு அல்லது பரிசம் *(ஆதி 34:12; யாத் 22:17; 1 சாமு 18:25)*. யாக்கோபு ராகேலை மண முடிக்க ஏழு ஆண்டுகள் வேலை செய்தார் *(ஆதி 24:53)*. மோசே தன் மாமனாரின் ஆட்டு மந்தைகளைக் கவனித்துவந்தார் *(யாத் 3:1)*. இவ்வாறு ஆண் வீட்டார் பெண்வீட்டாருக் குப் பரிசம் அளித்து நிச்சயதார்த்தத்தை உறுதி செய்தார்கள். ஆசிரியர்கள் சிலரின் கருத்துப்படி பெண்ணுக்குரிய மதிப்பைப் பரிசமாகக் கொடுத்து வாங்கிக் கொள் கின்றார்கள்; ஆனால் அடிமையாக அன்று.

***ஆ) சீதனம்:*** இது மணப்பெண்ணுக்கோ மணமகனுக்கோ பெண்வீட்டார் கொடுப் பது. இது சில நேரங்களில் அடிமைகளாகக் கூட இருக்கலாம் *(ஆதி 24:59.61; 29:24)*; நிலமாக இருக்கலாம் *(நீதி 1:15; 1 அர 9:16)*; அல்லது மற்றவகைப் பொருட்களாக இருக் கலாம் *(தோபி 8:21)*.

இ) மணமகளுக்கு மணமகன் அளிக்கும் பரிசு. இது நகையாக அல்லது ஆடையாக இருக்கலாம் *(ஆதி 24:53)*.

***ஆ. திருமணச் சடங்குகள்:*** கீழே கூறப் போகும் சடங்குகள் அனைத்தும் சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டவை. ஆனால் எல்லா வற்றையும் அவர்கள் சரியாகக் கடைப்பிடித் தார்களா என்பது தெரியவில்லை.

***1) மணவாளர்களின் உடைகள்:*** மணமகள் பொன்னிழை ஆடையை அணிந்திருந்தாள் *(சங் 45:14.15)*; அணிகலன்கள் அணிந்திருந் தாள்; போர்வை போர்த்தியிருந்தாள் *(எரே 2:32)*; முக்காடிட்டு முகத்தை மூடியிருந்தாள் *(ஆதி 24:65)*. மணவாளன் மாலை அணிந் திருந்தான். இயேசு மணமகளாகக் கொள்ளும் திருச்சபை தூயஆடை அணிந்தவளாய்க் காணப்பட்டாள் *(எபே 5:27; திருவெளி 19:8; 21:2)* என்று உருவகமாகக் கூறப் பட்டுள்ளது.

***2) தோழிகளும், நண்பர்களும்:*** *சங் 45:14*-இல் இளவரசி இளம் தோழியர்களால் இளவரசனிடம் அழைத்துவரப்படுவதாகக் காண்கின்றோம். கண்டிப்பாக மணமகனுக் கும் நண்பர்கள் இருந்திருப்பார்கள் *(நீதி 14:11)*. கணவனின் தோழனாக வந்திருந்த ஒருவனைத் தன் கணவனாகத் தேர்ந்து கொண்டாள் என்று நீதி *14:20; 15:2*-இல் பார்க்கின்றோம்.

*3)* **ஊர்வலம் வருதல்:** திருமணம் குறிக்கப் பட்ட அன்றுமாலை மணமகன் தன் தோழர் களுடன் ஊர்வலமாக மணமகள் வீட்டிற்கு அழைத்துவரப்படுவான். இரவு உணவை அங்குதான் உண்பார்கள். புதிய ஏற்பாட்டில் பத்துக்கன்னியர்கள் மணவாளன் வருகைக் காகக் காத்திருக்கும் நிகழ்ச்சி (மத் 25:1-13) இதை உறுதி செய்கின்றது. அரசர்களின் திருமணங்களில் மட்டும் பெண், கணவன் வீட்டில் இரவு உணவு அருந்துவாள் (சங் 45:14தொ; மத் 22:1-14: யோவா 2:9தொ). ஆடல் பாடலுடன் ஊர்வலம் செல்லும்.

*4)* **திருமணம்:** திருமணம் பொதுவாக மணமகன் வீட்டில் (மத் 22:1-10; யோவா 2:9), இரவில் (மத் 22:13; 25:6) நடைபெறும். உற்றார் உறவினர் இதில் பங்கு கொள்வர். பந்தியில் இரசம் பரிமாறுவர் (யோவா 2:3). பந்தி மேற்பார்வையாளன் அனைத்தையும் கவனிப்பான் (2:9.10). திருமண அழைப்பை ஏற்க மறுப்பது அவர்களை அவமானப்படுத் துவது போலாகும் (மத் 22:7). விருந்தினர் கள் அனைவரும் திருமண உடை அணிய வேண்டும் (மத் 22:11.12). சில முக்கிய சந்தர்ப் பங்களில் திருமணம் மணமகள் வீட்டில் நடைபெறும் (ஆதி 29:22;தோபி 8:19).

*5)* **மணமகளை மூடுதல் அல்லதுபோர்த்து தல்:** பழைய ஏற்பாட்டில் இரு இடங்களில் (ரூத் 3:9; எசே 16:8) மணமகன் மணமகளைத் தனது போர்வையால் போர்த்துவதாகக் கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் என்ன வெனில் என்றும் அவளை அவன் பாதுகாப் பான் என்பதாகும். ஜே. எய்ஸ்லர் தனது புத்தகத்தில் மணமகன் மகமகளை ஒருவிதத் தனிப்போர்வையால் போர்த்துவதாகவும், அப்போது மணமகன் ''இன்றுமுதல், என் னைத்தவிர வேறுஎவரும் உன்மீது போர்வை விரிக்கக்கூடாது'' என்று கூறுவதாகவும் எழுதி யுள்ளார்.

*6)* **ஆசீர்வதித்தல்:** பெற்றோர்களும், நண் பர்களும் மணமக்களை வாழ்த்துவார்கள் (ஆதி 24:60; ரூத் 4:11; தோபி 7:13).

*7)* **ஒப்பந்தம்:** மணமக்கள் விசுவாச உடன் படிக்கை கொடுப்பார்கள் (பழ 2:17; எசே 16:8; மலா 2:14). தோபி 7:14-இன்படி பெண் ணின் தந்தை திருமண உடன்படிக்கை தயா ரித்து மணமகனிடமும் பெற்றோரிடமும் கையொப்பம் வாங்குவார்.

*8)* **மணவறை:** மணவறை என்பது மண மக்களுக்காக அலங்கரிக்கப்பட்ட இடம் (தோபி 7:18). இங்கேதான் மணமகனும் மண மகளும் அமர்ந்து கொண்டிருப்பார்கள்.

*9)* **முதல் இரவு:** மணமகளும், மணமக னும் பெற்றோர்களால் அல்லது தோழர் தோழிகளால் அழைத்துச் செல்லப்படுவார் கள். மணமக்கள் தனிஅறையில் விடப்படு வார்கள். அவர்கள் இருவரும் ஒன்றுகூடு முன் இருவரும் கடவுளிடம் மன்றாடுவார் கள் (தோபி 8:4).

*10)* **கன்னிமையை நிரூபித்தல்:** இரத்தம் படிந்த பெண்ணின் உள்சட்டையைக் கணவ னுக்கு நிரூபணமாகக் காட்ட வேண்டும் (உப 22:13-21).

*11)* **விழாக்கோலம்:** திருமண விழா ஒரு வாரம் (ஆதி 29:27;) அல்லது இரண்டு வாரம் நீடிக்கும் (தோபி 8:20). பாடல்கள் வாசிக்கப் படும். சங்கீதங்கள் பாடப்படும். மணமக்கள் மகிழ்ச்சியாக நாட்களைக் கழிப்பார்கள்.

*4.* **தடைசெய்யப்பட்ட திருமணங்கள்:** திரு மணத்திற்கான தடைகள் லேவி 18;20:17-21; உப 27:20-23-இல் தெளிவாகக் கொடுக்கப் பட்டுள்ளன. ''மனைவி உயிருடனிருக்க, அவளுக்குச் சக கிழத்தியாக, அவள் சகோ தரியை மணம்புரிந்து உடலுறவு கொள்ளாதே (லேவி 18:18). இதிலிருந்து முதல் மனைவி இறந்ததும் அவளுடைய சகோதரியை இரண் டாம் முறையாக மணக்கலாம். ஆபிரகாம் (ஆதி 20:12), யாக்கோபு (ஆதி 29:21-30) ஆகியோர் செய்த திருமணங்கள் பிறகு நீக் கப்பட்டன. கொரிந்து திருச்சபையில் காணப்பட்ட தவறு என்னவென்றால் தந்தை யின் இரண்டாவது மனைவியிடம், முதல் தாயின் பிள்ளை உறவுகொள்வது. இது பவு லால் கண்டிக்கப்பட்டது.

*5. சட்டங்கள்:* திருமணமான ஒருவன் குழந்தையின்றி இறந்தால் அவனுடைய சகோதரன் அவளை மணந்து கொள்வான். இவர்களுக்குப் பிறக்கும் குழந்தை முதல் கணவனுடைய வாரிசாகக் கருதப்படும் *(ஆதி 38:8-10).*

''ஒருவன் தன் சகோதரன் மனைவியோடு உடலுறவு கொண்டால், அது ஒழுக்கக்கேடு; அவன் தன் சகோதரனை இழிவுபடுத்தினான் ''*(லேவி 20:21).* எனவேதான் திருமுழுக்கு யோவான் பிலிப்புவின் மனைவி ஏரோதியாளை வைத்திருந்த ஏரோதைச் சாடுகின்றார் *(மத் 14:3.4).* புதிய ஏற்பாட்டில் லேவியரின் சட்டங்களை நன்கு கற்ற சதுசேயர்கள் உயிர்ப்பு பற்றி விவாதிக்கும்போது இச்சட்டங்களைக் கொணர்கின்றனர் *(மத் 22:23 தொ).*

*6. விவாகரத்து, மணமுறிவு:* இயேசு மத் 19:80-இல் ''உங்கள் முரட்டுத்தனத்தின் பொருட்டே உங்கள் மனைவியரை விலக்கிட மோசே அனுமதி அளித்தார்'' என்று கூறுகின்றார்.

ஒரு மனிதன் தன் மனைவியை விபசாரியென்று தவறாகக் கணக்கிடும் பொழுதும், மனிதன் மற்றொரு பெண்ணோடு உறவு கொண்டபிறகு அவளுடைய தந்தை அவளை மணக்க வற்புறுத்தும் பொழுதும் விவாகரத்து செல்லுபடியாகாது *(உப 22:28.29; யாத் 22:16.17).*

வாக்களிக்கப்பட்ட நாட்டிற்கு வரும்பொழுது மணந்த இஸ்ராயேல் அல்லாத புற வினத்துப் பெண்களையும் *(எஸ் 9;19;நெகே 13:23தொ)*, யூதப் பெண்கள் நீங்கலான புற வினத்துப் பெண்களையும் விவாகரத்து செய்வது செல்லும் *(மலா 21:10-16).*

III. *புதிய ஏற்பாடு:* திருமணத்தைப்பற்றிய புதிய ஏற்பாட்டுக் கருத்து, புதிரான இயேசுவின் வாழ்க்கையினாலேயே வார்க்கப்பெற்றுள்ளது: ''பெண்ணிடமிருந்து பிறந்தவரான'' *(கலா 4:4; தவிர, லூக் 11:27 காண்)* இயேசு, பழைய ஏற்பாடு நெடுகிலும் ஆயத்தம் செய்யப் பெற்றிருந்த குடும்பத்தை ஒத்த ஒரு குடும்பத்தைத் தமது நசரேத்து வாழ்வினால் *(லூக் 2:51...)* திருநிலைப்படுத்தினார். ஆனால், அவரே கன்னித்தாயிடமிருந்து தோன்றி, கன்னிமையில் வாழ்ந்து, திருமணத்திற்கும் மேலான தகுதிபெற்ற ஒரு நிலைக்குச் சான்று பகர்கின்றார்.

*1. கிறிஸ்துவும் திருமணமும்:*

*அ. புதிய சட்டம்:* இயேசு மோசேயின் கட்டளைக்கும் அப்பால் சென்று, ஆதியாகமத்தில் கண்டுள்ள படைப்புத் திட்டத்தினை வெளிப்படையாகக் குறிப்பிட்டு, திருமணத்தின் தனிப்பட்ட பண்பினையும் அதன் முறிவுபடாத் தன்மையையும் உறுதிப்படுத்துகிறார் *(மத் 19:1-9)*; கடவுள் தாமே ஆணையும் பெண்ணையும் இணைத்து, அவர்கள் தன்னுரிமையாக ஒருவர் ஒருவரைத் தேர்ந்து கொள்வதற்கு, அம்மணமக்களுக்கும் அப்பாற்பட்ட ஒரு திருநிலை வழங்குகின்றார். கடவுள் திருமுன் அவர்கள் ''ஒரே உடலாய்'' இருக்கிறார்கள்; மனைவியை விலக்கி விடலாம் என்று 'முரட்டுத்தனத்தின் பொருட்டு' அனுமதித்ததும்கூட இறையரசில் விலக்கப்படவேண்டும்; ஏனெனில், அவ்வரசில் தொடக்கத்திலிருந்த முழு நிறைவினுக்கு உலகம் திரும்பிவருகிறது. ''கெட்ட நடத்தைக்காக'' *(மத் 19:9)* என்று குறிப்பிடப்பெறும் விதிவிலக்கு குறிப்பாக மண முறிவுக்கு ஓர் ஆதாரம் என நிச்சயமாகச் சொல்வதற்கில்லை *(மாற் 10:11;லூக் 16:18; 1 கொரி 7: 10தொ...காண்)*; இந்த விதிவிலக்கு கவனம் செலுத்துவது, முறைகேடாகக் கொண்டிருக்கும் வாழ்க்கைத் துணையை விலக்கிவிடுதல் பற்றியதாக இருக்கலாம்; அல்லது அடுத்து வேறொரு திருமணம் செய்யக்கூடாத வகையில் கணவன் மனைவி பிரிந்து செல்லுதல் பற்றியதாக இருக்கலாம். இதனால்தான் சீடர்கள் புதிய சட்டத்தின் கடுமையைக் கண்டு திகிலுறுகிறார்கள்: ''கணவன் மனைவியின் நிலை இப்படியென்றால், மணந்து கொள்ளாதிருப்பதே நலம்'' *(மத் 19:10).*

இவ்வாறு அடிப்படை விதிகளை வலியுறுத்துவது, பாவம் செய்த மனிதர்களுக்கு

இரக்கம் இல்லை என்பதாகாது. பல வேளைகளில் இயேசு விபசாரர்களையோ, அன்பின் முழு நிறைவினின்றும் நெறி பிறழ்ந்தவர்களையோ எதிர்ப்படுகின்றார் (லூக் 7:37; யோவா 4:18; 8:3தொ; தவிர, மத் 21:31 தொ... காண்). அவர் அவர்களை வரவேற்கின்றார். அவ்வாறு செய்வது, அவர் களின் நடத்தையை ஏற்றுக் கொள்வதற்காக அன்று; மாறாக அவர்களை மனந்திருப்புத லுக்கும் மன்னிப்புப் பெறுதலுக்கும் இட்டுச் செல்வதற்காகவே. இவ்வாறு மனந்திரும்புத லும் மன்னிப்புப் பெறுதலும், கடைப்பிடிக்கத் தவறிய குறிக்கோளின் தகைமைக்கு முக்கி யத்துவம் அளிக்கின்றன.

**ஆ. திருமணம் என்னும் திருவருட் சாதனம்:** திருமண நிறுவனம் தொடக் கத்தில் கொண்டிருந்த முழு நிறை வினை மனிதனின் பாவம் மங்கலாக்கியிருந் தது. இயேசு அந்த முழு நிறைவினுக்குத் திருமணத்தைத் திரும்பக் கொணர்ந்து மன நிறைவு கொள்ளக் காணோம். அவர் திரு மணத்திற்கு ஒரு புதிய அடித்தளத்தை அமைக் கிறார். அந்த அடித்தளம் இறையரசில் திரு மணத்திற்குச் சமயத் தொடர்புள்ள புதிய தொரு தனிச்சிறப்பு வழங்குகிறது. தமது சொந்த இரத்தத்தில் நிறுவும் புதிய உடன்படிக்கையால் (மத் 26:28), அவரே திருச்சபையின் மணமகனாகிறார். அவ் வாறே திருமுழுக்கிலிருந்து பரிசுத்த ஆவி யின் ஆலயங்களாகும் கிறிஸ்துவர்களைப் பொறுத்தளவில் (1 கொரி 6:19) திருமணத் தில் ''அடங்கியுள்ள மறையுண்மை பெரிது. இது கிறிஸ்துவுக்கும் திருச்சபைக்கும் பொருந்தும்...'' (எபே 5:32). திருச்சபை கிறிஸ்துவுக்குப் பணிந்திருப்பதும், கிறிஸ்து திருச்சபைக்கு மீட்பளிக்கும் அன்பு செய்து, அதற்காகத் தம்மையே கையளித்து அதை விடுவித்ததும் முறையே கணவன் மனைவி யர் பின்பற்றவேண்டிய உயிருள்ள விதி யாகின்றன. அவர்களால் இவ்விதியைப் பின் பற்ற முடியும்; ஏனெனில் மீட்பளிக்கும் அருள் அவர்களின் அன்பையே ஆட் கொண்டு அந்த அன்புக்குரிய குறிக்கோளை வகுத்தளிக்கிறது (5:21-33). மனிதனுக்குரிய பாலினப் பண்பின் இயல்பான தேவைகளை விவேகத்துடன் பொருட்படுத்த வேண்டும் (1 கொரி 7:1-6). இப்பொழுது, புனிதமான பொருள் ஒன்று அந்தப் பாலினப் பண் பினைத் தனக்குள் ஏற்று, அதை உருமாற்று கிறது.

**2. திருமணமும் கன்னிமையும்:** ஆதியாக மம் 2:19 ''மனிதன் தனிமையாய் இருப்பது நல்லதன்று'' என்று கூறும். இயேசு நிறுவிய இறையரசில் புதியதொரு குறிக்கோள் தோன்றுகிறது. அந்த அரசை முன்னிட்டு மனிதர் ''தம்மைத்தாமே அண்ணகராக்கிக்'' கொள்கின்றனர் (மத் 19:11 தொ). இதுவே கிறிஸ்துவக்கன்னிமையின் புதிராகும். பழைய ஏற்பாட்டுக் காலத்தில் இறைமக் களை நீடித்திருக்கச் செய்யும் வண்ணம் இனப்பெருக்கம் முதற் கடமையாக இருந் தது. கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக் காலத்தில் திருமணம் எடுபடும் (மத் 22:30இணை). இவ்விரண்டிற்கும் இடைப் பட்ட காலத்தில் இரு வாழ்க்கை முறைகள் திருச்சபையில் உடனிருக்கின்றன: ''கிறிஸ்து வுக்கும் திருச்சபைக்கும் பொருந்தும்'' மறை யுண்மையினால் உருமாற்றம் பெற்றுள்ள திருமணம்; திருநிலைப்படுத்தப் பெற்றுள்ள மணமாகாதநிலை என்பன. இந்நிலை மண மான நிலையைவிட நல்லது எனப் பவுல் கருதுகிறார் (1 கொரி 7:8.25-28). இவ்வாறு, திருமணத்தைக் குறைத்து மதிப்பிடுதல் என் பதல்ல நோக்கம் (7:1 காண்); மாறாக, கிறிஸ்துவன் ஒவ்வொருவருவனும் தன் திரு முழுக்கினால் ஏற்கெனவே பங்குகொள்ளும் திருமண மறையுண்மையினை முழுமையாக ஏற்று வாழ்வதென்பதே நோக்கம் (2 கொரி 11:2). ஆண்டவர் ஒருவரை மட்டும் மகிழ் விக்க வேண்டுமென்று மனச் சிதைவின்றி அவரிடம் பற்றுக் கொண்டிருப்பவர் (1 கொரி 7:32-35) சான்று பகர்வது யாதெனில், திருமண நிறுவனம் தொடர்பு கொண்டுள்ள நிகழ்கால உலகத்தின் அமைப்பு தனது முடிவை நோக்கிக் கடந்து செல்கிறது என்ப தாகும் (7:31). ஐயத்துக்கிடமின்றி இந்தக் கண்ணோட்டத்தில்தான் பவுல், ''மனைவி உள்ளவர்களும் மனைவி இல்லாதவர்

களைப்போல் இருக்கட்டும்'' *(7:29)* என்றும், கைம்பெண்கள் மீண்டும் திருமணம் செய்ய வேண்டாம் *(7:40)* என்றும் விருப்பம் தெரிவிக்கிறார். ஆனால், இறுதியில் இவையனைத்தும் ஆண்டவரைப் பொறுத்ததாகும். கிறிஸ்துவின் மறையுடலில் பல்வேறு அழைத்தல்கள், ஒன்றையொன்று நிறைவு செய்யும் அழைத்தல்கள் உண்டு. மற்றத் துறைகளில்போலவே இத்துறையிலும், ''கடவுள் தரும் தனிப்பட்ட வரத்தை ஒவ்வொருவனும் கொண்டிருக்கிறான்; ஒருவனுக்கு ஒரு வகையான வரமும், வேறொருவனுக்கு வேறு வகையான வரமும் கிடைக்கிறது'' *(7:7; தவிர, மத் 19:11 காண்க).*

### திருமுகம் *(EPISTLE, LETTER)*

1. தொலைவினால் பிரிக்கப்பட்ட நபர்களுக்கிடையே தொடர்பு ஏற்படுத்தப் பயன்படும் சாதனமாகும் கடிதம் அல்லது மடல். இது எழுதப்பட்ட செய்தியாகும். பெரும்பாலும் நெருங்கிய நண்பர்கள், உறவினர்கள், அறிமுகமானவர்களுக்கிடையே பரிமாறிக் கொள்ளப்படும் எழுதப்பட்ட செய்தியாகும். இப்படிப்பட்ட கடிதங்கள் வரலாற்றிலே அதிகம் கிடைத்துள்ளன. இவை வணிகம், ஆட்சிமுறை, சட்ட ஏடுகள், அரசியல் அறிக்கைகள் முதலியவற்றையும் உள்ளடக்கும்.

இவற்றிலிருந்து வேறுபட்டு நிற்பது அரசாங்கக் கடிதங்கள், அதிகாரபூர்வமான கடிதங்கள், அரச ஆணைகள் முதலியவையாகும். இவை எழுதப்பட்ட தூதுச் செய்திகள்; ஆணைகளாகும். இப்படிப்பட்ட கடிதங்கள் பல எகிப்திலும், மெசபொத்தாமியாவிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இப்படிப்பட்ட கடிதங்கள் அல்லது அவற்றில் சில பகுதிகள் பழைய ஏற்பாட்டில் காணப்படுகின்றன *(உ-ம் 2 சாமு 11:15; 1 அர 5:2-6; 21:9-10; 2 நாள் 2:11-16; எஸ் 4:11-12; 7:12-26; நெகே 6:6-7; எரே 29; 1 மக் 10-15).* இப்பகுதிகளோடு சில சமயங்களில் இக்கடிதங்களின் சுருக்கமும் கொடுக்கப்படலாம் *(உ-ம். 2 அர 20:12; நெகே 2:7-8; 6:17:19; எஸ்த 3:12-13; 8:4-11; 9:20-32; யூதி 4:6-7; 1 மக் 1:41-42.44-50).* இவ்வகைக் கடிதங்கள், செய்திக்கு ஏற்றவாறு வரலாற்றுச் சூழ்நிலைகளையும் கற்பனையாகக் கொண்டிருக்கலாம். புதிய ஏற்பாட்டில் ''திருமுகங்கள்'' அல்லது ''நிரூபம்'' என்றழைக்கப்படும் தொகுப்பைத்தவிர, ஆசியாவிலுள்ள ஏழு சபைகளுக்கு யோவான் எழுதிய கடிதங்களும் *(திருவெளி 1:4-8; 2-3), அ.ப.15:23-29; 23:26-30*-இல் காணப்படும் கடிதங்களும் உண்டு.

கிரேக்க, உரோமை உலகில் கடித வடிவம் கொண்ட ஆற்றல்மிக்க பேச்சுக்களும், தத்துவ இயல் கட்டுரைகளும், அரசியல் கட்டுரைகளும் பதிப்பிக்கப்பட்டன. இவை பலரும் வாசித்துப் பயன்பெறும் நோக்கைக் கொண்டவை. இவற்றில் சிறப்புப் பெற்றவை கி.மு. முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிசேரோ என்பவரின் கடிதங்களாகும். புதிய ஏற்பாட்டில் அப்போஸ்தலர்கள் மற்றத் திருச்சபைத் தலைவர்கள், பொது, தளத்திருச்சபைகளுக்கு எழுதிய கடிதங்களைத் தமிழில் முன்பு நிரூபம் என்றும் இப்போது திருகம் என்றும் அழைக்கிறோம். இக்கடிதங்கள் அத்தலைவர்களின் எண்ணங்களைத் தூதாக எடுத்துச் சென்றன. அவர்களை அத்திருச்சபைகளில் ஒரு விதத்தில் பிரசன்னப் படுத்தின.

2. கடிதங்கள் எழுதுவதற்கு எழுத்தர்கள் பயன்படுத்தப்பட்டனர். எழுதப்பட்ட ஏட்டுச்சுருள் சுருட்டப்பட்டு, இரகசியத்தைக் காப்பாற்ற முத்திரையிடப்பட்டது. இம்முத்திரை இரகசியத்தைக் காப்பதோடு அதிகாரத்தையும் சுட்டியது *(1 அர 21:8; எஸ்த 3:12; 8:8).*

இப்படி முத்திரையிடப்பட்ட கடிதங்கள், நடந்துசெல்லும் தூதுவர்கள் வழியாகவோ, புரவிகள், ஒட்டகங்கள் மீது அமர்ந்து செல்லும் விரைவு அஞ்சலர் வழியாகவோ குறிப்பிட்ட இடங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டன *(எஸ்த 3:13; 8:10).* அக்காலத்திலிருந்த அஞ்சல் அமைப்பு பெரியநாடுகள், பேரரசுகளின் ஆட்சித் தேவைகளை மட்டும்

தான் நிறைவு செய்தன (2 நாள் 30:6.10;எஸ்த 3:13.15; 8:10.14; 1 மக் 1:44). தனிநபர்களுக்கு அப்படிப்பட்ட அமைப்பு இருக்கவில்லை. வசதி வாய்ந்த செல்வந்தர்கள் தங்களுக் கெனச் சொந்த அமைப்புகளை வைத்துக் கொண்டனர். பவுல் தன் திருமுகங்களைத் தன் உடன் ஊழியர்கள் வழியாக அனுப்பி னார். இவர்களும் தளத்திருச்சபையை ஓரளவு அறிந்திருந்தனர் (பிலி 2:25-30; கொலோ 4:7-9; காண். எபே 6:21-22).

3. **வடிவமும் நடையும்:** கடிதங்கள் பல, எழுதுதலைத் தொழிலாகக் கொண்ட எழுத் தர்களால் எழுதப்பட்டதால், கடிதத்தின் பொருளடக்கம், மரபாலும், சூழ்நிலைக் கேற்றவாறும் ஒரு குறிப்பிட்ட வடிவம் எடுத்தது. பழங்காலக் கடிதங்கள், குறிப்பா கக் கிரேக்க மொழிக் கடிதங்கள் முன்னுரை, முக்கிய பகுதி, முடிவுரை என்ற பொது வடிவம் எடுத்தன (2 நாள் 2:11-16; எஸ் 4:11.17; 5:7; 7:12-26; எஸ்த 13:1-7; 1 மக் 10:18-20; 2 மக் 1:1-2:18). கிரேக்க, அரமேயக் கடிதங்கள் சில, நலம் விசாரிப்பையும் கொண்டிருந்தன.

புதிய ஏற்பாட்டுத் திருமுகங்கள் குறிப் பாக, பவுலினுடையவை, கிரேக்க வடிவங்க ளால் வரையறுக்கப் பெறவில்லையாயி னும், ஓரளவு அவற்றாலும் யூத மரபுகளா லும் பாதிக்கப்பட்டுள்ளன. பவுல் பயன் படுத்திய வடிவம், திருச்சபையின் கொள்கை களையும், போதகத்தையும் அறவுரைகளை யும் அளிக்கும் தனிப்பட்ட வடிவமாகியது. பவுலின் கடிதங்களும், அவருடைய ஆதிக் கத்தால் பாதிக்கப்பட்ட கிறிஸ்தவக் கடிதங்க ளும், கிரேக்க முறையைப் பின்பற்றி முன் னுரையோடு தொடங்கின. இதில் வாழ்த்து ரைகளும், சிலவற்றில் கடிதத்தின் நோக்க மும் எடுத்துக் கூறப்படும் (உரோ 1:1-7; கலா 1:1-5; 1 தெச 1:1; தீத் 1:1-4; பில 1-3; யாக் 1:1; 1 பேதுரு 1:1-2; 2பேதுரு 1:1-2; 2 யோவா 1:1-3; யூதா 1:1-2; திருவெளி 1:4-5). இஃதோடு எழுதுபவரின் பெயரும், சிலசமயம் உடன் ஊழியரின்பெயரும், யாருக்குக் கடிதம் எழு தப் படுகிறதோ அவரின் பெயரும் கொடுக் கப்படுகின்றன. கடிதம் அனுப்புபவருக்கும் அதைப் பெறுபவருக்குமிடையே உள்ள உற வும், சில சமயங்களில் கொடுக்கப்படுகிறது. ''மகிழ்ச்சியாயிருங்கள்'' என்ற கிரேக்க வாழ்த்துரையைப் பவுல் ஒருபோதும் பயன் படுத்துவதில்லை. அதற்கு மாறாக, ''சமாதா னம்'' என்று எபிரேய வாழ்த்துரையைக் (சாலோம்) குறிக்கும் ''அருள், சமாதானம்'' என்ற வாழ்த்துரையைப் பயன்படுத்துகிறார். இவ்வாறு வாழ்த்துரை ஆசீராக மாறுகிறது. சில சமயம் ''நம் தந்தையாகிய கடவுளிட மிருந்தும் ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவிட மிருந்தும்'' போன்ற கூற்றுக்களும் சேர்க் கப்படும்.

கிரேக்கக் கடிதங்கள், சில சமயம், முன் னுரைக்குப்பின் கடவுளுக்கு நன்றிகூறும் பகுதியைக் கொண்டிருக்கும் (2 மக் 1:11-17). பவுலின் கடிதங்களும் அவை போன்றவை யும் சாதாரணமான நன்றியுரையைக் கொண் டுள்ளன. சில சமயங்களில் கடிதம் பெறுப வர்க்கான மன்றாட்டும் அமையும் (1 கொரி 1:4-9; எபே 1:15-23; பிலி 1:3-11; 2 தெச 1:3-12; 2:13-14; 1 திமொ 1:3-7); யூத வழிபாட்டுக்கொத்த இறை போற்றுரை அமையும் (2 கொரி 1:3-4; எபே 1:3-14; 1 பேதுரு 1:3-5); அல்லது மகிழ்ச்சியை எடுத் துக்கூறும் (2 யோவா 4; 3 யோவா 3-4). சாதாரணமாகப் பவுலின் நன்றியுரை, கடிதம் பெறுபவரின் பிரமாணிக்கத்தில் கவனம் செலுத்தும்; கடிதத்தில் காணப்படும் அக்கறை களைப் பிரதிபலிக்கும். இதற்கு மாறாக கலா 1:6-இல் வரும் கூற்று கவனிக்கத்தக்க தாகும்.

இந்தக் கிறிஸ்தவ கடிதங்களில் முக்கிய பகுதிகளைத் தொடங்கும் முன்னும் ஒரு பகுதி யிலிருந்து மற்றொரு பகுதிக்குச் செல்லும் போதும் பின்வரும் சொற்றொடர்கள் காணப்படுகின்றன: ''சகோதரர்களே நான் உங்களைக் கேட்டுக் கொள்வது'' (உரோ 15:30; 16:17; 1 கொரி 1:10; 2 கொரி 10:1; 1 பேதுரு 2:11); ''உங்களுக்கு நாங்கள் சொல்ல விரும்புவது'' (2 தெச 2:1; 2 யோவா 5); ''...இருப்பதாக எங்கும் பேச்சு'' (1 கொரி

5:1) ''இப்பொழுது... குறித்துப் பேசுகிறேன்'' (1 கொரி 7:1; 8:1; 12:1; 16:;1); ''சகோதரர் களே... நினைவுறுத்தவிழைகிறேன்'' (1 கொரி 15:1; 2 பேதுரு 1:12; யூதா 5); ''உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்'' (2 கொரி 8:1; பிலி 1:12); ''.... என்பது உங்களுக்குத் தெரியும்'' (1 தெச 2:1; 2 திமொ 1:15) எனவும் மடலைமுடிக்கும் முறையில் ''சகோதரர் களே, இறுதியாக...'' (2 கொரி 13:11; எபே 6:10; பிலி3:1; 4:8; 1 தெச 4:1) எனவும் வரும். சில சமயம், போதகப் பகுதியிலிருந்து அற வுரைப் பகுதிக்குச் செல்லும்போது போற்று ரைப்பகுதி குறுக்கிடும் (உரோ 11:36-12:1; எபே 3:21-4:1; 1 தெச 3:11-4:1). பவுலின் கடிதங்களில் காணப்படும் மற்றொரு பண்பு ''அப்போஸ்தல பிரசன்னத்தைப் பற்றிய குறிப்புகளாகும். இதிலே பவுல் தனது பய ணத்திட்டங்களையும், கடிதம் பெறுபவரைச் சந்திக்க விரும்பும் நோக்கத்தையும், அவ ரோடு பவுல் கடந்தகாலத்தில் கொண்டிருந்த தொடர்புகள், அவரோடு வருங்காலத்தில் கொண்டிருக்க விரும்பும் உறவு ஆகியவை பற்றிய குறிப்புகளையும் காணலாம் (1 கொரி 4:17-21; 16:5-12; பிலி 2:19-30; 1 தெச 2:17-3:11; பில 22; எபி 13:19).

சபைகளைத் தன் பயணப்பணியோடு இணைக்கும் கூறாகப் பவுல் கடிதங்களை முடிக்கும் கிரேக்க முறையைப் பயன்படுத்து கிறார்; இதிலே பிறரிடமிருந்து வாழ்த்துரை கூறுகிறார்; பிறருக்கு வாழ்த்துரை கூறச் செய்கிறார் (உரோ 16:3-16. 21-23; 2 கொரி 13:12-13; கொலோ 4:10-15.18; தீத் 3:15; 1 பேதுரு 5:13-14;3 யோவா 15). இக்கிறிஸ்தவ கடிதங்களின் முடிவுரையில் இறுதி அற வுரை (உரோ 16:17-20; 1 கொரி 16:13-18; 2 கொரி 13:11; எபி 13:22), ஆசீர்கள் (1 கொரி 16:23; கலா 6:16.18; எபே 6:23-24; 2 தெச 3:16.18), இறை போற்றுரைகள் (உரோ 16:25-27; எபி 13:20-21; 1 பேதுரு 5:11; யூதா 24-25) ஆகியவையும் காணப்படும்.

பவுல் தனது திருமுகங்களில் பலவகை யான நடையைப் பயன்படுத்துகிறார். இடை இடையே கிறிஸ்தவர் பாடல்களும், விசுவாச அறிக்கைகளும் இடைப்புகும் (உரோ 1:3-4; 1 கொரி 15:3-7; 16:22; கொலோ 1:15-20; 1 திமொ 3:16). இத்தகைய பகுதிகள் கிறிஸ்தவச்சிந்தனை உலகிற்கு அமைப்பு அளித்தன. கடிதம் எழுதுபவர்களுக்கும் அதைப் பெறுபவர்க்கும் இணைப்பை உண் டாக்கின.

தொடக்ககாலக் கிறிஸ்தவ நூல்களில் சில பாரம்பரியமாகத் திருமுகங்கள் என்றழைக் கப்பட்டாலும், இவை ஓரளவே கடித அமைப்பைக் கொண்டுள்ளன. இவை சமய அறவுரைகளாகும். இவற்றிற்கு முன்னோடி யாக எரேமியாவின் கடிதங்களும் (எரே 29), எலியாவின் கடிதமும் (2 நாள் 21:12-15) அமைந்துள்ளன. இவை கடித வடிவத்தில் இருப்பதைவிட இறைவாக்கு வடிவில் உள் ளன. முன்னுரையைத் தவிர (திருவெளி 1:4-5) ஏழு சபைகளுக்குரிய கடிதங்களில் (திருவெளி 2-3) கடித வடிவமேயில்லை. தூரத்திலுள்ள மக்கள் சபைக்காக, கிறிஸ்தவ சமய அறவுரைகள் கடித வடிவில் எழுதப் படுவது சாதாரணமாக இருந்தது (காண். எபிரே யர், யாக்கோபு, எபேசியர்). பொதுவாக தொடக்ககாலக் கிறிஸ்தவ கடிதங்களில் சமய அறவுரைப் பண்புகள் மிகுந்து காணப்படு கின்றன.

## திருமுழுக்கு (BAPTISM)

'மூழ்குவித்தல், கழுவுதல்' எனப்பொருள் படும் 'பேப்டைன், பேப்டிசைன்' என்ற சொல்லுக்குத் தமிழாக்கமாகத் 'திருமுழுக்கு' என்ற சொல் பயன்படுகிறது. எனவே திரு முழுக்கு மூழ்குவித்தலை அல்லது கழுவுத லைக் குறிப்பதாகும். சமயங்களைப்பற்றிய வரலாற்றில் மிகவும் அடிக்கடி கண்டுள்ளது போல, துப்புரவாக்குவதற்கும் உயிரளிப்ப தற்கும் அடையாளமாகத் தண்ணீரை உரு வகமாய்ப் பயன்படுத்தியிருக்கிறார்கள்; எனவே, புறச் சமயச் சடங்குமுறைகளில் தண்ணீர் இவ்வாறு இடம் பெற்றிருப்பது எதிர்பாராத ஒன்று அல்ல. தண்ணீர் பயன் படுத்தப்படும் புறச்சமயச் சடங்குமுறைகள் கிறிஸ்துவ திருவருட்சாதனத்தை (திருமுழுக் கினை)ப் பலவாறு ஒத்திருப்பது முற்றிலும்

புறத் தோற்றத்தில் மட்டுமே; இவ்வாறு புறத் தோற்றத்தில் ஒத்திருப்பது இவைகளின் மிக உள்ளார்ந்த இயல்புகளை அடிப்படையாகக் கொண்டதன்று. எனவே, திருமுழுக்கினுக்கு ஒத்தவைகளை முதன்முதலாகப் பழைய ஏற் பாடு, யூதமக்களின் கோட்பாடுகள், யோவா னின் திருமுழுக்கு ஆகியவற்றில் தேட வேண்டும்.

I. *பழைய ஏற்பாடும் யூதர் சமயமும்*

*1. நீரின் துப்புரவாக்கும் தனியியல்பு பழைய ஏற்பாட்டிலே மிகத் தெளிவாகக் காணப்படுகிறது:* இத்தனியியல்பு புனித வர லாற்றின் நிகழ்ச்சிகள் பலவற்றில் வெளிப் பட்டது. இந்நிகழ்ச்சிகள் பிற்காலத் தில் திருமுழுக்கின் முன்னடையாளங்களா கக் கருதப்படும். எடுத்துக்காட்டாக, பெரு வெள்ளம் *(1 பேதுரு 3:20தொ காண்),* அல்லது செங்கடலைக் கடந்து சென்றது *(1 கொரி 10:1தொ காண்).* தீட்டுப்பட்ட பலப்பல காரியங்களில், திருச்சட்டம் சடங்கு முறைப்படி கழுவுதலை விதிக் கிறது. இவ்வாறு கழுவுதல் தூய்மைப்படுத்தி, வழிபாட்டுக்கான தகுதியளிக்கிறது *(எண் 19:2-10; உப 23;10தொ).* பாவத்தினின்று தூய்மைப்படுத்தும் தண்ணீர் தாராளமாய்ப் பொழியப்படும் என்று இறைவாக்கினர்கள் வெளிப்படையாக அறிவிக்கின்றார்கள் *(செக் 13:1).* எசேக்கியேல், இவ்வாறு இறு திக்காலத்தில் தூய்மைப்படுத்துவதை இறை வனின் ஆவியானவரின் கொடையோடு இணைக்கின்றார் *(எசே 36:24-28; தவிர, சங் 51:10 தொ. காண்).*

*2. நாடு திரும்பியபின் யூதர் சமயம்:* சடங்கு முறை சார்ந்த கழுவுதல்களை எண்ணிக்கை யில் பெருக்குகின்றது. இத்தகைய கழுவு தல்கள் மட்டுமீறிய சில்லறை நுணுக்கங்க ளாகி, நற்செய்திக் காலத்தில் வாழ்ந்த பரிசே யர்களிடையில், வெற்று ஆசாரம் என்ற கண் டனத்திற்குத் தப்பவில்லை *(மாற் 7:1-5 இணை).* சடங்கு முறைப்படி கழுவும் பழக் கங்கள், உள்ளம் தூய்மையாக்கப்படுவதற்கு அடையாளமாக இருந்தன. புதிய ஏற் பாட்டை நெருங்கிய காலத்தில் இராபிகள் (போதகர்கள்) எனப்படுவோர் யூத மறை யைத் தழுவிய புறவினத்தாருக்குத் திரு முழுக்கு அளிக்கின்றனர்; இவ்வாறு திருமுழுக் குப் பெற்றவர் யூத மக்களோடு இணைந்த னர் *(மத் 23:15 காண்).* இத்திருமுழுக்கு விருத்தசேதனத்தைப்போலவே அத்துணை அவசியமானதென்று சிலர் கருதுவதாகக் கூடத் தோன்றுகிறது.

யோசிப்பசின் கூற்றுப்படி, எஸ்ஸேனியர் எனப்படுவோரிடையிலும், தமஸ்கு, கும்ரான் குழுவினரிடையிலும் சடங்கு முறை சார்ந்த குறிப்புகள் வழக்கமானவை. எனினும், இத்தகைய குறிப்பு (புதியதொரு வாழ்வுக்கு) புகுமுகச் சடங்குமுறை அன்று. ஏனெனில் நீண்ட காலச் சோதனைக்குப் பின்னரே ஒருவர் புகுமுகச்சடங்கினுக்கு ஏற் றுக்கொள்ளப்படுவார். அச்சோதனைக் காலத் தின் நோக்கம், மனந்திரும்பியவரின் நேர் மையை வெளிப்படுத்தலாகும். சடங்கு முறைக்குறிப்பு நாள்தோறும் நிகழ்வதாகும். ஒருவர் தூய வாழ்வு நடத்தும்படி எடுக்கும் முயற்சியையும், புனிதப்படுத்தும் அருளைப் பெறும்படி அவர் கொண்டுள்ள அவா வினையும் அக்குறிப்பு வெளிப்படுத்துகிறது. அக்குறிப்பில் ஒருவர் தம்மையே தண்ணீரில் மூழ்குவிக்கிறார். ஆனால், யோவான் முன் னிலையில் மனத்துக்கம் கொண்டு தோன்று கிறவர்கள் அவர் கையினின்று திருமுழுக் குப் பெறுவார்கள். அத்திருமுழுக்கையும் ஒரே முறைதான் பெறுவார்கள்.

II. *யோவான் அளித்த திருமுழுக்கு:* யோவான் அளித்த திருமுழுக்கினை, யூத மறை யைத் தழுவிய புறவினத்தாருக்கு அளிக்கப் பட்ட திருமுழுக்கினுக்கு ஒப்பிடலாம். பிந் திய திருமுழுக்கு ஒருவரை இஸ்ராயேல் மக்களுள் புகுத்துவித்தது. யோவான் அளித்த திருமுழுக்கு ஆபிரகாமின் உண்மை வழித் தோன்றல்களோடும் *(மத் 3:8 இணை),* இஸ் ராயேலில் எஞ்சினோரோடும் ஒருவகை யான இணைப்பைத் தோற்றுவிக்கிறது. இனி, இந்த இணைப்புப் பெற்றவர்கள் இறைவனின் கடுஞ்சினத்தினின்று விடுவிக்கப் பட்டவர்களாவர். யோவானின் திரு

முழுக்கு, பாவிகளுக்கும் யூதமறையைத் தழுவிய புறவினத்தாருக்கும் மட்டுமன்று; யூத மக்கள் அனைவருக்கும் என்று வழங்கப்படுகிறது. அத்திருமுழுக்கு தனித்தன்மை வாய்ந்தது. அது பாலைவனத்தில், பாவமன்னிப் படையும்படி மனந்திரும்பியவர்களுக்கு அளிக்கப்படுகிறது (மாற் 1:4 இணை). அத்திருமுழுக்கு, ஒருவர் தாம் செய்த பாவங்களை உண்மையென்று ஒப்புக் கொள்வதையும், உறுதியாக மனந்திரும்புவதற்கு அவர் எடுக்கும் முயற்சியையும் குறிப்பாக உணர்த்துகிறது. இத்தகைய முயற்சியைத் திருமுழுக்கின் சடங்குமுறை வெளிப்படுத்துவதாய் இருக்க வேண்டும் (மத் 3:6தொ). யோவான் அறநெறித் தூய்மையை வற்புறுத்துகிறார்; மற்றப்படி, ஆயக்காரர்களோ படைவீரர்களோ தங்கள் அலுவல்களைக் கைவிடும்படி அவர் கோருவதில்லை (லூக் 3:10-14).

யோவானின் திருமுழுக்கு அப்பொழுதைக்கான சமய நடைமுறையை மட்டும் நிறுவுகிறது. யோவான் நீரால் திருமுழுக்கு அளிக்கிறார். அத்திருமுழுக்கு, பரிசுத்த ஆவியாலும் நெருப்பாலும் மெசியா காலத்தில் அளிக்கப்படவிருக்கும் திருமுழுக்கினுக்கு ஆயத்தமாகும் (மத் 3:11 இணை; அ.ப. 1:5;11:16; 19:3 தொ). பிந்திய இந்தத் திருமுழுக்கு ஒப்புயர்வற்ற தூய்மையாகும் (சங் 51 காண்); புதிய உலகினைத் தொடங்கி வைக்கும். அந்த ஒப்புயர்வற்ற தூய்மையின் தோற்றம் இங்குத் தீர்ப்புப்பற்றிய காட்சியோடு குழம்பியதாகக் காணப்படுகிறது. உண்மையில், மகிமைப்படுத்தப்பெற்ற மெசியா அனுப்பும் ஆவி எனும் கொடை தீர்ப்பினின்று தன்னை வேறுபடுத்திக் கொள்ளப் போகின்றது (லூக் 3:16 தொ இணை).

III. இயேசு பெற்ற திருமுழுக்கு:

1. யோவானிடம் திருமுழுக்கு பெறும்படி தம்மையே அவர்முன் நிறுத்தி, இயேசு தம் தந்தையின் திருவுளத்திற்குச் சரணடைகிறார் (மத் 3:14தொ). இவ்வாறு பாவிகளின் வரிசையில் பணிவாக இடம் மேற்கொள்கிறார். கடவுளின் செம்மறி என இயேசு உலகின் பாவங்களைத் தம்மேல் சுமந்து கொள்கிறார் (யோவா 1:29.36). யோர்தானில் இயேசு பெற்ற திருமுழுக்கு, அவர் தம் ''சாவில்'' பெறவிருந்த திருமுழுக்கினை அறிவித்து, அதை ஆயத்தம் செய்கிறது (லூக் 12:50; மாற் 10:38). இவ்வாறு இயேசு வெளிப்படையாக நடத்திய வாழ்க்கை இரு திருமுழுக்குகளுக்குள் உள்ளடங்குகிறது. நற்செய்தியாளரான யோவான் கூற விரும்புவதும் இதுதான். எப்பொழுதெனில், இயேசுவின் குத்தித் திறக்கப்பட்ட விலாவிலிருந்து இரத்தமும் நீரும் வெளிவந்தன என்றும் (யோவா 19:34 தொ), தேவ ஆவி, நீர், இரத்தம் ஆகிய மூன்றும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன என்றும் (1 யோவா 5:6-8) நற்செய்தி அருளப்பர் தெரிவிக்கும்போதாகும்.

2. யோவான் கையால் இயேசு பெற்ற திருமுழுக்கு, புறாவடிவில் பரிசுத்த ஆவி இறங்கிவந்ததாலும், ''இவரே என் அன்பார்ந்தமகன்'' என வானகத் தந்தை தம்மோடு இயேசு கொண்டுள்ள தெய்வீக மகவுத் தொடர்பினை வெளிப்படையாக அறிவித்ததாலும் சிறப்படைகிறது. ஆவியானவர் இயேசுவின்மேல் வருகை தந்தது, இயேசுவைப் பதவியில் அமர்த்தவாகும். இவ்வாறு அமர்த்தல் இறைவாக்குகளுக்கு இணக்கமாய் உள்ளது (எசா 11:2; 42:1; 61:1). அதேபொழுது, ஆவியானவர் இயேசுவின் மேல் வருகை தந்தது, பெந்தகோஸ்தே (ஐம்பதாம் நாள்) விழாவையும் பறைசாற்றுகிறது. அந்த விழா பரிசுத்த ஆவியால் திருமுழுக்குப் பெறுதலைத் தொடங்கிவைக்கும். இத்தகைய திருமுழுக்கு திருச்சபைக்கும் (அ.ப. 1:5; 11:16), திருச்சபையில் நுழைபவர் அனைவருக்கும் (எபே 5:25-32; தீத் 3:5தொ) கிடைக்கும். வானகத் தந்தை இயேசுவைத் தம் திருமகனாக அங்கீகரித்தல், விசுவாசிகள் அத்தந்தையோடு சுவிகார மகவுத் தொடர்பு கொள்வதை அறிவிக்கிறது. இந்தச் சுவிகார மகவுத்தொடர்பு இயேசுவின் மகவுத் தொடர்பில் பங்கு பெறுவதும், கொடையாக அளிக்கப்பெற்ற ஆவியானவரின் செயல்விளைவுமாகும் (கலா 4:6). உண்மை

யில் இயேசு, ''சாவினால் பெறும் திரு முழுக்கு'' அவரை உயிர்ப்புக்கு இட்டுச் செல்ல வேண்டும். உயிர்க்கும்போது இயேசு ஆவியை நிறைவாகப் பெறுவார். அதனால், மகிமைப்படுத்தப்பட்ட அவ ருடைய மனித இயல்பு ''உயிர்தரும் ஆவி'' *(1 கொரி 15:45)*யாக அமைக்கப்படும். அந்த ஆவி இயேசுவில் விசுவாசம் கொள்கிறவர் களுக்கு ஆவியைப் பகிர்ந்தளிக்கும்.

**IV. கிறிஸ்துவத்திருமுழுக்கு:**

***1. நீராலும் ஆவியாலும் பெறும் திரு முழுக்கு:*** யோவான் ஆவியாலும் நெருப்பா லும் கொடுக்கப்படும் திருமுழுக்கினை முன் னறிவித்தார் *(மத் 3:11)*. ஆவி எனப்படுவது வாக்களிக்கப்பட்ட மெசியா காலத்துக் கொடையாகும். நெருப்பு எனப்படுவது தீர்ப்பு ஆகும். இத்தீர்ப்பு இயேசுவின் வருகை யிலேயே நிறைவேறிடத் தொடங்கிவிடு கிறது *(யோவா 3:13-21; 5:22-25; 9:39)*. மெசியா காலத்துக் கொடையும் தீர்ப்பும் இயேசுவின் திருமுழுக்கில் தொடங்குகின் றன. இயேசுவின் திருமுழுக்கு, அவரில் விசுவாசங் கொள்கிறவர்களின் திருமுழுக் கினுக்கு ஒரு முன்னடையாளம். பவுல், இஸ் ராயேல் மக்கள் செங்கடலைக் கடந்து சென்ற தில் கிறிஸ்துவத் திருமுழுக்கு முன்னறிவிக் கப்படுவதாகக் காண்கிறார்; செங்கடலைக் கடந்து சென்றது இஸ்ராயேல் மக்களை அடிமை வாழ்வினின்று விடுவிக்கிறது *(1 கொரி 10:1தொ)*. கிறிஸ்துவத் திருமுழுக்கு பெந்தகோஸ்தே விழாவன்று பயன் அளிப்ப தாய் நடைமுறைக்கு வரத் தொடங்கு கிறது; ஒரு விதத்தில் பெந்தகோஸ்தே விழா திருச்சபை ஆவியாலும், நெருப்பாலும் திரு முழுக்குப் பெறும் விழாவாகும். இவ்வாறு திருச்சபை திருமுழுக்குப் பெற்றதும், வியத் தகு இத்திருமுழுக்கு நிகழ்ச்சியால் கவர்ந் திழுக்கப்பெற்ற மக்கள் கூட்டத்திற்குப் பேதுரு போதிக்கிறார். மக்கள் மனத் துக்க உணர்வுடன் திருமுழுக்குப் பெற்று, பாவ மன்னிப்பையும் பரிசுத்த ஆவியாகிய கொடையையும் பெற்றுக் கொள்ள வேண் டும் என்று அறிவுறுத்துகிறார். உண்மையில் அப்பொழுது உடனடியாக அங்கு நடப்ப தும் இதுதான் *(அ.ப. 2:38-41)*. பேதுருவின் இத்தகைய நடவடிக்கைக்குக் காரணம், யோவா *3:3*தொ அறிவிப்பது போன்று ஒரு கட்டளை கிறிஸ்துவால் கொடுக்கப்பட்டு, அவருடைய உயிர்ப்புக்குப் பின்னர்த் தெளி வான உருப்பெற்றிருக்கலாம் *(மத் 28;19; மாற் 16:16)*. வழக்கமாகத் திருமுழுக்கு என் பது தண்ணீரில் முழுவதுமான மூழ்குவித்த லைக் குறிக்கும் *(அ.ப. 8:38 காண்)*; அல்லது மூழ்குவித்தல் கூடாதபோது (கிறிஸ்துவ மறையின் மிகப்பழங்கால ஆவணச் சான்றுக ளில் ஒன்றான) திதாக்கே 7:3-இல் கண்டுள்ளது போல, திருமுழுக்குப் பெறுவோரின் தலைமீது தண்ணீர் தெளிப்பதையாவது குறிக்கும். திருமுழுக்கினை அடுத்துத் தலை மேல் கரம் வைக்கும் சடங்கு நடைபெறு கிறது. அப்போது பரிசுத்த ஆவியாம் திருக் கொடை நிறைவாக வழங்கப்படுகிறது *(அ.ப. 8:15தொ; 19:6)*.

புனித பவுல் திருமுழுக்குப்பற்றிய கோட் பாட்டு விளக்கத்தை வளர்த்து நிறைவு செய் கிறார். இந்தக் கோட்பாட்டு விளக்கம் நம் ஆண்டவரின் போதனையினின்றும் *(மாற் 10:38)*, திருச்சபையின் பழக்கத்தினின்றும் *(உரோ 6:3)*, படிப்படியாக உருப்பெற்ற தாகும். கிறிஸ்துவின் பெயரால் அளிக்கப்படும் திருமுழுக்கு *(1 கொரி 1:13)*, திருமுழுக்குப் பெறுகிறவனை நம் ஆண்டவரின் இறப்போ டும் புதைக்கப்படுதலோடும் உயிர்த்தெழுத லோடும் இணைக்கிறது *(உரோ 8:3தொ; கொலோ 2:12)*. தண்ணீரில் மூழ்குவித்தல் கிறிஸ்துவின் இறப்பையும், புதைக்கப்படுதலை யும் குறித்துக்காட்டுகிறது. தண்ணீரி னின்று வெளிவருதல், கிறிஸ்துவோடு இணைந்து உயிர்த்தெழுவதற்கு அடையாளமா யிருக்கிறது. திருமுழுக்கு, பாவத்திற்கு உடல் ஒரு கருவியாய் இருப்பதைப் பொறுத் தளவில் அந்த உடலை அழித்து *(உரோ 6:9.13)*, கிறிஸ்துவுக்குள் கடவுளின் வாழ் வில் பங்களிக்கிறது *(6:11)*.

பாவத்திற்குச் சாவதும், வாழ்வாம் கொடையைப் பெறுதலும் இணைபிரியா தவை; தூய நீரினால் கழுவுதல், அதேபொழுது,

கிறிஸ்துவின் இரத்தத்தால் தெளிக்கப் படுதலாகும். கிறிஸ்துவின் இரத்தம் ஆபேலின் இரத்தத்தைவிட மேலான முறையில் கூக்குரலிடுகிறது (எபி 12:24; 1 பேதுரு 1:2). கிறிஸ்து கல்வாரியில் அனைவருக்கும் உரியனவாகத் தேடித்தந்த பேறுகளில் பயனுறுதியுடன் பங்கு பற்றுதலாகும். கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலிலும், அஃதோடு அடிப்படையில் அவருடைய விண்ணக மகிமையிலும்கூட இணைதலுமாகும் (எபே 2:5தொ). எனவே, திருமுழுக்கு பாஸ்காத் திருவருட்சாதனமாகும்; கிறிஸ்துவின் பாஸ்காவோடு ஒன்றித்து உறவு கொள்ளுதலாகும். திருமுழுக்குப் பெற்றவர் பாவத்திற்குச் செத்தவர்; கிறிஸ்துவுக்குள் கடவுளுக்காக வாழ்கின்றவர் (உரோ 6:11); கிறிஸ்துவின் அதே வாழ்வை வாழ்கிறவராவார் (கலா 2:20; பிலி 1:21). இவ்வாறு, கண்டடையும் பொருள் நிலை மாற்றம் அடிப்படையானது. அந்த மாற்றம், மனிதன் தன்பழைய இயல்பினைக் களைந்துஅழித்துவிட்டு, புதிய இயல்பினை அணிந்து கொள்வதிலும் (உரோ 6:6; கொலோ 3:9; எபே 4:24), கடவுளின் சாயலில் புதிய படைப்பாவதிலும் (கலா 6:15) அடங்கும்.

இதைப் போன்றதும் ஆனால் இதைவிடச் சுருக்கமானதுமான, திருமுழுக்குப் பற்றிய கோட்பாட்டு விளக்கத்தினை 1 பேதுரு 3:18-21-இல் கண்டு கொள்ளலாம். இப்பகுதி நோவா பெரும்வெள்ளத்தினைக் கடந்து சென்றதில் கிறிஸ்தவன் திருமுழுக்கு நீரால் கடந்து செல்வதை முன்னடையாளமாகக் காண்கிறது. கிறிஸ்து உயிர்த்தெழுந்ததின் காரணமாக, கிறிஸ்தவன் சுதந்தர நிலைக்குக் கடந்து செல்கிறான்.

**2. திருமுழுக்குப் பெற்றவரும் தேவ ஆட்களும்:** இயேசு கிறிஸ்துவின் பெயராலோ, ஆண்டவராகிய இயேசுவின் பெயராலோ (அ.ப. 2:38; 8:16; 10:48; 19:5; 1 கொரி 6:11) கொடுக்கப்பட்ட திருமுழுக்கு என்பது, திருமுழுக்குப் பெற்றவர் கிறிஸ்துவுக்கு உடைமையாகிறார் என்றும், அவர் மனத்துள் கிறிஸ்துவோடு இணைக்கப்படுகிறார் என்றும் உணர்த்துகிறது (கலா 3:27; உரோ 13:14). திருமுழுக்குப் பெறுகிறவர்கள் அனைவரும் கிறிஸ்துவுக்குள்ளும் (கலா 3:28) மகிமைப்படுத்தப்பட்ட அவருடைய உடலுக்குள்ளும் (1 கொரி 12:13; எபே 4:4தொ) ஒருவராகி, தங்களுக்குள்ளும் ஒன்றுபடுகின்றனர்; இந்த நேரத்திலிருந்து அவர்கள் தொடர்ந்து கிறிஸ்துவோடு ஒரே ஆவி ஆகிறார்கள் (1 கொரி 6:17).

கிறிஸ்து பெயரால் திருமுழுக்கு என்பது, கிறிஸ்து மட்டும் குறிப்பிடப்பட்டஒரு வாய்பாடு பயன்படுத்தப்பட்டதைக் கருத்தில் கொண்டிருக்கலாம் என்று தெளிவாகிறது. பிற்காலத்தில் செல்வாக்குப் பெற்ற, தனிமுதல் மூவரான கடவுளைக் குறிப்பிடும் வாய்பாடு மத் 28:19-ஆம் வாக்கியத்திலிருந்து உருவாகிறது. இந்த வாய்பாடு மிகச் சிறந்த வகையில் உணர்த்தும் உண்மையாதெனில், திருமுழுக்குப் பெறுகிறவர் திருமகனோடு இணைந்து, அதே நேரத்தில் மற்ற இரு ஆட்களோடும் ஒன்றுபடுகிறார் என்பதாகும். உண்மையில் விசுவாசி ஒருவர், ஆண்டவராகிய இயேசுவின் பெயராலும் கடவுளின் ஆவியின் வழியாகவும் திருமுழுக்குப் பெறுகிறார் (1 கொரி 6:11). அவர் ஆவியின் ஆலயமாகவும் (1 கொரி 6:19), தந்தையின் சுவிகாரப் பிள்ளையாகவும் (கலா 4:5தொ) கிறிஸ்துவின் சகோதரரும் உடன் உரிமையாளருமாகிறார்; கிறிஸ்துவின் வாழ்வோடு மிக நெருங்கி வாழ்ந்து, அவருடைய மகிமையின் பங்கு பெறுவதற்கு என்று முன்குறிக்கப்படுகிறார் (உரோ 8:2.9.17.30; எபே 2:6).

**3. மனந்திரும்புதலும், திருமுழுக்கினுக்குத் தேவையான விசுவாசமும்:** ஒருவர் திருமுழுக்குப் பெறத் தேவையானது, அவர் நற்செய்திப் போதனையைக் கேட்டு, இயேசு கிறிஸ்துவில் தமது விசுவாசத்தை வெளிப்படுத்தியிருக்க வேண்டும். இந்த விசுவாசத்தில் தலையாயதும், விசுவாசத்தின் மற்றப் பிரிவுக்கூறுகளை உள்ளடக்கி, அவைகளைச் சுருக்கிக் கூறுவதுமான கொள்கை: கிறிஸ்துவின் உயிர்ப்பு (உரோ

10:9). எனினும், திருமுழுக்கினுக்கு முன்னரே பரிசுத்த ஆவி அளிக்கப்படும்பொழுது, யார்மீது கொண்ட விசுவாசம் என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம் (அ.ப. 10:44-48). இன்னும், குடும்பத்தின் தந்தை கொண்டுள்ள விசுவாசம் அவரைச்சார்ந்த அனைவருக்கும் செல்லக்கூடியதாகத் தோன்றுகிறது. இதற்கு எடுத்துக்காட்டாக, கொர்னேலியுவும், பிலிப்பு நகரத்துச் சிறைக்காவலனும் உள்ளனர் (அ.ப. 10:47; 16:33). ஆனால், கிறிஸ்துவில் விசுவாசம் கொள்வது என்பது, நற்செய்திப் போதனைமீது கொள்ளும் உள்ளப்பற்றுதல் மட்டுமன்று; அந்த விசுவாசம் முழுமையாக மனந்திரும்புதலையும், அனைத்தும் உட்பட, கிறிஸ்துவுக்கு உரிமையாதலையும் உள்ளடக்குகிறது. இந்நிலையில் கிறிஸ்து, ஒருவரின் முழு வாழ்வினையும் உருமாற்றுகின்றார். இத்தகைய விசுவாசம் இயல்பாகவே திருமுழுக்கு வேண்டுமென்று கேட்பதற்கு இட்டுச் செல்கிறது; திருமுழுக்கு விசுவாசத்தின் (விசுவாசத்தை அறிக்கையிடும்) திருவருட்சாதனமாகும். திருமுழுக்குப் பெறுவதில் விசுவாசம் தன்னிறைவு அடைகிறது. பவுல் விசுவாசத்தையும் திருமுழுக்கையும் ஒருபோதும் துண்டுபடுத்துவதில்லை. இன்னும், அவர் விசுவாசத்தினாலே இறைவனுக்கு ஏற்புடையவராகிறோம் என்று சொல்கிறார். அவ்வாறு அவர் சொல்வது, திருச்சட்டம் விதித்திருக்கும் செயல்களால் இறைவனுக்கு ஏற்புடையவராகிறோம் என்று வாதிடுகிறவர்களுக்கு எதிராகத்தான். இவ்வண்ணம் வாதிடுகிறவர்கள், புற இனத்தார் கிறிஸ்தவர்களாகுமுன்னர் யூதரின் பழக்க வழக்கச் சடங்கு முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று வற்புறுத்தும் யூதக் கிறிஸ்தவர்களாவர். விசுவாச அறிக்கையினை நிறைவு செய்வது திருமுழுக்கு என்பதனைப் பவுல் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மையாக எப்போதும் கருதுகிறார் (கலா 3:26தொ காண்). அப்போஸ்தலர்களின் போதனை தமக்குத் தெளிவாகக்காட்டும் இறைவனின் அழைப்புக்கு ஒருவர் விசுவாசத்தினால் மறுமொழி தருகிறார் (உரோ 10:14 தொ). மேலும், இவ்வாறு தரும் விசுவாச மறுமொழி அதன் செயலாகும் (எபே 2:8). திருமுழுக்கில் பரிசுத்த ஆவி விசுவாசியைத் தம் உடைமையாக்குகிறார்; திருச்சபை எனும் உடலோடு அவரை ஒன்றுபடுத்துகிறார்; கடவுளின் அரசில் அவர் நுழைந்துவிட்டதாக அவருக்கு உறுதியளிக்கிறார்.

எனவே, திருமுழுக்கு என்ற திருவருட்சாதனம் மாயவித்தை சார்ந்த வகையில் செயல்புரிவதில்லை என்பது முற்றிலும் தெளிவுபடுகிறது. திருமுழுக்கினுக்குத் தேவைப்படுவது முழுமையான மனந்திருப்புதல். இந்த மனந்திரும்புதல், அசைக்க முடியாத பற்றுறுதி கொண்ட மனநிலையில் புதியதொரு வாழ்வினைத் தொடங்குவதாய் இருக்க வேண்டும்.

*4. திருமுழுக்குப் பெற்றவரிடம் தேவைப்படும் பற்றுறுதி:* திருமுழுக்கின்போது கிடைக்கப்பெறும் ஆன்மீக நிலைமாற்றத்தின் பயன்நிறைவு பிறவகைகளிலும் வற்புறுத்தப்படுகிறது. திருமுழுக்கினுக்கு ஆயத்தம் செய்கிறவரைப் பொறுத்தளவில், இந்த ஆன்மீக நிலைமாற்றம் நீரினாலும் பரிசுத்த ஆவியினாலும் புதிதாகப் பிறப்பது என்றும் (யோவா 3:5), புதுப் பிறப்பைத் தரும் முழுக்கு என்றும், பரிசுத்த ஆவி அளிக்கும் புத்துயிர் என்றும் (தீத் 3:5), உள்ளத்தின் மீது இடப்படும் முத்திரை என்றும் (2 கொரி 1:22; எபே 1:13;4:30), ஒளி பெற்று, பாவ இருளினின்று கிறிஸ்து எனும் ஒளிக்குள் புகுதல் என்றும் (எபே 5:8-14; எபி 6:4), இறைமக்கள் சமுதாயத்தின் உறுப்பினராய் இணைக்கும் புதிய விருத்தசேதனம் (கொலோ 2:11; தவிர, எபே 2:11-22) என்றும் பொருள்படும். இவையனைத்தும் கடவுளின் மகனாய் இருக்கும் நிலையில் சுருக்கமாய் அடங்கிவிடுகின்றன (1 யோவா 3:1). கடவுளின் மகன் என்பது ஒப்பற்ற உயர்நிலையாகும். கடவுளின் மகனாய் இருப்பது, புதிய நிலையானதொரு தன்மையன்று. மாறாக, கடவுளின் மகனாய் இருப்பது, இயக்க ஆற்றல் உள்ள ஒரு நிலைமையில், ஓர் உயர் வாழ்க்கை நிலையில் நுழைவு பெறுவதாகும்; இந்நிலையிலிருந்து கிறிஸ்தவன் ஒரு

போதும் வீழ்ந்திடலாகாது. எனவே, பாவத்திற்குச் சாவதும், கடவுளுக்காக வாழ்வதும் தொடர்ந்து மேலும் மேலும் செயலூக்கமுடையதாய் இருப்பதற்கு, இடைவிடாமல் முயற்சி செய்ய வேண்டும் (*உரோ 6:12 தொ*). இவ்வாறு முயற்சி செய்யும்போது, சில வேளைகளில் இயேசுவின் பாடுகளில் இணைந்திருப்பது வற்புறுத்தப்படும்; சில வேளைகளில் அவரது உயிர்ப்பில் இணைந்திருப்பது வற்புறுத்தப்படும். பாடுகள், உயிர்ப்பு என்ற இந்த இரு பண்புக்கூறுகளும் ஒரே பாஸ்கா மறைபொருளைக் குறிப்பிட்டு, கூறுபடுத்த முடியாதபடி பிணைந்துள்ளன. திருமுழுக்குப் பெற்றவர் தம் முயற்சிகளாலும் நிறைவான பற்றுறுதியாலும் கிறிஸ்துவின் கடத்தலோடு (பாஸ்காவோடு) ஒன்றுபட்டவராய்க் கிறிஸ்துவின் மகிமைமிக்க அரசில் நுழையவும் (*கொலோ 1:12 தொ*), வானக உரிமைப்பேற்றினை உடைமையாக்கிக் கொள்ளவும் ஆயத்தம் செய்கிறார்; அந்த உரிமைப்பேற்றின் முதற்கனிகளைத் திருமுழுக்குப் பெற்றவர் இம்மையில் கொடையாம் ஆவியானவரின் உடைமையாகப் பெற்றிருக்கிறார் (*2 கொரி 1:22; எபே 1:14*).

## திருமுழுக்கு யோவான் (JOHN, THE BAPTIST)

இயேசுவிற்கான சாட்சி என்ற அளவில் யோவான் ஓர் இறைவாக்கினரைவிட மேம்பட்டவராக உள்ளார் (*லூக் 7:26 இணை*). ஆண்டவருக்கு முன் செல்கின்ற தூதுவராக (*லூக் 1:76; மத் 11:10; மலா 3:1*), அவர் நற்செய்தியைத் தொடங்கி வைக்கிறார் (*அ.ப.1:22; மாற் 1:1-4*). ''திருச்சட்டமும் இறைவாக்கினர்களும் அவரது காலம் வரை தான். அதுமுதல் கடவுளின் அரசைப்பற்றிய நற்செய்தி அறிவிக்கப்படுகிறது'' (*லூக் 16:16 இணை*). இணையற்ற இறைவாக்கினராக, ஆண்டவரது பாதைகளை அவர் ஆயத்தம் செய்கிறார் (*மத் 11:11; மாற் 1:3*). ஆண்டவருக்கு அவர் முன்னோடியாகவும் (*அ.ப. 13:24-25*), சாட்சியாகவும் (*யோவா 1:6-7*) இருந்தார்.

**1. முன்னோடியும் அவரது திருமுழுக்கும்:** அக்காலம் வரை குழந்தைப்பேறு இல்லாமலிருந்த ஒரு தாய்க்குப் பிறப்பதற்கு முன்னரே, இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்டுத் தூய ஆவியால் நிறைந்திருந்தார் (*லூக் 1:7.15 காண்க: நீதி 13:2-5; 1 சாமு 1:5.11*). புதிய எலியா என்று முன்குறிக்கப்பட்ட யோவான் (*லூக் 1:16-17*), தனது உடையினாலும், இளம் வயது முதல் பாலைவனத்தில் வாழ்ந்த (*லூக் 1:80*) தவ வாழ்வினாலும் அவரை நினைவுபடுத்துகிறார். கும்ரான் குழுவினர் போன்றவர்களால் அவர் பயிற்றுவிக்கப்பட்டாரா? எவ்வாறாயினும், லூக்காவினால் கவனமாகக் குறிப்பிடப்பட்டவாறு (*3:1-2*) இஸ்ராயேலுக்கான அவரது வெளிப்பாட்டின் காலம் இறுதியாக வருகிறது. சீடர்களால் சூழப்பட்ட குருவாக யோவான் தோன்றுகிறார் (*யோவா 1:35*). அவர்களுக்கு நோன்பிருந்து செபிக்குமாறு கற்பிக்கிறார் (*மாற் 2:18;லூக் 5:33; 11:1*). அவரது வலிமைமிக்க குரலானது யூதேயாவைக் கலக்குகின்றது. பாவங்களை அறிக்கையிட்டுச் சடங்குமுறை முழுக்கால் குறிக்கப்படும் மனந்திரும்புதலைப் போதிக்கிறார். இந்த மனந்திரும்புதல் வாழ்வைப் புதிப்பிப்பதற்கு அழைக்கிறது (*மாற் 1:4-5*). ஏனெனில், தாழ்ச்சியுடையவர்களுக்காக அவர் அளிக்கும் சட்டங்களைக் கொண்ட (*லூக் 3:10-14*) நீதியைக் கடைப்பிடிக்காமல் (*மத் 3:8-9இணை*) ஆபிரகாமின் பிள்ளைகளாக இருப்பதில் எவ்விதப் பயனுமில்லை (*மத் 3:5-9*).

ஆனால், பரிசேயரும், சட்ட வல்லுநர்களும் அவரை விசுவாசிக்கவில்லை; சிலர் அவரைப் பேய் பிடித்தவராக நடத்தினர் (*மத் 21:32; மாற் 11:30 தொ; லூக் 7:30-33*). இவ்வாறு அவர்கள் அவரிடம் வரும்போது, நற்கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு தீயில் போடப்படுமென அவர் எச்சரிக்கிறார் (*மத் 3:10 இணை*). ஏரோது அரசனுடைய விபசாரத்தைக் கண்டித்ததனால் சிறையிலடைக்கப்பட்டு, இறுதியாகக் கொல்லப்படுகிறார் (*மத் 14:3-12; லூக் 3:19-20; 9:9*). அவருடைய ஆர்வத்தின் காரணமாகப் பெருமளவில் எதிர்பார்க்கப்பட்ட புதிய எலியாவாக உள்ளார். மெசியாவின்

வருகைக்காக இவரே மக்களைத் தயாரிக்க வேண்டும் (மத் 11:14). ஆனால், அவர் அறிந்து கொள்ளப்படவில்லை. அவரது சாட்சியமும் மனுமகனின் பாடுகளைத் தடுக்காது (மாற் 9:11தொ).

**2. ஒளியின் சாட்சியும், மணமகனின் தோழனும்:** யோவானின் சாட்சியமானது முதன் முதலாகத் தன்னைச் சாதாரண முன்னோடி என்று அறிவிப்பதில் அடங்கியுள்ளது. அவர் மெசியா அல்லவா என்று மக்கட் கூட்டம் அவரைக் கேட்கிறது (லூக் 3:15). ஓர் அதிகார பூர்வமான வினாவிற்குத் தனக்கு முன்னால் உள்ள, தான் முன்செல்கின்றவருடைய காலணிகளை அவிழ்க்கவும்தான் தகுதியற்றவன் என அவர் பதிலளிக்கிறார் (யோவா 1:19-30; லூக் 3:16-17 இணை). ஆவியிலும் (மாற் 1:8) நெருப்பிலும் (மத் 3:11-12) திருமுழுக்கு அளிக்கவிருக்கின்ற, வரவிருப்பவர் இயேசுவே. அவர் மீதே திருமுழுக்கிற்குப் பின்னர் ஆவியானவர் இறங்கி வந்தார் (யோவா 1:31-34).

உலகின் பாவங்களைப் போக்குகின்ற இறைவனின் செம்மறி என்று அறிவிப்பதின் மூலம் (யோவா 1:29) கிறிஸ்து தனது கரங்களால் ஏன் திருமுழுக்குப் பெறவேண்டும் என்பதைப் புரிந்து கொள்ளாததுபோல், எவ்வாறு கிறிஸ்து பாவத்தைப் போக்குவார் என்பதை அவர் முன்னோக்கவில்லை (மத் 3:13தொ). பாவத்தைப் போக்குவதற்கு, யோவானுடைய திருமுழுக்கை ஓர் உருவமாகக் கொண்ட, அவரது பாடுகளின் திருமுழுக்கினை இயேசு பெற வேண்டியிருக்கும் (மாற் 10:38;லூக் 12:50). பாவிகளை விலக்குவதன் மூலமாக இல்லாமல், அவர்களின் பாவங்களைத் தானே சுமந்து அவர்களை ஏற்புடையவர்களாக ஆக்குவதன் மூலம் (எசா 53:7-&11-12), இயேசு அனைத்து நீதியையும் நிறைவேற்றுவார் (மத் 3:15). பாடுகளுக்கு முன்னர், நீதியின் பணியாளரை எதிர் பார்த்திருந்த யோவானையும் அவரது சீடர்களையும் இயேசுவின் நடத்தை வியப்புறச் செய்கிறது. கிறிஸ்து தான் நிறைவேற்றுகின்ற மீட்பின் இறைவாக்குகளை அவர்களுக்கு நினைவுபடுத்தி, இடறல்பட வேண்டாமென அவர்களுக்கு வலியுறுத்துகிறார் (மத் 11:2-6இணை; காண்க: எசா 61:1).

ஆனால், யோவானின் சீடர்களில் சிலர், இயேசுவிற்குச் சீடராக மாட்டார்கள். திருமுழுக்காளரின் பிரிவிற்கும், ஆதித் திருச்சபைக்குமிடையே வாதங்கள் இருந்ததற்கான சான்றுகள், நற்செய்திகளில் உள்ளன (மாற் 2:18). கிறிஸ்துவினுடைய முன்மேன்மையைக் காட்டுவதற்கென, திருச்சபையானது யோவானது சான்றையே பயன்படுத்த வேண்டியுள்ளது (யோவா 1:15). மணமகனின் உண்மையான நண்பன் மற்றும் அவரது தோற்றத்தின்போது மகிழ்ச்சியால் நிரப்பப்பட்டவர் என்ற நிலையில், யோவான் தன்னையே இயேசுவின்முன் தாழ்த்திக் கொள்கிறார் (3:27-30). தனது சொற்களால், தனது சீடரையும் இயேசுவைப் பின் செல்லுமாறு அழைக்கிறார் (1:35 தொ). இதற்குப் பதிலாக இயேசு, ஒளிவீசி எரியும் விளக்கு (5:35) மற்றும் பெண்களிடமிருந்து பிறந்த இறைவாக்கினருள் உயர்ந்தவர் (மத் 11:11) என்று அவரது சாட்சியத்தை மகிமைப்படுத்துகிறார். ஆனால், விண்ணகத்தில் மிகச்சிறியவர், யோவானிலும் உயர்ந்தவரென அவர் தொடர்ந்து கூறுகிறார். அவர் இறைவாக்கினருடைய அருங்கொடையைவிட, அரசினுடைய பிள்ளைகளின் அருளையே விரும்புகிறார். ஆனால் அதே சமயத்தில் யோவானுடைய புனிதத்தையும் அவர் குறைத்து விடுவதில்லை.

மணமகனுடைய இந்தத் தாழ்ச்சிமிகு நண்பனுடைய மகிமையானது, யோவானை ஊனுடலான வாக்குடன் இணைக்கின்ற நான்காம் நற்செய்தியின் முன்னுரைப்பாடலில் பறைசாற்றப்படுகிறது. ''யோவான் ஒளி அல்லர். மாறாக ஒளியைக்குறித்துச் சான்று பகரவந்தவர்.'' இந்த முன்னுரைப்பாடல் திருச்சபையுடனும் யோவானைத் தொடர்புபடுத்துகிறது. ''அனைவரும் தம் வழியாக நம்புமாறு ஒளியைக் குறித்துச் சான்றுபகர வந்தார்'' (யோவா 1:7-8).

**திருமுன்னிலை அப்பம்** (BREAD OF PRESENCE, SHOWBREAD)

எப்போதும் தம்முன் வைக்க வேண்டும் என்று யாவே கோரிய ''திருமுன்னிலை அப்பமாகும்'' (யாத் 25:30;லேவி 24:5-9). இவை, ஒவ்வொன்றும் ''மரக்காலில் பத்தில் இரண்டு பங்கு மெல்லிய மாவிலே செய்யப்பட்ட'', பன்னிரண்டு அப்பங்களாகும் (24:5), இவற்றைத் தூயகத்தின் வடபுறத்திலிருந்த பசும்பொன் மேசையில் ஆறு அப்பங்கள் கொண்ட இரு வரிசையாக வைக்க வேண்டும் (யாத் 26:35). இவை பிற்காலத்தில் ''காட்டும் அப்பம்'' என்றும், ''திருமுன் அடுக்கும் அப்பங்கள்'' (1 நாள் 9:32; 2 நாள் 13:11; 29:18) என்றும் அழைக்கப்பட்டன. இவற்றைக் குறிக்க ''தூய அப்பம்'' (1 சாமு 21:5) ''கடவுளின் அப்பம்'' (லேவி 21:6) என்ற பெயர்களும் பயன்பட்டன. இஸ்ராயேல், தனக்கு அன்றாட அப்பத்தை அளிப்பவர் கடவுளே என்பதை ஏற்றுக் கொள்வதை இந்த அப்பங்கள் அடையாளமாக உணர்த்தின. மேலும் இந்தப் பன்னிரண்டு அப்பங்களும் பன்னிரு கோத்திரங்களையும் இறைவன் முன் பிரசன்னப்படுத்தின எனலாம் (காண்க. யாத் 24:4; லேவி 25:2-9).

நினைவுச் சின்னமாக அளிக்கப்படும் இந்த அப்பங்களின் ஒவ்வொரு வரிசை மேலும் உப்பைக் கலந்த (காண்க. லேவி 2:13) வாசனைப்பொடி நிறைந்த கிண்ணம் ஒன்று வைக்கப்பட வேண்டும். அப்பங்கள் மாற்றப்படும்போது, அப்பத்திற்கு மாறாக இப்பொடி தகனப்பலியாக எரிக்கப்படும் (லேவி 24:7). இந்த அப்பங்கள் தனிப்பட்ட வடிவில், தனிப்பட்ட அடுப்புகளில் கோகாத்தியர்களால் செய்யப்பட்டது. இவர்கள் ஒவ்வொரு ஓய்வுநாளிலும் புது அப்பங்களைக் கொண்டு வந்து அடுக்கினர் (1 நாள் 9:32; காண் 23:29; 2 நாள் 13:11). பழைய அப்பங்கள் குருக்களுக்குக் கொடுக்கப்பட்டன. அவர்கள் அவற்றைத் தூயகத்துள்ளேயே உண்டனர் (லேவி 24:9; காண். 1 சாமு 21:4-7; மத் 12:4; மாற் 2:26; லூக் 6:4).

இந்த அப்பங்கள் வைக்கப்பட்ட மேசை சித்தீம் மரத்தால் செய்யப்பட்டது; 90 செ.மீ நீளமும் 47 செ.மீ. அகலமும் 70 செ.மீ. உயரமும் உடையது. அது பசும்பொன்னால் பொதியப்பட்டது; சுற்றிலும் பொன் தோரணம் தொங்கும்; மேலும் கை அகல அளவில் சுற்றுச்சட்டம் அமைக்கப்பட்டு, அதிலிருந்தும் பொன் தோரணம் தொங்கும். நான்கு மூலைக் கால்களில் நன்கு பொன் வளையங்கள் பொருத்தப்பட்டிருக்கும். மேசையைத் தூக்கிச் செல்லும் தண்டுகளைத் தாங்க இவை பயன்பட்டன (யாத் 25:23-30; 37:10-16). சாலமோன் இப்படிப்பட்ட பத்து மேசைகளைச் செய்ததாகத் தெரிகிறது (2 நாள் 4:8). ஆனால் ஒருநேரத்தில் ஒன்றுதான் பயன்பட்டது (காண். 1 அர 7:48; 1 நாள் 28:16; 2 நாள் 4:19).

பழம் மேற்காசியாவில், குறிப்பாக பாபிலோனியர், எகிப்தியர், இத்தியர்களிடையே, இப்படி ஒழுங்காக அப்பங்கள் ஒப்புக்கொடுக்கும் வழக்கம் காணப்படுகிறது. யூதாவின் மக்கள் பாபிலோனியத் தேவதையாகிய இஸ்தார் எனப்படும் ''விண்ணக அரசிக்கு'' மாவடைகள் ஒப்புக் கொடுப்பதை எரேமியா வன்மையாகக் கண்டனம் செய்கிறார் (எரே 7:19;44:15-19; காண். எசா 65:11).

**திரும்புதல்** (RETURN)

இது நாடு கடத்தப்பட்ட இஸ்ராயேலர், மெசபொத்தாமியாவிலிருந்து திரும்பிவந்து பாலஸ்தீனத்தில் குடியேறிய காலத்தைக் குறிக்கும்.

**திருவருகை** (ADVENT)

இது ஆண்டவரின் வருகையை அல்லது ஆண்டவரின் இரண்டாம் வருகையைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு சொல். இதைத்தான் திருவழிபாட்டு ஆண்டிலே கிறிஸ்து பிறப்பு விழாவுக்கு முன் உள்ள 4 வாரங்களைத் திருவருகைக்காலம் என்கிறோம். ஆண்டவரின் வருகையை எதிர்நோக்கி நம்மைத் தயாரிக்கத் தூண்டுகிறது இக்காலம் (காண். இரண்டாம்வருகை).

## திருவுரையாளர் (PREACHER, ECCLESIASTES)

''வீண், முற்றிலும் வீண் என்றுரைக்கிறார் திருவுரையாளர். வீண், முற்றிலும் வீண், எல்லாமே வீண். மனிதன் தன் வாழ்நாள் முழுவதும் பாடுபட்டு உழைக்கிறான். அவன் உழைப்பினால் பெறும் பயன் என்ன?'' (திருவுரை 1:2-3). இதுதான் இந்நூலின் தலைப்பு. இதைச் சுற்றியே இந்நூல் சுழல் கிறது. ஆசிரியருடைய சிந்தனைகள் புதிர்மிக் கனவாய் உள்ளன. அவரது மாறுபடும் மன நிலைகள் முன்னறிவிக்க முடியாதவை. ஆகவே, இந்நூலை ''ஐயவாதத்தின் சாரம்'' என்று சிலரும், ''பக்தியின் சாரம்'' என்று வேறு சிலரும் கூறியிருப்பதைக் கண்டு வியப்புற வேண்டியதில்லை. அன்றாட வாழ்க்கையின்முன் அடிபட்டுப் போகும் மனிதர்களின் சிறுசிறு முயற்சிகளையோ, வெறுமையான கூற்றுகளையோ, ஆசிரியர் தாக்கியிருந்தால் அது ஒருவரையும் பாதிக் காது. ஆனால் பக்தியுள்ளோர் போற்றிய சட்டத்தையே ஐயுறுகிறார். அறிவர்கள் போதித்த பாரம்பரியப் போதகமாகிய நீதியை யும் ஞானத்தையும் தேடுவதையே தாக்கு கிறார். இது வாசகர்களின் மன அமைதியைக் கெடுக்க வல்லது. ஆயினும் இந்நூல் பழங் கால மேற்காசிய இலக்கியங்களிலேயே மிக வும் அதிக எடுத்துக்காட்டாகப் பயன்படும் வாக்குகளைக் கொண்ட நூலாகத் திகழ் கிறது. யோபு நூல் நீதிமானின் துன்பம் என்ற பிரச்சனையோடு போராடியது என்றால், இந்நூல் மனிதனது மகிழ்ச்சி என்ற பிரச்சனை யோடு போராடுகிறது. இரண்டு நூல் களும் எடுத்துக்கொண்ட பிரச்சனைகளுக்கு விடை காணவில்லை. ஆயினும் அரிய பாடங்களைக் கற்பிக்கின்றன.

2. பெயர்: எபிரேயத்தில் இந்நூல் ''கோகெலேத்'' (Qoheleth) என்றழைக்கப்படுகிறது. இச்சொல்லுக்கு அடிப்படையாக இரு எபி ரேயச் சொற்களைச் சுட்டிக்காட்டலாம். முதற்சொல், ''ககால்'' (Qahal) என்பதாகும். இச்சொல்லுக்கு இஸ்ராயேல் மக்களது சபை அல்லது கூட்டம் என்று பொருள் கூறலாம். ''கோகெலேத்'' என்ற சொல் ஒரு பெண் பால் வினையெச்சப் பெயராகும். இச்சொல் முதலில் ஒரு அலுவலைக் குறிக்கிறது. பின்பு அத்தொழிலையுடைய பதவியையும், அப்பதவியைக் கொண்டிருப்பவரையும் குறிக்கலாம். இந்த அடிப்படையில் இச் சொல்லுக்குச் சபையை நடத்துபவர், சபை யில் பேசுபவர், போதகர் அல்லது திருவுரை யாளர் என்று பொருள் கூறலாம்.

இப்பெயர் ஏற்கெனவே கிரேக்க மொழி பெயர்ப்பாளர்களைத் திகைப்புறச் செய்துள் ளது. அவர்களும் இப்பெயரைத் திருச்சபை என்று பொருள்படும் ''எக்லேசியா'' (Ecclesia) என்ற சொல்லோடு தொடர்புடைய ''எக்லே சியாஸ்டெஸ்'' (Ecclesiastes) என்ற தெளிவில் லாத கிரேக்கச் சொல்லால் மொழி பெயர்த்து, இச்சொல்லின் புதிர்த்தன்மையை அதிகப்படுத்தியுள்ளனர். ''எலேசியாஸ் டெஸ்'' என்ற சொல் கிரேக்க இலக்கியத்தில் மிக அபூர்வமானது. இச்சொல் ஒரு சபை யின் அங்கத்தினரையோ அச்சபையைக் கூட்டு பவரையோ குறித்தது. கிரேக்கப் பெய ரைப் பின்பற்றி புனித எரோனிமு இலத்தீன் மொழியில் எழுத்துப் பெயர்ப்புச் செய்தார். அவரைப் பின்பற்றி, லூத்தர் இந்நூலைப் ''போதகர்'' என்று அழைத்தார். இதைப் பின்பற்றி தமிழில் பிரிவினைச் சகோதரர் கள் இந்நூலைப் ''போதகர் நூல்'' என்றும், கத்தோலிக்கர்கள் ''சங்கத் திருவுரை நூல்'' என்றும் அழைத்தனர். பொது மொழி பெயர்ப்பில் ''திருவுரையாளர்'' என்றழைக்கப் படுகிறது.

''கோகெலேத்'' என்ற சொல், ''க்ல'' (Qhl) என்ற மற்றொரு எபிரேயச் சொல்லிலிருந்து வருவதாகக் கருதுவர் சிலர். இச்சொல்லின் அடிப்படையில், ''கோகெலேத்'' என்ற சொல்லுக்கு ''வாதம் இடும் இயல்புடைய வர்'', ''வணங்காக் கழுத்துடையவர்'', அல் லது ''விடாப்பிடியாளர்'' என்று பொருள் கூறலாம். இதன்படி ''கோகெலேத்'' என்ப வர் ஒரு வாதிடும் இயல்புடைய அறிவாளி. இவர் எல்லாவற்றையும் தாக்கி, ஆய்வு செய்து, அவற்றின் அடித்தளம் வரை போகக் கூடியவர். இதற்கு அவருக்கு ஒருசபை வேண்டியதில்லை. ஒருதனிப்பட்ட ஆய்

வின் விளைவாகவோ, ஒரு சிறிய குழுவின ரோடு சேர்ந்தோ தமது நூலை ஆசிரியர் படைக்கலாம். ஒரு வேளை இப்பொருள் இந்நூலின் தன்மையை விளக்கலாம். இத் தகைய நூல் தோன்றியதே யாவற்றையும் ஐயத்துடன் கேள்வி கேட்கும் போக்குடைய காலத்தைச் சுட்டுகிறது.

''திருவுரையாளன் (Qoheleth) ஆகிய நான்....'' *(1:12)* என்ற வாசகத்தைக் கொண்டு, ''கோகெலேத்'' என்பதை ஓர் ஆளின் பெயர் என்று சிலர் கருதுவது சரியா கத் தெரியவில்லை.

*3. ஆசிரியர்:* இந்நூலை எழுதிய ஆசிரிய ரைப்பற்றி அதிகம் கூற முடியாது. நூலின் தொடக்கத்தில் ''தாவீதின் மகனும் எருச லேம் அரசனுமான திருவுரையாளர்'' *(1:1)* என்றும், ''திருவுரையாளனாகிய நான் எருச லேமில் இஸ்ராயேலின் அரசனாக இருந் தேன்'' *(1:12)* என்றும் ஆசிரியர் குறிக்கப்படு கிறார். இக்குறிப்புகள் இஸ்ராயேலின் மிகச் சிறந்த ஞானியாகிய சாலமோனைச் சுட்டுவதாகத் தெரிகிறது. சில மொழி பெயர்ப்புக்களில் சாலமோன் பெயரும் சேர்க் கப்பட்டுள்ளது. சாலமோன் வாழ்ந்தகாலத் தையும், இந்நூல் தோன்றியதாகக் கருதப் படும் காலத்தையும் மனதில் கொண்டால், சாலமோனுக்கு இந்நூலைச் சாற்றிக் கூறுவது ஒவ்வாது என்பதுதெளிவு. பிற்கால நூற் களை முற்காலப் பெரியார்களுக்குச் சாற்றிக் கூறும் இஸ்ராயேல் மரபு பற்றி ஏற்கனவே போதியமட்டும் கூறியுள்ளோம். இவ்வாறு கூறுவது ஒரு இலக்கிய யுக்தியே தவிர வேறன்று.

ஆசிரியரைப் பற்றிய நேரடியான குறிப்பு நூலின் முடிவுரையில் *(12:9-10)*; வருகிறது. ஆனால் இந்த விவரிப்பு எல்லா ஞானிகளுக் கும் பொருந்தும். ஆசிரியர் தமது ஆசை களையும், இச்சைகளையும் அனுபவித்து நிறைவு கொள்ளப் போதிய செல்வம் படைத்தவராகத் தெரிகிறது. அவர் பெரிதும் பய ணம் செய்திருக்கிறார்; கல்வி கேள்விகளில் நன்கு பயிற்சி பெற்றுள்ளார்; கலையிலும் கருத்துக் கொண்டிருக்கிறார்; வாழ்க்கையின் கூறுகள் எல்லாவற்றையும் சோதித்து அறிந் திருக்கிறார். அவர் காட்டும் நகரப்பண்பும், கலப்புக் கலாச்சாரப் போக்கும் ஆலயம் பற்றிய சிறு குறிப்புக்களும் *(5:1-5)* ஆசிரியர் கலாச்சார மையங்களில், ஒருவேளை எருச லேமில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று காட்டுகின்றன. அவர் தமது முதிர்ந்த வயதில் இந் நூலை எழுதியிருக்க வேண்டும்; இளமை யின் மகிழ்ச்சி பற்றியும் முதியவயதின் தொந் தரவுகளைப் பற்றியும் உணர்ச்சியோடு பேசு கிறார்.

பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டு இஸ் ராயேல் திரும்பிய பிற்காலத்தைச் சேர்ந்தவ ரும், வாழ்க்கையை முடிந்த மட்டும் துய்த்து அறிந்தவரும், உலக காரியங்களில் அனுபவ மிக்கவருமான ஓர் இஸ்ராயேல் ஞானி உல கம், வாழ்க்கை ஆகியவை பற்றிய தமது சொந்த அனுபவச் சிந்தனைகளைச் சால மோன் பெயரால் தொகுத்துத் தமது நூலை அமைத்துள்ளார். இவ்வாறு கடந்தகால அர சன் வாயிலிருந்து வருவதாக ஒரு ஞானி தமது சொந்த சிந்தனைகளை நூலாக அமைப் பது எகிப்திலும் பழைய ஏற்பாட்டிலும் காணப்படும் மரபாகும். ''ஞானமுள்ளவர்க ளின் சொற்கள் ஆயனின் கோல்போல் வழி நடத்தும். தொகுத்துவைத்த முதுமொழிகள் பசுமரத்தாணிபோல உள்ளத்தில் பதியும்'' *(12:11)* என்ற கூற்று இந்நூலின் ஆசிரியருக்கு மிகவும் பொருந்தும். இது, ஒரு வேளை, இந்நூல் பற்றிய பதிப்பாசிரியரின் சொந்த கருத்தாக இருக்கலாம்.

*4. நூல் தோன்றிய காலம்:* இந்நூல் உலகத் தைப் பற்றி அயர்ச்சியடைந்த தத்துவ கருத் துக்களைக் கொண்டுள்ளது. இந்நிலை பழைய ஏற்பாட்டு இலக்கிய வளர்ச்சியின் இறுதிக்கட்டத்தில்தான் நிகழ்ந்திருக்கக் கூடும். மேலும் இந்நூல் புறஇனக் கருத்துக்க ளால் பாதிக்கப்பட்டுள்ளது. இந்நிலை ஏற் பட, யூததுவவும் தன்னுள்ளே வளர்ச்சி யடைந்து, இத்தகைய புறப்பாதிப்பை ஏற்கத் தயாராக இருந்திருக்க வேண்டும். இத் தகைய காலம் நாடு கடத்தலுக்கு மிகப் பிந்திய

தாக இருக்கலாம். ஆனால், நூல் தோன்றிய காலத்தைத் துல்லியமாகக் கணிப்பது அவ்வளவு சுலபமன்று.

இந்நூலில் காணப்படும் பாரசீகச் சொற்றொகுதியை அடிப்படையாகக் கொண்டு, இந்நூல் கி.மு. 500-ஐ ஒட்டித் தோன்றியிருக்கலாம் என்று சிலரும், கி.மு. 4-3-ஆம் நூற்றாண்டுகளில் தோன்றியிருக்கலாம் என்று வேறு சிலரும் கூறியுள்ளனர்.

இந்நூலில் அதிகமாக அரமேயிக்குப் பண்புகள் காணப்படுவதை அடிப்படையாகக் கொண்டு, இந்நூல் அரமேயிக்கு மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது என்றும் சிலர் கருதுவர். இதை, இந்நூலைத் தொகுத்தவர் அரமேயிக்கு மொழி பேசப்பட்ட பகுதியில் வாழ்ந்திருக்கலாம் ஆகவே, அவரது சொற்றொகுதியில் அரமேயிக்குப் பண்புகள் புகுந்திருக்கலாம் என்று விளக்கலாம். நூலில் காணப்படும் மறைமுகச் சான்றுகள், காலக்கணிப்புக்கு ஒரு சிறிது உதவி செய்வதாகத் தெரிகிறது. ''வயது சென்ற அறிவுரை கேளாத முட்டாள் அரசன்'' *(4:13)* இரண்டாம் அந்தியோக்கு என்பவன் ஆவான் என்றும், ''சிறையில் கைதியாயிருந்தவன் அரியணை ஏறியதுமுண்டு'' என்பது *(4:14)* மூன்றாம் அந்தியோக்கு ஆவான் என்றும் அடையாளம் காட்டப்படும். இவற்றிலிருந்து, திருவுரையாளர் மூன்றாம் அந்தியோக்குவின் காலத்தைச் சேர்ந்தவர் என்றும் ஆகவே, இந்நூல் கி.மு. 200-ஐ ஒட்டித் தோன்றியிருக்க வேண்டும் என்றும் சிலர் கருதுவர்.

கி.மு. 180-ஐ ஒட்டித் தோன்றிய சீராக் நூல் திருவுரையாளர் நூலை அறிந்து பயன்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. *சீரா 5:3*-ஐத் *திருவுரை 3:15*-ஓடும், *சீரா 13:25*ஐத் *திருவுரை 8:1*-ஓடும், *சீரா 40:11*-ஐத் *திருவுரை 12:7*-ஓடும் ஒப்பிடுக. கும்ரான் குகைகளில் கண்டெடுக்கப்பட்ட இந்நூலின் துணுக்குகள், இந்நூல் ஏற்கெனவே கி.மு. 150-இல் வழக்கிலிருந்துள்ளது என்பதைச் சுட்டுகின்றன.

நூலின் சிந்தனைப் போக்கும் இந்நூல் தோன்றிய காலத்தைக் குறிக்க உதவுகிறது. அந்தியோக்கு எப்பிபானின் (கி.மு. 175-160) சமயக் கொள்கையின் விளைவாக யூதர்கள் தங்கள் சமயத்தில் ஆர்வம் கொண்டனர்; பெரும் பற்றுக் கொண்டனர். இப்போக்குக்கு எதிரான கருத்துக்களைக் கொண்ட இந்நூல் இக்காலத்திலும் இதற்குப் பின்னும் தோன்றியிருக்க முடியாது. இந்நூலை யூதர்கள் மரியாதையோடு ஏற்றுக் கொண்டனர் என்றால், கிரேக்க மயமாக்கும் இயக்கத்திற்கு எதிராகப் போராட்டம் தொடங்குமுன் இந்நூல் தோன்றியிருக்க வேண்டும். மேலும் ஆசிரியர் மரித்தோர் உயிர்ப்புப் பற்றிய விசுவாசத்தை அறிந்திருப்பதாய்த் தெரியவில்லை. ஆகவே இந்நூல் மக்கபேயர் காலத்திற்கு முந்தியதாக இருக்க வேண்டும். நூலில் காணப்படும் கிரேக்கப் பண்புகள் இந்நூல் அலக்சாந்தர் காலத்திற்கு முந்தியதாக இருக்க முடியாது என்பதை உணர்த்துகின்றன. மேற்கூறப்பட்டவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு இந்நூல் கி.மு. 250-200க்கு இடையிட்ட காலத்தில் தோன்றியிருக்கலாம் என்று கூறலாம்.

எங்கு இந்நூல் தோன்றியது என்று உறுதியாகக் கூறமுடியாது. ஆசிரியர் எகிப்தைப் பற்றிய அறிவைக் காட்டுகிறார். ஆகவே இந்நூல் எகிப்தில், குறிப்பாக அலக்சாந்திரியாவில் தோன்றியிருக்கக்கூடும் என்பர் சிலர். (ஆனால் இதற்கு வேண்டிய அயல் பாதிப்புக்குப் போதிய சான்றுகள் இல்லை). வேறுசிலர், இந்நூல் கீழ்த்திசையில் சிதறிக் கிடந்த யூதர்களிடையே தோன்றியது என்பர். நூலில் காணப்படும் எருசலேம், ஆலயம், பலிகள், நேர்ச்சிகள், பாலஸ்தீன நாட்டுச் செடிகொடிகள் ஆகியவை பற்றிய குறிப்புகள், இந்நூல் பாலஸ்தீனத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்று சுட்டுகின்றன - என்று பெரும்பான்மையான ஆய்வாளர்கள் இப்போது ஏற்றுக்கொள்வர்.

***5. அயல்பாதிப்பு:*** இந்நூல் அயல் இலக்கியங்களால் பாதிக்கப்பட்டுள்ளது என்று கருதுவர் சிலர். அப்படியானால் எந்த அளவுக்கு இந்தப் பாதிப்பு ஏற்பட்டது என்றும், அப்பாதிப்பை யூதத் தத்துவத்துக்குள்ளே விளக்க முடியுமா என்றும் பார்க்க வேண்டும்.

பாபிலோனியாவைச் சேர்ந்த ''தலைவனுக்கும் அடிமைக்குமிடையே அவநம்பிக்கை நிறைந்த உரையாடல்'' (Pessimistic Dialogue between Master and Slave) என்ற நூலும், எகிப்தைச் சேர்ந்த அமெனம் - எட் தன் மகனுக்குக் கூறும் அறிவுரை என்னும் நூலும் திருவுரையாளர் நூலுக்கு ஒத்ததாக உள்ளன என்பர். தாகூது என்ற அறிஞர் பெனிசிய - கானானிய பாதிப்பை வலியுறுத்துவார். மற்ற எபிரேய ஞான இலக்கியங்கள், பிற இன இலக்கியங்களை ஓரளவு தழுவியிருப்பது போல், இந்நூலும் அவற்றில் சிலவற்றை ஒத்திருக்கலாம்.

இந்த அயல்பாதிப்புக்களில் முக்கியமானது கிரேக்கக் கலாச்சாரப் பாதிப்பாகும். நூல் தோன்றிய காலம் கிரேக்கக் கலாச்சாரத்தால் பாதிக்கப்பட்ட தோலமியர்கள் ஆதிக்கம் செலுத்திய காலமாகும்.

(குறிப்பு: - கி.மு. 323 - 30 - க்கு இடையிட்ட காலத்தில் எகிப்தை ஆட்சி செய்த கிரேக்க அரச மரபைத் தோலமியர்கள் என்று அழைப்பது மரபு. மாமன்னன் அலக்சாந்தருடைய தளபதிகளில் ஒருவனான தோலமி என்பவனால் இந்த அரச மரபு நிறுவப்பட்டது. கி.மு. 301 - 198 - க்கு இடையிட்ட காலத்தில் தோலமியர் பாலஸ்தீனத்தை ஆட்சி செய்தனர். தோலமியர்களுக்கும் யூதர்களுக்குமிடையே பொதுவாக, சுமுகமான உறவு நிலவியதாகத் தெரிகிறது. இக்காலத்தில் எகிப்தில் பல யூதக் குடியிருப்புக்கள் தோன்றின. கிரேக்கப்பண்பாடு இக் குடியிருப்புக்களைப் பெரிதும் பாதித்தது. குறிப்பாக அலக்சாந்திரியாவில் அமைந்திருந்த செழிப்பான யூத சமூகத்தினரிடையே பழைய ஏற்பாடு கிரேக்கத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. பல யூத இலக்கியங்கள் கிரேக்க மொழியில் தோன்றின). அப்போது பரவிக் கொண்டிருந்த இந்தக் கிரேக்கக் கலாச்சாரத்தின் பாதிப்பிலிருந்து யூத நூல்கள் தப்பித்து இருக்க முடியாது. ஆனால் இது அடிப்படையில் பாதிப்பு ஏற்படுத்தவில்லை எனலாம். ஏனெனில், ஆசிரியர் கிரேக்கச் சிந்தனைப்போக்கில் எழுதினாலும், அடிப்படையில் ஒரு யூதனாகவே இருக்கிறார்.

**6. திருமுறைப் பட்டியலில் திருவுரையாளர் நூல்:** இந்நூல் யூதபக்திக்கு ஒத்ததாய் இருப்பதாகத் தெரியவில்லை. யூத இராபிகளின் பாரம்பரியப்படி இந்நூலில் காணப்படும் அவநம்பிக்கையும், முரண்பாடுகளும் இந் நூல் யூதத்திருமுறைப் பட்டியலில் சேர்க்கப்படுவதற்குத் தடையாக இருந்துள்ளன. இராபி கில்லெல் போன்றவர்கள் இந்நூல் பரிசுத்தமானது என்று கூறியுள்ளனர். பிறர் இதை மறுத்துள்ளனர். இந்நூல் ஞானத்தைப் பற்றிப் பேசவில்லை. சாலமோன் இந்நூலை இயற்றியிருந்தால், இதில் இறைவன் பேசவில்லை; சாலமோன் தமது தனிக்கூற்றுகளைக் கூறுகிறார் என்றனர். கி.பி. 100-ஐ ஒட்டி யாம்னியாவில் நடந்த யூதக் கூட்டத்தில்தான் இந்நூல் திருமுறைப்பட்டியலில் சேர்ந்ததாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதற்கு இந்நூலைச் சாலமோன் இயற்றினார் என்ற பாரம்பரியம் பெரிதும் உதவியது எனலாம்.

யூதர்களிடையே விழாக்காலத்தில் வாசிக்கப்பட்ட ஐந்து நூல்களில் இதுவும் ஒன்றாகும். இது கூடாரவிழாவின் மூன்றாம் நாள் வாசிக்கப்பட்டது. வாழ்வின் மகிழ்ச்சியின் நிலையாமையை எடுத்துக் கூறி மக்களுக்கு ஓர் எச்சரிக்கை விடுத்தது இந்நூல்.

திருச்சபை தொடக்கத்திலிருந்து இந் நூலைத் தனது திருமுறைப்பட்டியலில் சேர்த்துக் கொண்டது. ஆனால் இந்நூலுக்குத் திருச்சபைத் தந்தையரில் யாரும் விளக்கவுரை எழுதியதாகத் தெரியவில்லை.

**7. இலக்கியச் சிறப்பு:** நூலின்பெரும் பகுதி உரைநடையில் அமைந்துள்ளது. ஆசிரியர் தமது நடையிலும் சிந்தனைப் போக்கிலும் எந்த முன் மாதிரியையும் பின் பற்றியதாகத் தெரியவில்லை. ஆனால் நூலில் பல இலக்கிய வடிவங்கள் காணப்படுகின்றன. அவற்றில் சில, ஞானக்கூற்றுகள் (9:17-10:20), மேற்கோள்கள், அறவுரைகள், எச்சரிக்கைகள், ''இதைவிட அதுமேல்'' என்று அமைந்துள்ள கூற்றுகள் ஆகியவை யாகும். சில பகுதிகள் தன்மை ஒருமையில்

அமைந்துள்ளன *(1:12-17; 2:1-23)*. சில, சிந்தனைத் தொடர்களாக உள்ளன. பல,முன் அமர்ந்திருப்போரைப் பார்த்துக் கூறும் அறவுரையாக அமைந்துள்ளன *(4:17-5:8; 7:8-8:8; 11:1-6)*. *2:1-11.12-18; 3:1-8; 9:9-12:8* போன்ற பகுதிகள் தனித்து நிற்பதாய்த் தோன்றுகின்றன. பிற பகுதிகளைப் பிரித்துக்காட்டுவது அவ்வளவு சுலபமன்று.

ஆசிரியர் பழமொழிகளைப் பயன்படுத்தும் விதம் குறிப்பிடத்தக்கதாகும். பழமொழிகள் வாழ்க்கை அனுபவத்திலிருந்து பொது உண்மைகளை எடுத்துக் கூறுகின்றன; ஆனால் அவை எப்போதும், எல்லாருக்கும் பொருந்தியதாக இருக்க வேண்டியதில்லை. சான்றாக, ''தூரயிருந்தால் சேர உறவு'', ''கண்டால் காமாட்சிநாயகன், காணாவிட்டால் கபோதிநாயகன்'' என்ற நம்நாட்டு இரு பழமொழிகளை ஒப்பிடுக. பழமொழிகளின் ஒப்புமை சார்ந்த மதிப்பீட்டை, இந்நூலின் ஆசிரியரைப்போல், வேறு எவரும் நன்கு உணர்ந்து பயன்படுத்தியதில்லை. ஆசிரியர் ஒரு பழமொழியின் பொருளை மற்றொரு பழமொழியால் மட்டுப்படுத்துவார். இவ்வாறு ஓர் இடத்தில் ''இன்று உயிரோடு வாழ்கிறவர்களின் நிலைமையைவிட ஏற்கெனவே மாண்டு மறைந்து போனவர்களின் நிலைமையே மேலானது என்றேன்'' *(4:2)* என்று கூறும் ஆசிரியர் மற்றொரு இடத்தில் ''செத்துப்போன சிங்கத்தைவிட உயிருள்ள நாயே மேல்'' *(9:4)* என்று கூறிமுன்னைய கூற்றின் துர்நம்பிக்கையை மட்டுப்படுத்துவார். ''சிரிப்பதைவிட, துயரமே நல்லது'' *(7:3)* என்று கூறும் ஆசிரியர் மற்றொரு இடத்தில் மகிழ்வதைப் போற்றுகிறார் *(8:15)*. இப்படிக் கூறிக் கொண்டே போகலாம். இச்சான்றுகளிலிருந்து ஆசிரியர் தன்னையே மறுத்துக்கூறுகிறார் என்று நாம் கருதினால், அது தவறாகும். வாழ்வின் மதிப்பீட்டை ஆழ்ந்து கூர்மையாய் நோக்குகிறார் என்பதே கருத்தாகும். சிலருக்கு வாழ்வு ஒரு பெரும் சுமையாக இருக்கலாம். மற்றவர்களுக்கு அது எளிதாக இருக்கலாம். இந்த அனுபவத்தை ஆசிரியர் நன்கு அறிவார். ஆனால் ஒருவர் வாழ்வில் தேடும் நன்மைக்கும், அதைத் தேடுவதில் காட்டும் முயற்சிக்கும் எவ்விதச் சமன்பாடும் இருப்பதில்லை. நன்மை மனிதனது ஏக்கத்திற்கேற்ற வீதமுறையில் இருப்பதில்லை. நேர் முரணாகத் தோன்றும் கூற்றுகளை அருகருகே வைத்து, வாசகரே சிந்தித்து ஒரு விடையைக் காணட்டும் என்று விட்டு விடுகிறார்.

இந்நூல், தர்க்கிக்கும் பிரச்சனையைப் பொறுத்து மட்டுமன்று, அப்பிரச்சனை பற்றிய பல கருத்துக்களைப் பகிர்ந்து கொள்ளும் முறையிலும், யோபு நூலைப் பிரதிபலிக்கிறது. ஆனால் கருத்துக்களை எடுத்துக் கூறப் பல நபர்களைக் கொண்ட உரையாடலை ஆசிரியர் பயன்படுத்தவில்லை. வகையுறப் பேசும்முறையைப் பயன்படுத்தித் தனியுரையில் தமது கருத்துக்களை எடுத்துக் கூறுகிறார். ஒருபோது, பாரம்பரிய ஞானக்கருத்துக்களை எடுத்துக் கூறுவார்; மறுபோது, தாம் எழுப்பும் கேள்விகளுக்கு எப்படிப் பரம்பரை ஞானபோதகம் தகுந்த விளக்கம் அளிக்கவில்லை என்று காட்டுவார். பின் தமது சொந்த மதிப்பீட்டை எடுத்துக் கூறுவார். இதில் ஆசிரியர் தம்மோடே உரையாடுகிறார் எனலாம். இதில் ஆசிரியர் இயல்பாக உள்ளார் *(4:9-12;7:1-14;9:4-6)*. இம்முறையில் காணப்படும் நூலின் நெருக்கமில்லாத அமைப்பு-பழமொழி நூலைப் பிரதிபலிக்கிறது.

*8.* **நூலின் ஒற்றுமை:** நூலில் வேண்டுமென்று விரும்பி அமைக்கப்பட்ட ஒற்றுமை இருப்பதாகத் தெரியவில்லை. சிலர் கருத்தில் முரண்பாடு காண முயன்றுள்ளனர் *(4:2-ஐ 9:4 ஒடும், 4:5-ஐ 4:6-ஒடும், 7:4ஐ 8:15-ஒடும் ஒப்பிடுக)*. இவற்றைப் புரிந்து கொள்வது பற்றி முன்பே கூறியுள்ளோம். சில பகுதிகள் படர்க்கையில் எழுதப்பட்டுள்ளன *(1:2; 7:27; 12:8; 12:9-14)*. நூலின் பெரும் பகுதி உரையாடலில் உள்ளது. ஆனால் சில பாடல் பகுதிகள் புகுத்தப்பட்டுள்ளன. இவை நூலின் பொதுச் செய்தியை மாற்றி அமைப்பதாகத் தெரிகிறது *(4:9-12; 4:17-5:6; 7:1-12.18.22;10; 12:2-6)*. சில வாசகங்

கள் *(3:17;7:18; 8:5;12:12-14)* ஐயத்திற்குரியவை ஆகின்றன. ஏனெனில் இவை, பாரம்பரியத்துக்கு எதிரான ஆசிரியருடைய கருத்துக்களை ஒன்றுமின்மையாக்குவது போல் தோன்றுகின்றன.

நூலில் காணப்படும் பாரம்பரியக் கருத்துக்களைக் கூறும் பகுதிகளுக்கும், நூலில் விரவிக் கிடக்கும் துர்நம்பிக்கைக் கருத்துக்களுக்கும் ஒன்றியைந்த தன்மை இல்லை என்பது தெளிவாக உள்ளது. ஆசிரியர், பாரம்பரியச் சமய, ஒழுக்கமுறைகள் பற்றிப் ''பதித'' முறையில் கேள்விகள் எழுப்புகிறார். நூலின் மொழிநடையிலும் பல தனித்தன்மைகள் உண்டு. மேற்கூறிய காரணங்களுக்காக, இந்நூல் ஒரே ஆசிரியர் எழுதியநூல் அன்று; பலரால் இயற்றப்பெற்ற பகுதிகள் அடங்கிய தொகுப்பாகும் என்று ஆய்வாளர் சிலர், கருதுவர். இந்த அடிப்படையில், ஓர் ஆய்வாளர், இந்நூலில் எட்டு ஆசிரியர்களைக் காண்கிறார். மற்றொருவர், இந்நூலின் முக்கால் பகுதியைத் திருவுரையாளரும், பிற பகுதிகளை அவரது சீடர்களும் எழுதினர் என்பார். நூலில் காணப்படும் கடுமையான துர்நம்பிக்கையைச் சமன்படுத்தும் பொருட்டுப் பாரம்பரிய ஞானக்கருத்துக்களை *(2:14; 4:5-6; 6:10; 7:5-6; 7:26; 8:1-2; 11:4-6)* ஒரு பக்தியுள்ள யூதர் பிற்காலத்தில் நூலில் இடையிடையே புகுத்தினார் என்று சிலர் கருதுவர். இப்பகுதிகள் இருந்தும், ஆசிரியரின் ''பதிதத்தன்மை'' நூலில் தெளிவாக உள்ளது என்பதை நாம் காணத் தவறக் கூடாது. ஆசிரியரே இவற்றைக் கூறியிருந்தால், இவற்றைத் தர்க்கத்திற்குரிய வாசகமாகவோ, எடுத்துக்காட்டாகவோ பயன்படுத்துகிறார். ஏனெனில் சில இடங்களில் இவற்றை மறுக்கிறார் என்றும் சிலர் விளக்குவர்.

இந்நூலின் ஒற்றுமையை மறுப்பதைவிட, இதில் ஒற்றுமையில்லை என்று நிறுவுவது கடினம் என்று ஓர் ஆய்வாளர் கூறுவார். தொடக்க வரி *(1:1)*, முடிவுரை *(12:9-14)*, ஒருவேளை ''போதகர் கூறுகிறார்'' என்ற சொற்றொடர் *(1:2;7:27;12:8)* ஆகிய பகுதிகளைத் தவிர பிற பகுதிகளை ஒரே ஆசிரியர் எழுதினார் என்று இப்போது ஆய்வாளர்கள் பொதுவாக ஏற்றுக் கொள்வர். அண்மையில் நடைபெற்றுள்ள, இந்நூல் பற்றிய உளவியல், வரலாற்று நோக்கு ஆய்வுகள் இக்கருத்துக்கு ஆதரவு தருவதாகத் தெரிகிறது.

இயற்கையில் காணப்படும் ஞானம், நற்பெயர், மனித ஆசைகள், வெற்றிகள் ஆகியவற்றின் வீண்தன்மை பற்றி, கருத்துக்கள் நெருக்கமில்லாத முறையில் ஒரு மைய வட்ட வடிவங்களில், மீண்டும் மீண்டும் கூறப்படுகின்றன. ஆசிரியர் இந்நூலை ஒரே தொடராக எழுதியதாகத் தெரியவில்லை. அவ்வப்போது தமக்குத் தோன்றிய கருத்துக்களைக் குறித்துவைத்தார் என்று தோன்றுகிறது. ஒருவேளை, மாணவர்கள் தங்கள் ஆசானது சிறந்தகருத்துக்களைத் தொகுத்து எழுதியிருக்கலாம். நூலை ஒரே ஆசிரியரின் நாட்குறிப்பேடாக ஏற்றுப்புரிந்து கொள்வது நன்று.

நூலை ஒரே தொகுப்பாக ஏற்று, விளக்கம் அளிப்பது இப்போது ஆய்வாளர்களிடையே நிலவும் போக்காகும். சிலர் நூலில் திட்டம் உள்ளது என்று காட்ட முயன்றுள்ளனர். வேறு சிலர் நூலைத் திருத்தி அமைக்க முயன்றுள்ளனர். இவை தேவையற்ற முயற்சிகளாகும். ஏனெனில் ஆசிரியர் ஏதாவது ஒரு கருத்தை அது வரும் குறிப்பிட்ட இடத்தில் ஏன் வைக்கிறார் என்று தெளிவுபடுத்த எக்காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை. நூலில் வரும் கருத்துத் தொகுப்புக்களை எந்த முறையிலும் வரிசைப்படுத்தலாம். ஏனெனில் அவை நெருக்கமில்லாத ஒரு நாட்குறிப்பேடு போல் அமைந்துள்ளன *(1:2-11;3:1-8;7:1-8...)*.

9. திட்டம்: மேற்கூறியவற்றிலிருந்து, இந்நூலில் ஒரு தெளிவான திட்டத்தைத் தேடுவது வீண் முயற்சியாகும்; ஆயினும் ஆய்வாளர்கள் நூலை, 3, 6, 8, 12, 23, 37 பகுதிகளாகப் பிரித்துக்காட்ட முயன்றுள்ளனர் என்பதை நாம் அறிந்திருப்பது நன்று. நாம் இங்கு, வசதிக்காகப் பின்வருமாறு நூலைப் பகுக்கலாம்:

I. தலைப்பும் *(1:1)* முக்கிய கருத்தும் *(1:2-3)*.

II. மனித முயற்சிகள் வீணானவை *(1:4-2:26)*.

III. மனித வாழ்வில், வாழ்வும் சாவும் *(3:1-22)*.

IV. மனிதத் தன்மையற்ற போக்கும், இறைவன்பால் கவனமின்மையும் *(4:1-5:6)*.

V. செல்வத்தின் மாயை *(5:7-7:12)*.

VI. மனித வாழ்வில் முறைகேடுகள் *(7:13-9:10)*.

VII. வளத்தின் ஒவ்வாமை *(9:11-12:8)*.

VIII. முடிவுரை *(12:9-14)*.

*10. முக்கிய கருத்துக்கள்:* ''ஞானமுள்ளவர்களின் சொற்கள் ஆயனின் கோல் போல் வழிநடத்தும்'' *(12:11)* என்று நூலின் முடிவுரை கூறுகிறது. இக்கூற்று திருவுரையாளர் கூற்றுகளுக்கு மிகப் பொருந்தும். ஏனெனில் அவை ஆன்மாவை வேதனைக்குள்ளாக்குகின்றன; மனதைச் சஞ்சலப்படுத்துகின்றன; இதயத்தை அமைதி இழக்கச் செய்கின்றன; சுயநிறைவுடையோரை நிலைகுலையச் செய்கின்றன; மரபு விரும்பிகளை அதிர்ச்சியுறச் செய்கின்றன; ஞானிகளைக் கூட மனக் குழப்பமடையச் செய்கின்றன. இந் நூலை வாசிக்குமுன் ''இவையனைத்தையும் தொகுத்து முடிவுரையாக ஒன்று கூறுகிறேன். கடவுளுக்கு அஞ்சிநட, அவரது கட்டளைகளுக்குக் கீழ்ப்படி. மனிதன் படைக்கப்பட்ட நோக்கம் இதுவே. நாம் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும், மறைவான செயலுக்குங்கூட, அது நல்லதோ தீயதோ எதுவாயினும், அனைத்திற்கும் கடவுளே தீர்ப்பு வழங்குவார்''. *(12:13-14)* என்ற வாக்குகளையும், *5:1-6; 7:18; 8:12-13; 12:1* போன்ற ஆசிரியரது மற்றும் சில வாக்குகளையும் நாம் மனதில் கொண்டிருந்தோமென்றால், பலர் திருவுரையாளரைத் தவறாகப் புரிந்து கொண்டதுபோல், நாமும் அவரைத் தவறாகப் புரிந்து கொள்ள மாட்டோம். காலப் போக்கில் சமயப் பற்றற்றவர், இன்பம் விரும்பி, துர்நம்பிக்கைவாதி, காலத்தால் முந்திய தற்கால இயல்வாதி (Existentialist) போன்ற பல பெயர்கள் திருவுரையாளருக்குச் சூட்டப்பட்டுள்ளன. ஆனால் நூலில் நாம் காண்பது: அவர் இறைவனது அருள் பாலிப்பை விசுவாசிக்கிறார் *(3:11.14.15; 8:17; 11:5)*; இறை ஞானத்தைப் புகழ்கிறார் *(7:2.20; 9:13-18)*; இறைத்தீர்ப்பை எதிர்பார்க்கிறார் *(3:17; 11:9; 12:13-14)*. சுருங்கச்சொன்னால் அவர் ஒரு புடைத்தெடுக்கப்பட்ட விசுவாசியாவார். ஆகவே மேற்கூறப்பட்ட பெயர்கள் எதுவும் அவருக்குப் பொருந்தாது. ஆசிரியரையும் அவரது நூலையும் புரிந்து கொள்ள இவற்றை நினைவில் கொண்டிருப்பது நன்று.

மற்றொன்றையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். அது திருவுரையாளரது உண்மை, நேர்மை ஆகும். அவர் உலகைக் கவனிக்கிறார். அதுபற்றித் தமது கருத்துக்களை நேரடியாக எடுத்துக் கூறுகிறார். அவர் வாழ்ந்த காலம் செழிப்பின்றி இருந்திருக்கலாம். அதன் விளைவாக அவரது போக்கில் துன்பப் போக்கும், துர்நம்பிக்கையும் காணப்படலாம். ஆனால் தாம் கூறுவதில் நேர்மைமிக்கவராக இருக்கிறார். தாம் பார்த்ததை அப்படியே. சித்தரிக்கிறார். வாழ்வின் இன்ப துன்பங்களில் மறைந்திருக்கும் பொருளைக் காண முயலுகிறார். அவர் நுனிப்புல்மேயும் தன்மையுடையவர் அல்லர். வாசகர்களை எத்தகைய சூழ்நிலையையும் எதிர்கொள்ளத் தயாரிக்கிறார்.

*அ. இறைவனின் பண்புகள்:* திருவுரையாளரது போதகத்திற்கு இறைவனில் விசுவாசம் அடிப்படையாகும். இறைவனைக் குறிக்கும் ''எலோகீம்'' (Elohim) என்ற சொல் நூலில் 41 தடவை வருகிறது. இறைவனைப் படைப்பவர் என்றழைக்கிறார் *(12:1)*. உலகில் உள்ள யாவும் இறைவனால் படைக்கப்பட்டவை ஆகும் *(11:5)*. அவர் யாவும் வல்லவர் *(3:11; 6:10;7:4; 8:17)*. அவரே வாழ்வைஅளிக்கிறார் *(5:18; 8:15; 9:9)*. அதை

எடுத்துக் கொள்கிறார் (12:7). வாழ்வில் செழிப்பையும் (5:19;6:2) இன்பத்தையும் (2:24. 26; 3:13; 5:18) கொடுக்கிறார். யாவற்றையும் ஆய்ந்தறியும் ஆவலையும் கொடுப்பவர் அவரே (1:3; 3:11). அவர் மேலாண்மையுடையவர்; அவரது செயல்களை நாம் புரிந்து கொள்ள முடியாவிடினும், அவை நிறைவானவை (3:14; 5:1; 6:10; 7:13.14; 8:17; 9:1). அவர் ஞானம் மிக்கவர். ஏனெனில் அவர் கடந்த காலத்தையும் (3:15) வருங்காலத்தையும் (6:10) அறிந்திருக்கிறார். அவர் செய்வதையெல்லாம் நன்றாகச் செய்கிறார் (3:11.14). அவர் பரிசுத்தர். மனிதன் நேர்மையோடு அவருக்குப் பணி செய்ய விரும்புகிறார் (4:17; 5:1.3. 5-6; 7:18; 12:13). நீதிமான்கள், ஞானிகள்மேல் தனிப்பட்ட அக்கறை கொள்கிறார் (9:1.7). மனிதனது உழைப்பை ஆசீர்வதிக்கிறார் (2:24-25; 3:13). அவர் நீதியுள்ளவர். அவர் மனிதனுக்குக் கடினமான கடமையைக் கொடுத்திருந்தாலும் (1:13; 3:10) நல்லோருக்கு ஞானத்தையும் மகிழ்ச்சியையும் அளிக்கிறார் (2:26; 8:12); அவர்களைத் தீமையிலிருந்து விடுவிக்கிறார் (7:26). இதற்கு நேர் எதிராக தீயவர்களை நடத்துகிறார் (2:26; 7:26; 8:13). தண்டனை அளிப்பதில் காலம் தாழ்த்தினாலும் (8:11), நல்லோரையும் தீயோரையும் தீர்ப்பிடுபவர் அவரே (3:17). ஒருநாள் எல்லா மனிதர்களின் செயல்களையும் தீர்ப்பிடுவார் (11:9; 12:14).

இறைவன் பின்வாங்கியவராக, மனிதரோடு நெருங்கிய தொடர்பற்றவராகத் தோன்றுகிறார் (5:1-2). இது விவிலியப் போதகத்திற்கு மாறானதாகும். இறைவனது மறையுண்மையை ஆராய முடியாது (11:5). இறைவன் தூரத்திலிருப்பவரும், மௌன மிக்கவரும் மட்டுமல்லர்; விட்டுக்கொடாதவரும் கூட (7:13; 3:14). அவர் தீர்மானிக்கிறார்; மாறுவதில்லை. மனித காரியங்களில் கவலையற்றவராக இறைவன் தோன்றுகிறார். இதுவும் விவிலியப் போதகத்திற்கு மாறானது. அவர்முன் மனிதன் அதிகம் பேசக்கூடாது, மாறாக அவருக்குச் செவி மடுக்க வேண்டும் (5:1-2); நேர்ச்சியை நிறைவேற்ற வேண்டும் (5:5-6; 12:13).

**ஆ. மனிதன்:** மற்ற ஞான நூல்களைப் போல், திருவுரையாளர் நூலும் மனித வாழ்வையும் அதையொட்டிய பிரச்சனைகளையும் பற்றிப் பேசுகிறது. இறைவன் மனிதனை நேர்மையுள்ளவனாகப் படைத்துள்ளார் (7:30). மேலும் அவரிடமிருந்து மனிதன் பல காரியங்களைப் பெற்றுள்ளான் (5:17-18). இறைவனுக்கு வணக்கம் செலுத்துவதே மனிதனதுகடமை (3:14). ஆனால் மனிதன் பாவியாவான் (7:21). உலகில் ''நன்னெறியாளனும் தீ நெறியாளனும், நல்லவனும் கெட்டவனும், சுத்தனும் அசுத்தனுமாக (9:2) இருக்கின்றனர். இறுதியில், "இறைவன் தம் பார்வைக்கு நல்லவனாய் இருக்கிறவனுக்கு ஞானத்தையும் அறிவையும் இன்பத்தையும்'' (2:26) அளிக்கிறார்.

சமூக அமைப்பைப் பொறுத்தமட்டும் உலகில் அரசர்களும் ஊழியர்களும் (10:17), ஒடுக்குகிறவர்களும் ஒடுக்கப்படுவோரும் (4:1;5:7), செல்வம் உடையோரும் வேலையாட்களும் (5:11) இருக்கின்றனர். ஆனால் ஞானம் செல்வர்களின் உரிமைச் சொத்தாக இருக்க வேண்டிய அவசியமில்லை (4:13; 9:15). உழைப்பும் தோழமைக் கூட்டுறவும் (10:8; 4:9-12) வாழ்வில் முக்கியமானவை யாகும். சில சமயங்களில் கோபம் கொள்ளும் அதிகாரிகள்முன் பணிந்து போவதே மேலானது (10:4-7). மகிழ்ச்சியைப் பொறுத்தமட்டும், சிலர் தங்களுக்குக் கிடைத்ததைக் கொண்டு நிறைவடைந்து இன்பம் அடைகின்றனர் (5:18). ஆனால் பலர் நிறைவடைவதில்லை (5:9). ஏனெனில் அவர்களது ஆசைக்கு முடிவேயில்லை (1:13; 2:1-3; 8:11;...). ஆகையால் எல்லாம் விழல் என்ற உணர்வு அவர்களைக் கொடுமைப்படுத்துகிறது (1:2. 14;2:1.11.15).

எல்லோருக்கும் சாவே முடிவாகும் (3:19). அப்போது எவனும் ''செய்த உழைப்பினால் உண்டான பொருள் ஒன்றையும் கையில் எடுத்துக்கொண்டு போவதில்லை'' (3:15). ஒவ்வொருவரும் தனது செயல்களுக்குக் கணக்கு கொடுக்கவேண்டும் (3:17).

**இ. ஞானம்:** ஞானம், ஞானி என்ற சொற்கள் இந்நூலில் *44* தடவை காணப்படுகின்றன என்பது கவனிக்கத்தக்கது. இறைவன் மனிதனுக்கு ஞானத்தை அளிக்கிறார் *(2:26; 7:25)*. ஆனால் அதை மனிதன் உழைப்பாலும் *(1:1;7)* கவனிப்பாலும் *(8:16)* வளர்த்து நிறைவு செய்ய வேண்டும். ஞானத்திற்கும் இன்பத்திற்கும் நெருங்கிய உறவு இருகிறது. ஞானம் மனிதனது முகத்தை ஒளிர்விக்கிறது *(8:1)*; அவனை வலியவனாக்குகிறது *(7:12-20; 9:16)*; அவனை நீதிநெறியில் நடத்துகிறது *(10:3)*. பிறரோடு கொள்ளும் உறவில் உதவி செய்கிறது *(9:17; 10:17)*. ஞானி அகந்தைக்கு இடம் கொடுக்கக் கூடாது என்று வலியுறுத்த, அவனது ஞானம் எல்லாக் கேள்விகளுக்கும் பதில் காண முடியாது என்றும் *(8:17)* தீமையிலிருந்து காக்காது என்றும் *(9:4)*, சாவிலிருந்து காப்பாற்றாது என்றும் *(2:15-16)* எச்சரிக்கிறார் ஆசிரியர். ஆனால், ஞானி நீதியுள்ளவனாகவும், நல்லவனாகவும் இருப்பதால் *(2:26; 8:12-13)* இறைவனது பாதுகாப்பைக் கொண்டிருப்பான் *(9:1)*. மூடனதுநிலை இதற்கு நேர் எதிரானது. மூடன் இருளில் நடக்கிறான் *(2:14)*; தவறிப் போகிறான் *(10:2-3)*; தனது ஆற்றல்களைச் சிதறடிக்கிறான் *(7:4-6; 9:17)*; சோம்பேறியாகிறான் *(4:5)*, இறைவனுக்குத் துரோகம் செய்கிறான் *(7:17)*. இறைவன் அவனிடம் விருப்பம் கொள்வதில்லை *(5:3)*.

**ஈ. திருவுரையாளரின் ஒழுக்கவியல்:** இந்நூல் ஒருதெளிவான ஒழுக்க இயலைத் தரவில்லை. ஆயினும் ஒரு வாழ்க்கை முறையையும் சமூக மனப்போக்கையும் எடுத்துக் கூறுகிறது. அவற்றை மூன்று நல்லறிவுப் பாடங்களாகக் கருதலாம்.

**முதல்பாடம்:** எதிலும் அளவுக்கு மிஞ்சிப் போகக்கூடாது. அது நேர்மையானாலும், ஞானமானாலும், அவற்றில் மட்டுடைமை வேண்டும் *(7:16-17:21)*. ஏனெனில் ''நன்மை செய்து, பாவம் செய்யாத நீதிமான் இவ்வுலகில் இல்லை'' *(7:21)*. இந்த மட்டுடைமையைக் கடைப்பிடிக்காவிடில் ஒருவன் மூடனாவான். எதிலும் அளவு வேண்டும். இந்த மட்டுடைமைக் கருத்து காலம் கடந்த பண்புடையது.

**இரண்டாம் பாடம்:** ''கடவுள் நியமித்திருக்கிற கடந்துபோகும் நாட்களிலும், நிலையற்ற ஆயுட்காலத்திலும்'' ஒருவன் வாழ்க்கையை நன்கு அனுபவிக்க வேண்டும். இக்கருத்து ஏழுதடவை நூலில் நெடுகிலும் காணப்படுகிறது *(2:24-25; 3:12-13; 3:22; 5:18-6:2;8:15; 9:9; 11:8-9)*. உலக இன்பங்களை அனுபவிக்கும்போது, அவை ''கடவுள் தந்த வரம்;'' ஆகவே, அனுமதிக்கப்பட்டவை என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

**மூன்றாவது பாடம்:** ஆசிரியர் *3:19-21*-இல் மனிதர்களையும் விலங்குகளையும் ஒப்பிடுகிறார். இரு குழுவினருக்கும் நேரும் இறுதிக் கதியையும் எடுத்துக் கூறுகிறார். *4:1-6*-இல் உலகில் நிலவும் காட்டு நிலையையும், கொடுமைகளையும் விவரிக்கிறார். இவை பொறாமையாலும், போட்டி மனப்பான்மையாலும் ஏற்படுகின்றன. இந்த அவல நிலைக்குத் தனிமை ஒரு பதில் அன்று; தனிமை வெற்றிக்கு அளிக்கும் அதிகமான விலையாகும். தனிமையில் வாழ்பவன் வாழ்வின் இன்பங்களையெல்லாம் இழந்து விடுகிறான். தனித்து வாழ்தலும் வீணாகும். ''தனிமனிதனாய் இருப்பவன் விழுந்தால் அவன்நிலை வருந்தத்தக்கது. ஏனெனில், அவனைத் தூக்கிவிட எவருமில்லை''.

மனிதர் ஒருவர்க்கொருவர் உதவி செய்ய வேண்டும். இதுவே ஆசிரியர் இந்நூலில் அளிக்கும் பாடங்களில் மிகச் சிறந்தது. மக்கள் ஆதாயத்திற்கும், இன்ப நலத்திற்கும், தொடர்ந்து வாழ்வதற்கும், ஒன்று கூடி வாழ வேண்டும். ''தனி மனிதனாய் இருப்பதைவிட இருவராய் இருப்பதுமேல். ஏனெனில், அவர்கள் சேர்ந்து உழைப்பதால் அவர்களுக்கு மிகுந்த பலன் கிடைக்கும்'' *(4:9)*. மேலும் ''இரண்டு பேராய்ப் படுத்துக் கொண்டிருந்தால் ஒருவனுக்கொருவன் சூடுண்டாக்குவான்..... முப்புரிக் கயிறு அறுவதுகடினம்'' *(4:11-12)*.

**உ. பாரபம்பரியப் போதகத்திற்கு எதிராக:** இந்நூல் யூத ஞான இலக்கியங்களின் அடிப்படைப் போதகத்தைக் கடுமையாக விமர்சிக்கிறது. முந்தைய ஞானிகள் இயற்கையையும் மனிதர்களையும் பாகுபடுத்துவதில் சில குறிப்பிட்ட உறுதியான நிலைகளைக் கொண்டிருந்தனர். புண்ணியம் சன்மானத்திற்கும், தீமை தண்டனைக்கும் விதிவிலக்கின்றி இட்டுச் செல்லும் என்ற வினைப்பயன் கோட்பாட்டை உறுதியாக நம்பினர். இப்போதகத்தைப் பிற்காலத்தில் ஆற்றல் மிக்க சீராக்குகூட ஏற்றுக்கொள்வார். பாரம்பரியத்தை விரும்புவோருக்கு இப்போதகம் அனேக தரம், ஒருவகை ஆன்மீக போதையைத் தரக்கூடியது. ஆனால் இப்போதகம் அன்றாட வாழ்க்கை நடப்புக்கு ஒத்ததாய் இல்லை என்பதைச் சுட்டிக்காட்டி, யோபுநூல் பாரம்பரியப் போதகத்தின் பற்றாக்குறைத் தன்மையை எடுத்துக் காட்டியது. ஆனால் யோபுநூலில் கதைத்தலைவன் விசுவாசம் இழக்கவில்லை. யோபு நூலில் ஆசிரியர் நீதிமானின் துன்பம் என்ற பிரச்சனையோடு போராடினார். இந்நூலில், நீதிமான் மகிழ்ச்சியாய் இருக்க வேணடும் என்ற பாரம்பரியப் போதகத்தைத் திருவுரையாளர் தாக்கித் தகர்க்கிறார். ஒருவன் நீதிமானாய் இருந்து, அவன்விரும்பியதையெல்லாம் அடைந்திருந்தாலும், அவன் மனநிறைவடைவதில்லை; அடையவும் முடியாது. ஏனெனில் எல்லாம் வீணானது, ஒன்றுமில்லாதது. இவ்வாறு ஆசிரியர், பாரம்பரியப் போதகத்தின் பற்றாக்குறைத் தன்மையைச் சுட்டிக்காட்டுகிறார். ஆனால் அவர் விசுவாசம் இழக்கவில்லை.

ஆகவே திருவுரையாளரும் இன்பம், துன்பம் என்ற பிரச்சனைக்கு நிறைவான பதிலைக் காணவில்லை. மனிதன் தனது சொந்த ஆற்றலால் நிலையான மகிழ்ச்சி மிக்க வாழ்வை அமைத்துக்கொள்ள முடியாது என்று கண்டுணர்வதில் இந்நூலின் கருத்தாழம் அடங்கியிருக்கிறது. மனிதனது ஞானமும் புண்ணியமும் கூட அவனது பிரச்சனைகளை விடுவிக்கவோ, உலகில் மறைபொருள் மிக்க முறையில் பரவி நிலவும் தீமையை வெற்றி கொள்ளவோ முடியாது. இது பிரச்சனைக்கு எதிர்நிலைப் பதிலாகத் தோன்றலாம். இஃது ஓர் அளவு மன உலைவைத் தரலாம். யோபு நூலைப்போல் இந்நூலின் மதிப்பீடும் விடை கூறுவதைவிட, கேள்வி எழுப்புவதில் அடங்கியிருக்கிறது; நன்மை - தீமை என்னும் மறை உண்மையை நாம் அறிய முடியாது என்று வலியுறுத்துகிறது; இந்த நன்மை - தீமைப் போராட்டம் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டது என்று உறுதியாகக் கூறுகிறது. இச்செய்தி தனது உண்மைத் தன்மையையோ, பொருத்தமுடைமையையோ இழந்து விடவில்லை. இப்பிரச்னைக்கு விடைகாண எபிரேய விசுவாசம் காத்திருக்க வேண்டும்.

திருவுரையாளர், மற்ற ஞானிகளிலிருந்து பெரிதும் வேறுபட்டவர். இறைவனது அருள்பாலிப்பைப் பற்றி இயந்திரத் தன்மைப் போக்கைக் கொண்டிருந்த பாரம்பரியப் போதகங்கள் நன்மை நல்ல வாழ்வையும், தீமை தண்டனையையும் அளிக்கின்றன என்று விதிவிலக்கில்லாமல் போதித்தன. இறைவனுடைய வழிகள் கணிக்க முடியாதவை என்று கொள்கையளவில் ஏற்றுக் கொண்டாலும் (பழ 20:24; 21:30), மனித உள்நோக்குகளால் அமைக்கப்பட்ட குறுகிய வட்டத்திற்குள் இறைவனையும், அவரது சுதந்தர உரிமைகளையும் வரையறை செய்ய முயன்றன. இதை ஏற்க மறுத்து விடுகிறார் திருவுரையாளர். துல்லிய கணக்கு வைத்துக் கொண்டு, ஒவ்வொருவனுடைய நல்ல, தீய செயல்களுக்கேற்ப வாழ்வையும் சாவையும், மகிழ்ச்சியையும் துன்பத்தையும் கொடுக்கும் கணக்கர் அல்லர் இறைவன். அவர் எவ்வழியிலும் மனிதனுக்குப் பதில் சொல்ல வேண்டியவர் அல்லர். இறைவனை வரையறை செய்ய முடியாது. அவரைக் கட்டாயப் படுத்த முடியாது. ''ஒருவன் அல்லும் பகலும் கண் விழித்திருந்து பார்த்தாலும் கடவுளின் செயலை அவனால் புரிந்து கொள்ள இயலாது. அவன் எத்துணை முயன்றாலும் அவனால் அதைக் கண்டு கொள்ள இயலாது. ஞானமுள்ளவர்கள் அது தங்களுக்குத் தெரியும் என்று சொல்லிக் கொள்ளலாம். ஆனால்

அவர்களுக்கு அதுதெரியாது'' (8:17). இதுவே யோபு நூலின் இறுதி நிலையு மாகும். ஆனால் திருவுரையாளர், ஒருபடி முன் னேறுகிறார். வாழ்வின் குறிக்கோள் இவ் வுலக மகிழ்ச்சிதான் என்பதை எதிர்க்கிறார். வெறும் மகிழ்ச்சியைத் தேடுவது வாழ் வாகாது. மகிழ்ச்சி மனிதனது உரிமையன்று. இறைவனது கரத்திலிருந்து வரும் எதையும் ஏற்றுக்கொள்வதே அவனது கடமையாகும் (7:14-15). ஆசிரியர் தமது பிரச்சனைக்கு விடை காணவில்லை. ஆனால் போலி விடைகளைத் தாக்கித்தகர்த்து, வழியைத் தூய் மைப்படுத்துகிறார். வாழ்வின் உண்மை நிலையை எதிர்கொள்ளுமாறு வாசகர் களைக் கட்டாயப்படுத்துகிறார். திருவுரை யாளர் நற்செய்தியின் வாயிலை அடைய வில்லை. ''எளியோர் பேறு பெற்றோர்'' என்பதைப் புரிந்து கொள்ளுமுன் ''செல்வந் தர் பேறுபெற்றோர்'' என்பது பொய்யாகும் என்பதை அறிந்துகொள்வது வெகு அவசிய மாகும். இதையே திருவுரையாளர் செய் கிறார்.

இந்நூலில் காணப்படும் பல கூற்றுகள் (2:24 தொ; 3:12 தொ; 8:15; 9:7 தொ; 11:9 தொ) இன்ப இயல்வாதத்தை எடுத்துக் கூறுவ தாகத் தோன்றுகின்றன. ஆகவே திருவுரை யாளர் ஓர் இன்பவிரும்பி என்று குற்றம் சாட்டியுள்ளனர். இது இன்பம் பற்றிய பல பழைய ஏற்பாட்டுக் கூற்றுகளின் பொரு ளைக் காணத்தவறியதால் ஏற்படும் தவறா கும். உண்மையில் ஆசிரியர் இன்பவிரும்பி அல்லர். ஆனால் அவர் ஒரு கிறிஸ்துவத் துறவியும் அல்லர்; மாறாக இவ்வுலக வாழ் வின் இன்பங்கள் யாவற்றையும் இறைவ னுடைய கொடையாகக் கருதுபவர் (2:24; 3:13; 5:18; 9:7). சாலமோனை இன்பப் பிரியனாகக் காட்டும் பாரம்பரியத்தைப் பிரதி பலிக்கும் 2:1 தொ என்ற பகுதியில் இன் பியல் வாதத்துக்கு எதிராக அடைமொழி ஏதுமற்ற விதத்தில் வாதிப்பது கவனிக்கத்தக்க தாகும். அன்றாட வாழ்வின் இன்பங்களை இறைவனே அளிக்கிறார். அவற்றை அனுப விப்பது மனிதனுக்கு இறைவன் அளித்த வரமாகும். அதற்கு மேல் அனுபுவிக்க உழைப்பது ''வீண் வேலையும், வீண் நாட்ட மும் ஆகும்'' என்று உறுதிகொண்டவர் ஆசிரி யர். இன்பங்களைத் தவறாக அனுபவிப்ப தைக் கண்டனம் செய்கிறார் (2:1 தொ; 11:8-10). இறைவன் அளிக்கும் இன்பங் களை, அவை எதுவானாலும், ஏற்பதுவே மனித னுடைய கடமையாகும். இக்கருத்துக்கள் நூலில் பன்னிரண்டு தடவை வருகின்றன. இன்பம் பற்றிய ஆசிரியரது கருத்து நூலில் காணப்படும் துர் நம்பிக்கையை மட்டுப் படுத்தும் நோக்கம் கொண்டதாகும்.

**ஊ. எல்லாம் வீண்:** ஒருவகை ஐயவாத மும், உலக இன்பங்கள்பால் கொண்ட அயர்ச்சிப் போக்கும் நூல் முழுவதும் பரவிக் கிடக்கின்றன. ''எல்லாம் வீண்'' என்ற சொற் றொடர் நூலில் 20 தடவை வருகிறது. மனித னது முயற்சிகள் எல்லாம் வீணானவை; பொருளற்றவை; பயனற்றவை. எல்லாம் பொருள் அற்ற முறையில் மீண்டும் மீண்டும் நிகழ்கின்றன (2:1-11). சூரியன் முகத்தே நடப்பது எதுவுமே புதியதன்று.

''எல்லாம் வீண்'' என்ற தலைப்பை விடாப்பிடியாக ஆசிரியர் தொடர்கிறார்; மனிதன் தன் வாழ்வில் அக்கறை கொள்ளக் கூடிய செல்வம், இன்பம், வேலை,ஆறுதல், குடும்பம், உறவுகள், வழிபாடு, வியாபா ரம், பெண்கள், பிரமாணிக்கம், விவேகம், நேர்மை, ஞானம் போன்ற எல்லாவற்றை யும் சோதித்து அறிகிறார். இவற்றில் எதுவும் இறுதி மதிப்பீட்டைக் கொடுக்கவில்லை. எதுவும் நீடிக்கக்கூடிய, நிலையான மன நிறைவை அளிப்பதில்லை. இவற்றில் சிறந்த ஞானம்கூட சாவோடு அழிந்துபோகி றது. ஞானியும் மூடனும் சமமாகக் கல்லறை யில் முடிகின்றனர். ஆகவே எல்லாம் வீணா னது; ஒன்றுமில்லாதது; வீண் நாட்டமும் ஆகும். இவ்வாறு இத்தலைப்பைத் தொடர் வதில் ஒரு வித ஆவேச இன்பம் காண்கிறார் ஆசிரியர் என்று கூறலாம். அதனால் உலகின் பால் ஒருவித அயர்ச்சிகொள்கிறார்.

வாழ்க்கை - தன்மையாலே துடிப்புடை யது. அதைப்பாடம் செய்துவைக்க முடி

யாது. ஆகவே தமது தலைப்பைப் பற்றி, தமது நீண்ட பரந்த அனுபவம் எனும் உருப்பெருக்குக் கண்ணாடி வழியாக, பல கோணங்களில் ஆசிரியர் நோக்குகிறார்; பல மனநிலைகளில் சிந்திக்கிறார். வாழ்வில் எதுவும் மனநிறைவு அளிக்கக் கூடியதன்று. வாழ்க்கைநடப்பு, இதயத்தின் ஏக்கங்களுக்கு ஒத்ததாயில்லை. மனிதனின் ஆசைகள், அனுபவத்தின் கடின உண்மைகளால் எப்போதும் குறுக்கிடப்பட்டுக் கெடுக்கப்படுகின்றன. அவனது இதயத்திலுள்ள ''காலமற்ற தன்மை'' அவனது வாழ்நாட்களின் வரையறையால் ஏமாற்றப்படுகிறது. எல்லாவற்றிற்கும் குறிப்பிட்ட காலம் உண்டு. மரிப்பதற்குரிய நேரம், அவனது நம்பிக்கைகளுக்கெல்லாம் சாவு மணி அடிக்கிறது.

ஆசிரியர் தமது தலைப்பை விடாப்பிடியாக, இரக்கமற்ற முறையில் பின்பற்றுவது ஒருவகை அமைதியின்மையையும், பயங்கரச் சோர்வையும் அயர்வையும் ஏற்படுத்துகிறது. உள்ளத்தை அறுக்கக்கூடிய விதத்தில் வாழ்வின் வெறுமையை வலியுறுத்துகிறது. இந்த முழு இருளிலிருந்து தப்பிக்க ''விசுவாசத் தாவுதல்'' ஒன்றே ஆசிரியருக்கு எஞ்சியுள்ளது.

திருவுரையாளரின் உள்ளத்தில் எழக்கூடிய எந்த விசுவாசத்தையும், நம்பிக்கையையும், அன்பையும் ஒன்றுமில்லாது அழிக்கக்கூடிய துர்நம்பிக்கைக்கு இரு வரையறைகள் உண்டு. ஒருபுறம் வாழ்க்கை குறுகியதாகவும் பொருளற்றதாகவும் இருப்பதால், வாழ்வு என்னும் ''இச்சிறு விளக்கு நீடிக்கும் வரை'' அதை உறுதியோடு அனுபவிக்கத் தமக்கும் பிறருக்கும் அழைப்பு விடுக்கிறார். இந்த அழைப்பு வெறுமையான அவநம்பிக்கையில் மூழ்கிப் போகாமல் ஆசிரியரைக் காப்பாற்றுகிறது *(9:1-10)*. மறுபுறம், எது எப்படியிருந்தாலும் தாம் இறைவனிடம் கொண்ட விசுவாசத்தை இழக்கவில்லை *(2:24; 3:11.13.14)*. முன்னதில், வாழ்வின் நிலையாமையும் பொருளற்றதன்மையும், அதைக் கொச்சையாகவோ நயத்தோடோ அனுபவிக்கத் தூண்டுவதாக உணரும் எண்ணம், உலகெங்கும் காணப்படும் ஒன்றாகும். பின்னது யூதப் பாரம்பரியத்தைத் தெளிவாக வெளிப்படுத்துகிறது. இவ்வாறு இந்நூல், உலகோடு அயர்ச்சி கொண்ட அக்கறையின்மைக்கும் இறைவனில் கொண்டுள்ள யூத விசுவாசத்திற்குமிடையே நடக்கும் போராட்டமாக அமைந்துள்ளது. இப்போராட்டத்தில் இறைவனில் கொண்ட யூத விசுவாசம் முழுவதும் அழிந்து போவதில்லை. ஆயினும் அது, விசுவாசியை அழுத்தும் அனுபவத்தையும், குழப்ப மனப்போக்கையும் வெல்வதற்கு ஆற்றல் அளிக்கவுமில்லை.

ஆசிரியர் காலத்தில் யூதர்களிடையே வருங்கால வாழ்வு பற்றிய விசுவாசம் இல்லாதது அவரிடம் துர்நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. வாழ்வின் மறைபொருளின் ஆழத்தை அதன் இறுதி மதிப்பீட்டின் நோக்கில் அளக்க முயலுகிறார். 'எது நிலையானது, நீடிக்கக்கூடியது, உறுதியானது?' என்று தேடுகிறார். ஆனால் அதைக் காணத் தவறிவிட்டார். ஆயினும் இந்நூல் வாழ்வின் கடினமான, தப்பிக்க முடியாத உண்மைகளை உறுதியுடன் மதிப்பீடு செய்கிறது. ''ஒரு மனிதன் உலகையெல்லாம் தனதாக்கிக் கொண்டாலும் தன் ஆன்மாவை இழந்தால் அவனுக்கு என்ன பயன்?'' *(மத் 16:26)* என்ற கிறிஸ்துவின் கேள்விக்கு ''ஒன்றுமில்லை'' என்று எதிரொலிப்புடன் பதில் கூற வாசகர்களைத் தயாரிக்கிறது. ஒருவகையில் நூல், தான் எழுப்பும் பிரச்சனைக்குப் பதிலாக வருங்கால வாழ்வு பற்றிய விசுவாசத்தை வற்புறுத்துமாறு கோருகிறது. அந்த விசுவாசத்தை மறைமுகமாக எண்பிக்கிறது. இந்த விசுவாசத்தை உறுதியாகக் கூறமுடியாமை பாரம்பரியத்தின் குறையாகும். அந்த ஞானத்தை ஆசிரியர் விமர்சிப்பது சரியே. இவ்வுலக வாழ்விலேயே வினைப்பயன் பெறும் பாரம்பரியப் போதகம், பற்றாக் குறையானது என்று தயக்கமின்றித் தகர்க்கிறார். இறுதியான நிலையான மகிழ்ச்சியடைய, மனித வாழ்வில் எந்த ஆற்றல் மூலமும் முடியாது எனக் காண்கிறார். இப்படி உணர்வது ஒரு பெரிய முன்னேற்றமாகும்.

உண்மையிலேயே இந்தப் படியைத் தாண்டி னால் ஒழிய வருங்கால வாழ்வின் தேவை உண்மையானது என்று உணரவே முடியாது.

ஆசிரியர், நோக்கத்தாலும், அனுபவத் தாலும், மனிதக் குறிக்கோள்களில் பயனே இல்லை என்பதைவிட அவற்றில் நிலை யான நன்மையின் நிறைவு இல்லை என்று கண்டறிந்தார். நிலையான இன்பத்திற்காக, விண் வீட்டிற்காக மனித இதயம் ஏங்குவதை மறக்க முடியாத தெளிவோடு உணர்ந்து எடுத்துக்கூறிய நீடித்த பெருமை திருவுரை யாளருக்கு உரியதாகும். வருங்கால வாழ் வின் தன்மை பற்றி ஆசிரியர் அறிந்திருந் தால், புனித அகுஸ்தினாரைப்போல் ''ஆண் டவரே, உம்மில் இளைப்பாறும் வரை எங் கள் இதயம் அமைதியற்று இருக்கிறது'' என்று கூறியிருப்பார். ஆனால், அகுஸ்தினா ருக்கு அளிக்கப்பட்டதுபோல் இந்த ''அமைதி யற்ற இதயத்திற்கு'' இன்னும் வெளிப் பாடு அளிக்கப்படவில்லை. ஆகவே தன் இதயத்தின் ''காலமின்மையும்'', உண்மை யான நிறைவுக்கான ஏக்கமும், அவரது ஆசை களின் நிறைவும், இறைவனின் காலமின் மையிலும், அடித்தளமற்ற ஆழத்திலும் மூழ்கி நிறைவு பெறும் என்று ஆசிரியர் அறிந்திருக்கவில்லை. அதற்கு யூத விசுவா சம் இன்னும் காத்திருக்க வேண்டும்.

இறுதியாக, ஆசிரியர் துர்நம்பிக்கைவாதி யல்லர். ஆனால் துர்நம்பிக்கை பற்றி எழுதிய சிந்தனையாளர். ஏனெனில் அவர் படைப் பில் மகிழ்ச்சி கொள்கிறார் *(11:7)*. மனித னின் இறுதி முடிவான இறைவனின் முன் னறிவில் நம்பிக்கை கொண்டு உள்ளார் *(6:10; 12:7)*. மனிதனால் கண்டுபிடிக்க முடியாவிட் டாலும், இறைவன் உலகிற்கு ஒரு திட்டம் கொண்டிருக்கிறார் என்று அறிந்திருக்கிறார். அவர் ஓர் உண்மைவாதி. யோபு திறந்து காட்டிய இருண்ட புதிர் நெறியில் மேலும் ஆழமாக மூழ்கி எழுகிறார். அவரும் ஒரு வழி கண்டுபிடிக்க வீணான முயற்சி செய்தா லும், இறைவனில் கொண்டுள்ள விசுவா சத்தை நம்பிக்கைக்கு அப்பாற்பட்ட முறை யில் பற்றிக் கொள்கிறார். நீதியுள்ள இறைவ னில் விசுவாசம் கொண்ட, அவரது அருள் பாலிப்பில் உறுதியான நம்பிக்கை கொண்ட சமய வாதி ஆவார். அநீதியும், மடமையும் துன்பமும், சாவும் அவரது விசுவாசத்திற்கு ஆபத்து விளைவிக்கவில்லை. பதிப்பாசிரிய ரால் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டதாகக் கரு தப்படும் முடிவுரை *(12:13-14)* ஆசிரியரது ஆழ்ந்த மன உறுதியைப் பிரதிபலிக்கிறது. ''கடவுளுக்கு அஞ்சிநட! அவருடைய கட்ட ளைகளுக்குக் கீழ்ப்படி! மனிதன் படைக்கப் பட்டநோக்கம் இதுவே. நாம் செய்யும் ஒவ் வொரு செயலுக்கும், மறைவான செயலுக் குங்கூட, அது நல்லதோ தீயதோ, எதுவாயி னும் அனைத்திற்கும் கடவுளே தீர்ப்பு வழங் குவார்!''

*11. இக்காலத்திற்கு:* எக்காலத்திற்கும் திரு வுரையாளர் அளிக்கும் அடிப்படைச்செய்தி கடினமானாலும் எளியது. இவ்வுலகும், இவ்வாழ்வும் அதன் இன்பங்களும், வியப்பு களும் மனிதனின் அமைதியற்ற இத யத்தை நிறைவுபடுத்தமுடியாது. யோபு மனித துன்பத்தில் அக்கறை கொள்வது போல், திருவுரையாளர் அடிமட்டத்தில் மனிதனின் மகிழ்ச்சி பற்றி அக்கறை கொள் கிறார். இந்த உலகில் எந்த நிலையான, உறுதியான, பாதுகாப்பான இன்பத்தையும் அவரால் காண முடியவில்லை. மனிதன் உலகையெல்லாம் அடைந்தாலும், எல்லாச் செல்வங்களையும் கொண்டிருந்தாலும், அவனது ஆசைகளையெல்லாம் அனுபவிக்க முடிந்தாலும், அப்போது கூட அவன் நிறைவு அடையமாட்டான். அவன் முழுமை யான மகிழ்ச்சி அடையமாட்டான். அவ னது ஆசைகளையும், ஏக்கங்களையும் எது வும் நிறைவு செய்ய முடியாது. இவற்றை ஆசிரியர் உறுதியாக எடுத்துக் கூறுகிறார்.

ஆகவே திருவுரையாளர் வருங்கால வாழ்வு பற்றிய வெளிப்பாட்டைக் கோரு கிறார். ஆனால் அந்த வெளிப்பாடு, கிறிஸ்து வுக்கு முந்திய இரு நூற்றாண்டுகளில்தான், தானியேல் *(12:2-3)*, 2-ஆம் மக்கபேயர் *(6-7)*, ஞான நூல் *(2-5)* ஆகிய நூல்களிலும், நற்செய்தியிலும் யூதர்களுக்குக் கொடுக்கப்

படும். ஆகவே விடை காணமுடியாத தமது பிரச்சனைக்கும், தமதுநிறைவு அடையாத ஏக்கங்களுக்கும் விடை காணாது, நூலின் முடிவில் வரும் ''இவையனைத்தையும் தொகுத்து முடிவுரையாக ஒன்று கூறு கிறேன்: கடவுளுக்கு அஞ்சிநட; அவருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படி. மனிதன் படைக்கப்பட்ட நோக்கம் இதுவே'' *(12:13)* என்ற விசுவாசப் பிரமாணத்தோடு தற்சமயத் திற்கு நிறைவு கொள்ள வாசகர்களைத் தூண்டுகிறார்.

ஏற்புடைமைக்கு இது போதுமானது. ஏனெனில் ''நான் என் தந்தையின் கட்டளை களைக் கடைப்பிடித்து அவருடைய அன் பில் நிலைத்திருப்பதுபோல் நீங்களும் என் கட்டளைகளைக் கடைப்பிடித்தால் என் அன் பில்நிலைத்திருப்பீர்கள்'' என்று இயேசுவே கூறியுள்ளார். ஆனால் திருவுரையாளரது வேதனையுற்ற இதயத்திற்கு இது போதுமான தன்று; இறுதியான வார்த்தையுமன்று. அவர் கேட்டு மகிழ்ந்திருக்கக்கூடிய இறுதி வார்த்தை கிறிஸ்துவினுடையதே: ''என் தந் தையின் இல்லத்திலே உறைவிடங்கள் பல உள்ளன. இல்லாதிருந்தால் உங்களுக்குச் சொல்லியிருப்பேன். ஏனெனில் உங்களுக்கு ஓரிடம் ஏற்பாடு செய்யப் போகிறேன். நான் போய் உங்களுக்கு ஓரிடம் ஏற்பாடு செய்த பின், திரும்பிவந்து உங்களை என்னிடம் அழைத்துக் கொள்வேன். அப்போது நான் இருக்கும் இடத்திலேயே நீங்களும் இருப்பீர் கள்'' *(யோவா 14:2-3)*.

**திருவெளிப்பாடு நூல்** (REVELATION, BOOK OF)

1. இது விவிலியத்தின், மற்றும் புதிய ஏற்பாட்டின் கடைசி நூலாகும். முன்பு காட்சி யாகமம் என்றும் அழைக்கப்பட்டது. காட்சி இலக்கிய அல்லது வெளிப்பாட்டு இலக்கிய மொழியிலும் நடையிலும் எழுதப் பட்டுள்ள ஒரே புதிய ஏற்பாட்டு நூல்.

2. **ஆசிரியர்:** இந்நூல் ஆசிரியர் நான்கு இடங்களில் தன்னை யோவான் என்று அறி முகப்படுத்துகிறார் *(திருவெளி 1:1.4.9; 22:8)*. தன்னைக் கிறிஸ்துவின் ''அடியான்'' என்றும், ஆசியத்திருச்சபைகளின் ''உங்கள் சகோதரன்'' என்றும் கூறுகிறார் *(1:1.9)*. இவரே அப் போஸ்தலரான யோவான் என்றும், நான் காம் நற்செய்திக்கும் யோவானின் மூன்று திருமுகங்களுக்கும் ஆசிரியராவார் என்றும் இரண்டாம் நூற்றாண்டுக் கிறிஸ்தவப் பாரம் பரியம் ஏற்றுக் கொண்டது. உரோமையைச் சேர்ந்த மறைசாட்சி யூஸ்தின் (கி.பி 155), இரேனியு *(175)* ஆகியோர் இக்கருத்தைக் கொண்டிருந்தனர். இதைப்பின்பற்றி, இப் போலித்து, தேர்துல்லியன், ஓரிசன் என்பவர் களும் இதே கருத்துக் கொண்டிருந்தனர். லூக்கா நற்செய்திக்கு எழுதிய மார்சிய னுடைய முன்னுரையும் இதற்குச் சான்றுகூறும்.

இக்கருத்துக்கு மாறான கருத்து மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுந்தது. காயு என்ற உரோமைக்-குரு, திருவெளிப்பாடு நூல், செரிந்து என்ற பதிதன் கபடமாக எழுதிய நூலாகும்; ஏனெனில் ''ஆயிர மாண்டு நற்காலம்'' பற்றிய கருத்துகளைக் கொண்டிருக்கிறது என்று கூறினார். சாலமின் எப்பிபானியு என்பவர் *(கி.பி. 315-403)* மற்ற அப்போஸ்தல நூல்களுக்கு மாறான கூற்றுக் களைக் கொண்டிருக்கிறது என்ற அடிப் படையில், திருவெளிப்பாட்டு நூலைச் செரிந்து எழுதியதாக ''மோந்தனிசத்தைச்'' சேர்ந்த ஒரு குழுவினர் கூறியதாக எழுதிவைத்துள் ளார். திருவெளிப்பாட்டு நூலுக்கு அப் போஸ்தலர் யோவான்தான் ஆசிரியர் என்ற கருத்தை மிகவும் எதிர்த்தவர் அலக்சாந்திரிய ஆயரான தெனிசு என்பவராவார் *(264)*. இந்நூல் இறைஏவுதல் பெற்ற ஒரு புனிதரால் எழுதப்பட்டிருக்கலாம்; ஆனால் அப்போஸ் தலரான யோவானால் அன்று. ஏனெனில் நடையிலும் இறையியல் அழுத்தத்திலும் இந்நூல் யோவானின் பிறநூல்களிலிருந்து வேறுபடுகிறது என்றார். மேலும்,யோவான் என்ற பெயர் விசுவாசிகளிடையே வழக்கி லிருந்த ஒரு சாதாரணப்பெயர். ஆகையால் ஆசிரியரை அடையாளம் காட்டுவது கூடிய தன்று என்றார். பப்பியஸ் *(130)* ஆண்டவ ரைப்பற்றிய தனது சிந்தனைத் தொடரில்

அப்போஸ்தலரான யோவான், ''மூப்பரான யோவான்'' என்று இருவரைக் குறிப்பிடுகிறார். இந்த இருவரில் ஒருவர் திருவெளிப்பாட்டு நூலுக்கும் மற்றவர் பிற யோவான் நூல்களுக்கும் பொறுப்பாவர் அல்லது அப்போஸ்தலரின் மற்றொரு சீடர் இந்நூல்களை எழுதியிருக்கலாம் என்ற கருத்துத் தோன்றியது. இப்பிரச்சனையில் யூசேபியு தயக்கம் காட்டினாலும் தெனிசின் கருத்தை ஏற்றுக் கொள்கிறார். இவர் கூற்றுப்படி, முதல் நூற்றாண்டின் இறுதியில், யோவான் என்ற பெயர் கொண்ட ஒரு கிறிஸ்தவரை அப்போஸ்தலரான யோவான் எபேசுக்கு ஆயராக நியமித்தார். இது, நூல் ஆசிரியரின் பெயர், அதிகாரம், சிறிய ஆசியாவின் சமயச் சூழ்நிலை ஆகியவற்றை விளக்க உதவலாம். எருசலேமைச் சேர்ந்த சிரில், நான்சியா சென்னைச் சேர்ந்த கிரகோரி ஆகியோர் திருவெளிப்பாட்டுநூலை இறைஏவுதல் பெற்ற நூலாக ஏற்றுக் கொள்ளவில்லை. கிறிசோஸ்தோம் இந்நூலைக் குறிப்பிடவில்லை. சீரியக்கு வாசகத்தில் இந்நூல் காணப்படவில்லை.

மேலும், இப்பிரச்சனை மேலும் சிக்கலாகிறது. செபதேயுவின் மகனான யோவான் சிறிய ஆசியாவிற்குச் சென்று அங்கு கி.பி. 95-வரை வாழ்ந்தார் என்று உறுதியாகக் கூற முடியாது. செபதேயுவின் மகனான யோவான், அனேகமாக 70-க்கு முன்பே மறைசாட்சியாக மரித்தார் என்ற ஒரு பாரம்பரியம் இருக்கிறது. இஃதோடு இப்போது நான்காம் நற்செய்தியை அப்போஸ்தலரான யோவான்தான் எழுதினாரா என்ற பிரச்சனை எழுந்துள்ளது. இது பற்றிப் பல கருதுகோள்கள் தோன்றியுள்ளன. இவையும் பிரச்சனையை மேலும் சிக்கலாக்குகின்றன.

திருவெளிப்பாட்டுநூலை அப்போஸ்தலரான யோவான்தான் எழுதினார் என்ற தொடக்ககாலத் திருச்சபையின் ஒரே சீரான பாரம்பரியத்திற்குமுன் இந்த எதிர்ப்புக்கருத்துகள் ஒரு துளியே என்று கூறலாம். இந்த எதிர்ப்புக்கருத்துகள் எதிர்மாறான பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்டவையன்று; மாறாக விளக்கவுரை, நடை, கோட்பாடுகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டவையாகும்.

இனி, திருவெளிப்பாட்டு நூலுக்கு அப்போஸ்தலரான யோவான்தான் ஆசிரியர் என்ற கருத்துக்கு எதிர்ப்பாளர்களின் காரணங்களையும் அவற்றிற்குச் சார்பாளர்கள் அளிக்கும் பதிலையும் சுருக்கமாகக் காண்போம். அ) ஆசிரியர் தன்னை வெறுமனே கிறிஸ்துவின் அடியார் என்று மட்டும் குறிப்பிடுகிறார். இவர் அப்போஸ்தலர்களையும் இறைவாக்கினர்களையும் வேறுபடுத்தினாலும், தான் ஒரு அப்போஸ்தலர், கிறிஸ்துவின் சீடர் அல்லது ஓர் இறைவாக்கினர் என்று உரிமை கொண்டாடவில்லை.

*பதில்:* திருவெளி *18:20; 21:14*-இல் திருச்சபையில் அப்போஸ்தலர்களின் முக்கிய இடம் குறிக்கப்படுகிறது. அவர்களில் தன்னை ஆசிரியர் உள்ளடக்கவில்லை. ஆனால் பவுல் 1 கொரி 12;28; எபே 4:11-இல் இதையே செய்கிறார். மற்ற இடங்களில் பவுல் தனது அப்போஸ்தலர்த் தன்மையை வலியுறுத்துகிறார். உ-ம் 1 கொரி 15:9. இந்நூல் ஆசிரியர் திருச்சபை அமைப்பைப் பரந்தவிதத்திலேயே விவரிக்கிறார்.

ஆ. இந்நூலை யோவானின் மற்ற நூல்களோடு ஒப்பிடுகையில், நடையிலும் கிரேக்கச் சொற்களிலும் பலத்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. இந்த வேறுபாடுகள் எவ்வளவு வலுவானவையென்றால், இவைகளை எழுத வெவ்வேறு செயலர்கள் அல்லது எழுத்தர்கள் பயன்பட்டது, அல்லது கால வேறுபாடு ஆகியவற்றால் விளக்க முயல்வது அவ்வளவு முனைப்பாக இல்லை.

*பதில்:* ஆசிரியர் வெளிப்பாட்டு அல்லது காட்சி இலக்கிய வடிவத்தைப் பயன்படுத்துகிறார். அதற்கேற்றவாறு நடையும் சொற்றொகுதியும் இலக்கணமும் மாறுபடுகின்றன. ஆனால் இதுவோ, ''தேவ ஆவியால் என்னை ஆட்கொண்டது'' என்பதோ இலக்கண மற்றும் மொழியுருவக் கோளாறுகளை விளக்கவில்லை. வெளிப்பாட்டு நூலின்

இலக்கணம் பலவகையில் கோயினே மொழியிலிருந்து வேறுபடுகிறது. விவரங்க ளில் ஒழுங்கின்மை காணப்பட்டாலும், நூலை முழுமையாக நோக்கும்போது கவரத் தக்க ஒழுங்கமைவு காணப்படுகிறது.

இ. நற்செய்தியில் காணப்படும் சில முக்கிய கருத்துக்கள் இந்நூலில் காணப்பட வில்லை. சில கருத்துகளில் காணப்படும் ஒற்றுமை இரண்டும் சார்ந்துள்ள முந்தைய கிறிஸ்தவப் பாரம்பரியத்தாலோ சுதந்தர மான யூதப்பாரம்பரியத்தாலோ விளக்கப் படலாம்.

*பதில்:* நற்செய்தியில் காணப்படும் ஒளி, இருள், உண்மை போன்ற முக்கிய கருத்துக் கள் இந்நூலில் காணப்படவில்லை என்பது உண்மைதான். ஆனால் இரண்டுக்கும் பொதுவான கருத்துக்கள் பலவுள்ளன: திராட்சைக்கொடி, ஆயன், செம்மறி, மண மகள், வாழ்வின் நீர், வெற்றிவீரரான கிறிஸ்து, வார்த்தையான கிறிஸ்து போன்றவை. திரு வெளி *1:7*-இலும் யோவா *19:37*-இலிலும் செக் *23:10* என்ற வாசகம் பயன்பட்டுள்ளது. வலுவான புறச்சான்றுகளின் பாரம்பரியத் தையும் உள்ளார்ந்த சிக்கல்களையும் சேர்த்துக் கவனத்தில் கொண்டு, திருவெளிப்பாடும் யோவானின் மற்ற நூல்களும் அப்போஸ்தல ரான யோவானின் ஆதிக்கத்தில் தோன்றி யவை என்று ஏற்றுக்கொள்வது அறிவு சார்ந்த தாகும். இது ஐந்நூலுக்கு மோசே ஆசிரியர் என்ற கூற்றுக்கு ஒத்ததாகும். ஐந்நூலின் இறு திப்பதிப்புக்குக் காலத்தால் நெருங்கியிருப் பதைவிட அப்போஸ்தலரான யோவான் அவரை ஆசிரியராகக் கொண்ட நூல்களுக் குக் காலத்தால் மிக நெருங்கியவர்.

இந்நூலுக்கு ஆசிரியர் யார் என்ற பிரச் சனையைப் பெரும்பாலான அறிஞர்கள் முடிவு காணாக் கேள்வியாகவே விட்டுவிட விரும்பி வாசகச் சான்றிலிருந்து இந்நூலின் ஆசிரியர் யோவான் என்ற பெயருடைய யூத-கிறிஸ்தவ இறைவாக்கினர் ஆவார் என் றும் மற்றப்படி இவரைப்பற்றி வேறொன்றும் தெரியாது என்றும் கூறுவர். நூலின் அதிகா ரம் வாசகத்தின் ஆக்கத்தன்மையிலும், திருச் சபையால் தனது திருமுறைப்பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்பட்டது என்பதிலும் அடங்கியிருக்கிறது.

*3. திருமுறைப்பட்டியலில்:* ஆசிரியர் யார் என்பதும் புனித நூல்களின் பட்டியலில் ஏற்றுக் கொள்ளப்படுவதும் வெவ்வேறான பிரச்சனைகளாகும். திருவெளிப்பாட்டுநூல், கிழக்கத்திய திருச்சபையை விட மேற்குத் திருச்சபையால் அதிகத் தயாராக ஏற்றுக் கொள்ளப்பட்டது. இரண்டாம் நூற்றாண் டில், நூலில் காணப்படும் ''ஆயிரமாண்டு நற்காலம்'' பற்றிய கொள்கைக்காக சிறிய ஆசியாவைச் சேர்ந்த அறிவியல்வாதியான ''அலோகி'' என்பவர் இந்நூலை நிராகரித் தார். அலக்சாந்திரியாவின் தெனிசு, யூசேபியு ஆகியோர் இந்நூலுக்கு அப்போஸ்தலர் யோவான் ஆசிரியராவார் என்று ஏற்றுக் கொள்ள மறுத்தனர். நான்காம் நூற்றாண் டைச்சேர்ந்த அத்தனாசியு என்பவர் அப் போஸ்தலரான யோவான்தான் இந்நூலுக்கு ஆசிரியர் என்பதை வெகுவாக ஆதரித்தார். இந்நூல் திருமுறைப்பட்டியலைச் சேர்ந்தது என்று மேற்கில் கார்த்தேசில் நடந்த மூன் றாம் சங்கத்திலும் *(397)*, கிழக்கில் கான்ஸ் தாந்தில் நடந்த சங்கத்திலும் *(680)* ஏற்றுக் கொள்ளப்பட்டது. அவ்வப்போது, இங்கு மங்குமாகக் கருத்துவேறுபாடுகள் தோன்றி னாலும் திருச்சபை ஒரேசீராக இந்நூல் திரு முறைப் பட்டியலைச் சேர்ந்ததாக ஏற்றுக் கொண்டிருக்கிறது. திருறைப்பட்டியலைப் பற்றிய திரிதெந்தின் சங்கச் சட்டம் இதற்கு முடிவுகண்டது.

*4. இலக்கியப்பண்புகள்:* புதிய ஏற்பாட் டிலே திருவெளிப்பாட்டுநூல் தனித்தன்மை யுடையது. நற்செய்திகளும் அப்போஸ்தலப் பணிநூலும், பெரும்பகுதி உண்மையான நிகழ்ச்சியுரைகளைக் கொண்டவை. திரு முகங்கள் உரைநடையில் விளக்கவுரைகளை யும் அறவுரைகளையும் கொண்டுள்ளன. திருவெளிப்பாடு இவற்றிலிருந்து வேறு பாட்டு ஒரு தனிப்பட்ட உரைநடையில் உள்ளது; சாதாரணமாய் மனித உயிர்கள்

காணாத அசாதாரணக் காட்சிகளையும், கேளாத குரலொலிகளையும் கொண்டுள்ளது. இது புதிய ஏற்பாட்டில் தனித்தன்மையுடையதாயினும், பழங்கால உலகில் அத்தகையதன்று. இத்தகைய வாசகங்கள் பழைய ஏற்பாட்டிலும் மற்ற யூத இலக்கியங்களிலும், கிறிஸ்தவத் திருமுறை சாராத இலக்கியங்களிலும் காணப்படுகின்றன. இந்நூல் தன்மையால் வெளிப்பாட்டு இலக்கியத்தைச் சேர்ந்தது. ஆனால் அஃதேபோது இறைவாக்குகளோடும், கடித வடிவங்களோடும், நாடக வடிவத்தோடும் அடையாளவியலோடும் தொடர்புடையது.

அ. வெளிப்பாட்டு இலக்கியம் நீண்ட வரலாற்றையுடையது. இதுபற்றி வெளிப்பாட்டு இலக்கியம் என்ற தலைப்பின்கீழ் வாசித்தறியலாம். இங்குச் சுருக்கமாகத் தருகிறோம்.

1) *பொதுவாக:* இந்த இலக்கியம் உலக வரலாற்றுப் போக்கை உருவகமாக விளக்கும் யூகச் சிந்தனைகளாகும். இது உலக முடிவையும் வெளிப்படுத்துகிறது. இது, இறப்பு, தீர்ப்பு, சன்மானம், தண்டனை ஆகிய இறுதிக்காரியங்கள் பற்றிய வளர்ச்சியடைந்துள்ள இறுதிக்கால இறையியலைக் கொண்டுள்ள சமயங்களில் காணப்படுகிறது. இந்த யூகச்சிந்தனைகள் இந்தியாவிலிருந்து இரானிய சமயச் சிந்தையைப் பாதித்து, பின் பழைய ஏற்பாட்டையும் பாதித்துள்ளதாகத் தெரிகிறது. எசேக்கியேலின் இறைவாக்கு நூல், நாடு கடத்தப்பட்ட காலத்தில், பாபிலோனுக்கு அருகில் எழுதப்பட்டது. எசாயாவின் சிலபகுதிகள் நாடு கடத்தப்பட்ட காலத்திலும் அதற்குப்பின்னும் எழுதப்பட்டன என்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும்.

2) *யூதத்துவத்தில்:* இத்தகைய இலக்கியங்கள் கி.மு. 200 - கி.பி. 100-க்கு இடைப்பட்ட காலத்தில் வெகுவாக வளர்ந்தன. இந்த இலக்கியங்கள் இரு யுகங்களை விவரிக்கின்றன. வரலாறு இறைவனுடைய கைகளில் உள்ளது. மற்றும் அவரது திட்டங்கள் வெற்றியடைய வேண்டுமென்றாலும் முதலாம் யுகத்தில் தீய சக்திகள் கட்டுக்கடங்காத விதத்தில் செயல்படுகின்றன. இரண்டாவது யுகமாகிய புதிய யுகத்தில் மெசியா வந்து அவரது அரசை நிறுவுவார். ஆழ்ந்த விசுவாசங்கொண்ட யூதன் இறைவனுடைய வாக்குறுதிகள் நிறைவேறவில்லை என்பதை நன்கு உணர்ந்திருந்தார். இறைவாக்குரைத்தல் முடிந்துவிட்டது; அதாவது இறைவனிடமிருந்து உண்மையான, அதிகாரபூர்வமான செய்திகள் இல்லை (*1 மக் 4:46; 9:27; 14:41*). பல நூற்றாண்டுகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பாபிலோன், பாரசீகம், கிரேக்கம், எகிப்து, சீரியா, உரோமை ஆகிய அந்நியர்களின் ஆட்சியின் கீழ் வாடினர். ஆனால் வெளிப்பாட்டு நூல்கள் மகிழ்ச்சிமிக்க மெசியாவின் வருங்காலத்திற்கு மக்களின் கவனத்தைச் செலுத்தச் செய்தன. இறைவன் தம் வாக்குறுதிகளுக்குப் பற்றுறுதியாக இருக்க வேண்டும். வெளிப்பாட்டுநூல்கள், இறைவனது பற்றுறுதியில் கொண்டிருந்த ஆழ்ந்த விசுவாசத்தில் வேரூன்றியவையாகும். கருத்துகளும் உருவகங்களும் பழைய ஏற்பாட்டிலிருந்தே எடுத்துக் கையாளப்பட்டன. ஆசிரியர்கள் பெரும்பாலும் பழைய ஏற்பாட்டு இறைவாக்குகளை அவற்றின் சொற்பொருளில் எடுத்துக் கொள்கின்றனர். வெளிப்பாட்டு இலக்கியம் இறைவாக்கின் தொடர்ச்சியாகக் கருதப்படலாம். இரண்டையும் தெளிவாகப் பிரித்துக்காட்டுவது கடினம். இவ்விலக்கியத்தின் ஒரு பண்பு கனவுகளிலும் காட்சிகளிலும் செய்தித் தொடர்பு கொள்வது. அடையாள எண்கள் பயன்படுகின்றன. காட்சிகள் தெளிவில்லாமல் விவரிக்கப்படுகின்றன. எப்போதும் இந்நூல்களின் குறிக்கோள் ஆறுதல் அளிப்பதும் உற்சாகப்படுத்துவதுமாகும். அண்ட அதிர்வுகள் இறைவாக்குப் பண்புகளைச் சேர்ந்தவை. இவற்றை வெளிப்பாட்டு இலக்கியம் எடுத்துக் கையாளுகிறது. இஃது ஓர் இலக்கிய வகைதான். அது கூற விரும்புவது, ஒரு யூகம் முடிவுக்கு வருகிறது அல்லது மற்றொரு யூகம் தொடங்குகிறது; அல்லது இரண்டும் சேர்ந்து நடக்கின்றன என்பது தான்.

வெளிப்பாட்டு இலக்கியம் வரலாற்றுச் சூழ்நிலையிலிருந்து தோன்றுகிறது. அத னின்று அதைப்பிரிக்க முடியாது. வர லாற்றை வெளிப்பாட்டு இலக்கியம் பயன் படுத்துவது பற்றி மூன்று கருத்துகளை நாம் கவனிக்க வேண்டும் (அ) பயன்பட்டுள்ள பொருள்கள் எந்த அளவிற்கு உண்மையான வரலாற்றைச் சேர்ந்தவை? (ஆ) எந்த அடிப் படையில் நிகழ்ச்சிகள் தேர்ந்தெடுக்கப்படு கின்றன, வகுக்கப்படுகின்றன? (இ) எந்த விதத்தில் நிகழ்ச்சிகள் மாற்றிஅமைக்கப்பட் டுள்ளன?

விவிலிய வெளிப்பாட்டு இலக்கியத்தில் காட்சிகள் இலக்கியக் கற்பனையாக இருக்க லாம். இதனால் உண்மையின் தவறின்மை பாதிக்கப்படவில்லை. இறைவனால் அளிக் கப்படும் வெளிப்பாடு ஒருபுறம். அதைஎடுத் துக்கூறும் முறை மற்றொரு புறமாகும். வெளிப்பாட்டுச் செய்தியில் உள்ள உண்மை இரண்டாந்தரச் சூழ்நிலைகளால் அவை உண்மையானவையோ, கற்பனையான வையோ பாதிக்கப்படுவதில்லை.

*3) திருவெளிப்பாட்டு நூல்:* ''இது இயேசு கிறிஸ்து அருளிய வெளிப்பாடு....'' என்று தொடங்குகிறது. இக்கூற்று, இறைவன், இயேசுகிறிஸ்து, யோவான், இந்த வாசகம் ஆகியவர் வழியாக விண்ணகம் மற்றும் மண்ணகம், கடந்த நிகழ்கின்ற மற்றும் வரும் காலங்கள் ஆகியவை பற்றிய இரகசியங் களைத் திறந்து காட்டுகிறார்; வெளிப்படுத்து கிறார் என்ற கருத்தைக் கூறுகிறது. திரு வெளிப்பாட்டு நூல் யூத வெளிப்பாட்டு இலக் கிய மரபில் எழுதப்பட்டுள்ளது. இவ்விலக் கியப் பண்புகளில் பலவற்றை இந்நூலில் தெளிவாகக் காணலாம்.

*ஆ. இறைவாக்கு வடிவம்:* இந்நூல் தன் னையே இறைவாக்கு என்று அழைத்துக் கொள்கிறது (1:3; 22:7.10.18-19). ஆசிரிய ரான யோவான் தன்னை ஓர் இறைவாக்கினர் என்று கூறிக்கொள்ளவில்லை. ஆனால் மறைமுகமாகச் சுட்டிக்காட்டப்படுகிறார். யோவானுக்குக் காட்சிகளைக் காட்டும் இடையாளராக இருக்கும் வானதூதர் ''இறை வாக்கினரான உன் சகோதரர்கள்'' என்று குறிப்பிடுகிறார் (22:9). மற்றொரு இடத்தில் ''நீ மீண்டும் இறைவாக்குரைக்க வேண்டும்'' என்று யோவானிடம் கூறப்படுகிறது (10:11). தொடக்காலத் திருச்சபையில் இறை வாக்குரைத்தல் ஒருமுக்கியமான நிகழ்ச்சியா கும் (1 கொரி 11:2-16; 14:1-40; மத் 7:22; 10:41; அ.ப. 21:9; 1 திமொ 1:18; 4:14). ஆகவே தொடக்க காலக் கிறிஸ்தவ இறை வாக்குரைத்தலின் பின்னணியில் இந்நூலைப் புரிந்து கொள்ள வேண்டும். நூலின் பெரும் பகுதி வெளிப்பாட்டு இலக்கிய வடிவில் இருந்தாலும், அதில் இறைவாக்கு வடிவம் கொண்ட பல பகுதிகள் உள்ளன.

*இ. கடித வடிவம்:* நூலின் தொடக்கம் படர்க்கையில் அமைந்துள்ளது (1:1-3). ஆனால் நூலின் பெரும்பகுதி தன்மை ஒருமையிலேயே அமைந்துள்ளது. படர்க்கையி லிருந்து தன்மைக்கு மாறும்போது கடிதப் பண்புகள் புகுகின்றன (1:4). 1:4-5 என்ற பகுதி பழங்கால மாதிரிக் கடிதத்தின் கூறு களைக் (அனுப்புபவர், பெறுபவர், வாழ்த் துரை) கொண்டுள்ளது. சிலசமயம் வாழ்த்துரை யில் நன்றியுரையோ ஆசீரோ சேர்க்கப் படும். இந்நூலில் வாழ்த்துரையையடுத்துப் போற்றுரை வருகிறது. இதுஒருவகை வழி பாட்டுக் கூறாக இருக்கலாம். இந்த முன் னுரை கலா 1:3-5-இல் வரும் வாழ்த்துரை மற்றும் போற்றுரைக்கு ஒத்ததாக உள்ளது.

போற்றுரையை அடுத்துக் கடிதத்தின் முக் கிய பகுதி வரும் மரபிற்கு மாறாக, இந்நூலில் இரு தனிப்பட்ட இறைவாக்குகளும் (1:7.8), பின்பு யோவானுக்கு இயேசுவின் வெளிப் பாடு பற்றிய அறிக்கையும் வருகிறது (1:9-3:22); அதன்பின் பிறகாட்சிகளும் கேட் டல்களும் (4:1-22:5) சில தனிக்கூற்றுகளும் (22:6-20) வருகின்றன. நூல் ஓர் ஆசீரோடு முடிகிறது. இது சாதாரணமாய் ஒரு கடி தத்தை முடிக்கும் மாதிரிமுறையாகும். ஆகவே கடிதம், திருவெளிப்பாட்டின் இலக் கிய வகையை நிர்ணயிக்கவில்லை. அத னால் இந்நூல் மூடப்பட்டிருக்கும் ஓர் உறை போன்றதே.

இவ்வடிவத்தை ஆசிரியர் ஏன் பயன்படுத்தினார்? ஒருவேளை அப்படிப்பட்ட அவசியம் ஏற்பட்டிருக்கலாம். மேற்குச் சிறிய ஆசியாவிலுள்ள சபைகளோடு நேரடியாகப் பேசி வந்த ஆசிரியர், பத்மு தீவுக்குநாடு கடத்தப்பட்ட பின்பு எழுத்து மூலமாகத்தான் தொடர்பு கொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது எனலாம். ஒருவேளை அதிகாரபூர்வமான கிறிஸ்தவர் தலைவர்கள் கடிதங்கள் - திருமுகங்கள் - வழியாகத்தான் சபைகளுடன் தொடர்பு கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டிருக்கலாம். ஒருவேளை யூத அல்லது உரோமை மாதிரிகளைப் பின்பற்றி, பவுல் இத்தகைய முறையை நிறுவியிருக்கலாம். இக்னாசியு, போலிக்கார்பு போன்ற திருச்சபைத்தந்தையர்கள் இந்தக் கடித அல்லது திருமுகத்தொடர்பு முறையைப் பின்பற்றியுள்ளனர். கடித வடிவும் வெளிப்பாட்டு வடிவும் சேர்ந்த பிற நூல்களும் கிடைத்துள்ளன.

ஈ. நாடகம் ஓர் இலக்கியமாகும். அதில் ஆசிரியர் காண்பவர்கள் முன்னே தனது பாத்திரங்களை உயிருள்ளவர்களாக நடமாடச் செய்கிறார். திருவெளிப்பாடு உண்மையில் ஒரு நாடக இலக்கியம் அன்று. அதிலே ஆசிரியர் தானே நிகழ்ச்சிகளை விவரிக்கிறார். ஆனால் இந்நூல் நாடகத்தோடு, குறிப்பாக, துன்பியல் நாடகத்தோடு தொடர்பு கொண்டுள்ளது. துன்பியல் நாடகத்தைப் போன்று, திருவெளிப்பாட்டின் பொருள் வீறார்ந்தது; பெரியது. கிரேக்கத் துன்பியல் நாடகத்திற்கு ஒத்தவாறு யோவான் தன் நூலை அமைக்கிறார். விண்ணகத்தையும் வரவிருப்பவைகளையும் விவரிக்கும் போது, யோவான் குழுக்களும் தனிநபர்களும் நேரடியாகப் பேசிக்கொள்வதாக அமைக்கிறார். இப்படிப் பேசப்படுபவை சில சமயங்களில் பாடல்களாகும் *(5:8-10; 15:3-4)*. பெரும்பாலும் இப்பேச்சுக்கள் காட்சியில் கூறப்படும் நிகழ்ச்சிகளைப்பற்றி விளக்கம் அளிக்கின்றன *(2:10-12; 16:5-7; 18:10. 16-17. 18-19)*. மகிழ்ச்சிக்கு அழைப்பு *18:20; 19:6-8*-இல் காணப்படுகிறது. இவற்றில் எல்லாம் ஆசிரியர் கிரேக்கத் துன்பியல் நாடக அமைப்பை ஓரளவு பின்பற்றுவதாகத் தெரிகிறது. இந்த இலக்கியத்தின் நோக்கம் பயம், இரக்கம் ஆகியவற்றால் உணர்ச்சிகளைத் தூய்மைப்படுத்துதலாகும். திருவெளிப்பாடு அச்சத்தைத் தூண்டுகிறது. உலகில் விசுவாசி எதிர்கொள்ளும் ஆபத்துக்களைத் தெளிவுபடுத்துகிறது; வலியுறுத்துகிறது; பிரமாணிக்கமற்றவர்களுக்கு வரும் உலகில் காத்திருக்கும் பயங்கர விளைவுகளையும் சித்தரிக்கிறது.

இந்த நூலில் காணப்படும் நாடகப் பண்பை மேடை சார்ந்ததாகப் புரிந்து கொள்ளக்கூடாது. இந்த நிகழ்ச்சியில் கிறிஸ்தவர் வெறும் பார்வையாளர் அல்லர். அவர் பங்கு பெறுகிறார். அவர் கிறிஸ்துவுக்கு அர்ப்பணிக்கப்பட்டவரானதால், உறுதி பெற்ற கிறிஸ்தவன் இந்த நாடகத்தில் செயலாற்ற வேண்டும்; சொந்தமாகத் துன்புற வேண்டும். இப்போது நடந்து கொண்டிருக்கும் நாடகத்தில் அவரும் ஈடுபட்டிருக்கிறார். கிறிஸ்து மீண்டும் வரும்வரை இந்நாடகம் தொடர்ந்து கொண்டிருக்கும்.

**உ. இரட்டிப்பு உரைகள், நிகழ்ச்சிகள்:** ஏறக்குறைய எல்லாக் காட்சிகளும் நிகழ்ச்சிகளும் இருமுறை கூறப்படுகின்றன. நூற்று நாற்பத்திநாலாயிரம் *(7:2-8; 14:1-5)*; விண்ணக மக்கள் *(7:9-17; 15:2-5)*; 16 வாதைகள் *(அதி. 8-9)*; ஏழு தலைகளும் பத்துக் கொம்புகளும் கொண்ட மிருகம் *(13:1.8; 17:3.8)*; ஏழுதலைகளும் பத்துக்கொம்புகளும் அடையாளப்பொருள் *(17:12-14.16-17)*; பாபிலோனின் வீழ்ச்சி அறிவிக்கப்படுதல் *(14:8; 18:2-3)*; வீழ்ச்சியுற்ற நகரத்தைப்பற்றிய இரங்கற்பா *(18:9-19; 18:22.23)*; அந்தவீழ்ச்சியின்போது மகிழ்ச்சி ஆரவாரம் *(19:1-5; 18:20; 16:5-7)*; புற இன நாடுகளுக்கு எதிரான இறுதிக்காலப் போராட்டம் *(19:11-20; 20:7-10)*; இறுதித் தீர்ப்பு *(20:12.13)*; வருங்காலப் புதிய எருசலேம் *(21:1-8; 21:9-22:5)*; தீயோர் நிராகரிக்கப்படுதல் *(21:8-22:15)*; அதி 4-9 என்ற பகுதிக்கும் அதி 12-19 என்ற பகுதிக்குமிடையே இணைவுத்தன்மையுள்ளது; இவையாவும் விளக்கப்பட வேண்டும்.

ஆட்களும் பொருட்களும், ஏற்கனவே போதியமட்டும் விளக்கப்பட்டு விட்டாலும் முதல் தடவையாக வருவதுபோல் தோன்று கின்றன; ஒரு மிருகம் *(13:1; 17:3.4)*; ஒரு செம்மறி *(அதி. 5;14:1)*; பளிங்கு அல்லது கண்ணாடிக்கடல் *(4:6; 15:2)*; இறைவனின் அரியணை *(அதி 4-5; 21:11)*. இவற்றோடு சில முரண்பாடுகளும் உண்டு. 1) ஏழாவது எக்காளம் மூன்றாவது அழிவை அறிவிக் கிறது. ஆனால் அது நிகழவில்லை *(11:14-18)*. 2) பெரிய வேசியின்மேல் தீர்ப்பு அறிவிக் கப்படுகிறது. ஆனால் அதன்பின் வருவது மிருகம் பற்றிய விவரிப்பாகும் *(அதி 17)*. 3) மிருகத்தின் தலைகள் பேரரசர்களையும் *(17:10)*, ஏழு குன்றுகளையும் *(17:9)* அடை யாளமாக உணர்த்துகின்றன. மிருகம் உரோமைப் பேரரசை அடையாளப்படுத்து கிறது; ஆகவே உயிருள்ளதாக இருக்கிறது *(13:1.3.8)*. ஆயினும் ஏற்கெனவே மரித்து விட்ட பேரரசன் நீரோவையும் அடையாளப் படுத்துகிறது *(17:8; 13:18)*. 4) கடலும் பாதாள மும் தாங்கள் அடைத்திருந்த இறந்தோரை வெளியேற்றும் முன்னரே *(20:13)*, இறந்தோர் ஒன்று கூட்டப்பெற்றுத் தீர்ப்பிடப்படுகின்ற னர் *(20:12)*. இந்த முரண்பாடுகள் விளக்கம் கோருகின்றன.

சூழ்நிலைக்குப் புறம்பான பகுதிகள் உள் ளன. *18:14* திடீரென்று படர்க்கையிலிருந்து முன்னிலைக்கு மாறுகிறது. *18:21-24*-இல் வச. *21*-ம் *24*-ம் சேர்ந்து போக வேண்டும்; ஆனால் வச 22-23-ஆல் பிரிக்கப்படுகின்றன.

இந்தக் காரணங்களுக்காக இந்நூலின் இறைவாக்குப்பகுதியான அதி 4-22-இல் இரண்டு வெளிப்பாட்டுப் பகுதிகள் உள் ளன. மூலத்தில் இரண்டும் தனித்தனி யானவை; ஒரே வாக்கமாக இணைக்கப்பட்டுள் ளன என்று கருத அறிஞர்களைத் தூண்டியுள் ளன. இரண்டும் அதே இலக்கியப் பண்புக ளுடையவை. ஒரே ஆசிரியரையும் கொண் டிருந்திருக்கலாம். ஆனால் வெவ்வேறு காலங் களில் எழுதப்பட்டவையாகும். இந்த இரு வெளிப்பாடுகளை வரையறை செய்வதில் சிலர் ஈடுபட்டுள்ளனர். வேறுசிலர் திரு வெளிப்பாட்டுநூல் கிறிஸ்தவ மயமாக்கப்பட்ட யூதநூலை அடிப்படையாகக் கொண்டது என்பர். இன்னும் சிலர் யூதத் தோற்றமுடைய இரண்டு அல்லது மூன்று வெளிப்பாடுகளை ஒரு கிறிஸ்தவர் பொருத்தமில்லாமல் இணைத்திருக்கிறார் என்பர். இப்போது ஆய் வாளர்கள் நூல்முழுவதும் காணப்படும் நடையில் உள்ள ஒற்றுமையை ஏற்றுக்கொள் வர். இவர்கள் இந்நூலுக்கு ஒரே பதிப்பாசிரி யரை ஏற்றுக் கொள்வர். இவர் தனக்கு முன் இருந்தவற்றைத் தன்நடையில் கிரகித்து, வேறுபட்ட மூலங்களில் காணப்பட்ட வேறு பாடுகளை அகற்ற முயற்சி செய்யாமல், அப்படியே பதிப்பித்துள்ளார் என்பர்.

**ஊ. அடையாளங்களும் எண்களும்:** நூலில் வரும் காட்சிகள் கருத்தை அடிப்படை யாகக் கொண்டன; அறிவுத்தன்மையுடை யன; காணக்கூடியன; கற்பனை செய்யக்கூடிய தல்ல. ஏழுதலைகளில் பத்துக் கொம்பு களைப் பகிர்ந்தமைப்பது எப்படி? அதி. 4-5-இல் வரும் பெரும் காட்சிகளில் என்றும் செயலாற்றும் இறைவனின் யாவும் கடந்த தன்மையும், வெற்றிவீரரான கிறிஸ்து வின் நித்திய மன்றாட்டும் எடுத்துக் கூறப் படுகின்றன. கிறிஸ்துவில் யாவும் ஒன்றிக் கப்படுகின்றன. அண்ட நிகழ்ச்சிகள் ஒரு யுகத்திற்குச் சாவுமணி அடித்து, மற்றொன் றைத் தொடங்கி வைக்கின்றன.

கண்கள் அறிவைக்குறித்தன. அதிகமான கண்கள் அறிவின் நிறைவைக்குறித்தன. கொம்பு ஆற்றலையும் அதிகாரத்தையும் நீண்ட ஆடை குருத்துவத்தையும், முடி அரச தன்மையையும், வெண்ணிறம் மகிழ்ச்சியை யும் தூய்மையையும் வெற்றியையும் குறித் தன. எண்கள்கூட அடையாளப் பொருளில் பயன்பட்டுள்ளன. நான்கு: மண்ணுலகின் நான்குமூலைகளிலும் நின்ற வானதூதர் நால் வர் *(7:1)*; யூப்பிரத்தீசு என்னும் பேராற்றி னருகே கட்டுண்டிருந்த தூதர் நால்வர் *(9:14)*; மண்ணகத்தின் நான்கு திசைகள் *(20:8)*; நான்கு உயிர்கள் *(4:6)*. இந்த எண் அண்ட அமைப்போடு தொடர்புடையது. பன் னிரண்டு: மூலத்தில் இந்த எண் விண்மீன்கள்

பற்றிய சமயங்களோடு தொடர்புடையது. ஆனால் விவிலியத்தில் இப்பொருளில்லை. இவ்வெண் நிறைவின் அடையாளம் *(12:1)*: பன்னிரு இனத்தைக் குறிக்கும் *(14:1-5;* இறைவனின் மக்களின் எண்ணிக்கை *12 x 12 x 1000)*; நகரத்தின் பன்னிரு வாயில்களும் பன்னிரு விலையுயர்ந்த கற்களும் *(21: 12.14.21)*; *12000* ஸ்தேதிய நீளமும் அதே அகலமும் கொண்ட எருசலேம் சதுக்கம் *(21:16)*. இந்த எண் முழுமை பற்றிய கருத்தைச் சிறிது கொண்டுள்ளது. இந்நூலில் அடிக்கடி காணப்படுவது ஏழு என்ற எண்ணாகும்: ஏழுசபைகள் *(1:4:11)*; ஏழு ஆவிகள் *(1:4; 4:5; 5:6)*; ஏழு விளக்குகள் *(1:12.20;2:1)*; ஏழு விண்மீன்கள் *(1:16.20)*; ஏழு முத்திரைகள் *(5:1)*; ஏழு வானதூதர் கைகளிலுள்ள ஏழு எக்காளங்கள் *(8:2)*; ஏழு இடிகள் *(10:3)*; ஏழு கிண்ணங்களில் ஏழு வாதைகள் *(15:1.7;16:1)*. பழங்கால உலகில் ஏழு என்ற எண் நிறைவுடைமையை அடையாளமாக உணர்த்திற்று. பாபிலோன் சோதிடத்தில் ஏழு விண்மீன்கள் தேவதைகளாக வணங்கப்பட்டன. இவை அண்டத்தின் போக்கைக் கட்டுப்படுத்தியதாகக் கருதப்பட்டன. பாபிலோனும் அதன் சோதிடமும் எண்கள் பற்றிய அடையாளவியல் தோற்றத்திற்குத் தூர காரணமாக இருந்திருக்கலாம். ஆனால் அவர்களின் யூகங்கள் விவிலிய ஆசிரியர்களின் எண்ணப்போக்கில் இடம் பெறவில்லை. விண் கோள்கள் இறைவனுடைய படைப்புக்களே என்று யூதர்கள் கருதினர். மூன்றரை என்ற எண் துன்பம், மற்றும் வேத கலாபனைக்காலத்தைக் குறிக்கும்.

**5. காலமும் இடமும்:** இது ஒரு சிக்கலான பிரச்சனை. ஆசிரியர் பற்றிய கருதுகோள்களால் இப்பிரச்சனை மேலும் சிக்கலாக்கப்பட்டிருக்கிறது. கீழ்வருவது உண்மைக்கு நெருங்கியதாக இருக்கலாம் என்று கருதுகிறோம்.

யோவான் கிறிஸ்தவ மறைக்காகத் தான் சிறைப்பட்டிருந்த பத்மு தீவிலோ *(1:9)*, விடுதலையான பின் பிற்காலத்தில் எபேசிலோ இந்நூலை எழுதியிருக்க வேண்டும். அவர் சிறைப்பட்டிருந்த காலத்துத் துன்பமும், நூல்முழுவதும் விரவிக்கிடக்கும் மறைக்காகத் துன்புறும் சூழ்நிலையும் *(2:10.13; 3:10; 6:9; 17:6; 18:24; 19:2)*, மறைக்கு எதிராக நீரோ எழுப்பிய (கி.பி. *64-67*) துன்ப காலத்தையோ (கி.பி. *64-67*), தொமிசியன் காலத்தையோ (கி.பி. *95*) சுட்டுகின்றன. அறிஞர் சிலர் முந்தைய காலக்கட்டத்திற்குச் சார்பாகப் பேசுகின்றனர். அறிஞரில் பலர் தொடக்க காலத்திருச்சபைத் தந்தையர்களின் பாரம்பரியத்தை ஏற்று, தொமிசியன் காலத்தில்தான் இந்நூல் தோன்றியது என்பர். *13:4*-இல் குறிக்கப்படும் பேரரசன் வழிபாடு நீரோவின் காலத்திற்குப்பின்தான் பொதுப் பழக்கமாயிற்று. அதி. *2-3*-இல் விவரிக்கப்படும் சபைகளின் இழிநிலையும் பின்னையக் கணிப்புக்கு ஆதரவாகக் கருதப்படுகிறது.

**6. அமைப்பும் திட்டமும்:** ஒவ்வொரு ஆய்வாளர்களின் கருதுகோள்களுக்கேற்ப இது மாறுபடும். கீழ்வரும் திட்டம் ஆசிரியரின் இலக்கிய அமைப்பு, தொகுத்துரைத்தல், ஏழு என்ற எண் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு வரையப்பட்டது.

I. முன்னுரை *(1:1-3)*.

II. நாடகமுகப்பு *(1:4-8)*

III. அங்கம் 1:உலகில் திருச்சபை *(1:9-3:22)*.
- *1:9-20* : பின்னணி.
- *2:1-3:22* : ஏழுசபைகளுக்குச் செய்தி.

IV. அங்கம் 2:வரலாற்றில் இறைவனது நோக்கம் *(4:1-8)*.
- *4:1-5:14* : பின்னணி.
- *6:1-8:1* : ஏழு முத்திரைகள்.

V. அங்கம் 3: துன்புறும் திருச்சபை *(8:2-11:18)*.
- *8:2-6* : பின்னணி.
- *8:7-11:19* : ஏழு எக்காளங்கள்.

VI. அங்கம் 4: திருச்சபையின் மீட்பு *(11:19-15:4)*.
- *11:19* : பின்னணி
- *12:1-15:4* : ஏழு காட்சிகள்.

VII. அங்கம் 5: வேதனையுறும் உலகம் *(15:5-16:21)*.

*15:5-16:1* : பின்னணி.

*16:2-21* : ஏழு கிண்ணங்கள்.

VIII. அங்கம் 6: உலகம் தீர்ப்பிடப்படுதல் *(17:1-20:3)*.

*17:1-2* : பின்னணி.

*17:3-20* : ஏழு வாதைகள்.

IX. அங்கம் 7: ஆயிரமாண்டு நற்காலம் *(20:4-22:5)*.

*20:4-10* : பின்னணி.

*20:11-22:5*: இறைவனின் ஏழுவடிவத் திட்டம் நிறைவேறுதல்

X முடிவுரை *(22:6-20)*.

XI. இறுதி ஆசீர் *(22:21)*.

**7. விளக்கமுறையும் நோக்கமும்:** திருவெளிப்பாட்டு நூல் வெறுமனே அப்போஸ்தலிக்கச் செய்திதான். ஆனால் திருச்சபைக்கு ஒரு வரலாற்று இறையியல் அளிக்கும் நோக்கோடு இச்செய்தி வெளிப்பாட்டு இலக்கியத்தில் எழுதப்பட்டது. இதன் அடிப்படைச் செய்தி உயிர்த்த கிறிஸ்துவை நாசரேத்து ஊர் இயேசுவாகக் கண்டுணர்ந்து, அவரை இந்த உலக வரலாற்றின் ஆண்டவராக ஏற்றுக் கொள்வதாகும். மகிமையோடு ஆட்சிசெய்யும் கிறிஸ்து தனக்குத் தெளிவு அளித்துள்ளார் என்ற ஆசிரியரது விசுவாச உறுதிப்பாட்டில் தொடங்குகிறது இந்நூலின் விளக்கம். பெறப்படும் வெளிப்பாடே முக்கியமானது. அடையாளங்களும் எண்களும் பழைய ஏற்பாட்டுப் பின்னணியில் யூதப்பொருளில் விளக்கப்படலாம். இயேசு துன்பங்களின் வழியாகத் தீய சக்திகளின் மேல் வெற்றி கொண்டதுபோல், விசுவாசியும் செய்ய வேண்டும். இது மிக அவசியமாகும். ''மெசியா இப்பாடுகளைப்பட்டன்றோ மகிமையடைய வேண்டும்?'' (லூக் 24:26). ''என்னை அவர்கள் துன்புறுத்தினார்கள்; உங்களையும் துன்புறுத்துவார்கள்'' (யோவா 15:20). ஆகவே போராட்டம் தற்செயலான தன்று; எதிர்பார்க்காது நடப்பதன்று. முழுவதும் இணைக்க முடியாத இரு சக்திகளுக்கிடையே நடைபெறும் போராட்டமாகும். ''ஏன் அஞ்ச வேண்டும்?'' என்று காட்சியாளர் கேட்கிறார். ஏனெனில் கிறிஸ்து ஏற்கெனவே வென்று விட்டார். இந்த வெற்றிதான் விசுவாசிகளின் பலத்தின் ஊற்று. இதையே அவர்கள் தொடர்ந்து நோக்கிச் செயல் ஆற்ற வேண்டும்.

திருவெளிப்பாடு, புதிய ஏற்பாட்டு ஒளியில் பழைய ஏற்பாட்டு இறைவாக்குகளை விளக்குகிறது. பழைய ஏற்பாட்டிலிருந்து சுட்டுதல்கள் கொண்டிராத ஒருவாக்கைத் திருவெளிப்பாட்டில் காண்பதுஅரிது. இந்நூல் தொகுப்பு நடையில் எழுதப்பட்டுள்ளது. அதாவது பழைய ஏற்பாட்டுச் சொற்களையும் தொடர்களையும் வாக்கியத்தின் அமைப்பிலேயே புகுத்திக் கையாள்வதாகும். இப்படிப்பட்ட சுட்டிக்காட்டல்கள் இந்நூலில் மிக அதிகமாக உள்ளன. இத்தகைய நடை ஓரளவு விளக்கத் தன்மையை உள்ளடக்கும். ஆகவே திருவெளிப்பாட்டு நூலைப் புரிந்து கொள்வதற்கு அதில்வரும் பழைய ஏற்பாட்டுச் சுட்டிக்காட்டல்களை அறிந்திருப்பதும் அவற்றைக் காட்சியாளர் பயன்படுத்தும் முறையை அறிந்திருப்பதும் மிக அவசியமாகும்.

''ககால் யாவே'' யாகிய பழைய ஏற்பாட்டு இறைமக்கள் இறைவனின் திருச்சபையை முன் உருவகப்படுத்தினர். சிலுவையில் அறையுண்டு உயிர்த்த கிறிஸ்து, மீட்பரும் நீதிபதியும் ஆகிய கிறிஸ்துவாகிய மூல நற்செய்தியை அமைக்கும் அந்த வரலாற்று மற்றும் இறையியல் உண்மைகளால் இறைமக்கள் இறைவனின் திருச்சபையாக ஆகின்றனர் (அதி-12). மெசியாவின், செம்மறியின் வெற்றி இஸ்ராயேலின் வெற்றியாகும். இதை நோக்கி இஸ்ராயேல் இயங்கியது. காலத்தில் நடந்ததும் அதேபோது உண்மையான காலம் கடந்ததுமாகிய இந்த வெற்றியே மனுகுலத்தின் சமய வரலாற்றிற்குத் திறவுகோலாகும். ஆகவே இது இறைவாக்குப் பகுதியின் தொடக்கத்தில் (அதி 4-5) அமைக்கப்படுகிறது. இறை மக்களின் துன்பங்கள் திருச்சபையின் துன்பங்களை உருவ

கப்படுத்துகின்றன. இது அதி.4-9-க்கும் அதி. 12-19-க்கும் இடையிலுள்ள இணைவுத் தன்மையை விளக்கலாம். இவற்றிற்கு ஆசிரியர், தன் அண்மை சேய்மைக்காலப் பின்னணிக் கேற்ப, வண்ணம் பூசுகிறார். மெசியாவின் துன்பங்களுக்கிடையில் திருச்சபை பிறக்கிறது. அவர் வந்து வெற்றியடைந்துவிட்டாலும், இத்துன்பங்கள் அவர் வரும்வரை தொடரும்.

ஆனால் திருவெளிப்பாட்டுநூல் உலகத்தினுடையவோ திருச்சபையினுடையவோ இறைவாக்கு வரைபடம் அன்று. அஃது ஒரு யுகத்தின் முடிவையும் மற்றொன்றின் தொடக்கத்தையும் பற்றிப் பேசுகிறது. தனது மனுவுரு எடுத்தல், பாடுகள், உயிர்ப்பு வழியாகக் கிறிஸ்து வெற்றி பெற்று விட்டார். புதிய யுகம் தொடங்கிவிட்டது. ஆனால் தொடக்கம்தான் கொண்டுள்ளது; தன் நிறைவை அடைந்துவிடவில்லை. இதுதான் இந்நூலிலும் புதிய ஏற்பாட்டிலும் காணப்படும் இடுக்கண் நிலை. விசுவாசி வெற்றி நிலையில் கிறிஸ்துவோடு ஒன்றித்து வாழ்கிறார். ஆனால் அந்த வெற்றியின் நிறைவை அடைந்து விடவில்லை. அவர்கள் இன்னும் துன்பப்பட வேண்டும். கிறிஸ்து வரும்வரை இந்நிலையே நீடிக்கும். இதுவே வரலாறு பற்றிய கிறிஸ்தவ தத்துவ இயல் அல்லது இறையியலாகும். தீமையின் சக்திகள் இறைவனுக்கு எதிராக எழுந்துகொண்டேயிருக்கும். ஏனெனில் இறைவன் இறைவனாக இருக்கிறார்; தீமை தீமையாகவே இருக்கிறது. திருவெளிப்பாட்டுநூல், காலம் கடந்த தன்மையைக் கொண்டிருந்தாலும், காலத்திற்குள் கட்டுப்பட்டுள்ளது. அது எழுதப்பட்ட காலத்திய நிகழ்ச்சியோடு தொடர்பில்லாமல் இல்லை. இவற்றிலிருந்து ஆசிரியர் பல உந்துதல்களைப் பெற்றார். பாலஸ்தீனப் போர் அப்போதுதான் முடிந்திருந்தது. எருசலேம் ஆலயம் அழிக்கப்பட்டுவிட்டது. யூதர்கள் சிதறிப்போயினர். இறைவனின் புதிய மக்கள் துன்புறுத்தப்பட்டனர். விசுவாசிகளுக்கு ஆறுதலும் உற்சாகமும் வேண்டியிருந்தது. இந்தக் குறிப்பிட்ட சூழ்நிலையில்தான் இந்நூலின் காலமில்லாச்செய்தி எழுதப்பட்டது. ''ஆயினும் தைரியமாக இருங்கள்; நான் உலகை வென்றுவிட்டேன்'' (யோவா 16:33). இந்த மனநிலையில் விசுவாசிகள் நிகழ்காலத்தையும் வருங்காலத்தையும் நோக்க வேண்டும்.

**8. இறையியல் கருத்துகள்:**

**அ. இறைவன்:** இந்நூலில் காணப்படும் இறைவன் பழைய ஏற்பாட்டின் யாவும் கடந்த இறைவனே! ''ஆண்டவராகிய கடவுள்''; அகரமும் னகரமும் ஆனவர் (திருவெளி 1:8); என்றும் இருப்பவர்; எல்லாம் வல்லவர். இந்த உண்மைகள் மீளவும் அதி.4-இல் அடையாள முறையில் எடுத்துக் கூறப்படுகின்றன. அதில் அவரது புனிதம் மும்முறை அறிவிக்கப்படுகிறது. அவர் அனைத்தையும் படைத்தவர் (4:11); புதிய படைப்பின் ஊற்று (21:5); அவரே வரலாற்று நாயகன். மக்கள் மனந்திரும்பும்படியாக வாதைகளை அனுமதிப்பவரும் அவரே 9:20). பாபிலோனைத் தீர்ப்பிடுபவரும் (18:1.8), எல்லாரையும் தீர்ப்பிடுபவரும் அவரே. தொடக்கமும் முடிவும் அவரே (21:6). தமது பிள்ளைகளுக்கு வாழ்வின் ஊற்றிலிருந்து நீர் அளிப்பவரும் அவரே (21:6-7). செம்மறியுடன் சேர்ந்து அவரே புதிய ஆலயம். இறுதிக்கால அரசின் நிறைவில் ஒளியும் அவரே.

**ஆ. கிறிஸ்து:** கிறிஸ்து மெசியாபற்றிய இறைவாக்குகளின் நிறைவேறுதலாக, யூதா குலத்தின் சிங்கமாக (5:5), தாவீதின் வேரும் வழித்தோன்றலுமாக (21:16) எடுத்துக் காட்டப்படுகிறார். சங் 2:9-இல் முன்கூறப்பட்டபடி அவர்வந்து, இருப்புக்கோல் கொண்டு தம் மக்களுக்கு ஆயனாக இருப்பார் (2:27; 12:5;19:15). அவர் ''விரைவாகவே வருகிறார்'' (3:11; 22:7). ''அவரை ஊடுருவக் குத்தினவர்களும் காண்பார்கள்'' (1:7). ஆகவே தானியேலின் மனுமகன் போன்று ஊனும் இரத்தமும் உள்ள மனிதனாக வருவார் (1:12தொ). ஆயினும் அவர் மற்ற மனிதரைப் போல் வெறும் மனிதனல்லர். கடவுளுக்கே உரிய பண்புகள் அவருக்குக் கொடுக்கப்படுகின்றன. தந்தையைப் போன்று அவர் அகர

மும் நகரமும், முதலும் கடைசியும், தொடக்கமும் முடிவும் ஆவார் (1:17; 2:8; 22:13). அவரே ''அரசர்க்கெல்லாம் அரசர்; ஆண்டவர்க்கெல்லாம் ஆண்டவர்'' (17:14; 19:16). அவர் என்றென்றும் வாழ்பவர் (1:18); எல்லாம் அறிபவர் (2:23). அவரது முதல் வருகையில், மக்களைப்பாவத்திலிருந்து மீட்கும் பொருட்டுத் தன் இரத்தத்தைப் பலியாகச் சிந்தினார் (2:8; 5:9-14; 7:14; 12:11). அவர் மரித்து உயிர்த்தெழுந்தார் (1:5). பலியிடப்பட்ட உயிருள்ள செம்மறியென்ற அளவில் அரியணைமுன் அவரது பிரசன்னமே அவரது மன்றாட்டாகும் (5:6.9; 13:8). இறந்தோரிலிருந்து எழுந்தவருள் தலைப்பேறானவர் என்ற அளவில்அவர், அரியணைமுன் (3:21; 7:17; 21:1.3) விசுவாசிகளை உயிர்ப்புக்குக் கொண்டு வருவார். ஏனெனில் அவர் வைத்திருக்கும் வாழ்வு நூலில் எழுதப்பட்டிருப்பவர்கள் மட்டுமே புதிய எருசலேமில் நுழைய முடியும் (21:27). இங்கு, தந்தையோடு சேர்ந்து செம்மறியே புதுநகரத்தின் பீடம், ஒளி அளிக்கும் விளக்கு, நித்திய பேறு ஆவார் (21:22-23). அவரே நீதிபதி. இந்த வாழ்வுக்குள் புக அனுமதி அவரது தீர்ப்பைப் பொறுத்தது (19:11; 14:1). இறைவனுடைய வார்த்தையாகிய அவர் நம்பிக்கைக்குரியவர்; உண்மையானவர் (19:11.14). அதாவது இறைவன் தம் வாக்குறுதிகளுக்குக் காட்டும் பற்றுறுதியின் நிறைவான எடுத்துக்காட்டாவார்.

**இ. தூய ஆவி:** தூய ஆவி, திருச்சபையில் செயலாற்றும் இறைவனுடைய ஆவியின் நிறைவாகிய ஏழு ஆவிகளால் எடுத்துக்காட்டப்படுகிறார் (1:4; 3:1; 4:5). ஏழு ஆவிகள் இறைவன் அரியணைமுன் இருக்கின்றனர் (1:4). இவர்கள் இறைவனுடைய ஏழு ஆவிகளாவார் (4:5). ஏழு ஆவிகளையுடையவர் பேசுகிறார் (3:1). செம்மறிக்கு ஏழு கொம்புகளும் ஏழு கண்களும் இருக்கின்றன. மண்ணுலகெங்கும் அனுப்பப்பட்ட கடவுளின் ஏழு ஆவிகளே அக்கண்கள் (5:6). ஏழு ஆவிகளான பரிசுத்த ஆவி இறைவனுடையவும் செம்மறியினுடையவும் ஆகும். ''நான் தந்தையிடமிருந்து உங்களுக்கு அனுப்பப்போகிற துணையாளர் வருவார். அவர் தந்தையிடமிருந்து வரும் உண்மையின் ஆவியானவர். அவர் வந்து என்னைப் பற்றிச் சாட்சியம் கூறுவார்'' (யோவா 15:26) என்ற கூற்றை நாம் நினைவுகூர வேண்டும். இவற்றில் தந்தையிடமிருந்தும் மகனிடமிருந்தும் வரும் ஆவிக்கு அடித்தளம் இருக்கிறது. கடிதங்களின் முடிவில் ஏழு சபைகள் ஒவ்வொன்றோடும் பேசுபவர் ஆவியானவரே. புனிதர்களோடு சேர்ந்து ஆவியானவர் இரண்டாம் வருகைக்காக வேண்டுகிறார்.

**ஈ. திருச்சபை:** இறைவனின் புதிய மக்களாகிய திருச்சபையின் பிறப்பு திருவெளி 12-இன் உச்ச நிலையாகும். திருச்சபை பழைய ஏற்பாட்டு இறைமக்களின் இடைவிடாத தொடர்ச்சியாகக் காட்டப்படுகிறது. அது ''அரசகுலக் குருக்களால்'' ஆனது (1:6;5:10); செம்மறியின் இரத்தத்தால் உருவெடுக்கிறது. அது உலகத்தில் இருந்தாலும் அதைச் சார்ந்ததன்று. இறந்தவர்கள், சிறப்பாக மறைசாட்சிகள், பூமியிலுள்ள துன்புறும் சகோதரர்களோடு ஒன்றித்திருக்கின்றனர் (6:9-11; 19:2). கிறிஸ்துவோடு திருச்சபை கொண்டிருக்கும் உறவு பாரம்பரிய விவிலியத் திருமண உருவகத்தால் எடுத்துக்கூறப்படுகிறது (19:7; 21:2.9). திருச்சபையில் கிறிஸ்து எப்போதும் செயலாற்றுகிறார் (1:13-16); அதை எப்போதும் வழிநடத்துகிறார். திருச்சபையோடு அவர் கொண்டிருக்கும் ஒன்றிப்பு இரண்டாம் வருகையின் மகிழ்ச்சியில் தனது நிறைவை எய்தும்.

**உ. இறுதிக்கால இயல்:** யூதத்துவத்திற்கு இறுதிக்காலச்செயல் வருங்காலத்தில் வருவதாகும். இதற்கு மாறாக, கிறிஸ்துவத்திற்கு அது கிறிஸ்து நிகழ்ச்சியில் நடந்துவிட்டது. இது வரலாற்றில் இறைவனின் உறுதியான, இறுதியான இடையீடாகும். இறுதிக்காலம் தொடங்கிவிட்டது. ஆனால் இன்னும் முடியவில்லை. கடைசியான இறுதிக்கால மகிமையின் பங்குக்கும் (20:6; 21:1-4), இந்த வாழ்வில் கிறிஸ்துவையும் சாத்தானையும் எதிர்கொள்ளும்போது எடுக்கும் தீர்மானத்திற்கும் இடையே நேரடித் தொடர்பு உண்டு.

திருவெளிப்பாட்டு நூலில் காணப்படும் இறுதிக்கால இயல் புதிய எருசலேமாகிய சமூகப்பண்பும், தனிநபர்த் தன்மையும் உடையது (21:6; 14:1).

ஊ. தீர்ப்பு: இது நல்லோர்க்கும் தீயோருக்கும் உரியதாகும். ஏழு கடிதங்கள் வெற்றி பெறுபவர்க்கு இறைவாழ்வில் பங்கு உண்டு என்று உறுதியளிக்கின்றன (2:1-3:22). இதை அடைய கிறிஸ்தவன் மட்டுடையவனாக, அடக்கமுடையவனாக, விழிப்புடையவனாக இருக்க வேண்டும் (3:2-4). சன்மானம் மெசியா நிறைவேறுதலாக விவரிக்கப்படுகிறது (அதி. 21-22). ஆனால் சாத்தானோடு சேர்ந்து கொண்டவர்களுக்குக் கடுமையான தீர்ப்புக் காத்திருக்கிறது. இறுதிக்கால இறப்பு உள்ளது. இது இறைவனிடமிருந்து பிரிந்திருக்கும் உறுதியான நிலையாகும் (2:11; 20:6; 21:8).

எ. வழிபாடு: இந்நூலின் தொடக்கமும் முடிவும் வழிபாட்டுச் சூழ்நிலையில் அமைந்துள்ளன. கிறிஸ்தவ வாழ்த்துரையான ''அருள்'' தொடக்கத்தில் 1:4-இலும் முடிவில் 21:22-இலும் வருகிறது. பவுலின் வாழ்த்துரை வாய்பாடு மருவி வந்திருக்கிறது எனலாம். நூல் முழுவதும் வழிபாட்டுக் குறிப்புகள் விரவிக்கிடக்கின்றன. யாத்திரை நிகழ்ச்சி இஸ்ராயேலின் வழிபாட்டில் மையம் வகித்தது. அதில் ஆபிரகாமின் மக்கள் இறைமக்களாயினர் (சங் 78; 80; 104; 105; 114; 136). திருச்சபையின் வழிபாட்டில், அதைத் திருச்சபையாக்கிய கிறிஸ்துவின் மீட்புச் செயல் மையம் வகிப்பது இயல்பே. இது பாடல்வடிவில் நூல் முழுவதும் காணப்படுகிறது (1:4-8; 4:8.11; 5:9-14; 7:9-17; 11:15-18; 12:10-12; 15:2-4; 19:1-8). ''அது உண்மை'', ''அப்படியே ஆகட்டும்'' என்று பொருள்படும் ஆமென் என்று கூறி சமூகம் 1:7;5:14; 7:12; 19:4; 22:20-இல் வரும் உணர்வுகளைத் தன்னுடையதாக்கிக் கொண்டது. இறைவனைப் போற்றும் ''அல்லேலூயா'' 19:1.3.4.6-இல் எழுகின்றது. கிறிஸ்து தம் இரத்தத்தினால் நம்மை மீட்டார் என்ற விசுவாசம் பற்றிய நிலையானவிசுவாச வாய்பாடு மீண்டும் மீண்டும் வருகிறது. ''ஆமென். ஆண்டவராகிய இயேசுவே வாரும்'' (22:20) என்பது சமூகம் தன் பணியைத் தொடங்கும்போது எழுப்பும் அறைகூவலாகும். உலகில் துன்புறும், வழிபடும் திருச்சபையின் வழிபாட்டுச் செபம் விண்ணக வழிபாட்டில் புகுத்தப்படுகிறது (4:11; 5:9). இரண்டு வழிபாடுகளும் பிணைந்துள்ளன. அதி.5-இல் காணப்படுவதுபோல் இரண்டும் அண்டப்பண்புடையவை. 21:22-22:5-இல் வரும் விவரிப்பு கூடாரவிழா வழிபாட்டைச் சுட்டுவதாகத் தெரிகிறது. இந்த விழாவின் மாலையில் ஆலய முற்றம் மிகவும் ஒளிமயமாக்கப்பட்டது. ஒவ்வொன்றும் நான்கு பொன் கிண்ணங்கள் கொண்ட பொன் கிளை விளக்குத்தண்டுகள் ஒளி அளித்தன. கைகளில் தீப்பந்தம் ஏந்தி, பக்தியுள்ளோர் நடனம் ஆடினர். எக்காளமும் இசைக்கருவிகளும் முழங்கின. சங் 120-34 பாடப்பட்டன. காலையில் சீலோவாம் குளத்திலிருந்து ஊர்வலம் வந்தது. குளத்திலிருந்து நீர் ஆலயத்திற்குக் கொண்டு வரப்பட்டு, பீடத்தின்மேல் ஊற்றப்பட்டது. தேரல் பலியும் நடந்தது. ஆனால் புதிய எருசலேமில் இறைவனும் செம்மறியுமே ஆலயம் ஆவர். இறைவனே ஒளி; செம்மறி விளக்காவார். இஸ்ராயேல் மட்டுமன்று, எல்லா மக்களும் வழிபட வருவர். சீலோவாமிலிருந்து நீர் கொண்டு வரப்படுவதில்லை. இறைவன் மற்றும் செம்மறியின் அரியணையிலிருந்து தோன்றி நீர் நகரவீதிகளில் ஓடுகிறது. சபைகளுக்கு எழுதப்பட்ட கடிதங்கள், வழிபாட்டுப் பதில்கள், பாடல்கள் ஆகியவை இந்நூலில் சில பகுதிகள் சமூக வழிபாட்டுக் கூடத்தில் வாசிக்கப்பட வேண்டியவை எனச் சுட்டுகின்றன.

9. இக்காலத்திற்கு: திருவெளிப்பாட்டு நூலின் மொழி மறைபொருள்தன்மையுடையது. ஆகவே பலரும் பலவாறு இந்நூலுக்கு விளக்கம் அளிக்க முயன்றுள்ளனர். இந்நூலிலே வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு விளக்கம் காண முயன்றுள்ளனர். இதைக் கொண்டு வருங்காலத்தை முன்னுரைக்கவும் முயன்றுள்ளனர். திருச்சபையைப் பிளவு

படுத்தி இழிவு படுத்தியவர்கள் கூடத் தங்களுக்குச் சாதகமாகச் சில பகுதிகளை இந்நூலிலிருந்து எடுத்துக்கூறுவர். இவற்றில் இந்நூலின் முக்கியத்துவம் அடங்கவில்லை எனலாம். கி:மு. முதலாம் நூற்றாண்டு வரலாற்றுச் சூழ்நிலை இந்நூல் தோன்றத் தூண்டுதலாக அமைந்திருக்கலாம். ஆனால் இந்நூலின் நிலையான செய்தி: இறைவன் மற்றும் அவரைச் சார்ந்தவர்களுக்கும் தீய சக்திகளுக்கும் இடையே போராட்டம் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கும்; இறுதியில் இறைச்சக்திகள் உறுதியாக வெற்றிபெறும் என்பதாகும். தலைமுறை தலைமுறையாக விசுவாசிகளுக்கு, சிறப்பாகத் தங்கள் கிறிஸ்தவ மறைக்காகத் துன்பங்களையோ மரணத்தையோ எதிர்கொள்ளும்போது இந்நூல் ஆறுதல் அளித்திருக்கிறது, உற்சாகமூட்டியிருக்கிறது. தங்கள் விசுவாசத்தில் நிலைத்திருக்கச் செய்திருக்கிறது. சிறப்பான ஆற்றல் மிக்க விதத்திலே, திருச்சபையிலும் உலகிலும் இறைவன் முழுமையாக ஆட்சிசெய்கிறார். அவர் இறுதியில் உறுதியாக வெற்றி கொள்வார் என்ற உண்மையை மக்களுக்கு எடுத்துக் கூற இந்நூல் பயன்பட்டுள்ளது. இதுவே இக்காலத்திற்கும் எக்காலத்திற்கும் இந்நூலின் பயனாகும்.

## திரை (CURTAIN, SCREEN)

கூடாரம் செய்யப்பயன்பட்டது. விவிலியத்தில் பெரும்பாலான இடங்களில், திரை கூடாரத்துடன் சேர்த்தே குறிப்பிடப்படுகிறது. மேலும் திரையும் கூடாரமும் ஒன்றாகவே கருதப்பட்டது (உ.ச. 1:5; எசா 54:2; எரே *4:20; 10:20; 49:29;* அப *3:7*).

சாட்சியப் பேழையைக் கொண்டிருந்த உள் திருஉறைவிடம் பத்துத் திரைகளால் அமைக்கப்பட்டது. ஒவ்வொரு திரையும் இருபத்தெட்டு முழநீளமும் நான்கு முழ அகலமும் கொண்டிருந்தது (யாத் *26:2*).

மூன்று திரைகள் சிறப்புப் பெறுகின்றன. முதலாவது திரை திருத்தூயகத்தைத் தூயகத்திலிருந்த பிரித்த திரையாகும். இது மிக விலையுயர்ந்த பொருட்களால் செய்யப்பட்டிருக்கும். இது நீலம், கருஞ்சிவப்பு, சிவப்பு நிற நூலாலும் முறுக்கேற்றி நெய்த மெல்லிய நாற்பட்டாலும் நெய்யப்பட்டு, கலைத்திறனுடன் அமைக்கப்பட்ட கெரூபுகளைக் கொண்டிருக்கும் (*25:31*). இது இறைவனின் உறைவிடத்தை மறைக்கும் திரையாகும் (*35:12; 40:21*). பரிகார நாளில் இத்திரைமுன் இரத்தம் தெளிக்கப்பட்டது.

இரண்டாவது திரை தூயகத்தின் முன் தொங்கியது. இதுவும் மேற்கூறப்பட்ட திரையைப் போலவே நெய்யப்பட்டிருந்தது. ஆனால் கெரூபுகளைக் கொண்டிருக்கவில்லை (யாத் *26:36*). மூன்றாவது திரை முற்றத்தின் நுழைவாயிலில் தொங்கியது. இதுவும் அதே விலையுயர்ந்த பொருட்களால் நெய்யப்பட்டது; இருபது முழ நீளமும் ஐந்து முழ உயரமும் கொண்டது (*38:18*).

கூடாரத்திரை வான்வெளிக்கு உருவகமாகப் பயன்பட்டுள்ளது. ''வான் வெளியைத் திரைச்சீலையென விரித்துக் குடியிருக்கும் கூடாரம் போல் அமைப்பவரும் அவரே'' (எசா *40:22;* காண் சங் *104:2*). புதிய ஏற்பாட்டில் திரையென்றால் அது திருத்தூயகத்தின் தொங்கிய ''ஆலயத்திரைதான்'' (மத் *27:51;* மாற் *15:38;* லூக் *23:45*). இத்திரை எபி *6:19; 9:3*-இல் குறிப்பிடப்படுகிறது. எபி *10:20*-இல் இயேசுவின் உடலைக்குறிக்கும் உருவகமாக இத்திரை பயன்படுகிறது. இதன் வழியாகத்தான் விசுவாசிகள் இறைவனது திருமுன் நுழைய முடியும். காண்க. ஆலயத்திரை.

## திரோப்பியன் (TYROPOEON)

இது, தாவீதுநகர் அமைந்திருந்த ஓபேல் மலையை மேற்கு மலையிலிருந்து பிரித்துத் தெற்கு வடக்காக ஓடிய சிறிய பள்ளத்தாக்கின் கிரேக்கப் பெயராகும். இன்று இது ஏல்-வாத் என்றழைக்கப்படுகிறது. காலப் போக்கில் குப்பைகூளங்களால் நிரப்பப்பட்டு இன்று ஒரு சிறு பள்ளமாக உள்ளது. ஏரோது காலத்தில் ஆலயத்தை மேற்கு மலையினுடன் இணைக்கும் இரு பாலங்கள் இருந்திருக்கலாம்.

**திர்கனா** (TIRHANAH - சலுகை)

இவர் காலேபுக்கு அவர் வைப்பாட்டி மாக்கா வழியாகப் பிறந்தவர். ஒருவேளை, காலேபின் குடும்பங்களில் ஒரு துணைக் குடும்பமாக இருக்கலாம் (1 நாள் 2:48).

**திலயான்** (DILEAN - வெள்ளரிக்காய்)

இலாக்கீசைச் சேர்ந்த செபேலா மாவட்டத்தின் யூதாவிலுள்ள ஓர் ஊர் (யோசு 15:38). இது இருந்த இடம்பற்றிக் கருத்தொற்றுமையில்லை.

**திறவுகோல்** (KEY)

சாதாரணமாக, சாவி என்றால் பூட்டைத் திறக்கவோ பூட்டவோ பயன்படுத்தப்படும் ஒரு கருவி; உருவகமாகக் கூறப்போனால் உள் செல்வதையோ, வெளியே வருவதையோ கட்டுப்படுத்தும் ஒன்று. புதிய ஏற்பாட்டில் இறுதிக் காலத்தில் கடவுள் தரும் அதிகாரம், வலிமை இவற்றின் அடையாளமாகப் பயன்படுத்தப்படுகிறது. இயேசு மெசியாவாக இருந்து தாவீது அரசின் மனிதர்களை ஏற்றுக்கொள்ளவோ, வெளியேற்றவோ அதிகாரம் பெறுகிறார் (திருவெளி 3:7). இறந்து உயிர்த்தவர் எனும் முறையில் சாவின் மீதும், நரகத்தின்மீதும் அதிகாரம் கொண்டுள்ளார் (1:18). பாதாளத்திலிருந்து கொள்ளை நோய்களைத் திறந்து விடத் திறவுகோல் பயன்படுத்தப்படுகிறது (20:1). இறை அரசில் நுழைவதற்கான ஞானத்தின் திறவு கோலை மறைநூலறிஞர்கள் வைத்திருப்பதாகக் கூறப்படுகிறது (லூக் 11:52; காண் மத் 23:13). பேதுருவுக்கும் திருச்சபைக்கும் விண்ணகத்தின் திறவு கோல்கள் தரப்பட்டன. இது கட்டுவதற்கும், விடுவிப்பதற்குமான அதிகாரத்தைக் குறிக்கிறது (மத் 16:18-19). வாயில்கள் திறந்தேயிருக்கின்றன என்பது கடவுளின் மன்னிப்பை எவரும் பெறலாம்; அதற்குத் தடையே இல்லை என்பதையும், அவரதுகுடும்பத்தில் எப்பொழுதும் இணையலாம் என்பதையும் காட்டுகிறது (திருவெளி 21:25; 22:14). இவ்வாறு அடையாள முறையில் பயன்படுத்தியுள்ளதற்கு முன்னமேயே மேற்காசிய நாட்டு மரபில் இத்தகைய முறையில் பயன்படுத்தியுள்ளனர்.

**திறவுகோல்களின் அதிகாரம்** (POWERS OF KEYS)

''விண்ணரசின் திறவுகோல்களை நான் உம்மிடம் தருவேன். மண்ணுலகில் நீர் தடை செய்வது விண்ணுலகிலும் தடை செய்யப்படும். மண்ணுலகில் நீர் அனுமதிப்பது விண்ணுலகிலும் அனுமதிக்கப்படும்'' என்று கூறி இயேசு பேதுருவிடம் ஒப்படைத்த அதிகாரமாகும் (மத் 16:19). ஆட்சிக்கும் அதிகாரத்திற்கும் உண்மையில் உரிமையாளரான மெசியாவாகிய இயேசு ஒப்படைத்த அரசுக்கும் அதிகாரத்திற்கும் அடையாளமாகும் திறவுகோல்கள் (காண். திருவெளி 3:7). திறவுகோல்களின் அதிகாரம் இறைவீடு முழுவதன் மேலும் உள்ளதாகும். இது முதன்மையாக உள்நுழைய அனுமதிக்கும் அதிகாரமாகும். இது புறம்பாக்கும் அதிகாரத்தையும் உள்ளடக்குகிறது.

இயேசு நற்செய்தியையும் பாவமன்னிப்பையும் போதிக்கும் போது (மாற் 2:10), இறையரசின் வாயில்களை யாவருக்கும் திறந்து விடுகிறார். ஆனால் இதற்கு மாறாகப் பரிசேயர்கள் ''மக்கள் நுழையாதவாறு அவர்கள் முன்பாக விண்ணக வாயிலை அடைத்துவிடுகிறார்கள்'' (மத் 23:13). இந்தக் ''குருட்டு வழிகாட்டிகளுக்கு''த் தனது தெய்வீக ஆற்றலை அளிக்காது, இயேசு பேதுருவுக்கு அளிக்கிறார். இது இயேசு செய்வது போல் செய்யும் ஆற்றலாகும். அதாவது அருளும் தீர்ப்பும் அடங்கிய நற்செய்தியைப் போதிப்பதும், பாவங்களை மன்னிப்பதும், இவ்வாறு திருச்சபையாகிய இறைவனுடைய புதிய மக்களை ஒன்று கூட்டுவதும் ஆகும் (மத் 16:18). உண்மையில் திறவுகோல்களின் அதிகாரம் ''கட்டவும் அவிழ்க்கவும்'' எல்லா அப்போஸ்தலர்களுக்கும் அளிக்கப்பட்ட அதிகாரத்திலிருந்து தன்மையால் வேறுபட்டதன்று. ஆனால் திருச்சபை பேதுருவின் மேல் கட்டப்பட்டிருப்பதால் திறவுகோல்களின் அதிகாரம் பேதுருவுக்கு மட்டுமே அளிக்கப்படுகிறது. இரண்டு கூற்றுகளும் பன்னிருவரில் பேதுருவின் முதன்மையை எடுத்துக்கூறுகின்றன.

## தினை (MILLET)

உணவிற்காகப் பயிர் செய்யப்படும் புல் விதைகளில் மிகச் சிறியது. இதன் மாவிலிருந்து மிக எளிமையான ரொட்டி செய்யப்பட்டது. சாதாரணமாக இந்த மாவு மற்றத் தானியங்களின் மாவுடன் சேர்க்கப்பட்டது. எசேக்கியேல் இறைவாக்கினர், எருசலேமின் முற்றுகையை முன்னறிவித்தபோது அதன் அடையாள அப்பமாகக் குறிப்பிடப்பட்ட ரொட்டி செய்வதற்குப் பயன்பட்ட தானியங்களுள் தினையும் ஒன்றாகும் (எசே *4:9*). இது தினை மனித உணவாவதுஅசாதாரணம் என்று உணர்த்துகிறது. முற்றுகை உணவுப் பற்றாக்குறையை ஏற்படுத்தியது என்று சுட்டிக் காட்டுகிறது *(4:16)*.

## தின்காபா (DINHABAH)

ஏதோம் நாட்டு அரசன் பேலா அரசாண்ட நகரங்களுள் ஒன்று. இவர் பேகோரின் மகனாவார் *(ஆதி 36:32; 1 நாள் 1:43)*. இந்நகரம் எங்கே இருந்ததுஎன்பது பற்றிக் கருத்தொற்றுமையில்லை.

# தீ

## தீ, நெருப்பு (FIRE)

1. ஆபிரகாமை இறைவன் தேர்ந்து கொண்டதிலிருந்து, இறைவன் தம் மக்களோடு கொண்ட உறவு பற்றிய வரலாற்றில் நெருப்பின் அடையாளம் தெளிவாகக் காணப்படுகிறது (ஆதி 15:17). இந்த விவிலிய வெளிப்பாடு நெருப்பைத் தெய்வீகப் படுத்தும் சமயங்களிலிருந்து வேறுபட்டதாகும். பழங்கால மக்களோடு சேர்ந்து இஸ்ராயேலரும் நான்கு மூலப் பொருட்களை (பூதம்) ஏற்றுக்கொண்டனர். ஆனால் அதன் சமயத்தில் தீ ஓர் அடையாளம் மட்டுமே. அதைக் கடந்து மனிதன் இறைவனைக் காண வேண்டும். தனிப்பட்ட மனிதனோடு கொள்ளும் தொடர்பில் எப்போதும் இறைவன் தன்னை ''நெருப்பு வடிவில் வெளிப் படுத்துகிறார். ஆயினும் தீ இறைத்தன்மையை உணர்த்தும் அடையாளம் மட்டுமன்று. சில சமயம், அது மூச்சு, நீர், காற்று ஆகிய எதிர்மறை அடையாளங்களோடும் தொடர்புபடுத்தப்படுகிறது; அல்லது தன்னை ஒளியாகவும் மாற்றிக்கொள்கிறது.

II. பழைய ஏற்பாடு:

1. இறை மகிமைக்காட்சிகள்:

**அ. பாலைவனத்தில் மக்களின் அடிப்படை அனுபவம்:** இதில் தீ முதன்மையாக இறைவனின் மகிமையை வெளிப்படுத்தவில்லை; அவரது தூய்மையை, புனிதத்தை வெளிப்படுத்துகிறது. இப்புனிதம் மனிதனை ஈர்க்கவல்லது; எனினும் அச்சம் விளைவிக்கக் கூடியது. ஓரேபு மலையில் நெருப்பில் எரிந்து கொண்டிருந்தாலும் தீய்ந்து போகாத முட்புதரால் மோசே ஈர்க்கப்படுகிறார். இறைவனால் அழைக்கப் பட்டுத் தூய்மைப்படுத்தப்பட்டால் ஒழிய, மோசே அப்புதரை அணுக முடியாது என்று இறைவனின் குரல் கூறுகிறது (யாத் 3:2 தொ). சீனாய் மலையில், அதனைச் சூழ்ந்திருந்தாலும் அதை அழிக்காத தீயிலிருந்து புகை எழுகிறது (19:18). மக்கள் பயந்து நடுங்கினாலும், அம்மலையை அணுக அனுமதிக்கப்படாவிட்டாலும், தம்மை வெளிப்படுத்தும் இறைவன்முன் ஏறிச் செல்ல மோசே அழைக்கப்படுகிறார். ஆகவே, ''அழிக்கும் நெருப்பாக'' இறைவன் தம்மை வெளிப்படுத்தும்போது, தம்மைச் சுற்றியுள்ளவற்றையெல்லாம் இறைவன் அழிப்பதில்லை. ஏனெனில் தீ தூய்மைப்படுத்துபவர்களை அவர் அழைக்கிறார்.

அதே இடத்தில் நிகழும் மற்ற அனுபவங்கள் நெருப்பின் அடையாளப்பொருளை நன்குணர உதவுகின்றன. தீக்கொத்த பேரார்வமுடைய இறைவாக்கினர் எலியா சீனாயில் யாவேயின் பிரசன்னத்தைத் தேடுகிறார் (சீரா 48:1). புயலையும் நில நடுக்கத்தையும் அடுத்து நெருப்பைக் காண்கிறார். ஆனால் ''தீயிலும் ஆண்டவர் இருக்கவில்ல.'' ''மெல்லிய ஒலி'' அல்லது தென்றல் எனும் மற்றொரு அடையாளம் இறைவன் கடந்து செல்வதை வெளிப்படுத்துகிறது (1 அர 19:12). பிற்பாடு எலியா நெருப்புத்தேரில் விண்ணகம் எடுத்துக் கொள்ளப்படும் போது, இறைவனது சந்திப்பை எடுத்துக் கூறும் பல அடையாளங்களில் நெருப்பு ஒன்றாக மட்டுமே பயன்படுகிறது (2 அர 2:11).

**ஆ. இறைவாக்குப் பாரம்பரியம்:** இது நெருப்பு அடையாளத்தைச் சமய அடையாளச் சூழ்நிலையிலேயே பயன்படுத்துகிறது. எசாயா தனது அழைப்பை ஏற்கும் காட்சியில் கோயில் முழுவதும் புகையால் நிறைந்திருக்கக் கண்டார். ''ஐயோ, நான் அழிந்தேன். ஏனெனில்.... படைத்திரளின் ஆண்டவராகிய அரசரை என் கண்கள் கண்டனவே'' என்று அஞ்சுகிறார். இறைக்காட்சி முடிந்து வெளிவரும்போது தன் உதடுகள் பீடத்திலிருந்து வந்த நெருப்புப் பொறியால் தூய்மையாக்கப்பட்டுள்ளதை உணர்கிறார் (எசா 6); எசேக்கியேல் தன் தொடக்கக்காட்சியில், ''மின்னலடிக்கும் பெருமேகத்தையும் அதனைச் சுற்றிச் சுடர் வீசும் தீப்பிழம்பையும்''

காண்கிறார். அதிலிருந்து மனித சாயலுக்கு ஒப்பான ஓர் உருவம் தோன்றுகிறது. இத்தோற்றம் சீனாயின் இறைமகிமைக் காட்சியை விட, யாத்திரைக் காலத்து ஒளிரும் மேகத்தையே நினைவுபடுத்துகிறது (எசே 1). தானியேலுக்கு அளிக்கப்பட்ட வெளிப்பாட்டில் இறைவனது பிரசன்னத்திற்கு நெருப்பே பின்னணியாக அமைந்துள்ளது (தானி 7:10). ஆனால் அது தீர்ப்பை வருணிக்கும்போது சிறப்பான இடம் வகிக்கிறது (7:11).

**இ. உபாகம மற்றும் குருக்கள் பாரம்பரியங்கள்:** பாலைவனத்தில் நிகழ்ந்த இறைமகிமைக் காட்சிகளுக்கு அளிக்கும் விளக்கத்தில் தீயெனும் அடையாளத்தின் இரட்டைப்பொருளை வெளிப்படுத்துகின்றன. ஒன்று உயிருள்ள இறைவனின் வெளிப்பாடு; மற்றது தூய்மைமிக்க இறைவன் கோரும் தூய்மை. தம்மை உருவங்களால் சித்தரிக்கக்கூடாது என்பதை இஸ்ராயேலருக்கு உணர்த்த இறைவன் தீ நடுவிலிருந்து அவர்களிடம் பேசினார் (உப 4:12; 5:4.22.24); சட்டப் பலகைகளை அளித்தார் (9:10). ஆனால் மனிதரை அச்சுறுத்தி (5:5) அழிக்கும் நெருப்பு என்ற கருத்தும் (5:25; 18:16) இங்கு உள்ளது. சாவின்றி இறைபிரசன்னத்தை அணுக முடியும் என்று இறைவனால் தேர்ந்து கொள்ளப்பட்டவர்கள் மட்டுமே உறுதியாக அறிவர் (4:33). இந்த நிலையை அடைந்தபின், இயற்கையின் மூலப்பொருளோடு இறைவனைக் குழப்பும் ஆபத்தின்றி, இஸ்ராயேலர் இறைவனை ''அழிக்கும் நெருப்பாக'' எண்ணிப் பார்க்க முடியும் (4:24; 6:15). இச்சொற்கள், இறைவனது பொறாத தன்மை என்ற கருத்தை விவரிக்கும் மற்றொரு விதம் மட்டுமேயாகும் (யாத் 20:5; 34:14; உப 5:9; 6:15). பாவத்தின்முன் இறைவனது விட்டுக்கொடாத தன்மையைத் தீ அடையாளமாக உணர்த்துகிறது. தீ தான் எதிர்கொள்வதை எல்லாம் அழிக்கிறதுபோல் இறைவன் கடின இதயத்தையுடைய பாவிக்குச் செய்கிறார். ஆனால் தாம் தேர்ந்து கொண்ட மக்களிடம் வேறுமுறையில் செயலாற்றுகிறார். ஆனால் தாம் அணுகும் யாரையும் அவர் மாற்றி அமைக்க வேண்டிய விதத்தில் எப்போதும் செயலாற்றுகிறார்.

2. வரலாற்றில்:

**அ. நெருப்பினால் பலி:** இறைவன் அழிக்கும் நெருப்பாவார் என்ற கருத்துக்கு ஒத்த எடுத்துக்காட்டு வழிபாட்டில் வரும் தகனப்பலியில் காணப்படுகிறது. ஒரு வேளை, முழுத்தூய்மை பெற வேண்டும் விருப்பத்தாலும், இதைவிட, இவ்வழியால் திரும்பப் பெற முடியாத காணிக்கையை அளிக்க வேண்டும் விருப்பத்தாலும், இஸ்ராயேல் தகனப்பலியை ஒப்புக் கொடுத்திருக்க வேண்டும். விண்ணகத்தை நோக்கி, புகையெழுப்பி முழுவதும் எரிக்கப்பட்ட பலி இவ்விருப்பத்தை வெளிப்படுத்தியது. இங்கு நெருப்பு ஓர் அடையாளம் மட்டுமே. அது எந்தச் சடங்கையும் புனிதப் படுத்தவில்லை. தலைப்பேற்றினைத் தீயால் எறிப்பது தடை செய்யப்பட்டிருந்தது. (லேவி 18:21; காண். ஆதி 22:7). ஆனால் இந்த அடையாள மதிப்பு அதிகாரபூர்வமான வழிபாட்டில் அவ்வளவு முக்கியத்துவமுடையதன்று. பீடத்தின்மேல் எப்போதும் நெருப்பும் எரிந்து கொண்டிருக்க வேண்டும் (லேவி 6:2-6). ஆண்டவர் கட்டளைக்கு எதிராக நெருப்பைக் கொண்டுவரத் துணிந்தவர்கள்மேல் சாபம் இருந்தது (9:24-10:2). ஆபிரகாம் (ஆதி 15:17), கிதியோன் (நீதி 6:21), தாவீது (1 நாள் 21:26), சாலமோன் (2 நாள் 7:1தொ), தேங்கிநின்ற நீர் புதிய அணையாத தீயாக (2 மக் 1:18-23) வியத்தகு முறையில் மாற வேண்டும் என்று எதிர்பார்த்திருந்த எலியா (1 அர 8:38) ஆகியோரின் புகழ்பெற்ற பலிகளுக்குப்பின் இறைவன் புதுமையான விதத்தில் தலையிடவில்லையா? ஆகவே தீயின் வழியாக இறைவன் மனிதனுடைய பலியை ஏற்றுக் கொள்கிறார். அவனோடு செய்யும் வழிபாட்டு உடன்படிக்கைக்கு ஒப்புதல் அளிக்கிறார்.

**ஆ. இறைவாக்கினரும் தீயும்:** மக்கள் விரும்பி பலிகளை ஒப்புக் கொடுத்தாலும்,

சீனாய் மலைத்தீயைப் பார்க்க விரும்ப வில்லை. ஆனால் இதற்கிடையில் தெய்வீ கத் தீ இறைவாக்கினர்கள் வழியாக மக்க ளிடையே இறங்கிவருகிறது. இப்படிவருவது பெரும்பாலும், தூய்மைப்படுத்தியோ தண் டித்தோ இறைவனது புனிதத்திற்காகப் பழி வாங்கவோதான். மோசே தெய்வீகத்தீயால் தனது முகத்தில் வீசிய ஒளியை முக்காடு போட்டு மறைத்துக் கொண்டார் (யாத் 34:29 தொ). முன்பு எகிப்தியர்மேல் செய்தது போல் (9:23), மோசே பொற்கன்று என்ற ''பாவத்தைத்'' தீயால் எரிக்கிறார் (உப 9:21). கிளர்ச்சியாளர் மேல் தீயால் பழி வாங்குகிறார் (எண் 16:35). மோசேயைப் பின்பற்றி, எலியா அகந்தையுள்ளவர்களை முழுவதும் அழிக்க, வானின்று இறங்கி வரும் நெருப்பையும் மின்னலையும் பயன் படுத்துகிறார் (2 அர 1:10-14). இதில் ''தீப்பந்தம்போல் அவருடைய வாக்குப் பற்றியெரிந்தது'' (சீரா 48:1).

நூல்பெற்ற இறைவாக்கினர்கள், இறைவ னது கடுஞ்சினத்தைத் தீயென விவரிக்கின்ற னர். இதனால் இறைவன் இறைப்பற்றற்றவர் களைத் தண்டிக்கிறார் (ஆமோ 1:4-2:5). தோபேத்தில் நடக்கும் கானானிய வழிபாடு களை நினைவுபடுத்தும் அசுர தகனப்பலி யில் நெருப்பால் பாவநாடுகளைத் தீர்த்துக் கட்டுவார் (எசா 30:27-33). தீமையே தீயா கும் நிலையில் இஸ்ராயேலின் காடுகளில் எரிகின்ற காட்டுத்தீ உச்சநிலை அடைகிறது (9:17தொ; காண். எரே 15:14; 17:4.27). ஆனால் இத்தீயின் நோக்கம் அழிப்பதுமட்டு மன்று. அது தூய்மைப்படுத்தவும் செய் கிறது. அழியாமல் இறைவனை அணுகும் இறைவாக்கினர் உயிரோடு இருப்பதுவே இதற்குச் சான்று. இஸ்ராயேலில் எஞ்சி யோர் ''நெருப்பிலிருந்து இழுக்கப்பட்ட கொள்ளிக்கட்டை போல்வர்'' (ஆமோ 4:11). நெருப்புப்பொறியால் தூய்மைப் படுத்தப்பட்ட உதடுகளையுடைய எசாயா எவ்விதத் துன்பமுமின்றி இறைவார்த்தை யைப் போதிக்கத் தொடங்கினார் (எசா 6:6). எரோமியாவின் இதயத்தில் இறைவனது வார்த்தை ''பற்றியெரியும் தீபோல் இருக் கிறது.'' அதை அவரால் அடக்கி வைக்க முடியவில்லை (எரே 20:9). எரேமியா மக்களைத் சோதித்தறிய கட்டளைபெற்ற உலைக்களம் ஆகிறார் (6:27-30). ''என் சொல் தீயைப் போன்றது அல்லவா?'' என்று கூறிய இறைவனின் பேச்சாளன் ஆவார் (23:29). இதே முறையில் இறுதி நாளில் மக்களின் தலைவர்கள் ''வைக்கோல் கட்டுகளுக்குள் தீப்பந்தம் போலாகி (செக் 12:6), தாங்களே இறைத்தீர்ப்பைச் செயல் படுத்த வேண்டும்.

**இ. ஞானமும் பக்தியும்:** இந்தச் சமய அனுபவத்தால் தனிப்பட்டவர்களே நன்மை பெறுகின்றனர். நாடு கடத்தப்படுதலின் சாரமான துன்பமெனும் உலைக்களம் பற்றி (எசா 48:10) எசாயா ஏற்கனவே கூறியிருந் தார். ஆகவே ஞானிகள் மனிதன் பெறும் தண்டனைகளைத் தீயின் விளைவுகளுக்கு ஒப்பிடுகின்றனர். பாலைவனத்தில் நிகழ்ந்த துன்பியல் கிளர்ச்சியைப்போலவும் எலியா வின் நெருப்பால் அழிந்தவர்களைப்போலவும் யோபு உள்ளார் (யோபு 1:16; 15:34; 22:20). அவர் நெருப்பையும் பேரழிவு உண்டாக்கும் தண்ணீரையும் அனுபவிக்கிறார் (20:26.28). ஆனால் தீயின் அச்சுறுத்தும் பண்போடு, அதன் சுத்திசெய்யும், மாற்றியமைக்கும் பண்பும் உள்ளது. அவமானம் அல்லது துன்பம் என்னும் உலைக்களம் தேர்ந்தெடுக் கப்பட்டவர்களைச் சோதிக்கிறது (சீரா 2:5; காண். தானி 3). யாவற்றையும் வெல்லும் ஆர்வத்தின் அடையாளமாகிறது தீ. ''அன்பு'' யாவேயின் தீக்கொழுந்தாகும்; பெருங் கடலும் அதை அழிக்க முடியாது (உ.ச. 8:6 தொ). இங்கே தீ மற்றும் நீர் என்ற இரு அடையாளங்கள் ஒன்றையொன்று எதிர்கொள்கின்றன. தீ வெற்றி பெறுகிறது.

*3. காலத்தின்* **இறுதியில்:** கடினமன துடைய பாவியின்மேல் தீர்ப்பின் தீ விழும் போது கழுவாயற்ற தண்டனையாக, கடுஞ் சினத்தின் தீயாக ஆகிறது. ஆனால் இந்தத் தீ இனி ஒருபோதும் தூய்மையற்ற கறைகளை அழிக்க முடியாது; ஆனாலும் தணலை எரிக்கிறது. இவ்வாறு இறைத்தீயால் சுத்தி

யாக்கப்பட மறுக்கும் படைப்பின் உயிர் அதனால் எரிக்கப்படுகிறது என்று வெளிப் பாடு காட்டுகிறது. சோதோம் கொமோரா அழிவைப்பற்றிக்கூறும் பாரம்பரியத்தில் இருப்பதைவிட (ஆதி 19:24) இதில் அதிகம் உள்ளது. கேகன்னாவில் நடந்த இறைநிந் தனையான சடங்குகளில் தொடங்கி (லேவி 18:21; 2 அர 16:3; 21:6; எரே 7:31; 19:5 தொ), தீயெனும் இறைவாக்கு உருவகம் (எசா 29:6; 30:27-33; 31:9) மற்றும் உலோகம் உருக்குதல் ஆகியவற்றை ஆழப்படுத்துத லின் வழியாகத் தீயெனும் இறுதிக்காலத் தீர்ப்பை விவரிக்கும் (எசா 66:15 தொ) எடுத்துக்காட்டை நோக்கி ஒரு முன்னேற் றம் உள்ளது. இது கனிமப் பொருளைச் சோதிக்கும் தீயாகும் (செக் 13:9). யாவே யின் நாள் உருக்காலையில் உள்ள தீயைப் போன்றிருக்கும் (மலா 3:19). எருசலேம் தொடங்கி (எசே 10:2; எசா 29:6) உலக முழுமையும் எரித்து விழுங்கும் (செப் 1:18; 3:8). ஏனெனில், ''தீரின் நடுவினின்று வரும் நெருப்பைப்போல்'' (எசே 28:18) இத்தீ உள்ளிருந்தே எரியும். கிளர்ச்சிசெய்த மனிதர்களின் இறந்த உடலினுள் ''அரிக் கும் புழு சாவதில்லை; அவர்களை எரிக் கும் நெருப்பு அணைந்து போவதில்லை'' (எசா 66:24; காண். மாற் 9:48). ''தீர்ப்பு நாளில்.... அவர் நெருப்பையும் புழுக்களை யும் அவர்கள் உடல்மீது அனுப்புவார். அதனால் அவர்கள் என்றென்றும் உழன்று வேதனைப்படுவர்'' (யூதி 16:21). ஆனால் இங்கு அடையாளம்பற்றி ஓரளவு இரு பொருள் மயக்கம் காணப்படுகிறது. இறைப் பற்றற்றவர்கள் உள்ளார்ந்த நெருப்புக்கும் புழுக்களுக்கும் ஒப்படைக்கப்படும்போது (சீரா 7:17), அத்தீயிலிருந்து தப்புபவர்கள் நெருப்புச் சுவரால் சூழப்பட்டிருப்பதைக் காண்பர். இவர்களுக்கு இத்தீ யாவேயே ஆவார் (எசா 4:4 தொ; செக் 2:9). தூய்மைப்படுத்தப்பட்டபின் யாக்கோபும் இஸ்ராயேலும் நெருப்பாய் இருப்பர் (ஒப 18). ஏனெனில், அவர்கள் இறைவனின் வாழ்வில் பங்கு பெறுவர்.

III. **புதிய ஏற்பாடு:** கிறிஸ்துவின் வருகை யோடு இறுதிக்காலம் தொடங்கிவிட்டது. ஆனால் காலத்தின் முடிவு இன்னும் வரவில்லை. புதிய ஏற்பாட்டில் தீ தனது பாரம்பரிய இறுதிக்காலப் பொருளைக் கொண்டுள்ளது. ஆனால் அது உணர்த்தும் சமய உண்மை திருச்சபையின் காலத்தில் ஏற்கெனவே செயல்படத் தொடங்கி விட்டது.

அ. **இயேசு:** அவர் முறத்தைக் கையில் கொண்டு பதரைப் பிரித்தெடுத்து அதை அணையா நெருப்பில் சுட்டெரிப்பவராக வும் (மத் 3:12), தூய ஆவிஎன்னும் நெருப்பால் திருமுழுக்குக் கொடுப்பவராக வும் (3:11) அறிவிக்கப்பட்டாலும், அவர் நடுவர் அலுவலை முழுவதும் நிராகரிக் கிறார். பழைய ஏற்பாட்டுப் பாரம்பரிய மொழியைப் பயன்படுத்தி, தமக்குச் செவி மடுப்பவர்களைத் தீர்ப்புத்தீயை எதிர்பார்த் திருக்கச் செய்கிறார். கேகன்னாவின் நெருப் புப்பற்றியும் (எரிநரகம்) (5:22), பலனளிக் காத களைகளும் (13:40; காண் 7:19) திராட்சைக் கிளைகளும் (யோவா 15:6) போடப்பட்டு எரிக்கப்படும் நெருப்புப் பற்றியும் பேசுகிறார். அது அணைக்க முடி யாத நெருப்பாக இருக்கும் (மாற் 9:43 தொ). அங்கே ''அவர்களைத் தின்னும் புழு சாகாது; நெருப்பும் அவியாது'' (9:48). அவர்கள் தீச்சூளையில் தள்ளப்படுவார் (மத் 13:42.50). இக்கருத்துகள் பழைய ஏற்பாட்டுக் கருத்துகளையே பகிரங்கமாக எதிரொலிக்கின்றன (காண். 17:29).

ஆ. முதல் கிறிஸ்தவர்கள், பல சூழ்நிலை களுக்கேற்ப மாற்றியமைத்துக் கூறியபோதும், இதே மொழியைப் பயன்படுத்தினர். பவுல் காலத்தின் முடிவை விவரிக்க இதைப்பயன்படுத்தினார் (2 தெச 1:8). பூச்சிகளால் அரிக்கப்பட்டு, துருப்பிடித்து நெருப்பில் போடப்படும் செல்வத்தை விவ ரிக்கிறார் யாக்கோபு (யாக் 5:3). கிளர்ச்சி யாளர்களை விழுங்கப்போகும் கோபக்கன லைப்பற்றி எபிரேயருக்கு எழுதப்பட்ட திருமுகம் பேசுகிறது (எபி 10:27). விண்ணை யும் மண்ணையும் அழித்து மறைந்துபோகச் செய்யும் நெருப்பை நாம் கற்பனை செய்து

பார்க்கலாம் *(2 பேதுரு 3:7.12)*. இந்த இறுதிக்கால நெருப்பில் விசுவாசம் புடமிடப்பட வேண்டும் *(1 பேதுரு 11:7)*. அப்போஸ்தலப் பணியும் *(1 கொரி 3:15)*, கிறிஸ்தவனின் வாழ்வும் வேதகலாபனையால் சோதிக்கப்பட வேண்டும் *(1 பேதுரு 4:112-17)*.

இ. திருவெளிப்பாட்டுநூல், இறைமகிமைக்காட்சியில் வரும் தீ, தீர்ப்பின் தீ என்ற இரு கூறுகளையும் கொண்டுள்ளது. மனுமகன் எரிதழல்போல் சுடர்விடும் கண்களோடு தோன்றி காட்சியில் ஆதிக்கம் செலுத்துகிறார் *(திருவெளி 1:14; 19:12)*. ஒருபுறம், நெருப்போடு கலந்த கண்ணாடிக் கடலில் இறைமகிமைக் காட்சியைக் காண்கிறோம் *(15:2)*. மறுபுறம் இரண்டாவது சாவாகிய *(20:14-15)* பேய்களுக்குரிய கந்தக நெருப்புக்கடலில் *(20:10)* தண்டனையையும் பார்க்கிறோம்.

2. திருச்சபையின் காலத்தில்:

அ. இயேசு புதிய யுகத்தைத் தொடங்கி வைத்தார். திருமுழுக்கு யோவான் எதிர்பார்த்த அளவுக்கு உடனடியாகச் செயலாற்றவில்லை. இது யோவானைத் தன் விசுவாசத்தையே ஐயுறச்செய்தது *(மத் 11:2-6)*. வரவேற்க மறுத்த சமாரியர்கள்மேல் தீ வந்து அவர்களை அழிக்குமாறு செய்ய விரும்பிய ''இடியின் மக்களால்'' இயேசு எதிர்க்கப்படுகிறார் (லூக் 9:54தொ). இவ்வுலக வாழ்வின்போது இயேசு பழிவாங்கும் தீயின் கருவியாக இல்லாவிடினும் யோவான் முன்னறிவித்ததைத் தமக்கே உரிய முறையில் நிறைவேற்றுகிறார். ''மண்ணுலகில் தீவைக்க வந்தேன். அது இப்பொழுதே பற்றி எரிந்து கொண்டிருக்க வேண்டும் என்பதே என் விருப்பம். ஆயினும் நான் பெற வேண்டிய ஒரு திருமுழுக்கு உண்டு....'' (லூக் 12:49 தொ) என்று தமது சமதளப்பொழிவில் கூறும்போது இதைச்செய்கிறார். இவ்வாக்கை விளக்குவது கடினம். இயேசுவின் மரணம் ஆவியாலும் நெருப்பினாலுமான அவரது திருமுழுக்கில்லையா?

ஆ. அப்போதிருந்து கிறிஸ்துவின் பலியின் பயனாக, உலகைப் பற்றியெரியச் செய்யும் இத்தீயினால் திருச்சபை வாழ்ந்து வந்திருக்கிறது. உயிர்த்தவர் பேசியதைக் கேட்ட எம்மாவுக்குச் சென்ற பயணிகளின் இதயத்தில் இத்தீபற்றி எரிந்தது (லூக் 24:32). பெந்தகோஸ்தே நாளில் ஒன்றுகூடியிருந்த சீடர்கள் மீதும் இது இறங்கிவந்தது *(அ.ப. 2:3)*. விண்ணிலிருந்து வந்த இந்தத்தீ தீர்ப்பின் தீயன்று. இது இறைமகிமைக்காட்சியின் தீயாகும். இது ஆவியிலும் தீயிலுமான திருமுழுக்கைச் செயல்படுத்தும் *(1:5)*. இப்போது தீ ஆவிக்கு அடையாளமாகிறது. ஆவியே அன்பு என்று வெளிப்படையாகக் கூறப்படாவிடினும் பெந்தகோஸ்தே நாளின் விவரிப்பு, ஆவியினுடையதாகிய அதே செய்தியை எல்லா நாடுகளுக்கும் பரப்ப வேண்டியவர்களை மாற்றி அமைப்பதுவே அவரது தூதும் பணியும் என்று காட்டுகிறது.

கிறிஸ்தவ வாழ்வு வழிபாட்டுத்தீயின் அடையாளமாகவும் எடுத்துக்காட்டப்படுகிறது. இத்தீ சீனாய் மலைத்தீயன்று (எபி *12:18)*. மாறாக இறைவனுக்கு ஏற்புடைய வழிபாட்டில் நமது வாழ்வாகிய தகனப் பலியைச் சுட்டெரிக்கும் தீயாகும் *(12:29)*. ஒவ்வொரு நொடியும் இறைவனது பொறாமையை வழிபாட்டு அர்ப்பணமாக மாற்றுவ்தால் இத்தீ சுட்டெரிக்கும் தீயாகத் தொடர்ந்து செயலாற்றுகிறது. ஆவியின் தீயைப் பெற்றுள்ளவர்களுக்கு, இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையிலான தூரம், மனிதனின் ஆழத்திலே பிரசன்னமாயிருக்கும் இறைவனாலேயே அகற்றப்படுகிறது. ''பலிப்பொருள் உப்பால் தூய்மையாக்கப்படுவதுபோல்'', தீர்ப்பின் தீ மற்றும் ஆவியின் தீயால் ''தூய்மையாக்கப்படும்போது'' விசுவாசி பிரமாணிக்கமுள்ளவனாகிறான் *(மாற் 9:49)* என்ற புதிரான கூற்றுக்கு ஒருவேளை இது பொருளாக இருக்கலாம். ''எனக்கு நெருங்கியுள்ளவன் நெருப்பிற்கு நெருங்கியுள்ளான். எனக்குத் தூரத்தில் உள்ளவன் அரசிலிருந்து தூர விலகியுள்ளான்'' என்று இயேசு கூறியதாக ஓரிசன் கூறுகிறார்.

**தீக்கோழி, நெருப்புக்கோழி** *(OSTRICH)*

ஒரு பெரிய, விரைவாக ஓடக்கூடிய பறவை. பழைய ஏற்பாட்டில் இது உண்ணத் தகாத அசுத்தப் பறவையாகக் கருதப்பட்டது *(லேவி 11:16; உப 14:15)*. இது பெரும்பாலும் பாலை நிலங்களில் வறண்ட பகுதிகளில் வாழ்ந்து வந்தது *(எசா 13:21; 34:13; 43:20; எரே 50:39)*. ஆகவே ''பாலைவனத் தின் மகள்'' என்று அழைக்கப்பட்டது. இதனுடைய துயர்தருகிற கூவல் பாலை வனப் பகுதிகளுக்குப் பொருத்தமுடையதாக இருப்பதுபோல் தோன்றும் *(மீக் 1:8)*. இது ஏறக்குறைய 130 கி.மீ. வேகத்தில் ஓடக்கூடி யது *(காண். யோபு 39:13)*. கி.பி. 19-ஆம் நூற்றாண்டுப் பிற்பகுதிவரை சீரியன் பாலை வனத்திலும், அந்நாட்டின் தென்பகுதியிலும் சாதாரணமாகக் காணப்பட்டது. ஆனால் இப்போது ஆப்பிரிக்காவின் பாலைவனப் பகுதிகளில் மட்டும் காணப்படுகிறது.

இப்பெயருக்குப் ''பேராசையின் மகள்'' என்று மற்றொரு சொல்லிலக்கணப் பொருள் கொடுக்கப்படும். இதற்கு அதன் பழக்கங் கள் காரணமாகலாம். இப்பறவை எல்லா வற்றையும் தின்னக்கூடியது. எல்லா வகைப்புல், செடிகள், பழங்கள், பாம்பு, பல்லி, சிறு விலங்குகள் போன்ற விழுங்கக் கூடிய யாவற்றையும் உண்ணக்கூடியது. அதன் உணவில் மற்ற விலங்குகளும் உள்ளடங்குவதுதான், ஒருவேளை இப் பறவை எபிரேயர்களால் அசுத்தப் பறவை யாகக் கருதப்பட்டதற்குக் காரணமாகலாம். பழம் மேற்காசியாவின் மக்களில் பெரும் பாலோர் உணவுக்காக இப்பறவையை வேட்டையாடினர். அசீரியச் சித்திரங்களில் தீக்கோழி வேட்டை பல முறை இடம் பெறுகிறது.

இப்பறவை தன் முட்டைகளை மணலில் இடும். அதைச் சூரிய ஒளிசூடுபடுத்தும். முட்டைகளின் ஓடு கடினமானதாயினும், இந்தப்பழக்கம் எபிரேயர்களுக்குக் கைவிட் டோடுதலுக்கு அடையாளமாயிற்று *(புல 4:3; யோபு 39:14-17)*. இப்பறவை மடமைக் கும், அக்கறையற்ற நிலைக்கும், பாழ்பட்ட நிலைக்கும் அடையாளமாகும்.

**தீசான்** *(DISHAN - மலைவெள்ளாடு, மான்வகை)*

சேயிர் என்பவரின் ஏழாவது மகன் *(ஆதி 36:21; 1 நாள் 1:38)*. ஊசு மற்றும் ஆரான் ஆகியோரின் தந்தை *(ஆதி 36:30; 1 நாள் 1:42)*. ஏதோம் நாட்டிலுள்ள கோரியர்களின் (ஓரியர்) தலைவர்களில் ஒருவர்.

**தீசோன்** *(DISHON - வெள்ளாடு)*

1. சேயிர் என்பவரின் ஐந்தாவது மகன் *(ஆதி 36:21; 1 நாள் 1:38)*. ஏதோம் நாட்டிலுள்ள கோரியர்கள் (ஓரியர்) தலை வர்களில் ஒருவர் *(ஆதி 36:26.30; 1 நாள் 1:41)*.

2. கோரியர் தலைவரான சேயிரின் பேர னும், அனாவின் மகனும் *(ஆதி 36:25; 1 நாள் 1:41)*, ஏசாவின் மனைவியான *(ஆதி 36:1-2)* ஒகோலிபாமாவின் சகோதரனும் *(36:25)* ஆவார்.

**தீட்சியர்** *(TIZITE)*

தாவீதின் வலிமைமிக்க வீரர்களில் ஒருவ ரான யோகாவுக்கு இந்த அடைமொழி கொடுக்கப்படுகிறது *(1 நாள் 11:45)*. இது ஓர் இடத்தின் பெயரிலிருந்து வந்திருக்க லாம். இவ்விடம் பற்றி ஒன்றும் அறிவதற் கில்லை.

**தீட்டுக்கழிக்கும் தண்ணீர்** *(WATER OF IMPURITY)*

இறந்த பிணத்தைத் தொட்டதால் ஏற்படும் தீட்டைக் கழிக்கும் தண்ணீர் என்று எண் 19-இல் கூறப்பட்டுள்ளது. பழைய ஏற்பாட் டில் மற்ற இடங்களில் இறந்த பிணத்தைத் தொட்டதால் ஏற்படும் தீட்டைப் *(லேவி 5:2; 11:8.24-38; 21:1-4.10-11; எண் 5:2; 9:6-7.10-11; 31:19-24)* பற்றிக் குறிப்பிடும் போது இது குறிப்பிடப்படவில்லை. மேலும் நசரேயர்களுக்கான சிறப்பான சடங்கில் இது பயன்படுத்தப்படவில்லை *(எண் 6:6-12)*.

நுகம் ஏற்றப்படாத, மாசில்லாத சிவப்புக் கிடாரி கடவுளுக்கு ஒப்புக் கொடுக்கப்பட்ட

பின் பாளையத்திற்கு வெளியில் கேதுரு மரங்களோடும், ஈசோப்போடும், இரு முறை சாயம் தோய்ந்த நூலோடும் எரிக்கப் பட வேண்டும் (எண் 19:1-6). இந்தச் சாம்பல் தண்ணீரில் கரைக்கப்பட்டுத் தீட் டுக் கழிக்கும் தண்ணீர் தயாரிக்கப்பட்டது (19:7). பின் அது இறப்பு நேர்ந்தவீட்டிலும், இறந்த பிணத்தையோ, எலும்பையோ தொட்டவன் மீதும் தெளிக்கப்பட்டது (19:18). மூன்றாவது, ஏழாவது நாளில் இவ்வாறு செய்யத்தவறினால் அவன் இஸ் ராயேலிலிருந்து தள்ளி வைக்கப்படுவான் (19:11.13.20). இறப்புச்சடங்கில் பங்கு கொண்டவர்கள் மாலைவரை தீட்டுப்பட்ட வர்கள் (19:7-8. 10.21) ஆனார்கள்.

இத்தீர்த்தத்தைத் தயாரிக்கப் பயன்பட்ட பொருட்கள் குறிப்பிடத்தக்கவை. கிடாரி, பாலினப்பெருக்கத்தைக் குறிக்கும் பழங் கால அடையாளமாகும். நூல் மற்றும் விலங்கின் சிவப்பு நிறம் இரத்தத்தைச் சுட்டிற்று. கேதுருமரம் நீண்ட காலம் வாழ்ந்தது. இறப்பினால் உண்டான தீட் டைப் போக்க உதவும் வாழ்வை அடையாளமாக உணர்த்தும் பொருட்களின் கலவையான ''உயிருள்ள நீர்'' ஆற்றல் வாய்ந்தது எனச் சுட்டிக் காட்டப்படுகிறது.

மதியானியர்களிடமிருந்து கொள்ளை யடித்த பொருட்களைச் சுத்தப்படுத்த தீட்டுக் கழிக்கும் தண்ணீரை இஸ்ராயேலர் பயன்படுத்தினர் (எண் 31:23).

### தீட்டுப்படுத்துதல் (DEFILE)

இது ஒழுக்கமுறையில் அல்லது சடங்கு முறையில் அசுத்தமாதலாகும், கறைபடுத லாம் (லேவி 11:43; எண் 5:3; மாற் 7:5.18; யூதா 8; திருவெளி 14:4).

### தீத்து (TITUS)

1. யூதர்களுக்கு லீசியா அளித்த சலுகை களுக்கு இணக்கம் அளிக்கும் கடிதத்துடன் கி.மு. 165-இல் யூதேயாவுக்கு அனுப்பப் பட்ட இரு உரோமைத் தூதுவர்களில் ஒருவர் தீத்து மானியு என்பராவார் (2 மக் 11:34).

2. தித்தியு யூஸ்துவின் மற்றொரு பெயர் தீத்து யூஸ்து ஆகும். இவர் கொரிந்தியக் குடிமகனாவார். இவரது வீடு செபக்கூடத் திற்கு அருகில் இருந்தது (அ.ப. 18:7). செபக்கூடத்தில் பவுலுக்கும் மற்றக் கொரிந் தியக் கிறிஸ்துவர்களுக்கும் எதிர்ப்பு ஏற்பட்டபோது, இவர் அவர்களைத் தன் வீட்டில் வரவேற்றார்.

3. பவுலின் தோழனான தீத்து: இவர் பவுலின் சீடரும் உடன் உழைப்பாளியும் ஆவார். இவரைப்பற்றி அப்போஸ்தலர் பணிநூல் ஒன்றும் குறிப்பிடவில்லை. இதற் குக் காரணம் இவர் லூக்காவின் உறவினர் என்று விளக்கம் காட்டுவர் (காண்க: 2 கொரி 8:18-19. 22-23). ஆனால் கலாத்தியர், 2-ஆம் கொரிந்தியர், 2 திமொத்தேயு, தீத்து ஆகியோருக்குப் பவுல் எழுதிய திருமுகங் களிலிருந்து தீத்துவைப்பற்றி அதிகம் அறிகிறோம்.

தீத்து ஒரு கிரேக்கர்; அதாவது, புறவினத் தைச் சேர்ந்தவர். பவுலும் பர்னபாவும் எருசலேம் சங்கத்திற்குச் சென்றபோது (கி.பி. 49) தீத்துவும் அவர்களுடன் உடன் சென்றார் (கலா 2:1.3). இச்சங்கத்தில் தர்க்கிக்கப்பட்ட ஓர் அடிப்படைப்பொருள் புறவினக் கிறிஸ்தவர்கள் விருத்தசேதனம் பெற வேண்டுமா என்பதாகும். பவுலின் கருத்துப்படி, தீத்து விருத்தசேதனம் பெறும் படி கட்டாயப்படுத்தப்படவில்லை என்பது எருசலேம் சங்கத் தீர்மானங்களில் முக்கிய மானதொன்றாகும் (2:3). கொரிந்தியத் திருச் சபைக் கண்காணிப்பில், தீத்து பவுலுக்குப் பெரிதும் உதவினார். கொரிந்தியருக்குப் பவுல் எழுதிய முதலாம், இரண்டாம் திருமுகங்களுக்கிடையில், (ஒருவேளை 2 கொரி 2:4; 7:8-இல் குறிக்கப்படும் கடிதத் துடன்) கொரிந்துக்குப் பவுலின் தூதுவராகச் சென்று, அங்கு நிலவிய சிக்கலான நிலை யைத் தீர்த்துவைக்க உதவினார். பவுல் தீத்துவைத் துரோவாவில் எதிர்பார்த்தார் (2 கொரி 2:13). ஆனால் எல்லாம் சரியாயிற்று என்ற நற்செய்தியோடு தீத்து மாசிதோனியா வில் பவுலைச் சந்தித்து அவருக்குப்

பெரும் மகிழ்ச்சிதந்தார் (7:6). இந்த அனுப வத்தின் அடிப்படையில், எருசலேம் திருச் சபைக்காகப் புறவினத்திருச்சபைகளில் எடுக் கப்பட்ட காணிக்கையை மேற்பார்க்க பவுல் தீத்துவைக் கொரிந்துக்கு அனுப்பினார். இப்பணியைத் தீத்துதான் முன்பு கொரிந்தில் தொடங்கிவைத்தார் (8:6. 16 தொ). ஆனால் 2 கொரி 10-13 என்ற பகுதி பிற்பாடு எழுதப்பட்ட மடலின் ஒருபகுதி என்று கரு தப்பட்டால், பவுலுக்கும் கொரிந்துத் திருச் சபைக்குமிடையே உள்ள உறவு மீளவும் மோசமாகியதாகத் தெரிகிறது. பவுல், ''நான் உங்களுக்காகச் செய்யும் தொண்டில் என் உடனுழைப்பாளி'' என்று தீத்துவை அழைக்கிறார் (8:23). மேலும் தீத்து கொரிந் தியரிடமிருந்து எவ்வித ஆதாயத்தையும் எடுத்துக் கொள்ளவில்லை என்பதற்காக பவுல் அவரைப் புகழ்கிறார் (12:18).

தீத் 1:5-இன்படி, கிரேத்தாத் தீவில் தவறுகளைச் சீர்படுத்தி மூப்பர்களை ஏற் படுத்தவும் அங்குள்ள திருச்சபையை அமைக் கவும் பவுல் தீத்துவை அங்கு விட்டுச் சென்றார். தீத்துவுக்கு எழுதப்பட்ட திரு முகம் முழுவதிலும், பவுல் தன் உடனூழிய ரான தீத்துவின்பால் கொண்ட உயர்மதிப்பு மிளிர்கிறது. பவுல், ''நம் இருவருக்கும் பொதுவான விசுவாச வாழ்வில் என் உண்மை மகனான உமக்கு'' என்று தீத்துவை அழைத்து, திருமுகத்தைத் தொடங்குகிறார் (1:4). 2 திமொ 4:10-இல் வரும் சொந்தக் குறிப்பில், தீத்து தல்மாத்தியா என்ற மற்றொரு பணித்தளத்திற்குச் சென் றிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

4. தீத்து பிலேவியு வெஸ்பாசியானு, பேரரசன் வெஸ்பாசியானுஷுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்தவர். இவர் கி.பி. 39-இல் பிறந்தார். இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளில் போரிடக் கற்றுக் கொண்டார். அதன் பிறகு தன் தந்தையோடு 66-இல் யூதர்களின் கிளர்ச்சியை அடக்குவதில் பங்கு கொண்டார். கி.பி. 67-இல் தன் தந்தை உரோமையில் பேரரசரானபின் தீத்து 70-இல் யூதப்போரை வெற்றியுடன் முடித் தார்; 79-இல் ஆட்சிக்கு வந்தார். இவரது ஆட்சிக்காலம், குறுகியதாக இருந்தாலும், இவர்க்கு பின் வந்த சகோதரர் தொமிசிய னோடு ஒப்பிடும்போது முக்கியமானவரா கக் கருதப்படுகிறார்; மக்களுக்குப் பல நன்மைகள் செய்தார். இவர் 81-இல் இறக் கும்போது ஆட்சி மன்றத்தால் தெய்வமாகக் கருதப்பட்டார்.

5. சில போலிநூல்களால் நல்ல கள்வ னுக்குக் (லூக் 23:39-43) கொடுக்கப்பட்ட பெயர். காண்க. திஸ்மசு.

**தீத்துவின் மடல்** (TITUS, EPISTLE OF)

அயர்ச்சி தரக்கூடிய போலிநூல். இது பவுலின் உடனுழைப்பாளியான தீத்துவால் எழுதப்பட்டது என்று கருதப்பட்டது. இதன், கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த, இலத்தீன் கையெழுத்துப் பிரதிதான் கிடைத்துள்ளது. இந்நூலின் நோக்கம் கன் னிமை வாழ்வைப் போற்றுவதும், ஆணும் பெண்ணும் உடலுறவின்றிச் சேர்ந்து வாழும் ''ஆன்மீகத் திருமணத்தைக்'' கண்ட னம் செய்வதுமாகும். விவிலியமும், அந்தி ரேயா, பேதுரு மற்றும் யோவான் போன் றோரின் பணிபற்றிய துறவுத்தன்மை யுடைய போலிநூல்களும் இந்நூலுக்கு ஆதார மாக இருந்திருக்கலாம். இதன் தோற்றம் தெளிவாக இல்லை. ஆனால் ஒருவேளை 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த, ஸ்பெயி னைச் சேர்ந்த துறவுக் குழுவால் எழுதப்பட் டிருக்கலாம்.

**தீத்துவுக்குத் திருமுகம்** (TITUS, LETTER TO)

1. மேய்ப்புப்பணித் திருமுகங்களில் ஒன்று தீத்துவுக்கு எழுதப்பட்டதாகும். மற்ற இரண்டும் திமொத்தேயுவுக்கு எழுதப் பட்டவையாகும். இவை ஒத்த தன்மை கொண்டிருப்பதால் ஒரே தொகுப்பாகக் கருதப்படும். இது பற்றி மேய்ப்புப்பணித் திருமுகங்கள், திமொத்தேயுவுக்குத் திரு முகங்கள் என்ற தலைப்புகளில் வாசித்தறிக. இங்கு, தீத்துவுக்கு எழுதப்பட்ட திருமுகம் பற்றிச் சுருக்கமாகப் பார்ப்போம்.

2. **தீத்துவின் வாழ்க்கை வரலாறு:** காண்க. தீத்து (3).

*3. வரிசை, காலம், இடம்:* தீத்துவுக்கு எழுதப்பட்ட திருமுகத்தில் காணப்படும் தலைப்புகளே திமொத்தேயுவுக்கு எழுதப் பட்ட முதலாம் திருமுகத்தில் விரிவாக எழுதப்பட்டுள்ளதால், தீத்து திருமுகம் காலத்தால் முந்தியதாக இருக்க வேண்டும். இரண்டாம் திமொத்தேயு ஆன்மீக இறுதி உயிலாகவும் ஏற்பாடாகவும் உள்ளதாலும், பவுலின் உடனடியாக வரவிருக்கும் மர ணத்தை முன்னறிவிப்பதாலும் *(2 திமொ 4:6-8)*, இது இறுதியானதாக இருக்கலாம். ஆகவே மேய்ப்புப் பணித் திருமுகங்களைத் தீத்து, முதலாம் திமொத்தேயு, இண்டாம் திமொத்தேயு என்ற முறையில் வரிசைப் படுத்தலாம்.

இத்திருமுகங்களுக்குப் பவுல்தான் ஆசிரி யர் என்ற பிரச்சனைக்கு அளிக்கும் விடைக் கேற்ப, இந்நூல் எழுதப்பட்ட காலத்தை கி.பி. 60-க்கும் 100-க்கும் இடையே குறிக்கலாம்.

இத்திருமுகங்கள் ஆகியன் பகுதியில், குறிப்பாக சிறிய ஆசியா பகுதியிலுள்ள திருச்சபை பற்றியவையாகையால் இவை இப்பகுதிகளில், குறிப்பாக எபேசில், தோன்றியிருக்கலாம் என்று அறிஞர் கருது வர்.

இப்பிரச்சனைகள் பற்றி மேய்ப்புப் பணித்திருமுகங்கள் என்ற தலைப்பில் காண்க.

*4. நூலின் திட்டம்:*

I. வாழ்த்துரை *(1:1-4)*.

II. திருச்சபைகளில் மூப்பர்களை ஏற்படுத்து தல் *(1:5-9)*.

III. போலிப் போதனையும், உண்மையான போதனையும் *(1:10-3:7)*.

1. போலிப் போதகர்களின் தன்மை *(1:10-16)*.

2. உண்மையான போதகர்கள் கற்பிக்க வேண்டியவை *(2:1-3:7)*.

*2:1-15:* திருச்சபையில் கிறிஸ்தவக் கடமை கள்.

*3:1-7:* சமூகத்தில் கிறிஸ்தவக் கடமைகள்.

IV. போலிப் போதகர் பற்றி எச்சரிக்கை. சண்டை சச்சரவுகள் தவிர்க்கப்பட வேண் டும் *(3:8-11)*.

V. இறுதியுரையும் வாழ்த்தும் *(3:12-15)*.

*5. செய்திச்சுருக்கம்:* இத்திருமுகம் திருச் சபை அமைப்பை முதன்மையாகக் கருத் தில் கொண்டது. கிரேத்தாவில், திருச் சபையை அமைக்கும்படி தீத்துவைப் பவுல் விட்டுச் சென்றார். மூப்பர் குழு கவன மாய்த் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் *(தீத் 1:5-9)*; அதன் அதிகாரம் ஏற்றுக்கொள்ளப் பட வேண்டும்; வழிபாட்டுக் காரியங்களில் அதன் அறவுரை கடைப்பிடிக்கப்பட வேண் டும் *(2:1-3:8)* என்று பவுல் அறிவுறுத்து கிறார். திருச்சபையையும் அதன் விசுவாசத் தையும் அழிக்க பதிதர்கள் அச்சுறுத்தும் சூழ்நிலையில் இப்போதனைகளைக் கடைப்பிடிப்பது மிக அவசியமாகும். மற்ற வற்றிற்குக் காண்க: *மேய்ப்புப் பணித்திரு முகங்கள்.*

**தீபத்து** (DIPHATH)

எப்பேத்தின் மகன் கோமேரின், மகன் *(1 நாள் 1:6)*. இவர் ஆதி 10:3-இல் இரிபாத்து என்றழைக்கப்படுகிறார்.

**தீபோன்** (DIBON - அழிக்கிற, தேய்கிற)

1. மோவாபு நாட்டின் ஒரு நகரமான இந்தத் தீபோன் சாக்கடலுக்குக் கிழக்கே 20 கி.மீ. தொலைவிலும், ஆர்னோன் நதிக்கு வடக்கே 5 கி.மீ. தொலைவிற்குள்ளும் அமைந்துள்ளது. இன்று இது தீபான் எனப்படுகிறது. யுசேபியுவுக்கு இது அமைந்த இடம் தெரிந்தாலும் பாலைவனத் தில் இப்பெயரைக் குறித்திருக்கிறார்.

மோவாபியரிடமிருந்து எமோரிய அரச னான சீகோனால் எடுத்துக்கொள்ளப்பட் டது *(எண் 21:26-30)*. அவரிடமிருந்து இஸ்ராயேலர் இதைக் கைப்பற்றி ரூபன், காது ஆகிய இரு கோத்திரங்களும் இது தமக்குரிய பகுதி என உரிமை கொண்டாடி னர் *(எண் 32:3)*. காதுகோத்திரத்தால் காவல் செய்யப்பட்டது *(எண் 32:3.34)*; ஒரு காலத்

தில் இது தீபோன் காது என்றுகூட அழைக்கப்பட்டது (எண் 33:45-46; யோசு 13:9.17). இது மோவாபிய அரசன் எக்லோனால் கைப்பற்றப்பட்டு (நீதி 3:12-14), ஒருவேளை ஏகூதாலும் (3:15-30), உறுதியாகத் தாவீதாலும் (2 சாமு 8:2) விடுவிக்கப் பட்டது. எசா 15:2; எரே 48:18.22 ஆகியவை எழுதப்பட்டபோது தீபோன் மீண்டும் மோவாபியரின் கைக்கு மாறியது. மேசாவின் மோவாபிய கல்லில் குறிக்கப்பட்டுள்ள மேசாவின் தலைநகரமான ''காரா'' இந்த இடத்தில் இருந்திருக்க வேண்டுமென்ற முடிவுக்குச் சிலர் வருகின்றனர். மோவாபிய அரசன் தனது வெற்றியின் நினைவாகத் தலைநகருக்கு வேறுபெயர் கொடுத்திருக்கலாம் என்பதால் அப்பெயர் இக்கல்லில் காணப்படவில்லை. ஆயினும் தீபோன் என்ற பழைய பெயரே அதற்கு நிலைத்தது என்பது குறிப்பிடத்தக்கது.

இப்பகுதியை அகழ்ந்தெடுத்தபொழுது ஐந்து நகர வாயில் சுவர்களைக் கண்டுபிடித்துள்ளனர். ஆனால் எதற்கும் குறிப்பிட்ட காலத்தைச் சுட்டிக் காட்டமுடியாது. நபத்தேயக் கட்டடங்களின் அடிப்படைகளும் கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த உரோமைக் கட்டடங்களின் சிதைவுகளும், பைசாந்திய ஆலயமும் இங்குக் காணப்படுகின்றன. மோவாபியக் கட்டடங்கள் இருந்ததற்கான அறிகுறிகள் இல்லையெனினும் 'மேசா அரசன்' காலத்து மட்பாண்டங்கள் (கி.மு. 9-ஆம் நூற்றாண்டு) கிடைத்துள்ளன. நகரச்சுவர்களும், மக்கள் வாழ்ந்ததற்கான அறிகுறிகளும் இரும்புக்காலத்தைச் சுட்டுகின்றன.

2. எருசலேமுக்கு வெளியே யூதர்கள் குடியேறிய நகர்களின் வரிசையில் நெகேபிலுள்ள ஓர் ஊர். எஸ்ரோனுக்கும் எக்கபுசேலுக்கும் (எக்கபட்சவேல்) இடையில் இருந்தது (நெகே 11:25). இதுவும் திமோனாவும் ஒன்றே (யோசு 15:22).

## தீபோன் - காது (DIBON - GAD)

தீபோனின் மற்றொரு பெயர் (யோசு 33:45-46).

## தீப்பந்தம் (TORCH)

நீண்ட கழியின் ஒருமுனையில் எரியும் பொருள் சுற்றப்பட்டு, நெய்யில் நனைக்கப் பட்டு, பின்பு கொளுத்தப்படும். இதன் ஒளியும், நீண்ட கழியும், தீப்பந்தம் என்ற பெயர் வரக் காரணமாகின்றன. கடவுள், தான் உடன்படிக்கையை ஏற்றுக் கொண்டதன் குறிப்பாக, துண்டான பலிப்பொருளின் நடுவில் தீப்பிழம்பு வடிவில் கடந்து செல்கிறார் (ஆதி 15:17. எரே 34:18). தீப்பந்தங்களைத் தந்திரமாகப் பயன்படுத்தி கிதியோன் வெற்றி வாகை சூடுகின்றார். (நீதி 7:16 தொ). யோபு நூலில் லேவியாத்தானைப் பற்றிய பாடலில் தீப்பிழம்பைப் பற்றிய சிறப்பான வரிகள் இரண்டு உண்டு. ''அதன் வாயினின்று புறப்படுவது தீப்பிழம்பு; அங்கிருந்து பறப்பது நெருப்புப் பொறிகளே'' (யோபு 41:11). எசா 62:1-இல் ''சீயோனின் வெற்றி வைகறை ஒளியெனவும், அதன் மீட்பு சுடர் விளக்கெனவும் வெளிப்படும்வரை, அதனை முன்னிட்டு மவுனமாயிரேன்'' என்று இறைவாக்கினர் உறுதியளிக்கிறார். புதிய ஏற்பாட்டில் இயேசுவைப் பிடிக்க காவலர்கள் விளக்குகளோடும் பந்தங்களோடும் வருவது கூறப்படுகிறது (யோவா 18:3).

## தீமை, தீயவை (EVIL)

1. எபிரேய, கிரேக்க மொழிகளில் இக்கருத்து செயல் முறையானதையும் குணத்தையும் குறிக்கும் வகையில் பயன்படுத்தப் பட்டுள்ளது. இக்கருத்தை விவரிக்க மூல மொழிகளிலும், மொழி பெயர்ப்புகளிலும் பல சொற்கள் பயன்பட்டுள்ளன. ஒரு பொருள் பயனற்றதாகவும் அழிவுக்குரியதாகவும் இருந்தாலும் (2 அர 2:19; பழ 20:14; 25:19; எரே 24:2; மத் 6:23; 7:7), விரும்பத்தகாததாயும், அசிங்கமாகவும், துயரம் தருவதாகவும் இருந்தாலும் (ஆதி 21:11-12; 28:8; 41:19-20; நெகே 2:3; திருவுரை 7:3), நோவு தருவதாயும் தீங்கு செய்வதாயும் இருந்தாலும் (ஆதி 26:29; 31:7; உப 26:6; 28:35; 1 சாமு 18:10; 2 சாமு 12:18; பழ 11:15; திருவெளி 16:2), அதன் தோற்றத்தையோ விளைவையோ வைத்து அது தீயதாகக் கருதப்பட்டது.

பழைய ஏற்பாட்டில், துயரம் (ஆதி 44:34), தீங்கு (லேவி 26:6; உப 7:15) துன்பம் (திருவுரை 6:2), கொடுமை (1 சாமு 12:17; 1 அர 1:52; எசே 3:19), அவதூறு (எண் 13:32; யோபு 15:35; பழ 21:27; சங் 140:8) ஆகியவற்றை உணர்த்துபவை தீமை யானதாகக் கருதப்பட்டன. புதிய ஏற்பாட்டில் தீமை என்பதைக் குறிக்க ''காகோஸ்'', ''பொனேரோஸ்'' ஆகிய சொற்கள் பயன்படுகின்றன. இச்சை, காமம், தீய ஆசைகள் (உரோ 6:12; 2 திமொ 2:22; 1 பேதுரு 1:14), அநீதி, கொடுமை (1 கொரி 13:6) கெடுமதி, தீயநோக்கு (மத் 22:18), தீமை செய்வது (மாற் 3:4) ஆகியவை தீமை என்ற கருத்தால் குறிக்கப்படுகின்றன.

II. **பழைய ஏற்பாட்டுப்போதனை:** இறைவனைப் புறக்கணித்தல் (2 நாள் 12:14), உடன்படிக்கையை மீறுதல் (உப 17:2), யாவேக்கு அஞ்சாமை (யோபு 1:1) ஆகியவற்றைத் தீமை என்று குறிப்பிட்டாலும், விவிலிய ஆசிரியர்கள் மனிதர் தன் உடன் சகோதரர்களுக்குச் செய்யும் மனிதத் தீமையின்மீதும் கவனம் செலுத்துகின்றனர். நன்மை தீமைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகளை நன்கு உணர்ந்தவர்களாய், அவர்கள் தீமையை இறைவனுடைய சட்டத்தை நிராகரித்தலாக, ஆன்மீக சிலைவழிபாடு (உப 4:25; 1 அர 11:6; 2 அர 21:2 - ஆண்டவருக்கு எதிராகத் தீயதைச் செய்து) மற்றும் தனிப்பட்டவர்களின் (2 சாமு 12:9; சங் 34:13) சமூகத்தின் (உப 19:19; 22:21) உரிமைகளைக் கடைப்பிடிக்காமை என்ற பொருளில் விவரிக்கின்றனர். இஸ்ராயேலர் இவ்வுலகைச் சார்ந்த ஓர் அரசனை விரும்புவதும் கூட தீமையாகக் கருதப்பட்டது (1 சாமு 12:19). ஏனெனில் அது இறையாட்சியை மறுப்பதாகும்.

பலதரப்பட்ட தீய செயல்களைச் செய்பவர்கள் தீயவர்களாக விவரிக்கப்படுகின்றனர் (2 அர 21:6. 9.11; எரே 3:5; 5:28; 7:26). ஆனால் அவர்கள் நல்லவற்றைச் செய்ய அதாவது இறைவனுக்கும் அயலாருக்கும் அன்புகாட்டத் தூண்டப்படுகின்றனர். உபாகம ஆசிரியர் ''உன் நடுவிலிருந்து தீமையை அகற்றுவாய்'' என்று மீண்டும் மீண்டும் வலியுறுத்துகிறார் (உப 13:5; 17:7.12; 19:19). இதே எச்சரிக்கையைப் பிற்கால இறைவாக்கினர்களும் எதிரொலிக்கின்றனர் (எசா 1:16; எரே 18; எசே 33:11). அவர்கள் அறைகூவல் வீண்போகவில்லை. ஏனெனில் அவர்களால் நன்மை செய்ய முடியும். இதைப் பழைய ஏற்பாட்டுத் தலைவர்களில் சிலர் செய்து காட்டியுள்ளனர் (யோசேப்பு ஆதி 44:4; தாவீது 1 சாமு 25:21). உகந்த சூழ்நிலை இன்மை ஒருவனுடைய பொறுப்பை நீக்கிவிடவில்லை. எரொபவாமின் தீய பாதிப்பிற்கு உட்பட்டிருந்தாலும், மெனகேம் (2 அர 15:18), பெக்கயா (15:24), பெக்கா (15:28) ஆகிய அரசர்கள் அவர்களின் தகாத நடத்தைக்குப் பொறுப்பாக்கப்படுகின்றனர்.

விவிலிய ஆசிரியர்கள் போராடிய பிரச்சனை ஒன்றுண்டு. அது, தீயவர்கள் செழிப்புற்றுத் திகழ்வதாய்த் தோன்றும்போது நீதிமான் துன்புறுகிறான். அவர்கள் ஒழுக்கச் சட்டத்தைக் கடைப்பிடிப்பதால் பயனே இல்லை போல் தோன்றுகிறது. எடுத்துக்காட்டாக, யோபு எடுத்துக்காட்டாகவும் நேர்மையோடு வாழ்ந்தாலும் பெரிதும் துன்புறுகிறார் (யோபு 16:11; 30:26). இப்பிரச்சனைக்குப் பழைய ஏற்பாட்டு ஆசிரியர்கள் மூன்று முறையில் பதிலிறுக்க முயல்கின்றனர். 1) மனித தீமையை நன்மையாக மாற்றுகிறார் இறைவன். யோசேப்பு அவரது சகோதரர்களின் தீய எண்ணத்தால் எகிப்தில் அநீதியாகத் துன்புற்றபோது, இறைவன் பசியெனும் துன்பத்திலிருந்து அவரது குடும்பத்தைக் காப்பாற்ற அவரைப் பயன்படுத்துகிறார் (ஆதி 52:15-22). 2) இறைவன் நீதிமானைச் சோதித்தறிய தீமையைப் பயன்படுத்துகிறார். பொறுக்க முடியாத அளவுக்கு யோபு துன்புற்றார். இறுதியில் நீதிமான் என்று அறிவிக்கப்படுகிறார் (யோபு 42:7தொ). 3) தீமை அதிக நாட்கள் நீடிப்பதில்லை (சங் 37:16-17; பழ 10:29; 11:19; 17:13). ஏனெனில் மனிதனது நல்ல தீய செயல்களை இறைவன் தீர்ப்பிடுகிறார்

(திருவுரை 12:14). மனிதனுடைய செயல்களில் இறைவனுடைய கரம் எப்போதும் எளிதாகக் கண்டுணரப்படுவதில்லை என்பதைச் சங்கீத ஆசிரியர்களின் ஐயப்பாடுடைய ஏக்கங்களில் காணலாம். ''உன் கண்ணாலேயே நீர் காண்பீர்; பொல்லார்க்குக் கிடைக்கும் தண்டனையை நீரே பார்ப்பீர்'' (சங் 91:8) என்று வெற்றி முழக்கம் செய்கிறார். ஆனால் ''அப்படியானால் நான் என் உள்ளத்தை மாசற்றதாய் வைத்துக் கொண்டது வீண்தானா? குற்றமற்றவனாய் என் கைகளைக் கழுவிக் கொண்டதும் வீண்தானா?'' என்று புலம்புகிறார். ஏனெனில் ''பொல்லாதவர்கள் என்றும் வளமுடன் வாழ்ந்து செல்வத்தைப் பெருக்கிக் கொள்கின்றனர்'' (சங் 73:12-13).

மனித தீமையில் இறைவனை ஈடுபடுத்த விவிலிய ஆசிரியர்கள் விரும்புவதேயில்லை. ஏனெனில் அவர் ''பொல்லாங்கைப் பார்த்து மகிழும் இறைவன் இல்லை; அவர் முன்னிலையில் தீமைக்கு இடமில்லை'' (சங் 5:4). மேலும் அவர் தம் மக்களை ஆதரிக்கின்றார் (ஓசே 7:15; சங் 97:10). இருப்பினும் உடல்சார்ந்த துன்பங்களை இறைவனே அனுப்புவதாக விளக்குகின்றனர். இப்படிச் செய்வது நீதிமான்களைச் சோதித்தறிய மட்டுமன்று; பொல்லாதவர்களைத் தண்டிப்பதற்கும் ஆகும். ''இந்தக் கெட்ட தலைமுறையின் மனிதருள் எவனும்'' கானான் நாட்டிற்குள் நுழையப் போவதில்லை என்று இறைவன் தமது மக்களைத் தண்டிக்கிறார் (எண் 14:22-24; உப 1:34-36). கடவுள் அபிமெலக்கிற்கும் செக்கேம் மக்களுக்குமிடையில் கடும் பகையை மூட்டுகிறார் (நீதி 9:23). ஆண்டவர் அனுப்பிய தீய ஆவி சவுலை ஆட்கொள்கிறது (1 சாமு 16:4-16; 18:10). யூதாவின் சிலை வழிபாட்டின் காரணமாக அவர்கள் பாபிலோனுக்கு நாடுகடத்தப்பட இறைவன் அனுமதிக்கிறார் (எஸ் 9:13; காண்க: எரே 11:17; 18:1-10). தம்பால் காட்டிய பிரமாணிக்கமின்மைக்காகத் தம் மக்களை இறைவன் தண்டிக்கும்போது, அவர் தமது மனதை மாற்றிக்கொள்ளச் செய்யக்கூடும். மோசேயும் எரேமியாவும் இதில் வெற்றியும் கண்டனர் (யாத் 32:12-14; எரே 26:3; காண்க: யோனா 3:10). நாடு கடத்தப்பட்ட காலத்து இறைவாக்கினரான எசேக்கியேல் நேர்மையற்ற பெற்றோரின் குற்றங்களுக்காக நேர்மையுள்ளவர்கள் துன்புற மாட்டார்கள் என்றும் தீயவன் தண்டனை பெறுவதை விட அவன் மனந்திருந்துதலையே இறைவன் விரும்புகிறார் என்றும் கூறி அவநம்பிக்கை மிக்க நாடு கடத்தப்பட்டவர்களுக்கு ஆறுதல் அளிக்கிறார் (எசே 18).

III. புதிய ஏற்பாடு: இயேசு துன்பங்களையும் சோதனைகளையும் தமது வாழ்விலே அனுபவித்திருந்தார். ''தீயோனிடமிருந்து (அல்லது தீமையிலிருந்து) எங்களை விடுவியும்'' என்று இறைவனைப் பார்த்து மன்றாடுமாறு இயேசு தம் சீடர்களுக்குக் கற்பிக்கிறார் (மத் 6:13). இந்தத் தீயோன் ஒருவேளை சாத்தானைக் குறிக்கலாம் (13:19; 1 யோவா 2:13-14). பழங்காலத்து இறைவாக்கினர்களைப் போன்று இயேசுவும் ஒழுக்கத் தீமையின் இடம் இதயம் என்று சுட்டிக்காட்டி, நல்லவை செய்வோரையும் தீமை செய்வோரையும் வேறுபடுத்திக் காட்டுகிறார் (மத் 12:34-35). இறைவன், ''நல்லோர் மேலும் தீயோர் மேலும் தம் கதிரவன் உதித்தெழச் செய்கிறார். நேர்மையுள்ளோர் மேலும் நேர்மையற்றோர் மேலும் மழை பொழியச் செய்கிறார்'' என்று மத்தேயுவின் மலைப்பொழிவில் இயேசு கூறும்போது (மத் 5:45), யோவானின் நற்செய்தி நன்மை செய்வோர் மட்டுமே முடிவில்லா வாழ்வைப் பெறுவர் என்றும் தீமை செய்வோர் தீர்ப்புப் பெறுவர் என்றும் வலியுறுத்திக்கூறி இருவரையும் வேறுபடுத்துகிறது (யோவா 5:29; காண்க. 3:19-21).

தீமை பற்றிய பவுலின் உரைகள் மிகவும் விரிவாக உள்ளன. உண்மைக்குப் பணிபவர்களையும் பணியாதவர்களையும் வேறுபடுத்தி, ''தீமை சூழ்வதில் திறமைவாய்ந்தவனான'' (உரோ 1:30), ''இயற்கை சார்ந்த

மனிதன்'' மேல் பெரும் துன்பங்கள் வந்து விழும் (2:8-9) என்று பவுல் அறிவிக்கிறார். இதற்கு மாறாக, கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்கள், தீமையின்பால் உள்ள நாட்டங்களை ஒழித்து விடும்படியும் (கொலோ 1:21; 3:5), தீமையைப் பொறுத்து நன்மையைச் செய்யும்படியும் (உரோ 12:9) தூண்டப்படுகின்றனர்; பழிக்குப்பழி வாங் காது நன்மை செய்யும்படி எச்சரிக்கப்படு கின்றனர் (12:17.21; 16:19; 1 கொரி 14:20). விரும்பும் நன்மையைச் செய்ய முடியா மைக்கும் விரும்பாத தீமையைச் செய்வதற் கும் இடையிலுள்ள முரண்பாட்டைத் தன் வாழ்விலேயே அனுபவித்துணர்ந்த பவுல் (உரோ 7:19.21), அதே அனுபவத்தை யுடைய விசுவாசிகளுக்குப் போதிக்கும் போது, பழைய ஏற்பாட்டு மாதிரிகளி லிருந்து தனது வலிமையைப் பெறுகிறார் (1 கொரி 14:20).

யாக்கோபும் பேதுருவும் ஒழுக்கத்தீமை யோடு போராடும் மனுக்குலம் பற்றி இதே விதக் கருத்துக்களைக் கூறுகின்றனர். ''இறை வன் தீமைபுரியச் சோதிக்கப்படுபவர் அல்லர்; ஒருவரையும் அவர் சோதிப்பது மில்லை'' (யாக் 1:13) என்றும், ''ஓயாமல் தொல்லைப்படுத்தும்'' (3:6.8) நாவை எவரா லும் அடக்க முடிவதில்லை என்றும் யாக்கோபு கூறுகிறார். உரிமையடைந்தவர்க ளின் சுதந்தரத்தைத் தீவினை செய்வதற்குப் போர்வையாகப் பயன்படுத்தக்கூடாது என் றும் (1 பேதுரு 2:16), தீமைக்குத் தீமை செய்யாதிருக்கும்படியும் (3:9), தீமையி னின்று விலகி நன்மை செய்யும்படியும் (3:10-12; சங் 34:12-16) விசுவாசிகளைப் பேதுரு எச்சரிக்கிறார்.

IV. **இறையியல் சிந்தனை:** இரு கேள்வி கள் எழுகின்றன. முதலாவது உலகையும் மனித உயிர்களையும் நல்லவையாகப் படைத்த இறைவன் (ஆதி 1:31), தீயன செய்யும் நாட்டமுடைய மனிதர்களை எப் படிப் படைத்திருக்க முடியும். கருத்தியல்படி இறையொருமைக் கோட்பாடு தீமை யென்ற உண்மைக்கு இடம் தருவதில்லை (ஏனெனில் இறையொருமைக் கோட்பாடு இருமெய்மைவாதத்தையும் தீமையை உண் டாக்கும் இரண்டாம் தெய்வத்தையும் ஏற் றுக் கொள்வதில்லை). முதல் ஆண், பெண் ஆகியோரின் கீழ்ப்படியாமையால் ஒழுக்கத் தீமை உண்டாகியது என்று ஆதி 3 கூறுகிறது. மற்ற விவிலியப் பகுதிகள் பாவத்திற்கு வாய்ப்பளித்த பாம்பைத் தீமை யின் தலைவனான சாத்தானோடும், தொடர்பு படுத்துகின்றன. சாத்தானோடு இறைவன் கொண்டுள்ள போராட்டத்தின் பரந்தசூழ் நிலையில் மனித பாவத்தையும் தீமையையும் கவனத்தில் கொள்கின்றன.

இரண்டாவது, தமது மகன் இயேசு வழியாகச் சாவையும், கொள்கையளவில் சாத்தானையும் வென்றுவிட்ட இறைவன், ஏன் தீமை பரவலாகவும் மூர்க்கத்தனமுள்ள தாகவும் சாத்தான் ஆற்றல் மிக்கதாகவும் இருக்க அனுமதிக்கிறார். இது காலந் தோறும் விசுவாசிகள் எதிர்கொள்ளும் பிரச் சனையாகும். இறைவன் நன்மையும் ஆற்ற லும் மிக்கவராய் இருக்கும்போது, ஒழுக் கத் தீமையெனும் சுவருக்குப்பின் தம்மை மறைத்துக் கொள்வதுபோல் தோன்றுவது ஏன்? புதிய ஏற்பாடு இறுதிவிடையாக, இயேசுவின் இரண்டாம் வருகையைச் சுட் டிக்காட்டுகிறது. அப்போது நல்லோர் தங் களுக்குரிய சன்மானத்தைப் பெறுவர்; தீயோர் தாங்கள் தேடிக்கொண்ட தண்ட னையைப் பெறுவர் (மத் 24:36 தொ; 25:31-46).

நன்மை நிறைந்த இறைவன் இருத்தல் தீமையைப் புறம்பாக்குகிறது, மற்றும் தீமை பரவலாக இருப்பது, நன்மை நிறைந்த இறைவனின் பிரசன்னத்தை அகற்றுகிறது என்ற கருத்தியலான கூற்றுகளை விவிலி யம் ஏற்றுக் கொள்வதில்லை. அதன் விசு வாசம் எவ்வளவு முரண்பாடானதாகத் தோன்றினாலும் தீமை செய்யக்கூடியதான மனுக்குலத்தையே இறைவன் படைத்தார் மற்றும், விசுவாசிகளின் ஆழ்ந்த துன்பங்க ளிலும் சோதனைகளிலும் அவர்களுக்கு ஆதரவு அளிக்கிறார் என்பனவே வேதாக

மம் அறிவிக்கும் விசுவாசம். காண்க. நன்மை; நன்மையும் தீமையும்; பாவம்.

**தீமோனா** (DIMONAH - சாணக்குவியல்)

ஏதோமுக்கு அருகில் நெகேபிலுள்ள ஒரு நகர். யூதாவுக்குக் குறிக்கப்பட்ட பகுதியைச் சேர்ந்ததாகும். பெயேர் செபாவை மைய மாக வைத்து கீன், மற்றும் அதாதாதோடு குறிக்கப்படுகிறது (யோசு 15:21-32). இது வும் தீபோனும் (1) ஒரே இடமாக இருக்கலாம். நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய பின் யூதர்கள் இங்கு மீண்டும் குடியேறினர் (நெகே 11:25). இந்தத் தீமோனாவை கி.பி. 1955-இல் பெயேர் செபாவுக்குத் தென்கிழக்கில் 29 கி.மீ. தொலைவில் நிறுவப்பட்ட இக்காலத் திமோனாவுடன் குழப்பிவிடக்கூடாது.

**தீமோன்** (DIMON - சிவப்பான)

ஒரு மோவாபிய நகரம் (எசா 15:9). சாக்கடல் சுருள்களைப் பின்பற்றி சில வாசகங்கள் தீமோனுக்குப் பதிலாகத் தீபோன் என்று கொண்டுள்ளன. இரத்தத்தைக் குறிக்கும் சொல்லை வைத்துச் சொல்லாடும் நோக்கத்துடன் தீபோன் என்பது வேண்டு மென்றே தீமோன் என்ற மாற்றப்பட்டிருக்க வேண்டும் என்பர். அப்படியாயின் ''தீபோன் நீர்நிலைகள்'' அர்னானைக் குறிக் கும். இந்த வாசகத்தை ஏற்க மறுப்பவர்கள், அ) தீபோன் ஏற்கெனவே 15:2-இல் குறிக் கப்பட்டிருக்கிறது. இந்த அதிகாரத்தில் வேறு எந்த இடமும் இரண்டு முறை குறிக்கப்படவில்லையென்றும், ஆ) தீபோன் பெரிய ஆற்றங்கரையில் இல்லை; தூரத் திலும் உயரத்திலும் அது அர்னோனுக் குத் தொலைவிலுள்ளது; 15:9 ''தீபோன் நீர்நிலைகளைப்'' பற்றிக் குறிப்பிடுகிறது என்றும் சுட்டிக்காட்டுவர்.

இவ்விடம் மத்மேனாகவும் சுட்டிக்காட் டப்படலாம் (எரே 48:2). அப்படியாயின் இராபாவுக்கு வடமேற்கில் 4 கி.மீ. தொலைவிலுள்ள கிர்பெத்து திம்னேயா வாக இருக்கலாம்.

**தீமோன்** (TIMON - மதிப்பிற்குரிய)

தொடக்கத் திருச்சபையில் கிரேக்க மொழி பேசிய கைம்பெண்களுக்குரிய அறப்பணியில் அப்போஸ்தலர்களுக்கு உதவி செய்ய, திருச்சபையால் தேர்ந்தெடுக் கப்பட்ட எழுவரில் ஒருவர் (அ.ப. 6:5). இவரது கிரேக்கப்பெயர், இவர் சிதறிக் கிடந்த கிரேக்க மொழி பேசிய யூதர்க ளிடையே வளர்ந்திருக்கலாம் என்று சுட்ட வல்லது.

**தீய ஆவிகள்** (EVIL SPIRITS)

I. தீங்கு விளைவிக்கும் ஆன்மீக உயிர்க ளாகிய தீய ஆவிகளின் தோற்றமானது, சிறிது சிறிதாகவே வெளிப்பாட்டில் வெளிச் சத்திற்கு வருகிறது. தொடக்கத்தில், சாத்தா னுடைய மறைபொருளுடன் தொடர்பு படுத்தாமலேயே, பொதுப்பாணி நம்பிக்கைகளி னின்று சில கூறுகளை விவிலியப்பகுதிகள் பயன்படுத்தின. முடிவில், வளர்ச்சி யடைந்த முழுமையான கருத்து, சாத்தானிட மிருந்தும் அவனது துணையாளர்களிட மிருந்தும் மனிதரை விடுவிப்பதற்கென, கீழுல கிற்கு வந்த கிறிஸ்துவின் மறைபொருள் ஒளியின் பொருளைக் கொண்டுள்ளது.

II. பழைய ஏற்பாடு.

*1. விசுவாசத்தின் தோற்றங்கள்:* பண் டைய மேற்காசிய மக்கள் மனிதனைத் தாக்குகின்ற தீமைகளின் பின்னணியில் இருப்பதாகச் சந்தேகிக்கப்பட்ட ஆயிரக் கணக்கான தெளிவற்ற சக்திகளுக்கு ஆட் தன்மை அளித்தனர். பாபிலோனிய சமய மானது வளர்ச்சியடைந்த பேய் இயலைக் கொண்டிருந்தது. மந்திரத்திற்குட்பட்ட நபர் கள், பொருட்கள் மற்றும் இடங்களை விடுவிப்பதற்கென, பல பேயோட்டும் சடங் குகள் அங்குச் செயல்படுத்தப்பட்டன. ஒவ் வொரு நோயும் தீய ஆவியின் செயலாகக் கருதப்பட்டதால் இந்த அடிப்படை மந்திரச் சடங்குகள், மருத்துவத்தில் ஒரு முக்கிய பங்கு வகித்தன.

பழைய ஏற்பாடானது தொடக்கத்தி லிருந்தே இவ்வகையான உயிர்கள் இருத்தலை

யும் அவற்றின் செயலையும் அங்கீகரித்திருந்தது. காட்டாடுகள் (எசா 13:21; 34:14), கூளிகள் (34:14) முதலிய கொடிய மிருகங்களுடன் கலந்துள்ள அமைதி கலைந்த தோற்றங்களுடனான சிதைவுகள் மற்றும் கைவிடப்பட்ட இடங்கள் நிறைந்த நாடோடிப் பாடல்களைப் பயன்படுத்துகிறது. பாபிலோன் (எசா. 13), ஏதோம் நாடு (எசா 34) போன்ற சபிக்கப்பட்ட பகுதிகளை அது அவைகளுக்கு அர்ப்பணிக்கிறது. இஸ்ராயேலின் பாவங்களைச் சுமந்த வெள்ளாட்டுக்கிடாய் பேயாகிய அசாசேலுக்கு அளிப்பதைப் பாவப்பரிகார நாள் சடங்கானது விவரிக்கிறது (லேவி 16:10). அவ்வாறே தீய ஆவிகள் நோயாளியைச் சூழ்ந்து கொண்டு, அவனை வேதனைக்குட்படுத்துகின்றன. தொடக்கத்தில் கொள்ளை நோய் (சங் 91:6; அப 3:5), காய்ச்சல் (உப 32:24; அப 3:5) முதலிய தீமைகள் இறைவன் அனுப்பிய வாதைகளாகக் கருதப்பட்டன. சவுலின்மீது தீய ஆவியையும் (1 சாமு 16:14-15. 23; 18:10; 19:9), எகிப்தின் மீதுதனது அழிக்கும் தூதரையும், அசீரியப் படையின்மீது எருசலேமையும் அனுப்புவது போல (யாத் 12:23; 2 சாமு 24:16; 2 அர 19:35), குற்றமுள்ளோர் மீது அவர் வாதைகளை அனுப்புகிறார்.

ஆனால் நாடு கடத்தப்பட்டதற்குப் பின்னர் வானதூதர் உலகிற்கும் பேய்த்தனமான உலகிற்குமிடையே தெளிவான வேறுபாடு இருந்தது. தீய சக்திகள் மனிதனை வேதனைக்குட்படுத்துகின்றன (தோபி 6:8); மற்றும் வானதூதர்கள் அவற்றை எதிர்கொள்ளும் பணியைக் கொண்டுள்ளனர் (தோபி 8:3) என்பதைத் தோபியா நூல் அறிந்துள்ளது. ஆனால் கொலை புரியும் மிக மோசமான பேயினைக் குறிப்பிட, அசுமதேயு (தோபி 3:8; 6:14) என்னும் பெயரை அளிப்பதற்கெனப் பாரசீக நாடோடிப்பாடல்களைப் பயன்படுத்தத் தயங்கவில்லை. வானதூதர்களைப் போன்றே தீய ஆவிகள் இருப்பதையும் செயல்படுவதையும் பற்றி உறுதியாக அறிந்திருந்த பழைய ஏற்பாடு, நீண்ட காலம்வரை, அவற்றினுடைய இயல்பு மற்றும் அவை இறைவனுடன் கொண்டுள்ள உறவு ஆகியவை பற்றிய தெளிவற்ற கருத்தையே கொண்டிருந்தது என்பது தெளிவு.

*2. இறைத்தன்மை அளிக்கப்பட்ட தீய ஆவிகள்:* கீழ்த்தரமான ஆவிகளுக்குப் பலி வழிபாடு அளிப்பதன் மூலம் அவற்றைத் தன் வயப்படுத்த விரும்புதல், அதாவது அவற்றைத் தெய்வங்களாக்குவதான சோதனையானது புறவினத்தாருக்கு எப்போதும் இருந்திருக்கிறது. இச்சோதனையினின்று இஸ்ராயேலும் தப்பவில்லை. தன்னைப் படைத்தவரை விட்டுவிட்டு அது ''பிற தெய்வங்களை'' நோக்கித் திரும்பியது (உப 13:3.7.14); அதாவது, மனிதப்பலிகளை அளிக்கும் அளவிற்குத் (சங் 105:37) தீய ஆவிகளை நோக்கித் திரும்பியது (உப 32:17). இஸ்ராயேலர் தடைசெய்யப்பட்ட தொழுகைமேடுகளில் தங்கியிருந்த (2 நாள் 11:15) பேய்களுடன் விபச்சாரத்தில் ஈடுபட்டார்கள் (லேவி 17:7). கிரேக்க விவிலிய மொழிபெயர்ப்பாளர்கள், புறவினத்தாரின் தெய்வங்களைத் தீய ஆவிகளுடன் ஒப்புமைப்படுத்தி (சங் 95:5; பாரூ 4:7), மூல எபிரேயமானது அவற்றைப்பற்றிப் பேசாத இடங்களிலும் அவற்றை அறிமுகப்படுத்தி (சங் 90:7; எசா 13:21; 65:3), சிலை வழிபாட்டினுடைய பேய் சம்பந்தப்பட்ட விளக்கத்தினை முறைப்படுத்தினர். இவ்வாறு, தீய ஆவிகளின் உலகமானது இறைவனுக்கெதிராகப் போட்டியிடும் உலகாக உருவாயிற்று.

*3. சாத்தானின் படை:* பிற்காலத்தில் யூத சிந்தனையானது இவ்வுலகைத் திட்டத்தோடு முறைப்படுத்துகிறது. தீய ஆவிகள், வீழ்ச்சியடைந்த வானதூதர்களாகவும், சாத்தானின் துணையாளர்களாக உருவாகிய உடந்தையாளர்களாகவும் கருதப்படுகின்றனர். அவற்றின் வீழ்ச்சியை நினைவிற்குக் கொண்டுவர சில சமயங்களில் விண்மீன்கள் போர் பற்றிய புராண உருவகமும் (எசா 14:12), கடலை உருவகப்படுத்துகின்ற மிருகங்களுக்கும் யாவேக்கும் இடையிலான தொடக்ககாலப் போர் உருவகமும்

பயன்படுகின்றன. சில சமயங்களில் தெய் வத்தின் பிள்ளைகள், இவ்வுலகப் பெண்க ளிடம் காதல் வயப்படுவது பற்றிய மரபுக ளும் தோன்றுகின்றன (ஆதி 6:1தொ; 2 பேதுரு 2:4). மற்றும் சில பகுதிகளில், இறைவனுக்கெதிரான அடாத கிளர்ச்சியில் ஈடுபடும் தீய ஆவிகளை நாம் காண் கிறோம் (எசா 14:13-14; எசே 28:2). எவ்வா றெனினும், தற்பெருமையும், காம மும் கொண்ட தூய்மையற்ற ஆவிகளாக, தீய ஆவிகள் தோன்றுகின்றன. அவை மனிதனை வேதனைக்குட்படுத்தி, தீமைக்கு நடத்திச்செல்ல முயல்கின்றன. அவற்றை எதிர்கொள்ள, பேயோட்டுதல் மேற்கொள் ளப்படுகிறது (தோபி 6:8;8:2-3; மத் 12:27). இந்தப் பேயோட்டுதல்கள் முன்னாப் பாபி லோனில் இருந்ததுபோல மாய மந்திரங்க ளாக இல்லாமல், வசை மொழியாக உள்ளன. இறைவனுடைய பெயரின் வல்ல மையை நோக்கி வேண்டுகோள் விடுக்கப் பட்டால், சாத்தானையும் அவனது தோழர் களையும் இறைவன் அடக்குவாரென நம்பப் படுகிறது (செக் 3:2; யூதா 9). மேலும், மிக்கேலும் அவரது வானகப் படையினரும் தீய ஆவிகளுடன் இடைவிடாப்போரில் ஈடுபட்டுள்ளனர் என்பதும் மிக்கேல் மனித ருடைய உதவிக்கு வருவார் என்பதும் தெரியவருகின்றன (தானி 10:13).

III. புதிய ஏற்பாடு:

**1. இயேசு, சாத்தான் மீதும் அவனது ஆவிகள் மீதும் வெற்றி கொண்டவர்.**

இயேசுவின் வாழ்வும் செயல்களும், மனிதனுடைய மீட்பினைப் பணயமாகக் கொண்டுள்ள இரு உலகங்களுக்கு இடையி லான இந்தப் போராட்டத்தின் பின்னணியில் இடம் பெறுகின்றன. இயேசு நேரிடையாகச் சாத்தானை எதிர்கொண்டு, அவன்மீது வெற்றி கொள்கிறார் (மத் 4:11 இணை; யோவா 12:31). பாவ மனுக்குலத்தின் மீது வல்லமை கொண்டுள்ள தீய ஆவிகளையும் அவர் எதிர்கொண்டு, அவற்றினுடைய ஆட்சிப்பரப்பிற்குள்ளேயே அவற்றை அழிக்கிறார்.

கப்பர்நாகும் செபக்கூடத்திலுள்ள பேய் பிடித்தவன் (மாற் 1:23-27), கெரசாவிலுள்ள பேய் பிடித்தவன் (மாற் 5:1-20), சீரோபெனீ சியப் பெண்ணின் மகள் (மாற் 7:25-30) மற்றும் வலிப்புடைய மகன் (மாற் 9:14-29), ஊமைப்பேய் பிடித்தவன் (மத் 12:22 தொ) மற்றும் மக்தலேன் மரியாள் (லூக் 8:2) முதலான பேய் பிடித்தோரைப்பற்றிய சம்ப வங்களின் பொருள் இதுவே. பெரும்பா லான நிகழ்ச்சிகளில் பேய் பிடித்தலும், நோயும் ஒன்றோடொன்று கலந்துள்ளன (மத் 17:15.18). இதன் விளைவாகச் சில நேரங்களில் பேய் பிடித்தோரைக் குணமாக்கு பவராகவும் (லூக் 6:18; 7:21), சில நேரங்களில் தீய ஆவிகளை விரட்டுபவராக வும் (மாற் 1:34-39) இயேசு குறிப்பிடப்படு கிறார். தெளிவாகக் காணப்படும் பேய் பிடித்ததுபற்றிய சம்பவங்களின்மீது எவ்வித சந்தேகமும் படாமல் (மாற் 1:23-24; 5:6), இந்நாளில் உளவியலுக்கு உட்படுத்தப் படும் நிலைகளை அந்நாளைய எண்ணப்படி, நேரடியாகத் தீய ஆவிகளுக்கே சாற்றிக்கூறும் கருத்தை மனதில் கொள்ள வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, ஒவ்வொரு நோயும், மனிதனின் மேலான சாத்தா னுடைய வல்லமையின் அடையாளம் என் பதை மனதில் கொள்ள வேண்டும் (லூக் 13:11).

நோயினை எதிர் கொள்ளும்போது, இயேசு சாத்தானையே எதிர்கொள்கிறார். அதைக் குணப்படுத்தும்போதுஅவர் சாத் தான்மீது வெற்றி கொள்கிறார். இவ்வுல கின் தலைவர்களாகத் தாங்கள் அமர்த் தப்பட்டுள்ளதாக, தீய ஆவிகள் எண் ணின. இயேசு அவற்றை அழிக்க வந்தார் (மாற் 1:24). தீய ஆவிகளின்மீது அவர் காட்டுகின்ற அதிகாரத்தின் காரணமாக, மக்கள் திரள் ஆச்சரியப்படுகிறது (மத் 12:23; லூக் 4:35 தொ). ''பேய்த்தலைவனாகிய பெயல் செபூபுலை கொண்டு இவன் பேய் களை ஓட்டுகிறான்'' என்று அவரது விரோதி கள் அவரைப் பழித்தனர் (மாற் 3:22). ''அசுத்த ஆவி அவரைப் பிடித்திருக்கவில் லையா?'' (மாற் 3:30 யோவா 7:20;

*8:48-49.52; 10:20-21)*. ஆனால், இயேசு உண்மையான விளக்கத்தை அளிக்கிறார். அவர் கடவுளின் ஆவியைக் கொண்டு பேய்களை ஓட்டுகிறார். கடவுளின் அரசு வந்துள்ளது என்பதை அது நிரூபிக்கிறது *(மத் 12:25-28)*. சாத்தான் தன்னை மட்டுமே வலியவனென எண்ணினான்; ஆனால், அவனைவிட வலியவரால் அவன் இடம் மாற்றப்பட்டான் *(மத் 12:29)*.

அதுமுதல், பேயோட்டுதல்கள் இயேசுவின் பெயரால் நடைபெறும் *(மத் 7:22; மாற் 9:38-39)*. சீடர்களை அவர்களது போதகப் பணிக்கென அனுப்பும்போது, தீய ஆவிகளின் மீதான தனது வல்லமையினையே அவர் அவர்களுக்கு அளிக்கிறார் *(மாற் 7:7.13 இணை)*. சாத்தானுடைய வீழ்ச்சிக்குத் தெளிவான சான்றாக, தீய ஆவிகள் தங்களுக்குக் கட்டுப்படுகின்றன என்பதைக் கண்டுணர்கின்றனர் *(லூக் 10:17-20)*. நூற்றாண்டுகள் தோறும் புதுமைகளுடன் இணைந்த பேய்களை ஓட்டுதலானது, நற்செய்தியைப் போதித்தலுடன் இணைந்த அடையாளங்களில் ஒன்றாக இருக்கும் *(மாற் 16:17)*.

**2. திருச்சபையின் போர்:** உண்மையில், பேய் பிடித்தவர்கள் விடுதலை அடைவது அப்போஸ்தலர் பணியில் மீண்டும் தோன்றுகிறது *(அ.ப. 8:7; 9:11-17)*. ஆயினும், இயேசுவின் தூதர்களுக்கும் தீய ஆவிகளின் தூதர்களுக்கும் இடையில் நிகழும் போராட்டம், அப்போஸ்தலர் பணியில் வேறு வடிவங்களை ஏற்கிறது: மந்திரம் மற்றும் எல்லாவிதமான மூட நம்பிக்கைகளுக்கும் எதிரான போராட்டம் *(அ.ப. 13:8 தொ; 19:18-19)* மற்றும் குறி சொல்ல ஏவும் ஆவிகளில் நம்பிக்கை *(16:16)*, தீய ஆவிகளை ஆராதித்து *(9:20)* அவற்றின் பீடத்திற்கு மனிதரை வரவேற்கின்ற சிலைவழிபாட்டிற்கெதிரான *(1 கொரி 10:20-21)* போராட்டம்; போலி ஞானத்திற்கும் *(யாக் 3:15)*, எல்லா, காலங்களிலும் ஏமாற்றக் கூடிய பேய் பற்றிய, கோட்பாடுகளுக்கும் *(1 திமொ 4:1)*, மிருகத்தின் பணியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் *(திருவெளி 16:13-14)*, ஏமாற்றும் வியத்தகு செயல் செய்கிறவர்களுக்கும், எதிரான போராட்டம். நற்செய்தியின் முன்னேற்றத்தை எதிர்க்கும் ஒவ்வொரு மனித செயலின் பின்னணியிலும் சாத்தானும் அவனது உதவியாளர்களும் உள்ளனர். அப்போஸ்தலருடைய சோதனைகளும் சாத்தானின் தூதருக்குச் சாற்றிக் கூறப்படுகின்றன *(2 கொரி 12:7)*. ஆனால், தூய ஆவியின் துணையால், ஆவிகளை வேறுபடுத்துவதெவ்வாறு என்பதை இப்போது அறிந்துள்ளனர் மனிதர்கள் *(1 கொரி 12:10)*. அவர்கள் பேயினுடைய உலகின் ஏமாற்றத்தக்க கவர்ச்சியால் ஏமாற்றப்படுவதற்கு இனியும் தங்களை அனுமதிப்பதில்லை *(1 கொரி 12:தொ)*. இயேசுவில் இருந்ததைப் போன்று, திருச்சபையானது மரணம்வரை போரில் ஈடுபட்டு, வெல்ல முடியாத நம்பிக்கையில் உறுதியாக உள்ளது. ஏற்கனவே வெற்றி கொள்ளப்பட்ட சாத்தான், இப்போது வரைக்குட்பட்ட வல்லமையை மட்டுமே கொண்டுள்ளது. அவனும், அவனது துணையாளர்களும் அழிந்து போவதைக் காலத்தின் இறுதியானது கண்டிப்பாகக் காணும் *(திருவெளி 20:1 தொ. 7-10)*.

## தீயோன் *(EVIL ONE, THE)*

சாத்தானைக் குறிக்கும் ஒரு மரபுச்சொல். இந்தச்சொல், புதிய ஏற்பாட்டில் பல முறை காணப்படுகின்றது *(மத் 13:19, யோவா 17:15; எபே 6:16; 1 யோவா 2:13-14; 5:18-19)*. பழைய ஏற்பாட்டில் 'நோய்', 'தீமை', போன்ற சொற்கள் இருந்தாலும், இச்சொல்லுக்குச் சரிநிகரான சொல் இல்லை. புதிய ஏற்பாட்டுப்பொருள் மத் *13:19*-இல் தெளிவாகிறது. இதே கருத்துள்ள பகுதிகள் மாற் *4:15*; லூக் *8:12*-இலும் காணப்படுகின்றன.

*மத் 5:37; 6:13; லூக் 11:4; 2 தெச 3:3* போன்ற பகுதிகள் கேள்விக்குரிய பகுதிகளாக உள்ளன. மேலும் மத் 6:13-இல் உள்ள ஆண்டவர் கற்பித்த செபத்தின் இறுதி வேண்டுகோளோடு கேள்வி விவாதிக்கப்

படுகிறது. சில விளக்கவுரைகள் உயர் திணைப் பொருளில் ''தீயோனிடமிருந்து எங்களை விடுவியும்'' என்று கொண்டுள் ளன. வேறு சில விளக்கவுரைகள், அஃறி ணைப்பொருளில், நிகழ்கால மற்றும் இறு திக்காலத்தில் வரும் தீமையைக் குறிக்கும் விதத்தில் ''தீமையிலிருந்து எங்களைவிடு வியும்'' என்று கொண்டுள்ளன.

### தீரியா (TIRIA)

யூதாவின் இனத்தைச்சேர்ந்த எகலலே லின் மகன் *(1 நாள் 4:16)*.

### தீரின் ஏணி (LADDER OF TYRE)

தீரின் ஏணி என்பது தாலமாய்க்கு 20 கி.மீ. வடக்காக உள்ள ஒரு மலையாகும். கலிலேயாவின் மலைகள், கர்மேல் மலை ஆதியற்றை விட, இது உயர்ந்தது என்று யோசிப்பஸ் கூறுகிறார். இக்கூற்றின் விளை வாக அறிஞர் பலர், இது 300 மீட்டர் உயர்ந்தது என்றும் அக்ரா சமவெளியின் வடக்கு வரம்பு என்றும் கூறுகின்றனர். ராஸ் ஏல் - அபியாது, ராஸ் ஏன் - நகூரா, ராஸ் ஏல் - முசெயிரிபே ஆகிய மூன்று மலைகளும் கடலின் பக்கம் படிக்கட்டுப் போன்ற அமைப்பை உருவாக்குகின்றன. வானத்தைப் பின்னணியாகக் கொண்டு தென்புறமிருந்து நோக்கினால் இவ் வமைப்பு தீர் நாட்டுக்கு ஏறிச் செல்லப் பயன்படும் ஏணி போலத் தோன்றும். யோசிப்பஸ் தீரின் ஏணி கர்மேல் மலையை விட உயர்ந்தது என்று கூறுகிறார். ஆனால் கர்மேல் மலைகள் இதைவிட உயர்ந்தவை *(540 மீட்டர்)*. பல கருத்துகள் இருந்தாலும், இந்த ஏணி அமைப்பானது, 6-ஆம் அந்தி யோக்கு அரசனால் சீமோன் மக்கபேயு தலைவனாக நியமிக்கப்பட்ட பகுதியின் வடக்கு எல்லையாக இருந்தது *(1 மக் 11:59; கி.மு. 145)*.

### தீர் (TYRE)

இது பெனீசியாவின் தெற்குக் கோடியி லிருந்த ஒரு நகரம். இங்கே கப்பல் போக்கு வரத்தும் வியாபாரமும் சிறப்பாக நடை பெற்றன.

தீர் நகர் ஒரு சிறு தீவிலே அமைந்திருந் தது. ஈராம் மன்னர் இந்நகரை நாட்டுடன் இணைத்தார். தீர்நகர் கி.மு. 28-ஆம் நூற் றாண்டிலே நிறுவப்பட்டதாகக் கூறப்படு கிறது. மற்ற, பெனீசிய அரசுகளைப் போன்று தீர் அரசன் அபிமில்கியும் எகிப்துநாட்டுப் பார்வோனுடன் உடன்படிக்கை செய்திருந் தார். எகிப்தியர்களின் பலம் குன்றிய காலத்திலே தீர் சுதந்தரம் பெற்று மற்ற, பெனீசிய நகரங்களுக்குள் முதன்மையான தாக விளங்கியது.

சாலமோன் மன்னர் தீர் நகரத் தொழில் நிபுணர்களைத் தம் கட்டட வேலைக்குப் பயன்படுத்தினார். இஸ்ராயேல் நாட்டின் எல்லை தீர் நகரம் வரை பரவியிருந்தது *(2 சாமு 24:7)*. தீரின் அரசனாகிய ஈராம் தாவீதிடம் அரண்மனை கட்டுவதற்குத் தூதர்களையும், கேதுரு மரங்களையும், தச்சர் களையும், கொத்தனார்களையும் அனுப்பி வைத்தார் *(2 சாமு 8:11; 1 நாள் 14:1)*. மேலும் ஈராம் சாலமோனுக்கும் கேதுரு மரங்களை அனுப்பி வைத்தார் *(1 அர 5; 1 நாள் 22:4; 2 நாள் 2:3-18)*. இவற்றிற்கு விலையாக சாலமோன் கோதுமை, எண் ணெய் ஆகியவற்றை அனுப்பிவைத்தார். ஆகாபு அரசன் *(875-852)* தீர் அரசன் எத்பாகலின் மகள் ஈசபேலை மணந்து கொண்டார் *(1 அர 16:31)*. இவளும், இவள் மகளும் யூதாவின் அரசன் யோராமை மணந்து கொண்டவளுமான அத்தலியாவும் பெனீசிய வழிபாட்டை இஸ்ராயேல், யூதா நாட்டில் புகுத்த முனைந்தனர். தீர் நகரின் செல்வமும் கர்வமும் விவிலிய ஆசிரியர் களின் பழித்துரைக்கும் அதன் அழிவைப் பற்றிய முன்னறிவிப்புக்கும் ஆளாக்கின *(எசா 23:1-17; எரே 25:22; 27:3; 47:4; எசே 26:2-29:18; யோவே 3:4-8)*. வரலாற் றிலே பலமுறை படையெடுப்புகளைத் தாங்கிய தீர்நாடு இறுதியாக அலக்சாந்தர் மன்னனால் முறியடிக்கப்பட்டது. இதன் பின் கிரேக்க நாகரிகம் தீர் நகரிலே பரவியது; வியாபாரமும் தொழிலும் பெருகின; சுதந்தரமும் பெற்றது; பின்னர், உரோமை யர் ஆளுகைக்கு உட்பட்டது. மக்கபேயர்

நூல்களில் தீர் நகரம் குறிப்பிடப்படுகின்றது (1 மக் 11:59; 2 மக் 4:18). புதிய ஏற்பாட்டில் பல இடங்களில் இந்நகரம் பற்றிய குறிப்புகள் வருகின்றன (மத் 11:21-22; லூக் 10:13-14; அ.ப. 12:20). இயேசு தீர் நகரின் பக்கம் சென்றார் (மத் 15:21; மாற் 7:24.31). அவரது போதனையைக் கேட்க தீரிலிருந்து மக்கள் வந்தனர் (மாற் 3:8; லூக் 6:17). பவுல் காலத்திலே தீரில் கிறிஸ்தவர்கள் வாழ்ந்தனர். தனது கப்பல் சரக்குகளை இறக்கிக் கொண்டிருந்தபோது பவுல் தீரில் ஏழு நாட்கள் தங்கினார் (அ.ப. 21:3-7). உரோமையர் ஆட்சியிலே தீர் தொழில் வணிப மையமாக விளங்கியது. கி.பி 636-இல் தீர் அரேபியரால் கைப்பற்றப்பட்டது. இன்று தீர், சூர் என்றழைக்கப்படும் சிறு ஊராக விளங்குகிறது.

**தீர்ப்பின் நாள் - (DAY OF JUDGEMENT)**

பிற்காலத்திய யூதமதத்திலும், புதிய ஏற்பாட்டிலும், பழைய மற்றும் புதிய ஊழிக்காலங்களுக்கிடையிலுள்ள இறுதி நாடகத்தின் பிரிக்கும் காட்சியாகும். இது கடவுளின் நேர்மையான தீர்ப்பை அனைத்து மனிதர்மேலும் கொண்டுவருகிறது. உலக வாழ்வில் அவ்வப்போது ஏற்படும் இயற்கையான நிகழ்ச்சிகள் மற்றும் வரலாற்று வளர்ச்சிகள், இறைவனது தண்டனை அல்லது மீட்பின் செயல்களாகக் கருதப்படுகின்றன. ஆனால், இவை இறுதித் தீர்ப்பின் ஆரம்பக் கட்டங்களேயாகும். இறுதி நாளின் தீர்ப்பு என்பது வாழ்வோரையும் இறந்தோரையும் சார்ந்து அமையும், கடவுளால் அல்லது அவரது அதிகாரபூர்வமாய் நியமிக்கப்பட்ட பிரதிநிதியால் செயல்படுத்தப்படும் உலகளாவிய நியாயச் செயல் ஆகும்.

பெரிதும் வளர்ச்சியடைந்த வெளிப்பாட்டு இயல் எதிர்பார்ப்புகள் பழைய ஏற்பாட்டில் காணப்படவில்லை; காணப்படுபவையும் சுருக்கமான குறிப்புகளாகவே உள்ளன. கடவுளுடைய இறுதிக் குறுக்கீடானது, அவரது செயலின் நியாயத்தைக் குறிக்குமாறு, இங்குமங்கும் சட்ட முறைகளில் விளக்கப்படுகிறது. கடவுள் நாடுகளுடனோ, இஸ்ராயேலுடனோ சட்ட முறையான போராட்டம் ஒன்றைக் கொண்டுள்ளார். அவரே வாதி, சாட்சி மற்றும் நீதிபதி ஆகியவற்றின் மொத்த உருவம் (எசா 1:2.18; 3:3தொ; 51:5; 66:15-16; எரே 2; ஓசே 4:1; 5:1.5.9; 12:3; மீக் 1:2; 6:1; செப் 3:8; மலா 3:5; சங் 50; 76; 82; 96; 98). ஆயினும், குறிப்பிடப்பட்டுள்ள 'நாள்' (ஆண்டவரின்நாள்) என்னும் சொல்லின் விளக்கவுரையில், இறைவன் (தன்னுடையவரின் மீட்பிற்காக) தனது பகைவரின் மீது கொண்டுவரும் இயற்கையின் இடையூறுகள் மற்றும் போரின் பயங்கரங்கள் முதலியவையே பெரிதும் நிரம்பியுள்ளன. யோவேல் 3-4-இல் உள்ள நாடுகளுடனான இறைவனது இறுதிக் கால விவாதத்தின் விவரிப்பானது சட்டச் சொற்களால் பெருமளவு நிறைந்துள்ளது. உ.ம்:

''வேற்றினத்தார் அனைவரும்
கிளர்ந் தெழட்டும்;
கிளர்ந்தெழுந்து யோசபாத்து
பள்ளத்தாக்கிற்கு வந்து சேரட்டும்;
ஏனெனில், சுற்றுப்புறத்து
வேற்றினத்தார் அனைவருக்கும்,
தீர்ப்பு வழங்க நான் அங்கே
அமர்ந்திருப்பேன்'' (யோவே 4:12).

மேலும்,
''திரள்திரளாய் மக்கட்கூட்டம்
தீர்ப்பு வழங்கும் பள்ளத்தாக்கில்
திரண்டிருக்கிறது
ஏனெனில் தீர்ப்பு வழங்கும்
பள்ளத்தாக்கில்
ஆண்டவரின் நாள் நெருங்கிவிட்டது''
(யோவே 4:14).

இறந்தோர் உயிர்த்தெழுவர் என்னும் கருத்தைக் கொண்டுள்ள ஒவ்வொரு தனி மனிதருக்குமான தனித்தீர்ப்பு என்னும் கருத்து அக்காலத்தில் இன்னும் வளர்ச்சியடையவில்லை. இக்கருத்து முதன் முதலில் தானி 12:1-3-இல் காணப்படுகிறது. ''இறந்து போய் மண்புழுதியில் உறங்குகிற அனைவருள்ளும் பலர் விழித்தெழுவர்; அவருள் சிலர்

முடிவில்லா வாழ்வுபெறுவர்; வேறு சிலரோ வெட்கத்திற்கும் முடிவில்லா இழி வுக்கும் உள்ளாவர்'' *(தானி 12:2)*.

## தீர்ப்பு (JUDGEMENT )

I. உயிருள்ளோர் மற்றும் மரித்தோரின் நீதிபதியாகக் கிறிஸ்து மீண்டும் வருவதை எதிர் நோக்கியிருப்பது, கிறிஸ்தவ விசுவாச அறிக்கையின் ஒரு பகுதியாக உள்ளது. தனது செயல்களுக்குக் கணக்களிக்க ஒவ் வொரு மனிதனும் அவர்முன் தோன்றுவர். இத்தகைய கருத்தானது சமய வரலாற்றில் அசாதாரணமான ஒன்றன்று. ''இறந்தோரின் தீர்ப்புப்''பற்றி எகிப்தும் கிரேக்கமும் கூட அறிந்திருந்தன. இறுதிநாளில் கிறிஸ்துவின் தீர்ப்புப் பற்றி புதிய ஏற்பாட்டுக் கருத்தை அதனுடைய முந்தைய வளர்ச்சியின் பின்னணி யில் மட்டுமே புரிந்து கொள்ள முடியும். இறைவனின் தீர்ப்பானது ஏற்கனவே பழைய ஏற்பாட்டில் விசுவாசத்தின் ஒரு தலைப்பாக உள்ளது. வரலாறு அதற்குப் பல செயல்முறையான எடுத்துக்காட்டு களை அளித்துள்ளது; இறுதிக்கால இயலா னது அதனுடைய மகிமை மிக்க நிறை வேறுதலை வெளிப்படுத்துகிறது.

II. பழைய ஏற்பாடு:

1. இச்சொல்லின் வேரான ''சாபாத்'' சாதாரணமாக, தீர்ப்பைக் குறிப்பிட்டாலும், தனது மக்களை வழி நடத்துகின்ற ஆளுந ரைக்குறிக்கும் ''சோபேத்'' என்ற சொல் லின் பரந்த பொருளையும் கொடுக்கவல் லது *(தானி 9:12)*. கார்த்தேசின் ''சுபேத் தேங்கள்'' இத்தகையவர்களே. நாட்டைக் கைப்பற்றிய காலம் முதல் அரசர்களின் காலம் வரையிலான இஸ்ராயேலின் நீதிபதி களும் (விடுதலை வீரர்களும்) இத்தகை யானவர்களே *(நீதி 2:16)*. எல்லா ஆளுநர்க ளுடைய முக்கிய கடமைகளில் ஒன்று, சமூகத் தில் நீதியானது நீடித்திருப்பதற்கென நீதி மன்றங்களில் நேரிய தீர்ப்புகளை அளிப்ப தாகும். ஆளுநர்கள் ஒவ்வொரு குழுவி னுடைய உரிமைகளையும் பகுத்து, அவசிய மானபோது, குற்றம் புரிந்தோரைத் தண்டிப்ப தன் மூலம் சரியான அமைப்பை மீண்டும் ஏற்படுத்தவும் அவர்கள் கட்டளைகளைப் பிறப்பிக்க வேண்டும். இந்தத் தீர்ப்பிடும் பணியானது, மோசே மற்றும் அவருக்குத் துணைபுரிந்த முதியோர் *(யாத் 18:13-16)*, சாமுவேல் *(1 சாமு 7:16-17; 8:3)*, அரசர்கள் *(2 சாமு 15:1-6; 1 அர 3:16-28)*, சில உள்ளூர் நடுவர்கள், மற்றும் குறிப்பாகச் சில குருக்கள் *(உப 16:18 தொ; 17:8-13)* ஆகியோரால் செயல் படுத்தப்பட்டது. செயல் முறையிலோ, விதிமுறைகள் விதிக் கப்பட்டிருந்தாலும் தீமைகள் அரிதாகவே எப்போதும் தீர்க்கப்பட்டன; ஒவ்வொரு மனிதனுடைய உரிமைகளும் எப்போதும் மதிக்கப்படவில்லை. மேலும், நீதியானது துல்லியமாகக் கடைப்பிடிக்கப்படவில்லை. ஆனால், மெசியா அரசரின் சித்திரத்திலிருந் தும் *(சங் 71:1-2; எசா 11:3-4; எரே 23:5)*, இறுதிக்கால மக்களின் விவரிப்பிலிருந்தும் *(எசா 1:17,26)* எப்போதுமே மறையாத கருத்தியலான மாதிரி இதுவே. புனித ஆசிரியர்கள் இறைவனுடைய தீர்ப்பைப் பற்றிப் பேசும்போது, இந்த மனித அனுப வத்தினாலே தூண்டப்படுகின்றனர்.

2. வரலாற்றில் இறைவனுடைய தீர்ப்பு:

அ) இறைவனுடைய தீர்ப்பின் மீதான விசுவாசம் எப்போதுமே ஐயத்திற்கு உட்பட்ட தில்லை. ஆண்டவர் உலகையும் குறிப் பாக மனிதரையும் ஆள்கிறார். அவரது வார்த்தையானது சட்டத்தைத் தீர்மானித்து, நீதியின் விதிகளை அமைக்கின்றது. நீதி மான்களையும் பாவிகளையும் முழுமை யாய் அறிந்தவராய், அவர் ''நேர்மையோடு தீர்ப்பிடுகிறார்; உள்ளுணர்வுகளையும் இதய சிந்தனைகளையும் சோதித்தறிகிறார்'' *(எரே 11:20; 17:10)*. நிகழ்ச்சிகளின் மீது அவர் ஆதிக்கம் செலுத்துவதனால், இறுதி யில் நீதிமான்கள் தங்களுடைய துன்பங்களி னின்று தப்பிக்கவும், தீயோர் தண்டிக்கப் படவும் கூடிய வகையில் அவற்றை வடி வமைப்பதில் இறைவன் தவற முடியாது. *(ஆதி 18:23 தொ)*. நீதியைச் செயல்படுத்து பவர் மற்றும் தீங்குகளைச் சரிப்படுத்துபவர் என்ற முறையில், தன்னிச்சையாக அவ ருடன் தொடர்பு கொள்கிறோம் *(ஆதி 16:5;*

*31:49; 1 சாமு 24:16; எரே 11:20).* மேலாண்மை மிக்க நீதிபதி என்ற முறையில் அவரது செயலின் முக்கிய கருத்து இதுவே. பழி தீர்க்குமாறு ஒருவன் தனது நிலைஎ்ய அவரிடம் ஒப்படைக்கும்போது, மீறப்பட்ட உரிமையைச் சரி செய்து பழி வாங்குவதற்காக மட்டுமன்று. சில சங்கீதங்கள் பிறரால் துன்புறும் நீதிமான்கள் இறைவனுக்கு விடுக்கும் வேண்டுதல்களைக் கொண்டுள்ளன *(சங் 9:20; 26:1; 35:1.24; 43:1).* அவர் முழு உலகையும் தீர்ப்பிடுவதன் காரணமாகச் சில நேரங்களில் அவை அவரைப் புகழ்கின்றன *(1 சாமு 2:10; சங் 67:5).* மற்ற நேரங்களில், மனித நீதிபதிகளின் அநீதியினின்று காக்குமாறு அவரை வற்புறுத்துகின்றன *(சங் 82).*

ஆ. வரலாறு எல்லா மக்களும் மனிதரும் உட்பட்டுள்ள இறைத்தீர்ப்பிற்கான உறுதியான எடுத்துக்காட்டுகளை, விசுவாசிக்கு அளிக்கின்றது. யாத்திரையின்போது இறைவன் எகிப்தைத் தண்டித்தாரென்பது, தான் விடுவிக்க விரும்பிய இஸ்ராயேலைக் கொடுமைப்படுத்தியவரைத் தண்டித்தாரெனப் பொருள்படும் *(ஆதி 15:14; ஞான 11:10).* இறைசினத்தின் தெளிவான சான்றுகளாக உள்ள பாலைவனத்தில் இஸ்ராயேலர் அனுபவித்த தண்டனைகள் அனைத்தும், விசுவாசமற்ற மக்களுக்கு எதிரான நீதிமுறையான தண்டனைகளாகும். கானான் நாட்டை இஸ்ராயேலர் கைப்பற்றியபோது கானானியரை அழித்ததானது, இறைத் தீர்ப்பினுடைய கொடூரம் மற்றும் மட்டுடைமை, ஆகியவற்றை எடுத்துக்காட்டும் மற்றொரு எடுத்துக்காட்டாகும் *(ஞான 12:10-22).* பழைய வரலாற்றின் ஆய்வானது, பாவச்சந்ததியின்மேல் விழுகின்ற அனைத்துத் துன்பங்களினுடைய அடித்தளத்தில், இறைநீதிபதியின் தீர்ப்பு ஒன்று இருப்பதைக் காட்டுகிறது. சோதோம் *(ஆதி 15:20; 19:13),* பெருவெள்ளம் *(ஆதி 7:13),* முதல் பாவம் *(ஆதி 3:14-19)* ஆகியவற்றின் அழிவுகளைப் பொருத்தமட்டும் இது உண்மையாகும். எனவே, வரவிருக்கும் உலகிலில்லாமல், இன்றைய வரலாற்றிலேயே, மனுக்குலத்தின் மீது தொங்குகின்ற நிலையான எச்சரிக்கையாக இறைவனது தீர்ப்பு அமைந்திருக்கிறது. எந்தப் பாவியும் இதனின்று தப்ப முடியாது.

### 3. இறுதிக்காலத் தீர்ப்பு

அ) தீய முன்னறிகுறியான தீர்ப்பிற்கான அழைப்பு மற்றும் அதனுடைய உடனடி வருகையின் அறிவிப்பு ஆகியவை, அடிப்படையான இறைவாக்கு மையக்கருத்துக்களின் ஒரு பகுதியாகும். இறைவன் தனது மக்களுடன் வழக்காடத் தொடங்கியுள்ளார். அவர் அவர்களைத் தனது தீர்ப்பு மன்றத்திற்கு வரவழைத்துச் செயல்படுத்தப்போகும் ஒரு தண்டனையை அறிவிக்கின்றார் *(எசா 3:13 தொ).* இக்கருத்தானது தண்டனை பற்றிய அனைத்து இறைவாக்குகளையும் உள்ளடக்குகிறது *(எசா 1:24-25; 5:5-6).* ஆமோசின் காலம் முதல், பயங்கரத்தின் கூறுகளைச் சேர்ப்பதன் மூலம், யாவேயின் நாளின் எதிர்பார்ப்பை மாற்றியமைக்கின்றது *(ஆமோ 5:18 தொ).* பிரமாணிக்கமற்ற துணைவியாகிய இஸ்ராயேலானது, விபச்சாரச் சட்டத்தின்படி தீர்ப்பிடப்படும் *(எசே 16:35; 23:24).* அதனுடைய பிள்ளைகள் அவர்களுடைய நடத்தை மற்றும் செயல்களுக்கேற்பத் தீர்ப்பிடப்படுவர் *(36:19).* இந்த முன்னோக்கு அடக்கமானதாகத் தோன்றிடின், தமது தீர்ப்பை நிறைவேற்றும்போது இறைவன் நீதிமான்களையும் பாவிகளையும் வேறுபடுத்துவார் என்பதை மறக்கக்கூடாது. பாவிகளைத் தண்டிப்பதன் நோக்கமானது நீதிமான்களை மீட்பதாகும் *(எசே 34:17-22).* எனவே அவரது மக்களில், நீதிமான்களில் எஞ்சியோர் தீர்ப்பினின்று தப்பிப்பர். மேலும், இறைவனது தண்டனைகள் இஸ்ராயேலை மட்டும் நோக்கி இருக்க மாட்டா. ஆமோஸ் *(ஆமோ 1:3-2:3)* மற்றும் எசேக்கியேலின் *(எசே.25:1-17)* கண்டிப்பான நீதிமுறையில் காணப்படுவது போல அனைத்து மக்களும் அவற்றிற்கு உட்பட்டுள்ளனர். நாடுகள் மேல்வரும் இத்தீர்ப்பைப் பரந்த வடிவில் எரேமியா சித்தரிக்கிறார் *(எரே 25:30-38).* எதிர்காலப் பேரழிவுகள் பற்றிய இறைவாக்கு

களின் பின்னணியில், வரலாற்று நிகழ்ச்சி களின் எதிர்பார்ப்பு அமைந்துள்ளது. இந்த நிகழ்ச்சிகள் அனுபவத்தின் அளவில், பாவத்தின்பால் இறைவன் கொள்ளும் வெறுப்பை உணர்த்துகின்றன. இவற்றில் மிக முக்கியமானவையாக இருப்பவை, எருசலேமின் அழிவும், இஸ்ராயேலர் சித றிப் போதலுமாகும்.

ஆ) வெளிப்பாட்டு இலக்கிய முறை யைப் பயன்படுத்தும் நாடு கடத்தப்பட்ட தற்குப் பிற்பட்ட கால இறைவாக்கினர்களின், மீட்புப்பற்றிய இறைவாக்குகளில் அவசிய மான முன்னுரையாக இருப்பது இறுதித் தீர்ப்புப்பற்றிய இறைவாக்காகும். இந்த இறைவாக்கானது, உலக முழுவதின் பாவி களையும், இறைவன் மற்றும் அவரது மக்களை நோக்கிய அனைத்துப் பகைமை களையும் உள்ளடக்குகிறது. இறைவன் உலகை நெருப்பினால் தீர்ப்பிடவுள்ளார் (எசா 66:16). யோசபாது பள்ளத்தாக்கில் அவர் அனைவரையும் ஒன்று சேர்ப்பார் (இறைவன் - நீதிபதி). இறுதிக்கால அறு வடை செய்யும் மற்றும் திராட்சைப்பழங் களைப் பிழியும் காலம் இதுவே (யோவே 4:12தொ). காலத்திற்கு ஒரு முடிவை அளித்து, மனுமகனுடைய முடிவில்லா ஆட்சியைத் தொடங்கி வைக்கிற இத்தீர்ப் பினைத் தானியேல் நூல் உருவகச் சொற் களால் விவரிக்கிறது (தானி 7:9-12.26). இறுதிக்காலங்கள் உலகம் மற்றும் வரலாறு ஆகியவற்றைக் கடந்து செல்லுகிறது. நீதி மான்களும் அநீதியானவர்களும் கணக்களிப் பதற்கெனச் சேர்ந்து தோன்றுகின்றனர் என்று ஞானநூல் விவரிக்கிறது (ஞான 4:20-5:23). ஆனால், நீதிமான்கள் இறைவ னால் பாதுகாக்கப்படுவதன் காரணமாக, அப்போது பாவிகள் மட்டுமே பயப்பட வேண்டும் (4:15-16; 3:1-9). மனுமக னுடைய அரசில், உன்னதமானவருடைய புனிதர்கள் பங்கு பெறுவர் (தானி 7:27). இவ்வாறு, வரலாற்றுப்போக்கில் தனிப்பட் டவர்களையும் நாடுகளையும் பாதிக்கின்ற தனிப்பட்ட தீர்ப்புகளில் மட்டும், பாவ மனித இனத்தின் மீதான இறைவனுடைய தண்டனையானது நிறைவேறுவதில்லை. ஆண்டவரது நாள் வரும்போது தீர்ப்பினை உருவாக்குகின்ற இறுதிப் போராட்டத்தில் வரலாறு முடிவுறும்.

இ) நாடு கடத்தப்பட்ட காலத்திற்குப் பிற்பட்ட சங்கீதங்களை வாசிக்கும்போது, இந்த இறைவாக்கு முன்னோக்கை மனதில் கொண்டிருக்க வேண்டியது அவசியமாகும். இறைவனும் நீதிபதியுமானவரிடம் சமர்ப் பிக்கும் அவர்களது வேண்டுகோளானது இறுதித்தீர்ப்பின் காலத்தை விரைவுபடுத் தும் முயற்சியாகவே அடிக்கடி தோன்று கிறது ''உலகின் நீதிபதியே எழுந்தருளும்; செருக்குள்ளோர்களுக்கு உரிய தண் டனையை அளியும்'' (சங் 9:2). ஏழைகளுக் கும் துன்புறுவோருக்கும் இறைவன் நீதி யளிப்பார் என்று உறுதி கொண்டு (சங் 140:3-4), இந்தப் பகிரங்க விசாரணையின் மகிமையைச் சங்கீத ஆசிரியர்கள் முன்ன தாகவே பாடுகின்றனர் (சங் 75:2-11; 96:12-13; 98:7தொ). எனவே, பக்தியற்றவர்களுக்குப் பலியானவர்களும், புறவினத்தார்க்கு அடிமை யானவர்களுமான இஸ்ராயேலர் நம்பிக் கையுடன் தீர்ப்பை எதிர்நோக்கியுள்ளார். ஆயினும், இது ஒரு வெல்லமுடியாத முன்னோக்காகவே உள்ளது. ''தண்டனைத் தீர்ப்புக்கு உம் அடியானை இழுக்காதேயும். ஏனெனில், உயிர் வாழ்வோர் எவரும் உமது திருமுன் நீதிமான் இல்லை'' (சங் 142:2). ஒவ்வொரு மனிதனும் பாவியே. இறைவனுடனான சந்திப்பினை எவ்வாறு பயமின்றி அவன் சிந்திக்க முடியும்? இறைவனுடைய இரக்கமின்றி, யாரால், தீர்ப்பினின்று தப்பிக்க முடியும்?

### III. புதிய ஏற்பாடு:

1. இயேசுவின் காலத்தில், இறுதிக்காலப் பொருளில் புரிந்து கொள்ளப்பட்ட இறை வனுடைய தீர்ப்பின் எதிர்பார்ப்பானது, அதனுடைய செயல்முறையான விவரிப்பு முறையானதாகவும் ஒன்றிணைந்ததாகவும் இல்லாவிடினும், நன்கு நிறுவப்பட்டிருந் தது. தனக்குச் செவி மடுப்பவர்களை வரவிருக்கும் தண்டனையை எடுத்துக்கூறி

அச்சுறுத்தி, மனந்திரும்புதலின் அடையாள மாகத் தனது திருமுழுக்கினைப் பெறுமாறு வலியுறுத்தும் போது, திருமுழுக்கு யோவான் இத்தீர்ப்பை எடுத்துக் கூறுவதாக நற்செய்தியின் தொடக்கம் காட்டுகிறது (மத் 3:7-12 இணை). உலகில் இயேசு தோன் றிய தருணத்திலிருந்து இறுதிக்காலங்கள் தொடங்கிவிட்டபடியால், இயேசு மற்றும் அப்போஸ்தலர்களின் போதனை, தீர்ப் பைப்பற்றி மேற்கூறப்பட்ட கருத்துகளுக்கு நெருங்கியுள்ளதாயினும், சில முக்கிய மாற் றங்களைச் செய்கிறது. இறுதிக்காலத் தீர்ப் பானது முழுமையாக நிறைவேற்றப்பட கிறிஸ்துவின் மகிமை மிக்க வருகைக்காகக் காத்திருக்க வேண்டியிருந்தாலும், ஏற்க னவே இங்கு பிரசன்னமாகவுள்ளது.

*2. தீர்ப்புப் பற்றிய நற்செய்தி விவரிப்பு:*

*அ) ஒத்தமை நற்செய்திகளில்:* தனது போதனையில் இயேசு, இறுதித் தீர்ப்புப் பற்றி அடிக்கடி குறிப்பிடுகிறார். அப்போது அனைத்து மனிதரும் தங்களுடைய வாழ் வைப்பற்றிய கணக்கு அளிக்க வேண்டும் (*மத் 25:14-30*). வெளிவேட மறைநூல் அறிஞர்கள் (*மாற் 12:40*), இயேசுவின் போதனைக்குச் செவிமடுக்காத கலிலேயாக் கடலைச்சுற்றியுள்ள நகரங்கள் (*மத் 11:20-24*), அவரது போதனையால் மனந் திருந்தாத விசுவாசமற்ற தலைமுறைகள் (*12:39-42*) மற்றும் அவரது பிரதிநிதிகளை ஏற்காத நகரங்கள் (*10:14-15*) ஆகியவற்றிற்குப் பயங்கர தண்டனை காத்திருக்கிறது. அவை பெறும் தீர்ப்போடு ஒப்பிடும்போது சோதோம், கொமோரா-வின் மீதான தீர்ப்பு ஒன்றுமற்றதாக இருக்கும்; நரகத் தீர்ப் பினில் அவர்கள் துன்புறுவர் (*23:33*). இந்த எச்சரிக்கைகள் இறைவனுடைய தீர்ப்பின் முக்கிய நோக்கமாகிய, நற்செய்தியின்பால் மனிதனின் மனப்பான்மையை முனைப் பாக எடுத்துக்காட்டுகின்றன. தனது அய லான்பால் மனிதனின் மனப்பான்மையும் அவ்வாறே முக்கியமானது. மோசேயின் சட்டத்தில், ஒவ்வொரு கொலையாளியும் மனித தீர்ப்பிற்கு உட்பட்டுள்ளான். நற் செய்தியின் சட்டப்படி, ஒருவன் கொலையை விட மிகக் குறைவான குற்றத்திற்கு உட்பட் டிருந்தாலும், நரக ஆபத்தில் உள்ளான் (*மத் 5:21-22*). ஒவ்வொரு அவதூறான சொல்லுக் கும் கணக்குக் கொடுக்கப்பட வேண்டும் (*12:34-30*). தனது அயலாரைத் தீர்ப்பிட்ட வாறே ஒவ்வொருவரும் தீர்ப்பிடப்படுவர் (*7:1-5*). மனுமகன் தீர்ப்பளிக்கும் காட்சி யின் விவரிப்பு (*25:31-46*), ஒருவருக்கொரு வர் காட்டிய அன்பு அல்லது அக்கறையின் மைக்கேற்ப மனிதர் இறை அரசிற்குள் ஏற்றுக் கொள்ளப்படுவதையும் அல்லது முடி வில்லாத் தண்டனைக்குக் கையளிக்கப்படுவ தையும் காட்டுகிறது.

மற்ற எல்லாவற்றையும்விட இறைத் தீர்ப்பை அழைக்கின்ற குற்றம் ஒன்று உண்டு. மனிதனின் விசுவாசமின்மையா னது, நீதித் தீர்ப்பின் போலிக்காட்சியில் தனது உச்சியை அடைகின்ற இயேசுவின் பாடுகள் மற்றும் மரண தண்டனையே அது (*மாற் 14:63; லூக் 24:20; அ.ப. 13:28*). இந்த அநீதியான விசாரணையின்போது, நீதியுடன் தீர்ப்பிடக்கூடியவரிடம் இயேசு தன்னையே கையளிக்கிறார் (*1 பேதுரு 2:23*). மீண்டும் அவரை உயிர்த்தெழச்செய்த தன் மூலம், அவருக்குரியதாக உள்ளதை இறைவன் மீண்டும் அவருக்கு அளிக்கிறார். ஆனால், அந்த அநீதியான தண்டனை நிறைவேற்றப்படுதல், பாவ மனுக்குலத் திற்கு எதிரான இறைவனுடைய தண்டனை யைத் தன்னுடன் கொண்டு வந்துவிட்டது. மத்தேயுவின் விவரிப்பில் இயேசுவின் மர ணத்தினுடைய விவரமானது, பழைய ஏற் பாட்டு இறுதிக்கால இயலில் உள்ள தீர்ப்புப் பற்றிய பாரம்பரிய விவரத்துடன் ஒத்திருப் பது சுட்டிக்காட்டப்படுகிறது (மத் 27:45.51 தொ). எனவே, இயேசுவின் மரணமானது உலகின் மீதான தீர்ப்பின் நேரமாகும். பின்வரும் வரலாறானது இறுதிநாள் வரை யிலும் இத்தீர்ப்பை வெளிப்படுத்துவதை விட வேறெதையும் செய்வதில்லை. இயேசுவி னுடைய சான்றின்படி, தீர்ப்பானது, குற்றத்தில் முதன்மையானவர்களாக உள்ள ''யூதேயாவில் இருப்போரை'' முதலில் பாதிக்கும் (*24:15* தொ). ஆனால் அது,

நீதிபதியாக வரவிருக்கும் மனுமகனின் இறுதி வருகையினுடைய பீடிகையாகவும் அடையாளமாகவும் மட்டுமே இருக்கும் (*24:29* தொ). உலகத்தினுடைய பாவத்தின் பலிப்பொருளாகத் தண்டிக்கப்பட்டவரே, பாவ உலகின்மீது கடுமையான கண்டனத்தை அறிவிப்பார்.

**ஆ. யோவானின் நற்செய்தி:** இயேசுவின் காலமாகிய வரலாற்றின் மையத்தில் இடம் கொண்டுள்ள இத்தீர்ப்பை வலியுறுத்தும் இறையியலை விரிவாக்குகிறது இந்நற்செய்தி. மனுமகனாகிய இயேசுவை இறுதி நாளில் நீதிபதியாகத் தந்தையே ஏற்படுத்தியுள்ளார் என்ற உண்மையை யோவான் அறியாமலில்லை (*யோவா 26-30*). ஆனால் உண்மையில் தந்தை மகனை உலகிற்கு அனுப்பிய தருணத்திலிருந்தே தீர்ப்பானது பிரசன்னமாகியுள்ளது. அவர் உலகைத் தீர்ப்பிட அனுப்பப்படவில்லை; மாறாக, அதனைக் காக்கவே வந்தார் (*3:17; 8:15-16*). ஆனால், இயேசுவின்பால் ஒவ்வொருவரும் கொண்டிருக்கும் மனப்பான்மைக்கேற்ப, தீர்ப்பானது உடனடியாகப் பிரசன்னமாகியுள்ளது. விசுவசிப்பவன் எவனும் தீர்ப்பிடப்பட மாட்டான். விசுவசிக்காதவன் ஒளியை மறுப்பதன் காரணமாக ஏற்கனவே தீர்ப்பிடப்பட்டு விட்டான் (*3:18* தொ). எனவே தீர்ப்பானது, இறைத்தீர்ப்பு என்பதைவிட, மனித இதயங்களில் மறைந்திருப்பவைகளின் வெளிப்பாடு என்பதே மேல். தீய செயல் புரிவோர் ஒளியைவிட இருளையே தேர்ந்து கொள்வர் (*3:19-20*). தங்களுடைய தெளிவான காட்சியால் தற்பெருமை கொள்கின்ற இந்தத் தன்னிறைவான மனிதரே தங்களைக் குருடாக்கிக் கொள்ளுமாறு அனுமதிப்பது மட்டுமே இறைவனின் செயலாக உள்ளது. ஆனால், உண்மையில் செயல்படுவதன் மூலம், அவர்கள் ஒளிக்கு வருவதற்கென (*3:21*) மற்றவர்களுடைய கண்களைக் குணமாக்க இயேசு வருகிறார் (*9:39*). மனித இதயங்களில் ஏற்கனவே பிரசன்னமாகியுள்ள இப்பிரிவினை, இறுதித்தீர்ப்பானது யாவரும் பார்க்க வெளிப்படுத்தும்.

இயேசுவின் பாடுகள் மற்றும் மரணத்தினுடைய பொருளைப் பொறுத்தமட்டில் யோவான் எவ்விதத்திலும் கவனக் குறைவுள்ளவராக இல்லை. அவரது நூலில், அவரது மீட்புப்பணிக்கு அளிக்கப்பட்ட அதே அளவானது அவரது பாடுகளுக்கும் அளிக்கப்பட்டுள்ளது. சாத்தான் மற்றும் தீய உலகின் கருவிகளாக உள்ள யூதர்களை ''நீதியுடன் தீர்ப்பிடுமாறு'' செய்ய வீணாக முயல்கிறார் (*7:24*). உண்மையில், மரணத்திற்குத் தீர்ப்பிடப்பட அவர் பிலாத்துவிடம் கையளிக்கப்படுவார் (*19:12-16*). சிலுவையில் உயர்த்தப்படுவது மனுமகனுடைய மாட்சிமை மிக்க மறு வருகையை ஒரு வகையில் முன்னுரைப்பது போன்று, இயேசுவின் மரணமானது உலகின் தீர்ப்பையும், சாத்தானுடைய தோல்வியையும் முன்னடையாளமாக உணர்த்தும் (*12:31*. தனது மரணம் தொடங்கி, தனது விசுவாசிகளுக்கு ஆவியை அனுப்ப அவரால் முடியும். உலகின் அரசன் ஏற்கனவே தீர்ப்பிடப்பட்டு விட்டார். அதாவது தண்டிக்கப்பட்டுவிட்டார் என்ற உண்மைக்குச் சான்று பகர்வதன் மூலம் ஆவியானவர் உலகை நிலையாகத் திகைப்பூட்டுவார் (*16:8.11*). இவ்வழியாகவே இறைவாக்கினரால் முன்னுரைக்கப்பட்ட இறுதிக்காலத் தீர்ப்பானது நிறைவேற்றப்படுகிறது. கிறிஸ்துவின் காலம் முதல், தீர்ப்பானது தொடர்ந்து பிரசன்னமாகியுள்ள, நிறைவேற்றப்பட்ட உண்மையாகும். அதன் இறுதி முழுநிறைவு மட்டுமே இனி எதிர்பார்க்கப்படுகிறது.

**2. அப்போஸ்தலிக்கப் போதனையில் தீர்ப்பு**

அ. அப்போஸ்தலர் பணியிலிருந்து திருவெளிப்பாடுநூல் வரை உள்ள அனைத்து நூல்களிலும் மறையுரைகளில் காணப்படும் அப்போஸ்தலப் போதனையின் அனைத்துச் சான்றுகளும், மனமாற்றத்திற்கான அழைப்புடன் கூடிய தீர்ப்பினுடைய அறிவிப்பிற்கு முக்கிய இடத்தை அளிக்கின்றன. இறந்தோரிடமிருந்து உயிர்ப்பித்த கிறிஸ்துவின் மூலமாக உலகின் தீர்ப்பிற்கென இறைவன் ஒரு நாளைக் குறித்துள்ளார் (*அ.ப. 17:31; 24:25; 1 பேதுரு 4:5; எபி.6:2*). மனமாற்றத்திற்குப்

பின்னரும் இந்தத் தீர்ப்பு தொடர்ந்து உடனடியாக வரும் தன்மை (யாக் 3:9: ''நடுவர் வாசலிலே நிற்கிறார்'') முறையான மனப்பான்மையைக் கட்டளையிடுகிறது. ஏனெனில், தீர்ப்பானது தீமை புரிவோருக்கு விரிவாக்கப்படுவதற்கு முன்னர், இறைவனுடைய இல்லத்தினின்று தொடங்கும் (1 பேதுரு 4:17). இறைவன் ஆளைப்பார்த்துத் தீர்ப்புக் கூறுவதில்லை. அவரது செயல்களுக்கேற்பத் தீர்ப்பிடுவார் (1 பேதுரு 1:17; உரோ 2:6). இது பாவிகளை நடுங்கவைக்க வேண்டிய அச்சமூட்டும் முன்னோக்காகும் (எபி 10:27-31; உரோ 2:12). மணமாகாமல் கலவிமுறையில் ஈடுபடுவோரும், விபச்சாரம் புரிவோரும், பயங்கர தண்டனைக்கு உட்படுத்தப்படுவர் (எபி 13:4). பக்தியற்ற போலி போதகர்கள், வீழ்ச்சியுற்ற வான தூதர்கள் (2 பேதுரு 2:4-10), கொடிய தலைமை அதிகாரிகள் (1 திமொ 3:6), விதவை நிலையைக் கடைப்பிடிக்காத நேர்மையற்ற விதவைகள் (5:12) முதலியோர் தீமையின் பக்கம் சார்ந்தவராவர். சினத்தின் நாளில், இறைவனுடைய நேரிய தண்டனையானது வெளிப்படுத்தப்படும் (உரோ 2:5). மனிதருடைய மறைவானசெயல்களையும் இறைவன் தீர்ப்பிடுவதால் (2:16; 1 கொரி 4:4), ஓடி விடுவதென்பது இயலாத ஒன்று (உரோ 2:3). அப்போது உயிர்வாழ்வோருக்கும் இறந்தோருக்கும் நடுவராய் இருக்கக் கூடியவர் கிறிஸ்துவே (2 திமொ 4:1; உரோ 2:16; திருவெளி 19:11). திருவெளிப்பாட்டு நூல் இறுதித்தீர்ப்புப் பற்றி, பயங்கர காட்சியை விவரிக்கிறது (திருவெளி 20:12-13; 11:18; 16:5...). இதனுடைய வரலாற்றுப் பீடிகை இறைவனுடைய பகை நகராகிய பாபிலோனின் தீர்ப்பில் காணப்படுகிறது (14:8; 17:1; 18:2-24). தங்களது நிலையைத் தீர்ப்பிடும்படியான வேதசாட்சிகளில் வேண்டுதலுக்குப் பதிலளிக்கும் விதமாக (6:9-10; 18:20), தனது ஊழியர்களின் இரத்தத்திற்காக இறைவன் பாபிலோனைப் பழி வாங்குவார் (19:2). இறுதியாக, காலத்தின் முடிவில் தங்களது செயல்களின் மதிப்பை நிரூபிப்பதற்கென அனைத்து மனிதரும் நெருப்பிற்கு உட்படுத்தப்படுவர் (1 கொரி 4:5; 2 பேதுரு 3:7). இந்தச் சோதனையின் விதிமுறை என்னவாக இருக்கும்? அதனை அறிந்திருப்பதாக உரிமை கொள்வோர்க்குரிய விதிமுறையானது மோசேயின் சட்டமாகும் (உரோ 2:12). மோசேயின் சட்டத்தை அறியாதவர்கள் இயற்கையின் சட்டத்தால் தீர்ப்பிடப்படுவர் (2:14-15). ஆனால், நற்செய்தியை ஏற்றுக்கொண்டவர்கள் விடுதலையாக்கும் சட்டத்தால் தீர்ப்பிடப்படுவர் (யாக் 2:12). தனது அயலாரைத் தீர்ப்பிட்டவர்களுக்குத் துரதிருஷ்டம் காத்திருக்கிறது (உரோ 2:1 தொ.) ஏனெனில், மற்றவரைத் தீர்ப்பிட்ட அதே கடுமையான அளவையினால், அவனும் தீர்ப்பிடப்படுவான் (14:10 தொ; யாக் 2:13; 4:1தொ; 5:12).

ஆ) இறுதித்தீர்ப்புப் பற்றிய இவ்விவரங்களின் உருவ அமைப்பிற்கு இடம் ஒதுக்க வேண்டும். ஆனால் மிக முக்கிய வினாவானது, தீர்ப்பு விவரிக்கப்பட்டிருக்கும் முறையில், அதிலிருந்து யார் தப்பிக்க முடியும் என்பதாகும். யார் மீட்கப்படுவர்? இறைவனின் சீற்றமானது அனைத்து மனுக்குலத்தையும் நோக்கித் திருப்பப்பட்டுள்ளதாக வரலாறு வெளிப்படுத்துகிறது. அவர் முன்னிலையில் மாசற்றவர் எவருமில்லை (உரோ 3:10-20; 1:18). முதல் மனிதனுடைய வீழ்ச்சியின் விளைவாகப் பாவம் உலகில் நுழைந்த நாள்முதல் தண்டனைக்குத் தகுதியுடையவராக அனைத்து மனிதரும் தீர்ப்பிடப்பட்டுள்ளனர் (5:16.18). தனது சொந்தத் தகுதிகளால் மட்டுமே எவரும் தப்பிக்க இயலாது. ஆனால் ஊனுடலெடுத்த இறைமகனாகிய இயேசு, நமது பாவங்களின் விளைவாக இறந்தபோது, நம்மைப் பாவத்தின் நுகத்தடியினின்று விடுவிக்க, இறைவன் ஊனுடலின் பாவத்தைத் தீர்ப்பிட்டார் (8:3). இப்போது, இறைவனுடைய நீதியானது வெளிப்படுத்தப்படுகிறது. இது தண்டிக்கின்ற நீதியல்ல; மாறாக, ஏற்புடைமையையும் மீட்பையும் கொண்டு வருகின்ற நீதியாகும் (3:21). எல்லா மனிதரும் தீர்ப்பிற்கு உரியவராயினும், இயேசு கிறிஸ்துவில் விசுவாசம் கொண்டால் மட்டுமே,

பலன் கருதாது நேர்மைப்படுத்தப்படுவர் (3:24 தொ). இனிமேல் அவர்கள் தண்டனைக்குரியவர்களல்லர் (8:1). அவர்களை இறைவனே ஏற்புடையவராக ஆக்கினால், யார் அவர்களைத் தண்டிக்க முடியும்? (8:34) பழைய சட்டத்தில் மோசேயின் பணியானது தண்டிக்கின்ற ஒன்றாய் இருந்தது; ஆனால், நற்செய்தியினுடைய ஊழியர்களுடைய பணியோ அருள் (2 கொரி 3:9) மற்றும் ஒப்புரவினுடைய (5:19 தொ) ஒன்றாகும். தீர்ப்பின் நாளில் நமது நம்பிக்கையானது (1 யோவா 4:17), கிறிஸ்துவில் ஏற்கனவே வெளிப்படுத்தப்பட்ட இறைவனின் அன்பினின்று வருகிறது. ஆகவே நாம் எதற்கும் அச்சப்பட வேண்டியதில்லை. தீர்ப்பின் அச்சுறுத்தலானது இப்போது தீயோர்மீது மட்டுமே உள்ளது. இயேசு தீர்ப்பிலிருந்து நம்மை விடுவிக்கவே வந்துள்ளார்.

## தீர்ப்பு வழங்கும் பள்ளத்தாக்கு (DECISION, VALLEY OF)

எருசலேமை அழிக்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்த புறவின நாடுகளின் மேல் யாவேயின் தீர்ப்பு வழங்கப்படும் இடமாகும். (யோவே 4:14; காண்க: எசே 38-39; செப் 3:8). இது யோவேல் நூலில் வருகின்ற பெயர்; யோசபாது பள்ளத்தாக்கின் மறு பெயர். யோசபாது என்பதற்கு ''யாவே தீர்ப்பிடுகிறார்'' என்பது பொருள். கிதரோன் பள்ளத்தாக்குதான் இத்தீர்ப்பு வழங்கும் பள்ளத்தாக்கு என்பது பாரம்பரியக் கருத்தாகும்:

## தீலோன் (TILON - கொடை)

யூதா இனத்தைச் சேர்ந்த சீமோனின் மகன் (1 நாள் 4:20).

## தீவிரவாதி (ZEALOT)

1. இந்தச் சொல், தற்போது குறிப்பாக, மிகவும் தீவிரமான, போரிடும் தன்மையுடைய கிளர்ச்சியாளர்களைக் குறிக்கும். விவிலியத்தில் வெளிநாட்டினருக்கு எதிராக, குறிப்பாக உரோமையர்களின் ஆட்சிக்கு எதிராகப் போராடிய குழுவினரைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. இது இன்னும் பரந்த பொருளைக் கொண்டதாக இருக்கின்றது. இந்தச் சொல் லூக் 6:15; அ.ப 1:13-இல் சீமோன் பேதுருவிலிருந்து, கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலர்களில் ஒருவரான தீவிரவாதி எனப்படும் சீமோனை வேறுபடுத்திக் காட்டுவதற்காகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. அரமேயிக் மொழியில் உள்ள ''கன் அனா'' என்ற சொல் ''கானானேயன் சீமோன்'' என்று மத் 10:4; மாற் 3:18-இல் கட்டிக் காத்து வரப்படுகின்றது. இவர்கள் தங்களையே இறைவனுடைய கையில் ஒப்படைத்து, இறைவனுடைய நீதிக்கும், சிலைவழிபாட்டிற்கு எதிரான தீர்ப்புக்கும், பதிதப் போதனைக்கும், இறைவனுடைய விருப்பத்திற்கு எதிராக அவருடைய சட்டங்கள் மாற்றப்படும்போதும் இவை அனைத்திற்கும் எதிராக நின்று கடவுளுக்காகப் போராடுவதற்காகத் தங்களையே அர்ப்பணித்தவர்கள் ஆவர். கடவுளுடைய பெயரை வீணாகச் சொல்பவன் தப்பிக்கவே முடியாது. ஏனெனில் ஆயிரமாயிரம் பேர் அவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சட்டத்தின் தீவிரவாதிகள் தங்களுடைய மூதாதையர்களின் சட்ட நிறுவனத்திற்குக் கடுமையான காவல் புரிந்து வருபவர்கள்; அதற்குத் தீங்கு இழைப்பவர்களிடம் இரக்கமற்ற முறையில் நடந்து கொள்வார்கள். இயேசு பணம் மாற்றுபவர்களை ஆலயத்திலிருந்து விரட்டி அடித்த போது அப்போஸ்தலர்கள் அவர் தீவிரவாதிபோல நடந்து கொண்டதாக நினைத்தார்கள் (யோவா 2:17; சங் 69:9). பவுல் திருச்சபையைத் துன்புறுத்தியது சட்டத்தின் மீது அவருக்கு இருந்த ஆர்வத்தில் வேரூன்றி இருந்தது.

2. **அடிமைத்தனத்திற்குப் பிறகு இருந்த யூதத்துவத்தில்:** அடிமைத்தனத்திற்குப் பிறகு வாழ்ந்த யூத பாரம்பரியத்தின் தீவிர ஆர்வத்தின் முன்னோடிகளாகச் சீமோன், லேவி, பினகாசு, எலியா போன்றவர்கள் திகழ்ந்தனர். இது குருக்கள் பாரம்பரியத்தைச் சேர்ந்ததாகும். பினகாசு, லேவியின் வழி வந்த ஒரு குரு. எலியா, பினகாசின் பிரதி

என்று இராபிகளின் பாரம்பரியம் அடையா ளம் காட்டுகின்றது.

அ. சிமியோனும் லேவியும்: இவர்கள் யாகோபின் புதல்வர்கள். தீனா என்ற தங்களுடைய சகோதரியைச் செக்கேமைச் சேர்ந்த ஒருவன் கற்பழித்து விட்டதற்காக, அவ்வூரைச் சேர்ந்த பலருடைய தலைகளைச் சீவிவிட்டனர் (ஆதி *34:4* தொ). ஏறக் குறைய கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் நடந்த இந்தக் கதையை மனத்திற் கொண்டு இஸ்ராயேலர்கள் புறவினத்தா ருடன் திருமணம் செய்து கொள்வதைத் தடுப்பதற்கான முயற்சிகள் செய்தனர். ''இதிலிருந்து இஸ்ராயேலின் மகளிர் தீட்டுப் படுத்தப்படக்கூடாது; செக்கேமைச் சேர்ந்த எல்லா மனிதர்களும் வாளால் மடிவார்கள் என்று வானகத்தில் தீர்ப்பாகி விட்டது. ஏனெனில் இஸ்ராயேலுக்கு அவமானத்தை உண்டு பண்ணி விட்டார்கள். கடவுள் அவர்களை யாக்கோபின் புதல்வர்களின் கையில் அகப்படுமாறு செய்து, அவர்க ளுடைய தலைகள் வெட்டப்படுமாறு செய் தார். மேலும் இஸ்ராயேலில் எந்தக் கன்னி யும் மாசுபடுத்தப்படக் கூடாது என்று அவர்கள் வழியாக ஆண்டவர் ஆணையும் இட்டார். இஸ்ராயேலில் எவனாவது தன் னுடைய மகளைப் புறவினத்தாருக்குக் கொடுக்க முன் வந்தால் அவன் சாவது நிச்சயம். அவனைக் கல்லால் எறிந்து கொல்ல வேண்டும். ஏனெனில் இஸ்ரா யேலுக்கு அவன் அவமானத்தைக் கொணர்ந் திருக்கிறான். அந்தப் பெண் நெருப்பைக் கொண்டு எரிக்கப்பட வேண்டும். ஏனெனில் தன் தந்தையின் வீட்டிற்கு அவமா னத்தைக் கொடுத்துவிட்டாள். இஸ்ராயேலி லிருந்து அவளை அடியோடு அழித்துவிட வேண்டும். விபச்சாரியோ, அசுத்தமான பெண்ணோ இஸ்ராயேலில் இருக்கக் கூடாது. ஏனெனில் இஸ்ராயேல் கடவுளுக் குப் புனிதமானது எனப்படும். அதை மாசு படுத்துகின்ற ஒவ்வொருவனும் சாவானாக. அவனைக் கல்லால் எறிந்து கொல்வார் களாக. ஏனெனில் அவன் தன்னுடைய விதையை மோலக்கிற்குக் கொடுத்துவிட் டான்.... பாருங்கள்! செக்கேமைச் சேர்ந்த வர்கள் யாகோபின் இரு புதல்வர்களின் கையில் அகப்பட்டுக் கொடுமைப்படுத்தப் பட்டு வெட்டப்பட்டார்கள்! லேவியின் இனம் குருத்துவத்திற்காகத் தேர்ந்தெடுக்கப் பட்டது. அவருடைய ''வித்து'' இஸ்ரா யேலுக்கு எதிராக எழுந்தவர்கள் மீது நீதியும், தீர்ப்பும், பழிதீர்த்தலும் வழங்குவதில் ஆர் வம் கொண்டிருந்தார். தன்னுடைய வாழ் நாளில் அவன் செய்தநேர்மையான செயல்கள் அனைத்தும், ஆயிரம் ஆண்டுகள் வரைக் கும் எழுதிவைக்கப்பட்டிருக்கும். அது அவ னுக்கும் அவனுடைய சந்ததியாருக்கும் வரும்'' என்று யூபிலிநூல் கூறுகிறது.

மற்றொரு வட்டாரத்தில் லேவிக்குப் பதிலாகச் சிமியோனுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. பக்தியுள்ள கைம் பெண்ணான யூதித் பின்வருமாறு மன்றாடு கின்றாள்: ''என்தந்தை சிமியோனின் கடவு ளான ஆண்டவரே! கெட்ட ஆசையால் உந்தப்பட்டு ஒரு கன்னிப் பெண்ணைக் கற்பழித்த புறவினத்தாரைப் பழிவாங்கும் பொருட்டு, சிமியோனுக்கு நீர் ஒரு வாளைக் கொடுத்தீர்! அஃதோடு ஆர்வத் துடன் உம் பக்கம் நின்ற உம் ஊழியர்களுக்கு அப்புறவினத்தாரின் மனைவியரைக் கொள் ளைப் பொருளாகவும், அவர்கள் புதல்வி யரை அடிமைகளாகவும், அவர்களது சொத்தை யெல்லாம் சொந்தமாகவும் தந்தருளினீர். அதுபோலக் கைம்பெண்ணான எனக்கு நீர் உதவி செய்ய வர வேண்டும் என்று உம்மைக் கெஞ்சி மன்றாடுகிறேன். முந்தைய வற்றைச் செய்து முடித்தவர் நீரே! ஒன்றுக் குப்பின் ஒன்றாகத் திட்டமிட்டவரும் நீரே! உம் திட்டங்களே நிறைவேறி வந்துள்ளன'' (யூதி *9:2-4*).

ஆ. பினகாசு: ''அக்காலத்தில் சித்திமிலே தங்கியிருந்த இஸ்ராயேலர் மோவாபியரின் புதல்வியரோடு விபசாரம் செய்யத் தொடங்கினர்... இதோ! எல்லோரும் பார்க்க ஓர் இஸ்ராயேலன் மிதியானியப் பெண் ணான ஒரு வேசியின் வீட்டிலே நுழைந் தான். குருவாகிய ஆரோன் புதல்வன்

எலயாசருடைய மகனான பினகாசு அதைக் கண்டு, நடுச்சபையிலிருந்து எழுந்து, ஒரு கட்டாரியைக் கையில் ஏந்தி, விபசாரம் நடக்கும் வீட்டில் அவனைப் பின் தொடர்ந்து போய், அவனையும் அந்தப் பெண்ணையும் மறைவிடத்திலே குத்திக் கொன்று விட்டான். அதனாலே இஸ்ராயேலர் மீது விழுந்திருந்த வாதை நீங்கிப் போயிற்று'' *(எண் 25:1-8)*.

இச்செயலின் தீவிரவாத இறையியலை விளக்கும் பகுதி உடனடியாகத் தரப்படுகிறது. அப்போது ஆண்டவர் மோசேயை நோக்கி,.... ''நாமே நமது கடுங்கோபத்தில் இஸ்ராயேல் மக்களை வேரறுக்க இருக்கையிலே.... பினகாசு நம்மை அப்படிச் செய்ய விடாமல், தானே அவர்கள் மேல் கோபங் கொண்டவனாய் அவர்களைக் கண்டித்ததே நல்லது. அவன் தன் பக்தி வைராக்கியத்தினால் இஸ்ராயேலர் மேல் நமக்கு உண்டான கோபத்தைத் தணித்தான். ஆதலால் இதோ நமது உடன்படிக்கையின் சமாதானத்தை நாம் அவனுக்கு அளித்துள்ளோம். அவன் தன் கடவுளுக்காகப் பக்தி வைராக்கியம் காண்பித்து இஸ்ராயேல் மக்களுடைய துரோகத்திற்குப் பரிகாரம் செய்தமையால் அவனுக்கும் அவனுக்குப் பின் அவன் சந்ததிக்கும் நித்திய குருப்பட்டத்துக்குரிய உடன்படிக்கையை நிறுவுகின்றோம்'' *(எண் 25:10-13)* என்றார். தீவிர ஆர்வம் என்ற கருத்தானது, கடவுளைப் பொருத்தவரையில் அவரது சினம் தணிப்பதற்காகச் செய்யும் செயல் அல்லது பாவத்திற்காகச் செய்யும் பரிகாரத்தைக் குறிக்கின்றது. இல்லாவிட்டால் தீவிரவாதிகளின் வெறித்தனத்தையும், கொடூரத்தையும் விளக்குவது கடினம். பினகாசு எல்லோருக்கும் முன் மாதிரியான ஒரு தீவிரவாதி. மக்கபேயர்களுக்கு முந்திய காலத்தில், சீராக்கு நூல் ஆசிரியர் என்பவர், மோசே, ஆரோன் ஆகியவர்களைப் போற்றிப் புகழ்ந்த பின் பின் வருமாறு எழுதுகின்றார்:

''எலயாசர் மகன் பினகாசு என்பவர் தெய்வபயத்தில் ஆரோனைக் கண்டொழுகினமையால், மகிமையில் மூன்றாவதாக உயர்ந்திருக்கிறார். அவர் மக்களின் மரியாதையில் நின்றார். இஸ்ராயேலுக்காக அவர் காண்பித்த ஆன்மீக நற்குணத்தாலும் சுறுசுறுப்பாலும் கடவுளுக்கு விருப்பமானவரானார். ஆதலால் கடவுள் அவருடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டார்; குருத்துவத்தின் பெருமை அவருக்கும் அவர் சந்ததியாருக்கும் எப்போதும் இருக்கும்படி, குருக்களுடையவும் மக்களுடையவும் தலைவராக அவரை நிறுவினார்'' *(சீரா 45:23-24)*.

முதல் மக்கபேயர் நூலில் ''பினகாசு கடவுள்பால் மிக்க பற்றுக் கொண்டிருந்தமையால்'' மத்தத்தியா, அவர்களுடைய மக்கள் ஆகியவர்களின் முதுபெரும் தந்தையாக அழைக்கப்பட்டார் *(1 மக் 2:54)*. சங் 106-பினகாசு மோவாபியர்களின் தெய்வங்களுக்குப் படைக்கப்பட்ட காணிக்கைகளை உண்ணுவதைப் பற்றிய தவறான கருத்திற்கு எதிராகச் செயல்பட்டதைக் குறிக்கிறது.

''பினகாசு கொதித்தெழுந்து தலையிட்டதால்
கொள்ளை நோய் நீங்கிற்று.
இதனால் தலைமுறை தலைமுறையாக
என்றென்றும்
அவரது செயல் நீதியாகக் கருதப்பட்டது''
*(சங் 106:30-31)*.

முதல் மக்கயேர் நூல் ஆசிரியர், நாடு முழுவதும் செலூக்கியர்களுக்கு எதிராகக் கிளர்தெழுந்ததின் பின்னணியான தீவிர ஆர்வம் பற்றிய இறையியல் பினகாசு என்பவரின் பாரம்பரியத்தில் வேரூன்றி இருக்கின்றது என்னும் பொருள்பட விளக்கினார். ''மோதேயின் நகரத்திற்கு ஓடிப் போனவர்களைப் பலியிடவும், தூபம் ஏந்தவும், கடவுள் கட்டளையை மீறவும் கட்டாயப்படுத்தி அந்தியோக்கு அரசனால் அனுப்பப்பட்டவர்கள் அவ்விடம் வந்தார்கள்..... ஆனால் மத்தத்தியா பதிலளித்துச் சொன்னார். எங்கள் முன்னோரின் வழக்கத்தை விட்டுவிட முடியாது.... உடனே அரசன் கட்டளைப்படி மோதேயின் நகரத்துப் பீடத்தின் மேல் சிலைகளுக்குப் பலியிட யூதன்

ஒருவன் எல்லாருக்கும் முன்பாக வந்தான். மத்தத்தியா அதைப் பார்த்து மனம் கசிந்தார். அவர் உடம்பு துடித்தது. கட்டளையின் ஒழுங்குப்படி கோபம் மூண்டு, அவன் மேல் பாய்ந்து, பீடத்தின் மீதே அவனைக் கொன்றார். அந்தியோக்குவால் அனுப்பப் பட்டு, பலியிடும்படி வற்புறுத்தின மனிதனை யும் அதே நேரத்தில் கொன்று பீடத்தை யும் இடித்துத் தள்ளினார். சாலுவின் மகன் சிம்ரி என்பவனுக்குப் பினகாசு செய்தது போல, தாமும் கட்டளையின் பால் கொண்ட ஆர்வத்தால் தூண்டப்பட்டார்.... மத்தத்தியா உரத்த சத்தமாய்.... உடன்படிக் கைக் கட்டளைக்குப் பிரமாணிக்கமுள்ள வன் எவனோ அவன் என் பின்னால் வரக்கடவான் என்று சொல்லி அவரும், அவர் புதல்வரும் தங்கள் சொத்துகளை விட்டுவிட்டு மலைகளுக்கு ஓடிப்போனார் கள்.'' *(1 மக் 2:15-28)*. இதற்குப்பிறகு செலூக்கிய அதிகாரத்திற்குப் புறம்பே வெளி யில் வாழ்ந்து வந்தார்கள். புறவினத்தார்கள் தங்களை எதிர்த்ததினால் வழிப்பறிகளில் ஈடுபட்டு வாழத் தொடங்கிவிட்டார்கள். இப்படியாகப் பிற்காலத்தில் தோன்றிய, முக் கிய உரோமை ஆட்சியை எதிர்த்து வரி செலுத்த மறுத்து வழிப்பறிக் கொள்ளைக்காரர் களாக வாழ்ந்த தீவிரவாதிகளுக்கு மாதிரி யாக அமைந்தார்கள். இவர்களில் ஒரு குழுவைத்தான் நாம் தீவிரவாதிகள் என்று அழைக்கின்றோம். இவர்களுடைய வர லாறு இவர்கள் கி.பி. 66-70-இல் நடந்த சண்டையில் இவர்கள் பங்கு பெற்றார்கள் என்பதைத் தவிர அதிகம் நமக்குத் தெரியாது.

*இ. எலியா:* எலியா பாகாலின் எல்லா இறைவாக்கினர்களையும் கொல்லும்படி கட்டளையிட்டார் *(1 அர 18:40; 19:10-14)*. இதைப் பிற்கால இஸ்ராயேலர்களின் பாரம் பரியத்தில் ''ஆர்வமிக்க செயலான'' என்று பொருள் கொள்ளப்பட்டது. ''எலியா கட வுள் கட்டளை மேல் ஆர்வம் கொண்டிருந்த தால் விண்ணில் சேர்க்கப்பட்டார்'' *(1 மக் 2:58)*. இந்த எலியாவைப் பற்றிய பாரம்பரி யம் ஆர்வத்தின் அமைதிப்படுத்துகிற சக்தியை, அவருடைய மெசியா பணியுடன் தொடர்புபடுத்திக் காட்டுகிறது *(மலா 3:223-24)*. ''ஓ, எலியாவே! உம்முடைய வியத்தகு செயல்களில், நீர் எத்துணை மாட் சிக்குரியவர்! உமக்கு இணையாய் யார் பெருமை பாராட்டக்கூடும்? தீச்சூறாவளி யில், நெருப்புக்குதிரைகள் பூட்டிய தேரில் நீர் எடுத்துக் கொள்ளப் பெற்றீர். ஆண்டவ ருடைய சினம் சீற்றமாய் மாறுமுன் அதைத் தணிப்பதற்கும் தந்தையின் உள்ளத்தை மகனை நோக்கித் திருப்புவதற்கும் யாக்கோ பின் குலங்களைத் திரும்ப நிலைநிறுத்துவ தற்கும் குறித்த காலத்தில் நீர் கண்டிப்பீர்'' *(சீரா 48:4.9-10)*, என எழுதப்பட்டுள்ளது.

2. *தீவிரவாதி எனப்படும் சீமோன்:* தீவிர வாதி எனப்படும் சீமோனுடன் இராபி களுக்கு முந்திய யூத இலக்கியங்களில் இன்னும் ஓர் இடத்தில், ''தீவிரவாதி'' எனப்படும் சொல் 4-ஆம் மக்கபேயர் நூலில் ''தீவிரவாதியான பினகாசு'' என்று குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது *(18:12)*. தீவிரவாதி எனப்படும் சீமோன் இயேசுவின் சீடராகு முன் பினகாசு - மக்கபேயர்களின் பாரம்பரி யத்தில் சட்டத்திற்காகத் தீவிர ஆர்வத்துடன் வாழ்ந்த குழுவில் ஓர் உறுப்பினராக இருந்திருக்கலாம். கி.பி. முதல் நூற் றாண்டில் இந்தக் குழுவிலிருந்து ஏராள மான குழுக்கள் உருவெடுத்ததாகச் சொல்லப் படுகின்றது, மேலும் அவர்கள் பாலஸ்தீனத் தில் தீவிரமாகச் செயல்பட்டதாகவும் சொல் லப்படுகின்றது. இந்தக் குழுக்கள், பாம்பே யின் காலத்திலிருந்து தேசிய அளவில் உரோமையருக்கு எதிர்ப்பு அளிக்கும் ஒரு சக்தியாக உருவெடுத்தது.

3. *பவுல்:*கிறிஸ்தவராக மாறுவதற்கு முன் பவுல், சட்டத்தின் பால் கொண்ட ஆர்வத் தின் இறையியலால் தூண்டப்பட் டார் எனலாம். இந்தத் தீவிர ஆர்வம் பற்றிய யூதக் கூற்றுகளிலிருந்தும், பவுலின் வாழ்வு பற்றிய ஆய்விலிருந்தும் இந்த இயக்கம் பற்றிய முக்கிய உட்கருத்தை நாம் பெற முடியும். பவுல் கலாத்தியர்களுக்குப் பின்வருமாறு எழுதினார். ''ஒரு காலத்தில்

நான் யூத மறையைப் பின்பற்றிய பொழுது, என்ன செய்து வந்தேன் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். கடவுளின் திருச் சபையை எவ்வளவோ துன்புறுத்தி ஒழிக்க முயன்றேன். முன்னோர் பரம்பரையில் ஆர்வம் மிக்கவனாய் என் இனத்தவருள் என் வயதினர் பலரினும் மேலாக யூத மறை ஒழுக்கத்தில் சிறந்து விளங்கினேன்'' (கலா *1:13-14*). மற்றொருபகுதியில் பவுல் தான் திருச்சபையைக் கொடுமைப்படுத்தியதை இந்த ஆர்வத்தோடு நேரடியாக இணைக் கிறார். ''அதன் மேல் எனக்கு இருந்த ஆர்வத்தால் திருச்சபையைத் துன்புறுத்தி னேன்'' (பிலி *3:6*). பவுல் ஒரு பரிசேயர் (*3:5*). ஆனால் பவுல் தீவிரமான முறை யிலே அதிகமான பொறுப்புகளைத் தன் மேல் ஏற்றுக் கொண்டதினால், பரிசே யனை விட அதிகமான தகுதிகளையுடையவ ராக இருந்தார். மேற்குறிப்பிடப்பட்டுள்ள பவுலின் சுயசரிதை விவரிப்புக்கு அப் போஸ்தலர் பணியில் உள்ள செய்தித் தொகுப்புக்கள் ஆதரவு அளிக்கின்றன. அப் போஸ்தலர் பணியில் உள்ள குறிப்பின்படி, பவுல் கடைசியாக எருசலேமுக்கு வந்த போது, சட்டத்தின் தீவிரவாதிகளான ஆயி ரம் யூதர்களைப் பற்றி எச்சரிக்கப்பட்டார். இவர்கள் அவரைக் கொன்று போடுவதாக அச்சுறுத்தினர். ஏனெனில் பவுல் சிதறிக் கிடந்த யூதர்களை மோசேயின் சட்டத்திற்கு எதிராக நடக்கும்படி உற்சாகப்படுத்தியதாகக் குற்றம் சாட்டினார் (அ.ப. *21:20-21*). பிறகு ஒரு கொடூரமான கும்பல் ஆலயத்தில் பிடித்து இழுத்து வந்து, அவரை அடித்த னர். கும்பல் எந்த விதமான விசாரணையும் இல்லாமல், அவரைக் கொல்ல வேண்டு மென்று முடிவு செய்தது. ஆனால் உரோ மைப் படைவீரர்கள் இதில் தலை யிட்டனர் (*21:27.36*). அங்கே பவுல் கூட்டத்திற்குப் போதிக்கத் தொடங்கி னார். இதில் பின்வருமாறு கூறினார்: ''நான் ஒரு யூதன்,... கமாலியேலின் பாதத்தண்டை அமர்ந்து, நம் முன்னோரின் சட்டத்தை மிக நுணுக்கமாகக் கற்றேன். இன்று நீங்கள் அனைவரும் கடவுள்மேல் ஆர்வம் கொண் டுள்ளதுபோல நானும் கொண்டிருந்தேன்'' (*22:3*). தனது மனமாற்றத்துக்குப்பின் கடவு ளுடன் மனம் விட்டுப் பேசியபோது பவுல் ''உம்மீது விசுவாசம் கொண்டவர்களைச் சிறைப்படுத்தினேன். செபக்கூடந்தோறும் சென்று அவர்களைச் சாட்டையால் அடித் தேன்'' (*22:19*) என்றார். ''சட்டத்தின்பால் தீவிர ஆர்வம்'' கொண்டவர்கள் நாற்பது பேர் தாங்கள் பவுலைக் கொல்லச் செய்த முயற்சி தோல்வி அடைந்த மறுநாள், பவுலைக் கொல்லும் முயற்சியைத் தொடர, சபதம் எடுத்துக் கொண்டனர் (*23:12-14*). இந்த நிகழ்ச்சியானது பவுலை *21:38*-இல் குறிப்பிட்டுள்ள விசாரணைக்கு இட்டுச் சென்றது. சட்டத்தின்பால் தீவிர ஆர்வம் பற்றிய இறையியல் குறித்த பவுலின் தீர்ப்பு, சட்டத்தை அடிப்படையாகக் கொண்ட ஏற்புடைமை பற்றிய தர்க்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. ''சகோதரர்களே, அவர்கள் மீட்படைய வேண்டுமென்றே, என் உள்ளம் தவிக்கின்றது. அதற்காகவே நான் கடவுளிடம் மன்றாடுகிறேன். கடவுள் மேல் அவர்களுக்கு அன்பார்வம் உண்டு என்பதற்கு நான் சாட்சி சொல்ல முடியும். ஆனால் அந்த ஆர்வம் உண்மையான அறிவுக்கு ஏற்றதாயில்லை. கடவுளின் திரு அருட் செயல்முறையை அவர்கள் அறிந்து கொள்ளாமல் அருள் பெறுவதற்குத் தங்கள் முறையையே நிலை நாட்டத் தேடினார்கள். ஆகவே கடவுளுடைய அருட் செயல் முறைக்குத் தங்களை உட்படுத்தவில்லை. ஏனெனில் கிறிஸ்துவே திருச்சட்டத்தின் முடிவும் நிறைவும்; ஆகவே விசுவசிக்கும் எவனும் இறைவனுக்கு ஏற்புடையவனா வான்'' (உரோ *10:1-4*). பவுலை அறிந்து கொள்வதற்கு, அவர் மிகவும் கடுமையான சட்ட திட்டங்களை மிகவும் நுணுக்கமாகப் பின்பற்றி வந்த யூதப் பின்னணியிலிருந்து வந்தவர் என்பதை மனதில் கொள்வது அவசியம். ஏற்புடைமை பற்றிய இவரது கருத்தைப் புரிந்து கொள்வதற்கு, சட்டத் தைப் பற்றிய யூத இறையியலை நாம் தெரிந்திருக்க வேண்டும்.

*4. முடிவுரை:* இந்த ஆர்வம் பற்றிய இறையியல், ஒரே கடவுளை வழிபட்ட

இஸ்ராயேலர்களின் வழிபாட்டு முறையி லிருந்து உருவெடுத்தது என்பது தீவிரவாதி களுக்கு இலட்சியமாக அமைந்துவிட்டது. ''நானே உங்கள் ஆண்டவர். நான் சகித்துக் கொள்ள மாட்டேன்.'' மேலும், ''உங் களுக்கு வேறு கடவுள்கள் இல்லை''. இஸ்ரா யேல் புனிதமான மக்களாகும், அவர்கள் புனிதமுள்ளவர்களாக இருக்க கடவுள் சட்ட திட்டங்களை வழங்கினார். இஸ்ரா யேல் தங்களுடைய பதிதத்தால் கடவு ளுடைய பொறாமையைத் தூண்டியபோது ஆண்டவருடைய கோபம் அவர்கள் மேல் பொழியப்பட்டது. தீவிரவாதிகளின் தணிக் கும் செயல் நோய்த் தடுப்புத்தன்மை கொண் டது. அறுவை மருத்துவர் புற்றுநோய் உறுப்புக்களை வெட்டியெடுப்பது போல், தீவிரவாதிகள் பதிதர்களை வாள் கொண்டு அகற்றினர். உடன்படிக்கையின் ஆண்டவரிட மிருந்து அவர்களுடைய ஆர்வம் சட்ட திட்டங்களுக்கு மாறியது, மக்கபேயர் காலத்தில் நடந்தது என்று உறுதியாகக் கூறலாம். இம்மாற்றம் கிரேக்க உரோமை யர்கள் காலத்தில் நிலவிய தீவிரவாதத்திற்கு அடிப்படையாக அமைந்தது. தீவிரவாதி சட்டங்களுக்குக் கடுமையான பொருள் அளிப்பவர்; ''இஸ்ராயேலன் கடவுளு டைய சட்டதிட்டங்கள் மேல் ஆர்வமுள்ள வர்'' (அ.ப. 22:4); அதற்காக உயிரையும் கொடுக்கத் தயங்காதவர்; பிறரைக் கொல்ல வும் தயாராக இருந்தவர். கி.பி. 70-க்கும் 135-க்கும் இடையில் நடந்த வீழ்ச்சிக்குப் பிறகு, யூத ஆன்மீகத் தலைவர்கள் தீவிர ஆர்வம் பற்றிய இறையியலைப் படிப்படி யாக வரையறை செய்தனர். இராபிகளின் யூதத்துவத்தில் தீவிர ஆர்வத்தின் இடத்தைச் ''சாலோம்'' (சமாதானம்) எடுத்துக்கொண் டது. இஸ்ராலேயர் புறவினத்தாரிடம் கொண்ட உறவில் இந்தச் சமாதானம் இறையியல் ஆதிக்கம் செலுத்தியது.

புதிய ஏற்பாட்டில் புதிய இறையியலுக்கு ஒத்த விதத்தில் ஆர்வம் திசை திருப்பம் பெற்றது (காண்க. 1 கொரி 14:12; தீத் 2:14; 1 பேதுரு 3:13; திருவெளி 3:19).

## தீவு (ISLAND, ISLE)

விவிலியத்தில் மத்திய தரைக்கடலில் உள்ள தீவுகளைக் குறிப்பதற்கு இச்சொல் பயன்படுத்தப்படுகின்றது. சங் 71:10-இல் தீவுகளின் அரசன் எபிரேய அரசனுக்குத் திரை செலுத்துவான் எனும் நம்பிக்கை காட்டப் பட்டுள்ளது. எசா 40:15-இன்படி இறைவ னின் சக்தி தீவுகளையும் கடந்து நிற்கிறது. இதே கருத்து எசே 26:18-இல் காணப்படி னும், அது மத்தியதரைக்கடல் தீவுகளை விட பெனீசியக் கடற்கரைப் பகுதிகளையே குறிக்க வேண்டும். எசா 42:15-இல் இறுதிக் காலம் பற்றிய உருவகத்தில் ''ஆறுகளை யெல்லாம் தீவுகளாக மாற்றுவேன்'' எனக் கடவுள் கூறுகிறார். ஆனால் இது 'வறண்ட நிலங்களாக்குவேன்' என்றே இருக்க வேண் டும் எனப் பலர் கருத்துத் தெரிவிக் கின்றனர்.

புதிய ஏற்பாட்டில் மத்திய தரைக் கடல் தீவுகளைப்பற்றித் தெளிவாகப் பெயருடன் குறிப்பிடப்படுகிறது. அவை: சைப்பிரசுத் தீவு (அ.ப. 13:4.6); கவுதா (27:16); மால்தாத் தீவு (28:1). இவையெல்லாம் தீவுகள் எனக் குறிப்பிடப்படாவிடினும் பவுலின் பயணத் தில் தொடர்பு கொண்ட கிரேத்தாத்தீவு, ரோதுத் தீவு, கோசுத் தீவு போன்ற தீவுகள் பற்றிப் பேசப்படுவதைக் காண்கிறோம்.

எபிரேய மூலச்சொல் 'தீவு' என்ற பொருளை விட, கடற்கரையை ஒட்டியுள்ள நிலங்களையும், ஊர்களையும் குறிப்பதாக உள் ளது. ஒரு சில இடங்களில் இச்சொல் தீவு என்பதையும், ஒரு சில இடங்களில் கடற் கரைகளை அல்லது அதைஒட்டியுள்ள நிலங் களைக் குறிப்பதாகவும் உள்ளது.

## தீவேஸ் (DIVES - செல்வம்)

செல்வரும் 'இலாசரும் என்ற இயேசுவின் உவமையில் (லூக் 16:19-31), இது செல்வ ரின் பெயராகக் கருதப்பட்டது. வுல்காத்தா மொழிபெயர்ப்பு ''ஒரு செல்வர்'' என்று கொண்டுள்ளது. இதன் விளைவாக, இந்தப் பெயர் அறியப்படாத மனிதனுக்குத் தீவேஸ் என்பது பெயராயிற்று. கி.பி. மூன்றாம்

நூற்றாண்டில் இவருக்கு நினேவே, பினேயு போன்ற பெயர்கள் கொடுக்கப்பட்டன.

**தீனா** *(DINAH - தீர்ப்பு)*

யாக்கோபு - லேயா ஆகியவர்களின் மகள் *(ஆதி 30:21; 46:15)*. ஆதி 34-இல் மட்டுமே தீனாவைப் பற்றிய நிகழ்ச்சி வருகிறது. இவ்வியரான ஆமோரின் (காமோர்) மகனாகிய, செக்கேம் என்ற பெயருடையவன், செக்கேம்பகுதியில் தீனாவைக் கற்பழித்தான். செக்கேம் தீனாவை மண முடிக்க விரும்பினான். எனவே ஆமோரும், நகரத்தார் அனைவரும் யாக்கோபுவையும் அவரது புதல்வர்களையும் திருமணத்திற்கு இணங்கக் கேட்டுக் கொண்டனர். அதன் மூலம் அவர்களுக்கிடையே சமூக - வாணிக உறவை ஏற்படுத்திக்கொள்ள விரும்பினர். இதையெல்லாம் கேள்விப் பட்ட யாக்கோபின் புதல்வர்கள் சினம் கொண்டனர். முக்கியமாக, தீனாவின் சொந்தச் சகோதரர்களான சிமியோன், லேவி இருவரும் கடுஞ்சினம் கொண்டனர். எனினும் செக்கேமியர்கள் விருத்தசேதனம் செய்து கொண்டால் தங்கள் சகோதரியை மணம் முடித்துக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டனர். செக்கேம் நகர ஆண்கள் விருத்தசேதனம் செய்து கொண்டனர். இதனைப் பயன்படுத்தி லேவியும், சிமியோனும் செக்கேம் நகருக்குள் புகுந்து எல்லா ஆண்மக்களையும் வெட்டிப் போட்டனர். ஆமோரையும் செக்கேமையும் கொன்று போட்டனர். அதன்பின் அவர்கள் நகரைக் கொள்ளையிட்டனர். இதற்காக யாக்கோபு அவர்களைக் கடிந்து கொண்டார். ஏனெனில் அவர்களது செயலால் தனக்கு இனிப் பாதுகாப்பு இல்லையென அஞ்சினார் *(ஆதி 49:5-7)*.

இந்நிகழ்ச்சியானது அரசாட்சி தோன்றுவதற்குமுன் செக்கேம் - எபிரேய மக்களின் உறவை எடுத்துக்காட்டுகிறது. ஆனால் இந்நிகழ்ச்சியின் உண்மை வடிவம் பற்றிப் பல கருத்துகள் உள்ளன. ஒரு தனிப்பட்ட நபராகவோ, ஓர் இனமாகவோ இந்நிகழ்ச்சியில் தீனாவின் பங்கு தெளிவற்றதாக உள்ளது.

**தீனாவியர்** *(DINAITES)*

எருசலேம் ஆலயத்தைத் திரும்பக் கட்டக் கூடாதென்று அர்த்தக்சஸ்தா மன்னனுக்குக் கடிதம் அனுப்பிய *(எஸ் 4:8-23)* இரகூம் என்பவனைச் சார்ந்தவர்களில் இக்குழுவும் ஒன்று *(எஸ் 4:9)*. இச்சொல் ஓர் இனத்தைக் குறிக்கும் பெயரன்று; மாறாகப் பதவிப் பட்டமாகும். இவர்களைப் பற்றிய குறிப்புகள் அரமேயிக்குப் புல்தாள் ஏடுகளில் அடிக்கடி காணப்படுகின்றன. எரோதோதசும் யோசிப்பசும், இவர்களைப்பற்றிக் கூறுகின்றனர்.

**தீனி** *(PROVENDER)*

வீட்டில் வளர்க்கப்படும் விலங்குகளுக்கு உணவாகப் புல், மற்றத் தானிய வகைகளான கொள்ளு, தினை, கம்பு, பார்லி, சோளம் ஆகியவற்றைக் கொடுப்பது வழக்கம். களத்தில் அடிக்கப்பட்ட வைக்கோல் பதர் ஆகியவற்றையும் விலங்குகளுக்கு உண்ணக் கொடுப்பர். விலங்குகளுக்கு அளிக்கப்பட்ட ''சுவையூட்டப்பட்ட தீனி'' ஆண்டவர் தம் மக்களுக்கு வழங்கும் ஆசீரின் ஓர் அடையாளமாகும்.

# து

## துக்கம், துயரம் (SORROW)

பழைய ஏற்பாட்டில் துக்கத்தைக் குறிக்கப் பல சொற்கள் பயன்பட்டுள்ளன. மகிழ்ச்சி மற்றும் துக்கம் ஏற்படுத்தும் நிகழ்ச்சிகளில், அதுவும் அவற்றின் இறையியல் பொருளில், அக்கறை செலுத்தப்படுகிறது.

மனித துன்பம் பற்றிய உள்ளத்தைப் பெரிதும் வருத்தும் விவரிப்பு 2 சாமு 1:19 தொ; 18-இல் காணப்படுகிறது. தொடக்க காலத்தில் இஸ்ராயேலர் மரணத்தைப்பற்றி அவ்வளவு துக்கம் கொண்டதாகத் தெரியவில்லை; மாறாக, அகால மரணம் அல்லது கொடிய மரணம், அல்லது குடும்ப உறவில் மகிழ்ச்சியில்லாத மரணம் பற்றித் துக்கம் கொண்டனர் (ஆதி 42:38; 44:29தொ; 46:30). மனித வாழ்வில் மகிழ்ச்சியும் துக்கமும் பின்னிப்பிணைந்துள்ளன என்பதை ஞான ஆசிரியர்கள் நன்கு அறிந்திருந்தனர் (பழ 4). ஒருவனுடைய சொந்தமடமையாலோ (10:1), மற்றொருவனுடைய மடமையாலோ (23:29) துக்கம் வருகிறது. பிற்காலத்தைச் சேர்ந்த, எதிலும் கெடுதலையே காணும் மனப்பான்மை (யோபு 7:1-10; திருவுரை 1:18; 7:3; காண் சங் 90:10), பழைய ஏற்பாட்டிலோ ஞான இலக்கிய இயக்கத்திலோ (காண் ஞான 20:21தொ; 38:18 தொ) ஒரு பொதுவான பண்பன்று.

மனிதவாழ்வில் துக்கம் ஓர் அங்கமானாலும், அது இறைவனுடைய அமைப்பைச் சேர்ந்ததன்று. அது மனிதனின் பாவத்தன்மையோடு தொடர்புடையது (ஆதி 8:16-17; சங் 16:4). அது பெரும்பாலும் தண்டிக்கும் நோக்கத்தோடு (2 சாமு 7:14; 2 நாள் 6:24-31; காண். ஓசே 3:3-5; ஆமோ 4:6-12; எபி 12:3-11), இறைவனது சினத்தின் விளைவாக வருகிறது (சங் 88:7-9; புல 1:1-12; எசே 23:33-35). இறுதியில், விசுவாசிகளுக்குப் (சங் 13;31; 107:39-43) புதிய யுகத்தில் (எசா 51:11; காண். 25:8; எரே 31:1-17; திருவெளி 21:4) இறைவனாலேயே அது நீக்கப்படும்.

யாவேயின் முன் மனவருத்தத்தை எடுத்துக்காட்டும் வழிபாட்டுச் சடங்குகள் இழவுத்துக்கம் கொண்டாடும் முறையில் அமைந்துள்ளன (யோசு 7:6; 1 அர 21:27; நெகே 9:1). இத்தகைய ''அதிகாரபூர்வமாகத்'' துக்கம் கொண்டாடுதலை இறைவாக்கினர்கள் கடுமையாகச் சாடுகின்றனர் (எசா 58:5; ஓசே 5:15-6:4; ஆமோ 4:6-12). அவர்கள், உண்மையான கீழ்ப்படிதலை விளைவிக்கும் (எசா 58:6-7; ஓசே 6:6) உண்மையான மனந்திரும்புதலைக் கோருகின்றனர் (யோவே 2:12-13).

புதிய ஏற்பாட்டில் துக்கத்தைக் குறிக்கும் சொல் பொதுவில் வலி, துன்பம் என்ற பொருளிலும் (எபி 12:11; 1 பேதுரு 2:19) ''உள்ளார்ந்த கடுந்துயர்'' என்ற பொருளிலும் (லூக் 22:25;யோவா 16:6.20; உரோ 9:2) வருகிறது. ''துக்கமிக்க மனிதன்'' என்ற அளவில் (காண்க: மத் 26:37; மாற் 14:34; லூக் 19:41; 22:44; யோவா 11:35), எசா 52:13-53:12-இல் வரும் யாவேயின் ஊழியனை இயேசு நம் மனக்கண்முன் கொணர்கிறார் (மத் 8:17; லூக் 22:37; 1 பேதுரு 2:24-25).

உலகிலிருந்தாலும் அதைச் சாராத (யோவா 15:19) கிறிஸ்தவ சமூகத்தின் இடுக்கண்நிலை 2 கொரி 7:8-12-இலும், வேறுவிதத்தில் யோவா 16:1-22-இலும் பிரதிபலிக்கிறது. 2 கொரி 7:8-12-இல், ஒருவன் தன் கீழ்ப்படியாமையை உணர்ந்து கொள்ளும் துக்கம் ''கடவுளின் திருவுளத்திற்கேற்ற துயரம்'' எனப்படுகிறது. இது மனமாற்றத்தை ஏற்படுத்துகிறது; மீட்புக்கு இட்டுச்செல்கிறது. ''இவ்வுலகுக்கடுத்த துயரமோ - அதாவது இவ்வுலக ஆசைகள் நிறைவேறாததால் எழும் குற்ற உணர்வும் கவலையும் - சாவுக்கு இட்டுச் செல்கிறது. யோவா 16-இல் இயேசு இவ்வுலகத்தை

விட்டுச் செல்வதைக்கண்டு உலகம் மகிழும். ஏனெனில் அது அவரை வெறுக்கிறது (16:20; காண். 15:3). ஆனால் சீடர்கள் ''அழுவார்கள், புலம்புவார்கள்''. அவர் பிரிந்து செல்வதால் மட்டுமன்று (16:6). உலகத்தால் அவர்கள் மேல் வரவிருக்கும் வெறுப்பு மற்றும் துன்புறுத்துதலால் அவர்கள் துயரம் கொள்வர் (15:18-20). ஆனால் அவர் அவர்களை மீண்டும் காணும்போது (16:22; காண். திருவெளி 21:3-4) அவர்கள் துயரம் மகிழ்ச்சியாக மாறும் (யோவா 16:20).

## துடுப்பு, துடுப்புப்படகு (OAR, GALLEY))

துடுப்பு, நுனி சிறிது குழியாக்கப்பட்ட சதுரவடிவமுடைய நீண்ட மரக்கட்டையாகும். இது படகுகளைச் செலுத்தப் பயன்பட்டது. காலப்போக்கில் இதன் வடிவம் மேன்மைப்படுத்தப்பட்டு, நெம்பு கோல் ஆதார அமைப்பில் பயன்பட்டது.

துடுப்புப்பற்றிய விவிலியக் குறிப்புகள் துடுப்புப்படகுடன் சேர்ந்து வருகின்றன (எசா 33:21; எசே 27:6.8.26.29). துடுப்புப் படகு, தாழ்ந்த குறுகிய அமைப்புடையது; துடுப்புகளால் இயக்கப்பட்டது; போர்களில் பெரும்பாலும் பயன்பட்டது. எசா 33 பிற்காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்பட்டால், இங்குக் குறிக்கப்படும் படகுகள் கிரேக்கக் கப்பல்படையில் பயன்பட்ட படகுகளாக இருக்கலாம். கிறிஸ்தவ சகாப்தத்திற்குமுன் படகுகள் ஒரு தள வரிசைத் துடுப்புகளையே கொண்டிருந்தன. பிற்காலத்தில், இவை இரண்டு, மூன்று தளவரிசைத் துடுப்புகளைக் கொண்டிருந்தன.

காண்க: கப்பல்களும் கப்பலோட்டுதலும்.

## துட்மோசு (THUT-MOSE - சந்திரக்கடவுள் பிறந்திருக்கிறார்)

எகிப்திய வரலாற்றில் 18-ஆவது அரச மரபைச் சேர்ந்த நான்குபேர் இப்பெயரைக் கொண்டுள்ளனர். இவர்களில் முக்கியமானவர் மூன்றாவது துட்மோசு ஆவார் (கி.மு. 1504-1450). இவர் இருபத்திரண்டு ஆண்டுகள் ஆண்டார். இவரது ஆட்சியில் எகிப்து புகழ்பெற்று விளங்கியது. இவர் பதினேழு போர்களை நடத்தினார். கி.மு. 1482-இல் மெகிதோவைக் கைப்பற்றினார்; எகிப்தியப் பேரரசை ஆசியாவிலும் பரவச்செய்தார்.

## துணியால் சுற்றிப் பொதிதல் (SWADDLE)

முதலில் இது புதிதாகப் பிறந்த குழந்தையைத் துணிகளில் பொதிந்து வைத்தலைக் குறிக்கும் (லூக் 2:7; எசே 16:4). இது குழந்தையின் புற உறுப்புகளை நேராக வளரச் செய்ய உதவியது என்று கருதப்பட்டது. இப்பழக்கம் விவிலியக் காலம் முழுவதும் பயன்படுத்தப்பட்டதாகத் தெரிகிறது. ஆனால் எசே 30:21-இல் வரும் எபிரேயச் சொல் ஒடிந்துபோன கைக்குக் கட்டுப் போடுவதைக் குறிக்கிறது. யோபு 38:9-இல் வரும் ''பொதியும் துணி'' கடலின் மேல் எழும் மேகங்களை உருவகமாக உணர்த்துகின்றது.

## துணைக்கலங்கள் (FURNITURE))

திருஉறைவிடத்திலுள்ள அனைத்துப் பொருள்களையும் குறிக்க இச்சொல் பயன்பட்டுள்ளது (யாத் 25:9; 31:7; 40:9). அதாவது, சாட்சியப் பேழையையும் அதன் மேலமைந்த இரக்கத்தின் இருக்கையையும் தவிர்த்து, திருமுன் அப்பமேசை (யாத் 31:8), விளக்குத் தண்டு (31:8; 35:14), தகனப்பலிபீடம் (31:9) ஆகியவற்றையும் அவற்றோடு சேர்ந்த பொருட்களையும் இச்சொல் குறிக்கிறது.

ஆலயத்தில் பயன்பட்ட தட்டுமுட்டுப் பொருட்களையும் (1 நாள் 9:29), வீட்டுப் பொருள்களையும் (நெகே 13:8), எபிரேய மூலச்சொல் குறிக்கிறது.

## துணைச்சட்டப் பாரம்பரிய வரலாறு (DENTERONOMIC HISTORY)

இதை உபாகமப் பராம்பரிய வரலாறு என்றும் குறிப்பிடுவோம். துணைச்சட்ட நூல் (உபாகமம்) தொடங்கி 2 அரசர்கள் முடியவுள்ள விவிலிய நூல்களில் அடங்கிய வரலாற்றை இப்பெயரால் குறிப்பிடுகிறோம். இவ்வரலாறு, உபாகமமூலத்தின் ஆசிரியரான ஒருவராலோ பலராலோ

தொகுக்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டது என்று ஆய்வாள அறிஞர்கள் பலர் கருதுவர்.

இவர்கள் மதிப்பீட்டின்படி இந்த வரலாறு, மூலத்தில் பல்வகையான தனித் தனிப் பகுதிகளைக் கொண்டுள்ளது. இப்பகுதி கள் சட்டத் தொகுப்புகள், நீதிபதிகள் பற்றிய நிகழ்ச்சியுரைகள், 2 சாமு 9—1 அர 2 என்ற பகுதியில் காணப்படும் ''அரசவை வரலாறு'', எலியா, எலிசா ஆகியோரின் பகுதிகள் முதலியவற்றை உள்ளடக்கும். இவையும் சிறு சிறு பாரம்பரியங்களின் தொகுப்பாக இருக்கலாம். மோசேயின் உடன்படிக்கையின் கோரிக்கைகளை உள் ளடக்கிய சட்ட நூல் ஆலயத்தில் கண்டுபிடிக் கப்பட்டு (கி.மு. 622 - 2 அர 22-23; 2 நாள் 34-35), இந்நூலால் உந்தப்பட்டு, யூதாவின் அரசன் யோசியா தொடங்கிய சீர்திருத்தத்திற்கு ஆதரவாகவும் அதை மேம் படச்செய்யவும், மேற்கூறப்பட்ட பகுதிகள் தொகுக்கப்பட்டுப் பதிப்பு வடிவம் அளிக் கப்பட்டன. இத்தொகுப்பு இஸ்ராயேல் வரலாற்றில் காணப்படும் சமயபோத னையை வலியுறுத்துகிறது. மோசேயின் சட்டத்திற்குக் காட்டப்படும் பிரமாணிக்கத் திற்கேற்றவாறு நிகழ்ச்சிகளுக்கு விளக்கம் அளிப்பது இத்தொகுப்பின் சிறப்புப் பண் பாகும். இப்பண்பு யூதா மற்றும் இஸ்ராயே லின் அரசர்களின் நடத்தையின் விளைவாக (1 அர 15:26.30; 2 அர 15:3-5) சமாரியாவின் வீழ்ச்சி மற்றும் யூதாவின் நற்காலம், அவலநிலை ஆகியவைபற்றிய மதிப்பீட் டில் தெளிவாகத் தெரிகிறது. இஸ்ராயேல் பாவம் செய்ய, அதற்குத் தண்டனையாக இறைவன் கொடுமைப்படுத்துபவர்களை அனுப்புகிறார்; மக்கள் மனமாற்றம் கொள் கின்றனர்; இறைவன் நீதிபதிகளை அனுப்பி மக்களுக்கு விடுதலை அளிக்கிறார் என்ற அமைப்புடைய நீதிபதிகள் பற்றிய நிகழ்ச்சி யுரைகளிலும் இப்பண்பைக் காணலாம்.

இலக்கியம் அல்லது மூலங்கள் பற்றிய திறன் ஆய்வு அளிக்கும் சவால்களை ஒதுக்கிவிட்டு, உபாகம வரலாற்றின் அடிப் படைக் கருதுகோளை விவிலிய அறிஞர் கள் பொதுவாக ஏற்றுக்கொள்வர். ஆயினும் நூல்களில் காணப்படும் இலக்கிய, வர லாற்று மற்றும் இறையியல் வேறுபாடுகள், வரலாற்று வரம்புகள் மற்றும் இப்பாரம் பரிய வரலாற்றின் வளர்ச்சிக் கட்டங்கள் ஆகியவைபற்றி வேறுபட்ட விளக்கங்களை அளிக்க அறிஞர்களைத்தூண்டியுள்ளன. கருத்தொற்றுமையில்லையாயினும், சமீப கால ஆய்வுகள் இவ்வாரலாற்றுத் தொகுப் பில் மூன்று கட்டங்களைச் சுட்டிக் காட்டு கின்றன. அ) கி.மு. 8-ஆம் நூற்றாண்டு முடிவு அல்லது 7-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் துணைச்சட்டநூல் பதிப்பிக் கப்படுதல். இது, சமாரியாவின் வீழ்ச்சிக் குப்பிறகு (722) வட அரசிலிருந்து எருசலே முக்கு வந்த, ஒருவேளை லேவியரான அகதி ஒருவரால் செய்யப்பட்டிருக்க வேண்டும். ஆ) துணைச்சட்டம் முதல் 2 அரசர்கள் முடியவுள்ள தொகுப்பை யோசியாவின் சீர்திருத்தத்தின் பின்னணியில் பதிப்பித்தல். இது கி.மு. 620-ஐ ஒட்டி, யூதாவின் அரசவையைச் சேர்ந்த ஒருவரால், எருசலே மின் வீழ்ச்சிக்கு முன் செய்யப்பட்டிருக்க லாம். இ) கி.மு. 587-இல் எருசலேம் வீழ்ச்சியடைந்தபின் (2 அர 23:26) விவிலிய வரலாற்றில் சேர்க்கப்படுவதற்காக இப் பகுதி மீண்டும் பதிப்பிக்கப்படுதல். ஒரு வேளை இது பாபிலோனில் நடந்திருக்க லாம்.

## துணைச்சட்டநூல், உபாகமம் (DEUTERONOMY, BOOK OF)

I பெயர்: இந்நூல், எபிரேயத்தில் ''இவை (மோசேயின்) சொற்கள்'' என்று பொருள் படும் பெயரால் அழைக்கப்பட்டது. இப் பெயர் பொருத்தமுடையதே. ஏனெனில் இந்நூல் மோசேயின் தூண்டுதல் கொண்ட அரசியல், சமய, சமூக அமைப்புகள் பற்றிய சட்டங்களைக் கொண்டுள்ளது. எபிரேய உபாகமம் 17:18-இல்வரும் ''சட் டத்தின் நகல்'' என்று பொருள்படும் ''மிஷ்னா ஹட்டாரா'' என்ற சொற்றொட ரைக் கிரேக்கத்தில் தவறாக மொழி பெயர்த்து, எழுபதுநூல் இந்நூலை ''இரண்டா வது சட்டம்'' என்றழைத்தது. இப்பெயர்

தவறானாலும், இந்நூலின் அடிப்படைப் பிரச்சனையைச் சுட்டுகிறது. மோவாபில் அறிக்கையிடப்பட்ட சட்டத்திற்கும் சீனாயில் அறிக்கையிடப்பட்ட மூலச்சட்டத்திற்கும் இடையேயுள்ள உறவுபற்றிய பிரச்சனையாகும் இது. தமிழில் இந்நூலை நாம் உபாகமம் அல்லது துணைச்சட்டநூல் என்று அழைக்கிறோம்.

II. **நூல் தோன்றிய வரலாறு:** நாம் கொண்டிருக்கும் வடிவில், உபாகமம், யோசியாவின் காலத்திய (கி.மு. 640 - 609) சமயச் சீர்திருத்தத்தோடு தொடர்புடையது என்று இப்போது பொதுவாக அறிஞர் ஏற்றுக் கொள்வர். 2-ஆம் அரசராகமத்தில் ஒரு வரலாற்று நிகழ்ச்சி வருகிறது. ஆலய ஊழியர்களுக்குக் கூலி கொடுக்க ஆலயக் கருவூலத்திலிருந்து பணம் எடுக்கும்போது, பெரிய குருவாகிய இலிகியா இதுவரை அறியப்படாத ஒரு ''சட்டநூலைக்'' கண்டெடுக்கிறார். இச்சட்டநூலைப்பின்பற்றி யோசியா ஒரு சமயச் சீர்திருத்தத்தைத் தொடங்குகிறார் (2 அர 22:3-13). இந்தச் சட்டநூல்தான் உபாகமமாகும்; அதன் மூலப் பகுதியாகும் என்ற கருதுகோளை வெளியிட்டனர் டிபெட், வெல்ஹாசன் போன்ற அறிஞர்கள். இதற்கு அவர்கள் காட்டிய காரணம், ஆலயத்தில் இச்சட்டநூல் கண்டெடுக்கப்பட்டபின் நடந்த சமயச் சீர்திருத்தத்திற்கும் உபாகமச் சட்டத்திற்கும் உள்ள நெருங்கிய ஒற்றுமையாகும். உப 12-ஆம் அதிகாரத்தில் கூறப்படுவதற்கு ஏற்ப வழிபாட்டை மையப்படுத்துவதும் ஒரே வழிபாட்டுப் புனித இடத்தை அழுத்திக் கூறுவதும் யோசியா செய்த மறைச் சீர்திருத்தத்தின் சிறப்புடைமையாகும் (உப 22:1-7; 2 அர 23:8 தொ). ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட சட்டநூல், யோசியா செய்த சீர்திருத்தம் மேலாண்மையுடையதும் முறையானதும் உண்மையானதும் ஆகும் என்று காட்டச் செய்யப்பட்ட ''பக்திமிகுந்த மோசடி''யாகும் என்று டிபெட், வெல்ஹாசன் போன்ற அறிஞர்கள் கருதினர். இவர்கள் இந்த அடிப்படையில் இந்நூல் தோன்றிய காலத்தை ஓர் அளவு துல்லியமாக வரையறுத்தனர். இக்கருத்துகளையும் போக்கையும் பலர் ஏற்றுக்கொள்ளவில்லை. பெரும்பாலோர் உபாகமத்தை எசேக்கியா ஆட்சியில் அல்லது மனாசேயின் இருண்ட காலத்தில் ஏற்கனவே நடந்த முன்னைய சீர்திருத்தத்தின் திட்டமாகக் கருதினர். இந்நூல் கி.மு. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம். இந்நூல் எரேமியாவின் ஆகமத்தோடு கொண்டிருக்கும் மொழிநடை உறவு இதை உறுதிப்படுத்துகிறது. உபாகமத்தில் காணப்படும் சொற்களும் கருத்துக்களும் ஓசேயா, எரேமியா ஆகமங்களில் காணப்படுகின்றன. இருப்பினும் இக்காலவரையறைக்குக் கடந்தசில ஆண்டுகளாக எதிர்ப்பு வளர்ந்து கொண்டேயிருக்கிறது. இந்நூல் தோன்றிய காலம் கி.மு. 7.ஆம் நூற்றாண்டு என்று கூறும் போது இக்காலத்தில்தான் இந்நூல் முழுவதும் புதிதாகப் படைக்கப்பட்டதாகக் கருதக் கூடாது. இதன் மூலம் பாரம்பரியம் மோசேயின் காலம்வரை செல்கிறது. இஸ்ராயேலர் தங்கள் நூல்களைத்திருத்தி அமைத்தல், மீண்டும் விளக்கம் அளித்தல் ஆகியவற்றுடன் ஏற்கெனவே இருப்பவற்றோடு பிற காலச் சமய, சமூகத் தேவைகளுக்கேற்பப் பல பிற்சேர்க்கைகள் செய்வதும் வழக்கம். இவ்வழியைப் பின்பற்றி, உபாகமம் தனக்கே உரிய நடையையும், போக்கையும் அழுத்தத்தையும் 7-ஆம் நூற்றாண்டுப் பதிப்பிலிருந்து பெறுகிறது எனலாம். இஃது ஒரு நூற்றாண்டுக்கு முன்னரே இஸ்ராயேலின் வட அரசில் எழுத்து வடிவம் எடுத்திருக்கலாம்.

இஸ்ராயேலர் நாடு கடத்தப்பட்டுத் திரும்பியபின் அமைக்கப்பட வேண்டிய அரசை வரையறை செய்யும் கற்பனைச் செயல் திட்டத்தை இந்நூலில் காணச் சிலர் விரும்புகின்றனர். சிலர் நாடுகடத்தல் முடிந்த காலத்தில் இந்நூல் தோன்றியதாகக் கூறுவர். வேறு சிலர் இந்நூலில் உண்மையான பழமைமிக்க கருத்துக்களும் பொருட்களும் காணப்படுவதைக் கருத்தில் கொண்டு, இந்நூல் எழுதப்பட்டகாலத்தை மிக முன்தள்ளிப் போடுவர். இவர்களில் சிலர் சாமுவேலின் காலத்தையும், சிலர்

யோசு 24-இல் விவரிக்கப்படும் செக்கேம் உடன்படிக்கைக் காலத்தையும் இந்நூலுக்கு அளிப்பர். இன்னும் சிலர் இஃது உண்மையான மோசேயின் சட்டத் தொகுப்பாகும் என்றும், இதை மன்னராட்சிக்குச் செயல் திட்டமாக சாமுவேல் தொகுத்தார் என்றும் கூறுவர்.

மேற்கூறப்பட்ட பலவகைப்பட்ட கருத்துக்களையும் நூலில் காணப்படும் பலவகைச் செய்திகளையும் கருத்தில் கொண்டு தொகுத்துப் பார்த்தால், உபாகமம், நூல்வடிவம் எடுக்கப் பலகாலம் எடுத்தது எனலாம். இஸ்ராயேலின் தொடக்க காலத்திலிருந்து நாடு கடத்தப்பட்டுத்திரும்பிய காலம்வரை இந்நூல் வடிவெடுத்தது எனலாம். இவ்விடத்தில், ஐந்நூலில் காணப்படும் நான்கு பெரும் பாரம்பரியங்களைப்பற்றி நாம் ஏற்கெனவே கூறியவற்றை மனதில் கொள்வது நன்று. இந்நூல் வட அரசில் வாய்மொழிப் பாரம்பரியமாகத் தோன்றி, காலப் போக்கில் எழுத்து வடிவம் எடுத்திருக்க வேண்டும். சமாரியாவின் வீழ்ச்சிக்குப்பின் (கி.மு. 722) தென்னரசில் பெரிதும் வளர்ந்திருக்க வேண்டும். யூதேயாவைச் சேர்ந்த ஒருவரால் பதிப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். செக்கேம் புனித இடத்தைச் சேர்ந்த லேவியர் குழு இப்பாரம்பரியத்தைப் பாதுகாத்துவந்தது என்று கருத இடமிருக்கிறது. உபாகமக் குழுவாலும் எரேமியா போன்றவர்களாலும் வளர்க்கப்பட்டு, ஒரு நூற்றாண்டுக்குப் பின்வந்த யோசியாவின் சீர்திருத்தத்திற்கு அடிப்படையாக அமைந்திருக்க வேண்டும். இக்கருத்துக்கு வடிவத்திறன் ஆய்வும், மற்ற ஆராய்ச்சிகளும் உறுதி அளிக்கின்றன. எனவே இந்நூலை வட அரசைச் சார்ந்த எலோகீம் பாரம்பரியத்தைச் சேர்ந்த நூலாகக் கருதலாம். இந்நூல் கி.மு. 6-ஆம் நூற்றாண்டு நடுவில் இறுதி வடிவம் எடுத்திருக்கலாம். ஏனெனில் உபாகமப் பாரம்பரிய வரலாறு கி.மு. 562-இல் அவீல் மெரோதக்கு பாபிலோனில் அரியணை ஏறும்வரை நீளுகிறது *(2 அர 25:27)*.

III. ***உபாகமச் சீர்திருத்தம்:*** யோசியா மன்னன் காலத்தில் (கி.மு. 640-609) இஸ்ராயேலில் நடைபெற்ற மறைச்சீர்திருத்தம் உபாகமச் சீர்திருத்தம் என்ற பெயர் பெறுகிறது. ஏனெனில் இச்சீர்திருத்தம் உபாகம மனப் போக்கை உடையது. இச்சீர்திருத்தம்பற்றி இரு வாசகங்கள் உண்டு. *2 அர 22:1-23:27; 2 நாள் 34:1-35:19*. இரண்டிற்கும் வேறுபாடுகள் உண்டு. ஆயினும் சீர்திருத்தத்தில் சிறப்புக் கருத்துக்கள் தெளிவாயுள்ளன. இச்சீர்திருத்தம் யூதேயாவிலிருந்தும், எருசலேமிலிருந்தும் தொடங்கியது. இதில் சிறப்பானவை: 1) மெசப்பொத்தாமியாவில் தோன்றி இஸ்ராயேலில் புகுந்து அவர்களை இழிவுபடுத்திய, பலவகையான கதிரவன், விண்மீன் வழிபாட்டை யூதமக்களிடமிருந்து ஒழித்தலாகும் *(2 அர 23:4-5.11-12)*. 2) யூதமக்களிடமிருந்து, புகுந்து விட்ட கானானியர்களின் புறமத வழிபாட்டுச் சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் அறவே நீக்குதலாகும் *(2 அர 23:6-7.10.13-14)*. குறிசொல்லுதல், மாயவித்தை செய்தல் ஆகிய பழக்கங்களை அடக்கி அழிப்பதாகும் *(2 அர 23:24)*. யோசியா இச்சீர்திருத்தத்தை வடவரசு வழிபாட்டு இடங்களிலும் புகுத்தினார். சமாரியாவிலுள்ள புனித இடங்களையும் சிறப்பாகப் பெத்தேலையும் *(23:15)*, வடகலிலேயா வரையுள்ள புனித இடங்களையும் தகர்த்து அழித்தார் *(2 நாள் 34:6)*. எருசலேமிலேயே பொது வழிபாட்டை வரையறை செய்யும் பொருட்டு, நாடு முழுவதுமுள்ள யாவே வழிபாட்டு இடங்களை மூடினார். குருக்கள் அனைவரையும் எருசலேமுக்குக் கொண்டு வந்து சேர்த்தார் *(2 அர 23:9)*.

இரண்டு விவரிப்புக்களையும் ஒப்பிடும் போது நிகழ்ச்சிகளின் காலவரையறையில் வேறுபாடு தெரிகிறது. இரண்டையும் ஒத்துப்போகச் செய்வது முடியாதகாரியம் என்றாலும், நிகழ்ச்சிகளின் வரிசையை ஓர் அளவு அறிவுக்கேற்ற விதத்தில் திருத்தியமைக்கலாம். யோசியாசின் ஆட்சியின் 18-ஆவது ஆண்டில் சட்டநூல் கண்டுபிடிக்கப்பட்ட பின்தான் *(22:3-8)* முழுச் சீர்திருத்தமும் தொடங்கியது என்பது நடந்திருக்கக் கூடியதன்று. ஆலய மராமத்து வேலை

நடந்தபோது சட்டநூல் கண்டெடுக்கப்பட்டது என்பது இரண்டாம் நாளாகம விவரிப்போடு ஒத்துப் போகிறது. இஃது ஏற்கெனவே சீர்திருத்தம் தொடங்கி நடந்து கொண்டிருந்தது என்பதைக் காட்டுகிறது. 2 நாள் 34:3 சுட்டிக்காட்டுவதின்படி இச்சீர்திருத்தம் யோசியா ஆட்சியின் 8-ஆவது ஆண்டு தொடங்கியிருக்க வேண்டும். இஃது அசீரிய மன்னன் அசூர்பானிப்பால் (கி.மு. 627) இறப்பதற்குச் சிறிது காலத்திற்கு முந்தியதாகும்.யோசியா அசீரியரின் வளர்ந்து கொண்டிருந்த பலவீனத்தை ஊகித்தறிகிறார். யூதேயாவிலும் புத்துயிர் பெற்ற விடுதலை எழுச்சி தெளிவாக வெளிப்படத் தொடங்கியது.யோசியாவின் முதற்செயல் அந்நிய வழிபாடுகளைச் சிறப்பாக அசீரியாவில் தோன்றிய வழிபாடுகளை அகற்றுவதாகும். யோசியா ஆட்சியின் 12-ஆவதுஆண்டில் (கி.மு. 629;2 நாள் 34:37) அசீரியர்களின் பலவீனம் உறுதியாகத் தெளிவாகிறது. யூதர்களிடையே விடுதலை இயக்கம் ஊக்கம் பெறுகிறது. மறைச் சீர்திருத்தத்தின் ஓர் அங்கமாகிய புனித இடங்களைத் தூய்மைப்படுத்துதல் வட அரசுக்கும் நீடிக்கிறது. யோசியா ஆட்சியின் 18-ஆம் ஆண்டில், சீர்திருத்தத்தின் ஒருபகுதியாக ஆலயம் செப்பனிடப்படுகிறது. அப்போது சட்டநூல் கண்டெடுக்கப்படுகிறது (2 அர 22:3-8; 2 நாள் 34:8-14). அதன் கட்டளைகளைப் பின்பற்றுதல் சீர்திருத்தத்தின் இறுதிக்கட்டத்திற்கு இட்டுச் செல்கிறது.

இந்தச் சீர்திருத்தத்திற்கு அசீரியர்களின் பலவீனமும், யூதர்களின் விடுதலை எழுச்சியும் காரணம் அல்ல; ஒரு வாய்ப்பாக அமைந்தன. யூதேயாவின் அரசனான எசேக்கியாவின் காலத்திலிருந்து (கி.மு. 715-687) யூதேயாவில் இத்தகைய சமயச் சீர்திருத்தத்தை ஆதரிக்கும் குழுவினர் இருந்து வந்திருக்கின்றனர். ஆயினும் மனாசேயின் காலத்தில் இவர்களின் குரல் மக்களிடையே எடுபடவில்லை. ஆனால் யோசியாவின் காலத்தில் இவர்களுடைய ஆதிக்கம் உயர்ந்தது; செயல்பட்டது. அரசியல் காரணங்கள் வாய்ப்பாக அமைய, சமயத்தேவைகள் யோசியாவின் மறைச்சீர்திருத்தத்திற்குக் காரணங்களாயின.

இச்சீர்திருத்தத்திற்கு வழிகாட்டியாகக் கண்டெடுக்கப்பட்ட நூல் எது என்று யோசியாசின் சீர்திருத்த விவரிப்பில் அடையாளம் எதுவும் தரப்படவில்லை. இந்நூல் உபாகமம்தான் என்று விவிலிய அறிஞர் புனித எரோனிமு கூறினார். கி.பி. 19-ஆம் நூற்றாண்டிலிருந்து, அறிஞர்கள் சிலர் நாம் கொண்டிருக்கும் உபாகமநூல் யோசியாவின் சீர்திருத்தத்தின் விளைவாகும்; அதற்குத் தூண்டு காரணம் அன்று, என்று கூறத் தலைப்பட்டனர். இப்போது பெரும்பாலான அறிஞர்கள், நம்மிடமுள்ள உபாகமத்தின் நடுப்பகுதிதான் ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட நூலாகும் என்று பொதுவாக ஏற்றுக் கொள்வர்.

அந்நிய வழிபாட்டு முறைகள் யாவற்றையும் அழிக்குமாறு உபாகமம் கட்டளையிட்டது (உப 12:1-3). சிலை வழிபாடு தலையாய பாவமாகும் (13:2-12). இந்த முறையற்ற வழிபாட்டிற்கு ஆதரவு அளிக்கும் நகரங்களை அழித்துவிட இந்நூல் கட்டளையிட்டது (13:13-19). சுற்றுப் புறத்திலுள்ள யாவேயின் புனித இடங்களை அகற்றி, ஒரே மையப் புனித இடத்தை அமைக்க 12:4-14; 16:5-7 தூண்டியது எனலாம். நாட்டின் பிற இடங்களில் வாழ்ந்த லேவியரும் குருக்களும் தங்க வசதி செய்து கொடுக்கப்பட்டது (2 அர 23:9). இது உப 18:1-8-இல் வரும் படிப்பினைக்கு ஒத்ததாயிருக்கிறது. உபாகமத்தின் மையம் யோசியா தொடங்கிவைத்த சீர்திருத்தத்தோடு இணையாயுள்ளது. யோசியாவின் சீர்திருத்தம் எசேக்கியாவின் சீர்திருத்தத்திற்கு நெருங்கிய விதத்தில் ஒத்ததாயுள்ளது. எசேக்கியாவின் சீர்திருத்தம் ஆலயத்தைத் தூய்மைப்படுத்தியது; யூதேயாவில் எப்பிராயிம் மனாசே காலம் வரையிலுள்ள பிறதேவதைப் பீடங்களை அழித்தது (2 அர 18:4; 2 நாள் 29:3-31:1). யோசியா தொடங்கிவைத்த சீர்திருத்தம் எசேக்கியாவின் சீர்திருத்தத்

தைப் போன்றதே, அதன் வளர்ச்சியே இது என்று கூறுவது சாலப்பொருந்தும். இத்தகைய சட்டங்கள் யோசியாவின் காலத்திற்கு முன்பே எழுதப்பட்டிருந்தன என்று நாம் தெளிவாக ஏற்றுக்கொள்ளலாம். இதன்படி உபாகமத்தின் பெரும்பகுதி யோசியாவின் காலத்திற்கு முன்பே எழுதப்பட்டிருக்கலாம்.

யோசியாவின் சீர்திருத்தம் ஓர் அளவுடைய வெற்றியே பெற்றது. எருசலேம் ஒரே புனித இடமாயிற்று; யூதர்கள் வழிபாட்டின் மையமாகியது. ஓர் அளவிற்குப் புறமதச் சிலை வழிபாடும் அழிக்கப்பட்டது. பின் வந்த அரசர்கள் இச்சீர்திருத்தத்தைக் கடைப்பிடிக்கவில்லை. பிறமறைப் பழக்கங்கள் மீண்டும் தோன்றத் தொடங்கின (எரே *7:16-18; 11:9-13*). யோசியாவின் சீர்திருத்தத்தின் ஒரு சிறப்பான விளைவு, எழுத்து வடிவத்தில் மேலாண்மை உரிமையோடு அறிவிக்கப்பட்ட சட்டம் ஆகும். இது பிற்காலத்தில் யூத சமயத்தையும், வழிபாட்டையும், சமூகத்தையும் அரசியலையும் வரையறுக்கும் கொள்கையாக மாறியது.

IV. **திட்டமும் பிரிவுகளும்:** இந்நூலை ஆறு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

அ) மோசேயின் முதல் அறவுரை *(1:1-4:43)*.

| | |
|---|---|
| *1:1-5* | : அறவுரைக்கு முன்னுரை. |
| *1:6-18* | : நாட்டைக் கைப்பற்றக் கட்டளை, தலைவர்களை நியமித்தல். |
| *1:19-46* | : காதேசில் தங்கியது. |
| *2:1-25* | : ஏதோம், மோவாபு, அம்மோன் வழியாகப் பயணம். |
| *2:26-3:11* | : எஸ்போன், பாசான் ஆகியவற்றைக் கைப்பற்றுதல். |
| *3:12-22* | : யோர்தானுக்குக் கிழக்கில் குடியேறுதல். |
| *3:23-29* | : மோசேயின் செபம். |
| *4:1-14* | : இஸ்ராயேலர் அனைவருக்கும் சட்டத்தைப் பறைசாற்றுவதற்கு முன்னுரை. |
| *4:15-31* | : பத்துக் கற்பனை; முதல் பகுதிக்கு விளக்கவுரை. |
| *4:32-40* | : உடன்படிக்கை வழியாக இஸ்ராயேலின் தனிச்சிறப்பான அழைப்பு. |
| *4:41-43* | : புனித இடங்களைக் கொண்ட நகர்கள். |

இஸ்ராயேலர் ஓரேபு மலையிலிருந்து பெத்பேகோர் மலைக்குச் செய்த திருப்பயணத்தை மோசே பின்னோக்காக எடுத்துக் கூறுகிறார். இப்படிக் கூறுவது பல தடவை நடந்திருக்க வேண்டும். முந்தையரின் அனுபவம் ஒவ்வொரு தலைமுறையிலும் முழு இஸ்ராயேலரின் அனுபவமாகும். ஒரு தலைமுறை அடுத்து வரும் தலைமுறைக்கு இந்த அனுபவத்தைக் கையளிக்க வேண்டும். வருங்கால மக்களும் இவ்வனுபவத்தைத் துய்த்துணர வேண்டும். *4:1-40:* இது இந்நூலின் மிக அழகிய பகுதியாகும். இஃது இறைவன் தன் மக்கள்பால் கொண்டுள்ள அன்புநிறை அக்கறைபற்றிய அழகிய சொல்லாற்றல் வாய்ந்த உரையாகும்.

ஆ) மோசேயின் இரண்டாம் அறவுரை *(4:44-11:32)*.

| | |
|---|---|
| *4:44-49* | : அறவுரைக்கு முன்னுரை. |
| *5:1-22* | : "பத்து வார்த்தைகள்!". |
| *5:23-33* | : சட்டத்தைப் பறைசாற்ற மோசே நியமிக்கப்படுதல். |
| *6:1-19* | : உரிமை நாட்டில் உடன்படிக்கைக்குப் பிரமாணிக்கமாய் இருக்கக் கோரிக்கை. |
| *6:20-25* | : பாஸ்கு விழா மறையுரை. |
| *7:1-16* | : பிற இனத்தார் அடியோடு அழிக்கப்பட வேண்டும் என்ற கட்டளை கானானில் செயல்பட வேண்டும். |
| *7:17-26* | : வெற்றிபெற யாவேயிடம் நம்பிக்கை வேண்டும். |
| *8:1-20* | : நினைவாக்கம் கோருதல். |
| *9:1-7* | : நாட்டைக் கைப்பற்றுதல் யாவேயின் அலுவலாகும். |

| | |
|---|---|
| *9:8-29* | : ஓரேபில் நடந்த பதிதம் நினைவுபடுத்தப்படுகிறது. |
| *10:1-11* | : உடன்படிக்கை புதுப்பிக்கப் படுதல். |
| *10:12-11:7* | : உடன்படிக்கை வாழ்வு. |
| *11:8-25* | : உடன்படிக்கை நிறைவுறு தலுக்குக் குறிக்கோளாகவும் நோக்கமாகவும் நாடு பற் றிய வாக்குறுதி அளிக்கப் படுகிறது. |
| *11:26-32* | : ஆசீரையோ, சாபத்தையோ இஸ்ராயேலர் தேர்ந் தெடுக்க வேண்டும். |

இப்பகுதி சட்ட நூலுக்கு முன்னுரையாக அமைகிறது. மீண்டும் மீண்டும் அறவுரை கூறி, நாட்டின் வாழ்வும், நலமும் செழிப் பும் உடன்படிக்கையை நடைமுறைப்படுத் துவதில் அடங்கியிருக்கிறது என்று மோசே விளக்குகிறார். 6:4-9 மிகப்பெரிய கற்பனை யாகும். யாவேயை அன்பு செய்வதே சட் டத்தின் சாரமாகும்; உயிர் மையமானது மாகும். இஃதோடு உப *11:13-21*-உம் எண் 15-உம் சேர்த்து ஒவ்வோர் இஸ்ராயேலனும் நாளுக்கு இருமுறை சொல்ல வேண்டும். *10:12-22* உபாகமச் செய்தியின் சிறப்பான சுருக்கமாகும்; இரண்டாம் அறவுரையின் உச்ச நிலையுமாகும். இறைவன் கோருவது இவையே. இவை வழிபாட்டுணர்ச்சியுள்ள அன்பும் சேவையும், முழுக்கீழ்ப்படிதல், இறைவனது வழிக்கேற்ப வாழ்வை இசைந்திருக்கச் செய்தல் ஆகியவை. சமய அடிப்படை பற்றி இதைவிடச் சிறந்த உரையை நாம் காண்பது அரிது.

இ. உபாகமச் சட்டம் (*12:1-26:19*).

| | |
|---|---|
| *12:1-14* | : வழிபடும் இடம். |
| *12:15-28* | : ஊன்பற்றிய ஒழுங்குகள். |
| *12:29-32* | : உறுதிமொழி அளிக்கப் பட்ட நாட்டில் சிலைவழி பாடு பற்றி எச்சரிக்கை. |
| *13:1-18* | : சிலைவழிபாடு (தொடர்ச்சி). |
| *14:1-21* | : பிறமத வழக்கங்களையும் உணவுகளையும் சடங்கு களையும் தடை செய்யும் சட்டம். |
| *14:22-29* | : வரிகள். |
| *15:1-18* | : ஓய்வுநாள் விடுதலை. |
| *15:19-23* | : பலிக்காகத் தலைப்பேறு கள் ஒதுக்கப்படுதல். |
| *16:1-17* | : மூன்று திருப்பயண விழாக்கள். |
| *16:18-22* | : இறையாட்சிச் சமூகத்தில் பலவிதப்பணியாளர்கள். |
| *17:1-7* | : வழிபாட்டு முறை. |
| *17:8-20* | : நீதிபதிகளும் அரசர்களும். |
| *18:1-8* | : குருக்கள் - லேவியர். |
| *18:9-22* | : இறைவாக்கினர். |
| *19:1-13* | : அடைக்கல நகரங்கள். |
| *19:14-21* | : எல்லைகள், சாட்சிகள். |
| *20:1-20* | : புனிதப்போர். |
| *21:1-9* | : கொலை. |
| *21:10-14* | : போரில் பிடிபட்ட பெண் கள். |
| *21:15-23* | : மூன்று ஐயவாதச் சட்டங் கள். |
| *22:1-12* | : மனிதாபிமான நீதிச் சட்டங் கள். |
| *22:13-30* | : பாலின ஒழுங்குகள். |
| *23:1-9* | : பொதுச் சபையிலிருந்து விலக்கப்பட வேண்டியவர் கள். |
| *23:10-14* | : பாளையத் தூய்மை. |
| *23:15-25* | : பலவகைச் சட்டங்கள். |
| *24:1-4* | : ஒரே பெண்ணோடு மறு மணம் செய்யத்தடை. |
| *25:5-25:4* | : தாழ்த்தப்பட்ட இனத்தினர் சார்பாகச் சட்டங்கள். |
| *25:5-10* | : லேவியர் திருமணச்சட்டம். |
| *25:11-19* | : பலவகைச் சட்டங்கள். |
| *26:1-19* | : முதற் பலன் காணிக்கை. |

இப்பகுதி உபாகமத்தின் மையமாகும். இதுதான் யோசியாவின் காலத்தில் ஆலயத் தில் கண்டெடுக்கப்பட்ட சட்டநூலாக இருக்கலாம். இது சமயவழிபாடு, நாட்டின் சமய நிறுவனங்கள், குடும்பவாழ்வு, தனிப்

பட்டோரது ஒழுக்க வாழ்வு முதலியவை பற்றிய சட்டங்களைக் கொண்டுள்ளது. இப்பகுதிக்கு *26:16-19* தகுந்த முடிவுரையாக அமைகிறது. இறைவனுக்கும் மக்களுக்கும் இடையேயுள்ள நெருங்கிய ஆள்தன்மை யான உறவே உடன்படிக்கையின் சாரமா கும். இவ்வுறவே, சட்டத்திற்கும் அதன் விதிகளுக்கும் அளிக்கப்படும் கீழ்ப்படித லுக்கு அடிப்படையாகும்; தூண்டுகோலா கும்; காரணமாகும். நடையும், போக்கும், தொனியும் இப்பகுதி உடன்படிக்கை புதுப் பிக்கப்படும் சடங்கின் ஒரு பகுதியுமாகும் என்று சுட்ட வல்லன.

ஈ) உபாகமச் சட்டத்தின் முடிவுரை மோசேயின் அறவுரை *(27:1-28:68)*.

| | |
|---|---|
| *27:1-15* | : நினைவுத்தூண். |
| *27:16-55* | : சாபங்கள். |
| *28:1-68* | : கீழ்ப்படிதலின் நலன்கள், ஆசீர்களும் சாபங்களும். |

சட்டத்திற்குப் பிரமாணிக்கமாய் இருக்க வேண்டும் என்று இஸ்ராயேலின் பெரியோர் கள் சூழ, மோசே மக்களுக்கு அறவுரை கூறுகிறார். யாவேக்குக் கீழ்ப்படிவோர் ஆசீர் பெறுவர்; கீழ்ப்படியாதவர்கள் சாபம் பெறுவர்.

உ) மோசேயின் மூன்றாம் அறவுரை *(29:1-30:20)*.

| | |
|---|---|
| *29:1-15* | : மோவாபில் இஸ்ராயேலர் - இறைவன் உடன் படிக்கை. |
| *29:16-55* | : சிலை வழிபாட்டுக்கு எதி ராக எச்சரிக்கை. பிரமா ணிக்கமின்மைக்குத் தண் டனை. |
| *30:1-10* | : மனந்திரும்புவோருக்கு இரக்கம். |
| *30:11-14* | : இறைக்கட்டளை தெளிவாக வுள்ளது. |
| *30:15-20* | : இஸ்ராயேலின்முன் தேர்வு; வாழ்வு - சாவு; நன்மை -தீமை. |

இப்பகுதி இரண்டாம் அறவுரைக்கு ஒரு பிற்சேர்க்கையாகும். உடன்படிக்கையை மனமுவந்து ஏற்று அதைக்கடைப்பிடிக்க வேண்டும் என்று மக்களுக்குக் கூறப்படும் அறவுரையாகும். சட்டத்தின் உடன்படிக் கைத் தன்மை அழுத்திக் கூறப்படுகிறது. உடன்படிக்கை புதுப்பித்தல் சடங்கு இவ்வறவுரைக்கு வாய்ப்பாகவும் பின்னிலை யாகவும் அமைகிறது.

ஊ) முடிவுரை: மோசேயின் இறுதிநாட் கள் *(31:1-34:12)*.

| | |
|---|---|
| *31:1-8* | : யோசுவா தலைவராக நிய மனம் பெறுதல். |
| *31:9-13* | : சட்டம் வாசிக்கப்படுதல். |
| *31:14-15* | : மோசேயும் யோசுவாவும் இறைவன் திருமுன். |
| *31:16-22* | : மோசேயின் பாடலுக்கு முன்னுரை. |
| *31:23* | : யோசுவாவுக்குக் கட்டளை. |
| *31:24-29* | : சட்டம் வாசிக்கப்படுதல். |
| *31:30-32:44* | : மோசேயின் பாடல். |
| *32:45-52* | : மோசேயின் பாடலுக்கும் சட்டத்திற்கும் முடிவுரை. |
| *33:1-29* | : மோசே ஒவ்வோர் இனத் தவரையும் ஆசீர்வதித்தல். |
| *34:1-12* | : மோசேயின் இறப்பு -யோசுவா தலைமை ஏற் றல். |

மோசேயின் பாடல் இஸ்ராயேல் வரலாறு பற்றிய உள்ளக்கிளர்ச்சியூட்டும் இறை யியல் விளக்கமாகும். இது நீதிபதிகளின் காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம்; இறை வன் இஸ்ராயேல்பால் நடந்து கொண்ட விதத்திற்குக் காரணம் காட்டி விளக்குகிறது. இறுதியில் இறைவன் இஸ்ராயேலின் எதிரி கள்மீது வெற்றிகொள்வார் என்று அறிவிக் கப்படுகிறது. இறுதி அதிகாரம் குருக்கள் பாரம்பரியத்தைச் சேர்ந்ததாகத் தெரிகிறது. அதில் யாவே, எலோகீம், குருக்கள், உபாகமப் பாரம்பரியங்கள் கலந்திருக்கின் றன. இஃது எண்ணாகமத்திற்குத் தகுந்த முடிவுரையாக அமைந்திருக்கலாம். ஆனால் நாம் கொண்டிருக்கும் வடிவில் இது

யோசுவா ஆகமத்திற்கு முன்னுரையாகவும் அமைகிறது. உபாகமம் மோசேயைப் போற்றுவதோடு முடிகிறது. அவர் இறைவனது அன்பர் ஆவார்; மக்களின் தலைவர் ஆவார்; மிகப் பெரிய இறைவாக்கினர் ஆவார்.

V. சிறப்புக்கருத்துக்கள்

***1) உபாகமமும் யாத்திரையாகமமும்:*** உபாகமம் நீண்ட சட்டத்தொகுப்பையும் சட்டம் பற்றிய அறவுரைகளையும் கொண்டுள்ளது. ''சட்டத்தின் நகல்'' என்ற பொருளுள்ள எபிரேயச் சொற்களைத் தவறாக மொழி பெயர்த்து இந்நூலை ''இரண்டாம் சட்டம்'' என்று எழுபதுநூல் அழைத்தது என்று கூறினோம். இந்நூல் யாத்திரையாகமத்தோடு கொண்டுள்ள அமைப்பு ஒற்றுமையை நோக்கும்போது இப்பெயர் சரியானதென்றே நினைக்கச் செய்கிறது.

**யாத்திரையாகமம்**

| | |
|---|---|
| *1-18:* | : எகிப்திலிருந்து சீனாய்க்குப் பயணம். |
| *19:1-20:21* | : உடன்படிக்கையும் பத்துக் கற்பனையும். |
| *20:22-23:33* | : உடன்படிக்கை நூல். |
| *24.* | : முடிவுரை. |
| *32-34* | : ஆரோனின் பதிதம். மோசேயின் பரிந்துரை. மன்றாட்டு. உடன்படிக்கை புதுப்பிக்கப் படுதல். |

**உபாகமம்**

| | |
|---|---|
| *1:1-4:43* | : சீனாயிலிருந்து மோவாபுக்குப் பயணம். |
| *4:44-5:22* | : உடன்படிக்கையும் பத்துக் கற்பனையும். |
| *12-26* | : உபாகமச் சட்டநூல். |
| *27-28* | : முடிவுரை. |
| *9:7-10:5* | : ஆரோனின் பதிதம். மோசேயின் பரிந்துரை. மன்றாட்டு. பத்துக்கற்பனை மீண்டும் எழுதப்படுதல். |

இருநூல்களுக்குமிடையே தெளிவான, வெளிப்படையான வேறுபாடுகள் உள. யாத்திரை ஆகமத்தில் இறைவனது பேச்சு ஆதிக்கம் செலுத்துகிறது; யாவே பேசுகிறார். அதை மோசே மக்களுக்கு எடுத்துக் கூறுகிறார். மாறாக உபாகமத்தில் பொதுமக்களுக்கு மோசே அளிக்கும் பொது அறிவுரைகள் ஆதிக்கம் செலுத்துகின்றன (*1:1; 4:44; 5:1; 27:1; 29:1; 31:1-30; 33:1*). *9:7-10:5*; அதி. *27* ஆகிய பகுதிகளில் சில மாற்றிவைக்கப்பட்டுள்ளன. இருப்பினும் இரண்டு நூல்களுக்கும் உள்ள அடிப்படை ஒற்றுமை ஒரு பொதுத்திட்ட அமைப்பை அளிக்கிறது. உடன்படிக்கையும் அது வழிபாட்டுச் சூழ்நிலையில் புதுப்பிக்கப்படுதலும் இந்நூல்களில் உள்ள அடிப்படை ஒற்றுமையாகும்.

உபாகமநூலின் அமைப்புப்பற்றி நினைக்கும்போது, அதன் பொருத்தமுடைய முன்னுரையும் முடிவுரையும் நமது கவனத்தையும் ஈர்க்கத்தவறா. இந்நூலின் சட்டங்கள் மோசேயின் அறவுரைப் பணித்திட்டத்துள் புகுத்தப்பட்டு மோசேயின் மேலாண்மை பெற்ற நூலாகத் திகழ்கிறது.

*2) இறையியல்:* சட்டம்பற்றிய அறவுரைகளைப் பெரும் பகுதியாகக் கொண்ட இந்நூல் பழைய ஏற்பாட்டிலேயே இறையியல் மிக்கதாகும். இவ்விறையியலின் மையமும் அடிப்படையும் இஸ்ராயேலுக்கும் இறைவனுக்கும் இடையே ஏற்பட்ட உடன்படிக்கையாகும்.

யாவே இஸ்ராயேலின் ஒரே இறைவன். அவர் அருளும் ஆற்றலும் மிக்கவர். ஒரே இறைவன் கோட்பாடு ''ஆண்டவரே கடவுள் அவரைத் தவிர வேறு கடவுள் இல்லை'' (*4:35*) என்ற உரையில் தெளிவாகத் தரப்படுகிறது.

இறைவன் இஸ்ராயேலைத் தன்னுரிமையாக, அன்போடு தேர்ந்தெடுக்கிறார். அவர்களை எகிப்திலிருந்து விடுதலைசெய்து, பாலைவழியாக இட்டுச்சென்று, விரைவில் கானானை உரிமைச் சொத்தாக அவர்களுக்கு அளிக்கவிருக்கிறார். இதனை உடன்

படிக்கை வெளிப்படுத்துகிறது (உப 7:8; 28:6). இவ்விதம் இறைவன் இஸ்ராயேலைத் தேர்ந்தெடுத்தலுக்கு அவர்களின் எண்ணிக் கையோ, தகுதியோ காரணமன்று; அவர்கள் பால் அவர் கொண்ட அருள்நிறைந்த அன்பே காரணமாகும். இக்கருத்து பல உரைகளில் காணப்படுகின்றது (7:6-8; 4:37; 10:15). சட்டம், இந்தத் தேர்தலுக்கு இஸ்ரா யேல் அளிக்கும் அன்புமிக்க பதிலாகும் (6:5-9; 11:1; 19:9).. சட்டத்தைக் கடைப் பிடிப்பதால் இறைவனுக்கு இஸ்ராயேல் அன் புச்சேவை செய்கிறது. அப்பணிக்குப் பரி சாக நலமும் வளர்ச்சியும் செழிப்பும் இறை ஆசிகளும் உறுதியாக இஸ்ராயேலை வந்தடை கின்றன (11:26-38; 28:15-69). மாறாக, கீழ்ப்படியாமை தண்டனையையே அளிக் கும். கீழ்ப்படியாமை, தண்டனை, மன் றாட்டு, விடுதலை ஆகிய நான்கு சொற் களும் அடிக்கடி உபாகமத்தில் காணப்படு கின்றன; வரலாறு பற்றிய உபாகமத்தீர்ப் புக்கு அடிப்படையாகின்றன. இதை நீதி 2:11-19 என்ற பகுதி சுருக்கமாக எடுத்துக் கூறுகிறது.

உபாகமம் உடன்படிக்கையையும் அதன் அடிப்படையில் வாழும் வாழ்வையும் பற் றிய நிறைவான முதிர்ந்த கருத்துக்களைத் தருகின்றது. இந்த உடன்படிக்கைச் சமூகத்தின ரிடமிருந்து கோரப்படும் ஒழுக்கத்தை, மேற்கூறப்பட்ட இறையியலுக்கேற்ப நாம் அறிய முயல வேண்டும். உடன்படிக்கை யில் இறைவன் தாம் தெரிந்து கொண்ட மக்களுக்குத் தம்மையே வெளிப்படுத்து கிறார்; தம்மையே அவர்களுக்கு அளிக்கிறார். அதற்கு மனிதன் இறைவனுக்கு அளிக்கும் பதில் சட்டத்தைக் கடைப்பிடிக்கும் ஒழுக்க வாழ்வாகும். இது தூய்மைபெற்ற சமயச் சடங்கிலும், உயர்ந்த சமூக ஒழுக்க வாழ் விலும் அடங்கும். இறைவனுக்குப் பயப்பட வேண்டும் என்று உபாகமம் அடிக்கடி கற்பிக்கிறது. இப்பயம், கிலியாலோ திகிலாலோ ஏற்படுவதன்று; தங்களுக்கு இறைவன் செய்தவற்றிற்குக் காட்டும் அன் பின், நன்றியின் விளைவாக, இறைவன் ஆற்றல்முன் எழும் பணிவு மிக்க மரியாதை யாகும். இதன் அடிப்படைப்போக்கு இறை யன்பு பற்றிய மிகப் பெரிய கட்டளையில் வெளிப்படுகிறது (6:4-9). இதிலிருந்து, யூதர்கள் நாள்தோறும் இருமுறை சொல் லும் ''சேமா''வின் உன்னதவாசகம் உரு வெடுக்கிறது, இக்கட்டளையைப் பெரியதும் முதலாவதுமான கற்பனை என்று இயேசு கூறுகிறார்.

இஸ்ராயேலர் இறைவனால் தேர்ந்தெடுக் கப்பட்ட மக்கள்; புனித மக்கள்; அவ ருடைய மரபுரிமைச் சொத்தாவர் (4:20); அவருக்கே உரிய உடைமையாவர் (7:6; 14:2); அவருக்கென ஒதுக்கிவைக்கப்பட்ட மக்களாவர். இதை அவர்கள் ஒரு போதும் மறந்து விடக்கூடாது. ஆகையால் பிறமக் களின் சமயப் பழக்கவழக்கங்களிலிருந்து இஸ்ராயேல் பிரிந்திருக்க வேண்டும் என் பது மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்படு கிறது (7:25; 12:29-31; 18:9; 20:16-18). பிறமக்களின் தூய்மையற்ற சடங்குகளால் கறைபடுதலிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள வேண்டும். இதற்காக வழி பாட்டை மையப்படுத்தலில் அக்கறை செலுத்தப்படுகிறது.

இஸ்ராயேலர்களுக்கு அளிக்கப்படவிருக் கும் நாட்டில் வாழ்வோரை இறைவன் அழித்து விடுவார் என்ற உறுதிமொழி அழுத்திக் கூறப்படுகிறது. இந்தப் ''பரிசுத்தப் போர்'' என்ற கருத்தில் யாவேயே போரிட்டு எதிரிகளை அழிப்பார் என்று இஸ்ராயேலர் கருதினர். போர்வீரர்கள் இறைவனுக்குத் தங்களை அர்ப்பணிக்க வேண்டும். போர்வீரர்களின் எண்ணிக்கை தலையாயதன்று. ஏனெனில் இப்போரில் இறைவனே தானைத்தலைவர். இப் ''புனி தப்போரின்'' கொள்கை 7:16-26; 9:1-5; 31:3-8 ஆகிய பகுதிகளில் கொடுக்கப்பட் டுள்ளது. இப்போர் பற்றிய ஒழுங்குகளை 25;26;27-ஆம் அதிகாரங்களில் காணலாம். இப்போது இஸ்ராயேலர் பிறமதப் பழக்கங் களிலிருந்து காக்கப்படுதலையே குறிக் கோளாகக் கொண்டுள்ளது.

இறையியல் அடிப்படையில், உபாகமத்தில் வரும் சட்டங்களையும், ஒழுங்குகளையும் புரிந்து கொள்ள வேண்டும். சமயக்கடமைகள், ஒழுக்கக் கடமைகள், சமூகக் கடமைகள் ஆகியவைப் பற்றிய பல காரியங்களை இச்சட்டங்கள் ஒழுங்குபடுத்துகின்றன. தசம பாகத்தையும், மற்றக் காணிக்கைகளையும் செலுத்தியும், 16-ஆம் அதிகாரத்தில் விவரிக்கப்படும் முப்பெரும் விழாக்களைக் கொண்டாடியும், தூய கருத்துடைய முறையான புனித வழிபாட்டுச் சடங்குகளாலும் இஸ்ராயேலர் இறைவனை வழிபட வேண்டும். நீதிமன்றங்களில் நீதியைக் கடைப்பிடிப்பதாலும், வணிகத்தில் நேர்மையைக் கடைப்பிடிப்பதாலும், நல்ல குடும்ப வாழ்வாலும் இறைவனை வழிபட வேண்டும். அந்நியரிடமும், சமூகத்தில் அவப்பெயருடையவர்களிடமும் சலுகை குறைந்தவர்களிடமும் மக்கள் தாராளமாயும் அன்பாயுமிருக்க வேண்டும் என்பது அடிக்கடி எடுத்துக் கூறப்படுகிறது *(1:16; 10:19; 24:4; 27:19)*. இவற்றில் ஆமோஸ், ஓசே போன்றவர்களின் போதகம் எதிரொலிக்கிறது. ஆனால் சிலை வழிப்பாட்டையுடைய கானானியர்கள் அடியோடு அழிக்கப்பட வேண்டும். பதிதர்களுக்கு அடைக்கலம் அளிக்கும் நகரங்களும் ஆள், பொருளோடு முழுவதும் அழிக்கப்பட வேண்டும் *(13:6)*. இவற்றில் சமயப்பற்று, நாட்டுரிமைப் பற்று ஆகிய உணர்ச்சிகள் சிறப்பிக்கப் படுகின்றன *(31-32)*. பழி வாங்குதல் பற்றிய படிப்பினையிலும் நாட்டின் ஒற்றுமையே சிறப்பிக்கப்படுகிறது.

நாட்டின் வருங்கால வளர்ச்சியும் செழிப்பும் சட்டத்திற்குக் கீழ்ப்படிவதைப் பொறுத்திருப்பதால் *(5:26; 11:21)* பெற்றோர் குழந்தைகளுக்குச் சட்டத்தைக் கற்பிக்க வேண்டும் என்று *(6:2-7; 11;29; 31:13)* இந்நூலில் மீண்டும் மீண்டும் வலியுறுத்தப் படுகிறது.

உபாகமத்தின் செய்தியைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம். அன்பும் நேர்மையும் சேர்ந்து செயல்படுகின்றன. இறைவனை அன்பு செய்வது, தன் அயலானை அன்பு செய்து நீதியோடும் நேர்மையோடும் நடத்தலாகும். இறைவன் ஒருவரே. அவரே உயிருள்ள இறைவன். அவர் கற்களால் அல்லது மரத்தால் செய்யப்பட்ட சிலை அல்லர். அவர் பொறா உள்ளம் படைத்தவர். அவரின் மக்கள் அவரிடமிருந்து விலகிச்செல்லும்போது, அவர் வாளா இருக்கமாட்டார். அவர் அன்புடையவர்; தம் மக்கள் மீது வியத்தகுமுறையில் அருளிரக்கம் காட்டுபவர். மக்களும் அவரது ஆற்றலையும் உன்னதத்தையும் ஏற்று அவருக்கு அஞ்சி மரியாதை செலுத்த வேண்டும்; வணக்கம் செலுத்த வேண்டும்; அன்பு செய்ய வேண்டும்; அவருக்கு ஆழ்ந்த, ஆள்தன்மையான பற்றுதலையும் முழுமையான பிரமாணிக்கத்தையும் அளிக்க வேண்டும்.

உபாகமம், யாத்திரை நிகழ்ச்சிகள் பற்றிய ''இறையூக்கம் பெற்ற விளக்கவுரை'' எனலாம். இது அந்நிகழ்ச்சிகளின் பொருளைக் காட்டுகிறது. யூதர்கள் இவ்வகை இலக்கியத்தைப் புரிந்து கொண்டபடி இது வரலாற்று இலக்கியத்தின் மிகத் தூய்மையான வடிவமாகும் என்று கூறலாம். வெறுமனே நிகழ்ச்சிகளையும் நாட்குறிப்புகளையும் தரும் வரலாற்று இலக்கியத்தில் யூதர்கள் அக்கறை கொள்ளவில்லை. அவர்களுக்கு வரலாற்று இலக்கியம் நிகழ்ச்சிகளின் பொருளை விளக்க வல்லதாக இருக்க வேண்டும். இதை நரம் வரலாறு பற்றிய இறையியல் என்போம் *(உப 4:1-40)*.

*3) சட்டம்:* இந்நூலில் வரும் சட்டங்களில் பெரும்பாலானவை, பழம் மேற்காசியாவிற்குப் பொதுவான சட்டங்களைச் சார்ந்தனவாகும். விவிலிய ஆசிரியர்கள் அவற்றை ஏற்று அவற்றின் தொனியை உயர்த்தி, ஆன்மீகப் பண்பளித்து, அக்கால மற்றச் சட்டத்தொகுப்புகளுக்கு மேலானதாக இந்நூலை அமைத்தனர். அதன் நீதி பற்றிய கருத்து, நமக்குக் கொடுமையானதாகத் தோன்றலாம். ஆனால் அக்கால மரபோடு ஒப்பிடும் போது, இக்கருத்து இரக்கமிக்க

தாகும். எபிரேயச் சட்டத்தின் ஒரு சிறப்பான பண்பு எளியோருக்கும், பாதுகாப்பு அற்றோருக்கும், விதவைகளுக்கும், அநாதைகளுக்கும் அது காட்டும் அக்கறையாகும். பெண்களின் மேன்மை அதில் அழுத்திக் கூறப்படுகிறது.

உடன்படிக்கை ஊக்கம் பெற்ற இச்சட்டத் தொகுப்பு அதிகாரத்தோடு மக்கள் மேல் சுமத்தப்படவில்லை. யாத்திரை யாகமத்தில் காணப்படுவதுபோல் நேரடிக் கட்டளைகள் இந்நூலில் இல்லை எனலாம். மாறாக, நாட்டின் நலனுக்காகவும் அவர்களின் சொந்த நன்மைக்காகவும் அவர்கள் சட்டத்திற்குப் பணிய வேண்டும் என்று அவர்களைத் தூண்டுகிறது; இணங்கச் செய்கிறது. அஃது உன் வாயிலும் உன் இதயத்திலும் உள்ளது *(30:11.14)*.

*4)* **மோசேயின் இறுதி நாட்கள் - இறப்பு:** தனது இறப்புக்குமுன் யாக்கோபு தன் மக்களை ஆசீர்வதித்ததுபோல் மோசே பன்னிரு குலத்தவரையும் ஆசீர்வதிக்கிறார். மோசேயின் பாட்லையும் ஆசீர்களையும், நாம் கொண்டிருக்கும் வடிவில், பிற்காலக் கவி எழுதியிருக்கலாம். மோசே எழுதியதாகக் கருதப்படும் ஐந்நூலுக்கும் அதன் வரலாற்று இறையியலுக்கும் தகுதியான முடிவுரையாக இவை அமைகின்றன.

பன்னிரு குலத்தவரையும் உடன்படிக்கை இறைவனின் ஒரே மக்களாக்கி அவர்களை இறைவன் உறுதிமொழி அளித்த நாட்டிற்கு இட்டுச் செல்லும் மாபெரும் அலுவல் மோசேக்கு அளிக்கப்பட்டது. ஆனால் இப்பெரும் அலுவலை நிறைவேற்ற மோசேயால் முடியவில்லை. இறைவன் காட்ட, நெபோ மலையின் பிஸ்கா கொடுமுடியிலிருந்து, மோசே கானானைக் காண்கிறார் *(உப 34)*. கானானில் கால் வைக்காமலே, யோர்தானுக்குக் கிழக்கிலே இறந்து போகிறார். இறைவனே அவரை அடக்கம் செய்கிறார். அவரை அடக்கம் செய்த இடத்தை ஒருவரும் அறியார். இவ்வாறு வாழ்நாள் எல்லாம் அந்நிய நாட்டிலே வாழ்ந்த ஒரு பெரும் வாழ்வு அந்நிய நாட்டிலேயே முடிகிறது.

ஆனால் மோசேயைப் போன்ற ஒரு தலைவரை உலக வரலாற்றில் காண்பது அரிது. நாடோடி மக்களான பன்னிரண்டு குலத்தவரை ஒரு நாட்டினராக, ஓர் இனமாக அமைத்த பெருமையுடையவர். பழங்கால மேற்காசிய சீர்திருத்தவாதிகளைப் போலச் சட்டம் அளிப்பதிலும் பெயர் பெற்றவர். இச்சட்டம் பல நூற்றாண்டுகளுக்கு மக்களின் வாழ்க்கை இலயத்தை வரையறுக்க வல்லது; வரையறுத்து வருகிறது. மோசே ஓர் இறைவாக்கினர் என்பதே அவருக்குப் பெருமை தருவதாகும். இறைவன், யாவே என்ற தமது சொந்தப் பெயரை மோசேக்கு வெளிப்படுத்தினார். மோசே, இறைவனோடு நண்பனைப்போல் நேருக்கு நேர் பேசும் பேறும் சலுகையும் பெற்றவர். இறைவனின் கட்டளையை ஏற்று அவருக்கும் மக்களுக்குமிடையே ஓர் உடன்படிக்கையை ஏற்படுத்தியவர். மோசேயின் உண்மையான பெருமையும் மகிமையும் அரசியலில் அன்று, நாட்டுக் காரியங்களில் அன்று, சட்டக் காரியங்களில் அன்று, மறையைச் சார்ந்த காரியங்களில் அடங்கியிருக்கிறது. அவர் இன மரபு வரலாறு கடந்த ஒரு மாபெரும் சமயத் தலைவராவார். இறைவனின் புனிதத்திற்குள்ளே நுழைகிறார். எக்காலத்துக்கும் எக்கால மக்களுக்கும் உரியவர். மீட்பு வரலாற்றில் அவர் ஒரு திட்டம் செய்யப்பட்ட கட்டமாவார். அதே சமயம் வரவிருக்கும் மாபெரும் உறுதி மொழியின் ஓர் ஒப்பற்ற அடையாளமும் ஆவார். ''என் கடவுளாகிய ஆண்டவர் உன் இனத்தினின்றும் உன் சகோதரர்களிடத்தினின்றும் என்னைப் போல இறைவாக்கினரை உனக்காக ஏற்படுத்துவார். நீ அவருக்குச் செவி கொடுப்பாயாக'' *(உப 18:15)*.

VI **உபாகமமும் புதிய ஏற்பாடும்:** உபாகமத்தைப் போல் எந்தப் பழைய ஏற்பாட்டு நூலும் புதிய ஏற்பாட்டில் அவ்வளவு எடுத்துக் காட்டப்படவோ, சுட்டிக்காட்டப்படவோ இல்லை எனலாம். புதிய ஏற்பாட்

டில் உபாகமம் ஏறத்தாழ 32 தடவை எடுத்துக் கூறப்படுகிறது; 112 முறைகள் சுட்டிக் காட்டப்படுகிறது. மத்தேயுவிலும் எபிரேய ருக்கு எழுதப்பட்ட திருமுகத்திலும் இந் நூலின் செல்வாக்கும் ஆதிக்கமும் மிகுந்துள் ளது எனலாம். இயேசுவின் தூதை இந்நூல் ஒளிபெறச் செய்கிறது. ''சோதனைக்காட்சி'' யில் மும்முறை இந்நூலிலிருந்து எடுத்துக் கூறி (உப 8:3; 6:16; 6:13) இயேசு சாத்தானுக்குப் பதிலிறுக்கிறார் (மத் 4:4-10). முதலாவது பெரும் கட்டளை உப 6:5-இலிருந்து எடுத்துக் கூறப்படுகிறது (மத் 22:37; மாற் 12:29-30). இயேசு, உப 18:15-இல் வரும் மோசேயைப் போன்ற இறைவாக்கின ராகக் காட்டப் பெறுகிறார் (யோவா 1:21; அ.ப. 3:22; எபி 3:1-11). பின்வரும் ஒப்பியல் உபாகமத்தின் சிறப்பை எடுத்துக் காட்டும். உபாகமத்தையும் இயேசுவின் இறுதியுரையையும் சிறிது விரிவாக ஒப்பிட விரும்புகிறோம்.

உபாகமம் ஒரு மாபெரும் பிரியாவிடை அறவுரையாகும். இவ்வுரை, யோவான் நற்செய்தியில் வரும் இயேசுவின் இறுதி உரைக்கு ஒரு முன் எடுத்துக்காட்டாக அமைகிறது. இரு உரைகளையும் அமைக் கும் சூழ்நிலைகள் ஒத்திருக்கின்றன. 1) இரண்டும் பிரியாவிடை அறவுரைகளாகும். யாரை அன்பு செய்தார்களோ, யாருக்கு வழிகாட்டினரோ, அவர்களிடமிருந்து பிரிய விருக்கும் தலைவர்கள் இறுதி உரை ஆற்றுகின்றனர் 2) தங்கள் தலைவர்களை இழக்கவிருக்கும் இரு குழுவினரின் எதிர் கால நிலையும் ஒத்துள்ளது. இஸ்ராயேலர் கானானில் குடியேறி, யாவேயின் தேர்ந் தெடுக்கப்பட்ட மக்களாகத் தங்களை அமைத் துக் கொள்ள விருக்கின்றனர். இயேசுவின் சீடர்கள் அவருடைய நிலையான சமூகமாக மாறவிருக்கின்றனர். 3) இரு குழுவினருக் கும், தங்கள் எதிரிகளுக்கு மாறாகத் தொடங்கவிருக்கும் போராட்டத்தில் ஆறுத லும் உற்சாகமும் தேவையாகின்றன. 4) தங் கள் சமூக அமைப்பின் அடிப்படையாக, தங்களுக்குள்ளே நடந்து கொள்ளும் முறை பற்றியும், எதிரிகளோடு நடந்து கொள்ளும் முறை பற்றியும், இரு குழுவினருக்கும் படிப்பினையும், எச்சரிக்கையும் தேவை யாகின்றன. இப்புற ஒற்றுமையைவிட, உள்ளார்ந்த கருத்து ஒற்றுமையில் மிகுந்த நெருக்கம் உள்ளது.

VII. *முடிவுரை:* இறைவன் இஸ்ராயேலை அழைத்தார். அதில் முதல் பகுதி மோசேயை அழைத்ததாகும். மோசேயை இறைவன் முதலில் எவ்விடத்தில் அழைத் தாரோ, அங்கேயே இஸ்ராயேலர் இறைவ னோடு உடன்படிக்கை செய்து கொள்ளு கின்றனர். அடிமைத் துன்பத்திலிருந்து ஓர் இனமக்களை விடுதலைக்கும் வாக்குறுதி அளிக்கப்பட்ட நாட்டிற்கும் இட்டுச் செல்லு தல் மோசேயின் சிறப்பான அலுவலாகும். ஆனால் எல்லா மக்களுக்கும் மீட்பின் கால்வாயாய் இருப்பது இஸ்ராயேலின் சிறப்பு அலுவலாகும். இவ்வலுவல் சீனாய் உடன்படிக்கையில் எடுத்துக்கூறப்படுகிறது. இவ்வலுவலும், இவ்வுடன்படிக்கையும் எவ்வாறு சட்டத்தில் செயல்படுகிறது என்று நாம் புரிந்துகொள்ள முயல வேண் டும். மக்களின் வாழ்விலும், தனிப்பட்டோ ரின் வாழ்விலும் சட்டம் எவ்விடம் வகிக் கிறது, எப்படிச் செயல்படுகிறது என்று புரிந்து கொள்ள வேண்டும். சட்டம் ஒரு வாழ்க்கை வழியாகும். அதைக் கவனமாய்க் கடைப்பிடித்தல் இறைவனுடைய அரு ளைப் பெற்றுத்தரும். இதை உபாகமம் எடுத்துக் காட்டுகிறது. இது நற்செய்தியில், கிறிஸ்துவில் நிறைவெய்துகிறது.

## துணையாளர், பரிந்துரைப்பவர் (PARACLETE)

இச்சொல்லைக் குறிக்கும் ''பாராக்லே டோஸ்'' என்ற கிரேக்கச் சொல்லானது யோவானின் இலக்கியச் சொற்றொகுதி யைச் சேர்ந்ததாகும். இச்சொல் ஒருபொரு ளின் இயல்பைவிட அதன் செயல்முறை யினைக் குறிப்பிடுகிறது. ''சார்பாகப்பேச அழைக்கப்பட்டவர்'', துணையாளர், பரிந்து பேசுபவர், மற்றும் ஆதரவாளர் என்று பலவாறு இச்சொல்லுக்குப் பொருள் கூறலாம். இவர் தனது செயலைச் சுறுசுறுப்

பாக நிறைவேற்றுபவர். (போலிச் சொல் லிணக்க முறையில் பெறப்படும் ஆறுதல் அளிப்பவர், தேற்றுகிறவர் என்ற பொருள் களுக்குப் புதிய ஏற்பாடு சான்று அளிக்க வில்லை). விண்ணகத்தில் நமது சார்பாக, தந்தையுடன்பரிந்து பேசுபவராக உள்ள இயேசு கிறிஸ்து இந்த அலுவலை ஏற்றுப் பாவிகளின் சார்பாகப் பரிந்து பேசுகிறார் (1 யோவா 2:1). இந்த அலுவலை, இயேசுவின் பிரசன்னத்தை உண்மையாக்கு கிற தூய ஆவியானவரும் கொண்டிருக் கிறார். ஏனெனில் அவர் இவ்வுலகில் விசுவாசி களுக்கு இயேசுவை வெளிப்படுத்துபவரா கவும், காப்பாளராகவும் உள்ளார் (யோவா 14:16-17.26-27; 15:26-27; 16:7-11.13தொ).

*1. தூய ஆவி, இயேசுவின் பிரசன்னம்:* துணையாளரின் வருகையானது, மனித ரிடையிலான இறைவனுடைய பிரசன்னத் தின் வரலாற்றில் ஒரு புதிய நிலையைக் குறிக்கின்ற இயேசுவின் பிரிவுடன் இணைக் கப்படுகின்றது (யோவா 16:7). இறுதி இராவுணவிற்குப் பிற்பட்ட போதனையில், காலத்தின் இறுதியில் மட்டுமின்றி (14:3) உயிர்த்தபின் அளிக்கவிருக்கும் காட்சி களிலும் தாம் வருவதாக (14:18 தொ;16: 16-19) இயேசு அறிவிக்கிறார். உயிர்த்தவரின் காட்சியானது சீடரை மகிழ்ச்சி யில் மூழ்கடிக்கிறது (16:22). ஆயினும், அவரைப் பின் செல்பவர்களிடையிலான அவரது பிரசன்னமானது இனிப் புலன்களால் உணரக்கூடிய இயல்பினதாக இல்லாமல் ஆன்மீக இயல்பினதாக இருக்கும். அச்சம யம்வரை அவரைப் பின்பற்றியவர்க ளிடையே அவர் தங்கியிருந்தார் (14:25). இப்போது அவரது பெயரில் (14:26), இயேசுவே அனுப்பவிருக்கின்ற (15:26; 16:7) மற்றொரு துணையாளரை அவரது செபத் தால், தந்தை அவர்களுக்கு அளிப்பார் (14:16). இயேசுவிற்கு வேறுபட்டவராக இருந்தாலும், ஆவியானவர் இயேசுவின் பிரசன்னத்தை முழுமைக்குக் கொண்டு வரு கிறார். இயேசுவைப் போன்று, அவர் அவர் களில் உள்ளார் (14:17; 17:23); இயேசுவைப் போன்று, அவர் விசுவாசிகளுடன் தங்கு கிறார் (14:17.25). ஆனால், தந்தையின் உறை விடத்தில் இயேசு தயாரிப்பதற்கெனச் சென் றுள்ள இடங்களை இவர் முன்னறிவிப்ப தால் (14:2-3), இப்பிரசன்னம் முடிவுற்றதாக உள்ளது (14:16; மத் 28:20). இவரே உண்மையின் ஆவி (யோவா 14:17; 16:13); பொய்களின் தந்தைக்கு எதிராக (8:44) இயேசு உள்ள உண்மையின் ஆவி (14:16); இனித் தந்தையின் வழிபாட்டைச் சிறப்பிக் கின்ற உண்மையின் ஆவி (4:23-24). தூயவ ராகிய இயேசு (6:69) தனது திருநிலைப் பாட்டின் மூலம் (17:19) அவர்களுக்கு அளிப்பதற்கென வெகுமதியாகப் பெற்ற (20:22; 7:39) தூய ஆவி இவரே (14:26). இவர் அவர்களைத் திருநிலைப்படுத்துவ தன் மூலம் (17:17) இவ்வுலகைச் சாராதவர் களாக்குகிறார் (17:16). தன்னை வெறுக் கின்ற உலகிற்கு (7:7; 15:18-19) இயேசு தன்னை வெளிப்படுத்தாதது போன்று (14:21-22), ஆவியானவரும் உலகினால் வரவேற்கப்படவில்லை (14:17).

*2. உண்மையின் ஆவி, திருச்சபையின் உயிருள்ள நினைவு:* சீடர்களின் சமுதாயத் தில் துணையாளர் செயல்திறன் மிக்க பிரசன் னத்தைக் கொண்டுள்ளார். அவர் இயேசுவை மகிமைப்படுத்த வேண்டும் (16:14). முதலாவதாக அவரது படிப்பினையை மெய்யாக்க வேண்டும். ''அவர் உங்களுக்கு எல்லாம் அறிவுறுத்துவார்; நான் உங்களுக் குக் கூறியதெல்லாம் நினைவூட்டுவார்'' (14:20). இயேசு எப்போதும் தந்தையுடன் இணைந்து தனது பணியை நிறைவேற்றி யதுபோன்று, இந்த அறிவுறுத்தலும் நினைவூட்டலும் இயேசுவுடனான நெருங் கிய இணைப்பில் நிறைவேற்றப்படுகின் றன. தந்தையின் கொடைகளை இயேசு பகிர்ந்தளிப்பது போன்று (16:15; 17:10), ஆவியானவர் ''எனக்குள்ளதிலிருந்து பெற்று உங்களுக்கு அறிவிப்பார்'' (16:14-15). இயேசு கூறியவற்றையெல்லாம் நினைவிற்குக் கொண்டு வருவார். ஏனெனில் ''அவர் தன்னைப்பற்றிப் பேசமாட்டார்; ஆனால், தான் கேட்பது அனைத்தையும் அவர் பேசுவார்''. இவ்வாறு இயேசு

அனைத்தையும் தனது தந்தையிடமிருந்தே பெற்றார் *(5:30; 8:40; 15:15)*. மேலும் அவரது போதனை அவருடையதன்று *(8:28; 12:49-50; 14:10)*. இயேசுவைக் காண்பது தந்தையைக் காண்பது போன்று *(14:9)*, அபிடேகம் பெறுதல் அனைத்தைப்பற்றியும் கற்பிக்கின்றது *(1 யோவா 2:27)*. அதாவது, ஆவியானவர் ''அனைத்து உண்மைக்கும்'' நடத்திச் செல்கிறார் *(யோவா 16:13)*. உயிர்ப்பின் ஒளியில் அவர் பழைய நிகழ்ச்சிகளை மீண்டும் பிரசன்னப்படுத்துகிறார் *(2:22; 7:39; 11:51-52; 12:16; 13:7)*. இதன் மூலமாக அவர் கிறிஸ்துவுக்குச் சான்று பகர்கிறார் *(15:26)*. அவர் வழியாக, அவரோடு சாட்சியம் பகருமாறு அவர் சீடர்களுக்கும் ஆற்றல் அளிக்கிறார் *(15:27)*.

**3. உண்மையின் ஆவி, இயேசுவின் காப்பாளர்:** தேற்றரவாளர் தவறுக்கு எதிரான ஓர் உண்மையை வெளிப்படுத்துவதோடு நில்லாமல், உலகினுடைய பொய்க்கு எதிரான உண்மையையும் எண்பிக்கிறார். அவரே உண்மையின் ஆவி. அவரது சீடர்களுக்கு நடுவில் இயேசுவிற்கு எதிராக உலகம் நடத்துகின்ற நடவடிக்கைகளில், அவர் கிறிஸ்துவுக்குச் சாட்சியம் பகர்கின்றார். ஒத்தமை நற்செய்திப் பாரம்பரியத்தில், அரசர்களுடைய விசாரணைக்குழுவிற்கு *(மாற் 13:11)* முன்னால் நிறுத்தப்பட்ட சீடர்களுக்கு ஆதரவாக அவர் இருந்தாலும் யோவானில் இயேசுவின் காப்பாளராக அவர் உள்ளார். தனது உலக வாழ்வில் இயேசு இருந்தது போன்று, குற்றஞ்சாட்டப்பட்டவர்களாயிருந்தாலும், சீடர்கள் தங்களது நடுவர்களுக்கே நடுவர்களாகின்றனர் *(யோவா 5:19-47)*. துணையாளர் உலகினை மூன்று நிலைகளில் கண்டனம் செய்கிறார் *(16:8-11)*: இயேசுவை பொறுத்தவரை விசுவாசமின்மை பாவம் என்பதால் பாவத்தைக் கண்டனம் செய்கிறார்; தனது தந்தையின் பணியில் மகிமைப்படுத்தப்பட்ட இயேசுவின் பக்கம் நீதி இருப்பதால், நீதிபற்றி உலகம் கொண்டுள்ள கருத்தைத் தவறானது எனக் காட்டுவார். இவ்வுலகின் தலைவனுக்கு எதிராகத் தண்டனைத் தீர்ப்பானது ஏற்கனவே அறிவிக்கப்பட்டு விட்டதால் தீர்ப்பு என்ன என்று காட்டுவார். இவ்வாறு, விசுவாசி ஏற்றுச் செவிமடுக்கின்ற துணையாளரின் காரணமாக, அவனது இதயத்தில் ஓர் உறுதிப்பாடு நிலவுகிறது. உலகன்று, இயேசுவே நேர்மையானவர்; எனவே, அவனும் தனது தலைவரை விசுவசிப்பதும் அவருக்காகத் துன்புறுவதும் சரியே. அவருடன் சேர்ந்து அவன் ஏற்கனவே உலகையும் பேயையும் வென்றவனாக உள்ளான் *(16:33)*.

## துண்டு (TOWEL)

இயேசு சீடர்களின் பாதங்களைக் கழுவிய பின்னர், துண்டு கொண்டு அவர்களது பாதங்களைத் துடைத்தார் *(யோவா 13:4-5)*. இஃது ஓர் இழிவான செயலன்று; மாறாகத் தாழ்ச்சி நிறைந்த செயலாகும்.

## துப்பும் எச்சில் (PURSLANE)

இச்சொல் ''சுவையற்றது உப்பின்றி உண்ணப்படுமா? துப்பும் எச்சிலில் சுவை இருக்குமா''? என்ற யோபுவின் கூற்றில் மட்டும் *(யோபு 6:6)* ஒரே ஒரு தரம் வருகிறது. இறைவன்முன் தன் இயலாமையும் தன் சொற்களின் பயனின்மையும் கூறுகிறார்.

## துரு (RUST)

துரு என்ற சொல் விவிலியத்தில், உலோகங்களோடு சேர்த்தே சொல்லப்பட்டுள்ளது. பொதுவாக, 'துருப்பிடித்து வீணாதலைக்' குறிக்கும். இது பயிர்களுக்கு வரும் ஒரு நோயைப் போன்றது. பானையின் அல்லது கொப்பரையின் துரு, எருசலேமின் இழிவுக்கும், ஒழுக்கங்கெட்ட தனத்திற்கும் அடையாளமாகிறது. மீண்டும் மீண்டும் சூடுபடுத்தினாலும் ''அதன் திண்மையான துரு அகலவேயில்லை'' *(எசே 24:1-13)*. புதிய ஏற்பாட்டில், விண்ணுலகில் செல்வத்தைச் சேமித்துவைக்கும்படி கூறும் சூழ்நிலையில் துரு என்ற சொல் பயன்படுகிறது *(மத் 6:19-20)*. இதே கருத்தைப்பின்பற்றி யாக் 5:3 இவ்வுலகப் பொன்னும் வெள்ளியும் துருப்பிடித்துவிட்டன என்றும்,

இந்தத் துருவே பணக்காரர்களுக்கு எதிரான சாட்சியாகும் என்றும் கூறுகிறது.

**துருசில்லா** (DRUSILLA - *பனியால் நீருட்டப் பட்ட*)

முதலாம் ஏரோது அகிரிப்பாவின் மூன்றாவதும் கடைசியுமான மகளும் 2-ஆம் ஏரோது அகிரிப்பாவின் சகோதரியும் (கி.பி. 38-79) ஆவாள். சிறிய ஆசியாவிலுள்ள கொம்மாசெனேயின் இளவரசனான எப்பிபானுக்கு இவளை மணம் முடிக்க இருந்தது. ஆனால் அவர் விருத்த சேதனம் பெற்று யூத மதத்தைத் தழுவ மறுத்ததால் இத்திருமணம் நடைபெறவில்லை. அவளது சகோதரன் அவளைச் சீரியாவில் எமேசா நகரின் அரசன் அசீசுக்கு மணம் செய்து வைத்தான்.

மணம் முடித்து ஓர் ஆண்டுக்குப்பின், இந்த அழகிய துருசில்லா அவளது கணவனை மணவிலக்குச் செய்து ஏற்கெனவே மணவிலக்குச் செய்த தன்னை மணக்குமாறு உரோமை ஆளுநன் பெலிக்சு விடுத்த காதலை ஏற்றுக்கொண்டாள். நாற்பத்திரண்டாம் வயதில், பெலிக்சுக்குப் பிறந்த மகன் அகிரிப்பாவோடு வெசுவியஸ் மலையின் தீப்பிழம்பில் மடிந்து போனாள் (கி.பி. 79).

பவுல் செசரியாவில் தங்கியதைப் பற்றிய விவரிப்பில் லூக்கா துருசில்லாவையும் பெலிக்சையும் குறிப்பிடுகிறார் (அ.ப. 24:24-27). அதிலே இவள் யூதப்பெண் என்று குறிப்பிடப்படுகிறாள். ''கிறிஸ்து இயேசுவின் மேல் கிறிஸ்தவர்கள் கொண்டுள்ள விசுவாசத்தைக் குறித்து'' பவுல் பேச, துருசில்லாவும் பெலிக்சும் கேட்டனர் (24:24). ஒரு பாரம்பரியப்படி, இவள் தான் பவுலைப் பேச அழைக்கும்படி தூண்டியவள்.

**துருத்திகள்** (BELLOWS)

துருத்தி கண்டுபிடிக்கப்பட்டதையும், அதன் வளர்ச்சியையும் பல்வேறு நிலைகளில் விளக்கலாம். 1) மனித நுரையீரலில் இருந்து வரும் காற்று முதலில் தீயை ஊதப்பயன்படுத்தப்படுகிறது. 2) இரண்டாம் நிலையில், ஊதும் காற்றை ஒருமுகப் படுத்த மூங்கில், உலோகம் போன்றவற்றால் ஆன குழாய்கள் பயன்படுத்தப்படுகின்றன. 3) மூன்றாம் நிலையில் மனித நுரையீரல் காற்றைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக, காற்றை ஊதுவதற்குக் குழாய்களோடு சேர்ந்த ஒரு சிறிய சாதனம் பயன்படுகிறது. இத்தகைய துருத்திகள் புதிய அரசின் காலம் வரை (கி.மு.1550) எகிப்தில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. பெனிகாசான் எனுமிடத்தில் உள்ள ஒரு கல்லறையில் காணப்பட்ட ஓவியத்தில் ஒரு கழுதையின் முதுகில் இருக்கும் இரண்டு பொருட்கள், தற்காலத்தில் பயன் படுத்தப்படும் கைத்துருத்திகளைப் போன்றே உள்ளன. எகிப்தில் புதிய அரசின்காலத்தில் கால்களினால் இயக்கப்படக்கூடிய துருத்திகள் பயன்படுத்தப்பட்டன. பொதுவாகப் புதிய அரசில் இரட்டைத் துருத்திகள் பயன் பட்டனவாகத் தெரிகின்றன. துருத்திகள், மூங்கில், உலோகம் அல்லது களிமண்ணினாலான குழாய்களோடு இணைக்கப்பட்டு, நெருப்பு எரியும் இடத்தோடு இணைக்கப்பட்டிருக்கும். இரண்டு துருத்திகளையும், இயக்குபவர் ஒவ்வொரு காலாகத் தூக்கி அழுத்த, காற்று நெருப்பை எரியச்செய்யும், அழுத்தப்பட்ட துருத்தி மீண்டும் காற்றை உள்ளே ஏற்கும்படியாக ஒவ்வொரு துருத்தியையும் இழுத்துவிட கயிறுகள் இணைக்கப்பட்டிருக்கும்.

பெத்-செமேசு என்னுமிடத்தில் உலோகப் பொருட்கள் செய்யும் நிறுவனத்தோடு தொடர்புடைய களிமண்ணால் ஆன பல குழாய்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

எரே 6:29-இல் துருத்தி என்பது ஓர் இயந்திர சாதனத்தைச் சுட்டுகிறது. ஆனால் பிற இடங்களில் இது தெளிவாக்கப்படவில்லை (யோபு 20:26; 41:21; எசா 54:14; எசே 22:20-21; காண்க. சீரா 43:4).

நெருப்பில் புடமிடப்படுதல் யாவேயின் தீர்ப்புக்கு உவமையாகச் சொல்லப்படுகிறது (எசே 22:20-21 காண்க. யோபு 41:21).

**துரும்பு** (MOTE, SPECK)

இது, காய்ந்த மரத்துகள், வைக்கோல் தூசி, கம்பளத்தூசி ஆகியவற்றைக் குறிக்கும். துரும்பையும் மரக்கட்டையையும் ஒப்பிட்டு வேறுபடுத்தி, பிறரைத் தீர்ப்பிடக் கூடாது எனப் போதிக்கிறார் இயேசு (மத் 7:3-5; லூக் 6:41-42). பிறர் கண்ணிலுள்ள துரும்பை எடுக்க முயலுமுன் ஒருவன் தன் கண்ணிலேயே உள்ள மரக்கட்டையை அகற்ற வேண்டும். அதன்பின், பிறர் கண்ணிலுள்ள துரும்பை எடுக்க அவனுக்குத் தெளிவாகக் கண்தெரியும்.

**துரோகில்லியும்** (TROGYLLIUM - பழந்துறை முகம்)

சிறிய ஆசியாக் கடற்கரையில் அமைந்துள்ள தீபகற்ப மலையான மைகாலேமலையின், சாமுவை நோக்கிஅமைந்துள்ள நிலமுனை. அ.ப. 20:15-இன்படி பவுலின் குழுவினரை ஏற்றிச்சென்ற கப்பல் சாமுவை அடைந்தது. ஆனால் இந்த நிலமுனைக்கும் தீவுக்கும் இடையிலுள்ள சலசந்தியில் கப்பலைச் செலுத்துவது ஒரு பிரச்சனையானதால், துரோக்கில்லியுமில் தங்க வேண்டியதாயிற்று. பின்பு அங்கிருந்து மிலேத்துக்குப் புறப்பட்டுச் சென்றார்.

**துரோபிம்** (TROPHIMUS - ஊட்டம் பெற்ற)

இவர் பவுல் இறுதியாக எருசலேமுக்குச் சென்றபோது அவரோடு சென்றவர்களில் ஒருவராவர். ஆசியாவின் எபேசைச் சேர்ந்த இவரோடு, திக்கிக்குவும் உடன் சென்றார் (அ.ப. 20:4-6). இவர் புறவினத்தைச் சேர்ந்த கிறிஸ்தவர். சிறிய ஆசியா, மாசிதோனியா, கிரீசு ஆகிய இடங்களிலுள்ள திருச்சபைகளில் எருசலேம் திருச்சபைக்காக எடுத்த காணிக்கைகளைக் கொண்டு சென்ற இருவரில் ஒருவர்.

எருசலேமில் பவுலுடன் இவரைக்கண்ட யூதர்கள் சிலர் பவுல் இவரையும் புறவினத்தார் செல்லக்கூடாத ஆலயப்பகுதிகளுக்குள் அழைத்துச் சென்றிருக்கலாம் என்று முடிவு செய்து பவுல் ஆலயத்தின் புனிதத்தைக் கெடுத்து விட்டார் என்று குற்றம் சாட்டினர். இஃது ஒரு கலகத்திற்கு இட்டுச் சென்று, பவுல் கைதியானதில் முடிந்தது (21:27-33).

''துரோபிம் நோயுற்றிருந்ததால் மிலேத்துவில் அவரை விட்டு வந்தேன்'' என்று பவுல் 2 திமொ 4:20-இல் கூறுகிறார். இக்கூற்றுக்கும், அப்போஸ்தலர் பணிநூல் விவரிப்புக்கும் (அ.ப. 21:29) முரண்பாடு தெரிகிறது. ஆனால் பவுல் உரோமைச் சிறையிலிருந்து விடுதலையடைந்து, துரோபிமோடு சேர்ந்து மீளவும் தனது மறைபரப்புப் பணியைத் தொடர்ந்து நடத்தினார் என்பதற்கு 2 திமொ 4:20 ஒரு சான்றாகும் என்று பலர் கருதுகின்றனர்.

**துரோவா** (TROAS)

சிறிய ஆசியாவின் வடகிழக்கில், ஆகியன் கடற்கரையில், மைசியாவிலுள்ள ஒரு துறைமுக நகரம். இது பழங்காலத் திராய் என்ற நகருக்குத் தென்-தென்கிழக்கில் 25 கி.மீ. தொலைவில் அமைந்திருந்தது. இது திராய் என்ற பெயரிலிருந்து துரோவா என்ற பெயரைப் பெற்றிருக்கலாம்.

இந்நகரம் பெரிய அலக்சாந்தருக்குப்பின் வந்தவர்களில் ஒருவரான அந்திகோனு என்பவரால் சுமார் கி.மு. 310-இல் நிறுவப்பட்டு அந்திகோனியா துரோவா என்று பெயரிடப்பட்டது. இதனை மேம்படுத்திய லிசிமாக்கு இதற்கு அலக்சாந்திரியா துரோவா என்று பெயரிட்டார். இந்நகர் சிறிது காலம் செலூக்கிய அரசர்களின் உறைவிடமாகவும், சிறிதுகாலம் சுதந்தர நகரமாகவும் விளங்கியது. கி.மு. 133-ஐ ஒட்டி இது உரோமை அரசோடு இணைந்தது. அகுஸ்து ஆட்சிக்காலத்தில் ஓர் உரோமைக் குடியிருப்பாக மாறியது.

பவுல் தனது மறைபரப்புப் பயணங்களில் குறைந்தது மூன்று முறையாகிலும் துரோவாவுக்குச் சென்றிருக்கவேண்டும். இங்குதான் பித்தினியாவுக்குச் செல்லாமல் ஆவியால் தடுக்கப்பட்டு, தாம் கண்ட காட்சியில் மாசிதோனியா நாட்டுக்கு அழைக்கப்படுவதாக உணர்ந்தார் (அ.ப. 16:7-11). ''நாங்கள்''

என்ற பகுதி 16:10-இல் தொடங்குவதால், இப்போது லூக்கா பவுலோடு சேர்ந்திருக்க வேண்டும். துரோவாவுக்குப் பவுல் மீண் டும் வந்தபோது அங்கு நற்செய்தியை அறிவிக்க நல்ல வாய்ப்பு இருப்பதைக் கண்டார். ஆயினும் கொரிந்துத் திருச்சபை யைப்பற்றிய செய்திகளைத் தீத்துவிடமிருந்து அறியும் நம்பிக்கையில் மாசிதோனியாவுக் குச் சென்றார் *(2 கொரி 2:12-13)*. மாசி தோனியாவில் தனது பணியை முடித்துக் கொண்டபின், எருசலேமை நோக்கித் தனது இறுதிப்பயணத்தைத் தொடரும்முன், பவுல் ஏழு நாட்களுக்குத் துரோவாவில் தங்கினார் *(அ.ப. 20:5-12)*. அப்போதோ அதற்குப் பின்னரோ, துரோவாவில் போர்வை, நூல் கள், மற்றும் தோல் சுருள்களை விட்டுச் சென்றிருக்கவேண்டும் *(2 திமொ 4:13)*.

### துலாக்கோல் (Balance)

நாகரீகம் வளர்ச்சியடைந்து கொண் டிருந்த காலத்தில் முதலில் துலாக்கோல் அல்லது தராசு எடை பார்க்கப் பயன்பட்டது. இரண்டு உலோகத் தட்டுகள் ஒருகோலின் கோடிகளிலிருந்து கயிறுகளால் தொங்க விடப்பட்டன. கோல், நடுவில் கட்டப்பட்ட கயிற்றில் தொங்கும். பிற்காலத்தில்தான் கோலின் மையம் ஒரு செங்குத்தான மரத் தில் தொங்கவிடப்பட்டது. மேற்காசியா வில் உரோமையர் வருமுன் சம கிளை யுடைய துலாக்கோல்கள் வழக்கில் இருந்தன. ஆனால் நெம்புகோல் அடிப்படையில் அளவு களைக் கூறும் எடை பார்க்கும் கருவி இல்லை. ஆனால் பிற்காலத்தில் கீழ்ப்பக்க மாகத் தூக்கு நூல் போடப்பட்டது. இப்படிப்பட்ட துலாக்கோல் எகிப்திய ஓவியங்களில் காணப்படுகின்றன.

தூக்குநூல் செங்குத்தாக நிற்கும் பொழுது இருதட்டிலும் உள்ள பொருட்கள் சமமாக இருப்பது தெளிவாகத் தெரியும். எகிப்தியர் கள் பண்ட மாற்றுகையில் இதைப் பயன் படுத்தினர். இறந்தபிறகு தீர்ப்பு வழங்க கடவுள்களும் இதைப் பயன்படுத்துவதாக மக்கள் நம்பினர். மத்திய அரச காலத்தில் ''விவசாயியின் கதையில்'' வேண்டுதல் செலுத்துபவன் தராசைப் பற்றி அடிக்கடி குறிப்பிடுகிறான். ''நீதான் தராசு. உன் நாக்குதான் தூக்கு நூல் துண்டு. உன் இதயம் எடை. உன் இரண்டு உதடுகளும்தான் கோல்'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. எகிப் தில் தராசு பயன்படுத்தப்பட்டது போன்று அவ்வளவு அதிகமாக மெசபொத்தாமியா வில் பயன்படவில்லை. கைத்தராசு மக் களை ஏமாற்ற வாய்ப்பாக இருந்தது. கானான் நாட்டில் இஸ்ராயேல் மக்கள் வருமுன் தராசு இருந்தது. உகாரித்து வாச கங்களில் ஒரு குடும்பம் இவ்வேலையைச் செய்ததாகக் காணப்படுகின்றது. தந்தை கோலையும், தாய் தட்டுகளையும், சகோதரர் கள் உலோக வார்ப்புக் கட்டிகளையும், சகோதரிகள் எடையையும் பார்த்து வந்த தாகக் கூறப்பட்டுள்ளது. விவிலியத்தில் நீதி யுள்ள தராசு பயன்படுத்தப்படவேண்டும் என்றும், ஏமாற்றும் தராசு கண்டனத்துக் குரியது என்றும் கூறப்பட்டுள்ளது.

*சீரா 28:25; 42:4*-இல் துலாக்கோலும் எடைக்கற்களும் குறிக்கப்படுகின்றன. ஏழு முத்திரை விவரிப்பில் மூன்றாவது முத் திரையை உடைத்தபோது தோன்றிய கரு நிறக்குதிரைமேல் ஏறியிருந்தவருடைய கையில் துலாக்கோல் ஒன்று இருந்தது *(திருவெளி 6:5)*.

### துறைமுகம் (HARBOUR, HAVEN)

பெரும்பாலும் கப்பலோட்டும் பொரு ளில் பயன்பட்டுள்ளது. இது கப்பல்களை நங்கூரம் பாய்ச்சிப் பாதுகாப்பாக வைத் திருக்கும் இடத்தைக் குறிக்கிறது *(ஆதி 49:13; சங் 107:30)*.

பவுல் உரோமைக்குச் செய்த பயணத்தில் ஒரு துறைமுகம் குறிக்கப்படுகிறது. இதன் பெயர் செந்துறை *(அ.ப. 27:8)* ஆகும். இங்கிருந்து பயணத்தைத் தொடர்வது விபத்துக்குரியது என்று பவுல் எச்சரித்தும், கப்பல்தலைவன் பயணத்தைத் தொடர்ந்து கிரேத்தாவிலுள்ள பெனிக்சு துறைமுகத்தை அடைந்து, அங்கு மாரிக்காலத்தைக் கழிக்க எண்ணினான். அதன் விளைவு

அனைவரும் பெரும் விபத்துக்குள்ளானார்கள். பின்பு மால்தாத் தீவை அடைந்தார்கள் (அ.ப. *27:9-28:1*).

### துன்பப்பாதை (VIA DOLOROSA)

இயேசு தமது சிலுவை மரணத்துக்கு நடத்தப்பட்டுச் சென்றபோது, எருசலேம் வீதிகளின் வழியாக அவர் சென்றதாகப் பாரம்பரியமாகக் கருதப்படும் பாதை. இப்பாதை பிலாத்துவால் இயேசு தீர்ப்பிடப்பட்ட இடமாகப் பாரம்பரியமாகக் கருதப்படும் இடத்தில் தொடங்கி புனிதக்கல்லறைக் கோவிலில் உள்ள இயேசுவின் கல்லறையோடு முடிகிறது. திருப்பயணிகளின் நன்மைக்காக, இப்பாதையில் *14* நிலைகள் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளன. ''இதோ மனிதன்'' வளைவுக்கு அருகில் இருநிலைகள் துன்பப்பாதையைத் தொடங்கி வைக்கின்றன. ஏழுநிலைகள் நகர வீதிகளில் அமைந்துள்ளன. ஐந்துநிலைகள் புனிதக்கல்லறைக் கோவிலுக்குள் அமைந்துள்ளன.

கிறிஸ்துவின் பாடுகளின் வழியில் பக்தியோடு செபித்துக்கொண்டு செல்லும் வழக்கம் பைசாந்தியர் திருச்சபைக்காலத்தில் தொடங்கியதாகத் தெரிகிறது. இதுபற்றிய கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த குறிப்புகள் கிடைத்துள்ளன. காலப்போக்கில் இப்பக்தி முயற்சி வள்ச்சியடைந்துள்ளது. துன்பப்பாதை உரோமை ஆளுநனின் மாளிகையில் தொடங்கியதா, அந்தோனியாக்கோட்டையில் தொடங்கியதா என்பது பற்றி எளிதில் தீர்க்கப்பட முடியாத பிரச்சனை உண்டு.

இப்போது கடைப்பிடிக்கப்படும் துன்பப்பாதை *18*-ஆம் நூற்றாண்டில் நிறுவப்பட்டது. ஆனால் அதில் *10* நிலைகளே இருந்தன. இவை *19*-ஆம் நூற்றாண்டில் *14* நிலைகளாக அமைக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டன. இப்போது ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் எருசலேமில் உள்ள பிரான்சிக்கு சபையினர் மாலை *3* மணி அளவில் தொடங்கி இப்பக்தி முயற்சியை நடத்துகின்றனர். திருப்பயணிகள் பக்தியோடு அதில் கலந்து செபித்துக்கொண்டு, கிறிஸ்து சிலுவை சுமந்து சென்ற துன்பப்பாதையில் செல்கின்றனர்.

### துன்பம் (SUFFERING)

I. ''துன்புறுத்தப்படும்போது, இடுக்கணுறும்போது... நான் மனநிறைவோடு இருக்கின்றேன்'' (*2* கொரி *12,10*) என்று பவுல் மனந்திரும்பிய கொரிந்தியருக்கு எழுதத் துணிகின்றார். கிறிஸ்தவன் மனிதரின் துன்பங்களிலே பெருமைகாணும் தத்துவ ஞானி அல்லன். ''தம் முன்னே வைத்திருந்த மகிழ்ச்சியின் பொருட்டு, நிந்தையைப் பொருட்படுத்தாமல், சிலுவையைத் தாங்கி'' நம் ''விசுவாசத்தைத் தொடங்கிவைத்தவரின்'' சீடன் (எபி *12:2*). இயேசுகிறிஸ்துவின் ஒளியிலேயே எல்லாத் துன்பங்களையும் கிறிஸ்தவன் நோக்குகின்றான். ''இறைவனால் அபிடேகம் பெற்றவர்கள் படவேண்டிய நிந்தையை, எகிப்தின் கருவூலங்களிலும் மேலான செல்வமாகக் கருதிய'' (எபி *11:26*) மோசேயின் துன்பங்களில் அவன் ஆண்டவரின் பாடுகளைக் காண்கிறான்.

ஆனால் கிறிஸ்துவில் துன்பம் பெறும் புதுப்பொருள் என்ன? பழைய ஏற்பாட்டில் அடிக்கடி சாபமாகக் கருதப்பட்ட துன்பம் புதிய ஏற்பாட்டில் பெரும் பேறாக மாறியது எவ்வாறு? ''எனக்கு வரும் வேதனையிலெல்லாம் என் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கி வழிகிறது'' (*2* கொரி *7:4*; காண் *8:2*) என்று பவுல் கூறத்துணிந்தது எப்படி? விசுவாசம் உணர்ச்சியற்றதா? அல்லது துன்பத்தை இன்பமாகக் காணும் கலங்கிய நோக்கம் உடையதா?

II. பழைய ஏற்பாடு

*1. துன்பத்திலிருந்து தப்பமுடியாது:* வேதாகமம் துன்பத்தைப் பொருட்படுத்தாமல் விட்டுவிடுவதில்லை; அதை ஆழ்ந்த அனுதாபத்தோடு நோக்குகின்றது. அதே வேளையில் துன்பம் என்னும் தீமை இல்லாத ஓர் உலகம் இருந்திருக்கலாம் என்றும் அது கருதுவதாகத் தெரிகிறது.

அ. துன்பத்தின் கூக்குரல்: துயரங்கள், தோல்விகள், பேரிழப்புக்கள் இவற்றின் காரணமாக எழும் கூக்குரல்களும் முறையீடுகளும் புலம்பல்களும் வேதாகமத்தில் நிறைந்திருக்கின்றன. பெருமூச்சுகள் அடிக்கடி தோன்றிப் 'புலம்பல்' என்ற ஒரு தனி இலக்கியத்திற்கே வழிவகுத்திருக்கின்றன. மக்கள் பெரும்பாலும் இறைவனிடமே முறையிடுகின்றார்கள். உணவுக்காக மக்கள் பார்வோனிடம் கெஞ்சுவதும் (ஆதி 41:55), கொடுங்கோலருக்கு எதிராக இறைவாக்கினர் முறையிடுவதும் உண்மைதான். ஆனால் எகிப்தில் அடிமைகள் இறைவனிடமே முறையிடுகின்றனர் (யாத் 2:23). இஸ்ராயேல் மக்கள் யாவேயை நோக்கிக் கூக்குரலிடுகின்றார்கள் (14:10; நீதி 3:9). துன்பத்தின் குமுறல்கள் சங்கீதங்களில் நிறைந்திருக்கின்றன. தொடர்ந்து ஒலிக்கின்ற இத்துன்பக்கதறல்கள் மரணத்தின்முன் கிறிஸ்துவின் ''கண்ணீரும் பலத்த குரலும்'' (எபி 5:7) வரை நீடிக்கின்றன.

ஆ. துன்பம் இருந்திருக்கக்கூடாத ஒரு தீமை என்ற உணர்வே அதைப்பற்றிய மதிப்பீடுகளுக்கு அடிப்படை. துன்பத்திற்கு ஆளாகாதவர் ஒருவரும் இல்லை என்பது உண்மைதான்! ''பெண்ணிடம் பிறந்த மனிதனுக்கு வாழ்நாளோ குறைவு; வருத்தமோ நிறைவு!'' (யோபு 14:1; காண். சீரா 40:1-9). அதனால் தவிர்க்க முடியாததென்று துன்பத்தை மனிதன் ஏற்றுக்கொள்வதில்லை. ஞானமும் சுகமும் ஒன்றுக்கொன்று இணைந்தவை (பழ 3:8; 4:22; 14:30); சுகம் இறைவனின் கொடை (சீரா 31:20). அதற்காக மனிதன் அவரைப்போற்றுகின்றான் (சீரா 17:28); அவரை மன்றாடுகின்றான் (யோபு 5:8; 8:5தொ; சங் 107:19). பல சங்கீதங்கள் நோயுற்றோர் சுகம் வேண்டும் மன்றாட்டுகள் ஆகும் (சங் 6; 38; 41; 88). வேதாகமம் துன்பத்தைத் துய்த்து மகிழ்வதில்லை. மருத்துவர்களை அது புகழ்கின்றது (சீரா 38:1-15); வரவிருக்கும் மெசியாவின் காலத்தை நோயுற்றோர் சுகமும் (எசா 33:24) இறந்தோர் உயிர்ப்பும் (26:19; 29:18; 61:2) பெறும் காலமாகக் காண்கின்றது. குணமாக்குதல் யாவே (19:22; 57:18), மெசியா (53:4 தொ) என்பவர்களின் அலுவல்களுள் ஒன்றாகக் கருதப்படுகின்றது. பாலையில் உயர்த்தப்பட்ட வெண்கலப் பாம்பு (எண் 21:6-9) மெசியாவின் அறிகுறி ஆகவில்லையா? (யோவா 3:14). பஞ்சம், பொருட்சேதம், வறட்சி, துக்கம், போர், அடிமைத்தளை, அகதி நிலை என்றவாறு தனி நபர்களையோ நாடுகளையோ பீடிக்கும் துன்பங்கள் அனைத்திலிருந்தும் மெசியா விடுதலை அளிப்பார் என எதிர்நோக்கியிருக்கின்றனர். தவத்தின் பொருட்டோ, பவுலின் கருத்தைப் பின்பற்றியோ துன்பத்தை விரும்பி ஏற்கும் பண்பு பழைய ஏற்பாட்டில் காணப்படவில்லை.

2. துன்பம் ஒரு முட்டுக்கட்டை: இந்த மறுக்கமுடியாத அனுபவமாகிய துன்பத்தைப் புரிந்துகொள்ள வேதாகமம், தன்னைச் சுற்றியுள்ள மற்ற மதங்களைப்போல், பல்வேறு கடவுளருக்குள்ளே சச்சரவையோ இருபொருள் வாதத்தையோ நாடவில்லை. பாபிலோனில் அகதிகளாய், பேரிடர்களினால் கடல் போன்ற துன்பத்தில் ஆழ்ந்தபோது (புல 2:13) யாவே தன்னைவிட வலியவர் ஒருவரிடம் தோற்றிருப்பாரோ என்ற பெருஞ்சோதனை தோன்றியது உண்மைதான். யாவேதான் உண்மையான இறைவன் என்று கூறும் இறைவாக்கினர்கூட துன்பங்களுக்கு அவர் பொறுப்பல்லர் என்று தட்டிக்கழிக்காமல், துன்பங்களுக்கும் அவரே காரணம் என்று வலியுறுத்துகின்றார்கள். ''நான் ஒளியை உண்டாக்குகிறேன்; இருளைப் படைக்கிறேன். நல்வாழ்வை அமைப்பவன் நான்! தீமையைப்படைப்பவனும் நானே!'' (எசா 45:7; காண். 63:3-6). ஆமோசின் துணிகரமான வாக்கை இஸ்ராயேல் என்றும் மறக்காது. ''ஆண்டவர் அனுப்பவில்லையெனில், நகருக்குத் தீமை தானாக வந்திடுமோ?'' (ஆமோ 3:6; காண் யாத் 8:12-28; எசா 7:18). இப்படிப்பட்ட நம்பிக்கை சிலரிடையே ஒரு வெறுப்புணர்ச்சியைத் தோற்றுவித்தது. உலகிலே துன்பத்தைக் காணும் விசுவாசமற்ற தீயவர் சிலர்,

''கடவுள் இல்லை'' (சங் 10:4; 14:1) அல்லது ''இறைவனுக்கு எப்படித் தெரியும்? உன்னதர்க்கு அறிவு இருக்கிறதா?'' என்று கூறத் துணிகின்றனர். யோபின் மனைவி ''கடவுளைப் பழித்து மடிவது தானே'' (யோபு 2:9) என்று அறிவுறுத்துகின்றாள்.

இன்பத்தைப்போல் துன்பமும் இறைவனுக்கு முற்றும் கீழ்ப்பட்டிருந்தாலும், இறைவனுடைய நேரான தலையீட்டைத் தவிர்த்துத் துன்பத்திற்கு வேறு காரணங்களைக் காண முயல்கின்றனர். காயங்களை இயற்கைச் சக்திகள் வருவிக்கலாம் (ஆதி 34:25; யோசு 5:8; 2 சாமு 4:4). முதுமையில் நோய்கள் இயல்பானவை (ஆதி 27:1; 48:10). உலகிலே மனிதனுக்கு எதிரான தீயசக்திகள் உள்ளன. சாபத்தினின்றும் சாத்தானிடமிருந்தும் இவை தோன்றுகின்றன. பாவம் துன்பத்திற்குக் காரணமாகிறது (பழ 13:8; எசா 3:11; சீரா 7:1). ஆகவே துன்பங்களுக்கெல்லாம் முதற்காரணமாக ஒரு பாவத்தைத் தேடும் போக்கு காணப்படுகிறது (ஆதி 12:17 தொ; 42:21; யோசு 7:6-13). யோபின் நண்பர்களுக்கு இதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. உலகத்தின் துன்பத்திற்கெல்லாம் ஊற்றாக இருப்பது முதற்பாவம் என்றுதான் கூறவேண்டும் (ஆதி 3:14-19).

முன்னறிவிப்பின்றி வரைமுறை கடந்து பலதரப்பட்டவர்களையும் பீடிக்கும் சாவு மனிதருக்குப் பெரும் துக்கத்தை வருவிக்கின்றது (யோபு 21:28-33; பழ 11:4; ஆமோ 5:19). அதைவிட அதிர்ச்சி தருவது நல்லவர்கள் இறக்க, தீயவர்கள் நெடுங்காலம் வாழ்வது (திருவுரை 7:15; எரே 12:தொ). இதையெல்லாம் காணும்பொழுது இவ்வுலகில் நீதிக்கு இடமுண்டா என்ற ஐயப்பாடு எழுவது இயல்பே (அப 2:1-24; மலா 2:17; 3:15; சங் 37;73).

எப்படியும் துன்பம் விளைவிக்கும் இயற்கை, எதிர்பாரா விபத்து (யாத் 21:13), மனித வாழ்வின் நிலையற்ற தன்மை (யோபு 4:1தொ; காண் 4:17), பாவத்தின் பயங்கர விளைவுகள், சாபம் (ஆதி 3:14; 2 சாமு 16:5), சாத்தான் ஆகிய இவையனைத்துமே இறைவனின் வல்லமைக்கு உட்பட்டவையே ஆகும். ஆகவே இறைவனே காரணமாகச் செயலாற்ற வேண்டுவது அவசியமாகிறது. ஆகவே இறைவனப்பற்றிய ஐயப்பாடுகள் எழுகின்றன. நல்லோரின் துன்பமும் தீயோரின் மகிழ்ச்சியும் இறைவாக்கினருக்குக்கூடப் புரியவில்லை (எரே 12:1-6; 1:13; 3:14-18). துன்புறுத்தப்படும் நல்லோர் இறைவன் தங்களை மறந்துவிட்டார் என்று எண்ணுவதில் வியப்பில்லை (சங் 13:2; 31:13; 44:10-18). யோபு இறைவனுக்கு எதிராக முறையிட்டு அவரைப் பதில்கூற அழைக்கின்றார் (யோபு 13:22; 23:7). திருப்பாடல் அல்லது சங்கீத ஆசிரியர் ஒருவரும் நாட்டுக்கு நேர்ந்த நீதியற்ற துன்பங்களின் பொருட்டு அவ்வாறே செய்கின்றார் (சங் 44:10-27). ஆனால் துன்பங்களின் கொடுமை அளவிறந்தபோதுகூட இஸ்ராயேல் மக்கள் மனச்சோர்வு அடைந்ததில்லை. யோபு வரலாற்றின் ஆசிரியர் நம்பிக்கை இழந்த மனநிலையிலே தன் நூலை முடிக்கவில்லை. சோர்வே உருவான திருவுரை ஆசிரியர், எது எப்படியிருந்தாலும் வாழ்வு இன்பமயமாயிருக்கட்டும் என்று கூறுகின்றார் (திருவுரை 3:2.24; 9:7-10; 11:7-10). மனந்தளர்ந்த, மனம் வருந்தும் இறைவாக்கினர்கூட நம்பிக்கையையும் மகிழ்ச்சியையும் அறவே இழந்து விடுவதில்லை (எரே 9:16-23). வெற்றிகரமான உயிர்ப்பின் முன்னுணர்வு மறைமுகமாக முன்கூட்டியே வேதாகமம் முழுவதும் நிலவுகிறது என்று கூறலாம் (ஆதி 22; சங் 22; 49; 73; எசா 53; உரோ 4:18-21).

**3. துன்பம் ஒரு மறைபொருள்:** துன்பத்தால் மனந்தளர்ந்தாலும் விசுவாசத்தால் உந்தப்பட்டு இறைவாக்கினரும் ஞானிகளும் படிப்படியாகத் துன்பத்தின் ''மறை பொருளை'' (சங் 73:17) உணர்கின்றார்கள். உலோகத்தின் மாசுகளை நீக்கும் நெருப்பைப்போலத் துன்பம் தூய்மைப்படுத்துகின்றது (எரே 9:6; சங் 65:10). தந்தை தன்

மக்களைத் திருத்துவதற்காகத் தண்டிப்பது போல் துன்பம் நன்னெறிபயிற்றுகின்றது (உப 8:5; பழ 3:11 தொ; 2 நாள் 32:26-31). உடனுக்குடன் கிடைக்கும் தண்டனை யாகிய துன்பத்தில் இறைவனுடைய கரு ணையே வெளிப்படுகின்றது (2 மக் 6:12-17; 7:31-38). நமது சிற்றறிவுக்குப் புரியாத இறைத்திட்டத்தின் வெளிப்பாட்டைத் துன் பத்திலே அவர்கள் காணுகின்றார்கள் (யோபு 42:1-6; காண் • 38:2). யோபுவிற்குமுன் யோசேப்பு இத்தத்துவத்தைத் தன் சகோ தரருக்கு விளக்குகின்றார் (ஆதி 50:20). எதிர்பாராத முறையில் இளமையிலே உயிர் துறக்கும் ஞானியைச் சாவு பாவத்தினின்று காப்பாற்றுகின்றது (ஞான 4:17-20). இந்த அடிப்படையிலேயே மலடிகளும் அண்ணக ரும் பேறுபெற்றவர் என்று பழைய ஏற் பாடு கூறுகின்றது (ஞான 3:13 தொ). துன்பங்களும் துன்புறுத்தப்படுதலும் பாவப் பரிகாரமாகவும் இருக்கலாம் (எசா 40:2).

தனது ஊழியர்களுள் தலைசிறந்தவருக் கென இறைவன் வகுக்கும் ஓர் உயர்ந்த சோதனையாகத் துன்பம் இறைத்திட்டத்தில் இடம் பெறுவதை விசுவாசம் உணர்கின் றது. இவ்வாறு ஆபிரகாம் (ஆதி 22), யோபு (1:11; 2:5), தோபியா (12:13) ஆகியவர்களுக் குத் தான் எவ்வளவு பெரியவர், தன் பொருட்டு அவர்கள் எவ்வளவு துன்புற லாம் என்று இறைவன் காட்டுகின்றார். எரேமியாகூட எதிர்ப்பைவிட்டு மீண்டும் மனந்திரும்புவது இதனால்தான் (எரே 15:10-19).

இறுதியாகத் துன்பம் மீட்புக்கும் மன் றாட்டுக்கும் பயன்படுகின்றது. மோசே இதற்கு எடுத்துக்காட்டு. அவர் துக்கம் ததும்பச் செபிப்பதுமட்டுமன்றி (யாத் 17:11தொ; எண் 11:தொ) குற்றம் செய்த மக்களை மீட்கத் தன் வாழ்வையே பலியாக்கு கின்றார் (32:30-33). மோசேயும் அதிகத் துன்பத்திற்காளான எரேமியா போன்ற இறைவாக்கினர்களும் (எரே 8:18.21; 11:19; 15:18) யாவேயின் ஊழியனுக்கு மாதிரியாக இருக்கின்றார்கள்.

யாவேயின் ஊழியனுடைய துன்பங் களுக்கு அளவோ, எல்லையோ இல்லை. துன்பம் எவ்வளவு தூரம் அவரைச் சாடி அவரது உருவை நீர்மூலமாக்கியிருக்கின்றது என்றால் அவரைக் காணுகின்றவர்கள் அனு தாபத்திற்குப் பதில் பீதியும் அவநம்பிக்கை யும் அடைகின்றார்கள் (எசா 52:14 தொ; 53:3). அவருடைய வாழ்வில் துன்பம் ஒரு எதிர்பாரா விபத்தோ, விரைவில் கடந்து போகும் ஒரு துக்கவேளையோ அன்று. அவருடைய அன்றாட வாழ்வே துன்பந் தான். அதுவே அவரை அடையாளம் காட்டும் குறி. ''துன்பத்தின் மனிதன்'' அவர்! (எசா 53:3). மிகப்பெரியதொரு குற்றத்திற்குரியது என்று அல்லது தூய்மை யான இறைவன் அளிக்கும் எடுத்துக்காட் டான தண்டனை என்று இத்துன்பங்களை விளக்கலாம் (53:4). கேட்டறியாத அளவுக் குப் பெரிய குற்றம் உண்டென்பது உண்மைதான்! ஆனால் குற்றம் அவருடைய தன்று, நம்முடையது! நம் அனைவருடை யது! (53:6). அவர் குற்றமற்றவர். இதை விடத் திகைப்பூட்டக்கூடிய சூழ்நிலை வேறென்ன வேண்டும்?

ஆனால் இதில்தான் மறைபொருள் அடங்கி இருக்கின்றது; இறைத்திட்டம் நிறைவேறுகின்றது (53:10). பாவமற்றவர் ''பாவிகளுக்காகப் பரிந்து பேசுகின்றார்'' (53:12). அவருடைய பரிந்துரை வெறும் இதய எழுச்சிமட்டுமன்று. ''பாவப்பரிகார மாகும் அவருடைய உயிர்!'' (53:10). பாவிக ளோடு ஒருவராகி அவர்கள் குற்றங்களைத் தானே ஏற்றுக்கொள்கின்றார். திகைப்பு வியப்பாக மாறுகின்றது. யாவேயினுடைய ''ஆற்றல்'' வெளிப்படுகின்றது (53:1). உல கிலுள்ள எல்லாப் பாவமும் துன்பமும் அவர்மேல் சுமத்தப்படுகின்றன! கீழ்ப்படித லோடு அவற்றை ஏற்று அனைவருக்கும் சுகத்தையும் அமைதியையும் பெற்றுத் தரு கின்றார் (53:5).

### III. புதிய ஏற்பாடு

**1. இயேசுவும் மனிதரின் துன்பமும்:** இயேசு, துன்புறும் ஊழியனின் உருவாக, துன்புறும் மனிதனாகப் பிறக்கின்றார். மனிதரின் துன்

பங்கள் அவர் உள்ளத்தைத் தொடுகின்றன. துன்புறுவோரைக் காணும்பொழுது அவர் நெஞ்சம் தெய்வீகக் கருணையால் உருகுகின்றது (மத் 9:36; 14:14; 15:32). அவர் இருந்திருந்தால் இலாசர் இறந்திருக்கமாட்டான் என்று மார்த்தாளும் மரியாளும் அவருக்கு ஞாபகமூட்டுகின்றனர் (யோவா 11:21.32). இயேசுவே இக்கருத்தைப் பன்னிருவருக்கு மறைமுகமாகத் தெரிவிக்கின்றார் (11:14). அவர் அன்பு இத்தகையதென்றால் ஏன் இந்தப் புதிர்! ''அவன்மேல் இவருக்கு எத்துணை அன்பு, பாருங்கள்!... இவர் அவன் சாகாமலிருக்கச் செய்ய இயலவில்லையா?'' (11:36 தொ).

**அ. துன்பத்தை வெல்கின்றவர் இயேசு கிறிஸ்து:** அவருடைய இறுதி வெற்றியின் முன்னோடிகளாகவும், மெசியா அலுவலின் அறிகுறிகளாகவும் (மத் 11:4; காண் லூக் 4:18தொ) சுகமளித்தல், உயிர்ப்பித்தல் போன்ற புதுமைகள் விளங்குகின்றன. பன்னிருவர் செய்த புதுமைகளில் இயேசு சாத்தானின் வீழ்ச்சியைக் காண்கின்றார். ''நம் பிணிகளைத் தாங்கிக்கொண்ட, நம் துன்பங்களைச் சுமந்த'' (எசா 53:4) ஊழியனைப்பற்றிய இறைவாக்கை அந்நோய்களையெல்லாம் குணப்படுத்தி மெய்ப்பிக்கின்றார் (மத் 8:17). தனது பெயரால் நோய்களைக் குணமாக்கும் ஆற்றலைத் தன் சீடருக்கு அளிக்கின்றார் (மாற் 16:18). அழகிய வாயிலுக்கு வெளியே நோயுற்றவன் ஒருவன் குணமானது திருச்சபையின் தொடக்க காலத்தில் அதற்கு ஓர் உத்தரவாதமாக விளங்கியது (அ.ப. 3:1-10).

**ஆ. துன்பத்தைப் பேறுடையதாக்கும் இயேசு கிறிஸ்து:** துன்பத்தையோ தான் வெற்றிகொள்ள வந்த (எபி 3:14) மரணத்தையோ இயேசு இவ்வுலகிலிருந்து போக்கவில்லை. நோய் அல்லது விபத்துக்கும் பாவத்துக்கும், இயல்பான தொடர்புண்டு என்று அவர் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் (லூக் 13:2 தொ. யோவா 9,3), ஏதேன் தோட்டச் சாபத்தின் விளைவுகளை அவர் தடுக்கவில்லை. ஏனெனில் இந்த விளைவுகளை மகிழ்ச்சியாய் மாற்ற அவரால் இயலும். அவர் துன்பத்தைப் போக்கவில்லை; ஆறுதல் அளிக்கின்றார் (மத் 5:5). அவர் கண்ணீரை அகற்றவில்லை; தன் வழியிலே சிலருடைய கண்ணீரை மட்டும் துடைக்கின்றார் (லூக் 7:13; 8:52). இச்செயல்கள் எல்லோருடைய முகங்களிலிருந்தும் கண்ணீரைத் துடைத்து (எசா 25:8; திருவெளி 7:17; 21:4), இறைவன் தன் பிள்ளைகளோடு இணையப்போகும் மகிழ்ச்சியின் குறிகளே ஆகும். துன்பம் ஆசிராகலாம். ஏனெனில் அது இறையரசை வரவேற்க மனிதனைத் தயாரிக்கிறது; ''இறைவனின் அருஞ்செயல்களையும்'' (யோவா 9,3), இறைவனுடையவும் அவரது மகனுடையவும் மகிமையையும் (11:4) வெளிப்படுத்த வாய்ப்பளிக்கிறது.

**2. மனுமகனின் துன்பங்கள்:** இயேசு துன்பத்தை நன்குணர்ந்தவர் (எசா 53:3). விரியன் பாம்புக் குட்டிகளைப்போல் (மத்.12,34; 23,33) தன்னை விசுவசிக்க மறுக்கும் ''பற்றுறுதி இல்லாத, சீரழிந்த'' (மத் 17:17) மக்கள் கூட்டத்தைக் கண்டு அவர் துன்புறுகின்றார். தன்னுடைய மக்களே தன்னைக் கண்டுகொள்ளாததும் அவருக்குத் துன்பமூட்டுகின்றது (யோவா 1:11). எருசலேமுக்கு முன் அவர் அழுகின்றார் (லூக் 19:41; காண் மத் 23:37). தன் பாடுகளைநினைத்து அவர் கலக்கமடைகின்றார் (யோவா 12:27). அத்துன்பம் சாவு வருமளவுக்கு ஆழ்துயரமாகிறது; வேதனையாகிறது; கடுந்துயரும் பயமும் கலந்து போர்க்களமாகின்றது அவர் உள்ளம் (மாற் 14:33தொ; லூக் 22:44). காட்டிக் கொடுக்கப்பட்டதிலிருந்து இறைவனால் கைவிடப்படும் வரை (மத் 27:46) மனிதனுக்கு என்னென்ன துன்பம் நேரமுடியுமோ அவை அனைத்தும் அவர் பாடுகளாய்ப்பரிணமிக்கின்றது. இத்துன்ப உச்சநிலையோடு தன் உயிரையே பாவப்பரிகாரமாக அளிக்கும் (மத் 20:28) கிறிஸ்துவின் மீட்புப் பலி இணைகின்றது. இதற்காகவே தந்தையின் திட்டத்தின்படி அவர் உலகிற்கு அனுப்பப்பட்டார் (அ.ப. 3:18). இயேசு அன்போடும் (யோவா 14:31; 15:13) கீழ்ப்

படிதலோடும் (எபி 3:7-8) இத்திட்டத்திற்குப் பணிகின்றார். 'அவர் துன்புற வேண்டும்' என்ற தொடரில் துன்பத்தோடு எப்போதும் தொடர்புடைய 'வேண்டும்' என்ற சொல் அவரது வாழ்க்கை இரகசியத்தை வெளிப் படுத்துகின்றது. பேதுருவும் மற்றச் சீடர்களும் புரியாது இடர்ப்பட்டதையும் பொருட்படுத் தாது இயேசு தன் பாடுகளை முன்னறிவித்த போது இச்சொல்லை அடிக்கடி பயன்படுத்து கின்றார் (லூக் 17:25; காண் மாற் 8:31 தொ; மத் 17:22தொ; லூக் 9:42-45). ஆனால் மீட்பளிக்கும் பாடுகள் மகனின் மகிமையை வெளிப்படுத்துகின்றன (யோவா 17:1; 12:31தொ); ''அவரைச் சுற்றிச் சிதறிக்கிடந்த கடவுளின் மக்களை ஒன்றாய்ச் சேர்க்கின்றன'' (11:52). இவ்வுலக வாழ்க்கையில் ''சோதிக்கப்பட்டவர் களுக்கு உதவி செய்த'' (எபி 2:18) அவர் தீர்ப்பு நாளில் மகிமையோடு வரும்போது இவ்வுலகில் துன்பப் படுவோரோடெல் லாம் ஒன்றிக்க ஆசிக்கின்றார் (மத் 25:35-40).

*3. சீடரின் துன்பங்கள்:* உயிர்ப்பின் வெற் றிக்குப்பின் சாவும் துன்பமும் இனி இல்லை என்ற பொய்த் தோற்றம் கிறிஸ்த வர்களை அச்சுறுத்துகிறது. வாழ்வின் பயங் கர உண்மைகள் அவர்களது விசுவாசத்தின் உறுதியைக் குலைக்கின்றன (காண் 1 தெச 4:13). உயிர்ப்பு நற்செய்தியின் போதனையை உறுதிப்படுத்துகிறதே அன்றி அகற்றவில்லை. பேறுகளின் கருத்து அனுதினச் சிலுவை யின் தேவைகள் (லூக் 9:23) ஆகியவை யெல்லாம் ஆண்டவருடைய பாஸ்கா மறை யுண்மையின் ஒளியில் புத்துயிர் பெறுகின் றன; அவசரத்தன்மை பெறுகின்றன. அவ ருடைய சொந்தத்தாயே துயரத்திலிருந்து விடு தலை பெறவில்லையென்றால் (லூக் 2:35), ஆண்டவரே துன்பங்கள் துன்புறுத்தப்படு தல்கள் வழியாகத்தான் மகிமையடைய வேண்டுமென்றால் (24:26) சீடர்களும் அதே வழியைத்தான் பின்பற்ற வேண்டும் (யோவா 15:20; மத் 10:24). மெசியாவின் காலம் சோதனைகளின் காலமாகும் (மத் 24:8; அ.ப. 14:22; 1 திமொ 4:1).

*அ. கிறிஸ்துவோடு துன்புறுதல்:* கிறிஸ்த வன் வாழும்பொழுது, அவனல்லன் ஆனால் கிறிஸ்துவே அவனில் வாழ்வதுபோல (கலா 2:20), கிறிஸ்தவனின் துன்பங்கள் அவனில் கிறிஸ்துவின் துன்பங்களாகும் (2 கொரி 1:5). கிறிஸ்தவனின் உடல்கூட கிறிஸ்துவுக்குச் சொந்தம். அவன் துன்பத் தால் கிறிஸ்துவின் உருவைப் பெறுகின் றான் (பிலி 3:10). கிறிஸ்து ''மகனாயிருந் தும் பாடுகளினால் கீழ்ப்படிதலைநேரில் துய்த்துயர்ந்தது போல'' (எபி 5:8), நாமும் நம் ''விசுவாசத்தைத் தொடங்கி வைத்தவ ரும்... சிலுவையைத் தாங்கியவருமான இயேசுவின்மேல் கண்களைப் பதியவைத்து நமக்குக் குறிப்பிட்டுள்ள பந்தயத்தில் மன உறுதியோடும் ஓடவேண்டும்'' (எபி 12:1தொ). துன்புறும் மனிதரோடு கிறிஸ்து ஒன்றுகின்றார். அவருடைய சீடருக்கும் அதே ஒழுங்குதான் (1 கொரி12;26; உரோ 12:15; 2 கொரி 1:7).

*ஆ. கிறிஸ்துவோடு மகிமை பெற:* நாம் அவரோடு துன்புறுவது அவரோடு மகிமை பெறுவதற்காகத்தான் (உரோ 8:17). ''இயேசு வின் வாழ்வு (நம்) உடலில் வெளிப்படும் படி, போகும் இடமெல்லாம் இயேசுவின் மரணப்பாடுகளைத் தாங்கிச் செல்கின் றோம்'' (2 கொரி 4:10). ''நாம் கிறிஸ்து வில் விசுவாசம் கொள்வதற்கு மட்டுமன்று, அவருக்காகத் துன்பங்களை ஏற்பதற்கும் இறையருள் நமக்கு அளிக்கப்பட்டது'' (பிலி 1:29; காண். அ.ப. 9:16;. 2 கொரி 11:23-27). கிறிஸ்துவோடு படும் துன்பத்தி லிருந்து, இறந்தபிறகு ''அளவிடமுடியாத நித்திய மாட்சி ஒப்புயர்வற்ற வகையில்'' தோன்றுவது மட்டுமன்று (2 கொரி 4:17; காண் அ.ப. 14:21), இன்றிலிருந்தே மகிழ் வும் ஊற்றெடுக்கின்றது (2 கொரி 7:4: காண் 1:5-7). ''இயேசுவின் பெயருக்காகத் தாங்கள் இழிவுபடத் தக்கவர்களாய்க் கருதப்பட்டது பற்றி'' (அ.ப. 5:41) அப்போஸ்தலர் எருச லேமில் பெற்ற மகிழ்ச்சியில் முதல் அனுப வம் பெறுகின்றனர். ''இறைமாட்சிமையும் கடவுளுடைய ஆவியும்'' தங்கள்மீது தங்க, ''கிறிஸ்துவின்பாடுகளில் பங்குகொள்ள''

பேதுரு அழைக்கிறார் (1 பேதுரு 4:13 தொ). ''திருச்சபையாகிய தம் உடலின் பொருட்டு, கிறிஸ்து பட வேண்டிய வேதனைகளில் இன்னும் குறைவாயிருப்பதைத்'' தன் உடலில் நிறைவாக்க ''தான் படும் துன்பங்களில்'' பவுல் மகிழ்ச்சி கொள்கிறார் (கொலோ 1:24).

## துன்புறுத்தல், துன்புறுத்தப்படுதல் (PERSECUTION)

I. இறைவனுடைய மக்கள் தங்களுடைய வரலாறு முழுவதும் துன்புறும் அனுபவத்தைப் பெறுகின்றனர். அது இறைமகனையும் விடவில்லை. உலகை மீட்க வந்த அவர், அதனால் வெறுக்கப்பட்டுப் (யோவா 3:17; 15:18) பாடுகளை அனுபவிக்கிறார் (மத் 23:31-32). இறுதியாக அது அவருடைய சீடர்களுக்கு உரியதாகும். ''என்னை அவர்கள் துன்புறுத்தினார்கள்; உங்களையும் துன்புறுத்துவார்கள்'' (யோவா 15:20).

துன்பத்தின் மறைபொருளுடன் இணைக்கப்பட்டிருந்தாலும் துன்புறுத்தலானது அதனின்று வேறுபட்டுள்ளது. துன்பம் ஒரு பிரச்சனை! ஏனெனில் அது அனைத்து மனிதரையும், நீதிமான்களையும் பாதிக்கிறது. நீதிமான்கள் என்ற ஒரே காரணத்திற்காகத் துன்புறுத்தலானது நீதிமான்களைத் தாக்கும்போது, பிரச்சனையானது கவனத்தை ஈர்ப்பதாக உள்ளது. அதனுடைய தோற்றத்தின் காரணமாகத் துன்புறுத்தலானது மற்றக் கொடுமைகளினின்று வேறுபடுத்தப்படுகின்றது. துன்பங்களின் மூலமாகப் பாவியைத் தூய்மைப்படுத்தவும், துன்புறுத்தலின் மூலமான அன்பின் திட்டத்தில் நீதிமானைச் சோதிக்கவும் இறைவன் விரும்புகிறார். தீய மனிதன் இத்திட்டத்தை எதிர்க்கவும், இறைவனிடமிருந்து மனிதனைப் பிரிக்கவும் முயல்கிறான். ஆயினும், அனைத்துத் துன்பங்களையும் போன்றே துன்புறுத்தலானது இறைவனால் பயன்படுத்தப்படுகின்றது. ''மகிமையின் ஆண்டவரைச் சிலுவையில் அறைந்ததில் இவ்வுலகின் தலைவர்கள்'' அவரது ஞானத்தின் கருவிகளை அறிந்து கொள்ளவில்லை (1 கொரி 2:6 தொ). துன்புறுத்தப்பட்ட நீதிமான் (அ.ப. 3:14) என்றென்றைக்கும் உலகை வென்றுவிட்டார் (யோவா 16:33). துன்புறுத்தப்படுவது உறுதியான நிலையில் (2 திமொ 3:12), அவரது சீடர்கள் அக்களிக்கின்றனர் (மத் 5:11-12). அவர்கள், துன்புறுத்தும் உலகைச் சேர்ந்தவர்கள் அல்லர் (யோவா 15:19); மாறாக, அனைத்துத் துன்புறுத்தல்களின் மீதும் வெற்றி கொள்ளும் நாளில் ஆண்டவராகிய இயேசு மகிமைப்படுத்தப்படவிருக்கும் எண்ணற்றவர்களோடு சேர்ந்தவர்கள் (2 தெச 1:4-12) என்பதற்கான அடையாளமே அது.

II. துன்புறுத்தலின் மறைபொருள்:

1. பழைய ஏற்பாடு: எகிப்தில் தங்கியிருந்தது முதல் (யாத் 1:8-14) உரோமை ஆதிக்கம் வரை, அனைத்துப் புனித மக்களும் புறவினத்தாரின் கடுமையான எதிர்ப்பை அனுபவிக்க வேண்டியிருந்தது. அதே நேரத்தில், பல்வேறு உட்பிரச்சனைகளையும் அவர்கள் அனுபவித்தனர் (சங் 44:10-17; 79:1-4; 80:5தொ). ஆண்டவர் மீதான தங்களுடைய அன்பு மற்றும் அவரது வார்த்தையின் மீதான பற்றுறுதி ஆகியவற்றின் காரணமாகத் தலைவர்கள், அரசர்கள் மற்றும் குறிப்பாக இறைவாக்கினர் முதலிய பெரியவர்களும் அடிக்கடி துன்புறுத்தப்பட்டனர். மோசே தன்னுடைய மக்களாலேயே புறக்கணிக்கப்பட்டு (யாத் 2:14; அ.ப. 7:27,35) அவர்களது முறையீடுகளால் அடிக்கடி தொல்லைக்குள்ளானார் (யாத் 5:21; 14:11-12; 15:24; 16:3..., எசே 20:13.21; சங் 78:17-42). தாவீது (1 சாமு 19-24), எலியா (1 அர 19), ஆமோஸ் (மோ 7:10-17), எரேமியா (எரே 11:18-12:6; 26:37-38), மக்கபேய வேதசாட்சிகள் (2 மக் 6-7; 1 மக் 1:57-64; தானி 11:33-35) முதலானோரும் துரத்தப்படுகின்றனர். தனது பணியினின்று பிரிக்கப்பட முடியாதவையாக இத்துன்புறுத்தல்கள் எரேமியாவிற்குத் தோன்றுகின்றன. இவற்றின் வழியாகவே ஊழியனும் இறைவனின் திட்டத்தைச் செய்து முடிக்கிறார் (எசா 53:10). அவ்வாறே, அவர்களுடைய, எதிர்ப்பு மற்

றும் பற்றுறுதியுடன் சேர்ந்து நீதிமான்களின் துன்புறுத்தலானது தீர்வையின் நாளையும், அரசின் வருகையையும் தயாரித்து வருகிற தெனத் தானியேல் நூல் காட்டுகிறது (தானி 7:25 தொ; 8:24-25; 11:32-35). இறுதியாக, ஞான ஆகமமானது அனைத்துத் துன்புறுத்த லின் ஆழ்ந்த நோக்கத்தையும் வெளிக்கொணர் கிறது. நீதிமான் ஓர் ''உயிருள்ள தொல்லை யாய்'' இருப்பதால், இறைப்பற்றற்றவர்கள், நீதிமானை வெறுக்கின்றனர் (ஞான 2:12). ஆனால் அதே நேரத்தில் தாங்கள் ஏளன மாய்க் கருதுகின்ற இறைவனுக்கு அவன் ஒரு சாட்சியாக உள்ளான் (2:16-20). பேய்க்கு உரியவனாதலால் துன்புறுத்து வோன் அவரது சாட்சியாளர் வழியாக இறைவனைத் தாக்குகிறான். இறுதிநாளில், நீதிமானின் மீட்பு துன்புறுத்துவோனின் விசுவாசமின்மையைத் தீர்ப்பிடும் (3:7-10;5:1-6).

2. *இயேசு:* யாருக்காக அனுப்பப்பட்டார் களோ அவர்களாலேயே அநியாயமாகக் கொடுமைப்படுத்தப்பட்ட இத்தகைய துன் புறுவோரின் வரிசையைத் துன்புறுத்தப்பட்ட இயேசு நிறைவுபடுத்தி, முடிசூட்டுகிறார். அவரைத் தண்டிப்பதன் மூலம் இஸ்ராயே லின் தலைவர்கள் தங்களுடைய தந்தை யரின் குற்றங்களின் அளவை மிகுதியாக்கி, இறைவாக்கினரைக் கொன்றவர்களுடைய பிள்ளைகள் உண்மையில் தாங்களே என்ப தற்குச் சான்று பகர்கின்றனர் (மத் 23:31-32). ஆனால் கிறிஸ்துவின் அனைத்துத் துன்பங் களைப்போலவே இந்தத் துன்புறுத்தலானது, அவரது பணியை முழுமையாக நிறைவேற் றுவதற்கும், மீட்பின் திட்டத்தை நிறைவேற் றுவதற்கும் அவசியமாக உள்ளது.

3. *சீடர்கள்:* தங்களுடைய தலைவருடை யதைத் தவிர வேறெந்த நடத்துமுறைக்கும் சீடர்கள் உரிமை கோர முடியாது. அவரது மாதிரியைப் பின்பற்றி, அவரைப்போல வும், அவரது காரணமாகவும், அவர்கள் துன்புறுத்தப்படுகின்றனர் (யோவா 15:20; 16:1தொ). அவர்கள் அவருடைய கிண்ணத் தைப் பருகி, அவருடைய திருமுழுக்கைப் பெற வேண்டும் (மாற் 10:39). அவர்களில் தனது துன்புறுத்தலை இயேசு மீண்டும் வாழ்கிறார் (அ.ப. 9:4-5; காண்க: கொலோ 1:24). இது அவர்களுக்கு ஓர் அருளாகவும் (பிலி1:29), அதன் விளைவாக மகிழ்ச்சியின் ஊற்றாகவும் உள்ளது (1 பேதுரு 4:12 தொ).

முன்னர் ''இயல்பு முறைப்படி பிறந்த வன் தேவ ஆவியின் ஆற்றலால் பிறந்தவ னைத் துன்புறுத்தியது போன்று'' (கலா 4:29), முதலில் யூதர்கள் அவர்களைக் கொடு மைப்படுத்துகின்றனர் (அ.ப. 4:1; ...; 5:17... ; 8:1...; 13:50). தன்னுடையவ ராலேயே இயேசு காட்டிக் கொடுக்கப்பட்டது போன்று (யோவா 13:18; 18:35; எரே 12:6), சீடர்களும் தங்களுடைய குடும்பத்தவ ராலேயே துன்புறுத்தப்படுவர் (மத் 10:34 தொ). இது சூழ்நிலைகளின் சாதாரண ஒப்புமையை விட உயர்வானது. ''ஆண்ட வராகிய இயேசுவையும் இறைவாக்கினரை யும் மரணத்திற்கு உட்படுத்திய நம்மைத் துன்புறுத்திய யூதர்கள், இவ்வாறாகத் தங்க ளுடைய பாவங்களின் அளவை எல்லாக் காலத்திற்குமாக நிரப்புகின்றனர்'' (1 தெச 2:15-16).

புறவினத்தாரும் இயேசுவின் சீடர்களைத் துரத்துவர். புதிய பாபிலோனாகிய உரோமை, புனிதர்கள் மற்றும் இயேசுவின் சாட்சிகளுடைய இரத்தத்தைக் குடித்து வெறிகொள்ளும் (திருவெளி 17:6). ''பக்தி யோடு கிறிஸ்துவில் வாழவிரும்புவோர் அனைவரும் துன்புறுத்தப்படுவர்'' என்பது உண்மையே (2 திமொ 3:12).

*4. பிரச்சனையின் அடிப்படை:*

அ) இறைவனின் நண்பர்களைத் துன்புறுத் துவதானது, சாத்தானும் தீய சக்திகளும் இறைவன் மற்றும் அவரது ஊழியனுக்கு எதிராகச் செயல்படுத்தும் பல நூறு ஆண்டு காலப் போரின் ஒரு தோற்றமேயாகும். பாம்பின் தலையை நசுக்குவதுடன் இப் போர் முடிகின்றது. பாவத்தின் தோற்றம் முதற்கொண்டு (ஆதி 3) திருவெளிப்பாட் டில் விவரிக்கப்பட்டுள்ள இறுதிப் போராட்

டங்கள்வரை, பறவை நாகமானது பெண்ணையும் அவளது தலைமுறையினரையும் துரத்திச்செல்கிறது (திருவெளி 12; 17:19). இப்போரானது அனைத்து வரலாற்றிற்கும் பரவியிருந்தாலும், காலம் செல்லச்செல்ல அதிகமாக்கப்படுகிறது. இயேசுவின் பாடுகளின்போது அது தனது உச்சகட்டத்தை அடைகிறது. பின்னர், அதே நேரத்தில், இருளினுடைய அரசனின் நேரமும் இயேசுவின் நேரமும், அதாவது அவரின் மரணம் மற்றும் மாட்சிமையின் நேரமும் (லூக் 22:53; யோவா 12:23; 17:1) நிகழ்கின்றன. திருச்சபையில், கிறிஸ்து மற்றும் அவருக்குரியோரின் உறுதியான வெற்றியினுடைய அடையாளம் மற்றும் நிபந்தனையாகத் துன்புறுத்தல்கள் உள்ளன. இவ்வகையில் அவை இறுதிக்காலப் பொருளைக் கொண்டுள்ளன. ஏனெனில், அவை தீர்ப்பிற்கும் (1 பேதுரு 4:17தொ) அரசினுடைய முழுமையான அமைப்பிற்கும் ஒரு முன்னுரையாக உள்ளன. ''பெருந் துன்பத்துடன்'' அவை இணைக்கப் பட்டுள்ளன (மாற் 13:9-13. 14-20). மேலும், உலகின் முடிவிற்குப் பீடிகையாக இருந்து, புதிய யுகத்தின் பிறப்பை வரையறைப் படுத்துகின்றன (திருவெளி 7:13-17).

சோதனையில் விசுவாசமுள்ளவர்களாக இருந்த துன்புறுத்தப்பட்டோர் (திருவெளி 7:14), அத்தருணம் முதல் வென்றடக்குபவர்களாகவும், மகிழ்ச்சியில் அளவற்றவர்களாகவும் இருந்தால், அவர்களது மகிமையானது, துன்புறுத்தியவர்களுடைய தண்டனையின் கொடூரத்தன்மையை அவர்கள் மறந்துவிடச் செய்யக்கூடாது. பாவிகளுக்கு எதிராக இப்போது முதல் வெளிப்படுத்துகிற இறைவனின் சினமானது (உரோ 1:18), காலத்தின் முடிவில் கொடுமையான பாவிகள், குறிப்பாகத் துன்புறுத்தியவர்கள்மேல், விழும் (1 தெச 2:16; 2 தெச1:5-8; திருவெளி 6:9 தொ; 11:17-18; 16:5-6; 19:2). அவர்களது அவல முடிவானது அந்தியோக்கு எப்பிபானின் முடிவில் ஏற்கனவே அறிவிக்கப்பட்டுவிட்டது (2 மக் 9; தானி 7:11; 8:25; 11:45). ஏரோது அகிரிப்பாவின் முடிவிலும் அது மீண்டும் நிகழ்ந்துள்ளது (அ.ப. 12:21 தொ). இறுதிக்காலத் தண்டனைகளாக இத்துன்புறுத்தல்களின் இணைப்பானது, திராட்சைத் தோட்டக் கொலைகாரர்கள் (மத் 21;33-46) மற்றும் மணவிருந்து (22:1-14) உவமைகளில் வலியுறுத்தப்படுகிறது. திராட்சைத் தோட்டத் தொழிலாளர்களின் கடைசிக் குற்றம் மற்றும் கடைசி ஊழியர்கள் அனுபவித்த தீய நடத்துமுறை முதலியன கொடுமையின் வரிசையில் ஒன்று சேர்ந்து, தலைவர் அல்லது அரசருடைய கோபத்தைக் கட்டவிழ்த்து விட்டன. ''பரிசுத்தருடைய இரத்தத்தையும், இறைவாக்கினருடைய இரத்தத்தையும் மக்கள் சிந்தியதால், நீர் அவர்களுக்கு இரத்தத்தையே குடிக்கக் கொடுத்தீர். இது அவர்களுக்குத் தகுந்த தண்டனையே'' (திருவெளி 16:6; 19:2).

**III. துன்புறுத்தலை எதிர்கொள்ளும் கிறிஸ்தவன்:** துன்புறுத்தலின் மறைபொருளை ஊடுருவிச்செல்கின்ற விசுவாசத்தை உடைய விசுவாசி, மகிழ்ச்சியுடன் அவ்விசுவாசத்தைப் பற்றுகின்ற சக்தியைத் தனது நம்பிக்கையில் கண்டடைகிறான். பழைய ஏற்பாடு இத்தகைய மனப்பான்மையின் மாதிரிகளை அவனுக்கு ஏற்கனவே அளித்துள்ளது. இயேசு தனது எடுத்துக்காட்டினாலும், அறிவுரைகளினாலும் தனது முழு நிறைவை அதற்கு அளிக்கிறார்.

*1. மாதிரிகள்:* துன்புறுத்தலை எதிர்கொள்ளும்போது, பழைய ஏற்பாட்டு நீதிமான்கள் அனைவரும், நம்பிக்கையிலான பொறுமை மற்றும் துணிவான பற்றுறுதி போன்ற மனப்பான்மையைத் தழுவியிருந்தனர். விசுவாசமிக்கவராகவும், செபிப்பவராகவும் உள்ள துன்புறுத்தப்பட்ட நீதிமானின் மாதிரியாக எரேமியா உள்ளார். அவரது ''அறிவிப்புகள்'' சோகமான புலம்பல்களாக இருப்பதுபோல் பற்றுறுதியின் உறுதியான கூற்றுகளுமாகும். என்ன நிகழ்ந்தாலும் தன்னைப் பாதுகாக்கவும், காப்பாற்றவும் ஆண்டவர் தன்னோடு உள்ளார் என்பதை அவர் அறிந்திருந்தார் (எரே 1:8.19).

துன்புறும் ஊழியனும் (*எசா 52-53*), துன் புறுத்தப்பட்ட சங்கீத ஆசிரியர்களும் இந்த அனுபவத்தை நன்கு உணர்ந்திருந்தனர். ''ஆண்டவரே, என்னைத் துன்புறுத்துவோர் அனைவரிடமிருந்தும் என்னைக் காப்பாற் றித் தப்புவியும்'' (*சங் 7:1*). இத்தகைய துயரம் மற்றும் நம்பிக்கை மிகுந்த கூக்குர லானது சங்கீதங்கள் முழுவதும் காணப்படு கிறது. பகைவனுக்கெதிரான சாபங்கள் (*சங் 35; 55; 69; 70; 109*) அல்லது இறை பழிக்கான வேண்டுகோள்கள் (*எரே 11:20; 15:15; 17:18*) ஆகியவற்றுடன் பெரும் பாலும் இணைந்த நிலையில் இத்தகைய செபமானது, பற்றுறுதியான இறைவன் தன்னுடையவர்க்கு அளிக்கின்ற மீட்பின் உறுதிப்பாட்டை அடிப்படையாகக் கொண் டுள்ளது (*சங் 31:6; காண் 23:4; 91:15*).

துன்புறுத்தப்பட்ட இயேசு தன்னுட னிருக்கும் தனது தந்தையில் நம்பிக்கை கொண்டதோடு மட்டுமின்றி (*மத் 26:53; யோவா 16:32*), தன்னைத் துன்புறுத்தியவர் களுக்காகவும் செபிக்கிறார் (*லூக் 23:34*). எவ்விதத் துன்புறுத்தலையும் தாங்குகின்ற அன்பின் மிகமேலான எடுத்துக்காட்டை அவர் தனது சீடர்களுக்கு அளித்தார் (*1 கொரி 13:7*).

துன்புறுத்தல்களை எதிர்கொண்ட அப் போஸ்தலரும் முதல் கிறிஸ்தவர்களும், நற்செய்தியை அறிவிக்க இயலக்கூடியவர் களாக இருப்பதற்கெனத் தைரியமாக இருக் கச் செபிக்கின்றனர் (*அ.ப. 4:29; 12:5*). மேலும் அவர்கள் நம்பிக்கையையும் உறுதி யையும் காட்டுகின்றனர் (*அ.ப. 4:13.31; 28:31; பிலி 1:20*). தங்களது தலைவரைப் போன்று துன்புறுத்தல்களின் நடுவிலும் பொறுமையுள்ளவர்களாகத் திகழ்கின்றனர் (*2 தெச 1:4*). அவரைப்போன்று, தங்களைக் கொடுமைப்படுத்துவோரை மன்னிக்குமாறு இறைவனிடம் கேட்கின்றனர் (*அ.ப. 7:60*).

**2. இயேசுவின் அறிவுரைகள்:** அவர் அவர்களுக்கு அளித்துள்ள எடுத்துக்காட் டின் மனப்பான்மையுடன் இந்த அறிவுரை கள் ஒத்துப்போகின்றன. அவரைப் போன்று, சீடர் தன்னைத் துன்புறுத்துகிற வர்களுக்காகச் செபிக்க வேண்டும் (*மத் 5:44; உரோ 12:14*). அவர் துன்புறுத்தலைத் துணிவோடு தைரியமாக எதிர்கொள்ள வேண்டும். முன்பின் பாராது துடுக்குத்தன மாய் இருக்கக்கூடாது. ஒருநகரில் அவரைத் துன்புறுத்தினால் வேறொரு நகருக்கு ஓடிப் போக வேண்டும் (*மத் 10:23; அ.ப. 13:50-51*). சிறைப்படுத்தப்பட்டு, அடிக்கப் பட்டு, மரணத்திற்கு உட்படுத்தப்படுவதை அவர்கள் எதிர்பார்க்க வேண்டும் (*மத் 10:16-39; யோவா 16:1-4*). இத்தகைய நிலையை எதிர்கொள்ளும்போது அவர் அஞ்சக்கூடாது. அவரது தலைவர் உலகை வென்றுவிட்டார் (*யோவா 16:33*). இறுதி யாக, அவர் அழைக்கப்பட்ட, தேர்ந்தெடுக் கப்பட்ட விசுவாசமுள்ள தன்னுடையவர் களுடன், இறைப்பற்றற்ற துன்புறுத்துவோரை வெற்றி கொள்வார் (*திருவெளி 17:14*). சீடனுடைய பகைவர்கள் அவரது ஆன்மா விற்கு ஒன்றுமே செய்ய முடியாது (*மத் 10:28-31*). நடுவர் மன்றங்களுக்குமுன் அவர் இழுத்துச் செல்லப்படும்போது இறைவ னின் ஆவியானவர் அவருக்குத் துணை புரிவார். விசாரணையின்போது தனது காப் புரைபற்றி அவன் கவலைப்படத்தேவை யில்லை (*மத் 10:19-20*). ஆயினும், துன் புறுத்தலானது ஓர் ஆய்வு, ஒரு சோதனை யாக இருப்பதால், விழிப்பாயிருந்து செபிப் பது எப்போதுமே அவசியமாகும். மனம் ஆர்வமுடையதாக இருந்தாலும், உடல் வலுவற்றதாகும் (*மத் 26:41 இணை*).

இயேசுவின் அறிவுரைகளைப் பவுல் விரிவுபடுத்துகிறார். கிறிஸ்துவின் அன்பி னின்று துன்புறுத்தல், வாள் முதலிய எதுவுமே நம்மைப் பிரிக்க முடியாதென அவர் நமக்குக் கூறுகிறார் (*உரோ 8:35*). மொத்தத்தில், விசுவாசமுள்ளவனாகவும் நிலையானவனாகவும், மகிழ்ச்சியானவ னாகவும் தன்னை ஆக்குகின்ற நம்பிக்கை யில் சீடன் துன்புறுத்தலை எதிர்கொள் கிறார் (*உரோ 12:12; 2 தெச 1:4; காண். மத் 13:21 இணை*). தனது நம்பிக்கையை

யாரில் வைத்தோமென அவருக்குத் தெரியும் (2 திமொ 1:12). பழைய மற்றும் புதிய ஏற்பாடுகளின் எண்ணற்ற வேதசாட்சிகளால் சூழப்பட்டு, ''பாவிகளுக்காகத் தனக்கெதிரான குற்றச்சாட்டிற்கு அடிபணிந்த'' கிறிஸ்துவின் மீது பார்வையைப் பதித்த நிலையில், சோர்வின்றி நீடித்த ஆற்றலுடன் அவர் முடிவை நோக்கி ஓடுகிறார் (எபி *11:1-12:3*).

***3. மகிழ்ச்சி:*** நம்பிக்கையின் மகிழ்ச்சியானது இவ்வாறு அனுபவித்த துன்புறுத்தலின் விளைவாகும். ''என் பொருட்டுப்பிறர் உங்களை வசைகூறித் துன்புறுத்தும் போது... நீங்கள் பேறுபெற்றவர்களே! மகிழ்ந்து பேருவகை கொள்ளுங்கள்!'' (மத் *5:11-12*). ''வேதனையால் பொறுமையும், பொறுமையால் மனத்திண்மையும், மனத்திண்மையால் நம்பிக்கையும் விளையும். அந்த நம்பிக்கையோ பொய்க்காது என்பதை அறிந்து, அவ்வேதனையால் மகிமைப்படுத்தப்படும்'' கிறிஸ்தவனில் இயேசுவின் இவ்வாக்குறுதியானது நிறைவேறுகிறது (உரோ 5:3தொ; யாக் 1:2 தொ). அவருக்கு வரும் ''வேதனையில் மகிழ்ச்சி பொங்கி வழிகிறது'' (2 கொரி *7:4; 12:10*; கொலோ *1:24*; காண்க அ.ப. *5:41*; எபி *10:34*). வேதனையில் ஆறுதலானது (2 கொரி *1:3-10*) ஆவியின் கனியாகவும் (1 தெச *1:6*; அ.ப. *13:52*; காண்க: கலா *5:22*), அதே நேரத்தில் அரசினுடைய பிரசன்னத்தின் அடையாளமாகவும் உள்ளது.

பயங்கரச் சோதனைகளின் காலத்தில் எழுதப்பட்டு, திருச்சபையினுடைய வாழ்வைப் பிரதிபலிக்கும் திருவெளிப்பாட்டு நூல், இயேசுவினுடைய வெற்றியையும் அரசு நிறுவப்படுவதையும் உறுதியளித்து, துன்புறுத்தப்பட்டவர்களின் இதயங்களில் இந்த மகிழ்ச்சியான நம்பிக்கையை ஊட்டுகிறது. அனைத்துத் திருச்சபைக்குமாகச் சேர்த்து ஒவ்வொருவருக்கும் பின்வரும் வார்த்தைகளை உயிர்த்த ஆண்டவர் உரைக்கிறார்: ''உனக்கு வரப்போகும் துன்பங்களுக்கு அஞ்ச வேண்டாம். இதோ, அலகை உங்களுள் சிலரைச் சிறையில் தள்ளிச் சோதனைக்கு உட்படுத்தப்போகிறது. பத்து நாள் வேதனையுறுவீர்கள். சாவதாயினும் விசுவாசத்தில் நிலைத்திரு! வாழ்வை உனக்கு நான் வெற்றிவாகையாய்ச் சூட்டுவேன்'' (திருவெளி *2:10*).

# தூ

### தூக்கு நூல் (PLUMB LINE)

தூக்கு நூல் என்பது ஒரு நீண்ட நூல். இதன் ஒரு முனையில் ஈயக்குண்டு அல்லது உலோக எடை இணைக்கப்பட்டிருக்கும். இவ்வாறு நூலோடு எடை இணைக்கப் பட்ட இக்கருவி சுவர்கள் நேராக இருக்கின் றனவா என்பதைச் சோதிக்கப் பயன் படுத்தப்படுகிறது.

அக்காதிய மொழி மூல வார்த்தையை ஆராய்ந்தால் இவ்வார்த்தைக்கு நூல் அல் லது தூக்கு நூல் குண்டு என இரு பொருள்கள் கொள்ளலாம். ஆமோ *7:7-8*-இல் இது குறிப்பிடப்பட்டுள்ளது. கடவுள் தூக்கு நூற்குண்டைக் கையில் பிடித்தவராய்ச் சுவர் அருகே நிற்பவராகக் காட்சி காண்கிறார் ஆமோஸ். சுவர் இஸ்ரா யேல் மக்களாக உருவகப்படுத்தப்படுகிறது. அவற்றை அளவுநூல்வைத்து அளப்பது போல் இஸ்ராயேல் மக்களைக் கடவுள் சோதிக்கிறார் என்று ஆமோஸ் கூறுகிறார். இஸ்ராயேல் ஆகிய சுவர் சரியாகத்தான் கட்டப்பட்டிருந்தது; ஆனால் இப்போது நேர்தவறிவிட்டது; ஆகவே அழிக்கப்படும்.

அழிவைப் பற்றிக்கூறும்போது இச்சொற் கள் பயன்படுத்தப்பட்டுள்ளன *(2 அர 21:13; எசா 34:11)*.

மகிழ்ச்சியான சந்தர்ப்பங்களிலும் இச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. நீதியும் நேர்மையுந்தான் தூக்குநூலும், குண்டுமாகும் *(எசா 28:17)*.

### தூக்கு மரணம் (HANGING)

பகிரங்கப் பகைவர்கள், குற்றவாளிகள், போன்றோர் கொல்லப்பட்டபின், மேலும் இழிவுபடுத்தப்படுவதற்காக அல்லது பகி ரங்க எச்சரிக்கையாகத் தூக்கிலிடப்படுவர் *(ஆதி 40:19; யோசு 8:29; 10:26; 2 சாமு 4:12)*. விவிலியச் சட்டம் தூக்கிலிடுதலை ஒரு மரண தண்டனையாக ஏற்றுக்கொள்ள வில்லை. ஆயினும் அவனது பிணம் இறக்கப்பட்டு அதே நாளில் அடக்கம் செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனை யோடு அதை அனுமதிக்கிறது *(உப 21:22-23)*. ஏனெனில் தூக்கிலிடப்பட்ட மனிதன் நாட்டைத் தீட்டுப்படுத்துகிறான். மேலும் அது இறைவனுக்கு அவமான மாகும். ஏனெனில் அவன் இறைவனின் சாயலானவன்.

இதற்கு மாறாக எகிப்தியர் *(ஆதி 40:19)*, பெலிஸ்தியர் *(1 சாமு 31:10)*, தாவீது *(2 சாமு 21:10-14)* ஆகியோர் பிணத்தை நீண்ட காலத்திற்குத் தொங்கவிட்டனர்.

தூக்கிலிடுதல், உப *21:23*-ஐ இயேசுவுக் குச் சாற்றிக்கூறுவது ஆகியவை பற்றி அ.ப. *5:30; 10:39;* கலா *3:13*-இல் காண்க. ஒருவன் தன்னையே தூக்கிலிட்டுக் கொள்தல் அதா வது தற்கொலை, இருமுறை குறிக்கப்படு கிறது *(2 சாமு 17:23; மத் 27:5)*.

### தூசி, பதர் (CHAFF)

தானியங்களைத் தூற்றும்பொழுது காற்றி னால் அடித்துச் செல்லப்படும் சிறிய உலர்ந்த பொருளாகும். அழிக்கப்படுகின்ற பயனற்றவற்றை அல்லது தீமையைக் குறிக்க, உருவகமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது *(யோபு 21:18; சங் 1:4; 35:5; எசா 17:13; 29:5; 41:15; ஓசே 13:3; செப் 2:2; மத் 3:12)*.

### தூண்கள் (PILLARS)

சாதாரணமாகக் குலமுதுதலைவர்கள் காலத்தில் நினைவுச் சின்னமாக நடப்பட்ட கற்களைத் தூண்கள் குறிக்கின்றன *(ஆதி 28:18; 31:42-52; 35:14.20; யாத் 24:4; 2 சாமு 18:18)*. இத்தகைய நினைவுத்தூண்கள் இறைவனது பிரசன்னத்தை எடுத்துக்காட்டப் பயன்பட்டன *(ஆதி 28:22)*. இவை நடப் பட்ட இடங்கள் புனித இடங்களாகப் பாரம்பரியத்தில் இடம் பெற்றன *(28:19; 31:13; 35:15)*. இஸ்ராயேலின் வடவரசில்

தூண்கள் வழிபாட்டு நிலையங்களின் ஒரு பகுதியாயின (ஓசே 3:4; 10:1-2). இவை எகிப்தில் பிற்கால யூத வழிபாட்டு மைய மும் ஆகின (எசா 19:19).

தூண் என்பதைக் குறிக்கும் எபிரேயச் சொல் கானானியத் தேவர்களைக் குறிக்க அமைக்கப்பட்ட கற்களையும் குறித்தது (காண். யாத் 23:24; லேவி 26:1; 1 அர 14:23; 2 நாள் 33:1). இக்கற்கள் செப்பமற்ற சிலைகளாகவும், பாகாலோடு தொடர் புடையவையாகவும் கருதப்பட்டிருக்கலாம் (2 அர 3:2; 10:26-27). பெண் தேவதை களைக் குறிக்கும் அசெரிம்களோடு (உ.ம் யாத் 34:13; 1 அர 14:23; 2 அர 17:10; மீக் 5:13-14) சேர்த்து இத்தூண்கள் அமைக் கப்படுவது, இவை இலிங்கப் பொருளை உணர்த்தலாம் என்று சுட்டுகின்றன.

கலைப்பண்புடைய தூண்களும் குறிக்கப் படுகின்றன (உ.ம். யாத் 38; 1 அர 7; எசே 26:1). எகிப்திலிருந்து பாலைவனம் வழியாய் இஸ்ராயேலர் பயணம் செய்த போது அவர்களோடு பயணம் செய்த மேகத்தூண், நெருப்புத்தூண் ஆகியவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவையாகும் (யாத் 13:17-22).

புதிய ஏற்பாட்டில் ''உண்மைக்குத் தூணும் அடிப்படையும்'' (1 திமொ 3:15) ஆகிய திருச்சபையையும், முக்கிய திருச்சபைத் தலைவர்களையும் (கலா 2:9), விண்ணக ஆலயத்தில் நிலையாக நிறுவப்படுபவர் களையும் (திருவெளி 3:12) குறிக்கத் தூண் உருவகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**தூண்டில்** (FISH HOOK)

சாதாரண மீன் தூண்டிலைக் குறிக்கிறது. இதைக்குறிக்க எபிரேய மொழியில் பல சொற்கள் பயன்பட்டுள்ளன (எசா 19:8; அப 1:15; ஆமோ 4:2; மத் 17:27). யோபு 40:24-இல் தூண்டில் பெகிமோத்தின் மூக் கைத் துளைக்கப் பயன்படும் கொக்கி என்று விவரிக்கப்படுகிறது. இது அந்த விலங்கைப் பிடிக்கப் போதுமானதன்று.

**தூண்வரிசைவாயில்** (PARBAR)

ஆலயத்தின் முக்கிய கட்டடத்திற்கு மேற் கில், அதாவது பின்னால், அமைந்திருந்த ஒரு கட்டட அமைப்பை இச்சொல் குறிக் கிறது (1 நாள் 26:18). இது எசே 41:12-இல் குறிக்கப்படும் கட்டடத்தோடு ஒத்துப் போகிறது. ஆனால் இது எதற்காகப் பயன் பட்டது என்பது தெளிவாக இல்லை. இது கூரையில்லாத இடமாகவும், கி.மு. 5-ஆம் நூற்றாண்டிலிருந்து (?) பலிகளின் கழிவுப் பொருட்களைச் சேர்த்து வைப்பதற்குப் பயன்பட்டதாகவும் கருதப்படுகிறது. இந்த இடத்தை 2 அர 23:11-இல் குறிக்கப்படும் இடத்தோடு தொடர்புபடுத்தலாம். பின்னது மனாசே காலத்திலிருந்து சூரிய கடவுளின் வழிபாட்டுக்கு அர்ப்பணிக்கப்பட்ட குதிரை கள் வைக்கப்பட்டிருந்த இடமாக இருந்தது. அப்போதுகூரை வேயப்பட்டிருந்தது. இதை யோசியா அகற்றினார்.

**தூதாயிச் செடி** (MANDRAKE)

இது மத்தியதரைக் கடற்கரைப் பகுதிக ளில், குறிப்பாகச் சீரியா, பாலஸ்தீனத்தில் சாதாரணமாகக் காணப்படும் ஒரு பூண்டு அல்லது சிறு செடி வகையைச் சேர்ந்தது. இது அடிமரம் அல்லது தண்டு இல்லாத செடி; முட்டை வடிவ இலைகளையும் கருஞ்சிவப்புப் பூக்களையும் கொண்டது. இதன் பழங்கள் மே மாதத்தில் நல்ல மஞ்சள் நிறத்தில் பழுத்திருக்கும் (ஆதி 30:14; கோதுமை அறுவடைக் காலத்தில்). அதன் பழங்களும் கவடுபட்டசதைப்பிடிப் பான வேர்களும் சேர்ந்து மனித உடலைப் போன்று தோன்றும். இவை காம இச்சைக ளைத் தூண்டவும் கற்பம் தரிக்கவும் பாரம் பரியமாகப் பயன்பட்டதாகத் தெரிகிறது ஆதி 30:14 தொ-இல் வரும் கதை பண்பாடு வளர்ச்சியுறாத காலத்தைப் பிரதிபலிக்கி றது. இதில் இச்செடியின் பழம் ''பாலுணர் வுக் கனி'' என்றழைக்கப்படுகிறது.

இதன் மணம் பலருக்கு வெறுக்கத்தக்க தாயினும், உ.ச. 7:14 (காதற்கனி), அது மணம் கமழுகின்றது என்று கூறுகிறது.

**தூதுப்பணி** (MISSION)

I. இறைத்திருப்பணிபற்றிய கருத்து கிறிஸ்தவரல்லாத சமயங்களுக்கு முற்றிலும் புதிய ஒன்றன்று. கிரேக்கப் புறவினத்தாரிடம் இவ்வெண்ணத்தை ஓரளவிற்குச் சந்திக்க லாம். எப்பிக்தேத்து என்பவர் தன்னை ஓர் எடுத்துக்காட்டாகத் தெய்வங்களால் அனுப்பப்பட்ட தூதுவர், பார்வையாளர், தெய்வங்களின் முன்னறிவிப்பாளர் எனக் கருதினார். தனது படிப்பினை மற்றும் சாட்சியத்தின் மூலம் மனிதனில் இறைப் பொறியைப் புதுப்பிப்பது, விண்ணகத்தி லிருந்து தனக்கு அளிக்கப்பட்ட திருப்பணி யெனக் கருதினார். அதே முறையில் மெர்க் குரியின் சமயச்சடங்கிலும், தனது மன்றாட் டின் மூலம் மனித இனம் இறைவனால் காப்பாற்றப்படுவதற்காக, தகுதியுடையோருக் கான ஒருவழிகாட்டியாகத் தன்னையே அர்ப்பணிக்க அதில் பயிற்சி பெறுபவர் அழைக்கப்பெறுகிறார். ஆனால் விவிலிய வெளிப்பாட்டில் தூதுப்பணி என்ற கருத்து வேறுபட்ட அமைப்புகளைக் கொண்டுள் ளது. இது மீட்பின் வரலாற்றுடன் முற்றி லும் தொடர்புடையதாகும்; ஒவ்வொரு தனிப்பட்ட நிகழ்ச்சியிலும் தெளிவாக வெளிப்படுகின்ற இறைவனின் நேர்முறை யான அழைப்பைக் கொண்டுள்ளது. இது தொகுப்புக் குழுக்களுக்கும் தனிப்பட்டவை களுக்கும் பொருந்தும். முன்குறித்தல் மற்றும் அழைப்பு ஆகிய கருத்துகளுடன் தொடர்புபடுத்தப்பட்ட நிலையில் அனுப் புதல் என்னும் வினைச்சொல்லை அடிப் படையாகக் கொண்ட சொற்றொகுதியில் வெளிப்படுத்தப்படுகின்றது.

II. *பழைய ஏற்பாடு*

*1. இறைவனின் தூதுவர்கள்:*

அ. மோசேயை முதலாவதாகக் கொண்ட இறைவாக்கினர்களின் அழைப்பில்தான் (காண்க: எரே 7:25), இறைத்தூதுப்பணி என்ற கருத்து நன்கு கிரகிக்கப்படுகிறது.

''நான் உன்னை அனுப்புகிறேன்...'' என்ற சொற்றொடர் மொத்த இறைவாக்கு அழைப்பின் மையத்தில் உள்ளது (காண்க: யாத் *3:10*; எரே *1:7*; எசே *2:3-4*; *3:4-5*). இறைவனின் அழைப்பிற்கு ஒவ்வொரு வரும் தனது தனிப்பட்ட மனநிலைக்கேற்பப் பதிலளிக்கின்றனர். எசாயா தன்னையே அளிக்கிறார். ''இதோ, நானிருக்கிறேன்! அடி யேனை அனுப்பும்'' (எசா *6:8*). எரேமியா மறுக்கிறார் (எரே *1:6*). மோசே தனது பணியை நம்பிக்கைக்குரியதாக்க ஓர் அடை யாளம் கேட்கிறார் (யாத் *3:11* தொ); மறுக்க முயல்கிறார் (*4:13*), கசப்பாக முறையிடு கிறார் (*5:22*). அனைவரும் இறுதியில் கீழ்ப் படிகின்றனர் (காண்க: ஆமோ *7:14-15*). யோனா இதற்கு விதிவிலக்காவார்.அவர் தனது தூதுப்பணியை ஏற்க மறுத்து, நாடுக ளுடைய மீட்பைக் கண்டு இடர்ப்படுகிறார் (யோனா *1:1* தொ). இறைவனிடமிருந்து பெறப்பட்ட தனிப்பட்ட தூதுப்பணி பற் றிய இந்த உணர்வானது உண்மையான இறைவாக்கினரின் அத்தியாவசியமான தனிக் கூறாகும். எரேமியா எதிர்த்துப் போராடிய, இறைவனால் அனுப்பப்படாத ஆனால் ''இறைவனின் வார்த்தை'' என்று கூறித் திரிந்த போலி இறைவாக்கினரிடமிருந்து இப்பண்பு அவரை வேறுபடுத்திக் காட்டு கிறது (எரே *14:14-15*; *23:21.32*; *28:15*; *29:9*). சற்றுப்பரந்த அளவில், இறைவனுடைய மக்களில் வரலாற்றில் நற்பங்கு வகித்த அனைவரையும் இறைத்தூதுப்பணி பெற்ற வர்கள் என்று கூறலாம். ஆனால், அதே போன்ற தூதுப்பணிகள் உள்ளதை அறிந்து கொள்வதற்கு, இறைவாக்கினரின் சான்றும் தேவையாக உள்ளது.

ஆ. இறைத் தூதுவர்களின் அனைத்துத் தூதுப்பணிகளும் மீட்புத்திட்டத்துடன் தொடர்புள்ளவையாகும். அவற்றின் பெரும்பகுதி இஸ்ராயேல் மக்களுடன் நேரடியாக இணைக்கப்பட்டுள்ளது. ஆனால், அதிலும் பரந்த வேறுபாடுகளுக்கு இடமுண்டு. இறைவாக்கினர்கள் மக்க ளுடைய இதயங்களை மாற்ற, தண்டனை அல்லது வாக்குறுதிகளை அறிவிக்க அனுப் பப்படுகின்றனர். அவர்களுடைய பங்கா னது, மனிதருக்குக் கொண்டு வருவதற்கென அவர்களிடம் பொறுப்பாக ஒப்படைக்கப்

பட்டுள்ள இறைவனுடைய வார்த்தையுடன் நேரடியாகப் பிணைக்கப்பட்டுள்ளது. மற்றத் தூதுப் பணிகள், இஸ்ராயேலின் வரலாற்று ஊழின்மீது நேரடியாக அக்கறை கொண்டுள்ளன. யாக்கோபின் பிள்ளைகளுக்கு எகிப்தில் ஒரு வரவேற்பைத் தயாரிக்க யோசேப்பு அனுப்பப்படுகிறார் (ஆதி 45:5). மோசே, அவர்களை மீட்டு நடத்திச்செல்ல அனுப்பப்படுகிறார் (யாத் 3:10; 7:16; சங் 105:26). யோசுவா, நீதிபதிகள், தாவீது, நாடு கடத்தப்பட்ட பின்னர் யூதேயாவை மீண்டும் கட்டியெழுப்பியோர், மக்கபேயர் கிளர்ச்சியின் தலைவர்கள் முதலிய இறைவனுடைய மக்களின் தலைவர்கள் மற்றும் விடுதலையாளர்களுக்கும் இதே நிலை பொருந்தும். புனித வரலாற்று ஆசிரியர்கள் வெளிப்படையாகத் தூதுப்பணியைப் பற்றிப் பேசாவிட்டாலும் அவர்கள் வழியாக இறைவனது மீட்பு தன்னுடைய இலக்கை நோக்கி நகர்வதன் காரணமாக அவர்களை இறைத் தூதுவர்களாக வெளிப்படையாகவே கருதுகின்றனர். புறவினத்தாரும் கூட இதில் நற்பங்கு வகிக்கலாம். இவ்வாறு நேர்மையற்ற இஸ்ராயேலைத் தண்டிக்க அசீரியாவும் (எசா 10:6), பாபிலோனைக் கைப்பற்றி யூதரை விடுவிக்க சைரசும் (எசா 43:14; 48:14-15) அனுப்பப்படுகின்றனர். புனித வரலாறானது முடிவாக ஒரே முடிவிற்கு நடத்திச் செல்கின்ற இத்தகைய தனிப்பட்ட தூதுப்பணிகளின் பல்வேறு குறுக்குநெடுக்கான முறைகளால் அமைக்கப்பட்டுள்ளது.

**2. இஸ்ராயேலின் தூதுப்பணி:**

அ. தூதுப்பணிக்கும் அழைப்பிற்கும் இடையில் எப்போதும் உள்ள தொடர்பைக் கவனித்தோமாயின், இஸ்ராயேல் மக்களுடைய தூதுப்பணி என்று ஒன்று உள்ளது. அதுபற்றி நாம் பேச வேண்டும் என்று உணர்வோம். இஸ்ராயேலின் அழைப்பானது இறைவனுடைய திட்டத்தில் அதனுடைய தூதுப்பணியை விளக்குகிறது. எல்லா நாடுகளினின்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட இஸ்ராயேலானது அர்ப்பணிக்கப்பட்ட மக்களினம்; ஆண்டவருடைய ஊழியம் ஒப்படைக்கப்பட்ட குருத்துவக் கூட்டம் (யாத் 19:5-6). மற்ற நாடுகளின் பெயரால் இஸ்ராயேலானது இப்பங்கை நிறைவு செய்கிறது என்று கூறப்படவில்லை. ஆயினும் வளர்கின்ற வெளிப்பாட்டிற்கு ஒத்தநிலையில், ஒரே இறைவனுடைய வழிபாட்டில் பங்கு பெறுவதற்காக அனைத்து நாடுகளும் இஸ்ராயேலுடன் சேருகின்ற காலத்தை இறைவாக்குக் கூற்றுகள் முன்னதாகவே காண்கின்றன (எசா 2:1தொ; 19:21-25; 45:20-25; 60). அப்போது இஸ்ராயேலானது அனைத்து மனுக்குலத்திற்கும் வழிகாட்டும் விளக்காக உருவாகுமாறு அழைக்கப்படுகிறது.மேலும், இஸ்ராயேலானது மீட்புத் திட்டத்தின் பொறுப்பாளராக இருக்கிறதென்றால் அத்திட்டத்தில் மற்ற மக்களையும் பங்கேற்க ஒன்று சேர்க்கின்ற தூதுப்பணியும் அதற்குண்டு. ஆபிரகாமின் அழைப்பு முதல், இந்த மூலக் கருத்து அதில் உள்ளது (ஆதி 12:3). இறைவெளிப்பாடானது வளர்ச்சியுற்ற நிலையில் இறை நோக்கத்தை வெளிப்படுத்தும்போது, அது மிகத்துல்லியமானதாக உருவாகிறது.

ஆ. நாடு கடத்தப்படுதல் முதற்கொண்டு, இத்தூதுப்பணிபற்றிய இஸ்ராயேலின் தெளிவான உணர்வு அறியப்படுகிறது. தூதர் என்ற அளவில் ஆண்டவரால் அனுப்பப்பட்ட ஆண்டவரின் ஊழியன் தான் என்பதை அது அறிந்துள்ளது (எசா 42:19). இஸ்ராயேலானது புறவினத்தாருக்கான இறைவனின் சாட்சியாக உள்ளது. ஒரே உண்மையான இறைவன் அவரே என்பதை அவர்கள் அறியச்செய்யவும் (43:10.12; 44:8), சட்டத்தினுடைய அழியாத ஒளியை உலகிற்கு அளிப்பதையும் (ஞான 18:4) இஸ்ராயேல் தனது கடமையாகக் கொண்டுள்ளது. நாட்டின் அழைப்பானது இங்குச் சமய உலகளாவிய தன்மைக்கு விரிவாகிறது. இனிமேலும், புறவினத்தாரின்மீது ஆதிக்கம் செலுத்துவது பற்றிய பிரச்சனை இல்லாமல் (சங் 47:4), மாறாக அவர்களை மனமாற்றுவதான கடமையே நிலவுகின்றது. இவ்வாறு, இறைவனுடைய மக்கள் பிறரை மனம்மாறச் செய்து தங்களுடன் சேர்த்துக் கொள்கின்றனர் (எசா 56:3.6-7). இறை ஏவுதல் பெற்ற

நூல்களில் ஒரு புதிய போக்குப் பரவி நிற்கிறது. புறவினத்தாரைப் பயனடைகிறவர்களாகக்கொண்ட இறைவாக்குத் தூதுப் பணியை யோனாவின் நூல் காட்டுகிறது. பழமொழிநூலில், இறை ஞானத்தின் தூது வர்கள், அதன் விருந்திற்கு அனைத்து மனித இனங்களையும் வெளிப்படையாகவே அழைக்கின்றனர் (பழ 9:3 தொ). இறுதியாக இஸ்ராயேல், தூதுப்பணி மக்களாக உருவாகிறது. குறிப்பாகப் புனித நூல்கள் கிரேக்க மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட அலக்சாந்திரியாவில், இஸ்ராயேல் தூதுரை மக்களாக விளங்குகிறது.

*3. புதிய ஏற்பாட்டிற்குப் பீடிகை:*

அ. இறைத்தூதுப்பணியின் மையக்கருத்தானது புதிய ஏற்பாட்டிற்கென வெளிப்படையாகத் தயாரிக்கின்ற இறைவாக்கு இறுதிக்கால இயலில் மீண்டும் காணப்படுகிறது. ''மக்களின் உடன்படிக்கை மற்றும் நாடுகளின் ஒளி'' (எசா 42:6-7; 49:5-6) என்று ஆண்டவரால் குறிப்பிடப்படுகின்ற ஊழியரின் பணியாக இது உள்ளது. ''எளியோருக்கு நற்செய்தி அறிவிக்க'' ஆண்டவர் அனுப்பிய மறைபொருளான இறைவாக்கினரின் தூதுப்பணியே இது (எசா 61:1-2). அவர் இறைவனுக்கு முன்னால் வழியைத் தயாரிக்கின்ற (மலா 3:1) புதிரான தூதுவர் ஆவார்; புதிய எலியா ஆவார் (3:23). தங்களுடைய சகோதரருக்கு ஆண்டவருடைய மகிமையைக் காட்ட விரும்புகிற மனம் மாறிய புறவினத்தாரின் தூதுப்பணி யாகும் அது (எசா 66:19-20). இந்த இறைவாக்குகள் எவ்வாறு நிறைவேறும் என்பதைப் புதிய ஏற்பாடு காட்டும்.

ஆ. சுருக்கமாக, வாக்கு, ஞானம் மற்றும் ஆவிபற்றிய இறையியலானது வியப்பூட்டும் வழியில் இந்த இறை உண்மைகளை ஆட்தன்மைப்படுத்தி அவைகளின் தூதுப் பணி பற்றிப் பேசத் தயங்குவதில்லை. இவ்வுலகில் தமது சித்தத்தை நிறைவேற்றுவதற்கென இறைவன் தனது வாக்கை அனுப்புகிறார் (எசா 55:11; சங் 107:20; 147:15; ஞான 18:14 தொ). கடின உழைப்பில் மனிதனுக்குத் துணைபுரிவதற்கென அவர் தனது ஞானத்தை அனுப்புகிறார் (ஞான 9:10). உலகின் முகத்தைப் புதுப்பிப்பதற்காகவும் (சங் 104:30; காண்க: எசே 37:9-10), மனிதர் தமது சித்தத்தை அறியச் செய்வதற்காகவும் (ஞான 9:17) அவர் தனது ஆவியை அனுப்புகிறார். இந்தக் கூற்றுகளும் புதிய ஏற்பாட்டிற்கு ஒரு பீடிகையாக உள்ளன. தனது வார்த்தையாகவும் ஞானமாகவும் உள்ள இறைமகனுடைய தூதுப் பணியை விளக்கவும் திருச்சபையில் அவரது தூய ஆவியின் தூதுப் பணியைத் தெளிவாக்கவும் அவை புதிய ஏற்பாட்டில் பயன்படுத்தப்படும்.

## III. புதிய ஏற்பாடு

*1. இறைமகனுடைய தூதுப்பணி:*

அ. மலாக்கியாவினால் முன்னுரைக்கப்பட்ட புதிய எலியாவும், இறைவாக்கினரில் இறுதியானவரும், மிகப்பெரியவரும், இறைத்தூதருமான திருமுழுக்குயோவானுக்குப் பின்னர் (மத் 11:9-14), இறைவனுடைய ஒப்புயர்வற்றத் தூதுவராகவும், எசாயா நூலில் கூறப்பட்டவருமாக இயேசு மனிதரிடையே பணி செய்யத் தொடங்குகிறார் (லூக் 4:17-21; காண் எசா 61:1-2). கொலைகார திராட்சைத் தோட்டக் குத்தகைக்காரர் உவமையானது இறைவாக்கினரின் தூதுப் பணியோடுஅவரது தூதுப்பணி கொண்டுள்ள தொடர்ச்சியைக் குறைத்துக் காட்டினாலும், அதே நேரத்தில் இரண்டிற்குமிடையேயுள்ள அடிப்படை வேறுபாட்டையும் சுட்டிக்காட்டுகிறது. தனது ஊழியர்களை அனுப்பிய பின்னர், குடும்பத்தலைவர் தனது மகனையே அனுப்புகிறார் (மாற் 12:2-8இணை). இதன் காரணமாகவே தூதுவரை ஏற்பது அல்லது புறக்கணிப்பதன் மூலம் அவரை அனுப்பியவரையே ஏற்கவோ, புறக்கணிக்கவோ செய்கிறோம் (லூக் 9:43; 10:16). அதாவது, அனைத்தையும் தனது தூதுவரிடம் அளித்த தந்தையையே புறக்கணிக்கிறோம் (மத் 11:27). தந்தைக்கும் மகனுக்கும் இடையிலுள்ள மறைபொருளான உறவுமுறையினை ஓரளவாயினும் காணுமாறு நம்மை அனுமதிக்கின்ற இறைத் தூதுப்பணி

பற்றிய இந்த உணர்வானது தனிச்சிறப்பான சொற்றொடர்களில் வெளிப்படுத்தப்படு கிறது: நற்செய்தியை அறிவிக்கவும் (மாற் 1:3 இணை), திருச்சட்டத்தையும் இறைவாக்கு களையும் நிறைவேற்றவும் (மத் 5:17), உலகின் மீது தீயைக் கொணரவும் (லூக் 12:49), சமாதானத்தையல்ல, வாளைக் கொண்டு வரவும் (மத் 10:34), நீதிமான்களை யல்ல பாவிகளை அழைக்கவும் (மாற் 2:17 இணை), தொலைந்து போனதைத் தேடிக் காப்பாற்றவும் (லூக் 19:10), பணி புரிந்து தனது உயிரைப் பரிகாரமாக அளிக்க வும் (மாற் 10:45 இணை), ''நான் அனுப்பப் பட்டேன்...''; ''நான் வந்தேன்''; ''மனு மகன் வந்துள்ளார்'' ஆகியவை அச்சொற் றொடர்களில் சிலவாகும். இயேசுவால் நிறைவேற்றப்பட்ட மீட்புப்பணியின் இந்த அனைத்துக் கூறுகளும் கலிலேயாப் போதனை முதல் சிலுவைப்பலி வரையி லான, தந்தையிடமிருந்து அவர் பெற்ற தூதுப்பணியுடன் ஒன்றுபட்டுள்ளன. ஆயி னும் தந்தையின் திட்டத்தில் இத்தூதுப் பணியானது குறிப்பிட்ட பரப்பையே கொண்டுள்ளது. இஸ்ராயேல் குலத்தாருள் காணாமல் போன ஆடுகளாய் இருப்போ ரிடமே இயேசு அனுப்பப்பட்டார் (மத் 15:24). தங்களுடைய மனமாற்றத்தில், உல கின் எல்லா நாடுகளுக்கும் முன்பாக இறைவனுக்கும் அவரது ஆட்சிக்கும் சான்று பகர்கின்ற இஸ்ராயேலின் தெய்வீ கத் தூதுப்பணியைப் பற்றி, அவர்கள் உணர வேண்டும்.

ஆ. நான்காவது நற்செய்தியில் தந்தை மகனை அனுப்புவதென்பது போதனை கள் முழுவதிலும் நிலையான பல்லவி போன்று வருகிறது (40 முறை. உ-ம் 3:7; 10:36; 17:18). ஏனெனில், இயேசுவின் ஒரே ஆவல் ''தன்னை அனுப்பினவருடைய சித் தத்தைச் செய்வதும்'' (4:34; 6:38தொ), அவரது பணியைச் செய்து முடிப்பதும் (9:4), அவரிடமிருந்து கேட்டவற்றையே பேசுவது மாகும் (8:26). இருவருக்குமிடையே வாழ் வொன்றிப்பு எவ்வளவுக்கு இருக்கிறதென் றால் (6:57; 8:6.29), ஒருவன் இயேசுவின் பால் கொள்ளும் மனப்பான்மையே இறை வன்பால் கொள்ள வேண்டிய மனப்பான்மை யாகும் (5:23; 12:44-45; 14:24; 15:21-24). அவரது பணியின் நிறைவாகிய பாடுக ளைப் பொறுத்தவரை தன்னை அனுப்பின வரிடம் திரும்பிச் செல்லுதலாக இயேசு அவற்றைக் காண்கிறார் (7:33;16:5; 17:11). மனிதரிடம் அவர் கோருகின்ற விசுவாசமானது, தனது தூதுப்பணியின் மீதான விசுவாச மாகும் (11:42; 17:8.21.23.25). இது அனுப் பப்பட்டவராக மகன்மீதும் (6:29) அனுப்பிய வராகத் தந்தையின்மீதும் (5:24; 17:3) ஒரே சமயத்தில் கொள்கின்ற விசுவாசத்தை வெளிப்படுத்துகிறது. இவ்வுலகில் மக னுடைய தூதுப்பணியின் மூலமாக இறைவ னுடைய நெருங்கிய மறைபொருளின் ஓர் உயிர்நிலையான கூறு மனிதருக்கு வெளிப்படுத்தப்படுகிறது. தனது மகனை அனுப்பியதன் மூலமாக ஒரே உண்மை யான இறைவன் (உப 6:4; காண்க: யோவா 17:3) தன்னையே தந்தையாக வெளிப் படுத்துகிறார்.

இ. அப்போஸ்தலிக்க நூல்கள் மக னுடைய இத்தூதுப்பணிக்கு மைய இடத்தை அளிப்பதைக் கண்டு நாம் வியப்படைய வேண்டியதில்லை. காலம் நிறைவுற்ற போது நம்மை மீட்டு, நம்மீது மகனுக்குரிய சுவிகாரத்தை அளிப்பதற்காக இறைவன் தனது மகனை அனுப்பினார் (கலா 4:4; உரோ 8:15). நாம் அவர் மூலமாக வாழ்வதற் கென மீட்பராகவும், நமது பாவங் களுக்குப் பரிகாரமாகவும், இறைவன் தனது மகனை உலகிற்கு அனுப்பினார். நம்மீதான அவரது அன்பின் முடிவான எண்பித்தல் இத்தகையதாகும் (1 யோவா 4:9-10-14). இவ்வாறு இயேசு மற்றெல்லாரையும் விட உயர்ந்த தூதுவராகவும் (யோவா 9:7), நமது விசுவாச அறிக்கையின் அப்போஸ்தல ராகவும் உள்ளார் (எபி 3:1).

2. மகனுடைய தூதுவர்கள்:

அ. இயேசுவின் தூதுப்பணியானது அவ ரது தூதுவர்களால் தொடரப்படுகிறது. இதன் காரணமாகவே பன்னிருவரும் அப்

போஸ்தலர் என்னும் பெயரைத் தாங்கியுள்ள னர். தான் உலகில் இருக்கின்ற காலத் திலேயே, சொந்தத் தூதுப்பணியின் குறிக் கோளாகிய நற்செய்தியைப் போதிப்பதற்கும், குணப்படுத்துவதற்கும் (லூக் 9:1 இணை), இயேசு தனக்கு முன்னதாக அவர்களை, ஏற்கனவே அனுப்பிக் கொண்டிருக்கின் றார் (லூக் 10:1). அவர்கள் அறுவடை செய்ய தலைவரால் அனுப்பப்பட்ட ஊழி யர்கள் (மத் 9:30 இணை; காண்க: யோவா 4:38). தனது மகனின் மணவிருந்திற்காக விருந்தினரை அழைக்க அரசரால் அனுப்பப் பட்ட ஊழியர்கள் அவர்கள் (மத் 22:3 இணை). தங்களை எதிர்நோக்கியுள்ளவை களைப் பற்றி எவ்விதப் பொய்க்கருத்துகளை யும் அவர்கள் கொண்டிருத்தலாகாது. தூது வன் அனுப்பியவரைவிட உயர்ந்தவனல் லன் (யோவா 13:16). தலைவன் நடத்தப் படும் விதத்திலேயே ஊழியனும் நடத்தப்படு வான் (மத் 10:24-25). ''ஓநாய்களிடையே ஆடுகளை அனுப்புவதுபோல்'' அவர்களை இயேசு அனுப்புகிறார் (மத் 10:16 இணை). ''சீரழிந்த தலைமுறை'' (17:17) தன் தூதர் களைத் துன்புறுத்திக் கொல்லும் என்று அவர் அறிந்திருந்தார் (23:34 இணை). ஆனால், அவர்களுக்குச் செய்யப்பட்டது அவருக் கும், இறுதியாகத் தந்தைக்கும் செய்யப் படும். ''உங்களுக்குச் செவி சாய்ப்பவன் எனக்குச் செவிசாய்க்கிறான். உங்களைப் புறக்கணிப்பவன் என்னைப் புறக்கணிக் கிறான். என்னைப் புறக்கணிப்பவனோ என்னை அனுப்பினவரையே புறக்கணிக் கிறான்'' (லூக் 10:16). ''நான் அனுப்புகிற வனை ஏற்றுக்கொள்பவன் என்னை ஏற்றுக் கொள்கிறான். என்னை ஏற்றுக் கொள் பவனோ என்னை அனுப்பினவரையே ஏற் றுக்கொள்கிறான்'' (யோவா 13:20). உண்மை யில் அப்போஸ்தலருடைய தூதுப்பணி யானது இயேசுவினுடைய பணியுடன் நெருக்கமாகப் பிணைந்துள்ளது. ''என் தந்தை என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன்'' (யோவா 20:21). உயிர்த்த இயேசுவின் காட்சிகளின்போது பன்னிருவரையும் ''சொல்லுங்கள்...'' என்று கூறி, இறுதியாக அனுப்புவதனுடைய ஆழமான பொரு ளுக்கு இவ்வார்த்தையானது ஒளி அளிக் கிறது''. நற்செய்தியை அறிவிக்கவும் (மாற் 16:15), எல்லா இனத்தாரையும் சீடராக்கவும் (மத் 28:19), எங்கும் அவரது சாட்சிகளாக இருக்கவும் (அ.ப. 1:8) அவர்கள் உண்மை யாகவே செல்வர். இவ்வாறு, அவரது அப்போஸ்தலர் மற்றும் திருச்சபையின் தூதுப்பணி வாயிலாக, மகனுடைய தூதுப் பணியானது எல்லா மனிதரையும் சென் றடையும்.

ஆ. பவுலின் அழைப்பை விவரிக்கும் போது அப்போஸ்தலர் பணிநூல் இவ்வொளி யிலேயே புரிந்துகொள்ளப்பட வேண் டும். இறைவாக்கு அழைப்பின் பாரம்பரி யச் சொற்றொடரைப் பயன்படுத்தி, உயிர்த்த இயேசு, ''புறப்படு! ஏனெனில், தொலைவிலுள்ள புறவினத்தாரிடம் உன்னை அனுப்பப்போகிறேன்'' என்று தன்னால் தேர்ந்து கொள்ளப்பட்ட கருவி யிடம் கூறுகிறார் (அ.ப. 22:21). புறவினத்தா ருக்கான இத்தூதுப் பணியானது நேர் வரிசை யில் ஆண்டவருடைய ஊழியனின் பணி வரை பின்னோக்கிச் செல்கிறது (அ.ப. 26:17; காண்க: எசா 42:7.16). ஏனெனில், ஊழியன் இயேசுவின் உருவில் வந்தார். ''இஸ்ராயே லின் காணாமல் போன ஆடுகள் போன்ற வர்களுக்கு'' மட்டும் (மத் 15:24) அவர் வெளிப்படுத்திய மீட்புச் செய்தியை இயேசு வின் தூதுவர்கள் எல்லா இனத்தாருக்கும் கொண்டு வருகின்றனர். அப்போஸ்தலர் என்னும் தனது பட்டத்தை மெய்ப்பிக்க, தமஸ்கு செல்லும் வழியில் தான் பெற்ற துத்தூதுப்பணியையே பவுல் அடிக்கடி குறிப்பிடுகின்றார் (1 கொரி 15:8-9; கலா 1:12). அதன் உலகளாவிய தன்மை பற்றி உறுதி கொண்டு, புறவினத்தாரிடமிருந்தும் விசுவாசத்தின் கீழ்ப்படிதலைப் பெறுவதற் கென (உரோ 1:5), பவுல் நற்செய்தியைப் புறவினத்தாருக்கும் கொண்டு சென்றார். நற்செய்தியினுடைய அனைத்துத் தூதர் களின் தூதுப் பணியானது உயிர்நிலையானது என, அவர் கண்டார் (10:14-15). மனித ருடைய இதயங்களில் கிறிஸ்துவினுடைய

வார்த்தையின் மீது விசுவாசத்தைப் பிறப்பிக்கச் செய்தது அவரது உழைப்பே அல்லவா? *(10:17)*. அப்போஸ்தலருடைய சொந்தத் தூதுப்பணிக்கு அப்பாற்பட்டு, மொத்தத் திருச்சபையின் தூதுப்பணி அலுவல் இருக்கிறது. அதன் வழியாகத் திருச்சபை மகனுடைய தூதுப்பணியில் ஒன்றித்துள்ளது.

**3. தூய ஆவியின் தூதுப்பணி:**

அ. தங்களுடைய தூதுப்பணி அலுவலை முழுமையாகச் செய்து முடிக்க அப்போஸ்தலரும் நற்செய்தியின் போதகர்களும் தங்களுக்குரிய வழிமுறைகளிலேயே விடப்பட்டு விடவில்லை, தூய ஆவியினுடைய வல்லமையின் மூலமாக அவர்கள் தங்களது பணியைச் செய்து முடிக்கின்றனர். ஆவியினுடைய பங்கினைத் துல்லியமாக விளக்க, தூதுப்பணிஎன்ற சொல்லின் முழுப்பொருளில் அதைப்பற்றிப் பேசுவது மீண்டும் மிகஅவசியமாகிறது. இறுதி உணவிற்குப் பிற்பட்ட அறவுரையில் தனது எதிர்கால வருகையை வெளிக் கொணர்ந்த நிலையில், இயேசு அதனைப் பின்வருமாறு விவரிக்கிறார்: ''தந்தை என் பெயரால் அனுப்பப்போகிற பரிசுத்த ஆவியான துணையாளரும் உங்களுக்கு எல்லாம் அறிவுறுத்துவார்'' *(யோவா 14:26)*. ''நான் தந்தையிடமிருந்து உங்களுக்கு அனுப்பப் போகிற துணையாளர் வந்து என்னைப்பற்றிச் சாட்சியம் கூறுவார்'' *(காண்க: 15:26; 16:2)*. எனவே, ஆவியை அனுப்புவதில் தந்தையும் மகனும் ஒன்றுபட்டுச் செயல்படுகின்றனர். லூக்கா இயேசுவின் செயலை வலியுறுத்துகிறார். ஆனால் தந்தையின் பங்கோ இறைவாக்கின் சான்றுப்படி, அவர் செய்த உறுதிமொழியில் முதன்மையாக, அடங்கியுள்ளது. ''என் தந்தை வாக்களித்ததை நான் உங்களுக்கு அனுப்பப்போகிறேன்'' என்கிறார் இயேசு *(லூக் 24:49; காண்க: அ.ப. 1:4; எசே 36:27; யோவே 3:1-2)*.

ஆ. திருச்சபையைப் போன்று நீடிக்கக்கூடிய ஆவியினுடைய தூதுப்பணியின் தொடக்க வெளிப்பாடாகிய பெந்தக்கோஸ்தே நிகழ்ச்சியின் பொருள் இதுவேயாகும். பன்னிருவரையும் இயேசுவின் சாட்சிகளாக்குகிறார் *(அ.ப. 1:8)*. தங்களுடைய தூதுக் கடமைகளை அவர்கள் முழுமையாக நிறைவேற்றத் துணை புரிவதற்கென, அவர் அவர்களுக்கு அளிக்கப்பட்டார் *(யோவா 20:21-22)*. அதுமுதல் அவர்கள், அவரில் நற்செய்தியைப் போதிப்பர் *(1 பேதுரு 1:12)*. அவர்களுக்குப்பின் மற்றப் பிற்காலப் போதகர்களும் போதிப்பர். தனது தூதுப் பணிச்செயலை நிறைவேற்றுவதற்கெனத் திருச்சபை வார்த்தையைப் போதிக்கும் போதெல்லாம், ஆவியின் தூதுப்பணியானது இவ்வாறாக, திருச்சபையின் மறை பொருளிலேயே உள்ளார்ந்த பண்பாயிருக்கிறது. ஆவியின் தூதுப்பணியானது மனிதரைப் புனிதப்படுத்துவதன் அடிப்படையிலும் காணப்படுகின்றது. ''அப்பா! பிதாவே...'' *(கலா 4:6)* என்று குரலெழுப்பும் தனது மகனுடைய ஆவியை இறைவன் அவர்களது இதயத்தினுள் அனுப்புவதனாலேயே, திருமுழுக்கின்போது அவர்கள் மகனுக்குரிய சுவிகாரத்தைப் பெறுகின்றனர். ஆவியின் தூதுப்பணியானது அங்குக் கிறிஸ்தவ அனுபவத்தின் பொருளாகிறது. இவ்வாறாக, இறைத் தலைமையின் மறை பொருளானது வெளிப்படுகிறது. இறைவனுடைய வார்த்தையும் ஞானமும் ஆகிய மகனுக்குப் பின்னர் ஆவியானவர், தனது முறையில், மனித வரலாற்றில் புகும் இறை ஆளாக வெளிப்படுத்தப்படுகிறார். இவர் மனிதர்களை இறைமகனின் சாயலாக உள்ளார்ந்த முறையில் மாற்றி அமைக்கிறார்.

## தூதுவர் *(MESSENGER, AMBASSADOR, ENVOY, HERALD)*

தூதுவன் செய்தியை எடுத்துச் செல்பவன். இவன் தனிப்பட்ட நபருடைய செய்தியையோ *(ஆதி 32:3.6; எண் 24:12; 1 அர 12:2)*, பொதுச் செய்தியையோ *(எண் 20:14; உப 2:26; நீதி 6:35; 1 சாமு 16:19; 2 சாமு 2:5;, 2 அர 16:7)* சுமந்து செல்வான். இவன் வெற்றியோடு திரும்பும் அரசனின் வருகையை அல்லது பொதுச் சட்டங்களை அறிவிப்பவன்.

கடவுளால், செய்தி சொல்ல மக்களிடம் அனுப்பப்பட்ட, இறைவாக்கினரைக் குறிக்கும் இச்சொல் பயன்படுத்தப்படலாம் (2 நாள் 36:15-16; எசா 42:19; 44:26; ஆகா 1:13). இச்சொல் ஆண்டவரின் குருவையும் குறிக்க லாம் (திருவுரை 5:6; மலா 2:7). இவர் ஆண்டவர் நாளின் வருகையை அறிவிப்பார் (மலா 3:1). ''அரசனின் சீற்றம் மரண தூதுவன்'' என்று கூறப் படுகிறது (பழ 16:14). பழைய ஏற் பாட்டுப் பகுதிகளில்' கடவுளிடமிருந்து மனிதரிடம் வரும் ''வானதூதரைக்'' குறிக்க இச்சொல் பயன்படுத்தப்பட்டது.

புதிய ஏற்பாட்டில் 'ஆங்கேலோஸ்' என்ற கிரேக்கச் சொல் 'தூதுவன்' என்று பொருள் படும். புறவினத்தாரின் இலக்கியங்களில் இச்சொல் தேவர்களின் தூதுவர்களைக் குறிக் கின்றது. தூதுவர் வழியை ஆயத்தப்படுத்த அனுப்பப்பட்டவர்களாகக் கருதப்பட்டனர் (ஆதி 32:14; யூதி 1:11; 1 மக் 1:44; லூக் 7:24; 9:52). மெசியாவின் முன்னோடியும் தூதுவர் என்று குறிப்பிடப்படுகின்றார் (மத் 11:10; மாற் 1:2; லூக் 7:27; காண்க: 3:1). மீண்டும் புதிய ஏற்பாட்டில் 'அப்போஸ் தோலோஸ்' என்னும் கிரேக்கச் சொல் தூது வரைக் குறிக்கின்றது. எனவே இச்சொல் அப்போஸ்தலரையும், இறைவாக்கினர் களையும் குறிக்கப் பயன்பட்டது. ஏனெனில் இவர்கள் விண்ணக அரசரிடமிருந்து பெற்ற செய்தியைக் கொண்டு வருகின்றனர் அல்லது அறிவிக்கின்றனர் (லூக் 14:32; யோவா 13:16; 2 கொரி 5:20; 8:23; எபே 6:20; 2:25). உருவகமாக இச்சொல் போதகர்களை யும் குறிக்கும் (1 திமொ 2:7, 2 திமொ 1:11; 2 பேதுரு 2:5).

**தூபக்கலசம்** (CENSER)

அகப்பை அல்லது மண் அகற்றும் கருவி போன்ற ஓர் அமைப்பு. அதிலே தீக்கங்கு களை வைத்துச் சாம்பிராணியைத் தூவி, புகையெழுப்பித் தூபம் காட்டப்படும். (லேவி 10:1; எண் 16:6; 2 நாள் 26:19; எசே 8:11). இது சில சமயம் நெருப்புத்தட்டு என்றழைக்கப்பட்டது. திரு உறை விடத்தைச் சேர்ந்த துணைக்கலன்களில் இதுவும் ஒன்றாகும். இது வெண்கலத்திலோ (யாத் 27:3) பொன்னிலோ (1 அர 7:50) செய்யப்பட்டிருக்கும்.

மோசேக்கு எதிரான கோராகுவின் கிளர்ச்சி (எண் 16), ஊசியா தொழுநோயாளி யாகியது (2 நாள் 26), எசேக்கியேலின் ஆலயத்தில் ''அருவருக்கத்தக்க காட்சி'' (எசே 8) ஆகியவை பற்றிய விவரிப்புகள், ஆலய வழிபாட்டில் தூபம் காட்டும் பணி ஆரோனின் குருத்துவத்துக்குரியது என்றும் இச்சலுகையை ஆரோனியக் குருக்கள் கவன மாய்ப் பாதுகாத்து வந்தனர் என்றும் காட்டு கின்றன. பரிகார நாளில் சுத்தி செய்யும் சடங்கில் தூபக்கலசம் சிறப்பிடம் பெறு கிறது (லேவி 16:12-14).

திருவெளிப்பாட்டு நூலில் தூபக்கலசம் தூபம் காட்டுவதற்கும் மண்ணை எரிப்பதற் கும் பயன்படுகிறது (திருவெளி 8:3.5).

**தூபப்பாத்திரம்** (INCENSE DISH)

திரு உறைவிடத்தையும் (எண் 7:14.20...) ஆலயத்தையும் (1அர 7:50) சேர்ந்த துணைக் கலன்களின் பட்டியலில் தூபப்பாத்திரங்கள் பல சேர்க்கப்படுகின்றன. இவை திருமுன் அப்ப மேசையோடு தொடர்புபடுத்தப்படு கின்றன. இவை தூயபொன்னால் செய் யப்பட்டிருக்க வேண்டும். தூயகச் செக்கே லின்படி ஒவ்வொன்றும் பத்துச்செக்கேல் பொன்னால் செய்யப்பட்ட பன்னிரண்டு தூபம் நிறைந்த பொன் பாத்திரங்கள் இருந்தன (எண் 7:86). இவை சாலமோனின் ஆலயம் பற்றிய விவரிப்பிலும் (1 அர 7:50; 2 நாள் 4:22), யோசியா ஆலயத்தைப் பழுதுபார்த்த விவரிப்பிலும் (2 நாள் 24:14), கி.மு. 586-இல் கொள்ளைப் பொருளாகப் பாபிலோனுக்கு எடுத்துச் செல்லப்பட்ட பொருட்கள் பட்டியலிலும் (2 அர 25:14; எரே 52:18-19) குறிக்கப்படுகின்றன.

**தூபப்பீடம்** (INCENSE ALTAR)

சாட்சிப் பேழைக்கு முன்னால் திருத்தூய கத்திரையின் முன்னால் தூயகத்தில் அமைக்

கப்பட்டிருந்த பீடமாகும். இதன் விவரிப்பை யாத் 30:1-10-இல் காண்க. இது சாலமோனின் ஆலயத்தில் ''பொன்பலி பீடம்'' என்று குறிக்கப்படுகிறது (1 அர 7:48). எசே 41-இல் வரும் புதிய ஆலயத் துணைக்கலன்கள் பற்றிய விவரிப்பில் தூபப்பீடம் இடம் பெறவில்லை. முறையான வழிபாட்டைச்சேர்ந்த தூபப்பீடம் பற்றிய விவரிப்பை 1 மக் 1:23; 4:49-என்ற பகுதிகள் கொடுக்கின்றன.

**தூபால்** (TUBAL - குழப்பம்)

நோவானின் பேரனும் எப்பேத்தின் மகனுமாவார் (ஆதி 10:2; 1 நாள் 1:5). அவருடைய வழித்தோன்றல்கள் அடங்கிய மக்களின் இனப்பெயராகவும் இது பயன்பட்டுள்ளது (எசே 33:26). இவர்கள் கருங்கடலுக்குத் தென் கிழக்கில் வாழ்ந்திருக்க வேண்டும். இப்பெயர், மோசேக்கு என்ற பெயரோடு (எசே 27:13; 32:26; 38:2-3; 39:1) அல்லது சிறிய ஆசியாவின் மற்ற நாடுகளோடு (எசா 66:19) சேர்த்துக் கூறப்படுகிறது. எசே 27:13-இல் இவர்கள் தீருக்கு அடிமைகளையும் வெண்கலப் பாத்திரங்களையும் வியாபாரப் பொருளாகக் கொடுத்ததாகக் கூறப்படுகிறது. இவர்கள் மகோகு நாட்டின் கோகுக்கு அடிமைகளாக இருந்ததாக எசே 38:2-3; 39:1 கூறுகிறது. இவர்கள் வெகுதூரத்தில் இருந்தவர்களாகவும் அதிகம் அறியப்படாதவர்களாகவும் இருந்ததால், இப்பெயர்கள் இறைவன் மற்றும் அவருடைய மக்களின் எதிரிகளைக் குறிக்கப் பொதுவாகப் பயன்பட்டிருக்கலாம் (காண். சங் 120:5).

**தூபால் - காயீன்** (TUBAL - CAIN -குழப்பத்தில் ஆர்வமுள்ளவன், கொல்லனாகிய தூபால்)

இலாமேக்குக்குச் சில்லா வழியாகப் பிறந்த மகன். காயினின் வழித்தோன்றல் (ஆதி 4:22). ''இவர் வெண்கலத்தாலும் இரும்பாலும் எல்லாவிதமான கருவிகள் செய்யும் கொல்லன் ஆனார்'' (4:22). கலாச்சார வளர்ச்சிக்காலத்தில் இவர் வாழ்ந்ததாகத் தெரிகிறது (4:20-21). கலாச்சாரத்தில் வளர வளர மனுக்குலம் பாவத்திலும் வளர்ந்தது என்ற ஆதி 1-11-இல் காணப்படும் யாவே பாரம்பரியத்தின் பொதுக்கருத்தை எடுத்துக் கூற இப்பகுதி பயன்படுகிறது. ஏனெனில் தூர்பால் - காயீன் கொலைகாரனான காயீனைப் பின்னோக்குகிறார் (4:1-17). இலாமேக்கின் பண்பற்ற தற்புகழை முன்னோக்குகிறார் (4:23-24).

**தூமா** (DUMAH - மௌனம்) - ஆள்

1. இசுமயேலின் மகனும் ஓர் அராபிய இனத்தின் முன்னோரும் ஆவார் (ஆதி 25:14; 1 நாள் 1:30). அராபியாவில் இப்பெயரைக் கொண்ட இடங்கள் பல உள்ளன. அவற்றில் விவிலியக் குறிப்புகளோடு ஒத்துப்போகக் கூடிய ஓர் இடம் தூமாத் அல்-கந்தால் ஆகும். இது இப்போது ஏல்-யோஃபு என்றழைக்கப்படுகிறது. இது அக்காபா வளைகுடாமுனைக்கும் பாரசீக வளைகுடாவுக்கும் ஏறக்குறைய மத்தியில் அமைந்துள்ள ஒரு பாலைவனச் சோலையாகும்.

2. எசா 21:11-இல் வரும் ஒரு பெயராகும். இது ஏதோமைக் குறிக்கும் மறைபொருளான பெயராக இருக்கலாம். இது சேயீர் பற்றிய கூற்றுக்கு அடுத்து வருவதால், இது ஏதோமைக் குறிக்கலாம் என்று கருதப்படுகிறது. எழுபது நூல் வாசகம் ஏதோம் என்றே கொண்டுள்ளது. மௌனம் என்ற பொருளுடைய தூமா என்ற பெயர் இரவின் மற்றும் மரணத்தின் மௌனத்தைச் சுட்டிக் காட்டுகிறது என்பர். புதிரான இக்கூற்று எழுப்பப்பட்ட கேள்விகளுக்குப் பதில் கூறவில்லை.

**தூமா** (DUMAH -மௌனம்) - இடம்

யூதாவின் மலைப்பகுதியிலுள்ள ஒரு நகரம் (யோசு 15:52). இது எபிரோனுக்குத் தென்மேற்கில் 10 கி.மீ. தொலைவிலுள்ள இக்காலத் தெயீர் எத்-தோமே என்று அடையாளம் காட்டப்படுகிறது.

**தூய ஆவி** (HOLY SPIRIT)

காண்க: இறை ஆவி.

**தூயகம்** (HOLY PLACE)

உள் திருஉறைவிடம் திருத்தூயகம், தூயகம் என்று பிரிக்கப்பட்டிருந்தது. தூய

கம் முன் பகுதியாகும். இரண்டு பகுதிகளுக்கிடையில் ''நீலம், கருஞ்சிவப்பு, சிவப்புநிற நூலாலும் முறுக்கேற்றி நெய்த மெல்லிய நார்ப்பட்டாலும் செய்யப்பட்ட திரை'' தொங்கி, இரண்டையும் பிரித்தது. அதில் கெரூபிம்கள் கலைத்திறனுடன் அமைக்கப்பட்டிருக்கும் *(யாத் 26:31-33)*.

தூயகம் 9 மீட்டர் நீளமும் 4.5 மீட்டர் அகலமும் உயரமும் கொண்டது. இங்குத் திருமுன் அப்பமேசையும் விளக்குத் தண்டும் இருந்தன. இங்குதான் குருக்கள் தங்களது அன்றாடப் பணிகளைச் செய்தனர் *(28:29; 29:31; 38:24; 40:9; லேவி 6:9.19-20; 10:4.17-18)*.

**தூய கோலம்** (HOLY ARRAY)

இது சரியான உடை அமைப்பைச் சுட்டிக்காட்டும் சொல். சங் 29:2 இறைவன் தூய மாட்சியில் தோன்றுவதாக விவரிக்கிறது. இதை அடிப்படையாகக் கொண்டு மற்ற இடங்களில் இச்சொல் பயன்பட்டுள்ளது. விழாச் சீருடை அணிந்து, தூய கோலத்துடன் இறைவனை வழிபட மக்கள் அழைக்கப்படுகின்றனர் *(1 நாள் 16:29; 2 நாள் 20:21; சங் 29:2; 96:9)*.

**தூயவர்** (HOLY ONE, THE)

இஸ்ராயேலின் இறைவனாகிய யாவேக்கு அளிக்கப்பட்ட ஒரு பட்டம். இவர் இஸ்ராயேலின் தூயவர் என்றும் அழைக்கப்படுகிறார். இப்பெயர் யாவேயின் பிரிந்து வேறுபட்டிருக்கும் தன்மை மற்றும் தனித்தன்மை ஆகியவற்றை மட்டுமின்றி, இஸ்ராயேல் மக்களோடு கொண்டிருந்த சிறப்பான உறவையும் உணர்த்திற்று *(காண். 19:6; லேவி 19:2)*. இப்பெயர் எசாயாவிலும் *(1:4; 5:19.24; 10:7.20; 40:25; 41:14.16.20; 43:3.14-15)*, அதே காலத்து மற்றப் பகுதிகளிலும் *(2 அர 19:22; சங் 71:22; 78:41; எரே 50:29)* வருகிறது. புதிய ஏற்பாட்டில் இப்பெயர் மெசியாவுக்குச் சாற்றிக் கூறப்படுகிறது *(மாற் 1:24; அ.ப. 3:14; காண் 1 யோவா 2:20)*.

**தூய்மை, மாசின்மை** (PURE)

I. தூய்மை, பண்டையச் சமயங்களில் ஒரு பொதுவான கருத்தாகும். அது புனிதப் பொருட்களை அணுகுவதற்குத் தேவையான நிலையாகும். ஒழுக்கங்கெட்ட தன்மைக்கு எதிரான ஒழுக்க குணத்தை இது உள்ளுணர்த்தினாலும், இது ஒழுக்கச் செயல்களாலன்றி, சடங்கின் மூலமாகவே பெறப்படுகிறது. எவ்வித ஒழுக்கப் பொறுப்பினையும் கருத்தில் கொள்ளாமல், பொருள் சார்ந்த தொடர்புகளின் மூலமாக இது இழக்கப்படுகிறது. சாதாரணச் சூழ்நிலைகளில், இப்பண்டைய கருத்து வலிமைபெறலாம். ஆனால், இது மாறுபட்ட சிந்தனைகளின் பின்னணியில் மாறுபட்ட விதமாகச் செயல்படுகிறது. விவிலியத்தில் காணப்படும் சமய நம்பிக்கையானது அனைத்தையும் நல்லதெனக் காண்கிறது. எனவே, தூய்மை பற்றிய கருத்து உள்ளார்ந்ததாகவும், ஒழுக்கத் தன்மையுடையதாகவும் வளர்ச்சியடையும் போக்குடையது. கிறிஸ்துவில் அது உச்ச நிலை அடைகிறது. கிறிஸ்துவே தனது வாக்கிலும் பலியிலும் தூய்மையின் தனித்தன்மையுடைய மூலம் அடங்கியிருப்பதாக வெளிப்படுத்துகின்றார்.

II. பழைய ஏற்பாடு

*1. வழிபாட்டுச் சடங்கின் தூய்மை*

*அ. புனித சமுதாயத்தின் வாழ்வில்:* ஒழுக்க நடத்தையுடன் நேரடி உறவு இல்லாத நிலையில், வழிபாட்டுச் சடங்கிலும் அல்லது புனிதச் சமுதாயத்திற்குட்பட்ட சாதாரண அன்றாடத் தொடர்புகளிலும் பங்கு கொள்வதற்கான சட்ட முறையான நிறனைத் தூய்மையானது உறுதிப்படுத்துகிறது. லேவி 11-16-இல் குறிப்பிடத்தக்க அளவில் வளர்ச்சியடைந்த இந்தச் சிக்கலான கருத்து பழைய ஏற்பாடு முழுவதிலும் தோன்றுகிறது.

இது உடல் சுத்தத்தையும் தன்னுள் கொண்டுள்ளது; அதாவது இழிவானது *(மலம், உப 23:13 தொ)*, நோயானது *(தொழுநோயாளர்கள், லேவி 13-14; 2 அர 7:3)*, அல்லது நாற்றமெடுப்பது (சடலங்கள்,

*எண் 19:11-14; 2 அர 23:13-14)* ஆகியவற்றை அகற்றுதலாகும். ஆயினும், பெரும்பாலும் பண்டைய ஒதுக்கி வைக்கும் பழக்கத்தி லிருந்து பெறப்பட்ட, சுத்த மற்றும் அசுத்த விலங்குகளுக்கு இடையிலான வேறுபாடா னது *(லேவி 11)* சுகாதாரச் சூழ்நிலைகளால் மட்டுமே விளக்கப்பட முடியாது *(லேவி 11)*.

சடங்குமுறைத் தூய்மையானது புறவினத் தாருக்கெதிரான ஒரு பாதுகாப்பைக் கொடுத்தது. கானான் நாடானது புறவினத் தாரின் பிரசன்னத்தினால் கறைப் படுத்தப்பட் டிருந்தது. போரின் கொள்ளைப்பொருட்கள் அழிக்கப்படுவதற்கென ஒதுக்கி வைக்கப் பட்டன *(யோசு 6:24 தொ)*. அறுவடையின் முதல் மூன்று ஆண்டுகளில் நிலத்தின் கனிகளும் உண்ணப்படாமல் விலக்கப்பட வேண்டும் *(லேவி 19:23 தொ)*. பன்றிகள் முதலிய சில குறிப்பிட்ட விலங்குகள் தூய்மையற்றவையாகக் கருதப்பட்டன *(லேவி 11:7)*. ஏனெனில், புறவினத்தார் தங்களுடைய சமயச்சடங்குச் செயல்களில் இந்த விலங்குகளை இணைத்திருந்தனர் *(எசா 66:3)*.

புனிதமானதாகக் கருதப்பட்ட ஒவ் வொன்றினுடைய உபயோகத்தையும் கலாச் சாரத் தூய்மையானது கட்டுப்படுத்தியிருந் தது. வழிபாட்டுடன் தொடர்புடைய அனைத்தும் மேலான முறையில், தூய்மை யாக இருக்க வேண்டியிருந்தது. அனுமதி யின்றி அவற்றை அணுகவும் முடியாது *(லேவி 21:22; 1 சாமு 21:5)*. இதற்கும் அப்பாற்பட்டு, அச்சமூட்டுகின்ற தொற்றக் கூடிய வல்லமையினை உடையனவோ என்னும் அளவில், புனிதமானவையும் தூய்மையற்றவையும் சம அளவில் தீண்டத் தகாதவையாக இருந்தன *(யாத் 29:37; எண் 19)*. ஆசீரின் ஊற்று என்ற அளவில், உயிர் நிலையான சக்திகள் புனிதமானவையாகக் கருதப்பட்டதால், பாலின ஆற்றல்கள் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒழுக்க முறையில் பயன் படுத்தப்பட்ட போதும் கூட, அவற்றால் சில வகை தூய்மையின்மை பற்றிக்கொள்ளப் பட்டதாகக் கருதப்பட்டது *(லேவி 12:15)*.

**ஆ. தூய்மைப் படுத்தும் சடங்குமுறைகள்:** பெரும்பாலான அசுத்தங்கள், அல்லது தீட்டு கள் தாங்களாகவே மறையாத நிலையில் *(லேவி 11:24-25)*, உடல் அல்லது உடைகள் முதலியவற்றை நீரால் சுத்தப்படுத்துதல் *(யாத் 19:10; லேவி 17:15-16)*, பரிகாரப்பலி கள் *(லேவி 12:6-7)* முதலியவற்றால் நீக்கப்பட்டன. தூய்மைப்படுத்தலின் மிகச் சிறந்த விழாவாகிய பரிகார நாளில் தீட்டு களாலும், அனைத்து மக்களின் பாவங்களா லும் சுமத்தப்பட்டதன் அடையாளமாக ஒரு வெள்ளாட்டுக்கிடாயைப் பாலைவனத்திற்கு ஓட்டி விடுதலிலும் இது நிகழ்ந்தது *(லேவி 16)*.

**இ. புனித சமுதாயத்திற்கு மரியாதை:** தூய்மை பற்றி இன்னும் பெருமளவு, பருப்பொருள் சார்ந்த கருத்தின் அடிப்படை யில், உடலும் ஆன்மாவும் பிரிக்கப்படவிய லாத அளவில் மனிதன் உருவாக்கப்பட்டுள் ளான். எனவே அவனது சமயச்செயல்கள், ஆன்மீகத் தன்மையுடையவையாயினும், ஊனுடல் தன்மை கொண்டதாகவே இருக் கின்றன என்ற கருத்து உள்ளது. இறைவ னுக்கு அர்ப்பணிக்கப்பட்டு தன்னுடைய வாழ்வின் இயல்பான நிலையைக் கடந்து செல்ல விருப்பமுடைய சமுதாயத்தில், ஒருவன் எதையும் உண்பதில்லை; எல்லா வற்றையும் தொடுவதில்லை; அல்லது பிறப்பு சார்ந்த உரிமைகளைத் தாறுமாறாக உபயோகிப்பதில்லை. தொடக்கத்தில் தன் னியலாக இருந்திருக்கக்கூடிய இந்தப் பல் வேறுபட்ட கட்டுப்பாடுகள் இரட்டை விளைவைக் கொண்டிருந்தன. சுற்றுப்புறப் புறவினத்தாருடைய அனைத்துத் தூய்மைக் கேடுகளினின்று ஒரே இறைவன் கோட் பாட்டின் மீதான விசுவாசத்தை அவை காத்தன. மேலும், இறைவனுக்கான கீழ்ப்படி தலில், ஓர் உண்மையான ஒழுக்கக் கட்டுப் பாட்டை அது உருவாக்கியது. இவ்வழி யாக, இறைவனுடைய உண்மையான ஆன் மீகக் கோரிக்கைகள் படிப்படியாக வெளிப் படுத்தப்பட்டன.

**2. ஒழுக்கத் தூய்மைபற்றிய கருத்தை நோக்கி**

**அ. இறைவாக்கினர்கள்:** உட்புறத் தூய்மையை எடுத்துக்காட்டாவிடில் கழுவுதலோ, பலிகளோ தம்மிலே எவ்விதத் தகுதியையும் கொண்டிருப்பதில்லை என இறைவாக்கினர்கள் அடிக்கடி பறைசாற்றினர் (எசா 1:15 தொ; 29:13; ஓசே 6:6; ஆமோ 4:1-5;எரே 7:21 தொ). வழிபாட்டுக் கூறு அதற்கேற்ப மறையவில்லை (எசா 52:11). ஆனால், மனிதனைக் கறைபடுத்துகின்ற உண்மையான தூய்மையின்மை அதனுடைய அடிப்படை ஊற்றாகிய பாவத்தில் வெளிப்படுத்தப்படுகிறது. சட்ட முறையான அசுத்தங்கள் வெளிக்கூறுகள் மட்டுமேயாகும் (யாத் 36:17-18). இறைவன் மட்டுமே தூய்மையாக்கக்கூடிய, தன்மையாலேயே அசுத்தமானது ஒன்று மனதில் உண்டு (எசா 6:5 தொ). உதடுகள், இதயம் மற்றும் முழு ஆளின் அடிப்படைத் தூய்மையாக்குதலானது, மெசியா உறுதிமொழிகளின் ஒரு பகுதியாக அமைக்கப்பட்டுள்ளது: ''நான் தூயநீரை உங்கள்மேல் தெளிப்பேன்; நீங்கள் உங்கள் எல்லா அழுக்கிலிருந்தும் தூய்மையாவீர்கள்'' (எசே 36:25; காண்க: செப் 3:9; எசா 35:8; 52:2).

**ஆ. ஞான மெய்யியலார்:** இவர்கள், இறைவனைத் திருப்திப்படுத்தத் தேவையான நிபந்தனையாகக் கைகள், இதயம், முகம் மற்றும் செபத்தினுடைய தூய்மையைக் கோருகின்றனர் (யோபு 11:4.14.15; 16:17; 22:30); இவ்வாறாக, குறைகூற முடியாத ஒழுக்க நடத்தையைக் கோருகின்றனர். இறைவன் முன்னிலையில் மனிதனுடைய அடிப்படைத் தூய்மையின்மையைப் பற்றி ஞான மெய்யியலார் உணர்ந்திருந்தனர் (பழ 20:9; யோபு 9:30-31). ஒருவர் தன்னைத் தூய்மையானவரென நம்புவது வரம்பு மீறியதாகும் (யோபு 4:17). ஆயினும், தூய்மையினுடைய ஒழுக்க அடிப்படையை ஏற்படுத்த, ஞானி முன் வருகிறார். தொடக்கத்தில் தூய்மையின் பாலினக்கூறு வலியுறுத்தப்படுகின்றது. புறவினத்தார் தரக்குறைவான தூய்மையின்மையில் ஈடுபடும்போது (ஞான 14:24) சாரா தன்னைத் தூய்மையான நிலையில் வைத்திருக்கிறாள் (தோபி 3:14).

**இ. சங்கீத ஆசிரியர்கள்:** இவர்களில் ஒழுக்கத்தூய்மை பற்றிய அக்கறை மேலும் மேலும் வலியுறுத்தப்படுவதை இவர்களின் கலாச்சாரப் பின்னணியில் காண்கிறோம். இறைவனுடைய அன்பானது இதயத்தின் தூய்மையை நோக்கித் திரும்புகிறது (சங் 73:1). புனித இடத்திற்குள் புகுந்து நிற்கும் உரிமை, கறைபடாத கைகளும், மாசற்ற மனமும் உடைய மனிதனுக்கு ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது (சங் 24:4). நீதியைப் பின்பற்றுகிறவனுடைய கறைபடாக் கரங்களை இறைவன் நிரப்புகிறார் (சங் 18:21.25). அவர் மட்டுமே இத்தூய்மையை அளிக்க முடியுமாதலால் இதயத்தினுடைய தூய்மைக்கான செபமானது இறைவனை நோக்கிச் செய்யப்படுகிறது. இறைவனிடமிருந்து மட்டுமே வேண்டுபவர் எதிர்பார்க்கின்ற தூய்மையின் ஒழுக்க விளைவினை சங் 51 - வெளிப்படுத்துகின்றது. ''என் தீவினை முற்றிலும் நீங்கும்படி என்னைக் கழுவியருளும்... ஈசோப்பினால் என் பாவத்தைப் போக்கியருளும். நான் தூய்மையாவேன்'' (51:2.7). மேலும், எசேக்கியேலின் பாரம்பரியத்தைக் காத்து (எசே 36:25 தொ), பழைய ஏற்பாட்டு மரபிற்கு முடிசூட்டும் விதத்தில் ''தூயதோர் உள்ளத்தை இறைவா, என்னுள்ளே படைத்தருளும்'' (சங் 51:10) என வேண்டுவோன் கதறுகிறான். இச்செபம் ஏற்கனவே, எவ்வளவு ஆன்மீகமானதாக இருக்கிறதென்றால், அது இருக்கும் வடிவிலேயே புதிய ஏற்பாட்டின் விசுவாசி அதனைப் பயன்படுத்தலாம்.

III. புதிய ஏற்பாடு

*1. நற்செய்தி நூல்களில் தூய்மை:*

அ. தூய்மை பற்றிய செயல்முறைகள் இயேசுவின் காலத்தைய யூத இனத்திலும் இருந்தன. மீண்டும் மீண்டும் கழுவுதல்கள் (மாற் 7:3-4), மிகக்கவனமாகக் கழுவுதல் (மத் 23:25), தூய்மையின்மையைப் பரப்புகின்ற பாவிகள் (மாற் 2:15 தொ) மற்றும் சிறப்பாக, கவனக்குறைவினால் ஏற்படும்

தீட்டினை விலக்குவதற்கெனக் கல்லறைகள் (மத் 23:27) ஆகியவற்றினின்று விலகியிருத்தல் முதலான தூய்மைக்கான பொருள் சார்ந்த நிபந்தனைகளை வலியுறுத்துவதன் மூலம், சட்ட ஆசாரமுறை சட்டத்தையும் கடந்து செல்கிறது.

ஆ. சட்ட முறையான, தூய்மையின் சில விதிகளைக் கடைப்பிடிப்பதில் இயேசு கவனமாக உள்ளார் (மாற் 1:43-44). சட்டத்துடன் சேர்க்கப்பட்ட நடைமுறைகளில் அதிகப்படியானவற்றை மட்டும் அவர் முதன் முதலாகக் கண்டிப்பதாகத் தெரிகிறது (மாற் 7:6-13). ஆயினும், உண்மையான தூய்மையானது உள்ளார்ந்ததென அவர் இறுதியாக அறிவிக்கிறார் (மாற் 7:14-23 இணை). ''புறத்தேயிருந்து மனிதனுக்குள்ளே சென்று அவனை மாசுபடுத்தக்கூடியது ஒன்றுமில்லை. மனிதனுள்ளிருந்து வெளிவருவதே அவனை மாசு படுத்தும்''. இந்தப் பொருளில்தான், தீய ஆவிகள் ''அசுத்த ஆவிகள்'' என்று அழைக்கப்படலாம் (மாற் 1:23; லூக் 9:42). இயேசுவின் விடுவிக்கும் கோட்பாடு எவ்வளவு புதியதாய் இருந்ததெனின், அதனைப் புரிந்து கொள்வதில் சீடர்கள் மிக மந்தமாகவே இருந்தனர்.

இ. விசுவாசம் மற்றும் அன்பினுடைய எளிமையில் அவருக்குத் தங்களையே அர்ப்பணிப்பவர்களுக்கும் ''இதயத்தில் தூய்மையானவர்களுக்கும்'' இயேசு தனது தனிப்பட்ட நட்பைப் பொழிகின்றார் (மத் 5:8). இனிமேல், எருசலேம் ஆலயத்திலில்லாமல், அவரது அரசிலேயே இறைவனைக் காணவும், அவர் முன் பிரசன்னப்படுத்தவும், ஒழுக்கத் தூய்மையும் போதுமானதன்று. மனித வாழ்வில் ஆண்டவருடைய செயல் திறன்மிக்க பிரசன்னமே தேவையானதாகும். அப்போதுதான் மனிதன் அடிப்படையிலேயே தூய்மையாக உள்ளான். ''நான் உங்களுக்குக் கூறிய வார்த்தையால் நீங்கள் ஏற்கனவே தூய்மையாக இருக்கிறீர்கள்'' என்று இயேசு இவ்வாறாகத் தனது அப்போஸ்தலர்களிடம் கூறுகிறார் (யோவா 15:3). மேலும் தெளிவாக, ''குளித்துவிட்டவன் தன் பாதங்களை மட்டும் கழுவினால் போதும்; மற்றப்படி அவன் முழுவதும் தூய்மையாயிருக்கிறான். நீங்களும் தூய்மையாயிருக்கிறீர்கள்'' (யோவா 13:10).

2. அப்போஸ்தலிக்கப் போதனை

அ. தூய்மைக்கும் தூய்மையின்மைக்கும் இடையிலான பிரிவிற்கு அப்பால்: யூத கிறிஸ்தவ சமுதாயங்கள், தூய்மையின் செயல் முறைகளைத் தொடர்ந்து கடைப்பிடிக்கலாயின. கிறிஸ்துவின் போதனையினின்று மூவகை முடிவினை வெளிக்கொணர பேதுருவுக்கு இறை தலையீடு அவசியமாயிருந்தது. அசுத்த உணவு என்று எதுவும் இனி இல்லை (அ.ப. 10:15; 11:9); விருத்தசேதனம் செய்யப்படாதவர்கள் இனித் தீட்டுபட்டவர்கள் அல்லர் (10:28); இனி விசுவாசத்தின் மூலமாக மட்டுமே இறைவன், புறவினத்தாரின் இதயங்களைத் தூய்மையாக்குவார் (15:9). தன் பங்கிற்குப் பவுல், இயேசுவின் போதனையை ஆதாரமாய்க் கொண்டு (காண் மாற் 7) கிறிஸ்தவனுக்குத் ''தன்னிலேயே அசுத்தமானது எதுவும் இல்லை'' (உரோ 14:14) என்று நேரடியாகவே அறிவிக்கிறார். பழைய சட்டத்தின் ஆட்சி கடந்துவிட்ட நிலையில், தூய்மை பற்றிய கடைப்பிடிப்புகள் ''வலுவற்ற வறுமை மிக்க உலக பூதங்களாக'' உருவாகின்றன. இவற்றிலிருந்து கிறிஸ்து நன்மை விடுவித்துள்ளார். (கலா 4:3.9; கொலோ 2:16-23). அவரது உயிர்த்த உடலானது புதிய உலகின் வித்தாக இருப்பதால், ''உண்மைப் பொருளானது கிறிஸ்துவின் உடல்தான்'' (கொலோ 2:17).

ஆ. உள்மனிதனைத் தூய்மைப்படுத்த முடியாத சடங்குகளுக்குப் பதிலாக முழுத்திறமை மிக்கதான தனது பலியைக் கிறிஸ்து ஏற்படுத்தியுள்ளார் (எபி 9;10). இயேசுவின் இரத்தம் பாவங்களினின்று நம்மைத் தூய்மைப்படுத்தியதால் (1 யோவா 1:7.9), ''செம்மறியின் இரத்தத்தில் தங்களுடைய ஆடைகளைத் தோய்த்து வெண்மையாக்கிக் கொண்டவர்களிடையே'' நமது இடத்தை ஏற்க, நாம் நம்பிக்கை கொண்டுள்ளோம்

(திருவெளி 7:14). இந்த அடிப்படைத் தூய்மைப் படுத்தப்படுதலானது, சிலுவையி னின்று தனது திறனைப் பெறுகின்ற திரு முழுக்குச் சடங்கில் உண்மையாக்கப்படுகின் றது. திருவார்த்தையாலும் முழுக்கினாலும் திருச்சபையைத் தூயதாக்கிப் பரிசுத்தமாக்குவ தற்குக் கிறிஸ்து தம்மையே கையளித்தார் (எபே 5:27). பழைய செயல்முறைகள் வெளித்தூய்மையை மட்டுமே உருவாக்குவ தால், திருமுழுக்கின் நீரானது, இறந்தோரிட மிருந்து உயிர்த்தெழுந்த இயேசு கிறிஸ்து வோடு, நம்மை இணைக்கும்போது, எல் லாக் கறையினின்றும் நம்மை விடுவிக்கின் றது (1 பேதுரு 3:21-22). கிறிஸ்துவின் மூலமாக நம்மைத் தனது பிள்ளைகளாக்கிய இறைவனின் மீதான நம்பிக்கையால் நாம் உண்மையிலேயே தூய்மையாக்கப்பட்டுள் ளோம் (1 யோவா 3:3).

**இ. சடங்குமுறை மட்டத்திலிருந்து உள் ளார்ந்த மீட்பு மட்டத்திற்கு மாற்றம்:** இது, கொரிந்தியருக்கு எழுதப்பட்ட முதல் திருமுகத்தில் குறிப்பிடத்தக்க அளவில் வெளிப்படுத்தப்படுகிறது. இதில் தங்களு டைய வாழ்வினின்று பழைய புளிப்பு மாவை வெறியேற்றிவிட்டுத் தூய்மை மற்றும் உண்மையின் புளியாத அப்பத்தி னால் அதனை மாற்றியமைக்குமாறு பவுல் கிறிஸ்தவர்களை அழைக்கிறார் (1 கொரி 5:8; காண்க: யாக் 4:8). இவ்வாறு, தனது புனிதத்துவத்தின் பணியை அடைவதற் கென, ஆன்மா மற்றும் உடலினுடைய ஒவ்வொரு கறையினின்றும் கிறிஸ்தவன் தன்னைத் தூய்மையாக்கிக்கொள்ள வேண் டும் (2 கொரி 7:1). இத்தூய்மையின் ஒழுக்கக்கூறு மேய்ப்புப்பணித் திருமுகங்க ளில் அதிகமாக விவரிக்கப்பட்டுள்ளது. மீண்டும் உருவாக்கப்பட்ட இதயங்களின் காணவியலா அமைப்பைத் தவிர்த்து வேறெதுவும் இறைவன் முன்னிலையில் கணக்கிடப்பட முடியாதாகையால் (காண் 1 திமொ 4:4), ''தூய உள்ளத்தோருக்கு எல்லாம் தூயவையே'' (தீத் 1:15). கிறிஸ் தவ அன்பானது தூய இதயம், நல்ல மனச்சாட்சி, மற்றும் நேர்மையான விசுவா சம் ஆகியவற்றினின்று துள்ளி வருகிறது (1 திமொ 1:5; காண் 5:22). குற்றமற்ற மனச்சாட்சியுடன் கடவுளுக்குப் பணிவிடை புரிய முடிந்ததற்காகப் பவுல் ஆண்டவ ருக்கு நன்றி கூறுகிறார் (2 திமொ 1:3). அதே போன்று, நீதி, விசுவாசம், அன்பு மற்றும் சமாதானம் முதலியன வெளிப்படு கின்ற தூய இதயத்தை அவரும் தனது சீடர்களிடம் கோருகின்றார் (2 திமொ 2:22; காண்க 1 திமொ 3:9).

இறுதியாக, நன்னெறியில் பழிகூற முடி யாத வாழ்வு வாழ, கிறிஸ்தவனை ஆவியிலான புதிய வழிபாட்டிற்கான அவ னது அர்ப்பணிப்பே அனுமதிக்கிறது. தூய்மை யின்மையின் எதிர்நிலையானது புனிதத் தன்மையாகும் (1 தெச 4:7-8; உரோ 6:19). பழைய ஏற்பாடு ஏற்கனவே மதிக்கின்ற ஒழுக்கத்தூய்மையானது எப்போதுமே கோரப்படும் (பிலி 4:8). ஆனால் அதன் உண்மையான மதிப்பு, இறுதி நாளிலான கிறிஸ்துவின் வருகையின்போது, அவரை எதிர்கொள்ள அது இட்டுச் செல்வதில் அடங்கியுள்ளது (பிலி 1:10).

## தூய்மையான, தூய்மையற்ற, (சுத்த - அசுத்த) (CLEAN AND UNCLEAN)

I. இஸ்ராயேலின் வழிபாடு மற்றும் சமயவாழ்வு, பிற செமித்திய மக்களைப் போன்று (திருஉறைவிடம் போன்ற) புனித இடங்களையும், (குருக்கள் போன்ற) புனித மனிதர்களையும், (ஓய்வுநாள், பரி கார நாட்கள் போன்ற) புனித காலங்களை யும், (பலி, காணிக்கைகள், சுத்திகரங்கள் போன்ற) புனிதச் செயல்களையும் மைய மாகக் கொண்டு விளங்கின. இறைவழிபா டும், அதுகோரிய சடங்குத் தூய்மையும், ஏற்றுக்கொள்ளப்பட்ட முறைகளை மீறுவ தும் குறிப்பிடத்தக்க முறையில் ஒப்பிட்டு வேறுபடுத்தப்படுகின்றன. மேலும் சடங் குத் தூய்மை, இறுதியில், உடல்சார்ந்த, ஒழுக்கம் சார்ந்த தூய்மையோடு பிணைக் கப்பட்டுள்ளது. சமூகத்தின் தூய்மையைப் பேணவும், அதன் விளைவாக இறை வனுக்கு மகிழ்ச்சியுண்டாக்கவும், இஸ்ராயே

லர் சில விலங்குகளை உண்பது பற்றியும் (லேவி 11:1-38.41; காண்க: உப 14:3-20), குழந்தை பிறப்புப்பற்றியும் (லேவி 12:1-18), தொழுநோய் பற்றியும் (13:1-14:47), சில உடல்சார்ந்த கசிவுகளைப் பற்றியும் (15:1-33), செத்த உடலைப்பற்றியும் (11:39-40) கைப்பற்றப்பட்ட கொள்ளைப் பொருட்கள் பற்றியும் (எண் 31:23-24) சரியான எச்சரிக்கை கொண்டிருந்தனர்.

II. சொற்கள்: தூய்மையான - தூய்மையற்ற, சுத்த - அசுத்த, புனித - தீட்டுப்பட்ட, சமயம் சார்ந்த - சமயம் சாராதவை என்பன பற்றிய கருத்துகள் விவிலியத்தில் பல சொற்களால் குறிக்கப்படுகின்றன. இவையெல்லாம் சரியான வழிபாட்டு முறையோடு தொடர்புடையவை. சொற்கள் கருத்துகளை அவ்வளவு விளக்கவில்லை; அவை பயன்பட்டிருக்கும் சூழ்நிலையிலிருந்து பொருள் பெறுகின்றன. லேவி 11-15-ஐ மேல் எழுந்தவாரியாக வாசித்தாலே, இஸ்ராயேலர் உடல்சார்ந்த அசுத்தத்தை ஆன்மீகத் தூய்மையற்றதிலிருந்து அவ்வளவு துல்லியமாக வேறுபடுத்தவில்லை என்பது தெரியும். தூய்மையானது - தூய்மையற்றது பற்றிய வழிபாட்டுச் சட்டங்களில் உடல் சார்ந்த அசுத்தம் இரண்டாந்தர முக்கியமே வகித்தது. சடங்கு முறைப்படி தூய்மையற்றவர்கள், அவர்கள் உடல்சார்ந்த முறையில் சுத்தமாயிருந்தாலும், வழிபாட்டுச் சடங்குகளில் பங்கெடுக்கத் தடை செய்யப்பட்டிருந்தனர். மீண்டும் அவர்கள் வழிபாட்டுச் சடங்குகளில் பங்கு பெற, சில சுத்திகரச்சடங்குகளைச் செய்ய வேண்டும் (லேவி 11:24-25. 28.39-40; அதி 14). பொருட்கள்கூட தூய்மையற்றவை ஆகக்கூடும் (லேவி 13:47 தொ; 14:43). இச்சொற்கள், புதிய ஏற்பாட்டில் சொற்பமாகவே பயன்பட்டாலும், அவை சடங்கு, உடல்சார்ந்த மற்றும், ஒழுக்கம் சார்ந்த தூய்மையான - தூய்மையற்ற பழைய ஏற்பாட்டுக் கருத்துகளை எதிரொலிக்கின்றன.

III. தூய்மையானவை - தூய்மையற்றவை பற்றிய கட்டளைகள் சட்டத்தை வீட்டுக்குள்ளும் புகுத்துகின்றன எனலாம். இச்சட்டம் வாழ்வின் ஒவ்வோர் அலுவலையும் பாதித்தது. இவை இஸ்ராயேலுக்கு மட்டும் உரியவை அன்று. பழம் மேற்காசிய சமயங்களிடையே பெரும்பாலும் காணப்படுபவையாகும்.

அ. வழிபாட்டுத் தூய்மையின்மை: இக்கருத்துக்கள் வழிபாட்டுச் சூழ்நிலையில் முதலில் தோன்றி வளர்ச்சியடைந்தன எனலாம். தூய்மையற்றன யாவும் வழிபாட்டில் இடம் பெறலாகா. இஃது ஆட்களுக்கும் பொருட்களுக்கும் பொருந்தும். ஆட்களும் பொருட்களும் தூய்மையானவை தூய்மையற்றவை எனவும், பலிச்சடங்கில் பங்கெடுக்கத் தகுதியுடையவர், தகுதியில்லாதவர் எனவும் இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டனர். பலி செலுத்த முடியாமையாகிய தூய்மையின்மையில் பல படிகள் உண்டு. மிகக் குறைந்த அளவுத் தூய்மையின்மை ஒருவரை அந்நாளில் மட்டும் புனித இடத்தின் புறமுற்றத்துக்குள் நுழைவதைத் தடுத்தது. இத்தூய்மையின்மை உடம்பைக் கழுவுவதால் அல்லது ஆடைகளைத் துவைப்பதால் நீக்கப்படலாம். வழிபாட்டுத் தூய்மையின்மை ஒருவாரம், இரண்டுவாரம் அல்லது பல நாட்கள்வரை நீடிக்கலாம். இத்தூய்மையின்மை ஒரு வாரத்திற்குமேல் நீடித்தால் அதை நீக்கும் சடங்கில் பலி செலுத்துதல் இடம் பெறும்.

ஆ. இந்த வழிபாட்டுத் தூய்மையின்மையை மூன்று வகையாகப் பிரிக்கலாம்: 1. இறந்த உடல் சார்ந்தது: இறந்த விலங்கின் உடலைத்தொட்டவன் அன்று மாலை வரை தூய்மையற்றவனாக இருந்தான் (லேவி 11:39). இதை நீக்க அவன் தன் ஆடையைத் துவைத்தால் போதுமானது (11:40). இறந்த மனித உடலால் உண்டாகும் தூய்மையின்மை, அதைத் தொட்டவரையும் அது கிடந்த வீட்டையும் வீட்டில் வசித்தோரையும், வீட்டிலுள்ள பொருட்கள் அனைத்தையும் ஏழு நாட்களுக்குத் தூய்மையற்றதாக்கியது. இவற்றைத் தூய்மையாக்க வெறுமனே கழுவினால் மட்டும் போதாது.

எண் 19:11-இன்படிஇறந்த உடலைத் தொட்டவன் ஏழு நாட்களுக்குத் தூய்மையற்றவனாக, தொழு நோயாளியைப் போன்று பாளையத்துக்குப் புறம்பே (5:2-3) வசிக்க வேண்டும். அவன் மூன்றாவது ஏழாவது நாட்களில் குளிக்க வேண்டும். பின் தூய்மையாக, செங்கிடாரியின் சாம்பல் கலந்த நீரால் தெளிக்கப்பட வேண்டும். யூதர்கள் பாலைவனத்தில் பயணம் செய்த காலத்தில் சுமை சுமக்காத செங்கிடாரி, தனிச்சடங்கோடு கொல்லப்பட்டு, கேதுருக் கட்டை, ஈசோப்பு, கருஞ்சிவப்புநூல் ஆகிய வற்றோடு, முழுவதும் எரிக்கப்பட்டது. இந்தச் சாம்பல் பாதுகாப்பாக வைக்கப்பட்டு, தூய்மையற்றவற்றைத் தூய்மையாக்க, லேவியர் குறிப்பிட்ட சடங்குகளில் தண்ணீரோடு கலந்து தெளிக்கப்பட்டது (19:17).

2. **தொழுநோய் சார்ந்தவை:** இந்நோயுடையவன் இதில் வாடும்வரைத் தூய்மையற்றவனாகக் கருதப்பட்டான். அவன் துக்க ஆடை அணிய வேண்டும். பாளையத்துக்கு அல்லது நகருக்குப் புறம்பே மனித சமூகத்துக்கு அப்பால் வாழவேண்டும். தன்னை மக்கள் நெருங்கும்போது, தான் அசுத்தன் என்று உரக்கக்கூறி எச்சரிக்க வேண்டும். அவன் குணமானால், குருக்கள் மட்டுமே அவன் குணமானவன் என்று தீர்ப்பளிக்கக் கூடும். அவனுக்குச் சிக்கல் மிக்க சுத்திகரச் சடங்கு செய்ய வேண்டும் (லேவி 13-14). அவன் தங்கியிருந்த இடமும் ஆடைகளும் கூட, தொழுநோய்த் தூய்மையின்மை உடையனவாகக் கருதப்பட்டன.

3. **பிறப்பு, பலினம் சார்ந்தவை (லேவி 12):** ஆணிடமோ, பெண்ணிடமோ ஒரு நாள் வரை நீடிக்கக்கூடிய சட்டத்தூய்மையின்மையை உண்டாக்கக்கூடிய இயற்கை நிலையோ செயலோ இத்தூய்மையின்மையை உண்டாக்கின. இத்தூய்மையின்மையை உடையவர் எதைத் தொட்டாலும் அது தூய்மை இழந்ததாகக் கருதப்பட்டது. மூலநிலை நீங்கியபின் ஏழு நாட்களுக்குப் பின் அதுதூய்மையாயிற்று. குளித்தல், கழுவுதல் போன்ற சடங்காலோ, தகனப் பலியாலோ, பாவப்பரிகாரப் பலியாலோ இத்தூய்மையின்மை நீக்கப்பட்டது. உடல்நல நோக்கோ ஒழுக்க நோக்கோ மிக மறைமுகமாகத்தான் இச்சடங்கில் இடம் பெறுகின்றன. தன்னியல்பான இரவுப்புறக்கசிவும், கணவன் மனைவியரது முறையான புணர்ச்சியும்கூட ஒருநாள் வரைக்கும் தூய்மையின்மையை உண்டாக்கக்கூடும் (லேவி 15:16; உப 23:11). மாதவிலக்கு ஒரு பெண்ணை ஏழு நாட்களுக்குத் தூய்மையற்றவளாக்கியது (லேவி 15:19-24). இக்காலத்தில் அவள் தன் கணவனுடன் புணர்ச்சி கொள்ளக்கூடாது.

பிறப்பு சார்ந்த தூய்மையின்மையை, ஏதேன் தோட்டத்தில் ஏவாளின் மேல் சுமத்தப்பட்ட சாபத்தின் பின்னணியில் புரிந்து கொள்ளலாம். பாவத்தின் விளைவாக மனுக்குலத்தின் மேல் இறைவன் அளித்த சாபத்தோடு பிறப்பைப் பழைய ஏற்பாடு தொடர்புபடுத்துகிறது. யோபுவும் (யோபு 14:4) தாவீதும் (சங் 51:5) இதைச் சுட்டுவதாகத் தெரிகிறது. பெற்ற பிள்ளை ஆண்குழந்தையானால் 40 நாட்களுக்கும், பெண் குழந்தையானால் 80 நாட்களுக்கும் தாய் தூய்மை இழந்தவளாகக் கருதப்பட்டாள். இத்தூய்மையின்மை தகனப்பலியாலோ, பாவப்பலியாலோ நீக்கப்பட்டது. பலிப்பொருள் ஒரு செம்மறியும் ஒரு புறாவும் ஆகும். ஏழையானால் இருபுறாக்களாகும் (லேவி 12:8; லூக் 2:24).

இவ்வொழுங்குகள் திருமணம், பிறப்பு ஆகியவை பற்றிய வெறுப்பால் ஏற்படுத்தப்பட்டவை அல்ல. ஏனெனில் பெருங்குடும்பம் ஒரு மேலான ஆசிராகவும், மலட்டுத்தன்மை ஓர் அவமானமாகவும் இறைத் தண்டனையாகவும் கருதப்பட்டன. ஆனால் இவ்வொழுங்குகளுக்குப் போதிய விளக்கம் அளிப்பது கடினம்.

**இ) விலங்குகளை உண்பது பற்றியவை (லேவி 11; உப14):** சில விலங்குகளையும் அவற்றால் செய்யப்பட்ட பொருட்களையும்

தொடுவதோ, உண்பதோ ஓர் இஸ்ராயேல னைத் தூய்மையற்றவனாக்கக் கூடும். ஆகவே உணவுபற்றிப் பல ஒழுங்குகள் உள்ளன. பழைய ஏற்பாட்டில் தூய்மை யானவை தூய்மையற்றவை என்று விலங்கு களைப் பிரித்தல், புற அடையாளங்களை அடிப்படையாகக் கொண்டதாகும். நான்கு கால் விலங்குகளில் அசைபோடுவனவும், பிளந்த குளம்புகளையுடையனவும் தூய்மை யானவையாகும். நீரில் வாழ்பவைகளில் செதில்கள் உள்ளவையும், சிறகுகளை உடை யவையும் தூய்மையானவையாகும். ஒட்டகம், கழுதை, பன்றி, வளை தோண்டி வாழும் கரடி, குழிமுயல் போன்றவை தூய்மையற் றவையாகும். ஐந்நூலில் பன்றிக்கறியை உண் பதைத் தடுத்துத் தனிப்பட்ட முறையில் வலியுறுத்திக் கூறப்படவில்லை. ஆயினும் பிற்காலத்தில் இது மோசேயின் சட்டத்திற் குப் பிரமாணிக்கமின்மையின் மூடக் கொள்கை யாகவும் இஸ்ராயேலின் மறையிலிருந்து விலகுவதற்குச் சமானமாகவும் மாறியது (*எசா 65:4; 63:3.17; 2 மக் 6:18 தொ; தானி 1:8.12; அ.ப. 10:12*). ''பறப்பனவற் றுள் நான்கு காலால் நடமாடும் ஊர்வன யாவும் உங்களுக்கு அருவருப்பு. ஆயினும் நான்கு காலால் நடமாடியும் தரையில் தத்திப்பாயும்படி நெடிய பின்னங்கால்கள் உடையனவற்றை உண்ணலாம்'' (*லேவி 11:20-21*).

தூய்மையான விலங்குகள் முறையான விதத்தில் கொல்லப்பட வேண்டும். இயற்கை யான காரணங்களால் மரிக்கும் விலங்கு களையும் (*உப 14:21*), கீறிக்கிழிக்கப் பட்டவைகளையும் (*லேவி 17:15*) உண்ணக் கூடாது. இரத்தத்தோடு இறைச்சியை உண் ணக்கூடாது (*ஆதி 9:3-4; லேவி 17:11தொ; உப 12:23*). குட்டியை அதன் தாய்ப்பாலில் வேகவைக்கக்கூடாது (*யாத் 23:19; 34:26, உப 14:21*).

இவ்வொழுங்குகளை மீறுபவன் பெறும் தூய்மையின்மையை நீக்குவது எப்படி என்று தெளிவாகக் கூறப்படவில்லை. லேவி 11:40; 17:15 ''அவன் தன் ஆடைகளைத் துவைத்து, தண்ணீரில் மூழ்கு வான்; மாலைமட்டும் தீட்டாயிருப்பான்'' என்று கூறுகின்றன. இது சுத்திகரம் அன்றே நடந்தது என்று சுட்டுகிறது.

இவ்வொழுங்குகளின் காரணத்தைப்பற்றி ஒன்றையும் உறுதியாகக் கூற முடியாது. பிறமதப் பலிவழிபாட்டில் இவ்விலங்குகள் பயன்பட்டதும், இவற்றில் பல பெருந்தீனி உண்பதும், சில வெறுக்கத்தக்க தோற்றம் கொண்டிருப்பதும் காரணங்களாக இருக்க லாம். இப்படி விலக்கப்படுவதற்கு அறிவு சார்ந்த காரணம் எதுவும் கொடுக்க முடி யாது. தங்களைச் சுற்றியிருந்த மக்களிட மிருந்து இப்பழக்க வழக்கங்களை ஏற்றுத் தங்களது தேவைகளுக்கேற்ப மாற்றி அமைத்து, அவற்றிற்குச் சமய அடிப்படை யும் தபசு மனப்பான்மையும் அளித்துத் தனதாக்கிக் கொண்டது இஸ்ராயேல் என லாம்.

IV. **தூய்மை - தூய்மையின்மை - புனிதம்:** மேற்கூறியவற்றிலிருந்து, தூய்மை - தூய் மையின்மை என்பன உடல் நலத்தோடோ ஒழுக்கத்தோடோ சேர்ந்த கருத்தல்ல என் பது தெளிவாகும். ஒருபுறம் தூய்மை யின்மை மறைபொருளான, பொல்லாங் கான ஒன்றை உணர்த்தி அதை எப்படியா வது தவிர்க்க வேண்டும் என உணர்த்திற்று. ஆகையால் தூய்மையற்றவை கண்டிப்பாகத் தடை செய்யப்பட்டவையாகும்; ஒதுக்கி வைக்கப்பட்டவையாகும். இதன்படி, ஓர் ஆள், ஒரு விலங்கு, ஒருபொருள், ஏன் ஒரு செயல் கூட, தூய்மையற்றதாகக் கருதப்படலாம். இப்பொருளை உணர்த்தும் சொற்கள் விவிலியத்தில் பல இடங்களில் காணப்படுகின்றன.

மறுபுறம் தூய்மை - தூய்மையின்மை என்பவை மனிதனின் பிறப்பு, வாழ்வு, இறப்பைச் சார்ந்த கருத்தாக இருந்தன எனத் தெரிகிறது. இத்தூய்மை இழந்தால் அவர்க ளிடமிருந்து யாவே தம் முகத்தைத் திருப் பிக் கொள்வார். ''நான் அவர்களின் தீட்டுக் கும் குற்றங்களுக்கும் ஏற்றபடி அவர்களை

நடத்தி என் முகத்தை அவர்களிடமிருந்து திருப்பிக் கொண்டேன்'' (எசே 39:24). இப்போக்கு புனிதமிக்க யாவேக்கு அவர்கள் அளிக்கும் பதிலின் விளைவாகும் ''தூயோராய் இருங்கள். ஏனெனில் நான் உங்கள் கடவுளாகிய ஆண்டவர்! தூயவர்!'' (லேவி 19:2). தூய்மை இங்குப் புனிதத்தை உணர்த்திற்று. ஆயினும் சில வேளைகளில் தூய்மையின்மையும் புனிதமும் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதாகத் தெரிகிறது. செமித்திய மொழிகளில் இரண்டையும் குறிக்க ஒரே மூலச் சொல்லே பயன்படுகிறது. இது புனிதத்தையும் குறிக்கிறது; வெறுக்கத்தக்கதையும் குறிக்க வல்லது. புனிதமானது தொடக்கூடாததாகும் (லேவி 11:31-34; 15:4-12.20-28). ஆகையால் குரு, வழிபாட்டு வேலை முடிந்தவுடன், திருச்சடங்கு ஆடைகளைக் களைந்துவிட்டு, வேறு உடைகள் அணிய வேண்டும் (எசே 44:19;யாத் 28:43). செங்கிடாரி போன்ற திருப்பொருளைத் தொட்டால் (எண் 19:1-10) ஒருவன் தூய்மையற்றவனாகிறான். இரத்தம் தெளிக்கும் குரு தூய்மையற்றவராவார். ஆகவே புனிதமான இறைவனை அணுகும்முன் குளிக்க வேண்டும்; கழுவ வேண்டும். தூய்மையின்மையை நீக்குதல் அர்ச்சித்தல் அல்லது தூய்மையாக்குதல் என்றழைக்கப்பட்டது (யோசு 3:5; 1 சாமு 16:15). தூய்மையாய் இருத்தலும் புனிதமாய் இருத்தலும் ஒன்றல்ல. தூய்மை புனிதத்திற்கு ஒருநிபந்தனையும் முன் தேவையுமாகும். புனிதரான இறைவனை அணுகுதற்குத் தகுதிஅளிக்கும் நேரடி ஆற்றலாகும். புனிதரான இறைவன் தூய்மையின்மையைப் பொறுத்துக் கொள்ளார். இக்கருத்து, பழைய ஏற்பாட்டில் தூய்மை பற்றிய ஒழுங்குகள் மறைத்தன்மையை அடிப்படையாகக் கொண்டன என்று காட்டும்.

யாவே பொறாதவர். மற்றெந்தத் தேவர்களையும் பொறுத்துக் கொள்ளார். பிற தேவர்களை வணங்குவதால் யாவேயின் மக்கள் தூய்மையற்றவராகின்றனர் (எரே 2:7-23; ஒசே 6:10). சோதிடம் பார்த்தலும் (லேவி 19:31), இறந்த உடலில் நெற்றிக்கு மேல் மயிரைச் சிறைத்தலும் (உப 14:1), அயல்நாடுகள் பிற தேவர்களை வணங்குவதால் அந்நாடுகளும் (ஆமோ 7:17; எசா 52:1), அவற்றிலிருந்து வரும் உணவு உட்பட்ட பொருள்களும் தூய்மையற்றவையாகும் (ஓசே 9:3; தானி 1:5-16). ஆகையால் கானானியர்களின் புனித இடங்களும் அவற்றின் பொருள்களும் முழுவதும் அழிக்கப்பட வேண்டும் (எண் 31:20-24). பாபிலோனியாவிலிருந்து திரும்பிய யூதர்கள் தங்களைச் சுத்தி செய்தனர் (எஸ் 6:20-22). அந்நியரால் தீட்டுப்பட்ட எருசலேமின் சுவர்கள் கூடச் சுத்தி செய்யப்பட்டன (நெகே 12:30). பாபிலோனுக்கு நாடுகடத்தப்பட்டுத் திரும்பிய காலத்துப் பழக்கவழக்கங்களிலிருந்து சடங்குத்தூய்மை பற்றிய ஒழுங்குகளின் மையம், இறைவனுக்காகப் பிற மக்களிடமிருந்து பிரிந்திருக்கும் புனிதம் பற்றிய இறையியல் கருத்தாகும் என்று அறிகிறோம். புதிய ஏற்பாட்டுக் காலத்தில், பாஸ்குக் காலத்தில் அந்நியருடன் பழகுவதும் தீட்டாகும் எனக்கருதினர் (யோவா 18:28).

V. புறத்தூய்மை - அகத்தூய்மை: ஏற்கெனவே பழம் மேற்காசிய மக்களிடையே இருந்த தூய்மை - தூய்மையின்மை என்ற கருத்தை எடுத்து, அவற்றை இஸ்ராயேலர் தாங்கள் யாவேயிடம் கொண்டிருந்த விசுவாசத்திற்கேற்ப மாற்றி அமைத்து, மோசே அவற்றை மறைசார்ந்த கட்டளையாக்குகிறார். அவருக்குப் பின்வந்த குருக்கள் பாரம்பரிய ஆசிரியர்கள் இதே அடிப்படையில் இக்கட்டளைகளை வளர்த்துப் பேணிக் காத்தனர்.

இக்கட்டளைகளைக் கடைப்பிடிப்பது இறைமக்களின் புனிதத்திற்கு அடையாளமாகக் கருதப்பட்டது (லேவி 11:44). இஸ்ராயேலின் ஒரே இறைத்தன்மைக் கோட்பாட்டைக் காக்க இஃது உதவியது. ஏனெனில் இதனால் மற்ற மறைகளிலிருந்து இஸ்ராயேலர் பிரிக்கப்பட்டனர் (தானி 1:8-12; தோபி 1:10-12). மேலும் தூய்மை பற்றிய ஒழுங்குகள் இறைவனுடைய கட்டளைகளாகக்

கருதப்பட்டதால், அவற்றைக் கடைப்பிடிப் பது ஒழுக்கத்தையும் வளர்த்தது. இது சிலவேளைகளில் எலியேசரின் மறைசாட்சி மரணம் போன்ற *(2 மக் 16:18-31)* வீரச் செயல்களுக்கும் இட்டுச்சென்றது. ஆயி னும் வெறும் ஆசரக் கண்டிப்பு, சடங்குத் தூய்மையை மிகைப்படுத்துவது போன்ற கேடுகள் எப்போதும் இருந்தன. நாடு கடத்தப்பட்ட கால்திற்குப்பின் சுத்திகரச் சடங்கு வழக்கங்களைத் தவறாகப் பயன் படுத்துபவன்ர இறைவாக்கினர்கள் இடித்துக் கூறியுள்ளனர். ''வாய்ச்சொல்லால் இம்மக் கள் என்னை அணுகுகின்றனர்; உதட்டினால் என்னைப் போற்றுகின்றனர்; அவர்கள் உள்ளமோ என்னைவிட்டுத் தொலைவில் இருக்கிறது; அவர்களது இறையச்சம் மன னம் செய்த வெறும் மனித கட்டளைகளைச் சார்ந்ததே!'' (எசா 29:13). மனிதனைக் கறைபடுத்தும் உண்மையான தூய்மை யின்மை பாவமாகும் என்பதை எசேக்கி யேல் வலியுறுத்திக் கூறுகிறார் (எசே *36:17-20)*. இக்கறையை இறைவன் மட் டுமே தூய்மையாக்க முடியும் (எசா *6:5-7)*. புறத்தோடு அகத்தையும் சேர்த்து முழு ஆளையும் தூய்மையாக்குதல் மெசியாவின் வாக்குறுதிகளோடு வருவதாகும். ''நான் தூய நீரை உங்கள் மேல் தெளிப்பேன். நீங்கள் உங்கள் எல்லா அழுக்கிலிருந்தும் தூய்மையாவீர்கள். உங்கள் எல்லாச் சிலை வழிபாட்டுத் தீட்டையும் அகற்றுவேன். நான் உங்களுக்குப் புதிய இதயத்தை அருளுவேன். புதிய ஆவியை உங்களுக்குள் புகுத்துவேன். உங்கள் உடலிலிருந்து கல் லான இதயத்தை எடுத்துவிட்டு தசையா லான இதயத்தைப் பொறுத்துவேன். என் ஆவியை உங்களுக்குள் புகுத்துவேன். என் நியமங்களைக் கடைப்பிடிக்கவும் என் நீதித் தீர்ப்புகளைக் கவனமாய்ச் செயல்படுத்த வும் செய்வேன்'' (எசே *36:25-27*; செப் *3:9*; எசா *35:8; 52:1)*.

சங்கீத ஆசிரியர்களும் ஒழுக்கத் தூய்மை யைச் சிறப்பித்துக் கூறுகின்றனர். ''தூய உள்ளத்தினருக்கு ஆண்டவர் எவ்வளவோ நல்லவர்!'' (சங் 73:1). பாவமில்லாததோர், தூய இதயத்தோர் ஆண்டவரை அணுகலாம் *(24:4)*. ஒவ்வொருவனுக்கும் அவனது நீதிக் கேற்ப இறைவன் பரிசு அளிக்கிறார் *(18:21-25)*. மற்ற சங்கீதங்களை விட 51-ஆம் சங்கீதம் தூய்மை பற்றிய இஸ்ராயேலின் கருத்து, சடங்குத் தூய்மையிலிருந்து ஒழுக் கத் தூய்மைக்கு வளர்ந்துள்ளதற்குச் சான்று பகர்கிறது. ''என் பாவங்களைப் பாராதபடி உம் முகத்தை மறைத்துக் கொள்ளும். என்பாவக்கறைகளை எல்லாம் துடைத்து விடும்.... உம் மீட்பின் மகிழ்ச்சியை மீண்டும் எனக்கு அளித்தருளும். தன்னார்வ மனம் தந்து என்னைத் தாங்கியருளும்!'' *(51:10.12)*. ஞானநூல்களின் ஆசிரியர்கள் அகத்தூய் மையை அழுத்திக் கூறுகின்றனர் (யோபு *14:4-14; 16:17)*. இறைவன்முன் மனிதன் அடிப்படையிலேயே தூய்மையற்றவன் (பழ 20:9; யோபு 9:30.31). அவரால் மட்டும் அவன் தூய்மையடைய முடியும்.

VI. ***புதிய ஏற்பாட்டில்:*** நாடு கடத்தப்பட்ட பின், யூத சமயத்தில் ஒழுக்கத்தூய்மையும் சட்ட ஆசாரத்தூய்மையும் அடுத்தடுத்து காணப்படுகின்றன. இப்போக்கு கிறிஸ்து வின் காலத்திலும் காணப்படுகிறது. புறச் சடங்குகளைக் கடைப்பிடித்தல் அழுத்திக் கூறப்படுகிறது. சான்றுகள்: மீண்டும் மீண் டும் கழுவுதல் (மாற் *7:3-8)*; கிண்ணங்க ளைக் கழுவுதல் (மத் *23:25)*; பாவிகளோடு பழகுவதைத் தவிர்த்தல் (மாற் *2:15-16)*. இயேசு இவற்றில் சிலவற்றைக் கடைப்பி டித்திருப்பதாகத் தெரிகிறது *(1:43-44)*; ஆனால் இவற்றை மிகைப்படுத்திக் கூறுவ தைக் கண்டிக்கிறார் *(7:6-13)*. மனிதனைத் தூய்மையற்றவனாக்குவது ஒழுக்கமின்மை தான், சடங்குகளின் குறைவன்று. அவனே அவனது நடத்தைக்குப் பொறுப்பாவான். ''நான் சொல்வதை அனைவரும் கேட்டுப் புரிந்து கொள்ளுங்கள். வெளியேயிருந்து மனிதருக்குள்ளே சென்று அவர்களைத் தீட்டுப்படுத்தக்கூடியது ஒன்றுமில்லை. மனிதருக்கு உள்ளேயிருந்து வெளியே வரு பவையே அவர்களைத் தீட்டுப்படுத்தும்'' *(மாற் 7:14-15; மத் 15:11; இணை; காண்க: அ.ப. 15:29; உரோ 15:14-17)*. இப்பொரு

ளில் பேய்கள் தூய்மையற்ற அல்லது அசுத்த அரூபிகள் என்றழைக்கப்படலாம் (மத் 10:1; மாற் 1:23-27; லூக் 4:33-36).

எல்லாப் பாவங்களிலிருந்தும் ஓடவேண்டிய கிறிஸ்தவனின் கடமையைப் புதிய ஏற்பாடு நீக்கவில்லை. ஆனால் அது கிறிஸ்துவின் வல்லமை மிக்க செயல்களை எடுத்துக்காட்டுகிறது. கிறிஸ்து தீட்டுடையவரானார். சான்றாக, அவர் செத்தவர்களைத் தொடுகிறார் (லூக் 7:11-12; 8:54); இரத்தப் போக்குடைய பெண்ணைத் தொடுகிறார் (மத் 9:20-22; மாற் 5:25-34; லூக் 8:44-45); பாவிகளோடு பழகுகிறார்; பாவத்தின் தூய்மையின்மையைத் தன்மேலே ஏற்றுக் கொண்டு, ஒப்புரவினால் மனிதரை மீட்டார் (காண்க. 1 கொரி 15:54; கலா 3:13). உலகின் பாவத்தைப் போக்கும் செம்மறியாக (யோவா 1:29), இறைவனையும் மனுக்குலத்தையும் பிரித்த தடைச்சுவரைத் தகர்த்தெறிந்தார் (எபே 2:14-16).

உணவுபற்றிய யூத ஒழுங்குகளை இயேசு அடியோடு அகற்றவில்லை. ஆதித்திருச்சபை இவற்றைச் சிறிது சிறிதாக, துன்ப மிக்க அனுபவத்தோடு, அகற்ற வேண்டியிருந்தது (அ.ப. 10:11-14;15:28-29; கலா 2:11-17; உரோ 14:14; கொலோ 2:20-22). ஆதித்திருச்சபை உணவுபற்றிய ஒழுங்குகளை அடியோடு அகற்றியபோது, யூதநாடு முழுவதும் வீழ்ச்சியடைந்திருந்தது. இறையரசாகிய திருச்சபை நாடுகளின் பிரிவுகளைக் கடந்து, எல்லா மக்களுக்கும் இறையரசைப் போதிக்கும் பெரும்பணியில் ஈடுபட்டிருந்தது.

தூய இதயத்தோர் இறைவனை அணுக முடியும் (மத் 5:8). இறைவனைப் பார்ப்பது, அவர் திருமுன் வருவது, இறையரசுக்குள் நுழைவது ஆகியவற்றுக்கு ஒழுக்கத் தூய்மை மட்டும் போதாது. ஒருவனது உள்ளத்திலே இறைவனே குடிகொள்வது இன்றியமையாததாகும். அப்போதுதான் மனிதன் அடிப்படையிலேயே நிறை தூய்மையுடையவனாவான்; புனிதன் ஆவான் (யோவா 13:10; 15:3).

**தூய்மையானதை இழிவுபடுத்துதல்** (PROFANE)

தூய்மையானவற்றையும் புனிதமானவற்றையும் இழிவுபடுத்துதல், தீட்டுப்படுத்துதல், மாசுபடுத்துதலாம்.

கடவுளின் தூயகம் (லேவி 21:12; அ.ப. 24:6), பீடம் (யாத் 20:5), பலிகள் (லேவி 22:15), குருக்கள் மற்றும் அவர்கள் குடும்பங்கள் (லேவி 21:4), ஓய்வுநாள் (எசா 56:6), உடன்படிக்கை (மலா 2:10), அரசன் (சங் 89:39) ஆகிய இஸ்ராயேலின் புனித நிறுவனங்கள், அவற்றை வழிநடத்த இறைவன் அளித்த சட்டங்களைப் புறக்கணிப்பதால், இழிவுபடுத்தப்படலாம், தீட்டுப்படுத்தப்படலாம், மாசுபடுத்தப்படலாம். இத்தகையவற்றில் மிகக் கொடுமையானது. ஒரு புனிதப் பொருளைத் தூய்மையற்றவையோடு தொடர்பு கொள்ளச் செய்வதாகும். தூயவரான இறைவன் தமது மக்களைத்தூயவராக இருக்கும்படி கட்டளையிடுவதால், தூய்மையானவற்றை இழிவுபடுத்துதல் இறைவனுடைய புனிதத்தையே தாக்குவதாகும். அவரது திருப்பெயரை இழிவுபடுத்துதலாகும் (லேவி 21:6; எசே 22:26; ஆமோ 2:7). சிலைவழிபாடு (எசே 20:39), சிசுப்பலி (லேவி 18:21), சமூக ஒழுக்கக்கேடு (லேவி 19:11-12) ஆகியவை வெகுவாக வெறுப்பைத் தருகின்றவையாகும். இறைவனது பெயரை இழிவுபடுத்துவதற்குரிய தண்டனைகள் புனிதம் இழப்பது (எசே 24:21), அந்நியரால் அடிமையாக்கப்படுதல் (7:24), முடிவாக சாவு (18:32) ஆகியவையாகும்.

**தூரா** (DURA - வட்டம், சுற்றுச்சுவர்)

பாபிலோன் மாநிலத்திலிருந்த ஒரு சமவெளி. இங்கு நெபுகத்னேசர் ஒரு பொற் சிலையை வைத்து எல்லா மக்களும் அதை வணங்கக் கட்டளையிட்டார் (தானி 3:1). இது இருந்ததாகப் பல இடங்கள் அடையாளம் காட்டப்படுகின்றன. காபோரும் யூப்பிரத்தீசு ஆறும் சந்திக்கும் இடமாகிய தூரா யுரோப்போஸ் என்ற இடமாக இருக்கலாம்; அல்லது சித்தகெனே மாநிலத்திலுள்ள அப்பொல்லோனியாவுக்கு அருகிலுள்ள இடமாக இருக்கலாம். ஒருவேளை பாபிலோ

னுக்குச் சற்றுத் தெற்கேயுள்ள தூலுல் தூரா வாக இருக்கலாம். ''சுவர் சூழ்ந்த'' என்ற பொருளுடைய தூரா என்ற சொல் மெச பொத்தாமியாவிலுள்ள பல இடங்களுக்குப் பொருந்தும். ஆகையால் தூரா இருந்தஇடம் தெளிவாக இல்லை.

### தூற்றிப் பிரித்தல் *(WINNOWING)*

வெட்டப்பட்ட தாள்களிலிருந்து அடித்துப் பிரிக்கப்பட்ட தானியமும் பதரும் சேர்ந்த தொகுப்பைக் காற்றில் முறத்தால் தூக்கிஎறிந்து தானியத்தையும் பதரையும் பிரிக்கும் முறையாகும். தானியம் ஒரு குவியலாகத் தரையில் விழும். பதர் காற்றில் அடித்துக் கொண்டு செல்லப்படும். இது போரடிக்கும் களத்தில் நடந்தது. காற்று அடிக்கும் பிற்பகலிலோ மாலையிலோ இது நடந்தது *(1 ரூத் 3:2)*.

மெசியா மக்களைப் பிரித்தெடுப்பதற்கு உருவகமாக இச்செயல் பயன்பட்டிருக்கிறது *(மத் 3:2)*. தீமையின் அழிவை உருவகமாகக் கூற இச்சொல் பயன்பட்டுள்ளது *(காண்க: எரே 15:7; 51:2)*.

# முதுபெரும் தந்தையர் காலத்து விவிலிய உலகு

(கி. மு. 2000 – 1600)

## ஆபிரகாமின் அழைப்பும் பயணமும்

காஸ்பியன் கடல்
கோமேர்
இத்தியார்
அரராத்து
தோகருமா
கர்க்கமிசு
ஆரான்
மெசபொத்தாமியா
நினிவே
அசிரியா
காலாகு
அசூர்
மதாய்
ஆலெப்போ
உகரித்து
அமாது
யூப்பிரதிசு நதி
மாரி
திகிரிசு நதி
அக்காது
பிபுலோசு
சீரியா
ததிமோர்
சீதோன்
தமஸ்கு
மத்தியதரைக்கடல்
ஆசோர்
மெகிதோ
கானான்
செக்கேம்
அம்மோன்
பாபிலோனியா
பாபிலோன்
ஏலாம்
பெத்தேல்
ஆயி
சோவான்
சாலேம்
கெரார்
கெபிரோன்
லோத்து
மம்ரே
பெயேர்-செபா
ஏதோம்
ஊர்
லிபியா
கெலியோப்பொலி
பிரமிடுகள்
நைல் நதி
சீனாய்
மிதியான்
எ கி ப் து
அரேபியா
பாலைவனம்
பாரசீக வளைகுடா
செங்கடல்
தெதான்
குஷ்

0 100 200 300 400 500
கி. மீ.


மத்தியதரைக்கடல்
நைல் டெல்டா
இராம சேசு (தானிசு)
நாணல் கடல்
பாகால் செபோன்
கோசேன்
சொக்கோத்
பித்தோம்
கசப்பு ஏரிகள்
சூர் பாலைவனம்
கெலியோபொலி
மெம்பிசு
எகிப்து
நைல் நதி
விடுதலைப் பயணத்தின் தடம்
பாரான் வனாந்தரம்
சின் பாலைவனம்
தொபிகா
ஆசெரோத்
பாரான்
இரபிதிம்
சீனாய் மலை (ஓரேபு)
சீனாய் தீபகற்பம்
செங்கடல்
மிதியான்
ஏலாத்து
திமினா
ஏதோம்
பூனோன்
ஓபோத்து
சின் வனாந்தரம்
யக்கான்
அசிமோன்
காதேசு பார்னேயா (மெரிபா)
கோர்மா
பெயேர்-செபா
அராது
கெபிரோன்
எரிகோ
கானான்
பெலிஸ்திய சமவெளி
சாக்கடல்
எசிபோன்
நெபோ மலை
மேதபா
தீபோன்
ஆர்னோர் ஆறு
மோவாபு
இஸ்ராயேல் மக்களின் விடுதலைப் பயணம்
(அறிஞர்களின் பொதுவான கருத்துப்படி)
0 20 40 60 80 100
கி. மீ.


கானான் நாடு
(இஸ்ராயேலின் 12 கோத்திரங்கள் வாழ்ந்த நிலப்பகுதிகள்)
1. ரூபன்
2. சிமியோன்
3. மனாசே
4. யூதா
5. தாண்
6. நப்தலி
7. காது
8. ஆசேர்
9. இசக்கார்
10. செபுலோன்
11. எப்பிராயிம்
12. பென்யாமின்
சீரியா
தமஸ்கு
பாசான்
கோலான்
பெருங்கடல்
சாக்கடல்
ஏதோம்
மோவாபியர்
அரேபியர்
எமோரியர்
கர்மேல் மலை
தாபோர் மலை
ஏபால் மலை
கெரிசிம் மலை
நெபோ மலை
எருசலேம்
பெத்லெகேம்
கெபிரோன்

## தாவீது-சலமோனின் பேரரசு

(கி.மு. 1000-930)

0 20 40 60 70 120 கி.மீ.

சைப்ரஸ்

ஆர்வாது

கமாத்து

ததிமோர்

காதேசு

இரிபிலா

சூன்

செதாது

கசர் ஏனான்

பிபுலோசு
கெபால்

பெனிக்கியா

பெரோத்தாய்

பெரித்து

லெபனோன் மலை

செபிரோன்

சோபா

சீதோன்

இயோன்

தமஸ்கு

எர்மோன் மலை

தீர்

ஆபேல்

தாண்

கெதேசு

காசோர்

மாக்கா

ஆக்கோ

காபூல்

கர்மேல் மலை

கெசூர்

அஸ்தரோத்து

நோபாகு

பெருங்கடல்

தோர்

மெகிதோ
தனாக்கு

எதிரை

பேத்சான்

இராமோத்து கிலயாது

சலக்கா

கேப்பேர்

இஸ்ரயேல்

யோர்தான்

மகனாயிம்

செக்கேம்

சுக்கோத்து

யோப்பா

பெத்தேல்

அதமா

இரபா

கெசர்

அசுதோது

கிபயா

எசிபோன்

அம்மோன்

அசுக்கலோன்

பெலிஸ்தியா

எருசலேம்

மேதபா

காசா

காத்து

கெபிரோன்

இலாக்கீசு

தீபோன்

சாக்கடல்

கெரார்

சிக்லாகு

அரோயர்

யூதா

அராது

ஆர்

பெயேர்-செபா

கீர்-கரசேத்து

மோவாபு

அரேபிய பாலைவனம்

தாமார்

போசுரா

காதேசு-பார்னேயா

பூனோன்

எகிப்திய நதி

ஏதோம்

செலா

தேமான்

எசியோன்-கெபேர்

# பாலஸ்தீன் நாடு
(இயேசுவின் காலத்தில்)

Scale: 1 1,700,000

0 5 10 15 20




சீதோன்
லெபனோன் மலை
இத்துரேயா
அபிலேன்
தமஸ்கு
சரெப்தா
எர்மோன் மலை
சீரியா
தீர்
பெனிக்கியா
பிலிப்புச் செசரியா
தாண்
திரக்கோனித்து
கொராசின்
பெத்து சயிதா
கப்பர் நகூம்
தொலமாய்
கானாவூர்
மகதலா
கலிலேயா
கலிலேயாக் கடல்
கர்மேல் மலை
திபேரியா
நாசரேத்து
தாபோர் மலை
காதாரா
நயீன்
சலேம்
தெக்காப்பொலி
செசரியா
மத்தியதரைக் கடல்
சமாரியா
ஐனோன்
நதி
சமாரியா
ஏபால் மலை
கெரிசிம் மலை
சிக்கார்
செக்கேம்
கெராசா
அப்பொல்லோனியா
யாக்கோபின் கிணறு
யோர்தான்
அந்திப்பத்திரி
யோப்பா
அரிமத்தியா
பேத்து பாரா
பெத்தேல்
எப்பிராயிம்
இலிதா
பிலதெல்பியா
எரிகோ
ஒலிவ மலை
பெரயா
எம்மாவு
எருசலேம்
கும்ரான்
அயின் கெரேம்
பெத்து பாகே
எசிபோன்
பெத்தானியா
அசோத்து
யூதேயா
பெத்திலகேம்
அசுக்கலோன்
யூதேயாவின் பாலைநிலம்
சாக்கடல்
காசா
கெபிரோன்
பெயேர்-செபா
இதுமேயா


செசரியா
தமஸ்கு வாயில்
இயேசு தீர்ப்பிடப்படுதல்
பிலாத்து அரண்மனை (அந்தோனியா)
பெத்து சயிதா குளம்
பெத்தானியாவிலிருந்து வந்த இயேசு ஆரவாரச் சிறப்புடன் வரவேற்கப்படல்
எரிகோ
1
சிலுவையில் அறையப்பட்டு உயிர் நீத்தல்
கல்லறை
கொல்கொத்தா
சிலுவை சுமந்து செல்லல்
9
போதித்தல்
ஆலயம்
தங்க வாயில்
7
8
2
கெதுசமனித் தோட்டம் (இயேசு பிடிபடுதல்)
6
வியாபாரிகளைத் துரத்துதல்
பாலம்
அரச முற்றம்
யோப்பா
6
அழைத்துச்
ஏரோது அந்திப்பாவின் அரண்மனை
பெத்லகேம்
பிலாத்திடம்
ஒலிவ மலை
அழைத்துச் செல்லப்படுதல்
5
4
இயேசு ஆலோசனைக் குழுவின் முன்னிலையில்
கயபாவிடம்
கயபா (அரண்மனை)
பேதுரு மறுதலித்தல்
பெத்தானியாவிலிருந்து வருதல்
3
கெதுசமனித்
இறுதி இராவுணவு
சிலோவாம் குளம்
எருசலேம் — பாடுகளின் பாதை
இன்னோம் பள்ளத்தாக்கு
இரத்த நிலம் (குயவன் நிலம்)
மீட்டர்
0 50 100 150

# புனித பவுலின் தூதுரைப் பயணங்கள்

முதல் பயணம் கி.பி. 46—48 (அப். பணி 13—14)

உரோமைப் பயணம் கி.பி. 59—62 (அப். பணி 27—28:16)

தாகியா
மோசியா
கருங்கடல்
திராக்கே
தல்மாத்தியா
அதிரியாக் கடல்
இத்தாலியா
உரோமை
மூன்று விடுதி
ஆப்பியு சந்தை
புத்தயோலி
மக்கதோனியா
தெசலோனிக்கா
பிலிப்பி
அதிராமித்தியம்
ஆசியா
கலாத்தியா
அர்மேனியா
சிசிலி
இரேகியும்
சிரக்கூசா
கொரிந்து
அக்காயா
எபேசு
அந்தியோக்கியா (பிசிதியா)
இக்கோனியா
பிசிதியா
இலிசித்திரா
தெருபை
கப்பதோக்கியா
சிலிசியா
கொலோசை
பெருகை
அத்தாலியா
மீரா
பம்பிலியா
மால்த்தா
கினிது
கிரேத்து
பேனிக்சு
பதுமோ
சல்மோனே
கவுதா
செந்துறை
இலசயா
அந்தியோக்கியா
செலூக்கியா
சாலமி
பாப்போ
சைப்ரஸ்
சீரியா
மத்தியதரைக் கடல்
சீரேன்
லிபியா
சீதோன்
தமஸ்கு
செசரியா
அந்திப்பத்திரி
எருசலேம்
அலெக்சாந்திரியா
எகிப்து
0 100 200 300
கி. மீ.


புனித பவுலின்
தூதுரைப் பயணங்கள்
இரண்டாம் பயணம்
கி.பி. 49—52 (அப். பணி 15:39—18:22)
மூன்றும் பயணம்
கி.பி. 53—57 (அப். பணி 18:22—21:16)
கருங்கடல்
போ ந்து
பித்தினியா
மீசியா
ஆ சி யா
பிரிகியா
கலாத் தியா
அந்தியோக்கியா (பிசிதியா)
பிசிதியா
இக்கோனியா
இலிசித்திரா
தெர்பை
பம்பிலியா
சிலிசியா
தார்சு
அந்தியோக்கியா
செலூக்கியா
சீரியா
பெனிக்கியா
சைப்ரஸ்
தீர்
தொலமாய்
செசரியா
எருசலேம்
எகிப்து
அலக்சாந்திரியா
மத்தியதரைக்கடல்
கிரேத்து
மக்கதோனியா
அம்பிப்பொலிஸ்
பிலிப்பி
தெசலோனிக்கா
பெரோயா
நெயாப்-பொலி
சமொத்திராக்கு
அப்பொல்லோனியா
துரோவா
ஆசோ
மித்திலேன்
கீயு
பெருக மோன்
தியத்திரா
சர்தை
சிமிருனா
எபேசு
சாமு
மிலேத்து
கோசு
உரோது
பாத்தரா
கொரிந்து
ஏதன்சு
கெங்கிரேயா
அக் கா யா
செசரியாவுக்கு
எருசலேமுக்கு
0 100 200 300
கி. மீ.

# ஆசிரியரது பிற நூல்கள்

**விவிலிய அறிமுக நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | "தோரா" அல்லது "ஐந்நூல்" | (ஆதி, யாத்திரை, லேவியர், எண், உப ஆகமங்கள்) |
| 2. | வரலாற்று நாயகன் | (யோசுவா, நீதிபதிகள், 1,2 சாமுவேல், 1,2, அரசர்கள், 1,2 நாள், எஸ்ரா, நெகேமியா, 1,2, மக்கபேயர்கள்) |
| 3. | இஸ்ராயேலின் காவலர்கள் – I | (பொது முன்னுரை, ஆமோஸ் ஒசேயா, மீக்கா) |
| 4. | இஸ்ராயேலின் காவலர்கள் – II | (எசாயா, செப்பனியா, நாகூப், அபக்கூக்கு, எரேமியா, எசேக்கியேல், ஆகாய், செக்கரியா, ஒதியா, மாலக்கி, யோவேல்) |
| 5. | ஞான நூல்கள் | (யோபு, பழமொழி, சங்கீதங்கள், திருவுரை, உன்னத சங்கீதம், ஞானநூல், சீராக்கு) |
| 6. | சில கதைகளும் காட்சிகளும் | (யோனா, ரூத்து, தோபியா, எஸ்தர், புலம்பல், பாரூக்கு, தானியேல், யூதித்து) |
| 7. | நான்கு வடிவ நற்செய்திகள் | (மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் நற்செய்திகள்) |
| 8. | புனித பவுலின் திருமுகங்கள் – I | (பவுலின் வாழ்க்கை வரலாறு, மற்றும் 1 தெசலோனிக்கர், கலாத்தியர், பிலிப்பியர், 1 & 2 கொரிந்தியர், உரோமையர், பிலமோன் ஆகிய திருமுகங்களுக்கு அறிமுகங்கள்) |
| 9. | புனித பவுலின் திருமுகங்கள் – II | (2–ஆம் தெசலோனிக்கர், கொலோசையர், எபேசியர், தீத்து, 1–ஆம், 2–ஆம் திமொத்தேயு ஆகிய திருமுகங்களுக்கு அறிமுகங்களும், பவுலின் இறையியலும்) |

**விளக்கவுரை நூல்**

| | | |
|---|---|---|
| 10. | லூக்காவின் நற்செய்தி | (அருள்வாக்கு மன்றப்பதிப்பு) |
| 11. | விவிலியச் சித்திரக் கதைகள் | **பழைய ஏற்பாடு:** (காயின் ஆபேல், ஆபிரகாம், யாக்கோபு, யோசேப்பு, மோசே, யோசுவா, சிம்சோன் ரூத்து, சாமுவேல், சவுல், தாவீது, அரசன் தாவீது) |
| 12. | விவிலியக் களஞ்சியம் – I | **புதிய ஏற்பாடு:** |
| 13. | விவிலியக் களஞ்சியம் – II | |
| 14. | விவிலியக் களஞ்சியம் – III | |
| 15. | விவிலியக் களஞ்சியம் – IV | |
| 16. | விவிலியக் களஞ்சியம் – V | |

**தயாரிப்பில் உள்ளவை :**

1. விவிலியச் சித்திரக் கதைகள் (பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு)


*கிடைக்குமிடம்*

**தியான ஆசிரமம்**

13, மாதா கோவில் தெரு, சென்னை – 600 028.

**மற்றும் மறைமாவட்ட மேய்ப்புப் பணி நிலையங்கள்.**